

துளசிதாஸரின்

# ராமசரிதமானஸம்

அல்லது

# மானஸ ராமாயணம்

## அயோத்யா, அரண்ய காண்டங்கள்

S. ஜகந்நாராயணன்

கோஸ்வாமி துளசிதாசரின்

# ராமசரித மானஸம்

அல்லது

# மானஸ ராமாயணம்

மொழி பெயர்ப்பும், கருத்துக்களுடனும்,
மனோபாவத்துடனும்

## அயோத்யா, அரண்ய காண்டங்கள்

பிரசுரகர்த்தர் :
S. ஜசந்நாராயணன்
25, லேடி ஹார்டிஞ் ரோடு,
புது டில்லி–1

*First Edition—February, 1972*

மத்திய அரசாங்கத்தாரால் பொருளுதவி செய்யப்பட்டது

விலை ரூ.

---

காபிகள் கிடைக்குமிடம் :

மதராஸ் :

எஸ். ஜகந்நாராயணன்

(I) "ராஜலக்ஷ்மி"
Plot No. 38, ராமகிருஷ்ண நகர்,
Door No. 11, Near மந்தவெளி,
மதராஸ்–28

(II) S. ஜகந்நாராயணன்,
C–588, Ashok Nagar, Madras–83

புது டில்லி :

S. ஜகந்நாராயணன்,
25, லேடி ஹார்டிஞ்ச் ரோடு,
புது டில்லி–1

Kabeer Printing Works, Madras (1469)

# ஸமர்ப்பணம்

நாராயணம் நமஸ்கிருத்ய நாம் சைவ நரோத்மம்
தேவீம் ஸரஸ்வதீம் வியாஸம் ததோ ஜயமுதீரயேத்

ராமசரித மானஸம் எனப்படும் மானஸ ராமாயணத்தின் இரண்டாவது மூன்ருவது சோபானங்களாகிற அயோத்யா, அரண்ய காண்டங்களின் மொழி பெயர்ப்பை (கருத்துக்களுடன்) இப்புத்தகத்தில் ஸமர்ப்பித்துள்ளேன். அயோத்யா காண்டத்தில், கைகேயியின் வரத்தினுல் ராமன் லக்ஷ்மணன் சீதையுடன் வனவாசம் போவதும், பரதன் அவர்களைத் தொடர்ந்து சித்ரகூடம் சென்று, ஸ்ரீராம பாதுகைகளை அயோத்திக்குக் கொண்டு வருவதும், அதன் பின் ஏற்பட்ட பாதுகா பட்டாபிஷேகத்தைப் பற்றியும் சொல்லப்பட்ட புனிதமான சரித்திரம். அரண்ய காண்டத்தில் ராமன் சீதையுடனும் லக்ஷமணனுடனும் அத்ரி, சரபங்க சுதீக்ஷணர், அகஸ்த்திய ஆஸ்ரமங்களுக்குச் செல்வதும், சூர்ப்பனகையை சந்திப்பதும், ராவணனுடைய மாயா வேஷத்தினுல் சீதை அபஹரிக்கப்படுவதுமாகிற விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

இப்புத்தகத்தில் துளசிதாஸரின் ராமாயணத்தின் மொழிபெயர்ப்பு செய்யுட்களின் நம்பர்களால் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த மொழிபெயர்ப்பில் போடப்பட்டிருக்கும் பிராக்கட்டுகளிலுள்ள வசனங்களும் தியானமும் எனது கருத்துக்களையும் மனேபாவத்தையும் விமர்சனம் செய்கின்றன.

இப்புத்தகத்தை மேல்பார்த்து, இலக்கியப் பிழைகளைத் திருத்திக் கொடுத்துதவிய எனது நண்பரும்; புது டில்லி தயால் சிங் காலேஜின் தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீமான் R. பார்த்தசாரதி அவர்களுக்கு நான் மிக்கக் கடமைப்பட்டுள்ளேன். அதேபோல மத்திய அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட மேற்பார்வையாளரும், ஆக்ரா பல்கழகம் ஹிந்தி, தமிழ் பேராசிரியர் ஸ்ரீமான் Dr. A. N. ராஜகோபாலன் அவர்களுக்கும், அவர்களுடைய சிறந்த மனப்பான்மையினுல் யேற்பட்ட புத்தி ஆலோசனைகளுக்கும், கருத்துக்களுக்கும், நான் மிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இப்புத்தகம் வெளிவருவதற்கு மத்திய அரசாங்கத்தினர், சிக்ஷா நிலையம் (Ministary of Education) எனக்குப் பண உதவி செய்துள்ளார்கள். அவர்களுக்கும் நான் நன்றி செலுத்த கடமைப்பட்டவனுகவிருக்கிறேன். முக்கியமாக எனது நண்பர்களான ஸ்ரீமான் B. N. பட்நாகர் அவர்களுக்கும், ஸ்ரீமான் D. N. சாக்ஸீனு அவர்களுக்கும் மற்றுமுள்ள நண்பர்களுக்கும் நான் மிக்க நன்றியைச் செலுத்துகிறேன்.

ராமசரித மானஸமென்கிற மானஸ ராமாயணத்தின் ஏழு காண்டங்களையும் சரிவர நான் எழுதி முடிப்பதற்கு உதவியவர் எனது மனைவி திருமதி ராஜலக்ஷ்மி ஜெகந்நாராயணன் அவர்கள். அவர்கள் மன அன்பினால், எழுதுவதற்குப் போதுமான அவகாசம் கொடுத்து, எனது முயற்சியில் தேக உழைப்புடன் பூர்ணமாக ஈடுபட்டு, எனக்கு மிக்க உதவி செய்துள்ளனர். அவர்கள் சமீபத்தில் காலமானபோதிலும், அவர்களுடைய நல்நினைவாகவும், சீதாராமார்ப்பணமாகச் செய்திருக்கும் இந்த சிறிய நூலை டில்லி நகரிலுள்ள தமிழர்களும், மற்றைய பிரதேசங்களிலுமுள்ள எங்களது தமிழ் அன்பர்களும் மனநிறைவுடன் வரவேற்று என்னை ஆசீர்வதிக்கக் கோருகிறேன். வாசக தோஷங்கள் பலவிருப்பினும் என்னை மன்னிக்கும்படி தாழ்மையுடன் நான் அடிக்கடி அவர்களைப் பிரார்த்தித்துக்கொள்கிறேன்.

இந்த புத்தகத்தை அச்சிட்டு எனக்குக் குறித்த காலத்தில் பிரதிகளை அளித்த M/s கபீர் ப்ரிண்டர்ஸ், திருவல்லிக்கேணி, மதராஸ் அவர்களுக்கு நான் மிக்க நன்றி செலுத்துகிறேன். இப்புத்தகத்தில் காணப்படும் படங்களை எனக்கு இலவசமாகக் கொடுத்து உதவியவர்கள் டில்லியிலிருக்கும் ஸ்ரீமத் ராமசரித மானஸ் சதுஸ்ஸதி—அதாவது கோஸ்வாமி ஸ்ரீ துளசிதாஸரின் நான்காவது நூற்றாண்டு நினைவுச் செயலாளர்களின் கேந்திரம். அதன் காரியதரிசியாகவிருக்கும் ரத்னாகர் பாண்டே அவர்களுக்கும் நான் மிக்க நன்றி செலுத்துகிறேன்.

விரோதிகிருது வருஷம்,
தை மீ 27ம் உ,
வியாழக்கிழமை,
10th Feb. 1972.

சீநிவாச ஜெகந்நாராயணன்,
25, லேடி ஹார்டிஞ்ச் ரோடு,
புது டில்லி—1.

ஸ்ரீராமச்சந்திரன் சீதையுடன் ராஜ சிம்மாஸனத்தில் ஏறி உட்கார ஸகலரும் ஜய மங்கள கோஷங்கள் செய்தனர். முதன் முதலாக வஸிஷ்டர் ராஜதிலகத்தை அவர்களுக்கு அணிவித்தார். அவருக்குப் பின்பு ஸகல பிராம்மண ஸ்ரேஷ்டர்களும் வஸிஷ்டரின் ஆக்ஞைப்படி ராஜ திலகத்தை அணிவித்தார்கள். ஸகல மாதாக்களும் சீதா ராம தம்பதிகளுக்கு மங்கள ஆரத்திகளை எடுத்தார்கள்.

# அயோத்யாகாண்டத்தின் ஸ்துதிகள்

(1)

யஸ்யாங்கே ச விபாதி பூதரஸுதா தேவாபகா மஸ்தகே
பாலே பாலவிதுர்களேச கரளம் யஸ்யோரஸி வ்யாலராட்
ஸோऽயம் பூதிவிபூஷணஃ ஸுரவரஃ ஸர்வாதிபஃ ஸர்வதா
சர்வஃ ஸர்வகதஃ சிவஃ சசிநிபஃ ஸ்ரீ சங்கரஃ பாதுமாம்.

(2)

ப்ரஸன்னதாம் யாந கதாபிஷேகதஸ்ததா நமம்லே வனவாஸ துக்கதஃ
முகாம்புஜ ஸ்ரீ ரகுநந்தனஸ்யமே ஸதாஸ்துஸா மஞ்ஜுள மங்களப்ரதா

(3)

நீலாம்புஜ ஸ்யாமளகோமளாங்கம் சீதாஸமாரோ பிதவாம பாகம்
பாணௌ மஹாஸாயக சாருசாபம் நமாமி ராமம் ரகுவம்சநாதம்

## வால்மீகி ரிஷியின் ஸ்துதி (பக்கம்)

(1)

கஸ்ந கஹ்ஹு அஸ் ரகுகுலகேது தும்ஹ பாலக் ஸந்தத ஸ்ருதிஸேது

(2)

ஸ்ருதிஸேது பாலக்ராம் தும்ஹ் ஜகதீஸ மாயா ஜானகீ
ஜோஸ்ருஜதி ஜகு பாலதி ஹரதி ருக்பாஇ க்ருபாநிதான்கீ
ஜோ ஸஹஸஸீஸு அஹீஸு மஹிதரு லக்னு ஸசராசரதநீ
ஸுரகாஜ தரிநரராஜ தனுசலே தளன் கல் நிஸிசர் அநீ

(3)

ராம் ஸரூப தும்ஹார பசன அகோசர புத்திபர்
அவிகதஅகத அபார்நேதி நேதி நித நிகம கஹ்

(4)

ஜகு பேகன் தும்ஹ தேக் நிஹாரே விதி ஹரி ஸம்பு நசாவனி ஹாரே
தேஊ ந ஜானஹிம் மர்மு தும்ஹாரா ஔர் தும்ஹஹிகோ ஜான்நிஹாரா

(5)

ஸோஇ ஜானஇ ஜேஹி தேஹீஜநாஈ ஜானத்தும்ஹஹி தும்ஹஇ
ஹோஇ ஜாஈ
தும்ஹரிஹி க்ருபாம் தும் ஹஹி ரகுநந்தன ஜானஹிம் பகத் பகத் உர
சந்தன

(6)

சிதானந்தமய தேஹ தும்ஹாரீ பிகத்பிகாரஜான் அதிகாரீ
நரதனு தரேஹு ஸந்தஸுர காஜா கஹஹீ கரஹு ஜஸ்ப்ராக்ருதராஜா

(7)

ராம்தேகி ஸுநி சரிததும்ஹாரே ஜட் மோஹஹிம்புத ஹோஹிம் ஸுகாரே
தும்ஹஜோ கஹஹீ கரஹீ ஸபு ஸாஞ்சா ஜஸ் காசிஅ தஸ்சாஹி அநாசா

(8)

பூம்ச்சேஹு மோஹிகி ரஹெள கஹீம் மைம் பூஞ்சத் ஸகுசாஊம்
ஜஹம் நஹோஹீ தஹம் தேஹீ கஹி தும்ஹஹி தேகாவெளம் டாஊம்

(9)

ஸுநிமுனிவசன ப்ரேம ரஸஸாநே ஸகுசி ராம் மனமஹீம் முஸு காநே
வால்மீகி ஹம்ஸி கஹஹிம் பஹோரீ வாணீ மதுர அமிஅ ரஸ் போரீ

(10)

ஸுநஹீ ராம்அப் கஹஊம் நிகேதா ஜஹாம் பஸஹீ ஸியலகந் ஸமேதா
ஜின்ஹகே ஸ்ரவண ஸமுத்ர ஸமாநா கதா தும்ஹாரி ஸுபகஸரி நாநா

(11)

பரஹிம் நிரந்தர ஹோஹிம் நபூரே தின்ஹகே ஹியதும்ஹ கஹீம் க்ருஹ ரூரே
லோசனசாதக ஜின்ஹ கரி ராகே ரஹஹிம் தரஸ் ஜலதரஅபிலாஷே

(12)

நிதரஹிம் ஸரித ஸிந்துஸரபாரீ ரூப் பிந்து ஜல ஹோஹிம் சுகாரீ
தின்ஹகேம் ஹ்ருதய ஸதன ஸுகதாயக பஸஹீ பந்து ஸியஸஹ ரகுநாயக

(13)

ஜஸு தும்ஹார மானஸ விமல ஹம்ஸிநி ஜீஹாஜாஸு
முக்தாஹல குணகண சுநஇ ராம் பஸஹீஹியம் தாஸு

(14)

ப்ரபு ப்ரஸாத சுசி ஸுபக ஸீவாஸா ஸாதர ஜாஸு லஹஇநித் நாஸா
தும்ஹஹீ நிவேதித போஜன கரஹீம் ப்ரபு ப்ரஸாத பட் பூஷண தரஹீம்

(15)

ஸீஸ் நவஹிம்ஸு ரகுருத்விஜதேகீ ப்ரீதி ஸஹித கரிவினய விசேஷீ
கரநித கரஹிம் ராம் பத பூஜா ராம் பரோஸ ஹ்ருதயம் நஹி தூஜா

(16)

சரண் ராம் தீர்த்தசலி ஜாஹீம் ராம் பஸஹீ திந்ஹகேமன் மாஹீம்
மந்தர ராஜீ நித ஜபஹிம்தும் ஹாரா பூஜஹிம் தும்ஹஹி ஸஹித
பரிவாரா

(17)

தர்பந்ஹோம கரஹிம்விதி நாநா விப்ரஜேவா ஈதேஹிம் பஹீதாநா
தும்ஹதேம் அதிக குரஹி ஜியம்ஜாநீ ஸகல பாயம் ஸேவஹிம் ஸந்மாநீ

(18)

ஸபுகரி மாகஹிம் ஏகபல ராம் சரண ரதி ஹோஊ
தின்ஹகேம் மன் மந்திர் பஸஹீஸிய ரகு நந்தன தோஊ

(19)

காம்கோஹ மதமான் நமோஹா லோப நசோப நராக நத்ரோஹா
ஜின்ஹகேம் கபட டம்ப நஹிம் மாயா தின்ஹ கேம் ஹ்ருதய பஸஹீ
ரகுராயா

(20)

ஸப்கேப்ரிய ஸப்கே ஹித காரீ துக்க ஸுகஸரிஸ ப்ரஸம்ஸாகாரீ
கஹ்ஹிம் ஸத்யப்ரிய பசன பிசாரீ ஜாகத் ஸோவத் ஸரண்தும்ஹாரீ

(21)

தும்ஹஹி சாடி கதி தூஸ்ரிநாஹீம் ராம்பஸஹீ தின்ஹகே மன்மாஹீம்
ஜனனீ ஸமஜாநஹிம் பரநாரீ தனுபராவ விஷதேம் விஷபாரீ

(22)

ஜேஹர் ஷஹிம் பரஸம்பதிதேகா துக்கித ஹோஹி பரவிபத்திவிசேஷீ
ஜின்ஹஹிராம் தும்ஹ ப்ராண பியாரே தின்ஹகே மன்ஸுப ஸதன்
தும்ஹாரே

(23)

ஸ்வாமிஸகா பிதுமாதுகுர ஜீன்ஹ கே ஸப்தும்ஹ தாத
மன்மந்திர் தின்ஹகே பஸஹீ ஸீய ஸஹிததோஊ ப்ராத

(24)

அவகுண தஜி ஸப் கேகுண கஹஹீம் விப்ரதேனு ஹித ஸங்கட
ஸஹஹீம்
நீதிநிபுண ஜின்ஹ கஇ ஜக் லீகா கரதும்ஹார தின்ஹகரமனு நீகா

(25)

குணதும்ஹார ஸமுஜ்ஜயிநிஜ தோஸா ஜேஹிஸப் பாந்தி தும்ஹார பரோஸா
ராம பக்தப்ரிய லாகஹிம் ஜேஹீ தேஹிஉர பஸஹீ ஸஹித வைதேஹி

(26)

ஜாதி பாந்தி தனு தர்மு படாயீ ப்ரிய பரிவார ஸதன சுகதாயீ
ஸப்தஜிதும்ஹஹி ரஹஇ உர் லாஈ தேஹிகே ஹ்ருதயம் ரஹ்ஹீரகுராயீ

(27)

ஸரகு நரகு அபவர்கு ஸமானு ஜஹம்தஹம் தேக் தரேம் தனு பானு
கர்ம வசனமன ராஉர சேரா ராமகர ஹீதேஹிகேம் உர்டேரா

(28)

ஜாஹிந சாஹிஅ கப்ஹீம் கச்தும்ஹ ஸந் ஸஹஜஸ்நேஹ
பஸஹீ நிரந்தர தாஸு மன்ஸோ ராஉர் நிஜகேஹீ

## அரண்ய காண்டத்தின் ஸ்துதிகள்

(1)

மூலம் தர்மதரோர்விவேக ஜலதே: பூர்ணேந்து மானந்ததம்
வைராக்கியாம் புஜபாஸ்கரம் ஹ்ய ககனத் வாந்தாபஹம் தாபஹம்
மோஹம் போதரபூக பாடநவிதௌ ஸ்வ: ஸம்பவம் சங்கரம்
வந்தே ப்ருஹ்மகுலம் கலங்க சமனம் ஸ்ரீராம பூபப்பிரியம்.

(2)

ஸாந்த்ரானந்த பயோத ஸௌபகதனும் பீதாம்பரம் சுந்தரம்
பாணௌ பாண சராசனம் கடிலஸத்தூணீர பாரம் வரம்
ராஜீவாய தலோசனம் த்ருதஜடா ஜூடேன ஸம்ஸோபிதம்
சீதா லக்ஷ்மண ஸம்யுதம் பதிகதம் ராமாபிராமம் பஜே.

(3)

உமா ராம குணகூட பண்டித முனிபாவஹிம் பிரதி
பாவஹிம் மோஹ விமூடஜே ஹரி விமுக நதர்மரதி.

### அத்ரி ஸ்துதி

(1)

நமாமி பக்தவத்ஸலம் கிருபாளு சீலகோமளம்
பஜாமிதே பதாம்புஜம் அகாமினும் ஸ்வதாமதம்.

(2)

நிகாம சியாம சுந்தரம் பவாம்புநாத மந்தரம்
ப்ரபுல்ல கஞ்சலோசனம் மதாதிதோஷ மோசனம்.

(3)

ப்ரலம்ப பாஹுவிக்ரமம் ப்ரபோ அப்ரமேய வைபவம்
நிஷங்க சாபஸாயகம் தரம்திரிலோக நாயகம்.

(4)

தினேஸவம்ச மண்டனம் மஹேஸ சாபகண்டனம்
முனீந்திர ஸந்தரஞ்ஜனம் ஸுராரி வ்ருந்த பஞ்ஜனம்.

(5)

மனோஜவைரிவந்திதம் அஜாதி தேவஸேவிதம்
விசுத்த போத விக்ரஹம் ஸமஸ்த தூஷணுபஹம்.

(6)

நமாமி இந்திராபதிம் சுகாகரம் ஸதாம் கதிம்
பஜேஸசக்தி ஸானுஜம்சசீ பதிப்ரியானுஜம்

(7)

த்வதந்திரி மூலயேநரா: பஜந்திஹீன மத்ஸரா:
பதந்திநோ பவார்ணவே விதர்க பீசிஸம்குலே.

(8)

விவிக்தவாஸின: ஸதா பஜந்தி முக்தயே முதா
நிரஸ்ய இந்திரியாதிகம் ப்ரயாந்திதே கதிம் ஸ்வகம்.

(9)

தமேக மத்புதம்।ப்ரபும்' நிரீஹ।மீஸ்வரம் விபும்
ஜகத் குரும்ச சாஸ்வதம் துரீயமேவ கேவலம்.

(10)

பஜாமி பாவ வல்லபம் குயோகினும் ஸுதுர்லபம்
ஸ்வபக்த கல்ப பாதபம் ஸமம்ஸு ஸேவ்ய மன்வஹம்

(11)

அநூப ரூபபூபதிம் நதோஹமுர்விஜாபதிம்
ப்ரஸீத மேநமாமி தே பதாப்ஜ பக்தி தேஹிமே

(12)

படந்தியே ஸ்தவம் இதம் நராதரேணதே பதம்
வ்ரஜந்தி நாத்ர ஸம்சயம் த்வதீய பக்தி ஸம்யுதா:

## சரபங்கரின் ஸ்துதி

(1)

நாதஸகல ஸாதன் மேம்ஹீனு கீன்ஹீக்ருபா ஜானி ஜன்தீனு.

(2)

ஸோகலு தேவ்நமோஹி நிஹோரா நிஜபன் ராகே உஜன்மன் சோரா
தப்லகி ரஹ்ஹீதீன் ஹிதலாகி ஜப்லகி மிலோம் தும்ஹஹிதனு த்யாகி

(3)

ஜோக்ஜக்ய ஜபதப வ்ரதகீன்ஹா பிரபுகஹீம் தேஹபக்தி வர்லீன்ஹா
ஏஹிவிதி ஸரரசிமுனி சரபங்கா பைடேஹ்ருதயம் சாஹிஸப் ஸங்கா.

(4)

சீதா அனுஜ ஸமேத்ப்ரபு நீலஜலத தனுஸ்யாம்
மமஹியம் பஸஹீ நிரந்தர ஸகுணரூப ஸ்ரீராம.

## ரிஷிகளின் ஸ்துதி

ஜானத்ஹீம் பூச்சிஅகஸ் ஸ்வாமி ஸப்தர்ஸீதும்ஹ அம்தர் ஜாமி
நிஸிசரநிகர ஸகல முனிகாயே ஸுனிரகுவீர் நயனஜல் சாயே.

## சுதீக்ஷ்ணரின் ஸ்துதி

(1)

கஹ்முனி ப்ரபுஸுனு வினதிமோரி அஸ்துதி கரௌம்கவன் விதிதோரீ
மஹிமா அமித்மோரி மதிதோரீ ரவிஸன்முக் கத்யோத அம்ஜோரீ.

(2)

ஸ்யாம தாமரஸ தாமசரீரம் ஜடாமுகுட பரிதன முனிசீரம்
பாணிசாப ஸரகடி த்ருணீரம் நௌமி நிரந்தர் ஸ்ரீரகுவீரம்.

(3)

மோஹ்விபின் கனதஹன க்ருஸானு: ஸந்த ஸரோருஹ் கானன பானு:
நிசிசரகரி வரூத்.ம்ருகராஜ: த்ராதுஸதா நோபவகக பாஜ:

(4)

அருணநயன ராஜீவ ஸுவேஸம் சீதாநயன சகோர நிஸேசம்
ஹரஹ்ருதி மானஸபால மராலம் நௌமிராம உரபாஹு விசாலம்.

(5)

ஸம்சய ஸர்ப்ப க்ரஸன உரகாத: சமன ஸுகர்கஸதர்க்க விஷாத:
பவபஞ்ஜன ரஞ்ஜ்ன ஸுரயூத: த்ராது ஸதாநோக்ருபா வரூத:

(6)

நிர்குண ஸகுண விஷம ஸமரூபம் ஞான் கிரா கோதீத மனூபம்
அமல மகில மன வத்ய மபாரம் நௌமி ராம பஞ்ஜன மஹி பாரம்.

(7)

பக்த கல்பபாதப ஆராமஃ தர்ஜன க்ரோத லோப மத காமஃ
அதி நாகர பவஸாகர ஸேதுஃ த்ராது ஸதா தினகர குலஹேதுஃ

(8)

அதுளித புஜ ப்ரதாப் பலதாமஃ கலிமல விபுல விபஞ்ஜன நாமஃ
தர்ம வர்ம நர்மத குண க்ராமஃ ஸந்தத சம்தனோது மம ராமஃ

(9)

ஜதபி பிரஜ வ்யாபக அவிநாஸீ ஸப்கே ஹ்ருதயம் நிரந்தர பாஸீ
ததபி அனுஜ ஸ்ரீஸஹித கராரி வஸது மனஸி மம கானன சாரீ

(10)

ஜே ஜானஹிம் தே ஜானஹீம் ஸ்வாமி ஸகுண அகுண உர் அம்தர் ஜாமி
ஜோ கோஸல பதி ராஜீவ நயனு கரஉ ஸோ ராம ஹ்ருதய மம அயனு

(11)

அஸ் அபிமான் ஜாஇ ஜனி போரே மைம் ஸேவக் ரகுபதி பதிமோரே
ஸுனி முனிவசன ராம் மன் பாஏ பஹுரி ஹர்ஷி முனிவர உர் லாயே.

## அகஸ்தியரின் ஸ்துதி

(1)

தும்ஹரே இம் பஜன் ப்ரபாவ அகாரீ ஜானஉம் மஹிமா கச்சு க தும்ஹாரி
ஊமரி தரு விஸால தவ மாயா பல் ப்ரஹ்மாண்ட அநேக நிகாயா.

(2)

ஜீவ் சராசர ஜந்து ஸமானு பீதர் பஸ்ஹிம் நஜானஹிம் ஆனு
தே பல் பச்சக கடின கராலா தவ பயம் டரத் ஸதா ஸோஉ காலா.

(3)

தே தும்ஹ ஸகல லோகபதி ஸாஈ பூச் சேஹீ மோஹி மனுஜ கீ நாஈ
யஹ்பர் மாக்ஊம் கிருபா நிகேதா பஸஹு ஹ்ருதயம் ஸ்ரீஅனுஜ ஸமேதாஃ

(4)

அபிரல பக்தி பிரதி ஸத்ஸங்கா சரண் ஸரோருஹ் ப்ரீதி அபங்கா
ஜத்யபி ப்ரஹ்ம அகண்ட அனந்தா அனுபவ கம்ய பஜஹிம் ஜேஹி ஸந்தா

(5)

அஸ் தவ ரூப் பகான ஊம் ஜான ஊம் பிரி பிரி ஸகுண ப்ரும்ம ரதி மானஉம்
ஸந்தத தாஸன்ஹ தேஹீ படாயீ தாதேம் மோஹி பூச்சேஹீ ரகு ராயி

(6)

ஹே பிரபு பரம மனோஹர டாஊம் பாவன பஞ்சவட தே'ஹி நா ஊம்
தண்டக வன புனீத ப்ரபு கரஹீ உக்ர ஸாப முனிவர கர ஹரஹீ

(7)

பாஸ் கரஹீதஹம் ரகுகுல ராயா கீஜே ஸகல முனின்ஹ பரதாயா
சலே ராம் முனி ஆயுஸீ பாஇ துரதஹிம் பஞ்சவட நி அரா॰

## ஜடாயுவின் ஸ்துதி

(1)

ஜய ராம் ரூப அநூப நிர்குண ஸகுண குண ப்ரேரக ஸஹீ
தசசீஸ பாஹு பிரசண்ட கண்டன சண்ட ஸரமண்டன மஹீ
பா தோத காத ஸரோஜ முக ராஜீவ ஆயத லோசனம்
நித நௌமி ராமுக்ருபாள பாஹு விஸால பவபய மோசனம்

(2)

பல மப்ர மேய மனாதி மஜ மவ்யக்த மேகம கோசரம்
கோவிந்த கோபர த்வந்தவஹர விக்யான கன தரணீதரம்
ஜே ராம மந்தர ஜபந்த ஸந்த அனந்த ஜன மன ரஞ்ஜனம்
நித நௌமி ராம அகாம பிரிய காமாதி கல தல கஞ்ஜனம்.

(3)

ஜே ஹி ஸ்ருதி நிரஞ்ஜன ப்ரஹ்ம வ்யாபக விரஜ அஜ கஹி காவஹீம்
கரி த்யான க்ஞான விராக ஜோக அநேக முனி ஜேஹி பாவஹீம்
ஸோ ப்ரகட் கருணா கந்த ஸோபாவ் ருந்த அக ஜக மோஹஇ
மம ஹ்ருதய பங்கஜ ப்ருங்க அங்க அனங்க பஹு சவிஸோஹஇ.

(4)

ஜோ அகம ஸுகம ஸுபாவ் நிர்மல அஸம ஸம சீதள ஸதா
பஸ்யந்திஜம் ஜோகீ ஜதன கரி கர்த மனகோ பஸ்ஸதா
ஸோ ராம ரமாநிவாஸ ஸந்தத தாஸ பஸ் திரிபுவன தனீ
மம உர வஸஉ ஸோ ஸமன் ஸம்ஸ்ருதி ஜாஸீ கீர்தி பாவனீ.

(5)

அபிரல பக்திமாகி பரகீத கயஉ ஹரிதாம
தேஹி கீக்ரியா ஜதோசித நிஜ கர கீன்ஹி ராம

(6)

கோமள சித் அதிதீன தயாளா காரண வினு ரகுநாத க்ருபாளா
கீத் அதம கக³ ஆமிஷ போகீ கதி தீன்ஹீ ஜோஜாசத ஜோகீ.

DR. V. RAGHAVAN, M.A.PH.D.
*Professor of Sanskrit,*
UNIVERSITY OF MADRAS (RETD.)
JAWAHARLAL NEHRU FELLOW
(1969-70)

7, Sri Krishnapuram St.
ROYAPETTAH, MADRAS-14.
PHONE: 85091

26-2-1972

# FOREWORD

In 1948, I was travelling by Rail to Darbhanga for the 14th session of the All-India Oriental Conference; on the platform of one of the larger stations, where the train stopped at daybreak, I suddenly heard some song on Rama that sent a thrill through my whole body; I looked out and saw a poor man in a rag of a cloth, just bathed at the water-tap on the platform and with his bare frail frame walking in the cold with a bucket of water on hand; he continued to sing and I to listen; and in a short while, I realised that it was from Tulasi's *Ramayana* that he was singing. The impression has remained indelible; it was not only the magic of Tulasi's words but also the miracle of how all this heritage has had its hold over the people to the humblest of them.

*The Ramayana* (*Rama Charita Manasa*) of Tulasidas (1532—1574 A.D.) is, in the words of Sir George Grierson, the great linguist, the universally accepted bible of all classes from the Himalayas to the Narmada, 'the perfect example of a perfect book', exercising its spell over the unlettered millions to whom it brought in their language the entrancing and elevating personality of Valmiki's Ramachandra, the incarnation of *Satya* and *Dharma*, the saving grace of *Rama Nama* and the ideal of *Ramarajya* as the Kingdom of God on earth. The Muslim-Hindi poets Abdur Rahim Khani Khan and Raskhan adored it as the 'very lifebreath of saints' and 'endearing as the stream of milk flowing from the udders of the celestial cow'. Tulasidas, Grierson hails as 'one of the half-dozen great writers that Asia has produced' and 'a saviour of Hindustan'.

It is through Tulasi that *Rama Bhakti* and *Rama Nama* gained their sovereign sway over the whole of North India. It is through Tulasi that Gandhiji came to prize *Rama Nama* as the most potent medicine and cherish *Rama Rajya* as his ideal of Swaraj.

Long before any of the recent organizations or movements started their efforts to make the literary treasures in one Indian language known to the people of other languages, the name and work of Tulasi had spread to South India. The tradition of the Saint-singers, the *Bhagavata* and *Bhajana-kirtana Sampradaya* and the movement of the votaries of this tradition from one part of the country to the other had brought the life story of Tulasidas and his songs and his *Ramayana* to the devout Tamil people. To the Tamils who get so deeply involved in music and devotion, the *Mahatmas* of Maharashtra, of the Hindi areas and of Bengal are all objects of veneration and their *Abhangs*, *Chaupais* and *Padas* are part of the repertoire of Tamil *Harikatha* performers. Our great singer of Rama-songs, Tyagaraja, pays his homage to Tulasi as one of those wno had blazed the path of *Rama Bhakti* and *Rama Kirtana* before him.

Outside of this religious milieu, it is but proper that an outstanding classic of the kind of the *Rama Charita Manasa* should be made available to the literary world of Tamilnadu. This service, Sri S. Jagannarayanan has done in this Tamil rendering of his which he has done together with comparative notes from Valmiki, the Tamil Ramayana of Kambar and the songs of Tyagaraja. The Translator, along with his late talented wife, has been for long worshipper at the altar of music and devotion and has naturally brought to his translation his dedicated spirit. This is seen prominently in the *dhyanas* or preludes for helping contemplation of Rama that he has put in all through the narrative. The knowledge of the Hindi that he had gained through his long stay in the north has had its best fruit in this sacred task he had set for himself and has accomplished.

I am particularly pleased to write a Foreword to the volume covering the *Ayodhya kanda*. Although each of the books of the *Ramayana* has its own importance and projects a prominent phase of the scintillating prismatic personality of Rama, it is this book that narrates the great giving up of the kingdom and the greater thing namely Rama not being affected in the least by this apparently serious loss and continuing to have the wonted and excelling cheer on his face, and in the midst of everyone else in a disturbed state at the sudden turn of events, he alone, standing like a rock of *Dharma* and *Satya*, as one towering above all others, the veritable God among men that indeed he was. In his memorable lines on this, Valmiki said:

न चास्य महतीं लक्ष्मीं राज्यनाशोऽपकर्षति ।
लोककान्तस्य कान्तत्वात् शीतरश्मेरिव क्षपा ॥
न वनं गन्तुकामस्य त्यजतश्च वसुन्धराम् ।
सर्वलोकातिगस्येव दृश्यते चित्तविक्रिया ॥ II 19 32-3

It is this idea that Tulasi seizes as the most signifiicant and embodies in one of the three opening Sanskrit verses of his *Ayodhya kanda*:

प्रसन्नतां या न गताभिषेकत:
तथा न मम्ले वनवासदु:खत: ।
मुखाम्बुजश्री: रघुनन्दनस्य मे
सदास्तु सा मञ्जुलमङ्गलप्रदा ॥ II 2

"That which did not wax more gracious because of the (proposed) coronation nor wane because of the (impending) difficulties of forest life, may that charm of the lotus-face of Rama be for all time the bestower on me of things pleasing and auspicious". No image of Rama in the Epic could be more inspiring and thrilling than the one at this moment as he strode out of the chamber of Kaikeyi, having promised her that he was going to the forest and with the charm of his face not diminishing even by the slightest shade!

Madras
26—2—72

V. RAGHAVAN

# பொருளடக்கம்

# கோஸ்வாமி துளசிதாஸரால் இயற்றப்பட்ட ராமசரித மானஸம் அல்லது மானஸ ராமாயணம் என்கிற ராமதர்சனம்



## அயோத்யா காண்டம்

[தியானம்

ஹே சீதாராமா, பசுபதியினுல் ஆராதிக்கப்பட்ட மஹா தேஜஸ்ஸுகள் நிரம்பினவரே, கிருஷ்ணுவதாரத்தில் இந்திரனைக் கூட ஆச்சர்யப்படும்படி தனது அமானுஷ்ய சக்திகளை காண்பித்த தயாதரரே, அர்ஜுனனுக்கு ஹிதத்தைச் சொல்லி, ரதத்தை நடத்தி அவனைத் தன் சொற்களைக் கேட்கும்படி செய்தவரே, பக்தர்களுக்காகவும் தேவர்களுக்காகவும் அசுரர்களை அழிப்பதற்காகவும் பல உருவங்கள் எடுத்து, பல ஸ்ருங்கங்களாகிற கொம்புகள், பல கீர்த்தி பிரபாவங்கள் உள்ளவரே, மன்மதனை ஜயித்தவரும் உமையினுடைய கணவருமாகிய பரமேஸ்வரரை வசப்படுத்தக் கூடிய அழகான அம்புராத்துணி போல முழங்கால்களை உடைய சீதே, ராமனுடைய ஸ்நேகம்தான் பெரியது என்று வனவாசம் சென்ற மஹா உத்தமியே, தர்மவத்ஸலையே, மஹாபாகே, காடுகளில் வசிக்கும் சகல ஜீவராசிகளுக்கும் அவரவர் புண்ணியங்களுக்குத் தகுந்தவாறு தம்மை வலுவில் தந்து தமது ஸ்வரூபத்தை தனக்கு என்று மிச்சப்படுத்திக் கொள்ளாமல் எல்லாவற்றையும் அளித்த வள்ளலே, முக்குணங்களையும் ஒழித்த விசுத்தாத்மாவே, ஆசை ஆகாசத்தைவிடப் பெரியது; அக்ஞானத்திலிருந்து கோபமும், காமமும், சோகமும், அவிவேகமும் பிரவிருத்தியும் உண்டாகிறது; மற்றவருக்கு பரவசத்தன்மையும், மதமும், லோபமும், மாத்ஸர்யமும், ஈர்ஷையும்

---

**குறிப்பு** :—இந்த புஸ்தகத்தில் துளசிதாஸரின் ராமசரிதமானஸ ராமாயணத்தின் மொழிபெயர்ப்பு செய்யுட்களின் நம்பரில் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பிராக்கட் செய்திருக்கிற தியானமும் மொழி பெயர்ப்பில் பிராக்கட்டுகளில் போடப்பட்டிருக்கும் வசனங்களும் என் மனோபாவத்தையும் துளசிதாஸரின் கருத்துக்களையும் விமர்சனம் செய்கின்றன.—**ஆசிரியர்.**

ஏற்படுகிறது. அதனால் பலமற்று அசூயையினால் நிந்தையும், தயையும் பயமும் ஆகிய குணங்கள் பிராணிகளுக்கு பலமான சத்ருக்களால் ஏற்படும் உபத்வரங்களைப் போல க்லேசங்களையும் துக்கங்களையும் உண்டுபண்ணுகின்றன. தர்மத்தின் ஸ்வரூபத்தைத் தெரிந்தவன் ஸத்யத்தையே விரும்பி பெரியோர்களை சேவித்து, போகங்கள் நிலையற்றன என அறிந்து, எல்லாப் பிராணிகளிடத்திலும் ஸ்நேகம் தயை செய்து, லோபத்தை வெறுத்து, காமத்தை அஸங்கல்ப்பத்தினால் அழித்து, சோகம் பயனற்றது என்கிற ஞானத்தை அடைந்து, அதனால் மிக்க அடக்கமுள்ளவனாகி பெரியவர்களுடைய உபதேசப்படி வந்து உன்னை அடைகிறேன். தயாமூர்த்தி, என் இந்திரியங்களை அடக்கும் ப்ரக்ருஹரே, நிக்ரஹரே, உங்கள் கிருபையால் என்னை கடாக்ஷித்து, அம்ருதமயமான குளிர்ந்த திருஷ்டிகளால் என்னை நனைக்கவேண்டும்.]

எவருடைய சிரஸ்ஸில் கங்கையும், மடியில் ஹிமாசல மன்னரின் அரும் பெண்ணாகிய உமாதேவியும் வீற்றிருக்கிறார்களோ, எந்த மஹா புருஷனுடைய நெற்றியில் இரண்டாவது கலையுடன் சந்திரன் ஆபரணமாக விளங்குகிறானோ, எவருடைய கண்டத்தில் ஹாலஹால விஷத்தினால் லக்ஷணத்துடன் அடையாளம் செய்யப் பட்டதினால் நீலலோஹிதர் என்கிற பெயருடன் எவர் விளங்குகிறாரோ, எந்த மஹாபுருஷனுடைய பரந்த வக்ஷஸதலத்தில் நாகராஜனான சேஷ பகவான் அதி ஆனந்தத்துடன் வீற்றிருந்து சகல சராசரங்களையும் அவரவர்களின் கர்மங்களில் பிரவர்த்திக்கச் செய்து அவர்களுக்கு மஹா அனுக்ரஹத்தை செய்கிறானோ, எந்த பரிசுத்தமான தேகத்தில் பஸ்மம் என்கிற ஸகல விபூதிகளடங்கிய சராசரங்கள் விஸ்வத்ருக் என்கிற பெயர் வரும்படி அனைத்தும் தரிக்கப்பட்டிருக்கின்றதோ, அப்பேற்பட்ட தேவ ஸ்ரேஷ்டர்களான பார்வதி பரமேஸ்வரர்களை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். அந்த மஹேஸ்வரர்கள் ஸர்வாதிபர்கள். அவர்களைப் பக்தியுடன் நமஸ்காரம் செய்வதால் பாபக் கூட்டங்கள் விலகி, நாசம் செய்யப்படுகின்றன. அவர்கள் எல்லாவற்றையும் நிக்ரஹம் வ்யக்ரஹம் என்கிற சொற்களால் அடக்கி தங்கள் வசம் செய்து, பக்தர்களைக் காத்து, பரிபாலித்து அனுக்ரஹம் செய்யும் மஹா தயாளு மூர்த்திகள். ஸம்ஹரிக்கப் பட்ட எல்லாவற்றையும் மஹா கருணையினால் பிழைப்பித்து வைத்து மீண்டும் அவரவர்களின் காரியங்களில் பிரவர்த்திக்கச் செய்து அவர்களின் தீங்குகளை சிதற அடித்து கல்யாணங்களை

உண்டுபண்ணும் மங்கள மூர்த்திகளல்லவோ அவர்கள். பொற்புதையல்போல தம்மைத் தாமே வெளிப்படுத்திக்கொண்டு தமது ஐஸ்வர்யங்கள், வீர்யம் ஆகிய குணங்களால் காலம் தேசம் இவைகளுக்குத் தகுந்தாற்போல கடாக்ஷிக்கும் மங்கள மூர்த்திகளான சிவபெருமான் உமை ஆகிய இருவர்களையும் நான் பக்தி வினயத்துடன் நமஸ்கரிக்கிறேன். சந்திரன், குருக்கத்திப்பூப்போல வெண்மை நிறம் படைத்த விசுத்த ஆத்மாவாகிய பகவான் சங்கரர் ஸர்வதா என்னை ரக்ஷிக்கட்டும். (1)

ரகு குலத்தின் ஆனந்த கீர்த்தி உள்ளவரும், மஹா அழகு பெற்ற சீதாராமன் தன்னுடைய திவ்ய முகாரவிந்தத்தினல் என்னைக் குளிரக் கடாக்ஷித்து எனக்கு எப்போதும் மங்களங்களை நினைத்து அளிக்கவும் வேண்டும். அந்த தயாமூர்த்தியின் அழகான முகம் எவ்விதம் ராஜ்யாபிஷேகம் என்கிற சொல்லினல் அதிக மலர்ச்சியையும், வனவாசம் என்கிற கட்டளையினல் வாட்டத்தையும் அடையாது ஒருவிதமான விகாரமுமின்றி மஹா சோபையுடன் விளங்கிற்ருே, (சந்தோஷத்தினல் ஏற்பட்ட மாறுதலோ, துக்கத்தினல் உண்டான மனச்சோர்வோ ஆகிய எவ்வித தோஷங்களும் இல்லாததும்), எப்போதும் இளம் புன்னகையுடன் கூடிய ஸத்யரான ஸ்ரீசீதாராமன் மந்தஸ்மித பார்வையால் என்னை ஆனந்தப் படுத்தவேண்டும். (2)

நீலோத்பலம் போன்ற சியாமள நிறமுள்ளவரும், கோமளமானதும் நளினமான சுப அங்கங்களை உள்ளவரும் என் தாயான சீதாபிராட்டியை இடது கையினல் மிக்க அன்புடன் அணைத்துக்கொண்டு இடது மடியில் உட்காரவைத்துக்கொண்டு என்னை அன்புடன் நோக்கிக்கொண்டும், அழகாகப் பேசிக்கொண்டும் சுந்தரமாக விளங்கும் நாதன்; (ராவணன் கும்பகர்ணன் விராதன் மாரீசன் மூல பல சைன்யங்கள் கரதூஷணுதிகள் ஆகிய) கொடிய விரோதிகளை விளையாட்டாகக் கொன்றவர்; கோதண்டத்தையும் அமோகமான பாணக் கூட்டங்களையும் (சார்ங்கமாகிய கோதண்டத்தைத்) தரித்திருப்பவர்; "ஹே பிரபு, என் இந்திரியங்களை அடக்குவதற்குக் காரணமாகிய ஸாத்வீக அஹங்காரத்தின் திருவடிவமான வில்லை உடைய ஸ்ரீ சீதாராமா, உன்னை நான் என் ரக்ஷணத்திற்காக அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்." (3)

அகண்டமான பிரும்ம ஞானத்தைக் கொடுக்கும் என் குருநாதருடைய சரணகமலங்களில் நமஸ்கரித்து, அந்த தாசி

களை என் ஊர்த்வ புண்டரமாக அணிந்துகொண்டு, இருள் அடைந்த என் மனமாகிய கண்ணுடியை அவருடைய க்ருபா கடாக்ஷத்தினுல் துடைத்து, பதினுன்கு தோஷங்களான அக்ஞானம், முதலிய தோஷங்களை விலக்கி, ஸ்ரீ ரகு குலத்தின் நாயகனை ஸ்ரீ சீதாராமனின் விமலமானதும், உதாரமானதுமான கீர்த்திகளைக் கானம் செய்து, என் முக்குணங்களாகிற தோஷங்கள் நீங்கி, சதுர்வித புருஷார்த்தங்களாகிற தர்மார்த்த காம மோக்ஷம் என்கிற சிறந்த பலன்களை அடையவிக்கும் பரமகிருபாளுவாகிய சீதாராமனை நான் அடிக்கடி நமஸ்கரித்து வேண்டிக் கொள்கிறேன். (4)

எந்த சுபமான வேளையில் ஸ்ரீராமன் சீதாதேவியுடன் அயோத்தி வந்து சேர்ந்தாரோ, ஒவ்வொருநாளும் நித்ய மங்களங்களும் புதுப்புதிதான ஆனந்தங்களும் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. பதினுன்கு லோகங்களிலும், அவைகளின் மேல் விருக்கும் பர்வதங்களின் மேல் சுக்ருதம் என்கிற புண்ய மேகங்கள் சுகத்தையும் ஆனந்தத்தையும் ஸ்ரீராமச்சந்திரன் மூலம் வர்ஷித்துக் கொண்டிருந்தன. (5)

ருத்தி, சித்தி, ஸம்பத்தி, ஜயம் (திருப்தி மேன்மேலும் கிடைத்தல்) ஆகிய உத்தமமான நதிகள் தோன்றி பிரவாகம் பெருகி அயோத்யா ரூபியாகிய ஸமுத்திரத்தில் வந்து சேர்ந்தன. அப்பேற்பட்ட அழகான நகரில் ஸ்திரிபுருஷர்கள் யாவரும் நல்ல ஜாதியில் பிறந்த ரத்ன மணிகள் போலவும், முத்து மணிகளின் ஸமூகச் சேர்க்கைகள் போலவும் அவர்கள் எல்லாவிதத்தாலும் குலத்தாலும், கல்வியாலும், தனத்தாலும், சீலத்தாலும் பவித்திரமாக விளங்கினுர்கள். விலைமதிக்கப்படாத அபூர்வ புருஷர்கள் ; பார்ப்பதற்கும் மிக்க சுந்தரமான தோற்றம், அனுஷ்டானம் ஆகிய சேர்க்கைகள் கொண்டவர்கள். (6)

[தியானம்

ஹே ராமா சீதா, உமாசம்புவின் ஆதார தெய்வமே, எப்போதும் தர்மத்தைச் செய்துகொண்டு எல்லாப் பிராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்துகொண்டிருக்கும் உங்களை நான் நமஸ்கரிக்கிறேன். இந்த உலகத்தில் ஸம்பத்தை உள்ளவன் எல்லோருக்கும் தாதாவாக இருப்பவனும், தவத்தையே பொருளாகக் கொண்ட முனியாகவிருப்பவனும் சமம் என்கிறது ஆச்சர்யமில்லையன்றே? கார்ப்பண்யம் என்கிறது நன்ருக ஆலோசிக்கப்பட்டதல்லவா? கார்ப்பண்யத்தினுல் ஏற்படும் யாகம் தானம் தயை

வேதங்களும் சத்ய வசனமும் அன்றோ? இத்துடன் நன்றாகச் செய்யப்பட்டதுமான தவத்தால் மிக பரிசுத்தத்தை அடையலாம் அல்லவா? எல்லாவற்றிற்கும் மேலாக தீர்த்த ஸ்நானம் செய்வதும் ரொம்ப நல்லதல்லவா? புஷ்கரம், பிரபாஸம், குருக்ஷேத்ரம் மஹாஸரஸ் யாவற்றிலும் அகமர்ஷணம் என்கிற மந்திரத்தை மூன்று தடவைகள் ஜபித்து, ஜலத்தில் மூழ்கினால் அஸ்வமேதத்தின் அவபிருதத்திற்கு ஒப்பானது என்று மனு அல்லவா சொல்லியிருக்கிறார். யயாதியும் சொல்லியிருக்கிறான். பாபத்தை விலக்கி பரிசுத்தமடைந்த பின்பும், சுபத்தை செய்யும் புருஷன் அதிசோபையுடன் விளங்குகிறான். எனக்கு அப்பேற்பட்ட தீர்த்த கட்டங்கள் ஹே ராமா சீதா, நீங்கள்தானே. எல்லாவற்றையும் தானம் செய்து ஸந்யாஸம் என்கிறதை மீண்டும் மனு புகழ்ந்து சொன்னார். அந்த ஸந்யாஸம் என்கிற மனோபாவம் குழந்தைபோல உள்ளம் உடையவனும், உண்மையாகவும், புண்ணியமும் பாபமும் இல்லாதவனும், எல்லாப் பிராணிகளிடத்திலும் உள்ள துக்கமும் ஸந்தோஷமும் இல்லாதவனும், ஹே நாராயணா, காரண வஸ்துவாகிய உன்னை அடைந்த பிறகு, எல்லா விஷயங்களிலும் சம்பந்தம் விட்ட தியாகியாக ஆய்விடுகிறான் அல்லவா? கோபத்தை ஜயித்து, தன்னைத் திருஷ்டாந்தமாக அறிந்து பிறர்களை ஹிம்ஸிக்காமல் ஸ்வகாரியங்களில் முயற்சி உள்ளவனாக இருந்துகொண்டு பெரிய க்ஷேமத்தை அடையவேண்டும். துஷ்டர்களை விலக்கி, பாபத்தை மீண்டும் செய்யாதவனாக, நல்ல வாஸனையுடனும் சுத்தமான பரிசுத்தியுடனும் உங்களை நான் வந்தடைகிறேன். நீங்கள் அதே மனத்துடன் என் மனத்தில் வஸித்து என்னுடன் ஸதா விளையாடவேண்டும்.]

அயோத்தியின் ஐஸ்வர்ய பிரபாவங்கள் யாவையும் விவரிக்கமுடியாதபடி அமோகமாக இருந்தன. அவைகள் பிரும்மாவினால்தானே ஸ்வயமாக மிக்க சிரமப்பட்டு பகவானுடைய திருப்திக்காக செய்தவைகள் போல விளங்கின. அப்பேர்பட்ட மஹத்தான ஐஸ்வர்யங்கள் அயோத்தியை வந்து அடைந்தன. அந்த ஐஸ்வர்யங்களின் நிதிபோல ஸ்ரீராமச்சந்திர திருமுக மண்டலம் விளங்கியது. அதைப் பார்த்துப் பார்த்து, அந்த நகரவாஸிகள் அடைந்த சுகத்திற்கு எல்லையே இல்லை. (7)

அந்த தாய்மார்களும் அவர்களுடன் பாக்யம் செய்த சகிமார்களும் தங்கள் மனரூபியான பில்வமரங்களில் பழங்கள் காய்த்து அவைகள் பழுத்த பின்பு எவ்விதம் ஆனந்தத்தைத் தருமோ,

அதுமாதிரி ஆனந்தத்தை ஸ்ரீசீதாராம க்ருபையால் அடைந்தார்கள். அந்த சீதாராமன் இருவர்களுடைய ஸ்வரூபம், திவ்ய அழகு, ஔதார்ய சௌலப்ய குணங்கள், தர்மத்தில் பற்றுதல் ஆகிய சில குணங்களைக் கண்டு அரசர் தசரதர் அதிக ஆனந்தமடைந்தார். (8)

அவர்கள் யாவருடைய மனதில் ஒரே ஒரு அபிலாஷை தான் இருந்தது. அவர்கள் பெரிய மனமுள்ள மஹாதேவரை நமஸ்கரித்து அடிக்கடி சொல்லிக்கொண்டார்கள். "இந்த உத்தம சீல நடத்தை உள்ள அரசர் தன் வாழ்நாட்களுக்குள் ஸ்ரீராமனை யுவராஜாவாக பண்ணிவிடவேண்டும்," என்று பிரார்த்தனை செய்துகொண்ட வண்ணமாக விருந்தார்கள். (9)

ஒரு சமயம் ரகுகுலத்திலகமான தசரதர் தன் சபையில் வீற்றுக்கொண்டிருந்தார். அந்த சபையில் சகல சுக்ருதங்களின் புண்ய தேஜோ மூர்த்தியாக தசரதர் விளங்கிக்கொண்டிருந்தார். அந்த தர்பாரில் அயோத்யாபுரி வாசிகளால் ஸ்ரீராமச்சந்திரனுடைய புண்ய கீர்த்திகளடங்கிய விஷயங்களைச் சொல்லக் கேட்டு அரசர் புளகாங்கிதமடைந்தார். (10)

அந்த கோஸல மஹாராஜனின் கிருபையை ஸகல அரசர்களும் வேண்டினார்கள். லோகபாலர்கள் அவரை மித்ரராக நேசித்தார்கள். மூன்று உலகங்களிலும் நடந்தது நடக்கிறது நடக்கப்போவது ஆகிய மூன்று காலங்களிலும் ஸ்ரீராமச்சந்திரனைப் பெற்ற மஹா பாக்யவான்தசரதர்போல யாரும் இருக்க முடியாது என்று யாவரும் சொல்லுவார்கள். (11)

சகல மங்களங்களுக்கு மூல புருஷன் ஸ்ரீராமன்தானே. அவனே தசரதருக்குப் பிதா சொல்படி நடக்கும் பிள்ளையாக வந்திருக்கிறான். ஆகையினால் அந்த அரசனின் மகிமைகளைப் பற்றிச் சொல்லும் வார்த்தைகள் எல்லாமே ரொம்ப சிறியவை. அன்றோ? ஒருநாள் யதேச்சையாக அவர் கண்ணாடியில் தன்னைப் பார்த்து தன் மகுடத்தை சரியாக சீரமைத்துக்கொண்டார். (12)

அவர் காதுகளின் ஓரத்தில் வளர்ந்திருக்கும் நரைமயிர்களைக் கண்டார். அதைக் கண்டதும் தனக்கும் வயோதிகம் ஸமீபித்துவிட்டது என்று அவர் நினைத்தார். அதை அறிவித்து அது மீண்டும் அருவருக்கு உபதேசம் செய்ததுபோல, "ஹே ராஜன், ஸ்ரீராமச்சந்திரனை யுவராஜாவாகப் பண்ணி நீ ஏன் உன் வாழ்க்கையின் உயர்ந்த லாபத்தை அடைந்துகொள்ளக் கூடாது," என்று கேட்பது போலவும் அவர் மனத்தில் தோன்றியது. (13)

ஹ்ருதயத்தில் இந்த விசாரம் அவரை அரிக்க ஆரம்பித்தது. நல்ல தினத்தையும் அழகான சமயத்தையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். பிரேமையினுல் அவர் மனம் சரீரம் புளங்காங்கிதமடைந்துகொண்டிருந்தது. ஒருநாள் தன் குல குருவாகிய வஸிஷ்ட பகவானே அழைப்பி வைத்தார். (14)

தசரதர் சொன்ஞர், "முனி நாயகரே, தயவு செய்து கேளும். என் மகன் ஸ்ரீராமன் சர்வ யோக்யனுகிவிட்டான். சேவகர்கள் மந்திரிகள், புரவாஸிகள், என் சத்ருக்கள், மித்ர உதாஸீனர்கள், (15)

எல்லோருக்கும், ஸ்வாமி, தாங்கள் தங்கள் அன்பிற்கு நான் எவ்விதம் பாத்திரமாகவிருக்கிறேனே, அதுமாதிரி அவன் எல்லோருடைய அன்பையும் மனத்தையும் கவர்ந்திருக்கிருன். மனத்துக்கு இனியானுகவிருக்கும் ஸ்ரீராமனே, நான் உங்களுடைய பூர்ணமாக ஆசீர்வாதத்தின் பலனுகக் கருதி மஹா பிரபுவாகிய நாராயணர் என்மீது மஹா கிருபையுடன் அழகாக அர்ச்சாவ தாரம் எடுத்து என் கிருஹத்தில் என்னே ஆனந்தம் செய்வதற்கு சரீரம் எடுத்துவந்து பிறந்திருப்பதுபோலத் தோன்றுகிருன். ஹே ஸ்வாமி, சகல பிராம்மண ஸ்ரேஷ்டர்களும் தங்களே எவ்விதம் ஸ்நேகித்து கிருபையை அடைய விரும்புவார்களோ, அது மாதிரி எல்லோரும் அவனே விரும்புகிருர்கள்." (16)

"எந்த மனுஷ்யர்கள், தங்கள் குருக்களின் பாத சரணங் களில் திருமுடியை வைத்து, அந்த திருமுடியில் அவர்களின் பாத ரேணுக்களேத் தரித்துக்கொண்டு, சதாசிஷ்ய பாவத்துடன் இருக்கிருர்களோ, அந்த புண்யஸ்ரேஷ்டர்கள் சகல விபவங் களடங்கிய ஐஸ்வர்யங்களேயும் அடைகிருர்கள் அல்லவா? அவர்களின் வசம் ஸகல விபவ ஐஸ்வர்யங்களும் எல்லாம் வந்து லயமடைந்து, அவர்களே மஹத்தான குருகிருபா கடாக்ஷம் ஆனந்திக்கச் செய்கிறதல்லவா? இதற்கு பிரத்யக்ஷமான உபமானம் என்னேவிட யார் இருக்க முடியும்? தங்களுடைய பவித்ரமான சரணங்களின் பூஜையின் பலனின் காரணமாகத் தான் எனக்கு எல்லாம் சம்பவித்திருக்கின்றன." (17)

"அவ்விதம் இருந்தபோதிலும், ஹே ஸ்வாமி, எனக்கு ஒரே ஒரு அபிலாஷை இருந்து வருகிறது. ஸ்வாமி, அதையும் தாங்கள் கிருபை கூர்ந்து அனுக்ரஹம் செய்யவேண்டும்," என்று சொன்ஞர். வஸிஷ்ட பகவான் அதி பிரேமையுடனும் அதிவாத்ஸல்யத்துடனும் சொல்லப்பட்ட வசனங்களேக் கேட்டு

பிரஸன்ன முகத்துடன் பதில் சொன்னர். "ஹே ராஜன் என்ன அபிலாஷை இருக்கிறது? அதை ஆக்ஞை செய்" என்ருர். (18)

[தியானம்

ஹே சீதாராமா, என் மனதில் தாண்டவமாடும் ஆண்டவனே, நடராஜ மூர்த்தியே, தம் பக்தர்களுக்கு தவறுதல் நடவாமால் எது யுக்தமோ அதைச் செய்பவரே, பிரமாணங்களுக்கு உதவும் நியாயமாக விருப்பவரே, வித்யா ஸ்வரூபமாகவுள்ள நந்தகி என்னும் கத்தியை கையில் வைத்திருப்பவரே, தனக்குக் கிடைத்த பெரும் நிதியான ராஜ்யலக்ஷ்மியாகிய சீதையின் வயிற்றில் சிசுவைக் காப்பதுபோல வெகு ஜாக்ரதையாக பக்தர்களைக் காக்கும் ஶ்ரீ கர்ப்பரே, மஹேஸ்வரராலும் மஹரிஷிகளாலும் கடாக்ஷிக்கப்பட்ட மனு எவ்விதம் பூமியையும், தர்மத்தை உள்ளிற்கொண்ட கத்தியால் ப்ரஜைகளை ரக்ஷித்தாரோ அதுபோல உன் சீதையாகிற ராஜலக்ஷ்மியையும் பக்தர்களையும் கோதண்டம் என்னும் தனுஸ்ஸால் ரக்ஷித்த சார்ங்க தன்வா, பெரிதும் சிறியதுமான பிரயோஜனத்தைக் காரணமாக வைத்துக்கொண்டு தர்மவரம்பை மீறிச்சென்ற பிரஜைகள் தர்மப்படிதண்டத்தை அவரவர்கள் குற்றத்துக்கு ஏற்க, விதித்து, ரக்ஷித்து பரிபாலிக்கும் மஹாதர்மராஜனே, கடும் சொல்லால் அடக்குவதான தண்டம், மிருதுவாகச் சொல்லி என் போன்ற பக்தர்களை மயக்க வைக்கும் தண்டமும், சீதையைப் போல உன்னை ஆஸ்ரயித்தவர்களுக்கு கண்களாகிற சிருங்கார விலாஸங்களையும், பரதன், கணேசர், ஆஞ்சநேயர் போன்ற மஹா பக்தர்களுக்கு உன் ஸௌலப்ய குண விசேஷங்களாலும் உனக்கே ஏற்பட்ட தர்ம பரிபாலனத்தின் லக்ஷணங்கள் அல்லவா? அதே தண்ட பரிபாலனம் தர்மாரண்யத்தில் வசிக்கும் முனிகணங்களுக்கு அவர்களுடைய ஆத்ம உஜ்ஜீவனத்திற்கு ராவண ராக்ஷஸாதிகளை வதைத்தல் ஆகிற விஜயதண்ட பரிபாலனமாக ஏற்பட்டதல்லவா? அப்பேற்பட்ட கோதண்டராமா என்னைக் காத்து ரக்ஷிக்கமாட்டாயா]?

"ஹே ராஜாவே, உன்னுடைய நாமமும் சுந்தரமான புகழும் சம்பூர்ண மனோரதங்களையும் பூர்த்தி பண்ணக்கூடிய சக்தி வாய்ந்த வீர்யமுடையவை. ராஜாக்களுள் மிகச்சிறந்த மஹேஸ்வரரே, உம்முடைய அபிலாஷைக்கு முன்பே பலன் என்கிற கார்யங்களின் சுபமான முடிவு முன்னதாகவே பழுத்து

உம்முடைய சந்தோஷத்திற்காகக் காத்துக் கிடக்கின்றதே,'' என்று சொன்னார். (19)

தன் முன்பு, பிரத்யக்ஷமாக குருவான வஸிஷ்ட பகவானின் திருமுக மண்டலத்தின் பிரசன்னமான காரணத்தால் காரியம் சித்தியாகிவிட்டது என்கிற எண்ணத்தால் மஹாராஜா தசரதர் அதி ஸந்தோஷமடைந்தார். அதனால் அதிகோமளமான வாணியுடன் பேசலானார். "ஹே குருமஹராஜ், என் நாதரே, என் மைந்தன் ஸ்ரீராமச்சந்திரனை யுவராஜனாக நியமிக்க ஆசீர்வாதம் தாரும். மஹாக்ருபை கூர்ந்து எனக்கு ஆக்ஞை தந்து அதை நடத்தித் தரவேண்டும்.'' (20)

"என் வாழ்க்கையின் அதி உச்சமான ஆனந்த உத்ஸாஹம் உங்கள் அனுக்ரஹத்தால் ஏற்படட்டும். அந்த பேருபகாரத்தால் சகல லோகங்களும் அவர்களின் லோசனங்களை ஸ்ரீராமனுக்கு ஏற்பட்ட மகிமையினால் உண்டாக்கப்படும் ஆனந்தங்களால் நிரப்பி, பூர்த்தி செய்யப்பட்டு சுகமடையட்டும். ஹே பிரபோ, உம்முடைய பிரசாதத்தால் பகவான் சிவன் என்னிடம் பரம ப்ரீதியாகயிருக்கிறார். அவருடைய ஸுபிரசாதத்தால் சகல மங்கள காரியங்களும் இனிதாக நடைபெற்றன. எனக்கு தற்போது ஒரே ஒரு இச்சைதானிருக்கிறது. இந்த ஆசையை நிறைவேற்றி வைக்கவேண்டும்!'' (21)

"இந்த ஈர்ஷை ஸ்வாமி, பூர்ணமான பின்பு வேறு ஒரு ஆசையுமில்லாத பூர்ணகாமனாக நான் இந்த சரீரத்தை வைத்துக் கொள்வதிலோ அல்லது மறைத்துக் கொள்வதிலோ, பராங்முகனாக இருப்பேன். பின்னால் இதைச் செய்யவில்லையே என்று எனக்கு பச்சாதாபங்கள் ஏற்படக்கூடாது.'' என்று அரசர் விக்ஞாபனம் செய்தார். வஸிஷ்ட பகவான் தசரதரின் மங்கள ஹ்ருதயத்தையும் சகலருக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் வசனங்களையும் மனத்தில் மிக்க ஆனந்தத்துடன் கேட்டார். (22)

வஸிஷ்டர் சொல்ல ஆரம்பித்தார். "ஹே ராஜன், கேளும். எந்த புருஷனுடைய விரோதத்தினால் சகல சத்ருக்களும் அழிந்து பச்சாதாபப்படுகிறார்களோ, எந்த மஹா புருஷனை சதா பஜிக்காமல் சரீரத்தின் மூன்றுவித தாபங்களும் அடங்கி குளிர்ச்சி அடையாதோ, அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த ஸ்வாமி, ஸர்வலோகேஸ்வரர் ஸ்ரீராமன் உன்னுடைய புனிதமான பிரேமைக்கு கட்டுப்பட்டு, அபார வாத்ஸல்யத்தால் உனக்குச் சொன்னசொல் கேட்கும் சத்புத்ரனாக அவதரித்திருக்கிறானே, அப்பேற்பட்ட அவன் உனக்கு இஷ்டப்படமாட்டானா?'' (23)

"ஹே ராஜன், ஏன் காலத்தை வீணுக்குகிருய்? சுபமானதை சீக்கிரம் செய். எல்லாச் சாமக்ரியைகளையும் தயார் செய். பரம மங்கள மூர்த்தியான ஸ்ரீராமனுக்கு சகல தினங்களும் சுபமானவைகள். ஸ்ரீராமச்சந்திரனை யுவராஜாவாக ஏற்றுக் கொள்ளும் நாளும் சுபநாளாகிவிடுமே." (24)

மிக்க சந்தோஷமடைந்த அரசர் தன் அரண்மனைக்குச் சென்ருர். தன் சேவகர்களையும் மந்திரியான சுமிந்தரரையும் அழைப்பித்தார். அவர்களும் "ஜயஜீவ, ஜயவிஜயீபவ" என்கிற மங்கள வசனங்களுடன் அரசனை ஆசீர்வதித்துக் கொண்டு, வந்து சேர்த்தார்கள். அரசர் தன் மனத்திலுள்ள விஷயங்களை அவர்களுக்கு எடுத்துச் சொன்னுர். (25)

அவர் மேலும் வேண்டிக்கொண்டார். "என்னுடைய ஆசை உங்கள் எல்லோருக்கும் சம்மதமாக இருக்கும் பக்ஷத்தில், நீங்கள் ஹ்ருதயத்தில் என்போல சந்தோஷத்துடன் ஸ்ரீராமச் சந்திரனுக்கு ராஜதிலகத்தை அணிவித்து என்னையும் அவனையும் சிறப்பி வையுங்கள்." (26)

ராஜாவினுடைய பிரியமான வார்த்தைகளைக் கேட்ட மந்திரி பரிஜனங்கள் அதிக ஆனந்தமடைந்தார்கள். அவர்களின் மனோரதமாகிற செடியின் அடியில் இருக்கும் வேருக்கு நல்ல தண்ணீர் வார்த்தார்போல விருந்தது. மந்திரி பிரமுகர்கள் கைகளைக் கூப்பி "ஹே ஜகத்பதி, மஹாராஜாவே, நீங்களும் உங்களும் புத்ரனும் கோடிக்கணக்கான வர்ஷங்கள் வாழ வேண்டும்." (27)

"ஸ்வாமி, தாங்கள் சகல ஜகத்திற்கும் மங்களங்களை அளிக்கக்கூடியதும், மிக்க பலமானதும், ஆதாரமாயுள்ளதான பெரிய விஷயத்தை நினைத்திருக்கிறீர். ஹே, நாதா, இதை சீக்கிரமாகச் செய்யுங்கள். நேரத்தை வீணுக்க வேண்டாம்" என்ருர்கள். மந்திரிகளின் அனுமதியாகிற சுந்தர வசனங்களைக் கேட்ட அரசர் ஒரு இளம் வில்வக்கொடி அழகான ஆதாரத்தை அடைந்து தழுவி, வளருவதுபோல மிக்க சந்தோஷத்தை அடைந்தார். (28)

அரசர் உத்திரவிட்டார். "முனிராஜரான வஸிஷ்டர் ராமனுடைய ராஜ்யாபிஷேகத்திற்காக என்ன ஆக்ஞைகள் செய்கிருரோ, அவைகளை என் ஆக்ஞையாகப் பாவித்து சீக்கிரமாக நிறைவேற்றி வைக்கவேண்டும்." (29)

[தியானம்

ஹே நாகசயனு, லக்ஷ்மணனுல் சேவிக்கப்பட்ட சீதாராமா, நீ ஸகல தேவர்களிலும் ஸ்ரேஷ்டர் என்று இருந்தாலும், சரளமானஸ்வபாவம் உள்ளவரென்று எல்லோரும் சொல்லு கிருர்கள். தும்புரு நாரத மஹரிஷிகள் உன் சுகுண விலாசங்களே கீர்த்தனம் செய்துகொண்டு இடைவிடாத தபஸ்ஸுடன் உன்னே சேவிக்கிருர்கள். அம்பரீஷன் தியாகராஜர் போன்ற மஹா பாகவதர்கள் உன் உத்தம நாமங்களே சுகந்தமான தாமரை மல்லிகை துளசி பில்வங்களாக அர்ச்சித்து, உன் மரகதமணி ஸந்நிபமான தேகத்தைப் பார்த்து ஆனந்தமடைகிருர்கள். வேதமூர்த்தியான கருடன் உன் பாதங்களின் நகங்களின் அழகை சந்திரனுடைய குளிர்ந்த கிரணங்கள் மாதிரி அனுபவித்துக்கொண்டு அந்த நகங்களால் ஏற்பட்ட அடையாள தளங்களே தன் மார்பில் சாத்திக்கொண்டு, முத்துமாலேகளே அணிவதுபோல அணிந்துகொண்டிருக்கிருர். ஹே ஸ்ரீகாந்தா, சீதாராமரே, நீரும் சீதையும் தங்க ஊஞ்சலின்மேல் ஏறி வீற்றுக் கொண்டு ஆடும்போது காதுகளில் தொங்கும் மயிர்ச் சுருள்களும், குண்டலங்களும் என்னேக் காமிக்கச்செய்யும் பளபளப்பான கன்னங்களும், லாலியில் மேலேயும் கீழேயும் அசைபவைகளாக என் மனத்தை ஆனந்தப்படுகின்றன. நாரதர், தியாகராஜருக்கு தர்சனம் கொடுத்த சீதாராமரே, கிருபையுடன் என் ஆசையாகிற உமது சுப தரிசனத்தை, ரிஷிகளான விஸ்வா மித்திரர், பிரஹஸ்பதி, சுக்ராசாரியார், நாரத,ர் மார்க்கண் டேயர் சதா துதித்து ஆனந்தப்படும் உனது தர்சனத்தை எப்போது காண்பிப்பாய்? ஹே ஸ்வேத தீபத்தில் மிகப் பிரகாசமாக வீற்றிருக்கும் நாராயணு, என்னிடம் கிருபையுடன் இரும்.]

வஸிஷ்டர் மஹா ஆனந்தமடைந்து மிருதுவான குரலில் சொல்ல ஆரம்பித்தார். '' சகல ஸ்ரேஷ்டமான புண்ய தீர்த்தங் களேக்கொண்டுவாருங்கள். சிறந்த ஒஷதிகளேயும், கந்தம் புஷ்பம் பழங்கள், துளசி, பில்வம், தாமரை, பூக்கள் ஆகியவற்றைக் கொண்டு வாருங்கள். இவைகளேத்தவிர மஞ்சள் குங்குமம், மங் கள அக்ஷதைகள், கோரோசனே, கஸ்தூரி, சந்தனம், இன்னும் அநேகவிதமான மங்களமான வாசனேத் திரவியங்களேக்கொண்டு வாருங்கள்.'' (30)

சாமரங்கள், மான் புலித்தோல், நாளு பிரகாரமாக அழகிய பட்டு வஸ்திரங்கள், கணக்கற்ற கம்பளங்கள், பட்டு வஸ்திரங்கள்,

நானுவிதமான ரத்னமணிகள் இன்னும் அநேக மங்கள வஸ்துக்கள் ஜகத்தில் ராஜ்யாபிஷேகத்திற்காகத் தயாரிக்கப்படும் சாமக்கிரியைகள், அவைகள் எல்லாவற்றையும் வஸிஷ்டர் கொண்டு வரும்படி உத்திரவு இட்டார். (31)

வேதங்களில் ரிஷிகளால் விதித்திருக்கிறபடி ஒவ்வொரு விதியையும் விபரமாக எடுத்து உரைத்து, வஸிஷ்டர் சொல்ல ஆரம்பித்தார். "நகரத்தில் அநேக மண்டபங்களைக் கட்டுங்கள். நகரத்தின் தெருக்களில் பழங்கள் சகிதம் மாமரங்கள், பாக்கு மரங்கள், வாழை மரங்கள் ஒவ்வொரு இடங்களிலும் வைத்து அலங்கரியுங்கள்." (32)

"அழகான மணித் தோரணங்களால் மனோஹரமாக நகரத்தின் வாசல்களையும் கடைத்தெருவுகளையும் அலங்காரம் செய்யுங்கள். ஸ்ரீ கணேச பகவானுக்கும் குரு மஹாராஜர்களுக்கும், குல தெய்வமான ஸ்ரீ ரங்கநாதருக்கு ஐந்து வேளை பூஜை செய்யுங்கள். சகல நியமங்களுடன் பூதேவர்களான பிராம்மணர்களுக்கு பூஜை செய்யுங்கள்." (33)

"த்வஜங்கள், கொடிகள், தோரணங்கள், மங்கள கலசங்கள், குதிரைகள், ரதங்கள், யானைகள், இவைகளை எல்லாம் அலங்கரித்து தயார் செய்யுங்கள்." முனிஸ்ரேஷ்டரான வஸிஸ்டருடைய வசனங்களை சிரம்மேல் கொண்டு எல்லோரும் அவர் அவர்கள் செய்யவேண்டிய வேலைகளைச் செய்தார்கள். (34)

வஸிஷ்டர் யார் யாருக்கு என்ன கட்டளைகள் யிட்டாரோ, அவைகள் எல்லாவற்றையும் முன்னதாகவே ஏற்பாடுசெய்து வைத்து எல்லோரும் காத்துக்கொண்டிருந்தார்கள். அரசர் பிராம்மணர்களையும், சாது ஜனங்களையும், தேவதைகளையும் பூஜை செய்து ஸ்ரீ ராமச்சந்திரனுக்காகச் செய்யவேண்டிய மற்ற மங்கள காரியங்களையும் செய்துமுடித்தார். (35)

ஸ்ரீ ராமனுடைய யுவராஜ்ய பட்டாபிஷேக சமாசாரத்தைக் கேட்ட சுகிருத்துக்களும் அயோத்தியில் வசிக்கும் ஜனங்களும் அதிஆனந்தத்துடன் மங்கள பேரிகைகளையும், சங்கீத வாத்யங்களையும் வாசித்தார்கள். ஸ்ரீ ராமச்சந்திரனுடைய சரீரத்திலும், சீதைக்கும், சுபத்தை அறிவிக்கும் மங்கள சகுனங்கள் ஏற்பட்டன. அவர்களுடைய திவ்யமான அங்கங்கள் மங்களங்களைத் தரும்படி துடித்துக் கொண்டிருந்தன. (36)

அதிபுளகாங்கித சரீரமனத்துடன் இருவர்களும் பரஸ்பரம் பேசிக்கொண்டார்கள். "இந்த மங்கள சகுனங்கள் நம்மிருவரை விட்டுப்பிரிந்திருக்கும் பரதனுடைய வருதலை சூசிபிக்கின்றன.

(பரதன் கேகய தேசத்துக்கு தன் தாய் மாமனைப் பார்க்கச் சென்றிருந்தான். சத்ருக்கனனும் அவனுடன் சென்றிருந்தான்.) அவர்கள் சென்று ரொம்ப நாட்கள் ஆகிவிட்டன. அந்த சுபமான பந்து தர்சனத்தைக் காண என் மனம் ஆவலுடன் துடிக்கிறது. அந்த மஹாபுருஷன் ஸகுணவான் அல்லவோ ? இந்த சுபமான சகுனங்கள் அவனுடன் மீண்டும் திரும்பிச் சேர்தலுக்காக நம்பிக்கை உண்டு பண்ணுகின்றன.'' (37)

'' நம் இரண்டு பேருக்கும் இந்த ஜகத்தில் பரதனைவிட அதிகமாகப் பிரியமுள்ளவன் யார் இருக்கமுடியும் ? இந்த அழகான சகுனங்கள் சுபபந்து தர்சனத்தைத் தெரிவிக்கின்றன. வேறு ஒன்றுமில்லை.'' இவ்விதமாக ஸ்ரீ சீதாராமச்சந்திரன் பரதனைப் பற்றி இடைவிடாமல் இரவும் பகலுமாக பேசியவண்ணமாகவும், சிந்தியவண்ணமாகவுமிருந்தார்கள். ஆமையானது தன் முட்டைகளை மணலில் ஈன்று, அது தண்ணீரில் மூழ்கிக்கொண்டு ஹ்ருதயத்தில் தன் குஞ்சுகளையே பற்றி பிரியமாக நினைத்துக்கொண்டிருக்கும். அதுமாதிரி சீதாராம ஹ்ருதயத்தில் பரதன் சதா வசித்துக்கொண்டிருந்தான். (38)

இந்த சமயம் பரம மங்களத்தைத் தரும் சமாசாரத்தை அரண்மனையில் உள்ளவர்கள் கேட்டார்கள். அதிக ஆனந்தமடைந்தார்கள். எவ்விதம் சந்திரனுடைய வளரும் கலைகளைப் கண்டு சமுத்திரமானது அலைகளுடன் உத்ஸாஹ ஆனந்த விலாசங்களை அடைந்து சுசோபிதமாக விளங்குகிறதோ, அதுபோல அரண்மனையில் உள்ளவர்கள் நாளுக்கு நாள் அதிகரித்த உத்ஸாஹ ஆனந்தத்துடன் விளங்கினர்கள். (39)

எந்த ஸ்திரி புருஷர்கள் இந்த சமாசாரத்தை முதன் முதலில் பிறருக்குச் சொன்னர்களோ, அவர்களுக்கு அநேக விதமான ஆபரணங்களும் பட்டு வஸ்திரங்களும் வெகுமதியாகக் கிடைத்தன. ராணிமார்களின் சரீர ஆனந்தம் பிரேமையினல் அதிகரிக்கப்பட்டு அவர்களுடைய மனம் அதிக சந்தோஷத்தினல் சீதளமாக ஆகிவிட்டது. சகலரும் அதிக ஆசையுடன் சுபமான தினத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களே ஸ்வயமாக மங்கள கலசங்கள் முதலியவற்றைத் தயாரித்தார்கள். (40)

சுமித்திராதேவி ரத்னமணிகளாலும் பலவித மணிகளாலும் நூதனமாகவும் அலங்கரிக்கப்பட்டதும் மனோஹரமான கோலங்களைப்போட்டாள். மஹா ஆனந்தத்தில் மூழ்கின ஸ்ரீ ராமச்சந்திரனுடைய மாதா, மஹா பாக்யவதியான கௌசல்யா தேவி, பிராம்

மணர்களை அழைத்து, பலவிதமான தானங்களைச் செய்தாள். (41)

அந்த மஹாபுண்யவதி கிராம தேவதைக்கும் குலதேவதை யான ரங்கநாயகி சமேத ரங்கநாதனுக்கும் பூஜை செய்தாள். நாகங்களுக்கும் பால் வார்த்தாள். இதர தேவதைகளையும் பூஜை செய்து காரியம் சித்தி ஆன பின்பு மீண்டும் பூஜை செய்வதாக வேண்டிக்கொண்டாள். "என் பிள்ளையான ஸ்ரீராமச்சந்திரனுக்கு சகல மங்களங்களும் ஏற்படட்டும். நீங்கள் தயைசெய்து எனக்கு வரதானம் செய்யுங்கள்," என்று எல்லோரையும் வேண்டிக் கொண்டாள். (42)

கோகிலங்களையும்விட மதுரமான குரல் உள்ளவர்களும், சந்திரனைப்போல அழகான முகமண்டலம் உள்ளவர்களும், பெண்மானின் கண்களைப்போல அழகான சஞ்சலமான கண் களை உடைய ஸ்திரி ரத்னங்கள் மங்கள கீதங்களைப் பாடிக் கொண்டிருந்தார்கள். (43)

ஸ்ரீ ராமச்சந்திரனின் யுவராஜ்யாபிஷேகம் என்கிற சமா சாரத்தைக் கேட்டு சகல ஸ்திரி புருஷர்களும் தங்கள் ஹ்ருதயங் களில் சந்தோஷப்பட்டு, விதாதாவாகிய பிரும்மா அவர்களிடம் கருணையுடனும் வாத்ஸல்யத்துடனும் இருக்கிருர் என்று நினைத் துக்கொண்டு சகல மங்கள கார்யங்களைச் செய்ய ஆரம்பித்தார் கள். (44)

அந்த சமயம் வஸிஷ்டர் அரசரால் அழைக்கப்பட்டார். ராம னுக்குப் பலவிதமாக உபதேசம் செய்வதற்காக அவரை ஸ்ரீ ராமனு டைய கிரஹத்திற்கு அனுப்பிவைத்தார். குருவான வஸிஷ்டரு டைய ஆகமனத்தைக் கேட்டு, ஸ்ரீ ராமச்சந்திரன் அவரை வர வேற்று வாசற்படியின் அருகில் அவரை நமஸ்கரித்து கை கட்டிக் கொண்டு தாஸ்ய பாவனையுடன் இருந்தார். (45)

மிக்க மரியாதையுடன் அர்க்யம் முதலியவைகளைக் கொடுத்து பதினுறுஉபசாரங்களைச் செய்து (ஆசனம், பாத்யம், அர்க்கியம், ஆசமனியம், ஸ்நானம், கந்தம், வஸ்திரம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம், ஆசமனியம், தாம்பூலம், தக்ஷிணை, பிர தக்ஷணம், நீராஞ்ஜனம், மங்கள ஆரத்தி ஆகியவைகளை) அவரை வெகுவாக சம்மானித்தார். அதன் பிறகு சீதையுடன் அவருடைய பாதசரணங்களில் சுக்ருத பிரணமம் செய்து, கமல புஷ்பங் களுக்குச் சமமாக அழகுடன் விளங்கும் தன் இருகரங்களையும் அஞ்சலி செய்துகொண்டு ஸ்ரீ ராமன் மிருதுவான குரலில் சொல்ல ஆரம்பித்தார். (46)

[தியானம்

ஹே சீதாராமா, வஸிஷ்டர் விஸ்வாமித்திர மஹரிஷிகளாலும் சுக்ர பிரஹஸ்பதிகளாலும் ஆராதிக்கப்பட்டவரே, சகலருக்கும் மங்களத்தை அனுக்கிரஹிப்பவரே, தியாகராஜரையும், துளசி தாஸரையும் என்னையும் விரஜா மார்க்கத்தில் அழைத்துச் செல்லுபவரே, மோக்ஷத்தை அடையவிரும்பும் பெரும் அறிஞர்கள் சொல்கிறபடி நானும் அவலம்பித்து உன்னை, அந்த பதத்தை எனக்கு மஹா கருணையுடன் கொடுக்கும் வள்ளல் என்று நினைத்து நான் உங்களுடைய மங்கள பாதங்களை சரண் அடைகிறேன்.]

"ஸ்வாமி, சேவகனாகிய என்னுடைய கிரஹத்திற்கு தாங்கள் எழுந்தருளி வந்திருப்பது எனக்கும் சீதைக்கும் பரம மங்களங்களைக் கொடுப்பதற்காகவும், எங்களுடைய அமங்களங்களை நாசம் செய்வதற்காகவும் போலத்தோன்றுகிறது. ஹே நாதா, இது உங்கள் பரம காருண்யத்தால் ஏற்பட்டது. இருந்தாலும் பிரேமை நிறைந்த உங்கள் தாஸனான என்னை நீங்கள் அழைத்து வரச் சொல்வதுதான் மஹா உசிதம். அதுதான் நீதி." (47)

"ஸ்வாமி, ஆனால் தாங்கள் ஆசார்ய பிரபுத்வத்தை திரஸ்கரித்து அதிஸ்நேகத்துடன் ஸ்வயமாகவே நான் பிரார்த்திக்காமல் என் கிருஹத்திற்கு சாக்ஷாத்கரித்திருப்பது எங்களுக்கு பரம பவித்திரமானது. ஹே கோஸாயி, உத்தமமான மஹரிஷியே, நான் எதைச் செய்யவேண்டும் என்று ஆக்ஞை செய்யும். ஸ்வாமியாகிய உங்களுக்கு நான் தாஸன். தங்களுக்குச் சேவை செய்வதால்தான் நான் பரம லாபத்தை அடைவேன்." (48)

ஸ்ரீ ராமச்சந்திரனுடைய மிகப்புகழ் பெற்ற வசனங்கள், மிக்க வினயத்துடனும், பிரேமையுடனும் மதுரமான குரலில் சொல்லப்பட்டதைக்கேட்ட வஸிஷ்டர் ஸ்ரீ ரகுநாதனை பலவிதமாக புகழ்ந்தார். "ஹே ராம் உனக்கும் சீதைக்கும் பரம மங்களங்கள் ஏற்படட்டும். ஏன் இவ்விதமாகச் சொல்லுகிறாய்? நீ தானே சூர்ய வம்சத்தின் முகுட மணியாகவும் சிறந்த ஆபரணமாகவும் விளங்குகிறாய்" (49)

மஹரிஷி வஸிஷ்டர், பகவான் முன்னிலையில் அவருடைய குணசீல சௌலப்ய ஔதார்ய குணவிலாஸங்களை அதிகமாகப் புகழ்ந்து, அதிக ஆனந்தமடைந்தவராகி, பிரேமையுடன் சொல்ல ஆரம்பித்தார். "ஹே ராம், அரசர் தசரதர் உனக்கு ராஜ்யாபிஷேகம் செய்வித்து, மகிழப் பார்க்கிறார், எல்லா சாமக்ரியைகளையும்

தயார் செய்துவிட்டார். உனக்கு யுவராஜ பட்டத்தைக் கொடுக்க விரும்புகிருர்.'' (50)

"இதனுல், ராமா, இன்று நீ உபவாஸம் ஹவனம் இன்னும் விதி பூர்வமாகச் செய்ய வேண்டிய கர்மாக்களை செய்ய ஆரம்பி. இவைகளினுல் விதாதர த்ருப்தி அடைந்து அவர் இந்த யுவராஜ்ய பட்டாபிஷேகத்தை இனிதாகப் பூர்த்தி செய்யட்டும்'' என்று சொன்னுர். அவைகளைச் சொன்ன பின்பு, வஸிஷ்டர் தசரதரிடம் சென்று எல்லாவற்றையும் சொன்னுர். ஆனுல் ஸ்ரீ ராமச்சந்திரன் வேறு விதமாக ஹ்ருதயத்தில் எண்ண ஆரம்பித்தார். சீதையிடம் அவர் பேசலானுர். (51)

[தியானம்

ஹே சீதாராமா, சாகேத நிவாஸா, லோகாவனசதுரா, ஸரஸகுண அப்ரமேயா, ஸரஸி ஜாஸனு, ஸநந்தன வந்தித பாதாம்புஜா, சீதா மனோஹரா, இந்திர நீலக்கல்போல ஆக்ருதி, தொண்டை, வர்ணம், தேஜஸ் உடைய ராமா, தயாசிந்து, ஸ்ரீபதி, ஸார்வபௌமா, அகில ஜன ஆதாரா, ஹே சீதாராமா, உன் பாதங்களே எனக்கு கதி. உன் பக்தியே என் ஸ்வாசம். உன் நினைவே என் பிராணன். உன் சரித்திரமே எனக்கு ஆகாரம். உன் சேர்க்கையே என் ஐஸ்வர்யம். உன்னைப் பற்றி கற்பதே என் ஞானம். உன் பக்த கோடிகளே என் ஸ்நேகிதர்கள். உன் அன்பே என் ராஜ்யலக்ஷ்மி, உனது உதாரஹ்ருதயமே என் புத்ரன், உன் செய்கையே என் புத்ரி, உன் மனமே என் பித்ருக்கள், உன் லாவண்யமே என் மாத்ருக்கள், உன் விபூதிகளே என் சதாசார அனுஷ்டானங்கள். ஹே சீதா ராமா, த்யாகராஜஹ்ருதய சாகேத ராமா, என்னை அனுக்ரஹிக்க வேண்டும். உன் வேஷங்களைப் பாராமல் கருணை மேலிட்டு மாயா மானைத் தேடிச் சென்ற உன் பாத பங்கஜங்களை எனக்கு கொடுக்க வேண்டும்.]

"சீதே, இந்த என் வாழ்க்கையில் பரதன் போன்ற சகோதரர்களுடன் நன்ருய் ஜன்மம் எடுத்தேன். சாப்பாடு, தூக்கம் சயனம், கேலி விளையாட்டுக்கள், காது குத்தல், யக்ஞோப வீதம், கல்யாணம் போன்ற சடங்குகளும் ஒன்ருகவே எல்லோருக்கும் நடந்தன.'' (52)

இப்பேற்பட்ட நிர்மலமான ரகுவம்ச வாழ்க்கையில் எனக்கு மாத்திரம் ராஜ்யாபிஷேகம், மற்றவர்களுக்கு இல்லை என்கிற விஷயம் அனுசிதமாக விருக்கிறது'' பகவான் துளசி தாஸர் சொல்லுகிருர். "என் பிரபு ரொம்ப வாத்ஸல்யக்காரர். அதிக

பிரேமையும் பச்சாதாபமும் கார்ப்பண்யமும் கொண்டவர். தன் பக்தர்களிடம் அதிக அன்பு செலுத்தி, அவர்களின் தோஷங் களைப் போக்கு கிறவர்.'' (53)

அந்த சமயத்தில் மஹா ஆனந்தத்துடன் லக்ஷ்மணன் அதித் பிரேமையுடன் ஓடிவந்தான். ரகு குலத்தின் கீர்த்தியான குமுத புஷ்பத்தை பூர்ணமாக விகஸிக்கும் சந்திரனைப் போலவிருக்கும் ஸ்ரீ ராமன் அவனை வரவேற்று, தன் பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக் கொண்டார். அவனைப் பேச விட்டார். (54)

'' அநேக விதங்களான சங்கீத நாதங்கள், பேரிகைகள் முழங்குகின்றன. அயோத்யா நகரின் அதிசய ஆனந்தங்களை எடுத்துச் சொல்வது அசாத்யமாகயிருக்கிறது. சகல அயோத்யா வாஸிகளும் பரதனுடைய ஆகமனதை எதிர் பார்த்துக் கொண்டி ருக்கிறார்கள். அவன் வந்த பின்பு ஸ்ரீ ராமச்சந்திரனுடைய ராஜ்யாபிஷேகம் ஏற்பட்டு நம் நேத்ரங்களை ஆனந்தப் படுத்தப் போகிறோம்.'' (55)

'' கடைத் தெருக்கள், ராஸ்தாக்கள், வீடு மாளிகைகள், சந்து கள், சதுர வட்டங்கள் எங்கு எங்கு ஸ்திரி புருஷர்கள் சம்பாஷிக் கிறார்களோ, அங்கெல்லாம் ஸ்வாமி, உங்களுடைய விஷயமாக விருக்கிறது. நாளைக்கு நல்ல தினம். சுபலக்னம், முகூர்த்தநாள். அன்று விதாதா நம் ஆசை மனோரதங்களைப் பூர்த்தி பண்ணுவாரா ?'' (56)

'' கனக சிம்மாஸனத்தில் எங்கள் தெய்வமாகிய ஸ்ரீ ராமச் சந்திரன் சீதையுடன் அழகாக அமர்ந்து விராஜமாகும் நாளன்றோ எங்கள் மன இஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் நாள்'' இன்னும் சில பேர்களை சொல்லுகிறார்கள். '' இது சீக்கிரம் நடந்து விட வேண்டும். இல்லாத போனால் ஏதாவது தேவகட்டளையினால் விக்னங்கள் ஏற்படாமல் இருக்க வேண்டும்.'' (57)

தேவதைகளுக்கு அயோத்யா புரியின் கோலாகல விசேஷங் கள் விசேஷமாக ஆனந்தத்தைக் கொடுக்கவில்லை. நல்ல பூரணி மாவின் வெண்ணிலா திருடனுக்கு எவ்விதம் பிடிக்காதோ அது மாதிரி அவர்களுக்குத் தோன்றியது. தேவதைகள் எல்லோரும் தேவி சாரதாவை அழைத்து மிக்க வினயத்துடன் அவளை உப சரித்து, அவள் கால்களைப் பிடித்து, தண்டனிட்டு வேண்டிக் கொண்டார்கள். (58)

அவர்கள் சொன்னார்கள் '' ஹே மாதா, எங்கள் கஷ்டங்கள் உனக்குத் தெரியும். தேவி தயவு செய். ஏதாவது உபாயத்தால் ஸ்ரீ ராமச்சந்திரன் ராஜ்யத்தை தியாகம் செய்து விட்டு வனம்

செல்லும்படி செய்து, அவரைப் பூலோகத்தில் தேவ காரியத்தைச் செய்வித்து, சித்திக்கும்படி ஏற்பாடு பண்ணு.'' (59)

தேவதைகளின் வார்த்தைகளைக் கேட்ட சரஸ்வதி தேவி ஆச்சர்யத்துடன் வருத்தம் மேலிட்டு பச்சாதாபப்பட்டாள். ''ஹே நாதா இதுவா உங்கள் திருவுள்ளம்,! அழகான கமல புஷ்பத்துக்கு ஹேமந்த ருதுவின் ராத்திரி மாதிரி அல்லவோ நான் இன்று மிக கஷ்டப்படுகிறேன்,'' என்று பதில் சொன்னதைக் கேட்ட தேவதைகள் மீண்டும் அவள் கால்களில் விழுந்து கெஞ்சிக் கேட்க ஆரம்பித்தார்கள். ''மாதா, இந்த காரியத்தில் உங்களுக்கு ஒரு விதமான தோஷமும் ஏற்படாது. தங்களுக்கு ஒரு விதமான அபவாதமும் ஏற்படாது.'' (60)

அவளுடைய பாதசரணங்களைப் பிடித்துக்கொண்டு ''தாயே, தேவி, ஸ்ரீ ரகு ராய்க்கு இதில் சந்தோஷமோ வருத்தமோ ஏற்படாது. உங்களுக்கு ஸ்ரீ ராமசச்ந்திரனுடைய பிரபாவங்கள் எல்லாம் தெரியும். கர்ம பந்தங்களினால் ஏற்படும் துக்கம் சுகம் ஆகியவைகளை ஜீவன் தானே உண்டு பண்ணி கர்ம வசத்தினால் அவைகளை அடைகிறான். ஆகையினால் அயோத்திக்குச் சென்று தேவ காரியத்தைச் சாதித்து விட்டு வரவேண்டும்,'' என்று கெஞ்சினார்கள். (61)

அடிக்கடி அவளை தேவதைகள் வேண்ட, சரஸ்வதி தேவி சங்கோசத்தை அடைந்தாள். அதிக விசாரத்துடன் தேவி அயோத்திக்குச் சென்றாள். அவள் மனதில் தனக்குள் எண்ண ஆரம்பித்தாள். ''இந்த தேவதைகளின் புத்தி தங்கள் காரியத்தில் பற்றுதல் உள்ளதாக இருக்கிறது. பிறர்களுக்கு துக்கத்தை அளிப்பதுமாயுமிருக்கிறது. அவர்கள் வாசம் செய்யும் இடமோ மிக உன்னதம். (ஆனால் இவர்கள் அந்த பதவிகளில் மிக்க பற்றுதல் உள்ளவர்களாகவும், ஜாக்ரதையாகவும், தங்களுக்கு மற்றவர்களால் தொந்தரவு வராமலும், பிறர்கள் அப்பேற்பட்ட ஐஸ்வர்யங்களைத் தகுதியின்றி அடையக்கூடாது, என்கிற எண்ண முள்ளவர்களாக விருந்தார்கள்.) அதனால் தேவகார்யத்தையே சாதிக்க வேண்டும் என்கிற ஸ்வய எண்ணங்கள் மேலிட்டவர்களாகவும், அந்த மஹத்தான ஐஸ்வர்யங்கள் மற்றவர்களுக்கு ஏற்படக்கூடாது என்று ஈர்ஷை உள்ளவர்களாகத் தோன்றுகிறார்கள்.'' (62)

''அவர்கள் நினைக்கிறது ஒருபுறம் இருக்கட்டும். நான் வேறு விதமாக எண்ணுகிறேன். இனி நடக்கப்போகும் ராமனுடைய வனவாசம் அநேக விதங்களில் நன்மையைத் தரக்கூடியது.

(ராக்ஷஸவதம், முனிகளுக்கு ராமதர்சனம், ஜகத்திற்கு பகவானுடைய பாதசுவடிகளின் சேர்க்கையாகிற ஆனந்தம், சகல சராசரங்களும் அந்த புனிதமான அச்யுதபாதங்களை தங்கள் சிரஸின் மீது தாங்குவதற்கு கல்லாகவும், மண்ணுகவும், முள்ளாகவும், புல்லாகவும் அவதரித்திருக்கின்றனவே ; பக்தன் பிரஹ்லாதனுக்குக் கொடுத்த வாக்கு வரத்தினுல் அநேக தைத்ய ஜனங்கள் பலரூபங்களைத் தாங்கிக்கொண்டு பகவானுடைய பாதஸ்பர்சனம் கிடைக்கத்தவம் செய்துகொண்டிருக்கிருர்கள். இதை நான் நிறைவேற்றிவைக்கிறேன்.) சாமர்த்தியமுள்ளவர்களும் மிகக் கெட்டிக்காரர்களுமான கவிகள் என்னை இந்தமாதிரி சரித்திரத்தை நடத்திவைப்பதற்கு புகழ்வார்கள்,'' என்று பலவிதமாக சாரதா தேவி தனக்குள் எண்ண ஆரம்பித்தாள். அவள் மனம் ஒருவிதமாக சந்தோஷத்துடன் இருந்தது. தசரதருடைய புரிக்கு வந்து சேர்ந்தாள். அவள் வந்து சேர்ந்தது, தாங்க முடியாத துக்கத்தைத்தரும் ஒரு கெட்டகிரஹம் கர்ம வசத்தினுல் ஜீவனை பாதித்தால் எவ்விதம் சிரமப்படுவானே, அதுமாதிரி விளங்கியது. அவளும் அயோத்யா வாசிகளிடம் வந்து சேர்ந்தாள். (63)

[தியானம்

ஹே ராமா சீதா, த்யாகராஜ ஹ்ருதயத்தால் உன்னை ஆராதித்தால் தான் அப்பா நான் க்ஷேமம் அடையமுடியும். உன் பக்திகிடைப்பது ரொம்ப ரொம்ப கடினம். சதாசிவனும் உமையும் உன்னை முதல் கடவுளாக தரிக்க வேண்டும், என்ருல் நீ எவ்வளவு பெரியவன் தெரியுமா ? நீலமேகஸ்யாமளா, அலைகள் போல உன் முகமண்டலத்தின் மீது படிந்துள்ள சுருள் மயிர்களும், சீதையை அணைத்துக்கொண்டு அனுக்ரஹ பார்வையுடன் கைமுத்ரையும், ஆஞ்சநேயர் உன்பாதத்தைக் கெட்டியாக பிடித்திருக்கும் அழகும், விநாயகர் போன்ற ஹரிபக்தர்கள் உன்னைச் சூழ்ந்துகொண்டு அர்ச்சிப்பதும் என் மனதை கவருகிறது. உன்பக்தியாகிற பெரும் ஐஸ்வர்யக் கடலில் வசிக்கிற மீன்களும், குகையில் கபடமாகும் வசிக்கும் ஏழைகளும் நிஜமான பக்திவாழ்க்கை நடத்தாத போனுல் சமுத்திர ஸ்நானத்தையோ அல்லது தபஸ் செய்வது என்கிற காரியத்தில் ஈடுபட்டவர்களாகமாட்டார்கள் அல்லவா ? உன்பக்தியின்றி மனிதன் ஆனந்தமடையமுடியுமா ? சீதையின் ஸரஸ பேச்சுக்கள் காதில் விழாமல் இந்தக் காதுகள் புண்ணியத்தை

அடையுமா? புண்யமாக வாழும் ஒருவன் உன்கிருபையின்றி உன்னை வந்து அடைய முடியுமா? எவ்வளவு நாள் என்னை நீங்கள் இருவர்களும் பராங் முகமாக கவனியாமல் இருக்கப் போகிறீர்கள்? மரகதமணிஸ்யாமா, புண்யஸ்லோகா, பரத லக்ஷ்மணர்களால் சேவிக்கப்பட்ட ஸ்ரீராமா, சத்ருக்னனுடைய பிராதாவே, என்னை ரக்ஷி.]

மந்தரை என்கிற பெயருள்ள மந்த புத்தியுடன் விளங்கும் ஒரு தாஸி இருந்தாள். அவள் கைகேயியிடம் வேலைபார்த்து வந்தாள். அசுபமான கீர்த்திஉள்ள அவளை சரஸ்வதிதேவி பீடித்து, அவள் மனத்தில் குடில எண்ணங்களை நிரப்பிவிட்டு சரஸ்வதி சென்றுவிட்டாள். (64)

அந்த கெட்ட எண்ணமுள்ள மந்தரை யத்ருச்சையாக அயோத்தியாபுரி அலங்கரிக்கப்பட்டிருப்பதைக் கண்டாள். சுந்தரமான மங்களங்களுடன் பாடப்பட்ட சங்கீதத்வனிகளையும் பேரிகை நாதங்களையும் கேட்டாள். இந்த உத்ஸவமான கோலாகலங்களுக்கு என்ன காரணம்? என்று லோகத்தார்களை கேட்டாள். அவர்களிடமிருந்து ஸ்ரீராமச்சந்திரனுக்கு ராஜ்யா பிஷேகம் செய்யப் போவதாகக் கேட்டாள். அவளுடைய ஹ்ருதயம் அசூயையினால் கொதித்து பொங்கி வழிந்தது. (65)

அவளுடைய துர்புத்தி நீச ஜாதியில் பிறந்த தாஸிமாதிரி இருந்தது. எந்தவிதமாக இந்த காரியம் நடைபெறுமல் ராத்திரியி லேயே தடை பெற்று, நிற்கக்கூடும் என்று யோசிக்க ஆரம்பித் தாள். ஒரு குடில புத்தியுள்ள வேடுவச்சி தேன்கூட்டைப்பார்த்த பின்பு துராசையுடன் அதை அபஹரிக்க எண்ண முள்ளவளாக விளங்குவாளோ, அதுமாதிரி அவள் எந்த உபாயத்தால் இந்த சுபமான காரியம் நடைபெறுமல் தடுத்துவிடலாம் என்று எண்ணலானுள். (66)

அழுது கொண்டே பரதனுடைய தாயாகிய கைகேயியிடம் சென்றுள். கைகேயி சிரித்துக்கொண்டே அவளைக் கேட்டாள் "என்ன நடந்தது? நீ ஏன் வருத்தமாக இருக்கிருய்?" மந்தரை பதில் ஒன்றும் சொல்லவில்லை. ஆனுல் பெரு மூச்சுவிட்டுக் கொண்டு பெண்கள் சாகஸம் செய்வதுபோல அழுதுகொண்டு கண்ணீர்விட்ட மணியமாக விருந்தாள். (67)

ராணி சிரித்துக்கொண்டு "நீ பெரிய சாகஸக்காரி. ஒன்றும் பதில் சொல்லமாட்டேன்கிருய். லக்ஷ்மணன் ஏதாவது உன்னை தண்டித்தானு?" அப்பொழுதுகூட மஹாபாபியான மந்தரை

பதில் ஒன்றும் சொல்லவில்லை. கரு நாகம் ஸ்வாசம், செய்வது போல பெரு மூச்சுவிட்டுக் கொண்டிருந்தாள். (68)

அப் பொழுது ராணி பயந்துகொண்டு "அடியே சீக்கிரம் சொல். ராமன், அரசர், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன் சௌக்கியமாக இருக்கிறார்களா?" என்று கேட்டாள். இதைக் கேட்டதும் அந்த கூனியாகிற மந்தரை அதிக பீடை அடைந் தாள். (69)

மந்தரை பதில் சொன்னாள். "அம்மா, தாயே, என்னை யார் சிக்ஷிக்கமுடியும்? நான் பலமடைந்து வைய (திட்ட) ஆரம்பித்து விட்டால் என்னை எதிர்த்து எவர்கள் திரும்ப வையமுடியும்? இன்று ஸ்ரீராமச்சந்திரனைத் தவிர எவர்தான் சௌக்யமாக இருக்கிறார்கள்? அந்த ராமனையோ தசரத மஹாராஜா யுவராஜ பட்டத்தைக் கொடுத்து மேன்மை படுத்துகிறார்." (70)

"இன்று கௌஸல்யா தேவியிடம் விதாதா மிக்க அனுகூல மாக விருக்கிறார். நான் அவளைப் பார்த்தேன். அவள் என்ன கர்வத்துடன் இருக்கிறாள்! அவள் ஹ்ருதயம் என்ன மதத்துடன் விளங்குகிறது தெரியுமா? நீயே போய்ப் பார். உனக்கே தெரியும். அவள் பண்ணிக்கொள்ளும் அலங்காரங்களும் சோபைகளையும், அவள் உத்ஸாகமாக நடந்து கொள்ளும் விதங்களையும் கண்டதும் என் மனம் இருள் சூழ்ந்து விளங்குகிறது. உன் நன்மைக்காக, என் மனம் இப்போது சோபை யிழந்து விளங்குகிறது." (71)

[தியானம்

ஹே ராமா சீதாதேவியை பாக்யத்துடன் அடைந்து வாழ்க்கையில் கஷ்டப்பட்ட மஹானுபாவா, என் பாபங்களாகிற விஷயங்களில் பற்றுதல் உள்ளவனாக நான் கலக்கமடைகிறேன். என் மனம் மிக்க பற்றுதலுடன் உன்னை அடைய மறுக்கிறது. உன் கருணையாகிற மழையினால் பொழியப்பட்டு பின்பும்கூட நான் எவ்வளவு நிச்சய புத்தியுடன் இருந்தாலும், உன் கிருபையால்தான் உன்னை வந்து அடையவேண்டும். சீதா ராமா, என் மனஸ்ஸின் குணதோஷங்களை ஆராயாதே. ஆஞ்சநேயர் என் மனஸை அறிவார். வேங்கடேச நயனான சந்திரன் என் மனஸை அறிவார். மார்க்கண்டேய ரிஷி தர்ம புத்ரரை ஆஸ்வாசப்படுத்தி உன் பெருமையை உரைத்ததுபோல தியாகராஜர் உன்னைப் பற்றி அடிக்கடி எனக்கு சொல்லியிருக் கிறார். சாஸ்வதமானவரும் நிராமயருமான உங்களை நான் நார

தரை நினைத்துக்கொண்டு சரணமடைகிறேன். அழகான நான்கு முகங்களை உடையவரும் தாமரை பூக்களின் தேஜஸ் போல கண்கள் உள்ளவரும், அஹங்கார ரூபமான பிரும்மாவானவர், காந்தியுள்ளவரும், சநாதனரும், ஸத்வகுணமுள்ளவரும், பிரபுவும் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை புஷ்பத்தில் இருக்கும் அநிருத்ரரை சரணமடைவது போல நான் சரணமடைகிறேன். நாராயணரே, மதுகைடப அரக்கர்களைக் கொன்ற மதுசூதனரே, உன் கிருபையை எனக்குச் செய்யும்.]

"அரசியே, உன்னுடைய புத்ரனுகிய பரதன் பரதேசத்தில் இருக்கிருன். உன்னைப் பற்றிய சிந்தனை இங்குள்ள யாருக்கும் கிடையாது. நீயோ அறிவில்லாமல் ஸ்வாமி யாகிய தசரதர் உன் வசம் இருக்கிறவராக அறிந்து பகல் கனவு கண்டு கொண்டிருக்கிருய். அழகான பஞ்சு மெத்தை, அன்புள்ள தூக்கம் இவைகளின் வசத்தை அடைந்த மஹா ராணியாக விளங்குகிருய். பாவம், உன் வெள்ளை மனத்தில் கபட சித்தமுள்ளவரும் கெட்டிக்காரருமான உன் பதியின் கொடிய எண்ணத்தை நீ அறிகிறதாகவில்லை." (72)

மந்தரையின் அழகான வார்த்தைகளைத் கேட்டாள் கைகேயி. அவளுடைய மனம் களங்க மடைந்திருக்கிறதென்று அரசி உணர்ந்தாள். அதட்டலான குரலுடன் சொல்ல ஆரம்பித்தாள். "போதும் வாயை மூடிக்கொள். இது மாதிரி ஏதாவது மீண்டும் நீ சொல்லு வாயாகில், உன் நாவை வேருடன் துண்டித்து விடுவேன்." (73)

"ஒரு கண் உள்ளவன், கால் கை முடவன், கூனி இவர்களுடைய மனம் மிக்க குடிலமானது என்று பிரசித்தி பெற்றது. அதிலும் அவர்கள் ஸ்திரிகளாக இருந்து விட்டாலோ, அல்லது தாஸிகளாக இருந்து விட்டாலோ, அவர்கள் இன்னமும் மோசமாக விருப்பார்கள்." என்று சொல்லிக்கொண்டு கைகேயி சிரித்துக்கொண்டாள். (74)

மீண்டும் கைகேயி சொல்ல ஆரம்பித்தாள். "பிரியவாதினி, மந்தரை, உன்னை நான் தண்டிப்பதற்குப் பதிலாக வார்த்தைகள் சொல்லிவிட்டேன். எனக்கு உன்னிடத்தில் க்ரோதம் கிடையாது. அழகான மங்களங்களைக் கொடுக்கும் சுபமான இந்த தினத்தில் உன் வார்த்தைகள் நிஜமாக இருக்கட்டும். ஸ்ரீராமச்சந்திரனுக்கு யுவராஜ்யாபிஷேகம் நடக்கட்டும்." (75)

"ரகுவம்சத்தில் மூத்த குமாரன் ஸ்வாமிதான். மற்ற சகோதரர்கள் அவனுக்குத் தாஸர்கள்தான். இது தான் சூர்ய குலத்தின் ரீதியாக விளங்குகிறது. நீ சொல்லுகிறபடி ராமன் நாளை மகுடாபிஷேகம் செய்து கொள்ளப்போகிறுனுகில், ஹே சகி, உன் மனம் நல்ல எண்ணமுள்ளதாக ஆகி, என்னிடமிருந்து உனக்கு வேண்டிய வெகுமதிகளைப் பெற்றுக்கொள்." (76)

"கௌஸல்யாதேவியைப் போல சகல தாய்மார்களும் ராமனிடம் சமமான பிரிய முள்ளவர்கள். ராமனும் என்னிடம் விசேஷ பிரியத்துடன் இருக்கிருன். நான் அவனைப் பல தடவைகளில் பரிக்ஷித்து, திருப்தி அடைந்திருக்கிறேன்." (77)

"விதாதா மஹா கிருபையுடன் எனக்கு மானிட ஜன்மத்தைக் கொடுத்திருக்கிருர். ஸ்ரீராமனும் சீதையும் என் புத்ரன், மருமகப் பெண்ணுக ஆகும் பாக்யம் பெற்றவளாக நான் இருக்கிறேன். ஜன்மம் மீண்டும் அடைந்தால் இந்த பாக்யத்தையே நான் விரும்புவேன். பிராணனைவிட ராமனிடம் எனக்கு அதிக பிரியம். அல்லவா? அப்பேற்பட்ட ராமசீதை ராஜ திலகம் அணிவதால் உனக்கு என்ன மனக்குறை? சொல்." (78)

"பரதன் மேல் ஆணை. உன் கெட்டிக்கார சாகஸங்களை விட்டுவிட்டு உண்மையைச் சொல். நாம் சந்தோஷிக்க வேண்டிய இந்த சமயத்தில் விஷத்தை என் மனத்தில் செலுத்தி ஏன் கலக்குகிருய்? என்ன காரணத்தால் சொல்லுகிருய்.?" (79)

மந்தரை பதில் சொன்னுள். "நான் சொல்லவேண்டிய விஷயங்கள் எல்லாம் உங்களுக்கு ஒரு தடவை சொல்லியாய் விட்டது. நான் இன்னும் சொல்லவேண்டிய பக்ஷத்தில், இன்னொரு நாக்கை வைத்துக்கொண்டு பேசுகிறேன். என் துர்பாக்கியமான மண்டை உடையட்டும். உங்களுக்கு அது சரி என்று தோன்றினுல் அதையும் செய்து முடித்துவிடுங்கள். அது உங்களுக்கு நன்மையைப் பயக்கும் என்று மனதில் பட்டால், அம்மா, தங்களுக்கு ஹிதம் சொல்லும் என்னை, உங்கள் துக்கத்திற்கு மாற்றுதலாக செய்து விடுங்கள்." (80)

"அம்மா, உங்களுக்கு பொய்யை சத்யமாகப் பண்ணி வார்த்தை சொல்லவேண்டுமானுல் நான் சொல்லுகிறேன். உங்களுக்குப் பிரியத்தைச் செய்வதற்காக நான் ஏன் கசப்பான வார்த்தைகள் சொல்லவேண்டும், அவைகளைச் சொல்லவில்லை. உங்கள் முகம் கோணுமல் உங்கள் பிரியத்திற்காகச் சொல்லி, மன நிம்மதியுடன் நான் ராவும் பகலுமாக வாழவேண்டும்

பக்ஷத்தில் எது உங்களுக்கு பிரியமோ அதைச் சொல்லுகிறேன். (81)

சரிதானு? விதாதா என்னை குரூபியாக படைத்திருக்கிறுர். வாஸ்தவம்தான் .மேலும் உங்களிடம் ஜீவனம் செய்பவளாக வேறு நான் பிறந்திருக்கிறேன். நான் எதை விதைக்கிறேனே, அதைத்தான் என் 'கர்ம பலனுக அடைய முடியும். எவர் அயோத்திக்கு அரசனுக விருந்தால் என்ன, எனக்கு என்ன விசேஷமான அபிவிருத்தி கிடைக்கும்? என் தாஸித்தனத்தை விட்டு எனக்கு ராணி பட்டம் கிடைத்துவிடுமா ?'' (82)

[தியானம்

ஹே சீதாராமா, சாது ஜனங்களின் ஹ்ருதயத்தில் ஹம்ஸபேடு போல சஞ்சரிக்கிறவனே, சாதுக்களின் ஹ்ருதய தாமரையை மலர வைக்கும் ஆதித்யனே, தியாகராஜர் துளசி தாஸர் போல மஹான்களால் ஆஸ்ரயிக்கப்பட்ட குணேத்தமரான ராமா, சாம வேதத்தின் நிஜமான சுதாபோல நாத இனிப்பை உடைய ராமசீதா, நாதா சலதீபா, யாதவகுல முரளி, என்னை மோஹனப்படுத்திய தயாகரர, மார்க்கண்டேயர், யமன், தர்ம புத்ராதிகளால் வந்திக்கப்பட்ட ஸாது ஜனப்ரியா, ஆஞ்சநேயரால் சேவிக்கப்பட்ட சீதா, வேதங்கள், சப்தஸ்வரங்கள், இன் சொற்கள் இவைகளால் புகழப்படும். தர்மத்தின் மூல காரணமே, ஆத்மாவாகிய புத்ரன், தெய்வத்தால் ஏற்படுத்தப்பட்ட மனைவி, உன் கருணையாகிய மேகம், குண தோஷங்களுடன் கூடிய என் க்ஷேத்திரத்தில் உள்ள மனம், என் பக்தியாகிற உன்னிடமுள்ள அனன்ய அன்பு ஆகிய எல்லாம் என் சம்சார நோயைப் போக்குகிற மருந்தாக விருக்கிறது. ஸ்வாமி நீரே மருந்து. கர்வத்தை விட்ட நான் உனக்கு பிரியனுக ஆகவிரும்புகிறேன். கோபத்தைவிட்ட நான் துயரத்தை விட்டவனுகிறேன். காமத்தைவிட்ட நான் உன்னை அடைந்து, பெரும் பொருள் உள்ளவனுக ஆகிறேன். லோபத்தை விட்டதனுல் மிக்க சுக முள்ளவனுக ஆகிறேன். டம்பமான தர்மத்தை விட்டு, என் மனைவி நான் விரும்புவதை செய்பவளாகி தர்மார்த்த சேர்க்கை கள் பெற்று கௌரவத்துடன் உன்னுல் மிக்க அனுக்ரஹிக்கப் பெற்று மோக்ஷமாகிற உன் சேர்க்கையையும் ஞானத்தையும் நான் அடைய விரும்புகிறேன். வேதங்களின் ஒரே அர்த்தமாகி விளங்கும் உன்னை சிரமப்படாமல் அடைந்த என்னை நீதான் ஆதரிக்க வேண்டும்.]

"என்னுடைய ஸ்வபாவம் பிறர்களுடைய கஷ்டத்தைப் பொருதது. அதிலும், உங்களுக்கு அஹிதமாக ஏற்படும் விஷயத்தை நான் கண்டு பொறுக்கமாட்டேன். இதனுல் உங்களிடம் எனக்குத் தோன்றினதைச் சொன்னேன். நான் பண்ணினது தப்பிதம்தான். என்னை க்ஷமித்துவிடுங்கள்.'' (83)

கூடமானதும் கபடமானதும் தனக்கு ஹிதத்தைத்தரும் வசனங்களை கைகேயி கேட்டாள். மந்த புத்தியுள்ள ஸ்திரியின் ஸ்வபாவத்திற்கு கட்டுப்பட்டவளாகவும் தேவதைகளின் மாயைக்கு விடப்பட்டவளாகவும் ராணி ஆனுள். சுரர்களின் மாயையின் பலத்தால் தன்னுடைய சத்ருவை ஸுஹ்ருதயமுள்ளவளாக கருதினுள். அவளிடம் அதிக நம்பிக்கை காட்டினுள். (84)

அடிக்கடி வேண்டப்பட்டவளாக, மந்தரை அவளை ஒரு பெண்மான் வேடுவச்சியினுல் பாடப்பட்ட கீதத்திற்கு வசப்படுவது போல அவளை சீக்கிரம் வசப்படுத்தினுள். ஆதாரத்துடன் சொல்பவளான மந்தரையை தன் பக்கம் பேசுவதாக நினைத்து ராணி அவளிடம் தன் புத்தியை கவரவிட்டாள். அந்தோ, அவள் தன் வசம் திரும்பினதைக் கண்ட மந்தரை சந்தோஷத்துடன் மீண்டும் சொல்ல ஆரம்பித்தாள். (85)

"நீங்கள் என்னை மேலும் கேட்டதால் சொல்லுகிறேன். முதலிலேயே என்னைப் பயப்படும்படி செய்துவிட்டீர்கள். இப்பொழுது தைரியத்துடன் சொல்லுகிறேன்.'' இன்சொல்லாலும், குழைவாக பேசுவதாலும், ஹிதத்தைத்தருவது போல பேசிய பேச்சுக்களாலும் அநேக வழிகளால் விதவிதமாகச் சொல்லுகிறபடியாலும், அதிக நம்பிக்கையை உண்டு பண்ணுபவளாகவும் அயோத்தியின் ஏழரை நாட்டுச்சனி போன்ற ரூபமுள்ள மந்தரை கைகேயியைப் பீடிக்க ஆரம்பித்தாள். (86)

"ஹே ராணி, தங்களால் சீதாராம் எனக்கு ரொம்ப பிரியர்கள் என்று சொல்லப்பட்டது. ராமனும் தங்களிடம் ரொம்ப பிரியமாக இருக்கிருன் என்கிற உண்மையான வார்த்தையும் சொல்லப்பட்டது. இந்த விஷயம் பழைய காலமான விஷயமாகிவிட்டதே, அந்தக் காலம் மலை ஏறிவிட்டது. அம்மா, காலத்தின் வேற்றுமையினுல் மித்ரனே, சத்ருவோ ஏற்படுகிருன்.'' (87)

"சூரியன் கமலத்தை போஷிக்கும் தேவதை. ஆனுல் தண்ணீர் இல்லாது வரண்டுகிடக்கும் பூமியில் உள்ள கமலத்தை அதேசூரியன் பஸ்மம் செய்து நாசம் செய்துவிடுகிருன் தெரியுமா, உன் சக்களத்தியான கௌஸல்யை உன்னை வேருடன் பிடுங்கப்

பார்க்கிருள். ஆகையினுல் உன்னை ரக்ஷித்துக்கொள்ள அவசியம் உனக்கு நேர்ந்திருக்கிறது. இப்போது உபாயத்தினுல் உன்னைச் சுற்றி வேலி ஒன்று போட்டுக்கொள்ளவேண்டிய நிலை வந்திருக் கிறது. ஆனுல் ஒருவரும் உனக்கு தீங்கு செய்யமுடியாது.'' (88)

''உன்னுடைய பொய் பலத்தை நம்பி ஏமாந்துபோகாதே. ராஜா உன் வசம் இருப்பதாக நீ அறிந்திருக்கிருய். அரசர்களின் மனம் உன் மனதுபோல இல்லாமல் களங்கமுடையதாக விருக் கிறது. உன்னுடைய சரள ஸ்வபாவத்தினுல் அரசனை கபடமுள்ள கெட்டிக்காரன் என்று நீ அறியவில்லை'' (89)

''ராமனுடைய தாய் கெட்டிக்காரி. ஆழ்ந்த ஹ்ருதயமுள்ள கம்பீரமான சமுத்திரம் போன்றவள். அவள் சாமர்த்தியத்தை நீங்கள் அறிவது கடினம். அவள் சமயத்தை தன் பயனுக்காக உபயோகப்படுத்தியிருக்கிருள். அரசனே பரதனை தன் பாட்டி வீட்டிற்கு அனுப்பியிருக்கிருன். ஆகையினுல் ராமனுடைய தாயார் தன் காரியத்தை அரசனிடமிருந்து சாதித்துக்கொண்டி ருக்கிருள். இப்பவாவது நீங்கள் சரியாக அவர்கள் இருவர்களை யும் புரிந்துகொள்ளுங்கள்.'' (90)

''கௌஸல்யையின் மனத்தில் என்ன எண்ணம் தெரியுமா? அதையும் சொல்லுகிறேன் கேளுங்கள். எல்லா ராணிமார்களும் ப்ரீதியுடன் கௌரவிக்கிருர்கள். ஆனுல் பரதனுடைய மாதாவுக்கு மாத்திரம் ரொம்ப கர்வம் இருக்கிறது. அவளுக்கு அவள் பதியை தன் பலமாகக் கொண்டிருக்கிருள். இதனுல் தாயே, உங்களைவிட கௌஸல்யை உலகம் தெரிந்தவள். கபடமாக காரியம் செய்வதில் நிபுணத்வம் உள்ளவள். நீங்கள் அவள் முன்னேறுவதில் ஒரு முள் போல இருக்கிறீர்கள். அவளோ தன் மனேபாவங்களை யாருக்கும் தெரியாமல் மறைப்பதற்குத் தெரிந்தவள்.'' (91)

''அரசரோ உங்களிடம் விசேஷமான பிரேமையை சொறி கிருர். வாஸ்தவம்தான். அதனுல் கௌஸல்யா தேவியின் மனம் பொருமை அடைகிறது. அவளால் சகிக்க முடியவில்லை. அவள் சாகஸங்களால் அரசரை தன் வசப்படுத்தி பரதனுடைய வெளி தேச பிரயாணத்தை தனக்கு பிரயோஜனப்படுத்திக்கொண்டு, ராமனுக்கு ராஜதிலகம் அணிவிப்பதை லக்னம் முதல்கொண்டு நிச்சயப்படுத்தி தன் காரியத்தை சாதித்துக் கொண்டுவிட்டாள்'' (92)

''ராமனுக்கு ராஜதிலகத்தை அணிவிக்கட்டும். பரவாயில்லை. அதனுல் ரகுகுலம் உன்னதமான நிலையை அடையட்டும். இது எல்லோருக்கும் பிடித்தமான விஷயம்தான். எனக்கும்தான் பிடித்

திருக்கிறது. நடக்கட்டும். அதற்கு அப்புறம் நடைபெற விஷயங்கள் தான் மிக முக்கியம். அதைக்கண்டுதான் நான் பயப்படுகிறேன். இதை நான் யோசிப்பதினுல் பயப்பட்டு உங்களுக்குச் சொன்னேன். நீங்கள் அந்த விபரீத பலன்களை அவளுக்கு ஏன் திரும்பிக் கொடுக்கக்கூடாது? ஏன் நீங்கள் பூஜிக்கும் தெய்வம் உங்களுக்கு அனுசரணையாக இருக்காது?'' (93)

''இந்த மாதிரி கோடிக்கணக்கான குடில வார்த்தைகளைச் சொல்லி மந்தரை கைகேயியை கபடத்தினுல் ஆகர்ஷித்தாள். சூரிய குல திலகமான தசரதரிடம் வெறுப்பை உண்டாக்கினுள். அதுவும் பலித்தது. கைகேயியின் புத்தி பேதமடைந்தது. அவளை மீண்டும் நம்புறச் செய்ய அநேக கெட்ட கதைகளைச் சொன்னுள். கபடபுத்தியினுல் தூண்டப்பட்ட சகல விஷயங்களையும் நம்பிக்கை வரும்படிசெய்து அவள் மனதை மாற்றி மற்ற ராணிகள் விஷயத்திலும் விரோதமாக்கினுள். விதியின் பலத்தால் அவளுடைய விரோதம் வளர்ந்தது. (94)

[தியானம்

ஹே சீதாராமா, ராஜஸ்ரீயுடன் பெருமை உள்ள சீதாராமா, முன்பு ஒருகாலத்தில் மரீசி, அத்ரி, அங்கீரஸ, புலஸ்தியர் புலஹர் கிருது மிக்க தேஜஸ்வாய்ந்த வஸிஷ்டர் ஆகிய சப்தரிஷிகள் சித்ரசிகண்டிகள் (விசித்திரமான மயில் தோகை உள்ளவர்கள்) உலகத்திற்கு காரண புருஷர்களாக விளங்கினுர்கள்; அவர்களால் பாஞ்சராத்ர சாஸ்திரம் ஒரு விதமான அபிப்பிராயத்துடன் மேரு மலையில் செய்யப்பட்டது. அந்த சாஸ்திரமானது ஏழு முகங்களால் வெளியிடப்பட்டது. அவ்வேழுபேர்களுக்கும் பின்னுல் எட்டாவதாக மனு என்பவர் பிரும்மபுத்ரராக விளங்குகினுர். ஸத்தியம் தர்மம் இவைகளை முக்கியமாகக் கொண்ட இந்த எட்டுப் பேர்களும் இந்த உலகத்தைத் தாங்குகிறுர்கள். அவர்களால் வெளியிடப்பட்டதும், சரஸ்வதி தேவியினுல் உலகத்தின் நன்மையை விரும்பி நாராயணரால் கட்டளையிடப்பட்டு, சப்தத்திலும் அர்த்தத்திலும் ஹேதுவிலும் பாஞ்சராத்ர சாஸ்திரத்தின் மூலம் விருத்திசெய்யப்பட்டாள். ஓங்கார ஸ்வரத்தால் கௌரவிக்கப்பெற்றும், நாராயணர் இருக்கும் இடத்தில் சொல்லப்பட்டதுமான இந்த பாஞ்சராத்ரத்தை பிரமாண சாஸ்திரமாகச் சொல்லுகிறுர்கள். அதில் அடங்கிய தர்மங்களை ஸ்வயம்பு மனு, சுக்ரர், பிருஹஸ்பதி ஆகிய இவர்களுக்கு வெளியிட்டார். பிருஹஸ்பதியிடமிருந்து வஸு

என்கிற அரசன் அடைந்தான். பிரஹஸ்பதியினிடம் அந்த சாஸ்திரம் எல்லா அங்கங்களுடன் அடங்கியிருந்தது. பிருஹத், ப்ரும்மா, மஹத் என்கிற சொற்களால் ஒரே அர்த்தத்தை உடைய குணங்களை உடையவரும், வித்வானுமாயிருப்பவருமான அங்கீரஸின் புத்ரரான பிருஹஸ்பதியை வணங்கி, அந்த சாஸ்திரத்தில் சொல்லியபடி பரம்பொருளான நாராயணரை உங்களாகக்கருதி நான் உங்களை சதா ஆராதிக்கிறேன். உம்மை சதா தியானம் செய்து உன் பாத பங்கஜங்களில் என் மனந்தை நிறுத்தி, என் கர்மக்லேசங்களைப் போக்குகிறேன்.]

கொஞ்சம் கொஞ்சமாக கைகேயியின் மனத்தில் விஸ்வாசம் ஊற ஆரம்பித்தது. ராணி நல்ல மனத்துடன் மீண்டும் கேட்க ஆரம்பித்தாள். மந்தரை மீண்டும் பேச ஆரம்பித்தாள். "இன்னும் என்ன கேட்கிறீர்கள். இன்னும் உங்களால் நான் சொல்ல வேண்டியதை அறியமுடியவில்லையா? அம்மா, எது நல்லது எது கெட்டது என்று பசு முதலிய மிருகம் கூட தெரிந்துகொள்ளுகிறதே." (95)

"பதினைந்து நாட்களாக அயோத்தியே இந்த சமாசாரத்தில் அல்லோலப்படுகிறதே. ராமதிலகம் என்கிற விஷயத்தை இன்றுதான் நீங்கள் என்னிடம் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் கையினுல் வளர்ந்தது இந்த சரீரம். நான் உங்களுக்கு ஹிதத்தையும் சத்யத்தையும் சொல்வேன். என் பேரில் தோஷம் இருக்கக்கூடாது." (96)

"நான் தங்கள் ஹிதத்தை நாடாமல் அசத்யம் சொல்வேனுகில், கடவுள் என்னை நன்ருகத் தண்டிப்பார். நாளை ராமன் ராஜ்யாபிஷேகம் செய்துகொள்ளுவானுகில், விதாதாவினுல் உங்கள் நாசத்திற்கு பீஜம் (விதை) விதைக்கப்பட்டதுபோல எண்ணிக்கொள்ளுங்கள்." (97)

"நான் உறுதியாகச் சொல்லுகிறேன். பாமினி, தாங்கள் பாலில் விழுந்த ஈ மாதிரி ஆய்விடுவீர்கள். கௌஸல்யாதேவி தன் புத்ரனுடன் உங்களைப் பீடிப்பாள். நீங்கள் அவர்கள் வீட்டில் தங்கினுல் இந்தமாதிரி கதிதான் உங்களுக்கும் உங்கள் புத்ரனுக்கும் ஏற்படும். அவர்கள் உங்களை அடிமைகொண்டு வாழச் செய்வார்கள்." (98)

"கத்ரு தன் புத்ரர்களான நாகங்களுடன் எவ்விதம் கருடனுடைய தாயாகிய வினதையை பீடித்தாளோ, அதுபோல கௌஸல்யாதேவி உங்களைப் பீடிப்பாள். நீங்கள் மிகுந்த துக்கத்தை அடைவீர்கள் அம்மா. பரதனுக்கு ஜயில்வாசம்

கிடைக்கும். லக்ஷ்மணன் ராமனுடைய சகாயத்திற்கு உள்ள நாயகனாக ஆவான்.'' (99)

கைகேயி மந்தரையின் கசப்பான வார்த்தைகளைக் கேட்டு பயந்தே போய்விட்டாள். ஒன்றும் பேச முடியவில்லை. அவளுடைய உடல் வியர்த்தது. வாழை மரம் காற்றில் நடுங்குவது போல நடுங்கினாள். கூனியாகிய மந்தரை தன் நாக்கை அடக்கி, பேசாமல் இருந்துவிட்டாள். (அவளுக்கு எங்கே கைகேயியின் ஹ்ருதயம் பயத்தால் நின்றுவிடுமோ, தன் காரியம் அதனால் பழுது அடைந்துவிடுமோ என்கிற கவலையினால் பேசாமலிருந்து விட்டாள் என்று நினைத்துக்கொள்ளலாம்) (100)

[தியானம்

ஹே ராமா, சீதா, சுகர், நாராயண நம்பூத்ரிபட்டர் இவர்களால் சேவிக்கப்பட்ட நாராயணா, பக்தர்களிடம் கருணை காட்டும் வள்ளலே, கம்பன் முதலிய கவிகளால் வெகுவாகப் புகழப்பட்ட மஹானுபாவா, எந்த புருஷனாகிய உம்மை ப்ரும்மா ஆதியில் பரமாத்மா எனக்கண்டு வெளிப்படுத்தினாரோ, அதே மானிட ரூபம் தரித்த உம்மை தெற்கு வடக்கு கிழக்கு மேற்கு ஆகிற திக்குக்களில் நான் நமஸ்கரிக்கிறேன். இந்திரன் போன்றவர்களுக்கும் எனக்கும் உன்னைப்புகழ்ந்த பாகவதர்களுக்கும் சர்வ வியாபகராக விளங்கும் மஹாபுருஷரே, வினயத்துடன் தாழ்ந்து உம்மைத் துதிக்கும் துளசிதாஸருக்கு அடியனாக விளங்கும் என்னிடம் கருணை காட்டும்.]

மந்தரை கபடமாக கோடிக்கணக்கான கதைகள் சொல்லி ராணியை தன் வசம் திருப்பினாள். அத்துடன் மாத்திரமில்லாமல் தைர்யத்தை அடையும்படி வற்புறுத்தினாள். கைகேயியின் மனம் மாற, அவள் பாக்யமும் மாற ஆரம்பித்தது. அவளுடைய க்ஷேமங்களும் குறையும்படி காலம்வந்தது. அவளால் தன் நிஜ எதிரியைத் தெரிந்துகொள்ளவில்லை. ஒரு கொக்கு ஹம்ஸம் போல புகழப்பட்டு எவ்விதம் விளங்குமோ, அதுபோல அந்த பொல்லாத ஸ்திரி கைகேயியின் அன்பை அடைந்தாள். (101)

கைகேயி சொன்னாள், ''மந்தரை, உன் வாக்கியங்கள் சத்யம் தான். என்னுடைய வலது நேத்ரம் பலநாட்களாக துடித்துக் கொண்டு எனக்கு அசுபத்தை அறிவிக்கிறது. பிரதி தினமும் கெட்ட ஸ்வப்னங்களை நான் காண்கிறேன். அக்ஞானத்தினால் நான் உன்னிடம் கூட சொல்ல வெட்கப்பட்டுக் கொண்டிருந்தேன்.'' (102)

"மந்தரை, நான் என்ன செய்வேன்? என் ஸ்வபாவம் உனக்குத் தெரியாதா? நான் ஸஹஜமாக பழகுகிறேன். எது இடது எது வலது என்றுகூட வித்யாஸம் தெரியாமல் நான் பழகுகிறேன்." (103)

"நான் உச்சநிலேயடைந்தும் இதுவரை யாருக்கும் தீங்கு நினைத்ததில்லே. அவ்விதம் இருந்தும்கூட தெய்வம் ஏன் என்னே இவ்விதம் நான்செய்த எந்த பாபத்திற்காக என்னேக் கஷ்டப் படுத்துகிறது என்றுதான் தெரியவில்லே." (104)

"என் தகப்பன் வீடுசென்று என் வாழ்நாட்களேக் கடத்துவேன். உயிரோடு இருக்கும்வரை என் சக்களத்திக்கு சேவைசெய்ய நான் விரும்பவில்லே. தெய்வம் எவளே என் சத்ருவாக படைத்திருக்கிறதோ அவளே சேவை செய்வதைவிட எனக்கு மரணமே மேல்." (105)

ராணி இவ்விதம் பலவிதமாக தீனமாகப் புலம்பினுள். கூனி அவைகளேக் கேட்டு, பெண்ணின் சாகஸ திறமைகளேப் புகழ்ந்தாள். "ஏன் அம்மா, நீ மனத்தில் சங்கடப்பட்டுக்கொண்டிருக்கிருய்? ஏன் பிதற்றுகிருய்? உன்னுடைய சுகமும் ஏன் விருத்தியாகக் கூடாது? உன் மணவாழ்க்கையும் ஏன் சந்தோஷமடையக் கூடாது." (106)

"எவளால் உனக்கு கெடுதல் என்று எது நினேக்கப்பட்டதோ, அவளே அந்த கெட்டபலனே அனுபவிப்பாள். என் எஜமானியாகிய நீ ஒருநாளும் கஷ்டப்படமாட்டாய். இந்த விஷயத்தை கேட்டது முதல் நித்திரை ஆகாரம் ஒன்றும் எனக்கு கிடையாது." (107)

"நான் உன் நன்மைக்காக ஜோஸ்யம் கூட கேட்டு வைத்திருக்கிறேன். பரதன் அரசன் ஆவான் என்று சொல்லியிருக்யிருக்கிருர்கள். இது வாஸ்தவமான விஷயம். ஹே பாமினி, நான் உபாயம் சொல்லுகிறேன், கேளுங்கள். அரசரை உங்கள் வசம் அடையவிக்கும் உபாயத்தை என்னிடமிருந்து கேளுங்கள்." (108)

கைகேயி சொன்னுள். "நீ எதைச் சொன்னுலும் கேட்கிறேன். மந்தரை, கிணற்றில்விழுவதற்கும் நான் தயார். புத்திரன், பதி இவர்களேத் தியாகம் செய்யவும் தயார். என்னுடைய துர்கதியைக் கண்டு, இவ்வளவு நல்லமனசுள்ள நீ இதுவரை சொன்னதைக் கேட்டேனே அதுபோல இப்போது என் ஹிதத்திற்குச் சொல்லப்படும் வார்த்தைகளே ஏன் நான் கேட்க

மாட்டேன்? அதன்படி நான் ஏன் நடக்கமாட்டேன்? சீக்கிரம் உபாயம் ஏதாவது சொல், என்ருள்.'' (109)

[தியானம்

ஹே ராமா சீதா, பிரும்மஹத்தி செய்தவனுக்கும், கள் குடித்தவனுக்கும் திருடனுக்கும் அப்படியே வ்ரதம்பூண்டு அதி லிருந்து விடுபட்டவனுக்கும் பிராயசித்தம் உண்டு. ஆனல் நன்றி கொன்றவனுக்கு பிராயசித்தம் இல்லை. யசஸ் இல்லை. ஸ்தானமில்லை. சுகமில்லை. நன்றி கொன்றவன் நம்பத்தக்க வல்லன். பிராயசித்தம் இல்லை. ஒருவனுக்கு மித்ரன் சிறந்த பாக்யம். மித்ரனுக்கு த்ரோஹம் செய்யக்கூடாது. மித்ரலாபம் தனலாபம் இவற்றுள் மித்ரலாபமே மிகச் சிறந்தது. சாதுக் களுக்கு பெரும்பயனுக மித்ரன் கிடைக்கிருன். அறிவுள்ளவன் சாதுக்களின் சேர்க்கையையும் மித்ரர்களை அடைவதிலும் மிக முயற்சியைச் செய்வார்கள். ராம லக்ஷ்மணு, உங்கள் இருவர் களுக்கும் அப்பேற்பட்ட மித்ரனுன ஆஞ்சநேயர் கிடைத்தார். அர்ஜுனனுக்கு கிருஷ்ணர் கிடைத்தார். எனக்கு நீங்கள் மித்ரர் களாக கிடைத்தீர்கள். ரெங்கநாதா, ராஜகோபாலா, பிரணவத்தை விமானமாகக் கொண்ட ஸ்ரீரங்கக்ஷேத்ரமே, நித்யநிர்மல பரம பதமே, உங்களை நான் என்மன அடக்கத்துடன் நமஸ்கரிக் கிறேன். எனக்காக காத்துக்கிடந்த கோபாலா, காமதேனு, யோகிகள் சதா உங்களுடைய புண்யபதத்தை நாடி காலத்தைக் கழிக்கிருர்கள். தேவர்கள், முனிஜனங்கள், லோக குருக்களாகிய உமையும் சங்கரரும் தத்விஷ்ணோ: பரமம்பதம் என்று அவினுசி யாகியதும் சாக்ஷாத்காரமாகியதுமான உங்கள் பதத்தைத் தியானித்தவர்களாக இருக்கிருர்கள். ஜகத்பூர்வமாக உள்ள பிரும்மா விஷ்ணு சிவன் ஆகிய சக்திகளின் தேஜோராசியாக விளங்குகிறது ஸ்ரீவைகுண்ட பதம். ஸர்வேஸ்வரா, அச்யுதா, எங்கள் பக்திநம்ரதைகளில் திருப்தி அடைந்து, தர்சனம் தந்து, ஐயா, எங்களை அனுக்ரஹிக்கவேண்டும். எங்கள் கோசரமான திருஷ்டிக்கு சீக்கிரம் அனுக்ரஹம் செய்.]

மிக்க சாதுர்யமுள்ள கூனி கைகேயியை பலிபீடத்திற்கு அழைத்துவந்து விட்டாள். தன் கடூரமான திட்டமாகிய கத்தியை கபடமாக அவள் ஆசையாகிற கைகேயியின் ஹிருதயத்தில் தீட்டினுள். அபலையான கைகேயிக்கு சீக்கிரம் நேரப்போகும் துக்கம் எப்படித் தெரியும்? அந்தோ பாபம். பலிபீடத்திற்குக் கொண்டுபோகப் பட்ட பசு புல்லைத் தின்று தன் மரணத்தில்

அசிந்தனேயாக இருப்பதுபோல, விதியினுல் அவள் உந்தி செலுத்தப்பட்டாள். (110)

மந்தரையின் வார்த்தைகள் கேட்பதற்கு மதுரமாகவிருந்தன. ஆனுல் அவைகள் நிறைவேற்றுவதற்கு பரிணுமத்தினுல் பயங்கரமாகவிருந்தன. பயத்தைத் தரும் விபரிதங்கள் நிறைந்தனவைபோலவிருந்தன. விஷத்தைக் கலந்து தித்திக்கும் தேனில் கலந்து கொடுப்பது போலவிருந்தது. தாஸி சொன்னுள், "ஹே தாயே, முன்காலத்தில் உங்களால் ஒரு கதை எனக்கு சொல்லப்பட்டது. அது என் ஞாபகத்திற்கு அரைகுறையாக வருகிறது." (111)

"ராஜா உங்களுக்கு இரண்டு வரங்கள் கொடுத்ததாகச் சொன்னீர்களல்லவா? அவைகளே அரசரிடமிருந்து இன்று யாசியுங்கள். ஒன்றினுல் உங்கள் புத்திரனுகிய பரதனுக்கு ராஜ்யமும், மற்றென்றினுல் ஸ்ரீராமனுக்கு வனவாசமுமாகக் கேளுங்கள். இதன் பயனுக உங்கள் சக்களத்தியாகிற கௌஸல்யை தற்சமயம் ஆனந்தமடைவதை நீங்கள் அடைவீர்கள். பின்பு இதனுல் நீங்கள் பூர்ணமாக ஆனந்தமடைவீர்கள்." (112)

"பூபதிராமன் பேரில் ஆணேவைத்து சுகந்தமாகப் பேசும் சமயம், வரங்களே யாசியுங்கள். அரசருடைய வசனங்கள் மாருதபடி ஜாக்ரதையாக அவரிடம் கேட்கவேண்டும். இன்று இரவு கழிந்துவிட்டதானுல், உங்களுடைய எண்ணம் பூர்த்தி ஆகாது. ஆகையால் காலதாமதம் செய்யாமல் என் வார்த்தைகளே நம்பி ஹ்ருதயத்தில் தாரணே செய்துகொண்டு நன்ருகப் புரிந்துகொள்ளுங்கள்." (113)

மஹா பாதகியாகிய மந்தரை கோரமான திட்டத்தை தயாரித்து, அதன்படி அரசியை கோபகிருஹத்திற்குப் போகும்படி சொன்னுள். "ஜாக்ரதையாகவும் நிதானமாகவும் எல்லாக் காரியத்தை செய்துமுடியுங்கள். உங்கள் பதியை எளிதில் நம்பி விடாதீர்கள்" என்று ராணியை எச்சரித்தாள். (114)

கைகேயி அந்த கூனியை பிராணனே நேசிப்பது போல அறிந்து அவளுடைய புத்தி தீக்ஷ்ண்யத்தைப் புகழ்ந்தாள். "இந்த சம்சாரத்தில் உன்னேப்போல எனக்கு ஹிதத்தைச் செய்யும் மித்ரன் இல்லே. நான் பெரும் வெள்ளத்தால் நிலேயின்றி அடித்து தள்ளப்படவிருந்தேன். ஆனுல் எனக்கு நீ ஆதாரமாக வந்து சேர்ந்தாய். என் பிராணபலமாக வந்தாய்." (115)

"என் மனேரதங்களே விதாதா பூர்த்தி செய்வாராகில் என் பிரியசகி, என் கண் இமைகளேப்போல உன்னே நான் பரிபாலிப்

பேன். அநேகவிதமாக உன்னை நான் சம்மானிப்பேன்.'' இவ்விதம் கைகேயி பலவிதமாக அந்த கூனியை அன்புமிக்கப் பேசி, கோபகிருஹத்திற்கு எழுந்தருளினுள். (116)

[தியானம்

ஹே ராமா சீதா, உனக்கு தர்மம் பெரிது. தர்மத்தால் கட்டுப்பட்டிருக்கிற உலகமும் பெரிது. நீ இயற்றிய வேதங்களும் அதன்படியிருக்கும் தர்ம சாஸ்திரங்களும் மேலானவை. அவ்விதமிருக்கும் ரிஷிகளும் முனீஸ்வரர்களும் அவர்களுடைய வார்த்தைகளும் உனக்கு சீதா லக்ஷ்மணர்களை விட மேலானவை. காலத்தின் சக்தியும் எல்லாவற்றிலும் மேல் என்று நீயும் கிருஷ்ணனும் அறிந்திருக்கிறீர்கள். ஹே ஸத்ய தர்ம பராக்ரமரே, இதனுல் ஸாத்வீகர்களான அதிகாரிகளால் செய்யப்படும் உத்தமமான நிவிருத்தி தர்மத்தை மிகப் பிரியமாக அங்கீகரிக்கிறீர். அயோத்தியாவாசிகளுக்கும் புத்ரன், மித்ரன், பந்து, தூதன், சேவகன்மாதிரி எல்லோருக்கும் ஸத்பூதியாக இருப்பவரே, ஸத்பதாசாரரே, சாதுக்களின் தர்மங்களை தாமே அனுபவிப்பவரே, வனவாசத்தில் பிரியம்கொண்டு மஹரிஷிகளின் ஸ்நேகத்தை தானே ஸ்வயமாக விரும்பிச் சென்ற ராமா, சீதா, நீங்கள் என்னிடம் கருணையுடன் இருக்கவேண்டும். லக்ஷ்மணருடைய பிராதாவே என்னிடம் அன்பாயிரும்.]

பிரணயகலகம் விபத்திற்கு பீஜமாயிற்று. மந்தரை அந்த பீஜத்திற்கு வர்ஷருது போலவிருந்தாள். கைகேயி அந்த பீஜம் உள்ள நிலத்தை தன்கெட்ட புத்தியினுல் தோண்டினுள். கபடமான ரூபத்தையுடைய ஜலத்தை தன் கைகளால் வாறி இறைத்தாள். இரண்டு வரங்களும் அந்த சிறுசெடியின் இருதளங்கள். இப்பேற்பட்ட செடிக்கு துக்கரூபமாக பழம் காய்க்கவும் காய்த்தது. (117)

கைகேயி கோபத்துடன் தன் ஆபரணங்கள் எல்லாவற்றையும் எரிந்துவிட்டு படுக்கச் சென்றுவிட்டாள். ராஜாவின் குலத்தில் உள்ள சதாசாரங்களைப் புறக்கணித்துவிட்டு தன்னுடைய குதர்க்கமான புத்தியினுல் தனக்கே கேடு விளைவித்துக் கொண்டாள். ராஜாவின் அரண்மனையோ ஒரே அமர்க்களமாக விருந்தது. ஆனுல் இனி நடக்கப்போகும் இந்த விபரீதமான விஷயங்கள் யாருக்கும் தெரியவில்லை. (118)

ஆனந்தமடைந்த ஸ்திரி புருஷர்களாகிய அயோத்தியா நகரவாஸிகள் தங்கள் நகரத்தை பலவிதமாக சிங்காரித்தார்கள்.

மங்களகரமான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தனர். சிலர் வெளியில் போய்க்கொண்டும், சிலர் உள்ளே வந்தமணியமாகவு மிருந்தார்கள். ராஜத்வாரத்தில் பெரும் கூட்டம் கூட்டமாக ஜனத்திரள் வந்துகொண்டிருந்தது. (119)

ராமனுடைய பாலசிநேகிதர்கள் இந்த ராஜதிலக சமாசாரத்தைக் கேட்டு ஹ்ருதயத்தில் சந்தோஷம்கொண்டு ஐந்து பத்துப் பேர்களாக சேர்ந்துகொண்டு ராமனைக் கண்டு சந்தோஷம் தெரிவித்தார்கள். பிரபு அவர்களை ப்ரேமையுடன் வரவேற்று மரியாதைகள் செய்தவண்ணமாகவிருந்தார். அவர்களுடைய குசல க்ஷேமத்தை விசாரித்துக்கொண்டு அவர்களை ஆனந்தப் படுத்திக்கொண்டிருந்தார். (120)

அவருடைய அன்பான பேச்சுக்களில் மயங்கியவர்களாகி அவரிடம் சம்பாஷித்த பின்பு உத்தரவு பெற்றுக்கொண்டு பரஸ்பரம் ஒருவருக்கொருவர் ராமனுடைய மேன்மையான செளசீல்யத்தை சிலாக்கிக்கிறவர்களாகி, சொல்லிக்கொண்டு வீடு சென்றார்கள். "ரகுவீரனுக்கு ஸமமாக சம்சாரத்தில் சீலம், ஸ்நேகம், அன்பு, கௌரவம்கொடுத்தல் இவைகளைக் கொடுக்கும் தியாகமித்ரன் யார் இருக்கக் கூடும்?" (121)

"பகவான் நம்மிடம் மிக்கக் கருணையுடன் எந்த எந்த ஜன்மம் நமக்கு அளித்தாலும் அந்த ஜன்மங்களனைத்திலும் எங்கள் சுக்ருத கர்மங்களின் வாசனையாலும், சீதாபதியாகிற ஸ்ரீராமச்சந்திரனுடைய உறவு எங்களால் எந்த ஸ்திதியிலும் ஒழிக்க முடியாதது. நாங்கள் மனக்கலக்கமோ ப்ரமையோ துர்பாக்கியமோ அடையாமல் அவனுடைய ஸ்நேக சம்பத்தையும் அவனுக்குச் செய்யும் கைங்கர்ய பாக்யத்தையும் எக்காலமும் அடையவேண்டும். அவன் எங்களுக்கு பரம ப்ரியமான ஸ்வாமியாகவும், நாங்களும் அவனுடைய கட்டளையை பரிபாலிக்கும் தாஸ்ய சேவகர்களாகவும் இருக்கவேண்டும். அவனுடைய தாஸ்யத்தை பரம ப்ரீதியுடன் செய்பவர்களாக நாங்கள் விளங்கவேண்டும். அவனுடைய கைங்கர்யங்களைச் செய்யும் பரம பாகவதர்களுக்கும் அடியார்களுக்கும் சேவை செய்யும் வைஷ்ணவ பக்தியுடன் இருக்கவேண்டும். ராமனுடைய தாஸர்கள் என்று சொல்லுவதிலும் ஆர்வமும் பக்தியும் எங்களுக்கு இருக்கவேண்டும். (ஹனுமார் விபீஷணர் மாதிரி ராம பக்தியாகிற சின்னங்களை அணிந்துகொண்டு இருக்கும் சத்ஸங்கத்தையும், ஆசார்ய ஹ்ருதயத்தையும் அவர்களின் ஸ்ரீ வசனங்களைக் கேட்டும் பாக்யம் படைத்தவர்களாக விருக்கவேண்டும்.)

க்ஷமிக்கும் குணமுள்ள சீதாராமன் எங்களுக்கு இவ்விதம் அனுக்ரஹம் செய்யவேண்டும்.'' (122)

அயோத்தியில் உள்ள நகரவாசிகளுக்கு இம்மாதிரி அபிலாஷைகள் இருந்துவந்தன. ஆனால் கைகேயியின் மனத்திலோ தாபங்கள் கோபத்துடன் பொங்கி வந்துகொண்டிருந்தன. துஷ்டர்களின் சங்கத்தை அடைந்த மனிதர்கள் ஏன் கஷ்டப்பட மாட்டார்கள்? நீச புத்தியுள்ள மனிதர்களை ஸ்நேகமாக அடைந்தால் நம்மை அறியாமல் நம் மதியும் கெட்டுவிடுகிறது? (123)

சந்தியா காலம் வந்ததும் அரசர் மிக்க ஆனந்தத்துடன் கைகேயியின் பவனத்திற்கு வந்து சேர்ந்தார். அவர் எவ்விதம் தோன்றினர் தெரியுமா? காமம் பரம ப்ரீதி அடைந்து சரீரம் எடுத்துக்கொண்டு நிஷ்டூரத்தனமான (மூர்க்கத் தன்மையுடன்) பிடிவாதத்துடன் எதிர்த்து நிற்கும் எதிரியை அணுகுவது போலிருந்தது. (124)

கைகேயி கோபபவனம் சென்றுவிட்டதாக அறிந்து அரசர் தயங்கி நின்றார். அவருக்கு பயம் பிடித்துக்கொண்டது. பிரமை பிடித்தவர்போல என்ன பண்ணுவது என்று தெரியவில்லை. அவருடைய கால் கைகள் நடுங்கின. எவருடைய பாஹு பலத்தினல் இந்திரன் முதலான தேவர்களும், பூலோகத்தில் உள்ள அரசர்களும் நடுங்கிறவர்களாகவும், எவருக்கு பயந்து நடப்பதால் ஸ்தான பதவிகளை ஸ்திரமாகக் காப்பாற்றுகிறவர்களாகவும் விளங்கினர்களோ, (125)

[தியானம்

ஹே ராமா சீதா, ராமனுடைய லீலையாகிற பத்மம் எவ்வளவு கடினமாகவிருக்கிறது. அவன் அடியார்களுக்கு மனமுவந்து அதை எளிதாக்கினல்தான் அவர்கள் கிலேசங்கள் இல்லாமல் வாழ முடியும். அவன் திருவுள்ளம் வேறுவிதமாக இருப்பின் மனிதனுடைய ஸர்வ முயற்சியும் வீணே. வியாஸர் அர்ஜுனனுக்கு அடிக்கடி அடிக்கடி இதைத்தானே உபதேசித்தார். ஸ்திரிகளைக்கூட காண்டீபத்தினல் காப்பாற்ற முடியாத அர்ஜுனன் இவ்வளவு பலஹீனனுகப் போனதின் காரணத்தை அவன் வேதவியாஸரிடம் கேட்க, பகவான் யது குலத்தில் பிறந்தும், யது குலத்தினர்களுக்குத் தன் ப்ரேமையை அதிகமாகக் கொடுத்தும், அவர்களை ஒருவருக்கொருவர் சண்டை போடும்படி செய்து, அவர்களையே கொண்டு யது குலத்தை அழித்துவிட்டார். பஞ்சபாண்டவர்களின் வம்சத்தையும் அழித்து

விட்டார். தன்னை விராதனுகிற வேடனுல் அழித்துக் கொண்டார். உத்தரையின் கர்பத்தில் பிறந்த சிசுவை மாத்திரம் காப்பாற்றினுர். ஆகையால் மித்ரர்களுக்கும் பக்தர்களுக்கும்கூட ஹிதம் செய்பவராயிருந்தும் அவருடைய சங்கல்பத்தை அறிய முடிகிறதில்லை. இதையெல்லாம் நினைக்க நினைக்க என்மனம் ஐயா, பயப்படுகிறது. உமது சங்கல்பம் என்னை பயப்படச் செய்கிறது. உமது கருணை எவ்விதம் இருக்கும் என்று உம்முடைய சங்கல்பத்தை அறியமுடியாமல் உம்மையும் உமது பக்தியையும் அந்த பக்தியின் முடிவாகிய உமது பதத்தையும் எனக்கு கிலேசங்கள் இல்லாமல் அனுக்ரஹிக்க சங்கல்பம் செய்யவேண்டும். ஹே காலாத்மன், சக்ரபாணே, நம்பூதிரி சொன்னமாதிரி உன் பாதங்களை நம்பியிருக்கும் என்னை க்ருரவேகத்துடன் செல்லும் உமது கால சக்ரமானது கிருபையுடன் கஷ்டப்படுத்தவேண்டாம். ஹே குருவாயூர் அப்பனே, வாசுதேவா, சங்கல்பராமா, சத்ய சங்கல்பா, தனுர்தரரே, என்னை ரக்ஷி.]

அப்பேற்பட்ட மஹா சக்ரவர்த்தியாகிய தசரதன் ஸ்திரியின் கோபத்திற்கும் க்ரோதத்திற்கும் பயந்து நடுங்கினுர். காமதேவன் மூர்க்கத்துடன் ஒருவனிடம் பிரவேசித்துவிட்டால் அவனுடைய மகிமையை யாராலும் சொல்லமுடியாது. திரிசூலம், வஜ்ரம், வாள்கத்தி ஆகிற மஹா வீர்யம் படைத்த ஆயுதங்களின் சக்திகளையும் தாங்கக்கூடிய வைரம் படைத்த மஹாவீரர்கள், ரதிநாதனுகிய மன்மதனுடைய சுமனஸ்ஸாகிற புஷ்ப பாணங்களால் இறந்துவிட்டிருக்கிருர்கள் அன்ருே? (126)

அரசர் பயந்து பயந்து தன் ப்ரியையாகிற கைகேயியின் அருகே சென்ருர். அவளுடைய தசையையும் நிலையையும் பார்த்தார். பெரும் துக்கம் அவருக்கு வந்துவிட்டது. பூமியை சயனமாகக் கொண்டவளும் பழையதும் கிழிந்ததும், தடியான ஆடையை உடுத்திக்கொண்டவளும், சரீரத்தில் ஆபரணங்கள் ஒன்றும் இல்லாமல் சகல அங்கங்களும் சௌக்கியத்தைத் தியாகம் செய்தபடி விளங்குவதாக காணப்பட்டாள். (127)

துர்புத்தியுள்ள கைகேயியிக்கு எவ்விதம் இம்மாதிரி துர்வேஷம் சம்பவித்திருக்கிறது? அவளுடைய வேஷம் அவளுக்கு நேரப்போகும் விதவா தோஷமும் முன்கூட்டியே சூசிப்பதுபோல அல்லவா விளங்கியது. அரசர் கைகேயியின் அருகே சென்று கோமளவாணியினுல் மிருதுவாக அவளை

அழைத்தார். "ஹே ப்ராணப்ரியே, எதற்காக அம்மா கோபமடைந்திருக்கிருய்? (128)

"ராணி, எதற்காக கோபம் கொண்டிருக்கிருய்?" என்று சொல்லிக்கொண்டே அரசர் தன் கைகளால் அவளை ஸ்பர்சித்தார். அவள் வெடுக்கென்று அவர் கையை உதறித் தள்ளினுள். அவளுடைய க்ரோதம் ரோஷத்துடன் விளங்கும் க்ரூர விஷமுள்ள கருநாகம் மாதிரி இருந்தது. அவள் க்ரூரமான பார்வையாலும், உஷ்ணக் காற்ருலும் எரித்துவிடுபவள்போல விளங்கினுள். அவள் நினைத்துக்கொண்டிருக்கும் வரதான வசனங்கள் அந்த புஜங்கத்தின் இரு விஷமுள்ள நாக்குக்கள் போலவும், அந்த இரு வரங்களும் இரண்டு பற்கள் போலவும் விளங்கின. மர்மஸ்தானத்தில் கடிக்கும் தருணத்தை எதிர் பார்த்துக்கொண்டிருப்பது போல விளங்கிற்று. துளசிதாசர் சொல்கிருர். "அரசர் தசரதர் க்ரூரவிதியின் வசமடைந்ததால், இந்தமாதிரி, ராணியின் தூரத்தள்ளி ஒதுக்குதல்கூட அவருக்கு காமதேவனின் விளையாட்டுப்போல தோன்றிற்று." (129)

அரசர் அடிக்கடி மதுரமாகச் சொல்லிக்கொண்டும், அவளைத் தழுவிக்கொண்டும் சொல்ல ஆரம்பித்தார். "சுமுகி, என் அன்பே, அழகான லோசனங்களைப் படைத்தவளே, என்னைப் பார். கோகிலத்தின் த்வனிபோல உன் குரலைக் காண்பித்து என்னிடம் பேசு. மத்த கஜம்போல நடை உள்ளவளே, என் பிரியே, ஏனம்மா உனக்கு இந்த கோபம், க்ரோதம்? காரணத்தைச் சொல்." (130)

"என் பிரிய நாயசி உனக்கு, எவள் கெடுதல் செய்தாள்? எவளுக்கு யமராஜனுக்கு கொடுக்கும்படி இரண்டு தலைகள் இருக்கின்றன? யமராஜன் எவளை அழைத்துச்செல்ல விரும்புகிருன்? எந்த ஏழையை நான் உன் உத்திரவின்படி அரசனுக்க வேண்டும்? எந்த அரசனை நான் பதவியிலிருந்து தள்ளி, தேசத்தைவிட்டு விரட்டவேண்டும்? சொல். தாமதிக்காதே." (131)

"உன் சத்ரு அமரதேவதையாக இருக்கட்டுமே. அவனைக் கூட நான் கொன்றுவிடுகிறேன். அவர்களையே இவ்விதம் செய்வேனுகில் எனக்குச் சாதாரண கிராமீய ஸ்திரி புருஷர்கள் பூச்சி புழு மாதிரி. ஹே சுந்தரி, என் ஸ்வபாவமும் உன்னிடமிருக்கும் அன்பும் உனக்கு நன்ருகத் தெரியுமே. என் மனமானது ஸதா உன் முகரூபியான சந்திரனுக்கு ஒரு

சகோரபக்ஷி காதல் செய்வது போலிருக்கிறது. அதை நீ அறிவாயே.'' (132)

''என் பிரியையே, என் பிராணன், குழந்தைகள், ஸர்வ சம்பத்துக்கள் ஸகலமான என்னுடையவைகள் யாவையும், என் அம்மா, உனக்காக காத்துக்கிடக்கின்றன. எதை வேண்டு மானுலும் கேளு. என் பரிஜனங்கள் யாவரும் உன் ஆதீனத்தில் இருக்கிருர்கள். நான் கபடத்திஞல் உன்னிடம் சொல்லவில்லை. நூறு தடவைகள் நான் பிரிய புத்ரனுன ராமன்மீது ஆணை யிட்டுச் சொல்கிறேன்.'' (133)

'' நீ சந்தோஷப்பட்டு என்னிடம் வேண்டியதைப் பெற்றுக் கொள். உன் உடம்பை சிங்காரித்துக்கொள். உன் மனேஹர மான அங்கங்களை அலங்காரம் செய்துகொள். நல்ல சந்தர்ப்பம் உனக்கு வந்திருக்கிறது. உனக்கு வேண்டியதைப் பெற்றுக் கொண்டு இந்த கெட்ட வேஷத்தை தியாகம் செய்.'' (134)

இந்த வார்த்தையைக் கேட்டாள் கைகேயி. மனத்தில் ராமனுடைய ஆணையின் பேரில் சொல்லப்பட்ட வசனங்களை நினைத்துப் பார்த்துக்கொண்டாள். மந்தபுத்தியுள்ள கைகேயி எழுந்திருந்து தன் ஆபரணங்களை மாட்டிக்கொண்டு, தன்னை தயாரித்துக்கொண்டு எவ்விதம் க்ருர சித்தமுள்ள வேடுவச்சி மானைப் பார்த்துவிட்டு அதை பிடிப்பதற்கு வலையை தயாரிப்பாளோ, அதுபோல சித்தமானுள். (135)

அரசன் தன்வசம் கைகேயி அடைந்துவிட்டாள் என்கிற எண்ணத்தைக் கொண்டவராக, அதிகப்பிரேமையுடன் புளகாங் கித மடைந்து, மிருது மஞ்சுளபாஷையினுல் அவளைத் தழுவிக் கொண்டு சொல்ல ஆரம்பித்தார். ''என் பிரிய நாயகி, நீ என்னிடம் எதற்காகப் பயப்படவேண்டும்? உன் எண்ணம் நிறைவேறினதாக நினைத்துக்கொள். இன்று நகரத்தின் ஒவ் வொரு வீட்டிலும் ஆனந்தம் நிரம்பி வழிந்து ஓடுகிறது'' (136)

''நான் நாளை தினம் ராமனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்யப்போகிறேன். இதனுல் நீ மங்களங்களோடு அலங்கரித் துக்கொள்.'' இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அந்த அரசியின் கடூரமான ஹ்ருதயம் அதிவேகமாக துடித்தது. பழுத்த சிரங்கு ஸ்பரிசம் பட்ட மாத்திரம் வெடித்து ரத்தமும் சீயும் கொட்டுவது போலிருந்தது. (137)

அவ்வளவு மிக்க பாரமான பீடையைக்கூட தன் சாமர்த்தி யத்தால் சிரித்துக் கொண்டு மறைத்தாள் கைகேயி. எவ்விதம் ஒரு திருடனின் மனைவி தன் நாயகன் அகப்பட்டுக்கொண்ட

பின்பு வருத்தப்படாமல், பச்சாதாபப்படாமல், மூர்க்கத்தனமாக, தான் அவனுக்குச் சேர்ந்தவள் என்கிறதை மறைக்க விரும்பி அழாமல் ஒரு பேதத்தையும் காண்பிக்காமல் லஜ்ஜையின்றி விளங்குகிருளோ, அதுமாதிரி சாமர்த்தியத்தினுல் மறைக்கப் பட்ட அவளுடைய கபட ஹ்ருதயத்தை அரசர் புரிந்துகொள்ள வில்லை. ஏன் தெரியுமா? கோடிக்கணக்கான குடில யுக்திகளை கைகேயி குரு சிகாமணியாகிய மந்தரையிடமிருந்து நன்ருக கற்றுக்கொண்டிருந்தாள். (138)

அரசர் நீதி சாஸ்திரத்தில் நிபுணர்தான். ஆனுல் ஸ்திரி களின் சாகஸம் ஆழம் தெரியாத மஹாஸமுத்திரமாச்சுதே. அந்த கைகேயி கபடமான ஸ்நேகத்தை வரவழைத்துக்கொண்டு, தன் நேத்ரங்களையும் முகத்தையும் ஒருவிதமாக திருப்பிக்கொண்டு, மோஹமடைந்த அரசனிடம் சிரித்துக் கொண்டு சொல்ல ஆரம்பித்தாள். (139)

"ஆமாம், ப்ரிய நாயகா, வரங்களை வேணும்கிறபடி பெற்றுக்கொள் என்று சொல்லுகிறீர்களே, யார் கொடுத்தார்கள்? யார் பெற்றுக் கொள்ள இருக்கிருர்கள்? ஒன்றையும் யாரும் கொடுக்காமல் நான் எதை பெற்றுக்கொள்ளுவது? ஒரு சமயம் முன்பு நீங்கள் எனக்கு இரண்டு வரங்கள் கொடுத்தீர்கள். அவைகளைக்கூட நான் அடைவது சந்தேகம்தான்." (140)

அரசர் சிரித்துக்கொண்டே, அவளைத்தடவிக் கொண்டே, சொன்னுர்.—"இப்போதுதான், உன் மர்ம எண்ணங்கள் தெரிய வந்தன. உனக்கு என் மீது கோபம் காட்டுவது பரமப்ரியமாக விருக்கிறது. நீயோ அந்த இரண்டு வரங்களை சேமித்து வைத்து பூட்டிக் கொண்டிருக்கிருய். என்னைக்கொடு என்று கேட்டது கிடையாது. நானும் ஒரு முட்டாள். அவைகளை மறந்துவிட்டிருக்கிறேன்." (141)

"அதனுல் என்னை பொய்யன் என்று நினைத்துவிடாதே. வேணுமானுல் அந்த இரண்டு வரங்களுக்குப் பதிலாக நான்கு வரங்களைக் கேட்டுப் பெற்றுக்கொள். உனக்குத்தான் தெரியுமே, ரகு குலத்தின் தர்ம ரீதி சதாசாரம் படைத்தது. பிராணனை விட்டாலும் விடுவார்கள். வாக்குக் கொடுக்கப்பட்ட வசனங்களை, அதிலும் வேண்டப்பட்டு—யாசிக்கப்பட்ட வரதானங்களாகிய வசனங்களை நிறைவேற்றியே தீருவார்கள். அவர்கள் பேச்சு மாறினுர்கள் என்று யாரும் சொல்லமுடியாது." (142)

"அசத்யமான வசனங்களுக்கு ஸமமாக கொடூரமான பாப சமூகங்களும் இருக்கமுடியாது. கோடிக்கணக்கான கடுகு

விதைகள் சேர்ந்து ஒரு பெரிய மலைக்கு சமமாக ஆகுமா? சத்யத்தின் மூலம் சகல உத்தம புண்யங்களும் உற்பத்தியாகின்றன. இந்த உண்மை வேதபுராணங்கள் யாவற்றிலும் பிரசித்தமாக விளங்குகின்றனதே. ஸ்வயம்பு மனு அடிக்கடி சொல்லியிருக்கிறரே.'' (143)

''உனக்கோ நான் ராமன் பேரில் ஆணை செய்து வாக்களித்திருக்கிறேன். அந்த ரகு ராய், என் பையன், என்னுடைய சுக்ருதங்களின் புண்யபலனுச்சே. என்னுடைய பரம ப்ரீதிக்கும் அருகதையான புத்ரனுச்சுதே'' இந்த விதமாக பேசும் அரசரின் வார்த்தைகள் கைகேயியிக்கு காய்த்து தொங்கும் பழங்கள் போலிருந்தன. துர்புத்தியுள்ள கைகேயி சிரித்துக் கொண்டு அரசனிடம் சல்லாபம் செய்து கொண்டிருந்தாள். அவளுடைய துஷ்ட சித்தம் ஒரு துஷ்ட கழுகு, பருந்து போல தன்னுடைய க்ரூரமான பார்வையால் தன் இரையைத் தேடுவது போலிருந்தது. (144)

அரசனுடைய மனோரதம் அழகான வனம் மாதிரி அந்தோ, விளங்கியது. அதிலே அழகான பக்ஷி சமுதாயங்கள் வசித்தன. நல்ல எண்ணங்கள் அரசனுடைய மனதில் தோன்றிக்கொண்டிருந்தன. அந்த எண்ணங்களாகிற அழகான பக்ஷிகளின்மேல் குறிவைத்த ஒரு பில்லி வேடச்சி க்ரூரமான ராஜாளி பக்ஷியை முதலில் விட்டு அவைகளைக் கொல்வதுபோல அந்த கபடசித்தமுள்ள ராணி தன்னுடைய பயங்கரமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தாள். (145)

## மாஸபாராயணம்—பதின்மூன்ருவது அத்யாயம்

[தியானம்

ஹே லலிதே, திரிபுரசுந்தரி, உமாலக்ஷ்மி ப்ருவிருத்த ஸ்ரீமதி என்று என்னுல் அழைக்கப்பட்டு, அழகும், அறிவும், நிதியும், மஹாதபஸ் என்கிற ஞானம், பலம் ஆகியவைகளைக் கொண்டவளே, ஜனன மரணங்களடங்கிய ஸம்ஸாரமார்க்கத்தில் அனுதி காலமாக நடந்து கொண்டு வருந்தும் ஜீவராசிகளுக்கு சிரம பரிஹாரம் செய்வதற்காக அந்த அந்த காரிய காரணங்களை அறிந்து, கார்ய வர்க்கங்களை தம் தம் காரணங்களில் அடக்குவதற்குரிய ஸர்வக்ஞத்வம் உள்ள மஹாமதியே, நிமித்த காரணம் உபாதான காரணம் ஆகிய எல்லாவற்றிற்கும் மூலகாரணமான சக்தி தேவதையே, நீயே என்கதி. என்னிடம் பிடிவாதமாக

  

இருக்காதே. நான் உன் பாலகன் அன்றோ? அறிவானது உனது செல்வமல்லவா? நான் பிடிவாதமாக உன் பாதங்களை நம்பிவந்தேன். உன் சகோதரனான ராமபிரானின் அருளுக்குப் பாத்திரனாகவேண்டும். தாயே, என் மனதில் கோயில் கொண்டவளே, நீதான் தயை செய்யவேணும். சீதா தேவி, உன் மனம் குளிர்ந்து ராமனிடம் என்மீது அன்பாக இருக்கச்சொல். கருணையை எனக்கு கொடு அம்மா.]

கைகேயி சொல்ல ஆரம்பித்தாள். "என் பிராணநாதரே, தயவு செய்து கேளும். என் மனம் ரொம்ப ஆசைப்படும் முதல் வரமாகிய ராஜதிலகத்தை என் புத்ரனாகிய பரதனுக்குக் கொடும். என் நாதரே, இன்னொரு வரம் நான் கேட்பதையும், கைகூப்பி நான் கேட்பவையும் பூர்ணமாகப் பூர்த்தி செய்து கொடுக்க வேண்டும்." (146)

"மஹாதபஸ்வியின் வேஷம் தரித்து, உதாஸீன பாவத்துடன், ராஜ்யம், குடும்பம், போகங்கள் இவைகளிலிருந்து திரும்பிய மனமுள்ள நிவிருத்தி மார்க்கத்தை அடைந்த முனிமாதிரி ராமனை பதினான்கு வருஷங்கள் வனவாசம் செய்ய அனுமதிக்க வேண்டும்." கைகேயியினால் மிருதுவான கோமளமான வாணியினால் சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்ட பூபதியின் ஹ்ருதயம் மிக்க சோகத்தால் நிரம்பப்பட்டு, எவ்விதம் சந்திரனின் குளிர்ந்த கிரணங்களின் ஸ்பர்சத்தால் சகோரபக்ஷி திண்டாடுவதுபோல விளங்கினார். (147)

அரசர் அதிர்ந்துபோய்விட்டார். அவரால் வார்த்தைகள் ஒன்றும் பேசமுடியவில்லை. பயப்பட்ட பக்ஷியின்மேல் ஒரு பருந்து எதிர்பாராதவிதமாக ஒரு வனத்தில் துரிதமாக இறங்குவது போலிருந்தது. அரசருடைய நிறம் பயத்தால் மாறி, வெளுத்துப்போயிருந்தது. ஒரு பெரிய பனைமரத்தின்மேல் மின்னல் பாய்ந்து அதைக் கீழே தள்ளின மாதிரி அரசர் தன் சொந்த நிறத்தை இழந்து மரித்தவன் போல விளங்கினார். (148)

தன் இரு கைகளை நெற்றி புருவத்தின் மேல் வைத்துக் கொண்டு இறுகக் கண்களை மூடிக்கொண்டு அரசர் யோசிக்க ஆரம்பித்தார். அழ ஆரம்பித்தார். சோகமே உருவெடுத்து அழுவது போல விளங்கினார். "அந்தோ, தெய்வமே, என் மனோரத ரூபியாகிற கல்பக வ்ருக்ஷத்தின் புஷ்பம் பூக்க ஆரம்பித்தது. அந்த நல்ல சமயத்தில் கைகேயியாகிற பெண் யானை வேரோடு அந்தக் கொடியை பிடுங்கி எறிந்துவிட்டதே." (149)

"என் அயோத்யாபுரி கைகேயியினால் மனிதசஞ்சாரம் இல்லாத பாழான இடமாக ஆகிவிட்டது. மேன்மேலும் வருகிற ஆபத்துக்களுக்கு இவள் விதைவிதைத்து விட்டாளே" (150)

"எப்பேற்பட்ட நல்ல தருணத்தில் என்ன விபரீதமான சம்பவம் ஏற்பட்டது. என் ஸ்திரி, எனக்கு உட்பட்டவள், என்னுடைய பூர்ண விஸ்வாசத்தை அடைந்தவள் என்று நம்பி, நான் அவளாலேயே கொல்லப்பட்டேன். பரமதபஸ் செய்து, மிக்க அனுஷ்டானங்களுடன் சம்பவித்திருக்கும் யோகிக்கு சிறந்த சித்தி அடையும் சமயம், அந்த யோகி விஷயப்பற்றுதல் என்கிற அவித்யையை அடைந்து தன்னுடைய உத்தமமான தபஸ்ஸை பாழ்படுத்தியது போல அல்லவா நான் ஏமாற்றப் பட்டேன்." (151)

அரசரான தசரதருடைய மனம் இவ்வாறு கொந்தளித்தது. அவருடைய சிந்தனைகள் இவ்விதமாக ஓடிக்கொண்டிருந்ததைக் கண்ட பிடிவாதமுள்ள கைகேயி மனதில் ஆசை நிறைவேறுமோ என்கிற பயத்தால் க்ரோதத்தை அடைந்தவளாக, க்ரூரமாக அரசரை பீடிக்க ஆரம்பித்தாள். "ஹே ஸ்வாமி, பரதன் உமக்குப் பிறந்த புத்ரன் இல்லையா? என்னைத் தாங்கள் விலைக்கு வாங்கின அடிமை மாதிரி அடைந்தீர்களா? நான் உமக்கு விவாஹசம்பந்தம் இல்லாத பத்னியா? பதில் சொல்லும்." (152)

"ஏன் ஸ்வாமி, என் வார்த்தைகளைக் கேட்ட உடனே, அம்பு தெய்த்த மாதிரி கஷ்டப்படுகிறீரே? நீங்கள் முன்கூடியே யோசித்து வசனங்களை சாவதானமாகப் பேசியிருக்கலாமே. பதில் சொல்லுங்கள். பேசாமல் இருக்கிறீர்களே. நான் கேட்கிற கேள்விகளுக்கு சரியான உத்தரவு கொடுங்கள். முடியும், முடியாதது என்று சொல்லி விடுங்கள். நீங்கள் "ரகு குலத்தில் பிறந்த மன்னர்கள்—ஸத்யசந்தர்கள் சொன்ன சொல்லைக் காப்பாற்றுவார்கள்" என்று பிரகடனப் படுத்திக் கொண்டீர்களே." (153)

[தியானம்

ஹே சீதாராமா, சௌமித்ரியாகிற லக்ஷ்மணனால் நன்கு சேவிக்கப்பட்ட ஸ்ரீராமா, தியாகராஜ ஹ்ருதயத்தை ஆனந்தித்து அவருடைய ஸுதாவாகிற நாதத்தையும் நாதயோகத்தையும் அங் கீகரித்த மஹானுபாவா, நரசிம்மபாரதி போன்ற மஹான்கள், "தியாகராஜா, இதுவா பக்தி?" என்று சொல்லும்படி, வியக்கும் படி கீர்த்திவாய்ந்த மஹானுபாவா, சங்கர ஹ்ருதயத்தையும்

அம்பிகையாகிற பராசக்தியின் உள்ளத்தையும் அறிந்த மஹானு பாவரே, மனசையும் சரீரங்களின் ஆறுவித எதிரிகளையும் அடக்கி, நாதவித்தையை நாபி, கண்டம், மூக்கு, நாக்கு, காது, வாய், பிராணன் மனஸ் ஆகிற எல்லாவற்றுடனும் என் பிரபு சீதாராமனுக்கு அர்ப்பணம் செய்து, கைகளால் அர்ச்சித்தும் ஸ்ரீராம பாதங்களை எனக்குக் காட்டிக் கொடுத்த குரு மஹாராஜ ரான தியாகராஜரே, தியாகபிரும்மமே, நமஸ்காரம். காமாக்ஷி யின் தாஸரே, சீதையின் மனோஹரனே, நாரதரால் உபதேசிக்கப் பட்ட சத்குருவே, உம் அனுக்ரஹத்தால் என் தாமஸ குணங்கள் விலகி, சத்வமாகிற ராம மந்திரத்தின் உட்கருத்தை அனுப வித்து, உம்முடைய மஹா க்ருபையாகிற ராமதர்சனத்தை அடைந்து, ஆஞ்சநேயர், தூர்வாசர், நாரதாதி, சுகர், சௌன காதி, மதங்கர் முதலியவர்கள் அடைந்த பரபிரும்மத்தையும் நானும் அனுபவிக்க வேணும். ராமா, வேத மூர்த்தியான கருட னுக்கு சந்தேகத்தைக் கொடுத்த ராமா, ஆஞ்சநேயர் முதுகில் ஏறின ராமா, சேஷதல்பத்தில் படுத்த சீதாராமா, லங்கையில் இருக்கும் ஸுவேல மலையின்மேல் நின்ற ராமா, தியாகராஜருக்கு மலையின்மேல் நின்று காக்ஷி அளித்த ராமா, நாத வெள்ளத்தில் மூழ்கிக்கிடக்கும் நாதா, என் ஹ்ருதயத்தில் வசிக்கும் சீதாராமா, என்னை நீதான் ரக்ஷித்து அருளவேண்டும். ஸாது ஜனப்ரியா, அயோத்யா ராமா, தசரத ராமா.]

''நீங்களே வரத்தைப் பெற்றுக்கொள், என்று சொன்னீர்கள். உமக்கு இஷ்டமில்லாவிடில் வார்த்தைகளையும் வரங்களையும் வாபஸ் பெற்றுக்கொள்ளுங்கள். சத்யம் என்கிற விரதத்தையும் விட்டு விடுங்கள். இந்த ஜகத்தில் அசுபமான கீர்த்தியை அடையுங்கள். சத்யத்தைப் புகழ்ந்து, வரங்களை நீங்களே, நான் வேண்டாமல் இருக்கும் சமயம், என் கைகளில் திணித் தார்கள். நான் யாசகமாக ஒரு கைப்பிடி அரிசி கேட்பேன் என்று நினைத்தீர்களோ?'' (154)

'' அரசர் சிபி என்ன, ததீசி (தன் முதுகு எலும்பை வஜ்ரா யுதம் செய்வற்தகாக இந்திரனுக்குத் தானம் கொடுத்தவர்.), பலி சக்ரவர்த்தி ஆகிய இவர்கள் தங்கள் உயிர் போனாலும் வார்த்தை யின் கௌரவத்தைக் காப்பாற்றினவர்கள். சரீரம், ஐஸ்வர்யங் கள் எல்லாவற்றையும் தியாகம் செய்து, தங்கள் சத்யவ்ரதத் தினால் தங்களை மேன்மைபடுத்திக் கொண்டார்கள். கைகேயி யின் அதி கடூரமான வசனங்களைக் கேட்ட அரசர் புண்ணில்

உப்பை போட்டு தேய்த்தால் எவ்விதம் சங்கடப் படுவார்களோ, அதுமாதிரி சங்கடப்பட்டுக் கொண்டிருந்தார். (155)

தர்மத்தை த்வஜமாகக் கொண்டவரும், சதா சத்ய சந்தராக விளங்கின தர்ம துரந்தரரான தசரத மஹாராஜர் தைர்யத்தை வரவழைத்துக்கொண்டு நேத்ரங்களை விசாலமாகத் திறந்தார். தன் தலையில் அடித்துக் கொண்டார். தீர்க்கமான மூச்சு பெரிதாக வந்துகொண்டிருந்தது. "இவள் என்னைக் கோடாலியால் கொன்றுவிட்டாள்" என்று சொன்னார். (156)

கைகேயியின் கண்களில் கோபம் எரிந்தது. நிராசையால் ஏற்பட்ட கோபம் க்ரோதமாக மாறி நெருப்பு ஜ்வாலைகளை கக்கிக்கொண்டு எரிந்து கொண்டிருந்தது. பிரசண்டமான க்ரோதத்துடன் விளங்கும் கைகேயி, உருவின கத்திபோல நின்று கொண்டிருந்தாள். அந்த கத்தியின் அடிபாகம் சத்சங்கமில்லாததினால் ஏற்பட்ட அவித்யையின் பலனாகிற கெட்ட புத்தி, அதன் முனை கெட்ட புத்தியுடன் கூடின பிடிவாதம், அதனுடைய தீட்டுதல் மந்தரையாகிற கூனியினுடைய முதுகின் பாகம் கல் போல கடினமாக விருந்தது. இப்படிப்பட்ட முனையுடன் விளங்கிய கத்திபோல அரசி விளங்கினாள். (157)

அந்த பெரிய கத்தியையும், அதனுடைய உக்ர வேகத்தையும் கண்டு அரசர் பயந்தேபோய்விட்டார். வாஸ்தவமாக என் உயிரை இவள் அபஹரித்து விடுவாள் என்று யோசித்தார். தன் மனதை கடினமாக்கிக் கொண்டு வினயத்துடன் மிருதுவான பாஷையினால் அரசர் பேச ஆரம்பித்தார். (158)

"பிரியே, என்ன பயங்கரமான வார்த்தைகளைச் சொல்லி என்னைப் பயப்படுத்திவிட்டாயே. என்மீது விஸ்வாஸமாகிற நம்பிக்கை, பிரேமைபாசம் ஆகியவற்றை நஷ்டம் செய்து, உன் மனத்திற்குத் தோன்றினபடி வசனங்களைச் சொல்லுகிறாயே. உனக்குத் தெரியுமா, பரதனும் ராமனும் என்னுடைய இரு கண்கள். சங்கர பகவானுக்குத் தெரியும். அவர் ஸர்வதோமுகரானபடியால் ஸர்வசாக்ஷி. அவர் ஸத்யம் சொல்பவர்." (159)

"நான் அவஸ்யமாக தூதனை நாளைக் காலையில் அனுப்புகிறேன். பரத சத்ருக்னர்கள் இந்த விஷயத்தை அறிந்து உடனே வருவார்கள், நல்ல சுதினத்தில், சுபமுகூர்த்தத்தில் எல்லா ஏற்பாடுகளையும் தயார் செய்து, பரதனுக்கு ராஜ்யத்தை நான் தந்துவிடுகிறேன்." (160)

"என் ராமனுக்கு ராஜ்யத்தை அடைவதில் லோபம் இல்லை. பரதனிடம் ராமனுக்கு அத்யந்த பிரியம் உண்டு. நானாக ராஜ

நீதியை ஆலோசித்து, மூத்தவனுக்கு வம்ச பரம்பரையாக வந்த ராஜ்யத்தைக் கொடுப்பது என்று தீர்மானம் செய்தேன். பரதன் ராமனுக்கு இளையவன் என்று அனுமானித்தேன்.'' (161)

[தியானம்

ஹே சீதாராமா, கருடனால் சேவிக்கப்பட்ட வேதமூர்த்தி, பரமசிவனால் வணங்கப்பட்ட ராமபிரபு, உமாதேவியினால் தியானிக்கப்பட்ட ராமச்சந்திரா, சூர்யனால் சம்மானம் செய்யப்பட்ட கமலமே, காய்த்திரியின் உட்பொருளாக விளங்கும் மந்திர மூர்த்தியே, காளியினால் வணங்கப்பட்ட காலதெய்வமே, துர்வாஸரால் சேவிக்கப்பட்ட ஸ்ரீராமா, பரதனை தம்பியாகப் பெற்ற செல்வ சீமானே, தசரத நந்தனா, உன் மனம் இரங்கி, ஹனுமார், தியாகராஜர், வால்மீகி பகவான், துளசிதாஸர், நாரதர் சொல் கேட்டாவது என்னிடம் வரமாட்டாயா? உன் தயை, கிருபை எனக்கு எப்போது கிடைக்கும்?]

'' நான் ராமனை ஆணையிட்டு, நூறு தடவைகள் ஆணையிட்டு எனக்கு உன்னிடமுள்ள இயற்கையான ப்ரேமை ஸ்வபாவத்தினால் சொல்லுகிறேன். ராமனுடைய மாதாவாகிய கௌஸல்யையிடம்கூட நான் இதை பிரஸ்தாபிக்கவில்லை. அவளும் என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை. உன்னையும் கலந்து ஆலோசித்து, நான் இதைச் செய்யவில்லை. இதனால் இப்போது என் மனோரதம் நிறைவேறாமல் ஆகிவிட்டது.'' (162)

'' இப்போது தயைசெய்து க்ரோதத்தைவிடு. மங்களமான அலங்காரங்களைச் செய்துகொள். கொஞ்ச நாட்களில் பரதன் யுவராஜாவாக ஆகிவிடுவான். ஒரே ஒரு விஷயம் எனக்கு பரம துக்கத்தை கொடுக்கிறது. இன்னொரு வரமாகக் கேட்டாயே அது அசம்பாவிதமாகப்பட்டது.'' (163)

'' அதை நினைக்கும்போதே நெருப்பு மாதிரி என் உள்ளம் எரிகிறது. கோபத்தினால் நீ சொன்ன வார்த்தையா அல்லது கேலியாகச் சொன்ன வார்த்தையா? பரிஹாஸமாகச் சொன்னால் பரவாயில்லை. நீ ராமனிடம் என்ன அபராதத்தை கண்டாய்? க்ரோதத்தை விடு. எல்லோரும் ராமனை சாது என்கிறார்கள். உனக்கு என்ன அபராதம் அவன் செய்திருக்கக்கூடும்?'' (164)

'' ராமனைப்பற்றி நீயே எத்தனை தடவைகள் என்னிடம் புகழ்ந்து இருக்கிறாய்? நினைவுபடுத்திக்கொள். அவனிடம் அதிக ஸ்நேகத்தை நீயே காட்டியிருக்கிறாயே? இவ்வளவு நாட்கள் நீ சொல்லிய வார்த்தைகள் வீணாகப்போய், எனக்கு

உன்மீது வீணுக சந்தேகத்தை ஏன் ஏற்படுத்துகிருய்? எதிரிகளுக்குக்கூட ராமனின் ஸ்வபாவம் அனுகூலமாகவிருக்கும் போது, அப்பேற்பட்ட ராமனின் தாயாராகிய உனக்கு எங்கேயாவது பிரதிகூலமான காரியங்களைச் செய்திருப்பானு?'' (165)

''என் பிரியே, பரிகாசத்தையும் க்ரோதத்தையும் விட்டுவிட்டு, விவேகத்துடன் யோசித்து, வேறு வரம் கேட்டுப் பெற்றுக்கொள். அதனுல் நான், என் கண்கள் ஆனந்தத்துடன் நிரம்ப, ப்ரிய பரதனுடைய ராஜ்யாபிஷேகத்தை செய்துவைக்கிறேன்.'' (166)

''மீன் குஞ்சுகள் தண்ணீர் இல்லாமல் வாழாது; நாகமணி இல்லாமல் நாகசர்ப்பம் துக்கம் அடைந்து மரித்துவிடும். என்னையும் என் இயற்கையையும் உனக்கு நன்கு தெரிவிக்கிறேன். ராமன் இல்லாவிடில் என் ஜீவனும் பிரிந்துபோகும்.'' (167)

''நீ கெட்டிக்காரியாயிற்றே. அதிலும் என் ப்ரியையாகவும் இருக்கிருய். என் வாழ்க்கையின் ரகசியத்தைத் தெரிந்துகொள். ராமனுடைய தர்சனத்தை அதீனமாகக் கொண்டது என் ஜீவன்.'' அரசருடைய மிருதுவானதும் மதுரமான வசனங்களையும் கேட்டு, கைகேயி நெய் ஆஹுதி வார்த்த அக்னியைப் போல மனம் கொதித்தாள். (168)

கைகேயி சொல்ல ஆரம்பித்தாள்: ''ஐயா, கோடி உபாயங்களைச் சொல்லும். உம்முடைய மாயாஜாலங்கள் என்னிடம் இந்த விஷயத்தில் பலிக்காது. நான் எதைக் கேட்டேனே, அதைக் கொடுங்கள். இல்லாவிடில் அபகீர்த்தியை அடையுங்கள். நான் உங்களிடமிருந்து பல விதமாகச் சுற்றி வளைத்துப் பேசும் பேச்சுக்களை நான் கேட்கத் தயாராகவில்லை.'' (169)

''ராமனே சாது, நீயும் ஸாத்வி; ராமனின் தாயாரான கௌஸல்யையும் நல்ல பெண். நான் எல்லோருக்கும் ஹிதத்தை செய்யவேண்டும். கௌஸல்யை எவ்விதம் என் நன்மையை ஸதா நினைத்துக்கொண்டிருக்கிருளோ, நானும் அவளுக்கு யோக்யமானதும், அவள் என்னை மறந்து போகாமல் நினைக்கும்படி நல்லதைச் செய்யவேண்டும்'' என்று மன்னர் சொன்னுர். (170)

''நாளைக் காலை ராமன் முனிவேஷம் தரித்து வனவாசம் செல்லாவிடில், ஹே ராஜாவே, நான் மனதில் நிச்சயப்படுத்திவிட்டேன். என் மரணம் நேரிடும். உங்களுக்கு அபயசஸ் அபகீர்த்தி உண்டாகும். நன்ருகத் தெரிந்துகொள்ளும்.'' (171)

இவ்விதம் சொல்லிவிட்டு, கெட்ட புத்தியுள்ள கைகேயி

எழுந்தாள். அவளைப்பார்த்தால் ரோஷம் பொருமல் நதி தன் கரைகளை வெள்ளத்தினுல் மீறுவது போல விளங்கினுள். அப் பேற்பட்ட நதி பாபரூபியான மலையிலிருந்து உற்பத்தியாகி க்ரோதமாகிற ஜலத்தினுல் நிரப்பப்பட்டு, எல்லோருக்கும் பயத்தை உண்டுபண்ணுவதாக விளங்கியது. (172)

அந்த இரு வரதானங்கள் அந்த பயங்கரமான நதிக்கு இரு கரைகள். கைகேயியின் கடின சித்தம் அந்த நதியின் பயங்கர மான வெள்ளப் பிரவாஹங்கள். கூனி மந்தரையின் போதனைகள் அதன் சுழல்கள். ராஜா உருவத்தில் இருக்கிற விருக்ஷத்தை வேரோடு பிடுங்கி எரிந்து, அந்த வெள்ளப் பிரவாஹம் எல்லோருக்கும் ஆபத்துக்களையும் நாசத்தையும் உண்டு பண்ணிக்கொண்டு சமுத்திரத்தை நோக்கிப் பாய்ந்து அடைவது போலிருந்தது. (173)

[தியானம்

ஹே ராமா சீதா, ஸ்ரீமந்து வாகிற ஹனுமாரால் சேவிக்கப் பட்ட சீதாராமா, தியாகராஜர் பரதன் முதலியவர்களால் சேவிக்கப்பட்ட சீதாராமா, உன் பாத சேவையையும் கைங்கர்யத் திலும் சதா நாடி நிற்கும் ஸுபர்ணரையும், அவர் ஞானம் இன்பம் ஆகிற இரு இறக்கைகளால் வேத மூர்த்தியான உம்மை சதா அனுபவித்துக் கொண்டிருக்கிருர். புஜகோத்தமரான ஆதிசேஷன் சதா உனக்கு பணிவிடை செய்துகொண்டு, தாமரை இதழ்கள்போல நீண்ட திருக்கண்கள் உடையதும் குணங்களின் பெருமைகளை அறிந்து, உம்மிடமிருக்கும் அபார அன்பினுல்தான் நன்மை பெற்று, என் ஆசார்யர்களான வியாஸர், நாரதர், சுகர் வால்மீகி போன்றவர்களையும், நிரஞ்ச னரும் நிராமயரும் தாரையின் கணவரும் சுராசாரியரும் புவன மங்களத்தைக் கொடுப்பவரும் ஜிதக்ரோதரும், வேதத்தில் மஹா பாண்டித்யம் மஹா விஸவாசமுள்ளவரும், ஏகதர் த்விதர் திரிதரால் பரம் பொருளாகிற நாராயணரைப் பற்றி உபதேசிக்கப் பட்டவரும் மாதவருடைய பெருமையை இந்திராணிக்கு உபதேசித்தவரான பிரஹஸ்பதியை நமஸ்கரிக்கிறேன். அவரால் உபதேசம் செய்யப்பட்ட நான் அழகான திவ்ய மங்கள ரூபத்தை உடைய சீதாராமனிடம் என்பக்தியையும் பூஜையையும் ஏற்கச் சொல்லி, ரக்ஷகனுக சம்சார தாபங்களிலிருந்து விடுபடுவதற்கு அடைகிறேன். மரீசியே, சுகத்தை அளிப்பவரே, அமான வனே, அம்ருதத்தைக் கொடுத்து தேவர்களை சுகப்படுத்திய தன்

வந்திரியே என் ஸுஹ்ருத்தே, என் நன்மையைக் கோரும் ஸுப்ரரான ராமா, தியாகராஜர், சுக்ரீவன், விபீஷணன் ஆஞ்சநேயர் ஆகியோர்களின் மித்ரா, என்னை கட்டிக் காத்தருள்.]

அரசர் இப்போது கைகேயி சொன்ன வார்த்தைகள் நிஜ மென்று சரியானபடி புரிந்து கொண்டார். தன் விதிப்படி தனது மரணம் ஸ்திரி மூலம் ஏற்படப் போகிறது என்று மஹா அறிவுடன் புரிந்து கொண்ட அரசர், அந்த ம்ருத்யு இப்போது தன் முன்னே நடனமாடுகிறது என்றும் புரிந்து கொண்டார். சரி, வேறு விதமாக சமாதானப் படுத்தலாம் என்கிற எண்ணத் துடன் அவர் கைகேயியின் பாதகமலங்களைப் பிடித்துக் கொண்டு, வினதையுடன் கெஞ்சிக் கேட்க ஆரம்பித்தார். "தின கரகுலத்தின் மரத்தை கோடாலியினால் விழுத்தும்படி நடந்து கொள்ளாதே." (174)

"வேணுமானால் என் தலையைப் பெற்றுக்கொள். இப் போதே அதை நான் தருகிறேன். ராமனைவிட்டுப் பிரிந்து, விரஹதாபத்தினால் ஏற்படும் மரணத்தால் என்னை சாக வைக்காதே. எந்த விதமாவது ராமனை மாத்திரம் இவ்விடம் வைத்திரு. என் சொல்படி நடக்காதபோனால் உன் வாழ் நாட்கள் பூராவும், ஜன்ம பரியந்தம் வருந்துவாய், அம்மா பச்சாதாபப்படுவாய்," என்று கதறினர். (175)

அரசர் வ்யாதி அதி மீறிப் போய், சிகித்ஸைக்கு அடங்காதபடி வளர்ந்து போவதை உணர்ந்தார். தீனமான குரலில் "ராமா," 'ராமா" பரம ஆர்த்தியாகிற குரலில் "ஹா ரகு நாதா," என்று கதறிக் கொண்டு பூமியின் மேல் விழுந்தார். (176)

அரசர் வ்யாகூலம் அடைந்து விட்டார். அவருடைய சரீரம் முழுவதும் குளிர்ந்துபோய் மூர்ச்சை அடைந்துவிட்டவர் போல அவர் விளங்கினர். சகல மங்களத்தைத்தரும் கல்பதரு வேருடன் ஒரு யானையின் அக்ரம சேஷ்டிதத்தால் எரியப்பட்டதுபோல அவர் விளங்கினர். கண்டம் வரண்டுபோய், முகத்திலிருந்து பேச்சு மூச்சுவர வில்லை. அவருடைய ஸ்திதி எவ்விதம் ஜலமில்லாமல் வரண்ட இடத்தில் மீன்குஞ்சுகள் தத்தளிக்குமோ அது போல விருந்தது. (177)

கைகேயி மீண்டும் கடூரமான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தாள். அவளுடைய வார்த்தைகள் கோரமான காயத்தில் விஷத்தை வார்ப்பதுபோலவிருந்தன. "இவ்விதம் நடந்து கொள்ளப் போவதாக இருந்த பொழுது ஏன் என்னை

வரத்தை கேளு, பெற்றுக்கொள், என்று எந்த ஆதாரபலத்திஞல் சொன்னீர்கள்.?'' (178)

'' அரசனே, ஒரே சமயத்தில் சிரித்துக்கொண்டும் அதிருப்தி யிஞல் உதட்டை பிதுக்கிக்கொண்டும் ஒரு மனிதன் இருக்க முடியுமா? இரண்டையும் எவ்விதம் சேர்த்துச் செய்ய முடியும்? கொடைவள்ளலாகிற தர்மம் செய்பவன்; அல்லது நிறைய இருந்தும் மனம் இல்லாமல் கஞ்சத்தனமுள்ள கிருபணஞகிற லோபி ஆகிற இருவர்களுள் நீர் யாராக இருக்க விரும்புகிறீர்? சண்டையில் பெரும் வீரத்தைக் காட்டும் வீரஞக இருக்கிறவன் தன் க்ஷேமத்தையும் ஆயுளையும் கட்டிக்காக்கும் சாதாரண மனிதனைப்போல இருக்க முடியுமா.?'' (179)

[தியானம்

ஹே ராமா, சீதா வந்திதராமா, பத்மதளாய தாக்ஷியாகிற சீதே, ஹனுமாரால் ஆஸ்ரயிக்கப்பட்ட ராம பாதங்களே, துளசி தளம் என்கிற துளசிதாஸரால் அர்ச்சிக்கப்பட்ட ராமா, சீதா மஞேஹரா, சுகரால் தியானிக்கப்பட்ட ஹரிபகவானே, ராமா ம்ருதம் என்கிற பக்தி ரசன கீர்த்தனங்களால் தியாகராஜரால் அலங்கரிக்கப்பட்ட ரகு நந்தஞ, தசரதரின் அனன்ய பக்தி விஸ்வாஸம் மாதிரி உன் பிரிவு என் தியானத்தின் குறையாச்சுதே. சதா நாரதாதி முனிவர்கள் உன் நாம கீர்த்தனைகளால் ஆரா தித்துசாந்தமும் சௌக்யமும் அடைகிருர்களே. அதே மாதிரி, பரதஞல் சேவிக்கப்பட்ட ராமா, எனக்கு சாந்தத்தையும் சௌக்யத்தையும் கொடுக்கமாட்டாயா? சுக்ரர் தைத்யர்களுக்குத் துருவனைப் பற்றியும் த்வாதசாக்ஷர மஹிமையைப் பற்றியும் ஹிதோபதேஸம் செய்தாரே. ராஜகோபாலா, நீ எவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டு பிரணவ விமானத்தையும் ராம பாதங்களையும் காண்பித்தாயே. ஸமர் என்கிற பெயர், லக்ஷ்மி யுடன்கூட விருக்கும் நாராயணு, உனக்குத்தானே பொருந்தும், ஸமாத்மா, ஸம்மிதர் என்கிற பதங்களும் நாமாக்களும் உனக்கே தான் பொருத்தமானது, ரத்ன முக்தாலங்காரப்பிரியா, ஆதி சேஷன் மேல் பள்ளிகொண்ட ரங்கநாதா, நீதான் தயை புரிய வேண்டும். துர்வாஸர், அகஸ்தியர், லோபா முத்ரையிஞல் வணங்கப்பட்ட சதாசிவா, என்னை நீதான் ஆட்கொள்ள வேண்டும்.]

'' ஏன் ஸ்வாமி தயங்குகிறீர்? உமது வசன பிரதிக்ஞையை நிறைவேற்றும். தைர்யமிருந்தால் உமது வார்த்தைகளை விட்டு

விடும். அபலையான ஸ்திரி மாதிரி அழாதீர்கள். ஏன் ஸ்திரி மாதிரி கருணையை வேண்டுகிறீர்? சத்ய வ்ரத ரூபியுள்ள மனிதன் தன் சரீரம், ஸ்திரி, புத்ராதிகள், வீடு, தனம், பூமி ஆகிய எல்லாப்பொருள்களையும் ஒரு திருணம் (புல்) மாதிரி அல்பமாக நினைத்து தியாகம் செய்து விடுவான்?'' (180)

அரசன் ராணியின் மர்மங்களைத் தொளைக்கும் வசனங்களைக் கேட்டுவிட்டார். மீண்டும் அவர் சொல்லிப் பார்த்தார். ''கைகேயி, உன் காரியத்தை சாதிக்கும் வகையில் உன் நாவுக்கு வந்தது எல்லாம் சொல்லிவிடு. உன்னைத் தோஷம் சொல்லி என்ன பயன்? என் அந்திமகாலம் என்னை நெருங்கிக் கொண்டிருக்கிறது. அது பிசாசு ரூபமெடுத்து உன் மனத்தைப் பிடித்து ஆட்டுகிறது. அதனால் நீ பயங்கரமான வார்த்தைகளை என் மீது வீசுகிறாய்.'' (181)

''உன்னைவிட எனக்கு பரதனைப் பற்றி நன்றாகத் தெரியுமாதலால் நான் பரதனுக்கு ராஜபதத்தில் ஆசை கிடையாது என்று சொல்வேன். விதி வசம் அடைந்த நீயும் கெட்ட புத்தியினால் வார்த்தைகளைப் பிதற்றுகிறாய். நீ சொல்வது, நான் கேட்டுக்கொண்டிருப்பது என் பாபங்களின் பரிணாமங்களாகிற அளவுகள். அதன் விளைவினால் நல்ல தருணத்தில் விதாதாவாகிய கடவுள் என் மனோதிட்டங்களை உடைத்து நம் இருவருக்கும் விபரீதம் விளைவித்து, பாபம் ஒன்றும் அறியாத பரதனையும் அதற்கு உட்படுத்தப் போகிறாய்'' (182)

''சுஹ்ருதயர்களாக வாழும் மக்களையும் அயோத்தியையுமே அம்மா, நீ கலக்கப் போகிறாய். ஸமஸ்த கல்யாண குணங்களின் ராசிக் கூட்டமாகிற ஸ்ரீராமனின் பிரபுத்வத்தை எல்லோரும் பார்க்கப் போகிறார்கள். அது மாத்திரமில்லை. நன்றாகத் தெரிந்து கொள். அவனுடன் கூடப் பிறந்த பரத லக்ஷ்மண சத்ருக்னாதிகள் ஸ்ரீராமனுக்கு நித்ய சேவை செய்யப்போகிறார்கள். மூன்று உலகங்களில் வாழுபவர்கள் அனைவரும் ஸ்ரீராமனுடைய மகிமைகளைப் புகழப் போகிறார்கள். கடைசியில் உனக்கும், உன் மீது நம்பிக்கைவைத்து ஏமாந்து போன எனக்கும் பரிதாபம் மிகுந்த களங்கம்தான், நாம் இறந்த பின்பும் கூட அழியாதபடி ஏற்படப் போகிறது. இந்த அவகதியை நீயும் நானும் இப்போது மீற முடியாமல், ஸர்வ லோக ரக்ஷகனாகிய ராமன் நமக்கு புத்ரனாகப் பிறந்த பாக்கியம் பெற்றிருந்தாலும் அவன் கிருபை நமக்கு இல்லாதபடியால், அவனுடைய சங்கல்ப திருவுள்ளம் நமக்கு விரோதமாக இருக்கிற

படியால், நிச்சயமாக அபகீர்த்தியை அடையப்போகிறோம். உனக்கு எது தர்மமாகத் தோன்றுகிறதோ, அதன்படி செய். நான் உன்னை இனி என் சம்பந்தம் உள்ளவளாக கருத மாட்டேன். உன் முகத்தை என் முன் காட்டவேண்டாம். நீ எது வேண்டுமானாலும் இனி செய்யலாம்.'' (183)

''கைகூப்பி அஞ்சலி பந்தத்துடன் உன்னைக் கேட்டுக் கொள்கிறேன். நான் உயிர்வாழும் வரை எனக்கும் உனக்கும் ஒரு சம்பந்தம் கிடையாது. நானும் உன்னுடன் பேசவுமாட்டேன். இப்போது நீ என் வார்த்தையைக் கேட்காதபடியால், கணவனால் தியாகம் செய்யப்பட்ட அபாக்யவதியாக என்னாலே பரிதியாகம் செய்யப்பட்டு, நீ, உன் வாழ்நாட்கள் முழுவதும், சாது ஜனங்கள் ஒருவரும் உன்னை ஆஸ்வாசப்படுத்த முடியாமல், தனியாக அழுது, நொந்து கொண்டு, பாப சித்தத்தை அடைந்த பரம துக்கியாக ஆகப்போகிறாய். எங்கேயாவது பசுவை ரக்ஷணம் செய்வதற்குப் பதிலாக, நீயே பசுவை வெட்டி புலியின் பசியைத் தீர்ப்பதற்காக முயற்சி செய்யலாமா?'' (184)

இந்த மாதிரி அரசர் கோடிக்கணக்கான வழிகளால் சாம தான பேத தண்ட முறைகளால் கைகேயிக்கு புத்திசொல்லியும், ''ஏன் ஸர்வ நாசம் செய்கிறாய்; ஏன் விபரீத புத்தியுடன் இருக்கிறாய்?'' என்று கடிந்து சொல்லியும், அவள் மனம் மாறாமல் இருக்கக்கண்டு, மனம்தளர்ந்து, கீழே விழுந்தார். ஆனால் கபட உள்ளம் படைத்தவளும், சாதுர்யம் உள்ள கைகேயி ஒன்றும் பேசாமல் காரியம் சாதிக்கும் மௌன தபஸ்வி ஸ்மசானபூமியில் ஜாக்ரதையாக ஜபமந்திரங்களை பூத பிசாசுகளை வசப்படுத்துவதற்காக செய்வதுபோல விருந்தாள். (185)

அரசர் ''ராம்'' ''ராம்'' என்று கதறிக்கொண்டு அதி வியாகுலமடைந்து பூமியில் கதறினார். துர்பாக்கியமுள்ள ஒரு பக்ஷி இரு இரக்கைகளாகிற தயை, பகவத் ஸாரூப்யம் இல்லாமல் பிராணனை விடப்போகும் தருணம் எவ்விதம் துடிக்குமோ, அது போல மன்னர் துடித்தார். தன் ஹ்ருதயத்தில் ராம சிந்தனை உள்ளவராக, பச்சாதாபம் மேலிட்டு, உள்பிரகாசமடைந்த முனி எவ்விதம் வெளி இருட்டை விரும்பமாட்டாதவராக விருப்பாரோ அதுபோல தசரதர் வெளி இருட்டாகிற ராத்திரி நீடித்து, தன் சித்த பிரகாசம் தொடர்ந்து நிற்கும்படி, காலை சூர்யன் உதயமாகக் கூடாது என்று நினைக்க ஆரம்பித்தார். ஐயோ பாவம், ஒருவரும் ஸ்ரீராமனிடம் இதைப்பற்றி அறிவிக்கக்கூடாதபடி இருக்கக் கூடாதா? என்று யோசிக்க ஆரம்பித்தார். (186)

[தியானம்

ஹே ராமா சீதாராமா, ராகவா, விநாயகர் பூஜிக்கும் தசரத நந்தனு, உமை சேவிக்கும் ரகுகுல நாயகா, பரமசிவனுல் ஆரா திக்கப்படும் நாராயணு, என் சூர்யனே, உன் தயைதானே பெரும் பாக்கியம். பிரஹ்லாதன் தன் மித்ரர்களாகிய தைத்ய பாலர்களுக்கு சம்சாரத்தின் பயங்களைச் சொல்லி, நிவிருத்தி தர்மத்தில் பற்றுதல் உடையவனுக ஸநாதனமான சுகம் அச்யுதனுகிய உன் திருவடி நிழல் என்று சொன்னுராமே. உன்னையே அஜர் என்றும், அக்ஷயம் என்றும், விஷ்ணுபகவான் என்றும், சமஸ்த ஜகத்திற்கும் ஆதாரமென்றும், அவரிடமிருந்துதான் எல்லாம் உற்பத்தியாகி லயம் மீண்டும் அடைகிறதென்றும், சொன்னுராமே. அப்பேற்பட்ட அபின்ன மூர்த்தியாகிற நாராயணரே, லக்ஷ்மிநாதா, என்னிடம் பிரஸன்னமாயிரும். புண்டரீகாக்ஷரே, புருஷோத்தமரே, சரணம் சரணம். என்னை எவ்வளவு வருத்திலுைம், உன்னிடம் அசஞ்சலமான பக்தியைக்கொடு. எனக்கு ஏற்படும் விபத்துக்களையும் அக்ஞானங்களையும் விஷயப் பற்றுதல்களையும் நாசம் செய்யும். அமல ரூபியான கேசவா, உமது கிருபையினுல் சம்சாரத்தில் ஈடுபடச்செய்யும் சந்துஷ்டிகளைச் செய்து உன்னை மறந்துவிடும்படி செய்யாதே. தர்மார்த்த காமங்களை பூர்த்தி பண்ணுதே. என் அறிவுக்கு அவைகள் துச்சமானதும் அல்பமானதென்றும் ஐயா, எனக்கு அறிவுறுத்து. பிரும்ம ரூபியாகிற மஹாவிருக்ஷத்தை ஆஸ்ரயம் செய்தபின்பு, உன் கிருபையால் மஹத் பலனுகிய மோக்ஷ பலனை அடையும்படி நீ எனக்கு அருள் செய். நாத ரூப வரதா, ம்ருதுபாஷணு, அவ்யயபூஷணு, தியாகராஜர் போன்ற மஹான்கள் பயப்பட்ட பவசாகரத்தின் சுழல்களுக்கு நான் மிக்க பயப்படுகிறேன். விஷ்ணு பராயணனுகிய என்னை உன் தயையால் அக்கரையை அடையவை. விசித்திரமான மாயையில் அகப்பட்டு, ராமனுடைய பிதா தசரதர் சுழன்றதுபோல கஷ்டப்படுத்தாதே. உன் சங்கல்பத்தை இனியதாகவும் க்லேசமில்லாமலும் எனக்குப் பண்ணு. என் ரோகங்களை நீதான் போக்கணும். உன்னையன்றி வேறு சக்தி கிடையாது. நாக நாயக சயனு, இந்துமுகதின நாத நயனு, ஸீதாங்கா, யோகிகள் வந்தித பதாரவிந்தா, என் லோபம், க்ரோதம், மதம் மாத்ஸர்யங்களை நாசம் செய். என்னை ரக்ஷி. தாரகமணி, ரகுநாயகா, தியாகதுளசி சங்கமடைந்த என்னை மாருதி காட்டிய சீதாராம சரணங்களில் அடையவை. ஹே கிருபாநிதி.]

"ஹே ரவிகுல குருவாகிய சூரியனே, நீர் காலே உதயமாக வேண்டாம். இந்த துக்க சமாசாரம் கேட்டபின்பு இந்த அயோத்யாபுரி வாசிகள் கஷ்டப்படுவதை ஆதிகுல தெய்வமாகிய நீர் கண்டு கஷ்டப்படவேண்டாம்." அரசருடைய ப்ரீதி எவ்வளவுக்கு எவ்வளவு எல்லேயில்லாதபடியும் ஆழம் காணுதபடியுமிருந்ததோ, அதுமாதிரி கைகேயியின் கடினத்தனமான ஹ்ருதயமும் சரிக்கு சமானமாக பிரும்மாவினுல் வெகுசாமர்த்தியமாக படைக்கப்பட்டிருந்தது. (187)

அரசருடைய விலலாபங்கள் அதிகரித்துக் கொண்டுவர, இரவும் கழிந்து காலேயும் வந்து சேர்ந்தது. ராஜத்வாரத்தில் காலே வந்ததின் அறிகுறியாக வீணு வேணு, சங்க முழக்கங்கள் கேட்கப்பட்டன. அரசரை எழுப்புவதற்கு வந்தி பாடகர்கள் வந்துவிட்டார்கள். அரசர் அவைகளேக் கேட்டதும், பாணம் தன் மார்பில் பாய்ந்தது மாதிரி மிக கஷ்டப்பட்டார். (188)

மங்களங்கள் தசரதருக்கு எவ்விதம் அருவெறுப்பாக இருந்தனவோ, அதுபோல இல்லே கைகேயிக்கு. அவளுக்கு உத்ஸாஹங்கள் நிறைந்த அலங்காரங்களாகத் தோன்றின. ஸ்ரீராமனுடைய சுபதரிசனத்தை மஹாதபஸ்ஸின் பலனுக அடைய, அந்த பாக்யத்தை ஏற்கனவே அடைந்த அயோத்யாவாஸிகள் மிக்க ஆவலுடன் இராப்பூராவும் தூங்காமல் விடியற்காலேயை எதிர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். (189)

அரசரின் மாளிகையில் கூட்டம் கூட்டமாக மந்திரிகள் சேவகர்கள் வந்து சேர்ந்தார்கள். உதய ரவியைக் கண்டு அவர்கள் மனக்கலக்கத்துடன் "ஏன் அயோத்யாபுரி மன்னரான தசரதர் சுருசுருப்பாக எழுந்திருந்து தயாராகவில்லே?" என்று பேசிக்கொண்டிருந்தார்கள். (190)

"நமது அரசர் விடியுமுன் பரராத்திரியில் எழுந்திருப்பதும், கஜேந்திர நாராயணனே வணங்குவதும் நித்திய வழக்கமாச்சுதே. இன்று இன்னும் உறக்கத்தை விட்டவராக காணுதபடியால் ஆச்சரியமாக விருக்கிறதே. ஹே சுமந்தரரே, உள்ளே போய்வாரும். அரசரை எழுப்பி, அவரிடமிருந்து நாம் செய்யவேண்டிய காரியங்களுக்கு ஆக்ஞைகளேப் பெற்றுவாரும்." (191)

அரசரின் அந்தப்புரத்திற்கு சுமந்திரர் சென்ருர். ஒரே பயங்கரமான அல்லோலங்களேக் கண்டு, அவர் பயந்தே போய் விட்டார். எங்கு பார்த்தாலும் ஆள் நடமாட்டம் இல்லே. ஒரே பயங்கரமான வனம் போல அமைதி குடி கொண்டிருந்தது. ஒரு பெரிய பயங்கரமுள்ள பிசாசு ஓடிவருவதும் போலக்கண்டார்.

யாரும் அவருடன் பேசுவதற்கு இல்லை. ஒரேவிதமாய் அரண்மனை முழுவதும் விசேஷமான அலங்காரங்களும் இல்லை. அவர் மனத்தில் ஏதோ விபத்து விளைவிக்கும் கடுமையான விஷம் அல்லது பிசாசு அரண்மனையில் குடிகொண்டதுபோல உணர்ந்து ஏதோ விபரீதம் ஏற்பட்டிருக்கிறது என்று சம்சயத்தினுல் வருந்தி கஷ்டப்பட்டார். (192)

யாரைக்கேட்டாலும் ஒருவரும் பதில்சொல்லவில்லை. அரசரை கைகேயியின் பவனத்தில் பார்த்தார். "அரசர் நீடூழி வாழ்க" என்று ஜய சப்தங்களைச் சொல்லி, சுமந்தரர் அரசரை நமஸ்கரித்தார். அரசரின் அவகதியைக் கண்டு மனம் கலங்கினுர். (193)

பார்த்ததும் அவருக்குத் தோன்றியது. "அரசர் ஏதோ வியாகுலத்துடன் இருக்கிருர். அவருடைய முகம் அழுத களைப்பினுல் நிறம்மாறி வெளுத்திருந்தது. தரையின்மீது அரசர் முனங்கிக்கொண்டு புரண்டு கொண்டிருந்தார்." ஒரு கமலபுஷ்பம் வேருடன் பிடுங்கி எறியப்பட்டு, கோரமாக நசுக்கப்பட்டதுபோல அரசர் காக்ஷியளித்தார். அதிக பயத்தினுல் நடுங்கிக்கொண்டிருந்த மந்திரியாகிய சுமந்திரரால் ஒன்றும் பேசமுடியவில்லை. அப்பொழுது கைகேயி அசுபமான வார்த்தைகளைப் பேச ஆரம்பித்தாள். (194)

[தியானம்

ஹேராமாசீதா, பகவான் சம்புவின் மித்ரா, உமையின் ஹ்ருதயாதாரா, கண்டு முனிவர் பகவான் விஷ்ணுவை ஆராதித்து எவ்விதம் அவரை அடைந்தாரோ, அதுபோல உன்னை நான் அடையவேண்டும். ஸ்ரீவிஷ்ணுபகவான் சம்சார மார்க்கத்தின் அந்திம அவதியாக பரம் தாம் என்று சொல்லப்படுகிருர் என்று அவர் எனக்குச் சொன்னுர். ஐயா, உமக்கு மேற்பட்டவரோ, உம்மைக் கடந்தோ செல்லுவதோ முடியாது. நீர் ஆகாசாதி முதலியவைகளுக்கும் மேற்பட்டவர். அளவில்லாத மகிமையை உடையவர், சத்ய ஸ்வரூபர். ஸத் எனப்படும் பிராணனுக்கு த்ஏ என்னப்படும் ஆகாரத்தை யம் என்கிற கொடுக்கும் சூர்யனுக விருக்கிறீர். தவத்தையே தனமாக உடைய மஹாத்மாக்களுக்கு முடிவானதும் சாஸ்வதமானதுமான பதத்தை கொடுப்பவரும் நீரே. ஹே ஸ்வாமி, உம்மையே நீர்தான் கொடுப்பவர். ஆதலால் உம்மை நான் பெரும் முயற்சியுடன் அடையவேண்டும். அனுத்ம பிரபஞ்சங்களுக்கும் மேலானவர். இந்திரியங்களுக்கும் புலப்படாத அகோசரமான பரமாத்மா நீர். பக்தர்களுக்கு அந்த

அதோக்ஷஜரான நீர், ஹே பரமாத்மா, உம்மை உம்மாலேயே அடையவேண்டும். நீர்தான் உம்மைக் காட்டிக்கொடுக்கவேண்டும். திருதராஷ்டிரனுக்கும், உதங்கருக்கும் கண் கொடுத்த மஹாத்மா, நீர் ஸௌலப்யத்தை அடைந்துவிட்டால், கிடைக்கக் கூடாத உமது தரிசனம் சுலபமாக கிடைக்கும். நீர் நிமித்த காரணம்; நீரே உபாதான காரணம். நியக்ரோதர், மேலே வேரும் கீழே கிளையாகவும் பிரபஞ்சத்திற்கு மேலானவரும், கீழே நின்று துதிப்பவர்களை நோக்கி, எல்லாக் குணங்களாலும் உயர்ந்ததான பரமபதத்தையும் கொடுப்பவராகவும் திருமகள் முதலான விபூதிகளையும் அடைந்தவராயிருக்கிறீர். ஹே பகவான், நீர் ஆதிபீஜம் தாமோதரர், பிரளயகாலத்தில் அழிந்துபோன சகல சராசரங்களின் வித்துக்களுக்கு ஆதாரமான கப்பலைத் தாங்கி நடத்திய மத்ஸ்யமூர்த்தியே, இந்திரியஜயத்தினால் அடையப்படுபவரே, உம்மைப் பஜிப்பதால் சுகத்தை வெளிப்படுத்தி என்னை சுகத்தை அடையச் செய்பவர். ஐயா, யசோதையின் கயிற்றால் உரலோடு கட்டப்பட்டீர். என்போன்ற பக்தர்களின் அம்சமாகிற அந்த சலங்கைமணிகளால் அலங்கரிக்கப்பட்ட தாமோதரா, பக்தர்களின் ஸ்துதிகளாகிற நவநீதத்தைச் சாப்பிட்டு ஆனந்தப் பெருக்கால் வாயினால் வழியவிட்டுக் கொண்டு, யசோதையை அன்பினால் பார்க்கும் ஹேது, பஞ்சபூதம் அவற்றின் காரணமாகிய பஞ்சதன்மாத்திரை ஹேதுவாகிய தாமஸ அஹங்காரம் அவைகளின் ஹேதுவாகிற மஹத்தத்வம், மஹத்திற்கும் பிரதான ஹேதுவாகிய பரமஹேதுவாக விளங்கி, ஹே ஸ்வாமி, இவ்விதமாக கார்யங்களாலும் கர்மங்களாலும் கட்டுப்பட்ட சகல பிரபஞ்சங்களுக்கும் ஸமஸ்த கர்மமாகவும், கர்த்தாவாகவும் இவைகளுடன் விளங்கும் பிரபஞ்ச பாலனாகவும் பதியாகவுமிருக்கிறீர். அப்பேற்பட்ட நீர் பிருஹ்மபிரபு, ஸர்வஸ்வரூபர், அவினாசி, அச்யுதர், பரபிரும்மம், அவ்யயம், நித்யமானவர், அஜர். அப்பேற்பட்ட நாராயணர் க்ஷயம் முதலிய விகாரங்களுக்கு சூன்யமானவர். அவர் அக்ஷரமாகவும் அஜராகவும் (மற்றவர்களைப் போல ஜனியாதவரான) படியாலும் யோகசாங்கிய மதங்களின் முடிவாகிய இருபத்தாறுவது தத்வமாகிய புருஷோத்தமர் பகவான் விஷ்ணு என்று சொல்லப்படுகிறீர். பிரும்மபாரமான ஸ்தோத்ரங்களால் மஹா திருப்தி அடைந்து ராகத்வேஷாதிகளை சாந்தம் அடையச் செய்து, காமாதி தோஷங்களிலிருந்து விடுபட்டு, பரமாம் சித்திம் என்று சொல்லப்படுகிற கேசவபதத்தை உமது பக்தர்கள் ஆராதனத்தால் அடைகிறார்கள். உம்மால் கார்ய

கௌரவம் ஏற்படுகிறது. அப்பேற்பட்ட புண்ணிய கீர்த்தியுள்ளவரும், ஸத்யதர்ம பராக்ரமரும் லக்ஷ்மிபதியான ஸஹரை, என் பரமஹேதுவை நான் சரணம் அடைகிறேன்.]

"அரசருக்கு ராத்திரி பூராவும் தூக்கம் கிடையாது. இதற்குக் காரணம் ஜகதீஸ்வரருக்குத்தான் தெரியும். (அவர்தான் பரமஹேதுவாச்சே.) இவர் ராம், ராம் என்று விடியற்காலை முதல் சொல்லிக் கொண்டிருக்கிறார், ஆனால் இந்த மாறுதலுக்கு மர்ம காரணத்தை மஹாராஜர் என்னிடம் சொல்லுவதாக இல்லை." (195)

"ஆகையால் ராமனை சீக்கிரம் அழைத்துவாரும், அப்போது அவரிடம் முழு சமாசாரத்தைக் கேட்கலாம்." அரசருடைய அபிப்ராயம் அந்தயாதிரியே இருப்பதுபோல உணர்ந்து, சுமந்தரர் சென்றார். அவர் மனதில் ராணி ஏதோ சூழ்ச்சி பண்ணியிருக்கிறாள் என்றுமட்டும் தோன்றியது. (196)

அவர் யோசித்துக்கொண்டே வியாகூலம் அடைந்தார். ரஸ்தாவில் அவருடைய பாதங்கள் பதியாமல், ஒன்றும் விளங்காமல் கலவரமடைந்தார். "ராமனை அழைத்து வந்து அரசர் என்ன சொல்லப்போகிறார்" என்று யோசித்தார். ஹ்ருதயத்தில் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு ராஜத்வாரத்திற்கு வந்தார். அவருடைய ஸ்திதியைக் கண்டு ஸகல ஜனங்களும் "என்ன விசேஷம்?" என்று கேட்டார்கள். (197)

எல்லோரையும் ஒருவிதமாக சமாதானம் செய்துவிட்டு, சுமந்தரர் தினகர குலதிலகனாகிய ஸ்ரீராமச்சந்திரன் இருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தார். ஸ்ரீராமசந்திரன் சுமந்திரர் வருவதைக் கண்டு, தன் பிதாமாதிரி அவரை மதித்து, மிக்க மரியாதையுடன் வரவேற்றார். (198)

ஸ்ரீராமச்சந்திரனுடைய நிரதிசய முகத்தை மனம்குளிரப் பார்த்தார். அரசருடைய ஆக்ஞையை அவருக்குத் தெரிவித்தார். அதன்படி ரகுகுல தீபராகவிருக்கும் ராமன் தசரதரிடம் சென்றார். மந்திரியுடன் சாதாரணமாகச் செல்லும் ஸ்ரீராமனைக் கண்ட ஜனங்கள் ஆச்சர்யப்பட்டு பரஸ்பரம் கலவரமாக விவாதிக்க ஆரம்பித்துவிட்டார்கள். (199)

ரகுவம்சமணியாகிற ராமன் அரசனைப் பார்த்த சமயம், அரசன் பரமதீனராகவும் அத்யந்த கஷ்டத்தினால் மனம் தபிக்கப் படுகிறவராகவும், ஒரு யௌவனப் பெண் சிங்கத்தின் முன்பு வ்ருத்தனாகிற கஜராஜன் பார்த்தமாத்திரத்தில் பயத்தினால் உயிர் துடித்துக் கொண்டிருப்பதுபோலக் கண்டார். (200)

அரசருடைய எட்டு அங்கங்களும் வரட்சியை அடைந்திருந் தன. உடம்பு பூராவும் வியர்வை வழிந்துகொண்டிருந்தது. எவ்விதம் நாகமணியைத் துறந்த சர்ப்பம் துக்கித்துக்கொண் டிருக்குமோ, அதுபோல அவர் துடித்துக்கொண்டிருந்தார். அவ ருடைய சமீபத்தில் கைகேயி க்ரோதத்தினல் நிரம்பப்பட்டு, ஸாக்ஷாத் ம்ருத்யு தேவதை அரசனுடைய அந்திம நிமிஷங்களை எண்ணிக் கொண்டிருப்பது போலக் கண்டார். (201)

கருணை மயரான ராமன் இயற்கையாகவே மிருதுவாக பேசு கிறவரும், பூர்வபாஷியாகவும், மதுரமான ஸ்வபாவமுள்ளவராக வும் இருப்பவர். இப்பேற்பட்ட அரசரின் துக்கத்தை தான் இதுகாறும் வாழ்க்கையில் இதற்குமுன்பு பார்த்ததில்லை. முதன் முதலாகப் பார்க்கிறுர். இதற்குமுன் கேட்டதும் கிடையாது. சமயத்திற்குத் தகுந்த புத்தியுள்ள ஸ்ரீராமன் தைர்யத்தை வர வழைத்துக் கொண்டு, மதுரமான வாக்குக்களால் மஹாராணியை கேட்க ஆரம்பித்தார். (202)

"அம்மா, என் பிதாவின் துக்கத்திற்கு காரணம் என்ன? அதைத் தயவுசெய்து சொல்வீர்களாகில், நான் அந்த துக்கத்தை நிவர்த்திப்பதற்கு யத்னம் செய்கிறேன்." கைகேயி பதில் சொன்னுள், "ஹே ராமா, காரணத்தைக் கேளு. அந்தப் பூர்ண மான காரணம் உன்மீது அரசருக்கு ஏற்பட்ட அத்யந்த ஸ்நேகம் தான்." (203)

"இந்த அரசர் என்னைப் பெற்றுக்கொள்ளும்படி கேட்டு விட்டு, அதன்பிறகு நான் அவரிடமிருந்து இருவரங்களைப் பெற்றேன். என் மனதுக்கு எது நல்லது என்றுபட்டதோ, அதைக் கேட்டேன். அரசர் அவைகளைக் கேட்டதும் பெரும் யோசனையில் ஆழ்ந்து போய்விட்டார். உன்மீது சங்கோசப் பட்டுக்கொண்டு ஒருவேளை நீ சம்மதிக்காத போனுல், என்ன பண்ணுகிறது என்கிற வருத்தமான யோசனையில் தவிக்கிறுர் உன் பிதா." (204)

"ஒருபக்கம் உன்னிடமுள்ள புத்ர ஸ்நேகம். மற்றெரு பக்கம் தன் வார்த்தையைக் காப்பாற்றும் பிரதிக்ஞை, இந்த அரசர் இந்தமாதிரி தர்மசங்கடத்தில் தவிக்கிறுர். உன்னுல் செய்யக் கூடியதாகில், அரசருடைய ஆக்ஞையைப் பெற்றுக்கொண்டு நிறைவேற்றி வை. இதனுல் அரசருக்கு கடினமான கிலேசங்கள் ஒழிந்துவிடக் கூடும்." (205)

கைகேயி நிதானமாக உட்கார்ந்துகொண்டு இவ்விதம் மிகக் கடூரமான வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தாள். அவைகளைக்

கேட்டால் நிஷ்டூரத்தனமான கடினத்வமே பயப்பட்டு அத்யந்த வியாகுலம் அடையும். அவளுடைய நாக்கு ஒரு பெரிய தனுஷ் மாதிரியாகவும், வசனங்கள் அதி தீக்ஷ்ணமான பாணங்களாக வும், மகிபர் தசரதர் என்கிற லக்ஷியம் மிருதுவாகவும் அதி கோமள மாகவுமிருந்தது. (206)

நிஷ்டூரத்தனமாகிய பிடிவாதம் இரக்கமற்ற நெஞ்சுடன் சேர்ந்து, கடினத்வம் தானே ஸ்வயமாக சரீரம் எடுத்து, ஸ்ரேஷ்ட மான வீரத்தனம் படைத்த உருவத்துடன் தனுஷ் வித்யையை கற்றுக்கொள்ளுவது போலிருந்தது. ஸ்ரீரகுபதி அந்த விஷய பிரசங்கங்களை சிரித்துக்கொண்டு, ஒருவித விகாரமுமின்றி கேட்டுக்கொண்டிருக்க, பிடிவாதம் என்கிற துர்குணம் சிறிதும் இரக்கமின்றி வசனங்களின் ரூபமெடுத்து எடுத்துச் செல்வது போலிருந்தது. (207)

பானுகுலத்திற்கே பானுவாக விளங்கும் ஸ்ரீராமன் சிரித்துக் கொண்டு எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தார். துளசி தாஸர் சொல்கிறார். "என் பிரபு ராமன் ஸஹஜ குணமாகவும், ஆனந்தத்திற்கு உறைவிடமாகவும், பிறருக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும் கந்தமூர்த்தி அல்லவா? தூஷணமான வார்த்தை களைக் கேட்டும் அவருக்கு பெயர்போன ஸஹஜம்ருது மஞ்சுள பாஷையினால், வாக்குக்கே மிக்க அலங்காரத்தைத் தருவதாயு முள்ள வாக்விபூஷண வசனங்களை அதிகோமளமான வாணி யினால் சொல்ல ஆரம்பித்தார்." (208)

"என் அம்மா, தயவுசெய்து கேளுங்கள், எந்த புத்ரன் தன் பிதா மாதாக்களின் வார்த்தைகளுக்கு அடங்கி, அவர்களின் மனம்போல நடந்துகொள்கிறானோ, அவன்தான் மஹா பாக்யவா னாகிய புத்ரன். அவர்களின் ஆக்ஞையை தன் சிரம்மேல் கொண்டு, மாதாபித்ருக்களின் அபிலாஷைகளை ஸந்துஷ்டி செய் யும் புத்ரன்தான் என் அம்மா, எல்லா உலகங்களிலும் துர்லபம்." (209)

[தியானம்

ராமா, சீதாராமா, ராகவா, மாதவா, மஹாதேவா, ஸ்ரீகரா, ஸ்ரீவர்தனா, ஜகத், உமாபதி, உமானந்தா, சம்போ, சங்கரா, சங்கர்ஷணா, நாராயணா, விபாவஸோ, புஷ்கராக்ஷா, அனிர்தேஸ் யர், அஹிர்புதன்யர், த்ரியம்பகர், பினாகித்ருக் ஜடாதார கங்கா தாரா, நாதலோலுடா, நாதரூபா, பிரணவ ஏகாக்ஷரா, அஷ்டா வக்ரர் தன் பிதாவான கோஹலரை கௌரவப்படுத்தினதற்கும்,

அஷ்டவக்ரர் தர்மநியமப்படி மணந்துகொண்டதற்கும் அனுக்ரஹம் செய்த மஹானுபாவா, தசரதரால் சம்மானிக்கப்பட்ட ராமா, கைகேயியுக்கு தசரதரால் கொடுக்கப்பட்ட சாபத்தையும், பரதனுக்குயேற்பட்ட அபவாதத்திலிருந்தும் காப்பாற்றிய ஸ்ரீ சீதா ராமா, பிரும்ம ருத்ரதேவராஜனுல் வெகுமானிக்கப்பட்ட ஸ்ரீசீதாராமா, தசரதராமா, ராகவா சீதையுடன் கூடின ராமா, லக்ஷ்மணனை தம்பியாகவும் சகாவாகவும்கொண்ட விஜய ராகவா, நீயே தஞ்சம். என்னைக் காப்பாற்று. என்னை ரக்ஷி.]

"அம்மா, தவத்தில் பற்றுதல் கொண்ட முனிகணங்களைக் காண நான் வனம் சென்று சந்தோஷமடைவேன். நான் வனம் செல்வதால் எல்லோருக்கும் நன்மை விளைவிக்குமாகில், அதை என்ஹிதமாக எண்ணி, அதை ஹேதுவாகக்கொண்டு, வனத்திற்கு சந்தோஷமாகச் செல்வேன். அம்மா அதுமாத்திரமல்ல. என் பிதாவின் ஆக்ஞையையும் உங்களுடைய சம்மதமாகிய விருப்பத்தையும் நான் அனுசரித்தும் செல்வேன்." (210)

"என் ப்ராண பிரியனுகிற பரதன் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்டால் நான் சந்தோஷப்படுவேன் அம்மா. இந்த விதமாக விதி செய்வது, இன்று பார்த்து செய்வது அம்மா, எனக்கு பரமப்ரீதியாக விருக்கிறது. அம்மா, எனக்கு இந்த தினம் சுதினம். எனக்கு எல்லாம் அனுகூலமாகவிருக்கிறது. கடவுள் என்மீது அத்யந்த ப்ரீதி அடைந்திருக்கிறார். இந்தக் காரணத்தை உத்தேசித்து நான் வனம் செல்லாதபோனுல் நான் என்னைப்பற்றி பிரதம மூர்க்கனுகவும், முட்டாளாகவும் எண்ணிக் கொள்ள வேண்டும்." (211)

"தாயே, கல்ப தருவைவிட்டு விட்டு, விளக்கெண்ணை தரும் ஆமணக்கு செடிக்கு ஜலம்வார்த்து போஷிக்கும் சேவையை எவனுவது செய்வானு? அம்ருதத்தைத் தியாகம் செய்துவிட்டு விஷத்தை எவனுவது ஸ்வீகரித்துக் கொள்வானு? அம்மா, நீங்கள் இதற்காக ஏன் விசாரம் அடையவேண்டும்? என்மீது நம்பிக்கையைவைத்து, பார்க்கப்போகிறீர்கள். மூர்க்கனல்லவோ இந்த மாதிரி சந்தர்ப்பத்தை நழுவவிடுவான்?" (212)

"அம்மா, ஆனுல் ஒரு துக்கம் விசேஷரூபத்துடன் என்னை தபிக்கிறது அம்மா. இந்த நரநாயகரான தசரதருடைய வருத்தத்தைக் கண்டு நான் வருத்தப்படுகிறேன். நீங்கள் சொல்லிய அல்பமான வார்த்தைக்காக என் பிதா இவ்வளவு மஹத்தான துக்கம் ஏன் அடையவேண்டும்? இதனுல் எனக்கு இந்த விஷயத்தில் நம்பிக்கை ஏற்படவில்லை." (213)

"ஏனெனில் நமது அரசர் மஹாதீரர். உதார குணங்களையும் படைத்தவர். அம்மா, அவர் பெரிய சமுத்திரம் போல மஹத்தான குண ஐஸ்வர்யம் உள்ளவர். அவர் இவ்விதம் வருத்தப்படுவதற்கு நான் அவசியம் பெரும் அபராதத்தைச் செய்து அவரிடம் குற்றப்பட்டுவிட்டேன்; அபசாரப்பட்டு விட்டேன் என்தாயே, என்ன காரணத்தால் என் அருமை பிதா என்னிடம் ஒன்றும் பேசமாட்டேன்கிருர். என்மீது கருணை காட்டி, ஸத்பதத்தில் இருக்கும் தாங்கள் பூரா விபரங்களையும் சொல்லவேண்டும். அம்மா." (214)

ரகுவரன், ராமன் ஸஹஜஸ்வபாவத்துடன், தன் மனம் ஒன்றும் விகாரமடையாமல், உள்ளும் புறமும் ஒத்துச் சொல்லும் போது, துர்புத்தியுள்ள கைகேயி அவைகளை குடிலபுத்தியுடன் ஏற்றுக்கொண்டாள். அட்டை என்னும் புழு ஜலம் கடினமில்லாமல் வழுவழுப்பாக இருந்த போதிலும் கூட, அது தன் ஸ்வபாவமாகிற வளைந்து ஊர்ந்து செல்லுதல் என்னும் வழக்கத்தை விடாதல்லவா? (215)

ராணி கைகேயி ஸ்ரீராமன் தன்வழி வருவதைக் கண்டு சந்தோஷமடைந்து கபட ஸ்நேகத்துடன் அன்பான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தாள். "ராமா, உன்னையும் அறுதியிட்டு பரதன் மீது ஆணையாகவும் நான் சொல்கிறேன். எனக்கு ராஜாவின் உள்நோக்கம் ஒன்றும் தெரியாது. அவர் வருத்தத்திற்கு ஒரு காரணத்தையும் நான் அறியவில்லை." (216)

"என்பிரிய ராமா, நீ யாருக்கு அபராதம் செய்யப் போகிருய்? நீயோ உத்தம சீலனுச்சே; மாதாபிதாக்களுக்கு அபராதம் செய்தாய், அதற்காக வனம் செல்லுகிருய் என்று நினைக்கவேண்டாம். உன்னைப் பற்றி எனக்குத் தெரியும். நன்ருகவும் தெரியும். நீ மாதா, பிதா, சகோதரர்கள், பந்துக்கள் ஆகிய அனைவருக்கும் சுகத்தை வாரி அளிக்கக் கூடியவன். ஹே ராமா, அதுமாத்திரமா, நீ சத்யசீலன். எந்த வார்த்தையைச் செய்கிறேன் என்று சொல்லுகிருயோ, அந்த வார்த்தைப் படி முழுதும் நடக்கிறவன். அதுவும் மாதா பிதாக்களின் வசனங்களின்படி உண்மையாக நடக்கிறவன்." (217)

"உன்னைப்பற்றி எனக்கு நன்ருகத் தெரியும். ஆனல் உன்னை அவ்விதம் உன்பிதா உன்னை அறியமாட்டார். அவருக்கு நீயே எடுத்துச் சொல். நீ சொன்னல்தான் அவருக்கு இந்த வயது காலத்தில் வார்த்தையை மீறுதலால் ஏற்படும் அபயசஸ் சம்பவிக்காமல் இருக்கட்டும். அரசர் பரம சுக்ருதம் செய்து, உன்னைப்

போல சத்புத்ரனை பெற்றிருக்கிறார். அப்பேற்பட்ட சுக்ருதத்தை அலக்ஷ்யம் செய்து, மீண்டும் பாபத்தை அடையவேண்டாம் என்று உன்பிதாவுக்கு நீயே சொல்.'' (218)

துளசிதாஸர் சொல்கிறார், ''மஹா கெட்ட புத்தியுள்ள கைகேயிடமிருந்து சுபமான வசனங்கள் வந்துகொண்டிருப்பதைக் கவனியுங்கள். இப்பேற்பட்ட தர்ம வசனங்கள் பாப ஹ்ருதயத்திலிருந்து ஊறிவருவதைப் பார்த்தால், மகத தேசம் போல கெட்ட பிரதேசத்தில் கயை முதலிய புண்ணிய தீர்த்தங்கள் இருப்பது போல அல்லவா இருக்கின்றன. என்பிரபு ஸ்ரீராமச்சந்திரனுக்கு அவள் சொல்லிய ஒவ்வொரு வார்த்தையும் ஹிதமாகவும் சுகத்தைக் கொடுப்பதாகவுமிருக்கிறது. எது மாதிரி தெரியுமா? நல்லதோ கெட்டதோ ஆகிய ஜலங்கள் ஸுரஸரிதையாகிற கங்கையை அடைந்துவிட்டால், சுபமாகவும் சுந்தரமாகவும் ஆகிவிடுகிறதல்லவா?'' (219)

அரசர் மூர்ச்சையிலிருந்து விடுபட்டு, ராமனை ஸ்மரணை செய்துகொண்டு, அங்குமிங்கும் புரண்டார். மந்திரி அரசரிடம் ராமன் வந்திருப்பதை அறிவித்து சமயத்திற்குத் தகுந்தாற் போல அவரைத் தேற்றி எழுப்பிவைத்தார். (220)

அரசர் ராமன் வந்திருக்கிறான் என்பதை அறிந்தும் கண்களைத் திறந்துகொண்டு, மனத்தை அடக்கி, அவனைப் பார்க்க ஆரம்பித்தார். மிக்க தைரியத்துடன் ராமனை அழைத்து தன் பக்கத்தில் வரச்சொல்லி தடவிப்பார்த்தார். அரசரை மந்திரி உட்காரும்படி செய்தார். அரசர் தன்பாதங்களில் பணிந்து வணங்கும் ஸ்ரீராமச்சந்திரனைக் கண்டார். (221)

ஸ்நேக வெள்ளம் பொங்க அரசர் ராமனை தன் ஹ்ருதயத்தில் இறுகத்தழுவிக்கொண்டார் (உமை சிவனைத் தழுவுவது போல அதி ஆர்வத்துடன் அணைத்துக்கொண்டார்) நழுவிப் போன நாக மணியை மீண்டும் பாக்கியத்தால் அடைந்த சர்ப்பம் எவ்விதம் ஆனந்தத்தால் தழுவி முத்தமிடுமோ, அதுபோல தசரதர் ஆனந்தமடைந்தார். அரசர் ராமனைப் பார்த்துக்கொண்டேயிருந்தார். அவருடைய சுபமான லோசனங்களிலிருந்து கண்ணீர் பிரவாஹங்கள் வழிந்து ஓடின. (222)

சோகத்தின் எல்லையை அடைந்த அரசரால் ஒன்றும் பேச முடியவில்லை. அந்த மஹாபுருஷன் ஸ்ரீராமனை அடிக்கடி தழுவி, முத்தமிட்டு அன்புடன் கட்டிக்கொண்டிருந்தார். அவர் மனம் வேறுவிதமாக எண்ணமிட்டுக்கொண்டிருந்தது. எந்த

அதிருஷ்ட வழியினுல் விதாதாவான பிரும்மா தன் மகனுகிய ரகுநாதனை கானகம் செல்லாமல் ரக்ஷிப்பான் ? (223)

மனம், பிரரணன், இந்திரியங்கள், புத்தி ஆகிய எல்லா வற்றையும், நல்ல ஹ்ருதயம் படைத்துள்ள தசரதர் மஹேஸ்வர ரிடம் அர்ப்பித்து, சொல்ல ஆரம்பித்தார். "ஹே சதாசிவரே, வினயத்துடன் நான் சமர்ப்பிக்கும் விண்ணப்பத்தை தயவு செய்து கேளும். உம்மை ஆசுதோஷி, பக்தர்களின் உண்மை பக்தியை அறிந்து சீக்கிரமாக சந்தோஷமடைபவர். மிக்கக் கஷ்டப்படும் பக்தர்களுக்கும் தீனர்களுக்கும் உமது பெரும் ஐஸ்வர்யமாகிற கிருபையை வாரிக்கொடுக்கும் வழக்கமாயிற்றே. ஸ்வாமி, என்னை உம்முடைய சேவகனுக மதித்து, என் துக்கங் களை நாசம் செய்யும்." (224)

"நீர்தானே ஸர்வ அந்தர்யாமியாக விருந்து, எல்லோரையும் அவர் அவர்கள் செய்யவேண்டிய கர்மாக்களைச் செய்யும்படி தூண்டிவிடுகிறீர்கள். எல்லோருடைய ஹ்ருதயத்தில் வசிக்கிற படியால், என் பிள்ளை ராமச்சந்திரனுக்கு சரியான புத்தியைக் கொடுங்கள். அப்பேற்பட்ட புத்தியினுல் என்வார்த்தைகளை அவன் மதிக்காமல், ஸ்நேக பாசங்களுக்கும் சீலமரியாதை களுக்கும் ஆதரவு அளிக்காமல், அவன் வனம்போகாமல் அயோத்தியிலே என்வீட்டிலேயே தங்கிவிடும்படி அவனைத் தூண்டிவிடுங்கள்." (225)

"எனக்கு இந்த வாழ்க்கையில் சுபமான கீர்த்தியோ, அசுபமான கீர்த்திகளோ, வரட்டும். நல்லதெல்லாம் போகட்டும். வார்த்தைமீறுதலால் ஏற்படக் கூடிய புதிய பாபத்தால் முந்தின புண்ணியத்தால் கிடைக்கக்கூடிய சுரலோகம் கிடைக்காமல் போகட்டும். எனக்கு இன்னும் பலவிதமாக சகிக்க முடியாத துக்கங்களைக் கொடும். நான் சந்தோஷமாகப் பெற்றுக் கொள்கிறேன். மஹாதேவா, நான் என் அருமைக் குழந்தை யாகிற ராமச்சந்திரனை விட்டு அவன் என் திருஷ்டி பதத்தி லிருந்து பிரிந்திருப்பதை சகிக்கமாட்டேன். அவனைப்பார்த்துக் கொண்டிராமல் நான் உயிர்வாழமாட்டேன். அப்பேற்பட்ட மஹாகிருபை, சம்போ எனக்கு அளியும்" என்று வேண்டினுர். (226)

[தியானம்

ஹே ராமாசீதா ராமா, புண்யகந்தனே, பத்மஹஸ்தனே, சதாசிவனுல் ஆராதிக்கப்படும் ராமா, நாரதராலும் வஸிஷ்ட

பிரமுகர்களாலும் சேவிக்கப்படும் நிவ்ருத்த ஆத்மாவே, பல மாயைகளைச் செய்யும் நைகமாயரே, பல செய்கைகளாகிய அவதார ரஹஸ்யங்களை உடைய நைகஜரே, என்மனத்தில் நிற்கும் அக்ரஜரே, உமையினுல் சிரமப்பட்டு ஆராதிக்கப்படும் ப்ரும்மதத்வமே, பராசரால் எனக்கு உபதேசிக்கப்பட்டதன் வந்திரியே, என் பேஷஜரே, ஐயா, நிவ்ருத்திதர்மத்தை உபதேசிப்பதற்காகவும் சிறந்த வைராக்யத்தை தாமே அனுஷ்டிப் பதற்காகவும் அயோத்தியை விட்டு வெளிச்சென்ற சீதாராமா, ஏற்கனவே நீர் நர நாராயண அவதாரம் எடுத்தபோது இந் திரன் முதலானவர்களுக்கு சப்தாதிகாம விஷயங்களில் மனத் தினுல் துறந்திருந்தவர் என்று சொல்லப்பட்டீர். ஸர்வசாக்ஷி யான பகவானே, பரமேஸ்வரா, உமது திருப்திக்காகவும், உமது சந்தோஷத்திற்காகவும் வாழ்க்கை நடத்தும் என்னிடம் அன்பா யிரும். ஜகதாதாரா, என்னுல் சதா தியானிக்கப்பட்ட தர்ம ஸ்ரேஷ்டரே, தாரணரே, திரியம்பகரே, தீர்த்ததேவரே, ஸர்வம் என்கிற சொல்லுக்கு எனக்கு அர்த்தமாகிறவரே, உம்மையே நம்பியிருக்கும் என்னை உமது தயையினுல் கடாக்ஷித்து அனு க்ரஹியும். முசுகுந்தருக்கு தன்னைக் காண்பித்த கிருஷ்ணு, என் கல்பகத்தருவே, அர்ஜுனனுடைய சகாவே, பரதபிரியா, என்னை ரக்ஷி. உம்மை பீஷ்மர், வியாஸர், தர்மர் சொன்னபடி நமஸ்கரிக் கிறேன்.]

அரசர் மனத்தில் இவ்விதமாக சம்புவை வேண்ட, ஒரு வார்த்தையும் அவரால் சொல்லமுடியவில்லை. அத்திமரத்தின் இலைகள்போல ஆடிக்கொண்டிருந்தது அவருடைய மனம். ரகுபதி தன் தகப்பனுரின் அபார பிரேமையை அறிபவராகையால் அந்த பிரேமை சமுத்திரத்தில் மூழ்கினவராக அவரைக் கண்டார். இவ்விதம் இருவரும் இருக்கையில், தன் தாயான கைகேயி ஏதோ சொல்லப்போவதாக அனுமானித்து மீண்டும் பேசாமலிருந்தார். (227)

தேசம், காலம், சமயத்திற்கு ஏற்ப நடக்கவேண்டியது என்கிறதை அனுசரித்து, ராமன் மிக்க வினயத்துடன் தன் தகப்பனுரிடம் விண்ணப்பம் செய்தார். "அப்பா, அண்ணு, நான் ஏதோ கொஞ்சம் சொல்ல விரும்புகிறேன். தயவு செய்து கேளும். தாங்கள் நான் இறுமாப்புள்ளவன் என்று நினைக்கக் கூடாது. சிறுபையன் என்று என்னை நினைத்து, நான் சொல்லும் அனுசிதமான வார்த்தைகளை க்ஷமியுங்கள்." (228)

"ஒரு அல்ப விஷயத்திற்காக தாங்கள் இவ்வளவு வேதனை படக்கூடாது. எனக்கு இதற்கு முன்பு ஒருவரும் இந்த விஷயத்தைப் பற்றி பிரஸ்தாபிக்கவில்லை. ஹே கோஸாயி, பூஜ்யமான பிதாவே, தாங்கள் இவ்விதம் சிரமப் படுவதைப் பார்த்து, நான் என் தாயாரைக் கேட்கவேண்டியதாயிற்று. என் அம்மா, என்மீதிருக்கும் அன்பினால் தங்கள் மன அபிப்ராயங்களை எடுத்துச்சொன்னாள். உங்கள் இருவர் களுடைய மனோபீஷ்டங்களை நிறைவேற்றும் பாக்யத்தால் என்மனம் சந்தோஷத்தால் குளிர்ந்திருக்கிறது. எனக்கு யாதொரு விதமான மனத்தாங்கலும் கிலேசமும் கிடையாது." (229)

"என் அன்புள்ள பிதாவே, இந்த சுபமான வேளையில் என் தம்பி பரதன் பட்டம் ஏற்கப்போகிறான். வேறு ஒரு விதமாக தயவுசெய்து எண்ணவேண்டாம். தங்கள் இஷ்டப்படி நடக்கும் எனக்கு ஆக்ஞை செய்யும். நான் வனம் புறப்படு வதற்கு, உத்தரவு கொடும். மனத்தில் சந்தோஷமாகவிருங்கள்." என்று வினயத்துடன் சர்வ அங்கங்களும் புளகாங்கிதமடைந்து விசுத்த ஆத்மாவுடன் பேசினார். (230)

மேலும் ராமன் சொல்ல ஆரம்பித்தார். "என் பிரிய பூஜ்யமான பிதாவே, அண்ணா, தந்தையின் அனுக்ரஹத்தையும் தாயின் அனுக்ரஹத்தையும் பெற்ற சத்புத்திரரின் ஜன்மம்தான் இந்த ஜகத்தில் தன்யமான ஜன்மம். அப்பா, என் செய்கை களால் பிதாவாகிய நீர் சந்தோஷப்பட்டால் அதுவே எனக்கு பரமப்ரீதி. பரமதர்மம். பரமபுருஷார்த்தம். அந்த அனுக்ரஹம் ஒன்றே எனக்கு ஆனந்தத்தைத் தரும் ஸ்ரீநிதி அம்மா. (கிருஷ்ணர் உமாசங்கரரை உபமன்பு ரிஷி சொல்லியபடி ஆராதித்து, அநேக வரங்களைப் பெற்றதில் தந்தையின் அனுக்ரஹமும் தாயின் அனுக்ரஹத்தையும் குறித்து, தனித்தனி யாகக் கேட்டு அவர்களிடமிருந்து முதலில் பெற்றுக்கொண்டார்.) அப்பேற்பட்ட சுபமான ப்ரீதி உங்களுக்கு என்னிடம் வேண்டும். எந்த புத்ரனுக்கு மாதாபிதாக்கள், சரீரம் பிராணனுக்கும் உள்ள ஸ்நேகம் எவ்விதம் பிரியமாக விருக்கிறதோ, எவ்விதம் அன்னம் சரீரத்துக்குப் பிரயமாகவும் ஸர்வஸம்மதமாக விருக்குமோ, எவ்விதம் அன்னத்திற்கு சூரியன் மித்ரனாகவும், ஹேதுவாகவும் இருப்பாரோ, எவ்விதம் ஜகத்தின் இருப்பு வளர்ச்சிக்கு மழையாகிற கருணாம்ருதம் தேவைப்படுமோ, அதுபோல அப்பா, அண்ணா, அம்மா, உங்கள் கருணையாகிற அமிர்த

மொழிகளும் பார்வைகளும், அனுக்ரஹ சிந்தனைகளும் என்னிடம் எப்பொழுதும் இருக்கவேண்டும். இவைகளின் பலத்தினாலேயே நான்குவித புருஷார்த்தங்கள் என்கையில் கிடைத்துவிடும்.'' (231)

''ஐயா, தங்கள் உத்தரவை என் சிரம்மேல் வைத்துக் கொண்டு இந்த ஜன்மத்தை கடைத்தேறுவேன். தாங்கள் கொடுத்த இந்த சரீரம் தங்கள் சேவையில் உபயோகப்படும் ஸாதனமாக இருக்கிறது. நான் உடனே வனம் சென்று, காலம் முடிந்தவுடன் சீக்கிரமே திரும்பி வந்துவிடுவேன். மிக்க கிருபையுடன் உத்தரவு கொடுங்கள். என் தாயாராகிய கௌஸல்யாதேவியிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு மீண்டும் உங்களிடம் உத்தரவு பெற்றுக்கொள்ளத் திரும்பி வருவேன்.'' (232)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, லக்ஷ்மணராமா, கோதண்டராமா, சதாசிவன் உமைக்கு அருளிச்செய்த மோக்ஷ தர்மத்தை என் போன்ற விஷய பற்றுள்ளவர்களுக்கு விஹிதமாகக் காட்டுவதற்கு அவதரித்த ராமா, தசரத நந்தனா, கௌஸல்யா ஸுபுத்ரா, மோக்ஷ தர்மம், மூப்பு, இறப்பு, துயரம், சோர்வு இவைகளைக் கடந்து சிறந்த ஞானம் என்றும், சிந்தைக்கு எட்டாத பேரின்பம் என்றும், ரிஷிகளும் தேவர்களும் அதையே பரமபதம் என்றும், அழியாததும், சாஸ்வதமானதும், குறைவற்றதும், பூர்ணமானதும் அலைக்கவும், வெல்லக்கூடாதது என்றும், அக்ஷோப்யம், அஜேயம், சிவம், விஸ்ராந்தியுடன் கூடிய அந்த மோக்ஷ பதத்தை ஞானிகள் அடைகின்றனர். சம்சாரத்தில் உள்ள குற்றங்கள் அதற்கு கிடையாது. குற்றங்கள் க்லேசங்கள் நிறைந்து சம்சாரத்திற்கு எது காரணமாகிறதோ, அந்த ஆசையாகிற ரோகத்தை விட்டுவிட்டு, சரியான யுக்தியுடன் ''இந்த ஆத்மாவும் என்னுடையது அன்று, அல்லது பூமி முழுவதும் அதன் ஐஸ்வர்யங்களும் என்னுடையது. எனக்கு எவ்விதமோ, அவ்விதமே மற்றவர்களுக்கும் என்று அறிந்து கொண்ட காரணத்தால், சோகத்தைவிட்டு, சேர்க்கை இன்பங்களால் ஏற்படும் வியோகத்தின் துன்பங்களையும் சமமாகப் பாவித்து, பற்றுதல் அற்ற வாழ்க்கையை அடைந்தவனாக புருஷார்த்தங்களில் முந்தினதான தர்மத்திலும், கடைசியான மோக்ஷத்தையும் அவலம்பித்து, உள்ளத்தில் அடங்கி, தானாகத்

தோன்றும் ஆத்ம ஸ்வரூபத்தை பிரகாசமாகப் பார்க்கிறவர்கள் அன்ருே, அறிவுள்ள ஞானிகள் என்று கருதப்படுபவர்கள். மனிதன் ஸத்யம் பொய், துக்கம் சுகம், பிரியம் அப்ரியம் ஆகிய இரட்டைகளை விலக்கி, நல்ல அறிவுள்ளவனுக, தெய்வத் தாலும், முன் செய்த வினைகளால் துக்கமும் சுகமாய் முடியும் என்று பிங்களை நம்பி ஆனந்தமடைந்ததுபோல, உன் பக்கத்தில் வாழ விரும்புகிறேன். என் ஸுஹ்ருதே, நான் எங்கிருந்து வந்தேனே அங்கு போகப்போகிறேன். என்று உன்னை நம்பி உன்னிடமே வரப்போகிறேன். தர்மபுத்ரர் பீஷ்மர் இவர்களின் கிருபையாலும், உமையின் மடியில் அறிவே உருவாகக்கொண்ட விஷ்வக்ஸேனர் என்னைக் காப்பாற்றட்டும். அனிருத்த ஸ்வரூபியே, சக்தி தேஜஸ்கொண்ட பெருமாளே, கமலஹஸ்தா, நாராயணப்பிரியா, மஹாலக்ஷ்மியின் ஸ்நேகிதரே, ஏகதந்தரே என்னைக் காப்பாற்றும்.]

இவ்விதம் ராமன் சொல்லிவிட்டு அவரிடமிருந்து சென்று விட்டார். அரசர் சோகத்தின் வசம் அடைந்து ஒரு பதிலும் சொல்லவில்லை. இந்த செய்தி நகர்ப்பூராவும் பரவியது. தேள் கொட்டினதால் விஷம் எவ்விதம் சரீரம் பூராவும் பரவுமோ, அதுபோல இந்த அசுபமான செய்தி பரவியது. (233)

இந்த துக்ககரமான விஷயத்தைக்கேட்ட ஜனங்கள் ஸ்திரி புருஷர்கள் யாவரும் காட்டுத்தீயின் முன்பு நடுங்கும் கொடி களும் விருக்ஷங்களையும்போல நடுநடுங்கி வியாகுலம் அடைந் தார்கள். யார்யார் இதைக்கேட்டார்களோ, அவர்கள் தலையில் அடித்துக்கொண்டார்கள். அவர்களுடைய வருத்தமும் துக்கமும் யார் சொல்லியும் அடங்காமலிருந்தது. (234)

ஒவ்வொருவருடைய முகத்திலும் கண்ணீர் தாரைகள் வழிந்த வண்ணமாயிருந்தன. சோகத்தால் துக்கப்பட்டு அவர் களுடைய ஹ்ருதயம் வெடித்துவிடும்போல அதிசோகம் அடைந்தார்கள். ஒவ்வொருவருடைய மனத்திலும் ராமன்பால் ஏற்பட்ட கருணை ரஸம் பெருகி, அந்த புண்யமான அயோத்தி நகர் முழுவதும் ஒரு சேனை ஆக்ரமித்ததுபோல இறங்கிவந்து விளையாடியது. (235)

ஒவ்வொருவரும் கூடி பேசிக்கொண்டிருந்தார்கள். "நாம் ஒன்று நினைக்க விதாதா எல்லாத் திட்டங்களையும் உடைத்து விட்டார். எங்கு பார்த்தாலும் கைகேயியைத் திட்டியபடி வசை மொழிகளை ஜனங்கள் சொல்லிக்கொண்டிருந்தனர். அப்பேற் பட்ட பாபினியின் புத்தியைப் பற்றி என்ன சொல்வது?

  

"ஐயோ இவள் தான் குடியிருக்கும் வீட்டிலேயே நெருப்பை வைக்கிறாளே ?" (236)

"தன் கைகளாலே தன் கண்களைப் பிடுங்கிக்கொண்டு பார்க்க விரும்புகிறாளே. நவசுதாவை (புதிதாக உண்டாகிய அம்ருதத்தை) விட்டுவிட்டு விஷத்தைக் குடிக்க விரும்புகிறாளே. அபாக்யவதி, காலத்தினால் கெடப்பட்டு குடிலபுத்தி அவளுக்கு எவ்விதம் வந்தது? ரகுவம்சத்திற்கு நெருப்பு வைக்கிறாளே? தர்மவான்கள் நிறைந்த ரகுகுல மன்னர்களுக்கு அபகீர்த்தியை விளைவிக்கிறாளே ?" (237)

"மரக்கிளையில் உட்கார்ந்துகொண்டு அடிமரத்தை வெட்டுகிறாளே ? துக்கத்தை சுகத்தின் ஹ்ருதயத்தில் நிரப்புகிறாளே. இந்த ஸ்ரீராமன் அவளுக்குப் பிராணன்போல இதுகாறும் பிரியமாகவிருந்தானே. இந்த குடிலபுத்தி உண்டாவதற்கு என்ன காரணம் என்று புரியவில்லையே." (238)

[தியானம்

ஹே ராமா, சீதாபதி, மஹாபாகா, என் ஈஸானரே, தமரே, ஸ்ரீதரரே, எனக்கு சுகத்தை அளித்தவரே, எனக்கு நல்ல அறிவைக்கொடுத்து த்வந்தங்களிலிருந்து விடுதலை அளித்தவரே, உமது அருளினால் கோபத்தையும் பயத்தையும் சோகத்தையும் சிரமத்தையும் அவைகளின் மூலகாரணமாகிய ஆசையையும், விலக்கி, என்னுடையது என்கிற அபிமானமும் துறந்து தாபமில்லாதவனாக சாந்த புத்தி உள்ளவனாக உங்களை அடைகிறேன். ராமா, மஹேஸ்வரா, ஈஸானரே, கௌரி, சீதா, என் சரீரத்திற்கு பிராணன் போன்றவரே, என் சரீரத்திற்கு ஒன்பது த்வாரங்கள் இருப்பது போல, வனம் செல்லும் ராமா, உன் தர்மத்திற்கும் ஒன்பது த்வாரங்களிருக்கின்றன. இந்திரிய அடக்கம், தியாகத்தால் ஏற்படும் சாந்தியுள்ள மனம், ஆத்ம ஸமர்ப்பணம், மஹா அறிவு, சக்தி விரதமாகிய தேஜஸ், ஸத்யம், பூததயை, அஹிம்சை பெரியோர்களை அடுத்து சாஸ்திர ஞானம் பெறுதல் ஆகிய இந்த அம்சங்களுடன் கூடின உன்னை, கௌரி மனோஹரா, கௌஸல்யா ராமா, என்னை நீதான் காப்பாற்ற வேண்டும்.]

கவி ஸ்ஷேஷ்டர்கள் ஸ்திரிகளின் ஸ்வாபத்தைப் பற்றி ஸத்யத்தையே சொல்லியிருக்கிறார்கள். "ஸ்த்ரிகளின் சுபாவம் எளிதில் அறிய முடியாது. ரொம்ப ஆழமானது. எல்லா விதிகளுக்கும் உட்படாதவாறும், எல்லை வரம்புகளையும் தாண்டி அதிக்ரமித்திருப்பது. எளிதில் அறிவினாலோ, ஸ்தூலமாகவோ

புலப்படாதது. ஒருவன் நிஜமாக தன் நிழலைக் கூட பிடித்து விடலாம். ஆனால் நாரிமணிகளின் போக்கை நிச்சயமாக நிர்ண யிக்க முடியாது.'' (239)

நெருப்பு எதைத்தான் எரிக்கமாட்டாது? ஸமுத்திரம் எந்த வஸ்துவைத் தாங்காது? அபலையானவள் என்று பிரபலமாக சொல்லக் கூடிய தீனமான பெண்ணும் கூட எதைத்தான் மனம் வைத்தால் செய்ய முடியாது? இந்த சம்சாரத்தில் காலபுருஷனால் ஆக்ரமிக்கப்படாதவன் யாராவது இருக்கிறார்களா? (240)

விதாதாவாகிய பிரும்மா எவருடைய வசனங்களையும் வேண்டுகோள்களையும் கேட்டு, அவர்கள் சொற்படி, இஷ்டப்படி இதுவரை என்ன காரியம் செய்திருக்கிறான்? அவன் ஒன்றைக் காண்பித்து, மற்றொன்றைச் செய்கிறான். இப்போது அவன் எதைக் காண்பித்து நம்மையெல்லாம் திருப்தி செய்விக்க விரும்பு கிறானோ என்றுதான் நமக்குப் புரியவில்லை. ஒன்றை மாத்திரம் எல்லோரும் ஒருமிக்க ஏகோபித்துச் சொன்னார்கள். "இந்த பூபதி நன்றாகத் தீர விசாரிக்காமல், கபட புத்தியுள்ள கைகேயி யின் தீனமான வசனங்களுக்கு அடிமையாகி வரம் அளித் திருக்கக் கூடாது.'' (241)

"அவருடைய திருடமான ஸத்யவிரதம் ஸகல துக்கங்களுக் கும் மூலகாரணமாகவிருக்கிறது. அபலை என்று சொல்லக் கூடய ஸ்திரி வர்க்கத்திற்கு வசப்பட்டவரான அரசர் தன் சொந்த விவேக அறிவினால், தனக்கும் ஹிதம் செய்து கொண்டிருக்க வேண்டும். அதனால் அவர் தனது ஆத்ம சௌக்யத்தை நஷ்டப் படுத்திக்கொண்டார்'', என்று கூட சில பேர்கள் வாதித்துக் கொண்டார்கள். மற்றொரு வகுப்பினர் "ஸநாதனமானதும், அழிவில்லாததும், தெய்வத்தாலும், பூர்வகர்மவாஸனைகளாலும், நடக்கப் போவது நடந்தே தீரும்'' என்று சொல்லிக் கொண்டும் ஒரேசித்தமாய் தர்மத்தை அவலம்பித்தவரும், மஹா ஞானியும் பற்றுதல் ஆசை முதலியவைகளிலிருந்து விடுபட்டவருமான தசரதர் தர்மத்தின் மர்மமான ஆசரணையாகிறமரியாதை வியவஸ் தையில் அதிதீர்க்க புத்தியுடன் விசாரித்து, அறிந்து, நிச்சயித்து, ராஜதர்மத்தை விட சொந்த ஆத்ம தர்மமாகிற மோக்ஷ தர்மம் பெரிது; அதைக் கைப்பற்றிய மன்னரிடம் ஒரு தோஷமும் இல்லை'' என்று சொல்லிக்கொண்டனர். (242)

மஹா சக்ரவர்த்திகளும், ராஜரிஷிகளுமாகிற சிபி, ததீசி, ஹரிச்சந்திரன் ஆகிய உபாக்யானங்களை இன்னும் சிலர் ஞாபக படுத்திக் கொண்டு, மற்றவர்களிடம் சொல்லிக் கொண்டார்கள்.

சிலபேர் இந்த விஷயத்தில் பரதனையும் புகுத்தி, அவனுடைய சம்மதத்தையும், இதில் கேட்டு இருக்கலாம் என்று அவனுக்கு தோஷத்தையும் கல்பிக்க ஆரம்பித்தார்கள். பாகவத ஸ்ரேஷ்டர்களான மற்ற வர்க்கத்தினர் "மஹா அபராதத்தை பரதனுக்குச் சொல்லாதீர்கள்." என்று சொல்லிக் கொண்டு உதாசீன புத்தியுடன் வசனங்களை லஷ்யம் செய்யவில்லை. (243)

பரதனிடம் அபார நம்பிக்கை உள்ள பாகவத சிரோன்மணிகள் கைகளால் காதுகளைப் பொத்திக்கொண்டு தங்களுடைய நாக்குகளை பற் வரிசைகளால் அடக்கி, "அந்த அநியாய வார்த்தைகள் நம் காதில் விழக்கூடாது. சொல்லுவதற்கே மிக்க பாபமானவை. சகல சுக்ருதங்களை புருஷார்த்தங்கள் அனைத்தையும், பகவானுடைய ஆராத கோபத்தையும் ஜன்ம ஜன்மமாக அடையாதீர்கள். ராம பரத ஸ்நேகம் சரீரத்திற்குப் பிராணன் மாதிரி அல்லவா அன்புள்ளதாகவும், இணைபிரியாததாகவும் இருக்கிறது." (244)

[தியானம்

ஹே ராமா, கோதண்ட ராமா, சீதா ராமா, லக்ஷ்மண சீதா ராமா, தர்மத்தில் நம்பிக்கை வைத்து, விஷய போகங்களில் பற்றுதல் உள்ள மனிதர்களை, உறங்கிக் கொண்டிருக்கும் மிருகத்தை புலி எடுத்துக் கொண்டு போவது போல, மிருத்யுவானவன் அவர்களை அபஹரித்துச் செல்கிறான். ஆகையால் ஸ்ரேயசை அடைய விரும்பும் மனிதன் காலத்தை மீறிச் செல்ல விருப்பமின்றி ஆசையாகிற விஷய சுகங்களை நீக்கி, பாசபந்தங்களாகிற கயிற்றை அறுத்து, பரமாத்மாவாகிய உன்னிடம் சரணம் அடைகிறார்கள். நகரத்தில் வசிப்பவனுக்கு ஆசை என்கிற மிருத்யு ஏற்படுகிறது. அரண்யம் என்று சொல்லப்படுவது இந்திரியம் எனப்படும் பசுக்களைக் கட்டத்தக்க கொட்டில் என்று வேதம் உபதேசிக்கிறது. ஸத்யம் என்கிற பிரும்ம ஞானத்தை அடைந்து, மோக்ஷமாகிய இரட்டைகளிலிருந்து விடுபடுதல் ஆகிற அறிவு வழிகளால், எல்லோருக்கும் சுகத்தை விரும்புகிறவராகவும் அஹிம்சையை விரதமாகக் கொண்டவரும், அப்பேற்பட்ட ஹிதகாம்யருக்கு உண்டான வ்ரதத்தை ஏற்படுத்திக் கொண்டு, காமம், கோபம் ஆகியவற்றை ஜயித்து, சுகத்தையும் துக்கத்தையும் ஸமமாகப் பார்த்து, நிவிருத்தி மார்க்கத்தில் பழக்கம் என்கிற யாகத்தில், இந்திரிய நிகரஹம் உள்ளவனாகவும், பிரும்ம ஞானத்தில் நிலை பெற்றவனாகவும், வாக்கு, மனம், சரீரத்

திற்கு உள்ள ஜபம், தியானம், ஸ்நானம் என்கிற யாகங்களுள்ள வனுமான முனியாக இருந்து, உத்தராயணம் என்கிற பிரும்ம லோக வழிக்கு அருகதையான வனம் சென்ற ராமா, உன்னை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். தவமும் தியாகமும் கொண்ட ராமா, ஸத்யமும் அஹிம்சையையும் கொண்ட கோதண்ட சீதா ராமா, பெரிய மஹத்தான ஞானம் கொண்ட லக்ஷ்மண ராமா, ஆத்ம ரூபத்துடன் ஜ்வலித்த கோதண்ட ராமா, தனிமை, ஸம நிலை, ஸத்யம், சீலம், மரியாதை, ஹிம்ஸைஇல்லாமை, ருஜுவா கவும் பிரமாணமாகவுமிருப்பது, அந்த அந்த கர்மங்களி லிருந்து ஒழிவடைவது, முனிவர்களுக்கு மித்ரனாகவிருப்பது, பெரியோர்களாகிற தீர்த்தங்களை அடைந்து சேவிப்பது ஆகிய பெருங்காரியங்களைச் செய்துமுடித்த என் ஹ்ருதய குகைக்குள் வசித்துக்கொண்டிருக்கும் ஆத்மா ராமா, உன்னையும் சீதை யையும் பல தடவைகள் நான் நமஸ்கரிக்கிறேன்.]

"சந்திரன் தன் குளிர்ந்த கிரணங்களுக்குப் பதிலாக பூமியில் அக்னி தணல்களை வர்ஷிப்பான்; நல்ல சுதாவாகிற அம்ருதம் பெரும் விஷமாக மாறி விடும். ஆனால் பரதன் ஸ்வப்னத்தில் கூட ராமனுக்கு பிரதிகூலமாக நடப்பான் என்று சொல்ல முடியாது." (245)

இன்னும் சில பேர்கள் விதாதா வாகிற கடவுளுக்குத் தோஷம் கற்பித்தார்கள். "அம்ருத மாகிற ராம பட்டாபிஷேகத்திற்குப் பதிலாக விஷத்தை அளித்து விட்டார் கடவுள்," என்று கடவுளை நிந்தித்தார்கள். நகர் பூராவும் இந்த செய்தி பரவி, எல்லோரு டைய உத்ஸாஹ ஆனந்தங்கள் மறைய ஆரம்பித்தன. எல் லோரும் கவலையின் எல்லையை அடைந்து விட்டார்கள். (246)

பிராம்மண ஶ்ரேஷ்டர்கள், குலத்தில் பெரியவர்கள் வயதில் பெரியவர்கள் கைகேயியின் நன்மையில் பரம பிரியத்தை வைத்த வர்கள், கைகேயியின் பழைய சீலமான நடத்தையைப் புகழ்ந்து, அவளுடைய நற்கீர்த்தி புகழுக்கு ஹிதமான வார்த்தைகளை அவளிடம் சொன்னார்கள். ஆனால் கைகேயியுக்கு அந்த வார்த் தைகள் பாணங்கள் மாதிரி அவள் மனதில் தைய்த்தன. (247)

அவர்கள் கைகேயியிடம் சொன்னார்கள். "கைகேயி, நீ சதா ராமன் மீது அபார பிரியம் காண்பித்து, ராம மோஹம் அடைந்தவள் போல, சதா இருந்து கொண்டு, பரதனிடம் கூட அவ்வளவு பிரேமை கிடையாது என்றும்; உலகம் பூராவும் இந்த விசேஷமான பிரியத்தை ராமனிடம் நீ காட்டுவதை அறிவார்கள் என்றும், ராமச்சந்திரனும் உன்னிடம் ஸஹஜமான பிரியத்துடன்

இருப்பதாகவும் அடிக்கடி சொல்லுவாயே? இப்போது ராமன் உனக்கு என்ன அபராதம் செய்ததின் பலனாக அவனைக் காட்டுக்கு அனுப்புகிறாய்? (248)

"உனக்கும் மற்ற ராணிமார்களிடமும் அசூயை கிடையாது. அவர்களிடம் நீ காட்டும் அன்பும் விஸ்வாசமும் பிரசித்தி பெற்றது தானே. இப்போது கௌஸல்யாதேவி உனக்கு என்ன மஹத்தான தீங்கு செய்தாள்? அதன் பலனாக இந்த அயோத்யாபுரிக்கே வஜ்ரம் போட்டது மாதிரி, எல்லோரையும் கதிகலங்க வைத்து விட்டாயே." (249)

[தியானம்

"ஹே ராமா, சீதா ராமா, ஜகந்நாதா, ஜகன் மாதா, ஜகத் தாத்ரி, அந்தகாசூரனை வதைத்த சங்கரரால் ஆத்மா ராமனாக உபாஸிக்கப்பட்ட வனாந்தகராமா, அகஸ்தியரால் பஹுமானிக்கப் பட்ட சீதா ராமா, தியாகராஜரால் ஆராதிக்கப்பட்ட ராமா, நீ வனம் செல்லும் சமயம் உன் மனதில் சுகருடைய ஸ்லோகமாகி யதும், விதேஹ அரசரான ஜனகரால் பாடப்பட்டதும், மோக்ஷத் தைப் பற்றியதுமான காதையாகிறது இருந்திருக்கவேண்டும். "என்னுடைய பொருளானது அளவில்லாததுபோல் இருப் பினும் எனக்கு ஒன்றுமில்லை. மிதிலையானது எறிக்கப்பட்டாலும் என்னுடையது ஒன்றும் எரிக்கப்படவில்லை," ஆகிய வைராக்ய வசனங்கள் உனக்கு ஞாபகமிருந்ததா? ஜனகருடைய வீட்டி லிருந்து பெரிய அரண்யத்துக்குப் புறப்பட்டுப் போனவரும் எல்லா த்வந்தங்களிலிருந்தும் விடுபட்டவரான என் ஆசார்ய ரான சுகர் எனக்கு நாராயண கவசத்தை உபதேசித்த குரு, "காமங்களை எல்லாவற்றையும் அடைகிறவனும், காமங்கள் எல்லாவற்றையும் விடுகிறவனுமாகிய ஆகிய இருவர்களில் எல்லாக் காமங்களை அடைபவனைவிட எல்லாக் காமங்களை விடு பவன் சிறந்தவனாக ஆவான்" என்று சொல்லியிருக்கிறார். ஏனெனில் ராமா, சக்தியாகிற பௌருஷம் உனக்கு இருந்தும் அதுவும் தெய்வத்தை அடுத்திருக்கிறதல்லவா? பொருள்களின் ஆசையை விட்ட ராமா, வைராக்கிய ராமா, அர்ஜுனன், அஸ்வத்தாமன் ஆகியவர்களும், தியாகராஜரும் என்னிடம் பல தடவைகள் சொல்லியிருக்கிறார்கள். "விரும்பத்தக்க எல்லாத் தொழில்களின் எல்லையை அடைந்தவன் இதுவரையில் ஒரு வனும் இல்லை" என்று படித்துப் படித்து ஞாபகப்படுத்தியிருக் கிறார்கள். என் தாயார் சீதை என் குருவாகிற ஆஞ்சநேயரைப்

பார்த்து "ராமன் தேவதைகளின் அனுக்ரஹத்தைப் பிரார்த்திக்கிறாரா? புருஷ பிரயத்னத்தையும் தெய்வ அனுக்ரஹத்துடன் சேர்த்துச் செய்கிறாரா?" என்று கேட்டாள். அப்பேறபட்ட பொறுமையை கவசமாக அணிந்த சீதாராமா, என்னை விட்டு விடாதே. ரக்ஷிக்கவேண்டும். உங்கள் பரமகிருபை எனக்கு வேண்டும்.]

"சீதாபதியான ராமன் தன் பிரிய பத்னியான சீதையை பரித்யாகம் செய்துவிட்டு வனம் செல்லுவாரா? எவ்விதம் சுமித்திரையின் மஹத்தான தபஸால் நாராயணரை ஆதரித்து ராம கைங்கர்யம் செய்வதற்கு என்றே ஒரு பிள்ளையைப் பெற்றாளே, அந்த மஹாபாக்யமுள்ள லக்ஷ்மணன் எவ்விதம் ராமனை விட்டுப் பிரிந்திருப்பான்? அரை க்ஷணம்கூட அவர்கள் பிரிய மாட்டார்களே? தொட்டிலில் விடும்போதுகூட பால்ய அவஸ்தையிலிருந்து சேர்ந்து உணவு செய்து, தூங்கி விளையாடிக்கொண்டிருக்கும் இணைபிரியாதவர்களாச்சே? ராமனிடம் அதிகப் பிரியம் கொண்ட மஹாபாகவத சிரோண்மணியான பரதன் அயோத்தியை அரசாளுவதற்கு சம்மதிக்கமாட்டானே? தசரதரோ ராமனிடம் பிராணன்போல சிநேகிதம் வைத்தவர். ராமனை வனத்திற்கு அனுப்பிவிட்டால் அவர் பிராணன் தனித்து இருக்காதே." (250)

"ஹே கைகேயி, இவைகளை நன்றாக புத்தியினால் தீரவிசாரி. காம க்ரோதங்களை விடு. பரதனுக்குத் தாயாரே, உனக்கு வரப்போகும் பயத்தினால் ஏற்படும் சோகத்தையும், உன் மனது கலக்கத்தினால் எற்படும் அக்ஞான களங்கத்தையும் விட்டுவிடு. பரதனுக்கு ராமனே யுவராஜ்ய பட்டாபிஷேகம் கொடுக்க சம்மதித்தபடியால் நீ சந்தோஷப்படு. ஆனால் ராமனை மாத்திரம் வனத்திற்கு அனுப்பாதே." (251)

"நம் ராமன் பொருளின் ஆசையாகிற ராஜ்ய ஆசையை கொண்டவனில்லை. அவர் தர்மத்தை த்வஜமாகக் கொண்ட தர்மதுரந்தரன். விஷய சுகங்களின் பற்றுதலிலிருந்து விடுபட்ட முனி. அரசரிடம் வேறு ஒரு வரம் கேட்டு வாங்கிக்கொள். வனத்திற்குப் பதிலாக ராமன் குருவாகிற வஸிஷ்டரிடம் வசிப்பதைப் பெற்றுக்கொள். ராமன் குரு கிரஹத்தில் வசிக்கட்டும். அரண்யம் போகவேண்டாம்." (252)

"நாங்கள் சொல்லுகிறபடி செய். அவ்விதம் செய்வதனால் உனக்கு ஒரு நஷ்டமும் ஏற்படாது. பூர்ண லாபமும் உனக்கு கிடைக்கும். பரிஹாஸத்திற்காக ராமனை வனம் அனுப்ப

நினைத்தாயானால் அந்த பரிஹாஸத்தைக் காட்டும் சமயம் இது வல்ல. அதை வெளியில் எல்லோருக்கும் தெரியும்படி பிரகடனப் படுத்திவிடு.'' (253)

''ராமன் சகல நல்ல குணங்களும் நிரம்பின அடக்கமான சரீதா புத்ரன். அவன் தேசத்தை விட்டு வனத்திற்கு பிரஷ்ட மாக அனுப்புவதற்கு யோக்யமானவன் அல்ல. இந்த அநியா யத்தைக் கேட்கும் ஜனங்கள் உன்னை எவ்விதம் கேவலமாகச் சொல்லுவார்கள்? எழுந்திரு. ஏதாவது உபாயம் செய். அதனால் உனக்கு ஆயுள் பூராவும் ஏற்படக்கூடும் மஹா சோகத்தையும், விபரீதமான அபகீர்த்தியும், உனக்கும் உன் பரதனுக்கும் ரகு குலத்திற்கும் ஏற்படக் கூடாது.'' (254)

''உனக்கு மாத்திரமில்லை. இந்த அயோத்திநகர் பூராவுக்கும் ஏற்பட்டிருக்கும் அபகீர்த்தியையும் உன் உபாயத்தினால், சோக களங்கத்தையும் அழித்துவிடு. அது குலத்தின் நல்ல பெயரையும் காக்கட்டும். வனத்திற்குச் செல்லுகிறேன் என்று சொல்லிப் போகும் ராமனை திரும்ப அழைத்துக் கொள். சும்மா இருக்காதே. அவசரமாக உபாயம் செய். வேறு ஒன்றும் முயற்சிக்காதே.'' துளசிதாஸர் சொல்லு கிறார்: ''எவ்விதம் சூரியன் இல்லாமல் பகல் பிரகாசிக் காதோ, பிராணன் இல்லாமல் சரீரம் உயிர் வாழாதோ, சந்திரன் இல்லாமல் இரவு பூர்த்தியாகாதோ அது மாதிரி அம்மா, ஸ்ரீராமச் சந்திரப் பிரபு இல்லாத போனால் இந்த அயோத்தி பாழடைந்து போய்விடும். ஹே பாமினி, நன்றாகப் புரிந்துகொள். இந்த விஷயத்தில் உனக்கு சந்தேகம் ஒன்றும் வேண்டாம். (அயோத்தி யில் ராமன் சக்கிரவர்த்தி குமாரனாக அவதரித்தும், சௌலப்யம் ஔதார்யம் என்னும் குணங்களால் நிரம்பப்பட்ட ஸ்ரீராமன் எல்லோருடைய மனத்தையும் கவர்ந்திருக்கிறான். மானிடராக அவதரித்த போதிலும் ராமன் போக மோக்ஷ பதங்களை, தேவர் களுக்கும் கிடைக்காத அருளைக் கொடுக்கப் போகிறான். அயோத்தியே அவனுடைய மஹாக்கிருபைக்குப் பாத்திரமாகப் போவதாகவிருக்கிறது. அதனால் பக்த சிரோன்மணி துளசி தாஸர் ''பிரபு'' என்று பகவானைச் சொல்லுகிறார் ] (255)

[தியானம்

ஹே ராமா சீதாபதி, மோக்ஷ லக்ஷ்மியுடன் கூடின ஸ்ரீராமா, புஷ்கராக்ஷா, சக்ரனால் துதிக்கப்பட்ட ராமா, சசீபதியினால் வந்தனம் செய்யப்பட்ட அம்ருதலக்ஷ்மி, சதக்ருதுவினால்

ஸ்தோத்திரம் செய்யப்பட்ட மோக்ஷலக்ஷ்மி, ஜகந்மாதா, குவலே சயரே, விஜிதாத்மாவே, முன்பு ஒரு காலத்தில் யயாதிக்கு போத்யர் என்கிற ரிஷி மோக்ஷ மார்க்கத்தைத் தானாக தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் அதன் லக்ஷணத்தையும் சொன்னார். பிங்களை என்னும் ஆசையைத் துறந்த வேசி சுகமாக உறங்கினாள் என்றும், மாம்ஸத்துடன் கூடிய அணிலை மாம்ஸ மில்லாதவைகள் அடிக்கடி தொடங்கினதின் காரணமாக அந்த அணில் மாம்ஸத்தை விட்டதினால் சுகம் அடைந்ததென்றும், ஸர்ப்பமானது பிறனால் செய்யப்பட்ட வீட்டில் புகுந்து சுகமாக வசிப்பதுபோலவும், தனக்கென்று வீடு கட்டுவது துக்கத்தை உண்டு பண்ணுவது என்கிற அறிவினாலும், முனிவர்களாக விருப்பவர்கள் வண்டுகள் போல பிராணிகளுக்குத் த்ரோஹம் செய்யாமல் பிச்சை எடுக்கும் விருத்தியை அடைந்து, எவ்விதம் வண்டானது எல்லாப் பூக்களிலிருந்தும் ஸாரத்தை எடுப்பதுபோல, அறிவுள்ள மனிதன் சிறிதும் பெரியதுமான சாஸ்திரங்களிலிருந்து ஸாரத்தை எடுத்துக் கொள்ளவேண்டும் என்றார். லக்ஷ்யத்தை அடிக்கும் அம்புபோல மனிதன் மோக்ஷ பதத்தில் குறியுள்ளவனாக அருகிற் செல்லும் அரசனையும் அறிகிறதில்லை. ஹே ராமா, அப்பேற்பட்ட த்ருட பக்தியுடன் உன்னையும் சீதையையும் நான் நமஸ்கரிக்கிறேன். எவ்விதம் ஒரு வளையுடன் ஒரு பெண் அதிதிகளுக்கு போஜனம் செய்விக்கக் கருதி சத்தம் செய்யாமல் நெல்லைக் குத்தினாளோ, அதுபோல ராமா, நான் ஏகாந்த பக்தியுடன் நமஸ்கரிக்கிறேன். தோஷங்களைப் பாராமல் அயோத்தி வாசிகளுக்கு மோக்ஷம் தந்த உதார ராம, அஜகர விரதம் என்கிற தர்மத்துடன் ஆசாரத்துடன் நான் உறுதியான புத்தியுடனே ஸ்வதர்மத்திலிருந்து நழுவாதவனாகவும் பராபரமான ப்ரும்மத்தை அறிந்த நான் உன் தயவினால் பயத்தையும், பேராசையையும், அவிவேகத்தையும், மாத்ஸர்யம், க்ரோதம், லோபம், அசுபமானமதி ஆகிற எல்லாத் தோஷங்களையும் உதறித் தள்ளிவிட்டு, தெய்வமாகிய உன்னிடம் என் மனத்தை ஆத்மரூபத்தில் முடிவு பெற்றிருக்கச் செய்து அப்பேற்பட்ட உத்தமமான மலைப்பாம்பின் வ்ரதத்தை மன சுத்தியுடன் செய்கிறேன். இந்திரியங்களை அடக்கி, நியமும் விரதமும் கொண்டு வனம் செல்லும் சீதாராமா ஸத்ய வசனத்தால் கட்டுண்ட ராமா, ஆதித்யரே, ஞான திவாகரனே, கர்மம் பக்தி ஞானம் இன்னும் அநேக யோகங்களின் பயன்களில் அக்கரையில்லாத என்னைத் தள்ளிவிடாதே. சந்தோஷமாகச் செய்யும் பரிசுத்தனை என்னை

நீ எவ்விதம் பலி, பிரஹ்லாதன், நமுசி, மங்கி என்கிற முனி ஸ்ரேஷ்டர், இந்திரன், காஸ்யபர் இவர்களை ஆதரித்ததுபோல என்னையும் தயவு செய்து ஆதரிப்பாயாக. அப்பேற்பட்ட மஹானுபாவர்கள், பெரிய ஐஸ்வர்ய நாசம் ஏற்பட்ட சமயம் எவ்விதம் மஹத்தான அறிவினால் உன்னையே பெரும் லாபம் என்று கருதினார்களோ, அர்ஜுனனும், லக்ஷ்மணனும், சீதையும் யசோதையும், பரதனும், சத்ருக்னனும் இதையே அடிக்கடி எனக்குச் சொல்லியிருக்கிறார்கள். நான் அவ்விதம் அறிவுடன் எந்த ஸ்திதியிலும் உன் கிருபையால் இருக்கவேண்டும். என்னை ஏதாவது மோஹப்படச் செய்து உன்னிடமிருந்து தூரத் தள்ளிவிடாதே.]

இந்த விதமாக கைகேயியின் சுஹ்ருத்தான சகிமார்கள் சொல்லியும், காதுக்கும், மனத்திற்கும், ஆத்ம ஹிதத்திற்கும் மிக்க பரிணமம் உள்ளதும், தீனஸ்திதியை அவளை அடைய விக்காமல் காப்பாற்றக்கூடிய மதுரமான வார்த்தைகளைக் கேட்டும், குடிலபுத்தியினால் தூண்டப்பட்ட கைகேயி, ஒரு வார்த்தைக்கும் தன் செவியை கொஞ்சம்கூட சாய்க்காமல் இருந்தாள். அந்தோ, பரிதாபம்! (256)

அதனால் அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. கெட்ட கதி அடைந்த அவள் க்ரோதத்தினால் நிரம்பப்பட்டு ஒரு பசியுள்ள பெண் புலி ஒரு பெண் மானைப் பார்ப்பதுபோல அவர்களைத் தன் மூர்க்க ஸ்வபாவத்தினால் பார்த்தாள். அவளுடைய வியாதி சிசித்ஸைக்கு மீறி அசாத்யமாகப் போனதைக் கண்டு, அவர்களும் "முட்டாள், அபாக்யவதி, காலத்தினால் புத்தி கெடுக்கப் பட்டாள்" என்று அவளை நினைத்து நிந்தித்து தங்கள் முயற்சிகளைத் தியாகம் செய்தார்கள். (257)

அரசியாக கைகேயி இருந்து என்ன பயன்? தனக்கு எது ஹிதம் என்கிற புத்திகூட தெரியவில்லையே. நிச்சயமாக தெய்வம் அவளைக் கெடுத்துவிட்டது. இவள் செய்தபடி யாரும் செய்ய விரும்ப மாட்டார்கள். இந்த விதமாக ஸகல ஸ்திரி புருஷர்களும் பிரலாபம் செய்து, கபட புத்தியுள்ள கைகேயியை கோடிக்கணக் கான வசவுகளால் வைதார்கள். (258)

இந்த விதமாக விஷஜ்வரம் காட்டுத்தீப் பரவுவதுபோல, இந்த துர்செய்தி லோகம் பூராவும் பரவியது. தீர்க்கமானதும் ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக்கொண்டு தவித்த அயோத்தியாபுரி வாஸிகள் "ராமனை விட்டுப் பிரிந்து ஜீவிய வாழ்க்கையை நாம் எவ்விதம் நடத்துவோம்?" என்கிற கவலையை அடைந்தார்கள்.

அந்த ராம வியோகத்தை நினைத்து நினைத்து எவ்விதம் குளத்தில் ஜலம் வற்றுவதைக் கண்ட மீன் குஞ்சுகளின் ஸமுதாயம் வியாகுல மடையுமோ, அதுபோல மஹத்தான சோகத்தை அடைந்தார்கள். (259)

சகல ஸ்திரி புருஷர்கள் யாவரும் அத்யந்த துக்கத்தை அடைந்து முனகும் சமயம், என் பிரபு கோஸாயி, ராமன் தன் தாயாரான கௌஸல்யையிடம் சென்றார். தியாக புருஷனுைபடியால், அவர் முகம் சாந்த உள்ளத்தினால் ஏற்பட்ட சந்தோஷத்தைக் காட்டியது. அவருடைய இந்திரியங்கள் அவர் அறிவுக்கு வசப்பட்டு அடக்க ஸ்வரூபமாக ஸ்வாமி பொறுமையுடன் விளங்கினார். வெறுப்பு விருப்புக்கள் அற்று மோக்ஷ மார்க்கத்தில் ஸ்திரமாக விருக்கும் ஏகாந்த யோகியைப் போல பயமற்றவராகி, "இனி ராஜா மௌனமாக விருந்தபடியால் நம்மை வனம் போகாமல் தடுக்கமாட்டார்" என்ற நிச்சய எண்ணத்துடன் வனம் செல்வதற்கு பூர்ணமான மன சந்தோஷத்துடன் தன் சத்ய விரதத்தை பிரபு ராமச்சந்திரன் ஏற்றுக்கொண்டார். (260)

ரகுவீரன் ஒரு புதிதாக பிடிக்கப்பட்ட யானையைப் போல விளங்கினார். அந்த யானைக்கு நான்குபுறமும் கட்டுகளாகிற பந்தங்கள் ஏற்படுவதுபோல தனக்கு ராஜதிலகம் செய்ய ஏற்பாடுகள் பண்ணப்பட்டதைக் கண்டு, அவரும் கட்டுண்ட யானை போல லோகத்திற்குத் தோன்றினார். இப்போது "வனம் செல்ல வேண்டும்" என்கிற ஆக்ஞையைக் கேட்ட பின்பு அந்த கட்டுக்களாகிற பந்தங்கள் நீங்கி, ஸ்வதந்தரமாகி, மனத்தில் ஆனந்தம் உள்ளவராக காணப்பட்டார். (261)

ரகு குல திலகமான ராமன் இரண்டு கைகளையும் அஞ்சலி பந்தத்துடன் கைகூப்பி ஆனந்த உள்ளத்தினால் தன் தாயாராகிய கௌஸல்யாதேவியின் பாதகமலங்களில் விழுந்து நமஸ்கரித்தார். அதிதிதேவி எவ்விதம் இந்திரனை ஆசீர்வதிப்பாளோ, எவ்விதம் வினதை கருடனை சம்மானித்து அணைத்துக்கொண்டாளோ, எவ்விதம் சுநீதி துருவனை ஆசீர்வதித்து அணைப்பாளோ, அது போல விசால ஹ்ருதயமுள்ள கௌஸல்யாதேவி, (தன் பிள்ளை லோக ஹிதத்திற்காக பகவான் ஸ்ரீரங்கநாதரால் கொடுக்கப்பட்டிருக்கிறான் என்கிற பேரறிவுடன்), சுபமான மங்கள ஆசீர்வாதங்களைச் செய்து, தழுவி, முத்தமிட்டு அம்ருதமயமான கண்களால் அந்தக் குழந்தையைக் குளிரப்பார்த்து, அவளுக்குத் தனிப்பட்ட செல்வமாக விருக்கும் ஸ்ரீவசனபூஷணங்களால் ராமனை ஆசீர்வதித்தாள். (262)

அடிக்கடி முத்தமிட்டுக்கொண்டும், அவனைத் தடவிக்கொடுத்துக் கொண்டும், புளகிதமான நயனங்களாலும் சரீரத்தைக் கண்களின் கண்ணீரால் நனைத்துக்கொண்டு, அடிக்கடி தன் மடியில் குழந்தையை வைத்து, ஹ்ருதயத்துடன் தழுவின அந்த ராமச்சந்திரனின் மாதாவை எவ்விதம் வர்ணிக்கமுடியும்? ப்ரேமை புத்ரரஸம் பெருகும் அவள் ஹிருதயமும் ஸ்தனங்களும் ராமனை அடிக்கடி தழுவிக்கொண்டன. (263)

சுத்த ஸத்வமான ராமனை மீண்டும் மீண்டும் தழுவுதலால் ஏற்பட்ட பிரேமையும், அதனுல் ஏற்பட்ட மஹத்தான ஆனந்தத்தையும் யாரால் எவ்விதம் உபமானிக்கமுடியும்? பரம்பரை தரித்திரன் யதேச்சையாக தெய்வ சங்கல்பத்தால் தனுதிபதியான குபேரேஸ்வரனைப்போல பணப்பெருக்கை அடைந்து எவ்விதம் சந்தோஷிப்பானே, அதுபோல் கௌஸல்யை ஆனந்தமடைந்தாள். வெகுமரியாதையுடன் நல்ல முகத்துடனும் அழகான வார்த்தைகளை கௌஸல்யாதேவி சொல்ல ஆரம்பித்தாள். (264)

'' அன்புள்ள ராமா, உன்னை உன் தாயார் அன்புடன் கேட்கிருள். எப்பொழுது உன் ராஜ்யபட்டாபிஷேகத்திற்கு மங்களகரமான லக்னம் வைக்கப்பட்டிருக்கிறது? ராமா, என் சுஹ்ருதத்தின் பலனே, உன்னுடைய சீல நடவடிக்கையும், எல்லோருக்கும் பிரிய தர்சனராக விருக்கும் பாக்யத்தையும் கொடுக்கும். ஸ்ரீராமா எந்த ராஜ்யபட்டாபிஷேக சுகத்தினுல் என் ஜன்ம லாபமாகிறதும், என் குழந்தையான உன்னுல் ஏற்படப்போகும் பெருமைகளையும் நான் என்று காணப்போகிறேன்? ரொம்ப ஆசையாகக் காணத்துடித்துக்கொண்டிருக்கிறேன்.'' (265)

'' நான் மாத்திரமில்லை, ராமா, இந்த அயோத்தியில் உள்ள சகல நரநாரிகளும் அதிக ஆவலுடன் அதே சுதினத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிருர்கள். தாகத்தால் பீடிக்கப்படும் சாதக பக்ஷி தம்பதிகள் சரத்ருதுவின் ஸ்வாதி நக்ஷத்திரத்தில் ஏற்படும் மழை வ்ருஷ்டியை ஆவலுடன் எதிர்பார்ப்பதுபோல எதிர்பார்த்துக்கொண்டிருக்கிருர்கள்.'' (266)

'' பையா, நான் உன்னை வேண்டிக்கொள்கிறேன். சீக்கிரம் ஸ்நானம் செய். உன் மனசுக்குப்பிடித்தமானதும் மதுரமான ஆகாரம் சாப்பிடு. பிறகு உன் தந்தையிடம் செல். ரொம்ப நேரம் ஆகிவிட்டது. என்னுல் உனக்கு ஒருவிதமான காலதாமதமும் ஏற்படக்கூடாது.'' (267)

[தியானம்

ஹே சீதா, ராமா, ராமசீதா, லக்ஷ்மண ராமா எனக்கு நீங்கள்தான் கதி. தியாகராஜர், வேதாந்த தேசிகர் போன்ற மஹான்களுக்கு புத்தியைக் கொடுத்த மஹாபுத்திமானே, மஹா ஜ்யோதிர் மூர்த்தியே, நாரதரால் எனக்கு ஸ்ரீதனம் போல கொடுக்கப்பட்ட ஸ்ரீமானே, அஜகர வ்ரதத்தை பரிசுத்தனுக செய்ய விருப்பம் கொண்ட என்னிடம் கருணையுடன் என் மனத்தை உன்னிடம் முடிவு பெற்றிருக்கும்படி செய். ஆத்மரூபம் நீர்தான் என்று ஜனகரும், சுகரும் சொல்லியும், விரும்பத்தக்க சுகம் நிலையற்று இருப்பதைக்கண்டும், என் மனம் தர்மத்திலும் உன்னிடத்திலும் பற்றுதல் இல்லாமல் இருக்கிறது. உன்னைத் தவிர மற்றவை யாவும் நரகத்திற்குக் காரணம் என்று வேத வியாஸர் எனக்கு பலதடவைகள் சொல்லியும், தோஷங்களையும் பேராசையையும் விலக்கிவிட்டு உன்னிடம் விளையாடுவதற்கு எனக்கு எப்போதும் சந்தர்ப்பத்தைக் கொடு. நான் கர்ம பூமி யாகிற பாரத தேசத்தில் எப்போதும் ஜன்மம் எடுத்து, பலத்தை தியாகம் செய்த கர்மங்களால் ஸங்கல்பமாகிய ஆசையை பரமாத் மாவின் ஸ்வரூபமான விஷ்ணு பகவானிடம் அர்ப்பணம் செய் கிறேன். அதனுல் ஏற்படும் பாப புண்யங்களிலிருந்து விடுபட்ட வனுகவும், உன்னுல் இழுக்கப்பட்டவனுகவும் ஆகி, உன்னிடமே ஆஞ்சநேயர் சேர்ந்ததுபோல சேருவேன். தேவதேவா, என் கர்மங்கள் க்ஷயமடைந்து, என் இந்திரியங்களின் தோஷங்களான பயமும், கோபமும், பேராசையும், அவிவேகமும் நாசமடையப் பட்டு, உன் கிருபையால் அஜகரவ்ரதத்தில் இருக்கும் சுகத்தை நான் அடைவேனுக. நாராயணரே, நரஸ்ரேஷ்டரே, உங்கள் சங்கத்தினுல் சரஸ்வதியாகிற புத்தியையும் வேதவியாஸராகிற குருவின் கிருபையையும், உன் பதமாகிற ஜயத்தையும் கொடு. ராமாராகவா, சீதாராகவா லக்ஷ்மணராமா, ராமசீதா.]

கௌஸல்யையாகிற மாதாவின் வசனங்களைக் கேட்டார் பிரபு ராகவன். அவளுடைய வார்த்தைகள் அவர் மனத்திற்கு அனுகூலமாக விருந்தன. கல்பக விருக்ஷத்தின் புஷ்பம் மாதிரி அதிஸ்நேக மனத்துடனிருந்தது. சுகமான மகரந்த ரஸத் துடனும் ,ராஜலக்ஷ்மியாகிற ஸ்ரீமூலத்துடனிருக்கும் புஷ்பத்தை யும் பார்த்தும், ராமனுடைய களங்க மற்றதும் நிச்சயபுத்தி யுடன் கூடின 'மனமானது ஒரு வண்டு ஆசைப்படுவதுபோல் அந்த புஷ்பத்தை இச்சித்து ஆசை மனத்துடன் அந்த புஷ்பத் தின்மீது உட்காரவில்லை. ஆச்சர்யம்! (268)

ராமன் தர்மதுரந்தனுனபடியாலும், தர்மத்தின் கதியாகிய தும், தர்மத்தின் முடிவுமான ஆத்ம ரூபத்தில் நிலைபெற்றவரான படியாலும், அத்யந்த கோமளமான வசனங்களால் தாயாரைப் பார்த்துச் சொன்னான். "மாதா, பிதாவானவர் எனக்கு வனம் ஆகிய ராஜ்யத்தைக் கொடுத்திருக்கிறார். அந்த ராஜ்யத்தில் எனக்குப் பிடித்தமான காரியங்களைச் செய்வேன்." (269)

"அம்மா, நீ மனமுவந்து, உன்னுடைய சிறந்த ஆசீர்வாதங் களைக் கொடு. கருடன் வினதையிடம் கேட்ட மாதிரியும், அதிதி யிடம் இந்திரன் மங்கள ஆசீர்வாதங்கள் பெற்றதுமாதிரி, என்னு டைய வனயாத்திரை சுபமாக முடிவு பெறுவதற்கு மங்கள வசனங்களைச் செய். என் மீதுள்ள ஸ்நேக பாசத்தினால் பயந்து போகாமல் ஆனந்த உள்ளத்துடன் மஹாகிருபையுடனும் என்னை அனுக்ரஹி." (270)

"பதினான்கு வருஷங்கள் நான் வனத்தில் சஞ்சரித்து விட்டு பிதிரு வசனத்தை ஸத்யப் பிரமாணமாக ஊர்ஜிதம் செய்து விட்டு, வனத்திலிருந்து அயோத்தி திரும்பி வந்தவனாகவும் உன் பாதங்களில் சரணம் செய்பவனுமாக என்னைக் காண்பாய். இந்தப் பிரிவிற்காக உன் மனத்தை அலட்டிக்கொள்ளாமல் சந்தோஷத்துடன் விடைகொடு." (271)

ரகுகுல வீரனாகிற ராமனுடைய வினயமான வசனங்களைக் கேட்டாள் கௌஸல்யாதேவி. அம்பு தெய்த்தது மாதிரி அவரு டைய வசனங்கள் அவளுடைய ஹ்ருதயத்தை துளைத்தன. அந்த ரொம்ப குளிர்ந்த வார்த்தைகளைக் கேட்டு அவளுடைய தொண்டை வரட்சியினால் கஷ்டப்பட்டது. வார்த்தைகள் வெளி வர மறுத்தன. மழைக்காலத்தில் "ஜபாஸ்" என்கிற சப்பாத்தி போல முள் செடிகள் இலைகளை உதிர்த்து வாடுவதுபோல, அவளுடைய தொண்டை வரட்சி அடைந்தது. (272)

அவளுடைய ஹ்ருதயத்தில் ஏற்பட்ட துக்கத்தை விவரிக்க முடியாது. சிம்மத்தின் கர்ஜனையைக் கேட்டு பெண்மான் துடிப் பதுபோல அவளுடைய மனம் சங்கடப்பட்டது. நயனங்களி லிருந்து கண்ணீர் தாரைகள் வழிந்தவண்ணம், அவள் சரீரம் துக்கத்தால் நனைக்கப்பட்டு நடுங்கிக்கொண்டிருந்தது. மழை காலத்தில் முதல் வர்ஷங்களோடு வரும் நுரையைச் சாப்பிட்டு விட்டு மீன் குஞ்சுகள் நோய் பெறுவதுபோல, அவள் ரொம்ப கஷ்டப்பட்டாள். (273)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, என் புத்தியின் முடிவாகிற அறிவே, ஆசை என்கிற நோயினால் வற்றப்பட்ட புத்தியை எனக்கு கொடுக்காதே. தொடுவதாலும், பார்ப்பதாலும், கேட்பதாலும் அல்லவோ ஆசை உண்டாகிறது. மனிதன் ஸ்ரேயஸை அடைய விரும்பினால் உண்ணாமலிருப்பதும், பார்க்காமல் இருப்பதும், தொடாமல் இருப்பதும் ஆகிய நியமமானது கொள்ளப்படத்தக்க தாகும். மானிடப் பிறப்பும் பிராம்மண சரீரமும், ஸம்பூர்ண அவயவங்களோடும் கூடிய இந்த சரீரத்தில் அஜாக்ரதையில்லாத வனாகவும், வேத மோதுதலையும், அக்னிகளைப் பூஜிக்கிறவனாக வும், ஸத்யத்தையும் இந்திரியங்களின் அடக்கத்தையும், தானத் தையும் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். நல்ல புத்தியால் உன்னை அறிய வேண்டிய பொருள் என்று அறிந்து, குதர்க்க புத்தியை விலக்கி, ஆஸ்திகனாகவும், யாவற்றிலும் நம்பிக்கை உள்ளவனாக வும் வேதங்களை ஸ்லாகிக்கிறவனாகவும், சீதாராமா, உங்களிடத்தில் மனத்தை அர்ப்பணம் செய்தவனாகவும் உன் தயையால் விளங்க வேண்டும். குஹரே, கபிலையின் பெருமையைச் சொன்ன கார்த்திகேயரே, என் இச்சைச் செல்வமே, என் ஸ்வதந்தர பிரபோ, உனக்கு நான் வேதவியாஸர் முதலிய ஞானிகளால் உபதேசிக்கப்பட்ட என் பராதீனத்தை உனக்கு சமர்ப்பித்து, நீயும் எனக்காக இருக்கிறாய் என்று உன்னால் ஈரவஸ்திரத்துட னும், வனமலையாகிற நவதுளசி மாலையுடனும் கூடிய உன்னை பராசரபட்டர், अहं मे त्वं मे என்கிற ஸம்வாதங்களால் அறிந் தாரோ, அந்தமாதிரி உன்னால் காப்பாற்றப்பட்டு, இந்திரன் காஸ்யபருக்கு உபதேசித்தபடி நான் உன் அடிமையாக ஜீவிக்க வேண்டும். சீதாபதே, தயாநிதே, ஆஞ்சநேயரால் சேவிக்கப் பட்ட ஸ்ரீராமா, நாரதரால் வால்மீகிக்கு உபதேசிக்கப்பட்ட ராமா, என்னை நீதான் ஆட்கொள்ளவேண்டும்.]

கௌஸல்யை தைர்யத்தை வரவழைத்துக்கொண்டு தன் புத்ரனின் முகத்தைப் பார்த்து, மஹா பாக்யமுள்ள தாயார் அடங்கிய குரலுடன் தழுதழுத்த வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தாள். "பையனே, உன் பிதாவுக்கு நீ பிராணப் பிரியனான புத்ரனாக இருந்தாயே, அந்த அரசர் உன் மஹத்தான செய்கைகளைக் கண்டு, கேட்டு பிரசன்னமடைந்து, உன்னைத் தொடுவதால் ஆனந்தித்து, உன்னை சதா புகழ்ந்த வண்ணமாக விருந்தாரே." (274)

"அந்த அரசர் உனக்கு ராஜ்யத்தைக் கொடுப்பதற்கு சுதினம் சுநக்ஷத்திரம் சுபமான முகூர்த்தம் எல்லாம் பார்த்து ஏற்பாடுகளைச் செய்தாரே? நீ அவருக்கு என்ன அபராதம் வனம் செல்லும்படி செய்துவிட்டிருக்கிறாய்? என் குழந்தையே, அதன் காரணத்தை எனக்குச் சொல். சூர்ய குல வனத்திற்கு யாரால் நெருப்பு வைக்கப்பட்டது?" (275)

ராமன் அவள் சோகத்தை அடக்கி, சாந்தப்படுத்தினார். அவருடைய உள்ளத்தைப் புரிந்து கொண்டவனும் அவருடனிருந்த மந்திரிபுத்ரன் (சுமிந்தரரின் புதல்வன்) கௌஸல்யா தேவிக்கு சகல விருத்தாந்தங்களைச் சொன்னான். அந்த வார்த்தை பிரசங்கங்களைக் கேட்ட தாயார் ஒன்றும் பேச முடியாதவளாகி, மௌனத்துடன் அதிசோக நிலையை அடைந்தாள். அவளுடைய வருத்தம் சொல்ல முடியாத எல்லையை அடைந்திருந்தது. (276)

அவளால் ராமனை வனத்திற்கு "போ" என்றோ, அல்லது வனயாத்திரையிலிருந்து நிவர்த்தி செய்வதற்கோ ஆகிய இவைகளில் ஒன்றையும் அவளால் சொல்லவோ செய்யவோ முடியவில்லை. இரண்டு வழியிலும் அவள் மிக்கக் கஷ்டப்பட்டாள். தன் மனத்திற்குள் ஆலோசிக்க ஆரம்பித்து விட்டாள். "கடவுளின் சங்கல்பம், விதியின் போக்கு இவ்விதம் எல்லோருக்கும் கோணலாக விளங்குகிறதே. சந்திரனை நான் படம் எழுதப் போக ராஹுவை அல்லவா அவர் எழுதிக்காண்பிக்கிறார்." [பிள்ளையாரை எழுதப்போக, குரங்கை எழுதினேனே.] (277)

தர்மம் ஒரு பக்கம். ஸ்நேகம் மற்றொரு பக்கம். ஆகிய இரு பக்கங்களிலும் அவளுடைய மதியானது அலைந்து விசாரித்துக்கொண்டிருந்தது. அவளுக்கு எவ்விதம் ஒரு சர்ப்பம் "சுகம் தரி" (Musk rat) என்கிற ஒரு விதமான வாசனையுள்ள எலியைச் சாப்பிட விழுங்கும் சமயம் பயத்தினால் சங்கடப்படுமோ, அது மாதிரி ஒன்றும் சொல்ல முடியாமல், செய்ய முடியாமல் தவித்தாள். (இந்த எலியைச் சாப்பிட்டால் பாம்பு செத்துவிடும்; வாயிலிருந்து உமிழப்பட்டால் அது குருடாகிவிடும்) இந்த மாதிரி அவஸ்தையில் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த கௌஸல்யா தேவி, மிக்க அனுரோதத்துடன் ராமனை வனம் செல்லுவதிலிருந்து நிறுத்தினால் தர்மமும் குலைந்து பந்து ஜனங்களோடு விரோதமும் செய்துகொள்ள நேரிடுமே என்று கலங்கினாள். (278)

புத்ரனை வனம் செல்ல அனுமதித்ததால் தனக்கும் ராமனுக்கும் பெரிய ஹானி ஏற்படுமே. இல்விதமாக தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்ட ராணி எவ்விதம் ஸ்ரேயஸ் எல்லோருக்கும் விளைவிக்கக் கூடும் என்று தன் புத்தியினால் விசாரிக்க ஆரம்பித்தாள். தீர்க்க ஆலோசனைக்குப்பின் நிச்சய மான பதிவிரதா தர்மத்தை ஆஸ்ரயித்த கௌஸல்யாதேவி, தெய்வத்தின் மேல் அதிக நம்பிக்கை அடைந்தவளாக, ராமனும் பரதனும் தனக்குப் பகவானால் கொடுக்கப்பட்ட அதிஸ்நேகமுள்ள புத்ரர்கள் அல்லவா என்று அறியவேண்டிய தத்வத்தை அறிந்தாள். மனமும் புத்தியும் சேர்ந்தது மாதிரி அவள் அவர் களை நினைத்துப்பார்த்தாள். (279)

அதனால் சரள ஸ்வபாவம் அடைந்து, அறியவேண்டிய பொருளாகிற ஆத்மாவை புத்தி மனோ தத்வங்களால் தனது ஸ்வாமியாக நினைத்து, ஸ்ரீராமச்சந்திரனை நோக்கித் தைர்யத் துடன் சொல்ல ஆரம்பித்தாள். "பையா, நீ தர்மத்தை நன்றாக அறிந்திருக்கிறாய். உன்னால் இந்த தீர்மானம் சரியாகச் செய்யப் பட்டிருக்கிறது. பிதாவின் வசனங்களை குதர்க்க புத்தியினால் ஆராயாமல் கேட்டு அதன்படி செய்வதுதான் தர்மத்தின் அழகான திலகம் அல்லவா? நாஸ்திக வாதத்தையும் குதர்க்க புத்தியையும் விட்டு, தர்மத்தை பரம் பொருளின் முடிவாக நினைத்து, அதனை அனுஷ்டானம் செய்வது தர்மங்களில் அனுத்தமானது அல்லவா?" (280)

[தியானம்

ஹே ராமா சீதா, பகல் முதலிய பிரிவுகளுக்கு சக்ரத்தை உருட்டும் நாராயணா, என்னைப் பிரகாசிக்கச் செய்த குருவே, உம்மை அடுத்து உபாஸிப்பவர்களை இழிவான கதிக்குப் போகாமல் காக்கும் ஞானம் ஸ்வரூபமாக விருக்கும் பகல் போன்றவரே, என் கர்ம வாசனைகளால் ஏற்படும் அவித்யை, பாபம் ஆகிற இருட்டை நாசம் செய்யும் சூர்யனே, என்னை மத்ஸரமாகிற நித்திரையிலிருந்து எழுப்பும் காய்த்ரிதேவதையே, என்னைக் காப்பாற்றும் கர்ம ஸ்வரூபியே, கர்ம ஸ்வரூபமான வினையானது என்னைத் தொடர்ந்து எவ்விதம் மீறாமல் இருக்கிறதோ, எவ்விதம் கன்றானது ஆயிரம் பசுக்களின் நடுவே தன் தாயை அடைவதுபோல அதுமாதிரி, மஹானுபாவா, நாரதரால் அர்ச்சிக்கப்பட்ட நாராயணா, காய்த்திரி தேவியின் ஸ்வரூபமாக விருக்கும் ஜப அக்னி ஆகிற ஹவிஸ், அதுபோல

உன்னை நான் பக்தி வசமாக அடையவேண்டும். எவ்விதம் காலம் ஒரு விதமாக கட்டுப்படாமல் காலாகாலத்தில் பூக்களையும் பழங்களையும் உண்டாக்குகிறதோ, அதுபோல உன்னை நான் மீற முடியாதபடி வந்து அடைகிறேன். அழுக்கடைந்த இந்த ஆடையாகிற மனத்துடன் கூடிய சரீரத்தை நஹுஷனும் யயாதியும் தாங்கள் செய்த பாபங்களை புண்ய கர்மங்களால் விலக்கினார்களோ, அதுபோல பரமாத்மா உன் நினைவாகிற பூஜையைச் செய்து, மஹான்களுடைய ஆசீர்வாதத்தால் என் பாபங்களையும் மலங்களையும் போக்கி, உன்னை எப்போதும் அடைந்திருக்கவேண்டும். பிரக்ருதிக்குமேல் பட்டவரும், பொறிகளுக்கு விளங்காதவருமான பிரபுவாகிய ரங்கநாதா, நாராயணா, பரபிரும்மமே, அனந்தரே, உமது அன்பையும் சாமர்த்தியத்தையும் யாரால் சொல்லமுடியும்? உம்மை மானஸர், மானஸ புருஷர் என்றும், தாமரை புஷ்பமாகிய பூமியையும் பிரும்ம தேவரையும் உண்டு பண்ணின மூல புருஷரே, பிருகு முனிவரால் பரத்வாஜரிஷிக்கு உபதேசிக்கப்பட்ட அனந்தரே, என்னை நீங்கள்தான் கட்டிக்காக்கவேண்டும்.]

"பையா, அரசர் உனக்கு ராஜ்யம் தருவதாக வாக்களித்து, வனத்தைக் கொடுத்ததில் நான் மோஹப்பட்டு வருத்தத்தை லவலேசமும் அடையவில்லை. உன்னை விட்டு பிரிவதினால் என்னைவிட பரதனும் பூபதியாகிற உன் தகப்பனாரும் உன்னை பிராணனாகவும் துக்கங்களைப் போக்கும் சூர்யனாகவும் நினைத்துக் கொண்டிருக்கும் அயோத்யா வாசிகளின் பிரசண்டமான வருத்தத்தை யார் போக்குவார்கள்? பிதாவின் ஆக்ஞைமாத்திரம் உனக்கு இல்லை. பிதாவைவிட தாயாருடைய வசனங்களும் மிக முக்கியமானவை. மாதா பிதாவின் சேர்ந்த ஆக்ஞையாகிற நீ வனம் செல்வது மிக ஸ்லாக்கியமானதுதான். அப்பேற்பட்ட ஆக்ஞைக்கு உட்பட்டு நீ வனம் செல்வாயாகில், அது ஆயிரம் அயோத்திகளுக்குச் சமமானது. (281)

"நீ போகப் போகும் வனத்தில் வனதேவதைகள் உன் பிதாவாகவும் வன தேவிகள் உன் மாதாவாகவுமிருந்து உனக்கு அருள் புரிந்து உன்னைக் காப்பாற்றட்டும். அந்த வன ராஜ்யத்தில் பக்ஷி மிருகங்கள் உன் சரண கமலங்களை அனுசரித்து வாழட்டும். அஹிம்சையுடன் கூடின தபோ வாழ்க்கை அரசர்களுக்கு ராஜ்யத்தைத் தியாகம் செய்த பின் வாழக்கூடிய உசிதமான வாழ்க்கைதான். ஆனால் அந்த தபோ வாழ்க்கை வயது காலத்தில் ஏற்பட்டிருந்தால் பரவாயில்லை.

இப்போது அதுவாக நேர்ந்திருக்கிறது. உன் வயதையும் சுகுமாரனுன அங்கங்கள் கொண்ட உன் மிருதுவான சரீரத்தையும் கண்டு நான் துக்கப்படுகிறேன்.'' (282)

''ரகு வம்சத்திலே திலகமாக விருக்கும் ராமா, நீ பெரிய தியாக புருஷன். உன்னே அடையப் போகும் வனம் மஹா பாக்யமானது. உன்னே உதறித்தள்ளி வனம் செல்லுவிக்கும் இந்த அயோத்தி அபாக்யமுள்ளது. உன் ஸ்நேகத்தை விட்டுப் பிரிய மனமில்லாதவளான என்னேயும் நீ அழைத்துக்கொண்டு போ,'' என்று நான் உன்னே நிர்ப்பந்தம் செய்து சொல்வேனுயாகில், உன் ஹ்ருதயத்திற்கு நான் தடங்கல் செய்கிறேன், என்கிற சந்தேகம் உண்டாகும்.'' (283)

''புத்ரா உனக்கு எல்லோரும் வேண்டியவர்கள். அதுமாதிரி அவர்களுக்கும் நீயும் பரம பிரியன். அவர்களுடைய பிராணனுக்கு நீயே பிராணன். அவர்களின் ஜீவயாத்திரைக்கு நீதான் ஆதாரமான ஹ்ருதயம். அப்பேற்பட்ட ஸர்வாதாரமான பிராணனுகிய நீ என்னிடம் வந்து ''அம்மா, நான் வனம் செல்லுகிறேன். உத்தரவு தா'' என்று சொல்லும்போது, நான் அதைக்கேட்டு வருத்தப்படாமல் எவ்விதம் இருக்க முடியும்?'' (284)

''இதை யோசனே செய்து பொய்யான ஸ்நேகத்தை பெரிது படுத்தும் குணமுள்ளவள் போல நடித்து, நான் உன்னேப் போகாமல் தடுத்து எவ்வளவு நேரம் காப்பாற்றக்கூடும்? ஆகவே, நான் உன்னே ஒன்றும் சொல்ல முடியாதபடி தவிக்கிறேன். உன்னேக் கெஞ்சிக்கேட்டுக் கொள்கிறேன். என்னே மாத்திரம் நீ மறந்து விடாதே. நான் உனக்குத் தாயார் என்றும், என் வார்த்தைகளும் உனக்கு அவசியம் என்றும் உனக்குத் தோன்றட்டும்.'' (285)

''ஹே கோஸாயி, என் பவித்திரமான புத்ரனே, உனக்கு தேவர்கள், பித்ருக்கள் யாவரும் அனுசரணேயாக உன்னே சங்கடங்களிலிருந்து காப்பாற்றட்டும். எவ்விதம் இமைகள் நயனங்களேக் காப்பதுபோல உனக்கு அவர்களுடைய ரக்ஷை சதா கிடைக்கட்டும். உன்னுடைய வனவாசமாகிற அவஸ்தை ஜலமாகவும், உன் பந்து பிரியர்களும் அயோத்தியில் வசிக்கும் பரிஜனங்களும் மீன்களுக்குத் தண்ணீர்போல உன்னேவிட்டுப் பிரியாதவர்களாக விருக்கிறோம். நீ கருணுகரன். தர்மமாகிய

  

ஹிதத்தை யாருக்கும் செய்பவன். எங்களை மறந்து தயை காட்டாமல் மாத்திரம் இருந்துவிடாதே.'' (286)

[தியானம்

ஹே சீதா ராமா, ஜகஜ் ஜனனி ஸ்கந்தரான குழந்தையைக் கைகளில் வைத்து ஆனந்தப்படும் என் ஹ்ருதய தேவதையே, பரம பதம் மோக்ஷம் இவைகளுக்கு அதிகாரியான வஹ்னியே, உன் நாம அக்ஷரத்தில் ஹோமம் செய்யப்படும் என் ஆத்மாவை நீ ஏற்றுக் கொள். உன் கிருபையினுல் பீஷ்மருக்கு சிறந்த குருக்களான நாரதர், வேதவியாஸர், அர்ஜுனன், தர்மர், வாசுதேவர் உண்மையாகிற சத்யவ்ரதத்தினுல் அந்த பிரதிக்ஞையைக் காப்பாற்றுவதில் ஊக்கம் உள்ளவராக இருந்து, ராஜ்யத்தைக் கூட வேண்டாத சிறந்த ஆசாரம் என்கிற தர்ம புத்திரருடைய அபாரமான சீல நடத்தைகளை தன் சிறந்த குருவாகவும், பகவான் சங்கரரை பரிசுத்தமான மனத்தோடு பூஜை செய்து, நாராயணு, உன் அஷ்டாக்ஷரத்தின் மகிமையால் உன்னை அடைந்தார். நாராயணரே, நீர்தான் மானஸர் என்கிற புருஷராகச் சொல்லப் படுகிறீர். உம்மிடமிருந்து மஹத் என்கிற சிவன் உற்பத்தி ஆனுர். அஹங்காரம் என்கிற பிரும்ம தேவர் உண்டாக்கப்பட்டார். பிறகு ஆகாயம், ஜலம், அக்னி, வாயு, பூமி உண்டாயிற்று. பூமியிலிருந்து அஹங்காரம் என்கிற தாமரை மலர் உண்டாயிற்று. அந்த தாமரையிலிருந்து வேத உருவமுள்ளவரும், அறிவு, ஐஸ்வரியம் ஆகிய நிதி போன்றவரான பிரும்மதேவர் தோன்றினுர். ஐந்து பூதங்களும், அஹம்கார ரூபியும், எல்லா உலகங்களையும் தரிக்கிறவரான பிரும்மதேவரைப் படைத்த விராட் புருஷர் அனந்தர் என்று சொல்லப்படுகிருர். மனத்தை ஜயித்தவர்களால் ஸ்ரீவிஷ்ணு பகவானுக அறியப்படுகிருர். கோவிந்தர், வத்ஸர், வத்ஸலர் என்று சொல்லப்படுகிருர். அபார அழகு, கருணை, சக்தி, தேஜஸ், ஞானம், வைராக்கியம்என்கிற ஸ்வதந்தரத்தன்மை என்கிற குணங்களால் பிரதிபாதிக்கப் படுகிருர். அப்பேற்பட்ட மானஸ புருஷரை, ப்ருகுபரத்வாஜர் கண்ட மூலபுருஷரை, நாராயணரை, விஷ்ணு பகவானை நான் சிறந்த அறிவினுல் அன்புடனும் கிருதக்ஞையுடனும் விழுந்து நமஸ்கரிக்கிறேன். ரங்கநாதரே, நீளாதேவி, பூதேவி ஸ்ரீ தேவி சகித மஹாபாகரே, என்னை க்ருபையுடன் ஆதரியும். கௌஸல்யை பூஜித்த நாராயணு, தயையுடன் என்னை ரக்ஷியும்.]

"இவ்விதமாக உன் புத்தியினுல் தீர விசாரித்து எங்கள் மேல் அபாரக்ருபையை சாதித்து, நாங்கள் மரிக்கும் முன்பே எங்களை ஆட்கொள்ள நீ வர வேண்டும். வனத்திற்கு மன நிம்மதியோடும் சுகத்தோடும் போய் விட்டுவா. என் அனுமதி உனக்கு கிடைத்து விட்டது. நாங்கள் தான் உன் சேர்க்கையைத் துறந்த அனுதரர்கள். உன்னையே நம்பி வாழ்ந்து விடும் பரிஜனங்களும் அயோத்யா வாசிகளும் உன்னை இழந்ததினுல் அபாக்யர்கள்." (287)

"இன்றோடு எங்களுடைய சுகிருதங்களின் நற்பயன்ன்கள் முடிவடைந்தன. கடுமையானதும், இருள் சூழ்ந்துள்ள காலம் எங்களை நோக்கி ஓடி வருகிறது. நாங்கள் மீண்டும் தபஸ் செய்து, உன்னை மீண்டும் தியான யோகத்தால் அடைய வேண்டும். என்ன தபஸ் செய்தாலும் உன் கிருபைதான் வேண்டும். உன்னை அடைவதற்கு நாங்கள் பல விதங்களால் மீண்டும் கஷ்டப்படுவோம்," என்று மஹா அறிவுள்ள கௌஸல்யாதேவி அழுது புலம்பினுள். ராமனுடைய பரிபூர்ண கிருபையை அடைவதற்கு அவள் ராமனுடைய சரண கமலங்களை (ஆஞ்சநேயர் வருடிக் கொண்டிருப்பது போல வருடி,) கண்களில் ஒத்திக் கொண்டு, அந்த பாத ரேணுக்களை தன் நெற்றியில் தரித்துக் கொண்டு அபாக்யவதிபோல அழுது கொண்டிருந்தாள். (288)

அவளுடைய ஹ்ருதயத்தில் பயங்கரமான துக்க ஸந்தாபங்கள் படர்ந்து அவளைக் கஷ்டப் படுத்தின. அவளுடைய விலலாபங்களை யாரால் வர்ணிக்க முடியும்? தீவிர மனமுள்ள ராமன் தன் தாயை எழுப்பி, தன்னுடைய ஹ்ருதயத்தில் அவளைத் தழுவி மிருதுவான வசனங்களால் ஆஸ்வாசப்படுத்தினுர். (289)

இந்த சமயம் சீதை விஷயங்களைக் கேட்டு, மிக்க கலவரம் அடைந்து, கௌஸல்யாதேவியிடம் ஓடி வந்தாள். அவள் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்து, அதன் பிறகு ராமனுடைய கிருபையை வேண்டுபவளாக அவருடைய சரண கமலங்களை இறுகக் கட்டிக்கொண்டு உட்கார்ந்து விட்டாள். (290)

கௌஸல்யாதேவி அசாதாரணமான விசேஷ வகைகளால் சீதையை ஆசீர் வதித்தாள். சுபமான மங்கள ஆசீர்வாதங்களை மிருதுவான குரலில் நல்ல ஹ்ருதயத்துடன் செய்து ஆசீர்வதித்தாள். அதிசுகுமாரியாகிய சீதை அத்யந்த துக்கத்தை அடைந்ததை கண்டார்கள் கௌஸல்யாதேவியும் ஸ்ரீராமனும். அது மாத்திரமா, அழகு குவியல்களோடு சேர்ந்த ரத்ன பூஷணங்களாகிற பதிப்ரேமரத்ன மணியையும் அவர்கள் புனிதமான

சீதையிடம் கண்டார்கள். சீதை குனிந்த தலையுடன் தனக்குள் நினைத்துக்கொண்டு மனத்திற்குள் சிந்திக்க ஆரம்பித்தாள். (291)

[தியானம்

ஹே சீதாபதே ராமா, க்ஷீரசாகரஸயனு, ப்ருகுபாதத்தை க்ருதலக்ஷணராகக் கொண்ட உதார ஹ்ருதயமுடைய மஹாத்மா, ஹரிவக்ஷஸ்தலத்தில் நித்ய வாசம் செய்கிற மஹாலக்ஷ்மியை வாமனுவதாரமாகிய பிரும்மசர்ய ஆஸ்ரமத்தில் கூட விட்டுப் பிரியாத தர்மாத்மாவே, தத் என்று சொல்லப்படும் பகவானுடைய ஸ்நேகத்தை என்றும் பிரியாதபடி கொடுக்கும் மஹாகாருண்யம் படைத்த ஸ்ரீ தேவி, வஷட்காரத்தில் ஸந்ததம் பிரியமானவளே, காயத்ரி தேவதையே, கிருஷ்ணு, கஜேந்திரன் என்கிற வாரணத்தை தேற்றி களைப்பாற்றின கருடாரூடா, சக்ராயுதா, நாரீ மணியாகிற திரௌபதியின் மானத்தைக் காப்பாற்றின த்வாரகா புரிவாசா, தீரனுய் கஷ்டங்களை சகித்து பன்னிரண்டு வருஷ காலம் சிறையில் தவித்த பக்த ராமதாஸரைக் காத்த சீதா பிராட்டியே, உனக்காக மெருகு கொடுத்த தங்கம் போல நிறமுடைய ராமன், தாமரைப் பூவிற்கு ஒப்பான வாசனையுள்ள உன் முகத்தின் கந்தத்தைப் பருகி சாப்பிட்டும் திருப்தி அடையாமல் மீண்டும் சாப்பிடுவதற்கு விரும்பிய கோதண்டபாணி, லக்ஷ்மணனுடன் கூடிய ஸ்ரீ ராமன், ஆஞ்சநேயர், வானராதிகள் மூலம் சேதுவைக் கட்டி மஹத் என்கிற அஹங்காரத்தை வெளியிட்ட உத்தண்ட ராமா, என் தாரக நாமமே, மஹாபக்தரானவரும், என் ஹ்ருதயத்தில் சதா வாஸம் செய்பவருமான தியாகராஜரால் பிரமாணமாகச் சொல்லப்படும் தயாஸாகரா, உன்னை நான் விலக்ஷணமான பக்தி மார்க்கத்தில் சிறந்த அறிவுடன் அடைய வேண்டும். மஹான்களின் கிருபையினுல், ஸ்வாமி, ''உன்னை விட்டுப் பிரிவேன்,'' என்கிற வார்த்தையால் கூட நான் சொல்லப் படக்கூடாது. தர்மம் என்கிறதற்காக ஹே ராமா, நீ சீதையை ராஜ்யத்திலிருந்து வனத்திற்குக் கூட்டி வந்து அவளையும் விட்டுப் பிரிந்து நீயும் அவளும் தனித்தனியே மனக்கலக்கமும், சோகமும், பயமும் இல்லாமல், ஹ்ருதயத்தில் தைரியத்துடன் ஆத்ம ஈஸ்வரர்களாக இருந்தீர்களே, ஹே ஸ்வாமி, தயாபரி, உங்களிடம் சுஹ்ருதயமுள்ள என்னையும் ஒருக்காலம் விட்டுப் பிரியேன் என்கிற வாக்கு மொழி பிரமாணத்தால் ரக்ஷிக்க வேண்டும். சத்ய விரதமுள்ள வனம் செல்லும் ராமா, என்னை ''மயாவினு ஸூஷ்யதி ஸோக தீனம் ஜலக்ஷ்யே

பத்மமிவாதபேனு'' தாமரை புஷ்பம் ஜலமில்லாமல் வாடுவது போல, என்னையும் நினைத்து உன் ஸ்நேக ஸம்பத்தைக் கொடுத்து, ஆட்கொள்ள வேண்டும், பராசரருக்கும் சதகிருது வுக்கும், தேவர்களுக்கும், ஹரி வக்ஷஸ்தலத்திலிருந்து லக்ஷ்மி எவ் விதம் கடாக்ஷித்தாளோ, எவ்விதம் நந்தினி வத்ஸி இவர்களோடு கூடின சுரபி லக்ஷ்மிக்கு ஆஸ்ரயிம் தந்தாளோ, அந்த கோவிந் தன், அம்மா, முகுடமணியையும் எனக்கு சத்குருவாக நின்று கடாக்ஷிக்க வேண்டும். கரும்பு வில்லைத் தரித்துக் கொண்டிருக்கிற ஜகன் மோஹினி, காமேஸ்வரி எவ்விதம் சம்புவை குளிர்ந்த பார்வையினால் அங்கிகரித்தாளோ, அதுபோல ராமா, சீதாராமா, என்னை அங்கீகரிக்கவேண்டும்.]

"ஜீவநாதரே, ஐயா, தயா நிதே, என் ப்ராணப்ரியா நானும் உம்மை விட்டு பிரிய மனமில்லாதவளாக, என் சுக்ருதங் களின் பேரில் உம்மோடு வனம் செல்ல விரும்புகிறேன். உம் மனதில் நீர் எவ்விதம் சங்கல்பித்திருக்கிறீரோ, தெரியவில்லை. என் புண்ய பாவங்கள் உம்முடைய மனத்திற்கு எவ்விதம் தோன்றுகிறதோ தெரியவில்லை. பிராணனை விட்டு சரீரம் தனித்து இருக்க முடியுமா? தர்மத்தை விரதமாகக் கொண்டு எல்லோருக்கும் கௌஸல்யையின் க்ஷேமம், சுமித்திரையின் க்ஷேமம், பரதனுடைய க்ஷேமம் ஆகியவைகளை சதா நினைத்துக் கொண்டு தான் தாபத்தை அடையாத உம்முடைய மனமானது என் விஷயத்திலும் க்ஷேமத்தை நினைக்கிறதா? விதியாகிற உம் சங்கல்பத்தை நான் எவ்வளவு நெருங்கிய போதிலும் அறிய முடிகிறதில்லையே.'' (292)

"என் அக்ஞான இருட்டை போக்கக்கூடியது உம்முடைய அழகான சரணங்களின் நகங்களிலிருந்து வெளிவரும் ஜோதிஸ்,'' அந்த ஜோதிஸ்ஸை ஞாபகப்படுத்திக் கொண்டு, சீதாதேவி தன் சுந்தரமான சரணங்களின் நகங்களால் தாயா ராகிய பூமியைத் தூண்டி விடுபவளாக பூமியைக் கிள்ளிக் கொண்டிருந்தாள். அந்த தரணியின் மேல் அழகாகவும் மதுர மாகவும் துளசி தாஸர் போன்ற மஹாத்மாக்களாகிற கவிஸ்ரேஷ் டர்கள் கீர்த்தனம் செய்யும்படி, சீதையின் நூபுரகிங்கிணி சப்தங் கள் ஒலித்துக் கொண்டிருந்தன. அவளுடைய மனம் ப்ரேமை வசம் அடைந்து, மிக்க வினயத்துடன் கெஞ்சுபவளாக, எவ்விதம் நூபுரங்கள் சீதையின் பாதங்களை விட்டுப் பிரியாதோ, அது போல கவிஸ்ரேஷ்டர்கள் அந்த உன்னதமான ஸ்நேகப்ரேமையை

ஆனந்தித்து ஆராதிப்பார்களோ, அதுபோல சீதை ராமனுக்குத் தோன்றினுள். (293)

அவளுடைய தாமரைக் கண்களில் சகல துக்கங்களையும் நாசம் செய்யக் கூடிய அடர்த்தியான கருமேகத்தின் அம்ருத தாரைகள் நிரம்பியிருந்தன. ராமன் அவளுடைய கருணையையே வேண்டுபவராகவும், சீதை அவருடைய ஸ்நேகப்ரேமையைப் வேண்டுபவளாகவும் ஆக இருவரும் ஒன்றும் பேசாமலிருப்ப தைக் கண்ட மஹா பாக்யமுள்ள கௌஸல்யாதேவி சொன்னுள். "பையா, கேளு. இந்த பெண் சீதா அதிசுகுமாரி, மாமியார், மாமனுர், பந்து ஜனங்கள், யாவருக்கும் பிரியமானவள்." (294)

"இவள் பிதா ஜனகர் மஹாராஜர்களில் சிரோண்மணியாக விருப்பவர். மாமனுர் பானுகுலத்தில் உண்டானவர். ரகு குல ஸ்ரேஷ்டரான நீ இவளுக்குப் பதி. இவளை நீ அடைந்து உன் கௌரவம், குலத்தின் கௌரவம் (இவளுடையது, உன்னுடையது ஆகிய இரு வகையிலும்) ஆகியவைகளை எவ்விதம் சந்திரனைக் கண்ட குமுத புஷ்பம் தனக்கு இயற்கையான பிரேமை குணங் களையும் நித்யமான ஸ்நேக ரூபத்தையும் வெளிப்படுத்துமோ, அதுபோல நீ அவளிடம் விளங்குகிருய்" (295)

"அழகு ரூபத்தின் குவியலாக விளங்கும் இந்தப் பெண், சீதா, என்னிடம் மிக்கப் பிரியமுள்ளவளாகவும், தன் ரூப குணங்களாலும், அழகான சீல நடத்தைகளாலும், சகலருக்கும் எனக்கும் சுதத்தை வாரிக்கொடுக்கிருள். இந்த சீதையை நான் என் கண்களின் கருமணியாகக் கருதி, இவளிடம் என் அன்பைப் பெருக்கி, இன்று என் பிராணனை அவளிடம் அர்ப்பித்திருக் கிறேன்." (296)

"இந்த கற்பகவல்லியை பலவித முயற்சிகளால் பலகாலம் ஸ்நேகமாகிற பால் சமுத்திரத்திலிருக்கும் நுரைபோன்ற சுத்தமான ஜலத்தால் போஷித்து வளர்த்து வந்திருக்கிறேன். இந்த கொடி காய்த்து, பூத்து, பழம் கொடுக்கிற சமயம் இந்த இரும்பு மனம் உள்ள விதாதா இவளை என்னிடமிருந்து பிரிக் கிருர். அந்தோ, இதனுல் என்ன விபரீதம் ஏற்படுமோ, அதன் பரிணுமமாகிற அளவு எவ்விதம் இருக்குமோ தெரியவில்லையே" (297)

[தியானம்

ஹேராமா ஜானகிராமா, அனந்த ஸ்ரீ, காலசக்தி, கால புருஷரே, தயாசாகரரே, உன் பக்தர்களிடத்தில் நீண்ட காலம்

வசிப்பவரே, உக்ரம் தணிந்து தர்மத்தில் பற்றுதல் உள்ள ஞானியிடம் சதா அனுக்ரஹ புத்தியுடன் இருக்கும் அமித தேஜஸரே, உம்முடைய மஹத்வத்தையும், உம் உருவமான பிரும்மதேவர் போல ஸ்ருஷ்டிகர்த்தாவின் செயல்களையும் பிரமாணமாக்க வந்த மானிட ராமா, மனித வேஷம் அணிந்த சீதாபிராட்டி, உங்கள் திருவிளையாடல்களையும் அதன் எல்லைகளையும் யாரால் அறிய முடியும்? அவைகள் எவ்வளவு பெரியதாக இருக்கின்றனவோ, அதுபோல ஸூக்ஷ்மமாகவும் நீங்கள் அறியப்படுபவராகவும் இருக்கிறீர்கள். பிரும்மாவுக்கும் முந்தின பிறப்பை அடைந்த தாமரை மலரானது பிரும்மாவின் ஆஸனமாகிற பூமி என்றும், அந்த பூமி தாமரை மலர் என்றும், மேருமலையானது அந்த பூமியென்றும், தாமரை மலரின் கர்ணிகை (நடுவிலிருக்கும் காய்) என்றும் சொல்லப்படுகிறது. அதன் நடுவில் இருந்துகொண்டு பிரும்மா உலகங்களையும் பலவித ஸ்ருஷ்டிகளையும் செய்கிறார். பிரும்மதேவர் முதலில் ஜலத்தை ஸ்ருஷ்டித்தார். ஜலத்திலிருந்து பூமியும் மலைகளும் மேகமும் உருவமுள்ள மற்றயாவும் உண்டானது. ஆகாசம் அஸ்தமயத்தை அடைந்த சமயம் அந்த இருளிலிருந்து வேறு ஒரு இருள் உண்டானது போல ஜலம் உண்டானது. அந்த ஜலத்தால் இடைவெளிகளில் நிரப்பப் படும்போது வாயுவும் உண்டானது. அந்தக் காற்றும் ஜலமும் ஒன்றும்போது நீண்ட ஜ்வாலைகள் உள்ளதாக அக்னி தோன்றி ஆகாயத்தை இருள் இல்லாமல் செய்தது. அக்னியும் வாயுவும் சேர்ந்து ஆகாயத்திலிருந்து ஜலத்தைக் கெட்டியாக ஆக்கி பூமித்தன்மையை அடைகிறது. இந்த பூமியானது ரஸங்களோடும் எல்லாவித பூதங்களின் ஸ்நேகங்களாலும் பிராணிகளுக்கு காரணமாக விளங்குகிறது. இந்த உலகங்கள் யாவும் மஹாபூதங்கள் என்று பெயருள்ளவைகளால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. மஹத் என்னும் பதம் கணக்கில்லாதவைகளைச் சொல்லும் பொருளும், பூதம் என்கிற பதத்திற்கு பிறப்பை அடைந்தவைகளுக்கும் சொல்லப்படுகிறது. இந்த ஐந்து பூதங்களால் ஸ்தாவர ஜங்கமங்கள் எல்லாம் கூடியவையாக விருக்கின்றன. இந்த ஐந்து பூதங்களையும் ஸ்ருஷ்டித்த ஆதிபூதமும் அவ்யயருமான நாராயணரை நான் நமஸ்கரிக்கிறேன். அவரே என் பிதா, என் பிரபு விஷ்ணு, யத், தத் என்று சொல்லப் படுகிறவர். அவரே இந்திரியங்களை நடத்தும் ஹ்ருஷிகேசர். அவரே ஆத்மாவாகவும் ஹ்ருதய ஆகாசத்தில் வஹ்னி என்று சொல்லப்படுகிற தீபஜோதியாகவும், சர்வசாக்ஷியுமான கவியாக

வும் சொல்லப்படுகிறார். சூர்ய சந்திர ரூபர்களாக உலகத்தை மகிழவைக்கிறார். ஸந்தோஷம், சௌக்யம் ஆகியவற்றை பக்தர் களுக்குக் கொடுக்கிறார். அப்பேற்பட்ட சீதாராமா, உங்களை நான் தரிசித்து சந்தோஷமும் சௌக்யமும் அடையவிரும்பு கிறேன். பிருகு முனிவரின் புத்திரியான ஸ்ரீதேவி, தாமரை மலரின் தத்வமே, உன் ஹ்ருதய நடுவில் கர்ணிகையாகவிருக்கும் நாராயணரை சரணம் அடைந்து, உங்கள் தயவால் மோக்ஷ பதத்தை அடையவிரும்புகிறேன். சசி சூர்யநேத்ரா, என் பாபங்கள் விலகி, உங்கள் தயையை நான் அடையவேண்டும்.]

"சீதாதேவி எவ்வளவு சுகுமாரம், நளினம் உள்ளவள். அப்பேற்பட்ட சீதை பர்யங்க மெத்தையை விட்டும், என் போன்ற தாய்மர்களின் மடியைவிட்டும் இறங்கத்தகாத சிறு குழந்தை போலவும், வீட்டைவிட்டு நகரமுடியாத தொட்டில் குழந்தை போலவும் வளர்க்கப்பட்டிருக்கிறாள். அப்பேற்பட்ட நளின சீதை கடோரமான பூமியின் தரையில் எவ்விதம் தன் மெல்லிய பாதங்களை வைப்பாள்? இவளைப்போல பெரிய ஐஸ்வர்யத்தை, சஞ்சீவினி செடியைப் போல, அதிக உஷ்ணம் அதிக குளிர்ச்சி பொறுக்க முடியாத சுத்தமான சூழ்நிலையில் வளர்த்து, மிக்க ஜாக்ரதையாக கண்காணிப்புடன் நான் இவளை வளர்த்து வந்திருக்கிறேன். அவளை நான் என் ஆத்மஜோதியாக நினைத்திருக்கிறபடியால், என் மார்க்கத்தை அவளுடைய பிரகாச ஒளியினால் நான் காண்கிறேன். அவளைவிட்டு நான் பிரிந்திருக்க நேரிடுமானால் என்னிடம் நிச்சயமாக இருள் சூழ்ந்துவிடும்." (298)

"அப்பேற்பட்ட எங்கும் ஒளிவீசும் சீதை, என் விபரீத காலத்தின் விசேஷத்தால், ராமா, உன்னுடன் வனம் செல்ல விரும்புகிறாள். ரகுநாதா, அவளுக்கு உன்னுடைய ஆக்ஞை எவ் விதம் இருக்கிறது? இந்த பெண் உன் முகத்திலிருந்து பொங்கி வரும் பிரேமைரஸத்தை சந்திரனுடைய அம்ருத கிரணங்களி லிருந்து பொங்கிவரும் ப்ரேமை ரஸத்தை சகோரபக்ஷி குடிப்பது போல சதா ஆனந்தித்துக் குடித்துக்கொண்டிருக்கிறாள். எவ் விதம் ரவியினுடைய உஷ்ணமான கிரணங்களின் ஓரத்தை சகோரபக்ஷி தன் நயனங்களால் பார்க்காதோ, அதுபோல இவள் உன்னை விட்டுப் பிரிவதால் யேற்படும் தாபத்தை, அனுபவிக்கத் தக்க அருகதை அற்றவள்." (299)

"யானைகள், சிம்மங்கள், ராக்ஷஸர்கள் ஆகிய அநேக துஷ்ட ஜந்துக்கள் சஞ்சரிக்கும் இடம் வனம் அல்லவா? புத்ரா,

அப்பேற்பட்ட விஷப்பூண்டுகள் நிறைந்திருக்கும் வனத்தில் சகலருக்கும் கல்பதருவைப் போல மணம் தருவதும் சோகத்தை நாசம் செய்யும் சஞ்சீவினிச் செடியாகிற இந்த சுந்தரி சீதை எவ்விதம் வனத்தை அடையத்தக்கவள் ?'' (300)

"வனத்தின் சூழ்நிலைக்கு ஹிதமாக, பிரும்மா விஷய போகங்களில் இச்சைப்படாத கோல், கிராதர்கள் போன்ற வேடுவஜாதிப் பெண்களை படைத்திருக்கிருர். அவர்களுடைய ஸ்வபாவம் கல்லின் மேல் ஊறும் புழுப்பூச்சிகளைப்போல கடோர ஸ்வபாவமாகவும், வனத்தில் சஞ்சரிப்பதிஞல் ஒருவித கிலேசங் களையும் பொருட்படுத்தாத மனப்பான்மையுள்ளவர்களாகவும் இருக்கக்கூடியது'' (301)

"இவர்களைத் தவிர காயக்லேசம் பண்ணும் தபஸ்வி களுடைய ஸ்திரிகள், தபஸ்செய்வதற்கு விரதம் பூண்ட வர்களாகவும், அதற்கு சாதகமாக ஸகலபோக விஷயங்களை தியாகம் செய்யும் மனப்பான்மை உள்ளவர்களான ஸ்திரிகள் வனம் செல்லுவதற்கு யோக்யமானவர்கள். ஆனுல் ராமா, இந்த பெண் படத்தில் எழுதின குரங்கைப் பார்த்தாலே அலறுகிறவள். அப்பேற்பட்ட சீதை எப்படி அப்பா வனத்தின் கஷ்டங்களைப் பொறுப்பாள் ?'' (302)

"ஹம்ஸ குமாரியாகிற அன்னப்பேடு தேவலோகத்திலிருந்து ஊர்ந்துவரும் கங்கையில் உற்பத்தியாகும் தாமரைக் காடுகளில் சஞ்சரிக்கும் ஸ்வபாவம் உள்ளது. அதனுடைய ஸ்வபாவத்தை ஒன்றையும் விசாரியாமல், அதைக் குட்டையில் வசிப்பதற்கு தயார் செய்யலாமா ? ராமா, அவள் நன்மையைக் குறித்து நன்ருக யோசனை செய். நீ எதைச் செய்யச் சொல்கிருயோ, நான் ஜானகியை அதன்படி நடக்கச் சொல்கிறேன்.'' (303)

"சீதை என் பவனத்திலேயே தங்குவாளாகில், எனக்கு அதிக உதவியாகவிருக்கும்.'' ரகுவீரன் தன் தாயாரின் பிரிய மான வார்த்தைகளைக் கேட்டார். சீதையைப் பற்றி எப்படிப் பட்ட வார்த்தைகள் !! சீலம், ஸ்நேகம் நிறைந்த அம்ருத ஜல பிரவாஹமான வார்த்தைகளைக் கேட்டார். (304)

தன் தாயாராகிய கௌசல்யாதேவியை ராமன் பிரிய வசனங்களாலும், விவேகமய வார்த்தைகளாலும் ஆஸ்வாசப் படுத்திஞர். ஜானகிக்கு விபத்துக்கள் நிறைந்ததும், வனத்தில் வாழும் குணதோஷங்கள் எல்லாவற்றையும் ராமன் எடுத்துரைத் தார். (305)

  

## மாஸபாராயணம், பதின்மூன்காவது நிறுத்தம்.

ராமன் தன் தாயார் முன்பு சீதைக்கு அதிகமாகச்சொல்ல விரும்பவில்லை. அதனால் தயக்கமுள்ள ராமன் இந்த சமயத்திற்குத் தக்க சொற்களைச் சொல்ல விரும்பி மிக்க தயக்கத்துடன் ஆரம்பித்தார். "ராஜகுமாரி, நான் சொல்லும் புத்திமதியைக் கேளு. உன் மனதில் வேறுவிதமாக எண்ணாமல் என் வசனங்களில், குண தோஷங்களையும் பாராமல் நான் சொல்வதைக் கேளு." (306)

"அம்மா, எது உனக்கும் எனக்கும் க்ஷேமத்தைத் தருவதோ அதற்கு ஒத்தபடி, நீ வீட்டிலிருப்பதுதான் சரி என்று எனக்குத் தோன்றுகிறது. அதுதான் நான் உனக்கு சொல்லும் உபதேச வார்த்தை. அதன்படி கேளு. அவ்விதம் நீ இருப்பாயாகில், அது என் ஆக்ஞையுடன் கூடியதாக ஆகும். உன்னால் செய்யப்படும் என் தாயாரின் சேவையும், சிஸ்ரூஷைகளும் பெரும் உபகாரமாகவும் ஸகலவிதங்களிலும் எல்லோருக்கும் க்ஷேமத்தையும் தருவதாகவும் பெண்ணே, இருக்கும். அதனால் நீ வீட்டில் தங்குவது தான் சிலாக்யமானது என்று எனக்குத் தோன்றுகிறது." (307)

"அம்மா, உன் மாமனார், மாமியார் ஆகிய பெற்றோர்களைப் பூஜித்து, அவர்களுடைய பாதங்களை நமஸ்கரித்து பெரிய தர்மத்தை சம்பாதித்துக்கொள். இந்த தர்மத்தைவிட சிறப்புள்ள தர்மம் வேறு ஒன்றும் இல்லை. இருக்கவும் முடியாது. எந்த எந்த சமயங்களில் என் பிரியமான தாயார் என் ஸ்நேகத்தை இழந்து அதன் நினைவினால் வருத்தப்படுவாளோ, அவளுக்கு நீ அப்பொழுது அனுசரணையாக வார்த்தைகள் சொல்லி ஹிதம்செய்து ஆறுதல் செய்." (308)

[தியானம்

நாராயணா, மோக்ஷலக்ஷ்மி, சீதாராமா, தேவதேவா, என் ஐந்து பூதங்களுக்கும் பிராணனுக்கும் ஈஸ்வரரே, உம்மிடம் பக்தியுள்ள என் காரிய கர்மாக்களை உன் திருப்திக்காக செய்யப்படுவன என்று நினைத்து, என்னை அனுக்ரஹிக்கவேண்டும். உக்ரரே, பத்ம பிரபோதரே, ஜகஜ்யோதிஷே, சர்வசாக்ஷி, விஸ்வத்திற்கே பரமாகதியாக விருக்கும் என்னையும் ஆட்கொள்ள வேண்டும். என் மனம், புத்தி, ஆத்மா, இந்திரியங்கள் எல்லாவற்றையும் ரக்ஷிக்கும் பிராணனே, மஹாபுருஷரே, சாஸ்வதமான

தர்மம் நீர் என்றும், உம்மைச் சொல்லும் ஸ்துதிகள் கங்கை என்றும் சொல்லுகிறுர்கள். திருவிக்ரமா, ஜடாதரா, ஜாஹ்னவி, பாகீரதி கங்கா, சுரசரிதா, திரிபதகா, உமாவின் தோழி என்னை நீ தான் சுத்தப்படுத்தவேண்டும்.]

''ஹே சுந்தரி, அந்த துக்கமான சமயங்களில் என் தாயாரின் வியாகுலத்தை புராண இதிஹாஸங்களில் சொல்லப்பட்டபடி கதைகளையும் தத்துவ ஞானங்களையும் உன்னுடைய மிருதுவான வாணியினுல் சொல்லி ஆஸ்வாசப்படுத்து. அழகான முகம் உள்ளவளே, உன் புன்சிரிப்பாலும் இன்சொல்லாலும் மந்தஸ்மித வதனத்தாலும், என் மாதாவுக்கு ஹிதம் செய்பவளாக இருப்பாயாகில் எனக்கு ரொம்ப பிடித்தமாயிருக்கும். அதுதான் எனக்குப் பூர்ண சம்மதமாகும்.'' (309)

''என் ஆக்ஞையின்படி நடந்து, என் குருக்களான மாதா பிதாக்களை சேவைசெய்யும் பாக்யமானது மஹாகுரு ஸ்ரேஷ்டர்களாலும் வேதங்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டு ஒருவித சிரமமுமின்றி உனக்குத் தர்ம பலன்களைக் கொடுக்கின்றதாகவிருக்கிறது. பிடிவாதத்தினுல் நஹுஷ சக்ரவர்த்தியும், காலவரிஷியும் மிகுந்த சிரமங்களுக்கு உள்ளானுர்கள். உனக்குத் தெரியுமே! (நகுஷன் இந்திராணியை அடைவதில் ஊக்கம்காட்டி, அகஸ்திய முனிவராலும் பிருகுமஹரிஷியாலும் ஸ்வர்க்கத்திலிருந்து மலைப்பாம்பாகத் தள்ளப்பட்டான். யுதிஷ்டிரரால் மீண்டும் நல்லகதிக்கு மீட்கப்பட்டான். காலவரிஷியும் விஸ்வாமித்ரரை அடைந்து விடை கொடுக்கப்பட்டவராக விருந்தும், பிடிவாதமாக ''குரு தக்ஷிணை கொடுப்பேன்'', என்று சாதித்த சமயம், ஆயிரம் குதிரைகள் பல வர்ணங்களுடன் கொடுக்கப்படவேண்டும் என்று குருவினுல் உத்திரவிடப்பட்டு, அதை அடைவதற்கு வருண லோகம் சென்று மிக்க சிரமம் அடைந்தார். மீண்டும் குரு கடாக்ஷத்தால் எல்லாக் கஷ்டங்களையும் தாண்டி, அவர் குரு தக்ஷிணையை ஸமர்ப்பித்தார்.) (310)

''சுமுகி, என் அருமைத் தோழி, நான் என் பிதாவின் வார்த்தைகளை சத்யமாகச் செய்துவிட்டு வனத்திலிருந்து சீக்கிரம் திரும்பி வந்து விடுவேன். நாட்கள் வெகுவேகமாகச் சென்று விடும், நான் சொல்வதை ஆராய்ந்து, அதன்படி கேளு. சுந்தரி, என் புத்திமதியை ஏற்றுக்கொள்.'' (311)

''என் பிரியமுள்ள நாயகி, பிரேமை வசம் அடைந்து, என்னுடன் வனம் வருவாயாகில், உனக்குச் சொல்ல முடியாதபடி மஹத்தான துக்கங்கள் நேரிடும். வனவாழ்க்கை ரொம்ப

கடினமானது. பயங்கரமானது. அந்த அடர்ந்த காடுகளில் வெயிலின் தாபங்கள், குளிர்ச்சி, மழை, விருஷ்டிகள், புயல்காற்றுக்கள் பயங்கரமானவை.'' (312)

''வழிகள் முட்களாலும் முள் செடிகளாலும் கற்கள்போல கடினமான வஸ்துக்களாலும் நிரம்பப்பட்டு, அவைகளின்மேல் செருப்பு இல்லாதபடி கூட நடக்க வேண்டியதாயிருக்கும். உன்னுடைய அழகான சரண கமலங்கள் மிருதுவானவை. பத்மம் பட்டாலே சிவந்துவிடும். ஆகவே வனமார்க்கம் ரொம்ப கடினமாகவும் குன்றுகளாலும், மலைப்பிரதேசங்களாலும் ஏறுவதற்கு கடினமாக விருக்கும்.'' (313)

''பர்வதங்களின் ஆழமானதும், பயங்கரமான பிளவுகளும், குஹைகளும், காட்டாறுகளும், நதிகளும், தண்ணீர் தேக்கங்களும் கடக்கமுடியாதபடி ஆழமுள்ளதாகவுமிருக்கும். கரடிகள், புலிகள், ஓநாய்கள், சிம்மங்கள், யானைகள் இவைகளின் மிக்க பயங்கரமான சப்தங்கள் கேட்பதற்கே பயங்கரமாகவும், அவைகளைக் கேட்ட பின் மூர்ச்சை அடையாமலிருப்பதற்கே அதிக தைரியம் வேண்டும். (314)

[தியானம்

ஹே ராமா, ஜானகி வல்லபா, ஆதிபுருஷா, வாயுவாஹனரே, தூசிமாதிரி படர்ந்து பூமியில் இருக்கும் என்னை மேலே உன்னிடம் சேர்ப்பிக்கும் வாயுகுமாரனுகிற ஆஞ்சநேயரை கடாக்ஷித்த ராமா, வேதமூர்த்தியாகிற கருடன் உன்னை என்னிடம் சேர்ப்பிக்கும்வண்ணம் நான் உனக்கும் ஜானகிக்கும் கைங்கர்யம் செய்யவேண்டும், மோக்ஷலக்ஷ்மி, நரநாராயணர்களிடம் ஸித்தியாக இருக்கும் கைங்கர்யலக்ஷ்மி, அசுரர்களை அழித்து, தர்மத்தைப் பரிபாலிக்கும் ஸ்கந்தரே, ஸ்கந்ததரரே, அக்னி மனிதனுடைய சிரஸில் இருப்பதுபோல வாயுஸ்வரூபியாகிய தாங்கள் சிரஸிலும் அக்னியிலும் இருந்துகொண்டு பிராணஸ்வரூபியாகி, எல்லா பிராணிகளின் ஆத்மாவான ஸநாதன புருஷனுக விளங்குகிறீர். பிராணன் ரூபியாக எல்லா நாடிகளின் வழியாகச் சென்றும், சப்தம்ஸ்பர்சம் என்கிற வேலைகளையும் செய்து, ஹ்ருதயத்திலிருந்து மேலும் கீழுமாகவும் குறுக்காகவும் நெடுக்காகவும் வெளிப்படும் நாடிகளால் சென்று பத்து விதமான பெயர்களாகிற பிராண, அபானு, வ்யான, உதான, ஸமான, நாக, கூர்ம, க்ருகா, தேவதத்த, தனம்ஜய என்கிற பிரிவுகளாகப் பிரிந்து வாழ்க்கையை நடத்துகிறீர். யோகத்தை அடைந்தவர்கள் ஸம

புத்தி உள்ளவர்களாகி சிரமத்தை ஜயித்து தீரர்களாக மாறி தலை யில் செல்லும் ஸுஷும்னை என்கிற நாடியில் மனத்தைச் செலுத்தி, மோக்ஷபதத்தை அடைகிறார்கள். சங்கரரே, நாதஸ்வ ரூபியே, ஸப்த ஸ்வரங்களால் அலங்கரிக்கப்பட்டவரே, லோகத் திற்கு ஹிதம் செய்பவரே, என்னை ஜீவிக்கச் செய்யும் பிராண வாயுவே, எவ்விதம் பிராணவாயு அக்னியுடன் சேர்ந்த ஜீவனை வாழச் செய்கிறதோ, அதுபோல சீதாராமா உங்கள் இருவர்களு டைய கிருபையால், பீமரே, நான் வாழவேண்டும். நாத வித்யையை ஆதாரமாகக்கொண்ட த்யாகராஜர்போல, உன் ஸ்வரூப ஸ்வபாவத்தை நான் பரிபூரணமாக அனுபவித்து சந்தோஷப்படவேண்டும்.]

"அம்மா, பூமியில்தான் சயனம் செய்துகொள்ளவேண்டும். வல்கலத்தை வஸ்திரமாகவும், கந்த மூலங்களையும் பழங்களையும் போஜனமாகவும் கொள்ளவேண்டும். இப்பேற்பட்ட பொருள்கள் சதா தினந்தோறும் கிடைக்கும் என்று நினைக்கிறாயோ, அதுவு மில்லை. சமயத்திற்குத் தகுந்தாற் போலும், காலத்திற்குத் தகுந் தாற் போலும் பூவும் கனியுமாக வெளிப்படுகின்றன." (315)

"நரமாம்ஸம் சாப்பிடும் நிசாசரர்கள் (இரவில் சஞ்சரிக்கும் ராக்ஷஸர்கள்) சஞ்சரிப்பார்கள். கபட வேஷம் தரித்து அலைந்து திரிவார்கள். மழை தாரைகள் பயங்கரமாக மலைகளி லிருந்து விழும். வன வாழ்க்கையின் விபத்துக்கள் ரொம்ப அதிகம். எந்த சமயத்தில் எது ஏற்படும் என்று சொல்லுவது கஷ்டம்." (316)

"பயங்கரமான சர்ப்பங்கள், பக்ஷி வர்க்கங்கள் இருக்கும். கோரமான ராக்ஷஸர்கள் ஸ்திரி புருஷர்களை அபகரித்துச் செல்ப வர்கள், இவர்கள் எல்லோரும் கும்பலாக சஞ்சரிப்பார்கள். இவை களை நினைத்த மாத்திரத்திலே தீரர்களான புருஷர்கள் கூட பயப் பட்டுப் போவார்கள். மானின் கண்களைப்போல சஞ்சலமானதும் அழகான லோசனங்களைப் பெற்ற என் சீதே, நீ ஸ்வபாவமாகவே நளின காந்தியான படியால் எவ்விதம் சகிப்பாய்? பயப்பட்டுப் போவாயே? (317)

"ஹம்ஸப் பேடுபோல நடக்கும் உன்னுடைய சுந்தரமான தொடைகளும் கால்களும் மிருதுவான பாதங்களும் வனத்தில் சஞ்சரிப்பதற்கு யோக்யமானவை அல்ல. நான் உன்னை வனத் திற்கு அழைத்துச் சென்றால் ஜனங்கள் எல்லோரும் எனக்கு அபகீர்த்தியைக் கொடுப்பார்கள். மானஸ ஸரோவரில் அம்ருத மயமானதும் ஸலிலமான தண்ணீரில் ஊர்ந்து செல்லும்

அன்னப் பக்ஷி, அலைகள் நிறைந்ததும், கஷ்டங்களை விளை விக்கும் உப்புத்தண்ணீராகிய லவண சமுத்திரத்தில் சஞ்சரிப்ப தற்குத் தகுதியாக இருக்குமா? நீயே எனக்கு பதில் சொல்.'' (318)

''என் குயிலே, உனக்குத் தகுந்தது புது ஜீவனுடன் விளங் கும் மாம்பூக்கள் நிறைந்த மதுரரஸம் கொண்ட மாம்பழச்சோலை கள். உன்னை முட்கள் நிறைந்ததும் விபத்துக்கள் உள்ளதும் கரீலா முட்செடிகளும், ஒட்டகங்களுக்கு ஆகாரமாக விளங்கும் புதர்செடிகளும் கொண்ட வனக்காடுகளில் சஞ்சரிக்கச் செய்ய லாமா? என் ஹ்ருதயத்தை குளிரவைக்கும் சந்திரமுகி, ராஜ பவனத்தில் நீ இரு. கானக வாழ்க்கை உனக்குத் துக்கத்தைத் தரும். நன்ருக விசாரித்து ஆராய்ந்து பார்த்தால் நான் சொல் வது சரி என்று உனக்கு படும்.'' (319)

[தியானம்

ஹே ராமாசீதா, குப்தரே, என் பூர்வாசாரியர்களான ராமானுஜர், வேதவியாஸர் பீஷ்மர், மார்க்கண்டேயர், தும்புரு நாரதரால் ஆஸ்ரயிக்கப்பட்டவரே, விருஷாக்ருதி என்கிற பெய ரால் தர்ம ஸ்வரூபியாகவும், பராசரரால் அம்ருதே என்றும், யக்ஞ மயம் வபுঃ என்றும் சம்போதனம் செய்யப்பட்ட ஆதிதம்பதி களே, உங்களுடைய சேர்க்கை பிரியமுடியாததாகவும் ஐந்து பூதங்களாகிற பூமி ஜலம் பூமியிலும், அக்னி, வாயு ஆகாயம் வடிவ மில்லாமலும், இந்த ஐந்தும் சேர்க்கை பெற்ற சரீரம் என்றும், அதைப்போல ஒன்றையொன்று பிரியாதபடியுமிருக்கிறது. எவ் விதம் விறகிலிருந்து எரியப்பட்ட அக்னி நாசமடையாமல் காணப்படாமலும் ஆகாயத்தில் சேர்ந்த குணத்தால் அறியப்படா மலும் இருக்கிறதோ, அதுபோல ஜீவன் வாயு ரூபியாகிற பிரா ணன் அக்னி ரூபியாகிற உஷ்ணத்தால் பிரகாசிக்கப்படுத்தி எல்லா இந்திரியங்களையும் நடத்துகிறது. அதனுல் அந்த ஜீவனே மனத்துடன் கூடிய கண்ணுல் எல்லாவற்றையும் பார்க்கிறது. ஐம்புலன்களுக்குப் பொதுவான மனமோ உள்ளத்திலுள்ள ஆத்மாவினுல் தரிக்கப்படுகிறது. எவ்விதம் செய்த கருமங்கள் நாசமடையாதோ, எவ்விதம் செய்த தானம் வீணுகப்போகாதோ, அதுபோல ஆத்மாவாகிற ஜீவன் சரீர நஷ்டமடைந்தபோதிலும் சூக்ஷ்மமாக ஆகாயத்தில் ஜலரூபியாகிவிடுகிறது. பிரகிருதியைச் சேர்ந்த ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற குணங்கள் ஆத்மாவுடன் கூடி க்ஷேத்ரக்ஞன் என்று சொல்லப்படுகிறது. குணங்களுடன் கூடிய ஜீவன் குணங்களால் விடுபட்டால் பரமாத்மா என்று

சொல்லப்படுகிறான். அப்பேற்பட்ட ஆத்மா எல்லோருக்கும் ஹித காமியாகவும் பரமாத்ம ரூபியாகவும் அழிவற்றதாகவும் தெரிந்து கொள்ளப்படுகிறான். க்ஷேத்ரமாகிய சரீரத்தை அறிந்த வர்கள் அந்த மறைக்கப்பட்ட ஆத்மாவை சூக்ஷ்மமான புத்தி யினால் எப்பொழுதும் தியானித்தவர்களாக தெளிந்த புத்தியுடன் சுப அசுபமான கர்மங்களை தள்ளிவிட்டு ஆத்ம ரூபத்தில் ஈடுபட் டவர்களாக இந்த ஜீவ ரூபியான பிரும்மாவிடமிருந்து உண்டான ஸ்ருஷ்டியை பரமாத்மாவாகிற உங்கள் விபூதியாக பார்க்கிறார் கள். அப்பேற்பட்ட எனக்கு சம்சார பயத்தை ஒட்டவந்த வீத பயரே, முக்தர்கள் அனுபவிக்கும் உம்முடைய நித்ய விபூதியைத் தரும். இந்த க்ஷேத்ரமாகிய சரீரம் உம்முடைய பரம்தாம் என்று சொல்லப்படும் உமது வாசஸ்தலத்தை அடைந்ததாக இருக் கட்டும். சர்வசாக்ஷி, நீதான் எனக்கு கதி.]

"என்பிரியமுள்ள சீதா, ஸஹஜமான ஹிதகாமியும் உன் நன்மையைக் கோறும் ஸுஹ்ருதயம் கொண்ட குருமஹராஜரும், உனக்கு ஸ்வாமியான பதிக்கும் தலைவணங்கி, அவர்களின் ஆக்ஞைகளுக்கு உட்பட்டு அவர்கள் சொல்லும் ஹிதமான வார்த்தைகளை நீ கேட்காது போனால் பிற்பாடு ஹ்ருதயத்தில் நீ பச்சாதாபப்படுவாய். உனக்குச் செய்யப்படும் ஹிதம் ஹானி யாக அவசியம் நேரிடும்" என்று பகவான் கூறிமுடித்தார். (320)

சீதாதேவி தன் பதியின் மிருதுவானதும், அர்த்தங்கள் நிறைந்ததும், ஹிதமானதும், மனோஹரமாகச் சொல்லப் பட்டவையுமான வசனங்களைக் கேட்டாள். அவளுடைய லலிதமான லோசனங்களில் கண்ணீர் ஜலங்கள் நிரம்பி யிருந்தன. ஸ்ரீராமனுடைய சீதளமான வசனங்கள் தாபத்ரயத் துடன் நொந்துபோகும் ஜீவனுக்கு கூறும் புத்திமதிகள் போலவும் சரத்ருதுவின் இரவில் சந்திரனுடைய குளிர்ந்த கிரணங்கள் பெண் சக்கிரவாக பக்ஷியை எவ்விதம் தகிக்குமோ, அதுபோல விருந்தது. (321)

தர்மஸ்வரூபியான வைதேஹி என்ன பதில் சொல்லக்கூடும்? அதனால் பேசாமல் இருந்தாள். அவளுக்கு ஏகவருத்தம். "என்பவித்திரமான ஸ்வாமி பதினான்கு வருஷங்கள் என் ஸ்நேகத்தைத் துறந்து தனியாக விருக்க விரும்புகிறார்." இந்த நினைவை ஸ்மரித்த மாத்திரத்தில் அவளுடைய புஷ்கரலோசனங் களிலிருந்து கண்ணீர்கள் தாரை தாரையாக பெருகி ஊற்றெடுத்து வாரி வாரியாக பொங்கிக்கொண்டிருந்தன. மிக்கத் தைரியத் துடன் அந்த பூமியின் செல்வியாகிற சீதை, (322)

தன் மாமியாகிற கௌஸல்யையின் சுந்தரமான பாதங்களைப் பிடித்துக்கொண்டு மிக்க இனிமையாகப் பேச ஆரம்பித்தாள். "தேவி, என்னை க்ஷமிக்கவேண்டும். என்னுடைய இறுமாப்பை தயவு செய்து மன்னிக்கவேண்டும். என் பிராணபதி, தீனஸ்தியை அடைந்த எனக்கு மோஹப்படக்கூடிய வார்த்தைகளை என் பிராண ஹிதத்திற்காகச் சொல்லிவிட்டார். அவருடைய அபிப்பிராயத்தில், அம்மா, அவைகள் எனக்கு பரமஹிதமாக இருக்கும் விதி, வ்யவஸ்தை என்று சொல்லியும் விட்டார்." (323)

"ஆனால் தாயே, நான் என்னுடைய நிச்சயமான புத்தியினால் தீர்மானித்துவிட்டேன். எனக்கு என்னுடைய பதியினுடைய வியோகத்தினால் ஏற்படும் பிரிவின் துக்கமானது எல்லாத் துக்கங்களையும் விடமிகப் பெரிதானது. அதை என்னால் சகிக்க முடியாது." (324)

ஸ்ரீராமனை நோக்கிக்கொண்டு சொன்னாள், "ஹே பிராண நாதா, உம்மை எல்லோரும் கருணாநிதி என்று சொல்லுகிறார்களே. சுகுமாரா, எனக்கு பரமசுகத்தைக்கொடுக்கும் ராஜகுமாரா, என் சுஹ்ருதமே, ஐயா, உம்மைவிட்டு பிரிவேனாகில் நான் நரகத்தை போல காலம் கழிப்பேன். என் குமுதமாகிற ஹ்ருதயத்தை மலரவைக்கும் ரகுகுலத்தின் சந்திரனே, நீர் இல்லாத போனால் ஸ்வர்க்கம் கூட எனக்கு நரகவேதனையைத் தரும்." (325)

"மாதா, பிதா, சகோதர, சகோதரி, பிரியபந்து, பரிவாரங்கள் ஸுஹ்ருதுக்களான மித்ரர்களின் சமுதாயங்கள், மாமனார் மாமியார், குருதேவர்கள், என் ஹிதத்தில் நம்பிக்கைவைத்து நடக்கக்கூடிய சகல ஸ்நேகிதர்கள், அழகானவைகளும் சுசீல மான நடத்தை உள்ளவர்களும், எனக்கு சுகத்தைதரும் சத்புத்திரனும், (326)

ஹே பிராண நாதா, எங்குபார்த்தாலும் என் நன்மையைக் கோரும் ஸ்நேக உள்ளம்படைத்த மனிதர்களும்; ஹே ஸ்வாமி, பிரபு, புருஷோத்தமரே, அனந்தரே, தேவ தேவரே, உம்முடைய ஸ்நேகத்தை தினமும் பக்தியுடனும் தியானம் செய்தும், ஸ்துதி செய்தும், நமஸ்கரித்தும், நீரே என் எஜமானன் என்றும் அர்ச்சித்தும், பூஜித்தும், ஸர்வலோக மஹேஸ்வரன் என்று நாடுகிற உள்ளத்தினால் உம்மை நான் அடைந்திருக்கிறபோது, அப்பேற்பட்ட உம்மைப் பிரிந்து, எனக்கு இவ்விதமான மற்றவர்களுடைய ஸ்நேக ஐஸ்வரியங்கள், பிரியமான எண்ணங்கள், சுகங்கள், போகங்கள் யாவும் எனக்கு உபயோகப்படமாட்டா. தேவையு

மில்லை. பதியாகிற உம்மைப் பிரிந்து ஸ்திரியாகிய எனக்கு என்ன வேண்டும்? ஹே ஸ்வாமி, இப்பேற்பட்ட ஐஸ்வர்யங்கள் யாவும் என் சரீரத்தை சூரியனைபோல தபிக்கச் செய்யுமே தவிர, எனக்கு சாந்தியைத் தரமாட்டா.'' (327)

''என்னுடைய க்ஷேத்ரமாகிற சரீரம், என் ஐஸ்வர்யங்களாகக் கருதப்படுவம் ஐந்து பூதங்களின் சேர்க்கையாகிற விபூதிகள் என்னுடைய பரம்தாம் என்று சொல்லப்படுவன யாவும், நித்திய விபூதி (க்ஷேத்ரக்ஞன்), பிருத்வியாகிற பூலோக வாழ்க்கை, நகர் என்னும் வாசஸ்தலம், ராஜ்ய ஸ்ரீயாகிற போகஸ்தானங்கள், ஹே என் பிராணபதி, உம்முடைய சேர்க்கையின்றி, இப்பேற்பட்ட சமாஜ சேர்க்கை ஐஸ்வர்யங்கள் எனக்குப் பரம சோகத்தை நீண்டகாலம் தருவதாகவிருக்கும். இவைகள் அனைத்தும் என் துக்கத்தைப் பெருக்கும் சமாஜம் என நான் கருதுகிறேன். அவைகள் எனக்கு நீரின்றி தேவையில்லை.'' (328)

[தியானம்

ராமா, ராமுனிபதம் என்கிற காமிதார்த்த பலத்தைத் தியாக ராஜருக்கு அளித்த மஹனீயா, மஹானுபாவா, தயாசாகரே, முனிவர்களின் தபஸ்ஸை சித்திக்கவைத்த வனம் சென்ற ராமா, புதனால் கடாக்ஷிக்கப்பட்ட மஹனிய கவிகளால் வாக்மதுரம், ரஸமதுரம், கல்பனும்ருதம், தர்மகாமார்த்த மோக்ஷங்களைக் கொடுக்கும் கவிதைகளால் ஸ்துதி செய்யப்பட்ட சீதாராமா, உன்னை நான் உன்கடாக்ஷத்தினால் தெரிந்துகொள்ளவேண்டும். நரசிம்ம அவதாரத்தில் பிரஹ்லாதனுடைய தகப்பனாகிய ஹிரண்யகசிபுக்கு நிரதிசய தபோ புண்யத்தால் அற்புத மிருகம் உற்பத்தியானது என்று ரஜோ குணவசம் அடைந்ததால் அவனால் அறியப்பட்டது. ''இவன் அவாப்த ஸமஸ்த காமன் ஈஸ்வரன்'' என்று தனது புத்தரனால் சொல்லப்பட்டும் அவனால் உன்னைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. தாமோதரா, கௌஸல்யாபுத்ரா, ராம அவதாரத்தில் ராவணன், அவன் தம்பியான விபீஷணனால் சொல்லப்பட்டும், ஸகல போக ஸம்பத்துக்களை அடைந்திருந்தும், உன்னை அனாதி நிதனன், பரபிரும்ம பூத ஸ்வரூபன், பகவான் என்று தெரிந்துகொள்ள முடியாமல், ஜானகியிடம் காமவசம் அடைந்து சித்தம் தமஸ்ஸை அடைந்து, நீர் அச்யுதன் என்று தெரிந்துகொள்ள முடியாமல், கேவலம் உன்னைத் தரிசித்தபாக்கியம் என்மாதிரி அவனுக்குக் கிடைத்தது.

கருணாநிதியான ராஜகோபாலா, கோக்களுக்கு கோக்களே தஞ்சம் என்கிறவாக்கியத்தின் ஸத்யப்படி, அங்குசத்தை தரித்துக்கொண்டு இருக்கும் விஷ்வக்ஸேனா, ஜனார்தனப்ரியா, சங்கர பக்தஹ்ருதயா, ரஜஸ்தமஸ் இவைகளால் பாதிக்கப்பட்டு போஜனம் சயனம், ஸ்நானம் ஸம்பூர்ண அவஸ்தைகளிலும் அச்யுத நாமத்தை அனவரதமும் ஜபம் செய்து கொண்டு, மனம் மாத்திரம் நிந்தாஸ்துதியில் ஈடுபட்ட சிசுபாலனுக்கு, தாமோதரா, கிருஷ்ணா, உன்னுடைய மஹா உன்னதமான ரூபம் உத்பன்ன பத்மதள அக்ஷம், ஜ்வலிக்கின்ற பீதாம்பரம், அமலமான கிரீடம், கேயூர கடிகாதிகள் இவைகளுடன் சோபிக்கிற ஸ்ரீ கிருஷ்ணா ரூபத்தைக் காண்பித்து, உன்னுடைய உதாரணமான சதுர்புஜங்கள், சங்கு சக்கரம் கதாதரனாகவும் பத்மதரனாக வும் ஒருவித விகாரமுமின்றி நீ காக்ஷி கொடுத்து, ஸ்தம்பிக் கச் செய்து அவனை நீயே முடிவில் அணைத்துக்கொண்டாய். உன்னுடைய புத்திதத்வமாகிற சக்கரம் அவன் தலையை அறுத்து, உன் நாம உச்சரணையால் உன்னை வைதபோதி லும் அவன் பாபங்களை நாசம் செய்து, அவனைக் கெட்ட கதியிலிருந்தும் மீட்டுவிட்டது. சர்வசாக்ஷி, வசுதாதிபா, சார்வபௌமா, யயாதியின் பிள்ளையாகிற புருவம்சத்தில் பிறந்த யாதவகுலதீர்த்தா, புதனுடைய புத்ரனாகிற புரூரவஸ் ஊர்வசி யிடம் வைத்த அன்புக் காதல் மாதிரி, என் தாயாரும் ஜகஜ் ஜனனியும், பார்வதியின் அந்தரங்கப்ரியையுமான சீதையிடம் அன்புவைத்து மாயா மிருகத்தை தேடப்போன ராமா, சுகரால் தியானிக்கப்பட்ட சீதான் வேஷண ராமா, இவ்விதம் உன்னிடம் விரோதம் பாராட்டினவர்களிடமும் அகிலசுர அசுரர்களுக்கும் கூடகிடைக்காத துர்பலமான பலத்தைக் கொடுத்தாயே, ஆச்சர் யம்! பராசரர் மைத்ரேயருக்குச் சொன்ன வார்த்தையாகிற "அப்பேற்பட்ட தயாளுவான பகவான் அவருடைய பக்தி ஸம்பன்னர்களுக்கு ஏன் அவருடைய கிருபையைக் கொடுக்க மாட்டார்?" என்கிற வார்த்தையில் மஹாவிஸ்வாசம் வைத் தேன். கோசலராமா, கோதண்டராமா, வைதேஹிராமா, அச்யுதராமா, ராம்ஹரி, தாமோதரா, புனர்வசு, என்னை நீ ஆட்கொள்ள மாட்டாயா? என் சரீரம் மனம், புத்தி, வாக்கு பிராணன், என்ஸத்வரஜஸ்தமஸ் குணங்கள், என்னுடைய ஸுஹ்ருதுக்களாகவாழும் எல்லா ஜீவராசிகளும், நவகிரஹங் களும் ஒன்றாகச் சேர்ந்து பலன் அளிப்பது போல், உன் ஹிருதயத்தால் உன் ஆயுதங்களால் உன் அபாரமான கருணை

யால் என்தோஷங்களைப் போக்கி என்னை ஆட்கொள்ள வேண்டும். ராமா, சீதா நீங்கள்தான் என்கதி.]

"இப்பேற்பட்ட ஐஸ்வர்யங்கள் எனக்கு ரோகத்தைத்தரும் ஹேதுக்கள், அப்பேற்பட்டவைகள் அணிவதற்கு மிக்க பாரமாகவும், நரக வேதனையைதரும் சம்சார பிணிகள். பிராண நாதா, நீர் இல்லாமல் எனக்கு இந்த ஜகம் எல்லாவற்றையும் கொடுத்தாலும் எனக்கு வேண்டாம். அவைகள் எனக்கு சுகத்தைத் தரக்கூடியதல்ல. நான் தீர்மானமாக சொல்கிறேன்." (329)

"பிரபோ, தேஹத்தைவிட்டுப் போன பிராணன் மாதிரியும், நதியைவிட்டுப் பிரிந்த பிரவாஹம் போலவும் நான் உம்மை விட்டு பிரிந்தால் ஆகிவிடுவேன். நாதரே, புருஷனைவிட்டுப் பிரிந்த ஸ்திரிக்கு என்னகதி ஏற்படும்? எனக்கு ஸகலமும் நீரே. என் சுகமும் நீர்தான். ஐயா, உம்முடைய விசாலமான வதன மாகிற சரத் காலத்தின் பூர்ண சந்திரனைப் பார்த்து பார்த்து, நான் சதா ஆனந்த மடைவேன். தயாளு, ஸ்வாமி." (330)

"உமக்கு எவ்விதமோ, அதுமாதிரி பக்ஷிமிருகம் ஆகிய வைகள் எனக்கும் பரிஜனங்களாக விருக்கட்டும். வனம் நகரமாக இருக்கட்டும். வற்கலம் விமலமான வஸ்திரமாக இருக்கட்டும். நாத, உமக்கு சுகத்தைத்தரும் ஆஸ்ரம பர்ணசாலை எனக்கும் போகங்களைத்தரும் தேவலோக ஸதனமாக இருக்கட்டும்." (331)

"உதார ஹ்ருதயமுள்ள வனதேவதைகள், வனதேவர்கள் எனக்கு மாமியார் மாமனார் போல விளங்கட்டும். அவர்கள் எனக்கு காப்பாளர்களாக இருப்பார்கள். புல் படுக்கையாகவும் கல்லின் மேல் உம்மோடு சம்பாஷித்துக்கொண்டு ஆனந்தம் கொள்வது, பிரபு, காமதேவனுடைய அழகான மஞ்சம் மாதிரி இருக்கட்டும்." (332)

"நீர் சாப்பிடும் கந்த மூலபழங்கள் எனக்கும் அம்ருதம் மாதிரி தித்திக்கும். நீர் சஞ்சரிக்கும் வனத்தின் ஸத்வரூபமான மலைகளும் குன்றுகளும் நாம் இப்போது போகத்தில் வாழும் அயோத்தியில் இருக்கும் உல்லாஸ மாளிகைகளாக இருக்கட்டும். பிரபு, நான், ஒவ்வொரு க்ஷணமும், ஆனந்தமூர்த்தி, உம் முடைய சரண கமல ஆலயத்தைப் பார்த்து பார்த்து என் ஆத்மாவை சந்தோஷப்படுத்தி, பெண் கோகிலம் சூர்ய வெளிச்சத்தில் வாழ் நாட்களை ஆனந்தத்துடன் தள்ளுவது போல, என் காலத்தை உம்முடன் கழித்து விடுவேன்." (333)

"பிராண நாதா, நீர் என்னை சோதிப்பதற்காக வனத்தில் இருக்கும் துக்கங்களையும் பயத்தை விளைவிக்கும் ஆபத்துக்களையும், அடர்த்தியான ஸந்தாபங்களை விளைவிக்கும் ஹேதுக்களையும் விஸ்தாரமாகச் சொன்னீர். பிரபோ, எனக்கு நீர் அனன்ய பிராப்தன். உம்மை விட்டுப் பிரிவதால் ஏற்படும் துக்கத்திற்கு அவைகள் லவலேசமும் சமானமில்லை. (உம்மை நான் அவாப்த ஸமஸ்த காமன் என்று நினைத்து கடும் தபஸ்செய்து என் நித்ய விபூதிகளைத் தியாகம் செய்துவிட்டு, உம்முடைய லீலைகளில் பங்கு எடுத்துக்கொள்வதற்காக உம்மால் வரிக்கப்பட்ட நான் உம்மைவிட்டு எவ்விதம் தனியாக இருப்பேன்?) ஹே கிருபாதாம், இந்த ஐஸ்வர்யங்களின் சமாஜங்கள் எனக்கு உம்மைப்போல சமானமாகாது. நான் உம்மிடம் மோஹித்திருக்கிறேனே தவிர, அவைகளிடம் இல்லை, இல்லை." (334)

"ராஜ குமாரா, நற்பிறப்பாகிய இக்ஷ்வாகுவம்ச திலகா, ரவி குலத்தின் சிரோண்மணியே, நீர் என்னை நன்ருகப் புரிந்து கொள்ளும். உம்முடைய சேர்க்கை ஒன்றிலே பற்றுதலாக இருக்கும் என்னை, (விஷ்வக்ஸேனரே,) விட்டுவிடாமல் உம்முடன் அழைத்துச் செல்லும். (ஜனுர்த்தனரே,) ஸ்வாமி, நான் உம்மைப் பலதடவைகள் வினயத்துடன் சுக்ருத பிரணமம் செய்து, கெஞ்சிக்கேட்டுக்கொள்கிறேன்.' (நான் இப்போது சொல்லும் வார்த்தைகளால் மட்டு மின்றி என் ஸ்வரூபஸ்வபாவங்களை பூர்ணமாக உணர்ந்த நீர் என்னுடன் அல்லவா சேர்ந்து, கருணமயமாக ஆகிறீர். திரிவிக்ரமா, அந்தர்யாமி, சகல லோகங்களுக்கும் திரை லோக்ய லக்ஷ்மியாகிற என்னைவிட்டு விட்டு எவ்விதம் நீர் தனியாகச் செல்லவிரும்புகிறீர்?) (335)

"தீன பந்து, சுந்தரா, எனக்கு சுகத்தைத் தரும் சுகுமாரா, சீல ஸ்நேகரத்னமணி, நீர் என்னை அலக்ஷ்யம் செய்துவிட்டு, பதினன்கு வருஷங்கள் அயோத்தியில் தனியாக இருக்கும்படி நியமித்து விட்டுப்போனல், என் பிராணன் என்னிடம் இருக்காது." (336)

"என் மார்க்க தரிசியே, உம்மிடம் மோஹித்த நான் உம்முடைய சரோஜ சரண கமலங்களை க்ஷணபரியந்தம் பார்த்துப் பார்த்து, நான் களைப்படைந்து போகாமல், (உம்மைத் தொடர்ந்து சத்யவானுடைய ஆத்மாவை கொண்டு போகும் யமனையும் சாவித்திரி தொடர்ந்து சென்றது போல) உம்மை நான் அனுசரிப்பேன். என் பிரியரே, உமக்கு எது பிரியமோ, எந்த

தர்ம ஆசரணையில் இஷ்டமோ, உமக்கு எது சங்கல்பமோ, அந்த திரு உள்ளத்திற்கு அனுகூலையாக சேவை செய்வேன். (நான் கைங்கர்ய லக்ஷிமியான படியால்) உம்முடைய மார்க்கத்தை அறிந்தவளாக, உமக்கு ஏற்படும் தொழில்களான பக்த தர்ம சம்ரக்ஷணத்தில் ஏற்படும் விஸ்ராமங்களைப் போக்கி, உம்முடைய வழியை சிரமமின்றி எளிதாக்குவேன்.'' (337)

[தியானம்

ஹே ராமா, சீதா, அனிர்தேஸ்யவபு, ஸ்ரீமான், நாராயணர் என்கிற அவ்யயமானதத்வமே, ஓம் இதி என்கிற ஏகாக்ஷரரே, திரிஸாமாவாகிற ரதந்திரம், பிருஹத், வாம தேவ்யம் என மூன்ருக வகுக்கப்பட்ட ஸாம வேதங்களால் மகிமை புகழப் படுபவரே, பிரணவத்தில் அகார உகார மகாரங்களாகிற மூன்று பதங் களாலும் சொல்லப்படுபவரே, போக்யம் ஆகிய அசேதனம், போக்தா வாகிற ஜீவாத்மா, நியந்தாவாகிய ஈஸ்வரன் என்கிற மூன்று தத்வங்களையும் அறிவிக்கும் நாராயணரே, எல்லாப் பிரமாணங்களுக்கும் லக்ஷ்யமானவரே, காமரே, காமபாலரே, காமதேவரே, உம்முடைய புகழ், ஞானம், ஆசாரம், தர்மமாகிற அனுஷ்டானம், நாம ரூபகுண விலாஸங்கள், அகாதமாகவும் அபாரமாகவும், அக்ஷயமாகவும், ஜகங்களாகிற எல்லா சேதன சேதன வஸ்துக்களையும் மோஹிக்கும்படி கோயில்போல விருக் கின்றன. ஹே தீப்த மூர்த்தி, ஸ்வபிரகாசராகவும், பிரக்ருதி ரூப மாகிற ரஜோகுண விஷயத்தில் மூழ்கியிருக்கும் ஜீவாத்மாவாகிற புருஷனுடைய போகங்களுக்கு மோக்ஷ ரூபமாகிற பரம புரு ஷார்த்த பிரயோசனத்தைக்கொடுக்கும் ராமா, உம்முடைய பிரிய மான சேர்க்கையை மதுரமான அர்த்தத்துடன் கூடச் சொல்லி, ராமனையே தியானித்த அழகு வாய்ந்த சீதையின் ஆனந்தத்தைப் பற்றி மிக்க பராக்ரமமுள்ள ஹனுமார் எனக்குப் பல தடவை களாக சொல்லியிருக்கிறார். அப்பா, கமல லோசனையாகிற சீதை அதைக் கேட்டு மெய்மறந்து புரந்தரனை அடைந்த சசிதேவி சந்தோஷித்ததுபோல, நான் ராமார்த்த யுக்தமாகிற வார்த்தை களைக் கேட்டு, சங்கரரும் காமேஸ்வரியும் ஆனந்திப்பதுபோல, ஆனந்த மடைந்திருக்கிறேன். பரத்வாஜரே, த்வாபர யுகத்தில் வேத வியாஸராக இருந்த மஹாத்மாவே, எனக்கு ஸத்கதி, ஸத்பராயணம், ஸத்பூதி, பரமாம் கதி என்கிற துருவமாகிற ஏகாக்ஷரத்தின் பெருமையை நீர் சொல்வது போல, பராசரர் மைத்ரேயரிடம் ''சுக்ரம் அக்ஷயம் பஹீதாத்மகம், பிருஹத்

ஸர்வ வியாபகம் மஹத்தத்வம் பிரத்யக்ஷ காரணம், சாஸ்வதம், ஸ்வயம்பூ, பிரதான ஆத்மயோனி, என்று சொல்லப்படும் அந்தர்யாமி, அவிபாகர், வாஸுதேவர் ஆகிய பரமாத்மாவை ஓங்காரரூப பரபிரும்மத்தை ஸர்வதா நான் நமஸ்கரிக்கிறேன். ஸாதுக்களின் பராயணரே, வேதமயரே, ஞான ரூபியே, நீர் அல்லவோ சமஸ்த சாகைகளுக்கும் கர்த்தாவாகவும், அவைகளின் தத்வமாகிற அசங்கம் என்று சொல்லப்படும் சேர்க்கையில்லாத பகவான் என்றும் விளங்குகிறீர். உம்மை நான் பின்னமாகவோ, அபின்னமாகவோ, பார்த்தால் அவ்விதம் தோன்றுகிறீர். சேர்க்கையில்லாத ஸ்வதந்தர பகவானுகவும் காக்ஷி அளிக்கிறீர். அப்பேற்பட்ட ஓம் தத்ஸத் என்கிற தத்வங்களால் அறியப்படும் ஶ்ரீமானே, ஶ்ரீதரனே, நாராயணரே, கோபாலரே சரணம்.]

"ஹே ஸ்வாமி, உம்முடைய அரவிந்த பாதங்களை நான் தினமும், (கங்கை திருவிக்ரம அவதாரத்தில் தோன்றினபடி) அலங்கரித்து, சுசியாக உம்முடன் விருக்ஷங்களின் நிழலில் உட்கார்ந்துகொண்டு அழகாக சம்பாஷிப்பேன். உம்முடைய தத்வத்தை அறிந்த நான் மனத்தில் உம்முடைய சேர்க்கையால் ஆனந்தமடைந்து உம்மையும் சந்தோஷிக்க வைப்பேன். என் ஸ்யாமசுந்தரரே, அபார கருணும்புதே, உம்முடைய அழகிய தாமரைவதனத்தைக் கண்டு, மோஹித்துப் போகும் கருவண்டுகள் போல புஷ்கரக் கண்களை உடைய சுபாங்கரே, உம்முடைய தர்மமாகிய பக்தி சம்ரக்ஷணத்தில் ஏற்படும் தாபங்களை நான் அம்ருத மயமாகிற என் சேர்க்கையைக் கொடுத்து, உமது பரிஸ்ரமங்களைப் போக்குவேன். உமக்கு தேகமனுேதர்ம வியவஸ்தைகளில் சமயம் பாராமல் அனுகூலையாகவிருக்கும் என்னை, ஹே பிராணபதி, எவ்விதம் தள்ளிவிட்டு போவீர்?" (338)

"ஹே ஸ்வாமி, (புத்ரனைப்போல) உம்முடன், சமதளத்தில் பரப்பப்பட்ட புல், இலைகள் ஆகியவைகளை உமது படுக்கையாக விரித்து, கைங்கர்யம் செய்து, உம்முடைய நித்ரையாகிற செளக்யத்தை, தாஸி அடிமை எவ்விதம் ராத்திரி முழுவதும் கண் விழித்து, சிச்ரூஷை செய்வாளோ, அது போல உமது சரணங்களை அண்டியிருப்பேன். ஐயா, என் திவ்யமூர்த்தியே, உம்முடைய மிருதுவான அங்கங்களின் சேர்க்கை அனுபவங்களால் வனத்தில் உள்ள கடும் தாபங்களாகிற அக்னிக் காற்றுக்களின் உஷ்ணத்தை நான் தணித்துக்கொள்வேன். என் காமதேவரே, உம்மால் ஆதரவுடன் கொடுக்கப்பட்ட, தழுவுதலாகிற

மனச் சேர்க்கையினால் காமேஸ்வரி எவ்விதம் சதாசிவனை ரமித்துக் கொண்டிருக்கிறளோ, அதுபோல் என் மன்மதனாகிய உம்மைப் பார்த்துப் பார்த்து, என் மோஹங்களைத் தீர்த்துக் கொள்வேன்.'' (339)

''ஹே பிரபு, உம்மால் நானும், என்னால் நீரும் பிரகாசிக்கிறோம். இருகண்களாகிற உம்முடைய வீக்ஷண்யம் எனக்கும், எனக்கு சாக்ஷாத்காரமாகிற உம்முடைய திருமேனியும் இவ்விதம் பிரிக்க முடியாதபடி அனபாயினி என்று சொல்லும்படி சங்கத்தை (சேர்க்கையை) அடைந்த என்னை, ஸ்வாமி, நீர் தியாகம் செய்து போய் விடுவீராகில், என்னை யார் அடையக் கூடும்? ஆர்யபுத்ரரே, ஜனகரின் நற்குலத்தில் பிறந்த பெண் சிம்மக் குட்டியை முயலோ நரியோ அடையக்கூடுமா? உம் சேர்க்கையில் இருக்கும் என்னை யார் கெடுமதியுடன் பார்க்கக் கூடும்.? ஆம், நீர் சொல்வது போல நான் சுகுமாரிதான்; ஆனால் நான் ஒன்று கேட்கிறேன். ''நீர்தான் வனத்தில் வசிப்பதற்கு யோக்யமானவரா? ஸ்வாமி, என்னை விட்டுப்போக தீர்மானிக்கும் நீர் தபஸ் செய்வதற்கு உசிதமானவர் என்று எண்ணுகிறீரோ? உம்மை விட்டுப்பிரிந்த நான்தான் போகங்களை அனுபவிக்க உசிதமா? நன்றாக ஆலோசியும் பிரபு.'' (340)

பிரபு ராமச்சந்திரன் அழகான சீதையின் கடூரமான வசனங்களைக் கேட்டார். அந்த வார்த்தைகளை துளசிதாஸர் சொல்லுவதற்கு தயங்கி, ''என் மனம் விண்டுவிடும். கேட்பதற்கே பொறுக்காது,'' என்று சொல்லுகிறார். சீதை மீண்டும் சொன்னாள். ''உம்மைவிட்டுப் பிரியேன் என்கிற சொல்லையே கேட்கமுடியாத என் பிராணன் உம்மைவிட்டு நிஜமாகவே பிரிந்தால், துக்கங்களைச் சகிக்காமல் நீண்டகாலம் இருக்க முடியுமா என்று ஆராய்ந்து பாரும்.'' (341)

சீதை இவ்விதம் சொல்லி மஹார்த்தங்களை சுமக்கும் வசனங்களால் ராமனுக்குத் தெளிவு காட்டி வியாகுலத்துடன் நின்றாள். ''இந்தப் பெண் நம் பிரிவைத் தாங்கமாட்டாள்; நானும் அவளை விட்டு பிரியேன். வார்த்தையாகிற பிரிதலையே நாம் இருவரும் சகிக்கமுடியாது. அந்தவார்த்தையே எங்களைக் கொன்றுவிடும். இவளுடைய ஸ்வபாவம் தெரிந்த எனக்கு அவளுடைய அழுதலைக் கூட நான் பொறுக்கமாட்டேன். நான் இவளை தியாகம் செய்து போனால் அவளும் நானும் உயிரோடு இருக்கமாட்டோம்,'' என்று ரகுபதியான ராமன் நினைக்கத் தொடங்கினார். (342)

கிருபாளு, பானுகுலநாதன் ராமச்சந்திரன், (எவ்விதம் மன்மதனை எரித்த சதாசிவன் காமாக்ஷியை அன்புடன் சக்கிர மத்தியில் வைத்து பெரும்பாக்கியம் உற்ருரோ,) அதுமாதிரி, நன்ருக தீர்மானித்த எண்ணப்படி சீதையை அணைத்து, அன்புடன் கட்டி, இன்பச்சொல்லால் அவளுடைய மனத்தை நிரப்பி, ஆனந்தமூட்டி, '' சீதே, நீயும் என்னுடன் வனத்திற்கு வருவாய்; இனி நாம் இருவரும் விவாதம் செய்வதற்கு நேரமில்லை. வேகமாக ஸகல ஏற்பாடுகளையும் தயார் செய்'' என்று பண்பாய் சொல்லி அருளினர். (343)

[தியானம்

ஹே ராமா, தனஞ்ஜயரே, ராமநாமத்தை சதா ஜபித்துக் கொண்டும், ராக்ஷஸிகளின் மத்தியிலுமிருந்த மஹா தபஸ்வியான சீதைக்கு எவ்விதம் ஹனுமாரால் சொல்லப்பட்ட ஸ்ரீராம சரிதம் அங்குலீயத்தைவிட மனத்திலுள்ள சந்தேகங்களை விலக்கி வியாதியைப் போக்கியதோ, பிற்பாடு மருத்துவன் ரத்தவ்ருத்திக்கும் புஷ்டிக்கும் அளிக்கும் மருந்தைப்போல யாக்ஞ்யவல்கியரால் ஜனகருக்குக் கொடுக்கப்பட்டதும், ஜனகரால் ஜானகிக்குக் கொடுக்கப்பட்டதும், ஜானகியால் ஸ்ரீராமனுக்கு அளிக்கப்பட்டதும், ஸ்ரீராமநாமம் எழுதப்பட்டதுமான அந்த சிறந்த அங்குலீயம் இருதடவைகளில் ராமனையும் சீதையையும் சேர்த்து வைத்தது. அப்பேற்பட்ட அங்குலீயத்தைப் பார்த்த சீதை, விசாலாக்ஷி, என்மனத்தை அபஹரிப்பதும் சிவந்ததும், வெளுத்ததுமான கண்களை உடையவள் தன் அழகிய முகத்தினுல் சிம்சுபா விருக்ஷத்தின்மீது ஆஞ்சநேயரைக் கண்டாள். எப்படி ராகுவினுல் விடப்பட்ட சந்திரன் பிரகாசத்தை மீண்டும் அடைவானே, அதுபோல சீதை, சிறுபெண்ணுகிய பாலை, என் பவரோகத்தைப் போக்கும் கங்காதேவி, நாயகனுடைய வார்த்தைகளால் சந்தோஷமடையும் ராஜ்யஸ்ரீ போல, மஹாமேதாவியான சீதை ஆஞ்சநேயரைக் குளிரக் கடாக்ஷித்தாள். அப்பேற்பட்ட சீதை ஸ்ரீதேவி என்கிற பெயருடன் முன்பு பிருகுவுக்கும் கியாதிக்கும் பெண்ணுகப் பிறந்தாள். அந்த ஸ்ரீதேவியினுல் கடாக்ஷிக்கப்பட்ட ஸ்ரீராமா, வனம் என்கிற தர்மாரண்யத்தில் உபநிஷத்தின் தத்வமாகிய நீங்கள் இருவரும் உல்லாச வண்டுகள் போல முனி ஜனங்களிடம் சஞ்சரித்தீர்களே, சாரங்க ராமா, சீதையான அழகானதும் கும்பமான ரத்ன கலசங்களில் அடைக்கப்பட்ட அம்ருதமயமான ஸ்தனங்களைக் கண்டு உள்ளத்தில் ஆனந்த

மடைந்த ராமா, காஞ்சியில் காமாக்ஷி வீற்றிருப்பது போல என் உள்ளத்திலும் அப்பேற்பட்ட ஆனந்தமயமான சீதாராமர் குடி கொள்ளவேண்டும். தந்துவர்த்தனர் என்கிற பெயருக்கு ஏற்ப உங்கள் இருவர்களிடம் எனக்கு உள்ள பாசபந்தங்களை விருத்தி செய்து, எவ்விதம் வெண்ணெய் தயிர்பால் இவைகளில் ஒளிந் திருப்பதுபோல, எவ்விதம் உமை சதாசிவனின் ரஹஸ்யத்தை அறிந்து அவனிடம் ஒட்டிக்கொள்கிருளோ, அதுபோல பிரும்ம ரூபியாகிற என்ஜீவன் க்ஷேத்ரக்ஞகிற உன்னை சதா அடையவேண்டும். நரநாராயணர்களின் தத்வமாக விளங்கும் பிரும்ம பரமாத்மாவே, நீர்ஜீவனுகிய என்னை ஸர்வசாக்ஷியாக எல்லா உலகங்களுக்கும் ஹிதத்தைச் செய்யும் பரமாத்ம ஸ்வரூபி யாகி, ஜலபிந்து தாமரை இலையில் இருப்பதுபோல என் சரீரத்தில் இருந்துகொண்டு என்னை உஜ்ஜீவிக்கச் செய்கிறீர். பிருகுவின் பாதத்தை லக்ஷணமாகக்கொண்ட நாராயணு, உம்மால் அடையப் பட்ட இந்த சரீரம் உம்மை சூக்ஷ்மமாகக் கொண்ட ஜலஸ்வரூபி யான மனத்தில் சம்பந்தப்பட்ட ஆத்மாகவாக இருக்கிறீர். ஸத்வ ரஜஸ்தமஸ் ஆகிற புத்தியுடன் கூடின சரீரத்தை ஜீவனுல் அனுபவிக்கப்படும்போது, நீர் சாந்தராகவும், சாக்ஷியாகவும், ஒன்றிலும் சம்பந்தப்படாதவராகவும் சேஷ்டைகள் அற்றவராக வும், ஜீவனுடைய ஒழுக்கங்களைக் காணும் சாக்ஷிபோலவும், முக்தர்களை தன் சேர்க்கையால் ஆனந்திப்பவராயும், உம்மை வணங்கி லகுவான ஆகாரம் முதலிய நியமங்களாலும், பரிசுத்த மான புத்தியாலும் உம்மையே பார்த்து தியானித்துக்கொண் டிருக்கும் யோகிகளுக்கு முக்தியைக்கொடுக்கும் முகுந்தராகவு மிருக்கிறீர். ஜனர்த்தனு, என் காமமும், கோபமும், லோபமும், மோஹமும், பயமும், பசியும், சிரமமும், சோகமும் போய், என் மனத்தில் இருக்கும் "ஷ்ருதிவேத்யம்" என்கிற பொருளை நான் பிருகுமஹரிஷி பரத்வாஜருக்கு உபதேசித்தபடி அறியவேண்டும். ஸர்வாத்மன், நீயும் என்னை அறிகிருய். அதனுல் உன்கிருபையை எனக்குக் காட்டமாட்டாயா? ராமநாமத்தைச் சொல்லி சுகித்துக் கொண்டிருக்கும் தியாகராஜர், நாரதர், துளசிதாஸர், பராசரர், வால்மீகி, ஆஞ்சநேயர், சீதை எனக்கு அருள் செய்யமாட்டார் களா?]

ஸ்ரீராமச்சந்திரனுடைய தேவாம்ருதமான, "வனத்திற்கு நீயும் என்னுடன் வா" என்கிற வசனங்களை சீதை கேட்டாள். அவளுக்கு இப்பேற்பட்ட வார்த்தைகளைவிட எந்த வார்த்தைகள் மிக்கப் பிரியத்தைச் செய்யக்கூடும்? தன் மாமியாராகிய

கௌஸல்யாதேவியின் பாதங்களில் விழுந்து நமஸ்காரம் செய்து ஆசீர்வாதம் பெற்ருள். கௌஸல்யா சொன்னுள், "ராமா, நீயும் சீதையும் சீக்கிரம் அயோத்திக்கு திரும்பிவந்து எங்கள் துக்கங்களையும் உங்களையே நினைத்துக் கொண்டிருக்கும் அயோத்திவாசிகளின் துக்கங்களையும் போக்குவீர்களாக. நீங்கள் இருவர்களும் என்னை எந்தக் காலத்திலும் ஒருக்காலும் மறக்கக் கூடாது." (344)

"ஹே பிரும்மாவே, உன்னுல் விதி என்கிற சொல்லால் எவ் விதம் காரியங்கள் மாறுபாட்டை அடைகின்றன? உன்னுடைய சங்கல்பம் என் விஷயத்தில் மாத்திரம் எவ்விதம் இருக்கிறது? நான் இந்த திவ்யதம்பதிகளை மீண்டும் தரிசிப்பதற்குப் பாக்கியம் படைத்தவளாக இருப்பேனே, அந்த சுதினம் எப்போது எனக்கு கிடைக்கும்? அந்த சுபமான நேரம் எப்போது வரும்? நான் உயிரோடிருந்து சந்திரனைப்போல முகங்களையுடைய அந்த இருவர்களையும் பார்ப்பதற்கு ஏற்படும் சந்தர்ப்பம் மீண்டும் எனக்கு என் வாழ்நாளில் கிடைக்குமா?" (345)

"உன்னை "வத்ஸ," செல்வமே, ரகுபதி, ரகுவர, பையா, புத்ரா, என்று அன்புடன் அழைத்து, என் ஹ்ருதயத்தில் அன்பாகிற அம்ருதத்தினுல் ஸ்ரீதரனுகிய உன்னைத் தழுவி, சந்தோஷத்தை அடைந்து, கண்களால் எப்போது பார்ப் பேன்?" (346)

துளசிதாஸர் சொல்லுகிருர் "கௌஸல்யாதேவியினுடைய அப்ராக்ருதமான ஸ்நேகங்கள், அந்த ஸ்நேக வாசனையால் வரும் ஆழமுள்ளதும் கம்பீரமானதுமான வசனங்கள் அதிபிரேமை யால் வரும் வார்த்தைகள்." ஆனுல் பிரபு ஸ்ரீராமன் வேறுவித மாக நினைத்தார். "இப்படிப்பட்ட மிக்க பாசத்தினுல் கட்டப்பட்ட ஜீவனைப்போல அவள் என்மீது கட்டப்பட்டிருக்கிருள். அத னுல் அதிக வியாகுலம் அடைந்தவளாக இருக்கிருள். நான் பிரிந்துபோவதால் பயப்படுகிருள். இவளுக்கு வார்த்தைகள் வெளிவர மறுக்கின்றன." என்று அவளுடைய அப்ராக்கிருத மான பிரேமையை நினைத்துப் புகழ்பவராக தன் தாயாரை ஆஸ்வாசப்படுத்தினுர். அந்த சமயத்தில் ஏற்பட்ட ஸ்நேகவச னங்களையும் பாகவதர்களைக் காக்கும் பகவானுடைய அரவ ணைப்பு வார்த்தைகளையும் யாரால் எவ்விதம் விவரிக்கமுடி யும்? (347)

அந்தசமயம் ஜானகி தன் மாமியாரின் கால்களைப் பிடித்துக் கொண்டு மதுரமாகச் சொல்ல ஆரம்பித்தாள். "தாயே, நானும்

உங்களைப்போல சாதுஜனத்தை விட்டுப் பிரியும் அபாக்கியவதி. [பாகவத கைங்கர்யமாகிற] உங்களைவிட்டுப் பிரிய நேரிட்டிருக்கிற படியால் நான் தங்களுடைய சேவை பாக்யங்களை இழந்துவிட்டிருக்கிறேன். இந்த தெய்வம், நான் உங்களை இதுவரை ஆராதித்தபடியால், ராமனுடைய சேர்க்கையாகிற வனவாசத்தை எனக்குக் கிடைக்கும்படி செய்தது. ஆனால் என் மனோரதமாகிற உங்கள் சேவையையும், உங்கள் மனோரதமாகிற நான் அயோத்தியில் இருப்பதும் இல்லாமல் போயிற்று.'' (348)

'' அம்மா, தாங்கள் வருத்தங்களை விட்டுவிடுங்கள். கிருபை கூர்ந்து எங்களை நினையுங்கள். கர்மத்தின் கதிமிக்க கடூரமாகவும் யாவராலும் தாண்டக்கூடாதபடியு மிருக்கிறது. என்னிடமோ, என் பதியினிடமோ, மோஹத்தினால் குற்றம் தோஷம் யாதையும் சொல்லவேண்டாம்.'' இவ்விதமாய் சொல்லும் சீதையைக் கேட்டு மாமியார் மீண்டும் அதிக வியாகுலம் அடைந்தாள். அவளுடைய தீனமான தசையை யார்தான் வர்ணிக்க முடியும்? (349)

அந்த பொன் போல விக்ரஹமாகவிருக்கும் சீதையை கௌஸல்யாதேவி இறுகத் தழுவிக் கொண்டாள். முத்தமிட்டாள். தடவிக் கொடுத்தாள். மீண்டும் கட்டிக் கொண்டாள். அவளுடைய ஸ்பரிசத்தை விட மனமில்லாதவளாக கௌஸல்யை அவளுக்கு தைரியத்துடன் சிக்ஷையாகிற நற்புத்திமதிகளைச் சொன்னாள். தனது தீனஸ்திதியை வெளிப்படுத்தினாள். மங்கள ஆசீர்வாதங்களைச் செய்தாள். '' நீயும் ராமனும் கங்கையும் யமுனையும் சேர்ந்து வாழ்வது போல நித்ய சங்கம் நித்ய சேர்க்கை அடைந்தவர்களாக, என்றும் பிரியாத மனோ பாவத்துடன் வாழுங்கள்.,'' என்று சுபமான மங்கள ஆசீர்வாதங்களை சீதா ராமனுக்கு உதார ஹ்ருதயத்துடன் கொடுத்தாள். (350)

சீதாதேவி தன் மாமியாரால் சொல்லப்பட்ட ஒவ்வொரு புத்திமதியையும் நன்றாகத் தெரிந்து கொண்டு, அவளிடமிருந்து சிறந்த மங்கள ஆசீர்வாதங்களையும் பெற்றுக் கொண்டு அவளுடைய தீர்த்தம் போல புண்ணியத்தை தரும் பாத கமலங்களை சுக்ருத பிரணாமம் செய்து, அந்த பாத துளிகளை தன் சிரஸில் அலங்கரித்துக் கொண்டு விடை பெற்றுச் சென்றாள். (351)

[தியானம்

ஹே ராமா, சீதா, ராமானுஜரே, மஹா உரகரே, தண்டரே, யமரே, அந்தகரே, அமித விக்ரமரே, கமலநயனா, வாஸுதேவா,

விஷ்ணோ, தரணிதரா, அச்யுதா, சங்கு சக்ரபாணே, ஐயா, ஸ்வாமி, இந்த பவசாகரத்தில் யமனுக்கும் யம தூதருக்கும், யம பாசத்திற்கும், யம தண்டத்திற்கும், யம யாதனைக்கும் பயப்படும் எங்களை நீர்தான் காப்பாற்ற வேண்டும். இந்த சம்சார சாகரத்தில் தவிக்கும் எங்களுக்கு காருண்ய சிந்தோ, ஹேவிஷ்ணோ, உம்மைத்தவிர எங்களுக்கு யார் ரக்ஷை? எந்த பிராம்மணன் நியமமும், ஆசாரமும், ஆத்ம ஞானமும், பொறுமையையும், அடக்கமுள்ளவனுகவும், பொருமை அற்றவனுகவும், சாவித்திரி மந்திரத்தைச் சொல்லுவானே, எந்த வைஷ்ணவன் பகவான் அனந்தனை தன் ஹ்ருதயத்தில் நிறுத்தி ஸ்திர புத்தியுடன் சகல பிரபஞ்சத்தையும் வாஸுதேவமயமாகப் பார்க்கிறானே, எந்த சுத்த ஹ்ருதயமுள்ளவன் கர்வம், அவமானம், மாத்ஸர்யம் இவைகள் லவலேசமுமில்லாமலும் வர்ண தர்மங்களைச் செய்து கொண்டு ஸுஹ்ருதயமாக, மற்றவர்களின் பொருள்களில் ஆசையில்லாதபடி மற்றவர்களைப் பிடித்து ஹிம்சை செய்யாமலும், நிர்மலபுத்தியுடன் கலியின் கல்மஷமில்லாதபடி ஸர்வதா ஜனுர்த்தரை ஏகாந்திகளின் பக்திப்படி அனன்ய பாவத்துடனும், புருஷவரராகிய விஷ்ணுவை ஆராதிக்கிறானே, ஸநாதனமான வாஸுதேவரை எவ்விதம் புதிய சாலவிருக்ஷம் தன் ஹ்ருதயத்திலிருந்து அம்ருமயமான ரஸத்தை வெளிப்படுத்துவது போல, தன் ஹ்ருதயத்தில் விபூஷணனுக அலங்கரித்துக்கொண்டு அக்னியில் வார்த்த நெய் ஆஹுதிபோல ஜ்வலிக்கிறானே, அவனுக்கு உம்முடைய பிரஸாதமாகிற யமபயம் கிடையாது. அம்ருதரே, சங்கர்ஷணரே, மார்க்கண்டேயரால் பூஜிக்கப்பட்ட காலரே, ஆஞ்சநேயரே, ராமா, துஸ்ஸ்வப்னநாஸரே, பீஷ்மர் தர்மருக்கும், பீஷ்மர் நகுலனுக்கும், காளிங்கரிஷி பீஷ்மருக்கும், பராசரர் மைத்ரேயருக்கும் சொன்ன யமகீதையைச் சொன்னேன். லக்ஷ்மணரே, மஹா உரகரே, என் ஆசார்யரே, உம்மால் சேவிக்கப்பட்ட சீதா ராமனே எங்களுக்கு தஞ்சம்.]

இந்த சமாசாரம் லக்ஷ்மணனுக்குத் தெரிந்தது. அதிவியாகுலமடைந்து, ரத்த சிவப்பினுல் கோபித்த அவருடைய முகம் ரௌத்ராகாரமாகி விட்டது. அவருடைய சரீரம் நடு நடுங்கிக் கொண்டு, புளகாங்கித ரோமாஞ்சலியுடன் தன் நயனங்களில் தாரை தாரையாக நீரை சொறிந்து கொண்டு, பகவான் ராமச்சந்திரனிடம் அதிபிரேமை அடைந்தவராக, ராமனுடைய சரணங்களை இறுகப் பிடித்துக் கொண்டு அழுதார். (352)

அவருக்கு பேச்சு வார்த்தைகள் ஒன்றும் வெளிவரவில்லை. மரிக்கப் போகும் மீன் குஞ்சு தண்ணீரிலிருந்து எடுபட்ட பின்பு எவ்விதம் துடிக்குமோ, அவ்விதம் தீனமான ஸ்திதியை அவர் அடைந்திருந்தார். அவருடைய ஹ்ருதயத்தில் பலமான யோசனைகள் எழும்பிக் கொண்டிருந்தன. ('' நான் அனன்ய பாவத்துடன் என் குருவாகிய ஹரியினிடம் வசம் அடைந்து, ஸ்வதந்திரமின்றி பகவான் விஷ்ணு என் நியந்தா என்கிற வைஷ்ணவ பக்தியுடன் ஆராதித்திருந்தால், எவ்விதம் ஸ்வர்ணமானது ஒரே வஸ்துவாய், கடகம், முகுடம், காது குண்டலங்கள் ஆகிய வித விதமான ஆபரணங்களைச் செய்வதற்கு உபயோகப்படுகிறதோ, எவ்விதம் ஹரி பகவான் தேவதைகள், மனுஷ்யர்கள், பசு, பக்ஷி ஆகிய நானு வித ஸ்ருஷ்டிகளில் அந்தர்யாமியாக விளங்குகிருரோ, எவ்விதம் வாயு பகவான் சாந்தமடைந்த பின்பும், தூசியுடன் விளங்கும் பிருதிவியின் அணுவை குணங்களால் உண்டாகிய ஸமஸ்த தேவதை, மனுஷ்யர், பசு, பக்ஷி, ஆகிய எல்லா வஸ்துக்களையும் ஸநாதனமான பரமாத்மாவிடம் சேர்க்கும் கருட மூர்த்தியாக விருக்கிருனே, அப்பேற்பட்ட வேதங்களால் புகழப்படும் பகவானை, சுரர்கள் சேவிக்கும் நாராயணனை, பரமார்த்த புத்தியுடன் அவருடைய சரணகமலங்களை நான் பிடித்து நமஸ்கரிக்கிறேன்.'') ஹே ஸ்வாமி, தயாபரா, என்னுடைய சுக்ருதங்கள், புண்யங்கள் உம்மைத் தவிர யார் இருக்க முடியும்? என் பாபங்களையும் நீர் தான் சுமக்க வேண்டும். ஸமஸ்தாபாபபந்தங்களிலிருந்து என்னை விடுவிக்கும் புருஷரே, நீர் கிருபை கூர்ந்து என்னைத் தூரத்தில் தள்ளி விட்டு நீர் தனியாக வாசம் செய்ய நினைக்காதீர்.'' (353)

''ரகுநாதரே, நான் உம்மிடம் புதிதாக என்ன சொல்லுவேன்? '' என்னை வீட்டில் இரு '', என்று தயவு செய்து சொல்ல வேண்டாம். உம்முடைய அனவரதமான சேர்க்கையை என்னுடைய பரம புருஷார்த்தமாகக் கொடும்.'' வைஷ்ணவ பக்தியின் சின்னமாக அனன்யகதியை அடைந்த மஹா விரதமுள்ள லக்ஷ்மணன் தன்கைகளைக் கட்டிக் கொண்டு, தாஸஸ்வபாவத்துடன் இருக்கும் சிஷ்யன் குருவின் அனுக்ரஹத்தைப் பெறும் ஆவலுடன் இருப்பது போல, ராமன் லக்ஷ்மணனை அவ்விதம் கண்டார். சரீரம், மனம், வாக்கு இவைகளால் ஜீவனையும், வீட்டையும், தன் சுகங்களையும் தனக்காக அர்ப்பணம் செய்த அவனை மஹா பக்தனைக் கண்டார். ராமனே தன் பந்து, தன் பிதா, மாதா, குரு, தெய்வம் என்கிற ஏக பாவத்துடன் விளங்கும் இளைய பெருமாளைக் கண்டார். பிரபு. (354)

  

[தியானம்

சீதா ராமா, லக்ஷ்மணுக்ரஜா, லக்ஷ்மி வர்த்தனு, ஸ்ரீ கர்பா மஹா உரகரே, ராமதாஸரே, பீஷ்மரின் வதத்திற்காக சக்ரத்தை ஏந்திச் சென்ற அரவிந்தாக்ஷரே, அர்ஜுனனுல் திருப்பப்பட்ட கோவிந்தரே, புண்டரீகாக்ஷரே, வாரும், வாரும், என்னை ஆஸ்ர யித்துக் கொள்ளும். அடியேனுக்கு எல்லா உலகத்திலும் சிறந்த நன்மையைக் கொடுக்கும் ஸ்ரீ ராமா, தாரக பிரும்மமே, என் குரு நாதர்கள் சொல்லுகிற எந்த மார்க்கத்தில் செல்லுகிற யோகிகள் திரும்பாமலிருத்தலையும், திரும்பி வருதலையும் அடைகிறுர்களோ; அப்பேற்பட்ட இரண்டு கதிகளில் ஸர்வோத்தமமான கதியாகிற அவ்யக்தம் அக்ஷரம் என்கிற ஸ்தானத்தைக் கொடுப்பவரே, அர்ஜுனன் உம்முடைய விஸ்வரூபதர்சனத்தால் புளகாங்கித மடைந்து, வணங்கி, தழுதழுத்த குரலுடன், ''ஹ்ருஷிகேசரே, உலகமானது தேவரீருடைய மகிமையை கீர்த்தனம் செய்வதால், அதுவும் உம்முடைய ப்ரீதிக்காகச் செய்யப்பட்டால் அதிக சந் தோஷமடைகிறது. ஆயிரம் கைகள் உடையவரே, நான் மீண்டும் தங்களை நான்கு கைகளுடன் கூடிய கிரீடத்தை உடைய உம் முடைய திவ்ய ஸ்வரூபத்தை வனமாலையுடன் பார்க்க விரும்பு கிறேன். என் சரீரப்ருத், உம்முடைய சாஸனமாகிற தர்ம கட்டளை களின் வரம்பு மீறினுல் பயத்தை உண்டு பண்ணி, என்னைத் தண்டிப்பவரே, என்னை அப்பேற்பட்ட வழியில் போகாதபடி காக்கும் கிருபா நிதியே, லக்ஷ்மி நாராயணு, எனக்குப் பயத்தை நாசம் செய்பவரே,'' தர்மாத்மாவே, தியாகராஜர், நாரதர், பராசரர், வேதவியாஸர், இந்திரன், சாவித்திரி மந்திரத்தை அனுஷ்டித்து, சித்தி பெற்ற என் குரு மஹராஜர்களின் பாதரேணுவை எனக்குப் விபூஷணமாக அணிந்து கொண்டு, உம்மைத் தாஸ்ய புத்தியுடன் ஆஸ்ரயிக்கும் எனக்கு உம்முடைய ராம அவதாரத்தில் காட்டிய சௌஸப்யத்துடன் கட்டி அணைத் துக் கொள்ளும். யயாதி, ஸகர புத்திரர்கள், ஜமதக்னியின் புத்ரனுகிய பரசுராமர் முதலியோர் தர்மத்தையும் பித்ரு வசன பரிபாலனத்தையும் விலக்ஷணமாகக் கொண்ட மஹாத்மாக்கள் சித்தி பெற்றது போல உம்முடைய திருக்கண்களின் கடாக்ஷத் தால் என் பாபங்களை மறந்து, அனுக்ரஹியும் ஸ்வாமி. தியாக ராஜர், துளசிதாஸர் ஆகியவர்களையும், என் பந்து, யாக்ஞ்ய வல்கி யரையும் கடாக்ஷித்த ஞான பாஸ்கரரே, ''த்ரயிதாம்'' என்று சொல்லப்படும் வேதமயமாகவிருந்து, என்னுடைய மூன்று குணங்களைக் கண்ட அனந்த சயனரே, நான் உம்மிடம் வரும்

போது, உம்முடைய மூச்சுக் காற்ருல் என் குண தோஷங்களைப் போக்கி, நிர்த்தோஷனுக என்னை ஆட்கொள்ளும். ஹே சங்கர்ஷணுத்மன், நீர் அல்லவா அக்னி; சந்திரமா; ஜகத்திற்கு காரணமான விராட் புருஷன்; பரம் தேஜஸ் என்று சொல்லப் படும் ஸுஷும்ன என்றும் என்னுடைய நாடி; என் தோஷங்களை வற்றச் செய்யும் பாஸ்கரரே; கால ரூபியாக விளங்கும் பரமாக்ஷர ரூபியே, உம்முடைய கிரணங்களால் சந்திரனைப் போஷித்து, பித்ரு தேவர்களை ஸ்வதாஸ்வாஹா ரூபமாக திருப்தி செய்யும் யக்ஞாத்மன், பாரப்ருத், சுக்ல மால்யம் பரதரரே, சுத்தஸத்வமே, ஸவிதா, விவஸ்மான், ஸமஸ்த பூதங்களுக்கு ஆதி பூதமாகவும் பூதபாவனராகவும் விருக்கும் ஆதித்ய தேவதையே, உம்மை யாக்ஞய வல்கியர் அடிக்கடி சுக்ருத பிரணமம் செய்தது போல நானும் நமஸ்காரம் செய்து ஆராதிக்கிறேன். லக்ஷ்மி வர்த்தனு, அனந்த ஸ்ரீ, ராமானுஜரே, நாகசயனு, பாகவதாக்ரஜரே, என்னைக் காப்பாற்றும். ராம நாமத்தின் இரு அக்ஷரங்களின் சேர்க்கை போல, துளசி தாஸர் ராமனையும் லக்ஷ்மணனையும் என்றும் பிரியாத தம்பிகள் என்று சொல்லுகிருரே, அப்பேற்பட்ட ராம லக்ஷ்மணர்களே, சீதையின் கடும் வசனங்களால் பச்சாதாபப்பட்ட லக்ஷ்மணு, என்னைக் காப்பாற்று.)

ராமன் லக்ஷ்மணனை அணைத்துக் கொண்டு நயமாகவும் நாகரீகமாகவும் சீலவார்த்தைகள் அடங்கிய மஹா ஸ்நேகம் அர்த்த பாவங்கள், சுகத்தை வாரி அளிக்கும் அம்ருத சாகரமான வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தார். "என் தம்பி, ஆசை தம்பி, என்னிடம் அபாரமான ஸ்நேகம் நீ வைத்திருப்பதால், பரிணுமமின்றி ஆனந்த ஹ்ருதயமுள்ளவனுக நீ இருக்கிருய். ஆகையால் என் ஸ்நேகத்தை இழக்கப் போகிருமோ என்று நீ பயப்படுகிருய். உன்னைப் பக்குவப் படுத்திக்கொள். அதி ஸ்நேகத்தால் உன்னையே அறிந்து கொள்ளாமல் இருந்து விடாதே. ஸ்நேக பந்தத்தை அறுத்து, மோக்ஷமான ஆத்ம நிலையை அறிந்துகொள்." (355)

"மாதா, பிதா, குரு ஸ்வாமி ஆகிய பெரியோர்களின் வசனங்களுக்கு ஸ்வபாவமாக தலை வணங்கி, அடங்கி நடந்து, அவர்களுடைய சாஸனங்களைக் கௌரவப்படுத்து. அதனுல் நீ ஆத்ம கௌரவம் அடைந்து, அதன்மூலம் கார்ய கௌரவம் அடைவாய். ஜன்மத்தின் லாபத்தை அடைந்து கிருதகிருத்யனுக விளங்குவாய். இல்லாவிடில் தர்ம வரம்பு, தெய்வ நம்பிக்கையின்றி ஸ்வதந்தரமாக நடக்கும் அஹம்காரம்

முதலிய தோஷங்களால் நிரப்பப்பட்ட ஜன்மம் ஜகத்தில் கஷ்டப்படுவதுபோல, உன் வாழ்நாளும் வியர்த்தமாகிவிடும்.'' (356)

''எனக்கு சுகத்தைத் தரும் சகோதரா, உன் ஹ்ருதயத்தில் சாஸ்வதமான பரபிரும்மத்தை நினைத்துக்கொள். என் வார்த்தையைக் கேளு. மாதா பிதாக்களின் பாதங்களை சேவகம் செய். என் தம்பிமார்களான பரத சத்ருக்னன் அயோத்தியில் தற்போது இல்லை. நம்முடைய விருத்தரான பிதாவும், எல்லோருடைய கருணைக்குப் பாத்திரமான மஹாராஜரை, என் சார்பில் எனக்காக வருத்தப்படும் பிதாவை, அயோத்தியில் தங்கி, ஆஸ்வாசப்படுத்தி அவர் நன்மையைக் கருது.'' (357)

''இப்பேற்பட்ட தீனஸ்திதியில் நாம் இருக்கும்போது நான் உன்னை என்னுடன் வனத்திற்கு அழைத்துச் சென்றால் அயோத்தி அனாதையாகிவிடும்; உன் பிரிவாலும் எல்லாவிதங்களாலும் சோபை யிழந்து, லக்ஷ்மிகரம் வாடிவதங்கி, வற்றிப் போகும். குரு, மாதா, பிதாக்கள், பிரஜைகள், பந்து பரிவாரங்கள் ஆகிய எல்லோரும் பொறுக்கமுடியாத துக்கங்களை அடைவார்கள். நீ இருந்தாயாகில் அந்த துக்கபாரத்தை உன் சரீர ஆனந்தத்தால் நீ பொறுப்பாய். ஆத்மா ராமனாகிய நீ எல்லோருடைய துக்கத்தையும் போக்குவாய்.'' (358)

''அதனால் நீ இங்கே தங்கிவிடு. எல்லோருக்கும் மஹத்தான புஷ்டியைக் கொடு. நீயும் இல்லாதபோனால் எல்லோருக்கும் பெரும் கேடு விளையும். எந்த ராஜ்யத்தில் உன் போன்ற (பாகவத) பிரியர்கள் கோபித்துக்கொண்டு செல்லுகிறார்களோ, அந்த ராஜ்யத்தில் உள்ள அரசர் ஜனங்களாலும் ஸம்பத் விபூதிகளாலும் நேசத்துடன் சூழப்பட்டிருந்தபோதிலும், அந்த அரசர் சீக்கிரமாகவே நாசத்தை அடைக்கிறார் அன்றோ?'' (359)

''சுமித்திரையை ஆனந்திக்கும் லக்ஷ்மணா, இதுதான் சாஸ்வதமான நீதி. இதை நன்றாக அறிந்துகொண்டு, அதன்படி நடந்துகொள். வியாகுலம் அடையாதே.'' இப்பேற்பட்ட அர்த்த புஷ்டியுள்ள வசனங்களைக் கேட்டார் லக்ஷ்மணன். அதிக வியாகுலம் அடைந்தார். தாமரைப் பூப்போலவிருக்கும் அழகிய லக்ஷணமுள்ள அவருடைய முகத்தாமரை பனியைக் கண்டு சுருங்கி வாடுவதுபோல, அந்த குளிர்ந்த வசனங்களைப் பொறுக்க முடியாமல் வாடிப்போயிற்று. (360)

மஹா பிரேமையினால் விஸ்வாசமடைந்த லக்ஷ்மணன் தன் பாதுகாப்புக்காக உத்தரம் ஒன்றும் சொல்லவில்லை. (பாகவத ஸ்ரேஷ்டர்களின் பரம அஸ்திரமாகிய ஸாத்யோபாய

மாகிற பிரபத்தி என்னும் வழியைப் பின்பற்றினவனாக, கார்ப்பண்யம், செய்யமுடியாத காரியத்தில் முயற்சியைத் தடுத்து, நாராயணாஸ்திரத்தின் முன்பு நமஸ்காரம் ஒன்று செய்தலையே உபாயமாகக் கொண்டவர்கள் கர்ம பீடையிலிருந்து எவ்விதம் விடுபட்டார்களோ, அதுபோல லக்ஷ்மணன் தன் அகிஞ்சனத்தை முன்னிட்டுக்கொண்டு, தன் சொந்த இடமாகிய நித்ய விபூதியில் தன் ஸ்வபாவமான சேஷத்வத்தை நினைத்துக் கொண்டு, அர்ச்சாவதாரத்தில் எழுந்தருளியிருக்கும் பரம விபூதியாகிற ராமனை, சீதை எவ்விதம் முன்பே வழிகாட்டியிருந்தாளோ, அதுபோல "சேஷனுக்கு சேஷியின் உகப்பே பலன்" என்கிற கைங்கரியத்தில் ஆசை வைத்தவராக, பாகவத ஸ்ரேஷ்டரான லக்ஷ்மணர் சாஸ்திரங்களில் சொல்லப்படுவதும் பெரியோர்களால் அனுஷ்டிக்கப்படுகிறதும், கிருஷ்ணர் மஹா ஸௌலப்யத்துடனும் மஹாகாருண்யத்துடனும் அர்ஜுனனுக்குச் சுட்டிக்காட்டிய "ஸ்ரீமானான நாராயணனின் திருவடிகளே சரணம்" என்கிற வழியைப் பின்பற்றினவராக, ராமனுடைய திவ்ய பாதசரணங்களை, பிராட்டியும் ஆஞ்சநேயரும், சுகரும் போற்றும் திவ்ய சரணாரவிந்தங்களை, பரம பாக்கியவசத்தால் இறுகப்பற்றினான். எல்லோருக்கும் தலைவனாகவும் எல்லா சுகங்களிலும் மேன்பட்ட சுகமாக விளங்கக்கூடியதாகவும், சீதாபிராட்டியுடன் வனத்தில் ரமிக்கப்போகும் என்றும் பிரிவில்லாத ஸ்ரீமத் ராமச்சந்திரனுடைய திருவடிகள், திருவடிகளின் கைங்கர்யங்கள், எல்லாவிடங்களிலும், எல்லாக் காலங்களிலும் எல்லா அவஸ்தைகளிலும், பரிபூர்ண கைங்கர்யங்களின் விரோதிகளாகிற நித்ரை ஆகாரம் எல்லாவற்றையும் ஒழித்து, வேறு உபாயங்களில் சக்தி, அறிவு, அடியேனை அந்த ஸம்ரக்ஷணப் பொறுப்பிலும், அதன் பலனிலும் ஸம்பந்தம் கொள்ளாதவாறு, உன் சங்கல்பத்தினால் நான் நடப்பேன் என்று நினைத்தவராய், ராமனுடைய திருவடிகளைப் பற்றினார். பிரபன்னனுக்கு ஐந்து அங்கங்களாகிற (1) நான் எம்பெருமானுக்கே சேஷமாயிருப்பவன், நான் எனக்கு சேஷனல்லேன்; பிராட்டியுடன் கூடிய எம்பெருமானை நான் சதா அனுபவித்துக் கொண்டு கைங்கர்யம் செய்வேன்; (2) நான் எனக்கு உரியவனல்லன், என்னுடைய அவித்யை, கர்மம் அவைகளின் தொடர்பாகிய பிரகிருதி ஸம்பந்தம் ஆகிய எல்லா அநிஷ்டங்களை அடியேனுக்கு ராம கைங்கரியத்துக்காக ஒழிக்கவேண்டும். (3) எனக்கு வேறு உபாயமின்றி நீயே உபாயம் என்கிற

கோப்திருவத்தைக் காட்டுவது (4) நான் எம்பெருமானுக்கே பரமாக (பொறுப்பாக) ஸமர்ப்பிக்கப்பட்டேன் என்கிற ஆத்ம ஸமர்ப்பணம். (5) ஜீவனுகிய நான் எம்பெருமானுக்கே சேஷமாயிருப்பவன்; அவனிடம் பிரபத்தியைச் செய்தவன், அவனுக்கு பரிபூர்ண கைங்கரியத்தைச் செய்வேன். இவ்விதம் நமஸ்கரிப்பதால் அவரை உபாயமாக அடைந்து, அதன் பலனுகிய அவருடைய அனுபவித்திலாகிய பலனையும் அடைவேன் என்று நினைத்து) ராமனுடைய சரணகமலங்களைப்பற்றி, தீனமான வசனத்தால் சொன்னர். "நீர் எனக்கு ஸ்வாமி; நான் உமக்கு தாஸன். நீர் என்னைவிட்டு செல்வீர் ஆகில், நான் என்ன செய்யக்கூடும்?" (361)

"ஹே கோஸாயி, என்னை ஆட்கொள்ளவந்த தீப்த மூர்த்தியே, நீர் எனக்கு பரம உபகாரமாகிற சிக்ஷை புத்திமதிகள் சொன்னீர். நான் மஹா யோகிகளைப்போல தீர சித்தமுள்ளவனல்ல. ஜாதி, பிறப்பால் ஸஞ்சல ஸ்வபாவத்துடன் கூடியவன். என்னுல் செய்யக்கூடாதபடி அவைகள் அதிகிரமித்திருக்கின்றன. வேதங்களில் சொல்லப்பட்ட நீதி அனுஷ்டானங்கள் ஸ்ரேஷ்ட புருஷ அதிகாரிகளால் மிக்கத் தைரியத்துடன், தர்மதுரந்தராகச், செய்யக்கூடிய அனுஷ்டானங்கள்." (362)

"ஸ்வாமி, நான் ஒரு சிசு. உம்முடைய ஸௌலப்ய ஸ்நேகத்தின் பழம் நான். நான் உங்கள் அன்புப் பார்வைகளால் நளினம் பெற்றவன். அதனுல் கடூரமான நியமங்களைச் செய்யக்கூடும் ஆசார நீதிகளை அனுஷ்டிக்க சக்தியற்றவன். எங்கேயாவது தயாளு, ஸ்வாமி, ஒரு ஹம்ஸப்பேடு மந்திர மலையையோ, மேரு பர்வதத்தையோ தூக்குவதற்கு சக்தி படைத்ததா? தீனரக்ஷகரே, எனக்கு நீர்தானே குரு, மாதா, பிதா. நான் வேறு ஒருவரையும் அறிகிறேனில்லை. என் ஸ்வபாவம் பிறந்தது முதல் நாம் இருவரும் ஒன்றுகவே ஒரு தொட்டிலில் கண்வளர விடப்பட்டோமே. அந்த விஷயம் உமக்கு நன்றுகத் தெரியுமே." (363)

"இந்த ஜகத்தில் ஸ்நேகம் என்கிற சொல்லுக்கு என்ன அர்த்த சம்பந்தம் இருக்குமோ, கூட சகாவாக இருப்பது, உம் ப்ரீதிக்காக நான் வாழ்வது, உம்முடைய ப்ரீதியையே நான் எதிர்பார்ப்பது, இவைகள்தானே ஸ்வாமி, வேதங்களில் பொதைக்கப்பட்டிருக்கிற ரத்ன சுருக்கங்கள், நீதி உண்மைகள், சாஸ்வதமான தர்ம மர்மங்கள், மஹா ரஹஸ்யங்கள். தீனபந்து, என் உள்ளத்தில் இருக்கும் அந்தர்யாமி, (சர்வசாக்ஷியாக

இருக்கும் நீர் எனக்கு "ஏகம்" என்கிற சொல்லின் அர்த்தங்களாகிற (1) நான் அனுஷ்டிக்கும் உபாயம் (2) மழையை நோக்கி நிற்கும் சாதக பக்ஷிபோல ஏங்கும் என்னை நீர் கருணையோடு அனுகிரஹிக்கவேண்டும் என்கிற ஸங்கல்பமாகிய ஸித்த உபாயம்; (3) வேறு உபாயம் செய்ய சக்தியின்றி ஸாத்யோபமாகிய பிரபத்தியைச் செய்வது (4) நீர் என் சுமையை ஏற்று, பலன் தருவது (5) பலன் தரும் ஸ்வாமியாகிற நீர் எம்பெருமான்; என்னை ஆட்கொள்ளவந்த தர்மமூர்த்தி வேறு ஒன்றையும் எதிர்பாரால் தனித்து, நிற்கிறீர். (6) வருந்தி நிற்கும் ஜீவனை எல்லா வழிகளுக்கும் உள்ள பலன்களைவிட மஹாபெரியதும், ஸர்வசக்தித்வம், ஸர்வேஸ்வரத்வம் என்கிற குணங்களால் பிரதிபாதிக்கப்படும் மோக்ஷ பதத்தையும் அபார கருணையினால் கொடுக்கும் தயாளுவல்லவோ நீர், எவ்விதம் பிராட்டியும் நீரும் சேர்ந்தவர்களோ,) அதுபோல சேதனனும் பகவானும் சேர்ந்தவர்கள் என்கிற பாவத்துடன் உம்மை நான் சரணமடைகிறேன்." (364)

"நீர் சொல்லிய தர்மநீதி உபதேசங்கள் எனக்கு அவசியமில்லை. கீர்த்தி, விபூதி ஐஸ்வர்யங்களாகிற புத்ரன், மித்ரன், பந்து, தூதன், ஸாரதி, மனைவி, போகபோக்யங்கள், கல்வி ஆசரணை, ஸுகதியாகிற சிரத்தையோடு தர்மத்தையும் ஸாதுக்களைப் பூஜிப்பதும் ஆகியவைகளில் ஆசைப்பட்டு இருப்பவர்களுக்கு அல்லவா உம்முடைய நீதி அனுஷ்டானம் தேவை. ஹே கிருபாசிந்து, என் சம்பந்தப்பட்டவரையில் நான் மனம், கர்ம வசனங்களால் உம்முடைய சரணாரவிந்தங்களில் ஆசையுடன் பற்றினவன். (அப்பேற்பட்ட பாகவத உத்தமனாகிய என்னை, பரம வைஷ்ணவனாகிய என்னை, சேதன அசேதன ஈஸ்வரர்களாகிய தத்வம் ஆகிய மூன்றிலும், விவேகம் பெற்ற என்னை—ஐஸ்வர்யங்கள் யாவும் அழியும் தன்மை உடையது, அதனால் அற்பமானது என்கிற தோஷங்கள் நிரம்பினதாக அறிந்து, அவைகளை வெறுத்து பெரிய பலனாகிய மோக்ஷத்தை உம்மால் அடையத்தக்கவன் இவன். புண்ய பாபங்களிலிருந்து விடுபட்டவன் இவன், கிருஷ்ணன் அர்ஜுனனுக்குச் சொன்ன மாதிரி மாசுச: "நீ துக்கமடையாதே, உன்னை ரக்ஷிக்கவில்லையாகில் எனக்கு தீங்கு வரும்; இனி நீ துக்கிக்க வேண்டாம், நான் ஒருக்காலும் பொய் சொன்னதில்லை, சொல்வதில்லை; ராமன் வாக்கினால் மாறுபட்ட விஷயம் ஏற்பட்டது, என்கிற பேச்சும் கேட்கக்கூடாதவனாக ஆகி, இதோ இந்த க்ஷணத்தில்

பலனைப் பெற்றுக்கொள்'' என்கிற உதாரமனத்துடன் என்னை அரவணைத்துக்கொள்ளும். ஐயா, நீர் என்னை அனுக்ரஹிப்பதால் நீரும் நானும் கிருதார்த்தர்களாக ஆவோம், நானும் உமக்கு கிருதக்ஞனாக ஆவேன்'' என்று சொல்லாமல் சொல்லும்) லக்ஷ்மணன் ராமனைப் பார்த்து, சரண கமலங்களில் பிடித்துக்கொண்டிருப்பவனாக, ''நான் உம்மால் பரிதியாகம் செய்வதற்கு யோக்யமா?'' என்று கேட்பதுபோலிருந்தான். (365)

[தியானம்

ஹே ஸாகேதராமா, கனகபவன சீதா, அயோத்யாபுரி வாஸா, தர்ம க்ஷேத்திரங்களில் முதல் க்ஷேத்ரமாக விளங்கின ஸரயு நதி தீர வாஸா, கோமதி ஸரயு இவைகளால் சேவிக்கப்பட்ட ஸ்ருங்கார ராமா, கைகேயியினால் சீதைக்குக் கொடுக்கப்பட்ட நித்ய ஸ்ரீமங்களா, ஸ்காந்த புராணத்தில் அயோத்திக்கு வருபவர்களுக்கு அஸ்வமேத பலயாகம் கிடைக்கும் என்று சொல்லப்படுகிற மேன்மை வாய்ந்த நகரவாஸா, துளசிதாஸரால் போற்றப்பட்ட அயோத்யா ராமா, சங்கரபாக்வதியினால் போற்றப்பட்ட ஸாகேதராமா, தியாகராஜரால் உபாஸிக்கப்பட்ட ஸாகேதபுரி வாஸா, சீதையினால் பெருமையை அடைந்த மனோஹர ராமா. என் ஹ்ருதயத்தில் வஸிக்கும் லக்ஷ்மி நாராயணா, லக்ஷ்மணனால் ஆராதிக்கப்பட்ட ரகோத்தமா, பார்கவ ரிஷியினால் பூஜிக்கப்பட்ட அயோத்யாபுரிவாஸா, ஆதிரங்கநாதா, ஆழ்வாராதிகளால் போற்றப்பட்ட இக்ஷ்வாகுகுல ராமா, தசரத ராமா, என்னைக் கடாக்ஷித்த ஆஞ்சநேயரால் சேவிக்கப்பட்ட ரகுகுல ராமா, சீதையை முன்னிட்டு, புருஷகாரம் செய்த ராமா என்னையும் என் குடும்பத்தினர்களையும் பந்து மித்ர சுஹ்ருதுக்களையும், அயோத்யாபுரி வாஸிகளையும் கரை ஏற்றினது மாதிரி, ஸம்சார தாபங்களிலிருந்து கை கொடுத்து கரை ஏற்றி வைக்கவேண்டும். உன் கிருபையை நாடிவரும் எங்களை ஸரயுநதியின் அம்ருதத்தால் பொழிந்து ரக்ஷணை செய்யவேண்டும்.]

கருணை ஸிந்து என் ராமன். பிறருடைய வருத்தத்தை சகிக்க முடியாதவரும், வெண்ணெயைப் போல உருகும் நெஞ்சத்தினன் அயோத்யா ராமன். தன் சரீரம் போல தனக்காக வாழ்ந்து வரும் லக்ஷ்மணனுடைய உள்ள தாபங்களை அறிந்த அந்தர்யாமியானவரும் மஹாத்மாவுமான ராமன் தன் தாஸனான லக்ஷ்மணனின் உள்ள பாவங்களைப் புரிந்துகொண்டு, அவனைத் தடவிக் கொடுத்து உச்சி மோந்து, அணைத்துக் கொண்டு, அதிமிருதுவான வசனங்களால் அவனுடைய தாபங்களைத் தணிப்பவராகி,

தன்னுடைய பரம ஸ்நேக போக்யத்தை அனுபவித்தனுனபடியால், அர்த்த விசேஷங்கள் நிறைந்த வசனங்களால் அவனுடைய அறிவுக்கு புத்தி போஷகம் செய்தார். (366)

''என் பிரியமுள்ள தம்பி, உன் தாயாரான சுமித்திரையிடம் சென்று விடை பெற்றுக்கொள். நீயும் என்னுடன் வனத்திற்கு வா. தாமதம் செய்யாதே.'' தன் ஸ்ரேஷ்டமான அண்ணனின் வார்த்தைகளை ஆனந்தத்துடன் கேட்டான் லக்ஷ்மணன். தன் தகப்பனுரான தசரதர் போல ராமனை நினைத்து நடந்துவரும் லக்ஷ்மணனுக்கு பரம ஆனந்த மேற்பட்டது. ரகு குலத்தில் பிறந்து, சத்ருக்களுக்கு தாபத்தைக் கொடுக்கும் லக்ஷ்மணனுக்கு ஸ்ரீராமனுடைய ஹிதமான வசனங்கள் பயத்தை தெளிவித்து பரம போக்யமான ஸாகேதராமனை நித்ய கைங்கர்யப் பிராப்தியாகவும், மஹாலக்ஷ்மியின் அவதாரமாகிய சீதையை புருஷகாரமாக அடையும் பரம லாபம் கிடைத்தது. அவனுடைய பெரும் பயங்கள் நாசமடைந்து, மோக்ஷலக்ஷ்மியை ஆராதிக்கும் பாக்யம் அவனுக்கும் கிடைத்தது. (367)

அந்த லக்ஷ்மி வர்த்தனனுன லக்ஷ்மணன் பாகவத ஸ்ரேஷ்டையான சுமித்திரையிடம் ஓடிவந்தான். கண் திருஷ்டி மீண்டும் கிடைத்த குருடனைப்போல ஆனந்தித்தான். (அவனுடைய தாயார் ரங்க நாதனுகிய இக்ஷ்வாகு குல தெய்வத்தை ஆராதித்து, ராம கைங்கர்யத்துக்காகவே அவனைப் பெற்றெடுத்த மஹா பாக்யவதி.) அவளுடைய புண்ய பாதங்களில் தன் சிரஸை வைத்து நமஸ்கரித்தான், (ராம கைங்கர்யம் பெறுவதற்கு லக்ஷ்மணன் வரப்பிரசாதம் கேட்டான். சுத்தமான ஹ்ருதயத்தில் ரகு நந்தனன் ஜானகி ஸமேதராக இடம் பெற்று த்யான பூர்வமாக அவன் அவர்களை அர்ச்சித்துக் கொண்டிருந்தான்.) பேசாமல் இருந்தான். (368)

மஹா மலினமாகவும் உத்ஸாஹம் இழந்த லக்ஷ்மணனைக் கண்டதும், சுமித்திரை லக்ஷ்மணனிடம் காரணத்தை வினவ லக்ஷ்மணன் எல்லா விருத்தாந்தங்களையும் எடுத்து உரைத்தான். சுமித்திரை அதிகடோரமான வசனங்களைக் கேட்டதும் எவ்விதம் நான்கு பக்கங்களிலும் ஒரு பெண்மான் அபலையாகி நிராதரவாக தாபங்களைப் பெறுக்கும் வனத்தின் மஹா அக்னி ஜ்வாலைகளால் ஏற்படும் பயங்களையும் துக்கங்களையும் சகிக்குமோ, அதுபோல தாபப்பட்டாள். (369)

லக்ஷ்மணன் பெரிய உண்மையைக் கண்டுகொண்டான். ''எவ்வளவு பெரும் அனர்த்தம் சம்பவிக்கப்பட்டது. இப்பேற்

  

பட்ட உத்தம ஸ்நேக விசேஷத்தினுல், நம் இச்சையாகிற சீதா ராம கைங்கர்ய ராஜ்யத்தை இழக்கநேரிடுமே,'' என்கிற பயம் அவனைப் பிடித்துக்கொண்டது. தன் ஆத்ம தெய்வமான ராமனை பிரார்த்தித்துக் கொள்கிறவனுக "ஹே தெய்வமே, என்னுல் இந்த கஷ்டம் பொறுக்கமுடியாது. நீர்தான் என் தாயாரைப் ப்ரேரணை செய்து உம்முடன் நான் வனம் செல்ல உத்தரவு கொடுக்கச்சொல்லும். என் தாயாருடைய அனுக்ரஹம் உமது சேவைக்கு கிடைக்கவேண்டும். அவள் என்மீது ஸ்நேகவாஞ்சை யின் காரணத்தால் உம்மிடம் நான் வந்து சேராதபடியேற்படும் மஹா விக்னங்களை நீர் போக்கவேண்டும்.'' என்று மனத்திற்குள் சிந்திக்க ஆரம்பித்தான். (370)

[தியானம்

ஹே தசரத ராமா, இக்ஷ்வாகுகுல வம்ச உத்தாரணு, ஸத்ய வ்ரதா, சீதாபதே, உன்னை லக்ஷ்மியே அவளாக ஸ்வயமாக வந்து அடைந்தபடியாலும், நீயும் அவளை உன் வக்ஷஸ்தலத்தில் நித்ய ஸ்ரீயாக ஏற்றுக்கொண்டபடியாலும் உன்னை ஸ்ரேயஸ் ஸ்ரீமான் என்று சொல்லுகிருர்கள். வனம் புகச்சென்ற ராமன் சீதையை விட்டுபிரியாதவனும் தந்தை சொல் காப்பது என்கிற வியாஜத் தால் அயோத்தி மக்களை விட்டு, பரதனுக்கு ராஜ்யம் கொடுக்கும் எண்ணத்துடன், ராஜ்யஸ்ரீயை துறந்தான். வாஸ்தவம். ஹே ராமா, ஆனுல் உன் பாதுகைகளின் சம்பந்தத்தால் அயோத்தி மக்களுக்கு ஸநாதனமான தர்மத்தை நீ உபதேசித்தாய். அதே தர்மத்தின் கவசத்தினுல் பரதனையும் ராஜதிலகம் அடையாமல் இக்ஷ்வாகு வம்ச குல தர்மத்தையும் காப்பாற்றினுய். சீதையை மீண்டும் அயோத்யாபுரி வாசிகளின் இச்சைக்கு ஏற்ப பரிதியாகம் செய்தாய். ராஜ தர்மத்தில் மிக்க பற்றுதல் உள்ள ஸாகேத ராமா, நன்றி கொன்றவர்கள் போலத் தோன்றும் அந்த கெட்டபுத்தி உள்ள உன் புரி வாசிகளுக்கு தர்மத்தில் பற்றுதலை வளர்க்கச்செய்ய சீதையைப் பரிதியாகம் செய்தது நியா யமோ? ஸத்ய மேதஸ் என்கிற திருநாமத்தால் உள்ளும் புறமும் ஸஜாதியர்களான அயோத்யாபுரி வாஸிகளின் மனவிருப்பப்படி சீதையாகிற செல்வத்தை அவர்களுக்கு அளித்தும், அவர்களை தர்மத்திலும் பற்றுதல் உண்டாகும் படி நடத்திக்காட்டிய ஸாகேத ராமா, யதார்த்த ஞானமா கிற லக்ஷ்மியை அடைவது மிக்க சிரமம். அப்பா, பிருகு மஹரிஷி சிறந்த பிராம்மணரான பரத்வாஜருக்கு ஸ்ருஷ்டி கிரமத்தை

உபதேசிக்கும்போது, முதலில் பிரும்ம நிஷ்டர்களையும், பிறகு ஸத்யத்தையும், தர்மத்தையும், தவத்தையும் சாஸ்வதமான வேதத்தையும் அதன்படி நடக்கவிரும்பும் ஆசார சௌசத்தையும் உண்டுபண்ணி, அதன் பிறகே தேவர்கள், தானவர்கள் கந்தர்வர்கள், தைத்யர்கள், அசுரர்கள், மஹாஉரகர்கள், யக்ஷராக்ஷஸர்கள் நாகர்கள், பிசாசர்கள், அப்படியே பிராம்மண க்ஷத்திரிய வைஸ்ய சூத்ரர்கள் என்கிற மனுஷ்ய ஜாதியையும் மற்றுமுள்ள பிராணிக் கூட்டங்களைப் படைத்தாய் என்று சொன்னார். கர்ம விபாகத்தினால் பிராம்மணர்களை எல்லா ஜாதிகளாகவும் நீர் ஆக்கி விட்டீர். பிராம்மணர்களுக்கு காமம், கோபம், லோபம், பயம், சோகம், சிந்தை, பசியின் சிரமம் எல்லோருக்கும் உண்டாவது போல அவர்களிடமும் உண்டாகி, பிராம்மணப் பிறவி சிறந்த தென்று தெரிந்து கொள்ளாமல், விசேஷ அறிவும் நாசமடையப் பட்டு, கீழான பிராம்மணர்களாக அவர்கள் ஆகிவிடுகிறார்கள். சாகேத ராமா, ஸ்வதர்ம பற்றுதலாலும், தவத்தினாலும், வேதத்தில் சொல்லிய தர்மத்தின் பற்றுதலாலும் அல்லவா மனிதர்கள் ரிஷிகளாக ஆகிறார்கள். புத்தியால் இந்திரியங்களை வென்று ஆசைப் படத்தக்க பொருள்களைத் தள்ளிவிட்டு, இவ்வுலகிலும் மேல் உலகிலும் சலனமில்லாத ஆத்மாவை தியானம் செய்பவனாக அக்ஷய மான பதத்தை அப்பேறப்பட்ட ரிஷிகள் அடைகிறார்கள். ஊஹமாக அறியக்கூடியதும், லீங்க சரீரம் என்கிற மனத்தால் அறியக் கூடியதும், அவ்யக்தமானதும், அகோசரமான பொருளை வேதத்திலும் குருவின் வசனத்தாலும் நம்பிக்கை வைத்தவனாகி, வைராக்ய சித்தத்தில் இருப்பவனாகி, மோக்ஷத்தை அடைய வேண்டும். பரிசுத்தமான நடத்தையால் ராமா, நீ நடந்து காண்பித்து, அயோத்யாபுரி வாஸிகளை நடக்கும்படிசெய்து, அவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுத்த சரயுநதிதீர ராமா, ஜானகி பர்த்ரு ஸ்நேகத்தினால் ஆஞ்சநேயரிடம் சொல்லிய வார்த்தைகளை நினைத்துப் பார்த்து "நீ ஒருவனே ஸமர்த்தன், ரகுகுலவீரனான ராமன் தன்னுடைய பலத்தின் பெருமையால் யசசுடன் கார்யத்தை சாதிப்பவன்" என்கிற வசனங்களில் நம்பிக்கை உள்ள என்னை நீ காப்பாற்றமாட்டாயா! எனக்கு ஸுஹ்ருதாகவும், ஜீவனராகவும், இருக்கமாட்டாயா? கஜேந்திரனைக் கடித்த முதலைக்குக்கூட கந்தர்வனாக்கி ஸத்கதியைக் கொடுத்த லக்ஷ்மி நாராயணா, என்னை நீதான் காப்பாற்ற வேண்டும். அயோத்யாராமா, உன் ஸ்வஜனங்களைக் காப்பாற்றியது போல என்னையும் நீயும் சீதையும் ரக்ஷிக்கவேண்டும்.]

பரம யதார்த்த ஞானத்தை உடைய சுமித்திரை விசேஷமாக அறியத்தக்க ஸ்ரீராமனுடைய அவ்யக்த ரூபத்தை அறிந்த மஹா பாக்கியவதி. (அதுமாதிரி சதாதியான யோகத்தின் மகிமையால் பரவித்தை என்னப்படும் பூர்புவர்லக்ஷ்மி என்கிற மூன்று லோகங்களிலும் பெரிதான ஓம் என்கிற ஆத்ம வித்தையை தெரிந்து கொண்டபடியால், சீதையின் பிரும்ம ரூபத்தையும் அறிந்தவள்.) அவர்களுடைய வைராக்கியத்தையும் ராஜ்யபோகங்களில் பற்றுதல் இல்லாமையையும், கைகேயி தசரதர் அயோத்யாபுரி வாஸிகள், பரதன் ஆகிய எல்லோருக்கும் மித்திரனுக இருக்கும் வழியில் செல்லுகிற சீதாராமனை தன் இயற்கையாக உள்ள தர்ம ஸ்வபாவத்தினுல் ஆராய்ந்து பார்த்தாள். அவளுக்கு ராஜாவிடம் இருந்த ஸ்நேகத்தையும் நினைத்துப்பார்த்தாள். தன் தலையில் அடித்துக்கொண்டு அரசரிடம் பச்சாதாபம் காட்டினுள். "ஐயோ, பாபினியாகிற கைகேயி சதிதிட்டம் செய்து எல்லோரையும் ஏமாற்றிவிட்டாள்," என்று கதறி அழுதாள். (371)

ஆனுல் அழுவதற்கும் துக்கப்படுவதற்கும் இது சமயம் இல்லை என்கிற விசேஷ அறிவினுல் மனத்தையும் இந்திரியங்களையும் ஜயித்து, பற்றுதல் அற்ற மனத்துடன் தியாக புத்தியை அடைந்தவளாகி, ஆசைப்படத்தக்க பொருளாகிய தன்செல்வ ஆனந்த புத்ரனுகிற லக்ஷ்மணனை சீதாராம கைங்கர்யத்திற்கு பெற்றெடுத்ததாக நினைத்து, அவனை அந்த ஹோமத்தில் அர்ப்பணம் செய்ய நினைத்துவிட்டாள். அந்தோ, அவளுடைய ஸுஹ்ருதத்தின் பாக்ய விசேஷத்தை யாரால் சொல்லமுடியும்? அதிஸ்நேக உள்ளத்தால் கோமளமான வாணியினுல் சொல்ல ஆரம்பித்தாள், "என் மைந்தா, உன்னுடைய மாதா வைதேஹி, நான் அல்ல; தசரதர் உன் பிதா அல்ல; சாக்ஷத் பரபிரும்மமான நாராயண அம்சமான ராமன். (மஹாஉரக சயனபதி, ரங்க நாயகி சமேதனுகிற ஆதிரங்க நாதனை ஆராதனம், தியானம், அர்ச்சனம் நமஸ்காராதிகளால் அடையப் பெற்ற பிள்ளையாகிய நீ அந்த ராமனுடைய புத்திரன். அவரே உனக்கு ஸர்வம். அவரே எனக்கும் ஸர்வம். அவரே எனக்கு நிச்சய ஞானத்தைக் கொடுத்து உன்னை அவரிடம் சேர்க்கும்படி செய்தவர். அவரே உன் கர்ம காரியங்களுக்கு ஸோமயாக ரூபியாக இருப்பவர்.") (372)

"அப்பேற்பட்ட அயோத்யா ராமன் எந்த இடத்தில் தாமதிக்கிருரே, வாசம் செய்கிருரே, அந்த இடம்தான் அப்பா உனக்கு

அயோத்தி. ராம நிவாஸ்தான் உனக்கு என்னுடன் வசிக்கும் அயோத்யா வாசம். எந்த இடத்தில் ராமதிவாகரன் உதய மாகிருனே, அதுதான் உனக்கு பகல். அவன்தான் உன்மன இருளைப்போக்கும் பிரகாசினி, பானு. (அப்பேற்பட்ட சூரிய அக்னி தேஜஸ்ஸுக்கள் பொருந்திய சீதாஸமேதனுக விருக்கும்) ராமன் வனத்திற்குச் செல்வது நிச்சயமானுல், உனக்கு அயோத்தி யில் ஒரு கார்யமும் இல்லை.'' (373)

'' உனக்கு ஸர்வமாகவும், எனக்கு தேவ தேவனுகவும் இருக் கும் அந்த பிரபுவாகிய சீதாராமனை, என் அருமை புத்ரா, நீ குரு மாதா, பிதா, பந்து, தேவதை, ஸ்வாமியாகிற எஜமானன் ஆகிய ஸர்வமனேபாவத்துடன் அவர்களை வனத்தில் சேவை செய்து, பிராணவாயு ரூபியாக பிராணிகளை ஜீவிக்கச் செய்யும் ஆதிப் பிரானை கைங்கர்ய பாக்யத்தால் திருப்திசெய். ராமன் கூட்டில் பறவைகள் அடைவதுபோல எல்லா ஆத்மாக்களும் தம்மிடம் அடங்கும் படியிருக்கும் பிராண நிலையர். அவரே உன் சரீரத் தைத்தாங்கும் ஆதாரமான ஜீவாத்மாவுக்கு இருப்பிடமானவர். எல்லோருக்கும் அவரே பிராணனைக் கொடுக்கும் பிராணதர்; அவரே எல்லோரையும் போஷிக்கும் பிராணத்ருக். என் அருமைக்குமாரா, எல்லோருக்கும் தன்னலமாகிற ஸ்வார்த்தம் இன்றி, எல்லோரையும் அன்பினுலும் தயையினுலும் தர்மத் தினுலும் போஷித்து, எக்காலமும் உயிர்களை நடத்தி, அவர் களுக்கு ஆனந்த அனுபவமாகிய நித்யகைங்கர்ய சேவையை செய்வதற்கு சக்திபலத்தைக் கொடுக்கும் பிராணதரராகிய மித்ரன். தேவர்களுக்கும் அம்ருதத்தை அடைவிப்பதற்கு தேக பலத்தை கொடுக்கும் சகாவாகிய நண்பன்.'' (374)

'' அப்பேற்பட்ட பூஜிக்கவேண்டிய, நமஸ்கரித்து சேவை செய்யவேண்டிய உத்தம பரம்பொருள் அல்லவா ராமன்? இந்த சம்சாரத்தில் எங்கெங்கு வெகுமானிக்கத்தக்க மனிதர்களோ, ஜந்துக்களோ பரம மித்ரர்களாக எங்கெங்கு இருக்கிருர்களோ, அப்பேற்பட்ட ஜீவஸ்வரூபிகள் எல்லோருக்கும் அந்த மகிமை யானது, ராமனுடைய மஹத்வம் வாய்ந்த சேர்க்கையினுல் அல்லவா, கிடைக்கிறது. அப்ேபட்ட ராமனுடைய சங்கத்தை விட்டு விட்டு என்ன சுகத்தை யாரால் அனுபவிக்க முடியும்? உன் ஆழ்ந்த புத்தியில் ராமன் இன்றி, ஒன்றும் உனக்கு இல்லை என்கிற என் வசனத்தை ஏற்றுக்கொண்டு, அதன்படி நடந்து கொள். அந்த ராம சீதா தம்பதிகளுடன் வனம் நீயும் செல். (அதனுல் உன் வாழ்க்கை ஜீவனத்தின் பரம லாபமாகிற சீதாராம

ஆராதனம், பாகவதர்களால் தங்கள் ஆத்ம உஜ்ஜீவனத்திற்காக அனுஷ்டிக்கப்படும் பகவத் கைங்கர்யத்தை அடை.) அதனால் என்னையும் நம் ரகுகுலத்தினரையும் கரையேற்று.'' (375)

[தியானம்

ஹே சுமித்ரா ஸேவித ராமா, சுமித்திரானந்த லக்ஷ்மணா, ராமனுக்கு ஹிதகாமனாகவிருக்கும் லக்ஷ்மணா, சீதாதேவி, என் ஹ்ருதயத்தில் நித்யவாசம் செய்யும் ஹிருஷிகேசா, ஒவ்வொரு வருக்கும் அவரவர்களின் இஷ்டப்படி அளந்து வைத்திருக்கும் படிகளால் உன்னிடம் ஏறிவரச் செய்யும் மஹாகர்மரே, என் ப்ரீதியை வளர்க்கும் மரியாதை புருஷோத்தமரே, பிரபஞ்சம் பூராவும் அர்ஜுனனிடம் காட்டி தன் புகழையும், விபூதி ஐஸ்வர்யங்களையும் காட்டி அவனையும் என்னையும் மார்க்கண்டேயரையும் மலைக்கச் செய்த ப்ருதுவே, அனன்ய பக்தியுடன் வரும் துளசிதாஸர், தியாகராஜர் போன்ற மஹாத்மாக்களையும், திரௌபதியையும், நளதமயந்தியையும் கடாக்ஷித்த ப்ரியார்ஹரே, மஹாபாஹுவே, சுஹ்ருத் ஜனங்களை எல்லாவிருப்பங்களையும் அடைவிக்கச் செய்து, உம்மையும் பிராட்டியையும் பரமபிரயோசனமாக விரும்பச் செய்யும் பிரிய ராகவனே, சுமித்திரையை கிருதக்ருத்யையாகப் பண்ணிய லக்ஷ்மணா ராமா, பிரியவாதின், ஈரவஸ்திரத்துடன் நவதுளசி மாலையுடன் பராசரபட்டருக்கு கற்பூர ஹாரத்தி, காண்பிக்கிறசமயம், ''நான் உனக்காகவும், நீ எனக்காகவும், பராசரர் வேதவியாஸர் அர்ஜுனன் திரௌபதி, சீதை போன்ற மஹாத்மாக்கள் சாக்ஷி,'' என்கிறபடி :—
त्वं मे, अहं मे, कुतः तत्तदपि कुतः इद, वेदमूलप्रमाणं ऐतत् च अनादि सिद्धानुभव विभवात्, तर्हिसो अपि सोक्रोश एव,
ஆகிய வசனங்களால் அவரை ஆஸ்வாசப்படுத்திய ரங்கநாயகி சமேத ரங்கராஜா, எனக்கு மஹா கிருபையினால் காட்டிக் கொடுத்த பாதங்களையும், ஓங்கார பிரணவகாரவிமானத்தை உடைய ரங்கநாத, பில்வநிலையா, மஹாத்மாக்களாகிற சங்கர பார்வதிகளால் பூஜிக்கப்படும் நந்தரே, என்னையும் பாகவத சிஷ்டர்களின் அனுக்ரஹத்தாலும், ஆசார்ய கிருபையாலும் ஸ்ரீமானாக உன்னிடம் சேர்த்துக்கொள்ள மாட்டாயா? பரந்தாமனே, வைகுண்டபதி, நீங்களே எனக்குத் தஞ்சம்.]

''புத்தியுள்ள குமாரா, எனக்குத் திடமான புத்தியினாலும் நிச்சயமான விஸ்வாசத்தாலும் தெரியும். பூர்ணமாக அறியப்பட வேண்டிய புருஷன் சீதாராமன். அவனைப் புத்ரன் தகப்பனைப்

போலவும், புருஷன் மனைவியைப் போலவும், மித்திரன் சுஹ்ருதய மித்ரனைப்போலவும், ஆதிதேவனாகவும், புருஷனாகவும் புராண னாகவும், இந்த விஸ்வம் பூராவும் அவரால் நிரம்பப்பட்டிருக்கிற தென்று நான் தெரிந்துகொண்டிருக்கிறேன். ஜாக்கிரதையாக நான் சொல்லுவதை நீ தெரிந்துகொண்டு மாத்ஸர்யம் இல்லாத படி, கோபம், ராஜ்ய ஆசை இவைகளை விட்டு, பரம்தாம் என்று சொல்லப்படும் சீதாராம பாதங்களை பஜனை செய். பூஜை செய்து, அர்ச்சித்து, ஆராதனை கைங்கர்யமாக பக்திபூர்வமாக ஏற்றுக்கொள். உனக்கு எதைப்பற்றியும் மோஹமோ, பயமோ, சிந்தனையோ, வேண்டாம் அப்பா. ராமபதத்தை தியானித்து வரும் என்னைச் சிறந்த சௌபாக்கியமடைவித்த கிருத கிருத்ய னாகவும், பரம உபகாரியுமான புத்ரா, நீ என்னைப்பற்றி கவலை அடையாமல், நான் உனக்கு உபதேசித்தபடி, (சுநீதி துருவனுக் கும், சங்கரபகவான் சனைஸ்வரனுக்கு மாலினி மந்திரத்தை உப தேசித்து ஈஸ்வர ரக்ஷையை பெறும்படி செய்வித்தது போலவும், காமதேனுவும் ஸ்வயமாகவே இருந்தது மாதிரி), தயாசாகர மாகிய ஸ்ரீராம பதத்தை நான் ஆசைப்பட்டபடி நீயும் இயற்கை யாகவே ஆசைப்பட்டு சுதபஸ் செய்.'' (சுக்ராசாரியார் மஹா கிருபையுடன் த்வாதசாக்ஷரத்தை பிரஹ்லாதனுடனிருந்த அசுரபாலர்களுக்கு உபதேசித்து, அவர்களையும் கிருத கிருத்யர் களாக ஆக்கவில்லையா? அதுமாதிரி சுமித்ராதேவி ராமாக்ஷர மாகிய ஷடாக்ஷரத்தை லக்ஷ்மணனுக்குச் சிறந்த காருண்ய புத்தியுடன் உபதேசித்தாள்.) (376)

"என் சிஷ்யனும் புத்ரனுமாகிய லக்ஷ்மிவர்த்தனா, மாயை நிரம்பிய இந்த சம்சாரத்தில் ஸ்ரேயசைக் கெடுப்பதற்காக வளர்ச்சியடையும் லோபத்தையும், கோபத்தையும் விலக்கிக் கொண்டு, ராமசம்பத்தை கோபத்திலிருந்து ரக்ஷித்து, உன் தவமாகிய கைங்கர்யபாவம், கிரியைகள் ஆகிய இரண்டையும் மத்ஸரத்திலிருந்து ரக்ஷித்து, ராம வித்யையை மானம் அவமானத்திலிருந்து காத்து, உன் மனத்தை ஆத்மாவாகிய ராமபிரும்மத்தில் நிலைக்கச் செய்து, பற்றுதல் இல்லாதவனாக வைராக்யமடைந்த பக்தஸ்ரேஷ்டர்கள் மோக்ஷத்தை அடைவது போல, நீயும் ராமனை ஒருமிக்க பரிசுத்தனாகவும் நல்ல ஆசாரத் துடனும் தயையுடனும் வேறு சிந்தனையின்றி ராம பாதங்களையும் சீதாபிராட்டியின் உத்தம பாதங்களையும் ஆராதானம் செய். இந்த ஒரு காரியத்திற்காகத்தான் ஒரு யுவதியான ஸ்திரி புத்ர வதியாக ஆகவிரும்புகிறாள். ரகுபதியினுடைய பக்தனாக

இல்லாத ஒரு புத்திரன் இருந்தும் பிரயோசனமில்லை. அப்பேற்பட்ட பையன்களைப் பெற்ற தாயாரும் பத்துமாதங்கள் வியர்த்தமாக அவனை தன் கர்ப்பத்தில் சுமந்திருக்கிறாள் அப்பா. அவள் மலடியாகவே இருந்திருக்கலாம். புத்ரஹீனனாகவிருக்கும் அவள் ஒருவேளை சம்சார தாபங்களிலிருந்து தப்பித்துவிடலாம். ஆனால் ராம பக்தனாக இல்லாத புத்திரன் இருந்தும் அவனுடைய ஜீவனும் அவன் தாயாருடைய ஜீவனும் வாழ்வும் இரண்டும் அகண்டமான வ்யர்த்தம் அப்பா, அகண்டமான வ்யர்த்தம், இதை நன்றாகப் புரிந்துகொள்.'' (377)

''ஆதலால் உன் பாக்கியம், அத்துடன் நான் உன்னைப் புத்ரனாக அடைந்த பாக்யம், என்னவென்றால் '' நீ ராமனுடன் அவன் சேவைக்காக வனவாசம் செல்கிறாய் '' என்கிற உன் வசனங்கள்தான். அப்பா, என்னைப் ப்ரீதி செய்யும் பிராண புத்ரா, நான் உன்னிடம் எதிர்பார்ப்பது வேறு எவ்விதமான உபகாரமோ, கைங்கர்யமோ இல்லை. இந்த ஒரு காரணத்தால் நான் பரம ப்ரீதி அடைந்தேன். அக்ஷயமான பிரும்மத்தை நீ அடைந்திருக்கிறபடியால் ஸம்பூர்ண சுக்ருதங்களுக்கு இதுதான் பலன். மாதாவாகிய என்னுடைய பூர்ணமான ஆசீர்வாதங்களின் புண்யபலன். இதன் காரணமாக வளரப்படும் ப்ரீதியை, ராமசீதா ,இவர்களின் பாதங்களில் ஸ்வபாவமாகவும் இயற்கையாகவும் ஸஹஜமாகவும் ஸ்நேக பிரியத்தை விருத்தி செய்துகொள்.'' (378)

''ஹே லக்ஷ்மணா, உன் ஆத்மாவை அஜாக்ரதையிலிருந்து காப்பாற்றிக்கொள். எல்லா உபாயங்களாலும் ஆசையையும் கோபத்தையும் அடக்கி, லோபத்தையும் மிச்சமின்றி ஜயித்து, இந்திரிய அடக்கம், மன அடக்கம் உள்ளவனாகி, ஹிம்ஸையையும் பொருள் ஆசைகளையும் ஒழித்து, ஸ்வப்னத்தில்கூட பற்றுதல் ஒன்றிலும் இல்லாதவனாக இந்த விடுதலையாகிய சகல சங்க தியாகமும் பயனோடு இல்லாதவனாகி, பெரும் தியாக புருஷனாக மாறி, அதனால் புத்தி சிறப்பை அடைந்து, இவ்வுலகம், மேலுலகம் இவ்விரண்டிலும் சலனமில்லாத ஆனந்தபதமாகிய ராமபதத்தையே சிந்திப்பவனாக, ஸகல பிரகாரங்களாகிற மன கர்மவசன உபாயங்களால் நித்ரையின்றி சதா அவஸ்தையிலும் ராமனை ஆராதனை செய்யக் கற்றுக்கொள்.'' (379)

''இந்த விஷயத்தில் உனக்கு என்ன சிரமம் ஏற்படப் போகிறது? ஒரு கஷ்டமும் இருக்காது. வனத்தில் எல்லாப் பிரகாரங்களாலும் ஆனந்தத்தைக் கொடுக்கக்கூடியவர்கள்

வ்யக்தமான புருஷனுகிற ராமனும் சீதையும், அவர்களுடைய சல்லாப பேச்சுக்களும், மித்ரத்வம் ஸுஹ்ருத்வம் கிருதக்ஞத்வம் கொண்ட சேர்க்கைதான். என் அதிருஷ்டமான புத்ரனே, உன் கவனம் ராமனையும் சீதையையும்—ஆனந்தப்படுத்து வதிலும், அவர்களுக்குக் க்லேசங்கள் உண்டாகாதபடியுமிருக்க வேண்டும். (பிராம்மண லக்ஷணங்களுடன்) அந்த உத்தம திவ்ய தம்பதிகளை சேவை செய். இதுதான் நான் உனக்குக் கொடுக்கும் மஹா உபதேசம்.'' (பிருகு முனிவர் பரத்வாஜருக்கும் அளித்தது இதுதான் அப்பா.) (380)

[தியானம்

ஹே ராமா, ஸத்யவ்ரதா, கோவிந்தா, புண்டரீகாக்ஷரே, அரவிந்த லோசனு, பிம்பாதாரா, சீதையுடனும் உமையுடனும் கொஞ்சிப் பேசும் அழகான ஹ்ருதயமுள்ள ராமா, சங்கரரின் ஆத்மபூஜையை ஏற்றுக்கொண்டு என்னை ஆனந்திக்கும் சங்கர்ஷணு, ராமனுகிய முனியே, க்ஷத்திரியர்களுக்குரிய யுத்தத்தை அவலம்பித்தவனுகவும், அதைத் துறந்து வில்லும் கையுடனும் முனிவேஷத்துடனும், ராக்ஷஸர்களை வதம்செய்பவனும், வேதாத்யயனம், பிராம்மணர்களுக்கு ஹிதம் செய்வது, அகஸ்தியர், சரபங்கர் அத்ரி போன்ற மஹரிஷிகளிடம் அடி பணிந்து பிரும்மஞானத்தை அடைவது, காட்டிற்குப் புறப்படும் சமயம் எல்லாவித தானங்களுடன் கோதானத்தைச் சிறப்பாகச் செய்த முனிபுங்கவா, சீதை லக்ஷ்மணனுடன்கூடச் சென்ற ராகவா, ஸத்யம் வேதம் என்றும், ஸத்யம் தவம் என்றும், ஸத்யம் உலகங்களைப் பரிபாலிப்பது என்றும், ஸத்யத்தால் உலகம் ஸ்வர்க்கத்தை அடைகிறதென்றும், தசரதருக்காகவும் அயோத்தி வாசிகளுக்கும் எனக்கும் காண்பித்த சீதாராமா, உன்னுல் அல்லவோ இந்திரனும் பிரகாசமடைகிருன். மஹாத்மாவான பாகசாஸனன், சதக்ருது, மஹேந்திரன், சசீபதி, கருடன் தனது இரு பக்ஷி இறக்கைகளால் ஸாமகானம் செய்துகொண்டு, நீ கோவர்த்தனம் என்கிற மலையைத் தூக்கின சமயம், உனக்காக குடைபிடித்தது போல நின்ருனே, அந்த திவ்யதர்சனத்தைக் கண்ட பின்பு அல்லவா இந்திரன் உன் ஸ்வரூப ஸ்வபாவ குணங்களை அறிந்துகொண்டு, கேவலம் இவன் கோபாலன் இல்லை. இந்த பாலகன் காமதேனுபோன்ற சுரபிகளை ரக்ஷிக்கும் கோவிந்தன், இவன் க்ஷீராப்தியில் பிறந்த லக்ஷ்மி சம்பன்னன், தேவதைகளை ஆனந்தப்படுத்துபவன், பூமிக்கு

தேவதைகளின் பிரயோஜனத்திற்காக அவதரித்த கிருஷ்ணன், 'கோ' என்கிற பூமியை உத்தாரணம் செய்த மஹாவராஹ மூர்த்தி, நான் இவரை உபேந்திர பதத்தில் வைத்து ஆராதியாமல் போனால், அபிஷேகம் செய்யாமல் போனால் எனக்கு ஹானி நேரிடும் என்று புத்தி பூர்வமாக அறிந்து, "ஹே ஸ்வாமி, உம்மைபசுக்களுக்கு (ஜீவாத்மாக்களாகிற எங்களுக்கு) இந்திரன் (ஸ்வாமி) என்று அபிஷேகம் செய்கிறேன். இதனால் உமக்கு கோவிந்த பட்டாபிஷேகம் செய்கிறேன், "என்று தர்மாத்மாவும் ஸத்யப்ரியனாகிற இந்திரனும் உன்னை கௌரவப்படுத்தினான். அப்பேற்பட்ட கோவிந்தா, வாமனா, விஸ்வரூபம்கொண்ட விஷ்ணே, என் துன்பங்களை அழித்த அச்சுதா கங்காவதாரா, ஸ்ரீராஜகோபாலா, உன் திருவடித்தாமரைகளை என் மனத்தில் பதித்து, மஹா பிரணவம், மஹா உரகன் என்கிற ஆதிசக்தி, குபேரன் என்கிற சாம்ராஜ்ய லக்ஷ்மியை ஆகியவைகளை எனக்கு தயவு செய்து கொடு அப்பா. வேங்கடேசா, கண்டாவதாரா, வேதமூர்த்தி, கருடரே, விஷ்வக்ஸேனரே, விதாரணரே, ராகு முதலியவர்களை கண்டித்தவரே, உம்மைப் பக்தியால் ஆராதிப்ப வர்களை தாய்போல வயிற்றில் காக்கும் வர்த்தனரே, என் செல்வங்களை விருத்தி செய்த இந்திரனே, நீரும் என்னுடன் விருத்தி அடைந்து, உம்மையும் எனக்கு அளித்து, சசி தேவி தன் கணவரான பாகஸாஸனனிடம் அன்பாயிருப்பதுபோல, லோபாமுத்ரை அகஸ்தியரிடம் பிரியமாக இருப்பது போல ஆஞ்சநேயர் ராமரிடம் இருப்பது போல, கௌரியிடம் சங்கரர் அமர்ந்திருப்பதுபோல, என்னிடம் தாங்கள் இருக்கவேண்டும்.]

"பாக்யமுள்ள லக்ஷ்மணா, நான் உனக்கு படித்துப்படித்துக் கூறும் உபதேசம் இதுதான் அப்பா. ராமனையும் சீதையையும் சாதாரண மானிடர்களாக நினைத்து அலக்ஷ்யம் செய்யாதே. அவர்கள் இந்த பிருத்வியை உத்தாரணம் செய்வதற்காக வந்த பரமேஸ்வரர்கள். சகல ஜீவாத்மாக்களையும் காக்க வந்த கோவிந்தர். இந்திரன் முதலானவர்களால் சேவிக்கப்படும் வேத மூர்த்தி. அவர்கள்தான் உனக்கு தாய் தந்தையர்கள். அவர்களின் சுகம்தான் உன்னுடைய பரமலக்ஷ்யம். அவர்களைத் திருப்தி செய்துவிடு. உன்னுடைய பிதாவான தசரதர், தாயா ராகிய என்னையும் பிரிய ஸ்நேகிதர்கள், தம்பிகள், பந்து பரிவாரங் கள் யாவரையும் மறந்துவிடு. அவர்களின் சுகங்களை நினைத்து கஷ்டப்படாதே. (நான் வெகுகாலமாக ரங்கநாதனையும் (திரு வேங்கடமுடையானையும்) ஆராதித்து, அவனுடைய பாதங்களைத்

தழுவிக்கொண்டு, என் பாபங்களை விலக்கி, ஞானக்கண்களால் பிரணவாகார ரூபியாகிற ஸர்வ தேவனை மஹாலக்ஷ்மியுடன் ராம சீதாரூபத்தில் பார்க்கிறேன்,'' என்று அடிக்கடி அடிக்கடி ஸத்புத்ரனுகிற லக்ஷ்மணனிடம் சுமித்திரை சொன்னுள்.) இதைக் கேட்ட என் பிரபு துளசிதாஸர் சொல்லுகிருர், ''சுமத்திராதேவி இந்தவிதமாக என் பிரபு லக்ஷ்மணனுக்கு சிக்ஷையாகிற ஆக்ஞையைக் கொடுத்து, அவனை வனம் செல்லும்படி தூண்டினுள்.'' அது மாத்திரமா, (உபேந்திரனுக்கு இந்திரன் சொன்னதுபோல,) மங்கள ஆசீர்வாதங்கள் செய்தாள். எப்படிச் சொன்னுள் தெரியுமா? (அமலனுதிபிரான் என்று சொல்லப்படும்) ரகுவீரனுடைய பாதங்கள்தான் உனக்கு நிஜமான பரமசுகத்தைக் கொடுக்கும். சீதாராமனுடைய திவ்ய பாதங்களின் சேவை உனக்கு களைப்பு மயக்கம் ஆகியவைகளின்றி, நிஷ்காமமானதும் அனன்ய பக்தியுடன் கூடியதுமாக தினமும் வளர்ந்துகொண்டு உனக்கு பரமக்ஷேமத்தை உண்டுபண்ணட்டும். (என் பிரபு அவரை ஆராதிப்பதினுல் உன்னை வ்ருத்தி செய்யும் வர்த்தமானர், உனக்கு சகல சௌபாக்யங்களை அளித்தும் பரமசிவன் மாதிரி தமது நிறைவும் குறையாதவர், தினம் தினம் புதிய புதிய ஆனந்தங்களை நீ அவரிடமிருந்து அடைவாய்'' என்று ஆசீர்வதித்தாள்.) (381)

பாகவத சிரோண்மணியாகிற லக்ஷ்மணன் அத்யந்த சுக்ருதத்தினுல் (கருடன் விஷ்வக்ஸேனுதிகளுக்குக்கூட) கிடைக்காத அரிய புண்ய பலனை அடைந்தான். மாதாவின் திவ்ய சரணங்களைப் பற்றிக்கொண்டான். தலை வணங்கினுன். இன்னும் ஏதாவது இந்த தெய்வ காரியத்திற்கு விக்னம் வரப் போகிறதே என்று பயமடைந்தான். தன்னுடைய ஏற்பாடுகளை சீக்கிரம் செய்துகொள்ள வேண்டும் என்று துடித்துக்கொண்டிருந்தான். இதனுல் மிக்க பரபரப்புடன் வனம் செல்வதற்கு தயார் செய்வதற்காகப் புறப்பட்டான். சௌபாக்யவசமடைந்த பெண்மான் வேகமாக தப்பித்து ஓடும்போது அத்யந்த கடினமான வலையை உடைத்து தாண்டுவதுபோல, (மஹாகணபதியின் அருளால்) பெரும் விக்னத்தைத் தாண்டினுன். (382)

ஜானகிநாதனுகிற ராமன் இருக்கும் இடத்திற்கு ஓடி வந்தான். அவன் சேரவேண்டிய இடத்தை அடைந்துவிட்டபடியால் மஹா ஆனந்தத்தை அடைந்தான். ஸ்ரீசீதாராமன் ஆகியவர்களின் சுந்தரமான சரணங்களை வந்தனம் செய்தான்.

அவர்களுடன் ராஜாவினுடைய அரண்மனைக்குச் சென்றான். (383)

நகரத்திலிருக்கும் ஸ்திரி புருஷர்கள் பரஸ்பரம் பேசிக் கொண்டார்கள். "இது என்ன விபரீதமாக இருக்கிறதே. தெய்வம் சதிசெய்து எல்லாத் திட்டங்களையும் உடைத்து எறிந்து விட்டதே." அவர்களுடைய சரீரம் துக்கத்தால் இளைத்திருந்தது. மனம் தாபப்பட்டுக் கொண்டுவிருந்தது. அவர்களுடைய வதனங்கள் சோபையையிழந்து வியாகுலம் அடைந்திருந்தன. தேன் கூட்டிலிருந்து வஞ்சகமாக தேன் எடுக்கப்பட்டு, தேனீக்கள் தங்கள் சொத்தான தேனை விட்டுவிட்டு எவ்விதம் பரிதபிக்குமோ, அவ்விதம் அவர்கள் துக்கமடைந்தார்கள். (384)

அந்த அயோத்திவாசிகள் கைகளைப் பிசைந்துகொண்டு தங்கள் தலையில் "அடபாவமே" என்று அடித்துக்கொண்டு பச்சாதாபப்பட்டார்கள். இறக்கைகள் ஒடிந்த பக்ஷி எவ்விதம் துக்கிக்குமோ, அதுபோல அவர்கள் துக்கித்தார்கள். ராஜத்வாரத்தில் ஒரு கும்பலான ஜனத்திரள். எங்கு பார்த்தாலும் அபாரமான துக்கசமுத்திரம். அதன் ஆழத்தையும் கம்பீரத்தையும் யாரால் வர்ணிக்கமுடியும்? (385)

"ஸ்ரீராமச்சந்திரன் வந்திருக்கிறான்" என்று சொல்லி மந்திரிகள் ராஜாவை எழுப்பி உட்காரவைத்தார்கள். அந்த பிரியமான வசனங்களைக் கேட்ட அரசர் விழித்துப் பார்த்தார். சீதை சமேதனை ராகவனை லக்ஷ்மணனுடன் கண்டார். வனத்திற்குச் செல்லத் தயார்செய்து கொண்டிருக்கும் தன்னுடைய இரு ராஜகுமாரர்களைக் கண்ட அரசர் பயபீதியினால் அதி வியாகுலம் அடைந்தார். (386)

சீதாசகிதம் இரு புத்ரர்களையும் கண்ட அரசர் அடிக்கடி பார்த்து துக்கித்துக்கொண்டு அழ ஆரம்பித்தார். அதிக ஸ்நேகத்தின் காரணமாக அடிக்கடி அவர்களை தழுவிக் கொண்டார். தம் ஹ்ருதயத்துடன் அணைத்துக் கொண்டார். (387)

அதிவியாகுலமடைந்த காரணத்தால் அவரால் ஒன்றும் பேச முடியவில்லை. அவருடைய ஹ்ருதயத்தில் மகத்தான சோகமும் அதன் காரணமுமான ஸந்தாபங்களும் ஏற்பட்டிருந்தன. அந்த சமயம் ரகுவீரன் அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து அத்யந்த ப்ரேமையுடன் கைகளைக் கூப்பிக்கொண்டு, வனம் செல்வதற்கு விடைகேட்டார். (388)

"பிதா, என்னைப் பார்த்து ஆசீர்வாதம் செய்யுங்கள். உங்களுடைய கட்டளையைச் செய்யும். எனக்கு சந்தோஷத்துடன் ஆசிர்வாதங்கள் செய்யுங்கள். வனம்செல்லும் சமயம், தாங்கள் எனக்காக ஏன் வருத்தப்பட வேண்டும்? ஸ்வாமி, உம்மிடம் கொண்ட ப்ரேமையின் காரணமாக நான் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யத் தவறிவிட்டேனுகில் ஐயா, உலகத்தில் உமக்கு அல்லவா, அழகான புகழ்பெறும் கிர்த்திகள் நாசமடையும்? அதற்குப்பதிலாக உலகத்தின் நிந்தை அல்லவா ஏற்படும்?" (389)

அரசர் இந்த ஸ்நேகபூர்வமான வசனங்களைக் கேட்டு ராமனுடைய தீர்க்கமான கைகளைப் பிடித்துக்கொண்டு, அவனைத் தன் பக்கத்தில் உட்காரவைத்துக் கொண்டார். அவனைத் தடவிக் கொடுத்து, அன்புடன் பேச ஆரம்பித்தார். "என் பிரிய ராமா, கேளு. முனிஜனங்கள் உன்னை சராசரங்களுக்கு நாயகன் என்று சொல்லுகிறுர்கள்." (390)

"சுபமான காரியங்களுக்கும், பாபகாரியங்களுக்கும் ஏற்றுப் போல, ஈஸ்வரர் தேகத்தில் அமர்ந்துகொண்டு ஸர்வ சாக்ஷியாக எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு, அவரவர் கர்மங்களுக்குத் தக்க பலன்களைக் கொடுக்கிறுர். ஒருவரும் அவரிடமிருந்து தப்பமுடியாது. இவ்விதம் நிகமபுராணங்கள், வேதவசனங்கள் ஸகலமும் கோஷிக்கின்றன." (391)

"ஹே ராமா, கர்மரீதி அப்படியிருக்க எனக்கு மாத்திரம் ஒன்றும் புரியவில்லை. அபராதம் செய்தது ஒருவன் இருக்க, அதன்பலனை விபரீதமாக நீ அனுபவிக்கிருயே. இதுதான் பகவானுடைய லீலையாகிற பகவத்கதியின் போக்கு! ரொம்ப விசித்திரமாகவிருக்கிறது. அதனுடைய மர்மங்களையும் ஏன் அவ்விதம் நடக்கிறது என்கிற காரணத்தையும் ஆராய்வது இந்த ஜகத்தில் முடிகிறதா அப்பா? நான் ஒன்றும் சொல்லுவதற்கில்லை." (392)

மிக்க கெட்டிக்காரரான அரசர் ஸ்ரீராமச்சந்திரனை தன்னிடம் தங்குவதற்குப் பலவிதமான உபாயங்களைச் செய்தார். ஆனுல் தியாக புருஷனுக ராகவனைக் கண்டு, தர்மதுரந்தரனுகவும், மிக்க தைரியத்துடன் வனவாசம் செய்வது என்கிற முடிவுசெய்த ராமனின் முகத்தைப் பார்த்ததும், அந்த அரசருக்கு என்ன செய்வது என்று ஒன்றும் புரியவில்லை. அவரால் ராமனைத் தடுத்து அயோத்தியில் வைத்துக்கொள்வது என்பது முடியாத விஷயமாகக் கண்டுகொண்டார். (393)

அவ்விதம் புரிந்துகொண்ட நிருபஸ்ரேஷ்டரான தசரதர் சீதையை தன்னிடம் அழைத்து, அவளை உச்சிமோந்து, தலையைத் தடவிக்கொண்டு, தன் ஹ்ருதயத்தோடு தழுவிக் கொண்டார். அவருடைய கண்களிலிருந்து தாரைதாரையாக ஜலம் வழிந்துகொண்டிருந்தது. அந்த சிறிய பெண்ணுக்கு ப்ரேமை கலந்த வசனங்களால் வனத்தின் அபாயங்களையும், அவளுக்கு இவர் அபிப்பிராயத்தில் எது ஹிதம், எது நன்மை தரக்கூடியது என்றும், பல புத்திமதிகள் சொல்லிப் பார்த்தார். அவளுடைய மாமனார், மாமியார், அவளுடைய பிதாஜனகர், ஆகியவர்களிடம் வசிப்பது எவ்வளவு சுகத்தைத் தரும் என்றும் விவரித்துச் சொன்னார். (394)

ஆனால் அந்தப் பெண் ராமசரணங்களில் மனம் ஈடுபட்டவளாக, அந்த வார்த்தைகளில் தன்மனத்தைச் செலுத்தவில்லை. அவள் வனத்திற்கு ராமனுடன் செல்வதையே விரும்பியதால் விஷயபோகங்களில் மனத்தை செலுத்தவில்லை. அதனால் வனம் பயங்கரமாக அவளுக்குத் தோன்றவில்லை. இதைக் கண்டதும் அந்த ஊர் ஜனங்களும், பந்துமித்திரர்களும் சேர்ந்துகொண்டு, சீதைக்கு, ''இந்தபெண் பாலையாக இருப்பதால், வெளி உலகம் ஒன்றுமே தெரியவில்லை,'' என்று நினைத்து, மீண்டும் அவளுக்கு தெளிவுற வனத்தின் கஷ்டங்களைப் பலவிதங்களாக எடுத்துச் சொன்னார்கள். (395)

மந்திரிகளின் பாரியைகள் வஸிஷ்டபகவானின் பத்னியாகிற அருந்ததி, அவளுடைய ஸ்நேகிதைகள், ஸ்திரி கூட்டங்கள் எல்லோரும் ஒவ்வொருவராக வந்து சீதைக்கு எல்லாம் எடுத்துச் சொன்னார்கள். அதிமிருதுவான வாணியில் சொல்லி அந்தப் பெண்ணைத் தடுக்கப் பார்த்தார்கள். ''அடி பெண்ணே, ராஜா உனக்கு வனவாசம் தரவில்லையே, நீ ஏன் காட்டிற்கு போக வேண்டும்? எங்களுடன் தங்கிவிடு. அம்மா, நீ என்ன அபராதம் செய்தாய் இந்த கஷ்டங்களை அனுபவிப்பதற்கு? உன் இஷ்டப்படி அயோத்தியிலோ, மிதிலையிலோ தங்கிவிடு. உன் நளினமான உடம்புக்கு கொஞ்சம் பலமாகவீசும் காற்றுகூட பொறுக்காதே. வெயிலும் குளிரும், மழையும் காட்டில் கடுமையாக இருக்கும். எப்படி அம்மா அவைகளைத் தாங்குவாய்? இதன் காரணமாகவும், உன் குருக்களான மாமனார், மாமியார், வஸிஷ்ட பகவான், எல்லோரும் சொல்வதைச் செய் நீ. அதுதான் உனக்கும் நல்லது; உன் சரீரத்திற்குச் செய்யவேண்டிய தர்மம் அதுதான்.'' (396)

"வாஸ்தவம்தான். இவைகள் நல்ல பேச்சுக்கள். ஸ்நேக பூர்வமாகவும், மதுரமாகவும், மரியாதைக்குரிய பெரியோர்களாலும் ஸுஹ்ருதுக்களாலும் சொல்லப்பட்ட வசனங்கள்தான்." இருந்தாலும் சீதைக்கு அவைகள் பிடிக்கவில்லை. அவளுடைய மனம் வியாகுலமடைந்தது. சரத்ருதுவின் பூர்ணிமாவின் சீத கிரணங்களால் தாபிக்கப்படும் சக்விபக்ஷி போல அவள் மனத்தில் துடித்தாள். (397)

சீதை சாமர்த்தியமாக பதில் ஒன்றும் கூறவில்லை. அவள் ஏன் பதில்சொல்லுவாள்? காரியத்தில் மிக்ககெட்டிக்காரி அல்லவா அவள். இவ்விதம் நடந்துகொண்டிருக்கும் பேச்சுக்களையும் அரசருடைய ம்ருதுஸ்வபாவத்தையும் ராமனிடம் அவருக்கு இருந்த அன்பின் ஆழத்தையும் தெரிந்துகொண்ட ராணி கைகேயி கோபத்துடன் எழுந்திருந்து ஓடிவந்தாள். அவள் கைகளில் தவக்கோலம் பூண்டுகொள்வதற்கு வேண்டிய சாமான்களாகிற, காஷாய வஸ்திரம், வல்கலம், துளசிமாலை, ருத்ராக்ஷ மாலை, கமண்டலு என்கிற தீர்த்த பாத்திரம் எல்லாம் இருந்தன. அவைகளை அவள் கொண்டுவந்து ஸ்ரீராமச்சந்திரன் முன்பு வைத்து ஸமர்ப்பித்தாள். அதுமாத்திரமின்றி, நயமான வசனங்களால் ராமனைப் பார்த்துச் சொன்னாள். (398)

"ரகுவீரா, உன்னிடம் அரசருக்கு பிராணனைப் போல் ஸ்நேகம் உண்டு. உன்னைப் பார்த்து தரிசித்து, எக்காலமும் இனிய ஆனந்தத்தை அவர் அடைபவர். அந்த அனுபவத்தால் தர்மத்திற்கும் ஸத்யத்திற்கும் கைங்கர்யம் செய்வதற்குரிய சக்தியை தியாகம் செய்தவர். (சப்தாதி விஷயங்களால் தீண்டப்பட்டு மயக்கத்தினுல் தர்மத்தையும் ஸத்ய வாக்குகளையும் மறந்து, தம்முடைய ஆத்மாவை நாசம் செய்பவர்.) (உன்னை மீண்டும் அடைவதற்கு தர்மத்தின் ஆசரணையால் அல்லவா முடியும்? கர்ப்பத்தில் இறந்துபோன பரிக்ஷித்து முதலானவர்களையும் பிழைப்பிவைத்த பிராணதர் நீ அல்லவோ.) ஆதலால் உன்னிடம் கொண்ட பௌதிக ஸ்நேக வாழ்க்கையின் சேர்க்கையில் ஆசை வைத்த அரசரிடம் பிரேமையின் காரணமாக சீல வாழ்க்கையையும் துறந்துவிடத் தயாராகவிருக்கிறுர். பரலோக சிந்தனையே அவரிடம் இல்லை. அதனுல் சுக்ருதமாகிய புண்யங்கள் செய்ய வேண்டும். இந்த லோகத்திலும் நல்ல புண்ய கீர்த்திகளோடும் வாழவேண்டும். இக்ஷ்வாகுகுலதனமாகிற ஸத்ய வசனங்களின் படி எக்காலத்திலும், எந்த ஆபத்திலும் நடக்கவேண்டும் என்கிற ஆசரணையை துர்பலமான ஹ்ருதயத்துடன் அனுபவித்துக்

காட்ட சக்தி அவரிடம் இல்லை. அதனால் அவருக்குத்தான் நஷ்டம் ஏற்படுகிறது என்கிற நினைப்புமில்லை. சத்புத்ரனாகிய உன்னால்தான் அவர் கரையேற்றப்படவேண்டும். அவராக வாய்மொழிச் சொல்லினால் "வனம்போ" என்று உன்னை சொல்லவேமாட்டார். நீதான் முயற்சி பண்ணி, அவரை சத்ய சந்தராகப் பண்ணி குலதர்மத்தைக் கட்டிக்காக்கவேண்டும்." [உனக்குத் தெரியும். அன்பு என்னும் அக்ஞானத்தால், மறைக்கப்பட்ட ஒளி என்று சொல்லப்படும் தர்மத்தைப் பார்க்க முடிகிறதில்லை. அக்ஞானத்தால் உலகம் தலைகீழாக போய் விடுகிறது. ஸத்யம் பொய் இவ்விரண்டும் சேர்ந்துதான் அப்பா, புருஷர்களால் மனிதப்பிறவி அடையப்படுகிறது. அந்த மானிடப் பிறவியில் ஸத்யம் பொய், தர்மம் அதர்மம், பிரகாசம் அக்ஞானம், சுகம் துக்கம் என்கிற இரட்டைகளில், புத்தியுள்ள ராமா, நன்றாகக் கேளு, எது ஸத்யமோ அது தர்மம்; எது தர்மமோ அது பிரகாசம்; எது பிரகாசமோ அது சுகம்; எது பொய்யோ அது அதர்மம்; எது அதர்மமோ எது அக்ஞானமோ அது துக்கம். இந்த சம்சாரம் துக்கங்களுடனும் சுகங்களுடனும் கூடினது. உலக ஸ்ருஷ்டியைப் பார்க்கும் பண்டிதர்கள் அவிவேகம் அடையமாட்டார்கள். அறிவுள்ளவனாகிய நீ அவ்விதப் பிறவியில் உள்ள துக்கத்திலிருந்து விடபடவேண்டிய முயற்சியைச் செய். சுகம் இவ்வுலகத்திலோ, மேல் உலகத்திலோ நிலைபெற்றதல்ல. ராஹுவால் விழுங்கப் பட்ட சந்திரன் எவ்விதம் பிரகாசம் அடைவதில்லையோ, அது போல, ராமா, என் புத்ரா, அக்ஞானத்தால் விழுங்கப்பட்ட மனிதனின் சுகம் பிரகரசமடையாமல் நாசமடைகிறது. விஷய சுகம் சரீரத்தைப் பற்றினதென்றும், மனத்தைப் பற்றின தென்றும் இருவகைகளாகச் சொல்லப்படுகின்றன. இந்த உலகத்திலோ, மேலுலகத்திலோ எதுவானாலும் சரி, சுகத்திற் காகச் செய்யப்படும் முயற்சிகளாகவே இருக்கின்றன. விஷய சுகமாகிற ராஜபோகங்கள் ஸத்யம் பரிபாலிக்கப்படாமல் போனால் ஒருவிதமான சுகத்தையும் தருவதாயில்லை. கோபம், பேராசை, அவிவேகம், மதம் ஆகிற தோஷங்களால் சத்யத்தைப் பார்க்கமுடியாது அப்பா. நன்றாகத் தெரிந்துகொள். ஸத்யம் வேதம், ஸத்யம் தவம், ஸத்யம் பிரஜைகளை உண்டுபண்ணி, பரிபாலிக்கிறது. ஸத்யதாரணையால் உன் பிதா ஸ்வர்க்கம் அடையவேண்டும். அன்பாகிற அக்ஞானத்தால் கட்டுப்பட்டு அவர் நரகத்தை அடைய நான் விரும்பவில்லை. பொய்யால்

இந்த உலகத்திலோ, மேலுலகத்திலோ சுகத்தை அடைய மாட்டார்கள்.] (399)

"இப்படி நன்ருகத் தெரிந்துகொண்டு, புத்திபூர்வமாக தைர்யத்துடன் எது உனக்கு பிரகாசப்படுகிறதோ, அதைச் செய். பிற்பாடு நான் சொன்னேன், நீ செய்தாய் என்று தாபப்படக்கூடாது. வனவாச வாழ்க்கை ரொம்ப சிரமம்தான். பெருங்காற்று, உஷ்ணம், மிகக்குளிர் இவைகளால் பயங்களும் சரீரத்திற்கு துன்பங்களும் ஏற்படும். பந்துக்களின் பிரிவும் ஏற்படும். அதனுல் உன் மனமும் துயரப்படும். (இந்த துக்கங்கள் ஸ்வர்க்கலோகத்தில் ஏற்படுவதில்லை. அங்கு பசி, தாகம் கிழத்தனம், களைப்பு, பலஹீனம் ஆகிற தோஷங்கள் கிடையாது. அப்பேற்பட்ட ஸ்வர்க்க ஸுகத்தை உன் தந்தைக்கு உன் தர்ம ஆசரணையினுல் கொடு.) [அந்த லோகத்தில் பிரும்ம தேவர் என்கிற புருஷரும் தேஜோமயமான பீஜமும் உண்டு, என்று தெரிந்துகொண்டு,] சகல பிரஜைகளும் நீயும் உன் தகப்பனுர் உள்பட, ஏன் நாம் எல்லோரும் சேர்ந்துதான் அவரவர்களின் கர்ம பலன்களால் சூழப்பட்டிருப்பவர்களாக இருக்கிரேும் என்று தெரிந்துகொண்டு, எது உனக்கு உத்தம மானதாக தோன்றுகிறதோ, அதைச்செய். தர்ம வியவஸ்தை, ஸத்யதாரணம், ஸ்வர்க்க வாழ்க்கை, தந்தை, தன்னுடையது, தன் குலத்தின் ஆசரணைகள், இக்ஷ்வாகுகுல பெருமைகள் ஆகியவைகளைப் பற்றிய எல்லா வசனங்களையும் கேட்டார் பிரபு. (தர்ம துரந்தரர், ஸத்யவ்ரதர், சுக்ரீவன், விபீஷணன் ஆகியவர்களால் அன்புடன் அவர்களின் பட்டாபிஷேகம் ஆன பின்பு நகரத்திற்கு அழைக்கப்பட்டும் பிரபு ரகுநந்தனன் இந்த வசனங்களை நினைவுபடுத்திக்கொண்டு, கைகேயியின் தர்ம வியவஸ்தையை பரிபாலித்தவராக, அவர்களின் அழைப்பை ஏற்கமறுத்தார்.) அவருடைய ஸ்தாபிதமாகிற தர்ம வியவஸ்தை எவ்வளவு அழகாகச் சொல்லப்பட்டது. அவருடைய ஆத்மா வுக்கு எவ்வளவு ஹிதமான அம்ருத மொழிகள் !! ஆனுல் தசரதருக்கு, அந்த வார்த்தைகளில் ஒவ்வொன்றும் பாணம் மாதிரி அவர் சரீரத்தைத் தொளைத்தன. "என்ன கடுரம், என்ன விஷம், என்ன ஆக்ரோஷம், ராஜ்யத்திலுள்ள பற்றுதல் என்ன தீவிரமாக கைகேயிடம் நடனமாடுகிறது. ஐயோ, என் பிராணன் துர்பாக்கியம் படைத்த சரீரத்திலிருந்து செல்ல மறுக்கிறதே. ராம ஸாந்நித்யம் இல்லாத இந்த பூலோக வாழ்க்கை ஸ்வர்க்க

லோக சுகத்தைக் கட்டிலும் நரக வேதனை அல்லவா,'' என்று அவர் எண்ண ஆரம்பித்தார். (400)

அரசர் நினைத்து நினைத்து மூர்ச்சித்துவிட்டார். இதைப் பார்த்ததும் அங்கு கூடியிருந்த ஜனங்கள் வியாகுலம் அடைந்து விட்டார்கள். ராமச்சந்திரன் என்ன செய்வான்? இந்த சூழ் நிலையில் என்ன செய்வான் என்று யாருக்குத் தெரியும்? என் பிரபு, அவனால் நிர்மாணம் செய்யப்பட்ட உலகம், அவனால் போஷிக்கப்பட்ட ஸத்யம், அவன் மனப்போக்கு என்கிற சங்கல்பம்தான் ஸத்யம்; அவன் அனுஷ்டிக்கும் ஸத்யம்தான் உலக ஆசரணை, அனுஷ்டானம், அவன் அனுஷ்டானம்தான் ஜயம், உலகத்திற்கும் தேவர்களுக்கும் மங்களம், அவனல்லவோ பிரகாசமான தேஜோமய மூர்த்தி, அவனல்லவோ எல்லோரையும் நடத்திச்செல்லும் நேதா, அவனல்லவோ அமானவனாகிற மோக்ஷ பதத்திற்குக் கூட்டிச்சென்று படிகளாகிற வழிகளைக் காட்டிக்கொடுக்கும் ஞானமூர்த்தி, பரம பாகவதனான சங்கர உள்ளம் படைத்தவன்; (ஸ்ரீராம மூர்த்திக்காக பிரும்மசர்ய விரதம் பூண்டு தக்ஷன் பெண்ணாகிய தாக்ஷாயணியைத் தியாகம் செய்த தர்மாத்மா, அனவரதமும் தம்புரா சகிதம் தர்ம சிந்தனை யுடன் உமையுடன்கூட ஸநாதனமான ராமகீதத்தைப் பாடி மகிழும் ஆசுதோஷி, பரமார்த்திக உள்ளன், அவனுடைய பிரபு வாகிற) ராமன் என்ன செய்தார் தெரியுமா? ஒரு நிமிஷமும் தாமதியாமல், முனிவருடைய வேஷத்தைத் தரித்துக்கொண் டான். பெரும் ஞானம், பெரும் பிரகாசமடைந்த தியாக புருஷனா கிற ராமன் முனிவேஷம் தரித்துக்கொண்டு, கைகேயியை முதலில் வணங்கி, அதன்பிறகு தசரதரை நமஸ்கரித்து ஜபர்தஸ்தி யுடன் வனம் சென்றான். (401)

அந்தப் பெண்ணாகிய சீதை தனக்கும் தன் கணவனுக்கும் வனவாசத்திற்காக தேவைப்படக்கூடிய சாமக்ரியைகளை எடுத்துக் கொண்டு பதிவிரதை பதிக்குச் சேவை செய்வதுபோல செய்து முடித்தாள். அப்பேற்பட்ட நித்திய தம்பதிகளாகிற சீதாராமன் லக்ஷ்மணன் சகிதம் அங்கு கூடியிருந்த பிராம்மணர்கள், வஸிஷ்ட பகவான், (உமையின் தோழியும்) வஸிஷ்டரின் பத்னியு மாகிற அருந்ததி ஆகியவர்களின் திவ்ய பாத சரணங்களில் விழுந்து நமஸ்கரித்து, அவர்களுடைய உத்தமமான ஆசீர் வாதங்களையும் பெற்றார்கள். அவர்களை எல்லாம் திகைக்க வைத்து, என் பிரபு உயிரில்லாமல் பேச்சு மூச்சு இல்லாத

அசேதனப் பொருள்களாக மாறிப்போன மாதிரி சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் வனம் சென்றார். (402)

[தியானம்

ஹே சீதா, மீனாக்ஷி, உமையினால் ஆராதிக்கப்பட்ட புவனேஸ்வரி, தவக்கோலத்தில் உன்னைப் பார்த்து வஸிஷ்டர் எவ்வளவு கோபப்பட்டார். நீ வல்கலை உடுத்தி, ஹிமவானின் பெண்ணைப்போல வனம் சென்றாய். அவளாவது மலையிலிருந்து உண்டானவள். அதிமிருதுவான க்ஷீராப்தியில் உண்டாகும் பயஸ் என்கிற நுரையில் உண்டானவளான ஸ்ரீதேவியின் அம்சமான சீதா, நீ வனம் சென்று கால்நடையாக ராமனுக்கு முன்னால் சென்றதைப் பார்த்தால் எனக்கு வேடிக்கையாகவும், அம்மா, எனக்கு வருத்தமாகவுமிருக்கிறது. உனக்கு வல்கலை உடுத்தி பழக்கமில்லையே. அதை நீ தலைகிழாக உடுத்திக் கொண்டு வசிஷ்டரையும் வால்மீகியையும் என்னையும் நகைக்க வைக்கிறாயே. பராசரர் எனக்குச் சொல்லியிருக்கிறார், "சதக்ருது வாகிய இந்திரன் அவன் ஸ்தானத்தைக் காப்பாற்றிக்கொள் வதற்காக புவனத்ரயமும் உன்னையே ஆஸ்ரயிக்கிறபடி நானும் உன்னை நமஸ்கரித்து என்னிடம் பிரியமாகும்படி ஸ்தோத்ரம் செய்கிறேன்" என்றார். துர்வாஸருக்கு உன் மகிமை தெரியும். பத்மயோனியில் பிறந்தவளும், பகவான் விஷ்ணு விஷயமாக ஹிதகாமினியும் அனபகாமினியும், எனக்கு சகாயனியாகவு மிருக்கிற நீ ஜகத் ஹிதத்திற்காகவும் பிரஹ்லாதன் மேல் பகவானுக்கு உள்ள அதியந்த பிரியத்தினால் அவனுக்குக் கொடுத்த வாக்குதத்தமாகிற அசுரயோனியில் பிறந்து, வனத்தில் உன் பாதையில் ஜடமாகவிருக்கும் சகல ஜீவாத்மாக் களையும் உத்தாரணம் செய்வதற்கும் அல்லவோ வனம் சென்றாய்! சிம்சுபாமரத்தில் கஷ்டப்படும்போது தயாநிதி, மஹாகவியாகிற ஆஞ்சநேயர் பார்த்த ராக்ஷஸ ராக்ஷஸஸ்திரிகளை உத்தாரணம் செய்வதற்கு லங்கைபோன காருண்யசிந்தோ, என் மனமாகிற காஞ்சியில் ஆட்சிபீடம் செலுத்தும் காமாக்ஷி, உன் குக்ஷியில் வைத்து என்னைப் பரிபாலிக்கும் விசாலாக்ஷி, ஆனந்தத்துடன் செல்லும் முனிவராகிய ராமனுடைய தர்மபத்னி, சதாசிவ னுடைய ஹ்ருதயத்தில் தாண்டவமாடும் லலிதா பரமேஸ்வரி, பிரஹ்லாதனுக்குக் கொடுத்த அபய பிரதானமாகிற பக்த பிரியன் நான், நாராயண நம்பூதிரிக்குச் சொன்ன விஸ்வகர்ப்பன் நான்; என் ஆதி குருவாகிய ஸ்ரீமதே ஸ்ரீவன் ஸடகோப

ஸ்ரீ வேதாந்த தேசிகயதீந்திர மஹாதேசிகருக்குக் கையைப் பிடித்து கூட்டிப்போகும் கராவலம்ப லக்ஷ்மிநிருஸிம்ஹா, தாஸனுகிற என்னை கடாக்ஷிக்கமாட்டாயா? விகாரமில்லாத முகத்தை உடைய ஸ்திரரே, ஸர்வதிருக் என்று சொல்லப்படும் நரஹரி, பிரணதார்த்திஹரா, ஆஸ்ரித பக்த ஜலதே, என் போன்றவர்களுக்கும் பிரஹ்லாதனுக்கும் அனுக்ரஹித்தபடி உம் முடைய சேர்க்கையை எக்காலமும் எந்த அவஸ்தையிலும் நீங்காமலிருக்கும்படி அசஞ்சல பக்தி பிரபாவத்தைக் கொடுக்கும் மஹாலக்ஷ்மி, நாராயணப்ரியே, ஸந்திமானே, அம்ருத்யுவே, அம்ருதமே, கிருபாஸிந்தோ, கைகேயியின் வசனத்தால் கட்டுண்ட ராமனுகிய நீர் யசோதையால் வெண்ணெய் சாப்பிட்ட வாயுடன் கயிற்றுனுல் கட்டுண்ட மாயனுகவல்லவா நீர் விளங்கு கிறீர். துளசிதாசரால் பூஜிக்கப்படும் மரியாத புருஷோத்தம ரல்லவா நீர். ஹிரண்யகசிபுக்கு பிரஹ்லாதன் வந்தார்போல தர்மத்திற்கும் ஸத்யத்திற்கும் நீ அவதரித்தாய். நீ அனுசரணே செய்வதால் அல்லவோ தர்மம் ஸத்யமாகிற அவ்யக்தமாகவும் பிரகாசிக்கிறது. பிரஹ்லாதனுல் அல்லவோ ஹிரண்யகசிபும் அவனுடன் வாழ்ந்த அசுரர்களும் நஷ்டமடையாமல் சம்சாரத்தி லிருந்து காப்பாற்றப்பட்டார்கள். பக்தபோக்ய, லக்ஷ்மி நிருஸிம்ஹ, மமதேஹி கராவலம்பம் பாஹிமாம், ஸாது சம்ரக்ஷணு, விஷ்ணேர் பிரபா, முகுந்தா சரணும்புஜ, பிரும்ம ருத்ராதிகளால் சேவிக்கப்படும் விஸ்ருதாத்மா, யாவராலும் வியந்து கேட்கத்தக்க நிருசிம்மா, சீதாபதே, புத்ரன்போல வந்திருக்கும் என்னிடம் என் தலைமேல் உன் அனுக்ரஹ கையைவை அப்பா. அம்மா, கைவை அம்மா. ஹே ஹரி லக்ஷ்மி, ஸர்வத்தையும் புத்ரனுக நினைக்கும் நீ என்னை அனுக்ரஹி. என்னை மறந்துவிடாதே. என்னை உத்தாரணம் செய். பிரபத்தி அடைந்த எங்களை ஸம்ரக்ஷி. நீ செய்வது சரணுகத சங்கரஸ்தவம் அல்லவா.]

வெகு பரபரப்புடன் ராஜமஹல்லின் வெளி வாசலிலிருந்து வெளிப்பட்ட சீதாராமன், மஹா பாக்யவனுகிற லக்ஷ்மணருடன் குருநாதராகிய வஸிஷ்ட அருந்ததி பாத சரணங்களில் (ஆதிவண் சடகோபயதீந்திரர் லக்ஷ்மி நிருசிம்மனிடம் வணங்குவதுபோல) விழுந்து நமஸ்கரித்தார். பார்த்தார் வஸிஷ்டர் திரிகாலஞானி, மரவுரிதரித்த வேஷம், என்ன சொல்வார்? அவர் கண்டதை மூன்று லோகத்தில் உள்ள சகல ஜந்து ஜீவராசிகளும் கண்டார் கள். தயை நிரம்பின உள்ளம். விரஹதாபத்தினுல் துடித்துக்

கொண்டிருக்கும் தர்ம சிந்தனையுள்ள அயோத்யா வாசிகளைப் பார்த்தார். ப்ரிய பாஷியாகிற ராமன் எல்லோரையும் தடவி ஆஸ்வாசப் படுத்தினுர். மரிக்கப்போகும் ஜீவனே தாபத்ர யங்களிலிருந்து விடுவிக்கும் பொருட்டு, அம்ருதமயமாக ஹஸ்த கரங்களால் மிகுந்த தயையுடன் ஆசார்யன் தடவுதல் போல, (உமை சங்கரர் காசியில் மரிக்கும் ஜனங்களின் ஹ்ருதய கிரந்தி களிலிருந்து மோஹத்தை விலக்கி, ராமதாரகத்தை உபதேசிப்பது போல,) என் பிரபு சகலருடைய துக்கத்தையும் அம்ருதவசனங் களால் நாசம் செய்தார். அதன் பிறகு ரகுவீரன் விப்ர ஸ்ரேஷ்டர்களையும் வயோதிகப் பிராம்மணர்களையும் அழைத் தார். (403)

தன் குலகுருவாகிற பகவான் வஸிஷ்டரிடம் சகல பிராம்மணர்களுக்கும் ஒரு வர்ஷ காலம் அன்னம், போஜனம் அதிதி சத்காரம், வஸ்திரதானம், கோதானம், ரத்னம் தங்கம் ஆகியவைகள் தானம், செருப்பு குடை தண்ணீர் ஆகிய ஸர்வோத்தமமான தானங்களைச் செய்ய விண்ணப்பம் செய்தார். மிக்க வினயத்துடன் நமஸ்கரித்தார். பிறகு யாசகர்களைக் கூப்பிட்டு, அவர் அவர்களினிஷ்டப்படி தானம் செய்தார். (ஹோமம் செய்வதால் பாபம் விலகுகிறது; வேதாத்யாயனம் செய்வதால் உத்தமமான சாந்தி உண்டாகிறது; தானத்தால் போகம் உண்டாகிறது; தவத்தால் யாவற்றையும் அடைவார்கள் என்று சொல்லப்படுகிறது. தானமானது பரலோகத்திற்கும் இகலோகத்திற்கும் என்று இருவிதமாகச் சொல்லுகிருர்கள். ஸத்பாத்திரதானம் சிறிது ஆனாலும் பரலோகத்திற்கு வருகிறது. அஸாதுக்களிடம் கொடுக்கப்படும் தானம் இவ்வுலகில் பூஜிக்கப் படுகிறது.) இப்பேற்பட்ட தானங்களால் தன்னுடைய மித்ரர் களை மிக்க சந்தோஷமாக்கினுர் என் பிரபு. (404)

அதன் பிறகு தன்னுடைய தாஸ ஸேவகர்களைக் கூப்பிட்டு, அவர்களை தன் குரு நாதராகிய வஸிஷ்டரிடம் ஒப்பிவித்து அபாரகிருதக்ஞையுடன் கைகளைப் ப்ரேமை அஞ்சலி செய்து கொண்டு பகவான் ராமச்சந்திரன் சொல்ல ஆரம்பித்தார். "ஸாதுக்களைக் கௌரவப்படுத்தும் கோஸாயி, இந்த என் பக்தர்களுக்கு தாங்கள்தான் மாதா பிதா; இவர்களை என் இஷ்டப்படி ஸம்ரக்ஷணை செய்து, கட்டிக்காக்க வேண்டும். [மஹா பக்தனுன பிரஹ்லாதன் தன் பந்து ஜனங்களையும் கட்டி காத்தது போல, நீர் அனுக்ரஹத்துடன் பரிபாலிக்கவேண்டும்.] (405)

பிரபு ஸ்ரீராமன் தன் தாமரை தண்டுபோலிருக்கும் அழகான இரு புஜங்களை அஞ்சலி பந்தத்துடன் தர்மத்தைப் பரிபாலிக்கும் அயோத்தி வாஸிகளை நமஸ்கரித்து, கோமளமான வாக்குக் களால், (ஸத்ய வசனங்களுக்குப் பிரமாணராக விருக்கும் நரசிம்ம மூர்த்தி விஸ்வகர்ப்பனுகை ஆனேரோ, அதுமாதிரி) ரகுகுல வீரனுகிய ராமன் மரியாதை புருஷோத்தமன், முனிவேஷம் பூண்ட ராஜரிஷி கோலத்தில் என்றும் சாஸ்வதமான வார்த்தை களைச் சொன்னுர். "ஐயா, எனக்கு ஹிதம் செய்பவர்களாகிற நீங்கள் தர்மத்தில் ஈடுபாடு உடையவர்கள். பிரஜைகளுக்குப் பதி அரசர். அப்பேற்பட்ட சக்ரவர்த்தியை மிக்க முயற்சியுடன் சந்தோஷமாகவும், அமைதியுடனும் கட்டிக் காக்கவேண்டும். அவருடைய இஷ்டப்படி நீங்கள் நடந்து கொள்ளவேண்டும்." (406)

"புராண தர்ம க்ஷேத்ரமாகிய அயோத்யாபுரி வாசிகளே, பிரும்மாவினுல் நிர்மாணம் செய்யப்பட்ட மானஸரோவரி லிருந்து உண்டான சரயுநதியின் இரு கரைகளிலும் வசிக்கும் தர்ம துரந்தரர்களே, என் மீது உங்களுக்குள்ள அபாரமான பிரியத்தினுல் என் தாய்மார்கள் மூவரையும் மிக்க பிரயாசையுடன் (என் பிரிவினுல் வருந்தும்) அவர்களை சந்தோஷப்படுத்துங்கள். கைகேயியின் மனேபீஷ்டங்களைப் பூர்த்தி செய்து அவளையும் கிருதக்ருத்யையாகச் செய்யுங்கள்." (407)

இந்த மாதிரி அர்த்த புஷ்டியுள்ள வார்த்தைகளால் ஸ்ரீராமன் நிரந்தரமான ஸத்யத்தை, ஸர்வருக்கும் ஹிதம் செய்பவராக பரிபாலித்தார். தர்ம த்வஜர், விருஷபவாஹனராகிய சம்புவினுல் உபாஸிக்கப்படும் ஆதாரமூர்த்தி. அதன் பிறகு ஆத்ம திருப்தி உள்ளவராகி, பகவான் வஸிஷ்ட பகவானுடைய திவ்ய சரணும் புஜங்களில் சுக்ருத பிரணுமம் செய்தார். தன்னுடைய ஆத்ம பந்துக்களாகிற கணபதி, கௌரி, கைலாஸ பதியாகிற மஹா தேவரை நமஸ்கரித்து, அவர்களின் மங்களா சாஸனங்களைப் பெற்று ராமன் முனிராஜ வேஷத்துடன் [தியாகராஜர் துளசி தாஸர் ஆகிய மஹான்களை ஆனந்தித்தது போல] சீதை லக்ஷ்மணர்சகிதம் வனம் புறப்பட்டார். (408)

[தியானம்

ஹே கோஸாயி, வனகமனம் சென்ற ராமா சீதா, லக்ஷ்மணு, மஹா சர்மங்கள் படைத்தவரே, அர்ஜுனன் கண்ட விஸ்வரூப தர்சனம் மாதிரி ஆயிரம் தலைகள், ஆயிரம் பாதங்கள் ஆகிய

சதானுநு, நித்ய விபூதே, துளசிதாஸருக்கு ஸுமேருமலையில் தர்சனம் கொடுத்த கோதண்ட ராமா, தியாகராஜருக்கு பக்தி நிதர்சனமாகக் காட்டிய ''கிரிபை'' ராமா, பாற்கடலிலிருந்து மந்தர மலையினுலும் வாசுகியினுலும் தேவர்களாலும் அசுரர்களாலும் உன்னுடைய சக்தியாகிற கூர்ம ஆதார சக்தியுடன் கடையப் பட்டும், மஹாபரிஸ்ரமத்துடன் சம்புவினுல் உலக ஹிதத்திற் காகவும் உன் ப்ரீதிக்காகவும் சாப்பிடப்பட்ட ஆலகால விஷத்திற்குப் பின்தோன்றிய வெண்ணெய் போன்ற பத்ம நாபப்ரியே சரணம். ராமா, உன்னுடன் ஸார்வ பௌமத்தைச் சேர்த்து அனுபவிப்பதற்காக அவள் வனம் செல்லுகிருள் அப்பா. உன்னை ராஜ்ய ஹீனன் என்று யாராவது சொல்லு வார்களா? வன வாழ்க்கையிலும், உன்னுடன் ''ஸஹ தர்ம சரீ பவ ஸர்வதா[2] ஸத்ருசம் சீதே மமஸ்வஸ்ய குலஸ்யச வ்யவஸாயம் அனுக்ராந்தா காந்தே த்வமதி சோபனம்'' என்கிற வால்மீகி வசனங்களுக்கு ஏற்ப அந்தப் பெண் உன்னுடன் வருகிருள் அப்பா. ஹே லக்ஷ்மி நாராயணு, ராஜ்யஸ்ரீ நாராயணு, உலகங் களுக்கு ஹிதத்தை செய்யப்புறப்படும் பகவானே, ப்ரும்ம தேவரால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட தர்மங்களைக் காக்கவேண்டி தபோ வனம் சென்ற என் ஹ்ருதய தேவதைகளான விஷ்ணே காருண்ய ஸிந்தோ, உன்னுடன் தேசிகர் பாடிய தயை வரு கிருள். ராமானுஜனின் செல்வப்பிள்ளை வருகிருள் அப்பா; காமகோடி பீடத்தில் வீற்றிருந்து கருணையைக் கடாக்ஷிக்கும் காமாக்ஷி வருகிருள் அப்பா. வரதனுடைய சகோதரி யாகிய திரிபுரசுந்தரியைப் போல வருகிருள் அப்பா; ஞான ஐஸ்வர்ய மாகிய ஏகாம்ர நாயகி வருகிருள். மீனுக்ஷியுடன் கொஞ்சிப் பேசும் கிளி வருகிருள் அப்பா. அவளுடன் சேர்ந்துதான் நீ பிரபுவாகிருய்; போக மோக்ஷங்களை யாவருக்கும் கொடுக்கிருய். நினைத்த மாத்திரத்தில் ஸம்சார விலங்குகளனைத்தையும் வேர்களுடன் குற்றங்கள் சிறிதும் பற்றுமல் சிறந்த மோக்ஷத்தை எனக்கு புருஷகார சிபார்சு செய்து கொடுக்கும் பிரபாவம் படைத்த சித்த லக்ஷ்மி வருகிருள். விஷ்வக்ஸேனர் பூஜை செய்யும் உமை வருகிருள். சக்தி வேலுடன் நிற்கும் குஹன் வருகிருள் அப்பா, மஹேஸ்வரர் பூஜிக்கும் நாதவித்யை வருகிருள் அப்பா. நாரதர் கண்ட ஸர்வஸஹே வருகிருள். துர்வாஸர் இந்திரனுக்குக் கொடுத்த பூமாலையாகிய த்ரைலோக்ய ஸாம்ராஜ்யம் வருகிருள். மஹேந்திரனுடைய விக்ரமம் அந்தப் பெண். பிராம்மணர்களுடைய பிரம்மதேஜஸ்; மேதாதி

என்கிற ரிஷியின் புத்ரரான கண்வர் அப்பா அவள்; காமதேனு வினுடைய கிருதம் அவள்; சிவாக்னி என்கிற பிரேமை அக்னியில் உமை யாகிற ஆஹுதி; என் சிந்தாமணி. உனக்கு நிரதிசய நித்யமாகவும் உதார மனஸ்ஸுடன் நிரவதிய மஹா போக ரஸங்களைக் கொடுக்கும் செளந்தராம்பிகா, பகமாலினி யாகிற லக்ஷ்மி உன்னுடன் வருகிறாள்; ஆஞ்சநேயர் சிம்சுபா வ்ருக்ஷத்தின் அடியில் கண்ட க்ஷமாதேவதை வருகிறாள். பக்தர்களுக்கு ஸ்காந்த புராணத்தில் சொல்லிய ரஸாதல உலகத்தில் இருக்கும் பிரஜா அதிபோகங்களாகிற திருப்தி; ரஸ உல்லாஸமாகிற சித்தி என்னும் பசியை நஷ்டப்படுத்தும் சித்தி; உத்தம தர்மம்; ஸம்பூர்ண ப்ரஜைகளின் ரூபத்தைத் தாங்கும் ஆயுஸ்; ஏகாந்திகளின் பக்தி பலனாகிய விசோகா, சோக மில்லாமலிருக்கும் சித்தி; பரமாத்ம பராயணராக விருக்கும் ஸாது ஜனங்களுக்கு தபம் தியானம் இவைகளில் ரமிக்கும் ஸித்தி; தன் இஷ்டம் போல சஞ்சரிக்கும் காம சாரித்வம் என்கிற சக்தி; மனம்போல வேகமாக எங்கும் செல்லக்கூடிய அஷ்ட சித்திகள் சேர்ந்த மஹா லக்ஷ்மி வருகிறாள். அப்படி சேர்க்கைகொண்ட சீதா லக்ஷ்மண ராமனை நான் நமஸ்கரிக்கிறேன். என்னை ரக்ஷிக்கவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.]

அயோத்தியிலிருக்கும் கனக பவனிலிருந்து வனம் செல்லப் புறப்பட்ட ராமசீதா லக்ஷ்மணர்களைக் கண்ட ஜனங்கள் அதிபயத்துடன் வியோகம் தாங்காமல் கதற ஆரம்பித்தார்கள். நகரின் துக்க அலறுதலைக் கேட்ட சப்தம் சகல சராசரங்களையும் அசைத்துவிட்டது. அயோத்தியில் ஏற்பட்ட துக்கத்தின் சாயை ராவணன் வாழும் லங்கையில் எதிரொலியாகக் கேட்டது. அவக்கேடுகள் சம்பவிக்கும் துர்சகுனங்கள் ஏற்பட்டன. இந்த வன ஆகமனம் தேவர்களை ஆனந்தப்படுத்தியது. என் பிரபு தேவர்களுக்கு ஹிதத்தைச் செய்பவர். ஆனந்தத்தைக் கொடுப்பவர். பசு பிராம்மணர்களை ரக்ஷிக்கப் பிறந்த அயோத்யா ராமன், ராக்ஷஸர்களுக்கு நாசமும், அயோத்யாபுரி வாசிகளுக்கு வியோகமான துக்கமும் ஒரே சமயத்தில் அந்த ராமனுடைய வனம் செல்லுதலால் ஏற்பட்டது. (409)

அரசர் மூர்ச்சையிலிருந்து விடுபட்டார். சுமந்திரரை அழைத்துச் சொன்னார் "ராமன் வனம் சென்று விட்டான்; என் பிராணன் மாத்திரம் என்னைவிட்டுப் போக மறுக்கிறது; இனி என்ன சுகத்தை இந்த சரீரத்தைக் கொண்டு நான் அடைய

விரும்ப வேண்டும்? என் பூர்ண காமனுகிற ராமன் போனபின்பு இந்த சரீரம் எனக்குப் பிரயோசனமில்லை.'' (410)

''ராம வியோகத்தைவிட மஹத்தான பிராண நஷ்டம் எனக்கு என்ன ஏற்படப்போகிறது? இதைவிட துக்கம் எனக் கில்லை. என் சரீரத்திற்கு இதைவிட பெரும் வியாதி என்ன ஏற் பட்டு, என் சரீரம் எப்படி நஷ்டப்படுத்தப்படும்? நான் இனி உயிர் தரிக்கக் கூடாது,'' என்று கதறினுர். பிறகு தைர்யம் கொண்டு, மீண்டும் சுமந்தரரை நோக்கிச் சொன்னுர் ''என் பிரிய தோழா, ரதத்தை எடுத்துக்கொள். ராமனுடன் செல்'' (411)

''என் குழந்தைகள் இரண்டும் அதிசுகுமாரர்கள். அந்த செல்லப்பெண் சீதையாகிற ஜானகி இருக்கிருளே, அத்யந்த நளினம் படைத்த பத்மயோனி. க்ஷீராப்தியின் நுரையிலிருந்து உண்டான பத்மத்திலிருந்து உண்டான அதிசுகுமாரி. அவர் களுக்கு வனத்தை நான்கு தினங்களுக்கு காட்டிவிட்டு பின்பு திரும்பிக் கூட்டிக்கொண்டு வா.'' (412)

''என் புத்ரர்கள் இருவர்களும் ஸத்யஸந்தர்கள். த்ருட விர தர்கள். இந்தக் காரணத்தினுல் திரும்பிவர மறுத்தால், நான் சொன்னதாகச் சொல்,'' என்ருர். கைகளை கூப்பிக்கொண்டு தசரதர் மீண்டும் கெஞ்சிச் சொன்னுர், ''நீங்கள் வனம் தாராள மாகச் செல்லலாம். மிதிலேசனுடைய மஹாசெல்வக்குமாரியாகிய சீதையை வாபஸ் அழைத்து வரச்சொன்னுர். அவளைத்தான் நான் இனிமேல் என் பிராணனைப்போல நேசிக்கவேண்டும். சர்வ சங்கல்பனுன ராமன் என்னிடம் தயை காட்டாமல், மரியாதை புருஷோத்தம பாவத்தை அடைந்து, தன்னைத் தர்ம மாக நினைத்துக்கொண்டு வனம் செல்லட்டும். ஆனுல் அந்த தயை நிரம்பிய அம்ருத தேவதை என்னை விடவேமாட்டாள். அவளை நான் உபாஸித்து ராமனை மீண்டும் அடைவேன்.'' (413)

''அப்பேற்பட்ட பொறுமை தயை ஆகிய இரண்டு கண்களை உடைய திரிபுரசுந்தரியாகிய அழகுதேவதையை நான் பார்த்து, பார்த்து உயிர்வாழ்வேன். நளினஸ்வபாவம் படைத்த அந்தப் பெண் வனத்தைக் கண்டு மிக்கப் பயப்படுவாள். அந்த சந்தர்ப் பத்தை நழுவவிடாதே. அப்போது அவளிடம் சொல் ''உன் மாமனுர் மாமியார் உனக்கு ஸந்தேசச்செய்தி சொல்லியிருக்கிருர் கள். வனத்தில் க்லேசங்கள் அதிகம். உன்னுல் பொறுக்க முடியாது. சீக்கிரம் அயோத்திக்கு திரும்பி வந்துவிடு.'' (414)

"உனக்கு இஷ்டப்பட்டால் அப்பாவாகிற ஜனகரிடம் செல். சிலசமயம் மாமியார் மாமனுராகிய எங்களிடம் தங்கி வசி. அம்மா, உனக்கு என்ன இச்சை இருக்கிறதோ அதைச்செய். உனக்கு எதில் ருசி இருக்கிறதோ அதைச்செய். உன் மனத்தில் யாருக்கு கைங்கர்யம் செய்யவிருப்பமோ, அதைச்செய். உன் மனம் ஆனந்தமடைவதற்கு கர்மாக்கள் ஆகிற கைங்கர்ய சேவைதான் உபாயம். அதனுல் தர்மமும், காமமும், அர்த்தமும் கிடைக்கும். என் பெண்ணே, அந்த உத்தமப் பெண்ணுகிய சீதை, சுஜாதை, நல்ல குலத்தில் பிறந்த பாக்யவதி, ராமனுடைய பத்னி, என் பெண், ஜனகரின் குலவர்த்தினி, கௌஸல்யையின் பிரிய பாத்ரம், அவள் திரும்பி வந்தால் நான் உயிரோடிருப்பேன். அவள்தான் எனக்கு அன்னதாதா, இப்போது பிராணதாத்ரி," என்று கதறினுர். (415)

[தியானம்

ஹே ராமா, சீதா, லக்ஷ்மணு, லக்ஷ்மணுக்ரஜா, என்னை சீதையிடம் அழைத்துச் செல்லும் நேதா, ஸுமித்திரையின் ஆனந்தவர்த்தனு, ஸ்ரீ என்கிற ராமானுவர்த்தி என்கிற பகவத் கைங்கர்யம், லக்ஷ்மணுனுவர்த்தி என்கிற பாகவத கைங்கர்யம் இரண்டையும் சுட்டிக்காண்பித்த ராமானுஜா, சுநீதியினுல் அனுப்பப்பட்ட துருவன் எவ்விதம் மார்க்கத்தில் சப்தரிஷிகளைக் கண்டு உபதேசம் பெற்ருனே, அதுபோல நாராயண ஹ்ருதயத்தில் பற்றுதல் உள்ள என்னை வைஷ்ணவ தாஸனுகப் பண்ணிய மஹா உரகா, விஸ்வாமித்திரரின் குருவாகிய வஸிஷ்டருக்கு குருவாகிய குருர்குரோ, ஜாதவேதஸே, திர்யக் அவதாரங்களிலும் பஞ்சபூத ஸுக்ஷ்மங்கள் சேர்ந்ததான வைஜயந்தி என்கிற மாலையை எக்காலமும் அணிந்திருக்கும் ஸங்கர்ஷணரே, குண்டலி, ஹலாயுதரே, காலாத்மன், அனுதிகாலமாக வரும் கர்ம பிரவாஹங்களினுல் ஏற்படும் அவித்யை என்னும் நித்திரையிலிருந்து தம் ஸ்வரூபத்தை அறிவித்து, என்னைக் கண் விழிக்கச் செய்த பகல்போன்ற அஹரே, என்னைப் பிரகாசப்படுத்துகிற குரோ, இந்திரன், அக்னி, கௌதமர் உதங்கருக்கு உதவினது போலவும், காலவருக்கு அக்னி உதவியது போலவும் நீர் எனக்கு மணவாள மாமுனிகள் போலவும் உதவமாட்டீரா? காளி, கராளி, மனேஜவை, ஸுலோஹிதை, ஸுதாம்ரவர்ணை, ஸ்புலிங்கணை, விஸ்வரூபி ஆகிற ஏழு ஜ்வாலைகள் கொண்ட அக்னி பகவான் என் பாபங்களை அழித்து வஸுப்ரதராக இருக்கமாட்டீரா!

ஸ்ரீகரனுகிற உம்மைப் பாகவத கைங்கரியம் என்கிற லக்ஷணத்தால் நான் அறிவேன். நல்ல சௌசம், ஸம்ஸ் காரம், நியமம், விரதம் இவைகளில் நன்ருக அடங்கின மனம் உள்ளவனும், சூர்யனையும் அக்னியையும் இரண்டு சந்திகளில் ஸேவை செய்ததுபோல நீர் ராமனையும் சீதையையும் சேர்த்து சேவித்தீர். தூக்கத்தையும் சோம்பலையும் விட்டு தனுஷ்பாணி யாக உன் குருவாகிற ராமனுக்கும் அவனுடைய ஆத்மா வாகிற சீதைக்கும் சிஸ்ரூஷைகள் செய்து நீர் சுசியானீர். நீரோ குற்றமில்லாதவராக சீதையின் கிங்கிணி சப்தத்தால் பகவானுடைய சாந்நித்யத்தை அடைந்தீர். ஸ்வயம் பிரகாச முள்ளவரும் சுசியானவரும் சுசீலமான ஹ்ருதயம் அம்பரம் சரீரம் உள்ளவராகி, எல்லாவற்றிற்கும் மேலான ஐஸ்வர்யமாகிற பலம் இருக்கையிலும், கல்யாண குணங்களின் குளிர்ச்சியால் கடுமை தணிக்கப்பட்ட ஸௌம்ய மூர்த்தியாகிற அரௌத்தரரே, வினை, காமம், க்ரோதம் ஆகிய மூன்றையும் உதறித் தள்ளி அஹிம்சையை வ்ரதமாகப்பூண்டு எனக்கு, ஞானம் அனுஷ் டானம் இல்லாத எனக்கு, ஒரு பாகவதருடைய சம்பந்தம் கிடைத்தாலே போதும் என்று சொல்லும்படி பாக்யமாக வந்தீர். பாகவதஅபசாரம் உண்டாகில் அதுவே விநாசத்துக்கு ஹேதுவாகும் என்று கூரத்தாழ்வார் பிள்ளைப் பிள்ளையாழ் வான் என்கிற ஒரு சிஷ்யருக்குச் சொன்னது மாதிரி, நான் உன் பாத சம்பந்தத்தைப் பெறுவேன். ஹே ராமானுஜா, நீர் ஹீனகுலத்தில் பிறந்த நம் பாடுவான் சரிதையிலும், உத் கிருஷ்ட ஜாதியில் பிறந்து, பசுவிவாத விஷயத்தில் தேவர்கள் விஷயத்தில் பக்ஷபாதகனுக முடிவுகூறி, ரிஷிகளின் சாபத்தை அடைந்த அந்த வஸு மன்னன் விஷயத்திலும் சரி, தயை செய் தீர். பொறுமையுடன் கைங்கர்ய சேவை செய்தீர். மஹாத்மாக் களான தேவர்களால் வசு மஹாராஜன் வஸோர்த்தாரை அருந்தி பசி தாகம் ஸ்ரமம் இல்லாதவனுகி பகவானுகிற விஸ்வக்ஸேன ரைப் பூஜித்து எப்பொழுதும் நாராயணருடைய வாக்கிலிருந்து வெளிவந்த வேத மந்திரங்களை ஜபித்துக்கொண்டு, தேவர்களுக் கும் அசுரர்களுக்கும் குருவாயிருக்கும் ஹரிபகவானை பூஜித்தான். பகவானை சந்தோஷம் செய்வித்த அந்த அரசன், அதே பகவானுடைய கட்டளையை நிறைவேற்றும் வைநதேயரால் பூமி யின் புதரில் அமிழ்ந்துபோனவன் ஆகாயத்தில் தூக்கப்பட்டு சாபத்தினின்று விடுபட்டவனுக பிரும்ம லோகத்தை அடைந் தான். ஹே இந்திரஜித்தைக் கொன்ற இந்திர கர்மனே, சீதை

யினுல் கடிந்து சொல்லப்பட்ட லக்ஷ்மணு, நாரதரும் வியாஸரும் மணவாள மாமுனிகளும் சொன்ன பாகவத ஸம்பந்தத்தைப் பற்றிய இந்த விருத்தாந்தத்தால் ஹே லக்ஷ்மணு, நீ எனக்கும் கருடன் மாதிரி, இருக்கமாட்டாயா. கஜேந்திரனுக்கு சுதர்சன சக்ரமாக இருந்தபடி, என் பாபக்கூட்டங்களுக்கும், பாகவதகுரு அபசாரங்களுக்கும் என் க்ரோதத்திற்கும் என் மாத்ஸர்யத்திற்கும் லோபத்திற்கும் அசுபமான மதிக்கும் ஜாதிஸங்கரம தோஷங்களுக்கும் பரிகாரமாக இருக்கமாட்டாயா? கிருபாநிதி எனக்கும் உன் தயை பிறக்கவேண்டும்.]

"அந்த மஹாபாக்யவதி, என் வீடு திரும்பாமல் போனுல் எனக்கு மரணம் நேரிடும். நான் முயற்சி செய்துவிட்டேன். என் முயற்சிக்கு கடவுள் பலன் கொடுக்காதபோனுல் நான் வருந்தப் பட போவதில்லே. அநேக முயற்சிகளேச் செய்பவனும் பலனே அடையாமல் போனுல் கடும் தவமாகிற அவளே நினேத்து, வாடுவேன். என் பிராணனே விடுவேன். அன்ன ஆகாரமின்றி என் பாபங்களே வற்ற அடிப்பேன். ஹா ராமா சீதா, ஹா சுமிந்தரரே, சீக்கிரம் போய் என்னுடைய ராம லக்ஷ்மண சீதையை எனக்கு கொண்டுவந்து காட்டு." இவ்விதம் சொல்லிவிட்டு அரசர் மூர்ச்சை அடைந்து பூமியில் விழுந்துவிட்டார். (416)

சுமந்தரர் அரசரின் ஆக்ஞையைப் பெற்றுக்கொண்டு தலே வணங்கி அதிவேகத்துடன் சென்ருர். நகரத்தின் வெளியே சீதை லக்ஷ்மணனுடன் கூடி வீற்றிருக்கும் ஸ்ரீராமனேக்கண்டார். (417)

அரசருடைய வசனங்களே அவர்களுக்கு எடுத்துச்சொன்ருர். அவர்களே வணங்கி, தன் ரதத்தில் ஏறிக்கொள்ளும்படி வேண்டினுர். சீதை சகிதம் இருசகோதரர்களும் ரதத்தில் ஏறினுர்கள். ஆனுல் அவர்கள் ஹ்ருதயத்தில் அயோத்தியை நமஸ்கரித்து மேலே சென்ருர்கள். (418)

ஸ்ரீராமச்சந்திரன் லக்ஷ்மணன் அயோத்தியை அனுதையாக விட்டுவிட்டு வனம் சென்ருர்கள். இதைக்கண்டதும் அயோத்தி வாசிகள் அதிவியாகுலமடைந்து அவர்களுடன் வனம் செல்லப் புறப்பட்டார்கள். கிருபாசிந்துவாகிற ஸ்ரீ ராமன் பலவிதங்களால் தர்மத்தை உரைப்பவராக, அவர்களே அயோத்திக்கு திரும்பிச் செல்லும்படி வேண்டினுர். அவர்கள் பிரேமையின் காரணமாக திரும்பிச்சென்று மீண்டும் ராமனிடம் திரும்பிவந்தார்கள். (419)

[தியானம்

ஹே ராமா சீதா லக்ஷ்மணா, அக்ரரே, ஸர்வ தர்மங்களுக்கும் ஸர்வயக்ஞங்களுக்கும் ஈஸ்வரரே, பிரும்மாண்டத்தை ஆஸ்ரயித்து அபிமானி தேவதையாக விருக்கிற பிரும்மா என்கிற புருஷன் ஸ்ருஷ்டி யக்ஞம், ஸர்வஹீத் என்னப்படும் யக்ஞம், ஆகிய கர்மங்களில் ஆதிபுருஷனுகிற உன்னை பர்ஹிஷி என்று சொல்லப் படும் யாகத்தில் ப்ரோக்ஷித்தார்கள். அப்பேற்பட்ட பகவானே, உன்னுடன் கூடவரும் மஹா அழகியாக விருக்கும் ஸ்ரீதேவி அமரர்களாலும் ஸாத்யர்களாலும் பூஜிக்கப்படும் திரிபுரசுந்தரி. ஸர்வ சம்க்ஷோபண சக்தியாக வல்லவா உன்னுடன் கூட வருகிருள். உங்கள் இருவர்களோடு வரும் லக்ஷ்மணன் என்னைப் போலவும், இன்னும் மற்ற தேவயக்ஷ உரகராக்ஷஸ, கந்தர்வஸித்த, சாத்யர்களாகிய பசுக்களை, ஜீவாத்மாக்களை கட்டிக் காக்கும் பிரும்ம தேவதை அல்லவோ என்று சொல்லவேண்டும். நீங்கள் மூவரும் சேர்ந்து அல்லவோ பிரணவதத்வமாகிற "அ, உ, ம" என்கிற அக்ஷரங்களாக விளங்குகிறீர்கள். குரு சிஷ்யன் வித்யை என்கிற மூன்று தத்வங்களாகவும், மனம் புத்தி க்ஷேத்ரக்ஞானுகிற உன்னை அடைவது போலவும் எனக்குத் தோன்றுகிறீர்கள். ஹே கருடத்வஜா, உன்னை புருஸத்தமர் அதாவது கருடன் போன்ற பகவான், சந்தஸ் மயமாயிருக்கிற பிரபு, உன்னுடைய அமுதக்கடலாகிற குணங்களை குடிக்க விரும்பி, உன்னிடத்தில் ஆசை வைத்தவராகி, தெளிவான ஞானத்துடன் இருக்கிருரே, அப்பேற்பட்ட மஹா க்ருதுவாகிற உன்னை நான் இந்த ஜனகாத் மஜாவாகிற சீதையுடனும் லக்ஷ்மணனுடனும்; வேதவியாஸர், ஜனக மஹாராஜாவாகிற ஜிக்ஞாஸு, தர்ம தேவதை என்கிறதைப் பார்ப்பதுபோல பார்க்கிறேன். மித்ரா வருணனுடைய புத்ரனுகிற அகஸ்தியர் லோபா முத்ரை சகிதம் திரிபுரசுந்தரியை க்ஷேத்ரக்ஞனை பூஜித்த மாதிரியாகவும், அர்ஜுனன் சிஷ்ய பாவமாய் குருவாகிய கிருஷ்ணரைப் பார்த்தமாதிரியாகவும், தர்மர் திரௌபதியுடன் தர்மத்தை ஆஸ்ரயித்த மாதிரியும் உங்கள் மூவரையும் தியானித்து உங்கள் கிருபையை வேண்டு கிறேன். பேசலரே, முனிகளுக்கும் எனக்கும் சுலபராகவிருந்த பெருமாளே, தாயே, குருவே என்னை ரக்ஷி. எங்களைக் காப்பாற்று.]

அயோத்தியில் எங்கும் ஒரே பயம், பீதி சூழ்ந்து கொண்டது. ராமன் சீதையுடனும் லக்ஷ்மணனுடம் திரும்பிவர மறுத்து மேலே போய்க் கொண்டிருந்ததைக் கண்டு, அவர்களுடைய மன இருள்



**"ராம சீதா ஸ்நேகம்"** : ஸ்ரீராமனுடைய பிரிவினால் சகல அயோத்யா வாசிகளும், பசு பக்ஷி மிருகங்களும், ஸ்திரி புருஷர்களும் வாடி வதங்கி, சித்திரத்தில் எழுதின பொம்மைகளைப் போல அசைவற்று நின்றனர். விரஹதாபம் என்கிற அக்னியினால் கொளுத்தப்பட்டவர்களாக ஸகல அயோத்யாபுரியும் பெரும் துக்கமயமான காட்டைப்போலிருந்தது.

அதிகரித்தது. அந்தகாரம் பிடித்த காளராத்தரி நர்த்தனம் செய்வது போலிருந்தது. பரஸ்பரம் அன்பு குறைந்து விட்ட படியால், வனத்தில் மிருகங்கள் இருப்பது போல அந்த அயோத்யாநகரத்தில் கொடிய ஜந்துக்கள் நர நாரிகள் ரூபமாக வாழ்வது போல விளங்கியது. ஒருவரையொருவர் சந்தேகப் பார்வையுடனும் பயத்துடனும் கூடினவர்களாகவுமிருந்தனர். (420)

சகலருக்கும் பிரகாசத்தையும், பிராணனையும், பலத்தையும் கொடுக்கும் ராம சீதா, லக்ஷ்மணன் இல்லாத அயோத்தியில் வீடுகள் ஸ்மசானம் போலவும், குடும்பஸ்தர்கள் பூத பிசாசுகளா கவும், புத்திரன், ஹிதத்தைச் செய்யும் மித்ரன், பந்து ஜனங்கள் ஆகிய எல்லோரும் யமராஜனுடைய தூதர்கள் போலவிருந்தனர். தோட்டத்தில் இருந்த விருக்ஷங்கள் கொடிகள் எல்லாம் மரித்துக் கொண்டிருந்தன. நதி பிரவாஹமோ குளங்களில் பெருகும் தண் ணீரோ உயிரைப் போக்கும் கொடிய ஸ்வபாவத்துடன் விளங் கின. பார்ப்பதற்கு பயங்கரமாகவிருந்தன. (421)

கோடிக்கணக்கான குதிரைகள், யானைகள், விளையாடுவதற்கு வைத்திருந்த பழகின மான்கள், நகரத்தில் வேலை செய்யும், பசு எருமை, காளை ஆகிய ஜந்துக்கள், சாதகபக்ஷிகள், மயில்கள், கோகிலங்கள் சக்விபக்ஷிகள், கிளிகள், மைனா பக்ஷிகள் கொக்கு கள், ஹம்ஸபக்ஷிகள், சகோர பக்ஷிகள், (422)

ஸர்வ பூதஹிதனான ராமனை விட்டு பிரிவதால் அதிக துக்கத்தை அடைந்து கண்களால் ஜலத்தை விட்டுக் கொண்டு அழுத வண்ணமாயிருந்தன. எங்கு பார்த்தாலும் ஒரே நிசப்தம். பேயாடுவது போலிருந்தது. சித்திரத்தில் எழுதின ஓவியங்கள் போல அயோத்தி உயிரில்லாத காக்ஷியாகவிருந்தது. அயோத்தி எப்பேற்பட்ட புண்ய க்ஷேத்ரம்! அர்த்தமாகிற பொருள், தர்மம், காமம், மோக்ஷம் ஆகிற சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுக் கும் பெரும் பேறுபெற்ற புண்ய க்ஷேத்ரமாகிய இருந்தவூர் இப் போது புருஷஸ்திரி ஆகிய பக்ஷி பசுக்களால் நிரம்பிய காடு போல விளங்கியது. [இது வரை அர்த்த காமங்களுடன் நிறைந்து பின்னால் ராமசீதா வனவாசம் முடிந்தபின்பு ஏற்படப்போகும் ராமராஜ்யம் ஆகிய போகங்களுடனும் இருந்த போக வாழ்க்கை; இப்போது தர்மம் நிரம்பின வாழ்க்கை, பின்னால் ராம சீதா வனவாசம் முடிந்த பின்பு ஏற்படப்போகும் ராமராஜ்யம், ஆகிய மூன்றையும் (தர்ம அர்த்த காமங்கள்) அனுபவித்து, மோக்ஷத்தை அடைந்த நர நாரிகளாக ஆகப்போகும் அயோத்தி

வாசிகள் அல்லவா? அப்பேற்பட்ட சரயுநதிகொண்ட அயோத்தி இனி வரப்போவதை சூசிப்பதாகவுமிருந்தது.] (423)

பிரும்மாவினுல் ஆக்ஞை செய்யப்பட்ட கைகேயி அந்த பசுபக்ஷிகளாகிற அயோத்யா புரியில் வசிக்கும் நர நாரிகளின் காம அர்த்தங்களை நாசம் செய்யும் வேடுவஸ்திரி போல விளங்கினுள். அவளால் பத்து திசைகளிலும் கொழுந்து விட்டெரியும் பயங்கரமான அக்னி அந்தக் காட்டைப் பூராவும் எரிப்பது போல விருந்தது. பரம புருஷார்த்தமாகிற பகவானை அடைவதற்கு பகவானே தர்மம் என்று நம்பின அந்த அயோத்தி வாஸிகள், அவனே காமபோகத்தையும் கொடுப்பவன், அவனே அர்த்தர், மஹார்த்தர் என்று விஸ்வாசத்துடன் அவரை ஆஸ்ரயம் செய்வதற்காக அயோத்தியை விட்டு வனம் ஓடினுர்கள். (கண்டு முனிவர் எவ்விதம் அவரைத் தியானிக்காமல் நேரத்தை வீணுக்கினதைக் குறித்து வருந்தினரோ,) அதுபோல அவர்கள் வியாகுலமடைந்தார்கள். (424)

[தியானம்

ஹே ரங்கநாதா, ராமா, சீதா மனோஹரா, அத்ரி, யாக்ஞயவல்கியர், மனு முதலிய மஹரிஷிகளால் பூஜிக்கப்பட்ட பகவானே, பாண்டவர்களுக்காக கழுத்திலே ஓலை கட்டி தூது சென்ற கிருஷ்ணு, அர்ஜுனனுல் காணப்பட்ட வ்யாப்ய நாராயணு, தேவர்களின் மாதர்களை சிறை மீட்ட சீதையே, அபார கிருபா சிந்து, தைத்யர்களுக்கு திதியாகவும் தேவர்களுக்கு அதிதியாகவும் இருந்த ஹரிவல்லபே, ஹவிஸ் என்று சொல்லப்படும் ஹரியை மனமுவந்து எனக்கு கொடு. வேதவ்யாஸருடைய ஸாக்ஷாத் புத்ரரும், ஜனகரிடம் உபதேசம் பெற்றவரும், உன்னை அப்ஜமுகமாகிய ஹ்ருதய தாமரையில் திருத ஆத்மனுகவும், ஹே ஹரி பகவானே, பஞ்சஆயுதங்களைத் தரித்து பக்தர்களின் ஆபத்துக்களை நீக்குகிறவனுமான பகவானே, சுகர் எவ்விதம் உன்னை மிருக அன்வேஷணுகவும் சீதையின் இஷ்டத்தைப் பூர்த்தி பண்ணுகிற பரிபூர்ண காமனுகவும் ராகவனுகவும் கண்டாரோ, அந்த மஹானுடைய திருவடி சம்பந்தம் பெற்ற என்னை உத்தாரணம் செய். கேசவ கடாக்ஷம் பெற்ற சுக்ராசாரியார் தன் பத்மகோசமாகிற ஹ்ருதய ஆகாசத்தில் "கவி" என்கிற ஏகாக்ர பாவத்துடன் உன்னை சதா ஆராதிக்கிருரோ; எவ்விதம் பராசரருடைய பரம சிஷ்யனும், வியாஸருடைய தோழனுமாகிய மைத்ரேயர் கிருஹஸ்த ஆஸ்ரமத்தை அனுசரித்து நடந்தாரோ, அதுபோல

வல்லவா நீயும் சீதையும் கிரஹஸ்த தம்பதிகளாக வனத்திற்கு சென்றீர்கள். ஹிம்ஸை இல்லாததும், கோபமில்லாததும், ஸத்ய வசனமும், எல்லா ஆஸ்ரமங்களுக்கும் மூலமானதும், குற்றமில் லாத கர்மத்தால், ஸாதுக்கள் போல வாழந்து நீங்கள் என் வீட்டி லும் அதிதிகளாக வரும் பாக்யம் நான் பெற மாட்டேனா? துர்வாஸ ரைப் பூஜித்த ராமா, கிருஷ்ணா, என் தாயாகிய சீதை, ஸந்நியாசி வேஷத்தில் வந்த ராவணனை, அவளை வஞ்சகம் செய்ய வந்த கபட ஸந்நியாசியை, எவ்விதம் அதிதி ஸத்காரத்தால் நடத்திக் காட்டி தன்னைக் கஷ்டத்தில் உட்படுத்திக் கொண்டாள். அதை நினைத்தால், என் மாதாவாகிய அந்த ஸ்ரீ தேவி எல்லா பிராணி களுக்கும் நேசமுள்ளவளாகவும், செவிக்கும் இனிமையாகப் பேசும் பிம்போஷ்டியும், பிறரைக் குற்றம் சொல்லாமலும், டம்பம் அஹங்காரம், அவமரியாதை, கடும்சொல், அபவாதம் முதலிய தோஷங்களை விட்டவளாகவும், எனக்கும் அத்திரியின் மனைவி யாகிற அனுசூயைக்கும் மாலை ஆபரணம், ஆடை, அப்யங்கம் ஆகிய இவைகளில் காட்டிய போகத்தையும், ஆனந்த கூத்தனாகிற உன்னை சதா ரமித்துக் கொண்டிருக்கிற சீதை, என்னை கௌர வித்து, ஸ்வஸ்தி வசனம் என்னிடம் பெறமாட்டாளா? பிராட்டி யின் அழகில் மோஹமடைந்த காருண்ய ராமா, நான் உங்களை நற்குணங்களுடன் வந்து அடைகிறேன். தாயே, தேவர்களின் ஈஸ்வரனாகிய் இந்திரன் பகவானுடைய சகாயத்தினால் எவ்வளவு சிரமப்பட்டு அம்ருத மதனம் என்கிற பெருமுயற்சியினால் அடைந்தானோ, அதுபோல ரிஷிகளால் அனுக்ரஹிக்கப்பட்ட நான் சிஷ்யர்களுக்குரிய கதியாகிய உங்களை அடைய வேண்டும். அவ்விதம் வழிகாட்டிய ஆஞ்சநேயர், இளைய பெருமாள், ஸ்ரீ வசனபூஷணம் செய்த மணவாள மாமுனிகள் எனக்கு அனுக்ரஹம் செய்ய வேண்டும்.)

அந்த அயோத்திபுரி வாசிகளின் மனம் கலக்கமடைந்தது. "ராமன், லக்ஷ்மணன் சீதையின்றி இந்த சம்சார வாழ்க்கையை இந்த அயோத்தியில் எதற்காக நாம் செலவிடவேண்டும்? எந்த இடத்தில் ஸ்ரீ ராமன் இருக்கிறானோ, அதுவல்லவோ நமக்கு அயோத்தி. அங்குதானே ஜனங்கள் வசிக்கக்கூடிய நகரம். ரகுவீரன்இல்லாத அயோத்தியில் நமக்கு என்ன வேலையிருக் கிறது?" (425)

"நமக்கு இந்த போகங்கள் நிறைந்த அயோத்தி வேண் டாம். திருட வ்ரத சங்கல்பர்களாக நாமும் வனத்திற்குச் சென்று ஸ்ரீ ராமனுடன் வசிப்போம். அந்த ராமன் சுரர்களாகிற தேவர்

களுக்கும் கிடைக்கக்கூடாத துர்லபமான நிதி. அந்த அபாம் நிதியாகிற ராமக்கடலே நாம் எல்லோரும் நதிகள் சேர்வது போல அடைவோம்,'' என்று தெளிந்த புத்தியால் மஹாபாக்யம் செய்த சுக்ருத கர்ம விசேஷங்களால் நிர்ணயித்த அயோத்யா வாசிகள் வனம் சென்றுர்கள். "ஒரு தடவை ராமனேயும் சீதையையும் அனுபவித்த பின்பு எந்த மூடர்களாவது விஷய போகங்களில் மனத்தையும் நேரத்தையும் செலுத்துவார்களா?'' (426)

யார், எப்படிப்பட்டவர்கள் வனம் சென்றுர்கள் தெரியுமா? பாலர்கள் (பூர்வ கர்ம வாஸனேயால் பக்தி லக்ஷணம் செய்யப் பட்ட கிருத புண்ய ஆத்மாக்கள்), விருத்தர்கள் (கர்ம ஞானம் பக்தி மார்க்கங்களில் தேர்ந்த பாகவதர்கள்), வீடுகளேத் துறந்து தங்கள் குடும்ப சகிதம் வனம் சென்றுர்கள். முதல் தினம் ஸ்ரீ ரகு நாதன் தமஸா தீரத்தில் நிவாஸம் செய்தார். (427)

ரகுபதி பிரஜைகளின் பிரேமை நிறைந்த ஹ்ருதயத்தைக் கண்டார். ஸஹ்ருதயரான அந்த தயாளு விசேஷமான துக்கத்தை அடைந்தார். என் பிரபு, கோஸாயி, ஸகலருக்கும் பாரபக்ஷமின்றி ஹிதம் செய்யும் கருணுமய மூர்த்தி, பிறருடைய பீடைகளேக் காண சகிக்க மனமில்லாத உத்தம வைஷ்ணவ புரு ஷோத்தமன், பிறர்களின் துக்கங்களே தன் துக்கங்களேப் போல பாவிக்கும் (ஏக ஹ்ருதயம் உள்ள ராமானுஜர் போல) அனுக்ரஹ சித்தமுள்ள என் பிரபு, (428)

மிருது வசன பாஷி; பூர்வ பாஷி; பிரேமை கலந்த ஹிதமான வசனங்களால் அந்த மஹா ஜனங்களின் மனத்தைத் தொடும்படி சொன்னுர்; அநேக நீதி சாஸ்திர பிரமாணங்களால் அந்த பாகவத ஸ்ரேஷ்டர்களே அறிவுபடுத்தி, சுகத்தைத் தரும் தத்வஹித புருஷார்த்தங்கள் அடங்கின வைஷ்ணவபக்தியின் லக்ஷணங்களேயும், சாஸ்வதமான ராஜ தர்மங்களேயும், பிரஜா பாலன முறைகளேயும், மனு அத்ரி யாக்ஞ வல்கியர் ஆகியவர் களால் இயற்றப் பட்ட தர்ம சாஸ்திரங்களேயும், வேதத்தின் பாகு பாடுகளாகிற கர்ம காண்டத்தையும், பிரும்ம காண்டங்களேயும், அநேக புராணங்களேயும் எடுத்துச் சொன்னுர்; இவைகளேக் கேட்ட பின்பு அவர்கள் ஏன் திரும்பிப் போகிறுர்கள்? (கோபி கைகளின் ஆசை கிருஷ்ணனிடம் எவ்விதம் விருத்தி அடைந் ததோ, அது போல அல்லவா) அவர்களின் மாசற்ற பக்தியும் வளர்ச்சி அடைந்தது. என்ன ப்ரேமை, என்ன அனன்யபக்தி, என்ன ஏகமயமான சிந்தனே; ஆஹா, ரொம்ப விசேஷம்.! (429)

ராமனுடைய சீலமான நடத்தை, ஸ்நேகமான உள்ளம், அவர்களைக் கவர்ச்சி செய்தது. (எவ்விதம் அஸமஞ்சஸ் என்கிற சகர புத்ரன் தன் பிரஜைகளை நதியில் மூழ்க வைத்து, வனம் சென்று ராஜ்யத்தை துறப்பதற்கு சித்தமுள்ளவனாக விருந்தானோ, அதுபோல உபாயத்தை ரகுராய் அடைவதற்கு சிந்தனை செய்தார்.) "இந்த லோகத்தாரின் சோகம், என்னுடன் வன வாசம் செய்வதற்கு வருவதலால் ஏற்படும் சிரமம், அவர்கள் கிருஹஸ்தாஸ்ரமம் முதலிய நான்கு வித ஆஸ்ரமங்களுக்குச் செய்யவேண்டிய தர்மங்களை எல்லாம் செய்து விட்டல்லவா அவர்கள் என்னுடன் வனம் வரவேண்டும்! இவர்கள் இப்போது வருவதால் தேவகார்யமாகிற ராவணவதமும் நானும் சீதையும் செய்யப்போகும் லீலைகள் கெட்டுவிடும். இவர்களுடைய மதியைக் கலக்கும் தேவமாயையை பிரயோகிக்கவேண்டும்," என்று எண்ணமுள்ள வராகி, பகவான் அவர்களை நித்ரையை அடையும் படி செய்தார். (430)

இரண்டு பாகங்கள் கொண்ட ராத்ரி கழிந்த பின்பு விடிவதற்கு முன்பே, ராமன் ப்ரேமை பூர்வமாக சுமந்தரரை அழைத்துச் சொன்னார். "அன்புள்ள மந்திரியே, ரதத்தைப் பூட்டி நாம் சென்று விடுவோம். அவர்களுக்கு வழி புரியாதபடி தப்பு மார்க்கங்களைக் காட்டி, ஏமாற்றி, நாம் உபாயத்தினால் அவர்களைக்கடந்து மேலே வனம் செல்வோம்" என்று சொன்னார். (431)

சம்புவினுடைய சரணங்களை அடிபணிந்து, ராமன் லக்ஷ்மணன் சீதை ஆகிய மூவரும் ரதத்தில் ஏறி வனம் செல்ல ஆரம்பித்தார்கள். மந்திரியாகிற சுமந்திரர் அங்கும் இங்கும் ரதத்தை ஓட்டுபவராகி, வழிகளை மறைத்து அவர்களைக் கூட்டிச் சென்றார். (432)

[தியானம்

ஹே தசரத புத்ரா, ஸ்ரீராமா, அக்ரூரரால் ஆச்சர்யமாக பல அலங்காரங்களுடன் சேவிக்கப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணா, பலராமா, சுமிந்திரரால் பார்க்கப்பட்டதும் ஆச்சர்யகரமாக சீதையின் கைகளினால் ஸ்வயமாக அலங்கரிக்கப்பட்ட சிருங்கார ராமா, என் மஹாவிபூதே, குருவுக்குப்பின்னால் போகும் சிஷ்யனான லக்ஷ்மணா, சாரதா சந்திரமௌளி தரங்கத்தில் விளையாடும் குஹன் உங்களைப்பார்ப்பது போல நானும் உங்களைப்பார்க்க வேண்டும். சீதையின் ஹ்ருதயத்தில் விளையாடும் ரகுநந்தனா,

உன்னை தியாகராஜர், அவருக்குக் குருவாகிற புரந்தரதாஸ் உல்லாஸமாகப் பார்க்கிறமாதிரி பார்த்து, முதித ஆனந்தத்தில் நானும் கூத்தாடுகிறேன். ஈஸாவாஸ்ய உபநிஷத்துக்களில் காரண அர்த்தங்களாகிற ஆசைபாசம் இவைகளை நிபுணமாக விட்டு நிவாரணம் செய்த அம்பரீஷன், நாரதர், குஹன், சுமந்திரர் போன்ற மஹாபாகவத ஸ்ரேஷ்டர்களுக்கு அதிதிகளாகச் சென்ற சீதாராமா, லக்ஷ்மணா, உங்கள் தயவால் ராமன், தேவ அசுரகுரு, தேவ தேவன், ஸர்வ பூதங்களால் நமஸ்கரிக்கப் படும் பரபிரும்மம், அசிந்தனீயன் அனிர்தேஸ்யன் என்று சொல்லப்படும் ஐஸ்வரியம், பலம், வீரியம், தேஜஸ், சக்தி, ஞானம் ஆகிய ஆறுகுணங்களையும்கொண்ட கருங்கடலாகிய ஜகந்நாதர், ஸர்வபிராணிகளுக்கும் பிராணன், அயோநிஜர், சீதை லஷ்மணன் தேடிய புதைத்த பொருள்போல் விளங்கும் ஸித்தர், எனக்கு மஹாகிருபையால் சாரதாதேவி காட்டிக்கொடுத்த ரக்ஷகர், அப்பா, நீர் இயற்கையாக ஏற்பட்ட ரக்ஷகராக விருந்தாலும் எனக்கு அவித்யையினாலும் பிரவிருத்தி தர்மங்களாலும் ஸம்க்ஷேப்தாவாகப் போய்விட்ட மஹா புருஷர்; நீர் சங்கல்பம் செய்வதால்தான் எனக்கு சீதையின் அனுக்கிரஹம் ஏற்படும். உனது மடியில் கொஞ்சிவிளையாடும் குஹன் மனம் கோணாமல் எனக்கு உதாரஹ்ருதயத்துடன் காண்பித்தால் தானே, உன்னுடைய பரம ஸௌலப்யம் தெரியும். அம்மா, உன் ராமன் பிறருடைய துக்கங்களை சகிக்கமாட்டான் என்று நீயும், சுமந்தரரும் பார்த்திருக்கிறீர்கள். லக்ஷ்மணன் உன்னுடைய அந்தரங்க லீலைகளையும் பார்த்திருக்கிறார். புருஷகாரத்திற்கு வேண்டிய மஹாகிருபை, பாரதந்திரியம்—என்கிற பரம புருஷனாகிறவனும், எனக்குப் பிதா மஹானுமாகிய ஜகந்நாதருக்கு உரிமைப்படுதல், அதாவது ஸ்வதந்தரனான ராமனை அனுசரித்து அவனுக்கு வசப்பட்டு நடக்கவேண்டும்; மூன்றாவதாகிய அனன்யார்ஹத்வம் என்கிற "உனக்கின்றி மற்றொருவனுக்கு உரிமைப் படாது ஒழிந்திருப்பது" ஆகிய லக்ஷணங்கள் வைஷ்ணவ லக்ஷணங்கள் என்று சொல்லப்படுகின்றன. எவ்விதம் விபீஷணன் வந்தானோ, அதை சீதை பார்க்காத போனாலும், அவனை அங்கீகரிக்க வில்லையா? அப்பேற்பட்ட கருணை காகுத்ஸனிடம் சீதை பார்த்திருக்கும்போதே அவளை முன்னிட்டு சரணம் அடைகிறேன். ராமானுஜன் ராமகைங்கர்யத்தால் தபிக்கப்பட்டு விளங்குவதுபோல பாகவத லக்ஷணங்களால்

முத்திரையிடப்பட்ட என்னிடம் தயை செய்யமாட்டாயா? என் குறைகளை ராமனிடம் நீங்கள் சொல்லமாட்டீர்களா?]

அருணோதயம் ஏற்பட்டது. எல்லா ஜனங்களும் நித்ரையிலிருந்து எழுந்தார்கள். ஆனால் அதற்கு முன்பு ரகுநாதன் சென்றுவிட்டான் என்று அவர்கள் அறிந்துகொண்டார்கள். ஒரே பயம் நிரம்பின சோகக்குரல் எங்குபார்த்தாலும் ஒரே சத்தமாக கேட்கப்பட்டது. ரதத்தின் அடிச்சுவடுகளைத் தேடிப்பார்த்தார்கள். ராம், ராம் என்று கதறி அழுதாலும், ஆசாரிய பலம், ஆசாரிய அனுக்ரஹம் இல்லாத சிஷ்யன் தத்தளிப்பது போல, நான்கு ஓரங்களிலும் இங்குமங்கும் ஓடி அலைந்தார்கள். (433)

சம்சாரத்தை தாண்டவைக்கும் ஓடத்திற்கு பாஹுபலம் இருந்தால்மட்டும் போதுமா? (ஈஸ்வரசங்கல்பமாகிற ஆசார்ய பலம் இல்லாதபோனால் ஓடத்தின் கதி என்ன ஆகும்?) சமுத்திரத்தில் ஜனத்திரள்கொண்ட கப்பல் மூழ்குவதுபோல எல்லோரும் ராமகிருபை யில்லாதபடியால் அந்தகாரத்தில் மூழ்கிவிட்டார்கள். எவ்விதம் வணிகர்கள் தங்களுடைய ஆஸ்திகளைப் பூராவும் சாமான்களில் வைத்து, அந்த சாமான்கள் நஷ்டமடைந்துபோனால் எவ்விதம் துக்கிப்பார்களோ, அதுபோல அநிர்தேஸ்யனும் ஸ்ரீமானுமாகிற ராமன், சீதை, லக்ஷ்மணன் போய்விட்ட பின்பு என்னபயன்? அந்த அயோத்தி நகர்களின் ஸமாஜம், ஸமுதாயம் அடியிலிருந்து நுணிவரை எல்லையில்லாத துக்கங்களை அனுபவித்தது, "நாம் பாபிகள்; விஷய போகங்களில் இஷ்டமுள்ளவர்கள்; பரம போக்கியமான ராம சாயுஜ்யத்தை அனுபவிக்க சித்தசுத்தி, ஆசார நியம நிஷ்டைகள் இல்லாதவர்கள். நம்மால் அவர்களுக்கு க்லேசங்கள் தான் ஏற்படும்", என்று ராமன் நம் எல்லோரையும் தியாகம் செய்துவிட்டு சென்றுவிட்டார்' என்று ஒருவர் மற்றொருவரிடம் பரஸ்பரம் பேசிக்கொண்டனர். (434)

"நம் வாழ்க்கை நிந்திக்கத்தக்க வேண்டியதுதான். மத்ஸயம் தண்ணீரை விட்டுப் பிரிந்தால் உயிர் துறக்கிறது. நாமோ அவ்விதம் இல்லை. நாம் ரகுவீரனைப் பிரிந்து வாழ்வது, நமக்கு ஏற்பட்ட சாபம். ராமனை அனுபவியாத இந்த சரீரம் பூமிக்குப் பாரம்; இந்த பிரும்ம தேவனும் ரொம்ப கடூரமான நீதியால் நம்மை பரிபாலிக்கிறான். நம்மிடமிருந்து ராமனைப் பிரித்துவிட்டு நாம் வேண்டியும், மரணத்தை கொடுக்கிறானில்லை. அநியாயம்!" (435)

இவ்விதமாக பிரலாபங்கள் பலதடவைகள் செய்தார்கள்; அவர்களைப்பார்த்தால் நாகமணியை இழந்த சர்ப்பம்போல பரிதாபமாக விருந்தது. பரிதாபம் நிரைந்த உள்ளத்துடன் அயோத்திக்கு திரும்பிவந்தார்கள். (அந்தபாக்யஹீனர்களான அயோத்யா வாசிகள் என் ஆசார்யரும், குருவும், எனக்குப் பிரகாசத்தைக் கொடுப்பவரும், ஆஞ்சநேயரின் திருஷ்டி பதத்திலிருந்த துளசி தாஸரை அடித்து அகௌரவமாக அயோத்தியைவிட்டு விரட்டின மஹானுபாவர்கள் அல்லவோ; அப்பேற்பட்ட நஷ்ட ஹ்ருதயமுள்ள அயோத்யாபுரிவாசிகளுக்கு ராம வியோகம் ஆலகால விஷம் போலவிருந்தது. ஒரு நாளா, ஒரு மாதமா, ஒரு வருடமா, பதினுன்கு வருஷங்கள், ஏன் ஆயுசுபூராவும் தான்; அதுவுமில்லை. ஜன்ம ஜன்மாந்திரமாக வரும் சாஸ்வதமான துக்கம்தான். அந்த எண்ணம் வந்துவிட்டால் துக்கமும் பச்சாதாபமும் தானே. ஆனுல் அப்பேற்பட்டவர்களுக்கு உதார ஹ்ருதயமுள்ள என் குருநாதரான துளசிதாஸரின் கிருபை இருந்தது. சிறந்த வைஷ்ணவ தாஸனின் சிந்திக்க முடியாத கிருபை—"இந்த சேதனர்கள் அனன்ய கதியுள்ளவர்கள். நாம் கோபித்துக்கொண்டு இவர்களுக்கு கிருதக்ஞை செய்தாத போனுல், இவர்கள் உஜ்ஜிவிக்கமாட்டார்கள்." அப்பேற்பட்ட வைஷ்ணவ கிருபை, பிராட்டிக்கு ராக்ஷஸிகளிடம் ஏற்பட்டதுபோல ஏற்பட்டது.) அவர்கள் எண்ணமிட்டார்கள், "நம் பிராட்டியுடன் ராமன் கட்டாயம் பதினுன்கு வருஷங்கள் கழிந்த பின்பு அயோத்திக்கு திரும்புவார்கள்." இந்தக் காரணத்தால் அவர்கள் மிக்க சிரமப்பட்டு தவ வாழ்க்கையைக் கொண்டு ராமத்யானம் செய்பவர்களாக உயிர்களைத் தரித்துக்கொண்டிருந்தார்கள். (436)

"எவ்விதம் நமக்கு ராமதர்சனம் ஏற்படும் என்கிற சிந்தனை மேலிட்டவர்களாக அதற்குவேண்டிய ஹிதகார்யங்களைச் செய்ய ஆரம்பித்தார்கள். (எவ்விதம் நகுஷன் ரிஷிகளின் சாபத்தால் கீழே விழுந்து அவகதியை அடைந்தபோதிலும் மிக்கப் பிரயாசையுடன் பூஜை, தபஸ், தியானம் ஆகிற நியமங்களால் தன்னைத் தூக்கிவிட்டுக்கொண்டானே; எவ்விதம் யயாதி மஹாராஜன் சத்கர்மங்களாலும், புண்ய ஆத்மாக்களின் சேர்க்கை ஸங்கபலத்தாலும் தன்னை உத்தாரணம் செய்து கொண்டானே;) அந்த வழியைப் பின்பற்றின மஹா புத்திமான்களாகிற அயோத்திபுரவாஸிகள் நியம விரதத்துடன் துக்கப்பட்டுக்கொண்டு, ராம சீதை, லஷ்மணன் ஆகிய மூன்று தத்வங்களைத் தியானித்து,

(அவலம் பித்தவர்களாக, பரம பாகவத கைங்கர்ய நிபுணன், ஆஸ்ரிதவாத்ஸல்யன், மஹா கருணும்புதன், ராமனுடைய பரம பவித்திரனை தம்பி பரமேஷ்டி ஸ்வரூபமாகிறவனும், பாஞ்ச ஜன்யமாகிற சங்கத்தின் அம்சமான) பரதாழ்வானை முன்னிட்டு, அவரால் பழக்கப்பட்டு, (அந்த ஆசார்யரால் அக்னி சுடும்படி ராமமுத்திரை இடப்பட்டு) ராம சீதையை எதிர்பார்த்துக் கொண்டு எவ்விதம் ஆண்கோகிலம் பெண்கோகிலியை எதிர் பார்ப்துபபோலவும், கமல புஷ்பம் சூரியனை எதிர்பார்ப்பது போலவும் நாட்களைக் கழித்தார்கள். மஹாதீனர்களான அவர்கள் பாகவத கிருபையால் அல்லவா பரம ஐஸ்வர்யத்தை மீண்டும் அடைந்தார்கள்! (437)

அங்கே சீதை சகிதம் இரு சகோதரர்களும் ஸ்ருங்கிபேரபுரம் சென்றார்கள். ஸ்ரீ கங்காதேவியைக் கண்டு அந்த பாக்யமுள்ள ராமன் ரதத்திலிருந்து கீழே இறங்கி ஜடாதரன் கங்கையின் சேர்க்கையினால் எவ்விதம் சுகிப்பானோ, அதுபோல ராமன் கங்கையை அடைந்தது பற்றி சந்தோஷமடைந்து சுகித்தார். சுக்ருத பிரணமம் செய்தார். அவருடைய ப்ரேமை ஆனந்தம் பொங்கியது. (ராமன் திருவிக்ரம அவதாரமல்லவா? கங்கை தேவ ஸரிதா அல்லவா?) (438)

[தியானம்

ஹே கங்கா, திரிபதகா, ஸுரஸரிதா, என் பிரபு பீஷ்மருக்குத் தாயே, பிரஹஸ்பதிக்கு ஸமமான புத்திபடைத்த வரும், இந்திர னுக்கு சமமாக பலமுள்ளவரும், க்ஷமையில் பிராம்மணர்களுக்கு சமமான பலமுள்ளவரும், அமித தேஜஸ் உள்ளவரும் சந்தனு வின் புத்ரரும் அத்ரிவஸிஷ்டர், பிருகு, புலஸ்தியர், புலககிருது அங்கீரஸ், கௌதம, அகஸ்திய, சுமதி, விஸ்வாமித்ரர், சுக்ரர், பிருஹஸ்பதி இன்னும் அநேக பிரும்மரிஷிகள், நாரதர், துர்வா ஸர், மார்க்கண்டேயர், காலவர், பரத்வாஜர் போன்ற பிரும்ம வித்துக்களால் சேவிக்கப்படுகிற பீஷ்மருக்குத் தாயே, உன்னை நான் நமஸ்கரித்து, உன் கிருபையால் பகவானுடைய திருவடித் தாமரைகளை அடைய விரும்புகிறேன். ஹே திரிபதகா, மஹா பாகவத உத்தமரான யுதிஷ்டிரரால் மஹா விஸ்வாசத்துடன் வினயத்துடன் கங்காவதாரமும் கேட்கப்பட்டது. கங்காமஹாத் மியத்தையும், என் பிரபு விஸ்வாமித்ரர் ராமலக்ஷ்மணர்களுக்குச் சொன்னார், அவைகளையும் நான் கேட்டு ஆனந்தமடைந்தேன். ஹே வஸுப்ரதே, ஜகத்திற்கு பூஷணமாகவிருக்கும் கங்கா,

சைலபுத்ரியே, உமையின் ஜ்யேஷ்டையே, ஸர்வலோகங்களால் நமஸ்கரிக்கப்படுகிறவரும், பகீரதனுடைய மஹா தபஸ்ஸால் சந்தோஷமடைந்தவரும் ஸர்வதீர்த்தகரரும், அகிஞ்சநீயள், பரமயோகிகளால் அவ்யக்த மூர்த்திலிங்கராக தியானிக்கப்படும் கருணாவத்ஸலருமான உமாபதியிடம், எவ்விதம் கோவினிடம் லக்ஷ்மி புகுந்தாற் போல, ஜடாமண்டலத்தில் நீ ஸ்வர்க்கத்திலிருந்து வந்து புகுந்தாய். அதன் பிறகு பகீரதன்மீது அபார கருணையால் அவரால் விடுவிக்கப்பட்டு ஜாஹ்னவியாகி அதன் பிறகு பாகீரதியாக அவதரித்து ரஸாதலம் வரை சென்றாய். அம்ருத மதனம் மாதிரி அல்லவா உன் அவதாரணம் பூமியில் ஏற்பட்டது. உன் தயையால் அல்லவோ சங்கரர் தீர்த்தகரராகவும், தீர்த்தமயராகவும் வஸுப்ரதராகவும் ஆனார். என் உமையின் செல்வ புத்ரனாகிய ஸ்கந்தனைக் கர்ப்பத்தில் தாங்கிய வஸுமனஸ், க்ஷீராப்தியில் லக்ஷ்மி பிறந்தது போல என் உமா புத்ரன் உன் ஸரிதமான ஜலங்களிலிருந்து தோன்றின பத்மங்களிலிருந்து தோன்றினான். பொன்னின் தாயே, அக்னிபகவானால் சேவிக்கப்பட்ட லோகமாதா, உன்னைக் கண்டால் எவ்விதம் விஸ்வாமித்திரரைக் கண்ட கௌசிகன் சந்தோஷப்படுவானோ, எவ்விதம் அகமரிஷண ஸூத்திரத்தினால் கங்கையில் ஸ்நானம் செய்த பலன் கிடைக்குமோ, எவ்விதம் பகீரதனும் தர்மபுத்ரரும் கிருதக்ருதியர்களாக ஆனார்களோ, எவ்விதம் சீல விருத்தசித்தர்களிடமிருந்து கேட்ட உபதேசத்தால் தர்மபுத்ரர் முதலியவர்கள் கிருதகிருத்யர்களாக ஆனார்களோ, எவ்விதம் ராமலக்ஷ்மணர்கள் சீதை ஆகியவர்கள் சிறந்த சௌபாக்யத்தை அடைந்தார்களோ, எவ்விதம் பீஷ்மரை ஆராதித்து ஞானப்பழத்தை ஸகல ரிஷிகளும் பாண்டவர்களும் அடைந்தார்களோ, அதுபோல உன்னை ஆராதித்து, உன் கிருபையை நான் அடையவேண்டும். எவ்விதம் நாகர்களுக்கு சுதாவும், ஸுரகணங்களுக்கு உத்தமமான அம்ருதமும், பித்ருகணங்களுக்கு ஸ்வதா மாதிரியாகவும், மனிதர்களுக்கு ஸர்வப்ராண பிருதக்காக நீ விளங்குகிறாய். பார்த்த மாத்திரத்தில் பாபங்களை அபஹரிக்கிறாய். அக்ஷயமான நாராயண பாதங்களிலிருந்து உண்டாகி, சிம்சுமார சக்ரத்தின் வழியாக த்ருவபதத்தில் வரும் தேவமாதா, சிவமூர்த்தினியில் வஸிக்கும் சைலபுத்ரி, எனக்கு விரஜா நதியாகவிருக்கும் யசோதா, குஹனுடைய ப்ரஹ்மண்ய 'தேஜஸே; விஷ்ணுபதி, ஸர்வாத்ம பிரபன்னனாகவிருக்கும் என்னை: கீழே விழுந்த யயாதியைக் காப்பாற்றிய ஸத்ஸங்கர்கள்போல, உன்னுடைய ஸர்வ குணங்

களைப் புகழும் என்னை, எங்களை, என் வம்ஸத்தினர்களை, என் ஸுஹ்ருத்துக்களை காப்பாற்று அம்மா. ஸர்வலோக பாவனி உனக்கு சமமாக யார் இருக்கக்கூடும்! ஜம்பூத்வீபத்தில் பரத கண்டம் எவ்விதம் சிறந்து விளங்குகிறதோ எவ்விதம் பரதக் கண்டமாகிற கர்ம பூமியில் விஷ்ணு பாதங்களை அடைய உன்னைத்தவிர எனக்கு யார்அம்மா கதி? ஸர்வதீர்த்தமயே, கபில ராலும் ஸ்வேத ராஜரிஷியினுலும் தரணிக்கு அவதாரம் எடுத்த தேவமாதா என்னிடம் கிருபை செய்.]

லக்ஷ்மணன் சுமந்திரரோடு கூடிய சீதாராமர் சுரஸரிதை யாகிற கங்கையை ஸர்வோத்தமமான பூஜைகளாலும், ஆராதனங் களாலும், நமஸ்காரங்களாலும், திருப்தி செய்துவைத்தார்கள். பார்த்தமாத்திரத்தில் சகல பூர்வஜன்மங்களின் பாபபீடைகளை அறவே போக்கும் கங்கையை அந்த நால்வர்களும் பார்த்து சகல சுகங்களையுமடைந்தார்கள். ஸகல பிரும்ம, தேவரிஷிகளால் ஆஸ்ரயிக்கப்பட்ட தேவகங்கை, ஜடாதரனுடைய திருமுடி சம்பந்தத்தாலும் திருவிக்ரமனுடைய திருவடி சம்பந்தத்தாலும், அந்த பாகீரதி, திரிபதகா திரிலோக ஸரிதா விஸ்வ மாதா வாகவும், விஸ்வபந்துவாகவும், மித்ரனுகவும், ஆனுள். கங்கை ஸகலமங்களங்களுக்கும், பரம செளபாக்ய ஆனந்தங்களுக்கும் ஆதிமூலம் அல்லவா? மஹா பாபாத்மாக்களுக்கும் மலங்கள் நீங்கி, சுகத்தைத்தரும் பரமபாவனி அல்லவா அவள்? பூர்வகர்ம வாஸனைகளால் பீடைகளை அனுபவித்து, விசனங்களும் தாபத்ரயங்களும் கங்கா ஜலத்தை ஸ்பர்சித்த மாத்திரத்தில் யாவும் நீங்கப்பட்டு, நரர்கள் பகவத்கிருபையை அடைகிருர்கள். அல்லவா? (439)

அந்த மஹாதேவியினுடைய கோடி கோடிக் கணக்கான பிரபாவங்களின் கதைகளையும் இதிஹாஸங்களையும் சாஸ்வதமாக விருக்கும் கீர்த்தி பிரபாவங்களை, அந்த நித்ய தாரையாக ஓடும் கங்கையின் ஸலிலமான நீரிலிருந்து தோன்றும் அலைகளைப் பார்த்து, ஞாபகப்படுத்திக்கொண்டு ராமர் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் சுமந்தரரோடும் ஆனந்தப்பட்டார். அவை களின் ஸந்தேசங்களை பகவான் அனுதிகாலமாக வரும் கங்கை யின் கீர்த்தி பிரபாவங்களை, (குஹனுடைய அவதார ரஹஸ்யங் களையும்) தன்னுடைய பிரியத்திற்கு உட்பட்ட மூவருக்கும் எடுத் துரைத்தார். (440)

அதன் பிறகு எல்லோரும் ஸ்நானம் செய்தார்கள். அவர் களுக்குயேற்பட்ட மார்க்கத்தின் ஸ்ரமம் அந்த பவித்திரமான

ஜலங்களை ஸ்பர்சித்தமாத்திரம் தீர்ந்துவிட்டது. மனத்தில் பீடித்திருந்த வியாகுலங்களும் தீர்ந்து, சந்தோஷம் உள்ளவர்களாக ஆனார்கள். எந்த மஹாபுண்ணிய நதியை ஸ்மரித்த மாத்திரத்தில் அனாதி காலமாக ஏற்படும் கர்மபிரவாஹ வாசனைகளை மரித்துவிடச் செய்யும், அதிசயமான ஸ்ரமத்தைப்போக்கும் மிருத சஞ்சீவினி அல்லவா அந்த புண்ய நதி. அப்பேற்பட்ட பாக்யமுள்ள நதியின் பெருமைகளை, ஸர்வ சிரமங்களையும் போக்கும் ராமர் எடுத்துச் சொன்னார். துளசிதாஸர் சொல்லுகிறார் ''பகவான், கங்கையை உற்பத்திபண்ணிய பிரபு, அவர் நம் போன்ற பாபாத்மாக்களின் கர்ம சிரமங்களைப் போக்குவதற்கு கங்கையைப் போன்ற புனிதமான சங்கசேர்க்கையை அளித்தது மட்டுமின்றி, தன் பாதங்களில் சிரமமின்றி வந்துசேர வழிமார்க்கங்களைக் காட்டுகிறார். அவருக்கு சிரமம் ஏற்பட்டது, அதனால் களைப்பு நீங்கினார் என்று சொல்வது லௌகீக வார்த்தைகளாகத் தோன்றுமல்லவா?'' (441)

''என் பிரபு ஸ்ரீ ராமச்சந்திரன் சுத்தஸத்வஸ்வரூபர். சச்சிதானந்தமயன். நம்போன்ற பிரக்ருதி ஜன்மங்களுக்கு ஏற்படும் ஸத்வம் ரஜஸ் தமஸ்ஸாகிற திரிகுணங்களுக்கு அதீதன். மாயையாகிற சக்தி தேவதை அவனுக்கு உட்பட்டவள். அவ்விதம் அந்த பிரபு ஸர்வஸம்மதனாகவும், எல்லோராலும் மனம் ஒப்பி வேதங்களால் புகழப்படும் ஆனந்த கந்தன். பானு குலத்திற்கு தர்மத்வஜனாக விளங்கின பிரபு. அப்படிப்பட்ட ரகுகுல பிரபு ஸத்ருசமான புருஷன். கங்கையாகிற சம்ஸாரத்திற்கு தோணி போன்றவன். ராமேஸ்வர சமுத்திரத்திலிருக்கும் ஸேது போன்றவன். தீர்த்தவாரிகளுக்கு உன்னத தீர்த்தமயமாக விருப்பவன்.'' (442)

'' அப்பேற்பட்ட ராமசுதாகரன் மனம் ஒப்பி, அதி சௌலப்யத்தின் வசமடைந்து, பரமபாகவத ஸ்ரேஷ்டனான குஹப் பெருமானின் தபோ கீர்த்திப் பிரபாவங்களை அறிந்து, அந்த குஹன் வேடுவ ஜாதியில் பிறந்த அரசனாகவிருந்தபோதிலும், அவனிடம் போக தீர்மானித்தான். அதற்கு ஏற்ப அந்த நிஷாத ராஜன் ராம ஆகமனத்தைக் கேட்டு, ஆனந்தமடைந்தான். (பிரிய மாதுலனாகிற விஷ்ணு பகவான் வந்தால் எவ்விதம் குஹன் ஆனந்திப்பானோ,) அதுபோல அந்த நிஷாத அரசனாகிற குஹன் தன் பிரியபந்து வருவதுபோல ஆனந்தித்தான். நர்த்தனம் ஆடினான். ஓடினான் ராமனை உபசரிக்க. ருசியான பழங்களையும் தேன் அமிருதங்களையும் கொண்டுவருவதற்கு.

பகவானுக்கு அதிதி ஸத்காரம் காரம் செய்ய "பேண்ட்" (ஆகா ராதி வகைகளை) நிறைய தயார்செய்தான். அவைகளை தன் தலையில் சுமந்துகொண்டு ஞான ஸ்வரூபியான குஹன் ஆனந்த ஸ்வரூபத்துடன் ஹ்ருதயத்தில் ஆனந்த கந்தம் பொங்கிவர, ஓடினுன் ஓடினுன் பிரபு ராமசந்திரனைக் காண்பதற்கு. (443)

பகவானைப் பார்த்தான். சுக்ருத பிரணுமங்கள் ஒன்று அல்ல, கோடிக்கணக்காகச் செய்தான். அவன் பூஜை செய்த தெய்வம் அவனைத் தேடிக்கொண்டு ஓடிவந்திருக்கிறது.! கைகட்டி சாக்ஷாத்காரமாக பகவான் ராமச்சந்திரன் முன்பு நின்றுகொண்டிருக்கும் பரமபாகவதனை, (கம்பன் கண்ட ராம சகோதரனை, ராமன் தன் வாயினுல் சொல்லிய ஐந்தாவது தம்பியை,) என் பிரபு அத்யந்த ப்ரேமையினுல் கண்டார். ஸஹஜஸ்நேகத்துடன் அவனை ஓடித்தழுவி ஆனந்தித்தார். (அதுமாத்திரமா, லக்ஷ்மணன் கண்ட திருச்செல்வமாகிற ராமானுவர்த்தியாகிற கைங்கர்ய பாக்யங்களை அவன் அந்தராத் மாவில் பொறித்துவிட்டார்.) அவனை தன்னிடம் வாரி எடுத்து பக்கத்தில் உட்கார்த்திவைத்துக்கொண்டார். க்ஷேம குசலங்களை விசாரிக்க ஆரம்பித்தார். (444)

நிஷாதராஜனுன குஹன் பதில் சொன்னுன் " நாதரே, (என்னை ஆட்கொள்ளவந்த வேதமூர்த்தியே) (ஐயா,) உம்முடைய பாத பங்கஜங்களைக் கண்டதனுல் நான் பூர்ண ஆனந்தமும் நன்மையும் பெற்றேன். நானும் பெரும்பேறு பெற்றவர்களுடைய திரளில் ஒருவனுனேன். (அகல்யை உம்முடைய சரண ரேணுக் களால் சுத்தம் அடைந்தாளோ, அப்பேற்பட்ட) சரணுரவிந்தங் களை நான் (உமையின் கிருபையால்) இன்று கண்டேன். ஹே ஸ்வாமி, (க்ருதலக்ஷணன், க்ருதகாம்யன், க்ருதகிருத்யன் என்று சொல்லப்படும் வைஷ்ணவ) பாக்யவான்களுடைய சமாஜங் களில், ஸ்வாமி, தங்களுடைய அபார கிருபையால், நீரே மனம் உவந்து எனக்கு அளித்த மஹாபிரஸாதத்தால், நானும் ஒருவ னுகச் சேரப் பெரும்பாக்யம் பெற்றேன். அத்யந்த தயாளு, (என் ஆளுகைக்கு உட்பட்ட) இந்த நிலமும் பொருளும், (பிருதிவியாகிற ஜம்பூத்வீபம், அதின் தனமாகிற பரதக்கண்டம், அதிலும் மஹா உன்னதமாக விருக்கும்) என்னுடைய கிருஹமும், ஸ்வாமி, எல்லாம் உம்முடையவையே. நீர் எனது எஜமானரான படியால், நானும் என் குடும்ப பரிவாரங்கள் அனைத்தும் உம்முடைய தாஸர்கள் ஆவோம்." (அடியார்கள், ஸ்வாமி, உம் சித்தத்தின்படி நடக்கவிரும்பும் பரம பாகவத கோஷ்டிகள்) (445)

(என்னிடம் இவ்வளவு தயைகாட்டி, என்னைத்தேடி, தானே ஸ்வயமாக காண்பித்த திருமாமகளுடன்கூட வந்த பிரபோ, பக்தர்களுக்கு ஆஸ்ரித வாத்ஸல்யன் என்கிற தங்கள் திருநாமத்திற்கு ஏற்ப வைஷ்ணவ பாகவத குழாம்களில் அக்ர கண்யனாகவிருக்கும் லக்ஷ்மணனுடன் கூடிய ஸ்ரீராமசந்திரபிரபோ, இன்னமும், எக்காலமும், உன் திருவடி சம்பந்தம் நாடும் அடியார்களின் சேர்க்கைகொண்ட எங்களிடம் பூர்ண கிருபையுடன் ஸதா அனுஸந்தியும், ஸ்வாமி.) எங்களைப் பூர்ணதரனாக ஆக்க எண்ணம் கொள்ளும். கிருபாசிந்தோ. (ஆஞ்சநேயர், சுகர் சீதை போன்ற மஹா யோகிகள் சதா ஹ்ருதயத்தில் தாரணை செய்யும் தங்கள் திருவடித் தாமரைகளால்) என் வீட்டிற்கு வந்து, என் நகரத்தையும், என்னை நம்பி வாழும் அடியார்களுக்கு அடியார்கள் என்கிற தங்களுடைய தாஸர்களையும் புனிதப்படுத்தும். (அந்த பாக்யம் எப்போது வரப்போகிறது என்று தாபங்களைத் தீவிரமாக அனுபவித்துக் கொண்டிருக்கும் பாகவத குழாம்களை தாங்கள் விஜயம் செய்து குளிரப்படுத்தவேண்டும். இதுபோன்ற அமுதமான வாக்குகளால், பெரும் வைஷ்ணவ தர்சனத்தை காண்பிக்கும் தேசிகனாக மணியோசை கலீர் என்று முழங்கும்படி சொன்னான்.] ஸ்ரீராமச்சந்திரன் சொன்னார். "திறமைநிரம்பிய என் தோழனே, நீ சொன்னது சத்யமான வசனங்கள். ஆனால் நான் பிதாவினால் ஆக்ஞை செய்யப்பட்டவன்," (446)

"அந்த ஆக்ஞையின் பிரகாரம் நான் பதினான்கு வருஷங்கள் தவக்கோலம்பூண்டு, முனிவ்ரதனாக அந்த முனிவாழ்க்கைக்கு ஏற்ப ஆகார நியமங்களை ஏற்படுத்திக்கொண்டு, தபஸ் புண்ய தீர்த்தங்கள் இத்தியாதி கர்மங்களைச் செய்கிறவனானபடியால், உன்போல நகர கிராமவாசத்திற்கும் அதற்குரிய போகங்களுக்கும் இப்போது அருகதையில்லை. நீ என்னிடம் அனுதாபத்துடன் இருக்கிறாயே அதுவேபோதும்." (பிரியமான சகாவான குஹனே, பயப்படாதே. உன் தாபங்கள், உன் அடியார்களின் தாபங்கள் நீங்கிவிடும். தைர்யமாக இரு. என்று சொன்னார்.) இதைக் கேட்டதும் குஹனுக்கு (விரஜை நதியைத் தாண்டிச்செல்லும் வைகுண்ட பதத்தில் இருக்கும் மோக்ஷதர்சி எவ்விதம் ஸந்தாபப் படுவானோ, அதுபோல) பெருந்துக்கம் உண்டாகியது. (447)

ராமனுடைய திவ்யசௌந்தர்யம், ஸௌலப்யம், சீதையினுடைய திவ்ய சௌந்தர்யம், லக்ஷ்மணனுடைய திவ்ய பகவத் கைங்கர்யம் ஆகியவைகளைக் கண்டு கிராமங்களில் உள்ள பரிவாரங்கள், ஸ்திரி புருஷர்கள் யாவரும் ப்ரேமை ஆனந்தத்

துடன் ஆச்சரியமாகக் கண்டார்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் சம்பாஷித்துக்கொண்டார்கள். ஒருத்தி மற்ருெருத்தியிடம் சொன்ஞள் "சகி, இவர்களின் மாதாபிதாக்கள் எவ்விதமான ஆசாமிகளாக இருக்கக்கூடும்? அத்யந்த சுகுமாரர்களான இவர்களை, இந்த பாலகர்களை ஏன்தான் வனத்திற்கு அனுப்பியிருக்கின்றனரோ;" (448)

இன்ஞெருத்தி சொன்ஞள் "அரசர் சரியாகத்தான் நீதி செலுத்தியிருக்கிருர். இந்த வியாஜத்தால், நம்போன்ற பாகவத உத்தமர்களுக்கு பிரும்மாவிஞல் ஸ்வயமாகக் கொடுக்கப்பட்ட நேத்ரங்களுக்கு ஆனந்தத்தை விதி தாஞகவே கொடுத்திருக்கிறது. (யதேச்சையாக ஏற்படும் சுக்ருத ஆனந்தமாகவிருக்கிறது இவர்களுடைய தரிசனம்.) அந்த சமயத்தில் நிஷாதபதியாகிற குஹப்பெருமான் பகவான் பிராட்டியுடனும் லக்ஷ்மணனுடனும் தங்குவதற்கு ('அசோகம்' என்று பெயர்பெற்ற—சோகத்தைப் போக்கும்) மஞேஹரமான சிம்சுபா வ்ருக்ஷத்தைக் காண்பித்துக்கொண்டிருந்தான். (449)

அந்த விருக்ஷத்தின் அடியில் குஹன் பிரபுவை அழைத்துச் சென்று கொண்டிருந்தான். அந்த மரத்தின் நிழலில் அமர்ந்த ஸ்ரீ ராமச்சந்திரன் (சிவன் வில்வ மரத்தை நாடி சந்தோஷிப்பது போல) சந்தோஷத்துடன் சொன்ஞர். "இந்தஇடம் ஸர்வோத்தமமானதும், எனக்குப் பிடித்ததாகவுமிருக்கிறது." ஸ்ருங்கிபேரபுரவாஸிகள் ஒவ்வொருவரும் ராமனுக்கு சுக்ருதபிரணமம் செய்து, பகவானுடைய அருட்பிரஸாதத்தைப் பெற்று, தங்கள் கிரஹத்திற்கு எழுந்தருளிஞர்கள். ராமனும் கர்த்தவ்யமான நித்ய கர்மானுஷ்டானுங்களையும் ஸந்தியா பூஜைகளையும் செய்தார். (450)

பாகவத கைங்கரியத்தில் தேர்ந்த குஹன் பகவானுடைய படுக்கை ஆஸனத்திற்கு சித்தப்படுத்திஞன். தர்ப்பைகளால் மிருதுவான படுக்கையை தயார்செய்தான். அதன்மேல் கோமளமான இலைகளைப் பரப்பிஞன். மிருதுவான புல்லைப் பரப்பி தலையணையாக வைத்தான். தானே எல்லாம் தயார்செய்து அதன் பின்பு, அவன் மீண்டும் ருசியானதும் மிருதுவானதும் மதுரமானதுமான பழங்களை ஆராய்ந்துபார்த்து தொன்னைகளில் கொணர்ந்து வைத்தான். தண்ணீர் கொண்டுவந்து வைத்தான். (அவைகளைச் சாப்பிடுவதற்கு இலைகளால் தயார்செய்ப்பேட்ட தொன்னைகளைச் செய்துவைத்தான். ஸமஸ்த உபசாரங்களையும் மஞேவாக்கு காயங்களால் நிஷ்காம்ய பக்தியுடன், பகவானே பரம போக்யம், பகவானுடைய தாழ்களே பரம ஸாதனம், பகவத்

திருப்தியே நாராயண திருப்தி என்கிற வைஷ்ணவ அறிவுடன் செய்யப்படும் ஆத்ம ஸமர்ப்பணம் செய்தான் பரம பாகவதனுகிற குஹப் பெருமான்.) (451)

[தியானம்

ஹே ராமா சீதாராமா, ஸௌசீல்ய சாகரா, சீதாராமா நீங்கள் எனக்கு மார்த்தண்டன் சுரபியைப் போலவும், லக்ஷ்மணன் கோமதி ரோஹிணி மந்திரமாகவும் இருக்கிறீர்கள். நீங்களே ஸுசீலனுகவும் ஸர்வபலதாயனுகவும் ஸர்வஹிதைஷியாகவும் இருக்கிறீர்கள். வாத்ஸல்ய ராமா, ஜகஜ்ஜனனியாகிற காஸ்யபியினுல் சேவிக்கப்படும் சந்தான ராமா, நீங்கள் அத்ரிக்கு சந்திரன் போலவும் விஸ்வேதேவர்கள் போலவும் இருக்கிறீர்கள். ஹே காருண்ய ராமா, குஹனுகிற சுப்ரமண்யனுக்கு நீங்கள் இச்சா சக்தி கிரியாசக்தி வைராக்யமாகவிருந்த பிரணவார்த்தமாகத் தோன்றினீர்கள். ஹே பிரபோ, உமக்கு ராக்ஷஸன், தேவன், பசு பக்ஷி, மனிதன், திரியக், விருக்ஷம், அசுரன் என்கிற பாகுபாடு ஏதப்பா? கீழான ஜாதியில் பிறந்த விதுரனின் வீட்டுக்கு நீ போய் அவரைக் கௌரவிக்கவில்லையா? பரமார்த்தனுன நீ மனம் உவந்து உன்னையே நீ கொடுக்கும்போது, அதைவிட போக்ய மானது எது இருக்கக்கூடும் அப்பா? பீஷ்மரால் ஆராதிக்கப் பட்ட கேசவா, விஷ்வக்ஸேனரே, பரம உபநிஷத்துக்களால் மட்டும் அறியத்தக்க குஹ்யரே, என் தீப்தமூர்த்தியே, உம்முடைய மகிமைகளை அறிந்த என் பூர்வ ஆசார்யர்கள் வைஷ்ணவ ஸம்பிரதாயமாகிற திவ்ய தம்பதிகளின் உவந்த லீலைகளாகிற பிரணய விளையாட்டுக்களில் இன்பரஸம், பொருள், ஸர்வார்த்தம் ஸர்வபலதாயகம் என்று சொல்லி நிர்ணயிக்கிறுர்கள். நீர் தயரபரன், ஸௌசீல்யஸாகரன் என்று சொல்லக்கூடிய அழகிய தத்வங்களையும் வேதங்களால் புகழப்படும் ரஹஸ்யங்களையும் ஹே ஸ்வாமி, புருஷோத்தமா, விஸ்வாமித்திராதிகள் கண்டு அனுபவித்தார்கள். சீதாராமா, அவர்களுக்கு நீங்கள் திவ்ய தம்பதிகளாகத் தோன்றினதுபோல, குஹனும் உங்களைப்பரமார்த்தப்பொருளாகவும் கண்டான். ஆழ்வார்களிடம் காணப்பட்ட ஹ்ருதய வாஸம் "கல்லும் கனை கடலும் வைகுந்தவானுடும், புல்லென்றொழிந்தன கொல் ஏபாவம்—வெல்ல நெடியான் நிறங்கரியான் உள் புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம்" என்கிருப்போலே, ஹே சௌசீல்யராமா, என் ஹ்ருதயத்திலும் சீதாநிவாஸனுகவும் அலர்மேல்மங்கை மார்பில் உறைபவன், க்ஷணமும் அகிலகில்

லேன், என்கிற ஸ்ரீநிவாஸனுகவும் ஸ்ரீதரனுகவும், ஸ்ரீவத்ஸசின்ன னுகவும், திருபாற்கடல் பரமபதம் ஆகிய இடங்களைப்போல, உள் இச்சையாகிற சங்கல்பப்படி சரீரமாகிற என் ஹேதுவுக்கு நீ பரம போக்யமாக இருக்கமாட்டாயா ? திருமாலிருஞ் சோலைமலை என்றும், அத்தி கிரிக்ஷேத்ரமாகவும், சேஷசயனமாகவும் சந்திர சூர்யர்கள் போலவிருக்கும் திருக்கண்களைக் கொண்ட நெடியோன் நிற்கும் வேதவெற்பாகிற வேங்கடமலையாகவும், காவேரி சூழ்ரங்க தாம் என்கிற ரங்கநாயகி சமேத ரங்கநாதனுடைய வாசஸ்தலமாக வும் கங்கை உமை வாழும் ஜடாமண்டல ஹரனுகவும் எனக்கு என் ஹிருதயத்தில் இருக்கமாட்டாயா ? ஹே தீப்தமூர்த்தி, என் மனக் கடலுள் வாழும் மாய மணாளா, என்னைவிட்டுப் பிரியாமல் தியாக ராஜர் பிரஹ்லாதர், பலி, சங்கரர், நாரதர் போன்ற பக்திமான் களிடம் காட்டிய ப்ரேமையை என்னிடம் தயைபுரிந்து காட்டு அப்பா, அம்மா.]

(ஸத்பதாசாரத்திலுள்ள குஹனுல் ஸமர்ப்பிக்கப் பட்ட ஆராதனைகளையும், ஆத்ம நிவேதனத்தையும் பக்ஷ்ய போகிய வஸ்துக்களையும், பெருமாள் ஸ்வீகரித்தார். பிறர்கொடுக் கும் பரமான்னத்தை சாப்பிடுவதுபோல ஸௌசீல்யஸாகரரான எம்பெருமான் அங்கீகரித்தார். அரசர் பெருமானுகிற ராமன் குஹனுடைய சித்த சுத்தத்தையும் அறிந்த புருஷர். ஆகவே அவர் நேர்த்தியாகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளை சந்தோஷ மனத்துடன் ஏற்றுக்கொண்டார்.)

சீதை சுமந்திரர் லக்ஷ்மணன் சகிதம் அவர் கந்த மூலங்களை யும் பழங்களையும் ருசியுடன் உட்கொண்டார். அதன் பிறகு ரகுவம்சமணி நித்திரைக்கு எழுந்தருளினுர். அவருடைய தம்பி லக்ஷ்மணன் அவருடைய கால்களைப் பிடித்து க்ருத புண்யனுக ஆனுன். (452)

ஸ்ரீ ராமச்சந்திரன் நன்ருக உறங்கும் சமயம் லக்ஷ்மணன் எழுந்திருந்துபோய், சுமந்தரிரிடம் மிருதுவான குரலில் " நீங்கள் போய் உறங்கலாம், நான் பார்த்துக் கொள்கிறேன் " என்று சொல்லி விட்டு, கொஞ்சம் தூரம் தள்ளி இளைய பெருமாள் தனுஷ்பாணங்களுடன், வீராஸனத்தில் அமர்ந்தவராய் கண் விழிப்புடன் அனவரதமும் அந்த திவ்ய தம்பதிகளைக் காத்து வந்தார். (453)

குஹன் இதற்குள் மஹா விஸ்வாசத்திற்குரிய காவற்காரர்களை அழைத்து அத்யந்த பிரியத்துடன் இங்கும் அங்கும் காவல் வைத்தும் தானும் ஸ்வயமாக அதி ஜாக்கிரதையுடன் வில்லும்

அம்பும் சகிதனுக இடுப்பில் கச்சையைக் கட்டிக்கொண்டு மஹா பாகவதனுகிற லக்ஷ்மணன் அருகில் உட்கார்ந்து கொண்டு அவனுடன் திவ்ய தம்பதிகளை இரவு பூராவும் சோம்பலின்றி நித்திரையின்றி காவல் காத்தான். (454)

பிரபு என் ராமன் பசும் தரையில் படுத்திருக்கக் கண்டு குஹன் (எவ்விதம் பகவானுகிற குஹப்பெருமாள் தன்னுடைய பக்தர்களின் இன்ப துன்பங்களை தாமடைந்து துக்கமடைவது முதலியவைகளால் உலகமனைத்தையும் ரக்ஷித்து "குஹன்" என்கிற பெயரை அடைந்தாரோ, அதுபோல) விம்மி விம்மி அழுதான். அவனுடைய சரீரம் புளகாங்கிதமடைந்தது. (பிரபுல்ல லோசனங்களுடன் ஸ்ரீ ராமனுடைய திவ்ய மங்கள ரூபத்தை அனுபவித்தான்.) தன் சகாவாகிற லக்ஷ்மணனிடம் பிரேமை நிரம்பிய வசனங்களை அம்ருதமாகக் கொட்டினன். (455)

"தசரத மஹாராஜனின் அரண்மனை இயற்கையாகவே வெகு நேர்த்தியாக விருக்கும். இந்திர பவனம் என்கிற அமராவதியில் இருக்கும் சசீபதியின் நித்ய வாசஸ்தலம் கூட வெட்கத்தால் நாணப்படும்படி சோபிதமாக இருக்குமே. மணிமயம், ரத்னமயம் முத்துமயம் ஆகியவைகளால் வெகு நேர்த்தியாக ரதி பதியாகிற காமதேவன் ஸ்வயமாக தன் கைகளால் படுக்கை அறை, கட்டில்கள் மங்கள வஸ்துக்களால் ஜோடித்திருப்பானே." (456)

"இப்பேற்பட்ட சய்யாஸனம் சுசியானதும் விசித்திரமான அழகுகளுடனும் சுபோக்யமாக இருப்பதும், நல்ல வாஸனையுள்ள, கந்த புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டு நித்யோத்ஸவம் மாஸோத்ஸவம் போல கொண்டாடப்படும். இந்த இளம் தம்பதிகள், அப்பேற்பட்ட மஞ்சப் பலகைகளையும் நித்ரை சுகங்களையும், தியாகம் செய்து விட்டு, மணி தீபங்கள் கொண்ட விளக்கு வெளிச்சங்களையும் நான பிரகாரமாக சோபிதமாக விளங்கும் அழகு நேர்த்திகளையும் இழந்து விட்டு அவர்கள் வனம் அடைந்திருக்கிறார்கள்." (457)

"அயோத்தியின் அரண்மணையில் வித விதமான பஞ்சு மெத்தைகளை மிருதுவானதும் சுகத்தைத் தரும் அழகான படுக்கை தலையணிகள் பாலின் நுரைக்குச் சமமாகவுள்ள வாஸனை, கோமளம், நிர்மலம், பார்க்கப் பார்க்க நவயௌவன சௌந்தர்யம் ஆகிய விசேஷங்களால் நிரப்பப்பட்ட பட்டு ஹம்ஸதூளிகா மஞ்சங்கள் இருக்கின்றன. என் பிரபு சீதா ராமன் நித்ராஸானத்துக்கு வழக்கமாக தினந்தோறும் எழுந்தருளும் காக்ஷி வெகு நேர்த்தியாகவிருக்கும். அந்த நிஜவைபவங்களும் மனோரஞ்சிதமாக

விருக்கும் காக்ஷியும் ரதியுடன் கூடிய மன்மதனுடைய கர்வத்தையே போக்கும்.'' (458)

'' அப்பேற்பட்ட ராம சீதா இன்று புல் தர்ப்பையாகிற படுக்கைகளில் தூங்குகிறார். வஸ்திரம் கூட மூடப்படாமல் அதி கடூரமாகவிருக்கும் படுக்கையில் வழி நடந்த களைப்பினால் படுத்து தூங்குகிறார். அதிசிரமத்துடன் தூங்குகிறார்கள். இது பார்க்க இயலாத காட்சி பரிதாபமாக விருக்கிறது. மாதாவாகிய கௌஸல்யை, தசரதர் பர்ஜன பந்துக்கள் அயோத்யாபுரி வாஸிகள், ஸகல ஸுஹ்ருதயமுள்ள மித்ரர்கள், எப்போதும் பணி விடை செய்யக் காத்திருக்கும் தாஸர்கள், சுசீல நடத்தையுள்ள தாஸிகள்—அனைவரும் இவர்களைத் தங்கள் பிராணன் போல காத்துவந்தனர். (459)

'' அந்த சேவகர்கள் யாவரும் பிராணனை அடக்கி, யோகவசமடைந்து, ராமசீதா திருப்தி அடைய வேண்டும் என்று ஓடி ஆடி வேலை செய்து ஏகமனதாக, தங்களுடைய பிராணனைப் போல இந்த திவ்ய தம்பதிகளைக் காப்பாற்றினார்கள். அப்பேற்பட்ட என் பிரபு, கோஸாயி, (கோ என்கிற வேதங்களையும் பிராம்மணர்களையும் சகல ஜீவர்களையும் நடத்திச் செல்லும் நியந்தா,) இன்று கிருபணாக என்னால் அளிக்கப்பட்ட பிருத்வியின் மேல் தூங்குகிறார். எவளுடைய பிதா ஜனக மஹாராஜரோ, எவருடைய கர்ம ஜிக்ஞாஸ பிரபாவங்கள் மூன்று லோகங்களையும் விளங்கும்படி செய்யும் அதிசய கீர்த்திகள் உள்ளவைகளோ, அந்த ஸகர வம்சத்தைச் சேர்ந்த ராமனுக்கு சமுத்திரமும் இந்திரனும் தசரதருடைய பரம மித்ரர்களாக இருந்து என்ன பிரயோசனம்? (460)

[தியானம்

தசரத ராமா, சீதா ராமா, நிஸர்வகுணோப பன்னன், ப்ரஸ்வின்ன காத்ரம் உடையவன். பிரவிஷண்ண ரூபன் அப்பா, என் போன்ற பிரசித்தமான அபராதிகளைப் பொறுக்கும் பொறுமையுள்ள ஸ்ஹிஷ்ணு, என் மனமாகிற குதிரையை நடத்தும் ஹயக்ரீவர். உன் மகிமைகளை நீயாவது அல்லது உன்னை அண்டியிருக்கும் மஹானுபாவர்களான அகஸ்திய லோபா முத்ரை, மனுதம்பதிகள், திரௌபதி போன்ற மஹாபதிவ்ரதைகள் சொல்லாத போனால் யார் அப்பா தெரிந்து கொள்ளமுடியும்? வேதங்களால் புகழப்படும் ஓங்காரம், அஷ்டாக்ஷரம், ஏகாக்ஷரம் ஆகிய எல்லாம்சொல்லக்கூடிய ஏகமான நாராயணா, மஹாலக்ஷ்மி

யினால் அடையாளம் செய்யப்பட்ட ஆஸ்ரித வத்ஸலா, உன்னையும் உன் சீதையையும் புகழ்ந்து சொல்வதால் நாமல்லவோ உஜ்ஜீவிக்கப்படுகிறோம். ராமா, உனக்கு பாரபக்ஷம் ஏது? ராகு கேதுக்களை நீ அன்புடன் நடத்த வில்லையா? ஹிரண்யாக்ஷனை நீ அனுக்ரஹிக்க வில்லையா? கிருபணனுகப் போகும் ஆத்மாக்களுக்கு தயையே செய்து காட்டின புண்ய புருஷன் இல்லையா? உன்னுடன் கூட வந்திருக்கும் சீதை உன்னை விட கிருபையை அதிகமாக காட்டினாள். அவள் ராமாயணத்தில் மூன்று தடவைகள் உன்னை விட்டுப் பிரிந்து, உன் இச்சைப்படி நடந்து கருணை காட்டினாள். முதலில் தன்னை சிறைப் படுத்திக் கொண்டு லங்கையில் சிறைப்பட்ட தேவமாதர்களை ராவணன் வதத்தால் சிறை மீட்டினாள். அதே சமயத்தில் ராஷஸர்களையும் ராக்ஷஸிகளையும் திரிஜடை காட்டிய உபதேசத்தால் திருவடியின் கோபத்திலிருந்து ரக்ஷித்து பூர்ண கிருபாகுணத்தை வெளியிட்டாள். இரண்டாவது முறையாக லோக அபவாதத்திற்கு பயந்து காட்டில், ராமா—நிர்தயையுடன் உன்னால் விடப்பட்டும், கர்ப்பிணியான என் அம்மா உன்னிடமும் ரகுவம்சத்தினிடமும் அபார கருணை காட்டினாள். அதற்கு பின், பிரசவித்த பின் நான் முடிந்தேனாகில் "குற்றமுள்ளவளான படியால் பிறந்த ஸந்தானமும் பெருமாளாகிய நீரும் அபகீர்த்தியை அடைய நேரிடும்" என்று பயப்பட்டவளாக கிருபையுடன் உயிருடன் இருந்தாள். உன்னிடம் பாரதந்தரியம், பரம புருஷனாகிய உனக்கு உரிமைப்படுதல் என்கிற லக்ஷணத்தை எனக்கும் வைஷ்ணவர்களுக்கும் காட்டினாள். அந்த உத்தமமான ஸ்ரீ தேவதை, மூன்றாவது தடவையாக அவள் பூமியில் புகுந்த சமயம் "நான் பெருமாளைத்தவிர மற்ற எவரையும் மனத்தினாலும் சிந்தியாதவளாயின், இப்பூமி பிராட்டி எனக்கு இடம் கொடுக்கக் கடவள்" என்று கவிழ்ந்த தலையுடன் கிருதாஞ்சலியாக சபதம் செய்ய, அந்த பூமியாகிற வசுந்தரா அயோநிஜையான சீதையை, அகஸ்தியர் லோபா முத்ரை ஹயக்ரீவரால் உபதேசம்செய்யப்பட்டு ஆராதித்த மஹாதேவியை, என் ஆத்மா லயமடையும் லலிதாவை, இரு கைகளால் வாரி அணைத்துக் கூட்டிப்போக தன்னுடைய அனன்யார்ஹத்வத்தை, அதாவது தனக்கு என்ன ஆபத்து வந்தாலும் உனக்கு சேஷப்பட்டவள், உன் காரியத்தையே சதா செய்கிறவள்—உனக்கு மனோனுகூலை, மற்ற எவருக்கும் உரிமைப் படாத ஒழிகை ஆகிய லக்ஷணங்களை உடைய என் பிராட்டியை நமஸ்கரித்து ராமா, ஆஞ்சநேயர் உன்னை அடைந்தது போல, நானும் உன்னை

வந்து அடைகிறேன். ரக்ஷி அப்பா. கிருபை கூர்ந்து ரக்ஷிப் பாயாக.]

"என் ராமச்சந்திரன் அவளுக்குப் பதி என்கிற காரணத் தாலோ, பூமி பிராட்டியின் குமாரியான வைதேஹி என்ன கர்ம கதியை அடைந்து இவ்விதம் ராமனுடன் பூமியில் இடது பக்கம் தூங்க வேண்டும்? அந்தோ நான் பூர்வ ஆசார்யர் களிடம் பல தடவைகள் கேட்டிருக்கிறேன். கடவுள் ஒருக்காலும் எவருக்கும் பார பக்ஷமில்லாமல், எவருக்கும் பிரதி கூலம் செய் யாமல், அவர்களுடைய நன்மையையே கருதுவார் என்று சொல் லப் படுகிறுர். அப்பேற்பட்ட தயாளுவான கடவுள் ஏன், என் பிரபு ஸ்ரீ ரகு வீரனையும் சீதையையும் வனத்திற்கு யோக்யம் என்று அனுப்பி வைத்தார்? (ஸத்யம் ரஜஸ் தமஸ் ஆகிய முக் குணங்களுக்கு அப்பால் பட்டவரும், துராதர்ஷர் என்று வியாஸ ரால் சொல்லப்படுபவரும், கடல் போல ஆழ்ந்திருப்பதால் கலக்க முடியாத ஸ்வாபவம் படைத்த என் விஷ்வக்ஸேனர், என்ன அசுபமான காரியத்தையோ கர்மத்தையோ செய்து, கன்றுனது ஆயிரம் பசுக்களின் நடுவிலிருக்கும் தன் தாயை எவ்விதம் அடை கிறதோ, அது போல முன் பிறப்பில் செய்யப்பட்ட எவ்வித கர் மத்தால் இப்பேற்பட்ட அவகதியை அடைந்தார்?) லோகத்தார் கள் சொல்லுகிறுர்கள் "கர்ம பாக்யம் தான்" பிரதானமான அம்சம், வினையை யாவராலும் வெல்ல முடியாது. (இந்த பாரத பூமியில் புண்ய கர்மத்திஞல் தான் பரிசுத்தியை அடைய முடியும். அதற்காகத் தவவேடம் தாங்கி சரீரத்தை உலர்த்தி பாபங்களை விலக்கு வதற்காக இவிடம் வந்தாரா? ஆகாயத்தில் பறவைகளின் அடிச்சுவடும், நீரில் மீன்களின் அடிச்சுவடும் காணப்படுவதில்லையோ, அதுபோல பகவானுடைய சங்கல் பமும், கார்ய விசேஷமும், பிரும்ம ஞானமும் அதை அடை யும் வழிகளும் பீஷ்மர் போன்ற மஹா ஹ்ருதய உதாரமுள்ள ஆசார்யர்களின் திருவடி சம்பந்த மின்றி, தெரிந்துகொள்ள முடிகிறதில்லை.) ராமானுஜா, நீர் தரன் கிருபையுடன் எனக்குச் சொல்ல வேண்டும்." (461)

"மந்தமதி படைத்த கைகேயி நிச்சயமாக கடின ஸ்வாபவ மாகவும், குடில புத்தியுடன் கூடியவளாயும் இருக்கவேண்டும். என்ன காரணத்திஞல் என்ன சந்தர்ப்பத்தில் துக்கத்திற்கு சிறி தும் தகாதவர்களான இந்த கிருபாசிந்துவாகிற ராமசீதையை வனத்திற்கு அனுப்பிஞள்?" (462)

"ரகுகுல கல்பக விருக்ஷத்திற்கு அந்தபெண் கோடாலியைப் போன்றவள். அவளுடைய கெட்ட புத்தியினுல் அவளுக்கு மாத்திரமல்ல, சகல விஸ்வத்திற்கும் அபவாதத்தை அவள் உண்டு பண்ணி விட்டாள். அந்தோ, இன்று ராமனும் சீதையும் தரையில் படுத்து உறங்க நேர்ந்ததே என்று குஹப்பெருமாள் கதறினுர். (மலினமான கதியை அடைந்த என் பிரபு, ஸர்வ காருண்யன், கருணுமய ராம சீதா அபாக்ய வசமடைந்து பூமியில் புழுக்கள், வண்டுகள் தேள் ஸர்ப்பங்கள் போன்ற கொடிய எண்ணமுள்ள ஜந்துக்களை (எவ்விதம் தேவர்களுக்கு துன்பமளித்து தாரகாஸுரனை குஹப்பெருமான் தன்னிடம் வாகனமாகவும் கொடியுமாகவும் ஏற்று அனுக்ரஹித்தானே, அதுபோல) இந்த ஸ்திதியை பிரபு ஸர்வஸம்மதமாக ஏற்றுக் கொண்டிருக்கிருர்.'' இவ்விதம் (ஆழ்வார்கள் கதறினபடி) குஹப்பெருமாள் கதறினுர். (463)

இளைய பெருமாள் (ஆதிசேஷனுடைய ஸ்வபாவமான குணங்களாகிற) ஞான வைராக்ய பக்தி ரஸங்கள் நிரம்பின வசனங்களால் மிருது மதுரமான வசனங்களால் குஹனை ஆஸ்வாசப்படுத்தினுர். "மஹா புத்தியுள்ள குஹப்பெருமானே, யாரும் எவருக்கும் துக்கமோ சந்தோஷமோ கொடுக்கக் கூடியவரல்லர். பரம மித்ரனுக விருக்கட்டும்; கொடிய ஸ்வபாவமுள்ள சத்ருவாக விருக்கட்டும். தர்ம சக்ரத்தில் நடக்கும் கர்ம சம்சாரத்தில் அவரவர்கள் ஸம்மானமும் அவமானமும், லாபமும் நஷ்டமும், ஆபத்தும் ஸம்பத்தும் கர்மங்களின் முடிவில் திரும்பவும் செய்யப்பட்ட கர்மங்களை அனுசரித்தே உண்டாகும். கர்மம் தனக்குரிய காலத்தை மீறிச்செல்லுகிறதில்லை. (பூக்களும் கனிகளும் எவ்விதம் காலா காலத்தில் தோன்றுகிறதோ,) அதுபோல கர்ம பலன்களும் காலத்தால் மனிதனை வந்தடைகின்றன. (464)

"பந்துக்கள் கூடுவது, அப்பேற்பட்ட சேர்க்கை பிரிவது, மீண்டும் கூடுவது, நல்ல போகங்களை அனுபவிப்பது, அவக்கேடான துர்கதி, சத்ருமித்ரன் உதாஸீனன் எல்லாம் பிரமையால் ஏற்படும் வரிசைகள். ஜன்மம் மரணம், ஸம்பத்து ஆபத்து, கர்மம் அதன் பழத்தைத்தரும் காலம், எல்லாம் ஜகன் மோஹினியாகிற மாயையின் ஜகஜ்ஜாலங்கள்.'' (465)

"பூமியாகிற சொத்து, வீட்டின் சுகம், ஐஸ்வர்யங்கள், நகரவாஸம், பரிவார போகங்கள், ஸ்வர்க்க நரகம் ஆகியவை அனுதிகாலமாக ஏற்பட்ட வியவஹார சர்ச்சைகள். நீ எதைப்

பார்க்கிருயோ, எதைக் கேட்கிருயோ, எந்த குணத்தை மனத்தால் ஸ்மரிக்கிருயோ, இவை எல்லாம் மோஹத்தால் அக்ஞான மயத்தால், தனக்குத் தகுந்ததும் ஆத்ம ஹிதத்தைச் செய்யும் தர்மத்தை அனுஷ்டியாதபடியால் ஏற்படக்கூடிய விஷயம். ஆகையால் பரமார்த்தமான விஷயம் ஒன்று இருக்கிறது என்பதை புத்தியாலும் ஆசார்ய கிருபையாலும் அறிந்து அடையவேண்டும்.'' (466)

''ஸ்வப்னத்தில் அரசன் ஏழையாகிவிடுகிருன். ஏழை பணக்காரனுகிவிடுகிருன். ஸ்வர்க்கத்திற்கோ இந்திரனுகிவிடுகிருன். ஆனல் அதே மனிதன் முழித்தபின்பு லாபத்தையோ நஷ்டத்தையோ அடைகிறதில்லை. இந்த மனேபாவத்தால் ஞானத்துடன் இந்த பிரத்யக்ஷமாக விளங்கும் பிரபஞ்சம் அனைத்தையும் பார்க்கவேண்டும்.'' (467)

(பரமார்த்த தர்மமாகிற பகவான் நாராயணரை நினைக்கும் மஹா பாகவத உத்தமனுக்கு, புண்யம் செய்து புருஷோத்தமரிடத்தில் பக்தியை அடைந்தவர்களுக்கு, கோபமோ க்ரோதமோ இருப்பதில்லை; மாத்ஸர்யம் கிடையாது; தர்மங்களைச் செய்தது போதும் என்கிற லோபமுமில்லை, இருக்காது; அசுபமான மதியும் செய்கையும் சொல்லும் இருக்கவே இருக்காது.)

''இவ்விதமாக தீரனுடைய புத்தியால் விசாரித்து, க்ரோதவசப்படாமல் யாவரையும் விபரீதமாக தோஷம் கற்பிக்காமல், சுத்த மனத்துடன் இருக்கவேண்டும். மோஹங்கள் ஏற்படும் ராத்ரியில் தூங்குவதுபோல, இந்த சம்சாரத்தில் பற்றுதல் அற்ற வாழ்க்கையும் பகவானை மாத்திரம் ஆதாரமாகக்கொண்டு வாழவேண்டும். அப்பேற்பட்ட பகவான் நமக்கு ஜாக்ரத உலகில் ஸ்வப்னங்களை ஏற்படுத்துகிருர், என்று நினைத்து அவனுடைய லீலைகளுக்கு உட்படவேண்டும்.'' (468)

[தியானம்

ஹே சீதாராமா, ராமச்சந்திர பிரபோ, ஜீவ ஆத்மாவாகிற லக்ஷ்மணனுல் சேவிக்கப்பட்ட ஸ்ரீ சீதாராமா, என் பிரபிதாமஹரே, என்னை ஆட்கொள்ளவந்த கஞ்சலோசனியாகிற காமாக்ஷியின் ஸ்வரூபமே, சீதாவின் கதம்பவனமாகிற நந்தனத்தில் உலாவும் ராமதயாளு, உமது கருணை ஸ்வரூபத்தையும் உமது கல்யாண குணங்களையும் விபவங்களையும் இன்னும் அதிக அபிவிருத்தியடைந்து நிரம்பியிருப்பதையும், நினைத்துப் பார்த்து, ஸ்வாமி உமது ஸ்வதந்திர நடத்தையாகிற சங்கல்பத்

தையும் நினைத்துப் பார்த்தாலும், என் தோஷங்களையே நினைக்கும் தண்டராகவே நீர் எனக்குத் தோன்றுகிறீர். தாரையின் நினைவில் வளர்ந்தவனும், மாதங்கவிலாஸ காமனுக விருந்த வாலி உன்னையும் உன் தர்மங்களையும் நினைத்துப் பார்க்காமல் தம்பி என்கிற ஸ்நேகத்தையும் நினையாமல், எவ்வளவு அசூயையோடு சுக்ரீவனை பயமுறுத்தினன். ஹே பகவானே, உம்மால் தண்டிக்கப்பட்டவுடன், தன் க்ரோதத்தை இழந்து, உம்மிடமும் தாரையிடமும் சுக்ரீவன் அங்கதர்களிடமும் தயைகாட்டி, உமது நிக்ரஹவசத்தில் பரம ப்ரீதியானன். அப்பேற்பட்ட உமது தரிசனத்தை கண்ட வாலி பிரகிருதியாகிற இருளைத் தாண்டினன். சாந்த மனத்துடன், ஸம்சார துக்கங்களை வேருடன் அழித்து, உம்மை நிவிருத்தி தர்மத்தை உபதேசிக்கும் நிவிருத்தாத்மாவாகக் கருதினன். அப்போது உன் பிராட்டி உன்னிடம் இல்லை. உன்னிடம் புருஷகாரம் செய்வதற்கு லக்ஷ்மணன் மாத்திரம் இருந்தான். தாரையினிடம் ராமநாம உபதேசம் பெற்ற வாலி கர்மானு குணமாக உம்மிடம் பராங் முகனுகவிருந்தும், லக்ஷ்மணனை உம்முடன் கண்டதும் உம்மிடம் சுக்ருத விஷயமாக புத்தியைப் பெற்றுன். அப்பேற்பட்ட ராமானுஜனை ஆசார்யனுகக்கொண்ட என்னை என் குற்றங்களைக் கணக்கிட்டு, உம்முடைய ஸாயுஜ்யமாகிற அநிவிர்த்தி சுகத்தை, திரும்பவும் சம்சார சக்ரத்தில் உழலாதபடி ஆள்தேடி நிற்கும் எனக்கு, உமது கிருபையாகிற ஸம்பந்தம் இல்லாமல், கதவு அடைக்கப்பட்டுப் போகுமானுல், எனக்கு யாரிடம் போக்கு உண்டு? ராமா, தியாகராஜர், நாரதர், துளசிதாஸர், ஸப்தரிஷிகளால் உபாஸிக்கப்பட்ட சீதாராமா, ஸாதுக்களுக்கு தஞ்சம் கொடுக்கும் காருண்ய ராமா, பிராட்டி இருக்கும்போதும், ராமானுஜன் உன்னிடம் இருக்கும்போதும், சொல்லிவைத்தேன். நம் வலையில் யார் அகப்படுவார் என்று தேடித்திரியும் வனம் சென்ற ராகவா, அனந்தகுண கம்பீரா எனக்கும் உனக்கும் ஸம்பந்தம் ஆண்டாள் சொன்னதுபோல, திரௌபதி அர்ஜுனன் காட்டியதுபோல, உமைசங்கரர் எனக்கு படித்துப் படித்துச் சொல்லியதுபோல, ஒழிக்க ஒழியாத தென்றன்ருே? விஸ்லேஷ தசையில் சீதை ராக்ஷஸிகளைக் காக்கவில்லையா? நீ வாலியை அனுக்ரஹிக்கவில்லையா? என்னையும் உன் கையால் உன் திருவடிபக்கலிலே மன்ருடினன் என்று சுக்ரீவ சகாவாகிறவனும், தர்மம் அதர்மம் எது என்று தெரிந்து உன் பாதங்களை பெரிய தர்மம், பெரிய அனுஷ்டானம்

பெரிய ஆசாரம் என்று எனக்கு நாரதர் சொன்னதுபோல காட்டிக்கொடுத்த ஆஞ்சநேயர் சொல்லமாட்டாரா? பரமா கிருபாநிதி. என்னையும் கிருத ஆத்மவானாக செய்—அப்பா.]

லக்ஷ்மணன் மீண்டும் குஹப்பெருமானிடம் சொன்னார். "என் ஆத்மசகா, இந்த ஜகத்ரூபியாகிற இருள் சூழ்ந்த ராத்ரியில், மஹா புத்திபடைத்த யோகிகள் சதா முழித்துக் கொண்டு ஜாக்ரதையுடன் குல ஐஸ்வர்யத்தைக் காப்பதுபோல, சதா, எது ஸர்வேஸ்வரத் தன்மையுடன் விளங்குபவரோ, பரிபூர்த்தியுடன் இருப்பவரோ, கார்ய காரணங்களைவிட விலக்ஷணமும் நித்யமும் பரிசுத்தமும் ஞானமுள்ளதும் தமக்கு தாமே ஈஸ்வரராக விளங்கும் பரமாத்மாவை சதா தியானித்த வண்ணம் இருக்கிறார்கள். மாயாமோஹங்கள் லோபங்கள் க்ரோதங்கள் நிராசைகள் நிரம்பின இந்த பிரபஞ்சத்தை தூர ஒதுக்கித் தள்ளுகிறார்கள். அப்போது தான் சாந்தம் ஏற்பட்டு, நியமமுள்ளவர்களாகவும், பிரும்மசர்ய லக்ஷணங்கள் உள்ளவர் களாகவும், குருக்களை உபாஸிப்பவர்களாகவும் அறிவுபெற்று, அவர்கள் தர்மம் அதர்மம் என்பதை நன்கு கண்டு அறிகிறார்கள். அவ்விதம் அறிவினால் அந்த சேதனர்கள் சம்பூர்ண விஷய விலாஸங்களில் நிவிருத்தி அடைந்து வைராக்யம் மேலிட்டவர் களாக முழித்துக் கொண்டிருக்கிறார்கள்." (469)

அப்பேற்பட்ட விவேகம் அடைந்தபின்பு, என் பிரியமுள்ள குஹா, மோஹம் பிரமையாகிற ஆசைகள், லோபங்கள் எல்லா வற்றையும் அழிக்கிறார்கள். (எந்த பீஷ்மர், தர்மபுத்ரனுக்கு எல்லா தத்வஞானத்தை உபதேசித்த பின்பு, எல்லா தர்மங்களிலும் சிறந்த தர்மம் "பகவான் நாராயணர்தான்" என்று சொல்லி ஸ்ரீவிஷ்ணுவின் ஸஹஸ்ரநாமங்களால் பிரமாணம் செய்து தலைகாட்டினாரோ,) அப்பேற்பட்ட ரகுநாதனுடைய சரணங்கள் தான் உத்தமமான "பதமனுத்தமம்", அதற்குமேல் ஒன்று மில்லாத பரம ப்ராப்யமான வஸ்து என்று முடிவுகட்டி வாழ் கிறார்கள். அப்பேற்பட்ட பிரபு ராமனின் தாமரைமலர் சரணங் களை அடைய முயற்சிசெய். என் ஆத்ம ஸகாவே, குஹனே, இதுதான் அப்பா சம்சாரத்தில் சம்பாதிக்கவேண்டிய பரம பரமார்த்தம், இதுதான் சிறந்த ஐஸ்வர்யம்." (இதுதான் அப்பா, உனக்கு, உன் வீட்டில் அதிதியாகதானே ஸ்வயமாக வந்திருக்கும் இந்த ராமசீதா தம்பதிகள் தங்களுடைய ஸௌலப்ய கிருபா விசேஷங்களால் தங்கள் பரதத்வத்தை மறைத்து, உன்னிடம் தங்களை அர்ப்பித்து, போக்ய பரவசர்களாக ஆகிறார்கள்.

இப்பேற்பட்ட பரமார்த்த சரணங்களை நீ, மனம் கர்மம் வசனங்களால் பராயணமாகவிருந்து, மோக்ஷத்திற்கு ஸாதன மான பரம பக்தியை அவரிடமிருந்து பெற்றுக்கொள். அது தான் இந்த ஸம்ஸாரத்திற்கு திரும்பிவராத உயர்ந்த ஸ்தானம். அவரை அடைந்தால் அதை அவரே அளிப்பார். சீதை உனக்கு புருஷகாரம் செய்வாள், என்கிற வைஷ்ணவ த்வய மந்திரத்தின் சுருக்கைச் சொல்லி விளங்க வைத்தார். ஞான திவாகரனுகிற ராமானுஜர் "இதுதான் அப்பா, ஸர்வ ஸ்ரேஷ்டமான சாத்ய, சித்த உபாயத்தினுல் அடையக்கூடிய சேதனனுக்கு பரமஹித மாகிய புருஷார்த்தம்" என்று சொன்னுர்.) (470)

"அப்பா, மீண்டும் கேள். இந்த ராமர் பிரும்மம் என்கிற பரமார்த்த ஸ்வரூபமே. வேதங்களாலும், (வேதவியாஸர் போதாயனர் போன்ற மஹரிஷிகளாலும்) புகழப்படுகிற பர பிரும்மம். (ஸர்வ ஸ்வதந்தரராகவிருக்கும் பகவான் ஸர்வஞானம் ஐஸ்வர்யம் முதலிய குணங்கள் நிரம்பியிருப்பதாலும் அனுதி காலமாகவும் ஆதி பிரபிதாமஹராகவும் இருக்கிறபடியாலும்,) அவரை மூன்று குணங்களின் தோஷ சேர்க்கை பெற்ற குற்ற முள்ள நம் அறிவால், விஷயப் பற்றுதல் இன்றி, இந்த சம்சாரத்தில் அறியமுடியாது. (பிரும்மம், மஹத், மஹாபூதம் ஆகிய சப்தங்களால் அறியப்படும் பெரும் வஸ்து இருக்கிறதே, என் பிரிய குஹா,) அதனை ஸ்தூலமாக பார்க்க முடியாது. (தவம் வேதம், ஸத்யம் ஞானம் ஆகிய ஸாதனங்களால் அறியப்படும் ஹ்ருஷிகேசர், அகோசரமான பொருளாகிற அவர் யாவரும் அனுபவித்தும் தன் மகிமை ஒரு நாளும் குன்ருத அதோக்ஷஜர்) எல்லாவித மாறுபாடுகளும், பேதங் களும் அற்று ஒரே பரம்பொருளாக விளங்கும் அந்தத் தத்துவத்தை வேதங்களும் இன்னபடியென்று விளக்கிக் கூற இயலாமல் இருக்கின்றன. அனுதியானவர் பிரளய காலத்திலும் இருக்கும் அந்தகர். அவருக்கு கர்ம வசப்பட்ட நம்போன்ற ஜீவாத்மாக்களை உபமானமாக சொல்ல இயலாது. முடிவில்லாத வேதங்களின் முடிவை அவரே அறிந்திருக்கும் "பிரும்ம வித்தானபடியாலும் வேதங்கள் அவரை பிரத்யக்ஷ பிரமாணங் களைத் தவிர, வேறு பிரமாணங்களாலும் அறியப்படுத்துவதால்" "இவர் இதுவல்ல"; "இது இவர் அல்ல"; என்கிற நிரூபண சக்திகளுக்கு அதீதர்." (471)

"அப்பேற்பட்ட க்ருபாளு, (உன்னிடம் தயைகாட்டி, உன் வீட்டிற்கு ஸ்வயமாக பிராட்டியுடன் எழுந்தருளியிருக்கும் சீதா

ராமச்சந்திரன்,) பக்தர்களுக்காகவும், பூமியின் பாரத்தைப் போக்கி அதர்மத்தை வேருடன் அறுத்து, ஐஸ்வர்யத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கும் தர்மர் ; அந்த தர்மத்திற்கு ஸாதன மாக விருக்கும் வேதங்களை அறிந்து, அதன் ஆசாரப்படி நடக்கும் பிராம்மணர்களுக்கும் சேதனர்களுக்கும் போகத்திற்குரிய அளவற்ற ஸாதனங்களை தரும் இருப்புஸீகம் ஆகிற கோக்களையும், தேவதைகளைக் காப்பதற்காக மனுஷ்ய சரீரம் எடுத்து, தன்னுடைய லீலாவிபூதிகளுடன் வந்திருக்கிறார் அப்பா. அவரை நீ நன்றாக தெரிந்துகொள்.) அவருடைய சுந்தர சரித்திரமானதும் சுத்த ஆசாரங்களுடன் கூடிய லீலைகளை நன்றாக அறிந்து, என் பரம பாகவத உத்தமனே, ஜன்ம சக்கரத்திலிருந்து விடுதலையைப் பெற்றுக்கொள். இந்த சம்சாரமாகிற மாயாஜாலங்களை அழித்து, அவருடைய கிருபையால், மேலும் கீழுமாக சுழலும் ஜன்ம சக்ரத்தை, உன்னைத் தூக்கிக்கொள்வதற்காக, அவரைஅடைந்து, ஜன்ம தாபங்களிலிருந்து விடுபட்டு மோக்ஷமடை. இந்த பகவானுடைய லீலைகளைக் கேட்டாலே, ஜகத்தின் மாயை புரிந்து நாசமாகிவிடும். (நீ அவரைப் பிரத்யக்ஷமாகப் பார்ப்பதற்கும், அவரை சேவை செய்வதற்கும் மஹா பாக்யம் படைத்தவனாக இருக்கிறாய் என்று சொன்னார்.) (472)

## மாஸ பாராயணம்–15வது விஸ்ராம்–நிறுத்தம்

"ஹே சகா, இப்பேற்பட்ட விக்ஞான புத்தியுடன், ஸ்ரீசீதா ராமச்சந்திரனுடைய தாள்களைப் பற்று. மோஹத்தை தியாகம் செய்து அவர்களிடம் ப்ரேமை பக்தி செய். ஸர்வகாலமும், ஸர்வாவஸ்தையிலும் பர பக்திபர ஞானம் பரமபக்தி இவைகளைத் தரும் ஸ்ரீசீதா ராம குண விலாஸங்களைப் போற்றும் அம்ருத ஸமுத்திரத்தில் மூழ்கியிரு." இவ்விதம் இளையபெருமாள் சொல்லி குஹனுடன் இரவைக் கழித்தார். அருணோதயமும் ஏற்பட்டது. அப்பொழுது மூன்று லோகங்களுக்கும் மங்களத்தைத் தரும் ஸ்ரீராம வேங்கடேசன் நித்ரையிலிருந்து முழித்து எழுந்திருந்தார். (473)

[தியானம்

கௌஸல்யையின் அழகான புத்ரனாகிற ராமா, விஸ்வாமித்திரர் எவ்விதம் உமையுடன் கூடின ஸ்கந்தனைக் கண்டாரோ, மஹேஸ்வரராகிற விருஷபத்வஜன் ஸ்கந்தனைக்கண்டு எவ்விதம்

ஆனந்திப்பாரோ, அதுபோல குஹனை ஆனந்தமாய்ப் பார்த்துச் சுவைத்த ராமா, என் சுப்ரமணியனே, இச்சாசக்தியாகிற வள்ளி என்கிற சீதையுடனும் தேவயானையாகிற கிரியாசக்தியுடன் கூடின கைங்கர்ய லக்ஷ்மணனை உடைய சாகேத ராமா, அர்ஜுனன் " நமः புரஸ்தாத், அதः பிருஷ்டஸ்தே, நமோஸ்து ஸர்வத ஏவஸர்வः " என்கிறபடி உங்களை நான் நமஸ்கரிக்கிறேன். என் மனமாகிற தனஞ்ஜயருக்கு ரதசாரத்யம் செய்யும் பார்த்தசாரதி, எவ்விதம் அர்ஜுனன் ரணகளத்தில் மயங்கினரோ அதுபோல என் மனம் மயங்குகிறது. தீர்த்தகரனுகிய விளங்கிய ராமா, குஹன் முன்பு ராமானுஜரால் விளக்கப்பட்ட தர்மபீஜமே, பிரத்யக்ஷமாக வந்த தீப்தமூர்த்தியே, ஸத்ய திருதியாகவும், திருட ஸத்யவிக்ரமனுகவும், மஹா அரண்யமாகிற இருள்சூழ்ந்த சம்சாரத்தில் எனக்கு குருவாக வந்து, சிஷ்டாசாரம், வேதம், பிரத்யக்ஷம் ஆகிய மூன்று வகைகளால் பிராம்மணர்களால் அறியப்படும் ஏகம் என்று சொல்லப்படும் தர்மமே அவ்யயமான தர்மமே, ஞான வயோதிகம்கொண்ட பெரியோர்களால் உபதேசிக்கப்பட்ட தர்ம புத்ரர் கண்தெரியாதவன் போலவும் மூடன் போலவும், முடவன் போலவும் விசாரிக்காமல் உன்னையே தர்ம நிச்சயம் என்று அனுஷ்டித்தார். அஜாதசத்ருவே, கொல்லாமை, ஸத்யம், பொறுமை, கொடை ஆகிய நான்கையும் தர்ம லக்ஷணங்களாக அறிந்தும், தந்தை பாட்டன் முதலிய பரம்பரையில் இருந்து வரும் ஒழுக்கம் எதுவோ அதையும் அனுசரித்தும், குலரீதி குல ஆசாரப்படி நடந்து அவர்களை என் தர்ம தரிசிகளாக வைத்து, உன்னை வந்து நான் சரணடைகிறேன். என் வினயரே, தயிருக்குள்ளும் பாலுக்குள்ளும் மறைந்து கிடைக்கும் வெண்ணெய் போன்ற ஸாராம்சமாக விருக்கும் குப்தரே, உலகமெல்லாம் பிராம்மணர்களிடமும் பிராம்மணர்களாகிய எல்லோரும் உபாயபூதனுகிற எம்பெருமானையும், புருஷகார உபாயமாகிற பிராட்டியையும் பெருமாளையும், ஸ்வதர்மத்திலிருந்து விலகிய தோஷங்களையும், ஸ்வதர்மத்தை அனுஷ்டியாதலால் ஏற்பட்ட பாபங்களையும் அழித்து, எனக்கு பிரபத்தியை உபதேசித்த ஆசார்யனுன ராமானுஜனையும், அடியார்களுக்காக நீங்கள் இருவரும் இருக்கிறீர்கள் என்கிற அத்யாத்ம வித்யையும் உபதேசித்த அனந்தனையும் நான் உபாஸிக்கிறேன். என் தனஞ்ஜயரே, ஸுவ்ரதரே, என் பராபரனுரே, ஸர்வ பூதாத்ம பூதாத்மரே, அவ்யயமான தர்ம பீஜத்தை, என் அஸ்வத்த மரத்தை நான் நாடுகிறேன். நாராயணரே, சீதையுடன் கூடிய ராமா, ராகவா, வஸிஸ்டர், பரதர்

வியாஸர், சுகர், தியாகராஜாதிகளால் ஆனந்தமாகச் சேவிக்கப்பட்ட பகவானே, நாரத பிரியரே என்னை ரக்ஷித்து அருளும்.]

சௌசாசாரங்களையும், கர்த்தவ்ய கர்மங்களையும் செய்தவராய் கங்கையில் ஸ்நானம் செய்தார். பிறகு ஆலமரத்தின் பாலை எடுத்து தன் தம்பி சகிதம் ஜடாமுடியை தரித்துக்கொண்டார். இதைப்பார்த்ததும் சுமந்தரருக்கு ஒரே அழுகை வந்துவிட்டது. கண்களில் தாரை தாரையாக ஜலம் பெருகியது. (474)

அவருடைய ஹ்ருதயம் அதிக தாபத்தினல் எரிந்து கொண்டிருந்தது. அவர் முகம் ஒரு தாமரை புஷ்பம் ஜலமில்லாமல் வாடுவதுபோல வாடி மலினமாக பிரகாசித்தது. தன் இரு கைகளை குவித்துக்கொண்டு அத்யந்த பிரேமையினல் கலக்கப்பட்டவராகி, தன் தீனத் தன்மையையும் ராமனுடைய பிரிவைத் தாங்கமுடியாதவராகிச் சொன்னர். "என் நாதரே, (கோபம் இல்லாமையால், கொடுமை நீங்கினவரும் எப்பேற்பட்ட கொடிய விரோதிகளையும் கொல்ல அல்லது நிக்ரஹம் செய்ய மனமில்லாமல், ஸர்வசக்தியுடன் பொறுமையாக இருந்த அக்ரூரே,) எனக்கு கோஸலா நாதனுகிற தசரதர் ஆக்ஞை செய்திருக்கிருர். ரதத்தை எடுத்துக் கொண்டு ரகுநாதனேடு வனம் போ." (475)

"வனத்தை அவர்களுக்கு காண்பி. கங்கையில் ஸ்நானம் செய்து வை. பிறகு அந்த இரு ராஜபுத்ரர்களையும் அழைத்து வா. ஸந்தேகத்தையும், தர்மத்தைச் செய்வதில் சங்கோஜமின்மையையும் அடையாதே. லக்ஷ்மணன் சீதா ராமன் ஆகிய மூவர்களையும் திரும்பி அயோத்திக்கு சீக்கிரமாக கூட்டி வா." (476)

"என் பிரபு, தர்ம கோஸாயியான மன்னர், இவ்விதம் சொன்னர். நான் இப்போது உம்முடைய ஆக்ஞையை எதிர்பார்க்கிறேன். நான் உம்முடைய ஆக்ஞையை நிறைவேற்றி அரசருக்கும் கிருத கிருத்யனுக விளங்குவேன்." இந்தவிதமாக மஹாபராக்ரமமுள்ள சுமந்தரர் மிக்க வினயத்துடன் அடங்கி ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதங்களே தனக்குத் தஞ்சம், (எவ்விதம் மானம் போகும் சமயத்தில் சரணுகதையான திரௌபதி கிருஷ்ணனை ஆஸ்ரயித்தாளோ,) அதுபோல பகவானுடைய பாதங்களை ஆஸ்ரயித்து, குழந்தை மாதிரி அழுதார். (477)

தழுதழுத்த குரலில் "என்னை ஆட்கொள்ளவந்த ராமா, கிருபை செய். பெரும்மனத்துடன் க்ரோதம் செய்யாமல் உதார ஹ்ருதயத்துடன் அயோத்திக்கு திரும்பி வா. என் எஜமானராகிய தசரதர் அநாதையாக தவிக்கிருர்." ராமர் மந்திரியை எழுப்பினர். எல்லா சத்வகுணங்களும் நிரம்பின பரிபூர்ண தயாமூர்த்தியாகிற

ராமமூர்த்தி சுமந்தரரை தழுவிக்கொண்டு சொல்ல ஆரம்பித்தார். "ஐயா, உம்மால் அவ்யமான தர்மத்தை நன்ருக அறியப்பட்டிருக்கிறது. மனமாகிற ஸாதனத்தாலும், பெரியோர்களால் உபதேசிக்கப்பட்ட புத்தியாலும், வேதம் பிரத்யக்ஷம் சிஷ்டாசாரம் ஆகிய மூன்று வகைகளாலும் நன்ருக அறியப்பட்டிருக்கிறது. அப்பேற்பட்ட தர்மஞானம் உள்ளவரும் ஆசாரசீலருமாகவிருக்கும் என் பிதாவுக்கு மந்திரியே, என் பிதாவின் சகாவே, (478)

"தாங்கள் சிபி, ததீசி ஹரிச்சந்திரன் ஆகியவர்களைப் பற்றி கேட்டிருக்கலாம். இவர்கள் தர்மம் ஒன்றையே பராயணமாக வைத்து, கோடிக்கணக்கான கஷ்டங்களை அனுபவித்தார்கள். மஹாதேவனுகிற ரந்திதேவனைப் பற்றியும் (கவாமயனம் என்கிற யாகத்தைச் செய்தவனையும் பற்றி) தாங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். எவ்வளவு ஆபத்துக்கள் வந்தபோதிலும் பிரஹ்லாதனுல் ஆழ்ந்து உபதேசிக்கப்பட்ட பலி சக்ரவர்த்தியைப் பற்றியும் தாங்கள் கேட்டிருக்கலாம். இப்பேற்பட்ட மார்க்கதரிசிகள், ராஜரிஷிகள் என்ன சிரமம் வந்தாலும் தர்மம் என்கிற ஸர்வருக்கும் ஹிதம் செய்வதையே அனுஷ்டித்து வாழ்ந்து வந்தவர்கள். ஒருக்காலும் தர்மத்தை ஸ்வகாரிய பிரயோஜனங்களுக்குப் பரிதியாகம் செய்யாதவர்கள்." (479)

[தியானம்

ஹே காட்டுக்குப் போகிற ராமா, சீதாராமா, யக்ஞபதியே, பூவராகப் பெருமானே, மாதவி, உமது ஆராதனத்திற்குத் தேவையான புண்யங்கள் இல்லாமல் போனுல் என்னைப்போல இருப்பவர்களுக்கு ஜபயக்ஞ ரூபமாக விருப்பவரே, தியாகராஜர், சுக்ராசாரியார், விஸ்வஜித்யாகம் செய்த பகீரதன் போன்றவர்களுக்கு ஸதாம்கதியாக விருப்பவரே, தசரதருக்கும் கௌஸல்யை சுமித்திரை கைகேயி ஆகியவர்களுக்கு மஹா தேஜஸ்வாய்ந்த ரிஷிய ஸ்ருங்கராகவும் பார்யையான சாந்தையாக விருப்பவரே, என் பித்ருவே, பிதாமஹரே, பிரபிதாமஹரே, காம்யபலன்களை நாடுபவர்களுக்கு இந்திராதி தேவதா ரூபியாக ஆராதிக்கப்படும் இஜ்யரே, தேவர்களுக்கும் அந்தர்யாமியாகவிருந்து "யக்ஞபுக்" என்கிறபடி யக்ஞங்களை அனுபவிப்பவரே, ஸத்ரம் என்னும் நெடுங்காலமாகச் செய்யப்படும் யாகரூபியாகவிருப்பவரே, லீலைகளைச் செய்து விளையாடுபவரே, உம்மை மஹேஜ்யர் என்று சொல்லுகிருர்கள். உம்மையே விஷ்ணு பக்தரான விஷ்வக்ஸேனர் நேராக ஆராதித்து உமது ஆரா

தனத்தையே பெரிதாகக் கருதினர். பிரணவ வடிவான உமா புத்ரன் சந்தோஷமடைவதுபோல, நானும் உமது ஆரா தனத்தையே மோக்ஷபலனக கருதுகிறேன். சுக்ராசாரியாரின் மிருத சஞ்சீவினியாகிற ஔஷதமே, என்கிருதுவே, அக்னி ஷ்டோமம் முதலிய ஸோம பானமுள்ள யாகங்களால் ஆராதிக் கப்படும் ஆதிவராஹ மூர்த்தி, என்னை லக்ஷ்மிநாதனை நீர் அங்கீகரித்து, ரக்ஷித்து அருளவேண்டும்.]

"ஆகமங்களாகிற வேதங்கள், சாஸ்திரங்களாகிற தர்ம சாத னங்கள் (யாக்ஞயவல்கியர், மனு, போதாயனர் ஆகியவர்கள் எழுதின ஸ்மிருதி நூல்கள்) (வியாஸர் போன்ற மஹான்களால் இயற்றப்பட்ட) புராணங்கள் கோஷிப்பது என்னவென்றல் ஸத் யத்தைவிட மேலே ஒன்றும் இல்லை, பெரிதல்ல; அதை விடச் சிறந்த தர்மம் ஒன்றும் இல்லை. அப்பேற்பட்ட ஸத்ய தர்மத்தை இயற்கையாகவே கொண்ட ஸத்ய மேதஸ்ஸாகிற நான் வெளிக் காட்டுதல் இன்றி உள்ளத்திலும் இயற்கையாகேவே உண்மையாக விருக்கும் தன்மையுள்ளவன். எனக்கு, மனு முதலிய பிதா மஹர்கள் எழுதி அனுஷ்டித்த விஷயத்தில் வஞ்சனை இல்லாமல் நடக்க வேண்டும் என்கிற ஆசை உள்ளபடியால் அதைத் துறந்து அபயசஸ் ஆகிற அசுபமான குலக்கீர்த்தியினல் நான் ஸத்ய தர்மத்தைப் பாழாக்க விரும்பவில்லை." (480)

"லஜ்ஜையும் பயமுமின்றி "நான் ஸ்வாதந்திரன்; எனக்கு பகவான் இட்ட தர்ம ஸேதுவை மீற பராக்ரமம் இருக்கிறது" என்று எண்ணி அந்த விரதத்தை கைவிட்டால் மரணத்திற்கு சமமான அபயசஸ் உண்டாகி விடும். அந்த தாபத்தினல் ஏற் படும் ஆசரணைகள், ஸந்தாபங்கள் என் ஜீவநாட்கள் முழுதும் என்னைப் பயங்கரமாக அரித்துக்கொண்டிருக்கும். என் குல தனமே, என் பிதாவினல் மிக சிரமப்பட்டு சம்பாதிக்கப்பட்ட மந் திரியே, உமக்கு வம்ச பரம்பரையாக வந்த ஸதாசாரங்கள் எல் லாம் தெரிந்திருக்கிறபடியால் நான் உமக்கு மேலும் என்ன சொல் லப்போகிறேன்? உம்மை எதிர்த்து மீண்டும் பிடிவாதமாக நான் சொன்னல் எவ்வளவு பெரிய பாபங்களை நான் சம்பாதித்துக் கொள்வேன்?" (481)

"என் பிதாவுக்கு சமமான பந்துவே, எனக்குத் தோழனே, ஸாதுக்களாகிற என் போன்றவர்களுக்கு பிதா தான் முக்கியம். ஆதலால் என் பிதாவின் சரணங்களை கோடிக்கணக்காக என் சார்பில் நமஸ்காரம் செய்யும். வினயத்துடன் நான் சொன்ன தைச் சொல்லும். என் அன்புமிக்கும் வார்த்தைகளும் கைகளால்

செய்யப்பட்ட பிரார்த்தனைகளையும் சேர்த்துச் சொல்லியும் செய்தும், "ஐயா என்னைப் பற்றி கவலைப்படவேண்டாம். உமக்கு தர்மத்தைத் தவிர வேறு ஒரு சிந்தனையும் வேண்டாம்," என்று சொல்லும் (482)

"என் பிதாவுக்குச் சமமான நீர் எனக்கும் நன்மையைச் செய்யக் கூடிய ஹிதைஷி, உம்மை நான் மீண்டும் நமஸ்கரிக்கிறேன். நீரும் எனக்காகச் செய்ய வேண்டிய தர்மம் இதுதான். எங்கேயாவது பந்து, மித்ரன், புத்ரன், பார்யை என்கிற பாசத்தால், ஸநாதனமான தர்மத்தைத் துறந்து, மீளாத துக்கத்தை அடையலாமா? ஆகையால் என் பிதா, என்னை புத்ரகாமேஷ்டி யாகம் முதலியவைகளால் மிக சிரமப்பட்டு சம்பாதித்த போதிலும், எங்கள் விஷயத்தில் ஸதா கவலையுடன் துக்கப்பட்டுக் கூடாது. அவருடைய ஆத்ம சுகம், தர்மத்தையே மோக்ஷமாகக் கொண்டிருக்கக் கருதும் ஸத்பதாசாரியர்களான ரகுகுல மன்னர்களுக்குப் புத்ரன் போன்றவர்களிடம் அதிக பாசம் காட்டக் கூடாது." (483)

ரகுநாதனுடைய ஸம்வாதம் காதுக்கு இனிமைதான். ஆனால் ஆசரணையில் எவ்வுளவு சிரமங்கள் ஏற்படும்! மந்திரி சுமந்திரருடன் இந்த அர்த்த புஷ்டியுள்ள தர்ம ஸம்வாதத்தைக் கேட்ட பின்பு குஹப்பெருமானுக்கு பயம் வந்துவிட்டது. அவன் குடும்ப சகிதம் வியாகுல மடைந்து விட்டான். அதன் பிறகு லக்ஷ்மணன் கடும் சொற்களைச் சொன்னான். அந்த வார்த்தைகள் அனுசிதம் என்று கருதிய ஸ்ரீ ராமச்சந்திரன் அவைகளைத் தடுத்து அவனை தர்மஸேது என்கிற அணையில் அடக்கி நிறுத்தினார். (484)

ஸத்பதா சாரத்திலுள்ள ஸ்ரீ ராமன் தன் வழியை நன்றாகத் தீர்மானித்தவராக, அதி ஸ்நேகபாசம் கொண்ட சுமந்தரரிடம் சொல்ல ஆரம்பித்தார், "ஐயா, என் மீது அன்பு காட்டி, லக்ஷ்மணனால் க்ரோதத்தால் சொல்லப்பட்ட வசனங்களை என் மதிப்புக்குரிய தந்தையிடம் சொல்ல வேண்டாம். அதன் பிறகு சுமந்திரர் மீண்டும் அரசருடைய ஸந்தேசத்தைச் சொல்லுகிறவராகி, ஸ்ரீ ராமனிடம் விண்ணப்பித்துக்கொண்டார்." "அரசர் பெருமான் சீதா தேவியின் வனக்லேசங்களைப் பொறுக்க மாட்டாரர்." (485)

"ஆகையால் "சீதையை அயோத்திக்குத் திரும்பி கூட்டி வந்து விடு," என்று மஹாராஜா கட்டளையிட்டிருக்கிறார். நீயும் (மந்திரியு மான சுமந்தரர்) ரகுநாதனும் சேர்ந்து உபாயம் செய்து எவ்விதமாவது சீதையை அயோத்திக்கு வரச்சொல்லி ஏற்பாடு

செய்ய வேண்டியது. அவள் வராத பக்ஷத்தில் நான் ஆதார மில்லாமல் துக்கத்துடன் வாழ்ந்து, மீன் எவ்விதம் தண்ணீர் வரட்சியினால் மடியுமோ அதுபோல மரித்து விடுவேன்.'' (486)

''சீதை என்வீட்டிலோ, அல்லது அவள் பிதாவின் வீட்டிலோ இருக்கட்டும். அவள் நளின மானபடியால் எல்லா சுகங்களையும் பெறத்தகுந்தவள். எது வரையிலும் இந்த ஆபத்தான வன கமனம் உனக்கு இருக்கிறதோ அதுவரை அவள் இஷ்டப்படி சுக மாக இருந்து விட்டு போகட்டும்.'' (487)

[தியானம்

ஹே ராமா, வெங்கடராமா, சந்திரன் சூரியன் அக்னியாகவும் கொண்ட திரிலோசனங்களையுடைய சிவனுடைய ஹ்ருதயத்தில் தாண்டவமாடும் ராமா, ஆனந்தக் கூத்தனுடைய சிரஸில் வீற்றி ருக்கும் சந்திரனைப் போல, நீயும் உன் தலையின் மேல் சிவனைச் சின்னமாக வைத்துக் கொண்டு முனிவேஷம் தரித்துக் கொண்டி ருக்கும் கபர்த்தின், என் குருவும் பரம பாகவதையுமான உமை விலக்ஷணமாக கைகளில் தாங்கிக் கொண்டிருக்கும் ஞானப் பழ மாகிற சக்திவேல், பழனி ஆண்டவா, ஞான பண்டிதா, தியாக ராஜர்கண்ட சராசர ஆதாரா, அஸ்திரங்களைத்தரித்து கோதண்ட ராமா, என்னையும் என் பாபங்களின் வாசனைகளையும் கால சகோதரனான சனேஸ்சரனைப் போல தண்டிக்கும் கருணா மூர்த்தி, என் பாபக் கூட்டங்கள் ஹிமய மலையாகவும், மஹோததியாகவும் இருக்கிற சமயம் உன்னைச் சொல்லி பிரயோசனம் என்ன ? நீ ஸஹஜமாக யோகிகளின் நடுவிலே பரி பூர்ணனாக விளையாடு கிறாய். நாரதரிடம் பக்தியாக விளங்குகிறீர். விக்னேஸ்வரரிடம் சம்பத் பூர்ணனாக விளங்குகிறாய். ராம நாம சின்னமாக துளசி தாஸரிடம் வருகிறாய். பலியினுடைய தலையில் மஹாலக்ஷ்மி சின்னமாக வருகிறாய். சுகருக்கு அவரால் காணப்பட்ட பிருந் தாவன வெங்கடேச பாதசரணங்களாக விளங்குகிறாய். தர்மர் அடிக்கடி பொறுக்க முடியாத வார்த்தைகளைக் கேட்டும், கோபத் தினால் ஜ்வலித்து காலாந்தகனுடைய தாபத்தினால் கொதித்துக் கொண்டிருக்கும்போது கர்ணனுடைய திவ்ய பாதங்களைக்கண்டு அங்கே கோபம் அடங்கி பொறுமையை எவ்விதம் தரித்தாரோ, அதுபோல உன்னிடம் நான் அடங்கவேண்டும். நான் தப்பு செய்தால் என்னை சக்கரத்தால் வெட்டு. நான் சாராம்ச பக்தி யினால் தொழுதால், துளசி தாஸர் துளசி தளம் போல உன் பாத சரணங்களை அடைந்திருப்பது போல எனக்கும், என் போன்ற

அமித பாபங்களை உடைய பாபிகளுக்கும் உன் வேங்கடேச ஸுப்ரபாவம் கொண்ட பாதங்களைத் தியானிக்கக் கொடு. மாரீசன் பெரும் ஞானத்தால் ராவணனை நிராஹரித்து, உன்னை அழைத்துச் சென்ற பாதங்களை எனக்கும் கொண்டுவா. என் தயாநிதி சீதா பிராட்டி அனவரதமும் நரரூபத்தில் உன்னைப் பூஜித்த ராம பாதங்களைக் கொடு. ஹே அகில லோக பரிபாலா, ராமானுஜன் கண்ட திவ்ய பாதங்களை தா, அப்பா. எப்பொழுதும் வேண்டப் பட்ட என் வேதாந்த தேசிகனே, மணவாள மாமுனியே, சரணுகத வத்ஸலனுகிற பெருமாள் ஸ்ரீவத்ஸ சின்னனுக விருந்து, ஆஞ்சநேயர் விபீஷணனுக்குச் சொன்னமாதிரி "ஸ ஏஷதேசஃ காலஸ்ச" என்று பிரபத்தி சாஸ்திரத்தின் சாராம்சமாகிற "தேசகால நியமமில்லை" என்கிறபடி என்னை தயாபரியாகிய சீதையுடன் அனுக்ரஹி. சுமந்திரர் ராமானுஜன் குஹன் கண்ட ஸத்ய விக்ரமா, ஸத்யவ்ரதா, த்வயத்தின் மந்த்ரார்த்தமாகிற ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் பிரபத்யே ஸ்ரீமதே நாராயணுய நமஃ என்கிற அனுஷ்டானத்தை உடையவனும், உன்னிடத்தில் ருசியுள்ளவனுகிற எனக்கு, நாரதர், பலி, தியாகராஜர் பரதர், லக்ஷ்மணர், துளசி தாஸர், ஆஞ்சநேயர், வடவிருக்ஷம், வேதவியாஸர், பராசரர் கண்ட திவ்ய பாதங்களைக்கொடு. கொடு அப்பா. உதார ஹ்ருதயா, என் ஹம்ஸரே கொடு.]

"தர்மாத்மாவான அரசர் தன்னுடைய தீனத்வத்தை மாத்திரமின்றி ப்ரேமையின்றியும் பச்சாதாபத்தினுல் மட்டும் தாபப் படுகிறதாக நினைத்துக் கொள்ள வேண்டாம். அவர் தர்ம ஸ்தாபனர். ரகுகுல வம்சத்தின் தர்ம வத்ஸலர். (பசுவை என்கிற பசுவைப் போல உண்மையைச் சொல்லுகிறவர்.) அப்பேற்பட்ட மஹான் மஹா வினயத்துடன் சொல்லி அனுப்பினது என்னவென்ருல், "ராமா, என் குழந்தாய், நான் வினயத்துடன் சொல்வதைக் கேளு. இத்தனை நாள் உன் நினைவாக இருந்து சீதையை மறந்து விட்டேன். கிருபா நிதியாகிற நீ உன் சீதையை என்னிடம் ஒப்புவிக்க வேண்டும். அதற்காக ஆயிரம் தடவைகள் உன் புத்தியைச் செலுத்து. நீ எந்த பிரகாரமாவது சீதைக்கு உபதேசம் செய்து அவளை என்னிடம் கொண்டுவந்து கொடு" என்று சுமந்திரர் சொல்லி முடித்தார். (488)

ராமர் எல்லாவற்றையும் கேட்டுவிட்டு கிருபாதாமாகிற அந்த சீதையிடம் சொன்னுர். "சீதே, அப்பா தசரதர் சொல்லியதைக் கேட்டாயா? அந்த மஹா பாக்யவதியான சீதை திரும்பி வருவாளாகில் மாமியார், மாமனுர் குரு, பிரிய ஜனங்கள் ஆகிய

யாவருக்கும் கவலைகள் தீர்ந்து விடும், என்று சொல்லியிருப்பதைக் கேட்டாயா?'' வைதேஹி எல்லாவற்றையும் பதியின் வசனங்களால் கேட்டாள். பர்த்தாவிடம் பரம ஸ்நேகம் கொண்ட சீதை தன் பிராண பதியிடம் அர்த்த புஷ்டியுள்ள வார்த்தைகளைப் பதிலாக உரைத்தாள். (489)

''பிரபோ, கருணுமயா, நீர் பரம விவேகி. ஹேஸ்வாமி, நான் உம்முடைய வார்த்தைகளைக் கட்டாயம் கேட்கவேண்டும். ஆனுல் ஸ்வாமி, நான் செல்லும் வார்த்தைகளை பரிபூர்ண கிருபையுடன் விசாரித்து அருளும். (லக்ஷ்மியை விட்டு நாராயணன் எவ்விதம் பிரிய சகிக்கமாட்டாரோ, நாத பிரும்மத்தை விட்டு சங்கரர் எவ்விதம் பிரியாரோ, எவ்விதம் உமை நித்யராமனுக விருக்கும் பவரைவிட்டு பிரியாளோ, மாலினி பக்தர்கள் ஈச அம்ப கடாக்ஷ வீக்ஷண்யத்தை விட்டுப் பிரிய சகியார்களோ, அதுபோலவும், ஹே ஸ்ரீநிவாஸரே, ஸ்ரீதரரே,) சரீரத்தைவிட்டு அதன் நிழல் தனியாகப் பிரிந்து இருக்குமா? சூரியனைவிட்டு அவனுடைய ஒளியாகிய பிரபை பிரிந்து செல்லுமா? சந்திரனைவிட்டு நிலா விலகிநிற்கக் கூடுமா?'' இவ்வாறு கணவனுக்கு அன்பும் பணிவும் நிறைந்த மொழிகள் கூறி, சீதாபிராட்டி மந்திரியினிடம் அழகுறச் சொன்னுள். (புத்ரனை விட்டுத் தகப்பனுகிற வேதவியாஸர் பார்த்ததுபோல நான் தனித்திருக்க முடியுமா? மஹரிஷியாக விளங்கும் கபிலமூர்த்தியே, கௌஸல்யையுடன் வாதாடி அப்பாவின் ஸநாதனமான ஸத்யதர்மத்தை ''அம்மா, உன்னுலும், என்னுலும், வைதேஹியாலும், லக்ஷ்மணனுலும், சுமித்திரையாலும் பிதுர் வசனத்தை, துக்கத்தை சகித்துக் கொண்டு, காப்பாற்றவேண்டும்.'' என்று சொல்லிய தசரத ராமா, ஆயிர கிரணங்களைக்கொண்ட ஸஹஸ்ரபானுவின் பிரபா என்கிற ஒளி வடிவம் நானல்லவோ? ஸ்வர்ச்சலை ரூபியாக விருக்கும் என்னைவிட்டுப் பிரிந்து சூரியன் தனியாக அந்தகாரம் அடையுமா? பூர்ணிமையிலும் அமாவாஸ்யையிலும் ஸோமரூபியாக இருக்கும் சந்திரனுடைய பதினுறு கலைகளும் சோமனைவிட்டு பிரியுமா? அவ்விதம் இருந்தால் இந்த கலைகளை யிழந்த சந்திரன் எவ்விதம் வளர்ச்சி அடையமுடியும்? ஸ்வாமி, உமது கிருபையான உள்ளம்தானே, சங்கரரிடம் அதிக பாசம் வைத்ததின் காரணம், அப்பேற்பட்ட சந்திரகலாதரரிடம் காண்பித்த கிருபையுடன் என்னைப் பாரும். ஐயா, உமது மனேனுகூலையாக விருக்கும் என்னை சரியாக அறிந்து

கொள்ளும் தயாவேங்கடேசரே, என் பாபங்களைப் போக்கும் சந்திர சூரிய நேத்ரா, அனந்தன் பூமிகருடன், ராமானுஜதாஸர்களாகிற பக்தகோடிகளாலும் விருஷப்தவஜராலும் உமையாலும் நாரதர், தும்புரு, அகஸ்திய, விஸ்வாமித்திரர், ஆழ்வாராதிகளாலும் வேண்டப்படும், வேங்கடமலையாகிற உன் பிருந்தாவன சரணங்களைக் கொடும்'' என்று அழுதுகொண்டு சொல்ல ஆரம்பித்தாள்.] (490)

(பிரேமை மயமான பதிக்கு காருண்ய லக்ஷ்மியாகிற சீதை மிக்க வினயத்துடன் தன்னை ஆத்ம ஸமர்ப்பணம் என்கிற ராமானுஜ வித்யையின் பரம தத்வத்தை விமர்ஸனம் செய்வது போல, காலதேசம் ஒன்றும் பாராமல் பிரபன்னனுடைய தர்மத்தை வகித்தவளாக,) (வேதாந்த தேசிகன் ''ஒருக்கால் சரணம் என்றோர்க்கு அபயம் தரும் நெடும் மூர்த்தியாக'' என்று சொல்லியதுபோல,) சுமிந்தரரிடம் விண்ணப்பம் செய்ய ஆரம்பித்தாள். ''சுமந்தரரே, தாங்கள் எனக்கு பிதாவாகவும், மாமனார், மாமியராகவும், ஸுஹ்ருத்தாகவுமிருக்கிறீர். என் ஹிதத்தை எப்போதும் செய்பவராகமிருக்கிறீர். நான் உத்தரமாகச் சொல்லும் வார்த்தை இதுதான். அதை அனுசிதமாக நினைக்கலாகாது.'' (491)

''ஆனால் இன்று நான் அந்த தசரதரைப்போல அனாதையாகி விட்டேன். அதனால் பிரேமை வெள்ளத்தால் தள்ளிக் கொண்டு போகப்படும் ஒரு பெரிய வடவிருக்ஷத்தைப்போல ஆர்த்தியாகிறநான் தஞ்சத்தை வேண்டுபவளாக, (உம்மை ராமானுஜராக அடைந்த நான் பாக்ய ஸன்முகராக ஆனேன். அதனால் என்னை தர்மம் தவறினவளாக நினைக்கவேண்டாம்.) ஆர்யபுத்திரா (என் ஸ்வாமியின்) திருவடித் தாமரைகளைத் தவிர—மற்ற உலக பந்தங்கள் அனைத்தும் எனக்கு வியர்த்தமானவையே—வீணானவையேயாகும்.'' [சரணாகத வத்ஸலரான வேங்கடேசனை விட்டு, எவ்விதம் ஆழ்வார்கள் பிரிய சகிக்கமாட்டார்களோ, எவ்விதம் பிருங்கி, நடேசர், ஆஞ்சநேயர், அகஸ்தியர், மதங்க நாரதமாமுனிகள் சங்கீத ஞானத்தை பக்தி உபாஸனமாக வைத்து அதைத்தவிர வேறு ஒன்றுமில்லாமல் வாழச் சம்மதியார்களோ, என் குருநாதரான தியாகராஜருக்கு நியாயம் எது அநியாயம் எது, உலகம், மாயை, அதில் மானிடதோஷங்கள் சொண்டு உள் வசிக்கும் ஆறு குணங்கள் ஆகிற சத்ருக்களால் பாதிக்கப்பட்டும், ராமபக்தியும் சங்கீத ஞானமும் பெரிய ஞானபதமாகிற ஸ்ரீராம பதத்தைக் கொடுத்து உபகாரம்

செய்த மாதிரி;) ("இந்த மானிட வாழ்க்கையில் கர்ப்பவாச மாகப் பிறந்த இந்த ஆர்ய புத்திரராகிய இந்த பதியை, அடை வதற்கு அயோ நிஜையான நான் ஸ்வசங்கல்பத்தால் இந்த ஜகத்தில் அவதாரம் செய்ததின் வ்யாஜம் என்னவென்ருல் பகவாஞகிற பதியினுடைய சரண கமலங்களை எந்த நிமிஷ மும் பிரியாத வரையில் நான் உயிர்தரிப்பேன்; அந்த விநாடி வரை அவரை என் மனத்தில் தரித்து, மஹா ஆர்ஜவத் துடன் நம்பி வாழ வந்திருக்கிறேன். அப்பேற்பட்ட "இந்த" பிருந்தாவன சரணங்களை விட்டுவிட்டு நான் உயிர்தரிப்பது வ்யர்த்தம். மஹா வ்யர்த்தம். அதை நான் உம்மிடம் வாதிப்ப தால் ஏற்படும் லாபம் மஹத்தான உபகாரம் என்று நினைத்துக் கொள்ளும்.) (492)

[தியானம்

ஹே வால்மீகி முனிவரால் பலகாலம் கானம் செய்யப்பட்ட சீதாராமா, லவகுசர்களால் கானம் செய்யப்பட்ட ரகுகுல கீர்த்தி பிரபாவ மதுரரஸ ராமாயண கதாஸாகரா, அனந்தகுண கம்பீரா, நந்தி கிராம பரதஞல் சேவிக்கப்பட்ட மஹார்ணவா, பரத கிருபையினல் அடையப்பெற்ற கேசவபதா, ரங்கநாத விபூதே, ஸ்ரீ வித்யாதிஸேவ்ய சீதாமனேஹரா, வனத்தில் செல்லும் மத்த மாதங்ககன்யையாகிற சீதையுடன் சென்ற கஜராஜா, யோகிஜன ஹ்ருதயத்தில் ஹம்ஸம்போல உல்லாஸ மாக விளையாடும் ஈஸ்வரி, பரமேஸ்வரா, காருண்யஸிந்தோ, என் ஆசார்யர்களான தியாகராஜர் வால்மீகியினல் கானம் செய்யப்பட்ட ஸ்ரீ ராமுனி தத்வத்தையும், ஸத்பக்தியையும் தெரிந்துகொள்ளாமல் போனல், மற்ற சௌபாக்யங்களி லிருந்தும் அவைகள் யாவும் பதவிகளும் ஆகக்கூடுமா? சீதாராமா, ஆஞ்சநேய ஸேவிதராமா, பரதாக்ரஜா, சுமித்திரா புத்ரஸேவிதா, சத்ருக்னபிரியா, சந்திரவம்ஸத்தைச் சேர்ந்த ஜனக நந்தினியாகிற கமலையுடன் கூடின ராமா, உங்களது சேர்க்கை ரோஹிணி சசாங்கனுடனும், இந்திராணி சசீபதி யுடனும், உமை சங்கரருடனும், அருந்ததி வஸிஷ்டருடனும், லோபாமுத்ரை அகஸ்திய பெருமானிடமும் இருந்த மஹா பாக்ய முள்ளதாக வல்லவோ விருக்கிறது! காவேரி சூழ் ரங்கதாமே, ரங்கநாதா, பூமி நீளாதேவி சகிதம் இருக்கும் லக்ஷ்மி நாராயண, மார்க்கண்டேய, வைநதேய, அனந்த, விஷ்வக்ஸேனரால் சேவிக்கப்படும் ஆதிபுருஷா, பிரணவாகாரா, ஓங்காரநாத

ரூபமுள்ளவனே, பிரும்மாவிற்கும் கிடைப்பதற்கு அரிய மஹா பாக்யமான உன் கிருபையால் ஏற்பட்டதான உன் சுப தர்சனம் எனக்குத் தியாகராஜருக்கு கிடைத்ததுபோல எப்போதும் கிடைக்கும்? ''கனுகோனு சௌக்ய முகமலஜூகேன கல்குணு'' என்று பாடிய தியாகராஜப் பெருமாள் எனக்கு அருள்புரிய மாட்டாரா? முனிராஜ வேஷம் தரித்த தசரத ராமா, துளசிதளம் போல உன் பாதங்களை அலங்கரித்திருக்கும் துளசிதாஸர் அனுக்ர ஹம் செய்யமாட்டாரா? ஹே ஜிஷ்ணு, தனஞ்ஜயரே, குலத்தின் கீர்த்தியில் மிக்க இச்சையுள்ளவரே, ஸூரர்களை ஆனந்திப் பவரே, தேவேந்திரன், பிரும்மா, மஹேஸ்வரரால் ஆனந்திக்கப் பட்ட ராதாகிருஷ்ணரே, ப்ருதையின் புத்ரனுகிற அர்ஜூன னுக்கு சிநேகிதனே, ரணதீரரே, பீபத்ஸூவே, போர் புரிகிற போதும் ஒருக்காலும் அருவக்கத்தகாத செய்கையைச் செய்யா தவனே, பசுக்களிடம் அன்புகொண்ட ராஜகோபாலா, ராமா, உன் தயவுதான் வேண்டும். ஜ்யேஷ்டரே, கரைகாணுத பெரிய ஐஸ்வரியங்கள் நிறைந்தவருக்கும் மோக்ஷத்தை அனுபவிப்பவர் களுக்கும் எல்லாவற்றிற்கும், ஆதிப் பெருமானுகவும் மிகவும் சிலாக்யமாக விளங்கியவரே, காவேரி ரங்கா, பில்வ நிலைய ரங்கதாமே, ரங்கநாதா, பிரணவ விமானரே, நீயும் ரங்க நாயகியும் எங்களுக்குத் தஞ்சம். வல்லபி நாயகனுகிறவனும் வைஜயந்திமாலையைத் தரிப்பவனும் காடுகளில் திரியும் பிருந்த சரனுகிற ராமகிருஷ்ணனை பரம சௌசீல்ய புத்தியுடன் ஆஸ்ரயிக்கிறேன். சீதாராமா, ராதிகா கிருஷ்ணு, என்னை ஆஸ்ரயித்துக்கொள். ராமரஸம், கிருஷ்ண ரஸம் குடித்த சுக ஜனக, ஸனக, கௌசிக, நாரத, வால்மீகி முனிவர்களால் உபதேசிக்கப்பட்ட ஸ்ரீ வித்யாராமா, என்னை ரக்ஷித்து அருள வேண்டும்.]

''ஐயா, நான் என் பிதாவான ஜனகருடைய ராஜ்ய வைபவங்களைப் பார்த்திருக்கிறேன். அவருடைய ஐஸ்வரிய, விபவ விலாஸங்கள் ரொம்ப ரொம்ப பரந்தவை. பெரும் பெரும் சக்ரவர்த்திகள் நிமி வம்சத்தில் பிறந்திருக்கிருர்கள். அவர்கள் என் பிதாவை சதாதாஸ்யர்களாக ஆஸ்ரயித்துப் பார்த்திருக் கிறேன். அவர்களுடைய மணிமகுடங்கள் என் பிதாவினுடைய கால் நகங்களில் தோன்றும் பிரதி பிம்பங்களான மணிமகுடங் களாகவும் நான் கண்டிருக்கிறேன். என் பிதாவின் கிருஹம் ரங்கதாம்போல சுகநிகேதனம். இவைகள் எல்லாம் ஸ்வாமி,

என் பதி ரகுநாயகன் இல்லாமல் என் மனதிற்கு உகப்பதில்லை.'' (493)

''ஸ்வாமி; நான் புகுந்த வீடாகிற ரகுகுலவம்சம் கோஸல தேசத்து அரசர்களின் வம்சம் என்றும் எனக்குத் தெரியும். ரவிலோசனர்களான அந்த வம்சத்தில் உதித்த மன்னர்களின் பிரபாவங்கள் பதினுன்கு லோகங்களிலும் மிகவும் பிரசித்தம். அமராவதியின் ஈஸனுகிற இந்திரனும் கூட (எவ்விதம் தன் புத்ரனுகிற க்ரீடியாகிற அர்ஜுனனைப் போற்றி, தன் இந்திர சிம்மாசனத்தில் பாதி பாகத்தை அளித்து, ''அர்த்த சிம்மாஸனுதிபதி''யாக ஆக்கினுனே, அதுபோல) அந்த சூர்ய வம்சத்து அரசர்களில் முக்கியமான என்பதியின் பிதாவை எழுந்திருந்து வரவேற்று தன் பக்கத்தில் உட்காரவைத்துக் கொள்ளும் பிரபாவங்களையும், மந்திரி பெருமானே, நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்பேற்பட்ட இந்திர சம்மானம் பெற்ற தசரதர் என் மாமனுர். பதினுன்கு லோகங்களிலும் அவருடைய கீர்த்தி பிரபாவங்கள் பரிமளித்தன என்கிறது மிகப் பிரஸித்தம்.'' (494)

''என்னுடைய மாமியாகிய கௌஸல்யா தேவியோ இந்திரனைப் பெற்ற அதிதி தேவியைப்போல ஐஸ்வர்யம், பிரபாவம் கொண்ட ஸ்திரி என்று எனக்குத் தெரியும். அந்த ராஜதம்பதிகளின் நித்யவாஸம் பண்ணும் இடமோ தர்மபீஜ க்ஷேத்ரமாகிய ஸாகேதபுரி. அந்த ராஜ குடும்பத்தினர்கள் என் தாய் தகப்பன் போல இருப்பவர்கள். இவ்வளவு வைபவ சிறப்புக்கள் இருந்தும், என் பிராணநாதர் ரகுபதியின் (ப்ரியபத மனுத்தமம் என்கிற ஸ்ரீராமுனி பதத்தை, ரங்கதாமை, பிருந்தா வன சரண) பாதங்களை விட்டு, அவை (போகங்கள்) கனவிலும் எனக்குச் சுகம்அளிக்கக் கூடியவையல்ல. (வஸிஷ்டர் விஸ்வா மித்திரர், ஆஞ்சநேயர், மார்க்கண்டேயர், அகஸ்த்ய, சப்தரிஷிகள் துருவன், ஆண்டாள், ஆழ்வார்கள், வல்லபையாகிற நப்பின்னை கோமாதா, காவேரி, நாரதாதி, ஸனகஸநந்தன பிரமுகர்கள் சுகர், ஜனகர், காஸ்யபஅத்தி ஆகிய மஹோத்தமர்களால் மிக்க பிரயாசையுடன் தேடப்படும் ராகவருடைய பாதங்களை) ஒருக்காலும் விட்டு விட்டு, பராங்மனத்துடன், மோஹித்து, (ஏமாந்து போன அசுரர்களைப் போல,) ஸ்வாமி, ஸ்வப்பனத் திலும் கூட, என் சுகத்தில் மிக்க பிரயாசையுள்ளவளாக, ராகவ ஆராதனத்தை விடமாட்டேன்.) (என் பிராணபதி பக்த ஜனபோக்யரானபடியால், அவரும் என்னை கைவிடமாட்டார்,

அதற்கு சம்மதியார்.) (அவர் நிகம ஆகமங்களின் சாரம். ராம நாமத்தின் தீப்தமூர்த்தி. ரகுகுலதீபம். என் குற்றங்களைப் பாராத கோவிந்தன். என் குற்றேவலை ஏற்றுக்கொள்ளும் நாரணன். சௌசீல்ய, சௌலப்ய ஸாகரன். காலமுள்ள வரையும், சமுத்திரத்தின் ஜலங்கள் உள்ளளவும், எங்களுக்கு வாய்க்கும் எல்லாப் பிறப்புக்களிலும் பராசரர் கண்ட அனபகாமினி உறவுகொண்டவளாகவும், பூவும் மணமாயும், விஷ்ணுவாகவும் ஸர்வாத்மாவாக இருக்கும் அவகாசங்களாகவும், அதில் லக்ஷ்மியாகிற நான் ஸ்வர்க்கமாகவும், அவர் ஸ்ரீதரனுகிற சந்திரனுகவும், அதில் லக்ஷ்மியாகிற நான் வசிக்கும் அக்ஷயமான காந்தியாகவும், எங்கும் செல்லக்கூடிய ஹரியாகிய அந்த வாயு பகவானுக்கு சீதையாகிற நான் ஜகத்தின் சேஷ்டையாகிற கதியும் திருதியும் (ஆதாரமும்) ஆவேன். விவேகமுள்ள பக்திமானே, திர்யக் தேவமனுஷ்ய ஆதிஸ்வரூபங்களில் அவர் புருஷலிங்கமாகவும் நான் ஸ்திரி நாமமாகிற ஸ்ரீ: என்கிற பெயருடன் யிருக்கிறேன். என்னுடன் கூடவிருக்கும் இணை பிரியாத ஸ்ரீதரன், ஸ்ரீநிவாஸன்; ஸ்ரீவத்ஸ சின்னனுக அவர் ஆவார். நாங்கள் இருக்கும் இடம் ஸ்ரீரங்கதாம். அதுதான் எனக்கு அயோத்தியாகிற தர்மபீஜக்ஷேத்ரம்.) (495)

"கடப்பதற்கரிய (காட்டுப்) பாதைகளாயினும், காடுகளாயினும், மலைகளாயினும் யானை, சிங்கங்கள் போன்ற வனவிலங்குகளாயினும், மிகப்பெரிய ஆழமான ஆறுகளும் நீர்நிலைகளாயினும், கோலர் பில்லர் முதலிய காட்டில் வாழ் ஜனங்களாயினும் மான்களும், பறவைகளுமாயினும்—இவையனைத்துமே எனக்கு என் பிராணபதியோடு இருக்குங்கால் இன்பம் பயப்பவையேயாகும்."

[கருத்து :

"என் பதியுடன் கூடச்செல்லும் பாதைகள் மலையாக இருக்கட்டுமே; முட்கள் நிறைந்த வனமாகிவிருந்த போதிலும் அதுதான் எனக்கு தர்மாரண்யம். நடப்பதற்கு கடினமான பூமியாக விருந்தாலும், யானை சிம்மங்கள், பயங்கரமுள்ள குளம் குட்டைகள் காட்டாறுகள் நிரம்பியிருந்த போதிலும் அதுதான் என் காமபீடமாகிற வாசஸ்தலம். கோல் கிராதர்களாகிற கொடும் தொழில் உள்ளவர்களும், இரக்க சிந்தனையில்லாத வேடுவ ஜாதியினர்கள், மான்கள் விதவிதமான பக்ஷிகள் எல்லாம் பார்ப்ப

தற்கும் கேட்பதற்கும் பயப்படும் படியாகவும் விநோதமாகவும் இருந்தாலும், எனக்கு சுகத்தைத்தருவது என் பிராணபதியான ரகுநந்தனுடைய பிரும்மபதங்களே, அவருடைய பாதுகைகளே எனக்கு சதாதஞ்சம்.''] (496)

''ஆதலால், மஹாபுத்தியுள்ள மந்திரியே, என்னிடம் கருணை காட்டி, எனக்கு சுகத்தை தரும் ஸ்ரீராம பாதங்களை, (நான் எவ்விதம் என் தாய் தகப்பன் அருளைப் பெறுவதற்கு மாமனார் மாமியார் கால்களை இறுக கட்டிக்கொண்டு மிக்க ஆர்த்தரையாக யிருந்து தீனமான அவஸ்தையில் கருணையை வேண்டுவேனே, அதுபோல) என்சார்பில் தாங்கள் சிரமத்துடன் வினயம் அவர்களுக்குச் செய்து, கூறவேண்டுவது ஒன்றுண்டு— ''அதாவது என்னைப்பற்றி எவ்விதமான கவலையும் கொள்ள வேண்டாம். நான் காட்டில் இயல்பிலேயே இன்பம் பெற்று வாழ்வேன்'' என்பதாம். (ஸ்வபாவமகவும், இந்த ஆபத்தில் கூடவும், ஸத்பதாசாரத்தில் இருக்க விரும்பும் என்னை வனத்திலும் ஸ்ரீராமனுடைய திருவடித்தாள்களைப் பற்றிக்கொண்டிருக்கும்படி செய்யவேண்டும். அப்பேறபட்ட வனவாசம் எனக்கு அத்யந்த சுகத்தை கொடுக்கும். என் ஸ்வதர்மத்தை ரக்ஷியும்; அப்போதுதான் நான் கிருதக்ருத்யையாக ஆவேன். அவரில்லாமல் அயோத்யா வாசமோ, மிதிலாவாஸமோ எனக்கு பரம ப்ரீதியையோ, ஸ்ரேயசையோ உண்டுபண்ணுது.) (497)

''ஸ்வாமி, எனக்கு ஆபத்துக்கள் ஒன்றும் வராது. அவ்விதம் ஏற்படினும், என்னுடன் கூட கிருஹஸ்த தர்மத்தை அனுசரிக்கும் என் பிராண நாதர் என்மீது அத்யந்த ப்ரியர். அவருடன்கூட சஞ்சரிப்பவரான என் மைத்துனர் தேவர்களில் மிகச் சிறந்தவர். இருவர்களும் ரணதீரர்கள். எனக்கு முன்னும் பின்னுமாகச் சென்று என்னை ரக்ஷிப்பதில் அக்ர கண்யர்கள். சதாதனுஷ் அஸ்திரம் கொண்ட ரணவீரர்கள். இந்த பிருத்வி முழுவதையும் ஜயிக்க சாமர்த்தியம்கொண்ட மஹாவீரர்கள். அவர்கள் இவ்விதம் என்னை தனுஷ்பாணிகளாக ஸம்ரக்ஷிக்கும் சமயம், ஏது ஸ்வாமி எனக்கு சிரமம், பயம், கஷ்டம்?'' என் மனத்தில் வருத்தம் சிறிதேனும் இல்லை. வழி நடப்பதில் எனக்கு எவ்வித களைப்புமில்லை. எவ்வித மனக்குழப்பமும் எனக்கில்லை. ஆகவே நீங்கள் மறந்தேனும்கூட என்னைப் பற்றி கவலை கொள்ளாதீர்கள்.

[கருத்து :

(பிரியதர்சனராகிய என் மோஹன ராமனின் முகத்தைப் பார்த்து அவருடைய மந்தஸ்மிதத்தினுல் என் களைப்பைப் போக்கிக்கொள்வேன் ; அவர் களைப்பையும் நான் போக்குவேன். என் மனத்தில் ஸச்சிதானந்தமயமாகவிருக்கும் ஆத்மாராமனை நினைத்து, ஐஸ்வரியங்களிலோ அவைகளை வைத்திருக்கும் எஜமானர்களிடமோ, எனக்கு ஒருவிதமான பிரமை ஏற்படாது. என் மனம் துக்கங்களை உண்டு பண்ணிக்கொள்ளாது. இந்தக் காரணங்களாலே, தயாபரரே, எனக்காக நீங்கள் மாதா பிதாக் களாக விருந்தாலும் கவலைப்படவேண்டாம். நான் சந்தோஷ மாகத்தான் இருப்பேன். தர்மத்திற்காகவும் பித்ருவசன பரிபாலனத்திற்காகவும், ராஜ்யத்தை விட்டுச் சென்ற என் பதிக்கு, ஸ்நேகத்தில் முதிர்ந்த ஜ்யேஷ்டையான என்னைக் காட்டிலும், யாவத் ப்ருவ்ருத்தியும் கிடையாது. அப்பேற்பட்ட ராமப்ருவிருத்தியில் இருக்கும் அழகான என்னிடம், அழகான ராமார்த்தமாகவிருக்கும் எனக்கு, கேட்பதற்கோ பார்ப்பதற்கோ, கூடவிருந்து வசித்து நித்ரை செய்வதற்கோ அழகிய மிருதுவான ராம சரணங்களைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. ஸ்ரீராமனுக்கும் வேறு ஒன்றும் ஜீவிப்பதோ, மதுரமாகவிருப்பதோ என்னைத் தவிர ஒன்றும் இருக்கமுடியாது. எவ்விதம் மத்ஸயம் தண்ணீரை விட்டு விலகினுல் ஜீவித்திருப்பது ஸ்ரமமோ, அதுபோல அதிஸ் நேகத்தால் பந்தனம் செய்யப்பட்ட எங்களுக்கு ஹ்ருதயத்தில் தைரியத்தையும் சந்தோஷத்தையும் கொடுப்பது இந்தவனத் திலும் கூட எங்களுடைய பிரியாத சேர்க்கைதான். த்வயத்தின் இருபாதங்கள் போல நாங்கள் சஞ்சரிப்போம். எங்களுக்கு மனக்கவலையோ, சோகமோ, பயமோ ஏற்படாது. உங்களுக்கும் வேண்டாம்.) (498)

இவ்விதமாக சீதாதேவி உயர்ந்த அர்த்தத்துடன் கூடிய விசேஷமான வாக்கியங்களை அந்த சுமந்திரரைப் பார்த்து அருளிச்செய்தாள். அந்த மந்திரி எல்லாவற்றையும் பொறுமை யாகக்கேட்டார். "என்ன அழகான தத்வம், குளிர்ச்சியைத் தருவதும், தாபங்களைப் போக்குவதும் மஹா தத்வார்த்தங்கள். (எஜமான பக்தி மேலிட்டவரானபடியால், தசரதரிடம் அவ ருடைய மனம் பற்றுதல் உள்ளதாகவிருந்தது.) அதனுல் பயங்கள் நிறைந்து வியாகுலம் அடைந்தார். மணியை இழந்த நாகஸர்ப்பம் துடிப்பதுபோல துடித்தார். வருத்தம் மேலிட்டு கண்கள் ஒன்றையும் காணவில்லை ; செவிகள் ஒன்றையும் கேட்க

வில்லை. எதிரில் நிற்கும் மனிதர்களைக்கூட அடையாளம் தெரிந்து கொள்ள முடியாதபடி கனமான ஜலதாரைகள் கண்களிலிருந்து பொங்கி வழிந்தன. காதுகள் கேட்கமுடியாமல் ஆத்மா விரகதாபம் அதிகரித்து, ஸந்தாபத்தால் துடித்துக் கொண்டிருந்தது. அவருடைய வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவர மறுத்தன. அத்யந்த வியாகுலம் அடைந்த காரணத் தால் அவர் பிரமித்து விட்டார். (499)

ஸ்ரீராமன் அநேகவிதமாக நியாய ப்ரபோதங்களைச் செய்து, சுமந்திரரை ஆஸ்வாசப்படுத்தினர். சமாதானம் செய்து பார்த்தார். இருந்தபோதிலும் அவருடைய மனம் தாபத்தினுல் ஜ்வலிக்கும் அக்னியைப்போல எரிந்ததே ஒழிய குளிரவில்லை. தன்னுடன் அழைத்துச் செல்வதற்கு வேண்டிய யத்தனங்கள் யாவும் பலிக்கவில்லை என்று கண்டுகொண்ட மந்திரி சுமந்திரர் மீண்டும் மீண்டும் அர்த்தவாதிபோல வாதம் செய்தார். அவை எல்லாவற்றிற்கும் ரகுநந்தனர் பதில் உத்திரம் கொடுத்து, அவரை தன் முயற்சியிலிருந்து விடுபடும்படி நழுவச்செய்து விட்டார். இந்த ஸர்வோசிதமான பதில்களை ரகுநந்தரிட மிருந்து சுமந்திரர் கேட்டுக்கொண்டார். (500)

[தியானம்

ஹே காமாக்ஷி, கருணைகடாக்ஷி, ராமகதம்ப வனத்தில் ஏகாம்ரநாத க்ஷேத்திரமாகிய காஞ்சி காமகோடி பீடத்தில் இருக்கும் சீதே என்தாயே, ராமரஸபூர்ணிதே, பரிபூர்ண சிவே, நந்திபிரமத கணங்களால் சேவிக்கப்படும் விருஷபத்வஜனின் ஏகாந்த நாயகியே, என்ஹ்ருதய மணிதீபமே, தியாகராஜ முனிவராலும் வஸிஷ்டராலும் காணப்பட்ட லோஹிதாக்ஷனை ராமனை தன் ஞானக் கண்களால் பார்க்கும் விசாலாக்ஷி, ராமாம் ருதம் என்கிற அம்ருத சஞ்சீவினியை, சுக்ராசார்யர் கச்சனுக்குக் கொடுத்ததுபோல, கொடு அம்மா. ஹே பரப்ரும்மமே, ஸர்வ லோக நமஸ்கிருத ஜகன்னுதன் தசரதபுத்ரன் ராமனுக அவதரித்து தியாகராஜருக்கு முனி ராஜ வேஷத்தில் சித்ரகூடத் தில் வைகுண்ட நாதனுகக் காக்ஷி கொடுத்த முகுந்தா, புஷ்கராக்ஷா, வரதா, என் ரகுவீரா, த்வயமந்திரத்தின் ஸாராஸார ஒய்யார ரூபமாக விளங்கும் மோஹன வரதா, என்னையும் எல்லாம் துறந்த கௌசிகனையும் மோஹிக்கவைத்த திரிபுரசுந்தரி அம்மா, உன்னுடைய சிம்மகந்தமும், ஒய்யார நடையும் நீரத புஷ்பகாந்தியும்; ராமா, உன் கீர்த்தி பிரபாவங்களும், தர்மத்தில்

உள்ள பற்றுதலும், அப்பா, நீலமாமணிபோல விளங்கும் திரு மேனியும் பிராயோபவேசமாக வந்த பரதனைத் தழுவிக்கொண்ட ஆஜானுபாஹுக்களையும், பரந்த விசாலமான மார்பும், உன்னுடைய அலகலமாகத் தொங்கும் ஜடாமுடிகளும், துளசிதாஸரையும் பரமசிவனையும் ஆகர்ஷித்ததுபோல என்னையும் ஆகர்ஷித்து விட்டது. ராவணனைக் கொல்லவந்த ராமா, தேவர்களை ஆனந்திக்கவந்த ஸுரஹிதா, உன் திலகம் போல நாரதர் விளங்குகிறார். அவரிடம் சிக்ஷைபெற்ற தியாகராஜர், சங்கரருக்கு காமாக்ஷி கிடைத்ததுபோல உன் நாம கிருபையால் எனக்கும் சீதா சமேதனாக வேங்கடவரத பாதங்கள்தான் அப்பா வேணும். ராமநாம சுதாவைப் பருகி, சுகித்து, உன் சோபிதங்களைப் பார்க்கவேணும். கனகபூஷணம் கொண்ட சக்ரவர்த்தி திருமகனே, நீயும் சீதையும் என்னை அலங்கரிக்கக்கூடிய கிருத்யாகரணமும் அகிருதயகரணமுமாகிறதோஷங்களை நீக்கி சேதனனுக்குப் புருஷகாரமாகிற குற்றங்களைக் காணுமையும், உபாயமாகிற மந்திர தத்வார்த்த அனுஷ்டானமும், ஆகிற இருதத்வார்த்தங்களாக நீங்கள் விளங்குகிறீர்கள். இன்று நீசனுனேன், நிறைவொன்றுமில்லேன் என்கிற நான் உங்கள் கிருபாவாத்ஸல்யத்தால் குணகௌரவத்தைப் பெற்றவன் ஆவேன். அர்ஜுனன் எவ்விதம் உத்திரனிடம் தன் பிராதாவான தர்மராஜரைப் பற்றி சொல்லும்போது, ஸத்யத்துக்கும், கபடமின்மைக்கும் பொறுமைக்கும் ஆதாரமானவரும், தயை உள்ளவரும் தர்மத்தையே தலைமையாகக் கொண்டவரும், தர்மதேவதையின் புத்ரரான யுதிஷ்டிரர்போலப் பார்த்தானே, மார்க்கண்டேயர் ராமரை அனுபவிக்கும்போது, தர்மசீலராகக் கண்டாரோ அந்த ராமனை வணங்குகிறேன். சுமந்திரரால் காணப்பட்ட மஞ்சள்நிறமுள்ள தங்கத்தகடுபோல காந்தி உடையதும், பிற்பாடு சுக்ரீவன் முதலியவர்களால் பார்க்கப்பட்டதும், அதன்பிறகு ஆஞ்சநேய மாமுனிவரால் மங்களகரமானதும் சிம்சுபா மரக்கிளைகளில் தொங்கவிடப்பட்டிருந்த சுபமான ஆபரணங்களை அணிந்து கொண்டிருந்த சீதையை நமஸ்கரிக்கிறேன். வரதாயகி, என் மீனாக்ஷி, ராமஹ்ருதயவாஸினி, அனபாயினி, மஹாலக்ஷ்மி சகித வரத நாராயணா, என்னை ரக்ஷித்தருளும்.]

சுமந்தரர் தர்ம துரந்தரரானவரும் வாசஸ்பதியும் மஹா வாக்குக்களை அருளிச் செய்யும் வேதரூபியும் வாக்மீயாக விளங்கும் ராம வியாஸரைக் கண்டும் கேட்டும், தர்ம ஸரஸ்வதியாக விளங்கும் ராமனுடன் கூடிய சீதையின் அமுதம்போல இனிய

வாக்குக்களையும் கேட்டும் ஸ்தம்பித்துப்போய்விட்டார். (நாரா யண பட்டத்திரி ராமனை தர்மத்தைப் பரிபாலிப்பதற்காக வந்த சுத்தஸத்வமாக எவ்விதம் பார்த்தாரோ, அந்த தர்ம பீடத்தில் வீற்றிருக்கும் ராமராக ஜகந்நாதரை) சுமிந்திரர் (சேஷ சயன தல்பத்தில் வீற்றிருக்கும் மஹாலக்ஷ்மி நாராயணரை அச்யுதரை, அக்ரூரர்கண்டதுபோலக்) கண்டு தனக்குள் சிந்திக்க ஆரம்பித் தார். (லக்ஷ்மணன், ராமன், சீதை ஆகியவர்கள் சந்திரார்க்க வைஸ்வாநரனுகத் தோன்றும் மூன்று மூலபிம்பங்களாகக் கண்டார். ஆம். ஸ்ரீராமனுடைய ஆக்ஞை, உமைக்கு சங்கர ருடைய ஆக்ஞையைப் போல, அழிக்கமுடியாத. ஊர்ஜித சாஸனர், பிரும்மா, இந்திரன் முதலானவர்கள்கூட தாண்ட முடியாத உறுதியான கட்டளையை உடையவர். இச்சா சக்தியி ஞல் குருபக்தி சம்பாதிக்கப்பட்டு, அந்த குருபக்தியினுல் ஞான சக்தியை சம்பாதித்து, அதன் பிறகு க்ரியா சக்தியை அடைந்து, அந்த கிரியைகளால் வைராக்யம் அடைந்த ராமமூர்த்தி, கஞ்ச லோசனியாகிற சீதா காமாக்ஷி, ஆசார்யரான ராமானுஜர் ஆகிய மூவரையும் தர்ம வ்யவஸ்தையை நாட்ட வந்த வ்ருஷபத்வஜராக வும் ஊர்ஜிதராகவும் கண்டுகொண்டார் சுமந்திரர். அவர்கள் அனுஷ்டிக்கும் கர்மகதி சுத்தஸத்வம், வைராக்ய பந்ததி ஆகிய வைகளில் ரஜஸ்தமஸ்ஸுக்கு இடமே இல்லை. சுகர் நாராயண நம்பூத்ரி ஆகியவர்கள் கண்டு அனுபவித்த பரபிரும்மம்.) தர்ம க்லேசங்களை அனுபவிக்கத் தயாராகவிருக்கும் சுத்தஸத்வம் கொண்ட தர்மாத்மாக்களை தன் சொற்களால் மீட்டமுடியாது என்று கண்டுகொண்டார் மந்திரியான சுமந்திரர். அப்பேற்பட்ட ராமலக்ஷ்மண சீதையை நமஸ்கரித்தார். அவர்களுடைய க்ருபா வாத்ஸல்யத்தை வேண்டினுர். கப்பல் கவிழ்ந்துபோன வாணிகனைப்போல வெறும் ரதத்துடன் அவர் அயோத்தி மாநகர் திரும்பினுர். (501)

சுமந்திரர் ரதத்தை ஓட்டிக்கொண்டு போகலானுர். (அவ ருக்கு ஜகன்மோஹன ரூபத்தைக் கொண்ட ஆகர்ஷண ராமன் தன் குதிரைகளைக் கூடபிடித்து தன் பக்கம் இழுப்பது போலத் தோன்றினுர். அந்த) குதிரைகள் ராமனையே கண்டு அவரை மீண்டும் காணத் திரும்பும் எண்ணத்துடன் கனைத்தன. அதை சுமிந்திரர் கண்டார். வேடுவ ஜாதியில் பிறந்த குஹனுடைய ஆட்கள் அதைக் கண்டு அழுதார்கள்; தலையில் அடித்துக்கொண் டார்கள். அவர்கள் துக்கம் பூர்ணமாக நிரம்பினவனுர்களாகவும் காணப்பட்டார்கள். (502)

("விஸ்வபோதகனுகவிருக்கும் ஸ்ரீராமா, ஏன் அப்பா உன் மோஹன சக்தியை என்னிடம் பிரயோகிக்கிருய்? நான் எவ்வித மான சித்தம் உள்ளவனுகவிருந்தும், உனது மோஹத்தை விட முடியுமா? இதோ பார். நான் உன்னை பரபிரும்மமான நாராயணனுக நினைக்கிறேன்.) உன் வியோகத்தால் குதிரைக ளாகிற மிருகங்கள்கூட வாடிய தாமரை முகம் கொண்டதுபோல வியாகுலம் அடைந்திருக்கின்றன. அவ்விதமாகில் அப்பா, உன் பிரிவினுல், தசரதர், கௌஸல்யை, சுமித்திரை, உன் தம்பிகளா கிற பரதசத்ருக்னன் எவ்விதம் துக்கத்தை சகிப்பார்கள்? அவர் கள் உன்னைப் பிரிந்து எவ்விதம் உயிர்தரிப்பார்கள்? அவர் அவ் விதம் நினைத்துக்கொண்டிருந்த சமயம் ஸ்ரீராமன் சுமிந்தரரை அனுப்பிவிட்டு, கங்கை தடத்திற்கு வந்து சேர்ந்தார். (503)

ஸ்ரீராமன் ஒரு ஓடக்காரனிடம் ஒரு ஓடத்தை கொண்டு வரும்படி கேட்டார். ஆனுல் அந்த படகோட்டி அதைக் கொடுப்பானு அவ்வளவு சீக்கிரம்? அவன் சொன்னுன் "ஐயா, ராம நாமம் கொண்ட உன்னுடைய சாக்ஷாத்கார மர்மங்களை நான் அறிவேன். உன் திருவடித்தாமரைகளின் தூளிபட்ட மாத்திரத்திலே எதுவும் மனித ரூபம் பெற்றுவிடும். அந்த தூளி அவ்வித மகிமை வாய்ந்ததொரு மூலிகை மருந்து போன்றதென எல்லாரும் கூறுகிருர்களே! [தியாகராஜ நாரத முனிவர்களாலும், பாகவதசிரோண்மணியான ஆஞ்சநேயர் துளசிதாஸர் போல விருக்கும் ராமபக்தர்களாலும் அனவரதமும் வேண்டப்படும், தேடப்படும் வரதாகில ஜகன்மோஹன ராமன் நீ. உன்னை, உன் னுடைய சரணதாள்களை, எல்லோரும் தரமனுஜாவதாரம் என்றும் உன் மகிமைகளை, சுரர்களாகிற பிரும்மா, ருத்ரன் இந்திராதி தேவர்கள் கின்னர, கிம்புருஷர்கள், வித்யாதரர்கள் விதிப் பூர்வ மாக ஆராதனை செய்து உன் தர்சனத்தை சீதாராமனுகக் காண ஆசைப்படுகிருர்கள். நானே உங்களை சில காலமாக குருவாக நினைத்து, நாம பஜனை செய்து சேவித்துவருகிறேன். நீ சாதாரண மனிதன் இல்லை. நீ ஜகன்மோஹன ராமன், திரிபுர சுந்தரிபோல என்னையும் வேடுவஜாதியில் பிறந்த நீசர்களான எங்களையும், ஆட்கொள்ள வந்த வேங்கடவரதன். உன்னுடன் கூட விருக்கும் பிராட்டி என்னுடைய வரத சஹோதரியாகிய காமாக்ஷி.] (504)

[தியானம்

என்ருல் ஸ்மரணே செய்யப்படும் ராமதாரக நாமத்திஞல் அடையப்படும் சுகத்தைத் தரும் தியாகராஜ ஹ்ருதய ராமா, உன்னேயும் சீதையையும் நினைப்பதுதான் ஸ்ரேயஸ். மற்ற ஸௌபாக்யங்கள், பதவியசஸ் ஆகிய எல்லாமிருந்தாலும், அதுதான் அப்பா எனக்கு வரராஜயோகம். கல்கி ரூபமாகவந்து ஆட்கொண்ட என் வேங்கடராமா, வரகுருவாகிய சங்கர பகவான் அம்பிகைக்கும், மூஷிகவாஹனராகிய விஷ்வக்ஸேனருக்கும் உபதேசித்த ராமநாமம் இருக்கிறதே, ஏ மனமே, ப்ரேமைபுத்தியுடன் கிருஷ்ணனே திரௌபதி அடைந்ததுபோலவும், ஆஞ்சநேயர் கணையாழியாகிற ராமஸந்தேசத்தை அடைந்தது போலவும், துளசிதாஸர் சுக்ரீவனுடைய பரந்தமார்பில் ராமன் தலைசாய்த்துக் கொண்டு ஸுவேல மலையில் லக்ஷ்மணன் ஆயுதபாணியாக ராமனுக்குப் பின்னுல் நின்று கொண்டிருப்பது போலவும், ஆஞ்சநேயர் அங்கதன் ராமனுடைய திவ்ய பாதங்களே பிடித்துக் கொண்டு, த்யுதிமான்களாக விளங்குவதுபோலவும் கண்டாரே அதுபோல ராமா, உன்னே வந்து அடையவேண்டும். உன் நாமரூபம் என் ஹ்ருதயத்தில் பிரகாசித்து, நிஷ்காம புத்தியுள்ள தியாகராஜர்போல, ஸ்யாமசுந்தராங்கனுகவும், ஸர்வ சக்திமானுகவும், என் ஆசார்யராகவும், என் பாபங்களேப் போக்கும் ஸரிதா எனப்படும் மந்தாகினி போன்ற கங்கைத்தீர்த்தமாகவும், என் தாமஸ குணங்களேப்போக்கி, ராமச்சந்திரா, உன்னுடைய பரம ப்ரீதியை அடைவதற்கு, உன்னே தாத்ரா, விதாத்ரா, என்று புகழ்வதற்கும், தாரை வாலி ஆகியவர்கள் கண்டதுபோல அந்திம ஸ்மரணேயில் காணவேண்டும் அப்பா. நீயும் சீதையும் தரணிக்கு அணே போன்றவர்கள். துஷ்ட ஜனங்களின் மதத்தை அழிக்கும் ஸுவேல ராமா, என்னேயும் துளசிதாஸரையும் ஆட்கொண்ட தக்ஷிணுமூர்த்தி சிஷ்டஜன ஹ்ருதயவிஹாரா, உன்னேத்தானே நான் இஷ்டதேவதையாக கொண்டாடி குஹப் பெருமான், ஏகதர், த்விதர், திரிதர் தேவலோகத்தில் தேவேந்திரனுடன் மகிழ்ந்திருப்பவர்களும் ருத்ரர்களுக்கும், அக்னிக்கும் வசுக்களுக்கும் சமமான தேஜஸ் உடையவர்களான பர்ஹிதர்கள் என்று சொல்லப்படும் யவக்ரீதர், ரைப்யர், அர்வாவஸு பராவஸு உசியின் புத்ராரன கக்ஷீவான், அங்கிரஸ்ஸின் புத்ரரான பலர், மேதாதியின் புத்ரரான கண்வர் ஆகிய ஸப்தரிஷிகளின் சுவடுகளேப் பின்பற்றின எனக்கு அருள் செய்ய வேண்டும். தயை

நிரம்பினவர்களாக என்னிடம் இருக்கவேண்டும். கேசவா, மாதவா, விஷ்வக்ஸேனு, ஜனர்த்தனு.]

"அந்த தூளிபட்ட கணமே பாறையொன்று பெண்ணுருவம் பெற்றுவிட்டதாமே. (எனது இந்த படகோ மரத்தினுலானது) கல்லைவிட மரம் கடினமானதல்ல. (உம் திருவடியின் ஸ்பரிசத்தினுல்) என் படகும் முனிவருடைய மனைவியாக மாறிவிட்டால் நான் என்ன செய்வேன்? என் படகு அழிந்துவிடும். விபரீதமாகி விடும். இந்தப்படகைக் கொண்டுதான் நான் எனது குடும்பத்தை வாழவைத்துக் கொள்ளுகிறேன். எங்களுக்கு இதுதானே பிழைப்புக்கு ஆதாரம். எனக்கு வேறு தொழில் ஒன்றும் தெரியாது. ஆகவே ஹே பிரபு! நீர் கட்டாயம் அக்கரைக்குப் போகவேண்டுமாயின் முதலில் எனக்கு உம்முடைய திருவடிகளை அலம்புவதற்கு அனுமதி கொடுக்கவேண்டும்." (505)

"ராமதாரக பிம்பமே, எனக்கும் என் பரிவார ரக்ஷணத்திற்கும் இந்த ஓடத்தைத் தவிர வேறு ஒன்றும் ஜீவன உபாயமாக வில்லை. ஆகவே நீர் கங்கையைத் தாண்ட வேண்டும் என்று நினைப்பீராகில், முதன்முதலில் புண்யமானதும், விஷயமோகங்களை நாசம் செய்யக்கூடிய உமது பாதங்களை எனது பூஜை ஆராதனைக்காகத் தரவேண்டும்."

[கருத்து :

ஹேசீதாராமா, தங்களுடைய கமலபாதங்களை அலம்பி, நான் சுத்தம் அடைவேன். அவைகளை பத்ரம் பலம் புஷ்பம் தோயம் ஆகியவைகளால் ஆராதித்து, என்னை முதலில் கரை ஏற்றிக்கொண்டு, அதன்பிறகு, என் வசத்தில் சிக்கிய ராம கருணாமூர்த்தியே, உங்களையும் அக்கரையில் சேர்ப்பேன். தசரதராமா, நான் உன்னிடம் மோஹப்பட்டுவிட்டேன். ஜகன் மோஹன ராமா, நான் ஸத்ய வசனங்களால் ஹ்ருதயப்பூர்வமாக ஆசார்ய உபதேசத்தின்படி நடக்கிறவனுக ஸத்பதாசாரமுள்ளவனுகவும் ஆசார நியமங்கள் உள்ளவனுயும், மஹா விஸ்வாசம் கார்ப்பண்யம் அகிஞ்சனம் அனன்யகதித்வம் ஆகிய யாவும் ஒன்று மில்லாமை ஆகிய சத்குணங்களால் அலங்கரிக்கப்பட்ட தீனமான சேதனுக என்னை, ஸ்வாமி, அறிந்துகொள்ளும். என் பிரணதார்த்தி ஹரரே, என் ஆசார்ய பிரபுவான ராமானுஜராகிய லக்ஷ்மணன் என்னை நிக்ரஹசக்தியினுல் கூர்மையான அம்புகளாலோ, மற்ற பஞ்சாயுதங்களாலோ என் தோஷங்களை நாசம் செய்யட்டும். என் மீது ரண ப்ரிய

ராக விருக்கட்டும். நான் ஒன்று மட்டும் சொல்லுவேன். நானும் என்னை நம்பின பரிவார ஜனங்களும், பிரஹ்லாதன் பலி இவர்களை நம்பின அசுர ஜனங்களைப் போல, ஸ்ரீசீதாராம அவதாரத்திற்கு தியாகராஜர் போன்ற மஹான்கள் கண்டு அறிந்த மூலகாரணமான ராவணனும் அவனுடைய பந்து பரிவாரங்களைப்போல, எங்களுடைய விடுதலைக்கு எங்களுடைய மூப்பு, பிணி, நிறமாறுதல், மணமின்மை, மகிமையின்மை, பகவானுடைய ஸாந்நித்யத்தில் இல்லாமல் வியோகம் அடைவது ஆகிற சரீர வியாதிகளையும் அழிக்கக்கூடியதும்; சம்சார காலம் வரை தேக புஷ்டியும் ஆயுளையும் புகழையும், பிற்பாடு தேவ லோகத்தையும் கொடுப்பதும்; எங்களுக்கு இடையூருகவும், பாவமும் இல்லாமலிருப்பதும்; எப்போதும் ஜயத்துடனும் மறுமையில் ஸ்ரேயசைக்கொடுக்கும் நாராயண பதத்தைத் தாரும். உம்முடைய பாதங்களை நமஸ்காராதிகளால் பூஜை ஆராதனை செய்ய அனுமதிக்காத வரையில், ஸ்வாமி, உம்மையும், உம்முடன் சேர்ந்த சீதையையும், லக்ஷ்மணனையும் அக்கரை சேர்க்க மாட்டேன். ஹே பிரபோ, எங்களை அனுக்ரஹ ஹ்ருதயத்துடன் கிருதார்த்தனாக ஆக்கும். சுரர்களை பரிவாரங்களாகவும் வைஷ்ணவ பக்தர்களையும், ஆதிசேஷன், விஷ்வக்ஸேனர், கருடன் போன்ற வேதாத்மாக்கள், பிரும்ம ருத்ர இந்திராதி திக்பாலர்கள், அவர்களின் பத்னிகள், ஹே கோஸாயி, உன்னை சேவிக்கும்படி பாக்யம் பெற்றவர்களாகவிருக்கிருர்கள். விஸ்வாமித்ரர் வஸிஷ்டர் காஸ்யபர், பரத்வாஜர், கௌதமர், சுகர், மார்க்கண்டேயர், நாரதாதி மஹரிஷிகள், பராசரர் வேதவியாஸர் ஆகியவர்கள் சாமரங்கள் வீச, சத்ரம் பிடிக்க, எல்லா ஸித்தர்களும் ஸாத்யர்களும், நந்தி பிரமத கணங்களும் தர்மம் ஸத்யம், தபஸ் யாகம் ஆகியவைகள் சரீரம் எடுத்து சேவை செய்வதையும், தியாகராஜர் அர்ஜுனன், யசோதை, உதங்கர், உபரிசரஸ் மஹரிஷி, விதுரர் சஞ்சயன், ராவணன், தாரை, மண்டோதரி, சுமந்தரர் ஆகியவர்கள் புளகாங்கிதம் அடைந்து தர்சிக்க, ஆனந்த ஆசுகளாகிற அம்ருத கண்ணீர்கள் நிரம்பி வழிந்து, என் கன்னங்களில் ஓடிவர என்னைப் பேசவைக்க முடியாதபடி, எண்ண முடியாதபடி ஸ்தம்பனம் செய்கிறீர். துருவன் கண்ட ப்ருகுபதம் பதித்த துருவநாராயணராக காக்ஷி கொடுக்காதவரை, ஐயா, உம்மை நான் அக்கரை சேர்க்கமாட்டேன்.] (506)

''சீதாராமா, தங்களுடைய கமல பாதங்களை அலம்பி, பிறகு தான் படகில் ஏற்றிக்கொள்ளுவேன். (நான் சுத்தம் அடைந்து,

என்னை முதலில் கரையேற்றிக்கொள்வேன்.) உம்மிடமிருந்து வேறு ஒன்றும் எனக்குக் கூலி வேண்டுவதில்லை, உம்மையும் தசரதரையும் அறுதியிட்டு கூறுகிறேன் பிரபு, உம்மை பூஜியாமல் அதிதி ஸத்காரம் செய்யாமல், நான் உங்களை அக்கரை சேர்க்கமாட்டேன். என்னை லக்ஷ்மணன் அம்பினுல் அடிக்கட்டும் பரவாயில்லை. துளசிதாஸின் நாதரை அக்கரைசேர்க்கமாட்டேன்.'' (507)

பிரபு ராமச்சந்திரன் பிரேமையினுல் தத்தளிக்கும் அப் படகோட்டியைக் கண்டார். பரமவினதியுடன் ஸமர்ப்பிக்கப்பட்ட வசனங்கள். பிரபு சிரித்துக்கொண்டு சீதையையும் லக்ஷ்மணனையும் பார்த்தார். (508)

கிருபாஸிந்து ஸ்ரீராமன் ஓடக்காரனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு பேசினுர். ''என் தம்பி, உன் சம்சார வாழ்க்கைக்கு உபயோகப்படக்கூடிய ஓடம் அழிந்துபோகாதபடி எதைச்செய்து கொள்ளவேண்டுமோ, அதை உன் இஷ்டப்படி செய்துகொள். சீக்கிரமாக கங்கை ஜலம் கொண்டு வா ; என் கால்களை சுத்தம் செய். உன்னையும் சுத்தப்படுத்திக் கொள். கால விளம்பம் செய் யாதே. என்னை அக்கரைக்கு சீக்கிரமாக சேர்த்து வை.'' (509)

எந்த ராம நாமத்தை பராயணமாக வைத்து அதன் பிர பாவத்தால் ராம பிம்பமாகவிருக்கும் சியாமசுந்தராங்கதனுகிற மோஹனராமனை நேரில் பார்த்துப் பேசி ஆராதிக்கும் மஹா பாக்யமுடைய அந்த ஓடக்காரனுடைய நிலையை யாரால் தான் வர்ணிக்கமுடியும்? ஸ்ரீராமனுடைய திருவடிகள் திருவிக்ரம அவ தாரத்தின் சமயம் கங்கையின் அவதாரத்திற்கு காரணமாகவிருந் தன. அப்பேற்பட்ட மஹத்வம்கொண்ட ராமன் ஓடக்காரனுடைய பிரேமை பக்திக்கு கட்டுப்பட்டு அவனுடைய வேண்டுகோளுக்கு இசைந்தான். ஆஹா, அவனுடைய பாக்யமே பாக்யம்!

[கருத்து :

ராமனுடைய அருளே கதியின்றி, மற்றென்றுமில்லை, ராமனுடைய அருளே நெடுங்காலம் பிழைசெய்தும் செய்து கொண்டும் ஆசாரிய கடாக்ஷத்தால் ஸம்பவிக்கும் ராமானுஜ சேதனனுக்கு ராமசரணமே நாராயண ''சரணம்'' என்று துணிவு கொண்ட வ்ரதத்துடன், சரணம் என்று அடைந்தோர்க்கு, இந்த ஜன்மம் மாத்திரமா, கோடிக்கணக்கான ஜன்மங்கள் ஸம்பவித் திருக்கட்டுமே. அபாரமானதும் ஆழமானதும், காம க்ரோதங் களாகிற கொடிய விஷமுள்ள ஜந்துக்களால் ஆக்ரமிக்கப்பட்ட

தான பவசிந்துவாகிற சம்சாரக்கடலை எம்பெருமான் திருவடிகளை ''எனக்கு உரியது, எனது பரம், என் பெறும்பேறு'' ஆகிய மஹாவிஸ்வாசத்தால் எம்பெருமானுடைய திருவடிகளையே உபாய உபேயமாக நாம் கொள்வோமாகில் மனக்கவலை தீர்ந்து இவ்வுலகில் நாம் இருக்கும் வாழ்வு வைகுந்தம் என்றும்; நாம் இன்றைக்கே மோக்ஷத்தை விரும்பினுல் ஸர்வ சக்தியுள்ள மஹா கர்மர் என்று சொல்லப்படும் வரதராமன் சீதையுடன் வீற்றிருக்க, ராமானுஜன் பக்கத்தில் இருக்க, பேரருளாளனுக பெளிக்க முற் பட்டு நிற்கின்ருன். நம்மை இன்றே இசையின் இணையடி சேர்ப்பர், இனிப் பிறவோம், வினைத்திரளை மாற்றுபவன்; வேதி யனுகிற ராமானுஜவாசகத்தால் கட்டுண்டவன்; மாயன் மாதவன், செழுமறையின் முதல் எழுத்துபோலவும் திருவரங்கம் போலவும், விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வேதவெற்பாகிற வேங்கடவெற்பென விளங்குகிறதல்லவா? யசோதை கடைந்த தயிரையும் வெண்ணெயையும் வாரி உண்டு, தன் எளிமையைக் காட்டிய பேரருளாளன் வாழும் ஹஸ்திகிரியும், காமேஸ்வரி காம பீடத்தில் காமேஸ்வரனுக விளங்கும் காஞ்சி மஹாக்ஷேத்ர மல்லவா? அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த பகவானுகிற ஸ்ரீராம னுடைய திருவடிகள், திருவிக்ரம அவதாரத்தின் சமயம் உல களந்த பெருமானுகவும், உலகமுண்ட பெருவாயானுகவும், ஸர்வ வியாபியாகவும் இருந்த சமயம், அவனுடைய திருவடிகளில் பிரும்ம கமண்டல வாரியினுல் உண்டாகிய திரிபதகா என்று சொல்லப்படும் திரிலோக கங்கை உற்பத்தியாகிற்று. அப்பேற் பட்ட பிரபு இன்று குஹப்பெருமானுடைய தாஸனுடைய ப்ரேமைபக்திக்கு கட்டுப்பட்டு, கங்கைக்கரை தீர்த்தத்தில் அதிவாத்ஸல்யத்துடன் அவனுடைய விண்ணப்பத்திற்கு இசைந்தான். ''ஐந்து அங்கங்களுடன் கூடிய பிரபத்தியை அனுசரித்து, பெருமாள் திருவடிகளை சரணம் என்று நன்கு அறிந்து, இனி எனக்கு ஒரு ''பரமும்'' (பொறுப்பும்) வைக்காமல் திருமால் என்னை ஆட்கொள்ளவேண்டும்.'' என்கிற ராமானுஜ சித்தாந்தத்தைக் கைப்பற்றின அவனுக்கு பெருமாள், அடியவர்க்கு மெய்யன், ஆதி நாராயணர், எம் பெருமான் தன்மார்பில் க்ஷணமும் பிரியாது வாழ்கின்ற பிராட்டி யுடன் கருணைகொண்டு தன் திருவடிகளைத் தந்தான். அனன்ய சரணம் அடைந்த சேதனர்களை தெய்வநாயக ராமனுடைய திருவடிகளை தானே அடையச்செய்யும் அன்ருே! அப்பேற் பட்ட சீதாபிராட்டி சகிதம் உள்ள ஸ்ரீராமன் ராமானுஜன் முன்

பட "மூலமற கைத்தவனென்றுரைத்தேன் கண்டிலே எனன் கருவினையே" என்கிறபடி ஆஸ்ரித வாத்ஸல்ய பிரணதார்த்தி ஹர ராமன் இன்று குஹனுடைய தாஸனிடம் தன் கன்றைத் தேடிப்போகும் ராஜகோபால வத்ஸலராக ஆனனே, ஆஹா அவளின் பாக்கியமே என்ன பாக்யம்!!!] (510)

இந்த வார்த்தைகளைக் கேட்ட கங்காதேவியும் மோஹித்துப் போனுள். இந்த ராமன் என் தயையையும் கைங்கர்யத்தையும் ஸ்வீகரிக்காமல் எவ்விதம் அக்கரை செல்லமுடியும்? அவ்விதம் நினைத்த கங்காதேவி ஸ்ரீராமனுடைய திருவடிகளில் திருவிக்ரமனுடைய பாதரஜஸ்ஜுகளின் ஒளியைக்கண்டு, பரமாத்மாவாக உணர்ந்தாள். இதற்குள் ஸ்ரீராமனுடைய ஆக்ஞையைப்பெற்ற ஓடக்காரன் தனது மரச்சொம்பிலிருந்த கங்கை ஜலத்தினுல் (அவர்களது) திருவடித் தாமரைகளை அலம்பி அர்ச்சித்தான். பகவானுடைய பாத ஸ்பர்சம் பெற்ற கங்கை தனது பிறந்த விடத்தைக் கண்டுகொண்டு ஆனந்தித்தாள். (511)

(பகவானுடைய பாதஸ்பர்சம் தன் பிறந்தவீடாகிற திருவிக்ரம பதத்தை அடைந்து கங்கை சந்தோஷித்தாள். ஜடாதரனுடைய திவ்ய திலகமாக ஜடா முடியில் விளங்கும் ஸுரஸரிதா, அந்த பாதத்தின் மகிமையால் அல்லவோ, இன்று பாபங்களைப் போக்கும் மகிமைகளைப் பெற்ருய். அம்மா, உன்னை நான் மந்தார ஸுபுஷ்பங்களுடன் பூஜித்து ராமேஸ்வர கங்கையைப் பிரார்த்திக்கிறேன். குஹனுடைய க்ருபையால் மும்மூர்த்திகளுக்கும் பெரிய ஸ்ரீ ராம பாதங்களை அவளாகவே அடைந்தாள்.)

கங்கையினுடைய ஆனந்தத்தையும், ஓடக்காரனுடைய அனுராகத்தையும் ஸ்ரீராமனுடைய உத்ஸாஹத்தையும் யாரால் விவரிக்கமுடியும்? தேவர்கள் மணமுள்ள புஷ்பங்களை வர்ஷித்தார்கள். இவனைப்போல பாக்யசாலி யாரும் இருக்கமுடியாது என்று உத்கோஷித்தார்கள்.

[கருத்து

இதற்கு சமமாக எந்த புண்ணிய ராசிகள் இருக்கக்கூடும்? ஒன்றே ஒன்றைத் தான் சொல்லக்கூடும். மும்மூர்த்திகளின் குணங்களைவிட சீதா ராம குணங்கள் சிறந்ததென்று தியாகராஜரும் குஹப் பெருமானும் எவ்விதம் கண்டார்களோ, அதுபோல இருக்கக் கூடும் என்று நானும் சொல்லி, துளசிதாஸரும் "சரி" என்று ஆமோதிப்பார்.] (512)

பிரபுவின் சரண கமலங்களை அர்ச்சித்துவிட்டு, அந்த பாக்யமுள்ள படகோட்டி சரண உதகத்தை தானும், ஸ்வீகரித்துக் கொண்டு தன் பரிவாரத்திற்கும் கொடுத்தான். இந்த மஹத்தான காரியத்தினால் அவன் தனது இருபத்தேழு தலைமுறைகளின் இருவர்க்கமாகிற பித்ரு, மாத்ரு வர்க்கங்களை சம்சாரத்திலிருந்து கரையேற்றினான். அதன்பிறகு ஆனந்தமயமாக அவன் ராமசீதா தம்பதிகளையும், லக்ஷ்மணனையும் கங்கையைப் படகினால் தாண்டி, அக்கரை அடையும்படி செய்தான். (513)

(என் பிரபு கிருதக்ஞர், முதிதர் ஆசுதோஷி, கதாதரர், கயையில் இருக்கும் விஷ்ணு பாதமே, பத்ரியில் இருக்கும் கபால நாராயணரே, கோகர்ணத்தில் நித்ய வாசியாக இருப்பவரே, விரஜையைத் தாண்டுவிக்கும் ஸுரபியே, வைஸ்வாநரனுக்குப் பிதா, யமனுக்கு தண்டர், காலாந்தகர், நேதா, அமானவர், வைகுண்டவாசி, பரமபதநாதர், ஸ்ரீ ரங்கநாயகி ஸமேத ரங்க நாயகர், வேதவ்ரதர், வேங்கடநாயகர், அலர்மேல் மங்கை மார்பனாகிற சீனிவாசன், நீ எங்களையும் இவ்விதம் பவசாகரத்தைத் தாண்டுவதற்கு உதவ வேண்டும்.)

அக்கரை வந்துசேர்ந்த குஹன், ராம லக்ஷ்மண சீதை ஆகியோர்கள் அந்த ஓடத்திலிருந்து இறங்கினார்கள். கங்கையின் மணத்தடலில் ஓடக்காரன் பிரபுவின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தான். ராம கைங்கரியம் செய்யும் பாக்யம்பெற்றவனானான் : பிரபு அவனை எழுப்பி வாரி அணைத்துக்கொண்டார். இவனுக்கு நாம் ஒன்றும் கூலி கொடுக்கவில்லையே என்று வருத்தப்பட்டார். (514)

பதியின் மனோபிப்ராயத்தைத் தெரிந்துகொண்ட சீதா பிராட்டி தனது ரத்னமய அங்குட்டியை (காலில் அணிவது) உதிர்த்து படகோட்டிக்குச் சம்மானமாகக் கொடுத்தாள். பிரபு ராமன் அதை அவனிடம் கொடுத்தார். இதைக்கண்ட படகோட்டி மிக்க வியாகுலமடைந்து, பகவானுடைய சரணகமலங்களைப் பற்றிக்கொண்டு, சுத்த பிரேமையையே வரித்தான்.

[கருத்து :

(பிரபு, வெகுகாலமாக உங்களுக்காக நான் தவம்கிடந்து, இன்றுதான் அந்த பாக்யத்தை விதிவசமாக அடைந்தேன். உங்கள் பராயணமாக விருக்கும் எனக்கு உங்களுடைய பக்தி பிரேமையே பரம பிராப்தமாக விருக்கவேண்டும்.) (515)

ஶ்ரீ राम, என் ஸ்வாமி நாதா, மந்தாகினியாகிற கங்கை, கிருஷ்ணன் விளையாடிய காளிந்தி, குஹக் கடவுளுனுடைய நாவில் வாழும் சரஸ்வதி ஆகிய மூவர்களையும், ராமா, சீதா, லக்ஷ்மணா, உங்களிடம் நான் பார்க்கிறேன். எனக்கு மேரு மந்தர மலைய பர்வதங்களாக விளங்கும் மூன்று தத்வங்களே, பக்தனுக்கு குருவாகவும் இருக்கும் மஹேஸ்வரரே, நந்தீஸ்வர பிரமதநாதர் பிருங்கி தியாகராஜர், மதங்கர், நாரதர், சுகர் ஆகிய மஹரிஷிகளால் வணங்கப்படும் சிவகௌரி, நந்திகேஸ்வரராக விளங்கும் ராம சீதா லக்ஷ்மணா, திவ்ய தேகத்தோடு விளங்கும் தேவனும், ரிஷியும், திகம்பரனும் பினாகஹஸ்தனும் விளங்கும் சிவபெருமானே, என் அப்பனே, உன் அரவிந்த தாள்களை மந்தார புஷ்பம் ஆகிற பஹு புஷ்பங்களால் அர்ச்சித்து நான் கிருதார்த்தனாக ஆகவேண்டும். எங்கள் இரு குலங்களும் உத்தாரணம் பண்ணப்படவேண்டும். பஞ்சாக்ஷர மகிமையை உணர்ந்த குஹனே, இப்போது அஷ்டாக்ஷர மகிமையை அம்பிகையினால் போதிக்கப்பட்டு, எனக்குப் பிரமாணமாக நின்ற தத்வ மூர்த்தி, அம்பிகையின் பிராண நிலையனே, நமஃசிவாய என்கிற பஞ்சாக்ஷர தெய்வத்தின் பிராண ஜீவனரே, எனக்கு தத்வமாகிற வைஷ்ணவ சித்தாந்தத்திற்குள் ராமதர்சனத்தை தயிர் பால்களில் வெண்ணெயை வைத்திருப்பதுபோல குப்தமாக மறைத்து வைத்திருக்கும் குஹரே, உன் அரவிந்த தாள்களை கொடு அப்பா கொடு. மஹா லக்ஷ்மியும் விரும்பத்தக்க திருவுள்ளமும், திருவடி பணிந்தவர்களின் விஷயத்தில் தாழ்ந்து இணங்கும்படி வந்த என் விதேஹ ஆத்மாவே, தர்மத்தையே பரமாகக்கொண்ட மைதிலியை எனக்கு 'தா' அப்பா. மதன காமத்தால் துடித்த ராவணன் போன்ற சக்தி உபாஸகர்களுக்கு ஞானத்தைத் தந்த ஆஞ்சநேயா, சபரிபோல குருபக்தி விஸ்வாசம் உள்ளவர்களுக்கு பரம ராமகிருபையைக் கொடுத்து இன குலத்தில் பிறந்தும் "ஸமூலம் புன புன ராவிர்த்தி ரஹித பதத்தைக் கொடுத்த குஹ்யமான ராமப் பெருமானே," நீயும் என் குருவாகிற தியாகராஜரும் பிரும்மாவும் பார்த்த மும்மூர்த்திகளுக்கு மேலான குணச் சிகரமாக விளங்கும் தசரத ராமனை, தன்னை மானிடனாக நினைத்து நாடகம் நடித்த வேஷதாரி ராமனை, சீதா லக்ஷ்மணன் பரதன் சத்ருக்னன் மஹரிஷிகள், தேவர்கள் சகிதம் எனக்கு கொடு அப்பா. ஆஞ்சநேயர் ராவணனுக்கு உபதேசித்த ராம ஸாகரத்தை என் பஞ்சாக்ஷர நாம வடிவான சம்பு கண்ட சுவாமிநாதனை,

அம்பிகையின் உத்தரவால் எங்களுக்கு கொடு. சக்திவேல் தாங்கின குமரா, ஸோமாஸ் கந்தரே, அம்பிகையின் மலர்க் கைகளில் விளங்கும் கங்கா புத்ரா, அரவிந்த நேத்ரா, ராம ரூபத்தை கருணையினால் கசங்கின சிகப்பான கண்களால் தாங்கும் புஷ்கராக்ஷா, தயை செய். தேவயானை வள்ளி மணாளா, தேவேந்திரன் பிரும்மா, பகவான் விஷ்ணு இவர்களால் சேவிக்கப்படும் குஹமூர்த்தியே, ஓடி வா. ஷண்முகா மயில் மேல் ஏறி, என்னிடம் வா. தயை செய் அப்பா.]

[தியானம்

சீதா ராமா லக்ஷ்மணா, நீங்கள் ஓம்புவஃ ஸுவஃ ஆகிற பிரணவாகார விக்ருதிகளாக விருக்கிறீர்கள். நீங்கள் இருக்குமிடம் ஸ்ரீரங்கதாம், வேங்கட பதமே. நீ ஸகல லோகங்களையும் ஸம்ரக்ஷணம் செய்பவன். தியாகராஜாதிகளைப் போன்றவர்கள், பிரசவ வேதனைப்படும் பெண்ணைப் போல, உன் சேர்க்கை ஸம்பந்தத்தை நாடி, நளின தலநயனா, அமித ஜகத்தே, என்று புகழ் மிக்கப்பாடி, தங்கள் மஹாபாபங்கள், மஹா க்ரோதங்கள், மஹா க்லேசங்கள், மஹா வஞ்சகங்கள், மஹா லோபம் ஆத்திரம் கொண்ட குற்றங்களையும், தோஷங்களையும், அபராதங்களையும் பொறுத்துக் கொள்ளும்படி வேண்டினார்கள். "பிரபோ, நான் சபல சித்தமுள்ளவன், பிரஹ்லாதன் விபீஷணன் போல உன்னை மனஸார பக்தி செய்யவில்லை, நீ கிருபைக்குப்பெயர் போனவன் ஆச்சுதே," என்று பலவாறு வேண்டினார்கள். ஆளவந்தார் "ஸக்ருத்கிருதோ அஞ்சலிஃ," நன்றாக செய்யப்பட்ட அஞ்சலி உறுதியான உனது ஸ்நேகத்தைக்கொடுக்கிறது என்று வைஷ்ணவ ஸித்தாந்தத்தைச் சொன்னார். அர்ஜுனனை தானாக வலுவில் போய் கீதையை உபதேசித்து ஆட்கொண்டாயே, திரௌபதிக்கு அபிமதமான திருமங்கல்யம் போகாமால் பாண்டவர்களைக் காப்பாற்றிய பார்த்தசாரதியே, தர்மருக்கு "உன் சொற்படி நான் தூது செல்லுகிறேன்," என்று சொன்னாயே; ஸ்ரீவிபீஷணனை காலம் தேசம் பாராமல் அங்கீகரித்தாயே, எங்களையும் நீதான் காப்பற்றவேண்டும்.]

[தியானம்

கங்கைக் கரையில் குஹன் பெருமானை சுக்ருத பிரணமம் செய்தான். குஹன் கிருதக்ஞை பூர்ணமாக பக்தி விஸ்வாஸத்துடன் மஹா திருமந்திரம் உபதேசம் செய்யப்பட்ட வைஷ்ண

வனைப் போல, உதார நினைவுடன் குஹன் பெருமாளை வணங்கினான். என் ஆசார்யரான பீஷ்மர் பாண்டவர்களைப் பார்த்து, "கிருஷ்ணனுக்குச் செய்த ஒரு சுக்ருத பிரணாமம்," சம்சாரத்திற்கு திரும்பி வராதபடி மஹாபாக்ய பிரஸாதமுள்ளது என்று அருளினார். அதையே பிராட்டி அசோக வனத்தில் ராவணனை நிராஹரித்துவிட்டு, ராமனை "நமஃ" என்கிறபடி ஆராதனை செய் என்று அவனுக்கு புத்தி கூறினாள். அது மாதிரி குஹன் ராமனின் கழல்களை சுக்ருத தண்டவத்தாகச் செய்து முடித்தான். கூப்பிய கைகளின் அஞ்சலியை பிரபத்தியாகக் கொண்டு குஹன் ராமசீதா லக்ஷ்மண கைங்கர்யம் செய்த பாக்யமுள்ளவனாக, ஸ்வயம் பிரயோஜன புத்தியால் செய்து முடித்தான். அவனே வைஷ்ணவர்களின் குலதெய்வமாகவும், ஆசார்யராகவும் தெளிந்த ஞானமுள்ளவனாகவும், எனக்கு மார்க்க தரிசியாகவும், ஞானம் அனுஷ்டானம் என்கிற வள்ளி தெய்வானையின் கணவனாகத் தோன்றினார். சுவாமிநாதன், எனக்கு ஆளவந்தாராகவும் யமுனைத்துறைவனாகவும், "காந்தஸ்தே புருஷோத்தம: பணிபதி: ஸய்யாஸனம் வாஹனம், வேதாத்மா விஹகேஸ்வரோய வநிகா, மாயா ஜகன் மோஹினி, பிரும்ம ஈஸாதி ஸுரவ்ரஜஃ ஸதயி தஸ் த்வத்தாஸ தாஸீகணஃ ஸ்ரீரித்யேவச நாமதே பகவதி ப்ரூமஃ கதம் த்வாம் வயம்," என்கிற பெருவாக்கிய வசனங்களின் ஆதாரத்தால், நான் அவரை சரணமடைகிறேன். பிரபு ராமன், ஸமிதிஞ்சயர் என்று சொல்லப்படுபவர், குஹனை வாரி அணைத்துக்கட்டிக் கொண்டார். ஜீவர்கள் தமக்குத் தாஸர்களாக விருப்பதைவிட்டு ஸ்வதந்திரர்களாக நினைத்துக் கொண்டு, விவாதப் படுவதாகிய கலக்கத்தை ஜயித்து, ஜீவாத்மாக்களுக்கு தமது மகிமைகளை பூர்ணமாகத் தெரிவித்து, அவர்கள் "நாம் பகவானுக்கு அடிமையே யின்றி ஸ்வதந்தரர்களல்லோம் என்று அறிந்து பக்தி செய்து, உஜ்ஜீவிக்கச் செய்யும் ஆசார்ய ஹ்ருதயமுள்ள நாராயணர். அதனால் அல்லவோ தைத்யேந்திர புத்ரனாகிற பிரஹ்லாதன் "அவிவேகிகள் விஷய சுகங்களில் பிரவிருத்தி அடைந்து ஆனந்திப்பது போல உன்னை அனுஸ்மரணை செய்துகொண்டு, பராசரர் சொல்லிய பிரகாரம் உனது பக்தி ப்ரேமையினால் "ஸாமே ஹ்ருதயான மாபஸர்பது" என்று குஹன் பெருமாளிடம் விண்ணப்பித்துக்கொண்டான். ஹே ரெங்க நாயகி ஸமேத ரங்கநாதா, "ஸம் ரக்ஷஸி ஸ்ம சரணாகத சங்கரஸ்த்வம் மமதேஹி கராவலம்பம்," என்று ஸ்ரீவண்

ஸடகோபயதீந்திர மஹா தேசிகர் சொல்லி அருளியபடி, என்னை க்ருத கிருத்யனாக ஆக்கு அப்பா, அம்மா கிருபை செய்,'' என்று பச்சாதாப மனத்தோடு விண்ணப்பம் செய்து கொண்டான். பிரபுவும் அவனுடைய கைங்கர்ய ஆராதனத்தை அங்கீகரித்துக்கொண்டார். இது அவன் கருணை, அவன் உள்ளத்தின் இயற்கையான ஸ்வபாவம்.]

[தியானம்

ஹே குஹா, ஆத்மா ராமா, சக்தி வேலாயுதா ஷடாக்ஷரா, பவானி ஸுதா, கிரிராஜ தௌஹித்ரா, ஷடானனா, மஹேஸ்வர புத்ரா, மஹேஸ்வரருக்கு ஸ்வாமிநாதனாக நீ என்ன அர்த்தத்தை உபதேசித்தாய்? அவருக்கு அம்பிகையைப்பற்றிய ஸம்சயங்களைத் தீர்த்து வைத்தாயா? ராமா, பிற்காலத்தில் துர்வாஸருடைய கோபத்தை சமனம் செய்ய, நீ லக்ஷ்மணனைத் தியாகம் செய்தாயே. அந்த துர்வாஸரும் உன்னிடம் அந்த ரங்கமாக எதைப்பற்றிப் பேசினார்? ஸகலரும் உன்னையும் ஜன காத்மஜா வாகிறமைதிலியைப் பற்றியே பேசியிருக்கிறார்கள். ஸ்ரீதேவியாகிற ரமையின் ஸ்ரீலோலனே ரங்கசாயி, ஹே, பிரபு வைகுண்ட பதி, நீர் 'தானே பிரணவத்துக்கும் அர்த்தமாகிறீர். நீரேதான் அதன் சம்சயத்தை பிரும்மாவுக்கும் உமைக்கும் உண்டு பண்ணினீர். நீரேதான் ஸ்வாமிநாதனாக அவதரித்து மஹேஸ்வர ருக்கு ஆசார்யராக ஆவிர்பவித்தீர். நீரேதான் உமைக்கு மஹேஸ் வர ஆசார்யராக திகழ்ந்தீர். ஹே ஹிரண்யகர்ப்பரே, உம்மால் உபதேசிக்கப்பட்டால், அது சுத்த ஞானமாகி விடுகிறது. பக்தியையும் ஹ்ருதயத்தில் தோற்றிவித்து, முடிவில் உன்னையே அடையச்செய்கிறது. ஹே சுப்பிராம்மண்ய தேஜஸே, உம்மைச் சரணமடைந்த எங்களை நீர்தான் ரக்ஷிக்கவேண்டும். காயத்திரி மந்திரத்தின் உட்பொருளே, என்னையும் பிரகாசம் அடையும்படி செய்யவேண்டும்.]

அந்த படகோட்டி சொன்னான்: "நாதரே, இன்று நான் இந்த பரந்த சம்சாரத்தில் எதைத்தான் அடையவில்லை? என்னுடைய பாபங்களும், தோஷங்களும், துக்கங்களும், தரித்திரத்தின் கடும் அக்னி தாபங்களும் போக்கப்பட்டு, இன்று தான் அவைகளின் தாபங்களிலிருந்து விடுதலை அடைந்தேன். பிரபோ, நான் பலகாலம் பிறர்க்கு உழைத்து அடிமை செய்து, வாழ்ந்து வந்தேன். கடவுளின் உதார அனுக்ரஹத்தினால், ஹே

பிரபோ, இன்று தான் எனக்குச் சரியான கூலி கிடைத்தது.'' (516)

"நாதரே, தீனதயாளு, தங்களுடைய கிருபையினால், இனி நான் ஒன்றையும் வேண்டேன். எனக்கு தங்களிடமிருந்து கூலி ஒன்றும் வேண்டாம். தாங்கள் வனவாசம் முடிந்து திரும்பி வரும் சமயம், எதைக் கொடுக்கிறீர்களோ, அப்போது அதை நான் சிரம்மேல் கொண்டு சந்தோஷமாகப் பெற்றுக் கொள்வேன்.'' (517)

பிரபு ஸ்ரீராமன், சீதை, லக்ஷ்மணன் ஆகியோர் மீண்டும் முயற்சி செய்து பார்த்தார்கள். ஆனால் அந்த படகோட்டி ஒன்றையும் பெற மறுத்து விட்டான். அப்பொழுது கருணை யையே கவசமாகக் கொண்ட பகவான் ஸ்ரீராமச்சந்திரன் அவனுக்கு நிர்மலமான பக்தியை வரதானமாகக் கொடுத்து விட்டு அவனிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார். (518)

[தியானம்

என் நாதரே, சுவாமி நாதா, குரு, தெய்வமே, உம்முடைய சௌலப்யத்தை யாரால் எவ்விதம் விவரிக்கமுடியும்? உன் கையில் வீற்றிருக்கும் கிளி ரூபமாகிறவரும் உம் புத்ரனாகிய சுகப் பிரும்மமே, நாராயணா, ஸ்வாத்யாயம் ஸாங்கியம் யோகம், தர்மம், தபஸ், தியாகம், யாகம், தக்ஷிணையாகிற பொதுஜன சேவை, வ்ரதங்கள், தானங்கள், பகவத் ஆராதனம், மந்திரஜப அனுஷ்டானங்கள், தீர்த்த ஸ்நானம், உத்ஸவ கொண்டாட்டங் கள், ஹ்ருதய தாரணத்திற்காக யோகிகள் அனுஷ்டிக்கும் யோக முறைகள், அஹிம்ஸை முதலிய த்யாகதத்வங்கள், ஆகிய எல்லாம் சேர்ந்தும், சத்ஸங்கத்திற்கு எவ்விதம் சமமாகாதோ, அதுபோலவும் ராமா, உன்னுடைய கிருபையால் என்னுடன்கூட வசிக்கும் தேவ, தைத்ய, அசுர, ப்ரேத, பிசாச, பிரமதகண நாயகர்கள், யாதுதானர்கள், பக்ஷி மிருகங்கள், கந்தர்வர்கள் அப்சரஸ், நாகர்கள், சித்த சாரணர்கள், யக்ஷர்கள், வித்யாதரர் கள், குஹ்யகர்கள், மானிடர்கள், ஸ்திரிபுருஷர்கள், ராஜஸ தாமஸ குணங்களில் உழலும் ,அசுரஸ்வபாவமுள்ள ராக்ஷஸர்கள் ஆகிய எல்லா ஸ்ருஷ்டிகளில் உள்ள சகல சராசரங்களில் அனைத்துக்கும், அவர்களுக்கு அருகதையில்லாத போதிலும், நான் கெஞ்சிகேட்கிறேன் என்று, ராமா, சீதாராமா, என் தாயார் அம்பிகை பூஜை செய்யும் ஆத்மா ராமா, என் வார்த்தைக்கு கட்டுப்பட்டு, கோபிகளிடம் எவ்விதம் சுத்த சைதன்ய அன்பை

வர்ஷித்தது மாதிரி, உங்கள் காமனுகவிருக்கும் எனக்கும் எங்களுக்கும் உங்கள் சாந்நித்யமே பரமப்ராப்தமாகவிருக்க வேண்டும் என்கிற ஞானயக்ஞத்திற்கு, கிருபை செய், அப்பா, கிருபை செய். ஸர்வ தேஹியாகிற உங்களே "ஏகம்" என்கிற சப்தத்தால் சரணம் பண்ணும் என்னேயும் எங்களேயும் என் ஸ்வாமி, ஸர்வாத்ம பாவத்தினுல் அங்கீகரித்து எங்கள் மனோரதங்களே நிறைவேற்ற வேண்டும். சீதாராமா, அவர்களே யும் உங்களுடைய கிருபா பாத்ரனுகை ஆக்கவேண்டும். அப்போது தான் நான் பூர்ணமாக அனுக்ரஹிக்கப்பட்டவனுவேன் ஸ்வாமி. என் தாயாகிய சீதை எதை கொடுக்கிருளோ, அதை என் சிந்தாமணியாக என் தலேயில் சுமந்து உங்கள் பிரஸாதமாகக் கருதி போற்றி இன்புறுவேன்.]

அதன் பிறகு ரகுகுல நாதர் கங்கையில் ஸ்நானம் செய்து, குஹப்பெருமானுடைய தந்தையாகிற கங்காதரனுடைய பூஜை யைச் செய்தார். அவருடைய சின்னங்களாகிய பஸ்மம் நிர்மால் யம் ஆகியவைகளே ஸ்வீகரித்துக்கொண்டு, சிவபெருமானே சுக்ருத தண்டம் செய்தார். சீதாபிராட்டி பிரேமையுடன்கூடிய அஞ்சுலிகளுடன் கங்காதேவியை வேண்டிக் கொண்டாள். "மாதா, என்னுடைய மனோரதங்களே பூர்த்தி செய்துவை அம்மா. கிருபையுடன் இரு அம்மா." (519)

"என்னுடைய பதி, என் மைத்துனன் லக்ஷ்மணன் சகிதம் நானும் உன் அனுக்ரஹத்தால் வனவாசம் முடிந்த பின்பு அதிக கிருதக்ஞையுடன் குசல பூர்வமாக திரும்பி வந்து உன்னே மீண்டும் பூஜைசெய்ய வேண்டும். அவ்விதம் அனுக்ரஹிக்க வேண்டும்." என்று வேண்டிக்கொண்டாள். சீதையின் ப்ரேமை பூர்வமாகவும் மிக்கவினதையுடனும் செய்யப்பட்ட வாக்ய வசனங்களேக் கேட்டு, சீதையினுடைய நிர்மலமான பக்திக்கு கட்டுப்பட்டவளாக, அழகான குரலில் கங்காதேவி பதில் சொன்னுள். (520)

"ரகுவீரனுடைய பிரியதம வைதேஹி, கேளு அம்மா. மஹா ராஜி, வைதேஹி, உன்னுடைய கீர்த்தி பிரபாவங்கள் இன்னும் ஜகத்தில் பரவ ஆரம்பிக்கவில்லே. என் தாயே, உன்னுடைய கிருபாதிருஷ்டியினுல் லோகபாலர்களாகிற இந்திராதி தேவதை கள் உயிர் பெறுகிருர்கள். இந்திராதி தேவர்கள் தங்கள் மணி முகுடங்களால் உன் பாதசரணங்களே நமஸ்கரித்து, கிருதார்த்தர் களாகிருர்கள். உன் ப்ரீதிக்காக ஸகல சித்திகளும் கைகட்டி காத்துக்கிடக்கின்றன." (521)

"என்னைப்பற்றி பரம கிருபையுடன் நீ சொல்லி, ஆனந்தம் ஊட்டுவித்த மஹாவாக்யங்கள், அவைகள் உனக்கு என்மீதுள்ள அந்தரங்க பக்தியை விருத்தி செய்து, உனது பரம கிருபைக்கு என்னை இன்னும் ஆசைப்பட்டவளாக மோஹிக்கும்படி செய்கிறாய் அம்மா. என்னுடைய சௌபாக்யங்களை விருத்தி செய்யும் மஹாலக்ஷ்மியே, என் தேவியே, என் தேகம் ஆத்மா எவ்விதம் சுத்தமோ, அதுபோல அந்த இடத்திலிருந்து வரும் சாவித்திரி யாகிற என் குரலும் சுத்தமடைய வேண்டும். அம்மா, அந்த ஒரு காரணத்தால், நான் ஸபலத்துடன் வாழ விரும்புவதால் அம்மா, தாயே, உனக்கு ஆசீர்வாதங்கள் செய்கிறேன்." (522)

"நீயும் உன் பிராண நாதரும் லக்ஷ்மணசகிதம் பரம சௌக்யத்துடனும் க்ஷேமபூர்ணர்களாக அயோத்திக்குத் திரும்பி வருவீர்கள். எனக்கு உன் பூர்ணமனோரதங்கள் என்னவென்று தெரியாது. எவை இருந்தாலும் அந்த மனோரதங்கள் எல்லாம் பூர்த்தியாகி, உங்களுடைய சுந்தரமானதும் சுபமானதும், புண்யஸ்ரவணமானதுமான கீர்த்திகள், கடல்நீர் உள்ளளவும் ராம நாமம் வாழும் வரையிலும், ஜகம் எங்கும் பிரஸித்தியுடன் விளங்கட்டும்." (523)

சகல மங்களங்களுக்கும் மூலகாரணமாகிற பவானியாகிற கங்கையின் வசனங்களைக் கேட்டாள் சீதை. தன் மனோனுகூலமாக வரும் கங்கையின் வார்த்தைகளைக் கேட்டு, சீதை ஆனந்தித்தாள். அந்த சமயம் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் நிஷாத ராஜனாகிற குஹனிடம் அன்புடன் சொன்னார். "என் தம்பி, நீ இனி வீடு போகலாம்." இந்த வார்த்தையைக் கேட்டு குஹனுடைய ஹ்ருதயதாமரை வாடினபடியால், அவனுடைய முகமும் வரட்சி அடைந்தது. (524)

அதிதீன ஸ்திதியை அடைந்திருந்தான் குஹன். தழுதழுத்த குரலில் பதில் சொன்னான். "ரகுகுலமணி, என் பிரார்த்தனைகளை கேளு ஐயா, நான் உங்களுடன் கொஞ்சநாள் தங்கிவிட்டு உமக்கு இந்த காட்டின் வழிப்பாதைகளைக் காண்பித்துவிட்டு, சில தினங்கள் உங்கள் பாதசரணங்களுக்கு சேவைசெய்து வாழ விரும்புகிறேன்." (525)

"ஹே ரகுராஜ், ரகு ராமா, எந்த எந்த இடங்களில் பர்ணகுடி கட்ட ஆக்ஞை செய்கிறீரோ, அவைகளை இலைகள் காய்ந்த சரகுகளின் உதவியால் கட்டித் தருவேன். ரகு வீரா, உம்மால் நான் மோஹிக்கப்பட்டுவிட்டேன். நான் உம்முடைய



ஸ்ரீராமன் குஹனுடைய ஸ்வாபா
விகமான பிரேமையை அங்கீகரித்து,
அவனை தன்னுடன் இறுக அணைத்து
ஆனந்தம் கொடுத்து, அவனுடைய
பந்துக்களையும் சகாக்களையும் அனு
கிரஹித்துவிட்டு, மீண்டும் குஹனிட
மிருந்து விடைபெற்றுக் கொள்ளுதல்.

அடியார். உம்முடைய கட்டளைகளை ஆவலுடன் எதிர்பார்க்கும் தாஸன். அதன்படி நடக்கத் தீர்மானித்துள்ளேன். தயவு செய்யவேண்டும் ஸ்வாமி.'' (526)

[தியானம்

ஹே ராமா, தயாபரா, நாராயணா, நரோத்தமா, ரமா வைகுண்ட நாதா, புஷ்கராக்ஷா, ஸர்வஜகதாதாரா, ஜகத்பதி, உத்தவரால் சேவிக்கப்பட்ட கிருஷ்ணா, யக்ஞ கல்பனுகிற மாதவா, என்னுடைய யக்ஞ ஜிக்ஞாஸுகளைக்காக்கும் வராஹ ஸ்வாமி, அத்ரி அனுசூயை ஆஸ்ரமத்திற்குச் சென்ற ராமா, பரத்வாஜப்ரியா, தியாகராஜ, அம்பரீஷ, பீஷ்மர், ஸனகாதிகளால் சேவிக்கப்பட்ட மஹாலக்ஷ்மியுடன்கூடிய நாராயணா, உன் மங்கள ஹ்ருதயம் என்னிடம் வேண்டும். நாரத பகவானுல் வேண்டப்பட்டு தேடப்பட்ட நாராயணா, ரக்ஷிரக்ஷி. கருடாத்ரி யில் வசிக்கும் பிலலக்ஷ்மி நரசிம்மா, ரக்ஷி.]

குஹப்பெருமானுடைய ஸஹஜ ஸ்நேகத்தைக் கண்டார் பிரபு ஸ்ரீராமச்சந்திரன். அவனைப் ப்ரேமை பொங்கும் ஹ்ருதயத் துடன் இறுகத்தழுவிக் கொண்டார். அவனைக் கூட்டிப்போக சம்மதித்தார். குஹனுக்கு எல்லையில்லாத ஆனந்தம் ஏற்பட்டது. பரம கிருதார்த்தனுக ஆக்கப்பட்டான். கிருதகிருத்யனுகச் செய்யப்பட்ட குஹன் தன் பரிவார பந்துக்களை அழைத்து ஸ்ரீராமச்சந்திரனுடைய திருவடிகளில் அர்ப்பணம் செய்தான். பகவான் அந்த வேடுவ ஜாதியில் உதித்த சகல பரிவாரங்களையும் அனுக்ரஹித்து, அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார். (527)

அப்போது பிரபு கணபதியாகிற விஷ்வக்ஸேனரையும் பகவான் சிவபெருமானையும் ஸ்மரணம் செய்து, நமஸ்கரித்து விட்டு அதன் பிறகு சைலபுத்ரியான கங்கையை, ஸுரஸரிதா வைப் பூஜை பண்ணி நமஸ்கரித்தார். அதன் பிறகு ராமர் குஹன் சீதை லக்ஷ்மணருடன் மேலே வனம் சென்ருர். (528)

அந்த நாள் மூவரும் வடவிருக்ஷத்தின் நிழலில் தங்கினுர் கள். லக்ஷ்மணனும் குஹனும் ராமனுக்குத் தேவையான வசதிகள் செய்து முடித்தார்கள். அதன் பிறகு பிரபு விடியற் காலை எழுந்திருந்து ப்ராத ஸந்தியா முதலிய உபாஸனைகளைச் செய்து முடித்துவிட்டு, ஸகல தீர்த்தங்களுக்கும் சிகரமாக விளங்கும் தீர்த்த ராஜமாகிற கங்கை யமுனை சாஸ்வதி நதிகள் சேரும் பிரயாகை க்ஷேத்திரத்தை தரிசனம் செய்தார். (529)

அந்த தீர்த்தராஜ க்ஷேத்ரமாகிய பிரயாகை ராஜனுக்கு ஸத்யம் மந்திரி; ஸ்ரத்தை அன்பான மனைவி; வேணி மாதவர் உதாரணம் போல விளங்கும் நண்பனும் ஹிதகாரியாகவிருந் தார்கள். [யக்ஞகல்பங்களை ரக்ஷிப்பவரும் மாதவரே.] தர்மம் அர்த்தம், காமம், மோக்ஷமாகிற சதுர்வித புருஷார்த்தங்கள் நிரம்பின பொக்கிஷ க்ஷேத்ரமாக விளங்கியது பிரயாகை க்ஷேத்ரம். அது மஹாபுண்யமய பிரதேசம், அழகானதும் ரம்யமானதுமான இடம். (530)

பிரயாகை க்ஷேத்ரம் ஒரு கோட்டையாக காக்ஷி அளித்தது. ரொம்ப பலமானதும், பார்ப்பதற்கு ரம்யமாகவும் இருந்தது. அதில் ஸ்வப்னத்தில்கூட எதிரிகள் நுழைய முடியாது. ஸம்பூர்ண சேனை பலத்துடன் கூடியது. ஸகல புண்ணிய தீர்த்தங்களும் வந்து சேருமிடம். பாபங்களாகிற எதிரிகளை நாசம் செய்யக்கூடிய ரணதீரர்கள் கொண்ட புண்ணிய தீர்த்தவாரி. கலியினுடைய தோஷங்களையும், காலத்தின் மலங்களையும் போக்க வல்லமை யுடையதும், ஸர்வ சௌபாக்யங்களை வாரிக்கொடுக்கும் ஸர்வ ஸ்ரேஷ்டமான தீர்த்தகட்டம். (531)

யமுனை, கங்கை, சரஸ்வதி ஆகிய புண்ணிய நதிகளின் சேர்க்கை சங்கமம் அந்த தீர்த்த கட்டத்தின் ரொம்ப சோபிதமான இடம். அந்த இடத்திற்கு அக்ஷய வடம் சத்ரம் (குடை) போல விளங்கியது. முனி ஜனங்களின் மனத்தை மோஹிக்கக் கூடிய சக்தி வாய்ந்தது. அப்பேற்பட்ட யமுனை கங்கை தீரங்களில் அலைகள் படிப்படியாக வீசிக்கொண்டிருந்தன. யமுனையாகிற காளிந்தியின் நிறம் பகவானுடைய நிறமாகிற ஸ்யாமை நிறம். கங்கையின் நிறம் ஸலிலமாள வெண்மை. அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த புண்ணிய நதிகளின் சேர்க்கையை தர்சனம் பண்ண மாத்திரத்திலே இந்த ஸம்சாரத்தின் துக்கங்களும் தரித் திரங்களும் நஷ்டமாகிவிடுகின்றன. (532)

ஸுக்ருதம் படைத்த சாதுக்கள், புண்யாத்மாக்கள் உள்ளி லும் புறத்திலும் சுசியுள்ள புருஷஸ்திரிகள் அந்த ஸங்கமதீர்த் தத்தை ஆராதனம் செய்து பரம பாவன மாகிறார்கள். ஸர்வ மனோரதங்களையும் அடைகிறார்கள். வேதங்களாலும் புராணங் களாலும், அனாதி காலமாக வந்தனம் செய்யப்பட்ட புகழ் பெற்ற க்ஷேத்ரம். அப்பேற்பட்ட வேத பராயணர்களாகிற முனி கணங் கள் அந்த புண்ணிய க்ஷேத்ரத்தின் நிர்மலமான குண விலாஸங் களைக் கீர்த்தனம் செய்து, கிருத கிருத்யர்களாக ஆகிறார்கள். பகவானுடைய கிருபையையும், பகவானிடம் அவ்யயமான பக்தி

யையும் அடைகிருர்கள். இவ்விதம் மஹத்வம் வாய்ந்த பிரயாகை க்ஷேத்ரம் ஸம்பூர்ண காம மனோரதங்களுக்குக் காரண ரூபமாக விளங்கு கிறது. (533)

அந்த பிரயாகை க்ஷேத்ரத்தின் ஸ்துதியினுல் ஸகல பாபங்களும் தோஷங்களும் நஷ்ட மடைகின்றன. அப்பேற்பட்ட தோஷ பாபங்களாகிற யானைகளுக்கு பிரயாகை க்ஷேத்ரம், கங்கை யமுனை சரஸ்வதி சங்கமம், சிம்ம ரூபியாக விருக்கிறது. பிரயாகை க்ஷேத்ரத்தின் பிரபாவ மகிமைகளை யாரால் தான் பூர்ணமாக வர்ணிக்க முடியும்? அப்பேற்பட்ட புனிதமானதும், அத்யந்த சுகங்களை கொடுக்கும் தீர்த்த பதியான பிரயாகை திர்த்தத்தை ரகு வரஸ்ரேஷ்டர்களான ஸ்ரீ ராமர் சீதை லக்ஷ்மணர் தர்சனம் செய்து பரம சுகத்தை அடைந்தார்கள். (534)

[தியானம்

ஹே ராமா, நீரே சுசி. நாதத்தையே உடம்பாகக் கொண்ட பரிசுத்தமான சங்கர தேவரே, நமஸ்காரம். ராமா, உன்னையும் சீதையையும் நாதரூப சங்கரரை முன்னிட்டு நமஸ்கரிக்கிறேன். ராமானுஜா, கணபதி எவ்விதம் "அப்ஜகராம்" என்று ராமதத்வத்தை கையில் வைத்துக் கொண்டு, பார்வதி பரமேஸ்வரர்கள்தான் என் செல்வம் என்று நினைத்து, குஹனுக்குப் பாடம் கற்பித்தாரோ, அந்த பிரணவ மூர்த்தியை நமஸ்கரிக்கிறேன். மரணத் தருவாயிலிருந்த ஜடாயுவை பிரபு தரிசித்த சமயம், லக்ஷ்மணன் ராமனுக்குப் பலவிதமாக உபதேசித்தான். "ஸாத்விக ஸ்ருஷ்டிகளான கந்தர்வ யக்ஷகின்னர முதலிய தேவகணங்களைக் கொண்டதும், பிரும்ம ஞானிகளான பிராம்மணர்களும் மஹரிஷிகளும் கொண்ட பூலோகத்தை அழிப்பது தகாது. தாங்கள் இக்ஷ்வாகு வம்சத்தில் அவதரித்த காரணத்தை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, நமது சத்ருவைக் கொல்வதில் பூர்ணமான முயற்சி செய்ய வேண்டும். தங்களுக்கு ஒருவன் அபராதம் செய்திருக்க, லோகங்கள் அனைத்தையும் நாசம் செய்வதால் யேற்படும் லாபமென்ன? ஆகவே அந்தப் பாபியைக் கண்டு பிடித்து, கொல்வதுதான் நியாயம் என்று தெரிவித்தான்." அதே மாதிரி ராமனும் ஜடாயுவின் வசனங்களைக் கேட்டு, அது மரித்த சமயம், "இவரும் என்னைக் கைவிட்டுப் போனுர். சகல பிராணிகளிலும் சாதுக்களும், தர்மாத்மாக்களும் உபகாரிகளுமிருக்கிருர்கள்," என்று பிரபு லக்ஷ்மணனிடம் சொன்னுர். ஜடாயுவும் லக்ஷ்மணன் சொல்லியபடி "ராவண

னைக் கொன்று சீதையுடன் சுகமாக வெகு காலமிருப்பாய்,'' என்று ராமனுக்கு வழி 'காட்டினர். அதைப் போல ராவணனுல் அபஹரித்துக் கொண்டு போகப்பட்ட சீதை லக்ஷ்மணனை பலவிதமாகப் புகழ்ந்து, தனது குற்றத்தை உணர்ந்து பச்சாதாபப்பட்டு, காலனே என்னை இந்தக் கஷ்டத்திற்கு உள்ளாக்கி, லக்ஷ்மணனை என்னை விட்டுப் பிரியும்படி செய்தான் என்று சொன்னுள். இந்த வசனங்களிலிருந்து லக்ஷ்மணனுடைய தத்வம் விமர்சனமாகத் தெரிய வருகிறது. மஹாபாஹுக்களைக் கொண்டவனும், குருசித்த பிரஸாதகனும், லக்ஷ்மி வர்த்தனனும், துஷ்டர்களைப் பாபங்களுக்குத் தகுந்தாற் போல சிக்ஷிக்க மனமுடையவனும், சுகம் அந்த சுகத்தை அடைவதற்கு தர்மமாகிற கருணையையும் பரஹிதத்தையும், பெருமாளுடைய பெரும் பதங்களை அண்டியிருப்பதற்குப் பெரும் பாக்யத்தை உடைய லக்ஷ்மண தத்வத்தை தியாகராஜ வால்மீகி முனிவர்கள் பலவிதமாக விளக்கிச் சொல்லியிருக்கிருர்கள். ஹே மஹா கணபதியே, நீரும் கமல புஷ்பத்தை கரத்தில் தரித்துக் கொண்டிருக்கிறீர். உன்னையும் நமஸ்கரித்துக் கேட்கிறேன். நிகம ஆசாரங்களிலே பரம உத்தமரும், அமோகரும், இந்திரன் பலி என்று பாரபக்ஷம் பாராட்டதவருமாகிய என் பிரபு ஸ்ரீ ராமன், ஸ்ரீ மந் நாராயணன் அல்லவோ உமது கமல புஷ்பமாக விளங்குகிருன். ராமபக்திதான் சிறந்தது, அதுதான் பூலோக வாழ்க்கையில் மிக்க ஸாரமானது என்று சொல்லிய தியாகராஜரும் இதற்காகத் தானே ஸத்யோஜாதாதி பஞ்ச முகங்களால் பகவான் சங்கரர் அம்பிகையுடன் ஸரிகமபதனிஸ என்கிற ஸப்தஸ்வரங்களடங்கிய கீர்த்தனைகளால் ஸதா சீதா ராமனைப் புகழ்ந்து கொண்டிருக்கிருர். அது மாதிரி நானும் மஹா கணபதியினுல் அனுக்ரஹிக்கப்பட்டவனுக சீதா ராமனைப் பூஜிக்கிறேன். ஹே ராமா சீதா லக்ஷ்மணு என்னிடம் ஓடிவாருங்கள்.]

[தியானம்

என் காலம் வீணுகித் கொண்டு போகிறது. என் மனமாகிற சங்கர பகவானே, காலனை சம்ஹரித்து தியாகராஜரைப் பாலனம் செய்து அவருக்கு விமல ஹ்ருதயத்தைக் கொடுத்த பஞ்சமுக வேத ஸ்வ்ரூபமே, சாமவேதத்தின் ஸாரமே, என்னிடம் தயை செய். அப்பா, மோதக கர, நிகமோத்தமமான மஹா கணபதியாகிற விஷ்வக்ஸேனரே, எங்களிடம் கருணைகொள் அப்பா. பிராட்டி லக்ஷ்மி தந்திரத்தில் '' இதம் சரணமஞ்ஞாநாம்''

அக்ஞானனுன நான் என் செய்வேன்? எனக்கு யோக்யதை ஒன்றுமில்லையே, என்று ஆழ்வார் கதறியபோது, எம்பெருமான் ''ஆழ்வார், உமக்கு நான் ஞானம் தந்தோமே,'' என்ருன். ''உன் பார தந்திரியத்தை உணர்ந்துகொள்.'' ''ஸாதனு அனுஷ்டானம் ஒன்றுமில்லையே, என் செய்வேன்?'' என்று ஆழ்வார் பச்சா தாபப்படும் போது, '' பகவான் ஸ்வரூபத்திற்கு சேராதாகிலும், அதனுல் உன்னைப்பெறமுடியுமாகில், அதனை அனுஷ்டிக்கலாம், '' என்று சொல்ல, அப்போது ஆழ்வார் ''பக்தி ரூபாபந்நஞ் ஞானத்தை நீ தந்த படியால் ஒன்றையும் சிரமமாக அனுஷ்டிக்க முடியாதபடி ஹே ஸ்வாமி, நான், உம்மிடம் பக்த பரவசனுன நான் என்ன செய்வேன்?'' என்று ஆழ்வார் விக்ஞாபிக்க, '' என் ஸ்வரூபம் கருணை, அஞ்சவேண்டாம், சேதனனுகிற உம்முடைய ஆர்த்தியைக் கண்டு இரங்குவேன். பிரபன்னனுடைய திருவுள் ளத்தை அறிந்து, அவன் இச்சைப்படி நடப்பேன். அதுவே ஹேது, பக்திப்ராவண்யமே ப்ரபத்திக்கு முக்ய ஹேது'' என்று விளக்கிக் காட்டிய நம்மாழ்வார் நாரதர், சங்கரர், சீதை, ஜடாயு, கணபதி, உமை, பராசரபட்டர், தியாகராஜர் ஆகியவர்களின் வாக்யங்களைக் கண்டுகொண்டு சீதா 'லக்ஷ்மண ராமரை நான் சரணம் அடைந்து கிருபையை வேண்டுகிறேன். ராமா ரக்ஷித்தருள வேண்டும் ஸர்கரே.]

(''ப்ராம்சு'' என்று சொல்லப்படும் திருவிக்ரமர்) பகவான் ஸ்ரீராமச்சந்திரன் தன்னுடைய திருவுள்ளத்தை தனது ஸ்வரூப ஸ்வபாவங்களை தனது திருமுக மண்டலத்தால் சீதாதேவி லக்ஷ்மணர், சகாவாகிற குஹன் ஆகியவர்களுக்குச் சொல்பவராக தீர்த்த ராஜமாகிய பிரயாகை க்ஷேத்ரத்தின் மகிமையை, எடுத்துச் சொன்னுர். கருணையையே உருவாகக்கொண்ட பகவான் லோக பாவனமாகிற பிரயாகை க்ஷேத்திரத்தை நமஸ்கரித்து அங்கு சமீபத்திலிருந்த வனம் பூந்தோட்டங்களையும் அதிப்ரேமையுடன் சுற்றிப் பார்த்து ஒவ்வொன்றின் சிறப்பையும் அவர்களுக்கு எடுத்துரைத்தார். (535)

இந்த விதிப்படி ஸ்ரீராமர் சகல மங்களங்களைக் கொடுப்பவ ளும் மூன்று உலகங்களையும் பாவனமாக்கி, தன் பிறந்த இட மாகிற பகவானுடைய பாதங்களை சதா தரித்துக்கொண்டிருக்கும் கங்கையை, அந்த கங்கை யமுனை சரஸ்வதி இவர்கள் கூடிய பிரயாகை க்ஷேத்ரத்தை, தர்சனம் செய்தார். (''ஸர்கர்'', என்கிற நாமத்திற்கு ஏற்ப ஸ்ருஷ்டிகர்த்தாவாகிற பகவான் திருவிக்ரம அவதாரத்தில் உண்டான கங்கையின் மூலம் சேதனர்களை தன்

திருவடித்தாமரைகளை எளிதில் பற்றும்படி தம்மை மஹா கிருபை யுடன் அளிக்கும் பிரபு) ஸ்ரீராமச்சந்திரர் முதித மனத்துடன் கங்கையின் ஸங்கமத்தில் ஸ்நானம் செய்தார். அனுஷ்டானப்படி தீர்த்ததேவதையானவரும் ஜடிலருமான பகவான் சங்கரரைப் பூஜைசெய்து தீர்த்தராஜ க்ஷேத்ரமாகிய பிரயாகை திரிவேணியை யும் பிரபு பூஜை செய்தார். (536)

[தியானம்

ஹே அன்னபூர்ணே, விசாலாக்ஷி, காசி மதுரை க்ஷேத்ரத் தில் சகல சேதனர்களுடைய க்லேசங்களைப் போக்கும் கேசவ ரூபத்தில் இருக்கும் காமாக்ஷி, காஞ்சியிலும் பிரயாகையிலும், வாமனவதாரத்தில் பிரும்மசாரியாகவிருந்து கஸ்யபர் அதிதிகிரு ஹத்தில் உபநயனத்தின் போது "பிக்ஷாந்தேஹி" என்று சொன்ன கள்வனுக்கு, (என் மனத்தையும் ஆத்மாவையும் ஹவிஸ்ஸாக சாப்பிடும் யக்ஞபதிக்கு) அம்மா தாயே நீ மாதாவாகி, கிருபா வலம்பனம் செய்து, அவனுடைய பிக்ஷாபாத்ரத்தை அன்ன மிட்ட காசீபூர்ணேஸ்வரியாக விளங்கினாய். மீனாக்ஷி, அன்னபூர்ணே, ஸதாபூர்ணே, பரத்வாஜருடைய ப்ராணவல்லபே, ஞானவைராக்ய ஸித்தி யர்த்தம் "பிக்ஷாந்தேஹி" என்று சங்கரபகவத்பாதரால் பிக்ஷை கேட்கப்பட்ட பார்வதி, என்னை ரக்ஷி. மஹாபாக்யர் களான உன்முசுஃ பிரமுசுஃ அகஸ்தியர் ஆகிய மூன்று ரிஷிகளால் பிரகாசித்துக் கொண்டிருக்கும் தெற்கு திக்கைப் போலே, பரத்வாஜ ஆஸ்ரமத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் சீதா ராமா லக்ஷ்மணா, தர்மத்தில் அபார அனுஷ்டானமும், நம்பிக் கையை உடைய தர்ம புத்ரரைப்போல விளங்கும் தர்ம விக்ரஹ வானே, சுரபியினாலும் கங்கையினாலும் சேவிக்கப்பட்ட வாஜஸ நியே, இம்மைக்குரிய அன்னம் முதலியவைகளை அடையும்படி செய்து, அஹிம்சையை மயில் தோகையைப் போல அணிந்து கொண்டு வரும் ஸ்ருங்கி ஶ்ருங்கி, என் சம்சார பிஷக்கே, என் ஔஷதமே, பரத்வாஜர் போன்ற சப்தரிஷிகள் உம்மை அர்ச் சாவிக்ரஹங்களில் எழுந்தருளும்படி பிரார்த்திப்பதை ஏற்றுக் கொண்டு அவர்களால் காண்பிக்கப்பட்ட ஸ்வயம் வ்யக்தம் ஸித் தம் மானுஷம் முதலிய திவ்ய ஆலய ப்ரதேசங்களில் அவர்களை அனுக்ரஹிப்பதற்காகவே ஸுகமாகவந்த ராமசீதா, லக்ஷ்மணா, தர்ப்பசயனா, பிரயாகையாகிற திரிவேணியில் வசித்த மும்மூர்த்தி களே, என்னையும் ரக்ஷிக்கவேண்டும். உயர்ந்த மூக்குள்ளவளும்,

வெண்மையான பற்களை உடையவளும், குற்றமற்றதும் பரிசுத்த மான மந்தஹாஸமுடைய, சுசிஸ்மிதம் பத்மபலாஸலோசனமு மான சீதே, க்ஷுத்ரத்தால் தவிக்கும் எனக்கு, க்ரூரமான கார்யங் களைச் செய்கிற பாபியாகிற எனக்கு, அதிபயங்கரமான வேஷங் களை உடைய எனக்கு, என் அன்னபூர்ணே, எப்போது அம்மா என் திருஷ்டிபதத்திற்கு வருவாய்? தர்மம் அதர்மம் ஆகிய த்வந்தங்களில் நன்ருக பிருகு மஹரிஷியால் உபதேசிக்கப்பட்ட பரத்வாஜரே, தர்மபுத்ரர் இந்திரனுலும் தர்மதேவதையினுலும் வேண்டப்பட்டும், பிராதாபந்துக்கள் விஹீனம் (இல்லாமல்) எனக்கு ஸ்வர்க்கம்வேண்டாம்'' என்று பிடிவாதமாகக் கேட்ட போது, தர்மபுத்ரரை ''தர்மவிக்ரஹமே'' என்று இந்திரன் சொன்னதுபோல உம்மையும் தர்மவிக்ரஹவானே என்று அழைக் கிறேன். ஸலிலமான கங்கை போன்ற ஸ்பரிசத்தால் என் சோக பாபபயங்களை நாசம்செய்து, பிரஹ்லாதனுக்கு நீ செய்தது போல என்னையும் க்ருபா அவலம்பனம் செய். அம்மா, ராம பத பங்கஜ விசாலாக்ஷி. மாதாமஹேஸ்வரி, ஸம்சார தாபங்களை நாசம்செய்து உன்னுடைய பாதங்களைத் தா, அம்மா.]

அப்போது பிரபு பரத்வாஜருடைய ஆஸ்ரமத்திற்கு எழுந் தருளினர். அந்த மஹாத்மாவை தண்டம் செய்தார். வழிமேல் விழிவைத்து காத்துக்கிடக்கும் பரத்வாஜர் சீதாராமனை லக்ஷ்மண னுடன் கண்டு முதித மணத்துடன் வரவேற்ருர். அவருக்கு பிரம்மானந்தத்தின் பெரியதொரு குவியலே கிடைத்துவிட்டதோ என ஆனந்தம் அளவிடமுடியாதபடி பொங்கியது. (தேவர்களால் காரிய ஸித்தியைக் கொடுக்கப்பட்ட அந்த முனிவர் பரமேஸ்வர னும் எல்லாப் பூதங்களுக்கும் பிரபுவும் கண்ணுக்குப் புலப்படாத வரும் அபார கிருபையினுல் பரத்வாஜருடைய நன்மைக்காகவும் அவருடைய பந்து ஸுஹ்ருத் வர்க்கங்களுக்குக் காருண்யம் செய் பவராக, அவருடைய திருஷ்டி பதத்தில் சீதை லக்ஷ்மணனுடன் எழுந்தருளிய தாஸ்யராமா, பிரும்மானந்த ராசிக்குவியல்களைக் கொடுத்த பரத்வாஜராமா, பரத்வாஜரை கட்டித்தழுவிய தண்டவத் ராமா, பரத்வாஜருடைய ஹ்ருதயத்தை மலர வைத்த ஆத்மா ராமா, உம்முடைய கிருபா விசேஷங்களை யாரால் சொல்ல முடியும்?] (ஹனுமார் சீதையைக் காணுமல் எவ்விதம் வாடி அலைந்து திரிந்து எல்லாத் தேவர்களையும் பிரார்த்தித்தாரோ அதுபோல ராமனைத் தேடித்திரிந்த பரத்வாஜமுனி ஸ்ரேஷ்டருக்கு மாதா அன்ன பூர்ணை சகிதம் ராமன் தோன்றினர்.) முதித மனத்துடன்

ஆனந்தமூர்த்தியாக முனிவர் விளங்கினுர். அப்போது அவர் பிரும்ம பதத்தையடைந்த ரிஷியைப்போல ஆனந்தமடைந்தார். (537)

(தர்ம விக்ரஹங்களாகிய) ராம சீதா லக்ஷ்மணர்களுக்கு பரத்வாஜர் ஆசீர்வாதங்கள் செய்தார். அவருக்கு "நான் செய்த அளவில்லாத நல்வினைகளுடைய பலனை பிரம்மா என் கண்முன் கொண்டுவந்து நிறுத்தி இருக்கின்ருரோ" எனத் தோன்றியது. அவருடைய காரியம் சித்தியானபடியால் அவர் அனுபவித்த ஆனந்தம் யாவராலும் விவரிக்கமுடியாதபடி விருந்தது. (கணக்கில்லாமல் அனுதிகாலமாக யக்ஞம்தபஸ் சௌசம் குரு பூஜை இவைகளில் தேர்ந்த பரத்வாஜர் அகோசரமான தீப்தமூர்த்தியை, அன்னபூர்ணுவினுல் கடாக்ஷிக்கப்பட்ட கிருபா வலம்பனராக, ஞானம் வைராக்யம் அடைந்த பகவத் பாத சங்கரரைப்போல) ஸகல சுக்ருதங்களின் பலனுக தன் கோசரமான கண்களின் திருஷ்டிபதத்தில் ஸ்ரீமத் ராமனைக் கண்டார், தர்சனம் செய்தார். (538)

ஸ்ரீராமனுடைய குசலத்தைக் கேட்டார். ஆஸனம் கொடுத்து அதிதியைப் ப்ரேமை, பரிபூர்ண சந்தோஷத்துடன் (இந்திரனுடைய சாஸனங்களை நிறைவேற்றும் தேவர்களைப் போல,) பகவான் ராமச்சந்திரனையும் சீதையையும் லக்ஷ்மணனையும் உபசரித்து சந்தோஷப்படுத்தினுர். அதன் பிறகு அம்ருத ருசியுள்ளதும் வாசனையுள்ளவைகளும் புஷ்டியுள்ளவைகளும், தன் வனத்தில் உண்டானவைகளான நல்ல கந்தமூலங்கள், திராக்ஷைபழங்களைக் கொடுத்து அதிதி ஸத்காரம் செய்தார். (539)

சீதை, லக்ஷ்மணன், சேவகன், குஹன், ஸ்ரீராமச்சந்திரன் ஆகியவர்கள் மிக்க உத்ஸாஹத்துடன் சாப்பிட்டார்கள். (நரகத்தில் விடுபட்ட ஜீவர்கள் ஸ்வர்க்கத்தில் களைப்பு நீங்கி, பயங்கள் போய், எவ்விதம் சுகிப்பார்களோ,) அதுபோல பகவான் அந்த ரிஷி ஆஸ்ரமத்தில் ரிஷியின் ப்ரேமை ஸ்நேகத்தால் கட்டப்பட்டு, பரம சுகத்தை தன் பிரிய பந்துக்களாகிய சீதை லக்ஷ்மணன் குஹன் ஆகியவர்களுடன் அனுபவித்தார். அதன் பிறகு பரத்வாஜர் மிருதுவான வசனங்களால் பகவானைப் பார்த்துச் சொன்னுர். (540)

"ஸ்வாமி, என் கண்களுக்குப் புலப்பட்ட தீப்தமூர்த்தியாகிற ராமா இன்று நான் உமது தயவால் கிருத கிருதயனுக ஆக்கப் பட்டேன். என்னுடைய தவங்கள், தீர்த்த உபாஸனைகள், அந்த தீர்த்த கட்டங்களில் நான் கொடுத்த கபில கோதானம்

போன்ற உத்தம தானங்கள் பலனளித்தன. எல்லாவிதமான சுகங்களையும் தியாகம் செய்து எப்போது அகோசரமான பரமாத்மா என் திருஷ்டி பதத்திற்கு வருவான், என் கண்ணன் இன்று வருவான் நாளை வருவான் என்கிருப்போலே, (அம்பிகை யின் கிருபாகடாக்ஷம், தேவேந்திரனுடைய சாஸனம், எனக்கு எப்போது கிடைக்கும் என்று வாடி வதங்கும் எனக்கு ஸ்வாமி, என் மாதாவினுடைய கிருபையினல், யாக்ஞ்யவல்கியருடைய குரு அனுக்ரஹத்தாலும், குஹனுடைய பரமகாருண்யத்தாலும்) இன்று காரியம் ஸித்தியாகிவிட்டது. என்னுடைய ஜபம் தபம் வைராக்யம் எல்லாம் பலனைக் கொடுத்தது. எனக்கு ஸாதனமாக விளங்கிய அவைகளும் என்னை கௌரவித்தது மட்டு மின்றி, ஸ்வாமி, நானும் உங்களாலும் அனுக்ரஹிக்கப்பட்டேன்.'' (ஹே ராம், ஜகத்ஸேது, ஸம்பூர்ண ஸமுதாயத்திற்கு சுபத்தைத் தரும் தர்ம விக்ரஹமான ராமா, அஹிம்சையை கொம்புபோல அணிந்துகொண்டிருக்கும் ஸ்ருங்கவான் श्रृङ्गवान्.) (541)

''உம்மை நானும் என் பந்துக்களும் அடைந்த லாபத்தின் எல்லையானது (கபீரர் என்று சொல்லக்கூடியதும் ஆழமானதும் விஸ்தாரமானதுமாகிற) கடல் அப்பா; அந்தக் கடலின் சுகம் அகாதமாகவிருக்கிறது. ஹே தீப்தமூர்த்தி, (என் குருநாதரான யாக்ஞ்யவல்கியரால் இயற்றப்பட்ட உபநிஷத்துக்கள் போல சாதனங்களால் அறியப்படும் ஞானம், ஐஸ்வரியம், பலம் ஆகிய மூன்று குணங்களால் அங்கீகரிக்கப்பட்ட சீதாராமா லக்ஷ்மண, கலங்கின தண்ணீராகியதும் அறுதியாகவுள்ளதுமான என் அக் ஞானத்திற்கு தேற்றுங்கொட்டையைப்போல தெளிந்து வைத்த ராமா,) உன்னுடைய தரிசனத்திற்குச் சமமானதும் சுகத்தைத் தருவதும் வேறு ஒன்றுமில்லை. (நரக யாதனை படும் பீமன் அர் ஜுனன், கர்ணன், நகுல சஹாதேவர்கள், திரௌபதி, பாண்டவ சைன்யங்கள் ஆகிய எல்லோருக்கும் தர்மபுத்ரருடைய தர்சனம் எவ்விதம் சுகத்தைத் தந்ததோ, அதுபோல எங்கள் சுகத்தின் எல்லை அளவிடக்கூடாததாகவிருக்கிறது.) என் ஆசைகள் இன்று பரிபூர்ணமாக்கப்பட்டன. எனக்கு ஒரே ஒரு அபிலாஷைதான் இன்னும் இருக்கிறது. உன்னுடைய நிஜபதங்களில், சரோஜ பதங்களில், இயற்கையானதும் ஸஹஜமான ப்ரேமையுடன் கூடிய சேவைகளை அனுக்ரஹம் செய். நீரும் கிருபைகூர்ந்து ஸஹஜ ஸ்நேகத்துடன் எப்போதும் என்னிடம் இருக்க வேண்டும்.'' (542)

[தியானம்

ராமா, தசரதகுமாரா, ஜானகி ஸமேத ராமா, லக்ஷ்மணனால் சேவிக்கப்படும் சீதாராமா, குஹனால் பூஜிக்கப்படும் லக்ஷ்மணன், சீதாராமா, எல்லா திக்குக்களிலும் மிக்க ஸ்ரேஷ்டமான வட திசையைச் சார்ந்தவரும் ஸப்தரிஷி மண்டலத்தில் சாந்நித்யம் செய்துகொண்டு, சதா துருவனுடன் ரமித்துக்கொண்டிருக்கும் வேங்கடேசா, வைகுண்டபதி, ரமாநாராயணா, தியாகராஜர் போன்ற மஹான்களின் சாது சங்கத்திற்குப் பாரிஜாதம் போன்றவரே, ஜடாயுவினாலும் லக்ஷ்மணனாலும் லோகமாதா வாகிற சீதையின் தத்வத்தை உலகுக்கு எடுத்துச் சொன்ன குஹ்ய மானவரே, ஆபத்தர்மத்திலும் தன் குலதர்மத்தை கை விடாத பரத்வாஜரால் பூஜிக்கப்பட்ட குஹ்யராமா, விஸ்வரக்ஷக, ஸரஸிஜாக்ஷா, முயற்சியாகவிருக்கும் க்ருதுவே, என்னைப் போன்ற சம்சாரிகளுக்குப் பகவானைப் பூஜிக்கவேண்டும் என்கிற க்ருதுவாகிற ஸுஹ்ருதத்தை அனுக்ரஹம் செய்த கிருதியே, விஸ்வசாக்ஷி, எல்லாப்பொருள்களிலும் அந்தர்யாமியாக விருக்கும் பூதாத்மாவே, எனக்கு ஸகல வ்ருத்திகளைக் கொடுக்கும் பூதபாவனரே, என் குருவுக்கு குருவாகிற பராசரரால் போதிக்கப் பட்டதும், மைத்ரேயரால் அனுஷ்டிக்கப்பட்டு மேன்மை யடைந்ததுமான ஜிக்ஞாஸுக்களைக் கொடுக்கும் ராமா, பண்டிதர்களாகிற வித்வான்கள் உன்னை அடைவதற்கு கர்மம் ஞானம் ஆகிற வழிகளால் தங்கள் தேகமன நோய்களை அகற்றி, நிர்மல ஹிருதயத்துடன் ஏகமாத்திரமாக நிரதிசய ஆனந்தரூப சுகத்தை அடைவதற்கு ஸநாதனமான ஔஷதமாகிற பகவத் பிராப்தியை அடைய முயற்சி செய்கிறார்கள். ஞானம் இரு வகைப்பட்டது. இந்திரியங்களால் அறியப்படும் ஞானமும் தீபத்தைப் போன்றது. விவேக ஞானமாகிறது சூர்ய ஒளியைப் போன்றது. சப்தபிரும்மஞானம் சாஸ்திர ஜன்யமாகவுள்ளது. ஆகவே விவேக ஞானம் பரபிரும்ம ஞானமாகவுள்ளது. சப்த பிரும்மமாகிற நாதவித்யையினால் பரபிரும்மாகிற விவேக ஞானம் அறியப்படுகிறது. ஆகையினால்தான், வேதாந்த விஷயங்களை ஸ்மரணை செய்து மனு சொல்லியபடி தர்ம ஞானங் களைக் கேட்டு சப்தபிரும்மத்தையும் அதனால் பரபிரும்மத்தையும் அடையலாம். சப்தபிரும்மத்தின் உதவியினால் ஜிக்ஞாசு அடைந்து, பரா என்கிற அதர்வ வேதத்தில் சொல்லப்படும் வித்யையின் மூலம், அதே வேதத்தில் பிரதிபாத்யமாகவுள்ள பரபிரும்மத்தை அடையவேண்டும். பரா என்கிற வித்யையை

விட அபரா என்கிற வித்யை ருக்யஜுஸ் ஸாமவேத த்ரீயீரூபமாக விருக்கிறது. அப்பேற்பட்ட த்ரீயீ வேதமய ராமா, சீதா லக்ஷ்மணா, எனக்கு பிரயாகை, பிரபாஸம், புண்யமான நைமிசாரண்யம்போல விருக்கும் மும்மூர்த்திகளே, உங்களை அடைவதால் நானும் குஹனும், பரத்வாஜரும், துளசிதாஸரும், வால்மீகியும், ராமதாஸரான ஆஞ்சநேயரும், அவ்யக்தமானதும் அஜர் என்று சொல்லப்படுகிறவரும், அசிந்தனீயர், அஜஃ அவ்யய, அநிர்தேஸ்ய, அரூப, பாணிபாதாதிசூன்ய வ்யாபக, ஸர்வகத, நித்ய, பூதங்களுக்கு ஆதிகாரணராகவிருந்து ஸ்வயம் காரண ஹீனராகவிருப்பவரே, வ்யாப்த நாராயணன் பரம்தாம், முமுக்ஷுக்களால் வேண்டப்படும் ஸ்ருதுவாக் யோதிதம் ஸூக்ஷ்மம் தத்விஷ்ணோஃ பரமம் பதம் என்கிற வைஷ்ணவ பதத்தை, வேதவசனங்களால் பிரதிபாதிதமாகிற அதிசூக்ஷ்ம பதத்தை கிருபைகூர்ந்து, எங்களுக்கு தா, அப்பா. "பகவத்" என்கிற சப்தத்தாலும், பரமாத்மா என்கிற ஸ்வரூபத்தாலும், அந்த பகவத் சப்தத்திற்கு மேலாகவிருக்கும் அக்ஷயமான வைஷ்ணவ ஸ்வரூபத்தின் குறிக்கோளாகிற வேங்கடேச பகவானே, ரமா வைகுண்ட புஷ்கர தீர்த்தமே, கங்கை யமுனை சரஸ்வதி போல விளங்கும் தீப்த மும்மூர்த்திகளே, பிரயாகை திவ்யக்ஷேத்ரத்தில் பிரார்த்தித்த பரத்வாஜருக்கு அளித்தது மாதிரி என்னையும் தயையுடன் பாரு அப்பா.]

"ஹே பகவான், மனிதன் தனது செய்கை, வாக்கு, மனம்— இவற்றால் கபடம் ஒளிவு இவற்றை அகற்றி திரிகரணங்களைச் சுத்தப்படுத்திக்கொண்டு உன்னிடம் அன்பு கொண்டு தாஸனாக ஆனாலன்றி வேறு எந்த வகையாலும் கோடிக்கணக்கான உபாயங்கள் செய்தானாயினும், கனவிலும்கூட எவ்வித சுகமும் அடையமாட்டான்." (சப்த பிரும்மமே குப்தரே, என்னுடைய ஜிக்ஞாஸுகளாகிற கர்மவசன மனத்தின் மலங்களை அகற்றி அகமர்ஷண ஸூத்ரங்களின் பிரபாவங்களாகிற அவப்ருத ஸநானத்தின் பலன்களை அடைந்தது, ஞானகர்ம ஐஸ்வர்யங்கள், ஆகிய எல்லாவற்றையும் பகவத் அர்ப்பணம் பண்ணி, ஸ்வாமி, நான் வைஷ்ணவ தாஸனாக உம்மிடம் வந்திருக்கிறேன். ரமாபதி, புஷ்கராக்ஷா, உன்னிடம் தாஸனாகவில்லாத வரையில் மனுஷ்யனுக்கு என்ன லாபம் இருக்கக்கூடும்? ஹே, விஷ்ணோ, அந்த மனுஷ்யன் கோடிக்கணக்கான உபாயங்கள் செய்யட்டுமே. தான யக்ஞாதி ஜிக்ஞாசுகளில் தேர்ச்சி பெற்று நற்குலத்திலும் பிறந்தவனாகவிருக்கட்டுமே. உனக்கு

பாரதந்தரியமான வைஷ்ணவனுக வாழ்வுவில்லாதபோது எப்படி அப்பா, அவனுல் அக்ஷய சுகமாகிற வைகுண்ட பதவியை ஸ்வப்னத்தில்கூட ஸ்மரிக்கமுடியுமா? ஐயா, நீர் அக்ஷரமான க்ஷேத்ரக்ஞன் அல்லவோ. என் சேஷியாகிய நீர் என்மீது கிருபை செய்யவேண்டும். என் சுகத்திற்காக தயைபுரிய வேண்டும். ராமா சீதாபதி, லக்ஷ்மண சீதாராமா, குஹசமேத லக்ஷ்மண சீதாராமா.) (543)

பகவான் ஸ்ரீராமச்சந்திரன் பரத்வாஜரின் ஸம்பூர்ண பக்தி வசனங்களைக் கேட்டார். அவருடைய ஏகபாவம், வைஷ்ணவனுடைய தாஸ்யபக்தி, தியாக ஐஸ்வர்யத்தினுல் ஏற்படும் ஆனந்தம், சந்துஷ்டி ஆகியவைகளை பிரத்யக்ஷமாகவும் சாக்ஷாத்தாகவும் பார்த்து ஸ்வீகரித்தார். தன்னுடையவன ஆகமன ஐஸ்வர்யத்தின் பிரதிபிம்பமாக விளங்கும் பரத்வாஜரைக் கண்டு ரகுவர ஸ்ரேஷ்டர், சுபமான கீர்த்திகளையும் சுயசஸ்களை உடைய அந்த க்ருதுவாகிற பரத்வாஜரை, யக்ஞபுருஷரும், யோகேஸ்வரரும், புருஷர்களுள் பரமபுருஷரும், ஜனர்த்தனருமாகிய ஸ்ரீராமன் சந்துஷ்டியுடன் பார்த்தார். ரகுவரன் அன்புடன் எல்லோர் முன்பு அவரைப்பற்றி புகழ்ந்தும் பேசலானர். (544)

"ஹே முனிவர் தலைவரே! நீர் எவனை ஆதரித்து கௌரவப் படுத்துகின்றீரோ, அவனே உயர்ந்தவனுகிவிடுவான்; அவனே எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாவான்." இந்த பிரகாரம் ஸ்ரீராமர் பரத்வாஜருடன் பரஸ்பரம் சம்பாஷித்துக் கொண்டு அகோசரமூர்த்தியாகிற வ்யாப்த நாராயணரை இருவரும் ஸ்துதி செய்து இருவர்களும் அநிர்வசினீய சுகத்தை அடைந்தார்கள். (545)

இப்பேற்பட்ட ஸ்ருதி சாகரமாகிற அம்ருதத்தை அடைந்த பரத்வாஜருடைய ஆனந்த அனுபவத்தைக் கேட்ட பிரயாகை நிவாஸிகள் ஓடிவந்து சீதா ராமலக்ஷ்மணர்களைத் தரிசனம் செய்தார்கள். எத்தனை பிரும்மசாரிகள், தபஸ்விகள், முனிகள், ஸித்தர்கள், உதாஸீனர்களாகிற தியாகசீலர்கள், எல்லோரும் தசரத நந்தனரான ஸ்ரீராமரையும் லக்ஷ்மணனையும் காண பரத்வாஜ ஆஸ்ரமத்திற்கு வந்து சேர்ந்தார்கள்; சாரங்கபாணியான ஸ்ரீராமரைத் தர்சித்தார்கள். (546)

[தியானம்

ஹே சீதாராமா, துருவ நாராயணு, சுநீதிகுமாரனுகிற துருவனுல் ஆஸ்ரயிக்கப்பட்ட பரத்வாஜரே, என்னுல் தியானிக்கப்

படும் பரத்வாஜ ராமா, சப்தரிஷி மண்டலமே, இந்திரன் அக்னி இவர்களாலும் நாரதர், வேதவியாஸராலும் தியானிக்கப்படும் பரமபத நாராயணு, எனக்கும், துருவனுக்கும், சப்தரிஷிகளுக்கும் இந்திரனுக்கும், அக்னிக்கும் அடைவதற்கு அரியதான துர்க் கமரே, மத்யான்னஸுர்யன்போல பிரகாசிப்பவரே, ப்ராயோப வேசம் செய்த பரதனுல் எளிதில் அடையப்பட்ட ஸ்ரீராமா, மோக்ஷத்தை அளிக்கக்கூடியவரும் என் பாபங்களாகிற மணற் கரைகள்போல தடுக்கமாட்டாமல் இருக்கும் சக்திகளை யுடைக்கும் துர்த்தரரே, எல்லாவற்றையும் தாங்கும் சீதாராமா, ராமானுஜ னுடைய தாஸனுகிய என்னையும் தாங்கும் துருவ நாராயணு, பரத்வாஜ ஆஸ்ரமபிரியா, நீங்கள்தான் குஹனை முன்னிட்டு சரணம் அடைந்த என்னை ரக்ஷிக்கவேண்டும்.]

ஸ்ரீராமனை சுக்ருதபிரணுமம் செய்தார்கள். எல்லோரும் ராமனுடன் கூடவிருந்த சீதை, லக்ஷ்மணன், பரத்வாஜர், குஹன் ஆகியவர்களுக்கு நமஸ்காரம் செய்தார்கள். நேத்ரங்களின் பரம லாபமாகிற பகவானுடைய தரிசனத்தை (எவ்விதம் துருவன் தபஸ்ஸின் முடிவில் நாரரயணனைக் கண்டு முதித மனத்துடன் பேசமுடியாமல் ஆனந்த வெள்ளத்தில் மிதந்தானே, அதுபோல) தங்கள் பாக்யமான நேத்ரங்களை ராமதர்சன சுகத்தால் நிரப்பிக்கொண்டார்கள். (பகவானுடைய பரம க்ஷேமங்களைக் கூறும் வைஷ்ணவ தாஸர்கள் எவ்விதம் நித்ய தம்பதிகளாகிற லக்ஷ்மி நாராயணனை ஆயதனவான் பவதி, ஆயதனம் என்றும் பல்லாண்டு பல்லாண்டு பலகோடி நூறுயிரம் பல்லாண்டு என்கிற உபயவேதங்களால் வாழி திருநாமம் ஆகிற ஆசீர்வாதங்கள் செய்வார்களோ, அதுபோல) சீதாராம லக்ஷ்மணர்களை மங்களாசீர்வாதம் செய்தார்கள். ராமனுடைய சௌந்தர்ய அழகுகளைப் புகழ்ந்துகொண்டு திரும்பிச் சென்றுர்கள். (547)

ஸ்ரீராமன் அந்த ஆஸ்ரமத்தில் இரவு தங்கி களைப்பாறினுர். விடியற்காலையில் பிரயாகை சங்கமத்தில் ஸ்நானம் செய்து, பிரயாகை தீர்த்தராஜனைப் பூஜித்தார். அதிபிரஸன்ன மனத் துடன் பரத்வாஜ ரிஷியை நமஸ்கரித்து, அவரிடம் விடை பெற்றுக்கொண்டு, குஹனுடன் ஸ்ரீசீதாதேவியையும் லக்ஷ்மண னையும் அழைத்துச் சென்றுர். (548)

போகும் சமயம் ராமன் அதிபிரேமையுடன் தம்மை வணங்கின பக்தர்களின் நன்மைகளையே நினைக்கும் மஹா கிருதக்ஞரான பகவான், பரத்வாஜரிடம் சொன்னுர். "ஐயா,

என் நாதரே, நான் எங்கு போகவேண்டும்? உம்முடைய ஆக்ஞையின்படி மார்க்கத்தை நான் தேடிக்கொண்டு போவேன்.'' பரத்வாஜர் சிரித்துக்கொண்டு பதில் சொன்னார். ''என் ஆத்மாராமா, துர்லபரே, ஐம்புலன்களை வெல்லாதவருக்கு கிடைக்க அரியவரே, (அவித்யை முதலியவைகளால் அடைய முடியாத வைகுண்ட பரமபதத்தில் வசிக்கும் நாராயணராகிய துராவாஸரே), யோகிகளால் மிக்க சிரமத்துடன் மனத்தில் தரிக்கப்படும் சேஷதல்பத்தில் படுத்திருக்கும் ரங்க நாராயணரே, தங்களுக்கு ஏது அப்பா பாரபக்ஷம்? ஸகல ஜீவராசிகளும் சகல மார்க்கங்களும் உமக்கு ரொம்ப பிடித்தமாகவும் சுகந்தமான வைகள் அல்லவா?'' (549)

அதன்பிறகு தன் சிஷ்யர்களை அனுக்ரஹிக்க எண்ணம் கொண்டவராக, பரத்வாஜர் தன் சிஷ்யர்களைக் கூப்பிட்டு, அவர்களை ஸ்ரீராமனுடன் செல்லும்படி உத்திரவிட்டார். ஸ்ரீராம ஸந்நிதானத்தில் இருக்க விரும்புவர்களும், முதித மனத்துடனும் இருபத்தைந்து சிஷ்யர்கள் குருவின் ஆக்ஞையை ஏற்றுக் கொண்டு, அபார ப்ரேமை வாத்ஸல்யத்துடன் ஓடிவந்தார்கள். எல்லோருக்கும் ஒரே உத்ஸாஹ ஆனந்தம் ராமனுடன் செல்வ தற்கு. அபார ப்ரேமை வாத்ஸல்யத்துடன் ஓடிவந்தார்கள். ஆகர்ஷண சக்தியுடன் விளங்கும் மோஹனராமன் அல்லவா. ஒவ்வொருவரும் ''எனக்குப் பாதை நன்றாகத் தெரியும்'' என்று சொல்லிக்கொண்டு ஓடிவந்தார்கள். (550)

அந்த சமயத்தில் அந்த முனிவர் அவர்களில் நால்வரைப் பொறுக்கி எடுத்து, அந்த பிரும்மசாரிகளை ராமனுடன் போகும்படி உத்தரவிட்டார். அந்த நான்குபேர்களும் எத்தனை ஜன்மங்கள் பகவத்சேவையிலும், பாகவத கைங்கர்யமாகிற சுக்ருத புண்ணியங்கள் செய்தவர்கள். ஸ்ரீரகுராமன், ரகுராயி முதித ஹிருதயத்துடன் பரத்வாஜரைப் ப்ரணாமம் செய்து அவருடைய மங்கள ஆசீர்வாதங்களைப் பெற்று அதி ஆனந்தத் துடன் மேலே சென்றார். (551)

எப்போது அவர்கள் எந்த கிராமத்தில் தங்கினார்களோ, அப்போது ஸ்திரி புருஷர்கள் யாவரும் ஓடிவந்து, அவர் களுடைய ரூபத்தைத் தரிசனம் செய்தார்கள். [என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் வேத மார்க்கங்களை விட்டுவிட்டு, கெட்ட வழியில் செல்லும் அசுரர் போன்ற ஸ்வபாவங்களை உடையவர் களைப் பல உபாயங்களால் திருத்தும் துராரிஹா அல்லவா?, அந்த வனவாசிகள் எத்தனை பாவங்கள் செய்தபோதிலும்]

  

அந்த சுபராம தரிசனத்தால் அந்த ஜன்மத்தின் ஸநாதனமான பலனை யடைந்தார்கள். அதி துர்லபரான பகவானை [ஏதோ குரு கிருபையினால் அடைந்துவிட்டபடியால்,] அவர்களும் கிருத கிருத்யர்களாக ஆக்கப்பட்டார்கள். எல்லோரும் வருத்தம் தீர்ந்தவர்களாக சந்தோஷத்துடன் தர்சனம் செய்தபின்பு தங்கள் வீடு சென்றார்கள். ஆனால் அவர்களுடைய மனம் ராம சங்கமம் ஆகி, தப்த மனஸ்ஸுடனும் ஸ்ரீராம தர்சன பலனுடன் சென்றார்கள். (552)

அதன்பிறகு ஸ்ரீராமன் அதி வினயத்துடன் அந்த நான்கு பிரும்மசாரிகளிடமும் விடைபெற்றுக்கொண்டு, அவர்களையும் அனுக்ரஹித்து அனுப்பிவைத்தார். அவர்களும் நாராயணரிடம் வைஷ்ணவர்களுக்கு எவ்விதம் அனன்ய பக்தி இருக்குமோ, அதுபோல ஸ்ரீராமனிடம் அனன்ய பக்தியுடன் சென்றார்கள். வாக்கு மனம் காரியங்களை பகவானுக்காக அர்ப்பணம் செய்த மஹா பக்யமுள்ள பாகவத ஸ்ரேஷ்டர்கள், குரு கிருபை குரு கடாக்ஷம் பெற்றவர்கள். அதன்பிறகு அந்த நால்வரும் யமுனையில் ஸ்நானம் செய்தார்கள். அந்த காளிந்தியின் சரீரமும் ஸ்ரீராமனுடைய சரீரமும் கருணைபொங்கும் ஸ்யாமை நிறத்துடன், குளிர்காலத்தில் ஹிதமான சூடு உள்ளதும் கோடைகாலத்தில் உசிதமான குளிர்ச்சியுள்ள ஸ்யாமை என்கிற குணத்துடனிருக்கும் அம்ருத வெள்ளப் பிரவாஹத்துடன் இருந்தது. அந்த உத்தமமான நதியில் ஸ்ரீராமன் சீதையுடன்கூட லக்ஷ்மணன், குஹன் சகிதம் ஸ்நானம் செய்தார். (553)

[தியானம்

ஹே கௌஸ்துபமணி அணிந்த நாராயணா, மஹாலக்ஷ்மி விஷ்வக்ஸேனா, சங்கரரின் ஞானம் விபு ஆகிய இரண்டின் பலனாக விருப்பவரே, அம்பிகை, அம்பிகையின் மனது, அம்பிகையின் அழகு ஆகிய மூன்றாகவிருக்கும் ராமலக்ஷ்மண சீதா, கோதாவரி, வேணா, கிருஷ்ணவேணி என்கிற தீர்த்தங்களாகத் தோன்றும் மும்மூர்த்திகளே, வஸிஷ்டர், சக்தி, பராசரர் போலவும், பிருகு, அங்கீரஸ், கண்வர்போலவும், நிருகன், யயாதி நஹுஷன்போலவும், சித்ரகூடம், அஜநாபம், கந்தமாதனம் போலவும், அம்பிகை, குஹன், விஷ்வக்ஸேனர், போலவும், மஹேஸ்வரர், அம்பிகை, விக்னராஜர் போலவும், வைஷ்ணவனுடைய மூன்று தத்வங்களாகிற அனுஷ்டானம், உபாயம் உபேயம் ஆகிற ராமலக்ஷ்மண சீதா, எனக்கு ஸங்கரராகவும்,

திருவிக்ரம அவதாரத்தின் ஒரு பகுதியாகிற வனகமன ராமனின் திருவடித் தாமரைகளை எளிதில் பற்றும்படி தம்மைத் தாமே அளிக்கும் ஸர்க்கரே, சிவனுடைய தரிசனத்தை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்த தியாகராஜ ஹ்ருதயம், பஞ்சநதீஸ்வரரை சிவ, சிவ, சிவ என்கிற நாமங்களால் ஸதா புகழ்ந்தமனஸ், பதினாறு தடவைகள் பிரதக்ஷணம் செய்தல், கோபுர தர்சனம் ஆகிற பாபஹர பக்தி சேவைகளைச் செய்தும், ஜபம், அர்ச்சனை, பாதசேவனை செய்தும், ஸ்ரீராமனுடைய பொன்னுருவத்தை ஹ்ருதயத் தாமரையில் தரிக்க எவ்வளவு சிரமப்பட்டார். அதுபோல வைஷ்ணவனுடைய பக்தி பார வஸ்யமே பிரபத்திக்கு முக்கிய ஹேது என்று நம்பியிருக்கும் வஸிஷ்டர், அகஸ்தியர், கௌதமர்; நமః சிவாய, நமோ நாராயணாய, ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் க ஏ இ ல ஹ்ரீம் ஹஸக ஹல ஹ்ரீம் ஸகல ஹ்ரீம் ஆகிய மஹா திரிபுரசுந்தரியின் மந்திரார்த்தங்களாக விளங்கும் மூன்று அக்ஷரங்களாகிற பிரணவ அர்த்தமே, நீயே தாரகமாகவும் நீயே என் பாதகங்களை ஒழிக்கும் கல்யாண குணவிஷயமாகவும், உமது சரணங்களாகிய திருவடித் தாமரைகள் "கண்ணனுக்கின்றி என்மனம் தாழ்ந்து நில்லாதே" என்கிற சொல்லாகிய பெரிய திருமொழியின் வசனங்களால் வந்தடைக்கிறேன். மஹாத்மா, ஸமாதி ஸம் யோஸமாஹிதாத்மாவாகிற வசனங்களால் உன்னை அம்பு போடுகிறவன் நல்ல பாணங்களுடன் குறிபோடுவதுபோல உன்னிடம் ஊக்கமுள்ளவனாகிறேன். ஆசார்ய கிருபா கடாக்ஷத்தினால் என்னை உன்னிடம் பரஸமர்ப்பணம் செய்கிறேன். பிரபத்தியை அவலம்பித்த எனக்கு ரக்ஷையைக் கொடு.]

காளிந்தியாகிற யமுனா தடத்தில் தீர்த்தவாஸியாகிற பல ஸ்திரி புருஷர்கள் இருந்தார்கள். அந்த மஹா புண்யவாசிகள் தங்களுடைய நிஜமான தீர்த்த ஸ்நான ஜபங்களை தியாகம் செய்துவிட்டு, குஹப்பெருமானுடனிருக்கும் சுந்தராங்கங்கள் கொண்ட லக்ஷ்மண ராமசீதையைப் பார்க்க ஓடிவந்தார்கள். அவர்களுடைய பாக்ய விசேஷங்களினால் பூர்ணம், பூர்ண விஹாரம், பரிபூர்ணம் ஆகிய சொற்களால் பிரதிபாதிக்கும் ராமனைக்கண்டு ஆனந்தமடைந்தார்கள். (554)

அவர்களுடைய அந்தராத்மாவில் சூக்ஷ்மமாகவிருக்கும் ஆசைகூட நிறைவேற்றப்பட்டது. ஆனால் அவர்கள் அவர்களுடைய நாமங்களைக் கேட்க வெட்கப்பட்டார்கள். எங்கு வசிக்கிறவர்கள் என்று கேட்க விருப்பமிருந்தும் அவர்கள்

ஆசைகளை அடக்கிக்கொண்டார்கள். அனுமயம், அவ்யயமான பொருள்கள் என்று தெரிந்துகொண்ட வயது விருத்தர்களில் சாமர்த்தியமுள்ள சிலர், மஹா பாக்யமுள்ள பக்தர்கள், கிருத லக்ஷணர் ; ஸ்ரீவத்ஸமார்பன், பிருகு பதம் பதிந்த ஹரி வக்ஷஸ் தலன், லக்ஷ்மீவான், லக்ஷ்மிஸம்பன்னன், ஜகத்பதி என்கிற அடையாள குணவிசேஷங்களால் அவர்களைப் புரிந்துகொண்டார்கள். தாஸஹ்ருதயம் உள்ள ஸத்பூதிः என்று அவர்கள் தெரிந்து கொண்டார்கள். (555)

அவர்கள் சகல விருத்தாந்தங்களையும் அந்த பக்தர்களுக்கு எடுத்துச்சொன்னார்கள். பிதாவின் ஆக்ஞைப்படி வனம் புகுந்த ராமன் லக்ஷ்மணன் சீதை என்று தெரிந்து கொண்டார்கள். இதைக் கேட்டதும் ஸகல லோகத்தார்களும் துக்கம் அடைந்தார்கள் ; பச்சாதாபம் மேலிட்டவர்களாக ''ராணியினாலும் ராஜாவாலும் சரியாக தர்மம் செய்யப்படவில்லை,'' என்று குறை கூறினார்கள். (556)

[தியானம்

ஹே ராமா, சீதா லக்ஷ்மணா, எனக்கு ப்ருகு, அங்கீரஸ், அத்ரி மஹரிஷிகள் போலிருப்பவர்களே, சசி சூர்ய நேத்ரபில்வ நிலையே, மஹாபாகரே, பரதனுடைய அனுஜேந்த்ரா, பரதனுடைய விண்ணப்பமாகிய ''த்வம் பக்தான் ப்ருத்யான் ந சாதி (शादि) ஹி'' என்று சொல்லப்பட்ட பட்டாபிஷேக ராமா, பிராம்மண பதமுடைய ஸ்ரீ வத்ஸமார்பா, பிராம்மண துக்கத்தைப் போக்கின ஸாகேத ராமா, என் ஆசார்யர்களான குஹன், ஆழ்வார்கள், தியாகராஜர் போன்ற மஹான்கள், நந்தி கிராமத்தில் வசித்த பரதன், உன்னைப்பற்றி என்ன சொன்னார்கள் தெரியுமா? ''ராமா, உன்னை ஸர்வ அந்தர்யாமி, ஸர்வ வ்யாபகர், க்ஷமிணும் வரः, அதாவது கஜேந்திரன், சீதை, திரௌபதி ஆகியவர்களைக் கண்ட பிறகு, பதை பதைக்காமல் தன் மனத்தை நிறுத்திக்கொண்ட மஹாத்மா, பொறுக்கும் சக்தியுள்ளவர், பூமிக்கு சமானம் என்றும்; மஹீபர்த்தா என்னும் லோகாதரன், கடலில் அணை கட்டுவது, ராவண வதம் முதலிய கார்யங்களில் பார்ப்பவர் மனதை கவரும் மஹேஸ்வாஸர்; பரத்வாஜ முனிவர்களால் தேடப்பட்ட மார்க்கர்; ராஜ்யம் முதலியவற்றை பரதனுக்காகத் துறந்த விரதர்; அடுத்தவர்களுக்கு குற்றமில்லாத வழியைக் காட்டும் மார்க்கதரிசி; ரஜோ குணம் இல்லாதவர் ; மஹா புத்தி, மஹா சக்தி இவைகளால் பூரிக்கப்

பட்டு, அசுரர்களை அடக்கி, வருத்தப்படுத்தி, ககுத்ஸ குலத்தில் பிறந்த ராமா, உனக்கு எவ்வளவு பெயர்கள் இருந்தும், நீ என்னைப் பற்றி தெரிந்து கொள்ளாமல் போனுல், யாரப்பா, என்னைத் தெரிந்துகொள்ளமுடியும்? என் மனத்தில் மத்தியான்ன சூர்யன் போல விருக்கும் நீ என் தாபங்களை அறியமாட்டாயா? எப்போது பார்த்தாலும், எங்கே பார்த்தாலும், என்ன செய்தாலும், என்ன பேசினுலும், என்ன சேவை, ஆராதனை, பூஜை, பக்தி கைங்கர்யங்கள் யாது செய்தாலும், அப்பா, பிரணவ நாதனுகிற விஷ்வக்ஸேனர், விநதையின் புத்ரனுன கருடனைப்போல உன் பாதார விந்தங்களைத் தானே நாள் தினமும் த்யானம்செய்து கொண்டிருக்கிறேன். நீ இல்லாமல் எனக்கு வாழ்வு, ஜீவனம், சந்தோஷம், துக்கம், சாந்தி, படுக்கை, ஆகாரம், வினயம், கோபம், தாபம், மனோரதம் அடைதல், இன்னும் என்ன இருக்கக் கூடும், என் மனைவி, புத்ரன், புத்ரி, குரு, மாப்பிள்ளை பந்து சகோதரர்கள், என் ஐஸ்வர்ய, வித்யா விலாஸங்கள், என் பாப சமூகங்கள், மித்ரர்கள், எல்லாம் அர்ஜுனன் சொன்னதுபோல ஸர்வமும் நீதானே. அதை ஏன் நீ புரிந்துகொள்ள மாட்டேன் கிருய்' உன் வரவு என் ஸ்வய தினம் இரண்டையும் விளங்க வைக்கும் "போகு நம்பி" "கழகமேறேல் நம்பி" என்கிற வசனங்களின்படி நீதான் அப்பா என்னைப் பேணவும் வேண்டும்; தரிக்கவும் வேண்டும்; உன் குல ஸ்வபாவங்களை அனுசரித்து கல்யாண குண விசேஷங்களை ஒட்டி, நான் உன் பாதங்களையும் திருநாமங்களையும் உன் திருக்குழலோசையாகிற இன்சொல்லையும் தானே நம்பி வாழ்கிறேன். என் பலம் நீதானே அப்பா; அதை ஏன் புரிந்துகொள்ள மாட்டேன்கிருய்? தியாகராஜ மஹானுக்கும், துளஸிதாஸருக்கும், பரதனுக்கும், பிராம்மணர்களுக்கும் நீ காட்டினுயே, அந்த அன்பை என்னிடம் தயையுடன் காட்டு.]

அந்த சமயத்தில் அந்த இடத்திற்கு ஒரு தபஸ்வி வந்தார். அவரோ தேஜஸ்ஸின் குவியல். சிறிய வயதுள்ள வாலிபர். பார்க்கப் பார்க்க இனிய சுகந்தமான வாசனை உள்ளவர். (சுக்ரர் பிருஹஸ்பதி அகஸ்தியர்போல பிரபாவங்கள் கொண்ட) கவி: மார்க்கதரிசி. பிரதாபவான். மஹனீயரான ஆசார்யரான படியால் (என் பிரபு துளசிதாஸர் என்று இவர் கருதப்படுகிருர். தியாகராஜரின் பிரஹ்லாத பக்த விஜயத்தில் முதல் பாட்டில் துளசி வனத்தில் நடமாடும் அக்ரகண்யராகக் கொண்டாடப்படும் மஹா புண்ய சீலர்) அவருடைய அடிச்சுவடுகளை பரிச்சய அடை

யாளங்களால் நெருங்கிப் பழகின (ஹனுமார் போன்ற) உத்தம ஹ்ருதயம் படைத்த மஹான்களாலே மாத்திரம் அறியப்படும் கதியை (போக்கை) உடையவர். (ஜமதக்னி ரிஷி கண்ட சூர்ய கதியைப் போல மர்ம ஞானம் உள்ளவர். மாத் யான்னிக சூரியன் போல பிரகாசிக்கும் தேஜஸ் உள்ளவர். என் தாபங்களை குளிரப்படுத்தும் பிலா ஆகாசத்தில் உள்ள சந்திரன் போன்றவர். கீர்த்தி பிரபாவங்களால் ஆகாயத்தைத் தொடும் திவிஸ் ப்ருக் போன்றவர். ஆனால் அவரைப் பார்த்தால் ஞானசக்தி, கிரியா சக்தி இவைகளுடன் கூடிய வைராகி, ராமனையே மனம், வசனம், கர்மம் ஆகிய ஜீவாதாரம் கொண்ட தியாகராஜர் போல விளங்கினர்.) (இந்த ஸ்லோகம் ப்ராசீன கிரந்தங்களில் காணப்படுவதால், துளசிதாஸரே தன்னைப்பற்றி விமர்சனம் செய்துகொள்கிறர் என்றும், ஸ்ரீராம சீதா லக்ஷ்மண தர்சனம் கண்டு துளசிதாஸர் தன் அனுபவங்களைச் சொல்லுகிறதாகவும் எடுத்துக் கொள்ளப்படுகிறது. பின்னல் சேர்க்கப்பட்டது என்று நினைப்பதற்கு ஆதாரமில்லை. சிலர் ஹனுமார் என்றும், சிலர் துளசிதாஸர் என்றும் சொல்லுகிறர்கள். இன்னும் சிலர் அக்னி என்றும் சொல்லுகிறர்கள். ஊர் பெயர் தெரியாதவரும், தன் ஊரையும் பெயரையும் சொல்ல விரும்பாத கவி ஒருவர் "कवि अलखित् गति" என்று சொல்லப் படுவதால் பதங்களால் தோன்றினர் என்று எடுத்துக்கொள்ளப் படுகிறது. நான் என் ஆசார்யரான துளசிதாஸர், அவரே தியாக ராஜர் என்று சொல்லுகிறேன்.) (557)

அவருடைய இஷ்ட தேவதையைக் க்ருதலக்ஷணங்களால் (கிருத புண்யங்களால், குரு கிருபாகடாக்ஷங்களால், பித்ருக்களின் ஆசீர்வாதங்களால், ஸ்வதர்மங்களால், அடையாளம் தெரிந்து கொண்டார்.) நேத்ரங்கள் ஆனந்தக் கண்ணீரால் நிரம்பப்பட்டிருந்தன. சரீரம் பிரபுல்ல லோசனங்களால் ஏற்பட்ட ஆனந்தத்தை அறிவிப்பதுபோல புளகாங்கிதமடைந்தது. அவர் சுக்ருத பிரணமம் செய்தார். ப்ரேமையினல் கட்டப்பட்ட அவருடைய சந்தோஷத்தை யார் எப்படி வர்ணிக்கமுடியும்? (558)

[தியானம்

ஹே ராமா சீதா, லக்ஷ்மண, குஹனல் சேவிக்கப்பட்ட கங்கா யமுனை சரஸ்வதி, எனக்கு கங்கா காயத்ரி கீதையாகத் தோன்றும் ராம லக்ஷ்மண சீதா, சுக்ரீவனுக்கு மலய பர்வதம் போல வாலியினிடமிருந்து அபயம் கொடுக்கும் ராமா, ஆஞ்ச

நேயருக்கு கம்புக்ரீவத்துடனும், ராஜ ரிஷி போலவும் ஸத்ய பராக்ரமத்துடன் விளங்கும் ராம லக்ஷ்மண மலைய பர்வதமே, துளசிதாஸருக்கு கங்கை, சித்ரகூடம், ஸுவேல மலை போல விளங்கின மூன்று தத்வங்களே, மலையின் மேல் நின்றுகொண்டு தர்சனம் கொடுத்த தியாகராஜ ராமா, ராஜகோபாலா, வேங்கடேச பாதா, ரங்க ஸாயுஜ்யமே, ராமன் எப்போது வரப் போகிறான் என்று நந்திக்கிராமத்தில் வசித்து வந்த ஜடாதரனான பரதனுக்கு சஞ்சீவினி, மாருதி, ராம நாமம் போன்றவர்களே; ஆஞ்சநேயருக்கு ராம கைங்கர்யம், பரதனால் அனுப்பப்பட்ட ராம நாமமாகிய அஸ்திரம், பரதனுடைய தபஸ்ஸாக விளங்கும் ராம பக்தி ஆகிற மூன்று தத்வங்களே எப்படி அப்பா, உங்களையும் மஹானுபாவர்களான துளசிதாஸர், ஆஞ்சநேயர், பரதன் ஆகிய மூவர்களும் சீதார்ராம லக்ஷ்மண தர்சன காங்க்ஷிதர்களாக விருந்த மாதிரி எனக்கும் எப்போது நான் பூர்ண லோசனங்களுடன், கண்டு ஸஹஜ ஸ்நேகத்துடன் புளகித சரீரத்துடன் என் ஹ்ருதய தாபத்தை குளிரப்படுத்திக் கொள்வேன்? ரகு குல திலகா, தயாநிதே, எப்போது அப்பா என்னிடம் நீ ப்ரீதி அடைவாய்? शरचापधर, சரசாபதர,யோகிவரனுதா, பரிபூர்ணா, நரரூபர்களே, நிரதமு வர த்யாகராஜ பரிபாலா, ஸுர பூமி ஸுருலனு ஸ்திரமுகா, கருணை செய் அப்பா. தங்களுடைய சரணங்களில் சேவை செய்யவேணும் என்கிற ஆசை எனக்கு மாத்திரமில்லை; துளசிதாஸருக்கும், ஆஞ்சநேயருக்கும், பயம் பிடித்த சுக்ரீவனுக்கும், பரதனுக்கும், தியாகராஜரின் சுத்தமான மனத்திற்கும், வைஷ்ணவ ஆசார்ய ஸம்பன்னர்களுக்கும், யாருக்குத்தான் தோன்றாது, ஸ்ரேயஸைக் கொடுக்காது? உன்னுடைய ஸுப்ரபாதத்தை அம்மா அப்பா, தரச்சொல். ராமானுஜா, நீயாவது சொல்லி தரச்சொல். அரவிந்த லோசனா, கமல பத்ராக்ஷா, என்னிடம் பிரஸன்னமடை. கிரீடி, ஜகந்நிவாஸா, உன் முக சந்திர மண்டலத்தைக் காண்பி. அத்ரியாதி சப்த ரிஷிகள், அனந்த, கருடன், விஷ்வக்ஸேனர், ஆகியவர்களாலும் என் பத்மா சேவிக்கும் உன் சுபமான திருவடிகளைக் கொடு. என்னுடைய ஆகாச சிந்துவே, நாரதருடைய பக்தியே, விஸ்வாமித்திரரின் ஆனந்த ஸ்பர்சமே, ப்ரும்மா, ஈஸ ஸ்கந்தரால் சேவிக்கப் படும் நாராயணா, என்னிடம் ஓடிவாரும். விருஷசைல நாதா, தயாநிதே, ஸ்ரீசைல நாதனாகிற த்ரியக்ஷ, த்ரிதசஸ் ஸ்ரேஷ்டா, திரியம்பகா, திரிதசாதிபா, திரிபுராந்தகா, காமாங்கஹரனே, திரிபதகாதரனே, தக்ஷயக்ஞப்ரமதன, சூலபாணி, உமா நாயகா,

இவ்விதமாக உமை எவ்விதம் ஸ்துதிகளால் ஶ்ரீ மஹேஸ்வரரைப் பூஜித்து என் போன்ற பக்தர்களுக்கு மார்க்க தர்சனம் தந்தாள். தர்மதர்சி, பரமேஷ்டியான பிரபு பக்தர்களுக்காக எவ்விதம் துஷ்டி அடைந்த சமயம் ஸாக்ஷாத் ஸாயுஜ்யத்தை சங்கரரிட மிருந்து அவள் வரமாகக் கேட்டாளோ, அதுபோல ராம சீதா லக்ஷ்மணு, துளசிதாஸ ஆஞ்சநேய தியாகராஜரை முன்னிட்டு உன் ஸாயுஜ்யத்தையும் உன்னுல் அதிகமாக ஸந்தோஷிக்கப் பட்டவனுக ஸாக்ஷாத் ப்ரீணயதி, எப்போது நான் ஆவேன்? ஸஹஸ்ரார்ச்சி, த்ரீயீமய, த்ரயிநாதா, த்ரயீஸ்துதா, காலாத்மன், அர்ஜுனன் தர்மர் பீஷ்மர் சரணடைந்தது மாதிரி உன்னை, நான் வந்து அடைகிறேன், சகா போலவும், ப்ரியை போலவும் புத்ரன் புத்ரி போலவும் என்னிடம் ப்ரஸீதமடைந்து ஏற்றுக் கொள். பிரசன்ன வேங்கடேசா, வைஷ்ணவர்கள் ஸ்துதி செய்யும் ஸுப்ரஸாதமே, தேடப்படும் சுப்ரபாதமே, தயாநிதி கிருபா நிகேதன்.]

ராமன் பிரஸன்ன ஹ்ருதயத்துடன், புளகாங்கித சரீரத் துடன் பிரபுல்ல லோசனங்களுடன் அந்த பிரும்ம ராஜரிஷியைத் தழுவிக்கொண்டார். (திருவிக்ரம அவதாரத்தில் ஏற்பட்ட கங்கை ஜடாதரனுடைய முடியில் எவ்விதம் ஆனந்தமடைவாளோ, எவ்விதம் குஹன் உமை சங்கர மடியில் ஆனந்தமடைவானே, எவ்விதம் நான் ராஜகோபால ஸந்நிதியில் பிரணவத்தையும் வேங்கடேச ஸுப்ர பாவங்கள் கொண்ட ஸ்ரீராம பாதுகைகளைக் கண்டு புளகாங்கிதமடைந்தேனே.) பரம தரித்திரன் சிந்தா மணியை அடைந்தால் எவ்விதம் சந்தோஷிப்பானே, அதுபோல ஸ்ரீதரனுகிற ராமன் பெரும் பேரானந்தத்தை, (உமையை சங்கரர் கண்டுஅணைவது போல) அடைந்தார். பரமார்த்தமான பொருள். பரம கிருபையுடன் கைக்கு எட்டி, முன் நிற்கிறது. சஹஸ்ர கோடி ஜன்மங்களின் புண்ணிய பிரபாவங்களினுல் ஏற்படும் ஒரே ஒரு மாபலன். (ராம ஹ்ருதயமுள்ள ஹனுமாரால் ஒரே மூச் சுடன் தாவப்பட்ட ஸம்சாரச் சமுத்திரத்தின் அக்கரை. துருவன் கம்புக்ரீவனுகிற நாராயணனைக் கண்டு ஆனந்தப்படுவதுபோல அந்த பாக்யவான் துடித்தார்.) ப்ரேமையும் பரமார்த்தமும் சரீரம் எடுத்து தர்சனம் எல்லோருக்கும் கொடுப்பதுபோல, (எனக்கு ராம ஆஞ்சநேயர் போலவும் பரதன் துளசிதாஸர் போலவும், லக்ஷ்மி வாசம் செய்யும் நாராயணர் போலவும் தியாகராஜருக்கு நாதவித்யை போலவும், உமைக்கு சங்கரர் போலவும், ஸாயுஜ்யம் கேட்டவர்களுக்கு ப்ரீதியான மனஸ்ஸும் போலவும்) காக்ஷி

அளித்தார்கள். [அவர்களை ஆயிரம் நமஸ்காரங்கள் நான் செய்கிறேன்.] (559)

அந்த பிராம்மணன் அதன் பிறகு ஸ்ரீராமனுடைய அனுஜனுகிய லக்ஷ்மணன் கால்களில் விழுந்து நமஸ்கரித்தார். அவரும் அந்த ராஜ பிரும்மரிஷியை அனுராகத்துடன் எழுப்பி மார்பில் தழுவிக்கொண்டார். (மஹோரகன் தன் மூச்சுக் காற்றினுல் வைகுண்டம் போகும் சேதனனுடைய முக்குணங்களை நாசம் செய்து சுத்த ஸத்வத்துடன் ஆராதிப்பானே அதுபோல அது விருந்தது.) அதன் பிறகு அந்த பிராம்மணரிஷி, (எப்பொழுதும் "விப்ரமத்யூத விருத்தௌ பிரம்மே ஸாத்யா: தததி யுவயோ: அக்ஷசார பிரசாரம்" என்கிறபடி விளையாட்டாக லீலைகள் செய்பவளும்) ராமனுல் பூஜிக்கப்பட்ட சீதையின் சரண தூள்களை எல்லையில்லாத ப்ரேமை ஆனந்தத்துடன் (குஹன் உமையிடம் ஆனந்தமடைவது போல,) தன் சிரஸில் தரித்துக்கொண்டார். மாதா ஜகஜ்ஜனனி, பிதா ஜகந்நிவாஸர், அவர்கள் இருவர்களும் தன் சிறிய குழந்தை என்று அவரைக் கட்டி அணைத்து முத்தமிட்டு, மங்கள ஆசீர்வாதங்கள் செய்தார்கள். (வினதையிடமிருந்து கருடனும், ராமனிடமிருந்து பரதனும், கௌஸல்யையிடமிருந்து ஸ்ரீராமனும், சுநீதியிடமிருந்து துருவனும் இந்திரனிடமிருந்து அர்ஜுனனும்,, பீஷ்மரிடமிருந்து யுதிஷ்டிரரும் துளசியிடமிருந்து நானும், தியாக ராஜரிடமிருந்து நாதலக்ஷ்மியும், என்னிடமிருந்து லக்ஷ்மிதரனும் லக்ஷ்மிசின்னனும் ஆசைப்படுவார்களோ, அதுபோல அந்த கங்கை யமுனை தீரத்தில் வசித்துவந்த அந்த ரிஷி ஆனந்தப்பட்டார்.) சுஜாதாவான அவருடைய ப்ரேமை பக்தியின் அபார பலனை யாரால் வர்ணிக்கமுடியும்? (560)

[தியானம்

ஸ்ரீராமா, சீதா ராமாலக்ஷ்மணு, பக்ஷிகளுக்கு ராஜனுன கருத்மானுல் சேவிக்கப்பட்ட லக்ஷ்மணராமா, காகுத்ஸனுடைய ஸகாவும் ப்ராணஃ பஹிஸ்சரனுகிற ஸுபர்ணனுல் சேவிக்கப்பட்ட ரங்கமன்னுர், கோஸல ராஜனுக அவதரித்த தசரதருடைய குமாரா, வாயுவின் புத்திரனுகிற ஹனுமாரால் சேவிக்கப்பட்ட ராமசீதாலக்ஷ்மணு, ஸுரர்கள், கந்தர்வர்கள், இந்திரனுகிற சதக்ருது அசுரர்கள், மஹா பலவான்களாகிற தானவர்கள், இவர்களால் கூட செய்யமுடியாத நாகபாச விமோசனத்தைச் செய்த ஸுபர்ணரால் கௌதூகலம் செய்யப்பட்ட ஸ்ரீராகவா, தர்மக்ஞா,

அவதாரங்களில் துன்பத்தைப் போக்கி, எல்லோருக்கும் இன்பம் தந்த பாவனரே (भावनो) என்னை ராமதாஸ தாஸோஹம் என்று பறைசாற்றிக் கொள்ளும் வைஷ்ணவ பக்தன் போல உம்முடைய ரக்ஷணத்தைத் தரவேண்டும். ஹே நீரஜநேத்ரா, நித்யானந்தம் கொடுக்கும் நாராயணா, நீரஜநாபா, விஷ்ணோ, நளினாக்ஷா, நீராதாரா, நிரபாயா, எனக்கு உம்மைத்தந்து காப்பாற்றும். நீரே எனக்கு பர்த்தா, என் குற்றங்களை நினைக்காமல் சம்சார விலங்குகளை, எவ்விதம் கருடன் கத்ருவின் நாகபாசத்தை அறுத்து ராமலக்ஷ்மணர்களுக்கும் வினதைக்கும் மோக்ஷ மளித்ததுபோல, எனக்கும் உயர்ந்த ஜன்மத்தைக் கொடுத்து ரக்ஷித்த பிரபாவரே, போக மோக்ஷம் அளித்த பிரபுவே, கிருத கர்மரே, ரணவீரரே, வரகுண ராஜாதி ராமா, பரம பாவனரே, உனக்கேதாஸன். உன் அடியார்களுக்கு தாஸன், பவனரே என்னைக் கிருபையுடன் ரக்ஷித்தருளும். நான் அடிக்கடி சொல்லியாய்விட்டது. உம்மைத்தவிர எனக்கு கதிகிடையாது. ஸ்வாமி, எங்கேயாவது புத்திரனும் பிதாவுமாகிற இரண்டு தலைக்கு உண்டான உறவு விரஸப்படுமோ? ஈஸ்வரனாகிற உனக்கும், பிள்ளையாகிற எனக்கும் உண்டான ஸம்பந்தம் அத்யாவஹமாயாயிற்றிருப்பது தானே இந்த பிரபத்தி. இது தானே எனக்கும் உபாயம். நீதானே உபாயாந்திரம். அப்பேற் பட்ட ராகவா, கருடனை முன்னிட்டு என்னை உன்னிடம் நான் சமர்ப்பிக்கிறேன்.]

அதன்பிறகு நிஷாத ராஜனான குஹப்பெருமான் அந்த பிராமணனைக் குளிர்ந்து பார்த்தார். ஸ்ரீராமச்சந்திரன் குஹனிடம் ப்ரேமையுடனிருப்பதைக் கண்டு, அதி ஆனந்தத் துடன் குஹப்பெருமானை சந்தோஷிக்க எண்ணம் கொண்ட அந்த பிராம்மணர் நிஷாத ராஜனைத் தழுவிக்கொண்டார். [சதருத்ரீயத்தில் புகழப்பட்ட ருத்ரன் எவ்விதம் சந்தோஷ மடைவாரோ, அதுபோல] அந்த பிராம்மண தபஸ்வி தன்னு டைய விசாலமான நேத்ரங்களால் ஸ்ரீராமச்சந்திரனுடைய நவ சுதாவாகிற சௌந்தர்ய அம்ருதங்களை குடித்துக்கொண்டு, முதித மனத்துடன் எவ்விதம் பசித்த புருஷன் விசேஷமான போஜன விருந்தைப் புசித்த பின்பு ஆனந்தம் அடைவானோ, அதுபோல சந்தோஷம் அடைந்தார். (561)

இங்கே கிராமத்து ஜனங்கள் ராம சௌந்தர்ய அழகைப் பார்த்துக்கொண்டு சம்பாஷித்தார்கள், "ஹே சகி, இந்த பாலகர் களாகிற ராம சீதை லக்ஷ்மணருடைய அழகைக் கண்டீர்களா?

இந்த மாதிரி திவ்ய சௌந்தர்ய, லாவண்ய குவியல் கொண்டவர்கள் வனத்திற்கு வரலாமா?'' காட்டில் வாழ்பவர்களிடம் ஸஹஜஸ்நேகத்துடன் அதிப்பிரேமை அடைந்த இவர்கள் துஷ்டஜந்துக்கள் நிரம்பின காட்டில் சௌக்யமாக இருக்க வேண்டுமே என்று கவலைப்பட்டார்கள். (562)

அந்த சமயம் ரகுவீரன் தன் சகாவாகிற குஹனை அழைத்து தன் கிருஹத்திற்குத் திரும்பிச் செல்லும்படி வேண்டிக் கொண்டான். ராமசாஸனம் கொண்ட குஹப் பெருமான் அவருடைய எண்ணத்தை தலைமேல் கொண்டு, தன் கிருஹத்திற்கு திரும்பிச்சென்றான். (563)

அதன் பிறகு சீதாராம லக்ஷ்மணன் கைகளை அஞ்சலி செய்துகொண்டு யமுனாதேவியை நமஸ்கரித்தார்கள். சூர்யனுடைய புத்ரியான யமுனையை ஸ்தோத்ரம் செய்துகொண்டு, இரு சகோதரர்களும் சீதையுடன் கூட முதித ஹ்ருதயத்டன் மேலே சென்றார்கள். (564)

வழியில் நடந்து போய்க்கொண்டிருந்த சமயம் அநேக யாத்ரீகர்களைக் கண்டார்கள். அந்த யாத்ரீகர்களும் இரு சகோதர்களைப் பார்த்து ப்ரேமை பூர்வமாகச் சொல்ல ஆரம்பித்தார்கள் ''ஹே ராஜகுமாரர்களே, சுகுமார லக்ஷணங்களையும் ராஜ லக்ஷ்ணங்களையும் உடைய நீங்கள் ஏன் வனம் வரவேண்டும்? என்கிற நினைவுதான் எங்கள் ஹிருதயத்தில் தோன்றுகிறது.'' (565)

''இவ்விதம் ராஜ சின்னங்கள் உடைய உங்களைக் கண்டு எங்கள் மனம் பரிதபிக்கிறது. ஏன் நீங்கள் கால்நடையாக வனங்களில் சஞ்சரிக்க வேண்டும்? இதிலிருந்து எங்களுக்கு, (சுக்ராசாரியார் பிருஹஸ்பதியின் சுமங்கள திருஷ்டியை தன் பெண் விஷயத்தில் கவனிக்க மறந்து, எவ்விதம் தன்னையும் ஜ்யோதிஷ சாஸ்திரத்தையும் குறைகூறினரோ, அதுபோல அவர்கள் சொல்ல ஆரம்பித்தார்கள்.) ''நாங்கள் மிக்க சிரமத்துடன் கற்றுப் பயின்ற ஜ்யோதிஷ சாமுத்ரிகா சாஸ்திரங்கள் வீணாகவும் பொய்யாகவுமல்லவோ தோன்றுகின்றன. இந்தக் காடுகளும் கடும் இருள் சூழ்ந்தவனமாகவும், அடர்த்தியான மரம் செடி கொடிகளைத் தாங்கும் கடினமான மலைப்பிரதேசமாகவுமுள்ளன. இதை எவ்விதம் உங்களுடன் கூடவரும் சுகுமாரியான சீதை கடப்பாள்?'' (566)

''அது மாத்திரமா ஐயா, யானை, சிம்மங்கள் கொண்ட துஷ்டமிருகங்கள் அநேகம் சஞ்சரிக்கும். நினைப்பதற்கே

பயங்கரமாகவும் பார்ப்பதற்கு மிக்க பயத்தை உண்டு பண்ணுபவன. இந்தக் காட்டிலே அப்படிப்பட்ட துஷ்ட மிருகங்கள் நுழைவதற்கே பயப்படும். நீங்கள் இஷ்டப்பட்டால், ஆக்ஞை செய்தால், நாங்கள் வந்து உங்களுக்கு மார்க்கம் காண்பிக்கிறோம். நீங்கள் எதுவரையில் செல்ல விரும்புகிறீர்களோ, அதுவரை உங்களுக்கு அடையாளங்களுடன் வழிகாண்பித்துவிட்டு, பிறகு உங்களை வணங்கி, நாங்கள் திரும்பி வந்து விடுகிறோம்.'' (567)

இந்த விதமாக ப்ரேமை வசமடைந்த யாத்ரீகர்கள் பல பேர்கள் புளகாங்கித சரீரத்துடன் கண்களில் ப்ரேமை ஆனந்தக் கண்ணீர்களை வடித்து, ராம சீதா லக்ஷ்மண தர்சனத்தால் ஆனந்த மேலிட்டவர்களாக ராம கைங்கர்யம் செய்வதில் ஆசையுள்ளவர்களாக விருந்தார்கள். என்பிரபு கிருபாசிந்து, கருணைரஸம் நிரம்பிய கரும்பு, அடி முதல் நுனி வரை கிருபா பூர்ணர், ஸ்ரீராமச்சந்திரன் அதிம்ருது வசனங்களால் அதிவினயத்துடன் அவர்களை ஆஸ்வாசப்படுத்தி, திருப்தி மனஸுடன் திரும்பி அனுப்பிவைத்தார். (568)

எந்த எந்த புரிகள், கிராமங்கள், நகரங்கள், அவர்களுடைய வழியில் இருந்தனவோ, அவைகள் எல்லாம் அந்த சுபமான சீதாராம தர்சனத்தை அடைந்தபடியால், அவர்களுடைய பாத ஸ்பர்சத்தைப் பெற்றதால் மஹா பாக்கியமான இடங்களாக மாறின. அப்பேற்பட்ட பாக்கியத்தை நாகலோகத்தில் உள்ள சிறப்பு வாய்ந்த பட்டிணங்கள் கூட அடையவில்லை. அதனால் அந்த நகரங்கள் தங்கள் சிறப்புக்கள் குன்றியதாக வெட்கப் பட்டன. எந்த சுக்ருதத்தினால், எந்த புண்யவான்கள் எந்த சுபமான வேளையில் அவைகளை நிர்மாணித்தானோ தெரியவில்லை? அப்பேற்பட்ட புண்யமய புருஷர்கள், விஸ்வகர்மாக்கள் நிஜமாகவே தன்யர்கள், பரம சுக்ருத்துக்கள்; கிருதகிருத்யர்கள். (569)

எங்கு எங்கு சீதாராம சரணங்கள் அடியெடுத்து வைக்கப் பட்டனவோ, அந்த சுபமான இடங்களுக்கு இந்திரபுரியாகிய அமராவதி கூட சரி சமானம் என்று சொல்ல முடியாது. அந்த புண்ணிய இடங்களின் ஓரத்தில் வரும் ரஸ்தாக்கள், ஒற்றையடிப் பாதைகளும், அந்தப் பாதைகளில் வசிக்கும் ஆத்மாக்களும் மஹாபுண்யம் செய்தவர்கள். ஸ்வர்க்கத்தில் வசிக்கும் அமரர்கள்

கூட அந்த புண்ய ஆத்மாக்களை "மிக்க தன்யர்கள், பெரும் பாக்கியம் கொண்டவர்கள்" என்று புகழ்ந்தார்கள். (570)

அப்பேற்பட்ட புண்ய ஆத்மாக்கள் ராமனைத் தனமாகப் பெற்றவர்கள். பேரானந்த வடிவழகு உடையவரும், முக்தர்களால் மட்டும் அறிவதற்குரியதான பரதத்வத்தைக் காட்டிலும், மனிதர் முதலிய சேதனர்களுக்கும் அசேதனர்களுக்கும் சுலபமாக வியக்த மாகத் தெரியக்கூடிய தசரத புத்ரராக விருந்து வனத்தில் சஞ்சரிக்கும் பிரபு, (துஷ்டர்), சிறந்த கல்யாண குணங்களாலும், ஸ்வரூப அழகாலும் பிரகாசிக்கும் புஷ்கராக்ஷர், புஷ்டர், கனஸ்யாம நிறமுள்ள ஸ்ரீராமர், சீதை லக்ஷ்மணன் சகிதம் அனுத்தமமான ஸ்ரீயைக் கொடுக்கும் பிரபு சுபதர்சனத்தால் அந்த புண்ணிய ஆத்மாக்களை திருப்தி செய்துவைத்தார். அவர்கள் அந்த அர்ச்சாவதார தர்சனத்தால் நேத்ரங்களில் ஆனந்தத்தை என்றும் வற்றுதபடி நிரப்பிக் கொண்டார்கள். எந்த குளம், குட்டைகள், நீர் ஓடைகள், நதிகள் இவைகளில் அந்த ராம லக்ஷ்மண சீதை ஸ்நானம் செய்தார்களோ, அந்த புண்யமான இடங்களை, தீர்த்த கட்டங்களை தேவலோகத்தில் உள்ள ஸரோவர்களும், தேவநதிகளும் கூட புகழும்படி தீர்த்த பிரபாவங்கள் அடைந்து சுசியாகவிருப்பதைப் பற்றி அநேக கீர்த்திகளையும் அடைந்தன. (571)

எந்த விருக்ஷத்தை அந்த பிரபு நிழலுக்காகவோ, ஜபத்திற்காகவோ, நித்ரைக்காகவோ, களைப்பு தீர்ப்பதற்காகவோ, பழம் இலைகள் பட்டைகள் இவைகளுக்காகவோ அண்டினரோ, அந்த உத்தமமான விருக்ஷங்களை தேவலோகத்தின் கற்பக விருக்ஷங்கங்கூட புகழ்ந்தன. அது மாத்திரமா, அவைகளைப் புகழ்ந்த கற்பதருக்கள் தங்கள் பெருமைகளை இன்னும் அதிகமாக உயர்த்திக்கொண்டன. ஏன் தெரியுமா? ராம பாதங்கள் சுலபமாகவும் எளிதாகவும் கிடைக்கக்கூடிய ஐஸ்வர்யங்களா? என் பிரபு ஸ்ரீ ராமச்சந்திரனுடைய திவ்யபாத சரணகமலங்கள், அவைகளில் ஒட்டிக்கொண்டிருக்கும் பாதரேணுக்கள், அந்த திவ்யபாதங்களின் ஸ்பர்சங்கள் கொண்ட புண்ய பூமி ஸ்தலங்கள், பூரிதக்ஷிணைகளைக்கொடுத்த அஸ்வமேத யாகத்தின் சமயம் பூமியனைத்தையும் வித்வான்களாகிற பிராம்மணர்களுக்கு தக்ஷிணையாகக் கொடுக்கப்பட்ட இடத்திற்கு (ஸ்தலத்திற்கு) மேற்பட்டதல்லவா? அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த ஸ்ரீராம பாத ஸ்பர்ச க்ஷேத்திரம், தனக்கும் சரி, அதை அண்டினவர்களுக்கும் சரி, பரம சௌபாக்யங்களைக் கொடுக்கும் பாவனமான

ஸ்தலமல்லவோ? அதனுல் பூமிதேவிக்கு, அந்த பரம தயாளு வான பெருமாள், எல்லா செல்வங்களையும் சௌபாக்யங்களையும், கொடுத்து, துக்கங்களையும் போக்கி, பயங்களை அறுத்து, பாபிஷ்டர்களை சம்ஹரித்து, பரம சந்தோஷத்தையும் பூமி யின் விருப்பங்களையும் நிறைவேற்றுவதற்காகவே அவதரித்த "பூரயிதா" வாகிற எம்பெருமான், எந்த எந்த இடங்களில் சஞ்சரித்தாரோ, அந்த அந்த இடங்களை பூமி தேவியானவள் தனது மிக்க சௌபாக்ய சின்னங்களாகப் போற்றி சந்தோஷம் அடைந்தாள். (572)

பாதையில் மழை பெய்யும் மேகங்கள் சூர்யனுடைய தாபத்தைக் குறைத்து, ராம சீதா லக்ஷ்மணர்களுக்கு சத்ரம் (குடை) பிடித்ததுபோல சஞ்சரித்தன. தேவதைகள் சுகந்தமான புஷ்பங்களை வழிகளில் வாரி இறைத்து ராமசீதாலக்ஷ்மண கைங்கர்யம் செய்தார்கள். உயிரற்ற அசேதன பொருள்கள் போல வெளியில் தெரியும் பர்வதங்களில் உள்ள வனங்கள், பசு பக்ஷிகள், அஜங்கமஜங்கமங்கள் வழியில் ஸ்ரீராமனைக் கண்டு அழகில் மனத்தைப் பறிகொடுத்து, அடிக்கடி பார்த்துக் கொண்டு சென்ற வண்ணமிருந்தார்கள். (573)

சீதாலக்ஷ்மணர் சகிதம் ரகுராய் வருவதைக்கேட்ட கிராமத்து ஜனங்கள், அக்கம்பக்கங்களில் உள்ள வாசிகள், பாலகர்கள், விருத்தர்கள், ஸ்திரி புருஷர்கள், தங்கள் வீட்டு வேலைகள், ஜீவனோபாயங்கள் யாவையும் துறந்து லக்ஷ்மண ஸ்ரீசீதா ராமதர்சனம் செய்ய ஓடிவந்தார்கள். (574)

எப்பேற்பட்ட மன்மத ரதி சௌந்தர்யங்களைவிட அதி நேர்த்தியான ரூபலக்ஷணங்கள் கொண்ட திவ்ய மங்கள மூர்த்திகள். விக்ரக ஸ்வரூபங்கள் அழகு பிம்பங்கள். அவை களை ஒரு தடவைக் கண்ட பின்பு, இந்த பிரும்மாவினுல் கொடுக்கப்பட்ட நேத்ரங்கள் ஜன்மலாபத்தையும் பயனையும் அடைந்தன. ஸ்ரீசீதா ராம தர்சனம்இல்லாத நேத்ரங்கள் இருந்து தான் என்ன பிரயோசனம்? ஸ்ரீசீதாராமதர்சனம் அல்லவோ பரமபாக்யங்களாகிற சுகத்தை அளிக்கக்கூடியது. அந்த ராஜ குமாரர்களாகிய ராம லக்ஷ்மணர்களைக்கண்டு ஸகலரும் குணங்களாலும் வடிவழகினுலும் ஆகர்ஷிக்கப்பட்டு, யாவரும் தம்மிடம் மகிழும்படி அழகான சரீரத்தைப்படைத்த தசரத குமாரர்கள்; ராமர், பார்க்கப்பார்க்க வற்ருத பிரேமை ஆனந்தம் ஆகியவைகளைத் தருபவர், அவரைத் தழுவவேண்டுமென்கிற எண்ணம் உடனே உதிக்கும். சுபதர்சனர், பிரியதர்சனர்,

யோகிகள் மகிழும்படி இருக்கும் ராமர், மோஹன ராமர், அழகு தெய்வம்; எவ்வளவு கருணையுடன் வழிநடந்து ஒவ்வொரு ஜங்கமாஜங்கம பொருள்களை கடாக்ஷித்துக்கொண்டு, வழி நெடுகச்சென்ற நேதா, அவ்வளவு பேர்களையும் பொருள்களையும் தானும் ஆனந்தப்படுவதுமின்றி, பிறரையும் ஆனந்தப்படுத்திக் கொண்டு அவர்களுடைய நேத்ரங்களையும் சரீரங்களையும் புளகாங்கித மடையும்படி செய்துவிட்ட பேரானந்தமூர்த்தி. கோடிகோடிக் கணக்கான ஜன்மங்களை ஒரு விநாடியில் முடிவு பெறச் செய்து, முக்தர்கள் விரும்பும் மோக்ஷ சுகத்தை அளிக்கும் கிருதக்ஞர். அவரைக் கண்டு ஆனந்த மகிமை அடைந்த ஸகல பிராணிகளுமல்லவோ தங்கள் ஜன்மங்களை சாபல்யமாக்கிக்கொண்ட புண்ணியவான்கள், கிருத கிருத்யர்கள் என்று தெரிந்துகொள்ளவேண்டும். (575)

அவர்களுடைய அனுபவங்களையோ, அவஸ்தைகளின் ஆனந்தப் பெருக்கையோ, ப்ரேமை வெள்ளத்தின் பிரவாக மகிமைகளையோ யாரால் வர்ணிக்கமுடியும்? ஜன்மாந்திர தரித்ரன் திடீரென்று சகல மனோபிஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் சிந்தாமணியை அடைந்து, எவ்விதம் சந்தோஷிப்பானோ அது போல சொல்லலாம்! அவர்களுடைய மற்றொரு ஆச்சர்ய செய்கைகளையும் கேளுங்கள். ஒருவர் தான் மட்டும் திருப்தி அடையாமல், மற்றவர்களையும் ஒவ்வொருவராக பெயர் சொல்லி அழைத்து "இதோ பார், தெய்வம் நம்மைத் தேடிக்கொண்டு தானே வந்திருக்கிறது. யத்ருச்சையாகவும் மஹா கிருபை யுடனும் வந்திருக்கிறது, சீக்கிரம் ஓடிவாருங்கள். அனுபவி யுங்கள். மற்றவர்களையும் அழைத்து வாருங்கள். ஒரு க்ஷணத்தில் கோடிக்கணக்கான ஜன்மங்களின் ஏகாந்த பக்தி யுடன் செய்யப்பட்ட தபஸ்ஸுகளின் பலனை அனுபவியுங்கள்." நித்யானந்தன், நீராதாரன், நளினாக்ஷன், நீரஜநாபன், நிரபாயனுகிறவனும் நிரவத்யனுமாகிற பரமபதநாதன் உரு வெடுத்து நமக்காக வந்திருக்கிறான், என்று சொல்லிக் கொண்டு, அந்த ஒரு க்ஷணத்தில் நேத்ரலாபங்களை அடைந் தார்கள். ஜன்மாந்திர சுக்ருதங்களை அனுபவித்தார்கள். (576)

[தியானம்

ராமா, ஒருவன் கருத்ததும், பரந்திருக்கும் உன்னுடைய முன் மயிரையும், அழகான கபோலங்களையும், நாசியையும், வருத்தத்தைத் துடைக்கும் புன் சிரிப்பை உடைய அமிதவிக்ரம

ஞுகிற முகுந்தனுடைய முகாரவிந்தத்தை, ராமா, [மாரீசன் யக்ஞ ரக்ஷணத்தின் போதும், சிவனுடைய தனுஸ்ஸை ஒடிக்கும் போதும் விஸ்வாமித்திரரும் அலகலல்ல லாடகனி யாரான் முனி யேட்ட போகிஞே என்று தியாகராஜர் பாடினதுமாதிரி,] உன் முக அழகை ரஞ்சித்தாரே, அப்பேற்பட்ட முகாரவிந்தத்தைப் பார்த்த கோபிகைகளோ, ஆஸ்ரம வாசிகளோ, நாரதரோ, வால்மீகியோ, ஆழ்வாராதிகளோ, வாலியினிடம் பயந்த சுக்ரீவஞே, என்ன பாக்யம் செய்திருக்கவேண்டும்! பிரும் மாவினுடைய ஸ்ருஷ்டி சாமர்த்தியம் முழுவதும் ஒருங்கே அமைந்த ஒரு பொருளைப் பார்த்து இன்பம் நுகர்ந்த கோபிகை களின் நேத்ரங்களே, பரபாக்யமுள்ளவை! பரமபாகவத ஸ்ரேஷ்டர்களான உத்தவர், அக்ரூரர், விஸ்வாமித்திரர், அக்னி, சூர்யன், சந்திரன், ஆஞ்சநேய மஹானுபாவர், துளசிதாஸர் என்ன பாக்யம் பெற்றிருக்க வேண்டும்? சர்வஸ்வரூபியும் சர்வ புத்தி சாக்ஷியாக விருந்து அவைகள் ஒன்றிலும் பற்றுதல் இல்லாத ஸம்மிதர் என்கிற உமது நாமத்துக்கு ஏற்ப, ஆஸ்ரிதஞன நான் உம்மை நமஸ்கரிக்கிறேன். மாயையினுல் நீர் ஏற்படுத்தும் குணபிரவாகமானது என்னை மாத்திரமில்ல; ஸ்வாமி, தேவர்களையும் ஸகல சராசரங்களையும் யாவரையும் வசப்படுத்துகிறதே. என்னைப் போன்ற சேதனர் கள் உமது சக்தியாகிய பிரக்ருதியில் உண்டான முக்குணங் களால் கட்டப்பட்டு உபாயம் தன்னையே என்று நினைத்து உமக்கும் எனக்குமுள்ள கிருபாயத்னம் என்கிறதை மறந்து அழிந்துபோகிறுேமே. நீர் ஸமாத்மா. உமக்கு சேதனர்களிடம் உள்ள ஏற்றத் தாழ்வு உண்டா? இல்லை. விராட்புருஷ ராகிய உமக்கு அக்னிமுகம்; பூமிபாதம்; சூர்யன் கண். ஆகாசம் நாபி, திக்குக்கள் செவி. ஸ்வர்க்கம் ச்ரஸ்; ஸுரஸ்ரேஷ்டர்கள் உமது கைகள். கடல் உமது, உதரம். வாயு உமக்குப் பிராணன். மரம் கொடிகள் உமது ரோமங்கள். மேகங்கள் உமக்கு தலைமயிர்கள். மலைகள் உமது எலும்புக்கள் நகங்கள்; இராப்பகல் உமது கண்ணிமைப்பு திறப்பது. விரிஞ்சி உமது புல்லிங்கம். மழை உமது வீர்யம், திரிவிக்ரமனுகிற உம்மிடத்தில் சகல ஜீவராசிகளும் அனந்த கோடி கண்டங்களும் நித்ய புருஷராகிய உம்மிடத்தில் மஞேமயமாகக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. நீர் ஸர்வதர்சி யாகி எல்லாத் தர்மங்களையும் பார்க்கிறவர்; ராமாகிருஷ்ணு, மல்லிகைக்கொடி, மாமரம், காளிங்கன் போன்ற ஸர்ப்பம், கருடன் போன்ற வேதாத்மா, மஹா உரகன், பிரஹ்லாதன்,

சுக்ரீவன் போன்ற வானரம், கோபிகைகள், பிங்களை போன்ற தாஸிகள், யோகிகள், விஸ்வாமித்ரர் போன்ற மஹரிஷிகள், புழு, துரும்பு ஆகிய எல்லாம், விராட்ராமா, எல்லாம் உமக்கு சமம். பழகினவன் பழகாதவன், ஆவல் அதிகம் உள்ளவன், ஆவல் குறைந்தவன் என்று வித்யாஸம் பாராமல் ஒரே கௌரவம் வைக்கும் ஸமர் அல்லவோ நீர். அப்பேற்பட்ட நீர், என்னையே உபாயமாக சகிக்காமல், உன்னையே உபாயமாக நினைத்துகொண்டிருக்கும் ஸித்தோபாயமான ஸர்வேஸ்வரா, என் இஷ்டப்பிராப்திக்கும் என் அநிஷ்ட நிவாரணத்திற்குமல்லவோ நான் உமது கிருபையாலும் எனது கர்ம ஞானபக்தி யோகங்கள் யாவற்றையும் தியாகம் செய்து, பாரதந்திரிய உணர்ச்சியுடன் மோக்ஷஸாதனமாக, உமது முகார விந்தத்தைப் பார்த்த நான் உமது பாதாரவிந்தத்தைக் கேட்கிறேன். பிரபத்தியினுல் உமது கிருபையை வேண்டுகிறேன். உமது பிரவிருத்தியாகிற ஸ்வ ரூபம் கருணை தானே. என் பலனும் உன்னைத்தானே கேட்கிறது. சுக்ரீவன் தவித்தமாதிரி. பிறவிக்கடலில் அழுந்திக்கிடக்கும் எனக்கும் ஆபந் நிவர்த்தகனுன நீர் தஞ்சம் தாரும்.]

ஒரு சேதனஸ்திரி ஸ்ரீராமச்சந்திரனைக் கண்டு மிக்க ஆகர்ஷணம் செய்யப்பட்டு, அனுராகத்தால் சித்தத்தையிழந்து, (எவ்விதம் கோபிகைகள் தங்கள் கணவன் மார்களையும் வீடு வாசல்களையும் மறந்து கண்ணன் பின் சென்றதுபோல,) அந்த ராமனுடன் பின் சென்ருள். ராம ஸங்கம் அடைந்தவள் அல்லவா அவள்? இன்னெரு சேதனன், ஏன் அஜங்கமமான மிருகம் பக்ஷி, பசு எதையுமே எடுத்துக்கொள்ளலாமே, ஸ்ரீராமனுடைய சௌந்தர்ய அழகுகளை, [விஸ்வாமித்திரர் போல மஹரிஷிகள் கண்ட முகுந்தனுடைய முகாரவிந்த அழகுகளை,] நேத்ரங்களால் தர்சனம் செய்த பின்பு, அதுவும் ஒரு க்ஷணம் தர்சனம் செய்த பின்பு, ஆனந்த மக்னனுகி, தன் குணங்களின் பிரபாவங்களை யிழந்து, மனம் சரீரம் வாக்குக்கள் எல்லாம் இழந்து, அத்புத ஆச்சர்யம் படைத்தவனல்லவா ஆகிவிடுகிருன்? அடியிலிருந்து சிரஸ் பரியந்தம் கரும்பின் ரஸம்போல பிரும்மானந்த ரஸத்தினுல் அல்லவா அவன் நிரப்பப்படுகிருன். (577)

ஒருவன் ஒரு வட விருக்ஷத்தின் அடியில் சுகந்தமான நிழலைக்கண்டு அதன் பக்கம் பஞ்சு மெத்தைபோல புல் மேடையிருப்பதைக் கண்டு, அதன் மேல் இலைச் சருகுகள் உதிர்ந்து உட்காருவதற்கு மிருதுவாகயிருக்கும்படி செய்து ஸ்ரீராமனிடம் "இங்கு ஒரு நிமிஷம் தங்குங்கள்; இளைப்பாருங்கள். அதன்

பிறகு சிரமம் தீர்ந்தவுடன் இப்போதோ அல்லது காலையில் எழுந்திருந்து மேலே செல்லலாம்'' என்ருன். (578)

அப்போது ஒரு சேதனன் ராமகைங்கர்யம் செய்ய ஆவல் உள்ளவன் ஒரு கலசத்தில் தண்ணீர் கொண்டுவைத்து, கோமளமான வாணியினுல் சொன்னுன். ''நாத, ஆசமனம் செய்யுங்கள்.'' (அவர் அகமர்ஷணராகத்தான் இருக்கவேண்டும்) என்பிரபு எல்லா சேதனர்களையும் ஸம நோக்கு, ஸம திருஷ்டியுடன் பார்க்கும் புருஷோத்தமர்; அந்த ப்ருது அவனுடைய வசனங்களைக்கேட்டு, ப்ரீதி அடைந்து, குளிரக் கடாக்ஷித்து, தயாளு புருஷனுகி, பரம சுசீலபுத்தியுடன் வந்த அந்த அகமர்ஷணரை, கிருபாளுவாகிய ஸ்ரீராமச்சந்திரன் தடவிக்கொடுத்து, அவர் பட்ட ஸ்ரமங்களை நீக்கி, விஸ்ராமர் எனகிற பெயருக்கு ஏற்ப களைத்துப்போன ஜனங்களுக்கு இளைப்பாறுமிடமாக இருந்தார் பிரபு. (579)

தன்னுடைய ஸ்ரீமதியாகிற சீதை களைப்பை அடைந்ததைப் பார்த்து, அந்த வடவிருக்ஷத்தின் நிழலை அவள் நாடுகிருள் என்று அறிந்துகொண்டு, ராமன் அந்த விருக்ஷத்தை நாடினுர். அங்கே கூடியிருந்த ஸ்திரிபுருஷர்கள் யாவரும் அவர்களைக்கண்டு, ஆனந்தமடைந்து சோபிதமாக விளங்கினுர்கள். அனுபமான ரூபம், அம்ருத கண்களுடன் கூடின நேத்ரானந்தங்கள், கருணை யாகிற கடாக்ஷ வீக்ஷணயத்தை வாரி அளிக்கும் ஸமாத்மா, மனம் மோஹிக்கும்படி சஞ்சரிக்கும் ஸ்ரீராமன், கூடவிருப்பது மஹாலக்ஷ்மியாகிற சீதை, ராமானுஜன் ஆகிற லக்ஷ்மணன், சகல ஸ்திரி புருஷர்கள் யாவரும் மோஹிக்கப்பட்டுவிட்டார்கள். (580)

[தியானம்

ஹே ராமா, நாராயணு, சீதாலக்ஷ்மி, ராமானுஜா எனக்கு விஷ்ணு சக்கரம், முதலை, கஜேந்திரன் போலவிருக்கும் மூன்று தத்வங்களே, பாரிஜாதம் துளசி வில்வம் போலவிருக்கும் மூன்று பூஜா திரவியங்கள் போலல்லவாயிருகிறீர்கள். ராமா, நாராயணு, உன்னை விட்டால் யாரப்பா எனக்கு கதி? சீதாபதி, யார் எனக்கு ரக்ஷகன்? உன் தயையின்றி எனக்கு இந்த ஜன்மம் எதற்கு? முரவைரி, நீ பேசவில்லை, தர்சனம் கொடுக்கவில்லை, என் விருப் பத்தைக் கேட்கவில்லை, என்ருல், அது உனக்கு நஷ்டமில்லை எனக்குத்தான் மாநஷ்டம். அடிக்கடி நான் சொல்லுவேன். தியாக ராஜரால் அர்ச்சிக்கப்பட்ட ஸ்ரீராமா, ஸுரபூஜித ராமா, எப்

போது உன் கிருபையைக் கொடுப்பாய்? எனக்கு பிரஹ்லாத பக்தியில்லை. புலஸ்தியருடைய உபதேசமுமில்லை. கஜேந்திரன் உன்னை "மூலபிரக்ருதியே, அஜிதரே, மஹாத்மா, அனுஸ்ரிதாய தேவாய நிஸ்ப்ருஹாய நமோ அஸ்துதே, நமஸ்தே புண்டரி காக்ஷ பக்தானும் அபயப்ரதே, அப்ரஹ்மண்ய நமஸ்தே அஸ்து த்ராஹிமாம் சரணாகதம்" என்று அலரின அஞ்சனுஸங்காசனை கஜேந்திரன் பங்கஜவனத்தில், தந்தோஜ்வல வபுः என்கிறபடி முதலையினுல் இழுக்கப்பட்டு, கோரயுத்தம் செய்து தோற்றுப் போகும் சமயத்தில் ஸ்ரீமான் நாராயண பராயணராக உன்னையே சரணம்; நீர்தான் எனக்குத் தேவர்; நீர்தான் ஸர்வாத்மாவாக இருக்கிறீர் என்கிற ஏகாத்மா பாவத்தாலே, உன்னுல், லக்ஷ்மி நாராயணு, சக்ரபாணே, அஜரே, வரேண்யரே, வரபத்மனுபரே, பிருஹ்மநிதியே, ஸுரேசரே, அனுக்ரஹிக்கப்பட்ட ஆத்மாவை உடைய அந்த கஜேந்திரன் ஸ்துதி செய்தாரோ, அதுபோல பீஷ்மர், தர்மபுத்திரர், திரௌபதி, சீதை, அகஸ்தியலோபா முத்ரை, சிவபார்வதி, குஹன், பராசரர், வேதவியாஸர், புலஸ் தியர், விஸ்வாமித்திரர், வால்மீகி, வாமதேவர், சுகர், நாரதர் இவர்களால் பல தடவைகள் உபதேசிக்கப்பட்ட நான் என் ஆசார்யர்களான ராமானுஜன் முதலியோரை முன்னிட்டு, ராமா, நாராயணு நீர்தான் ஒப்புயர்வற்ற ஸ்வாமி, மங்கள ஸ்வபாவம் முழுவதும் நிறைந்திருப்பவர்; பரமபுருஷார்த்தம் என்று லக்ஷ்மி யாலும் என்னுலும் நினைக்கப்படுகிறவர். உம்மைத் துதித்து, ஆராதித்து, ஐஸ்வர்யம் முக்தி ஆகிய இருவித நன்மைகளைப் பெற்று, அதையும் உமக்கு அர்ப்பணம் செய்து, நாராயணு, லக்ஷ்மி நாராயணு, ராமானுஜ லக்ஷ்மி நாராயணு, பன்ன கேந்திர போகஸயனு, கருடத்வஜா, வேதநிலையரே, குஹ்யரே, கூடரே, சிவசாந்தரே, நரரோத்பவரே, ஆதித்ய ருத்ர அஸ்வின வசுப்ரபாவரே, என் பிரபுவே, த்ருப்தரே, வரபத்மனுபரே, பீமபலரே, மத்ஸய, கூர்ம, வராஹ, நரசிம்ம வாமனு, நாராயணு, எவ்விதம் லக்ஷ்மணன் இரு கைகளால் உங்களுக்கு திருவெண்கொற்றக் குடை பிடித்தல், திருவெண் சாமரம் பணி ஆகிய இரண்டையும் ஏககாலத்தில் செய்ததுபோல நாராயண பராயணனுக விருக்கும் என்னை, "பிராட்டியும் நீயும் எப்படியோ, நீரும் மீனும் எப்படியோ அதுபோல எங்களுடைய கைங்கர்யமும் உங்களுடைய பிரபுத்வமும், உங்களைப் பிரிந்த நாங்கள் ஸாரமற்று, ஸத்தைப்பெற்றோ மில்லோம். ஸ்வாதந்தரிய மான நீங்கள் குற்றக் கண்ணுடன் நோக்காதபடி எங்களுடைய

கைங்கர்யங்களை நீரே, ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று பிரார்த்திக்கிறோம். கஜேந்திரனை முன்னிட்டு, நமஸ்கரிக்கிறோம். அபய வரதா, ஆதித்யதேவா, நாராயணா, வாஸுதேவா, விஷ்ணு என்று சொல்லி நமஸ்கரித்து சரணாகதர்களான எங்களை ரக்ஷித்தருளும்.]

சகல ஜனங்களும் ஸ்ரீராமச்சந்திரனுடைய முக சந்திரனைக் கண்ட சகோர பக்ஷிகள் ஏகாத்மாவாகப் பார்த்து பார்த்து எவ்விதம் நான்கு திக்குகளிலும் சொக்கிப்போய் பரம சோபிதமாக விளங்குமோ, அந்தமாதிரி அவர்கள் ஸ்ரீராமனுடன் தன்மயமானார்கள். அந்த பிரபுவினுடைய தமால (பனை) விருக்ஷம்போல் ஸ்யாமை நிறம், வரவரேண்யர், பார்க்கப் பார்க்க வரிஷ்டர், அதிசோபையுடன் விளங்குபவர், கோடி மன்மதர்கள் பார்த்து பார்த்து ஸ்தபித்துப்போய், வியக்கும்படி மோஹன சக்தியை உடைய ஜனார்த்தனர், (581)

மின்னல் மாதிரி தேஜஸ் உள்ள ஆதிபூதமாகிய லக்ஷ்மணர், நகத்திலிருந்து சிகை வரை பொன்னொளியுடன் சுப லக்ஷணங்களுடன் கூடிய சுகுமார அழகினால் எல்லோருடைய மனத்தையும் ஆகர்ஷித்து, பிடித்து இழுக்கிறார்கள். வல்கலம் அணிந்த இருமுனி வேஷதாரிகள் கடினமான விற்களையும் அம்புராத்துணிகளையும் இருபக்கங்களிலும் தரித்துக்கொண்டு (வரதீப்த சுதர்ஸனம், கமல புஷ்பம் கொண்ட) இருகைகளில் தனுஷ் பாணம் ஆகியவைகளைத் தரித்துக்கொண்டு, எல்லோரையும் மயக்கிக்கொண்டு நின்றுகொண்டிருந்தார்கள். (582)

அவர்கள் தலையில் ஜடாமுகுடம்; வக்ஷஸ்தலங்கள், புஜங்கள், நேத்ரங்கள் ஆகியவை எல்லாம் பரந்து விசாலமாக விருந்தன. சரத்பூர்ணிமாவின் சந்திரனின் சோபையைப்போல பூர்ண அழகுடன் விளங்கும் முகார விந்தங்கள். ஸ்வாதி நக்ஷத்திரத்தில் மழையினால் உண்டாகும் மோதி முத்துக்கள்போல வியர்வைத் துளிகள் அரும்பிட்டு, கன அழகுடன் விளங்கின. அப்பேற்பட்ட வரவரத அழகை யாரால் எப்படிச் சொல்ல முடியும்? பார்த்தவர்கள் பார்த்துக்கொண்டேயிருந்தார்கள். (583)

அந்த மனோஹரமான ஜோடி ராமலக்ஷ்மணர்களை யாரால் பூர்ணமாக வர்ணிக்கமுடியும்? அவர்களின் சோபைக் கூட்டங்கள் என் மதியை மயக்கச் செய்கின்றன. எல்லையை அடைய முடியாத ஆர்வம் நிறைந்த மனத்துடன் எவ்விதம் வர்ணித்தாலும், அவர்களுடைய சுந்தர அழகுகளை சொல்ல முடிகிறதில்லையே, என்ன செய்வேன்? இந்த ராமலக்ஷ்மண சீதையாகிற

ஜோதிகள் என் மனத்தை அபஹரிக்கிறார்கள். என்னைக் காமுறுகச் செய்கிறார்கள். என் சித்தத்தைப் பேதப்படுத்து கிறார்கள். புத்தியை சிதற அடிக்கிறார்கள். அதனால் நான் மிக்க சிரமப்பட்டு, அவர்களுடைய கிருபையின் நோக்கால், குறைவற்ற பூர்ண கடாக்ஷ அனுக்ரஹத்தால், நாராயண பராயணனாக விருக்கும் நான், என்மனம் சித்தம் புத்தி ஆகிய மூன்றையும் அவர்களிடம் ஸமர்ப்பிக்கிறேன். (584)

ப்ரேமை தாகத்தால் பீடிக்கப்பட்ட அந்த பாக்யமுள்ள ஸ்திரி புருஷர்கள் இந்த சௌந்தர்ய குவியல்களைக்கண்டு, அதுளித மான பேரழகுகளைக் கண்டு, ஸ்தம்பித்துவிட்டார்கள். ஒரு தீபத்தைக்கண்ட பெண்மான் அல்லது ஆண்மான் எவ்விதம் பேச்சு மூச்சில்லாமல் மயங்கிவிட்டது மாதிரி, மோஹிக்கப்பட்டு, காமவசமடைந்தார்கள். கிராமத்து பெண்கள் சீதையின் ஸாயுஜ் யத்தை வேண்டி கிட்ட நெருங்கினார்கள், அத்யந்த ஸஹஜ ஸ்நோக்கத்துடன் நெருங்கினார்கள். இந்த ப்ரேமை பாசத்தின் காரணத்தைக் கேட்க ஆரம்பித்தார்கள். (585)

அடிக்கடி அடிக்கடி அந்த புண்யவதி சீதையின் கால்களை ஸ்பர்சம் செய்து, தலையில் ஒத்திக்கொண்டு, அதிகோமளமான வசனங்களைப்பேசி, அவளைப் பேசவைத்தார்கள், "ராஜகுமாரி, நாங்கள் அதிவினயத்துடன் கேட்கிறோம். எங்கள் நிவேதனத் தைக் கேளு அம்மா" ஆனால், மேலே பேசமுடியாதபடி ஸ்திரி ஸ்வபாவமாகிற வெட்கத்தால் கவரப்பட்டு, மேலே பயத்தால் ஒன்றும் கேட்க முடியாதபடி ஆனார்கள். (586)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, மஹாலக்ஷ்மி சீதா, ஹனுமாரால் சேவிக்கப்பட்ட லக்ஷ்மண ராமா, சீதாபராயணனாக விருக்கும் ராமா, நீ எவ்விதம் சர்வசக்திமானாகவிருந்தும் ஒன்றும் தெரி யாதவனாக நஷ்ட மனத்தை உடையவனாக நடித்தாய்? ஹனுமார் எவ்விதம் கிருதகிருத்யனாக ராவணனுடைய பலத்தையும் சாக ரத்தின் பரந்த விஸ்தீர்ணவிக்னத்தையும் ராம பலத்தினால் அழித் தாரோ, அதுபோல நான் ஆசார்ய பிரபாவத்தாலும், இருள் சூழ்ந்து காம க்ரோதம் திருஷ்ணை லோபம் மாத்ஸர்யம் இவை களால் அழுங்கிக் கிடந்து வெளிவரத் தெரியாமல் தெய்வ கடா க்ஷத்தால் நிருகன் கிருஷ்ண ஸ்பர்சத்தினால் கிணற்றிலிருந்து தூக்கப்பட்டானோ, அதுபோல தெய்வ பலத்தை என் விடு தலைக்கு விரும்புகிறேன். சீதாபதிராமா, நீங்கள் தியாகராஜ

ருடைய பக்தியால் கவரப்பட்டு, அவரிடம் என்ன சொன்னுய் தெரியுமா? "நீ ஏன் கவலைப்படுகிருய். நான்தான் உன்னை க்ஷமித்துவிட்டேன். தியாகராஜா, நான் இப்போது அனுபவிக் கிற சுகமெல்லாம் உன்னுடையதுதானே" என்று சொல்லி, உன் பிரிய பரதனைக் கூப்பட்டு, "நம் தியாகராஜன்" ஏன் ஜன்மம் எடுத்தேன் என்று கதறுகிருன். மாரகோடிலாவண்யம் படைத்த ஸ்ரீராமனுடைய சீதாராமனுடைய அழகைக் காணுமல், முத்யா லங்காரம் கொண்ட மார்பு பிரதேசங்களைக் கொண்ட அந்த புருஷ ஸ்திரி பிம்பங்களை, சிவனை விட்டுப் பிரியாத சிவஜாயை என்று சொல்லப்படும் மீனுக்ஷி சுந்தரேஸ்வரர்போல இணை ந்திருக்கும் ராஜதம்பதிகளைப் பாராமல், இந்த ஸங்கீதலோலனுன தியாகராஜன் என் பட்டாபிஷேக அழகுகளைப் பார்த்து ஆனந் திக்க விரும்புகிருன். நீ எப்படி பாதுகைகளை எடுத்துக்கொண்டு ஆனந்தித்தாயோ, அதுபோல ஜபதபம் கொண்டு, ஆராதித்த தியாகராஜன், என்னைக்கண்டு ஆனந்தமடைகிருன். கிருத கிருத்யனுன ஆஞ்சநேயர் வேகமாக எவ்விதம் என் ஹ்ருதயத் தைத் தழுவிக்கொண்டாரோ, அதுபோல என்னை கட்டித் தழுவி முத்தமிட்டு, ஸாகரஜலம்போல விசாலமானதும் அன்பு மயமான தும் பிரேமை கண்ணீர்களால் இனிப்பான கீதமாலையால் அர்ச் சித்து ஆனந்தப்படவிரும்புகிருன். நீ சாமரம் வீசுவதைக் கொஞ்சம் நிறுத்து" என்று என்ன ஹ்ருதயத்தால் சொன்னுய்? இந்தப் பெண் சீதையிருக்கிருளே, அத்ரி ஆஸ்ரமத்தில் "நல்ல வனுகிலும் கெட்டவனுகிலும் பெண்டிற்கு தெய்வம் பர்த்தாவே," என்று வேறு சொல்லிவிட்டு வந்திருக்கிருள். இப்படி துதிக்கப் பட்டு, வெட்கப்பட்டு, ஒதுங்கி நிற்கும் தியாகராஜனைப்போல, சீதாராமா, நீங்களே உங்கள்மீது கொண்ட அனுராகத்தாலே நான் எப்போதாவது குணக்கேட்டை அடைந்தபோதிலும், "நாம் அவைகளைக் கண்டுகொள்ளோம். எங்களுடைய குணும் ருதோததியாகிய கல்யாணகுண விசேஷங்களால், குணஹீனனை யும் விரூபனையும், எம் பக்கம் இருக்கும் இருப்பைக் காண் போம்" என்று சொன்னுயே," என்று ஏசிக் கேட்கிருன் தியாக ராஜன். ஆஞ்சநேயர்போல குருதெய்வ விஷயத்தில் தாஸனுன அவர் ராம கைங்கர்யத்தில் அசோகவனத்தை அழித்து கிருத கிருத்யனுக ஆனதை உதாரணமாகக்கொண்டு எங்களிடம் தயை காட்டி, உங்கள் ஸ்வரூபஸ்வபாவ அழகுகளை காண்பிக்க மாட்டாயா? பாஹ்ய விஷயங்களில் செலுத்தும் என் எண்ணங் களை தூரவிலக்கி, அந்தர்முகனுக ஏகமயமாக, தன்மாத்திரமாகி,

ஐயா, துருவன் லக்ஷ்மி ஸம்பன்னனை நாராயணனை சப்தரிஷிகள், நாரதர் வாக்கினால் அடைந்தானே, அதுபோல பரதன், தியாகராஜர், சீதை, ஹனுமார், ராமானுஜன் ஆகியோர்களின் வழியை பின்பற்றி உன்னை ஜபித்து தபித்து, ஆராதித்து ஆனந்திக்கிறேன். தயை செய்யப்பா. என் பர்த்தாவே, ஸ்வாமி, ஈஸ்வரரே, பிரபுவே, லக்ஷ்மீவானே, ஸ்ரீதரனே.]

"தாயே, எங்களுடைய வினயஹீனமான பேச்சுக்களையும் குணஹீனமான நடத்தைகளையும் ஈஸ்வரி, மன்னித்துவிடு. நாங்கள் நாகரிகம் ஒன்றும் தெரியாத கிராமத்து ஜனங்கள். எது நல்லது, எது கெட்டது என்கிற விவேகம் கிடையாது. உன்னுடன் கூடவிருக்கும் இந்த இரு ராஜ குமாரர்கள் அதிலாவண்யமாய் சரீரம் படைத்தவர்களாக விருக்கிறார்கள். மரகதமணி வர்ணம்போல ஒருவர் (ராமர்) இருக்கிறார்; இன்னொருவர் தப்த ஜாம்பூனதயம் என்கிறபடி ஸ்புடம் செய்யப்பட்ட சிகப்பு தங்க ரேக்கைப்போல பக்கத்தில் நின்றுகொண்டிருக்கிறார். இந்த சோபைகள் கொண்ட பிம்பங்களைச் சேர்த்துப் பார்த்தால் ஒருவர் பசுமை நிரம்பின ஹரிதாப நீலமேனியுடனும், இன்னொருவர் ஸ்வர்ணகாந்தியோடும் விளங்கி, ஸ்வர்ணத்துக்கே அந்த தேஜஸ்ஸைக் கொடுத்த தேஜோவ்ருஷர்களாகவும், தங்களுடைய காந்தவடிவழகினாலும் குண அழகாலும், மேன்மை, சௌலப்யம் அன்பர்களைக் காக்கும் விஷயத்தில் சக்தியை மிகுதியாக உபயோகிக்கும் கருணாரஸ ஸம்பூர்ணதரர்களாகவும், சரணம் அடைந்தவர்களைக் காப்பாற்றும் பரமபுருஷர்களாக இருக்கிறதுபோல விருக்கிறார்களே அம்மா." (587)

"ஒருவர் ஸ்யாமள நிறம்; மற்றொருவர் அருண சூரியன் போல சிகப்பாகவுமிருக்கிறார். பால்ய அவஸ்தை கொண்ட இரு ராஜகுமாரர்கள். உபமானம் சொல்ல முடியாததும் சுபமானதும் பரம சுந்தரேஸ்வரர்களாகவுமிருக்கிறார்கள். சரத் பூர்ணிமாவுக்கு ஒப்பமுகமண்டலங்கள். சரத்ருதுவில் புஷ்பித்து விகஸிக்கும் ஸரோஜ புஷ்பத்தின் தளங்கள் போல கமல நயனங்கள், புஷ்கராக்ஷங்கள், அரவிந்த லோசனங்கள், கமலபத்ராக்ஷங்கள் கொண்ட (தியாகராஜர் ஸேவித்த வரபக்தஸுபர்ண வாஹனர் போல,) ப்ரேமை ரஸம் கொண்ட இரு குமாரர்களை நாங்கள் தர்சனம் செய்கிறோம்." (588)

## மாஸபாராயணம் பதினுருவது நிறுத்தம்
## நவாஹபாராயணம் நான்காவது நிறுத்தம்

"எங்கள் பிரிய தர்சனி, பிரியம்வதே, கோடிக் கணக்கான காமதேவர்களை ஆகர்ஷணம் செய்யும் காந்த சக்தி படைத்த பிம்ப மூர்த்திகள். இவர்கள் யார் அம்மா? இவ்வளவு தூரம் நாங்கள் மனத்தைப் பறிகொடுத்து தவிக்கிற எங்களுக்கு இவர்களைப் பற்றி தெரிந்து கொள்ளவேண்டும்?" என்று சொன்னுர்கள். அந்த பரம சுந்தரியான சீதை, அதிவாத்ஸல்யத் துடன் அதி சுந்தரமான வாணியினுல் சொல்லப்பட்ட மஞ்சுள மான வாக்யங்களைக் கேட்டாள். மந்தஸ்மிதம் கொண்டாள். கல்யாண சுந்தர காருண்ய ராமனை, சரணுகத வத்ஸலர்களை மனஸாரக்காக்கும் பரிபூர்ண ராமனை ஒரு க்ஷணம் நினைத்துப் பார்த்தாள். (589)

உத்தம ஹிரண்ய பொன் போல வரவர்ண, வர்ணனை செய்ய முடியாத அழகு பெற்று பொன் பிம்பம் போலவிருக்கும் சீதை, அந்த அனுத்தமமான அழகு ஸ்ரீகளைப் பெற்ற இரு ராஜகுமாரர் களைக் கண்டாள். அதிசங்கோசமடைந்தாள். லஜ்ஜையினுல் தலையைக் குனிந்து கொண்டு பூமியைப் பார்க்கத் துடங்கினுள். கிராமத்து ஜனங்களின் துக்கங்களையும் பச்சாதாபங்களையும் போக்க நினைக்கும் சீதை, ஹரிணி, பொன் மான் குட்டியின் அழகானதும், சஞ்சலமானதும் காருண்யத்தால் துடிக்கும் நயனங்களுடனும், மதுர வசனங்களைப் பொழியும் கோகில குஞ்சு போல அதியௌவனமுள்ள சீதை காருண்ய பாராவார மாகிற வசனங்களை வர்ஷிக்க ஆரம்பித்தாள். (590)

[தியானம்

ஹே ராமா சீதா, மார்க்கண்டேயரால் பூஜிக்கப்பட்ட நாராயணு, நாரதரால் ஸ்துதி செய்யப்பட்ட மஹாலக்ஷ்மியுடன் கூடிய நாராயணு, எந்த மனிதர்கள் வேலைக்காரர்களிடம் கோப மில்லாதவர்களாக விருக்கிருர்களோ, அவர்கள் மிக்க கடினமான துக்கங்களை தாண்டுகிருர்கள். எவர்கள் பிறந்தது முதல் மது மாம்ஸம், பெண்டிர்கள், கள் ஆகியவைகளை விலக்குகிருர்களோ, அவர்கள் கடினமான துன்பங்களை தாண்டுகிருர்கள். பீஷ்மரால் உபதேசிக்கப்பட்ட தர்மபுத்ரர் மன அடக்கத்தினுலும், நாராயண பரனுக விருந்தபடியால் மிக்க பொறுக்க முடியாத துக்கத்தை தாண்டினுர். சீதை பதிவ்ரதா தர்மத்தை அனுசரித்து பெரும்

துக்கத்தைத் தாண்டினுள். ராமா, நீயும் மஹத்தான துக்கங்களை எவ்விதம் தாண்டினுய் தெரியுமா? ராஜ்யமாகிற பொருளாசையை விட்டு, முனிவேஷம் தரித்து ஆசார சீலனுகி, பெரும் ஞானத்தை அத்ரி அகஸ்திய வஸிஷ்டர் விஸ்வாமித்ரர் போன்ற பிரும்ம ஞானிகளிடம் கல்வி கேள்வி பயின்று, அகார்யங்களில் வெட்கப்பட்டு, தமம், சமம், மன அடக்கம் ஆகிய குணங்களால் பிராம்மண வாழ்க்கையைக் கடைப்பிடித்து, ஒழுக்கமாகவிருந்து, ஸர்வசக்தி மானுகவும், சௌலப்யத்துடனும், பாரபக்ஷமின்றி பழகி, பித்ருக்களேயும் தேவர்களேயும் திருப்தி செய்து, ரகுகுலத்தை சீதையின் பதிவ்ரதா தர்மத்தினுல் கரை யேற்றினுய். ஸாதுக்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட ஸ்ரீராமா, சீதா, தர்மத்தை வ்யவஸ்தை செய்த புண்யவான்களே, உங்களே நான் எல்லாவிதத்திலும் பூஜை செய்யவேண்டும். எனக்கும், விஸ்வாவஸுக்கும், பரத்வாஜருக்கும் சொல்லிய இருபத்தாருவது பொருளாகிய புருஷோத்தமரை, ஸ்ரீமந் நாராயணரைப்பற்றி உபதேசித்த யாக்ஞ்ய வல்கியரைக் கொண்டு, தர்ம மூர்த்திகளே, நான் சரணமடைகிறேன். பக்தர்களின் துன்பத்தை அபஹரிக்கும் கோவிந்தா, ஸுரபி, மார்த்தாண்டரால் பூஜிக்கப்பட்ட நாராயணு, கோமதி ரோஹிணி மந்திரங்களின் உட்புதைந்திருக்கும் ஸ்ரீராஜகோபாலா, கிருஷ்ணு, தாமரை இதழ்கள் போல கண்களே உடைய ஸ்ரீகிருஷ்ணு, அதிதி புத்ரனுன இந்திரனுலும், பசுபதியினுலும், பிராம்மண தெய்வங்களாகிற சரஸ்வதி, பிரும்ம தேவராலும் பூஜிக்கப்பட்ட ஸ்ரீராமா, உமையாகிற கௌரியினுல் போற்றப்பட்ட சீதா, உங்கள் தயவால் விஸ்வா விஸ்வம், புருஷன், பிரக்ருதி, மித்திரன் வருணன் ஞானம் ஞேயம், ஞன் என்று சொல்லப்படும் அறிகின்றவன் அஜ்ஞன் (அறியாதவன்), கம் என்கிற ஆனந்தம், தபஸ் என்கிற ஆலோசனே, அதபஸ் என்கிற ஆலோசியாமை, ஸூர்யாதி ஸூர்யர்கள், வித்யா வித்யைகள், அறியக் கூடியது அறியக் கூடாதது என்கிற வேத்யா வேத்யம், சலம் அசலம், நாசமற்ற பொருளான அவ்யயம், குறைவற்ற நாராயணராகிய அக்ஷரம் க்ஷேமம்யம் என்கிற தத்வ விஷயங்கள் கொண்ட மஹாலக்ஷ்மி இவைகளே நான் அறிகிறேன். நாராயணு, என்னிடம் கிருபை செய்யும். ஹே பிரும்ம தேவரே, மஹேஸ்வரரே, இந்திரனே, விஷ்ணுவே, காருண்யஸிந்தோ, பிராம்மணப்ரியா, என் குரு நாதர்களான ஜைகீஷவ்யர், அஸிதர், தேவலர், பிரும்மரிஷியான பராசரர், புத்திமானுகிய வார்ஷகண்யர், ஸந்யாசியாகிற பஞ்சசிகர், கபிலர், சுகர், கௌதமர், ஆரிஷ்டிஸேனர், மஹாத்மா

வான கர்க்கர், நாரதர், ஆஸுரி, புத்திமானுன புலஸ்தியர், ஸநத் குமாரர், மஹாத்மாவான சுக்ரர், காஸ்யபர், பிருஹஸ்பதி, மார்க் கண்டேயர், பிருகு, பீஷ்மர், தர்மபுத்ரர், வதான்யர், அஷ்டா வக்ரர், வடதிசை, கிருதாசி, தேவர்கள், பித்ருக்கள், அசுரர்கள், விஸ்வ ரூபரான ருத்ரர், யாக்ஞ்யவல்கியர், விஸ்வாவஸ் என்பவர் களை நமஸ்கரித்து அவர்களுடன் உதவியால், புருஷோத்தமா, வைகுண்டவாசி, ராம நாராயணு, சீதா கௌரி உங்களை ஆஸ்ரயிக்கிறேன். அனுக்ரஹம் செய்யவேண்டும். எனக்கு பார்க் கிறதும் பாராததும், க்ஷேமத்திற்கு ஹிதமான தத்வத்தைப் பாராததும், ஜடமற்றதான சுத்தமும், ஜடத்தின் கூடிய இருபத்தைந்தாவது விஷயமாகிற ஜீவன் என்கிற தத்வத்தையும், அதற்கு மேல்பட்டவனுன பரனும், நாராயணரும், இருபத் தாருவது விஷயமாகிய தத்வத்தையும் தயையுடன் சொல் அப்பா, அம்மா சரணம். அதனுல் நான் க்ஷேம ஸ்ரீயை அடைய வேண்டும்.]

ஜனக புத்ரியான சீதை சொல்ல ஆரம்பித்தாள், "ஸஹஜ ஸ்வபாவத்துடனும், அழகுடனும், சுபலக்ஷணங்களுடன் கூடிய அந்த மனிதர்களைப் பற்றி சொல்கிறேன். சாவதானமாக கேளுங்கள். சிகப்பு நிறமுள்ள சரீரம் உள்ளவரின் நாமம் லக்ஷ்மணன். அவர் என்னுடைய மைத்துனன்." அதன் பிறகு அதிப்ரேமையுடன் கலந்த லஜ்ஜையுடன் தன் முகத்தை தன் மேலாடையால் போத்திக் கொண்டு, குழிவிழும் கன்னங்களின் பளபளப்பை எவ்விதம் சந்திரமுக மண்டலத்தை மேகங்கள் மறைப்பது போல, மறைத்துக் கொண்டு தன் கணவரான ஸ்ரீராமச்சந்திரனை அதிபிரியதம வாத்ஸல்ய அன்புடன் நோக்கி, தன் புருவங்களை வில்போல வளைத்து, (591)

கஞ்சனபக்ஷியின் அழகான நேத்ர ஜாடைகளால் அடை யாளம் செய்யப்பட்ட சீதாதேவி, (என் தர்ம தேவதே, புண்ய தேவதை, சீலகௌரி, ஜகஜ்ஜனனி, ஜகதம்பா,) தன்னுடைய பரமாகிற ஸ்ரீராமச்சந்திரனை தன்பதி தெய்வமாகக் காட்டினுள். ஹரி வக்ஷஸ் தலையான லக்ஷ்மி ஹரி பகவானின் குணங்களைக் கண்டு அம்ருதமதனத்தின் சமயம் எவ்விதம் மாலையிட்டாளோ, அதுபோல தன்பதியை பரிவுடன் சுட்டிக் காட்டினுள். இதை அவர்கள் புரிந்து கொண்டார்கள். கிராமத்து ஜனங்கள் மஹா தர்ம துரந்தரர்கள். ஸகல ஜனங்களும் யுவதிகளும் ஆனந்தமடைந்தார்கள். பரம தரித்திரன் கங்காளங்கள் நிறைய பொக்கிஷங்களை அடைவது போலவும், சிஷ்யன் குருவினிடம்

இருபத்தைந்து ராசிக் கூட்டங்களின் சேர்க்கையாகிற ஜீவதத்வத்திற்கு பரமாகவிருக்கிற நாராயண தத்வமாகிற இருபத்தாருவது தத்வத்தைத் தெரிந்து கொண்டு சோபையை அடைவதுபோல, ஸந்தோஷமடைந்தார்கள். அவர்கள் பரம க்ஷேமத்தையும் அடைந்தார்கள். (592)

மஹாத்மாக்களான அந்த ஸ்திரிகள் அதி பிரேமையுடன் சீதையின் கால்களில் சுக்குத பிரணமம் செய்து, பிரதக்ஷிணம் செய்து பல விதங்களால் சீதையை ஆனந்தப்படுத்தி ஸ்துதி செய்தார்கள். அவர்களின் ஸ்துதி ஸ்வஸ்தி வசனங்களைக் கேளுங்கள். "எவ்வளவு காலம் பூமிதேவி ஆதிசேஷன் தலையில் வீற்றிருக்கிருளோ, அது பரியந்தம், ஏஜனககுமாரி, உன்னுடைய புகழ் சௌபாக்யங்கள் காதுக்கும் மனத்திற்கும் இனிமையாக சர்வ காலங்களிலும் விளங்கட்டும்." (593)

"பார்வதிக்குச் சமமான பதிவ்ரதையாகிற நீ, பதிப்ரீதியை ஸர்வ காலங்களிலும் ஸர்வ அவஸ்தைகளிலும் அடையக்கடவாய். எங்களுடைய தேவியே, நீ எங்களிடம் தயை செய்யவேண்டும். அஞ்சலி பந்தத்துடன் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறோம். ப்ரியதர்சினி, உன்னிடம் பக்தி செய்யும் எங்கள் மனங்களை அபஹரிக்கும் புருஷோத்தமி, கடினமான துன்பங்களை அனுபவிக்கும் எங்களுக்கு உன்னுடைய சுப தர்சனத்தையும் அதன் பலனுகிற துக்க நாசத்தையும் தயையுடன் கொடு. நீ வனவாசம் முடிந்த பின்பு திரும்பி வரும் சமயம் இதே வழியில் வந்து, எங்களை உன் கடாக்ஷ வீக்ஷண்யத்தால் தயை செய்து அனுக்ரஹிக்க வேண்டும். [மஹாலக்ஷ்மி,] தாயே, உன் கிருபை எங்களிடம் பரிபூர்ணமாக இருக்கவேண்டும்." (594)

[தியானம்

ஹே ராம நாராயணு, சீதா, ராமானுஜா, உங்களை என் ஸ்வரூப பிரயுக்தமான அடிமைத்தனத்தால் சரணம் அடைகிறேன். அர்ஜுனன் பரம உத்தமானஞானத்தினுல் உங்களை ஏகமாகவரித்து, உன்னை தன் சாரதியாக ஆக்கிக்கொண்டான். அவனிடம் நீ விஸ்வதிருக் என்கிற பெயரை நிரூபணம் செய்வது போல விஸ்வரூபத்தைக் காட்டினுய். உன்னையே அவன் ஸர்வம், தேவதேவன் என்று சொல்லிக் கொண்டான். நாரதர் அவனை நர ரிஷி என்று பீஷ்மருக்கு சொல்லியிருக்கிறபடியால் நாராயண ஆஸ்ரிதனுகக் கண்டுகொண்டு, எவ்விதம் உமா புத்ரனை விஷ்வக்ஸேனர், கண நாயகர், என் மன நாயகர், பத்ரிகாஸ்ர

மத்தில் நர நாராயண ரிஷிகளை ஆஸ்ரயத்தது போலே, நான் மஹாலக்ஷ்மி சகிதம் இருக்கும் ராமனை சரணமடைந்து ஆனந்த மடைகிறேன். கடைசி காலத்தில் கோவிந்தனுக்காக மனத்திலும் கர்மத்திலும் தேய்த்து, நாரரயணனுடைய வைகுண்ட ஸம்பந்தம் பெற ஆசையுள்ள கங்கா புத்ரன் அர்ஜுனனை எவ்விதம் நாடி ஸநாதனமான கிருஷ்ணரை அடைந்தாரோ, கிருஷ்ணரை நமஸ்கரித்தாரோ, கிருஷ்ணவ்ரதனாக கிருஷ்ணனை அனுஸ்மரனை செய்தாரோ, எப்பேற்பட்ட ஞான உத்தமமான வைஷ்ணவ தர்மத்தையும் பாஞ்சராத்திர ஸம்ஹிதை முதலிய சாஸ்திரங் களின் உட்கருத்தை அறிந்த பீஷ்மர், "நாராயணா, உன்னையே பரப்பிரும்மம், பரம்தப: பரோதேவ ஸர்வம் நாராயண: ஸதா" என்று தன் மனம் கர்மம் ஆகியவைகளை "ஜனார்த்தன: ப்ரீயதாம்" என்று எவ்விதம் பீஷ்மர் வாழ்ந்து, கடைசியில், ராமா, நாராயணா, உன் தேக சம்பந்தத்தைப் பெற கங்கையையும், அர்ஜுனனையும் நாரதரை யும் முன்னிட்டுக் கொண்டு கிருஷ்ணனை அடைந்தார். என் பிரியசீதே, ஜனகநந்தினி, என்தாயே, நீயும் மஹா பதிவ்ரதா தர்மத்துடன், ராமனை நிமித்த காரணமாக்க வேண்டுமென்றும், பகவானுடைய சத்ய ஸங்கல்ப்பத்திற்குப் பங்கம் வரப்படாது என்று என்ன தயையுடன் சிறுமைப்படுத்திக்கொண்டாயே. இந்த ரஹஸ்யத்தை யுணர்ந்த மஹாத்மாவான ஆஞ்சநேயர் எனக்கு சொல்லியிருக்கிறரே. அதுமாத்திரமா? தர்மபுத்ரர் ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து, பீஷ்மர் சரதல் பத்தில் விழுவதற்கு முன்பு என்ன சொன்னர் என்பதை ஞாபகப்படுத்திக்கொள். "மாதவா, உமது அருளால் வெற்றி; உமது கோபத்தால் தோல்வி, பக்தர்களுக்கு ரக்ஷகம் செய்யும் கேசவரே," க்ஷேமத் தைக் கொடுக்கும் கிருஷ்ணரே, மஹாத்மாவாகிய உம்முடைய சோதனையிலிருந்து தர்மபுத்ரர் தப்பினதுபோல நான் தப்பவேண் டும். ராமா, விபீஷணர் ஆஞ்சநேயர் அர்ஜுனர் பீஷ்மர் தர்மர் போன்ற ஸத்புருஷர்களால் ஆராதிக்கப்பட்ட நாராயணா, சபரி முதலிய ஸாதுக்களால் பூஜிக்கப்படும் ராம லக்ஷ்மணா, எனக்கு பாடம் கற்பித்த சீதையின் உன்மீதுகொண்ட பிராவாண்யம், அதற்குக் காரணமாகிற ஞான உத்தமமான சேஷசேஷி பாவ மாகிற ஸம்பந்தம், அந்த ஸம்பந்த குணங்களால் வராமல் ஆத்மாவினுடைய ஸத்தையே பிடித்து, அந்த ஸத்தா பிரயுக்த மாகிற ஸம்பந்தம் பகவத் அனுபவம், அந்த பகவத் அனுபவம் ஒரு க்ஷணமுமில்லாத வாழ்வு, என் பரம ஆசார்யர்களான

ராமானுஜ ஆழ்வார்கள் மூலம் வந்த அனுபவம், நீரைவிட்டுப் பிரிந்த மீன்போல, ஸத்தை அழியும்படி பரமபக்தி, பீஷ்மருக்கும், ஆஞ்சநேயருக்கும், சீதைக்கும், அர்ஜுனனுக்கும், தியாகராஜ மஹானுக்கும், துளசிதாஸருக்கும், வால்மீகிக்கும், நாரதர், கம்பர், தர்மருக்கும் நீ கொடுத்தது மாதிரி, ஐயா, சீதையை முன்னிட்டு நமஸ்கரிக்கும் எனக்குக் கொடுக்கமாட்டாயா? விபீஷணு, லக்ஷ்மணு, என்னை காருண்ய புத்தியால் அனுகிரஹிக்கமாட்டாயா? விஷ்வக்ஸேனு தயைசெய்.]

"அம்மா, தாயே, நீதான் எங்களுக்கு ஸர்வம். எங்களை உன் தாஸர்களாக நினைத்துக்கொள். (அம்மா, ரங்கநாயகி, எங்களுக்கு உன் ஸ்வரூப ஸ்வபாவ பிரவிருத்தியாகிறதும் கருணை ரஸத்துடன் கூடிய நிஜதாஸர்களாகிய எங்களுக்கு, அதிப்ரேமை, ஸத்தையே பிடித்து, உன் சம்பந்தத்தை உணர்ந்தத்தை உணர்ந்து, அன்புமீதூர்ந்து, உன்னை விட்டு க்ஷணபரியந்தம் அனுபவியாமலிருப்பதை நீரைவிட்டு வாழும் மீன் குஞ்சுபோல, எங்களுக்கு விதிக்காதே. ஸத்யசங்கல்பனுகிற பகவானுக்கு மனோனுகூலையாகிற நீ எங்களுக்கு கருணை செய். பரமபக்தி ஏற்பட்டு, பகவத்ஸம்பந்தம், பகவத் அனுபவம், பகவத் பாகவத கைங்கர்யம், பகவத் விஷயத்தில் ஸ்வப்ரவிருத்தி, ஆகியவைகளைக் கொடு, அம்மா என்று ஆழ்வார்கள் ரங்க நாயகியினிடம் கூடிய ரங்கநாதனிடம் கதறியதுபோல) அந்த கிராமத்து ஸ்திரி புருஷர்கள் கதறினுர்கள். அந்த மஹானு பாவையான சீதை மதுரமான வசனங்களைக் கேட்டாள். பெருமிதப்பட்டாள். முதிதமனத்துடன் அனுக்ரஹித்தாள். அவளுடைய குளிர்ந்த அம்ருதகடாக்ஷம் (சரதல்பத்தில் படுத் திருக்கும் பீஷ்மரை அர்ஜுனன் தாகசாந்திபண்ணி திருப்தி செய்ததுபோல) கங்காநதிக்கரையில் உள்ள குமுதினி புஷ்பத் திற்கு சந்திரனுடைய குளிர்ந்த கிரணங்கள் ஹிதத்தைச் செய்து, அந்த புஷ்பத்திற்கு புஷ்டியைத்தந்து, ஸந்துஷ்டியைக் கொடுப் பதுபோல, அந்த புஷ்பம் பகவத் அனுபவமாகிற விகஸிப்பதை அடையவிக்கும் படி போலவிருந்தது. (595)

அந்த சமயம் ரகுவரனுகிற லக்ஷ்மணன் ஸ்ரீராமனுக்கு அந்த ஜனங்களின்மீது திருஷ்டி நோக்கும் கடாக்ஷ எண்ணத்துடன் ராமன் முன்பு அவர்களை மார்க்கவழி கேட்டார்கள். இதைக் கேட்டு அவர்கள் பகவத்ஸம்பந்தம் க்ஷணகாலம் பிரிய மன மில்லாதவர்களாக பரம துக்கத்தை அனுபவித்தார்கள். ஸ்திரி புருஷர்கள் யாவரும் சோகத்தை அடைந்தார்கள். உடனே

ஏற்படப்போகும் வியோகத்தினுலும், அதன் பயத்தாலும், அந்த பயம் ஏற்படுமுன் நேரே நின்று சாக்ஷாத்காரம் செய்யும் ஆதிபுருஷனுடைய தர்சனத்தால் அந்த பக்தர்கள் யாவரும் [ஆழ்வாராதிகள்போல] பிரபுல்ல லோசனங்களுடன் புளகாங்கித மனம் சரீரம் உள்ளவர்களாக்கி, பகவானிடம் இரண்டறக் கலந்தார்கள். நேத்ரங்களிலிருந்து ப்ரேமைக் கண்ணீர்கள் உதிர்ந்து கொண்ட வண்ணமிருந்தன. (596)

அவர்களுடைய ஆனந்தம் குறைய ஆரம்பித்து, உத்ஸாஹம் குன்றினவர்களாக, தங்களுடைய வினைக்குற்றங்களை நினைப்பவர்களாகி, பிரும்மதேவரை வேண்டினுர்கள். விதியை நொந்து, விதாதாவை கடிந்தார்கள். பகவானுடைய கிருபையை வேண்டினுர்கள். பரமபக்தியை நாடினுர்கள். கர்மகதி ரொம்ப க்ரூர ஸ்வபாவமுள்ளதன்ருே. அதனுல் அவைகளில் தேர்ச்சியடைந்த அந்த தீரர்கள் கர்மத்தின் முடிவாகிய ஞானமாகிற உத்தம வழியை அடைந்து, அதன் பிரவிருத்தியாகிற பக்தியையும் தாண்டி, அதனுல் பகவத் அனுபவம் பெற்று, அதன் பிறகு ஸ்வரூப பிராப்தங்களாகிறதும் சேஷி அனுபவமாகிறதும், ஸ்வபிரவிருத்தியாகிறதுமான ஸத்ஸம்ப்ரதாய ஸாரஸங்கிரஹத்தை அடைந்தார்கள். அதனுல் திருப்தி உள்ளம் பெற்றவர்களாக அந்த பக்தர்கள் ஸ்ரீராம சீதை லக்ஷ்மணன் ஆகியவர்களுக்கு பரம க்ஷேமத்தை விளைவிக்கும் பாதைகளை விளக்கிக் காட்டினுர்கள். (597)

லக்ஷ்மணன் ஜானகி சகிதம் ரகுநாதன் மேலே புறப்பட ஆரம்பித்தார். எல்லா ஜனங்களையும் ஹிதமான வார்த்தைகளால் தேற்றி திருப்பி அனுப்பித்தார். (விநயகர் எவ்விதம் ஹரிசரணங்களை தன் மனதில் தரித்துக்கொண்டு ஸதா ஆனந்தமடைகிருரோ, அதுபோல) ஸ்ரீராமர் அவர்களுடைய மனங்களை தன் மார்பில் தரித்து, காந்த சக்தியுடன் அவர்களை இழுத்துக் கொண்டு, மேலே சென்ருர். [பிருகு பதம் அணிந்த பிராம்மண ப்ரியரான நாராயணு, உன்னை மஹாலக்ஷ்மியை முன்னிட்டும் அந்த பக்தகோடிகளையும் முன்னிட்டு சரணமடைகிறேன்.] (598)

[தியானம்

ஹே ராமா சீதா, லக்ஷ்மணு, கிருஷ்ணு, பீபத்ஸு, ஜிஷ்ணுவே, லக்ஷ்மணனுல் பூஜிக்கப்பட்ட புருஷோத்தமா, எல்லாப் பிராணிகளிலும் அந்தர்யாமியாகவிருக்கும் உம்மை நான் நமஸ்கரிக்கிறேன். புரந்தரதாஸ், அரஜுனன், தியாகராஜர்

போற்றும் கருணை கவசம் உள்ள மஹானுபாவரை ஸ்துதி செய்கிறேன். தர்மபுத்ரர், விதுரர், திரௌபதி, தௌம்யர், போற்றும் அக்ஷர மென்கிற முக்தாத்மாவாகிய உம் இயற்கை ரூபத்தை தியானித்து நமஸ்கரிக்கிறேன். வாஸுதேவா, எல்லா பிராணிகளுக்கும் க்ஷரம் என்று சொல்லப்படும் சராசரங்களைனத் துக்கும் மேலாக விளங்கும் ஈஸ்வரரே, நீர் அல்லவோ நாராயணன், பிரளய பயோதரன், நீர் அல்லவோ கேசவத்ருத பத்து அவதாரங்களை எடுத்து, தேவர்களால் புகழப்படும் பரமாத்மா, க்ஷரமான பிரபஞ்சத்தை அதிகிரமத்திருப்பதினாலும் அக்ஷரமான முக்தாத்மாக்களைக் காட்டிலும், உத்தமனாயிருப்ப தாலும், பத்தர்கள் என்று சொல்லப்படும் புருஷர்களைக் காட்டிலும் உத்தம புருஷராயிருப்பதாலும், உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென்று பிரசித்திபெற்று இருக்கிறீர். ஹே, விஷ்ணோ, உம்மை லக்ஷ்மணனையும் பரதனையும் ஆஞ்சநேயரையும் வால்மீகியையும் நாரதரையும் பிரஹ்லாதனும், பிரும்மாவும் இந்திரனும், மஹேஸ்வரரும் உமையாகிய அம்பிகை யும், அர்ஜுனனுடைய ஆசார்யரும் பரத்வாஜ புத்ரருமான துரோணரும், சுக்ரரும், குபேரனும், யமனும், வருணனும், கிருபரும், அக்னியும், தர்மதேவதையும், லக்ஷ்மியும், அவள் நாதனை ஸ்ரீ கிருஷ்ணனும், பிநாகம் என்கிற வில்லைக்கொண்ட பரமசிவனையும், மாருதியை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். துளசிதாஸரால் மானஸ ஸரோவரில் ஹம்ஸ ரூபியாக பிரதக்ஷணம் செய்யப்பட்ட ஸ்ரீராமா, ஸாகேத ராமா, வாரணாசி ராமா, பிரயாகை க்ஷேத்திரத்தில் பரத்வாஜரால் பூஜிக்கப்பட்ட சீதாராமா லக்ஷ்மணா, பத்ரம், பலம், தோயம், யோமே பக்த்யா பிரயச்சதி, தத்ஹம் பக்தியா உபஹ்ருதம் அச்நாமி பிரிய தாத்மனః என்கிறபடி அல்ப ஸந்துஷ்டனாகிற எம்பெருமானே, உம்மை ராமானுஜன் மதிமயக்கமின்றி புருஷோத்தமன் என்று அறிந்து, ஆராதித்து கைங்கர்ய லக்ஷ்மியை அடைந்து, அதிரஹஸ்யமான சாஸ்திர ஞானத்தையும் தேகசம்பந்தத்துடன் பெற்ற வைஷ்ணவ குருவாக ஆனார். உம்முடைய கிருபையால் அல்லவோ நான் செய்யவேண்டிய கார்யங்களையும் செய்து கிருதகிருத்யனாக ஆகிறேன். ஹே ராமா, சீதாபதி கிருபை செய்.]

அதன் பிறகு நரநாரிகள் அதிக பச்சாதாபத்தை அடைந் தார்கள். தங்கள் மனதில் க்ரூரமான கர்ம கதியையும், க்ஷர அக்ஷர ஸ்வரூபங்களாகிய பக்தர்களைக்காட்டிலும் மேலாக

விருக்கும் பரமாத்மா, ஸர்வசாக்ஷியும், ஒன்றிலும் பற்றப்படாத வரும் புருஷோத்தமருடைய சத்ய சங்கல்பங்களை நினைத்துக் கொண்டு, தங்களுக்குள் பரஸ்பரமாக "இந்த புருஷோத்தமரான நாராயண லீலைகளை யாரால் அறியமுடியும்? நம் இச்சைக்கும் ஆசைகளுக்கும் அவருடைய ஸங்கல்பம் மேலானதல்லவா?" என்று கூறிக்கொண்டார்கள். (599)

"அந்த நாராயண சங்கல்பம் ஒன்றையும் கவனிக்காதது. ஸர்வசக்திமானாகவும், எஜமானனாகவும், ஒருவரிடமும் எந்த வியாஜத்தினாலும் பராதீனன் இல்லாத ஸர்வஸ்வதந்தரனாக அல்லவோ அவர் விளங்குகிறார். அப்பேற்பட்ட ஈஸ்வரர் தன் காரியத்தைச் சாதிக்க நிஷ்டூரமானவரும், நிர்தயையுடனும் விளங்குகிறார். அப்பேற்பட்ட புருஷோத்தமர் சந்திரனைக்கூட கலைகளை இழக்கச்செய்து களங்கம் என்கிற வியாஜத்தினால் பித்ருக்களைப் போஷிக்கிறார். கற்பகவிருக்ஷத்தை ஒரு மர மாகவும், பரந்த விசாலமான ஜலத்திரள்கள் கொண்ட ஸமுத்திரத்தை உப்புத்தண்ணீராகவும் படைத்திருக்கிறார். அந்த நாராயண ஆக்ஞையினால் இந்த ராஜகுமாரர்கள் வனத் திற்கு வந்திருக்கிறார்கள்." (600)

"எப்போது அந்த பரமாத்மா இவர்களுக்கு வனவாசத்தை கொடுத்தானோ, அதே பரமாத்மாவினால் போகவிலாஸங்களுக்காக ஏற்படுத்தப்பட்ட ஸகல வஸ்துக்களும் இந்த சுகுமாரர்களுக்கு இல்லாதபடி வியர்த்தமாக ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. எப்போது இந்த புண்ணிய புருஷர்கள் வெறும் கால்களுடன் பாதரக்ஷைகூட அணியாமல் நடமாடும்பொழுது, அந்த சமயம் பிரும்மாவினால் ஸ்ருஷ்டி செய்யப்பட்ட உத்தமமான ஸவாரிகளும் வாகனங்களும் வியர்த்தமாக அல்லவோவிருக்கின்றன." (601)

"இந்த ராஜகுமாரர்கள், அந்த சிறிய ராஜகுமாரி, முனிவர் களைப்போல தீனதன்யர்களாகி, தர்ப்பை, இலை, சருகுகள் கொண்ட பூமியின்மேல் படுக்கும்படி விதாதாவினால் விதிக்கப் பட்டிருந்தால், என்ன காரணத்தால் அந்த பிரும்மா போக்ய மான பஞ்சசயனம் என்கிற (அழகு, குளிர்ச்சி, மென்மை, பரிமளம், வெண்மையாகிற நிறம், தளிர், மலர், பட்டு, பஞ்சு வெண்மையான கம்பளம் ஆகிய ஐந்து தன்மைகளுடன்) போக சயனங்களை ஏன் படைத்திருக்கவேண்டும்? எப்போது இந்த கடூரமான நெஞ்சுள்ள விதாதாவாகிய பிரும்மா இவர்களுக்கு மர அடி நிழலை வாசம் செய்வதற்கு பணித்தாரோ, அந்த ஸ்ருஷ்டிப் பெருமான், நான் நிச்சயமாகச் சொல்வேன், மாடி

அடுக்குகள் உள்ள பலவித போகங்கள் நிறைந்த மஹல்களாகிய அரண்மனைகளை வெகு சிரமத்துடன் படைத்திருக்கவே வேண்டாம். அந்த சிரமம், அந்த அரண்மனைகள், தங்குமிடங்கள் எல்லாம் வீணே!'' (602)

''பாவம், அத்யந்த சுகுமாரர்களான இந்த ராஜபுத்ரர்கள் சீதை ஆகியவர்கள் தவமுனி வேஷம் கொண்டு, வல்கலங்களை தரித்துக்கொண்டு, ஜடாமுகுட வேஷம் தரித்து, ஆஸ்ரம வாசம் செய்ய வருவதைப் பார்த்தால் இந்த புருஷோத்தமக்கடவுள் அநேகவிதமான பட்டு வஸ்திரங்களையும் விதவிதமான பொன், மணிமுத்து ஆபரணங்களை ஏன் படைத்திருக்க வேண்டும்? ஆண்டவனின் இந்த கைத்திறமை எல்லாம் வீணாகிவிட்டதே!'' (603)

''இந்த மஹாத்மாக்கள் எளிய வாழ்க்கையை கைக்கொண்டு கந்த மூலம் பழங்களைச் சாப்பிடுவதால் இந்த ஜகத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பாற்கடலின் அம்ருதம் போல புஷ்டியுள்ளதும், ருசியுள்ளதும் ஸத்வகுணங்களையும், ஆயுளையும், கீர்த்திகளையும் விருத்தி செய்யக்கூடும் ஆகாரங்கள் எல்லாம், அசன சயன போக்யங்கள் எல்லாம் வியர்த்தமாகப் போய் விட்டனவே. அந்த கும்பலின் மூலையில் ஒரு முனி(கௌசிகன் போலவிருக்கும்) சொன்னார். [வேதாஹம் வேதம் புருஷம் மஹாந்தம் ஆதித்ய வர்ணம் தமஸஸ்து பாரே, அஹம் வேத்மி, என்கிற சப்தங்களால் எவ்விதம் தன்னை வெளிப்படுத்திக்கொண்டு, அபார காருண்யத்தினால் ராமானுஜன் திருக்கோஷ்டியூரில் சேதனர்கள் உஜ்ஜீவிப்பதற்காக நாராயணரையும் அஷ்டாக்ஷரத்தையும் பிரகடனப்படுத்தினரோ, எவ்விதம் வாமதேவர் இந்திரனுக்குப் புருஷோத்தமரைப் பற்றி போதித்தாரோ, கிருஷ்ணன் அர்ஜுனனுக்கும் தர்மருக்கும் தன்னைப்பற்றி போதித்த புருஷோத்தம ஞானத்தை யடையச் செய்த அந்த மஹானுபாவன், தியாகராஜரால் அடையாளம் செய்யப்பட்ட தப்த பக்தியை விலக்ஷணமாகவுடையவன்) பக்தர்கள் கிருபா வேகத்தினால் காட்டிய பரம ஸத்யத்தை சொற்களால் வெளிப்படுத்தினான். ''என் தோழர்களே, (சகல வித்வான்கள், வைஷ்ணவர்கள் ஆகிய எல்லோரும் ''ஸத்விப்ரா ஏகம் வதந்தி'' என்று ஒரு புருஷோத்தமரான நாராயணரைச் சொல்லுகிறார்களே, அந்த புருஷோத்தம வடிவமே இந்த மண்ணுலகத்தில் தசரத அரண்மனையில் மானிட வேஷத்தினால் மறைந்து வசிக்கும் பிரபு, ஸ்வபாவமாகவே உள்ள ஸஹஜ சௌலப்யம் கொண்ட மூர்த்தி; ஏற்றத் தாழ்வு பார்க்காத கிருதக்ஞர்; அல்ப

சந்தோஷி; பரமபதத்திலிருக்கும் பிரளயபயோதரன்; கேசவத்ருத பத்து அவதாரங்கள் எடுத்த புராணன்; கிருஷ்ணன்; நரநாராயண ரிஷியுடன் கூடின மஹாலக்ஷ்மி; அவருடைய ஸௌந்தர்யமாதுர்ய நித்ய ஸ்வாபாவிக மகிமைகளை யாரால் அறியப்படும்? அப்பேற்பட்ட) க்ஷீராப்தி நாதன் வைகுண்டபதி, தன் ஸ்வய இச்சையால், தன்னைப் பக்த பராதீனனாக ஆக்கும் நோக்கத்துடன் (அர்ஜுனனுக்கு "मां एकं चरणं व्रज, अहं मोक्षयिष्यामि" என்கிற சொற்களால் காட்டப்படும் சர்வசக்திமானாகிற பரபிரும்ம நாராயணன் வாசுதேவன், விஷ்ணு,) அதி ஸௌசீல்ய ஸௌலப்யத்துடன் தன்னைத்தானே கிருபாவசமாகிக் காட்டிக்கொடுக்கும் அவதாரம் எடுத்த ஸம்பவர்.' இவர் பிரும்மாவினால் படைக்கப்படாத மானிடர். இவர் ஸ்வபாவமாகவே மிக்க அழகுள்ளவர்,'' (இவரே பத்மநாபர். புஷ்கராக்ஷர், ஹிரண்ய கர்ப்பர், ஆதிப்பெருமான். ஆதிவராஹர்.) (604)

[தியானம்

ஹேராமா சீதா, நாராயணா, மஹாலக்ஷ்மி ப்ரதா, சங்கரர் நாரதர் ஆகியவர்களால் பூஜிக்கப்பட்ட மஹேசரே, உமையினால் சேவிக்கப்பட்ட கிருஷ்ணரே, ஸௌம்யம் உக்ரமூர்த்தி ஆகிற மூர்த்தி ஸ்வரூபங்களால் வியாபித்திருக்கும் விஷ்ணுவே, சங்கரவரரே, ஸர்வேசரே, ஸர்வஜகத்குரோ, தேவாதி தேவாய நமः, மஹேஸா, சசிகலாதரரே, கோரத்திற்கும் அதிகோரமாகவிருக்கும் ருத்ரரே, நமஸ்காரம் நமஸ்காரம். சதுர்முகரே, தக்ஷயக்ஞத்திற்குப் பிறகு சந்திரனிடம் கருணை கொண்டு, அவனைத் தன் தலையில் வைத்து தன் பாபத்தைப் போக்க மனமுள்ள சசிகலாதரரே, நாரதர் எவ்விதம் வால்மீகிக்கும் ரிஷிகளுக்கும் பகவானுடைய பெருமைகளாகிற ராம பெருமையையும், உமாமஹேஸ்வரர் ஸம்வாதத்தை கிருஷ்ணன் முன்பு சொன்னாரோ, அதுபோல சங்கடஹரனாகிற மாருதி துளசிதாஸருக்கு எடுத்துச் சொன்னார். அதுபோல ராம ரஸம்கொண்ட முத்துக்களால் ராமகதையை உலகத்திற்கு அனுக்ரஹித்த வால்மீகி, தியாகராஜர், துளசிதாஸர், கம்பரை முன்னிட்டுக்கொண்டு, உமாமஹேஸ்வர ஸம்வாதம், யாக்ஞவல்கிய பரத்வாஜ ஸம்வாதம், காகபுசுண்டி கருடருக்குச் சொன்ன ஸம்வாதங்கள், துளசிதாஸர் எனக்குச் சொன்ன மாதுர்ய ஸம்பாஷணைகள், எனக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் உமாமஹேஸ்வர ஸம்வாதம், பீஷ்மர் யுதிஷ்டிரருடைய ஸம்வாதங்கள், ஆஞ்சநேயர் துளசிதாஸருக்குச் சொன்ன வாக்யபூஷணங்

கள், வேதவியாஸர் சுகருக்குச் சொன்ன ஸர்வரஹஸ்யங்கள் ஆகிய எல்லாவற்றையும் வாக்மீகி பகவானுடைய ராமாயணத்தை முன்னிட்டு, ஆதிகாவ்யத்தின் அனுக்ரஹ பூர்ணத்தை, காயத்திரி மந்திரத்தின் பெருமைகளை ஸ்காந்தம், பாத்மம் முதலிய புராணங்களில் எனக்குத் தெரிந்தபடி முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். காசிவிஸ்வநாதா, விசாலாக்ஷி, உமா மஹேஸ்வரரே, உஜ்ஜயினிலுள்ள உக்ரகாலரே காலபைரவரே ஆனந்த பிரும்மரிஷியே, சங்கடஹர ஹனுமாரே, நாராயண ருடைய பெருமைகளையும் கிருபைகளையும் அறிய விருப்பமுள்ள என்னை (கிருதார்த்தனுக்கவேண்டும்) நாரதரே வால்மீகியே, தியாகராஜரே, துளசிதாஸரே, உமையே மஹேஸ்வரரே, நாராயணரே எனக்கு அருள் செய்யவேண்டும்.]

"பதினான்கு லோகங்களிலும், சகல சராசர ஸ்ருஷ்டிகளிலும் வேதங்களில் சொல்லப்பட்டபடி காதுகள், கண்கள், மனம் ஆகிய வற்ருல் தேடிப்பார்த்தாலும், இவ்விதமான உத்தம புருஷ ஸ்திரி ஸ்ருஷ்டிகளைப் பார்க்கமுடியுமா?" (605)

[கருத்து :—வேதங்களின் விதிப்படி, நம்முடைய காதுகள், நேத்ரங்கள் கொண்ட நம் சரீரத்தின் நவத்துவாரங்களின் வழியாக, ராமரஸத்தை (ஹனுமார் மிக்கப் பிரயாசத்துடன் கிரஹித்தது மாதிரி) அந்த சீதாராமரஸத்தை இழுத்து, மனமாகிற மானஸ ஸரோவரில் தேக்கி, அதன் அனுபவத்தை துளசிதாஸர் ஒரு ஹம்ஸப் பேடாக அனுபவிக்கிற மனத்துடன் அத்புதமானதும், ஆச்சர்யமானதும் ஆனந்தத்துடன் உல்லாஸமாக அனுபவித்து திரிகிருரே, அதுபோல, அப்பேற்பட்ட உத்தம புருஷரான விஷ்ணு பகவான், வேதங்கள் உள்ள வரையிலும், சமுத்திரத்தில் ஜலங்கள் உள்ள வரையிலும், பூமி சராசரங்கள் உள்ள வரையிலும் எங்கும் வியாபித்திருக்கிருர். எங்குபோய் பார்த்தாலும், அந்த வ்யாப்த நாராயணனையே விஸ்வபுக்காகவும், விஸ்வதிருக்காகவும் பார்க்கலாம். பதினான்கு லோகங்களிலும் வேதவியாஸர் தேடிப்பார்த்து எவ்விதம் அலைந்துதிரிந்து, கடைசியில் அனந்தனுக்கும் ஸஹஸ்ரமூர்த்திக்கும், ஸஹஸ்ரபாதங்கள், ஸஹஸ்ரசிரஸ்கள், ஸஹஸ்ரபாஹுக்கள் கொண்டவரும், ஸஹஸ்ரநாமங்கள் கொண்டவரும், சாஸ்வதரும், ஸஹஸரகோடி யுகங்களை தாரணம் செய்யும் வாசுதேவருக்கும், நாராயணருக்கும், விஷ்ணுவுக்கும், நமஸ்காரம் செய்து, அந்த ஏக புருஷனுகிய பரம்பொருள், பரம தத்வம், பரோத்யானம், பரோதர்மம், அவரே நாராயணன். அந்த நாராயண பரப்ரும்மம் மானிட உருவமெடுத்திருக்கிருர்.

அவரே தன் மார்பில் உறைந்திருக்கும் லக்ஷ்மியுடன் இருக்கிறார். அவர்கள் நித்ய தம்பதிகளாக, கிருபை சுரக்கும் வள்ளல் தன்மை யுடன் நம்மைத்தானே தேடிவந்திருக்கிறார்கள். இவர்கள் நித்ய தம்பதிகள். உமாமஹேச்வரர்களைப்போல என்றும் பிரியாத வர்கள். புருஷன் தர்மம் என்கிற அவ்யயமானதும், மாறாதது மான ஸம்பந்தம் உள்ள புருஷ ஸ்திரி வேஷங்கள் தரித்தவர்கள். இவர்களைப் பார்த்தால் அந்த ஆதி தம்பதிகளின் ஞாபகம் வருகிறது. இவர்களுடைய மகிமையாலும் கிருபையாலும் விதாதாவே வாழ்கிறார்.)

"இப்பேற்பட்ட உபமானம் இல்லாத அனுத்தமமான தம் பதிகள் தங்கள் பெருமைகளையும் கிருபைகளையும் வெளிப்படுத் திக் கொள்ள அவதரித்திருக்கிறார்கள். முதலில் பிரும்மா இவர் களைக் கண்டு பிரும்மானந்தத்தினால் அனுராகம் அடைந்தார். இவர்களுடைய தேக அழகுகளை, திவ்யமங்கள விக்ரஹத்தைக் கண்டு ஸ்தம்பித்துப் போய்விட்டார். பிரும்மா இவர்களுக்குச் சம மாக இன்னும் ஸ்திரிபுருஷ ஸ்ருஷ்டிகளைச் செய்துகொண் டிருக்கிறார். பல காலம் அனுபவமிருந்தும் இவர்களுக்கு உபமான யோக்யதரமாக ஸ்ருஷ்டி இன்னும் அவரால் படைக்கப் பட முடியவில்லை. இன்னும் அடையப்போகிறதில்லை. அவ ருடைய ஸ்ரமமும் வீணாகத்தான் இருக்கும். அதனால் க்ரோதத் தினால் வேகம் அடைந்த பிரும்மா அதிஈர்ஷைகொண்டு, இவர்களை வனத்திற்கு அனுப்பியிருக்கிறார். இவர்களை நாடு நகரங்களில் வசிக்கச் செய்தால் எங்கே தன்னுடைய ஸ்ருஷ்டி யின் குறைவுகள் வெளிப்பட்டுவிடுமோ என்று எண்ணி, இவர் களை காட்டில் ஒளிக்க விரும்பி, வனத்திற்கு அனுப்பியிருக்கிறார்! அதிக்ரூர நெஞ்சமுள்ள விதாதாவினால் அனுப்பப்பட்டிருக்கும் இந்த ஆதிதம்பதிகள் நம்மை அனுக்ரஹம் செய்ய எண்ணம் கொண்டு நம்மைத்தேடி வனம் வந்திருக்கிறார்கள்." (606)

அந்த கும்பலில் இருந்த (வாமதேவர்) ஒருவர் சொன்னார். "எனக்கு இவர்களைப் பற்றி அதிகமாகப்பேச ஒன்றும் தெரி யாது. (இவர்களின் கீர்த்திகளின் முடிவை நானும் இந்திரனும் பரம ஞானிகளும் அறியமுடியாது. இவர்கள் யார் என்று தெரிந்துகொள்வது அப்புறம் இருக்கட்டும்.) ஒன்றுமட்டும் திண்ணமாகச் சொல்வேன். நாம் எல்லோரும் பரம தன்யர்க ளாக ஆக்கப்பட்டோம். (நமக்கு கௌரவத்தையும், வாத்ஸல்யத் தையும் அளிப்பவர். நம் க்லேசங்களைப் போக்கும் கேசவர்.

ஆகாயத்திலும், பூமியிலும், எவ்வுலகத்திலும் நாராயணராகிய அவரில்லாதது ஒன்றையும் காணமுடியாது. எல்லாம் அவரால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது மானிடஜன்மம் எடுத்து, ராமசீதாவாக நமக்கு சுபதர்சனம் கொடுத்திருக்கிருர்கள். நம் ஆக்ஞைக்கு உட்பட்டுவந்திருக்கும் ஆதிகேசவப் பெருமாள், மஹாலக்ஷ்மியுடன் நமக்காக தர்சனம் கொடுக்க வந்து நம்மை கௌரவித்திருக்கிருர்.) இவர்களை தர்சனம் செய்வதால், நம்போன்றவர்கள் பக்தர்கள் பரம புண்யபுஞ்கர்களாகவும், தன்யர்களாகவும் கிருதார்த்தர்களாகவும் ஆக்கப்படுவோம், ஆக்கப்பட்டோம். (அர்ஜுனன் அடிக்கடி கண்ட கிருஷ்ணனைப் போல) நாம் இவர்களை அடிக்கடி காணவேண்டும். இவர் யார் யாருக்கு தர்சனம் கொடுக்கவிரும்புகிருரோ, அவர்களன்ரோ மிக்க பாக்யவான்கள். அவர் இன்னும் யார் யாரை புண்ய பாக்யவான்களாக மாற்ற நினைத்திருக்கிருரோ, அவர்களுக்கும் தங்கள் தரிசனத்தைக் கொடுத்துப் புண்யக்ருதார்த்தர்களாக ஆக்குவார்.'' (607)

குறிப்பு :—மூலத்தில் சிலர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நான் வாமதேவரிஷி யென்று கற்பனை செய்துகொண்டேன்.

'இந்த விதமாக, (கர்பத்திலே சிசுவாகவிருந்து இந்திரனை ஞானவானுகப்பண்ணிய பரமஞானி வாமதேவர், எல்லோருக்கும் ஹிதமும் தத்வமும் புருஷார்த்தமும் கொண்ட ப்ரியவைஷ்ணவ வசனங்களைச் சொல்லி, சொல்லிக்கொண்டு,) தன்னுடைய சுத்தமான ஹ்ருதயத்திலிருந்து ஊறும் பிரேமை வெள்ளத்தை ஆனந்த பாஷ்பங்களாக உதிர்த்தார் அந்த ரிஷி. (பிரும்மரிஷி, நாராயணரை தயிரில் ப்ரியமுள்ள ஜிஷ்ணுவாகவும், எங்கும் வியாபித்திருக்கிறவராகவும், அன்னத்தோடு கூடியவருமான அக்னியாகவும், கர்பூரம், சந்தனம், கோரோசனை, புஷ்பம் முதலிய வாசனை திரவியங்களைக் கொடுத்து, வேதம் சாஸ்திரங்களில் சொல்லியபடி பகவானை ஆராதனம் செய்தவர். சகலருக்கும் மங்களங்களையும் ஆயுளையும் விருத்தி செய்யக்கூடிய மஹா அனுக்ரஹம் உள்ளம் படைத்தவர்.) அப்பேற்பட்ட மஹானுபாவருடைய நயனங்கள் அதிதிருப்த மனத்துடன் ஜலங்களால் ஸ்ரீராமசீதா தர்சனத்தால் நிரம்பப்பட்டன. அதிப்ரேமைவசமடைந்த அந்த முனிவருடன் யிருந்த சிலர் '' அத்யந்த சுகுமார சரீரம் கொண்ட இந்த ராஜதம்பதிகள், ராஜபுத்ரனுகிய லக்ஷ்மணன் கடினமான கோட்டைகள் நிரம்பிய மார்க்கங்களில் எவ்

விதம் செல்வார்கள்?'' என்று க்ருதக்ஞை மேலிட்டவர்களாகக் கதறினர்கள். (608)

ஸ்திரி ஜனங்களும் அதிஸ்நேகத்தினுல் காமவசமடைந்து கதறினர்கள். அவர்களுடைய விலலாபங்கள் சந்நியாகாலத்தில் பெண்சக்ரவாக பக்ஷிகள் தன் பதிகளின் வியோகத்தினுல் அடையும் பீடைகளே சகிக்க எண்ணமில்லாதவர்களாக துக்கம் அடைந்து, கதறுவதுபோலிருந்தது. ''அதிமிருதுவாக இருக்கக் கூடிய ராமசீதா பாத கமலங்கள் நிஷ்டூரமான பாதைகளில் எவ்விதம் சஞ்சரிக்கும்?'' அவர்களுடைய ஹ்ருதயம் அந்த துக்கத்தைப் பொறுக்கமுடியாமல் உத்தம வாணியினுல் ஸ்துதி செய்ய ஆரம்பித்தார்கள், (609)

''இவர்களுடைய கோமளமானதும் அருணோதய காலத்தில் ஏற்படும் சிகப்பு வர்ணமுள்ள அரவிந்த பாதங்களின் ஸ்பர்சத்தால் இந்த மஹியான பூமிதேவியானவள், (திருவிக்ரம அவதாரத்தின்போது ஏற்பட்ட பயங்கரமானதும் உத்தமமானதுமான ஒரு அடியை நினைத்து, நடுங்கினளே அதுபோல), நம் மனம் துடிக்கிறது மாதிரி அவளும், அந்த சுந்தர நளின பாதங்களே நினைத்து வருந்துவாள். இவர்களுடைய மகிமைகளேயும் கிருபைகளேயும் நினைக்கமாட்டாத ஸ்ருஷ்டிகர்த்தாவாகிற ஜகதீஸ்வரர் இவர்களே தீனதசையை அடையச் செய்து வனத்திற்கு அனுப்பட்டும், பரவாயில்லே. ஆனல் அவர்களுடைய மார்க்கங்களே ஸுமனஸ் ஸுகந்தம் கொண்ட மணமுள்ள புஷ்பப் பாதைகளாக ஏன் செய்திருக்கக்கூடாது?'' (610)

[தியானம்

ராமாலக்ஷ்மணு, சீதா, நரநாராயணு ரிஷிகளே, கைங்கர்ய லக்ஷ்மியாக விருக்கும் ஜானகி, அர்ஜுனன், பரதன் வால்மிகி, திரௌபதி துளசிதாஸர் சிவபார்வதி, விஷ்வக்ஸேனர், குஹன் முதலியவர்களின் ஹ்ருதய ஸ்தானத்தில் ஹ்ருஷிகேசரராக விருந்து, ஹனுமாரால் ஜகத்தின் விருத்தி பிரகீர்த்திகளுக்கு, ஜகத் பிரஹ்ருஷியாக விளங்கும் நாராயணருக்கு, மஹா லக்ஷ்மியின் பதியான கேசவருக்கு ராமானுஜர் சேவித்த மாதவ நாராயணருக்கு, நமஸ்காரம் செய்கிறேன். காசி, கங்கை கீதை எவ்விதம் பீஷ்மருக்கிருந்ததோ, அதுபோல நீங்கள் எனக்கு இருக்கிறீர்கள். அவ்யக்தமான ஸாயுஜ்யநாராயணு, உமாவினுல் ''திரியக்ஷ, திரிதஸஸ்ரேஷ்ட, திரயம்பக, திரிதசாதிபர்'', என்று அழகாய் சேவிக்கப்பட்ட மஹேஸ்வரரே, ஸாங்கிய சாஸ்தி

ரம் யோக சாஸ்திரம் ஆகியவைகளின் முடிவு எல்லேக்கு அப்பாற் நிற்கும் சங்கர பிரபுவே, முமுக்ஷுக்களால் சேவிக்கப்படுபவரும் ஸநாதனருமான நீங்கள் வனத்தில் சித்தர்களின் ஸங்கத்தை அடைந்திருக்கிறீர். உம்மை ஈஸர் என்றும், அவ்யயம் என்றும் சராசர குருவென்றும், விஸ்வபுக்கென்றும், பக்தர்களுக்கு ஹித மானவர் என்றும், அநிர்தேஸ்யவபுః ஶ்ரீமான், ஶ்ரீநிவாஸர் நாராயணோஹரிః என்று அர்ச்சித்து, கோவிந்த கோபால கிருஷ்ணமுராரி என்று நமஸ்கரிக்கிறேன். க்ரீடி எவ்விதம் க்ருதாஞ்சலிః வேபமானః நமஸ்கிருத்ய பூய ஏவாஹ கிருஷ்ணம் கேசவம் என்கிறபடி பயக்ருத் பயநாஸனః என்று உன்னேச் சரணம் அடைந்திருக்கிற என்னே, भीत: भीत: பிரணம்ய என்று சொல்லும் என்னே, ஹே சக்ரதாரி, காலாத்மன், க்ரீடி, கதையைக் கொண்ட சாரங்கபாணி, கமல புஷ்பம் முதலியவைகளேக் கொண்ட சதுர்புஜ ரூபத்துடன் கூடிய விஷ்ணோ, ஸஹஸ்ர பாஹோ, விஸ்வ மூர்த்தியே, என்று சொல்லி நான் நமஸ்கரிக்கிறேன். பிரபத்தி செய்த என்னே நீங்கள்தான் ரக்ஷிக்க வேண்டும். துளசிதாஸரால் மிக்கப் பிரயாசையுடன் கண்டுபிடிக்கப் பட்ட ஶ்ரீராமா, சீதா லக்ஷ்மண ஆஞ்சநேயா, கிருபை செய்யுங்கள்.]

"நாம் எதை வேண்டுமானுலும் வரம் கொடுக்கும் பிரும்மா விடம் இவர்களுக்காக வரதானம் கேட்கலாம். அந்த வர பலத் தினுல் இவர்களுக்கு நாம் கைங்கர்யம் செய்து எவ்விதமாவது, எந்த உபாயத்தினுலாவது நாம் இவர்களே நம் பக்கத்தில் இருக்க வைத்து, நம் கண்களுக்கு நேத்ரலாபம் ஏற்படுத்தி, நம்மையும் ஆத்ம உஜ்ஜீவனம் செய்து கொள்ளலாம். யத்ருச்சையாக நேர்ந்த லாபத்தை நாம் நமது முயற்சியாலும் தயாளுவாகிற ராம சீதை லக்ஷ்மணர் இவர்களின் காருண்யத்தாலும் பேரின்பத்தை ஸ்திரமாக ஆக்கிக் கொண்டு, கண்களின் இமைகளில் இவர்களின் ரூபத்தைத் தேக்கி வைத்து நிரந்தரமான லாபவான்களாக விருப் போம். எந்த நரநாரிகள் இவர்களேக் காண இந்த சமயம் வரவில் லேயோ, அவர்கள் திடமாக அபாக்யவான்கள் என்றும், அவர் களுக்கு ஶ்ரீ சீதாராம தரிசனம் இனி மிக்க பிரயாசைப்பட்டு, அடைய முடியாதது என்று சொல்லிவிடுவோம். கருணேயுடன் வந்திருக்கும் மூர்த்திகளேப் பாராமல் விட்டு விட்டு அவர்கள் பின்பு எப்போது இவர்களே மீண்டும் காணமுடியும்?" (611)

"இவர்களே உத்தமமான புருஷர்கள் என்று அறிவது ஒரு புற மிருக்கட்டும். பார்க்கப் பார்க்கத் திகட்டாத நவயௌவன சௌந்

தர்ய ஸ்வரூபங்களை, அழகுக் குவியல்களைக் கேட்டு அவர்களை இதுவரை பார்த்திராத அந்த அபாக்யவான்கள் ஓடிவந்து நிச்சய மாகக் கேட்பார்கள், '' நீங்கள் எங்களுடைய பரம ஹிதகாரி, உப காரி, அந்த மஹாத்மாக்கள் இப்போது எங்கு சென்றிருப்பார் கள்?'' அவர்களில் எவர்கள் காரிய சாமர்த்திய முள்ளவர்களாக விருந்தார்களோ, அவர்கள் வேகமாக ஓடிச் சென்று, அவர்களைப் பார்த்து, அவர்களின் சுபமான தர்சனத்தைக் கண்டு, தங்க ளுடைய ஜன்மத்தின் பரம லாபத்தை எளிதில் அடைந்து, பிர முதித மனத்துடன் ஆனந்த உல்லாஸமாக நிச்சயமாக திரும்பி வந்தார்கள். அவர்களின் மட்டற்றதும் விசேஷமான ஆனந் தத்தை யாரால் உணரமுடியும்? (612)

பாவம், அபலையான ஸ்திரிகள், கர்ப்பவதிகள், வேகமாகச் செல்லக் கூடாத தேகவலிமை யில்லாத ஸ்திரிரத்னங்கள், விருத் தர்கள், பாலகர்கள், அவர்களுக்குப் பாக்யம் தரும் சுபதர்சனத்தை அடைய முடியாதபடியால், கைகளைப் பிசிந்து கொண்டு அதி தீவிரமாகப் பச்சாதாபப் பட்டார்கள். '' அந்த கருணு மூர்த்தி நம்மைத் தேடிவந்த சமயம் நாம் பராமுகமாக விருந்து விட்டு, இப்போது வருத்தப்படுவதில் என்ன லாபம்?'' என்று வாடி வருந் தினர்கள். இந்த விதமாக அந்த வனவாசிகளுள் சிலர் பாக்ய மடைந்தவர்கள், சிலர் தர்சன லாப மடையாத மங்கள ஹ்ருதய முள்ளவர்கள், ராம ப்ரேமையினுல் கவரப்பட்டு, வித விதமாக எங்கு எங்கு ஸ்ரீ ராமச்சந்திரன் கால் அடிகளை வைத்து நடந்து சென்ருரோ, அந்த இடங்களுக்குச் சென்று பலவிதமாகப் புலம் பிக் கொண்டிருந்தார்கள். (613)

ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு சேரியிலும், ஜனங்கள் வசிக்கும் இடத்திலும், இந்த விதமாக ஆனந்தம் ஊற்று எடுத்து பெருக்காக ஊறி, எங்கும் பரவிக் கொண்டிருந்தது. பானு குலத் தில் உதித்த ஸ்ரீராமன் குமுதினி புஷ்பத்தை பிரபுல்லமாக விகஸித்து ஆனந்தத்தைத தரும் சந்திரனைப்போல குளிர்ந்த ஹ்ருதயமும் கருணை பொங்கும் கடாக்ஷவீக்ஷணயமும் உள்ளவர். அப்பேற்பட்ட பானுகுல சந்திரன் என் போன்ற பாக்யவான் களுக்கும் கிருதக்ஞராக கௌரவம் கொடுத்தார். ஆனந்தம் அடையவித்தார். இன்னும் சில ஜனங்கள் அந்த ராமச்சந்திர னுக்கு வனவாச தண்டனை கொடுத்த சமாசாரத்தைக் கேட்டு, அந்த ராஜா ராணியாகிய தசரத கைகேயியுக்கு தோஷம் கற் பித்து, பேசிய வண்ணமாக விருந்தார்கள். (614)

[தியானம்

ராமா சீதா, லக்ஷ்மணு, தியாகராஜ துளசிதாஸ வந்தித ராமா, உங்களைத் தவிர நான் வேறு ஒன்றையும் பார்க்காமலிருக்கிறேன். அந்தர்யாமியான மாதவா, பக்தவத்ஸலா, மதுஸூதனு, திரிவிக்ரமா, ராக்ஷஸர்களுக்கும் ராவணனுக்கும் பயத்தை உண்டு பண்ணிய பீம பராக்ரமா, வாயு புத்ரனுகிற ஆஞ்சநேயரால் சுமக்கப்பட்ட ரண தீர ராமா, ரக்ஷோகண ராஜ ம்ருத்யு, ஜனஸ்தானத்தில் ஏற்பட்ட சீதாபஹரணத்தையும் அதனுல் ஏற்பட்ட அவமானத்தையும் பொறுத்து ராவணினிடம் கருணை காட்டிய ஸ்ரீராமா, பதினுன்கு லோகங்களிலிருக்கும் சராசரங்கள் அனைத்தும் திகைத்துப் போகும்படி — களைப்புற்றவனும், நிராயுதபாணியுமான தசக்ரீவனை தர்மயுத்தத்தில் விருப்பமுள்ளவனுக "இன்று போய், யோசித்து, நாளைவா" என்று ராவணனுக்குச் சொல்லி கருணை காட்டிய ராமா, சாந்ததம சீலனே, தன்வீ, கோதண்டபாணி, சாரங்கபாணி, சியாமசுந்தரா, ஸந்ததமும் உன்னையே நாராயண மஹா லக்ஷ்மியென்று வாடி வதங்கித் தியானிக்கும் எனக்கு கருணை காட்ட சமயம் "இதுவல்ல" என்று தயங்குகிருயோ! உன்னை "பாகவதான்தரங்க சரன்" என்று தியாகராஜர் சொல்லியிருக்கிருரே "துளசி மானஸசரர்" என்று துளசி தாஸரால் சொல்லப்படுகிற நீர் என்னையும் கிருத கிருத்யனுக எப்போது ஆக்கப் போகிறீர்? ஹே ஸ்ரீகாந்தா, கமனீய குணுந்த காந்தகா, ஸர்வலோகபந்து, ஹிதாந்த ரஹிதா, மஹாத்மாக்களான என் ஆசார்ய முனிசிந்தனீயா, அர்ஜுனன் தர்ம புத்ரர் கண்ட வேதாந்த வேத்யா, சங்கர பார்வதி தியானம் செய்யும் "ஸாமந்த ராஜனுதா, ஸுகருணுஸ் வான்தா", நாரதர் ப்ருங்கி, ஜைகிஷவ்யர், அகஸ்திய, வஸிஷ்ட வாமதேவாதிகளால் பிருந்தாரகாதிப்ருந்தார்ச்சித பாதார விந்தா, குஹன், விஷ்வக்ஸேனர், விஸ்வாமித்ரர், கருடன், அனந்தனுகிற ஸத்பக்தர்களால் சேவிக்கப்பட்டு அவர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் ஜீவாந்தகரா, ஸூர்யகுல சந்தனுரிஹர, ஸனந்தனுதினுதா, வர மந்தர धरा, கோவிந்தா, முகுந்தா, என்னிடம் உனக்கு இருக்கும் சந்தேகம் யாது? எப்போது அந்த சந்தேகம் தீரும்? பராசரர் வேதவ்யாஸர், சுகரால் பூஜிக்கப்பட்ட கஜராஜ ரக்ஷகா, மணி ராஜ ஸயனு, ஜகத்பதி, எப்போது க்ரீடியாகவும் ராஜித மணி முகடத ராஜஸந்நிதா, ஸுபூஷனு, கருணையையே கவசம் வாக்கு, செய்கை, எண்ணம் ஆகியவனுக நீ எப்போது என் முன்

தோன்றுவாய்? ஆசார்ய க்ருபை எப்போது எனக்குக்கிடைக்கும்? மாருதி, எப்போது உன் மனம் என்னிடம் வரும்?]

அதில் ஒருவன் சொன்னான் "நீங்கள் ஏன் அந்த ராஜ தம் பதிகளுக்கு தோஷம் கற்பிக்கிறீர்கள்? அவர்களுக்கு நாம் நன்றி அல்லவா செலுத்த வேண்டும். அவர்களுடைய செய்கையினால் அல்லவா நமக்கு சீதா ராமதர்சனம் கிடைத்தது. தீனர்களாகிற நமக்கு இந்த மஹா பாக்யமுள்ள லோசன லாபம் அந்த மஹாத்மாக்களால் அல்லவா ஏற்பட்டது?" இவ்விதம் பரஸ்பரம் ஒவ்வொருவரும் அந்த ஜனக் கும்பலில் பேசிக் கொண்டார்கள். அங்கு கூடியிருந்த ஜனத்திரள் எல்லோரிடமும் ஸர்வஸம்மத ராகவும், லோகபந்துவாகவும், லோகநாதனாகவும், மாதவனாகவும், பக்தவத்ஸலனாகவும், பகவான் ராமன், சீதை, லக்ஷ்மணன் சகிதம் தோன்றினார். ஒவ்வொரு பக்தனிடம் ஸ்நேகம் நிறைந்த உள்ள மும், ஸஹஜ ஸௌலப்யமும், ஸௌசீல்யமும், கருணை நிறைந்த வசனங்களும், ஸ்வரூப அழகுகளுடன் கூடிய திவ்யதேஜோமய மான மூர்த்திகளைக் கண்டு, ஸரளமான வார்த்தைப் புகழ்களால் எல்லோருக்கும் இன்பம் தரும் மதுர ஸ்மித பூர்வ, மிருது பாஷண சக்தியால் கொள்ளை கொள்ளப்பட்ட மனங்களை, பகவான் தன்னி டம் ஆகர்ஷித்துக் கொண்டார். [ஹே ஸுதா மாதுர்ய பாஷணா, ஸுதாகரானனா, என்னிடம் தயை செய்.] (615)

அவர்கள் எல்லோரும் ஒரே மனத்துடன் சொல்ல ஆரம்பித் தார்கள். "அந்த மஹாத்மாக்களான அரச தம்பதிகள் இவர் களுக்கு ஜன்மம் கொடுத்ததற்காக, தன்யர்களாக கௌரவிக்கப் பட வேண்டும். இந்த உத்தம ராஜ குலத்தை நமக்காகப் பெற்றுக் கொடுத்த ஸாகேத நகரத்தை நாம் ஏக மனத்துடன் புகழ வேண் டும். ஆதி தர்ம பீஜ க்ஷேத்ரமாகிய அயோத்தி நகரிலிருந்து இந்த மஹா பாக்யவான்கள் நம்மிடம் கருணையுடன் வேண்டப் படாமல் வந்திருக்கிறபடியால், அந்த நகரின் புகழைக் கீர்த்தனம் செய்ய வேண்டும். இவர்கள் சஞ்சரிக்கும் தேசம், பாரத தேசம், அந்த தேசம் முழுவதுமிருக்கும் மலைகள், வனப் பிரதேசங்கள் கிராம நகரங்கள் எல்லாம் இவர்களால் மஹா பாக்யமுள்ளதாகச் செய்யப்பட்டன. இவர்களால் இந்த உத்தம ராஜகுமாரர்கள் சீதையுடன் அடி எடுத்து பூமியில் ஸ்பரிசம் செய்யும் ஸ்தானங் களோ, இன்னும் அதிக விசேஷமானவை." (616)

"இந்த ஸர்வ ஸ்ருஷ்டியின் கர்த்தாவாகிறவரும், காய்த்திரி சாவித்திரி, சரஸ்வதியின் அதிதேவதையுமான விரிஞ்சியாகிற பிரும்மா இந்த மஹாத்மாக்களுக்கு அதி ஸ்நேகமுள்ள நம்

போன்றவர்களைப் படைத்து, நமக்கு மாத்திரமில்லாமல், தனக்கும் தன்னுடைய ஸ்ருஷ்டித் தொழிலுக்கும் அல்லவா, என்றும் அழியாத சுகத்தையும் கொடுத்து ஆனந்தத்தையுமடைகிருர். அந்த மஹாத்மாவின் உள்ளத்தையும் ஆனந்தத்தையும் யாரால் வர்ணிக்க முடியும்? ஸகல விதங்களாலும் நம்மை ஸ்நேக உள்ளத்துடன் படைத்து, கிருதக்ருத்யர்களாக ஆக்கின மஹா பாக்யவான், நம்மைப்பற்றி பெருமையாகச் சொல்லிக் கொள்ளும்படி ஆக்கினவர் அந்த விரிஞ்சி அல்லேவா?'' பாதசாரிகளாக சஞ்சரிக்கும் அந்த ஶ்ரீராம சீதா லக்ஷ்மண சுந்தரகதாவ்ருத்தாந்தங்கள் அந்த ரஸ்தாக்களிலும் காடுகளிலும் ஒலி பெருக்கப்பட்டு அவைகளின் த்வனிகள் எல்லாத் திக்குகளிலும் பரவி (எவ்விதம் வாமதேவர் இந்திரனிடம் நாராயணனைக் கண்டு பத்து திசைகளிலும் அறிவுறுத்திஞரோ, அதுபோல) எங்கு பார்த்தாலும் அவர்களின் பேச்சாகவே இருந்தன. (617)

இந்தவிதமாக ரகுகுல ரூபியான கமல புஷ்பத்தை விகஸிக்கும் சூர்யஞ்கிற ஶ்ரீராமச்சந்திரன் வனமார்க்கங்களில் சஞ்சரித்து சீதையுடன் ஒவ்வொரு ஜந்துவுக்கும் சேதனனுக்கும் சுகத்தை வாரி இறைத்துக்கொண்டு, முதித மனத்துடன் சஞ்சரிக்கலானுர். அவருடன் கூடவந்த சீதையும் லக்ஷ்மணனும் வனங்களையும் புதிய இடங்களையும் பார்த்துக்கொண்டு சென்ருர்கள். (618)

முதலில் ராமன், நடுவில் சீதை, அவர்களுக்குப் பின்புறம் லக்ஷ்மணன் மஹா சோபிதங்களுடன் வனத்தில் சஞ்சரித்துக் கொண்டு சென்ருர்கள். தாபஸ்விகளின் வேஷம் அணிந்த இரு ராஜகுமாரர்களும் கௌரவமான சோபிதையுடன் விளங்கிஞர்கள். அந்த உபய ராஜகுமாரர்களின் நடுவில் சீதை பிரகாசித்துக் கொண்டு, கருணை உள்ளத்துடன் அன்னை ஜானகி நடந்து வந்தாள். பரபிரும்மம் ஜீவன் ஆகிற புருஷ பிரக்ருதி, பரமாத்மா ஜீவாத்மா, அனுக்ரஹ நாராயணன் சேதனன், (இருபத்தாறு இருபத்தைந்தாம் பொருள்களாகவும், ஸாங்கியயோக சாஸ்திரங்களில் வர்ணிக்கப்பட்ட இரு தத்வங்கள், வைஷ்ணவ ஆசார்யர்களால் பாஞ்சராத்திரத்தில் சொல்லப்பட்ட மதுசூதனர் நாரதர் ஆகிய பகவான், பக்தன், ஶ்ரீவித்யா உபாஸர்கள் சேவிக்கும் ஹயக்ரீவர் அகஸ்தியர், ஆகிய குரு சிஷ்ய, பாவபக்தி நம்ரதை, ஆசார சீலங்களின் நடுவில்) ஜகத்தாத்ரி, ஜகன் மோஹினி, ஜகஜ்ஜனனி, ஜகன்மாதா, திரிபுராம்பிகா, திரிபுர சுந்தரி, ஈஸ்வரருக்கு உட்பட்ட மாயை, ஸர்வ காருண்ய

ஸ்வரூபம், ஸர்வமோஹன ஆகர்ஷண சக்தி, அழகு பிம்பம், (பகவானிடம் சேதனின் குறைகள், தோஷங்கள், ஆசார நியம குறைவுகள், பக்தி வினயதாவின் குறைவுகள், வேதங்களில் சொல்லப்படும் கர்ம விபாகங்களைச் செய்யாமல் பாபம் மலிந்து போன சேதன அசேதன ஜீவர்களிடம் அபார கருணையுடன் பகவானிடம் புருஷ்காரம் செய்யும் மஹாலக்ஷ்மி, என் அம்மா, பரதேவதை, எனக்கு மஹானுக்ரஹம் செய்யும் நோக்கத்துடன்) நடந்துவரும் சீதை, இந்த இருவர்களுக்கும் நடுவில் ராஜ ராஜேஸ்வரியாகவும் கைங்கர்ய லக்ஷ்மியாகவும் சித்ஸ்வரூபிணி யாக, கோபால உள்ளத்தினளாகவும் மெள்ள மெள்ள பாதங்கள் எடுத்துவைத்து ஊர்ந்து அன்னப்பேடுபோல மிதந்து வந்தாள். (619)

[தியானம்

ஹே ராமாசீதா, லக்ஷ்மணா, ஸுவேல பர்வதத்தின்மேல் ஏறி ராவணனுடைய சிறையில் வைத்திருந்த ஜானகியைப் பார்க்க விரும்பிய ராமா, கிரோத மூர்ச்சிதனாக லங்கையைப் பார்த்து அதன்பின் களைப்பினால் ஏற்பட்ட மன ஆயாஸத்தைப் போக்க சுக்ரீவன் மார்பில் சாய்ந்துகொண்டு, ஹனுமார் லக்ஷ்மணர் இருவர்களும் பக்கத்தில் நிற்க, விபீஷணன் அங்கதன் முதலியோரை என்ன செய்யலாம் என்று ஆலோசனை கேட்டாயே, மானிடரூபம் தரித்த ராமா, துளசிதாஸருக்கு காக்ஷி அளித்த ஸுவேலே பர்வத ராமா, தியாகராஜருக்கு கிரியின்மேலே வில்லையும் பாணத்தையும் தரித்துக்கொண்டு, ஆஸ்வாசப்படுத்திய ராமா, நீ ஒரு அபாம்நிதி, பாற்கடல் கடையும்போது அந்த மந்தர மலையைத் தாங்கின ஆதார புருஷன் அல்லவோ நீ? அமிதவிக்ரமரே, நீர்தானே பிரக்ருதி முதலான தத்வங்கள் எல்லாவற்றையும் தாங்கும் ஆதாரசக்தி. திருவிக்ரம அவதாரத்தின்போது, யமுனா தீரத்தில் ஏற்பட்ட உன்னுடைய திருவடி பதிப்பு அடங்காமல் மூவுலகங்களையும் அளந்துவிட்டாய். உன்னை ஸர்வதః சக்ஷுః என்று எல்லோ ருடைய கண்களுக்கும் புலப்படும் புருஷன்; பிரத்யக்ஷமாக அவதரித்தபின்பு உன்னை மஹா புருஷன் என்று நம்புவதற்கு ஸம்சயம் ஒன்றுமில்லை என்று சொல்லப்படும் மஹா புருஷ லக்ஷணங்களைக் கொண்ட ஆதி நாராயணன். உன்னு டைய நளினதள நயனங்களால் என்னைக் கருணையுடன் கவனிக்கமாட்டாயா? என்னிடம் பல பாபங்களும் தோஷங்

களும் மலிந்திருந்தபோதிலும் என் பிரேமையை நினைத்து ஸ்ரீ தியாகராஜ துளசிதாஸர் ராமானுஜ சரணங்களை அனவரதமும் நம்பி வாழும் எனக்கு, இந்த ஜன்மத்தில் உன் தர்சன தானம், அனுக்ரஹ பார்வை, மரீசி, சுகர் ஆகியவர்கள் பூஜிக்கும் உன் திருவடித் தாமரைகளைக் கொடுக்கமாட்டாயா? உன் பேரில் நான் குறைசொல்ல முடியுமா? என் பாபங்கள், மன அழுக்குகள், திடமில்லாத பக்தி, ஆசரணைகள் எனக்கு உன்னிடம் வரத்தடுக்கின்றன. என்னைப்போன்றவர்களுக்கு நீயும் சீதையும் ஆசார்யரான ராமானுஜரும்தான் கிருபை செய்யவேண்டும். நாரத பகவானால் சேவிக்கப்பட்ட ரகுகுலதிலகா, சீதாதேவியே, கிருபை செய்யுங்கள். அக்ரகண்யனாகிய கிருஷ்ண, சஹாதேவனால் பூஜிக்கப்பட்ட ஜகந்நாதரே, ஜனார்த்தனரே, கிருபை செய்யும்.]

என் மனசு அந்த காமேஸ்வரி லலிதா திரிபுரசுந்தரி போலவும், மஹாலக்ஷ்மி போலவும், அம்பிகை போலவும், வாக்தேவியாகிற அம்ருத சரஸ்வதி போலவும் இருக்கும் சீதா தேவியின் அழகை எவ்விதம் சித்தரித்தால்தான் என்ன? அதைச் சொல்ல முயற்சித்து, உபமானத்தால் அடக்கமுடியுமா? இருந்தாலும் என் மனது கேட்க மறுக்கிறது! அதன்படி நான் சொல்லுகிறேன். வசந்துருது, காமதேவனாகிற மன்மதன் ஆகிய இருவர்களுக்கும் நடுவில் எல்லாப் புவனங்களையும் காம வசப்படுத்தும் ரதிதேவியைப்போல சீதை நடந்து போனாள். ஜகன்மோஹினி, ஜகஜ்ஜனனி, தன் ஜோதி பிரகாசத்தினால் எல்லோருடைய மனத்தை ஆகர்ஷித்துக் கொண்டு சென்றாள். இன்னும் ஒரு உபமானம் சொல்லுகிறேன் கேளுங்கள். அழகு சுந்தரி மாத்திரமல்ல அவள். மஹா புத்தியுள்ள விவேகி. ரோஹிணிதேவி சந்திரனுக்கும் புதனுக்கும் நடுவில் பிரகாசித்துக்கொண்டு எவ்விதம் தேஜோமயமாக விளங்குவாளோ அதுபோல சீதை ராமலக்ஷ்மணர்களின் நடுவில் பிரகாசித்தாள். (620)

என் தாயான சீதை என் பிரபுவாகிற ராமபத சரண ரேகைகளின் நடுவில், (ஸ்ரீசூர்ணம் நெற்றியில் விளங்கும் ஊர்த்வபுண்டரங்களின் நடுவில் பிரகாசிப்பதுபோல,) தன்னுடைய சுந்தரமான பாதங்களை பயத்துடன் இங்குமங்கும் சஞ்சலக் கண்களுடன் வனத்தைப் பார்த்துக்கொண்டு, ராம சரணங்களின் ரக்ஷணத்தை விரும்புவதுபோல மெதுவாக பூமியில் பதித்து நடந்துவந்தாள். அந்த சுபகடாக்ஷ

வீக்ஷண்யங்களாகிற புருஷகார நோக்குக்களால் எவ்வளவு கோடிக்கணக்கான சேதனர்களை ராம சரணங்களில் சேர்த் திருப்பாள் அந்த பாக்யவதி மஹாலக்ஷ்மியாகிற என் தாய்! அப்பேற்பட்ட சீதாராம பாதங்களை வலதுபக்கமாக பிரதக்ஷணம் செய்துகொண்டு (தர்ம மரியாதை வியவஸ்தையின் ரக்ஷணத் திற்காக எவ்விதம் ராமானுஜர் திரு நாராயணனுகிற செல்வப் பிள்ளையை ஊர்த்வ புண்டரம் தரித்த மார்பு பிரதேசத்தில் அணைத்துக்கொண்டு காத்து ரக்ஷித்தாரோ, அதுபோல) லக்ஷ்மணன் மிக்க ஜாக்ரதையுடன் அவர்களைப் பின்தொடர்ந்து கொண்டு சென்றுகொண்டிருந்தான். அந்த ராமசீதை பாதங் களை நமஸ்கரித்துக்கொண்டு, அந்த பாத ரேணுக்களை தன் தலையில் தரித்துக்கொண்டு, (கங்காதரனுகிற சிவன் பகீரதன் வேண்டுகோளுக்காக இணங்கி பூமி முழுவதையும் சுத்தப் படுத்தினரோ, அதுபோல) உலக முழுவதும் பாவனமாக்கிக் கொண்டுசென்றூர். (621)

அப்பேற்பட்ட ராமலக்ஷ்மண சீதையின் வனசஞ்சாரத்தை என் ப்ரீதிக்காக சுந்தரமான வாக்குக்களால் சொல்ல விரும்பிச் சொன்னேன். ஆனுல் அந்த சுபகரமான விஷயம் என் வார்த்தைகளுக்கு அடங்குமோ? அகோசரமான வஸ்து, அநிர் வசனீயன், அபாம்நிதி, கடலைவிட ஆழமானதும் பரந்ததுமான திருவிக்ரமன் அப்பேற்பட்ட புருஷஸூக்த நாராயணனை, என் ஆதிப்பிரானை, நான் எவ்விதம் வார்த்தைகளால் அளவிட முடியும்? பெரும் அழகு குவியல்கள் ஒருங்கே சேர்ந்து, அத்புதமான கல்யாண குணவிசேஷங்களால் சோபிதமாக்கப் பட்டு, எல்லோருடைய நன்மைக்காகவும், புவன மங்களத்திற் காகவும், பிரயாசைப்படும் தீர்த்த பிம்பங்கள். பசுபக்ஷி மிருகங் கள் நானுவிதமான சேதன அசேதன சராசரங்கள் அனைத்தை யும் மோஹிக்கும்படி அல்லவா, அவைகள் பார்த்துக் கொண் டிருக்கும்போதே அவர்கள் சென்றுகொண்டிருந்தார்கள். பிரேமை ஆனந்தம் நிரம்பின உள்ளத்துடனும் பரம சௌசீல்ய வாத்ஸல்யாதி குணங்களால் நிரப்பப்பட்ட ஹிருதயம், கண்களில் குளிர்ந்த அனுக்ரஹ பார்வைகள், இவைகளின் அத்புதமான விசேஷத்தால் எல்லோரும் ஸ்தம்பித்துப்போய் விட்டார்கள். அப் பேற்பட்ட பாதசாரியான ஜகன்மோஹனராமன், (சீதாவரனுகிற ராமன், ஸுரகின்னர கிம்புருஷ வித்யாதர ஸுரபதி, பிரும்ம ருத்ராதிகளாலும், கௌரி, ஸரஸ்வதி இந்திராணி, திக்பாலர்கள் தம்பதிகள் சகிதம், முனீஸ்வரர்கள், யோகிகள், ஆத்ம நிவேதனம்

செய்த வைஷ்ணவ பக்தர்கள் ஆகிய எல்லோரும் மோஹம் அடையும்படி சஞ்சாரம் செய்த ராமன்) எல்லோருடைய மனத்தையும் ஆகர்ஷித்துக்கொண்டு அல்லவா சென்றுன்! (அப்பேற்பட்ட ஜகன்மோஹனராமா, சீதாவரனே, மானிட வேஷம் தரித்தவனே, லக்ஷ்மணு, என்னிடம் எப்போது என் தோஷங்களை மறந்து தர்சன தானம் செய்யப்போகிறீர்கள்? தியாகராஜ வரதாகில பக்தர்களால் சேவிக்கப்பட்ட லக்ஷ்மண சீதாராமா, எப்போது உங்கள் அனுக்ரஹம் கிடைக்கும்?) (622)

[தியானம்

ஹே ராமாசீதா லக்ஷ்மணு, நாராயணு, கஜேந்திரனுடைய குரலைக்கேட்டு, ஓடிவந்த ஸ்ரக்வி, உனக்கு திரியக், மனுஷன் தேவன், அசுரன் ஆகிற வித்யாஸம் தெரியாதபடி அதி சூக்ஷ்ம மான வைஜயந்தி மாலையை வெளிப்படையாக ஸதா தரித்துக் கொண்டு, நாராயணு, மிருகமாகிற கஜேந்திரனின் கைங்கரி யத்தை ஏற்றுக்கொண்டு, தெளிவாகக் கேட்கக்கூடாத அபயக் குரலைக்கேட்டு, அவனை விடுவிக்க ஓடிவந்த சப்த ஸஹரே, சப்த பிராமணங்களுக்குமேல்பட்ட சப்த அதீதரே, தயாளுவான ஸ்ரீராமா, பக்தர்களை அனுக்ரஹிக்கும்போது வாயு வேகமாகச் செல்லும் சலரே, உலகங்களை வாழ்விக்க எண்ணமுள்ள சர்வ ரீகரரே, மார்க்கண்டேயருக்கு தெளிந்துகாட்டிய விஸ்வரூபத்தை உடைய வியக்தரூபரே, வனத்தில் வசிக்கும் ஸர்வ சேதனங் களுக்கும் தன்னை வெளிப்படுத்திக்கொண்ட கிருபாளுவாகிய வியக்தராமா, சீதாலக்ஷ்மணு, பிறவிக் குருடனுகிற திருதிராஷ் டிரனுக்குக்கூட மஹா அனுக்ரஹத்துடன் விஸ்வரூபத்தைக் காட்டிய மரீசி, கிருஷ்ணு, எனக்கு எப்போது கிருபை செய்ய விரும்புகிருய்? உன் தர்சனத்தின் தாகமும் பசியும் அதிக மாகிக்கொண்டு போகிறது. அப்பா, எப்போது சாந்தி ஏற்படும்?]

அன்பு, காருண்யம், கிருதக்ஞை மேலிட்டு, வனத்தில் பாத சஞ்சாரிகளாக நடமாடும் தெய்வங்களாகிற ராம லக்ஷ்மண சீதை எந்த எந்த இடங்களில் நோக்கிஞர்களோ, அந்த இடங்கள் எல் லாம் செழிப்பாகத் தோன்றி, அவர்களுடைய அனுக்ரஹப் பார் வையால் விருத்தி அடைந்தன. ஸகல தோஷங்களும், பாபங் களும் நசித்துப்போய், பயங்கரமானதும், ஜன்மத்தின் பிறப்பு இறப்பு ஆகிற சம்சார சக்கிர சுழல்களிலிருந்து ஸகல சேதனர் களும் விடுபட்டு, ஒருவித காயக்லேசம், தபக்லேசம், கர்மஞான

பக்திக்லேசங்களின்றி, சுகந்தமான வழிகளில், அர்ச்சராதி மார்க்கங்களில், (அக்னி, உத்திராயணம், சூர்யன், பகல், மின்னல், வருணன், இந்திரன், காற்று, அமானவன் ஆகிய ஆதிவாஹ்யர்கள் வைஷ்ணவதாஸர்களை விரஜா நதி தாண்ட வைத்து வைகுண்டபதத்திற்கு அழைத்துச் செல்லும் நபுனராவர்த்ததே என்கிறபடி, லக்ஷ்மி நாராயணர் மஹா கிருபையுடன் அளிக்கும் மஹா நாராயண பதத்தை அல்லவோ, நித்ய ஸூரிகளாகிற அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனர், ராமானுஜர்யாதி ஆசார்ய மஹானுக்ர ஹத்தால் அல்லவோ,) அவர்கள் நித்ய ஆனந்தபதமாகிற சுகத்தை அடைந்தார்கள். (லக்ஷ்மி நாராயணர் ஆகிய சீதாராம தர்சனம், வாயுபகவான் பூமியில் கீழே உள்ள தூசிகளை மேலே ஆகாயத்திற்கு தூக்கிப் போவதுபோல, அந்த மஹத்தான பாக்ய பதங்களை பக்தர்களுக்கு ஜாதி பிறப்பு, இழிவு தாழ்வுயாவித வித்யாஸமின்றி சுலபமாக அளித்தது.) (ராமரை வாயுவாஹனன் என்றும், மாருதி வாஹனன் என்று அழைப்பதின் ரஹஸ்யம் இது அன்றோ? அப்பேற்பட்ட சுபமான பிரிய தர்சனனாகிற ஸ்ரீராமனை நான் எப்போது காண்பேன்?) (623)

துளசிதாஸர் உத்கோஷத்துடன் சொல்கிறார் :—"நான் அந்த மஹா பாக்யவான்களை மாத்திரம் சொல்லவில்லை. ராம அவதாரம் கழிந்து, பல ஆயிரக்கணக்கான வருஷங்கள் சென்ற பின்பும், நான் சொல்வது என்னவென்றால், இன்றுகூட எவனுடைய ஹ்ருதயத்தில் சகலருக்கும் மங்களத்தையும் செழிப்பையும் செய்யும் (கிருதாசிஸ் ஆகிற) பகவான் நாராயணர் விபவவதாரம் எடுத்து, வ்யக்த ரூபர்களாகவும், ஸ்தூல ரூபர்களாகவும் ஜடாமுடி தரித்து வனத்தில் நடமாடிய லக்ஷ்மண சீதா ராமர்களை தரிக்கிறார்களோ, எவர்களுடைய மனதில் ஸ்வப்னத்திலேனும் சீதா பிராட்டியுடனும், (தம்பியாகிய) லட்சுமணனுடனும் கூடிய இராமபிரான் வழிப்போக்கர் என்கிற உருவத்தில் வந்து தோன்றுவாரோ, அவர்கள் அந்த திவ்ய தம்பதிகளை ரக்ஷணம் செய்யும் லக்ஷ்மணனையும் கூட நினைத்து த்யானம் செய்து, மனமுறுகி, ஆத்ம ஸமர்ப்பணம் செய்வார்களாகில், அவர்கள்கூட வைகுண்ட பதமாகிற ராம (நாராயண) பதத்தை அந்த அர்ச்சராதி மார்க்க வழிகளினால் சுலபமாக அடைகிறார்கள். அவர்கள் எப்போதோ யாரோ ஒரு பெரும் பாக்கியசாலியாகிய முனிவர் மட்டுமே சென்றடையக் கூடிய அந்தப் பெரும் பேற்றிற்கான பாதையை எளிதில் பெற்று விடுவார்கள்." (அப்பேற்பட்ட நபுனராவர்த்ததே நபுனராவர்த்

ததே என்கிற வைகுண்ட பதவி ஸாயுஜ்ய ஸாம்ராஜ்யம், ஆதி நாராயணனுடைய சேர்க்கை வைபவங்கள், ஸாங்கிய யோக சாஸ்திர நிபுண முனிவர்களுக்கும், ஆத்ம சுத்தி ஆத்ம நிவேதனம் இன்றி கிடைக்கக் கூடாதது அன்றே! அப்பேற்பட்ட ஹிரண்மயவபுஃ ஜனார்த்தனருடைய பாதங்கள், கோவிந்த சரணங்கள், கோபால ஹ்ருதயம், ராம பாதுகைகளின் பிரபாவங்கள், மஹாலக்ஷ்மியின் புருஷகாரத்தினால் ஏற்படும் நாராயண கைங்கர்ய பாக்யங்கள் நாராயண ப்ரீதிக்காகச் செய்யப்படும் வாழ்க்கை வினியோகங்கள், பலத்தை உத்தேசியாமல் பகவானால் தள்ளப்பட்டு "நான் போகிறேன்" என்று மஹா கிருபையை அவலம்பித்த பீஷ்மர், தர்ம புத்ராதிகள், அர்ஜுனன் நாரதர், பிரஹ்லாதன் போன்ற மஹா பக்த சிரோண்மணிகள் "ஸ்வயமேவ காரயதி" என்று அவலம்பித்த வைஷ்ணவ கொள்கைகளை, தாஸர்களுக்கு தாஸர், தாஸானு தாஸர், என்கிற ஸ்ரீமத் ராமானுஜருடைய அருள்வாக்குக் கொண்டு "வாழும்" சோம்பர்களின் மஹா பாக்யத்தை, உபய வேதாந்த விஷயங்களில் ஆசாரிய சீலரான வேதாந்த தேசிகர் ரஹஸ்யதிரய ஸாரத்திலும், பரம பத சோபானம் ஆகிற கிரந்தங்களில் கண்ட மேம்பதவியை, பர வாசுதேவ பக்தியுடன் அடையலாமன்றே?) (624)

அப்பொழுது ரகுவீரர் தன்னுடைய ஸ்ரீமதியான சீதை சிரமம் அடைந்ததைக் கண்டு, பக்கத்திலிருந்த வடவிருக்ஷத்தையும் குளிர்ந்த ஜலமுள்ள தேக்கத்தையும் கண்டு, அந்த தினத்தை அங்கேயே கழிக்கவிரும்பினார். கந்த மூல பழங்களைச் சாப்பிட்டு விட்டு இரவைக் கழித்து, பிராதக் காலையில் ஸ்நான பானாதிகளையும் கர்த்தவ்யமான நித்ய கர்மானுஷ்டானங்களையும் மானிடர்கள் தெய்வ அனுக்ரஹத்திற்காக வேண்டிச் செய்யும் காரியங்களையும் சாதாரண மனிதர்கள்போல வேஷம் தரித்த ராம லக்ஷ்மண சீதை செய்து முடித்துவிட்டு மேலும் வழியில் நடந்துகொண்டு போனார்கள். (625)

அழகான வனங்கள், குளம் குட்டைகள், பர்வதங்கள், சகலத்தையும் கடாக்ஷித்துக்கொண்டு, என் பிரபு ராமச்சந்திரன் வால்மீகி மஹரிஷியினுடைய ஆஸ்ரமத்தை அடைந்தார். அந்த முனிவருடைய வாசஸ்தலம் அதிசுந்தரமாகவிருப்பதைக் கண்டு, அதைச்சுற்றி மிக்க ரமணீயகரமான மலைகள் காடுகள் குளிர்ந்ததும் பாவனமான தண்ணீர் வசதிகளுடன் இருப்பதை ராமன் பார்த்தார். (626)

[தியானம்

[ஹே ராமா நாராயணா, மஹாலக்ஷ்மி சேவித ரகுநந்தனா, லக்ஷ்மணா, ஸ்ரீமானே, அழகும் ஒளியும் பொருந்திய மனதைக் கவரும் திவ்ய மங்கள விக்ரஹத்தை உடைய ஸ்ரீசீதா பிராட்டியை போகங்களாலும் விளையாட்டினாலும் அகலாமலிருக்கும் திருமா மகளே, கர்ப்பத்தில் சிசுவைப்போல காப்பாற்றினாயே, ஸ்ரீகர்ப் பரே, பக்தர்களுக்கு நன்மை செய்வதில் தம்மைவிட வேறு யாரும் இல்லாதபடியிருக்கும் அநயரே, தம்மிடம் அன்பு வைத்த ரிஷி களைக் காப்பதில் கர்ப்பத்திலிருக்கும் சிசுவைப்போல ரக்ஷித்து நன்மை பயக்கும் ராமா, என் நயரே, என்றால் தேடப்படும் மார்க்கரே, பரத்வாஜர் வால்மீகி, முதலிய முனிவர்களால் தேடப் படும் மார்க்கரே, மார்க்கதரிசியே, விரதரே, விரஜா மார்க்கத் தைத் தாண்டவைக்கும் விரதரே, ராம நாராயணா, நாரசிம்மவபுঃ, புருஷோத்தமா, என்னை நீதான் காப்பாற்ற வேண்டும். எனக்கு சுகந்தமான வழியை அன்புடன் காட்டி என்னை கூட்டிப்போகும் கராவலம்பன நரசிம்மா, ராம நாராயணா, லக்ஷ்மிபதி, பிரஹ்லாத பக்தியினால் கட்டப்பட்ட மஹானுக்ரஹ நாராயணா, தயை செய் அப்பா. கிருபை செய். ஸத்ஸங்க க்ஷேத்ரமாகிய ராமாயணத் தில் காலம் கழித்த வால்மீகி, துளசிதாஸர், தியாகராஜர், பட்டர் முதலிய ஆசார்யர்களின் சாஸ்வதமான ஸ்நேகத்தை எனக்கு அருள்செய். கருடவாஹனா, கருடத்வஜா, அன்பு காட்டு.]

அந்த சரோவரத்தில் கமல புஷ்பங்கள் அலங்காரமாகவிருந் தன. அதைச் சுற்றியுள்ள வனப் பிரதேசத்தில் விருக்ஷங்களும் புஷ்பங்களும் மகரந்தப் பொடியின் வாசனையால் கவரப்பட்ட மதம் பிடித்த வண்டுகள், தேனீக்கள் ரீங்காரம் செய்துகொண்டு விளங்கின. அந்த சிங்காரமான இடங்களில் பசு பக்ஷி மிரு கங்கள் கோலாஹலமாக விளையாடிக் கொண்டிருந்தன. [விரஜா மார்க்கத்தில் விஷயப் பற்றுகிய ரஜோகுணம் சேதனர்களுக்கு விலகி, அவர்கள் ஆனந்தமடைவார்களோ அதுபோல] ராமகிருபா கடாக்ஷத்தினால் அந்த பசு பக்ஷிகள் மிருகங்கள் யாவும் பரஸ்பர மாக ஏற்பட்ட விரோதம், வைரம், ரஜோ குணத்தால் ஏற்பட்ட விரோத மனப்பான்மைகள் யாவும் ஒழிந்து சகல ஜீவராசிகளும் ஆனந்த முதித மனத்தினர்களாக முகபாவங்கள் அதிமலர்ச்சி யுள்ள சௌபாக்யங்களுடன் விளங்கி ஆனந்தம் மேலிட்டு விளங்கினார்கள். (627)

அந்த சுந்தரமானதும் பவித்திரமானதுமான ஆஸ்ரமத் தைக் கண்டதும் ராஜீவாக்ஷனை ராமன் நிரதிசய சுகத்தை

அடைந்தார். ரகு ஸ்ரேஷ்டனுகிற ஸ்ரீராமன் வருவதைக் கண்ட வால்மீகி முனிவர் அவரை வரவேற்று தன் ஆஸ்ரமத்திற்கு அழைத்துச் செல்ல விரும்பினுர். (628)

ஸ்ரீராமச்சந்திரன் ஆதிகவியாகிய வால்மீகி முனிவரை தண்டன் ஸமர்ப்பித்து தன்னையும் தன் பத்னியாகிற சீதையையும் லக்ஷ்மணனையும் வால்மீகி முனிவருக்கு அறிமுகப்படுத்தினுர். விப்ரஸ்ரேஷ்டரான அந்த வால்மீகி முனிவர் அவர்களுக்கு ஆசீர்வாதம் செய்தார். ஸ்ரீராமனுடைய பேரெழிலைக் கண்டு (அபார காருண்யத்தையும் மஹா வ்யூகத்தில் எழுந்தருளியிருக்கும் நாராயணன் தன் ஸௌலப்ய ஸௌசீல்ய அவஸ்தையில் அர்ச்சாவதாரம் எடுத்து, தன்னைத்தானே காண்பித்துக் கொடுத்து, எல்லோரையும் ஆட்கொள்ள வந்த பேரருளாளன் தன்னிடம் காட்டும் மஹத்தான அன்பைப் பார்த்து, பார்த்து,) வால்மீகி முனிவரின் நயனங்கள் குளிர்ந்து மகிழ்வுற்றன. ராம சீதா தர்சனத்தை லக்ஷ்மணனுடன் கூடியவர்களாகப் பார்த்தார். பின்னர் அம்முனிவர் அவர்களை ஆதரவுடன் தனது ஆஸ்ரமத்திற்கு அழைத்துச் சென்ருர். (629)

(பரமபாக்ய விசேஷத்தாலும் நாரத குரு பிரசாதத்தால்) யேற்பட்டதும் பகவான் ராமச்சந்திரன் தன் ஆஸ்ரமத்திற்குத் தானே, விரும்பத்தக்க பிராண ப்ரிய அதிதிகளாக, வந்திருப்பதைக் கண்டார் வால்மீகி. அந்த அதிதிகளை நன்கு உபசரிக்கும் பொருட்டு, மதுரமானதும் சுவையுள்ளதுமான கந்தமூல பழங்களைத் தரவழித்தார். சீதை, லக்ஷ்மணன், ராமன் ஆகியோர்கள் அந்த முனிவர் தந்த ஆகாரங்களைச் சாப்பிட்டு, அதன்பிறகு அவர்கள் சுகம் அடைவதின் பொருட்டு நிரந்தர இளைப்பாறி, சுகமாக காலம் கழிப்பதற்கு இடத்தைக் காண்பித்துத் தந்தார். (630)

வால்மீகி முனிவரின் மனம் ஒரே ஆனந்தமயமாகவிருந்தது. சகல காலங்களிலும் சகல அவஸ்தைகளிலும் சதா தியானித்து வரும் மங்கள மூர்த்தியாகிற ஸ்ரீராமச்சந்திரன் (நாரதா கிருபா பாத்ரமடைந்த) வால்மீகி முனிவர், தனக்கு நேரில் சாக்ஷாத்காரமாகவிருக்கும் சீதாராமனைக் கண்டு தரிசித்தார். அவருடைய மஹா பாக்யமுள்ள நேத்ரங்கள் பிரபுல்ல லோசனங்களாக சீதாராம தர்சனத்தால் நிரம்பப்பட்டன. அவருடைய பேரானந்தத்தைக் கண்ட ஸ்ரீரகுராய் தன்னுடைய கர கமலங்களைக் குவித்து, வால்மீகியின் பக்திக்கு கட்டுப்பட்டு அடங்கியவராக, ஸ்மிதபூர்வ

மதுரபாஷணனுக இனிக்கும் வசனங்களை காது இன்புறும்படி சொல்லத் துவங்கினுர். (631)

"ஹே முனிநாதரே, தாங்கள் திரிகாலதரிசி. ஸம்பூர்ண விஸ்வம் உமக்கு உள்ளங்கையில் இருக்கும் ஒரு இலந்தைப் பழம் போல தெற்றென விளங்குகிறது." அதன்பிறகு, பிரபு தன் ஆத்மகதையை முனிவருக்குச் சொல்லி, எவ்விதம் ராஜ்யம் முதலியவற்றில் ஆசையில்லாமல் ஒழிவடைந்திருக்கும் மஹாவ்ரதராகவும், கைகேயியினுல் வனவாசம் அனுப்பப்பட்ட கதையையும், சகல விருத்தாந்தங்களையும் ஒன்றுவிடாமல் பிரபு அவரிடம் கூறினுர். (632)

"ஹே பிரபோ, பிதாவின் கட்டளையை நிறைவேற்றும் ஸத்யவ்ரதன், மாதாவினுடைய ஹ்ருதயத்தையும், என் தம்பி பரதனுடைய க்ஷேமத்தையும் கோரியபடியால், ஏற்பட்ட இந்த வனவாசத்தின் பலனுக, ஹே ஸ்வாமி, பிரபோ, உம்மைத் தர்சனம் செய்ய பாக்யம் ஏற்பட்டது. இந்த சுபதரிசனத்தால், (நான் எல்லா உலகங்களுக்கு விலக்ஷணமாகவும், தனக்கே சிறப்பாயுமுள்ள சரித்திரங்களை உடைய விவிக்தர், பிரபஞ்சம் முழுவதிலும் ஒன்றிலும் சேராது தனித்துநிற்கும் நாராயணர், என்னுடைய பூர்வபுண்ய கர்மங்களால் கட்டப்பட்டு, என்னை இன்று உம்மிடம் ஸமர்பித்துக் கொண்டேன்.") உமது அதிதிகளாகவிருக்கச் ஸம்மதித்தேன். (633)

"ஹே முனிராஜரே, நாங்கள் உம்முடைய சரணங்களைத் தரிசிக்கப்பெற்ருேம். இன்று எங்களுடைய புண்ணியங்களனைத்துமே பலித்துவிட்டன. நாங்கள் தங்குவதற்குத் தகுந்த இடமொன்றை குறிப்பிட்டு எங்களுக்கு ஆணை அளித்தருளவேண்டும். அங்கு வசித்துவரும் முனிவர்களுக்கும் எவ்வித தொந்தரவும் எங்களால் உண்டாகக் கூடாது. [என்னுடைய கிருதக்ஞதைகளை உமக்குத் தெரிவிப்பேன். உம்முடைய சுக்ருதம் என்னுடையது. உமக்கு நான் கட்டுப்பட்டவன். உம்முடைய புண்ய பலங்களின் பெருமையை நீர் இப்போது அடையவேண்டும். நீர் எவ்விதம் என்னைக் கண்டு ஆனந்தமடைந்தீரோ, அதுபோல நானும் உம்முடைய தர்சனத்தால் ஆனந்தமடைகிறேன். உமக்கு தாஸனுகிறேன். நான் எங்கு செல்லவேண்டும் என்கிறதில் உம்முடைய ஆக்ஞையை நிறைவேற்றுகிறேன். என் விக்ஞாபனத்தைக் கேளும்.] என்னுல் எந்த முனிஸ்ரேஷ்டர்களுக்கும் உத்வேகங்களாகிற தொந்தரவுகள் கஷ்டங்கள் ஏற்படக் கூடாது." (634)

"ஏனெனில், தபஸ்விகளுக்கு எந்த அரசனுல் துக்க ஸந்தாபங்கள் ஏற்படுகின்றனவோ, அந்த அரசன் குடும்பசகிதம் அக்னிதாபமில்லாமலேயே அவனுடைய துஷ்டகர்மங்களின் பலனுலேயே எரிந்து சாம்பலாகிவிடுகிருன். பிராம்மணர்க ளுடைய சந்தோஷம் மங்களங்களுக்கு ஆதிமூல்யமாகிறதல்லவா? பிராம்மண கிருபை, கடாக்ஷம், அனுக்ரஹம், சகல செளபாக்யங் களைக் கொடுக்கும் ஆணிவேர் போலவல்லவா இருக்கிறது; பிராம்மணர்கள் பூதேவர்கள். அவர்களை நமஸ்கரித்து அவர்க ளுடைய அனுக்ரஹத்தால் சக்தியையும் புகழையும் ஆயுசையும் பகவானுடைய சேர்க்கையையும் அடைகிருர்கள். அவர்கள் க்ரோதமடைந்தால் கோடிக் கணக்கான குலங்கள் பஸ்மமாகி விடும்." (பிராம்மண மகிமையை விளக்கிச் சொன்ன வாயு பகவான் கார்த்திய வீர்யார்ஜுனனுக்கு பல இதிகாஸங்களைச் சொன்னுர். அவர்கள் நடத்திய சம்பாஷணைகளை மஹாபாரதத் தில் அனுசாஸன பர்வத்தில் தானதர்ம பரிபாகத்தில் காண்க.) (635)

"இவ்விதமாக நான் என் ஹ்ருதயத்தில் தீரவிசாரித்து உம்மிடம் கேட்டுக்கொள்கிறேன். நான் தங்குவதற்கு ஒரு வாசஸ்தலம் நியமிக்கவேண்டும். லக்ஷ்மணன் சீதை சகிதமாக அங்குபோய் வசிக்கிறேன். அவ்விடத்தில் ஒரு அழகான பர்ண சாலையை இலைகள், புல் முதலியவைகளால் ஏற்படுத்தி வசிக் கிறேன். கிருபாளு, உம்முடைய ஆதரவின் கீழே கொஞ்சகாலம் தாமஸித்து வாழவிரும்புகிறேன்" என்று சொன்னுர். (636)

[தியானம்

ராமா லக்ஷ்மண சீதா, வாசுதேவா, மாயையினுல் உலகத்தை மறைத்து, எனக்கு த்வாதசாக்ஷர மந்திரத்தை உபதேசித்து, மஹாகிருபையை அடையச்செய்த பிரபோ, உம்மை எப்போதும் நித்யவிபூதியான பரமபதத்தில் அதிபிரகாசமுள்ள ஸ்வரூபத் திஞல் பக்தர்கள் ஆராதிக்கும் ப்ருஹத்பானுவே, நீர்தான் ஆதி தேவர், நாராயணர், பிரம்மாவுக்கும் முந்தியவர், பிரகாசிப்பவர். நீர்தான் விளையாட்டு புத்தியினுல் லீலா விபூதியாகிற ப்ருகிருதியை நடத்துகிறவர். நீர்தான் ஆதிதைவிக பயத்தைப் போக்கும் புரந்தரர். தேவகாரியத்திற்காக அவதாரம் எடுத்து அசுரராக்ஷஸ பிசாச முதலியவைகளை சம்ஹரிப்பவர். உம்மைத் தான் ஸோமரூபியாகவிருக்கும் ஸவர் என்று சொல்லுகிருர்கள். பராசரபட்டர் உம்மைக் கிருஷ்ணுவதாரத்தில் சிறுவர் முதலிய

யாவருக்கும் தம்மைப்பற்றிய நிச்சய ஞானத்தை உண்டு பண்ணும் ஸ: என்று சொல்லுகிருர். ராமகைங்கரியம் செய்து பேரானந்தத்தை அனுபவித்து, தூம் ராக்ஷஸனை வதம்செய்த பின்பு ராமனையும் சீதையையும் லக்ஷ்மணனையும் ராஜாசுக்ரீவனை யும் நினைத்து சந்தோஷப்படச் செய்த வாயுஸூதனை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.]

ஸஹஜமானதும் ஸரளமானதுமான ஸ்நேகத்தினுல் கட்டப் பட்ட வால்மீகிமுனிவர் ராமச்சந்திரனுடைய மிருதுவான வாணி யினுல் சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்டார். உடனே உணர்ச்சிவசம் மிகுந்தவராகி, பிரும்மஞானமுள்ள வால்மீகி முனிவர் சொல்ல ஆரம்பித்தார். "ஸ்வாமி, நான் தன்யனுக்கப் பட்டேன். பிரபோ உம்மால் கிருதகிருத்யனுக ஆக்கப்பட்டேன். ரகுகுலத்தின் (பெருமையை விளக்கக்) கொடிபோன்றவரே! நீர் என்னைப் பார்த்து இவ்விதம் ஏன் கூறமாட்டீர்! நீர் எப்போதுமே வேதத்தின் முறையைக் காக்கின்றீர். ஐயா, ரகுகுலகேது, ரகு குலத்தின் கொடியே, நீர் ஆதிதேவரான நாராயணர், ஸ்ருதிக ளாகிற வேதங்களால் புகழப்படுகிறவர். தர்மவியவஸ்தையை நிலைநாட்டும் வஜ்ரபாணியாகிற புரந்தரர். ஐயா ஸ்ருதிஸேது, உமது தண்டத்தினுலும் கிருபையாலும் உலகத்தின் மரியாதை வியவஸ்தைகள் ரக்ஷிக்கப்படுகின்றன. (637)

ராமா, நீர் வேதங்களின் மரியாதையை ரக்ஷிக்கிற தர்மஸேது அல்லவா? நீர் ஜகதீஸ்வரர். ஜானகீதேவியோ உமது மாயையின் உருவமாவாள். கருணைக்கடலாகிய உம்முடைய திரு உள்ளப் படியே இவள் உலகைப் படைத்து, காத்து அழிப்பவள். ஆயிரம் தலைகளைக் கொண்ட ஸர்ப்ப ராஜனுகி பூமண்டலத்தை தலையால் தாங்குகிறவனும் சராசரங்களுக்குத் தலைவனுமாவனே இலக்கு மணனுகத் தோன்றியுள்ளான். தேவர்களது காரியமாக நீர் இவ்வாறு அரசரூபத்தில் தோன்றி துஷ்ட ராட்சதர்களை அழிக்க வந்துள்ளீர்." (சரீராதிகளில் ஆத்மபுத்தியைவிட்ட மகான் களுக்கு பரமாத்ம ஸ்வரூபராகவிருந்து, மோக்ஷமளிக்கிறவரும், சரீரங்களையே ஆத்மாவாக நினைக்கிறவர்களுக்கு ஸம்சாரத்தை வ்ருத்தி செய்பவரும், மஹத் முதலிய காரிய ஸ்வரூபியாயும், பிரகிருதி என்னும் காரண ஸ்வரூபியாகவும், மாயையினுல் தன் ஞானத்தை பிரகாசித்துக்கொண்டு பிறருடைய ஞானத்தை நிரோதம் செய்யும் ஜகத் ஸ்வரூபருக்கு நமஸ்காரம். உம்மை பிரும்மபரமான உபநிஷத்துக்கள் சிரத்தையுடன் மோக்ஷ

ஆனந்தத்தைத் தரும் நாராயண தத்வமாக சொல்லுகின்றன. இவ்வுலகில் க்ஷேமமும் பர உலகில் மோக்ஷமும் கொடுக்கவேண்டியதற்காக வர்ணாஸ்ரம தர்மத்தையும், ஆத்ம ஞானத்தையும் கொடுத்து, ராகத்வேஷங்களை விலக்கி, சிருஷ்டிக்குமுன் மாயையுடன் கிரிடிக்கிற ஆதிநாராயணன் என்று சொல்லப்படுகிறீர். உம்முடைய மாயையே இப்போது வந்திருக்கும் ஜானகி; கிருபையின் ஸமுத்திரம். உங்களால் ஜகத் எல்லாம் நியமிக்கப்பட்டு நடத்தப்படுகிறது.) (638)

ஸஹஸ்ர தலைகளை உடைய ஆதிசேஷன், சகல சராசரங்களை தன் சிரத்தின்மேல் தாங்கும் ஸர்வத்ருக், மஹா உரகர், லக்ஷ்மணராகவிருக்கிறார். (அப்பேற்பட்ட அனந்தரை நான் நமஸ்கரிக்கிறேன்.) தேவகாரியத்தின் நிமித்தம், நீங்கள் இருவர்களும் மாயையான சீதைசஹிதம் மானிடசரீரங்கள் எடுத்துக்கொண்டு ராஜபுத்ரர்களாக அவதரித்து, வனத்தில் வாசத்தை ஸ்வதந்திரர்களாக ஏற்றுக்கொண்டு, ராக்ஷஸர்களை வதம் செய்வதற்காக நீங்கள் சஞ்சரிக்கிறீர்கள்.'' (639)

[தியானம்

ஹே ராமா சீதா லக்ஷ்மணா, அபராஜிதராமா, தங்களுக்கு வசப்பட்ட மாயையிடமிருந்து என்னைக் காப்பாற்றவேண்டும். என்னுடைய ஸத்வத்தை எப்பொழுதும் ஓங்க வைக்கவேண்டும். நீரே நாராயணர். அவாப்த காமர். எனக்கு ஸமஸ்த ஐஸ்வரியமாகவிருப்பவர். சகல ஜீவர்களுக்கும் ஞானமுதலிய சக்திகளைக் கொடுப்பவர் நீரே. வேதங்களும் ரிஷிகளும் இந்த ஜகத்தை உம்முடைய பிரும்மத்தின் ஒரு அம்சமாகவே அறிகிறார்கள். நீர் ஆதிபுருஷர். விகாரமற்றவர். உம்மை நான் முனிவர்களும் வேதங்களும் பூஜிப்பதுபோல மனம் வாக்கு காயம் இவைகளால் என்னை உம்மிடம் அர்ப்பணம் செய்து, உம்முடைய அம்சங்களாகிய இந்திராதி தேவர்களைச் சொன்னாலும் உம்மையே பூஜித்தது ஆகும். ஸத்வம் முதலிய குணங்களுக்கும் அப்பால் இருக்கும் நாராயணா, சகலபாபங்களையும் நாசம் செய்யும் தங்களுடைய புண்யஸ்ரவண கீர்த்திகளை அம்ருதபானம் செய்வது போல செய்து, என்னுடைய ஸந்தாபங்களைப் போக்கி, அந்நுணனுகை சொரூப ஞானத்துடன், மனோதர்மங்களாகிய ராகாதிகளும், காலத்தினால் ஏற்படும் கிழத்தனம் முதலியவைகளை ஒழித்து, அகண்டானந்த ரூபத்தை நான் எப்போதும் தர்சனம் பண்ணும்படி சதா அனுக்ரஹம் செய்யவேண்டும். ராமா, லக்ஷ்மணா,

  

சீதா, சுக்ராசாரியரை முன்னிட்டு, த்வாதசாக்ஷரத்தின் மகிமை யினுல் துருவன் வந்து சேர்ந்ததுபோல நான் உன்னைவந்து அடைய கிருபை செய் ராமா.]

"ஹே ராமா. உம்முடைய ஸ்வரூபஸ்வபாவங்கள் வார்த்தை களுக்கு அடங்காத மகிமைகள் பெற்று, அகோசரமாகவும் ஆழ முள்ளதாகவும், இந்திரியங்களுக்குப் புலப்படாததாயும், புத்தி தத்வத்தில் நிர்ணயம் செய்யமுடியாதபடி (விளங்கும் அதோக்ஷஜ ராக நீர்) விளங்குகிறீர். (பிருஸ்னிகர்ப்பரே, ஹயசிரஸ் ரூபமாக ஹவ்யகவ்யங்கள் எல்லாவற்றையும் புஜிக்கும் போக்தாவே, அநிருத்த நாராயணரே, ஞானிகள் தங்கள் கர்மங்கள் எல்லாவற் றையும், உமது ப்ரீதியை அடைவதற்காகச் செய்த கர்மங்கள், கர்மங்களின் பலன்கள், எல்லாவற்றையும் உம்மிடம் அர்ப்பணம் செய்கிருர்கள். ஸம்சாரத்தை நிவர்த்திசெய்வதாகிய தங்க ளுடைய பாதசரணங்களை த்வயம் சர்மஸ்லோகம் முதலிய வழி களால் அவலம்பித்து உம்மையை பரமார்த்தமாக அடைகிருர்கள். ஹே ஸ்வாமி, ஜனுர்த்தனரே, இதன் காரணத்தால்தான்) தங்க ளுடைய மகிமைகள் அவ்யக்தமாகவும் சொல்லவொண்ணுதபடி அபாரமாகவும் ஆழமும் விசாலமுமாக விளங்குகின்றன. (ஸர்வ அந்தர்யாமியாகவும், ஸர்வ வியாபகமாகவும் இருக்கிறபடியால்) சுருதிகள் உம்மைப் பூராவும் வர்ணிக்கமுடியாமல் நேதிநேதி என்று சொல்லி தயங்கி, ஒடுங்கி நிற்கின்றன."

(ஹே பராபரமான வஸ்துவே, தங்களிடம் ப்ரேமை வைத்த என்னை தாங்களே பரிசுத்தம் செய்யவேண்டும்.) (640)

[தியானம்

ஹே ராமா, நாராயணு, பத்ரிநாராயணு, மஹாலக்ஷ்மியாகிய சீதையுடன் கூடிய நடமாடும் ராமா, ராமானுஜா சீதளபூதவி பூத்யே நமஸ்காரம். அர்ஜுனசகாவே, ஸம்சாரியாகிய எனக்கு உன்னைப் பூஜிக்கவேண்டும், என்கிற சுக்ருதத்தைக் கொடுத்து, என்னை உன்னிடம் அனுராகமாக முயற்சியுடன் விளங்கவைக்கும் கிருதியே, வேதங்களால் புகழப்படும் பிரபுவாகிற நாராயண, சுரேசரே, என்னை உன் ஆதீனத்துக்கு உட்படுத்தி உம்முடைய சொத்து என்று கருதும் ஆத்மவானே, நீர்தானே எனக்கு அன்பை பக்தியைக் கொடுத்து, ராம கைங்கர்யமாகிற உபாயத் தைப் பற்றி உம்மிடம் சேரும்படி அனுக்ரஹிக்கும் ப்ரஜாபவர். நீரே சுகத்தை அளிக்கும் பலனுகவும், சுகமாகவுமிருக்கும் சர்மர். சரணம். ஸரஸிருஹாக்ஷா, உன்மீல்ய நேத்ரங்களோடு என்னைப்

பார்த்து கிருபையை வர்ஷித்தருளவேண்டும். ஸர்வவ்யாபியாக விருக்கும் விஷ்ணோ, முகுந்தா, கிருஷ்ணா, வைகுண்டபதி, உத்தம ஸ்லோகா, அம்பரீஷன் நாரதர் வால்மீகி போன்றவர்கள் ஸர்வாத்ம பாவத்துடனும், வாசுதேவ பக்தியையே வாழ்வின் சின்ன மாகவும், பாகவத பக்திப்ரேமையை ஜீவனுதாரமாகவும் ஹரியி னுடைய கதைகளையும் அச்யுதனுடைய பாதங்களை வாழ்வாகவும் கருதி, ஹேஸ்வாமி, சகல சம்பத்துக்களையும் நித்ரையில் ஏற்படும் கனவுகள் மாதிரி கருதி, தங்களுடைய மோஹத்தை சேதனம் செய்து கொண்டு, மோக்ஷ தர்மத்தை அவலம்பித்தவர்களாக ஸர்வ பூதங்களுக்கும் அனுகம்பையாகிற தயைக் காட்டி, மாதவ னுடைய ஆராதனை, ஸாதுக்களுடைய ஸங்கம், நாராயணபத சரோஜங்களில் துளசி பில்வ அர்ச்சனைகள் செய்து, ஹ்ருஷி கேசனுடைய பாதங்களை சந்தனம் மல்லிகைப்பூ கோரோசனை போன்றவைகளால் அர்ச்சித்து, பாபங்களையும் பயங்களையும் ஒழித்து, ஏகாந்த பக்தி பாவத்தினுல் வந்து அடைந்தார்களே, ஹே, அதோக்ஷஜா, அப்பேற்பட்ட உன்னுடைய த்யானம் இல்லாத இந்த சரீரம் ஜீவன் இல்லாமல், வெறும் தோல்பை மூச்சு விடுகிற மாதிரி, அல்லவா ஆகிருர்கள். சில ரிஷிகள் உம்மை வயிற் றின் பாகமாகிற மணிபூரகத்தை பிரும்மமாகவும், சில ரிஷிகள் ஆருணிகள் என்று சொல்லப்படும் தஹா (ஹ்ருதயத்தை) பிரும்ம மாக உபாஸிக்கிருர்கள். அந்த ஹ்ருதயத்திலிருந்து மேலே கிளம் பும் ஸுஷும்ன நாடியை அவலம்பித்தவர்களாக சம்சாரத்திற்கு திரும்பி வருகிறதில்லை. அப்பேற்பட்ட உத்தம பக்தி உள்ள வர்கள் ஏகாந்த சொரூபியாகி, ஸம்சாரத்தை நிவர்த்தி செய்து கொண்டு, முகுந்த சரணங்களை நம்பிக்கையுடன் உபாஸிக் கிருர்கள். அப்பேற்பட்ட ஈசனே, ராமகிருஷ்ணுதி சரீரங்களை அடைந்த மாதவ பிரபோ, உம்முடைய கதாசாகர அம்ருதத்தில் மூழ்கி, தாபத்ரயங்களை நீக்கி, உம்முடைய சரணங்களாகிற தாமரைப் பூக்களுக்கு அன்னங்களாக விளங்கும் நாரதர் அம்பரீஷன் ராமானுஜர் பரதன் போன்ற பாகவத உத்தமசீலர் களின் ஸங்கத்தினுல் பற்றுதலற்ற மனத்துடன் மோக்ஷத்தை அபேக்ஷிக்கிறேன். நீங்கள்தான் எனக்கு ரக்ஷணம். நரநாரா யண பிரபோ, நந்தை, அபர நந்தை தீர்த்த மஹாஹ்ருதம் போல விளங்கும் ராம சீதா லக்ஷ்மணு, எங்களிடம் தயை செய்து அனுக்ரஹம் கொண்ட புத்தியுடன் ஸதா இருக்கவேண்டும்.]

"ஹே ராமா, உம்மால் உண்டாக்கப்பட்ட இந்த ஜகத் எல்லோ ராலும் பார்க்கப்படும் ஸ்தூலமாகவுமிருக்கிறது. நீரோ ஸர்வ

போக்தாவாகவும், ஸர்வ சாக்ஷியாகவும் பிரவிருத்தி, நிவிருத்தி தர்மங்களனைத்தையும் பிரத்யக்ஷமாகப் பார்க்கும் தன்மையுள்ள ஸர்வதர்சியாக விளங்குகிறீர். ஐயா, நீரே பிரும்மா, நீரே விஷ்ணுவாகிற ஸர்வ வ்யாபி. ஸர்வஅந்தர்யாமி. நீரே ஸம்ஹாரம் செய்யும் கோர மூர்த்தியாகவும் சம்புவாகவும் விளங்குகிறீர். நீரே ஈசானராகவுமிருக்கிறீர். உமது இஷ்டப்படி அவர்களை காரியங்களில் நியமிக்கிறீர். அப்பேற்பட்ட குஹ்யராக விளங்கும் உம்முடைய மர்மரஹஸ்யங்களை அறிவதற்கு உம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட என்போன்ற சேதனர்களுக்கு முடியுமா? பிரபு, இதுவரையிலோ, இனிமேலோ, எக்காலத்திலோ, உம்முடைய மகிமைகளை கணக்கிடுபவர்கள் இருக்கிறார்களா? ஒருக்காலத்திலும் இருக்க முடியாது. (641)

"எந்த ஆத்மாவுக்கு நீர் அருள் சுரந்து, நான்தான் பரதத்வம், என்னை நன்றாகத் தெரிந்துகொள் என்று (அர்ஜுனனுக்கு பரம கிருபையுடன் விஸ்வ ரூபத்தைக் காட்டி, அவனை அணைத்துக் கொண்ட மாதிரி) நீரே மஹா அனுகம்பையால் க்ரோதம், கோபம் முதலியவைகளை திரஸ்கரித்து, பாகவத ஸம்ரக்ஷணம் என்கிற தர்மத்தை அவலம்பித்து, ராமா, சீதா நாயகா, நீங்களாக தங்களைக் காட்டிக் கொடுக்கிறீர்களோ, அவனல்லவோ ஆத்மவானாகவும், ஜிதக்ரோதனாகவும் ஜிதமன்யுவுமாகி, உன்னுடைய ஸ்வரூபஸ்வபாவங்களையறிந்து, உன்மயமாக ஆகிறான். ரகு நந்தனா, உம்முடைய கிருபையின் வேகம் சீதள பூமியிலிருக்கும் பதரி வனத்தில் நடுநாயகமாகவிருக்கும் கைங்கர்ய லக்ஷ்மியாகிற மஹாலக்ஷ்மி சகிதம் எவ்விதம் நரராகவும் நாராயண ரிஷியாகவும், சேதனர்களின் தாபத்ரயங்களை குளிர வைக்கும் உரு சந்தனமூர்த்தி, சந்தனாங்கதி, சந்திராம்சு அது போல உம்முடைய கிருபைதான் அப்பா எங்களுக்கு வேண்டும்." (என்ன முயற்சி செய்தும் உம்மை அடைய எண்ணம் கொண்டு வாடி வருந்திய போதிலும், நாராயணா, உன் ஹ்ருதயம் என்னிடம் ப்ரீதியாகி இல்லாதவரை, என்னுடைய பக்தி ஆசரணைகள், நம்ரதிகள் எல்லாம் வீணே வ்யர்த்தமே.) (642)

"ஹே பிரபோ, உம்முடைய கிருபா கடாக்ஷத்தினால், என்னுடைய அறிவுக்கு நீர் சித்ஆனந்த மய (ப்ருகிருதி ஸம்பந்தமுள்ள ஐந்து பூதங்களால் பண்ணப்படாததும், கர்ம பந்தங்களால் இறுகப்படாததுமானதும்) பரிசுத்தமுள்ளதும், சரீரங்களாயுள்ள சேதனா சேதனங்களின் குற்றங்கள் ஒன்றும் பற்றப்படாத பூதாத்மாகவும் விளங்குகிறீர். நீர் ஸாமான்ய ஜீவர்

களுக்கு ஏற்படும் விகாரங்கள், ஜனன மரண ஜரா மாறுதல்கள், உத்பத்தி நாசங்கள், விருத்தி க்ஷயங்கள் ஆகிய மாறுதல்களால் பற்றப்படாத அம்ருத்யுவாகவும் அமேயாத்மாவாகவும் விளங்கும் லக்ஷ்மி நரசிம்மன் போல அல்லவா விளங்குகிறீர். உம்முடைய சரீர ரூப தாரணைகள், அவதாரங்களின் ரஹஸ்யங்கள், அத்புத மான ரூபங்களுடன் கூடிய செய்கைகளை யாரால் உம்முடைய தயையின்றி அறியமுடியும்! நீர் பக்தி செய்கிறவர்களுக்கு ஸ்வதந்தரமாக அனுபவிக்கும் ஹவிஸ். நீர் ஸுரேசர். மனுஷ்ய ரூபமெடுத்து தேவதைகளின் கார்யத்தையும், ஸாதுக்களை ஆட் கொண்டு, ரக்ஷிப்பதற்காகவும் இப்போது அவதரித்திருக்கிறீர். சாதாரண ப்ரகிருதி புருஷன் போல சஞ்சரித்துக் கொண்டு, மாயையினால் எங்களை வஞ்சித்து, ஒரு அரசகுமாரனைப் போல எங்களிடம் விளையாடுகிறீர், பேசுகிறீர், செய்து காண்பிக்கிறீர்.'' (643)

''ஹே ராம், உம்முடைய அபாரமான ரூப செய்கைகளைக் கண்டு ராக்ஷஸபுத்தியுள்ள மூர்க்கர்கள் மோஹம் அடைந்து, புத்தி மனஸ் பிராணன் இந்திரியங்கள் எல்லாவற்றையும் நஷ்டப் படுத்திக் கொண்டு, ஸ்வாமி, உம்மிடம் விரோதபுத்தியை அடை கிறார்கள். ஆனால் பிரபஞ்ச முழுவதையும் ஆத்ம ஸ்வரூபமாகப் பார்க்கும் ஞானிகள், ஜீவன் வரையிலுள்ள முக்குண ரூபமான இப்பிரபஞ்சம் தங்களிடத்தில் லயமடைகிறது. தாங்களே ப்ரளய பயோமுசः தங்களிடத்தில் மனோ விலாஸத்தால் ஸ்தம்பம் போல விளங்குகிறது என்று நினைத்து பேத அபேத புத்திகளில் உள்ள சூக்ஷ்மங்களை அறிந்து, சுகத்தை அடைகிறார்கள். நீர் சூத்ரதாரி. எல்லா ஜீவர்களையும் நடத்தி வைக்கும் நியந்தா. பிரும்மா, ருத்ரன், உம்மை நன்றாக அறிகிறார்களில்லை. உம்முடைய மனோ பாவங்களுக்கும், ஸங்கல்பங்களுக்கும் மனோவாஞ்சை களுக்கும் அனுசரணையாகவும், உம்முடைய சொத்துக்களாக என்னை நினைத்து, ஆட்கொள்ள வேண்டும். நீர் இப்போது மனுஷ்ய ரூபத்தில் தோன்றி மனுஷ்ய வியவஹாரங்களைச் செய்ய விருப்பமுள்ளவரானால், அவ்விதமே நடக்கட்டும். அது வும் எனக்கு பிடித்ததுதான். வேஷம் தரித்த மனிதன் வேஷத் தை நடத்தியாக வேண்டு மல்லவா? (ஹே முனி ராஜவேஷம் கொண்ட ராமா, தியாகராஜர் போன்ற மஹான்களால் ஆராதிக் கப்படும் ராமநாமத்தை உடையவரே, வேதங்களால் புகழப்படும் கீர்த்திகளை உடையவரும், உமது நாமரூபங்களைக்கண்டு பிரும்ம ருத்ராதிகள் கௌரி, நாரதர், தியாகராஜர், பிரஹ்லாதன்

அம்பரீஷன் போன்றவர்கள் முதித மனதுடன் விளங்குகிறார் களோ, அந்த மங்களமூர்த்தி தர்சனத்தை எந்த மஹாராஜனுக்காக அருள் சுரக்க இந்த பூமியில் அவதரித்தாயோ, அந்த மஹாத் மாவை முன்னிட்டு, புலஸ்திய வம்சத்திற்கு கிருபை காட்டிய ஹரிபகவானே, சுகபிரும்மத்திற்கு சதா ஆனந்தத்தைத் தரும் ஹரி: நாராயணோவிஷ்ணுஃ உம்மை நான் சரணம் அடைகிறேன். அர்ச்சிக்கிறேன், நமஸ்கரித்து ஸ்துதிசெய்கிறேன். நீரே என் னுடைய எஜமானன் என்று நமஸ்கரிக்கிறேன். ஜகத் பிரபோ, தேவதேவா, அனந்தரே, புருஷோத்தமரே கிருபை செய்ய வேண்டும்.'') (644)

''ஹே ஸ்வாமி, தாங்கள் என்னிடம், ''நாங்கள் எங்கு வசிக்கவேண்டும்?'' என்று கேட்பவராய் வாசஸ்தலத்தைக் நிய மிக்கும்படி கேட்டு, காண்பிக்கச் செய்கிறீர்கள். ஹரி நாராயணரே விஷ்ணோ, என்று சொல்லப்படும் உம்மை நான் மிக்க சங்கோசத் துடன் வினவுகிறேன். ஜகத்பிரபு, அவ்யயமான புருஷனே, நீர் இல்லாத ஸ்தானம் எங்கேயாவது உண்டா? யாராலும் சொல்லக் கூடுமா? அப்படியிருந்த போதிலும், ஸர்வத்ஞரே, நீர் கேட்கிறீர், நான் உமது ஆக்ஞைக்கு உட்பட்ட சேதனன் என்கிற முறையில் சொல்லுகிறேன். நீங்கள் வாசம் செய்வதற்கு உத்தமமான ஸ்தலத்தை உம்முடைய ப்ரீதிக்காகச் சொல்லுகிறேன். நாராயண ப்ரீத்யார்த்தம் செய்வதாக நினைத்துக் கொள்ளவேண்டும் என்று தண்டனிட்டு (அனாதிநிதனம், விஷ்ணும், ஸர்வலோக மஹேஸ் வரம் என்று விஷ்ணு பகவானை பீஷ்மர் தர்மபுத்திரருக்கு வர்ணித்தாரோ), அது போல வால்மீகிரிஷி பகவான் (பீஷ்மரைப் போல்) சாக்ஷாத்காரமாய் ராமனை நமஸ்கரித்து, பிரேமை பக்தி யால் கட்டப்பட்டு விக்ஞாபித்துக் கொண்டார். (645)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, விஷ்ணோ, பக்த பராதீனரே, நீ அம்பரீஷ பராதீனனாகயிருந்து சுதர்சன சக்ரத்திடமிருந்து பயந்த துர்வாஸருக்கு உனது ரக்ஷணத்தைத் கொடுத்து அம்ப ரீஷனுக்கு திருப்தி அளித்தாய். பக்தவத்ஸலா, உன் நாமத்தைச் சொல்லி பகவானை உபேக்ஷை செய்து ஆசார்யரே எல்லாம், ஸர்வமும் நம்மாழ்வாரே என்று கருதிய ஆளவந்தார், மதுர கவிகள் அவர்களுடைய சாந்த தமசீலம் ஞானம் இவை களால், பகவானே, சீதாலக்ஷ்மண சகிதம் உள்ள ஸ்ரீராமச் சந்திரனே, பூர்ணரே, பரமாராத்யரே, காம விலாசமுள்ளவனே,

நளினுக்ஷரே, சரணம் என்றும் சொல்லியும் உன் பாத சரணங்களில் அடிபணிந்து வாழும் பாகவத உத்தமர்களுக்கு தாஸர்களாகவும், அடியாருக்கு அடியாராக விருக்கும் பாக்யத்தைப் பெற்ற நான் உன்னையே வந்து சரணமடைகிறேன். ரங்கேசனின் பாதுகைகளை சிரம்மேல் தாங்கும் பரதனை முன்னிட்டு நமஸ்கரிக்கிறேன். பாகவத உத்தமனுன சத்ருக்னனை முன்னிட்டு, தாஸனுகவிருக்கும் என்னை கிருத கிருத்யனுகச் செய்யவேண்டும். சாந்தியை விரும்பும் எனக்கு க்ஷமையை அருள்செய்து ஆனந்த கிருதனுகச் செய்யும். ஹே ஹரி பகவானே, ருத்ரர் பிரும்மா, ஸநத் குமாரர், நாரதர், அம்பரீஷன், கபிலர், அபாந்தரதமர், தேவர், தர்மதேவதை, ஆசுரி என்கிற ரிஷி, மரீசி முதலிய சித்தர்கள் எல்லோரும் உன் மாயையினுல் கவரப்பட்டு, கலங்கி, உன்னையே தஞ்சமடைந்து, உன் சுதர்சன சக்ரத்தின் ஒளியினுல் பாபங்களை விலக்கி, உன்னையும், உன்னைப் பூஜிக்கும் பாகவத ஸ்ரேஷ்டர்களையும் ஆராதித்து, உன்னை திருப்தி செய்ய வேண்டும், நீரே அக்னி, நீரே சூரியன், நீரே காலாத்மன், நீரே சோமன், நக்ஷத்திர நேமி, நீரே பஞ்ச பூதங்கள், விஸ்வாத்மன், ஸர்வ குணுஸ்ரயர், விஸ்வேஸ்வரர், என்று சொல்லி ஸர்வ பூதாத்ம பாவத்துடன் சரணமடைந்தார்கள். அதைப் போல நானும் உன்னை சரணமடைகிறேன். என்னிடம் பிரஸன்னமடைய வேண்டும். லோகபாலகரே, உன்னுடைய க்ரூரமான சக்ரத்தை, விலக்கி உன் பாதத்தை அவலம்பித்து வாழ்ந்துவரும் எனக்கு, கிருபை செய்யவேண்டும். விஷ்ணோ: காருண்ய ஸிந்தோ, ரக்ஷை செய்யவேண்டும்.]

"பகவான், ஸர்வ தரிசி, ஸர்வ சாக்ஷி, பக்த பராதீனர், வால்மீகியின் பிரேமை ரஸம் பொருந்திய வசனங்களை சிரித்துக் கொண்டு கேட்டார். ஹ்ருஷிகேசர், வால்மீகி ஹ்ருதயத்தில் வாசம் செய்யும் ஶ்ரீராமன், ஸர்வ அந்தர்யாமி, பக்தனுடைய ஹ்ருதய தாபத்தை ஊடுருவி நோக்கும் மஹாசக்திமான், தன்னைத்தானே கிருபையின் வேகத்தால் அர்ப்பித்துக்கொண்ட மஹா தயாளு, மந்த ஸ்மிதனுனுன். (பிராம்மண ப்ரியன், துர்வாஸ ப்ரியன், ராமதாரக மந்திரத்தை அப்யாஸம் செய்த வால்மீகி ப்ரியன். நாரதருடைய க்ருபா பாத்ரத்தை அருள் நோக்குடன் பார்த்தார்.) அந்த சுக்ருத அம்ருதமயமான கருணையின் திருஷ்டி பதத்தில் விளங்கின மஹா பாக்யவானுன வால்மீகி முனிவர் சிரித்துக் கொண்டு, மதுரமான குரலில் மீண்டும் ராமனை நோக்கிப் பேச ஆரம்பித்தார். (646)

"ஹே ராமா, உமக்கு ஒரு வாசஸ்தலத்தைச் சொல்கிறேன் கேளும். அந்த இடத்தில் நீர் சீதை லக்ஷ்மண சகிதம் வசித்து வாரும். எந்த ஸ்ரீவாஸ நிகேதனத்தில் உம்முடைய அம்ருதமய மான கதா விசேஷங்களை சதா பஜனம் செய்து கொண்டும், உமது நாம சங்கீர்த்தனங்களை பானம் செய்து கொண்டும், உமது புண்ய ஸ்ரவண கீர்த்திகளை மஹா பாக்யமுள்ளவர்களாகக் கேட்கும் காதுகளைப் படைத்த ஸ்ரவண சமுத்திரத்திற்கு சுந்தர மான ஜலங்களை நிரப்பிக்கொண்டு பாயும் நதிகள் போல, (647)

சதா ஹரி கீர்த்திகளைக் கானம் செய்யும், அந்த மஹா உத்த மர்கள் எவ்வளவு நேரம் பருகினாலும், திருப்தி அடையமாட்டார் களோ, அப்பேற்பட்ட பாகவத உத்மர்களின் ஹ்ருதயத்தில் நித்யவாஸம் செய்யும். எந்த பாகவத மூர்த்திகள், ஹே தீப்த மூர்த்தியே, தாமஸ ஜன தூரனே, (தியாகராஜர் போன்ற முனிவர்களால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீராமா,) சுபேக்ஷணராகிய தங்களைத் தர்சனம் செய்து, நேத்ரங்கள் சாதக பக்ஷியைபோல, உம்முடைய கருணைரஸம் நிரம்பிய மேகவர்ண ஸ்யாமள வர்ண நிறமுள்ள லக்ஷ்மிவானாகிற உம்மைத் தரிசனம் செய்துகொண்டு கோடிக்கணக்கான சுக்ருத பிரணாமங்களைச் செய்துகொண்டு, அபிலாஷைகள் தீர்ந்தவர்களாக விளங்குகிறார்களோ, அப்பேற் பட்ட சுக்ருத ஆத்மாக்களில் தாங்கள் நித்யவாசம் செய்ய வேண்டும். பரம கிருபாளு. ரகு குல ஸ்ரேஷ்டா, காலவரை பார்க்காமல் உம்மையே பெரும் தனமாகக் கருதி, ரகு குல நாயகா, உமது சரணங்களை அவலம்பித்து வாழும் பக்த கோடி களின் ஹ்ருதயத்தில் வாஸம் செய்யும் ஐயா." (648)

"ஹே ஸ்வாமி, பிரவாஹங்கள் நிறைந்த நதிகள், ஸமுத் திரங்கள், ஏரிகள் ஆகிய ஜல சமுத்திரங்களை நிராகரித்துவிட்டு, சாதக பக்ஷிகள் மழைத்துளிகளை விரும்பி அதற்காகக் காத் திருந்து அந்த பிந்து ஜலங்களைப் பருகி சுக ஆனந்தத்தை அடைகிறதல்லவா?" (அதுபோல ஹே கிருபாளு, உம்முடைய ஸச்சிதானந்தமய சுத்த ஸத்வ ஸ்வரூபத்தை அங்க அங்கமாகப் பார்த்து, அழகின் இன்ப ரஸங்களைப் பருகி, விஸ்வேஸ்வரா, ஸ்தூல சூக்ஷ்ம காரணமாக விளங்கும் ஸர்வ திருக், ஜகத்பதி, பூலோகம் ஸ்வர்க்கம் பிரும்மலோகம் ஆகிய பதவிகளையும், பகவத் கிருபையின் மா பலன்களாகிற ஸாயுஜ்ய, ஸாலோக்ய, ஸாரூப்ய ஸாமீப்ய பாக்யங்களையும், பகவத் கைங்கர்யத்தை முன்னிட்டு, தியாகம் செய்த வைஷ்ணவ தாஸர்களின் ஹ்ருதயத் தில் சுகமாக வசித்து வாரும் ஐயா.) (649)

கருத்து :—

லோகபந்து, காலத்தினால் ஜீர்ணமாகும் இந்திர பதவி, நாக லோக பதவி, பிரும்ம பதவி முதலியவைகளையும் தியாகம் செய்து, ஸ்வயமேவ காரயிதி, நாராயண ப்ரீத்யர்த்தம், என் கர்மங்களைச் செய்கிறேன் என்று வைஷ்ணவ சங்கல்பத்தைச் செய்யும் பக்தர் களின் ஹ்ருதயத்தில் சுக ஆனந்த மயமாக விளங்கும். (ஐயா, உன் பாத துளசி தளத்தை எடுத்து ஸ்வீகரித்து வாழும் வைஷ்ணவ தாஸர்கள், சரீரத்தை விட ஆத்மா பெரியது, ஆத்மாவை விட அந்தர்யாமியாகிற விஷ்ணு பெரியவர், விஷ்ணுவை விட பாகவத அடியார்கள் பெரியவர்கள், அந்த பாகவத பிரியர்களின் மேல் விளங்கும் ரங்கேசனுடைய பாதுகை கள் பெரியவை என்று குரு கடாக்ஷத்தை நம்பி வாழும் பாகவத உத்தமர்களிடம், ஹே கிருபாளு, நீர் நிச்சயமாக வாஸம் செய்ய வேண்டும்.) இவ்விதம் பகவானை விட பகவானுடைய பாதுகை கள் பெரியது என்று நிரூபணம் செய்த பரதன் போன்ற கைங்கர்ய சிகாமணிகளின் நிர்மலமயமாக விருக்கும் ஹ்ருதய புண்டரத்தில் வசிக்கும் தாஸ ஜன சுக தாயகா, ரகு நாயகா, நீர் லக்ஷ்மணர் சகிதம் சீதை சகிதம், அப்பேற்பட்ட வைஷ்ணவ தாஸர்களின் ஹ்ருதயங்களில் நிவாஸம் செய்யும்.]

'' என்னுடைய மன இருளைப் போக்கும் ஹம்ஸரே, எனக்கு ஒளிதரும் ஆதித்யரே, என் மனதை குளிரப்படுத்தும் சந்திரனே, உம்முடைய கீர்த்தி ரூபியாகிற நிர்மல மானஸரோவரில் எந்த பாகவத ஸ்ரேஷ்டனுடைய நாக்கு ராஜஹம்ஸ பேடாக, யேற்க னவே நிர்ணயிக்கப்பட்டிருக்கும் உம்முடைய குணாஸ்ரயங்களா கிற, கல்யாண குணங்களாகிற முத்துமணிகளைப் பொறுக்கிச் சாப்பிடுகின்றனவோ, ஹே ராம், அயோத்யாபதி, அப்பேற்பட்ட அனுத்தமதாஸ ஹ்ருதயங்களில் நித்யவாஸம் செய்யும் ஐயா.'' (650)

'' ஹே பிரபு, எந்த மஹாத்மாவினுடைய மூக்கு உம்முடைய ஆராதனங்களால் கிடைக்கப்பெறும் பகவத் பிரஸாதங்களாகிற துளசி, பில்வம், தீர்த்தம், பிரஸாதங்கள், ஆகியவைகளை ஸ்வீகரித்துக்கொண்டு, முகர்ந்து பார்த்து, உம்முடைய சுகந்த மானதும், மிக பவித்திரமானதுமான பிரஸாதங்களை மிக்க நம்பிக்கையுடனும் மரியாதையுடனும் (துர்வாஸருடைய மாலை பிரஸாதத்தை கர்வத்தினால் ஐராவதம் மேல் ஏறிய இந்திரன் அலக்ஷ்யம் செய்ததுபோல செய்யாமல்) மிக்க அடக்கத்துடனும் சிரத்தையுடனும், போஜன நைவேத்யங்களுடனும் ஹே பிரபு,

ஸ்வீகரித்துக்கொண்டு, அந்த உச்சிஷ்டங்களையும் வைஷ்ணவ சின்னங்களாகிற ஊர்த்வ புண்டரங்களை சரீரம் முழுவதும் ஆபரணங்களாக அணிந்து திகழ்ந்துவரும் வைஷ்ணவ தாஸர்களின் ஹ்ருதயத்தில் வசித்து வாரும். அந்தப் பெரியர்கள் உம்முடைய பிரஸாதத்தை வஸ்திர பூஷணமாக அணிகிறார்கள் அல்லவா? அப்பேற்பட்ட சுகந்த பூஸாரர்களாகிற வைஷ்ணவர்களின் ஹ்ருதயங்களில் சதா சாந்நித்யம் செய்து, சாக்ஷாத்காரமாக விளங்கவேண்டும்.'' (651)

[தியானம்

ஹே ராமநாராயணா, லக்ஷ்மி சீதா, ராமானுஜ க்ருத ஆத்மன், பரம ஸௌலப்யத்துடன் தம்மைப் பக்தர்களிடம் காட்டிக் கொடுக்கும் ஆஸ்ரிதவாத்ஸல்யரே, பிரும்மாதி தேவர்களை அவரவர்களின் காரியங்களில் கட்டளை இடுபவரே, திசரே, வேத கர்மங்களுக்குப் பலனைக் கொடுக்கும் வள்ளலே, உம்மைத் தரிசிப்பதால் பரம மங்களத்தை அடையும்படி செய்விக்கும் பத்மி, சுதர்சனரே, சுநாபரே, சதா வர்த்தரே, அநேக சுழல்கள் உள்ளதுமான சுதர்சன கால சக்ரத்தை தரித்திருக்கும் க்ரீடாத்மன், தமது அளவற்ற ஐஸ்வர்யப் பெருக்கு குறைபடாது மேன்மேலும் அதிகரிக்க ஸௌலப்யத்தினால் அதை அடக்கி பக்தர்களுக்கு விநியோகம் செய்யும் அச்யுதப்ரியரே, பதும மலர் போல மலர்ந்து அழகியதும் ஸ்ரமத்தைப் போக்கும் மதுரமான கடாக்ஷ வீக்ஷணயமுள்ள பத்ம நிபேக்ஷணரே, மஹாலக்ஷ்மிக்கும் பக்த கோடிகளுக்கும் அனுகூலரே, உம்மிடம் இயற்கையாகவே மகிமைகள் இருந்தும், பரதத்வத்தைப் பாராட்டாமல் அம்பரீஷன் துர்வாஸர், நாரதர், மார்க்கண்டேயர், பிரஹ்லாதன், அர்ஜுனன் இவர்களிடம் அடங்கி, எளியவராகி, சுலபமாக விளங்கும் சுலபரே, உமக்கு எப்போதும் ஜயங்களும் மங்களங்களும் ஏற்படட்டும். கதா ப்ருதராகிய விஷ்ணோ, மஹாத்மன், அனந்த தாஸர்களிடம் தன்னுடைய மஹத்வத்தை மறந்து, தசரத புத்ரராகவிருந்து மனிதர், விருக்ஷம் முதலிய யாவருக்கும் தர்சனம் கொடுத்த ராமா, பேரானந்த வடிவமுள்ள துஷ்டரே, உம்முடைய நாம ஸ்ம்ருதி மனிதர்களை சுத்தப்படுத்தி, நிர்மலமான ஹ்ருதயத்துடன் விளங்கும்படி செய்து அவர்களை மஹா தீர்த்த பதமாக ஆக்கிவிடுகிறது. சுதர்சன சக்ரம் கொண்ட கிருஷ்ணா, காலாதீதனே, காலவராள்னே, கமனீயனே, கருணா கடாக்ஷமுள்ள ராமா, உன்னுடைய கருணாத் மாவினால் அனுக்ரஹம் செய்யப்பட்ட நாங்கள் தோஷங்கள்,

பாபங்கள் யாவற்றையும் விலக்கி, முக்தர்கள் தாபத்ரயங்களை விலக்கி ஆனந்தமடைவதுபோல, சீதையுடன் கூடிய உன் பாத சரணங்களை, ராமானுஜன் காட்டிய வழியில் பின்பற்றியவனாக, அவலம்பித்த எங்களை, எவ்விதம் துர்வாஸரிஷி அம்பரீஷனை ஸ்வஸ்தி வசனங்களால் புகழ்ந்தாரோ, ஐயா, எங்களை அது போல பரமாசிஷ வாக்யங்களால் அனுக்ரஹிக்கவேண்டும். சுக ப்ரும்மமே, ஆஞ்சநேயா, தியாகராஜா, துளசிதாஸரே, அனுக்ரஹம் செய்யவேண்டும்.]

"ஹே பிரபு, எந்த மகான்களின் மஸ்தகங்கள், அகங்கார மமகாரங்களாகிய தோஷங்கள் விலகி, தேவதை, குரு, ஆசார்யர்கள், பூதேவர்களான பிராம்மணர்கள் இவர்களைக்கண்ட மாத்திரம் (தாமரைமலர் ஆதித்யனைக்கண்ட மாத்திரம் எவ்விதம் பூர்ண ஹ்ருதயத்துடன் மலர்ந்து ப்ரேமையின் அபார வெள்ள ரசத்தில் மூழ்கி, தலை வணங்கி நிற்கின்றதோ, அதுபோல) நமஸ்கரிக்கின்றதோ, அந்த மஹானுபாவர்களிடம், ஸ்வாமி, நீர் நித்ய புஷ்டராக வாசம் செய்யவேண்டு வாரும். (அந்த விசேஷமான வினய நம்ரதைகளில் பழக்கப்பட்ட வைஷ்ணவ தாஸர்கள், ஹே விஷ்ணோ, காருண்ய ஸிந்தோ, ராமபதமாகிற வைகுண்ட பதத்தை அவலம்பித்தவர்களாக ராம நாராயண சரணங்களை சதா பூஜை அர்ச்சனை முதலியவைகளைச்செய்து, உம்மையே, ஆனந்த ராமா, ஆத்மாராமர்களாகத் தரித்து, உம்மிடம் அதிக ஸ்நேகம் வைத்து, எல்லாவித பற்றுதல்களையும் ஆசைகளையும் ஒழித்து, உம்மையே பாராபரம், உம்முடைய சரணங்களையே பரமாகதி யென்று நம்பிவாழும் மஹாத்மாக்களும், வைஷ்ணவ சீலர்களும், ராமத்யான சீலர்களும், பாபத்தை விலக்கிக் கொண்டவர்களும், பாபச் செயலைத் தூண்டும் மனம் இந்திரியம் இவைகளை ஜயித்தவர்களும் ஆவார்கள். அவர்களிடம் நீர் வசிக்கவும்.) ஜன்மாந்தரீயமான புண்ய ரூப பாக்யத்தை அடைந்த யாதொரு பெரியோர்களுக்கு ராகத்துக்கும் த்வேஷத்துக்கும் நிமித்தமான ப்ரிய அப்ரியமாயும் உள்ள வஸ்துக்கள், ஹே லக்ஷ்மி நாராயணா, உம்மைத் தவிர வேறு இல்லையே இல்லையோ அந்த வைஷ்ணவதாஸ ஹ்ருதயங்களில் நீங்கள் ஸதாவாசம் செய்யவேண்டும். (அப்பேற்பட்ட தாஸர்கள் அடியார்கள், அடியார்களுக்கு அடியார்கள் ஸமதர்சனர்களாகவும், விஷ்ணுவிடம் நிபத்த ஹ்ருதயமுள்ளவர்களாகவும். ஒரு ஸத்ஸ்திரி ஸத்பதியை பக்தியினால் ஆகர்ஷிப்பதுபோல மனத்தையும் பிராணனையும் ஆத்மாவையும் அபஹரித்துக்

கொண்டு ஸாது ஹ்ருதயத்துடன் வாழும் பெரியோர்களிடம் நீங்கள் சதா வாழவேண்டும்.'') (652)

''ஹே வால்மீகி ராமா, எந்த தீர்த்த ஸ்வரூபிகளாக விருக்கும் அனுக்ரஹ சீலர்கள், ஸ்ரீராமச்சந்திரனுக்குப் பிடித்த கங்கை காவேரி, யமுனை, சரஸ்வதி, அளகநந்தை, சரயு ராமேஸ்வரம் போன்ற ஸ்நான தீர்த்தங்களுக்குச் சென்று தங்களுடைய சரணங்களைத் தேய்த்து, ராமப்ரியத்திற்காக வாழும் உத்தமர்கள் எங்கு உளர்களோ, அங்கு மஹா தீர்த்தரே, சென்று சீதையுடனும் ராமானுஜனுகிய லக்ஷ்மணனுடன் கூடி வாழும். ஹே ராமா, உன் நாம ஸ்ருதியாகிற श्रीरामाय नमः என்கிற ஸ்ரீராமாய நமஃ என்கிற ராஜதாரகத்தை ஸதா ஜபம் செய்து கொண்டு, தங்களுடைய பரிவாரசகிதம் தங்களையே பூஜைசெய்யும் மஹா மஹத்வம் வாய்ந்த அனந்த தாஸர்களிடம் சதா நித்ய வாசம் செய்யும்.'' [ஹே அனுக்ரஹ ராம நாராயணு, ஹரிபகவானே, ஸாத்வதாம் ரிஷபரே, தயை செய்யும்.] (653)

''எந்த ராம தாஸர்கள் அநேக பிரகாரம் தர்ப்பணம் ஹவனம், முதலியவைகளை விதிப்படி செய்துகொண்டு, பித்ருக்கள் தேவதைகள் இவர்களை சந்தோஷப்படுத்தி அதன் பிறகு விப்ர போஜனம் செய்வித்து, அதிமலர்ந்த மனத்துடன் தானதர்மங்களைச்செய்து, அதனுல் அதிக சுத்தமடைந்த ஆத்மா உள்ளவர்களாக மாறி, சுசியாக விருந்து கொண்டு, விசுத்த ஆத்மாக்களாக பகவானைவிட பாகவத கைங்கர்யம் பெரிது, அந்த பாகவத கைங்கர்யத்திலும் ஆசார்ய கைங்கர்யம் ஸகல பாக்யங்களையும் அளிக்க வல்லது, மஹத்வம் வாய்ந்தது என்று ஸகல பாவங்களுடைய ஹ்ருதயத்தால் ஆசார்யஸேவை, ஆசார்ய ஸம்மானம், இவைகளில் மனத்தைக்கொடுத்து, வாழும் வைஷ்ணவ பரமாசார்யர்களிடம் தயாளு, நீங்கள் வாழ வேண்டும்.'' (எவ்விதம் மதுரகவி ஆழ்வார் நம்மாழ்வாரை அடைந்து, பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அவதரித்திருந்த போதிலும், அவரை நேராக தர்சனம் செய்யத் த்வாரகை செல்லாமல் நம்மாழ்வார்டம் சென்ருரோ, அப்பேற்பட்ட மஹான்களிடம் வாழும். அவர்களிடம் நித்யஶ்ரீ நித்யமங்களமாக நீங்கள் இருக்கவேண்டும்.'')] (654)

''ஹே ராம், எல்லாவிதத்திலும் சுபமானதும், வேதோத்தமான எல்லாக் கர்மங்களைச் செய்தும், (வைஷ்ணவ தாஸர்கள், भगवानेव स्वनियाम्य स्वरूपस्थिति प्रावृत्ति स्वशेषतैक रसेन

(अनेनात्मना) स्वकीयैश्च उपकरणैः स्वराधनैक प्रयोजनाय परमपुरुष सर्वशेषी श्रियपतिः स्वशेषभूतमिदम्...स्वप्रीतये स्वयमेव कारयिति என்கிறபடி ஸ்வயமே காரிதவான், என்று ஸாத்விக தியாகம் செய்யும் மஹா உத்தமர்கள், நாராயண ப்ரீத்யர்த்தம் பகவத் கைங்கர்யம் என்கிற நியமப்படி (எவ்விதம் பாகவத உத்தமனுன விபீஷணன் தூதவதத்தைத் தடுத்து சமயம், அதன் பின்பு ராவணனிடம் பிராட்டியை ராமனிடம் கொண்டுபோய்விட்டு மன்னிப்புகேட்கும்படி சொன்ன சமயம், சரணுகதவத்ஸலனுகிற ராமனிடம் கதாபாணியாக விபீஷணன், த்யக்த்வா புத்ரான், தாராம்ஸ்ச ராகவம் சரணம்கதஃ என்று சொல்லி, ஆத்ம நிவேதனம் செய்து, மாம் க்ஷிப்ரம் உபஸ்திதம் என்று தன்னையே பகவானுடைய யக்ஞ சரீரத்தில் அனன்ய பக்தியாகிற அக்னியில், ஆத்ம நிவேதனமாகிற சுரபியினுடைய கிருதம் (நெய்) ஆஹுதி செய்வது போல,) ஸாத்விக தியாகம் செய்து, சரணுகத தர்மத்தை ஆஸ்ரயித்த (அர்ஜுனன், யசோதை, துருவன், பிரஹ்லாதன், மார்க்கண்டேயர், திரௌபதி, கஜேந்திரன், நாரதர், ஆஞ்சநேயர் போன்ற) மஹா உத்தம பாகவத வைஷ்ணவ தாஸர்களிடம் வசித்து வாரும் ஐயா. இந்த வைஷ்ணவ சீலர்கள் கலிகல்மஷங்களை விலக்கி, கடமையைச் செய்யவேண்டியது என்கிற நிச்சய எண்ணம் கொண்டவர்களாகவும், அதன் விளைவினுல் ஒரே ஒரு பலனை இச்சிக்கிருர்கள். அதன் பிரகாரம் சீதா ராம சரணத்தில் அதிப்ரீதி ஒன்றையே ஏகமாத்திர பலனுக அடைகிருர்கள். அப்பேற்பட்ட சரணுகதி செய்யும் பக்தர்களிடம், ஹே ரகுநந்தனு, (ஆஸ்ரித வாத்ஸல்யா, ஜிதமன்யு, ஜிதக்ரோதா, பக்தர்கள் விரும்பத்தக்க திவ்ய சேஷ்டிதங்களை உடைய ஸமீரணரே, கிருபாளு, பரமாராத்யனே மன ரூபியாகிற திருக் கோயிலில், மனக்கோயிலில், மன மந்திரத்தில்,) சீதையையும் லக்ஷ்மணனையும் ஆனந்தப்படுத்திக்கொண்டு வசித்து வாரும்.'' (655)

[தியானம்

ஹே ராம நாராயணு, உன்னையும் பாக்ய விசாரதன், விஸ்வ திருக், குணத்தையும் குற்றத்தையும் பாராமல் உயிர்கள் உய்வதையே கருதி உலகத்தை படைப்பவர் என்று சொல்லுகிருர்கள். ஸாதுக்களுக்கு க்ஷேமத்தையும் துஷ்டர்களுக்கு பயத்தையும் தருவதால் உம்மை விஷமர் என்றும், கலியுகமென்னும் விரோதியை ஒழித்து, கல்மஷங்களை நாசம் செய்து,

வேதத்தில் சொல்லப்பட்ட முறைகளை ஸ்தாபிதம் செய்யும் விஸ்தாரர், பக்தர்களை பரமபதம் அழைத்துச்செல்லும் விஹாய ஸகதி என்று சொல்லுகிருர்கள். சீதையையும் லக்ஷ்மணனையும் வனத்தில் அழைத்துச் செல்லும் விஹாயஸகதி என்று சொல்லு கிருர்கள். சீதையையும் லக்ஷ்மணனையும் வனத்தில் அழைத்துச் சென்று உன் பக்தர்களுக்கு க்ருதாக்ருதன் என்கிறபடி போக மோக்ஷம் கொடுத்த மஹானுபாவா, என்னையும் நீர் ரக்ஷிக்க வேண்டும்.]

" ஹே ராம் எவர்கள் பொறுமையையும் அஹிம்சையையும் அவலம்பித்து, காமக்ரோத மத அபிமானங்களையும், மோஹங் கள் லோபங்கள் துரோஹ சிந்தனைகள், ராகத்வேஷங்கள் ஆகிய எல்லா குணதோஷங்களைப் பரிதியாகம் செய்து சாந்த தம சீலர் களாக விருப்பு வெறுப்பு அற்றுவிருக்கும் பழுத்த பாகவத உத்த மர்களிடம், (மண்டோதரி பர்த்தாவும் மரித்தவனுமான ராவணனை ரணகளத்தில் தன் மடியில் போட்டுக்கொண்டு, தனக்கு நேர்ந்த அவமானம், தீங்கு அபகாரம் வைதவ்யம் ஆகிய யாவற்றையும் லக்ஷ்யம் செய்யாமல், சீதையையும் சீதை அவலம்பித்த பதிவ்ரதா தர்மத்தையும் உபாஸிப்பவளாக "பகவான் ராமச்சந்திரா, வ்யக்தமேவ மஹாயோகி பரமாத்மா ஸநாதனः அனுதிமத்ய நிதனோ மஹதः பரமோமஹான், தமஸः பரமோ தாதா, சங்க சக்ர கதா தரः ஸ்ரீவத்ஸ வக்ஷா நித்ய ஸ்ரீரஜய்யः சாஸ்வதோ த்ருவः, மானுஷம் ரூபம் ஆஸ்தாய விஷ்ணுः ஸத்ய பராக்ரமः ஸர்வ சப்தத்தால் பர்வ்ருதோ தேவைவான ரதவ முபாகதைः ஸர்வ லோகேஸ்வரः ஸ்ரீமான், லோகானும் ஹித காம்யயா" என்று பகவான் நாராயணனை ஸ்துதி செய்யும் பாகவத உத்தமர்களிடம்) வாழும் ஐயா, வாழும். அப்பேற்பட்ட வைஷ்ணவ சீலர்களுக்கு கபடம் தெரியாது. டம்பமாக தங்களைப் பற்றி பறை சாற்றிக்கொள்ளமாட்டார்கள். (தெருவில் நட மாடும் விருஷபம்போல வெட்கமின்றி சஞ்சரிக்கமாட்டார்கள். தியாகராஜர், தாரை, ஆஞ்சநேயர் போன்ற மஹாத்மாக்கள் எது நித்யம், எது அநித்யம் எதைச் செய்யவேண்டும், எது அக்ருத்யம், ப்ரத்யேகமாக ஒரு ஸநாதனமான அவ்யயமான புருஷன், நாராயண பிரபு; இருக்கிருன் அவனுக்கு நாமெல் லோரும் பாரதந்திரியர்கள், அவன் சேஷி, நாமெல்லோரும் சேஷ பூதர்கள். அதர்மத்திலும் பாபத்திலும் குல நாசம் செய்யும் அனுசிதமான கர்மங்களைச் செய்யாமலும், அவ்விதம் எதிர் பாரமால் செய்த போதிலும் பகவானுடைய தண்டனையைப்பெற்று

அந்ருணம் கடனில்லாதவர்களாக, ஏதத் தேஹாவசானம், விட்ட அம்பு மாதிரி வாழ்க்கை நடத்தும் இந்த ஜீவிய சரித்திரத்தில் சகல துன்பங்களேயும் இன்ப போகங்களேயும் அனுபவித்து, அந்த வாழ் நாட்கள் முழுவதும் விஷயப்பற்றுதல் இல்லாதபடியால் சோக நாஸனுக விருந்து, பகவான் நாராயணனே அப்ரமேயன், அப்ரதிமர், துராஸதன் ஜிதேந்திரியன், உத்தம தர்மத்தைச் செய்பவன், அக்ஷீண கீர்த்தியுள்ளவன், ஒருவித தோஷமுமற்றவன், க்ஷிதிக்ஷமவான் க்ஷதஜோப மாக்ஷஃ என்று தாரை தன் கணவனுகிய வாலியினிடம் ரணகளத்தில் சர சாப பாணியாகிற கோதண்டராமனேப் பார்த்துச்சொன்னுளே, "இவர் பர்த்தாவைக் கொன்றவன் இந்த நாராயணன் தான்" என்று தெரிந்துகொண்டும் தன் அத்ருஷ்ட பூர்வத்தினுல் இந்த உத்தம ஸ்லோகனுகிற ஸ்ரீராமனே எவ்விதம் தாரை புகழ்ந்தாளோ,) அப்பேற்பட்ட பாகவத உத்தமர்களிடம் (தன் விசனத்தையும் அபஹாரத்தையும் போக நஷ்டங்களேயும் பாராமல் न क्रोधो न च मात्सर्यं न लोभो नाशुभामतिः भवन्ति कृत-पुण्यानां भक्तानां पुरुषोत्तमे என்று என் ஆசார்யான வேத வியாஸர் சொல்லியபடி வாழும் வைஷ்ணவ பக்தர்களிடம்) சதாரமித்துக்கொண்டு சீதை லக்ஷ்மணனுடன் கூடி வாழும். ஹே ரகுராயா." (656)

[தியானம்

ஹே ராமா சீதா ரமணு, உங்களுடைய பலுக பேச்சுக்களும் ஸ்மித வதனமும், மந்த பாஷணமும், காஞ்சியிலிருக்கும் காமாக்ஷியிருக்கிருளே, வரத சகோதரி அவளேப் போல, அவைகள் என் மனத்தைக் கவருகின்றன. ஹே ராமா, வால்மீகி முனிவரால் பூஜிக்கப்பட்டு, தியாகராஜருடன் சம்பாஷணேகள் செய்த ராமா, துளசிதாஸரால் பில்வமாக அர்ச்சனே செய்யப்பட்ட தசரத ராமா, நாராயணு, என்னுல் துளசியால் ஆராதிக்கப்பட்ட முனிதம்பதிகளே, ராமானுஜன் முன்பு உங்கள் பாத சரணங்களில் ஆஞ்சநேயர் எனக்கு மார்க்கதரிசியாக விருக்க நான் அவரை சரணம் அடைகிறேன். குணஹீனனுன நான் குணேத்தமமான உம்மை எவ்விதம் அறிய முடியும்? ஸ்துதி செய்யமுடியும்? பீஷ்மர் எவ்விதம் ஸ்வதர்மத்தை ஆபத்திலும் பயப்படாமல், லோபத்தினுலும், பிரவிருத்தி தர்மத்தாலும் ஸ்வதர்மத்தைக் கைப்பற்றி பித்ருக்களின் கிருபையையும், மாதாவின் அனுக்ரஹத்தையும், அடைந்தாரோ, எந்த பரசுராமர்

பிறரை ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கச் செய்வதில் ஆததாயியாக விருந்து பீஷ்மருடன் சண்டை செய்து, பித்ருக்களின் கருணைப் பேச்சுக்களாலும் நாரதருடைய வசனங்களாலும், யுத்தத்தி லிருந்து நிவர்த்தி அடைந்து தவத்திற்கு சென்றுரோ, அந்த ஸநாதனமான புருஷரை நான் ஜடாயுவை முன்னிட்டுக்கொண்டு சரணம் அடைகிறேன். பகவத் கைங்கர்யம் செய்த நம்மாழ்வார் எவ்விதம் அத்தைக் கண்டு இருக்கிறேன் என்று சொல்லியபடி ராம நாம உச்சாரணத்தாலும், வால்மீகி, சிவ பார்வதி தம்பதி களின் அனுக்ரஹத்தாலும், நாரதரையும், சுகரையும், மார்க்கண் டேயரையும் முன்னிட்டுக் கொண்டு சரணமடைகிறேன். ராமானுஜா, ஸ்ருங்கார ரஸம் கொண்ட ராம சீதா தம்பதிகளிடம், யுக்தமான பேச்சுக்களால் பிரும்மாவை மனத்தில் தரித்த எங்களைப் பற்றிச் சொல்.]

"ஹே ராம், எல்லோருக்கும் பிரியர்கள், ஸமதர்சினர்கள், ஸர்வ ஆத்ம பாவத்தால் ஸத்யமாகிற கருணையையும் அஹிம்சை யையும் எல்லாவற்றையும் ஊடுறுவி ப்பார்த்து நின்று ஸ்வதர் மத்தை அனுஷ்டித்து, பிறர்களையும் ஸ்வதர்மத்தை அனுஷ்டிக்கச் செய்யும் உத்ஸாஹ மனமுள்ள வைஷ்ணவ ஆசார்யர்களிடம் வஸித்து வாருங்கள். அந்த உத்தம வைஷ்ணவ சீலர்களுக்கு அனுகம்பையாகிற கருணை கவசம் இருக்கிறது. ஸர்வ ஆத்ம பாவத்தால் சராசரங்களை அவர்கள் பார்ப்பதால், (எவ்விதம் வேத வியாஸர் புழுவைக்கூட சந்தித்து, சம்பாஷித்து, அனுக்ரஹித் தாரோ, அது போல) அவர்கள் சகல ஜீவராசிகளுக்கும் ஹித காரிகள். அவர்கள் வாசுதேவரைப் போல வஸுப்ரதர்கள். (தங்க ளுடைய ஆத்ம ஞானத்தை, அஷ்டாக்ஷரத்தை, ராமானுஜர் எல்லா ஜீவகோடிகளும் உய்விக்க எண்ணம் கொண்டவராகி, திருக்கோஷ்டியூர் கோபுரத்தின் மேல் ஏறி, குரு சாபத்தையும் பாராமல், பிரகடனப் படுத்தினுரோ, அதுபோல நம்மாழ்வார் போன்ற வைஷ்ணவ ஆசார்யர்கள் மஹனீயர்கள். ஆளவந்தார் போல குருவுக்கு தியாகம் செய்யும் உள்ளம் படைத்தவர்கள். ஜடாயுபோல பகவத் கைங்கர்யத்தில் உயிர்போகுமளவு ஈடுபாடு உடையவர்கள்.) அப்பேற்பட்ட மஹாத்மாக்களிடம் வசியுங்கள் இவர்கள் குணுதீதர்களான படியால், ஸ்திதப்பிரக்ஞர்கள். துக்கம் சந்தோஷம் முதலிய இரட்டைகளால் பாதிக்கப் படாத வர்கள். அவர்களுடைய மனம் பிராம்மண ஹ்ருதயம் போல வெண்ணெய் மாதிரியும், வாசுதேவ சரணங்களைப்பற்றியிருப்ப தாலும் எல்லோருக்கும் அனுகூலமானது. இகழ்ச்சி புகழ்ச்சி

களால் தங்களுடைய நிலைகளையும் ஸ்வதர்மங்களையும் மறவாத வர்கள். ஸத்யமாகிற ஹிதகாமிகள், ப்ரிய வசனமாகிற அனுக்ரஹ உள்ளத்தை உடைய மஹ ரிஷிகள். பிரும்மத்தை சதா தியானம் செய்யும் வித்வான்கள். ஸகல அவஸ்தைகளிலும் ஸ்வப்னம் முழித்திருப்பது ஆகிய எல்லா நேரங்களிலும் பகவத் சரணாரவிந் தங்களையே கதியாகக் கொண்டவர்கள்.'' (657)

''பகவத் ப்ரிதி, பாகவத் கைங்கர்யம் ஆகிய இரு விஷயங் களிலும் அனன்யகதியாகிற நாராயணனை, ரமாரமணனை சரணாகத தர்மத்தை அவலம்பித்து, ''பிரணதார்த்தி ஹரனே, உன்னையே அனன்ய சரணம்'' என்று நம்பி வாழும் சரணாகத தர்மசிலர்கள். (ஹே ராம், வெங்கடபிரபு, வேங்கட வெற்பு, வேத வெற்பு, எவ்விதமாவது பகவத் சம்பந்தம் வேண்டும் அதற்கு ஆசார்ய சம்பந்தமும் வேண்டும், அந்த மஹா ஸம்பத்திற்கு, உத்கிருஷ்டமான வர்ணாஸ்ரம தர்மமே சிறந்து ஹேது, அந்த ஹேதுவினால் ஜன்ம தோஷங்கள் கழிந்து, வைஷ்ணவர்களின் ஸம்பந்தம் அடைவிக்கப் பெற்று, அந்த வைஷ்ணவர்களை ஆசார்ய துல்யராகவும் தன்னையும் ஈஸ்வரனையும் காட்டிலும் மேம்பட்டவர்கள் என்னும் நினைவுடன் வாழும் உத்தம பக்தர் களிடம், தாஸன் தாஸானு தாஸன், அடியேன் ராமானுஜதாஸன் என்று அடக்கத்தினால் ஊர்த்வ புண்டரங்களால் பறை சாற்றிக் கொள்ளும் வைஷ்ண மகநீயர்களிடம், ஹே கருணையாகிற வெண்ணெயைப் போல ஹ்ருதயம் கொண்ட ராமா, நீ உன் சீதையுடன் நித்யவாசம் செய்யவேண்டும். அவர்கள் மோஹத்தை ஒழித்து, சிஷ்யர்களுக்கும் அந்த திவ்ய ஞானத்தை பகிர்ந்து கொடுப்பவர்கள். இந்திரிய நிக்ரஹம் உள்ளவர்களான படியாலும், மனத்தை பீஷ்மர் ஆஞ்சநேயரைப் போல அடக்கி, ஊர்த்வரேதஸ்ஸுகளாக விளங்கும் மஹாத்மாக்கள்). பர ஸ்திரியை கர்ப்பவாசம் கொடுக்கும் தாய் போல கருதும் நோக்க முள்ளவர்கள். பிறருடைய தனத்தை விஷத்தைவிட கடினமான ஆலகால விஷமாக கருதும் மஹா புண்யர்கள்.'' (658)

''அவர்கள் நிராசையற்றவர்களான படியால் பிறர்களுடைய தன சம்பத்தைக் கண்டு பொறாமைப் படாதவர்கள். அதிக அனுகம்பை உள்ளவர்களான படியால் பிறர் துக்கங்களைத் தங்களுடைய விசேஷமான துக்கங்களாகக் கருதி ஹிதத்தைச் செய்யும் வைஷ்ணவ ஜனத்தோர்கள். ஹே ராம், பிரணதார்த்தி ஹரனே, திருப்பாற் கடலில் வசிக்கும் வசு, அந்த வைஷ்ணவ பெரியோர்கள் உம்மைத்தான் பெரும் தனமாகவும், பிராண

ப்ரியர்களாகவும் வஸு என்றும் அழைக்கிறார்கள். (எவ்விதம் அலர்மேல் மங்கை ஒரு க்ஷணமும் திருவேங்கடமுடையானை விட்டுப் பிரியாமல் ப்ருகு பதத்தில் மருவாக சீனிவாசனுடைய விசாலமான வக்ஷஸ்தலத்தில் ஸ்வயமாக ஆஸ்ரயித்திருக்கிறாளோ, நாராயண ப்ரியர்களான விஷ்வக்ஸேனராகிய சேனை முதலியார் போன்ற பாகவத உத்தமர்களிடம் அச்யுதன் தன்னை அடைந்தவர்களிடத்தில் "நான் வஸுவாகவும், அன்பனாகவும் இருப்பேன்," என்று சொல்லி சத்யவ்ரத க்ஷேத்திரத்தில் வரத முத்ரையுடன் விளங்குகிறானே, அதுபோல) அப்பேற்பட்ட வைஷ்ணவ யோகியர்களிடம் வசித்து வாரும்." (ஹே ரங்கசாயி, ரங்கேசா, ரங்கநாதா, காவேரி தீர்த்த பிரபாவா, சுரபியின் மேல் கை வைத்து அனுக்ரஹ சித்தமுள்ள ராஜகோபாலா, பாகவத ப்ரியா, ராமானுஜப்ரியா, பொய்கை ஆழ்வார், நம்மாழ்வார், விஷ்ணுசித்தன் அவர்களின் பரம்பரை பரம்பரையாக வரும் நாத முனி ராமானுஜ யதீந்திரதேசிக வைஷ்ணவ ஆசார்யர்களிடமும், அவர்களின் சீடர்களிடமும் வைஷ்ணவ குலத்தில் பிறக்கும் யாவரையும் ஹே ராமா, நீர் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் கூடிவாழும், ரமிக்கும் யோக்யமான சுபஸதனம் என்று நீங்கள் கருணையுடன் நினைத்து வசித்து மகிழ்ந்து வாரும்; வசித்து மகிழ்ந்து வாரும்.) (659)

[கருத்து: பிரபு, எவனுக்கு ஸ்வாமி, சகா, பிதா, மாதா, குரு, இன்னும் ஸகலமும் நீர்தான் என்கிற விஸ்வாஸம் இருக்கிறதோ, அவனுடைய மனமாகிய கோவிலில் தாங்கள் சீதையுடனும் லஷ்மணனுடனும் ஸதா வசித்து வரவேண்டும். எவ்விதம் அர்ஜுனன் ஸாத்வதாம் பதியை ஸர்வமாகக் கண்டானோ, ஸர்வ வித ஸம்பந்தத்தால் ஆராதித்தானோ; ஹே ராம், எவ்விதம் வேதாந்த தேசிகர், "மாதாதேவி, த்வமஸி பகவான் வாசுதேவ பிதாமே," என்று புகழ்ந்து சொன்னாரோ; எவ்விதம் பராசரர் லக்ஷ்மியைப் பார்த்து "த்வம்மாதா ஸர்வ லோகனும் தேவதேவோ ஹரிஃபிதா," என்று சொன்னாரோ, மணவாள மாமுனிகள், போன்ற வைஷ்ணவ ஆசார்யர்கள் ஆளவந்தார் திருவடிகளை ஆஸ்ரயித்த மாறநேரி நம்பி விஷயத்தில் பெரிய நம்பியைப் பார்த்து, "புரோடசத்தை நாய்க்கு இடாமல் காக்கவேணும்" என்கிற உத்திரவின்படி தாமே சரம கைங்கரியங்களைச் செய்தாரோ; உடையவரால் கேட்கப்பட்ட பெரிய நம்பி "ஸந்தியா வந்தனத்திற்கு ஆளிடுவது உண்டோ? சக்ரவர்த்தி திருமகனுகிற ராமன், ஜடாயு என்னும் பெரியவுடையார்க்குப்

பெருமானே ஸ்வயமாக ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் செய்தாரோ, எவ்விதம் விதுரருக்கு தர்மபுத்திரர் ஸம்ஸ்காரம் செய்தாரோ அதுபோல, அந்த ராமனேயோ தர்மரையோ விட நான் சிறந்தவனே, இவர் ஜடாயுவை விடத் தாழ்ந்தவரோ, என்று சேவித்து வாழும் வைஷ்ணவர்களிடம், உம்மையே மாதா, பிதா, குரு, சகா, ஸ்வாமியாகவும் ஸர்வ சுகமாகவும் நினைக்கும் வைஷ்ணவர்களிடம் வாழ்ந்து வாரும்.]

[தியானம்

ஹே ராமா, லோகாவன சதுரா, மஹாபலியிடம் வாமனனுகத் தோன்றிய க்ரீடாத்மன், வால்மீகியிடம் மானிட வேஷம் தரித்த ஸரஸிஜாஸனு, ஸரஸகுணுப்ர மேயா, ஸனக ஸநந்தனுதிகளால் வந்தித யோக புருஷா, ஜிஷ்ணுவாகிற அர்ஜுனனுல் காணப் பட்ட புருஷோத்தமா, வைஷ்ணவ ஆசார்யர்களால் காணப்பட்ட க்ஷராக்ஷர, பத்த முக்தாத்மாக்களேவிடப் பெரியதான புருஷ னுகிற புருஷோத்தமா, முக்குணங்களால் ஏவப்பட்ட கர்மாக்கள் யாவும் தோஷமுள்ளதாகக் கண்டு, பக்தி பிரபத்தி ஆகிற இரு வழிகளில் பிரபத்தி சிறந்த தென்று நினைத்து, உலகத்திற்கு வழங்கிய பரம ஞானத்தை நம்மாழ்வார், நாதமுனிகள் அர்ஜுனன், லக்ஷ்மணன், திரௌபதி, தர்ம புத்ரர், தியாகராஜர் துளசிதாஸர், மார்க்கண்டேய நாரதாதிகளாலும், பினுகம் தரித்த மஹேஸ்வரராலும் காண்பிக்கப்பட்ட வழியில் ஊர்ந்து வரும் எனக்கு அமோகரான உம்முடைய சம்பந்தம் வீண்போகக் கூடாது. விபரீத ஞானம் ஒழிந்து, அஸ்வத்தராகவிருக்கும் உம்மை, நிலையில்லாத சம்சார பந்தங்களினின்று விடுபட்டு, வர தேசா, காமக்ஷியின் ஸகோதரா, எனக்கு ஹிதத்தின் பொருட்டு, கீதையில் நீர் சொல்லியபடி "நீரே எல்லாத் தர்மங்களாகிற தர்மங்களின் பலன்," மமஹாரத்வம், ஸாத்விக தியாகத்துடன் செய்யப்பட்ட கர்மங்கள் யாவும் மோக்ஷஸாதனமான பகவத் உபாஸனத்தின் பொருட்டு என்றும், மனம் பிராணன் இந்திரி யங்கள் இவைகளுடைய செய்கைகளே தவருமலிருக்கிற எந்த தைர்யத்தினுல் அர்ஜுனன் தர்மபுத்ராதிகள் தங்களே நிலே நிறுத் தினுர்களோ, அப்பேற்பட்ட ஸாத்வீக தைர்யத்துடன் உம்மை சரணமடைகிறேன். கோவிந்தா, காயத்ரி தேவதையாகிற சீதே, குணங்கள் நடத்திக் கொண்டு போகின்றன என்கிறபடி கர்த்ருத் வத்தையும் நான் பரிதியாகம் செய்தேன். ஹே கிருஷ்ணு, அக்னியை திருப்தி செய்துவித்த அர்ஜுனனுக்கு மஹேஸ்வர

ராலும், பிரும்மாவாலும், "கிருஷ்ணன்" என்கிற நாமதேயத்தைக் கொடுக்கச் சொன்ன ராம கோவிந்தா, ஹ்ருஷிகேசா, புண்டரீ காக்ஷா, சுசியே, சிஷ்டாவிசிஷ்டரே, அத்ரி, அகஸ்திய, வால்மீகி, விஸ்வாமித்திரர், வஸிஷ்டர் முன்னல் தோன்றிய விலக்ஷணரே உம்முடைய அனுக்ரஹத்தால் ஸர்வ கர்ம பந்த நிவிருத்தியையும் சாஸ்வதமான ஸ்தானத்தையும் நான் அடையவேண்டும். திரௌபதி பீமனிடம் வாதித்த சமயம் "விவேகமுள்ள புருஷன் தெய்வம் அனுகூலமாவதற்கே எப்பொழுதும் முயலவேண்டும்" என்று சொன்னுள். சீதை ஆஞ்சநேயரிடமும், பீஷ்மர் தர்ம புத்ரரிடமும், தியாகராஜர் என்னிடமும் "ஆபாலங்கிருத சுந்தர அவனீபாத அத்புதமு நிபாதமுகதி, ஹே ஸ்ரீபதே, வரதா, ஸார்வ பௌம அகில," என்று சொல்லியிருக்கிருர். பெருமாளே, ஸ்ரீசபரிகையினுலும் அமுது செய்து அருளினுயே. சப்தரிஷி களே அண்டின வேலைக்காரனுகிற என்னை நீ பீஷ்மத்ரோணுதி களின் கிரஹங்களை விட்டு, விதுரருடைய திருமாளிகைக்குச் சென்று அமுது உண்டாயே, என்னிடம் எப்போது கிருபை செய்யப் போகிருய்?]

"எவன் சகல தோஷங்களையும் அவ குணங்களையும் விட்டு, குணங்களையே பார்த்தும் கிரஹித்துக்கொண்டிருக்கிருனே, எவன் பிராம்மணர்களுக்காகவும், பசுக்களுக்கும் தன்னைச் சங்க டத்திலும் கஷ்டங்களிலும் உட்படுத்திக்கொண்டு, பொறுமை யைக் காத்து வருகிருனே, நீதியிலும், உலக மரியாதையைக் காப் பாற்றுவதிலும் நிபுணனுக விருக்கிருனே, அப்பேற்பட்ட புண்ய சாலியின் மனத்தில் குடிகொண்டு நீங்கள் வாழவேண்டும்.

[கருத்து :—எவ்விதம் அர்ஜுனன் ஸர்வ சப்தத்தால் பகவா னைத் துதித்தானே, அப்பேற்பட்ட பாகவத உத்தமர்களிடம் லக்ஷ்மண சீதாசகிதம் வசித்து வாரும். எந்த மஹா உத்தமர்கள் அவ குணங்களைவிட்டு, சரணுகதி தர்மத்தை அடைந்து, பிர விருத்தி நிவிருத்தி தர்மங்களையும் காரியா காரியங்களையும், பயா பயங்களையும் பந்தத்தையும் மோக்ஷத்தையும் எந்த புத்தியினுல் அறிந்து, அந்த புத்தியினுல் "ஓம் தத்ஸத்" சாஸ்திரோக்த மான யாகமும், தானமும் தவமுமாகிற கிரியைகள், பலனைக் கரு தாமல் இவைகளை அனுஷ்டித்தல், மங்களகரமான பகவத் குண தர்ப்பணமாகிற "ஸத்" என்கிற புருஷோத்தமனிடத்தில் நிலை பெற்றிருத்தல், அவனுடைய ஹேய கல்யாண குண விசேஷங் களை கிரஹணம் செய்துகொண்டு, பிராம்மண பசுக்களின் நன் மைக்காகவும், அவர்களின் சங்கடங்களை ஒழிப்பதற்காகவும்

தாங்கள் கஷ்டங்களை சஹிக்கிறார்களோ, அவர்களிடம் வசித்து வாரும். அப்பேற்பட்ட தர்மசீலர்கள், (ஜிஷ்ணுவைப்போல) இந்த ஜகத்தின் தர்ம வியவஸ்தையை அறிந்தவர்கள். அவர்களுடைய அழகான மனம் பரம தர்மத்தை ஆஸ்ரயித்திருப்பதால் நீங்களும் அவர்களுடைய அடி நிழலை ஆஸ்ரயிங்கள்.''] (660)

'' ஹே ராம், நீர் குணங்களைக் காட்டிலும் வேறாயிருக்கின்ற ஸநாதனமான புருஷன். இந்தவித ஞானத்தினால் எந்த வைஷ்ணவ ராம பக்தர்கள் குணங்களாகிற ஸாத்வீக, ராஜஸ தாமஸங்களால் ஸம்பவிக்கின்ற குண தோஷங்களைப் பாராமல் உதாஸீனனாக இருந்துகொண்டு, குண காரியங்களிலும் சுக துக்கங்களிலும் ஸமமான சித்தவிருத்தி உடையவர்களாகி, ஹே ராமா, தங்களுடைய ஆத்ம ஸ்வரூபத்தில் நிலைபெற்றவர்களாக மண்ணாங்கட்டியையும் தங்கத்தையும் ஸமமான பார்வையுடன் மனோதைரியமாக புகழையும் நிந்தையையும் ஸமமாக நினைப்பவனும், முக்குணங்களைத் தாண்டி ராம பிரும்மத்தை ''சதா அழிவற்றது குறைவற்றது, சாஸ்வதமான, தர்மமானது, நித்ய சுகத்திற்கு இருப்பிடம், வைகுந்தம் வேங்கடம் என்று சதா தியானிக்கும் வைஷ்ணவ சீலர்கள் இருக்கிறார்களே, உம்முடைய தாள்களை தம்முடைய தடக்கையாலும் திருக்கைகளாலும் நம்பிக்கை வைத்து வாழ்கிறார்களோ, அந்த சரணாகதர்களாகிறவர்களும், உமக்குப் பிரியமுள்ள ராம பக்தர்களை நீர் ப்ரீதியுடன் அண்டி, (தர்ம புத்ராதிகளிடத்திலும், லக்ஷ்மண பரதாழ்வார்களிடமும் காட்டிய விசேஷ ப்ரேமையைச் செலுத்தி,) அவர்களையும் உன் சகாக்கள், பந்துக்கள் என்கிற மனோபாவத்துடன் நினைத்து வைதேஹி சகிதம் அவர்களின் புண்ய ஹ்ருதயங்களில் வசித்து வாரும்.'' (661)

'' ஜாதி, பந்துத்வம், தனங்களாகிற ஐஸ்வரியங்கள் தர்மங்கள், பதவி, அந்தஸ்துக்கள், ப்ரிய பரிவாரங்களாகிற பந்து ஸ்நேகிதர்கள் சுகத்தை அளிக்கும் போக ஸாமக்ரியைகள் யாவற்றையும் துறந்து, (எவ்விதம் சப்த ரிஷிகள் தவத்திலே மனம் ஈடுபட்டு பிரவர்த்திக்கிறார்களோ, எவ்விதம் விபீஷணன் அனன்யார்ஹத்வம் என்கிற விரதம் பூண்டு ஒன்றையும் சம்பந்தம் கொள்ளாமல் பிராட்டியைப்போல ஸ்ரீராம பாதங்களில் சரணம் அடைந்தாரோ,) அப்பேற்பட்ட கேவலம் நீதான் என் தஞ்சம் என்று நம்பி வாழும் பக்தர்களின் ஹ்ருதயத்தில் ஹேரகுநாத்ஜி, ராமனை விட வேறு ஒன்றும் இல்லை என்று சொல்லும் (ஆஞ்சநேயரைப் போல) ராமதாஸர்களிடம் நீர் சீதை சகிதம் கோவில் கொண்டு

வாழும். அவர்களை ஒருக்காலும் கைவிடாதீர். அவர்கள் மஹனீயர்கள். அர்ச்சாவதாரத்தின் காலத்திற்குப் பின்பும் இன்றும், என்றும் இந்த ஜகத்தை அவர்கள் உய்விப்பவர்கள். அவர்களிடம் ஸாகேத ராமா, நீர் நித்ய பூர்ணராக சீதை லக்ஷ்மணனுடன் வசிக்க வேண்டும்.'' (662)

[தியானம்

ஹே ராமா, லக்ஷ்மண சீதா, நரநாராயண மஹாலக்ஷ்மியே, நரசிம்ம ரூபா, ஸ்ரீமான் புருஷோத்தமரே, த்யானமங்கள விக்ரஹ ஸ்வரூபரே, உம்மால் அல்லவோ ஸகல தேவர்களும் ப்ரேரணை செய்யப்பட்டு, உமது ஆக்ஞையை நிறைவேற்றுகிறார்கள். காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் நிலயத்தில் இருக்கும் காமாக்ஷியே, கதம்பவன வாசியே, காமகோடி பீடத்தில் இருக்கும் நாராயண சகோதரி, நாராயணனாகிற பாம பந்துவை எனக்குக் காட்டு. மார்க்கண்டேய ரிஷியினால் ஆராதிக்கப்பட்ட வடபத்ர சாயி, புராண ரிஷியாகிற ப்ருகு வம்ச மார்க்கண்டேயரால் காணப் பட்ட நர நாராயண ரிஷிகளே, சாந்தர்களாகவும், கிருஷ்ணஜனம் ஸாக்ஷ ஸூத்ரம், குஸமாகிற தர்ப்பை, நியமங்களுடன் கூடிய ஆரண்ய அர்க்கர்கள் போல காக்ஷி அளித்த ராம லக்ஷ்மணா, நர நாராயணரே, கைங்கர்ய லக்ஷ்மி, காமகோடி காமேஸ்வரி சகிதம் வந்த சீதா காமாக்ஷியே, என்னை அனுக்ரஹ எண்ணத்துடன் கடாக்ஷியுங்கள். அதோக்ஷஜா, கோவிந்தா, புராண ரிஷிகளே, பாஞ்சராத்திர வைஷ்ணவ ஆகமத்தின்படி ஆராதனை செய்யப் படும் ரங்கேசா, காவேரிநிவாஸா, சுக்ராசார்யரைக் கடாக்ஷித்த கேசவா, '' நமோநமஃ ஆத்மகுரோ '', அகில குருவாக விளங்கும் ஆதிநாராயணா, பக்தர்களுக்கு அம்ருதரே, உபாஸிப்பவர்களுக்கு சதுர்கதியாகிற இந்திரபதம் பிரும்மபதம், கைவல்யம், மோக்ஷம் ஆகிற பலன்களையும், நான்கு வர்ணாஸ்ரமத்திற்கும் நான்குவித புருஷார்த்தங்களுக்கும் தஞ்சமாயிருப்பவரே, உம்மை மார்க்கண்டேயர் சுகர் உபாஸித்தபடி, நான் '' தஸ்மை ஓம் நமோ பகவதே புருஷாய பூம்னே விஸ்வாய விஸ்வகுரவே பரதேவதாயை, நாராயணாய ரிஷியே ச நரோத்தமாய ஹம்ஸாய ஸம்யதகிரே நிகமேஸ்வராய,'' ஸர்வ ஹ்ருதயங்களிலும் பத்மகோசராகவும் அவ்யயமாகவும், பாற்கடலில் வசிக்கும் பன்னகசாயியாகவும், வைநதேயர், விஷ்வக்ஸேனர், சுரபி தேவதைகளால் பூஜிக்கப்படும் கோவிந்தா, வேதஹ்ருதயா, உங்களுடைய தர்சனத்தைக் காண ஆவலுள்ள, எண்ணமுள்ள என்னை எப்போது கடாக்ஷிக்கப்

போகிறாய்? சரதர்ப்பங்களை கையில் வைத்துக்கொண்டிருக்கும் கோதண்டராமா, என்னுடைய கர்மங்களின் அசுத்தங்கள், குணங்களின் தோஷங்கள், காலத்தின் மாறுதல்கள் என்னை அக்னிபோல கொளுத்தி, அந்த தாபத்ரயங்களின் விடுதலைக்காகவும், ஆத்ம க்ஷேமத்திற்காகவும் உம்முடைய பாதாரவிந்தங்களை தியானிக்கிறேன். ரூபசீலனே, மஹா புருஷா, கூடபோதனே, ஹ்ருஷிகேசா, சீதா மனோஹரனே, லக்ஷ்மண பரத சத்ருக்னன் ஆஞ்சநேயரால் சேவிக்கப்பட்ட ராமா, உன் பாத மூலத்தை நம்பி வந்திருக்கும் எனக்கு ரக்ஷை கொடு. ஆசார்யாரான வேதவியாஸர், ராமானுஜர், போதாயனர், கௌசிகர் ஆகிற சம்பந்தத்தால் வாழும் எங்களுக்கு பரமபக்தி விளையப்பெற்று ஸ்வ பிரவிருத்தியாகிற ஸத் ஸம்பிரதாய ஸார ஸங்கிரஹம் என்கிற படி ஆளவந்தார் ஆகிற ஆசார்யர்களிடமும் ரங்கதாஸன் என்று சொல்லும் ரமா ரங்கேசனிடமும், ப்ருவர்த்தியை நாரத சுக மார்க்கண்டேய வால்மீகாதிகளுக்குக் கொடுத்த மாதிரி ப்ராப்தமடையச் செய். அர்ஜுன சிஷ்யனாகிற என்னை திக்பாலர்களும் சர்வ திக்குக்களிலும் உள்ள ரிஷிகளும் காப்பாற்றட்டும்.]

"ஸ்வர்க்கம், நரகம், மோக்ஷம் ஆகியவை எல்லாம் எந்த வைஷ்ணவ உள்ளங்களில் சமமாகவே இருக்கின்றனவோ, அப்பேற்பட்ட பெரியவர்களிடம் சீதா லக்ஷ்மணர் சகிதம் ஹே ராமா, வசித்துவாரும். ஏனெனில் கோதண்டபாணி, அவர்கள் உம்முடைய கரங்களில் சரசாபங்களாகிற வில், அம்பு, அம்புறாத் தூணியைக் கொண்டு நிற்கும் ரூபத்தை, முரஹரி, ஸர்வதோ முகனாக எங்கும் ஸர்வ சாக்ஷியாக இருப்பதாக எங்கும் பார்க்கிறார்கள். (நீர் யோக நித்ரையிலிருந்து எழுந்து வந்து பக்தர்களை கடாக்ஷிப்பதற்காக வந்த ஆதிதேவனாகிற நாராயணர், நரரிஷியாகிற லக்ஷ்மணன், கைங்கர்ய லக்ஷ்மியாகிற சீதை என்று நினைக்கிறார்கள்.) எந்த மஹா பாகவதர்கள் ஏகாந்த ஸ்தலத்தில் இருந்துகொண்டு, தைர்யத்தினால் மனத்தை அடக்கி, நாராயண வாஸுதேவ ஹரி பராயணனாக விருந்துகொண்டு, அகங்காரம் ம்மகாரம், பலம், இறுமாப்பு, காமக்ரோதம் அபிமானம் இவைகளை ஒழித்து, கர்ம வசன மனங்களால், ஹே ராம், ரங்கசாயி, உம்முடைய தாஸர்களாகி, தெளிந்த மனத்துடன் எல்லாவற்றையும் உம்மிடம் அர்ப்பித்துவிட்டு, சித்தத்தைச் செலுத்தி வாழும் வைஷ்ணவ பக்தர்களிடம் வாழ்ந்து, ஆஸ்ரயித்து வாரும்." (663)

("ஹே நாராயணா, மார்க்கண்டேயர், வைநதேயர், சுக ஆஞ்சநேயர், பிரஹ்லாதி நாரதாதி) முனிகளுக்கு உம்மைத்

தவிர ஒன்றையுமே பிடித்தமில்லாமல் வேண்டப்படாதோ, அப்பேற்பட்ட இயற்கையாகவுள்ளதும் ஸஹஜ ஸ்வாபாவிக ஸ்நேக பெருக்குடன் ஜகத்தை ஸம்ரக்ஷிக்கும் அனுக்ரஹ சீலர்களான வைஷ்ணவர்களிடம், (ஆபத்பந்தோ, ஸர்வ சகாயரே,) அப்பேற்பட்ட தாஸ ஹ்ருதயங்களில் நிரந்தரம் வசித்து வாரும். ராம நாராயணு, உம்மை அடைந்து உம்மிடம் பக்தி செய்து, உம்மை நமஸ்கரித்து, உமக்குப் பிரியர்களாக வாழும் ஸாத்யர்களிடம் வசித்து வாரும். அவர்களுடைய ஹ்ருதயம்தான் உமக்கு பத்ம கோசம்.'' (664)

இந்தவிதமாக ஸம்சார பந்தத்தை நாசம் செய்வதும், புண்ய கர்மங்களைச் செய்தவர்களுக்கு கிடைக்கக் கூடியதும், (நாரதரால் பகவானுகிற ஹரி நாராயணரிடம் ஸ்வயமாக ஸ்வேத தீபத்தில் கேட்கப்பட்ட ஸாத்வதாம் பாஞ்சராத்திரத்தின் அர்த்த மர்மங்களை உபதேசிக்கப்பட்ட மாதிரி, மார்க்கண்டேயர் வடபத்ரிசாயியாகிற கமலநயனனை, புஷ்கராக்ஷனைக் கண்டு பூஜித்தது மாதிரி, சுகர் தன் பிதாவாகிய வேத வியாஸரிடம் ஜனகரின் ஆத்ம போதனையால் பிரகாச மடைந்த ஞானத்துடன் அதோக்ஷஜரும், ப்ருஸ்னிகர்ப்பருமாகிற க்ஷீராப்தி ஸ்ரீயப்பதியைப் புகழ்ந்தது மாதிரி, என் பிரபு, என் குலதனம் என் வைஷ்ணவ ஆசார்யர்களான பட்டர், ஆளவந்தார், தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகிய எல்லோரும் ரங்கநாயகி சமேத ரங்கநாதனைப் பூஜித்து ஆராதித்தபடி,) வால்மீகி பகவான் (வஸிஷ்டர் வேதவ்யாஸர்போல, ஸர்வ காலங்களையும், பகவானுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களையும் குணங்களையும், விபூதிகளையும், பரிமாணம் முதலியவைகளையும், பக்தியினுல் அடையப்படும் ஸர்வ சுலபராக விருக்கும்) ஸ்ரீராமனை, சீதையையும் லக்ஷ்மணனையும் முன்னிட்டு, ஆராதித்து, வார்த்தைகள் சம்பாஷித்து அவர்களுடைய நித்ய வாசஸ்தலத்தை மஹா காருண்யத்துடன் நமக்கெல்லாம் நன்மை பயக்க சங்கல்பம் கொண்டவராகி, அனுக்ரஹித்தார். அவருடைய வசனங்கள் தத்வம், ஹிதம், புருஷார்த்தம் ஆகியவைகளாக, அநிர்வசனீயனுகிற நாராயணனை, லக்ஷ்மி நாராயணனை, ராமானுஜனை பக்தியினுல் கட்டுப்படுத்தி, ஸர்வ சுலபனுகவும், பத்ரம், பலம் தோயம் ஆகியவைகளால் அர்ச்சனீயனுகவும், தாஸ உள்ளம் படைத்தவனுகவும் விளங்கச் செய்தன. (அர்ஜுனனுடைய விபரீத ஞானம், மமகாரம் கர்த்ருத்வம், பலன், கர்மம் ஆகியவை எல்லாம் ஒழிந்ததுபோல,) பகவானுடைய தத்வ ஞானமானது பகவத் அனுக்ரஹத்தால் உள்

ளது உள்ளபடி அடையப்பெற்ற வால்மீகி பகவான் ஸந்தேகங்கள் நீங்க ஸ்வஸ்தராக ராமனை அடைந்தார். மஹாத்மாவான வால்மீகி பகவானுடைய வசனங்களை, நாராயணனுகிற ராம சீதை லக்ஷ்மணன் முதித மனத்துடன் கேட்டார்கள். அதன் பிறகு முனிவரரான ப்ராசேதஸர் மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். ''ஹே பானுகுல நாயகா, தயவு செய்து என் வசனங்களைக் கேளும். நான் இப்போது சுகத்தைத் தரும் ஆஸ்ரம வாசத்திற்கு இடத்தைச் சொல்கிறேன்.'' (665)

''ஹே ராம், சித்ரகூட பர்வதத்திற்குச் சென்று வாசம் செய்யும். அங்கே உமக்காக சகலவிதமான ஸௌகர்யங்களும் காத்திருக்கின்றன. அழகான பர்வதம், அதைச் சுற்றிப் பார்க்கப் பார்க்க அழகான காடு வனந்திரங்கள், அந்த இடத்தில் யானை சிம்மம், மான், பக்ஷி வகைகள் விளையாடும் இடமாக விருக்கிறது.'' (666)

''அழகானதும் பவித்திரமான நதி ஒடுகின்றது. புராணங்களில் பிரஸித்தி பெற்று விளங்குகிறது. அத்ரி மஹரிஷியின் ப்ரியபார்யையினுல் நிஜதபோ பலத்தினுல் வரவழிக்கப்பட்டது. ஹே ஸ்வாமி, அனுசூயா தேவியினுல் கொண்டு வரப்பட்ட மந்தாகினி கங்கையின் பிரபாவம் போல பிரபாவம் கொண்டது. ஸகல பாதகங்களையும் டாகினி தேவி குழந்தை பாலர்களை முழுங்குவது போல, நாசம் செய்யக்கூடிய மஹத்வம் வாய்ந்தது.'' (667)

[தியானம்

ஹே ராமா, நாராயணு, விஷ்ணே, ஹரி வாஸுதேவா, தாமோதரா, சீதா லஷ்மண சகிதம் மந்தாகினி, சித்ரகூட பர்வதத்தில் விளங்கும் துளசி ராமா, என் பரமக்ருபாளு, பலபத்ர சோபிதமான ஹம்ஸரே, மார்க்கண்டேய மஹரிஷியைப் பார்த்து அழகான பற்வரிசைகளால் புன்சிரிப்புச் செய்த வ்யக்தரூபரே, சாஸ்வதமான சிசு ரூபத்தில் பாலகிருஷ்ணனுகத் தோற்றம் அளித்த சயானரே, ஸ்ரீநிவாசரே, ந்யக்ரோதரே, கீழேநின்று வணங்கப்படும் பக்தர்களை அஸ்வத்தராகவும் ஸர்வாஸ்ரய அச்சுதராகவுமிருக்கிற தங்களை நோக்கி, அனுக்ரஹித்து, அவர்களைப் போஷித்து, தன்னுடைய எல்லா குணங்களையும் உயர்ந்த தான பரமபதத்தையும் அளிக்கும் நாராயண தத்வத்தையும் அளிக்கும் வள்ளல் அன்றோ நீர்.? தாமோதரராகவும் திருமகள் சகிதமாகவும், ஸ்ரீதரனுகவும், ஸ்ரீநிதியாகவும், ஸ்ரீகர்ப்பராகவும்,

அம்பரர் என்று சொல்லப்படும் விஸ்வத்தை விலாஸமாகவுடைய மஹா நாராயணா, மிக உயர்ந்த ஏகாந்திகளான வைஷ்ணவ தாஸர்கள் சேவிக்கும் விஸ்வமே, ப்ரேமை ஸுதா, ரோஹிதரே, என் வஹ்னியே, என்னைத் தாங்கும் அக்னியே, காவிரி மந்தாகினி, சந்திராம்சு, கங்காதரன் ஆகிற சலிலமான தீர்த்த ஸ்வரூபமே, புண்யமான பிரயாகை, பிரபாஸம், நைமிஷம் போல காக்ஷிதரும் ராம லக்ஷ்மண சீதா, மஹா மரகத ஸ்யாமா, ஸ்ரீமத் வதன பங்கஜனே, கம்புக்ரீவனே, மஹோராங்கமான விசால மார்பு பிரதேசத்தில் சீதையை அணைத்தவனே, சுநாஸனே, சுந்தரமான புருவங்களை உடையவனே, பத்மகர்ப்பரே, ஆருண பாங்கம் ஹிருத்ய ஹாஸமாகிற மந்தஸ்மித முகத்துடன் என்னையும், மார்க்கண்டேயரையும், ஜனகரையும், சுகப்பிரும்மத்தையும் பார்த்த சரணும்புஜா, உன் கால்களை உன் முகாரவிந்தத்தில் போட்டுச் சப்பி சாப்பிடுகிற மாதிரி என்னையும் அனுக்ரஹிக்க மாட்டாயா? உன் பாதங்களில் துளசி தளம் மாதிரி, உன்னால் செய்யப்பட்ட பூர்வ வது ஸ்திதனகை விருக்கும் ஸ்ரீயக் காந்தா, ஸ்ரீநிவாஸா, புவன மங்களகரனே, தயை செய்ய மாட்டாயா? நாரதர், மார்க்கண்டேயர், பராசரர் ஆகியவர்களால் பூஜிக்கப் பட்ட விதிவந்தியனே, விஷ்ணோ, விஸ்வவிலாஸனே, விபு தேசனே, நாராயணனுகிற ஹ்ருதிவேத்யனே, அர்ஜுனன் மார்க் கண்டேயர், கௌஸல்யை, யசோதைக்கு அருள் செய்தாயே, எனக்கு கிருபை செய். குஹப்பெருமாள் ஒரு தடவை உன் திருமுக மண்டலத்தை சேவித்து உன் வடிவழகில் எத்தனை ஈடு பட்டார். உன் குண அழகுகளை ஸேவிக்கப்பெற்ற நான் உன்னையும் உன் லக்ஷ்மியையும் ராமானுஜரையும் ஒரு தடவை கூட காணப்பெற பாக்கியமில்லையே, ராமநாராயணா, கிருபை செய்.]

"அந்தஸ்ஸலிலமான மந்தாகினி தீர்த்தத்தில் அத்ரி மூன்று வசை அத்யயனம் செய்யாத ராத்திரி இல்லை. "அராத்ரி இல்லை" என்று சொல்லப்படும் மஹரிஷி தன் சிஷ்யர்களுடன் தன் தர்ம பத்னியாகிற அனுசுயாவுடன் அங்கு வசிக்கிறுர். அந்த வர முனிவர் யோகத்தினுலும் தவத்தினுலும், ஜபயக்ஞத்தினுலும் தன் சரீரத்தை வாட்டி உன்னையும் உன் விபவங்களாகிற சீதை லக்ஷ்மணனுடன்கூடப் பார்க்க ஏங்கிக் கிடக்கிறுர். அவரை முதலில் பாரும். அவருடைய சிரமத்தை தீரும். அவருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் உம்முடைய வரவு ஆகமனத்தால் சந்தோஷப்படுத்தும். ஹேராம், அவருடைய ஆசையை ஸபல மாக்கிச் செய்து அவரது சிரமத்தைப்போக்கும். ஹேராம், அதன்

பிறகு அங்கு இருக்கும் பர்வத ஸ்ரேஷ்டமான சித்ரகூட பர்வதத்தை அடைந்து, அதற்கு கௌரவத்தைக் கொடும்.'' (668)

கவிகளால் அடையப்பட்ட அந்த சித்ரகூட பர்வதத்தின் மகிமைகளை ஒன்றுவிடாமல் அந்த உத்தம வாக்கோவிதர், ஞான பக்தி யக்ஞம் செய்து அமித பலன்களை அடைந்த வால்மீகி முனிவர் ஸ்ரீராமனுக்கு எடுத்துச் சொன்னார். அதன்படி நடந்த பிரபு, சுசீலர், சீதை லக்ஷ்மணனுடன் அவிடம் சென்று, மந்தாகினி நதியில் ஸ்நானம் செய்து, அகமர்ஷண சூத்ரம் சொல்லி, மங்கள ஸ்நானம் செய்தார். (669)

ரகுவரஸ்ரேஷ்டரான ஸ்ரீராமன் லக்ஷ்மணனைப் பார்த்துச் சொன்னார். ''ஹே லக்ஷ்மணா, நமது பாத துளிகள் படுவதற்காக அமைக்கப்பட்ட இந்த ஸ்நான கட்டங்களைப் பார். ரொம்ப அழகாக விருக்கின்றன. நாம் இங்கு சில நாட்கள் தங்குவதற்கு ஏற்பாடுகளைச் செய்.'' லக்ஷ்மணன் அந்த பயஸ்வினி நதி தீரத்தில் வடக்கு பிரதேசத்தில் உயரமான ஒரு கரையில் ஏறி பார்த்துக்கொண்டு, ராமனைப் பார்த்துச் சொன்னார். ''இதற்கு நான்கு புறங்களிலும் தனுஷ் வளைந்த மாதிரி ஒரு சிறிய ஓடை வளைந்துபோகிறது'' (670)

''மந்தாகினியாகிற நதி அந்த தனுஷ்ஷுக்கு நாண் பூட்டிய மாதிரி, நிகமேந்திரியர்களாகிற யோகிகளுக்கு சமம், தமம், தானம் ஆகிற பாணங்கள் மாதிரியாகவும், அவைகளின் உதவியினால் கலியுகத்தின் ஸகல பாப கல்மஷங்களைப் போக்கி, ஜிதேந்திரியர்களாக விளங்கச் செய்வதற்கு அனுகூலமான ஆசாரம்போல அல்லவா இந்த மந்தாகினியும் அதன் கிளை நதியின் பிரிவாகிற பயஸ்வினியும் இருக்கிறது. இந்த அழகான சித்ரகூடமலை பயப்படாமல் குறிவைத்துவிடும் வேடுவனைப் போல காக்ஷி அளிக்கிறது. அந்த குறியிலிருந்து யாரும் தப்ப முடியாது. எதிரே நின்றால் குறி தப்பாமல் நிச்சயமாக அடிக்கப்பட்டு வீழ்த்திவிடும் வீர்யம் படைத்ததாகவல்லவோ விளங்குகிறது.'' (671)

[தியானம்

ஹே ராமா, சீதா, நாராயணா, விஸ்வதோமுகனாகவிருக்கும் பானுவே, அக்னியே, எங்கும் ஒளி வீசும் அக்னி வடிவான அக்ரபுக் என்று சொல்லப்படும் முதலில் உண்பவராகவிருக்கும் பகவானே, என் சரீரத்தில் உணவை முதலில் உண்டு, பிறகு பிரித்துக்கொடுத்து, என்னை உயிர்வாழ வைக்கும் திஷ்டனே,

  

நிலைத்துநின்று நடத்திவைக்கும் அஜரே, கவிகளால் எப்பொழுதும் காணப்படும் நாராயணா, என் காந்தரே, சீதையாகிற இயற்கை பிரவிருத்தி, இயற்கை ஹிதம், இயற்கை பகவத் அனுபவம், இயற்கை ஸ்நேக உள்ளம், இயற்கையாக உள்ள மனோ அனுகூலம் ஆகியவைகளால் எனக்கு பகவானிடம் அதிசய பக்தியை காண்பித்த மஹா ஆசார்யரே, குணங்களை நினைத்து, ஸ்வரூப அழகுகளை நினைத்து, "எனக்கு பெருமாள் பக்கம் அனுராகம் இயற்கையாக ஏற்பட்டது;" "ராஜ்ய ஹீனனாகவிருந்தாலும், காட்டிற்கு வந்தாலும், ராமன் வாழ் அயோத்தி, பெண்டிற்கு தைவம் பர்த்தாவே, நல்லவனாகிலும் தீயவனாகிலும் பெண்டிற்கு தைவம் கணவனே" என்று அனுசூயையினால் அத்ரி ஆஸ்ரமத்தில் சொல்லப்பட்ட ஜானகி, "எப்பொழுதாவது ஒரு சமயம் அவரைவிட்டுப் பிரிந்து வாழ நேரிடில், என்னுடைய அனுராகம் ஸ்வரூபமாகவே உண்டாகியிருக்கிறது. அந்த ராமர் குணங்களிலோ, ஸ்வரூபத்திலோ சிறந்தவரானபடியால், குண மஹோததியாகவிருக்கிறபடியால், நான் அவர் பக்கம் இருக்கும் இருப்பை அடைவிக்கப் பெற்றேன் அல்லன். அவர் குணஹீனராகவிருந்து, என்னிடம் பராமுகனாகவிருந்தபோதிலும், அவர் என்னிடம் விரூபராயிருந்தபோதிலும், நான் என் சம்பந்தமட்டில் அவர் பக்கம் காணுமிருப்பது" என்று என் பெரிய பிராட்டி சொன்னாள். அப்பேற்பட்ட சீதை பகவானுடைய அனபாயினி, ஸ்வரூப ப்ரவிருத்தியில் எனக்கு ஆஞ்சநேயர் முன்பு சிம்சுபா விருக்ஷத்தின் அடியிலோ, பின்பு அக்னியின் மடியில் சுக்ரீவன், விபீஷணன், ஆஞ்சநேயர், வானரர்கள், யாவரும் பார்த்து நிற்க, இறுதியில் பூமியின் மடியில் ரிஷிகளின் சந்நிதானத்தில் லவகுசர்கள் முன்பு, சீதை எனக்கு வழிகாட்டியாகவிருந்தாளே. அப்பேற்பட்ட பெரிய பிராட்டியை காலில் சரண் அடைந்து, பகவத் ஸ்வபிரவிருத்தியை என் ஆசார்யர்களின் நிழலில் பிரார்த்தித்து, அந்த உத்தம ரங்கநாத பாதங்களை, வேங்கட வெற்பின் உத்தம சரணங்களை துளசிதளம் படிந்த வரத சரணங்களை நான் அடைகிறேன். ஹே காமக்ருத், காமப்ரதராகிய நீர் விரும்பின யாவையும் கொடுப்பவர். காமத்தை உண்டுபண்ணும் மன்மதன், மாதுர்ய ஆகாரம்போல, எல்லோராலும் ஸர்வஸம்மதராக விரும்பப்படுபவர். எல்லோரும் விரும்பும் காமர். எனக்கு எல்லாம் கொடுத்தும்தான் ஒன்றும் குறைவில்லாத காமி. என் இழிவான குணங்களைப் போக்கும் காமஹா. ரோஹிதமான தாமரைக்

கண்களை உடைய காந்தர். நல்லது கெட்டது ஆகியவைகளை வேற்றுமையின்றி அறியும் விஸ்வதக்ஷிணர். தகுந்த பலன்களை அளிக்கும் விஸ்வதக்ஷிணரே, பிள்ளை லோகாச்சாரியார் போன்ற ஆசார்யர்களின் நிழலில் உம்மைப் பிரார்த்திக்கும் எனக்கு அருள் செய்யும்.]

என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் லக்ஷ்மணனால் இவ்விதம் சொல்லப்படுவதைக் கேட்டு, அந்த ஸ்தானத்தை பார்வையிட்டார். அந்த ஸ்தலத்தின் மேன்மைகளைக் கண்ட பிரபு சுகத்தை அடைந்து தன் இச்சையின் சம்மதத்தைத் தெரிவித்தார். தேவதைகள் "நம் ராமனின் மனம் இந்த இடத்தில் ஈடுபாடு உடையதாக விருக்கிறது" எனக் கண்டுகொண்டு, சுரர்களுக்கு வீடு, மனைகள் அமைக்கும் சிற்பியான விஸ்வ கர்மாவை அழைத்துக்கொண்டு அந்த இடத்திற்கு வந்தார்கள். (672)

அந்த தேவதைகள், கோலர்கள், கிராதகர்கள் வேஷம் தரித்து, அவரிடம் வந்தார்கள். அழகான இலைகளாலும், சரகுகளாலும் புல் கொடிகளாலும் திவ்யமான பர்ணசாலையை அமைத்தார்கள். அழகான இருபர்ண சாலைகளை அமைத்தார்கள். அவைகளின் அழகுகள் வர்ணிக்க முடியாதபடி விளங்கின. அந்த இரண்டில் ஒன்று பெரியதாகவும், மற்றொன்று சிறியதாகவுமிருந்தது. (673)

லக்ஷ்மணன், ஜானகி சகிதம் பிரபு அந்த சித்திரகூடத்தில் ரமணீயகரமாக நிர்மாணம் செய்யப்பட்ட நிகேதனத்தில் வசித்து வந்தார். (ஸௌலப்யம், ஔதார்யம், தயை முதலிய ஆத்ம குணங்களாலும், மஹர் என்னப்படுபவர், மஹாபிரபு, விஸ்வேஸ்வரர் யாவராலும் விரும்பப்பட்டு, காமராக சீதையுடன் விளங்கினார்.) தம்முடைய அளவற்ற குணங்களால் மன்மதனைப் போல உலகத்தை மயக்கச் செய்த காமர், (அப்சரஸ்கள் நரநாராயணர்களை பத்ரிகாஸ்ரமத்தில் பூஜிப்பதுபோல,) சீதையினுடைய காந்தரான ராமன் லக்ஷ்மணனுடன் வசித்து வந்தார். (கைங்கர்ய லக்ஷ்மியாகிற மஹாலக்ஷ்மியை அடைந்த நர நாராயண ரிஷிகள் எவ்விதம் பதரிவனத்தில், நீலகாந்த மலையினடிவாரத்தில் அளகநந்தா நதிதீரத்தில், நிகமேஸ்வரராக விளங்கினார்களோ, அதுபோல சீதையினால் அடையப்பட்ட ஸ்ரீராமன், லக்ஷ்மணன் காவலில் ரமித்து வந்தார்.) காம தேவன் பூமியில் முனி வேஷம் தரித்து பத்னியாகிற ரதி தேவியை ரமித்துக்கொண்டு, வசந்து ருதுவின் சுசோபிதங்



சித்திரகூடத்தில் ஸ்ரீராமன் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் புல்லினால் அழகாய் கட்டப்பட்ட பர்ண குடியில் வசித்தல். காமதேவன் முனி வேஷம் தரித்துக்கொண்டு, பத்னி ரதியுடனும் வசந்த ருதுவுடனும் சோபிதமாக விருந்தால் எவ்விதமிருக்குமோ, அது போல ராமன் சீதை லக்ஷ்மணனுடன் விளங்கினர்.

களால் சூழப்பட்டு இன்பமடைந்து வாழந்துவந்தானே, அது போல காமப்ரதர், காமபாலர், என்காமி, பக்தபாகவத ஜனப்ரியன் தபஸ்வினி வேஷம் தரித்த சீதையாகிற தயாமூர்த்தி யுடன் புல்லாலும் இலைகளாலும் கட்டப்பட்ட ஆஸ்ரமத்தில் ராமன் வசித்துவந்தார். லக்ஷ்மணன் ருதுராஜன் வசந்தன் மாதிரி அவர்களைக் காவல் செய்து வந்தார். (674)

## மாஸபாராயணம் பதினேழாவது நிறுத்தம்

அந்த சமயம் தேவதைகள், நாகலோகத்தினர்கள், கின்னரர்கள், திக்பாலர்கள் சித்ரகூடத்திற்குச் சென்றார்கள். என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் அவர்கள் எல்லோருக்கும் நமஸ்காரம் செய்தார். தேவதைகள் பகவானுடைய ஸ்வரூப ஸ்வபாவ பிரவிருத்திகளைக்கண்டு ஆனந்த ஹ்ருதயத்துடன், தங்களுடைய புண்யமான லோசனங்களை ராமதர்சனத்தால் நிரப்பிக் கொண்டார்கள். (675)

தேவக்கூட்டங்கள் புஷ்பங்களை வர்ஷித்தவண்ணம், பகவானைப் பிரார்த்தித்துக்கொண்டார்கள். "ஹே நாதனே, தேவாதி தேவனே, உம்முடைய தர்சனத்தால் நாங்கள் இன்று நாதன் உள்ளவர்களாக ஆனோம். சுரேஸரே, எங்கள் துக்கங் களைப் போக்கும். பிரணதார்த்தி ஹரரே, எங்களுடைய சிரமங் களை தாங்கள் ஸ்ரவணம் செய்துகொண்டு, எங்களுக்கு விமோ சனம் அருள் செய்யும்படி பிரார்த்திக்கிறோம்" என்று நிவேதனம் செய்து, தங்கள் கதை விருத்தாந்தங்களையும், ராவணனால் ஏற்படும் சகிக்கமுடியாத அவமானங்களையும், கஷ்டங்களையும் விண்ணப்பித்துக்கொண்டார்கள். ஸௌலப்யம், ஔதார்யம், மஹத்வம் ஆகிய குணங்களால் சிறப்பிக்கப்படும் என் பிரபு, எல்லாச் செய்கைகளிலும் சிறந்த சாமர்த்தியமுடைய ஸர்வ சக்திமான் மானிடர்போல அவதரித்தும் தேவர்களுக்கும் ரக்ஷையைக் கொடுத்து அவர்களின் போகங்களையும் ஆட்சி பதவிகளையும் நீடிக்கச்செய்து, பிரும்மத்தில் நாட்டமுடைய மஹரிஷிகளுக்கு மோக்ஷ முதலிய பயன்களை அளிக்கவல்ல மஹாபிரபு, காருண்யமூர்த்தி, குற்றங்களைப் பாராத கிருதக்ஞர், சிரித்துக்கொண்டு எல்லாவற்றையும் கேட்டு, அவர்களை ஆஸ்வாசப்படுத்தி, நல்ல மனத்துடன் அவரவர்களின் கிருஹத் துக்கு வழி அனுப்பிவைத்தார். தேவர்களும் காரியசித்தி அடைந்துவிட்டதாக மனம் நிரம்பி தங்கள் ஸ்தானங்களுக்குத் திரும்பிச் சென்றார்கள். (676)

"சித்ரகூடத்தில் ரகுநந்தனன் வந்திருக்கிருர்," என்கிற சமாசாரம் ஸகல திக்குக்களுக்கும் பரவியது. முனிஸ்ரேஷ்டர்கள் இதைக் கேட்டார்கள். உடனே கூட்டம் கூட்டமாக ஓடிவந்து ஸ்ரீராமனை சீதை சகிதம், லக்ஷ்மணனுகிய தம்பியுடன் கண்டு தரிசித்தார்கள். ரகுகுல சந்திரமா, ஸ்ரீராமன் முதிதமுனி மண்டலம் வருவதைக் கண்டு, (பிரும்ம விவர்த்தனர் என்று அழைக்கப் படும் என் பிரபு), தவம் முதலிய தர்மத்தை விருத்தி செய்கிற முனிவேஷம் தரித்த ஸ்ரீராமன், அவர்களை எதிர்கொண்டு அழைத்து, அவர்களைத் தண்டம் செய்து தன் எளிமையை விளம் பரப்படுத்திக் கொண்டார். (677)

முனிகணங்கள் ரகுவரஸ்ரேஷ்டனுன ராமனைத் தர்சனம் செய்து உருகாயனுகிறவனும் மஹான்களால் கீர்த்தனம் செய்யப் படுபவனுமான அந்த விஷ்ணுவை மனத்தில் தியானித்துக் கொண்டு, தங்கள் தபஸ்ஸுகளின் புண்யமான ஸுபலத்தை அடைந்ததாகக் கருதி, அந்த நித்ய தம்பதிகளுக்கு பல்லாண்டு இசைத்துப் பாடினுர்கள்; ஆசீர்வாதங்களாகிற மங்களா சாஸனம் செய்தார்கள். சீதை சௌமித்திரியாகிய லக்ஷ்மணன் ஸ்ரீராமன் ஆகியவர்களின் அழகு பிம்பங்களை தர்சனம் செய்து, தங்களுடைய தபஸ்ஸுகளாகிற சாதனங்கள் அனைத்துக்கும் முடிவான சுப பலன்களை அடைந்ததாகக் கருதினுர்கள். அவர்களை தர்சன மாத்திரத்தில், ஏன் அவர்களை ஸ்ரவணம் செய்த மாத்திரத்திலேயே, மஹா பாதகர்களாக விருந்தபோதிலும், தாழ்ந்த ஜாதியில் பிறந்தவர்களாகவிருந்தபோதிலும், ஸகல தோஷங்களும் பாபங்களும் விலகி, சுத்த ஸத்வமடையப் பெற்றுர்கள். அப்பேற்பட்ட சுபலக்ஷணங்களுள்ள மங்கள மூர்த்திகளை தரிசித்தது மாத்திரமின்றி, அவர்களுடன் சம்பாஷணைகள் செய்த அந்த உத்தமரிஷிகணங்களின் பேற்றைப்பற்றி சொல்ல. வேண்டுமா? (678)

என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் அந்த ரிஷிகளுடனும் அந்த முனிகணங்களுடனும் சம்பாஷித்து, யதாயோக்யமாக ஸம்மானம் செய்து, முனி ஜனங்களை கௌரவப்படுத்தி, அனுமதி கொடுத்து வழி அனுப்பித்தார். பகவானுல் கடாக்ஷிக்கப்பட்ட மஹனீயர்கள், அந்த பாக்யசாலிகள், ஒரு கவலையின்றி தங்கள் ஆஸ்ரமங்களுக்கு திரும்பிவந்து, தங்கள் யோக்யதைக்கு தகுந்த பிரகாரம் யோகம், ஜபம், யக்ஞம், தவம் ஆகியவைகளைச் செய்ய முயற்சித்தார்கள். (679)

அம்ருதமயமான அந்த மூவரையும் எவ்வளவு தடவைகள் தர்சனம், சம்பாஷணம், கைங்கர்யம் ஆகியவைகளால் மனம் கொடுத்தவர்கள், போதுமென்று திருப்தியை அடையாமல் மேன் மேலும் விருப்பம் அதிகமாகப் பெருக விளைவித்து, மேன் மேலும் வந்துகொண்டிருந்தார்கள். பாற்கடலின் அம்ருதம் போலிருக்கும் ஸ்ரீராமச்சந்திரனின் ஆகமனத்தைக் கேட்ட கோலர்கள், பீலர்கள், வேடுவர்கள் அதிக சந்தோஷத்தை அடைந்து, தங்களுக்கு நவநிதி கிடைத்ததுபோல அவர் களிடம் ஓடிவந்தார்கள். (நவநிதிகளாகிற பத்மம், மஹாபத்மம், சங்கம், மகரம், கச்சிபம், முகுந்தம், நீலம், குந்தம், வர்ச்சிகம். கடைசி இரண்டிற்கும் நந்தம், கர்பம் என்றும் சொல்லுவ துண்டு. இந்த நவநிதிகளில் ஒன்றை வைத்திருந்தாலே, மஹா பாக்யங்கள் ஏற்படும் என்று கருத்து.) அந்த பாக்யசாலிகள் அவர்களுக்குச் சாப்பிடும் ஆகாரங்களாகிற கந்தம், மூலம் ருசி யுள்ள பழங்கள் ஆகியவைகளை இலைகளில் சுமந்துகொண்டு, தரித்திரர்கள் தங்கப் புதையல்களை அடைவதற்கு ஆத்திரப்படு வதுபோல ஓடிவந்தார்கள். (680)

[தியானம்

ஹே பகவான், திரிஸாமா, பிருஹத்ரதந்திரம், வாமதேவ்யம் ஆகிய மூன்று வகைப்பட்ட ஸாம வேதங்களால் கானம் செய்யப் படும் நாராயணா, தேவவ்ரதங்களாகிற மூன்று ஸாமங்களால் புகழப்படும் ஸ்தோத்திராத்மன், சுபர்ணர் என்கிற வேதாத்மா வினால் யஜுர் என்கிற பெயருடைய சந்தங்களால் புகழப்படும் நாராயணா, நரநாராயணர்கள் பதரிகாஸ்ரமத்தில் விளங்குவது போல ராம லக்ஷ்மணர்கள், சீதையின் நிழலில் இருக்கும் இரு ராஜ குமாரர்களாகிற உங்களுக்கு நமஸ்காரம். உங்களை என் ஆசார்யரான பீஷ்மர், ஸூர்யாத்மன், ஸோமாத்மன், க்ஞேயாத் மன், வேதாத்மன் யக்ஞாத்மன், ஹோமாத்மன், ஸ்தோத்திராத் மன், ஹம்ஸாத்மன், வாகாத்மன், வீர்யாத்மன், நித்ராத்மன், ஸத்யாத்மன், தர்மாத்மன், காமாத்மன், க்ஷேத்திராத்மன், ஸாங்கியாத்மன், யோகாத்மன் என்று பலவிதமாக ஸ்தவ ராஜங் களால் புகழ்ந்தார். பார்த்தன், தேர்தட்டு, கிருஷ்ணன் ஆகிய மூன்று தத்வங்களாக விளங்கும் லக்ஷ்மண சீதாராமா, உங்களை சுத்தர், புத்தர், சுசி என்று பலவிதமாகப் புகழ்ந்து ஸ்துதி செய்து, அர்ஜுனன் போன்ற பக்தர்கள், பரமபுருஷன், கருணாரஸ பூர்ணன், மரகதமணி வர்ணன், வரபக்தஸுபர்ண வாஹனன்

என்று பலவிதமாக தியாகராஜர் போன்ற மஹான்கள் கீர்த்தனம் செய்தபடி, நான் உன்னை ஏகனுகவும், ஏகமங்கள மூர்த்தியாகவும் வரேண்யம் என்று பொறுக்கி, சரணமடைந்திருக்கிறேன். ஸ்ரீவத்ஸதாமா, சந்திரனை மனத்தில் உண்டாக்கிய ஸ்ரீராமா, ஸாதுபோல வாழ விரும்பும் என்னை ரக்ஷித்தருளுவாய், சூரிய குல ஸ்ரீராமா, நீயே தஞ்சம். வேங்கடேசநயனு, என்னைக் காப்பாற்று.]

அந்த மஹாபாக்யர்கள் ஸ்ரீராம லக்ஷ்மணர்களைக் கண்டு திரும்பி வந்த சிலர்களை வழியில் பார்த்து அந்த இரு சகோதரர்களின் அழகுகளைப்பற்றி விசாரித்தார்கள். இவ்விதம் ராம தியானமாக அநேகம் பேர்கள் ரகுவீரனுடைய ரூபலாவண்யங்களைப் புகழ்ந்துகொண்டும், அவர்களைக் காண்பதற்கு வந்து கொண்டும், சென்று கொண்டும் இருந்தார்கள். இந்த விதமாக பலபேர்கள் ரகுராயினுடைய சுபதர்சனத்தை அடைந்தவண்ணமிருந்தார்கள். (681)

பகவானுக்கு நைவேத்யத்தை ஸமர்ப்பித்து அத்யந்த அனுராகத்துடன் லோகஜனங்கள் பகவானைத் தர்ச்சித்தவண்ண மிருந்தார்கள். அந்த பிரபுவின் ரூபசோபலாவண்யங்களைக் கண்டு, ஸ்தம்பித்துவிட்டார்கள். ஆச்சரியத்தினுல் கவரப்பட்டவர்களாகவும், சித்திரங்களில் எழுதியுள்ள உருவங்கள் போலவும் பேச்சு மூச்சின்றி நின்றுகொண்டிருப்பதுபோலவும், அவர்களின் மனம் பறிக்கப்பட்டது. அவர்களின் மோஹன ரூபங்களில் தங்கள் பார்வைகளைச் செலுத்தி, புளகாங்கித சரீரத்துடன் நேத்ரங்களில் ப்ரேமையினுல் வழிந்து ஓடும் கண்ணீர் பெருக்குக்களை வெட்கமின்றி, பெருக விட்டுக்கொண்டு, (ஆஞ்சநேயர், பீஷ்மர், நாரதாதிகள், தியாகராஜர், துருவன், துளசிதாஸர் போன்ற மஹாத்மாக்கள் பேச்சு மூச்சின்றி பகவானுடைய ரூபலாவண்யங்களைக் கண்டு களிப்பதுபோல), ஆனந்தித்தார்கள். (682)

ராமன் அவர்களை ஸ்நேக உள்ளத்துடன் கடாக்ஷித்து அவர்களின் ப்ரேமைகளைக் கண்டு, மக்னப்பட்டு, பிரிய வசனங்களால் அவர்களை எழுப்பித் தடவிக் கொடுத்து, அணைத்துக் கொண்டு, சந்திரன் இரு புறங்களிலும் தேவ பித்ருக்களைப் போஷிப்பது போல குளிரக் கடாக்ஷித்து, அமுதாகிற தன்னை அவர்களுக்கு விநியோகப்படுத்திக் கொண்டு, தானும் சந்தோஷமடைந்தார். அந்த மஹனீயர்கள் அடிக்கடி பிரபுவை அஞ்சலிகளால் வணங்கிக் கொண்டு, தங்களுடைய பராதீனத்தை வெளிப்படுத்திக் கொண்டு, ஸாத்யோபாயமான ஸ்ரீ ராமனை சரணுகதி தர்மத்தினுல்

அதி வினயத்துடன் தங்கள் பக்தி நம் ரதைகளை ஸமர்ப்பித்துக் கொண்டார்கள். (683)

"ஹே ஸ்ரீ நாதா, பிரபு, தங்களுடைய சரணங்களை அடைந்த பின்பு, தங்களுடைய ரக்ஷையைப் பெற்ற பிறகு, நாங்கள் நன்கு காப்பாற்றப்பட்டோம். தங்களுடைய பாத தர்சனங்களால், ஹே துக்கபேஷஜரே எங்கள் தாபங்கள் தீர்க்கப் பட்டு, ஸகல பயங்களை ஒழித்தோம். ஹே கோஸல ராஜன், எங்கள் பாக்கியத்தினால் அல்லவோ, தங்களுடைய சுப ஆகமனம் இவ்விதம் ஏற்பட்டது?" (684)

"ஹே சீதா நாதனாகிற நீங்கள் எங்களுக்கும் நாதன். எந்த எந்த புண்யமான இடங்களில் தங்களுடைய பாத சரணங்கள் அடி எடுத்து வைக்கப் படுகின்றனவோ, ஸ்வாமி, ஸ்பர்சிக்கின்றன்வோ, அந்த பூமி பிரதேசங்கள் தன்யமாக்கப்பட்டன. இந்த வனமாகிற ஸ்தலங்கள், வழி மார்க்கங்கள், மலைப்பிரதேசங்கள் யாவும் தங்களால் புனிதமாக்கப்பட்டன. தங்களைத் தரிசிக்கும் பாக்யம் படைத்த பக்ஷிகள் மிருகங்கள் இன்னும் கானகத்தில் சஞ்சரிக்கும் சகல ஜீவர்களும் தங்களைத் தர்சனம் செய்து க்ருத புண்யர்களாக க்ருத ஆத்மவான்களாகவும், க்ருதாக்ருதர்களாக வும், அநேக கோடி ஜன்மங்களின் சாபல்யத்தை இந்த க்ஷணத்திலே அடைந்து விட்டார்கள். அதுமாத்திரமில்லை. (பீஷ்மர் சொல்லியபடி) ராம கிருஷ்ண நாராயண பரர்கள், வ்ரதர்கள் தாங்களை அனுஸ்மரணை செய்பவர்களாக ராத்திரி பகல், மீண்டும் ராத்திரி பகல் என்று எழுந்து வாழ்க்கை நடத்திய போதிலும் தங்கள் தோஷங்களை ராம கிருஷ்ண வைகுண்ட லோகத்திற்கு மந்திரத்தால் ஹோமம் செய்யப்பட்ட சுரபியினுடைய நெய் மாதிரி தங்களை வந்து அடைந்து விடுவார்கள். (நபுனர்பவாய என்கிறபடி மீண்டும் ஐயா,) உமது க்ருபையினால் ஸம்சாரத்தில் ஜனனம் அடைய மாட்டார்கள்." (685)

"அது மாத்திரமில்லை ஸ்வாமி. எங்களைச் சேர்ந்த பரிவார சகிதம் தன்யர்களாக அவ்வித புனர் ஜன்மமின்றி ஆக்கப்பட மாட்டோம். எங்களால் தர்சனம் செய்யப்பட்ட நீர் எங்களுடைய குலங்களையும், (பிரஹ்லாதன் அசுர யோனியில் பிறந்த எல்லோரையும் கரையேற்றினது போலவும், ராமானுஜன் வைஷ்ணவ குலத்தில் பிறந்த, பிறக்கப் போகிற யாவரையும் கரையேற்றினது போலவும்,) கரை ஏற்றிவிட்டீர்கள். ஹே கிருபாளு, நாங்களும் எங்களுடைய நேத்ரங்களில் உம்முடைய சுபலக்ஷணங்களாகிற திவ்ய விக்ரஹத்தை நிரப்பிக் கொண்டோம். இனி தாங்கள்

சுகமாக "இவ்விடம் நல்ல ஸ்தலம்," என்று எண்ணிக்கொண்டு எங்களையும் உமது தாஸர்களாக நினைத்துக் கொண்டு சுகமாக வசித்து வாரும். இந்த இடத்தில் ருதுக்கள் ஸகல போக போக்யங்களை அளிக்கும். தாங்கள் சீதையுடன் வஸந்த காலத்தை சுகமாகவும் ரமணீயமாகவும் அனுபவிக்க வேண்டும். லக்ஷ்மணன் தங்களைத் காவல் செய்து கொண்டும் நாங்களும் அவனுக்கு ஒத்தாசை செய்து கொண்டும் உங்களுடைய நிழலில் கைங்கர்யம் செய்துவருவோம்." (686)

[தியானம்

ஹே மைதிலி, ஜானகி, ஜனக நந்தினி, காமாக்ஷி, காஞ்சியில் ஏகாம்ருதபதநிலையே, என்று சொல்லும்படி ராம நிழலில் ஸ்திதிவாசம் செய்யும் என் காமாக்ஷி, கஞ்சதளாயதாக்ஷி, மீனுக்ஷி காருண்ய மூர்த்தி, சதா சிவனுடைய ஜாயை மாதிரி ராமனுடன் இருக்கும் மைதிலி, உன்னையே கதியாக நம்பி வாழும் எனக்கு ஸ்ரீராமனைத்தா அம்மா. அனந்தன் பூஜை செய்யும் மா, மாதவி, நீங்கள்தான் என் மானம். என் கௌரவம். நீதான் எனக்கு பரமாகதி. கதி ஸத்தமர்களுக்கு அம்ருதம் போலவிருக்கும் உன்னை ஸ்ரீவிபீஷணனுடைய ஹ்ருதயத்தாலும், ஆஞ்சநேயருடைய பக்தியாலும், அனந்தருடைய கைங்கர்யங்களாலும் வாகீஸனுகிற குரு குஹனுல் வந்தனம் செய்யப்பட்ட உன் பாதங்களை நான் பரம தத்வார்த்தமாகவும் மங்களம் பரம் என்றும் பூஜை செய்கிறேன். பரம சாந்த ரூபையே, உன் பாத பங்கஜத்தைப் பூஜித்தால் ஹரி நாராயணன் பூஜிக்கப்பட்டு சந்தோஷமடைகிருன். நாராயண பிரியே, நிரதிசய சுகதர்மத்தையும் ரதி, கீர்த்திவர்த்தனங்களையும் கொடு. பகவானுடைய கோபத்திலிருந்து என்னைக் காப்பாற்று. நாகத்தை பூஷணமாகவும், கருடனை வாஹனமாகவும் உடையவளே, பானுவுக்குப் பிரகாசம் தரும் வைஷ்ணவி, நீயும், ராமனும் ராமானுஜ கைங்கர்யத்திலிருக்கும் போது, பிரத்யும்ன அம்சமாகிற ஐஸ்வர்யம், வீரியம் ஆகிற சக்தி தேஜஸ்ஸுகளை அணிந்திருக்கிறீர்கள். கருடனுகிற வேதாத்மாவினுல் பார்க்கப்பட்ட அனந்த ரூபியாக விளங்குகிறீர்கள். நீ எனக்கும் ஸாதுக்களுக்கும் ஜனுர்த்தனுகை விருக்கிருய். உமையின்மடியில் பால் சாப்பிட்டுக்கொண்டிருக்கும் பஞ்சசிகரான கிரோத பட்டாரிகாவிற்கு ஸ்ரீவித்யா உபாஸனியாகவும் ஸ்ரீவித்யையாகவும், உன் பக்தர்களைக் காக்கும் விஷயத்தில் தவருத ஊக்கம் காண்பிக்கும் அப்ரமத்தராகவும் அபிராம சுந்தரி

யாகவும் விளங்குகிருய். அம்மா, நீ என்தாய், மனைவி, புத்ரன், புத்ரி, ஐஸ்வர்யங்கள், வித்யைகள் யோகக்ஷேமங்கள். எனக்கு நீதான் ஸ்வஸ்தியாகிற மங்கள மூர்த்தி. உபகாரம் செய்வதில் ஸுஹ்ருத், இடம் கொடுப்பதில் சுரபியாகிற காமதேனு, சத்க்ருது வாகிற இந்திரனால் "ஸம்யக், பிருதக் பிருதக் ஸுகோஷம்" செய்யப்பட்ட பரிபூர்ணி. பராசர முனிவராலும் சுகராலும் அம்ருதமதனத்தில் சேவிக்கப்பட்ட பயஸ்வினி, ஸ்ரீதேவி. ஹரிவக்ஷஸ்தலையாகிற உன்னைப் பூஜித்து, நாமங்களை ஸ்துதி செய்து, "ஸர்வவித்" என்று சொல்லப்படும் பிரத்யும்னரை, அழிக்கப்பட்ட பிரபஞ்சகளனைத்தையும் மீண்டும் உண்டு பண்ணி, தேஜோமயமாகப் பண்ணிய நாராயணனை, பானு என்கிற பெயரை பிரகாசப்படுத்தும் விஷ்ணுவை, நான் திருவடி பணிந்து சரணம் அடைகிறேன். ஹே விஷ்ணுவின் அனபாயினி, கங்கையினால் பூஜிக்கப்பட்ட தர்மபராயணே, மஹா தேவியே, உன்முகத்திலிருந்து வெளிவரும் அமுதத்தை எப்போது எனக்கு கொடுக்கப்போகிருய்? பிரிய சம்பாஷிணி, சூடாமணியைக் கொடுத்த சீதே, மஹேஸ்வரி, உன்னைப்பார்த்தால் பகவானைப் பார்த்தமாதிரியாகவும், பகவானைப்பார்த்தால் ஸகல தேவர்களையும் பார்த்தமாதிரியாகவும், இருக்கும் அம்மா. என்னை உன்மடியில் இருக்கும் குஹனைப் போலவும், அனந்த பிரும்மாவாகிற விஷ்வக்ஸேனர் போல நினைத்து தயை காட்டு. என்னிடம் தோஷங்களைப்பாராதே. இஷ்டமாய் வா. சந்தோஷத்துடன் வா. என் ஞானமொட்டின் புஷ்பமாக பூக்க என்னிடம் ஓடிவா. பத்மி, ப்ரேமவதி, ஸாமவதி, ஸோமவதி, சங்கபுஷ்பங்களைக் குண்டலங்களாக வைத்திருக்கும் சீதே, ராமன் மடியில் விளையாடும் சங்கீத ஆர்வம்கொண்ட ராஜமாதங்கி, என் வேண்டுகோளை செவிசாய்த்து ராமபிக்ஷையாகிற ஸ்ரீராமனை எனக்குத்தா அம்மா. விஸ்வாமித்திரர், வஸிஷ்டர் தசரதருக்கும் எவ்விதம் அருள் செய்தாரோ, அதுபோல எனக்கு உன் கிருபையும் ராமானுஜருடைய கைங்கர்ய கிருபையும் நாராயண ப்ரியத்துக்காகச் செய்யப்பட்ட சதாசிவனுடைய ஞானமும், ஆஞ்சநேயருடைய தாஸ்ய பக்தியும், துளசிதாஸர் விபீஷணர் ஆகியவர்களின், ஹே சியாமகிருஷ்ண ஸஹோதரி, அர்ச்சனை வந்தனங்களும் தியானமும் வேண்டும் அம்மா. சுக்ரீவனால் தேடப்பட்ட ராஜ்யஸ்ரீ தயைசெய். கருணாஜலநிதே, நதிதீர்த்தங்களால் சேவிக்கப்பட்ட விஷ்ணு மனோனுகூலையே, தயைசெய்.]

(எப்பொழுதும் புதியதும், புதியவைபோல மேன்மேலும் மகிழ்ச்சியைத்தரும் திருஅழகு, திருஸ்வபாவம், திருபிரவிருத்தி, திருசுக அனுபவங்கள், திருக்கல்யாண குணவிசேஷங்கள், உதாரமனது ஆகிய வரிசைகள் ஒன்றுக்குமேல் ஒன்று ஓங்கி அனந்தமாகவும், ஹலாயுதமாகிற கண்திருஷ்டிகளால் விசேஷ மாக விருத்தியாகும்படி பக்தர்களின் உள்ளங்களில் வாழ்ந்து கொண்டிருக்கும் சீதே, ராமானுஜனுடைய அனன்ய சரண்யை யே, ஸர்வலோகங்களும் ஆஸ்ரயிக்கும் ஸ்ரீ மஹாலஷ்மியே, ஹே லஷ்மணனுடைய ஜாக்ரதையினுல் காப்பாற்றப்படும் சீதை ராமா, உங்கள் மூவர்களையும் வைஷ்ணவபக்தர்களாகிற நாங்கள் "ஸர்வமும் நீங்களே" என்று குருபரம்பரையாக வந்த அனுஷ்டானக்ரமத்தால் ஆராதனை செய்யும் எங்களை, ஸர்வ பிரகாரங்களிலும் ஏற்று அனுக்ரஹிக்கவேண்டும்; சீதை எங்கள் தேவி, ராமராகிய நீர் வாஸுதேவராகிய பிதா, நாங்கள் உங்கள் இருவர்களையும் ஆசார்ய பக்தியினுல் கட்டுண்டு சேவகராக விளங்கும் லக்ஷ்மணனை எங்கள் ஆசார்யராக நினைத்து,) "உங்கள் மூவரையும் ஸகல விதமான ஆபத்துக்களாகிற யானை, சிம்மங்கள், ஸர்ப்பங்கள் இதர வேதனைகளிலிருந்து காப்பாற்றி உங்களுக்குச் சேவை செய்வோம். ஹே பிரபோ, இந்த சம்சார மாகிய இருள் போல, ஆபத்துக்கள் சூழ்ந்த வனப்பிரதேசமாக இருக்கிறது. எங்குபார்த்தாலும் ஒரே மரவிருக்ஷங்களும், மலை களும், குகைகளும், மலைப்பிளவுகளும், சமவெளிப் பிளவுகளும், பயங்கரமாகவிருக்கின்றன. இந்த அபாயங்களை இவிடங் களில் சஞ்சரிக்கின்ற நாங்கள் நன்ருக ஒவ்வொன்றும் எவ்வித மான அபாயம், துக்ககரமானது என்று அறிவோம்." (687)

"நாங்கள் உங்களை உத்தம ஸ்தானங்களுக்கு அழைத்துச் செல்வோம். எந்தவிடத்தில் தாங்கள் விளையாடுவதற்கு, ரமிப்பதற்கு யோக்கியமோ, வேட்டையாடுவதற்கு சிலாக் கியமோ, அந்தவிடங்களுக்கு கூட்டிச் செல்வோம். நல்ல தீர்த்த பிரதேசங்களுக்கு அழைத்துச் செல்வோம். இனிப்பாகவும் சுகத்தைதரும் அம்ருத மயமான தண்ணீரை உங்களுக்கு காண்பித்துக் கொடுப்போம். நாங்கள் எங்கள் பரிவாரங் களுடன் ராமானுஜன் மாதிரி உங்கள் தாஸர்கள். ஹே நாதனே, எங்களை தாங்கள் உபயோகப்படுத்திக்கொண்டு, கிருதார்த்தர் களாகச் செய்யவேண்டும். எங்களை உங்கள் மனுஷ்யர்களாக பாவித்து, ஸங்கோசமின்றி உத்தரவிடவேண்டும்." (688)

அகோசரமான வேத வசனங்களால் புகழப்படும் ஸுகோஷ தரான பிரபு ஸ்ரீராமச்சந்திரன், (கதி ஸத்தமர்களாகிற வஸிஷ்டர், விஸ்வாமித்திரர், பராசரர் இந்திராதிகளால் சதா மனத்தில் தியானம் செய்யப்படும் வியக்த ரூபர்கள்,) கல்யாண மூர்த்திகளாகிற சீதை லக்ஷ்மணன் சகிதம் எல்லாவற்றையும் பிரியத்துடன் கேட்டு, அங்கீகாரம் செய்துகொண்டார். சுலபர் ஆஸுதோஷி, சுசீலர், கருணையின் இருப்பிடம், கருணையைக் கவசமாகக் கொண்ட சீதாராமன், கிராதவேஷம் அணிந்த பாகவத சிரோண்மணிகளின் பக்தி ஸேவையை பூர்ணமாக அனுக்ரஹித்தான். (அவன் ஸர்வலோக பிதா. சீதை ஜகந்மாதா. இருவர்களும் ஜகத் ரக்ஷகர்கள். ஜகத்பதி, ஜகதாஸ்ரயர்கள், பக்தர்களுக்கு ஸர்வம் ஸம்பத்ஸ்யதே என்று அனுக்ரஹிக்கும் லக்ஷ்மி நாராயணன்.) தாய்தந்தையர்கள் பாலகனுடைய வார்த்தைகளை அங்கீகரிப்பது போல, (உமை சங்கரன் ஆகியவர்களின் மடியில் குஹன் விளையாடுபவது போல, சித்திபுத்தி விநாயகர் ஸந்நிதானத்தில் காயித்திரி விளையாடுவது போல, ராகவ சீதா மடியில் அனந்தன் விளையாடுவது போல, ராமானுஜ வைஷ்ணவ பக்தர்களின் மடியில் வைஷ்ணவ தத்வம் விளையாடுவது போல,) பகவான் கிருபாளு, சீதையின் புருஷ காரத்தால் எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டார். (689)

ஸ்ரீராமன் பக்தர்களிடம் அசாதாரணமான ப்ரேமை உள்ளவர். எவர்கள் அந்த கிருபாளுவை அறிய விரும்புகிறார்களோ, அவர்கள் அறிந்து கொள்ளட்டும். சுலபமாக அடையக்கூடியவர். அப்பொழுது ராமச்சந்திரனுல் அதிபிரேமையுடன்கூடிய வசனங்களில் ஆஸ்வாசப்படுத்தக் கூடிய ரத்னமணிகளாகிற பிரிய சம்பாஷணைகளால் சந்தோஷப்படுத்தப்பட்ட சகல வனவாசிகளும், பகவானுடைய மிருது பாஷண ஸ்மித பாஷண பூர்வ பாஷண வசனங்களால் தேறுதலடைந்து அவரைப் புகழ்ந்துகொண்டு அதிபிரேமையுடன் சென்றார்கள். (690)

அவர்களை அவர் பிரியமாக வழி அனுப்பி வைத்தார். அவர்களும் ராமனுக்கு சிரம் வணங்கி, பிரபுவின் குண விபூதிகளைப் புகழ்ந்துகொண்டு, தங்கள் வீடுகளுக்குத் திரும்பினார்கள். இந்த பிரகாரம் ஸுரர்களாகிற தேவர்களுக்கும் முனி ஸ்ரேஷ்டர்களுக்கும் சுக ஆனந்தத்தைத் தரும் இரு சகோதரர்களும் சீதா சமேதர்களாக வனவாசம் செய்ய ஆரம்பித்தார்கள். (691)

எந்த சமயத்திலிருந்து ரகுநாதன் வனத்திற்கு வந்து வாசம் செய்ய ஆரம்பித்தாரோ, அப்பொழுதிலிருந்து அந்த வனம்

மங்களத்தைக் கொடுக்கக் கூடியதாக விருந்தது. அநேகவிதமான விருக்ஷங்கள் புஷ்பிக்க ஆரம்பித்தன. பழங்கள் ருசிகரமாக காய்க்க ஆரம்பித்தன. நிழல் தரும் வாகைகள் போல அழகான கொடிகள் மரத்தில் மேல் படர்ந்து அழகாக கொடிப் பந்தல், கொடி மண்டபம் போல விளங்கின. (692)

அவைகள் தேவ லோகத்தின் கல்பதருவுக்கு ஸமானமாய் ஸ்வாபாவிகமாகவே அழகாயிருந்தன. அப்பேற்பட்ட உத்தம விருக்ஷங்கள் தேவ லோகத்தின் நந்தனவனத்தை விட்டுவிட்டு ராமனுடைய கிருபாகடாக்ஷம் பெற அந்த வனத்திற்கு வந்தவை போல விளங்கிற்று. அழகான தேன் வண்டுகள், இனிமையாக ரீங்காரம் செய்துகொண்டு மதுவை திரட்டிய வண்ணமிருந்தன. சுகத்தைத் தரும் சீதள மந்த, வாசனையுள்ளதும் ரமணீயமான மாருதம் எல்லோரையும் ஆனந்திக்கும்படி வீசிக் கொண்டிருந்தது. (693)

[தியானம்

ஹே ராமா, சீதா, லக்ஷ்மணா. காயத்திரிதேவி போலவும் அகஸ்திய வஸிஷ்டர் போலவும் காக்ஷி அளிக்கும் சீதா லக்ஷ்மண ராமா, திவ்ய ஒஷதிகள் நிறைந்த விந்திய மலை, மேரு மலை, மஹேந்திர பர்வதம் போலவும், சக்ஷு, மந்தாகினி, கங்கை போலவும், பராசரர் வேதவியாஸர் சுகர் போலவும், பரதன் சகுந்தலை துஷ்யந்தன் போலவும் காக்ஷி அளித்த ரகுகுலத்தில் பிறந்த ராம லக்ஷ்மணர்களே, சீதையை முன்னிட்டு உங்களை நான் சரண மடைகிறேன். பாயஸான்னத்தில் விருப்பமுள்ள அன்னபூர்ணை யின் மிகப்பற்றுதல் உள்ள விஷ்வக்ஸேனர் என்கிற பிரணவரே, பக்தர்களுக்கும் பகவானுக்கும் உள்ள சம்பந்தம் வீண் போகப் படாது என்று மஹாலக்ஷ்மியிடம் புருஷகாரம் செய்யும் உம்மை நமஸ்கரித்து, கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். வாருணரே, யோகவிதாம்வரரே என்றும், சர்வ அந்தர்யாமியாகவிருந்து எல்லாவற்றையும் பார்க்கும் கிருஷ்ணா, கேசவா, கேசிஹா, திரௌபதியின் துயரத்தையும் பீஷ்மருடைய ஸ்தவராஜத்தையும் கேட்ட யோகீஸ்வரரே, ப்ரதான புருஷேஸ்வரரே, ஜீவர்களாகிற எங்களைப் பந்தப்படுத்தி பிருகிருதியையும் அதில் பந்தப்பட்ட ஜீவர்களையும் எல்லாவகைகளாலும் நடத்தும் ஜனார்த்தனரே, ரமா நரஹரி: நீங்கள் எனக்கு மதுவாக விருக்கிறீர்கள். என் புலன்களாகிற மதுக்களை உம்மிடம் விஷ்வக்ஸேனர் கிருபையால் இடையூறில்லாமல் சேர்ந்திருக்கும்படி அருள் சுரக்கும் மதுசூத

னராக விருக்கிறீர். ஹே ஹரிः பகவானே, கோவிந்தரே, ராம கிருஷ்ணரே, என்னை எப்போது ஆட்கொள்ளப்போகிறீர்? எப்போது கராவலம்பனம் செய்து பாதாரவிந்தத்தைக் காண்பிப்பாய்? பரிபூர்ண, ஹ்ருதி வேத்யமே, பூர்ணகாரனே, நிரதிசய சுகதாயகரே, வர கவிகளான தியாகராஜ துளசிதாஸர், தீக்ஷதர் ஸ்யாமாசாஸ்திரி, பத்மனுப முத்ரையினுல் அலங்கரிக்கப்பட்ட ஸ்வாதி திருநாள், குலசேகராழ்வார், பிள்ளை லோகாச்சாரியார், மணவாள மாமுனிகள், வேதாந்த தேசிகர் ஆகிய ஆசார்ய அபிமானத்தால் உமது ஸ்வரூபத்தையும், ஸ்வபாவத்தையும் நுகர விரும்பும் எனக்கு எப்போது உன் திருவருள் கிடைக்கும்.]

நீலகண்டமுள்ள மயில், இனிமையாகப்பாடும் குயில், கிளி வகைகள், சாதகபக்ஷிகள், சக்ரவாகங்கள், சகோரங்கள் இன்னும் அநேக பக்ஷிவர்க்கங்கள் காதுக்கினிமை பயந்து மனதைக் கவர்ந்து இன்னிசைகள் பாடின. (மன்மத ஸ்தானத்தை அடைந்தது மாதிரி, (காமேஸ்வரியாகிற சீதை காமேஸ்வரனுகிற ஸ்ரீராமனின் ஸதாசிவமய மஞ்சத்தில், லலிதா திரிபுரசுந்தரி அமர்ந்து புஷ்பப்படுக்கையில் அன்புடன் வீற்றிருப்பதுபோல), எல்லா பக்ஷிகளும் நித்ய தம்பதிகளாகிற சீதாராமனுக்கு ஆனந்தத்தைத் தருவதற்காக, விதவிதமாக உருவெடுத்துக் கொண்டு சித்தத்தை அபஹரிக்கும் இன்பநாத சப்தபிரும்மங்களை ஸநாதனமான ஸ்ருதி வெள்ளத்தில் மூழ்கச் செய்தார்கள். அந்த மதுரமான இன்ப கானங்களைக் கேட்க, கேட்க, சுக ஆனந்தங்கள் பெருகி, பேசுவதற்கு வரம்பில்லாமல் தோன்றின.) (694)

யானைகள், சிம்மங்கள், வானரக் கூட்டங்கள், வராஹங்கள் மான் வரிசைகள் ஆகிய யாவையும் தங்கள் பழைய வைரங்களையும், விரோத பாவத்தையும் மறந்து, ஸநாதனனும் பகவானுமாகிய ராம சீதா ஸந்நிதானத்தில் ஒற்றுமையுடனும் முக்குணங்களாகிற சத்வம் ரஜஸ்தமஸ் விலகி, சாந்த ஸ்வரூபிகளாக அலைந்து திரிந்தன. சாந்த தமசீலன், பரம மங்களமூர்த்தியாகிற சிவமூர்த்தி, ஸத்வஸம்பன்னன், பத்ரன், பார்க்கும் ஜீவர்களை பரம ம்ருடமாகிற சுக ஆனந்தத்தைக் கொடுக்கும் ஸ்ரீராமச்சந்திரனை சிகாரியாகிற வேட வேஷத்தில் இறைதேடும் வேடுவனைப்போல பார்த்தும், பேசாமல் அவருடைய அழகை பாக்கியமாகவும் மௌனமாகவும் சப்பிட்டு அனுபவிப்பதுபோல முதித மனத்துடன் விசேஷமாக ரஞ்சித்துக்கொண்டு நின்று கொண்டிருந்தன. (695)

ஜகத்தில் எந்த எந்த இடங்களில் தேவதைகளின் வனபிரதேசங்கள் இருந்தனவோ, அவைகள் எல்லாம் தேஜோ மயமாகவும், பரமசோபிதமாகவும் இருக்கும் ஸ்ரீராமவனத்தைக் கண்டு வெட்கப்பட்டன. பரமபவித்திரமான சுரஸரி (கங்கை), ஸரஸ்வதி, சூரியகுமாரியாகிற யமுனே, மேகலாவின் பெண்ணுகிற நர்மதை, கோதாவரி, (வைகை, காவேரி) ஆகிய மிகப் புனிதமய பாக்யமுள்ள நதிகள், (696)

ஸகல 'குளம், குட்டைகள், சமுத்திரங்கள் நதிகள் இன்னும் அநேக ஜலராசிகள் மந்தாகினியின் பாக்ய விசேஷங்களேப் புகழ்ந்து பாடின. மேருமலேயிலிருக்கும் உதையாசலம் அஸ்தாசலம், கைலாஸம், மந்திராசலம், ஸுமேரு ஆகிய எல்லா மலேகளும் இன்னும் தேவதைகள் வசிக்கும் உத்தம ஸ்தான கிரிகள், (697)

மஹாதிவ்ய ஒஷதிகள் அடையப்பெற்று கீர்த்திகளே உடையதும், உமையின் பிதாவாக விளங்கும் ஹிமவத் பர்வதம் கூட மந்தாகினியின் கரையில் உள்ள சித்ரகூட பர்வதத்தின் பெருமையைக் கண்டு மனத்திற்குள் சிலாகித்தன. தம் வர்க்கத் திற்கு பகவானுடைய கிருபையை அடைவிக்கப்பெற்று, அந்த குல உத்தாரணம் செய்த குலீனனுகிற சித்ரகூடத்தைப் புகழ்ந் தார்கள். அந்த பர்வதத்தை ஸர்வ மலேகளும் சிலாக்யர் யோக்யர் என்று புகழ்ந்தார்கள். விசித்திரமானதும் பல நிறங் களுடன் கூடிய தாதுக்களேயும் தீர்த்த ப்ரதேசங்களேயும் ஒஷதி களேயும் கொண்டு நிரம்பிய விந்தியமலேயின் ஆனந்த ஹ்ருதயத்தை, தனக்கு ஸமம் எவரும் இல்லே என்று சொல்லும் படி எல்லேமீறியிருந்தது. அந்த மலே தன்னுடைய பாக்ய விசேஷத்தால் (உமை ஈஸ்வரர், அகஸ்தியர், வஸிஷ்டர் ஆகியவர் களின் கிருபாகடாக்ஷத்தால்) எவர்களுக்கும் கிடைக்கப்பெருத ராமசீதா பாக்யத்தை அடைந்ததாக எண்ணியது. அனந்த னுடைய கைங்கர்ய சேவைகளே, சித்ரகூடத்தில் ஒருவித பிரயாசையுமின்றி அவர்களாகவே உத்தம ஸ்தானத்தை, ரமணீ யவாச ஸ்தலத்தை, மன்மதவிகாரத்தை, நிர்மித்து ராம ஸ்ரீசக்ர மத்தியில் காமாக்ஷியாகிற சீதை, சித்ரகூட மஞ்சத்தில் புஷ்பப் படுக்கையில் ரஹஸ்ய தர்ப்பணமாகிற அன்பு வேட்கையில் பாக்யமாக இன்புற்ருளே; அந்த பெருமைகளே யாரால் அனுயாஸமாக கிடைத்த விமலமான புண்யபாகங்களே விவரிக்க முடியும்? (அப்பேற்பட்ட சித்ரகூட மந்தாகினியை நான் நமஸ்கரிக்கிறேன். லக்ஷ்மிநாராயணு, கிருபை செய்.) (698)

[தியானம்

ஹே ராமா, லக்ஷ்மண சீதா, உமாதேவியின் முன்னிலையில் இருக்கும் கணபதி குஹன்போலவிருக்கும் உபயமூர்த்திகளே, அகஸ்தியர், வஸிஷ்டர் போலவும், ஜமதக்னி விஸ்வாமித்திரர் போலவும், வாயுவும் கார்த்தியார்ஜுனன் போலவும், பிரதிபூஷன் பிரபாஸன் போலவும், மித்ரன் வருணன் போலவும், மஹத் அஹங்காரம் போலவும், பொருள் அதில் லயமடையும் சக்தி போலவும், ஜைகீஷ்வ்யர் மஹேஸ்வரர்போலவும், ஸநத்ஸுஜாதர் திருதிராஷ்டிரன் போலவுமிருக்கும் இரு ராஜபுத்திரர்களே, தாங்கள் அக்ஷதாம் வைதேஹி ஸந்நிதியில் இருக்கிறீர்கள். திங்களை முடிசூடிக்கொண்டு தருண பல்லவச்சாயைபோல மாயாதேவி, சந்திரனை ஆபரணமாகக்கொண்ட காமாக்ஷியைப் போல விளங்கும், ராமனை ரமிக்கச்செய்யும், சீதே, என் சங்கடங்கள் திவந்தங்கள் எல்லாம் நீக்கி, எவ்விதம் காமாக்ஷி புரஹர ஜாயையாக விளங்குகிருளோ, அவ்விதம் ராமஜாயை என்று சொல்லும்படி சீதாராம விருந்தாந்த கோவிதனுகிற ஆஞ்சநேயர் ஸந்நிதானத்தின்மீது வந்தடைகிறேன். ஹே லக்ஷ்மணனுல் சேவிக்கப்பட்ட ராமசீதா, ராமன் பொருள் சீதா பொருளின் சக்தி ; ராமன் புஜிப்பவன் சீதா ராமனுல் புஜிக்கத் தகுந்த வஸ்து ; பெரிய பாக்யம் பெற்ற உமையே, ராமன் பரன் சீதை பிருக்ருதி ; ராமன் விஷ்ணு, பிரும்மா, யக்ஞன் ; ராமனுக்கும் சீதைக்கும் வேற்றுமையில்லை. ஆகிலும் உருண்டையான பூமியும் அதிலும் பல விசேஷத்துடன் விரிவடைகிறது. ராமன் சாந்தமான புத்தியுள்ளவன், பெரியமுனி, சங்கரனுடைய பக்தன், தோழன், சிஷ்யனுகிற தாஸ்யன். சங்கரன் பினுகி ; ராமன் கோதண்டபாணி ; ஆசையற்றவன், த்வந்தங்களை ஒழித்தவன் ; அறிவுள்ளவன் ; யோகி, மஹாத்மா, ஜைகீஷவியரை கிருதார்த்தனுக்கி பரிபூஷணனுகப் பண்ணிய விருஷபக் கொடியுள்ளவர்போல, லக்ஷ்மணனையும் ஆஞ்சநேயரையும் கடாக்ஷித்த சீதை, என்னை அவ்வித புத்தியில் நிலைக்கச்செய்து, உங்கள் கிருபையை வேண்டுகிறேன். எவ்விதம் யோகிகள் த்வந்தங்களை விலக்கி நித்யர்களாக எவ்விதத்தாலும் தாமே சக்தி பெற்றவர்களாக இருப்பார்களோ, அவ்விதமான ரக்ஷிக்கக் தகுந்தவனுன என்னை ஹே சீதே, என் குற்றங்களிலிருந்து பொறுக்கவேண்டும். உமை எவ்விதம் ஜைகீஷவ்யரை ரக்ஷித்தாளோ அவ்விதம் நானும், ஹே ராமாசீதா லக்ஷ்மணு, உங்களால ரக்ஷிக்கப்பட வேண்டும். நற்குணம் நிறைந்த நாரதரால் போற்றப்படும்

கிருஷ்ணு, அக்ராஹ்யரே, உலகத்திலுள்ள மண் பொன் முதலிய காரணங்கள் வேலை செய்பவரால் கையாளப்படுகின்றன. ஆனால் பக்தர்களாகிய கோடிக்கணக்கான மஹாத்மாக்கள் உம்மைச் சித்தரித்து, அனுபவித்து, நீரே மனமுவந்து அனுபவிக்கக் கொடுக்க சித்தமாயிருக்கும் அவ்விதம் · உபாதான காரணமாகவும் அதைக் கையாளும் கர்த்தாவாகவுமிருக்கிறீர். உம்முடைய சங்கல்பம்தான் கிருத கிருத்யனுக ஒருவனைச் செய்யும். நீர் பரபிரும்மம். ஸ்ருஷ்டி முதலியவவைகளில் லீலா ரஸமாக எப்போதும் மகிழ்ந்திருக்கும் கிருஷ்ணர். கருமை நிறமுள்ள ஸச்சிதானந்தர். ஐயா, உம்முடைய ரூபத்தை காணக்கூடிய நிலையிலில்லை. மிகவும் சுத்தமான மனது உடையவர்கள், யோகிகள் அந்த சுத்த பிரும்மத்தை எப்பொழுதும் இருக்கிற சாஸ்வதனுக பகவானைப் பார்க்கிறுர்கள். அவ்விதமாகவே அறிந்த வித்வான் உலகத்திற்கு ஹிதமாகி, மனத்தை அடக்க வல்லமை அடைந்து, மனத்தால் தாபத்தை அடைகிறதில்லை. நான் வேறு தேகம் வேறு, எனக்கு மரணம் இல்லை; ஜனனமுமில்லை. ஸத்யமான ஆகாயம் முதலிய உலகமும் பொய்யான ஸ்வப்ன பிரபஞ்சமும் என்னிடம் கட்டப்பட்டிருக்கின்றன. காரியத்திற்கும் காரணத்திற்கும் அவனே. பிரும்மம் நல்ல காரியம், கெட்ட கர்மத்தினுல் வேறுபாடு உள்ளதாக காணப்படுகிறதில்லை. எப்பொழுதும் இருக்கும் பகவானுமான சுத்த பிரும்மத்தை எவன் எல்லா பிராணிகளிடத்திலும் தன்னுடைய ஆத்மாவாகக் கண்டு பார்க்கிறுனே, அவன் அதன் பிறகு மற்றவர்கள் மற்ற வஸ்துக்களில் பற்றுள்ளவர்களாகயிருக்கையில் ஏன் துக்கிப்பான்? ஆத்மாவை அறிந்த மனிதன் வேதத்தில் சொல்லப்பட்ட எல்லா ஸாதனங்களை அடைகிருன். நானே எது உள்ளதோ எது இல்லாததோ, எல்லாமாக கருதப்படுகிறேன். நான் பிதாமஹன், பிதாபுத்ரன். எனக்கு ஆத்மாவே ஸ்தானம். பகவானே பிராணநிலையர். என் ஜன்மத்திற்கும் ஹேது அவரே. சர்வதோமுகன், அச்யுதன். அஜர், சோம்பலின்றி ஸர்வ சாக்ஷியாகவிருக்கிருன். உலகத்திற்கு பிதாவாகவிருக்கிற ஹே ராமா, சீதாவாகிய சக்தி லயமடைந்த ராமா, உம்மை நான் ஸநத்ஸுஜாதரை சரணமடைந்து, எல்லா பிராணிகளுடைய ஹிருதய கமலத்தில் இருக்கும் புஷ்கராக்ஷராக அறிகிறேன். கோதாவரி, வேணி, கிருஷ்ண வேணி போலவிருக்கும் ·ராமசீதா லக்ஷ்மணு, என்னைக் காருண்யத்துடன் அணைத்துக்கொள். லோஹிதாக்ஷரே கிருபை செய்.]

"சித்ரகூடத்தில் விளையாடும் பசுபக்ஷி, வில்வம்போன்ற விருக்ஷம், புல்பூண்டுகள், ஸகல பிராணிகளும் அசேதன வஸ்துக்களும் வில்வ மரங்களும் வட விருக்ஷங்களும், சகல ஜாதியின் பிறப்புக்களும் புண்ணியங்களின் ராசிக் கூட்டங்கள், மஹா பாக்யமுள்ளவைகள்", என்று ராவும் பகலுமாக ஓயாமல் தேவதைகள் பேசிக்கொண்டிருந்தார்கள். (699)

பரம பாக்யத்துடன் கண்கள் படைத்த சகல ஜீவராசிகளும் ரகுவர ஸ்ரேஷ்டனைக் கண்டு சோகங்கள் மோஹங்கள் விபரீத ஞானங்கள் யாவும் நசிக்கப்பட்டு பரம ஞானத்தை அடைந்து, நித்யர்களாக அடையும் பேறை அல்லவோ ஜன்மத்தின் பலனாக அந்த சமயத்தில் அடைந்தார்கள். சலனமில்லாத பர்வத விருக்ஷ, பூமி, நதி, முதலிய பிறப்புக்களை அடைந்த சேதன அசேதனர்கள் பகவானுடைய பாத சரணங்களின் ஸ்பர்சம் ஏற்பட்டு பரம போக்யத்தைத் தரும் வைகுண்ட பதவியை அடைய யோக்யர்களான அதிகாரிகளாக மாறிவிட்டார்கள். மோக்ஷத்தையும் பெற்றுவிட்டார்கள். ஆச்சர்யம்! (தேவாசுர குரு, பிதா மஹர், ஜகந்நாதர், அயோநிஜர், பிரபு ராமனுடைய கிருபை ஆதி புருஷனாகிற நாராயணனுடைய கிருபையின் வேகம் போன்றதல்லவா?) (700)

அந்த சித்திர கூடத்திலிருக்கும் வனங்கள் பர்வதங்கள் ஸ்வ பாவமாகவே அழகுள்ளன. அவைகளைத் தியானிப்பதால் பரம மங்களங்களை கொடுக்க வல்லவை. பாவனம் செய்யும் கங்கைக்கும் கோதாவரிக்கும் அதிபாவனமான பொருள்; ராமன், பதித பாவனன் பாவனபாவனன் அந்த விடத்கிற்கு எழுந்தருளியிருக்கிறார். அந்த பரபிரும்மத்தின் மகிமைகளை என்ன விதிப்படி, என்ன அறிவினால், என்ன பரிமாணத்தினால் என்ன பிரகாரம் வர்ணிக்க முடியும்? அந்த ராம சீதா சுகசாகரன்; ஸ்ரீநிவாஸராகிய அந்த ராம சீதாவின் ஸ்ரீநிகேதனமே சித்ரகூடம். (ரங்கதாமில் ரங்கநாயகிச் சமேத ரங்கராஜன் இருப்பதுபோல) ஆனந்த போக்யனாகவும், ஹவிஸ்ஸாகவும் போக்தாவாகவும், பொருளாகவும் அதில் அடங்கியிருக்கும் சக்தியாகவும், ராம மஞ்சத்தில் பத்ம ஹஸ்தையாகிற சீதை லயமடைந்திருக்கிற காக்ஷியை, இருவர்களின் சுகங்களை, (ஹயக்ரீவர் கூட) சொல்ல முடியாது. பரம போக்யமான வாசம். (701)

க்ஷீர ஸாகரத்தைத் தியாகம் செய்த சூரர், தனிவிரனாகிய ஸ்ரீராமன் அயோத்திக்கு எழுந்தருளினான். அயோத்தியையும்

பரதனுக்காக தியாகம் செய்த சித்ரகூட சூரர் சீதை சகிதம் லக்ஷ்மணனின் கைங்கர்ய நிழலில் சித்ரகூடத்தில் மந்தாகினி தீரத்தில் ரமித்தான். அந்த ரமணீயகரமான இடத்தில் உள்ள வனத்தின் சோபையை (அந்த பரம சோபைகளை வைகுண்டத்தின் போகத்திற்கும் ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தின் போகத்திற்கும், திருப்பதியில் சாம்ராஜயம் செய்யும் ஏகனுகிற ஸ்ரீநிவாஸனுக்கும், கிடைக்கக் கூடிய காமபோக விலாஸங்கள், அங்கே ஒருங்கேகூடியிருந்தன.) அந்த பரம விசேஷங்களை ஆயிரம் முகங்கள் கொண்டவனும் ஸஹஸ்ர நாவுகள் கொண்ட ஆதிசேஷனுலும் வர்ணிக்கப் பட்டாலும் முடிவை அடையாதபடி இன்னும் கொஞ்ச தூரம், என்று சொல்லும்படியாக வல்லவோ விளங்கின. (702)

[தியானம்

ஹே ராமசீதா, சீதா, லக்ஷ்மணு, அனந்த ஆத்மாவே, கூர்ம அவதாரத்தில் உலகங்களைத் தாங்கும் ஆதிசேஷனுகிற லக்ஷ்மணனைத் தாங்கும் நாராயணு ஆத்மாவே, சீதையாகிற ரமையுடன் கூடி சித்ர கூடத்தில் ரமிக்கும் ராமா, நீ நினைவுக்கும் எட்டாத அதிருஸ்யர். அளவற்ற மகிமைகள் கொண்ட இந்திரனுகிற ஹுதபுக்கினுலும் (ஹோமம் செய்வதைப் புஜிப்பவனுகையால் ஹுதபுக் என்று இந்திரன் சொல்லப் படுகிருன்) பிரஜைகளைக் காக்கும் போக்தாவாகிற பிரும்மாவினுலும், காலத்தாலும் தேசத்தாலும் ஸ்வரூபத்தினுலும் அளவு பரிமாணம் செய்ய முடியாமல் அனந்தமாக விருக்கும் பரமாத்மா, அவ்யயமான பொருள் ராமராக காக்ஷி அளிக்கிறீர். ராம வ்யக்த ரூபத்தை அடைந்து, திவ்ய மங்கள விக்ரஹ ஸ்வரூபத்தை உடைய நாராயணு, உம்மை சீதா ஸந்நிதானத்தில் சதா நமஸ்காரம் செய்கிறேன். சங்கு சக்ரக தாதாரியான வாஸுதேவா, அர்ஜுன சகாயராகிய பார்த்தஸாரதியே, ஜனுர்த்தனரே, சீதையின் இன்ப சுகத்தை முகரும் ஆதி புருஷனே, "நான் வஞ்சனை செய்வதில்லை, ஈஸ்வரார்ப்பணம் செய்யாமல் தர்மத்தைச் செய்வதில்லை. பக்தியினுல் சுத்தத் தன்மையை அடைந்து சாஸ்திரத்தினுலே ஜனுர்த்தனரை அறிகிறேன்" என்று சஞ்சயனுடைய பக்திக்கு கட்டுப்பட்ட கிருஷ்ணரும் பக்தியினுலே, மூன்று யுகங்களை ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களாகிறவரும், உலகங்களுக்குக் கர்த்தாவும், கர்மத்தால் ஸாதிக்க முடியாதவரும், பிராணிகளுடைய உற்பத்தி அழிவுக்கும் காரணமானவரும், சூக்ஷ்மரும், தேவருமான மதுசூதனரை திருதராஷ்டிரன் அறிவே கண்ணுகிற ஞானத்தினுலும், அடைந்த

படியும், அக்ஞானத்தால் கெடுக்கப்படாதவரும் மஹா புத்தியுள்ளவருமான விதுரரால் சேவிக்கப்பட்ட கேசவரை சரணமடைகிறேன். சஞ்சயனுலும், வியாஸராலும் சேவிக்கப்பட்ட அனுதியும், பரனுமான ஹ்ருஷீகேசரை அறிய விரும்புகிறேன். ஆசாபாசம், ஸ்நேக பாசம், கர்ம பாசம் ஆகிய பந்தங்களால் கட்டப்பட்ட மனிதன் கோபத்தாலும், மகிழ்ச்சியாலும், தம்முடைய பொருள்களைக் கொண்டு, மகிழாதவர்களான மனிதர்கள் காமத்தால் மூடர்களாகி, நடந்து செல்கிற ஒரு குருடன் மற்ற குருடர்களை நடத்துவது போல, தங்கள் கர்மங்களாலே நடத்தப்படும் சேதனர்கள் ஸம்சாரத்தை தாண்டுகிறதில்லை. ஆனுல் சுகர் போல வித்வான், மஹா வித்வான்களாகிற நாரதர், சப்த ரிஷிகளாகிற சித்ரசிகண்டிகள், மனு, சுக்ராசாரியார் பிருஹஸ்பதி வேத வியாஸர், பராசரர் ஆகிய என்னுடைய ஆசார்யர்கள் யம பயங்களை ஒழித்து, சம்சார தாபங்களை அறுத்து, மோக்ஷத்வாரமாகிற சூர்யனுடைய மார்க்கத்தை ஒரே ஸ்தானமாக அறிந்து, மனத்தை ஜயித்து, ஆத்மாவை இந்திரிய நிக்ரஹத்தினுல் அறிந்து, விஷயப்பற்றை விட்டு ஜாக்ரதையினுலும், கொல்லாமையாலும், முயற்சியுள்ள ஞானத்தாலும் அடைந்தார்கள். வேதியர்களாகிற பிரும்ம ரிஷிகளால் ஞான மார்க்கம், சாஸ்திர லாபம், யோகம், தத்வ விஷயத்தில் ஜனர்த்தனருடைய அனுக்ரஹம் இவைகளால் வித்வான்கள் ஜனர்த்தனரை அறிகிருர்கள். இவ்வித ஞான பரம்பரைகளால் தர்மார்த்த காமங்கள், சுகம் துக்கம், ஜீவனம், மரணம் ஆகியவைகளை உள்ளபடி அறிந்து, ஸ்ருஷ்டி பிரளயங்களின் சூக்ஷ்மங்களை மார்க்கண்டேயர் போல அறிந்து, அவ்யக்த மானதும், உலகங்களில் வியாபித்த ஆத்மாவை, அதே உலகங்களில் ஹரி, விஷ்ணு வியாபித்து லயமடைவது போல, பகவானுகிற நாரயாணரை, மஹாலக்ஷ்மி ஸந்நித மஹா நாராயணனை, பாராவாரத்தை அறிந்து, ஞான மூலமான சக்தியினுல் எல்லா நிலைகளிலும் எல்லா பிராணிகளையும் ஸமமாகப் பார்ப்பவனும், பிரும்மமுமானவன் அசுபத்தை அடைகிறதில்லை. மோகத்தால் ஏற்பட்ட க்லேசங்களை விலக்கி, ஒன்றிலும் விருப்பமில்லாதவனுகி, பந்த நிவ்ருத்தியடைந்து, தவத்தின் வன்மையாலும், குரு கிருபா கடாக்ஷத்தினுலும் சுகர் சித்தி அடைந்தது போல நானும் அவரை சரணமடைந்து ராமா, சீதா ராமா, உன்னை வந்து அடைகிறேன். பாஞ்ச ராத்திர நாராயணு, என்னை நீதான் கட்டிக்காக்க வேண்டும்.]

"அந்த ரம்யமானவிடத்தின் மகிமைகளை நான் எவ்விதம் வர்ணிக்க முடியும்? (ரங்கநாயகி ஸமேத காவேரிரங்கன் ரமாதரங்கத்தில் நீஞ்சிவிளையாடும்போது, ஆதிசக்தியாகிற சீதை பெரும் பொருளாகிற மஹாநாராயணனிடம் யோக நித்ரையில் உறங்கும் அவஸ்தையைவிட்டு, இன்ப காம விலாஸங்களில் அடங்கி, விளையாடும் நிரதிசய மஹிமைகளை அவர்களின் புத்ரனாகிற நான் எவ்விதம், எந்த தர்மத்தின்படி விவரிக்கமுடியும்?) சிறு குட்டையில் வாழும் ஒரு ஆமை மந்திராசலத்தை, பகவான் கூர்மாவதாரத்தில் செய்தது போல, தன் கைகளால் தாங்க முடியுமா? ஆனால் நான் ஒன்று நிச்சயமாக சொல்லக்கூடும். பிங்கள நிறமுள்ள லக்ஷ்மணன் தன்னுடைய மனம் வசனம் கர்மம் ஆகிய ஸாதனங்களால் ஈஸ்வரனாகிற ஸ்ரீராமச்சந்திரனுக்கு தன்னை அர்ப்பணம் செய்து ஜாக்ரதையுடன் சோம்பல் நித்ரையின்றி, ஸேவாகைங்கர்யங்கள் செய்துவந்தான். அந்த ஈஸ்வர பக்தியை (சுகர், ஸஞ்சயன் போல) பற்றுதலற்ற சீல நடத்தையையும் எந்த மஹானுபாவன் வர்ணிக்கக்கூடும்?" (703)

ஒவ்வொரு க்ஷணமும் ஸ்ரீசீதாராம பதங்களை அறிந்து, பார்த்து, நமஸ்கரித்து, (வந்தன ஹ்ருதயத்துடன் ஹரிசரணங்களைத் தாங்கும் விஷ்வக்ஸேனர்போல,) அபாரமான ஸ்நேக வாத்ஸல்யத்தால் கட்டுப்பட்டு, பாசபந்தங்களை அறுத்து, ஸ்வப்னவஸ்தையிலும் பூர்வவாசனையாலும் கேசவருடைய அபார க்ருபா கடாக்ஷத்தினாலும், (பாஞ்சராத்திர சாஸ்திர ஞானத்தினாலும், நாரதர் போன்ற குருக்களின் க்ருபாகடாக்ஷத்தாலும், வைஷ்ணவ பக்தன் பகவானுடைய ஸ்நேக பாசத்தை அறிவதுபோல அறிந்து,) ராமசீதாவே தன்னுடைய மாதா பிதா, வீடு, ஸர்வமும் அவர்கள்தான் என்று அறிந்து பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டதை ஒருவாறு அறியலாம். அப்பேற்பட்ட ராமானுஜன் தன் சொந்த மாதா பிதாவாகிற சுமித்திரை தசரதர், ராஜபோகங்களடங்கிய அயோத்தியையும் ஒரு க்ஷணமும் நினைவுபடுத்திக் கொள்ளவில்லை. மஹா ஆச்சர்யம் இதுதான்.!! (704)

[தியானம்

ஹே ரகுநந்தன, நாராயண, சீதா, ராஜராஜேஸ்வரி, லக்ஷ்மண, ஆதிசேஷா, சாம்பவி, வாராஹி, வைஷ்ணவி, கமலா, ஸர்வ ஸஹரே, பசு எவ்விதம் ஸகல பிராணிகள், தேவர்கள், கின்னரர்கள், மனிதர்கள் ஆகிய எல்லோருக்கும் சக்தியை அளிக்கிறதோ,

அதுபோல எல்லோரையும் தாங்கும் ஆதாரசக்தியே, நீதான் அம்மா எல்லா சாதுக்களுக்கும் இருப்பாகவிருக்கும் ஸத்தா, பேதமில்லாத ஞானஸ்வரூபமுள்ளவள். தரணிதரி. தத்வத்தை யும் மோக்ஷத்தையும் கருதும் சித்தர்களும் கண்ணுக்குப் புலப் படாமல் எல்லா பிராணிகளிடத்திலுமுள்ள யாகம், தானம் முதலிய நற் கருமங்களையும் பாவங்களையும் அறிகின்றாய். உன் பெயர்களைச் சொன்னால் இனிய முகமலர்ச்சியோடு நீ நன்மை யைத் தருகிறாய். காலன், ம்ருத்யு, விஸ்வேதேவர்கள் ஆகிய தேவர்களும் பித்ரு ஸ்ரேஷ்டர்களும், உன்னையே நம்பியிருக் கின்றன. கௌமாரி, ராஜராஜேஸ்வரி, புவனேஸ்வரி, சகல சராசரங்களும் உன்கிருபையால் தங்கள் திவ்ய சக்திகளோடு பிரும்மாவினால் படைக்கப்பட்டு, இவ்வுலகங்களில் வசிக் கின்றனர். பிரும்மாணி, கௌரி, உயிரை நடத்துகிறவளாகிய உன்பெயரை பரிசுத்தமாக தினந்தோறும் கீர்த்தனம் செய்பவன் சகல புருஷார்த்தங்களையும் அடைந்து, புண்யபாவங்களை விலக்கி, மோக்ஷத்தை, நாராயணி, 'உன்புருஷகாரத்தினால் நாராயணனிடமிருந்து அடைகிறான். அஜரே, உயர்வுதாழ்வுமா யுள்ள எல்லா புருஷார்த்தங்களுக்கும் நீதானே காரணமாகும் ஸர்வாதி. சரணாகதி செய்தவர்கள் அனைவருக்கும் கால தாமதத்தையும், அதனால் வரும் மனச்சோர்வையும் விலக்கு வதற்காகத்தானே, ''அம்மா, ஸகல லோகமாதரம், அஸ்மத் மாதரம், அசரண்ய சரண்யம் அனன்ய சரண்யம் சரண மஹம் பிரபத்யே,'' என்று உன்னிடம் ஓடிவருகின்றனர். நீ ஸர்வேஸ்வரி, விஸ்வேஸ்வரி. ஒரு உபாயமும் தேடாது புதைத்த பொருள்போல முன்னமே ஏற்பட்டிருக்கும் ஸித்தர், ஸித்தி, உனது புருஷகார உண்மையை அறிந்து, பரிஸ்ரம மின்றி பகவானை நீ என் போன்றவர்களுக்கு, ஏகாக்ஷ ராக ஏற்படுத்தியிருக்கிறாய். நீ இயற்கையாகவே ரக்ஷகை யானபடியால், பகவானும் எனக்கு ரக்ஷகராக இயற்கையாக அமைக்கப்பட்டார். உன் ஸம்பந்தத்தால் அவர் எனக்கு ஸித்தர் ஆகிறார். ஸாத்யசித்த உபாயங்களால், அம்மா, மஹாலக்ஷ்மி, நீயும் நாராயணனும் ஸித்தியாகிறீர்கள். உபாயங்களால் தேடப் படுகிறவராகவும், எங்களுக்கு சுலபராகவும் ஸித்தி அடையும்படி நீங்கள் செய்விக்கிறீர்கள். உன்மூலமாக நாராயணனை அடைந் தால், நாராயணனும் எங்களைவிட்டு நீங்காதபடி அச்யுதர் என்று சொல்லும்படி ஆகிறார். உன்னுடைய கிருபையினால் எங்களுக்கு தவறுதல்கள் ஏற்படாதபடி நீ செய்து, உன்னைவந்து அடைந்தவர்

களைக் காப்பாற்றி, ஹே தர்மவத்ஸலே, தர்மபராயணே, சுரபி, ஸுவாஸினி, காமாக்ஷி, மீனாக்ஷி, பகவானை விபவ அவதாரத்திலும் தமது ஸ்தானத்திலிருந்து நழுவாத அனுக்ரஹ நாராயணனாகவும், அச்யுதராகவும், வியவஸ்தை செய்கிறாய். உன்னுடைய குங்குமமேனியும், சொட்டும் இரத்தம்போல நிறமுள்ள அழகு வாய்ந்த உன் திருமேனியை, ஜபமாலையுடன் கூடிய பத்மஹஸ்தத்தையும் கன கலசங்களாகிற இரு ஸ்தனங்களையும் புன்னகையோடு ராமனைத்தழுவும் இருகைகளையும், உன் அமிர்தகடாக்ஷத்தினால் கடாக்ஷித்து களைப்புற்ற ராமன் மீண்டும் சக்திமானாக விளங்குவதும், வர அபயஹஸ்தமும், என்னை ராமனிடம் ஒப்பிவிக்கும் "ஜயதி தவரூபதேயம்," என்று சொல்லும்படி என்னை வாழ வைக்கும் ராஜராஜேஸ்வரி. கமலாகாந்தா, உனக்கு நான் எவ்வாறு கைம்மாறு செய்வேன்? உன்னை காமாக்ஷி, பத்மதளாயதாக்ஷி, நல்ல ஒளிவீசும் நயம்கொள் யாழ்மீட்டும் இன்பநாதமயமாக விளங்கும் மங்கை சரஸ்வதி விரிஞ்சியினிடம் இருப்பதாகவல்லவோ உன்னை ஸ்மரித்து ராம மஞ்சத்தில் பிந்து தர்ப்பணம் செய்யும் என்னை, கவிகளை ஆதரிப்பது போல ஆதரிப்பாய் அம்மா.]

ராமனுடைய அசாதாரணமானதும் வைகுண்டத்தில் கிடைப்பதற்கரிய சங்கம சேர்க்கையை சீதையின் மஞ்சத்தில் ஊஞ்சலாடும் ஸ்ருங்கார ராமனை அவதாரகாலத்திலும் கைங்கர்யம் செய்யும் பாக்யம் பெற்றான் லக்ஷ்மணன். சீதையின் சுகம் ராமனுடையது, ராமனின் சுகம் தன்னுடையது என்று கருதின மஹாதியாக புருஷன், உரகபதியாகிய ஆதிசேஷனின் அவதார அம்சமான ராமானுஜன். ராம சீதாவுடனிருப்பது அயோத்தியாபுரி; தன்பத்னி, அரண்மனை போகங்கள் யாவற்றையும் மறந்து நிரதிசய சுக ஆனந்தத்தை ராம கைங்கர்யத்தால் அடைந்தான். ஒவ்வொரு க்ஷணமும் குளிர்ந்த தாமரையின் சீதளத்தைவிட அழகிய சந்திரனுடைய காந்தியை உடைய ரகுநந்தனின் திருமுகமண்டலத்தைக் கண்ட சீதையை ராமன் கண்டு ஆனந்தப்படுவது போல, இருவர்களின் சுக ஆனந்தத்தினால் ஏற்படும் முகமண்டலத்தைப் பார்த்து, லக்ஷ்மணன் பரமபிரஸன்னமடைந்தார். பரம பாகவத உத்தமனான ராமானுஜர் சகோர குமாரியாகிற பக்ஷி சந்திரனுடைய அம்ருத தாரைகளைப் பருகி சுகமடைவது போல சுகமடைந்தார். (705)

ஸ்வாமியினுடைய ப்ரேமை, அவருடைய மனம் கோணாது இங்கிதங்களினால் முன்புத்தியுடன் தினந்தோறும் நடந்து

சோம்பலின்றி கைங்கர்யங்கள் செய்துகொண்டு அந்த நித்ய தம்பதிகளை ராமானுஜன் கட்டிக்கார்த்தார். அந்த பேரின்பத்தால் சீதை அடைந்த ஆனந்தத்திற்கு அளவு காலவரையிலும் இல்லை. சூரிய வெளிச்சத்தில் கோகில பக்ஷி ஆனந்தத்தால் துள்ளுமே, அதுபோல ராம மஞ்சத்தில் சீதை விளையாடினுள். சீதையினுடைய மனம் ஸ்ரீராமச்சந்திரனுடைய புஷ்பசரணங்களில் அதி அனுராகத்துடன் கவர்ந்து பதிந்திருந்தது. அவ்விதம் பற்றுதல் கொண்ட சீதையின் வனவாஸம் ஆயிரக்கணக்கான அயோத்யா புரிவாசத்திற்கு சமமாகவிருந்தது. (ராம சரணங்களைப் பற்றின சீதையின் பாதசரணங்களை நான் நமஸ்கரிக்கிறேன். அந்த பாதங்களை எனக்குக் காண்பித்த ராமானுஜர், அகஸ்தியர், லோபா முத்ரை, ஹயக்ரீவரை நான் என் குருநாதர்களாக வரித்து, ராஜ ஸ்ரீயுடன் கூடிய ராமச்சந்திரனை நான் என் தஞ்சமாக அடைகிறேன்.) (706)

[தியானம்

ஹே ராமா நாராயணு, மஹாலக்ஷ்மி சீதா, ராமானுஜா, லக்ஷ்மணு, என்னுடைய சோகம், மோகம், பயம் இவைகளை அழித்து என்னுடைய ஹ்ருதயத்திலிருந்து ஆட்சிவீற்று ஸ்திதமாக விருக்கும் புண்ய மூர்த்திகளே, ஆயுः ராஜ ரிஷியான க்ஷீபன், நராதிபனுகிற கக்ஷேயன் ஆகிய மூன்று ராஜ ரிஷிகள்போல விளங்கும் மும்மூர்த்திகளே, வருணன் கௌரியுடன் விளையாடுவதுபோல சீதையுடன் விளையாடும் ராமா, விஸ்வேதேவர் ஆகாயம் நக்ஷத்திரம் கிரஹம் ஆகிற அழகின் கூட்டமாக விளங்கும் மும்மூர்த்திகளே, உம்மை பப்ரு என்றும் சொல்லுகிருர்கள். ஆதிசேஷ ரூபம் கொண்ட ராமானுஜனைத் தாங்கும் ராமா, ஸ்ருங்கார நாயகியாகிற சீதை உன்னிடம் லலித்து, யிருக்கும் போது, நீங்கள் இருவர்களும் திவ்ய ரூபத்தாலும், திவ்ய சேஷ்டிதங்களாலும் பக்தர்களாகிற காமேஸ்வரியுடன் கூடின காமராஜன் போல விருக்கிறீர்கள். நெஞ்சுருகி, ஆனந்தக் கண்ணீர் விடும்படி செய்யும் ருத்ரரே, மஹா விஷ்ணுவே, ஸம்ஹார காலத்தில் ப்ரஜைகளை அழும்படி சிக்ஷித்து, யோக நித்ரையுடன் தூங்கும் மஹாபிரளய மூர்த்தியே, பிரளய பயோதரா, அநேக தலைகளைக்கொண்ட விராட் புருஷரே, என் போன்ற பக்தர்களைக் கட்டிக்காக்கும் விஸ்வயோனி, ராம சீதாலக்ஷ்மணு, நீங்கள் மூவர்களும் வைஷ்ணவ சித்தாந்தங்களாகிற உலகங்களைத் தமக்கு ஆதாரமாகவும், பிரும்மருத்ராதிகளை

நடத்தும் காரண ஈஸ்வரராகவும், சேதன உலகரூபியாகவிருக்கும் ராமானுஜனும், சீதையாகிற ஜீவனின் புருஷகாரம் செய்யும் மஹாலக்ஷ்மியாகவும், தத்வம் ஹிதம் புருஷார்த்தமாகவும் விளங்கும் என் மூன்று ஐஸ்வர்யங்களே என்போன்ற வைஷ்ணவ பக்தர்களால் இனிதாகச் சொல்லப்படும் ஆர்த்தி விஷயங்களைக் கேட்டு மகிழும் சுசிஸ்ரவஸே, சீதையை விட்டுப் பிரிந்து தனித்து சோகத்தால் வாடியபோதிலும் வாலியை மதுரமான வாக்யங்களால் ஆஸ்வாசப்படுத்தி தர்மபதத்தில் நிலைநிறுத்திய மஹாத்மா, ராமா, மஹேந்திரனுக்கு உபமானமாகச் சொல்லக் கூடிய பீம விக்ரமா, சித்ரகூடத்தில் சீதையுடன் கூடிய ராமா, அங்குசமும் பாசமும் அம்பு கோதண்டமும் செங்கரம் கொண்டு விளங்கும் ராமசீதாலக்ஷ்மணா, என்னைக் காக்கவந்த முடிசூடும் திங்களே, காமாக்ஷியே, என் மனத்தில் உங்களை வைத்து சதா தியானிக்கிறேன். என்னிடம் பிரஸாதம் அடையும். நரேஸ்வரர்களே, என் குற்றங்களையும் பாபங்களையும் தோஷங்களையும் க்ஷமிக்கவேண்டும். என் கல்யாண மூர்த்திகளே, கிருபை செய்யுங்கள். உங்களிடம் அர்ப்பித்துக்கொண்டு, உங்களையே பராயணனாகவிருக்கும் எங்களுக்கு உமது அணைப்பைக் கொடும்.]

பிரியதமனாகவிருக்கும் ஸ்ரீராமன் உடனிருக்க அழகாக நிர்மாணிக்கப்பட்ட பர்ணகுடி சீதைக்குப் பேரின்பம் பயப்பதாக இருந்தது. அவளுடைய இன்ப ஆனந்தம் ராமனுடைய ஏகாந்த அணைப்பில் சொல்ல முடியாதபடி பொங்கி வழிந்தது. மிருகங்கள் பக்ஷிகள் குடும்ப பரிவாரங்கள்போல விருந்தன. முனிவர்கள் அவர்களுடைய ஸ்திரிகள் சீதையின் பதிக்கு பிதா மாதாக்கள் போலவும், அந்த வன சூழ்நிலையில் கிடைக்கும் கந்தமூலம் இனிப்புள்ள பழங்கள் அவர்களுக்கு அம்ருத ஸல்லாப வார்த்தைகளுக்கு குழம்புப்பால்போல புஷ்டிதரும் ஏர் பொருள்களாக விளங்கின. (707)

தனி ஈஸராக விளங்கும் ராமஸ்வாமியுடன் படுக்கை கொள்ளும் சுந்தரியான சீதாலக்ஷ்மிக்கு குசங்களாலும் மணமுள்ள இலை புஷ்பங்களால் தயாரிக்கப்படும் படுக்கை நூற்றுக் கணக்கான காமதேவர்களுடைய சய்யாதல்பங்களைவிட உயர்ந்ததாக விளங்கியது. அந்த ராமநாதனுடன் புன்சிரிப்புக்கொண்டு பூத்த முகத்துடன் கருணைவடிவமாயுமுள்ள என் தாய், செஞ்சுடர் தேவி, போகம் கொண்டு மனம் உவந்து, பாற்கடலில் பள்ளி

செய்வதுபோல, ராமானுஜனின் நிழலடிவாரத்தில், (நான் பன்முறை சேவிக்கும் தெய்வநித்ய தம்பதிகள், ஸதாசிவ மஞ்சத்தில் படுத்துறங்கும் திரிபுரசுந்தரியைப்போல,) ஆயிரக்கணக்கான மடங்குகள்போல ஆனந்தப் பெருக்கை மிஞ்சிய வான் அளாவிய ஆகாயத்தின் கீழே அனுபவித்தார்கள். அவர்களுடைய பேரானந்தம் ஆயிரக்கணக்கான ரதி காமதேவர்கள் அனுபவிக்கும் உள்ளுரை ஆனந்தத்தைவிட தனிக்கட்டு விளங்கியது. எவர்களுடைய ஒரு துளி கடாக்ஷ வீக்ஷண்யத்தினுல் ஒரு ஜீவன் லோக பாலனுக ஆகிருனே, அப்பேற்பட்ட கருணு மூர்த்திகளுக்கு போக விலாஸங்கள் மோஹத்தை உண்டுபண்ண சக்தி வாய்ந்தனவா ? (ஹே ஸ்ருங்கார நாயகியுடன் விளங்கிய ஸ்ரீராமா, துர்வாஸரின் சாபத்தை அடைந்த சதக்ருதுவாகிற மஹேந்திரன் அம்ருத மதனம் செய்யும் சமயம் விஷ்ணு வக்ஷஸ்தலேயாகிற அம்ருத சஹோதரியான மஹாலக்ஷ்மியாகிற ஸ்ரீதேவியை சரணமடைந்த காரணத்தால் அந்த பெருந்தேவி கடாக்ஷ வீக்ஷண்யங்களால் அல்லவோ த்ரைலோக்ய ராஜ்யஸ்ரீயை மறுபடி அடைந்து எல்லா விதத்திலும் ஸ்திரமாக விருக்கும் நிலேத்த ஸம்பத்தை அனுபவித்தான்.) அப்பேற்பட்ட அம்ருத ஸஹஜை, ராமனின் வக்ஷஸ்தலத்தில் அன்புடன்கூடி அனுபவிக்கும் சமயம் போக விலாஸங்களுக்கு குறைவு ஏற்படுமா ? (கிருபாமூர்த்தியாகிற சீதை கஷ்டத்தை அனுபவிக்கும் நாராயணபரர்களுக்கு புஷ்கராவர்த்தம் என்கிற மேகம் போலவும், அம்ருதத்தை வர்ஷிக்கும் கார்முகில் போலவும், உஷக்காலத்தில் மலர்ந்த தாமரைப் பூக்களுக்கு தோழர்கள் போலவும் தன்னுடைய கடைக்கண் வீச்சுக்களின் பார்வைகளினுல் எங்கெங்கு செலுத்துகிருளோ, அந்த மஹானுபாவையுடைய கண்வீச்சுக்களின் திக்குகளில் ஸம்பத் பிரவாஹங்கள், ஐஸ்வர்ய விலாஸங்கள் "நான் முந்திப்போகிறேன், நான் முதலில் சேர விரும்புகிறேன்" என்று போட்டி போட்டுக்கொண்டு சொல்லிக்கொண்டும், சொல்வதைச் செய்துகொண்டும் போகுமே) அவ்விதமிருக்கும்போது, சகல போக விலாஸங்களும் அவள் ராமனிடம் கூடும் சமயம் அடங்கிவந்து சித்தமாயிருந்தன. அப்பேற்பட்ட ஐஸ்வர்ய விலாஸங்களின் முன்பு மஹேந்திரனே, வருணன் குபேரன் யமன் போன்ற அஷ்டதிக் பாலகர்களின் ஐஸ்வர்ய விலாஸங்கள் எம்மாத்திரம் ? அப்பேற்பட்ட நித்ய தம்பதிகளே யாவரையும் மோஹப்படுத்தும் போக விலாஸங்கள் வசப்படுத்தக்கூடுமா ? (சீதை சாக்ஷாத் பரமபத நாதனுடன் ரமிக்கும் சமயம் யார் யார் எதைக்கண்டு மோகிக்கா

மல் இருக்கக்கூடும்? ராமானுஜனுகிற லக்ஷ்மணன் ஒருவன் அன்றோ விவேகியாக அதிலிருந்து தப்பினுன். (708)

அப்பேர்பட்ட ராமானுஜனுடைய நிழலில் வசித்து வரும் ஸ்ருங்கார ராம சீதாவை ஸ்மரணம் செய்துகொண்டு, தியானம் செய்துகொண்டு வாழும் வைஷ்ணவ பக்த ஜனங்கள், அடியார்கள், அடியார்களுக்கு அடியார்கள் சகல போக விலாஸங்களையும் தவம், பக்தி, கைங்கர்யம் ஆகியவைகளுக்காக தியாகம் செய்து அவைகளைப் புல்லுக்குச் சமமாக நினைத்து, பகவானுடைய உத்தம சேர்க்கையை அன்றோ சதா அனுபவிக்க வரும் அந்த புண்ய சீலர்கள் விரும்புகிருர்கள். அதற்காகவே அவர்கள் தியாகம் செய்யும் பொழுது, ராமப்ரியையான சீதை, ஜகஜ்ஜனனி, சகல விஷய ஞான சுகங்களுக்கு ஆதார மூலம், ராமச்சந்திரனை வனத்திலும் விட்டுப் பிரியேன் என்கிற விரதத்துடன் அயோத்தியின் போக விலாஸங்களை உதறித் தள்ளிவிட்டு, தனித்து ராமனை ரமிக்கும் சமயம், அவளுடைய ராமபக்தி வைஷ்ணவர்களின் பரந்தாமனுக்காகச் செய்யப்படும் தியாக புத்தியுடன் கூடிய பரமா பக்தி போலவல்லவா விளங்கியது? அப்பேற்பட்ட ஜகன் மாதா, ராஜஸ்ரீ ராமனுடன் கூடி வாழ்வதையே, அந்த ஒன்றையே பெரிதாக நினைத்துக் காடு வந்து ரமித்து வாழும் போது அவளுடைய போக விலாஸங்களின் தியாகம் சிறுமைப்படுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லையே! (709)

என் பிரிய ரகுநாதன் சீதையையும் லக்ஷ்மணனையும் மிருது, மதுர, பூர்வ, மந்த ஸ்மித பேச்சுக்களால், குளிர்ந்த பார்வைகளால் சுகப்படுத்தினுர். அவர்கள் அடைந்த சுகம் எப்படி, எவ்விதம் எந்த முறையில் ஏற்பட்டது என்று யாராலாவது சொல்லக் கூடுமா? எதைச் செய்தால், எதைச் சொன்னுல் அவர்கள் சுகம் அடைவார்களோ, அவ்விதம் (மதுரயாழ் கொண்ட நாரத பிரியனுகிற) ராமன் சொல்லி சம்பாஷித்தார். (நாரதர் ஆர்த்திகளுக்கு தாபங்களை நீக்கி, ஸத்பலனை அடையச் செய்யும் புராண இதிஹாஸ மந்திரங்களைச் சொல்வதுபோல,) பகவான் ராமன் புராண கதைகளையும் மர்ம ரஹஸ்ய மந்தரங்களையும் வித்யைகளையும் சொல்லி, அவர்களை அத்யந்த சுகத்தில் மூழ்கும்படிச் செய்தார் என் பிரபு. (710)

எந்த எந்த சமயம் அயோத்தியின் நினைவு, மாதாக்களின் நினைவுகள் வந்தனவோ, அப்போதெல்லாம் அவருடைய நேத்ரங்களிலிருந்து, கிருபா ஸமுத்திரமாகிற நேத்ரங்களிலிருந்து

கண்ணீர்கள் மேகம் வர்ஷிப்பதுபோல வர்ஷித்தன. தன் மாதா கௌஸல்யையும், பிதாவையும், குடும்பத்தினர்கள் தம்பிமார்கள், பிராதாவான பரத நம்பியிடம் காட்டிய அத்யந்த பிரேமை விலாஸங்கள், சீல ஸலில ஸ்நேக ஸ்வபாவங்கள் எல்லாவற்றையும் பிரபு நினைத்துக்கொண்டு அழுதார். (711)

கிருபா சிந்து என் பிரபு (சீதையோ சகலருடைய துக்கங்களையும் ஒழிக்கும் துரிதாபஹாரிணி. ஓங்காரியாகிற சீதையுடன் கூடிய) ஸ்ரீராமன். சகல துக்கங்களையும் போக்கும் சீதையைப் பார்த்து தன் துக்கங்களை சமனம் செய்துகொண்டு ஓய்ந்து விடுவார். மிக்க தைர்யத்துடன் துக்கப்படுவதற்கு தருணம் இது அல்ல என்று விவேகத்திஞல் அறிந்து சாந்தமடைவார். அந்த சமயங்களில் என் பரதேவதை சீதை (தன் குஸுமம பார்வைகளாலும், அன்புப் பேச்சுகளாலும், காம அணைப்பாலும் வியாகுலமடைந்த) ராமனை அனுஸரித்து நடப்பாள். குளிரவைப்பாள். அம்ருதமாகிய சந்திர கலைகளால் போஷிப்பாள். தேவதைகளையும் பித்ருக்களையும் போஷிப்பது போலவும் களைப்புற்ற ராமனையும் லக்ஷ்மணனையும் செழிப்பாக்கும் சந்திராம்சுவாக விளங்கினாள். சீதை லக்ஷ்மணனும் அழுவான். ராமனுடைய நிழல் அல்லவா சீதையும் லக்ஷ்மணனும். அவளும் சில சமயங்களில் அழுவாள். இவ்விதமாக பழைய சம்பவங்களால் பாதிக்கப்பட்ட சீதையும் லக்ஷ்மணனும் அழுவதைக் கண்டு, ராமன் அவர்களைத் தேற்றுவார். என் பிரபு சீதையுடன் கூட இவ்விதமாக மனுஷ்ய பாவனைகளை அடைந்து, மானுஷ்ய சேஷ்டிதங்களைச் செய்தார். (712)

அந்த துக்க சமயங்களில் என்பிரபு ஸர்வலோகபந்து, வித்வான், சுகதுக்கங்களாகிற த்வந்தங்களை ஒழித்த தீரன், மஹாகிருபாளு, (பிரஹ்லாதன் போன்ற பக்தர்களின் ஹ்ருதய தாபத்ரயங்களை அம்ருதகைகளால் தடவிக்கொடுக்கும் ஸந்தாதர்) சந்தன ரூபியாகி, அவர்களின் மனங்களை குளிரவைப்பார். ரகுநந்தனன் சீதை லக்ஷ்மணின் ப்ரியபந்து, அவர்களை சந்தோஷப்படுத்துவார். (தர்மபுத்ராதிகள் வனவாசம் செய்யும் சமயம் வேதவியாஸர் மார்க்கண்டேயர், லோமசர், தௌம்யர் போன்ற மஹாத்மாக்கள் புராண இதிஹாஸங்களைச் சொல்லி அவர்களின் துக்கங்களை நிவர்த்தி செய்ததுபோல) ஸ்ரீராமச்சந்திரன் ஞான ரூபியாகி, சீதை லக்ஷ்மணனின் தீனதசையைப் பார்த்து, பவித்திரமானதும் பாவங்களைப் போக்குவதுமான கதைகளை வஸிஷ்டர் விஸ்வாமித்திராதிகளிடமிருந்து கற்று அவைகளை சரியான சமயத்தில் விநியோகம் செய்வார். அந்த இதிஹாஸ

உண்மைகளை அறிந்து சீதையும் லக்ஷ்மணனும் மீண்டும் சுக ஆனந்தத்தைப் பெறுவார்கள். (713)

இந்த விதமாக ராம சீதா லக்ஷ்மணன் பர்ணகுடியில் மிக்க சோபிதமான வனவாச வாழ்க்கையை நடத்தினர்கள். அவர்களுடைய வாசம் அமராவதியில் வசிக்கும் சுசியான பத்னியாகிற சசியுடன் கூடி ரமிக்கும் மஹேந்திரனுடைய வாசமாகவும், அவர்களுடன் கூடி ரமிக்கும் புத்ரனை ஜயந்தனுடைய சேர்க்கை போலவும் ஆச்சர்யகரமாகவும் இன்பகரமாகவுமிருந்தது. (714)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, லக்ஷ்மணா, சீதாராமா, தித்திக்கும் ராமபீடத்தில் ஆஸனமாக ஸ்ரீவித்யை வடிவாக விளங்கும் ரக்ஷரூபிணி, என்குரு ராஜசிரோண்மணியான சீதாதேவி, காம பீடத்தில் தித்திக்கும் கரும்பு வில்லுடன் ஆதிசக்தியாக அவதரித்த என் காமாக்ஷியே, ராஜராஜேஸ்வரி மாதங்கியே, லக்ஷ்மணனை வியாஜமாகவைத்து, துளசிதாஸரையும் வால்மீகியையும் என்னையும் நிமித்த காரணமாக வைத்து, ராமனுடன் தர்ம ஸம்வாதம் செய்த தர்ம வத்ஸலையே, முன்னொரு நாள் சைல ராஜபுத்ரியாகிற உமை ரிஷிகள் தேவர்களின் ஸந்நிதானத்தில் தன் பதியான மஹேஸ்வரரை மிக்க வினயத்துடன் அடைந்து, ஈஸ்வரருடைய மகிமையையும் ஈஸ்வரருடைய கிருபையையும் புகழ்ந்து அங்கு கூடியிருந்த தேவரிஷிகளின் கூட்டத்தின் சந்தோஷத்திற்காக வர்ணாஸ்ரம தர்மங்கள், கர்மஞான பக்தி ஸ்வரூபங்கள், பரம கைங்கர்யமாகிற பாசுபதயோகம், ஸாங்கியம் முதலிய ஞானச் செல்வங்களைப்பற்றியும் ஆத்ம வித்யையும் கேட்டுவிட்டு, மோக்ஷதர்மத்தின் ரஹஸ்யங்களையும் பகவானால் சொல்லப்பட்டு, இன்னும் இதர தர்மஸம்பாஷணைகளை லோகங்களின் ஹிதத்திற்காகச் சம்புவை சொல்லச் சொன்னாள். அதுபோல, சீதை ராமன் வாயிலாகவும், தனது செயல்களாலும் தர்மங்களை அருளி, அவைகளைச் செயல் முறையிலும் நடத்திக் காட்டினாள். அப்பேற்பட்ட அமோகர் என்று சொல்லப்படும் ஸ்ரீராம சீதா தன்னை அடுத்தவர்களை வீண் போகாமல் காப்பாற்றக் கூடியவர், இந்திரனுக்கும், பலிக்கும் வித்தியாஸமின்றியும், ஜடாயுவுக்கும், விபீஷண, சுக்ரீவனுக்கும் அனுக்ரஹம் செய்தவர். எல்லாப் பொருள்களிலும் வியாபித்து உள்ளும் உறங்கும் அப்ரமேயாத்மா. தாபப்படும் தப்தமனம் சரீரம், வாக்கு முதலியவைகளால் கருடன் காலவரைக்

காப்பாற்றியது போல, ஸம்சாரிகளின் துக்கங்களை விலக்கி, அவர்களை கடலின் அக்கரையில் சேர்க்கும் ஸுபர்ணர், பக்தர்களின் வைஷ்ணவ சேர்க்கையை எக்காலமும் நீங்காமலிருக்கச் செய்யும் ஸந்திமான், விபு என்றும் சொல்லப்படுகிறார். அப்பேற்பட்ட மஹானுபாவனுகிற சீதாராமனை என் ஆசார்யரான ராமானுஜரால் தேடிவைக்கப்பட்ட மஹாநிதி, அண்டர்கோன் அணி அரங்கன், என் அமுதன் அவனைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணுவே என்று சொல்லி தென் திருவரங்கமே பதியாக வாழ்ந்து வந்த ஆளவந்தார் திருவடிகளே சரணம், அவரை முன்னிட்டு சரணமடைகிறேன். அப்பேற்பட்ட ஆளவந்தாருக்கு பாகவதஸம்பந்தம் ஏற்பட்டாற்போல் ஞான அனுஷ்டானங்களில் பரிபூர்ணராக விளங்கிய ராமானுஜனிடம் கருணைகொண்டு பெரிய பிராட்டியாரின் திருமுலை தடத்தாலே நெருங்கிய அணைப்பும் இன்சொற்களும் இருந்தும், அவளது முகமண்டலத்தைப் பாராமல் ஸர்வேஸ்வரன் ராமானுஜன் பக்கம் பார்த்து பேசினுராமே! அப்படி திருவருளைப் பெற்ற ராமனுஜனுடைய சம்பந்தத்தைப் பெற்ற எனக்கு என்றும் அதை அடையப்பெற வேண்டும்.]

பிரபு ஸ்ரீராமச்சந்திரன் சீதையையும் லக்ஷ்மணனையும் இமைகள் கண்களைக் காப்பதுபோல காப்பாற்றினுர். லக்ஷ்மணன் ராமனையும் சீதையையும் மிக்க ஜாக்ரதையாக கவனித்து, எவ்விதம் அவிவேகியான புருஷன் தன் சரீரத்தைக் கவனித்துப் போஷித்து வருவானே, அதுபோல போஷித்து வந்தான். (715)

பசு, பக்ஷி, தேவர்கள், தபஸ்விகள் ஆகிய எல்லோருக்கும் ஹிதத்தைச் செய்யும் என் பிரபு சகலருக்கும் அன்பனுகவும் தானும் சுகமடைந்து அவர்களுக்கும் சுகத்தையும் கொடுத்து வசித்து வந்தார். என் பரம குருவான துளசிதாஸர் சொல்கிறுர். "நான் ஸ்ரீராமச்சந்திரனின் வன ஆகமனத்தை அழகாகச் சொன்னேன். இப்போது நான் ராமனை விட்டுப் பிரிந்து அயோத்திக்குச் சென்று சுமந்திரரைப் பற்றிய கதையைச் சொல்கிறேன், கேளுங்கள்." (716)

பிரபு ஸ்ரீராமச்சந்திரனுக்கு அடையாளங்கள்'சொல்லிவிட்டு, நிஷாத ராஜனுன குஹன் திரும்பி வந்து மந்திரி சுமந்திரரைப் பார்த்தான். அந்த சுபுத்தியுள்ள மந்திரியின் வியாகுலத்தைக் கண்டு நிஷாத ராஜன் அடைந்த துக்கத்திற்கு அளவே இல்லை. (717)

நிஷாதராஜன் தனியாகத் திரும்பி வருவதைக் கண்ட சுமந்திரர் "ஹே ராம், ஹே ராம், சீதா, லக்ஷ்மணா" என்று கூவி அழுது கொண்டு அதிவருத்தத்தினால் மூர்ச்சை அடைந்து தரையில் விழுந்து புரண்டு கதற ஆரம்பித்தார். ரதத்தில் பூட்டப்பட்டிருந்த குதிரைகள் ராமன் சென்ற தெற்கு திக்கையே நோக்கிய வண்ணம் கனைக்க ஆரம்பித்தன. பக்ஷிகள் இறக்கைகள் ஒடிந்து போன பின்பு எவ்விதம் வியாகுலம் அடையுமோ, அதுபோல துர்கதியை அவைகள் அடைந்தன. (718)

அந்தக் குதிரைகள் புல் ஆகாரம் ஒன்றும் சாப்பிடவில்லை. தண்ணீர் ஒன்றும் சாப்பிடவில்லை. ராமனை விட்டுப் பிரிந்த துக்கத்தால் அவைகளின் கண்களினின்று துக்கக் கண்ணீர்கள் பெருகிய வண்ணம் இருந்தன. ஸ்ரீராமனுடைய குதிரைகளின் தீனதசையைப் பார்த்த பின்பு, சகல நிஷாதர்களுக்கும் வியாகுலமும் பயமும் ஏற்பட்டுவிட்டது. (719)

மிக்கத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, நிஷாதராஜன் குஹன் சொல்ல ஆரம்பித்தான், "ஹே சுமந்தரரே, துக்கத்தை விட்டு விடுங்கள். தாங்கள் ஈஸ்வர சங்கல்பத்தின் மேன்மையை அறிந்த பண்டிதன்; பகவானுடைய கட்டளையை யாரும் மீற முடியாது. பரமார்த்தமாகிற பகவானுடைய சாஸனங்களை அதிகிரமிக்க முடியாது என்று விக்ஞானம் கொண்ட மஹா விவேகி; நம்மிடம் பகவான் விமுகராக ஆகி, நம் எண்ணங்களை பிரதிகூலம் செய்கிறார் என்று அறிந்து தைரியமாக அவனுக்கு அடங்கி வாழும்." (720)

ஞான பண்டிதனாகிற குஹன் அதிகோமளமான குரலில் சமயத்திற்கு ஏற்ப பல கதைகளைச் சொல்லி, அவரை சமாதானப்படுத்தி, சுமந்திரரை ரதத்தின்மேல் ஏற்றி உட்கார வைத்தார். ஆனால் சுமந்தரரின் சோகம் எல்லை மீறியிருந்தது. அழுது அழுது அவருடைய உடம்பு குளிர்ந்து போய்விட்டது. ரதத்தை சாரத்யம் செய்ய சக்தி குன்றிப்போய், வருத்தம் மேலிட்டவராக, ரகுவீரனை இழந்துவிட்டு, வருத்தத்தினால் ஹ்ருதயத்தில் தாபப்பட்டவராகி, அதிதீவ்ரமான வேதனையை அனுபவித்துக் கொண்டிருந்தார். (721)

ரதத்தில் பூட்டிய குதிரைகள் கால்தடுமாறி பலமின்றி கீழே விழுந்தன. பின்புறம் செல்ல ஆரம்பித்தன. ராமனைவிட்டு பிரிந்த துக்கத்தால் ரஸ்தாவில் மேலே அடி எடுத்து வைக்க மறுத்தன. அவைகளின் நடத்தை முதன்முதலாக காட்டில் வாழும் பசுக்களை ரதத்தில் பூட்டினால் எவ்விதம் தகராறு

செய்யுமோ, அதுபோல அவைகள் செல்ல மறுத்தன. வழியில் கால் தவறி கீழே விழுந்தன. ராமன் போன தெற்கு திக்கையே பார்த்த வண்ணமாயிருந்தன. ராமனுடைய வியோகத்தை அவைகளால் சகிக்கமுடியவில்லை ; துக்கமயமாக விளங்கின. (722)

யாராவது ராமலக்ஷ்மணன், வைதேஹி என்ற பெயரைச் சொன்னால் அந்தக் குதிரைகள் அதி பிரியத்துடன் அவர்களை நோக்கும். அவர்களைப் பார்த்து அன்புடன் கனைக்கும். இந்த குதிரைகளுக்கு கூடவா ராமனிடம் இவ்வளவு பிரியம்? யார் அவைகளின் கதியை உண்மையாக உரைக்கக்கூடும்? ராமனை இழந்து அவைகளின் துக்கம் நாகமணியை இழந்த சர்ப்பத்தின் அவகதிபோல துக்ககரமாயிருந்தது. (723)

குஹன் சுமிந்தரரையும் குதிரைகளையும் கண்டு அதிதுக்க மடைந்தான். அவனும் அழ ஆரம்பித்துவிட்டான். பிறகு தைர்யம் கொண்டு, தன்னுடைய அந்தரங்க வேலைக்காரர்களை அனுப்பி வைத்து, அவர்களை ரதத்தின் சாரதிக்கு உதவியாக அனுப்பி வைத்தான். (724)

குஹன் அந்த சாரதிகளை அழைப்பிவைத்து, சுமிந்திரருக்கு வழியின் அடையாளங்களைச் சொல்ல அவர்களை அவருடன் அனுப்பிவித்து, அதன் பிறகு அவரிடமிருந்து விடைபெற்று திரும்பிவந்தான். அவர்களின் வியோக துக்கங்களை யாரால் வர்ணிக்க முடியும்? அந்த நான்கு நிஷாதர்களும் ரதத்தை அழைத்துக்கொண்டு அயோத்திக்குப் புறப்பட்டார்கள். அந்தக் காட்டில் வாழும் நிஷாதர்கள் சுமந்தரருடைய துக்கத்தையும் குதிரைகளின் வருத்தத்தையும் கண்டு அவர்களும் துக்க சமுத்திரத்தில் மூழ்கினார்கள். (725)

[தியானம்

ஹே ராமா நாராயணா, லக்ஷ்மிசீதா, ராமானுஜா, மஹா உரகா, புண்யமான சர்மண்வதி, புண்யமான கௌசிகி, புண்யமான யமுனைபோல இருக்கும் மஹாதீர்த்தகட்டங்களே, போகம் ஐஸ்வர்யமாகிற பிருவிருத்தி தர்மத்தையும் மோக்ஷத்தையும் அளித்து, நிவிருத்தி தர்மமாக விளங்கும் கிருதாகிருதரே, பொறுமையை கடைப்பிடிக்கும் அக்ரூரரே, ஜிதக்ரோதரே, சுமந்தரருக்கு சுபமான சீதாராமதர்சனத்தைக் கொடுத்த அத்புதரே, சுமந்தரருடைய அன்பு அளவற்ற அன்பு பகவானிடமுள்ள சேஷ சேஷிபாவத்தால் அல்லவா ஏற்பட்டது. குண

ப்ரயுக்தமாய் வந்ததல்ல. ஆத்மாவின் ஸ்வரூபத்தை ஒட்டி ஸத்தாகிற பகவானுடைய ஸம்பந்தம் உள்ளது. அந்த தர்மத்தின் பலனாக உமக்கு என் ஆசார்யன் ராமானுஜனுக்குக் கிடைத்ததுமாதிரி, பகவத் அனுபவம் க்ஷணகாலமும் நில்லாது. ஓய்வில்லாமல் கிடைக்க விரும்புகிறீர். க்ஷீராப்தி நாதனையும் பலபத்ரரையும் சங்குசக்ரகதாபாணியாகவும் பத்மஹஸ்தத்தையும், ஹரியின் வக்ஷஸ்தலத்தில் உறைந்து அகலாமல் இருக்கும் ஸ்ரீதேவியைக் கண்ட மஹானுபாவா, சீதையைப்போலும் ராமானுஜனைப்போலும் பகவத்அனுபவம் ஸ்வபிரவிருத்தியுடன் கூடிய வைஷ்ணவ சிகாமணியாகிற சுமந்திரரே, உமக்கு நமஸ்காரம். பகவத் ஸம்பந்தம் விரும்பும் முசுகுந்தனைப்போல, அப்ரமேய பரமபதமாகிற ராமசீதா சரணங்களில் அனன்ய கதியாக வந்து அடைந்த எங்களைக் காப்பாற்றவேண்டும். ஸம்சார காற்றில் சுழலும் தப்த சித்தத்தை உடைய எனக்கு உம்முடைய சம்பந்தத்தால் நிரதிசயமான தேஜோமய நிர்வாண ஸ்வரூபத்தை அடைய வேண்டும். முசுகுந்தப் பிரியா. அக்ரூரப்ரியா, சுமந்திரப் பிரியா, கிருபை செய்.]

சுமந்திரர் யோசித்தார். அதிதுக்கத்தினால் பீடிக்கப்பட்ட அவருக்கு விவேகம் கொஞ்சம் கொஞ்சமாக வர ஆரம்பித்தது. "நான் எவ்விதம் ரகுவீரனுடைய ஸம்பந்தம், ஒழிக்க ஒழியாத ப்ராவாண்யம் அளவற்ற அன்பு, அதன் காரணமாகிற சேஷ சேஷிபாவம், ஸத்வைஷ்ணவ ஸம்ப்ரதாய ஸாரமாகிற, பக்தி பெருக்காக ஊறி ஸ்வபிரவிருத்தியாகிற எம்பெருமானுடைய ஸம்பந்தம் ஆகிய எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்தார். மீன்குஞ்சு தண்ணீர் இல்லாமல் வாழாதோ, அதுபோல வல்லவா அவருடைய ஸ்வபிருவிருத்தி விளங்குகிறது. இந்த வியோக துக்கத்தைத் தாங்காமல் சரீரம் பிரிய நேரிடில் போகட்டும். நசித்துப்போக வேண்டிய சரீரம் ராமனுக்காக ஏற்படட்டுமே. ஆனால் இந்த அசுத்தமான சரீரம் ராமன் வனவாசம் புறப்படும் சமயம் பிரிந்திருந்தால், எனக்கு இனிமேல் ஏற்படக்கூடிய அபயசஸ் ஏற்பட்டிருக்காது. அந்த சமயம் சும்மா நான் இருந்துவிட்டு, லக்ஷ்மணன்போலில்லாமல், பேசாமலிருந்து விட்டேனே. லக்ஷ்மணன் அல்லவோ உத்தம ஸ்வபிருவிருத்தி, அடிக்கழஞ்சு பெறும் என்பது போல ஸத்ஸம்ப்ரதாய ஸார ஸங்கிரஹத்தைக் கடைப்பிடித்தான். ஆஹா, கஷ்டம் லக்ஷ்மணன் போலவும், சீதையைப் போலவும் நான் இல்லையே. இப்போது வருத்தப்பட்டு பயன் என்ன?" (726)

"என் பிராணன், அதைத் தாங்கும் இந்த சரீரம் பாபத்தின் சேர்க்கையைப்போல, அவைஷ்ணவ ஸம்பந்தத்தைப் பெற்றது. அதனுல் இந்த பாபத்திரள்களின் மத்தியில் வசிக்கும் என் பிராணன் கூட்டைவிட்டு பிரிய மறுக்கிறது. நான் மந்தபுத்தியுள்ளவன். அரசனின் தீர்க்க ஆலோசனை செய்வதற்கு உரிய மந்திரி என்று விருதாவாக நாமம் பெற்றேன். அக்ரமம், என் சொந்த ஆத்மாவிற்கும் சரீரத்திற்கும் ஹிதத்தைத் தேடாத முட்டாள். என் மனம், புத்தி, காரியசாமர்த்தியம் ஆகிய எல்லாம் சமயத்தில் நழுவிவிட்டது. வெள்ளம் ஓடின பின்பு அணைபோடுவதுபோல இப்போது என் இந்திரியங்களை நிக்ரஹம் செய்து என்னபயன்? எனக்கு அவமானமும் ராமசீதா லக்ஷ்மணனுக்கு இழைத்த தீங்கினுல் அவர்களின் வியோகமும் கைக்குவந்ததுபோலவிருக்கும் வில்வக்கனி கங்கையில் விழுந்தது போல, அந்த பகவத் ஸம்பந்தத்தையும் லக்ஷ்மணனுடைய பாகவத ஸம்பந்தத்தையும் கூடி நான் இழக்கப்பெற்றேன். ஐயோ, நான் என்ன செய்வேன். நான் உயிர்வாழ்வதால் எனக்கும், "ராமனையும் சீதையையும் மீட்டுக்கொண்டுவா" என்று சொன்ன தசரதருக்கும் பிரயோசனமில்லை. இந்த அவமானம் தாங்காமல் என் ஹ்ருதயம் சுக்குநூருக வெடிக்கவில்லையே. என்ன பாபம் செய்திருக்கிறேன். க்ஷீராப்தி நாதா, நாராயணு," (727)

இவ்விதம் பச்சாதாபத்தினுல் அந்தசிறந்த வைஷ்ணவ பக்தனுகிற சுமந்திரர் கையைப் பிசிந்துகொண்டு துடித்துக்கொண்டிருந்தார். தன் தலையில் அடித்துக்கொண்டார். ஒரு கிருபணன் சகல சொத்துக்களையும் இழந்து துடிப்பது போல பரமார்த்தமாகிற ராமசீதா லக்ஷ்மணனை இழந்து துடித்துக்கொண்டிருந்தார். ஒரு உத்தம வீரன் தனது விரதத்தையும் கௌரவத்தையும் காப்பதற்காக ரணகளம்சென்று, அந்த சூரன் ரணகளத்திலிருந்து புறங்காட்டி ஓடுவது போல சுமந்திரர் வெறும் கைகளுடன் திரும்பி ஓடிவந்தார். (728)

"ஒரு விவேகியான விப்ரன், வேதவேதாங்கங்களைக் கண்டு அறிந்த நிபுணன், ஸாதுக்கள் ஒப்புக்கொள்ளும்படி ஆசாரநிபுணசீலன், உத்தமகுடியில் பிறந்த அந்தவிப்ரன், எல்லாவிதங்களிலும் குலீன பிராம்மணன் ஏமாற்றத்தால் மதுவைக் குடித்துவிட்டு, பிற்பாடு பச்சாதாபப் படுவதுபோல, அந்த அபாக்யவானுகிற சுமந்திரர் அழுதார். நிலைதவறி கரைபுரண்டு வெள்ளம் ஓடுவதுபோல, பொங்கி பச்சாதாபப்பட்டு அழுதார். ஆம், பக்ஷி

களாகிற ராமசீதா லக்ஷ்மணன் அவருடைய கைகளிலிருந்து ஓடிவிட்டன. மந்தபாக்யம் அடைந்த நான் இனி வருத்தப்பட்டு பிரயோசனம் என்ன? (அச்யுதர் என்னைப் பார்த்துப் "பாபி, என்று நீக்கிச் சென்றுவிட்டார். அச்யுதர் நான் தர்மநிலையில் இல்லை; தவறுதல் செய்துவிட்டேன்" என்று ஸங்கல்பித்து என்னை நிர்தாக்ஷண்யமாக உதறி நீக்கிச் சென்றுவிட்டார்.) காரியம் கெட்டபின்பு வருத்தப்பட்டு பிரயோசனம் என்ன? இந்தவிதமாக பரமபாகவத சீலனாகிற சுமந்திரர் தாபப்பட்டு நொந்துகொண்டு அயோத்திக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தார். (729)

எவ்விதம் ஸாதுகுலத்தில் பிறந்த மஹா உத்தமபிறவியுள்ள பதிவ்ரதை தன் பதியை மனவசன கர்மாக்களில் சதா ஆராதனம் செய்யும் ஸதி, க்ரூரமான கர்மகதியின் வசம் அகப்பட்டு, (தமயந்தி சீதா நளாயினி கண்ணகி போல,) உத்தம பதியை விட்டுபிரியும் நேரம், எவ்விதம் கொதித்து எழுவாளோ புறப் பகைகளையும் அகப்பகைகளையும் ஒழிக்கும் தாருணராகிய பெருமாளின் பகவத்கிருபையை அடையாத ஸமயம் எவ்விதம் துடிப்பாளோ, அதுபோல ஆதிபௌதிக பயங்களை நிவிருத்தி செய்யும் என் பிரபு ராமச்சந்திரன், சீதாராமன், லக்ஷ்மண சீதா ராமன் வைஷ்ணவதாரணரின் ஸம்பந்தத்தை நீக்கப்பெற்ற அந்த சுமந்தர மந்திரி துடித்துக் கொண்டிருந்தார். (730)

அவருடைய பரிபூர்ண லோசனங்களில் பரபக்தியின் காரணமாகத் தோற்றுவிக்கும் அன்பு வெள்ளம் பெருகி, கண்ணீர்கள் ஆராக வழிந்துகொண்டிருந்தன. ராமதிருஷ்ணையில் மனம் வைத்த அந்த மஹா பாகவதருக்கு ஸ்தூலதிருஷ்டியும் வ்யக்த சரீரமும் வேலைசெய்ய மறுத்தன. ஸ்ரவணசக்தியும் குறைந்தது. மதி களங்கமாகி மயக்கமடைந்தது. உதடுகள் உலர்ந்துவிட்டன. நாக்கு வரட்சி அடைந்து உலர்ந்துவிட்டது. ம்ருத்யுவின் லக்ஷணங்கள் தோன்ற ஆரம்பித்தன. ஆனால் அம்ருதமயமான ராமனை நினைத்து சீதையைப் பற்றிக்கொள்ள ஆசை இருந்ததால், ஆம் பெரிய பிராட்டியை புரஸ்காரம் செய்ததால், லக்ஷ்மணனுடைய ஆசார்ய சம்பந்தம்பெற்றதால், உயிர்பிரிய மறுத்தது. (ஆம் வாயுவாஹனல்லவோ ராமன். தாழ்ந்த ஜீவர்களை கரை சேர்க்கும் பிரபு. கருடரூபி. பதினான்கு வருடங்கள் கழிந்த பின்பு நம்மை மீண்டும் சீதாராமனிடம் சேர்த்துவைக்கும் கிருபாளு. இந்த எண்ணங்கள்மேலே எழும்ப "இந்த அயோத்தி" என்னை மீண்டும் ராமனை எனக்கு அடைவிக்கும் என்கிற

நினைவுவர), அதே நினைவுடன் அயோத்தியின் வாயிற்வந்த சுமந்திரருக்கு கதவு பூட்டியிருந்து, வழிதர மறுத்தது போல, அவருடைய பிராணனும் ராமனைக் காணலாம் என்கிற ஆசையினுல் பிரியமறுத்தது. (731)

[தியானம்

ஹே ராமாசீதா, லக்ஷ்மணு, ப்ருது, ஊர்வசி புரூரவஸ் போலவிருக்கும் மும்மூர்த்திகளே, ராமா, ஸர்வவித் என்று பிரத்யும்ன வ்யூஹத்தின் ஐஸ்வர்யம் வீர்யம் கூறுகளாக உலகங்களை உண்டு பண்ணும் மன்மதனே, உம்மை ஸர்வகர் என்று எதற்காகச் சொல்கிறுர்கள் என்றுல் நீர் பீஜ அவ்யயம், அக்ஷரமான பொருள், ஸம்ஹரிக்கப்பட்ட எல்லாப் பொருள்களையும் உமது பலத்தினுல் வீர்யத்தினுல் தம்மிடம் தாங்கும் சக்தியை உடையவர். என் ஞானதிவாகரன். நீர் எல்லாவற்றையும் பிரகாசிக்கும்படி செய்து, படைத்து ஞானத்தையும் சக்தியையும் கொடுத்து, உமது சம்பந்தப்பட்டவரை ஒருவித விகாரமுமின்றி விளங்குகிறீர். உம்முடைய ஸங்கல்பவன்மையை ப்ரளய காலம்முதல் அழியும்வரை மீறமுடியாத துர்த்தரர். உம்மை யாரும் அலக்ஷியம் செய்துவிட முடியாத துரதிக்ரமர். ஐயா நான் எதற்காக உம்மை வசப்படுத்த முயற்சி செய்யவேண்டும்? என் முயற்சி சிரமங்கள் யாவும் வீண். உம்மை ஒன்றினுலும் ஜயிக்கமுடியாது. அதனுல் துர்ஜயர் என்று அழைக்கப்படுகிறீர். ஆகையால் நீரே மனம் உவந்து அளிக்காத போனுல் நான் வாழ்வது, உம்மையே நம்பிவாழ்வது எல்லாம் வீணே. சீதை தியாகராஜர் ஆஞ்சநேயர் லக்ஷ்மணன் பரதன் இவர்கள்தான் என்னைப்பற்றி உம்மிடம் சொல்லவேண்டும். நான் ஸாது ஸங்கமத்தினுல் கரையேற்றப்பட வேண்டும். நீரே என் கதி. பராசக்தி, உன்கருணை எனக்கு வேண்டும்.]

சுமந்திரரின் முகம் மாறி நிறம் வெளுத்திருந்தது. அதிகதாப வேகத்தினுல் முகம் பயம் இருள்சூழ்ந்து வெளிறியது, பார்க்க சகிக்கவில்லை. மாத்ருஹத்தி பித்ருஹத்தி செய்தவன் பிரும்மஹத்தி தோஷத்தை அடைந்ததுபோல பாபம் சூழ்ந்தவன் மாதிரி சுமந்திரர் தோன்றினுர். ராமன் சாதாரணமாகக் கிடைக்கக் கூடிய பொருளா? கோடிகோடி கணக்கான சுசிவாழ்வுகள் எடுத்தும், வசித்தும், ஜபதபாதி யாகங்கள் செய்தும் அந்த சீதா ராமனுடைய சேர்க்கையை, அவர்களின் கிருபையால் அளிக்கப்பட்ட மஹா உன்னதமான சேர்க்கையை தன் பாபங்களினுல் மீண்டும் இழக்கநேரிட்டதே! இது என்ன கொடூரமான கர்மகதி,

இந்த சீதாராம லக்ஷ்மண வியோகத்தால் ஏற்படும் தீங்குகள் ஜன்ம ஜன்மமாகத் தொடர்ந்துவருமே. அவைகளைச் சரியாக புரிந்துகொள்ளாமல் நம்மன இருளினுல் அவருடைய சங்கமத்தை யிழந்துவிட்டேனே. விபுலமான என்மனம் பாபசுமையினுல் களங்கப்பட்டுவிட்டது. நான்படும் அவஸ்தை நரகபாதையில் செல்லும் ஜீவன் யமயாதனைகளைப் பார்த்து, அனுபவித்து உஜ் ஜீவிப்பதற்கு இடம் இல்லாமல், இருள்சூழ்ந்த அசிபத்ர காட்டில் சஞ்சரிப்பதுபோல அல்லவா நான் நடமாடுகிறேன். ஸ்வயார்த்தி யாகவில்லாமல், பரசேவையாகிறதும் பராதீனமாகவிருந்தும் லக்ஷ்மணனைப் போல ராமகைங்கர்யம் செய்ய, மந்திரி பதவிகள் போகங்கள் யாவையும் தியாகம் செய்யாமல் அரசபோக வாழ்க்கை களில் மோஹம் கண்டு வாழ்ந்துவிட்டேனே, அந்தோ பரிதாபம்! என் ஆத்மா என்னைவிட்டு பிரிந்து அல்லவா வாழ்ந்துவிட்டது. (732)

அவருடைய முகத்திலிருந்து வார்த்தைகள் தடைப்பட்டு நின்றன. நான் மீண்டும் அயோத்திக்கு திரும்பி வந்து ராமசூன்யத்தை சீதாராமா சூன்யத்தை அல்லவோ பார்க்கப் போகிறேன். அயோத்தி எனக்கு கசந்துவிட்டது. ஸ்ரீராமனும் சீதையும் என்னிடம் ரதத்தில் இல்லாமல் என்னை ரத சூன்ய மாக நினைத்து, அயோத்தி மாஜனங்கள் என்னை நிச்சயமாக வெறுப்பார்கள். என் கார்ய சாமர்த்தியத்தை இகழ்வார்கள். எனக்கும் அவர்களைப் பார்க்க சங்கோசமாகவிருக்கிறது. (733)

என்னை அவர்கள் நெருங்கி கேட்டால், நான் என்ன பதில் சொல்வேன்? என்னைப் போல அயோத்தியில் வாழும் ஸகல ஸ்திரி புருஷர்களும் அத்யந்த ராம சீதா பக்தர்கள். அவர் களுக்கும் இதே கதி. ஆதி தர்ம க்ஷேத்ரம் என்று நம்பி பகவானே சாக்ஷாத்தாக ஜனனம் எடுத்த புண்ணிய க்ஷேத்ரம். இக்ஷ்வாகு முதலிய தர்மசீலர்கள் சூரிய குலத்தின் தேஜோமயமான ராசிக் குவியல்கள் வாழ்ந்த இடம். அவர்கள் என்னைப் பார்த்து முதலில் "ராம சீதா எங்கே?" என்று தான் கேட்பார்கள். இந்திரனின் வஜ்ரம் போல என் மனத்தை அவர்களின் வசனங்கள் நிச்சயமாக பிளக்கும். நான் பதில் கடினமாகத்தான் சொல்லி ஆகவேண்டும். (அவர்களும் சூடு பெற்று விருஷபம், பூனையைப் போல தவிக்க வேண்டும். தப்த ஆத்மாவாக தவம் செய்யவேண்டும். நஹுஷன், யயாதி, ந்ருகன்போல அத்யந்த முயற்சிகளைச் செய்து, தங்கள் கர்மங்களாலும், பகவத் க்ருபாகடாக்ஷத்தினு லும், தர்ம ஆசரணைகளாலும், பந்துக்கள் உறவினர்களின்சுக்ருத

செய்கைகளின் தியாகச் செயல்களாலும், மன அடக்கத்தாலும், ஈஸ்வரார்ப்பணம் என்கிற கர்மபக்தி ஞானபிரபத்தி ஆகிற வழி களின் ஆராதனைகளாலும் நானும், அயோத்திமாநகர் ஜனங் களை தர்மபதத்தில் நிலைநிறுத்தி, அத்யந்த கடூரமான தபஸ்ஸி னுலும் இந்திரிய நிக்ரஹங்களாலும், மனோவாக்கு காயம் முதலிய வைகளின் அடக்குதலாலும், ஈஸ்வரனை அந்த துரதிக்ரமனை, துர்ஜயரை, ஆராதித்து கிருபையை மீண்டும் அடைவேன். அடையச் செய்வேன். என் ராமன் ஞானதிவாகரனுகிய பானு, விதைநடாமல் செடிமுளைப்பதில்லை. பகிரதன் அத்யந்த முயற்சி களினுல் கங்கையை வரவழைத்தான். கர்மங்கள் நசிக்கிறதில்லை. பகவானுடைய கிருபையும் வீணுகிறதில்லை.) (734)

(ஐயோ, எவ்விதம் என் மனோரதங்களை அவர்களிடம் நான் சொல்வேன்? வயது முதிர்ந்தவர்கள், தீன தசையில் இருப்பவர் கள், ஜபம் தபம் செய்யமுடியாத பலஹீனமுள்ளவர்கள், தேகங் களில் பற்றுதல் உள்ளவர்கள், பகவானை அடைவதில் சிரமங் களைக் கண்டு அனுபவித்த யோகஸ்ரேஷ்டர்கள், தங்கள் முதிய காலத்தில் ராம சீதை அனுக்ரஹம் நாம் பெறவில்லையே, மோசம் போய்விட்டோமே என்று ஏங்கும் மஹாத்மாக்கள் ஆகிய இவர் கள் "எங்கே ராம சீதா?" என்று கேட்டால் நான் என்ன பதில் சொல்வேன்? ஹே பிரும்மாவே, என்னை ஏன் இந்த அவகதிக்கு உட்படுத்தினுய்? ராம சீதையின்றி நான் அவர்களை திருப்தி செய்யமுடியுமா?) அந்த மஹாபாக்யவதி சுமித்திரை, கௌஸல்யை "எங்கே அவர்கள்?" என்று கேட்டால் நான் என்ன பதில் கூறுவேன்? அவர்களின் பிள்ளைகளின் சுக ஸந்தேசங்கள், சுகத்தைத்தரும் செய்திகள் என்னவென்று நான் சொல்வேன்? நிச்சயமாக சுமித்திரை நன்ருக லக்ஷ்மணனை அறிந்துகொள்ளாத படியால் அந்த மஹாபாக்யவானுடைய மன அடக்கத்தையும், ராம கைங்கர்ய விபவங்களையும் பற்றி நிச்சயமாக என்னிடம் அவள் கேட்டாள். அவளுக்கு சுகத்தைத் தரும் செய்திகள் நான் என்ன கூறலாம்? லோகாபிராமனுக்கு, என் பிரபு சீதா ரமண னுக்கு பகவத் கைங்கர்யம் செய்யக் கொடுத்தவனின் மஹா பாக்யவதியான தாயார் அல்லவோ அவள். (735)

[தியானம்

ஹே ராமா, நாராயணு, சீதாலக்ஷ்மி, லக்ஷ்மணு, அஜராகிய நாராயணு, பிரணவம் அஷ்டாக்ஷரம், ஷஷ்டாக்ஷரம், த்வாதசா க்ஷரம், பஞ்சதசாக்ஷரம், ஷோடசாக்ஷரங்களால் ஆராதனை

செய்யப்படும் நாராயணு, மஹார்ஹரே, ஆத்மாக்களினுல் ஸ்வபிரு விருத்தியாகவும் இயற்கையாகவும் ஸ்வபாவமாகவும் அடையக் கூடிய ஸ்வாபாவ்யர், ஜிதாமித்ரர் என்கிற பெயருக்கு ஏற்ப காம க்ரோதங்கள் மமகாரங்கள் அஹங்காரங்களை ஜயித்த ஜிதா மித்ரரே, எல்லோரையும் பிரமிக்கும்படி செய்விக்கும் பிரதாபனரே, நீர் கருணையுடன் இரும்.]

ஸ்ரீராமனை ஜனனம் செய்த கௌஸல்யா தேவியை நான் எவ்விதம் பார்ப்பேன்? புதிதாக ஈன்ற கன்றை நக்கிக்கொடுப்ப தற்கு ஓடிவரும் தாய்ப்பசுபோல என்னிடம் ஓடிவருவாளே. நான் ராம சூன்யமாக ரதத்தை கொண்டுவந்திருப்பதைப் பார்த்து, அவளுடைய மனம் என்னமாதிரி துடிக்கும்? அவள் கேள்விகள்மேல் கேள்விகள் கேட்டால் என்ன பதில் சொல்வேன்? சரி, என் மனதை திடப்படுத்திக்கொண்டு, "ஆம் ஸ்ரீராம், லக்ஷ்மண சீதாதேவி ஆகியவர்கள் வனத்திற்குப் போய்விட்டார் கள்" என்று பதில் சொல்வேன். (736)

இந்த பதிலை கௌஸல்யாதேவிக்கே நான் சொல்வேன். யார் வந்து கேட்டாலும் இதே பதிலைத்தான் சொல்வேன். என்ன துர்பாக்கியம் எனக்கு சம்பவித்திருக்கிறது? அயோத்தி சென்று எவர் கேட்டாதும் இந்த பதிலைச்சொல்லி நான் சுகமடையவேண்டும் என்று பகவத் ஸங்கல்பம்போலிருக்கிறது. (ராமர் துராதர்ஷர், துர்கர். கடல்போலவும் மலையின் மறைவான கோட்டை போலல்லவா அவருடைய சங்கற்பங்களும், செய்கை களும் இருக்கின்றன.) என் நாயகர் தசரத மஹாராஜர் ஸ்ரீராமன் பிரிவினுல் பரமதுக்கம் ஏற்பட்டு என் கருணைக்குப் பாத்திரமாக விருக்கிருர், அளவற்ற அன்புகொண்ட ராமனின் பிதா. ஹும். ராமனே தன் பிதாவை உதறி தள்ளிவிட்டு ஸத்ய காமனுக வனம் சென்றுவிட்டார். என்ன விநோதமாக விருக்கிறது. ஜனனம் கொடுத்த பிதா, ராமதர்சனமே மூச்சாக உள்ள பிதா, ராமனுக்கே தன் ஜீவனத்தைப் பராதீனமாக நடத்திய பரம வைஷ்ணவர், அந்த ராமனைப்பற்றி அவர் என்னை கேட்கவேண்டியதாயிருக் கிறது. மத்யான்ன சூரியன் போல ஜ்வலிக்கும் பிரபு, சொந்த பிதாவுக்குக்கூட அரியவராகப் போய்விட்டார். (துர்க்கமர் தானே அந்த சீதாராமன்.) (737)

அப்பேற்பட்ட ஸ்வபிருவிருத்தியுள்ள தகப்பன் என்னிடம் ஸ்ரீராமனைக் கேட்கும்போது நான், "ஐயா, உமது புத்திரர்களை யும் வைதேஹியையும் உமது ஆணையினுல் காட்டிற்கு அழைத்துச் சென்று கொண்டுபோய் விட்டுவிட்டு, நான் சுகமாக

ஒருவித அபாயமுமின்றி அயோத்திக்கு திரும்பிவிட்டேன்'' என்று சொல்வேன். என் வார்த்தைகளைக் கேட்ட பின்பு அந்த அரசர் புல்லைப்போல தன் சரீரத்தைத் தியாகம் செய்துவிடுவார். (738)

"பிரியதமனுன ஸ்ரீரகுநாதன் பிரிந்துவிட்டான்'' என்று கேட்ட பின்பும், பார்த்த பின்பும் என் ஹ்ருதயம் சுக்குநூராக ஒடிந்துபோகவில்லை. அந்த அம்ருதவர்ஷம் இல்லாதபோது, பூமி வெடித்து தண்ணீருக்காக தன் ஹ்ருதயத்தை பிளந்து கொள்வதுபோல, என் மனம் ஹ்ருதயம் ஆகிய இரண்டும் வெடிக்காமல் உயிர் வாழ்ந்துகொண்டு இருக்கின்றன. ஐயோ, களிமண் கூட என் சரீரத்தைவிட மிக்க மேலானது. என் உடம்பு இரும்பு மயமாகவும் சகல பாபங்களை அனுபவிக்க யோக்யமுள்ளதாகவும், நரகவேதனைகளுக்காகவே பிரும்மாவினுல் படைக்கப்பட்டிருக்கிறது போலவும்விருக்கிறது. இந்த சரீரம் எனக்கு பிரும்மாவினுல் கொடுக்கப்பட்ட யாதனு சரீரம்தான், சந்தேகமில்லை. நான் படும் தொல்லை அவதி உக்ரமான தாபங்கள், பச்சாதாபங்கள் இப்போது இருந்து என்ன பயன்? அதி முட்டாளாகிவிட்டேன்.'' (739)

இந்தவிதமாக வழிமுழுவதிலும் புலம்பிக்கொண்டு வந்தார் பரம பாகவத சிரோண்மணியான சுமந்திரர். அவ்விதமான எண்ணங்கள் ஓய்ந்த பின்பு தமஸாநதி தீரத்தின் கரையில் தேர் வந்து நின்றது. மந்திரியிடமிருந்து குஹனுடைய நான்கு ஆட்களும் விடைபெற்றுக்கொண்டு சென்றூர்கள். சுமந்திரர் அழுவதைக்கண்ட அந்த பாகவத சிரோண்மணிகள் நிஷாத வேஷம் தரித்த வேலைக்காரர்கள் அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து அவருடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுச் சென்றூர்கள். (740)

மந்திரி நகரத்தில் பிரவேசம் செய்தார். அவருடைய மனம் அயோத்திக்குச் செல்ல மறுத்தது. குருத்ரோஹி, குருஹத்தி செய்தால் என்ன பாபம் நேரிடும், பிராம்மணஹத்தி பசுஹத்தி செய்வதால் எவ்விதம் பிரும்மஹத்தி நேரிடும், அதுபோல மஹாபாதகம் செய்த பாபியைப்போல அவர் துடித்துக்கொண்டு, பயந்துகொண்டு, ராஜகளை தவறி, அரசசின்னங்கள் யாவையும் துறந்து, விவரிக்கமுடியாதபடி விளங்கினுர். கிருச்ரம், சாந்திராயணம் முதலிய பிராயசித்தங்களைச் செய்யும் பாப ஆத்மாபோல ஒருவடவிருக்ஷத்தின் கீழே உட்கார்ந்து ஒரு தினம் பூராவும் பச்சாதாபத்தினுல் துடித்துக்கொண்டிருந்தார். இந்த

வித சிந்தனையில் பகலும் கழிந்து, பாபியை மறைக்கும் ஸந்தியா இருட்டும் எங்கும் சூழ்ந்துகொண்டது. (741)

[தியானம்

ஹே ராமா நாராயணா, சீதா சகித ராமா, என் ஆபத்பாந்தவா, பயப்பட்டவனும் மிக்க அவமானத்தை அடைந்தவனும் துக்க சாகரத்தில் மூழ்கினவனுமாக விருந்த வாலிக்கு நீ என்ன வார்த்தைகளைச் சொன்னாய்? புஷ்கலாவர்த்தம் என்கிற மேகம் போலவும் அம்ருத வசனங்களைப் பொழிந்து அவனையும் பரமப்ரீதனாகவும் சந்தோஷப்படும்படியாகவும் அவனுக்கு நஷ்டமாயிருந்த பௌருஷத்தை வர்த்தனம் செய்தாயே. எனக்கு, என் போன்ற கதியற்றவர்களுக்கு, உன்னையே பரதத்வமாக பாராட்டி அனுகூலர் என்கிற சப்தத்திற்கு பலம் கொடுக்கும் அர்த்தம் போல விளங்கும் சீதாபதி, நீ என்ன தீர்மானம் செய்திருக்கிறாய்? எல்லோருக்கும் ஆத்மாவாக விளங்கும் ராம நாராயணா, சண்டிகாதேவி பிரளயத்தில்கூட காப்பாற்றும் தாயே, வைஷ்ணவி, பிரும்மாணி, மோக்ஷகாரிணி, லக்ஷ்மிதேவியே, வில்வநிலையே, உங்கள் இருவர்களையும் நாஸத்யன் தஸ்ரன் என்கிற இரு அஸ்வினி தேவதைகளாகவே நான் பார்க்கிறேன். பல சூழல்கள் உள்ளதும், என்றும் குறைவுபடாததுமான ஐஸ்வர்யங்களும் விளங்கும் ஸ்ரீமானே, உமது சௌலப்யத்தினால் என்னிடம் வாரும். எனது நூறு நாடிகளிலும் பிராண ரூபியாக வசியும். ஹே ராமா, பல அவதாரங்களிலும் லீலா பத்மத்தை தரித்துக் கொண்டிருக்கும் நாராயணா, அனன்யார்ஹ சேஷத்வம் அனன்ய சரணத்வம் அனன்ய போக்யத்வம், சேர்க்கையில் சந்தோஷமும், உமது பிரிவில் மஹா துக்கமும், ததேகநிர்வாஹ்யத்வம் என்கிற ஆறு மஹத்தான இயற்கை ஸ்வரூப குணங்களை சீதை எனக்குக் காட்டினாள். கைங்கர்ய ஸம்பத்தாகிற அதிருஷ்ட புருஷார்த்தத்தின் உயர்வை விஸ்வாமித்திரர், வஸிஷ்டர், அகஸ்தியர், சுக்ரீவன், ஆஞ்சநேயர், பரதனைப்போல எனக்கு லக்ஷ்மணன் வழிகாட்டினார். பிரும்மாவையும் கோபிகளையும் சமமாக நடத்தின பத்மநிபேஷணமாகிற உமது புஷ்கலா கடாக்ஷ வீக்ஷணங்களைச் செலுத்தின மஹா நாராயணா, துருவ நாராயணா, உன்னை அடைவதும் இழப்பதும் மீண்டும் அடைவதற்கு நீயே ஹேதுவானபடியால் ஸ்ரீகுலசேகராழ்வார், பெரியாழ்வார் அவரது திருமகள் ஆண்டாள் உன் ஸம்பந்தத்திற்கு அனுகூலமாக திரியக் ஜன்மத்தையோ, இடைச்சிகள் போன்ற ஆய்குலத்தையோ, ஸ்தாவர ஜன்மத்

தையோ விரும்பினர்கள். உமா மஹாதேவரால் பூஜிக்கப்படும் ராமநாதா, உன்னல் ஆதரிக்கப்படும் அனுகூலமான ஜன்மத்தை எப்போது கொடுப்பாய்? பன்னகாபரண பூஷிதே, பாயாஸான் னப் பிரியே, பரமாம்ருதம் என்று சரணம் அடைந்த என்னைக் காப்பாற்று. விசாலாக்ஷி, அகில புவன சாக்ஷியே, கடாக்ஷியே.]

இருள் சூழ்ந்த அயோத்தியில் பிரவேசம் செய்தார் மந்திரி சுமந்திரர். ரதத்தை அவிழ்த்துவிட்டு, சத்தம் செய்யாமல் ராஜ அரண்மனையில் நுழைந்தார். ஆவலோடு சுமந்திரர் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சில பேர்களுக்கு அவர் வந்திருப்பதை அறிந்து, ரதத்தினடிக்கு ஓடிவந்தார்கள். (742)

ரதத்தை அடையாளம் தெரிந்துகொண்டு அந்த ரதத்தில் பூட்டியிருக்கும் குதிரைகளை அதிவியாகுல மடைந்திருப்பதாக அறிந்து, அவைகளின் சரீர புஷ்டிகள் இளைத்திருந்து, கடும் வெயிலில் ஆலங்கட்டிகள் வீணுகுவதுபோல ராம சீதா லக்ஷ்மண தபஸ்ஸால் அந்த குதிரைகள் க்ஷீணமாயிருப்பதைக் கண்டு, அந்த மாஜனங்கள் வியாகுலமடைந்தார்கள். அவர்களுடைய துக்கம் அச்னி நக்ஷத்திரத்தில் தண்ணீர் வரண்டுபோவதைக் கண்டு சகியாத மீன் குஞ்சுகளின் துக்கத்தைப் போலிருந்தது. (743)

தனியாகத்தான் வந்திருக்கிருர் என்று ஸகல ஜனங்களும் மஹாபயத்தையும் வியாகுலத்தையும் அடைந்தார்கள். ராணிகள் வசிக்கும் அரண்மணையிலிருக்கும் யாவரும் அதிகோரமான வியாகுலமடைந்தார்கள். அந்த ராஜ மஹாலின் தோற்றம் பிரேதங்கள் வசிக்கும் ஸ்மசான பூமியாக விளங்கியது. (744)

தாபத்தினல் தகிக்கப்படும் விஷய ஆர்த்திகளைப்போல, ராம சீதார்த்திகளாகிற அந்த உத்தம ஜனங்கள் சுமந்தரரை அடிக்கடி கேள்விமேல் கேள்விகளாகக் கேட்டார்கள். என் பிரபு, பரம பாகவத ஸ்ரேஷ்டர், அடியார்களுக்கு முகுடா மணிபோல விளங்கும் சுமந்திரர் என்ன பதில் சொல்வார்? வார்த்தைகள் வெளிவர மறுத்தன. இந்திரியங்கள் வேலை செய்ய மறுத்தன. காதுகள் கேட்கவில்லை. நயனங்கள் பார்க்கவில்லை. (ஸதாவர்த்தரான ரங்க நாராயணனிடம் மனத்தையும் புத்தியையும் பிராணனையும் அர்ப்பித்துக்கொண்ட மஹானுபாவன், ஸ்ரீகுலசேகராழ்வார் பிரார்த்தித்ததுபோல வேங்கடத்து கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே, என்று பகவத் ஸம்பந்தத்திற்கு அனுகூலமாக ஜன்மம் எடுக்க விரும்பும் என் ஆசார்ய ஸ்ரேஷ்டன்,) அவர் என்ன பதில் சொல்வார்? அவர் திரும்பக் கேட்ட கேள்வி,

"ந்ருபரான தசரதர் எங்கே?" என்று யாவரையும் கேட்ட வண்ணமாயிருந்தார். ("ஹே பவானி, கஞ்சலோசனி, பக்தர்களின் கூட்டமாகிற கதம்பவனத்தில் வசிக்கும் அம்பா, என்னை அந்த ஸங்கமத்தில் சேர் அம்மா.") (745)

("வைஷ்ணவ தாஸர்கள் பரதுக்கங்களை ஒருக்காலும் சகியார்.") அதுபோல தாஸ தாஸிமார்கள் சுமந்திரரை மீளாத் துக்கநிலையில் அவதிப்படுவதைக் கண்டு, அவரை கௌஸல்யையின் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள். சுமந்திரர் அவர்களுடன் சென்றார். அங்கே ராஜா தசரதரை பார்த்தார். ஆம் அரசரைப் பார்த்தார். ஜீவநாடியாகிற பிராணன் பிரிந்து போகும் சமயம் அதனால் கிட்டத்தட்ட மரித்துப்போன அரசர் (தக்ஷசாபத்தால் பிரும்மஹத்தி தோஷத்தை அடைந்த சந்திரன் அம்ருத கலைகளையிழந்து பித்ருக்களையும் தேவர்களையும் போஷிக்கும் சக்தியற்று பலஹீனமாகவும், பயத்தினாலும் அத்யந்த பச்சாதாபத்தாலும் முகம் வெளிறிப்போன க்ஷீண சந்திரனாக ஆனானே அதுப்போல) அவர் துடிப்பதைப் பார்த்தார்.

(746)

[தியானம்

ஹே பரதனுடைய சகோதரனை ராமா, பரதனுக்கு ஹிதத்தைத் தேடி ராஜ்யத்தைத் துறந்து தாயையும் தகப்பனையும் துறந்து பக்தர்களாகிற ஆழ்வாராதிகளுக்கு தம்மைத் தாமே காட்டிக் கொடுக்கச் சென்ற மஹாத்மாவாகிய ஸ்ரீராமா, மைதிலி ஆத்மஜா, அதீனமான வாக்குக்களால் உமக்கு மேற்பட்ட யாருமில்லாத அனுத்தமா, கடல் போல ஆழமாயுள்ள கலக்க முடியாத துராதர்ஷரே, உம்மை அறிவது, வெல்வது சொல்வது ஒன்றும் செய்ய முடியாத காரியம். குலசேகராழ்வார் சீறினாலும் காலைக் கட்டிக்கொள்ளலாம், பிடி என இருப்பவன் எம்பெருமான்; ஸதம் நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம், வதார்ஹமபி காகுத்ஸః க்ருபயா பர்ய பாலயத், என்று காகா சூரனையும், அம்பரீஷ துர்வாஸ உபாக்யானத்தையும் கைகேயினுடைய சூழ்ச்சிகளையும் அறிந்து, கிருத்க்ஞர் என்கிற பெயரை அடைந்தாயே. ஸத்கீர்த்தி என்கிற பெருமையை அபராதங்கள் செய்தவரிடமும் காட்டிய கிருபாளு, புண்ணிய வசத்தினால் சிறிதளவு செய்த உபகாரத்தை பேருபகாரம் என்று கருதி என்றும் மறவாமல் காத்து ரக்ஷணம் செய்ய விரும்பும் அனுராகம் கொண்ட க்ருதராத்மவானே, சோக பாபங்களால் பீடிக்கப்பட்ட எனக்கு சாந்தியையும்

மங்களத்தையும் உன் இஷ்ட பிரஸாதங்களாகக் கொடு. ராகவனுடைய பார்யையான மைதிலி, பரதனுடைய பிராதாவான லக்ஷ்மணு, சங்கரருடைய அம்சமான ஆஞ்சநேயரை முன்னிட்டு நான் சரணம் அடைகிறேன்.]

ராஜா தசரதர் ஆஸன மில்லாமலும், படுக்கை யில்லாமலும் அலங்காராதிகள் இல்லாமையாலும், (சீதை அசோக வனத்தில் எவ்விதம் ஆஞ்சநேயரால் கண்டபடி ராம தியானத்தால் மனத்தை இழந்து, பிராணனை தரித்துக் கொண்டிருந்தாளோ, அதுபோல்) ராம வியோகத்தால் மலின கதியை அடைந்த அரசர் தசரதர் பூமியில் அழுக்குள்ள பிரதேசத்தில் தீனஸ்தியை அடைந்து விளங்கினர். தீர்க்க உஷ்ணமான மூச்சுக்களை விட்டுக் கொண்டு, ஸ்வர்க்கத்திலிருந்து விழுந்த யயாதி மஹாராஜனைப்போல் துர்பாக்கியவனுகிற, அரசர் கீழே விழுந்து, தன் பாப கர்மங்களைச் சிந்தித்துப் பார்த்தார். (பரதன் எவ்விதம் ராமனின் வன ஆகமனத்தைக் கேட்டு, கைகேயியையும், தான் ஒன்றும் சொல்ல முடியாமல் திகைத்துப்போய், தன் பாப கதியையும் நினைத்துப் புலம்பினனே.) அதே க்ருதிராத்மவானுகிற தசரதர் தன் பாபச் செயல்களையும் ராம சீதா இவர்களின் க்ரூரமான சத்திய ஸங்கல்பத்தையும் நினைத்துப் பார்த்தார். (747)

ராஜா க்ஷணத்திற்கு க்ஷணம் நினைத்து பச்சாதாபப்பட்டுக் கொண்டு இருக்க அதிதீவ்ரமான ராமதாபம் அவர் மனத்தை வெந்து போகும்படி எரித்துக் கொண்டிருந்தது. அவருடைய உடம்பு கீழே விழுந்து புரளும் காக்ஷி (ஜடாயுவின் பிராதாவான சம்பாதி ஜடாயுவைக் காப்பாற்ற எண்ணம் கொண்டு சூரிய வெப்பத்தின் கடூரத்திலிருந்து தன் இறக்கைகளால் காப்பாற்ற, சம்பாதியினுடைய இறக்கைகள் ஆதித்ய வெப்பத்தால் எரிந்து போன சமயம் சம்பாதி கீழே விழுந்து விட்டபோது எவ்விதம் அலறிக் கொண்டு விழுந்தானே, அதுபோல) சக்ரவர்த்தி தரையில் "ஹா ராமா, ஹா வைதேஹி, ஹாராம் ராம், ஹா லக்ஷ்மணு, என் ஸ்நேக பந்து, சுக்ருத், ஹே ராம்," என்று சொல்லிக் கதறிக் கொண்டு அழுது கொண்டிருந்தார். (748)

[தியானம்

ஹே ராம, சீதா, நாராயணு, மஹாலக்ஷ்மி, லக்ஷ்மணு, மதுசூதனு, ஜனர்த்தனு, கோவிந்தா, அகிலகுரோ, உம்மை ஸத்ய பராக்ரமர் என்று சொல்லுகிறுர்கள். "மனு" என்கிற பெயர், பிதா, அன்புள்ள தசரதர் என்றும் பாராமல், பக்ஷபாத

மின்றி, தம்முடைய ஸத்ய வ்ரதத்தை வஞ்சனையின்றி உபயோகித்தவர் என்கிறதால் அல்லவா நீர் மனு என்கிற பெயரை அடைந்தீர். பிரும்மா முதலானவர்களுக்கும் எல்லா வித்யைகளையும் உபதேசித்து அவர்களுக்கும் பரமாசாரியார் என்கிறபடியால் பிரும்ம ஞானத்தை அளித்தீர். சீதை லக்ஷ்மணன் போல ஸ்வரூபபிருவ்ருத்தி இருந்த போதிலும், ஸ்வரூப விரோதியான உபாயாந்திரங்கள் எனப்படும் கர்ம ஞான பக்திகளுக்கு எப்போதும் காலம் தேசம் தேஹம் என்கிற காரணங்களால் அச்சம் அதிகமாக ஞானிகளுக்கு ஏற்பட்டு, கடைசியில் நீர் அர்ஜுனனுக்கு மாசுசஃ என்று வாக்களித்தபடி, தரித்திர நாராயணனுகிற எனக்கும் கூட, பிரபோ ஹே தாமோதரா, "நானே நீ என்னுடைமையும் நீயே" என்கிற திருவாய் மொழிப்படி நானும் என்னுடைமையும் ஆகிய இரண்டிற்கும், மதுசூதனு, ஜனுர்த்தனு, கோவிந்தா, ஈஸ்வரரும் ஸத்திய பராக்ரமராகிய உம்முடைய ஆதீனத்தில் இருக்கிறபடியால், "என் விஷயத்தில் எனக்கு ஸமர்ப்பிக்க வேண்டியது ஒன்றுமில்லை" என்று நீ நினைத்து கருணை காட்டு. மாசுசஃ என்கிற சொல்லின்படி உன் அருளை எங்களுக்குக் கொடு. ஐயா, எங்கேயாவது பதிபக்தி செய்யும் ஸதி பர்த்ரு போகத்தை வயிறு வளர்க்கைக்கோ அல்லது ராத்ரி கலவினதற்கு கைக்கூலி தரவேண்டும் என்று கேட்பாளா? நீர் எனக்கு மனமுவந்து போக ரூபமான பக்தியைக் கொடுத்து, நான் உனக்கு சேஷ பூதனுக இருக்கும் சமயம், "மோக்ஷத்தைக் கொடு," என்று கேட்டா, உன் கிருபையை பெறவேண்டும்? எப்போது என் அஹங்காரம் ஒழிந்து, ப்ரபன்னனுக வந்து, "ப்ரணதார்த்தி ,ஹரனே என்னைக் காப்பாற்று" என்று அழைக்கும்போது ஐயா, என் முயற்சியை உபாயந்திரமாகவும் அதன் தோஷமாகவும் நீ கருதலாமா ?]

மந்திரி பெருமான் "ஜயவிஜயீபவ" என்று அரசரை வாழ்த்தி, தண்ட பிரணுமம் செய்தார். அவ்விதம் கேட்டுக் கொண்டிருக்கும்போது தசரதர் "மந்திரி, சீக்கிரம் சொல். என் பிரியமுள்ள ராமன் எங்கிருக்கிருன் ?" அதி வியாகுலமடைந்து அவர் கதறிக்கொண்டு அழுதார். (749)

சுமந்திரரை தன் மித்ரன்போல இறுக அணைத்துக் கொண்டார் அரசர் தசரதர். ஆம். மூழ்கிக்கொண்டிருக்கும் ஒரு மனிதன் தன் கைக்கு எது கிட்டினுலும் தன்னை விடுவித்துக் கொள்ள கைப்பற்றும் ஸாதனம் என்று கருதுவானே, அதுபோல சுமந்திரரை இறுக அணைத்துக்கொண்டார். மந்திரி ஸ்நேக

பாவத்துடன் அரசரை தடவிக்கொடுத்து, ஆறுதல் கூறுவது போல பக்கத்தில் உட்கார்ந்து, சம்பாஷித்துக்கொண்டிருக்கும் போது, அரசர் தன் நயனங்களில் பெரும் கண்ணீர்களை வழிய விட்டுக்கொண்டு, (அர்ஜுனன் விஸ்வரூப தர்சனத்திற்குப்பின் மனம் கலங்கி, உபாயந்திரங்கள் விஷயமாக அச்சம் உண்டாகும் போது, கண்ணன் சர்மஸ்லோகத்தை மலர்ந்து அருள, ஸ்வரூபத்திற்கு அனுரூபமான பிரபத்தியை உபதேசித்து, "மீண்டும் வருத்தப்படாதே" என்று திருவாய் மலர்ந்து அருளினனே, அதுபோல) தசரதர் பகவானுடைய, ஸத்ய பராக்ரமனுடைய அபார கிருபையை வேண்டியதுபோல, சொல்ல ஆரம்பித்தார். (750)

"என் பிராணஸகா, சிநேகிதா, ராமசீதா லக்ஷ்மணனுடைய குசலத்தை சீக்கிரம் சொல். அவர்கள் எங்கு இருக்கிறர்கள் ? அவர்களை நீ திரும்ப அழைத்துக்கொண்டு வந்தாயா ? அல்லது அவர்கள் வனம் சென்றுவிட்டார்களா ?" இந்த வார்த்தைகளைக் கேட்டதும் மந்திரியின் கண்களில் தாரை தாரையாக வழிந்துகொண்டிருந்தது. அவர் சொல்ல ஆரம்பித்தார். (751)

சோகம் அரசருக்கு அதிகரிக்க, அதிகரிக்க, மீண்டும் வினவுகிறவராக, அரசர் "சீதை, ராமன், லக்ஷ்மணன் ஆகியவர்களின் ஸந்தேசத்தை விஷய சமாசாரங்களைச் சொல். என் ராமன் பிரணதார்த்திஹரன். அவன் இயற்கையாகவே கிருபையுள்ளவன். அவனுடைய ரூபகுணசீல நடத்தைகளை மேன் மேலும் ஞாபகப்படுத்திக்கொண்டு, அரசர் தனக்குள் என்ன கர்ம பந்தங்களால் தனக்கு இன்னும் விடுதலை வரவில்லையே என்று என்ன ஆரம்பித்தார். (752)

"நான் அவனை அரசனுக்க வாக்களித்தேன். அவனே என்றால் வனத்திற்கு அனுப்பப்பட்டான். அந்த மதுசூதனன் ஸத்யபராக்ரமன் ராஜ்யம் வனம் ஆகிய இரண்டையும் ஒன்றுகவே கருதினன். பொன்னையும் மண்ணுங்கட்டியையும் ஒன்றுக நினைத்தான். ஒருவிதமான முகமன விகாரமின்றி சந்தோஷத்துடன் என் ஆக்ஞையை ஏற்றுக்கொண்ட உத்தமபுத்திரன். அப்பேற்பட்ட பரம பாக்யமான புத்ரனை நான் வனத்திற்கு போகும்படி செய்துவிட்டு, என் பெரும் நிதியை இழந்துவிட்டு, நான் உயிருடன் இன்னும் இருக்கிறேன். என்னைப்போல பாபி யாராவது இருக்கக்கூடுமா ?" (753)

"என் அன்புள்ள சகா, அந்த பரம பாவனர்களாகிற ராமசீதா லக்ஷ்மணன் இருக்கும் இடத்திற்கு என்னை அழைத்துச் செல், நான் ஸத்ய பாவத்தினுல் சொல்லுகிறேன். ஆக்ஞை யிடுகிறேன். என் பிராணன் என்னைவிட்டு பிரிவதுபோலிருக் கிறது." (754)

அரசர் அடிக்கடி மந்திரியைக்கேட்ட வண்ணமாகவிருக்க "சொல், என்னுடைய அத்யந்த பிரிய தமனுகிற புத்ரன் ராமன் சொல்லிய விஷத்தைச் சொல். ஏதாவது உபாயம் சீக்கிரமாகச் சொல். எனக்கு சீதாராம லக்ஷ்மண தர்சனத்தைச் செய்து வை." (755)

மந்திரி தைரியத்தை வரவழைத்துக்கொண்டு கோமளமான வார்த்தைகளால் சொல்ல ஆரம்பித்தார். "மஹராஜ், நீர் மஹா வித்வான், பிரும்மத்தைத் தெரிந்த பிரும்மவாதி. (சூர்யனைப்போல காந்தி பொருந்தியவரும், இருளுக்கு அப்பால் இருப்பவரும் விஸ்வாமித்திரர் அன்ருெருநாள் உம்மிடம் "அஹம் வேத்மி மஹாத்மானம் ராமம் ஸத்ய பராக்ரமம், வஸிஷ்டோபி மஹாதேஜா யேசேமே தபஸ்ஸ்திதா:" என்று அந்த புருஷனை உம் போன்ற வித்வானுகிறவர்கள் அறிந்திருக் கிறபடியால்,) நான் உமக்குச் சொல்லலேண்டியது ஒன்றுமில்லை. (உம்முடைய புத்ரன் குருர்குருதமர்). ஹே தேவ, நீரோ மஹா சூரர். உத்தம தைரியவான்களில் மஹா ஸ்ரேஷ்டராக விளங்கு கிறீர். ஸாதுக்களில் மஹாஸ்ரேஷ்டராக விளங்குகிறீர். ஸாதுக் களின் சங்கமத்தை அடைந்த ஞானியாகவும் இருக்கிறீர். (ஐயா, உமக்கு பிரும்ம ஞானத்தில் பிரவிருத்தி இருக்கிறபடி யால், உமக்கு ராமனைப் பற்றி நன்ருகத் தெரியும். பிரளய காலத்தில்கூட சகல சராசரங்களையும் தாங்கி அவைகளின் வித்துக்களுக்கு ஆதாரமான கப்பலைத் தாங்கி நடத்திய தாபர் அல்லவா அவர்?) (756)

"ஜன்மமோ, மரணமோ, சுகதுக்கங்களின் போகமோ, ஹானியோ லாபமோ, நாம் ஸ்நேகிக்கும் பிரிய புத்ரஸ்திரிகளை பிரிவதோ, மீண்டும் அடைவதோ, மேகங்கள்கூடி, பிரிந்து மீண்டும் கூடி ஒன்ருகுவதுபோல, எல்லாம் நியந்தாவாகிற அந்த தாமோதரனுல் நடத்தப்படுகிறது. அவரே ஸர்வத்ருக், புருஷனுகிற அவர் மாத்திரம் காலாதீதன். மற்றவர்கள் யாவரும் காலவரைக்கு உட்பட்டவர்கள். கர்மத்திற்கும் பராதீனமாக உள்ளவர்கள். அவருடைய கிருபைதான் வேண்டும். ராத்ரி தினம் மாறிமாறி வருவதுபோல காலத்தின்

வன்மையாலும் கர்ம கதியாலும் சுகதுக்கங்கள் மாறிக்கொண்டு வந்தேயிருக்கின்றன.'' (757)

'' அவிவேகிகள் சுக காலங்களில் சிரித்துக்கொண்டு துக்கங்களில் அழுது கொண்டுமிருப்பார்கள். ஆனால் வித்வான்கள் சுகத்தின் சமயத்தில், இந்த சுகம் நீடித்திருக்காது என்கிற விவேகத்தினுல் துக்கத்தையும், துக்ககாலங்களில் பகவத் கிருபையினுலும் அத்யந்த தபஸ்ஸினுலும் இந்த துக்கம் நீடித்திருக்காது, என்கிற விவேகஞானம் கொண்டவனுக, இரு சமயங்களிலும் துக்க சுகங்களை சமமாக பாவித்து, மனத்தை தளரவிடாமல், ஸ்திதப் பிரக்ஞர்களாக விருப்பார்கள். அந்த பரம புருஷன் ஸர்வருக்கும் ஆஸ்ரிதர், எல்லோரையும் பாரபக்ஷமின்றி ஸத்யராக ரக்ஷிக்கக் கூடியவர். துக்கத்தை தைர்யத்தினுல் பொறுத்து, சோகத்தைப் பரித்யாகம் செய்யும். பகவத் கிருபையை வேண்டிக்கொள்ளும். (முயற்சியாகிற அஹங்காரத்தையும் விட்டு '' நான் தரித்திரனுகையாலே, எனக்கு கொடுக்க வேண்டியது ஒன்றுமில்லை; நான், என்னுடைய உடைமை ஆகிய எல்லாம் உமக்கு அதீனமானபடியால் என்று சொல்லி உம்மையே அவரிடம் ஸமர்ப்பித்துக்கொண்டு, ஸ்ரீராமனுடைய கிருபையை அவலம்பித்து, வாழ்ந்துவாரும்'' என்று கூறி,) மேலும் சொல்ல ஆரம்பித்தார். (758)

[தியானம்

ஹே ராம லக்ஷ்மணு, பரதனுடைய ப்ராத்ருவத்ஸலா, சீதையைப் பர்த்தாவாகக்கொண்ட ஸத்யபராக்ரமா, மஹாத்மாவான ராமபிரும்மத்தை அடுத்தவனுகிற வித்வான் குழந்தையைப் போல் காமத்தையும் துரோகத்தையும், டம்பம் முதலியவைகளை, விட்டுவிட்டு, ஸம்சாரத்திலிருந்து நிவிருத்தி அடைவான். அவித்வான்கள் களங்கமற்ற கர்மாவினுல் அழிவுள்ள ஸ்வர்க்க முதலியவைகளை அடைகிருர்கள். பிரும்மத்தை விரும்பும் ஞானிகள் ஞானத்தினுல் எல்லாமாகிய பிரும்மத்தை அடைகிருர்கள். மோக்ஷத்திற்கு வேறு விதமான மார்க்கம் கிடையாது. வைஷ்ணவர்கள் பிரபத்தியை உபாயமாகக்கொண்டு, இது உபாயத்வம் பிரபத்திக்கு அர்ஹமாய்க்கொண்டு, '' பிரபத்தி உபாயம் குற்ற மில்லை'' என்று ஸ்வீகரித்துக்கொண்டு '' ஸர்வாத்மர் ஸர்வ பூதஸ்திதர், ஸர்வ அந்தர்யாமி யாகிற ஹே விஷ்ணோ, ஸர்வத்ருக், உமது மகிமைகளால் சகல சராசரங்களின் தீங்குகளை சிதற அடிக்கும் ஶர்வ: என்று சொல்லப்படுவரே,

சிவமங்களமாய் யாவருக்கும் நன்மை புரிவதில் உமக்கு, நாராயணு, ஈடு உண்டோ? முக்தர்களாகிற ஆழ்வாராதிகளின் சரீரங்களில் வாசம் செய்துகொண்டிருந்த அவ்யயரே, நீர் அல்ப ஸந்தோஷி. அவாப்த ஸமஸ்த காமத்வம் உள்ளவர். இவன் இவ்வளவு கொடுத்தான், செய்தான் என்று நினைத்துப் பாராமல், கணக்கிடாமல் நாம் இட்ட அளவே கொண்டு ஸந்தோஷிப்பவர் நீர். அன்றோ கண்ணபிரான் தூது எழுந்தருளும் போது சஞ்சயன் திருதாஷ்டிரனுக்கும் வஞ்சகனை துர்யோதனனுக்கும் கண்ணனைப்பற்றிச் சொல்லும் சமயம், கண்ணன் நாட்டையும் பொன்னையும் மணியையும் விரும்பமாட்டான்; ஒரு இன்சொல் போதும்; அதுவும் இல்லையென்றால் உன் அபிமுக்ய சூசகமாக அவனை க்ஷேமம் விசாரி, அவன் வரும் வழியில் அவன் திருவடிகளை விளக்க ஒரு குடம் தண்ணீர் வை; ஒரு பத்ரம், புஷ்பம், பழம், ஜலம் இவைகளை அர்ப்பித்துவிடு. அவரோ கிருதக்ஞர். ஜயசீலனுகிற அர்ஜுனனின் பிரிய ஸ்நேகிதன். அனன்ய ப்ரயோசனத்வமாகிற சுத்தியோடு மனசுடன் பக்தியால் அவாப்த ஸமஸ்த காமனை மரியாதா புருஷோத்தம ராமனை, பழத்தையும் ஜலத்தையும் பூவையும், புகையையும் தூபதீபாதிகளாலும் இன்சொற்களாலும் ஜனர்த்தரை "பிரிவகையின்றி நன்னீர் தூய்புரிவதும் புளகபூவே" என்று ஆழ்வார் அருளிச் செய்தபடி பகவத் அனுக்ரஹத்தைக்கொண்டும், அதனால் திருப்தி அடையாமல் மேன்மேலும் வளரச் செய்யும் ஸ்தாணுவையும் பரம புருஷார்த்தமாக விரும்பப்படும் பூதாதியாகிற பகவான் நாராயணனை நிதி அவ்யயமாக நான் சரணம் அடைகிறேன்.]

"ஸ்ரீராமனுடைய முதல் நாள் முகாம் தமஸா நதி தீரத்தில் இருந்தது. இரண்டாம் நாள் சீதாபதியான ராமன் லக்ஷ்மணனுடன் கூட சுரஸரிதையாகிற கங்கைக் கரையில் ஸ்நானம் செய்து ஆகாராதிகளை உண்டு காலம் கழித்தார்." (759)

"கேவடனுகிற (படகோட்டியாகிற) குஹராஜனால் பல அத்புதமான சேவைகள் செய்யப்பட்டன. அன்று இரவு அவர்கள் சிருங்கிபேர புரத்தில் தங்கினார்கள். அதன் மறுகாலையில் ஆலமரத்தின் பாலைக் கொண்டு வரச்செய்து சீதாபதியான ராமன் லக்ஷ்மணன் ஜடாமுகடம் அணிந்தவர்களாக காணப்பட்டார்கள்." (760)

"அதன் பிறகு ராமன் தன் சகாவாகிற குஹனை அழைத்து ஒரு ஓடம் கொண்டு வரச்சொல்லி, அதில் முதலில் தன் ப்ரியையான சீதையை உட்காரவைத்து, அதன் பிறகு ஸ்ரீராமச்சந்திரன்

எழுந்தருளினர். உமது பாக்யமுள்ள புத்ரன் லக்ஷ்மணன் தனுஷ்பாண சகிதனுக தனஞ்ஜயராக, பொன்ராஜ்யம் போகங்களை தியாகம் செய்து வெறுத்து, சம்பாதிப்பதற்கும் காப்பாற்றுவதற்காகவும் மிக்க விரும்பத்தக்க கைங்கர்ய லக்ஷ்மியினல் பகவான் ஸ்ரீராமச்சந்திரனையும் அவன் ஸதியான சீதையையும் பக்தியுடன், இன்சொற்களால் பிரபு ராமனுடைய ஆக்ஞையை ஸதா எதிர்பார்த்த வண்ணமாக, (அர்ஜுனன் கிருஷ்ணரையும், நரன் நாராயணனை ஆஸ்ரயித்தது போலவும்), அந்த ஓடத்தில் ஏறிக்கொண்டான்.'' (761)

''என் முகத்தைப் பார்த்தார் பிரபு ரகுவீரன். நான் அடைந்த துக்கம் ஸர்வ அவாப்த ஸமஸ்த காமனுன ராமனை இழந்ததால் நான் வ்யா மோஹத்திலே கலங்கி நிற்க, கிருபாளு, கிருதக்ஞர், அல்பசந்தோஷி, ஒரு நமஸ்காரத்தால் திருப்தி அடையும் பிரபு, மதுரமான வசனங்களால் என்னை திருப்தி செய்து உம்மையும் அனுக்ரஹித்தார்.'' ''ஐயா, என் பிதாவிடம் எங்களுடைய சுக்ருத பிரணமங்களை தெரிவியுங்கள். என் சார்பில் நான் உம்மை சுத்தமான களங்கமில்லாத மனத்துடன் சொல்வதாக நினைத்து, அவருடைய பாத சரணங்களில் நான் அபிமுக்ய ஸூசகமாகப் பிடித்து இன்சொல்லாலும் க்ஷேமவினக்களாலும் அதிதியை உபசரிப்பதுபோல அவர் மனத்திலுள்ள குறைகளை என் சார்பில் குளிரவையுங்கள்.'' (762)

''காலைப் பிடித்துக் கொண்டு, மஹா பாகவத சிரோண்மணியே நான் அதிவிநயத்துடன் சொல்லியதாக சொல்லும்: ''ஐயா, தர்மசீலரே, சத்யஸந்தரே, என் பிதாவே, என்னைப் பற்றி கவலை உமக்கு துளிக்கூட வேண்டாம். ஸ்வாமி, தங்களுடைய கிருபா வேகத்தினுல், அனுக்ரஹ மனத்தினுல், பூர்ண காமனுகவும், கிருத கிருத்யனுகவும், மங்களமயனுகவும், கிருத புண்யவானுகவும், கிருதாக்ருதனுகவும், கிருதாகமனுகவும், கிருதாந்த க்ருதாகவும், க்ருத லக்ஷணராகவும், ஆக்கப்படுவேன். உமது ஆசீர்வாதங்களால், எங்கள் வழி மார்க்கங்கள் மங்களமயமாகவும் விக்னங்கள் இல்லாதபடியாகவும் இருக்கும்.'' (763)

[தியானம்

ஹே ராமா, நாராயணு, லக்ஷ்மி சீதா, ராமானுஜா, உம்முடைய கிருபை உமது ஸ்வதந்திரத்தாலே ஏற்படக்கூடியது. தசரதரை தள்ளிவிட்டு, ஐயா, பெற்ற தகப்பனைத் தள்ளிவிட்டு, நீர் ரிஷிகளை தேடிக் கொண்டு போனீர். ஆனல் உன்னல்

அங்கீகாரம் பெற்ற குஹப்பெருமாள், சிறிய திருவடி ஆகியவர் களையும் நீ அங்கீகரித்தாய். உம்மை ஸங்கர்ஷணர் வேதர், அப்யுபாயம் (பரகதியை அடைவிக்கும் கருவி) ஆகமஃ (சாஸ்திரம் வருமிடம்) பந்தா (நேர்வழி) நேதா (நடத்துகிறவர்) என்கிற நாமாக்களால் அல்லவோ போற்றுகிறுர்கள். ஆசார்யர் என்கிற பட்டப் பெயரையும் பிராம்மணர் என்கிற காரணப் பெயரையும் கொண்டாய். வேதம் உம்முடைய ஆக்ஞையாகவிருப்பது. உம்மை அறிவதும் வேதத்தினுல் தான் ஏற்படக்கூடியது. நீர் உமக்கு உண்டான கருணையாலே பக்தர்களின் சொற்படி நடப்பதும் உண்டு. அது மாத்திரம் அல்ல, ஸ்வாமி நீர் நிர்ஹேதுக கிருபையால் சிலரை அங்கீகரிக்கிறீர். உம்முடைய பக்தர்களிடம் காட்டும் நட்பு, பாரதந்திரியம், கிருஷ்ணர்ஜுன சகவாஸம் போல அல்லவா விளங்குகிறது. சிறிய திருவடியை அங்கீகரிக்கும் போது லக்ஷ்மணனையும் குஹனை ஏற்றுக் கொள்ளும் சமயமும், பிராட்டியையும் வைத்து அவர்களின் புருஷகாரத்தை அங்கீகரித்தாய். அந்த சமயங்களில் பம்பையும் கங்கையும் ஸ்தான விசேஷங்களாக விருந்தன. அர்ஜுனனுல் உம்மை நிராயுதபாணியாக வரிக்கப்பட்ட சமயம், உமது திருவுள்ளத்தால் அவனுக்கு புகழ் உண்டாக்குவதற்கு, அவனுக்கு வரம் அளித்த உமை சங்கரர் இவர்களுடைய புருஷகாரத்தை ஹே கிருஷ்ணு, நீ ஏற்றுக்கொண்டாய். விபீஷணனை நீ ஏற்றுக் கொள்ளும் சமயம் சுக்ரீவனுடைய புருஷகாரங்களையும் சிறிய திருவடியின் சிபாரிசையும் ஏற்றுக் கொண்டாய். சுக்ரீவனுக்கு பிராட்டியின் ஆபரணங்களும், விபீஷணனுக்கு பிராட்டி இருந்த லங்கையும் ஆதரவளித்தன. அப்பேற்பட்ட பாகவத உத்தமர் களை முன்னிட்டும், பிராட்டியை முன்னிட்டும் சரணம் என்று அடைந்த என்னை நீர் நிர்ஹேதுவாகக் கருதி கருணை செய்.]

"பிதாவே, உமது கருணை வெள்ளத்தினுலும், அன்பின் அனுக்ரஹத்தாலும், கிருதார்த்தனுக நான் ஆக்கப்பட்டு, உம்முடைய திருவுள்ளப்படி என் வன மார்க்கங்கள் எங்களுக்கு சுகத்தை அளிக்கும். உமது ஆக்ஞையை நான் நிறைவேற்றி, பதினுன்கு வருஷங்களையும் சீக்கிரம் கழித்துவிட்டு திரும்பி வந்து சௌக்யமாகவும் குசலபூர்ணமாகவும் உமது சரணுரவிந் தங்களை நாங்கள் தர்சனம் செய்வோம்." "ஐயா, என் சார்பில் என்னுடைய தாய்மார்களை, எங்களுக்கு ஜன்ம சரீரம் கொடுத்த மஹா உத்தமிகளை சரணம் அடைந்து, அவர்களிடமும் பக்தி வினய நம்ரதிகளால் அவர்களையும் ஆஸ்வாசப்படுத்துங்கள்."

துளசிதாஸர் சொல்லுகிருர். "என் தாய்மார்களிடமும் சொல்ல வேண்டும். என் சந்தேசமாகச் சொல்லவேண்டும் என்கிருர்" "பிரபு, கோஸலாதிபதி தசரத மஹாராஜர் சௌக்யமாகவும், சந்தோஷமாகவும் சதா இருக்கும்படி என் சார்பில் பிரயத்னம் செய்யுங்கள்." (764)

"ஐயா, அதன் பிறகு என் குருநாதரான வஸிஷ்டரை அடிக்கடி சரண கமலங்களில் நமஸ்கரித்து, என் சார்பில் அனுப்பப் பட்ட ஸந்தேசத்தை அவரிடமும் விண்ணப்பம் செய்யுங்கள்" "நீங்கள் முயற்சி செய்து அயோத்யாதிபதியான என் பிதாவை என் நினைவில் வாடி வருந்தாமல் சந்தோஷகரமாக இருப்பதற்கு முயற்சி செய்யச் சொல்லுங்கள்." (765)

"ஹே தாதா, என்னை நினைத்து வாடி வருந்தும் அயோத்யா புரிவாஸிகள், குடும்ப பந்துக்கள் மிக்க அனுராகத்துடன் இருந்தவர்கள், அவர்களையும் சமாதானப்படுத்தி, என்னுடைய மிக்க தாழ்மையான வேண்டுகோளைப் பூர்த்தி செய்யுங்கள்." "எவ்விதமாவது முயற்சி செய்து, என் பிதாவை வருத்தத்திற்கு உள் ஆக்காமல் சந்தோஷப்படுத்த வேண்டும். அவர்கள் அப்போது தான் எனக்கு ஹிதம் செய்பவர்கள்" என்று சொல்லுங்கள். (766)

"ஐயா என் பிரியமுள்ள பரதன் இருக்கிருனே, அவனிடம் நான் சொல்லிய சமாசாரத்தைச் சொல்லுங்கள். "நீ ராஜ பட்டத்தை அடைந்த பின்பு, தர்மத்தையும் நீதியையும் தியாகம் செய்யக்கூடாது. பிரஜைகளை தர்மத்துடன் பரிபாலிக்க வேண்டும். கர்மத்திலும் மனத்திலும் சொற்களாலும் பிரஜைகளை நன்ருக ரக்ஷண பரிபாலனம் செய். அத்துடன் இல்லாமல், எல்லாத் தாய்மார்களையும் சமமாகப் பாவித்து அவர்களை சேவை செய்து வரவும்." (767)

"என் பிரியமுள்ள தம்பி, தம்பி செய்யவேண்டிய கடமைகளாகிற தாய்தகப்பன், ஸ்வஜனங்கள் யாவரையும் ஸம்ரக்ஷித்து, கடைசி வரையிலும் எல்லா சேவைகளாலும் அவர்களைத் திருப்தி செய்து வை. அரசரான பிதாவை நீ எந்த விதத்திலும் திருப்தி செய்து வைத்து, என்னைப் பற்றிய கவலையில்லாமல் சுகமாக வாழவைக்கவேண்டும்." (768)

"லக்ஷ்மணன் சில க்ரூரமான வசனங்களைச் சொன்னுன். அதைக் கேட்ட ராமன் அவனை அடக்கி, அடிக்கடி அடிக்கடி என்னை கெஞ்சிக் கேட்டுக் கொண்டு, "ஐயா, நான் அரசர் காட்டிய நிஜமான மார்க்கத்தில் நிலைத்து நிற்கிறேன். இந்த

சிறு பிள்ளை லக்ஷ்மணன் சொல்லிய வார்த்தைகளை அரசரிடம் சொல்லவேண்டாம். நான் மஹாராஜாவின் சாஸனத்தை நிறைவேற்றுவதற்கு ஊர்ஜிதராக விருக்கிறேன். ஒருவித விகாரமும் இன்றி, சுசியாகவும், ஸத்பதத்திலும் இருக்கிறேன்'' என்று என் பிதாவிடம் ஸமர்ப்பியுங்கள்.'' (769)

[தியானம்

ரங்கநாயகி சமேத ரங்கநாதா, கௌதுஸ்ப நாராயணா, குரு சித்த பிரஸாதமுள்ளவரும் மஹா பாஹுக்களை உடையவரும் உரகனுடைய அம்சமான லக்ஷ்மணா, உங்களை, கங்கையினால் ஸன்மானிக்கப்பட்டவளும், தர்மபராயணையும் கிரிராஜனுடைய புத்ரியுமான உமையுடன்கூடிய மஹேஸ்வரரை முன்னிட்டு நான் சரணமடைகிறேன். ஹேபினாகின், பகனுடைய நேத்ரத்தை அபஹரித்தவரே, ஸர்வலோகங்களால் நமஸ்கரிக்கப்பட்டவரே. சங்கரபகவானே, உமையுடன் சதா ஆனந்திக்கும் மஹேஸ்வரரே, உம்மால் உபதேசிக்கப்பட்ட நான் ரமாவின் அந்தரங்கனும், ரமையினுடைய காம விலாஸங்களில் நீஞ்சுபவரும், யோகிமுனிகளின் ஹ்ருதயத்தில் சிஷ்டகிருத்தாக விளங்குபவரும், ஹ்ருஷிகேசரும் அர்ஜுனன் கண்ட ஸர்வவியாபியும், சீதை ஆஞ்சநேயருடைய வாக்கால் கேட்ட ராம சங்கீர்த்தனத்தால் ஆராதிக்கப்படுகிறவரும், என் பாபங்களைப் போக்கும் வேங்கட வரதரும், என்னை ஆஸ்ரயித்தவனாக நினைத்து தன் நீண்ட புஜங்களை நீட்டி அணைப்பவரும், பத்ம நயனருமான வரதனை நான் நமஸ்கரிக்கிறேன். வைகுண்டபதியான நாராயணனை ஏகமாக நினைத்து ஆஸ்ரயித்து, ஸர்வக்ஞர், தேவவரர், ஸாக்ஷாத் தேவநாதர், பரம்தபஸ், நரோத்தமர், மஹாபுத்திமான், கவிகளுக்கு அனுக்ரஹம் செய்பவர், மதுரமான குரலில் ஸம்பாஷிப்பவர், சுசியானவர், தாம் செய்யும் பேருதவிகளுக்கு எவ்வித கைம்மாறுகளையும் எதிர்பாராத நிர்ஹேதுக கடாக்ஷ நாராயணனை மஹாலக்ஷ்மி சகிதமாக பன்னக சயனத்தில் ராஜேஸ்வரி ராஜனாக நான் நமஸ்கரித்து சரணமடைகிறேன். நாரதரால் அனுக்ரஹிக்கப்பட்ட நான் சுஸ்ரூஷையில் ஊன்றி நடந்து ஹனுமார் அங்கதன், குஹன் ஆகியவர்கள் வழியில் நடந்துவரும் எனக்கு, ப்ரேமை தசையில் தடுமாடி கிடக்கும் நான் பல்லாண்டு, பல்லாண்டு மங்களா சாஸனம் பாடி, ரக்ஷிய ரக்ஷகபாவத்துடன், அவனுடைய ஸௌகுமார்ய லாவண்யங்களை நோக்கி, அந்த திவ்ய தம்பதிகளுக்கு கண் எச்சில் படாதபடி காக்க விரும்பு

கிறேன். பிரஹ்லாதன், பராசரர், சப்தரிஷிகள், தசரத சக்ர வர்த்தி, ஸீதாபிராட்டி, சிறிய திருவடி சுக்ரீவ மஹாராஜர் நந்த கோப யசோதை, மனுதர்மர், விதுரர், ஸ்ரீமத் ராமாயண, ஸ்ரீ விஷ்ணு புராண, ஸ்ரீ மஹாபாரதம், பாகவதம் இவைகளை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். ஸத்குரு நாதரே, சரஸ்வதி நந்தனரான பிரும்மாவினால் சேவிக்கப்பட்ட பத்மநாபரே, எனக்கு அருள் செய்யும்.]

"சீதையும் உமக்கு பிரணாமம் செய்து, செய்தி சொல்லி யனுப்பினாள். (விதேஹதேசத்துப் பெண்ணான அந்த சீதை ஸ்ரீராமனை விட்டு பிற்பாடு சோகப்பட்டாளோ அதுபோல ஸமமான சோகத்தினால்) சோகம் கொண்டு, சரத்ருதுவின் ஆரம்ப காலத்து மீதமான மேகங்களுள்ள சந்திரனோடு கூடிய, இரவு போல, அதிகாருண்யத்தால் சீதளமடைந்து, பெருமூச்சுவிட்டுக் கொண்டு, மதுரமான வாணியினால், அடிக்கடி அழுது கொண்டு பேசவதால் பேச்சு வார்த்தைகள் தடுக்கப்பட்டு, நேத்ரங்களில் தங்கள் தியானத்தால் நித்யம் கவலைப்பட்டவளாகி, தங்களை பல தடவைகளில் "அரசர்," "என் பிதா" என்று சொல்லி அழைத்து, ரோமாஞ்சலியுடன் தங்களை அடைவதற்கு முயற்சி செய்வதுபோல, விளங்கினாள். அவளுடைய மனோஹரமான வார்த்தைகள் வெளி வரும்போதும், நான் அவைகளைக் கேட்டுக் கொண்டிருக்கும் போதும், ஐயா," (770)

"அந்த சமயம் பார்த்து, ரகுவரன் தலையை அசைத்து, இங்கிதம் காட்டினான். அதை ஆக்ஞையாகப் பெற்றுக்கொண்டு குஹன் ஓடத்தை கங்கையில் கொண்டுவந்து நிறுத்தினான். ரகுகுல திலகன், தினகரகுல திலகன், ஸ்ரீராமச்சந்திரன் சீதை லக்ஷ்மணனுடன் கங்கையை, அந்த ஜகன்மாதா, ஸகல நதிகளாலும் ஸர்வ ஜனங்களாலும் ஸம்மானம் செய்யப்பட்ட சுரசுந்தரியாகிற கங்கையைக் கடந்து சென்றார். குஹன் அவருக்குச் சேவை செய்தான். நான் அவர்கள் போவதை பிரும்மமாகப் பார்த்துக் கொண்டு நின்றேன். வஜ்ரம் பாய்ந்தமாதிரி என் மனம் பிளந்து கொண்டிருந்தது. திக்பிரமை கொண்டவன்போல விளங்கினேன்." (771)

"ஐயா, என் ஸ்வாமியே, என்னுடைய மனக்லேசங்களை எப்படி உமக்கு தெரிவிப்பேன்? காகுத்ஸ குலத்தில் பிறந்து ராமபராயணர்களாக வாழும் உமக்கு, நான் ராமசீதை லக்ஷ்மணன் சூன்யமாக வந்து என்ன ஆறுதல்களைச் சொல்லப் போகிறேன்? ஸிம்மத்தினால் பிடிக்கப்பட்ட யானைபோல

விருக்கும் உமக்கு என்ன சுகத்தை கொடுக்கப்போகிறேன்? ஆதலால் ஒன்று மாத்திரம் சொல்வேன். பொறுமையுடன் கேளும். தயவு செய்யும். ராமகிருபையால் வாடிவதங்கப்பட்ட என் மனதில் உள்ள எண்ணங்களைக் கேளும். நான் குடியிருக்கும் இடம், நான் உட்கொள்ளும் ஆகாரம் இவைகளின் ஆணையின்மேல் சொல்லுகிறேன். என் ஆணை மலையவிந்தியமேரு மந்திரங்கள் போலவும், அவைகளில் வளரும் சந்தன விருக்ஷங்கள் போலவும் சொல்லுகிறேன். என் கிலேசங்கள் ராமசீதா வியோகத்தினால் வளர ஆரம்பித்தன. ஐயா, சீதை சொல்லிய ஆதரவு கனிந்த வார்த்தைகளைக் கேட்கும் சமயம், அவளுடைய ஸந்தேசம் பெறும் சமயம், ஐயா......சுமிந்தரனுடைய வார்த்தைகள் தடைப்பட்டன. கண்ணீர்கள் நிறைந்து வழிந்து ஓடின. நான் எவ்விதம் உங்களுக்கு ராமசீதாவின் வரவில், அயோத்தி புனரா கமனத்தில் திருஷ்டிசெய்து கொண்டிருக்கும் உமக்கு என்னபடி ஆறுதல் சொல்லப் போகிறேன்?'' ஒரே வருத்தமயம், ஒரே ஏமாற்றம், ஒரே துக்கமயமாக தோன்றினார் மந்திரி. (772)

சாரதி சுமந்திரரின் வசனங்களைக் கேட்டுக்கொண்டிருக்கும் சமயம் அரசர் பூமிதளத்தில், அடித்தளத்தில் வெட்டப்பட்ட ஒரு விருக்ஷம்போல கீழே விழுந்தார். அவருடைய ஹ்ருதயம் சீதாராம வியோகத்தினால் படப்படப்புடன் அடித்துக்கொண்டிருந்தது. அவர் நடுங்கிக்கொண்டிருந்தார். அவருடைய மனதில் பெரும்பீதி, மஹாமோஹம், இருள் அந்தகாரம் காளராத்ரி ரூபமாக வியாபித்து, அவரைத் துக்கக்கடலில் ஆழ்த்தியது. மீன் குஞ்சுகள் முதல் மழை வ்ருஷ்டியினால் துடிக்கிறமாதிரி அவர் துடித்தார். (773)

சகல ராணிமார்களும் துடித்துக்கொண்டு அழ ஆரம்பித்தார்கள். அப்பேற்பட்ட மஹாவிபத்தை நான் எவ்விதம் வர்ணிக்கமுடியும்? அந்த சமயத்தில் கேட்ட துக்க விலலாபங்களை துக்கமே கேட்டு, நடுநடுங்கிப்போகும். தைர்யம், மனோதைர்யம் ஆத்ம சக்தியாகிற எல்லாம் இருக்கிற இடம் தெரியாமல் ஓடிவிட்டன. (774)

[தியானம்

ஹே ராமா, சங்குசக்கிர பாணியாகிற ஸ்ரீராம நாராயணா, மஹாலக்ஷ்மி அம்மா, என் தாயே, பாலே, பத்மாஸனியே, பத்மலோசனி, ராமானுஜரின் ஸுதா, என் கிலேசங்களைப் போக்கும்

கேசவரே, ராமானுஜன் கூரத்தாழ்வானிடமும் முதலியாண்டா ளிடமும் காட்டிய ஆஸ்ரயபக்தி ப்ரேமைபோல பக்தர்களிடம் காட்டும் அன்பு சீலரே, சரீரமே ப்ரதானம் என்று நம்பி வாழும் சேதனர்களை நடத்திக்கொண்டுபோகும் குவலேசயரே, தசரதர், யசோதை, கௌஸல்யை விஸ்வாமித்ரர் போன்ற மஹா ஸ்ரேஷ் டர்கள் தங்கள் கண்களால் கண்டு மகிழும்படி வடிவழகு பெற்ற கும்பரே, லோபாமுத்ரை அகஸ்தியர் போன்ற மஹரிஷிகளுக்கு ஆதாரமாக விருப்பவரே, காலரூபமான கமலத்தை நாபியாக உடைய பத்மநாபரே, என்னை குருகிருபா பாத்ரனாக ஆக்கும் ஐயா, திருக்கோட்டியூர்நம்பி ராமானுஜரை பதினெட்டு தடவை கள் சர்மஸ்லோகத்தின் ரஹஸ்ய அர்த்தங்களை, தன் பாதங்களை தொடவிட்டு அளித்தாரோ, எவ்விதம் ராமானுஜர் தண்டம் பவித் திரம் என்று சொல்லும்படி கூரத்தாழ்வானையும் முதலியாண்டா னையும் அனுக்ரஹித்தாரோ, அதுபோல நிர் ஹேதுவான கிருபையை எனக்கு பகவத் ஸங்கல்பத்தால் செய்யும். சரணம் என்று கைகூப்பி நிற்கும் எனக்கு உமது திருவருளைக் கொடும்.]

அரசருக்கு பிராணன் பீறிட்டுக்கொண்டு கண்டத்திற்கு வந்தது. மரண சமீபம் அடைந்துவிட்டதாகத் தோன்றியது. நாகசர்ப்பம் மணியைத் தொலைத்துவிட்டு எவ்விதம் வியாகுலம் அடைந்து துடிக்குமோ, அதுபோல அரசர் பிராணனோடு துடித் துக்கொண்டிருந்தார். எல்லா இந்திரியங்களும் அடங்கிக் கொண்டு வந்தன. பிராணன் வரட்சி அடைவதைப் பார்த்தால், ஜலமில்லாமல் கோடைகாலத்தில் உஷ்ணத்தினால் கமல புஷ்ப வனம் வாடி வதங்கி குளத்தில் அனாதரவு பெற்று விளங்குமோ, அதுபோல ராஜ சின்னங்களின் ஒளி மங்கிக்கொண்டு அரசர் மரணவாயிலில் வந்து நின்றுகொண்டிருந்தார். (775)

கௌஸல்யை அரசரின் நிலையைப் புரிந்துகொண்டு தனக்குள் எண்ணமிட்டாள். "சூர்யகுலத்தின் சூர்யன் அஸ்த மித்துக் கொண்டுவருவது போலவிருக்கிறது." அவரை இறுகத் தழுவிக்கொண்டாள். ராமஹ்ருதயம் தரித்த மார்பில் ராம ஹ்ருதயம் தியானம் செய்யும் அரசரை பிரேமையுடன் கலந்த மனோ வியாகுலத்துடன் தழுவிக்கொண்டாள். அரசரை தைர்யப்படுத்தி, மிக்க அனுதாபத்துடன் தைர்யம் உண்டாகும் வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தாள். அவளுடைய வசனங் கள் சமயத்திற்கு ஏற்ப அனுகூலமாகவிருந்தன. (776)

"ஹே பிராணநாதரே, நன்கு சிந்தித்துப்பாரும். இராம னுடைய பிரிவு என்பது ஒரு கரையிலா சமுத்திரமாகும்,

அயோத்தி கப்பலாகும். இக்கப்பலேச் செலுத்தும் கப்பலோட்டியாக நீர் இருக்கின்றீர். நம் உற்ருர் சுற்றத்தினர் பிரயாணிகளாவர். அவர்கள் இக்கப்பலில் ஏறியுள்ளனர். நீர் மனத்திடத்துடன் இருந்தால் அனைவரும் இக்கடலேக் கடந்து செல்வார்கள். இல்லேயேல் இவர்கள் அனைவருமே (இப்பிரிவெனும் பெருங்கடலில்) மூழ்கிவிடுவர். ஆகவே, ஹே பிரிய நாதரே! என் விண்ணப்பத்தை மனதில் நிலேநிறுத்திக்கொள்வீராஞல் இராமனும் சீதையும் இலக்குமணனும் மீண்டும் நம்முடன் வந்து கூடுவார்கள்.'' (777)

கருத்து :—'என் பிராணநாதரே, சம்ஸாரபந்தங்களாகிற பெண்டாட்டி குழந்தை ராஜ்யம், கர்மகதியின் குறைவுகள், பக்தி ஞான தோஷங்கள் இவைகளே மறந்துவிடுங்கள். பகவானுடைய ஸ்ரீபாதங்களிலும் ஆசார்யனுடைய ஸ்ரீபாதங்களிலும், பிரணதார்த்திஹரா, என்று சொல்லி பிரபத்தி செய்து, பகவானுடைய நிர்ஹேதுக கிருபையையும் ஆசார்யரின் நிர்ஹேதுவான கிருபாகடாக்ஷத்தையும், அந்த ஒப்பு உயர்வு இல்லாத சாந்தத்தைத் தரும் பாதரேணுக்களே தரித்துக்கொண்டு, ஹே ஸ்வாமி, கருணு ஸமுத்திரம், லோகாவனசதுரன், ஸரஸகுண அப்ரமேயன், ஸரஸிஜாஸனன், ஸநந்தனவந்தித ஸாகேத ராமனே, என் பிரபு, ராகாப்ஜமுகன், என் பிள்ளே ராமனே, நீலாக்ருதிகள் லாவண்யன், உம்முடைய பிள்ளே, உம்முடைய புத்ரன், நீல சமுத்திரம்போல கம்பீரமுள்ளவன், நீல மயில்போல மிடுக்கு உள்ளவன், பாலசூரியன்போல தேஜஸ் உள்ளவன், கனிந்த பழம்போல பார்த்து பார்த்து அனுபவிக்க ருசியுள்ளவன், சுகந்த பீத வாடை உள்ளவன், வனமாலி, கௌஸ்துப நாராயணன், ஶ்ரீதேவியின் லோலன், அந்த லக்ஷ்மியாகிற கருணே சுவசத்தை அங்க அங்கமாக உறைபோட்ட மாதிரி அணிந்து விளங்கும் ராமானுஜப்ரியன், ஸர்வக்ஞன், ஸர்வசாக்ஷி, சங்கரரின் ஆழ்ந்த ஹ்ருதயமாகிற மானஸ ஸரோவரில் உல்லாஸமாக சஞ்சரிக்கும் ராஜஹம்ஸப்பேடுபோல விளங்குபவன், அழகான கபோல பிரதேசங்களே உடையவன், சீதையை அணேத்துக்கொள்ளும்போது லாவண்ய மோஹன சதுர ராமனுக விளங்குபவன், கிருபாளு, பக்தஜனபிரியன், நிர்ஹேதுக கிருபையை கடாக்ஷிக்கும் புஷ்கலா வர்த்தம் போன்ற மேகத்தின் சாயையும் குளிர்ந்த அம்ருத தாரைகளே வர்ஷித்து, விண்டு போன மனத்தை குளிரவைப்பவன், நாரதரின் பக்திக்கு அடிமைப்பட்டவன், விஸ்வாமித்திரப்ரியன், குலகுருவான

வஸிஷ்டருக்கு சிஷ்யன், அவனிடம், என் நாதரே, உமது மனதை திருப்பும். அவனுடைய பாதங்களை சிந்தியும். அவனுடைய உரக சயனத்தை நினையும். கருடன் விஷ்வக்ஸேனர் போன்ற நித்ய சூரிகளை நினையும். பாகவத ஸம்பந்தத்தைப் பெற்ற வைஷ்ணவ அடியார் மாதிரி அந்த பரம போக்யன், உமது ரகுகுலத்தாரால் ஆராதிக்கப்பட்ட ரங்கநாயகி ஸமேத ரங்கராஜனை நினையும். பிரணவாகார விமானத்தையும் தியானம் செய்யும். அவைகளைச் சுட்டிக் காண்பிக்கிற ராஜகோபால விலாஸங்களைப் பாரும். ஐயா, உமது பாதங்களே என்கதி என்று தாழ்மையுடன் கெஞ்சிக்கொள்ளும். ஸ்ரீபதே என்று சொல்லும். வேங்கடவரதா ஸார்வபௌமா, அகிலலோகநாயகா, ஜகத்பதி, தியாகராஜர், வால்மீகி போன்ற மஹான்களால் சேவிக்கப்பட்ட ராமா, உமை சதாதியானம் செய்யும் ராமா, ராகவா என்று வாயினால் சொல்லும். வெட்கப்படாதேயும். ராம, ராம, உம்முடைய பிள்ளையின் ராம நாமம் அபாரமான சமுத்திரம். அவன் கிருபையின்றி, அவனை உபாயம் உபேயம் இன்றி அடைய முடியாது. க்ஷீராப்திபோல அபாரம். அந்த பயோநிதியில் அயோத்தி ஒரு ஓடம்போலவும், ரகுகுல திலகர்களின் வம்சத்தில் உதித்த நீர் என் பிரபு, என் பிள்ளையின் க்ருபாபாத்ரம், அந்த ஓடத்தின் முன்னால் உட்கார்ந்திருக்கும் அதிகாரி, உம்முடைய நிழலில் சகல குடும்ப ஜனங்களாகிய நாங்கள் யாத்ரீகர்கள். உங்களை எங்கள் ஆதாரமாக நினைத்து நாங்களும் உம்முடன் ஓடத்தில் ஏறியிருக்கிறோம்.)

"நீர் தைரியத்தை வரவழைத்து சந்தோஷமாகவிரும். நாங்களும் சந்தோஷத்துடன் தைர்யமாக உம்மோடு இருப்போம். நீர் புத்தி கலக்கமடைந்தவராகி, பதட்டப்படுவீராகில், ஸ்வாமி, நாம் எல்லோரும் மூழ்கிவிடுவோம். தைரியத்தை இழக்காதேயும். (என் பிள்ளை ராமன் ஆபத்ஸகாயன் காருண்ய மயன். நம் குரலைக்கேட்பவன். அதிவினயத்துடன் மந்த ஹாஸம் செய்பவன். அவன் பரமார்த்தி. ஸ்ரீதேவியின் புருஷகாரத்தைக் கேட்பவன். அபார பந்துஜனப்ரியன். அவனை நம்பினால் நாம் ஒருக்காலும் மோசம்போகமாட்டோம்.) என் ப்ரிய ஸ்வாமி, என் வார்த்தையைக்கேளும். தைரியத்துடன் பதினான்கு வருஷங்கள் வாழ்ந்துவந்தால், புனர்வசுவாகிற ஸ்ரீராமச்சந்திரனை சீதாரமணனை, லக்ஷ்மண அக்ரஜனை, பரத ப்ரியனை, சத்ருக்னனின் ஜேஷ்டனை, திரும்பி மீண்டும், அந்த ஸ்ரீநிதியை அடையலாம்." (778)

[தியானம்

நாஸத்யன் தஸ்ரன்போல விருக்கும் ராம லக்ஷ்மணா, ராம வல்லபே, சீதே, மஹாலக்ஷ்மி நாராயணா, ஆத்ம வித்யையினால் மோக்ஷ பலனைக் கொடுக்கும் ஸாதனமான புருஷ காரத்தினால் நீ நாராயணனை அடையச் செய்கிறாய். அம்மா, உன் சம்பந்தமும் லக்ஷ்மணனுடைய சம்பந்தமும் பேறுக்கு ஹேதுக்கள். உங்களை இழந்தால், உங்களுக்கு அபசாரம் செய்தால் இழிவுக்கு ஹேது. நீங்கள் அஸ்வத்தர். கீழே நின்று கைகூப்பும் எங்களுக்கு ந்யக்ரோதர் போல மேலே வேரும் கீழே கிளையுமாக வளரும் பிரபஞ்சத்திற்குக் காரணப்பொருளாக விளங்குகிறீர், உம்முடைய ரூபம் சாந்தமாயும், அனந்தமாயும் மிக்க ஐஸ்வர்யம் நிறைந்த பிரும்ம ரூபத்திற்கும் மேலானது. அம்மா ஜானகி, பகவானுக்கு ஏற்ப ரூபகுண யௌவன காருண்யத்தின் செழிப்புக்களால் விளங்கும் என் ஹரிவல்லபே, உன்னை ராமன் நெருக்கமாக இருகைகளாலும் அணைத்துக்கொண்டு, எந்த சுகத்தை நீயும் பகவானும் அனுபவிக்கிறீர்களோ, அந்த சுகத்தை கட்டிக்காத்து பரிபாலித்து மேலே வளர விடச் செய்த லக்ஷ்மணனுடைய கைங்கர்ய பாக்யங்கள் எவ்விதம் மிகச் சிறந்தனவோ, அந்த பாக்யமுள்ள கடாக்ஷங்களால் ஹரிவல்லபே, முகுந்தா, ஜனார்த்தனா, அச்யுதா கோவிந்தா, ஹரி பகவானே, யக்ஞபதி, யோகேசரே, ஹே விஷ்ணு, நாரதருடைய கிருபையினால் உங்களை நான் அடைய வேண்டும்.]

(கௌஸல்யாதேவி லோக ஹிதத்திற்காக ஒரு பிள்ளையைப் பெற்றாள். அப்பேற்பட்ட கௌஸல்யையின் ஸுட்ரஜாராமன் தசரதரின் மனத்தில் இருந்து கடாக்ஷித்தான். ஆனால் அவன் தசரதனின் இறுதி காலத்தில் தன் மடியில் பிதாவைப் போட்டுக் கொண்டு, புத் என்கிற நரகத்திலிருந்து விடுவிக்க துர்லபராக ஆகிவிட்டான். பரம க்ருபாளு நிர்ஹேதுக் கிருபையை தன் பிதாவிடம், ப்ருஸ்னிகர்ப்பரிடம், காண்பிக்க மறுத்துவிட்டான். ஸர்வ ஸ்வதந்தரன், யாருக்கும் வசப்படாதவன். உன்மத்தன், அவன் வழிகாட்டி நடக்கும் பந்தா, தசரதரின் தீப்த மூர்த்தியாக அவதரித்தான். பாவிகளைக் கொல்லும் துஷ்கிருதர், ஸத்குண சம்பன்னரானவரும் பிரும்மஞானியுமான தசரதருக்கும் மரணத் தருவாயில் அப்பால் ஓடிவிட்டான். திரௌபதி, கஜேந்திரன் முதலானவர்களுக்குக்கூட தீங்கு நேரிடும்படி அனுமதித்தவன். தேய்ந்த மனத்துடன், மிக்க வருந்தமடைந்து, பக்தர்களின் பேருபகாரத்தை நினைத்துப் பார்த்து விம்மின மார்புடன் பிற்பாடு

வருத்தப்படுபவன். பச்சாதாபப்படுபவன். அவன் ஸ்வபாவமே தனி உதார மனதுடைய ராமன் தசரதரிடமிருந்து கண்ணன் கோபிகளிடமிருந்து விலகினதுபோல, பாண்டவர்களிடமிருந்து பாரத யுத்தம் நடத்தி, அஸ்தினபுர பட்டாபிஷேகத்தை யுதிஷ்டிரருக்குச் செய்தபின்பு, துவாரகைக்கு மீண்டும் எழுந்தருளும் போது எவ்விதம் கிருஷ்ணன் மஹா வருத்தத்தை அடைந்தாரோ, அதுபோல தசரதரிடமிருந்து விலகிவிட்டான்.) பிரிய பத்னியாகிற கௌஸல்யையின் அம்ருத வசனங்களைக் கேட்ட பின்பு அரசருக்கு உலகம் வெறுத்து விட்டது. ராம சூன்யமாக தன் ஸ்தலத்தைப் பார்த்தார். ஸாதுக்களின் சங்கமத்தைப் போல உயிர் அளிக்கும் கௌஸல்யையின் வசனங்களைக் கேட்ட பின்பும் அவருடைய வருத்தம் தாங்கவில்லை. கண்களை திறந்து பார்த்து ராமசூன்யமாக உலகத்தைக் கண்டார். அவருடைய வார்த்தைகள் தீனஸ்திதியை அடைந்து, தவித்துப் போன மீனின் மேல் குளிர்ந்த நீரை வார்ப்பதுபோல, அவருக்கு கௌஸல்யையின் வார்த்தைகள் கொஞ்சம் ஆறுதலைக் கொடுத்தன. (779)

தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, அரசர் உட்கார்ந்தார். பிறகு ராம தியானத்தினால் கதற ஆரம்பித்தார். "ஹே சுமந்தரரே, மந்திரியே, எங்கே என் ராமன்? நிர்ஹேதுவாக கருணையை வாரிக் கொடுக்கும் சீதாபதி எங்கே? லக்ஷ்மணன் எங்கே? என் ப்ரிய புத்ரனின் வதூ ஜானகி எங்கே?'' (780)

"ஆம். ராமலக்ஷ்மணன் சீதையுடன் வனம் போய்விட்டார்கள். அவர்கள் திரும்பி வரமாட்டார்கள். வந்தாலும் நான் பார்க்க முடியாது. வருத்தப்பட்டு பிரயோசனம் என்ன?'' என்று அடிக்கடி யோசித்து, அழுது கொண்டிருந்தார். அந்த ராத்திரி ஒரு யுகம்போல கழிந்தது. அவருடைய துக்கம் ஆறுதபடி ராத்திரியாக விருந்தது. கர்மங்களின் கதியை யாரால் அதிக்ரமிக்க முடியும்? என் புத்ரனாக விருத்தாலும் கர்ம கௌரவம் கொடுக்கும் நியந்தா, துரதிக்ரமர், தண்டர். பாபிகளை சுத்தம் செய்யும் சுசிஸ்ரவஸ். தான் சுத்தமான சுசி. கர்ம ஸ்வரூபங்களை நன்றாக அறிந்த அரசர் தன் பாபங்களை சிந்தித்துப் பார்த்தார். ஆம். நான் முன்பு குருட்டு தபஸ்வியானவரும் ஸ்ரவண குமாரனுடைய பிதாவின் சாபத்தை அல்லவோ பெற்றுக்கொண்டிருக்கிறேன். புத்ர வியோகத்தினால் அவருக்கு மரணம் சம்பவித்தது. அது போல எனக்கும் மரணம் ஏற்படும் என்று சாபம் அவர்

கொடுத்திருக்கிருர். பிராம்மண சாபம் வீண் போகாது. இந்த பாபத்தின் ப்ராயசித்தம் இந்த பழைய விருத்தாந்தத்தை நான் யாரிடமாவது சொல்லவேண்டும். இந்த நினைவுடன் கௌஸல் யையை அழைத்து அவளுக்கு சகல விருத்தாந்தங்களையும் அவர் சொன்ஞர். (781)

அந்த பழைய இதிஹாஸத்தைச் சொல்லும்போது, அரசர் வர்ணிக்கமுடியாத துக்கத்தை அடைந்தார். ராமவியோகம் அவரை வாட்டிக்கொண்டிருந்தது. நான் ராமனை விட்டுப் பிரிந்து இனி என் வாழ்க்கையை வாழ்ந்து என்ன பிரயோசனம்? இந்த சரீரம் ராமனின் அணைப்பிஞல் போஷிக்கப்பட்டது. அவன் கிருபாதிருஷ்டியின் ரஸத்திஞல் வளர்ந்த சரீரம். பிரேமை ரத்னமணி, ராமன் என் சமீபம் இல்லாதபோது, இந்ப் சரீரயாத்திரை மஹாவ்யர்த்தம். முனிவரின் சாபமும் வீணுகப் போய்விடாது. நான் பிராம்மண ப்ரியன். எனக்கும் ஹிதத்தை தேடிக்கொள்ளவேண்டும். பிராம்மண சாபம் அடைந்த இந்த சரீரம் ராமவியோகத்திஞல் மிக்க மலிந்து, என் பிராணன் போகும் நிலையும் வந்துவிட்டது. எதற்காக இந்த பாபமயமான சரீரத்தை மேலும் தாங்கவேண்டும்? எனக்கு இனி ஜீவ யாத்திரையிஞல் யாது பலன் இருக்கக்கூடும்? ஹே ராம நாராயணு!'' (782)

[தியானம்

ஹே ராமா நாராயணு, மஹாலக்ஷ்மி சமேத ஸ்ரீவத்ஸ நாராயணு, பாலையான சீதை பர்த்தாவின் விரலின் ஆபரணமான மோதிரத்தை எடுத்துப்பார்த்து தன் நாயகனை அடைந்தது போல எவ்விதம் ஆனந்தமடைந்தாளோ, ராமா, ஸ்ரீராம நாமம் எழுதின மோதிரத்தைப் பெற்ற விசாலாக்ஷியான சீதையி னுடைய சிவந்ததும் வெளுத்ததுமான அகண்ட கருணை பொங்கும் விழிகளைக்கண்டு, ராஹுவிஞல் விடப்பட்ட சந்திரனைப் போல ஆனந்தமடைந்த சீதையின் முகத்தைக் கண்டு ஆஞ்ச நேயர் ஆனந்தித்தாரோ, எந்த சீதை தன் நாயகன் ராமன் தன்மீதுள்ள பாசத்திஞல் காமத்திற்கு வசமாகி சீதையையே தியானம் செய்கிறவராகவும், அவளை அடைவதற்கு மனக்கவலை யடைந்தவராக இருப்பதைக் கேட்டு, வேறு ஒன்றையும் நினைக் காமல் தன்னையே நினைத்துக்கொண்டு இருப்பதை ஹனுமாரால் சொல்லப்பட்டு, மஹாலக்ஷ்மி அம்மா, எவ்விதம் ஆனந்தமடைந் தாளோ, எந்த பரமாசார்யரான ஹனுமாரைக்கொண்டு

ஸ்ரீராமனும் லக்ஷ்மணனும் சீதையும் ஆனந்தித்தார்களோ, அதுபோல நானும் உங்கள் நினைவால் அர்ச்சனை செய்வதால் தியானம் செய்வதால், உங்கள் ஹ்ருதயத்தை தர்ம வழியாக முயற்சியினால் அடைய மனக்கவலை அடைந்தவனாகயிருக்கிறேன். கிருபை செய்யவேண்டும். சம்ஹார காலத்தில் விளங்கும் க்ரோதாத்மன், ஸ்ருஷ்டிகாலத்தில் சக்தியுடன் கூடத் தோன்றும் வீர்யாத்மன், வேதங்களால் ஸ்தோத்ரம் செய்யப்படும் ஸ்தோத்ராத்மன், மஹாத்மாக்களான நாரதர் கௌசிகர்களால் புகழப்படும் அனந்தாத்மன், துளசிதாஸர், தியாகராஜர் போன்ற மஹான்களால் புகழப்படும் ஏகபத்னி வ்ரதன், ஏகபாண வீரன், ஏகவாக்யஸத்யன், என்னிடம் அன்பு காட்டவேண்டும். ஸர்வ லோக சரண்யா, ராகவா, நாராயணா, லக்ஷ்மிநாராயணா, கிருபை செய்.]

"ஹா ரகுநந்தனா, என் மனம் வாக்கு இந்திரியம் பிராணன் ஆகிய எல்லாவற்றிற்கும் எனக்கு சதா ஆனந்தத்தைக் கொடுக்கும் வள்ளலே, என் ப்ரியபுத்ரனே, உன்னைவிட்டுப் பிரிந்து சில தினங்கள் பல யுகங்களாக ஆகிவிட்டன. ஹா லக்ஷ்மணா, சுமித்திரையின் ஆனந்த ஸாகரமே, அந்த ஸாகரத்தில் எனக்கு பூர்ணசந்திரன்போலத் தோன்றினாயே, ரகுகுலத்தில் தோன்றிய ஸ்ரேஷ்டனே, என் பிரிய சுஜாதாவான ஜானகியே, (பத்ம யோனியே, பத்மஹஸ்தே ஸ்ரீதேவி, ரகுகுல ஸ்ரேஷ்ட ராமனிடம் நித்ய மங்களமாக வீற்றிருக்கும் ஜானகி) ராமா, என் தாபங்களைப் போக்கும் கருணாமய ரஸமே, சாதகபக்ஷிபோல வாடும் எனக்கு புஷ்களா மேகங்கள் வர்ஷிப்பதுபோல வர்ஷிக்கும் கருணை தாரையே, (என்னுடன் விளையாடும் க்ரீடாத்மன், நந்தினியிடம் உள்ள மஹர்விஸ்வாசத்தினால் கட்டப்பட்ட சுரபி), எனக்கு என் தாபங்களைப் போக்க உன் அம்ருதமயமானக்ருபா திருஷ்டிகள் எப்போது கிடைக்கும்?" (783)

கருத்து: "ஹே ராம், ராம் ராம, உன் ஒரு நாமமாகிய ராம தாரகத்தை ஒருதடவை உச்சரித்தால் நாராயண சப்தமானது எவ்விதம் ஐந்துவிதமான துக்கங்களைப் போக்குமோ; ஸகல துக்கங்களும் நாசமாகி, ஸஹஸ்ரநாமங்களையுடைய ஜனார்த்தனரை ஸ்தோத்ரம் செய்வது, அர்ச்சிப்பது, நமஸ்காராதிகளைச் செய்வது போல அல்லவா ஆகும் என்று சம்பு பார்வதியிடம் சொன்னார். (எனக்கு சுகம் எப்போது கிடைக்கும்? உன் பரம சௌந்தர்யமுள்ள பிம்பத்தை எப்போது எவ்விதம் நான் காண்பேன்? ஹே ராமா, ராமா, ராமா, நாராயணா, இந்த சரீரம் உன்னைவிட்டு

பிரிவதால் அதுவும் என் பாபச்செயல்களின் பலனுகை, பிராம்மண ஹிம்ஸையால் ஏற்பட்ட கடும் விபரீதகாலத்தின் தோஷத்தாலும் என் மஹா பொக்கிஷத்தை, ஸஹஸ்ரகோடி ஜன்மங்களின் சுக்ருதங்களின் பலனுகிய உன்னை ஸத்யம் என்கிற கயிற்றால் கட்டப்பட்டு அக்ரோதம், அலோபம், மாத்ஸர்யமின்மை, ஸகல பிராணிகளுக்கும் த்ரோஹமில்லாமல் வாழ்வது, உன்னைத்தவிர இதரவஸ்துக்களிலோ, தத்வங்களிலோ, மோஹமில்லாமை ஆகிய இவைகளுடன் கூடிய விமல புத்தியும் சாந்த ஆத்மாவுடன் எவ்விதம் உன்னைவந்து நான் அடைவேன்? அடையப் போகிறேன்? எனக்கு உன் கிருபைதான் வேண்டும். சீதா தேவியே, உன் புருஷகாரத்வம் வேண்டும். என்னுடைய அசுபமான காரியங்களிலோ சரீரமோ, மதியோ, ராகத்வேஷங் களால் விடப்பட்டு சாந்த ஆத்மனுக உன்னை எப்படிப்புகழப் போகிறேன்? எனக்கு குருகிருபை வேண்டும். ஆசார்ய ஹிருதயம் வேண்டும். ஆத்ம நிவேதனம் செய்த எனக்கு உங்கள் ஸம்ரக்ஷணம் வேண்டும். ஸகல கார்யங்களையும், கர்மாக்களையும் பகவத் அர்ப்பணம் பண்ணிய எனக்கு ராமா, உன் அனுக்ரஹம் வேண்டும். பாகவத கைங்கர்யம் செய்ய விரும்பும் எனக்கு பகவத் பிரஸாதம் வேண்டும். நாரதர், அஸிதர், தேவலர், மார்க் கண்டேயர், வஸிஷ்டர், ஜைமுனி, பைலர், வியாஸர், தேவஸ் தானர், சுகர், பராசரர், ஸாண்டில்யர், ஸமத்ரேயர், லோமசர், அத்ரி போன்ற ஸப்தரிஷிகள், அகஸ்தியர் போன்ற மஹாத்மாக்கள், பிருஹஸ்பதி, சுக்ரர், சியவனர், ஸனத்குமாரர், கபிலர், வால்மீகி, தும்புரு, மௌத்கல்யர், பார்க்கவரான ராமர், த்ருணபிந்து, பிப்லாதர், வாயு, ஸம்வர்த்தர், புலஹர், கசர், காஸ்யபர், காலவர், தௌம்யர், விபாண்டர், மாண்டவ்யர், உலூகர், ஆகிய ஸஹஸ்ர புண்யாத்மாக்களின் பரமக்ருபை பீஷ்மருக்கு கிடைத்தது போல, எனக்கு எவ்விதம் கிடைக்கும்? ஆசார்ய ஸம்பத்தின் விசேஷமல்லவோ நீயும் ஜானகியும்? ஹே ஜானகி ராமா, சீதாராம், உங்களை விட்டு, இந்திரன் ஆத்மவித்யையை விட்டுப் பிரிந்து எவ்விதம் வருந்துவானே, அதுபோல அல்லவா நான் தபிக்கிறேன்.) என் பூட்டுக்கள் என்னைவிட்டு அகலு கின்றன. என் சரீரம் வெப்பத்திஞல் தகிக்கப்படுகிறது. என் ஜீவயாத்திரை முடிந்துவிட்டது. என் அசுபமான மதிவிலகியது. நிர்மல ஹ்ருதயத்துடன் நான் ராமநாமத்தை ஸ்மரித்துக் கொண்டு, என் சரீரத்தை தியாகம் செய்கிறேன். என் வாழ் நாட்கள் போதும். இனி சீதாராமனை மீண்டும் அடைவதற்கு

முயற்சிப்பேன். இவ்விதம் பல தடவைகள் பலவிதமாக புலம்பிக்கொண்டு தசரதர் தன் சரீரத்தை, வாக்குக்களை, கர்மாக்களை, மனத்தை சீதாராமார்ப்பணம் செய்துகொண்டு உயிர் போகும்படி கீழே விழுந்தார்.)

தசரதர் "ராம, ராம் என்றூர், மீண்டும் 'ராமா!' என்றழைத்தார். மீண்டும் 'ராமா! ராமா!' என்றூர். பின்னர் 'ஹே ராமா!' என்றவாறே உடலைவிட்டு விட்டார். இராமனுடைய பிரிவினுல் தசரதர் உடலைவிட்டு தேவருலகைச் சென்றடைந்துவிட்டார். (784)

தசரத மஹாராஜா, வாழ்விலும் இறப்பிலும் நற்பயனைப் பெற்றுவிட்டார். அவருடைய புகழ் பிரம்மாண்டம் முழுவதிலும் நிரம்பிவிட்டது. உயிருடன் இருந்தபோது இராமனுடைய மதிமுகத்தைக் கண்டுகளித்தார். அவனைப் பிரிந்தபோது, அப்பிரிவையே ஒரு வியாஜமாகக் கொண்டு இறப்பை ஏற்றுக்கொண்டார், பெருவாழ்வு பெற்றுவிட்டார். (785)

(கருத்து: (ராமபிதாவாகிய தசரதர் வாக்குக்களால் புலம்பிக் கொண்டு, மரணத்தையடைந்தார். அவருடைய புலம்புதல்களின் சப்தங்கள் ஸகல பிரும்மாண்டங்களிலும் எதிரொலிகளாகப் பரவின. அந்த மஹாத்மாவினுடைய நிர்மலமான புகழ் கீர்த்திகள் எதிரொலி வரும்படி கீர்த்தனம் செய்யப்பட்டன. என்ன பாக்ய ஹ்ருதயம் படைத்த மஹாத்மா, துளசிதாஸர் சொல்லுகிறூர்.) "உயிரோடு இருக்கும்போது அவர் ராமச்சந்திரனுடைய பெயரைச் சொல்லி, அவனுடைய அழகை, முகாரவிந்தத்தை, அரவிந்தலோசனங்களை, அணைக்கும் தீர்க்க பாஹுக்களை, பாத ஸேவை செய்யக் கூடிய உத்தம விஷ்ணுவின் பாதங்களைப் பார்த்து, பார்த்து அனுபவித்தவர். இப்போது ராமவியோகத்திஞல் அதையே நிமித்தமான காரணமாகக்கொண்டு, அந்த வியாஜத்தால் தன் மரணத்தையும் தானே வரழித்துக் கொண்டார். வியோக கைங்கர்யத்தில் ஈடுபட்ட அரசர் நாராயண ஹிருதயத்தை சந்தோஷப்படுத்தினுர். இது வல்லவோ பரமஸ்ரேஷ்டமான பகவத் அனுபவம்; இதுவல்லவோ பகவத் ப்ரேமை, அனன்ய சரண்யன், அனன்யகதியாகிற நாராயணனையும் மஹாலக்ஷ்மியையும் சாஸ்வதமாக அடையும் வழி அல்லவா? அந்த பரம கைங்கர்யத்தை தசரத மன்னர் நாராயண ப்ரியனுகச் செய்துமுடித்தார்.")

[தியானம்

ஹே ராமா நாராயணு, பக்தப்பிரியா, சுதர்சன சக்ரகையுடன் வரதமுத்திரை கொண்டு, என்னைக் கட்டி காத்தருளும் பேரருளா, தேவேந்திரனின் விக்னங்களைப் போக்கும் வரதா, தீப்த மூர்த்தியே, அனந்த பௌருஷா பிரபுல்ல அரவிந்த விமல லோசனங்களை உடைய மஹா நாராயணு, யோகீஸ்வரா, பரா, மாதவா, உங்களை நான் நமஸ்கரிக்கிறேன், நாராயணன் பரப்ரும்மம், லக்ஷ்மி நாராயணன் பரம்தபஸ், நாராயணனே பரம உத்கிருஷ்டமான தேவன், ஸர்வமும் ஸதா நாராயணனே என்று விஸ்வாசம் வைத்து ஆத்மஸமர்ப்பணம் பண்ணிய நாரதர், பீஷ்மர், தர்மபுத்ரர், தசரதர், துளசிதாஸர், ஆஞ்ச நேயர், ராமானுஜர், அவர்களுடைய தாஸவர்க்கங்கள் காட்டிய வழியில் நடமாடும் என்னை அனுக்ரஹிக்கவேண்டும். துருவனைக் கட்டிக்காத்த சப்தரிஷிகள், உசானஸ் போன்ற மஹாத்மாக்கள் பிருஹஸ்பதி, குஹன், அம்பிகை, சிவன், விஷ்வக்ஸேனர் எனக்கு அனுக்ரஹம் செய்யட்டும். மார்க்கண்டேயர், நம்மாழ்வார், நாதமுனிகள், நந்தி, கருடன், அனந்தாதி, நித்யஸூரிகள் எனக்கு அனுக்ரஹம் செய்யட்டும். குணுகரன், புருஷோத்தமர் சப்தாதி விஷயங்களுக்கு மேற்பட்டவர். வியாஸபராசரசுகர் ஆகியவர்கள் அனவரதமும் தேடிய மஹாகுரு, அகில குரு. ஜிதேந்திரியனுன அர்ஜுனனைப்போல என்னை சரணுகதனுக அவன் அறிந்தருளவேண்டும். அவனைத்தவிர எனக்கு ஒன்றும் தெரியாது. அனன்யகதி அவன்தானே. என் துக்கக் கடன் களிலிருந்து விடுபட்டு, என் தேகமனுே வியாதி சமூஹங்களி லிருந்து விடுபட்டு, ஐயா, ஸர்வ பாவத்துடன், ஸர்வாத்ம ஸ்பாவத்துடன் கர்ம குணங்களிலிருந்து விடுதலை அடைந்த நான் தத்விஷ்ணோ: பரமம் பதம் என்று சொல்லப்படும் ஸநாதனமான பதத்தை நான் அடைய விரும்புகிறேன். நபுனர்பவம் என்கிற சம்சார கடலைத் தாண்டுதல் விஷயத்தில் பரமாத்மாவே ஜீவாத்மாவை ஸம்யோஜனம் செய்து அழைத்துச் செல்கிருன் என்கிற நியதிப்படி வைஷ்ணவ அனுஸ்ம்ருதியை நான் மஹாத்மாக்களான ஆசார்ய வழிகளால் கைப்பிடித்து, உந்தி தள்ளப்பட்டவனுக இருக்கிறேன். ஏக நிஷ்டரும் சாஸ்வதரும், அச்யுதரும், பரமாத்மாவுமான நாராயணரை லக்ஷ்மி ஸம்பூதராகவும், அனந்த விஷ்வக்ஸேன கருடாதி நித்ய ஸூரிகளுடன் நான் சரணம் அடைகிறேன். கிருபாதயாளு.]

ராணிகளனைவரும் சோகம் மேலிட்டு பெரியதாகப் புலம்ப லாயினர். அவர்கள் தசரத மஹாராஜாவினுடைய உருவத்தின் அழகையும், நற் பண்புகளையும், பல பராக்கிரமங்களையும் பெருமையையும் கூறிக்கூறி பலவாறு கதறி அழுதனர். அழுது அழுது தரையில் சாய்ந்து விழலாயினர்.

(தசரதரின் புலம்புதல், அந்திம நினைவுகள், வைஷ்ணவ அனுஸ்ம்ருதிகள், நாராயணனாகிய ராமனுடைய பரதத்வம் மஹாலக்ஷ்மியுடன்கூடிய நாராயணனுக்கு பிராட்டியின் புருஷ காரம், வைஷ்ணவ பதத்தின் மேன்மை, நபுனர்பவம் என்கிற ஆறுதலான சொற்கள் ஆகிய எல்லாவற்றையும் அறிந்து ஆத்மா தசரதரின் பூத உடலிலிருந்து பிரிந்து பகவத் கிருபையுடன் ஜோதிர் மயமாகச் செல்வதை கண்டார்கள், தசரதரின் பாக்யவதிகளான ராணிமார்கள். அவர்களுடைய துக்க வியோகம் தேக்கி வைக்கப்பட்ட மடைத் தண்ணீர் விடுபட்டு வெள்ள பிரவாகமாக ஓடுவதுபோல பெருக்கோடியது. (ஆம். எவ்வளவு மகத்தான துக்கம். ராமனும் ஜானகியும் ஆறுதல் சொல்வதற்குகூட பக்கத்தில் இல்லை. பரதனும் சத்ருக்னனும் இல்லை.) அரசனுடைய பூர்ண மகிமை பிரபாவங்களை முற்றிலும் அறிந்தவர்கள். அவருடைய ரூபசீல பலம் கொண்ட செய்கை கள், அவருடைய தேஜோ மயமான இதிஹாஸங்கள் யாவற்றை யும் ஒன்றுவிடாமல் சொன்னார்கள். புலம்பினார்கள். அவருடைய கீர்த்தி பிரபாவங்கள் அநேகம். காலத்தின் செய்கைகளை யாராலாவது சொல்லமுடியுமா? அவர்களும் விலலாபமடைந்து அநேக பிரகாரம் கத்தினார்கள். (கஜராஜனை விட்டுப்பிரிந்த கஜ பத்னிகளைப்போல அவர்கள் கதறினார்கள்.) பூமி தளத்தில் அடித்துக்கொண்டு விழுந்தார்கள்.) (786)

ராணிகளின் அலறுதல்களைக் கேட்ட தாஸ ஜனங்கள் வேலைக்காரர்கள், அவர்களும் அழ ஆரம்பித்தார்கள். இந்த துக்கம் அயோத்தி முழுவதிலும் ஒவ்வொரு வீட்டிலும் மக்கள் புலம்பலாயினர். புரவாஸிகள் அழ ஆரம் பித்தார்கள். "இன்று சூர்யகுலத்தின் தர்ம சின்னம், அயோத்தியில் உருவம் எடுத்து தர்மத்தைக் கைப்பிடித்து, குண நிசேதனாகவும் ரூப சௌந்தர்யத் தின் பொக்கிஷமாகவும் விளங்கின சூரியன் அஸ்தமித்து விட்டான்." (787)

"எல்லோரும் கைகேயிதான் இதற்கு பொறுப்பாளி என்று அவளைத் திட்டினார்கள். அவளால்தான் இந்த ஸம்சார இருள், அரசனில்லாத நாடு, ஞானமில்லாத குருடர்கள்போல் நாம்

ஆகிவிட்டோம்'' என்று அவளை வைதார்கள். இந்த பிரகாரம் விலலாபங்கள் ஏற்பட்டு அந்த ராத்திரியும் சோகத்துடன் கழிந்தது. விடிந்ததும் எல்லோரும் மஹா முனியான வஸிஷ்ட பகவானிடம் வந்து சேர்ந்தார்கள். (788)

அவர்களின் துக்கங்களைப் போக்குவதற்கு அந்த முனிவர் பல இதிஹாஸங்களைச் சொன்னர். அந்த ஞான ஸம்பத்தினுல் எல்லோரும் துக்கத்திலிருந்து விடுபட்டு, தங்கள் சோகத்தை விலக்கிக்கொண்டார்கள். (789)

அரசரின் உடல் முழுவதும் எண்ணெய் போன்ற வஸ்துக்களால் தடவப்பட்டது. வஸிஷ்டர் தூதர்களை அழைத்து "நீங்கள் வேகமாய் ஓடிப்போய், பரதனிடம் செல்லுங்கள். அரசன் இறந்த விஷயத்தை யாரும் அவனுக்குச் சொல்லக் கூடாது.'' (790)

"அவர்களிடம் நான் சொன்னதாகவும் "குரு ஆக்ஞைப் படி இங்கு அயோத்திக்கு உடனே வரவேண்டும்'' என்று தெரிவியுங்கள்.'' இந்தச் செய்தியுடன் அந்த தூதர்கள் வேகமாக ஓடினர்கள். வேகமாகச்செல்லும் குதிரைகளின்மேல் ஏறி பரதனிடம் சென்றுர்கள். (791)

[தியானம்

ராமா, நாராயணு, வரதேவலக்ஷ்மி, பரவாஸுதேவா, தசரதர், நாரதர், வியாஸர், சீதை போன்ற மஹா உத்கிருஷ்டமான ஜன்மம் எடுத்த பாகவத ஸ்ரேஷ்டர்கள், எந்த அவஸ்தையிலும் பகவத் ஸம்பந்தம் பெற்ற ஸத் ஸங்கத்தையே நாடினவர்களாக, அதன் மூலம் தங்களை ஆனந்தப்படுத்திக் கொண்டார்கள். பிராம்மண தலைவரான பெரியாழ்வாரும் ஆண்டாளும் அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்தை ஜய ஸ்ரீராதாவாக நினைத்து ஏறிட்டுக்கொண்டார்கள். இதன் மூலம் அனன்யார்ஹ சேஷத்வம், அனன்ய சரணத்வம், அனன்னிய போக்ய த்வம், ஸம்ஸ்லேஷத்தில் ஆறியிருக்கை, விஸ்லேஷத்தில் ஆறியிராமை, ததேக நிர்வாஹ்யத்வம் விளங்குகிறது. ஹே ராஜகோபாலா, ஸ்ரீவித்யா ராஜராஜேஸ்வரி, கருணும்பிகே, சாது ஜனஸம்ரக்ஷகி, சம்புவின் மஹாதேவி, உன் கிருபாகடாக்ஷம் வேண்டும். சுக்ராசாரியருக்காக சிவனிடம் பரிந்து பேசி அவருக்கு புத்ரத் தன்மையை வாங்கிக் கொடுத்த மஹா உத்தமி, நீயல்லவோ? பிரஹஸ்பதியினுல் இந்திராணிக்கு காட்டிக் கொடுக்கப்பட்ட பரபிரும்மமே, குஹனும் விஷ்வக்ஸேனரும்

அனவரதமும் தொழும் மஹாமாயே, என் அவித்யாதி தோஷங்கள் விலகி, விசுத்த ஆத்ம ஸ்வரூபத்துடன் பிராட்டியோடு ஸாம்யம் இயற்கையாகக்கொண்ட பரவாசுதேவனை நான் ஸர்வாத்ம பாவத்துடன், ஸர்வபாவத்துடன் சரணம் அடைகிறேன். கிருபாளு, தயாநிதி, வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற ஸத்பதே, பரிபூர்ண சந்திரன் போன்ற முகத்தை உடைய ஜானகியுடன் கூடிய பரிபூர்ணராமா, உனக்கு அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டுகள். உன்திருக் குழாத்திற்கு பல்லாண்டுகள் பாடுகிறேன்.]

அயோத்தியில் அரசனில்லாத நாடு, என்கிற குழப்பம் எப்போது ஏற்பட்டதோ, அது முதல் பரம பாகவத ஸ்ரேஷ்டனான பரதனுக்கு பல அபசகுனங்கள் கொத்துக்கொத்தாக ஏற்பட்டன. ராத்திரி வேளைகளில் பயங்கரமான ஸ்வப்னங்கள் ஏற்பட்டன. முழித்திருக்கும் வேளைகளில் பலவிதமான பயங்கரமான கல்பனைகள் ஏற்பட்டன. கோடிக்கணக்கான கடூரமான நினைவுகள் உண்டாயின. (792)

வரப்போகும் அநிஷ்டங்களை சாந்தி செய்யும் பொருட்டு, பரதன் தன் தம்பி சத்ருக்னனுடன் கூட விப்ரபோஜனம், இன்னும் பலவிதமான ஸ்ரேஷ்டதான தர்மங்ககளைச் செய்தான். பகவான் சம்புவை (ருத்ராபிஷேகம் சதருத்ரீயம், ரதாந்தர ஸாமம் ஜேஷ்ட ஸாமம், பிருஹத் ஸாமம் ஆகியவைகளால் ஆராதித்து) சந்தோஷம் செய்வித்தான். "என்பிரபு சம்பு ஆசுதோஷி. கருணையைக் கவசமாகக் கொண்ட தீர்த்த நாராயணன் என்னிடம் அன்புடன் இருக்கவேண்டும். அம்பிகையின் பதி என் பாபங்களையும் தோஷங்களையும் க்ஷமிக்கவேண்டும். தர்ம நிலையன்; ஞான பூர்ணன்; பக்தர்களின் மஹா பிரியன்; சப்த பிரும்மம்; கங்காதரன்; மஹா தேவர் என்னை ஹ்ருதய பூர்ணமாக க்ஷமித்து, கட்டிக்காத்து, என் மாதா பிதா, குடும்ப சகிதம், எனக்கு எல்லா ஸம்பத்துக்களாக விளங்குபவரும், சராசர குருவும், அகில லோக சரண்யனான ராமஜானகி, என் பிராதாக்களும், சகலரும் உன் தயவால் க்ஷேமமாக விருக்க வேண்டும். ஹே மஹேசரே, என்னிடம் தயை காட்ட வேண்டும். என் பரிஜனங்கள் உன் அருளால் குசல க்ஷேமத்துடன் இருக்கவேண்டும்." என்று வேண்டிக்கொண்டான். (793)

பாகவத அக்ரன், பரம பாக்யன், ராமனிடம் அத்யந்த விஸ்வாசம் கொண்ட பரதன் பலவிதமாக சிந்தனை செய்து கொண்டு இருக்கும் சமயம், அயோத்திலிருந்து புறப்பட்ட

தூதர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களை அவன் வரவேற்றான். அவர்கள் குரு மஹராஜ் வஸிஷ்டரின் கட்டளைப்படி செய்தியை அறிவித்தார்கள். பரதன் விக்ன ராஜரான கணபதியை மனதில் தியானித்த வண்ணம் எல்லாம் சுபமாக முடியவேண்டும் என்று வேண்டிக்கொண்டு அயோதிக்குப் புறப்பட்டான். (794)

வாயு வேகமான குதிரைகள், பலவித நதி, மலைகள் காடு வனாந்தரங்கள் எல்லாம் தாண்டி சுலபமாக பரதன் அயோத்திக்கு சென்றுகொண்டு இருந்தான். அந்த உத்தமனுடைய ஹ்ருத யத்தில் பலவித எண்ணங்கள் தோன்றின. அவனுக்கு வாழ்வதற்கேபிடிக்கவில்லை. அசுசிகொண்டவனாக, அவனை அறியாமல் பயம் சூழ்ந்துகொண்டது. அயோத்திக்குப் பறந்து ஓடிச்செல்லமாட்டோமா என்று நினைத்து வந்தான். (795)

ஒரு நிமிஷம் ஒரு வருஷக் கணக்காக ஓடியது. அந்த ஒப்புயர்வற்ற பரதன் அயோத்தியின் சமீபம் வந்து அடைந்தான். அவன் நகரத்தில் நுழையும்போதே அபசகுனங்கள் ஏற்பட்டன. அப்போது ஒரு காக்கை அசுபமான குரலை எழுப்பி சப்தித்துக் கொண்டிருந்தது. (796)

[தியானம்

ஹே ராமா சீதா நாராயணா, மஹாலக்ஷ்மி சமேத நாராயணா, ருக்மிணிகிருஷ்ணா, சத்யபாமாசமேத ஸ்ரீவாசுதேவா, நாரதர் சுகர்பராசரர் வ்யாஸாதிகள் கண்ட ஆதிதேவா. மார்க்கண்டேய ரால் நேரில் பார்க்கப்பட்ட பீஜ அவ்யயமே, கஜேந்திரனால் சொல்லப்பட்ட சாஸ்வதமான ஈஸ்வரரே, திருப்தரே தேவர்களும் ரிஷிகளும் உம்முடைய குணோத்தமங்களை வர்ணித்து திருப்தி அடைகிறார்களில்லை. கிரீடகேயூர மகரகுண்டலங்கள் அணிந்த வாஸுதேவா, பராசரர், இந்திரனால் புகழப்பட்ட மஹாபாகே, புஷ்கராக்ஷரே, பிரும்மபராயணரே, அர்ஜுனனால் கேட்கப் பட்டபோது நீர் கிருஷ்ணராகவும் காலமாகவும் சொல்லப்பட்டீர். ஹே ஹ்ருஷிகேசா, உம்மை ஜகந்நிவாஸர் என்றும் ஸதஸத்பரம் என்றும் நரர்போன்ற மஹரிஷிகள் அறிகிறார்கள். உம்மையே மனதில் தரிப்பவனாகவும் உம்முடைய பக்தனாகவும், உம்மையே யாசிப்பவனாகவும் உம்மையே பரம்பொருள் என்று நமஸ்கரிப் பவனாகவும் உம்மையே ஸ்வாமி, என் ஆத்மாவாகவும், உம்மையே பராயணமாக நம்பிவாழும் எனக்கு, வரபத்மநாபா, கேசவா, தாமோதரா, சிவபார்வதி தம்பதிகள், தியாகராஜர் போன்ற மஹான்கள் காட்டிய வழியில் நடமாடும் எனக்கு அனுக்ரஹம்

  

செய்யும். ஸர்வதோஷங்களையும் பாராமல் உமதுகிருபையை நான் அடையவேண்டும்.]

அயோத்தியில் பரதன் நுழையும்போது கழுதைகள் நரிகள் பயங்கரமாக ஓலமிட்டன. ஏதோ ப்ரீதிகூலம் நேரிடப்போகிறது என்று பரதனுடைய மனம் ஸர்வ சாக்ஷியாகச் சொல்லியது. மனத்தில் தோன்றிய எண்ணங்கள் ஸத்யம் என்று நம்பிவாழும் உத்தம பரதனுக்கு தனக்கு பெரும்கெடுதி ஸம்பவிக்கக் காத்திருக் கிறது என்று யூகித்து அதிவியாகுலமடைந்தான். குளம் குட்டைகள், நதிகள், வனங்கள், தோட்டங்கள் யாவும் தங்க ளுடைய இயற்கையான சோபைகளையிழந்து, ராமஹீனமான அயோத்தி போல பாழடைந்து தோன்றின. நகரமோ விசேஷ மான பயங்கர சூழ்நிலையில் அகப்பட்டு தவிப்பதுபோலத் தோன்றியது. (797)

பக்ஷிகளும், மிருகங்களும், குதிரைகளும், யானைகளும் ராம வியோகம் ஏற்பட்டதால் கடும் வியாதியால் பீடிக்கப்பட்டு தேகம் ஆத்மாவுடன் தவிப்பதுபோல விளங்கின. நகரத்திலோ ஸ்திரீ புருஷர்கள் அத்யந்த துக்கமடைந்தவர்களாக காணப்பட்டார்கள். ஸகல ஜீவன்களும் ராமசம்பத்தாகிற ஸகலமும் திருடப்பட்டு, நஷ்டப்பட்டு, மீண்டும் எவ்வளவு பிரயாசை செய்தபோதிலும் திரும்பிவருமோ வராதோ என்கிற பயத்தாலும் வாடிவதங்கி, வ்யாகூலமடைந்து மனத்தில் துக்கப்பட்டுக்கொண்டிருந்தார்கள். (798)

பரதன் எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டே வந்தான். அவனையும் அயோத்தியாபுரவாஸிகள் பார்த்தார்கள்; அவனிடம் ஒருவரும் ஒன்றும் பேசவில்லை; சும்மா நமஸ்கரித்துவிட்டு, தங்கள் வேலைகளில் ஈடுபட்டுக்கொண்டிருந்தார்கள். பரதனிடம் க்ஷேம விலாஸங்களைக் கேட்பதற்கு விருப்பமில்லாமல் உதாஸீனர்களாக இருந்ததைக் கண்டு, அவனுடைய மனம் பயத் தால் தாக்குண்டு விஷம் பரவியதுபோல தவித்தது. (799)

கடைத் தெருக்கள், ரஸ்தாக்கள் ஒன்றையும் பார்க்கக் கூடாமல் கோரமாக விளங்கின. நகரத்தின் பத்துதிக்குக்களிலும் கொடும் அக்னிபரந்து ஜ்வாலைவிட்டு எரிந்தால் எவ்விதம் அமங்களமாக விளங்குமோ, அதுபோல அயோத்தியையும் அதில் வாழும் புரவாஸிகளையும் பரதன் கண்டான். ஆனால் கைகேயி மாத்திரம் தன் புத்ரன் வந்துவிட்டதைக் கேட்டாள்; ஆனந்தப் பட்டாள். ரவிகுலத்தின் குமுதத்திற்கு சந்திரனைப்போல சந்தோஷமடைந்து விளங்கினாள். (800)

ஆம்; தன்பிள்ளை மஹாராஜாவாகப் போகிறான். சகல மங்களங்களுக்கு இருப்பிடமானவன். அவன் வந்துவிட்டான் என்று அறிந்து அதிக ஆனந்தத்துடன் மங்கள ஆரத்திகளை எடுத்து தயார்செய்து வரவேற்க எண்ணம் கொண்டவளாய் ஓடி, எல்லாம் தயார் செய்துகொண்டு, ராஜத்வாரத்தில் காத்துக்கிடந்து, பரத சத்ருக்னாதிகளை வரவேற்று உள் அழைத்துவந்தாள். ஆனால் பரதனோ சகலரையும் துக்கசஹிதமாகப் பார்த்தான். ஒரு பெரிய கமலவனம் பனியினால் மூடப்பட்டு அழிக்கப்பட்டதுபோல, ஸகல பரிவாரங்களையும் பார்த்தான். (801)

இந்த கைகேயி மாத்திரம் ஒரு பீல் ஜாதியைச் சேர்ந்த வேடுவ ஸ்திரி வனம் முழுவதும் தீயை வைத்துவிட்டு, ஆனந்த சுமையினால் நர்த்தனம் ஆடுவாளே, அதுபோல அதி ஆனந்தத்துடன் இருப்பதை பரதன் கண்டான். அதனால் கைகேயியோ தன் புத்ரன் சோகவசம் அடைந்திருப்பதைக் கண்டு, அவனுக்கு உத்ஸாஹத்தை கிளப்புவதற்கு, அவனைத் தழுவிக்கொண்டே கேட்க ஆரம்பித்தாள். "பையா, என் பிறந்த வீட்டில் எல்லோரும் சௌக்கியமாக விருக்கிறார்களா?" (802)

"ஆம் அம்மா. ஸகலரும் அதிசௌக்யமாக விருக்கிறார்கள். அம்மா, (உன் பிறந்த குலத்தினரின் க்ஷேமம் மாத்திரம் விசாரித்தாயே) சொல் அம்மா. என் அப்பா எவ்விதம் இருக்கிறார்? எங்கு இருக்கிறார்? என்னுடைய மற்ற மாதாக்கள் எங்கே? (என்னுடைய ஆத்மாவான) ராமலக்ஷ்மணர்கள் எங்கே அம்மா? என் பிரிய சகோதரர்கள் காணப்படவில்லையே? சொல் அம்மா" (803)

புத்ரனின் அதிஸ்நேகம் கொண்ட வசனங்களை கைகேயி கேட்டாள். கபடத்தினால் தன் நேத்ரங்களை கண்ணீரால் நிரப்பிக்கொண்டு, மஹா பாபியின் அவஸ்தையை த்ரோஹ சிந்தனையால் அடைபவள் போல, பரதனுடைய காதுகளில் கைகேயி மெதுவாகச் சொல்ல ஆரம்பித்தாள். அவளுடைய ஒவ்வொரு வசனமும் சூலம் கொண்டு பரதனுடைய மனத்தைப் பிளப்பது போலிருந்தது. (804)

"ஹே தாதா, உனக்காக நான் பிரயாசைப்பட்டு, ஒருத்தியாக எல்லாம் செய்து முடித்துவிட்டேன். பாவம், மந்தரை மாத்திரம் எனக்கு சகாயம் செய்தாள். ஆனால் காரியமத்தியில் என் ஆசை மூளியாகி, என் காரியத்தையும் அசுபமாக்கியது. பூபதியாகிற உன் பிதா தேவலோகத்தை அடைந்துவிட்டார். நம்மை விட்டு அவர் போய்விட்டார்." (805)

இந்த அசுபமான வார்த்தைகள் பரதனுடைய நெஞ்சில் விஷம் பாய்வதுபோல பாய்ந்து அவனைப் பிளந்தன. ஒரு பெரிய யானை ராஜசிம்மத்தின் கர்ஜனையைக் கேட்டு ஒடுங்குவதுபோல பரதன் அடங்கிவிட்டான். துக்கம் நெஞ்சை பிளந்துகொண்டு பீறிட்டு வந்தது. "அப்பா, அண்ணா, அப்பா அண்ணா, என்னை விட்டு அனாதையாகப் போய்விட்டாயோ? (எனக்கு சரீரம்) ஞானம், ராமபக்தி ஆகிய ஸகல சம்பத்துக்களையும் வாரி அளித்த, வள்ளலே, அகில குருவே, என் ஆத்ம பந்துவே, என் தோஷங்களையும் குற்றங்களையும் மறந்து (பரம அனுக்ரஹ மனத்துடன் ராமகைங்கர்யம்தான் வாழ்க்கையின் லக்ஷ்யம்,) ராம அனுபவம் தான் லக்ஷணம் என்று ஆசார பூதமாக எனக்கு சதா காட்டிக் கொடுத்த ஞானபாஸ்கரனே, எனக்கு வரலக்ஷ்மியாகவிருந்து ராமவரதனைக் காட்டிக்கொடுத்த என் பிதாவே, என்னை விட்டுப் பிரிந்து போனீரோ" என்று கதறிக்கொண்டு அதிவியாகுலத்தினால் பீடிக்கப்பட்டு பூமிதளத்தில் விழுந்தான். (806)

[தியானம்

ராமா, சீதா, நாராயணா, மஹாலக்ஷ்மி சமேத நாராயணா, உன்னை வந்து அடைந்த பின்பு ஐயா, உன் பிரியத்தை அடைந்த பின்பு, உன் பக்தனான பின்பு, சுப அசுபம் ஏது அப்பா? த்வந்தங்களிலிருந்து விடுபட்டவன் வைஷ்ணவதாஸன். சத்ருமித்ரன் இருவர்களுக்கும் சமன். மனிதன் மனித ஜன்மமில்லாதது என்கிற வித்யாஸமுண்டா? நிந்தை புகழ் ஆகிய எதற்கும் லக்ஷ்யம் உண்டா? ப்ரியம் அப்ரியம், கல் பொன் என்கிற வித்யாஸம் பார்ப்பானா? பரதன் ராமபக்தி கொண்டவன், தர்மத்தால் கட்டுப்பட்டவன். ராமனேபரம் தர்மம் என்று நம்பினவன். தர்ம ப்ராதனான பரதன் ஸ்ரத்தையுடனும் ராம பராயணனாக வாழ்ந்து, ராம பக்தியே சாஸ்வதமான பரம்தர்மம் என்று எனக்கு எடுத்துக் காட்டி என் ப்ரியனாக ஆகிவிட்டான். அப்பேற்பட்ட பரதாழ்வாருக்கு நமஸ்காரம்.]

பரதன் கதற ஆரம்பித்துவிட்டான். "அண்ணா, அப்பா, தாங்கள் உயிர்விட்டுப் பிரியும் சமயம், உம்மிடம், உமது சேவைக்காக, என் ஆத்ம திருப்திக்காக, இல்லாமல் போகும்படி அபாக்யவானாக ஆகிவிட்டேன். அதுமாத்திரமா, ஸ்ரீராமனிடம் என்னை ஒப்பிவித்து, அவனுடைய தாஸன் என்று உம்மால் பறையடிக்கப் பட்டு, அவனிடம் என்னைச் சேர்த்துக்கொள்ளாமல் அபாக்யத்தை அடைந்தவனாக, பெரும் துக்கத்தை அடைந்து

விட்டேனே. (எனக்கு எவ்வளவு தடவைகள் ராமனைப்பற்றி உபதேசித்தீர்கள். அப்பேற்பட்ட ஞான தீபனை நீர் உமது கையாலே, வாக்யஞத்தாலே, உமது வாத்ஸல்ய குமாரனாகிய ஸ்ரீராமனிடம் என் க்ஷேமப் பொறுப்பை ஒப்பிவித்திருந்தால் நான் நிர்பரனாக எவ்வளவு கிருதார்த்தனாக ஆகியிருப்பேன்?) இனி நான் சொல்லி என்ன பயன்? (ஞானம் துக்கத்தை நிவிருத்தி செய்வதில்லை. மிக்க பலமுள்ளதான இந்த துக்கம் ராம ஞானத்தைக்கூட கெடுத்துவிடும். பற்றுதல்களிலிருந்து விடுபட்ட யோகிகளும் முனிவர்களும், உலகம் நடைபெற வேண்டும், பகவானுடைய சேஷ்டிதங்கள் நடைபெற்று ஆக வேண்டும் என்கிற நோக்குதலுடன் சுகங்களால் சுகத்தையும் துக்கங்களால் துக்கத்தையும் அடைந்தவர்களாகின்றனர். புத்ர னிடத்திலும், ராஜ்யத்திலும், தாரங்களிடத்திலும், உற்ற உற வினர்களிடத்திலும், மோகம் என்கிற ஸ்நேகத்தை வைத்தவர்கள் சுகியாகவும் துக்கியாகவும் ஆகிறார்களன்றோ? பெரிதான இந்த ஸ்நேகத்தில்தான் இனி எனக்கு எது உசிதம்? ஆம் ராம கைங் கர்யம்தான் பெரிது. சரி. நம் மனத்தை திடப்படுத்திக்கொள் வோம்'' என்று தனக்குள் ஆலோசித்த) பரதன் அம்மாவிடம் சொல்ல ஆரம்பித்தான். ''அம்மா, பிதா மரணமடைவதற்கு காரணம், ஹேதுவாக இருந்தது என்ன? சொல்?'' (807)

கைகேயி தன் பிள்ளையின் வசனங்களைக் கேட்டாள். அவளுடைய வசனங்கள் பரதனுடைய மர்ம ஸ்தானத்தைப் பிளந்தது மாத்திரமின்றி தகிக்க முடியாத விஷத்தையும் அதில் திணிப்பதுபோல விருந்தன. குடில புத்தியுள்ளவளும் கடூர மன முள்ள கைகேயி மிக பிரஸன்ன மனத்துடன் முதலிலுருந்து பரதனுக்கு எல்லா விபரங்களைச் சொல்ல ஆரம்பித்தாள். (808)

பரதன் ஸ்ரீராமன் காட்டிற்குச் சென்றுவிட்டான் என்கிற விஷயத்தைக்கேட்டதும், தன் பிதா மரணம் அடைந்து விட்டதைக்கூட மறந்துவிட்டான். நான் தான் ராமன் வனம் சென்றதிற்கு காரணம். அதன் பிறகு அந்தக் காரணத்தினால் மரணம் அடைந்துவிட்டார் என்று அறிந்ததும் வாய் பேச முடியாமல் துக்கத்தால் ஸ்தம்பித்துப் போய் திணறிவிட்டான் பரதன். (809)

தன் புத்ரன் சோக வசமடைந்ததைக் கண்டு, கைகேயி அவனை சமாதானப்படுத்தும்படி மீண்டும் வசனங்களைச்சொல்ல ஆரம்பித்தாள். அவளுடைய வார்த்தைகள் சுட்ட புண்ணுக்கு உப்பு நீரை வார்த்தது போலவிருந்தன. கைகேயி சொன்னாள்.

"எதற்கு நீ அரசருக்காக வருந்துகிறாய்? உன் பிதா அப்பேற்பட்ட வருத்தத்திற்கு யோக்யமில்லை. அவர் கால தர்மத்தால் இறந்துபோய்விட்டார். அவர் அதி சுக்ருத புண்யங்களால் கடைசி நிமிஷம் வரை சுகபோகங்களை அனுபவித்தார். அது மாத்திரமின்றி, இந்த வாழ்க்கையிலும் அதி சுக்ருதங்களையும் சம்பாதித்தார்." (810)

"தன் ஜீவிய வாழ்க்கை பூராவும் சகல ஜன்ம சுக்ருதங்களையும் அடைந்தார். அதனால் கடைசியில் இந்திர லோகம் அடைந்தார். நீ அதைப்பற்றி வருத்தப்பட்டு என்ன பயன்? இனி நடக்கவேண்டிய விஷயத்தைப் பற்றி ஆலோசி. உன் பரிவாரங்களுடன் அரசாங்கத்தை நடத்தி பரிபாலித்துவா." (811)

அரச குமாரனாகிய பரதன் இதைக்கேட்டதும் ஸ்தம்பித்து போய் விட்டான். சுடும்புண்ணில் நெருப்புத் தணலைக் கொட்டியதுபோல அவனுக்கிருந்தது. தைர்யத்தை வரவழைத்துக்கொண்டு, தீர்க்கமாக மூச்சுவிட்டுக்கொண்டு சொல்ல ஆரம்பித்தான். "நீதான் பலவிதங்களாக நம் குடும்பத்தை நம் குலத்தையே நாசம் செய்துவிட்டாய்." (812)

[தியானம்

ஹே ராமா, லக்ஷ்மணா, பரதசத்ருக்ன ஜானகி ஸமேத ராமா, ஆஞ்சநேயர், நாரதர், தியாகராஜர் முதலியவர்களால் சேவிக்கப்பட்ட ராமா, உங்களுடைய ஸக்யம் எனக்கு அனவரதமும் வேண்டும். பாண்டவர்களுடன் எவ்வளவு பிராண ஸ்நேகம் கொண்டாடினாய்? நீ அன்பர்களை நேசிப்பவரும், பிராதாக்களை மிக்க மரியாதையுடன் நடத்துகிறவரும், எல்லா மங்கள குணங்களையும் உடையவனாக விருக்கிறாய். நீ எப்பொழுதும் தர்மத்தில் இருப்பவர்களை தர்மத்தில் விருப்பமுள்ளவர்களாகவும், ஒரே ஆத்மாவாகவிருந்து காப்பாற்றுகிறாய். எவன் ஆசையையும் கோபத்தையும் பின் பற்றினவனாகி அறியாமையால் குணவானை விரோதிக்கிறானோ, அவனை நீர் வெறுக்கிறீர். ஸ்வாமி, மனத்தை ஜயிக்காதவனும், கோபத்தை ஜயிக்காதவனும், எவன் கல்யாண குணங்களையுடைய ஞாதிகளை அறியாமையாலும் பேராசையாலும் பகைக்கிறானோ, அவனையும் நீர் வெகுமானிக்கிறதில்லை. ஸ்வாமி, எவன் மனத்திற்கு பிரியமில்லாதவனாக யிருந்தாலும், குணங்களுடன் கூடினவனாக விருந்து, பிரியத்தினால் வசம் செய்கிறானோ, அவனையும் நீர்

நேசிக்கிறீர். விதுரர் போன்ற மஹாத்மாக்களிடமும் பேரறிவாளர்களிடமும் வினய சம்பத்துக்களுடன் இருப்பவனையும் நீர் வெகுமானிக்கிறீர். ஐயா, அன்பினுலும், நன்மதிப்பினுலும் நட்பினுலும், புண்டரீகாக்ஷரே, விதுரர் கிருஷ்ணரை உபசரித்தும், கிருஷ்ணர் பாண்டவாதிகளையும் ஸவ்யசாசியையும் நேசித்தது மாதிரி நானும் உங்களை நேசிக்கிறேன். என்னிடம் தயை செய்யும்.]

(ஐயோ அம்மா, என் தர்மங்களையும், என்குடும்ப கௌரவத்தையும், குலயோக்யதைகளையும் பாழ்பண்ணிவிட்டாய். இவ்வளவு துர்புத்தியும், சிஷ்டமில்லாத நடத்தையும், துஷ்ட எண்ணம் கொண்டவளுமாய் கர்வத்தை அடைந்து எது நன்மை, எது தீமை என்கிற விவேகம் அழிந்து, காமத்தையே வடிவாகக் கொண்டவளும், தானே அறிவாளி என்கிற அபிமானத்துடன் ஞாதிமித்ரர்களுக்கு துரோகம் செய்பவளும், எல்லாரிடத்திலும் சங்கைப்படுகிறவளும், ஒரு நன்மையையும் மற்றவருக்குச் செய்யாதவளும், செய்நன்றி மறப்பவளும், தர்மத்தை விட்டவளும், மனஅடக்கம், இந்திரிய அடக்கம் இல்லாதவளும், பொய்யில் பிரியமுள்ளவளும், முட்டாளும், புத்தி திருத்தப்படாதவளும், காமங்களையே பிரதானமாக அனுசரித்து, மற்ற எல்லாக் காரியங்களிலும் உறுதியில்லாதவளாக, இவ்விதம் பல குற்றங்களுடன் விளங்கும் நீ என் மாதாவாக ஏன் இருக்கிருய்?) ஐய்யோ? உனக்கு இவ்வகை தீயதான விருப்பம் ஒன்று இருந்திருந்தால் என்னை நீ சிறுபருவத்திலேயே வெட்டிச் சாய்த்திருக்கலாம். துஷ்டபுத்தியுள்ள நீ மரத்தை வெட்டிவிட்டு, அதன் இலைகளைக் காக்கும் எண்ணத்துடன் ஜலம் விடுகிருயே! மீன்கள் உயிர்வாழும் நோக்கத்துடன் குளத்தில் இருக்கும் தண்ணீரையே எடுத்துவிட்டாயே? (என்ன காரியம் செய்திருக்கிருய்? எனக்கு ஹிதமா செய்திருக்கிருய்? என் வாழ்க்கையின் லக்ஷ்யங்களையே பாழ்செய்து விட்டாயே) (813)

"என் வம்சம், சூர்யவம்சம் அம்மா, (தர்மமே மதிப்பாகவும் பெரியோர்கள், குருமஹராஜர்களின் கட்டளையை சிரம்மேல் ஏற்று நடப்பவர்களும் அகாரியத்தில் லஜ்ஜை உடையவர்களும், ஸத்தியம், சாந்தகுணருமானவரும்) பிதாவுமாகிய தசரதர் மிக்க புகழ் உடையவர் அம்மா. (ஜலத்தை சுமக்கின்ற மேகம்போல நிகரான தான தர்மங்கள் உடைய மஹாராஜா,) ராம லக்ஷ்மணர்கள் போன்ற உத்தமர்கள் எனது ஸஹோதரர்கள். ஆனல் என்னைப் பெற்றெடுத்த தாயாக நீ தோன்றினையே

அந்தோ! பெற்றெடுத்த பர்வதத்தின் கொடிமுடிபோல் விளங்கும் உத்தமர் என்பிதா ஹா!! என்ன அக்ரமம். என்ன அக்ரமம். அப்பேற்பட்ட எனக்கு நீ என் மாதாவாகவும், அவருக்கு பட்ட மகிஷியாகவும் இருக்கிருய். உன்னைக் குறை சொல்லிப் பயன் என்ன? விதி எனக்கு சதி செய்து விட்டது, என்னைக் கேலி பண்ணுகிறது அம்மா'' (814)

"கெட்ட புத்தியுள்ளவளே! எவ்வளவு காலமாக நீ இந்த துர்புத்தியுடன் இந்த துர்விஷயங்களை உன் ஹ்ருதயத்தில் தேக்கிவைத்து நிறைவேற்றி நடத்த திட்டமிட்டிருந்தாய்? அப்பேற்பட்ட கல்நெஞ்சு படைத்த உன் உள்ளம் ஏன் துண்டு துண்டுகளாக வெடித்துப்போகவில்லை? நீ அரசரிடமிருந்து வரதானம் பெற்றுக்கொண்டாய், என்று சொல்லிக்கொள்கிருயே. உனக்கு எவ்வளவு நெஞ்சு அழுத்தம்? உனக்கு மனச்சாக்ஷி, தெய்வ நம்பிக்கை, தர்மத்தில் பற்றுதல் ஒன்றுமே இல்லையா? ஒருவிதமான பயமோ, லஜ்ஜையோ இல்லையே. திண்ணத் துடன் செய்து முடிக்கும் உனக்கு நாக்கு அறுந்துவிடவில்லையே? உனக்கு வாயும் அடைத்துப்போகப்படவும் இல்லையே?'' (815)

"என்ன, அம்மா, அரசர் உனக்கு அபசாரம் செய்தார்? அதைச்சொல். உன்னிடமோ அவருக்கு அபாரப்ரியம், அத்யந்த விஸ்வாசம். உன் ப்ரீதியையே பெரும் பாக்கியமாகக் கருதின உத்தமர். அப்பேற்பட்ட அரசர் உன்னை நம்பி, ஏமாந்துபோய் விட்டாரே? ஆம். இங்கேயும் விதிவிளையாடி நகைத்து விட்டது. மரணகாலத்தில் அரசருடைய மதியையும் விதி கெடுத்து விட்டது. இதிலிருந்து எனக்கு ஒன்று தெளிவாகிறது. ஸ்திரி களின் நடத்தையை நம்பி யாரும் வாழமுடியாது. கடவுளே வந்தாலும் அவர்களை அறிய முடியாது. கபடங்களும். பாபங் களும், சகல அவகுணங்களும் நிறைந்தது ஸ்திரியின் உள்ளம். அதன் கதி, போக்கு யாவராலும் அறியப்படுகிறதில்லை.'' (816)

"உனக்கு என்பிதா நேர் எதிரிடை. கபடமற்ற உள்ளம் உள்ளவர் என்பிதா. சுசீலமான நடத்தையுள்ள புருஷோத் தமர். என்பிதாவான தசரதர் விருப்பாலும் வெறுப்பாலும், பகையாலும், பொருள் நிமித்தத்தாலும், கபடத்தாலும், லோபத் தாலும், எவ்விதத்தாலும் அம்மா, எந்த அவஸ்தையிலும், ஆபத் திலும்கூட அம்மா, தர்மத்தை விடாத தர்மபராயணர். அப்பேற் பட்ட மஹான் எவ்விதம் கபட நடத்தையுள்ள ஸ்திரியை நம்பி, ஏமாந்திருக்காமல் இருக்க முடியும்? அந்தோ! இவ்வுலகத்து ஜீவராசிகளுள் எவருக்குத்தான் இராமன் தன் பிராணனைவிட

அதிகமான அன்பானவன் அல்ல? (எந்த ஜீவனுமே இராமனைத் தன்னுயிர்போல் நினைத்து அன்பு கொண்டிருக்க, நீ, ஒருத்திமட்டும் ஏன், இவ்வாறு இராமனிடம் தீய நினைப்பு கொண்டாய்? அவரைத்தவிர எந்த ஜந்துவிடம் என்பிரியதா அதிகப்பிரியம் காட்டினார்? நீயே சொல்லு அம்மா. அவரை, பிராணனுக்குச் சமமாக நினைத்துவந்தாரே.) (817)

"அப்பேற்பட்ட ராமன்கூட உனக்கு சத்ருவாகிவிட்டான். ராமன் தசரதர் இவர்களின் பெருமையையும் புத்தியையும் அறியாமல் அவர்களையும் பகைத்துக்கொண்டு விட்டாய். அகாரணமாக அவர்களை பகைப்பது உசிதமன்று. இவ்வித நடத்தையுள்ள நீ யார்? உண்மையைச் சொல். யாராய் இருந்தால் என்ன? காரியம் நடந்துவிட்டது. காலம் விதி மூலமாக என்னை அதிக்கிரமித்து விட்டது. நீ உன்முகத்தில் கருமையைப் பூசிக்கொண்டு என் திருஷ்டி பதத்திலிருந்து அகன்றுப்போ! எங்கேயாவது போய்விடு." (818)

"ஐயோ, என்னை கடவுள் ஏன் படைத்தார்? இவ்வித பாப உள்ளமுள்ள ராம விரோதியிடமிருந்து பிறந்த நான், என் பிறப்பு என்னை ஸ்ரீராமனுக்கு, என் பிரபு ஸ்ரீராமச்சந்திரனுக்கு த்ரோஹம் நினைக்கும் உள்ளத்தினனாக படைத்து கேலி பண்ணு வதுபோலிருக்கிறதே. காலத்தின் நோக்கிலும், உலகில் என்னை விட பாபி யார் இருக்கமுடியும்? ராமனுக்குத் த்ரோஹம் செய்த பாபியின் மகனாக அல்லவோ நான் பிறந்திருக்கிறேன்? உன்னை ஏன் நான் வீணாகக் குற்றம் சொல்லவேண்டும்? நானே பாபி! (ஒரே மதியாகவுள்ள இந்த தாயாரிடம் நல்லவார்த்தையோ கெட்ட வார்த்தையோ ஒன்றும் ஏராது. விவேகமில்லாதவர்களிடத்திலும் சண்டாளர்களிடத்திலும் தத்வத்தை உபதேசிக்கும் பிராம்மணன் போல அல்லவா, நான் ஆகிவிட்டேன்? அறியாதவர்களிடத் திலும், மரியாதை இல்லாதவர்களிடத்திலும் உண்மையான வார்த்தையை உரைக்கிறவன் நிந்திக்கத்தக்கவன். பாப புத்தியி னால் மோகத்தை அடைந்த இவள் நம்மிடமிருந்து நன்மை ஒன்றையும் கிரஹிக்கமாட்டாள். நம்மிடத்தில் இவளுக்கு சங்கை யிருப்பதால் நான் சொல்லும் வார்த்தையைக் கேட்கமாட்டாள். உறுதியுள்ள ஆசையினால் கவரப்பட்ட இவள் நம் வார்த்தையை லக்ஷ்யம் செய்யமாட்டாள். ஆகையால் இவளுடன் வாதாடுவதில் பயனில்லை. மொத்தத்தில் என் ஜன்மம் ராமனுக்கு விரோத யானால், நான் அவருக்கு த்ரோஹம் செய்தால், அது வ்யர்த்தி மான ஜன்மமாகிவிடும்) (819)

இவ்விதம் பரதன் தனக்குள்ளும் கைகேயியிடமும் வாக்கு வாதம் செய்துகொண்டிருக்கும் சமயம், இந்த பரதன் கைகேயி ஸம்வாதத்தைக் கேட்டுக்கொண்டிருந்த சத்ருக்னன் க்ரோதத்தி ஞல் தேகம் முழுவதும் வியாபிக்கப்பட்டவனுக தகித்துக் கொண்டிருந்தான். இனி என்ன சொல்லக்கூடும்? காரியம் மிஞ்சிவிட்டது. அந்த சமயத்தில் விதம்விதமாக அலங்கார பூஷணையாக கூனியாகிற மந்தரை வந்து கொண்டிருந்தாள். (820)

அவளைப் பார்த்ததும் லக்ஷ்மணனின் இளைய சகோதரன் சத்ருக்னன் கோபத்திஞல் ஆக்ரமிக்கப்பட்டவனுக, எரியும் தீயில் நெய்யின் ஆஹுதி விழுந்தாற்போல, கொதித் தெழுந்தான். அந்தக் கூனியைக் காலால் உதைத்தான். அவள் கதறிக்கொண்டு பூமியில் குப்புறவிழுந்தாள். (821)

அவளுடைய கூனு உடைந்துபோய்விட்டது. அவளுடைய கபாலம் உடைந்தது. பற்கள் உடைந்தன. வாயிலிருந்து ரத்தம் பெருகியது. அவள் கதற ஆரம்பித்தாள். "தெய்வமே, இது விபரீதமாக விருக்கிறதே. நான் என்ன கெடுதி இவர்களுக்குச் செய்தேன்? நான் செய்த பேருபகாரத்திற்கு நீதியான பலன் இதுதானு? என்ன அக்ரமம்!" (822)

[தியானம்

ஹே ராமா நாராயணு, லக்ஷ்மி நாராயணு, சீதாதேவி, பகவத் சேஷத்வம், பாகவத சேஷத்வம் ஆகிய இரண்டு வழிகளி லும் பகவானுடைய வடிவழகு, ஸ்ரீயக்குணங்கள், விபவம் ஆகிய எல்லாவற்றிலும், உன் "சேவடி செவ்வி திருக்காப்பு" என்கிற பகவத் விஷயத்திற்கும் "மங்கையும் பல்லாண்டு, சுடராழியும் பல்லாண்டு" "அப்பாஞ்ச ஜன்யமும் பல்லாண்டு" என்கிற பாகவத விஷயத்திற்கும் மங்களாசாஸனம் செய்த பெரியாழ்வார் போன்ற ஆழ்வாராதிகள், உபயசேஷத்வமும் வளர்வதற்கு ஹேதுவாய் விளங்கும் பரதசத்ருக்ன லக்ஷ்மண ஜானகி ராமா, பரவாஸுதேவா, உன்னை நற்செய்கைகளால் பாபங்களைப் போக்கி, ஸர்வவ்யாபியான உன் பாதாரவிந்தங்களில் பழுதில் லாமல் பணிசெய்து, உன்னுடைய அனுக்ரஹம் இல்லாவிட்டால் என்ஞல் எதுவும் செய்யமுடியாது, நீதான் உயர்ந்த புருஷார்த் தம், என்பதை ஞானத்திஞல் அறிந்து, உனக்கு நான் சேஷத்வம்கொண்டு, என் ஸ்வரூப ஸ்வபாவபிரவிருத்திகளை

உன்னிடம் அர்ப்பணம் செய்து, குருவினால் உபதேசம் செய்யப் பட்ட நான் "நீ ஸர்வக்ஞர், ஸர்வசக்திமான், பரமபுருஷன்" எனக் கருதி "என்னுடைய கர்மானுஷ்டானப் பிரவிருத்திகளை உன்னிடம் அர்ப்பித்தேன். ஸமர்ப்பித்தேன். மோக்ஷம் என்கிற நித்யமான பலனை நாடுகிறவனாக, பரவாஸுதேவா, எல்லா ஜீவர் களிடமும் அந்தர்யாமியாகவிருக்கும் விபோ, உன்னை நான்கு மூர்த்திகளான வாஸுதேவ, ஸங்கர்ஷண, பிரத்யும்ன, அநிருத்த ராக விவரணம் செய்து, பிரணவத்தின் அக்ஷரங்களை நன்றாக அறிந்து, பஞ்சகால ப்ரகிரியை, நித்ய தர்மகர்ம அனுஷ்டானங் களால் உன்னை அனுபவித்து பரப்ரும்மமாகிற உன் அனு பவத்தை," "என்றென்றும் அவன் சேவகமே ஏற்றிப் பறை கொள்ளும்படிக்கும்," இதுவே எனக்கும் வைஷ்ணவ தாஸர்க ளான பாகவத சிரோண்மணிகளுக்கும் பரமதத்வம், பரமஹிதம், பரம புருஷார்த்தம், ராமனே ஸகுண பிரும்மம், அவனுக்கு என் பிராணன், கண், மனம், காது, சரீரம் போன்ற ஐந்து பூதங் களின் சேஷ்டிதங்கள், வாக்கு ஆகிய எல்லாவற்றையும் அடைக் கலம் செய்து, பரமாத்மாதான் ஸகல ஜீவர்களிலும் அந்தராத்மா என்று தெளியத்தெரிந்து, நிஷ்காம்ய கர்மாவாகிற ஸாத்விக தியாகத்தினால் எம்பெருமானைப் பெறும் பலவழிகளில் பிரபத்தி என்கிற வழியை அனுசரித்து வாழும் பரதாழ்வானுக்கு நமஸ்காரம் செய்கிறேன். அப்பேற்பட்ட பாகவத சிரோண்மணி எனக்கு கைகொடுத்து, என் கர்மங்களை மாற்ற, எனக்கு பிரும்ம ஞானத்தைக் கொடுத்து, பகவானின் பெருமைகளை அறிய வைக்கவேண்டும். இதுவே சாரீரக சாஸ்திரமாகிற பிரும்ம ஸூத்ரமும் அதைப்பற்றின தச உபநிஷத்துக்களும் அல்லவோ. அப்பேற்பட்ட ஞானபாஸ்கரர்களான பரதாழ்வாரையும், சத்ருக்னனையும் முன்னிட்டு, பகவான் நித்யஶ்ரீயுடன் விளங்கும் ஶ்ரீபரவாஸுதேவனை நான் சரணம் அடைகிறேன். ராஜ கோபாலா, நீதான் எனக்கு குரு, எனக்கு ஸர்வசாக்ஷி. ஸர்வ ஸஹே.]

மந்தரையின் வசனங்களைக் கேட்ட சத்ருக்னன் அவளை காலிலிருந்து தலைவரை துஷ்டத்தனம் நிறைந்தவள் என அறிந்து கொண்டான். பின்னர் அதி கோபவசமடைந்தவனாக, அவள் தலைமயிரைப் பிடித்து இழுத்துச் சென்றான். அப்போது கருணைக்கடலாகிய என் வைஷ்ணவ தாஸன், பிறர் துக்கத்தைக் கண்டு சகியாதவன் பரம அபராதிக்கும் கருணை காட்டும் நிதி யான பரதன் மந்தரையின், தீன ஸ்திதியைக் கண்டு ஓடிவந்து

அவளை விடுவித்தான். பிறகு இரு சகோதரர்களும் கௌஸல்யை வசிக்கும் இடத்திற்குச் சென்றார்கள். (823)

அகில லோகத்திற்கும் ஹிதம் செய்வதற்காக ராமனைப் பெற்றெடுத்த பாக்யவதியான கௌஸல்யாதேவி அழுக்கு வஸ்திரத்தை தரித்துக்கொண்டு, முகத்தின் காந்தி குன்றி வெளிறு நிறம் அடைந்தவளாக, அதிதுக்கத்தினால் பீடிக்கப்பட்டு அந்த புத்ர ராம, பர்த்தா வியோகத்தினால் தகிக்கப்பட்டவளாக விளங்கினாள். உடம்பெல்லாம் ஒடுங்கிப்போய், மன உத்ஸாஹங்கள் இழந்து, எவ்விதம் தங்க நிறமுள்ள கல்பதரு, வனத்தில் பனியினால் நாசம் செய்யப்பட்டு அனாதரவுடன் விளங்குமோ, அதுபோல அந்த புண்ணியவதி விளங்கினாள். (824)

பரதனைக் கண்டதும் மாதாவான கௌஸல்யை எழுந்தாள். அவனைத் தழுவிக்கொள்ளுவதற்காக ஓடிவந்தவள் மூர்ச்சித்து கீழே விழுந்தாள். அவளைக் கண்டதும் பரதனுக்கு பயமும் வியாகுலமும் அதிகரிக்க தன்னை மறந்து அவளுடைய பாத சரணங்களில் விழுந்து மூர்ச்சித்தவனாகவும் தயையை வேண்டுபவனாகவும் விளங்கினான். (825)

பரதன் கதற ஆரம்பித்து விட்டான் "என் அம்மா என்னை ஆட்கொள்ள வந்த பெருந்தேவியே, என் பிதா எங்கு இருக்கிறார்? அவரிடம் நான் செல்லவேண்டும். எனக்கு அவரைக் காண்பி. என் பிராதாக்களான ராம லக்ஷ்மணர்கள் எங்கேயிருக்கிறார்கள்? சீதா தேவி எங்கே அம்மா? ஏன் அம்மா, கைகேயியாகிற என் தாயார் பிறந்தாள்? அப்படி பிறந்தபோதிலும் பிள்ளையைப் பெறாத மலடியாக அவள் இருந்திருக்கக்கூடாதா? இது பரவாஸுதேவனுடைய திருவுள்ளமா?" (826)

"அந்த கைகேயி என் குலத்திற்கு களங்கமாகிவிட்டாள். எனக்கு அபயசசைக் கொடுத்துவிட்டாள். என்னை என்னுடைய பரிஜனங்களுக்கும் ஞாதிகளுக்கும் விரோதியாக்கிவிட்டாள். என்னை எல்லோருக்கும் த்ரோஹம் செய்யும் பாதகன் என்று சொல்லும்படி அவள் ஆக்கிவிட்டாள் அம்மா. என்னை ஏன் அம்மா அவள் புத்ரனாக பரவாஸுதேவன் படைத்தான்? என்னைப்போல பாபி மூன்று உலகங்களிலும் இல்லை. சகல சராசரங்களிலும் அபாக்யவான் இருக்கமுடியாது. அப்பேற்பட்ட கைகேயினால் தாங்களும் அல்லவா இந்த கோரமான ஸ்திதிக்கு வரப்பட்டீர்." (827)

"என் பிதா தேவலோகத்தை அடைந்துவிட்டார்; என் பிரிய பந்துவான ரகுவரன் காட்டை அடைந்துவிட்டான். நான் ஒரு

தூமகேதுபோல எல்லோருக்கும் அனர்த்தத்தை விளைவிப்பவனுக ஆகிவிட்டேன். அம்மா நான் பிறந்தது வீண். என்னுல் யாவருக்கும் கெடுதி. மூங்கில் காட்டை தீ எரிப்பதுபோல நான் நம் ரகுகுலத்தையே எரித்துவிட்டேன் அம்மா. அதன் பலனுக துக்கத்தால் பீடிக்கப்பட்டு எல்லோராலும் தூஷணம் செய்யப்பட்டு, மரியாதை இழந்து, ரகுகுலத்தின் பாதகத்தையும், ராம த்ரோஹத்தை சின்னமாக வைத்து விளங்குகிறேன். (என் பிரிய ராமனுக்கு பலத்த அபராதியாக ஆகிவிட்டேன் அம்மா. எனக்குப் பிராய சித்தமே கிடையாது. என் பிறப்பினுல் என் மாதா எனக்கு நிரந்தரமான இழிவைத் தேடித்தந்தாள். யாராலேயும் ஒன்றும் செய்யமுடியாது. நான் இறக்கும் தருணம்வரை, இது என்னுடன் ஒட்டிக்கொண்டுதான் இருக்கும்.) (828)

[தியானம்

ராமா, நாராயணு, மஹாலக்ஷ்மி சமேத நாராயணு, ஜானகி ராமா, தபஸ்ஸை நம்பி தபஸ்ஸினுல் பகவான் நாராயணனை அடைந்து, தியான யோகத்தினுல் சுத்தமடைந்து பிரஸன்ன மனத்துடன் ஆத்ம சிந்தனையில் ஈடுபட்டு, வாழ்வேன். ராம தியானமே யோகம், எனக்கு என்று ஒன்றும் கிடையாது. அஹங்காரம் கிடையாது. எனக்கு என்று வாழாமல் அவ்யக்தம் மஹத் என்கிற சப்தத்தால் அழைக்கப்படுவதுமான பிரும்மத்தை சிந்தித்து உத்தமமான லோகங்களை அடைவதற்கு முயற்சி செய்வேன். நிர்முக்தனுக கேவலம் ஸத்வ குணத்தை அவலம்பித்தவனுக, ஸர்வ பாபங்களையும் ஸர்வத்வந்தங்களிலிருந்தும் விடுபட்டு, க்ஷேத்ரக்ஞன் என்று சொல்லப்படும் வேதமும் ஆத்ம வித்யையாகிற உயர்ந்த அறியப்படவேண்டிய ரஹஸ்யத்தையும் நான் அறிவேன். சித்தத்தை ராம சிந்தனையில் அடக்கி ஒரு முனியைப் போல வாழ்வேன். குஹ்யமானதும் ராம மயமாக வாழ்வதும் ஸநாதனமான தர்மம் அல்லவோ? அவ்யக்தமான பொருளும், அதி விசேஷங்களுடன் கூடியதும் அவித்யைகளைப் போக்குவதும், எப்போதும் ஷ்ருதி ஸ்மிருதமாகிறதும், குணலக்ஷணங்கள் பொருந்தியதும், அச்யுதனும் கேசவனுமாகிற நாராயணனை நம்பி வாழப்போகிறேன்'' என்று சங்கல்பம் செய்த பரதாழ்வானையும், பகவத் கைங்கர்யத்தைவிட பாகவத கைங்கர்யம் செய்த சத்ருக்னனையும், இருவர்களையும் நாடிய கௌஸல்யை, சுமித்திரை போன்ற வைஷ்ணவ தாஸர்களையும் நான் நமஸ்கரிக்கிறேன்.]

பரதனுடைய மிருதுவான வசனங்களைக் கேட்ட மாதா கௌஸல்யை சிறிது தேறினவளாக எழுந்திருந்தாள். பரதனை எடுத்து அணைத்துக் கொண்டாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது. அவளால் பரதன் சமாதானம் அடையச் செய்யப்பட்டு, அவனும் எழுந்திருந்தான். அவனும் கௌஸல்யையை தழுவிக்கொண்டு அழுதான். அவளும் அழுதாள். (829)

கௌஸல்யையின் சரள ஸ்வபாவம், மாதாவினுடைய அன்பின் பிரபாவம், கௌஸல்யையின் அணைப்பு, இயற்கையாகவே அன்பு கொண்ட உள்ளம் ஆகியவைகளால் மூழ்கடிக்கப்பட்ட பரதன் ஸ்ரீ கௌஸல்யையின் அணைப்பில் ஸ்ரீராமனே திரும்பி வந்துவிட்டது போல எனக்கும் துளசிதாஸருக்கும் விளங்கினான். அதன் பிறகு கௌஸல்யை சத்ருக்னனையும் இறுகத் தழுவிக் கொண்டாள். அவளுடைய ஹிருதயத்தில் சோகமும் அன்பும் அடங்காமல் ததும்பிப் பெருகியது. (830)

கௌஸல்யையின் அபார ஸ்நேக வாத்ஸல்யத்துடன் விளங்கும் ஸ்வபாவத்தைக் கண்டு, ஒவ்வொருவரும் சொல்லிக் கொண்டார்கள். "ஸ்ரீராமனைப் பெற்றெடுத்த தாயாகிய இவளுக்கு இவ்விதமான பெரும் பண்பு ஏன் இருக்காது?" கௌஸல்யை பரதனை தன் மடியில் இட்டுக் கொண்டு, அவனுடைய கண்ணீர்களை துடைத்து, கோமளமான வசனங்களால் ஆறுதல் செய்தாள். (831)

"என் குழந்தாய் நீ நன்றாக இருக்கவேண்டும். உனக்குத் தீங்கொன்றும் நேராமலிருக்க மனத்தை அடக்கி, துக்கத்தைப் பொறுத்துக் கொள். தைரியமாக இரு. இது கெட்டகாலம் என்று எண்ணி சோகத்திற்கு இடம் கொடுக்காதே. நீயும் நானும் ஒன்றும் செய்வதற்கில்லை. காலத்தின் தர்மமும், அவரவர்களின் கர்ம கதியும் எவராலும் அதிக்ரமிக்கமுடியாது. ஆகவே உள்ளத்தில் வேதனை அடையாதே. அழிந்து விட்டதாக நினைக்காதே. (ஆயிரம் பசுக்களின் நடுவில் கன்று தன் தாயை வந்து அடைவது போல), அவரவர்களின் கர்மகதி எவரையும் எந்த ஸ்திதியிலும் கட்டாயம் வந்து அடைந்துவிடும். அதனால் யாரையும் நிந்திக்காதே. (832)

"என் அப்பனே! யாருக்கும் தோஷம் கிடையாது. இது எவராலும் உண்டாக்கவில்லை. ஆகையினால் ஒருவருடைய குற்றமும் இதில் கிடையாது. கடவுள் என்னைக் கஷ்டப்படும்படி நியமித்து விட்டார். இவ்வளவு துக்கங்கள் வந்த பின்பு என்னை

கடவுள் உயிருடன் விட்டிருக்கிறார். இதிலிருந்து அவருடைய திருவுள்ளம் என்ன விருக்கிறதோ தெரியவில்லை.'' (833)

[தியானம்

ஹே ராமா ஜானகி, மதுசூதனா, புருஷோத்தமா, ஸூர்ய சந்திர நக்ஷத்திரங்களால் ஆகாயத்தை சரீரமாக உடைய வ்யவஸாயரே, காலரூபமாகிற வ்யவஸ்தானரே, அறுபத்து நான்கு கலைகள் கொண்ட பூர்ண மூர்த்தியே, ஸர்வாத்மன், ஸர்வஸத்வ மனோரதரே. விஸ்வம்பரனே, ஸ்ரீயின் ஈசரே, ஸ்ரீயக்காந்தரே, ஸ்ரீவத்ஸமார்பா, கருணை கொண்ட பெரியபிராட்டியின் பதியே, அகஸ்தியரால் உபதேசம் செய்யப்பட்ட சூர்யநாராயணா, உமையினால் அர்ச்சிக்கப்பட்ட ராமா, சிவனால் ஞான ஐஸ்வர்யம் ஆகக் கருதப்பட்ட உமா, அவள் பதி ஆகிய இருவர்களையும் முன்னிட்டு ராமா, சீதையாகிற என் ஆஸ்ரித வாத்ஸல்யர்களை சரணமடைகிறேன்.]

''என் பிரியமான பரதா, உன் பிதாவின் ஆக்ஞையின் பிரகாரம் ஸ்ரீரகுவீரன் பூஷணம், பட்டு பீதாம்பரங்களை, தியாகம் செய்துவிட்டு வற்கலத்தை அணிந்துகொண்டு வனம் சென்று விட்டான். அவனுடைய ஹ்ருதயத்தில் துளிக்கூட வருத்தமோ, சந்தோஷமோ யாதும் கிடையாது.'' (834)

''அவனுடைய முகம் எவ்விதமான விகாரமின்றியும், முகமும் மனமும் ஒருவித மாறுதலின்றியும், பிதாவின் கட்டளைப்படி, நடந்தான். '' அவனுடைய முகத்தின் காந்தி குறையவில்லை. பிரஸன்ன மனத்துடன், மனத்தில் சந்தோஷத்துடன், ஒருவித ரோஷமுமின்றி, அவன் எல்லாவகையிலும் எல்லோரையும் சந்தோஷிப்பிவித்து, (என் போன்ற தாய்மார்களுக்கும் நியாயமான சமாதானங்களைச் சொல்லிவிட்டு, என் குழந்தை ராமன்) வனம் சென்றான். அவன் வனம் செல்லப்போகிறான் என்று கேட்டு, என்று அந்த பெண் சீதை ராம ஸ்நேகத்தைப் பெரிதும் விரும்பி அவனுடன்கூட வனம் சென்று விட்டாள். (அவளுடைய விரதமாகிற ராம சரணங்களே தனக்கு அனுராகமானது, ரொம்ப பிடித்தமானது என்று அவள் நிரூபித்துவிட்டாள்.) இராமனது திருவடிகளில் அசையா அன்பு கொண்டிருக்கும் சீதை எவ்விதத்திலும் (அவனை விட்டு) தனித்திருக்க இசையவில்லை.'' (835)

'' அவர்கள் வனம் செல்லப்போகிறார்கள் என்று கேட்டதை அறிந்து லக்ஷ்மணனும் தானும் அவர்களுடன் போவேன் என்று பிடிவாதமாகச் சென்றுவிட்டான். ரகுநாதன் அவனைத் தடுத்து

அயோத்தியில் இருக்கும்படிக்கும் உனக்கு ஒத்தாசை செய்வதற்கும் சொல்லிப்பார்த்தான். ஆனால் அந்த லக்ஷ்மணன் பிடிவாதமாக யிருந்துவிட்டான். அதன் பிறகு ரகுபதி எல்லோருக்கும் தலையினால் வணங்கி, ஆசீர்வாதங்களுடன் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் வனம் சென்றுவிட்டான்.'' (836)

'' அந்த மூவரும், ராமனும் லக்ஷ்மணனும் சீதையும் வனம் சென்றுவிட்டார்கள். நான்தான் துர்ப்பாக்கியவதி. அவர்களுடன் நானும் செல்லவில்லை. என் பிராணனையும் அவர்களுடன் அனுப்பாமல் இங்கு தங்கிவிட்டேன். இப்பேற்பட்ட துக்கங்களைப் பார்த்து அனுபவிக்க வேண்டுமென்று ரங்கநாதன் திருவுள்ளம் கொண்டுவிட்டான். என்னைப்போல அபாக்யவதி, சரீரத்தைத் தரித்துக்கொண்டு பூமியில் நடமாடுவதின் பயன் யாது ?, ஒன்றுமில்லை.'' (837)

'' என் பிரியம், என் புத்ர வாஞ்சை, புத்ர ஸ்நேகம், என் புத்ரனாகிற ராமனுடைய உதாரகுணத்திற்கும், சுபமான நடத்தைகளுக்கும், ஸதாசார புருஷோத்தமனாகிய ராமனுக்கு ஈடு இல்லாமல், லஜ்ஜைபட்ட மனத்துடன் காலத்தை விருதாவாக கழிக்கிறேன். என்னைவிட பூபதி ராமனை நன்றாகப் புரிந்துகொண்டவர். அவருடைய ஹ்ருதயம் எவ்விதம் ராமனுடன் வாழவேண்டும்; ராமனை விட்டு வியோகம் ஏற்பட்டால் எப்படி சாகவேண்டும் என்று புரிந்துகொண்ட உத்தம ஞானி. ராமனே பரமார்த்தம் என்று சீதை, லக்ஷ்மணன் புரிந்துகொண்ட மாதிரி அவர் புரிந்துகொண்டுவிட்டார். ராமனின்றி வாழவிரும்பாத பூபதி என்னைவிட பாக்யசாலி. என் மனம் ஆயிரக்கணக்கான வஜ்ரங்களின் கடுரத்தனத்தை அடைந்துவிட்டது.'' (838)

'' என் பிரபு, உத்தம ஞானி.'' பரம பாகவதனாகிற பரதன் உயர்ந்த தத்வார்தங்கள் கொண்ட கௌஸல்யாதேவியின் வசனங்களைக் கேட்டான். பரம வைஷ்ணவ பக்தன். பரதனுக்கு அழுகை அழுகையாக வந்தது. தானும் அந்த சமயத்தில் அயோத்தியில் இல்லாமல் மாமாவின் வீட்டிற்குச் சென்றுவிட்டோமே என்று துக்கம் மேலிட்டவனாக அழுதுகொண்டிருந்தான். சத்ருக்னனும் அழுதுகொண்டிருந்தான். அவர்களின் தீனஸ்திதியைக் கண்டு, ஸகல ராணிமார்களும் அழுதவண்ணமாக விருந்தார்கள். ஸகலரும் வியாகுலம் அடைந்து, ராஜகிருஹம் முழுவதும் சோகத்தின் நிவாஸம் போல விளங்கியது. (839)

[தியானம்

ஹே ராம ஜானகி, நாராயணு, மஹாலக்ஷ்மி சமேத ரங்க நாதா, உமா சம்பு, பிருஹஸ்பதியினுல் ஆராதிக்கப்பட்ட ஹவ்ய கவ்ய வாஹனு, ஸப்த நாக்குகள் (ஜிஹ்வா) கொண்ட அக்னியே, சூர்யம் ஸோமம் ஹுதாஸனம் ஆகிய மூன்று நேத்ரங்களைக் கொண்டு, உலகத்தை சம்ரக்ஷிக்கும் நித்ய தம்பதிகளே, விஷ்வக் ஸேனரே, கேசவரே, வேத மூர்த்தியான ஹயக்ரீவரே, புஷ்கர க்ஷேத்திரத்தில் சாவித்திரியுடன் விளங்கும் பிரும்மதேவரே, பிராம்மண ஈஸரே, சரணம். உங்களுடைய ஆசீர்வாதங்களும் அனுக்ரஹமும் அனவரதமும் வேண்டும். வேதவியாஸ பகவானு டைய காருண்யமய அனுக்ரஹமும், பிரஸாதமும் வேண்டும்.]

பரதன் சத்ருக்னன் ஆகிய இரு சகோதரர்களும் மிகவும் வேதனையடைந்தவராய் விலவிக்கலாயினர். அந்த சமயம் அவர் களுக்கு ஆறுதலாக கௌஸல்யாதேவி அவர்களை அணைத்துக் கொண்டாள். அநேக பிரகாரம் பரதன் " தனக்கு ஒன்றும் தெரி யாது, தன்னுல் இவ்வளவு அனர்த்தங்கள் ஏற்பட்டுவிட்டதே, அயோத்தியில் தானில்லாதது விபரீதமாக முடிந்து விட்டதே" என்று பலவிதங்களாக அங்கலாய்த்துக்கொண்டு அநேக விவேக மயமான வசனங்களைச் சொல்லி, கௌஸல்யையும் மற்றவர்களை யும் ஆஸ்வாசப்படுத்திஞன். (840)

(எவ்விதம் தர்மபுத்ரர் பாரத யுத்தம் ஆனபின்பு சோகவச மடைந்து, ராஜ்ய பராமுகனுக இருந்த சமயம், வேதவியாஸர் நாரதர் போன்ற மஹான்கள் அவரை ஆஸ்வாசப்படுத்திஞரோ, அதுபோல) பரதனும் எல்லா தாய்மார்களுக்கும் புராண இதி ஹாஸ கதைகளையும், வேதங்களின் கதைகளையும் எடுத்துச் சொல்லி, ஒவ்வொருவரையும் தேற்றிஞன். தன் இரு கைகளையும் கூப்பிக்கொண்டு, பரதன் பவித்திரமானதும் களங்கமில்லாதது மான பாபங்களைப் போக்கும் வசனங்களைச் சொல்ல ஆரம்பித் தான். (841)

"மாதா பிதாக்களைக் கொன்ற புத்திரனுக்கு எந்த பாபம் கிட்டுமோ, எந்த பாபம் கோக்கள் வசிக்கும் இடத்தையும் பிராம்மணர்கள் வசிக்கும் இடங்களையும் அக்னியை வைத்து எரித்ததால் சம்பவிக்குமோ, எந்த பாபம் ஸ்திரிகளையும் பாலகர்களையும் வதம் செய்வதால் நேரிடுமோ, எவன் தன்னுடைய மித்ரனுக்கும் அரசனுக்கும் விஷம் கொடுத்து கொல்கிருனே, அந்த பாபங்கள், (842)

கர்மவசன மனஸ் இந்திரியங்களால் ஏற்படும் உப பாதங்கள், பெரியவை சிறியவை ஆகிய எல்லாம் கவிகளும் பௌராணிகர்களும், ரிஷிகளும் விவரித்துச் சொல்லியிருக்கின்றார்களோ, "பிரும்மாவே, நான் மோஹத்தின் வசமடைந்து, ராஜ்யத்தின் ஆசையினால் ஜானகிராமனுக்கு த்ரோஹம் செய்ய எண்ணமுள்ளவனாக, என் தாயுடன் சேர்ந்து இந்த சதி செய்திருந்தால், அந்த பாபங்கள் எல்லாம் என்னை சூழ்ந்து அடையட்டும்." (காமவசனாகவும், க்ரோதவசனாகவும் நான் ஆகி என் சஹோதரன், என் பிராணன், என் பிரபு ஸ்ரீராமசந்திரனுக்கு த்ரோகம் செய்ய எண்ணத்துடன் என் தாயுடன் சேர்ந்து சதி செய்திருப்பேனாகில், எனக்குப் பிராயசித்தம் இல்லாத பாதகங்கள் என்னை வந்து அடையட்டும். என் தாயே, நான் பொய் சொல்லாமல் அக்னி, வாயு, சூரியன், ஸோமன், தினம் பகல் ராத்திரி, பக்ஷிங்கள், ருதுக்கள், ஆகாயம், பூமி, பகவான் நாரயணன் ஆக ஸர்வ சாக்ஷிகளாகவிருக்கும் ஸகலரும் முன்பே, பிரதிக்ஞை செய்கிறேன். என்னை நம்புங்கள். என் வசனங்களுக்கு கௌரவம் செய்யுங்கள்.) (843)

"எந்த பாபாத்மாக்கள் பகவான் விஷ்ணுவாகிய ஸ்ரீஹரியையும், உமாபதியான ஹரனையும் தன் ஆத்ம பாவத்தினால் அவர்களைச் சரணமடைந்து வழிபடாமல், அலக்ஷ்ய புத்தியுடனும் கர்வத்துடனும், அஹங்காரத்துடனும் வாழ்கிறார்களோ, எவர்கள் பயங்கரமான பூதகணங்களை வழிபட்டு, காலத்தைக் கழிக்கிறார்களோ, அவர்களுடைய கதியை, இந்த ராமன் வனவாசம் செல்வதற்கு நான் உடந்தையாகவிருந்தேனாகில், எனக்கு விதி அளிக்குமாக." (புண்ய நதிகளாகிற கங்கை யமுனை காவேரி, கிருஷ்ணா, வைகை, கோதாவரி, தாம்பரபரணி ஆகிய நதிகள், புஷ்கர பிரபாஸம் ஆகிற புண்ணிய தீர்த்தங்கள் என் பாபங்களைப் போக்காமல் மஹா பாதகங்களால் சூழப்பட்டு நான் அவதிப்படவேண்டும். ஹே பிரும்மா, சாவித்திரி, பிராம்மண தேவதைகளே, ஸப்தரிஷிகளே, காயத்திரி சாவித்திரி சரஸ்வதி ஆகிற வேத மந்திரங்களே, அவர்களுடைய கதி எனக்கு சம்பவிக்கப் படட்டும்.) (844)

"எந்த மனிதன் வேதங்களை விற்கின்றனரோ, ஸநாதன தர்மங்களையும், வேதத்தில் சொல்லப்பட்டவைகளும், பெரியோர்களால் அனுஷ்டானம் செய்யப்பட்ட தர்மங்களைத் துறந்து, தானே தமக்குத் தோன்றியபடி கர்ம வசனங்களைச் செய்கிறார்களோ, தர்மானுஷ்டானம் செய்வதால் உலகில் பயனைப்

பெறலாமென்று அத்தர்மத்தைக் கறக்கின்றனரோ, தங்கள் பாபங்களை மறைத்து பிறருடைய பாபங்களைப் பறைசாற்றுகிறார்களோ, வேதங்களினால் ஆத்ம பலத்தை அடையாமல், அவைகளை விற்று ஜீவிக்கிறார்களோ, கபட புத்தியும் குடில புத்தியும் உள்ளவர்களாகி கலஹ ப்ரியர்களாகவும் மித்ர த்ரோஹிகளாகவும், காமம், லோபம், க்ரோதம், மதம், மாத்ஸர்யம் இவைகளால் தாக்கப்பட்டு வேதங்களை நிந்தித்து, சகலருக்கும் விரோதியாகப் பீடிக்கிறார்களோ. (845)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, மஹாலக்ஷ்மி அம்சமான சீதாதேவி, காயத்ரி சாவித்திரி சரஸ்வதி அம்சமாக விளங்கும் பரதேவதே, உன்னுடைய மஹத் பிரும்ம குண கீர்த்தனம் செய்கிறவள் ஒருக்காலும் துக்கத்தை அடைகிறதில்லை. துக்க பேஷஜரான உன்னை அச்சுதன் என்று ஆராதித்தால் பரமாம்கதி என்று சொல்லப்படும் பரம வைஷ்ண பதத்தை அடையலாம். நாரதர் புஷ்கரக்ஷேத்ரத்தில் உன்னை ஆராதித்து ஸித்தி பெற்றார். கமலவாஸினி, மாலினிமந்திரத்தின் அதிதேவதையே, சூலினி, உன் கிருபா கடாக்ஷம் பெறும் ஜீவகோடிகள் மாதா பிதாக்கள் கொடுக்கும் செல்வம்போல எதை வேண்டுமானாலும் அடைகிறார்கள். மீனலோசனி, என் பந்தங்களை அறுக்கும் பாசமோசினி, உன் நினைவுதான் ஸர்வாத்ம நினைவு. உன் அர்ச்சனைதான் பிரஜாபதியாகிற பிரும்மா விஷ்ணுவை ஆராதிப்பதுபோல விருக்கிறது. இந்திரியங்கள், வாக்குக்கள், கர்மங்கள் இவைகளுக்கு அதீதமானவள் நீ. உன்னுடைய வைஷ்ணவ தேஜஸ், சூரியனுடைய தேஜஸ்ஸைவிட அதிதேஜஸ் கொண்டது. உன்னுடைய சாவித்திரி ஜபத்தை அதிகுஹ்யம் என்று பராசராதி முனிவர்கள் கருதுகிறார்கள். விஸ்வாமித்திரர் என்கிற கௌசிகர் உன்னை ஆராதித்ததால் தர்மஸ்வரூபத்திலிருந்த வஸிஷ்டரிடமிருந்து அனுக்ரஹம் பெற்றார். காமக்ரோத மதலோப மாத்ஸர்யங்களை இழந்து தன்னடக்கமுள்ளவனும் நாராயண பராயணர்களான உன் பக்தகோடிகள், அப்பா அம்மா, உங்கள் இருவர்களையும் புராண ரிஷியென்றும், புருஷஸப்தத்தினாலும், யுகங்களில் தோன்றும் பிரும்ம ப்ரோக்தம் என்றும், யுகங்கள் க்ஷயமாகிறபோது ஸங்கர்ஷணன் என்றும், உபாஸிக்கிறார்கள். நீதான் அர்ஜுனனுக்கு ஏகமானதுபோல, எனக்கு ஏகமும் பஹூ ஆத்மாக்கள் உள்ளதாயும்,

அடிக்கடி தோன்றுகிறவர்களாகவும் அதோக்ஷஜராகவும், வித விதமாகவும் தோன்றுகிறீர்கள். உங்களை நான் அடைய பக்தி யுடனும் கிரியைகளுடனும் ஸர்வகாமதனுகவும் பூஜிக்கிறேன். என் தோஷங்களை க்ஷமிக்கவேண்டும்.]

"எந்த லோபிகள், பகவத் ஆராதனை விஷயத்தில் திருப்தி உள்ள மனம்கொண்டு, மதமாத்ஸர்யம், கோபம் ஆகிய அசுப மான மதியினுல் பகவான் வாஸுதேவரை ஆராதியாமல், அசிரத்தையுடன் இருக்கிருர்களோ, அவர்களின் பாபங்களை நான் அடைவேன் அம்மா. பிறருடைய பொருளையும் பிறர் மனையையும் அபஹரிக்க வேண்டும் என்று நோக்குகின்றவர் அடையும் பாவத்தை நான் அடைவேனுக."

[கருத்து: சர்வசாக்ஷிகளாக விளங்கும் பூர்வதக்ஷிண பஸ்சிம உத்தர என்கிற கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு ஆகிற திக்குக்களே, ரஹஸ்யமாக பிறர்களின்மீது அசூயைகொண்டு அவர்களை வாழவிரும்பவைக்காமல், பகவத் ஸ்ருஷ்டிக்கும் பகவத் ஆராதனமாகிய கைங்கர்யத்திற்கும் ஸர்வ ஆத்ம பாவமாக வாழாமல், அவன், அந்த பரமன், உதார ஹ்ருதயத்துடன் ஸ்ருஷ்டித்த சகல ஜீவராசிகளுக்கும் த்ரோக எண்ணத்துடன் கெடுதல் விளைவிக்கும் நோக்குடன் அவர்களைப்பற்றி குறை குற்றம் சொல்லுபவனும், பிறர்களிடம் அவதூராகப் பேசி கோட்சொல்லி அவர்களின் விருத்தியை தடுக்கும் பாபங்களை நான் ராமனுக்கும் ஜானகிக்கும் த்ரோகம் செய்ய நினைத்திருந் தால் அடைவேன். எனக்கு பகவத் உள்ளத்தின்படிக்கும் கர்மகதிகளின்படி நியாயமான பலன்களை அடைவதில் திருப்தி ஏற்படாமல் கர்மஞான பக்தி ஸ்வரூபமாக விளங்கும் உமா மஹேஸ்வரர்களின் தர்ம ஸம்வாதங்களில் நம்பிக்கை வைக்காமல் அதிக பேராசை கொண்டு, கர்ம துரந்தரனுகவும் தர்மங்களின் ஆசார அனுஷ்டானங்கள் வேதங்களால் சொல்லப்பட்ட படிக்கும் பெரியோர்களால் மிக்க சிரமத்துடனும் சிரத்தையுடனும் அனுஷ்டிக்கப்பட்டிருக்கிறபடிக்கும் பிறர்களுக்கு ஆசார்ய சிஷ்யமார்க்கமாய் உபதேசிக்கப்பட்டபடியும், தர்மங்களை சிரத்தையுடன் அனுஷ்டானம் செய்யாமல் அலக்ஷ்யம் செய்ப வர்களின் பாபங்களை நான் ராமத்ரோஹம் செய்திருந்தால் அம்மா, என்னை வந்து அடையட்டும். எனக்கு கிடைத்தது பகவத் ஆக்ஞை என்கிற நம்பிக்கை கொள்ளாமல் மேலும் ஆசை கொண்டு தர்மவிரோதமாக நடக்கும் பேராசைக்காரனின் பாபங்கள் எனக்கு ஸத்யவாதிகளும் கண்ணுக்குப் புலப்படாத

ஸர்வ பூதங்களின்மேல் ஆணையாக, எனக்கு வரட்டும். பிறருடைய தனத்தைக்கண்டு ஆசைப்பட்டு மனம் வெந்து, மனமுறுகும்படி ஈரிஷை கொண்டும், தனக்குக் கிடைத்த ஸ்திரியின் தாம்பத்ய சந்தோஷத்தைக் கொண்டு திருப்தி பெறுமல், பரஸ்திரிகளை அடைய விரும்பும் காமாந்தகனுடைய பாபங்கள், ராஜாவும் பிராதவுமான என் பிரபு ராமச்சந்திரனுக்கு நான் த்ரோஹம் செய்திருப்பேனுகில் எனக்கு அவைகள் சம்பவிக்கட்டும்.'' (என்னை ராமனைப்போல பரிபாலிக்கும் தாயே, கௌஸல்யாதேவி, எல்லாபிராணிகளிடத்திலுமுள்ள யாகம் தானம் முதலிய நற்கருமங்களையும், பாவங்களையும் நோக்கும் ம்ருத்யு காலன், விஸ்வேதேவர்கள், ஆகிய தேவஸ்ரேஷ்டர்களும் பித்ருக்கூட்டங்களும் தவத்தையே தனமாக உடைய முனிவர்களும், தவத்தினுல் மோக்ஷத்தைக் கருதும் ஸித்தர்களும், தேகமெடுத்துக்கொண்டு என்னைப் பார்க்கிருர்கள். அவர்களும் கேட்கட்டும். என் அம்மாவாகிய கைகேயி செய்திருக்கும் காரியத்தில் எனக்கு ஏதாவது பங்கு இருக்குமாகில், அதில் என் சம்பந்தம் இருக்குமாகில் எனக்கு கோரமான பாபங்கள் பாதகங்கள் என்னை வந்து அடையட்டும். நானும் கோரமான கதியை அடைவேன்.) (846)

''ஸாதுக்களுடைய சேர்த்தியில் அன்புகொள்ளாதவர்கள், பரமபுருஷார்த்தமென்னும் மோட்சத்தை அடைய விரும்பாது அதற்கு எதிராக இருப்பவர்கள், மனித சரீரத்தைப் பெற்றும் ஹரியை நினையாது பகவானிடத்து பக்திகொள்ளாது வாழ்வை வீணே போக்குகின்றவர்கள், ஹரி, ஹரன்—இவர் தம் புகழை மதிக்காது வெறுப்புணர்ச்சி கொண்டவர்கள் அடையும் பாபம் எனக்கு உண்டாகுக.''

[கருத்து: எந்த பாப ஆத்மாக்கள் விஷயபோகங்களில் மன இச்சைகொண்டு, பகவானுடைய உள்ளத்திற்கு சேவை செய்ய விருப்பமில்லாதவர்களாகி, சம்சாரிகளின் மனத்தை அடைந்து தங்களுக்கு யதேச்சையாகக் கிடைத்த ஸாதுக்களின் சங்கத்தை விரும்பாமல், மீண்டும் சம்சார சுழல்களில் அனுராகம் கொண்டு, ஸர்வ ஆத்ம பாவத்துடன் கோவிந்தன், அச்சுதன், ஜனர்த்தனர், நாராயணர், யக்ஞபதி, யோகேஸர், விஷ்ணுவாகிற ஜகத்பதிதான் பரமார்த்தம், அவரே தபஸ், அவரே தபஸ்ஸின் பலன், அவரே ஸர்வமும் என்று நேரான ராஜபாட்டையில் போகாமல், அந்த பரமாத்மஸ்வரூபத்திற்கு த்ரோஹ சிந்தனையுடனும், விமுகர்களாகவுமிருக்கும் பாபிகளுடைய பாபங்கள் என்னை

வந்து சேரட்டும். பகவான் நாராயணரால் மஹா அனுக்ரஹத்து டன் கொடுக்கப்பட்ட இந்த சுபமான மனுஷ்ய சரீரம் அந்த பக வானுகிற ஹரிக்கு உபயோகப்படாமலும், அந்த ஹரி பகவான் மிக்கப் பிரியமாக நேசிக்கும் மங்கள கீர்த்திகள் உடைய உமாபதி யான சங்கரரையும் பூஜிக்காமல், அவர்களிடம் விரோதம் கொண்டு, அவர்களை ஆராதிக்காமல், ஆத்மசுத்தியுடன் உமைக்கு வந்தனம் செய்யாமல் இருக்கும் விஷய போகிகளுடைய பாபங் கள் என்னை வந்து சேரட்டும்.) (847)

"அம்மா, வேத மார்க்கங்களைப் புறக்கணித்துவிட்டு, வேதங் களில் சொல்லப்பட்டதும் வர்ஜிக்க வேண்டிய தர்மங்களையும் கர்மாக்களையும் பிணக்குப்பண்ணி செய்பவர்களின் பாபங்கள் நான் ராமச்சந்திரனுக்கு த்ரோஹம் செய்திருக்குங்கால் என்னை வந்து சேரட்டும். பிறர்கள் தங்களைப் புகழவேண்டும் என்கிற நோக்கத்துடன் வஞ்சகமாக வேஷம் போட்டு ஜகத்தை ஏமாற் றும் பாபிகளின் பாபங்கள் என்னை வந்து சேரட்டும். நான் மோஹத்தின் வசமடைந்து உங்களிடம் நல்லவன் போலவும், நிச்சயமான வேஷதாரியாக ஏமாற்றிப் பொய்சொல்லி உங்களிடம் நான் நிரபராதி என்று நினைக்கும் பொருட்டு, இந்த வசனங் களையும் கர்ம ஸ்வரூபங்களையும் பாப ஸ்வரூபங்களையும், பிராய சித்தமுடைய பாபங்கள், பிராய சித்தமில்லாத பாதகங்கள் எல்லாம் என்னை வந்து அடையட்டும். அம்மா, நான் உன்னையும் சர்வ சாக்ஷியான ராமனையும் சாக்ஷிகளாக வைத்துக் கொண்டு, பிரதிக்ஞை செய்கிறேன். (எனக்கு இந்த விஷயத்தில் பங்கு ஒன்றும் இல்லை. எனக்கு ராமபக்தி அதிகம் என்று உங் களுக்குத் தெரியும். நான் வெறும் வேஷதாரி இல்லை. நான் சொல்வது பொய்யாக இருக்குமாகில் என் பிரபு உமா மஹேஸ்வரர் எனக்கு கடும் தண்டனை கொடுத்து என்னை கோர மான கதிக்குத் தள்ளட்டும். ஆயிரம் தடவைகள் சொல்கிறேன் அம்மா.) (848)

[தியானம்

நாராயணா, ரங்கநாயகி ஸமேத ஸ்ரீரங்கநாதா, உமையுடன் ஸதா ஆனந்திக்கும் கூத்தபிரானே, சம்போ மஹாதேவா, கௌரி, மஹாலக்ஷ்மி, ஏன் இந்த ஜன்மம் எனக்குக் கொடுத்தாய்? உன் கிருபையின்றி நான் எவ்விதம் இந்த ஜன்மத்தை தாங்குவேன்? ராமா ஜானகி, நீங்கள் இருவர்களும் எனக்குப் பிராண ஜீவனர் களல்லவா! தர்மத்திற்காக படைக்கப்பட்ட இந்த சாதனமாகிற

சரீரம் உங்களுக்கு உபயோகப்படவேண்டும். உங்களை மறந்து, உங்களுக்குத் த்ரோகம் செய்ய என் பிறப்பு ஹேதுவானதே? கோடி லாவண்ய சுந்தரா, கோடிகோடிக்கணக்கான மன்மதர்கள் சேர்ந்தும் ஹரி பகவானே, உன் அழகுக்கு ஈடு இல்லையே, உன்னோடு உரையாட முடியாத இந்த ஜன்மம் எதற்கு? உன் முத்து மாலை, நவதுளசி மாலை ஸ்ரீவத்ஸம் ஸ்ரீதரன் ஆகிய மார்பு பிரதேசத்தைப் பார்க்கவும், உன் பால் வடியும் திருமுக மண்டலத்தை சதாகாலமும் காணமல் காணாத ஜன்மம் எதற்கு எனக்கு? உன்னோடு கூடப்பிறந்த பாக்யத்தை அனுபவித்த பரதனுக்கு அந்த கொடூரமான பிரிவைக் கொடுத்து, அவன் மேல் பழி சுமத்திய இந்த மானிட ஜன்மம் எதற்கு? அப்பா அம்மா, உன் கண் ஜாடைகளான இங்கிதங்கள், சங்கீத மர்மங்கள் பாவங்கள் தெரிந்த எனக்கு உங்களை அணைத்துக்கொள்ளாத ஜன்மம் எதற்கு? சேஷசயனம் கொண்ட பத்மநாபா, அர்ஜுனனுக்கு காக்ஷி கொடுத்த ஹ்ருஷிகேசா, தியாகராஜர், பரதன் துளசிதாஸர், ஆஞ்சநேயர் போன்ற மஹான்களுக்குச் காக்ஷி அளித்த ஹே விஷ்ணோ: காருண்ய ஸிந்தோ, யானையையும் பிரஹ்லாதனையும் காத்த ஹரி பகவானே, உன்னையும் ஜானகியையும் காண உள்ளம் உருகி, கண்ணீர் விட்டு அவன் விஸ்வகர்ப்பன் என்று எண்ணி வாழும் எனக்கு, பிரும்மா இந்திரன் முதலானவர்கள் கூட தபஸ் செய்தும் அகப்படாமல் இருக்கும் மஹா நாராயணன் ஸ்ரீநிகேதன், என்னை கைவிட்டு விடுவானோ? அத்யந்தப் பிரேமையுடன் ஸத்தியவந்தன், வேங்கட வரதன், ரங்கநாதன் என்னை மோர்ந்து பார்த்து தடவிக்கொடுத்து அணைத்துக் கொள்ளமாட்டானா?]

தாயாகிய கௌஸல்யாதேவி பரதனது கபடமற்ற உண்மையான வாக்குக்களைக் கேட்டு, அவனுக்குக் கூறலானாள். "அப்பனே! நீ மெய், வாய், மனம் மூன்றினாலும் இராமனுக்கு அன்பன் ஆவாய். அப்பா பரதா, என் ராமன் உனக்கு பிராணனைக் கொடுப்பவர் என்று எனக்குத் தெரியும் (உனக்கும் எனக்கும் மாத்திரமல்ல, ஸகல ஜீவராசிகளுக்கும் உயிரைக் கொடுத்து, ஆத்மாவை உய்விக்கும் ப்ராணதர். உன்னைப் பார்த்து ராமன் சந்தோஷப்படுகிறான். அவனைப்பார்த்து நீயும் அவனிடம் சந்தோஷத்துடன், அடங்கியிருப்பாய். என் பிள்ளை ரகுபதி உன்னைப் போன்ற பாகவத ஸ்ரேஷ்டர்களுக்கு ப்ராண த்ருக், என்று சொல்லப்படும் ஜீவாத்மாக்களைப் போஷிக்கும் தாய் தந்தைபோல விருப்பவர். அப்பேற்பட்ட ரராமனுக்கு நித்திய

கைங்கர்யம் செய்ய ஆசைப்படும் உனக்கு ராமர் பிரியதரிசனர்.) சந்திரன் அம்ருத கிரணங்களால் விஷத்தை கக்கினுலும் கக்கிடுவான். மூடுபனி நெருப்பைக்கூட கக்கினுலும் கக்கலாம். தண்ணீரில் வாழும் பிராணிகள் ஜலத்தைக்கூட தியாகம் செய்யலாம். (849)

ஞானமடைந்த சீலன் மீண்டும் மோக்ஷத்தின் வசம் அடையலாம். ஆனுல் எனக்குத் தெரியும் பரதா, நீ ஒருக்காலும் ராமனுக்கு பிரதிகூலமாய் நடக்கமாட்டாய். எவனுவது நான் சொல்வதை நம்பாமல், உனக்கு இந்த விஷயங்களின் பங்கு உண்டு என்று வாதிப்பானுகில், அந்த துராத்மா ஸ்வப்னத்தில் கூட சுபமான கதியையும் சுகத்தையும் அடையமாட்டான்.'' (850)

இவ்விதம் ராமனின் மாதாவான கௌஸல்யை சொல்லிக் கொண்டு பரதனை இறுகத் தழுவிக்கொண்டாள். (ராமன் பிறந்த ச்ரீரம். ராமனை வளர்த்த கைகள். ராமனை பிரியத்துடன் பார்த்த கண்கள், ராமதியானம் கொண்ட ஹிருதயம். அப்பேற்பட்ட ராம சங்கீர்த்தனம் செய்யும் கௌசல்யையின் சுந்தரமான அங்கங்கள் பரதனின் மேல் ஸ்பர்சித்ததும், அவனுடைய தாபத்ரயங்கள் அடங்கிவிட்டன ) அவளுடைய ஸ்தனங்களிலிருந்து பால் பெருகி, பரதனை அன்பு மயமாகச் செய்தது. அவளுடைய கண்ணீர் தாரைகள் கங்கா தாரைகள் மாதிரி, அவனுடைய பாப பழிகளைத் துடைத்து, போக்கி, சுகத்தைக் கொடுத்தன. அவர்கள் இருவர்களும் இவ்விதமாக அந்த ராத்திரியைப் போக்கி, ராம தியானத்தில் காலத்தைக் கழித்தார்கள். (851)

அந்த சமயம் வாமதேவரிஷி, வஸிஷ்ட பகவான் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். மந்திரிமார்களையும் மஹாஜனங்களையும் அவர்கள் கூப்பிட்டு வரவழைத்தார்கள். வஸிஷ்ட பகவான் பரதனுக்கு பல உபதேசங்கள் செய்து, சமயத்திற்கு தகுந்தாற்போல, பரமார்த்தங்களைக் காண்பிக்கக்கூடிய ஞான உபதேசம் செய்தார். (852)

வஸிஷ்டர் சொல்ல ஆரம்பித்தார் ''பரதா உன் ஹிருதயத்தில் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, இப்போது என்ன காரியம் செய்யவேண்டுமோ, அவைகளை நீ முதலில் செய்ய வேண்டும்.'' பரதன் அந்த வார்த்தைகளை ஆமோதிக்கிறவனுக, எழுந்திருந்து எல்லாவற்றையும் தயார் செய்யும்படி ஆக்ஞை யிட்டான். (853)

வேதங்களில் சொல்லப்பட்டபடி விதி ப்ரகாரம் அரசருடைய தேகத்தை ஸ்நானம் செய்வித்தான். பரம விசித்திரமான விமா

னம் ஒன்று தயார் செய்து அந்த உடம்பை அடக்கம் செய்வதற்கு ஏற்பாடுகளைச் செய்தான். அந்த உடம்புடன் எரிந்துபோக விரும்பும் தன் தாய்மார்களை மிகுந்த பிரயாசையுடன், "ராமனை மீண்டும் பார்க்கலாம்" என்கிற அபிலாஷையுடன் தடுத்தான். (854)

சந்தன மரம், அகர் மரத்தின் கட்டைகள் இன்னும் அநேக விதமான சுகந்தமான மரக்கட்டைகள், கற்பூரம், குங்கிலீயம், கேஸரி போன்ற சுகந்தமான வஸ்துக்களை தரவழித்து ஏற்பாடு பண்ணினான். அவைகள் எல்லாவற்றையும் சரயு நதிதீரத்தில் அழகாக வைத்து உயர அடுக்கினார்கள். அந்த மரக்கட்டைகளின் அடுக்குதலைப் பார்த்தால் தேவலோகத்திற்கு அமைக்கப் பட்ட சோபானம் மாதிரி, படிக்கட்டுகள் அமைக்கப்பட்டன போலத் தோன்றின. (855)

இந்த விதிப்படி சகல தேகக்ரியைகளை விதி பிரகாரம் செய்து முடித்தார்கள். எல்லோரும் சரயுவில் ஸ்நானம் செய்தார்கள். திலதர்ப்பணம் செய்தார்கள். அதன் பிறகு வேதங்கள் ஸ்ம்ருதிகள் புராணங்களில் சொல்லப்பட்ட பிரகாரம் பரதன் தசகாத்ர ஏற்பாடுகள், பத்து நாள் கிருத்யங்கள் செய்து முடித்தான். (856)

முனிஸ்ரேஷ்டரான வஸிஷ்டர் எவ்விதம் ஆக்ஞை செய்தாரோ, அவைகளை ஒன்றையும் விடாமல் பரதன் செய்து முடித்தான். சுத்தியடைந்த பின்பு விதிப்படி பரதன் தானங்கள் செய்தான். கபிலைப்பசு, குதிரை, யானை அநேக பிரகாரமான சவாரிகளைத் தானம் செய்தான். (857)

ஸிம்மாஸனம், பூஷணங்கள், பட்டு வஸ்திரங்கள், அன்ன தானம், பூமிதானம், பொன் ஆகிய ஸ்வர்ண தானம், வீடு தானம் ஆகிய எல்லாவற்றையும் பரதன் எல்லோருக்கும் வழங்கினான். பூதேவர்களான பிராம்மணர்களுக்கு தானம் செய்து பரிபூர்ண காமனாக விளங்கினான். (858)

பிதாவின் மேதை கிரியைகளை பரதன் செய்து முடித்தான். அவைகளை வர்ணிப்பது ஆயிரம், லக்ஷம் முகங்களால் முடியாது. அவ்விதம் ஸ்லாக்யமாகச் செய்தான். அதன் பிறகு ஒரு சுபமான நாளன்று வஸிஷ்டர் மீண்டும் வந்து, மந்திரி மார்களையும் மஹாஜனங்களையும், ஸகலரையும் வரவழைத்தார். (859)

[தியானம்

ராமாசீதா, லக்ஷ்மிசமேத மஹா நாராயணு, கேசவா, கிருஷ்ணு, ஜனர்த்தனரே, பெரியோர்களுடைய கட்டளேயில் இருப்பவனும், அஜாக்ரதை யில்லாதவனும், ஸத்யஸந்தனும், ஸாதுவும், ஸர்வ பிரஜைகளுக்கு ஹிதம் செய்பவனும், தயை உள்ளவனும், புலன்களே வென்றவனும், ஸாது ஸமூஹத்தை தாங்குபவனும், க்ஷமை, துக்கங்களே ஸஹித்தல், அடக்கம், நேர்மை, தவருத வ்ரதம், சாஸ்திரம், பிராணி தயை, சிக்ஷை என்கிற ராஜ குணங்கள் பொருந்திய தர்மபுத்ரனேயும், பரதனே யும் நேசித்தாய். கெட்ட நடை உள்ளவனும், லோபியும், எப் பொழுதும் உறவினர்களிடம் கெட்ட எண்ணம் கொண்டவனும் மோகத்தோடு கூடியவனும், கர்வமுள்ளவனுமான துர்யோதனே வெறுத்தாய். ஹே ராமா ஜானகி, அறிஞர்களுடைய முயற்சி யானது தர்மார்த்த காமங்களே அனுசரிப்பதாக விருக்கிறது. தர்மத்தை மாத்திரம் அனுசரிப்பவன் தீரனுகிருன். மத்யமன் கலகத்துக்குக் காரணமாகிற அர்த்தத்தை அனுஸரிக்கிருன். புலன்களின் மேல் உண்டான ஆசையினுல் தர்மத்தை விடுகிற ப்ராகிருதனுகிற மூடன் கெட்ட உபாயத்தால் காமத்தையும் அர்த் தத்தையும் அடைய விரும்புகிருன். அதனுல் நாசமடைகிருன். காமத்தையும் அர்த்தத்தையும் அடைய விரும்புகிறவன் தர்மத்தை முதலில் அனுஷ்டிக்கவேண்டும். தர்மத்தை விட்டு அர்த்தமும் காமமும் ஒருபோது விலகாது. தர்மத்தையே த்ரிவர்க்கத்தினருக் கும் உபாயமாகச் சொல்லுகிருர்கள். தர்மத்தைக் கொண்டவன் புதரில் தீயைப் போல சீக்கிரம் விருத்தி அடைவான். அப்பேற் பட்ட புத்திமானுகிற கிருஷ்ணருடைய வசனங்கள், வியாஸ ருடைய வாக்குக்கள், பரதனுடைய சுத்தமான சொற்கள், தர்ம புத்ரருடைய சுசியான தர்ம நடத்தை, தர்ம வசனங்கள், விதுர ருடைய உபதேசங்கள், வாமதேவ, மார்க்கண்டேய பீஷ்ம, நாரத வஸிஷ்ட் விஸ்வாமித்திரர், இந்திரன், குஹன் போன்ற மஹாத் மாக்களுடைய வசனங்களும், தர்ம ஆசரணேகளும் மிக பிரஸித் தம். எல்லோருக்கும் தாயும் தந்தையுமாக விருக்கும் உமா மஹேஸ்வரர் தர்ம ஸ்வரூபிகள். பிரும்மாவும், ஸ்வயம்புவும் சாவித் திரியும் தர்மத்தின் பிரபுக்கள். இவர்களே நான் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, சுக்ருத பிரணமம் செய்கிறேன். அவர்கள் கிருபை செய்யவேண்டும்.]

ஊரில் உள்ள மஹாஜனங்கள் ராஜதர்பாரில் வந்து உட்கார்ந் தார்கள். அச்சமயம் வஸிஷ்டபகவான் பரத சத்ருக்னர்களேக்

கூட்டி வரவழைத்தார். அவனுக்குத் தர்மார்த்த காமங்களடங்கின நீதிகளை உபதேசித்தார். (860)

முதலில் வஸிஷ்டர் கைகேயியின் குடில எண்ணங்களைச் சொல்லி, ஒன்றுவிடாமல் அயோத்தியில் நடந்தது முழுவதையும் பூராவும் சொல்லிமுடித்தார். பிறகு தசரதருடைய சீலம், தர்ம நடத்தை, ஸத்யத்திற்கு மதிப்புக் கொடுத்து தன் புத்ரனையும் ராஜ்யத்தையும் இழந்தது ; அதன் பிறகு ராமவியோகத்தினுலும் கைகேயியின் துர்நடத்தையாலும் ஏற்பட்ட மன அதிருப்தி, அதனுல் ஏற்பட்ட தசரதரின் மரணத்தைப் பற்றியும் சொன்னுர். (861)

அந்த முனிராஜரான வஸிஷ்டர் ராமச்சந்திரனுடைய தர்ம சீலநடத்தை, ஸ்வபாவமாகவுள்ள சௌசீல்யசௌலப்ய நடத்தைகளையும், பக்தர்களிடம் அதிப்ரேமை கொண்டவராகவும் சொன்னுர். அவ்விதம் சொல்லும் சமயம், அவர் உடம்பு பூராவும் புளகாங்கித மடைந்தார். அவருடைய நேத்ரங்களிலிருந்து ஆனந்த கண்ணீர் பெருக, அதைக் கேட்டவர்களும் மஹா ஆனந்தத்தை யடைந்தார்கள். அதன் பிறகு லக்ஷ்மணருடைய ஸ்நேகத்தையும், ஜானகியின் அத்யந்த பிரேமையை நினைப்பவராக, அவர்களுடைய பிரிவினுல் சோக மடைந்தவராக விளங்கினுர். எவ்வளவு ஞானியாக விருந்த போதிலும் பகவானுடைய கல்யாண ஹேய குணங்களையும், விபவவைபவங்களைம் ஸ்ரீயப்பதியின் சௌசீல்ய சௌலப்யாதி குணங்களின் வரிசைகளையும், தயையினுல் தேக்கப்பட்ட மஹாத்மாவின் மனதை அறியமுடியும்போது, வஸிஷ்டருடைய வார்த்தைகள் சொல்லுக்கு வரமுடியாமல் அவர் கலக்கமுற்றுர். (862)

மஹாபாகவத சீலனும், தர்மார்த்த காமங்களின் சூஷ்மங்களை (அர்ஜுனன் போல) கண்டறிந்த மஹாமேதாவியான பரதன் ஒன்றுவிடாமல் கேட்டு, அதிதுக்கம் அடைந்தவனுக காணப்பட்டான். முனிராஜரான வஸிஷ்டர் மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். "ஹே பரதா, ஏகமனத்துடன் கேள். நடக்கப் போகிறது நடந்தே தீரும். விதி மிகவும் பலமானது. அதை எதிர்த்து ஒருவராலும் போராடமுடியாது. லாபம் நஷ்டம், ஜீவிப்பது மரணம், சுத்தமான புகழ் அபயசஸ் ஆகிய எல்லாம் விதியின் கையில் இருக்கிறது அப்பா" (863)

"நீ இதை நன்ருக உணர்ந்து கொண்டு, ஒருவரையும் தோஷம் சொல்லாதே. யாரிடமாவது க்ரோதத்தை காண்பித்து, நிந்திக்காதே. அப்பா, பரதா உன் மனதில் நன்ருக கிரகித்துக்

கொள். இறந்துபோன அரசராகிய தசரதரைப் பற்றியும் நீ சிந்திப்பதில் பிரயோசனமில்லை.'' (864)

''வேதங்களைப்பற்றித் தெரியாத பிராம்மணன், விஷய போகங்களில் பற்றுதல் உள்ளவனாக யிருப்பானாயின், அவனைப் பற்றிச் சிந்திப்பதில் லாபமில்லை. அவனுக்கு நிஜ தர்மம் எது என்று தெரிகிறதில்லை. அதனால் அவனுக்கு நாம் பச்சாதாபப் படக்கூடாது. அதுமாதிரி அரசாளக்கூடிய ராஜனுக்கு நீதி சாஸ்திரம் என்னவென்று தெரியாதபடி அதாவது, ''என்னுடைய தனம் பட்டணத்து ஜனங்களுக்கும், தேசத்தின் ஜனங்களுக்கு மாக ஏற்பட்டது. என்னுடைய போகங்களுக்காக அன்று'' என்று நினைக்காத அரசனும் சிந்திக்கத்தக்கவனல்லன். பரதா, எந்த அரசன் பிறருக்காக ஏற்பட்ட தனத்தை தன் இஷ்டப்படி செலவு செய்கிறானோ, அவன் ஒருக்காலும் அறத்தையும் புகழை யும் அடையவே மாட்டான். எவனுக்குப் பிரஜைகள் ப்ராண ப்ரியர்களாக இல்லையோ, அவனைப்பற்றிச் சொல்வதே பாபம், அப்பா.'' (865)

### தியானம்

காமேஸ்வராங்கத்தில் ஸ்ரீ லலிதாபரமேஸ்வரி விளையாடுவது போல மஹாலக்ஷ்மி தரங்கத்தில் விளையாடும் ரங்க நாராயணா, ஜானகி, ராமா, ஆஞ்சநேயரும், அகஸ்தியரும் நாத உருவ மெடுத்து விளங்கும் உங்களுடைய பிரும்மஸ்வரூபத்தை சப்த பிரும்மம், அனுமான பிரும்மம் அதோக்ஷஜபிரும்மமாக நினைத்து, ஆனந்தப்படுகிறார்களோ, அதுபோல உங்களுடைய ஸுப்ரஸாதம் கிடைக்க வேண்டும். ஸ்வாமி தங்களை அநிர்தேஸ்ய வபுః சமயத்திற்கு தகுந்த ஏற்ற திவ்யமங்கள ரூபங்களை எடுப்ப தாகச் சொல்கிறார்கள். ஹே குண்டலி, சக்ரீ, காயத்ரி உஷ்ணிக், அனுஷ்டிப், ப்ருஹதி பங்க்தி, திரஷ்டிப் ஜகதி என்கிற ஏழு சந்தஸ்களோடு கூடிய வேதமந்திரங்களுக்கு அதிஷ்டான தேவதையான சூர்ய நாரயணா, கேசவா, தாங்கள் மகிழ்ச்சியை அடைந்தால் ஸகலரும் சந்தோஷத்தை அடையலாம். பெரிய தான ஒன்றை அடைய விருப்பமுள்ளவன் இந்திரியங்களை தர்மத்திலும் அர்த்தத்திலும் அடக்கவேண்டும். அடக்கப்பட்ட இந்திரியங்களாலே விறகுகளால் அக்னி எரிவதுபோல, புத்தி வளருகிறது. வசமாகாத புத்தி இந்திரியங்கள், பழக்கப்படாத குதிரைகள் போலவும், திறமையில்லாத பாகனை வழியில் கொல்வதுபோல, ஒருவனைக் கொல்வதற்கு போதும். காம

க்ரோதங்கள் வலையினால் மறைக்கப்பட்ட இரு மீன்களைப் போல நம் சரிரத்திலிருக்கின்றன. இவ்வுலக இயற்கையில் பயந்து, ஆசையற்று, ஸ்வர்க்கத்தில் செல்லுகிறவனுடைய ஸ்வர்க்க வாயிலை தேவர்கள் எவைகளால் மறைக்கின்றார்களோ, அவைகள் காமக்ரோதங்கள் என்றறிந்து, ஆசையையும் கோபத்தையும் லோபத்தையும் கர்வத்தையும் அஹங்காரத்தையும் நன்கு வெல்ல வேண்டும். அவனல்லவோ அர்த்தத்தையும் தர்மத்தையும் ஜயத்தையும் பிறர்களுடைய உதவியையும் அடைகிறான். இப்படி காந்தாரி துர்யோதனனுக்கும், கௌஸல்யாதேவி பரதனுக்கும் உபதேசித்துத்தானே, கேசவனையும் ஹ்ருஷிகேசனையும் திருப்தி செய்தார்கள். அப்பேற்பட்ட பெரியோர்களையும் பேரறிவாளர்களையும் நான் வணங்கி லக்ஷ்மிநாராயணை, சரணமடைகிறேன். ரக்ஷி.]

வஸிஷ்டர் மீண்டும் சொல்ல ஆரம்பித்தார் ''பரதா நன்றாகக் கேள். எந்த வைஸ்யன் தனவானாக ஆகியும், லோபத்தினால் கிருபணத்வத்தை யடைந்து, அதிதிஸத்ஸரம் செய்ய மனமில்லாதவனாகவும், புத்தியை சிவபக்தியில் செலுத்தாமல் வாழ்கிறானோ, அவனைப் பற்றியும் நினைப்பதில் யாதொரு பிரயோசனமில்லை. எந்த சூத்ரன் தன்னடக்கமில்லாமல், அசூயையினால் வேதவித்துக்களான விப்ரர்களை அலக்ஷ்யம் செய்து, அவமானப்படுத்துகிறானோ, வாக்குக்களால் ஸத்யமில்லாத வசனங்களைச் சொல்பவனாகவும், மானத்திலும் ஆத்ம கௌரவத்திலும் ஆசை அதிகம் உள்ளவனாகவும் தன்னை குணவான் என்றும், தன்னுடைய ஞானம் மிகப்பெரியது, என்று நினைக்கிறவனாகவும், ஞானத்தினால் ஏற்படும் அஹங்காரத்தினால் விப்ரர்களையும் மேல் ஜாதியினரையும் அலக்ஷ்யம் செய்கிறானோ, அவனைப் பற்றியும் சிந்திப்பதில்லை.'' (866)

''எந்த ஸ்திரி தாலிகட்டிய புருஷனோடு வாழாமல் வஞ்சக புத்தியுடன் இருப்பாளோ, குடில எண்ணத்துடனும் கலஹ ப்ரியையாகவும், ஒரு வரம்புக்கும் அடங்காமல், தனக்குத் தானே தோன்றியபடி நடப்பாளோ, அவளைப் பற்றியும் வருத்தப்படுவதில் நியாயமில்லை. எந்த பிரும்மசாரி தன் பிரும்மசர்ய விரதத்தை விட்டுவிட்டு, தன் குரு ஆக்ஞையின்படி நடக்காமல் இருப்பானோ, அவனுக்குப் பரிஹாரம் ஒன்றும் இல்லை.'' (867)

''எந்த கிரஹஸ்தன் மோஹத்தின் வசம் அடைந்து தன் நித்ய கர்மனுஷ்டானங்களைத் தியாகம் செய்கிறானோ, எந்த

ஸந்யாஸி இந்த பிரபஞ்சத்தில் மோஹத்தினுல் விஷய போகங்களில் ஆசைப்பட்டு, ஞான வைரக்ய ஸம்பத்தை யிழந்து, சஞ்சல புத்தியுடன் இருந்து என்ன பயன்? அவர்களைப் பற்றியும் சிந்திப்பது வ்யர்த்தம் அப்பா.'' (868)

''எல்லா சுகங்களையும் அனுபவித்த பின்பு வானப்ரஸ்த ஆஸ்ரமத்தை அடைந்தவர்கள் தபஸ்ஸிலும், பகவத் சிந்தையிலும் காலத்தைக் கழிக்காமல், மீண்டும் போகங்களில் இச்சைப் பட்டுக்கொண்டிருந்தால் என்ன லாபம்? நன்ருகக் கேளு. அகாரணமாகக் கோபிப்பது; பிறர் வாழ்வதில் லோபத்தினுல் தாக்கப்பட்டு அவர்களைபற்றி கோள் சொல்லுவதும், தன் தாய் தந்தை, குரு, சகோதரர்கள், பந்துக்கள் யாவரிடமும் விரோதம் செலுத்துகிறவர்களிடம் அனுதாபம் காட்டி என்ன பயன்? அவர்களை நினைப்பதே மிகப்பெரிய தவறு.'' (869)

[தியானம்

ராமா, ஜானகி, மஹாலக்ஷ்மி சகித நாராயணு, துருவ நாராயணு, கிருஷ்ணு, மதுசூதனு, பகைவரை வாட்டுகிறவரே, ஸனகர்போல ஸாதுக்கள் இளைப்பாறுமிடமாகவிருக்கும் ஸஜ்ஜன பாரிஜாதரே, ஸந்நிவாஸரே, பக்தர்களின் நிர்ப்பந்தங்களையும் ஸஹிப்பவரான விருக்ஷரே, பாண்டவர்களுக்கும் விதுரருக்கும் எல்லாப் பலன்களையும் அனுபவிக்கக் கொடுத்த மஹா விருக்ஷரே, நீர் ஸூர்ய சந்திராதி கோள சக்ரம் தம்மிடத்தில் கட்டப்பட்டதால் வியவஸாயர் என்று சொல்லப்படுகிறீர். புண்டரீகாக்ஷரே, உம்மை அவமதித்து பலாத்காரமாக கட்டி விடலாம் என்று யோசித்த துர்யோதினுதிகளுக்கு தகுந்த சிக்ஷையை அளித்தவரே, புருஷஸ்ரேஷ்டரான உம்மை வெல்ல முடியாது. நீர் கோபமடைந்தால் காலேஸ்வரனுகி காசி ராஜனைக் கொன்றதுபோல கொன்றுவிடுகிறீர். ஜனுர்த்தனரே, நீர் விரும்பினுல் எவரையும் வென்று யமனுடைய வீட்டை அடையச் செய்வீர். கேசவரே, யாதவர்களுக்கு சுகத்தை அளிக்கும் பாரிஜாதமே, புருஷோத்தமரான நீர் ஒருக்காலும் தர்மத்திலிருந்து விலகமாட்டீர். அச்சுதரே, நிந்திக்கத்தக்க செய்கையை ஒருக்காலும் செய்யமாட்டீர். சங்குசக்ர கதாதாரியான நீர் ரதாங்கபாணியாக யுத்தம் செய்ய நேரிட்டால் உம்மை இந்திரன் வஸுக்களுடன் கூடியும் எதிர்க்க முடியாது. நீர் பொறுமையைக் கடைப்பிடித்து பொறுக்க நேரிட்டால், தர்மத்தைக் குறித்தும், பாப புண்யங்களுக்காகவும் பொறுக்

கிறீர். ரதாங்கபாணியான கேசவரை யாவராலும் தாங்க முடியாது. எவ்விதம் சந்திரனைக் கையால் தொடமுடியாதோ, அதுபோல கிருஷ்ணரை, கேசவரை, கோவிந்தரை பலாத்காரத்தினாலோ, நிர்பந்தத்தாலோ, பலத்தினாலோ, பிடிக்கமுடியாது. நல்லோர்களால் செய்யப்பட்ட தர்ம ஆசரணைகளால்தான் அவரை அடையமுடியும். எவ்விதம் பூமியை தலையால் தாங்க முடியாதோ, அதுபோல நாராயணனை பலாத்காரமாகவோ, முயற்சியில்லாமலோ, அடையமுடியாது. மஹாபாகுவும், சுலபமாகக் காரியத்தை ஸாதிப்பவரும், அபராஜிதரும், வருத்தமின்றி காரியத்தைச் செய்து முடிப்பவருமான இவரை ஆத்ம பூஜையினால் மாத்திரமே அடையமுடியும். அப்பேற்பட்ட மஹாலக்ஷ்மி நாராயணா, உன்னை சரணமடைகிறேன். கிருபை செய் ]

''அப்பா; பரதா, இறந்துபோன அரசரான தசரதரைப் பற்றி வருந்தி பயனில்லை. அவருடைய பிரபாவங்கள் பதினான்கு லோகங்களிலும் வியாபித்திருந்தன. உன்னுடைய பிதாவான தசரதர் எவ்விதம் அரசாண்டு வந்தாரோ, அது மாதிரி ஒருவரும் இருந்ததில்லை. இப்போதும் கிடையாது. இனியும் இருக்கப்போவதில்லை.'' (870)

''பிரும்மா, விஷ்ணு, சிவன், சுரபதியான இந்திரன், அஷ்ட திக்பாலர்கள், ஆகிய எல்லோரும் புண்யமான தசரதருடைய கீர்த்திகளைக் காதைகளாகப் பாடுபடுகிறார்கள்.'' (871)

''என் பிரிய சிஷ்யனே, நீயே சொல். அவருடைய பெருமைகளையும் மேன்மைகளையும் யாரால் அதிகிரமிக்க முடியும்? எவருக்கு ஸ்ரீராமன், லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன், பவித்திரமான புத்ரர்களாக விருக்கிறார்களோ, அப்பேற்பட்ட மஹானுடைய மேன்மைகளைப் பிரகடனப்படுத்துவதற்கு யாரால் முடியும்?'' (872)

''ஸர்வ பிரகாரத்திலும் பூபதியான தசரதர் மஹா பாக்யவான். அவரைப்பற்றி துக்கிப்பதில் வியர்த்தம்தான். இதை நன்றாக புரிந்துகொண்டு, உன் மோஹங்களையும் வருத்தங்களையும் விட்டுவிட்டு, அவருடைய ஆக்ஞையை தலைமேல் வைத்துக்கொண்டு அதன்படி நடந்துவா.'' (873)

''அரசர் ராஜபதத்தை உனக்குத் தந்திருக்கிறார். நீ பிதாவின் வசனங்களை சத்யமாக நடத்து. ஸ்ரீராமனை சத்யத்தைக் காப்பாற்றுவதற்காக தியாகம் பண்ணி, அவனை வனவாசம் செய்வதற்கு அனுப்பிவிட்டு, அவர் அந்த ராமவியோகமாகிற

அக்னியில் தன் தேஹத்தை ஆஹுதியாக செய்துகொண்டார்.'' (874)

''உன் பிதாவான அரசர் வார்த்தை வசனங்களில் மிக சுத்தமானவர். ஒருக்காலும் பொய்சொல்லமாட்டார். தானமாகக் கொடுத்ததைப்பற்றி பச்சாதாபப்படமாட்டார். அவருக்கு தன் பிராணனைவிட வார்த்தை கௌரவம் அதிகம். இதை நன்ருக புரிந்துகொண்டு பிதாவின் கட்டளையை தலைமேல் கொண்டு, ராஜ்யத்தைப் பரிபாலனம் செய். அதனுல் உனக்கு மேன்மைகள் உண்டாகும்.'' (875)

[தியானம்

ஹே ராமா ஜானகி, விஸ்ருதாத்மா, திரிலோகாத்மா, விதிதாத்மா, திவிஸ்பிருக், ஸர்வதிருக் என்று பலவிதமாகப் புகழப்படும் மஹா நாராயணு, வேதவியாஸரால் காணப்பட்ட சங்கல்ப நாராயணு, சப்புவினுல் புகழப்படும் ஆதிநாராயணு, உமையினுல் கொண்டாடப்படும் ஜானகிராமா, உன் கிருபையும் என் முயற்சியும் சேர்ந்து பரிமளிக்கவேண்டும். நாரதர், மார்க்கண்டேயர், துர்வாஸர், அர்ஜுன, பரதன், ஆஞ்சநேயர் போன்ற மஹான்களின் கிருபை வேண்டும், அப்பா.]

வஸிஷ்டர் மீண்டும் உபதேசித்தார். ''பிதாவின் ஆக்ஞையினுல் கெட்டுப்போனவன் ஒருவனுமில்லை. ஒருக்காலும் இருக்கமுடியாது. மஹா சாஸ்திரங்களும், ஆததாயியும், பிராம்மண ஹிதரான பரசுராமர், பிதாவும் (ரிசிகர் புத்ரரான) ஜமதக்னியின் ஆக்ஞையின்பேரில் ரேணுகா என்கிற சொந்த தாயாரைக் கொன்று, மீண்டும் பிதா சந்தோஷமடைந்தபோது அவரிடம் ரேணுகாவை உயிர்ப்பிக்கும்படி வரமாக வேண்டினுர். (உனக்குத் தெரியும். அதிருஸ்யமான சங்கல்ப நாராயணருக்குத் தெரியும்.) சந்திர வம்சத்தில் பெயர்போன அரசனும், கர்வத்தினுல் இந்திரனுல் ஸ்வர்க்கத்திலிருந்து தள்ளப்பட்டு, ஸாதுக்களின் சங்கமத்தை வரமாகப் பெற்று, புத்ரியான மாதவி, அவளுடைய புத்ரர்களும் தர்மாத்மாக்களும், தனக்கு தௌஹித்ரர்களுமானவர்களின் உதவியினுல் யயாதி மீண்டும் ஸ்வர்க்கத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அப்பேற்பட்ட புகழ்பெற்ற யயாதி தன் வயோதிகத்தை தன் புத்ரனுகிற புருவுக்குக் கொடுத்து, அவனுடைய யுவாவைப் பெற்ருன். கடைசியில் சுபமான முடிவு ஏற்பட்டது. புருவும் அபயசஸ்ஸையும் தோஷத்தையும் அடையவில்லை. பிதாவினிடமிருந்து யௌவனத்தை மீண்டும்

பெற்றுக்கொண்டான். தன் பிதாவையும் கரை ஏற்றினன். அந்த வம்சம் செழித்தது.'' (876)

''அப்பா, இதுதான் பகவானுடைய சிறந்த ரஹஸ்யம். பிதாவின் கட்டளை அனுசிதமாகவிருக்கிறது, விருத்தியை தடுக்கிறது, உசிதமில்லை என்று தப்பு எண்ணம் கொள்ளாமல், ஆராய்ந்துகொண்டிருக்காமல், சொன்னதைச் செய்யும் உத்தம புத்திரன் ஒருக்காலும் கெட்டதில்லை. அவன் அதன்படி நடந்தால் சுபமான முடிவையும், சுகத்தையும், புகழையும், கீர்த்தியையும், அமரபதியான இந்திரனின் லோகத்தையும் அடைவான். பூர்ண ஆயுசுயுடன் வாழ்வான்.'' (877)

''ஆகையினுல் உன் பிதாவான அரசரின் வார்த்தைகளை ஸத்யமாக்க வேண்டியது உன் பொறுப்பு. அவருடைய மனோரதங்களைப் பூர்த்திசெய். அவருடைய பிரஜைகளை தர்மமாக பரிபாலித்துவா. சோகத்தை விடு. அதன்படி செய்வதால் உன் பிதா ஸந்தோஷத்துடன் ஸ்வர்க்கத்தை அடைவார். உனக்கும் சுந்தரமான கீர்த்தி புகழ்களும் ஏற்படும். உலகத்தார்கள் உனக்கு ஒரு விதமான தோஷத்தை கற்பிக்கமாட்டார்கள்.'' (878)

''இது ஈஸ்வர ஆக்ஞையாகிற வேதங்களின் ரஹஸ்யம். அவைகளால் ஒப்புக்கொள்ளப்பட்டது. சாஸ்திர, புராண இதிஹாஸங்களின் குஹ்யமான ரஹஸ்யமும் நான் தெரிந்து கொண்டதும் இதுதான் அப்பா. சாஸ்திரப்படிக்கும், பிதாவின் மனப்படிக்கும், பிதாவின் இச்சையாலும் ஒருவன் அரசனுகிறுன். ஆகையால் நீ ராஜதிலகத்தை அணிந்துகொள். கிலேசங்களை விடு. என் வசனங்கள் உனக்கு ஹிதமாகும். தர்ம அர்த்த காம மோக்ஷமாகிற வசனங்களாக ஏற்றுக்கொள்.'' (879)

''இந்த உபயோகமான வார்த்தைகளைக் கேட்டுத்தான் என் பிரபு ராமன், வைதேஹி நடந்திருக்கிறுர்கள். அவர்கள் கட்டாயம் சுகத்தை அடைவார்கள். சாஸ்திரங்களை அறிந்த ஞானபண்டிதனுகிற விப்ரன் இவைகளை ஒருக்காலும் அனுசிதம் என்று சொல்லமாட்டான். இதனுல் கௌஸல்யை போன்ற உன் மாதாக்களும், உன் பிரஜைகளும், மஹத்தான சுகத்தை அடைவார்கள். ராஜதர்மத்தையும் பித்ருவாக்யங்களையும் லக்ஷ்யம் செய்து கொண்டு உங்கள் வம்சம் வாழட்டும்.'' (880)

''உனக்கும் பரம ஹிதைஷியான ராமனுக்கும் உள்ள ஆத்ம தேக சம்பந்தம் எல்லோருக்கும் தெரியும். அதனுல்தான் சகல ஜனங்களும் உனக்கு நன்மையைப் பெரிதும் விரும்புவார்கள்.

ராமன் வனவாசம் முடிந்த பின்பு அயோத்தி திரும்பியதும், அவனிடம் ராஜ்யத்தை மீண்டும் ஒப்புவித்துவிட்டு, அவனுடைய பரமப்ரீதிக்காக வாழும் கைங்கர்ய பரதனாக இரு.'' (அதனால் உனக்கும் ராமனிடமுள்ள ஆத்மதேக ஸம்பந்தம் பிரிக்க முடியாது; இந்த பரஸ்பர ஸ்நேகம் அனாதி காலமாக வரும் ஸ்வபிர விருத்தி அல்லவா? இப்பேற்பட்ட பிரவிருத்தி, ஸ்வபாவ ஸ்வரூப பிரவிருத்தியையும் அதிகிரமித்து விளங்குகிற மேன்மை யான ஸ்நேகம் என்று எனக்குத் தெரியும்) (881)

[தியானம்

ஆதிதேவா, நாராயணா, மஹாலக்ஷ்மி சமேத நாராயணா, ஜானகி வல்லபா, ராமா, உனது விஸ்வரூபத்தில் இருகைகளில் ஹலாயுதரான பலராமரை இடது கையிலும் வலது கையில் நரனான அர்ஜுனனையும் காட்டிய மஹானுபாவா, வாஸுதேவா, உன் பெருமைகளை பிரும்மா, சசீயின் கணவரான இந்திரன் தேவர்கள், சொல்லி ஆனந்தப்படுகிறார்கள். பூலோகத்தில் புகழப் படும் கேசவா, ஜனார்த்தனரே, சுகர்ஸனத் குமாராதிகளால் வணங்கப்படும் ஹரிநாராயணா, நீரே தர்மத்தின் தரிசனம். நீர் கருடன், அனந்தன், தரணி, ஸ்வர்க்கம் முதலான லோகங் களைத் தாங்கும் ஸர்வத்ருக், எனக்கு ஹரிநாராயண பிரபு, விஷ்ணுவை விரதமாகக் கொண்ட பரம வைஷ்ணவர்கள் மஹத் சப்தத்தால் உம்முடைய வடிவை வர்ணிக்கிறார்கள். ஸநாதன மான உம்மை நாரதர், தியாகராஜர், துளசிதாஸர் போன்ற மஹான்கள் தினமும் அனுவிரதர்களாக இருந்து பூஜிக் கிறார்கள். உம்மை கர்மணா, மனஸா, வாசா முதலியவைகளாலும் சுக்ருத நமஸ்காரங்கள் செய்வதாலும் பிராம்மணர்கள் திருப்தி செய்கிறார்கள். அம்பிகை சிவனுடன் சேர்ந்து எவ்விதம் இருவர் களும் ஆனந்த யோகத்தைப் பெறுகிறார்களோ, நாஸத்யன் தஸ்ரன் ஸூர்யனையும் பிரபையையும் அடைந்து எவ்விதம் மஹத்தான ஆனந்தமடைகிறார்களோ, முனிஸத்தமர்களான மார்க்கண்டேயாதிகள் ஸுரஸத்தமர்களான இந்திராதி திக்பாலர்கள் தங்கள் பத்தினிகளுடன் உம்மைத் தரிசிப்பதால், மஹா வராஹரே, ஸர்வலோக பிதாவாக அறிகிறார்கள். ஹே சௌரி, ரகுநாயகா, உம்மை மஹா பிரியத்தோடு பூஜை செய்கிறேன்.]

மந்திரி கைகளைக் கூப்பி பரதனைப் பார்த்துச் சொன்னார்:— "ஸ்வாமி, குருஜிகளின் ஆக்ஞைகளை அவஸ்யம் பூர்த்தி செய்ய

வேண்டும். ரகுபதி வனவாசத்திலிருந்து திரும்பி வந்த பின்பு எது உசிதமோ அதைச் செய்யலாம். இப்போது குரு ஆக்ஞையை 'கர்த்தவ்யம்' என்று செய்வதுதான் உசிதம்.'' (882)

கௌஸல்யாதேவி மிக்கத் தைர்யத்தை வரவழைத்துக் கொண்டு சொன்னாள். ''புத் என்கிற நரகத்திலிருந்து விடுவிப்பவன் புத்ரன். உன் அப்பாவின் குருவானவரும் இப்போது உனக்கு நல்ல உபதேசங்கள் செய்ததையும் கேட்டு, அவைகளை சிரம்மேல் வைத்து நடத்தி வா. அவருடைய வார்த்தைகளுக்கு கௌரவம் வை. அவைகள் உனக்கு தத்வம் ஹிதம் புருஷார்த்தங்களைக் கொடுப்பவைகளாக இருக்கின்றன. உன் பிதா காலாக்னியால் மரணத்தை அடைந்து விட்டார். அவருக்காக நீ உடலை வருத்தி, கெடுத்துக் கொள்ளாதே.'' (883)

''ரகுபதி வனத்தை அடைந்து விட்டான். அரசர் ஸ்வர்க்கத்தையும் அடைந்து விட்டார். அதனால் நீ பயப்பட்டு கோழையைப் போல நடந்து கொள்ளாதே. என் குழந்தாய், நீதான் இப்போது உன் பரிஜனங்களாகியவர்களுக்கும், உன்னை நம்பிவாழும் பிரஜைகளுக்கும், மந்திரிக்கும், உன் தாய்மார்களாகிய எங்களுக்கும், ஆதார கதி. இதை நீ மறந்து விடாதே.'' (884)

''விதி நம்மோடு கடூரமாக விளையாடி விட்டது. அதனால் மனத்தை கலங்க விடாதே. நாங்கள் எல்லோரும் உன் நன்மையை விரும்புகிறோம். மனத்தில் தைர்யத்தை அடைந்து, குருவின் ஆக்ஞையை அனுசரணை செய். பிரஜைகளை பரிபாலனம் பண்ணு. நம் குடும்பத்தினர்களின் துயரங்களைப் போக்கு.'' (885)

பரமதாஸ்ய உள்ளம் படைத்த பரதன் குருவினுடைய வார்த்தைகளையும் மந்திரியின் வார்த்தைகளையும் சிரத்தையுடன் கேட்டான். அவைகள் அவனுக்குப் பரம ஹிதத்தைக் கொடுக்கக் கூடியதாகவும், தாபப்பட்ட மனத்திற்கு சந்தனம் போல குளிர்ச்சியை உண்டுபண்ணுவதாக விருந்தன. மாதாவின் மிருதுவான பேச்சுக்களையும் கேட்டான். எல்லோராலும் சொல்லப்பட்ட வசனங்கள் பரம உத்தமமான சில நடத்தைகள் ஸ்நேகபூர்வமாகவும், எளிதில் செய்யக்கூடியதாகவு மிருந்தன. (886)

அம்ருதம் போல இனிப்பான சொற்களால் மனத்தையும் தாபத்ரயத்தையும் குளிரவைப்பது போல விருந்தன. ராமனின்

  

தாயாராகிய கௌஸல்யாதேவியின் வார்த்தைகள் மஹாத்மாவின் உள்ளத்திலிருந்து வந்தவை. பரம அபராதியையும் க்ஷமிக்கும் எளிமைத்தனம். கொடிய சத்ருவை அனுக்ரஹிக்கும் மனப் பான்மை. இப்பேற்பட்ட உத்தமமான ராமனின் தாயாரை நான் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லையே. என்ன தப்பிதம் செய்து விட்டேன் என்று வியாகுலமடைந்தான். அவனுடைய புஷ்கராக்ஷங்களில் தாமரை மலரில் ஜலதிவலைகள் அமர்ந் திருக்கிற மாதிரி கண்ணீர் துளிகள் காணப்பட்டன. பரம உபஹாரியை எவ்விதம் கௌரவப்படுத்த வேண்டியது என்று நினைத்து அவனுடைய ஹிருதயம் துடித்துக் கொண்டிருந்தது. அவனுடைய உடம்பு பூராவும் அதிவியாகுலமடைந்தவனின் தசை போலிருந்தது. வார்த்தைகள் ஒன்றும் வெளிவராமல் ஸ்தம்பித்து விட்டிருந்தான். அவனை அந்த ஸ்திதியில் பார்த்துக் கொண்டிருந்த குரு வஸிஷ்ட பிரமுகர்கள் மந்திரி ஜனங்கள் எல்லோரும் தங்கள் ஸ்திதியையும் மறந்துவிட்டிருந்தார்கள். துளசிதாஸர் சொல்லுகிறுர் ''ஹா, என்ன பிரமாதம். பரத னுடைய அனுத்தமமான ஸலிலஸ்வபாவம், ராமனிடம் உள்ள ஸ்நேக உள்ளம், யாவரும் வியக்கும்படி நடந்து கொள்ளும் ஸஹஜ ஸ்நேகமல்லவாகவோ இருக்கிறது. இதுவா ப்ராத்ரு ஸ்நேகம்! கௌஸல்யையின் அர்த்தம் நிறைந்த வார்த்தை களைக் கேட்டு, இதுவா மாத்ருஸ்நேகம்! பரதனுடைய விஸ்வாசத்தைக் கண்டு, இதுவா பித்ருஸ்நேகம். பரதனுடைய வார்த்தைகள், கௌஸல்யையின் வசனங்கள், குருமஹாராஜரான வஸிஷ்டருடைய வார்த்தைகளைப் புகழ்ந்து, இதுவா எல்லோரும் புகழும் ராஜதர்மம்!! மந்திரி ஜனங்களின் வார்த்தைகளை நினைத்துப் பார்த்தால் இதுவா அரச விஸ்வாஸம், இப்பேற்பட்ட மஹா மரியாதையுள்ள வசனங்களையும், வஞ்சனை உள்ளத்தி லிருந்து வராமல், எளிதில் யாவரையும் கவர்ச்சி செய்வதாக விருக்கும் உள்ளன்பு, ஒருவர் மற்றொருவரிடம் கொண்ட பக்தி விஸ்வாஸம் இதுதானு? என்று ஒவ்வொருவரையும் யாவரும் வியந்து புகழும்படியிருந்தது.'' (887)

''என் பிரபு பரதன் தர்மதுரந்தரன், தர்மநியந்தா, தரணி யைத் தாங்கும் தர்மத்தை அனுசரித்து வாழுபவன். அப்பேற் பட்ட பரதன் எளிய ஸ்வபாவத்தோடு மனத்தை அன்பாகிற ஆஹுதி செய்பவனுக, தைரியத்துடன் தன் கர கமலங்களைக் குவித்துக்கொண்டு, தாளும் தடக்கையுடன், அம்ருதமயமான வசனங்களை மிக்க வினயத்துடன் அந்த ராஜஸபையில்

ஸமப்ர்பிக்கலானுன். அவனுடைய ஒவ்வொரு வார்த்தையும் மிக்க கௌரவம் வாய்ந்ததாகவும், ஸமயோசிதமாகவும், அங்கு சொல்லப்பட்ட ஒவ்வொரு வசனங்களுக்கும் தகுந்த பிரதி உத்தரமாகவுமிருந்தது.'' (888)

## மாஸ பாராயணம்—பதினெட்டாவது நிறுத்தம்

[தியானம்

ஹே ராமா, நாராயணு, சநீரப்ருத், விஸ்வதிருத், பாரப்ருக், ஸர்வத்ருக், துக்கபேஷஜரே, சோகநாஸனரே, துர்க்காதேவியின் சகோதரரே, மஹாலக்ஷ்மி அம்மா, சரணம் தாயே. ஸர்வ காமேஸ்வரி, உங்கள் கிருபை கிடைக்க வேணும். கிருஷ்ணு, விருஷபத்வஜரே, உமாதேவியினுல் ஆராதிக்கப்பட்டவரே, சரணம்.]

பரதன் அழகாகப் பதில் சொல்ல ஆரம்பித்தான். ''ஐயா குருவே, மந்திரிமார்களே, அம்மா, ஞானதிவாகரனை குருமஹா ராஜரால் எனக்குப் பரம ஹிதமான உபதேசம் சொல்லப்பட்டது. அவருடைய உபதேச மொழிகள், அதன் பிறகு சொல்லப்பட்ட என் தாயின் வசனங்கள், மந்திரியின் வசனங்கள், எல்லோருக்கும் ஸர்வ ஸம்மதமாக இருக்கின்றன. இந்த சமயத்தில் தீனஸ்திதியை அடைந்த என்னிடம் தயை காட்டி என் தாயாரான கௌஸல்யாதேவி உசிதமான வார்த்தைகளைச் சொன்னுள். மேலும் குருவின் ஆக்ஞைப்படி நான் நடக்க வேண்டும் என்று அவள் வற்புறுத்திச் சொன்னுள். நான் அவளுடைய ஆக்ஞைப்படி என் தலையால் குருவை வணங்கி, அவருடைய கட்டளை நிறைவேற்ற விரும்புகிறேன்.'' (889)

''ஹே குருஸ்வாமி, பிதா, மாதா, ஸ்வாமி ஸுஹ்ருதய முள்ள நண்பன் இவர்களின் வசனங்களைப் பூர்த்தி செய்கிறவன் கட்டாயம் நன்மையை அடைவான் என்கிற விஸ்வாசத்துடன் ஸ்வாமி, உத்ஸாஹத்துடன், ஹ்ருதயபூர்ணனுக அவர்களுடைய வசனங்களை சந்தோஷத்துடன் நடத்தி நிறைவேற்றி வைக்க வேண்டும். இது உசிதம், அனுசிதம் என்று நான் விசாரிக்கக் கூடாது. அவ்விதம் ஆராய்ந்து பார்த்தால் பாப மூட்டை என் தலை மேல் விழும். நான் நம்பிக்கையற்றவனுகவும் காரியம் கெட்டவனுகவும், புகழ் அழிந்தவனுகவும் ஆய்விடுவேன். இது தான் என்னுல் அறியப்பட்ட ஸநாதன தர்மம்.'' (890)

''பெரியோர்களே, நீங்கள் எல்லோரும் சொல்லியவை பவித்திரமானதும் எனக்கு நன்மையை விரும்பிச் செய்த

மஹா உபதேசங்கள். அதன்படி நடந்தால் நான் ஸ்ரேயஸை அடைவேன். பெரியோர்களின் வசனங்களில் அடங்குகிறவனாக வும், தர்மத்தின்படி நடக்கிறவனாகவும் என் நன்மையை கோருகிறவனாகவும், உங்கள் வார்த்தைகளுக்கு நான் மிக்க கௌரவம் செய்யவேண்டும். ஆனால் என் மனதில் சந்தோஷம் ஏற்படவில்லை. என்னையும் அறியாமல் ஏதோ பயத்தினால் நான் தாபத்தை அடைந்திருக்கிறேன்.'' (891)

''குருமஹராஜ், என் தாயே, என் மந்திரி ஜனங்களே, என் பரிஜனங்களே, இப்போது நான் சொல்லும் வார்த்தைகளை நீங்கள் தயது செய்து காது கொடுத்துக் கேட்க வேண்டும். நான் ஏதோ சொல்லுகிறேன் என்று யிராமல், என் யோக்யதையை தெரிந்துகொண்டு, அதற்குத் தகுந்தாற் போல எனக்கு சிக்ஷை விதியுங்கள். நான் தங்களுடைய வசனங் களுக்குப் பிரதி உத்தரம் கொடுக்கிறதாக நினைக்கக்கூடாது. என் வசனங்களால் உங்களுக்கு ஏதாவது அபராதம் செய்தேனாகில், அதை க்ஷமித்து, கிருபையை ஸாதிக்க வேண்டும் என்று தாழ்மையுடன் பிரார்த்திக்கிறேன். ஸாதுக் களான நீங்கள் அனைவரும், பரம கிலேசத்தை அடைந்த என்னிடம் குணதோஷங்களை பார்க்கக்கூடாது.'' (892)

''என் பிதா இறந்துவிட்டார். என் அருமை சகோதரன் ஸ்ரீ ராமச்சந்திரன் சீதையுடன் வனம் சென்று விட்டார். நீங்கள் அனைவரும் என்னை ராஜ்யத்தை ஆளும்படி உத்தரவு செய் கிறீர்கள். இந்த விஷயத்தில் உங்கள் அபிப்ராயம் என் நன்மையை நோக்கினதாக யிருக்கிறதென்று நான் அறிகிறேன். உங்கள் உத்தரவின்படி நான் நடப்பதால் முதலில் உங்களுக்கு பெரிய நன்மை ஏற்படப்போகிறதா என்று யோசிக்க வேண்டும். அல்லது எனக்குத்தான் இது நல்லதா என்றும் நாம் யோசிக்க வேண்டும்.'' (893)

''நான் முதலில் என் அபிப்ராயத்தைச் சொல்கிறேன். என் அபிப்ராயத்தின்படி, எனக்குப் பெரிய நன்மையை பயக்கக் கூடியது சீதாபதியான ஸ்ரீராமனுக்கு கைங்கர்யம் செய்வது தான். ஆனால் அந்த பாக்கியத்தை நான் பெற்றவளின் குடிலத் தனத்தினால் இழந்து விட்டேன். நான் நன்கு சிந்தித்துப் பார்த்து விட்டேன். எனக்கு நன்மை வேறு வழியில் இல்லை.'' (ராஜ்யம் செய்வதில் எனக்கு எவ்வித நன்மையும் கிடையாது. இராமனுக்கு அடிமைத் தொழில் செய்வதில்தான் உள்ளது.)

(கருத்து : ஆஞ்சநேயாதி, உமாசங்கரர் நாரதர், கணேசர், பிரும்மா, வஸிஷ்டர் ஆகிய மஹாத்மாக்களால்) குற்றேவல் செய்யும் பாக்யத்தை அடைய விருப்புகிறவனாக, பெரியோர்களே, இந்த ஜன்மத்திலே கூட தவறு செய்யாமல், அந்த ஸ்ரீயப்பதிக்கு மனோவாக்கு காயத்தினால் அனுசரணையாக, இளைய தம்பியாக பிறந்திருக்கிறேன். அது மாத்திரமில்லை. அந்த மஹானு பாவனான ராமனும், அவனையே நம்பி வாழும் அந்த மங்கை யான ஜானகியையும், ஐயன்மீரே, அவர்களை ஒரு தடவை நினைத்தாலே, என் உள்ளம் உருகி, பாகாகிவிடுகிறது. என் கைகளை கூப்பிக்கொண்டு, ஏகமாத்திரமாக, அவர்களின் திருவடிகளில் தாஸனாக கைங்கர்யம் செய்துகொண்டு, அவர் களைக் கண்டு தரிசிப்பது என் பாக்ய பலனாகவும், அவர்களின் இங்கிதம் தெரிந்து கொண்டு, மனம் கோணாமல், அதன்படி நடப்பதே என் வாழ்க்கையின் லக்ஷ்ய லக்ஷணங்கள் என்று எண்ணி நான் ஒவ்வொரு நிமிஷமும், என் காலத்தை நடத்து கிறேன். ஹே ஸ்வாமி, குருமஹராஜ், அப்பேற்பட்ட உத்தம தேவதைகளுக்கு நான் செய்யவேண்டிய கடமைகளை என் மாதாவின் குடிலபுத்தியினால் ஏற்பட்ட திட்டத்தினால், அவளுடைய பொருமையினால் ஏற்பட்டதும் என்னுடைய அஜாக்ரதையினால் நான் இழந்து விட்டேன். நான் பெரும் அபாக்யத்தை அடைந்தது மாத்திரமன்று. பெரும் பாபியாகவும் ஆகிவிட்டேன். என் மனதில் உங்கள் வார்த்தைகளை நன்றாக ஆலோசித்து விட்டேன். என் பெற்ற தாய் மாதிரி அந்த நித்ய தம்பதிகளைக் கண்டு கொண்டு வாழவேண்டிய நான் இப்போது காலத்தின் கொடுமையால், (யயாதி, நஹுஷன், நிருகன் ஆகிய ராஜரிஷிகள் மாதிரி,) கீழே தள்ளப்பட்டு, நிலை தவறி, பகவத் கிருபையை வேண்டுகிறவனாக, நான் தணிந்து நிற்கிறேன். மஹா நிரபராதியான எனக்கு என் கர்ம கதியால் கேடு வந்து விட்டது. என் ஜீவன் மஹா தாபத்தை அடைந்திருக்கிறது. நீங்கள் சொல்லும் உபாயத்தால் நான் உத்தமகதியான ஸ்ரீ ராம பதத்தை அடைய முடியாது. ஆதலால் அந்த வார்த்தைகளாகிய உங்கள் ஹிதோபதேசம் எனக்கு சரிப்பட்டு வராது.'') (894)

''ராமதாஸனாகிற எனக்கு சோகத்தையும், கவலைகளையும் கொடுக்கும் இந்த ராஜதிலகம் வேண்டாம். என் ராஜ்யம் லக்ஷ்மணன் ராமன் சீதை ஆகியவர்கள் தான். (என் கடமை பாகவத கைங்கர்யம், பகவத் கைங்கர்யமும் தான். அந்த ரகு குல திலகனாகிற ராமனே என் தெய்வம். அவனை நான் விமல

ஹ்ருதயத்துடன் பூஜிக்கிறேன். அவனுடைய பாதங்கள் கௌதமரால் தன் பத்னி அஹல்யைக்குக் கொடுக்கப்பட்ட சாபங்களை நாசம் செய்வித்தன. அந்த சீதையோ ராமபக்தியாகிற கூட்டில் அந்த ரகு வம்ச உத்தாரகனாகிற என் பிராதாவை, கிளியைப் போல தன் ஹ்ருதயத்தில் தேக்கி வைத்திருக்கிறாள். அந்த இரு தம்பதிகளும் குலுக்கு பலுக்குடன் பேசும் பேச்சுக்கள், தேன் போல இனிக்கும் அழகிய ஸரஸ ஸல்லாபங்கள், அந்த மிருது பாஷண, சுபாஷண, பூர்வ பாஷணுயிருக்கிற ராமன், பக்த சித்த தாபத்தை அறுக்கும் ஹரன், லக்ஷ்மணன் சீதை சகிதம் கூடியிருக்கும் போது நக்ஷத்திரங்களின் நடுவில் சந்திரன் போல விளங்குகிறான். அந்த நாக ராஜ சயனத்தின் மேல் படுக்கும் சீதா ராம தம்பதிகளுக்கு சேவை செய்யும் சுகத்திற்கு ஈடு வேறு எந்த போக போக்கியமும் இல்லை. அப்பேற்பட்ட) மஹானுபாவர்களான அவர்களை நான் இப்போது காணவில்லை. அவர்களின் சரணங்களை இப்போது நான் வருடி, என் கிலேசங்களைப் போக்க முடியவில்லை. ஹே சாதுக்களே, ராமஹ்ருதயஸத் ஜனங்களே, நிர்மாணமாகவிருக்கும் புருஷனுக்கோ, ஸ்திரிக்கோ ஆபரணங்கள் அழகு செய்யுமா? வஸ்திரங்களை அணிந்தால்தானே அந்த ஆபரணங்கள் சோபையைக் கொடுக்கும்? (வைராக்யத்தை அடையாமல் என் போலிருப்பவனுக்கு எங்கேயாவது பிரும்ம விசாரம் செய்ய முடியுமா? ராஜ்ய சுகங்களிலும் விஷயப் பற்றுதல்களிலும் ஏற்படக் கூடிய மனத்துடன் என் பிரபு சீதா ராமனை ஏகாக்ரசித்தத்துடன் அடைய முடியுமா?'') (895)

''ரோகங்கள் மலிந்து கிடக்கும் சரீரத்திற்கு நானு பிரகாரமாக விருக்கும் போக விஷயங்கள், போக ஸாமகிரியைகளினால் ஏதாவது பிரயோசனம் ஏற்படுமா? ஸர்வதோமுகனான என் பிரபு ராமனை பக்தியின்றி ஜபத்தினாலோ, யோகத்தினாலோ அடைய முடியுமா? (ராமன் என்கிற பெயரைக் கேட்டதும் ப்ரேமை கண்ணீர்களால் நிரப்பப்பட்டு, மெய் சிலிர்த்தவனாக, அந்த ராம பக்தியினுடைய ஸாம்ராஜ்யமான லக்ஷ்மணர், ஆஞ்சநேயர், சுகர், ஸனகர், நாரதர், துர்வாஸர் போன்ற மஹாபாகவத உத்தமர்களின் தர்சனமின்றி ராமனை அடைய முடியுமா? என் மூச்சுக் காற்று இவர்களைப் பற்றியே இருக்கிறது. இந்த அழகான உடம்பிற்கு அவர்கள் கிருபை இல்லாத போனால், இந்த தேகத்தை வியர்த்தமாக சுமந்து கொண்டிருக்கிறதாக நான் நினைக்கிறேன். ஏன் நான் மாத்திரமல்ல. இதோ, பாருங்கள். என் தாயாரான கௌஸல்யாதேவியையும் என்

தம்பியான சத்ருக்னனையும் பாருங்கள். இதோ என் முன் அழுது கொண்டு கண்களை துடைத்துக் கொண்டிருக்கும் மஹாத்மாவான என் குரு மஹாராஜ் வஸிஷ்டரைப் பாருங்கள். ஏன், உங்களையே நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள். ஒவ்வொருவரும் தங்களுக்கு ஏற்பட்ட சோகத்தை மிக்க பிரயாசையுடன் மறைத்துக் கொண்டிருக்கிறீர்களே. என் தாய்மார்களான கைகேயியும் சுமித்திரையும் கண்களை துடைத்த வண்ணமாக விருக்கிறார்கள்.) என் பிரபு ரகுநாதன் பானுகுல சந்திரன், ஸர்வருக்கும் சுகதாதா, அன்ன தாதா, க்ரோதமின்றி கிருபையை வர்ஷிக்கும் உதாரஹ்ருதயன், அப்பேற்பட்ட மஹாத்மா. எனக்கு அவனை விட்டு மற்றது எல்லாம் வ்யர்த்தம், வீண், (ஓங்காரிணி, துரித நிவாரிணி. அந்த ஜகன் மாதாவாகிய சீதையின்றி ராமன் தனித்து நிற்கமாட்டான். ஆகையால் அவர்கள் தான் எனக்கும் உங்களுக்கும் கதி.'') (896)

"இந்த காயமாகிற தேகத்திற்கு சீதா ராமனே ஆபரணம். அவர்கள் தான் எனக்கு போக மோக்ஷத்தைக் கொடுக்கும் வள்ளல்கள். என் சரிர யாத்திரையையும் எளிது படுத்தும் கிருபாளுக்கள், அதுவே எனக்குப் பிடித்தமான சுகந்தமான ராஜபாட்டை. (வித்வான்கள் கர்வத்தையும் மோகத்தையும் அடக்கியும், ஸத்யம், நேர்மை, அடக்கம், லஜ்ஜை, சுசியாக விருத்தல், வித்யை ஆகிய ஆறு குணங்களையும் மோக்ஷ செல்வம் அடைவதற்கு வாயில்களாகச் சொல்லுகிறார்கள். செல்வமான ராஜ்ய போகங்களுடன் சேர்ந்திருப்பது பிரும்மத்தைச் சார்ந்த மோக்ஷத்திற்கு விரோதமாக விருக்கிறது. என் பிரபு ஸ்ரீ ஜானகி ராமன் விஷயத்தில் நாரதர், தீக்ஷதர், தியாகராஜர், சியாமா சாஸ்திரி போன்ற மஹாத்மாக்கள் வேத சப்தத்தினாலேயே, சொல்லத் தக்கதான வேதசப்தத்தில், நாத ரூபத்தில் பிரும்மத்தை நாடுகிறார்கள். அல்லது வாக்கின் மௌனத்தாலும் மனத்தை வேதங்களுடன் சேர்ப்பதாலும் ஜப மௌனத்தாலும் அடைகிறார்கள் ) (897)

"என் பிரபு ராமன் பிரணதார்த்தி ஹரன். சுகத்தைக் கொடுக்கும் சங்கரர். தேஜோ விருஷர். சகல குற்றங்களையும் க்ஷமிக்கும் த்யுதிமான். ஆஸ்ரித வாத்ஸல்யர். என்னை அப்பேற்பட்ட ரகு குல ஸ்ரேஷ்டனாகிய ஸ்ரீ ராமனிடம் ஒப்பிவிக்க, உங்கள் கிருபா கடாக்ஷத்தை வேண்டுகிறேன். நானும் ராம சரணங்களை நாடி அவருடைய மஹா பிரஸாதத்தை அடைய விரும்புகிறேன். இது தான் எனக்கு நிச்சயமாக ஹிதத்தைச்

செய்யக்கூடியது. ஐயா என்னை அரசனுக்கி, தங்கள் விருத்தியைத் தேடும் விஷய போகங்களில் ஆசைப்பட்டவனுக என்னைக் கருத வேண்டாம். ஸ்வாமி, நான் கைகளை கூப்பி பிரார்த்திக் கிறேன். நீங்களும் அவ்விதம் எண்ணத்துடன் இருந்தால், உங்களுக்கு பரம க்ஷேமம் கிடைக்கும். என் மீது காட்டும் மோஹமான ராஜ விஸ்வாசத்தால் என்னைப் புகழ்கிறீர்கள். என்னுல் செய்யப்பட வேண்டிய தர்மத்தின் பதத்தை தவறி விடாமல் காப்பது உங்கள் பொறுப்பு.'' (898)

[தியானம்

ராமா, நாராயணு, வேத வியாஸரால் ஏகம் தர்மம், ஏகம் பரம், ஏகம் ஸத் விப்ராவதந்தி என்று சொல்லப்படும் மஹா நாராயணு, ஸனத் ஸுஜாதர், திருதாராஷ்டிரர்களால் வேதத்தில் அறியப்படும் பர பிரும்மமே, ஞான மயமாக விளங்கும் பகவானே, கிருஷ்ணு, ராமா, தேஜோ வ்ருஷரே, த்யுதிமான், வீரர், அனந்தர் என்று பல தடவைகள் சொல்லியும், தன் விஸ்வ ரூப தர்சனத்தைக் காண்பித்தும், அவருடைய மகிமைகளை பரசு ராமர், கண்வர், விதுரர் நாரதர் போன்ற மஹாத்மாக்கள் சொல்லி வைத்தும், பாசங்களாலும் பற்றுதல்களாலும் கவரப் பட்டு, திருதிராஷ்டிரன் எவ்விதம் மனத்தை கட்டுப்படுத்த முடிய வில்லையோ, அப்பேற்பட்ட பரம ஞானிகளுக்கும் புலப்படாத கோவிந்தா, அமானுஷ்யமான காரியங்களைச் செய்தும், பயப்பட வைத்தும், அந்த மனமானது கட்டுப்பட மறுத்துப் போகும் அஸ்வம் மாதிரி அல்லவோ திமிறிக் கொண்டு ஓடியது. ஆனுல் பரம ஞானியான பரதன் போல பிரும்மரிஷி ஹே பிரண தார்த்தி ஹரா, உன்னையே நம்பி வாழத் துணிந்திருக்கிருனே; சுகத்தை வாரிக்கொடுக்கும் சங்கரா, நான் உன்னை சிரகாலம் உன் பாத பங்கஜங்களை நம்பி வாழும், உன் கிருபா வ்ருஷ்டியை ஸதா எதிர் பார்த்து நிற்கும் எனக்கு, உன் சரண க்ருபையைக் கொடுக்க மாட்டாயா? உன் திருஷ்டி பதத்தை சாஸ்வதமாக அளிக்க மாட்டாயா? உன்னுடன் ஆத்மதேக ஸம்பந்தத்தை வஞ்சகமின்றி கொடுக்க மாட்டாயா? என்று கேட்கிருனே. பிரபோ, உன் பாத சேவைகளை நம்பி வாழும் தியாகராஜர், பரதன், ஹனுமார் போன்று விளங்கும். வைஷ்ணவ தாஸர் களின் ஸ்நேக செல்வத்தை எனக்குக் கொடுக்க மாட்டாயா? யயாதி ஸத் ஸங்கத்தாலும் தெளஹித்ரர்களாலும் தனது பெண்ணுலும் மீட்கப்பட்டு மீண்டும் உத்தமகதியை அடைந்தான்.

நிருகன் பகவான் கையினால் தூக்கி விடப்பட்டான். நஹுஷன் அபார பூஜைகளாலும், தர்ம புத்ரராலும் காப்பாற்றப்பட்டான். துஷ்யந்தன் தேவர்களால் சாப விமோசனத்தை அடைய வில்லையா? ராமா ஜானகி, லக்ஷ்மணா, பரதா, சத்ருக்னா, உங்கள் கிருபா கடாக்ஷம் வேணும்.]

"என் ஸுஹ்ருத்துக்களான நீங்கள் என்னிடம் அனுதாபம் காட்டி, எனக்குப் பரம ஹிதம் செய்ய வேண்டும் என்று நினைப்பீர் களானால், என் நிச்சய புத்தியினால் ஏற்பட்ட ஞானத்தைக் காப்பாற்ற வேண்டும். கைகேயியின் புத்ரன் பரதன் குடிலபுத்தி யுள்ளவன், ராமனை விமுகனாகவும், அலக்ஷ்யம் செய்பவனாகவும், லஜ்ஜையின்றி அரசனாகி விட்டான், ராம அபராதத்தைப் பொருட்படுத்தவில்லை என்கிற பழிச்சொல்லுக்கு இடம் கொடுக்க வேண்டாம். மிக்க அறிவாளிகளான உங்களுடைய ஸ்நேகத்தை அடைந்தும் மஹா வித்வான்கள், "நாராயணனுடைய ஸங்கல்பம் மிகப்பெரிது, அதைத் துணிந்து நாம் ஒன்றும் செய்வதற்கில்லை" என்று நம்பியிருக்கும் உங்களைப் போன்ற காருணிகரிகளின் ஸ்நேகத்தை அடைந்தும் இந்த பரதன் தர்மத்தில் நம்பிக்கை யற்றவனாகவும், மோஹத்தால் கவரப்பட்டு ராஜபோகங்களுக்கு அடிமையாகி விட்டான். தன் சுகத்தைத்தேடி ராமனை வன வாசத்தில் இருக்கும்படி தீர்மானித்துவிட்டான், பிதாவின் ஆக்ஞைப்படிதான் நடந்து அவ்விதம் செய்து விட்டான் என்கிற களங்கச்சொல் வேண்டாம். (பீபத்ஸுவாகிற அர்ஜுனன் மாதிரி,) அகாரியங்களில் லஜ்ஜை கொண்டவன். ராம அபராதத்திற்குப் பயப்படுபவன். என்னை நீங்கள் நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள்." (899)

"நான் ஸத்யத்தோடு இந்த வார்த்தைகளைச் சொல்லு கிறேன். ஆயிரம் தடவைகள் பிரதிக்ஞை செய்து (பீஷ்மர் மாதிரி) சபதம் செய்கிறேன். தர்மிஷ்டர்களான உங்களுக்கு அதிபதியாக விருக்கக்கூடியவன் மஹா தர்ம சீலனாக விருக்கவேண்டும். நீங்கள் என்னைப் பிடிவாதத்துடனும் பலவந்தத்தாலும் அரசனாக் கினால், இந்த பூமியே பாதாளத்தில் அமுங்கிப் போய் விடும்." (900)

"நீங்களே உங்களுடைய தர்ம புத்தியினால் விசாரித்து அறியுங்கள். என்னை விட மஹா பாபாத்மா யார் இருக்கக் கூடும்? பாபத்தின் பொக்கிஷம் நான். நான் பிறந்ததின் காரணமாக என் பிரபு, யாருக்கும் தீங்கு நினைக்காத சீதையுடன் கூடின ராமன், கடுமையான வனவாசத்தை அடைந்து விட்டார்.

என் பிரியமான தந்தையும் ராமனுக்கு வனத்தைக் கொடுத்து விட்டு, தானும் மரணம் அடைந்து விட்டார்.'' (901)

''நான் பிறப்பினுல் துஷ்ட ஜன்மம் எடுத்து விட்டேன். (என் பிரபு, ஜனனர் என்று அழைக்கப்படும் ஸ்வாமி, பக்தர்களின் ஜன்மத்துக்கு தாமே பலனுக விருக்கும் ஜனஜன்மாதி பிரபு அவருடைய கிருபையை வேண்டுவதைத் தவிரவும், அதனுல் அடையப்பெறும் பகவத் ஸ்வரூபத்தையும், அதற்குரிய கர்ணுகளேபரங்களோடு ஜனிக்கச் செய்யும் மஹா கிருபாளு, அவருடைய மன்னிப்பையும் சந்தோஷத்தையும் பெருமல் நான் இனி ஒரு க்ஷணம் வாழமுடியாது.) இவ்வளவு அனர்த்தத்திற்கு ராஜ பிறப்பின் காரணமாகிற இந்த ஜன்மத்தை வீணுக்கிக் கொண்டேன். காற்றுவாக்கில் இலேசாக நினைத்து, தப்பான மார்க்கத்தில் செல்ல வைக்கும் உங்கள் வார்த்தைகளை நான் இதுகாறும் கேட்டுக் கொண்டிருந்தேன். என் பிரபு ரகுவீரனைப் பார்க்காமலும் அவனுடைய பாதநிழலில் இருக்காமலும் இனி வரப்போகும் என் காலத்தை கழிக்கமாட்டேன், அப்பேற்பட்ட மஹானுபாவனின்றி, ராமசூன்யமான இந்த அரண்மனையைக் கண்டும் என் பிராணனையும் இன்னும் தரித்துக் கொண்டிருக்கிறேனே! ஜகத்தின் பரிகாஸங்களையும் பொறுத்துக் கொண்டிருக்கிறேனே! ஐயோ, என் பாவம் பரிணுமமின்றி யிருக்கிறதே.'' (902)

[தியானம்

தசரத நந்தனு, ஸ்ரீ ராமா, ஜானகி ரமணு, பிரளயபயோதி ஜலத்தில் வேதங்களை வஹித்துக்கொண்டு, கேசவதிருத பத்து அவதாரங்களை எடுத்த மஹா நாராயணு, வனமாலையைத் தரித்துக் கொண்டிருக்கும் கோபாலா, கோவிந்தா, வல்கலத்தை அணிந்துகொண்டு ஜடாமுடி தரித்திருக்கும் முனிஜன மானஸ ஹம்ஸராமசீதா, சீதையுடன் மதனமோகத்தால் கனகாட்டில் வாழும் கமலாம்பா ஸமேத காமேஸ்வர ராமா, உங்கள் ஸரஸ வசந்த ஸமய ஸல்லாபங்களைப் பார்த்து, கேட்டு மனமகிழும் ஹலாதர ரூபலக்ஷ்மணு, மத்த மதங்கசேஷ்டிதங்களினுல் மதம் அடைந்த ராஜமாதங்கி போல நடந்து வரும் சீதையின் லாவண்ய அழகுகளைப் பார்த்து ரமிக்கும் ஸ்ருங்கார ராமா, உங்களுடைய பீதவாடைகளை மோந்து, அதில் ருசியுடையவர்களாக ராஜ்யம் அனுசிதம் என்று முனி பரிவாரங்களைப்போல பார்க்க விரும்பிய என் பிரிய பரத சத்ருக்னு, ரதிசுக சமயத்தில்

சீதையை ப்ரேமை ரஸமாகவும், ராமனை கருணை ரஸமாகவும் கண்ட பரதா, காமேஸ்வரி பீடத்தில் அதிரஹஸ்ய யோகத்தைச் செய்யும் துர்வாஸ ரிஷி போன்ற மஹாத்மாக்கள் ரதி மன்மதன் நாரதர், இந்திராணி, சாவித்திரி, பிரபாவதி, ராதா போன்ற மஹா உத்தம உத்தமிகள் சதா பூஜை செய் யும் அந்த உத்தம திருவடிகளை நான் ஆஞ்சநேயர் ஸ்ரீ ஜானகிராமனை அடுத்திருப்பது போல அடுத்து, சரணமடைந்திருக்கிறேன். அவர்களாலும் நான் எளிதில் பார்க்கப்பட்டு, வ்யாதிகள் நாசமடைந்து மன உல்லாஸமடைந்தேன். ஹே ராமசீதா, சதா என்னை கடாக்ஷவர்ஷத்தால் நனைக்க வேண்டும்.]

"என் பிரபு ஸ்ரீராமன் புனிதன். பதிதபாவனன். மஹா புண்யவான். கனவிலும் பிறருக்கு அபகாரத்தை நினையாதவர். ஆர்ஜவம், ஜிக்ஞாஸம், ஸத்யம் அஹிம்சை ஆகிய தர்மவிரதம் பூண்டவர். அப்பேற்பட்ட ஸர்வத்தையும் மோஹிக்கும் ஸ்ரீ ராமனை விட்டுவிட்டு, விஷய போகங்களில் ஆசைப்பட்டவனாகவும், ராஜ்ய போகங்களில் ஈடுபடும் லோபியைப் போல என்னை நீங்கள் இருக்கச் செய்யாதீர்கள். எனக்கு ராஜ்ய பதவியிலும் அரச போகங்களிலும் பசியோ இச்சையோ கிடையாது. நான் என் மனதை கடினப்படுத்தி, கல்லாலோ அல்லது இரும்பாலோ செய்யப்பட்ட கடின ஹ்ருதயத்தை உடையவனா? வஜ்ரத்தையும் கேலி செய்யும் கடூர நெஞ்சம் படைத்தவன் நான் அல்ல." (903)

"காரணமாகிய ஒரு பொருளைக் காட்டிலும் அதிலிருந்து தோன்றிய காரியப்பொருள் அதிக கடினமாக இருக்கும். (ததீசியின்) எலும்பைக் காட்டிலும் (அதிலிருந்து தோன்றிய) வஜ்ராயுதம் அதிக கடினமானதல்லவா? கல்லைக் காட்டிலும் (அதிலிருந்து தோன்றிய) இரும்பு அதிக கடினமல்லவா?" (904)

கருத்து: "கார்யம் செய்யப்பட்டு விட்டால் காரணம் கடினமாகத் தோன்றுது. இந்த வியவஹாரத்தில் எனக்கு துளிக்கூட தோஷம் இல்லை. ததீசியினால் வஜ்ராயுதத்திற்காக முதுகெலும்பு கொடுக்கப்பட்டதும். அந்த வஜ்ரம் கல்லிலிருந்து உண்டான இரும்பு போல மிக்க கராளகடூரமாக விருந்ததல்லவா? (கைகேயியின் வயிற்றில் தோன்றிய இந்த உடலில் பற்று கொண்டுள்ள என்னுடைய இந்தப் பிராணன் (விடுபடவில்லையே? ஆதலால் இது) அபாக்யமுள்ளது. மிகவும் துரதிர்ஷடம் வாய்ந்தது, எனது அன்பனைப் பிரிந்தும் இந்தப்

பிராணன் எனக்குப் பிரியமாகி நிலைத்திருக்கிறதென்றால், இனி மேலும் நான் வாழ்ந்திருந்து என்னென்ன பார்க்கப் போகிறேனோ? என்னென்ன கேட்கப்போகிறேனோ?) (905)

(கருத்து: "ஆம் வாஸ்தவம்தான். நான் கைகேயியின் வயிற்றில் பிறந்தவன்தான். அவளுக்கு நிஷ்டூரத்தனமான ஹ்ருதயம் படைத்திருந்த போதிலும், அவளிடம் என் சரீரம், என் பாக்யம் என் பிராணன் எல்லாம் பிடித்துக் கொண்டிருக்கிறது. இருந்தாலும் என் பிரியமான சகோதரனிடமிருந்து பிரிக்கப்பட்டு, நான் விரஹதாபத்தை அடைந்திருக்கிறேன். என் பிராணனும் சரீரத்தைத் தியாகம் செய்ய இஷ்டப்படவில்லை. (மலர்ந்த செந்தாமரை போன்ற கண்களை உடைய சீதா மனோஹரனுன ஸ்ரீ ராமனை நான் மீண்டும் பார்க்கப்போகிறேனு? அவர்களுடைய மதுரரஸமான ஸல்லாபங்களை கேட்கப்போகிறேனு? என்று நினைப்பவன் போலப் பேசுகிறான் பரதன்.) ஏனக்கு பரம துக்கம் ஏற்பட்டிருந்தபோதிலும் மரணம் ஏற்படவில்லை. ஆம். மரணத்தால் துக்கம் விலகாது. பிரிய அப்ரியங்களில் துக்கமும் அதிக பயமும்தான் ஏற்படும். விவேக ஞானத்தினால்தான் துக்கமும் பயமும் அடக்கப்பட்டு, விலகும். (நான் பிராணனைத் தரித்து ஜீவித்திருந்தால், பர்த்தாவின் மடியிலிருந்து துள்ளிக் குதித்து ஓடும் தாமரை போன்ற கண்களை உடைய சீதையை நான் மீண்டும் பார்ப்பேன்.) என் பிராணன் இப்போது என் சரீரத்தை விட்டு பிரியாமல் இருப்பதால், என் ஹ்ருதயம் வஜ்ரம் அல்லது இரும்பாலோ ஆக்கப்பட்டதென்று நினைக்கிறேன். உயிருடன் வாழ்வதால் நான் கேட்பதற்கும் பார்ப்பதற்கும் முடிகிறது. (பூர்ண சந்திரனுக்கு ஒப்பான முகத்தை உடையவனும், ஸத்யவ்ரதனுமாகிய ஸ்ரீ ராமனை என் கண்கள் பார்த்தால் தான் எனக்கு நன்மை உண்டு. ஆத்மஹத்தி செய்வதால் மஹத்தான தோஷத்தை அடைவேன். ராமனிடத்தில் மஹத்தான ஆசை கொண்டு, என் வாழ்க்கையை நாசமடையச் செய்வதில் லாபம் இல்லை. அவனிடத்தில் வைத்த என் ஹ்ருதயம் உபவாஸம் முதலிய தபஸ்ஸையும், அவன் நாமாவை ஜபித்தல் முதலிய விரதங்களையும் செய்து என் ஸ்வல்ப பாக்யத்தை விரிந்ததாகச் செய்து கொள்வேன். கஷ்டம் வந்த போதிலும் அதை பொறுத்துக்கொண்டு, நூறு வர்ஷமானாலும் ஒருவன் ஜீவித்திருந்தால் கஷ்டம் நீங்கி, ஆனந்தம் உண்டாகும் என்று உலகில் பழமொழியாக சொல்லப்படுகிறது. ஆகையால் பிரிய

வாதியும், பிரும்மாஸ்திரத்தையும் வேதங்களையும் அறிந்தவனும், எவன் வேதம் அறிந்த ஞானிகளுள் மிகச் சிறந்தவனும் தர்மசீலனுமான என் ராமன், தசரதபுத்ரன், என் பிராதா, க்ஷேமமாகவிருக்கும் போது நான் என் பிராணனை, அவனுக்காக தத்தம் செய்த பிராணனை ஏன் விடவேண்டும்?) (906)

"என் தாயார் கைகேயி லக்ஷ்மணன், ராமன், சீதை இவர்களுக்கு வனவாஸத்தை கொடுத்தாள்; தன் பதியையும் ஸ்வர்க்கத்திற்கு அனுப்பிவிட்டாள். அதனால் அவள் பண்ணின பாபத்தின் பலனை யடைந்துவிட்டாள். அவளும் விதவையாகி, எக்காலத்திலும் அவளை இகழும்படி அபகீர்த்தியையும் அடைந்து விட்டாள். குடிமக்களுக்கு சோகத்தையும் தாபத்தையும் அளித்துவிட்டாள். (இதனால் நீங்கள் எல்லோரும் இந்த ராஜ திலகத்தை என் தாயார் விரும்பியதால் எனக்குக் கொடுக்க இச்சிக்கிறீர்கள்." (907)

"உத்தம ஜனங்களே, என் தாயார் எனக்கு சுகம் ஏற்படுவதற்கும் அழகான கீர்த்தி பிரபாவங்கள் வருவதற்கும் உத்தமமான ராஜ்யத்தை சம்பாதித்துக் கொடுத்திருக்கிறாள். (ஆனால் நானே தீனஸ்திதியை அடைந்து விட்டிருக்கிறேன்.) (நீங்கள் விரும்பியதைத்தான் என் தாயாரும் செய்திருக்கிறாள்.) இந்த ராஜ்யத்தை விட எனக்கு மேலானதும் உத்தமமான வஸ்து வேறு யாது உளது! இப்படி இருந்தும்; நீங்கள் அனைவரும் எனக்கு ராஜ்யம் அளிப்பதாகக் கூறுகிறீர்கள்." (908)

"நீங்கள் சொல்வது அனுசிதம் என்று நான் சொல்லவில்லை. நான் கைகேயியின் வயிற்றில் பிறந்திருக்கிறேன் அல்லவா? நீங்கள் மாத்திரம் சொல்லவில்லை; விதியும் கூட என்னை வஞ்சித்து விட்டது. விதியினால் எனக்கு இந்த மாதிரி ஏற்பட்டிருப்பதற்கு நான் நொந்து கொண்டிருக்கும் சமயம், நீங்கள் அப்பேற்பட்ட விதிக்கு உபகாரமல்லவோ செய்கிறீர்கள்." (909)

"நீதிமான்களே, கெட்ட கிரஹத்தின் இச்சையால் ஒருவனுக்கு பிசாசு பிடித்திருக்க, வாயுரோகத்தினாலும் அவன் தாக்கப்பட்டு, தவிக்கும்போது, அவனை தேள் ஒன்று கடித்து, அதற்கு மேல் அவனை மதுவையும் குடிக்கச் சொல்லி, அவனுக்கு வைத்யம் செய்வது போலவல்லவா விருக்கிறது உங்களால் சொல்லப்படும் வசனங்கள்." (910)

"கைகேயியின் புத்ரனுக்கு ஸம்சாரத்தில் வாழவைப்பதற்கு பிரும்மா ஒரு திட்டம் வகுத்திருக்கிறார். ஆனால் அந்த கெட்டிக்

  

கார பிரும்மாவே என்னையும் தசரத புத்ரனாகவும் படைத்து, ராமனின் இளைய சகோதரனாகவும் படைத்து விட்டான். அதனால் அந்த பிரும்மா தன் ஸ்ருஷ்டியின் கௌரவத்தையே இழந்து, என்னையும் அவமானப்படுத்தி விட்டான்.'' (910)

'' நீங்கள் எல்லோரும் என்னை ராஜ பதவி ஏற்கச் சொல்லு கிறீர்கள். அரசரின் கட்டளையும் அது மாதிரி இருப்பதால் உங்கள் மனமும் திருப்தியாக விருக்கிறது. நான் யாருக்கு பிரதி உத்தரம் கொடுப்பேன்? யாருக்கு எப்படித் தோன்றுகிறதோ, அப்படியே தாராளமாகச் சொல்லிக் கொண்டிருங்கள்.'' (911)

'' கெட்ட புத்தி படைத்த என் தாயும் நானும் தவிர வேறு யார் தான் இது நன்றாகவே நடைபெற்றது என்று சொல்லுவார்கள்? நீங்களே கூறுங்கள்! இந்த சராசர வஸ்துக்கள் கொண்ட உலகில் என்னைத் தவிர வேறு யார் தான் சீதா ராமர்களை உயிரினும் மேலாக நேசிக்காதவன் இருக்கக்கூடும்?

கருத்து :— ''என் பிரபு சீதாராமன் ஸகல சேதன அசேதனங்களுக்கும் பிராண நிலையர். கூட்டில் பறவைகள் அடைவதுபோல எல்லா ஆத்மாக்களும் தம்மிடம் லயம் அடையும்படி செய்பவர். இந்திரியங்களுக்கு பிராணன் அபானன் வ்யானன் ஸமானன் உதானன் ஆகியவைகளுக்கு ஆதாரமான ஜீவாத்மாவாக விருப்பவர். முக்தி பெற்றவர்களுக்குப் உயிராக விருப்பவர். அப்பேற்பட்ட எல்லாவற்றையும் வஹிப்பவர், போஷிப்பவர், ஜீவரூபியாக விருப்பவர், பிராணவாயுவாக விருந்து பிராணிகளை ஜீவிக்கச் செய்யும் பிராண ஜீவனர், பிராணர், ஆத்ம நாசம் அடைந்தவர்களையும் உய்விக்கும் பிராணராகிய என் பிரபு சீதாராமனை நேசிக்காத ஜீவர்கள் (என்னைத் தவிர) யாராவது இருப்பார்களா? சகல சராசரங்களும் அந்த இருவர்களின் திருஷ்டியால் மோஹிக்கும்படி விளங்கு கிறார்களே. (ஐயா, நீங்களும் இதற்கு விதி விலக்காக இருக்க முடியாதே.'') (912)

'' அவ்விதம் ஸம்மோஹிக்கப்பட்ட நாம் எல்லோரும் எதை பரமஹானி என்று நம்பி அறிய வேண்டுமோ, அதை பரம லாபம் என்று கருதக்கூடாது. உங்களைச் சொல்வதில் குற்றமில்லை. நீங்களும் நிரபராதிகள். என் பாபங்களால் ஏற்பட்டதும், கெட்ட காலத்தின் வன்மையாலும் நீங்கள் அவ்விதம் பேசுகிறீர்கள் என நினைக்கிறேன். நீங்கள் எல்லோரும் மஹத்தான சந்தேகத்தையும், ஸ்வபாவமாகவே சில நடத்தையும் உள்ளவர்களாகவும், என்னிடமும் அரசரிடமும் அதிக ப்ரேமை, பாசம், பற்றுதல் கொண்ட

தாலும், என்னை அரச பதவி ஏற்கும்படி சொல்லுவது உசிதம் என்று எண்ணுகிறீர்கள்." (913)

[தியானம்

ராமா ஜானகி, எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் இயற்கையாகச் செல்லும் பவனரே, உம்முடைய சக்தியானது ஸதா கதி என்று சொல்லப் படுகிறது. நீர் ஆத்மாவையும் தேகத்தையும் சராசரங்கள் அனைத்தையும், உன் பக்தர்களையும் பரிசுத்தப்படுத்துவதாலும், மஹா பயங்களிலிருந்து காப்பாற்றுவதாலும் பவனர், பாவனர், என்று சொல்லப்படுகிறீர். ஏகாதச ருத்ரர்களில் ஒருவரான ஹவனர் என்று சொல்லப்படுகிறீர். நீர் நித்ய ஸூரிகளில் ஒருவராகவும், வாயுஸூதனுகவும், கருடனுகவும், சிறிய திருவடி பெரிய திருவடி என்றும், புண்யர் என்றும், சரீர பூதப்ருத் என்றும் சொல்லப்படுகிறீர். தமது சரீரமாயிருக்கும் பிரக்ருதி மஹத் அஹங்காரம் முதலிய தத்வங்களையும் வகிப்பவர் நீரே. உமது அனுக்ரஹத்தால் சிறு தன்மையை அடைந்தவர்களும், குறையப் பெற்றவர்களும் மீண்டும் உத்தம கதியை அடைகிருர்கள். முயற்சிக்கும் வீர்யத்திற்கும் காரணமாக விருப்பவரே, முக்தனுகிற ஒருவன் எல்லா அர்த்தங்களையும் நிலையற்றனவாக நினைத்து, முயற்சியைச் செய்து, பலனில் விருப்ப மில்லாதவனுகி, தன் குறையையும் போக்கி, பகவத் கிருபையால் செழிப்பை அடைகிருன். கர்மம் கட்டாயம் பலனைக் கொடுக்கும். கர்மம் பயனுள்ளது என்று நம்பி மனத்தைச் செலுத்தி, எப்போதும் துன்பம் இல்லாமல் மங்கள காரியங்களையும் பிராம்மணர்களையும் தேவதைகளையும் முன்னிட்டு ஊக்கத்தை அடைய வேண்டும். விழித்திருந்த, அறிவினுல் செழிப்பு உண்டாகிறது. சூரியன் சுற்றிக் கொண்டு கிழக்கு திக்குக்கு வருவது போல முயற்சியுள்ள மனிதனை லக்ஷ்மி அவனை சீக்கிரம் வந்து சுற்றிக் கொண்டிருக்கிருள். இவ்வுலகில் புருஷார்த்தத்தை தேடவேண்டும். தனவானையும் மித்ரன் வணங்குகின்றனர்; அடுக்கவும் செய்கின்றனர். ஆண்மையுடன், புருஷ தனத்துடன், மஹா புருஷார்த்த நினைவுடன் பகவானுகிற ஜானகி ராமனை நான் அக்ன, வாயு கார்த்தியார்ஜுனன் பிராம்மணர்கள், பிரும்ம ரிஷிகள் இவர்களை முன்னிட்டு சரண மடைகிறேன். நீங்கள் தான் என்னை வாத ரோகத்தினின்றும் சரீர ஆபத்து துக்கங்களிலிருந்து பயப்படக்கூடிய வியாதிகளி

லிருந்தும் ரக்ஷித்து, சுகத்தைக் கொடுக்க வேண்டும். பயக்ருத் பயநாஸனः]

"ராமனுடைய தாயார் கௌஸல்யாதேவி என்மீது அபார வாத்ஸல்யம் உள்ளவள். அவள் ஸ்வபாவமாகிய ஸரள ஹ்ருதயம் படைத்தவள். அதனுல் அவளும் என் துக்கத்தைப் பொருமல் எனக்கு ஹிதத்தைச் செய்ய எண்ணமுள்ளவளாக இந்த விதமாக சொல்கிருள். அதனுல் அவளுடைய வார்த்தைகள் என்மீது பற்றுதலாக இருக்கிறபடியால் நியாயமானதாக இல்லே." (914)

"என் குரு மஹராஜ் வஸிஷ்டர் ஒரு பெரிய ஞான சாகரம். இவருடைய விசாலமான அறிவு உலகம் முழுவதும் தெரிந்த விஷயம். அவருடைய உள்ளங்கையில் இந்த விஸ்வம் பூராவும் ஒரு நெல்லிக்கனி போல இருக்கிறது. அவர் திரிகால ஞானரூபி. மஹா சாமர்த்தியமும் வீர்யமும் உள்ளவர். அவர் கூட என்னே அரசனுக்க விரும்புகிருர். (அவர் நிச்சயம் செய்த முகூர்த்தத்தில் ராமனுடைய விவாஹம் நடந்தது. ஆனுல் ராஜ்யாபிஷேகம் நடக்கவில்லே. அதனுல் மனக்குறை கொண்டு எனக்கு அவர் ராஜ திலகத்தை அளிக்க விரும்புகிருர். அது எப்படி முடியும்?) நானே மஹா பாபி. துக்கத்திற்கு என்று பிறந்தவன். கடவுளே என்னே அவ்விதம் படைத்திருக்கும் போது ஒவ்வொருவரும் விபரீதமான எண்ணத்துடன் பேசுகிறீர்கள்." (915)

"பூர்ண ஞான ஸ்வரூபியானவரும், ஜகத்தை வகிப்பவருமான என் பிரபு சீதாராமன் "நான் நிரபராதி; எனக்கு ஒரு தோஷமில்லே" என்று அவர்கள் மாத்திரம் நன்கு அறிவார்கள். அவர்களேத் தவிர இந்த ஜகத்தில் என்னே யாவரும் குற்றத்திலிருந்து விடுவிக்க மாட்டார்கள். சீதாராம ப்ரீத்யர்த்தம் வாழும் எனக்கு, அவர்களின் சுத்த எண்ணமே போதும். அவர்கள் சுமனஸ்ஸுடன் இருந்தால் போதும். அவர்களிடம் என் துக்கங்களேக் கூறி என் கிலேசங்களேப் போக்குவேன். அவர்கள் நிச்சயமாக என் கஷ்டங்களேப் பொறுமையுடன் கேட்பார்கள். நீங்கள் எல்லோரும் என் வார்த்தைகளுக்கு கௌரவம் கொடுக்கமாட்டீர்கள். என் குறையை நோக்கி, என்னே சந்தோஷப்படுத்த முயல மாட்டீர்கள். நான் உங்களுடைய புத்திமதிகளே ஏற்றுக்கொண்டு நடக்கவேண்டும் என்று அபிப்ராயப் படுகிறீர்கள். எங்கே தண்ணீர் இருக்கிறதோ, அங்கேதான் சகதியும் சேரும் இருக்கிறது. அது போல நான் நிரபராதி என்று நம்பி சொன்னுலும் என் பிரபு சீதாராமன் கேட்பார். ஆனுல் என்னே நீங்கள் நம்புவது கடினம்." (916)

"நான் நாராயண ப்ரீத்யர்த்தமாகவும், நாராயண கைங்கர்யத்துக்காகவும் வாழ்வதால் உங்களுடைய நன்மதிப்போ ஜகமாகிற இந்த சம்சாரத்தின் நற்சொற்களோ, தீயச் சொற்களோ என்னை ஒன்றும் பாதிக்காது. எனக்கு பரலோகத்திலும் நம்பிக்கை இருந்தாலும், அது ராமனுடைய கைங்கர்யத்திற்கு அப்பால் வரும் தர்மமானபடியால் அதைப் பற்றியும் நான் கவலைப்படவில்லை. என் மனதில் ஒரே ஒரு விஷயம் அரித்துக் கொண்டிருக்கிறது. அதையும் சொல்லி விடுகிறேன். என் பிறப்பின் காரணத்தாலும், என் அஜாக்கிரதையாலும் என் பிரபு சீதா ராமன் என்னிமித்தம் துக்கத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள்." (917)

"நான் மஹா துர்பாக்கியம் படைத்தவன். என் பிதா லக்ஷ்மணன்தான் ஜன்ம பாக்யத்தை அடைந்து விட்டான். எல்லாவற்றையும் உதறித் தள்ளி விட்டு, ராம சரணங்களே மிக மிகப் பெரியது, அவைகளை மிக்க முயற்சியுடனும், ஞானத்துடனும் அடையப்படவேண்டும் என்று நம்பி தன் மனத்தை நாராயணனுடைய ஹ்ருதயத்திற்கும் சரீரத்தை ராமகைங்கர்யத்திற்கும் அர்ப்பித்துவிட்டான். நான் அவனுடன் கூடப் பிறந்தவனாக இருந்த போதிலும் என் நிமித்தமாக ராமன் சீதா வனவாசம் அடைந்து விட்டார்கள். என்னைப் போல அபாக்யவான் இருப்பானா? இருக்கக் கூடுமா? என் அஜாக்ரதையினால் ஏற்பட்டது. இப்போது நான் பச்சாதாபப்பட்டு பயன் கிடையாது. மீண்டும் முயற்சி செய்து அவர்களின் ஸத்ஹிருதயத்தை நான் அடைய வேண்டும்." (918)

ஆனால் நானோ, அபாக்யமுள்ளவன். ராமனை வனம் செல்லுவதற்காக நான் பிறந்திருக்கிறேன். அதைப்பற்றி நான் இப்போது பச்சாதாபப்பட்டு என்ன பிரயோசனம்?" (919)

(கருத்து: "என் ஹ்ருதயமும் நாராயணனுக்கு அர்பிக்கப் பட்டதுதான். (பரவாஸுதேவனும், ஸர்வ சாக்ஷியும், சரீர பூதப் ருத்தும், விஸ்வாத்மாவும், ஸர்வாத்மாவும் ஸர்வ தோமுகனும், அனலனும், ஹவிர் ஹரியும் பவனரும், பாவனரும், த்ருடமான எண்ணத்தை உடையவரும், கிருபாளுவும், ஸர்வக்ஞனும் ஸர்வ சக்தி உடைய என் பெருமான் ராமசீதா ஆகியவர்கள் என் மனத்தை அறிகிறார்கள். என் சங்கல்பத்தை நன்றாக அறிவார்கள். என்னுடைய தீனமான ஸ்திதியையும் புரிந்து கொண்டு என்னை அனுக்ரஹிப்பார்கள். ரகுகுல நாயகன், என் ரகுநாதன்

அவனுடைய பதங்களை எனக்கு அளிப்பான். (குற்ற முள்ளவர் களையும் பரிபாலிக்கும் உக்ரன், மஹா வீரனுக சத்ருக்களிடம் ஜ்வலிப்பவன், பார்ப்பதற்கும் தண்டனை செய்வதிலும் மிக்க பயங்கரமான ஸ்வபாவமுள்ளவன், அடுத்தவர்களையும் ஆஸ்ரிதர் களையும் "பத்ரம்" என்கிற சொல்லின் அர்த்தமாகிற கல்யாண நன்மைகளை பிரஹ்லாதனுக்கு அனுக்ரஹித்த லக்ஷ்மி நரசிம்மன், மிருத்யுவுக்கும் மிருத்யுவாகவிருக்கும் என் பிரபு ஸ்ரீ சீதையுடன் கூடிய ரகுநாதனை அண்டி அவன் சரணங்களைப் பிடித்துக் கொள்வேன். அவனைத் தர்சிப்பேன். அவனிடம் என் கிலேசங் களையும் விண்ணப்பித்து போக்கிக் கொள்வேன். ஆதலால் என் ஜன்ம லாபத்தை அடைந்து கொள்வேன். இது தான் என் மனத்தில் தோன்றும் தீர்மானம். அவனிடம் மன்னிப்பையும் கிருபையையும் வேண்டுவேன். அதனுல் என் தாபங்களைப் போக்கிக் கொள்வேன்.")

[தியானம்

ராமநாராயணு, மஹாலக்ஷ்மி ஸம்பூத ராமநாராயணு, நீ பக்தர்களுக்கு எளிதாகப் போகும் க்ருசர். எங்கும் தடை யின்றி செல்லும்படியான லக்ஷ்மி என்னும் ஐஸ்வர்யத்தை உடைய பரதநாராயணு, சில சமயங்களில் பக்தர்களுக்கும் அவர் களின் பாபபுண்யங்களுக்குத் தகுந்தபடி பாரமாக போகிருய். பாரப்ருக், உனது கருணையை அடைந்தவர்கள் ப்ருஹத் என்னும் பரமபதத்தை உள்ளங்கையில் அடக்கிவிடுகிருர்கள். ஆஸ்ரிதர்களுக்கு எளிமையான ஸ்ரீ ராமா, எங்கும் வியாபித் திருக்கும் மகிமை என்னும் ஐஸ்வர்யம் உடையவரே, உமக்கு அத்ருதர் என்கிற பெயரும், யசோதையின் பக்திக்கும் சஹா தேவனுடைய உள்ளத்திற்கும் கட்டுப்பட்டிருந்த கிருஷ்ணு, மஹாத்மாவாள கேசவா, உமது சங்கல்பத்திற்கு விரோதமாக யார், எந்த கர்மங்கள், எந்த தர்மங்கள், எந்த புண்ணிய பாவங்கள், தேவர்கள், மஹரிஷிகள், சகல சராசரங்களும் என்ன செய்ய முடியும்? ஹே க்ரோதரே, அந்தகரே, சேதனு சேதனங் களின் ஸ்வரூபங்களை மாற்ற சக்தி படைத்த உம்முடைய ஸ்வதந் திர ஸங்கல்பத்திற்கு பரதனை முன்னிட்டு, உமா சம்புவை முன்னிட்டு என் குஹப்பெருமானை முன்னிட்டு, சரணமடை கிறேன். புருஷோத்தமரே, என் குறைகளால் என்னை நான் அவமதித்துக் கொள்ளாமல், ஊக்கத்தை அடைந்தவனும், மனக் கலக்கம் அடையாதவனும், ஜயத்தை விரும்புகிறவனும், வீரர்

களைப் பெற்றவளுமான குந்திதேவியைப் பிரார்த்தித்து பகவான் கிருஷ்ணரை ஸநாதனமான பிரும்மம் என்று சரணமடைகிறேன். ராமா, ஜானகி, லக்ஷ்மிநாராயணா, கேசவாத்ருத கிருஷ்ணா ரக்ஷி ரக்ஷி. சரணம் சரணம் தாயே)

"பரதன் மீண்டும் சொல்ல ஆரம்பித்தான். "என் ஸுஹ்ருத்துக்களே, என்னைப் போல பாபிக்கு வேறு உபாயம் கிடையாது. எனக்கு ஸ்ரீ ராமச்சந்திரன் திருவடிகள்தான் சரணம். அவரை விட்டு எனக்கு ஒன்றும் இல்லை. என் நிச்சய பூர்வமானதும் திண்ணமானதுமான என் ஒரே எண்ணத்தைக் கேளுங்கள். ராஜ்ய மோஹத்திலிருந்து என்னைக் காப்பாற்றிய அந்த சீதாராம சரணங்கள்தான் எனக்குத் தஞ்சம். இந்த எண்ணத்துடன் நாளைக் காலையில் நான் சீதாராமனிடம் புறப்படுவேன்.'' (920)

"நான் பெருத்த அபராதி. அனாதிகாலமாகச் செய்யப்பட்ட கர்மவாஸனையினால் ஏற்படும் பாபங்களால் சூழப்பட்டு, எனக்கு ஹிதத்தைச் செய்யும் ஸுஹ்ருத்துக்களை நான் பார்க்கவில்லை. என் பாபங்களே என்னை ஜன்மத்திலும் இப்போதும் ஸுஹ்ருத்துக்கள் இல்லாத சூழ்நிலையிலும் வளர்த்து விட்டிருக்கின்றன. எனக்கு ஆறுதல் கொடுக்கும் மஹா புண்யவான்கள் யாரும் இல்லை. ஸ்ரீராமனுடைய சரணங்கள்தான் என் தாபங்களைப் போக்கும் நிழல். பாரப்ருத்தான அவர் என்னை வெறுக்க மாட்டார். என்னை இன்முகம் கொண்டு வரவேற்பார். என் அபராதங்களையும் பாபங்களையும் க்ஷமிப்பார். என் தீனஸ்திதியைக் கண்டு கண்ணீர் வடிப்பார். மெய்சிலிர்க்கும்படி கிருபா சமுத்திரமாகிய அந்த உதாரமனத்தை உடையவர் ஜனார்த்தனர், புருஷஸ்ரேஷ்டர், என்னை அணைத்து என் க்லேசங்களைப் போக்கி, எனக்கு விசேஷமாக கிருபை செய்வார்.'' (921)

"அந்த ஸ்ரீ ரகுநாதன் பக்தர்களிடம் ஸௌசீல்யம் ஸௌலப்யாதி குணங்களால் நிரம்பப் பெற்ற குணப்ருக், வஞ்சகம், கெட்ட எண்ணம், சங்கோசம், விரோதம் க்ரோதம், யாதுமில்லாத ஸரள ஸ்வபாவமுடைய நிர்குணன் மஹான். (மிக்க வஞ்சகம் படைத்தவர்களும் லோபத்தினால் சஹோதரர்களைக் கூட வெறுக்கும் துரியோதனன் சகுனி போன்றவர்களுக்குக் கூட ஞான உபதேசம் செய்யும் கிருபாளு. என்றாவது, இவன் நம் பக்கத்தில் நம் வழியில் வரமாட்டானா என்று பொறுமையுடன் காத்துக் கிடக்கும் கிருபாளு. தம் ஆஸ்ரிதர்களை "ஐயோ, நம் உதவி இவர்களுக்கு தாமதமாக கிடைத்ததே.

இவர்கள் கஷ்டப்படும் முன்பே இவர்களிடம் நாம் போக வில்லையே'' என்று பச்சாதாபப்படும் ஸ்நேகம் உள்ளம் படைத்த மஹாத்மா. பாண்டவர்களுக்கு தூது நடந்த பரந்த உள்ளம் கொண்ட கேசவர் யுத்தம் முதலியவைகள் செய்து முடித்துவிட்டு, ராஜ்யாபிஷேகம் செய்து, சில காலம் ஹஸ்தினு புரத்தில் தங்கி ஹிதோபதேசம் செய்துவிட்டு, த்வாரகைக்கு எழுந்தருளும் சமயம் எவ்விதம் மனத்தாங்கலுடன் இவர்களுக்கு நம் உதவி அதிக கிருபை முன்னதாகவே காட்டப்படவில்லையே என்று ஏங்கிச் சென்ற மஹா விஸ்வாச அன்பைக் கொண்ட மஹாத்மா.) என் பிரபு ஸ்ரீ ராமச்சந்திரன் (ராவணுதி போன்ற மஹா அபராதிகளுக்கும் கொடிய அஹங்காரம் கொண்ட சத்ருக் களுக்கும், மஹா பொறுமையுடன் அவர்களின் குறைகளை எடுத்து உரைத்து, அவகாசம் கொடுத்து, ''சிந்தித்து திருந்தி வா'' என்று அனுக்ரஹம் செய்யும் மஹாவீரன்.) கனவிலும் எவருக்கும் அனிஷ்டம் செய்யாதவர், தாய் சிசுவினிடம் தன்னைத் தியாகம் செய்துகொண்டு அன்புடன் போஷிப்பாளோ, அது மாதிரி பரிசுத்த மனதுடையவர். என் போன்ற சேவகனையும் காத்து பரிபாலிக்கும் உத்தமர்.'' (922)

''ஹே குருமஹராஜ், தாய்மார்களே, மஹாஜனங்களே, இந்த வார்த்தைகளை நம்பி, என் மனோரதங்கள் நம் அனை வருக்கும் மங்களங்களைத்தரும், ஆயுசையும் கீர்த்தியையும் கொடுக்கும் என்று விஸ்வாசபூர்வமாக என்னை நம்பி மங்கள ஆசீர்வாதங்கள் செய்யுங்கள். என்னுடைய வினயமான வார்த்தைகளுக்கு கௌரவம் கொடுங்கள். நான் ராமதாஸன். அதனால் என் எஜமானனுகிய ஸ்ரீ ராமனை சீதையுடன் கூடிய ரகு நாதனை ராஜதானிக்கு அழைத்துவர உத்தரவு தாருங்கள்.'' (923)

''என் மாதா எனக்கு விரோதம் செய்திருந்தாலும், என்னை துஷ்டன் என்று சதா தோஷமுள்ளவனுக நீங்கள் நினைத்தாலும் நான் திடமான நம்பிக்கையுடன் என் பிரபு ரகுவீரன் என்னைத் தியாகம் செய்யமாட்டார்; என்னை ஸ்நேகபூர்வமாக வரவேற்பார்; என்கிற நம்பிக்கையுடன் செல்வேன்.'' (924)

[தியானம்

ராம், ஜானகிராம், நாராயணு, மஹாலக்ஷ்மி சமேத ஸ்ரீவத்ஸ நாராயணு, ஸ்ரீதரா, உன்னை அத்ருதர் என்று சொல்லு கிறுர்கள். பரம ஆகாச ரூபமாக விருந்தாலும், விஸ்வாத்மாவாக இருந்த போதிலும் வாயுபகவான் போல எதற்கும் கட்டுப்படாத

வீர்யமுடையவர். ஆனால் உம்முடைய ஸங்கல்பத்தினால் யாதொரு தடையுமின்றி, பக்ஷி புழு, கீழான ஜாதி, பாபாத்மா, புண்யாத்மா என்று பாகுபாடு பாராமல் எளிதாக அடையும்படி ஆகியிருக்கிறீர். மாதலி, குணகேசி, நாரதர், கருடன் போன்ற மஹாத்மாக்களாலும், காலவர் போன்ற சிஷ்யர்களின் மஹா புண்யத்தாலும் இந்திரனாலும் காணப்பட்ட ஸ்வதிருதராகவும் விளங்குகிறீர். விஷ்ணோ, நாராயண நம்பூத்ரியினால் வேண்டப் பட்ட காருண்ய ஸிந்தோ, தம்மைத் தாமே தாங்கும் மகிமை உடைய நீர் என்னிடம் அனுக்ரஹ புத்தியுடன் இரும். யோகி களுக்கு மந்திரம், ஔஷதம் தனம் தியானம் முயற்சியால் ஏற்பட்ட ஐஸ்வர்யங்கள் ஆகவிருக்கிறீர். ஆனால் நீரோ தமக்குத் தாமே ஆதாரமாக விருக்கும் கூர்மமூர்த்தி. பக்தர் களைக் காப்பாற்றும் ஸுவிரதரே, பரதனுக்கு ஸுலபராக இருந்தபடி என் பக்திக்கும், பிரணமத்திற்கும், ஸ்துதிகளுக்கும், தியானத்திற்கும், என் அறிவுக்கும், இந்திரியங்களுக்கும், ஸுலப ராக விருக்கும்படி பிரார்த்திக்கிறேன். ஐயா என்னைக் காத்தருள வேண்டியது உன் பொறுப்பு.]

மஹா பாகவத சிரோண்மணியான பரதனுடைய வார்த்தை கள் (பரம தத்வார்த்தமும், ஹிதமும், புருஷார்த்தங்களுடன் கூடியதாகவும்,) அந்த உத்தம ஸதஸில் இருந்த அனைவருக்கும் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளும்படியாகவு மிருந்தன. ராம னுடைய தர்சனம், அவருடைய ஸ்நேகம் அம்ருதத்தின் ருசியை விடச் சிறந்தது. மக்கள் அனைவரும் இராம வியோகமென்கிற விஷம் தீட்டிய அம்பினால் அடிபட்டுக் கிடந்தார்கள். இப்போது பரதனுடைய வாக்குகள் பீஜாட்சரத்தோடு மந்திர ஜபம் செய்தது போலாகவே அவர்கள் அந்த விஷ உபாதையினின்று தெளிந்து விழிப்பு அடையப் பெற்றனர். (அதனால் அந்த ராமப்ரேமையை நினைத்து ஆழ்வாராதிகள் நெஞ்சுருக மனமுறுகப் பாடி மனம் கசிந்தும், பிறரை மனம் கசிய வைத் தார்களோ, அதுபோல) அந்த புண்யச்ரவணமாகிற பரத னுடைய வசனங்கள் எல்லோருடைய ஆத்மிக துக்கங்களையும் தேக க்லேசங்களையும் போக்கி, அவர்கள் ஏகோபித்து பரதனை ஸ்லாகித்தார்கள்.

ஸ்ரீ சீதாராம வியோகம் மஹத்தான ஆலகால விஷத்தைப் போன்றது. (பரமசிவனைத் தவிர மற்ற எவரையும் பயங்கர மடையச் செய்யக்கூடியது. மஹா விஷத்தை உண்டு பயத்தைப் போக்கிய நீலகண்டனாக வந்து சேர்ந்தான் பரம பாகவதனாகிற

பரதன்.) ஸகல அயோத்திவாசிகளும் (தங்களுடைய பாபங்களால் ஏற்பட்ட) ராமவியோகம் பரதனால் சாந்தி அடையப் பெற்றது என்று நினைக்கும் போது எல்லோரும் சந்தோஷத்தை அடைந்தார்கள்.) பீஜாக்ஷரத்தோடு கூட மந்திரத்தை ஜபிப்பதால் ஜனங்கள் விஷத்தின் உபாதையிலிருந்து விடுபட்டு விழிப்படைந்தார்கள். (925)

தாய்மார்கள், வஸிஷ்ட குரு, மந்திரிகள், புரவாஸிகள் ஸ்திரி புருஷர்கள் யாவரும் ஸ்ரீ ராம ஸ்நேகத்தால் தூண்டப்பட்டு, பரதனால் மீண்டும் தூண்டப்பட்ட பழைய நினைவுகளுடன், துக்கமடைந்ததினால் தளர்ந்த மனத்தை உடைய அந்த மஹா புண்யாத்மாக்கள் பரதனை அதிகமாகப் புகழ்ந்தார்கள். "அப்பா, பரதா, உனக்கு நீயேதான் உபமானம். உன்னைப் போன்ற ராமப்ரேமை யாருக்கும் எக்காலத்திலும் இருக்க முடியாது. சாக்ஷாத் ராமப்ரேமையே உருவெடுத்து வந்திருக்கிறாய். (எங்களை, பிரஹ்லாதன் எவ்விதம் தன் இனத்தார்களாகிற அசுரக் கூட்டங்களை உத்தாரணம் செய்தானோ, அதுபோல) அயோத்யாபுரிவாசிகளை, தரையின் கீழே தூசி போல மண்ணில் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் எங்களுக்கு வாயுவாஹனராகிய கருடனைப் போல, எங்களை ஸ்ரீ ராம சரணங்களில் சேர்த்து வைக்கப்போகும் மஹா பாக்யத்தை உன்னால் நாங்கள் அடையப் போகிறோம். அப்பேற்பட்ட உனக்கு நாங்கள் என்ன மாதிரி கடமைப்பட்டிருக்கிறோமென்று வர்ணிக்க முடியுமா?" (926)

"எங்களைக் காக்க வந்த மஹா உத்தமா, தீரனே, வித்வானே, கருணைக்கடலே, (ராமானுஜர் தன் வைஷ்ணவ குழாம்களை அஷ்டாக்ஷர மந்திரத்தினால் காப்பாற்றியது போல,) உதார மனத்துடன் எங்களை எங்கள் பாபங்களிலிருந்து விடுவித்த நரோத்தமா, ஸ்ரீ ராமனுக்கு நீ பிராணப்ரியன் என்கிற விஷயம் எங்களுக்கு இதுவரை தெரியாமல் போய்விட்டது. கருணா ஸாகரமே, விஸ்வபந்து, எந்த பாபாத்மா இனி உன்னை ஈடுபடுத்தி கைகேயின் குற்றத்தினால் ஏற்பட்ட மூர்க்கத் தனத்தினால் உன்னை இகழ்ந்து, அபவாதமாகச் சொல்லி, உனக்கு பரம அபஹாரம் செய்வானோ, உன் நடத்தையிலும் வாக்யங்களிலும் விஸ்வாச பூர்ணனாகயில்லாமல் உன்னை அலக்ஷ்யம் செய்வானோ. (927)

அப்பேற்பட்ட துஷ்டன் கோடிக்கணக்கான பந்து மித்ரர்களுடன் பல தலை முறைகளுடன், பல கல்ப காலங்கள் நரகத்தில் வசிப்பான். ஜாதியின் தோஷத்தினாலோ, பிறப்பாலோ, பகவா

னுடைய கிருபையை அடையாதவர்கள் யார் இருக்கின்றனர்? எங்கள் ராமன் விசுத்தாத்மா. கிருபா சமுத்திரம், ஸர்வ ஸுலபர், பசுபக்ஷி மிருகம், பாபிகள் என்று மனப்பான்மையுடன் இராமல் ஸகலரையும் கடாக்ஷிக்கும் உதார ஹ்ருதயன், மஹாத்மா, அவனுடைய ஸ்ருஷ்டியே விநோதம். ஒரு சர்ப்பம் பாபத்தினால் அவகதியை அடைந்திருந்த போதிலும், அதனுடைய நாக மணியின் பிரபாவம் அந்த நாகத்தின் துஷ்ட பிறப்பினால் உண்டான தோஷங்களை கிரஹித்துக் கொள்கிறதில்லை. ஆனால் அந்த மணி அந்த சர்ப்பத்தின் விஷத்தை அகற்றி, தரித்திரத்தையும் நாசம் செய்து, துக்கத்தையும் போக்குவதாயிருக்கிறது. அப்பேற்பட்ட உத்தம குணம் வாய்ந்த நாகமணி நீயல்லவோ அப்பா பரதா.'' (928)

''பரதா, நீ எவ்விதம் சொன்னாயோ, அதுபோல நாம் எல்லோரும் ராமன் வாழும் வனத்திற்குச் செல்வோம். எங்கள் சோகத்தைப் போக்கும் மணி மந்திர ஔஷதமே, உன் கிருபையாகிற எங்களுடைய க்ஷேமதியானங்களை நீ செய்வதால் நாங்கள் புத்ர பௌத்ரர்களுடனும், முன்னோர்களுடனும் சோக சமுத்திரத்தில் மூழ்கடிக்கப்பட்டவர்களாக இதுவரை இருந்தோம். இப்போது உன் உதவியினால் நாங்கள் அனைவரும் கரையேற்றப் பட்டோம். எங்களைக் காப்பாற்றிய பாகவத உத்தமரே, உம்முடைய தயையினால் நாங்கள் பாபங்களை விலக்கி விட்டோம். தர்மத்தினால் அஹங்கார மடைந்த நாங்கள் சீதாராம த்ரோஹத்திலிருந்து காப்பாற்றப்பட்டோம்.'' (929)

''எங்கள் மனத்தில் ஆனந்தம் பொங்குகிறது. மேகங்களின் கர்ஜனை சப்தங்களைக் கேட்ட சாதக பக்ஷிகளைப் போல சீதாராம தரிசனத்தில் ஆசை கொண்டு உன்னுடன் வனம் போவதை ஆவலுடன் எதிர் பார்க்கிறோம். மயில்கள் மேகங்களைக் கண்டு ஆனந்த நடனம் செய்வது போல நாங்கள் உன்னுடன் வருகிறோம்'' என்று பரதனைப் புகழ ஆரம்பித்தார்கள். மறுநாள் விடியற் காலையில் பிரயாணத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் கண்டு, ஸகல அயோத்யாவாஸிகளும் பரதனிடம் ப்ராணபிரியர்களாக ஆனார்கள். (930)

[தியானம்

ஹேராம நாராயணா, மஹாலக்ஷ்மிசமேத சங்கல்ப நாராயணா, பக்தர்களுக்கு எதை வேண்டுமானாலும் கொடுக்கும் வ்யக்ரஹர் நீர். உம்மால் ஏற்படுத்தப்பட்ட ஆசாரங்களால், தர்ம வியவஸ்தை

களால், உலகத்தையே நிலை பெறச் செய்யும் பிரமாணர். ப்ருது என்று சொல்லப்படும் வஸுதாதிபனை ஆயிரம் காதுகளால் உன் கதைகளைக் கேட்கும்படி அனுக்ரஹித்தவர், அஸ்வமேத யாகாதிகளுக்கு நிரம்ப தக்ஷிணையாக அளித்தவர் ; அப்பேற்பட்ட மஹா உத்தமருக்கு பரதன் தன்னுடைய யாவையும் சமர்பித்தான். ராம அபராதத்திற்கு கலங்கினான். ராம கிருபையை வேண்டினான். அப்பேற்பட்ட பரதனை நான் நமஸ்கரிக்கிறேன்.]

ஸகல ஜனங்களும் முனிஸ்ரேஷ்டரான வஸிஷ்டரை நமஸ்கரித்த பின்பு பரதனையும் நமஸ்கரித்துவிட்டு தங்கள் கிரஹம் திரும்பினார்கள். இந்த உலகத்தில் பரதனுடைய பரிசுத்தமான வாழ்க்கை ஜீவிய பரிசுத்தமடைந்தது. தன்யனான பரதனை சகலரும் புகழ்ந்தார்கள். மஹா உத்தம நடத்தையுள்ள பரதன் சீலம், அடக்கம், பிராத்ரு ஸ்நேகம் இவைகளுக்கு யிருப்பிடமாக யிருப்பதாக எல்லோரும் புகழ்ந்தார்கள். (931)

ஒவ்வொருவரும் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள், "இன்று ஒரு பெரிய வேலை முடிந்தது" எல்லோரும் பரதனுடன் செல்வதற்கு தயார் செய்தார்கள். யார் யாரை விட்டுச் சென்றார்களோ, அவர்கள் எல்லோரும் பிடரியில் அடிபட்டவர்கள் போல விளங்கினார்கள். (932)

சில பேர்கள் மற்றவர்களைப் பார்த்துச் சொன்னார்கள். "இந்தா, அயோத்தியில் தங்கும்படி யாரையும் சொல்ல வேண்டாம். இந்த வாழ்வின் லாபத்தை யார்தான் அடைய விரும்ப மாட்டார்கள்? ராம தரிசனம், ராம கைங்கர்யம், ராம அபவாதத்தைப் போக்குவது, ராமனுக்கு த்ரோகம் செய்யாமலிருப்பது மேலான ஜன்ம லாபங்கள் அல்லவா?" (933)

ஸம்பத்துக்களோ, வீடோ அதன் போகங்களோ, சுகங்களோ, ஸ்நேகிதன், மாதாபிதா ஸஹோதரன் யார் இருந்தாலும் இருக்கட்டும்; அழிந்து போனாலும் போகட்டும். நாங்கள் ஒன்றையும் விரும்பவில்லை. ராம சரணங்களுக்கு இடையூறுகளாக ஏதாவது இருந்தால் அவைகள் எங்களுக்கு வேண்டாம். அவ்விதம் எவர்களாவது பிரஸன்ன ஹ்ருதயத்துடன் எங்கள் பிரயாணத்திற்கு சஹாயம் செய்யாவிடில் அவர்களை நாங்கள் வாஸ்தவமாகவே வெறுக்கிறோம்." (934)

இவ்விதமாக ஒவ்வொருவரும் ஒவ்வொரு வீட்டிலும் பேச்சுக்கள் கேட்கப்பட்டன. ஒவ்வொரு கிரஹஸ்தரும் தங்கள் வாகனங்களை தயார் செய்து கொண்டு புறப்பட்டார்கள். "மறுநாட் விடியற்காலையில் புறப்பட்டுப் போகிறோம்" என்று எங்கு பார்த்

தாலும் ஒவ்வொருவருக்கும் குதூஹலம். பரதனும் தன்வீட்டுக்குப் போய் மனத்திற்குள் சிந்திக்க ஆரம்பித்தான். குதிரைகள் யானைகள் வீட்டின் பொக்கிஷங்கள் யாவையும், (935)

ஸகல அயோத்யா புரியின் ஸம்பத்துக்கள் யாவையும் ரகுபதி யான ஸ்ரீ ராமச்சந்திரனுடைய பொக்கிஷங்கள் இவைகளை நான் அயோத்தியில் விட்டு விட்டுப் போனல் யார் அவர்களை ரக்ஷிப் பார்கள்? அதனால் எனக்கு கெட்ட பெயர் ஏற்படும். ஸ்வாமியின் சொத்துக்களை சரிவர பரிபாலிக்காத போனல் மிகச் ஸ்ரேஷ்ட மான பாபம் அல்லவோ எனக்கு உண்டாகும். (936)

நானோ ஸ்ரீராமனுடைய சேவகன். எந்த சேவகன் எஜமான னுடைய ஹிதத்தைச் செய்யாமல் அசிரத்தையுடன் இருக்கிறனோ, அவனுக்கு கோடி கோடி கணக்கான பாபங்கள் வருகின்றன. துஷ்டர்கள் எனக்கு வேணுமென்று தோஷத்தை கற்பிப்பார்கள். இப்படி யோசனை செய்து, விஸ்வாஸ பாத்ரமான சேவகர்களை அழைத்து, அவர்களுடைய ஸ்நேக தர்மத்தைப் புகழ்ந்து சொன்னன். அந்த உத்தமர்கள் கனவிலும் எஜமானத்ரோகம் செய்யாத மஹா புண்யாத்மாக்கள். (937)

அவர்களிடம் பரதன் தர்மத்தின் ரஹஸ்யங்களைக் கூறி அவர்களின் லாயக்குக்குத் தகுந்தபடி காரியங்களை ஒப்பு வித்தான். ஒவ்வொருவரையும் வேலைகளை நன்ருக கவனிக்கும் படி ஞாபகப்படுத்தினன். சகல ஏற்பாடுகளையும் செய்துவிட்டு, பரதன் ஸ்ரீ ராமனின் தாயாரான கௌஸல்யாதேவியிடம் சென்றன். (938)

தன் தாய்மார்களின் துக்கங்களை முழுவதும் தெரிந்து கொண்டவனுன பரதன் அவர்கள் புறப்படுவதற்கு உத்தமமான பல்லக்குகளை தயார்படுத்தி, அதில் ஆஸனங்களை அமைத்து, சகல ஏற்பாடுகளையும் தயார் செய்யும்படி உத்தரவிட்டான் (939)

நகரத்தில் உள்ள ஸ்திரி புருஷர்கள் யாவருடைய மனத்திலும் சக்ரவாக தம்பதிகள் கூடி எவ்விதம் ஆனந்திக்குமோ அதுபோல அத்யந்த ஆனந்தத்தை அடைந்தார்கள். ஒவ்வொருவரும் ராத்திரி முழுவதும் முழித்துக் கொண்டு காலையை ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணமாக விருந்தார்கள். அப்போது பரதன் தன் மந்திரிமார்களை அழைப்பிவித்தான். (940)

"ராஜ்யாபிஷேகத்திற்கு வேண்டிய சகல சாமக்ரியைகளை எடுத்து தயார் செய்யுங்கள். வனத்தில் வஸிஷ்ட பகவான் ஸ்ரீ ராமச்சந்திரனுக்கு ராஜ்யத்தை அளிப்பார். சீக்கிரம் தயார் செய்யுங்கள்" இந்த வார்த்தைகளைக் கேட்ட மந்திரிமார்கள்

வந்தனம் செய்து துரிதமாக குதிரைகள், ரதங்கள், யானைகள் இவைகளை சிங்காரிக்கத் துடங்கினார்கள். (941)

[தியானம்

ராமா ஜானகி ராமா, அலர்மேல்மங்கை ஸ்ரீநிவாஸா, கருணாம்புதே, சசிசூர்யநேத்ரா, சங்குசக்ரகதாம்பிருதகரே, வனமாலையினால் அலங்கரிக்கப்பட்ட மஹாவீர்யா, மஹாத்யுத்மான், மஹாத்ருதி, வெள்ளை வஸ்திரம் உடுத்தி, ஸஸி வர்ணத்தால் ஜ்வலிக்கிறவரும் மஹா பாஹுக்களான சதுர்புஜங்களை உடையவரும், விஷ்ணுவும் கிருஷ்ணரும் நரநாராயண ரிஷிகளின் அம்சமான விஷ்வக்ஸேனரை பீஷ்மர் ஸ்துதி செய்தது போலச் செய்கிறேன். நீரே ஆதி பூதம். அவ்யயமான பிதா. சராசர குரு. புராணன். புருஷோத்தமர் தேவதேவர். அனந்தா, ஹேவிஷ்ணோ, சுக்ராசாரியார் போன்ற மஹாத்மாக்கள் எந்த பகவானை ஆராதித்து கிருபா கடாக்ஷம் வேண்டினார்களோ, அந்த ஸ்வேத வராஹ கல்பனை நான் நமஸ்கரிக்கிறேன். மஹா உத்தம சந்யாஸியும் தாம்பத்ய வாழ்க்கையுடன் கூடிய வன சஞ்சார சீதா ராமனை, பரதன் லக்ஷ்மணன் சத்ருக்னன் சகிதம் பூஜித்து, எவ்விதம் ஆனந்தித்தாரோ, அந்த மஹா பாகவத உத்தமரான பரதனை முன்னிட்டு ஜானகி ராமனை சரணமடைகிறேன்.]

எல்லோருக்கும் முதன் முதலாக வஸிஷ்ட பகவானும் அருந்ததியும் ரதத்தில் ஏறிக்கொண்டார்கள். அக்னிஹோத்ரம் முதலிய ஸாமக்ரியைகளை எடுத்துக்கொண்டு அவர் முதலில் புறப்பட ஆரம்பித்தார். அவர்களைத் தொடர்ந்து பிராம்மண ஸமூஹங்கள், (வாமதேவர் ஜாபாலி காஸ்யபர் போன்ற பிரும்ம ரிஷிகள், தேஜோவ்ருஷர்கள்) அனுக்ரஹ பார்வையுடன் ஸ்ரீராமன் பரதஸம்வாதங்கள், தர்மம் ஸம்பந்தம் கொண்ட பேச்சுக்கள், புண்ய ஸ்லோகனுடைய ராஜ தர்மத்தின் அனுசனைகள் ஆகியவைகளை கண்களால் பார்த்தும், காதுகளால் கேட்டும் ஆனந்தப்பட ஆவலுடன் சென்றார்கள். மஹாத்மாக்களான ஆசார்யர்கள் தவத்தையும் மோக்ஷத்தையும் பராயணமாக ஜீவனை நடத்துபவர்கள். தாங்கள் செய்யும் ஒவ்வொரு நினைவாலும் செய்கையிலும் வாக்குக்களாலும் நாராயணபரனாக வாழும் புண்ணிய மூர்த்திகள். அப்பேற்பட்ட மஹாத்மாக்கள் முதலில் புறப்பட்டார்கள். (942)

அதன் பிறகு நகரத்தின் ஸ்திரி புருஷர்கள் யாவரும் அவரவர்களுக்கு ஏற்பட்ட வாகனங்களில் ஏறி சித்திரகூடத்திற்கு

செல்லப் புறப்பட்டார்கள். அவர்கள் புறப்படும் அழகையும் மனத்திலிருக்கும் தூய்மையான எண்ணங்களையும், ஸர்வோத்தம மான மஹா நாராயணரின் அம்சமாகிற ஜானகிராமனைப் பார்ப்பதற்கு சாஸ்திரப்படி செய்யவேண்டிய பூஜை சாமான் களையும் எடுத்துக்கொண்டு போகும் அழகை யாரால் வர்ணிக்க முடியும்? அவர்களுக்குப் பின் அழகான பல்லக்குகளில் ராணி மார்கள் ஏறி புறப்பட்டார்கள். (943)

மஹா விஸ்வாசம் கொண்ட ராஜசேவகர்களிடம் ராஜ்யத்தை ஒப்படைத்துவிட்டு, எல்லாரையும் மிக்கப் பரிவோடு பிரயாணம் செய்வித்து, பிறகு ஸ்ரீ சீதாராமனுடைய திருவடிகளைத் தியானம் செய்தவாறே, அவர்களே வாழ்க்கையின் ஒளி என்று ஸ்மரணம் செய்து கொண்டு, பரத சத்ருக்னாதிகள் சென்றார்கள். (944)

இராமனைக் கண்களால் காணவேண்டும் என்று அளவிலா அன்பு மேலிட்டு, ஆண் பெண் அனைவரும் திரளாகச் சென்றனர். தாஹம் கொண்டு தவித்துக் கொண்டிருக்கும் யானைகளுடைய கூட்டம் ஒன்று ஓரிடத்தில் நீர்நிலையைக் கண்ட போது எவ்வாறு (பரபரப்புடன் ஆவலோடு) வேகமாகச் செல்லுமோ, அதுபோல விருந்தது அவர்கள் செல்லும் காட்சி. (அந்த மஹாத்மாக்கள் ஸ்ரீ சீதாராமனின் சரணங்களின் தியான பூர்வமாகச் செல்வதைப்பார்த்து, சிலர் சந்தோஷத்துடன் வழி அனுப்பிவைத்தார்கள்.) எல்லோருக்கும் கடைசியில் சத்ருக்ன னுடன் கூட பரதன் கால்நடையால் சென்று கொண்டிருந் தான். (945)

(கருத்து: பகவான் கிருஷ்ணர் பாண்டவர்களுக்காக தூது செல்லும் சமயம் வழியில் ஜனங்கள் நல்ல மனத்தை உடையவர் களாகவும் விஷ்வக்ஸேனரான பகவானைப் பார்க்கும் விருப்பத் தால், கூட்டம் கூட்டமாக வந்து நின்றார்களோ, அதுபோல அந்த மஹாத்மாக்களான ஜனங்கள் வழி அனுப்பினார்கள். ஸ்திரி புருஷர்கள் யாவரும் ஜ்வலிக்கின்ற அக்னி போல காட்டிற்குச் சென்றவரும் மஹாத்மாவும், யௌவன வயதுள்ள சீதையுடன் கூடியவரும் தங்கள் க்ரஹத்திற்கு எழுந்தருளப் போகும் மாப்பிள்ளையையும் அதிதியையும் பிரபுவையும் எவ்விதம் பூஜிப்பார்களோ, அதுபோல மதுசூதனரான கேசவரை, ஸ்ரீ சீதாராமனை, நமது அதிருஷ்டவசத்தால் மீண்டும் தர்சிப்போம், அவர்களின் பாத சரணங்களை அடுத்து வாழ்வோம் என்று அதிக ஆவல் உள்ளவர்களாகச் சென்றார்கள். அந்த புருஷர்கள் ஸ்திரீகள் திக்கஜங்களான அஞ்சனம்

ஐராவதம் போன்ற உத்தம யானைகள் தங்களின்பத்னிகளுடன் எவ்விதம் க்ரீடானுபவங்களில் ஆசை கொண்டு, ஜலத்தில் இறங்குமோ, அதுபோல அதிக உத்ஸாஹத்துடன் சென்றார்கள். எங்கள் பிரபு சீதாராமன் சகல போக்யங்களையும் பரித்யாகம் செய்து விட்டு வனத்தில் நிவிருத்தி மார்க்கத்தை அடைந்து விட்டார். ஸகலராலும் பூஜிக்கப்பட வேண்டிய அந்த மஹாத்மாக்களான ராஜகுமாரர்கள் வனம் சென்றது நமது துர் பாக்கியத்தால் அன்றோ ஏற்பட்டது என்று மனக்கலக்கம் அடைந்தார்களாக, மஹாத்மாக்களான பாத சத்ருக்னர்கள் பகைவர்களை சிக்ஷிப்பவரான ஹ்ருஷிகேசரை நினைத்துக் கொண்டு கால் நடையால் ஶ்ரீ ராமனை சீதையுடன் கூடிய மங்கள ராமனை லக்ஷ்மணன் ஆராதிக்கும் சீதாராமனை, ஸகல மன அடக்கத்துடன் காணச் சென்றார்கள். அவர்களுடன் பல அயோத்யாபுரிவாஸிகளும் கால் நடையுடன் சென்றார்கள். எல்லாப் பிராணிகளின் உள்ளங்களில் வசிக்கும் பரமாத்மாவை நல்ல வாசனையுள்ள புஷ்பங்களால் இறைக்க வேண்டும்; அவருடைய அழகானதும் தர்மங்களுடன் கூடினதும், சுகத்தைத் தருவதுமான பேச்சுக்களை நம் காதுகளால் கேட்கவேண்டும்; அந்த மஹா பாஹுக்களால் நாம் அணையப்பட வேண்டும்; அவருடைய கிருபாதிருஷ்டி நம் மீது யதேச்சையாகவோ, அல்லது புராண சுக்ருதத்தாலோ, பித்ருக்கள் செய்த மஹா பாக்ய விசேஷத்தாலோ அல்லது நம்முடைய பரிஸ்ரமத்தினுலோ, கிடைக்க வேண்டும். அல்லது ஸாதுக்களின் உத்தமமானதும் மங்கள ஆசீர்வாதங்களாலும் ஏற்படவேண்டும் என்று கலங்கிக்கொண்டு ஆசையுடன் சென்றார்கள்.

சத்ருக்னனோடு பரதன் சீதாராமர் காட்டிலே (வாழ்க்கைக்கு வேண்டிய) சுகோபகரணங்கள் ஒன்றுமில்லாமலே வாழ்கின்றனரே என்று நினைத்து (வாஹனத்தில் ஏறிக்கொள்ளாது) நடந்தே செல்லலாயினன். (946)

அந்த மஹா ஸ்ரேஷ்டதமர்களான பரத சத்ருக்னன் அவர்களுடன் கூடச் செல்லும் மஹா பாகவத உத்தமர்கள் அதிப்ரேமையுடன் நடந்து செல்வதைக் கண்ட இதர ஜனங்கள் குதிரைகள் யானைகள், ரதங்களிலிருந்து கீழே இறங்கி தாங்களும் பரத சத்ருக்னுதிகளுடன் கால் நடையாகச் சென்றார்கள். அதைக் கண்ட ஶ்ரீராமனின் தாயார் கௌஸல்யாதேவி தன் பல்லக்கை பரதனுக்கு அருகில் செல்வித்து, இனிய முறையில்சொல்ல ஆரம்பித்தாள். (947)

"அப்பா, பரதா, சுகத்திற்காகப் பிறந்து, சுகத்தில் இதுவரை வளர்ந்த உன் மிருதுவான அங்கங்கள் ரொம்ப பலஹீனம் அடைந்துவிடும். ரதத்தில் ஏறிக்கொண்டு வா. அப்பனே, உன் தாய்மார்களாகிய நாங்கள், அனைவரும் நீ நன்றாக இருக்கவேண்டும் என்று வாழ்த்துகிறோம். நீ ரதத்தில் ஏறிக்கொள். இல்லையேல் நம் பரிவாரமனைத்துமே வருத்த மடையும். நீ நடந்து செல்வதால் எல்லாரும் நடந்தே செல்வார்கள். சோகத்தினால் எல்லாரும் மெலிந்திருக்கின்றனர். நடப்பதற்கு சத்தியற்று இருக்கின்றனர். உன் ஸ்திதியைக் கண்ட இந்த பரிவார ஜனங்கள் மனம் கலங்கி, உன்னைப் போல நடந்து வருகிறார்கள். முதலில் நீ ரதம் ஏறி, முன் சென்றால் தான் அவர்களும் உன்னைப் பின்பற்றுவார்கள். நாம் போகக் கூடிய வழிகள் நடப்பதற்கு யோக்யமின்றி கரடுமுரடாக விருக்கின்றன. நான் சொல்வதை தயவு செய்து கேளு." (948)

[தியானம்

ராமா ஜானகிராமா, ரவி என்று சொல்லப்படும் சூர்யர், விரோசனர் என்று கூறப்படும் உத்திராயணம் தக்ஷிணாயணம், என்கிற இருமார்க்கங்களில் சேரப்படும் ஸம்வத்ஸரமாகவிருக்கும் நாராயணா, எல்லாவற்றையும் உண்டாக்கும் ஸவிதாக விருப்பவரே, விஸ்வாமித்ரர் பூஜை செய்த ஸவிதா நாராயணரே, அழகான லோசனங்களைப் படைத்தவரே, எந்த பரதன் தன் குல நாயகரான சூர்யனை மனதில் நினைத்து ஸ்ரீ லக்ஷ்மணன் சீதா சஹிதம் உள்ள ராகவனை நினைத்து, வழி முழுவதும் சென்றானோ, அந்த மஹா பாக்யவானான பரதனை முன்னிட்டு உங்களை நான் சரணமடைகிறேன். சத்ருக்னன் எனக்கு அந்த அடக்க அறிவைக் கொடுப்பானாக.]

கௌஸல்யையின் ஆக்ஞையைத் தலையால் ஏற்றுக்கொண்டு அவளுடைய சரணங்களை நமஸ்கரித்து விட்டு பரதசத்ருக்னர் ரதத்தில்ஏறினார்கள். முதல் நாள் தமஸா நதிதீரத்தில் தங்கிவிட்டு, மறு நாள் கோமதி தீரத்தில் வசித்தார்கள். (949)

சில பேர்கள் பால் சாப்பிட்டுவிட்டு விரதத்துடன் இருந்தார்கள்; சில பேர்கள் பழங்கள் சாப்பிட்டு ராத்திரி காலத்தை ராமதியானத்தில் கழித்தார்கள். இன்னும் சிலர் பலஹாரம் சாப்பிட்டு விட்டுமௌன வ்ரதத்துடன் இருந்தார்கள். எல்லோருடைய உள்ளங்களிலும் ஸ்ரீராமனை எப்போது தர்சிப்போம், அவர் என்ன சொற்களைச் சொல்லப்போகிறார்; என்கிற மனக்கவலை

யுடன் இருந்தார்கள். ஸ்ரீராமனை, அந்த சுலபரை, சௌசீல்ய ராமனை எவ்விதமான உத்தம வ்ரதத்தினால், ஸர்வ அந்தர்யாமியாக விருக்கும் ஜானகிராமனை எவ்விதம் திருப்திபடுத்தலாம் என்கிற ஏக்கத்தினால் ஆபரணங்கள், போகவிலாஸங்கள் யாவையும் தியாகம் செய்துவிட்டு, அவர்கள்ஒரே ஸ்ரீராம தியானத்தில் ஈடுபட்டிருந்தார்கள். (950)

(என் பிரபு ஸர்வதீர்த்தகரர் ; மந்திரயக்ஞ தபக்கிரியையாகிற ஜபயக்ஞமாக விளங்கும் ஸ்வாமி ; ஸகல சுலபர் ; அவருடைய நினைவினால் ராத்திரி முழுவதும் கழித்துவிட்டு) 'ஸா' என்ற நதியின் கரையில் இரவைக் கழித்தனர். காலையில் அங்கிருந்து கிளம்பிச் சென்றனர். அவர்கள் ஸ்ருங்கிபேரபுரத்தை நெருங்கிச் சென்றார்கள். பரதன் சத்ருச்னன் வருவதை அறிந்த நிஷாத ராஜனான குஹன் மனத்தில் கவலை அடைந்து, தனக்குள் யோசிக்கலானான். (951)

"என்ன காரணத்தால் பரதன் தன் தம்பியுடன் கூட வனத்திற்கு வந்திருக்கிறான்? ஏதாவது கபட எண்ணம் இருக்குமோ? அவன் மனதில் குடில எண்ணங்கள் இல்லாத போனால், ஏன் சேனை பரிவாரங்களுடன் அவன் வரவேண்டும்? (952)

ஒருவேளை தன் தம்பி லக்ஷ்மணன் சகிதம் ஸ்ரீ ராமனை வதைத்து விட்டால்—எண்ணவே பயமாக விருக்கிறது. நிர்பயமாகவும் சுகமாகவும் ராஜ்யத்தை ஆண்டு அனுபவிக்கலாம் என்கிற நோக்கத்துடன் இருக்குமா? பரதன் ராஜ நீதியில் தேர்ந்தவனாக இருக்கமுடியாது. அதைப்பற்றி அவன் சிந்தனை செய்யவில்லை. அவன் அவ்விதமிருந்தால் தனக்கு தன்னால் ஒரு பெரிய களங்கத்தை ஏற்படுத்திக்கொண்டு விட்டான். இப்போது ஏதாவது ராமனுக்கு அபகாரம் செய்வதாக விருந்தால், தன் மரணத்தையே என்னிடம் விரும்புவான் போலிருக்கிறது." (953)

[தியானம்

ராமா நாராயணா, சித்தலக்ஷ்மியுடன் கூடிய விஷ்வக்ஸேனரே, ஹிர்ண்யகர்ப்பரே, பரதன் சத்ருக்னன் ராஜ்ய போகங்களை விட்டு, உம்மையே நன்மையைத் தருபவராகவும் ஆனந்தத்தை தருபவராகவும் பொன் போல ரமணீயமாக விருப்பதாலும், பரமபதத்தில் வசிக்கும் ஹிரண்ய கர்ப்பராகவும் நினைத்தார்கள். உம்முடைய சௌலப்யம் பரமஸ்நேகம் எதிர்பாராததாகவும் எல்லையில்லாததாகவும், மகிமையுடன் விளங்குகிறது.

அவ்யக்தரூபரே, பிரதான புருஷரே, விதுரர் போன்ற தீனஸ்திதியை அடைந்தவர்கள் உம்முடைய காருண்ய ஸ்நேகத்தை, மாதவா மதுசூதனு, ஹ்ருஷிகேசா, கேசவா, சௌரி என்று நேரில் சொல்லி பல தடவைகள் அனுபவித்தும் திருப்தி அடைகிருர்களில்லை. உமையும் சம்புவும், உம்மை கோவிந்தரே, கிருஷ்ணு, தாசார்ஹரே, ரகுவம்ச திலகரே, ராமா, ராமா, என்று பல தடவைகள் கூறி ஆனந்தப்படுகிருர்கள். பிருக்ருதிக்கு மேற்பட்ட புருஷரே, நாரதர், மார்க்கண்டேயர், பராசரர், சுகர் ஆகியஎல்லோரும் வேதவாக்குகளால் புகழ்ந்தும் திருப்தி அடையவில்லை. லக்ஷ்மணன் சீதையுடன் கூடிய ராமா, சத்ருக்னன் பரதன், வஸிஷ்டர், அருந்ததி, சப்தரிஷிகளை முன்னிட்டும், பிரஹஸ்பதி சுக்ராசார்யரை முன்னிட்டும் பானுகுல திலகனுனராமா, உன்னை சரணம் அடைகிறேன். எனக்கு நீர் தான் ஹிதம்; நீர்தான் தத்வம்; நீர்தான் புருஷார்த்தம்; நீர் தான் அனுகூலர்; நீர்தான் என்னுடைய ஆராவமுது; நீர்தான் என்னுடைய அஷ்டதள ஹ்ருதயதாமரையில் இருக்கும் தியான பலனைத் தரும்மஹா நாராயணர். உம்மை நம்பி வாழும் எனக்கு உம்முடைய ஆதரவு ஸர்வதா கிடைக்கட்டும். தியாகராஜர் போன்ற மஹான்களைக் கடாக்ஷித்த மஹானுபாவா, என்னிடம் சௌசீல்யத்துடன் வாரும்)

"ஐயோ பாபம். இவ்வளவு உத்தம பிறவியில் பிறந்த பரதனுக்கு ராமனுடைய வீரம் தெரிந்துதான் இருக்கும். மஹா வீரன், மஹா சக்தி படைத்தவன், ராமனைப்போல யாராகிலும் உண்டா? ஸகல சுரர்கள் அசுரர்கள், தைத்யர்கள் ஸகல சராசர ஸ்ருஷ்டியில் பலத்திற்கும் த்யுதிக்கும் பெயர் போன யாவரும் ராமனுடைய வீரத்தனத்திற்கு முன்பு என்ன செய்யக்கூடும்? அப்பேற்பட்ட ரணதீரனை இந்த பரதன் நன்ருக அறிந்திருப்பான். அவ்விதம் தெரிந்து கொண்டும் பெரிய சேனையுடன் அவன் சத்ருக்னனுடன் வரக்காரணம் என்ன? ஆனுல், இதில் என்ன ஆச்சரியம்? விஷக் கொடியில் அமிருதபலம் எங்காவது காய்ப்ப துண்டா? (கைகேயியின் பிள்ளையாகிய பரதனும் துஷ்டபுத்தி உள்ளவனுக இருந்தால் வியப்பென்ன? ஆகவே, அவன் இராமன் மேல் படையெடுத்து வருகிருன்.) இதில் ஏதோ மனேபாவம் நமக்குப் புலப்படாமல் இருக்கவேண்டும். பகவத் ஸ்ருஷ்டியில் ஹிரண்ய காப்பரின் விளையாடல்களை யார்தான் சரியாக தெரிந் திருக்கக் கூடும்? ரகு வம்சம் அம்ருத வம்சம். (வில்வப்பழம் மாதிரி) அதி சுகத்தைத் தரக் கூடியது. அதில் விஷமுள்ள பழம்

என்பதே கிடையாது. பரதன் நல்ல குலத்தில் பிறந்து, தப்பு எண்ணத்துடன் வந்திருக்க மாட்டான்.'' (954)

''மஹா ஞானவானுகிற குஹன் அதிநேரம் சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்தான். தன்னுடைய ஜாதி சகாக்களைக் கூப்பிட்டு, அவர்களைத் தயார் படுத்தினுன். எல்லா ஓடங்களை நதியில் மூழ்கி விடுங்கள். படித்துறைகளை எல்லோரும் ஆக்கிரமித்துக் கொள் ளுங்கள். உங்களுடைய உத்தரவு இன்றி, யாரும் கங்கையின் ஜலத்தில் இறங்கக்கூடாது.'' (955)

''தகுந்த ஏற்பாடுகளுடன் படித்துறைகளில் நின்று கொண்டு உயிருக்கு ஆசை வைக்காமல் சண்டை போட அவர்கள் வந்தால், திருப்பி நீங்கள் சண்டை செய்யுங்கள். நான் பரதனை மைதானத்தில் சந்தித்து, அவனது அந்தரங்க எண்ணத்தை அறிகிறேன். அவன் யுத்த மனப்பான்மை யுடனிருந்தால், அவனுடன் சண்டை செய்கிறேன். என் உயிரை விட சித்தமாக விருக்கிறேன். கங்கையில் இறங்குவதற்கு முன் அவர்கள் என்னை ஜயிக்காமல் மீறிவர முடியாது.'' (956)

''யுத்தத்திலே மரணம் அதுவும் கங்கையின் கரையில் இராமனுடைய நிமித்தமாக இந்த மரணம் ஏற்படுகிறது. இந்த உடலோ நொடியில் அழியக்கூடியது. பரதனே இராம னுடைய தம்பி. அவன் உத்தம அரசகுலத்துப் பிள்ளை. நானே தாழ்ந்த மனிதன். ஆகவே இவ்விதமான நல்ல மரணம் பெரும் பாக்யத்தினுல்தான் கிடைக்கக்கூடும்.'' (957)

(கருத்து :—''என் வாழ்க்கை ராம பராயணமாக ஏற்பட்டது. ராம கைங்கர்யம் என் லக்ஷ்யம், ராம ப்ரீதி என் ஆனந்தம். ராமனுடைய காரியத்தில் உயிர் விடுவது எனது மோக்ஷ சுகம்.)

(ராமா, உனக்காக நான் சண்டை செய்து மரணம் அடைந் தால், சுரஸரியான கங்கையில் என் தேஹத்தை விடுவேன். அவள் சாக்ஷி.) அந்த மஹா புண்யவதியான என் தாய் என் புகழ் கீர்த்திகளை ஸர்வ காலத்திலும், பதினுன்கு லோகங்களிலும் பறைசாற்றுவாள். என் ஸ்வாமியின் காரியத்திற்காக ரணத்தில் உயிர் விடுவேன். ரகுநாதன் என் உயிர். பரதன் என் நிமித்த காரணம். ரகுநாதன் விஷயத்தில் என் பிராணனை (ராம தியானம் ராம சேவை, ராமப்ரீதி என்கிற மூன்று அக்னிகளைக் கொண்ட ஜ்வலிக்கும் ரணத்தில்) தியாகம் செய்வேன். இது ஒரு நல்லவாய்ப்பு. எனக்கு இரண்டுகைகளிலும் 'மோதகம்' (ஒரு தின் பண்டம்) இருப்பது போல, இன்பம் தரும் (அதாவது இறந்து

விட்டால் மோட்சம் பெறுவேன். வெற்றி பெற்றால் இராமனுடைய காரியத்தைச் சாதித்த பெருமை எனக்குக் கிட்டும்.'') (958)

''என்னைப் போன்று உத்தம பிறவியில்லாதவனுக்கு ஸாது ஸமாஜமோ, ஸ்ரீ ராம பக்தியும் இல்லையோ, அவன் பூமிக்கு பாரம். அவனுடைய ஜன்மம் பாழ். ஜகத்தில் அவன் இருந்து பிரயோசனமில்லை. ஜகஜ்ஜனனியாகிற பிருத்விக்கு அவனால் ஒரு லாபமும் இல்லை. அவனுடைய தாயாரின் யௌவனத்தை கோடாலியினால் வெட்டுபவனாக ஆவன். என் தாயையும் என் பிதாவையும் நான் கௌரவிக்க வேண்டுமானால், இந்த சமயத்தில் நான் ஸ்ரீ ராமனுக்காக பாடுபட வேண்டும்.'' (959)

இந்த விதமாக நிஷாததிபதி குஹன் தனக்குள் தன் பிராணனை அர்ப்பணம் செய்வதற்கு தயார் பண்ணிக் கொண்டான். அந்த எண்ணத்துடன் எல்லோருடைய உத்ஸாஹங்களைக் கிளப்பி, (பிரஹ்லாதனும் சுக்ராசாரியாரும் நாராயணருடையதும் வாஸுதேவருடைய த்வாதசாக்ஷர மந்திரத்தின் பெருமையையும் தன் சிஷ்யர்களுக்குச் சொல்வது போல எல்லோருக்கும் சொல்லி,) அவர்களையும் ராம காரியத்தில் ஈடுபடச் செய்தான். பரமபாகவதன். ராம தியானமே பிராணனாகவுள்ள குஹன் தன் கச்சை வில், அம்புராத்துணி ஆகியவைகளைத் தயார் செய்தான். (960)

குஹன் தன் சகாக்களைப் பார்த்துச் சொன்னான். ''என் பிரியர்களே, வேகமாகத் தயார் செய்து கொள்ளுங்கள். என் ஆக்ஞையை தரித்துக் கொண்டு, பயப்படாமல் காரியத்தை செய்து முடிக்க வேண்டும்.'' அவனுடைய வார்த்தைகளைக் கேட்டதும், எல்லோரும் ஒருவரை மற்றொருவர் மிஞ்சுவது போல, உத்ஸாஹத்துடன் கோஷித்துக்கொண்டு எழும்பினார்கள். (961)

நிஷாத ராஜனைப் பின்பற்றியவர்களாக, ஸகலரும் குஹனை நமஸ்கரித்து, பிரிந்து போனார்கள். ஸகலரும் பெரும் வீரர்கள். ஸகல ஆயுதங்களுடன் புறப்பட்டுச் சென்றார்கள். நல்ல ஞானத்தினால் ஏற்பட்ட ராம பதத்தை நினைத்துக் கொண்டு, ராமச்சந்திரனுடைய திருவடித் தாமரைகளின் பாதரேணுக்களை தலையில் தரிப்பவர்களாகி, தங்கள் ஆயுதங்களான வில், அம்பு, கச்சை யாவற்றையும் தயார் செய்து கொண்டார்கள். (962)

கச்சை கட்டி, தலையில் தலைப்பாகை, முண்டாசு கட்டிக் கொண்டு, ஆயுதங்களைத் தீட்டி சீராக அமைத்து, கோடாலி அம்பு, வேல், கத்தி, சூலம் ஆகியவைகளை எடுத்துக் கொண்டு,

அவர்கள் உத்ஸாஹத்துடன் கிளம்பினுர்கள். அதைப் பார்த்ததும் குஹன் அதி உத்ஸாஹத்துடனும் கிருதக்ஞையுடனும் ஒவ்வொரு வீரனையும் கை குலுக்கி, சந்தோஷத்துடன் ஆர்பரித்தான். ஒவ்வொரு வீரனும் ஆகாயத்தில் பறப்பது போல பாய்ந்து சென்றுன். (963)

[தியானம்

காமாக்ஷி, வாராக்ஷி, வைஷ்ணவி, மாதங்கி, உன் அன்பான கிருபை வேண்டும். அம்மா இது ஸமயம் என்று அறிந்து வர வேண்டும் அம்மா. பிரும்ம ஸூத்ரத்தில் ஜீவனுக்கு ஞானம் என்கிற குணமே ஸாரமாதலின் ஜீவனே ஞானம் எனப்படுகிறுன். ஸர்வக்ஞுன எம்பெருமானுக்கு ஆனந்தம் என்கிற குணம் ஸாரம் ஆதலின் அவனை ஆனந்தம் என்று உபநிஷத்துக்களில் கூறப்படுகிறது. அழகிய வளைகள் அணிந்த ஜானகியுடன் கூட நிற்கும் ஆனந்த ராமா, உன் மார்பை விட்டு அகலாது உறைந்திருக்கும் பிராட்டியை முன்னிட்டு நான் சரணம் அடைகிறேன். நீங்கள் தான் எனக்கு வாயு பகவானுகிய ஸூரியர். அர்ச்சராதி மார்க்கத்தில் வரும் வாயுலோகம். ஆஞ்சநேயர் சிவ சக்தியின் ஸ்வரூபம். என் ஹ்ருஷீகேசா, என்னை நடத்தி வைக்கும் ஹரி பகவானே, உம்மை அணுகி, கர்ணன் அர்ஜுனன் இருவர்களும் ஸந்தோஷத்தையும் சௌக்யத்தையும் ஐஸ்வரியத்தையும் அடைந்தார்கள். நர பிரியனே, நாராயணு, ஸ்ரீயப்பதியான உம்மைத்தவிர எனக்கு உபாயம் ஒன்றுமில்லை. ஞான சிகாமணியான பெரியாழ்வார் தன்னடியார் என்று சொல்லி, என் அடியார் செய்வது எல்லாம் நல்லதே என்று சொல்லியது போல, எக்காலமும் லக்ஷ்மியைத் தரித்துக்கொண்டிருக்கும், ஸ்ரீதரா, தாமோதரா, பஞ்ச பூதங்களை நடத்தும் ஹலாயுதா, நீர் அவதார காலங்களில் உமக்கு ஏற்றவாறு லக்ஷ்மியை ஆக்கிக் கொள்கிறுர். எல்லா பலனுக்காகவும் அடையப்படுகிற பிராட்டியைப் பிரியாத ஜானகி ராமா, லக்ஷ்மி ராமா, உலகுக்கு தாயாரான பிராட்டியுடன் தந்தையாய் நின்று, ஸகலத்திற்கும் ஆஸ்ரயமாக விருக்கும் லோக திரையாஸ் ரயா, மூன்று உலகங்களிலும் நீ அறியாதது ஒன்றுமில்லை. ஆயினும் எங்களிடம் உள்ள நட்பினுல் எங்கள் கருத்தையும் கேட்டறிவதால் மிகப் பெருமையை நீ எங்களையும் அடைய வைக்கிறுய். பெருந்தன்மை வாய்ந்த ராமா, ஒருவன் நூற்றுக்கணக்கான அபராதங்களைச் செய்தும், அவற்றை நினையாமலும் இவன் நம் அடியார்; ஏதாவது ஒரு வகையில் ஒரு

உதவி செய்ய மாட்டேனு என்று ஏங்கும் காருண்ய பிரபோ, பரதனுக்கு தன்னுடைய ஆத்ம ஸ்வபாவத்தையும் உமக்கு பரதனுடைய ஸ்வரூபத்தையும் ஸ்வீகரித்த ஆசார்ய சிஷ்ய பாவங்கள் மிக உன்னதமாயிருக்கின்றன. பரம போக்யமான உம்முடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை பரதனுக்கு அளித்தும் பரதனுடைய ஸ்வரூபத்தைப் பேணி, ஆத்ம ரக்ஷணம் செய்து, அவனுடைய மமகாரத்தை ஒழித்து, அவனுடைய பாரதந்திரியத்தை சரீரம், அர்த்தம், பிராணன் முதலியவைகள் எல்லாவற்றிற்கும் ஆசார்யனுகிற நாராயணனுக்குச் சேஷ பூதம், இதுவே பகவத் கைங்கர்யம், இதுவே ஆசார்யனின் உடமை என்கிற பிரபத்தியோடு கூடிய பரதாழ்வான் சத்ருக்ன ஆழ்வான், பெரியாழ்வார் போன்ற மஹாத்மாக்களை முன்னிட்டு, நாராயணு, நான் சரணமடைகிறேன்.]

தன்னுடைய இனத்தார்களை போர்புரியும்படி தூண்டிவிட்டு குஹன் நின்று கொண்டிருக்கும் போது அவனுடைய ஆட்கள் தங்களைச் சித்தப்படுத்திக் கொண்டு, அவனிடம் கும்பல் கும்பலாக வந்து ஆசி பெற்றுர்கள். குஹன் அவர்களைப் பார்த்து, ஆனந்தத்துடன் குஹப்பெருமாள் விசாகன் போன்ற தன் படை வீரர்களை சிலாகித்து, தட்டிக் கொடுப்பானே, அதுபோல ஒவ்வொரு வீரனையும் பெயர் சொல்லி தட்டிக் கொடுத்து உத்ஸாஹ மூட்டினுன். (964)

குஹன் சொன்னுன் "என் பிராதாக்களே, இன்று நாம் ஒரு பெரிய காரியம் செய்ய வேண்டியதாயிருக்கிறது. உங்கள் உயிரை திருணமாக வைத்து ராம காரியத்தை சரிவர பூர்த்தி செய்யுங்கள்." இதைக் கேட்டு, அவனுடைய தோழர்கள் "ஸ்வாமி, பொறுமையுடன் இருங்கள். நாங்கள் சந்தோஷமாக செய்து முடிப்போம். எங்கள் படைத்தலைவரே" என்று பதில் கூறினுர்கள். (965)

"பிரபுவே, ஸ்ரீராமனுடைய வீர்ய பிரதாபத்தினுலும் தங்களுடைய பலத்தாலும், பரதனுடைய சைன்யத்தை ஆள்படை வீரர்களையோ, குதிரை வீரர்களையோ, குதிரைகளையோ, ஒன்றையும் விடாமல் சின்னு பின்னமாகச் செய்து விடுகிறோம். ரண பூமியில் எங்களுடைய வீரத் தனத்தினுல் ஏற்படப் போகும் முண்ட மயமான சரீரங்களையும், சிரங்களையும், குதிரைகளையும், காண்பீர்.' (966)

இவர்களின் வார்த்தையைக் கேட்ட குஹராஜன் அவர்களை மெச்சி "ரணபேரிகையை கொட்டுங்கள்" என்று யுத்த

முழக்கத்தை ஆரம்பித்தான். அப்போது ஒருவன் இடதுபக்க மாக தும்மல் தும்மினுன். இதைக் கேட்டு சகுனத்தை ஆராய்ப வர்கள் "இது நல்ல சகுனம், ஜயம் நமக்கு கட்டாயம் ஏற்படும்" என்று சொன்னுன். (967)

அப்போது அந்த கூட்டத்தில் இருந்த ஒரு கிழவன் சொன்னுன். "இந்த சகுனத்தை விசாரித்துப் பார்த்தால், இந்த சண்டையே நடக்காது போலிருக்கிறது. முதலில் நாம் பரதனே சந்திப்போம். பரதன் ராமனுடன் சண்டை செய்வ தற்கு வரவில்லை என நினைக்கிறேன். பரதன் ராமனை அணுகி, அவனை அயோத்தி திரும்பும்படி வேண்டிக் கொள்ளப் போகிருன். சகுனமும் நமக்கு விரோதமாக ஒன்றும் இல்லை," என்று தன் முதிய அனுபவத்தால் அவன் சொன்னுன். (968)

[தியானம்

சித்தலக்ஷ்மி சமேத விஷ்வக்ஸேனரே, நர நாராயண பிரியரே, ரகுநந்தனனுன ஜானகிராமா, ரமாரமணு, என்னுடைய பவசாகரத்திற்கு ஓடம் போன்றவரே, முனியோகிகளின் மானஸ பீடத்தில் ஊர்ந்து வரும் அழகான அன்னப்பேடே, உமா மஹேஸ்வரரின் மடியில் தவழ்ந்து விளையாடும் மஹாகணபதியே, ஸ்ரீ ராமனுடைய விக்னங்களையும் என்னுடைய விக்னமாகிற பாவங்களையும் போக்கின விஷ்வக்ஸேனரே, மோதகம் என்கிற மோக்ஷ அனுபவத்தை உன் பக்தனுகிற எனக்கு சுலபமாகக் கொடு. ராமஹ்ருதயம், ராமசரணங்கள் ராமபக்தி, நாரதருடைய அடக்க வினயங்கள், அகஸ்தியருடைய அந்தரங்க சுத்தி, விஸ்வாமித்திரருடைய ஆர்ஜபம், வஸிஷ்டருடைய மேன்மை பிரதாபங்கள், இந்திரனுடைய தர்மஞானம், அம்பிகையி னுடைய ஜயம், பகவான் சங்கரருடைய ஞானச்செல்வம், குஹனுடைய களிப்பு எல்லாம் உன் கிருபையால்தான் ஏற்பட்டன. பீஷ்மரால் வணங்கப்பட்ட விஷ்வக்ஸேனரே, மஹா லக்ஷ்மியினுல் ஸம்மானிக்கப்பட்ட மஹா விஷ்வக்ஸேனரே, பரதனையும் சத்ருக்னனையும் முன்னிட்டு உங்களை சரணமடை கிறேன்.]

வ்ருத்தனுன நிஷாதனின் வசனங்களைக் கேட்ட நிஷாத ராஜனுகிற குஹன் "இவர் வயது முதிந்தவராகவும் பிதாவுக்கு ஸமமாகவுமிருக்கிருர். இவர் சரியாகத்தான் சொல்கிருர். அவசரப்பட்டுச் செய்யும் மூர்க்கன் பிற்பாடு பச்சாதாபப்படு கிருன். நானும் அவசரப்படக்கூடாது. (ஓம்கார ஸ்வரூபமாகிற

விஷ்வக்ஸேனருடைய) தம்பியாகிய பரதன் ஸ்வரூப ஸ்வபாவங்களில் ராமனை ஒத்திருப்பான். அவனுடைய சில ஸ்வபாவத்தை நான் தெரிந்து கொள்ளாதவரையில் நான் யுத்தம் செய்வேனாகில் எனக்கும் என் ராமனுக்கும், ராமபக்தி கொண்ட மஹா பாகவதர்களுக்கும் பலமான ஹானி நேரிடும்.'' (969)

''ஆகையினால் என் தோழர்களே, நீங்கள் சென்று ஒழுங்காக பரதனை கங்கையில் இறங்க விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். நான் அவனை சந்தித்து, மர்ம எண்ணங்களை அறிய முயல்கிறேன். (நான் குஹன். பரதன் கூடனாக விருக்கும் பக்ஷத்தில், என்னையும் விட அகோசரமான ராமபக்தியில் ஈடுபட்டிருப்பான்.) அவன் ராமனிடம் உத்தம ஸஹஜமான மித்ர ஸ்வபாவத்துடன் இருக்கிறானோ, மத்யம ஸ்நேகம் மாதிரியும், ஸ்வபாவ ஸ்வரூப ஸ்வபிருவிருத்தி யில்லாமல், பிறர் போதனையால் ராமனை நேசிக்கிறானா என்றும் அல்லது சமயத்திற்கு ஏற்றாப்போல ராமனை நேசித்தும் விரோதித்தும் தன் காரியத்தை சாதிக்கும் அதமனா என்று பரீக்ஷித்து விடுகிறேன். அதன்படி உங்களுக்கும் தெரிவித்து விடுகிறேன்.'' (970)

''அவன் வாஸ்தவமாக உத்தம ராமபக்தியில் அந்தரங்க சுத்தியுடன் ஸ்வபிருவிருத்தியுடன் இருக்கும் பக்ஷத்தில் நான் அவனை அடையாளங்களால் புரிந்து கொள்வேன். ஒருவனுடைய வைரத்தையோ, மித்ரத்வத்தையோ எவ்வளவு சிரமப் பட்டாலும், மறைக்க முடியாது.'' இவ்விதம் சொல்லிக்கொண்டு குஹன் பரதனை சந்திப்பதற்கும் பூஜை செய்வதற்கும் சாமக்கிரியைகளை தயார்செய்தான். கந்தம், மூலம், பழங்கள், பக்ஷிகள், மான் முதலிய ஆகாராதிகளை தயார் செய்து வைத்தான். (971)

அவனுடைய ஆட்கள் மதீனா என்கிற பழையதும் பருத்ததும் கடலிலிருந்து கிடைப்பதுமான மீன்களை ஆகாரமாக உட்கொள்ளுவதற்கு தயார் செய்தார்கள். இவைகளைத் தயார் செய்து கொண்டு, பரதனை சந்திக்கப்போகும் சமயம் மங்கள சகுனங்கள் ஏற்பட்டன. (972)

குஹன் முதலில் வஸிஷ்ட பகவானை சந்தித்து தன் பெயரை அவருக்கு அறிமுகப்படுத்தினான். தண்டப்பிரணாமம் செய்தான். மஹா விரதத்துடன் கூடிய வஸிஷ்ட பகவான் குஹனை ராமனின் அந்தரங்கப்ரியன் என்று உணர்ந்து மங்கள ஆசீர்வாதங்கள் செய்தார். பிற்பாடு அவர் பரதனிடம் இவனுடைய ராமபக்தியையும் ராமனிடம் கொண்ட பிரியத்தையும் எடுத்துரைத்தார். (973)

"இவன் ராமனுடைய சகா." என்று கேட்டவுடன் பரதன் தன் ரதத்தை தியாகம் செய்து கீழே யிறங்கி, மிக்க ப்ரேமை பாசத்துடன் (கணேசன் குஹனைத் தழுவுவது போல) ஆனந்த கண்ணீர்களால் அன்பு பெருக்க தழுவிக் கொண்டான். குஹன் தன்னுடைய கிராமத்தின் பெயரையும், தன் பெயரையும், கஹன கோசரனுன அவன் ராமபக்தியுடன் தன்னை அறிமுகப்படுத்தி, வைஷ்ணவ அடியார்கள் ஒருவருக்கொருவர் தண்டனிட்டு தங்கள் வினயதைகளைத் தெரிவிப்பது போல, பூமியில் விழுந்து நெற்றி மார்பு கைகால்கள் எல்லாம் பூமியில் தொடும்படி சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். (974)

[தியானம்

ராமா, சூர்யன், அக்னி, சந்திரன் ஆகிய மூன்று தேஜஸ்களையும் கொண்ட சீதாராமா, பூः புவ: ஸுவ: என்கிற மூன்று வ்யாஹ்ருதிகளும் எல்லாத் தேவர்களுமாகிய நாராயணு, அமாவாஸை பூர்ணிமை நக்ஷத்திரங்கள், த்ருவம் முதலிய யோகங்கள், பர்வகாலங்கள், கரணங்கள், ருதுக்கள், காஷ்டை முதலிய க்ஷணம் வரை வியாபித்திருக்கும் காலாத்மனே, எல்லோருக்கும் ஆத்மாவாக விளங்கும் விஷ்ணே, மஹேஸ்வரரான திரியக்ஷர், திரிதஸஸ்ரேஷ்டர், திரியம்பகர், திரிதசாதிபர், திரிபுராந்தகர், காமாங்கஹரர், திரிபதகாதரனுகிற உமா ஸம்போ, சூலபாணே, அரிசூதனு, காமாக்ஷியினுல் உபாஸிக்கப்பட்ட ஆத்மாராமா, ஆளவந்தார் முதலிய மஹான்கள் சொல்லி யிருக்கிருர்கள். "எம்பெருமானுடைய மிகப் பெரிய திவ்ய மங்கள விக்ரஹம், அவனுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும், அவனுக்கும் மிக்க போக்யமாய், மிக்க ஆச்சர்யகரமுள்ளது." அப்பேற்பட்ட ஈஸ்வரன் தனக்கும் போக்யதமமான தேஹாத்மாவின் அனுபவத்தை அடையும் போது, பரதனும் சத்ருக்னனும் ஆஞ்சநேயரும் அதை அடைய விரும்புவதில் ஆச்சர்யமில்லை.

"பிரபோ, நித்ய விபூதியில் பிரும்மாண்டமாகவிருக்கும் நீர் விருத்தாத்மாவே, நீர் அவ்யயமான நிதி, ரதந்தரம், வாமதேவ்யம் பிருஹத் ஆகிய ஸாம வேதங்களினுல் கானம் செய்யப்பட்ட ஸ்ரீ ராமநாராயணு, உம்முடைய அழகினுல் எல்லோருடைய கண்களையும், கொடை முதலிய ஆத்மஸ்வபாவத்தினுல் மனத்தையும் கவருகின்ற பிரியதர்சனர். சிவந்த உள்ளங்காலுடன் நன்கு பதிந்தனவாய், அழகிய மெல்லிய செம்மையான விரல்களால் அழகியனவாக உம்முடைய திருவடிகள் தூயமனத்

தோடு ஆஞ்சநேயாதிகள் போல தூயாத்மாக்களாலும், நித்ய ஸூரிகளாலும் தாங்கி வணங்கப்படுகின்றன. ஐயா, உன் திருவடித்தாமரையின்றி எனக்கு க்ஷேமத்தைத் தரத்தக்க சிந்தாமணி வேறு ஒன்றும் எந்த ஜன்மத்திலும் கிடையாது. எனக்கும் வேண்டாம். தேன் நிறைந்த தாமரை யிருக்கும் போது, தேனுலேயே வாழ்க்கை நடத்தும் வண்டு, நீர்முள்ளி பூவை கண் கொடுத்தும் பாராதன்றோ? ஐயா, வேறு கதியற்ற அடியேன் உன் திருவடியில் புகுந்து நின்றேன். உம்முடைய நல்ல மணம், மிக்க வன்மை முதலிய குணங்கள் நிறைந்த வனமாலி, சந்தனுங்கி, உன் திவ்ய திருமேனியை பச்சை முத்துக்கள் பவளம் முதலிய நிரம்பின உன் விசால மார்பை, ஆஸ்ரிதர்களை அணைக்கும் தீர்க்க பாஹுக்களை, புஷ்கராக்ஷங் களை பிரபுல்ல லோசனங்களை, சுகர் போன்ற மஹரிஷிகள் மிக்க சிரமப்பட்டு தேடித்திரிந்த பிருந்தாவன சரணங்களை என் அனுபவத்திற்கு எப்போது தரப்போகிருய்? அர்ஜுனன் குருகூர் சடகோபன், திருவனந்தாழ்வான், கருடன் உமாசங்கரர் ஆகிய மஹாத்மாக்கள் அதே சிந்தனையாகவே இருந்தார்கள். அஹிர்புதன்யர் ஸம்ஹிதையில் சொல்லப்பட்டபடி "பகவான் நம்மை அவஸ்யம் ரக்ஷிப்பான்," என்கிற பிரபத்தி மஹா விஸ்வாசத்தோடு உம்மை உபாயமாகவும் பிராட்டியை புருஷகார மாகவும் அடைகிறேன். பிரும்மாஸ்திரத்திறல் ஹனுமாரைக் கட்டிய பிரும்மாஸ்திரம் எப்படி அரக்கர்களின் நம்பிக்கை குறை வால் வீணுகிவிட்டதோ, அதுபோல ஆஞ்சநேயரின் வழியைப் பின்பற்றிய எனக்கு பிரபத்தி மோக்ஷத்தைத் தரவேண்டும்.]

குஹன் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்ததைப் பார்த்து, பரதனும் குனிந்து அவனை வாரியணைத்து, நமஸ்காராதிகளால் இறுகத் தழுவிக் கொண்டான். அவனுடைய ஹ்ருதயத்திலும், குஹனுடைய உள்ளத்திலும் ராமபக்தியினுல் யேற்பட்ட பிரேமை அன்புரஸம் ஊற்றுப் பெருக்காகத் தோன்றியது. (குஹன், திருவனந்தாழ்வான் தன் மீது பள்ளிக் கொண்டிருக்கும் மஹா லக்ஷ்மி ஸமேத ரங்கநாதனைப் பார்த்து, பார்த்து, ஆனந்திப்பது போல பகவானுடைய திருவடித்தாமரைகளை நாள்தோறும் சிந்தித்தவண்ணம் இருக்கும் லக்ஷ்மணனைப் பார்ப்பது போல பரதனிடம் கண்டான். அவன் (குருகூர் சடகோபாதிகள் போன்ற உத்தம ஆழ்வாராதிகள் அடைந்த) மஹா ஆனந்தத்தை அடைந்தான். (975)

குஹன் பரதன் சந்திப்பு, தழுவுதல், பரஸ்பர குசல ப்ரஸ்னைகள், ஸ்வயமாகவும், கர்மவாசனையால் தோன்றாததான ப்ரேமை நிறைந்த பாசங்களை, ஸகலரும் ஆச்சர்யத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் "பிரேமையிலும் இதுவா பிரேமை; ஜாதி வித்யாஸம், ராஜதோரணையாகிற வரம்புகளையும் மீறி இவ்வளவு சிறந்ததாக நாம் பார்த்தது மில்லை; கேட்டதுமில்லை" என்று புகழ்ந்தார்கள். இருவர்களும் தன்யர்கள்; அவர்களைப் பார்த்த நாமும் தன்யர்கள். மங்களங்களுக்கு மூலமான "தன்யோ அஸ்மி; தாஸோ அஸ்மி" என்கிற வாழ்த்துக்களும் ஆசீர்வாதங்களும் ஏற்பட்டு தேவ கணங்கள் கற்பக புஷ்பங்களை, பாரிஜாத மலர்களை வாரி இறைத்தார்கள். (976)

அவர்கள் சொல்ல ஆரம்பித்தார்கள். "லோகத்தார்களும் வேதங்களும் சொல்வதும் எல்லா வகைகளிலும் கீழ்ப்பட்டவன், மேற்பட்டவன் என்கிற பாகுபாடுகளுடன் இருக்கும் ஜனங்களை, தொட்டாலும் பார்த்தாலும் ஸ்நானம் முதலிய தேகசுத்தங்களை எவர்களுக்காக செய்யவேண்டுமோ அப்பேற்பட்ட நிஷாத ஜாதியில் பிறந்தகுஹன், கஹனகோசரன், தன் ஹ்ருதயத்தில் ராம விஸ்வாச பக்தியை வெளிப்படுத்திக்கொண்டு, ஸ்ரீராமச்சந்திரனின் இளைய தம்பியான பரதனுடைய சரீரத்தைத் தழுவுதலால் யேற்பட்ட பரிபூர்ண காமனாக காணப்பட்டான். வைஷ்ணவ அடியார்களிடம் காணப்படும் தாஸவிஸ்வாஸம், தாஸபக்தி, தாஸப்ரேமை, தாஸஸங்கம், தாஸ ஹ்ருதயம் ஆகிய உத்தம பாகவத லக்ஷணங்களைப் அவனிடம் பார்த்தவர்கள் ஆச்சரியப் பட்டார்கள். (977)

"ஹேராம்," சோம்பல்விடும்போதுகூட "ராம்" "ராம்" என்று சொல்லும் ஜனங்கள் கோடிக்கணக்கான ஜன்மங்களின் பாபங்களை அறவே ஒழிக்கிறார்கள் அல்லவா? ராமா, பாப வாசனைகளை அறவே அறுக்கும் மஹா ஒஷதியாக விளங்கும் உன் நாம ஜபத்திற்கு முன்பே எதுவும் பிரியமுள்ளதல்ல. (ராமா, உன்னுடைய புனிதமானதும் மங்களகரமானதும் லக்ஷ்மி தேவி மிக்க ஆசையுடன் தழுவுதல் கொள்வதும், திருவனந்தாழ்வான் கருட பிரமுகாதிகள் ஆசையுடன் வசிக்கும் திவ்ய மங்கள விக்ரஹ ஸ்வரூபத்தை பகவான் ஸ்ரீராமச்சந்திரன் தன் ஸ்வய இச்சையோடு குஹனுக்கு அளித்து, அவனைக் கட்டித் தழுவி, உச்சிமோர்ந்து, பரிபூர்ணனாக ஆக்கின தேஹம் குஹனுடைய திவ்யமங்கள விக்ரஹம்.) (என் பிரபு ஸ்கந்தர்,

உமையின் கைகளால் வாரி அணைக்கப்பட்டு, உச்சி முகரப்பட்டு லோகஹிதராக விளங்கும் குஹப்பெருமானைக் கண்டு, பக்த கோடிகள் ஆச்சரியத்துடன் அந்த சுகுமாரனுடைய புனிதமான ரூபத்தைப் பார்ப்பார்களோ, அதுபோல அல்லவா) அந்த குஹனுடைய திவ்ய ஆத்ம ஸ்வரூபம், திவ்ய திருமேனி, விளங்கியது. அந்த மஹாத்மாவினால் குலசமேத குஹன் பரிசுத்தமாக்கப்பட்டான். அவனை நினைத்தால் ஜகத்தை பாவனம் பண்ணும் அபார கருணாநிதியாகிவிட்டான். அந்தோ, ராமானுக்ரஹம் பெற்ற குஹப்பெருமானின் மேன்மைகளை யாரால் வர்ணிக்க முடியும்? (978)

'கர்மநாசினீ' என்ற நதி (ஸ்னானம் செய்பவரின் புண்ணியத்தை எல்லாம் அழித்துவிடும் என்பார்கள். ஆனால் அந்த நதியின் தண்ணீர்) கங்கையில் விழுந்தபோது (கங்கையின் சேர்த்தியால் புனிதமடைந்து விடுகிறது. அப்போது) யார்தான் ஜலத்தை தலையால் ஏற்க மாற்றார்கள்?

(கருத்து :—கர்மநாசத்தைச் செய்யும் தீர்த்தகரர். குஹனை நினைத்தமாத்திரத்திலே, நாமத்தை உச்சரித்தமாத்திரத்திலே, எல்லா பாபங்களையும் போக்கும் கங்கை புஷ்கரம் பிரபாஸம் ராமேஸ்வரம் ஆகிய புண்ணியதீர்த்தங்கள் கடல்போல ஆழமான தம்மிடத்தில் பக்தர்கள் இழியும்வண்ணம் அசைந்து கொடுக்கும்படி விளங்குகிறார் குஹப்பெருமான். அந்த ஸர்வேஸ்வரன் மாதிரி இருக்கும் பாவனர் கங்கையின் கரையில் அல்லவா இருக்கிறார். அப்பேற்பட்ட தீப்தமூர்த்தியின் பாத ரேணுக்களை தன் தலையில் எடுத்துவைத்துக் கொண்டால் சகல பாப சமூஹங்களும் கொத்து கொத்தாக விலகி, பகவத் பிராப்தி ஸுலபமாக கிடைக்குமே. அது அதிருஷ்டவசத்தால் கிடைத்தால் யாராவது தலையில் சூட தயங்குவார்களா?) எந்த ராமநாமத்தை தப்பி, மாறாக தவறிச் சொன்ன வால்மீகிபகவான் பிரும்ம தேஜஸ்ஸை அடைந்து, (பதினான்கு வித்யைகளையும் வேதத்திற்கும் சமமான ராமாயணத்தையும் மோஹங்களைப் போக்கும் காயத்திரியின் அர்த்தபூர்வமாக விளங்கும் மஹாகாவ்யத்தை இயற்றி அதை ஸ்ரீ சீதாராம ஸந்நதியில் அரங்கேற்றி) பிரும்ம பதத்தை அடையவில்லையா? (979)

[தியானம்

ராமா, ரமாரமேஸா, உன் பாதங்களை நம்பின யோகிகளுக்கு புகல் கொடுக்கும் நாராயணா, துஷ்டர்களின் துக்கங்களையும்

போக்கும் உதாரஹ்ருதயரே, திரிஸாமாவினால் புகழப்படும் சங்கரபகவானே, லக்ஷ்மணன், சீதை ஆகிய இருவர்களுடன் இணைந்திருக்கும் ஸ்ரீராமா, பிரளய காலத்தில் மற்ற எல்லா நக்ஷத்திரங்கள் அழிந்திருக்கும்போது, நாலு நக்ஷத்திரங்களோடு மட்டுமே துருவனுக்கு அருகில் இருப்பதினால் க்ஷாமர் என்று சொல்லப்படும் ஸ்ரீராமா, வனம் சென்ற ராம ஜானகி லக்ஷ்மணா, பரதன், குஹன், சத்ருக்னன், வஸிஸ்டர், சுமந்தரர் கௌஸல்யாதேவிமார்கள் ஆகிய முக்தர்களால் அறியப்படும் க்ஷேத்ரக்ஞரே, உம்மை அவர்களை முன்னிட்டு சரணமடைகிறேன். நீர் ஸம்சாரிகளின் தோஷங்களையும், தன்னுடைய தோஷமென்று கருதுகிறீர். அதற்கு காரணம் நாராயணத்வப்ரயுக்தமான ஸம்பந்த ஞானம். இதுவல்லவோ ஹேது பந்தஞானம். பரமாத்மா உமது சங்கல்பத்தாலே, இந்த தோஷம் பக்தனுக்கு தோன்றுவதிற்கில்லை அந்த தோஷங்களிலிருந்து விலகினவன் இவன் என்று, எண்ணி தோஷங்களை விலக்கும் ராமா, சீதாபிராட்டி ஹனுமாரிடம் தன் விஷயமாக பிறர் குற்றங்களை பகவத் விஷயத்திலாவது, பாகவத விஷயத்திலாவது மறந்து, விண்ணப்பம் செய்யக்கடவன் என்கிற பரந்த புருஷகாரம் செய்து, ஏகாக்ஷி ஏககர்ணி ஆகிய எழுநூறு ராக்ஷஸிகளை பத்து மாஸம்தான் அவதிப்பட்டிருந்த போதிலும் பகவான் விஷயத்திலும் அவர்களுடைய அறியாத் தன்மையாலும் செய்யப்பட்ட குற்றங்களை மறக்கும்படி செய்யவில்லையா? அப்பேற்பட்ட சீதையை முன்னிட்டு, குரு ஆஞ்சநேயரை நமஸ்கரித்து, ராமனை நான் சரணம் அடைகிறேன்.]

(மஹாலக்ஷ்மியின் புருஷகார பிரபாவத்தாலும் ஆசார்ய அனுக்ரஹத்தாலும் ராமஜபத்தின் மகிமையாலும், ராமமந்திரத்தின் வீரியத்தாலும், யார்தான் பகவானைப் பற்றிய ஹேதுபந்த ஞானத்தை அடையவில்லை') "மூர்க்கன், பாமரன் சண்டாள ஜாதியில் பிறந்தவன், சபரி, (பீலஜாதியைச் சேர்ந்தவள்) யவன், கோல், கிராதஜாதிகளில் பிறந்தவன்கூட, "ராம் ராம்" என்று சொல்லி, பரிசுத்தமடைந்து மூன்று உலகங்களிலும் இன்புற்று கியாதி பெற்று விளங்குகிறார்கள்." (980)

"இதில் ஒரு விதமான ஆச்சர்யமில்லை. இது யுகம் யுகமாக நடக்கும் அற்புதம். ரகுவிரனுக்கு இவன் தீனன், இவன் ஜாதியில் உத்தமன், இவன் மஹா தபஸ்வி, இவன் சாதாரண சம்சாரி என்கிற பாகுபாடுகள் கிடையாது. இது ராம நாமத்தின் பிரபாவம். இந்த பிரபாவத்தை ஸுரர்களான தேவதைகள்

கோஷிக்கிருர்கள். அதைக்கேட்டு அயோத்யாவாசிகள் ஆனந்த மடைகிருர்கள்.'' (981)

''பிரேமை ரஸம் கொண்ட இரு மஹாபுண்யவான்கள் மஹா தீர்த்தகரர்கள், புண்யஸ்ரவண கீர்த்திகள் கொண்ட குஹன் பரதன் ஆகிய இருவர்கள் ராமபக்தி என்கிற வியாஜத்தால் ஒன்றுசேர்ந்தார்கள். ஒருவருக்கொருவர் குசல பிரஸ்னம் செய்து கொண்டார்கள். பரதனுடைய புகழத்தக்கதும் சீலமான நடத்தையையும் கண்டு குஹன் விதேஹ முக்தியை அடைந்தான். பகவானுடைய தர்சனத்திற்குப்பின்பு கிடைக்கப்பெற்ற பாகவத தர்சனம் அவனுடைய சாந்தி பராயணம் என்று சொல்லக்கூடிய ஸமாதியின் கடைசி நிலேயாகிற்று. தம்மையே அனுபவித்துக் கொண்டிருக்கச் செய்பவர்களாகவும் அவித்யைகளிலிருந்து நிவிருத்தி செய்யப்பட்டவர்களாகவும், மோக்ஷ ஆனந்தத்தை அடைந்தவர்களாகவும் அவர்கள் விளங்கினுர்கள்.'' (982)

ஒருவருக்கொருவர் கொண்ட ஸ்நேகம் ஸஹஜமான பிரியம், வைஷ்ணவதாஸ உள்ளம், எல்லாம் நன்ருக அறிந்துகொண்டு பரதனும் ஸ்தம்பித்துபோய், குஹனேப் பார்த்துக்கொண்டு அனுபவித்தான். பிறகு குஹன் தன் ஸ்வயநிலேயை அடைந்து, தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, கூப்பின கரங்களுடன் பரதநம்பியை நமஸ்கரித்து, ஸத்ய வார்த்தைகளே அதிவினயத் துடன் ஸமர்ப்பிக்கலானுன். (983)

''என் பிரபோ, என் குசலத்தின் காரணம், பாகவத ஸ்ரேஷ் டரான உம்முடைய திருவடி சம்பந்தத்தால் ஏற்பட்டது. உம்மைத் தரிசிக்கும் பாக்யம் எனக்கு பகவானுடைய நிர்ஹேதுக பிரபாவத் தால் ஏற்பட்டது. எங்களுடைய சகல தோஷங்களும் விலகிப் போய், உமது பரம அனுக்ரஹத்திற்கு நானும் என் குலத்தோர் களும் கோடி கோடி கணக்கான ஜன்மங்களால் ஏற்பட்ட பாபங் கள் விலகி, பகவானுடைய பொறுமையையும் கிருபையையும் சிரிப்பையும் அனுகிரஹ பார்வைகளேயும் கடாக்ஷிக்கும் கை கால் கண்களேயும், சகல மங்களங்களுக்கு ஆதிகாரணமான பகவத் பிரியத்தையும் அடையப்பெற்ருேம் ஸ்வாமி.'' (984)

[தியானம்

ஹே தத்வார்த்த ராமா, ஜானகிரமணு, பரதனிடமும் பாண்டவர்களிடமும் நீ பிரியமாகவிருந்ததின் காரணம் அவர்கள் வம்ச போஷகர்கள், அஜாக்ரதையில்லாமல் பீஷ்மர், திருதிராஷ் டர் ஆகிய பந்துக்களுடைய கட்டளேயில் இருப்பவர்கள் தான்

அன்ருே? அவர்கள் ஸாதுக்கள். பிரஜைகளுக்குப் பிரியர்கள். ஸாது சமூகத்தை தாங்குபவர்கள். நண்பர்களிடமும் தயையுள்ளவர்கள். புலன்களை வென்றவர்கள். க்ஷமை, ஸஹித்தல், அடக்கம், நேர்மை, தவருத விரதம், சாஸ்திரம், அஜாக்ரதையில்லாமை, பிராணிதயை, சிக்ஷை என்கிற எல்லா ராஜரிஷி குணங்கள் இருப்பதால் அல்லவா? லோபத்தையும் மோஹத்தையும் விலக்கினவர்கள். "ஐயா நான் அபராதங்களுக்கு இருப்பிடம். வேறு உபாயமற்றவன். உம்மைத்தவிர வேறு பலனை வேண்டாதவனுகவுமிருக்கிறேன். ஆளவந்தார் சொல்லியபடி நான் கர்ம யோகத்தையோ, பக்தி யோகத்தையோ ஞான யோகத்தையோ உன் திருவடித் தாமரையில் ஸமர்ப்பித்தவன் அல்லன். உன் திருவடிகளையே சரணம் என்று நம்பி வந்தேன்." என் குருநாதர் ஸ்ரீராமானுஜன் "எம்பெருமானை அடைவதற்கு அவனுடைய இரு சரண தாமரைகளில் பிரபத்தியை செய்தல் அன்றி வேருேர் உபாயம் ஆயிரம் கோடி கல்பகாலம் சென்ருலும் எனக்கு இல்லையென்று எண்ணுகிறேன் அடியேன்" என்று வைகுண்டகத்யத்தில் சொல்லவில்லையா? ஐயா, பரதன், பிரஹ்லாதன் ஆஞ்சநேயர் தியாகராஜர், சுக்ராசாரியார், நாரதர் போன்ற மஹாத்மாக்களை முன்னிட்டு உன்சரணங்களையே அடைக்கலமாக அடைகிறேன். நீரே எனக்கு பிரபத்தி அளிக்கவேண்டும்.]

"என்னுல் செய்யப்பட்ட மஹா அபராதங்கள், தாழ்வான விஷய போகங்களில் இச்சைகொண்ட எனது பிறப்பு, ஐயா, ஸர்வதர்சனரான பிரபுவுக்கு தெரிந்திருக்கும். எம்பெருமாள் நம்மை அவசியம் ரக்ஷிப்பான் என்கிற மஹாவிஸ்வாசமும், ரக்ஷிக்கவேண்டும் என்கிற என்னுல் யாசிக்கப்படும் வேண்டுதலும், ஸ்வாமி, ராமச்சந்திர பிரபோ, உம்முடைய நிர்ஹேதுக கிருபை, (முயற்சி செய்த பிரஹ்லாதன் துருவன் அம்பரீஷன் போன்ற) மஹாத்மாக்களை ஸத்பதத்தில் இருந்து பிரவிர்த்திக்கும்படிசெய்யும் ஆற்றல் உள்ளது. ராம கிருபாளு ஸ்வயமாக ஸாதுக்களின் ஆசாரங்களை தானும் அனுஷ்டிக்கும் மஹாத்மா. (அவரது அனுசரணையினுல் ஆத்மாவை ஸமர்ப்பித்த என்னையும் என் குடும்பத்தினர்களையும் அனன்ய கதியாகிறதும் அனன்ய சரண்யன் என்கிற கார்ப்பண்யத்துடன் கேட்கப்பட்ட சரணுகதியை காலக்ரமத்தில் கொடுக்கும் வள்ளல்;) இன்னமும் ஸம்சாரம் மேலிடின் என்ன செய்வோம் என்று பயப்படும் ஹேதுவுக்கு, ஐயா, என் பிரபு ராமச்சந்திரனின் பாதங்களே கதி. (எம்

பெருமானுடைய தயை, கிருபை, க்ஷமை முதலிய குணங்களை அனுஸந்திப்பதால் பயம் கழிவதற்கு ஹேதுவாக விளங்குகிறது. ஆஸ்ரித வாத்ஸல்யரான ராமன் ஸ்வதோஷ ஸந்தானத்திற்கும், பகவத் பாகவத குணானு ஸந்தானத்திற்குமே உபாயம் உபேய யுக்தமான பிரயோசனம் அவரது திவ்ய சரணங்கள் அல்லவா ?) பரதந்தரனான எனக்கு ரகுவீரனுடைய பாதங்களே கதி. ஆகையால் சீற்றம் உண்டாகாதபடி அந்த பிரணதார்த்தி ஹர னுடைய திருவடிகளைக் கட்டிக்கொள்ளும்படி பரம கிருபாளுவா யிற்றல்லவோ, ("ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்ய சரணாகதம் வதார்ஹமபி காகுத்ஸ: கிருபயா பர்யபாலயத்" என்கிறபடி ஸ்ரீமத் ராமாயணத்தின் வசனத்தால் பகவத் கிருபையை நான் ஸதா வேண்டிக்கொண்டு நிற்கிறேன்.) இப்பேற்பட்ட உத்தம ஹேதுவை பிரயோசனத்தை அடைய அந்த ராம சரணங்களை பஜிக்காமல், விபரீத புத்தியினால் ஏற்பட்ட அவித்யைகளை ஒரு மனிதன் அடைந்தால், அவனை விதி ஏமாற்றிவிட்டதல்லவா? (ஸம்சாரிகளாகிற என் போன்றவர்களின் ஜன்மம் கர்மானுகுண மாக ஸம்சரிக்கிற ஆத்மாவை ஈஸ்வரன்பால் ஸமர்ப்பிக்காமல் இருந்ததால் அன்றோ ஏற்பட்டது?) (985)

"நான் கபடமுள்ளவன், வஞ்சகன், கோழை புத்தியுள்ள வன், விபரீத மதியுள்ளவன். ஐயா, லோகத்தாராலும், வேதத் தினாலும் பிரஷ்டனாகத் தள்ளப்பட்டவன். அந்த கிருபாளு என்னை எப்போது சந்தித்து, என்னை தனது பொருள் என்று ஆக்கிக்கொண்டாரோ, அந்த க்ஷணம் முதல் நான் உலகத்தில் கியாதியடைந்து சுத்த விலக்ஷணராக ஆகிவிட்டேன். இப்போது நான் கிருதார்த்தனாக ஆக்கப்பட்டு, விஸ்வபூஷண னாக மாறிவிட்டேன்." (986)

பரதனுடைய தம்பியாகிய சத்துருக்னனும் மிக்க ஆச்சரியத் துடன் குஹப்பெருமானுடைய அர்த்த புஷ்டியுள்ள வசனங்கள், ராமனிடம் கொண்ட மஹாபிரேமை, அதிவினயத்துடன் ஸமர்ப்பிக்கப்பட்ட ஆத்ம நிவேதனம், ராமபிரபத்தி ஆகியவை களை பார்த்துப் பரவசமடைந்து அன்புடன் அவனைக் கண்டு பேசினான். பிறகு நிஷாதராஜன் மிக்கமரியாதையுடன் மதுரமான வார்த்தைகளால் ராணிமார்களிடம் தன்னைத் தெரிவித்துக் கொண்டு, அவர்களின் நன்மதிப்பைப் பெற்றான். (987)

ராணிமார்களும் அவனை லக்ஷ்மணன் மாதிரி ராமனுடைய தம்பியாகக்கருதி ஆசீர்வாதம் செய்தார்கள். அவர்கள் "ஆயிரம் லக்ஷம் வருஷங்கள் சுகபூர்வமாகவிரு." என்று மங்கள ஆசீர்

வாதங்கள் செய்தார்கள். அந்த அயோத்யாபுரிவாசிகள் அவனை லக்ஷ்மணனுகக் கருதி அவனைப் பார்ப்பதில் ஆனந்தம் அடைந்தார்கள். (988)

எல்லோரும் சொல்லிக்கொண்டார்கள். "இந்த நிஷாத ராஜன் ஜன்மத்தின் மஹாபாக்யத்தை அடைந்து விட்டான். நம்முடைய ராமபத்ரன் இவனை இறுகத்தழுவி, தன்னுடைய மங்களகரமான தீர்க்க அபய ஹஸ்த பாஹுக்களால் குஹனைத் தடவிக்கொடுத்தான். இந்த பாக்யம் ராம கைங்கர்யத்தால் அல்லவோ ஏற்பட்டது? நம் போன்றவர்களுக்கு இந்த பாக்யம் கிடைக்கவில்லையே" என்று குஹனை, பலவிதமாகப் புகழ்ந்தார்கள். இதைக்கேட்ட குஹப்பெருமான் அதிக ஆனந்தத்துடன், எல்லோரையும் தன்னுடன் கூட அழைத்துச்சென்றுன். (989)

[தியானம்

சீதாராமா, மைத்ரேயா, கருணன்விதரே, ஓங்காரம் வஷட்காரமாகவிருக்கும் பிரணவ ஸ்வரூபியே, சேதனனுடைய ஸத்குணமே உன் பேற்றுக்கு அடியென்றும், லாப நஷ்டங்களுக்கு ஹேதுவாகிற உன் திருவடிகளைப் பெறுமல் ஜன்ம லாபத்தையும் இழந்து ஸ்வரூப நாசத்தையும் அடைந்து ஊழ்வினையின் பயனையும் அனுபவிக்க நேரிடும். ஸம்சாரக் கிணற்றில் நழுவிப்போன எனக்கு உன் சீற்றமும் அடங்கிப்போய், நிருகனை கிருஷ்ணன் தூக்கிவிட்டது போல அல்லவா, ஸ்வாமி, உன் கருணையால் என்னை உத்தாரணம் செய்யவேண்டும். சராசர ஆத்மாவும் சூக்ஷ்மாத்மாவும் ஆக இருக்கும் ஹ்ருஷிகேசா, தர்மாத்மாவான யுதிஷ்டிரர் உம்மை அடிக்கடி தியானித்து, உம்மையே ஜகத்தின் ஸாரமும் அஸாரமும், பலமும் அபலமுமாகிய எல்லாவற்றையும் தாங்குகிறவர்; தாசார்ஹரான கிருஷ்ணர், என்ன சொன்னுலும் அதன்படி நடப்பேன்; அவரே நம்முடைய வெற்றிக்கு மூலம், காரணம்; வித்தியாஸத்திற்கு மூலம்; நம் பிராணனும், ஸம்பத்தும் ராஜ்யமும் வறுமையும் இருப்பும் இல்லாமையும் ஸுகமும் துக்கமும் அவரிடத்தில் உள்ளன. தரிக்கிறவரும் இவரே. இவரிடத்தில் காரிய ஸித்தியானது நிலைத்திருக்கிறது என்று விஸ்வாஸம்கொண்டு வாழ்ந்தார். அதன்படி உம்மை நான் பூஜை செய்து, புண்டரீகாக்ஷரான உமது கிருபையை எனக்கு வேண்டுகிறேன். நீர்தான் ஸுகப்ரதர், ஸுகதர்; ஸுப்ரஸாதர். சரணுகதி அடைந்த என் பாரத்தை வகிக்க திறைமையுள்ள ஸுபுஜர்.]

தன் குலபதியின் மனோபீஷ்டத்தை பூர்ணமாக அறிந்த குஹப்பெருமானுடைய ஆட்கள், தங்கள் ஸ்வாமியின் அதிதிஸத்காரத்தை மேற்கொண்டு எடுத்துச்செய்ய முன்வந்தார்கள். சிலர் தங்கள் வீட்டிற்குச் சென்றனர். சிலர் விருக்ஷத்தின் அடிக்குச் சென்றனர். சிலர் குளக்கரைக்குச் சென்றார்கள்; இன்னும் சிலர் அவர்கள் தங்குவதற்கு வனத்தில் ஸ்தானத்தை ஏற்பாடு செய்து கொடுத்தார்கள். (990)

பரதன் ஸ்ருங்கிபேரபுரத்திற்கு எப்பொழுது சென்றானோ, அவனையுமறியாமல் அதிபிரேமை வசம் அடைந்த காரணத்தால் அவன் உள்ளம் ஆனந்தத்துடன் இருந்தது. பரதனுடைய இடது கை குஹப்பெருமானுடைய தோளைத் தழுவிக்கொண்டு, அதி ஸ்நேக பாவத்துடன் குஹப்பெருமானின் கருணையை வேண்டுபவனாக, துக்க விமுகனாக, ராம நிழலில் இருப்பவன்போல தன்னை அனுபவித்தான். பாகவத ஸ்ரேஷ்டர்களின் குளிர்ந்த புஷ்கராக்ஷங்கள் ஒரு ஆர்த்தியின் விஷயத்தில் எவ்வளவு மகிமைகளை உண்டு பண்ணுமோ, அதுபோல நிஷாத ராஜனின் ஸந்நிதானத்தில் பரதன் பூர்ண சுகத்தை மீண்டும் பெற்றான். பரதனுடைய அதிவினயத்துடனும் அதிபிரேமையுடனும் காட்டப்பட்ட ஸ்நேக உள்ளத்தை (கிருஷ்ணர் விதுரர் வீட்டிற்குச்சென்று அவருடைய அதிதிஸத்காரத்தை அனுக்ரஹித்ததுபோல) பரதன் குஹப்பெருமானின் அருளை அடைந்தவனாக, தன் காரியசித்தியை அடைந்தவன்போல் கருதினான். (991)

இந்த விதமாக பரதனுக்கும் அவனுடன் கூட வந்த யாவருக்கும் தன் பிறப்பு ஸ்தானமானதும் புனிதமான கங்கையை குஹப்பெருமான் காட்டிக்கொடுத்தான். பாலுடன் சர்க்கரையைச் சேர்த்ததுபோல தம்மை அனுபவிப்பவனை தம்மிடம் சேர்க்கும் உபதானக் காரணமான ராமன் குளித்து, ஸந்தியா சேவைகள் முதலிய கர்த்தவ்யங்களைச் செய்த "ராம் காட்"டை (ராமபடுத்துறையை) குஹன் காண்பித்தான். "ராம் காட்"டை பரதன் முதலியவர்கள் நமஸ்கரித்தார்கள். அவர்களுடைய ஆனந்தம் அதிக இன்சுவையுடன் கூடியிருந்தது. ராமனையும் ஜானகியையும் லக்ஷ்மணன் மீண்டும் தரிசிப்பவர்போல எல்லோரும் விளங்கினார்கள். மாதவனாகிற ராமனுடைய கிருபையை அடைந்ததாகத் தங்களைக் கருதினார்கள். (992)

நகரத்தின் ஸ்திரி புருஷர்கள் யாவரும் கிருதார்த்தமடைந்தார்கள். குஹப்பெருமானால் மிக்க களிப்புடன் காண்பிக்கப்பட்ட பிரும்ம ஸ்வரூபமாகவிருக்கும் கங்கையைக் கண்டு ஆனந்த

மடைந்தார்கள். அவர்கள் கங்கையில் நீராடி, அதன் பிறகு கங்கையைப் பூஜைசெய்து கங்கையை வேண்டிக்கொண்டார்கள். ‘‘ஹே கங்காமாயி, எங்களுக்கு ராம விஸ்வாசமும் ராம பக்தியும் உனது அருளால் வளரட்டும். ராமச்சந்திரனுடைய சரணகமலங்கள் எங்களுக்குக் கிடைக்கட்டும்.’’ (993)

பரதன் கைகூப்பிக் கொண்டு திரிபதகா என்று சொல்லப் படும் சுரநதியான கங்கையை மிக்க பவித்ரமான பூஜைசெய்து, அதன்பிறகு வேண்டிக்கொண்டான். ‘‘என் தாயே கங்காதேவி, அம்மா, உன் பாததூளிகள் ஸகலருக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கும். உனது அடியார்களுக்கு நீ காமதேனுவைப்போல விருப்பங்களைப் பூர்த்தி செய்கிருய். மாதா, என் கைகளை கூப்பி உன்னிடமிருந்து வரதானமாக கேட்டுக்கொள்கிறேன். அதை தயவுசெய்து நீ பூர்த்தி செய்யவேண்டும். உன் அருள் கடாக்ஷத்திஞல் ஸ்ரீ சீதாராமனுடைய சரணங்கள் எனக்கு ஸ்வபாவமாகவும் ஸ்வபிருவிருத்தியாகவும் இயற்கையாகவும் ஏற்படவேண்டும்.’’ (நான் ராம பதங்களை ராம் கிருபையால் அடையவேண்டும். என்னுடைய சித்தத்தை அதன் நிழலில் அமரும்படி செய். பிரும்மாஸனகர், ஸனந்தனர், இந்திரன், வஸிஷ்டர், விஸ்வாமித்திராதிகள் ஸதா அவைகளை நினைத்த வண்ணமாகவிருக்கிருர்கள். அம்மா தோஷங்களைப் பாராமல் ராம் கிருபையால் ராம பாத ஸ்பர்சனம் பட்டவுடனே, கல்லாயிருந்த அஹல்யை உயிர்பெற்று எழுந்து அவளுடைய கணவன் ஸ்வீகரிக்கும்படி ஆனுள். (தியாகராஜர் போன்ற மஹான்கள் சதா தியானித்த) ஸ்ரீராம பாதங்களை உன் அன்பு வரதானத்தால் எனக்கு அளி அம்மா’’ என்று வேண்டிக்கொண்டான். சத்ருக்னனும் அவனுடன் சேர்ந்து ராம கைங்கர்யத்தையும் ராம அனுபவத்தையும் வேண்டிக்கொண்டான்.) (994)

[தியானம்

ஜானகிராமா, பாபநாஸனரே, காமக்ரோதாதிகளை நாசம் செய்து உமது கதா வ்ருத்தாந்தங்களில் ஆசையை செய்பவரே, தர்மவாஹனரே, என் ரோகத்திற்கு காரணத்தையும் அதன் பரிகாரத்தையும் நன்குணர்ந்த வைத்யராக விருக்கும் பிஷக் என்று சொல்லப்படும் தன்வந்தரியே, எனக்கும் அர்ஜுனனுக்கும் பரவித்யையை உபதேசித்த மஹா ஆசார்யரே, கர்ப்ப வாஸம் கொடுத்து ஸம்சாரிகளை பயமுறுத்தும் பீமரே, ‘‘கிம்’’ என்கிற சொல்லின் அர்த்தமாகிற பிரும்ம விசாரமும்,

நிர்ஹேதுக கிருபையாகிற ஒரு காரணமுமின்றி சேதனன் தெரிந்துகொள்ள விரும்பும்படியிருக்கும் மஹா நாராயணு, புத்ரன் பக்கலில் பித்ருவின் ஹ்ருதயம் கிடக்குமாப் போலே, எம்பெருமானே, பகவத்குணுனு ஸந்தானம் அபயஹேது என்கிற விஷயமாக, ஸம்சாரிகளாகிற அஸ்மதாதிகளின் பிரிவினுல் நான் பரிதாபமுற்று எவ்விதம் உம்மோடு கலப்பேன், என்கிற சிந்தனையில் வாடிய பரதசத்ருக்னுதிகளை "ஸ்வாமி, நீர் உறங்குகிற சிசுவை தாயார் அணைப்பது போல என்னிடம் அருள் செய்யமாட்டீரா? என் ஊரைச் சொன்னுய், என் நாமத்தைச் சொன்னுய். என் அடியாரைக் கண்டு குசல பிரஸ்னம் செய்தாய், அவர்களுக்கு ஒதுங்கும் நிழலை அளித்தாய் என்கிற யத்ருச்சையாக செய்தவை, முயற்சியுடன் செய்தவை, அறியாமல் செய்தவை ஆகியவைகளால் ஏதாவது ஒன்றை நீ சிறியதாகவிருந்தாலும், பெரியதாக நினைத்துக்கொண்டு ரக்ஷிக்க மாட்டாயா? ஶ்ரீவல்லபா, இவைகளைத்தானே உமது கிருபையின் விசேஷம், யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம் ஆனுஷங்கிகம் என்று பலவிதமாக வைஷ்ணவர்கள் சொல்லுகிருர்கள். உம்முடைய திவ்ய நாமமாகிய "ஸுவ்ரதர்" அர்த்தத்தின்படி "எவ்வகையாலும் என் பாதங்களை அடைந்தவர்களுக்கு நான் கைவிடாமல் காப்பாற்றுவேன்" என்கிற உறுதியுள்ள வ்ரதமுள்ளவரன்ரே? இதற்காகத்தான் நீர் "ஸித்த ஸங்கல்பர்" என்று அழைக்கப் படுகிறீர். அப்பேற்பட்ட உமது பாதகமலங்களை பரதன், குஹப் பெருமான், சத்ருக்னன், ஆஞ்சநேயர், வியாஸர், தியாகராஜர் போன்ற மகான்களை முன்னிட்டுக்கொண்டு சரணமடைகிறேன்.]

இந்தவிதமாக பரதன் கங்கையில் ஸ்நானம் செய்து, அதன் பிறகு குருவின் ஆணையின் பேரில் தன் தாய்மார்களுக்கும் ஸ்நானம் செய்வித்து, தன் இருப்பிடமாகிய கூடாரத்தில் தங்கு வதற்கு அவர்களுடன் சென்ருன். (995)

குஹனுடைய ஆட்கள் எங்கு பார்த்தாலும் கூடாரம் அமைத்திருந்தார்கள். பரதன் ஒவ்வொருவரையும் ஆதரவுடன் விசாரித்து அவர்களை அமைதியாகயிருக்கச் செய்து, அதன்பின் தேவபூஜைகள் முதலியவைகளை முடித்துக்கொண்டு, ஶ்ரீராமச் சந்திரனின் தாயாரான கௌசல்யாதேவியிடம் சென்ருன். (996)

அவளுடைய காலில் விழுந்து நமஸ்கரித்து அதிம்ருதுவான வசனங்களால் எல்லாத் தாய்மார்களையும் ஸத்காரம் செய்தான். அவனுடைய தம்பியான சத்ருக்னனை அழைத்து அவர்களுக்கு சேவை செய்யச் சொன்னுன். பிற்பாடு பரதன் தானே ஸ்வய

மாக குஹப்பெருமானைக் கூட்டி அழைத்துவரச் சொன்னான். (997)

அவனுடைய கைகளை பிடித்துக்கொண்டு பரதன் தன் சகாவுடன் வெளிப்புறப்பட்டான். குஹப்பெருமானின் ஸந்நிதானத்தில் பரதன் அதிக ஆனந்தமடைந்தான். அவனுடைய சரீரம் அதி உன்னத ஸமாதியில் நிலைத்து நிற்கும் யோகியின் பூர்ண ஆனந்தத்தை அடைவது போல அடைந்து இன்புற்றான். பரதன் தன் சகாவை அதிவினயமான வார்த்தைகளால் கேட்க ஆரம்பித்தான். "என் நண்பா, எனக்கு கங்கையைக் காண்பித்தது போல, அந்த பவித்திரமான சீதாராமன் வாஸம் செய்த இடத்தைக் காண்பி; அதனால் என் நயனங்கள் சுக்ருதம் அடையட்டும். என் மனம் பாவனமாகட்டும். என் ஆத்மாவின் தாபத்ரயங்கள் அடங்கி, போக மோக்ஷத்தை அடையட்டும்." (998)

"என் குருநாதா, குரு குஹா, எந்த இடத்தில் சீதாராமன் ஆனந்தமாக படுத்து உறங்கினார்கள்? எந்த இடத்தில் லக்ஷ்மணன் படுத்து உறங்கினான்? ஸர்வதீர்த்தகரராகிய என் பிரபு, மஹாத்மா, எவ்விதம் இரவைக் கழித்தார்? பாபத்தை நாசம் செய்யும் அந்த கதாம்ருதங்களைக் கேட்டு நான் சந்தோஷமடையவேண்டும்", என்று சொல்லும் போது, அவனுடைய புஷ்கராக்ஷங்களிலிருந்து ப்ரேமை கண்ணீர்கள் சொரிந்த வண்ணமாயிருந்தன. கன்றுக்கிரங்கிய பசுப் போல கண் சொறிந்தான். அந்த நிஷாதராஜன் பரதனுடைய வார்த்தைகளைக் கேட்டு, மிக்க வருத்தமுற்று, உடனேயே அந்த இடத்திற்கு அவனை கூட்டிச் சென்றான். (999)

[தியானம்

ராமா, பிரஹ்லாத பக்தி, தியாகராஜ ஹ்ருதயம், பரதனுடைய தியாகம், உமாமஹேஸ்வரர்களுடைய ஞான ஆனந்தம், குஹப்பெருமானுடைய உதாரமான நுண்ணறிவு, ஆசார்யர்களான குருக்களுடைய காருண்யம், ஆஞ்சநேயருடைய கிருபை எல்லாம் என்னை நெஞ்சு உருக எலும்பு உருக பண்ணுகிறதப்பா. சித்ஸ்வரூபனும், பக்தர்களின் சித்தத்தை அனுஸரித்துச் செல்லும் லக்ஷ்மி நாராயணா, நீங்கள் இருவர்களும் உத்ஸவபுருஷர்கள். உரகஸாயி, எனக்கும் பராசருக்கும் ஸகலருக்கும் மாதாபிதாக்கள். அனைத்தையும் மன்னித்து தயை செய்யும் மாபெரும் வள்ளல்கள். கற்பவல்லி கொடி போல

விருக்கும் மஹாலக்ஷ்மிபிரியரே, கோடி கோடி கணக்கான அஜருத்ரர்களால் சேவிக்கப்படும் ஆதிநாராயணு, உங்களை நிஜதாஸ உள்ளத்துடன் உங்கள் சரணங்களைப் பற்றுகிறேன். பக்தர்களின் துயரத்தைப் போக்கும் தல்லிதந்தையே, வனஜாக்ஷி லக்ஷ்மி நாதா, கோடி மின்னல்களைப் பழிக்கும் உருவத்தைத் தாங்கும் கருமாணிக்கமே, மின்னலையும் பொற்கொடியையும், மன்மதனின் அழகையும், ஒருங்கே பழிக்கும் கோவிந்த ராமா, ஸ்ரீகாந்தராமா, தயையுடன் விரைவாகவும், மதுசூதனு என்னிடம் வரமாட்டாயா? பிரஹ்லாதன், தியாகராஜர், குஹர், ஆஞ்சநேயர், பரதன், நாரதர் ஆகியவர்களை முன்னிட்டு சரணம் அடைந்திருக்கும் நாதா, என் நண்பா, என்று கூவி அழைக்கிறேன். என்னைக் காப்பாற்ற ஓடிவாரும்.]

இராமன் இருந்து களைப்பாற்றிக் கொண்ட இடமாகிய அசோகமரத்தைப் போய்க் கண்டான். ''சீதை அவருடன், உட்கார்ந்து கொண்டு அதிமாதுர்யமாக சம்பாஷித்துக் கொண்டிருந்தாள். அவர்களுடைய சம்பாஷணைகள் உன்னைப் பற்றியும், உன் ப்ரேமையைப் பற்றியும் இருந்தன.'' இதைக் கேட்டதும் ஸௌஹ்ருதயமுள்ள பரதன் ஸஹஜ ஸ்நேகத்தால் கவரப்பட்டு, (''அடியேனுள்ளான், ஸர்வக்ஞன், என் ஜீவாத்மாவை எம்பெருமான் அனுப்ரவேசம் செய்து, கண்கள் சிவந்து இருக்கும் ஸ்ரீயப்பதி, என் ஆத்மாவுக்கு ஞான ஆனந்தத்தைக் காட்டிலும், சேஷத்வமே பிரதானம் என்று நிரூபிக்க விரும்பும் என்னை, பிராட்டியும் பகவானும் புரிந்து கொண்டார்கள்'' என்று) விசேஷ கிருதக்ஞதையால் பரதன் அப்போது அன்பு மேலிட்டு அத்யாதரத்துடன் மெய்சிலிர்த்து, அந்த புண்ணிய இடத்தை சுக்ருதபிரணமம் செய்தான். (அக்ருரர் மதுரையில் உருண்ட மாதிரி) அந்த விடத்தில் இருந்த பாதரேணுக்கைகளால் தன் தாய் தந்தையர்களால் கொடுக்கப்பட்ட சரீரத்தை புனிதப்படுத்திக் கொண்டான். (1000)

தர்ப்ப படுக்கையைக் கண்டு அந்த பரதனும் குஹனும் பூபிரதக்ஷணம் செய்வது மாதிரி வலதுபக்கமாக பிரதக்ஷணம் செய்தார்கள். ஸ்ரீராமச்சந்திரனின் பாத இலச்சினை படிந்த இடத்திலிருந்து ரேணுக்களை எடுத்து தன் தலையில் தரித்துக் கொண்டான் பரதன். ஆகிஞ்சனன், அனன்ய சரண்யன், (சீதாபிராட்டியுடன் கூடிய ஸத்வம், சுத்தபுத்தி ஆகிய ஸ்ரீமன் நாராயணமூர்த்தியை பிரஹ்லாதன் சேவித்துக் கொண்டு நிச்சயம் செய்தது போல,) பரதனும் தன் மனத்திற்குள்

அதிக ஆனந்தத்தை அடைந்தவனாக, ராமப்ரீதிவர்த்தனனாக விளங்கினான். (1001)

அந்த பவித்திரமான இடத்தில் இரண்டு கனகபிந்துக்கள் (தங்க மணிகள்) சீதையின் ஆடை ஆபரணங்களிலிருந்து) நழுவி விழுந்திருந்தன. அவைகளை மிக்க ஜாக்ரதையாகப் பொறுக்கி, தன் தலையில் சூட்டிக்கொண்டான். அவனுடைய கண்களிலிருந்து ப்ரேமை கண்ணீர்கள் தாரை தாரையாக வந்து கொண்டிருந்தன. அதிவாத்ஸல்யத்தினால் பரதன் அதிம்ருதுவான குரலில் குஹனைப் பார்த்துச் சொன்னான். (1002)

"என்னைப்போல இந்த இரு ஸ்வர்ண குண்டுமணிகள் பாக்ய மற்றவை. சீதையின் பிரிவினால் இவைகள் ஸ்ரீ நிதி நஷ்டமானது போல சோபைஹீனமாக பிரகாசிக்கின்றன. ராமவியோகத்தால் ராமனே எனக்கு ஆதாரம், ராமசீதாவே என் நோம்புகளின் பயன், (அவர்களை இந்திராதி தேவர்கள் வணங்குவதைப் பார்த்து தாங்களும் ஆனந்தமயமாகும்.) இந்த இரு ஸ்வர்ண பிந்துக்கள் ஸ்தானபிரஷ்டம் அடைந்து அயோத்தியின் ஜனங்கள், ஸ்திரி புருஷர்கள் யாவரும் மனம் நலிந்து, சோகத்தை அடைந்திருக்கிறார்களே, அவர்களைப் போல இவை களும் விளங்குகின்றன. அந்த நாரீமணியின் தகப்பனார் ஜனகர். ஜிக்ஞாஸம், ஆர்ஜவம், அஹிம்சை, சத்யம், தபஸ், ஞானம் வைராக்யம் ஆகியவைகளில் தேர்ந்த ஜனகர் ஜகத்தில் போகம் மோக்ஷம் இரண்டுகளாலும் சீதையை அடைந்து சந்தோஷப் பட்டவர். அப்பேற்பட்ட மஹானின் புத்ரி அந்த ஜானகி!" (1003)

"தினகர குலத்தின் பதி தசரதர் அந்த சீமாட்டியின் மாமனார். அவருடைய மகிமையைக் கண்டு அமராவதியின் பாலனாகிற சதக்ருது கூட ஆச்சரியப்படும்படி, அளவற்ற ஐஸ்வர்யங்கள் அந்த மஹாத்மாவினிடமிருந்தன. அந்த தாமரைக்கொழுந்தின் பிராணநாதர் ஸ்ரீ ரகுநாதர், அவர்கள் இருவர்களுக்கும் மேல்பட்டு, விளங்கக்கூடிய ஒருவரும் ஜகத்தில் இருக்கமுடியாது. இவர்களோ எனக்கும் ஸர்வ சராசரங் களுக்கும் ஆதாரமாக விளங்கும் கூர்ம ஸ்வரூபி. அவர்களிட மிருந்தே எல்லோரும் மேன்மையை அடைகிறார்கள்." (1004)

[தியானம்

ஹே ராமா, தீர்த்த நாராயணா, அயோநிஜையான சீதை யுடன் கூடிய ஸ்ரீராமச்சந்திரா, நீலமேக தீபம் போல எனக்கு

தோன்றுபவனே, கருமுகில் கண்ணு, அஞ்சனபுஞ்ச சியாம குந்தளம் அனந்தஸயம், த்வாம் அப்ஜ பாணி பதம் அம்புஜ நேத்ரம் நேத்ர ஸாத்குரு கரீச ஸதாமே. எப்பொழுதும் உன்னை ஸேவித்துக் களிப்பதற்கு உறுப்பான அப்ராக்ருத திவ்ய நேத்ரம் அடியேனுக்கு ஸாதித்து அருள வேண்டும். ஹே அதோக்ஷஜா "பிருஸ்னிகர்ப்பா," என்று உடையவர் பிரர்த்தித்ததும், கூரத் தாழ்வானுக்கு மனம் இரங்கிய எம்பெருமானே, பரதன் சத்ருக்னன், ஆகியவர்களையும், குஹனையும் முன்னிட்டு சரண மடைகிறேன். அந்த சமயம் கூரத்தாழ்வானும் அஸஹ்ய அபசாரப்பட்டும், வைஷ்ணவ குலத்தில் பிறந்த ஒருவன் படுகுழியில் விழலாகாது, என்று பரம த்ரோஹிகளுக்கு நற்கதியை வேண்டின ஸத்குரு கிருபாகடாக்ஷத்திற்கு என்னை இலக்கனுக்க வேண்டும். ஐயோ, திருத்ராஷ்டிர், உதங்கர், யசோதை, அர்ஜுனன், சஞ்சயன் ஆகியோர்களுக்கு திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்து, வரம் காட்டிய வரதா, பேரருளா, என்னிடம் தயை ஸம்பன்னையாகிற லக்ஷ்மியுடன் நீ கிருபை செலுத்த வேண்டும்.]

பதியே தெய்வம், (சக்திபொருளில் அடங்கியிருக்கிறது என்று ஜைகீஷவ்யர் போன்ற மஹான்களும், உமையும் சீதா லக்ஷ்மியும் நிரூபித்துக் காட்டின) மங்கள கீர்த்தியுள்ள சீதையின் தர்ப்ப படுக்கையைக் கண்ட பரதன் மிக்க பரிதவித்தவனாக, "என் மனம் கல் வஜ்ரம் இரும்பால் செய்யப்பட்டதாகவிருக்க வேண்டும். ஜகஜ்ஜனனியாகிற சீதைக்கு அஸஹ்ய அபசாரம் செய்துவிட்டேன். சங்கரபகவானே, உம்முடைய போக்கே விசித்திரமானது. உம்முடைய பாத பூஷணனாகவிருக்கும் எனக்கு வஜ்ரத்தைக் காட்டிலும் மிக்க விசேஷமான கடினத்வம் வாய்ந்த ஹ்ருதயத்தை அல்லவா அளித்திருக்கிறீர்" என்று வெட்கமின்றி கதறலானான். (1005)

"என் அருமைத் தம்பி பரமபாகவதன். புண்யசிலன், ஸத்வகுண ஸம்பன்னன். மஹாதபஸ்ஸினால் மனத்தை அடக்கியவன் ராஜகுமாரன். ஸர்வஸம் பத்துக்களுக்கும் போக லக்ஷ்ய லக்ஷணங்களுக்கும் காரண பூதன், லக்ஷ்மீவான், அப்பேற்பட்ட மஹாபுருஷன் அன்புடன் போஷிக்கத்தக்கவன். இப்பேற்பட்ட உத்தம தம்பி எந்த தேசத்திலும் எந்தக் காலத்திலும் கிடைக்கப்பெருதவன். பகவத் கைங்கர்ய ஆனந்தம், அது ஞான ஆனந்தத்தைவிட மேற்பட்டது. அடியேன் செய்த குற்றங்களையும் தோஷங்களையும் மறந்திருந்து,

வெட்கமின்றி நாம் தயையை வேண்டும் சமயத்தில், நமக்கு நினைப்பூட்டிப் பண்ணும், உபகாரம் செய்யும் மஹாத்மா, எக்காலத்திலும் ஸம்பவிக்க முடியாது. அப்பேற்பட்ட லக்ஷ்மணன், லக்ஷ்மிவர்த்தனன், எனக்கும் சத்ருக்குனனுக்கும் அயோத்யாவாசிகளுக்கும், என் மாதாக்கள் பிதா அனைவருக்கும், என் பிரபு சீதாராமன், ரகுவீரன் ஆகியவர்களுக்கும் பிராண பிரியன்.'' (1006)

"அவனுடைய மூர்த்தி ஸ்வரூபம் மிக மிருதுவானது. நளினமானது. சுகுமார ஸ்வபாவங்களுடனும் சுப லக்ஷணங்களுடனும் உடைய அவனுடைய திவ்ய சரீரம் மூன்று குணங்களாகிற ஸத்வம் ரஜஸ்தமஸ் இவைகளால் பற்றப்படாமல், தாபத்ரயங்கள் நீங்கியதாக, (அதிபோக மோக்ஷ ஆனந்தங்களில் ஈடுபடும் அந்த அனந்த ஸ்ரீ லக்ஷணங்கள் உள்ளவை. அப்பேற்பட்ட மஹானுபாவனின் மூச்சுக்காற்று பட்டவுடன் ஸகலரும் ஸத்வகுணத்தை அடைந்துவிடுவார்கள்.) அந்த மாதிரி விலக்ஷணமுள்ள லக்ஷ்மணன் வெயில் தாபத்தை பொறுக்கமாட்டான். வனத்தில் இருக்கும் ஸகல விபத்துக்களுக்கும் அருகதையற்றவன். அந்த மஹாத்மா என்னால் பரம துக்கங்களை அனுபவிப்பதற்கு வனத்திற்கு அனுப்பப்பட்டான். இப்பெற்பட்ட பாகவத - உத்தமனுக்கு அஸஹ்ய அபசாரம் என்னால் செய்யப்பட்டது. என்னுடைய ஹ்ருதயம் சுக்குநூறாக வெடிக்காமல் வஜ்ரம்போல கடினமாக இன்னும் இருக்கிறது. அந்தோ என் செய்வேன்.'' (1007)

"என் பிரபு,எனக்கு தாய்தந்தை மித்ரன் குருதெய்வம்ஆகிய ஸர்வ பாவத்திலும் விளங்கும் ராமன், (இந்த அரிச்சாவதாரமாகிய மானிட வேஷத்துடன் பூமியில் அவதரித்திருப்பது) இந்த ஜகத்திற்கு அபாம் நிதியான ரூபம், சீலம், சுகம், போகம், மோக்ஷம் ஆகிற ஸகல கல்யாண குணங்களுக்கு "குணப்ருத்'' என்று சொல்லும்படி தம்முடைய ஸ்வஸங்கல்பத்தினால் எல்லா நிலைமைகளிலும் எல்லாப் பொருள்களையும் தமது குணம்போல தம்மிடத்தில் வைத்துத் தாங்கும் ஈசித்வ ஐஸ்வரியம் பெற்ற குண ஸாகரம், அப்பேற்பட்ட ஆதிகாரண புருஷன் தன் ஸ்வய ஜனங்களாகிற அயோத்தியா வாசிகளுக்கும், குடும்ப பந்துக்களுக்கும் குரு மஹாராஜாக்களுக்கும் பிதா மாதாக்களுக்கும் ஸ்வபாவமாக சுகத்தை தன் பிரியதரிசனத்தால் அளிக்கும் மஹாத்மா.'' (1008)

"சத்ருக்கள், த்ரோஹிகள் ஆகியவருக்கும் அன்புடமை என்னும் அசாதாரண திருக்குணம் பெற்றவர். அந்த பிரிய தரிசனர். பூர்வ ம்ருதுமதுர பாஷணனுகவிருக்கும் பிரபு, சம்பாஷிக்கும் சமயம், அதிவினயத்துடன் வாசஸ்பதியாக வாக்குக்களைப் பொழியும் சமயம் அவருடைய தேன் மதுர மொழிகளும், அம்ருத ஸாரமான அர்த்தங்களும், யாவருடைய உள்ளத்தை கவருகிறதாகவிருக்கின்றன. அவனுடைய சிரிப்பும், மந்தஹாஸமும், உதாரமனஸும், கண்ணேக்குகளும், அழகான பல்வரிசைகளுடன் குவிந்த தாமரை மொட்டுப்போல விருக்கும் பவளச் செவ்வாயும், பவழம்போல உதடுகளின் அழகுகளை கோடி கோடி கணக்கான சரஸ்வதிதேவியோ, ஆயிரம் நாக்குக்கள் கொண்ட சேஷபகவானே வர்ணிக்க முடியுமா? அப்பேற்பட்ட என் பிரபுவின் குணக்கடலை யாரால் ஆராயமுடியும்? எல்லையற்ற மகிமைகள் கொண்ட என் பிரபுவுக்கு ஈடு அவரே ஆவர்." (1009)

[தியானம்

ராமா ஜானகிராமா, சச்சிதானந்த ராமா, சங்கர பகவானுல் புகழப்படும் ராமா, உமாமஹேஸ்வரரால் கீர்த்தனம் செய்யப்படும் ராமா, உன்னை சங்கர ஹ்ருதயத்துடன் பூஜை செய்கிறேன். தர்மத்தில் டம்பம், போஜன ப்ரியம், தற்புகழ்ச்சி ஆகியவைகள் மனத்தை அசுசிபடுத்திவிடும். மன அசுசியானுல், மனம் சமனத்தை அடையாது. ஹேராம், தவம் இல்லாதவனுல் ஸ்வர்க்கம் அடையப்படாததுபோல, தர்மம் மன அசுசியினுல் அடையப்படுகிறதில்லை. அதனுல் அல்லவோ பரதன் அகஸ்தியர், குஹன், ஜமதக்னி முதலியவர்கள் மனத்தின் தூய்மையினுல் மேன்மை அடைந்தார்கள். பகவத் ஸம்பந்தம் அனுதிகாலமாகவும், அனுதி ஸித்தமாகவிருந்த போதிலும், ஆசாரியன் அதன் மகிமையை உணர்த்துவதற்கு அஸத் கல்பமாயும், அவன் உணர்த்தின பின்பு கொடியை கொள்கொம்பு தாங்குவதுபோல, கொள்கொம்பிலே துவக்கி வைப்பதுபோல, கார்யகரமாக ஆகிவிடுகிறது. அந்த ஆசாரிய ஸம்பந்தம் துரதிர்ஷ்டத்தினுல் குலைந்து போனுல் பகவத் ஸம்பந்தமும் குலைந்து போகிறது. ஆகையால் ஆசார்ய ஸம்பந்தத்தைப் பெற்றுல் ஒழிய பகவத் ஸம்பந்தம் நிலைத்து நிற்காது. தன்னுடைய துரபிமானத்தால் ஈஸ்வர அபிமானத்தை அழித்துக் கொண்ட ஒரு சேதனனுக்கு ஆசாரிய அபிமானத்தை அடையப்

பெருவிடில் வேறு உஜ்ஜிவன உபாயமில்லை என்று நம்பிள்ளை திருவடிகளிலே, ஸகல சாஸ்திர தாத்பரியங்களைக் கேட்ட வடக்கு திருவீதிப்பிள்ளை பலகாலும் அருளிச் செய்தனர். அப்பேற்பட்ட ஆசாரிய ஸம்பந்தமுற்ற எனக்கு ஆஞ்சநேயாதிகள் அனுபவித்துவரும் ராம கைங்கரியம், ராம பிரியம் ஏற்படட்டும். பகவத் திருவடி ஸம்பந்தம் பாகவத அனுகிரஹம் ஆகிய இரண்டும் ஆசாரிய கிருபையால் கிடைக்கும். ஸ்வயத்ன ஸாத்தியமான பக்தியானது பகவதேக பாரதந்தர்ய விரோதியான ஸ்வஸ்வாதந்திரியத்தை உண்டாக்குகிறபடியால், சேதனனுக்கு உபாயமின்றி கர்மானு குணமாக ஸம்சரிக்கிறான். அதனால் அவன் என்ன செய்வதென்று மஹாபயத்தை அடைகிறான். மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடிய பகவான் ஆசார்யனையே உபாயமாக வரிக்கும்படி நியமிக்கிறான். அஹங்காரம் சேதனனுடைய பிரபத்திக்கு ஸ்வரூப விரோதி. பரமகாருணிகனாய், நிர்ஹேதுகமாக தன்னையே அங்கீகரித்தருளி நோக்கிக்கொண்டு போகிற ஆசாரியன் "இவன் நம்முடையவன், நம்மைச் சார்ந்தவன்" என்று திருவுள்ளம் பற்றுகிறான். கையில் உள்ள பொருள்போல ஆசாரியன் அதி ஸுலபனாக பூமியில் புதைத்து வைத்துக் கிடக்கும் துர்லபமான பகவத் விஷயத்தை ரக்ஷகமாக சூசிப்பிக்கிறான். அப்பேற்பட்ட நிர்ஹேதுக கிருபையான ஆசாரிய கிருபை எனக்கு எப்போது கிடைக்கும்?]

"ரகுவம்சசிகா மணியாகவும், திலகமாகவும் விளங்கும் ஸ்வாமி, மோக்ஷ சுகத்தை இகத்திலும் பரத்திலும் கொடுக்க வன்மை உள்ளவன். மோக்ஷ ஹேதுவான ஆசாரிய கிருபையையும் ஆசாரிய கிருபையினால் ஏற்படும் பகவத் விஷயமும், பகவத் விஷயத்தினால் ஏற்படும் பாகவத ஸம்பந்தமும் சேதனனுக்கு கிடைக்கிறபடியால் ஸ்ரீராமச்சந்திரன், பரம மங்கள மூர்த்தி, பூமியில் புதைத்த பொருளைக் காட்டிக்கொடுப்பதுபோல ஆனந்தத்தைக் கொடுக்கும் வள்ளல், என் பிரபு பகவான், குசப்படுக்கையில் படுத்து உறங்கினார் என்பதைக் கேட்க, மிக்க வருத்தமாயிருக்கிறது. ஐயோ, இவ்வுலகில் விதியின் கொடுமை மிக்க வலிமை உள்ளதாகவிருக்கிறது.!" (1010)

"என் பிரபு ராமச்சந்திரன் பிறர் துக்கத்தைப் பொறுக்க மாட்டார். காதால் கேட்டுக்கொண்டு இருக்கமாட்டார். என் தகப்பனார் அப்பேற்பட்ட கற்பவல்லிக்கொடிபோல விளங்கும் ராமதருவை தன்னுடைய ஜீவனத்தருப்போலே கண்ணும் கருத்துமாய் போஷித்து வந்தார். அவருடைய மனம் கோணுதை

படி என் தாய்மார்களும் கண்மணியை இமைகள் காப்பதுபோல மூடி மூடி ராத்திரி பகல் என்று பாராமல் சர்வ ஜாக்ரதையாக போஷித்து வந்தார்கள்.'' (1011)

''அப்பேற்பட்ட உத்தம பிறவியுள்ள கோமகன், சக்ரவர்த்தியின் திருக்குமாரன் கேட்பாரற்று வனத்தில் வெறுங்கால்களுடனும், குளிர், பசி, தாகம், உஷ்ணம், மழை இவைகளின் முன்பு ஒருவித ஏற்பாடன்றி நடமாடுவது என்ன அஸஹ்ய அபசாரம் என்னுல் ஏற்பட்டு விட்டது. எவ்வளவு பக்ஷ்யபோகங்களை அனுபவிக்கும் போக மூர்த்தி கந்த மூல பழங்களைத் தின்று சாப்பிடும்படி ஆய்விட்டதே? இந்த அனர்த்தங்கள் எல்லாம் கைகேயியின் பிடிவாதத்தால் ஏற்பட்டுவிட்டது; பிடிவாதத்தினுல் அவள் தன் பிராணபதியான மன்னருக்கும் பிரதிகூலமாகவல்லவோ நடந்து விட்டாள்.'' (1012)

''நான் அவளுடைய வயிற்றில் பிறந்தது மஹாபாபம் செய்ததின் பலன். அவளும் தன் பதிக்கு விரோதியாகி பதி தர்மத்தையும் இழந்தாள்; நானும் என் ஸ்வாமிக்கு தீங்கு இழைத்து, எனக்கும் என் பானு குலத்திற்குமே களங்கம் ஏற்படுத்திவிட்டேன். விதாதா என்னை அபாக்யவானுக தீர்மானித்து விட்டான். நான் ஸ்வாமியின் த்ரோஹியாகிவிட்டேன். என் பிறப்பினுல. இவ்வளவு உத்பாதங்கள் ஏற்பட்டிருக்கின்றன. (நான் தகுந்த ஆசாரிய ஸம்பந்தம் பெருமல் பகவத் கிருபையையும் யிழந்தேன்.) என் பிரியமுள்ள குஹப்பெருமாளே, உன்னையும் உன் மாதாவான கங்கையையும் தரிசித்து, உங்கள் கிருபா கடாக்ஷத்தினுல் ராம ஸம்பந்தம் எனக்கு யேற்படட்டும்.'' என்று குஹனை பரதன் கட்டிக்கொண்டு அழுதான். (1013)

பிரேமை, ஆச்சரியம், காருண்யம், கிருபை ஆகிற ஸர்வோத்தம குணங்கள் பாவங்களுடன் கலந்தன போல, என் பிரபு குஹப்பெருமான் பரதனைத் தழுவிக்கொண்டார். ஆறுதலுடன் கூடிய ஸித்த உபாயமாக வார்த்தைகள் கூறலானுன். ''என் பிரபுவே, நீர் ஏன் வ்யர்த்தமாக வருத்தப்படுகிறீர்? ஐயா, நீர் ராம பிரியன்; ராமன் பரத ப்ரியன்; அப்பேற்பட்ட பரஸ்பர ஸ்நேகம் உங்களிடம் இருக்கிறது. ஆசாரிய க்ருபை அடைந்த சேதனனுக்கு பகவத் கிருபை கிடைக்குமாப் போலே, உமக்கு கிடைத்திருக்கிறது. இந்த ஸ்நேக நிச்சயமான ஸித்தாந்தம். நீர் பார்ப்பதுபோல தோஷங்கள் என் கண்களுக்கு தோன்றவில்லை. அவ்விதம் அவைகள் வாஸ்தவமாயின், அந்த தோஷங்கள் விதாதாவைத்தான் சேரும்.'' (1014)

"பேறறிவையுடைய நீர் வருத்தமுற்றவராகாதீர். மனிதனுன வன் புண்ய பாப கர்மங்களில் தானே கர்த்தாவாகிறதில்லே. ஸ்வதந்திரமில்லாதவனுகி, மரப்பாவைபோல அவன் செய்விக்கப் படுகிருன். (மனிதர்களுள் சிலர் ஈஸ்வரரால் ஏவப்பட்டும், சிலர் தற்செயலாலும் மற்றவர் முன்வினைகளாலும் ஏவப்பட்டு, கர்மாக் கள் செய்யப்படுகின்றன. இந்த லீலே மூன்று விதமாக காணப் படுகிறது.) ஆகையால் பரதா, நீர் அனர்த்தத்தை அடைந்த தாகக் கருதாமல், மனத்தை ஸ்திரப்படுத்திக் கொள்ளும்." (1015)

[தியானம்

ஜானகிராமா, ஸ்ரீவத்ஸராமா, ஸ்ரீதரா, பகவான் ஆசார்யர் ஆகிய இருவர்களும், பகவான் சேதனன், ஆசாரியன் சிஷ்யன் ஆகிய இருவர்களின் ஸ்வரூபம், பாதந்திரனுன சேதனனுக்கு ஸ்வரக்ஷகனுக விரு கமுடியாது. ஸ்வதந்திரனுன சேதனன் ஆசாரியனிடத்தில் பரதந்திரனுகவுமிருக்கிருன். கிருஷ்ணரை அனுசரித்த யுதிஷ்டிரர் மிக்க அடக்க மனமுள்ளவனுக ஆகிருனன்ருே? ஸர்வ ஸ்வதந்தரனுன பகவானும் மிக்க காருண்ய பாவத்தால் தன் ஆக்ஞையாகிற சாஸ்திரங்களே பஹுமானிப்பவனுக, சேதனனிடம் ஒட்டிக்கொள்கிருன். இப்பேற்பட்ட ஸ்வாதந்திரயம் வேஷம் போடப்பட்டதாக ஆகி, ஸர்வ சக்திமானும், ஸர்வ தாயகனுமாகிற பகவான் ஸர்வஸுலப னுகிவிடுகிருன். பாகவத அபசாரங்களும் பூர்வ வாஸனையால் ஏற்பட்ட கர்ம விசேஷங்களின் பலனுலும் பகவத் விஷயத்தைக் கெடுப்பதற்கு ஹேதுவாக விருக்கின்றன. இப்படி யிழந்து கிடந்த வன் விஷயத்தில், அவ்விழந்த ஸ்ரீதனத்தை, அபாம் நிதியை, அநிர்தேஸ்யவபுः என்று சொல்லப்படும் ஸ்ரீகாந்தனே, உமை சங்கரரை திரும்பி அடைந்ததுபோல, திருப்பி அடையவைக்கும் ஹேது கிருபையாகும். அந்த கிருபையோ, விதியின் வாய் கிடைப்பதாகவும், அவனுடைய கர்மத்தாலும், ஆசார்ய விசேஷ கடாக்ஷத்தினுலும் கிடைப்பதல்லவோ? அப்பேற்பட்ட ஞான சிகாமணிகளான நாரதர், பரதர், ஆஞ்சநேயர், குஹன், துளசி தாஸர் ஆகிய மஹான்களே நான் சரணம் அடைகிறேன்.]

"என் பிரிய நண்பா, (விதி பிரதிகூலமாகப் போகுமாகில் அதை மீறிச் செல்லும் பாக்யம் பகவத் கிருபையை யன்றியும் ஆசாரிய கடாக்ஷத்தினுலுமின்றி, வேறு யாவராலும் முடியாது. ஆகையினல் கைகேயியின் மதி விபரீதபுத்தியை அடைவித்து அவளே பகவானுடைய சாக்ஷாத்காரத்தை அனுபவிக்கமுடியாமல்

முன் செய்த முழுவினை அனுதிகாலமாக திரட்டப்பட்ட அவளுடைய கர்மத்தினுல் பகவத் நிதியை அவளிடமிருந்து பிரித்துவிட்டது.) ஆனுல் என் பிரபு உன்னுல் கைவிடப் படாதவன், ''இவனையிழந்து நாம் இருக்கக்கூடாது,'' என்கிற அபார கருணையால் உன் சுசியான ஹ்ருதயத்தை அன்று இரவு முழுவதும் மதுரமாக ஜானகியிடம் அவர் சம்பாஷித்துக் கொண்டிருந்ததை நானும் லக்ஷ்மணனும் ஆனந்தத்தோடு கேட்டோம்.'; மஹா பாகவத சிரோன்மணியான துளசிதாஸர் சொல்லுகிருர் :— குஹன் பரதனைத் தழுவி, அன்புடன் உச்சி முகர்ந்து, அவன் தாபத்ரயங்களைப் போக்கி, சூக்ஷ்ம விசேஷ அதிகாரத்தினுல் பரதனிடம் சொல்ல ஆரம்பித்தார். ''ஸ்ரீராம பரத ஸம்பந்தம் இருவருக்கும் உள்ள ஸ்வரூபம் (ரக்ஷ்ய பூதத்வம், ரக்ஷ்யத்வம் என்கிற ஸாரமாய் உள்ளது. மணவாள மாமுனிகள் ஸாதித்தபடி ''இவனுடைய அனுமதி பேற்றுக்கு, ஹேதுவல்லா தாற் போலே, அவனுடைய அனுமதியும் இழவுக்கு ஹேதுவன்று. பரதந்திரனுன பரதனுக்கு ஸர்வ ஸ்வதந்திரனுன பகவான் ஸ்வாக்ஷ்யவஸ்து போல ஆகிவிடுகிருன். இதுவல்லவோ இருவருக்கும் ஸ்வரூபம், ஸ்வபாவம் ஸ்வபிரவிருத்தி, ஆகிய லாபங்கள்.) பரதா உன்னுடைய ஸத்குணமே ராமப்பேற்றுக்கு அடி என்று நினை. ஈஸ்வரனும் பிரதி கிரஹம் செய்து கை நீட்டி வாங்குவதாலே, அவனுடைய திருவடிகள், அவனுடைய கிருபை, அவனுடைய லக்ஷிமி கடாக்ஷம், அவனுடைய ஸத்ஹ்ருதயம், ஆகிய எல்லாம் உனக்காக ஸித்தமாயிருக்கின்றன. அவை உனக்கு மீண்டும் கிடைக்கும். தைரியமாக இரு. கவலைப் படாதே.'' (1016)

''என் பிரபு ஸர்வ அந்தர்யாமி, ஸர்வ ஆத்மன், ஸர்வ ஸாக்ஷி, ஸர்வ பூத ஸ்திதன், விஸ்வாத்மா, சாஸ்வதன், அச்யுதன், ஸ்தூல சூக்ஷ்ம பிரகாசன், ஸர்வேசன், ஸர்வ ஸ்வரூபத்ருக். உன்னுடைய ஸத்ஹ்ருதய பிரேமையை நன்கு அறிவான். அவன் பேரருளாளன். (நாமே இவனைக் கிணற்றில் தள்ளினேம் என்று தேய்ந்த ஹ்ருதயத்துடன் நினைக்கும் பரம கிருபாளுவாகிற பகவான் தன் ஸ்வதந்திரத்தை உபயோகித்து, ஸர்வசக்திமானுகி, ''ஐயோ, இத்தனை காலமும் இவனைத் தள்ளிக் கஷ்டப்படுத்தி விட்டோமே, மோசம் போனேமே, என்று கருணை பொங்கும் கண்களுடன் தன் தீர்க்க பாஹுக்களை விசாலமான வக்ஷ ஸ்தலத்தை உனக்கு அளிப்பான்.) வித்வானுகிற நீ அம்ருதனுக

நினைத்துக்கொண்டு தைரியத்தை அடைந்து மனத்தை சோகத்தில் கலங்கவிடாதே.'' (1017)

'சுவாமிநாதன்'. தீனரக்ஷகனாகிய குஹப்பெருமானின் நம்பிக்கையூட்டும் வார்த்தைகளைக் கேட்டு பரதன் தன் சகாவின் தழுவுதலினால் சகல தோஷங்களும் விலக்கப்பட்டு, ஜன்ம ஜன்மாந்திரங்களினால் திரட்டப்பட்ட தோஷ கர்மங்களின் பலன்களை விலக்கி, ஆஸ்ரித வாத்ஸல்யனாகிற ஸ்ரீராமனின் பாதங்களை ஸ்மரணை செய்தான். இவ்விதம் அனன்ய கதித்வம், போதனை செய்த குஹனை மிக்க ஸ்லாகித்துக்கொண்டு பரதன் தன்னிருப்பிடம் சென்றான். இதைக்கேட்ட அயோத்யாபுரி வாஸிகள், ஸ்திரி புருஷர்கள் யாவரும் மிக்க மரியாதையுடன் மனம் புறண்ட கவலையினாலும் அந்த புனிதமான இடத்தை தரிசனம் செய்வதற்கு ஓடி வந்தார்கள். (1018)

அவர்கள் அந்த இடத்தை அடைந்து பிரணமம் செய்தார்கள். நேத்ரங்களில் கண்ணீர் நிரப்பிக்கொண்டு, மிக்க வருத்தத்துடன் விதியின் கடூரத்தனத்தையும் கைகேயியையும் தூஷணம் செய்தார்கள். (1019)

அவர்களில் சிலர் பரதனுடைய தூய்மையான அன்பை மெச்சினார்கள்; இன்னும் சிலர் அரசரின் காமத்தினால் யேற்பட்ட விபரீத பலன் என்று சொன்னார்கள். அவரவர்கள் தங்களுக்குத் தோன்றியபடி நிந்தை செய்தும், நிஷாதராஜனை புகழவும் செய்தார்கள். ''யாரால் விதியை ஏமாற்றமுடியும்?'' என்று சொல்லிக்கொண்டார்கள். (1020)

இந்த விதமாக ஜனங்கள் இரவு முழுவதும் முழித்துக் கொண்டு சம்பாஷித்தார்கள். விடிந்ததும் நதியைக் கடப்பதற்கு ஏற்பாடு செய்தார்கள். முதலில் வஸிஷ்ட பகவானை ஒரு அழகான ஓடத்தில் உட்கார வைத்தார்கள். அதன் பிறகு இன்னொரு அழகான ஓடத்தில் தாய்மார்களை உட்கார வைத்தார்கள். (1021)

[தியானம்

ராமா, லக்ஷ்மிராமா, சீதாராமா, உம்முடைய கிருபையும் பிராட்டியினுடைய கிருபையும் பெயர்போனது. காமதேனு இந்திரனிடம் சம்பாக்ஷித்துக் கொண்டிருந்தபோது, வெயிலில் உழவனால் விரட்டப்பட்டதன் சந்ததிகளின் துக்கத்தைப் பொறுமல் துக்கப்பட்டது. அதுபோல தகப்பனார் ஒரு மகன் மாத்திரம் தேசாந்திரம் போக, மற்ற சுகங்கள் இருந்தபோதிலும்

மகிழ்ச்சி அடையாதது போல எம்பெருமானும் பிராட்டியும் ஸம்சாரிகளான அஸ்மதாதிகளின் பிரிவையே நினைத்துப் பரித விப்பான். ஸர்வ அந்தர்யாமியாக விருக்கும் பகவான் தான் அறிந்த ஸம்பந்தத்தின் காரணமாக நம்மை விடமாட்டாமல் நம்மைத் தொடர்ந்துகொண்டே நாம் கெட்ட காரியங்களில் பிரவேசிக்கும்போது நமக்குத் துணையாக வந்து நம்மை திருப்புகைக்கு இடவெளி பார்ப்பான் அல்லவோ? ராவணனுக்கும் ஆஞ்சநேயருக்கும் பிராட்டிக்கும் சுக்ரீவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் கைகேயியுக்கும் ராமன் பரம அனுக்ரஹம் செய்யவில்லையா? பரதன் விஷயத்தில் லக்ஷ்மணனையும், கைகேயி விஷயத்தில் பரதனையும் தசரதர் விஷயத்தில் கௌஸல்யாதேவியையும் ராமன் காக்கவில்லையா? என் ஊரைச் சொன்னாய், என் பெயரைச் சொன்னாய், என் அடியாரை ரக்ஷித்தாய் என்று சில ஸுக்ருதங்களை மேலிட்டுப் பார்க்கும் பிரபுவல்லவோ் நீர்? அப்பேற்பட்ட ஸங்கல்ப நாராயணா உன்னை நான் சரணம் அடைகிறேன்.]

ஸகலரும் நான்கு மணி நேரத்தில் கங்கையைத் தாண்டினார்கள். அதன் பிறகு பரதன் எல்லோரும் வந்துவிட்டார்களா என்று நிச்சயம் செய்து கொண்டான். (1022)

காலைக்கடன்களை முடித்துவிட்டு, பரதன் தன் தாய்மார்களையும் குருவையும் நமஸ்கரித்தான். நிஷாதராஜனின் ஆட்கள் வழி காண்பிக்க ஸகலரும் நடந்து சென்றார்கள். (1023)

குஹப்பெருமான் ஆசார்ய ஸ்தானத்தில் இருப்பது போல எல்லோருக்கும் வழி காட்டினான். அதன் பிரகாரம் தாய்மார்கள் பல்லக்குகளுடன் சென்றார்கள். சத்ருக்னன் அவர்களின் மெய் காப்பாளனாக அனுப்பப்பட்டான். பிராம்மணர்கள் சூழ குருமஹா ராஜரான வஸிஷ்டர் அதன்பின் சென்றார். (1024)

அதன் பிறகு பரதன் கங்கையை சுக்ருதபிரணமம் செய்து, தன் பிராதாவான லக்ஷ்மணனுடன் கூடிய ஸ்ரீராமனை மனதில் ஸ்மரித்தான். பரதன் கால் நடையாகச் சென்றான். சவாரி யில்லாத குதிரைகள் அவனைப் பின்தொடர்ந்து சென்றன. (1025)

பரதனுடைய சேவகர்கள், தன் எஜமானனை குதிரையின் மீது ஏறிவரச் சொன்னார்கள். அவர்களுக்கு பரதன் ஜவாப் சொன்னான். "என் பிரபு ஸ்ரீராமன் கால் நடையாக அல்லவா சென்றான். என் நன்மைக்காக இந்த குதிரை யானை ரதங்கள் யாவையும் விட்டுவிட்டு என் பிரபு வனம் சென்றார்." (1026)

"நான் செய்திருக்கிற பாவத்திற்கு, கால்களால் நடப்பதற்கு பதிலாக தலையால் நடந்தோ, அல்லது உருண்டு போனாலோ

என் கிருத்யாபாபங்கள் நீங்கும். நான் ராம சேவகன். சேவகனுடைய வ்ருத்தி யஜமானனை அடுத்தது அல்லவா? அவனுக்கு நியமிக்கப்பட்ட தர்மம் மிக்க கடுரமானது.'' பரதனுடைய தாமரையிதழ் போல விருக்கும் மெல்லிய பாதங்கள் வனத்தில் கரடு முறடான பாதையில் சிவந்து போன சமயம், சகல சேவகர்களும் தங்களை இகழ்ந்து கொண்டு பரதனுடைய சுந்தரமான பதிலையும் அடக்கமான நடத்தையையும் புகழ்ந்தார்கள். (1027)

[தியானம்

ராமா சீதா, சீதாராமா, நந்தநந்தன சீதாராமா, நான் ஜன்மாந்திர சுக்ருதங்களும் செய்ததில்லை. பிறப்பினுல் அவமானப்பட்டு, உனக்கும் ஆசார்யர்களுக்கும் பரம அபராதியாகிவிட்டேன். யாத்ருச்சிகமாக, அஜகரவ்ரதமாக, ஏற்படக்கூடிய ஸுக்ருதமான பரம கிருபையைத்தான் நான் வேண்ட வேண்டும். இப்பேறற்பட்ட நிர்ஹெதுக க்ருபையை அடைய எனக்கு பச்சாதாபமாவது கொடு அப்பா. ஈஸ்வரா; எனக்கு ஏன் தீயமனம் கொடுத்தாய்? உன்னை மருவித் தொழும் மனமே தருவாய். என்னை உன் பொருளாக்கிக் கொள்வாய். நான் உனது அடிமை என்று பரதந்திர ஸ்வபாவத்தோடு வருகிறேன்.]

அதிக ப்ரேமை அடைந்த பரதன், சீதாராம், ராமசீதா என்று சொல்லிக்கொண்டு மூன்ருவது நாள் பிரயாகைக்கு வந்து சேர்ந்தான். (1028)

பரதனுடைய திவ்ய பாதாரவிந்தங்களில் புண்கள் ஏற்பட்டன. நடந்து போன சிரமத்தினுல் பித்தவிரிவுகள் போல சிறு பிளவுகள் கால்களில் ஏற்பட்டன. அவைகளைத் தரிசித்தால் கமலபுஷ்பத்தில் பிரகாசிக்கும் பனித்துளிகள் போல விளங்கின. பரதன் நடந்து வருகிருன் என்று கேட்டதை அறிந்த ஸகல ஜனங்களும் அதிதுக்கத்தை அடைந்தார்கள். (1029)

ஸகல லோகத்தார்களும் ஸ்நான கிரியைகளைச் செய்து முடித்த பின்பு, பரதன் திரிவேணியில் ஸ்நானம் செய்ய ஆரம்பித்தான். திரிவேணிக்கு பிரணமம் செய்து, பிறகு விதிபூர்வமாக வெள்ளை சியாம நிறங்கள் கலந்த சங்கம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பிராம்மணர்களுக்கு தானங்கள் கொடுத்தான். (1030)

உமாமஹேஸ்வரர் போல சியாம நிறத்தையும் வெள்ளை நிறத்தையும் கண்டு, கங்கா யமுனை நிர்மல ஜல பிரவாஹத்தைக் கண்டும், அங்கிருந்த தீர்த்தவாசிகளையும் கண்டு, அவனுடைய சரீரம் ஆனந்தத்தால் புளகாங்கிதமடைய, மனம் சித்தத்தில்

லயித்து ஆனந்த ஸமாதியை அடைந்த மஹா யோகியைப்போல பரதன் இன்பமுற்று பிரயாகையின் தீர்த்தராஜரை வேண்டிக் கொண்டான். "என் பிரபு, தீர்த்தராஜரே ராம என்கிற நாம ஜபத்தின் சேர்க்கை போல விளங்குபவரே, உம்மை ஸ்மரிப்ப தால் ஸகல காமங்களை அடையவிருக்கும் கற்பகத்தருவைப் போல விருக்கிறீர். உம்முடைய பிரபாவம் வேதங்களில் மிக பிரஸித்தம். இந்த உலகில் ஸம்சாரிகள் உம்மையடைந்து, திவ்ய மந்திரத்தின் அர்த்தப் பொருளான சீதா ராமபகவானுடைய சரண கமலங்களை அடைவதற்கு பரம ஹேதுவாக விளங்கு கிறீர்." (1031)

"அஹங்காரம், ஐஸ்வர்யம், விபூதிகள் நிறைந்த என் ஆத்ம விபூதிகளை நான் தங்களுடைய திருவடியில் ஸமர்ப்பித்து, பரதந்திரனுகி, என் கைகளால் பிறருக்குக் கொடுப்பதைத் தவிர பிரதிக்ருஹம் செய்வது கிடையாது என்கிற ரகு, இக்ஷ்வாகு மஹா ராஜர்கள் பிறர்களுக்கு தானம் செய்யும் க்ஷத்திரிய பழக்க முள்ள குலதர்மத்தை தியாகம் செய்து, உங்களிடம் ஆர்த்தியாக வந்தடைந்திருக்கிறேன். தீனஸ்திதியை அடைந்த துர்பாக்யன். எவன் தன் ஸ்திதியை மீண்டும் பெறுவதற்கு குதர்க்கமான எந்த வழியைத்தான் பின்பற்ருமலிருப்பான்? இதை அறிந்த மஹா ஜனங்கள் கைநீட்டி வாங்கும் விரதத்தை அனுஷ்டித்து தங்கள் இஷ்டபூர்த்திகளைச் செய்து கொள்ளுகிருர்கள்." (1032)

"எனக்கு பொருளில் ஆசையில்லை; தர்மத்திலும் பற்றுதல் இல்லை. காமத்திலும் மோக்ஷத்திலும் கூட ஆசை கிடையாது. ஜன்ம ஜன்மந்தோறும், உறவேல் ஒழிக்க ஒழியாது, அறியாத பிள்ளைகளாகிய நாங்கள் உம்முடைய திருவடி ஸம்பந்தம் பெற்று, ராம பாதங்களே, உத்தம போக்யம் என்கிற மனப் பான்மையுடனும், ராமபக்தியே சிறந்த லக்ஷணமாககவும் ராமன் திருவடிகளே உபாய உபேயமாக எனக்கு அருளிச் செய்யும்." (1033)

[தியானம்

ஹேராமா, சீதாராமா, அர்ஜுனன், யசோதை, ஆஞ்சநேயர், துளசிதாஸர், தியாகராஜர் போன்ற மஹான்கள் உன் பக்தியை மிகப் பெரிய செல்வமாகக் கருதினுர்கள். எம்பெருமானுர் என்கிற ஸ்ரீ ராமானுஜர் ஆசார்ய உல்லங்கத்தைச் செய்து, தான் ஒருவன் நரகம் புகுந்தாலும் ஆத்மகோடிகளான சேதனர்கள் குரு கடாக்ஷ மாகிற திருவருளாலே உஜ்ஜீவித்துப் போவார்கள் என்று கருதி,

அந்த உகப்பினால் பரிவாஹகமாக பகவானே அதிசயிக்கும்படி கருணைக்கடல் என்று சாக்ஷாத்கரிக்கப் பெற்றார். எமக்கெல்லாம் தலைவர் என்கிற பொருளையுடைய "எம்பெருமானார்" என்கிற விருது பெற்றார். அப்பேற்பட்ட ஆசார்யரை நமக்கு பகவத் விஷயம் போல் ஸுக்ருத தேவரென்றும், ஆசார்யரே ஸுக்ருதம் என்றும், அக்ஞாத ஸுக்ருதம், யாத்ருச்சிக ஸுக்ருதம், எது உண்டாகிலும் புருஷார்த்த ஹேதுவல்ல; ஆனால் ஆசார்யரை வியாஜமாக ஆக்கி, எம்பெருமான் அங்கீகரிப்பது புருஷார்த்த ஹேது என்று சொல்வது நியாயமல்லவா? அது போல கருணைக் கடலாகிய குஹப்பெருமான் ஸந்நிதியில் பரதன் ராமகடாக்ஷம் பெறுவதும் ஆச்சர்யமில்லை. பரதன் தன் உஜ்ஜீவன விஷயத்தில் முயற்சி செய்ததைப் பார்த்துக் கொண்டிருந்தும் உதிர்ந்த தான்யம் க்ருஷி முயற்சியின்றி விளைந்து தளைக்கட்டுவது போல, ஸம்சார வாசனையுள்ள ஜீவனுக்கு கர்மக்ஷயம் ஆகி, நாம் ஸ்வதந்திரரோ, பரதந்தரரோ என்று சம்சயம் ஏற்படும் அளவில், ஆசார்யன் அல்லவோ பரம புருஷார்த்த ஹேதுவாக நம்மை பகவத் விஷயத்தில் கருணைக்கு உந்தித் தள்ளுகிறான். அப்பேற்பட்ட குஹப்பெருமான், பாதன், சத்ருக்னன் ஸந்நிதியில் நான் ராமசீதாவை சரணம் அடைகிறேன்.]

உத்தம சிஷ்யபாவத்தில் பரதன் திரிவேணி ஸங்கமத்தில் தீர்த்த ராஜனான பிரயாகை க்ஷேத்ரத்தைக் குறித்து வேண்டினான். "என் அனன்ய சரண்யன் ஸ்ரீராமன் நான் மோஹத்திற்கு வசப்பட்டு, குடிலபுத்தியை அடைந்து விட்டேனே என்று இராமல் என்னைப் புரிந்துகொள்ள வேண்டுமே. என்னுடைய பாரதந்தர்யம் அவனுக்கு புலப்பட்டு இருக்கவேண்டுமே? ஏதாவது நான் செய்த பூர்வ பாபங்களின் பலன்களையும் தியாகம் செய்து, ராமபகவத் விஷயத்தை அடையப்போகிறோமோ இல்லையோ என்று நான் சம்சயித்துக் கொண்டிருக்கும் ஸமயம், ஹே தீர்த்தராஜனே, உமாமஹேஸ்வரர்போல காக்ஷி அளிக்கும்படி விளங்கும் பரம ஆசார்யரே, மந்திரம் தியானம் ஆகிற இரட்டையின் மிதுன சேர்க்கை ஸ்வரூபமாக விளங்கும் ராமதியானமே எனக்கு கதி என்று அவரை அறியும்படி செய்யவேண்டும். என்னை லோகத்தார்கள் குருத்ரோஹி, ஸ்வாமி த்ரோஹி என்று பலவிதம் இகழ்வார்கள். ஆனால் நிர்ஹேதுக கிருபை விசேஷத்தால், உம்முடைய திருவருளால், ராமகிருபா என்கிற அனுக்ரஹ சக்தியால், ஸ்ரீ சீதாராம சரணங்களையே அனுதினம் உபாஸிக்கும்படி எனக்கு ருசி உண்டாகி, விவேகியாய், சாஸ்திரங்களில்

ஊற்றமுடையவனாய், ஸதா சார்ய சம்பத்துடன் ஸ்ரீ ராம திருவருளை என்னை அடையச் செய்யவேண்டும்.'' (1034)

"நான் அதிருஷ்ட ஹீனனாக இருக்கட்டும். பரவாயில்லை. மேகம் காருண்யமாக விருக்கவேண்டிய சமயம் மிக்க கடோர கர்ஜனையுடன் வஜ்ரம், கல், மழை பொழியட்டும். பரவாயில்லை. ஆனால் மேகத்தின் வ்ருஷ்டிகளை நம்பி வாழும் சாதகபக்ஷி எவ்விதம் தன் வாழ்நாட்களை மேக ஜலத்தையே நம்பி, விரும்பி காலம் கழிக்குமோ, அதுபோல ஹே கிருபாளு, ராமப்ரேமை ஒன்றையே குறிக்கோளாகக் கருதி ராமரஸத்தைப் பெறுவேனாகில், அதுவே எனக்குப் போதும். அதை அடைந்து விட்டேனாகில் எனக்கு ஸகல புருஷார்த்தங்களும் பரமபதமும் கிடைத்தது போல விளங்கும். (கிருஷ்ணர் கோபிகளைத் தள்ளினதினால், கோபிகளின் ப்ரீதி அதிகரித்ததேயன்றி குறைவடையவில்லை. அதுபோல) ராமபக்தி எனக்கு விருத்தி ஆகட்டும்.'' (1035)

"கனகத்தை நெறுப்பில் சுடச்சுட அதனுடைய காந்தி எவ்விதம் விருத்தி அடைகிறது? அதுபோல ஸம்சாரதாபங்கள் என் ஆத்மாவை சுடச்சுட புண்ய பாபங்களாகிற கருமங்கள் க்ஷயம் அடைந்து, கடனில்லாத அந்ருணனாக ராமனுடைய அனுக்ரஹ சக்தியினால் தூக்கிவிடப்பட்டவனாக இருக்கவேண்டும். அதனால் அல்லவோ ராமசேவகனாகிற நான் கௌரவம் அடைந்தவனாக ஆகிவிடுவேன். ஹே பிரபு, என்னுடைய ஸ்வஸ்வரூபத்தை மீண்டும் அடைந்தவனாக கிருபை செய்யவேண்டும்,'' என்று பல விதமாக வேண்டினான். திரிவேணி ராஜன் பரதனுடைய சுத்தமான பக்தியை மெச்சுவதாக மங்களங்களைத் தரும் அழகான குரலில் கடாக்ஷிக்கலானான். (1036)

"என் பிரிய பரதா, நீ சகலவிதத்திலும் ஸாது என்று ஒப்புக்கொள்ளப்பட்டவன். உனக்கே இந்த வார்த்தைகள் தகும். உன் ராமபக்தி, ராமசரணங்களில் உனக்கு உள்ள விஸ்வாசம், உவமையில்லாதது. உனக்கு பவித்திரமான ராம பக்தியின் ஈடுபாடு, ராம சரணங்களில் ஏற்பட்டிருக்கும் பக்தியின் ஈடுபாடு அதிகரிக்கட்டும். அனாவசியமாக உன் மனதை கவலையில் ஆழ்த்திவிடாதே. உன்னைவிட ஸ்ரீராமச்சந்திரனுக்கு அதிக பிரியமுள்ள வ்யக்தி ஒருவரும் இருக்கமுடியாது. இருக்கப்போவதுமில்லை'' (1037)

திரிவேணியின் அனுகூலமான வார்த்தைகளைக் கேட்ட பரதன் சந்தோஷத்தால் புளகாங்கிதமடைந்தான். தன்னை

தன்யனாக கருதினான். "தன்யோஸ்மி, தாஸோஸ்மி" என்று சொல்லிக்கொண்டு, சந்தோஷித்தான். தேவதைகள் மிக்க களிப்புடன் பாரிஜாத மலர்களை அவன்மீது வர்ஷித்தார்கள். (1038)

[தியானம்

பகவானே, ராமா, ஜானகிராமா, பகவத் விஷயத்திற்கு ஸத்குரு கடாக்ஷம் முதலாவதுபடி. அதன்மேல் ஏறினவன்கூட மிகுந்த ஆபத்துக்களை அடைந்தபோதிலும், வினயசம்பத்துடன் இருந்தானாகில் அவனுடைய வழி சுலபமானது. அந்த வினய ஸம்பத் இருக்குமாகில், பகவத்கிருபை ஸதா அவனுக்கு சித்திக்கிறது. தர்மபுத்ரர் கோபத்தினால் தன் எதிரிகளை அடக்கும் சாமர்த்தியம் பெற்றும் வாஸுதேவரிடம் தன் பொறுப்பை ஒப்பிவித்தார். அர்ஜுனன் மஹேஸ்வரருடைய கிருபைக்கு பாத்திரமாகி பாசுபதாஸ்திரம் பெற்றும் வாஸு தேவரிடம் தன் பொறுப்பை ஒப்பிவித்தான். சிறந்த விஸ்வாச தர்மத்தை அனுஷ்டித்தான். கருடன் தன் சொந்த பலத்தினால் முயற்சித்தும், வாஸுதேவரின் கிருபையை நிக்ரஹ சக்தியினாலும், பெரிய அறிவாலும் அடைந்தான். இந்த ஹரியானவர் சத்திய ஸங்கல்பர். அவர் எப்படி விரும்புகிறாரோ, அப்படியே ஆகும்; வேறுவிதம் ஆகாது. அவ்விதம் வினய ஸம்பத்துள்ள இந்திர குமாரனாகிற அர்ஜுனன்போல, மஹாத்மாவான பரதன் சத்ருக்னன் பகவத் விஷயத்தில் சக்தி உள்ளவர்களாகவிருந்தும், சக்தியில்லாதவர்களாக தங்கள் பொறுப்பை ஸ்ரீ சீதாராமனிடம் ஒப்பிவித்து, அதன்படி நடக்க சித்தமாயிருந்தார்கள். அப்பேற்பட்ட பரத சத்ருக்னாதிகளை முன்னிட்டுக்கொண்டு நான், சீதாராமா, உங்களை சரணம் அடைகிறேன். எனக்கு வழிகாட்டும் மார்க்க தரிசி அல்லவோ நீர்.]

அந்த மஹாதீர்த்தத்தில் வசித்துவந்த வானபிரஸ்தர்கள், பிரும்மசாரிகள், கிருஹஸ்தர்கள், சந்யாசிகள் யாவரும் ஆச்சரியபட்டுப்போனார்கள். கும்பல் கும்பலாக அவர்கள் பரதனுடைய ஸஹஜ ஸ்நேகத்தையும் பவித்திரமானதும் கபட மில்லாததுமான சீல நடத்தையும், பாபங்களை ஸ்மரித்த மாத்ரம் போக்கக்கூடிய உத்தம விஸ்வாசமுள்ள ஆத்ம ஸ்நேகத்தை அறிந்து புகழ்ந்தார்கள். (1039)

அந்த மஹானுபாவரான ராமனின் கிருபையை அடைந்த பரதன் குஹாதிகளால் அனுபவிக்கப்படும் மஹத்தான குண சமூகங்களைக் கேட்டும், நேரில் பார்த்த முனிஸ்ரேஷ்டர்கள் முனிஸ்ரேஷ்டரான பரத்வாஜரிடம் சென்றுர்கள். அவரிடம், சகல விருத்தாந்தங்களையும் சொன்னுர்கள். இதற்குள் பரதனும் அவ்விடம் வந்து சேர்ந்தான். அவருடைய பாதங்களில் விழுந்து சுக்ருத பிரணுமங்கள் செய்து, "பாக்யம், என் பாக்யம்" என்று சொல்லி, ராமகிருபையை வேண்டினுன், பரத்வாஜரும் தன் குளிர்ந்த திருஷ்டியினுல் அவனைக் கடாக்ஷித்தார், (1040)

பரதனை வாரி எடுத்து தன் ஹ்ருதயத்தோடு அணைத்துக் கொண்டு, ஆசிர்வாதங்கள் செய்து அவனைக் கிருத கிருத்யனுக பண்ணினுர். பகவானுகிற பரத்வாஜர் பரதனுக்கு ஆஸனம் கொடுத்தார். அதன்மேல் உட்கார்ந்த பரதன் லஜ்ஜையினுல் தலையைத் தொங்கவிடப்பட்டவனுக, பேசாமலிருந்தான். அவனுடைய அடக்கத்தையும் லஜ்ஜையையும் கண்ட பரத்வாஜர் அவனுடைய சங்கோசத்தை விலக்குவதற்காக, மதுரமான வார்த்தைகளைச் சொன்னுர். "பரதா, நான் எல்லாம் கேட்டு அறிந்துகொண்டேன். விதியின் போக்கை யாராலும் எதிர்க்க முடியாது. ஆனுல் வித்வானுகிற புருஷன் ஒருக்காலும் செய்யவேண்டிய கடமைகளிலிருந்து நழுவி விடமாட்டான். (1041)

"உன் தாயாரால் இது செய்யப்பட்டது என்று மனத்தில் நினைத்துக்கொண்டு வருத்தப்படாதே. கைகேயியுக்கு தோஷம் இதில் ஒன்றுமில்லை. அவளுடைய புத்தியை சரஸ்வதி தேவி கலக்கிவிட்டாள். (1042)"

"நான் இவ்விதம் சொல்வதால், ஒருவரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். உலகத்தினரின் போக்கே வேறு. லோகத்தில் வேதங்கள், வேதங்களை ஓதும் வித்வான்களுடைய ஆசரணையை ஸர்வ ஸம்மதம் என்று சொல்லுவார்கள். (தர்ம முடிச்சு மர்மமாக விருப்பதால் வித்வான்களுடைய ஆசரணைகள் தர்ம அர்த்த மார்க்கங்களில் சஞ்சரிக்கும். அவர்கள் அர்த்த ஸந்தேகத்தை அடைந்தபோது, தர்மத்தை மாத்திரம் கைவிட மாட்டார்கள். தர்ம நிச்சயத்துடனிருக்கும் அவர்களின் ஆசரணையின்படி தர்மமும் அதைதான் ஆதாரமாக ஒட்டிக் கொள்ளும். நீ பரமபாக்யவான். தர்மத்தில் சித்தம் உள்ளவனுக

யிருப்பதால், ராம விஸ்வாசம் என்கிற அக்னியில் உன் பக்தியை ஆஹுதியைச் செய்திருக்கிருய். உன் ஆசரணை மிக்க ஸ்லாக்ய மானது.) என் குழந்தையே, அதனுல் உன் நிர்மலமானதும் கபடமில்லாததும் நேர்மையான வழியில் உள்ளதும், மிக்க அடக்கமான மனத்துடன், வாஸுதேவனுகிய ஸ்ரீ சீதாராமனை சகாயமாகக்கொண்டு அனுஷ்டிக்கப்படும் உன் உத்தம ஸ்நேக பாவங்களை வேதங்களும், லோகாத்தார்களும் புகழ்ந்து கிருத புண்ணியர்களாக ஆவார்கள். சந்தேகமில்லை. (வாஸுதேவர் ஸர்வம் என்று சொல்லக்கூடிய மஹாத்மாக்கள் மிக்க துர்லபம். அநேககோடி ஜன்மங்களை எடுத்து, அதன் பலனுக சேகரிக்கப் பட்ட ஞானத்திஞல் ராமனையும் சீதையையும் சரணமடைந்த வர்கள் மிக்க மிக்க துர்லபம்.) அதனுல் நீ உத்தம கியாதியைப் பெற்றவனுகிருய்.'' (1043)

[தியானம்

ஹேராமா, ஜானகி ராமா, லக்ஷ்மணனுல் சேவிக்கப்பட்ட ராமா, சீதாதேவியே, உம்முடைய போக்கு விசித்திரமானது. உம்முடைய காருண்யம் நிக்ரஹ சக்தியாகவும் ரூபமெடுத்து, நீ வள்ளலாகவும் காக்ஷி அளிக்கிறபோது, கருடன், பிரஹ்லாதன், பலி, கர்ணன், சிசுபாலன், பீஷ்மர், துரோணர் முதலானவர்கள் எவ்வளவு குதூகலத்துடன் அவற்றை வரவேற்ருர்கள். அந்த சமயத்தில் உம்முடைய மனம் கருணை ததும்பி, லோபம் க்ரோத மின்றி, நீண்ட திருப்புஜங்களை நீட்டும் சமயம், ஐயா, உமது கருணையையே மேலான குணமாகச் சொல்லப்படுகிறது. கர்மத்திஞல் ஏற்படும் தோஷங்களை உனக்கு அர்ப்பணம் செய்து, விபரீத பலன்களையும் உம்முடைய கிருபை என்று நினைத்து, உம்மையே தியானித்து, உமது திருவடிகளையே ரக்ஷக உபாயம் செய்துகொண்டு, அந்த திருவடிகளே எனக்குப் போதும் என்று எனக்குக் காட்டிக் கொடுத்த மார்க்க தரிசியான பரதனை முன்னிட்டு நான் சரணம் அடைகிறேன். அவ்விதம் தன்னையே பாத்திரமாகக்கொண்ட ராமா, நீதான் தஞ்சம்.]

''லோகத்தார்களாலும் வேதங்களாலும் ஸர்வ ஸம்மதம் என்று ஒப்புக்கொள்ளப்பட்ட நீதி என்னவென்ருல் பிதாவான அரசர் இஷ்டப்பட்டு எந்த புத்ரனுக்கு ராஜ்யத்தைக் கொடுக்கிருரோ, அவன் அதை அடைகிருன். உன் பிதாவான தசரதர் ஸத்யவ்ரதர்; உன்னைக் கூப்பிட்டு, ''இந்தா ராஜ்யத்தை எடுத்துக்கொள்'' என்று சொல்லியிருக்கிருர். அப்படி

கொடுக்கப்பட்ட ராஜ்ய லக்ஷ்மி உனக்கு தர்மமாகவும், சுகத்தைக் கொடுப்பதாகவும் எல்லோருக்கும் மேன்மை கௌரவம் ஆகிய வற்றை கொடுப்பதாகவிருக்கிறது.'' (1044)

''ஆனால் இப்பேறுபட்ட சந்தோஷத்திற்கு எதிராக அனர்த்தம் விளைந்திருக்கிறது'' என்று நீ நினைப்பாயாகில் அதன் மூலகாரணம் ராமனுடைய வனம் செல்லுதல் அன்றோ? அதைக் கேட்டதும் ராமனை விட்டுப் பிரிவதால் (எவ்விதம் விருத்ரனைக் கொன்றபின் தர்மாத்மாவான இந்திரன் ஸர்வ பிராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்டும் மிக்க கவலையுள்ள மனத்துடனாகவும், அஸத்யத்தினால் அவமதிக்கப்பட்டும், பிரம்மஹத்தியினால் தோஷத்தை அடைந்தவனாக ஆனானோ, அதுபோல,) ராமனுடைய பிரிவினால் சகல சம்சாரங்களும், பிரும்மஹத்தி தோஷம் அடைந்து, பயமற்றவையான மஹாதேவருடைய பூதங்களால் நிந்திக்கப்பட்டு, பீடையை அடைந்தார்கள். (பிரும்மஹத்தியினால் பீடையை அடைந்த இந்திரன் போல) ஸகலரும் பயத்தால் பீடையை அடைந்தார்கள். ஆனால் இந்த ராமன் வனம் சென்றது விதியினால் ஏற்பட்டது. உலகமெல்லாம் அரசனில்லாத தாகி, நீயும் கேகய தேசத்திற்கு சென்றிருந்தபடியால், உபத்ரவங்களால் பீடிக்கட் பட்டு, ''நமக்கு இப்போது யார் அரசனாவான்'' என்று பயமடைந்த அயோத்யா ஜனங்கள் யாவரும் நடுங்கினார்கள். கைகேயி கூட இதை ஏன் இவ்விதம் செய்தோம்? என்று நடுக்கமுற்று பச்சாதாபப் பட்டாள். இன்னமும் பட்டுக்கொண்டிருக்கிறாள்.'' (1045)

''இந்த சூழ்நிலையில் உன்னை அபராதியாக்கி, குற்றம் சொல்லுபவன் மஹா அதமன். அக்ஞானி. அவன் ஸாதுக் களால் ஒப்புக்கொள்ளப்படாத மூர்க்கன். உனக்கு ராஜ்யம் ஏற்றுக் கொள்வதால் தோஷம் ஒன்றும் கிடையாது. இதைக் கேட்டால் ராமச்சந்திரன்கூட சந்தோஷப்படுவார்.'' (1046)

''பரதா, இப்போது நீ செய்திருப்பது ரொம்ப மெச்சத் தகுந்தது; இதுதான் மிக உசிதம். (எவ்விதம் மஹேந்திரன் விருத்ராசுரனை கொல்லுதலால் ஏற்பட்ட பீடையை சகிக்க முடியாமல், தேவர்கள் விஷ்ணு பகவானிடம் முறையிட்டபோது, பகவான் ''இந்திரனை பரிசுத்தம் செய்வேன்'' என்று மங்களமா யும் ஸத்யமாயும் அம்ருதத்திற்கு ஒப்பானதுமான திருமாலி னுடைய வார்த்தைகள் இருந்தனவோ, அதுபோல) பரதா, நீயும், உன் புரவாசிகளும் ஸ்ரீராமச்சந்திரனுடைய சரண கமலங்களை அதிபிரேமையுடன் ஆராதித்து வந்தால், ரகுவர

னுடைய அனுக்ரஹ பிரஸாதத்தினால் நீயும், ஸகல சம்சாரங்களும் சகல சௌபாகியங்களையும் அடைவீர்கள்.'' (1047)

''ஸ்ரீராமச்சந்திரனின் சரண கமலங்கள் உன்னைப்போல சிரமப்படும் ஆர்த்திகளுக்கு தனம், ஜீவனாதாரம், பிராண நிலயம். அதைச் சரியாக புரிந்துகொண்ட நீ மஹாபாக்யவான். உன்னுடன் கூடப்பிறந்த ஸ்ரீராமனின் மஹத்வதை அறிந்த நீ மஹா ஞானஸ்தன். உன்னைவிட சிறந்த பாக்ய முள்ளவன் யாரும் இருக்கமுடியாது. இதில் ஒருவித ஆச்சரியமும் இல்லை. ஸ்ரீ நிதி யான பரமாத்மா உனக்கு பிராதாவாகவும் சகல ஆசாரங்களிலும் தேர்ந்த தர்மாத்மாவான தசரதர் உனக்குப் பிதா குருவாகவு மிருக்கிறபடியாலும் உனக்கு ஸ்ரீராமசரணங்கள் சித்தித்து இருக்கின்றன. ஆகையால் நீ ராம பிரியனாக இருப்பதுடன் பிறப்பின் கிருத லக்ஷணத்தையும் அடைந்திருக்கிறாய். அதனால் மனத்தை தளரவிடாதே. உன் மனம் அதர்மத்தில் (நகுஷன் பிள்ளையைப்போல) பிரவர்த்திக்கிறதாக இல்லை. தர்மத்தை அறிந்திருக்கிறாய்.'' என்று பரத்வாஜர் அழகாகச் சொன்னார். (1048)

[தியானம்

ஹே ராமா ஜானகி, லக்ஷ்மி நாராயணா, பரதனுடைய வாழ்க்கை, தர்மபுத்ரருடைய சீலமான நடத்தை, எதிரிகளுடைய மனத்தையே கவருகிறதாக விருக்கிறது. அவர்கள் எது செய்தாலும் தர்மார்த்தங்களுக்காக காரியத்தைச் செய்கிறார்கள். சுகத்தையும் பிரியத்தையும் காமத்தையும் அனுசரிக்கிறார்கள். சீதம், உஷ்ணம், பசி, தாகம், நித்திரை, சோம்பல், கோபம் ஆகிற விஷயங்களில் சந்தோஷம், அஜாக்ரதை ஆகிய இவைகளை தைரியத்தினாலும் அறிவினாலும் விலக்கி, தர்மார்த்த சாதனங்களில் முயற்சி செய்கிறார்கள். அவர்களை நீண்டகாலம் புகழ்வதால் அவர்களுடைய புகழ் குறைவதில்லை. இந்திரியங்களை அடக்குகிறவர்களுக்கு, பகைவர்களை வெல்லக்கூடியவர்களும் மஹரிஷிகளால் துதிக்கப்படும் இந்திரனும் விஷ்ணுவும், கிருஷ்ணனும் அர்ஜுனனும் போலவல்லவா அவர்கள் விளங்குகிறார்கள். நீண்ட புஜங்களை உடைய அந்த மஹாத்மாக்களை முன்னிட்டு, அகஸ்தியர் பரத்வாஜர் ஆகிய இரு ரிஷிகளையும் முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன்.]

''என் பிரியமுள்ள பரதா, நன்றாக கேள். ஸ்ரீரகுவரனாகிற ராமச்சந்திரனுடைய மனத்தில் உனக்குச் சமமான பிரேமை

பாத்திரம் யாரும் இருக்கமுடியாது. பிறவியில் தம்பி. ஆகவே, ராமராலும் தகப்பனுராகிய தசரதராலும் கடாக்ஷிக்கப்பட்டிருக்கிருய். ரகுகுலம்; வஸிஷ்ட பகவானுல் இருவர்களும் சிக்ஷை செய்யப்பட்டவர்கள். நான் அன்று இரவு முழுவதும் சீதாராமன் லக்ஷ்மணன் ஆகியவர்களால் உன்னுடைய பெருந்தன்மையான குணங்களையும், இந்திரிய அடக்கத்தைப் பற்றியும், தர்ம மார்க்கத்தில் புத்தியைச் செலுத்துகிறவனுகவும், தர்மமாக தகப்பனுரால் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை உடையவனுகவும், தர்மத்தில் ஸ்திர புத்தியுள்ளவனுகவும், உன்னைப்பற்றி புகழ்ந்துகொண்டிருந்தார்கள்.'' (1049)

''அதுமாத்திரமில்லை பரதா, காமத்தினுலோ, லோபத்தினுலோ அவர்கள் உன்னிடம் அஸூயை கொள்ளவில்லை. பிரயாகை நதி தீரத்தில் அவர்கள் ஸ்நானம் செய்தபோது, அவர்கள் உன்னை நினைத்துக்கொண்டே ஸ்நானம் செய்தார்கள். அப்போதுதான் அவர்களுடைய மர்மமானதும் அந்தரங்கமான பிரியத்தையும் உன்பால் நான் கண்டுகொண்டேன். மூர்க்கனுக்கு விஷயங்களில் புத்தி எவ்விதம் லயிக்குமோ, அதுமாதிரி அப்பா, ஸ்ரீராமச்சந்திரனுக்கு உன்னிடம் எல்லையில்லாததும் உவமையற்றதுமான ப்ரேமை உண்டு.'' (நீ தர்மத்திற்கு இருப்பிடம்; லஜ்ஜையுடன் கூடியவன்; பலசாலி, தவமுடையவன். பிரும்மசரிய வ்ரதத்துடன் இருப்பவன் நீ: சுசி, ஆகையால் கோபத்தை விலக்கியவன். இதனுல் ராமனுக்கு உன்னிடம் அத்யந்த பிரியம்) (1050)

''நான் ஸ்ரீராமச்சந்திரனை பலவிதமாக அறிவேன். மஹா பாக்யமுடைய ஸ்ரீராமன் உன்னைத் தம்பியாக அடைந்ததினுல் அல்லவோ, பெரும்புகழை அடைவான். (உன்னுடைய பிராத்ரு ஸ்நேகம் தர்மபுத்ருக்கு அர்ஜுனன் போலவும், இந்திரனுக்கு விஷ்ணுவைப் போலவும் மிக்க பிரஸித்தமாகப் போகிறது.) காரணம் என்ன தெரியுமா?) (ஜகத் பிரபு ராமச்சந்திரன் மிக்க வீர்யமுடைய அனுதியான விஷ்ணுவல்லவோ? சகல சராசரங்களையும் தாங்கும் திரிவிக்ரமனல்லவோ? சகலரையும் குடும்ப சகிதம் தாங்கும் விஷ்ணுவல்லவோ?) நீயோ ராம விஸ்வாசமாகிற பக்தி ரஸம் ப்ரேமை பூர்வமாக தேகமெடுத்து, வந்திருப்பது போல அல்லவா விளங்குகிருய்'' (1051)

''பரதா, உன் தூய்மையினுல் நாங்கள் சுத்தமாக்கப் பட்டோம். நீ களங்கமற்றவன். ராமஸ்நேகம் என்கிற ஸ்ரீயுடன் கூடியவன். அனுதியாயிருக்கிற ராஜ தர்மமானது உன்னுலும்

ராமனுலும் உங்கள் பிதாவினுலும் அறியப்பட்டதே. உன்னுடைய களங்கமற்ற பிரேமை எங்களைப் போல பிரும்மரிஷிகளுக்கும் சிறந்த பாடம். மஹத்தான உபதேசமாக நாங்கள் கருதுகிருேம். இந்த மஹத்தான சந்தர்ப்பம் '' பரத விஜயம் '' என்கிருப்போல, ராம பக்தி ரூபரஸமாக சித்திப்பதற்கு அழகான சுபமுகூர்த்தம் சித்திப்பது போல அல்லவா விளங்குகிறது.'' (எவன் நியமத்துடன் பரதவிஜயம் என்கிற உன் சரித்திரத்தைப் படிப்பானே, அவன் பாபங்களை நீக்கினவனும், ஸ்வர்க்கத்தை ஜயிப்பவனும், இந்திரனுடைய பிரியத்தை அதர்வாங்கிரஸ் என்கிற ரிஷி அதர்வ வேதத்தில் துதித்து யக்ஞபாகத்தையும் சிறந்த கீர்த்தியையும் அடைந்தாரோ, அதுபோல இகத்திலும் பரத்திலும் ராமனுடைய கிருபையால் சந்தோஷத்தை அடைவார்கள் ) (1052)

''பரதா, உன்னுடைய புகழ் நிர்மலமானது. நீ ராம உலகத்தில் தோன்றிய புதிய சந்திரன். ராமனுடைய அத்யந்த பக்த கோடிகள் அநேக கோடிக்கணக்கான அல்லிப் பூக்கள் போலவும், சகோர பக்ஷிகள் போலவும் விளங்குகிருர்கள். அவர்கள் எல்லோருக்கும் உயிர் அளிக்கும் ஸோமன் நீ. ஆனுல் உனக்கும் சாதாரண சந்திரனுக்கும் ஒரு பெரிய வித்தியாஸம். நீ அந்த ராம தியான உலகத்தில் ஸதா உதயமாகும் சந்திரனுகவும், அஸ்தமனம் அடையாமல் மங்காத கீர்த்தியுடன் விளங்குவாய். நீ சதா விருத்தி அடைந்தவனுக, ஆகாசத்தில் பிரகாசித்துக் கொண்டு விளங்குவாய். உனக்கு காலவரையாகிற க்ஷயம் கிடையாது. பாருள்ளவரையும் கடல் நீருள்ளவரையும் வாயு அக்னி சந்திரன் சூரியன், ஆகாயம் உள்ளவரையும் நீ பிரேமையினுல் சதா எல்லோராலும் பூஜிக்கப்பட்டு விளங்குவாய்.'' (1053)

[தியானம்

ஹே பகவன், ஸர்வதிருக், நீர் வியாஸர், அயோநிஜர் வாசஸ்பதி என்கிற சபதங்களால் அறியப்படுகிறீர். பரமேஸ்வரரே, கருணையுடன் கூடியவரே, தமஸः பரஸ்தாத் என்று சொல்லப்பட்ட வேதாத்மாவை லோகஹிதத்திற்காகக் காட்டிய தயாளுவே, பராசரரின் புத்ரரே, திரிஸாமா என்கிற தேவ வ்ரதங்களாகிற ஸாமங்களால் புகழப்படும் நாராயணு, பிரஹஸ்பதி அங்காரகன், சுக்ரர், அகஸ்தியர், நாரதர், கருடன், விஷ்வக்ஸேனுதிகளால் புகழப்படும் புண்ணியமூர்த்தியே, ஸ்ரீவத்ஸப்பிரியனே, ராமா, ரமாரமணு, ராஜராஜேஸ்வரி, ஸ்கந்தன்,

கணேசன் போலிருக்கும் ராமபரதா, உங்கள் பாதங்களே சரணம். எனக்கு நீங்கள்தான் ரக்ஷணம் செய்யவேண்டும்.]

"பரதா, நீ கவனமாய் கேள். சக்ரவாக பக்ஷியாகிற உன் (ராம விஸ்வாசம், பாகவத தன்மை, பகவத் விஷயம், ராம கிருபை ஆகிற திரைலோகிய) ஸ்வரூபத்தை சந்திரனாகிற யசஸ்கீர்த்தி, அதிபிரியத்துடன் உன்னை வந்து அடையட்டும். கீர்த்தி லக்ஷ்மியுடன் எக்காலத்திலும் மூன்று லோகங்களிலும் பிரகாசிப்பாய். உன்னுடைய பிரதாபங்களை ஸ்ரீராமச்சந்திரனுடைய சூரிய கிரணங்களாகிற மேலான குணங்கள், சிறந்த மகிமைகள் ஒருக்காலும் அவைகளின் பிரதாபங்களை மட்டுப்படுத்தமாட்டா. ஹே பரதா, உன் கீர்த்தியாகிற சந்திரன் இரவிலும் பகலிலும் பிரகாசிப்பான். சகலரும் உன்னை ஸ்மரிப்பதால் துக்கம் விலகி, சந்தோஷமும் சுகமும் ஏற்படும். கைகேயியினுடைய விபரீத செய்கையின் பலனாகிற ராஹு இந்த நிர்மலமான சந்திரனை கிரஹிக்காது." (1054)

"என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் பூர்ணர். அந்த பூர்ணரை இந்த சந்திரனாகிற உன் கீர்த்தி புகழ் அதிபிரேமையுடன் நேசிக்கும். இந்த சந்திரனுக்கு ஒரு விதமான தோஷமும் களங்கமும் இருக்காது. சந்திரன் பிரஹஸ்பதியை அவமானப் படுத்தி, களங்கம் அடைந்ததுபோல, உன் கீர்த்தி ஸ்வரூபமாகிற சந்திரன் பிரஹஸ்பதியான ராமச்சந்திரனை அவமதிக்காமல், அவரை (லக்ஷ்மி, நாராயணரை அனுசரிப்பதுபோல,) அனுகூல புத்தியுடன் இருக்கும். அதுமட்டுமா, பரதா." (1055)

"நீ பரம உபகாரியாகவும், மஹாத்மாவாகவும் பரமாசாரியனின் உள்ளத்தை கொண்டவனாகவுமிருக்கிறாய். இப்பேறற்பட்ட ராம பக்தி என்கிற அம்ருத ரஸத்தைப் பொழியும் சந்திரனை பூமியில் ஸ்ருஷ்டி செய்திருக்கிறாய் அந்த சந்திரனின் குளிர்ந்த ரஸத்தை அநேக கோடி பக்த ஜனங்கள் பானம் செய்து, தங்கள் சோகத்தைப் போக்கி, இந்த பூமியில் அம்ருதத்தைக் குடிக்கும் தேவ தேவர்களாக விளங்குகிறார்கள்." (1056)

"அப்பா, உன் ரவி குலத்தில் மஹாஸ்ரேஷ்டர்கள் உண்டாகியிருக்கிறார்கள். பகீரதன் இந்த பூமியில் தன் குலத்திற்கு வேண்டப்படும் சாதனத்தை வியாஜமாக உபயோகித்து, அதை வியாஜமாக வைத்து, லோகஹிதத்திற்காக, தேவலோகத்தில் திரிவிக்ரமனின் கால்களில் உற்பத்தியான கங்கையை பூமியில் தரவழைத்தான். அதனால் அவன், அவன் குலத்தினர்க்கும் லோகங்களுக்கும் ஹிதம் செய்து, மங்காத புகழை அடைந்து

விட்டான். ஸகரனை எவ்விதம் பகீரதன் திருப்தி செய்துவைத்தானோ, அதுபோல பரதா, நீயும் தசரதரையும் திருப்திசெய்து வைத்தாய். சகல குண ஸம்பத்துக்களை உடைய தசரதர் மஹாத்மா. அவருடைய குணவிசேஷங்களை யாரால் வர்ணிக்க முடியும்? அதிகமாகச் சொல்வதால் யாது பயன்? அவருக்கு ஸமமான குணமுள்ள பாக்யவான் ஜகத்தில் யாரும் இருக்க முடியாது.'' (1057)

''பிருஸ்னிகர்ப்பரான பகவான் ராமச்சந்திரன் தசரதருடைய புத்ரராக அவதரித்தார். அதிப்ரேமையினாலும், தபஸ்சீலம் முதலிய நடத்தைகளாலும் ஸகலரையும் ஆகாஷித்துக் கொண்டு, லோகஹிதத்திற்காகவும் தேவகாரியத்திற்காகவும் ஸ்வயமாக தர்மத்தைப் பிடித்து, அதன் மேன்மையை உணர்த்துவதற்காகவும், பரதா, உன் போன்ற தகுதியுள்ள மனிதர்களை பிரத்யக்ஷமாக அறிவதற்கு ஹேதுவாகிற பகவான் ராமச்சந்திரன் ஸ்வதந்திரனாகவும், தசரதர் கௌஸல்யை இவர்களுக்கு அடங்கின புத்ரனாக அவதரித்திருக்கிறார். அப்பேற்பட்ட மஹா ஸ்ரேஷ்டரான ராமனை, உமா சதாசிவன் ஸதா மனத்தில் தரித்த வண்ணம், அதோக்ஷஜரான பகவானை தரிசித்து, தரிசித்து திருப்தி அடையாமல், தங்களுடைய நேத்ரங்களைக் கூட மூடாமல் ஸதா பார்த்த வண்ணமிருக்கின்றனர். அப்பேற்பட்ட புருஷோத்தமரான ராமன் உனக்குப் பிராதா.'' (1058)

''பரதா, நீ அவருக்கு தம்பியாக விருந்தும், உன் கீர்த்தி பிரபாவங்கள் உவமையற்றதாக விருக்கின்றன. உன் கீர்த்தி ஸ்வரூபமாகிற பூர்ண சந்திரனில் ராமப்ரேமை என்கிற பெண் மான், (கீர்த்திலக்ஷ்மி நாராயணரை அடுத்தது போல,) அடுத்து விளையாடிக் கொண்டிருக்கிறது. என் பிரியனே, (கஸ்தாரிமான் ஸ்வயமாக தன்னிடமிருந்து வரும் வாசனையை அறியாமல் பிற இடங்களில் தேடித் திரியுமோ, அதுபோல) உன் ஹ்ருதயத்தில் வீணாக கஷ்டங்களையும் ஆத்ம நிந்தனைகளையும் ஏற்படுத்திக் கொள்ளாதே, உன் கையில் கிடைத்திருப்பது ஸர்வார்த்த ஸாதகமாகிற சிந்தாமணி. அதை அடைந்திருந்தும் தரித்திரன் தரித்திரத்தைக் கண்டு பயப்படுவது போல நீ ஏன் பயப்படுகிறாய்.?'' (1059)

''பரதா, நான் சொல்வதைக் கவனமாகக் கேள். நான் ஒருக்காலும் பொய் சொன்னதில்லை. என் வார்த்தைகளை உதாசீனம் செய்யாமல் தாபத்தை அடைந்து விடாதே. நான் ஒரு தபஸ்வி தான். ஸாதனை செய்யும் நிவ்ருத்த ஆத்மாதான், எனக்கு லோக

விவகாரங்களில் பற்றுதல் கிடையாது, காட்டில் புல் பூண்டு ஆகாராதிகளை உண்ணும் சாதாரண மனிதன் தான். அப்பேற் பட்ட எனக்கு சுலபமாக, என்னைத் தேடி கொண்டு வந்து, கதவைத் தட்டி சுபதர்சனத்தை தந்த மஹா கிருபாளுவாகிற சீதா ராமன், லக்ஷ்மணனுடன் இந்த ஆஸ்ரமத்திற்கு எழுந் தருளினார்.'' (1060)

[தியானம்

பரமஸ்பஷ்டரே, ராமா, ஜானகியை அழைத்துச் செல்லும் லக்ஷ்மணாக்ரஜரே, பத்து சக்தி, பத்து வித கமகங்கள் ஆகிய சங்கீதம், நாதயோகம் முதலிய ஐஸ்வர்யங்களால் சூழப்பட்ட ராமா, பரதனும், லக்ஷ்மணனும், சீதையும், சத்ருக்னனும் உன்னையே தஞ்சமாகவும், தனஞ்ஜயராகவும் நினைத்து, நன்றாக அறிந்த தர்மத்தினால் ராஜ்ய போகமாகிற காமத்தில் ஆசையில் லாதவர்களாக வந்து அடைந்தார்கள். காமத்தின் வேகத்தால் தூண்டப்பட்டு தர்மத்தைத் துறந்து, பரலோகத்தில் நம்பிக்கை இல்லாதவனாக, பகவானே, உம்மிடத்திலும் சிரத்தை யில்லாத வனாக யாராவது இருந்தால், ராமா ஜானகி ராமா, நீ அவர்களை பவித்திரமான எண்ணத்தால் பார்த்திருப்பாயா? பரலோகத்தில் ஒருவிதமான காரியமும் செய்யப்படுகிறதில்லை. ஆனால் பர லோகத்திற்கு ஸாதனமும், ஸத்துக்களால் ஆமோதிக்கப்பட்ட பெரிய புண்யமான தர்மங்களை இந்த உலகில் செய்வதற்கு தர்ம காரியமானது செய்யப்படுகிறது. அப்பேற்பட்ட சிறந்த தர்மம் ராமா, ஜானகியுடன் கூடிய ராமா, லக்ஷ்மணாக்ரஜ ராமா, நீ அல்லவோ? தர்மாதர்மம் சூக்ஷ்மமாக விருக்கிறபடியால், அந்த சூக்ஷ்ம முடிச்சை அறிஞர்களே அறிவதாலும், அந்த தர்மாதர்ம கர்மங்களுடைய சம்பந்தத்தை நல்லதென்று நினைக்கிறவர்களும் மிகக்குறைவு. எந்த ஸ்திதியிலும் அதர்மத்தை நான் கைப்பற்ற மாட்டேன், என்று சொல்லிய தர்ம புத்ரர் கடைசியில் கேசவரைத் தான் வித்வானாக அறிந்து அவருடைய வார்த்தையின்படி யுத்தம் செய்தார். அப்பேற்பட்ட தர்ம நிச்சயத்தை பரதனும் அனுஷ் டித்தான். ஆகையால் தர்மர், பரதன் முதலானவர்களை முன்னிட்டு நான் உன்னை சரணம் அடைகிறேன். மீனலோசனியாகிற சீதே, மாயே நீதான் என்னை அதர்மத்திலிருந்து காப்பாற்ற வேண்டும்.]

''சீதா லக்ஷ்மணன் சகித ராமச்சந்திரனை உன் கர்ம பலத் தினால், பரதா, காட்டில் வசிப்பவர்களும் ஏகாக்ரசித்தம் உள்ள

தபஸ்விகளாகிய எங்களுக்கு சீதாராமனைப் பார்க்கும் சந்தர்ப்பம், பாக்யம் கிடைத்தது. அந்த ராம தர்சன பாக்ய விசேஷத்தால், உன்னையும் பார்க்கும் பாக்யமும் எங்களுக்குக் கிடைத்தது. அப்பா நீயல்லவோ பரம கிருபாளு. தர்மாதர்ம ஸ்வரூபத்தை நீயல்லவோ பரம புத்தியினால் ஆராய்ந்து நிச்சயித்து எங்களுக்கு அளித்திருக்கிறாய். பரதா, நீதான் மஹாவித்வான். வேதாத்மாவை நீயல்லவோ ராஜ்யத்திலிருந்துகொண்டும் அறிந்திருக்கிறாய்! நீ உதார கங்கையாக விளங்குகிறாய். உன் பாதகமலங்கள் மஹா தீர்த்தம். உன்னால் நாங்கள் தன்யர்களாக ஆக்கப்பட்டோம். உன்னுடைய புகழ் கங்கையின் புகழ் போல ஜகத்பாவனமாக, என்றும் குறைவுபடாது.'' இவ்விதம் பரம பாகவத பிரியனான பரத்வாஜர்பரதனைப் புகழ்ந்தார். (1061)

பரத்வாஜரின் அசூயையற்ற வார்த்தைகளைக் கேட்ட ஸாதுக்கள் யாவரும் புகழ்ந்தார்கள் அந்த பரத விஜயத்தை பார்த்துக் கேட்டுக் கொண்டிருந்த தேவதைகள் கற்பகவல்லியின் குளிர்ந்த புஷ்பங்களைப் பரதன் மீது வர்ஷித்தார்கள். ஆகாசத்தில் எங்கு பார்த்தாலும் ''பரமாத்ம ஸ்வரூபத்தில் இறங்கி, குற்றங்கள் யாவும் நீங்கப்பட்டு, மிக்க பரிசுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தை அடைந்த பரதனின் விஜயத்தினால் பிரயாகை ராஜன் மஹா புண்யத்தைச் செய்தான் என்கிற சப்தம் கேட்கப்பட்டது.'' இப்பேற்பட்ட அழகான த்வனிகளை பரதன் கேட்டு, (வஸிஷ்டரின் வார்த்தையால் ப்ரீதி அடைந்த விஸ்வாமித்ரர் போல,) சந்தோஷப் பட்டான். (கிருதக்ஞை, ஆசார்யர், கர்மத்தின் பயன், தர்மா தர்மங்களின் ஸ்வரூபம் இகலோகம் பரலோக நம்பிக்கை, கிருதா கிருதன் என்று சொல்லப்படும் போகம் ஐஸ்வர்யம் ஆகிற அநித்ய பலன்களை பிரவிருத்தி தர்மமாகவும், மோக்ஷமாகிற நிவ்ருத்தி தர்மமாகவும், கார்யம் அகார்யம் ஆகிய இரண்டிற்கும் காரண ஸ்வரூபரான பரமாத்மாவை ஏகாக்ரபக்தியினால் பரதன் பூஜை செய்தான்.) அதன் பலனாக ஸகல சந்தோஷங்களையும் அடைந்து, பிரும்மரிஷிகளாலும், தேவர்களாலும் இகலோகத்தில் ஸகல ஸாதுக்களாலும் போற்றப்பட்டான். அந்த பரமப்ரீதியைக் கண்டு பரதன் அடக்கத்தின் திறத்தினால் லஜ்ஜையை அடைந்தான். (யுகிஷ்டிரரைப் போல கேசவராகிய ராமனை பரதன் வசியம் செய்தான்.) (1062)

பரதனுடைய குளிர்ந்த கமல நயனங்கள் ஆனந்த பாஷ்பங்களால் நிரம்பி அவனுடைய சரீரத்தைப் புளகாங்கிதமடையச் செய்தன. (ஹரி சரணங்களை ஹ்ருதயத்தில் தரிக்கும் விஷ்வக்

ஸேனர் ஆனந்த முதனுக எவ்விதம் விருத்தி அடைவாரோ, அது போல) ராமசீதை ஆகியவர்களின் திருவடிகள் பதிந்த ஹ்ருதய முடைய பரதன் கமல புஷ்பங்களுக்குச் சமமான நயனங்களை உடைய என் பிரபு, மெய்சிலிர்த்து (ஆனந்ததத்வத்தை ஸமாதியி லிருக்கும் காமேஸ்வரன் காமேஸ்வரியின் சாக்ஷாத்காரத்தில் அனுபவிக்கும்) ஆனந்த உல்லாஸத்தை அடைந்தான். இதைப் பார்த்த மஹாபுண்யம் படைத்த முனிவர்களின் மண்டலத்தைக் குறித்து பரதன் வார்த்தைகளைத் தொண்டையில் தழுதழுக்கச் சொல்ல ஆரம்பித்தான். (1063)

"என்ன பாக்யம்! இந்த ஸதஸ் மஹா மேதாவிகள் நிறைந்த கூட்டம். தீர்த்த ராஜனுன பிரயாகை க்ஷேத்திரம். இங்கு பர மாத்மாவை சதா தியானிக்கும் உத்தம சீலர்களும் மஹா பாவங் களைப் போக்கும் புண்ய ஆஸ்ரமங்கள் பல இருக்கின்றன. இப் பேற்பட்ட மிக்க பவித்திரமான இடத்தில் தர்ம விரோதமான வார்த்தைகளைச் சொன்னுல், ஆணையிட்டு ஊர்ஜிதமாகச் சொன் னுல், அவன் மஹா பாபத்தை அடைந்ததுமின்றி நீசத்தன்மை யையும் அடைகிறுன்." (1064)

"ஆகையால் மஹா பயத்துடன், நான் யதார்த்தமாகச் சொல்ல விரும்புகிறேன். ஹே ராம்! நீர் என் பிரபு, என் எஜ மானர், ஸர்வசாக்ஷி, ஸர்வக்ஞன், ஆதிகாரணப்பொருள். நான் என் மாதாவாகிற கைகேயியின் துர்ச்செய்கையினுல் ஏற்பட்ட விபரீத பலன்களிலிருந்து விடுபட்டேன். (அவளால் தான் நான் இவ்விதம் பகவத் பெருமையை உணர முடிகிறது. இப்போது என் தாயார் மூலம் எனக்கு சம்பவித்திருக்கும் துக்கத்தைப் போக்கிக் கொண்டேன். சுநீதி துருவனை உபதேசித்தது போல, கர்மத்தின் விபரீத பலனுல் ஏகாக்ர சிந்தத்துடன் ராமனை அதிக மாக அடைய விரும்புகிறேன்.) என் மீது பழி சுமத்தி உலகத் தார்கள் நிந்தித்தாலும் பரவாயில்லை. அதற்காக நான் வெட்கத் தையோ லஜ்ஜையையோ அடையவில்லை. (காட்டு வாசிகளான உங்களைப் போல மானம் அவமானம் என்கிற இருத்வந்தங்களி லிருந்து விடுபட்டேன். என் கவலையெல்லாம் ராமனுடைய திரு வடிகளை ஆஸ்ரயித்த எனக்கு அந்த குளிர்ந்த சீதாராம தர்சனம் எவ்விதம் கிடைக்கும்?") (1065)

[தியானம்

ஹே ராமா சீதா, பகவானே, நீங்கள் வேதம் பிராம்மணர்கள், ஆகியவர்களின் வேர். நீர் கோப ரூபமான மரத்தை எரிக்கிறீர்.

தர்ம ரூபமான மரத்தை செழிக்க வைக்கிறீர். லோப ரூபமான வனத்தை அழிக்கிறீர். உம்மை ரக்ஷகனாக லோபி அடைந்தால், புலி வனத்தைக் காப்பது போல அவனை ரக்ஷிக்கிறீர். எவ்விதம் வனத்தை சிம்மமும், ஸிம்மத்தை வனமும் காக்கிறதோ அதுபோல மனத்தை வசப்படுத்தியவனும், சோம்பல் இல்லாதவனும், சுகத்தையும் மனதின் பிரியங்களையும் தள்ளிவிட்டு, பிரும்ம சர்யத்தை அனுஷ்டித்து, கர்மத்தினால் இந்திரன் தலைமையையும், தேவஸ்ரேஷ்டனாகவும் ஆனான்; மகவானான அவன், சசிதேவி சகிதனாக, ஸத்யத்தையும் தர்மத்தையும் தவறுதல் இல்லாமல் காக்கிறவனாகி, அடக்கம் பொறுமை ஸமபுத்தி, எல்லாப் பிராணிகளிடத்திலும் பிரியம் ஆகியவைகளை அனுஷ்டித்து, சிறந்த தான தேவராஜ்யத்தை அடைந்தான். பிரஹஸ்பதியானவர் இந்திரியங்களை அடக்கி சுகத்தை விட்டு, ஸமாதியுடன் கூடியவராக, இளைத்த சரீரம் உள்ளவராக விதிப்படி பிரும்ம சரியத்தை அனுஷ்டித்தார். அதுபோல மிக்க வன்மை உள்ளவராயிருந்தும் பகவான் வாஸுதேவரும் தர்மத்தை அனுஷ்டித்த படியால், பகவான் பாண்டவர்களுக்கு நாசமில்லாமலிருப்பதையும், ஐஸ்வரியத்தையும் பிரியத்தையும் விரும்பினார். அதுபோல சிலர் கர்மாவினாலும் சிலர் ஞானத்தாலும், சித்தியை அடைகிறார்கள். வித்வானாக விருந்தாலும் இவ்வுலகில் போஜனமாகிற கர்மாவைச் செய்யாமல் பக்ஷ்ய போஜ்யங்களிலிருந்து விடுதலையாகிற திருப்தி அடைகிறதில்லை. பிரும்மவித்துக்களுக்கும் இந்த உலகில் கர்மா விதிக்கப்பட்டிருக்கிறது. எந்த வித்யைகள் இவ்வுலகில் கர்மாவை சாதிக்கின்றதோ அவைகளுக்கு பயன் இருக்கிறது; மற்ற வித்யைகளுக்கு காணவில்லை. ஆகையால் பகவத் விஷயமாகிற கர்மாவைச் செய்து பாகவத கோஷ்டியில் அக்ரஸ்தானத்தை அடைந்த பரதனை, குஹப் பெருமானை, ஸநாதனமான கிருஷ்ணரை. என் ஆசாரியர்களாக நினைத்து சரண மடைகிறேன். அவர்கள் தான் என்னை ரக்ஷித்து நல்ல விஷயங்களில் போகும்படி செய்ய வேண்டும்.]

''ஐயா, நான் ஸ்வார்த்தி இல்லை. நான் இகலோகத்திலோ, பரலோகத்திலோ ஆசை வைத்து, பயமடைந்து இருக்கிறவனாக நீங்கள் அறியவேண்டாம். ஆசார்யரான என்பிதா மரணம் அடைந்துபோனதிற்காக நான் அதிகம் வருத்தப்படவில்லை. அவருடைய சுக்ருதங்களும் அழகான கீர்த்தி பிரபாவங்களும் இந்த விஸ்வம் முழுவதும் பரவியிருக்

கின்றன. அதன் சுக்ருத பலனாக லக்ஷ்மணனும் ராமனும் சத்புத்திரர்களாகப் பிறந்திருக்கிறார்கள்.'' (1066)

''அவருடைய ஆத்மஸ்நேகம் இப்பொழுது ரொம்ப பிரசித்தமாயிருக்கிறது. ஸ்ரீராமச்சந்திரனுடைய பிரிவைத் தாங்கமுடியாமல், ஒரு க்ஷணம்கூட பொறுக்கமுடியாதவராக என்பிதா தன் சரீரத்தைத் தியாகம் செய்தார். அப்படிப்பட்ட மஹானுக்கு நான் பச்சாதாபப்படவேண்டியதில்லை. நான் கவலைப்பட்டு துக்கமாயிருப்பதற்கு காரணத்தை பகிரங்கமாக சொல்கிறேன். தயவுசெய்து கேளுங்கள். என் பிரபு, ஸ்ரீராமச்சந்திரன், லக்ஷ்மணன், அந்த மஹா உத்தமியான சீதை தங்கள் கால்களில் செருப்புக்கூட யில்லாமல் முனி வேஷங்களை தரித்து, கால்நடையாக வனம் சென்றார்களே அதுதான் என் மர்மங்களைப் பிளக்கிறது.'' (1067)

''அந்த மஹாத்மாக்கள் மஹா புண்யம் செய்தவர்கள். சிறந்த வஸ்திரங்களை அணிவதற்கு யோக்யமானவர்கள். அப்பேற்பட்டவர்கள் மரப்பட்டைகளாகிற வற்கலங்களை ஆடையாக அணிந்து, கந்தமூல பழங்களை ஆகாரமாக உண்டு, பூதளத்தில் தர்ப்பை படுக்கையின்மேலும் உலர்ந்த இலைகளின் மேலும் படுத்துறங்கினார்கள்; அரண்மனையின் சுகபோகங்களை அனுபவிக்கவேண்டிய அவர்கள் விருக்ஷங்களின் நிழலில் வாசம் செய்பவர்களாக நாடோடிகள் மாதிரி, சூரியவெப்பம், குளிர், மழை, பலமான காற்று, இவைகளை ஸஹஜமாக அனுபவிக்கும்படி என்றால் நேரிட்டதே.'' (1068)

''இப்படிப்பட்ட துக்கம் இரவும் பகலுமாக என் மர்மங்களை பிளக்கிறது. என் தாபம் அடங்க மறுக்கிறது. எனக்கு பகலில் ஆகார ருசியும் இரவில் நித்ரையில் விருப்பமும் வர மறுக்கிறது. நான் என் வன்மையை உபயோகித்து, ஸமஸ்த உலகங்களிலும் இந்த நோயைப் போக்கும் ஔஷதம் தேடியும் எனக்கு அகப்படவில்லை.'' (1069)

''என் தாயாரின் கெட்ட மதியினால் அவள் என் பிருவிருத்தியை வேறுவிதமாக அறிந்து, எனக்குப் பாபங்களை வளர்க்கும் பெரும் நிதியைத்தேடி வைத்திருக்கிறாள். அவள் செய்திருக்கிற விபரீதம் ஒரு ஆசாரி பூதம் பிசாசை விரட்டுவதைப்போல எனக்கு நன்மையைத் தேடும் வியாஜமாக, அவளுடைய கெடுமதியினால், என் பிரபு, சகல லோகத்திற்கும் ஹிதகாமியாகிற ஸ்ரீராமச் சந்திரனை அயோத்தியிலிருந்து விரட்டிவிட்டிருக்கிறாள். ஒரு கெட்ட அசுபமான மரத்திலிருந்து ஒருபங்கை வெட்டி அதில்

யந்திரம் செய்து, எதிரிகளின் நாசத்திற்காக வேலைசெய்து, ஆனால் அந்த யந்திரத்தை தன் சொந்த வீட்டிலே நட்டு வைத்திருப்பதுபோல, அயோத்தியில் என் குடும்பத்தில், சண்டை, சச்சரவு அன்யோன்ய பாவமில்லாமை, அதனால் விளையும் கேடுகளான மனவெறுப்பு, விரோதம், கிரோதம், சண்டை ஸர்வநாசம் ஆகிய எல்லா அசுப பலன்களை எனக்கு தரும்படி பதினான்கு வருஷங்களுக்கு சம்பாதித்துவிட்டிருக்கிறாள். என் மாதாவின் கெட்ட மதிச்செய்கையால், அசுபமான சூழ்ச்சி திட்டத்தால், எனக்கு அவள் ஒரு ஆசாரிபோலவும் பரதனுக்கு ராஜ்யம் கிட்டுவதற்காக ராமனின் வனவாசம் கொண்ட பதினான்கு வருஷங்கள், என்கிற கஷ்டதாபங்களை மந்திர யந்திரமாக அமைத்து, கேடு விளைவித்திருக்கிறாள்.'' (1070)

''இவைகளின் விபரீதங்கள் எல்லாம் என் நன்மைக்காகச் செய்யப்பட்டதாகவும், அதன் விபரீத பலனாக சகல ஜகமும் நாசத்தை அடைந்து சின்னாபின்னமாகிவிட்டது. என் குடும்பமும் அயோத்தியும் பாழடைந்துபோயிற்று. எங்கள் ஜோதியான ஸ்ரீராமச்சந்திரன் மீண்டும் திரு அயோத்தி நகருக்கு எழுந்தருளினால், நானும் என் குடும்பத்தினர்களும் சகல அயோத்தி ஜனங்களும் உயிர்பெற்று வாழ்வோம். அதுவரை நாங்கள் நடைப்பிணங்களாக விருப்போம்.'' (வேதாஹம் வேதம் புருஷம் மஹாந்தம் ஆதித்ய வர்ணம் தமஸঃ பரஸ்தாத், தமேவ வித்வான் அம்ருதமிவ பவதி, நான்யதঃ பந்தா அயனாயவித்யதே என்கிறபடி அந்த புருஷோத்தம பானுவைவிட்டு, எங்களுக்கு வேறு உபாயமில்லை. அவனுடைய திருவடிகளே அவனுடைய திருவடிகளுக்குதஞ்சம். கோக்களுக்கு கோக்களே தஞ்சம் என்று கோமாதாக்களை கோக்கள் வேண்டியதுபோல, பரதன் ராமன் திருவடிகளை ஆஸ்ரயிப்பதற்கு ஸ்ரீராமனுடைய திருவடிகளையையே தஞ்சமாக அடைந்தான்.'') (1071)

பரதனுடைய சுகபிருந்த வாக்யங்களை மஹா முனிவரான பரத்வாஜர் கேட்டு, ''ஹா ஹாகாரம்'' செய்தார்கள். பல விதங்களாக அவனைப் புகழ்ந்தார்கள். வைஷ்ணவ ரீதியில் அடிபணிந்த தாஸ உள்ளம் படைத்த மஹா மேதாவியான பரத்வாஜர் சொன்னார். ''என் பிரிய பரதா, நீ இனி இந்த விஷயத்தைப்பற்றி யோசிக்கவேண்டாம். உன் மனோபிஷ்டம் நிறைவேறும். உன்னால் ராமபாத தர்சனம் அடையப்பெற்று,

அதனால் நீ எல்லோருடைய துக்கங்களையும் சமனம் செய்வாய்.'' (1072)

[தியானம்

ராமா, கிருஷ்ணா, ஜனார்த்தனரே, மாதவரே, மதுசூதனரே, சைலபுத்ரியாகிய உமையும் ஸநாதன தர்மத்தை ஆஸ்ரயித்த வரான மஹேஸ்வரரும், ''எந்த இடத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் இருக்கிறாரோ அந்த இடத்தில் புஷ்டியும் ஸ்ரீயும், த்ருதியும் கீர்த்தியும் விஜயமும் இருக்கிறாள்,'' என்று சொல்லிய மஹா மேதாவியுமான வியாஸரும் நாரத பகவானும் உம்மை அடிக்கடி புகழ்ந்து, மஹத்தான ஸ்ரேயசை அடைந்தார்கள். நாராயணரே ஸர்வருக்கும் கதி; நாராயணரே அவதாரங்களான கிருஷ்ணனாகவும் ராமனாகவும் வந்தார்கள் என்று அடிக்கடிச் சொல்லக் கேட்டும், என் மனம் லோபத்தினால் கெடுக்கப்பட்டிருக்கிறது. இந்திரனுக்கு நிகரான வலிமையுடைய அர்ஜுனனும் இந்திரனால் வெகுமானிக்கப்பட்ட பரதனும், செய்யமுடியாத காரியத்தை செய்துமுடித்தார்கள். அப்பேற்பட்ட கிருஷ்ணர், ராமர் போர் செய்யாமலே மனத்தினால் ஒரு மனிதனுக்கு வெற்றியை விரும்புவாராகில் அவனைத்தேடி எல்லா ஐஸ்வர்யங்களும் வெற்றியும் தேடிவருகிறது. சந்திரனையும் சூரியனையும் நேத்ரமாகக்கொண்ட பரமாத்மா, லவகுசன், பிரத்யும்னன் ஆகியவர்களைப் பெற்ற சீதை ருக்மணி ஆகியவர்களை மனைவிகளாக அடைந்து உலகத்திற்கு தர்மத்தையும், தர்மத்தை ஆஸ்ரயித்த மஹாத்மாக்களையும் காப்பாற்றினாரோ, அப்பேற்பட்ட ஸநாதன புருஷோத்தமருக்கு நமஸ்காரம். மதுசூதனா, நீர்தான் கிருபை செய்யவேண்டும். லோபம் எங்களிடம் ஏற்படாமல் பரதனும் அர்ஜுனனும் அம்பரீஷனும் என்னைக் காப்பாற்றவேண்டும்.]

இந்தவிதமாக முனிஸ்ரேஷ்டரான பரத்வாஜர் பரதனின் துக்கத்தை சமனப்படுத்தி சுபமங்கள ஆசீர்வாதங்களைச் செய்தார். அதன்பிறகு முனிஸ்ரேஷ்டரான பர்த்வாஜர் சொல்ல ஆரம்பித்தார். ''என் பிரேமை பிரியனாகிற பரதா, நீ எனக்கு இன்று பிரியபந்து. என்னைக் கிருதார்த்தனாக்கிய மஹா அதிதி. கிருபை கூர்ந்து நான் கொடுக்கும் கந்தமூலம் பழங்கள் ஆகிய ஆகாராதிகளை உண்டு, என் அதிதிஸத்காரத்தை ஸ்வீகரிக்கவேண்டும்.'' (1073)

பரதன் பரத்வாஜரின் ஹிதமான வார்த்தைகளைக் கேட்டு லஜ்ஜையடைந்து, பேசாமலிருந்தான். மஹா ஸ்ரேஷ்டரான

வரும் குருமஹாராஜருமான அவருடைய வார்த்தைகளுக்கு மிக்க மரியாதை கொடுத்து, அவருடைய பாத கமலங்களைப் பிடித்துக்கொண்டு, கைகளைக் கூப்பிக்கொண்டு பரதன் சொல்ல ஆரம்பித்தான். (1074)

''ஹே நாத, என் மார்க்கதரிசியே, தங்களுடைய ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு, நடத்துவது என்னுடைய பரம பாக்யமான தன்யம்,'' என்று சொன்னதைக்கேட்ட அந்த மஹரிஷி அவனுடைய அடக்கத்தைப் புகழ்ந்துகொண்டு, தன்னுடைய அந்தரங்க சிஷ்யர்களைக் கூப்பிட்டு அழைத்தார். (1075)

''பரதனுக்கு விருந்து அளிக்கவேண்டும். நீங்கள் சீக்கிரமாக கந்தமூல பழங்களை தயார் செய்யுங்கள்,'' என்று உத்தரவு விட்டார். அவர்களும் ''அப்படியே செய்கிறோம்'' என்று பதில் சொல்லி தங்கள் தங்கள் காரியங்களில் ஈடுபட்டார்கள். (1076)

முனிஸ்ரேஷ்டர் தனக்குள் யோசிக்க ஆரம்பித்தார். ''இன்று நமக்கு வந்திருக்கும் விருந்தாளிகள் மிக்க உத்தமர்கள். இவர்களுக்கு நாம் சாதாரண விருந்து அளிக்கக்கூடாது. ஏதாவது ஒரு தேவதையை நினைத்து பூஜைசெய்து அவர்களையும் திருப்தி செய்விக்கவேண்டும்'' முனிவருடைய வார்த்தைகளை ருத்தி அணிமாதிசித்திகள் கேட்டு அதன்படி நடக்க ஓடிவந்து, முனிவரைப் பார்த்துச் சொன்னார்கள். ''ஹே பிரும்ம ரிஷியே, கோஸாயி, நாங்கள் தங்களுடைய உத்தரவுக்குக் காத்திருக்கிறோம். அதன்படி நடக்க சித்தமாயிருக்கிறோம்.'' (1077)

[தியானம்

ராமா, ஜானகிராமா, நாராயணா, மஹாலக்ஷ்மி, நாரத ஹ்ருதயத்தில் வீற்றிருந்த ராமகிருஷ்ணதத்வமே, தியாகராஜர் வால்மீகி பகவானால் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட மஹாக்ருபாளு நாராயணா, த்வந்தங்கள் அற்றவர்களும் அஹங்காரமில்லாதவர்களும் சுசீலமாகவிருப்பவர்களும், சுத்தமான லோசனங்களை உடையவர்களும் மஹா தபஸ்ஸினால் உன்னைப் பூர்ணமாக தரிசனம் அடைகிறார்கள். மஹா பிராக்ஞர்களும் மஹா யோகிகளும், உம்மையே தர்சிப்பதில் ஏகாக்ரசித்தமுள்ளவர்களும், தேவரிஷியான நாரதர், பிரும்மரிஷியாகிற வேதவியாஸர், சுத்த சித்தமுள்ள பீஷ்மர், துரோணர், விதுரர், பரதன், தர்மபுத்ரர்

பீமன், அர்ஜுனன், திரௌபதி, நகுல சஹாதேவன் ஆகிய மஹாத்மாக்கள் உம்முடைய தர்சனத்தையே பெரும் தபஸ்ஸின் பலனாகக் கருதினார்கள். ஹ்ருஷிகேசா, கிருஷ்ணா, தேவகி கௌஸல்யா நந்தனா, கோவிந்தா, முகுந்தா, முக்தியையே விரும்பும் மஹரிஷிகள் ஸர்வ காரணத்திற்கும் கர்த்தாவாகவும் விகர்த்தாவாகவும் உம்மையே நினைக்கிறார்கள். உம்மை விஷ்ணு வாகவும் அனன்ய மனஸ்ஸுடன் உம்முடைய ஸாயுஜ்யமே துர்லபமான வஸ்து என்றும் நித்யம் என்றும் நினைத்து நான் என் ஹ்ருதயத்தில் தரிசிக்க ஆசைப்படுகிறேன். ஸர்வலோகத்ருக் ஆகியவரும் தேவஸ்ரேஷ்டரும் சாஸ்வதருமானவரும் நாராயண: பரம் இல்லை என்று நம்பி கேசவனை ஆராதிக்கிறேன். புண்டரீ காக்ஷா, உம்மை சாதாரண மனிதனாக நான் கருதவில்லை. நீர் அசிந்தனீயன். அநாமயன் என்கிற விபுக்களை உடையவர். அப்பேற்பட்ட பகவானே, உம்மை கிருஷ்ணத்வைபாயனர், நாரதர், அஸிதர், தேவலர் வால்மீகி மஹா தபஸ்ஸை உடைய மார்க்கண்டேயர், பரத்வாஜர், பகவானும் ஈஸ்வரரும் பிரபுவு மாகிற ராமனை குஹப்பெருமான் சந்நிதியிலும் வஸிஷ்டரையும் பரதனையும் சத்ருக்னனையும் முன்னிட்டு சரணம் அடைகிறேன்.]

பரத்வாஜர் சந்தோஷமடைந்து அவர்களிடம் சொன்னார் "சிறிய சகோதரனாகிற சத்ருக்னனுடன் கூட பரதன் எல்லா ஸாதுக்களாலும் விரும்பப்பட்ட ஸ்ரீராமலக்ஷ்மி தரிசனத்தை விரும்புகிறான். அவர் பிரிவினால் வாடுகிறான்: அப்பேற்பட்ட மஹா உத்தமர்கள் என் அதிருஷ்டவசமாக அதிதிகளாக வந்திருக்கிறார்கள். இவர்களுடைய வழி சிரமத்தைப் போக்குங் கள்." (1078)

முனிவருடைய உயர்ந்த கட்டளையை சிரமேற்கொண்டு ருத்திசித்தி ஆகிய தேவதைகள் தங்களை ஸ்ரீராமனால் பகுமானிக் கப்பட்டவர்களாகவே கருதினார்கள். அதிக சிரத்தையுடன் தங்களுக்குள் பரஸ்பரம் பேசிக்கொண்டார்கள். "இந்த உத்தம மான பரதன் நமக்குத் தோன்றிய வரையிலும் மஹா ராமபக்த னாக விருக்கிறான். இவனுக்குச் சமானமாக யாரும் இருக்க முடியாது. அப்பேற்பட்ட அதுளித பரதன் நமக்கு மகிமை யுடன் விளங்கும் விருந்தாளியாக ஆராதனம் செய்யத் தகுந்தவன்." (1079)

அவர்கள் முனிவருடைய திவ்யமான பாதசரணங்களை வந்தனம் செய்துவிட்டு, "அவ்விதமே செய்கிறோம்" என்று பணிந்து, "இந்த ராஜ சமாஜம் முழுவதையும் நாங்கள்

விருந்தூட்டி "சுகப்படுத்துகிறோம்" என்று சொன்னார்கள். உடனே அவர்கள் ஒரு அழகான வீட்டை ஸ்ருஷ்டி செய்தார்கள். அந்த வீட்டைக் கண்டு தேவ விமானங்கள், மண்டபங்கள் கூட லஜ்ஜையை அடைந்தன. (1080)

[தியானம்

ஹே பகவானே, நாராயணா, மஹாலக்ஷ்மி சமேதராமா, எந்த யோகிகள் பிராக்ஞர்களில் சிறந்தவர்களோ, எவர்கள் இந்திரியங்களுக்கு ஈஸ்வரரான பகவான் வாஸுதேவரை சரண மடைந்து ராமகிருஷ்ணாதி அவதாரங்களை நிச்சயமாகக் கருதி அவர்களுடைய அனுக்ரஹத்தை நாராயணருடைய அனுக்ரஹ மாகவும், நாராயணருடைய கைங்கரியத்தைப் பகவத் கிருபை யாகவும் ஸ்மரிக்கிறார்களோ, அதுவே பரமபாக்யம். மஹரிஷிகள் இந்தவிதமாக கோவிந்தரை ஆராதித்து முக்தி பெறுகிறார்கள். புத்தியுள்ளவர்கள் அழகான பிராம்மண சரீரத்திற்கு கிருதக்ஞை செய்பவர்களாக எதை அறிந்து சாந்தமடைகிறார்களோ, அது தான் வேதவாக்குக்களாலும் புகழப்பட்டும் விளங்க முடியாத பரமாக விருக்கிறது. அந்த பரமான பொருள், சப்தம் ரூபம் ரஸம் ஸ்பர்சம் வாசனை ஆகியவைகளுக்கு மேலானதும், ஞான கர்மேந்திரியங்களுக்கு விஷயமாகாத அதோக்ஷஜரான பகவானை, ஜாதியில்லாததுமான பரபிரும்மத்தை, சாக்ஷாத் நாராயண ராகப் பார்க்கிறார்கள். அப்பேற்பட்ட நாராயணரை நான் நமஸ் கரிக்கிறேன். ராமா, நீர்தானே அந்த நாராயணர். நீர்தானே அந்த அக்ஷரமான வஸ்து. ஏகம் என்று சொல்லக்கூடிய வஸ்துவும் நீர்தானே. ஸ்வாமி, லக்ஷ்மிராமா, பரதன் உம்முடைய பகவத் கைங்கர்யத்தில் ஆசைப்பட்டு வந்தான். பகவானுடைய உகப்புக்கு உறுப்பான பாகவத கைங்கர்யத்தை பரத்வாஜர் மேற்கொண்டார். ஆசார்ய கைங்கர்யத்தில் ஏற்றம் அறிந்த பரதன் பாகவதர்களுக்கெல்லாம் உகப்பாகப் பண்ணும் ஆசார்ய கைங்கர்யம் என்கிறபடி, குஹப்பெருமான், வஸிஷ்டர் ஆகியவர்களின் சாக்ஷாத்காரத்தில், சர்ம ஸ்லோகத்தின் அடிப் படையாக விளங்கும் ஆவிர்பூத ஸ்வரூபனான ஆத்மா, சேஷத் வத்தைக் கொண்டே, ஸர்வ சேஷியாகிற பகவானிடத்தில் தன் விஷயத்தில் கிஞ்சித்தேனும் பகவத்கிருபையை வேண்டி நிற்கின்றான். ஆம், பகவான் ஸர்வ ஸ்வதந்தரர்; ஜீவன் பார தந்தரன். கருமங்கள் நடத்திக்கொண்டு போகுமளவில் க்ருபா குணம் இருவர்களுக்கும் ஆசார்ய காரியத்தாலும் குரு கிருபா

கடாக்ஷத்தாலும் பெருகத் துடங்கி, ஒன்றாலும் தடுக்க வொண்ணுதபடி வெள்ளத்தின் இருகரைகளும் உடைந்து போன மாதிரி, பகவானுடைய நிர்ஹேதுக க்ருபையை ஸ்மரிப்பதாம். கிருபாளுவாகிற பகவான் நிர்பயமாகவிருக்கும் சேதனனை, அவன் கர்மங்களைப் பாராமல் அங்கீகரித்து, அவனுடைய ஸம்சார சுழல்களை அடி அறுத்து, தானே ஸ்வயமாக தன் திருவடிகளில் சேர்த்துக் கொள்கிறுன். இதுவன்றோ பகவத் கிருபை. அப்பேற்பட்ட பகவத்கிருபையை ஸ்மரித்து, பரதனை யும் நஞ்சீயரையும், பூர்வாஸ்ரமத்தில் வாதில்வென்ற பட்டரையும், நாரதரையும், மனுவையும் பிரஹஸ்பதியையும் முன்னிட்டு நான் சரணம் அடைகிறேன். என்னுடைய கர்ம பக்தி ஞானங்களால் ஏற்பட்ட பயஹேதுவையும், பகவத்குணனுசந்தானம் அபய ஹேது என்கிறதை அறிந்து, நான் திருமந்திரத்தில் பிறந்து, த்வயத்தில் வளர்ந்து, 'த்வயைக நிஷ்டராவீர்' என்று சொல்லி பட்டர் திருவடியை ஆஸ்ரயித்த அனந்தாழ்வான், நஞ்சீயரை முன்னிட்டு பகவத்கிருபையை சரணம் அடைகிறேன்.]

அந்த அரண்மனைகளில் போக போக்யங்கள், இந்திரியங் களை சுகப்படுத்தும்படி அநேகம் இருந்தன. ஐஸ்வர்ய விலாஸங்கள் ஏகபோகமாக அமைக்கப்பட்டிருப்பதைப் பார்த்து, தேவதைகள் கூட அபிலாஷை கொள்ளும்படியிருந்தன. தாஸிகள் தாஸர்கள் அழகான உடைகளில் அதிதிகளை ஆரா தித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவர்களின் மனோபிஷ்டப்படி நடந்து கொண்டார்கள். (1081)

அந்த ஐஸ்வர்ய போகவிலாஸங்களுக்குச் சமம் ஸ்வர்கத்தில் கூட இல்லை. ஸ்வப்னத்தில் கூட ஸ்மரிக்க முடியாதபடிவிருந்தன. அவ்வித உத்தம காமபோகங்களை ஸித்திதேவதை, ருத்தி தேவதை தயாரித்தார்கள். முதன் முதலாக ஒவ்வொருவருக்கும் அவர்கள் இஷ்டப்படிக்கும் ருசிக்கு தகுந்தவாறும் வசிப்பதற்கு இடவசதிகள் செய்து கொடுத்தார்கள். (1082)

அதன் பிறகு குடும்ப சகிதம் உள்ள பரதனுக்கு பரத் வாஜரின் ஆக்ஞைக்கு அனுசரணையாகத் தங்குமிடத்தைக் கொடுத்தார்கள். விதாதாவாகிற பிரும்மாவே ஆச்சர்யப்படும்படி பரம முனிஸ்ரேஷ்டரான பரத்வாஜர், அகஸ்தியர் லோபா முத்ரைக்கு தயாரித்தது மாதிரி, தம்முடைய தபோபலத்தால் ஸ்ருஷ்டி செய்தார். (1083)

முனிவருடைய பிரபாவங்களை பரதன் முதலானவர்கள் உணர்ந்தார்கள். லோகபாலர்கள் கூட ஆச்சரியப்படும்படி

அவைகள் மேன்மை பெற்று விளங்கின. சுக சாமக்ரியைகள் இவ்வளவு இருக்கின்றனவா, என்று வியக்கும்படி யிருந்தன. யார் எதை வர்ணித்தாலும் பார்த்தாலும் சொல்லவொண்ணுதபடி யிருந்தன. அவைகளைக் கண்டு ஞானிகளும் யோகிகளும் வைராக்யத்தையும் மறந்துவிடும்படி சிறந்தவைகளாகவிருந்தன. (1084)

உத்தம ஆஸனங்கள், சுகந்த பரிமளமுள்ள படுக்கைகள், அழகான பட்டாடைகள், துப்பட்டாக்கள், அழகான குளிர்ந்த நந்தவனங்கள், பக்ஷி, பசு, மிருகங்கள், சுவையானவையும் அம்ருதத்திற்கு ஒப்பான ருசியுள்ள பழவகைகள், கலக்க மற்றதும் தெளிந்ததும் ஸாதுக்களின் ஹ்ருதயம் போல களங்க மில்லாத அம்ருத ருசியுள்ள ஜலங்களும், குளம் குட்டைகளில் எங்கு பார்த்தாலும் காணப்பட்டன. (1085)

[தியானம்

ராமா சீதா, லக்ஷ்மி நாராயணு, காய்த்திரி ராமா, சரஸ்வதி ராமா, நீ பரமக்ருபாளு. கர்மங்களினுல் பயமும், உன்னுடைய நிர்ஹேதுக கிருபையினுல் அபயமும், ஆக நீங்கள் இருவர்களும் பயக்ருத் பயநாசன; என்று சொல்லும்படி விளங்குகிறீர்கள். இப்பேற்பட்ட பயாபயம் மாறி மாறி வருவது ஜீவனுடைய பிரக்ருதி ஸம்பந்தத்தால் அல்லவோ ஏற்படுகிறது. இருபத்தைந் தாவது தத்வமாகிற ஜீவன், இருபத்திநான்காவது தத்வமாகிற பிரக்ருதியினின்று விடுபட்டு, இருபத்தாருவது தத்வமாகிய பரமாத்மாவைப் பார்க்கிருன். அப்பொழுது இவனுடைய பிரக்ருதி குணங்கள் நாசமடைந்து, மனம் தெளிந்து, ஸ்திர புத்தியினுல் எம்பெருமானுடைய குணுனுபவங்களை விஸ்வாச பூர்வமாக அனுசந்திப்பவனுக, அவனுடைய அருளினுலேயே எவ்விதம் மஹாத்மாவான ஆதித்யனுகிற சூர்யன், சொந்த மாமாவுடன் கலகம் ஏற்பட்டு அவமதிக்கப்பட்டவரான யாக்ஞய வல்கியரிடம் இருபத்தாருவது தத்வமாகிய பரமாத்ம தத்வத்தை மஹா அருளினுல் சொல்லி ஞானத்தை உண்டுபண்ணினுரோ, அதுபோல அவித்யா காரணமாகிற கர்மவாசனை ருசி பிரக்ருதி ஸம்பந்தங்கள் ஆகியவைகளால் ஏற்படும் பிறப்பு இறப்பு பயத்தைப் போக்கி, "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி," என்கிறபடி நிவர்த்தகமான பகவானுடைய அருளைப் பற்றின ஞானமாகிற அபயஹேதுவை சேதனன் அடைகிருன். பிரும்ம பாவத்தை அடையும் சமயம் பிரக்ருதி ஸஹவாசத்தையும்

அபிமானத்யையும் துறந்தவனாக, கேவலனாகி, எல்லாவற்றையும் அறிந்த வித்வானாகி மறுஜன்மத்தை அடைகிறதில்லை. இவ்விதமாக பரத்வாஜர் பரதனுக்கு வஸிஷ்டர் குஹப்பெருமான் சந்நிதியில் சொல்லும்போது தன் குருவாகிய யாக்ஞய வல்கியரிடம் தான் சிரத்தையுடன் கேட்டதைக் கூறலானார். 'பரதா, இவ்விதம் ஜடமான பிரக்ருதியையும் அறிகிற ஜீவனை ஞானவானாகிய சேதனன் வேதத்தின் திருஷ்டாந்தத்தைக் கொண்டு பார்க்க முடியாத அதோக்ஷஜரான பரமாத்மாவைப் பார்க்கிறான். ஸர்வசாக்ஷியான பகவான் அந்த சேதனனுக்கு அனுகூலராகி, அவனுடைய கர்வத்தைப் போக்கும் நிவிருத்த ஆத்மாவாகவும், பிரியக்ருத் என்கிற பிரயோசனாந்திரங்களை விட்ட சேதனனுக்கு தன்னை யத்திருச்சையாகக் கொடுப்பவனும், அனன்ய பக்தியுடன் வரும் ஞானிக்கு பிரியார்ஹனாகவும், தன்னுடைய பிரீதியை வளரச் செய்து பக்தனுடைய மேன்மையையும் வெளிப்படுத்தும் ஆத்மா அல்லவோ அவர்.'' இவ்விதம் ஆதிநாராயணரின் விஷயத்தைச் சொல்லிய பரத்வாஜர், யாகிஞ்யவல்கியர், சூர்யன், விஸ்வாவஸு, மனு, பிரஹஸ்பதி இவர்களின் ஞானத்தை அடைந்த பரதனை முன்னிட்டு, ராமா, நான் உன்னை சரண மடைகிறேன். என் க்ஷேமத்திற்கும் மோக்ஷத்திற்கும் ஹேதுவான தத்வமல்லவோ இது!]

அந்த மஹாவிருந்தில் ஞானத்துடன் கூடிய சுவை மிகுந்த பதார்த்தங்கள் அம்ருத குணமாகிய புஷ்டியையும் மனநோய், தேகநோய் ஆகியவைகளிலிருந்து காப்பாற்றக்கூடிய பதார்த்தங்கள், குளிர்ந்த பானங்கள், யதேஷ்டமாக விருந்தன. அவைகளைப் பார்த்த மாத்திரத்தில், வைராகி மாதிரி இகலோகத்தில் உள்ள விஷயங்களில் பற்றுள்ள மனிதர்கள் அவைகளிலிருந்து நிவர்த்தி அடைந்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் நந்தனி வத்ஸி சுரபி, காமதேனு மாதிரி கோக்கள் வைக்கப்பட்டிருந்தன. இந்திரனும் சசிதேவியும் அந்த வைபவங்களைப் பார்த்து அபிலாஷை அடைந்தார்கள். (1086)

காலமோ வசந்த காலம் மாதிரி இளவெப்பம், இளம்குளிர்ச்சியுள்ளதாகவிருந்தது. சீதளம், மந்தம், சுகந்தமான மாருதம் வீசியது. யாவருக்கும் தர்ம அர்த்த காம மோக்ஷமாகிற சகல புருஷார்த்தங்களும் அந்த சூழ்நிலையில் கைமுஷ்டியில் கிடைப்பதுபோல, ஒவ்வொருவருக்கும் அவரவர் இஷ்டப்படி கிடைப்பதுபோல விருந்தது. மாலைகள், சந்தனம், ஸ்திரி போகங்களுக்கு வேண்டிய சாமான்கள், சந்தோஷத்தை விருத்தி

பண்ணுவதாயும், சாப்பிடுவதற்கு ருசியாயும் வைக்கப்பட்டிருந்தன. அப்படியிருந்தும், ராம வியோக சமயத்தில் அவைகளை அனுபவிப்பது, நிவிருத்த ஆத்மாவாகிற பரதனுக்கு உகந்ததாக வில்லை என்று ஸர்வ ஜனங்களும் மனத்தில் சங்கடப்பட்டார்கள். எல்லோரும் விஸ்மயபூதர்களாக என்ன செய்வதென்று கலங்கிக் கொண்டிருந்தார்கள். (1087)

ஸம்பத்தி, போக ஸாமக்கிரியைகள், பெண் சக்ரவாக பக்ஷி கூட்டில் அடைபட்டிருப்பதுபோல விளங்கின. பரதனே அந்த பெண் பக்ஷியில் ஆண் பக்ஷியாக விளங்கினான். ஆண் பெண் தம்பதிகள் கூட்டில் அடைபட்டதுபோல, மஹாமுனிவரின் கட்டளையின்பேரில் ஸம்பத் போகவிலாஸங்கள் வந்து அவை யாவும் அந்த இரவு முழுவதும் பரதனும் பெண் சக்ரவாக பக்ஷியாகிற போக விலாஸங்களும் சிறைபட்டவர்களாக அந்த ஆஸ்ரமத்தில் கிடந்தார்கள். எவ்விதம் அந்த தம்பதிகளுக்கு இரவு நேரம் கடினமாக விருக்குமோ, அதுபோல பரமஞானி யாகிற பரதனுக்கு விஷய போகங்களில்நிவிருத்தி அடைந்த வனாக, மனத்தில் தெளிந்த புத்தியுடன், பரமாத்மாமை சிந்திக்க லானான். ராமபிரும்மத்தை நினைத்து, பகவானுடைய கிருபையை அடைய யோக்யதாம்சம் பெற்றான். (1088)

[தியானம்

ஹே ராமா, ஜானகிராமா, கிருஷ்ணா, நாரதரால் உபதேசிக் கப்பட்ட மஹாத்மாவே, என் பராபர ரஹஸ்யமே, காமேஸ்வரி பீடத்தில் வீற்றிருக்கும் உத்தம ஆனந்த பிந்துவே, உம்மை நினைத்து நீரும் பகஹா ஆனந்தி ஆகிறீர். நானும் உமது அபிப் ராய பிரியன் என்கிற பெயரையும் அடைகிறேன். ஸர்வ ஸ்வதந் திரரான நீர் யாவருக்கும் வசப்படாதவராகிறீர். உமது கருணை யினால் பக்தவத்ஸலராக ஆகிறீர். உமது உடம்பு கருடனுடைய அடையாளங்களாலும், வேதங்களின் அடையாளங்களையும் ஸ்ரீயினுடைய அடையாளங்களையும், ப்ருகு முனிவருடைய வலது பாதத்தின் அடையாளங்களால் விலக்ஷணமாக காணப் படுகிறது. உமது ஹ்ருதயமோ பரதனிடம் அதிஇரக்கம் கொண்ட தாக விருக்கிறது. தன்பிராதாவான பலராமரிடம் அன்பு வைத்த கிருஷ்ணா, லக்ஷ்மண பூர்வஜா, லக்ஷ்மணனை தன் ஸந்நிதானத் தில் சேர்த்துக்கொண்ட ராமா, உம்மை அடைவது மிக்க கடினம். தமஸ்ரஜஸ்ஸுகளால் விடப்பட்டு, இந்திரியம், விஷயம் மனம் புத்தி மஹத்தத்வம், அவ்யக்தம், புருஷன் இவ்வேழையும் ஜயித்து

நீர் ஸர்வ ஸ்வதந்திரராகவும் ஸர்வக்ஞனுகவுமிருக்கிறீர். திருப்தி, அனுதியான அறிவு, தன் வசனுயிருக்கும் ஸர்வ ஸ்வதந்திரம், எப்பொழுதும் அழிவில்லாத சாஸ்வதமான ஞானத்தையும், அனந்த சக்தி ஆகிய அங்கங்களுள்ள மஹேஸ்வரரையும் அறிந்து, பிரதானத்தின் பரிணுமத்தையும் அறிந்த பரதன் ஹே ராமா, உன்னைப் பரபிரும்மமாகப் பார்க்கிருன். அந்த பரதன் தன் தாயாருக்கு இதைச் சொல்லி உனக்குப் பிரியார்ஹனுக ஆனுன். அப்பேற்பட்ட பரதனை முன்னிட்டு அர்ஜுனனுடைய விசேஷ அறிவினுலும் தர்மபுத்ரர் ஆஞ்சநேயாதிகளின் அடக்கத் தாலும், நாரதர், வியாஸருடைய சிறந்த புத்தி ஸாமர்த்தியத் தாலும், சுகருடைய விஸ்வாசத்தாலும் உம்மை சரணமடை கிறேன். பரத்வாஜரே, ஸப்தரிஷிகளே நாதமய ஜோதியான சாவித்திரியே எனக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும்.]

## மாஸபாராயணம் பத்தொன்பதாவது நிறுத்தம்

காலை நேரம். (அஸ்வினி தேவர்கள் நடமாடும் சமயம்) பரதன் தீர்த்தராஜனுகிற பிரயாகையில் ஸ்நானம் செய்தான். தன் கூட்ட பரிவாரத்துடன் முனிராஜரான பரத்வாஜரை நமஸ்கரித்தான். பரதன் அவருடைய மங்கள ஆசிர்வாதங்களை அடைவதற்காக சுக்ருத பிரணுமங்கள் செய்தான். அதிவினயத் துடன் தாளும் தடக்கையுடன் அவரைப் பிரார்த்தித்துக்கொண் டான். (1089)

அதன்பிறகு தன் பரிவாரங்களுடன் குஹனுல் வழி காட்டப் பட்டவனுமாக, பரதன் மேலே தொடர்ந்து சென்ருன். அவ னுடைய மனம்முழுவதும் சித்திரகூடத்தில் லயித்திருந்தது. ராமனுடைய சகாவான குஹனைப் பிடித்துக்கொண்டு, பரதன் மேலே நடக்க ஆரம்பித்தான். பிரேமையின் வடிவு அழகு கொண்ட நிஷாத ராஜனுகிற குஹன். ராமனுக்குப் பிரிய பாத்ரன். வழி முழுவதும் அந்த பரதன் லக்ஷ்மணன் ஸ்ரீராமன் சீதை ஆகியவர்களின் பாத சுவடிகளைப் பின்பற்றிக்கொண்டு, அவர்களின் விஷயங்களைப் பற்றியே, கோமளமான குரலில் குஹனுடன் சம்பாஷித்துக்கொண்டு போவனுக விருந்தான். (1090)

ராமன் வாஸம் செய்தஇடம், நிழலுக்காக தங்கிய விருக்ஷம் இவைகளைக் கண்டவுடன் அவனுடைய ஹ்ருதயம் ராமனிடம் கொண்ட பக்தி அன்பினுல் உருகியது. பரதனுடைய பவித் திரமான அன்பைக்கண்ட தேவர்கள் பாரிஜாத மலர்களை அவன்

மீது வர்ஷித்தார்கள். அதனுல் மந்தமாருதம் சுகந்தமாக வீசியது. வழி சுலபமாகவும், பூமி குளிர்ச்சியையுமடைந்து ஸகலரும் சிரமமின்றி நடந்து சென்ருர்கள். (1091)

அந்த நல்ல மார்க்கங்களில் கணக்கிடாத உயிருள்ளவை களும் உயிரில்லாதவைகளுமாகிய ஜீவர்கள் இருந்தார்கள். புல் புழு மரம் ஆகிய அசேதனப் பொருள்களும், மனிதர்களும், மிருகங்களும் பக்ஷிகளும் ஸகல ஜீவகோடிகளும் அந்த வழியில் ராமச்சந்திரன் சீதை லக்ஷ்மணனுடன் வரும்போது, அவர்களால் பார்க்கப்பட்டபோது, பரம பதத்தை யடைவதற்கு யோக்யர் களாக ஆனுர்கள். மஹாகிருபாளுவின் புஷ்கர கடாக்ஷத்தினுல் பாபங்கள் தோஷங்கள் யாவும் விலகி, சுத்த ஆத்மாக்களாக ஆனுர்கள். பரதனே தர்சனம் செய்தபின் அவர்கள் பவபயமாகிற பிறப்பு இறப்பு ஆகிற ரோகத்தை பூர்ணமாக விலக்கிக்கொண் டார்கள். ராமனின் தர்சனத்தால் பரமபதம் அடைவதற்கு யோக்யர்களாக ஆக்கப்பட்டார்கள். பரமபாகவதனுகிற பரதனேக் கண்டதும், அவர்களுக்கு பரமபதம் சுலபமாக கிடைத்தது என்று சொல்லலாம். (1092)

துளசிதாஸர் சொல்லுகிருர். "நான் இந்த விஷயத்தில் அளவு மீறிச்சொல்லவில்லே. ஸத்யத்தையே உரைக்கிறேன், பரதனின் விஷயத்தில் நான் சொல்வது பூராவும் ஸத்யம். அனன்ய பக்தியாக வந்து அடையும் மஹா ஞானியாகிற பரதன் ராமனுக்குப் பிரியார்ஹனுக வந்துவிட்டான். இந்த சம்சாரத்தில் "ராம்", "ஹே ராம்", என்று ஒரு தடவை சொன்னவன், கொட்டாவி விடும் சமயத்தில் கூட அனுயாஸமாக ராம நாமத்தைச் சொன்னபோது கூட, அந்த ராம மந்திரத்தின் வீர்யத்தினுல் மனிதர்கள், தாங்களும் பவசாகரத்தின் அக்கரையை அடைந்தது மட்டுமின்றி, தங்கள் குலத்தினர்களேயும் பந்து மித்ரர்களேயும் ஆஸ்ரிதர்களேயும் கரையேற்றி வைக்கிருர்கள். (1093)

[தியானம்

ராமாஜானகி, சீதாராமா, நாராயணு, கிருபாளு, நீ தானே பரம புருஷார்த்தம். உமது மஹாசக்தியினுல் சகல சராசரங் களும் நடைபெறுகின்றன. இந்திரியம் தேகம், மனம், வாக்கு, புத்தி ஆத்மா எல்லாம் உம்முடையதுதானே. அஹங்காரம், மமகாரம் எல்லாம் ஒழித்து, உமது பாத சரணங்களேயே உயர்ந்த தபஸ்ஸின் பலன் என்று பெரியோர்கள் சொல்லுகிருர்கள். அள

வற்ற கல்யாண குணங்களால் எங்கும் வியாபித்திருக்கும் கேசவப் பெருமானே, பரிசுத்தமானவரே; உம்மை நினைப்பதாலே யாவரையும் மஹா பரிசுத்தமாக்குபவர்; உமது சக்தியினால் உம்மைச் சேர்ந்த பரதன் முதலிய பாகவத பக்தகோடிகளை மகிமை பெறும்படி அனுக்ரஹிப்பவரே, மங்களங்களுக்குள் மங்களமான தேவதையே, விகளே, வரமுக்தி தானத்தில் நிபுணராக விளங்கும் கமலா நாயகா, விஷயாதிகளில் அதிநிவர்த்தியடைந்த மஹா பாகவத கோடிகளில் சிறந்த லக்ஷ்மணன், பரதன், குஹன், நாரதர், வேதவியாஸர், வாத்ஸயர், அஸ்மர், ஸுமந்து, தேவசிரஸ், தேவஸ்தானர் ஆகிய பிரும்ம ரிஷிகளின் விநோதமான பாதங்களில் விழுந்து, அவர்களை முன்னிட்டு, அருணோதய நிறமுள்ள சீதையின் கால் அடிகளை நினைத்துக்கொண்டு, சீதையின் உள் அந்தரங்கத்தில் ஆலயமாக வீற்றிருக்கும் மஹா தீர்த்த ஸ்வரூபியான ஸ்ரீராமனுடைய சரணாரவிந்தங்களை, கருடன் ஆஞ்சநேயரால் அடையாளம் செய்யப்பட்ட நளின பாதங்களை என் கதியாக அடைகிறேன். ஹே ஆஸ்ரிதகல்பதருவே, கமனீய வதனத்தையும், அபய ஹேதுவான உம்முடைய திருக்கரங்களையும், புஷ்கர கடாக்ஷங்களையும் சுக்ராசாரியருக்குக் கொடுத்தது போல என்னையும் அனுக்ரஹிக்கவும், ஸ்வாமி.]

"ராமபிரியனாகிற பரதன் தன் தம்பியான சத்ருக்னனுடன் கூடவிருக்கிறான். பகவத் கைங்கர்ய பூஷணனான பரதன் பாகவத கைங்கர்ய ஸ்ரேஷ்டரான சத்ருக்னனுடன் இருக்கும் போது, ஏன் மங்களங்கள் ஏற்படாது? இது ஒரு ஆச்சர்யமில்லை. அவர்களுடைய மஹாதபஸ்ஸின் பலனாக, வழி மார்க்கங்கள்கூட சுகத்தைக்கொடுக்கும் கல்பதருமாதிரி ஆகிவிட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை." ஸாதுக்கள் பரதனையும் சத்ருக்னனையும் கண்டதும், தங்களுடைய குளிர்ந்த பார்வைகளாலும் மிருதுவானதும் இன்பமான பேச்சுக்களாலும் அவர்களை ஆனந்தப் படுத்தினார்கள். (1094)

பரதனுடைய அதுளித பக்தி பிரேமையைக் கண்டான் சுரலோகாதிபதியான மஹேந்திரன். அவனுக்கு பயம் ஏற்பட்டது. ஒருவேளை கருணாமூர்த்தியாகிற ராமபிரான் ஆஸ்ரித வாத்ஸல்யனாகவிருப்பவன், பரதனுக்கு வசப்பட்டு, தெய்வ காரியத்திற்கு விக்னமாகவும், அயோத்தி திரும்பிவிட்டால், என்ன செய்வது? என்று மனக்கவலையுடனிருந்தான். (1095)

உடனே தன் குருவான பிரஹஸ்பதியை அடைந்து, "ஸ்வாமி, ராமன் ஸர்வஸக்திமான் ஆனபடியாலும் ஸர்வ ஸ்வதந்திரத்தினாலும் அவர் பக்தர்களுக்கு அடிமைப்பட்டவர். அவருடைய தரிசனத்தையே பரமதபஸ்ஸின் பலனாக கருதும் பரதனுக்கு அவர் மிக்க வசப்பட்டுவிடுவார். அதனால் நம் காரியம் தடைப்படும். இதற்கு ஏதாவது உபாயம் செய்து அவர்கள் இருவர்களையும் சந்திக்கவிடாதபடி நாம் செய்துவிட வேண்டும். பரதன் ராம பிரேமையின் ஸாகரம் அல்லவா? ராமனும் பரதனுக்கு பிரேமைரத்ன கௌஸ்துபமணி அன்றோ." (1096)

"என்பிரபு ஸ்ரீராமன் ஸகலருக்கும் நன்மையைப் பயக்க வைக்கும் உதார ஹ்ருதயம் உள்ளவர். அவருடைய திருஷ்டி பதத்தில் உயர்ந்தவர், தாழ்ந்தவர், தேவர்கள், மனிதர்கள் அசுரர்கள், தானவர்கள் என்கிற பாகுபாடுகள் கிடையாது. பரமகிருபாளு, பக்தர்களை துக்கத்தினால் தேயவைக்க சம்மதிக்க மாட்டார். பயோநிதியில் பிறந்த சீதையும், லக்ஷ்மணனும்கூட விருக்கிறார்கள். நடந்துபோன விஷயங்களான ராமனின் வனவாசம், தசரதரின் மரித்தல், பரதனின் ராஜ்யாபிஷேக ஏற்பாடுகள் ஆகிய எல்லாம் இதுவரை இனிதாக நடந்துவிட்டன. ஏதாவது உபாயத்தினால் விபரீதங்கள் மீண்டும் வராதபடி எங்களைக் காக்கவேண்டும்" என்று விக்ஞாபித்துக்கொண்டான் இந்திரன். (1097)

"ஆத்ம ஞானத்தினால் தன்னுடைய புத்தியை அடக்கின வரும் மேதாவியுமான பிரஹஸ்பதி இந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்துக்கொண்டார். ஆயிரம் கண்கள் உள்ள தேவ ராஜனும் என் சிஷ்யனாகவிருந்தும் மதிமயக்கம் அடைந்திருக் கிறானே," என்று நினைத்து மனங்கலங்கினார். அவர் தேவ ராஜனைப் பார்த்து சொல்லலானார். "தேவராஜா, உனக்கு உன் பதவியில் ஆசை பற்றுதலுடனிருப்பதால், பரமாத்மாவின் ஸ்வரூபத்தை சரியாக நீ அறியவில்லை. இந்த பரதன் ஆத்ம ஞானமுள்ளவனாக அழிவில்லாத பரபிரும்மமாகிற ராமபிரும் மத்தை ஸநாதனமாகவும் ராமனுடைய பாதங்களையே மோக்ஷ ஸ்வரூபமாகவும் நினைக்கிறான். அப்பேற்பட்ட பரம உத்தமமான ராமசேவகனிடம் விஷயங்களில் லயிக்கச்செய்யும் மாயை உபயோகப்படாது. அவனுடைய மனம் நொந்துபோனால், அது விபரீத பலன்களையே தரும்." (1098)

"முன்பு நாம் செய்த காரியங்கள் ஸர்வ அந்தர்யாமியாகிற ராமனுடைய அபிப்ராயத்திற்கு ஒத்திருந்தன. (பரமாத்மாவான ராமன் சீதையுடன் சம்பாஷிக்கும்போது பரதனுக்கு அரச முடியைக் கொடுக்க நிச்சயிக்கும்போது, "சீதே, உன் கிருபா திருஷ்டியாகிய ராஜ்யஸ்ரீ அவனிடம் விழட்டும்" என்று சம்பாஷித்துக்கொண்டிருந்த சமயம் நீயும் நானும் சகல தேவர்களும் கேட்டுக்கொண்டிருந்தோம்.) ஆனால் இந்த சமயம் ராமனுடைய அபிப்ராயம் சரியாக தெரியாதபோது. நாமாக ஏதாவது செய்தால் விபரீதத்தில் வந்துமுடியும். சுரேசா, நான் உனக்கு ஒரு உண்மையை உரைக்கிறேன். இந்த ரகுநாதனின் ஸ்வபாவம் அவனுக்கோ அல்லது அவனுடைய உடமையான மஹாலக்ஷ்மியின் அவதாரமாகிய சீதைக்கோ ஏதாவது அபராதம் செய்தால் அவர் பொறுத்துக்கொள்வார்." (1099)

[தியானம்

ராமா, காயத்திரி ராமா, பகவானே, ஜனகருடைய சிரத்தையும் ஜிக்ஞாஸமும் பாக்யமும் யாரால் சொல்லமுடியும்? கர்மத்தின் கரையை அடைந்த ஜனகர் யாக்ஞ்யவல்கியருடைய உபதேசத்தை நினைத்துப்பார்த்தார். சுசியுள்ளவனாகவும், பிரும்ம நாட்டமுடையவராகவும் வித்வானும், மோக்ஷத்தில் விருப்பமுள்ளவரும், சோகம் அற்றவனாக, யாக்ஞ்ய வல்கியரை பிரதக்ஷணம் செய்து நமஸ்கரிப்பவராக, பிரும்ம ஞானத்தை உபதேசமாகப் பெற்றார். அதுபோல சர்மஸ்லோகத்தின் மர்மங்களை என் ஆசார்யரான ஸ்ரீராமனுஜர் திருக்கோஷ்டியூர் நம்பியிடமிருந்து பெற்றார். பிரும்ம ஞானமுள்ளவன் மஹத் தத்வத்தின் ஸ்தானத்தையும் அஹங்காரத்தின் ஸ்தானத்தையும் அஹங்காரத்தின்மேலுள்ள ஸ்தானத்தையும் அடைந்தவனாக ஆவான். நித்யமாகவிருக்கிற அவ்யக்தத்தை அடைந்து அதற்கு மேலான பிரும்மத்தை ஞானத்தில் அறிவான். ஜனன மரண பயமற்றதும், அர்ஜுனனால் ஸதஸத்பரம் என்று சொல்லப்பட்டதும், பிரபஞ்சத்திற்குப் மேலான ஈஸ்வரரை அறிகிறவன் சோகத்தையோ மயக்கத்தையோ அடைகிறதில்லை. சரீரமாகிற க்ஷேத்ரத்தை அறிந்து, உண்மையாகிற ஞானம் என்னும் யாகத்தை உபாஸித்து, ரிஷியாகி, அனாதியும் அழிவற்றதும் சுபமும் மங்களத்தைத் தருவதும் மோக்ஷரூபமான பிரும்மத்தை பரதன், ஜனகர், யாக்ஞ்யவல்கியர், ராமானுஜர், குஹப்பெருமான் ஆகியவர்கள் நன்றாக அறிகிறார்கள். இந்த ஞானத்தை உமை

அடைந்து சங்கரரைப் பூஜை செய்தாள். இந்த ஞானத்தை உமை குஹனுக்கு உபதேசம் செய்தாள். குஹன் மஹேஸ்வரருக்குக் கொடுத்தார். அப்பேற்பட்ட மிகச்சிறந்த ஞானிகளை முன்னிட்டு ராமசீதா, என் பரபிரும்மமே உம்மை சரணம் அடைகிறேன்.]

"ஆனால் அந்த ராமசீதை இருவர்களும் தங்கள் பக்தனுக்கு யாராவது இழைக்கும் அபராதத்தைக் கண்டால், க்ஷமை என்றும் குணத்தை விலக்கி, தண்டத்தை கையில் எடுத்துக் கொண்டு மஹாக்ரோதத்துடன் ஜ்வலிப்பார்கள். பகவான் பக்த பராதீனன் என்கிற விஷயம் வேதத்திலும் இதிஹாஸத்திலும் அடிக்கடி சொல்லப்பட்டு, நானும் உனக்கு அடிக்கடி சொல்லியிருக்கிறேன். பரபிரும்மஞானியாகிற துர்வாஸர்கூட இந்த மகிமையை உலகுக்குக் காட்டுவதற்கு லீலை செய்திருக்கிறது, உனக்கும் நன்றாகத் தெரியும்." (1100)

"ஜகம் முழுவதும் ராம், ராம் என்கிற ஜபத்தைச் செய்து சோகமற்றதாக விளங்குகிறது. அப்பேற்பட்ட ராமஜபம் செய்பவர்களில், ஸ்ரீராமனிடம் மிகப்பிரியம் காட்டுவதில், யாராவது பரதனுக்குச் சமமாகச் சொல்ல முடியுமா?" (1101)

"அமரபதியே, மஹேந்திரனே, ராமனுடைய பக்தனின் திட்டங்களைப் பாழ்படுத்தவேண்டும் என்கிற துராசையை தர்ம நாட்டமுள்ள உன் மனத்திலிருந்து விலக்கிவிடு. அவ்விதம் ஒருபொழுதும் நினைக்காதே. என் வார்த்தையை மீறி ஏதாவது செய்வாயாகில், உனக்கு அபயசஸ்ஸூம் பரலோகத் துக்கமும், சோகத்தை விலக்கமுடியாத கஷ்டமும் கொத்துக் கொத்தாக உன்னைவந்து அடையும்." (1102)

மஹா ஞானியானவரும், மஹா மேதாவியான பிரஹஸ்பதி மீண்டும் உபதேசம் செய்தார். "தேவராஜா, (நான் ஒரு சமயம் ஸ்வயம்பு மனுவை ஆராதித்து ஆத்மவிசாரத்தில் பற்றுதல் உள்ளவனாக அவரிடமிருந்து உபதேசம் பெற்றேன். உலகத்தில் விஷயங்களைவிட ஆத்மா மிகப்பெரியது. வித்வானாகிறவன் பரமாத்மாவின் அம்சங்களான குணங்களைக்கொண்டு, அனுமானத்தினால் பரமாத்மாவைத் தெரிந்துகொள்கிறான். ஆத்மஞானத்தினால் புத்தியையும், புத்தியினால் மனத்தையும், மனத்தால் பொறிகளின் கூட்டத்தையும், சுத்தமாகச் செய்தபின்பு அழிவற்ற பரமாத்மாவை அடைகிறான். கடலில் உள்ள காற்றானது ஓடத்தைக் கரையைச் சேரவைப்பதுபோல நல்ல காரியங்கள் ஒருவனைப் பரமாத்மாவை அடையச்செய்யும்.

இந்த பரதன் உத்தம கர்மத்தினுலும் சிரத்தையாலும் அழிவற்றதும் ஸநாதனமானதும் மோக்ஷ ஸ்வரூபமாகிற ராமனை அடைய விரும்புகிருன்.) இந்த விஷயத்தைப் புத்தியில் ஸ்திரப்படுத்திக்கொள். ஸர்வாந்தர்யாமியாகிற ராமன் பரதனை நன்கு அறிவான். அதனுல் அவனுக்கு ராமன் வசப்பட்டவன். ராமனுடைய எண்ணங்கள் யாவும் பரதனைப் பற்றியும் பரதனுடைய சுகத்தைப் பற்றியதாகவிருக்கும். பக்த பராதீனனுகிற ராமன் தன் பிரிய சேவகர்களை எவனுவது விரோதித்தால், அவன் அவருடைய வைரியாகிவிடுகிருன். அவனை வசப்படுத்த முடியாது.'' (துரியோதனுதிகளை பாண்டவர்களின் நிமித்தம் ''நீங்கள் என் விரோதிகள்'' என்று கிருஷ்ணர் கூறியது ஞாபகமிருக்கட்டும்.) ''பரதனுடைய க்ரோதத்தை நீ சம்பாதித்துவிட்டால், தேவகாரியங்கள் கெட்டுவிடும்.'' (1103)

''ஸகல ஜகத்துக்கும் இருப்பிடமானவரும் எல்லா ஜனங்களையும், சேதனு சேதன வஸ்துக்களை ஸ்ருஷ்டித்த பரமாத்மா, எங்கும் பிரும்ம மயமாக வியாபித்திருக்கிருன். அப்பேற்பட்ட பரமாத்மாவுக்கு வெறுப்பு விருப்பு என்று யாதும் கிடையாது. பாப புண்யங்கள் குணதோஷங்கள் அவரைப்பற்ருது. அப்பேற்பட்ட மஹாத்மா ஞானபூர்வமாகச் செய்யப்படும் கர்மாக்களை உயர்ந்ததாகச் செய்கிருர். நித்யனும் கேவலனுமாயிருக்கிற அந்த அனந்தன் என்னும் பரமாத்மா, தர்மா தர்மங்களையும் புண்ணிய பாபங்களையும், ஸத்யா ஸத்யங்களையும், ஜனன மரணங்களையும் பிராகிருதமாக நிச்சயித்து, அக்ஞானத்தாலும் அவித்யையினுலும் வினைக்குரிய பிறவிகளையும் மிகுந்த அக்ஞானத்தினுல் பிராகிருதமான பல பிறவிகளையும் அவரவர்களின் வினைக்குரிய பிறவிகளையும் கொடுக்கிருன். அவர்கள் பரத்திற்கு பரமான பிரும்மத்தைப் பார்க்கிறதில்லை. இஷ்டா நிஷ்டங்களிலிருந்து விடுபடுகிறதில்லை. அவரவர்கள் தங்கள் கர்மங்களின் பலன்களை அடைகிருர்கள்.'' (1104)

[தியானம்

ஹே ராமா, கௌஸல்யாராமா, அனந்தஶ்ரீ, சரீரப்ருக், ஸூரியன் ஸோமன் ஆகிய இருவர்களை நேத்ரங்களாயும், அக்னியை த்யுதியாகவும் கொண்ட சீதாராமா, திரியம்பகரால் சேவிக்கப்பட்ட ஆத்மா ராமா, கைங்கர்ய லக்ஷ்மியால் ஆராதிக்கப்பட்ட மோக்ஷ நாராயணு, நாரதர், வியாஸர், சுகர், பராசரரால்

ஆராதனம் கீர்த்தனம் செய்யப்பட்ட முனி ராஜவேஷதரா, தீர்த்த நாராயணா, எனக்குக் கிருபை செய்யும்.]

"அவருடைய லீலைகள் மிக்க விநோதம். குணநிதியாகிற அவர் பக்தர்களின் அபிப்ராயப்படி லீலைகளைச் செய்கிறார்." (ஹே பிரபு, உம்முடைய விவகாரங்கள் அனந்தம். பக்தனிடம் அனுகூல பிரியனாகவும், உமது சத்ருவிடம் விருத்தமாகவும் விவகாரம் செய்கிறீர். ஸ்வாமி, நீர் குணரஹிதர், குணாதீதர், யாவற்றாலும் பற்றப்படாதவர். மானம் அவமானம் யாவும் இல்லாதவர். சதா ஆனந்தமே யோனியாகவும், ரஸமாகவும் உள்ளவர்" என்று பகவான் பிரஹஸ்பதி கைகளை அஞ்சலி செய்துகொண்டு சொன்னார்.) "இந்திரா, இப்படிப்பட்ட பகவான் நாராயணர் பக்தர்களின் வேண்டுகோளுக்கிரங்கி, ஸ்ரீராமனாகப் பூமியில் அவதரித்து ஸகல கல்யாண குணங்களோடு விளங்குகிறார்." (1105)

"இப்பேற்பட்ட ஸ்ரீராமர் சர்வத்ரகாலமும் பக்த பராதீனன். வேதபுராணங்கள், ஸாதுக்கள், தேவதைகள் யாவரும் இந்த உண்மைக்கு சாக்ஷி. ஆகையினால், மஹேந்திரா, நீ ராம பக்தர்களிடம் அடங்கவேண்டும். குடிலமான புத்தியை அவர்களிடம் செலுத்தக்கூடாது. ஆகையால் நீ பரதனுடைய பாதங்களில் அந்தரங்கமான பக்தியைச் செலுத்து." (1106)

"என் பிரிய இந்திரா, (தர்ம நாட்டமுள்ளவனே,) சசீபதி, என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் ஸ்வபாவமாக பிறர் நன்மைகளை நாடுபவர். இதனால் பிறர் கஷ்டங்களைப் பொறுக்கமாட்டார். பரமதயாளு. அவ்விதமிருக்கும்போது, தேவராஜனே, இந்த பரதனே அவருடைய பக்தகோடிகளுள் சிரோண்மணி அதனால் அவன் தேவகாரியத்திற்கு குறுக்கே நிற்கமாட்டான்." (1107)

"அது மாத்திரமல்ல. என் பிரபு ஸ்ரீ ரகுகுலதிலகன் ஸத்யஸந்தன். அவருடைய ஸத்யம் தேவர்களுக்கு ஹிதத்தைத் தரக்கூடியது. மஹாபாகவத சிரோண்மணியாகிற பரதன் ஸ்ரீராமனின் மனோபீஷ்டத்திற்கு அனுசரணையாகச் செய்வான். அத்யந்த ஆசையினால் நீ வீணாக கலவரப்படுகிறாய். விஷய போகத்தில் ஈடுபட்ட நீ ஆத்மவிசாரமுள்ள பரதனைக்கண்டு வியாகுலம் அடைகிறாய். ஆகையினால் நீ பரதனை அற்ப மனிதனைப்போல எண்ணாமல், மோஹத்திலிருந்து விடுபட்டு பரதனிடம் தோஷம் ஒன்றையும் காணாமல், ப்ரீதி செய்." (1108)

சுரர்களில் மிக்க ஸ்ரேஷ்டரான மஹேந்திரன், சசீபதி, சத்க்ருது, பாகஸாஸனன், தன் குருவும் மேதாவியுமான

பிரஹஸ்பதியிடமிருந்து இவ்விதம் கேட்டான். இதைக் கேட்டதும் இந்திரனுக்கு ஆனந்தம் ஏற்பட்டது. அதிக ஆனந்தத்தால் பாரிஜாத கற்பகமலர்களை உதார ஹ்ருதயத்துடன் பரத சத்ருக்னர்களின் மீது வாரி இறைத்தான். தன்னுடன் கூட விருந்த மற்ற லோகபாலர்களிடமும், அவர்களின் பத்னி களிடமும், பரதனின் பக்தி ப்ரேமையையும் மேன்மையையும் விளக்கிச் சொன்னான். (1109)

[தியானம்

ஹே கமலாம்பிகே, சிவே, லலிதே, ஸ்ரீயப்பதியான ராம சஹிதே, த்ரைலோக்ய சுந்தரி, சுரரிபுமர்தனி, சீதே, ரமா வாணிசஹித அம்பிகே, மஹாகாளி, மஹாலக்ஷ்மி மஹாசரஸ்வதி யின் சேர்க்கைக் கூட்டமாக விளங்கும் காமேஸ்வரி, சிவஸந்நி தானத்தில் ஆளும் பார்வதி தேவியைப்போல எனக்கு காக்ஷி கொடுக்கும் அம்மா, திரிபுவனரக்ஷகி, என்னை ஸம்ரக்ஷி. குருவாகிற குஹனால் ஆராதிக்கப்பட்ட மஹா திரிபுரசுந்தரி, ராமனுக்கு வனத்திலும் உத்தம ராஜபோகங்களைக் கொடுத்த சீதே, என் ஆனந்தவல்லி, அம்ருதவல்லி, கற்பகவல்லி, எனக்கும் பரதனுக்கும் ஸ்ரீயப்பதியான ராமச்சந்திரனுக்கும் சுகத்தைத் தரும் சந்திரமுகி, உன் ராஜீவலோசனங்களால் என்னை அம்ருதகடாக்ஷம் செய். சீதையை அனன்ய பக்தியுடன் உபாஸித்து, கமலே, நீ பூஜை செய்யும் ஸ்ரீராம பாதங்களை சிவசக்தி ஐக்யமாகவிருக்கும் உன்னதமான ஸாயுஜ்யத்தை நீ எனக்குக் கொடு. என் மனது, வாக்கு, செய்கைகள், யாவும் சஞ் சலமான பக்தியில்லாமல், பயங்கள் யாவும் விலகி, ராம பக்தனாக வும் நாராயண பிரியனாகவும், மஹாலக்ஷ்மி ஸந்நிதனாகவும் ஆக வேண்டும் அம்மா. பதினான்கு அங்கங்களோடு கூடிய சிம்சுமார பிரஜாபதியை முன்னிட்டு நான் ராமபாதங்களை ஆஸ்ரயிக்கிறேன். ஹே அபயனே, தர்மத்தை விலக்ஷணமாக வுள்ள தர்ம நந்தினி, ஸத்யத்தை ஆடையாகவும், க்ஷமையை மஹாகுணமாகவும் பிரும்ம பலத்தைக்கொண்ட கமலா, என்னைக் காப்பாற்று.]

இந்த விதிப்படி பரதன் சீதாராம பாதங்களை தியானித்துக் கொண்டு வழிநடந்து சென்றான். அவனுடைய ஹ்ருதயத்தி லிருந்து பொங்கிவரும் ப்ரேமை ஏக அகண்டரஸமாக வருவதைப் பார்த்த ஸித்த முனிகணங்கள் ஆச்சர்யப்பட்டார்கள். ஒவ்வொரு தடவையும் ராம், சீதா, என்று சொல்லிக்கொண்டு

தீர்க்கமான மூச்சுவிட்டுக்கொண்டும், அவன் சென்ற சமயம், ஒவ்வொரு திக்கிலிருந்தும் அந்த மங்கள சப்தங்கள் ஒலித்துப் பரவின. (1110)

அவனுடைய பூர்ணமான அன்பிலிருந்து உதயமாகும் புண்ய சப்தங்களைக் கேட்டதும், வஜ்ரம்போல கடினமான இரும்பு, கல் முதலியவை வெண்ணெயைப்போல உருகிக் கொண்டு பாபங்கள், பாம்பானது தோலினால் விடப்பட்டது போல, பெரிய புண்யத்தினால் விடப்பட்டதுபோல பரதன் விளங்கினான். இதைக்கண்டதும் அயோத்யா வாசிகளும் அதி அன்பினால் குளிர்ந்து, (எவ்விதம் ஜலத்திற்குள்ளாவது அல்லது ஸூர்யனுக்கு எதிராலாவது "பத்ரம்நः" என்கிற ருக்ஸம்ஹிதா பாதத்தை எவன் படிப்பானோ, அவனுடைய பாபங்கள் எவ்விதம் நாசமடையுமோ, அதுபோல) அவர்களும் பாவத்திலிருந்து விடுபட்டு, அதிசுசியாக விளங்கினார்கள். அப்போது அவர்கள் தங்குவதற்கும் இளைப்பாறுவதற்கும் யமுனாநதி தீரம் வந்தது. (பகவானுடைய திருவடிகளின் ஸம்பந்தத்தால் மிக்க ஒளியை அடைந்து,) உத்தமமான ஜலத்தைக்கொண்ட யமுனாநதியாகிற காளிந்தி, ஒன்றிலும் பற்றாத தாமரை இலையானது ஜலத்தினால் ஸ்பர்சிக்கப்பட்டும் பற்றப்படாததுபோல பரதனுடைய புண்ய மான புஷ்கரலோசனங்கள் சீதாராம விரஹதாபத்தால் ஏற் பட்ட கண்ணீர் ஜலத்தைவிட்ட மணியமாக விருந்தனவையாகப் பார்த்தாள். (1111)

மஹாபாக்யவதி காளிந்தியை, தரிசித்து பரதனும் தனக்குள் நினைத்துக்கொண்டான். என் பிரபு ரகுவரன் இந்த சியாமள நிறமுள்ள நீலமேக மணிதீபன், இந்த யமுனையின் ஜலம் போல கருமேக கார்வண்ணன். "என் தேவியாகிற சிதை சியாமை. இந்த இருவர்களுடைய பிரிவினால் என் மனம் தவிக்கிறேன்" என்று வாய்விட்டு பரதன் அலறினான். இதைக் கண்ட பரத சமாஜத்தினர்களும் மிக்க துக்கத்தை அடைந்து, அவர்களும் அழ ஆரம்பித்தார்கள். இவ்விதம் தடைப்பட்ட பயணத்தை உடைய பரதனுக்கு விவேக ஞானம் மீண்டும் வந்து, ஏதாவது ஒரு சுத்த கர்மாவினால் தங்கள் தடையைப் போக்கு வோம், என நினைப்பவனாக, ஸ்ரீ சீதாராமனை எவ்வளவு சீக்கிரம் தரிசனம் செய்யலாமோ, அப்போதுதான் இந்த துக்கம் நாசமடையும் என்கிற எண்ணத்திற்கு முடிவு வந்தான். (1112)

அன்று அவர்கள் பூராவும் யமுனா நதிதீரத்தில் வசித்தார்கள். சமயத்திற்கேற்ப ஆகாராதிகளை உண்டார்கள். அன்று இரவே

நிஷாதராஜனுகிற குஹன் யமுனையைத் தாண்ட வைக்கும் தோணிகளை கணக்கில்லாமல் ஏற்பாடு செய்தான். அவனுடைய ஏற்பாடுகளை யாரால் பூர்ணமாக வர்ணிக்க முடியும்? (1113)

விடிந்ததும் எல்லா ஜனங்களும் ஓடங்களில் ஏறிக் கொண்டார்கள். ராமசகாவாகிற குஹப்பெருமான் ஸ்ரீராம கைங்கரியத்தில் தான் ஈடுபட்டதிற்கு சந்தோஷப்பட்டான். பரதனும் சத்ருக்னனும் யமுனையில் தீர்த்தமாடி குஹப்பெருமானுடன் நதியைக் கடந்தார்கள். (1114)

அந்த ஊர் வலத்தின் முன் பாகத்தில் ஸ்ரேஷ்டதமரான வஸிஷ்டாதி முனிவர்கள் இருந்தார்கள். அவர்களுக்குப்பின் இரு ராஜகுமாரர்களும் சாதாரண ஆடை ஆபரணங்களுடன் பின் சென்றுகொண்டிருந்தார்கள். (1115)

அவர்களுடன் சேவகர்களும் மந்திரி குமாரர்களும் மித்ரர்களும் வந்துகொண்டிருந்தார்கள். எல்லோரும் புண்யத்தைத் தரும் லக்ஷ்மண சீதா ரகுநாதன் இவர்களைப்பற்றியே தியானம் செய்துகொண்டும் பேசிக்கொண்டும் வந்தார்கள். எந்த எந்த இடங்களில் ராமன் இறங்கி, தங்கி இளைப்பாறினுரோ, அந்த இடங்களைப் பிரேமையுடன் நமஸ்கரித்துக்கொண்டு சென்றூர்கள். (1116)

வழியில் வசிக்கும் ஸ்திரிபுருஷர்கள் இதைக்கேட்டு தங்கள் வேலைகளை உதறித்தள்ளிவிட்டு பரத சத்ருக்னுதிகளைக் காண ஓடிவந்தார்கள். அவர்களும் இவர்களுடைய பக்தி ப்ரேமையைக் கண்டு, அதிக ஆனந்தமடைந்து, அவர்களின் தரிசனத்தை அவர்கள் ஜன்மத்தின் பரம லாபமாகக் கருதினுர்கள். (1117)

கிராமத்து ஸ்திரீகள் ப்ரேமை பூர்வமாக ஒருவருக்கொருவர் சம்பாஷித்துக்கொண்டு வந்தார்கள். ஒருவள் சொன்னுள் "ஹே சகி, இந்த இருவர்களையும் பார்த்தால் ராமலக்ஷ்மணர்கள் மாதிரியே யிருக்கிருர்கள். அவர்களுடைய எளிய உடை; மனோ பாவங்கள், சரீரத்தின் நிறம், சாந்தி எல்லாம் அவர்கள் மாதிரியே இருக்கின்றன. இவர்களுடைய சீலமான நடத்தையும் ஸஹஜ ஸ்நேகமும் அவர்கள் மாதிரி இணைபிரியாத நட்பும், (பகவத் பாகவத சேர்க்கையைப் போல) ஒன்றுகக்கொண்டு இணைபிரியாத சேர்க்கை ஸ்நேகம் போலவிருக்கிறது." (1118)

"ஆனுல் வேஷம் ஒன்றுகவிருந்தாலும் சீதையைப் போல ஒரு பெண்ணும் இவர்களிடம் காணப்படவில்லை. மேலும் இவர்கள் சதுரங்க சேனைகளுடன் வந்திருக்கிருர்கள். இவர்களுடைய முகம் சந்தோஷத்தால் பிரஸன்னமாக இல்லை. ஏதோ

துக்க பாரத்தினல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறதாகத் தோன்றுகிறது. அதனல் இவர்கள் ராமலக்ஷ்மணர்களாக யிருக்க முடியாது என்று சந்தேகப்படவேண்டியதாயிருக்கிறது.'' (1119)

[தியானம்

ஹே காமாக்ஷி, கருணு கடாக்ஷி பரதனுடைய சிந்தனைகள், அந்த பகவானுடைய நிர்ஹேதுக கிருபையையும், அவைகளைக் காட்டிலும் மிகப் பெரியதான ஆசார்ய கிருபையையும் அருளையும் அல்லவோ என் மனதில் சித்திரிக்கின்றன. திரிவிக்ரமனுரின் பிரபாவத்தை ஜாம்பவான் ''எண்திசையுமறிய இயம்புவேன்'' என்று பெருமிடறு செய்தது போல, ஆசார்ய ஹ்ருதயத்தில் ''நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினன்,'' என் அப்பன், என் ஐயன், மலையைக் குழித்து, நீரை நிறுத்துவாரைப் போல, அதில் தேங்கின மடுக்கள் போல அல்லவா ராம சீதா லக்ஷ்மண அர்ச்சாவதாரம் விளங்குகிறது. என் நெஞ்சில் இருள் படியும் படியான திருமேனியைத் தரிசித்த பரத சத்ருக்னனுழ்வான் எம்பெருமானுடைய நிரதிசய கிருபாபிரபாவத்தை விட ஆழ்வாராதிகளான மதுரகவியாழ்வார், நம்மாழ்வார் நாதமுனிகள், ஸ்ரீமத் ராமானுஜர் ஆகிய என் பூர்வாசாரியர்கள் மயர்வறமதி நலமருளினன் என்னும்படி அருள்வல்ல வருள்புரியும் பகவானுடைய கிருபையைவிட பெரிதாகவிருக்கிறது. ஈஸ்வரன் விட்ட ஆத்மாக்களையும் அவர்களுடைய துர்க்கதியையும் கண்டு திருத்த முற்பட்டபடியாலே பரத சத்ருக்னுதி அருள் பிரதிபக்ஷமன்றே; ஊரும் நாடும் உலகமும் தம்மைப் போல அவர்களுடைய பேறும் தார்களுமே பிதற்ற பண்ணுற்ருயிற்று'' என்கிருப்போல, அடியார்களுடைய அருள் ஸர்வாதிகாரம் பெற்று தேவு மற்றரியாத என் போன்றவர்களுக்கு வாய்க்கப் பெறும் மகாபாக்கியத்தை என்னவென்று சொல்வேன்? இதுவல்லவோ உத்தம உபதேசம். இதுதான் ஸித்ததர்ம விதி. இதுதான் அனுஷ்டானங்கள். இதுதான் அகமொழித்துக் கொடுத்து, அமுதுபடியும். அப்பேற்பட்ட மஹா காருணிகர்களின் அக்ரஜராக விளங்கும் பரத சத்ருக்னுதிகளை என் ஆசார்ய பிரிய ஹ்ருதயத்தால் வணங்கி, அம்மா, அப்பா என்று சொல்லி உன்னை வந்தடைகிறேன்.]

அந்த சகியினுடைய தர்க்கபுத்தி மற்ற ஸ்திரிகளுக்குப் பிடித்திருந்தது. அவர்கள் அந்த ஸ்திரியைப் பார்த்து ''இவள் ரொம்ப கெட்டிக்காரி; இவளுடைய புத்தி சாதுர்யத்திற்கு

ஈடாக வேறு ஒருவரும் யாரும் இருக்கமுடியாது.'' இவ்விதம் அவளைப் புகழ்ந்து கொண்டு, "அவளுடைய வசனங்கள் ஸத்யம்'' என்று ஒருத்தி மற்றவர்களிடம் சொன்னாள். (1120)

அவள் அதிபிரேமையுடன் எல்லா விருத்தாந்தங்களைச் சொன்னாள். எவ்விதம் ராமனுக்கு ராஜதிலகம் நடைபெறாமல் பங்கமானது, எவ்விதம் அவர் வனத்திற்கு எழுந்தருளினது, என்கிற விருத்தாந்தங்கள் எல்லாவற்றையும் கூறி முடித்தாள். அதன் பிறகு பரத சத்ருக்னனுடைய தியாக புத்தியையும் ப்ரேமைபூர்வமான சில ஸ்நேகத்தையும் ஸௌபாக்ய விலாஸங்களையும் ஆசார்ய அருளையும், ஸர்வாதிகாரம் படைத்த மஹா கிருபையையும் புகழ்ந்து சொல்ல ஆரம்பித்தாள். (1121)

அவள் மீண்டும் சொல்ல ஆரம்பித்தாள். "என் பிரியே, இதோ பார். இந்த மஹா பாக்யவானான பரதன் தன் பிதாவினால் மனப்பூர்வமாக கொடுக்கப்பட்ட ராஜ்யஶ்ரீயை தியாகம் செய்து விட்டு, தீனமான ஸ்திதி அடைந்தவனாக, கால் நடையாக ராமனைப் பார்த்து சந்தித்து, ராஜ்ய பட்டாபிஷேகத்தை அடையும்படி கெஞ்சுவதற்குப் போகிறான். இப்பேற்பட்ட தத்வ உபதேசம் செய்யும் பரதனுக்கு ஈடு யாராலும் இருக்கக்கூடுமா?'' (1122)

"பரதனுடைய ப்ராத்ரு ஸ்நேகம், பக்தி ஆசரணைகள் ஸ்மரித்தவுடனேயே ஸகலதோஷங்களைப் போக்கும். அவனுடைய மஹா தியாகபுத்தியை நினைத்தால், ஸம்சார துக்கங்கள் யாவும் விலகும். என் பிரிய ஸகி, அவனுடைய பாதங்கள் கல்பதரு. அந்த பாதங்களின் ஸம்பந்தம் எதைத்தான் கொடுக்காது? அந்த சுகத்தின் வரம்புகளை யாரால் அறியமுடியும்? என் பிரபு உத்தம மரியாதை புருஷோத்தமரான ராமனுக்கு இப்பேற்பட்ட தம்பி ஏன் இருக்கக்கூடாது?'' (1123)

"தம்பியுடன் கூடிய பரதப்பெருமானை கண்ணாரக்கண்ட நாமனைவரும் தன்னியர் ஆனோம். பெரும்பேறு பெற்றவர்களில் நாமும் சேர்ந்து கொண்டோம்.'' இவ்வாறு கூறுகின்றவர்களாய் அந்தப் பெண்கள் எல்லாரும், பரதனுடைய நற்பண்புகளைக் கண்டும், காதால் கேட்டும், மனமுருகி வருத்தத்தோடு சொல்லலாயினர். "அந்தோ! இவ்வளவு உத்தமப்பிறவியாகிய ஒரு பிள்ளை கைகேயிக்குத் தகுந்த பிள்ளை அல்ல!'' (1124)

[கருத்து: இந்த பரதன் சத்ருக்னனின் பாதஸம்பந்தம் நமக்கு ஸர்வாசாபூரகம். வரமுக்தியைத் தருவது. அவைகளின் ஸம்பந்தத்தால் பேரானந்த சுகமாகிற ராம பாதங்களை நாம்

அடையலாம். நித்யகல்யாணி, அவைகளுடைய குளிர்ந்த கடாக்ஷங்கள் தோஷத்தையும் குணஹீனத்தையும் குணஹானியையும் போக்கி, பகவானுடைய அங்கீகாரத்திற்கு ஹேதுவாக விருக்கின்றன. பகவானும் "ஆஸ்ரித வாத்ஸல்ய ஜலதே" என்கிற குணத்திற்கு ஏற்ப பகவானுடைய கிருபையாகிற முலைப்பாலை கடுப்பாலே தரையிலே பீச்சுவாரைப் போலே அருளிக்கொண்டு நிற்கின்றன. இப்பேற்பட்ட மஹா புண்யவான்களாகிய ஆசார்ய கிருபா கடாக்ஷத்தினுல் நாம் உய்விக்கப் பெற்ருேம். ஸ்ரீராமனுடைய தாளினைக்கீழ் புகுந்தோம். அடிமைக்களன்பு செய்வித்து, ஸேவைக்கு எளிமையும் இனிமையும் செய்விக்கப் பெற்ருேம். அப்பேற்பட்ட குணக்ருத தாஸ்யம் பரத சத்ருக்னுதிகளால் நமக்கு கிடைத்திருக்கிறது. ஆகையால் நாம் நம்முடைய ஜன்மத்தின் லாபத்தை அடைந்தோம். மஹா பாக்யபதிகளாக ஆகி, பரதகாமினியாகவிருக்கும் ராமனுடைய வாத்ஸல்யத்திற்கு கிருதலக்ஷணர்களாக நாம் அமைக்கப் பெற்ருேம். "இவ்விதம் ஸ்வரூப பிரயுக்தமான தாஸ்ய பக்தியை அடைந்த பரத நம்பியினுடைய குணங்களின் புகழைக் கேட்ட ஒருத்தி, பரதனுடைய நிஜ நிர்வாண சுகத்தைக் கொடுக்கும் ராமபக்தியையும் அவனுடைய தியாகத்தையும் கண்டு ஸ்திரிகள் யாவரும் வருத்தப்பட்டு சொல்ல ஆரம்பித்தார்கள். "இப்பேற்பட்ட புத்ரன் கைகேயிக்கு எவ்விதம் அவதரித்தான்?]

மற்ருெருத்தி சொல்ல ஆரம்பித்தாள். "அம்மா இதில் ஏன் ராணியாகிற கைகேயியுக்குத் தோஷம் கற்பிக்கிருய்? விதியினுல் பண்ணப்பட்டது. நமக்கு லாபகரமாக ஏற்பட்டது. நமக்கு வேதங்கள், புராணங்கள் ஆசார அனுஷ்டானங்கள் தெரியுமா? (பகவானுடைய நிர்ஹேதுக கிருபா பிரபாவமாகிற "எண்திசையுமறிய இயம்புவேன், நபயம் வித்யே கிஞ்சித் ஜிதம் பகவதா ஜகத்" என்கிறபடி கால் நடையாக ஊர்ந்து செல்லும் திருவிக்ரமனுடைய சக்தி பிரபாவம் மிக்க சுலபமாக நம்மைத் தேடிக்கொண்டு வருமா? "நம் நெஞ்சுகள் நிற்கப் பெற்று நிறுத்தினேம்," "தொண்டீரெல்லீரும் வாரீர்" என்கிறபடி ஆழ்வார் குழாங்களை அழைத்து அவர்களின் நெஞ்சில் பதித்த மாதிரி,) நம் நெஞ்சுகளில் ராம பாதங்கள் பதிக்கப்பெற்ருேம். ஹீன குலத்தைச் சார்ந்த நமக்கும் பேரருளாளன் கிருபையல்லவோ கிட்டியது. (பகவானைக் காணப் பெரும் பாக்யம் ஆசார்ய ஹ்ருதயம் ஆகிய இரண்டும் கிடைக்கப்பெருத வஸ்துக்கள். அவைகளுக்கு முன்பு ஸகலமும் துச்சம்.) (1125)

[தியானம்

ஹே ராமா, சீதா ஸர்வாத்மன், நாராயணு, பராத்பரா, பரமாத்மன், புண்டரீகாக்ஷா, மாதவா, ஹிரண்யகர்ப்பா, அனங்கஜா, ஸம்சாரத்தை உத்தாரணம் செய்வதற்கு அவதரித்த ஸ்ரீராமா, உன்னை புராணர் என்றும் அநிருத்தர் என்றும் அச்யுதன் என்றும் சொல்லுகிறுர்கள். பாஞ்சராத்ராதிகள் உன்னை வாஸுதேவர் என்றும் அநிருத்தர், பிரத்யும்னன் சங்கர்ஷணர் என்றும் சொல்கிறுர்கள். நான் ஸம்சாரதாபம் பொறுக்கமாட்டாமல் உன்னை என் கதியாக நமஸ்கரிக்கிறேன். ஹே விஸ்வகர்மன், விஸ்வாத்மன், விஸ்வஸம்பவரே, உன் கால்களால் பிருத்வியையும், சிரஸ்ஸுகளால் எங்கும் வியாபித்திருக்கும் ஸர்வமச்யுதன் நீர். உம்மை உத்தங்கர் அனன்ய பக்தியுடன் ஸர்வ கருணை நிறந்த மனத்துடனும் குரு கடாக்ஷம் பெற்றவரும் உம்முடைய மகத்தான ரூபமைஸ்வர்யம் நிறைந்த மங்கள வடிவை (சரீரத்தை)ப் பார்த்த மாதிரி எனக்கு எப்போது எவ்விதம் சாக்ஷாத்கரிக்கப் போகிறீர்? உன் ஸ்வரூபத்திற்கும் என் பலத்திற்கும் தகுந்த உபாயம் பரதன் முதலான வைஷ்ணவ தாஸர்கள் தான். நீர் பகவத்சேஷத்வம் பெற்றிருந்தாலும், பரதன் உத்தங்கர், மார்க்கண்டேயர், ஆஞ்சநேயாதிகளைப் போல, உம்முடைய பாதங்களையே ஸ்வரூபமாகவும் பலமாகவும் உபாயமாகவும் ஆக்கிக்கொண்டார்கள். பகவத் கைங்கர்யம், பாகவத கைங்கர்யம், ஆகியவைகளுள் ஸதாசாரியன் திருவடிகளே ஸ்வரூபம், பலன்கள், ஆகிய இரண்டிற்கும் பொருந்தின உபாயம் என்று மதுரகவி ஆழ்வார் "மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே, தேவுமற்றறியன் (கண்ணிநுண் சிறுத்தாம்பில் சொல்லிய படி) ஸ்வாசார்யரான நம்மாழ்வாருடைய திருவடிகளையே ப்ராப்யமும் ப்ராபகமுமாகப் பற்றி ஒரே நிலையில் நின்றுரே. அது போல வடுகநம்பி கூரத்தாழ்வானை உபாய உபேயங்களிரண்டிற்கும் உடையவர் திருவடிகளே என்று பிரதிபத்தி செய்து, எம்பெருமானைக்கூட கண்ணெடுத்தும் பாராத மஹா புண்ய ஆசார்யர்கள் பிரதமாவதியிலும் சரமாவதியிலும் கைவித்த நின்ற இவர்கள் இருகரையர் போல நிற்கவில்லையா? அப்படிப்பட்ட சிறந்த உதாரணங்களால் விளங்குகின்ற பரதன் ராமனைத் தேடிப் போன ஸமயம், உமை சதா சிவனிடம் அனன்ய பக்தி செலுத்துவது போல விளக்கிக் காட்டினுன். காமம், க்ரோதம், லோபம் மோஹம், மதம், மஹாமோகம் என்கிற ஆறு வ்ருஷர்களை வென்ருன். கர்வம், அடங்காமை, அஹங்காரம், பொருமை, த்ரோஹம்

கடுஞ்செயல், க்ரூரத் தன்மை ஆகிய ஏழு க்ஷத்திரிய குணங்களை யும் பரதன் ஜயித்தான். க்ருரனாக விருத்தல், வஞ்சனை, மாயை, ரஹஸ்யமாகக் கெடுதலைச் செய்தல், டம்பம், ருஜுவாக இல்லாத ததைக் கோட் சொல்வது, பொய் என்னும் வைஸ்ய ஜாதிக்குணங் களையும்வென்றான். தாஹம், பசி, நித்திரை, சோம்பல், அருவருப் பின்மை, இரக்கமின்மை, மனோவியாதி, துக்கம், தவறுதல், ஸத்வம் குறைந்திருப்பது, பயம், மனத்தளர்ச்சி, அறியாமை, பாப எண்ணம், கோபம், ஆசை, சிரத்தையின்மை, உறுதி யின்மை, ஆலோசியாமை, அசுத்தனாக விருத்தல், மலினமாக விருத்தல் ஆகிய இருபத்தோரு சூத்ர ஜாதிக்குரிய தோஷங்களை அவன் வென்றான். ஸாத்விகனும் சுத்தனும் ஏகபராயணனும் கோபமற்றவனாகவும் ஆத்மதத்வத்தில் நிலைத்து நிற்கும் பரதனை நமஸ்கரித்து ஸதாசார்யனுடைய அனுக்ரஹத்தை அடைய விரும்புகிறேன். பயத்திலிருந்து விலகி, தைரியத்தில் நிலை பெற்ற வனாக, சஞ்சலமான மனத்தை அடக்கி, ராமபக்தனாக இருக்க விரும்புகிறேன்.]

"நாம் எல்லோரும் காட்டுவாஸிகள். மற்றவர்கள் குருஞானம் ஸதாசார்ய சம்பத் இல்லாதவர்கள். அதிலும் ஸ்திரி ஜாதியினர்கள். இப்பேற்பட்ட மலினமான பிறப்பை உடைய நமக்கு மஹத்தான புண்யங்களின் கோடிச் சேர்க்கைகளின் பலனாகவல்லவா இந்த பரத விஜயத்தினால், பரத தர்சனம் நமக்கு கிடைத்தது. துவர்ப்பு மண்உள்ள பிரதேசத்திலோ பாலைவனத் திலோ கற்பதருபோலவும், பாலைவனத்தில் உத்தங்க மேகங்களைப் போலவும்கிருபாரஸ பூர்ணமாக வர்ஷிக்கும் ஜல அம்ருதம் மாதிரி அல்லவா இவர்கள் வந்திருக்கிறார்கள்" (ஸ்ரீலலிதா தேவியை பூஜை செய்பவனுக்கு ஸம்க்ஷோபண சக்தியைப் போல அல்லவாசித்தித்திருக்கிறது." (1126)

"என் பிரியமான சகி, பரத தரிசனத்தால் பாதைகளில் வசிக்கும் ஜனங்கள் கூட லோகத்தில் மஹா பாக்யம் செய்து விட்டவர்களாகஆகிவிட்டார்கள். தெய்வ கடாக்ஷத்தால் சிங்களத் தீவில் வசிக்கும் ஜனங்களுக்கு பிரயாகை க்ஷேத்ரத்தின் தீர்த்த ஸ்நான பலன் சுலபமாக கிடைத்து விட்டது போல விருக்கிறது." (1127)

இந்த விதமாக தங்கள் குணங்களின் வாயிலாக பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய நிர்ஹேதுக கிருபையை அவர்கள் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். பரதனே ஸதாசார்ய சம்பத்தை அடைந்தவனாக, (ராம பாதங்களை உபாயம் உபேயம் என்கிறதை

ஸ்மரிப்பவனாக,) தன் பிரயாணத்தை நடத்திக் கொண்டிருந்தான். அவனுடன் கூட வந்தவர்கள் சகல நியமங்களுடன் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து விட்டு சாவித்திரி, சூரியன் முதலிய தேவதைகளையும், நாரதர் ஆகிய பிரும்ம ரிஷிகளையும் பித்ருக்களையும் பூஜை செய்து, கோயில்களையும் தர்சனம் செய்து கொண்டு பரதன் தன் பரிவாரங்களுடன் சென்று கொண்டிருந்தான். (1128)

ஒவ்வொரு இடத்தில் மனத்தில் தெய்வகிருபையை வேண்டியவனாக, "சீதாராம பாதங்களில் என் ஆசை பரிபூர்ணமாகவிருக்கவேண்டும்" என்று வரதானமாகக் கேட்டுக் கொண்டுவந்தான். அந்த திவ்ய பாதங்களின் உத்தம கைங்கர்யத்தை வரத்தின் பலனாகக் கேட்டுக்கொண்டான். போகும் வழியில் பீல், கோல் ஆகிய வேடுவ ஜாதிகளையும் வனவாசிகளையும் வானப்ரஸ்த பிரும்மசாரிகளையும், ஸந்நியாசிகளையும் வைராக்யமடைந்தவர்களையும் தர்சனம் செய்து கொண்டு பரதன் சென்றான். (1129)

ஒவ்வொருவரிடத்திலும் கைகூப்பிக் கொண்டு என் பிரபு சீதாராமன் லக்ஷ்மணன் சகிதம் எந்த வனத்தில் இருக்கிறார், ("கமலபதே, நீ எங்கிருக்கிறாய்?) வைதேஹி எங்கு இருக்கிறாள்?" என்று பார்த்தவர்களைக் கேட்ட வண்ணம் ஒவ்வொருவரிடத்திலும் அவர்களைப் பற்றிக் கேட்டான். அவர்கள் ராமசீதா விருத்தாந்தங்களையும் லக்ஷ்மணனுடைய பாதுகாப்பையும் விளக்கிச் சொல்லி, பரதனுக்கு சுகத்தைக் கொடுத்தார்கள். அவர்களும் பரதனைக் கண்டு, தங்கள் ஜன்மங்களின் பிராப்ய பலன்களை அடைந்தார்கள். (1130)

[தியானம்

ஹே ராமாசீதா, லக்ஷ்மணா, பரதன் உன் பாதுகைளை நினைத்து நடந்து போவதைப் பார்த்தால், என் பிரபு ஸ்ரீமான் தீர்க்க பாஹுக்களைக் கொண்டவர், தமஸঃ பரம் என்கிற வேதாத்மாவைக் காண்பித்தவர், பராசரருக்கு உமா சங்கரரால் புத்ரனாக லோகத்தின் ஹிதத்திற்காகக் கொடுக்கப்பட்ட பகவான் வேத வியாஸர், மஹா பாரதத்தை இயற்றிவிட்டு, கைகளை உயரத் தூக்கிக்கொண்டு "நான் உரக்கச் சொல்கிறேன்; ஆயிரக்கணக்கான ஸந்தோஷங்களும் துக்கங்களும் மூடர்களை அடைகின்றன பண்டிதனை அடைகிறதில்லை; என்னுடைய வார்த்தைகளை ஒருவரும் கேட்கவில்லை; தர்மத்தால் பொருள் இன்பமும் உண்டாகின்றன. அந்த தர்மம் ஏன் அனுஷ்டிக்கப்படவில்லை? காமத்தினாலாவது, பயத்தினாலாவது ஆசையினாலாவது ஜீவனத்தின்

நிமித்தமாவது தர்மத்தை ஒருக்காலும் விடத்தக்கதில்லை. தர்மம் நித்யமானது. சுகதுக்கங்களோ அநித்யம் பரமாத்மாவினால் கொடுக்கப்பட்ட ஜீவன் நித்யமானது. அதற்கு ஹேதுவாகிற காரணமோ அநித்யமானது. அப்படிப்பட்ட உத்தம ஜீவனை ஆசார்ய கைங்கர்யம் பிராப்யம் என்று நிஷ்கரிக்கப்பட்டால், அந்த கைங்கர்யத்திற்கு பிராபகமான ஆசார்யனை அடைய வேண்டும். அப்பேறபட்ட ஆசார்யனை பற்றுதல் "அநதிக்ர மணீயம் ஹிசரணக்ரஹணம்" என்கிற நழுவவிடாத அச்யுத பாதங்கள் அல்லவோ பரம உபகாரகர்கள், ஈஸ்வரனுக்குச் சேஷமான இந்த ஆத்மாவை, "ஆத்மா என்னுடையது" என்று சொல்லிய பகவானுடைய வசனங்களால், பகவத் விஷய ஞானம் மில்லாதபடியால் நெடு நாளாக அஸத் கல்பனாய் தேங்கிக் கிடந்த சேதனனுக்கு பகவத் ஸம்பந் தத்தை அறிவித்து, ஆசார்யனாகிறவன் சேஷியானவனைக் காட்டிக் கொடுக்கிறான். ஆகையினால் அல்லவா ஈஸ்வரனும் கீதா சார்யனாகவும், லக்ஷ்மிநாத ஸமாரம்பாம் என்கிற குரு பரம்பரை யில் அன்வயித்தும், விபீஷணனுக்கு அபயப்ரதான ஸ்லோகம் அருளிச் செய்த படியாலும் இதை உத்தேசித்துத்தான். அப்பேற் பட்ட ஆசார்ய மஹத்வத்தைக் காட்டிக் கொடுத்த நாரதர், வியாஸர், வால்மீகி, பரதன், ஆஞ்சநேயாதிகள், அர்ஜுனன் முதலியவர்களை அன்வயித்து நான் ராமசீதா பாதங்களை உத்தம ஹேதுவாக சரணமடைகிறேன்.]

"எந்த உத்தம பாகவதர்களாகிற லோக ஜனங்கள் எதை மனப்பூர்வமாகச் சொன்னார்களோ, நான் அவர்களுடைய க்ஷேமங்களை கவனித்திருக்கிறேன். அவர்களுடைய சேஷ பாவங்களைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் நிச்சயம் என் பிரபு சீதாராமனை லக்ஷ்மணன் சகிதம் பார்த்து அனுபவித்திருக்கிறார் கள். அவர்களின் மனதில் இருக்கும் ஆனந்த அமைதியை பார்க்கும் படியாக விருக்கிறது." இவ்விதம் அழகான குரலில் பரதன் தான் கண்ட ஒவ்வொருவரிடத்திலும் ராமனையும் லக்ஷ்ம ணனையும் சீதையையும் அவர்களின் க்ஷேமங்களையும் விசாரித்துக் கொண்டு, ராமவனவாசத்தின் மகிமைகளை அறிந்த வண்ணமா யிருந்தான். (1131)

அந்த தினத்தின் முடிவில் ஒரு நல்ல இடத்தில் தங்கிவிட்டு, விடிந்ததும் ஸ்ரீரகுநாதனை ஸ்மரித்துக் கொண்டு பரதன் மேலே சென்றான். பரதனுடன் கூடவிருந்தவர்கள் இனி பகவத் தர்சனம் சுலபமாக பிராப்யம் என்று அறிந்தவுடன் அதிக ஆசை கொண்

டார்கள். (ஆசார்ய ஸம்பந்தம் பெற்ற சேதனனுக்கு பகவத் விஷயம் கிடைக்குமாப் போலே தோன்றியது.) (1132)

அப்பேற்பட்ட பரம பாக்யவான்களாகிய அந்த கூட்டத்தினர் களுக்கு ஸகல சுகத்தை அளிக்கக் கூடிய மங்சள சகுனங்கள் எங்கும் தோன்றின. (விகளே பரமுக்தியை அளிக்கும்படி சகலருக்கும் கிட்டும்படி, அந்த விநோத ராம சரணங்கள் அகண்டைக ரஸபூர்ணமாக விளங்கின.) புருஷர்களுக்கு வலது கண்களும் புஜங்களும், ஸ்திரிகளுக்கு இடது கண்களும் புஜங் களும் துடித்தன. பரத சமாஜத்திற்கு ஆனந்தம் தாங்கவில்லே. இராமனேக் காணப்போகிறோம் நமது துக்கத்தின் தாபமெல்லாம் மறைந்துவிடும்—என்று பெரும் உற்சாகம் உண்டாகிக்கொண் டிருந்தது. (ஸத்குரு சாயையில் இருக்கும் சேதனனுக்கு பகவத் கிருபையாகிற கன சுகத்தைக் கொடுப்பது போலிருந்தது. கமலாகாந்தன், காமேஸ்வரியின் அதீதன், ஹிமகிரியின் புத்ரி யான உமையின் கிருபாகடாக்ஷத்திஞல் மஹா காருண்யம் கிடைப்பதுபோல, இமயத்திலும் மஹோததியிலும் கலிகல்மஷத் தைப்போக்கும் ரத்னம் கிடைப்பதுபோல சகல சௌபாக்யங்களே வாரிக்கொடுக்கும் ஈஸ்வரதயை கிடைப்பதுபோல விருந்தது. ஸர்வ ஸம்க்ஷோபணுதி சக்திகள் சித்திப்பதுபோல விருந்தன. ஞானமயம் போதமயமாக விருக்கும் ராமபிரும்மம் பிரகடனப் படுவது போலிருந்தது. அகளங்க ரூபமுடையதாய், அபர்ணு ஸுபர்ணு என்று சொல்லக்கூடியவள் சுகத்தைக் கொடுத்து, சோகங்களே விலக்கி, சாப பயங்களேப் போக்கி, பரம சோபன மாக விளங்கும் ராமதர்சனத்தை அளிப்பதாக விருந்தன. சராசர கல்பிதன், சித்த ஆனந்த பூர்ணகன், கமலாம்பிகையின் நாத ஞகிற ராமன் சாக்ஷாத்கரிப்பது போலிருந்தது. பரமசிவையான சீதையுடன், லலிதையுடன் நிவாஸம் செய்யும் ஸதாசிவன் தோன்றினது போல விருந்தது. ராகத்வேஷங்களற்ற மூர்த்தி, சந்திரமுகம், குளிர்ச்சி தரும் பத்மமுகி, ராஜயோக சுகி, ரமா வாணி சகிதம் இருக்கிறுப்போல, சீதை லக்ஷ்மணர் சகிதம் ராமன் வீற்றிருப்பதுபோல, அவர்களுக்குத் தோன்றியது. சந்திரனேக் கலாதாரியாக வைத்திருக்கும் ஈஸ்வரியைப் போல சீதையுடன் ரமித்துக் கொண்டிருக்கும் ராமன் என் பரம மங்கள நாயகன், நெடும் தூரத்தில் காணும்படி அவர்கள் கண்களுக்குத் தோன்றியது. ஸகலருக்கும் துக்கம், பசி, களேப்பு, மயக்கம் எல்லாம் பறந்துவிட்டது.) (1133)

அவரவர்கள் தம்தம் மனப்போக்கின்படி—ராமனைப் பற்றியும் சீதையைப் பற்றியும்—ஆசைகொண்டு கற்பனை செய்துகொண்டிருந்தனர். அன்பெனும் மதுவைப் பருகி மயக்குற்று நடந்து சென்றனர். உடல் உறுப்புக்கள் தளர்ச்சியுற்றுத் தள்ளாடிச் சென்றனர். கால்கள் பிணக்குற்றுத் தடுமாறின. பிரேமபரவசர்களாகி உள்ளம் நெகிழ்ந்து (அன்பு ததும்பும்) சொற்களை (பலபடியாகச்) சொல்லியவாறு சென்றுகொண்டிருந்தனர். (1134)

(கருத்து :— ஒவ்வொருவருடைய மனத்திலும் ராமனை எப்படி அழைப்பது, சீதையை எவ்விதம் ஸ்வீகரிப்பது, லக்ஷ்மணனைக் கண்டு எவ்விதம் ஆனந்திப்பது என்கிற எண்ணங்கள் தோன்ற ஆரம்பித்தன. அவரவர்களின் இஷ்டப்படி அவர்கள் நினைத்துக்கொண்டார்கள். அகண்ட ஏகப்ரேமை ரஸம் ஊறி மதம் பிடித்தவர்கள் போல அவர்கள் காணப்பட்டார்கள். அவர்களுடைய அங்கங்கள் பாரிஜாத மலர்களின் ஸ்பரிசத்தால் குளிர்ச்சியை அடைவதுபோல, ராம தரிசன எண்ணங்களால் தாபங்கள் அடங்கி, மனம் குளிர்ந்து சந்தோஷத்தால் பிரேமை கொண்ட வசனங்களால் பேசிக் கொண்டார்கள்.)

ராமஸகா, நிஷாதராஜனுகிற குஹன் அந்த சமயத்திற்கு ஏற்ப, ஸஹஜ ஸ்நேகமுள்ளவனுக, பர்வதசிகாமணி காமதகிரி சித்ரகூட பர்வதத்தைக் காண்பித்தான். அதற்கு சமீபத்தில் பயஸ்வினி நதி அழகாக ஓடிக்கொண்டிருந்தது. அந்த அழகான நதியின் கரையில் சீதா ஸமேதனுன ராமன் லக்ஷ்மணனுடன் காணப்பட்டார். (1135)

அந்த தீப்தமூர்த்திகளைக் கண்ட ஜனங்கள் சுகிருத பிரணுமங்கள் செய்தார்கள். ''ஜயஜானகி, ஜயஜீவனராமா'' என்று கோஷித்தார்கள். அந்த ராஜஸமாஜம் முழுவதிலும் ப்ரேமையாகிற கங்கை வழிந்து ஓடிக்கொண்டிருந்தது. பரதன் ரகுநாதன் அயோத்திக்குத் திரும்பிவிட்டால் எவ்விதம் சந்தோஷிப்பானே, அதுபோல ப்ரேமை வசம் அடைந்துவிட்டான். அவனுடைய சுகங்கள் பூர்ண காமனுடைய சுக ஆனந்தங்களைப் போலிருந்தன. (1136)

[தியானம்

ஹேராமசீதா, நாரயணு, தர்மஸ்வரூபியே, பரதன் சத்ருக்னன் இருவர்களும் உன் ஸ்வரூபத்தையும் சீதையின் ஸ்வபாவத்தையும் உங்கள் இருவர்களின் பாத சரணங்களையும்

மகிமைகளையுமறிந்தவர்கள். ஸகல சராசரங்களும் உங்களிடம் லயித்து மீண்டும் உயிர்பெற்று உங்களையே நம்பி வாழ்கின்றன. பரதனும் சத்ருக்னனும் தர்மத்தின் பிரபுக்கள். அவ்யயமான தர்மத்தை ஆஸ்ரயித்து, சீலத்தாலும், ஒழுக்கத்தாலும் மிக்க சிரத்தையுடனும், சுத்தமான மனத்துடனும், கோபத்தையும் இந்திரியங்களையும் ஜயித்து, பற்றுதல் அற்ற மனத்தை உடைய வர்களாகவும் ஆசை என்கிற முளையை உடையதும், விஷய விருப்பம் என்கிறதால் மூடப்பட்டதும், மிக்க சூக்ஷ்மமான ஸ்வர்க்கத்தின் வாயிலை அக்ஞானத்தால் அறியப்படாததுமான உத்தம தர்மத்தைச் செய்த கிருதகிருத்யர்கள், பரதன் சத்ருக்னன் ஆகியவர்களின் தானத்தாலும், பிரும்மசர்யத் தாலும் யக்ஞத்தாலும், ஞாதி விஸ்வாசத்தாலும் சுத்தமான தர்மத்தாலும் தசரதர் முதலிய பித்ருக்களும் கரையேற்றப் பட்டார்கள். ரந்திதேவன் ஒன்றுமில்லாதவனுகவும் சுத்தமான மனத்துடன் ஜலத்தைக் கொடுத்து ஸ்வர்க்கத்தின் மேல்பகுதியை அடைந்தான். பரதனும் சத்ருக்னனும் தங்கள் சரீரங்களை வாட்டி ரஜோகுணமற்று மிகுந்த தானத்தின் பயனையடைந்தார் கள். தன் குலத்திற்கு உத்தாரகனுமாய் ராமனுக்கு உபகாரனுமாக, ராமனுடைய திருவடிகளை அடைந்த பரதனும், பரதனுடைய திருவடிகளை அடைந்த சத்ருக்னனும் ஞானபக்தி விரதங்களாகிற ஆத்ம குணங்கள் அடைந்து ஸர்வ மங்கள ஹேதுவான ஆசார்ய சம்பந்தம் பெற்று பூர்வ சுக்ருதங்களால் புத்தி குலையா மல், அந்த சம்பந்த ஐஸ்வர்யத்தால் ஸூர்யன் தாமரையை ஸ்வரூப விகாஸிக்கவைப்பதுபோல, ஈஸ்வரன் பகவத் சம்பந் தத்தை விகாஸிக்கச் செய்கிறுன். வளரும் ஒரு கொடிக்கு கொள் கொம்பிலே சேர்க்கும்போது, சுள்ளிக்கால் அவஸ்யமாவதுபோல, பகவத் சம்பந்தம் பெற்ற பரதன் பாகவத சம்பந்தம் பெற்ற சத்ருக்னனுடன் சேர்ந்து விளங்கினுன். அருள், ஸாதனம், கைங்கர்யம், புருஷார்த்தம் என்கிற அரும்பேறுகளை அவ்விருவர் களும் அடைந்தார்கள். அப்பேற்பட்ட உத்தமர்களை வணங்கி நான் ராம தர்சனம் அடைகிறேன்.]

பரதனுடைய ப்ரேமை கரை பொங்கிவழிந்தது. அவனுடைய சுகபோகங்கள் உரகராஜனுன சேஷ பகவானுக்குக்கூட சொல்ல முடியாதபடியிருந்தன. மஹாகவியும் (ஸர்வக்ஞத்தையும் அறிந்த வேதவியாஸர் சுக்ராசாரியர், அகஸ்தியர், பிரஹஸ்பதி போன்ற) கவிகள் விவரிக்கமுடியாதபடி ஆனந்தம் பிரும்மானந்தங்கள் பரதனுக்கு ஏற்பட்டன. அவர்கள்கூட இந்த மனிதப் பிறவியை

அடைந்த பரதனுக்கு, அஹங்காரம், "நான்" என்கிற உணர்ச்சிகள் மலிந்த மனித பிறவிக்கு, ஏற்பட்டதா என்று வியக்கும்படி ஆயிற்று. (1137)

ரகுவரனுகிற ராமனிடம் உள்ள பராத்பர அன்பு ஏற்பட்ட பின்பு பரதனுடன் கூடவந்திருந்த சமாஜத்தினர் சூரியன் அஸ்தமிக்கும் சமயம் ராமனிருக்குமிடத்திலிருந்து நான்கு மைல் தூரம் இருந்தார்கள். அந்த இடம் ஜலத்துடன் தங்குவதற்கு சௌகரியமாக விருந்தது. அந்த இரவு அவ்விடம் தங்கிவிட்டு விடிந்ததும் பரதன் ப்ரேமை பூர்வமாக ராமனைத் தரிசிக்கப் புறப்பட்டான். (1138)

அங்கே ராமன் பிராம்மி முகூர்த்தத்தில் முழித்துக்கொண்டான். அந்த இரவில் சீதைதான் பரதனை ஸமாஜ சகிதம் வருவதுபோல ஸ்வப்பனம் கண்டதை ராமனுக்குச் சொல்லிக்கொண்டிருந்தாள். பிரபு ராமச்சந்திரனின் வியோகத்தால் ஏற்பட்ட தாபத்ரயங்களை பரதன் அனுபவித்த மாதிரி சீதை ராமனிடம் சொல்லிக்கொண்டிருந்தாள். (1139)

பரதனுடன் கூடவந்த ஸகல ஜனங்களும் மனத்தில் அசுசியடைந்து, தீனர்களாகவும் துக்கம் உள்ளவர்களாகவும் ஸ்வப்னத்தில் காணப்பட்டார்கள். மாமியார்களின் தோற்றங்களும் மாறியிருந்தன என்று சீதை தான் ஸ்வப்பனம் கண்டதாக ஒவ்வொன்றையும் விடாமல் சொல்லிக்கொண்டிருந்தாள். அந்த விருத்தாந்தத்தைக் கேட்ட பிரபு ராமச்சந்திரனுடைய கண்களில் தாரை தாரையாக ஜலம் வந்துகொண்டிருந்தது. எப்பேற்பட்ட மஹா புருஷரை ஸ்மரிப்பதால் சகல துக்கங்களும் விலகுமோ, அப்பேற்பட்ட பிரபு லீலாவசம் அடைந்து சாதாரண மனிதனைப்போல அழ ஆரம்பித்தார். (1140)

"லக்ஷ்மணா, இந்த ஸ்வப்பனம் நமக்கு நல்லதை அறிவிப்பதாக இல்லை. நம் மனத்திற்கு விருப்பமில்லாத கடும் செய்தி ஒன்று நமக்காக காத்திருக்கிறது." என்று சொன்னார். அதன் பிறகு சீதையுடன் லக்ஷ்மணன் சகிதம் ஸ்நானம் செய்தார். திரிபுராரியான பரமசிவனையும் ஸாதுக்களையும் பூஜை செய்தார். (1141)

[தியானம்

ஹே கமலபுஷ்பம் போல கண்களை உடைய நாராயணா, நீலமேகம் போலவும் பவழ்வாயும் கமலபுஷ்பம் போல பாதங்களை உடைய ராமாசீதா, அச்யுதா, ஆயர்கொழுந்து, உன் பாதங்

களின் சுவையைத் தவிர நான் இந்திரலோகம் ஆளுவதையும் பெரிதும் வேண்டேன். அந்த பாதங்கள் ஆசாரிய பாரதந்திரியத்திலிருந்து ஊற்றமுடையவனாக விருந்த பரதனைப்போல ஆசார்ய அபிமான நிஷ்டனாக, ஆசாரிய திருவுள்ளத்தில் ப்ரீதி "பழுதாகாதென்றறிந்தேன்;" இவன் நல்லவன், "பிதாமஹம் நாதமுனிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தம சிந்தயித்வா" என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தப்படி "பசுர் மனுஷ்ய பக்ஷீவாயேச வைஷ்ணவ ஸமஸ்ரயா: தேநைவதே பிரயாஸ்யந்திதத் விஷ்ணோ: பரமம்பதம்" என்கிற பௌராணிக ஸ்லோகத்தை பிராமாணிகவைத்து; ஆசாரிய அபிமானத்தினால் பிரபத்தியானது கர்ம ஞான பக்திகளாகிற உபாயந்திரங்களுக்கு அங்கமுமாய், என் அநிஷ்ட நிவிருத்திக்கும் இஷ்ட பிராப்திக்கும் ஸதாசாரியனின் உபதேசத்தால் "ப்ராப்னுவந்தி பராங்கதிம்" என்கிற ஸ்வரூபம் நிலைகுலையாமல் ஆசார்ய கடாக்ஷம் என்கிற பரம ஹேதுவால், மஹாவிஸ்வாசத்தால் பந்த மோக்ஷங்கள் ஆகிய இரண்டுக்கும் பொதுவான ஈஸ்வர ஸ்வாதந்திரிய பயத்தாலும் தவிக்கும் எனக்கு, பரதனும் சத்ருக்னனும் சீதா பிராட்டியும் லக்ஷ்மணனும் ஸ்ரீராமனுடைய பாதுகைகளே உபாயம். இவைகள்தான் எனக்கு உத்தாரகம். என் ஸ்வரூபத்தைத் துளிர்க்கச் செய்து பின்பு புஷ்பிதமாக்கும் அநந்தரம் பலபர்யந்தமாக்கும்.]

தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பூஜை ஆராதனைகள் செய்துவிட்டு ஸ்ரீராமன் உட்கார்ந்துகொண்டு வடக்கு திக்கை நோக்கலானார். ஆகாயம் முழுவதும் ஒரே தூசி மயமாக விருந்தது. பக்ஷிகள் வியாகுலமடைந்து அங்குமிங்கும் பார்த்துக்கொண்டிருந்தன. அவைகள் பிரபுவின் ஆஸ்ரமத்திற்கு வந்துகொண்டிருந்தன. "இதென்ன தூசிமயமாக விருக்கிறது? என்ன காரணம் இருக்கக்கூடும் என்று ராமன் யோசித்தவண்ணமிருந்த சமயம், அந்த சமயத்தில் வேடர்கள் கோல், பீல், ஸ்திரீகள் பகவானிடம் பரதாகமனத்தை விண்ணப்பித்தார்கள். (குருவினால் அபிமானம் செய்யப்பட்ட சேதனனுக்கு "தாவுபௌ டரமாம்ஸித்திம் நியமாதுபகச்சத:" என்கிற பரத்வாஜ சம்ஹிதையில் சொல்லப்பட்டபடி, பரகத ஸ்வீகாரம் போல, ஸ்வகத ஸ்வீகாரமும் பலனைக் கொடுப்பதில் தப்பாது, பிரதிகூலர்களும் அனுகூலர்களாக ஆவார்கள். நித்யசூரிகளும் மஹேந்திரனும் பிரும்மாவும் இதர தேவர்களும் பிரும்மரிஷிகளும் ஆமோதிப்பார்கள் என்கிறபடி, வேடர்களும் வேடுவ

ஸ்திரிகளும் பரதவிஜயத்தை முன்கூட்டியே ஸ்வாமிக்கு எடுத்துச் சொன்னார்கள்.) (1142)

என் ஆசார்யன் துளசிதாஸர் சொல்கிறார். "இந்த சுமங்கள வசனங்களைக்கேட்டு ஸ்ரீராமனுக்கு புளகாங்கிதம் எடுத்து அவர் ஆனந்தமடைந்தார். பிரியபந்து தரிசனம், எங்கு பார்த்தாலும் அம்ருதரஸம் ராமனுடைய சரீரத்தில் பெருக்கு ஓடியது; கண்களின் பிரேமை நிறைந்த ஜலங்கள் வழிந்து ஓடின. (1143)

மறுபடியும் சீதாபதி தனக்குள் "பரதன் இங்கு இப்போது வரக்காரணமென்ன?" என்று யோசிக்க ஆரம்பித்தார். இதற்குள் இன்னொருவர் "பரதன் சதுரங்க சைன்யங்களுடன் வந்துகொண்டிருக்கிறான்" என்கிற தகவலைச் சொன்னான். (1144)

இதைக்கேட்டதும் ராமன் மீண்டும் தீவிரமாக யோசனை செய்தார். ஒரு பக்கம் பிதாவின் ஆக்ஞை; மற்றொரு பக்கம் பரதனுடைய வேண்டுகோள். பரதனுடைய ஸ்வரூப பிரவிருத்தி ஸ்ரீராமனுக்குச் சரியாக தெரிந்திருந்தபடியால், பிரபு தன் சித்தத்தை எவ்விதம் அடக்குவது என்று தோன்றாமல் சிறிது நேரம் கலங்கினார். (1145)

[தியானம்

ஹே ராமா சீதா, உங்கள் இருவர்களின் மந்தஸ்மித முகத்தை ஆயிரக்கணக்கான ஸ்லோகங்களாலும் கீர்த்தனங்களாலும் பாட்டுக்களாலும் ஸ்தோத்ரம் செய்ய வேண்டும் என் ஆராத அமுது நீங்கள் அல்லவா? உங்களுடைய ம்ருதுள பாததூளிகளை என் ஆபரணங்களாக அணிந்துகொள்ள வேண்டும். உங்கள் மந்தமான நடையையும் கிருபாகடாக்ஷங்களாகிற புஷ்கரலோசனங்களையும், பத்மதண்டுகள்போல நீண்ட பாஹுக்களையும், எனக்கு மோக்ஷத்தை அளிக்கும் ஸ்ரீவத்ஸ மார்பனுகிற மஹாலக்ஷ்மியுடன் கூடின சுபாங்கரை நான் நமஸ்கரிக்கிறேன். என் காம பரிபந்திகாமினி, காமேஸ்வரி, ராமரிடத்தில் வீற்றிருக்கும் காமேஸ்வரி, காமதுக்தா, கமலா, காமகலே, காமகோடி காமாக்ஷி, ஜய ஜய ஜகதம்பா, ஜய சிவ ஜயராமா, ஜய சீதாபதே, ஜயாத்ரிஸுதே, ஜய ஜய மஹேஸதயிதே, ராமதயிதே, ஜய ஜய சித்ககனகௌமுதி, கோடி கந்தர்ப்பலாவண்யம் படைத்த நித்யதம்பதிகளே, ஜகன்மோஹன ரூபத்ருக், எங்களைக் காப்பாற்று.]

பிரியபந்து, பிரியதம்பி, பந்துசகா, ஸாது; என் அனுகூல பிரியன்; என் பிரிய காமினி, (என் ஹ்ருதயத்தில் வீற்றிருக்கும் சுஜாதா காமேஸ்வரி,) அவனைப்பற்றி நன்ருகத் தெரியும். அவனுல் தேவகாரியத்திற்கு இடைஞ்சல்வராது. என்று பகவான் ராமச்சந்திரன் பரதனை நினைத்துப்பார்த்து அவனுடைய ஸ்வபாவ ஸ்வரூபங்களை நினைத்துப்பார்த்து ஒருவாறு ஆறுதல் அடைந்தார். திருமாமகள் கேள்வனுகிற மாதவன் கருணையால் சிவந்து மலர்ந்த திருக்கண்களை உடையவனுகவும், ஶ்ரீராமன் காணப்பட்டான். நித்யவிபூதி லீலாவிபூதி யாகிற திரண்ட ஐஸ்வர்யங்களைக்கொண்ட சீதாராமனைப் பார்த்தான் லக்ஷ்மணன். [தன்னுடைய கைங்கரியப் பிராப்திக்கு விரோதியாகிற உபாய விரோதியும் ப்ராப்தி விரோதியும் ஜீவாத்மா பரமாத்மாவை அடையவிடாமலிருக்கும் தடைகளான விரோதிகளைத் தெரியும் எண்ணத்துடன் சேதனன் நீதி அறிவினுல் பரிசோதிப்பது போல] சமயத்திற்கு ஏற்ருப்போல ப்ராதாவிடம் நீதி பேசினுன் லக்ஷ்மணன். (1146)

"ஹே ஸ்வாமீ! நான் தாங்கள் கேட்காத ஸமயம் ஏதோ சொல்ல விரும்புகிறேன். என்னைத் தப்பாக எண்ணக்கூடாது. பிரபு நான் தாங்கள் என்னைக் கேட்கும்வரை தாமதிக்க நேரமில்லை; சேவகன் யஜமானனுடைய நேரத்தை சவனிக்காமல் அவருடைய ஹிதத்தைச் செய்யவேண்டும். ஐயா, நீர் ஸர்வாந்தர்யாம்யாக விருக்கிறபடியால், நான் சொல்வதைப் பூர்ணமாக அறிகிறீர்." (1147)

"நாதா, நீர் எனக்கு பரம ஆசார்யரான ஸுஹ்ருத். என் நன்மையைக் கோறும் பரம உதார மனஸ் உள்ளவர்; கிருபாளு. ஸஹ்ருதயம் கொண்ட சேவகன் நான். என் சித்தம், சீலம் ஸ்நேகம் யாவும் தங்களையே பற்றியது. ஆனுல் நீரோ ஸர்வருக்கும் மித்ரன். மஹாவிஸ்வாசம்கொண்ட காமேஸ்வரர். நியந்தாவாகிற நீர் ஸகலரையும் நடத்துகிறீர்." (1148)

"ஆனுல் குணங்களின் சேர்க்கையை அடைந்த இந்த ஜீவன் அவித்யையினுல் மஹா மோஹத்தை அடைகிறது. விஷய போகங்களில் ஈடுபட இச்சிக்கிறது. தன் ஸ்வரூபத்தை மறந்து தான் சேரவேண்டிய இடத்தை மறந்து, குணபிரபாவங்களினுல் அறிவீனனுக தன்னைப் பிரகடனப்படுத்துகிறது. இந்திரியங்கள் வசமடைந்தவன் வித்வானுகவிருந்த போதிலும் சமயத்தில் தன் சுத்த ஞானத்திலிருந்து நழுவி விடுகிருன். நம் பரதன் மஹா நிபுணன். நீதி சாஸ்திரங்களில் கரைதேர்ந்து

சகலராலும் ஸாது என்று ஒப்புக்கொள்ளப்பட்டவன். நற்பிறப்பை அடைந்து, நல்லவர்களால் பழக்கப்பட்டவன். உம்முடைய சரணங்களில் பவித்திரமான அன்புகொண்டவன். இந்த பிரேமை ஸகலருக்கும் தெரிந்த விஷயம்.'' (1149)

"அப்பேற்பட்ட பரதன் இன்று தங்கள் பதங்களை விரும்பி சிம்மாஸனத்தில் ஏறி, தர்ம மரியாதை ஆகிற அவஸ்தைகளிலிருந்து நழுவி விட்டிருக்கிறன். தன் தாயாரின் குடில புத்தியைக் கொண்டு, தங்களைத் தனியாகவும் சகாயமில்லாதவனுகவும் நினைத்து, இந்த வனத்தில் தங்களை சந்திக்க வந்து கொண்டிருக்கிறன்.'' (1150)

"தன் அதிகாரத்தை ஸ்திரப்படுத்தும் நோக்கத்துடன் ராஜ்யத்தை விட்டுவிட்டு இவிடம் வந்திருக்கிறன். அநேக பிரகாரமான சேனை பந்தோபஸ்துக்களுடன் தங்களைப் பயமுறுத்த, வந்திருக்கிறன். அநேக குடில எண்ணங்களைக் கொண்டு இரு சகோதரர்களும் வந்திருக்கிறர்கள்.'' (1151)

"இவர்கள் மனத்தில் கபட எண்ணங்களோ அல்லது துர்விஷய புத்தியினுல் ஏற்படும் உபாயங்களோ இவர்களுக்கு இல்லாதபோனுல், இவர்கள் ஏன் ரதம், குதிரை, யானை முதலிய படைகள் சகிதம் இவிடம் வந்திருக்க வேண்டும்? நாம் பரதனைக் குற்றம் சொல்வதில் பிரயோசனமில்லை. இந்த ஜகம் முழுவதும் ராஜபதம் கிடைத்தவுடன் மனிதர்கள் மஹா மோகத்தினுலும் லோபத்தினுலும் மதம்பிடித்தவர்களாக ஆகிவிடுகிறர்கள்.'' (1152)

[தியானம்

ஹே சம்புமோஹினி, புஷ்கரேக்ஷணு, பாலா, லீலைகள் செய்வதில் மஹா நிபுணத்வம் வாய்ந்தவளே, ராஜ்யலக்ஷ்மி, அகஸ்தியர் லோபா முத்ரையால் அர்ச்சிக்கப்பட்ட மஹாலக்ஷ்மி, உமையாகிற சீதே, என் கிருபாளு, கருணையும் ஞானமும் ரூபமாக உடைய மஹா சித்தேஸ்வரி, காயத்திரி சாவித்திர சரஸ்வதி ஆகிற வியாகிருதிகளை உடைய மஹா பிரணவமே, உன்னுடைய கடைக்கண் பார்வைக்கு வேலைக்காரிகளாக விருக்கும் அநேக மஹாலக்ஷ்மிகளாக இருப்பவளே, எனக்கு பிரும்மரந்திரத்தில் குருவின் ரூபமாக இருப்பவளே, ராமச்சந்திரனுல் சேவிக்கப்பட்ட ஸ்ரீவித்யையே, எனக்கும் பரதனுக்கும் சத்ருக்னனுக்கும் மங்களத்தைக் கொடுப்பவளே, சிவன் சக்தி இவர்களுடைய ஐக்யத்தையே ரூபமாக உடையவளே, எனக்கு

லலிதையாகவும் அம்பிகையாகவும் இருப்பவளே, கொஞ்சிக் கொஞ்சி விளையாடும் லோகாதீதையான லலிதையே, பத்மா, எனக்கு நீதான் கிருபை செய்யவேணும்.]

"சந்திரனிடம் மஹாகிருபை காட்டிய (ஜிதக்ரோதனுகிற) பிரஹஸ்பதியிடம் துரோக சிந்தனையுடனிருந்த சந்திரன் குரு பத்னி காமியாகிவிட்டான். இந்திரபதத்தை அடைந்த நஹுஷன் பிரும்மரிஷிகளான அகஸ்தியர் ப்ருகு சப்தரிஷிகள் சுமந்துச் சென்ற பல்லக்கில் ஏறி இந்திராணியை சந்திக்க விரும்பினுன். அரசனுன வேனனை சகல ரிஷிகளும் சேர்ந்து "ராஜனே, ஜனங்களுக்கு நன்மை செய். ஹரிபகவானை திருப்தி அடையும் படி யக்ஞங்களால் ஆராதனம் செய்" என்று சொன்னுர்கள். ஆனுல் அரசனுன வேனன் "ஹரி என்கிறவர் யார்? நான் தானே அரசன். சகல தேவதைகளும் என்னிடம் வாஸம் செய்கிருர்கள். பிராம்மணர்களே, எல்லோரும், நீங்களும் என்னுடைய ஆக்ஞையை நிறைவேற்றுங்கள்" என்று அத்யந்த க்ரோதத்துடன் கடுமையாக மொழிந்தான். அதனுல் தர்ம க்ஷயமடைந்து நாசமடைந்தான்." (1153)

"கார்த்தியவீர்யார்ஜுனன் கதை உம்மால் எனக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. பிருகு வம்சத்தினர்களை அவமதித்த படியால் குலத்திற்கே நாசம் தேடினுன். தேவராஜனுன இந்திரன் அஹல்யையும் பிரும்ம ரிஷியான கௌதமரையும் வஞ்சித்தான். நம் இக்ஷ்வாகு குலபதியான திரிசங்கு வஸிஷ்ட ரிடம் விரோதம் செய்துகொண்டான். இவர்கள் எல்லோரும் ராஜபதத்தை அடைந்து, தங்களுக்கும் குலத்தினர்களுக்கும் களங்கத்தை ஏற்படுத்திக்கொண்டார்கள். என் ஸுக்ருதுவே, இந்த பரதனும் அவர்களின் வழியைப் பின்பற்றினவனுகவும் நீதி சாஸ்திரத்தின்படி வாங்கின கடனையோ அல்லது எதிரியையோ மிச்சம் வைத்திருக்கக்கூடாது என்கிறபடி உபாயத்தைக் கைக்கொண்டவனுக நம்மை எதிர்க்க வந்திருக்கிறுன்." (1154)

"பரதன் நிஜமாகவே பக்தனுகவிருக்கலாம். ஆனுல் ஒரே ஒரு விஷயத்தில் அவன் சரியாக நடந்துகொள்ளவில்லை. நீர் வனத்தில் தன்னந்தனியாக ஒருவித உதவியுமின்றி இருக்கிற தாக நினைத்து, நம்மை அலக்ஷ்யம் செய்துவிட்டான். ஆனுல் இன்று நடக்கப்போகும் யுத்தத்தில் தங்களுடைய அஸ்திர மயத்தைக்கண்டு, சஸ்திரத்தினுல் மறைக்கப்பட்ட க்ரோதத்தைக் கண்டு, அவன் தன்னுடைய முட்டாள் தனத்திற்கு தகுந்த பலனை அடைவான்." (1155)

[தியானம்

ஹே நாதரூபினி, சீலரூபகுண ஸௌந்தர்யங்களால் பிரகாசிக்கும் பிரும்மாணி, ராமனே ஸர்வம் என்று புத்தி பூர்வமாக அறிந்து, நிச்சயித்து, வாக்குக்குப்பதியான பிருஹஸ்பதியின் பொருட்டு, அம்மா நான் நமஸ்கரிக்கிறேன். எவ்விதம் ராமசரிதமானது உயிர்போகும் தருவாயிலும் மிருத சஞ்சீவினியாக விருக்கிறதோ, எவ்விதம் பிரஹஸ்பதியின் சிஷ்யனுன இந்திரனுக்கு குருவினுடைய பிரஸாதத்தால் வாக்குஸித்தி ஏற்படுமோ, அதுபோல பிரும்மதேவனேயும் வாக்குக்குப் பதியான ஸரஸ்வதிதேவியை நான் நமஸ்கரிக்கிறேன். வாக்குக்கு அதிஷ்டானதேவதை அக்னியாவதால் அக்னியின் பிரஸாதத்தையும் கோரி, யாக்ஞ்யவல்கியர் சூரியனே நமஸ்கரித்தபடியும், சாமுண்டாதேவியை நாராயணியாக ஸ்மரித்து தேவர்களும் மார்க்கண்டேய ரிஷியும் நமஸ்கரிப்பதுபோல, பரதனுடைய புத்தியையும், அர்ஜுனனுடைய சேவகத்தையும், ஆஞ்சநேயருடைய கிருதக்ஞதையையும், அகஸ்தியருடைய வாக்கு சாமர்த்தியங்களேயும் லோபா முத்ரையின் அன்பையும் ஸ்மரித்துக்கொண்டு நமஸ்கரிக்கிறேன். ஹே சீதா, காருண்ய மூர்த்தி, வரதீப்தையே, எனக்கு ராம லக்ஷ்மணர்களுடைய அருள்கொடு. பிரபன்னனுக "தவாஸ் மீதி ச யாசதே" என்று சரணுகதி அடைந்த பரதசத்ருக்னனுக்கு சதுர்த்தியாக நின்ற ராமா உன்னே நான் வந்து அடைகறேன்.]

இவ்விதம் நீதியை உரைக்கும் லக்ஷ்மணன் நீதி சாஸ்திரத்தின் மர்மத்தைப் புரிந்துகொள்ளவில்லே. (அஹிம்ஸா பரம தர்மம், அஹிம்சையே பரம தீர்த்தகரம் என்கிற மர்மத்தை மறந்து ராமனிடம் காட்டிய மஹா பற்றுதலினுல்) யுத்த ரஸமாகிற லக்ஷ்மண விருக்ஷம் மயிர்க்கூச்சலென்ற வியாஜமாகப் பூக்களால் நிரம்பிவிட்டது. (லட்சுமணன் வீரரஸம் நிரம்பிய விருட்சமாக, அவனது உடலில் கோபத்தினுல் தோன்றிய மயிர்க்கூச்சல் மரம் பூத்ததுபோல் காணப்பட்டது.) பின்னர் சீதாராமனின் பாதசரணங்களேப்பற்றி அவர்களுடைய பாதரேணுக்களே தலேயில் அணிந்துகொண்டு தன்னுடைய ஸ்வாபாவிகமான (ஆதிசேஷனுடைய) பலத்தை ஸ்மரிக்கிறவனுக, வார்த்தைகளே ஆயிரம் நாக்குக்களால் சொல்ல ஆரம்பித்தான். (1156)

"என் நாதரே, நான் சொல்வதை விபரீதமாக தாங்கள் எடுத்துக்கொள்ளக்கூடாது. ஸ்வார்த்திபுத்தியை அடைந்து மஹாமோகத்தில் வசமடைந்து தவிக்கும் பரதன் தங்களேயே

பெரிது என்று நினைக்காமல், ஐஸ்வர்யகாமனுக, நான் தங்கள் பக்கலில் வில்லும் அம்புமாக விருக்கும் சமயம், நம்மை அலக்ஷ்யம் செய்துவிட்டான். அதனுல் என்னுடைய கர்த்தவ்யங்களை மறந்து, நான் எவ்விதம் சும்மாயிருக்கக்கூடும்? என்னை இந்த ஸ்திதிக்கு கொண்டுவந்துவிட்ட பரதனை நான் சும்மாவிடப்போகிறதில்லை.'' (1157)

''க்ஷத்திரிய ஜாதி, ரகுகுலத்தில் ஜன்மம் (அபஜயமே ஏற்படாத விஜய ரகுவம்சம்) மேலும் ராமனே பரதெய்வம், ராம கைங்க்ர்யமே ஸகல ஐஸ்வர்யம் என்று தங்களையே ஆஸ்ரயித்தவனுக விருக்கிறேன்.'' இந்த விஷயம் சகல ஜகத்திற்கும் தெரிந்த விஷயம். கால்களில் அடக்கப்படவேண்டிய தூசிகள் கால்களால் உதைக்கப்பட்டால் நம் தலைக்குமேலே ஏறிவிடுகின்றன. ஆகையால் பரதனை நாம் அடக்கி ஆள வேண்டும்.'' (1158)

இவ்விதம் தீர்க்கமான உஷ்ணக் காற்றினுல் ஏற்படும் மூச்சை விட்டுக்கொண்டு, சீதாராமன் முன்பு லக்ஷ்மணன் கீழேவிழுந்து அவர்களுடைய ஆக்ஞையாகிற பரதனை அடக்குதல் என்பதை வரமாகக் கேட்டான். தன் மனத்திற்குள் வீரரஸம் புகுந்தாற்போல லக்ஷ்மணன் கதறினுன். தன் ஜடா மண்டலத்தையும் இடுப்பில் கச்சையையும் இறுக கட்டிக் கொண்டு வில்லும்பாண சகிதமாக லக்ஷ்மணன் யுத்தத்திற்கு சன்னத்தமாக மீண்டும் சொல்ல ஆரம்பித்தான் (1159)

''ஸ்வாமி, இன்று ராமனுக்கு பரம அபகாரம் செய்தவனை ராமனுடைய சேவகன் என்ன செய்வான் என்று பாரும். இந்த பரத யுத்தத்தில் லக்ஷ்மணனுடைய வீரத்தைப் பாரும். என்பிரபு ராமச்சந்திரன் நிராதாரமாக ஸர்வசக்திமான், என்பதை அறியாத பரத சத்ருக்னன் ஆகிற இருசகோதரர்களும் என்ன பாடுபடுகிருர்கள் என்று தெரிந்துவிடும். யுத்த பூமியில் என்னுடைய யுத்த முழக்கத்தைக் கேட்பீர்கள்.'' (1160)

''சகல சேனைகளும் ஒன்றுசேர்ந்து ஒரே சமயத்தில் ஏகத்திரமாக வந்திருப்பது என் பாக்யமே, என்னுல் மிக சிரமத்துடன் மறைக்கப்பட்ட க்ரோதத்தை வெளிப்படுத்தப் போகிறேன். எவ்விதம் சிம்மக்குட்டி யானைகளின் கூட்டத்தை நாசப்படுத்துமோ, எவ்விதம் கழுகு புருக்கூட்டங்களை த்வம்சம் செய்யுமோ, அதுபோல ராம விரோதிகள் அனைவரையும் நான் நஷ்டப்படுத்தப்போகிறேன்.'' (1161)

"பரதனுடைய சகாயத்திற்கு வந்த சேனைகள் அனைத்தையும் நாசப்படுத்தி பசிதாபம் ஏற்படும்படி செய்கிறேன். இந்த இரு சகோதரர்களுக்கும் பாடம் கற்பிக்கிறேன். (சங்கர்ஷண ஆத்மாவாகிய) சங்கர பகவானே, அவர்கள் சகாயத்திற்கு வரட்டும். ஹே ராம் தங்கள் அனுக்ரஹம் எனக்கு ஏற்படுமாயின் அவர்களையும் யுத்தத்தில் ஜெயிக்கிறேன்." (1162)

அத்யந்த ராம பக்தியை அடைந்த லக்ஷ்மணனுடைய க்ரோதவார்த்தைகளைக் கேட்டார் பிரபு. (மன இருளை கோபத்தினால் அடைந்துவிட்ட லக்ஷ்மணனுக்கு பகவத் விஷயத்திற்கு முன்பு பாகவத விஷயம் என்கிற ஞானம் ஏற்படவேண்டும். அவனையும் ஸத்பதத்தில் நிறுத்தவேண்டும் என்று பிரமாண ரூபியாக வந்த ஆசார்யரான ராமன் சீதை ஸந்நிதானத்தில் எல்லாவற்றையும் ஊர்ஜிதராக நின்றுகொண்டு கேட்டுக்கொண்டிருந்தார். பிரதான புருஷனாகிற ராமன் அவனுடைய ஸ்ருஷ்டியின் அடித்தத்வம் அஹிம்சை என்பதையும் மறந்து ஸகல லோகங்களையும் பயமடையச்செய்யும் வார்த்தைகளைக் கேட்டு, அதுவும் ஸகல லோகங்களையும் தாங்கும் ஆதார புருஷனாகிற) ஆதிசேஷனின் அம்சமான லக்ஷ்மணனுடைய வார்த்தைகளைக்கேட்டு ஸகல சராசரங்களும் லோகபதிகளான அஷ்டதிக்பாலர்களும் பயம் நிரம்பினவர்களாக ஸதாசிவாநந்தக் கரணம்செய்யும் அகண்ட ஏகரஸமாகிற ராமசீதையின் அன்பை, ப்ரேமையை அனுபவிக்கமுடியாமல் ஓடினார்கள். (1163)

ஸகல ஜகம் முழுவதும் ஞானம் க்ரோதத்தினால் மறைக்கப்பட்டு, பாபமும் பயமும் நிரம்பினதாகத் தோன்றியது. (ஸ்ருங்கார ராமசீதையை அனுபவிப்பதை விட்டுவிட்டு), பயத்தினால் யேற்படும் தீனத்தன்மையை அடைந்த சகல சராசரங்களும் லக்ஷ்மணனுடைய பாஹு பலத்தினால் கலக்கமடையப்பெற்று எங்கு பார்த்தாலும் ஆகாயத்தில் பயசப்தங்கள் ஏற்பட்டன. "அப்பா லக்ஷ்மணா, (ராஜராஜேஸ்வரி ஸந்நிதானத்தில் ஆனந்தமயமாகவிருக்கும் எங்களுக்கு அபயம் கொடுக்கவேண்டும். எங்கள் வேதனைகளைக் குறைக்கவேண்டும்.) உன்னுடைய பிரதாபங்களையும் பிரபாவங்களையும் யார்தான் அறிவர்? இவைகளை யாரால் பூர்ணமாக வருணிக்கமுடியும்?" (1164)

(ராமனுடைய வாமபாகத்திலிருக்கும் பரதேவதையின் ஸ்வரூபமே, சகல சராசரங்களுக்கும் ஆத்மமங்களகாரிணி, பிரேமை ஆத்மாவாக விளங்குபவளே, சித்திமுத்தி அளிக்கும்

சிந்தாமணி, பிரும்மமய பிரகாசினி, காமகலா பிரதர்சினி நாமரூபவிமர்சினி, காம ரஹஸ்யங்களை அறிந்த மனோன்மணி, அப்பேற்பட்ட ராமசீதா ஸந்நிதானத்தில் ராகத்வேஷங்களுக்கு இடமில்லை). ஆகையால் சீதையை ரமித்துக்கொண்டு, லக்ஷ்மணனை நோக்கினார் என்பிரபு ஸ்ரீராமன். மேலும் ஆகாய வாணி கூறியது "லக்ஷ்மணா, கேளு. ஒருவன் செய்யும் கார்யம் உசிதம் அனுசிதம் என்பதும், கார்யத்தின் கௌரவமும், அதனால் ஏற்படும் கீர்த்தியும், கார்யம் செய்யப்படும் முன்பு ஆராயவேண்டும். இவைகள் காரியம் ஆரம்பிக்கப்பட்ட பின்பு ஆராயத்தகுந்த விஷயம் இல்லை. வேதங்களும் வேதங்களை அறிந்த பண்டிதர்களும், விஷயங்களை மனத்தினால் கிரஹித்து, புத்தியினால் தீர்க்க ஆராய்ந்து நிச்சயத்தை அடையவேண்டும். அவசரப்படக்கூடாது" (1165)

சகல சுரர்களுடைய இந்த வாணியைக் கேட்டார் பிரபு லக்ஷ்மணன். லஜ்ஜையினால் மனம் குன்றினார். ராமசீதை ஆகியவர்களின் ஸன்மானத்தை மீண்டும் அடைந்தார். குளிர்ந்த திருஷ்டியினால் புஷ்கரலோசனங்களுடன் பிரபு சொல்ல ஆரம்பித்தார். "என் பிரிய லக்ஷ்மணா, நீ சொல்வது வாஸ்தவம் தான். நீதியின் அக்கரையை அடைந்த நீ சொல்வது பூராவும் ஸத்யம்தான். ராஜ்யமதம்கொண்ட அபிமானிகளுக்கு ஏற்படும் விபரீத புத்திதான் எல்லோரையும் தங்கள் பதங்களிலிருந்து நழுவிவிடும்படி செய்கின்றது." (1166)

"எவர்கள் சாதுக்களால் பழக்கப்படாதவர்களோ, அவர்கள் மிக்க மதம் கொண்டவர்களாக ரிஷிகளையும் ஸாதுக்களையும் அர்த்தஹீனர்களையும் அலக்ஷ்யம் செய்வது ஸர்வ சாதாரணம். ஆனால் புத்திபூர்வமாக கவனித்துக் கேள். பிரும்ம ஸ்ருஷ்டியில் பரதனுக்கு ஸமமான ஆத்மபுருஷன் இதுவரையிலும் இல்லை. இனியும் இருக்கப்போவதுமில்லை. இந்த விஷயம் பிரபஞ்சங்கள் முழுவதிலும், காலங்கள் முழுவதிலும் தெரியப்படவேண்டிய விஷயம். யாவராலும் கேட்கப்பட்டிருக்காதபடியும் பார்த்திருக்காதபடியும் பரதன் விளங்கப் போகிறான். நீ அதை பார்க்கப் போகிறாய்." (1167)

[தியானம்

ஹே ராம ஹயக்ரீவா, கருணாகரா, லக்ஷ்மிநாயகா, ரமாபதே, ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் தாமரை போன்ற கையில் உள்ள ஸ்வர்ண குடத்தால் அமுதபிரவாஹத்தால் அபிஷேகம் செய்யப்பட்ட

ஜடாமண்டலமுடைய ஸ்ரீராமா, சின்முத்ரை, அக்ஷமாலை, தாமரை புஷ்பமாகிற சீதையுடன் ரமித்துக் கொண்டிருக்கும் ஞான ஹயக்ரீவா, அம்ருதத்தால் நனைக்கப்பட்ட பகவானே, சந்திரகாந்தி போன்ற ராமச்சந்திரா, ராக்ஷஸர்களுக்கு எதிரியான ஸ்ரீராமா, கருணைக்கடலாகிய கன்னங்களையும் வாக்கின் பெருக்கிற்குக்கடலான பகவானே, சிறந்த சிரோத்திரத்தை உடையவனே, என் நாக்கை நீர்தான் ரக்ஷிக்க வேண்டும். ஹனுமாரால் சேவிக்கப்படும் ராமா, வைகுண்டநாதா, உலகத்தை வகிக்கும் பங்கஜலோசனு, கங்கைக்கு உற்பத்தி ஸ்தானமே, பஞ்சாயுதங்களைக் கொண்ட மஹாவிஷ்ணோ, உமா பரமசிவனுல் நமஸ்கரிக்கப்பட்ட ராமா என்னை ரக்ஷி.]

''லக்ஷ்மணு, அயோத்தியின் ராஜ்யபதத்தை மாத்திரம் நான் சொல்லவில்லை? பரதனுக்கு பிரும்மபதமே கொடு; விஷ்ணு பதமே கொடு; பாசுபத யோகத்தால் அடையப்படும் உமா மஹேஸ்வர பதத்தைக் கொடு. அவன் அவைகளைப் பெற்ருலும் இந்திரிய அடக்கத்தோடு கூடியவன். அவனை இந்த பதங்கள் மதம் செய்துவிட முடியாது. புளித்துப்போன கஞ்சி க்ஷீர ஸமுத்திரத்தின் வாஸனையையும் ருசியையும் நஷ்டப்படுத்தக் கூடுமா?'' (1168)

''மாத்யான்னிக சூர்யன் அஸ்தமாகிவிடலாம். ஆகாயத்தில் பலமான மேகங்கள் ஒன்று சேர்ந்து ஆகாயமே காணப்படாமல் தோன்றலாம். அகஸ்திய மஹரிஷி சமுத்திரத்தையே குடித்தவர். அவர் கூட ஒரு பசு மாட்டின் குளம்பின் ஜலத்தால் மூழ்கப்படலாம். க்ஷமைக்குப் பெயர் போன பூமிதேவி தன் ஸ்வாபாவிக குணத்தை இழந்துவிடலாம். வாயுபகவானுலும் தகர்க்க முடியாத மேருபர்வதமே ஒரு கொசுவின் வாய் ஊதுதலால் கிள்ளி எரியப்படலாம். ஆனுல் என் அருமைத் தம்பி பரதன் நிருபபதத்தை அடைந்து மஹா மோகத்தை ஒருக்காலும் அடையமாட்டான். என் பிரிய லக்ஷ்மணு, இன்னமும் கேள். உன்னையும் என் பிதாவையும் நினைத்துச் சொல்கிறேன். பரதனைப் போல சுசியான புருஷனும், பந்துக்களிடம் பிரியமானவனும் யாரும் சம்சாரத்தில் இருக்கமுடியாது.'' (1169)

''ஸகல ஸத்வகுணங்களையும் கொண்ட க்ஷீரத்தை கீழ் நோக்கிப் போகும் ஜலத்துடன் பிரும்மா கலந்து பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்தார். ஆனுல் நம் பரதனே ரவி வம்சத்தில் பிறந்த ஹம்ஸப்பேடு. யாதொரு குணதோஷங்கள்யின்றி நம் குலத்தில் அவன் அவதரித்திருக்கிருன்.'' (1170)

"அந்த பரத ஹம்ஸம் ஸத்வகுணத்துடன் கூடிய க்ஷீரத்தை கிரஹித்துக்கொண்டு அவகுணங்கள் கொண்ட ஜலத்தை ஒதுக்குகிறன். சிறிய விஷயங்களில் அவன் மனம் ஈடுபடுகிற தில்லை. அப்பேற்பட்ட மஹாத்மா ஜகத்தில் ஜ்வலிக்கும் நக்ஷத்திரமாக விருக்கிறன்." இவ்விதம் கலப்படமில்லாத பரத னுடைய மங்களகரமான சீல நடத்தைகளையும் ஸ்வபாவ பிரவிருத்தி குணங்களையும் சொல்லி பிரபு ரகுராய் ப்ரேமை யாகிற க்ஷீராப்தியில் மூழ்கி ஆனந்தப்பட்டார். (1171)

[தியானம்

ஹே ராமா, சீதாபதி, நாராயண மஹாலக்ஷ்மி, விஷ்வக் ஸேன சுகர்தேடிய தங்களுடைய பிருந்தாவன பாதங்களைக் கொடு. ஆசார்யனே ஸர்வமும் என்கிற மனஸ்ஸுடனும், மஹா விஸ்வாசத்துடனும் வந்து உங்களை அடைகிறேன். நீர் அம்பிகையாகிற பராசக்தியின் ஹ்ருதயத்தில் ஸுவர்ண பிந்து வாக வீற்றிருந்து ஸர்வசக்தி உள்ளவராக விளங்குகிறீர். உம்முடைய பேச்சினால் பிரணவ ஸ்வரூபியாயும், நாதரூப மாகவும் விளங்குகிறீர். உம்முடைய சரணாகதவ்ரதம் ரொம்ப பெயர் பெற்றது. உம்முடைய "அபயம்" என்கிற ஒரு வார்த்தையும், "அஸ்திரம்" என்கிற ஒரு அஸ்திரமும், சீதை என்கிற ஒரு மனைவியும், நீர் தானம் கொடுப்பதால் ப்ரதிகிருஹம் செய்கிறவன் மற்றொருவனிடம் யாதும் வேண்டாமையைப் பெறுவதும் ஆகிய ஸத்குணங்களால் அல்லவா உம்மை அசேஷாப்யர் என்கிற திருநாமத்தால் அழைக்கிறார்கள். ஸர்வர் என்கிற சப்தத்தால் சகலமும் நீயே என்கிற சீதையின் சொற் படிக்கும், ஆஞ்சநேயர் காண்பித்தபடிக்கும், பரதன் ராமவிரதம் பூண்டபடி நடக்கும் எனக்குப் பிரபத்தி யோகத்தை உபதேசிக் கும் ஆசார்ய கடாக்ஷம் கிடைக்க வேண்டும். ஹே வாகீஸ்வரரே என்னை நீர்தான் ஆதரிக்க வேண்டும்.]

(ஸர்வர், வாகீஸ்வரர் என்கிற சப்தங்களால் அறியப்படும்) ரகுவரனாகிற ஸ்ரீராமனின் அழகான வாக்குக்களால் பரதனைப் பற்றிய புகழ்ந்த சொற்கள், அவனுக்கே ததம் என்று சொல்லும்படியான வசனங்கள், லக்ஷ்மணனுக்கு அடக்கத்தை ஏற்படுத்தி, அவனுடைய பாகவத பிரேமையை அதிகரித்தது. ராமனும் லக்ஷ்மணனுடைய பிரேமையைக் கண்டு, அந்த ஹேதுவினால் லக்ஷ்மணனையும் புகழ்ந்தார். ஸகல தேவதைகளும் இதை உணர்ந்து "எங்கள் பிரபு ராமன் கிருபாஸிந்து;

அவரைப் போல யார் இருக்கக்கூடும்?'' என்று சொல்லிக் கொண்டார்கள். (1172)

"மஹாத்மாவான பரதன் இந்த ஜகத்தில் ஜன்மம் எடுக்காத போனால், யார் ராமனால் ஏற்படுத்தப்பட்ட சகல தர்மங்களையும் அனுஷ்டிக்க முடியும்? பரதன் ஸம்பூர்ண தர்மத்தின் சின்னம். வேதங்களின் பிரமாணங்களைச் சுமக்கும் தாரணர். கவிஸ்ரேஷ்டர்கள், சௌனகாதி போன்ற பாகவத பிரேமையுள்ளவர்கள் கூட பரதனுடைய சீரிய குணோத்தமங்களைச் சொல்லியும் புகழ்ந்தும் பூர்ணமாகச் சொல்ல முடிகிறதில்லை. ரகுநாதன் ஒருவர்தான் குருர்குருவாகவும், ஆசார்ய பரம்பரையில் அக்ர கண்யராகவும் அறியப்பட்டு அறிகிறார்,'' என்கிற தேவ வாக்குக்கள் ஆகாசவாணியாகக் கேட்கப்பட்டன. (1173)

லக்ஷ்மணன் சீதாராமச்சந்திரன் ஆகியவர்கள் தேவதையின் வாக்குக்களைக் கேட்டார்கள். அத்யந்த சுகத்தை அடைந்தார்கள். அவர்கள் அடைந்த பிரேமை ஆனந்தத்தை யாரால் விவரிக்க முடியும்? இங்கே பரதன் தன் கூட்டத்தினர்களுடன் புனிதமான மந்தாகினியில் ஸ்நானம் செய்தார்கள். (1174)

அதன் பிறகு பரதன் அந்த நதியின் கரையோரத்தில் எல்லோரையும் அமர்ந்து தங்கும்படி சொன்னான். மாதாக்களையும் குருவான வஸிஷ்டரையும் மந்திரி பிரமுகர்களையும் அழைத்துக்கொண்டு, நிஷாதராஜனாகிற குஹனுடனும் சத்ருக்னனுடனும் பரதன் சீதையுடன் கூடிய ரகுராய் ஆகிற ராமன் வசிக்கும் இடத்திற்குப் புறப்பட்டான். (1175)

[தியானம்

ஹே சீதாபதி, ராமா, நாராயணா, மஹாலக்ஷ்மியுடன் கூடிய தீர்த்தபதே, பரதன் மாந்தாதா, சௌபரி, சத்ருக்னன் போன்ற மஹா ஆசார்யர்கள் மஹா மோஹத்தை ஒழிக்க உன்னுடைய அச்யுதபதங்களை நாடினார்கள். பாவம், ராகம், தாளம் ஆகிற நாத வித்யையினால் தியாகராஜர், நாதமுனி போன்றவர்கள் ஸர்வ ஸ்வரூபரும், விஷ்ணுவும், அமலனாதிபிரானும், அனந்தனுடன் கூடிய ஸர்வேஸ்வரரை ஆராதித்து ஆதிமத்ய சூன்யங்களில் பிரகாசித்து மறைகிறவரான உம்மை ஏகாந்திகளின் பாவத்துடன் ஆராதித்தார்கள். ஹே குரூணாம்பரம்குருவாக விளங்கும் என் வைகுண்ட நாராயணரே, உம்மை தேஜோமயராகவும், ஸர்வ ஸ்வரூபராகவும், அவ்யக்த புருஷனாகவும், விஸ்பஷ்ட சரீரத்தை உடைய ஸ்ரீ மஹாலக்ஷ்மியுடன் கூடிய விஷ்ணு

பகவானாக நான் ஆஸ்ரயித்து என் தோஷங்களையும் மலங்களையும் கொண்ட சித்தத்தை மஹா மோகத்திலிருந்து விடுதலை செய்வதற்காக நிஸ்சல பக்தியுடன் உம்மை அர்ச்சித்து நமஸ்கரிக்கிறேன். நம்மாழ்வார் உம்முடைய அருளை பரம காருணிகனிடமிருந்து உற்பத்தியாவதாக அடிக்கடி சொல்லுகிறார். அந்த சடகோப பாதங்களை என் தலையில் ரஜஸ்ஸாக அணிந்து கொண்டு பகவானே, உம்முடைய கிருபையை வேண்டுகிறேன்.]

பரதன் தன் தாயாரை அழைத்து என்ன செய்யவேண்டும் என்று கற்பித்தான். அவளுடைய மனத்தில் எழுந்த சந்தேகங்களையும் பயங்களையும் போக்கினான். "என் பிரபு ஸ்ரீராமன், சீதையுடன் கூடிய ராமன், லக்ஷ்மணன் சீதையுடன் கூடிய ஸ்ரீராமன், அபயம் என்று ஸர்வகோசர் பாவத்தாலே ஸர்வ பயாபயத்தையும் கொடுக்கும் கருணைக்கடல். ஆகையினால் நாம் வருவதை அறிந்து அந்த பிரபு நம்மிடம் கோபம் கொண்டு வேறு இடம் செல்லமாட்டார்." (1176)

("ஸர்வ பூதேப்யஃ அபயம் ததாமி" என்கிற வ்ரதம் பூண்ட ராமனும், "அஸ்துதே தயைவ ஸர்வம் ஸம்பத் ஸ்யதே" என்கிற புருஷகாரம் பண்ணும் பிராட்டியும், "நீர் பண்ணின சரணாகதியையே காரணமாக வைத்து உம்முடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும்பேறு சித்திக்கும்" என்று கொள்ளப்படும் விசேஷ அனுக்ரஹமும்.) தாளும் தடக்கையும் கூப்பி நாம் பணியும் அவருக்கு, அவர்கள் ஒருக்காலும் என்னையும் என் சம்பந்தம் உள்ளவர்களையும் ஒருக்காலும் கைவிடமாட்டார். என் தாயின் அபராதத்தால் என்னை நிர்வஹிக்கும் கிருபையால் எனக்கும் என் தாயாரால் விளைந்த தோஷத்திற்கும் பரிஹாரமாக ("ஸர்வம் ஸம்பத் ஸ்யதே" என்று சோதிவாய் திறந்த) திவ்ய தம்பதிகளின் அனுக்ரஹ பிரஸாதம் பலித்துநிற்க கேட்கவேண்டுமா? (எம்பெருமானாரைப் போல "தயைவ ஸர்வம் ஸம்பத் ஸ்யதே" போன்ற) ராமானுஜருடைய விசேஷ அனுக்ரஹம், அபயபிரதானம் நம் போன்றவர்களுக்கு உண்டு, நம் போன்ற புண்யஹீனர்களுக்கும் தோஷங்கள் மலிந்த ஆத்மாக்களுக்கும் பகவான் பிராட்டியுடன் கூடியவராக ராமானுஜன் சந்நிதியில் விஷேச கிருபை உண்டு." என்கிற அபய பிரதான ஸ்லோகத்தை பரதன் அருளினான். (1177)

"அவர் என்னை பரிஹாரங்களால் மீட்கமுடியாத அந்தகாரம் சூழ்ந்த பாபாத்மாவாக நினைக்கட்டும். என்னை ஒரு சேவகனாக பகவான் ஸ்வீகாரம் செய்து அவருடைய ரக்ஷக பாதுகை

களை என் ஆத்ம பீடமாகவும் அடைக்கலம்புகும் நிழலாகவும் உதார மனத்துடன் கொடுப்பார். ஸகல ராம தாஸர்களிடமும் பூதங்களாகின்ற அசித் ஸம்ஸ்ருஷ்டங்கள் மலிந்துதானே கிடைக்கும். மஹாத்மாவாகிற என் பிரபு அவை எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டு, '' இவன் நம்மைச் சேர்ந்தவன் '' என்று நினைத்து அருள்சுரக்கும் வள்ளல் (வைஷ்ணவ தாஸர்களிடம் தோஷங்கள் இருக்கத்தானே செய்யும்? அவர்களும் மனிதப்பிறவி அல்லவா?) (1178)

''இந்த ஜகத்தில் நிர்மலமான யசசுக்குப் பாத்திரமானவர்கள் சாதக பக்ஷியும், மீன் குஞ்சுகளும்தான். இவைகள் தங்களுடைய ப்ரேமையை என்றும் நவசுதாவாகப் பண்ணுவதில் நிஜமான நிபுணர்கள். தங்கள் எஜமானர்களிடம் சதா அனன்ய பக்தி செய்பவர்கள்.'' அவ்விதமாக நினைத்துக்கொண்டே பரதன் சென்று கொண்டிருந்தான். சில சமயங்களில் ராமன் என்ன சொல்வாரோ என்கிற கிஞ்சித் பயமும், சில சமயங்களில் பயத்தை நாசம் செய்யும் ராமனுடைய நிர்ஹேதுக கிருபையும் பரதனுடைய உள்தாபங்களை குளிரவைத்தன. (1179)

''நான் பண்ணும் சரணாகதி ராமனை எவ்விதமாவது அயோத்திக்கு என் மாதாவின் எண்ணத்திற்கு விரோதமாக அழைத்து வந்துவிடவேண்டும்,'' ஆனால் கர்ம ஸ்வரூபியாகிற பகவான் கர்மத்தின் பலனைக் கொடுக்காமல் விட்மாட்டான். என் மாதாவின் கெட்ட கர்மத்தினால் துஷ்பலன் சம்பவிக்கும் என்கிற எண்ணம் அவனுடைய நெஞ்சில் மிதந்தவுடன் அவன் தளர்ச்சி அடைவான். ஆனால் அவனுடைய அந்தராத்மாவின் ஆத்ம பலமும், பகவானே ஏகபராயணம், அதுவே அவன் தர்மம், அதுவே அவன் தாரணம், அதுவே ஆத்ம பலம் என்கிற நினைவுகள் வந்ததும் அவன் தைரியமடைவான். ''என் குண தோஷங்கள் இருக்கட்டும் ஒரு பக்கம்; என் பிரபு ரகுநாதனின் இயற்கையான புத்ர வாத்ஸல்யம் எங்கு போய்விட்டது? அவன்தானே எனக்கு தகப்பன், தாய், குரு, சகாவாகிறமித்ரன், பதியாகிற ஸர்வமும்-ஆம். என்னை அனுக்ரஹிப்பார். கட்டாயம் என்னை ரக்ஷித்தருள்வார்,'' என்கிற விஸ்வாசம் அவனை ராம பிரணதார்த்திஹரனிடம் வெகுவேகமாக அழைத்துச்சென்றது. பரதன் மார்க்கத்தில் வெகு வேகமாக ராமசீதாவை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். (1180)

[தியானம்

ஹே ராமசீதா, மதுசூதனு, ரங்கபதே, நம்மாழ்வார் நாத முனிகள் ஆஸ்ரயித்த ராமானுஜபதமே, பரதன் ஆஸ்ரயித்த ரங்கநாத பதமே, கிருபாளு, வேதாத்மாவாகிய கருடரும் மஹா உரகனும் ஆஸ்ரயித்த சீதாராமா, பிரபன்னுய அபயம் ததாமி என்று அருளிச்செய்த ஆஸ்ரித வாத்ஸல்ய ஜலதே, பரதனும், அவனை அண்டின சத்ருக்னனும், அவர்களை அண்டின பரமார்த்திக பகவத் சரணுரவிந்த சரணுகதி ரியதாவஸ்திதா அவிரதா அஸ்துமே என்கிற பிரார்த்தனைக்குப் பிரதி வசனமாக அஸ்துதே என்று அருளிச்செய்த கிருபாஸிந்தோ, மதுசூதனு, பிரபன்னராகிய என்னை எம்பெருமானுர் பரதன் முதலிய பாகவத சிரோண்மணிகள் "தயைவ" என்று பண்ணின சரணுகதி யினுலே, நாங்கள் எல்லோரும் எக்காலத்திலும் எந்த அவஸ்தை யிலும் "ஸர்வம் ஸம்பத் ஸ்யதே" என்று அருள் செய்த மாதிரி யாக விருக்கிறது. அப்பேறற்பட்ட அவருக்கு நாங்கள் என்றும் கிருதார்த்தர்களாக ஆகவேண்டும்.]

அந்தசமயம் பரதனுடைய அனுபவங்கள் எவ்விதம் இருந்தன? பெரும்வெள்ளத்தில் விழுந்து மிதந்து செல்லும் வண்டுபோல் ஆகிவிட்டான் பரதன். (எத்தனை கோடி ஜன்மங் களின் மஹா தபஸ்ஸின் பலன்களை ஒரு நொடியில் அறியப் போகிறுன். அனுதி காலமாக ஓடிவரும் கர்மபிரவாஹம், பக்தி பிரவாஹம், ஞான பிரவாஹம், பிரபன்ன பிரவாஹம் ஆகிய சதுர்வித மார்க்கங்களின் ஏகமாத்திரத்தில் உன்னத பலன்களின் சாராம்சமாக ராமசீதா தர்சனத்தையும், ஸர்வம் ஸம்பத் ஸ்யதே என்கிற அருள்வாக்கும் ஒரு நிமிஷத்தில் சம்பவிக்கப்போகிறது. அவனும் துக்கங்களின் முடிவைப் பார்க்கும் சேதனன் தண்ணீரில் மொய்க்கும் ஒரு ஈப்போலவும், அருள் பிரவாஹம் மஹத்தானதும், கம்பீரமானதும், பயத்தைப் போக்குவதுமான கிருபாதிருஷ்டி யினுல், புஷ்கர லோசனங்களால், பகவத் ஸம்பந்தம், பாகவத ஸம்பந்தம் ஆகிய பேற்றைப்பெற்ற ஒரு சேதனன் ஒரு மலையி லிருந்து மற்றொரு மலைக்கு தாவிப்போகும் அருவியின் ஜலத்தின் வேகத்தினுல் கொண்டு போகப்பட்டதுபோல உணர்ந்தான்.) பரதனுடைய பிரேமை பிரவாஹத்தைக்கண்ட நிஷாத ராஜன் குஹன் அந்த சமயத்தில் தன் தேகத்தையும் மறந்து விதேக முக்தி அடைந்தவன்போல காணப்பட்டான். ஆச்சரியம்! (1181)

அபூர்வமான மங்கள சகுனங்கள் ஏற்பட்டன. எங்கு பார்த்தாலும் மங்களத்தைத் தெரிவிக்கும் மிருகங்களின் த்வனிகள்

பக்ஷிகளின் சப்தங்கள், கேட்கப்பட்டன. இதைக்கேட்ட வேட அரசனுன குஹப்பெருமான் சொன்னுன் "கவலைகள் தீரும்; சந்தோஷங்கள், பந்து தர்சனம், ஏற்படும்; கடைசியில் மீண்டும் பிரிவு ஏற்படும்." (1182)

(ஆம். குஹன் சத்யஸந்தன், அம்பிகையின் வரபிரஸாதம் பெற்றவன்.) ராமனும் சத்ய சங்கல்பன் என்று பரதன் தனக்குள் எண்ணமிட்டுக்கொண்டான். இதற்குள் எல்லோரும் ராமனுடைய ஆஸ்ரமத்தைக் கண்டார்கள். அந்த ஆஸ்ரமம் வனத்தின் நடுவிலும், அந்த வனம் பர்வதங்களின் நடுவிலும், யிருந்ததைக் கண்டு பரதனுடைய ஆனந்தம் பொங்கி வழிந்தது. பசித்தவனுக்கு சுவையான ஆகாரம் கிடைத்தபின்பு எவ்விதம் ஆனந்திப்பானே, அவ்விதம் பரதன் ஆனந்தித்தான். (1183)

இந்த மஹா பாக்யவானுன பரதன் மூன்றுவித ஆதிஆத்மிக, ஆதிதைவிக, ஆதிபௌதிக தாபங்களிலிருந்து விடுதலை அடைவான். மஹா கொடூரமான கர்மங்களின் பலனுகவும், க்ரூர கிரஹங்களின் பார்வையாலும், மஹா மாரி அம்மனின் பீடித்தலாலும், இயற்கையாகிற மின்னல், இடி, மழை, வெப்பம் ஆகிய கடுந் தண்டனைகளுக்கு பயப்படும் ஒரு பாபாத்மா எவ்விதம் ஸங்கீர்த்ய நாராயண ஸப்த மாத்திரம் மஹா துக்கங்களிலிருந்து விடுபட்டு பரம பாக்யம் அடைந்தவன்போல உத்தம ஸாம்ராஜ்யத்தை அடைந்து, அந்த ராஜ்யத்தின் நல்ல பலன்களைத் தரும் ராஜரீகத்தினுல் பூர்ணமாக சுகங்களை அடைவானே, அதுபோல பரதனுடைய கதியும் உத்தமமான ராமபாதுகைகளை சீதையின் புஷ்கர கடாக்ஷத்தின் முன்பு மேலானதாக ஆவதுபோல விளங்கியது. (1184)

அதிவிருஷ்டி, அனுவிருஷ்டிபனி பெய்தல், எலி, பூச்சி புழுக்களின் உபாதைகள், பக்ஷிகளால் ஏற்படும் உபத்திரவங்கள், அன்னிய அரசனுடைய படையெடுப்பு ஆகிய ஐந்துவித உபத்ரவங்களுக்கு ஈர்தியினுல் ஏற்படும் உத்பாதங்கள் என்று சொல்லப்படுகின்றன. (1185)

ராமனுடைய வனவாசத்தாலும், ஐஸ்வர்யம் நிரம்பின தர்மராஜனுடைய குடையின்கீழ் ஜனங்கள் எவ்விதம் சுகிப்பார்களோ, அதுபோல ராஜ்யத்தில் ஜனங்கள் அதிக சுகத்தை அடைந்தார்கள். ராமனுடைய வனத்தில் சீதையின் செழிப்பு கண்களின் வீக்ஷண்யத்தால் எங்கும் பசுமையான மரம் செடி கொடிகள் பூத்துக்குலுங்கி, காய்த்து பழங்கள் சொரிந்த வண்ணமிருந்தன. அந்த வனவாசிகளும் உத்தமராஜனுடைய கண்காணிப்பினுல்

அடையும் மஹா சுகங்களை அடைந்தார்கள். இந்த வனவாச ராஜ்யத்திற்கு விவேகம் அரசனாகவும், வைராக்யம் மந்திரியாகவுமிருந்தார்கள். தர்ம நிச்சயமுள்ள அரசன் இந்திரியம் மனம் அடக்கம் கொண்ட மந்திரியை தன் ஆலோசனைகளுக்கு வைத்திருப்பதுபோலத் தோன்றியது. (1186)

[தியானம்

ஹே ராமா, தியாகராஜ ஹ்ருதாப்ஜத்தில் வசிக்கும் சீதா ராமா, துளசிதாஸரின் சந்தன திலகத்தின் வாஸனையுள்ள புருஷோத்தம ராமா, உங்கள் கிருபை வேண்டும். ஆனந்த ஸ்ரீராமபாதுகைகள், உமா லக்ஷ்மி சரஸ்வதியின் பக்தி ஹ்ருதய வசமுள்ள ஸ்ரீராமபாதுகைள். ஆஞ்சநேயர் ஸதா நிர்மல பக்தியுடன் பூஜை செய்யும் உத்தம பாதங்கள். பரதன் ஆஸ்ரயித்த பாதகமலங்களே, என்னிடம் உன் மனதானது குஹன் சந்நிதானத்தின் முன்பு கருணை செய்யவேண்டும். ராமானுஜன் ஸர்வ ரக்ஷகனாகி உன் பாதங்களின் ஸ்பர்சங்களின் ஸம்பந்தங்களை எனக்கு அடிக்கடி கொடுக்கவேண்டும். ஒவ்வொரு பாப பயங்களிலிருந்தும் ரொம்ப மலினமான என் மனம் உன்னிடம் ஸம்பந்தப்பட்டு விட்டால், எப்படி நிர்மலமாக ஆகாமலிருக்கும்? உன் பாதங்களால், திருவிக்ரம அவதாரத்தின்போது ஒரு அடியால் பூமியை அளந்தாய். உமது பாதங்கள் எனது தாய் தகப்பனாகிற உங்கள் இருவர்களுடைய தயைக்கு முக்யமான லக்ஷ்யமாயிருக்க வேண்டும். உங்களுக்கு வேலைக்காரனாக ஆசார்யர்களால் நான் கொடுக்கப்பட்டேன். நீங்கள் எப்பொழுதும் மலர்ந்த முகத் தாமரையுடன் என்னைப் பிரகாசிக்கச் செய்யவேண்டும். பாதுகைகளே, நீங்கள் ஸர்வ வியாபகர்கள். விபவங்கள் உடையவர்கள். சரண்யமாகவும பிராபகவுமாகவும் இருக்கிறீர்கள். தாயே, மஹாலக்ஷ்மியே, தாங்கள் சேஷி ஆனபடியால் ஆத்ம ஸமர்ப்பணம் செய்கிறேன். காரணாந்தரமின்றி உத்தேசிக்கப்படும் தன்மையை அடையும் உங்களை வேதங்களால் தேடப்படுகிறது. தேவி, பாதுகாதேவி, எப்பொழுதும் உங்கள் மகிமைகள் என் மனதில் நர்த்தனம் செய்துகொண்டிருக்கவேண்டும்.]

அந்த வனவாச வாழ்க்கையில் அஹிம்சை ஸத்யம் என்கிற பூததயை, பிறர் பொருளை ஆசைப்படாமலிருத்தல், பிரஹ்மசர்யம், அபரிக்ரஹம் (தானம் செய்வது) ஆகிற யமங்களும், சுசியாகவிருத்தல், சந்தோஷமாகவிருத்தல், தபஸ் செய்தல், வேதங்களைப்படித்தல், ஈஸ்வரனை ஆராதனம் செய்தல் ஆகிய

பஞ்சநியமங்கள் இருந்தன. அப்பேற்பட்ட வாழ்க்கைக்கு அந்த ஆஸ்ரமத்தைச் சுற்றியிருந்த பர்வதங்கள் ராஜ்யங்களாகவும், சுசியுடனும் சாந்தியுடனும் சுபுத்தியுடனும் கூடிய அழகான ராணியாகவும் விளங்கின. அந்த வனத்தின் அரசன் பூர்ணமான ஸம்பத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட ஸம்பன்னனாக விருந்தான். அவன் ஐஸ்வர்யம் படைத்திருந்தபோதிலும், அதிவினயத்துடனும் அதிவிஸ்வாசத்துடனும் ஸ்ரீராமபாதங்களை சரணமாக ஆஸ்ரயம் செய்யப்பட்டதால், சித்தம் உத்ஸாஹத்தை அடைந்து அதனால் ஆனந்தமடைந்தது. ராஜ்ய ஸம்பத்துக்கள் ஏழு விதம். விவேக அரசன், உண்மையான மந்திரி, பக்க படைபலமுள்ள ஸுஹ்ருதய ஸ்நேகிதர்கள்; பொக்கிஷம், கோட்டை முதலிய பாதுகாப்புக்கள், சதுரங்கஸேனை. (1187)

[தியானம்

உமையுடன் கூடிய ஸ்கந்தரே, ஆறுமுகங்களுடன் பிரகாசிக்கும் என் ஞான பாஸ்கரரே, ஸர்வரோகங்களையும் நாசம் செய்பவரே, நமஸ்கரிப்பவர்களுக்கு கல்பகவிருக்ஷம் போலிருப்பவரே, செந்தாமரை போல காந்தியுள்ள ராமபாதுகைகள், செந்தாமரை போன்ற மெல்லிய கரத்தினள் சீதை, ராமானுஜர் போன்ற ராமஹ்ருதயம் கொண்டவர்களும், பரதனுடைய உள் அந்தரங்க அன்புடனும் சேவை கைங்கர்யம் ஆகிய மஹத்தான தபஸ்ஸினால் திருப்தி அடையப்பட்ட இரண்டு ராம பாதுகைகளின் சம்பந்தம் என்னைவிட்டு என்றும் அகலாமல் இருக்க வேண்டும். அகஸ்தியர், லோபா முத்ரையின் அருளுக்கு பாத்திரமானவனும் சிம்ம வாஹினியான என் உமாலக்ஷ்மியின் கிருபைக்கு அடைக்கலமாக ஒப்பிவிக்கப்பட்ட என்னிடம் பரிபூர்ண கிருபையுடன் பாதுகைகள் இருக்கவேண்டும். கௌபீனம் தரித்து தண்டத்தை வலது கையில் தரித்திருக்கிற ஸ்கந்தர் என்னைக் குளிரக் கடாக்ஷிக்கட்டும். அண்டினவர்களின் சோகத்தைப் போக்கும் கௌஸல்யா புத்ரன் எனக்குப் பிரியமாகவிருக்கட்டும். ஆஞ்சநேயர் மனத்தினால் கண்டு ஆனந்தித்த ஜனகாத்மஜா என்னிடம் கிருபையுடன் இருக்கட்டும். சதா பரதனை நமஸ்கரித்து வாழ்ந்து வந்த சத்ருக்னன் ராம கைங்கர்யத்தில் அனுகூலனாகவிருக்கிற என்னை அனுக்ரஹிக்கட்டும். ஸ்ரீமீனாக்ஷியும் சுந்தரேஸ்வரரும் இரு கற்பகமரங்கள் போல எனக்கு சுகத்தைத்தரட்டும் ]

(மஹா மோகங்களின் வசமடைந்த சும்பன், நிசும்பன், ராவணன், சூரபத்மன் போன்ற) அரசர்களை சேனையுடன் ஜயித்து, பிரும்ம ஞானமடைந்த அரசன் எவ்விதம் ராஜ்யத்தை ஸ்தாபித்து, தர்மத்தில் புத்தியை செலுத்தி, சூரியனையும் சந்திரனையும் அவரவர்களின் பதங்களில் நிறுத்தி நிலைக்கச் செய்து, தேவர்களின் காரியங்களையும் செய்து அவர்களை திருப்தி செய்விப்பானோ, அது போல ராமனுடைய வனவிஜயத்தால் சகல சராசரங்களும் ஸந்தோஷமடைந்தன. அந்த வனத்தில் நகரத்தின் சுகங்களும் அமைதியும் ஸம்பத் ஐஸ்வர்யங்களும் நர்காலத்தைத் தெரிவிக்கும் அறிகுறிகளும் சேர்ந்தாற்போல விளங்கின. (1188)

அந்த வனத்தில் எத்தனையோ முனிவர்களுடைய ஆஸ்ரமங் களிருந்தன. அவைகள் அந்தவிடங்களில் செழிப்புக்கு அறிகுறி யாக லக்ஷ்மி ஸபன்ன சின்னங்களான பட்டிணங்கள் போலவும் கிராமங்களும் சேரிகளும் அந்த விவேக ராஜனுடைய ஸம்பத் ஐஸ்வர்யங்களாக விளங்கின. அநேக விதமானதும், விசித்திர மானதும், அழகான பக்ஷிகளும், மிருகங்களும், பசுக் கூட்டங் களும் அவிடம் இருந்தன. இவைகள் எல்லாம் சமாஜமாகச் சேர்ந்து ராமனுடைய வனசஞ்சாரம் ராஜ்யம் போல விளங்கியது. பிரஜைகள் மாதிரியாகவும், தர்ம பர்பாலனமாக அரசாங்கம் நடைபெறுவது போலவுமிருந்தன. அவைகளுடைய அழகும் கீர்த்தி பிரபாவங்களும் வர்ணனைக்கும் மீறியிருந்தன. (1189)

முயற்குட்டிகள், யானைகள், சிம்மங்கள், புலிகள், முள்ளம் பன்றிகள், காட்டெருமைகள், காளைகள், இவைகள் எல்லாம் அரசனுடைய ஸம்பத் கூட்டங்களை அதிகப்படுத்தின. அவைகள் ராம சீதா என்கிற தயையின் சந்நிதானத்தில் வெறுப்பு விருப்பு முதலியவைகளைத் துறந்து, ஒன்றுக்கொன்று சண்டை செய்து கொள்ளாமல், மித்ர பாவத்துடனும் அன்புடனும் கூடித்திரிந்தன. அவைகளைப் பார்த்தால் அரசனுடைய சதுரங்க சைனியம் ஒழுங்காக அணிவகுத்து செல்வது போலவிருந்தது. (1190)

மலை அருவிகள் அங்கு அங்கு காணப்பட்டன. காம மதம் பிடித்த யானைகள் பிளிறிக் கொண்டிருந்தன. அவைகளின் சப்தங்கள் யுத்த முழக்க பேரிகைகளின் சப்தங்கள் போல விருந்தன. சக்விபக்ஷிகள் சகோரபக்ஷிகள் சாதகபக்ஷிகள் அழகான ராஜஹம்ஸங்கள், கிளிகள், கூட்டம் போல மதுரமாக கூவிக் கொண்டு திரிந்து கொண்டிருந்தன. அவைகளின் நடை அழகும், இனிய குரல்களும் பரஸ்பர அன்புடன் நடந்து

கொள்ளும் விதமும் யாவருடைய மனத்தையும் வெல்லுவது போலிருந்தன. (1191)

ஆம் நாத மயமாகவிருக்கும்படி ரீங்காரம் செய்யும் வண்டுகள், தேனீக்கள் பிரும்ம ஆனந்தத்தை அடைந்தது போல ஆனந்தமயமாக, (கூத்தபிரானைப் போல) ஆனந்த தாண்டவம் செய்து ஆடின. மதுரமான கீதம், நாட்யம், நர்த்தனம், மங்களங்களை அறிவிக்கும் அழகான ராஜ்யத்தில் இருக்கும் அமைதி சுகத்தைத் தெரிவித்துக் கொண்டிருந்தன. (சங்கர ஹ்ருதயம் போல விளங்கும்) வில்வமரங்களும் அநேக மிருந்தன. அநேக விருக்ஷங்களும் அநேக கொடி வகைகளும் பூத்துக் குலுங்கி காய்த்து, பழங்களுடன் காணப்பட்டன. ஆம் இவைகள் எல்லாம் ராம வைகுண்டத்தில் இருக்கும் அழகானதும் ருசிகரமானதும் பார்க்கப் பார்க்க சுகங்களைத் தருவதும், மங்களங்களை கற்பக விருக்ஷம் போல தருவதுமாக எங்கு பார்த்தாலும் காணப்பட்டன. (1192)

"ஆம், என் பிரபு ஸ்ரீராமசீதா தம்பதிகள் இருக்குமிடம் வைகுந்தம்தானே!" அட்பேறபட்ட மஹா பாக்யம் பெற்ற மந்தாகினி சகிதம் சிறப்பாக வீற்றிருக்கும் சித்திரகூட மலையின் சோலைகளைக் கண்டு பரதனுடைய ஹ்ருதயம் அதிபிரேமையினால் ஆனந்தப்பட்டுக் கொண்டிருந்தது. மஹா தபஸ்ஸின் முடிவில் மஹா நியமங்கள் உள்ள ஜபயக்ஞன் தன்னுடைய நியமங்களின் பலன்களை (எவ்விதம் விஸ்வாமித்திரராகிய கௌசிகன் காயத்திரியை ஜபித்து பரம மங்களங்களை அடைந்தாரோ, அதுபோல) பரதன் ராமலக்ஷ்மணன் சீதா ஆகிய சுப தர்சனத்தை மஹா பக்தியின் சுக்ருத பலனாக அடைந்தான். அதிக ஆனந்தம் கொண்டான். ஒரு தபஸ்வி தன் நியமங்களுக்குக் கிடைத்த பலன் மாதிரி பரதன் தன் சரீரம் மனம் ஆகிய இரண்டிலும் ஆனந்தமடைந்தான். (1193)

**மாத பாராயணத்திற்கு 20ஆவது நிறுத்தம்**
**ஒன்பது நாள் பாராயணத்திற்கு ஐந்தாவது நிறுத்தம்**

[தியானம்

ஹே ராமா, நாராயணா, மஹா லக்ஷ்மியுடன் கூடிய பிரபோ, மஹா சூரரும் வல்கலை ஜடாமண்டலம் ஆகிய தபஸ்வியின் வேஷம் அணிந்தவரும், மலர்ந்த செந்தாமரையைப் போல அழகிய கண்களை உடைய சீதா ராமா, உங்களை நான்

முகுந்தனுக மனத்தில் ஸ்மரித்து, கைகளைக் கூப்பி நமஸ்கரிக்கிறேன். உங்கள் மடியில் படுத்திருக்கும் எனக்கு, அன்புடன் என் மாதா பிதாக்களான உங்களுடைய முக மண்டலத்தைப் பார்த்து ஸ்தன்யபானம் செய்யும் எனக்கு, ஹே ஸ்வாமி, ரகு நந்தனு, உங்கள் செந்தாமரை போன்ற இருகண்களின் வீக்ஷண்யத்தால் பரதன் சத்ருக்னுதிகளைப் போல, ஸத்ரூபியும், சித்ரூபியும் வெகு ரூபங்களை உடைய நீர், தேவரீர், என்னைக் கிருதார்த்தனுக ஆக்க வேண்டும். தேவதேவா, உங்களுடைய பாதங்கள் தேவதேவ ஸ்திரிகளால் வந்திக்கப்பட்டு அர்ச்சிக்கப்படுகின்றன. உமது பாதங்கள் அவர்களுடைய விபத்துக்களைப் போக்குகின்றன. அவர்களுடைய ஐஸ்வர்யங்களுக்கு மூலமாகின்றன. அப்பேற்பட்ட பாத கமலங்களை நான் பக்தியுடன் வினயத்துடன் நமஸ்கரிக்கிறேன். உங்கள் பாதங்களை ஸேவித்து யாவரும் கிருதார்த்தர்களாக ஆகி சரீரம் விலகியபின் வாஸுதேவ பதத்தை நிச்சயமாக அடைந்து, அந்த பதத்தின் மகிமையினுல் மீண்டும் பிறப்பை அடைகிறதில்லை. ஸ்ரீயப்பதி, சுத்தஸத்வமே, தயை செய்யவேண்டும்.]

அந்த சமயம் மஹாத்மாவான குஹப்பெருமான் பக்கத்திலிருந்த மேட்டின்மேல் ஏறி பரதனை ஆச்சர்யக் குரலுடன் கூவி அழைத்து, ''பரதா, என்பிரபு, இதோபார். அழகான அத்தி மரம், அதன் பக்கம் நாவல்மரம், அதற்குப் பக்கம் இலந்தை விருக்ஷம், மாமரம், வேங்கை, தமாலவிருக்ஷம் எல்லாம் பரந்து தேஜோமயமாகவிருக்கின்றன.'' (1194)

''அவைகளின் நடுவில் விசாலமான ஆலமரம் அழகாய் கிளைகளுடன் பரந்து வளர்ந்திருக்கிறது. அந்த அழகான மரத்தைப் பார்த்து, என்மனம் மோஹித்துப்போகிறது. அதனுடைய இலைகள் நீலநிறத்துடன் அடர்த்தியாக வளர்ந்திருக்கின்றன. கொடிகளும் பழங்களும் அழகாகத் தொங்கிக்கொண்டிருக்கின்றன. அதனுடைய நிழல், ஆத்மாவைச் சார்ந்த மூன்றுவித தாபங்களைப்போக்கும் மனேகரமாகவும் ரமணீயகரமாகவுமிருக்கிறது. இந்த அபூர்வமான மரம் ஸகல ருதுக்களிலும் சுகத்தைத் தரும் கற்பகவிருக்ஷத்தைப்போல விருக்கிறது.'' (1195)

''இந்த மரத்தைப் பார்த்து, எல்லோருக்கும் ஆஸ்ரிதவாத்ஸல்யனுன பிரும்மா சோபைகளின் ராசிக்கூட்டங்களை ஒன்று சேர்த்து, மனத்தை அபஹரிக்கும்படி அஞ்சனமயமாயும், சிகப்பு நிறமாயும் தேஜஸ்ஸுடனும் கூட விளங்கும் இதை மிக்க சிரமத்

துடன், வேண்டும் என்றே, ஸ்ருஷ்டித்திருக்கிறார்.'' ''ஹே கோஸாயி, இந்த அபூர்வவிருக்ஷம் மந்தாகினி நதியின் பக்கமாக விருக்கிறது. அதற்குப் பக்கம் ரகுவரஸ்ரேஷ்டனுன ராமனுடைய பர்ணசாலை, அதை அணைத்துக்கொண்டு இலைகளால் மூடப்பட்டு அழகாக விற்றிருக்கிறது.'' (என் மனதுக்கு இசைந்த விருக்ஷரே, உமக்கு அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன்.) (1196)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மியுடன்கூடிய நாராயணு, சீதாராமா, வேங்கடமுகுந்தா, பரம் என்று சொல்லப்படும் உயர்ந்த தத்வமே, அன்னையாய் அத்தனுய் என்னை யாண்டவன், என்னுதே என்னை யாண்டிடும் தன்மையான் என்று அருளிச்செய்த மதுரகவி ஆழ்வாருடைய மனப்பான்மையுடன் நான் ஆழ்வாருடைய நிலைநின்ற ஸ்வபாவத்துடன் வருகிறேன். அவருடைய அருள் தன்னளவல்ல என்று பொருள் படியும்படி ''அஹம் ஏவம் வியோர்ஜுன'' என்கிற கீதாசார்யன் வார்த்தையும், ''ஒருவன் கருத்திருக்க ஒருவன் சிவந்திருக்கக் கண்டாயே, அப்படியே எனக்கும் இது நிலைநின்ற ஸ்வபாவம், தன்மையான் என்கிற பதத்திலுைம், ஐயா, நான் உங்களை சரணம் அடைகிறேன். கிருபை செய்யுங்கள்.]

அங்கே அழகான துளசி செடிகள், பகவான் கிருபாளு, (கிருத கிருத்யர், கிருதலக்ஷணரான துளசிதாஸர் வாழும்படியாக வைத்த மஹா தயாளு,) சொந்த திருக்கைகளால் ராமனும் சீதையும் நட்ட செடிகள் ரொம்ப அழகாக விளங்கின. லக்ஷ்மணனும் அநேக பக்திரம்யமான செடிகளையும் நட்டிருந்தான். அந்த விருக்ஷங்கள் ஓங்கி வளர்ந்து நிழல், (என் போன்ற சேதனர்களுக்கு,) கொடுத்துக்கொண்டிருந்தது. அங்கே சீதை சொந்த கரகமலங்களால் அழகான மேடை ஒன்று கட்டியிருந்தாள். (1197)

அழகானவர்கள், நற்பிறப்பை அடைந்தவர்களுமான முனி கணங்களின் நடுவில் பகவான் ஸ்ரீராமச்சந்திரன் சீதையுடன் அந்த மரங்களின் நடுவிலிருந்து மேடையின் மீது வீற்றிருந்து, ஆகம நிகம புராண இதிஹாஸங்களைக் கேட்டுக்கொண்டிருப்பது வழக்கம். அவருடைய பக்கத்தில் சீதை வீற்றுக்கொண்டிருப்பாள். ராமானுஜனுன லக்ஷ்மணனும் பக்கத்தில் இருப்பான். (1198)

குஹப்பெருமானால் அடையாளங்களைத் தெரிவித்தபோது பிரபு பரதன் அந்த சாந்தரூபியான விருக்ஷத்தைக்கண்டு, கண்களில் தாரைதாரையாக கண்ணீர் ஜலங்களை விட்டான். அவனுடைய அழகான புஷ்கரலோசனங்களில் பிரேமை பிரவாஹம் ஓடியது. இருசகோதரர்களும் அந்தக் காக்ஷியைப் பார்த்து, தர்சனம் செய்து, கைகளைக் கூப்பிக்கொண்டு பிரணமம் செய்தார்கள். அவர்களுடைய நிஜபக்தி பிரபாவம் ஸாரதா தேவியான சரஸ்வதிக்கும் வர்ணிக்க முடியாதபடி யிருந்தது. (1199)

பூமியில் பதிந்து காணப்பட்ட அந்த நிர்மலமான ராம பாதங்களை, அடிச்சுவடுகளை வஜ்ரம் தாமரை சங்கு அங்குசம் ஆகிய அழகிய அடையாளங்களால் முத்திரையிடப்பட்ட திருப்பாதங்களை, லக்ஷ்மிதேவி தினம் துளசி தளங்களால் பூஜைசெய்யும் அந்த திவ்ய பாதங்களைக் கண்டு தரிசித்து, தரித்திரர்கள் எவ்விதம் சகல ஸம்பத்துக்களையும் அடைந்து மனத்தில் சந்தோஷமடைந்தார்களோ, அதுபோல அந்த ஸ்ரீ பாதரேணுக்களை பரதன், குஹன், சத்ருக்னன் தங்கள் சிரங்களில் தரித்துக்கொண்டு கிருதார்த்தரானார்கள். அவை களினால் ஏற்பட்ட ஸ்பர்சத்தினால் ஸ்ரீரகுவரனாகிற சீதாராமனை தரிசித்ததுபோல சுகத்தை அடைந்தார்கள். (1200)

பரதனுடைய அத்யந்த பக்தி பிரேமையைக்கண்டு, வார்த்தைகளுக்கும் புரிபடாத அன்பு பிரவாஹத்தையும் நேரில் பார்த்த, சேதன சேதன பொருள்களான பசு, பக்ஷி, மிருகம் விருக்ஷங்கள்கூட அன்பினால் கட்டப்பட்டார்கள். விசேஷப் பிரேமையை அடைந்த நிஷாத ராஜனை குஹப்பெருமான் தன்வழியை மறந்து சீதாலக்ஷ்மணராமனை தரிசிக்க குறுக்கு வழியில் ஓடிக்கொண்டிருந்தான். அவனுடைய பிரேமை வாத்ஸல்யத்தைக்கண்ட தேவர்கள் பாரிஜாத மலர்களை வாரி இறைத்தார்கள். (1201)

பரதனுடைய அசிந்தனீயமான பிரேமையை தரிசித்த சித்த மஹானுபாவர்கள் ஸாதகர்கள் பரதனை, அவனுடைய நிலைநின்ற ஸ்வபாவத்தை, அதன் தன்மை எல்லாம் கண்டு ஆச்சர்யத்துடன் ரமித்தார்கள். இதுவல்லவோ பிரேமை, இனி இந்த பிருதிவியில் மோக்ஷநிலையை உதறித் தள்ளிவிட்டு ஜன்மம் எடுக்க நேரிடுமாகில் பரதன் போல் அல்லவா பிறக்க வேண்டும். இந்த பரதன் பிறந்திராவிடில் அசேதனப் பொருள் கள் உயிருள்ள பொருள்களாகவும், நம்போன்ற உயிருள்ள

பொருள்கள் ராமபக்தியினால் ஸமாதி நிலைமையயடைந்து, ஏகமாத்திரம் ராமனுடன் ஐக்ய நிலையாகிற ஜடமான அவஸ்தையை அடைந்திருக்க முடியாது என்று எண்ணிக் கொண்டார்கள். அவர்கள் தங்களையும் புகழ்ந்து கொண்டார்கள். (1202)

[தியானம்

ஹே ராமா, மஹாலக்ஷ்மி நிவாஸா, பகவானுடைய இரு பாதங்களைப்பற்ற ஆசார்யனுடைய ஒருபதமே போதுமானது. "கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன் என்னப்பன்" என்று ஆசார்யர் ஈடுபட்டது அவருடைய அவதாரம், அவர் அழுவது, தொழுவது, மோஹிப்பது, மடலெடுப்பது, தூதுவிடுவது, அவனல்லது செல்லவொண்ணாத காதலைப் பெருக்கி, "சரிவின்பத்திரு வெள்ளம் யான் மூழ்கினேன்" என்று நம் திருவாயாலே சொல்லலாம்படியான பெருமாயன் அப்பனின் போக்யதை களெல்லாம் பரக்கப்பேசி, அதை பூர்வபக்ஷமாக்கி, "என்னப் பனில் நண்ணித்தென குருகூர் நம்பி, என்றக்கால் அண்ணிக்கும் அமுதூறும் என் நாவுக்கே" என்று ஸித்தாந்தித்தாற்போலே, "அருள் கொண்டாடும்" பாட்டிலும் முதலிரண்டு அடிகளால் எம்பெருமானுடைய நிரதிசயமான கிருபாவேகத்தை, பிர பாவத்தை கனக்கப்பேசுகிறார். பிறகு அதையும் பூர்வபக்ஷ மாக்கி, ஆழ்வார் அருளே அதிலும் விஞ்சியது என்று ஸித்தாந் தித்திருக்கிறார் மதுரகவிகள். ஆண்டாளும் "ஆழிமழைக் கண்ணா, ஒன்று நீகை கரவேல்" என்று ஸித்தாந்திருக்கிறாள். அதுபோல பரதனுடைய ப்ரபாவம், பாதுகைகளின் பிரபாவங் கள், சீதாராமனுடைய திருப்பாதங்கள் எனக்கு அருள் செய்யட்டும்.]

பகவத் பிரேமை அம்ருதம். நவஸுதா, அவனைவிட்டு பிரிவது மந்திராசலம் என்கிற அம்ருதமதனம் செய்யும் பர்வதம். பரதன் ("ஆழியுள்புக்குமுகந்து கொடார்த்தேறி" போல) தன்னுடைய சித்தத்தில், கடலினுள் புகுந்தும் ஒளிக்காதிருக்க வள்ளல் தன்மையைக்கொடுக்கும் க்ஷீராப்தி ஸமுத்திரம். கம்பீரமானதும், ஆழமானதும் பெரும் முழக்கத்தோடும் கூடியது. என்பிரபு ரகுவீரன் பக்தர்களிடம் கிருபாஸிந்துவாக, ஸுரர்களின் நன்மையைச் சதா செய்பவனாக, உபேந்திரனாக, பரதனுடைய பிரேமை க்ஷீராப்தி கடலைக்கடந்து, கமலநயனாக்ஷி

யாகிற மஹாலக்ஷ்மியுடன்கூடிய நாரயணன், பிரேமை என்கிற அம்ருதத்தை கடைந்து எடுத்தார். அந்த அம்ருதம் ஸாதுக்களுக்கும் தேவதைகளுக்கும் ஹிதத்தை செய்வதாகவிருக்கிறது! பரதனுடைய பிரேமையே அந்த நவநீதம், அம்ருதம்! (1203)

அவனுடன் கூடவிருந்த நிஷாதராஜன் அந்த பரத சத்ருக்னர்கள் ஆகிற மனோகரமான ஜோடி, ஆகிய மூவரையும் வனத்தில் அடர்ந்து பரந்திருக்கிற இலைகளாலும் கிளைகளாலும் லக்ஷ்மணனால் பார்க்கமுடியவில்லை. ஒரே அடர்த்தியாகவும் செழுமையாகவும் வளர்ந்திருந்தது காட்டுப்பிரதேசம். ஆனால் பரதன் பிரபுவினுடைய பாவனமான ஆஸ்ரமத்தைக் கண்டான். அந்த ஆஸ்ரமம் க்ஷீராப்திபோல சகல மங்களங்களுக்கும் இருப்பிடமாகவும் அழகாகவும் பவித்திரமாகவுமிருந்தது. (1204)

அந்த ஆஸ்ரமத்தில் பிரவேசம் செய்யும்போது பரதனுடைய துக்கதாபங்கள் உடனே மறைந்தன. ஆம். ஒருயோகி மிகச் சிறந்த சாதனையால், பகவத் பிரஸாதமாகிற கிருபையை அடைந்து பரமார்த்தப் பிராப்தியை அடைந்தபின்பு எவ்விதம் ஆனந்திப்பார். (எவ்விதம் துருவன்போன்ற மஹாத்மாக்கள் நிரதிசயப்ரேமையை அடைந்து, பேச ஒண்ணாமல் பகவானுடைய தோஜோ விருஷரூபத்தைக்கண்டு மெய்மறந்து ஆனந்திப்பார்களோ, அதுபோல) பரதன் ஆனந்தித்தான். பரதன் பிரபுவை அவ்விதம் பார்த்து ஆனந்தித்தான். பிரபுவின் முன்பு லக்ஷ்மணன் நின்றுகொண்டிருந்தான். கைகளைக் கட்டிக்கொண்டு ப்ரேமை பூர்வமான லக்ஷ்மணன் அவரை வினவிக்கொண்டிருந்தான். அதற்கு என்பிரபு, கிருபாஸிந்து, ப்ரேமை பூர்வமாக உத்தரம் அளித்துக்கொண்டிருந்தார். (1205)

(இராமனுடைய) சிரத்தின்மேல் ஜடாமகுடம். இடுப்பில் பட்டு வஸ்திரம் அணிவதற்குப்பதிலாக வற்கலம். முஞ்சம் இடுப்பில் கட்டியிருந்தது. கையில் பாணம். தோளில் தனுஷ். மேடையில் முனிகளும் ஸாதுக்களும் சகஜமாகக் கூடியிருந்தார்கள். என்பிரபுவின் பக்கத்தில் ராஜலக்ஷ்மிபோல சீதை பிரகாசித்துக்கொண்டிருந்தாள். (1206)

ஸ்ரீ பிரபுவின் வஸ்திரம் வல்கலம். பிரபு ஜடாதாரணம் செய்து கொண்டிருந்தார். சியாமநிறம். அந்த ராம சீதா தம்பதிகள் முனிவேஷம் தரித்த காமதேவன் ரதிபோல விளங்கினார்கள். அவருடைய திருக்கரங்களில் தனுஷ் (ஆகிய கரும்பு வில் அனங்க குஸுமரமம் போல) கண் திருஷ்டிகள் கூர்மையான பாபங்களையும் தாபங்களையும் அழிக்கவல்ல பாணக் கூட்டங்கள்

போல அவருடைய குளிர்ந்த பார்வைகள். ஒரு தடவை சிரித்துக் கொண்டு என் பிரபு சீதாபதி, குளிர்ந்து கடாக்ஷித்தால், அந்த இடத்தில் இருக்கும் சகல சேதன சேதனர்களுக்கும் சாந்தியும் ஆனந்தமும் முன் ஓடிவந்து காத்துக் கொண்டிருக்குமே! (1207)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, மஹாலக்ஷ்மி சகிதம் வீற்றிருக்கும் ராமானுஜா, மஹா பாகவத உத்தமனான பரதன் சத்ருக்னன் உங்களை ஸர்வாத்ம பாவத்துடன் அடைந்து, ஸர்வகாமியாகத் தியானித்து வியாஸர் நாரதர் சொன்னபடி த்யேயஃ நாராயணஃ த்யேயஃ ஹரி என்றும், சர்வமங்களங்களுக்கு இருப்பிடமான சிவனும், ஹிரண்ய கர்ப்பராகவும், ஸ்ருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் ஆகிய முத்தொழில்களை நடத்தும் பரமாத்மா வெனினும், நீரே ஸர்வாதார கூர்ம ரூபியாகவும், நிரதிசயமகிமைகளைக் கொண்ட பரம தத்வமாகவும் வேதாத்மாவரகவும், தன் புண்டரீக ஹ்ருதயத்தில் தெரிந்து கொண்ட ஹ்ருதி வேதியனாகவும், சரணம் அடைந்தார்கள். ஸத்ய சங்கல்ப ராமா, புண்டரீக நயனா, காருண்ய கிருபா ஸிந்தோ, பரதனும் சத்ருக்னனும் முன்பு காட்டின மார்க்கத்தில் வரும் எனக்கு அடைக்கலம் கொடுக்கவேண்டும்.]

என் பிரபு ரகுகுல சந்திரன் அவனுடன்கூட பத்மயோனியில் பிறந்த சீதை அந்த முனி மண்டலத்தின் நடுவில் ஞானமே ரூபம் எடுத்து வந்தது போலவும், அந்த ஞானத்திற்கு ஸஹாயமாக பக்தி உருவம் எடுத்து அந்த இரண்டு மூர்த்திகளும் சச்சிதானந்தம் அடைவது போல, உத்தம சரீரங்களுடன் பிரகாசித்துக் கொண்டிருந்தார்கள். அந்த முனி மண்டலம் அவர்களுடன் அதிசோபிதமாக விளங்கிக் கொண்டிருந்தது. (1208)

பரதன் தன் இளைய சகோதரனாகிற சத்ருக்னனுடனும் சகாவான நிஷாதராஜனான குஹனுடனும் அவர்களைத் தரிசித்தார். அவனுடைய மனம் (இராமனிடத்து அன்பில்) லயித்துவிட்டது. சோகத்தையும் மகிழ்சியையும், சுகத்தையும் துக்கத்தையும் எல்லாவற்றையும் மறந்தான். ஹே நாதனே! காப்பாற்றி அருளும்! ஹே ஸ்வாமி! காத்தருளும் என்று கூறியபடி தரையில் மரக்கட்டை விழுந்தது போல விழுந்தான். (ஹே பிரபோ, ஆனந்தத்தைக் கொடுக்கும் சந்தனங்கதி, ஹேமாங்கரே, நாதனற்றவர்களுக்கு தமது ஸம்பந்தமில்லாமையினால் உண்டாகும் விசனத்தை ஒழிக்கும் சோகநாசனரே, சங்கல்ப மாத்திரத்

தில் சோகங்களை ஒழிக்கும் நாராயணரே, ஆர்த்தா விஷண்ணு ஸிதிலாஸ்சபீதா, கோரேஷுச வ்யாதிஷு வர்த்தமாநா: ஸங்கீர்த்ய நாராயண ஸப்த மாத்திரம், விமுக்தா துக்கா: ஸுகிநோ பவந்தி,'' என்கிறபடி ஸகல துக்கங்களையும் நாராயண சப்தமாத்திரத்தில் போக்கி சந்தோஷத்தையும் ஆனந்தத்தையும் வாரிக் கொடுக்கும் வள்ளல் அவனன்றோ! அப்பேற்பட்ட நாராயணரின் அர்ச்சாவதாரமான ஸ்ரீ ராமநாராயணனை பரதன் கண்டான். அவனையுமறியாமல் ஸ்வபாவ ஸ்வரூப ஸ்வபிரவிருத்தியின் விசேஷங்கள் மேலடைந்து, அனன்யார்ஹத்வம் மேல் ஓங்க, அதிக தீனமான குரலில் நந்தினி சுரபி காமதேனுவையும், காமதேனு லக்ஷ்மியையும், லக்ஷ்மிராஜகோபாலனையும் அடைந்து ஆறுவதுபோல, என் பிரபு பரதன் ''ஹே நாதா, என்னைக் கட்டிக் காக்க வந்த அத்தனே, அய்யனே, அப்பனே, ஸர்வமும் நீதான். ஹேகோஸாயி, என்னை ரக்ஷித்தருளும், புண்டரீக நயனா, புஷ்கரலோசனா, நீர் இன்றி நான் தனித்திருக்க முடியாது. எப்பொழுதும் எக்காலத்திலும் எந்தக் காரணத்தாலும் மஹாலக்ஷ்மியுடன் கூடின ராமா, என்னைவிட்டு பிரியாதீர்கள்.'' என்று கதறிக் கொண்டு) பரதன், (இந்திரன் சசீபதி, சதக்ருது, திரைலோக்ய லக்ஷ்மியை சரணம் அடைவது போலவும், பராசரர் வேதத்தியான பரமாத்மாவை சரணம் அடைவது போலவும், வியாஸர் நாரதர் நாராயணரை சரணமடைவது போலவும். சுகர் ஆத்ம ஞானத்தை அடைந்து தகப்பனால் வினவப்பட்டும், வாஸுதேவ மயத்தை அடைவது போலவும்) பகவானுடன் ஐக்யமடைந்தான். தரையில் மரக்கட்டை விழுந்தது போல விழுந்தான். (1209)

வார்த்தை வசனங்கள் பிரேமையினால் அமுக்கப்பட்டு, ஜடம்மாதிரி, விழுந்த பரதனைப் பார்த்தான் லக்ஷ்மணன் பரதன் பிரணாமம் செய்வதைப் பார்த்தான். பந்து ஸ்நேகமாகிற பிராத்ருத்வம் ஒரு பக்கம். ஸரள ஸஹஜஸ்வபாவம் இன்னொரு பக்கம். ஆனால் ராமசீதாவைப் பாதுகாக்கும் மஹாவைராக்ய விரதத்துடன் வனம் வந்து தாயாராகிய சுமித்திரையின் வார்த்தைகளுக்கு கௌரவம் செய்யும் ராம சேவகனாகிற லக்ஷ்மணன் பரதனுடைய அன்பினால் கட்டுண்ணப்பட்டு கண்களிலிருந்து ஜலத்தை பிரேமை அஞ்சலியை வாரி இறைத்தான். (பிரபு மஹா உரகன் வைகுண்டத்திற்கு வரும் சேதனனை தன் மூச்சுக் காற்றினால் வரவேற்று, முக்குணங்களைப் போக்கி, சுத்த ஸத்வமாக ஹேமாங்கனாக எவ்விதம் ஆக்குவானோ, அது போல அவன் பரதனை

குளிர்ந்து கடாக்ஷித்தான்), ஆனால் ராம விரதம் பூண்ட அவன் தன் இருப்பிடத்தை விட்டு நகரவில்லை! (1210)

ஒரு க்ஷணமும் ராமசீதாவை மறவாத மஹாஉரகனைப்போல லக்ஷ்மணன் தன் ராம கைங்கர்யத்தை மறக்காமல், தன் பந்து பாச ஸ்திதியை உல்லங்கனம் செய்து, மனத்தின் கதியை அடக்கி, தீவிர வைராக்யத்துடன் நின்ற நிலையை, (ஆழ்வாராதிகள் கண்டு நின்ற நிலையைப் போல, அசையாமல் விளங்கும் தீபம்போல, பிரகாசிக்கும் ராமானுவர்த்தி கொண்ட தீப்த மூர்த்தியின் மனோபாவங்களை சுக்ராசாரியார், சுகபிரும்மம் போன்ற) உத்தம கவிகளுக்குத்தான் வர்ணிக்க இயலும். "நான் ராமசீதை கைங்கர்யத்திற்காக வனம் வந்தேன்" என்கிற மனோபாவத்துடன் விளங்கும் லக்ஷ்மணன், தன் கவனம் முழுவதையும் அதில் செலுத்தி அதில் மனம் ஈடுபட்டவனாக சங்கல்ப பகவத் கைங்கர்யம் போல விளங்கினான்! அவனுடைய திசை சொல்லவொண்ணாதபடியிருந்தது; பட்டம் ஆகாயத்தில் விடும் சிறுவர்கள் மேலே பறந்து கொண்டிருக்கும் தங்கள் பட்டத்தினால் இன்னொரு பட்டத்தை அபஹரிப்பதுபோல, அவனுடைய கைங்கர்ய பாவத்தை பரதனுடைய ப்ரேமை என்கிற பாவம் அபஹரிப்பதுபோல விளங்கியது. மஹா அனந்தன், உத்தம ஸம்பத்துக்களை அடைந்து அனந்த ரூபியாக விளங்குவதுபோல பரதனும் அவனைக் கண்டான். (நானும் அவ்விதம் கண்டேன்.) (1211)

[தியானம்

ஹே ராமா, நாராயணா, தேவதேவ, மஹா விபூதே, மஹா லக்ஷ்மி சகித நாராயணா, சீதா மனோஹரா, பகவானாகிற ஸ்வாயம்பு மனு பிருஹஸ்பதிக்கும், சுக்ராசாரியார் மஹாபலிக்கும், நாரதர் வியாஸர் தர்மருக்கும், மார்க்கண்டேயர் தான் அனுபவித்த மாதிரி எனக்கும் காண்பித்த பரதா, உன் பாத சம்பந்தத்தால் பகவான் லக்ஷ்மி சமேதனாகிற நாராயணனுடைய மஹா கிருபை கிடைக்கவேண்டும். நான் ரக்ஷிக்கவேண்டியவன், அவன் எனக்கு ஸாம்ராட், ஸ்வராட் என்கிறது உன் மனத்தில் சங்கல்பம் ஆகவேண்டும். ஆர்த்தி கல்பா, சத்திய ஸங்கல்பா, கிருபை செய்.]

"தன்னுடைய நீண்ட திருக்கரங்களால் பரதனை வாரி அணைத்து அவனை இறுகத்தழுவி அவனுடைய தாபத்ரயங்களைப் போக்கி, அபயத்தை அருளி, தன் சேர்க்கையைப் பிரிக்க ஒண்

ணுதபடி திட சங்கல்பம் அடைந்தவனாக, வனமாலி, வல்கலதாரி, சீதாராமன் எழுந்திருந்தார். பிரேமை பக்தியினால் கட்டுண்ட ராமன், என் அப்பன், என் ஐயன், என் அத்தன், என் குரு, என் ரக்ஷகன், பெருமூச்சு விட்டுக் கொண்டும், சொல்லிக் கொண்டும் படுத்திருக்கும் பரதனைக் கண்டார். அவர் எழுந்த வேகம் பரபரப்பு (கருடத்வஜனை நாராயணன் கஜேந்திரனைக் காப்பாற்றும் சமயமும், கிருஷ்ணர் திரௌபதியைக் காக்கும் சமயமும், அம்பரீஷனை பகவான் காப்பாற்றியதுபோல) அதிவேகத்துடன் இருந்தபடியால் அவர் கையில் வைத்திருந்த தனுஷ் பாணங்கள், கச்சையாகிய வல்கல உத்தரீயம் யாவும் சிதறி வெவ்வேறு திக்குக்களை அடைந்தன.'' (1212)

ஸப்ரேமையுடன் கூடிய லக்ஷ்மணனுடைய வசனங்கள், (வைகுண்டத்தில் தைஸ்தியர்களான நித்ய சூரிகளின் பூர்ண ஸம்மதத்தால் யேற்படும் பகவானுடைய திருவுள்ளப்படி நடத்தலால் சேதனன் எவ்விதம் பகுமானிக்கப்படுகிறானோ, அதுபோல விருந்தன) ஸர்வ பந்துவான லக்ஷ்மணனுடைய கிருபா வசனங்கள், ''பரதன் பிரணமம் செய்கிறான், ஸ்வாமி, தாங்கள் அங்கீகரிக்கவேண்டும், ரகுநாதரே,'' என்று லக்ஷ்மணன் சொன்னதுதான் தாமதம் உடனே என் பிரபு அன்பினால் உந்தப்பட்டு பரபரப்புடன் எழுந்தார்; மேல் வஸ்திரம் சரிந்து எங்கேயோ விழுந்தது; வில் ஒரு பக்கம் சாய்ந்து விழுந்தது; அம்புராத்தூணி மற்றொரு புறம் தெறித்து விழுந்து, கீழே கட்டையைப்போல் கிடந்த பரதனை கருணைக் கடலாகிய இராமன் வலிதே பிடித்து வாரி எடுத்து மார்புடன் தழுவிக் கொண்டார்.

(ஸத்ய ஸங்கல்பன், ஆர்த்தி கல்பன், பிரணதார்த்திஹரன் ஆவலுடன் பரதனை எதிர் பார்த்துக் கொண்டிருந்தவன் தீர்க்கமானதும் நீண்டதுமான புஷ்கரலோசனங்களால் பரதனைக் குளிர்ந்து கடாக்ஷிக்க விரும்பினவன், புஷ்பஹாஸன், மலர்ந்த தாமரை பூப்போல விருக்கும் அரவிந்தலோசனன் என் பிரபு, தயாளு, பிறர்களின் கஷ்டங்களை தன் கஷ்டங்கள் போல பாவிப்பவன், பரதனுடைய அத்யந்த அன்பிற்கு வசப்பட்டவன், கருணையினால் தேய்ந்த மனத்தினனாக எழுந்திருந்தார்.

[கருத்து: ஆம் என் பிரபு கிருபாதாம். கிருபைக்கு இருப்பிடம். அவருடைய எழுந்த வேகத்தையும், பரபரப்பையும் பக்தி பிரேமையால் தேய்ந்து போன பரதனுடைய மார்பை தழுவுவதிலில் ஆசை கொண்டதையும், ஐயோ இவனை இவ்வளவு தூரம் நாம் சோதித்து விட்டோமே, நம்மை நம்பினவனை கை

விட்டு அவனுக வரும் வரை காத்திருந்தோமே, என்கிற மனப் பான்மையுடன் பிரபு தன் ஸ்தானத்திலிருந்து எழுந்திருந்தார். (கவிக் குத் தெரியும்: இதே மாதிரி தவித்தார் கிருஷ்ண பரமாத்மா யுத்தத்திற்குப் பின்பு பாண்டவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு த்வாரகை செல்ல விரும்பும் சமயம்) ஸ்ரீராமன் எழுந்திருந்து, பரதனிடம் தாவிப் பாய்ந்து அவனை பூமியிலிருந்து வாரி எடுத்து, தனது விசாலமான மார்புப் பிரதேசத்தில் அணைத்துக் கொண்டார்). அந்த ராம பரதமிலாப் என்கிற சந்திப்பு, தழுவுதல் இயற்கையான ப்ரீதியுடன் பரஸ்பரம் கட்டிக் காத்தல் ஆகியவை களின் நீதிகளை, ரீதிகளை யார் வர்ணிக்கமுடியும்? அதைப் பார்த்த மஹான்களே மிக்க பாக்யவான்கள். அதைக் கண்டவர் கள் தங்கள் ஸ்திதியை மறந்துவிட்டிருந்தார்கள். (1213)

"யார் தான் அந்த அப்ராக்ருதமான இணைப்புக் காதலை வர்ணிக்க முடியும்? கவிகுல ஸ்ரேஷ்டர்கள் இதைத்தான் ஸ்ரேஷ்டமான கர்மம் என்று எண்ணி சித்திரம் வரைவார்கள். கர்மம், மனம், வாக்கு ஆகிய மூன்றிற்கும் எட்டாத அதீத பிரேமை அல்லவா அது. புராணமானதும் ஸநாதனமானதும் அப்ராகிருதமான அன்பு அல்லவா அது! இரு சகோதரர்களாக ஜன்மம் எடுத்து தன் ஸ்வநிலை மறந்து, மனம், புத்தி, இந்திரி யங்கள் சித்தம் அஹங்காரம் ஆகியவைகள் எல்லாம் பரமாத்ம ஸ்வரூபத்தில் லயித்து, சுத்தமானதும் பூர்ணமானதுமான பரம பிரேமையை அல்லவா இந்த ஸ்நேக ஸம்பந்தம் சித்திரிக்கிறது." (1214)

"சொல்லலாம் ஆயிரக்கணக்கான உபமானங்கள். அந்த சுத்தமானதும் மங்களகரமானதுமான பிரேமையை யார்தான் பிரகடனப்படுத்த முடியும்? எங்கேயாவது சாயையாகிற நிழல் பொருளின் தரத்தை அடைய முடியுமா? எந்த கவியானவர் தன் முழுமதியை உபயோகித்தும் நிழலினுல் முழுப்பொருளின் தத்வத்தை சரியாக உணர்த்த முடியுமா? கவியினுடைய பலம் அவன் யாரைப்பற்றி வர்ணிப்பது பற்றியும், என்ன அக்ஷரங் களை சொல்வன்மையுடனும் அர்த்தபுஷ்டியுடன் உபயோகிக் கிருன் என்பதையும் பொறுத்திருக்கிறது. (நடனமாடும் கிருதாசி போன்ற அப்சரஸ்கள் தாள ஸ்வர ராக ஸ்ருதிகளையா அனுசரணை செய்து நடனம் செய்கிருர்கள்? அவர்களைப் பின்பற்றுகிறதா இந்த ராக தாள ஸ்வர பாவ அக்ஷரங்கள்? இல்லவே இல்லை.) அதுபோல பரத ராமச்சந்திர பிரபுவிற்கு உபமானம் சொல்ல முடியாதபடி யிருந்தது." (1215)

"பரத ராம ஸ்நேகம் யாவராலும் ஆசரணை செய்ய முடியாத படி தனிப்பட்ட பிரேமைதான். பிரும்மதேவனுடைய சிறந்த சிருஷ்டி பரதன். இந்த அனுத்தமமான சிருஷ்டியைப் போஷித்து மீண்டும் வளர்த்தவர் விஷ்ணுவும், உமையுடன் கூடிய மஹேஸ்வரர். குஹப்பெருமானும் அதற்கு நீர் பால் வார்த்து மென்மையாக்கி, பழம் கொடுக்கும் ஸ்திதிக்குக் கொண்டுவந்து வைத்தார். அப்பேற்பட்ட அனுத்தமமான ஸம்பந்த ஸ்நேகம் கொண்ட பரத விஜயத்தை என் போன்ற குறுகிய மனம், மதி கொண்டவர்கள் எவ்விதம் வர்ணிக்க முடியும்? காண்டர் என்னும் ஒருவகை புல்லினுல் தந்தி போடப் பட்ட தம்புராவினுல் ஸ்ருதிகளை எழுப்பி மதுரமான நாதத்தை ஒலிப்பித்து மென்மையான சங்கீதம் பாடப்படக்கூடுமா?" (காண்டர் என்பது ஒருவகைப் புல்) (1216)

"ஆனுல் நான் ஒன்று சொல்வேன். பரதனும் ராமனும் சந்தித்துக்கொண்டு தழுவிக்கொண்டார்கள் ஒருவரையொருவர். ரகுவர ஸ்ரேஷ்டனுன ராமன் பரதனைத் தழுவிக்கொண்ட சமயம், தேவக்கூட்டங்கள் மனம் கலங்கி, யாது நடக்குமோ, ராமன் பரதன் வேண்டுகோளின்படி அயோத்தி திரும்பிவிடுவானே என்கிற பயபீதியினுல் கலங்கி நிற்கும் சமயம், ஸுரகுருவாகிற பிரஹஸ்பதி அவர்களைத் திருத்தி, ஆதரவாக வார்த்தைகள் கூறி, புஷ்பங்களை வர்ஷிக்கச் சொன்னதின் பேரில், அவர்கள் பாரிஜாத மலர்களை அந்த இரு சகோதரர்களின் மீது வாரி இறைத்தார்கள். எங்கு பார்த்தாலும் ஒரே கோலாகலமான சப்தங்கள் கேட்கப்பட்டன. 'ராம் ஜயஹே', 'பரத் ஜயஹே', 'ராம் சீதா ஜயஹோ', 'லக்ஷ்மண பரத சத்ருக்ன ஜய ஹோ' என்கிற கோஷங்கள் ஆகாயத்தில் கேட்கப்பட்டன. (1217)

[தியானம்

ஹே ராமா சீதா, நாராயணு, மஹாலக்ஷ்மி சமேத திரிவிக்ரமா, லக்ஷ்மி நரசிம்ம பிரஹ்லாதா, உன் கிருபை வேண்டும். அச்யுதபதா, ஜனு'த்தனு, ஜகந்நாதா, உன் குளிர்ந்த திருஷ்டிகள் என் மீது படவேண்டும். உன் பக்தியாகிற பரபக்தி, பரஞானம், பரமபக்தி வேண்டும். ஸர்வதாபிரபன்னனுக விருக்கும் என்னை சர்வசேஷியாக நீர் பரமார்த்த கிருபை செய்ய வேண்டும். தயைவ ஸர்வம் ஸம்பத் ஸயதே, என்கிற பிராட்டி யின் புருஷகாரத்வமும் எனக்கு வேண்டும். பத்மநாபா உன்னுடைய சிவசக்தி ஐக்ய ஸ்வரூப அனுக்ரஹம் வேண்டும்.

என்னுடைய அஹங்காரத்திற்குப் பரமாகவும், என் புத்திக்கு ஆத்மாவாகவும் என் ஆத்மாவுக்கு பரமாகவும் இருக்கும் பரம அவ்யக்த புருஷனை நான் சரணமடைகிறேன். ஸ்ரீ வத்ஸம் ஸ்ரீதேவி, ஆகிய இருவர்களை தன் வக்ஷஸ்தலத்தில் சுமக்கும் ராபா, சீதாராமா, சுஜாதாராமா, பராபரனுனும், ஸர்வ கர்மங்களுக்கு ஈஸ்வரனும், ஸர்வ பூதாத்மாவாகவும், அபூதாத்மாவாகவும் விளங்கும் அஜரான நாராயணனை பரதனை முன்னிட்டு, ராம பாதுகைகளை முன்னிட்டு, ராம நிழலில், சீதா சமேதனாக விருக்கும் பராத்பர ராமனை அவ்யயமான புருஷனை நமஸ்கரிக்கிறேன். ராமானுஜா, ராஜராஜேஸ்வரி, மதுசூதனா, அகஸ்தியர் விஸ்வாமித்ரர், குஹன், வஸிஸ்டர் ஆகியவர்கள் காட்டிய பாதையில் வரும் எனக்கு மஹா அருள் செய்ய சங்கல்பம் செய்ய வேண்டும்.]

ரிபு என்று சொல்லக்கூடிய ஆத்மவிரோதிகளையும், வெளியில் சஞ்சரிக்கும் சகல சத்ருக்களையும் வென்ற சத்ருக்னனுடன் கூடிய பரதாழ்வான் ராமசீதாவை தரிசித்தார்கள். அணைத்து உச்சிமோந்து தாய்க் கன்றினிடம் செல்வது போல பரமார்த்த ராமன் தன் ஸ்வரூப பிரேமையை வெளிப்படுத்திக் கொண்டான். பரதனும் சத்ருக்னனும் அவர்களை ராமானுஜன் நிழலில் சந்தித்தார்கள். குசலபிரஸ்னம் செய்தார்கள். அதன் பிறகு குஹப் பெருமான் பகவானை அணைத்துக் கொண்டான். அதன் பிறகு ஆஸ்ரிதவாத்ஸல்யனான லக்ஷ்மணன் ராமானுஜன் பாதனைத் தழுவிக் கொண்டான். அதிபிரேமையுடன் வார்த்தை குசல பிரஸ்னம் செய்தான். (1218)

அதன் பிறகு (ராமானுஜன் கூரத்தாழ்வானைத் தழுவுவ போல,) லக்ஷ்மணன் சத்ருக்னனைத் தழுவிக் கொண்டான். (குஹப்பெருமானை அம்பிகை தழுவுவது போல) ராமானுஜன் குஹனைத் தழுவிக் கொண்டான். (பாகவதப் பிரேமை பகவத் பிரேமையைவிட மிகச் சிறந்தது அல்லவா? அடிக்கடி) பாகவத ஸ்ரேஷ்டர்களான பரதனும் லக்ஷ்மணனும், சத்ருக்னனும் லக்ஷ்மணனும், குஹனும் லக்ஷ்மணனும் ஒருவரையொருவர் ராமசீதா ஸந்நிதியில் தழுவிக் கொண்டார்கள். அதன் பிறகு முனிகணங்களை வணங்கி நான்கு பிராதாக்களும் அவர்களுடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொண்டார்கள். (1219)

அதன் பிறகு மஹாலக்ஷ்மி அம்சமான சீதையிடம் சகல பிராதாக்களும் மிக்க அனுராகத்துடனும் பிரேமை பக்தியுடனும் (புத்ரன் தாயிடம் செல்வது போல, சகரனிடம் கௌதமர் செல்

வது போல, சதா க்ஷேமத்தை நினைக்கும் மனப்பான்மையுடன்) பரதன் சத்ருக்னன் ஆகியோர் சீதையை நமஸ்கரித்து, அவளுடைய சரண கமலங்களின் பாதரேணுக்களை விலக்ஷணமாக அணிந்து கிருத புண்யர்களானார்கள். சீதாபதம் கிடைத்த அந்த பாகவத உத்தமர்களுக்கு அடிக்கடி அந்த மஹாபாக்யவதி ஆசீர்வாதங்கள் செய்து, பகவானிடம் புருஷகாரம் செய்தாள். அடிக்கடி சுக்ருத பிரணமம் செய்யும் அந்த பரகவத சிரோண் மணிகளை பரதசத்ருக்னனை, சீதை தன் கைகளால் (புத்ரர் களாகிற குஹப் பெருமானையும் கணேசப் பெருமானையும் உமாமஹேஸ்வரர் வாரி அணைப்பது போல) தன் திருக்கைகளால் வாரி அணைத்து அன்புடன் உச்சிமோந்தாள். (அவளுடைய திவ்ய கரகமலங்களின் ஸ்பரிசம் ஏற்பட்டதும் அவர்களுக்கு சிறந்த ஞானமும் ஸத்தியஸந்தரான ராமசீதாவின் ஸம்பந்தமும் ஆசார்ய கிருபையும் ஏற்பட்டது) வேதங்கள் எந்த மஹாத்மாக் களின் உள்ளங்களில் ராமசீதா புதையல்களாக வைக்கப்பட்டிருக் கின்றனவோ அப்பேற்பட்ட மஹாத்மாக்களாக அவர்கள் அறியப் பட்டார்கள். (1220)

என் தாயார் ஜகஜ்ஜனனி, (க்ஷமை என்னும் உருவெடுத்து வந்திருக்கும் அமிர்தவாஹினி,) தன் மனத்தால் இந்த இரு ராம சஹோதரர்களை வாழ்த்தி ஆசீர்வதித்தாள். அவளுடைய ஸ்நேக பிரேமை அபிராகிருதமானது. அமிர்த சஹோதரியான மஹா லக்ஷ்மி கைகேயியின் துர்மதியினால் ஏற்பட்ட சாபத்திலிருந்து அவர்களை விடுவித்தாள். (விஷ்ணுவின் வக்ஷஸ்தலத்தில் வீற்றிருக்கும் அப்ஜமுகியான) சீதை தன்னைச் சரணமடைந்த பரத சத்ருக்னர்களை தன் குளிர்ந்த கடாக்ஷ வீக்ஷணயங்களால் பார்த்தாள். அதன் பலனாக பரத சத்ருக்னன் சகல காமங்களை எல்லாவிதத்தாலும் நிலைத்ததான ஸம்பத்துக்களை அடைந்து ராம ஸம்பந்தத்தினால் மேன்மை பெற்று விளங்கினார்கள். அந்த உத்தம ஹ்ருதயத்தினால், தாமரைக் கண்களால் அம்ருதம் வர்ஷிக்கப்பட்ட பரத சத்ருக்னன் சீதை அனுகூலமாக விருப் பதைப் பார்த்தார்கள். அதனால் சோக ரஹிதர்களானார்கள். அவர்களுடைய பாபபயங்களும் விலகின. (1221)

அந்த பரமஸ்ரேஷ்டமான முகூர்த்தத்தில் (கௌசிகன் போன்ற) ஒருவன் வினவுகிறான். "இந்த பாக்யம் நமக்குக் கிடைக்குமா? குஹப்பெருமான் போல இன்னொருவன் நினைக் கிறான் "சர்வசாக்ஷியான பகவான் நம்மையும் இவ்விதம் அனுக்ரஹிப்பானா? துளசிதாஸர் போன்ற மகாத்மா, என்

பரிபூர்ணப் பிரேமையை சீதாராமன் உணர்ந்து கொள்ளுவார்களா? (தியாகராஜர் போன்ற ராமநாத பராயணர்கள் என் நிஜ பக்தியை சீதாராமன் அறிவார்களா?) புருஷோத்தமரும், பூர்ணரும் சம்சார பேஷஜரும் ஸ்தோத்ரங்களால் மட்டுமே வசப்படுகிற பரிபூர்ண ராமன் பிரேமையின் வசம் அடைந்து ஒன்றும் பேசாமலிருந்தார். பரதனும் சத்ருக்னனும் அன்பு வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தார்கள். (சீதை தன் காரியம் சரிவர நடந்து முடிந்தது என்று மன நிம்மதி கொண்டாள்.) ராமானுஜன், "வழி தப்பிப்போன பரதன்," என்று நாம் நினைத்தோமே, இப்போது நாம்ஸத்பதத்தில் வந்து ராமசீதா திருஷ்டிக்கு பாத்திரமாக ஆனேம் என்று உள்ளம் மகிழ்ந்தான். அந்த சமயம் குஹப்பெருமான், (தேவஸேனுதிபதி இந்திரனைப் பார்த்துச் சொல்வது போல,) தன் கைகளைக் கூப்பிக்கொண்டு தைரியத்துடன் பிரணமம் செய்து அதிவினயத்துடன் சொல்லலானுன். (1222)

[தியானம்

ஹே மாதவா, நாராயணு, நாராயணப்பிரியே, கேசவா, மதுசூதனு, கிருபாஸிந்தோ, இந்திரா, ஜயா, ஶ்ரீதரா, தாமோதரா, வைகுண்டப்பிரபோ, நாரத வியாஸரால் சேவிக்கப்பட்ட ஹயக்ரீவரே, எனக்குத் தேசிகராக வந்த காருண்யக்கடலே, உமையின் பாதங்களைப் பற்றின எனக்கு வழி காண்பித்த மார்க்கதரிசியே, அஷ்டலோகபாலர்களுக்குப் பதியே, சசிதேவி, ஸ்வாஹாஸ்வதா தேவிகளால் வணங்கப்படும் அன்புக்கடலே, தூமோர்ணே, கௌரி, அஞ்சனுதேவி, ருத்தி ஆகிய அஷ்டதிக்பாலர்களின் மஹிஷிகளால் வணங்கப்படும் உதாரமூர்த்தியே, என்னிடம் தயை செய். வஸிஷ்டர், வாமதேவர், விஸ்வாமித்ரர், ஜமதக்னி ஆகியவர்களை முன்னிட்டுக் கொண்டு நான் சரணமடைகிறேன். ஶ்ரீ வத்ஸஜாத மஹாபிரபோ, உன் திவ்ய பாதங்களையும் உன் காருண்ய திருஷ்டிகளையும் எங்களுக்கு கொடு. பிருகுபாதத்தை எங்களுக்குக் காண்பி.]

"ஹே பிரபோ முனி நாதரான வஸிஷ்டரை முன்னிட்டுக் கொண்டு ஸகல ராஜ மாதாக்களும் ஸகல அயோத்யாபுரி வாசிகளும், உம்முடைய தாஸர்களும் மந்திரி ஸேனுதிபதிகளும் ஐயா, உம்மை விட்டுப் பிரிந்து வாழ முடியாமல், உயிர் தரிக்கும் எண்ணத்துடன் உம்மைத் திரும்ப அழைத்துப் போக உம்மிடம் வந்திருக்கிருர்கள். கருணை செய்ய வேண்டும். மஹா அபராதி

களான எங்களிடம் அன்புடன் கிருபை செலுத்த வேண்டும். (உம்மை அர்த்த பஞ்சகமாகவும், உம்து கருணையை வாழ்க்கையின் லக்ஷ்யமாகவும், உம்முடைய ஸாயுஜ்யத்தைப் பரம போக்யமாகவும், உம்முடைய பிரிவை பரம வியாகுலமாகக் கருதும் உம்முடைய பக்த பராதீனர்களிடம், ஐயா, சீதாராமா, லக்ஷ்மணனுடன் கூடிய சீதாராமா, கருணை செய்யும்; உம்முடைய நிர்ஹேதுக கிருபை பரம விசேஷமானது. அதிலும் வேண்டப்பட்ட பக்தர்களின் கோரிக்கை உம்முடைய ஸத்ய சங்கல்பத்திற்கு விரோதம் செய்யாமல், கௌரவம் செய்யக் கூடியது. தயாசிந்தோ, அருள் புரிய வேண்டும்.) (1223)

சீலமே உருவாகக் கொண்ட சீதாராமன் தன் குரு ஸ்ரேஷ்டரான வஸிஷ்ட பகவான் வந்திருந்து சாக்ஷாத்கரித்திருப்பதை உணர்ந்து சீதையை தன் தம்பி சத்ருக்னனிடம் ஒப்பிவித்துவிட்டு, தர்மத்தை தன் தலையில் சுமக்கும் தர்ம துரந்தரர், பரம தயாளு, தாழ்ந்தவர்களிடம் மனம் ஒப்பி தாமே ஒட்டிக் கொள்ளும் பரம காருண்ய ஸ்ரேஷ்டரான பகவான் ராமச்சந்திரர் மிக்கத் தைரியத்துடன், வேகத்துடன் தன் குருநாதரான வஸிஷ்டரை தரிசனம் செய்து வரவேற்க எண்ண முள்ளவராக அதி வேகத்துடன் சென்றார். (1224)

குருவை தரிசித்தார். லக்ஷ்மணனுடன் கூடிய ராமர் அதி பிரேமை வசம் அடைந்தார். சுக்ருத பிரணாமங்கள் செய்தார். அவருடைய பாத ரேணுக்களை தன் சிரஸில் ஆபரணமாக வைத்து தரித்துக் கொண்டார். அதைக் கண்ட வஸிஷ்டர் மஹா விரதங்களுடன் கூடிய அந்த ரிஷிபுங்கவர் ராமலக்ஷ்மண சகோதரர்களை தன் மார்புடன் ஹ்ருதயத்தில் தழுவிக் கொண்டார். அவருடைய பிரேமை ராம லக்ஷ்மணர்கள் காட்டிய பக்தி பிரேமையை அதிகரித்து மீறி நின்றது. (1225)

(என் குரு நாதரான குஹப்பெருமான், உமையின் கைகளில் தவிழ்ந்து கொண்டு, பகவான் சங்கரரைப் பார்த்து ரமிப்பது போல,) நிஷாத ராஜனாகிற குஹன் வஸிஷ்டரிடம் ராமலக்ஷ்மணர்கள் காட்டிய பரஸ்பர ஸ்நேக விஸ்வாசத்தைப் பார்த்தார். ராமலக்ஷ்மணர்களை முன்னிட்டு வஸிஷ்டரை நமஸ்கரித்தான். அனந்த கோடி நமஸ்காரங்கள் செய்தான். தூரத்திலிருந்து தண்டம் செய்தான். அதைப் பார்த்த மஹா ஞானியாகிற வஸிஷ்டர் ராம சகா தன் ஆத்ம பந்து என்கிற நியமத்துடன் உணர்ந்து ஓடிவந்து, குஹப் பெருமானை இறுகத் தழுவி ஆசீர்வதித்து, கிருதகிருத்யரானார். அந்த வஸிஷ்டருடைய தழுவுதல்

  

பூமியில் ராம அன்பு சிதறிக் கிடந்ததை அதை ஒன்று சேர்த்து ஒரு பிம்பமாக வடித்தது போல் குஹப் பெருமானை தழுவுதல் தோன்றியது. (ராம பக்தியே ஸாம்ராஜ்யம் ராம ஸ்நேகமே மஹா பாக்யம் என்று கருதும் தியாகராஜர் போன்ற உத்தம பாகவதர் களின் பிரத்யக்ஷரூபமாக விளங்கினன் குஹப் பெருமான்.) (1226)

என் பிரபு ரகுபதி அதிமங்களங்களுக்கு மூல காரணம் ஆவர். பரம புருஷார்த்தங்களான தர்மம் மோக்ஷம் ஆகிய இரண்டையும் அளிக்கும் சுலபமான மூர்த்தி. அருவருக்கத்தக்கதும் விரைவில் அழிவதும் துன்பங்களையும் கஷ்டங்களையும் தருவதுமான எண்ணிறந்த குற்றங்களுடன் கூடியதும் நிறைந்ததுமான அர்த்த காமங்களை யும் அன்புடன் கொடுத்து அதையும் அதிக்ரமிக்கும் வேகத்துடன் பரம போக்யங்களான தர்மம் மோக்ஷம் ஆகியவைகளைக் கொடுக் கும் காருண்ய ஸிந்து, என் பிரபு சீதாராமன், ("அவனே ஸத்யம், திரும்பவும் ஸத்யம்; கை தூக்கி உத்கோஷிக்கிறேன். வேத சாஸ்திரங்களுக்கு மேலான சாஸ்திரமில்லை. கேசவருக்கு மேலான தெய்வமில்லை. என்று பல தடவைகள் சொல்லுகிறேன்,") என் கிறதைக் கண்ட தேவர்கள் ஆச்சரியத்துடன் புஷ்பங்களை கல்ப தரு பாரிஜாத மலர்களை சீதாராம தம்பதிகளின் பேரிலும் லக்ஷ் மணனுடன் கூடிய பரத சத்ருக்னன் சகோதரர்களின் மேலும் ஆகாசத்திலிருந்து வாரிப் பொழிந்தார்கள். ஆச்சரியத்துடன் உத்கோஷித்தார்கள். இந்த ஜகத்தில் ராம பக்தியை விட மேலான புருஷார்த்தம் ஒன்றுமில்லை. அதுதான் ஸர்வ மங்களங்களுக்கு மூலகாரணம், என்று வாயாரப் புகழ்ந்து இந்த குஹப் பெருமான் நீச ஜாதியில் பிறந்தும் ராம ஸ்நேகத்தால் மேலானததும் பரம உத்கிருஷ்டமான பலனை அடைந்து விட்டான்! ஆச்சர்யம்! வஸிஷ்ட பகவான் (விஸ்வாமித்திரரை பிராம்மணனாக்கியது போல,) குஹப்பெருமானையும் அன்புடன் தழுவிக் கொண்டார். "அவருடைய கருணையும் தர்ம விரதங்களும் மிகப் பெயர் பெற்றவை. அவைகளை நாம் இன்று கண்டு அறிந்தோம்" என்று வாயார தேவர்கள் வாழ்த்தினர்கள். (1227)

[தியானம்

ஹே ராமா, சீதா பிரபோ, லக்ஷ்மி நாராயணா, உன் கிருபை எப்போதும் வேண்டும். உமாசங்கரர், அர்ஜுனன், கிருஷ்ணர் பரதன் ராமன், சீதை ஆஞ்சநேயர், யசோதை, பாலகிருஷ்ணன், தியாகராஜர் நாதபிரும்மம் போன்ற ஸ்நேகம் இணைக்கப்பட்டு,

அதிஸ்நேகத்தை எங்களுக்கு அருள்வாயாக. தயாளு, மஹா உரகனுடைய சேர்க்கையால் பெரும் தனமாக நினைத்து, அதை சதா அடைவதற்கு முயற்சியும் காயக்கிலேசமும் வாழ்க்கை ஜீவனம் நடத்தினர்கள். அப்பேற்பட்ட மதுகர வித்யையில் ஊன்றிப் போன எனக்கு உன் கிருபை பரிபூர்ணமாக எப்போதும் கிடைத்து, உனக்குத் தாஸனாக வாழ நீ அனுமதி தரவேண்டும்.]

முனி ராஜரான வஸிஷ்ட பகவான் குஹனை இறுகத் தழுவிக் கொண்டார். (உமைசங்கரரை தழுவுவது போல) சுகம் அனுபவித்தான் குஹப் பெருமான். பரம ஆசார்யர்கள். உலகத்திற்கு ராம ஸந்தேசம் சொல்லி, பிரகடனப்படுத்துவதற்கு ஆவிர்பவித்தவர்கள். அந்த இறுகத் தழுவுதலின் ஆனந்தம் குரு சிஷ்ய பாவத்தை மீறி குரு கிருபா கடாக்ஷத்தினால் குருவாகவே ஆக்கப் பட்ட சிஷ்யன் எவ்விதம் ஆனந்திப்பானே, எவ்விதம் லக்ஷ்மணன் தன் மூத்த சஹோதரனை ராமனால் அன்புடன் தழுவப்பட்டு ஆனந்தத்தை அடைவானே, அதுபோல குஹனுடைய ஆனந்தமும் வஸிஷ்டருடைய பேரானந்தமும் பரஸ்பரம் மேல் தூக்கி நின்றது. சீதாபதியின் பெருமையை உணர்ந்தவர்கள் "ஹா, இதுவல்லவோ ராமனுக்குத் தாஸர்கள் அடைய வேண்டிய பரம லாபம். இதற்காகவல்லவோ ராமனுக்குத் தாஸனாக பிறக்க வேண்டும். ராமனுடைய பிரதாபத்தை பஜனை செய்வதற்கு இது வல்லவோ தருணம். குருவினால் கடாக்ஷிக்கப்பட்ட சிஷ்யன் ராமனால் எவ்வளவு பெருமையை அடைகிருன். இதை நாம் பிரத்யக்ஷமாகப் பார்க்க நேரிட்டதே," என்று சகல தேவர்களும் ஆனந்தித்தார்கள். (1228)

ராமன் தயைக்கு இருப்பிடம், (சேதனர்களிடம் காணப்படும் குற்றங்கள் யாவற்றையும் மறக்கக் கூடிய பூதாத்மா. பக்தர்களின் சுத்தமான பக்தியை நிவேதனமாக அனுபவிக்கும் போக்தா. கருணை பொழியும் புஷ்கராக்ஷர். புஷ்பம் மலர்வது போல தாமே மலர்ந்து மிக போக்யராக பிரகாசிக்கும் வள்ளல். தீனர்களிடம் வலுவில் தாமே ஓடி, தம்மைப் பூர்ணமாக அனுபவிக்கத் தக்கவர். அவனுக்கு பராபக்ஷம் கிடையாது. ஜாதி பிறப்பு ஆகிய வித்யாஸங்கள் பாராட்டாத பரமாத்மா. பாபிகளையும் புண்யர்களாக ஆக்கும் புண்யர்), கருணை ததும்பி வழியும் ஸ்ரீராமச்சந்திர பிரபு தயை ரூபியாக வந்த சீதையுடன் கூடிய பகவான், லோகத்தின் இன்னல்களையும் துக்கங்களையும் போக்க வந்த கிருபாஸிந்து அப்பேற்பட்ட என் பிரபு ராம சீதா ஸகலருடைய துக்கங்களையும் அரை நொடியில் புரிந்து கொண்டார். எந்த எந்த பாவத்துடன்

அவரை யார் யார் அடைய விரும்புகிறார்களோ, அந்த அந்த பாவத்துடன் சுலபமாகத் தம்மை அளிக்கும் சுசீலர். அவரவர் களின் அபிலாஷைக்கு ஏற்ப தர்மை அளிக்கும் போக்யர். தாமும் அனுபவிக்கும் போக்தா. (1229)

அப்பேற்பட்ட பிரபு ராமச்சந்திரன் லக்ஷ்மணனுடன் அங்கு வந்திருக்கும் யாவரையும் சந்தித்து ஆனந்தப்படுத்தி சோகத்தை விலக்கினார். நாம் அவரைப் பற்றிச் சொல்வதால் நம் சோகம் விலகுவது மாத்திரமின்றி அதிகமாகப் பிரயோசனத்தையும், எதையும் அடையலாம். ராமன் விஷயத்தில் கிடைக்கக் கூடாதது என்று ஒன்றுமில்லை. பரம் என்று சொல்லப்படும் ராம திவாகரன், கோடி கோடிக் கணக்கான சேதனர்களிடம் அந்தர்யாமியாக விருப்பவன், எவ்விதம் ஒரு சூரியன் கோடிக்கணக்கான பாத்திரங் களில் உள்ள தண்ணீரில் பிரகாசிப்பானோ, அதுபோல அவன் நினைத்தால் எல்லோரிடமும் பிரகாசிக்கிறான். சத்ய சங்கல்பன் மட்டுமின்றி ஆர்த்தி கல்பன் அல்லவா அவன். குஹனுடைய பெருமையைப் பெரிதாக்க திருவுளம் பற்றின ராமனுடைய எண்ணத்தின் பிரகாரம் எல்லாம் நடந்தது. (1230)

சகல அயோத்தி வாஸிகளும் குஹனை சந்தித்து, தழுவிக் கொண்டார்கள். அவனுடைய பாக்யத்தைப் புகழ்ந்தார்கள். அதே சமயம் ராமன் துக்கத்தோடுவிருக்கும் தன் தாய் மார்களை இளம் கொடிகள் பனியினால் வாடிப் போனது போலக்கண்டார். (1231)

முதன் முதலாக ராமன் கைகேயியைச் சந்தித்தார். அவளைத் தடவிக் கொடுத்து சரள ஸ்வபாவத்துடன் அவளைத் தேற்றினார். அதி வினயத்துடன் அந்தரங்க சுத்தியுடன் பக்தியுடன் அவளை மனம் தேற்றினார். (அத்யாத்ம ராமாயணத்தில், இந்த இடத்தில் ராமன் தன் நிஜ ஸ்வரூபத்தை வெளியிட்டு, ராவணனைக் கொல்வ தற்காக மானிட உருவம் ஏற்றுக் கொண்டதாகவும், வனவாசம் தேவகாரியமாக ஏற்பட்டதாகவும் சொல்லி தேற்றினார் என்று சொல்லப்பட்டிருக்கிறது) அவளுடைய பாத சரணங்களில் விழுந்து நமஸ்கரித்து, காலத்தின் வன்மையையும் தர்மத்தின் பேரில் நடந்ததும், விதியின்படி நடக்கக் கூடியதும், பகவா னுடைய ஸர்வ ஸங்கல்பத்தையும் ஸ்வதந்திர நிலையையும் விளக் கிக்காட்டினார். கைகேயியின் மனத்தில் தோன்றிய அசுபமான பயத்தையும் போக்கி, அவளை ஆஸ்வாசப்படுத்தினார். (1232)

[தியானம்

ஹே பிரபு நாராயணா, லக்ஷ்மிதரா, அவரவர்கள் விரும்பும் ஐஸ்வர்யங்களைக் கொடுப்பதால் தனேஸ்வரர் என்றும், பெரும் கீர்த்தியை வகிப்பதால் த்யுதிமான் என்றும், போக்யம் போக்தா நியந்தா ஆகிற மூன்றையும் நீர் வகிப்பதால் திரிபதர் என்று சொல்லப்படுகிறீர். உமக்கு எல்லாம் சமத்வமாகத் தோன்று கிறது. உமது பாதத்தைப் பற்றினவர்களுக்கு ஒருக்காலும் அசுபமான மதியோ, செய்கையோ, பாபம் நிறைந்த கர்மங் களோ விளைகிறதில்லை ஆஞ்சநேயர், மார்க்கண்டேயர், அர்ஜுனன் பரதன் ஆகிய உத்தமர்கள் உம்பாதங்களை நம்பி வாழ்ந்து, எனக்கு வழிகாட்டுகிறார்கள். கருணையையே வடிவாக உள்ள உன் மனத்தை ஒருக்காலும் நோகவைக்காமல் என்னை நீதான் பாதுகாக்கவேண்டும். உன் கிருபையை அவலம்பித்த எனக்கு உன் நடு நிலைமை தவறாமல் எனக்கும் கருணையையும் காட்டு. எனக்கு உன் சங்கம் நேரும்படி தவறுதல்கள் செய்யாத படி என்னைக் காப்பாற்று. உமை சங்கரருடைய பாதங்களைப் பற்றி மார்க்கதரிசியாக விளங்குகிறபடி எனக்கு அருள் செய்].

கைகேயியைத் தரிசித்த பின்பு ரகுவரஸ்ரேஷ்டரான பிரபு தன் எல்லாத் தாய்மார்களையும் சந்தித்து, ஆஸ்வாசப்படுத்தினார். ஒவ்வொரு இடத்திலும் கால தர்மத்தின் போக்கையும் (பலி இந்திர னுக்கு விளக்கியது போல) எடுத்துச் சொன்னார். (காலம் தர்மத்தின் பேரில் செல்லும், அதை மீறுவதற்கு யாவராலும் முடியாது. கால சக்ரம் சுழல்வதால் ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி யாவும் நடத்தப்படுகிறது. காலம் ஒருவரையும் வீணாக கெடுப்பதில்லை. அவரவர்களின் கர்மங்களை அடிப்படையாகக் கொண்டு, ஸர்வ பூதங்களும் காலத்தின் வன்மையால் சம்சாரத்தைச் சுழலச் செய்கின்றன). "பகவான் ஒருவனே ஸர்வ சாக்ஷியாக விருப்ப தாலும், ஸர்வ ஸ்வதந்த்ரனாகவுமிருப்பதாலும், காலத்தையும் நடத்தும் ஸர்வ சக்திமானாக விருப்பதாலும், கிருபை மூலம் காலத்தின் கதியை மட்டுப்படுத்த முடியும். அப்பேற்பட்ட பகவானின் தாள்களைப் பணிவதைத் தவிர சேதனனுக்கு உய்விக்கும் மார்க்கம் வேறு ஒன்றுமில்லை. (ஹே மாதா, என் அம்மா, ஸர்வ ஸ்வதந்தரரான பகவான் நாராயணனைப் பஜியுங்கள். இந்த ஜகத், ரிஷிகள், பித்ருக்கள், தேவர்கள், மஹா பூதங்கள் ஜங்கமா ஜங்கமங்கள் யாவும் ஜ ந் நாராயண னிடமிருந்து உண்டானவை. ஹிரண்ய கரப்பரான அந்த நாரா யணருக்கு ஜகத் முதலிய ஸ்ருஷ்டியாவும் அதீனம். அவன்

இதை நடத்துவதால் சுப அசுப காரியங்கள் யாருக்கும் தோஷத்தையோ அபகாரத்தையோ விளைவிப்பதில்லை. பகவத் பராயணராக விருப்பவர்களுக்கு ஒருக்காலும் அசுபங்கள் ஏற்படுவதில்லை,'' என்று) இதிஹாஸ புராணங்களை திருஷ்டாந்தங்கள் மூலம் விளக்கிக் காட்டினார் பிரபு ரகுராமன். (1233)

பிறகு ராமலக்ஷ்மணர் அங்கு வந்திருந்த பிராம்மணர்களுடைய ஸ்திரிகளுக்கும், வஸிஷ்டருடைய பத்னியாகிற அருந்ததிக்கும் வணக்கம் செலுத்தினார்கள். ஒவ்வொருவரையும் கங்காதேவிக்கும் கௌரிதேவிக்கும் ஸமமாக நினைத்து அவர்களுடைய சரண கமலங்களில் வணங்கி ஆசியை விரும்பினார்கள். அவர்களுடைய எளிய ஸ்வபாவத்தைக் கண்டு, எல்லோரும் ஆனந்தமடைந்து, கோமளமான வாணியினால் மங்கள ஆசீர்வாதங்களைச் செய்தார்கள். (1234)

அந்த சமயம் சுமித்திரா தேவி அவிடம் வந்தாள். ராமலக்ஷ்மண சகோதரர்கள் அவளுடைய பாத கமலங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். ஒரு தரிதிரன் எவ்விதம் ஆனந்தத்தோடு பணக்குவியலைக் கட்டித் தழுவி ஆனந்திப்பானோ, அதுமாதிரி அந்த திவ்ய பாத சரணங்களைக் கட்டி அவள் ஆனந்தித்தாள். அதன் பிறகு அந்த இரு சகோதரர்கள் கௌஸல்யா தேவியை அணுகி, பிரேமை வியாகுலம் இவைகளால் நனைந்து மெலிந்து போன அவளை பாத கமலங்களில் நமஸ்கரித்து சந்தோஷப்படுத்தினார்கள். (1235)

பரிசுத்தமான அன்புடன் கௌஸல்யா தேவி அந்த இரு குழந்தைகளையும் வாரி அணைத்துக் கொண்டு முத்தமிட்டு தன் ஹிருதயத்தோடு சேர்த்து, நேத்ரங்களினால் பிரியமான அன்பை கண்ணீர்கள் மூலம் சொரிந்து கொண்டிருந்தாள். ''அந்த ஸலில ஸ்வபாவம், ஸ்நேக உணர்ச்சிகள், எத்தனையோ ஜன்மங்களின் பூர்வ வாஸனைகளின் சுக்ருதங்களாக விருக்கவேண்டும். யார் தான் அவைகளின் ஆனந்தத்தை விவரிக்கமுடியும்? வாய்ச் சொல் திறமையில்லாத ஊமை ஒருவன் தான் சாப்பிட்ட பதார்த்தங்களின் ருசியைப் பற்றிச் சொல்ல முடியுமா? அதுபோல எந்த கவியாவது மனத்தில் தோன்றிய உணர்ச்சிகளையும், பகவானால் செய்யப்பட்ட கருணை பொங்கும் காரியங்களையும் ஜன்மாகந்திர சுக்ருதங்களின் பலன்களையும் ஏககாலத்தில் வர்ணிக்க முடியுமா?'' (1236)

'' ஆம். என் பிரபு ரகுராய் லக்ஷ்மணனுடன் தன் தாயாரான கௌஸல்யாதேவியுடன் ஸம்பாஷித்து விட்டு குரு மஹா ராஜரான

வஸிஷ்டருடைய கட்டளையின் பேரில் அயோத்தி வாஸிகள் அனைவரையும் சந்தித்தார். ஒவ்வொருவருக்கும் தங்குவதற்கு ஸ்தல வசதிகளையும் ஜல வசதிகளையும் காட்டி ஏற்பாடு செய்தார். (1237)

அதன் பிறகு ரகுநாதன் அங்கு வந்தவர்களில் பிராம்மணர்களையும், ஸ்திரிகளையும், மந்திரிமார்களையும், தாய்மார்களையும் பரதனையும் லக்ஷ்மணன் சகிதம் ஆஸ்ரமத்திற்குக் கூட்டி வந்தார். (1238)

[தியானம்

ஹே நாராயணா, மஹாலக்ஷ்மி சகித ஆதிநாராயணா, பிருகு புத்ரியான ஸ்ரீதேவியின் பதியே, ஸ்ரீகரனே, அமிருத்யுவாகிற லக்ஷ்மி நரசிம்மா, மூர்த்தியே, பரம பதத்தில் அம்ருத ரூபியாக விருப்பவரே, என் தந்வந்தரியே, முக்தியை அளிக்கும் அம்ருதரே, உன்கிருபையால் எக்காலத்திலும், சேவித்தது போதும் என்று உணராமல், உன்னிடம் ஐயா, உங்களிடம் மேன் மேலும் சேவிக்கிறது, பஜிக்கிறது என்கிற விருப்பம் எனக்கு விருத்தி ஆகவேண்டும். உம்மை ஒரு தடவை சுக்ருத பிரணாமம் செய்வதால் நீர் உம்மை அவனுடைய கிங்கரனாக பாவிக்கிறீர். ஹே நீலாயதாக்ஷி, உன் தயை ஸ்வரூபம் பகவானுக்கு உன் நிழலில் ஏற்பட்டால் ராமன் பரவசமடைந்து சகலரும் விரும்பும்படி காருண்யராகி விடுகிறான். அம்மா, உன்னை நான் எவ்விதம் துதித்து, ஸ்தோத்ர ஆராதனைகளால் சந்தோஷிப்பித்து என் கிருதக்ஞதையை தெரிவிப்பேன்? ஹே புருஷா, புருஷோத்தமா, பக்தர்களுடைய சேர்க்கையை எக்காலத்திலும் நீங்காமல் தாமே அளிக்கும் ஸந்திமான். என்னிடம் உங்களுடைய பூர்ண தயை சகல காலத்திலும் ஏற்படட்டும்.]

சீதாதேவி பகவான் வஸிஷ்டருடைய பாத சரணங்களில் நமஸ்கரித்து, தன்னுடைய சௌலப்யத்தை வெளிப்படுத்தினாள். பகவானாகிற வஸிஷ்டர் (சாக்ஷாத் பிருகு மஹரிஷியின் புத்ரியாகிற ஸ்ரீதேவியை எவ்விதம் ஆசீர்வதிப்பாரோ, அதுபோல) அவளை அணைத்து உச்சி மோர்ந்து, நித்ய தம்பதிகளாகிற பகவான் லக்ஷ்மி நாராயணனை மங்களா சாஸனம் செய்தார். உசிதமான வார்த்தைகளால் ஆசீர்வதித்தார். அதன் பிறகு சீதை குருபத்னியாகிற அருந்ததி தேவியை நமஸ்கரித்து (பார்வதி சிவனுடைய பத்னித்வத்தை வேண்டுவது போல) ராமனுடைய ஏக பத்னிதவத்தை வரமாக வேண்டிக் கொண்டாள்.

  

அருந்ததியின் பிரேமை சீதையிடம் பரிபூர்ணமாக பரிமளித்து சிறப்பை அடைந்தது. அதை விவரிப்பதற்கு யாரால் முடியும்? (1239)

மஹா உத்தமியான சீதாதேவி அங்கு வந்திருக்கும் வயதான ஸ்திரிகளையும் முதியோர்களையும் ஒவ்வொருவராக பாத சரணங்களில் விழுந்து நமஸ்கரித்து, ஆசிர்வாதம் பெற்றுக் கொண்டாள். ஒவ்வொருவரும் சீதையினுடைய வினய சேவைகளைக் கண்டு மனம் பூரித்தவர்களாக அவளைப் பிரேமையுடன் அணைத்துக் கொண்டாள். (சுகுமாரி ஸுமங்களங்களைத் தெரிவிக்கும் நீலாயதாக்ஷி, கஞ்ச லோசனி, துரித நிவாரிணி, பாப ஸம்ஹாரிணி, கருணை ரஸமே உருவெடுத்து வந்திருக்குப் தங்கப்பதுமை போல விளங்கும் பிராட்டி, ஆம் சகலருக்கும் மாதா, நாரதரால் பல தடவைகள் ஸ்தோத்ரம் செய்யப்பட்ட உத்தமி, பராசரரால் "தேவி" என்று பிரியமாக அழைக்கப்பட்டவள், இந்திரனுல் பலதடவைகள் ஸ்தோத்ரம் செய்யப்பட்டவள், சசிதேவியினுல் ஆராதனை, வ்ரதங்களுடன் செய்யப்பட்டு பூமியில் அவதரித்தவள், தேவமாதர்களை சிறையிலிருந்து விடுவிக்கத்தான் சிறைப்பட்டு விடுவிக்க ஆவிர்பவித்தவள், மஹா கருணை கிருபை ஆகியவைகளால் பக்தர்களை கர அவலம்பம் செய்யும் நளின ஸ்வபாவமுள்ளவள்), ஜகஜ்ஜனனி மானிட ஸ்வபாவம் அடைந்தவளாக தன்னை வெளிப்படுத்திக் கொண்டு, உணர்ச்சியுடன் தன் தாய்மார்கள் ஒவ்வொருவரையும் பாத கமலங்களில் விழுந்து நமஸ்கரித்து, அவர்களுடைய ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொண்டாள். (1240)

சீதை தன் மாமிகளுடைய தீன ஸ்திதியை கண்டு மனம் உருகி, நடுநடுங்கி, தன் குளிர்ந்த பார்வைகளினுல் அவர்களை கடாக்ஷித்தாள். அந்த தாய்மார்களுடைய ஸ்திதி எல்லையற்ற சோகத்தை அடைந்திருந்தது. பெண் ராஜ ஹம்ஸங்கள் க்ரூரமான வேடனிடம் அகப்பட்டுக் கொண்டு எவ்விதம் தவிக்குமோ, அதுபோல க்ரூர வேகத்துடன் செல்லும் விதியின் வசமடைந்த அந்த ராஜ பத்னிகள் தீனமாக அவளுக்குக் தோன்றினுர்கள். தனக்குள் நினைத்துக் கொண்டாள் "இந்த விதி யாவரையும் கீழ்ப்படுத்தி துக்கத்தை விளைவிக்கிறது. எப்பேற்பட்டவர்கள், எவ்வளவு புண்யத்தைச் செய்தவர்கள் நிரதிசயமாக புண்யத்தையும் சுக்ருதங்களையும் செய்தவர்கள், கால வசமடைந்து, தீனர்களாக ஆகி, இன்று என்னுடைய கஷ்ட தசையையும் கண்டு மிக்க அனுதாபத்துடன் ஒவ்வொருவரும் தோன்றுகிறுர்களே,

இவர்களை அல்லவோ நான் ஆஸ்வாசப்படுத்த வேண்டும்? அதே மாதிரி அவர்களும் நினைத்தார்கள்'' இந்த சீதை நளின மானவள். துக்கத்தை எவ்விதம் சகிப்பாள்?'' இவ்வித நினைவுடன் அவர்கள் சீதையைக் கண்டு மனம் கலங்குனார்கள். இந்த சீதை கருணையையே உருவாக வந்தவள் விதியினுடைய கட்டளையை யாரும் மீறமுடியாது போலிருக்கிறதே'' என்று அவர்கள் கலங்கினார்கள். (1241)

அந்த சமயம் ஜனகரின் புத்ரியாகிற ஜானகி தன் நீலக் கண்களை துடைத்துக்கொண்டு, மிக்கத் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு சிறந்த அழகுள்ள நயனங்களால் நளினமாகப் பார்த்துக்கொண்டு, புல்லலோசனங்களால் கிருபையை வாரி வழங்கிக்கொண்டு, தன் தாய்மார்களை அணுகி, இறுகக் கட்டிக்கொண்டு அவர்களுடைய ஹ்ருதய கமலத்தில் தன் சிரத்தை வைத்துப் புதைத்து ஆறுதல் அளித்துக் கொண்டிருந்தாள். (நீலாயதாக்ஷியாகிற சீதை கருணையை கடாக்ஷித்துக் கொண்டு தன் கிருபா சமுத்திரத்திலிருந்து ஜலத்திவலைகளை உதிர்த்துக்கொண்டிருந்தாள். பெரியநாயகி, ரங்கத்தம்மா, ராமனின் அன்பாகிற சமுத்திரத்தில் அலைகள் போன்றவள். கம்பீரத்தில் மென்மை போன்றவள். ஜலத்திற்கு நுரை போன்றவள். மஹாபிரளய காலத்திலும் பகவானுடன் சாக்ஷியாகவிருப்பவள், நித்யமானவள், ஸர்வ கர்மங்களின் முடிவாகவிருப்பவளும், அவித்யை ஸம்பந்தமில்லாத பரா என்று என்னால் பிரியமாக! அழைக்கப்படுகிறவளும், ஜயத்தை எப்போதும் உடையவளும், நித்யஸ்ரீ நித்யமங்களங்களை உடையவளும், உயிரெழுத்து மெய்யெழுத்துக்களால் அலங்கரிக்கப்பட்டவளும் அதிமங்களையுமான தயாமூர்த்தி, தாமரஸ தண்டிலிருக்கும் நூலைப்போல மிருதுவான கொடிபோன்ற கைகளை உடைய சீதை, மஹத்தான ஸாம்ராஜ்யதாயினி போல விளங்கும் என் மாதா,) சீதாபிராட்டி அந்த சிறந்த வேளையில் கருணை ரஸமாக பிருதிவிமேல் விளங்கினாள். (அகஸ்தியர் லோபாமுத்ரைக்கு ஸம்சாரமாகிற காட்டுத்தீக்கு அம்ருதவர்ஷம்போல எவ்விதம் தோன்றினளோ, அதுபோல அந்த மஹாமாயை தௌர் பாக்யமடைந்த ராஜமாதாக்களின் கெட்ட பாக்யமாகிற டஞ்சுப்பொதிக்கு சுழல் காற்றாக சாந்தியை அளித்தாள். அப்பேர்பட்ட துரித நிவாரிணி) கருணை நிழலை அளித்து எல்லோரையும் இன்புறச் செய்தாள். (1242)

அந்த இளம் சீதை நவயௌவன பாலே, எல்லோரையும் பிரீதியுடன் அணுகி, இறுகத் தழுவி ஸஹஜ ஸ்நேகத்துடனும் அனுராகத்துடனும் பேசி, தன் ஹிருதயத்திலிருக்கும் பிரேமை வெள்ளத்தை வெளிப்படுத்திக்கொண்டு ஒவ்வொருவரிடமும் அன்பும் ஆசியும் பெற்றுக்கொண்டாள். ("ஹே ஸர்வ மங்கள காரி, ஆதிசக்தி, அநேக பிரும்மாண்டங்களேயும் ஸிருஷ்டிக்கும் நாயகி, தன் சரீரத்தை ஈஸ்வரனுகிற ராமனுடைய பூஜைக்காக உலர்த்திக்கொண்ட சுத்த சைதன்ய ஸ்வரூபிணி தன் புத்தியை ராமனுக்கு நியாஸம் செய்து சுத்தி அடைந்த மஹாபுண்யவதியே, கங்காதேவியைப்போல எல்லோரையும் சுத்தம் செய்யும் மஹா பாக்யவதி,) நீ உன்னுடைய பதியுடன் உன் திவ்யமங்கள விக்ரஹத்துடன் சர்வஸௌபாக்ய ஐஸ்வர்யங்களோடு என்றும் விளங்கவேண்டும்" ("தாயே, தயாபரி, பூர்ணே, கிருபாஸிந்து, உன் கிருபாகடாக்ஷங்கள் அம்ருத வர்ஷங்களாக எங்கள்மீது பொழிய வேண்டும் உன் கிருபைக்கு நாங்கள் எப்பொழுதும் பாத்ரமாகவேண்டும். உன் பாதசரணங்களின் ரக்ஷணமும் அடைக்கல்மும் எப்பொழுதும் எங்களுக்கு ஸித்திக்கவேண்டும். மானிட உருவில் எழுந்தருளிய மஹாதேவி, நீ ராமனுகிற விஷ்ணுவின் பத்னி, ஸ்ரீ நாரயண பிரியையாகிற லக்ஷ்மி, நீயும் ஸ்ரீயப்பதியாகிற நாராயணனும் என்றும் ஸர்வ சௌபாக்யங்களுடன் விளங்கவேண்டும்" என்று அவர்கள் மங்களா சாஸனம் செய்தார்கள்.) (1243)

[தியானம்

நாரயணா, லக்ஷ்மி அம்மா, சர்வகுண ஸம்பன்னர்களான உங்களே வாக்கினுலும் மனத்தினுலும் கர்மங்களாலும் ஆராதனே செய்யவேண்டும். உமையை கங்கை எவ்விதம் புகழ்ந்தாளோ, அதுபோல உங்களே புத்தியினுலும் வினய சம்பத்துக்களாலும் ஆராதிக்கவேண்டும். நீங்கள் மஹாபுண்யர்கள். பாபபயத்தை அபகரிக்கிறீர்கள். ஸர்வதர்ம விசாரதர்களாகவிருக்கிறீர்கள். உங்களுடைய புன்முறுவலுக்கு ஏங்கி நிற்கும் எனக்கு ஒவ்வொரு நிமிஷமும் உங்கள் கிருபையுடன் வரும் ஆதரவும், எனக்கு திருப்பாற்கடல் கடையும்போது மந்திர மலையைத் தாங்கினது போலவிருக்கிறது. நீர் மஹாவராஹர், சம்ஹாரகாலத்தில் உலகம் அனைத்தையும் விழுங்குகிறீர். ஆதிகூர்ம ரூபியாக புஷ்கரக்ஷேத்ரத்தில் பூமியை எப்போதும் தாங்கும் மஹீ பர்த்தா. உமது பாண பிரயோகம், சக்ரத்தின் வீர்யம், கதையின் வேகம்

சங்கின் நாதம் மிக்க பிரஸித்தமானது. அப்பேற்பட்ட சிறப்பு வாய்ந்த நீர் மிக்க அற்பர்களிடமும் அந்தர்யாமியாகவிருக்கிறீர். என் சுசியை நீர் தெரிந்துகொண்டுதான் என்னைக் கஷ்டப் படுத்துகிறீர். உம்முடைய கிருபையின்றி ஒருக்காலும் ஜீவிக்க முடியாது. போக்தா, தீப்தமூர்த்தி, தேஜோவிருஷர், குஹ்யர் என்கிற சப்தங்களுக்கு ஏற்ப என்னிடம் உம்முடைய அனுதாபம் எப்பொழுதும் இருக்கட்டும்.]

("சீதே நீ விகளே") அப்பேற்பட்ட பாக்யவதியான சீதை யின் ஸஹஜ ஸ்நேகத்தை அனுபவித்த ராணிமார்கள் அதிவியாகு லத்தை அடைந்தார்கள். அவர்களுடைய சோகத்தைக் கண்டுகுரு வாகிற வஸிஷ்டர் எல்லோருக்கும் ஞான வாஸிஷ்டம் என்கிறதை உபதேசித்தார். முனிநாயகரான பகவான் வஸிஷ்டர் ஜகத்தின் கதியையும் மாயையினால் எற்படும் விளைவுகளையும், பரமார்த்த ஸ்வரூபமாகிற பகவான் ஒருவரே நித்யம் என்றும், மற்றவை எல்லாம் இந்த சம்சாரத்தில் அழியக்கூடிய வஸ்துவென்றும், பகவானாகிற அந்த ஆதிப்பிரானிடம் அசஞ்சலமான பக்தி ஒன்றே இந்த மாயையினால் ஏற்படும் கஷ்டங்களைத் தாண்ட விப்பது என்றும் திருஷ்டாந்த பூர்வமாக உரைத்தார். (1244)

அதன் பிறகு வஸிஷ்டர் இறந்துபோன தசரதருடைய பெருமைகளை எடுத்துரைத்தார். அவைகளைக் கேட்டு, ரகுவர ஸ்ரேஷ்டனாகிற தசரதருடைய பெருமைகளைத் தாமும் உணர்ந்த வராக ஸ்ரீராமன் மஹாதுக்கத்தை அனுபவித்தார். சகிக்க முடியாத துக்கம் அவரையும் மீறி பீறிட்டுக் கொண்டிருந்தது. தன் பிரிவினால் ஏற்பட்ட துக்கம்தான் அவருக்கு மரணத்தைக் கொடுத்தது என்று அறிந்து தர்மதுரந்தரரான ராமச்சந்திரன் அதி ஸ்நேகத்தினால் யேற்பட்ட பிரிவு இதற்கு காரணம் என்றும், ஞான பூர்வமாக அறிந்திருந்தும், தசரதருடைய அன்புமொழிக ளையும் நினைவுகளையும், (தன் தேக அழகையும் நடை அழகையும் முன்னும் பின்னுமாக அனுபவித்த மனோபாவங்களையும்) பிரபு நினைவுபடுத்திக்கொண்டவராக, அவைகளை நினைக்க அவருக்கு துக்கம் எல்லையின்றி பொங்கிவழிந்தது. (1245)

வஜ்ரத்தின் ஓசையைப்போல சகலரும் துக்கத்தைஅடைந்து அழுதார்கள். லக்ஷ்மணன், சீதை, சகல ராணிமார்களும், அதி வியாகுலத்தை அடைந்தார்கள். அந்த ராஜசமாஜம் முழுவதும் சோக சமுத்திரத்தில் மூழ்கினர்கள். அவர்கள் அவ்விதம் நினைத்து அழுதபோது, அரசர் அன்றுதான் மரித்தாரோ என்று சந்தேகமாகவிருந்தது. (1246)

பகவான் வஸிஷ்டர் ராமனுக்கு "ஞானவாஸிஷ்டம்" என்பதை உபதேசித்தார். அதன் பிறகு மந்தாகினியில் எல்லோரும் ஸ்நானம் செய்தார்கள். அந்த தினம் பிரபு நிர்ஜலத்துடன் வ்ரத நியமனங்கள் கொண்டு கர்மங்களைச் செய்தார். வஸிஷ்ட குரு ஆக்ஞை செய்தபோதிலும், பிரபு தந்தையின் நினைவாக, ஜலமின்றி யாவரும் சோகமூர்ச்சிதர்களாக விருந்தார்கள். (1247)

மறுநாள் ரகுநந்தன் முனிவருடைய ஆக்ஞையின்பேரில் மிகுந்த சிரத்தையுடன் தகப்பனுருக்குச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்து முடித்தார். (1248)

பித்ரு கிரியைகளைச் செய்து, வேதங்களில் சொல்லியபடியும் வஸிஷ்டரின் ஆக்ஞைப்படியும் எல்லாக் கிரியைகளையும் செய்து முடித்தார் பிரபு ரகுநந்தனர். காளராத்ரியான பாபங்களை நாசம் செய்யும் ஆதித்ய ரூபியாகிற பிரபு பகவான் அந்த கிரியைகளைச் செய்து முடித்த பின்பு மீண்டும் புனிதரானுர். தீட்டு முதலிய பாதகங்களாகிற யாவும் தீர்ந்தன. "எந்த பிரபுவை ஒரு தடவை ஸ்மரணம் செய்தாலோ, கீர்த்தனம் பாதஸேவனம், அர்ச்சனம் ஆகியவைகளால் ஆராதித்தாலோ, சகல ஜன்மாந்திர பாபங்கள் விலகி, மீண்டும் சுத்தமாகி விடலாமோ, அப்பேற்பட்ட நித்ய சுத்தரான பிரபு மானிட ஜன்மத்திற்கு ஏற்ப வியாகுலம் அடைந்து கிரியைகள் செய்த பின்பு மீண்டும் புனிதமானுர் என்று சொல்லும்படியாகவிருப்பது விநோதமாகவிருக்கிறது. அவர் அவ்விதம் நடித்துக் காட்டினுர். பாபக் குவியல்களாகிற பஞ்சுப் பொதியலுக்கு ஸ்மரித்த மாத்திரம் நெருப்புத் துளிபோல விளங்கும் பரமாத்மா, சுபங்களுக்கும் மங்களுக்கும் எப்போதும் எந்த அவஸ்தையிலும் இருப்பிடமாகவிருப்பவர், அவர், ஸ்வயமாக சுசி, பிறராலோ, கிரியைகளாலோ, பிரகாசம் உண்டுபண்ண வேண்டாதவர். மிக பரிசுத்தர், பவித்திரமான ஸ்வயம் பிரகாசமுள்ளவர்," (1249)

[தியானம்

ஹே ராமாசீதா, லக்ஷ்மிநாராயணு, நீர் மங்களங்களுக்கு இருப்பிடம். உமது கிருபாகடாக்ஷத்தை ஆசாரியர் மூலமாக அடைந்து மந்திரபூர்வமாக உன் ஸ்வரூபத்தை அறிந்துகொள்ள வேண்டும். பூர்வோத்திர பாபங்கள் விலகி இந்த சரீரம் சுத்தியடைந்து, ஐயா, உன் ஆதரவினுல் உன் நாயகியினுடைய கிருபா அவலம்பித்தினுல் அழைத்துச் செல்லப்பட்டு, ஹே

காமாக்ஷி, உன் காருண்யச் சொற்களால் தேற்றப்பட்டு, நிரவதிக மான தயையினுல் யேற்பட்ட ஞான விஸ்வாசத்தை அடைய வேண்டும். ராமா, ரங்கநாதா, காயத்திரி மஹாதேவி, தேவகி நந்தனு, ஸ்ரீதரா, ஸ்ரீநிவாஸா, வரதநாயகி, உங்களை அனுப விப்பதையே எனது போகமாகவும் உங்களுக்காக நான் என்றும் சரீரம் எடுத்தவனுகவும், பிரியதமனுகவும்; மஹா உரகா, பதகேஸ்வரா, விஷ்வக்ஸேனரே, அனந்தரே, ஈஸானரே, பிராணரே, உங்கள் பொருட்டு உமக்கு சேவகனுகவும், கிங்க ரனுகவும் நான் இருக்கதாங்கள் கிருபையுடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். என் சிந்தாமணி மலையே, உங்கள் ஹ்ருதயத்தில் தோன்றும் கங்கையைப்போல என்றும் வற்ருத கிருபாபெருக்கு சங்கரனையும் உமையையும் சதா நினைப்பதுபோல என்மீது பொழிந்து, சரணுகதர்களின் நியாஸத்தைச் செய்த எனக்கு அரங்கன் பணிபர்யங்கத்தில் வீற்றிருப்பதுபோல், கைங்கரிய பிரஸாதத்தை அளிப்பித்து, அருள் செய்வாயாக. ஹே சீதா, தயாபரி, நாரதர், தியாகராஜரால் போற்றப்பட்ட என் தாயே, உன் ஆதரவு சகல ஜன்மங்களிலும் எனக்கு சித்திக்கட்டும். ஸௌம்யே, ஸர்வஸஹே, வத்ஸி, காமதேனுவே, ஸுரபி மார்த்தண்டனே, எனக்கு அருள் செய்.]

" என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் நித்யசுத்தர், எல்லாவற்றை யும் தாங்குவதாலும், போஷிப்பதாலும், போகங்களைக் கொடுப்ப தாலும், அந்தர்யாமியாக விருப்பதாலும் பாபிகளையும் மங்களங் களுக்கு உரியவர்களாகச் செய்து அவர்களின் மலங்களையும் பாபங்களையும் போக்குவதாலும் புண்யர் என்று சொல்லப்படு கிருர். அப்பேற்பட்ட பிரபு கர்ம வசத்தினுல் ஏற்படும் தோஷங் களுக்கு மேற்பட்டவராகபடியாலும், அவைகளால் ஏற்படும் பலன்களிலும் சம்பந்தப்படாதவர். சாதுக்களின் ஸம்பந்தம் பெற்ற மஹா புண்யவதியான சுரஸரி என்று சொல்லப் படும் கங்கை எவ்விதம் பாபிகளால் சேவிக்கப்பட்டு, தன் சுத்தத் தினுல் அவர்களைப் பாவனமாகச் செய்து, அதனுல் ஏற்பட்ட களங்கத்தை, சாது ஜனங்களின் சேர்க்கையினுல் மீண்டும் பாவனமாக ஆக்கபபடுகிருளோ, அதுபோல புண்ய ஸ்ரவண கீர்த்தனரான சீதாராமன் நித்ய சுத்த ஸ்வரூபியாகவும், பூதாத்மா வாகவும் சரீரங்களாயுள்ள சேதனு சேதனங்களின் குற்றங்கள் ஒன்றிலும் பற்ருமல், எல்லாப் பிராணிகளாலும் " இவரே புருஷார்த்தம் " என்று ஆவலோடு அடையப்படும் பூதாதி, பூத வாஸர். அப்பேற்பட்ட பிரபு, எல்லாப் பிராணன்களும் லயமடை

யும் பிரபு கர்மத்தின் சேர்க்கையினுல் மனித உலகத்தில் "சுத்த மாக்கப்பட்டார்" என்று சொல்வது அந்த கர்மத்திற்கு பெருமை கொடுப்பதற்காகவே. இரண்டு மூன்று நாட்கள் கழிந்தபின்பு குருவாகிற வஸிஷ்டரைப் பார்த்து ஸ்ரீராமன் சொல்ல ஆரம்பித்தார். (1250)

"குருநாதா, எல்லோரும் சோகமே உருவெடுத்துத் தோன்றுகிருர்கள். கந்தமூல பலங்களைச் சாப்பிட்டு இவர்கள் கஷ்டப்படுவதைப் பார்த்தால் மிகவும் பரிதாபமாக விருக்கிறது. தம்பி சத்ருக்னன், பரதன், மந்திரிமார்கள், ராஜமாதாக்கள் ஒவ்வொருவரும் சகிக்கமுடியாத துக்கத்தை அனுபவிக்கிருர்கள். ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகம் போலவிருக்கிறது." (1251)

"ஆகையால் எல்லோரையும் அழைத்து அயோத்யாபுரி செல்லும்படி வேண்டுங்கள். தாங்கள் இவிடமும், அரசர் ஸ்வர்க்கத்திலும் இருக்கிறதால், அயோத்தியாகிற தர்ம க்ஷேத்ரம் சூன்யமாகிவிட்டது. தர்மம் சூன்யமாகிவிட்டால் மனிதர்களுக்கு சகல புருஷார்த்தங்களும் கிட்டாது. உமக்கு நான் சொல்லத் தேவையில்லை, என்ருலும் நான் சொல்லிவிட்டேன். அதிகமாகச் சொல்லிவிட்டேன் ஸ்வாமி. மன்னித்துக் கொள்ளவும். எது உசிதமோ அதைச் செய்யுங்கள்," என்று அடக்கமாகச் சொன்ஞர். (1252)

வஸிஷ்ட பகவான் பதில் சொன்ஞர். "வத்ஸராமா, நீ தர்மஸேது, தயையின் இருப்பிடம். இவ்விதம் ஜனங்களுக்குப் பரிந்துபேசுவது உன் இயற்கை ஸ்வபாவம். உன்னைத் தரிசனம் செய்து இரண்டு மூன்று நாட்கள் உன்னுடன் காலம் கழித்தல், உன்ஞேடு சேர்ந்து கர்மங்களைச் செய்தல் ஆகியவைகளால் அவர்கள் சந்தோஷமடையட்டும், நொந்துபோன லோகத்தினர்கள் பரம சாந்தியை உன் கிருபையினுல் அடைகிருர்கள். சோக நஷ்டர்களாகி பரம விஸ்ராந்தியை அடைந்திருக்கிருர்கள். ஆகையால் உன் சேர்க்கை ஸ்நேகத்தை அவர்களுக்கு இரண்டு மூன்று நாட்களுக்குக் கொடு." (1253)

[தியானம்

நாராயணு, ரங்கநாயகி ஸமேத ரங்கநாதா, தேவதேவா, புருஷோத்தமா, நீர் சீதையுடன் கூடிய அரக்கர். கர்மவசர்களான ஜீவாத்மாக்களைக் காட்டிலும் விலக்ஷணமாக உள்ளவர். பிரபஞ்சத்தில் அவதரித்தும் குற்றங்கள் யாவும் சிறிதும் அணுகாதவர். நீர் துன்பத்தைப்போக்கும் அசோகர். பசி, தாகம், விசனம்,

மயக்கம் மூப்பு மரணம் ஆகிற குற்றங்கள் இல்லாதவர். சுசியாகிற நித்திய சுத்தர். நித்ய புத்தர். உமக்கே உரித்ததான கிருபை உம்மையே சில சமயம் வருத்தப்படுத்தச் செய்யும். உம் பக்தர்களிடம் காட்டும் அன்பு பரிவினால் நீர் கவரப்பட்டு, ஐயோ, இவனுக்கு இன்னமும் நம்மால் உபகாரம் செய்யப்படவில்லையே, இவனுக்கு காலத்திற்கு முன்பு நம்மால் உதவி செய்யப்படவில்லையே, இவனை இவ்வளவு நாழிகை தாமதித்து நம் கிருபையைச் செலுத்தினோமே என்று தம்மை கீழ்படுத்திக்கொண்டு, நாதனற்றவனைக் காப்பாற்றுவதில் தீவிர எண்ணமுடைய காலர். உமது கிருபா விசேஷத்தினால் மஹாபிரஸாதம் அடைந்த மஹனீயர்கள் தசரதர், பாண்டவர்கள் திரௌபதி, கஜேந்திரன். இவர்கள் விஷயத்தில் நீர் துக்கப்படுவது ஆச்சரியம்தான். உம்மை ஒரு தடவை நமஸ்கரிப்பதால் இவனுக்கு என்ன பேருபகாரம் செய்யலாம் என்று துயரப்படும் உமக்கு நான் என்ன சொற்களால், விலக்ஷணங்களால் சொல்லப்போகிறேன். கிருபாஸிந்து உம்மையே பெரிதென்றுநாடி உம்மையே நமஸ்கரித்து, உம்மைத்தவிர வேறு ஒன்றும் வேண்டாம் என்று வாடும் எனக்கு உமது கிருபையையே வரப்பிரஸாதமாகக் கேட்கிறேன். தயாமூர்த்தியாகிற தாயான சீதையுடன் ரமிக்கும் ராமா, உமது பாதங்களை எனக்கு மனமுவந்து அளிக்க நீர்தான் ஆஞ்சநேயர் சுகர் கிருபா விசேஷத்தால் எனக்கு அளிக்கவேண்டும்.]

ராமனுடைய வசனங்களை அங்கு கூடியிருந்த ஸமாஜம் முழுவதும் கேட்டனர். அவர்கள் யாவரும் பயமடைந்துபோய் விட்டார்கள். மத்ஸ்யம் தண்ணீரை நம்பி வாழ்வதுபோல ராமனையும் சீதையையும் உயிருக்கு உயிராக நம்பிக்கிடக்கும் ஜன சமுத்திரத்திற்கு ராம தரிசனமே கிடைக்கமுடியாதபடியாக ராமனுடைய சொற்கள் அர்த்தத்துடன் விளங்கின. நடுசமுத்திரத்தில் அலைகள் வீசும்போது பெருங்காற்றினால் செல்லும் ஓடம்கவிழ்ந்து போனதுபோல அவர்கள் தங்கள் நம்பிக்கையை யிழந்துவிட்டார்கள். பகவான் ராமச்சந்திரன் தர்மத்தை விடாதவர். அநிவர்த்தியான ஸ்வரூபி மீண்டும் குருபகவானாகிற வஸிஷ்டர் ராமனுக்கு ஹிதோபதேசம் செய்தார். வஸிஷ்டருடைய வார்த்தைகள் யாவருக்கும் மங்களங்களைத் தருவதாக விருந்தன. அனுகூலமான காற்றினால் ஏற்படும் உதவி மூழ்கும் கப்பலுக்கு கிடைப்பதுபோல, குருபகவானுடைய ஸ்ரேஷ்டமான சொற்கள் யாவருக்கும் நம்பிக்கையை மீண்டும் தந்தன. (1254)

பரம பவித்திரமான பயஸ்வினி நதி. மூன்று காலங்களாகிற காலை மத்யானம் சாயங்காலத்தில் அவர்கள் ஸ்நானம் செய்தார்கள். ஒவ்வொரு சமயமும் மங்கள மூர்த்தியான ராமசீதா பிரபுவை தரிசனம் செய்தார்கள். தங்கள் ஹிருதயம் பூர்ணமாக ஆகும் வரை, அவர்களை சுகிருத நமஸ்காரங்கள் செய்தார்கள். தங்கள் கண்கள் நிரம்ப அரவிந்தாக்ஷரான ராமச்சந்திரனை மீண்டும் மீண்டும் தரிசித்து தண்டம் செய்து சந்தோஷமடைந்தார்கள். (1255)

அயோத்தி ஜனங்கள் ராமன் சீதையுடன் வசிக்கும் பர்வதத்தையும் வனத்தையும் (காமதகிரி என்னும் பர்வதத்தையும்) பார்த்தார்கள். அந்த விடத்தில் மனத்தில் ஆனந்தத்தைத் தவிர வேறு ஒன்றும் ஏற்படவில்லை. உத்தம சாந்தி ஏற்பட்டதால் துக்கங்கள் யாவும் விலகிவிட்டன. சாப்பிடுவதற்கு அம்ருதமான பயஸ்வினி தீர்த்தம். அந்த ஜலம் இளம் குளிர்ச்சியாகவும் ஆரோக்யகரமாகவும் வாசனை உள்ளதாகவுமிருந்தது. தேஹத்தில் ஏற்படும் மூன்று வித தாபங்களாகிற ஆதிஆத்மிக ஆதிதைவிக ஆதி பௌதிக உபாதைகளைப் போக்கும் சக்தி படைத்ததாக விருந்தது. (1256)

கணக்கில்லாத வடவிருக்ஷங்கள், கொடிகள் நாணற்புதர்கள்; தங்குவதற்கு நிழல் தருவதாக விருந்தன. ஆகாரநிமித்தமாக விதவிதமான பழங்கள் இருந்தன. இளைப்பாறுவதற்கும் பார்த்துப் பார்த்து ரமிப்பதற்கும் மனத்திற்குப் பிடித்த புஷ்பங்கள் அநேகமிருந்தன. கற்பலகைகள், விருக்ஷங்களின் நிழல் அடி வாரங்களில் அநேகம் விதவிதமாக விருந்தன. அவைகளின் அழகு விலாஸங்களையும் கூட்டத்தையும் யாரால் என்ன சொற்களால் விவரிக்கமுடியும்? (1257)

ஓடைகளில் பரிபூர்ணமாக விகஸிக்கும் செந்தாமரைப் புஷ்பங்கள். அவைகளின் அழகுக்கு ஏற்ப பக்ஷிக்கூட்டங்கள். அம்ருதமயமான குரலில் சப்த ஸ்வரங்கள் ஒலிக்கும்படி கூவிக்கொண்டிருந்தன. ஒவ்வொரு பக்ஷியும் பார்க்கப் பார்க்க விநோதமாக பல வர்ணங்களுடன் இருந்தது. யாது கவலையுமின்றி, ஒருவித விரோத மனப்பான்மையின்றி, அதிபூர்ணமான விஸ்வாச பாவத்துடன் ஸ்நேக காருண்ய பாவத்துடன் அந்த மஹா பாக்யமுள்ள பக்ஷிகள் ராமசீதா ஸந்நிதானத்தில் திரிந்து கொண்டிருந்தன. (1258)

[தியானம்

ஹே ரங்கநாராயணு, லக்ஷ்மி, ரங்கநாயகி, தாயே, ஜகன் மாதா, உமை வடிவத்தில் எனக்குத் தோன்றின மஹாலக்ஷ்மியே, உன் கிருபை நிர்ஹேதுகமானது. உனது சௌந்தர்யம் எல்லா வித தாபங்களையும் குளிரப்படுத்துகிறது. மனுஷ்ய அவதாரத்தில் மறைந்திருக்கும் அவ்யக்தராமா, உம்மை அடுத்தவர்களுக்கு குற்றமில்லாத வழியை நீர் காண்பிக்கிறீர். உம்மை அடுத்தவர்கள் உம்மையே பெருந்தனம் என்றும் வஸு என்றும் அழைக்கிருர்கள். மனக்குறை அடைந்த அயோத்யாபுரி வாசிகளை இன்சொற்களால் தேற்றிய விருஷரே, உமது ரூப சௌந்தர்யம் உமது இன்சொற்கள், சீதையினுடன் சேர்ந்திருக்கும் வைபவங்கள், உன் குரு தம்பிமார்களிடம் சேர்ந்து நீர் விவகரிக்கும் தர்ம சூக்ஷமங்கள் யாவும் ஐயா, உம்மை வ்ருஷாகிருதி, வ்ருஷர் விருஷோதரர் என்கிற நாமங்களை உமக்கு கொடுத்திருக்கிறது. உமது அன்பிஞல் வருடப்பட்ட எனக்கு உமது கிருபை உமது ஸாந்நித்யம் சதா ஸம்பவிக்கவேண்டும்].

அந்த ராம சீதா சந்நிதானத்தில் கோலர்கள், விராதர்கள் பில்லர்கள் ஆகிய வனவாசிகள் மதுவையும் சுத்தமானதும் ருசிகரமானதும் மணமுள்ளதும், வாயுபகவாஞல் ஸ்வீகரிக்கப்பட்டதுமான அம்ருத ருசியுள்ள பழங்களைக் கொண்டு வந்து வைத்தார்கள். பாத்திரங்களில் பூர்ணமாக நிரம்பப்பட்ட தேனையும் ஜலத்தையும் அவர்களால் செய்யப்பட்டு வந்த மரியாதைகளையும், கந்த மூல திராக்ஷை பழ வகையராக்களையும் கண்டு அயோத்யா புரி வாசிகள் மிக்க ஆனந்தமடைந்தார்கள். (1259)

எல்லாவற்றையும் விட மேலான அவர்களுடைய அதிதி ஸத்காரங்களையும் பார்த்து, அவர்கள் கொண்டு வந்த பதார்த்தங்களின் அழகு, வரிசைகளின் தூக்கிய உத்கிருஷ்டமான அன்பு, நேர்த்தியான மணம் பொருந்தியதும் ருசியுள்ளதும் ஆகிய எல்லாவற்றையும் கண்டு, அயோத்யாபுரி வாஸிகள் அதிக வெகுமானத்துடன் பரிசுகளாகவும், நிறைய விலை கொடுத்தும் ஸ்வீகரித்துக்கொள்ள விருப்பம் கொண்டார்கள். அவர்களின் குண விசேஷங்களையும் பதார்த்தங்களின் குணலாபங்களையும் ஸ்லாகித்தார்கள். ஆஞல் அந்த மஹா உத்தம வனவாசிகள் ராமனுடைய ப்ரேமை ஒன்றுதான் ஸ்வீகரிக்கக் கூடிய பொருள்; மற்றவை யாவும் வேண்டாம் என்று சொல்லிவிட்டார்கள். நாராயண ப்ரீதிக்காக வாழும் உத்தமர்களான வனவாசிகள்

அயோத்யாபுரிவாசிகளுக்கு விநோதமாகவும் மனத்திற்குப் பிடித்தவர்களாகவும் தேன்றினர்கள். (1260)

அவர்களுடைய ஸ்நேகம் (கோபிகைகள் கிருஷ்ணனிடம் காட்டும் அன்பைப் போல) ராம விஸ்வாசம் நிரம்பியதாக விருந்தது. ஸாதுக்களால் ஒப்புக் கொள்ளக் கூடியதும் ஸர்வ சம்மதமானதுமான அன்பு பிரேமை வாத்ஸல்யம், "நிஷாதர்களான நாங்கள் வனவாசிகள்தான். நீங்கள் ராமனையும் சீதையையும் எங்கள் லாபத்திற்காக வனம் அனுப்பிய புண்யாத்மாக்கள். நாங்கள் செய்யக்கூடிய பிரதி உபகாரம் எல்லாம் நீங்கள் செய்த உதவிக்கு மலினமாகத் தோன்றும். உங்களைப் போன்ற மஹா புண்ய விசேஷம் படைத்தவர்களை எங்கள் பிரபு ராமனுடைய வரப் பிரஸாதமின்றி நாங்கள் அடைய முடியாது" (1261)

"ஐயா, உங்களை நாங்கள் எங்கள் கிருஹங்களில் காண்பது துர்லபம். பாலைவனத்தில் எங்கேயாவது கங்கையை காணக் கூடுமா? பாருங்கள். அடர்ந்த வனப் பிரதேசத்தில் உங்களை ராமனுடைய கிருபையின்றி காணமுடியுமா? ஹே ஸ்வாமி, குலத்தில் ஈனர்களான வேடுவ ஜாதியாகிற எங்களுக்கு சீதா ராமனுடைய கிருபை எவ்வளவு மஹத்தாகவும், பிரும்ம சாக்ஷாத்காரமாகவும் காட்டப்பட்டிருக்கிறது. ராஜா எவ்விதம் தயாளுவாக இருக்கிருரோ, அதுபோல அந்த ராம ராஜாவைச் சேர்ந்த உங்களுடன், உங்களைப் போல ஆசையுடனிருக்கும் பரிவாரங்களாகிற நாங்களும் கூடி வாழ விரும்புகிருேம்." (1262)

"நீங்கள் எங்களிடம் வந்ததே பெருமை. ஆகையால் உங்கள் தாஸர்களான எங்களிடம் பரிபூர்ணமான கிருபையுடன், ஸஹஜ ஸ்நேகத்துடன் யாதொரு சங்கோஜமுமின்றி, ஐயா, உங்கள் பிரேமையை எங்களுக்குக் கொடுங்கள். கிருபையுடன் நாங்கள் அளிக்கும் உபசரணைகளை யேற்றுக் கொள்ளுங்கள். ராம பிரஸாதத்தினுல் உங்களைப் பகுமானிக்க நேர்ந்திருக்கிறது. எங்களால் தரப்பட்ட பழங்கள் கிழங்குகள் திராக்ஷ முதலிய ஆகாராதிகளை ஸ்வீகரித்துக் கொண்டு எங்களைக் கிருதார்த்தர்களாக ஆக்க வேண்டும்." (1263)

[தியானம்

மஹாலக்ஷ்மி சமேத நாராயணு, ஸ்ரீதேவி சகித நாராயணு, ஹரிப்ரியே, பத்மா, பத்மாலயா, ஹரிவல்லபே, வஸிஷ்டர், சூரியன், வாலகில்யர்கள், மஹா உரகன், குமுதன், குமுதாக்ஷன், போன்ற நாராயணரின் கணர்கள், ஜய விஜயன் போன்ற கண

நாயகர்கள் எல்லாம் ஒருமிக்க உமது கிருபையை வேண்டுகிறுர்கள். என்னுடைய அனன்யாரிஹத்வத்தையும் அனன்ய கதியையும் ஆசார்ய ஹ்ருதயத்தில் தோன்றும் குளிர்ந்த மனப் பான்மையும் இரும்பையும் பொன்ஞக்கும் ஸாது சங்கமும் உன் கிருபைக்கு என்னை ஏற்றவனுகச் செய்ய முடியுமா என்ருல், ஸ்வாமி, என் பாரதந்திர பிரதிபாத்யத்தாலே "உன் அடியார்க்கு என்ன செய்வேன், என்று இருக்கும் நீ, இவனுக்குப் பாபத்தையும் தோஷத்தையும் விலக்கி, அனுக்ரஹம் செய்து, மேன்மேலும் உபகரிக்கையாலே ஸம்ஸார நிவிருத்தியாகிறதின் தொடக்கமான உங்களுடைய கைங்கர்ய பிராப்தி பர்யந்தமாக ஸகல பலங்களும் உண்டாம் என்று அல்லவா ஆகிறது." காருண்ய சீதாலக்ஷ்மியே, நான் செய்த பாபங்கள், அக்ருத்ய அபராதங்கள் ஆகியவைகளைக் கண்டு பயப்படும் எனக்கு ஈஸ்வரனுடைய ஸ்வாதந்தர்யமும் அதை அடுத்து ஸ்வஅபராதமும் ஆகிற இரண்டையும் நினைத்து அஞ்சும் எனக்கு "அஞ்ச வேண்டாம்" என்று அபய பிரதானம் செய்து, இந்த ஜகம் முழுவதும் தோஷம் நிரம்பியது, அபராதிகள் யார் இல்லை? காகுத்ஸனே, அபராதியில்லை யார்?" என்று தத்துவ ஞானப்படி புருஷகாரம் செய்யும் என் மாதா சீதையின் கிருபை எனக்குக் கிடைக்குமா? இரண்டு தலையும் கூடியிருக்கும் திசையிலே, ஆஸ்ரயிக்க வேண்டுமே என்கிறபடி புருஷகாரம் உபாய வஸ்துக்களுடைய நித்ய யோகத்தை பிரதிபாதிக்கிற இந்த ஸ்ரேஷ்டமான த்வயமாகிற மந்திரம் எனது ஆஸ்ரயத்திற்கு காலம் பாராமல் உடனடியாக சீதையின் ஸந்நிதியில், அவள் ஸந்நிதியாலே காகம் தலைப்பெற்றது போல, நானும் உய்ய வேண்டும். உமது அருளின்றி எனக்குத் தஞ்சம் ஒன்றுமில்லை. ராமா, உனது பரத்வத்தைப் பாராட்டாமல் சதா அனுகூலாகவும், ஆஸ்ரிதர்களுக்கு போதும் என்று நினையாமல், அக்னி பெருமான் மேன்மேலும் விறகு முதலியவற்றை எதிர்பார்த்திருப்பதுபோல என்னை இன்னும் காப்பாற்ற சித்தமாயிருக்க வேண்டும். இவ்விதம் ஆராமையைர் கொண்ட வஸுப்ரதரே, என்னிடம் சீதையின் ப்ரேரணையின் காரணமாக அன்புடன் இரும்.]

"ஹே ஸ்வாமி நாங்கள் வனங்களில் சஞ்சரிக்கும் மூடர்கள் தான். ஆனுல் நீங்கள் எங்கள் கிருஹத்திற்கு வந்திருப்பதால் உங்களை அதிதிகளாக வரவேற்கிரோம். எங்களால் முடிந்தவரை சேவை செய்கிரோம். ஐயா, தேவர்கள் போல விளங்கும் உங்களுக்கு எங்களால் என்ன கொடுக்க முடியும்? வனத்தில் சஞ்சரிக்

கும் பில்லர்களின் ஸ்நேகமித்திர பாவத்தினுல் உங்களுக்கு என்ன லாபம் ஏற்படக்கூடும்? உங்களுக்கு சரீர வெப்பத்திற்காக உலர்ந்த சரகு, விறகு முதலியவைகளையும், சாப்பிடுவதற்கு நாங்கள் ஏற்கனவே கொடுத்திருக்கிறதைத்தானே சொல்ல வேண்டும்?'' (1264)

"இதுதான் எங்களால் இந்த ஸ்திதியில் அளிக்கக் கூடியது. அது மாத்திரமில்லை. எங்கள் பழக்க வழக்கங்களைக் கேட்டு துராசைகளையும் தியாகம் செய்து உங்களுடைய உயர்ந்த விலை மதிப்புற்ற வஸ்திரங்களையும் பண்டங்களையும் திருடாமல் காப் பாற்றுவோம். நாங்கள் தாழ்ந்த பிறப்பினர்களான படியால் உங்களைப் போல அறிவுபெருத மரக்கட்டைகள். இரக்கம் தயை யின்றி வாழும் எங்களுக்கு குடிலபுத்தியுண்டு. அதனுல் கொடுமை ஸ்வபாவமுள்ளவர்களாவும் பிறரை ஹிம்சைப் படுத்துவதிலும், அதனுல் பகவத் சேர்க்கையில் தூர விலகிப்போய் தாழ்ந்த தௌர்பாக்யத்தை அடைந்திருக்கிருேம்.'' (1265)

"எங்கள் வாழ்க்கை ஜீவனம் இரவு பகல் பாராமல் பாபங்கள் செய்வதிலேயே கழிந்து போகிறது. அதன் பலன்களாக எங்க ளுக்கு ஆடையில்லை; சரிவர உண்ண ஆகாராதிகள் கிடையாது. ஸ்வப்னத்தில் கூட தர்மத்தில் புத்தி செல்ல மறுக்கிறது. அப்பேற் பட்ட துஷ்கிருதம் செய்தவர்களாகிய எங்களுக்கு பரம உத்கிருஷ்டமான லாபம் உங்களைப் பார்க்கும்படி இப்போது நேர்ந்திருக்கிறது. இது பரம கிருபாளுவாகிற ரகுநந்தனுடைய தர்சன லாபத்தால் அல்லவா ஏற்பட்டது? இது அந்த தர்சன பிரபாவமல்லவா?'' (1266)

"எந்த நிமிஷத்தில் நாங்கள் பிரபுவின் பத கமலங்களைப் பார்த்தோமோ, அதற்கு முன் நாங்கள் பிறந்திலோம். பார்த்த பின்பு நாங்கள் இறந்திலோம். எந்த நிமிஷத் தில் சுபமான பிரபுவின் சரண கமலங்களை எங்கள் தாயாகிய சீதையின் ஸந்நிதானத்தில், ஹரியினுடைய சுபமான திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பார்த்தோமோ, அந்த நிமிஷத் திலிருந்து நாங்கள் பிறந்து, பிறந்தபின் அவனை ஒருக்காலும் மறந்திலோம், என்று "ப்ராப்ய வைலக்ஷண்ய ஞானம்'' பிறந் தார் போலவும், ராம கைங்கர்யம் ராமனைச் சேர்ந்த பாகவத கைங்கர்யப் பிரார்த்தனை, இடைவிடாமல் சித்திக்கும்படி வேண்டு பவர்களாகவும் இப்பேற்பட்ட மஹத்தான கைங்கர்ய பிரவிருத்தி களுக்கு தேசகால ஆசார நியமாதிகள் இல்லாதமையை அருளிச் செய்வது போல அவர்கள் சொன்னுர்கள். "ஹே மஹா

ஜனங்களே, இப்போது எங்கள் துக்கங்கள், பாபங்களாகிற தாபத்ரயங்கள் அழிந்தன. ஞானவைராக்யர்களாக ராமபதத்தை, சீதா ஸந்நிதியில் ராம கைங்கர்யத்தை அவலம்பித்த எங்களுக்கு, உங்களுடைய கைங்கர்ய பிரஸாதத்தை அருளிச் செய்யுங்கள்'' என்று அனுராகத்துடன் வனவாசிகள் சொன்னூர்கள். இவ்வளவு பக்தி பூர்ணமாகவும், கிருஹஸ்தர்கள் அனுஷ்டிக்கும் அதிதி ஸத்காரம், ஸம்ஸ்காரம் முதலியவை நிரப்பப்பட்ட இன்சொற்கள், ப்ரேமையை சுமந்து கொண்டிருந்தன. அவர்களின் ராம பாக்யத்தைப் புகழ்ந்து அயோத்தி ஜனங்கள், "இது வல்லவோ நாம் அடைய வேண்டிய பாக்யம், ஞானம், ஸ்வரூப பிரவிருத்தி,'' என்று மனத்திற்குள் புகழ்ந்து கொண்டார்கள். (உத்தவர் கோபிகைகளின் பக்தியைப் புகழ்ந்தது மாதிரியிருந்தது) (1267)

சகலரும் அவர்களுடைய வரவேற்பையும் ப்ரேமை நிரம்பின வசனங்கள் யாவையும் கேட்டார்கள். அவர்கள் பேசின பேச்சுக்கள், இன்சொற்கள், செய்து காட்டிய நன் நடத்தைகள், ஆசார வினயங்கள், உத்தம சாந்தியின் லக்ஷணங்கள் (ஞான வைராக்யத்தால் அடையப்பெற்ற சாந்தியின் பெருமைகள்) ஆகிய எல்லாம் "எம்பெருமானுக்கே உரியர்களான நாங்கள் எங்களுக்கு உரியர்கள் என்பது இன்றைக்கே ஒழியவேண்டும்; ஸர்வ சேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பேரருள் பெறவேணும்,'' ஆகிய வைஷ்ணவ மனப்பான்மை, பாகவத கைங்கர்யம், "எல்லாம் சீதாராமனின் சரணங்களே எங்கள் தஞ்சம்'' என்று அடைவதால் அல்லவா ஏற்பட்ட சுகங்கள். (நாம் அயோத்தியாகிற தர்ம க்ஷேத்திரத்தில் பிறந்தும், வஸுவாகிற பகவான் அபார காருண்யத்தினுல் அயோத்தியில் பிறந்து வளர்ந்தும் உலகத்திற்குத் தாய் தந்தையர்களாகவிருக்கும் பெரும் மகிமை பெற்ற வஸுப்ரதராகிய ராமசீதா, தாமே உவந்து தம்மை நமக்கு அளித்தும், நம்மிடம் இவ்விதமான சுத்த பிரேமை இல்லையே என்று தங்களை வாட்டிக் கொண்டார்கள், பச்சாதாபப்பட்டார்கள்.) (ராம அபராதம் செய்தவர்களுக்கு ராமக்ருபை சீதா ஸந்நிதியில் கிடைத்தால்தான் நல்லது. அது யில்லாவிடில பேரின்பம் சுகசாந்தியாவும் கிடையாது மஹா பக்தனுகிற பரதனுல் வேண்டப்பட்டு, "நமக்கு அது சித்திக்க வேண்டும்'' என்று நினைத்துக் கொண்டவர்களாக விருந்தார்கள்.) இதைப் பார்த்த மஹா கிருபாளுவாகிற துளசிதாஸர் சொல்லுகிறர். "ராம கிருபையால் அல்லவா இரும்புத் துண்டுகூட ஓடத்தை தாங்கிக்கொண்டு சம்சார சாகரத்தில் மிதக்கக்கூடும்?''

ஞானத்தை ஊட்டிய கோலர்களும் வேடர்களும் இரும்புத்துண்டு கள் போலவும், மஹா பாக்யவான்கள் என்று தங்களை நினைத்துக் கொண்டிருக்கும் அயோத்யா வாஸிகள் ஓடம் போலவும், ராம கிருபையினால் ஆக்கப்பட்டார்கள்.'' (1268)

[தியானம்

ராமா, நாராயணா, லக்ஷ்மி நாராயணா, சீதாராமா, உமது கிருபா விசேஷத்தாலே பூர்வ ஆசாரியர்களான பிள்ளைலோகாச்சாரியார் மணவாளமாமுனிகள் ''உமக்குப் பரார்த்தமாக விஹித கர்மம், உம்முடைய உபாயம் உபேயம், ஆத்மபுத்தி, உமது பிரீதியே ஹேது, உமது கைங்கர்யமே பலப்ராப்தி, பகவத் ப்ராப்தியே பெரும்பலன், சேதனின் ஸ்வபிருவிருத்தியாகிற ஸூக்ஷ்ம ஞானம் ஸ்வரூபத்தினால்யேற்படும் எனினும் அழியாத ''பக்தியா த்வதந்யயா சக்யः'' என்கிறபடி பகவத் பிராப்திக்கு ஸாதனமான பக்தி, அந்த ஸாதனமான பக்திக்கு போஜனமான உமது திருவடி கைங்கர்யம், அதில் ருசி, அதில் பிரவிருத்தி, அனன்ய சரண்யமாக விருத்தல், இவை எல்லாம் அனுசந்தித்து, ஆசார்ய கடாக்ஷ மகிமையினால், பக்தி பிரபத்தி இவை இரண்டிற்கும் பகவத் பிரஸாதத்தை அடையவேண்டும். அடைந்த பின்பு, அது நீடிக்கப் பிரார்த்திக்க வேண்டும்;'' என்று அருளிச் செய்தனர். ஆஸ்திகனாய் ருசிகண்டு உஜ்ஜீவித்தல், நாஸ்திகனாய் நசித்தல் ஒழிய நடுவில் நிலையில்லை என்று பட்டருக்கு எம்பரர் அருளிச் செய்ததும், ''மாமேகம் சரணம் வ்ரஜ'' என்கிற வார்த்தைகளைக் கேட்ட பெரியாழ்வார் ''தந்நிஷ்டரா யிருப்பர்,'' ''உத்திஷ்டராயிருப்பர்'' என்றும், அவன் பண்ணும் ரக்ஷையை அர்ஜுனனை வியாஜமாகக் கொண்டு நம்மாழ்வார் அருளிச் செய்த ''வார்த்தை அறிபவர்'' என்கிற பாட்டின்படி ''நம்மை ஆட்கொள்வான், அத்தனாகி, அன்னையாகி ஆளும் எம் பெருமானாய் புகுந்து நம்முள்மேவினார்; ஏழை நெஞ்சமே, எத்தினால் இடர்க்கடல் கிடத்தி'' என்று அருளியபடி, என்று நாம் செய்த பாபங்களை புண்யங்களாக ஸ்வீகரித்து, நம் ஸ்வாமி, ஸர்வவித பந்துவாக நமக்கு ஹிதத்தைப் போதிப்பவனாக, தம் மேன்மையைப் பாராமல் தாழ நின்று உபசரிக்கும் அவனிருக்க எத்தாலே நீ துக்க ஸாகரத்தில் கிடக்கிறது?'' என்றார் திருமழிசைப் பிரான். ''அத்தனாகி'' என்கிற பாட்டும் பிரமாண மில்லையா? என்றார். இவ்விதம் சர்ம ஸ்லோக பிரகரணத்தில் மனம் ஊறின எனக்கு நீ அருள் செய்ய மாட்டாயா? சீதா ஸந்நி

தானத்தில் அபயபூதனுகவிருக்கும் மதுசூதனு, நீ கிருபை செய்யாவிடில் எனக்கு ஏது தஞ்சம்?]

இவ்விதம் மனத்தில் ஆனந்தமடைந்து அந்த மஹா பாக்ய வான்களாகிற அயோத்தி ஜனங்கள் வனத்தின் நான்கு புறங்களி லும் அலேந்து திரிந்தார்கள். அவர்களுடைய எல்லேயில்லாத ஆனந்தம், வர்ஷ முதலில் தண்ணீருக்கு ஏங்கிக் கிடக்கும் தவளே எவ்விதம் ஆனந்தப்படுமோ, மயில் கார் காலத்தின் கருமேனி மேகங்களேக் கண்டு ஆனந்தக் கூத்தாடுமோ அது போல அவர்களுடைய ஆனந்தம் மனச் சாந்தியினுல் ஏற்பட்டு எல்லேயற்றிருந்தது. (1269)

அந்த அயோத்யாபுரிவாஸிகளின் ஸ்திரி புருஷர்கள் யாவரும் மெய் ஆனந்தத்தை அடைந்தார்கள். அவர்களுடைய பொழுது இமை கொட்டுவது போல வேகமாய்ச் சென்று கொண்டிருந்தது. இங்கே எவ்வளவு தாய்மார்கள் இருந்தார்களோ அவ்வளவு பேர் களேயும் சீதாபிராட்டி அவர்களுக்கு இஷ்டப்படி பல ரூபங்கள் தரித்துக் கொண்டு ஒவ்வொருவரையும் தனி முறையில் தனிச் சிறப்புடன் சிஸ்ரூஷை செய்தாள். (1270)

என் பிரபு ஸ்ரீராமன் ஒருவனுக்கே சீதையின் மர்மங்கள் தெரியும். அவள் பராசக்தி. அவள் மஹாமாயை. அவள் பல ரூபத்துடன் பல காரியங்கள் செய்ய சக்தி வாய்ந்தவள். ஒவ் வொரு தாய்மாரும் சீதையின் அந்தரங்க சிஸ்ரூஷையில் மனம் ஈடுபட்டு அதிகமாக சுகத்தை அடைந்து, அந்த சுகத்தினுல் சீதைக்கு மங்கள ஆசீர் வாதங்கள் செய்தார்கள். (1271)

ஸ்ரீ சீதையின் ஸஹஜ ஸ்நேகத்தையும், ராமலக்ஷ்மணர் களின் அதிமித்ர பாவத்தையும் கண்ட குடிலபுத்தியுள்ள கைகேயி யும் பிரமித்து விட்டாள். அதிவியாகுலமடைந்து பச்சாதாபப் பட்டாள். அவளுக்கு எவ்விதமாவது இந்த ஜன்மத்தை, ராம னுக்கு விரோதமாகவிருந்த ஜன்மத்தை அழித்துவிட்டு, புனர் ஜன்மம் ராம கைங்கர்யத்திற்காக எடுக்கலாகாதா என்று எண்ணி மனம் பச்சாதாபப்பட்டவளாக, தாயாகிய பூமி தேவியையும், ம்ருத்யு தேவதையுமான யமராஜனேயும் வேண்டிக் கொண்டாள். ஆனுல் அவர்கள் யாவரும் அவள் நினேத்தபடி அவள் ஒத்தாசைக்கு வரவில்லே. பூமியும் வெடிக்கவில்லே; அவளுக்கு துர்மரணமும் ஏற்படவில்லே. (1272)

லோகத்தில் பழமொழி உண்டு. அந்த பழமொழி வேதத்தில் கோஷிக்கப்படும் உண்மையைத்தான் சொல்கிறது. "ஸ்ரீராம னிடம் விமுகனுக விருந்து நாஸ்திகவாதம் செய்பவனுக்கு

நரகமும் இடமும் தாராது.'' ''இதையேதான் ஞானிகளும் சொல்லுகிறுர்கள்.'' என்று துளசிதாஸர் சொல்லுகிறுர். இப்பொழுது ஒவ்வொருவர் மனத்திலும் ஒரு சந்தேகம் ஏற்பட்டது. ''ஹே தெய்வமே, ஸ்ரீராமச்சந்திரன் அயோத்தி திரும்புவாரா அல்லது வர மறுப்பாரா?'' என்று தான் சந்தேகம் எழுந்தது. (1273)

[தியானம்

ஐயா நாராயணு, மஹாலக்ஷ்மி சமேத நாராயணு, சீதா ராமா, உம்முடைய நித்ய விபூதி லீலா விபூதிகளாகிற உபய விபூதிகளில் உம்முடைய லீலா விபூதி ரொம்ப விசேஷமானது. பிரக்ருதி புருஷன் காலம் ஆகிய மூன்றும் லீலோபகரணமாக விருப்பது. பிரக்ருதி புருஷர்கள் ஸ்ருஷ்டி யாதிகளுக்கு உபகரணமாக விருக்கின்றன. ஸத்ய சங்கல்பனுகிற பகவான் நியந்தாவாகி, கால நியமம் செய்கிருன். இதைத்தான் பெரியோர்கள் க்ரீடாபரிக்ரம் என்று சொல்லுவார்கள். காலத்தின் பரிணமம் கொண்ட லீலா விபூதியில் சரீர ஆத்மாவும் சேஷ சேஷி பாவமும் ஒன்றே, அப்பேற்பட்ட ஈஸ்வர ஸம்பந்தத்தைக் காட்டும் தத்வமும், புருஷார்த்தமும், ஹிதமும் எனக்கு உன் கிருபையால் ஸம்பவிக்க வேண்டும்.]

பரதனுக்கு ராத்திரி பூராவும் உறக்கம் வரவில்லை. தினத்தில் பசியும் யேற்படவில்லை. அவனுடைய ஹ்ருதயம், பவித்திரமான எண்ணங்கள் யாவும் ராமனுடைய திருஷ்டி பதத்திலும் சீதையின் கருணையிலும் லயித்திருந்தன. சகதியில் மூழ்கிப்போன மீன் குஞ்சு ஜலத்தின் வரட்சியினுல் எவ்விதம் வ்யாகுலம் அடையுமோ, அதுபோல வியாகுலம் அடைந்தான். (1274)

பரதன் தனக்குள் யோசித்துக்கொண்டான். ''எந்தவிதமாக காலம் விபரீத எண்ணத்துடன் என் மாதா ரூபமாக வந்து சமயத்தில் எனக்குத் துரோகம் இழைத்து விட்டது. தானியம் பழுத்து அறுவடை செய்யக் காத்திருந்த போது கடும் விரோதியான பூச்சிகள் சூழ்ந்து தான்யத்தை பாழடைந்துவிடும்படி செய்து விட்டன. விதி என்னுடன் விளையாடிக்கொண்டிருக்கிறது. எப்படியாவது என் பிரபு ஸ்ரீராமசந்திரனின் பட்டாபிஷேகம் நடந்து விடவேண்டும். அதற்குரிய உபாயம் யாது? அது எனக்குத் தோன்றவில்லையே'' (1275)

''ஆம் நம் ராமன் பிராம்மண ப்ரியன் மாத்திரமில்லை. குருவினுடைய ஆக்ஞையைக் கேட்பவன் என் பிரபு. அவஸ்யம்

அவர் வார்த்தையைத் தட்டமாட்டார். ஆனால் வஸிஷ்ட பகவானே ஸ்ரீராமனுக்கு அயோத்தி திரும்புவதில் இச்சையிருந்தால் ஒழிய அவர் ஒன்றும் சொல்லமாட்டார். தர்ம வத்ஸலையான கௌஸல்யாதேவி ராமனை அயோத்தி திரும்பும்படி செய்வாளா? ராமனை அவன் தாயார் ஒருக்காலும் கட்டாயப் படுத்த மாட்டாள்.'' (1276)

"நான் ராமனுடைய விஸ்வாசமுள்ள சேவகன் என்று எவ்வளவு தூரம் நான் பரக்கச் சொல்லியும் ராமன் என் வார்த்தையை அங்கீகரிக்கிறானோ, இல்லையோ; அவன் என்ன அபிப்ராயப்படுகிறானோ தெரியவில்லை. ஒரு வேளை பிரபு அதை அங்கீகரிக்கலாம்; ஆனால் தெய்வம் பிரதிகூலமாகி விட்டாலோ என்ன செய்கிறது? நானே பிடிவாதம் செய்தால் அதர்மத்திற்கும் பகவானுடைய சத்ய சங்கல்பத்திற்கும் விரோதம் செய்தவனாவேன். ராமனுடைய தாஸன் என்று சொல்லிக்கொள்வது எவ்வளவு மிகக் கடினம்! பரமசிவனுடைய கைலாஸத்தை தூக்கி விடலாம். ஆனால் குருவினுடைய சுஸ்ரூஷை செய்வது மிகக் கஷ்டம், அதை கடைசி வரை நிர்வஹிப்பதும் இன்னும் மிகக் கடினம்.'' (1277)

"எவ்வளவு தூரம் நான் சிந்தித்தும் எனக்கு ஒரு யுக்தியும் தோன்றவில்லை.'' இவ்விதம் கடும் யோசனை செய்து செய்து, ஒரு வழியும் புலப்படாமல் இருக்கும்போது, அந்த இரவும் கழிந்து கொண்டிருந்தது. காலை விடிந்ததும் பரதன் எழுந்திருந்து ஸ்நான ஸந்திகளைச் செய்துவிட்டு பிரபு ராமச்சந்திரனை நமஸ்கரித்து, அவருடன் உட்காருவதற்கு முயற்சித்த சமயம், பகவான் வஸிஷ்டர் அவனைக் கூப்பிட்டுவிட்டார். (1278)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி பிரியா, பூமிநீளா தேவி ஸந்நிதா, ராமா, உனக்கு லீலையாகிற அர்ச்சாவதாரம் உன் இச்சையால் ஏற்படுகிறது. ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும், துஷ்டர்களை சிக்ஷிப்பதற்கும் தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் ஏற்படுகிறது. இவ்விதம் ஸ்வரூப ஞானத்தை சேதனர்களுக்கு அளிப்பித்து, விபரீத ஞானத்தைப் போக்கி, உம்முடைய பரமார்த்தமான ரூபத்தை என் போன்ற பக்தர்களுக்கு ஆராத்ய போக்யமாக காட்டிக் கொடுத்த பரதாழ்வானை நான் மீண்டும் மீண்டும் நமஸ்கரிக்கிறேன். நீ ஸஞ்ஜீவனி. பரதாழ்வானால் ஏற்படும் உன்னுடைய சேர்க்கை ஸுககரமாகவும், என் நிஜ ஸ்வரூபத்தை மீண்டும் ஏற்படுத்தி, உன்னையே ஸ்வப்ரார்த்தித பிரார்த்தமாக ஆழ்வா

ராதிகள் அருளிச் செய்ததுபோல நமக்குக் கிடைக்கச்செய்கிறது. என்னுடைய அபராதங்களை க்ஷமித்து, ஸர்வ ஸஹிஷ்ணுவாகை யாலே, அர்ச்சக பரதந்திரனான உன்னை, ஐயா, ஸமஸ்த வியாபா ராதிகளை உடையவனாக, நித்ய விபூதியில் எழுந்தருளியிருக்கும் உம்முடைய திவ்ய விக்ரஹத்தை, இந்த அர்ச்சாவதாரத்தில் அல்லவோ காணமுடிகிறது? அப்பேற்பட்ட சுசிகரனும், ஸ்ரீசரும், ருசிகரனும், அசேஷலோக சரண்யத்வமும் கொண்ட உன் திவ்யபாதங்களை, பரதாழ்வான், அனந்தாழ்வான், உமை சங்கரர், கோமாதா, சீதாபிராட்டி, வஸிஷ்ட விஸ்வாமித்ரர்களை முன்னிட்டு நான் சரணமடைகிறேன். தியாகராஜா, நிஜ ஸ்வரூப பக்தி உடைய உம்முடைய வரப்பிரஸாதமாக வல்லவோ இது கிடைக்கவேண்டும்.]

குருவாகிற வஸிஷ்ட பகவான் பரதனை முன்னிட்டு சொல்ல ஆரம்பித்தார் :— "ஹே மஹாஜனங்களே, நல்ல குணமுள்ள பரதா, கேளு. நீங்கள் யாவரும் கவனமாகக் கேட்கவேண்டிய விஷயம் இதுதான். சத்யசங்கல்பரான பகவான் ஸ்ரீராமச் சந்திரன், ரவிகுலத்தின், மஹாராஜன் அவாப்த ஸமஸ்தகாமன். (ஸ்ருஷ்டியாதி வியாபாரங்களில் எம்பெருமானுக்கு அவித்யாதி கர்மங்களால் நம் போன்றவர்களுக்கு யேற்படுவதுபோல, அவனுக்கு ஏற்படுகிறதில்லை.) ஸ்வஇச்சையாலே நிரவத்யனாக, நிரஞ்சனனாக, க்ரீடதோ விஷயமாக லீலா கைங்கர்யம் சேஷ்டிதங்கள் செய்வதற்காக ஸ்ரீயப்பதியான பகவான் பூமியில் அவதரித்திருக்கிறார். அவர் ஸர்வ ஸ்வதந்திரன். அவர் அப்ர மேயன். நம்போன்ற சேதனர்களிடமும் ஸஹஜமாகப் பழகி நம்மை அனுபவிக்கும் மோதிதன். நம்முடைய உஜ்ஜீவனம் அவனுக்குப் பரம லக்ஷ்யம். அவனுக்கு ஸ்ருஷ்டியைப்போல சம்ஹாரமும் லீலையுமாகிறது." (1279)

"அவர் சத்ய பிரதிக்ஞையேற்று அந்த வியாஜத்தினால் தானே நடத்திக்காட்டும் நமக்கு மார்க்கதரிசியைப் போலவும், ஸ்ருதி ஸ்மிருதிகளில் நமக்கு விஸ்வாஸத்தை வளர்ப்பதற்காகவும், லோகத்தின் மரியாதைகளைக் காப்பாற்றுவதில் ஊக்கமுள்ளவராக வும், தர்மத்தின் ஸேதுவாகவும் காணப்படுகிறார். இந்த பரமார்த்த ராம அவதாரம் லோகத்திற்கு சகல மங்களங்களை அளிவிக்கக் கூடியது. அவருடைய இச்சையாகிற ஹேது சகல சேதனர்களை யும் மிருத சஞ்சீவினியாக்கக்கூடியது. அப்பேற்பட்ட பிரபு இந்த சமயம் குரு, பிதா, மாதர, வசனங்களை அனுசரிக்கும் தர்ம துரந்தரராகக் காணப்படுகிறார். துஷ்டர்களை சம்ஹரித்து,

சாதுக்களையும் தேவதைகளுக்கும் ஹிதத்தைச்செய்ய வ்ரதம் பூண்டிருக்கிறுர்.'' (1280)

''நீதி, பிரேமை, பரமார்த்தம், ஸ்வரூப பிரவிருத்தி ஆகியவைகளில் ஸ்ரீராமனுடைய அவதார ரஹஸ்யங்களை நாம் எளிதில் அறியமுடியாது. அவர் சர்வ ஈஸ்வரரானபடியாலும், அர்ச்சாவதாரத்தில் ஸர்வ ஜகத் ஸ்வாமியாகவும், பரம ஸௌலப் யத்தை அடைந்து ஸர்வ ஸுலபனுக சேதனர்களுக்கு ஆகிறபடி யால் அந்த அர்ச்ச பிம்பத்தின் குணுதி விசேஷங்கள் யாவருக் கும் எளிதில் புலப்படா. பிரும்மா விஷ்ணு, மஹேஸ்வரர் சந்திரன் சூரியன், திக்பாலர்கள், மாயை, ஜீவர்கள், ஸகல தர்மங்கள் காலம் முதலியன.'' (1281)

''சேஷ பகவான், பாதாள லோகம் போன்ற பதினுன்கு லோகங்களிலும் வசிக்கும் யோகிகள், ஸித்தர்கள், நிகம ஆகமங் கள், யாவும் ஈஸ்வரனுடைய ஸ்வரூப ஸ்வலக்ஷணங்களை கானம் செய்திருக்கின்றனர். அவனுடைய குணங்களையும் விலாஸங் களையும், சேஷ்டிதங்களையும் லீலைகளையும் வர்ணிக்க யாரால் முடியும்?'' (அப்ரமேயன், அவாப்தகாமன் அவன். இவை எல்லாவற்றையும் தீரமனதில் ஆராய்ந்து, நான் சொல்வதைக் கேளுங்கள். நம் போன்றவர்களுக்கு அவனுடைய கிருபை மஹா அவசியம். அதை அடைவது, அவனுடைய ஆக்ஞைகளுக்கு நாம் சிரம் பணிந்து, அவன் இச்சைப்படி நடந்து கொள்ளவேண்டி யது. அவன் ஸர்வ பலப்ரதன். காரிய காரணங்களுக்கு கர்த்தா. அப்பேற்பட்ட ரங்கேஸ்வரனுகிற சீதாராமன் ஸர்வ ஸஹிஷ்ணு வாக அர்ச்சாவதாரத்தில் நமக்குப் பரனுக எழுந்தருளி நமது ஹ்ருதயத்தை ஸ்வீகரித்தவனுக விருக்கிறுன்.] ''ஆகையால் அவனுடைய ஆக்ஞையை ஏற்றுக்கொண்டு அவனை மறுத்துப் பேசாமல், நடப்பதே நமக்கு சன்மார்க்கத்தைத் தரும் ஹேது. இந்த ரஹஸ்யங்களை உங்களுக்குச் சொல்லி விட்டேன். நாம் ஸர்வ சம்மதமாக ஒருமித்து, ஏகமனதாக அவனைத் திருப்தி செய்வோம். இதற்குப்பின் உங்கள் இஷ்டத்தைச் செய்யுங்கள்.'' (1282)

**[தியானம்**

**ஹே நாராயணு, பரவாஸு தேவா, பத்மநாபப்ரியே, விஸ் வப்ரியே, ஹரிவல்லபே, ஸ்ரீவத்ஸ ஸ்ரீதரநாயகி உன்னுடைய அழகு ரொம்ப பெயர்போனது. உன்னுடைய சங்குடன் கூடிய சக்கிரமும் புண்டரீக, நயனங்களும், சந்திரன், சூரியன், அக்னி**

  

வாயு, ஆப: என்று சொல்லப்படும் மஹா பூதர்களாலும், ஸர்வ ரிஷிகளாலும் ஸர்வ தேவர்களாலும் உத்தம தீர்த்தங்களாலும் ஆஸ்ரயிக்கப்பட்ட உம்முடைய திவ்ய மங்கள விக்ரஹம்போல இரு மஹிஷிகளான தர்மம், விபூதி விலாஸங்கள் ஆகிய இரு மகிமைகளும் என்னை வசீகரப்படுத்துகின்றன. உம்முடைய விஸ்வம் எனப்படும் சகல கல்யாண குணங்களும், ஸர்வ சக்திகளும், உமது தயை ஸௌலப்யம் ஔதார்யம் முதலிய ஆத்ம குணங்களும் என்னை உனக்கு அடிமையாக்குகின்றன. ஐயா, உம்முடைய ஸ்வதந்திரம், நீர் அருளிச்செய்த ஞானபோதகமான விஷயங்கள் என்னை என்றும் பயப்பட வைக்கின்றன. மந்த புத்தி படைத்த எனக்கு உமது தயையைத் தவிர வேறு எது எளிதில் எனக்கு கிடைக்கக்கூடும்? நாராயண ப்ரியே, உன் சந்நிதானத்தில் லக்ஷ்மணன், குஹன் சந்நிதானத்தில், வஸிஷ்டர் விஸ்வாமித்ரர் நிழலில் சேர்ந்திருக்கும் எனக்கு பராசரருடைய விஸ்வாசத்தையும் வேதவியாசருடைய விசாலமான அறிவையும், சுகருடைய தீவிரமான ஜிக்ஞாஸ பக்திகளையும், நாரதர் வால்மீகி தியாகராஜ பக்திமான்களுடைய அந்தரங்க பக்தியையும், அர்ஜுனன், திரௌபதி, தர்மர், பீமன் முதலிய பாண்டவர்களுடைய திருதி, அஹிம்சை, கீர்த்தி, க்ஷமையாகிற வைஷ்ணவ லக்ஷணங்களையும் கொடு. பாகவத அபசாரம் நேரிடாதபடி பரதன் என்னைக் காப்பாற்றட்டும். விபரீத ஞானம் ஏற்படாதபடி ஆஞ்சநேயர் காப்பாற்றட்டும். ராமசீதா தம்பதிகளே, கிருபை செய்யுங்கள்.]

"ஸ்ரீ சீதாராமனின் ராஜ்யாபிஷேகம் எல்லோருக்கும் சுகத்தையும் சௌக்யத்தையும் அளிக்கக்கூடியது. அந்த ஏக புருஷன் திவ்ய தம்பதிகளுடன் சேர்ந்திருக்கும் சமயம் மஹா அபராதங்களைச் செய்திருக்கும் நம்போன்ற சேதனர்களிடம் மஹாகிருபையுடனும் சௌலப்யத்துடனும் எளிதில் சுலபனாகி, நம் எல்லோருக்கும் மங்களங்களையும் ஆனந்தத்தையும் மனத்தில் சாந்தியையும் உண்டு பண்ணுவான். இப்பொழுது ரகுகுல ஸ்ரேஷ்டன் அயோத்தி திரும்புவதில் எனக்கு இஷ்டம். ஆனால் எந்த உபாயத்தினால், யார் சொல்லி, அவன் சிரம் சாய்த்து அயோத்திக்குக் கொண்டு போகப்படாலாம் என்பதை தீர யோசித்துச்செய்யுங்கள்." என்று வஸிஷ்டர் சொன்னார். (1283)

மஹா வ்ரதங்கள் கூடிய மஹா முனிவராகிய வஸிஷ்ட பகவான் சொன்னதை யாவரும் கேட்டார்கள். பகவான் ராமச்சந்திரனுடைய ஸ்வரூப ஸ்வபாவ ஐஸ்வர்யாதி மஹிமைகள்,

திருக்கல்யாண குணங்கள், சௌலப்ய ஔதார்யம், தயையாகிற ஆத்ம குணங்கள் அடங்கிய ஈஸ்வர தத்வத்தையும் இயற்கையாகவே மங்கள ரூபத்தையும், ஆத்ம ஸ்வரூபத்தையும் முதலில் எடுத்துரைத்து, அதன்பின்பு உலகங்களின் செழிப்பை உண்டாக்குவதில் நிற்கும் ராம சீதாவின் மனோபீஷ்டங்களையும் நிதியையும், அதன்பிறகு லௌகீக விஷயங்களான சதுர்வித புருஷார்த்தங்களையும் எடுத்துச்சொன்னார். இதைக்கேட்டதும் சகலரும் விஸ்மயித்து பதில் ஒன்றும் சொல்லமுடியாதபடி ஆனார்கள். அந்த சமயம் பரதன் தலைவணங்கி, சகலருக்கும் தன் எளிமைத்தனத்தையும் ராமனிடம் கொண்ட மஹாவிஸ்வாசத்தையும் வெளிப்படுத்துகிறவனாக, இரு கமலக்கரங்களைக் குவித்து, ஆசாரிய நிழலில் ஸகலருக்கும் விக்ஞாபிக்க ஆரம்பித்தான். (1284)

"ஸ்வாமிகளே, இந்த சூரிய குலவம்சம் மஹத்தான கீர்த்தி வாய்ந்த வம்சம். இதில் ஜனித்த ரகுகுல ஸ்ரேஷ்டர்கள் ஒருவரையொருவர் அதிகீர்த்தியுடன் மிஞ்சும்படி விளங்கினார்கள். ஸகலருக்கும் ஜனனம் பூமியில் இந்த குலத்தில் எடுப்பதற்கு மாதா பித்ருக்கள் காரணமாகிறார்கள். அவர்களுடைய தேகயாத்திரை அவரவர்களின் சுப அசுபமான கர்மங்களைப் பொறுத்திருக்கிறது." (1285)

"ஹேஸ்வாமி, பகவான், தங்களுடைய ஔதார்யம், மகிமை, வீர்யம், தயை ஆகிய குணங்களின் பெருமைகளால் தாங்கள் எல்லோருடைய துக்கத்தை சமனம் செய்கிறீர்கள். நாதனற்றவர்களுக்கு உமது ஸம்பந்தத்தால் சகல துக்கங்களும் விலகி, பகவானுடைய பெருமைகளைச் சொல்வதுபோல, ஆனந்தமடையச் செய்கிறீர். உம்முடைய ஆசீர்வாதங்கள் கிடைத்தபின்பு எதைத்தான் எளிதில் நாம் அடையமுடியாது? பகவானாகிற தாங்கள் சகலமும் அறிந்த திவ்ய திரிகால ஞானி. நீர் மனதில் சங்கல்பம் என்ன செய்கிறீரோ, அதுதான் நடக்கும். உம்மை மீறி யாவரும் ஒன்றும் செய்யமுடியாது. நீர் நினைத்தால் தெய்வத்தின் கதியாகிற காலகதியையும் தாண்டமுடியும். நீர் நாம் என்ன செய்யலாம் என்பதைச் சொல்லவேண்டும். கிருபையுடன் எங்களுக்குச் சொல்லவேண்டும்." (1286)

அப்பேற்பட்ட மஹா ஞானியாகிற நீர் என்னிடம் உபாயம் யாசிக்கிறீர். இதுவும் என் அபாக்யம் தான்." என்று மிக்க வினயத்துடன் ஸமர்ப்பித்தான். குரு மஹராஜ் வஸிஷ்டர் பரதனுடைய வார்த்தைகளில் ததும்பும் குருபக்தியையும், ஸ்நேக

பூர்வமான வார்த்தைகளையும் மிக்க அனுராகத்துடன் சொல்லப் பட்ட வசனங்களையும் கேட்டார். (1287)

[தியானம்

ராமா சீதாராமா, இந்திராஸேவித கோமாதா, எவ்விதம் ஸ்ரீதேவி தானே வலுவாக கோமாதாக்களிடம் அவர்கள் முதலில் மறுத்தும் வந்து ஸ்வயமாக ஒட்டிக் கொண்டாளோ, அதுமாதிரி என் பாப குணங்களால் விக்னங்கள் யேற்பட்டு உன் ஸஹஜ ஸ்நேகத்தை ஏற்படவிடாமல் கெடுத்து விடுமே என்கிற பய மிருக்கிறது. பகவானுடைய சௌலப்யம் ரொம்ப பிரஸித்தம். ஆனால் பிராட்டியினுடைய குணச் சேர்க்கையால் யேற்பட்ட சௌ லப்யம் இன்னுமதிகம். அதைவிட கோக்களும் மஹா புண்யங் களைச் செய்திருக்கின்றன. நித்யமான ஸம்பந்தம் ஸ்ரீதேவியினால் ஏற்பட்டது. கோக்கள் தர்ம பராயணமாக விருந்தபடியால் பக வானும் அந்த கோமாதாக்களை ஆதரித்தார். அந்த மாதிரி தர்ம புத்தியை கோக்களுக்கு அளித்தது மாதிரி, நீ எனக்கு அளிக்கமாட் டாயா? கோக்களால் அனுக்ரஹிக்கப்பட்ட ஸ்ரீதேவி என்னிடம் பிரியமாகவிருப்பாளா?]

வஸிஷ்டர் தனது புஷ்கராக்ஷங்களால் பரதனைப் பார்த்து கடாக்ஷித்தார். "நான் சொல்வது ஸத்யம். இயற்கையாகவே ராமன் சீதையுடன் கூடின சமயம் மஹா கிருபையை அவலம்பித் திருக்கிறான். பிராட்டியினால் திருத்தப்படும் ஸ்ரீராமன் உன்மேல் கிருபை வைத்தால் ஒழிய, ஸ்வப்னத்திலும் ராமனுடைய சேர்க்கை ஸம்பந்தத்தை அடைய முடியாது. மஹா வினயத்துடன் தர்ம பராயணனாக இல்லாதபோனால் ராமன் நிச்சயமாக பராங் முகனாக ஆகிவிடுவான். அப்போது ஸ்வப்னத்தில் கூட ராம னுடைய கிருபையை அடைய முடியாது. ராமனுடைய கிருபையன்றி உனக்கு காரிய கௌரவமோ, பலப்ராப் தியோ, கிடைக்காது. இந்த மாதிரி என் மனதைக் குளிரப் படுத்தும்படி நீ சொல்வது, ராமனுடைய பரம அனுக்ரஹம் உனக்கு இருக்கிறது என்று நினைக்கிறேன். புத்திமான்கள் ஆபத் துக்களிலும் தர்மத்தை அனுசரிப்பவர்களாக இருப்பார்கள். அந்த சமயம் அவர்களுடைய மனம் செய்கை சொல் யாவும் நல்வழியில் செல்லும். அந்த சமயம் முதலுக்கு மோசம் ஏற்பட்டால், கிடைத்த பாதியையும் விட்டுவிடுவார்கள். தர்மத்திற்கு ஹானி ஏற்படு மாகில் அர்த்தத்தையும் காமத்தையும் ஒருங்கே தியாகம் செய்து விடுவார்கள்." (1288)

"நீயும் சத்ருக்னனும் வனம் போவதாகவும், லக்ஷ்மணன் ராமசீதை ஆகியோர் அயோத்திக்குத் திரும்புவதாகவும் இருப்பதானால், ஸ்ரீராமன் ஒரு வேளை அயோத்திக்குத் திரும்பலாம்." இந்த அழகான நீதியுள்ள வசனத்தைக் கேட்டதும், பரத சத்ருக்னர்களின் மனத்தில் சந்தோஷத்தை அடைந்தார்கள். அந்த வார்த்தைகள் அவர்களுடைய சரீரம் முழுவதையும் ஆனந்தப்படுத்தி பரிபூர்ண சுகத்தை அளித்தது. (1289)

அவர்களுடைய மனம் பிரஸன்னமடைந்தது. தேகம் ஆனந்தத்தால் சோபிதமடைந்தது. புத்தி நிர்மலமாகிவிட்டது தியாக புத்தி தர்மத்துடன் சேர்ந்தபடியால் மாண்ட தசரதனே உயிர் பெற்றுவிட்டால் எவ்விதம் ஆனந்தமடையலாமோ, ஸ்ரீராமச்சந்திரனின் ராஜ்ய பட்டாபிஷேகம் நடைபெற்றால் எவ்விதம் சந்தோஷப்படுவானோ, அதுபோல அவர்கள் ஆனந்தமடைந்தார்கள். மஹா ஜனங்கள் நினைத்துக் கொண்டார்கள் "அர்த்த லாபம் இந்த ஏற்பாட்டினால் அதிகம். தர்மமும் சிதையப்படாது" என்றும் எண்ணினார்கள். சுகமும் துக்கமும் இந்த புத்தி சூக்ஷ்ம ஏற்பாட்டினால் சமமாகவிருக்கும். பொறுக்கும் படியாகவுமிருக்கும். ஆனால் ராணிமார்களுக்கு இது பிடித்ததாக இல்லை. அவர்களுக்குப் புத்ரர்களின் பிரிவினால் யேற்படும் துக்கம் நீக்கப்படவில்லையே! (1290)

பரதன் தன்னுடைய நிச்சய புத்தியினால் மீண்டும் சொல்ல ஆரம்பித்தான். "என் தயாளுவாகிய குரு வஸிஷ்டர் சொல்படி நான் நடக்க சித்தமாயிருக்கிறேன். இதனால் ஜகம் முழுவதற்கும் ராமகிருபை ஏற்படும். நான் பதினான்கு வருஷங்கள் மாத்திரம் இல்லை. ராமன் அயோத்தி ஆளும் வரை நான் வனத்தில் வசிப்பதற்கு தயார். இதனால் உலகம் செழிப்படையும். நான் ராம அபராதத்திலிருந்து என் தாயாருடன் விடுபட்டவன் ஆவேன்." (1291)

"ராமனும் சீதையும் என் ஹ்ருதயவாசிகள். என் சுத்தமான மனதை அவர்கள் அறிவார்கள். ஹே குரு நாதா, நீரோ சர்வ சக்திமான், ஸர்வக்ஞர், பகவானுக்கு இருக்கும் ஆறுவித குணங்களும் உமக்கு இருக்கின்றன. என்னிடம் அத்யந்த பிரியம் உள்ளவர், நீரும் என்னை நன்றாக அறிவீர். நீர் சொல்வதையும் நான் நடத்திக் காட்டி விடுகிறேன். உம்முடைய சித்தப்படி நான் வியவஸ்தை செய்து கொண்டுவிட்டேன். மேற்கொண்டு செய்ய வேண்டியதைச் செய்யுங்கள்," என்றான். (1292)

[தியானம்

ராமா சீதா லக்ஷ்மி நாராயணா, உன்னிடம் மஹா கிருபையை எதற்கு கேட்கவேண்டும் என்றால், நீர் சொல்லியும் என் அஹங்காரத்தால் நான் செய்த அகிருத்ய அபசாரங்களும் அஸஹ்ய அபசாரங்களும், பகவத் பாகவத அபசாரங்களும், கிருதிய அகிருத்ய அபசாரங்களும் பல உள்ளவை. அக்ஞானத்தினாலும் ஏற்பட்ட தோஷங்களும் பல உள. அதிக ஸ்வதந்த்ரதையினால் ஏற்பட்ட விபரீத தோஷங்களும் அதிகம். உன்னையும் உன் தயையும் குறிக்கோளாக வைத்து நான் உங்கள் க்ஷமையை எல்லாவிதங்களிலும் கேட்கிறேன். இதற்குப் புருஷகாரம் செய்யும் சீதா பிராட்டியின் தயையும் உன் அனுகூலமும் தான் வேண்டும்.]

பரதனுடைய வசனங்களை எல்லோரும் கேட்டார்கள். அந்த வார்த்தைகளில் ததும்பும் ராம பிரேமையும், ஸஹஜ ஸ்நேகமும், மஹாத்மாவின் உள்ளத்தில் எழும் தியாக புத்தியும் எல்லாவற்றையும் கேட்டு, பரம விதேக நிலையை அடைந்த வஸிஷ்ட மாமுனிவரும் ஸ்தம்பித்து விட்டார்கள். இதுவல்லவோ ராமனிடம் நாம் செய்யவேண்டிய அன்பு. இது வல்லவோ ஆதர்ச ஸ்நேகம், என்று சபையோர்கள் புகழ்ந்தார்கள். பரதனுடைய தியாக உள்ளம் பரந்த சமுத்திரம் எவ்விதம் ஆழமாக அதிகமாகவும் தோன்றுமோ, அதுபோல ஆழ்ந்திருந்தது. அப்பேற்பட்ட சமுத்திரதீரத்தில் அபலையான ஸ்திரி அதைத் தாண்டுவதற்கு எவ்விதம் தவிப்பாளோ, அதுபோல மஹா மேதாவியான வஸிஷ்டருடைய தீவிர சூக்ஷ்மமான புத்தியும் தவித்தது. பரதனின் மஹத்தான வசனங்கள் மஹனீயரான வஸிஷ்டரைக் கலக்கின. (1293)

அந்த அபலையான ஸ்திரி அந்த பரந்த கடலைத் தாண்டுவதற்கு தவித்துக்கொண்டு ஒரு உபாயமும் கிடைக்கப் பெறாமல் மனம் தவித்துக் கொண்டிருப்பது போல, ராமனுடைய கிருபா ஸமுத்திரத்தில் எவ்விதம் உபாயம் நமக்கு கிட்டும்? எதை ஓடமாக வைத்துக் கொள்ளலாம்? யாரை ஓடம் ஓட்டுபவனாக வைத்துக் கொள்ளலாம்? இந்த பரதனுடைய பெருமையை யார் உலகத்திற்கு அறிவிக்கக்கூடும்? நம்மால் பகவத் கிருபையன்றி, ராம ஸங்கலபமின்றி, செய்யக்கூடுமா? ராமன் எங்கே, நாம் எங்கே? அவனுடைய உதார ஹ்ருதயம் நம்முடைய அறிவிற்கு மிஞ்சியதே. (நான் திருவிக்ரம அவதாரத்தின் சமயம் ஏற்பட்ட விஷ்ணுவின் மகிமைகளை பூமியில் உள்ள தூசிகளைப் போல

அவன் கிருபையினுல் அகக் கண்களால் பார்த்திருக்கிறேன். என்ருலும், திரிபாத ஊர்த்வம் கொண்ட புருஷனின் அறிய முடியாத செயல்களும் வீர்யங்களும் சக்திகளும் அனைத்திற்கும் இறைவனும், ஆனந்தம் அனைத்தும் நிறைந்தவனும், ஸர்வக்ஞனும், ஸர்வ அந்தர்யாமியும், எல்லோருக்கும் அனுகூலமானவனுமாகிய இந்த ஆதிப் பிரானுகிற நாராயணனுடைய திருவுள்ளம் எவ்விதமோ என்று ஸர்வ தரிசனரான பகவான் வஸிஷ்டர் கலங்கினுர்). பகவானுகிற ஸ்ரீராமனுல் காலக்ரமத்தால் அறிவிக்கப்படும் பெருமைகளை தாமே செய்யக்கூடாது என்று அவர் மனம் கலங்கினுர். எங்கேயாவது பல ஜீவராசிகள் சேர்ந்த மஹா சமுத்திரத்தை ஒரு சிறிய குளத்திலுள்ள தண்ணீரில் அடைத்து வைத்திருக்க முடியுமா ? (1294)

வஸிஷ்டரின் மனேவியா குலமும் முனிவருடைய ஹிதமான மனமும் பரதனை வசப்படுத்தியன. சரி, எல்லோரும் ராமனிடமே போய் இந்த பிரஸ்னைக்கு உத்தரம் சொல்லச் சொல்வோம் என்று வஸிஷ்டர் நினைத்து அந்தக் கூட்டத்தின் சகிதம் பரதனுடன் ராம சீதா ஸந்நிதிக்கு வந்து சேர்ந்தார்கள். வஸிஷ்டரைக் கண்டதும் பிரபு அவர்களுக்கு நமஸ்கார வந்தனங்கள் செய்து, உத்தம ஆஸனுதீகளைக் கொடுத்தார். ஸகல ஜனங்களும் முனிவருடைய ஆக்ஞையின் பேரில் உட்கார்ந்தார்கள். (1295)

மஹா மேதாவியான வஸிஷ்டர் சமயத்திற்குத் தகுந்தாற் போல வார்த்தைகளை தன்னுடைய தீர புத்தியினுல் கடைந்தெடுத்து பிரஸாதித் தருளினுர். "ஸர்வக்ஞரான ராமா, உம்மிடம் தர்மம் நீதி சௌலப்யாதிக்ருபா குணங்கள், பரந்த சாஸ்திர ஞானம், சகலமும் உறைந்து நீ எல்லாவற்றிற்கும் ஈஸ்வரனுக விளங்குகிருய். நீ தமஸ்ஸாகிற இருளுக்கு அப்பால் விளங்கும் பரமாத்மா. மஹாத்மா, ஸத்ய பராக்ரமம் ஸத்ய ஸங்கல்பம் எல்லாம் உடைய மஹா கிருபாளு. உம்மை தபஸ் ஒன்றினுலேயே தான் அறிய முடியும். நீர் தேவர்களுக்கும் முன்னவராகவிருக்கும் ஹிரண்யகர்ப்பர் என்று எல்லோராலும் அறியப்படுகிறீர்." (1296)

"அப்பேற்பட்ட பரமேஸ்வரரான நீர் ஸர்வ அந்தர்யாமியான விஷ்ணுவாகவுமிருக்கிறீர். ஸ்வயம் பிரகாசமான பர பிரும்மமாகவுமிருக்கிறீர். உம்முடைய விசேஷ சக்தியினுல் ஸர்வதோ முகராய், ஐயா, நீரே எந்த சங்கல்பத்தினுலோ, வியாஜத்தினுலோ பக்தர்களால் சாதிக்க முடிவதும் சாதிக்க

முடியாததுமான சக்தி அசக்தி பிரபாவங்களை நன்றாக அறிந்து, உம்மையே ஸ்வாமி, வலுவில் எளிதில் அளிப்பித்து, நிர்ஹேதுக கிருபைக்கு சேதனர்களை பாத்திரமாக்குகிறீர். அப்பேற்பட்ட ஸர்வாஸு நிலையரான நீர் இந்த மஹா கஷ்டத்தில் அவதிப்படும் மஹா ஜனங்களுக்கும், உன் தாய்மார்களுக்கும் உன் பேரில் மஹா விஸ்வாச உள்ளம் படைத்த பரதனுக்கும் நன்மையைத் தரும் ஹிதத்தைக் கொடுக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். உம்மை மீண்டும் அவர்கள் அடைவதற்கு தகுந்த உபாயத்தை கிருபை கூர்ந்து தெரிவிக்கவேண்டும்.'' (1297)

''ஆர்த்திகள் மனம்நொந்துபோனால் ஒன்றும் சரிவர சொல்லமாட்டார்கள். விசாரித்து எது ஹிதம், எது அஹிதம் என்றும், எது ஸாதிக்கமுடியும், எது ஸாதிக்கமுடியாது என்றும் உணர்பவரல்லர். சூது விளையாடுபவன் தன்னையும் அடகு வைக்குமாப்போல, அவர்கள் ஒரே எண்ணத்துடன் எவ்விதமாக வாவது ஜயிக்கவேண்டும் என்கிற ஆசையுடன் இருப்பதுபோல, இவர்கள் ஒரே எண்ணத்துடன் இருக்கிறார்கள்.'' இந்த வஸிஷ்ட வாக்யங்களைக்கேட்ட பிரபு ரகுராய் மனத்தில் சிரித்துக் கொண்டவராய் பதில் சொன்னார். ''ஸ்வாமி, என் குருநாதா, உம்மிடமல்லவா உபாயம் சிக்கி இருக்கிறது.'' (1298)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மியுடன்கூடிய ரங்கநாதா, ராமா சீதாபதே. கர்மம் பயஹேது கிருபை அபயஹேது, என்கிறப் போல, கர்மங்களினால் யேற்பட்ட சரீராதிகளால் ஏற்பட்ட பாபபுண்யங்களாலும் நிரந்தரமான சுகத்தை அடையமுடிகிற தில்லை. ஸஞ்சித கர்மங்களின் பாபங்களோ புண்யங்களோ, சொல்லவொண்ணாதபடி இருக்கின்றன. அப்பேற்பட்ட சூழ் நிலையில் கார்முகில்வண்ணா, செங்கண்கொண்ட திருமாலே, கதிர்மதியும் போன்ற முகத்தை உடைய ராமா, சீதாபதே, கருணை ரஸம் நிரம்பினவளும் பயத்தினால் யேற்படும் என் கவலைகளை நீக்குபவளும், மிக்க அழகுவாய்ந்தவளும், கருணை ததும்படி பேசுகிறவளும், உன் மனதுக்கு இனியவளும் அழகான குரலுடன் ஸத்யமான வாக்குக்களை பேசுபவளுமான சீதையை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். அந்த சீதையோ வினயத்துடன் கிட்டவந்தவனும் பாகவதகோஷ்டிகளில் அக்ர கண்யம் வகிப்பவனும், மஹாத்மாவும் ராமனே பெரும்தனம், பெரும்பாக்யம் என்று நினைப்பவனும் மிக்க அழகு வாய்ந்தவனு

மான பரதனுக்கு கைங்கர்ய லக்ஷ்மியின் பிரஸாதத்தை அருளிச்செய்கிருள். இவ்விதம் பக்தி பிரபக்தி, கைங்கர்ய பிவிருத்தி, ராமஸேவை, இவைகளில் தேர்ந்த பரதனை முன்னிட்டு சீதாராமனை லக்ஷ்மணன் சந்நிதியில் சேவிக்கிறேன். குஹப்பெருமானும் ஆஞ்சநேயரும் என்னை அனுக்ரஹித்து, பூர்ணசந்திரனைப் போல முகத்தை உடைய ஸ்ரீ சீதாராமனை என்று நான் காண்பேனே ?]

''பகவான், குருநாதரே, மாதாபிதா எல்லாம் எனக்கு நீர்தானே. உம்மிடம் பாரதந்தர்யம்கொண்ட எனக்கு, பிரபோ, எது ஹிதம் என்று கருணைவடிவுள்ள உங்களுக்குத்தெரியும். தங்களுடைய ஆக்ஞையை சத்யமாக்கி, பரிபூர்ண மனத்துடன் நிறைவேற்ற சித்தமாயிருக்கிறேன். ஆகையால் பிரஸன்ன மனத்துடன் என்னை அனுக்ரஹிக்கவேண்டும். உம்முடைய திவ்யஞானத்தினுல் ஏற்படும் கட்டளை ஸகலலோகங்களுக்கும் ஹிதத்தை கட்டாயம் செய்யும். முதலில் எனக்கு ஆக்ஞை செய்யும். நான் அதன்படி செய்கிறேன்.'' (1299)

''என்னையும், அயோத்தி ஜனங்களையும் கட்டிக் காக்கும் கோஸாயி, ஸதாசார்யராகவிருக்கும் உம்முடைய வசனங்களை சிஷ்யர்களான நாங்கள் நிறைவேற்றி வைப்பது எங்களுடைய கடமை. உமக்கு சுச்ரூஷை கைங்கர்யம், திருப்தி ஏற்படச் செய்யவேண்டியது எங்கள் தர்மம். அதனுல் தாங்கள் பரமப்ரீதி அடைந்தால் ஸ்வாமி, நாங்கள் கிருதக்ருத்யர்களாக ஆவோம். எந்தவிதத்தில் உம்மை நாங்கள் திருப்திசெய்ய வேண்டும். அதைச்சொல்லுங்கள் ஸ்வாமி.'' முனிவஸிஷ்டர் சொல்ல ஆரம்பித்தார். ''ராமா, உன்னுல் எல்லாம் சரியாகச் சொல்லப்பட்டது. ஆனுல் உன்னிடம் பரதன் வைத்திருக்கும் விஸ்வாசப் ப்ரேமையை விசாரிக்காமல், அதையும் ஆராய்ந்து பார்க்காமல், நான் இந்த விஷயத்தில் ஒன்றையும் சொல்லப் போகிறதில்லை. அவனுடைய பக்தி விஸ்வாசம் என்னை கதிகலங்க வைக்கிறது. ராமா, உன்னிடம் அவன் வைத்திருக்கும் பக்தி பிரேமை, அவன் உன்னை ஆத்மபாவத்தினுலும் ஸர்வ பாவத்தாலும் ஆராதிப்பதைப் பார்த்துவிட்டு, ராமா, உன்னை ஸததம் தியானம் செய்பவனுகவிருப்பதால், அதற்கு ஏற்றவாறு நான் பதில் கூறவேண்டியதாக யிருக்கிறது.'' (1300)

''இந்த விஷயத்தில், ராமா, பரதனிடம் நான் மிக பற்றுத லுடன்கூடிய விஸ்வாசபுத்தியுடன் இருக்கிறேன். என் புத்தி பரதனிடம் பக்திகொண்டதாகவிருக்கிறது. அவன் உனக்காக

தியாகம்செய்யும் உள்ளமும், உன்னிடம் அவன் காட்டும் பரபக்தி பரஞான பரமபக்தியும் என்னை அவனிடம் அதிக அன்பு காட்டச்சொல்கிறது. அவனுக்கு நான் வசப்பட்டவனுக விருக்கிறேன். ராமா, இன்னும் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். நாங்கள் இருவர்களும் உன்னிடம் பூர்ணமான விஸ்வாசம் வைத்திருக்கிறோம். இதற்கு பகவான் சம்பு சர்வ சாக்ஷியாகச் சொல்லுவார். எங்களுக்கு எது நன்மையைத் தருமோ, அதை யோசித்து எங்களைக் கிருதார்த்தர்களாகச் செய்யவேண்டியது உன் கடமை.'' (1301)

''முதன் முதலில் பரதன் அதி வினயத்துடன் உன்னிடம் சில வார்த்தைகளை ஸமர்ப்பிக்க ஆசைப்படுகிறுன். அதைக் கேட்டபின்பு நீ யோசித்துச்செய். உனக்கு நீதி எது, ஸாதுக் களுக்கு எது ஸர்வசம்மதமாகவிருக்கும், எது லோகத்தாரால் ஒருவித ஆக்ஷேபணையின்றி ஸர்வசம்மதமாக ஒப்புக்கொள்ளப் படும்; எது வேதவாக்யங்களால் ஸாரமாக ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது, அது ராஜநீதிக்கும் அடங்கியிருக்கிறது, ஆகிய எல்லா விஷயங்களையும் மனத்தில் ஆராய்ந்து முடிவு செய்.'' (1302)

பரமாத்மாவும் குருவான வஸிஷ்டர் பரதன்பால் அதிக ப்ரேமையுடன் அவன் வசமடைந்ததைக் கண்டார். பாகவதப் பிரியஞன ஸ்ரீராமன் தன் அடியாரிடம் காட்டும் பிரேமையைக் கண்டு ஹ்ருதயத்தில் பரிபூர்ண ஆனந்தத்தை அடைந்தார். ''பரதன் தர்ம துரந்தரன், (யுதிஷ்டிரர் மாதிரி தர்மத்தையே மோக்ஷ மார்க்கமாக அனுசரிப்பவன்.) ராமனுடைய நிஜ சேவகன். வாக்கு மனம் செய்கை யாவற்றையும் ஸ்ரீராமனுக்கு ஸமர்ப்பித்தவன். வாக்கினுல் ராம, ஸ்ரீராம என்று நாமாவை சதாசொல்லிக்கொண்டிருப்பவன். இந்த பரதன் தனக்கே உரித்தான சீதாராம சேஷத்வத்தை ஒப்புக்கொண்டு அதற்கு அடங்கி, ஸ்வாதந்தர்யமில்லாதவனுக, சகல ஐஸ்வர்யங்களையும், ராமனுக்கு உரியதாக நினைக்கிறுன். இவனுடைய எல்லையற்ற ஸேவை என்னும் ஸம்பத்தை நான் அறிவேன்'' என்று ஸ்ரீசீதா பிராட்டியின் நாயகனுகிற ஸ்ரீராமன் தனக்குள் எண்ண மிட்டுக்கொண்டார். (பரம கிருபாளு, ஆர்த்திகளின் சமயத்தை நன்கு அறிபவர்.) (1303)

ஸ்ரீராமன் குருவின் ஆக்ஞையை அடைந்து, குருவின் வசனங்களுக்கு அனுகூலராக, மனோஹரமான வார்த்தைகள் சொல்லுபவராகி, அதிம்ருதுவாக மதுரமாகப் பேசுகின்றவ

ராகவும், அந்த வார்த்தைகள் லோகஹிதமாகவும் கல்யாணங்களைச் செய்வதாகவுமிருந்தன. "ஹே பிரபு, என் பிதாவை நினைத்து, உமது சரண கமலங்களில் நமஸ்கரித்து நான் விக்ஞாபித்துக் கொள்கிறேன். இந்த விஸ்வம் முழுவதிலும் பரதனைப்போன்ற அருமையான சகோதரனைக் காண்பதற்கில்லை. அவனுக்கு ஸமமான அன்பும் சகோதர வாஞ்சையும் உலகில் ஒருவனையும் நான் காண்கிலேன்." (1304)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மி சமதே மஹா நாராயணா, ஆதி அமலனே, நீ எங்கு தேடினாலும் கிடைக்கக்கூடாத பொருளாக விருக்கிறாய். உனக்கும் ராமா, சீதாபிராட்டியே உனக்கும் ஸ்வபாவமான தயையின் பெருக்குகளினால் தேவரீர் சரணாகதர்களின் அநிஷ்டங்களைப் போக்குகிறீர். பூர்ண பொலிவுடன் புஷ்கராக்ஷங்களுடன் விளங்கும் சுடரே, நீர் எல்லா சராசர ராசிகளாலும் பூர்ணமாகப் பிரகாசிக்கிறீர். துருவன் தன் மாதாவிடம் உம்மைப்பற்றிக் கேட்கும்போது, "நீர் சுசீலனிடமும், தர்மாத்மாவினிடமும், ஸகல சேதன அசேதனர்களிடம் மித்ர பாவத்துடன் ஸர்வ ஹிதைஷியாக எவன் இருக்கிறானோ, அவனிடம் நீரே ஸ்வயமாகப்போய், மேலான இடத்திலிருந்து பாய்ந்து கீழே ஓடும் தண்ணீரின் ஸ்பாவத்துடன் ஓடிவருவது போல, ஒட்டிக்கொள்கிறீர். ஸ்ரீகரா, ஸாதுக்களிடம் ஒட்டிக் கொள்ளும் மஹாராஜா, பிரபோ, நீர் ஸர்வ பலதாயகர். ஸாதுக்களின் ஹ்ருதயத்தில் வசிக்கும் யோகீஸ்வரர். ஸாது ஜீவனர். சீதை கௌரி, சரஸ்வதி இவர்களின் ஹ்ருதயங்களில் வசிக்கும் ராமா, கேசவா, அச்யுதா, கோவிந்தா, தியாகராஜர் பரதன் நாரதர் துருவன் இவர்களை முன்னிட்டு உன் பாரிஜாத திருவடிகளை நான் என் கதியாக ஆஸ்ரயிக்கிறேன். பரமாத்மா, ஜகத்பிரபு, என் குணதோஷங்களுக்கு ஏற்றுப்போல என்னிடம் வந்துசேர்.]

"எந்த பாக்யவான்கள் குருகிருபா திருஷ்டிபதத்தில் ஸ்திரமாகவிருக்கிறார்களோ, அவர்கள், (துருவன் பரம ஆசார்யர்களான ஸப்தரிஷிகளின் திருஷ்டி வீக்ஷண்யத்தில் இருந்து கொண்டு சதா ஆனந்தமடைவது போல,) ஆனந்தம் அடைகிறார்கள். அப்பேற்பட்ட மஹனீயர்கள் இந்த லோகத்தின் போக்யங்களையும், வேதங்களால் கானம் செய்யப்படும் பரமார்த்த புருஷனும், ஸ்ரீகரனும், ஸர்வ பலதாயகனும், பர

ஸ்வரூபத்தைப்போல வ்யூக விபவ அரச்ச அவதாரங்களிலும் தம்மையும் லக்ஷ்மியையும் அளிக்கும் புருஷோத்தமனின் எல்லையற்ற ஐஸ்வர்யங்களை அடைகிறார்கள். குருகிருபா விசேஷத்தால் பகவத் பிராப்தியும் பாகவத கைங்கர்யமும் அத்தால் ஏற்படும் ஸகல ஐஸ்வர்யங்களும், யோகக்ஷேமங்களும் எளிதில் அடைகிறார்கள். ஐயா, உம்மை உத்தம சிஷ்யனாகிற என்பிராதா பரதன் கதியாக அடைந்தபின்பு, ஸ்வாமி, பரம உதாரகுணமுள்ள உம்முடைய கிருபாகடாக்ஷத்தை அவன் அடைந்தபின்பு, இனி அந்த பாக்யமுள்ள பரதனுடைய விசேஷங்களை யாரால் எவ்விதம் புகழக்கூடும்? குரு சிஷ்ய ஸ்நேக பாவங்கள் அத்யந்த மகிமைகள் உள்ளன. அவைகள் உங்கள் இருவர்களுக்கும் உங்களுக்கே பிரத்யேக முறையில் உரிய தாகவும், எல்லையற்ற மகிமைகளை உடைத்ததாகவும் இருக் கின்றன.'' (1305)

''எனக்கு பரதன் இளைய தம்பிதான். அதனால் நான் சிறிது லஜ்ஜையுடன் அவன் முன்பு அவனைப் புகழவேண்டியதாக விருந்தாலும், அவனுடைய சிஷ்ய பெருமைகளையும், அவனுக் குக் கிடைத்த ஸதாசார்ய பெருமைகளையும் குருகிருபா வீக்ஷண் யத்தையும் இந்த ஸாது ஸமாஜத்தின் முன்பு புகழாமல் இருக்கக் கூடாது. அப்பேற்பட்ட அதுளித தேஜஸ் வாய்ந்த பரதன் என்ன சொன்னாலும், அவனுடைய வார்த்தைகளில் ஸகல ஜகத்தின் ஹிதத்தையும் மேன்மையையும் உற்பத்தி செய்யும். ஸகலருக்கும் ஸமஸ்த ஸம்பத்துக்களை அனிவிக்கக்கூடும்.'' இவ்விதம் சொல்லிவிட்டு பிரபு ஸ்ரீராமச்சந்திரன் மேலே ஒன்றும் பேசாமல் பரதனின் வார்த்தைகளைக் கேட்க சித்தமாயிருந்தார். (1306)

அந்த சமயம் பார்த்து பரதனிடம் ஸஹாய உள்ளம் படைத்த வரும், பரதனுக்கு அச்யுதபதங்களைக் காண்பித்த மஹா கிருபாளுவாகிறவரும், ராமன் பரதன் இவர்களுக்கு விசிஷ்டமாக நிற்கும் வசிஷ்டர் பரதனைப் பார்த்து ''பரதா, கிருபாஸிந்து வாகிற ஸ்ரீராமனிடம், உன் ஆத்மபந்துவினிடம், சங்கோச மின்றி, உன் பிரேமைகளைக் காண்பித்து, வார்த்தைகளைச் சொல்'' என்று ஆக்ஞாபித்தார். (1307)

பரதன் முனிஸ்ரேஷ்டரான வசிஷ்ட பகவானுடைய வார்த்தைகளையும் கேட்டு, ஸ்ரீராமச்சந்திரனுடைய திருவுள்ளப் போக்கையும் அனுஸரித்து, பக்தியைக் காட்டிலும் பிரபத்திக்கு உள்ள வேற்றுமையையும் மேன்மையையும் உணர்ந்தவனாக,

தேகத்தில் ஆனந்தம் அடைந்தவனாக, 'ராமன் மஹா கிருபாளு', என்கிற மஹா விஸ்வாசத்தை அடைந்தவனாக, ராமன், குருவாகிற வஸிஷ்டர் ஆகிய இருவர்களும் தனக்கு அனுகூல மித்ரர்களாகவும் கண்ட பின்பு, (யாகம் ஸுக்ருத கர்மங்களின் முடிவான பலனாகவும், எல்லாவிதமான பலன்களையும் அடைவிக்கக்கூடிய) பக்தி பிரபத்தி யோகத்தை அடைந்தவனாக ஒன்றும் பேச முடியாமல் பொறுப்பு முழுவதும் தன் தலையில் விட்டு இறங்கும் பிரபன்னனைப் போல, தோன்றினான். தன்னுடைய புத்தியில் இந்த தௌர்பாக்ய திசையில், நான் தீர ஆலோசித்துச் செய்யவேண்டியது இதுதான். "நான் ராமனை, சீதாநாயகனை, மஹா விஸ்வாசத்துடன் சரணம் அடைய வேண்டும். பிரபத்தி ஒரு முறை செய்தாலும் என் பாபங்கள் அனைத்தும் தொலைந்து விடும். (பிரமன் சிவன் முதலானோர்க்கும் கிட்டாத மோக்ஷமும் பகவத் பிராப்தியும் பகவத் கைங்கர்யமும் பாகவத அனுவர்த்தியும் எளிதில் கைகூடும்.) இவையெல்லாம் கிடைப்பதற்கு தடையான ஐயம் என்பதை ஒழித்து, மஹாவிஸ்வாசத்தை அடைந்து, ரமாபதியானவரும் ரங்கநாயகியின் ஈஸனான நாராயணனைப் போக்யமாக வரித்து, "நீதான் சீதாராமா, ஸர்வம்," என்று நான் பிரபத்தி அடைய வேண்டும். என் பிரபு வேங்கடரங்கன், எனக்கு மஹா கிருபை செய்யவேண்டும்," என்று பலவிதமாக யோசிக்கலானான். (1308)

"ஹே ராமா, சீதாபதி, (உன் நீரஜநயனங்களால் எனக்கு ஆசார்ய கடாக்ஷத்தை என்னிடம் விழும்படி செய்துவிட்டாய். நானோ ஞானம் கர்மம் பக்தி ஆகிய இவைகளில் ஒன்றிலும் தேர்ச்சி பெறாதவன். என் பிரபலமான பாவங்கள் என்னை விட்டு விலகாமல் இருக்கின்றன. ஆனால் என் மனோபாவம் உன் சந்நிதியில் ஆசார்ய வஸிஷ்ட கடாக்ஷத்தால் கலக்கப்பட்டு உன்னையே பிரபத்தி செய்து, (வைஷ்ணவன் மாதிரி த்வயமந்திரத்தை அனுசரித்து வேங்கடரங்கனின் அபயஹேதுவினால் பயங்கள் தீர்ந்து தெளிந்தவனாகி), எம்பெருமானின் திருவடித்தாமரைகளை தாமரைக் கண்ணினாள் முன்பு அடைவேன் என்று நினைக்க, நினைக்க, பரதனுடைய சரீரம் அத்யந்த பிரபுல்லிதமான தாமரை விகஸித்து ஆனந்தப்படுத்துவது போல, அவனுக்கு ஆனந்த சாகரத்தை எடுத்துக்காட்டியது.) அவனுடைய விசாலமான பங்கஜ நேத்ரங்களிலிருந்து பிரேமை கண்ணீர்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. (பகவானை ஆசார்ய கடாக்ஷத்தால் ஸத்ஸம்பன்னனான சிஷ்யன் எளிதில் அடைவது போல, பரதன்

ரங்கநாதனின் பாதுகைகளை உள்ளத்தில் அனுபவித்தான்.) அவன் அந்த சமூகத்தின் நடுவில் வார்த்தைகள் தடுமாறிக் கொண்டு சொல்ல ஆரம்பித்தான். "ஹே ஸ்வாமி, தீனபந்து, நான் சொல்ல வேண்டியதை என் பிரபுவாகிற குருநாதர் சொல்லிவிட்டார். அவர் சொன்னதைவிட நான் மேல்கொண்டு என்ன சொல்லப் போகிறேன்?" (1309)

[தியானம்

ஹே ராமா, சீதாராமா, லக்ஷ்மிநாராயணா, பிரஹ்லாதன் துருவன் ஆஞ்சநேயர், மஹா உரகன், கருத்மான் ஆகிற மஹனீயர்கள் தேடிய ராம பாதங்களை அல்லவோ வேண்டினான் பரதன். அவன் மனதில் சீதையின் அனுக்ரஹ நோக்கும் புருஷகார பாக்யமும் வஸிஷ்டருடைய சிபாரிசும், அந்த ஆசார்ய மூலமாகக் கிடைத்துள்ள ஸ்வரூபத்தை மீண்டும் பெற்றவனாக, பரதன் பூர்வோத்திர பாபங்களை விட்டவனாக, ஶ்ரீரங்கபதத்தில் ஆசை வைத்து தன்னை நியாஸமாக செய்து விட்டான். மரித்துப் போன ஸுஹ்ருதுவினுடைய ஆத்மா மீண்டும் புதிய சரீரம் எடுத்து சீதாராமனுடைய ஆதரவினால் விரஜா மார்க்கத்தில் அழைத்துச் செல்லப்படும் போது எவ்விதமான நிரதிசயமான தும், ராமா, உன் தயையினால் ஏற்படக்கூடியதுமான ஆனந்த ஞான விகாஸத்தை அடைந்து, பரமாத்மாவை மீண்டும் நழுவ விடாதபடி கைங்கர்ய போக்ய அனுவர்த்தியினால் பயம் நழுவின வனாக, நித்யசூரிகள் போல என்றும் பிரியாதவனாக, ராமா உன் பொருட்டே அனன்யார்ஹத்வம் உடையவனாக விளங்குவானே, அதுபோல பரதன், வஸிஷ்டர், லக்ஷ்மணன், குஹன், சீதா ஸந்நி தானத்தில் விளங்கினான். பக்தியாலும் பிரபத்தியாலும் அவனை அடைவதற்கும், அனன்ய பிரயோசனம் ஏதுமின்றி நாராயணத் வம் ஆகிற ஸம்பந்தம் பெற காங்க்ஷனாக, ஸௌஹார்த்தம் நிரம்பினவனாக, காலதத்வமின்றி என்றும் சாஸ்வதமாக சீதா ராமா, உங்கள் பாதங்களை பூஜிக்கப் பாக்யம் பெற்றான். பரதன் உன் திருமேனியின் சுபமான அழகும் தேஜஸ்ஸும், ரத்ன குணங்களின் பரி அழகினால் மிகச் சிறப்பு பெற்று, பாகவத கோடிகளுக்கு உபாயாந்திரத்தையும் பிராப்ய பிராபக வஸ்துவை யும் காட்டிய, நெறி காட்டிய வள்ளலாக விளங்கினான் பரதன்! கமலக்கண்ணினாள் உள்ள மணாளனை, புண்டரீகாக்ஷனை, தன் கண்ணுக்கு விஷயமாக்கிக் கொண்ட உத்தமனாகிற பரதன் பரபக்தி, பரஞானம், பரம பக்திகள், "பக்தியாத்வ தன்யயா

சக்ய: அஹமேவம் விதோர்ஜுந," என்கிற படிக்கும், "பரபக்தி பரஞான பரம பக்தியேக ஸ்வபாவம் மாம் குருஷ்வ" என்று பிரார்த்தித்த பாஷ்யக்காரரைக் குறித்து, "மத்ஞான தர்சன ப்ராப்திஷு நிஸ்ஸம்ஸய: ஸுகமாஸ்வ" என்கிற பகவத் ஸம்சிலேஷம், விஸ்லேஷம் ஆகிற சுகதுக்கங்களில், பகவத் ஸ்வரூப ரூபகண விபூதிகளையும், புண்யஸ்ரவண கீர்த்தனுதிகளையும் அனுசரித்து, பாகவத கோஷ்டியில் அக்ரகண்யர்களாகிய பரத சத்ருக்னுதிகளை முன்னிட்டு சீதாராமா, ரங்கபதே, வேங்கடபதே, வரதராஜா, உன் சேவடி திருக்காப்புக்களில் ஒழிக்க ஒழியாத ஸம்பந்தத்தை நாடுபவனுக, நான் வந்து அடைகிறேன். ஸாது பரித்ராணமே உமக்கு விரதம், என்கிறபடி குணவிசிஷ்டனுன உம்மை, என் ஈஸ்வரனுகவும் பகவத் பிரஸாதமே வேண்டுபவனுகவும், வந்து அடைகிறேன். ஆழ்வார்களின் அன்புப் பெருக்கில் ஒதுங்கி வாழும் வேதாத்மாவே, "புகலொன்றிலா" என்றும் "அடியேன்" என்றும் "உன்னடிகீழ்" என்றும் "சரணௌ" என்கிற திருவடிகளை "சரணம் பிரபத்யே" என்கிற அர்த்தத்தால் வஸிஷ்டாதி பராசர வியாஸ பகவான், ராமானுஜாதிகளை நினைவுபடுத்திக் கொண்டு "பரம் தாம்," "பரப்ரும்மம்" ஹரிம், விஷ்ணும், ஐந்திரமிந்திரம், ஜனர்த்தனம் அயோ நிஜம் என்கிற நாராயணனின் திருவடிகளை "வையளந்த மணாளனுகிற திருவிக்ரமனின்" "லோக விக்ராந்த சரணௌ சரணம் தேவ்ரஜம் விபோ" என்கிறபடி வஸிஷ்ட வாக்யத்தின்படி ஸௌசீல்யம் நிறைந்த பாதங்களை தாமரைக் கண்ணினுள் முன்பு நான் வரிக்கிறேன். ஸ்ரீயப்பதியாகிற ஸ்ரீநிவாஸா, ஸ்ரீவத்ஸசின்ன, ஸ்ரீதரா, கறவைப்பசு தன் கன்றைத் தேடிக்கொண்டு நின்று பால் சொரியுமாப் போல, உன் கிருபையை நாடி வந்திருக்கும் என்னிடம் சீறி அருளாதே. ப்ராப்யமான உன் சேஷத்வத்தையும், மோக்ஷ ஆனந்தத்தையும் ஸகுணபிரும்ம உபாஸனத்தையும் நிஷித்த அனுஷ்டானங்களில் வெறுப்பையும், க்ஷேத்ர ஸாதுக்களின் வாஸங்களையும் எனக்கு அருள் செய். என் கரிவரதா, ஜகத்சிந்தாமணி கிரியே, பணிபர்யங்க ரஸிகா, கிருபை செய்.]

"என் பிரபுவே, நான் உம்முடைய ஸௌசீல்ய ஸ்வபாவத்தையும் ஸர்வ சக்தித்வத்தையும் அறிவேன். கடுத்த தோஷங்கள், பாபங்கள் கொண்ட என் பூர்வஜன்மங்களையும், இதர ஜன்மங்களையும் நான் அறிவேன் பிரபோ. பரம அபராதிகளிடமும் உம்முடைய கோபத்தையும் க்ரோதத்தையும், தஞ்சம்

என்று வந்திருக்கும் எனக்கு, நீர் செய்வதில்லை என்கிறதையும் நான் அறிவேன். அதுமாத்திரமல்ல ஸ்வாமி, உம்முடைய தாஸனுகிற என்னிடம் அபாரமானதும் விசேஷமானதுமான கிருபையையும் நான் அறிவேன். விளையாட்டில் கூட என் மனோரதம் நிறைவேறும்படி அனுகூலராகவிருக்கும் உதார ஹ்ருதயம் கொண்ட ராமா, என்னிடம் நீர் விளையாட்டில் கூட கோபத்தையோ கடும் வசனங்களையோ காண்பித்ததில்லை.'' (1310)

''உமது ஸ்நேகம் எனக்குப் பூர்வஜன்மங்களின் வாசனையால் இளமைப்பருவம் முதற்கொண்டு கிடைத்திருக்கிறது. உம்மை விட்டு அதிக நேரம் நான் பிரிந்ததே கிடையாது. என் தியானத்தில் ஸதா வாழும் ராமா, பிரபு, கிருபாநிதி, நானும் நீரும் விளையாடும் சமயங்களில் என் மனம் சந்தோஷப்படுவதற்காக உம்மையே தோற்றுப் போகும்படி நீரே செய்து கொண்டு, என் ஆனந்தத்தையே குறிக்கோளாகக் கொண்டீரோ, அதை நான் எவ்விதம் மறக்க முடியும், ஸ்வாமி? என்னை இப்போது விட்டுப் பிரிய எப்படி உமக்கு மனம் வந்ததோ! அப்பேற்பட்ட உம்முடைய ஸம்பந்தத்தின் ஆனந்தத்தை அனுபவித்த எனக்கு உம்முடைய பிரிவினுல் ஏற்படும் துக்கத்தை துளிக்கூட சகிக்க முடியாது.'' (1311)

''உம்மிடம் நான் வைத்திருக்கும் ஸ்நேகம் அப்ராகிருதமானது ஸ்வாமி. அநேக ஜன்மங்களின் சுக்ருத புண்ய சேர்க்கையினுலும் குருக்களின் பரமகிருபா விசேஷத்தாலும் கூட்டப்பட்ட இந்த ஸஹஜஸ்நேகம், நமது பிராத்ருத்வம், என்றும் பிரியாதது. அப்பேற்பட்ட வீண்போகாத சம்பந்தத்தில் என் ப்ரேமை என் தாஸ்யத்வம் ஆகிற அனன்யார்ஹத்வம், அசேஷத்வம், ஆகியவைகள் உயது திருமுகமண்டலத்தின் முன்பு சொல்லமுடியாதபடி வெட்கத்தை அடைந்திருக்கிறேன். ஐயா, பத்மமுகியான உம்முடைய புண்டரீக நயனங்கள், உம் அடியார்களுக்கென ஒதுக்கப்படும் கிருபாநோக்குகள், உம்முடைய சுபமானதும் அப்ராகிருதமானதும் அங்க அழகுகள் கொண்டதும், அலைகள்போல சரிந்து வழியும் ஜடாமண்டலமும், வாரி அணைக்கும் தீர்க்கபாஹுக்களும் தாகித்தவன் தண்ணீர் கண்டாற்போல எனக்கு தன்னைத்தந்து, உமது திருமேனி அழகை, உமது விபூதிகளை நான் கண்டவன்போல், கண்டு ஆனந்திக்கிறேன். சீதாராமா, உமது பரத்வத்தையும் அதிலிருந்து பரிமளிக்கும் கல்யாண தர்மகுணங்களையும் சிந்திப்

பவனுக, என்நிலே தடுமாறி, உம்மை சதா அனுபவித்தும், என் கண்கள் திருப்தி அடையாவண்ணம் உமது ஹஸ்த விசேஷங்களைக் காணவிரும்புகிறேன். ராமா, சீதாபிரபோ, உங்களுடைய சுபதர்சனத்தின் ஆனந்தத்தைக் கூறமுடியாமல் பசித்தவன் சோறு கண்டாற்போல ஆனந்தமடைகிறேன்.'' (1312)

''என் தீப்த மூர்த்தியே, எதிரில் நிற்கும் சுடரே, இப்போது விதியின்பலத்தால், உம்மைப் பிரிந்து வாடிவருந்துகிறேன். நாராயணு, என் சம்பந்தத்தை, என் ஆனந்த அனுபவத்தை காலத்திஞல் அழிக்கப்பட்டு, விதிக்கே பொறுக்க முடியாதபடி நான் நீசகதியை என் தாயாரின் ஸ்வரூபத்தால் அடையப் பெற்றேன். அதை இப்போது உம்மிடம் நிவேதனம் செய் வதற்கு காலவரை தாண்டினபடியால் ஸங்கோசப்படுகிறேன். அது எனக்கும் என்தாயாருக்குமே சோபையைத் தராது. அது வும் ரகு குலத்தில் பிறந்த நமக்கே நன்மையைப் பயக்காது. ஸ்வாமி, நீர் அறியும்படி நான் துராத்மா, என்தாயார் நல்லவள்; இல்லை ஸ்வாமி, மன்னிக்கவும், நான் அறிந்தபடி நான் பவித்திர மான ஸத்குண ஸம்பன்னன்; என்தாயார் ஸாதுக்களால் சம்மதிக்கப்படாத துர்குணங்கள் உள்ளவள் என்று சொல் வதற்கு எனக்கு என்ன தகுதியிருக்கிறது? சர்வதர்சனரான நீர் அல்லவோ விமர்சிக்கவேண்டும். நீர் அல்லவோ ஸர்வநியந்தா வாக எவன் ஸாது, எவன் பவித்திர குணமுள்ளவன், எவன் சுசி என்று அறிந்து சொல்பவர்.'' (1313)

''என்தாயார் அபராதம் செய்துவிட்டாள்; நான் ஸதாசார முள்ள 'ஸனத்' என்றும் ஸாது என்றும் நான் சொல்லிக் கொண்டால் மட்டும் போதுமா? ஸ்வாமி, அவ்விதம் பறை அடித்துக் கொள்வது விநயமார்கத்திலினின்று நழுவுவது மின்றி, கோடிக்கணக்கான பாபங்களையும் செய்தவனுவேன். கோடிக்கணக்கான துராசாரங்களை பிரஸ்தாபம் செய்தவனுக ஆவேன். 'கோதவ்' என்று சொல்லப்படும் மட்டமான தானியங் களின் விதைகளை ஊன்றிஞல் நல்ல நெல்லை விளைவிக்க முடியுமா? நல்ல நெற்விதைகளை விதைத்தால் அல்லவா நல்ல கதிர் கிடைக்கும். கறுப்பு கிழிஞ்சல்களிலிருந்து விலை உயர்ந்த முத்து கிடைக்கப்பெறுமா?'' (1314)

[தியானம்

ஹே ஜானகி வல்லபா, பத்மகராம், ஹரிவக்ஷஸ்தல நித்ய வாஸ ரஸிகாம், பகவானை நோக்குபவளுமான மஹாலக்ஷ்மியை

நமஸ்காரம் செய்து பகவான் நாராயணனைப் பிரார்த்திக்கிறேன். எது எனக்கு அசலமான ஶ்ரீயும் ஸ்ரேயசையும் அளிக்கக் கூடியதோ அப்பேற்பட்ட சரணாகதி மார்க்கத்தை பரதனுடைய விஸ்வாசம் போல நிச்சயித்து, பகவானையும் பத்மாக்ஷியான பெரிய பிராட்டியையும் சரணமாக அடைகிறேன். ஹேபரதா, ரங்க பதியின் திருவடித்தாள்களைக் காண்பித்த மஹானுபாவா, ஸகல ஐஸ்வரியங்களிலும் நாராயணனுடைய பாதங்களும், நாராயண னுடைய சுதர்சனமும், ஸ்வராட்டாகிற நாராயணனுடைய நாம கீர்த்தனங்களும் மஹா பெரியது என்று உலகிற்குக் காட்டிய மஹாபிரபோ, உன் அருளினால் ஆழிமழைக் கண்ணனையும், கருத்த கார்மேனி உள்ள பத்மநாபனையும், நீருண்ட மேகத்தில் மின்னல் கொடிபோல விளங்கும் மஹாலக்ஷ்மியாகிற சீதைக்குப் பதியும், அனந்தமான விஸ்வவிலாஸங்கள் விபூதிகுண ஐஸ்வரியங்கள் உடையவரும் அப்ரமேயம் அவ்யயம் அஜர் என்னும் பதங்களால் அறியப்படுகிறவரும் என் உள்ளத்தில் புகுந்து உறைந்து கிடக்கின்ற நாராயணனை சீதாராமனாக அறிகிறேன். என்ஹிருதய கோசத்தில் ஜ்வாலை கொழுந்து விட்டு எரிந்துகொண்டும், அந்த ஜ்வாலைக்கு சுரபியினுடைய க்ருதம் போல பரதனால் தூண்டப்பட்ட பக்தி ப்ரேமையை ஆஹுதியாக அளிக்கிறேன். இந்திரன் சந்திரன் மஹாமேதாவி யான நாரதர், விஷ்வக்ஸேனர், குபேரன், சீதை முதலியவர்களும் விரும்பும் தங்கள் புத்தியினால் வியவஸ்தை செய்து, ஜகத்தில் எல்லா உருவங்களையும் எல்லாப் பொருள்களையும் தோற்றுவித்து, வியவகாரம் செய்து நடத்துகிறானே, அந்த வேதப்பொருள், சூரியனைப்போன்ற காந்தியுள்ளவரும், தமஸ்ஸாகிற இருளுக்கு அப்பால் இருக்கிறவருமான புருஷனை பரமாத்மா வென்றும் சீதாராமன் என்றும், எனக்குக் காட்டிக்கொடுத்த தீரனாகிற பரதனை, ராஜராஜ ஈஸ்வரனை நமஸ்கரித்து உன்னை, சீதாராமா, சரணம் அடைகிறேன். தியாகராஜர் சொல்லிய மாதிரி "இது தான் சமயம், நீ எனக்கு வாக்களித்தபடி, உன் கிருபையையும் உன் சுபதர்சனத்தையும், உன் ரக்ஷகத்தையும், உன் அழகு பொருந்திய மந்தஸ்மித, அஸ்வினி தேவர்கள் வாழும் உன் பவளவாயின் ஹிதமான சொற்களையும் அருள்நோக்கு பார்வை களையும் எனக்குத் தந்தருளும் ஸ்வாமி. உன்னை நம்பிவந்த என்னை க்ருதார்த்தனாக்கவேண்டும். சீதாராமா."]

"ஸ்வப்னத்தில் செய்யப்பட்ட கெட்டகாரியங்களுக்கு தோஷத்தை கற்பிக்கலாமா ஸ்வாமி? என்னுடைய அபாக்கியங்

கள் ரொம்ப ரொம்ப பெரியவை. மஹார்ணவம் போல ஆழமாக விருகின்றன. என் பாபக்கூட்டங்கள் பரிணாமமின்றி பெரும் மலைகளாக உமது சம்பந்தத்தைப் பெறமுடியாதபடி விக்னங்களாக விருக்கின்றன. அப்பேற்பட்ட துராத்மாவான என்மீது இவ்வளவு குற்றங்கள் இருக்கும் போது, வீணாக என்தாயாரைக் குற்றம் சொல்லிப் பிரயோசனமென்ன?'' (1315)

"நான் எனது உள்ளத்தில் எல்லாப் பக்கத்திலும் தேடிப் பார்த்து தோற்றுவிட்டேன். எனக்கு நன்மையை விளக்கும் சாதனம் ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயமாக நன்மை பயக்கக்கூடியதென்று நான் நினைக்கிறேன். அதாவது, எனக்கு குருவும், ஸ்வாமியும் ஆகிய சீதாராமர் ஸர்வஸமர்த்தராவர். அவரே எனக்குத் தஞ்சம். அவரையே சரணமாகப் பற்றி இருப்பதால் நற்பரிணாமம் உண்டாகுமெனத் தெரிகின்றது.'' (1316)

[கருத்து: "நான் கர்மங்களின் ஸ்வரூபங்களை அறிந்து, அதன் விளைவுகளால் யேற்பட்டிருக்கும் விபரீத பலன்களையும், ஸ்வாமி, உம்மாலும் வஸிஷ்டராலும் அருளப்பட்ட ஞானத்தினாலும், என் அந்தராத்மாவின் உதவியினாலும் வியவஸ்தை செய்துகொண்டு ஆராய்ந்து பார்த்தேன். நீர் அர்ச்சாவதாரத்தில் எழுந்தருளிய பரமாத்மா. ஸர்வமகிமைகள் பொருந்தியவர். சூரியனைப்போன்ற காந்தி உள்ளவரும் இருளுக்கு அப்பால் இருப்பவரும், என்ஹ்ருதய கோசத்தில் உறைந்திருப்பவரும், புருஷனும், வேதங்களில் விஸ்வாமித்திரர், வாமதேவர் மரீசி, வஸிஷ்டர் போன்ற மஹான்களால் காணப்பட்ட பரம புருஷனை இந்தப் பிறவியில் அறிந்து, எந்த தீரனாகிய வித்வான் இதுதான் ஸ்வயம் பிரகாசமான பிரும்மம் என்று அறிகிறானோ, அதுபோல் ஆழிமழைக்கண்ணா, உன்னுடைய சேர்க்கை சம்பந்தம், உன்திருவடிகளின் கைங்கர்யம், பிரேமை அபிவிருத்தி, உன் கையில் ஏந்தியிருக்கும் ஸுதர்சனம் சங்கு ஆகிய ரக்ஷகத்வம், உன்னைவிட்டுப் பிரியாத பிரியையான கமலையினுடைய அருள்நோக்கு, உங்கள் சேவடி திருக்காப்பு, உன்னோடு வாழும் பாக்யம், உன் பவழவாய்ச் சொற்களைக் கேட்டும் பாக்யம், உன்னுடைய சுபமான அங்கங்களின் அதிலாவண்ய அழகு குவியல்களைக் காண்காணெனப் பார்க்கும் பாக்யம், உமக்காகவே பிரத்யேகமாக ஏற்பட்டிருக்கும் சக்தி, தேஜஸ், ஐஸ்வர்யாதிகள், தபஸ் முதலிய நற்கருமங்கள், உன் செழிப்பைக்காண ஆவலும், மஹத்தான அம்ருதம் என்று பிரும்மா, ருத்ரன், உமை

சூரியன், இந்திரன் ஆகியவர்கள் விரும்பும்படி, நான், ஸ்வாமி, உம்மிடம் நாட்டமுள்ளவனாகவிருக்கிறேன். சதபதபிராம்மணத்தில் கொண்டாடப்பட்ட பிரும்மரே, உமது உடம்பில் நந்தா போன்ற சகல புண்ணிய தீர்த்தங்களும், கங்கையும் யமுனையும் சதாவாஸம் செய்கின்றன. எனக்கு எது நன்மையைத் தரும், எது ஸ்ரேயசைக் கொடுக்கும் என்கிறவழி புலப்படாமல் உம்மையே ஆராதிப்பது, கர்மவாக்மனத்தால் உமக்காக வாழ்வது, என்கிற வழியைத்தவிர வேறுவழி ஒன்றையும் நான் காணவில்லை. ஜகதீஸ்வரா, என்குருவான வஸிஷ்டபகவான், எனக்கு உன்பாதங்களைக் காட்டின மஹாகிருபாளுவாகிற பாகவதோத்தமன், மஹா ஸமர்த்தர் ஆகிறார். என்னைக் கட்டிக்காக்கும் கோஸாயி, என் பிரபுவான நீர், சீதாராமா, எனக்கு கட்டளையிடும். இப்பேற்பட்ட உண்மையான ஸ்வரூபத்தை அடைந்த என்னை, ஜனார்த்தனா, முகுந்தா, அச்யுதா மாதவா, ஸ்ரீரங்க பர்த்தா, கருணாரஸமே உருவெடுத்த வேங்கடபதே, உம்மிடம் பிராட்டியின் புருஷகாரத்துடன் என்னை நியாஸம் செய்து கொண்டுவிட்டேன். இதனால் எல்லா நன்மைகளும் ஏற்படக்கூடும் என்று திண்ணமாய் விஸ்வாசத்தை அடைந்து விட்டேன்.]

"ஸாதுக்களின் கூட்டம் இது. என் ரோகத்திற்கு சிறந்த ஔஷதமாக விருப்பவர்கள் இவர்கள். ஸௌலப்யம், மஹாவ்ரதம், ஔதார்யம் நிறைந்த பிரபுவான வஸிஷ்டபகவான் என் குரு. அவர் கங்கை புஷ்கரம் போன்ற புண்யதீர்த்தம். ஸ்ருதிஸ்மிருதி போன்றவைகளை நம்பி, ஸத்சம்பிரதாயங்கள் கொண்ட இந்த மஹான்கள் முன்பு நான் ஸத்யமாக கோஷிக்கிறேன். பலதடவைகள் கோஷிக்கிறேன், பிரபு, எனது இந்த பக்தி—பிரேமை—உண்மையானதா அல்லது வெறும் கபட நாடகமா? என்பதை (எல்லாம் அறிந்த முனிவர் வஸிஷ்டரும்) ரகு வம்சஸ்ரேஷ்டராகிய தாங்களும்தான் அறிவீர்கள். (நான் ஸ்ரீராமனிடம் அந்தரங்க பக்தி உள்ளவன் என்று எல்லா பிரபஞ்சங்களிலும் அறிய வேண்டும். உம்மை ஒன்றைத்தான் என் உள்ளத்தில் தேக்கி வைத்திருக்கிறேன். திருமாமகளின் பர்த்தாவாகிற உம்மை ஒன்றைத்தான் பெரிதாக நேசிக்கிறேன். இதுமாத்திரம் தாங்கள் தெரிந்துகொண்டால் போதுமா? ஸ்வாமி, என் பிரேமையையும் ஸர்வசாதாரணமாக விருக்கிறதா அல்லது வெறும் கபட எண்ணங்களுடன் இருக்கிறதா, என்று எல்லாவற்றையும் அறியும் ஸர்வ அந்தர்யாமியாகிற நீர், ஹே பகவான், விஷ்ணுவாகவுமிருக்கிறீர். ஹே ஸ்வாமி, நீர் திருவிக்ரமனாகவும்,

ஸாம்ராட்டாகவும், ஸ்வராட்டாகவும் இருக்கிறீர். நீரும் சீதா பிராட்டியும் ஆஸ்ரிதர்களை ரக்ஷிக்கும் விஷயத்தில் மஹா விரதங்களுடன் கூடினவர்கள் என்றும் என் குருவும் ஆசாரியருமான வஸிஷ்டரும் நானும் அறிவோம்.'') (1317)

''ராமா, உமது பிரிவைத் தாங்காமல் பூபதியான என் பிதா மரித்தார் என்பது ஸர்வஜனங்களுக்கும் தெரிந்த விஷயம். அது மாதிரியே நீர் வனம் புகுந்தது, என்மாதாவின் குதர்க்க புத்தியினால் ஏற்பட்ட விஷயம் என்று எல்லோரும் அறிந்த விஷயம். இங்கு கூடியிருக்கிற வஸிஷ்ட பகவான் உள்பட ஸகலரும் சாக்ஷிகள். இப்போது பாரும். என் தாய்கூட இப்போது பச்சாதாபப்படுகிறாள். மீளாத நரகத்தை அடைந்த மாதிரி தவிக்கிறாள். அவள் மாதிரி எல்லாத் தாய்மார்களும் அயோத்தி நகர் மக்களும் ஸ்திரி புருஷர்கள் சேதனா சேதனங்கள் யாவரும் ஐயா, உமது பிரிவினால் தாபப்படுகிறார்கள்.'' (1318)

''பிரபு, இந்த ஸகல துக்கங்களுக்கும் காரணமான புருஷன் நான் ஒருவனே. (பல புண்யங்களைச் செய்து உம்மோடு கூடப் பிறந்திருக்கும் பாக்யத்தை அடைந்திருந்தும்), நான் இப்போது மகத்தான அபராதத்தினால் இந்த பரிஜனங்களின் துக்கத்திற்கும் காரணமாய் விட்டேன். நான் பாபி, ராம அபராதம் செய்தவன். என்னுடைய தர்சனமே கூடாது என்று எல்லோராலும் பழிக்கப்பட்டு, பிரபு, நிந்தை செய்யப்பட்டதையும் நேரிலேயே பார்த்தும், கேட்டும் மஹாதுக்கத்தை அடைந்துவிட்டேன். இப்போது உமது தரிசனத்திற்காக எல்லாவற்றையும் சகித்துக்கொண்டிருந்தேன். உம்மைப் பார்த்து, நேரில் சொல்லவேண்டும் என்று வந்தேன். ஐயா, எனக்கு தந்தையும் தாயும் நீரே, எனக்கு சீதா பிராட்டியுடன் கூடியிருக்கும் ரங்கநாராயணா, நீங்களே தஞ்சம்; (உங்கள் பாதங்களையே நான் ருசிக்கவேண்டும்; உங்கள் கதாம்ருதங்களைப் பருகுவதால் பெருமிதம் கொள்ளவேண்டும்; உங்களிடமே என் பாரத்தை வைத்து உங்களையே உபாயம் உபேயமாக வரிக்கவேண்டும்; உங்களையே பலப்ராப்தியாக அனுபவித்து பிரவிர்த்திக்கவேண்டும் என்றுநான் நினைத்து,) ஸ்வாமி, உங்களை தரிசித்து, உங்களிடமே என்னை நியாஸம் செய்துகொண்டு ஆசாரிய கடாக்ஷத்தினாலும் உங்கள் இருவர்களுடைய கருணையாலும் நான் சம்மானிக்கப்பட்டேன்'' என்று மஹா வித்வானும் தீரனுமாகிற பரதன் சொல்லிக்கொண்டே போனான். மீண்டும் பரதன் சொல்ல ஆரம்பித்தான். ''ரகுநந்தனா, இந்த பரிஜனங்களால் பரிகசிக்கப்பட்ட நான், நீரும் சீதையும் லக்ஷ்மணனும்

வெறும் கால்களுடன் பாதரக்ஷைகள்கூட வின்றி, முனிவேஷ தாரிகளாக, வனம் சென்றுவிட்டீர்கள், எனக்காக ராஜ்ய லக்ஷ்மியை பரிதியாகம் செய்துவிட்டுப் போனீர்கள் என்று கேள்விப்பட்டேன். ஸ்வாமி, ஸர்வசாக்ஷியானவரும், ஊர்த்வரேதஸ்ஸும், விரூபாக்ஷரும் உமையுடன் கூடினவருமான சங்கர பகவான் என் வார்த்தைக்கு கௌரவம் செய்வார்கள். அந்த அப்ரியமான வார்த்தைகளை நான் கேட்டவுடனே, என் பிராணன் பிரியவில்லையே, என்று நான் அழுதிருக்கிறேன். (ஸ்வாமி, இன்னமும் உயிருடன் உம்மைப் பார்க்கும் வரை இருக்க வேண்டும்; உம்மிடம் என் அவஸ்தைகளைச் சொல்லவேண்டும்; என்று சிந்தித்தவனாக) உம்மையும் சீதையையும் லக்ஷ்மணனையும் அன்வேஷணாக தேடி வந்திருக்கிறேன். வரும்வழியில் இந்த வேடராஜன் குஹனை சந்தித்தேன். இவன் உம்பேரில் வகிக்கும் நிர்மலமான பக்தி பிரேமையைக் கண்டுகொண்டேன். (உம் தம்பியான நான் அவனுடைய அனன்ய சரண்யத்வம், அனன்ய பக்தி இவைகளைக் கண்டு), ராமா, ரகுநாதா வஜ்ரத்தினால் அடிபட்டவன் போல் ஆனேன். என் மனம் ரொம்ப ரொம்ப கடினமாகத்தான் இருக்கவேண்டும். ஸ்வாமி, என் ஆத்மா குடிகொண்ட தேகம் இன்னும் வெடிக்கவில்லையே! நான் என்ன செய்வேன்.'' (1319)

[தியானம்

ஸ்ரீமஹாலக்ஷ்மி நாராயணா, நேரில் தோன்றிய தீப்தமூர்த்தியே, மனத்துக்கினியானே, அயோத்தி மைந்தனே, தேவாதி தேவா, என்னைத் தூயப்படுத்திய தாமோதரா, தென்னிலங்கை சென்ற கோமானே. சீதாபதி, தண்டக வனம் சென்று சகலரையும் காத்து ரக்ஷித்து அருளிய கீர்த்தி பிரபோ, மதுசூதனா, ஸ்ரீராமா, உன் தாரக நாமத்தை காசியில் கங்கையில் உமாமஹேஸ்வரர் மனம் திருந்திய ஸாதுக்களை நற்பதத்தில் சேர்ப்பதற்காக போதிக்கிறாரோ, அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த உன் நாம ஜபத்தை எனக்கு அருள்வாயாக. சூர்யகுலபதே, ரங்கபதி, ரங்க தீர்த்தா, சீதாநாயக, என்கிற பத பிரயோகங்கள் எனக்கும் பிரும்மாவுக்கும் சரஸ்வதிக்கும் ஏற்படும்படி பண்ணிய காருண்ய மூர்த்தி ராமா, தியாகராஜர் துளசிதாஸர் போன்ற மஹான்கள் பரதனுடைய வழியைப் பின்பற்றினவர்களாக '' நீ தான் அப்பா தெய்வம். உம்மை ஒரு தடவை வணங்கினால், இவனுக்கு நாம் என்ன செய்யலாம், நாம் செய்தது போராதே என்று நீ வருந்துகிறாய். நிர்ஹேதுக கிருபை என்கிறதால் நீ சுபபலன்களை

வர்ஷிக்கிருய்.'' அப்பேற்பட்ட ஸ்ரீமானுகிற நீர் உமது பிராட்டியோடு பல்லாண்டு பல்லாண்டாக என் ஹ்ருதயத்தில் எழுந்தருளியிருக்கவேண்டும். நீர் எப்போது உம்முடைய சுபமான தரிசனத்தை அளிக்கப்போகிறீர்? குருவாயூர் அப்பா, ராமா, கிருஷ்ணு, வரத வேங்கடேசா அயோத்தியிலும் ஆயர்குலத்திலும் தோன்றிய மணிவிளக்கே அருள்செய்.]

"பிரபு நான் இவ்விடம் வந்து உங்களைக்கண்டு, தரிசித்து நான் காமப்படும் ரங்கதுரியபாதங்களை சரணம் அடைந்துவிட்டேன். உம்முடைய பிரபாவங்களை நேரில் கண்டுவிட்டேன். (பரிமளம் பொருந்திய வைஜயந்தி என்கிற மாலையை அணிந்துகொண்டிருக்கும் ராம வனமாலி, ஸமிதிஞ்சயரான நீர் ஜீவர்களாகிய எங்களுக்கு உம்முடைய தாஸத்வத்தைத் தவிர வேறு ஒன்றும் அளிக்கவேண்டாம். ஸர்வ ஸ்வதந்திரரான பகவானுக்கு நாம் அடிமையே யன்றி அவனைப்போல் ஸ்வதந்தரர் அல்லர் என்று உம்மிடம் பாரதந்திரியர்களாக உஜ்ஜீவிக்கக்கடவோம். அப்பேற்பட்ட ஸ்வாமியாகிற நீர் இயற்கையாகவே அன்பினுல் "நாதனில்லை'' என்கிற பயத்தைப் போக்குகிறீர். அதனுல் நான் ஆயுள் நாள் முழுவதும் என் உயிரை உமக்காகவும் உம்முடைய குற்றேவல்களுக்காகவும் சித்தம் பண்ணி வைத்திருக்கிறேன். என்ன கஷ்டங்கள் வந்தபோதிலும் பரவாயில்லை. உமக்காக நான் சகிக்க மனம் உவந்து வந்திருக்கிறேன்). பிரபு, அப்பேற்பட்ட பயநாசனரான உம்மைப் பார்த்ததும், உம்முடைய திருமேனி அழகையும், பங்கஜ கண்களையும் பார்த்து, ஸ்வாமி, இயற்கையாகவே கோபம், ரோஷம், க்ரோதம், அசூயை உள்ள நல்லபாம்பு, தேள் முதலிய விஷஜந்துக்கள் கூட தாங்கள் வரும் வழியில் பிறருக்குப் பயத்தைத் தரும் விஷத்தையும் தாமஸ குணங்களையும் தியாகம் செய்துவிட்டு, ஸத்வ குணங்களுடன், எல்லாக் குற்றங்களும் தோஷங்களும் நீங்கினதாக ஆக்கப்படுகிருர்கள்! இதை நான் நேரிலேயே பார்த்துவிட்டேன்.'' (1320)

"ரகுநந்தனு, உமக்குத் தம்பியாகப் பிறந்தும், சீதாபிராட்டியின் கிருபையை அடைந்தும், என் தம்பி லக்ஷ்மணனுடைய நல்லெண்ணத்தாலும் நான் என் துக்கங்களிலிருந்து விடுபடுவேன் என்று நினைத்தேன். ஆனுல் ஸ்வாமி, நான் கைகேயியுக்கு புத்ரனுகப் பிறந்திருக்கிறேன். அது நான் மரிக்கும் வரை அழியாத அதிருப்தியைக் கொடுக்கிறதாக விருக்கிறது. ஏனெனில், ஸ்வாமி, என் தாயாரான கைகேயி ஸர்வ பந்துவாகிற உம்மையும் சீதாபிராட்டியையும் லக்ஷ்மணனையும் தன் விரோதி

களாக பாவிக்கிறபடியால், அவளுக்குப் புத்ரனாகிற நான் ஸவாதந்திரியம் உள்ளவன், அதனால் நெடுங்காலம் அக்ஞான நிலையுடன் உம்முடைய ஸம்பந்த ஸம்பத்தை அடைய அருகதையில்லேன் என்கிற தப்பு அபிப்ராயம் ஏற்படுவது ஸஹஜம்தானே ஸ்வாமி. அதனால் நான் வாழ்நாட்கள் பூராவும் உம்முடைய நிர்ஹேதுக கிருபையைக்கூட அடையமுடியாமல், உமக்கு சேஷத்வம் இல்லாத அபாக்ய ஸ்திதியில் ஏற்படும் துக்கங்களை அனுபவித்தே தீரவேண்டுமா? (பிரஹ்லாதன் வம்சத்தில் பிறந்த அசுரர்களையும் திருத்திப் பணி கொண்டுள்ள ஸத்பதாசரரே, என்னிடம் உம்முடைய நிர்ஹேதுக கிருபைக்குக் கூட இடமில்லையா? ஐயா, உலகத்திற்கெல்லாம் ஆதிமுதல் தெய்வமாக விருக்கும் நாராயணா, மஹாகிருபை வடிவமாகவிருக்கும் சீதையுடன் கூடிய சீதாபதே, உம்மால் உமது கைங்கர்யத்திற்காக புத்தி மனஸ் பிராணன் இந்திரியங்கள், ஞான ஐஸ்வர்யாதிகள் முதலானவற்றை விஸ்வரேதஸ் என்கிறபடி எனக்கும், என் தாயாராகிய கைகேயிக்கும் மற்றும் எல்லா சராசரங்களுக்கும் உண்டாக்கப்பட்டது. அந்த சரீரத்தில் ஒரு அம்சமாகிற எங்களுக்கு உமது திருஷ்டி பதம் கிடைக்காதா?) எவ்வளவு காலம் எங்களால் மஹா துக்கங்களை அனுபவித்துக்கொண்டு பொறுத்திருக்கமுடியும்?'' என்று கதறி அழுதான் பரதன். அழுது கொண்டிருந்தான். (1321)

ஸகலலோக நாயகன், ஆதிப்பிரான், என் பிரபு சீதாராமன் ஸர்வ அகிஞ்சனனாக, மஹா வைராக்யம் படைத்த உள்ளத்துடன், தத்வ ஞானத்தினால் நிரதிசய ஐஸ்வர்ய குணங்களை உடைத்த பிராட்டியின் ஈசனான ஸ்ரீராமன், பரதனால் அதிவியா குலத்துடனும், உணர்ச்சியுடனும் சொல்லப்பட்ட வார்த்தைகளைக் கேட்டார். (தாமரை யோனியில் பிறந்து, தாமரையைக் கையில் வைத்திருக்கும் ரங்கநாயகியின் அம்சமாகிற சீதைக்கு பரதனுடைய ஆர்த்தி பிரபாவங்கள், வரப்பிரஸாதமான வாணியினால் சொல்லப்பட்ட வார்த்தைகள், வினயத்துடன் சொல்லப்பட்ட நீதிகள், நிரபராதித்வம் கலந்த பச்சாதாபங்கள், வஸிஷ்ட பகவானால் போதிக்கப்பட்ட சிஷ்ய நியமங்கள், ப்ரீதியை உண்டாக்கி, வளர்த்து, அவளை அவன் பால் வசீகரித்தது.) இந்த பாவத்தையே சகல ஜனங்களும் அடைந்தார்கள். பரதன் சோகத்தினால் கலங்கி நிற்க, அந்த ஸமாஜத்தில் இருந்த ஸகல ஜனங்களும் அதே சோகத்தை அனுபவித்தார்கள். ராம வியோகம் என்பது பெரிய க்லேசம் அல்லவா? அந்த ஜன சமூகம் முழுவதும் ஒரு பெரிய தாமரைக்காடு பனியினால்

ஏற்பட்ட கேட்டினுல் ஒளி குன்றி வாடி வதங்கிப் போவது போல சகலரும் ஒளி குன்றி சோகத்தினுல் தவித்துக் கொண்டு, ஸ்ரீ சீதாராமனுடைய கிருபா வ்ருஷ்டியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். (1322)

சமயத்திற்கு ஏற்ப மஹா ஞானியான வஸிஷ்டபகவான் துக்கத்தை சமனம் செய்வதற்கு ஞான பிரபோதங்களாகிற இதி ஹாஸப் புராண கதைகளை எடுத்துச் சொல்லி, பரதனின் ஸந்தா பத்தை அடங்கச் செய்தார். அதன் பிறகு பானுகுல சூர்யனுன ரகுநந்தனன் கிங்கிணி வாய்ச்சொல்ல, விகஸித்த தாமரைப் பூப்போல, தன்னுடைய அழகு பொருந்திய குமுத வாயினுல் அழகானதும் மதுரமானதும் சுகத்தையும் பரிமளத்தையும் தரக் கூடியதும் நாதனற்றவர்களுக்கும் தமது ஸம்பந்தம் வீண் போகாதபடி விசனத்தை ஒழிப்பவரும், அம்ருத ஸ்வரூபியான சந்திரனைப்போல, ஸ்ரீ ராமச்சந்திரன் உசிதமான வார்த்தை களைச் சொல்ல ஆரம்பித்தார். (1323)

"என் பரதா, ஏன் மனதில் வீணுகக் கஷ்டப்பட்டுக் கொண் டிருக்கிருய்? ஜீவர்களுடைய கதி ஈஸ்வரனுக்கு அதீனம். ஸர்வ சங்கல்பனுகிற பிரபு எல்லா ஜீவர்களையும் உண்டு பண்ணி, ரக்ஷித்து, நியந்தாவாகி, பரிணமிக்கிருன். என்னு டைய அபிப்ராயத்தில் பரதா, உனக்கு மிஞ்சின புண்யாத்மாக் கள் பதினுன்கு லோகங்களிலும், முந்தி இருந்த காலத்திலும் சரி, இப்போதும், இனி வரக்கூடிய காலத்திலும் இருக்க முடி யாது. உனது பக்தியும், ஞானமும் பிரபத்தியும் அகிஞ்சனத் வமும், அனன்ய சேஷத்வமும், பாரதந்தர்யமும், உன் பக்தி வினயங்களும் அனுஷ்டானங்களும் ஸர்வோத்தமமானவை. ஆதலால் உன்னைப்போல சீதாராம நாராயண ஸம்பத்தைப் பெற்ற புண்யாத்மாக்கள் இல்லவே இல்லை; இருக்கவும் போவ தில்லை. யாவரும் உனக்குப் பின்பு தான் இருக்க கூடியவர்கள். அப்பேற்பட்ட புண்ணியாத்மாக்களுக்கு நீ அக்ரகண்யனுக விளங்குகிருய், என் பிரிய தம்பியே," (1324)

[தியானம்

ஹே ரங்க நாராயணு, சீதாபதே, ராமா என்கிற உன் நாமம் திரிபுவனங்களிலும் சிறந்தது. உன் தயை ரொம்ப பிரஸித்த மானது. உன் அபய ஹஸ்தம் உன்னை ஒரு தடவை நமஸ் கரித்தால் போதும் என்று காட்டுகிறது. உன் பாத சரணங்கள் ஹரி தாஸர்களுடைய பரமாம் கதியாக விருக்கின்றன. உன்னை

ஹரி கோவிந்தா நரஹரி, ராம கிருஷ்ண, கருணும்புதே, என்று ஒரு தடவை கூப்பிட்டால் என் சரீரம் புளகாங்கித மடைகிறது. உன் அம்ருதமான சரீரத்தைப் பார்த்தால் என்னுடைய சகல தோஷங்களும் விலகி, உனக்கு ஸ்வாதந்தர்யமாகிறது. உன் குணங்களின் அழகைப் பார்த்தால் உனக்கே அடிமையாக எக் காலமும் இருக்க வேண்டும் என்று என் ஆத்மா துடிக்கிறது. உன் ஞான ஐஸ்வர்யங்களைப் பார்த்தால் நீயே எனக்கு குருவாக விருக்கவேண்டும் என்று என் மனம் நினைக்கிறது. ராஜ ராஜ வல்லபையான மஹாலக்ஷ்மியின் கணவனே, தாமரைபோல குளிர்ச்சியுள்ள உன் குளிர்ந்த கடாக்ஷங்களை என் மேல் கிருபா வேசனுக வர்ஷிக்கமாட்டாயா? என் மனது உனக்கு நமஸ்காரம் செய்ததால் என் உள்ளம் முழுவதும், சீதாபதே உங்களால் நிரம்பப்பட்டிருக்கிறது. பக்தர்களின் தோஷங்களைப் பார்க்கா மல் உன் அம்ருதத்தை சந்திரன் சாப்பிட்டது போல உன்னு டைய அம்ருதவபுவை எனக்கு கொடு. உன் பாத சரணங்களை பரதனுக்கும் பலிக்கும் பிரஹ்லாதனுக்கும் வைத்தது போல எனக்கும் கொடு. ஸஹஸ் ராக்ஷி, யோகிகளின் சிந்தனீயனுக விருக்கும் திருமாலே, கார்முகில் வண்ண, திங்களும் ஆதித்யனும் சேர்ந்தாற் போலிருக்கும் இரு விழியானே, எவ்விதம் நாத முனிகள் உய்யக் கொண்டார் திருமுடியிலே பாரிதோஷிகமாக திருவடிகளை அமர்த்திக் கொள்ளும் போது, உய்யக் கொண் டாரும் திருமுடி நிலைகளை நாதமுனிகளின் திருவடிகளிலே ஸமர்ப்பித்து பரதாழ்வானைப் போலவும் வேதாத்மாவான கரு டனைப் போலவும் லக்ஷ்மி வர்த்தனை லக்ஷ்மணனைப் போலவும் போல அல்லவா விளங்கினர். உய்யக்கொண்டாரின் பாதங் களைத் தாங்கிய மணக்கால் நம்பியும், ஆளவந்தாருக்கு அந்த திருவடி நிலைகளை பிரஸாதிக்க வில்லையா? அப்பேற்பட்ட பரம்பரையாக சங்கிலித் தொடர்போல வந்த உபநிஷத்துக்களின் ஸந்தானமான சத்ருக்னன் லக்ஷ்மணன் சீதை தினந்தோறும் தங்கள் உள்ளங்களில் தேக்கிய பாதங்களை, எனக்கு சீக்கிரம் கொடு.]

"என் பரதா, நீ என்னைச் சிறந்த பேறு என்று உய்யக் கொண்டாய். (ஆஞ்சநேயர், யசோதை, அர்ஜுனன், பலி, பிரஹ் லாதன், சஹாதேவன், பீஷ்மர், ஆழ்வாராதிகள் வைஷ்ணவ பூர்வாசாரியர்களைப் போல பகவானே பரமார்த்தம், என்று சகல ஐஸ்வர்யங்களையும் பரித்தியாகம் செய்த புண்யாத்மா நீ. உமக்கு தகுந்த பாரிதோஷிகமில்லை என்று சொல்லும்படி பக்த பாகவத

கோஷ்டியில் நீ அக்ரகண்யனுக விளங்குகிறுய். மார்க்கண்டேய ரிஷி போல என் பாதங்களே பரம புருஷார்த்தமாக நாடி வந்திருக்கிறுய்.) அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த உன்னே குடில புத்தியினுல் எவனுவது தோஷம் கல்பித்தனுகில் அவனுக்கு இந்த லோகத்திலும் பரலோகத்திலும் நற்கதி, சௌபாக்ய செல்வங்கள், பகவத் பிராப்தி ஒன்றும் கிடைக்காது. உன் தாயாரான கைகேயியுக்கும் எந்த மூர்க்கன் தோஷம் கற்பிக் கிருனே, அவன் சாதுக்களேயும் ஸத்குருவினிடம் அண்டியும் பகவானுடைய சேஷ்டிதங்களே அறிகிருனில்லே.'' (1325)

எனக்கு உகந்த பரதா, உன் நாமஸ்மரணே, உன் பாதங் களின் ஸம்பந்தம், சகல பாபக் கூட்டங்களேயும் நாசம் செய்து அகில அமங்களங்களேப் போக்கும் ஔஷதமாகவும், மிருத சஞ்சீவினியுமாக விருக்கின்றது. ஸம்சாரம் என்னும் கொடிய விஷத்தை நிவிருத்தி செய்யும் சஞ்சீவினியாக விருக்கிறது. பரதா, உன்னுடைய அழகான நாம ஜபம் இந்த உலகில் சுப மானதும், சுத்தமானதும் நிர்மலமான கீர்த்தியையும், பரலோ கத்தில் சுகத்தையும் தருவதாகவும் விருக்கிறது.'' (1326)

''என் பிரியமான பரதா, நீஸ்வபாவமாகவே ஸத்யம் பேசு கிறவனுக விருக்கிறுய். சொன்ன சொல் தவருதவன் நீ என்று எனக்குத் தெரியும். நான் உன்னேப் பற்றிச் சொல்லிய வார்த்தைகளுக்கு சகல கல்யாண குணங்களேயும் தோஷங்களே யும் பார்க்கும் பகவான் சங்கரரே சாக்ஷி. இந்த பிருத்வி முதலானவர்கள் உன்னேப் போன்ற சாதுக்களால், ஆதார நிலே யாய், அதனதனுடைய வழிகளில் நிறுத்தப்பட்டு சோபிதமாக விளங்குகின்றனர். என் பிரியனே, வீணுக ஸ்வயமாக ஆரோ பிக்கப்பட்ட தப்பு எண்ணங்களால் உன் மனதைப் புண்படுத்திக் கொள்ளாதே. வைரமோ பிரேமையோ மிகவும் சிரமப்பட்டுத் மறைத்துக் கொள்ளப்பட்டாலும் அதை வெகுநேரம் யாவராலும் ஒளித்து வைத்திருக்க முடியாது.'' (1327)

''பக்ஷிகள், மிருகங்கள் ஒருவித பயமுமின்றி அஹிம் சையை ஆதாரமாகக் கொண்டுள்ள முனிஜனங்களிடம் ஸஹஜ ஸ்நேகத்துடன் பழகுகின்றன. ஹிம்சையையே தொழிலாகவுள்ள வேடுவனேக் கண்டு உடனேயே ஓடி மறைந்து கொள்ளுகின்றன. அப்பேற்பட்ட அசேதனப் பொருள்களான பசுபக்ஷி மிருகங்கள் தங்கள் மித்ரன் யார், தங்கள் சத்ரு யார் என்று எளிதில் அறிந்து கொள்ளும்போது, பரதா, ஞான ஸம்பத்துக்கள், குண

ஐஸ்வர்யங்கள் கொண்டிருக்கும் சேதனுன மனுஷ்யனைப் பற்றிச் சொல்வானேன்?'' (1328)

''என் ஆப்தபந்துவே, என்னை ஆட்கொள்ள வந்த தம்பியே. பரதா, நான் உன் குணங்களை நன்றாக அறிவேன். ஆனால் இப்போது நான் என்ன செய்யக்கூடும்? என் மனதிலும் குழப்பம் யேற்பட்டிருக்கிறது. நமது பிதா சொன்ன சொல் தவறாத சத்யஸந்தர். அவர் தன் சொற்களைக் காப்பாற்றுவதற்கு உத்தமமான ஸ்நேகத்தைக் கொண்ட என்னையும் தியாகம் செய்தார். ஸத்யத்தின் நோக்கினால் என்மீது அதிகப் பிரியம் கொண்டிருந்தபோதிலும், அவர் முடிவில் என் பிரிவினால் தன் தேகத்தையும் ஸத்தியத்திற்காகவே தியாகம் செய்துவிட்டார்.'' (1329)

''அப்பேற்பட்ட மஹானுபாவனுடைய வார்த்தைகளை மீறி நடப்பதற்கு நான் தயங்குகிறேன். ஆனால் உன் நிலையைப் பார்த்து எனக்கு அதிகமாக துக்கம் வருகிறது. அதன்மேல் குருநாதரான வஸிஷ்டருடைய ஆக்ஞையும் என் சிரம்மேல் இருக்கிறது. இதை எல்லாம் யோசித்துப் பார்த்து, நீ என்ன செய்யச் சொல்கிறாயோ, அதை நான் செய்வதற்கு தயாராக விருக்கிறேன்.'' (1330)

[தியானம்

ஸ்ரீ மஹா நாராயணரே, ஆதிராமா சீதா, உம்மை நான் நாரத பகவானால் அனுக்ரஹிக்கப்பட்டு நமஸ்கரிக்கிறேன். நாத வடிவமாக உள்ளவரும், பாஞ்சராத்திரத்தை நாராயணருடைய முகாரவிந்தத்திலிருந்து கேட்டவரும், சரத்காலத்து முழுமதி போலவும் தேஜஸ்ஸுகள் உள்ளவரும், பிரஹ்லாதன், துருவன், வால்மீகி, தியாகராஜர் இவர்களிடம் மஹா அனுக்ரஹம் செய்தவரும். என் குருவும், ஸதாசார்யருமான நாரதபகவானை அர்ச்சித்து, ராமா, பரதன் பூஜை செய்த சீதாநாயகனின் பாதங்களை நான் பிரபத்தியோகத்தால் வந்து அடைகிறேன். கேசவா, நாராயணா, உம்மை ஆஸ்ரிதர்களைக் காப்பதில் ஊக்கம் தவறாத அப்ரமத்தர் என்றும், என் பாபங்களையும், என் விக்னங்களையும் போக்கும் விஷ்வக்ஸேனர் என்றும், கைகளில் சுடராழியும், சங்கும் ஏந்தும் தடக்கையன் என்றும், ஜனார்த்தனர் என்றும், சாரங்கன் என்றும், ஸகல உலகங்களுக்கும் தாமே ஆதாரமாக விளங்கும் கூர்ம பிரதிஷ்டதராக விளங்கும் சீதாபதி என்றும் நான் நமஸ்கரிக்கிறேன். பரதன் மீது கருணை காட்டிய

ராமா, மூன்றுவித தாபங்கள் அடங்கி, நாரதர், தியாகராஜர், துளசிதாஸரால் பரமபாவனமாக ஆக்கப்பட்ட என்னிடமிருந்து, என் நியாஸயோகத்தை யேற்றுக்கொண்டு, என் கைங்கர்ய பிரவிருத்தியை அங்கீகரிப்பாயாக. உமை, சங்கரர் வழியில் வரும் எனக்கு, அழகும், அறிவும், கருணையும் உருவெடுத்த குஹப்பெருமான் விக்னேஸ்வரரை ஆராதித்து, அனுக்ரஹம் பெற்றது போல, தயாபரி, சீதாபிராட்டி, உன் அருள் நோக்கினுல், கடைக்கண்களின் திருஷ்டிகளாலும், ஸத்யபாமா ஸ்ரீ கிருஷ்ணனை நாரதருக்குத் தானம் செய்தது போலும், பிரஹ்லாதனை அனுக்ரஹித்த மாதிரியாகவும், ஸ்ரீ ராமனிடம் என் த்யுதிகளைப் பற்றிச் சொல்லி, என் வினயத்திற்கு அதுளமிருது நளின ராமசரணங்களை எனக்கு கொடுப்பாயாக. உங்களையே நம்பி பாரங்கதனுக வாழும் எனக்கு உத்தமமான கதியைக் கொடு. பரமபாவனு, தயை செய். ஆஞ்சநேயாதிகளின் கிருபை கிடைத்த எனக்கு தயை செய்.]

"பரதா, உன் மனதும், நீயும், என் அருள் நோக்காலும், (சீதையின் அனுக்ரஹ கடைக்கண்களாலும்) பரமபாவனனுக ஆக்கப்பட்டாய். ஸதாசார்யரால் அனுக்ரஹிக்கப்பட்டவனுக விளங்குகிருய். (ஆகையால் நீ ஸ்ரீகரனுக ஆக்கப்பட்டு விளங்குகிருய். ராமபக்தியாகிற ஸ்ரீ நிதியை சுமக்கும் ஸ்ரீதரனுக விளங்குகிருய்.) ராமபரஸமர்ப்பணம் செய்தபடியால், புகழ்ப்பெற்றதும், புண்ணியமானதுமான ரகுகுலத்தில் உதித்த அயோத்தி மன்னர்களிடம் வாழ்ந்தவனுய், ராமகிருபையாகிற ஸ்ரீமந்நாராயணருக்கு அங்கமாக விளங்குகிருய். ஆதலால் உன் மனதில் யேற்படும் கிலேசங்களைத் துறந்து சந்தோஷத்தை அடைந்து, நிர்பரனுக வாழக்கடவாய். என்னிடம் ஸஹஜ ஸ்நேகத்துடன் இருக்கக் கடவாய். நீ எதைச் செய்யச் சொல்கிருயோ, அதை நான் உடனே செய்து முடிப்பேன்" என்று அருள்வாக்கு புரிந்தார். (1331)

ஸ்ரீராமனுடைய அருள்வாக்குக்கள் தீனமான பரதனுக்கு ஸர்வ ரக்ஷகத்வமாக விளங்கின. (ராமகிருபாளு, ஜகதீசன், ஜகத்பதி, அப்ரமேயர், பரதனுடைய பக்தி வினய நம்ரதிகளினுல் கட்டுண்ட மாயன்; அனன்ய சரண்யன், பிராட்டியின் அசரண்ய சரணங்களில் நிலையேறினவன்.) கிருதார்த்தகிருத புண்யனுகவும் ஆக்கப்பட்ட பரமபாக்யமுள்ளனுகவும் பரதன் இந்த வார்த்தைகளைக் கேட்டான். அங்கு கூடியிருந்த ராமதாஸர்களான ஸகல ஜனங்களும் ஆர்த்தியோடும், திருப்தியோடும் இந்த உத்தம வாக்கியங்களைக் கேட்டார்கள். ரகு

குலத்தில் உதித்த ஸத்யஸந்த ராமரை அன்று எல்லோரும் கண்டார்கள். பக்தர்களை ரக்ஷிப்பதிலும், அவர் சொல்லிய ரக்ஷக வார்த்தைகளில், சொன்ன சொல் தவறாத சத்யபராக்ரமமுள்ள ஸ்ரீ ராமசாமியைக் கண்டார்கள். (1332)

இந்த நிலவரத்தைக் கண்ட ஸுரராஜனுகிற தேவேந்திரன் தன்னுடைய ஸுரகணங்களோடு கூடி மனம் தளர்ந்தவனாக ஆலோசிக்க ஆரம்பித்தான். ராமன் அயோத்தி திரும்புவாராகில், தேவகார்யம் கெட்டுவிடுமே, ராவண ஸம்ஹாரம் முடியாதே என்று அவன் கவலைப்பட ஆரம்பித்தான். இந்த சமயத்தில் நமக்கு உபாயம் ஒன்றும் தோன்றவில்லையே. ஆம். "பரதன் காட்டிய ராமசரணங்களையே நாம் நம் மனதிற்குள் தியானித்து, சரணம் அடைவோம்" என்று தீர்மானித்தவர்களாக ஸ்ரீ சீதா ராமனை சரணம் அடைந்தார்கள். (1333)

"பரதனைப் போல நமக்கு பூர்ண விஸ்வாசம் ஏற்பட வில்லையே" என்று பரஸ்பரம் பேசிக்கொண்டு மனங்கலங்கின வர்களாக தேவர்களும், தேவராஜனும் தோன்றினார்கள். இந்த ரகுபதி பக்தர்களுக்கு கட்டுப்பட்டவன். பக்தர்களின் எண்ணத்தை சிரம் மேல் தாங்கும் பாரப்ருத், பாரத்ருக்." முந்தி நடந்த துர்வாஸ அம்பரீஷன் ஸம்பவத்திலிருந்து தெரிந்து கொண்ட விஷயம், ரகுபதி பக்த பராதீனன். நாம் ஒன்றும் ராமபக்தர்களுக்கு தீங்கு நினைக்கக்கூடாது," என்று எண்ணம் மேல்நோக்கி வர, பரதன் ராமனிடம் என்ன வரம் வேண்டப் போகிறான் என்பதைப் பார்க்கலாம், என்று உள்ளம் கலங்கினவர்களாகவிருந்தார்கள். இந்திரன் இவ்விதம் நினைக்க நினைக்க, அவனுடன் கூடவிருந்த தேவர்களும் இதை ஆமோதிக்க, ஸர்வரும் வியாகுலத்துடன் தோன்றினார்கள். சில சமயம் தங்கள் காரியம் பலிக்காது, என்று நிராசையாகவும் தோன்றினார்கள். (1334)

இந்த மாதிரி ஸுரகணங்களுக்கு முந்திகாலங்களிலும் பல சமயங்களில் மனக்கலக்கம் ஏற்பட்டிருந்தது. ஒரு சமயத்தில் அவர்கள் அவ்விதம் கஷ்டப்படும்போது, பிரஹ்லாதன் நரஹரி ரூபமுள்ள மஹாவிஷ்ணுவை ஸர்வபக்தபிரியனாக, தேவர் களுக்கும், அகில ஜகத்திற்கும் பிரகடனப்படுத்தினான். அது மாதிரி, இந்த சமயத்திலும் நம் காரியம் பரதனிடத்தில் சிக்கி இருக்கிறது. விஷ்ணு பக்தர்கள் ஸுரர்களுக்கு ஹிதம் செய்யக் கூடியவர்கள்" என்று தங்களுக்குள் அவர்கள் பரஸ்பரம் பேசிக் கொண்டார்கள். (1335)

"சரி, பரதனின் தாள்களைத் தவிர நமக்கு வேறு ஒரு உபாயமும் காணப்படவில்லை. பரதன் ஸ்ரீராமனுடைய சேவகன். நம் போல் பிறர் ஹிதத்தில் ஆசை வைத்தவன். ஸ்ரீராமனும் பக்த பிரியனுகிறபடியால், (நாம் பாகவத பக்தி பண்ணினுல், ஸ்ரீராமன் பரதனை அங்கீகரித்தது போல,) பரதனும் நம்மையும் அங்கீகரித்து அனுக்ரஹிப்பான். ஆகையால் நாம் பரதனை தியானித்து, அவனுக்கு ஹிதத்தை நினைப்போம். அவனைப் பிரேமையோடு அலங்கரிப்போம். பரதனிடம் நாம் அன்பு செலுத்துவதைப் பார்த்து, ஸ்ரீராமன் நம்மிடம் ப்ரீதி உள்ளவனுக ஆவான். பரதன் தன் ஸ்வரூப குணமாகிற கைங்கர்ய அனுவர்த்தி, சீலகுணமாகிற ராம விஸ்வாசம், இவைகளால் ஸ்ரீராமனை தன் வசம் வசீகரித்திருக்கிருன். அதே மாதிரி நாமும் பரதனை சரணம் அடைந்து, நம் காரியம் நடக்கும்படி அவனை வேண்டிக் கொள்வோம்" என்று தீர்மானித்தவர்களாக பரதனை ஹிருதய பூர்வமாக பிரேமையுடன் ஸ்மரித்தார்கள். (1336)

தேவர்களின் எண்ணங்களை அறிந்த தேவகுரு பிருஹஸ்பதி சந்தோஷமடைந்து, தேவராஜனைப் பார்த்துச் சொன்னுர்: "நீங்கள் செய்த யோசனை சுபத்தை அளிக்கக்கூடியது. உங்களுடைய பாக்யமே இந்தமாதிரி நினைக்கும்படி பிரேரணை செய்தது என்று நான் நினைக்கிறேன். பரதனுடைய சரணகமலங்கள் சகல மங்களங்களுக்கும் மூலமான யிருப்பிடம். அவனுல் ஸ்ரீ சீதாபிராட்டியின் கணவனுன ஸ்ரீராமன் சுலபராகவும், எளிதில் அடையக்கூடியவராகவும் ஆவார். ஜகத்திற்கு அவனுடைய ஹ்ருதயத்தால் ஸகல மங்களங்களும் உண்டாகும். தேவகார்யமும் நடக்கும். ஆகையால் பரதனுடைய பவித்திரமான சரணங்களை பிரபத்தி யோகத்தால் அடையுங்கள்," (பாகவத கைங்கர்யத்தினுல் பகவான் பிரஸன்னமடைவான்) என்று சொன்னுர். (1337)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மியை வக்ஷஸ்தலத்தில் வைத்திருக்கும் ஹரிநாராயணு, லோகங்களில் எல்லாவற்றிலும் கீர்த்திமானுகவும், அழகு ஸ்ரீமானுகவும், மாயை லீலைகள் செய்பவனுகவும், மஹா விபு என்று சொல்லப்படும் உன்னை எப்போது அப்பா பார்க்கப் போகிறேன்? நீ ஏன் என்னிடம் பராங்முகனுக விருக்கிருய்? உனக்கு ஆயிரம் கண்கள், ஆயிரம் பாதங்கள், ஆயிரம் காதுகள், ஆயிரம் கைகள் இருந்தும் உனக்கு நான் படும் துன்பங்கள் தெரியவில்லையா? ஸ்ரீபதே, வரதா, உன் பாதங்களே பரமார்த்தம்,

வேறு ஒன்றும் வேண்டாம் என்று பரதனும், நாரதரால் உபதேசிக்கப்பட்ட தியாகராஜரும் எனக்கு உபதேசித்திருக்கும் போது, நான் அவைகளை அடையாமல் எவ்விதம் சந்தோஷமாக இருப்பேன்? ராமா சீதா நாயகா, முன்பு பாற்கடலிலிருந்து எழுந்து வந்த லக்ஷ்மி, பகவானுகிய உம்மை மாலையுடன் வரித்து, உமது வக்ஷஸ்தலத்தில் புகுந்து உம்மைத் தேவாதி தேவனுக ஆக்கவில்லையா? அதைக் கண்ட தேவராஜன், அஷ்டதிக்பாலர்கள், தங்கள் மஹிஷிகளுடனும், மகரிஷிகளுடனும் ஸகலரும் பிரஸன்னமாகவில்லையா? கிருபாஸாகரா, உன்னுல் செய்யப் படும் யத்ருச்சை சுக்ருதம் எவ்வளவு மஹத்தானது என்று எனக்குத் தெரியாதா? நீலமேனி ஸ்யாமள திருக்கண்ண பிரானே, ராமமுனியே, உம்முடைய நீல ஆக்ருதி பால சூர்யன் போல தேஜஸ் பொருந்திய அழகான திருமேனி, ராகாம்புஜ முகமும், கருடன், விஷ்வக்ஸேனர், மஹா உரகன், உமாசங்கரர், பிரும்மா, தேவராஜன் முதலியவர்கள் தொழும் உன்னுடைய ஸ்ரீ பாதங்களும், நாரதர் முதலிய ரிஷிகள் கண்டு களிக்கும் ஸரஸ ஸல்லாப குணப் பேச்சுக்களையும், உன்னுடைய ஸரோஜ நயனங்களையும் நான் எப்போது காண்பேன்? கேட்பேன்? மாருதியையும், பரதனையும் தழுவிய உனது திருமேனியையும் நான் எப்போது தழுவுவேன்? ஸநந்தன வந்தித ஸ்ரீராமா, நிஜமாக உன் பாதங்களையே என் தஞ்சம் என்றும், கதி யென்றும், ஜீவனம் என்றும், பரம தபஸ்ஸின் பலன் என்றும், நம்பி வந்திருக்கும் என்னிடம், நீயும், சீதாவும் பராங்முகர் களாக இருக்கலாமா? நீங்கள் ஹம்ஸம் போல என் தோஷங்களை மறந்து, ஸாரமாகிற என் குணங்களை மாத்திரம் அறிந்து, கிருபை செய்யமாட்டீர்களா? ராக்ஷஸிகளை மன்னித்த சீதா பிராட்டியின் ஸந்நிதியில் வீற்றிருக்கும் ஹே ஸரஸி ஜாஸனு, அப்ரமேயா, அனுமயனுகிற நாராயணு, ராமய்யா, பரத பிரியா, விஸ்வாமித்திர பிரியா, என் மனேரஞ்சிதா, பத்மநாபா, வேதப் பெருமாளே, என் ராதிகா, மஹா விபூதே, என்னிடம் உன் மாயாஜாலங்களைக் காண்பிக்காதே. நுண்ணிய இடை அழகுள்ள சீதாபிராட்டியின் நாதா, உன் கிருபாதிருஷ்டிகளும், உன் திருஷ்டி பதமும் எனக்கு எப்போது கிடைக்கும்?]

பிரஹஸ்பதி பகவான் தேவராஜனைப் பார்த்துக்கொண்டு சொல்லலானுர். "தேவராஜா, பயப்படாதே. சீதாபதியாகிற ராமன் ஸுரஸேவகன். ஸுரப்பிரியன். தர்மத்தில் பிரியமுள்ள தேவர்களைப் பிரத்யக்ஷமாகப் பார்க்கும் ஸுராத்யக்ஷர். (காம

க்ரோதத்தினல் தேவர்களிடமும் ஏற்படும் தோஷங்களையும் மறந்து தேவர்களுக்கு ஹிதத்தைச் செய்யும் தேவாதிதேவனும் காமதேனுவாகவும் கோவிந்தனுகவும் விளங்குபவன். தன் மீது நம்பி வாழும் கோபர்களைக் காத்த மஹாகிருபாளு.) உன்னுடைய தர்ம ஹ்ருதயத்தில் பரதனிடம் நட்பும் பக்தியும் விஸ்வாசமும் ஏற்பட்டிருக்கிறது. பாற்கடலைக் கடையும்போது உன்னல் சந்தோஷப்படுத்தப்பட்ட லக்ஷ்மிதேவி ஸ்ரீராமனுடன் ஸ்வயமாகவே விருக்கும்போது, உனக்கும் தேவர்களுக்கும் நன்மையும் ஸ்ரேயசும் ஏற்படும். ஆகையால் கவலைப்படாதே. இந்த விஷயத்தில் கடவுள் ஒரு தீர்மானம் பண்ணியிருக்கிருர். வியாகுலத்தை விடு.'' (1338)

''தேவராஜா, தேவபதி, இப்பொழுது பரதனுடைய பக்தி பிரபாவங்களையும் பிரபத்தியோகத்தின் பிரபாவங்களையும் பார். தன் விபு ஐஸ்வர்யங்களுடன் கூடிய மாயனுகிற ரகுநாதன் மோஹத்தை யொழித்த பரதன் வசம் பூர்ணனுகவும் உதாரனுகவும் விளங்குகிருன். பரதனுடைய ராம பக்தியையும் தியாக சீலத்தையும் ராம வியோகத்தினல் ஏற்படும் துக்கத்தையும் ராமஸ்வாமியின் ஸம்ஸ்லேஷத்தினல் அடையப்பெறும் ஆனந்த மஹத்வத்தையும் ராமனுடைய திருவடி ஸம்பந்தமே பரமார்த்தம் என்று பகவத் ப்ராப்தியையே வரிக்கும் பரதனை ஸ்மரணை செய்து, பிரேமையுடன் அனுஸ்மரணை செய்யும் பாகவத உத்தமனுக்கு ஸ்ரீராமனுடைய அனுத்தமமான ஸ்ரீப்ராப்தி கிடைக்கும்போது பயத்திற்கு இடம் ஏது?'' (1339)

ஸுரகுரு, புவன மங்களத்தைச் செய்யும் தாரையின் கணவராகிய பிருஹஸ்பதி பகவானுடைய வசனங்கள் தேவர்களுக்கு ஹிதத்தைத் தருவதாகவும் ருசிகரமாகவும் ஸர்வ ஸம்மதமாகவுமிருந்தன. ஸர்வாத்மன், ஸர்வ அந்தர்யாமியான ரகுவரன் ஸ்ரீராமன் தேவகுருவுக்கும் தேவராஜனுக்கும் நடந்த சம்பாஷணைகளையும் தேவபதியினுடைய மனக்கஷ்டங்களையும், தேவமாதர்களின் சிறைவாசத்தையும் அறிந்து, மனத்திற்குள் கஷ்டப்பட்டார். பரதனும் தன் நிஜ அறிவினல், எது தனக்கும் லோகத்திற்கும் ஹிதத்தைத் தரும் என்று எண்ணினவராக பொறுப்பு தன் தலையில் சுமத்தப்பட்டவனுக, கோடிக்கணக்கான யோசனைகளை அநேக பிரகாரம் ஆராய்ந்து பார்த்தான். (1340)

கடைசியில் மோஹம் நீங்கினவனுக, பரதன் தன் மனத்திற்குள் (அர்ஜுனன் கண்ணன் கழல்களில் பணிந்தமாதிரி) நிச்சய புத்தியை அடைந்தவனுக, ஸ்ரீராமனுடைய சாஸனத்தை நிறை

வேற்றுவதே தனக்கு கடமை, லோக கல்யாண மார்த்தமாக விளங்கும்; ஸ்ரீசீதாபதியான ராமனின் ஆக்ஞையைப் பரிபாலிப்பது தனக்கும் ஹிதம் என்று முடிவுக்கு வந்தான். ("ராமனுடைய கட்டளைப்படி நடப்பதுதான் எனது திலகம், எனது முடிவு. பரதா, நீ எதைச் செய்யச் சொல்கிருயோ, அதை நான் உனக்காகச் செய்வேன் என்று வாக்குத் தத்தம் செய்த கிருபாளு; எனக்காக அவர் தன் வ்ரதத்தையும் கூட விட்டு விடுகிறேன் என்ருர். (பிஷ்மரிடம் ஆயுதம் ஏந்தி நடந்து சென்ற கண்ணன் ஞாபகத்திற்கு வருகிறது.) ஒரு முறை என் பிரபுவை வணங்கிஞல், எல்லாவற்றையும் அளித்துவிடும் சுலபன்.) "என்னிடம் அத்யந்த ஸ்நேகமும் கிருபையும் கொண்டவர். எனக்கு பாக்கிய வடிவமாகவும், எனது துராசை மோஹம் சகல பாபங்கள் ஆகியவற்றை வேருடன் நாசம் செய்யும் புருஷோத்தமன், எனக்கு அவருடைய அனுக்ரஹம் பரிபூர்ணமாக விருக்கிறது." (இந்த சரீரம் உள்ளவரை அவனுடைய திட்டம்தான் நடக்கப்போகிறது. அவருடைய திருவுள்ளம் எவ்விதமோ தெரியவில்லை. வ்யக்தமான பிரதான புருஷர். அவனே விராட். ஸ்வராட்டாகிற ஹ்ருஷிகேசன். ஸத்யசங்கல்ப, ஸத்ய வ்ரத, ஸத்ய பராக்ரமா ஸஹலேதர விலக்ஷணன். ஸம்ராட்டல்லவா அவன்.)" (1341)

"என் பிரபு சீதாராமன் என்னிடம் அதிகிருபாவேசனுக, அத்யந்த அனுக்ரஹமுள்ளவனுக, பார்க்கிருர், பேசுகிருர். (குசேலர் கிருஷ்ணனைப் பற்றி சிந்தித்து இவ்விதமே ஆலோசித்துக் கொண்டு வீடு வந்துசேர்ந்தார் என்பதும் ஞாபகத்திற்கு வருகிறது.) (இவரிடம் யாசிக்க வேண்டியது ஸ்ரீரங்கபதம்தான். அடிக்கடி அபராதங்கள் செய்தபோதிலும் அவனுடைய பத விசேஷத்தால், வெங்கடேச தயை நமக்கு எதையும் கொஞ்சமும் கூட குறையாது கொடுக்கிறது. வெங்கடேச பதம் மஹத்தான யோகக்ஷேமத்தை வகிக்கும். அந்த முகுந்தனுடைய பதம் யோகி சித்தர்களாலும் தேவராஜாவினுலும் வஸிஷ்ட பராசர மார்க்கண்டேய, வியாஸ சுக நாரதாதிகளாலும் வேண்டப்படுவது. கிடைத்தும் அனவரதமும் அவனே ஸந்தமும் கிடைக்கச்செய்கிறது. அவனுடைய பாதங்கள் சீதையின் தாமரை இணையடிகளுக்கு ப்ருங்கி போல வந்துசேரும் ஆனந்த வண்டு போலவும், நித்ய மணமாகவும், நித்ய பரிமளமாகவும், நித்ய அம்ருதமாகவும் சேவிக்க சேவிக்க ஆவா வென்ருராய் தருளைக் கொடுப்பதாக விருக்கின்றன. நான் நிர்பரனுகி விடுவேன். கல்யாண ஆத்மனுகவும் ஸ்ரீரங்கநாத, கமலா காந்தனுமான வைகுண்டபதி

நம்மிடம் நிலையாக நிற்பவன்.") என்று தனக்குள் தெளிந்த வனாக மஹாபாகவத உத்தமனான பரதன் (ஸ்ரீ சீதாராமனை த்வய மந்திரத்தை அனுசரிப்பவனைப் போல) கைகள் கூப்பி, அஞ்சலி பந்தத்துடன், சுக்ருத பிரணாமங்கள் செய்து அம்ருதம்போல தன்னையும் ஸகல லோகங்களையும் வாழவைத்தான். ஸ்ரீராமனைப் பார்த்து அழகான வசனங்களைச் சொல்ல ஆரம்பித்தான். (அந்த பரதனுக்கு நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.) (1342)

"என் ஸ்வாமியே, நான் உமக்கும் சீதா பிராட்டிக்கும் நிரந்தர தாஸனாக விருக்கிறேன். நீங்களோ கிருபா அம்பு நிதி. (என் உள்ளத்தில் ஹ்ருஷிகேசனாகவும் அந்தர்யாமியாகவும் என்னை ஆட்கொண்டு ப்ரேரணை செய்கிறீர்.) ஹே லோககுரு, என் குருவாகிற வஸிஷ்ட பகவானையும் சந்தோஷப்படுத்தும் ஸ்வாமியாகிற நீர் எனக்கு அனுகூலராகவும் இரும். (உம்மிடம் இயற்கையாகவே கர்வமும் அஹங்காரமும் இல்லாமையால், உம் முடைய பரத்தத்வத்தைப் பாராட்டாமல், ஆஸ்ரிர்தர்களைக் காப் பாற்றுவதில் ஊர்ஜிதராகவும் எளியவராகவும் காணப்படுகிறீர்.) அதனால் நான் தைர்யமடைந்து, என் மலினமான மனத்தில் தோன்றியதும் வீணாக கற்பித்துக்கொண்ட தோஷங்கள், அக் ஞானங்கள், மோஹங்கள் யாவையும் நாசப்படுத்திவிட்டீர்கள். ஸ்வாமி, என்பயங்கள் நாசம் செய்யப்பட்டு, உமது அன்பை என் நாதனாக, நான் அடையப் பெற்றேன்." (1343)

"தமஸ் என்கிற இருளில் தவித்த எனக்கு ஹ்ருதய பிரகாசம் உம்மால் அளிக்கப்பட்டிருக்கிறது. இனி நான் யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. திசை மூலைகளை அறியாதவரை சூரியனைக் குறை கூறிப் பயன் என்ன? (பத்மப்ரோபோதனும் மார்த்தாண்டனு மாகிற சூரியன், என் ஸ்வயம் பிரகாசனை, நான் தெரிந்து கொண்ட பின்பு, என் மார்க்கதரிசியை அறிந்துகொண்ட பின்பு, நான் இனி கலங்கவேண்டியதில்லை.) தேவதேவா, உம்மை இழந்த துர்பாக்கியமும், அதை இழப்பதற்கு புத்தியின்மை யினால் செய்யப்பட்ட என் தாயாருடைய பிடிவாதமும், கடவுளின் சாஸனமும், காலத்தின் துர்கதியும்." (1344)

இவை எல்லாம் சேர்ந்து கால் ஊன்றி நின்று என்னை அழிக்க வந்தன. ஆனால் சரணாகதர்களை ரக்ஷிக்கின்ற நீர் உம்முடைய பிரதிஞ்ஜையை, அதாவது "எனக்கு சரணமடைந் தவன். நான் எல்லாவிதத்திலும் காப்பேன்" என்ற வாக்கை நிர்வஹித்தீர். எனக்கு அடைக்கலமளித்துக் காத்தருளினீர். இது ஒன்றும் புதிதான வழியல்ல. லோகத்திலும் வேதத்திலும்

இந்த சரணுகத ரக்ஷண விரதமானது நன்கு ப்ரகடனம் அடைந்ததே. இதில் மறைந்திருப்பது ஒன்றுமில்லை. (1345)

கருத்து :—உம்மை இழந்த துர்பாக்கியமும், காலத்தின் துர்கதியும் எல்லாம் சேர்ந்து உம்முடைய ஸ்வரூப ஸ்வபாவ பாக்யங்களை அனுபவிக்கமுடியாமல் என்னை வருத்தத்திற்கு ஆளாக்கிவிட்டன. ஆனுல் நீர் பிரணதார்த்திஹரர். (ஒருக்காலே சரணம் என்றவர்க்கு, ஒழிவில் காலமெல்லாம் பிறந்து தீனனுகி, பகவத் பாகவத ஸம்பந்தம் பெருமல் அவதிப்பட்டு நின்னருளால் கதியின்றி மற்ருென்றில்லேன், என் திருமால் அடைக்கலம் கொள், என்னை நீயே அடைக்கலம் கொள் என்று சொல்லுபவருக்கு, கிருபாளு, கிருதகிருத்யரே, க்ருதாகமரே, "அக்ரதः ப்ரயயௌ ராமா" என்கிறபடி நீரும் பிராட்டியுமான சீதையும் என் முன் நடந்து, "குருஷ்வ மாமனுசரம்" என்று பிரார்த்தித்த லக்ஷ்மணனை திருவுள்ளம் பற்றித்தானே வழி நடத்திய நேயரே, நயரே, சரணுகதர்களின் கட்டளைகளில் அடங்கியிருக்கும் பிரபோ, பக்த பராதீனரே, பத்ரம் பலம் தோயம் என்கிறபடி அமுது செய்யும் பிரபோ, பயம் த்யஜத பத்ரம்வः என்கிறபடி, ஆளவந்தார் ஸ்ரீராமானுஜரை தன் தாமரைக் கண்களால் குளிர்ந்து நோக்கி, "யஸ்ய பிரஸாத கலயா பதிரஸ் ஸ்ருணோதி" என்கிருப் போலே, ஐயா, உமது தாஸன், உம் அடியார்க்கு அடியார், ஆகிய என்னை, ஸ்வாமி, நிர்வாஹம் செய்யவேண்டும். "ஸக்ருதேவ" என்கிறபடி ஸர்வ ரக்ஷகத்வம் பொருந்திய உம்மிடம் ஸதா சார்ய கடாக்ஷத்தாலே) நியஸ்த பரனுன பிரபத்தி பண்ணிய எனக்கு ஆசார்ய நியமனமே கைங்கர்யம் என்று துணிவு கொண்டேன். நீரும் ஸ்வாமி, என்னுல் பரமார்த்தத்தை அடையப்பட்டதுமாதிரி தெளியவேண்டும். ஐயா, இது நான் புதிதாக அனுஷ்டித்த வழி யில்லை. (இது இந்த ஜகத்தில் பரம்பரை பரம்பரையாக சங்கிலித் தொடர் போல அனுஷ்டித்ததும், வேதங்களின் உபாயம் உபேயம் நீர்தான், உம்முடைய அடித்தாள்கள்தான் என்கிற நிலையை பிரகடனப்படுத்துவதும், "மாம் ஏகம் சரணம் வ்ரஜ" என்று உம்மால் அர்ஜுனனுக்கு உத்தோஷிக்கப்பட்டதும், ஸர்வ ஸம்மதமுமான உமது ஸ்ரீபாதங்களையே வெளிப்படுத்தும் சாஸ்வ தமும் ஸநாதனமான வழி அல்லவோ ?) (1346)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மியுடன் கூடிய நாராயணு, தீப்தமூர்த்தியே, அநேக மூர்த்தியே, கிருஷ்ணுவதாரத்தில் பதினுயிரம் ஸ்திரி

களின் நடுவிலே பிரகாசித்த பரவாஸுதேவா, ராஜராஜேஸ்வரா, ராஜீவாக்ஷா, அப்ராகிருதமான திவ்ய ரூபத்தை உடைய அமூர்த்திமான், பராசரர், துருவனால் அநேக வித ரூபங்களுடன் காணப்பட்டாலும் ஏகமூர்த்தி என்று சொல்லப்படும் துருவ நாராயண மூர்த்தியே, ஸர்வ ஸத்வமனோரதனே, ஆச்சரியப் படத்தக்க ரூபங்களையும் செய்கைகளையும் குணங்களையும் சங்கு போன்ற ஆயுதங்களையும் கொண்ட மாமாயனே, "உனக்கு நாமங்கள் பலவிருக்கின்றன. நீர் சகல சராசரங்களுக்கும் பிதா வான ஹிரண்ய கர்ப்பராக விருக்கிறீர். நளினதள நயனபூர் ணரும் குறை ஒன்றுமில்லாத வருமாக விருக்கிறீர். பக்தர்களைப் பரிபூர்ணராகச் செய்கிறீர். என் தோஷங்கள், கர்மங்கள், ஞானங்கள், பக்தி பிரபாவங்கள், பிரபத்தி யோகங்கள் எல்லாம் சரிவர நடத்தப்பட்டிருக்கவில்லை. நீர் பரம புருஷன், உமக்கு சமமாக சௌலப்யாதி குணங்களில் வேறு ஒருவருமில்லை. ஸகலத்துக்கும் காரண வஸ்துவாகிற பொருளாகவிருக்கிறாய். உன்னைவிட பூஜிக்கத் தகுந்தவர் வேறு ஒருவருமில்லை," என்று அர்ஜுனனும் யசோதையும் கௌஸல்யையும் பரதனும் தியாக ராஜரும் காட்டிக் கொடுத்தபடி எனக்கு விளங்குகிறாய். மாதா பிதா யுவயோ:, என்று என் ஆசாரியர்கள் சொல்லியிருக் கிறார்கள். "விதிதஸ் ஸஹிதர்மக்ஞ" என்று பிராட்டி ராவண னிடம் இராமனிடத்தில் நட்பு கொள்வாய், அவர் தர்மங்களையும் அதர்மங்களையும் நன்கு அறிவார் என்று கூறினாள். விஸ்வ விக்யாதனாகவிருக்கும் ராமா, நீர் பூர்ண விஹாரனாகவுமிருக்கிறீர். "மித்ரபாவேன ஸம்ப்ராப்தம்," என்னிடம் தோழமையோடு வந்தவனிடம் நான் இருந்த இடம் வந்து "நான் உன்னைச் சேர்ந்தவன்" என்று யாசிக்கிற எவனையும் அவன் தோஷங் களையும் பாராமல் அபயம் அளித்து, ரக்ஷித்தருளுவேன்." என்று சொன்னவன் நீ, என்னைப் பெற்ற அத்தையாய், தந்தையாய் அறியாதென அறிவித்த அத்தா, என்று ஆழ்வார்கள் காட்டிய சேஷசேஷி பாவத்தைக் காட்டிய மஹா ஆசார்யர்களை புரக்ரம மாக வரும் வழியில் எனக்கு, மஹா கிருதக்ஞையுடன், ஆசாரியர் களுக்கு நான் பிரதி உபகாரம் செய்வதற்கில்லை; என்கிற எண்ணத்துடன் "ஆ றெனக்கு நின்பாதமே சரணாகதந்து ஒழிந்தாய், உனக்கு கைம்மாறு நான் ஒன்றிலேன், எனதாவியு முனதே" என்று ஆழ்வார் எம்பெருமானிடம் பேசினபடி பரதன் அன்று சீதா பிராட்டியின் ஸந்நிதியில் லக்ஷ்மண அக்ரஜனிடம் பேசினான். புராண இதிஹாஸ ஆகமங்களில் கூறப்பட்ட

விஷயங்களை பரதனும் பிரஹஸ்பதி தேவராஜனுக்கும் எனக்கும் சொன்னார். ராமாயணத்தில் வானரக் கதை, காகாசுரன், ராக்ஷஸனான விபீஷணனுடைய கதைகளும், மஹாபாரதத்தில் திரௌபதியின் சரணாகதியும் சொல்லப்பட்டிருக்கின்றன. கஜேந்திரன், ஸுமுகன் என்னும் சர்ப்பம் (மாதலியின் மாப்பிள்ளை) சரணமடைந்து பெரிய திருவடியினிடம் தீங்கு நேராமல் வரம் பெறவில்லையா? விஸ்வாமித்ர பிரியா, உன் குருவான விஸ்வாமித்ரர் திரிசங்கும், சுனஸ்சேபனும் ஆபத்தை அடைந்தபோது அவருடைய பிரும்ம தேஜஸ்ஸினால் காப்பாற்றப்படவில்லையா? ஹே நரஹரி, நரோத்தமா, தைத்ரீய உபநிஷத்தில் தஸ்யைவம் விதுஷ: என்று கூறப்பட்ட புருஷவித்யை, பிரபன்ன வித்யை போலவும், ஸ்ரீ பாஷ்யக்காரர் சொல்லியபடி பிரும்ம உபாஸனத்தை அனுஷ்டிப்பவனுக்கு பிரம்ம ப்ராப்தியே பயனென்றும், ஸ்ரீதேசிகன் அருளிச் செய்தபடி பிரும்ம வித்யாங்கம் கொண்ட பிரபத்திக்கு ராமா, நீ தானே பிராப்யம். பிரபன்னன் நிர்பரன், நிர்பயம் கொண்டவன். அதுபோல ஸ்ரீ தியாகராஜருடைய தோஷங்களைப் பாராமல் அவருடைய மனத்தில் தோன்றிய ப்ரேமை மாத்திரம் அனுபவித்த ராஜீவாக்ஷா, உன் சரணங்களைத் தேடிவந்த என்னை "நான் உன்னையன்றி இலேன் கண்டாய் நாரணனே, நீ என்னையன்றி இலை" என்கிற ரக்ஷ்ய ரக்ஷகம் உறவு ஒழிக்க ஒழியாது என்கிற ஸம்பந்த ஞானத்துடன் உன் திருமா மகள் வருடிய பாதங்களை ஆஞ்சநேயர் நாரதர் வஸிஷ்டர் பிருஹஸ்பதி வாமதேவர், விஸ்வாமித்திரர் போன்ற மஹான்களை ஆஸ்ரயித்த வழியில் தேறின எனக்கு கால விளம்பனம் செய்யாதே. பெரிய வாச்சான்பிள்ளை அவதாரிகை செய்தபடி "ராமா, கிருஷ்ணா தன் செயலாவது யாதொன்றுமில்லை; கண்ணன் வந்தபோது வருகிறான்" என்று, நான் பக்குவம் அடைந்த பின்பு வருவேன் என்றுமட்டும் தயவு செய்து சொல்லாதே.]

"எனக்கு எல்லா ஜகங்களும் ஆரோபித்து கெடுதல் நினைக்கட்டும். (நீர் விஷ்ணு, சர்வசக்திமான், ரதாங்கபாணி என்கிறப் போலே) கோஸாயி, என்னைக் கட்டிகாக்க வந்த மஹாகுரோ, நீர் ஒருவர் மாத்திரம், என் ஈஸ்வரரே, அனுகூலமாக விருந்தால் எனக்குப் போதும். (சர்வமங்கள ஸ்வரூபியான பீஷணரே, அருள்நோக்குடன் என் அபராதங்களைப் பார்க்காமல், மித்ர பாவத்துடன் வந்திருக்கும் என்னை, அனுகூல்ய சங்கல்பராக என் நியாஸபரத்தை அங்கீகரித்து, உம்முடைய பரிபூர்ண கடாக்ஷத்தை யோக்யதையின்றியும் ஸ்வீகரித்தவனான எனக்கு

"தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது, வாயினுற் பாடி மனத்திருல் சிந்திக்க போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினிற்றூசாகும்" என்கிருப் போலே, ஸ்வாமி, ஆழ்வார்கள் அனுபவத்தையும் நாதமுனிகள் பராசரர் முதலியவர்களை புரஸ் ஸகாவாகக் கொண்ட என்னை ஆட்கொள்வாய்) பிரபோ, உம்மையின்றி ஸரள ஸுலபரான உம்மிடமின்றி (எனக்கு நன்மையோ, இந்திரலோகம் ஆளுவதையுமோ, என் நாரணனே வேண்டேன். பாஞ்சஜன்யம் என்கிற சங்கை சகல சராசரங்களும் நடுநடுங்கும்படி ஒலிக்கும் பவளவாய் அச்சுதா, அமரர்களுக்குப் பதியே, உன் சுவை தவிர இந்திரலோக சுவை பெரிதில்லை. மற்றவர் எதைக் கொடுத்தாலும்) நான் ஒன்றையும் ஸ்வீகரிக்கமாட்டேன். நீர் தேவ தருவாகிற கற்பக விருக்ஷம். (ராஜராஜேஸ்வரன், நான் உன் வத்ஸன், ஸ்வபாவமாகவே உனக்கு உதாரமான மனது, பிரபத்தியாகிற சிறிய உபாயத்திருல், மஹாவிஸ்வாசத்தை அடைந்த எனக்கு மஹத், ஹிமவத், ஆகிற உன் சிவமான ஸாம்யத்தைக் கொடு.) கற்பக விருக்ஷமாகிற உமக்கு வேண்டியவன் வேண்டாதவன் என்கிற பாகுபாடு கிடையாது, அதுவேண்டாம் ஸ்வாமி, என்னிடம் தயவு செய்து வேண்டாம்." (1347)

"அது மாத்திரமா, ஸ்வாமி, கற்பக விருக்ஷத்தினிடம் செல்பவன் இது கற்பக விருக்ஷம் என்று தெரிந்து கொள்ளவும் வேணுமா? அதனுடைய அடி நிழல் சகல விபரீத எண்ணங்களையும் போக்கி தரித்திரனுகை விருந்தாலும் அவரவர்களின் ஸர்வ ஸத்வ மனோரதங்களை மாத்திரமே அந்த தேவ விருக்ஷம் காம தேனுவைப் போல பூர்த்தி செய்கிறதல்லவா?" (1348)

"பிரபு, நான் என் பரம ஆசாரியரான வஸிஷ்ட பகவானையும், உம்மையும் அதிஸ்நேக மித்ரபாவத்துடன் கண்டு, என்னுடைய மனக் லேசங்கள் அழிந்தன. என் பாபங்கள் ஒழிந்தன. ஒரு விதமான சந்தேகத்தையும் அடையாமல் உம்மிடம் மஹா விஸ்வாசம் வைத்துவிட்டேன். (தயையாகிற சீதா தேவியுடன் கூடவிருக்கும் சீதாபதே, கருணகர, பத்மாபதே, திருமகளின் கடைக் கண்களில் ஒதுங்கும் ரமாபதே, நான் உம்மால் ஒதுக்கப்பட உரியனல்லேன். (அர்ஜுனன் பிரதக்ஷணம் செய்தபடி) நமஸ்காராதிகள் செய்திருக்கும் என்னை, ஸ்வாமி, பிரியத்துடன் ஸ்வீகரித்து ஏற்றுக்கொள்ளும்). தேவரீருடைய அன்பு பொறுமை ஆகிய குணங்களுக்கு பாத்திரமாகவிருக்கும் என்னை கடாக்ஷித்து ரக்ஷித்தருளும். தாஸர்களின் ஸர்வ ஸத்வ

மனோரதத்தைப் பூர்த்தி செய்யும் ஸர்வாத்மன், உம்மை என் தவத்தின் பலனாக இப்பொழுது பார்க்கப்பட்டது. இப்போது என் மனோரதங்களும் பூர்த்தி செய்யப்படட்டும், ஜகத்பதே, ஸர்வபூத ரூபமாக எல்லாப் பிராணிகளிடமும் விளங்கும் ஆதி மூர்த்தியே, நாராயணா, மஹாலக்ஷ்மிபிரியா, ஹே தயாபூர்தியே; உம் இஷ்டப்படி நடக்கவிரும்பும் என்னிடம் உமது சித்தத்தில் விசாரம் கிலேசம் எதுவும் ஏற்படவேண்டாம்.'' (1349)

"நான் உம்முடைய தாஸன் என்று பறை செய்து கொண்ட பின்பு, என் நியம அனுஷ்டானத்தை உமது திருவுள்ளப்படி மாற்றி உமக்கு ஏற்றபடி நடந்து கொள்வது என்று தீர்மானித்த பிறகு, ஸ்வாமி, நான் அந்த வைஷ்ணவ ஸ்வரூபத்தினுடைய தாஸ்ய புத்தியை அடைந்துவிட்டேன். பிரபு, உமது திருப்தியையே மனப்பூர்வமாக நான் விரும்புகிறேன். அதுவே எனக்கு ஹிதத்தைத் தரும். அவ்விதம் நிலையிலிருக்கும் எனக்காக உம்முடைய வ்ரத பங்கமும், சத்யசங்கல்பத்திலிருந்து நழுவுதலும் எனக்காக ஏற்படவேண்டாம். நான் உம்முடைய நிஜதாஸன் ஆனபடியால் உமக்கு சேவகனிடத்தில் எவ்விதம் திருவுள்ளமோ, அதுபோல நீர் சித்தம் செய்து கொள்ளலாம். நான் சகல ஆசைகளையும் லோபங்களையும் மதங்களையும் நிராஹரித்து விட்டு, உம்மால் கடாக்ஷிக்கப்பட்டு, பிரபோ, என்னை ஆத்மஸம்க்ஷேபணம் செய்து கொண்டுவிட்டேன். அதனால் நான் பரிபூர்ணமான சுகத்தை அடைவேன்.'' (1350)

"என்னை ஆட்கொண்ட பிரணதார்த்தி ஹரரே, நீங்கள் மீண்டும் அயோத்தி திரும்பி வருவதில் என்னுடைய ஸ்வய அபிப்ராய மாத்திரமின்றி, இங்கு வந்திருக்கும் எல்லோருக்கும் ஆசையாகவுமிருக்கிறது. அதுபோல உம்முடைய ஆக்ஞையை நிறைவேற்றுவதிலும் கோடிக்கணக்கான வழிகளில் லாபங்களும் கல்யாணங்களும் ஏற்படும். இதுதான் என் சொந்த மனத்தின் அபிப்பிராயமும் பரமார்த்தமாக விளங்கும். (தத்வம், ஹிதம், புருஷார்த்தம் எனப்படும் மூன்று விதஸாரமாகத் தோன்றுகிறது. இதுதான் எனக்கு வஸிஷ்டர் முதலிய பரம ஸ்ரேஷ்டர்களான ஆசார்யர்களால் உபதேசிக்கப்பட்டதும், ஸகல சுக்ருதங்களின் பலனாகவுமிருக்கும் பரமாம்கதி என்கிற உம்முடைய திருவடிப் பாதங்களும் சீதையின் கடாக்ஷ வீக்ஷண்யத்தால் ஏற்படும் புருஷகாரத்வமும், லக்ஷ்மணன் முனி வஸிஷ்டமுனி போன்ற ஸதாசார்ய க்ருபையால் ஏற்படும் பெரிய வீடாக (எம்மா வீடாகிற மோக்ஷமுமாக) கருதப்படும், சுபமானகதிக்கு அழகு

வைத்ததுபோல, படிகள் நிர்மாணிக்கப்பட்டது போல, ஒவ்வொரு படியிலும் அழைத்து கராவலம்பனம் செய்யும் உத்தம மார்க்கத்தரிசிகளோடும் ஸ்ருங்காரமாகவும் எளிதாகவும், சுலப மாக அடையக்கூடியதாகவும் அமைக்கப்பட்டிருக்கிறது.'' (1351)

''பிரபு என்னுடைய இன்னொரு வேண்டுகோளையும் பிரார்த் தனையையும் கேட்டு, ஸ்வாமி தாங்கள் அருளவேண்டும். அதைக்கேட்டு எது உசிதமோ, அதன்படி செய்யும். தங்களுடைய ராஜ்ய லக்ஷ்மிக்காக ஸகல சாமக்ரியைகளையும் ஸாதுக்களுடனும் மஹாஜனங்களுடனும் தயாரித்துக்கொண்டு வந்திருக்கிறேன். தங்களுக்கு அரசுப்பட்டத்தைக் கொடுக்க நான் ஸர்வஸம்மதமாக விருக்கிறேன். பிரபுவாகிற நீங்கள் எதை மனத்தில் வரிக்கிறீர்களோ, அதன்படி நடக்க நான் சித்த முள்ளவனுக விருக்கிறேன். அந்த ராஜ்ய லக்ஷ்மியை அடைந்து தாங்கள் எல்லோரையும் திருப்தி செய்துவைக்க இஷ்டப்பட்டால், அதன்படி காரியம் நிறைவேற்றிக்கொள்ளலாம்.'' (1352)

[தியானம்

ஹே துளசிதாஸ பிரபோ, உம் கருணையால் அல்லவா நான் தியாகராஜர் ஆஞ்சநேயர் புரந்தரவிடல் போன்ற மஹான்களால் ஷ்ருதிவேத்யனுக அறியப்பட்ட ராம சீதாவை அறிந்தேன். பரக்கச் சொல்லியும் ஓயாது புகழ்ந்தும், காலமெல்லாம் சிந்தித்தும் உம்முடைய மஹோபகாரம், என்னுல் அறியக் கூடாதபடியிருக்கிறது. வியாஸவாக்கியப்படி ''ஸர்வஸ் தாது துர்காணி, ஸர்வோபராணி பஸ்யது.'' அனைவரும் சம்சார கஷ்டத்தில் நின்று நீங்கவேணும், அனைவரும் நன்மையை அடையவேண்டும் என்கிறபடி, பிரபு, உம்மை நான் அடைந்த தால் அல்லவோ ஸதாசார்யனின் பாக்கியத்தைப் பெற்றேன். ராமநாம ஜபத்தில் ஜீவனம் செய்தவரும் ராமமங்கள விக்ரஹத்தை ருசிகண்டு அம்ருதம் உண்டதைப் போல ஆனந்தத்துடன் அனுபவித்தவரும், ஆஞ்சநேயருடைய அருளால் கலிபுருஷனை விரட்டிய துளசிபிரபோ, உம்மை வணங்குகிறேன். கௌஸல் யையின் ஸுபுத்ரரான தசரதராமனை வணங்கிய என் ஆசாரி யனே, உமக்கு அநேக சுக்ருத நமஸ்காரங்கள் செய்கிறேன். கமலாவின் கரங்களைப் பிடித்துக்கொண்டிருக்கும் கமனீய காத்ரனே ஸ்ரீராமா, உன்னைத் தெரிந்துகொண்டு காமத்துடன் வாடும் பக்தர்களுக்கு மித்ரனும், கலியின் கல்மிஷங்களுக்கு சூரியன் சந்திரனைப் போன்றவரும், முனிவர்களுக்கு தாஸனும்,

நாகசர்ப்பத்தின்மீது உறங்குபவரும், வேதாத்மாவும், துளசி தளம் படிந்த ஸ்ரீ சீதாராம சரணங்களை உமது கிருபையால் நான் அடைய விரும்புகிறேன். என் ஆசாரியரான மதுரகவிகள் சொல்லியபடி "அன்னையாய், அத்தனாய் என்னையாண்டிடனும் தன்மையான்" என்று நினைத்து, துளசிதாஸரே, உம்முடைய திறத்தில் நான் ஒதுங்கி, எவ்விதம் எம்பெருமானாராகிய ஸ்ரீ ராமானுஜர் தன் சிஷ்யர்களைப் பார்த்து, "த்வயத்தினுடைய அர்த்தானு ஸந்தானம் பண்ணுங்கள்; அதற்கு யோக்யதை இல்லாமல்போனால், என்னுடையவன் என்று அபிமானிப்பான் ஒரு வைஷ்ணவனுடைய அபிமானத்தில் ஒதுங்கி வர்த்திக்கக் கடவாய்" என்கிற நியமனசாஸனப்படி, உமது திருவடிகளில் ஒரு நமஸ்காரத்தால் கைமுத்ய நியதியின்படி மிகச்சிறியதாகிய என் ஆத்மார்த்த க்ருதக்ஞையைத் தெரிவிக்கும் நமஸ்காரத்தால் ப்ரபோ, ஸ்வாமி, தீனதயாளு, வைஷ்ணவபிரியா, ராமபிரியா, மிகவும் உயர்ந்ததும், பராசரரால் பிரும்ம வாக்கின்படி "தத் விஷ்ணோ: பரமம் பதம்" என்றும், முக்தானும் பரமாம் கதிঃ என்கிற ஸ்ரீ சீதா ராமபதத்தை உமது அனுக்ரஹத்தால், சிவசக்தி ஐக்கிய ஸ்வரூபனான மாருதியின் திருவுள்ளத்தால் நான் அடையவேண்டும். நான் செய்யும் பிரபத்தி, ராம நாராயண மந்திரம், ஸ்ரீ சித்த நாராயணகதிঃ உமது கிருபையினால், அபாரதயை பொருந்திய கடாக்ஷத்தால் ஸபலமடையச் செய்யவேண்டும். ஆளவந்தார் அருளிச் செய்தபடி "ஸதாசார்ய கடாக்ஷத்தாலே நியஸ்த பரனான பிரபன்னனுக்கு ஆசார்ய நியமனமே கைங்கர்யம்" என்று துணிவு வேண்டாவோ என்று அருளிச் செய்தது போல, உமது கைங்கர்யம் எனது பரம புருஷார்த்தம் என்று என்மனம் தெளிந்தேன். தேவதேவா, ஜகதீஸா கிருபை செய்யவேண்டும். என் மஹத்தான அபராதங்களைப் பொறுக்கவேண்டும்.]

"பகவானே, என் தம்பியான சத்ருக்னனுடன் நான் உமது திருவுள்ள சம்மதம் பெற்றவனாக வனம் செல்வேன்; என் நாதரே, நீரும் லக்ஷ்மணனும் எல்லோருடனும் அயோத்தி திரும்புங்கள். என் கிருபாளு, என் ஆப்தபந்துவே, அவ்விதம் இஷ்டமில்லா போனால், லக்ஷ்மணனையும் சத்ருக்னனையும் அயோத்திக்குத் திருப்பி அனுப்புங்கள். நான் உமக்கும் சீதாபிராட்டிக்கும் கைங்கர்யம் செய்வதற்கு வனம் செல்வேன்." (1353)

"சீதா நாயகரே, அதுவும் உமக்கு இஷ்டமில்லாவிடில் நாங்கள் மூவரும் வனம் செல்லுகிறோம். ரகுராய், தாங்கள்

சீதையுடன் அயோத்திக்கு வஸிஷ்ட மஹாஜனங்களுடன் எழுந்தருளவேண்டும். இந்த ஏற்பாடுகளில் ஏதாவது ஒன்றில் தாங்கள் பிரஸன்னமடைய வேண்டும். தயாஸாகரா, உமது சங்கல்பம் எவ்விதமாவது நிறைவேறட்டும்.'' (1354)

''தேவா, (உபேந்திரனே) நீர் உபாயம் சொல்லும். நான் அதைச் செய்கிறேன். லோக குருவாகிற நீர் என்னை நியமிக்கிறீர். பொறுப்பு என்னுடையதாக விருக்கட்டும். என்று அனுகூல ரான நீர் நினைக்கிறீர். நானோ எனது தன்னலம் கருதியே எல்லாம் சொல்லிக்கொண்டிருக்கிறேன். ஆர்த்தி கொண்ட வனுக்கு விவேகம் இருக்காதல்லவா; (பிரபன்னனுக்கு சேஷ சேஷித்வமாகிற ஞானம் இருந்து, ஸதாசார்ய கிருபையிருந்தும், பகவத்பிராப்தி உமது திருவுள்ளத்தால் ஏற்படுகிறது. கஷ்ட ஸாதனமான வெவ்வேறு சாதனங்களை அனுஷ்டிக்கவல்லேன் அகிஞ்சனன். உம்முடைய கிருபையால் வளர விருப்பம் உள்ள வன். என் அகிஞ்சனத்தின் அனுஸந்தானமான கார்ப்பண்யம் உள்ளவன். உம்முடைய கட்டளைப்படி நடப்பது என்கிற திட ஸங்கல்ப புத்தியால் ஸர்வபாப புண்யங்களையும் ஸர்வ தர்மங் களையும் விட்டவன். யமம், நியமம், ஆஸனம், பிராணயாமம், பிரத்யாஹாரம், தியானம், தாரணம் ஆகிற ஏழு அங்கங்களோடு ஸமாதி என்கிற அஷ்டாங்கயோகம் பெற்ற வனல்லேன். ஆனல், ஸ்வாமி, அதற்குப்பதிலாக நீர் ரக்ஷிக்கக்கூடியவர்; என்னை ரக்ஷிக்கப்போகிறீர் என்கிற மஹா விஸ்வாசம் கொண்டவன். பகவத்ப்ரீதியே சரணுகதனுக்கு அவஸ்யம் போல, ஸ்வாமி, நீரே ரக்ஷிக்கவேண்டும் என்று சங்கோசமின்றி பிரார்த்திக்கிறேன். ஆழ்வார்கள் அனுஸந்தித்தபடி ''உண்ணும் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம் பெருமான்''; ''உன் தன்னோடு உறவேல் நமக்கு ஒழிக்க ஒழியாது;'' என்கிருப் போலே, உம்மைத் தவிர்த்து வேறுகதி யின்றி இருத்தல் என்கிறபடி நியாஸ வித்யையை, வேதாங்கராகக் கொண்ட சீதாராமா, உமது ஆக்ஞையை உம்முடைய கிருபை யினுல் நான் அடையவேண்டும். நான் செய்வது சரி, தர்மம் என்கிற விசாரமில்லை; எனக்கு குருவசனம்; வேதவாக்கியம் இவைகளில் மஹா நம்பிக்கை உள்ளவனுக, என் ஆத்மா உஜ்ஜீ விப்பதற்கு இவ்வளவு வசனங்களையும் சொன்னேன். பிரபு, முப்பத்துமூவர் அமரர்க்குமுன் சென்று அவர்களுடைய விரோதி களை அடக்கும் வலிமையுள்ள கலியே, செற்றோர்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா, என்னை அனுபவிப்பதிலும், உருவத்திலும்

அழகிலும் செவ்வாய்ச் சிறுமருங்கில் பிரகாசிக்கும் திருவாகிற சீதா பிராட்டியின் முன்பு "என்னை அவனோடு சேரும்படி செய்" என்று நான் அனுசந்தித்திருப்பதாலும், மஹா ஆர்த்தியான என்னை, என்சுமையை, பாரப்ருத், சரீரப்ருத் பூதப்ருத்தாகிற நீர் அங்கிகரிக்கவேண்டும்.) துக்கமடைந்தவர்களுக்கு எது செய்யக்கூடாது, எது செய்யவேண்டும் என்கிற விவேக ஞானம் கிடையாது அல்லவா ஸ்வாமி." (1355)

"ஸ்வாமியாகிற உம்முடைய சாஸனத்தைப் பெற்ற நான் மீண்டும் மீண்டும் உத்தரம் சொல்வது மஹா லஜ்ஜையாக விருக்கிறது. ஸ்வாமியின் சேவகனுன என்னுடைய லஜ்ஜை யைப் பார்த்து லஜ்ஜையே வெட்கும்படி மஹத்தான லஜ்ஜையை அடைந்திருக்கிறது. நான் மகா அபராதங்கள் செய்யக் கூடிய அவகுணங்களைக் கொண்டவன். சீதையுடன் கூடிய நீரோ ஆழமானதும் கம்பிரமானதுமான கருணை ஸமுத்திரம்; (ஸ்வாமி. அன்று அர்ஜுனன் விராட் புருஷனுன கண்ணனைக் கண்டு "பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யுঃ ப்ரியঃ ப்ரியார்ஹஸிஸ்நேகம் போல, உமது தம்பியான எனக்கு உமக்கே ஏற்பட்டதும், மிக்கப் பெயர் கொண்டதுமான கருணையை வர்ஷிக்க வேண்டும். என் நிஜ ஸ்வரூபத்தை நானே தெரிவித்தபடியால், என்னுடைய மூன்று வித தாபங்களும் அடங்கும்படி பர்ஜன்யராகவிருந்து என்னை அனுக்ரஹிக்க வேண்டும். கருணை என்கிற திருவுள்ளத்தால்) என்னைத் தாங்கள் அன்பின் காரணமாக அதிகமாக புகழ்கிறீர்." (1356)

"ஹே க்ருபாளோ! இனி உம்முடைய மனதிற்கு எதில் எந்த விதமான விருப்பமிருக்கிறதோ, அதைச் சொல்வதற்கு சங்கோசமும் இருக்காதோ, அதுவே எனக்கும் விருப்பமான தாகும். உம்முடைய திருவடிகளை ஆணையிட்டுக் கூறுகிறேன். உண்மை உள்ளத்தோடு சொல்லுகிறேன். உலகத்தில் நன்மைக் கான உபாயம் இது ஒன்றே!" (1357)

[கருத்து: நீர் கிருபாளு. நீர் என்றல் ஒருவிதமான சங்கோஜத்தை அடைய வேண்டாம். பிரபுவாகிற உம்முடைய சரணங்களே என் உபாயம்; பிரபுவினுடைய சரணங்களே என் உபாயத்தின் பலன், என்கிற பிரபன்னனுடைய யோகத்தின்படி உமது தாள்களை, அரவிந்த சரணங்களை பத்மாக்ஷியான சீதை யின் முன்பு, அடைந்திருக்கிறேன். இந்த ஒரு உபாய உபாயமே ஸகலலோகங்களுக்கும் எனக்கும் மங்களங்களையும் தரக்கூடிய தத்வம் ஹிதம் புருஷார்த்தமாகிற பகவத் ப்ராப்தி. பகவத்

கைங்கர்யம், பாகவத அனுவர்த்தி, ஆகிற பரம புருஷார்த்தத்தையும் சித்திக்கச் செய்யும். (ஸ்வாமி, நானும் ஒரு துளசிதளமாக சித்த நாராயணனின் திருவடிகளை, துளசிதாஸர் ஒதுங்கினது போல அவர் கிருபையால் தத்விஷ்ணோ: பரமம்பதம் அடையப்பெறுவேனு. சத்யமாகச் சொல்கிறேன். இது லோக கல்யாணங்களைச் செய்யும். அதற்கு இதுதான் உபாயம்.)

[தியானம்

ஹே ராமா சீதா லக்ஷ்மி, நாராயணு, பரத லக்ஷ்மண சத்ருக்ன ஸேவித சீதாராமா, கிரிஜாவுடன் கூடவிருக்கும் சிவமே, நாதாத்மகா, உன் கீர்த்தி புகழ்களையும் உன்னேடு சஞ்சாரம் செய்வதிலும் உனக்குச் சேவை செய்வதிலும் ஊற்றம் வேண்டும். பெரியவனே, உன்னிடம் பக்தி பண்ணுவது பிரபத்தி செய்வது, கைங்கர்யம் செய்வது, ஆகிய எல்லாம் செய்த பரதன் கோபிகளின் ஞானத்தை அல்லவோ அடைந்தான். தன் ஸ்வரூபத்தை வெளிக்காட்டி, அதையும் உன்னுல் அங்கீகரிக்கச் செய்து, தம்பியாகிற தன் உறவு, ஐஸ்வர்யங்கள் இரண்டையும் உனக்காகத் தியாகம் செய்துவிட்டு, உன் ஸம்பந்தம் பெற்ற பாதுகைகளை அல்லவோ அடைந்தான். தன் ஸ்வரூப விரோதிகளை அழித்தான். உன்னையே ப்ராப்யம் பிராபகமாக வரித்தான். உன் ராஜ கைங்கர்யத்தை விட மேலான ப்ராப்தி ஒன்று இல்லை என்று அறிந்தான். உன்னைத் தவிர கதி, உபாயம் உபேயம் ஆகிய இரண்டிற்குள் வேறு இல்லை என்று பிரபத்தி செய்தான். தேக அபிமானத்தால் கட்டுப் படாதவனுக, உன்னைப்போல தவவாழ்க்கையைக் கொண்டு பசுவின் மூத்திரத்தில் வேகவைக்கப் பட்ட யவதானியத்தை உண்டு, பதினுன்கு வருஷங்கள் நியமத்தோடு வாழ்ந்து வந்தான். இவைகளால் பிராட்டியைப் போல, பகவத் விஷயத்தில் அநன்யார்ஹ சேஷத்வம் ஸர்வ அவஸ்தைகளிலும் கால தத்வத்தை மீறி, நீதான் அதைத் தரமுடியும் என்று சங்கல்பித்தவனுக, உன்னிடமும் பிராட்டி முன்பும் லக்ஷ்மணன் முன்பும், இந்திரன் பிரஹஸ்பதி முன்பும் கேட்டான். உன் குலத்தில் பிறந்தும், உன்னேடு பரம பதத்தில் வாழ்ந்தும், உன்னை விட்டு பதினுன்கு வருஷங்கள் பிரிந்து வாழ சம்மதித்தும், ஸத்வம் தலைப்பெற்ற உன் அனுபவம், உன் அன்பு, நினைவு, உன் ஞானம், உன் மறை, காலமுள்ளளவும் எல்லாப் பிறப்புக்களிலும் உன்னேடு உறவு, உனக்கு அடிமைத்தனம், இவைகளுக்கு விரோதம் வராமல் தன்னை தடுத்துக் கொண்டு,

தன்னுடைய ஸ்வபிரவிருத்தியைத் தலைக் காட்டினன். ஆஹா ஆச்சரியம்! பிராட்டியைப் பிரிந்த பெருமாள், பத்தாயிரம் ஆண்டுகள் தனியாக வாழ்ந்து வந்தவர், இளைய பெருமாளைப் பிரிந்து பகல் அமுதை செய்திலர். அவ்விதமிருந்த கைங்கர்ய லக்ஷ்மணனைப் பிரிந்து வாழ சகியாத ராமன், பரதனை பதினன்கு வருஷங்கள் விட்டுப் பிரிந்து வாழ அவருடைய அவதார ரஹஸ்யம் காரணமாக விருந்தது. தேவகார்யம் நடக்கப்பெற இருந்தது. தியாகராஜர் சொன்னது மாதிரி, ஆண்டாள் அருளிச் செய்தது மாதிரி, உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே, மஹா ராஜனகவும், ராமுனிவேஷமாகவும் இரு வேஷங்களைத் தரித்து யார் யார்களை ரக்ஷித்தும், யார் யார்களை நிக்ரஹித்தும், ராமா என்கிற வேதங்களால் கீர்த்தனம் செய்யப்படும் மஹா தாரக மந்திரத்தின் பெருமையை உமாசங்கரர் மூலம் பிரகடனப்படுத்து வதற்கும், நீர் அவதாரம் செய்தீர். கார்மேனி செங்கண் கதிர் மதியம் போல முகத்தையும், அன்று அவ்வுலகம் அளந்த திருவடி களுடன், குன்றைக் குடையாக எடுத்த கரங்களுடன், துளசி தாஸர், தியாகராஜர், இந்திரன், பிரஹஸ்பதி, ராவணன், வாலி, பரதன், சீதை, லக்ஷ்மணன் ஆகியோர் அனுபவித்த திருஉரு வுடன் என்னைப் பரவசப்படுத்தும். உமது திருமேனி ஸ்வரூபம், கருணை பொங்கும் விழிகள், புஷ்கராக்ஷங்கள் எல்லாம் காண முடிந்த அந்த மஹானுபாவர்களை கிருதக்ஞை பூர்வமாக நான் நமஸ்கரிக்கிறேன். ஹே ராமய்யா, உன் பக்தன், உன் நாம பராயணன், உன் கைங்கர்யத்தில் பிரவிருத்தி எல்லாம் கொண்ட ஒருவனுக்கு அசுபம் யேற்படுவதில்லை. ஸர்வ பாபங்களிலிருந் தும் விடுபட்டு, ஸதாசாரிய கடாக்ஷத்தால் அவரவர்களின் புண் யங்களுக்குத் தக்கபடியும், தமக்குத்தாமே ஸ்வதந்திரர் என்பதை யும் நிரூபிக்க நீர் நிர்ஹேதுக கிருபையினல் தம் முழு ஸ்வரூ பத்தை பக்தர்களிடம் ஒப்புவிக்கும் விசுத்த ஆத்மாவாகவும் பிரும்ம ஸநாதனம் என்று போற்றப்படும் திருவடிகளை அடைய விக்கிறீர். அப்பேற்றபட்ட சம்பந்த ஐஸ்வர்யமுள்ள ராம பாது கைகளே, ராம பாதுகா கொண்ட பரதனை நமஸ்கரிக்கிறேன். என் துருவ நாராயணனை நான் சரணமடைகிறேன்.]

'என் பிரபுவாகிய நீர் என்னிடம் திருப்தியடைந்தவராக என்மீதுள்ள பிரியத்தினல் சங்கோஜத்தை தியாகம் செய்து, நமக்குள்ள முதிர்ந்த உறவை தியானம் செய்பவராக எதை ஆக்ஞையாக்கி செய்யச் சொல்கிறீரோ, அதை ஸ்வாமி, உமது திருவிலச்சனை சூடிய நான் இன்று இனிது செய்து முடிப்பேன்.

என்னுடன் கூடவந்த ஜனங்கள் யாவரும் என்னுடன் சேர்ந்தே செய்து முடிப்பார்கள். நாங்கள் உமக்கு சிரம் வணங்கிச் செய்வதால், எங்களுக்கு ஒரு அசுபமும் ஒருக்காலும் ஏற்படாது. ஒரு கஷ்டமும் அனர்த்தமும் ஏற்படாது. எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபட்டு பரிசுத்தமான ஆத்மாவை உடையவர்களாகி, சாஸ்வதமான பரபிரும்மத்தைச் சேருவோம்.'' (1358)

(பரதனுடைய அபாரமான வார்த்தைகள், நியாஸ வித்தையையின் பிரபாவங்கள், ஸதாசார்ய கடாக்ஷத்தினுல் யேற்பட்ட சுக்ருதங்கள் பகவத் பிராப்தி பகவத் கைங்கர்யங்களின் அனுவிருத்தி, முக்தி தானம் ஆகிறதிருவிலச்சினே, ராம மந்திரமாகிய திருமந்திரம், ராமசரணங்களாகிற திவ்ய அனுசந்தானம், பந்தகத்தை நிவர்த்தி செய்யக்கூடிய வைராக்யத்தைக் குறிக்கும் சர்மஸ்லோகம் இவைகளே ஆண்டாள் காட்டிக் கொடுத்ததுபோல காட்டிற்று. எதை விடவேண்டும், எதைப் பற்றவேண்டும், என்கிறதாகிற ஞான வைராக்யத்துடன் கூடிய அர்த்த ப்ராப்தியை, பரமார்த்தம் என்று சொல்லப்படுகிறதை, ஆகிய சகல விஷயங்களும் சூக்ஷ்மமாக காண்பிக்கப்பட்டன. ஸ்ரீராமனுக்கு சீதாபிராட்டியின் நாயகனுக்கு, தன் பாரதந்திரியத்தை வெளியிட்டு, போக்தாவான அவனேடு ஸம்பந்த உறவை எந்த அவஸ்தையிலும் பெறக்கூடிய போக்யம் எல்லாவற்றிலும் உயர்ந்தது. ராமனின் பாதரேணுகைகளே அவைகளேத் தாற்காலிகமாக இழக்க நேரிட்டும் மீண்டும் நித்யமாகப் பெறுவதாகவும் இருக்கிறது. அந்த இழந்த சமயத்திலும் பகவானுடைய ஸ்வரூப ஸ்வபாவதியானம் கோபிகைகளின் தாபத்ரயங்களே போக்கியது போல நித்யானந்தத்தைப் பெறலாம் என்கிற நம்பிக்கையை ஊட்டுவதாக விருக்கிறது. விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் அடிப்படையான தத்துவம் ஹிதம் புருஷார்த்தம் ஆகிய உண்மைகளே, ஆண்டாள் ''ஆடை உடுப்போம், பாற்சோறு மூடநெய் பெய்து முழிங்கை வழிவாரக் கூடியிருந்து குளிர்ந்தேலோ ரொம்பாவாய்'' என்று அருளிச் செய்ததுபோல, பரக்கச் சொல்லிய தத்வ விஷயார்த்தங்கள் லோக கல்யாண வார்த்தைகள் ஆயிற்று. ஸுரஹிதன், ஸுரகாமன் என்று சொல்லக்கூடிய தேவ காரியங்களேச் செய்யும் அவதார புருஷனின் லீலேகள் ஆகிய) சகல விஷயங்களேயும், பாகவத சிரோண்மணியான பரதனின் வார்த்தைகளேயும் பிருஹஸ்பதியுடன்கூடிய தேவராஜன், தேவகணங்கள் யாவரும் கேட்டனர். ''இவனல்லவோ ஸாது, இவனல்லவோ பரம வைஷ்ணவன், தன்நலம் பாராமல் ''ஸர்வஸ்தரது

துர்காணி, ஸர்வோபத்ராணிபஸ்யது'' என்கிற வ்யாஸ வாக்கின்படி லோக கல்யாணங்களை ஸ்மரிக்கும் பரம பாகவதன் என்று பரதனைப் புகழ்ந்தார்கள். பரத னுடைய அந்தப் பவித்ரமான வாக்குக்களைக் கேட்டு தேவர் களும் பெருமகிழ்ச்சி அடைந்தவராய் நன்று நன்று எனப் புகழ்ந்தனர். கற்பக மலர்களை வாரி இறைத்தார்கள். அயோத்யா வாசிகளோ, மனத்தில் கலக்கமுற்றவர்களாக ராமனுடைய சங் கல்பம் எவ்விதம் ஆகுமோ, என்று முடிவு பார்ப்பவர்களாக ஆவலுடன் இருந்தார்கள். வனத்திலிருக்கும் ஜனங்கள் தபஸ் விகள் ராம ஸம்பந்தமாகிற ஸம்பத்தை சம்பாதிப்பதை நினைத்து ஆனந்தத்தை அடைந்தார்கள். (1359)

ஆனால் (கன்றுக்கு இரங்கி நினைத்து முலை வழியே நின்று பால் சொரியும் தாய்ப்பசுபோல பரம போக்யனான) ரகுநாதன் ஒன்றும் பேசாமல் சங்கோசத்துடன் இருந்தார். பிரபுவின் சங்கல்ப கதியை ஆராய முடியாமல் ஸகல சபையோர்களும் கலக்கமுற்று விசாரத்திலிருந்தார்கள். அந்த சமயம் ஜனகராஜ ருடைய தூதர்கள் வந்து சேர்ந்தார்கள். வஸிஷ்ட முனிவரும் அவர்களை அழைத்தார். (1360)

அவர்கள் ராமனையும் சீதையையும் பிரணமம் செய்துவிட்டு ஸ்ரீராமனுடைய முனி வேஷத்தைப் பார்த்து மனத்தில் துக்க மடைந்தனர். வஸிஷ்டர் அந்த தூதர்களைச் சமாதானம் செய்து ஜனக மன்னருடைய ஸந்தேசத்தை வினவினார். (1361)

அந்த தூதர்கள் தங்கள் சிரத்தை வணங்கியவர்களாகி, கைகளை அஞ்சலி செய்துகொண்டு, ''ஸ்வாமி, மன்னிக்க வேண்டும். உங்கள் உத்தரவினால் நாங்கள் எங்கள் கடமையை நினைவுறுத்தப்பட்டோம். கோஸாயி, உங்கள் மனம் எங்கள் நன்மையை ஸதா தியானித்துக்கொண்டிருக்கிறது. அதனால் தான் நாங்கள் சௌக்கியமாக விருக்கிறோம்.'' (1362)

''நாதரே, கோஸல அரசன் இறந்த பின்பு எங்கள் சௌக் கியங்களும் குறைந்துவிட்டன. ஆனால் தாங்கள் இருப்பதால் எங்களுடைய குசலக்ஷேமங்கள் மீண்டும் அடையக்கூடியதாக விருக்கின்றன. இந்த ஜகத் முழுவதும் அனாதையாகவிருந்தும், ராஜன் இல்லாதபடியால், பயங்கள் சூழ்ந்திருந்தும், அதிலும் முக் கியமாக அயோத்தியும் மிதிலையும் அநாதர்களாகச் செய்யப்பட்டு ஜனங்கள் விசேஷ துக்கத்தை அடைந்திருக்கிறார்கள்.'' (1363)

''அதிலும் தசரதர் வியோகத்தினால் ஏற்பட்ட அயோத்தி யின் கதியை நினைத்து ஜனகரும் மிதிலாவாசிகளும் சோகத்தை

அடைந்திருக்கிறுர்கள். தேஹாபிமானமில்லாத விதேயாத்மா வாகிற ஜனகராஜர் அந்த சமயம் சோகத்தை அடைந்ததைப் பார்த்த மிதிலாவாசிகளிடம் விதேஹமூர்த்தியான நம் பிரபுவாகிற ஜனகர் தன் பெயருக்கு ஏற்ப, சத்யமாகக் தோன்றுகிருரோ என்றுகூட சந்தேக எண்ணங்கள் தோன்றின. இவருக்குக் கூட சோகங்கள் ஏற்படக்கூடுமா? என்று நினைத்தார்கள்.'' (1364)

''கைகேயியின் கெட்ட எண்ணத்தை அறிந்த ஜனகராஜர் ஆச்சரியப்பட்டுவிட்டார். ஒரு சர்ப்பம் தன் மணியை இழந்த போது எவ்விதம் துடிக்குமோ, அதுபோல மனம் நொந்து போனுர். அதன் பிறகு பரதன் நாடு ஆளுவதையும் ரகுவரஸ் ரேஷ்டரான தாங்கள் வனம் சென்றிருப்பதையும் கேட்டு மிகவும் துக்கித்தார்.'' (1365)

''அரசர் தன் சபையில் இருக்கும் மந்திரிகளையும் வித்வான் களையும் கூப்பிட்டு ஆலோசித்து, இன்று நாம் செய்யக்கூடியது என்ன? என்று எண்ணிமிட்டார், அவர்களும் அயோத்தியின் பரிதாப நிலையை உணர்ந்து, இரு பிரகாரத்தாலும் ''மிதிலையில் இருங்கள் அல்லது அயோத்திக்குப் போங்கள்'' என்று ஒருவித முடிவுக்கும் வராமல் மனம் கலங்கினுர்கள். அவர்களால் தீர்மானமாக ஒருவித முடிவுக்கும் வரமுடியவில்லை.'' (1366)

''அந்த அரசரும் தைர்யத்தை தரித்துக்கொண்டு தன் மனத்திற்குள் எதைச் செய்யலாம் என்று ஆலோசித்தார். மிக்கக் கெட்டிக்காரர்களான ஒற்றர்களை அயோத்திக்கு அனுப்பி வைத்தார். அவர்களிடம் ''நீங்கள் அயோத்திக்குச் சென்று பரதனுடைய மனோபாவங்களை ரகசியமாக அறிந்து செய்தி கொண்டு வாருங்கள். ஒருவருக்கும் நான் அனுப்பியதாக தெரியக்கூடாது. சீக்கிரம் வரவேண்டும் என்று கட்டளை யிட்டார்.'' (1367)

''அங்கு ரகசியமாய் போய்ச் சேர்ந்த ஒற்றர்கள் பரதன் தன் தம்பியுடனும் வஸிஷ்ட பிரமுகர்களுடன் சித்ரகூடம் எழுந்தருளி யிருப்பதைக் கேட்டு அறிந்து, அவர்கள் மிதிலைக்கு திரும்பி விட்டார்கள்.'' (1368)

''தூதர்களின் வசனங்களைக் கேட்ட அரசர் பரதனுடைய தியாகபுத்தியையும் பச்சாதாபச் செய்கைகளையும் கேட்டு தன் அரச சமாஜத்துடனிருந்த மஹா ஜனங்களுடன் வர்ணிக்க முடியாத துக்கத்தை அடைந்தார்கள். குரு, பரிஜனங்கள், மந்திரிமார் கூடிய அரசன், ராஜ்ய உரிமையுள்ள பரதன் வனத்

திற்குச் சென்று சீதாராமனை ராஜ்ய பட்டாபிஷேகத்திற்காக அயோத்திக்குக் கூட்டிவர வனம் சென்றிருக்கிறான் என்று கேட்ட பின்பு சகலரும் மீளாத துயரத்தை அடைந்திருக்கிறார்கள்.'' (1369)

[தியானம்

ஹே, மனஸே, நாராயண ஆத்மகனாகிற பரதனையும் சீதா ராமனின் மகிமைகளையும் அறிவாய். சீதா நாயகனாகிற ராஜ கோபாலன் மஹா மகிமைகள் வாய்ந்தவன். அவன் ஸ்ரீவித்யா லோலன். மந்தஸ்மித காமாக்ஷி, நந்தினி வத்ஸியுடன் கூடிய காமதேனுவுடன் சஞ்சரிக்கும் ஆனந்த கந்தன். உபாயம் உபேயம் என்கிற ஸர்வ முக்தி தானபிரியன். பிரும்மா ஈஸ்வரர் மஹேந்திரனால் வணங்கப்படுகிறவன். பூதம்பவ்ய நாதராகவும், அவ்யயமும் தர்மமுமாகவிருப்பவன். கருணையையே உருவாகக் கொண்டவன். ஜனகஸனக ஸனந்தனாதிகளாலும் நாரதராலும் சேவிக்கப்படுகிறவன். நாராயண மந்திரத்தை தாரகமாக வுள்ளவன். ஆஸ்ரிதவாத்ஸல்யன் எல்லோருடைய மானத்தையும் காப்பவன். அதுபோல பரதனுடைய மகிமையினால் என்னையும் காப்பாற்றுபவன். அயோத்தி ஜனங்களனைவருக்கும் ராம கிருபையையும் வைகுண்ட லோகத்தையும் சரயு நதிக் கரையில் அளித்தவன். ராஜ தர்மத்தில் பற்றுதல் உள்ளவன், அவ்யயமான தர்மத்தையும் ஸுஹிதத்தையும் செய்பவன். லக்ஷ்மணனைப் போல் பரதனும் ராம கைங்கர்யம் செய்தவன். அப்பேற்பட்ட பரதனை முன்னிட்டு, ராஜகோபாலனை, ஸ்ரீவித்யா லோலனை நான் நமஸ்கரிக்கிறேன்.]

''பிறகு ஜனகர் மனத்தை தைரியப்படுத்திக் கொண்டு பரதனுடைய செயலைப் புகழ்ந்து தனக்கு நம்பிக்கையுள்ள சேனைத் தலைவர்களையும் சகாக்களையும் அழைத்து அவர்களிடம் தன் தேச ரக்ஷணத்தை ஒப்பித்துவிட்டு, குதிரை, ரதம், யானை ஆகிய சவாரிகளைத் தயார் செய்தார்.'' (1370)

''சுபமான முகூர்த்தத்தில் புறப்பட்டார்கள். வழியில் விஸ்ராமம் கூடச் செய்யாமல் ஒரே அடியாக புறப்பட்டு வந்து, இன்று காலை பிரயாகை க்ஷேத்ரத்தில் ஸ்நானம் செய்தார். பிறகு யமுனையைக் கடந்து அவர் வந்துகொண்டிருக்கிறார்.'' (1371)

''பிரபுவே, எங்களை முன்னே அனுப்பி உங்கள் இருப்பிடத்தை அறிந்து வரச் சொன்னார்கள். அதனால் நாங்கள் இவ்விடம் வந்தோம்.'' என்று கூறி முடித்து பூமியில் விழுந்து

நமஸ்கரித்தார்கள். இதைக் கேட்டதும் முனி ஸ்ரேஷ்டரான வஸிஷ்டர் ஆறு ஏழு வேடர்களை அவர்களுடைய துணைக்கு அனுப்பிவைத்தார். (1372)

ஜனகருடைய வருதலைக் கேட்டு ஸகல அயோத்தி ஜனங்களும் சந்தோஷித்தார்கள். ஆனால் ரகுநாதன் மனத்திற்குள் சிந்திக்க ஆரம்பித்தார். அவரை விட விசேஷமாக தேவராஜனும் யோசிக்க ஆரம்பித்தான். (1373)

குடில புத்தியை ஒரு சமயம் அடைந்த கைகேயி, இதைக் கேட்டு மிக்க பச்சாதாபமடைந்து, தனக்குள் வெட்கப்பட்டாள். யாரிடம் தன் லஜ்ஜையைச் சொல்லி, தன் பாபத்தைப் போக்கிக் கொள்வாள். பாவம்! அவளுடைய மனம் ராமனுடைய பாதங்களை நினைத்தன. "மஹா கருணையை அடைந்த ராமன் என்னையும், என் மனதையும் அறிவான். அவன் வாசாமகோசரன் அல்லவா?" என்று தனக்குள் நினைத்துக் கொண்டாள். ஆனால் அங்கு வந்திருந்த ஸ்திரி புருஷர்கள் யாவரும் ஜனகருடைய வருதலால் இன்னும் சீதாராம ஸந்நிதானத்தில் யிருக்கப் பெறலாம் என்று ஆனந்தப்பட்டார்கள். (1374)

இந்த மாதிரி அந்த நாளும் சென்றது. மறு நாள் விடியற் காலை எல்லோரும் ஸ்நானம் செய்துவிட்டு கணேஷ், கௌரி, திரிபுராரி, சூர்யபகவான் ஆகிய எல்லோரையும் பூஜை செய்தார்கள். (1375)

பிறகு ரமாதேவியுடன் கூடிய ராஜகோபாலனை, விஷ்ணுவை, (கோகுலநாதனை, ஸுரபியுடன் கூடிய ஸ்ரீவித்யா லோலனை) அயோத்யா ராமனை சீதா பிரபுவை, அவர்கள் நமஸ்கரித்து, மிக்க வினயத்துடன் அஞ்சலிபந்தம் செய்து, "ஹே பிரபு, எங்கள் பிரார்த்தனையைக் கேளும். ஸ்ரீராமன் எங்களுக்கு அரசனாகவும், ஜானகி ராணியாகவும் அயோத்தி திரும்ப வந்து மீண்டும் நாங்கள் ராமகிருபையை அடைந்து, ஆனந்தம் அடையவேண்டும். எங்கள் மனோரதங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும்." (1376)

"எங்கள் எல்லோரையும் ஆனந்தப்படுத்திக் கொண்டு, எங்கள் பிரபு ஸ்ரீராமன் பரதனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவித்து, எங்களுக்கு, தேவதேவா, சுகத்தைக் கொடுக்க சுதாவாகிற அம்ருதத்தை பானம் செய்யும்படி அனுக்கிரஹிக்க வேண்டும். ராமராஜ்யம், பரத யுவராஜ்ய பட்டாபிஷேகம் ஆகிய இரண்டும் அவ்யயமான தர்மத்தைப் பாதுகாக்கும். நாங்கள் அந்த அம்ருதமயமான ஆனந்த கந்தத்தை

அனுபவித்துக்கொண்டு, இந்த உத்தமமான தேஹத்தை எடுத்த தற்கு, இந்த அயோத்தியில் ஜனனம் செய்ததற்கு, லாபத்தை எடுத்துக் கொள்வோம். (கறவைகள் பின் சென்று அவர்களுடன் வாழும் மிக்க சரள சல்லாபம்கொண்ட தீனதயாளு,) அறிவில்லாத எங்களுக்கு அனுகிரஹம் செய்யவேண்டும். உத்தமமான பிறவி எடுத்தும், ஸ்ரீசீதா ராமனுக்கு மஹத்தான அபராதம் செய்து ராம ராஜ்யத்தை இழக்கப்பெற்று, உம்முடைய கிருபையினாலும், பரதனுடைய சேர்க்கையின் மகிமையாலும் நாங்கள் அதை மீண்டும் அடையப் பெறுவோம்.'' (1377)

''இந்த பரதன் தர்மத்தைப் பரிபாலிக்கும் விஷயத்தில் வஸிஷ்ட மஹா முனிவருடன் சேர்ந்திருக்கிறான். அவனுடன் கூடிய சத்ருக்னனும் ராமகிங்கரனாக விருக்கிறான். இப்பேற்பட்ட மஹா பாக்யவான்களாகிற ராம சகோதரர்களுடன் அயோத்தியில் ஸ்ரீராமனுடைய ராஜ்ய பட்டாபிஷேகம் நடக்கப் பெறக்கூடும். இந்த அயோத்தி ஜனங்கள் சீதாராமனை ராஜா ராணியாக அடைந்து, அவர்களுடைய குடையின் நிழலில் வாழ்நாட்களை நடத்தி, இறுதியில் நாங்கள் அயோத்தியில் மரணம் அடைவோம். எங்களுக்கு இதைத் தவிர வேறு வரம் ஒன்றும் வேண்டாம், ஸ்வாமி, என்று அவர்கள் ஏகோபித்து (ராஜ கோபாலனை,) ரங்கநாதனை வேண்டிக்கொண்டார்கள்.'' (1378)

மஹா ஸ்நேகமயமான வார்த்தைகளை புரஜனங்களிட மிருந்து கேட்டு, அந்த வனத்திலிருந்த யோகிகளும் வைராக்ய முள்ள தபஸ்விகளும் தங்களுடைய யோக நியமங்களை நிந்தை செய்துவிட்டு, ''இவர்கள் அல்லவோ கிருதார்த்தர்கள். நம் மனதில் மிக்க சிரமத்துடன் தேக்கிவைத்திருக்கும் பரபிரும் மத்தை இவர்கள் நேரில் பார்த்து, அதனுடன் சேர்ந்துவாழும் பாக்கியத்தைப் பெற்றவர்கள். அதனுடன் பேசும் பாக்யமும், ஆனந்த அனுபவமும் அந்த சீதாராமனுடன் கூடியிருந்து குளிர்ந்து அனுபவிக்கிறார்கள். ஆஹா, இந்த மஹா பாக்யத்தை நித்ய கர்மானுஷ்டானம் போல செய்து கொண்டு இந்த அயோத்தி புரவாஸிகள் சீதாராமனை புளகாங்கித சரீரத்துடன் பார்த்து, ஆனந்த பரவசமடைந்து அவர்களை சுக்ருத பிரணமம் தினமும் செய்கிறார்கள்.'' (1379)

''அவர்களில் பெரியவன், சிறியவன் மத்யமன் என்கிற வித்யாஸம் உண்டா? ஸ்திரியாக விருந்தால் தான் என்ன? புருஷனாக விருந்தால் தான் என்ன? அவரவர்களின் நிஜபக்தி ஸ்வரூபத்திற்கு ஏற்ப, நற்கதி கொடுக்கும் ஜிதமன்யுவாகிற

1469—40

பிரபு எங்கள் ஸ்ரீராமச்சந்திரன், மஹாலக்ஷ்மி தினமும் வணங்கும் திருவடிகளை, விசுத்த ஆத்மாவாக தம்மை மிச்சப் படுத்தாமல் அவர்களுக்கு அளித்து, அவரவர்களின் புண்யங் களுக்கு தக்கபடி அனுபவிக்கச் செய்கிறார். ஆஹா, எங்கள் ஸ்ரீராமச்சந்திரன் கிருபா நிதானம். சாவதானமாக எல்லோரை யும் அழைத்து, சௌசீல்யத்துடன் ஜிதக்ரோதராக தன்னை வந்து அடைந்த ஆஸ்ரிதர்களுக்கு அவர்களின் மீது உள்ள கோபத்தையும் அவர்கள் கொண்டுள்ள கோபத்தையும் அடக்கி, தன் மோஹன ரூபத்தால் எல்லோரையும் ஸம்மானம் செய்பவர். அப்படிப்பட்ட ஆனந்தம் அல்லவா பெரிது என்று புகழும்படி ஸ்ரீராமச்சந்திரன் அன்று நடந்து கொண்டார். (1380)

[தியானம்

ஹே ராமாசீதா, ஸஹஸ்ரார்ச்சியான லக்ஷ்மி நாராயணா, ரங்கஸ்ரீ, ரங்கபதே; வேங்கடபதே, நீர்தான் என் குல விளக்கு. நீர்தான் என்றும் அழியாத ஞானவிளக்கு. உன் அடிகளைப் பணிவதே என் பாக்கியம். உன்னை விட்டு எனக்கு யார் கதி? தியாகராஜர் ஆஞ்சநேயர், துளசிதாஸர் அகஸ்திய லோபா முத்ரை, மார்க்கண்டேயர் புலஹர் புலஸ்தியர் போன்ற மஹான் கள் தீர ஆராய்ந்து, உன்னைத் தவிர வேறு தெய்வம் நான் காண்பது மிகக் கஷ்டம் என்று சொன்னார்கள். ஹே நீரஜாக்ஷா, ராமய்யா என் ஸ்வரூப ஞானத்தைக்கூட அத்துடன் பகவத் பாகவத கைங்கர்யத்தையும் அனுக்ரஹித்து, உன்னையே என் குல தெய்வமாக நினைத்து சிஷ்ட ஆசாரங்களுடன் ஞான வைராக்ய பூஷணனாக வந்து அடைகிறேன். பரபக்தி பரஞானம் பரம பக்தி ஆகியவைகளை அளித்த குந்தரே, ஸம்பரதாயம் ஆசார அனுஷ் டானம் கொண்ட பரதன் போன்ற மஹா உத்தமர்கள் காண்பித்த மஹாகுப்தரான உம்மை நாங்கள் கண்டு களிக்கும்படி அழகுச் சுடரை, என் க்ஷேத்ரக்ஞரை, அகஸ்தியர் மார்க்கண்டேயர் உமை சங்கரர் போன்ற தியான சீலர்கள் தங்கள் ஆராதனத்திற்கு விஷயமாகும்படி பிரகாசிக்கும் கும்பரை, என் பிரபுவை, சப்தம் ஸ்பரிசம் போன்ற போகங்களை உடைய அர்ச்சாவதாரமான சீதாராமனை, ஹே மனஸே, நீ என்றும் துதிப்பாயாக. குமுதரே, என் பர்ஜன்யரே, ஜனகாதிகளால் வணங்கப்படும் ராமா, என் உள்ளத்தில் புகுந்து நிறைகொள்ளக்கடவாய். பரதன் காட்டிய வழியில் பின்பற்றி அயோத்தி ஜனங்கள் ஒருக்காலே சரணம் அடைந்து, உன் பாதத்தை உன்னுடன் அனுபவித்தார்கள்.

அப்பேற்பட்ட ஸாகேத ராமா, சீதாராமா உன் அனுக்ரஹம் சித்திக்கவேணும்.]

"எங்கள் பிரபு ரகுவரன் குழந்தைப் பருவம் முதல் எங்கள் அன்பை உணர்ந்தவர். நீதியுடன் அனுஷ்டிக்கப்பட்ட எங்கள் பிரேமையை உணர்ந்து எங்களைக் காப்பாற்றிய பர்ஜன்யர். தம்முடைய நிஜஸ்வரூபத்தை குறைவின்றி வெளியிட்டு எங்களுடைய மூன்றுவித தாப த்ரயங்களை குளிரவைத்த முகில்வண்ணன். அவருடைய சீலத்தையும் உதார குணங்களையும் வர்ணிக்கமுடியாத விதேயாத்மா. சமுத்திரம் போல ஆழமாகவும், அளவிட முடியாதபடி விளங்கும் ரத்னகர்ப்பர். அவருடைய சுபமான புஷ்கராக்ஷங்களையும் (ஆண்டாள் கண்ட போதரிக் கண்ணினாய், எங்கள் காமாக்ஷியாய், கஞ்ச லோசனிநாய், பிரபு பார்க்கும் அருள் நோக்கும், கிருபா திருஷ்டிகளும், தியாகராஜர் மார்க்கண்டேயர் அகஸ்தியர் போன்ற சீலர்கள் கண்டு அனுபவித்த) நீலமாமணி போல கரிய திருமேனியும், சுலபர் என்று சொல்லும்படி அவருடைய சௌசீல்யாதி குணங்களால் பிரகாசாத்மாவாகவும், பிரும்மா முதலானவர்களுக்கும் வரங்களை அளிக்கும் விராமராகவும் வல்லவா விளங்குகிறார்." (1381)

"நாங்கள் ஸ்ரீசீதையுடன் கூடிய ராமனுடைய குணாதிசயங்களைச் சொல்லி தியானித்து அவர்களிடம் மிக்க அனுராகம் கொண்டுவிட்டோம். இதுவல்லவோ பெரும் பாக்யம். (தேனே திருவேங்கடமாமலையே கோனே என் மனம் குடிகொண்டிருந்தாயே, சிந்தாமணியே, திருவேங்கடம் மேய எந்தாய் இனியானுன்னை யென்றும் விடேனே, என்கிறபடி) நாங்கள் இந்த தெய்வத்தை எங்கள் குலவிளக்கை விட்டு மறந்து, பிரிந்து, பேசுவதற்கு வேறு யாரிடம் செல்வோம்? நாங்கள் ஸம்பாதித்த புண்யம் இதுதான். (மாமாயன்,) மாதவன் ஸ்ரீசீதாராமன் என்கிற நாமம் பலவும் அவனைச் சொல்லி சந்தோஷிப்போம். எங்களைப் போல பாக்யசாலிகள், எங்களுடைய அனன்யார்ஹ பக்தியைப் போல விருக்கும் மனிதர்கள் இந்த ஜகத்தில் மிகச் சிலரே. எங்கள் பிரபு, சுடரொளியாய் நிற்கும் சோதி, உடல்கொண்டு திருமேனி ஸம்பந்தம் பெறச்செய்ய மிக பாக்யமுள்ள அயோத்தி ஜனங்களை, அவர்களின் தூய பக்தியை, எங்களுக்கு பெறுவீடு கொடுக்கும் அயோத்தி கோமானை, நாங்கள் வாயாறப் புகழும் அயோத்தி மன்னனை ஸர்வக்ஞர் என்று நாங்கள் அறிவதால், எங்களுடைய ப்ரேமாதிசயத்திற்கு சரியான பாரிதோஷகம்

  

அளிப்பான்.'' (இதனுல் அவர்கள் ஆர்த்த பிரபத்தி, த்ருப்த பிரபத்தி ஆகிய இரண்டையும் செய்தார்கள்.) (1382)

இவ்விதம் கானம் செய்யும் அயோத்தி ஜனங்கள் மிக்க ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கி, ஸ்ரீராமனுடைய கிருபையை அனுபவித்தார்கள். பகவான் அம்ருத ரூபியாகி திருமேனி சாத்தி, அவர்களை சீதையுடன் குளிரக் கடாக்ஷித்தார். அந்த சமயம் மிதிலாதிபதியான ஜனகராஜர் வந்து கொண்டிருந்தார். அவருடைய வரவைக்கண்டு சூரியகுல கமலம்போல விளங்கும் ஸ்ரீராமச்சந்திரன் எழுந்திருந்து அவரை வரவேற்க சித்தமானுர். (1383)

தன் தம்பிமார்கள் புடைசூழ, குரு வஸிஷ்டரையும் அயோத்தியாபுரி வாஸிகளையும் அழைத்துக்கொண்டு பிரபு அவரை எதிர்கொண்டு அழைக்கச் சென்ருர். ஜனக மஹாராஜர் பர்வத ஸ்ரேஷ்டமான காமத நாத்தைக் (சித்ர கூடத்தை) கண்டு பிரணமம் செய்து, அந்த சித்ர கூட மலையில் வசிக்கும் கோவிந்த ராஜனை, பெரிய பெருமாளை நினைத்து, தன்னுடைய செருப்பு முதலியவைகளைத் தியாகம் செய்துவிட்டு கால்நடையாக வந்து கொண்டிருந்தார். (1384)

அவருடைய கண்கள், மனம், இந்திரியங்கள் யாவும் சியாமாங்கனை ஸ்ரீராமனுடைய திவ்ய ராமதர்சனத்தை காண மிக்க ஆசைப்பட்டன. ஆசை அதிகரிக்க, அதிகரிக்க, உத்ஸாஹமும் ஏற்பட வழியில் நடந்துவந்த க்லேசங்களும் சிரமங்களும் தோன்றவில்லை. ''என் பெண் வைதேஹி, எனக்கு ஜய மங்களங்களைக் கொடுக்கும் ஜானகி, விதேக நாட்டின் ஜயாதேவி, என் பிரபு ரகுவரன் இவர்களைக் காணுத கண்கள், தழுவாத தேகம், இவர்களிடம் பேசாத பேச்சுக்கள் யாவும் வீணே. அப்பேறற்ற மந்த பாக்யம் படைத்த மானிடரை இந்த வையம் சுமப்பதும் வீணே.'' என்று நினைத்தவராய் மனம் தேகம் யாவையும் சீதா ராமனுக்கே ப்ரேமையுடன் அளித்த மஹா பிரபு, சகல துக்க சோகங்களை ஒழித்தவர். மனம், சரீரம் ஆகியவைகளில் ராம சுதாவை மிக்க அனுபவித்த மஹாராஜரான ஜனகர் வந்து கொண்டிருந்தார். (1385)

இவ்விதம் சீதாராம தியானத்துடன் வந்து கொண்டிருந்த ஜனகர் தன் கூட்டத்தாருடன் ப்ரேமை அலைகள் பொங்கும் சமுத்திரமாக விளங்கினுர். அந்த இரு கூட்டத்தார்களும் ஒன்ருய் கலந்த சமயம், ஒரே பிரேமை மயமானதும் பரஸ்பரம் அன்பு கொண்டதாகவும் மிக்க கிருதிக்ஞையுடன் ஒன்றையொன்று தாவி-

அணைத்துக்கொண்டு வரவேற்கும் சமுத்திர வாரிகள் போல, ஒருவருக்கொருவர் வரவேற்றுக்கொண்டார்கள். ஸ்ரீராமனும் ஜனகரும் ஒருவரையொருவர் சந்தித்து பரஸ்பர குசல க்ஷேமங்களை விசாரித்துக்கொண்டார்கள். (1386)

ஜனகர் வஸிஷ்ட முனிவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார். ரகுநந்தனன் சதானந்தருடைய திவ்ய சரணங்களில் விழுந்து நமஸ்கரித்தார். அதன் பிறகு தம்பிகளுடன் ஜனக மஹாராஜரை மீண்டும் நமஸ்கரித்து அங்கு வந்த எல்லோரையும் தன்னுடைய ஆஸ்ரமத்திற்கு கூட்டிச் சென்றார். (1387)

ஸ்ரீசீதாராமனுடைய ஆஸ்ரமம் சாந்த ரூபம் கொண்ட பவித்திர ஜலத்துடன் விளங்கும் பரிபூர்ண சமுத்திரம்போல விளங்கியது. இந்த கூட்டத்தினர்கள் ஸ்ரீராமனுடைய கருணைக்குப் பாத்திரமானபடியால் கருணையையே ஜலமாக வைத்துக் கொண்ட நதிகள் போலவும், ரகுநாதனின் ஆஸ்ரமம் அவைகளை கட்டி அணைக்கும் கருணை ஸமுத்திரமாகவும் சாந்தியையே ஆடையாகக் கொண்டு சோபிதமாக விளங்கியது. (1388)

இந்தக் கருணைக் கடலில் சேர விரும்பும் நதிகள் ஞானம் வைராக்யம் ஆகிற இரு கரைகளிலும் ப்ரேமை ரஸத்தை வாரி இறைத்துக்கொண்டு சென்று கொண்டிருந்தன. சீதாராம பிரிவினால் யேற்படும் விஸ்லேஷ துக்கங்களாகிற கிளை நதிகளும் உப நதிகளும் இந்த நதிகளுடன் வந்துசேர்ந்தன. ராமன் நம்மிடம் மீண்டும் கருணையோடு இருப்பாரா, நம்மைவிட்டுப் பிரியாமல் ஒன்று கூடியிருப்பாரா என்கிற சந்தேகப் பயங்களால் யேற்படும் தீர்க்க மூச்சுக்களும், வருத்தத்தின் சாயைகளும் வாயுவினால் எழுப்பப்படும் காற்று அலைகளாகவும், போதும் போதும் இனி பொறுக்கமுடியாது, நின்னருளை கொடுத்தே தீரவேண்டும் என்கிற ஆர்த்தியின் கஷ்ட துக்கங்களுக்கு அப்பால் யேற்படும் தைரியமும் பொறுமையின் எல்லையும், சோதிக்கப்படும் பக்தி ஞானம் வைராக்யம் அந்த தண்ணீர் வெள்ளத்தில் மிதந்து வரும் பாச பந்தங்கள் கூடிய விருக்ஷங்கள் போலத் தோன்றின. (1389)

பயங்கரமானதும் சோகத்துடன் நிரம்பிய சம்சார சுழல்கள், கிணறுகள் அந்த தண்ணீர்களில் காணப்பட்டன. பயம் மோஹமாகிற பிரமைகொண்ட சுழல்களும் நீர்க்குமிழிகளும் அபாரமாகக் காணப்பட்டன. வித்வான்களாகிற ஓடக்காரர்கள், ஸ்ரீசீதாராம வித்யையாகிற ஓடத்தை தயாராக வைத்துக் காத்துக் கொண்டிருந்தனர். அந்த மஹா மோகம் அடைந்த சம்சாரிகள்

அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளாமல் ஆழம் எவ்வளவு, நாம் இப்போது என்ன செய்யலாம் என்று கலங்கிக் கொண்டிருந்தார்கள். (1390)

[தியானம்

பகவானுகிறவனும், திரிதசஸ்ரேஷ்டருமாகிற இந்திரனும் சசீராணி யாவராலும் பூஜிக்கப்படுபவரும் ராமா, நாராயணுத் மகனுமான வஜ்ரதாரியினுல் பூஜிக்கப்படும் சீதாராமா, பாலே, தர்மஸம்வர்த்தினி, சங்கு சக்ரம்யேந்தும் பங்கயக்கண்ணு, பிரளய காலத்தில் ஸர்வசேதன அசேதனங்களும் ஒடுங்கும் ஆலிலே மேல் பள்ளி கொண்டு யோக நித்ரையில் சயனித்திருக்கும் வடபத்ரசாயி, என் பெருமாளே, தேவதேவா, அன்று ஆனந்தக்கண்ணீருடன் மார்க்கண்டேயரால் அனுபவிக்கப்பட்ட உத்தம நாராயணு, சுக்ராசாரியர் அம்பிகையின் திருவருளை அடைந்து சங்கரருக்குப் புத்ரனுனுரே, அந்த போக்யம் உங்களிடம் நான் அடையவேண்டும். நீலமணி போல விளங்கும் சியாமளே, என் மனதை ஆட்கொண்ட லலிதே திரிபுரசுந்தரி போல, என்னைக் கவர்ச்சி செய்த ராமா, உமாபுராரி பணியும் பங்கயக்கண்ணு, சனைச்சரன் ராஹு கேதுக்கள் பணியும் அரவிந்தாக்ஷா, உன்னிடமிருக்கும் அழகு குணங்கள் புண்ய ஸ்ரவணமான கீர்த்தி பிரபாவங்கள் ஸ்ருதிகள் சொல்லியதும், யசோதை அனுபவித்ததுமாகிற உன் சௌலப்யாதி குணங்கள் உங்களை எனக்கு ஸ்வாமி என்றும் அனன்ய போக்யத்வமாக அளித்திருக்கின்றன. உன் பாதங்கள் எனக்கு அனன்ய சரண்யத்தையும், உனக்கு கைங்கர்யம் செய்வது அனன்னயார்ஹத்தையும் காட்டுகின்றன. அஷ்டாக்ஷரத்தில் நமஃ என்று பிரகாசிக்கும் பதங்கள் என்னை உன்னிடம் பாரதந்த்ர்யமாக்குகின்றன. உன்னைத் தவிர எனக்கு ரக்ஷகம் எனக்கு என்ன வேண்டும்? நீங்கள் பரமபாவனர்கள், சுகுணசாலிகள், நதஜன பரிபாலன லோலர்கள், ஜனகர் முதலிய கர்மஞானிகள் கண்டு எடுத்த காலபைரவர், உங்களுடைய பால இந்து முகத்தினுல் ஒளியினுல் நான் என் பவரோகங்களைப் போக்குகிறேன். சீலமான சீதே, என் சஹோதரி போல, ஸகலலோக ஜனனி, வரதன் என்று பெயருள்ள உன் நாயகனை என் போக்யத்திற்கு கொடு அம்மா. ரமாராமா, ராமா ரமா என்று சொல்லுபவனுகிற எனக்கு பிரணதார்த்திஹரராகிய உன் ராமனைக் கொடு. துர்ஜனங்களுக்கு பீமனுகிற ராமனைக் கொடு. தியாகராஜர்,

நாரதர், அகஸ்தியர், அத்ரி போன்ற மஹரிஷிகள் வணங்கிய ராமசரணயுகளங்களேத் தா. பாமர ஜனங்களுக்கும், அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் சிவத்தைச் செய்யும் தர்ம ஸம்வர்த்தனஊ எனக்குத்தா. உன்னுடன் சேர்ந்து நீங்காத செல்வமும், சேவகமும் திருவருளும் பெறுவோமாக.]

அந்த இருகரைகளிலுமுள்ள யாவர்களும் சஞ்சரிப்பவர்களுமான வேடர்கள், கோலர்கள், யாத்ரிகளாகவும் அக்கரை சேர்வதில் எண்ணமுண்டு கலங்கி நிற்பவர்களாகவும், நதியின் வெள்ளப்பெருக்கைக் கண்டு உதவியை நாடுபவர்களாகவுமிருந்தார்கள். மனம் சலித்துப்போய் காத்துக்கிடந்தவர்கள் போலத் தோன்றினுர்கள். அந்த ஜலப்பெருக்கு ஆஸ்ரமமாகிற சமுத்திரத்தை அடைந்து லயமானபோது, அவர்களுடைய மனங்களில் உத்ஸாஹம் கலந்த வருத்தங்களும், சோகங்களும் தோன்றின. (1391)

இந்த ராஜ சமூஹங்களும், ஒருவரை யொருவர் கலந்து கொண்ட சமயம், வழிதவறிவிட்டவர்களேப் போல கலங்கி நின்றுர்கள். சீதாராமஊ இழந்து மறந்து போகும்படி சந்தர்ப்பத்தையும், அவஸ்தையையும் அடைந்த அவர்களுக்கு மீண்டும் அந்த செல்வத்தையும், திருவருளேயும் இழக்க நேரிடுமே என வருந்திஞர்கள். தங்கள் பாபங்களேயும், அபராதங்களேயும் சொல்வதில் தைரியமுள்ளவர்களாகவும், மஹா ஞானத்தை அடைந்த சமயம், குறைவின்றி கள்ளம் கபடமில்லாதவர்களாகவும், லஜ்ஜையை விட்டவர்களாகவும் கதறினுர்கள். ராமன்பால் வைத்த அயோத்தி அரசனுடைய அனன்ய போக்யத்தையும், அனன்ய சேஷத்தையும், அனன்ய சரண்யத்தையும் அறிந்து புகழ்ந்து கொண்டு, அந்த மன்னனுடைய குணங்களேப் புகழ்ந்து கொண்டு, அவர் இறந்ததினுல் வருத்தத்தையும் தெரிவித்தார்கள். அவருடைய சில குணங்களே வர்ணித்து, அயோத்திவாசிகளின் சோகங்கள் அதிகரிக்கும்படி ஸகலரும் வியாகுலமடைந்தார்கள். (1392)

சகலரும் சோக சமுத்திரத்தில் மூழ்கி ஸ்நானம் செய்வது போல, நரநாரிகள் வியாகுலமடைந்து காணப்பட்டார்கள். இந்த கஷ்டங்கள் காலமாகிற விதியினுல் ஏற்பட்டிருக்கின்றன என்று க்ரோதத்தை அடைந்து, தங்கள் பாபகர்மங்களே மறந்து, விதாதாவைப் பழித்தார்கள். பிரதிகூலமான தெய்வ சங்கல்பம் ஏன் இவ்விதம் ஏற்படவேண்டும்? என்று கதறியவண்ணமிருந்தார்கள். என் பிரபு, பரமாசார்யரான துளசிதாஸர் சொல்லுகிருர் :—" ஸுரர்கள், ஸித்தஜனங்கள், தபஸ்விகள், யோகி

ஜனங்கள், முனிக்கூட்டங்கள், விதேஹராஜனுடைய அனன்ய போக்யத்வமாகிற சீதாராம அன்பு, பாகவத பிரேமையாகிற தசரதரிடம் காட்டிய பிரேமை எல்லாம் ஆச்சர்யகரமாகக் கண்டு, "இதுவல்லவோ உத்தமமான ஸ்நேகம்; பிரேமையாகிற நட்பு ரஸத்தில் மூழ்கிய பற்றுதலற்ற கர்மஞானியாகிற ஜனகமஹா ராஜர் பகவத்கிருபையையும், திருத்தக்கச் செல்வமுமாகிற சீதாபிராட்டியுடன் கூடிய ஸ்ரீராமனை எவ்விதம் அடையப் போகிறார்? என்று நாம் பார்க்கலாம், நமக்கு மார்க்கதரிசியாக விருக்கும் அவர் என்ன செய்யப்போகிறார், பார்க்கலாம்," என்று அருளிச் செய்தார். (1393)

அங்கே கூடியிருந்த முனிவரர்கள் ஸ்ரேஷ்டமான உபதேசத்தால், லோகத்தரர்களை ஆஸ்வாசப்படுத்தி, அவர்களின் சோகங்களை அடக்கினார்கள். வஸிஷ்டபகவான் நரஸ்ரேஷ்டரான ஜனகரைப் பார்த்து, "ராஜனே, தைரியத்தை கைக்கொள். கலங்காதே" என்று சொன்னார். (1394)

மஹா ஞானரூபியான சூரியன் உதயமாகும் போது, தமஸ்ஸாகிற இருள், சோகம், பயம், அக்ஞானம் ஆகியவைகள் நாசமடைந்து விலகிப்போவது போலவும், வஸிஷ்டபகவானுடைய வசனங்களாகிற சூரியகிரணங்களால் விகஸிக்கும் கமல புஷ்பத்தைப் போல, அரசர் ஜனகர் இருள்ஞானம் நீங்கியவராக, அருள்ஞானம் பெற்றவராகத் தோன்றி ஆனந்தப்பட்டார். கர்மங்களால் பழக்கப்பட்ட ஞானம், பக்தியினால் வளர்ச்சி அடையப்பட்ட பரமபக்தி, பிரபத்தி முதிர்ந்து பழுக்கும் சமயம், சோகங்கள், பயங்கள், பாபங்கள் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ளக்கூடும் என்கிற அஹங்கார மமகார சேஷ்டிதங்கள் என்ன செய்யக்கூடும்? புண்யஸ்ரவண கீர்த்திகள், பகவத் குணானுபவங்கள் சீதாராமமயமாக சாக்ஷாத் கரித்திருக்கிறபோது, ஸதாசார்ய திருஷ்டியினால் கடாக்ஷிக்கப் பட்ட சேதனின் துக்கங்கள் எவ்வளவு காலம் நீடிக்கும்? சீதாராமன் காலபைரவர். சங்கையும், சக்கிரத்தையும் யேந்தும் தடக்கையன், பங்கயக்கண்ணன், வஸிஷ்டர் போன்ற மாமுனிகள் புகழும் அருள்வரதன். மஹா மகிமைகள் பெற்றவரும் தூய்மையான ஜனகரின் ஸ்நேகத்தைச் கண்டு அறிபவரும், ஸர்வசாக்ஷியான சீதாராம சூரியன் அல்லவோ பிரகாசிக்கிறான். சீதாராமனிடம் ஜனகர் காட்டிய அனன்ய போக்யத்வமான பிரேமை ஸ்நேகமல்லவா அந்த தாற்காலிகமாக சோக பயங்களை

யும், மோஹ மமகாரங்களேயும், ஜீவனின் ஸ்வாதந்தர்யங் களேயும் நாசம் செய்தது. (1495)

துளசிதாஸர் சொல்லுகிருர், "இந்த உலகில் மூன்றுவித மான ஜீவர்கள் ஏற்படுகிருர்கள் என்று வேதங்கள் சொல்லு கின்றன. அவர்களில் முதல் வகை அர்த்தகாமிகளாக விஷய போகங்களில் ஈடுபடும் விஷய போகியர்கள். கர்மானுஷ்டானங் கள், யக்ஞாதிகள் இவைகளே சரிவரச் செய்து, யக்ஞபதியான விஷ்ணுவை ஆராதிக்கும் சிஷ்டர்கள், ஸாதகர்கள் இரண்டா வது வகை; ஞானமே பெரிது, அந்த ஞானமும் ,கர்மம், பக்தி விசேஷங்களால் சோபிக்கப்பட்டு, பிரபத்தியாக விகஸித்து, அந்த பிரபத்தியோகத்தின் மாபலன்களாகவிருக்கும் கைங்கரியம், அனன்யார்ஹத்வம், அனன்ய போக்யத்வமாக மாறி, பாரதந்தர் யர்களாக பகவானுக்கு வாழ்பவர்களாகத் தோன்றும் சித்த புருஷர்கள்; பிறர்களின் ஹிதத்தை நாடும் வைஷ்ணவ சீலர் கள்; இந்த மூன்றுவகை சேதனர்களிடமும், ஸ்ரீ சீதாராம னுடைய ஸ்நேக உள்ளம் சரளமாகவும், ஸஹஜமாகவும் ஏற்படு கிறது. இவர்கள் யாவரிலும் ராமனே பெரும் செல்வம், பரமார்த்தம். ராமனின் நாமங்களேக் கீர்த்தனம் செய்வது, அவருடைய நட்பைப் பெரும் போக்யமாக எவன் கருதுவானே, அவனே ஸர்வஸ்ரேயசையும், செல்வத்தையும் மிக்க உயர்ந்த ஸ்ரேயசாகிறதும், க்ஷயமாகாததுமான மோக்ஷ ஆனந்தத்தை அடைகிருன். அவனே நாராயணபதம், வைகுண்டபதம், என்று சொல்லப்படும் முகுந்தபதத்தை அடைகிருன். அப்பேற் பட்டவன் சாதுக்களின் சபையில் புகழப்படுகிருன். (1396)

[தியானம்

ஹே த்ரயீமயீ சக்தியாகிற சூர்யநாராயணு, வைஷ்ணவ சக்தியாகிற லக்ஷ்மி ராமா, என் அந்தகாரத்தை நாசம் செய்யும் சூரியபகவானே, எங்கே அப்பா இந்த நாடகம் நடிப்பதற்கு கற்றுக்கொண்டாய்? உமக்கு, ஸர்வத்தையும் பார்க்கும் உமக்கு, என் ஹ்ருதி வேத்யன், என் ஹ்ருதி வேத்யஸியாகிற திருமாமகளுடன் கூடிய சீதாராமா, என் ஆர்த்தி பிரபத்திகளே அறியாயோ! ஆதிதேவா என்று சொல்லிய கஜேந்திரனேயும், ஆண்டாளேயும், தியாகராஜரையும் நீர் சம்மாளிக்கவில்லேயா? ஜனகஸன்னுத ராமா உனக்கு கருடன் வாஹனமாக விருக்கும் போது, உனக்கு இந்திரன், நாரதர், வருணன் அந்தரங்கர்களாக விருக்கும்போது, சப்தரிஷிகளின் நடுவில் பிரகாசாத்மாவாக

துருவன் இருக்கும்போது, என் நிஜதாபங்கள் உன் கணங்களுக்கு காதுகளில் விழவில்லையா? ஹே சஹஸ்ரபாஹு, உன் திருவடிகளைப் பணியும் என்னிடம் ஏன் இந்த பராங்முகம்? தருமன் விடு தூதுக்குச் சென்ற உன் பாதங்களை எனக்குத் தரமாட்டாயா? தூயமனத்துடன் பராசரரை வணங்கிய மைத்ரேயரைப் போல, உன் நாம பிரபாவங்களில் ஆசைவைத்து, நாரதர் வியாஸரால் தூண்டப்பட்டு, திருமார்பில் கௌஸ்துபம், இடுப்பில் பட்டு பீதாம்பரம், கிரீடம் திருமுடியிலிருக்க, சூரியன் உதித்தாற் போல, உன் துணையழகாகிற சீதாபிராட்டியுடன், நாரதர் மேரு மலையில் கருமுகில் கண்டாற் போல, உன் திருமேனி திருவைபவ அழகுகளை நான் எப்போது ருசிக்கத் தரப்போகிறாய்? ஸர்கரே, பன்றியின் உதிரம் போல சிவந்ததானதும், நன்மணமுள்ளதுமான சிறந்த சந்தனத்தால் பூசப்பட்ட உன் திருமேனி சுகத்தை எப்போது தருவாய்? சந்திரனைச் சேர்ந்த சித்ரா நக்ஷத்திரம் போல உன் சுந்தரராஜ உருவத்தைக் காணாத கண்கள் வீணே. என் நெஞ்சே, என்னைச் சூழ்ந்து நிற்கும் பாகவத குழாங்களே, திருவேங்கடமுடையான் திருவடிகளும், பெரிய பெருமாள் மெய் பதங்களும், அருள்வரதனுடையதும், உரலோடு தயிர் வெண்ணெய் வைத்த இடத்தைத் தொட்ட உன் மலர்ப்பாதங்களை எப்போது தருவாய்? ஸகலமும் நீயே என்று அர்ஜுனன் மாதிரியும், சீதாபிராட்டி, ஆஞ்சநேயரும் சொன்னது போலவும், அந்த ஏகபாவத்தில் உன் வைஷ்ணவ ரூபத்தின் பெருமைகளை காணப் பேறு பெறவேண்டும். தியாகராஜர், வால்மீகி, துளசி தாஸர், கம்பன், மார்க்கண்டேயர், வியாஸர், பராசரர், சுகர் ஆகியவர்களின் பாதங்களை வணங்கிக் கேட்டும், எனக்கு நாரதர், இந்திரன் கடாக்ஷத்தினால் உன் கிருபை கிடைக்காதா? சசீராணியுடன் விளங்கும் மஹேந்திரா, தர்மத்தை நீ பரிபாலிப்பதாலும், நான்கு திசைகளிலும் நீ எந்த பிரும்மத்தை முதலில் அறிந்து, ஹிரண்யகர்ப்பர் என்று உலகத்திற்கு அறிவித்தாயோ, அந்த பரமாத்மாவை எனக்கு எப்போது அளிக்கப்போகிறாய்? த்ரயீ நாதா ஸர்கரே, தாமோதரரே, விஸ்வபாஹு கிருபை செய்.]

"அப்பேற்பட்ட வைஷ்ணவ பக்தியுடன் கூடியின்றி ஸ்ரீராமனிடம் அதிபிரேமையின்றி, என்ன ஞானமிருந்தாலும், எவ்வளவு பெரிய கர்மங்கள் செய்திருந்த போதிலும், எத்தனையோ தானதர்மங்கள் செய்திருந்த போதிலும் சோபை தராது? ஓடமிருந்து என்ன பயன்? ஓட்டுவதற்கு ஒருவன்

வேண்டாமா? அதுபோல ராமபக்தி, ராமஞானம், சீதாராம னிடம் பரமார்த்த பக்தி, பிரபத்தி ஆகியவையின்றி சம்சார சாகரத்தைத் தாண்டவும் முடியாது. (ராமன் தேவர்களேயும் உத்தாரணம் செய்த இந்திரகர்மா. தேவகாரியத்திற்காக பூமியில் அவதரித்த உத்தாரர். தேவமாதுக்களின் கஷ்டங்களே நிவாரணம் செய்வதற்காக அவதரித்த உத்தாரணர். அவதாரங்களிலும் தன் நிஜ ஸ்வரூபத்தை ஸந்தேகமின்றி காண்பிக்கும் கிருபாளு, உதீர்ணராகிய அவரை மானிடராக நினைப்பதே தவறு.) "நான் பலமுறைகள் சீதாராமனின் பெருமைகளேப்பற்றி பிறர்களுக்குச் சொல்லியும், என் உணர்ச்சியால் கவரப்பட்டு தமஸ்ஸை அடைந்துவிட்டேன்" என்று நினைத்த ஜனகராஜரை, மஹா முனியாகிற வஸிஷ்டபகவான், "அநேக பிரகாரம் ராமஸங்கல் பம் மிக்க உயர்ந்தது; அதன்படிதான் எல்லாம் நடந்தே தீரும்" என்று அன்பு மிக்க உறைகள் நிகழ்த்திய பின்பு, ஜனகர் தன் ஸ்வயஸ்திதிக்கு வந்தார். கவலேகளும் வருத்தங்களும் தீர்ந்து, சீதாராமனேப் பார்க்கும் ஆனந்தத்தில் ஈடுபட்டார். அதன்பிறகு, ராமனுல் ஏற்படுத்தப்பட்ட "காட்"டில் ஸ்நானம் செய்தார்கள். (1397)

அன்று முழுவதும் சகல ஜனங்களும் வருத்தத்துட னிருந்தார்கள். ஜலம்கூட சாப்பிடாமல் அன்றைய தினம் கழிந்தது. பசு, பக்ஷி, மான்கள் யாவும்கூட ஒருவிதமான ஆகாரத்தையும் சாப்பிடவில்லே. இவ்விதமான அசேதனப் பொருள்கள் இருக்கும்போது, ஞானம்வைராக்யமுள்ள மனிதர் களேப்பற்றிச் சொல்வானேன்? (1398)

நிமிவம்சத்தில் பிறந்த ஜனகராஜரும், ரகுவம்சத்தில் பிறந்த ஸ்ரீராமச்சந்திரனும் மறுநாட் காலேயில் ஸ்நானம் செய்துவிட்டு, மிக்கவருத்தத்துடனும், மனம்தளர்ந்து வடவிருக்ஷத்தின் கீழ் அமர்ந்திருந்தார்கள். (1399)

அந்த சமயம் அயோத்தியாபுரியில் வாழ்ந்துவரும் பூசுரர் களான பிராமணர்களும் மிதிலேயில் வசிக்கும் பிராம்மணர்களும் அதேமாதிரி சூர்யகுல குருவாகிற வஸிஷ்டரும், ஜனகமகா ராஜரின் குலகுருவாகிற சதானந்தரும் ஸம்சாரத்தில் ஏற்படும் தாபத்ரயங்களேச் சொல்லி, பரமார்த்தமான பகவானுடைய சரணங்களின் பெருமைகளேயும் சொல்லி அதையாவரும் அடைய வேண்டும். அவனல்லவோ செற்ருேர்க்கு வெப்பம் கொடுக்கும் விமலன் என்று புத்தி உபதேசம் செய்தார்கள். வஸிஷ்ட பகவானும் சதானந்தரும் இகபரசுகங்களேத் தரும் நன்மார்க்கங்

களைக் கண்டு அறிந்திருந்தபடியால், எல்லோருக்கும் அவர்களின் ஹிதமான உபதேசங்கள், பரமதத்வங்கள், சதுர்வித புருஷார்த்தங்களைக் கொடுப்பதாகவிருந்தன. (1400)

அவர்கள் சாஸ்திரங்களில் பரதர்மம் எது என்பது பற்றி உபதேசித்தார்கள். [பீஷ்மர் தர்ம புத்ராதிகளுக்கு உபதேசித்தது மாதிரி], அநேக தர்மங்கள், உட்பகை வெளிப்பகைகளானதும் பகவத் பிராப்திக்கு ஏற்படும் விக்னங்கள், ஸ்வரூபவிரோதிகள், ஸ்வபாவநாசத்தில் ஏற்படும் விபரீதங்கள், ஸதாசார்ய உபதேசம், கடாக்ஷமின்றி கஷ்டப்படும் சேதனர்களின் கதைகள், ஆசார்ய கடாக்ஷத்தினால் உய்விக்கப்பட்ட மஹான்களின் சரிதங்கள், விவேகயுக்தமான ஞானவைராக்ய பக்தி ஆகியவைகளின் பெருமைகள் ஆகிய எல்லாவற்றையும் எடுத்து உரைத்தார். அதேசமயம் கௌசிக விஸ்வாமித்ரரும் அவிடம் எழுந்தருளி புராணங்களைச் சொல்லி ஜனகருக்கும் ஸ்ரீராமனுக்கும் அழகான நீதிகளையும் உபதேசித்தார். (1401)

அந்தசமயம் ஸ்ரீரகுநாதர், கௌசிகபகவானைப் பார்த்துச் சொன்னார். “என்னை ஆட்கொள்ளவந்த பிரபு, நேற்று யாவரும் தண்ணீர்கூட சாப்பிடாமல் ஏகவருத்தமயமாக யிருக்கிறார்கள். இப்போதும்கூட ஒன்றும் சாப்பிடாமல் வருத்தத்துடன் அவர்கள் இருக்கிறார்கள். இதற்கு ஏதாவது உபாயம் செய்யவேண்டும் ஸ்வாமி” என்று விக்ஞாபித்தார். இதைக்கேட்டு விஸ்வாமித்ரர் “ஆம் ரகுராய் சொல்வது சரிதான், இப்போது பாதிதினம் முடிந்துவிட்டது. இனிமேலாவது ஏதாவது சாப்பிடவேண்டும்” என்று சொன்னார். (1402)

விஸ்வாமித்திரரின் மனதில் இருக்கும் எண்ணத்தையுணர்ந்த ஜனகமஹாராஜர் பதில் சொன்னார் “இப்போது தான்யங்களால் தயாரிக்கப்பட்ட உணவு சாப்பிடுவது உசிதமில்லை. ஏதாவது மிதமான ஆகாரம் பசியைத் தணிப்பதற்கு சாப்பிட்டால் போதும்” என்று சொல்லிய வார்த்தைகள் சகலருக்கும் சந்தோஷத்தை கொடுப்பதாகவிருந்தன. அரசருடைய உத்தரவைப் பெற்ற ஜனங்கள் மத்தியான்ன ஸ்நானத்திற்குச் சென்றார்கள். (1403)

அந்தசமயம் அந்தக் காட்டில் இருக்கும் வனவாசிகள், கோல கிராதர்கள் அநேகவிதமான பழங்கள், இலைகள், தொன்னைகள் கிழங்குவகைகள் நிறையக் கொண்டு வந்து வைத்து அவர்களின் முன்பு வைத்தார்கள். (1404)

சீதையுடன் கூடிய ராமனுடைய அருள் பிரஸாதத்தால் காமதகிரியாகிற சித்ரகூடமலை அருள்புரியும் மலையாக விளங்கியது. மனோஹரமாகவும் அவரவர்களின் விருப்பங்களுக்கு ஏற்ப வஸ்துக்களைக் கொடுக்கும் புண்யபூமியாகவிருந்தது. ஸர்வகாமங்களையும் பூர்த்தி செய்வதாகவும், ஸர்வதுக்கங்களையும் நாசம் செய்வதாகவும், தம்மைத் தியானிப்பவர்களுக்கு ஸம்சார தாபத்தை நிவிருத்திசெய்யும் அபாரமான வைத்தியர் போலவும், இயற்கையின் அழகினால் பக்தர்களின் தாபங்களை அபகரிக்கும் குன்றுகளுடன் விளங்கின. அந்த புண்யமானவிடத்தில் அழகான நதிகளும், வனபூமிகளும் தோட்டங்களும், பழுத்த நல்லப் பழங்கள் உள்ள வனாந்தரங்களும் அநேகம் இருந்தன. அவைகளைக் கண்டதும் ஸகலருக்கும் வருத்தங்கள் தீர்ந்து, ஆனந்தமயத்தை ஊட்டிவைப்பது போலவிருந்தன. (1405)

வில்வமரங்கள், விலாம்பழமரங்கள் இன்னும் சுவையுள்ள ரசமுள்ளதுமான பழங்களுடன் விருக்ஷங்கள் அநேகம் இருந்தன. பலவிதமான மணமுள்ள புஷ்பங்கள் அழகான பசு பக்ஷிகள் அனுகூலமான மிருகங்கள் அவர்களை வரவேற்பதுபோல கூவிக் கொண்டிருந்தன. அந்தசமயம் வீட்டிற்கு வரும் கண்யமுள்ள அதிதியை இனிய முகத்துடன் வரவேற்கும் ராஜதம்பதிகள் போலவும், ஸகல ஜீவராசிகளும் அந்த வனத்தில்வந்த ஜனங்களை மிகுந்த உத்ஸாஹத்துடன் வரவேற்பது போல ஆனந்தமயமாக விருந்தன. மூன்றுவித பெருமையுள்ள மந்தசீதள மணமுள்ள, வாயு எங்கும் வீசுவதாகவிருந்தது. (1406)

அந்த காமதகிரியின் அழகு மனோஹரங்களை யார் எவ்விதம் வர்ணிக்கக் கூடும்? ப்ருதுமஹாராஜன் காலத்தில் பூமி தாய்ப்பசு போல எவ்விதம் கறந்ததோ, அதுபோல நீதிமானாகிற ஜனக மஹாராஜரை கௌரவிப்பதற்காக ப்ருதிவியாகிற தேவி தன்னுடைய செல்வங்களை சுரபிபோல செறிந்துகொண்டு, இளம் கன்றுகளுக்குத் தாய்ப் பசுபோல விளங்கினாள். அந்த சமயம் ஸகல ஜனங்களும் ஜலத்தில் குளித்து ஸ்நானம் தர்ப்பணம் செய்துவிட்டு, வந்தார்கள். அதன்பிறகு ஸ்ரீராமச்சந்திரன், ஜனகர், வஸிஷ்டர் ஆகியவர்களின் ஆக்ஞையைப் பெற்று, அவர்கள் தங்களுக்குப் பிடித்தமான மரங்களை அடைந்து, அதனடியில் தங்குவதற்கு ஏற்பாடு செய்தார்கள். ஒவ்வொரு பழவிருக்ஷத்தையும் நிழல்தரும் விருக்ஷத்தையும் பாரிஜாத விருக்ஷத்தைக் கண்டதுபோல அன்புடனும் அம்ருதம் தரும் நோக்குக்களுடனும் கண்டு அநேகவிதமாக இன்புற்

ருர்கள். அந்தப்புர ஜனங்கள் அவரவர்களுக்கு இஷ்டப்படி பழங்களையும் பூக்களையும் இலைதளங்களையும், கந்தமூலங்களையும் எடுத்துக் கொண்டார்கள். ஒவ்வொன்றும் கற்பக பாரிஜாத விருக்ஷம்போல அம்ருதமயமான பதார்த்தங்களை கொடுப்பதாக விருந்தன. (1407)

மிக்க வினயத்துடனும் பக்தி சிரத்தையுடனும் ஸ்ரீராமச்சந்திரனும் குரு வஸிஷ்டராலும் கூடைகள் நிறைய பழங்கள் ஒவ்வொருவருக்கும் அனுப்பப்பட்டன. அப்பொழுது ஸகல ஜனங்கள் பித்ருக்கள், தேவதைகள், அதிதிகள் குருக்கள் ஆகியோரைப் பூஜை செய்துவிட்டு, பலஹாரம் செய்ய ஆரம்பித்தார்கள். (1408)

இந்தவிதம் நான்கு தினங்கள் கழிந்தன. ஸ்ரீமத்ராமச்சந்திரனைக் கண்டு ஆனந்தித்து ஸகல ஸ்திரி புருஷர்கள் யாவரும் சுகத்தையும் ஆனந்தத்தையும் அடைந்தார்கள். அங்கு கூடியிருந்த இரு சமாஜங்களுக்கும் ஒரே எண்ணம்தான் குடி இருந்தது. ஸ்ரீ சீதாராமனிடமிருந்து நாம் பிரிந்து நாம் நம் ஊர்களுக்கு திரும்பிப் போகக்கூடாது. அது நமக்கு ஹிதத்தையும் சுகத்தையும் தராது என்று எண்ணமிட்டனர். (1409)

[தியானம்

ஹே ரங்கபதே, வெங்கடமலையானே, ஆதிரிஷியே புருஷா, புருஷோத்தமா, முகுந்தா, வைகுண்டபதே, மூவுலகங்களிலும் பெரியோனே, வண்டுகளாகிற ரிஷிகள் கூட்டம் கூட்டமாக உம்முடைய திருவடிகளை சேவிக்கின்றனர். ரகசியமாக மானிட வேஷம்தரித்து, வனம், மலை, நதி இவைகளில் சஞ்சரித்து உம்மைத் தெய்வமாக கொண்டாடுபவர்களை, நீர் அவர்களது சேவையை வேண்டும் என்று வேண்டுகிறீர்கள். உன் பக்தர்களை, உன் புகழ்களைப் பாடும் உன் பராயணர்களை நீரும் ஆதரிக்கிறீர். நாரதருக்குத் தோற்றம் கொடுத்த நாராயணரே, த்வந்தமற்றவர்களும் அஹங்காரம் அற்றவர்களும் சுசியாகவிருப்பவர்களும் சுத்தமான உள்பார்வை, வெளிப்பார்வையுள்ள லோசனங்களால் அடிக்கடி உம்முடைய திவ்யமான ரூபத்தைப் பார்க்கிறார்கள். பூதபாவனரே, ராவணன் போன்ற துராத்மாக்களுக்கும், தர்ப்ப சயனத்தில் உன்காரியத்தைச் செய்யத் தாமதித்த கடலரசனுக்கும் என்பாவம், துராசை, க்ரோதம் துஷ்கர்மங்கள், அபராதங்கள் அனைத்துக்கும், பார்ப்பவர்களின் மனத்தைக் கவரும்படி பாண பிரயோகம் செய்யும் ராகவ கம்பீரா, அழகாக ஒலிப்பதும் நாத

பிரும்மத்தை உண்டுபண்ணுவதும், பக்தர்களின் அஹங்காரத்தை அழிப்பதும் உயரே நோக்கிய சிவந்த உன் செவ்விய திருவடிகளை மந்திரமலையாகிய என் பந்தபாசங்களில் வைத்து, ஆமை மாதிரி ஆதி கூர்மம் மாதிரி வைத்து என்னை ரக்ஷிக்கமாட்டாயா? நான் ஸ்வதந்தரன், உன் அடியார்களுக்குப் பணியாதவன், நற்குலத்தில் பிறந்தவன், ஐஸ்வரியம், வித்யைகள் உள்ளவன் என்கிற இறுமாப்பினால் உன்னையும், உன் அடியார்களையும் மறந்த கொடியோனாகிய எனக்கு அருள்தரும் நோக்குக்களுடன் குற்றங்களை மறந்து, மனோஹரமாய் விளங்குவதும், கல்பக விருக்ஷத்தின் தளிர்போன்றதும், விகஸித்த தாமரையைப்போல குளிர்ச்சியுள்ளதுமான உன் திருமாமகள் ஒதுங்கும் கண்விழிகளை என் மீது கிருபையால் வர்ஷிக்கமாட்டாயா? அலைகள் போன்றதும், நெருக்கமானதும், கருமை நிறமுள்ளதும் வீர சிம்மத்தைப் போன்றதுமான உன் கேசபாரத்தையும் மந்திர புஷ்பங்களுடனும் சுகந்த மணமுள்ள இளதுளசிமாலை மரு ஆகியவைகளால் சோபிதமாகக் காட்டும் உன்னை ஸ்ரீவாஸ ரமணனாகச் செய்யும் உன் விசாலமான மார்பை எப்போது என் பிராட்டி எனக்கு காட்டி அருள் செய்வாள்? பன்னிரு நாமங்களாகத் துதிக்கும் எனக்கு உன் கீர்த்தி பிரபாவங்களைச் சொல்ல இயலாமல், உம்முடைய நாமங்களே ஸ்ரேயஸை அளிக்க வல்லது என்று நம்பி வைகுண்டத்தில் வஸிக்கும் உம்முடைய கல்யாண குணங்களை என் மெலிந்த சொற்களால் துதிக்கிறேன். யோகிகளுக்கும் மஹா பிராக்ஞர்களுக்கும், உம் தர்சனத்தையே வியவஸ்தை பண்ணி வாழும் ஜீவர்களுக்கும், மஹாலக்ஷ்மி நந்திகேசன், நாரதர் தும்புரு சதாகீதம் செய்யும் ஸர்வ காரணத்வமுமான உம்முடைய பாத பங்கஜங்களை எப்போது உம்முடைய திவ்ய ஸ்வரூபத்துடன் காண்பிக்கப் போகிறாய்? நாகரதியின் மேல் உட்கார்ந்திருக்கும் பரம பதநாதா, நாகராஜரின் மேல் உட்கார்ந்து என் ஹ்ருதயத்தில் ஆக்ஷி செய்யும் ரதாங்கபாணே ஸ்ரீநிவாஸா, ஸதாம் கதியே, சரணாகத ஆப்தா, மாதவா, அச்யுதா, கோவிந்தா, விகர்த்தா, மஹாலக்ஷ்மியுடன் கூடிய நாராயணா, ரங்கபதே, வேங்கடபதே, வரதா, உன்னை அனன்ய மனதுடனும் என் குல விளக்காகவும், ஹ்ருஷீ கேசனாகவும், கிருஷ்ணனாகவும் ராமனாகவும், கௌஸல்யா தேவகி நந்தனாகவும் ஆராதிக்கிறேன். முக்தியைக் கொடுக்கும் கோவிதாம்பதியே, அவ்யக்த பொருளே வேதச்சுடரே, கிருபைசெய். உனக்குச் சேவை செய்ய பெரிய உடையாரான ஜடாயுவுக்கு உன்

லோகத்தை அளித்து, உன் மானிட வேஷத்தை கலேத்துக் கொண்டாயே, அப்பேற்பட்ட கருணையுடன் ராமசீதா, தயை செய்.]

"எங்கள் பிரபுவாகிய சீதாராமனுடைய சேர்க்கை ஸம்பந்தம் வனத்திலாவது இருக்கட்டும், நாம் அவர்களை விட்டுப் பிரியோம். இவர்களுடன் சேர்ந்து வாழ்வது கோடி அமரபுரங்களில் வசிப்பதினுல் யேற்படும் சுகங்களைக் காட்டிலும் மேலானது. ராமனேயும் வைதேஹியையும் லக்ஷ்மணனையும் விட்டுப்பிரிந்து தன் இல்லத்தில் வாழ விரும்பும் துராத்மாவுக்கு விதாதா நிச்சயமாக விபரீத புத்தியுடன் இருப்பார்." (1410)

(எப்போது நாம் ஸ்ரீராமனே பரம புருஷார்த்தம், சீதாராம கைங்கர்யமே வைகுண்டம், ராகவனே அனுமயனுன நாராயணர் அப்ரமத்தனுன ஹ்ருஷிகேசன், சீதை அவனுடன் கூடி விளையாடும் மாயை, சங்கல்ப மாத்திரத்தில் காரியங்களைச் சாதிக்கும் மஹா விக்ரமர்கள் என்று நினைக்கிறோமோ, இவர்களுடன் வசிக்காமல், ஸ்வயார்த்தமான சுகங்களைத் தேடி ஸ்வதந்திரமாக அடங்கா வன்மையைக் கொண்ட பிடிவாதக்காரர்களான ஜீவர்கள் அல்லவோ விதாதாவினுல் துர்பாக்கியர்களாக விதிக்கப்பட்டு, அவர்களை விட்டுப் பிரிந்து வாழ்வார்கள்.) "நமக்கு சீதாராம ஸந்நிதியில் வாழ்வதற்கு எண்ணம் ஏற்பட்டிருப்பதிலிருந்து, தைவம் நமக்கு அனுகூலமாக விருக்கிறது. (அவர்களுடைய பிரஸாதம், பகவானுகிற நாராயணருடைய பிரஸாதம், நாரத பகவானுக்கு கிடைத்திருப்பதுபோல நமக்கும் கிடைத்திருக்கிறது. நாம் த்வந்தங்கள், பாசங்கள், பயங்கள், அஹங்காரமமகாரங்கள் ஆகிய தோஷங்களைத் துறந்து,) சுசியாக மந்தாகினியில் மூன்று தடவைகள் ஸ்நானம் செய்து மங்களங்களை வாரிக்கொடுக்கும் முகில்வண்ணன் மணிவண்ணனுகிற திருமாலை ஆனந்தமாக தர்சனம் செய்வோம். ஸ்ரீமானுன ராமனை முதித மனத்துடன் கண்டு களிப்போம். (ஸ்ரீவத்ஸவக்ஷனும், சாருமணி கௌஸ்துப மார்பையுடையவனும், மந்த ஸ்மித முக அம்போஜனனுமான சீதா நாயகனை, ராமானுஜன் ஸந்நிதியின் நிழலில், அவருடைய மூச்சுக் காற்றுக்களால் முக்குணங்கள் போக்கப்பட்டு அதனுல் யேற்படும் சுத்த ஸத்வத்தால் அவர்களைக் கண்டு மகிழ்வோம். அழகானதும் குளிர்ந்ததும் பாபங்களைப் போக்குவதும் விழுந்து நமஸ்காரங்கள் செய்யும் பக்தர்களை சந்தோஷிப்பதுமான அவர்களுடைய அருள் நோக்குக்களை நாம் அடைவோம்.) (1411)

நம் பிரபு ஸ்ரீராமனுடைய பர்வதமாகிற சித்ரகூட பர்வதம் நமது மனோபீஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் வைகுண்டம் மாதிரியிருக்கிறது. அதில் நாம் சஞ்சரிப்பதால், அதை நாம் பிரதக்ஷணம் செய்வதால், அங்கு வசிக்கும் தேவர்கள் இந்திரன் முதலிய திக்பாலர்கள், ஆதிசேஷன், கருத்மான், விஷ்வக்ஸேனர் பிருகு மார்க்கண்டேய நாரதர் பராசரர் ஸனத்குமாரர் போன்ற மஹாத்மாக்களான ரிஷிகளையும் பிரதக்ஷிணம் செய்வதுபோலவிருக்கும். இங்கு உள்ள வனங்களையும் தபஸ்விகளையும் அவர்கள் வசிக்கும் ஸ்தானங்களையும் நாம் சுற்றி வருவதால், உமை சங்கரர் சாந்நித்யம் செய்யும் இடம் போலவும் இருக்கிறது. அம்ருதத்திற்குச் சமமான கந்த மூலங்களையும், ருசியுள்ளதும் மணமுள்ளதுமான பழங்களையும் நாம் சாப்பிடலாம். இந்த விதமாக நாம் சீதா ராம லக்ஷ்மணன் சந்நிதானத்தில் பதினன்கு வருஷங்கள் வனத்திலேயே காலம் கழித்து விடலாம். நம் வாசம் வைகுண்ட வாசம் போல சகல சுகத்தையும் ஆனந்தத்தையும் உமா சங்கரருடைய திருவருளையும் கொடுக்கும். காலம் வெகு சீக்கிரத்தில் போவது கூட நமக்குத் தெரியாமல் போய்விடும்.'' (அதாவது வனத்தில் இருக்கிறோமா, வைகுண்டத்தில் இருக்கிறோமா என்கிற வித்தியாசம் இல்லாமல் நாம் வாழ்க்கையின் ஸமஸ்த ஸாரத்தை அடைந்து, பகவான் நாராயணரை அனன்ய மனஸ்ஸுடன் நேராகத் தரிசனம் செய்து மஹா துர்லபமான ராமசீதா லக்ஷ்மண சாயுஜ்யத்தை நாம் தினமும் ஹ்ருதயத்தில் ஸ்மரிக்கும் வைகுண்டத்தை அடைந்துவிடலாம், ஸர்வலோக த்ருக்கான ஸ்ரீராமன் சாஸ்வதன்; மஹா பாஹுக்களை நம் போன்ற பக்தர்களை ரக்ஷிப்பதற்காகவே கருணையுள்ளத்துடன் கொண்டவன்; கேசவன்; ஸத்ய விக்ரமன்; அசிந்தனீயன்; புண்டரீகாக்ஷன்; இவனும் சீதையும் லக்ஷ்மணனும் பரதனும் சத்ருக்னனும் மானிடர்களல்ல. நாம் ஏமாந்து போகக்கூடாது.) (1412)

இந்த விதமாக அங்கு கூடியிருந்த ஆர்த்த பிரபன்னர்களான ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். அவர்களுடைய தீர்க்க அறிவும் சீதா ராம லக்ஷ்மணனிடம் கொண்ட ஸஹஜ ஸ்வபாவமும் ஆச்சரியப்படத்தக்கவை. ''நாம் அனந்தமான சுகத்தை அடைவதற்கு மஹா அபராதிகளாகிவிட்டோம். நமக்கு யோக்யதையில்லாதபடியால் நம்மைவிட்டுப்போக இவர்களை வனத்திற்கு அனுப்பிவிட்டோம். மீண்டும் சீதாராமன் நம்மோடு வசிப்பதற்கு சம்மதிப்பாரோ தெரியவில்லை. நாம் மஹா

சந்தேகத்தை அடைந்தாலும், சீதாராம ஸம்பந்தத்தை விட மாட்டோம். நமக்கு அவர்கள் அனுக்ரஹம் செய்வார்கள். நாமும் இரு சமாஜத்தார்களும் இயற்கையாகவே ஸ்ரீசீதாராமனுடைய சரணப்ஜங்களில் ப்ரேமை கொண்டுள்ளவர்களாக விருக்கிறோம். நம்மிடம் கருணைஸிந்துவாகிய அவர் கட்டாயம் அருள் செய்வார். நமக்கு அவர்களுடன் பிறவி தந்த புண்யத்தினால் அவர்களை அவர்களாலேயே நாம் அடையப்பெறுவோம்.'' (1413)

இந்த விதமாக அவர்கள் சீதாராம மனோரதத்துடன் இருந்து வந்தார்கள். அவர்களுடைய ப்ரேமை ரஸம் கலந்த வசனங்களை கேட்பதிலேயும் ஸ்மரிப்பதாலேயும், புண்ய ஸ்ரவணமாகவும் சீதா ராம லக்ஷ்மண ஸாயுஜ்யத்தையும் அடையவிப்பதாகவும் விருக்கிறது. சகல மங்களங்களையும் கொடுப்பதாகவும் விருக்கின்றன. மனோஹரமாயும் நித்ய ஆனந்தத்தைத் தருவதாயும் சாஸ்வதமான பலனையும் கொடுப்பதாகவுமிருக்கிறது. சாக்ஷாத் வைகுண்ட பதமே இவ்விதம் ஆனந்தம் தருவதாகவும் காட்டப் படுகிறது. அதுவல்லவோ சீதா ராம லக்ஷ்மண பரத சத்ருக்ன ரின் நித்ய வாஸம். (இவ்விதம் துளசிதாஸர் மஹா கருணையுடன் நினைவிற்கு அரியதும், புலனோடு புலனலன் ஒழிவிலன் பரந்த அந்த நாராயணன் ஒருவனை அணுகிய பாக்யத்தை ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் அத்தி வேங்கட பதத்தை, அந்தமிழ் புகழ் காரேழி வண்ணலைக் காட்டிய மஹா அருள் கொண்டாடும் அடியவர், அருளின திருமறையின் பொருள்—அடியார்களிடம் அருள் கொண்டு, இவ்வுலகினில் அருள் கண்டு, ஆள் புக்கக் காதல் அடிமைப் பயனைக் காட்டிவித்த அன்பன். அடைந்தவர்க்கெல் லாம் வைகுந்தம் காட்டிய அமரபதியாக விளங்குகிறார். அவருக்கு நான் எவ்வாறு கைம்மாறு செய்வேன்?) (1414)

இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும்போது சீதையின் தாயா ராகிய சுநயனாவினால் அனுப்பப்பட்ட தாதிகள் கௌஸல்யா சுமித்திரா கைகேயி இவர்களிடம் ஸந்தேசம் கொண்டுபோவார் களாகக் காணப்பட்டார்கள். (1415)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீமந் நாராயணா, சீதாராமா, உன்னைத் துளசிதாஸர் பிரஹ்லாதன் துருவன் பிரும்மா சங்கரர் இந்திராதி தேவர்கள் சூழவும் மஹரிஷி கள் சூழவும் பார்த்து, உன் ஹ்ருதயத் தாமரையில் பொங்கி

வரும் பிரேமை அதிசயத்தைப் பார்க்கவேண்டும். வனமாலி, வேதாத்மாவான கருடனால் அடையாளம் செய்யப்பட்ட காருண்ய மூர்த்தியே, மார்பு பிரதேசத்தில் ஸ்ரீவத்ஸம் என்கிற மறுவினால் கிருதலக்ஷணனாகச் செய்யப்பட்ட ஸர்வ லக்ஷண லக்ஷணரே, திருமாமகளால் முத்ரையிடப்பட்ட ஸ்ரீயப்பதியே, வாஸுதேவா, ரகுகுல ஸ்ரேஷ்டா, வஸிஷ்டர் கர்க்கர் முதலிய பெரியோர்களால் குணங்களாலும் ரூபத்தாலும் கீர்த்தியாலும் மாஹாத்மியத்தாலும் நாராயணனுக்குச் சமமானவர்கள் என்று "கிருஷ்ண", "ராமன்" என்று பெயர் வைக்கப்பட்ட, குறைவில்லாத கோவிந்தா, என் மனதுக்கினியானே, பிரிய தர்சனரே, மனோஹரமான பிரபுவே, எப்போது சீதையுடன் கூடிய உன் தர்சனத்தை நான் பார்ப்பேன்! அச்யுத பதங்களே, என் ஆராதனம்; ஸமத்வமாகிறதும், ஸர்வத்ர ஸம திருஷ்டியே என் விரதம்; ஸம்சார விஷயங்கள் அஸாரமானது என்று விவேக ஞானத்தால் அறிந்து பரமார்த்தம் என்று சொல்லப்படும் கல்பக விருக்ஷமாகிற பகவானுடைய பாதங்களை ஹ்ருதயத்தில் தாரணை செய்துகொண்டு, கிருத லக்ஷணனாக என் தாபங்களைப் போக்கி, உம்முடைய பரமானந்த ஸந்தோஹ லக்ஷ்மியையும் நான் அடைவேன். உமா மஹேஸ்வரரால் துதிக்கப்பட்ட நாராயணா, ராமா சீதா, ருக்மணி கிருஷ்ணா, நீர் ஒருவரே ஆதியில் உண்டானவர். புருஷர், புருஷோத்தமர்; ஏற்றத்தாழ்வு அற்றவர்; ஸ்துதி செய்வதற்கு யோக்யமானவர்; உம்மிடம் எல்லாக் குணங்களுமிருப்பதால் உமது சங்கல்பத்தின்படி உமது மாயையால் விகாரத்திற்குத் தக்கபடி ரூபத்தை எடுக்கிறீர். அதன்படி மானிட நடத்தையிலிருந்து ஸனகர், ஜனகர் போன்ற சாதுக்கள் வந்து இளைப்பாறும் இடமாக யிருக்கும் யதுகுல ரகுகுல ஸ்ரேஷ்டராகவும், ஸந்நிவாஸராகவும் ஸநாதனதமராகவும் விளங்குகிறீர். என்னையும் உம்மையும் காலத்தால் பிரிக்கப்பட்டு மீண்டும் சேர்க்கும் சங்கர்ஷணராகவும் இருக்கிறீர். நீர்தான் என் கதி. உங்கள் பாதங்கள்தான் எனக்கு சிந்தாமணி. நீரும் சீதையும் தான் உமா மஹேஸ்வரர். உங்களுடைய பாதங்களை பஜிப்பதே என் ஸ்ரேயஸ். உங்களை ஸ்தோத்ரம் செய்வதால் என் அபராதங்களுக்கு மன்னிப்பை கேட்பேன். சூரியன் சந்திரன் மறைக்கப்பட்டாலும் பிரகாச ஆத்மாவாகிற நீர் இருக்கிறபடியால் உமது கருணையால் ஜனன மரண ரூபமான ஸம்சார ஓடம் போன்ற சரீரத்தைப் பெற்று, உமது ஆராதனையால் ஸம்சாரக் கடலைத்

தாண்டுவேன். ஸர்வேசா, ஸர்வ பூதாத்மன், அச்யுதா விஷ்ணு, அனந்தா, ஸர்வாதாரா கிருபை செய்.]

சீதைக்கும் அவள் மாமியார்களுக்கும் சாவகாஸமிருப்பதை அறிந்து, ஜனகமஹாராஜரின் ராணிகள் அவர்களைக் காண வந்தார்கள். கௌஸல்யா ராணி அவர்களுக்கு மரியாதை செய்து, ஆஸனங்களைக் கொடுத்து உபசரித்தாள். (1416)

இரு பக்கங்களிலும் உத்தம சில குணங்களுடன் பிரகாசிக்கும் பிரேமை ஸ்நேகத்தைக் கண்டு, மற்ற யாவரும் இந்த நிரதிசய அன்பு அனுத்தமானது; இதை நாம் முந்திக் கேட்டதுமில்லை; பார்த்ததுமில்லை என்று பேசிக்கொண்டார்கள். இவர்களுடைய ஸ்நேகம் கடூரமான நெஞ்சாகிற வஜ்ரத்தையே உருகும்படி செய்யும். பவித்திரமானதுமான உள்ளன்பினால் யேற்பட்ட ஸஹஜ ஸ்நேகம். கௌஸல்யா சுநயனா ஆகியவர்களின் சரீரங்கள் மித்ரபாவத்தினால் புளகாங்கிதமடைந்து நேத்திரங்களில் பேரானந்த வெள்ளமாகிய பிரேமை அம்சுகள் பொங்கிவழிய, ஒன்றும் பேசமுடியாமல் இரு ராணிகளும் பூமியைத் தங்கள் நகங்களினால் கீறிக்கொண்டிருந்தார்கள். என்ன சொல்வது, என்ன செய்வது யென்று யோசனையில் இருந்தார்கள். (1417)

இந்த கௌசல்யாதேவி ஸ்ரீராமன் அவதரித்த சமயம் குழந்தை ராமனை சங்குசக்கர கதாதரனாகப்பார்த்த புண்ணியவதி. இந்த ஸுநயனா சீதையை பத்மயோனியில் பத்மகரத்துடன் பார்த்த மஹா பாக்கியவதி. (இவர்கள் இருவர்களும் சீதாராம பிரஸாதம் பெற்ற மஹா பாக்கியமுள்ளவர்கள். சீதையின் பதியாகிற ஸ்ரீராமமூர்த்தியின் பிரேமையை தேவகி யசோதை மாதிரி அடைந்தவர்கள்.) பகவத்கிருபையினால் யேற்பட்ட கருணை ரஸம்கொண்ட இருமூர்த்திகள். இவர்களைக்கண்டு கருணை அநேக உருவங்கள் யெடுத்து அணைத்துக்கொள்வது போல விளங்கிற்று. சீதையின் மாதாவாகிய ஸுநயனா சொன்னாள் "விதிபடுமோசம் செய்துவிட்டது; அதனுடைய க்ரூரபுத்தி பாலில் பொங்கிவரும் நுரையை வஜ்ரத்தினால் பிளந்தால் நல்லது என்று தீர்மானித்து மூர்க்கத்தனமாக அடித்துவிட்டது. தோஷமற்ற உங்களை விதிக்ரூரமான நடத்தையால் சோதித்து விட்டது." (1418)

"பகவத்கிருபை அம்ருதம், மிருதசஞ்சீவினி என்று நாம் சொல்லக் கேட்டிருக்கிறோம். ஆனால் நாம் விதிச்செயலைப் பார்ப்பதோ க்ரூரமான ஹாலவிஷம் போலிருக்கிறது. இவ்வளவு

தாரம் விதாதா பயங்கரமாக விருப்பாரா என்று சந்தேகிக்கும்படி யிருக்கிறது. நாம் விதியினுல் பார்ப்பது காக்கை, ஆந்தை, கொக்கு போல சாதாரணமானதும், க்ரூரமானதுமான பக்ஷிகளைத்தான். மஹா சுக்ருதமாகிற ஹம்சத்தை மானஸ ஸரோவரில்தானே காணமுடியும்?'' (1419)

''இந்த அழகான வார்த்தைகளைக் கேட்ட சுமித்திராதேவி மிக்க சோகத்துடன் சொல்ல ஆரம்பித்தாள். ''இந்த விதியாகிற பகவத்சங்கல்பம், அதனுடைய இச்சையால் செய்யப் படும் காலகதியாகிற விதியின் போக்கு விபரீதமாகவும் விசித்திர மாகவுமிருக்கிறது. உலகங்களின் உற்பத்தி இருப்பு நாசம் இவைகளுக்குக் காரணபூதரும் அதிக சாந்தரும், சிநேகிதரும், குக்ஷியிலுள்ள சகல சராசரங்களையும் உடைய நாராயணர் ஒரு சமயம் படைக்கிருர்; காப்பாற்றுகிருர்; மீண்டும் அவற்றை அழிக்கிருர். அவருடைய லீலா விபூதிகளின் விளையாட்டுக்களை விவேக சூன்யமான நான் எவ்விதம் சொல்லமுடியும்? (1420)

கௌஸல்யாதேவி சொன்னுள். ''இதில் யாவருக்கும் தோஷம் கற்பிக்கிறதாகவே இல்லை. துக்கம், சுகம், லாபம், நஷ்டம், பிறப்பு, இறப்பு யாவும் விதாதாவினுல் யேற்படுகிறது. அவரவர்களின் கர்மங்களின் அதீனத்தால் யேற்பட்டாலும் பகவத்ஸங்கல்பத்தால் தான் நேரிடுகிறது. கர்மகதியும் மிகவும் க்ரூரமானது. இதை அறிந்துதான் பகவான் ஸர்வசாக்ஷியாக சுப அசுப பலன்களை அவரவர்களின் கருமங்களுக்குத் தக்கபடி யும், பகவத் ஆராதனையினுல் யேற்படும் கருணு விலாஸத்திற்கும் ஏற்ப, பலன்களை நாம் அடைகிறேம்.'' (1421)

''ஈஸ்வரருடைய ஆக்ஞை எல்லோருடைய தலையிலும் இருக்கிறது. உற்பத்தி, ஸ்திதி, லயம், அம்ருதமானபலன், விஷத்தைப்போல க்ரூரகதி ஆகியவை எல்லோருக்கும் யேற்படு கிறது. இதை நாம் ஆராய்வதனுல் லாபம் ஒன்றுமில்லை. தேவி, மோஹத்தின் வசமடையாமல், ஸர்வ ஸ்வதந்திரர்களாக நாம் நம்மைப்பற்றி நினையாமல், பகவத் உள்ளத்திற்கு அடங்கி நடப் பதால் நமது மனத்தை ஒருவாறு தேற்றிக் கொள்ளலாம். இவ் விதம் பிரபஞ்சம் முழுவதையும் அவர் நடத்தி, அவர் சங்கல்பத் திற்கு விரோதமாக ஒன்றையும் நடக்கமுடியாதபடி, அசைக்க முடியாதபடி அசலராகவும், ஊர்ஜித சாஸனராகவும் அனுதியாக வும், சாஸ்வதமாகவும் பிரபு நாராயணர் விளங்குகிருர்.'' (1422)

பரமாத்மாவாகிற நாராயணு, மஹாலக்ஷ்மியான மஹாதேவி, உன்னைப் பரிபூர்ண நல்ல எண்ணத்தோடு வெட்கமின்றி, கோப ஸ்திரிகள் பூஜை செய்ததுபோல ஆராதனை செய்து மனம் சந்தோஷமடைகிறேன். ராமசீதா, கொண்டல் வண்ணு, உலக முண்டவாயா, வாமனனுக என் உள்ளம் புகுந்து அமலனுய், விமலனுய், அண்டர்கோனுய், அயோத்தி அரசனுய், உவந்த உள்ளத்தினுய், என் சிந்தனைகள் எல்லாம் கொள்ளைகொண்ட கள்வா, உன் கமலபதம் தந்து என் கண்ணினுள் உள்ளவனுக கிருபை செய்யமாட்டாயா? விண்ணவர் கோனே, யோகிகளால் அசிந்தனீயர் என்று சுட்டிக்காட்டப்படும் யோகேஸ்வரா, திரிபதகாவாகிற கங்கையை சுமக்கும் திரியம்பகர் உமைபோற்றும் ஸநாதனு, உமையின் தூயஉள்ளத்தில் குடியிருக்கும் ஆதிப் பிரானே உன்னைக்கண்ட கண்கள், என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றென்றையும் காணவிரும்பா. திருமாமகள் வருடிய பாதங்களை, ஆதிசங்கரரால் பாவனமாக கருதப்படும் என் ஸுப்ர பாதங்களை எனக்கு, ஐயா அணிஅரங்கா, அருங்கலமே, அரவணைமேல் ஊர்ஜித சாஸனராகவிருக்கும் சீதாராமா, அடியேனை உய்யக்கொள். அடியேனை ஆட்கொள். என் உயிரே, என் பிராணனே, பிரமாணமே. அர்ஜுனன் சீதை ஆகியவர்களுக்கு புரஸ்ஸகாவாக முன்சென்ற நாராயணு, தயவு செய். பரதன் உன்னை பரமார்த்தம், பரம ஆராத்யம் என்று அறிந்தாற் போல நான் உன்னை விபுமீட்யம், நீரஜநாபம், காமாதாரம், கமனீயம் என்று சீதையை முன்னிட்டு ஸ்துதி செய்கிறேன்.]

கௌஸல்யை சொன்னுள் :- "பூபதியான தசரதர் அறுபதி னுயிரம் வர்ஷங்கள் தர்மநெறியுடன், இந்திரனே பாதி ஸிம்மாஸனம் கொடுக்கும்படி அரசாண்டார். அவர் இறந்தது; அவரால் நாம் லாபங்களை அடைந்தது இவைகளை நாம் நினைத் துப்பார்த்தால், என் பிரியபந்துவே, நம் ஹிதம் பூர்ணமாக நஷ்டமடைந்து விட்டதுபோலத் தோன்றுகிறது. [ஊர்ஜிதரும் சக்ரீயுமாயுள்ள பரமாத்மா நம்மை விட்டுவிட மாட்டார். அரசர் ஸ்வர்க்க வசமடைந்துவிட்டதால் மஹாராஜாவின் அருளையும் சிற் றின்பங்களையும் யார் நமக்கு இனி செய்யப்போகிருர்கள்? நமக்கு ஹானி வந்தால் நாம் யாரை ரக்ஷகத்திற்கு அடையலாம் என்று எண்ணும்படியிருக்கிறது.] பகவான் தான் ஆதிப்பிராணுகிற படியால் நம்மை முழுவதும் கவனித்து ஹிதம் செய்யவேண்டும்.

அவன் இருக்கும்போது நம் கவலைகள் தீரும், என்று மனம் ஆறுதல் அடைகிறது.'' அவளுடைய வசனங்கள் தத்வ விளக்க மாக விருந்தன. கௌஸல்யையின் வார்த்தைகள் வருத்தத்தினால் உலர்ந்துபோன பூமிக்கு நீர் தாரையை வார்த்ததுபோல விருந்தன. சுநயனா, சீதாவின் தாயார் மீண்டும் சொல்ல ஆரம் பித்தாள். ''என் பிரியபந்துவே, தங்களுடைய அர்த்த புஷ்டி யுள்ள (ஸர்வ ரக்ஷகத்வம், தயையைவேண்டும் பூமியின் சேதனா சேதனங்கள்) வசனங்கள் சத்யமாகவும் என் துக்கங்களைப் போக்குவதாகவும், எனக்கு சாந்தியைக் கொடுப்பதாகவுமிருக் கின்றன. தாங்கள் அயோத்தி மன்னரைப்போல புண்ணியாத்மா, மஹா சுக்ருதங்களின் பரிபூர்ண நிலையை அடைந்திருக்கிறீர்கள். மஹா சுக்ருதம் படைத்த அயோத்தி மன்னருக்கு ஏற்ற மஹா ராணியாகவுமிருக்கிறீர்கள்.'' (1423)

கௌஸல்யாதேவி சொன்னாள். ''லக்ஷ்மணன் ராமன் சீதை வனம்சென்று விட்டார்கள். அயோத்தியில் பதினான்கு வருஷங்கள் அரசருக்கு கேடுவிளையும்படி கிரஹ அமைப்புக் களால் ஏற்படவிருந்தது. அதனால் லக்ஷ்மணன் ராமன் சீதை வனம் சென்றபடியால் அவர்களுக்கு தீங்கும் ஒன்றும் வராது. பரதன் அரசனாக சிம்மாஸனம் ஏறும்படியிருக்கிறது. நாங்கள் அவனிடம் மிக்க அன்பு கொண்டபடியால் அவனைப்பற்றித் தான் கவலையாக விருக்கிறது. அவனுக்கு ஒருவிதமான அசுபமும் யேற்படக்கூடாது.'' (1424)

''ஈஸ்வரருடைய அனுக்ரஹம் மிக்க பரக்க உள்ளது. அம்மா, உன்போன்ற புண்ணியவதியின் ஆசீர்வாதங்கள் மிக்க வீரியமுடையவை. என்னுடைய நான்கு புத்ரர்களும் நான்கு மாட்டுப்பெண்களும் தேவகங்கையைப்போல ஸலிலமான ஸ்வபாவமுள்ளவர்கள். நான் என் அருமைக் குழந்தை ராமனை ஆணையிட்டுச் சொன்னதில்லை. என் சகி, இப்போது நான் ஆணையிட்டு சொல்கிறேன். நான் சொல்லப்போவது ஸத்யம்.'' (1425)

''என் பரதன் சத்தியசீலன். அஹிம்சை உள்ளம் கொண்டவன். குணவிசேஷங்களால் பரமார்த்தமான ராம னுடையதும் சீதையினுடையதுமான மஹா செல்வமாகிய திருவருளைப் பெற்றிருக்கிறான். ராம சேவகமே பெரிது என்று நினைக்கும் குணப்பெருக்கு உள்ளவன். வினயத்துடன் ராம சாஸனத்திற்கு அடங்கியிருப்பவன். சீதாராமானுடைய

பெருமைகளையும் மகத்வங்களையும் உணர்ந்த பாகவத சீலன். பெரும் தியாக சீலன். பிராதாவினிடம் பரிபூர்ண அன்புடன் கள்ளம் கபடுயில்லாமல் ஸஹஜஸ்நேகத்துடன் பழகுபவன். ஆத்மாராமனுக தன்னை நினைக்கும் பரதன் பயபக்திகள் நிறைந்த பிரபத்தியோகத்தில் மஹாவிஸ்வாசமடைந்து பிரபன்னனுக ஆர்த்தப்ரபத்தி, த்ருப்தபிரபத்தி கார்ப்பண்யம் முதலியவை களால் சோபிக்கும் மஹா யோகீஸ்வரன். வஸிஷ்டர் முதலிய பெரியோர்களால் உபதேசிக்கப்பட்டு, சாஸ்திர விதிபிரகாரம் பிரபன்னன் எதை விடவேண்டியது, எதை அடையவேண்டும் என்கிற நிச்சயபுத்தியை உடையவன். அவன் தன்நிலைக்கு ஒத்தபடி அவாப்தகாமனுகிற சீதாராமனை தனக்கு சகாவாக நினைத்து ஆத்மார்ப்பணம் செய்த பரதன், மேற்படி சொன்ன பரந்நியாஸத்தால் ஏற்படுகிற பயனிலும், அஹங்கார மமகார ரூபங்களைத் தியாகம் செய்து, சீதாராம ஸங்கம ஸாயுஜ்யத்தில் நிர்பரனுய், நிர்பயமாய் இருந்து, ஸ்வயம்பிரயோசனமாக பாகவத கைங்கர்யத்தை நினைத்து சீதாராமனை என் ஶ்ரீயப் பதியை சரணமடைந்து, வாழ்நாட்களை சுகமாகக்கழிக்க விரும்பு கிருன். இவனுடைய பக்தி பாகவத பிரேமை அளவிட முடியாதபடியிருக்கிறது. இவன் அடையப்போகும் பாக்கியங்கள் என்னவென்று சொல்லமுடியாதபடியிருக்கிறது. ஈஸ்வரன் எவ்விதம் இவனுடைய கார்ப்பண்யத்தை அங்கீகரிப்பார்? என்றும் சொல்லும்படியிருக்கிறது. இதை மஹாமதி படைத்த சாரதாதேவி கூட விஸ்தரிக்கத் தயங்குவாள். க்ஷீராப்தி போல கல்யாணகுணஸாகரத்தை கிளிஞ்சல்போல ஒரு மத்தினுல் கடைந்து [பரதனைப்போல் பக்திபிரபன்ன] நவனீதத்தைக் கடைந்து எடுக்க முடியுமா?'' (1426)

"பரதன் ரகுகுலத்தின் அணையா விளக்கு. எனக்கு நன்ருகத்தெரியும். என்பதியும் மஹாராஜாவும் பெரும் ஞானத் திலும் தியாக சீலத்திலும் மோஹம்கொண்ட மஹாராஜரும் அடிக்கடி புகழ்ந்து சொல்லும்படி நான் கேட்டிருக்கிறேன். கனகத்தை (தங்கம்) உரைகல்லில் தேய்த்துப்பார்த்து அதனுடைய மாத்துக்கள் எவ்வளவு சுத்தம் உள்ளது என்று நாம் அறியலாம். நல்ல ரத்ன மணியின் குணவிசேஷங்களை ரத்ன வியாபரியிடம் கொடுத்து பரிக்ஷித்து அறிந்துகொள்ளலாம். அதுமாதிரி ஸத்புருஷனுடைய குணவிசேஷங்களை ஆபத்தை அடைந்த சமயம் அவனுடைய ஸ்வபாவங்களை சுலபமாக அறிந்து தெரிந்துகொள்ளலாம்.'' (1427)

"இன்று எங்களைப்பற்றிச் சொன்ன சொற்கள், அஹங்காரத்துடன் சொல்லப்பட்ட விசேஷ வார்த்தைகள், தங்களுக்கு அனுசிதமாகப்படலாம். சோகமும் ஸ்நேகமும் ஞானத்தை மட்டுப்படுத்தும். சோகத்திலும் ஆறுதலாக விருக்கக்கூடிய விஷயங்கள் பல இருக்கின்றன. நீங்கள்தான் என் பரம ஆத்ம பந்துக்கள். விவேக ஞானம் உள்ளவர்கள். அதனுல் எல்லை தாண்டி தற்பெறுமையாக வசனங்களை உரைத்தேன். மன்னித்துக்கொள்ளவேண்டும்" என்று கௌஸல்யாதேவி சொன்னுள். அவளுடைய உத்தம வசனங்கள் அர்த்த புஷ்டியுள்ளதாகவும், சோகத்தை நாசம் செய்யக்கூடியதாகவும் பரதனிடம் அப்ராகிருதமான பிரேமை உள்ளவளாயும், தசரதரின் பிரியத்திற்குப் பாத்திரமான மஹாராணியின் வார்த்தைகளைக் கேட்ட யாவரும் ஸ்நேகத்திஞல் கலக்கப்பட்டு, ப்ரேமை சமுத்திரத்தில் மூழ்கிஞர்கள். (1428)

[தியானம்

ஸ்ரீசீதாராமா நாரயணனே, நமக்கு பறைதருவான் என்று சொல்லிய ஆண்டாளும், தியாகராஜரால் அர்ச்சிக்கப்பட்ட கோபிகைகளும், "இந்த கிருஷ்ணன் ஸாமான்ய மாமாயன் அல்ல; இந்த மாதவன் அநேக வேதங்களுக்கு ஆதாரமானவன்; அநேக நாமங்களுடன் சஞ்சரிப்பவன், நிர்மலஹ்ருதயன், கோவர்த்தன மலையைத் தூக்கினவன், ஸேதுவை அணைகட்டினவன், ராவணனையும் சிசுபாலனையும் கொன்றவன்; நம்மை இச்சமயத்தில் காப்பாற்ருமல் கைவிடான். அவன் பெயர் வரதனல்லவா? மானத்தில் மூடிக்கொண்டவர்களாக இல்லை; உயிரில் ஆசை வைத்தவர்களாகவும் இல்லை; "பிரேமையை விலைக்கு வாங்க முடியாது" என்று ஏசிக் காண்பித்த கிருஷ்ணனை, பிழைப்பதற்கும் வழி ஒன்றும் தோன்றவில்லை; எங்கள் கழுத்துவரை ஜலம் வந்துவிட்டது; ஸ்ரீஹரியின் பாதத்தை மனதில் தரித்து, மாதவன் நாமத்தைச் சொல்லி, "ஹரிஹரி", ஸனகர் ஸநந்தனர் நாரதர், சுகர், அர்ஜுனன், பரதன், தியாகராஜர், வால்மீகி, துளசிதாஸர், நாராயணதீர்த்தர் ஆகிய மஹனீயர்கள் துதிக்கும் கமலநேத்ரங்களை உடைய கமல பத்திராக்ஷா, சியாமளரங்கா, தர்ம வத்ஸலா, முப்பத்துமூவர் அமரர்க்கு முன் சென்று கப்பம் தவிர்க்கும் கலியே, உன்பாதங்களைக் கொடு" என்று கதறிஞர்கள். பரதன் "ஜிகுப்ஸ்வான நீ வனவாசம் முடிந்த பின்பு அயோத்தி திரும்பாவிடில், ஜடாதரனை நான் உன்னைப் பார்க்காமல்

பதினுங்கு வருஷங்கள் முடிந்த பின்பு ஹுதஸனனுகிற அக்னியில் விழுவேன், பிரவேசிப்பேன்'' என்று கோரமான பிரதிக்ஞை செய்தான். தர்மவத்ஸலையான ராமசீதா அநிர் விண்ணனுகவும், க்ஷாந்தி என்கிற கல்யாண குணத்துடனும், ஒரு முறை உன்னைக் கூவி அழைத்த என்னை ஞாபகப்படுத்திக்கொண்டு, துரிதமான செய்கைகள் செய்பவனும், அன்பு பொறுமை ஸ்துதிபிரியன் ஆகிற கல்யாண குணங்களால் தர்சனபாத்ரனுகிற என்னிடம் கிருபை செய். உன்னை, உன் பிராட்டியை, கோபிகள், பரதன், தியாகராஜர், துளசிதாஸர், தேசிகர், ஆஞ்சநேயர் திருவடிகளை முன்னிட்டு சரணமடைகிறேன்.]

கௌஸல்யாதேவி மீண்டும் தைர்யம் கொண்டு சொல்ல ஆரம்பித்தாள். ''சோகத்தினுலும் அதிபிரேமை வாத்ஸல்யத்தாலும் விவேகம் மந்தமாகிவிடுகிறது. என் பிரிய பந்துவான மிதிலேஸ்வரி, தாங்கள் மஹாஜுகுப்ஸுவானவரும் பற்றுதலற்ற வைராக்ய ஞானத்தில் மஹாமேதாவியுமான மிதிலாபதியின் பிரியை. நான் தங்களுக்கு எவ்விதம் ஆறுதலாக உபதேசம் செய்வேன்?'' (1429)

''ராணியே, என் யோசனைகளைக் கேளுங்கள். சமயம் வந்தாலோ அல்லது உமக்காகத் தோன்றியதாகவும் எங்கள் சார்பில் அரசரிடம் விண்ணப்பம் செய்யுங்கள். ஜனக மஹாராஜரிடம் சொல்லிப் பாருங்கள். அயோத்தியில் லக்ஷ்மணனும், அவனுக்குப் பதிலாக பரதன் ராமனுடன் வனவாசம் செய்வதாக விருந்தால், நல்லதாக விருக்கக்கூடும். இந்த யோசனை ஜனக மஹாராஜருக்குப் பிடித்திருந்தால், அவர் இதை ஆலோசனை செய்துபார்க்கட்டும்.'' (1430)

''என் மனதில் நான் நன்ருக யோசித்துப் பார்த்து முடிவுக்கு வந்துவிட்டேன். ஆனுல் உமது அரசரும் இதை யோசிக்கட்டும். என் மனதில் படும் எண்ணத்தை நான் சொல்லிவிடுகிறேன். பரதன் தர்மத்தில் பற்றுதல் உள்ளவன். குலதர்மப்படி மூத்தவன் பட்டம் யேற்கவேண்டும் என்கிற எண்ணத்துடன் இருப்பவன். அவனுடைய அப்ராகிருதமான ராம ஸ்நேகத்தையும் நான் அறிவேன். அவனுடைய யோக க்ஷேமத்திலும் எண்ணமுள்ளவளாக நான் இதைச் சொன்னேன். ஸ்ரீமானுன பரதனுடைய மனதில் ஸ்ரீநிதியாகிற ராம ஸ்நேகம் மறைவாக வைக்கப்பட்டிருப்பதை நான் அறிவேன். அவன் இதுவரை அதை பிரகடனப்படுத்தினதில்லை. ராமனை வனத்தில் விட்டு, அவனிடமிருந்து பரதனைப்

பிரித்து வீட்டில் வைத்திருப்பது அவனுக்கு அவ்வளவாகப் பிடிக்காது.'' (1431)

கௌஸல்யையின் கபடமற்ற உள்ளமும், கள்ளம் தவிர்ந்த வசனங்களும், சுலபமான வசனங்களால் சொல்லப்பட்ட வார்த்தைகளை எல்லோரும் கேட்டார்கள். எல்லாப் பிராணிகளும் அவைகளைக் கேட்டு, பரதனிடம் கருணை கொண்டார்கள். அவளுடைய வார்த்தைகளைக் கேட்ட ராணிமார்கள் (கோபிகைகள் கிருஷ்ணனுடைய வார்த்தைகளைக் கேட்டு கண்களை மூடிக்கொண்டு பகவானைத் தியானம் செய்த மாதிரி) ராம பரத ஸ்நேகத்தை தியானம் செய்தார்கள். இந்த சமயம் ஆகாயத்திலிருந்து முப்பத்து முக்கோடி தேவர்கள் அமிர்தமயமானதும் விதவித நிறங்களுடனும் மிக்க மணமுள்ள பாரிஜாத கற்பக விருக்ஷங்களின் மலர்களை வாரி இறைத்தார்கள். அவர்களுடைய இருள் அகன்று, நாம் இன்றல்லவோ ஆதர்ஸ பரதனுடைய மஹாத்மியத்தையும் அயோத்தி ஜனங்களுடைய தூய அன்பையும், ககுத்ஸ குலத்தில் உள்ள தர்ம பற்றுதல்களையும், கௌஸல்யையின் தூயமான அன்பையும் க்ஷாந்தியையும் நினைத்துக்கொண்டு, ''நாம் தன்யர்களாக ஆக்கப்பட்டோம்'' என்று ஜயசப்தங்களுடன் ஆரவாரம் செய்தார்கள். மனத்தைக் கவரும்படியிருக்கும் கௌஸல்யையின் வார்த்தைகளையும் அப்ராக்ருதமான ராம பரத வாத்ஸல்யத்தையும் நினைத்து, பார்த்து, கேட்டு, சகல யோகிகளும், சித்த ஜனங்களும் ஆச்சர்யத்துடன் புளகாங்கிதமடைந்தார்கள். (1432)

இந்த ஜயசப்தங்களும் புஷ்ப விருஷ்டிகளும் கமகமவென்று பரவி வாசனையுடன் வீச, நாலுபக்கங்களிலும் கந்தம் கமழும் வாசனைப் பொடிகளைக்கொண்டு, ஸகல ராணிமார்களும் ஆச்சரியப்பட்டு, ''பாருங்கள்'' என்று கூவிக் கொண்டார்கள். (கோபிகைகள் ரங்கபதியை எவ்விதம் ஆனந்திப்பார்களோ, அதுபோல) அவர்கள் ஆனந்தப் பரவசமடைந்தார்கள். அந்த சமயம் சுமித்ராதேவி தைர்யமடைந்து இன்சொற்களைச் சொல்ல ஆரம்பித்தாள். ''தேவி, இப்போது ராத்திரி இரண்டு மணியாகிவிட்டது.'' இதைக் கேட்டதும் ராம மாதாவான கௌஸல்யா தேவி துரிதமாக எழுந்திருந்தாள். அதிபிரேமைவசமடைந்த கௌஸல்யாதேவி, (1433)

ஸத்பாவத்துடன் பேசினாள், ''இப்போது நீங்கள் உங்களுடைய வாசஸ்தலத்திற்குச் செல்லுங்கள். நாம் ஈஸ்வரன்மேல்

பாரத்தைவைத்து''மிதிலாதிபதி ஜனகரின் ஸஹாயத்தால் நன்மை அடைவோம்'' என்று சொன்னாள்.'' (1434)

அதிபிரேமையுடன் சோபிக்கும் கௌஸல்யாதேவியைக் கண்டும், அவளுடைய அத்யந்த ஸ்நேகத்தால் கள்ளம் கபடு இல்லாமல் சொல்லப்பட்ட வசனங்களையும் நினைத்துப் பார்த்தும் ஜனகபிரியையான சுநயனாதேவி கௌஸல்யையின் பவித்திர மானதும் புனிதமான சரணங்களைப் பிடித்துக்கொண்டு '' அம்மா தேவி, உங்களுடைய வினயங்களும் பக்தி பிரேமையும் தேவ மாதாவாகிய அதிதி தேவியை நினைவுபடுத்துகின்றன. உமக்கு ஸுப்ரஜையானவரும் புருஷோத்தமருமான பகவான் நாரா யணனை, பன்னகசயனனை ரகுகுல ஸ்ரேஷ்டரான ஸ்ரீராமனை சொகுஸாக வளர்த்த புண்ணியவதியான உமக்கே தகும். ஸ்ரீராமனை விட்டு ஒருக்கணமும் பிரிய மனமில்லாத தர்மநந்தன ரானவரும் தரணிபுகழ் அயோத்தி மன்னரான தசரதருக்கு தர்மபத்னியாகிற இருக்கும் பாக்யம் உங்களுக்கே தகும். உங்கள் வினய அடக்கங்கள் சாமான்யமாக யிராதவை. உங்களைச் சரணம் அடைவதால் நாங்கள் புண்ணியர்களாக ஆக்கப்படுகிறோம்.'' (1435)

'' பிரபுவாகிய ஈஸ்வரர் (அறிவொன்றுமில்லாத ஆய்க் குலத்தை சம்ரக்ஷிக்க வில்லையா?) அவருக்கு இவன் நீசன், இவன் மேற்குலத்தில் பிறந்தவன் என்கிற பாகுபாடு கிடையாது. எல்லா ஜீவராசிகளிடமும் பாரபக்ஷமின்றி ஜிதமன்யுவாகவும், ஜிதக்ரோதராகவும் புவன மங்களகரனாகவும், ஸர்வலோகயோக க்ஷேமம் செய்பவராகவும் விளங்குகிறார். அக்னி புகையையும், மேருமந்திரபர்வதங்கள் தூசிகளையும் தங்கள் சிரங்களால் சுமக் கிறார்கள் அன்றோ? எங்கள் பதியான ஜனகர் கர்மமன வசனங் களால் தங்களுடைய சேவகர். எப்பொழுதும் சுத்தமான கங்கை யைத் தரிப்பவரும், அசைக்கமுடியாத பதிபிரேமைகளைக் கொண்டவளுமான உமாசங்கரர், உமாமஹேஸ்வரர், தீனதயாளு, தர்மகோப்தா, விருஷபத்வஜர், அவரே தங்களுக்கு சகாயர். (1436)

[தியானம்

ஹே ராமசீதா, ரங்க நாராயணா, சீதாபதே, ஸர்வபூத ஸ்திதி யாகிறவளும், தேவதேவியுமான மஹாலக்ஷ்மியின் பதியே, பராசரபகவானால் சொல்லப்பட்ட த்யேயமான வேதப்பொருளே, நீர்தான் விஸ்வம், அக்ஷரம் அவ்யயம் ஆதாரபூதர். ஸர்வத்திற்

கும் பிராண நிலையரான ஹரிபகவானே, என்னிடம் சந்தோஷமடையும். ஸர்வத்திலும் வியாபித்திருப்பவரும், ஸர்வசேதனுசேதனர்களும் ஆஸ்ரயித்திருக்கும் விஷ்ணு பகவானே, என்னிடம் பொறுமைகாட்டி கிருபை செய்யவேண்டும். அகில புவனங்களையும் வியக்தமாயும் அவ்யக்தமாகவும், உள்ளும் புறமாகவும் வியாபித்தும் தாம் ஒருவரே அவைகளில் சேராமல் அதிரக்தராகவும், நாம ரூபங்கள் பல இருந்தும் அவருடைய கிருபையாலே ஏக ரூபம், ஏக நாமமாக ஸத்துக்களுக்கு பிரகாசிக்கும் வாஸுதேவருக்கு நமஸ்காரம். புராணன், புருஷோத்தமன் விஸ்வரூபமுள்ளவன், சூக்ஷ்ம ரூபமுள்ளவன், ஜகத்தாத்ரி, பிராணவல்லபே, ஸர்வசக்திதரன், பஞ்சாயுதன் குணுஸ்ரயன், சுரேஸ்வரன், அசிந்தனீயன், பிரஹ்லாதன் பரதன் துருவன் கண்ட அனந்தன், நாராயணன், தாங்கள் என் உள்ளத்தில் உட்புகுந்து ஹ்ருஷிகேசனுக அமர்ந்து அன்பனுய் அன்னையாய், அத்தனுய் ஆண்டிடும் வைகுந்தபதி, அக்ஷயன், நித்யன் ஆத்மா தரனுகிற பரமாத்மா லக்ஷ்மி நாராயணருக்கு நமஸ்காரம், நமஸ்கரம், நமஸ்காரம். ஜகத்திற்கு ஆதியிலும் அந்தத்திலும் க்ஷாமணராகவிருக்கும் பிரம்ம ஸம்ஞர், பரமபுமான் என்று சொல்லப்படும் ராம நாராயணு, ரங்கபதே, திருவிக்ரம அவதாரத்தில் உலகை அளந்து, பலியின் தலையில் கால் வைத்த பொற்பாதத்தை எனக்குத் தா, கிருஷ்ணுவதாரத்தில் கன்றுகளை மேய்த்த ராஜ பாதங்களை என் மனத்தில் பதியவை. ராம அவதாரத்தில் சீதையை மணம் புரியச் சென்ற உன் திருவடிகளைக் எனக்கு கொடு. விஸ்வாமித்ரர் ஸ்பரிசித்து, ஆனந்த ஸுப்ரபாதம் செய்த திருவடி நிலையை எனக்குத் தா. கௌஸல்யை, யசோதை, தேவகி ஆகிய புண்யவதிகள் கண்ட உன் திருப்பவள வாயில் புதைத்துச் சப்பிக் கொண்டிருக்கும் மெல்லிய தாமரை இதழ்கள் போலவிருக்கும் உன் குஞ்சித பாதங்களைக் கொடு. பரதன் நாடாளுவதற்காகக் கொண்டு வந்த சிம்மாஸனத்தில் எழுந்தருளியப் பண்ணிய பொற் பாதுகைகளின் மேல் ஏறி கடாக்ஷித்த உன் செந்தாமரை பாதங்களை, திருமகள் தேடி நின்று, அர்ச்சித்து, வருடும் உன் துளசிகமழும் பாதங்களை என் நினைவிற்கு எப்போதும் தா. சுகர், மார்க்கண்டேயர், ஸநகர், ஸநத்தனர், நாரதர், இந்திரன் அக்னி, வஸிஷ்ட பிரமுகாதிகள் கண்டு ஆனந்திக்கும் திவ்ய திருவடிகளைத் தா, தா. வேதாத்மாவான கருடன் தாங்கும் பொற் திருவடிகளை தா. நாகராஜன் அர்ச்சிக்கும்

உன் பூ மலர் பாதங்களை தா. விபீஷணனுக்காக தென்னிலங்கை நோக்கி சயனித்திருக்கும் உன் பொற்றாமரை அடிகளைத் தா. ஆண்டாள் வேண்டிய நமக்கு உறவேல் ஒழிக்க ஒழியாது, உன் சேவடி திருக்காப்பு கொண்ட உன் பாதங்களைத் தா. வேதாந்த தேசிகர் காட்டிய கடுவினைகள் அகற்றும் கண்ணன் அடியிணையே நமக்கு, விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வேங்கட வெற்பைத் தா. கரிகிரி மேல் நின்ற வரத பாதங்களைத் தா. ஆஞ்சநேயர் சதா தஞ்சம் என்று அடைந்த சீதா ராம சரணங்களைத் தா.]

"அம்மாதாயே, உமா சங்கரரை ஹ்ருதயத்தில் தரித்த ராணியே, அவர்களைத் தவிர, தங்களுக்கு சகாயம் செய்வதற்கு இந்த புவியில் யார் யோக்யர்களாக இருக்கக்கூடும்? எங்கேயாவது சாதாரண தீபம் ஸர்வ பிரகாசனான தினகரனுக்கு ஸஹாயம் அளிக்கக்கூடுமா! தங்களுக்கு ஸ்ரீராமச்சந்திரன் அவதார புருஷனாக ஜனித்திருக்கிறார். தேவ காரியங்களை ஸாதிப்பதற்கு அவர் சீதையுடன் வனம் எழுந்தருளியிருக்கிறார். அந்தக் காரியத்தை செய்து முடித்த பின்பு, அவர் சீதையுடன் அயோத்திக்கு மீண்டும் எழுந்தருளி, பலகாலம் அமைதியுடன் அரசாளுவார். (1437)

தேவதைகள், நாகர்கள், மனுஷ்யர்கள், ஸ்ரீராமனுடைய பாஹு பலத்தினால் ரக்ஷிக்கப்பட்டவர்களாகி சுகமாக தங்கள் தங்கள் தர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டு, தங்கள் ஸ்தானங்களில் சுகமாக காலம் கழிப்பார்கள். இவர்கள் எல்லாவற்றையும் தேவி எங்களுக்கு பூர்வ புண்யங்களின் சுக்ருதமாகக் கிடைக்கப் பெற்ற எங்கள் குருயாக்ஞ்யவல்கியரால் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தபிரும்ம ரிஷியின் வசனங்கள் ஒருக்காலும் பொய்யாகாது." (1438)

இவ்விதம் பிரேமை பூர்வமாகச் சொல்லி சுநயனா கௌஸல்யையின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தாள். பிறகு சீதாவின் தாயார் சீதையை தன்னுடன் கூட்டிச் செல்வதற்கு உத்தரவு வேண்டினாள். ஜானகி தேவி கௌஸல்யா தேவியின் உத்தரவு பெற்றுக் கொண்டு தன் தாயாருடன் அவள் இருப்பிடம் சென்றாள். (1439)

ஜானகி தேவி தன் பந்து ஜனங்களுடன் இஷ்டமித்ரர்களுடனும் எவ்விதம் பழகிப் பேச வேணுமோ அவ்விதம் செய்து விட்டு, எல்லோரையும் களிப்பித்தாள். வைதேஹியின் தபஸ்வி

வேஷத்தைக் கண்டு எல்லோரும் அத்யந்த வியாகுலம் அடைந்தார்கள். (1440)

ஜனக மஹாராஜர் குருவஸிஷ்டரின் ஆக்ஞைப்படி தன் இருப்பிடத்தை அடைந்தார். அங்கு சென்று தன் புத்ரியான சீதையைப் பார்த்தார். ஜனக மஹாராஜர் தன் பவித்திரமான சீதையை பிராண அன்புடன் இறுகத் தழுவி முத்தம் கொடுத்து பிரேமைக் கண்ணீர்கள் மல்க மங்கள ஆசீர்வாதங்கள் செய்தார். (1441)

ஜனகருடைய வாத்ஸல்யம் உத்ஸாகமாகக் பெருகிக் கொண்டிருந்தது. ராஜரிஷியின் பிரேமை உள்ளத்துடன் சீதையின் அன்பு வெள்ளம் ஓடித்தாவி அணைத்து பிரயாகை சங்கமம் போல பவித்திரமாக விருந்தது. அவருடைய ஸ்நேகம் சீதையின் பிரேமை ஆகிய இரண்டும் ஜனகருடைய மனமாகிற சமுத்திரத்தில் கலந்தது. அவர்கள் பிரயாகை க்ஷேத்திரத்தில் உள்ள அக்ஷய வடமாகவும், அதன் அடியில் ஸ்ரீராமச்சந்திரன் ப்ரேமை ரூபியான பாலகனுகவும், சோபிதமாக விளங்கினுர்கள். ஜனகரின் அன்பு, அக்ஷயவடமாகிற சீதை, ராமனிடம் காட்டிய பரிவு, ஆகிற எல்லாம் பரம சோபிதமாக விளங்கின. (1442)

சிரஞ்சீவியான மார்க்கண்டேயரிஷியின் சிரஞ்சீவித்வமான ஞானத்வம் ஜனகரை அடைந்தது. ராம பிரேமை ஒரு பக்கம், சீதையின் ஸ்நேகம் இன்னொரு பக்கம் ஆகிற இரு கரைகளாகிற பிரயாகை அன்பு வெள்ளத்தில் மிதக்கும் ஜனகருக்கு, ஸஹாயமாக வந்த விவேகஞானம் அவரை மோஹத்தினுல் யேற்பட்ட துக்கத்திலிருந்து காப்பாற்றி, அவருடைய மதியை, மஹா மகிமைகள் பொருந்திய ஸ்ரீராம சீதா ஸ்நேகத்தில் அடைய வைத்தது. இந்த மாதிரி சாந்தியை அடைந்த ஜனகர், "இது சீதாராம பிரஸாதம்" என்று தனக்குள் எண்ணினுர். தபஸ்வி வேஷம் தரித்த சீதை ராமனிடம் தான் வசிக்கவேண்டும் என்று விவேகஞானத்தால், (மார்க்கண்டேயருடைய கிருபையாலும்) அறிந்தார். ராமசீதா ப்ரேமை வளரவேண்டும்; அதற்கு தன்னுடைய பிரேமை குறுக்கே நிற்கக்கூடாது, என்று விவேக பூர்வமாக அவர் உணர்ந்தார். (1443)

சீதையும் பிதா மாதாவின் பிரேமை உள்ளங்களை நன்கு அறிபவளாதலால், தன் பிரேமையையும் வெளிக்காட்டினுள். ஆனுல் தான் அதைரியப்பட்டால், நம்மாதா பிதா அதைர்யமடைவார்களோ, என்று நினைத்து, தரணியின் பெண்ணுகிற க்ஷமா என்கிற சீதை, தர்மவத்ஸலை, தர்ம நந்தினி, மிக்க

தைர்யத்துடன் தன் இருப்பிடம் ராமன் தான்; அதுதான் அயோத்தி; அது தான் வைகுந்தம்; என்று தீரபுத்தியினுல் ஆராய்ந்து நிச்சயபுத்தியுடன் விளங்கினுள். (1444)

இந்தப் பெண் அரச குமாரியாகப் பிறந்தும் அரச குமாரனுக்கு வாழ்க்கைப்பட்டும், தபஸ்வியின் வேஷத்தை தரித்திருக்கிருளே, என்று நினைக்கும் பொழுது அவருக்கு வருத்தம் ஒரு பக்கம்; இன்னெரு பக்கம் தன் பதியான ஸ்ரீராமனுக்கு அனுசரணையாக வாழ்க்கை நடத்துகிருள் என்கிற சந்தோஷம்; ஆகிய இரு விதமாக தன் புத்ரியைப் பார்த்த ஜனகர் சந்தோஷம் தாங்கமுடியாமல் "அம்மா, பவித்திரமானவளே, உன்னுல் இரு குலங்களும் பெருமையாக தரிக்கப்படவேண்டும். இதனுல் உன் குலமும் பவித்திரமாக, செழிப்பாகவும் கீர்த்தி பிரபாவங்களுடன் விளங்கட்டும். இதனுல் நீயும் உன் கணவனும் நிர்மலமான யசஸ்ஸை அடைவீர்கள். உங்களுடைய கீர்த்தி பிரபாவங்கள் பல்லாண்டு பல்லாண்டு பல கோடி நூருயிரம் பல்லாண்டுகளாக ஜகம் முழுவதும் சோபிதமாக விளங்கட்டும். நீங்கள் நன்ருக வாழ்க்கை நடத்தவேண்டும். இம்மாதிரி நான் சொல்வது போல எல்லோரும் உங்கள் புகழைப் பாடவேண்டும். ஸ்ரீராமனுடன் கூடச் சேர்ந்த சீதை மங்காப் புகழை ஸர்வ காலத்திலும் அடையவேண்டும்." (1445)

"உன்னுடைய கீர்த்தி பிரபாவங்கள் சுத்தமானதும் பாபங்களைப் போக்குவதாகவும் மங்களங்களை அளிப்பதாகவும் ஸுரஸரிதாவாகிற கங்கையின் பிரும்மாண்டமான கீர்த்தி யசஸ்களையும் அதிகரிக்கும் படியாக விளங்குகின்றன. பிரும்மாண்டத்தில் உற்பத்தியான கங்கை இந்த பூமியில் ஹரித்வார், பிரயாகை, கங்காஸாகர் ஆகிய பல இடங்களில் கீர்த்தியுடன் விளங்குகிருள். ஆனுல் அம்மா, நீ நிர்மலமான கீர்த்தியுடன் ஸாதுக்களின் ஹ்ருதயங்களில் ஒவ்வொரு நிமிஷமும் வசிக்கப்போகிருய். அதனுல் உன் கீர்த்தி பிரபாவங்கள், நாம பிரபாவங்கள் தீர்த்தகரமாக அநேக தீர்த்த கட்டங்களாக இருக்கப்போகின்றன. ஸாதுக்களின் சமாஜங்களில் பரம பாவனியாக விளங்கப்போகிருய். அதனுல் உன் கீர்த்தி பிரவாகம் சாதுக்களின் பெருமைகளை பிரவர்த்திக்கச் செய்து, கடல்போல இறங்க முடியாதபடி ஆழமுள்ளதாகவும் உன்னைத் தியானிப்பவர்களுக்கு எல்லா பாபங்களும் விலகி, பகவானும் உன் புருஷகாரத்தை ஏற்கும்படி ("அஸ்துதே தயைவ ஸர்வம் ஸம்பத் ஸ்யதே" என்று அனுக்ரஹிக்கும்படி) விளங்கப்

போகிருர்.'' (அப்பேற்பட்ட ஸ்ரீரங்க நாச்சியாரே, ஸதா என்னிடம் அனுராகத்துடன் இரு அம்மா.) (1446)

[தியானம்

ஹே நாராயணு, மஹாலக்ஷ்மியுடன் கூடிய ஸ்ரீகர்ப்பரே, மார்க்கண்டேய முனிவரால் ஸ்ரீமானுகவும், வேத நிதியாகவும் தபஸ்ஸின் நிதியாகவும், ஸத்ய பிருதனுகவும், புனராவர்த்தி இல்லாமல் செய்பவனுமாகிய நாராயணராகக் காணப்பட்டீரே, அவ்விதமே உம்மைக் காண நானும் ஸ்வாமி, விரும்புகிறேன். நாரத பகவான் நாராயண வ்ரதனுகவும் நாராயண பரனுகவும், நாராயண ஆத்மகனுக இருந்தது போல, ஸ்ரேஷ்டதமனும் மஹாலக்ஷ்மியின் பதியுமான ஸ்ரீமன் நாராயணரைப் பார்க்க விரும்புகிறேன். நீராதாரரும், கமலேசரும், நீரஜநாபரும், புண்டரீகாக்ஷரும், புராணரும், வேதஸ்மிதரும், மதுகைடபர்களோடு யுத்தம் செய்து, அவர்களைக் கொன்று ஹயசிரஸ்ஸுடன் கூடிய ஹரிபகவானைப் பிரும்மா பார்த்து ஸ்துதி செய்தபடி நான் ஸ்துதி செய்ய விரும்புகிறேன். பிரும்மா முதலான தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் ஈஸரும், மஹாயோகீஸ்வரரும் ப்ருதுவும், மஹாலக்ஷ்மியுடன் கூடிய மஹாவிஷ்ணுவைப் பார்க்க விரும்புகிறேன். நிக்ரஹம் அனுகிரஹ சக்தியுடன் விளங்கும் ஸர்வ பூதக்ருதா வாஸரான வாஸுதேவரைப் பார்க்க விரும்புகிறேன். மஹாவிபூதி, மஹா ஐஸ்வர்யங்கள், பரமர், சுலபர் சுசீலர், காலாத்மன், மஹாத்மாக்கள் தஞ்சம் அடையும் பரமாகதி; ஞானிகள் சரணமடையும் குணீதகரான நித்யபுருஷனை நான் சரணமடைகிறேன். ஏகாந்திகளால் சம்சயமின்றி பரம கௌதூகலத்துடன் தர்மாரண்யமாக பூஜிக்கப்படும் நாராயணரை, பராசரர், வேதவியாஸர், சுகர், நாரதர், பிரும்மா, இந்திரன், பரதன் இவர்களை முன்னிட்டு நான் என் லக்ஷ்ய கதியாக ஸ்மரித்து ஆராதிக்கிறேன். பாஞ்சராத்திரம் என்கிற ஸம்ஹிதையை எனக்கு காட்டிக் கொடுத்த விஷ்வக்ஸேனரே, நாரதர், ஆழ்வாராதிகள், ஸ்வேததீப வாசிகள் ஆகிய மஹா குருக்களை நமஸ்கரித்து, வைகுண்டபதியானவரும், என் பாரங்களை சுமப்பவரும், எனக்கு வியாஸராக காக்ஷி அளித்தவரும், ஸ்ரீமானும், அயோநிஜரும், ஸாத்வதாம் பதியுமான நாராயணரை, அகிலலோக குருவை நான் நமஸ்கரிக்கிறேன். அப்பேற்பட்ட பிரபு எனக்கு ராமனுகவும், லக்ஷ்மணனுகவும் தோன்றட்டும். அந்த பிரபு சீதாமணுளனுகத் தோன்றட்

டும். அர்ஜுனனும், மார்க்கண்டேயரும், உதங்கரும், யசோதையும், திருதிராஷ்டிரரும், பிருகு, கண்வர் முதலிய ரிஷிகள் கண்டு ஆனந்தித்த மோஹனமூர்த்தியாக என் ஹ்ருதயத்தில் சதா தோன்றட்டும். உன் அடியன், உன் அடியார்களுக்குத் தொண்டன், மஹா பிராக்ஞர்களை சரணமடைந்தவன், பிராம்மணன் என்று என்னை ஆட்கொண்டு; வித்வான்கள் அடையும் உன் பாதங்களில் ஒரு துளசி தளமாக அடைக்கலம் தருவாய். ஹே சீதே, மாரீசனைப் பார்த்து விஸ்மயித்து ஸ்ரீராம லக்ஷ்மணர்களிடம் அதைப் பிடித்துத்தா என்று கேட்டாயே, அதுபோல என்னையும் சம்ரக்ஷி என்று சொல்லமாட்டாயா! மஹாபத்மே, பிரும்மருத்ரஸம்வாதத்தில் நாராயணர் ஒருவர்தான் ஸர்வாத்ம புருஷன், நிர்குணராகக் காணப்படும் நித்யர், பத்மபத்ரம் தண்ணீரில் காணப்படுவது போல ஒன்றிலும் பற்றப்படாத நாராயணரை என்பரனாக நமஸ்கரிக்கிறேன். அவ்யயம் பிரதானம்; விப்ரர்கள் புகழும் அனிருத்தரை ஏகபாவத்துடன் நமஸ்கரிக்கிறேன். அப்பேற்பட்ட மஹாலக்ஷ்மியின் பதியான பரமாத்மா, என்னை சம்சயமின்றி காப்பாற்றட்டும்.]

ஜனகர் தன் புத்ரியினிடமுள்ள ஸ்நேகபாசத்தால் கட்டப்பட்டும், (வியாஸ பகவானால் சுகபிரும்மத்திற்கு உபதேசிக்கப்பட்ட ஞானியினுடைய கதியையும் அனுசரித்து,) ஸத்யமான வார்த்தைகளை அழகான சொற்களால் இவ்விதம் சொன்னார். (பத்மபத்ரம் தண்ணீர் ராசியில் எவ்விதம் விளங்குமோ, அது போல வைராக்ய ஞானத்தையடைந்த ஸ்ரீமானாகிற ஜனகர் ராமசீதையின் அவதார ரஹஸ்யங்களை உணர்ந்தபடியால், மேலே ஒன்றும் சொல்லக்கூடாமல், சங்கோசத்துடன் தோன்றினார்.) தன் புகழைக் காதுகளால் விரும்பிக் கேட்கும் ஸ்தோத்ர தோஷிதையான சீதை, உள்ளுக்குள் அகமகிழ்ந்தாள். வெளியில் சங்கோசத்தை அடைந்தவளைப்போல நடித்தாள். (கந்தம் கமழும் குழலி, மாதவி, பந்தார் விரலி செந்தாமரை கைகளுடன் விளங்கும் கனகாங்கதி, என் தாய், ஜகஜ்ஜனனி, பத்மலோசனி, என் பக்தியின் பிரபத்தியினால் மையிட்டுக் கொண்ட மைத்திடங் கண்ணினாய், லக்ஷ்மணன், குஹன், பரதன் தொழும் முத்து சிலம்புகளுடைய கமலை,) தன் அருள் நோக்குகளை வலிய தன் மாதாபிதாக்களுக்கு கொடுத்தாள். அவளுடைய மோஹன பார்வையில் சிக்கிய ஜனகராஜரும், அவர் மனைவியும் அவளை இறுகத்தழுவி உச்சிமோந்து, அவளுடைய வனவாசத்தில் இருக்கவேண்டிய ஹிதமான புத்திமதிகளையும், மங்கள ஆசீர்

வாதங்களையும் தீனஸ்திதியில் பிரியவேண்டிய ஹ்ருதயத்துடன் அந்த மஹா புண்யவதியை வாழ்த்தி, மீண்டும் தழுவிக் கொண்டார்கள். (1447)

சீதை யாவற்றிற்கும் பதில் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் மனத்திற்குள் எண்ணமிட்டாள். இன்று ராத்திரி இவர்களுடன் தங்குவது நல்லது அல்ல என்று நினைத்தாள். நம்மிடம் இவர்கள் பாசம் வைத்து, மிக்க கலங்கிவிடுவார்கள் என்று நினைத்தாள். அவள் எண்ணத்தை அறிந்த மஹாராஜரும், சுநயனாவும் அவளை வெகுவாகப் புகழ்ந்து, அவளுடைய சீல சுலப ஸ்வபாவங்களைக் கண்டு ஆச்சரியப்பட்டு அடிக்கடி அவளைப் புகழ்ந்தார்கள். (1448)

அடிக்கடி அவளை அந்த ராஜதம்பதிகள் கட்டி அணைத்துக் கொண்டு, முத்தமிட்டு ஆசீர்வாதங்களுடன் அவளை ஸ்ரீராமனிடம் அனுப்பி வைத்தார்கள். நல்ல சமயம் பார்த்து கெட்டிக் காரியான சுநயனா, கௌஸல்யாவின் சொற்படி பரதனுடைய தீனகதியை அரசருக்கு எடுத்து உரைத்தாள். (1449)

அரசர் பரதனுடைய வியவஹாரத்தை முழுவதும் கேட்டார். பொன்னிலிருந்து சுகந்தமான நிறமும், சந்திரனிடமிருந்து நவஸுதாவாகிற அம்ருதம் போலவும், மணமும், ருசியுமாக சேர்ந்து விழுந்தது. அரசர் பரதன் மீது காட்டும் பிரேமை, ஸ்நேகம் அவருடைய கண்களில் பிரேமைக் கண்ணீர்கள் மல்க, புளகாங்கித சரீரத்துடன், ஏகாந்திகளால் அடையப்பெறும் நாராயண பரனாகவிருக்கும் பரதனுடைய மங்களக் கீர்த்திகளை பரமஞானியும், ஜிக்ஞாஸுமான ஜனகமஹாராஜர் அதி ஆனந்தத்துடன் வர்ணிக்க ஆரம்பித்தார். (1450)

“என் அருமை ராணியே கேள். என் மனம் போல நடக்கும் சுநயனா, சாவதானமாகவும், ஏகமனதாயும், கவனமாயும் கேளு. பரதனுடைய மன ஆத்மபாவனைகள், அவனுடைய ஏகாந்த பக்தி, ஞானவைராக்யம், நாராயணபரனாக விருக்கும் தியாக குணங்களடங்கிய பரதனுடைய கதை, ஜன்மங்களுக்கு புனராவிருத்தியை அழித்து, பந்தபாசங்களை நாசம் செய்து, மோக்ஷத்தை தரக்கூடியது. அவன் பிரும்மரிஷி, (பரமயேகாந்திகளான வியாஸர், தர்மர், பீஷ்மர், நாரதர், மார்க்கண்டேயர்களால் அனுஷ்டிக்கப்பட்ட ஏகபராயண தர்மம், ராஜரிஷிகள் அனுஷ்டிக்கும் பிரும்மவிசாரம்). (எனக்கு ஸ்ரீமானான யாக்ஞயவல்கியரால் உபதேசிக்கப்பட்ட மூன்று ஞான விஷயங்களை, அதாவது, தர்மங்கள், ஸநாதனமான ராஜநீதி, பிரும்மவிசாரம்

ஆகியவைகளை நினைவுபடுத்திக்கொண்டு,) இவனைப்பற்றி நான் சொல்லுவதற்கே அருகதையில்லாத போனாலும், என் சிறிய அறிவுக்குத் தகுந்தாற்போலச் சொல்லுகிறேன் கேள். இவனுடைய ஸம்பந்தம் வீண்போகாதது. எல்லோரையும் ஜன்ம தாபங்களிலிருந்து விடுவிக்கும் மஹா தபஸ்வி. (1451)

[தியானம்

ராமா, என் அம்மா சீதா, ஸரோஜநயனா, ராஜராஜ கம்பீரா, என் மனதில் ஆனந்தகூத்தனாக விளையாடும் நடராஜா, உமையுடன் கூடி காக்ஷி தந்த விருஷபத்வஜா, பரமசிவமூர்த்தியே, சாந்தமூர்த்தியே, ஸத்வமூர்த்தியே, ஸகலரையும், மார்க்கண்டேய ரிஷியையும், சுகரையும் ஆனந்தப்படுத்திய பரம்ருடா, என் குணங்களின் விபரீத சேர்க்கையால் ஏற்பட்ட மாபெரும் பாவங்களுக்கும், அனாதிகாலமாக கர்ம பிரவாகமாக ஓடிவரும் கர்ம வெள்ளத்திற்கு, ஸேது போல விளங்கும் அகோர மூர்த்தியே, தபஸ்ஸினால் ஏற்படும் மஹா அபராதங்களை க்ஷமிக்கும் என் பர்த்தாவே, உனக்கும், உன்னுடன் கூடிய உமைக்கும், திரிலோகசுந்தரிக்கும் நமஸ்காரம். பராம் என்று சொல்லப்படுபவரும், புருஷனாக விளங்குபவரும், அவ்யயமான நாராயணபரனாகவிருக்கும் மார்கண்டேயருக்கும் சிபார்சு பண்ணின உமாதேவி, மார்க்கண்டேய ரிஷியின் பக்திக்கு வரனாகவும், உமையின் புருஷகாரத்தினாலும், ரிஷிக்கு யோகம் தபஸ்ஸின் மகிமையினாலும் கிடைத்த ரதாங்கபாணியின் அச்சுத பக்தியை எனக்குத் தாரும். பூர்ணமாக அனுசந்தித்து கொடும். என் காமத்தைப் பூர்த்தியாக்கும் தாயே, பகவானாகிற அச்யுத பக்தியையும், அவனையே பரமாக நம்பி வாழும், உன் கிருபையால் வைஷ்ணவ தாஸர்களிடமும், அம்மா அப்பா, உமையப்பா, உங்களிடமும் அசலமான பக்தி பிரேமையும் எனக்குத் தாரும். ஜகதீஸா, ஜகதாதாரா, உலகில் மார்க்கண்டேயரைப் போல, எவ்வளவு தபோசீலர்கள், தர்மபராயணர்கள், கர்மகதியினால் துக்கம் அனுபவிப்பதைப் பார்த்தால், பயக்ருத்தாகிற உம்மிடம் அபராதங்களுக்கு மன்னிப்பு கேட்காமல் போனால், ஸ்வாமி, நானும் மிக்கக் கஷ்டப்படுவேன். தர்மபுத்ரர் ஜனகர், ஸத்யவான், யயாதி நிருகன், இன்னும் அநேகம் பேர்கள் வித்வான்களாக விருந்தபோதிலும், அச்யுத பக்தியினாலேயே, மாயையாகிற காலாத்மனுடைய சேஷ்டிதங்களில் அகப்பட்டு, தத்தளித்து வெந்துபோய்விட்டு, கடைசியில் காப்பாற்றப்பட்டார்கள். என்

ஈஸ்வரரே, என் அம்பிகையே, நீங்கள் இருவர்களும் சர்வ சாக்ஷிகள், ஜகதீஸ்வரர்கள், தர்மத்தை அவலம்பித்து பகஹா ஆனந்தியாக விருக்கிறீர்கள். கபர்தின், உம்முடைய ஞானம் மாயையைக் கடந்தது. நீங்கள் உங்கள் பக்தர்களுக்கு ஸுஹ்ருதுக்கள், விஸ்வாத்மா, அகில குரு, பரமஞானியாக விருந்தும் குணச்சேர்க்கையால் கூடப்பெற்ற ஆத்மாவாக மாயையினுல் காணப்படுகிறீர். அப்பேற்பட்டவரும், பகவானுகிறவரும், திரிகுணயகுணத்மனே என்று சொல்லப்படும் உமக்கு நமஸ்காரம். அத்விதீயராக காணப்படும் பிரும்மமூர்த்திக்கு நமஸ்காரம். எப்போது ஸத்யகாமராகிய உம்முடைய தரிசனமும், அம்பிகையின் திருவளும் கிடைக்கும்? ஸம்சாரத்தில் மார்க்கண்டேய ரிஷி போல, மாயையினுல் மஹா கிலேசங்களை புங்கானுபுங்கமாக அடைந்த எனக்கு அம்ருதம் போல, உமாசிவ ஆகமனம், உமாசிவ வசனங்கள் எப்போது எனக்கு கிடைக்கப்பெறும்? போதரிக்கண்ணினுய், தீப்தமூர்த்தியே, எவ்வுலகுக்கும் தாயும், தந்தையுமாக விளங்கும் நீங்கள், எம்பெருமானது திருவடியில் உய்யவேண்டும்; நாரணன் அருள் மார்க்கண்டேயருக்கும், நம்மாழ்வாருக்கும், கோதைக்கும் கிடைத்த மாதிரி ஸம்பவிக்க வேணும் என்று பல காங்க்ஷுகை விருக்கும் எனக்கு அருளவேண்டும். தாயே, கோதா, லக்ஷ்மி நேத்ரோத் பலஶ்ரீ என்கிருப் போல, உன்னுடைய கடாக்ஷ வீக்ஷண்யமும், கனத்த கூந்தல் மாலையை அணிந்து கொண்டு ரங்கபதியினிடம் கிருதார்த்தையாக விளங்கும் சுபதரிசனமும், ஈஸனருளும், ஞானமும், சுகமும், சாந்தி பராயணமும், மாயையைத் தாண்டும் உதவியும் எப்போது கிடைக்கும்? உமாதேவியே, கோதாதேவியே, பரதா, வேதவியாஸரே, உங்களை பல கோடி நமஸ்காரங்கள் செய்கிறேன்.]

"எந்த புருஷன் தர்மத்திலும் அனுஷ்டானத்திலும் ராஜ நீதியிலும் தேர்ச்சியுடன் இருக்கிருனே, எவன் பிரும்ம விசாரத்தில் நாட்டமுடையவனுகவும், அரசனுகவும், ரிஷியாகவும் நடக்க விரும்புகிருனே, அந்த வழிகளில் ஸதாசார்ய ஸம்பத்தினுல் நானும் ஏதோ உழண்டு வந்திருக்கிறேன். என் பிரிய நாயகி, பல இதிஹாஸக் கதைகளையும் மஹாமகிமைகள் வாய்ந்தவர்களும், ஸர்வஞானிகளுமான பெரிய ஆசார்யர்களிடமிருந்தும் கேட்டிருக்கிறேன். எனக்குத் தெரிந்தவரையில், பரதனுடைய பிரபன்ன யோகத்தையும், ஹரியினிடம் காட்டும் மஹாவிஸ்வாச ஆத்ம ரக்ஷாபரத்தையும் (பொறுப்பையும்) பிரபத்தியோகத்தினுல்

அவன் அழித்த பாபபயங்களையும், மாயையினுல் யேற்படும் கிலேசங்களையும், பரமஞானிகள்கூட அகங்காரத்தினுல் ஏமாந்து மெய்ஞானம் பெருமல் தவித்து, பிறகு பகவத்கிருபையினுல் யேற்பட்ட உணர்ச்சிகளின் பேரானந்தத்தை மீண்டும் அடையும் பாக்கியங்களையும், பரதன் சீதாராம சரணங்களில், (ஆதிப்பிரானுடைய சேர்க்கையால் மகிழம்பூமாலையை தரித்திருக்கும் நம்மாழ்வார், ஆண்டாள் போன்ற மஹா உத்தம உத்தமர்கள்) அடைந்த மீட்சியை, வைகுந்தத்தை, கையளவில் கண்டு விட்டான் பரதன். (இந்த விஷயத்தில் மார்க்கண்டேயரையும் நாரதரையும் பகவான் வேதவியாஸரையும் மிஞ்சிவிட்டான்.) அவனுடைய நினைவு ஸம்பந்தமே எனக்குப் போதும். (நான் ஒரு சமயம் "பந்துக்களும் பொருள்களும் வரும்போதும் நீங்கும்போதும் சுகத்தை விரும்பும் மனிதன் எவ்விதம் இருக்கக் கடவன்" என்று அஸ்மர் என்னும் பிராம்மணரிடம் சந்தேகம் கேட்டேன். மஹா அறிவிற் சிறந்த அவர் மனிதனுக்கு மூன்று விதமான காரணங்களால் மனம் கர்வம் அடைகிறது. அதாவது நான் நற்குலத்தில் பிறந்தவன்; சித்தியுள்ளவன்; ஸாதாரண மனிதன் அல்லேன்; இவ்வித கர்வங்களால் பரதன் வாட்டப்பட வில்லை. ராமனுக்குத் தம்பியாகப் பிறந்தும், ராமனுடைய கிருபையை அடைந்தும், ஸதாசார்யஸம்பத் யிருந்தும், நோயின்மையையும், அழகும் வீரியமும் நல்ல உருவம் போகங் களனைத்தும் அடையப்பெற்றும், மனிதனுக்கு இச்சரீரம் உண்டான பின் சரீரத்தைத் தொடர்ந்து பல துன்பங்கள் யேற் படும். சுகமும் துக்கமும் விதியினுல் செய்யப்படுவது; அவை களிலிருந்து மீட்சி அடைவதற்கு வேதத்திலும் ஆஸ்திகர்களிட மும் மஹா விஸ்வாசத்தை வைத்து, சீதாராம சரணங்களில் தன் பொறுப்பை ஸமர்ப்பித்து, த்ருதாத்மாவாகிற ஸ்ரீமன் நாராயண சரணங்களைத் தஞ்சம் என்று அடைந்திருக்கிறவன் ஒருக்காலும் கஷ்டப்படுகிறதில்லை" என்று சொன்னர்.) அந்த பாக்யமான சொற்களை நினைத்துப் பார்த்து, பரதனுடைய பிரதாபங்களை என் தாழ்ந்த அறிவினுல் சிந்தித்து சொல்கிறேன். பிரும்மா, கணபதி, சேஷபகவான், மஹாதேவர், சாரதாதேவி, (ஸகலத்தையும் காலவரையின்றிப் பார்க்கும் சுக்ராசாரியார், சுகர், தேசிகர் போன்ற கவிகள், ராமாநுஜர் நம்மாழ்வார் போன்ற பரமஞானிகள், வேதவியாஸர் போன்ற மஹாபண்டிதர்கள், மார்க்கண்டேய ரிஷி நாரதர் போன்ற புத்திமான்கள்.) (1452)

ஸகலரும் பரதனுடைய சரித்திரத்தையும், கீர்த்தி பிரபாவங்களையும், தியாக பிரபன்ன செய்கைகளையும், அஹங்காரமற்ற பாரதந்திரிய உணர்ச்சிகளையும், நாராயணனுக்கே அடிமை என்கிற பரம உத்கிருஷ்டமான தர்மத்தையும், ராமனுக்குத் தம்பியாகப் பிறந்தும் மன இந்திரிய அடக்கம் தபஸ் இவைகளில் காட்டிய சீல குணங்களும், நிர்மலமான பரமார்த்தம் என்கிற சீதாராம சரணங்களையே பரம ஐஸ்வர்யமாக பாவிக்கும் விமல ஹ்ருதயமும், ஸ்வயம் பிரயோசனமான பகவத் பிரேமையையும் கேட்க கேட்க அம்ருதமயமாகவும், அவனை நினைத்த மாத்திரத்திலேயே பகவத் கிருபையும் பாகவத பிரேமையும் ஸம்பவிக்கும் பரமதீர்த்தகரனாக வல்லவோ விளங்குகிறான். பாபங்களைப் போக்கி, பகவானுடைய கிருபையை நமக்குக் கிட்டும்படி பரம சுகத்தை தருகிறான். அவனுடைய பவித்திரமான கீர்த்திகள் மாபெரும் பாபங்களைப் போக்கும் ஸுரஸரிதாவான கங்கையை விட சுத்தமானதும், ருசியில் அம்ருத பெருக்கையும் தாண்டி வற்றமுடியாதபடி புதிதாக ஊறும் அமிர்த ஊற்றுக்கள் மாதிரி விளங்குகின்றன. இவைகளை அடிக்கடி சொல்லக் கேட்டு யாவரும் ஆனந்தமடைகின்றனர்.'' (1453)

''பரதன் நிரவதிசய சத்குணங்களின் பெருக்கை உடைய ஸம்பன்னன். எக்காலத்திலும் அவனுக்கு சமமாக பகவத் பக்தியில் சமமாக யாருமில்லாதபடி நிருபம புருஷனாக விளங்குகிறான். அவனுக்கு சமம் பரதனேதான். அவ்விதமாக நீ அறிந்துகொள். எங்கேயாவது ஸுமேரு பர்வதத்தை அளவு படிக்கல்களால் அளக்க முடியுமா ? அவனுடைய ராமபக்தி, விஸ்வாசம், தியாகம், அடக்கம், வினயம் ஆகிய குணங்களை வர்ணிப்பதில் கவி சமாஜத்திற்கே சரியான உபமானம் கிடைக்காமல் அவர்களுடைய அறிவையும் மிஞ்சுவதாக விருக்கிறது.'' (1454)

''என் அழகான சுநயனா, பரதனுடைய மகிமைகளை வர்ணிப்பது எவ்விதம் ஜலவரட்சியால் மீன் குஞ்சுகள் பூமியில் நீஞ்ச முடியாதோ அதுபோல மிக்க கடினம். கவனமாகக் கேளு. பரதன் அபரிமித மகிமைகளை உடையவன். பரமபுருஷனான ஸ்ரீராமச்சந்திரன் சீதை ஆகியவர்களே அதை அறிவார்கள். அதை அறிந்தும் அவர்களாலும் வர்ணிக்க முடியாது. அவர்களும் தயங்குவார்கள். அவ்வித அபார மகிமைகள் உள்ளவன்.'' (1455)

இவ்விதமாக ஜனகமஹாராஜர் பரத பிரேமையினால் தத்தளிப்பவராக அவனுடைய பிரபாவங்களை தன் சொந்த புத்தியி

னாலும் அனுபவத்தினாலும் ஆராய்ந்து, சொல்லிக்கொண்டிருந்தார். பிறகு பத்தினியின் இஷ்டத்தை அறிந்து, அவளைத் திருப்தி செய்ய எண்ணமுள்ளவராக அவர் மீண்டும் சொல்லலானார். "லக்ஷ்மணன் அயோத்தி திரும்பட்டும்; பரதன் ராமன்கூட வனம் செல்லட்டும். இந்த ஏற்பாட்டினால் எல்லோருக்கும் நன்மைகள் ஏற்படலாம். இதுதான் எல்லோருடைய மனத்திலும் இருக்கிறது." (1456)

"ஆனால் ஒரு சங்கடம் இருக்கிறது. தேவி இதையும் கேளு. ஸ்ரீராமனும் பரதனும் பரஸ்பரம் ஸ்நேகம் விஸ்வாசம் கொண்டவர்கள். அவர்களுடைய ஸ்நேக விஸ்வாசம் ஸ்மரிக்க முடியாமலும் எல்லையின்றியும் பிரகாசிக்கிறது. இருந்தபோதிலும் பிரபு ஸ்ரீராமர் ஸம்மிதர் என்கிருப்போல ஏற்றத் தாழ்வுகளைப் பாராது ஆஸ்ரிதர்களை ஸமமாக மனதில் நினைப்பவர். பழகினவன் பழகாதவன் ஆவல் அதிகமுள்ளவன் என்கிற வித்தியாஸம் பாராட்டாமல் யாவருக்கும் ஒரே கௌரவம் கொடுப்பவர். அதுமாதிரி பரதன் பாகவத குழாம்களில் அக்ரகண்யனாக விளங்கும் பகவத் பிரேமை உள்ள வைஷ்ணவதாஸன்." (1457)

"பரதன் கனவிலும் தன் நலமோ ஸ்வார்தமோ, ராமனைத் தவிர பரமார்த்தமோ மற்ற எந்த சுகத்தைப் பற்றியோ யோசித்ததில்லை. அவனுடைய லட்சியம் ஒன்றே ஒன்றுதான். அதுதான் இராமனுடைய திருவடிகளில் பரமபிரேமை. அதுவே அவனுடைய சாதனமும் சித்தியும் ஆகும். இதுதான் பரதனுடைய கொள்கை என்று எனக்குத் தோன்றுகிறது." (1458)

(கருத்து: நான் ஸ்ரீராமனுக்கே உண்டானவன், ஸ்ரீராமனுடைய கைங்கர்யமே எனக்கு ஸ்வயம்பிரயோசனம், ராம கைங்கர்யத்துக்காக மோக்ஷத்தையும் பலனாகக் கருதாது, எது முன்பு செய்த பிரபத்தியால் ஏற்பட்டதும் பரமகாருணிகனான பகவானின் அனுகிரஹத்தாலே தானே வருமென்று உறுதி கொண்டு, முக்தனுடைய கைங்கர்யம்போல ஸ்வயம்பிரயோசனமாக கைங்கர்யங்களைக்கொண்டு அனுஷ்டிக்கும் பரதன் பரம பாகவதன். ஆனால் ராமன் சர்வசக்திமான், க்ருபாதாம், நான் சேஷன், சேஷியான எம்பெருமானுடைய திருவடிகளில் என் பொறுப்புக்களை ஒப்பிவிப்பவனே. பசுக்களாகிற ஜீவாத்மாக்களை ரக்ஷிப்பதால் கோவிந்தன், பசுபதி என்கிற பெயர்களைக்கொண்ட ஸர்வ ரக்ஷகனாகிற பகவான் கருணையையே உருவாகக்கொண்டு தனக்கும் ஜீவாத்மாக்கும் உள்ள உறவு ஒழிக்க ஒழியாதது, ஜீவனும் அந்த உறவால் உஜ்ஜீவனம் செய்யப்படவேண்டும்.

"நான் செய்வது யாதொன்றுமில்லை; கண்ணன், ராமன் வந்த போது வருகிறான். நம் பக்குவம் அறிந்து, அவன் தானே வருவான். இடைச்சியரோடும் கோபர்களுடனும் ஆஸ்ரமவாசிகளுடனும் உறவு கொண்டாடிய மாயன், என்னுடைய அனன்யார்ஹ சேஷத்வத்தை அறிந்து, "நாம்" என்கிற மமகாரத்தையும் ஒழித்ததையும் தெரிந்துகொண்டு, அவன் இஷ்டபிரகாரம் சொரூபவிரோதி, பரத்வவிரோதி, புருஷார்த்தவிரோதி, உபாய விரோதி, ப்ராப்திவிரோதி ஆகிற ஐந்து விரோதிகளை ஒழித்தவன் எனக் கண்டுகொண்டு, "எங்கள் கைங்கர்யம் உனக்கேயன்றி, வேறு ஒருவருக்கும் உரித்தாகாமல் இருக்கவேண்டும். அதை நான் பிரார்த்தித்தபோது மின்றி, நீயும் அதை ஸ்வீகரித்து நிர்ஹேதுக கிருபையாலோ அல்லது பாரமார்த்திக எண்ணத்தாலோ நீதான் அதைத் தரமுடியும்; நீர் ரக்ஷகன், நாங்கள் ரக்ஷிக்கப்படவேண்டியவர்கள். அதனால், கோவிந்தா என்றைக்கும் ஏழேழு பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமே ஆவோம், "உனக்கே நாம் ஆட்சி செய்வோம்; மற்றை நாம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்" என்கிறாப்போலே, கருணையினால் திண்மைவாய்ந்த திருத்தோள்களைக்கொண்ட ஸ்ரீசீதாபதே, செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலே, எனக்கு உன் திருவருள் தா என்று பகவத் கிருபையை வேண்டியும், அது வரும்வரை பொறுமையுடன் காத்திருந்தும், பகவானிடம் அளவிலா விஸ்வாசப் பிரேமை கொண்ட மஹா பாகவத உத்தமன் பரதன் அல்லவோ? தன் சுகங்களையும் போகங்களையும் தியாகம் செய்து, பரமாத்மாவுக்கு யேற்பட்ட ரக்ஷியரக்ஷகம் போக்த்ரு போக்தா, அந்த ஸ்வரூபங்கள் நித்யம்; "நான் உன்னையன்றி இலேன் நாரணனே, நீ என்னையன்றி இலை" என்கிற ஸம்பந்தச் சேர்க்கையை அறிந்த பரதன் ஸ்ரீசீதா ராமனை பரமார்த்தம், தனக்கு வேண்டிய ஐஸ்வரியம், தன் சுகத்திற்காக வேண்டிய ஆதாரம், வேறு ஒன்றும் ஸ்வப்னத்தில் கூடயில்லை. என்றால் ஒன்றும் செய்வதிற்கில்லையென்று பாரதந்திரிய உணர்ச்சி ஆகிய எல்லாம் சோபிக்கும்படி ஞானதிவாகரனாக விளங்குகிறான் பரதன். ஸ்ரீசீதாராம சரணங்கள்தான் எனக்கு சாதனமாகிற உபாயம். ஸ்ரீசீதாராம சரணங்களே எனக்கு பிராப்யபலன். சித்திஸ்ரீ சீதாராம சரணங்களே என் அனுபவம். அந்த அனுபவம் நிதியாகையாலும், அவன் உறவு ஒழிக்க ஒழியாததாகையாலும், என்பாரதந்தரியம் வெளிப்பட்ட ரகசியமானதாலும், பகவானை, ஒரு தடவை நமஸ்காரம் செய்து பிரபத்தியோகத்தை

அடைந்து, அனுஷ்டித்து, இடைவிடாமல் திண்ணமாக நமக்கு அன்பிஞல் வருவான் என்கிற விசிஷ்டாத்வவத சித்தாந்தத்தை பிரகடனப்படுத்துவது போலவும், ஆழ்வார் எம்பெருமாஞர் வேதாந்த தேசிகன், மணவாள மாமுனிகள் காட்டிய வழியில் வரும் பாகவத அக்ரகண்யன். அவனுக்கு பலகோடி நமஸ்காரங்கள். இதுதான் நமக்கு பரதன் அருளால் அறிவிக்கும் ஏகமாத்திரமான அதிருஷ்டம். இதுவல்லவோ நமக்கு மஹா கிருபையால் பரதன் காட்டிய நல்வழி என்று சொல்லிக்கொண்டே போஞர் ஜனகமஹாராஜர்.) (1459)

[தியானம்

ஹே ஹரிபகவானே, உனக்கு நமஸ்காரம், ஹே உமா சகித சம்போ, உங்களுக்கு நமஸ்காரம். பிரஹ்லாதன் அசுரர்களைப் பார்த்து "என் சகோதரர்களே, யார் யாரால் கொல்லப்படுகிருன்? யார்யாரால் ரக்ஷிக்கப்படுகிருன்? அவனவனுடைய சுபமான கர்மம் அவனை ரக்ஷிக்கிறது. அவனவனுடைய அசுபமான கர்மம் அவனை நாசமடையச் செய்கிறது. கர்மத்தின் காரணமாக எல்லாம் ஸம்பவிக்கிறது. இதஞல் ஸர்வபிரயத்னத்தோடு ஸாதுக்கள் சுபமான கர்மங்களை ஆசரணை செய்கிருர்கள். அதுபோல நீங்களும் ஹ்ருதயத்தில் ஸ்ரீஹரிபகவானை தியானம் செய்து கர்ம ஆராதனம் செய்யுங்கள்," என்று உபதேசித்து அவர்களை ஸத் கதியை அடையவைத்தான். அதுமாதிரி, பிரஹ்லாதனைப் போல ராம பக்தியில் சிறந்து விளங்கும் பரத ஸ்ரேஷ்டனை எவ்விதம் சிறந்து வர்ணிக்கமுடியும்? பரிக்ஷித்து மஹாராஜன் சுகபிரும்மத்தை நோக்கி சொன்ஞன். "நாராயணனை தேவதேவனை நான் எவ்விதம் ஆராதித்து "ஐயா ராமன், ஹரி இல்லாமல் எனக்கு உலகம் இல்லை; ஹம்ஸபுத்தியை (சலனமற்ற) அடைந்து நான் அனந்தனுடைய கீர்த்தி புகழின்றி பேசுவதுமில்லை, கேட்பதுமில்லை, பாடுவதுமில்லை, எழுதுவதுமில்லை, அச்யுதனை திருப்தி செய்வதைவிட எனக்கு கர்மம் வேறு ஒன்றுமில்லை, அச்யுதனைத் தவிர அமலமான ஞானமும் வேண்டாம்; கோவிந்தனைத் தவிர வர்ணுஸ்ரம தர்மங்கள் வேண்டாம்; ஸ்ரீதர பாத பத்மங்களை குண பூர்வமாக கீர்த்தனம் செய்து ஆனந்தமடையும் ஆனந்தத்தைத் தவிர வேறு ஒன்றும் வேண்டாம்; ஹ்ருஷிகேசனுடைய ஆதாரத்தை தவிர எனக்கு வேறு கர்மகதி வேண்டாம்; கிருஷ்ணன் ராமன் ஆகியவர்களின் அரவிந்த பாதங்களைத் தவிர என் எண்ணங்கள் வேறு ஒன்றையும் நாடவேண்டாம்; பரமாத்

மாவின் பக்தியைத் தவிர எனக்கு ஸத்வமும் வேண்டாம். ஞானமும் வேண்டாம். சுத்தமும் வேண்டாம். அவனைவிட்டுப்பிரிந்து வாழும் விக்ஞானமுமான வைராக்ய மனப்பான்மையும் வேண்டாம். அகில ஆத்மபூதன், நாராயணன், என் சீதாராமன், அஜர், பிரஹ்லாத பக்தபிரியன், பக்தவத்ஸலர், காமீ, காமதர் கலியுகத்தின் கல்மஷங்கள் நிரம்பின எனக்கு, சிந்திக்கமுடியாதபடி அவைகள் என்னை அந்தகாரமாய் மொய்த்துக்கொண்டிருக்கும் போது கேசவ பக்தியும், ஸர்வ பூதங்களின் அனுகம்பையும் ஸாதுக்களின் ஸங்கமும், உமா மஹேஸ்வரர்களின் விஸ்வாசமும், பிரஹ்லாதன், பரதன், ஜனகர், துருவன், மார்க்கண்டேயர், சுகர், பரிக்ஷித் மஹாராஜர், மஹானுபாவரான துளசிதாஸர், தியாகராஜர், தீக்ஷிதர், சியாமாசாஸ்திரிகள், பாஸ்கரராயர் என்னை ஸத்ஸங்க யோக்யனாக வந்தடையட்டும். ஹே திருமாலே, உன் கிருபையினால் ஸகல ஜீவர்களையும் கேசவாராதனம் என்று நினைப்பவனாய், மனத்தினாலும் வாக்கினாலும் கர்மங்களாலும் பிறரை பீடை செய்யாமல், சுபசித்தத்துடன் ஸர்வ பூதங்களுக்கும் ஈஸ்வரரான விஷ்ணு பகவானை பண்டிதர்கள் எங்கும் உளன். அவன் உருவம் இவ்வுலகமாயும் உலகம் யாவும், அவன் இல்லையென்றால், இவ்வுருகளும் இலை, உளன் இலன் என்று குணமாகத் தோன்றினால் பரந்து குணமுடைய அம்ருதவபுவான உன்னோடு, ராமசீதாவுடன் இருத்தலைப் பெற்று நான் உண்டு வாழ்வேன்; நம்மாழ்வார் பரதன் திருவடிகளே சரணம்.]

"பரதன் சிறிதும் மறந்தும்கூட ஸ்ரீராம சாஸனத்தை மீறமாட்டான். அதனால் நாம் வீணாக மனம் கலங்கி, ஸ்நேகத்தினால் இதைச் செய்தால் நல்லது என்று சிந்தை கலங்கவேண்டாம்." என்று சொன்னார். (1460)

[கருத்து:—ஜனக ராஜர் (மஹா கிருதக்ஞதை பூர்வமாக ஆத்மா ராமனாகிற பரதனின் பக்தி பிரபன்ன பாவங்களையும், ராமனின் பதத்தை சதா ஸ்மரிக்கிறவனாகவும், பாகவத கோஷ்டியில் பிரஹ்லாதனைப்போல அக்ரகண்யனும், நான் அறியவேண்டிய மஹத்தானதும் சுரர்களால் அனுஷ்டிக்கப்பட்ட ஸநாதனமான பகவத் பக்திக்கும் பிரேமைக்கும், ஆத்ம உஜ்ஜீவனத்திற்கும் ஹேதுவானதும் கலியினால் யேற்பட்ட என் தோஷங்களையும் பாபங்களையும் போக்குவதும், விஷ்ணு பதத்தைக் கொடுப்பதுமான வழியை, பிராப்யமான பலனை, பரதன் மூலம் அறிந்தேன். எவ்விதம் பரிக்ஷித்ராஜன் சுகரை ஆஸ்ரயித்து ஆனந்திப்பாரோ, அதுபோல ஜனக மஹராஜர் ராம சீதா சரணங்களை நினைத்துக்

கொண்டு பரதனைப் புகழ ஆரம்பித்து, கண்களால் பிரேமைக் கண்ணீர்கள் விட்டுக்கொண்டிருந்தார். அவருடைய சரீரம் புளகாங்கிதமடைந்தது. பின்பு பெருமூச்சு விட்டுக்கொண்டு ஜனகர் மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருந்தார்.)

இந்த விதமாக ஸ்ரீராமனிடம் உள்ள அப்ரமேய பரத பக்தியைப் பற்றி ராஜாவும் ராணியும் சம்பாஷித்துக் கொண்டிருக்கும் போது அந்த ராத்திரியும் இமை கொட்டுவதுபோல சீக்கிரம் கழிந்துவிட்டது. விடியற்காலை இரு சமாஜத்தார்களும் எழுந்திருந்து மந்தாகினியில் ஸ்நானம் செய்து தேவதா ஆராதனை செய்தார்கள். (1461)

ஸ்ரீரகுராயும் விடியற்காலையில் ஸ்நானம் செய்துவிட்டு, குருவான வஸிஷ்டரின் பாத சரணங்களில் விழுந்து நமஸ்கரித்து அவருடைய அனுமதி பெற்று பேசலானார். "மஹராஜ், பரதன் அயோத்தி மாஜனங்கள், என் தாய்மார்கள் என் வனவாசத்தைக் கண்டு அத்யந்த வியாகுலமடைந்திருக்கிறார்கள்.' (1462)

"மிதிலா தேசபதியும் அவர் கூட்டத்தார்களும் அதிக கிலேசம் அடைந்திருக்கிறார்கள். இவ்விதமாக பலதினங்கள் சென்றுவிட்டன. இப்போது எது உசிதமோ அதைச்சொல்ல வேண்டும். தங்கள் மனம் எல்லோரிடமும் அனுகம்பையாகவிருக்கிறபடியால் உங்கள் கைகளில் எல்லோருடைய நன்மையும் ஹிதமுமிருக்கிறது." (1463)

இவ்விதம் சொல்லிவிட்டு ரகுராய் அதிசோகத்தினால் பேசாமல் இருந்துவிட்டார். ராமனுடைய சீல அடக்கம் ஸ்வபாவங்களைக் கண்டு வஸிஷ்ட பகவான் அத்யந்த புளகாங்கிதமடைந்தார். அவர் சிரித்துக்கொண்டு பதில் சொன்னார். "என் பிரிய ராம், உன்னையன்றி ஸம்பூர்ண சுகங்களையும் போகங்களையும் இரு ராஜஸமாஜங்களும் நரகத்திற்கு சமமாக நினைக்கின்றனர்." (1464)

[தியானம்

ஹே திருவிக்ரம நாராயணா, விராட் ராமசீதா, உன் திருவடிகளின் பெருமைகளை யாரால் கூறமுடியும்? அன்று கிருஷ்ணாவதாரத்தில் காளிங்கனை அடக்கி, அவன் பத்தினிகளாலும், அவனாலும் கௌரவிக்கப்பட்டாய். உன் பாத ரஜஸ்ஸின் ஸம்பந்தம் பெற்ற யோகிகள், நாகலோக பதத்தையும், ஸார்வ பௌமத்தையும், பாரமேஷ்டியையும் ரஸாதிபத்யத்தையும், இந்திர பட்டத்தையும், பிரும்ம பட்டத்தையும், யோக சித்திகளையும், மறுபிறப்பு

இல்லாததையும் விரும்பமாட்டார்கள். சம்சாரமாகிற சக்ரத்தில் சுழலுகின்ற பிராணிக்கு உம்முடைய ஸம்பந்த ஸம்பத், அக்ஞானிகளுக்கும் தோஷங்கள் நிறைந்து சேதனர்களுக்கும் கிடைத்திருக்கிறது. விஸ்வரூபரே, கதாக்ரஜரே, உம்முடைய அழகான திவ்ய மங்கள விக்ரஹத்தை பக்தர்களுக்கு வலிய கொடுக்கும் ருசிராங்கதரே, ஸர்வ ஜீவரே, ஸர்வ சுகந்த பரிமளரே, அனந்தரே, சூக்ஷ்மரே, குண ப்ரதீபரே, சதுர் மூர்த்தியே, பிரவிருத்தி நிவிருத்தி ஆகியவைகளுக்கு பிரமாண மாகவும் நிகமமாகவும் இருக்கும் ராம சீதா, மௌனசாலிகள் வணங்கும் ஹிருஷிகேசா, ஸுரவரியரே, நிக்ரஹசக்தியுடன் விளங்கும் கதாதரரே, உம்முடைய தண்ட நீதி அசுரர்களுக்கு பரம உபகாரமாக விருக்கிறது. பூரி கர்ப்பரே, உம்மால் வதம் செய்யப்பட்ட ராவணன், அவமானம் செய்யப்பட்ட பலி, காளிங்கன், உம்மால் நிக்ரஹம் செய்யப்பட்ட எத்தனையோ அசுரர்கள், உம்மால் அனுக்ரஹம் செய்யப்பட்டவர்களாவார்கள். சம்சார போகங்களில் காலத்தை வீணுக்குவதைவிட பிரஹ்லாதன் உம்முடைய பாத பங்கஜத்தை தனக்கு அபயமாகவும், துருவ மாக உம்மிடம் சேருவதற்கும் அனுஷ்டித்தார். அப்ரமேயா, ஜனர்த்தன, புண்யமான மோக்ஷலக்ஷ்மியினுல் தூண்டப்பட்டு, என் ஸம்பத்துக்களாகிற இகபோகங்களை விட்டு, யத்ருச்சையாக உம்முடைய பாத சரணங்களில் ஸதாசார்ய கடாக்ஷத்தினுல் உந்தி தள்ளப்பட்டேன். நீர் எல்லாவற்றையும் கொடுக்கிறீர். நீரே அவை எல்லாவற்றையும் எடுத்துக்கொள்கிறீர். ஜிதமன்யுவே, ஜகதீஸ்வரரே, நாராயணு, அகில லோக சாக்ஷி, மதுசூதனரே, ஹிரண்யகர்ப்பரே, மாயாக்ரீடரே, புண்டரீகாக்ஷரே, விஷ்ணு பகவானே, உருக்ரமரே, ஸ்ரீவத்ஸாங்கரே, கேசவா, குஹ்யரே, என்னிடம் பரம ப்ரேமையுடன் இரும். உன் பாத சேவையைத் தாரும்.]

"என் பிரிய பந்துவான ராமா, நீர் பிராண ஜீவனர். பிராண நிலயர். பிரியமுள்ள ராமா, நீ பிராணனுக்குப் பிராணனுனபடியால், ஆத்மாவுக்கும் ஆத்மாவாகவும், சுகத்திற்கும் சுகமாகவும் விளங்குகிருய். அப்பனே உன்னைவிட்டு எவர்கள் குடும்பத்தையும் கிருஹத்தையும் விரும்புகின்றனரோ, அவர்களுக்கு விதி விபரீதமாகவுள்ளது என்றே சொல்லவேண்டும்." (மஹா அபராதிகளான காளிங்கனுக்கும் பலிக்கும் பிராணன் தந்த ஜீவர். ஸகல ஆத்மாக்களுக்கும் நியந்தாவாகிற பரமாத்மா, சுகம் கொடுப்பதால் பரம சுகத்திற்கும் போக்யர். அனுக்ரஹம் நிக்ரஹ

சக்தியினால் எல்லோருக்கும் உமது பாத நிலையை அளிக்கும் வள்ளல். என் பிரிய தர்சன ராமா, உன்னைவிட்டு பிரிந்து, தங்கள் வீடுகளில் மனைவி புத்ரன் ஆகிய செல்வங்களிலிருந்தும் உன் திருவடி சம்பந்தம் பெருமல், அதுவும் ராமா, நீர் வைகுண்டத்தி லிருந்து மஹா காருண்யமாக அர்ச்சாவதாரமாக அவதரித்த சமயம் அந்த பாத ஸ்பர்சத்தை அனுபவிக்காமல், மற்ற சுகங்கள் யாவும் வீணே). அதுமாதிரி, உன்னை அயோத்தியிலிருந்து இழந்துவிட்டதால் விபரீதமான தெய்வ குற்றங்களுக்கு இலாக்கு ஆவோம்.'' (1465)

''உம்முடைய திருவடிகளில் பக்தியும் அன்புமில்லாத போனால், எந்த சுகமும், எந்த கருமமும், எந்த தருமமும் வீணே. அதை அறிந்து கொள்வோமாக. ராமபக்திக்கு முக்கியத் வம் இல்லாத யோகம் என்பது குயோகமே, அதாவது கெட்ட யோகமே, அல்லது வினைப்பயனே. அப்படிப்பட்ட ஞானமும் அக்ஞானமாகும்.'' (1466)

[கருத்து: எந்த விடத்தில் உம்முடைய பாதங்களின் மகரந்தத்தை, தேனை, இளநீரை, ஸர்வ கந்த பரிமள வாசனை ஸம்பந்தத்தை பிரும்மாதிகள் அண்டும் பாத விபூதிகளை மறந்து, ராமா, தங்களுடைய இக சுகங்களில் ஈடுபடும் மானிடர்கள் தங்கள் பொழுதுகளை வீணுக்குகிறார்கள். அமிதமாயாலீலா விசாரதரே, எங்கு உம்முடைய சரண கமலங்களில் பிரேமை இல்லையோ, அந்த விடத்தில் சுகம் இல்லை; ஆயுள் இல்லை; கர்ம பாக்யங்கள் இல்லை; தர்மமும் வ்யர்த்தமாகிறது. பிரபு, கல்பதரு, உன்னை மறந்து, விஷய போகங்களில் மமதையினால் வாழ்பவர்களுக்கு ஸம்பத் யோகங்கள் எவ்விதம் கிடைக்கும்? ராம பிரேமை யில்லாதவர்களுக்கு ஞானம் பக்தி பிரபத்தி யோகம், அனுக்ரஹம் எவ்வாறு கிடைக்கும்? பிரபோ, இதை நீர் நன்கு அறிவீர்.'') (1467)

''உம்மைவிட்டு அகன்றவர்களே சம்சாரத்தில் மிக்கத் துக்கப் படுவார்கள். சுகப்படுபவர்கள் உம்முடைய நினைவினால்தான் சுகமடைகின்றனர். யாருடைய உள்ளத்தில் என்ன இருக்கின்றது என்பதை, (ஸர்வாந்தர்யாமியான) நீர் நன்கு அறிவீர். உம்மு டைய ஆணையோ யாவருக்கும் தலையால் ஏற்கத் தக்கதாகும். கிருபா ஸமுத்திரமாகிய உமக்கு அனைவருடைய கதியும் போக் கும் நன்கு தெரிந்ததே. (1468)

[கருத்து: உம்முடைய பாத ஸம்பந்தமின்றி எல்லோருக் கும் துக்கம்தான். உம்மால் அனுக்ரஹம் செய்யப்பட்டவனே

சுகியாகவும் பிரகாசமாகவும் ஆகிறுன். (விபு மீட்யரே, குஹன், தக்ஷன், அங்கிரஸ் முதலியவர்களால் அனுக்ரஹமாகத் தேடப் படும் நாராயணு,) நீர் அந்தராத்மா. எல்லோருடைய இச்சையை நன்கு அறிவீர். திருவிக்ரமரே, உம்முடைய சாஸனம் பலி, காளிங்கன் ராஹு கேதுக்கள் அசுர தைத்யர்கள் இவர்களால் கூட உல்லங்கனம் செய்யப்படமாட்டாது. அவ் விதமிருக்கும்போது பிராணுவபஸ்தையை அடைந்திருக்கும் அயோத்தி ஜனங்களுக்கும் மிதிலா நகரவாசிகளுக்கும் உமது அடியார்கள் என்றும், தாங்கள் நினைத்து எவ்விதமான கட்ட ளையை இடுகிறீரோ, ஸ்வாமி, அதை சிரத்தையுடன் அனுஷ் டித்து, சமஸ்த தாபங்களிலிருந்து விடுபடுக்கூடுமோ, அவ்வித மான கட்டளையை அளித்து அனுக்ரஹம் செய்ய வேண்டுகிருேம். நீர் சாந்த ஆத்மாவாகிய கிருபாளு, எங்கள் கஷ்டங்களை ஸர்வ சாக்ஷியாக நீர் பார்க்கிறீர். நீர்தான் எங்களுக்கு கதி.'')

ஆகவே, ராமா, இனி நீர் ஆசிரமத்திற்குச் செல்வது தகும்.'' இவ்வாறு கூறிவிட்டு முனிவர் பெருமான் (வசிஷ்டர்)பக்தி பரவசராகி தளர்ச்சியுற்று நின்ருர். இராமனும் அவரை வணங்கி விட்டு ஆசிரமத்தை நோக்கிச் சென்ருன். முனிவரும் மனத் திடம் பெற்று ஜனகரிடம் சென்ருர். (1469)

(கருத்து : ஆகையினுல் மானிட அவதாரம் எடுத்த ராமா, உம்முடைய திருவிளையாடல் மானிடர்களுக்குப் புரிபடாது. நீலோத்பல மலர்களைப்போல உம்முடைய திருவடிகள் சம்பந்தம் பெற ஆசையுடனிருக்கிருவனுக இருக்கிறேன். ஜகந்நாதரே முனிமானியரே, மாயாக்கிரீடரே, மாயின மாத்யரே, என் பிரமைகளைப் போக்கும் கதமாயரே, மோஹ மஹாரி, மஹனீய ரான விஷ்ணுவே என்னை சோதிக்க வேண்டாம். நீர் நிக்ரஹம் செய்தாலும் அனுக்ரஹம் செய்தாலும் எதைச் செய்தாலும் எங்களுக்கு ஸர்வ சம்மதம் தான்,'' என்று ஆவேசம் வந்தவர் போல தழுதழுத்த குரலுடன் ஸர்வ விரத ரூபியானவரும் பகவா னும், வரிஷ்டருமான வசிஷ்ட மஹா குரு ராம பிரேமையினுல் சொல்லிக்கொண்டே போனுர். அவருடைய ஆனந்த நிலை சொல்ல முடியாமல் இருந்தது. உசானஸ் பகவானுகிற சுக்ரர், மஹாபலிச்சக்ர வர்த்தி யாகத்தின் சமயம் பலி ரஸாதளத்திற்குச் சென்ற பின்பு, ஹரி பகவானுடைய ஆக்ஞையைப்பெற்று காமேஸ்வரரான பகவானை,'' யக்ஞேசா, யக்ஞ புருஷன் ஸர்வ பாவங்களால் பூஜிக்கப்படும் பரம புருஷரே, எவர் உம்முடைய நாம உச்சாரணத்தால் தப்பாகச் சொல்லியும், நீர் திருப்தி

அடைகிறீரோ, அப்பேற்பட்ட தயாளுவை, மந்திர தந்திரங்களால் அறியப்படும் சூக்ஷ்மரை, நாம சங்கீர்த்தனம் செய்து, துதித்தாரோ, அதுபோல பகவான் வஸிஷ்டர் என் ஆசார்யர் ஸ்ரீராமனை சீதாபதியை ஸ்துதி பிரணமம் செய்துவிட்டு பேசாமலிருந்தார். ராமன் அவரை திருப்பி பிரணமம் செய்துவிட்டு தனது ஆஸ்ரமித்திற்கு விடைபெற்று போனர். வஸிஷ்டர் மனத்தை தைரியப்படுத்திக் கொண்டு ஜனகரிடம் வந்து சேர்ந்தார்.)

[தியானம்

ராமசீதா தியாகராஜரால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீராமா, உன்னை அவருடைய ஆக்ஞையின் பேரில் துளசிதாஸரை சிரம் பணிந்து நமஸ்கரிக்கிறேன். தியாகராஜ துளசிதாஸ பரத ஹ்ருதயத்தில் வாழும் பிரும்மா, நாத பிரும்மாவாகிற சங்கரனுள்ளத்தில் வாழும் ஆனந்த கந்தமே, மஹானுபாவா, உன்னை நாரதர், உத்தவர், அர்ஜுனன் ஜனகர், லக்ஷ்மணன் புரந்தர தாஸர், ஜயதேவர், உமை, விஷ்வக்ஸேனர், குஹன், பிரஹ்லாதன் போன்ற மஹானுபாவர்கள் சதா ஆஸ்ரயித்த வண்ணம் இருக்கிறார்கள். உன் திருவடிகளே பெரும் பாக்யம்; உன் சேவகமே பெரும் சேவகம்; என்று பராசரர், நம்மாழ்வார் ராமானுஜர், மணவாள மாமுனிகள், தேசிகர் போன்ற மஹா மகிமைகள் பொருந்திய என் பூர்வாசாரியர்கள் அடிக்கடி சொல்லுகிறார்கள். ஆஞ்சநேயரால் உபாஸிக்கப் பெற்ற ஸ்ரீ சீதா நாயகா ராமா, உன்னுடைய பக்த கோடிகளை புரம்வைத்து உன்னை நமஸ்கரிக்கிறேன். கோபிகைகள் ஸ்வதவதந்திரரான உம்மை, ஸகல விஷயங்களையும் தள்ளிவிட்டு உம்முடைய பாத மூலத்தை நாடி, ஆதிபுருஷா, மோக்ஷத்தை விரும்புகிறவர்களைக் காப்பது போல ரக்ஷித்தீர். ஸ்ருதிகளால் புகழப்படும் ஸுரோத்தமா, வேதங்கள் சிருஷ்டிக்கு முன் மாயையுடன் கிரீடிக்கிற தங்களுக்கே ஞானம் முதலிய சக்திகளைத் கொடுக்கும் தன்மை உண்டு என்பதையும் ஸத்வம் முதலிய முக்குணங்களையும் ஸ்ருஷ்டித்த ஆதிகர்த்தா என்றும் பறை சாற்றுகின்றன. உன் நாமங்கள் பல விருந்தாலும், ராமாகிருஷ்ணா, நாராயணா, மஹாலக்ஷ்மி நாராயணா, என்கிற நாமங்கள் எனக்கு உவந்து வருகின்றன. என் கர்ம பலத்தால் சம்பாதிக்கப்பட்ட சரீரத்திற்கு போக்தாவாக விருக்கிறீர். தாங்கள் அன்று உத்தவருக்கு உபதேசித்தபடிக்கும், பரதன் பிரஹ்லாதன் போன்ற பக்த கோடிகள் வைஷ்ணவ தர்மத்தின் சூக்ஷ்ம

மான விஷயங்களை அறிந்து, எல்லா கர்மங்களையும் துர்ஜயமான என் மிருத்யுவை ஜயிக்கக்கூடியதும், ஸம்சார தாபங்களை நிவர்த்தி செய்வதுமான உம்முடைய சரணங்களை எத்தனையோ மஹானுபாவர்கள் காட்டிய வழித்துணையின் பேரில், உபாஸிக்கிறேன், என் கர்மாக்கள் பூராவையும் உன்னை நினைத்துக் கொண்டு உன் ஆராதனமாகச் செய்கிறேன். உனக்கு அர்ப்பித்த மனத்துடனும், உன் பக்தர்களை ஆஸ்ரயித்தும் ஸகல சேதன அசேதனர்களை உன்னுடைய ஸ்வரூபபாவத்தால் நினைத்து எங்கும் வியக்தனுன பகவான் என் சரீரத்திலுமிருக்கிறுர் என்கிற ஆத்ம பாவத்தினுல், ஐயா, ஸர்வம் பிரும்மாத்மகம், அவனுடைய சரணுரவிந்தமானது நாங்கள், கிருத கிருத்யங்களோடு விருந்தாலும் எங்கள் மனதில் எப்போதும் இருக்கின்றது என்று ஸ்மரிக்கிறேன். பிரபோ, பகவானுடைய ஸ்வபாவம் கிருதக்ஞதை பூர்வமாகவுள்ளது. பக்தர்கள் எவ்வளவு அற்பத்தைக் கொடுத்தாலும் அதை மிக்கப் பெரிதென்று நினைக்கும் வள்ளல். அப்படிப்பட்ட பகவானிடத்தில் உள்ள ஸ்நேகம் அன்பு பக்தி, அவனுடைய ஹிதத்தைப் பிரார்த்திப்பது, உபகாரம் செய்வது ஒவ்வொரு ஜன்மத்திலும் ஏற்படவேண்டும். அவனுடன் இருப்பதுமின்றி, அவனுடன் சேர்ந்து வாழும் பக்தர்களுடன் விசேஷமான ஸம்பந்தமும் பெற வேண்டும்; அப்படிப்பட்ட பகவானுக்கு பிராம்மணர்களே தெய்வம் என்கிற நினைவும் வேண்டும்; என் வாக்கு இந்திரியங்கள் மனம் பிராணன் ஸர்வ பூதங்களுக்கு ஹிதமாகவும், நிஷ்பலனை எதிர்பார்த்து, உன்னையே திருப்தி செய்கிறுவனுகவும், முக்குணங்களால் தீண்டப்படாதவனுகவும் நான் செய்யும் இக லோக கர்மாக்கள் உனக்கே அர்ப்பணம் செய்வதால், நிர்பயனுக பாபமற்றவனுக இருப்பேன். இது ஸத்யமான வழி, அம்பிகை, தியாகராஜர், நாரதர், வால்மீகி, வேதவியாஸர், சுகர் ஜனகர் போன்ற மஹானுபாவர்கள் எனக்குக் காட்டிக் கொடுத்த பரமாம்ருதம் என்று மஹா விஸ்வாசத்துடன் உன்னை பாதனை அறுதியிட்டு சரணமடைகிறேன். ராமசீதா, லக்ஷ்மணு, நம்மாழ்வாரே, தயை செய்ய வேண்டும்.]

வஸிஷ்டர் ராமனுடைய வசனங்களை ஜனகருக்கு எடுத்துச் சொன்னுர். என்ன சீலமான நடத்தை, ஸஹஜ ஸ்நேகம் கொண்ட சுந்தரமான வார்த்தைகள் என்று இருவர்களும் ஸ்ரீராமனைப் புகழ்ந்தார்கள். வஸிஷ்டர் ஜனகரைப் பார்த்து மீண்டும் சொல்ல ஆரம்பித்தார். "மஹராஜ் எது தர்ம சகிதமாக

விருக்குமோ, எல்லோருக்கும் எது ஹிதமாகவும், ஸமதிருஷ்டியாகவும் பரம பாகவதர்களின் உள்ளத்திலுள்ள கர்ம பலமின்றி, ஈஸ்வர ஆராதனையாகிற எந்த உபாயம் எல்லோருக்கும் ஹிதத்தை விளைவிக்குமோ, அதைச் செய்யுங்கள். ஜனகரே, நீர்தான் புத்திமான்களுள் சிறந்தவர்.'' (1470)

''வைஷ்ணவ ஞானமாகிய ஸர்வ பூதங்களிலும் பர வாஸுதேவன் வ்யக்தமாக விருக்கிறபடியால் ஸர்வம் ராமமயமாகப் பார்க்கும் நற்பிறவியுள்ள மஹா வித்வான் நீர், அனுஷ்டானத்திலும் சுசியான தர்மங்களை உடையவர். (முக்குணங்களாலும் கவரப்படாத ஆத்மாவையும், கர்ம விசேஷங்களையும் ஜிக்ஞாஸுகளையும் உடைய வித்வானே, பிராம்மணன், நீச ஜன்மத்தில் உள்ளவன், திருடன், பாகவதன், சூரியன், சிறிய விளக்கு க்ரூர நெஞ்சுள்ளவன் இரக்க ஸ்வபாவமுள்ளவன், குற்றமுள்ளவன், குற்றமில்லாதவன் ஆகிற வித்யாஸங்களன்றி எல்லோரையும் ஸம திருஷ்டியுடன் பார்க்கும் மஹா வைஷ்ணவ பண்டிதரே, நர பாலரே,) உம்மைத்தவிர இந்த தர்ம சங்கடமான நிலையில், காரிய ஸாமர்த்தியம் உள்ளவர் வேறு யார்? எல்லோரையும் வெறுப்பு விருப்பின்றி ஸர்வ ஆத்ம பாவமாகப் பார்க்கும் பிரும்ம ரிஷியல்லவோ நீர்? (1471)

முனி ஸ்ரேஷ்டரான வசிஷ்டரின் வாக்யங்களை பரம புண்ணிய வானுகிற ஜனக மஹாராஜர் மிக்க அனுராகத்துடன் கேட்டார். புகழப்பட்டும் பரம ஞானியான ஜனகர் இந்த விஷயத்தில் ராமனுடைய சங்கல்பம் எதுவோ அது நடந்தே தீரும் என்று நம்பி மிக்க வைராக்ய !மடைந்து விட்டார். அவருடைய ஸ்திதியைக் கண்டு ஞானமும் வைராக்யமும் அவரை அடைந்தது பற்றி மிக்க பாக்யமாகக் கருதி, அவரிடம் உள்ள பக்தியினுல் ஆச்சரியப்பட்டு நின்றன. (பகவத் பக்தியை விட ஞானமும் வைராக்யமும் பெரிதல்ல; நாம் இந்த மஹத்வத்தைப் பார்த்து, ஏன் நமக்கு இந்த ராமபக்தி வரக்கூடாது என்று வெட்கப்பட்டு, இதுகாறும் காலத்தை வ்யர்த்தமாக்கி விட்டோமே, பாகவத பிரேமைக்கு பகவான் வசப்படுவான் என்கிற உண்மையை அறிய மாட்டாமல் போனேமே என்று வருத்தப் படுவது போல விளங்கின.) ஜனகரும் வஸிஷ்டருடைய நிலையைப் பார்த்து தனக்குள் சிந்திக்க ஆரம்பித்தார். நாம் இவருக்கு புத்திமதி சொல்ல வந்தோமே, என்ன துர்பாக்கியம், நான் இந்த விடத்திற்கே வந்திருக்கக் கூடாது. இதனுல் தான் இந்த மாதிரி மஹா மேதாவியான வஸிஷ்டர் நம்மைக்

கேட்கும்படி ஆயிற்று?'' என்று ஜனகர் எண்ணமிட்டார். (1472)

தசரதமஹாராஜர் ''ராமனை வனம் செல்'' என்று உத்தர விட்டார். ராமனிடம் அதிக பிரேமை கொண்ட அவர், ராமன் வியோகத்தை தாங்காமல் உயிர் துறந்தார். நம்முடைய அன்பும், ஞானமும் தசரதருடைய அன்பைப் போலவும், ஞானத்தைப் போலவும் இருக்குமோ? இப்போது நாம் செய்யக்கூடியது என்னவென்றால், பரம விவேகத்துடன் ராமனை வனத்திற்கு அனுப்பிவிடுவோம். அதனால் நாம் ஞானத்தை, ராமபக்தியை, ராமனுக்குச் செய்யவேண்டிய பரம தர்மத்தைச் செய்து, நம்மை ஆனந்தித்துக் கொள்வோம். நாம் ஒருக்காலும் தசரதர் போல, பக்தி கொண்டவரல்லர். இருந்தாலும் ராமன் தன்னிஷ்டப்படி தான் ஸ்வதந்திரமாக நடப்பார் என்கிற பரமஞானத்துடன் கூடியவராக தன் நாட்டுக்கு திரும்பிவிடுவோம் என்று ஜனகர் தனக்குள் சொல்லிக்கொண்டார். (1473)

இந்த சம்பாஷணை வார்த்தைகளை தபஸ்விகளும், முனிவர்களும், பிராம்மணர்களும் கேட்டு, பரம சந்தோஷமடைந்தார்கள். என்றாலும், பரதன் என்ன சொல்லப்போகிறான், ராமன் என்ன செய்வார் என்பதைக்காண ஆவல் கொண்டவர்களாக, எல்லோரும் சமயம் போவதை உணர்ந்து, தைரியத்தை வரவழைத்து கூட்டமாக பரதனிடம் சென்றார்கள். (1474)

[தியானம்

ஹே சிவமந்திரமும், நாராயண மந்திரமும் சேர்ந்த ராமா, மஹேஜ்யர் என்று சொல்லப்படும் நாராயணா, உம்மை ஆராதிப்பவர்களை, தேவர்களைவிட சிறந்ததாக கருதும் மஹா உதாரரே, உம்மிடம் பிரபத்தி செய்து, ஆத்மஸமர்ப்பணம் செய்யும் மஹா பாகவத உத்தமர்களுக்கு எளிதாகவும், சுலபமாகவும், பலனையும், பிரயோசனந்திரங்களையும் கொடுக்கும் மஹா கிருதுவல்லவோ நீர். நீர் யக்ஞர், யக்ஞவாஹனர், பொற்புதையல் போல அர்ச்சாவதாரத்தில் எழுந்தருளும் ஸம்பவர். யக்ஞபதி, ஜகத்பதி, காம்ய பலன்களைத்தரும் இஜ்யர், நீரே க்ரது; நீர்தானே பிரகிருதி, புருஷன், காலம், ஆதிமத்யம், அந்தம். ஸ்வாமி, அதனால் மஹரிஷிகள் உம்மை முகுந்தரே, ராமகிருஷ்ணா என்று ஆராதித்து, தமஸ்ஸாகிற இருள் சூழ்ந்த ஸம்சாரத்தை தாண்டுகிறார்கள். அப்பேற்பட்ட மஹரிஷிகளான பரதன், ஜனகர், வஸிஷ்டர், க்ருது முதலியவர்களை முன்னிட்டு, என் ஆத்மாவை

உம்மிடம் சீதாபதே ஸமர்ப்பிக்கிறேன். நீர் ஸ்வீகரித்துக் கொண்டு, என்னை அனுக்ரஹம் செய்யவேண்டும். விபீஷணனுக்கு திருவடிகளைக் கொடுத்த ராமா, பாண்டவர்களுக்கு தூது சென்ற கிருஷ்ண, கோபிகைகளுக்கும், உத்தவருக்கும் அபயம் கொடுத்த முராரி, காமாக்ஷியின் ஹ்ருதயத்தில் விளங்கும் முகுந்தா, துளசி தர்மாரண்யத்தில் பாவனமாக விளங்கும் பதிதபாவனரே, த்ருதரே என்னை ரக்ஷிக்க வேண்டும்.]

பரதன் அந்த மஹா யோகிகளை எதிர்கொண்டு அழைத்து, அந்த சமயத்திற்கு ஏற்ப, அவர்களை கௌரவம் செய்தான். ஜனகர், மிதிலையில் பிரகாசிக்கும் அரசர், பரதனைத் தழுவி அன்புடன் சொல்ல ஆரம்பித்தார், "பிரிய பரதா, நான் சொல்வதை கவனித்துக்கேள். உனக்கு ரகுவீரனுடைய ஸ்வபாவ ஸ்வரூபகுணங்கள் யாவும் தெரியும். (1475)

"நம் ராமச்சந்திரன் ஸத்யவரதன், ஆனால் பக்தர்களுக்காக தன் ஸத்யத்தை நழுவவிடும் அஸத்யன், (பீஷ்மருக்காக ஆயுதம் எடுத்த பக்த பராதீனன், பக்தர்கள் விஷயத்தில் தர்மங்களை புறக்கணித்துவிட்டு, ரக்ஷகத்தைச் செய்யும் உதார ஹ்ருதய முள்ளவர். ததிபாண்டனுக்கும், வெண்ணெய்த் தாழிக்கும் மோக்ஷம் கொடுத்த மஹா ஹ்ருதயர். அதனால் அவருடைய சீலதர்ம நடத்தைகளும், ஸ்நேக மனப்பான்மையும் ஆழ்ந்த கடல் போல விருக்கின்றன.) பக்தர்களுக்கு நோவாதவண்ணம், தன்னை வியவஸ்தை செய்து கொள்ளுவதால், தர்மசங்கடத்தில் ஸங்கோசத்துடன் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாமல் இருக்கிறான் ராமன். இந்த சமயத்தில் நாங்கள் ஒன்றும் சொல்லுவதற்கில்லை. (மஹாக்ருதுவாகிற நீ, அக்னிஷ்டோமம் போன்ற யாகங்களின் பயன்களைவிட, பாரமார்த்திக ஸமர்ப்பணம் என்கிற ஆத்மவித்தையால், அதன் பிரயோசனந்தரமான சேஷ சேஷி பாவத்தினால், அந்த இஜ்யரான பரமபுருஷரை நீ ஸர்வ பாவத்துடன் ஆராதித்திருக்கிறாய்.) ஆகையால் உன் திருவுள்ளம் எதுவோ, அதைத்தான் ஸத்யவிக்ரமராக ஸ்ரீராமன் செய்து முடிப்பார். அதை எங்களுக்கு தயவு செய்து கூறு." (1476)

பகவானுடைய கிருதக்ஞையையும், உதார ஹ்ருதயத்தையும் கிருதகிருத்யனான பரதன் கேட்டு, ரகுராமனுடைய குண ஸாகரத்தில் ஈடுபட்டவனாக, அம்ருததாரைகளாகிற கண்ணீர்கள் மல்க, புளகாங்கித சரீரத்துடன், தைரியத்துடன் மெதுவாக வார்த்தைகள் சொல்ல ஆரம்பித்தான். "ஐயா, தயாநிதி, தாங்கள் என் பிதா போன்றவர்! ராமனாலும், சீதையாலும்

வெகுவாக கௌரவிக்கப்பட்ட மஹேஜ்யர், எனக்கு வஸிஷ்ட பகவானைப் போல், மாதா, பிதா, குரு, தெய்வம் யாதொன்றுமில்லை. அவரால் காட்டிக்கொடுத்த பாதையில் செல்லும் எனக்கு அவருடைய வார்த்தைகள்தான் ஹிதத்தைத் தருவன.'' (1477)

''இந்த சமாஜம் தமஸ் என்கிற ஸம்சார இருளைத் தாண்டின மஹாக்ருதுக்களான விஸ்வாமித்ரர் போல, யக்ஞ புருஷர்களாகிற இஜ்யர்கள் வாழும் இந்த சமாஜம், அவர்களும் மந்திரக்கூட்டங்களுடன் அலங்கரித்திருக்கிறார்கள். இன்று இவ்விதம் அலங்கரித்திருக்கிற இந்த ஞான சமாஜம், ஸ்ரீராமனுடைய பரம பக்தர்கள், ராம சேவகத்தையே விலக்ஷணமாகக் கொண்ட பாகவத உத்தமர்கள். ஐயா, அந்த சமாஜத்திற்கு நீர் யோகேஸ்வரராகவும், அக்ரகண்யராயுமிருக்கிறீர். உம்மிடம் யோகம், ஸாங்கியம், பாகவத பக்தி, பகவத் பிரேமை ஆகிய எல்லாம் நிரம்பி இருக்கின்றன. என்னைக் கௌரவப்படுத்துவதற்காக இவ்விதம் வார்த்தைகளைச் சொல்லுகிறீர்கள். நான் உமக்கு ஒரு குழந்தை. நீர் என்னைக் எவ்விதம் ஆக்ஞையிடுகிறீரோ, அதன்படி நடக்கிறேன். நீர் என் பிரபு, நான் உமது அடிமை. எனக்கு நீர்தானே மார்க்கதரிசி'' (1478)

''(சீதை, அம்சர், யாக்ஞயவல்கியர் ஆகியவர்களால் உபதேசிக்கப்பட்ட விக்ஞானம் ஏகரூபமாக வந்திருப்பவர் நீர். உமது பெருமைகளை நேரில் கண்ட புண்யமூர்த்திகளாகிறவர்களும், இந்த சமாஜத்தில் மஹனீயர்களாக விருக்கும் வஸிஸ்ட, விஸ்வாமித்ர, வாமதேவ, ஜாபாலிக்ருது போன்றவர்களைக் கேட்டால்தான் தெரியும்.) நான் உமது ஸந்நிதியில் மௌனமாக விருப்பதின் காரணம், என் எளிமைத்தன்மைதான் காரணம். ஆனால் என் எண்ணங்களைப் பிரகடனப்படுத்தாது போனால், அதுவும் இந்த புண்ய சித்ரகூட மந்தாகினிதீரத்தில், நான் கள்ள உள்ளம் கொண்டவனாகத் தோன்றும். அதனால் உங்கள் மன்னிப்பை பிரார்த்தித்து, எனக்குத் தோன்றினதை உங்கள் முன்பு ஸமர்ப்பிக்கிறேன். (எனக்கு பகவத்பிரேமை பாகவத உள்ளமிருந்தாலும், உம்முடைய அனுக்ரஹம் வேண்டும்.) விதி என்னை கடூரமாகச் சோதனை செய்கிறது. என் பிரிய தகப்பனார் போலவிருக்கும் ஆப்த அப்பா'' (1479)

''பிரசித்தமானதும், வழக்கத்திலிருப்பதுமான ஆகமங்கள், புராணங்கள், இதிஹாஸங்கள் எல்லாம் உமக்கு நன்றாகத் தெரியும். இந்த புராண ஸாகரத்தில் ஒரு உண்மை சொல்லப்பட்

டிருக்கிறது. அடிமையாகிற வாழ்க்கை, சேஷிக்கு உகந்த சேஷனுடைய நித்யஜீவயாத்ரை மிக்கக் கடினம். (மஹத் அஹங்காரத்தாலும், பிரக்ருதி, புருஷன், காலம் ஆகியவைகளால் சேதனன் மிகவும் சோதிக்கப்படுகிறுன்.) அதனுல் ஸேவாதர்மம் மிக்க கடினமானதும், க்ஷமையையே அங்கியாகவும் கொண்டுள்ளது. அதனுல் ஸ்வாமிக்குச் செய்யவேண்டிய கர்த்தவ்யங்களிலிருந்து ஜீவன் நழுவி, அவன் செய்யத்தகாத காரியங்களையும் செய்து, ஸ்வய எண்ணங்களாலும், ஹிம்சையாலும், பரபீடையாலும், பகவத் ஸேவையை மறந்து, அனந்தமான அஸஹ்ய அபசாரங்களுக்கு இலக்காகிறுன். அதனுல் ஸ்வய நல பிரவிருத்தியும், ஸ்வாமிதாஸ அபிவிருத்தியும் ஒன்றுக்கொன்று பரஸ்பர விரோதபாவமாக விருக்கின்றன. அதனுல் வெறுப்பு முற்றிப்போய், கிரோதமாகி பிரேமையே வரண்டு போகும்படி சேதனன் வாழ்கிறுன். அசுபமான மதியுடன், காமக்ரோதங்கள், மதமாத்ஸர்யங்கள், லோபங்களுடன் வாழ்ந்து, அவன் பிறரை ஹிம்சிக்க ஆரம்பிக்கிறுன்.'' (1480)

[தியானம்

பிருகு பதத்தை நாராயணன் மார்பில் தரித்திருப்பது போல, பரதபதத்தை தரித்த சீதாராமா, தியாகராஜரால் கருணு ஜலதி என்று வாத்ஸல்யமாகக் கொண்டாடப்பட்ட சீதாபதே, தாசரதிராமா, கமனீய ஸுகுணநிதியே, ஜகன்மோஹன ராமா, என் காமாக்ஷியே, கருணுகடாக்ஷியே, சதுர்முக ஜனகா, ஜனகரால் மனம் ஒப்பி வனம் அனுப்பப்பட்ட ராமா, அகஸ்தியர், விஸ்வாமித்ரர் போன்றவர்களால் உபதேசிக்கப்பட்ட ஆத்ம வித்யையும், தர்மசிஷ்டர்களையும் அடைந்த ராமா, ஞான ஸ்வரூபமான ஜீவனை, ஆத்ம விசாரணை செய்யும்படி தூண்டி, குஹ்யவித்யையான ராமபக்தியை ஸ்வயம் பிரயோசனமாக பிரபன்ன வித்யையாக பிரகடனப்படுத்திய பரதாக்ரஜா, சீதாபதே, என் ஸ்ரீகரா, தராதிபா, மித்ரனுக விருக்கும் சரீரத்துடன் விளங்கும் சீதாராமா, ஆபத்தர்மத்தினுலும் சரணம் என்றும், என்கதியே என்றும் உம்மைவந்து நான் அடைந்திருக்கிறேன். பிரேமை பக்த ஜனரக்ஷகா, பரத பிரியா, ஜனகபிரியா, எல்விதம் உபமன்யு ரிஷி, பகவானும், லோகபூஜிதருமான மஹா தேஜஸ்வியும், சராசர குருவும், பரம மங்களமான உமாமஹேஸ்வரரை ஸத்புத்தியால் ஆராதித்த சமயம், இந்திரன் வேஷத்தால் சோதிக்கப்பட்டும், நடராஜா, உன்னையே தன் மனதில்

தரித்துக்கொண்டு, கடைசியில் ஏமாறுமல், ஈஸானருடைய மஹா கிருபா பிரஸாதத்தை அடைந்தாரோ; அகஸ்தியர், லோபாமுத்ரை, ஆகியோர் சிவஜாயையான உமாமஹேஸ்வரியை ஆராதித்து, சிவஸாந்நித்யத்தை அடைந்தார்களோ, அதுபோல தியாகராஜர், பரதனுல் பூஜிக்கப்பட்ட சீதாராமா, என்னிடம் சாக்ஷாத்காரம் செய்யமாட்டாயா? என்னிடம் ஸாந்நித்யம் கொள்ளமாட்டாயா? ஹே மனஸே, தியாகராஜ பக்தியினுல் சூடு செய்யப்பட்ட ஸ்ரீ நிதியே, தேவர்களின் முகமும், அவர்களுக்கு முந்திச் செல்லுகிறவரும், ஊர்த்வரேதஸ்ஸுடும் பரிசுத்தமா யிருப்பதை மட்டில் பொறுக்கிறவரும், என் பிரபுவும், கௌசிக ரால் ஆராதிக்கப்பட்ட அக்னிபகவானே, ஸ்வாஹா ஸ்வதா நாயகரே, உம்மிடம் என் பக்தி வினயங்களை ஸமர்ப்பிக்கிறேன். உம்மை முன்னிட்டு, என் லோபங்களை நாசம் செய்து, ராமசீதா சரணங்களை அடைகிறேன். கிருபையுடன் என்னை அழைத்துச் செல்லும்.]

"ஐயா என்ஞான பிரபோதகரே, நான் ராமனின் அடிமை யானபடியால், ராமனுடைய ருசிபிரகாரம், தர்மகவசத்துடன் லோபத்தை நாசம் செய்து, என்மனத்தால் ஆத்ம விசாரணை செய்து சீதாராமனே என் பரமார்த்தம், எனக்கு யோக க்ஷேமத்தை தரும் உபாயம், சீதாராம சரணங்களே எனக்கு உறுதியாயுள்ள புத்தியினுல் காட்டப்பட்ட பலன், சீதாராம அனுபவமே என் ஆத்மஜீவனம், என் பாபங்களையும் சம்சார துக்கங்களையும் போக்கும் மிருதசஞ்சீவினி என்றும், எல்லோருக்கும் ஸர்வ சம்மதமான ஆகாரம் போல, அவனும் அந்த ராமனும் ஸர்வபக்த ரக்ஷகன், என்று தெளிந்தபுத்தியினுல் (அகஸ்தியர், விஸ்வாமித்திரர் தர்மதேவதை ஆகியவர்களால் ஆபத்துக்காலங்களிலும் விடத்தகாத ஆத்ம உஜ்ஜீவனத்தில் சரீராபிமானத்துடன் வாழவிரும்பும்) சிஷ்டர்களின் வழியில் செல்லுகிறேன். ஐயா, இந்தவிதமாக என்னை விஸ்வமித்திரனுக நினைத்து, பிரேமையுடன் எதைச்செய்யச் சொல்லுகிறீரோ, அது உமக்கும் எனக்கும் மஹா தர்மவான்களாகிற சிஷ்டர்கள் அடங்கிய இந்த கூட்டத்திற்கும் ஸகலருக்கும் புஷ்டியான ஆகாரம் போல ஸர்வ சம்மதமாக விருக்கும்." (1481)

பரதனுடைய ஸ்வபாவமான பிரேமையும் ஆபத்காலத்தில் கூட செய்யவேண்டிய தர்மத்தில் பற்றுதலையும் கண்ட அந்த சிஷ்டர்களடங்கிய ஸபையும், ஜனகராஜரும் அவனைப் புகழ்ந் தார்கள். பரதனுடைய வசனங்கள் மணமுள்ளதும் பசியைப்

போக்குவதும் புஷ்டியைத்தருவதும் ஆயுளை வளர்க்கக் கூடிய தான ஆகாரம் போல ஸுகந்தமாக விருந்தன. அழகாகவு மிருந்தன. கோமளமான ருசியை வளர்ப்பதாகவுமிருந்தன. சாப்பிடுவதற்கு வெறுப்பில்லாமல் ஆசையை உண்டு பண்ணுவ தாகவுமிருந்தன. சங்க்ஷேபமாக வார்த்தைகள் இருந்தாலும் அர்த்த புஷ்டியாகவும், பாராவாரம் என்று சொல்லக்கூடிய அபாரமான ஆழ்கடல்போல, (ராகஸ்வரதாள சேர்க்கையாலும் வினய பக்தியாலும் சீதாராம சரணங்களை கீர்த்தனம் செய்யும் தியாகராஜர் துளசிதாஸரின்) கவிதைகள் கீர்த்தனங்களைப் போல இன்பமளித்தன. (1482)

முகம்பார்க்கும் கண்ணாடியில் பிரதிபிம்பமாகத் தோன்றும் முகத்தைக் காணலாம். ஆனால் அதை ஸ்பர்சிக்க முடிகிறதோ? அதன் தோற்றத்தினால் மட்டும் ப்ரீதி அடையலாம். ஆனால் அதை நிஜமாக அடைந்து, அனுபவிக்க முடியுமா? அதுபோல பரதனுடைய வசனங்கள் காதுக்கும் மனத்திற்கும் இன்பமயமாக விருந்தன. அதன் அர்த்தங்கள் குஹ்யமாகவும் இந்திரஜால வித்யையைப் போல அபாரமாகத் தோன்றின. அதன் மர்மத்தை எளிதில் காணமுடியவில்லை. சப்தபிரும்மமாக விருக்கும் வார்த்தைகளால் அதோக்ஷஜரை எவ்விதம் இந்திரியக் கண்களால் பார்க்க முடியாதோ, அதுபோல வாக்கிற்கும் மனத் திற்கும் அகோசரமாகவிருந்தன. பரதனுடைய வார்த்தைகளால் கலக்கமடைந்த ஜனகர், பரதன், மஹா சிஷ்டர்களாகிற முனிவர்கள் அயோத்திமிதிலா வாசிகள் தேவரூபியும் குமுத புஷ்பத்தை மலரவைத்து ஆனந்திக்கும் ஸ்ரீராமச்சந்திரன் என்கிற சந்திரமூர்த்தியை ஆஸ்ரயித்து தங்கள் இன்பவாழ்விற் காக சரணம் அடைந்தார்கள். ராமன் இருக்கும் இடத்தை அடைந்தார்கள். (1483)

சகல விஷயங்களையுமறிந்த ஸமாஜஜனத்தினர்கள் ராமனின் ஸங்கல்பம் எவ்விதமிருக்கப் போகிறதோ என்று வியாகுல மடைந்தார்கள். அவர்களுடைய தாபங்கள் முதல் விருஷ்டி யினால் மீன்குஞ்சுகள் எவ்விதம் கடூரமாகத் தவித்து சிரமப் படுமோ, அதுபோல கவலையுடன் இருந்தார்கள். தேவதைகளும் அதுமாதிரி வருத்தம் அடைந்தார்கள். அவர்கள் ராமன்பால் வைத்திருக்கும் குலகுரு வஸிஷ்டருடைய ப்ரேமை பக்தியையும், ஜனகராஜரின் விசேஷ ஸ்நேகத்தையும், ராமன் அவர்களிடம் காட்டும் பரிவையும் நன்கு அறிவார்கள். வஸிஷ்டருடைய

நிலைமையையும் ஜனகருடைய நிலைமையையும் பார்க்கப் பார்க்க பரிதாபமாக விருந்தன. (1484)

[தியானம்

சீதே, ராமனுடைய பிரியபார்யே, உனக்கு நன்றாகத்தெரியும். ராமன் துக்கப்படுகிறவர்களைக் கண்டால் மிக்க துக்கமுள்ளவனாக ஆவான். எனக்குத் தெரியும் அம்மா, நீயும் ராமனும் காலத்தையும் மிருத்யுவையும் ஜங்கம ஸ்தாவரங்களனைத்தையும் நீங்கள் இருவரும் ஐக்யபாவத்துடன் நியமனம் செய்கிறீர்கள் என்றும், ஒரு வஸ்துவை வஸ்துவாக உண்டுபண்ணுவதும், அதை மேலாக நீடிக்கச் செய்வது, நியமனம் செய்வது, போன்ற வியாபாரங்களை தங்கள் பிரயோசனத்திற்காக போகோபகரணமாக ஸ்வீகரிக்கிறீர்கள் என்று உபநிஷத்துக்களும் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன. அப்பேற்பட்ட நித்ய தம்பதிகளான நீங்கள் என்விஷயத்தில் உபாயமாகவும் உபேயமாகவும் உங்களுடைய ஸ்வரூபத்தால் தானே ஏற்பட்டது? ஐயா அம்மா, நான் உங்கள் குழந்தை அல்லவா? ராமன், தேவி உன்னுடையதான இனிய முகத்தின் இங்கிதத்தைப் பார்த்துத்தானே, பிராட்டியாகிற உன் சங்கல்பத்தை முதலில் அறிந்து, சிஷ்டக்ருத் என்கிறபடி ஸகல வியவஸ்தைகளையும் லீலையாகச் செய்கிறான். அம்மா, நினைத்த முலைவழியே நின்று பால் சொரியும் என்கிறாப் போலே, என் ஆசார்யரான பட்டர் உன்னை, அஞ்சலிபரனான என்னை, மஹா ஔதார்யத்தால் ஜீவாத்மானுபவத்தையும் பரமபதத்தையும் கொடுத்தும், இவனுக்குத் தகுந்தது நாம் ஒன்றும் செய்யவில்லையே என்று லஜ்ஜைப்படுகிறாய் என்று சொல்லுகிறார். மேலும் உன் பெருமையை, உன் ஸ்வாமியான ராகவனும், ஏன் நீயுமே தேவி, கண்டறியவில்லை என்கிறார். நியஸ்த பரனான பரதனும் ஜனகமஹாராஜரும் பட்டரும் வஸிஷ்டரும் தியாகராஜரும் நானும் குஹனும் அல்லவா அதைப்பற்றி அறிவோம்? தியாகராஜர் உன் சரணங்களைச் சேவித்துக்கொண்டிருக்கும் போது, ராமன் பரதனை சாமரம் வீசுவதிலிருந்து நிறுத்தச் சொன்னார். குறைவு ஒன்றுமில்லாத கோவிந்தா, நான் படைப்பிலேயே இல்லை; என் தாயின் கர்ப்பத்தில் நான் பிழைத்திருக்க ஏதாவது ஏற்பாடு செய்தேனா? பிறந்த பின்னும் பால்ய அவஸ்தையிலும் பிழைப்பதற்கு உபாயம் செய்தேனா? அம்மா, நீயும் உன் சங்கல்பத்தாலே பகவானுக்கு சேஷபூதையாகிறாய். உன் ரத்ன

காந்தியால் பகவானும் சிகண்டியாகவும் சிறந்த மகிமைகள் உள்ளவனுகவும் ஆகிருன். நீ சதக்ருதுவுக்கு அம்ருத மதனம் செய்தபோது வாக்களித்தபடி அல்லவா உன் சங்கல்பத்தை நிறைவேற்றித்தானே பகவான் ஸுராரிஹா என்கிற பெயரை அடைந்தார். தெளிவாக நான் சொல்வதை கேட்டறியும் அம்மா, நாதபிரும்மமே, சப்தசஹராக விருக்கும் உமையே, காமாக்ஷி, உன்னுடைய குழந்தையும் கோப்தா என்று அழைக்கும் என்னே, அப்ரமேயனுன ராமனிடம் “திருவுக்கும் திரு” என்று போக்ய மாகச் சொல்லமாட்டாயா? தாமரையாள் கேள்வன் ஒருவனேயே நோக்கு முணர்வுகொண்ட என்னே, மஹாலக்ஷ்மியுடன் கூடிய நாராயணு, பரதனேயும் ஜனகரையும் வேதவியாஸர் நாரதர் விஸ்வாமித்திரர், பட்டர், வஸிஷ்டர், ஆஞ்சநேயர், தியாகராஜர், துளசிதாஸர் முதலியவர்களே அர்ஜுனன் கிருஷ்ணனே சகாவாக அனுபவித்ததுமாதிரி, செய்து, உங்களுக்கு சேஷபூதனும், உங்களால் அனுக்ரஹிக்கப்பட்ட புத்தியினுல் நியஸ்தபரனுன எனக்கு, உங்களாலே ஒரு பொறுப்பும் இல்லாதபடி, உங்கள் பொறுப்பாகவே, உங்களிடத்தில் நீங்கள்தானே சேர்த்துவைத்துக் கொள்ளவேண்டியது. ஸ்ரீகுணரத்ன கோசத்தில் சொல்லப் பட்டபடி, சந்திரன் போன்ற இனியமுகம் படைத்த லக்ஷ்மியே, சீதாபிராட்டியே, குண்டலங்களே அணிந்த கர்ணமுகி, உங்கள் ஸ்வரூபம் இதுதானே? உங்கள் ஸம்பந்தம் கொண்ட எனக்கு, பிராட்டியே, உன் ஸம்பந்தம் பெற்ற ஸ்வதந்திரமில்லாத பகவானின் ஸ்வரூபமும் இத்தம் இப்படித்தானே. முன்பு என்னிடமும், பரதனிடமும் ஜனகரிடமும் காட்டிய கருணேயை என்மீது செலுத்து அம்மா. ராஜராஜேஸ்வரி.)

(சதக்ருதுவாகிற மஹேந்திரன் ஸர்வபூத ஸ்திதையான மஹாலக்ஷ்மியை நினேத்தான். கருணேவடிவமுள்ள ஸ்ரீராமன் ஸந்நிதியில் லக்ஷ்மணன் முதலிய சேஷாசனர் கூடியிருக்கும் போது, “ராக்ஷஸிகளே, பெரும் பயத்திலிருந்து இந்த சீதை நம்மைக் காக்க சக்தி உடையவள்,” என்கிருப் போலேயும், சௌனகர் பகவான் சொல்லிபடி “वाचः परं प्रार्थयिता प्रपद्येन्नियतः श्रियम्” என்கிற நியமனத்துடன் ஸ்ரீதேவியைப் பிரார்த்திக் கிறவன், “எம்பெருமானே அடையவேண்டும்.” அதுபோல பிரார்த்திக்கிற பரதனேயும் கண்டு லக்ஷ்மியினிடமும் சேஷாசனரான லக்ஷ்மண முனியினிடமும் பிரபத்தி செய்து அதன் பிறகு கட்டாயம் பிராட்டியும் பகவனும் ஸதாசாரிய கடாக்ஷ வீக்ஷண்யத்தால் பரதனுக்கு பிரஸாதித்து அருளுவான் என்கிற பயம்

தேவராஜனுக்கு பரதனுடைய நிலையைப்பார்த்து தோன்றியது). ராமன் அதீந்திரியன். பரதனுடைய நிரதிசயமான பக்தி பிரேமையை அறிவான். அவன் பரதனின் வசமடைந்து போய் விட்டால் தேவகாரியங்கள் கெட்டுவிடும். (பிராட்டிதான் நமக்கு ஹிதம் செய்யவேண்டும் என்று பிராட்டியை நினைப்பவனாக கவலையுடனிருந்தான்.) அதே மூச்சினால் பரதனுடைய பக்தி பிரேமையையும், தன் ஸ்வய பிரயோசனத்தை நினையாத பரதன் பகவானுடைய பிரயோசனத்தையே ஸ்வீகரிக்கச் செய்கிற ஆர்த்தனாக வந்திருக்கும் நிலையையும் கண்டு, தங்கள் காரியம் எங்கு நிறைவேறாது போகுமோ என்று கவலையுற்று திகைத்து நின்றான். தேவராஜனின் நிலையைக் கண்ட மற்ற தேவர்களும் அதிவியாகூலமடைந்தார்கள். (1485)

இந்த ராமனும் பரத ஸ்நேகத்தினால் பராதீனனாகப் போய் விட்டால் நம் காரியத்தை ஸாதிக்கமாட்டான் என்கிற நினைவு தேவராஜனுக்கு மேலெழுந்தது. நாம் ஏதாவது மாயாஜாலம் செய்து, அவர்களுடைய எண்ணத்தை திருப்பிவிடலாம் என்று தேவராஜர் மற்ற தேவர்களுடன் ஆலோசித்தார். (1486)

தேவதைகள் சாரதாதேவியான சரஸ்வதிதேவியை ஸ்மரித்தார்கள். அவளைத் துதிசெய்தார்கள். தேவியும் வந்து சேர்ந்தாள். ஏகமனதாக தேவர்கள் பிரார்த்தனை செய்தார்கள். "தேவி, தேவர்களாகிற நாங்கள் உன்னை சரணமடைகிறோம். உன்னுடைய தயையினால் பரதனுக்கு புத்திதடுமாற்றம் ஏற்பட்டு, எங்களை ரக்ஷித்தருளு. அம்மா உன்னுடைய மாயையினால் பரதனை எங்கேயாவது குளிர்ந்த நிழல்தரும் மரத்தினடியில் சேர்ந்து தேவகாரியங்களை சாதித்துவிடு. அதிதியின் குலநாயகர்களை ரக்ஷித்தருளு." (1487)

தேவதைகளின் பிரார்த்தனைகளை சாரதாதேவி கேட்டு, அவர்களை தன்னலம் நிறைந்தவர் என்றும் அறிவற்றவர் என்றும் நினைத்து சிரித்துக்கொண்டாள். பிறகு சிவமான ஹ்ருதயத்தை யுடைய சாரதாதேவி சொன்னாள். "தேவராஜா! பரதனுடைய மனதை மாற்றவேண்டும் என்று என்னைக் கேட்கிறாய். உனக்கு ஆயிரம் கண்கள் இருந்தும் நீ சுமேருவை (மலை போன்றதொரு பெரும் பொருளையும்) காணவில்லையே!" (1488)

கருத்து: (உன் ஸ்வயநலத்தை விடு. உன் பயங்களையும் விடு. பரதன் லோகாத்யக்ஷர், ராமன் அவனைப் பிரத்யக்ஷமாகப் பார்க்கிறான். எல்லா அனுஷ்டானங்களுக்கும் ஆதாரமாக இருக்கும் பரதன் ஸுமேருபர்வதம் மாதிரி கம்பீரமாக நிற்கிறான்.

மனத்திற்கு இனியவனுன சீதாராமனிடம் நிலைபெற்று நிற்கும் நிஷ்டர், பாவம் தோஷம் புண்யம் ஆகிய யாவையும் விலக்கி, பரமகதிக்குப்போகும் ஸ்வரூபமாயுள்ள நிர்வாணம் அவன். நிவிருத்தாத்மா, வேதங்களில் ரத்னகர்ப்பமாகவிருக்கும் தர்மத்தை சாதனமாகக்கொண்டு பிராட்டி எம்பெருமானை, அவர்களின் பிரயோசனத்திற்காகவே அடையும் தர்ம விதுத்தமன், சீதையும் ராமனும் பிரத்யக்ஷமாக, தர்மாத்யக்ஷர் என்கிறபடி பரதனை ஸ்வானுபாவமாக அனுபவிக்கிறதை, ஆயிரம் கண்கள் கொண்ட கண்ணுயிரத்தானே, பகவானே, பார், நன்ருகப் பார்.)

"உனக்குத் தெரியாதா? பிரும்ம மாயை, விஷ்ணுவின் மாயை, மஹேசருடைய மாயை ஆகிய எல்லாம் மிகப் பிரசித்தமானவை. ஆனால் அவைகள் எல்லாம் பரதனிடம் செலுத்தத் தக்கதன்று. (பரதனை அலக்ஷ்யம் செய்யாதே, பரதனிடம் மோஹ புத்தியினுல் தப்பான எண்ணங்களைச் செய்யாதே. சீதாராமன் நிழலடி நிலையை அடைந்த பரதனிடம் கெட்ட எண்ணங்களை மறந்துவிடு.) எங்கேயாவது சந்திரனின் ஒளி சூரியனுடைய கிரணங்களை அபகரிக்க முடியுமா?" (1489)

பரதனது உள்ளத்தில் ஸ்ரீசீதாராமர் நிலைபெற்றிருக்கின்றனர். (பரதன் சீதையின் உள்ளத்தில் உறைந்திருக்கும் அண்டர் கோன் ராமனின் நிழலை அடைந்திருக்கிருன். ராமன் அமரர் கோன் ஆழி சங்கு வாள் வில் தண்டு ஆதிபல்படையான், குமரன் கோலனவங்களை வேள் தாதை கோதிலடியார்தம், அவன் பொன்னுழிக்கை என்னம்மான், அவன் அடியாரடியார் அடியார் வசம் கொண்டவன்.) எந்தவிடத்தில் சூர்யதேஜஸ் இருக்குமோ, அந்தவிடத்தில் இருள் பிரகாசிக்குமோ? "உன் அக்ஞானத்தை விடு. பரதனிடம் நட்புகொள்," என்று சரஸ்வதிதேவி இந்திரனுக்குப் புத்தி கூறி பிரும்ம லோகம் சென்றுவிட்டாள். தேவதைகள் தங்கள் கவலைகளுடன் எவ்விதம் ராத்திரியில் சக்ரவாக பக்ஷி வியாகுலம் அடையுமோ அதுபோல வியாகுலத்துடன் ராமனுடைய முடிவை எதிர்பார்த்தவண்ணமிருந்தார்கள். (1490)

மலினமான நம்பிக்கையுள்ள தேவலோக வாசிகள் மீண்டும் கெட்ட எண்ணத்துடன் கவரப்பட்டு, பிரபலமான இந்திரஜால மாயைகளை அயோத்தி ஜனங்களிடம் ஏவினுர்கள். அதனுல் எங்கும் இருள் சூழ்ந்து, பயம் பிரமை, மதிமயக்கம் ஒருவருக்கொருவர் அப்ரீதி காரணமின்றி தோன்றும் அசூயை, வெறுப்பு ஆகியவைகள் தோன்ற ஆரம்பித்தன. (1491)

மிகவும் கெட்டிக்காரத்தனர்களால் யேவப்பட்ட மாயாஜாலங்கள் அயோத்தி ஜனங்களைப் பீடித்தன. இந்திரனோ மீண்டும் கவலையில் ஆழ்ந்தவனாக, பரதன் என்ன செய்யப்போகிறானோ என்று கவலைப்பட்டுக்கொண்டிருந்தான். இங்கே அரசர் ஜனகர் வஸிஷ்ட பிரமுகாதிகளுடன் ரகுநாதன் சமீபம் வந்து சேர்ந்தார். சூரியகுலத்தவனான ரகுராமன் அவர்களை வரவேற்று ஸம்மானம் செய்தார். (1492)

[தியானம்

ஹே மஹாலக்ஷ்மி நாராயணா, சீதாகௌரி, என் காமகோடிகா, சாருஹாஸா, சாருபத்மலோசனா, உமாசீதா, மனோன்மணி, மன்மதனால் பூஜிக்கப்படும் லலிதா, திரிபுரசுந்தரி, ராமம்ருடபிரியா, சரத்சந்திர நிபானனா, காமேஸ்வரி, ராஜீவாக்ஷி, என் மீனாக்ஷி, மஹாபாதக நாசினி, பந்த மோசினி, பாபமோசினி, ஸ்ர்வாதாரா, ஸுகபிரியா, ஸதாசிவனின் பிரேமை ரத்னமணி, நித்யகிளின்னா, உன்னுடைய திருமேனி ஸதா ராம அங்கத்தில் ஆஸ்ரயித்துயிருப்பதால் கரையேற முடியாத என் போன்ற பாபமயமாக விருக்கும் ஆத்மாக்களுக்கு சம்சாரத்தை சிரமமின்றி தாண்டுவதற்கு உன்னைத் தியானிப்பதால் உபயோகப்படுகிறது. உன்னுடன் கலந்த எம்பெருமானுடைய திருமேனியும் ஜகத் ஸமஸ்தமும் ஸகலமும், பிராட்டி, உன் கடைக்கண் நோக்கத்தின் ஆதாரமாக உடையதல்லவா ? பொன்னால் அலங்கரிக்கப்பட்ட என் காமாக்ஷியே, குஹனால் அர்ச்சிக்கப்பட்ட புண்ய மூர்த்தியே, உன் அனுக்ரஹமில்லாமல் பக்தன் ஸம்சாரத்தில் ஆசைப்படக்கூடிய உயர்ந்த அனுபவத்தையும், பரசிந்தனையுள்ள வைஷ்ணவ தர்மத்தையும், அக்ஷரமான எம்பெருமானுடைய ஸம்பந்தச் சேர்க்கையும் அதன் அனுபவங்களும் மனிதனுக்கு கிடைக்கிறதில்லை. மனிதன் எதனால் சந்தோஷமடைந்தாலும், மிகுந்த புண்யத்தினால் கிடைத்த நவத்வாரங்களைக் கொண்ட இந்த சரீரத்தை இந்த ஓடமானது உடைந்து போவதற்குள் துக்கக் கடலின் அக்கரையாகிற உன்னை அடைவதற்கு நீதானே அருள் செய்கிறாய். தியாகராஜர், வேதவியாஸர், மார்க்கண்டேயர், பரதன், லக்ஷ்மணன் உன்னை அடைவதற்கு எவ்வளவு சிரமப்பட்டார்கள்? அவர்களால் அர்ச்சிக்கப்பட்டதும் மாணிக்க கொலுசுகளையும் கிங்கிணி சப்தம் செய்யும் கொலுசுகளையும் கால்களில் உடைய சீதே, மராளியாகிற ஹம்சம்போல நீ மெதுவாக நடக்க, உன் சப்த சலங்கைகள் கீதங்களாக எனக்கு ஒலிக்க, அவ்வித மந்த கதியை

உடைய லாவண்யலக்ஷ்மி, பெரியாழ்வார் பெற்றெடுத்த செல்வமே, விஷ்ணுசித்தன் பல்லாண்டு பல்லாண்டு பாடிய திவ்ய தம்பதிகளே, நீங்கள் சிவசக்தி ஐக்யஸ்வருபமாகவும் ஐகரஸமாகவும் ஐகபாவமாகவும், ஸத்அஸத் யாகிற பிரும்மம், பிரபஞ்சமாகவும், ஞானம் பக்தியாகவும், ஏகமான பிரபன்ன வித்யையாகவும், ஸ்ரீவித்யா ரூபிணியாகவும் இருக்கிறீர்கள். தேவாதிதேவா, கருணையாகிற சீதையுடன்கூடிய பொறுமை வரதா, உங்கள் பொற்றாமரை அடிகளை எங்களுக்குத் தா. ராஜீவாக்ஷா, நீங்கள் தான் ஸத்யம், நீங்கள்தான் நித்யம். உங்களுடைய ரணதீரத்தைச் சொல்ல முடியாது. உங்களுடைய அத்யந்த ரூபத்தை விவரிக்க முடியாது. உங்களுக்கு அமிதபல மிருக்கிறது. நித்யோத்ஸவத்துடன் ஸ்ரீரங்கதாமில் வீற்றிருக்கிறீர்கள். நித்ய ஆனந்தத்துடன் விளங்கும் காமேஸ்வரி, காமகோடி மந்திரம் பிரபின்ன வித்யை என் பக்தி பிரேமை ஆகியவைகளை ஸ்வரூபமாக உடைய உமாலக்ஷ்மி, தியாகராஜரால் அர்ச்சிக்கப்பட்ட சீதாராமா, துளசிதாஸரால் கொண்டாடப்பட்ட பரதன் ஜனகர் லக்ஷ்மணர் ஆகியவர்களால் நிஷ்காமமாக வந்தனம் செய்யப்பட்ட சீதாபதே, ஸ்ரீமத் ராமாநுஜனின் ஸ்ரீபாதம் தாங்கிய நான் உங்களுக்கு நிஜதாஸன். வேதாந்த தேசிகன் சொல்லிய நிஜ பிரபன்னன். மணவாள மாமுனிகள் சுட்டிக் காட்டிய அவாவறச் சூழரியை, ஸர்வேஸ்வரனை நிஜமாக சரணமடைந்திருக்கிறேன். பரத உள்ளத்தோடு சரணமடைந்திருக்கிறேன் என்று புருஷகாரம் செய்யமாட்டாயா? காகாசூரனை அனுக்ரஹித்த பிராட்டியே, சிறிய திருவடிக்கு உன் தத்துவத்தை விளங்க உரைத்த மதியே, நிர்துக்கரான ஆழ்வார் அருளிச்செய்த "அவாவிலந்தாதிகளால் இவை ஆயிரமும்" என்கிறபடி உன்னைச் சரணம் அடைந்திருக்கிறேன். தாயே, நீதான் காப்பாற்றவேண்டும். நீங்கள் இருவர்களும் ஐகரஸத்துடன் என்னை உங்களைச் சேர்ந்தவன் என்று கருணையுடன் ஸ்வீகரித்துக்கொள்ளவேண்டும்.]

சமயத்தை அறிந்து, ரகுவம்ச புரோகிதரான வஸிஷ்டர் அந்த தர்மவான்கள் அடங்கிய சபையில் ரகுநந்தனிடம் சில வார்த்தைகளை சமர்ப்பித்தார். சகலருடைய எண்ணங்களையும் அறிந்த வஸிஷ்டர் ஸ்ரீசீதாராமனுக்கு ஜனக பரத ஸம்வாதங்களை எடுத்துச் சொன்னார். பரதனுடைய திருவுள்ளத்தையும் அழகாக எடுத்துரைத்தார். (1493)

"அப்பனே! ராமா! எனக்கு என்ன தோன்றுகிறதென்றால் நீ எவ்வாறு ஆணை இடுகிருயோ அதுபோலவே எல்லாரும் நடப்

பது நல்லது. இதைக் கேட்டு ரகுநாதர் கைகளைக் கூப்பிக் கொண்டு வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தார். (1494)

[கருத்து: நீங்கள் என்ன ஆக்ஞை செய்கிறீர்களோ, அதை நாங்கள் ஏகமனதுடன் நிறைவேற்றுகிறோம். புஷ்கராக்ஷா, மஹாபாஹோ, மஹாவக்ஷரே, பரம்தபஃ தர்மப்ருதாம்வர, ஸஹஸ்ர சரணஃ ஸ்ரீமான், தசசதசீரிஷர், ஸஹஸ்ரத்ருத், கிருஷ்ணு, ஸநாதனதர்மமே, யோகபிருஷ்டர்களும் உங்களைத் தியானிப்பதால் விடுதலை அடைகிறார்கள். சம்சார துக்கங்களைத் தாண்டவைக்கும் க்ஷாமரே, க்ஷிதீசரே, எங்களை ரக்ஷித்து உங்களுடைய ஸ்வபாவ குணங்களால் கருணையுடன் அருள்கொண்டு, நோக்கும்.) பகவான் ரகுநந்தனர் வஸிஷ்டரின் திருஅமுதின வார்த்தைகளைக் கேட்டு ஆனந்தம் கிருதக்ஜை மேலிட, பிரபஞ்ச நாயகனாகிற அவர், பிராம்மண பந்துவாக, கிருதாஞ்சலிகரனாக வினயசம்பத் நிறைந்தவனாக, அடியார்க்கு எளியவனாக, சத்யமான வசனங்களை மதுரமான குரலில் கிருதிக்ஞை உள்ளத்துடன் சமர்ப்பித்தார்.)

"ஐயா கிருபாளு, ஸ்வாமி, தாங்களும் தர்மகோப்தாவான மிதிலேசரும், (ஸ்ரீவித்யை, பிரபின்னவித்யை, அதிகோப்யமான வைஷ்ணவ) தர்மங்களடங்கிய மஹாவித்யை ரூபமாக விருப்பவர்கள் நான் உங்கள் சந்நிதியில் விக்ஞாபிப்பது மிக்க அனுசிதமாகவிருக்கும். உங்கள் இருவர்களுடைய ராயஸம், ஆக்ஞை எதுவோ, அதைச் செய்யக் காத்திருக்கிறேன். (நான் அறுதியிட்டு பத்ததீக்ஷை கொண்ட சத்யவ்ரதனாக, பக்த பராதீனனாக அனுக்ரஹமுள்ளவனாக விருக்கிறேன்.) சீதையுடன் கூடியவனாக எதையும் செய்யக் காத்திருக்கிறேன். ஸ்வாமி, நீங்கள் கட்டளையிடலாம்." (1495)

ராமனுடைய ஸத்ய வ்ரதத்தை அறுதியிட்டு கூறியதைக் கேட்ட ஸகல சபையினர்களும் ஆச்சர்யப்பட்டார்கள். அவர்கள் என்ன நடக்குமோ என்று ஆவலுடன் முடிவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஜனகரும் ராம குணானுபவங்களின் எல்லையை அடைந்தவராக விளங்கினார். எல்லோரும் ஒன்றும் சொல்லமுடியாமல் பரதனுடைய முகத்தைப் பார்த்தவண்ணமிருந்தார்கள். (1496)

பரதன் சபையினுடைய எண்ணத்தை அறிந்துகொண்டான். ராமபந்து, ரகுகுலதீபன் தைரியத்துடன் ஸ்ரீசீதாராம ஸந்நிதியில் விக்ஞாபனம் செய்ய பிரயத்னம் செய்தான். அவனுடைய உள்ளம் ராமசீதா ஸ்நேகத்தினால் குளிர்ந்து, (நம்மாழ்வார் "முனியே நான்முகனே முக்கண்ணப்பா, என் பொல்லாக்

கனிவாய்த் தாமரை கருமாணிக்கமே, இனி நான் போகவிட்டேன் ஒன்றும் மாயம் செய்யேல் என்னையே, என்கிறப்போலே, ஆரா வமுதனாக, உன்னைப் பெற்று இனி போக்குவனே, அவாவற்று வீடு பெற்ற நான் உன்னையிழந்து போவேனே, நீயும் என்னை அவா வற சூழ்ந்தாயே, என்கிறபடி ஆராய், அமுதாய் என்று எண்ண மிட்டுக்கொண்டிருந்தான். ஆதி ஊழிகால ஸ்நேகம். அதன் பரிமளம் அவன் நினைக்க நினைக்க, ஸர்வ சுகந்த பிரியரான சீதா ராமனுக்கு பரம யோக்யமாக அவன் விளங்கினான்.) மனத்தை ஒருவிதமாகத் தேற்றிக்கொண்டு, அகஸ்திய மாமுனி விந்தியா சலத்தின் வளர்ச்சியை தடுத்தது மாதிரி, தன்னை அடக்கிக் கொண்டு, ராமனிடம் சீதையை புருஷகாரமாக வைத்து, ராமானுஜ கடாக்ஷய வீக்ஷணயத்தால் உத்தரம் சொல்லப் பிரயத்னப்பட்டான். (1497)

அந்த சபை முழுவதும் சோகமயமாகக் காணப்பட்டார்கள். இருள் சூழ்ந்து, மதிமயக்கமடைந்த ஹிரண்யாக்ஷன் எவ்விதம் பூமியை அபஹரித்து, புத்தியையும் பிரும்மாவையும் கடத்தி, விமல கீர்த்தியுள்ள பூமிதேவியை, (என் நம்பின்னைப்பிராட்டியை, மார்த்தாண்ட பைரவ சுரபியை), அஹங்காரத்துடன் ஸ்வயநலத் துடன் அபஹரித்தானோ, அதுபோல ஞான ஒளியிழந்த அந்த சபையினர்கள் துக்கத்தைப் புத்தியினால் அடக்க முடியாதபடி கலங்கிக் கொண்டிருந்தார்கள். அந்த ஞான வரட்சியாகிற சபை யில் பரதன் விவேகரூபியான விசால வராஹமாகத் தோன்றி, அனாயாஸமாக பூமியாகிய புத்தியை மீட்டு சோகத்தைத்தந்த ஹிரண்யாக்ஷன் என்கிற அக்ஞானத்தையும் ஸம்ஹரித்து, தன் வார்த்தைகளால் அந்த சபையை ஞான சோபிதமாக சுடர் செய்தான். (1498)

எல்லோருக்கும் சுக்ருதபிரணாமங்கள் செய்தான். மீண்டும் ஸ்ரீசீதாராமனின் சரணங்களில் நமஸ்கரித்து, அதன்பின்பு ஜனக மஹாராஜரையும் வஸிஷ்டரையும் பிரும்ம ரிஷிகளடங்கிய சாது ஸமாஜத்தையும் வணங்கிவிட்டு, அதிவினயத்துடன் சொல்ல ஆரம்பித்தான். "ஸ்வாமிகளே, என் பக்த ஜனங்களே, நான் சொல்வதை க்ஷமையுடன் பொறுத்துக் கொள்ளவேண்டும். ஏதாவது அனுசிதமான வார்த்தைகளைச் சொன்னால் மன்னிக்க வேண்டும். நான் சொல்லப்போவது கடினமாக விருந்தாலும் நல்ல மனத்துடன் நீங்கள் ஏற்றுக் கொள்ளவேண்டும். அபராதம் என்று தெரிந்து செய்தாலும் கூட ஸ்வாமி, தெரியாமல் செய்தா லும், அதையும் பொறுத்துக் கொள்ளவேண்டும்." (1499)

பரதன் உடனே சாரதாதேவியை மனத்தில் நினைத்துக் கொண்டான். அவளை ஸ்மரித்த மாத்திரம், சரஸ்வதிதேவி மானஸ ஸரோவரிலிருந்து பரதனுடைய முக பங்கஜத்திற்கு எழுந்தருளிவிட்டாள். விமல புத்தியைக் கொடுப்பவளும் பாபங்களைப் போக்கும் விவேக மனத்தையும் நிச்சய புத்தியைக் கொடுப்பவளும், தர்மத்தின் வழியில் அழைத்துச் செல்பவளும், (அகாரம் முதல் க்ஷகாரம் வரை உயிர்மெய் எழுத்துக்களால் அலங்கரிக்கப்பட்டவளும், மந்திர ஸ்வரூபமாக இருப்பவளும், பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும் வேதமனைத்துக்கும் வித்தாகும் என்கிருப்போல நாதஸ்வரூபிணியாகிற லலிதாதேவி,) என் சாரதாதேவி அழகான ராஜஹம்ஸம்போல மந்த கதியுடன், சீதையின் பொற்சிலம்புகள் கணீர் கணீர் என்று ஒலிக்கும் இசை போல, என் அம்மா, பரதேவதை, காளும்ருதை. ராஜமாதங்கி, பிரும்மாணி, சாவித்திரி, காயத்திரி.) அதிஸ்நேகத்துடன் பரதனுடைய முகார விந்தங்களில் குடியேறினாள். (1500)

அதனால் பரதனுடைய வசனங்களாகிற அன்பினால் கட்டுண்ட அந்த சபையனைவர்க்கும் ப்ரேமை அதிகரித்தது. அவர்கள் ஸஹஜ ஸ்நேகத்துடன் பரதன் மீது பிரேமையை வர்ஷித்தார்கள். அவர்களுடைய நிரதிசயமானதும் விவேகமானதுமான வசனங்கள் ("கிருஷ்ணம் ஏகம் தர்மம் ஸநாதனம்" என்கிருப்போலே,) ராமபக்திகொண்ட ஸமாஜத்தினரின் உட்நோக்கை அறிபவனாக. பரதன் அழகான வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான். சபையின் அருள் நோக்கை வகிப்பவனாக, பரதன் தன் கோமளமான கரங்களை அஞ்சலி செய்து கொண்டு, சீதையை நமஸ்ரித்து, (அவளால் अस्तुते, அஸ்துதே தயைவ ஸர்வம் ஸம்பத் ஸ்யதே, என்று அவளுடைய அமுத வாக்கினால் புல்லரிக்கப்பட்டு, புளகாங்கிதனாக, ஸ்ரீசீதாராமனின் திருவடித் தாமரைகளில் நமஸ்கரித்து,) வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித்தான். (1501)

"ஹே பிரபு, நீங்கள் இருவர்களும் மாதா பிதா, ஸுஹ்ருதயம் கொண்ட மித்ரர்கள். குரு, ஸ்வாமி எல்லாம் நீங்கள்தான். என் மனதில் கோயில் கொண்டு வாழும் ஸ்ரீரங்கபதி, ஆகையினால் நீங்கள் என்னால் பரம விசேஷமாகப் பூஜிக்கப்பட்டு ஆராதனம் செய்யத் தகுந்தவர்கள். (யாக்ஞ்யவல்கியர் சொல்லியபடி என் ஆராதனத்திற்கு உத்கிருஷ்டமானவர்) எனக்கு பரம ஹிதத்தைச் செய்யும் முகில்வண்ணன். என் மானஸ ஸரோவரில் நடமாடும் ராஜஹம்ஸங்கள். என்னிடம் கள்ளம் கபடுயில்லாமல்,

ஸஹஜ அன்புடன் பழகும் காருணிகர்கள். புருஷோத்தமர் கல்யாண குணங்களின் ஸ்ரீநிதி. சரண மஹம் பிரபத்யே என்று ஒரு தடவை செய்யும், சொல்லும் ஆர்த்த பிரபன்னன், திருப்த பிரபன்னன் ஆகிய இருவர்களுக்கும் பிரணதார்த்திஹரன். பிராண நிலையன். ஜீவநாடி. ஸர்வாதாரன். ஸர்வக்ஞன். நற்குடியில் பிறந்த ரகுகுல, ஸ்ரேஷ்டர்.'' (1502)

'' நீர் காரியங்களில் ஸமர்த்தன். சரணுகதர்களைத் தர்ம விரதனுகவும், தீக்ஷை கொண்டு ஸத்ய வ்ரதனுகக் காக்கும் ஹிதகாரி, ஸத்குணங்களையும் பாபங்களையும் பயங்களையும் போக்கும் பிரபு. ஹே கோஸாயி, ஹே பிரபோ, சம்சார துக்கங்களிலிருந்து என்னைக் கரையேற்றும் பிரபோ, உமக்கு ஸமமாக நீரே ஆவீர். அதைப்போல, ஸ்வாமிக்குத் துரோஹம் அபராதம் செய்தவன் நானே எனக்குச் சமமாக ஆவேன். (1503)

'' பிரபோ, நான் மோஹத்தில் சிக்குண்டவனுக, உங்களுடையவும், பித்ருவினுடைய வசனங்களையும் உல்லங்கனம் செய்து விட்டு, பரம அபராதியாக அஸஹ்ய அபசாரங்களுக்குக் கர்த்தாவாகவும், உமது சீற்றத்திற்கு யேற்ற யோக்யனுகவும், இந்த பரிவார ஜனங்களுடன் வந்திருக்கிறேன். உம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட இந்த ஜகத்தில், நல்லவர்களும் கெட்டவர்களும் உயர்ந்தவர்களும் தாழ்ந்தவர்களும், நல்லது கெட்டது ஸ்வபாவம்கொண்ட பண்டிதர்களும், ஞானிகளும் அக்ஞானிகளும் பக்திமான்களும் விரோதம் உம்மிடம் காட்டுபவர்களும் இருக்கிறுர்கள். (அனவரதமும் உமது கிருபையை நாடிய வண்ணமிருக்கிறுர்கள்.) (கர்ம பலன்களில் ஒட்டாமல்) தங்களை அனுபவித்துக்கொண்டு, தேவர்களைப் போல சுக ஜீவனர்களாகவும் காணப்படுகிறுர்கள். அம்ருதம் அமரபதம் ஆகியவைகளை அடைந்தவர்களாகவு மிருக்கிறுர்கள். அதேமாதிரி, உம்மை மறந்தவர்களாலும், நீர் செய்யச் சொல்லிய காரியங்களைச் செய்யாமலும், அக்ருத்யங்களைச் செய்துகொண்டும், நானுவித அபசாரங்களுக்கு இலக்காகி, விஷம் மிருத்யுவாகிற உபாதைகளில், நரக பாதைகளில் விழுவதுபோல, விழுந்து, ஜன்ம சக்கிரங்களில் விழுந்து அவர்கள் துக்கப் படுகிறுர்கள்.'' (1504)

[தியானம்

பிரபு ஜனர்த்தனரே, உத்தம ஸ்லோகரே, நாராயணரே, மஹாலக்ஷ்மி பிரியா, உங்களுடைய கீர்த்திகளை வேதங்கள் உபநிஷத்துக்கள், ஆகம புராணங்கள், சாரதாதேவியின் கூடிய

பிரும்மா, உமாசங்கரர் இந்திராதிதேவர்கள் போன்ற மஹான்கள் யாவரும் ஸதா கீர்த்தனம் செய்து கொண்டிருக்கிறார்கள். அப் பேற்பட்ட பகவானாகிற முகுந்தரே, நீர் பரதனுடைய முழு உயிர் நிலையாகவுமிருக்கிறீர். ஆகையால் பரதனுடைய பிறப்பானது, உமக்குத் தம்பியானது, மிக்க பாக்யமே. பரமாத்மாவே, அச்யு தரே, மாயையை அடக்கிக் கொண்டிருப்பவரே, எல்லா பிராணி களுக்கும் நாராயணராகிய நீர்தான் ஆத்மா. அவைகளை இயங்கச் செய்கிறவரும் நீரே; அவர்களுக்குள் ஸம்பந்தப்படாமல் ஸர்வ சாக்ஷியாக விருப்பவரும் நீரே; பத்மநாபரே, அரவிந்தலோச னரே, பூமி ஜலம் பிராணிகள் இவைகளுக்கு நீர் இருப்பிடமான தால் நாராயணர் என்று சொல்லப்படுகிறீர். தாமோதரா, அதோ க்ஷஜா, நான் செய்த பிழையைப் பாராமல் எல்லாவற்றிற்கும் ஆதியாக விருக்கும் முதல் வேதவித்தே என்னை ஆட்கொள்ளும். அபாண்டவ அஸ்திரத்தினால் மரிக்கப்பட்ட பரிக்ஷித்தை நீர் உமது கழலடியால் உயிர்ப்பிக்க வில்லையா? பிரும்மா ஈசன் ஆகி யவர்களுக்கும் உமது ஸ்வரூபத்தைக் காட்டிய பரவாஸு தேவா! ஜனகர் வஸிஷ்டர் முதலானவர்களுக்கு பக்தி பிரபன்ன விதியின் ஸ்ரேஷ்டங்களைக் காண்பித்த மஹானுபாவா, உம்மை தியாக ராஜர், வால்மீகி, நாரதர், சுகர், பராசுரர் ஆழ்வாராதிகள் ஸ்ரீமத் ராமானுஜர் போன்ற மஹா மேதாவிகளால் அல்லவா உம்முடைய நிஜ ஸ்வரூபம் அறியப்பட்டு, சராசரமான உலகம் அனைத்தும் கோபர்களாகவும் கன்றுகளாகவும் பிரும்மா அன்று அறிந்தது போல, ஸர்வ வியாபியான பகவானுடைய ஆத்மாவின் உருவம் வேறு வஸ்து அல்ல. எல்லா சேதன அசேதனங்களும் காரணத் தால் ஏற்படுத்தப்பட்டு, விஸ்வகர்மா, அக்காரணத்திற்கும் கர்த்தா நீரே ஆகிறீர். அகிஞ்சனனானவனும் மஹா விஸ்வாசம் கொண்டவனும் பாபபுண்யங்களை விட்டவனும் "மாசுச:" என்கிற அர்ஜுனனுக்குக் கொடுத்த வாக்குறுதியை நினைப்ப வனும், ஸதாசார்யர்களால் உபதேசிக்கப்பட்டவனுமான பரதன் போன்ற மஹான்கள், புண்ய மூர்த்தியான சீதாராமா, மஹா லக்ஷ்மி பிரபோ, ஆஸ்ரயித்த பல்லவம் போன்ற உங்களது த்வயம் ஆகிற "பாதபத்மங்கள்", அம்புஜநேத்ரா, காமகோடி சுந்தரா, தியாகராஜர் சுகர் ஆகியவர்களால் கானம் செய்யப் பட்ட மரகத மணிசாயா, ஆஸ்ரித பக்த ஜலதே, ஓடமாக நினைத்து எவர்கள் சரணமடைகிறார்களோ, விஸ்வமூர்த்தி, மாம் ஏகம் சரணம் வ்ரஜ, பஜஸ்வமாம், அபயம்ததாமி, என்கிற வசனங்களை நினைவு படுத்திக்கொண்டு, அர்ஜுனன், தர்மர்,

பரதன், ஆஞ்சநேயர் முதலியோரை புரம்வைத்து, சம்சாரமாகிய இந்த துக்க சமுத்திரத்தை பசுவின் கால் குளம்பு அளவு போல தாண்டி அதுவே வைகுந்தமாகி, உங்களைப் பிரேமையுடன் ஆராதித்து ஆனந்தமடைகிறார்கள். அப்பேற்பட்ட வழியில் அகப்பட்டுக் கொண்ட நான் அவர்களையே முன்னிட்டு உன் பாதங்களை தஞ்சம் அடைகிறேன். சீதாராமா, உன் கரிய திருமேனி வாட கானகமெல்லாம் திரிந்த ராமா, என் குறைகளைப் பாராமல் அருமருந்தாய், தேனின் இனியதாய், மருவி மணம் கமழ்கின்ற மல்லிகையாய், உருவம் அழகிய நம்பியாய், உகந்து, உய்ய எண்ணம் கொண்டு, ஆண்டாளிடம் பூச்சூட்ட வந்த மாதிரி, உம்பர் கோமானே, உலகை உண்டிட்டு ஒராரிலையில் துயில் கொண்ட கண்ணா, திருவுடையாள் மணவாளா, திருவரங்கத்து அம்மானே, உருவுடையாய் நின்ற ஜோதிச் சுடரே, என்னிடம் கருணையுடன் வா.]

"ராமா, ஊர்ஜித சாஸனரே, ஜ்யேஷ்டரே, நாராயணரே, விஸ்வமூர்த்தியே, உம்முடைய ஆக்ஞையை மனத்தினால் கூட உல்லங்கனம் செய்யமுடியுமா? நான் இது வரையில் எங்கும் கேட்டதில்லை; பார்த்ததுமில்லை; ஸர்வ ஸவதந்திரரான நீர் மாயையினால் யாவரையும் மயக்குகிறீர், பரமாத்மாவாகிற உம்மிடத்தில் ஒருவன் சாமர்த்தியமாக நடந்துகொண்டு, நான் "அதிகாரமுள்ளவன்," கர்த்தா வென்கிற கர்வமாகிற இருளடைந்த கண்களை உடையவனாய், ரஜோ குணத்துடனும் பரம தோஷங்களுடனும் வந்தால் கூட, அவனும் உம்முடைய க்ஷமைக்குப் பாத்திரனாகிவிடுகிறான். அதுமாதிரி, உம்மிடம் நான் வந்திருப்பதைப் பார்த்து, ஹே கிருபாளு, உம்முடைய கிருபையினால் என்னை ஸ்வீகரித்து அச்சுதா, என்னுடைய குற்றத்தைப் பொறுத்து, இவனும் நம்மைச் சேர்ந்தவன் என்று (அபார கிருபா ரூபமாகவிருக்கும் சீதையை நீர் பரந்த விசாலமான மார்பு பிரதேசத்தில் அணைத்துக் கொள்வது போல), என்னிடம் தாங்கள் அபய ஹஸ்தத்துடன் விருக்கவேண்டும்." (நின்றாய், நிலையாய் என்கிறபடி பெரிய பெருமாள்போல, என்னிடம் ஸ்நேக கிருபையை நீ, என் மனம் வாக்கு காயங்களின் அசுத்தங்களைப் பாராமல், காட்டுகிறாய். அனந்தரே, பரமாத்மாவே, புராண பிரும்மமாகிய உம்மை நான் பந்துவாகவும் மித்ரராகவும் அடைந்தது நான் உன் சேவகன் என்றும் பறைசாற்றிச் சொல்வதும் உம்முடைய பரம கிருபை தான் பிரபோ.) (1505)

(என் உள்ளம் புகுந்து என்னை ஆட்கொள்ள வந்த திருமாலே, ஒருவன் எது வரையில் உம்மைச் சேர்ந்தவனாக வில்லையோ, அது வரையில் அவனுக்கு ஆசை முதலானவை திருடர்களாகவும், வீடு சிறைச்சாலையாகவும், அக்ஞானம் அஹங்காரம், கர்த்ருத்வம் ஆகியவைகள் விலங்காகவும், தோன்றுகின்றன. உம்மைச் சரணம் அடைந்த பின்பு, நிர்பரனாய், எக்காலத்திலும் சித்ஸ்வரூபியாகிற உம்மை அடைந்து, உம்மைச் சேர்ந்து பிரபன்னமடைந்த பக்த கோடிகள் உமது கிருபையால் அனுபவிக்கும் ஆனந்தத்தை அடைவதுபோல, நான் அந்த பரமானந்தத்தை உமது கிருபையாலே உமது நிர்ஹேதுக கிருபையாலே, அடைவேன்.) "நீர் எனக்கு நாதர், என் யோக க்ஷேமத்தை வஹிப்பவர். எனக்கு சீதையின் அருளால் கிடைக்கப்படும் கிருபையை நிலைக்கச் செய்பவர்; நானும் உம்மையும் உமது ஸம்பந்தத்தையும் வேண்டிப் பிரார்த்திக்கிறேன். அதனால் ஸ்வாமி, உமது கண்களின் முன்பு என் தோஷங்களாகிற பாபங்கள், என் குண பிரபாவங்கள் ஆகிய யாவற்றையும் உமக்கு அர்ப்பணம் செய்திருக்கிறேன். தாங்கள் எல்லாவற்றையும் பார்க்கிறீர்கள், எல்லாவற்றையும் அறிகிறீர்கள் (ரகுகுலமாகிற தாமரை மலரைப் பூத்து மலரச் செய்யும் சூரியனே, பூமி தேவர்கள், பிராம்மண பசுக்கள் இவர்களை விருத்தி செய்வதில் சந்திரன் போன்றவரே, அதர்மத்தைப் அழிக்கும் அக்னியே, இருட்டை பிரகாசிக்கவைக்கும் ஆத்மாவே,) என் தோஷங்கள் நான் உம்மைச் சேர்ந்தவன் என்கிற கிருபையினால் எனக்கு ஆபரணங்களாகிவிட்டன. என் புகழும் கீர்த்திகளும் நான்கு திசைகளிலும் பிரகாசமாக பரவ ஆரம்பித்துவிட்டன. உம்முடைய நல்ல எண்ணத்தால் எனக்கு இவையாவும் கிடைத்துவிட்டன." (1506)

"ஹே நாதா, உம்முடைய தர்ம நெறியும், இனிய சுபாவமும், உலகில் புகழடைந்தவை. வேதங்களும் சாஸ்திரங்களும் இதையே மிக்கப் புகழ்ந்து பாடுகின்றன. எவன் ஒருவன் க்ரூரனாகவும், குடில புத்தியாயும், துஷ்டனாகவும், களங்கமுள்ளவனாகவும், நீசனாகவும், நன்னடத்தை இல்லாதவனாகவும், கடவுளே இல்லை என்கிற நாத்திகனாயும், சிறிதேனும் அச்சம், சங்கோசம் இல்லாதவனாயும், இருக்கிறானோ, (1507)

அப்படிப்பட்டவனை கூட ஒருமுறை அவன் உன் முன் வந்து கைகூப்பி பணிந்தானென்றால், அவனையும் உன்னுடையவனாக ஏற்றுக் கொள்கிறாயே! அவனது ஹிமயம் போலவிருக்கும்

குற்றங்களை அறிந்தும் கூட அவற்றை உபேட்சித்து, அவனது நற்பண்புகளையே நினைத்து, சாது ஸமாஜத்தில் அவைகளை வெளிப்படுத்துகிறுயே, உன்னுடைய உதார குணத்தையும், மனத்தையும் நான் என்னவென்று சொல்லக்கூடும்?'' (1508)

[கருத்து: பரமாத்மாவே, அதோக்ஷஜரே, ஈசரே உம்முடைய ரீதி, அனுஷ்டானங்கள் சுசியாகவிருக்கும் காரணத்திஞல் நீர் என்னையும் பிரகாசப்படுத்திவிட்டீர். உமது ஸம்பந்தம் பெற்ற பொருளாகிய என்னை உம்மிடம் சேரத்தக்க கல்யாண குணங்களுள்ளவனுக என்னை ஆக்கிக்கொண்டு விட்டீர். (இப்பேற்பட்ட உம்முடைய வழிகள், மார்க்கண்டேயர் போல சான்றேர்களால் இந்த ஜகத்தில் பிரபலமாக்கப்பட்டிருக்கின்றன. பகவான் வேத வியாஸர், சுகர், வால்மீகி, துளசிதாஸர், கம்பர், தியாகராஜர் போன்றவர்கள் புராண ஆகமங்கள் கீர்த்தனங்களால் உம்முடைய சுந்தரமான புண்ய ஸ்ரவண கீர்த்திகளைப்பாடி பிரகடனப் படுத்தியிருக்கிறுர்கள். நாரதர் எப்போதும் உமது தியானமாக விருக்கிறுர்.) உம்மை அண்டி யாரும் வியர்த்தமாக திரும்ப வில்லை. க்ரூரன், குடிலபுத்தியுள்ளவன், துஷ்டன், கெட்டமதி உள்ளவன், களங்கமுள்ளவன், நீசன் சீல அனுஷ்டானமில்லாதவன், நாஸ்திகன், நெஞ்சில் ஈரமில்லாமல் யாவற்றையும் நிடர புத்தியுடன் செய்யும் பாதகன், ஆகிய யாவரும் உம்முடைய சரணங்களில் வந்து அடைந்து ஒரு தடவை சுக்ருத பிரணுமம் செய்து உங்களை சரணம் என்று அடைந்த பொழுது ''நீங்கள் எங்கள் வஸ்து'' என்று அவர்களை ஸ்வீகரித்துக் கொண்டிருக்கிறீர்கள், என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களுடைய (ஹிமயம்போல விருக்கும்) அபராதங்களை க்ஷமித்து, குணஹீனங்களையே நற்குணங்களாக ஸ்வீகரித்து, அந்த சரணுகதர்களை ரக்ஷித்திருக்கிறீர்கள். நீரே பிரத்யக்ஷமாக அந்த குண தோஷங்களையும் பார்த்திருக்கிறீர். அப்படியிருந்தும் நீங்கள் அவைகளை உல்லங்கனம் செய்து, ஸாது சமாஜத்தின் நடுவே அவர்களைப் புகழ்ந்து கொண்டாடியுமிருக்கிறீர்கள்.]

[தியானம்

பிரிய தர்சனரே, ஸத்வ ஸம்பன்னரே, ராமாசீதா, கருணு வேதியே, பிரஜைகளுக்கு ஹிதம் செய்யும் த்ருட விரதரே, பிரஸன்னுத்மாவே, தர்மக்ஞரே, ஞான விக்ஞான ஸம்பன்னரே, அப்ரமேயா, ஜிதேந்திரியரே, க்ஷரம் அக்ஷரம் என்று சொல்லப் படும் பிரபஞ்சம், அனுபவிக்க அனுபவிக்க நித்யானந்தம் கொடுக்கும் ஆத்ம ஸ்வரூபரே, பாலும் சர்க்கரையும் சேர்ந்தாற்

போல உம்மை அனுபவிப்பவர்களை தம்மிடம் சேர்க்கும் ஆத்ம யோனியே, ஸர்வலோக பிரியம்வதரே, புண்ய ஸ்ரீயே, புண்ய நிலையரே, பிரும்ம ஸ்ரீயே, பிராம்மணப் பிரியரே, காத்யாயனி, ஜனகாத்மஜா, நீங்கள் கிருபை செய்யுங்கள். "நான் எம்பெருமானுக்கு சேஷ பூதம்," என்று நிச்சயிக்கப்பட்ட புத்தியுடன் வந்திருக்கிறேன். பரமேஸ்வரரே, त्वं मे என்கிற ஸர்வேஸ்வரனாகிய நீங்கள் अहं मे ஆகிய பாரதந்திரியனை, அஸங்கல்பனை, உஜ்ஜீவிக்க ஸர்வசேஷியான பகவான் ஸபத்னீகனாக லக்ஷ்மி வாசகனாக, பரமாசாரியர்களால் காட்டப்பட்ட பரம உபகாரத்தைப் பிரதானமாக வைத்து, என்னை அங்கீகரித்தருள்வீர். நான் சேஷன், நீங்கள் சேஷி. எனக்கு ஜீவாத்மாவாகிற மகாரம் ஜீவபூதம். இருபத்தைந்து தத்வங்களாகிற சகாரம் முதல் மகாரம் வரை இருக்கும் தத்வங்களுக்கும் ஆத்மாவாகிய பரமேஸ்வரர்களாகிய நீங்கள் மாதவா, கேசவா, கோவிந்தா, என் நாதர்கள். என்னுடையவைகள் என்று சொல்லப்படும் யாவும் ஐயா, உமக்கு எப்போதும் சேஷபூதம் என்று பரதனால் நன்கு அறிவிக்கப்பட்ட பின்பு நான் உங்களுக்கு எதை ஸமர்ப்பிப்பேன்? அவித்யையிலிருந்து விடுபட்டவனாய், பரதன், ஜனகர், அர்ஜுனன், ஸனக ஸநந்தனாதிகள் நாரதர், தியாகராஜர், துளசிதாஸர் ஆகியவர்களாலும் என்னுடைய பூர்வாசாரியர்களாலும் ஆதரிக்கப்பட்ட நல்வழி உடையவனாக, அஸத் ஆகிற அற்ப பலன்களை அனுபவிப்பதில் லஜ்ஜை உடையவனாகி, பரதனால் காட்டப்பட்ட அடைக்கலமாய் வஸ்துவாகி, நாராயணன் பாதங்கள் சேர்ந்து பழ அடியார் நயந்த குற்றேவல் எல்லாம் நாடும் நல்ல மனுக்களான திருவஷ்டாக்ஷரம், த்வ்யம், சர்மஸ்லோகம் எல்லாம் அனுஸந்தித்தோம். சீதாராமா, உமது கிருபையைத் தாரும்.]

"ஐயா, உம்மைப்போல சேவகர்களின் மீது கிருபைக்காட்டும் எஜமானர் எனக்கு யார் இருக்கிறார்கள்? எங்கே கிடைக்கும்? நீரே சிரமப்பட்டு மஹாகிருதக்ஞராக சேவகனுக்கு வேண்டியது இதுதான் என்று நிர்ணயம் செய்கிறீர். அதுமாத்திரமா, இதுவும் போறாது என்று தன்னை வருத்திக்கொள்ளும் பிரபுவன்றோ நீர்? ஸ்வப்னத்தில்கூட உமக்கு என்னைப்பற்றியே நினைவுகொண்டவராகவுமிருக்கிறீர். "நம் பரதன், நம்பந்து என்ன பண்ணுகிறானோ, என்று காட்டில் அலையும்போது கூட என் நினைவுடனிருந்திருக்கிறீர். ஸ்வப்னத்தில் கூட அவனுக்குச் செய்திருக்கும் உபகாரத்தையும் நினைக்காமல், ஸதா அவனுடைய அபிவிருத்தியிலே கண்ணும் கருத்துமாகவிருக்கிறீரே." (1509)

"நான் சத்யமிட்டு, அறுதியுடன் கோஷிக்கிறேன். பல தடவைகள் ஸத்யம், ஸத்யம் என்று அக்னிமுன்பு கோஷிக்கிறேன் ஸ்வாமி. நான் ஸத்யம், ஸத்யம் என்று கைதூக்கி உத்கோஷிக்கிறேன். (வேத சாஸ்திரத்திற்கு மேலான சாஸ்திரமில்லை; கேசவராகிய உமக்கு மேலான தெய்வமில்லை.) என்னை ஆட்கொள்ளும் நாராயணு, மாதாபிதா, குரு, பந்து, மனைவி, புத்ரர், புத்ரி, வீடு வாசல், சொத்து பதவி தெய்வம் சகலமும் நீரே. பிராட்டியுடன் கூடிய கோஸாயி, நான்மட்டுமா, ஸகல ஜீவராசிகளும் உம்முடைய புத்ரர்களாக ஆவார்கள். ஹே சகலருக்கும் சூத்ரதாரியாக விளங்கும் சர்வதோமுகரே, உம்மால் சங்கல்பிக்கப்பட்டு, சகல காரியங்களும் நடக்கின்றன. நர்த்தனமாடும் பசு, வானரம் போலவும் பழக்கப்பட்ட கிளிபோலவும் நான் சொல்லுகிறேன் என்று நினைக்கவேண்டாம். அவைகளின் நடனமும் அவைகளின் சொல்லும் சிக்ஷிப்பவனை அல்லவா பொறுத்திருக்கிறது." (கோஸாயி, எனக்கு உம்மைவிட்டு வேறு யாரும் கதிகிடையாது. இதை நான் உயரத்தூக்கிய கைகளுடன் அறுதியிட்டுக் கூறுகிறேன். ஒருதடவை அல்ல, பலதடவைகள் உத்கோஷிக்கிறேன். பசுவோ, கிளியோ அதற்கு பாடம் கற்பிக்கப்பட்டபிரகாரம் வெகு நேர்த்தியாக நடனமாடுகிறது, அல்லது மதுரமாகவும் பிராக்ஞுகவும் பேசுகிறது. அவ்விதமிருந்தபோதிலும், அவைகளுடைய சாமர்த்தியம் ஓரளவு அவைகளைப் பழக்கினவர்களின் சாமர்த்தியத்தையும் பொறுத்ததல்லவா?) (1510)

பிரபோ, இந்தமாதிரி சேவகர்களிடம் காட்டப்படும் உம்முடைய வழிகளும் பிரத்யேகமாகவிருக்கின்றன. உம்முடைய தாஸர்களை ஒழுங்குபடுத்தி, அவர்களை யோக்ய ஸம்பன்னர்களாக மாற்றி, அவர்களை ஸம்மானித்து, ஸாதுக்களின் முகுடாமணிகளைப்போல நீர் அலங்கரித்துக்கொள்கிறீர். இதிலிருந்து சேவகர்களிடம் நீர் காட்டும் நட்பும் பரிவும், அதனுல் யேற்படும் புகழ் உரைகளும் உம்முடைய கிருபையினுலும் உதாரஹ்ருதயத்தினுலும் அல்லவோ உண்டாகின்றன. இந்த விஷயத்தில் உமக்கு ஈடாக யாரையாவது சொல்லக்கூடுமா? உம்மைத் தவிர யாராவது செய்யக்கூடுமா? ஹே கிருபாளு உம்முடைய புகழையும், காப்பாற்றிக் கொள்வதில் உம்மைத் தவிர யார் பிடிவாதமாகக் காப்பாற்றக் கூடும்? (1511)

"பிரபோ, என் சோகத்தினுல் கடூரமான வார்த்தைகளைச் சொல்லி விட்டேன், நீர் எனக்கு வேண்டியவன் என்கிற ஸ்நேகத்தினுல் உரிமை கொண்டாடி உம்மால் பொறுக்கத்

தகாத வசனங்களையும் கூறிவிட்டேன். என் பால புத்தியினால் விளையாட்டுத்தனமாக உமது மகிமைகளையும் தெரியாமல் கூறிவிட்டேன். (சீதையின் கண் ஓரங்களில் தங்கும் விஸ்ராமரே,) மன்னித்து விடும். உம்மை மீறி இவிடம் என் பந்து பாகவத ஜனங்களுடன் உம்மைத் தரிசனம் செய்ய வந்து விட்டேன். (ஹரி பகவானே, ஆர்த்திகல்ப,) என்னை ஸம்ரக்ஷிக்க வேண்டியது சீதாநாயகா, உமது பொறுப்பு. (எள் ஊழ்வினையும் வாழ்வினையும் இறை நிலையும் உயிர் நிலையும் தக்க நெறியும் யாவும் நீங்களே. எனக்குத் தெரிந்ததை எல்லா பிரகாரங்களாலும் எடுத்துச் சொல்லி விட்டேன். கிருபாளு, நான் உங்கள் தாஸன். உங்கள் குடும்பத்தினர் என்று எண்ணமுடன் என்னை உஜ்ஜீவிக்கச் செய்ய வேண்டும். ஆழிப் பிராணே, உலகமுண்ட பெருவாயா, சுடரொளி மூர்த்தி அடியேன் ஆருயிரே,) வேட்கையால் சொல்லிய என் வசனங்களைப் பொறுத்து, ஆட்கொள்ளுவாயே.'' (1512)

'' நான் தங்களுடைய சுந்தர மங்கள சரணங்களை தரிசனம் செய்தேன். அத்துடன் இங்கு வந்ததால், ஸ்வாமியாகிய தாங்கள் இயற்கையாகவே, என்னிடம் அன்பு கொண்டவராகவும், அனுகூலமான ஸஹஜ ஸ்நேகத்துடனிருப்பவராகவும் கண்டேன். ஸதா சார்யர்கள், மஹான்கள் அடங்கிய இந்தப் பெரிய சமாஜத்தில் என்னுடைய பெரும் பாக்யமாகிற தங்களுடைய அனுராகத்தையும், குறைகள் குற்றங்களுள்ள என்னிடமும் பரம ஸ்நேகத்தைக் காட்டும் ஸ்வாமியின் உதார ஹ்ருதயத்தையும் நான் கண்டேன்.'' (1513)

(கருத்து: இந்தப் பிரியம் என்னிடம் நீடித்திருக்க வேண்டும். எனது தோஷங்களைக் கவனியாமல், பிரபு என்னிடம் ஸதா கிருபையுடனிருக்கவேண்டும். இங்கு வருவதற்கு முன்பு இவ்வளவு பிரியம் காட்டுவீர் என்று நான் நினைக்கவில்லை. அந்த பாக்யமே போதும். இங்குள்ள சபையினர் அனைவரும் எனது பாக்யத்தைப் பிரத்யக்ஷமாகப் பார்க்கிறார்கள். இவர்களே ஆச்சர்யப்படும்படி நீர் என்னிடம் காட்டும் கிருபை சொல்ல முடியாதபடியிருக்கிறது.)

[தியானம்

ஹே ராமா சீதா, நரநாராயணர்கள் போலவிருக்கும் இரு தத்வங்களே, கோவிந்தா அச்யுதா, விஷ்ணோ, கீர்த்தநாதா, ஹிரண்யவபு, ஸர்வயக்ஞமயவபுః அன்னபதே, புருஷோத்தமா,

தாய்போல தம் உதரத்தில் காப்பாற்றிய இஷ்டரே, பரதனால் நியமமாகப் பூஜிக்கப்பட்ட வசிஷ்டரே, பரதனுக்கு மங்களத்தைக் கொடுத்த ஸ்வஸ்தி தக்ஷிணரே, என் பிரபோ, விஷயங்களில் அவிவேகிகளின் புத்தியிருப்பதுபோல, உம்மிடம் அசஞ்சலமான பக்தியையே வரமாகக் கேட்ட பிரஹ்லாதனுக்கும், பரதனுக்கும், துருவனுக்கும், உங்களுக்கும் நமஸ்காரம். கேசவா, பிரபன்னார்த்தி ஹரா, உம்முடைய பிரஸாதத்தால் என்னைச் சேர்ந்தவர்களின் தோஷங்கள் யாவும் விலக வேண்டும். உம்முடைய தயவு இருந்தால் தர்மார்த்த காமமோக்ஷம் யாவும் புருஷனுக்கு கிடைத்துவிடும். அப்பேற்பட்ட அசஞ்சலமான பக்தியையும், த்யேயோ நாராயணம் ஸதா, என்கிற தியானமும், ஹரியாகிற விஷ்ணுவையே எப்போதும் நினைக்க வேண்டியது, ஒரு போதும் அவரை மறக்கக்கூடாது என்று வியாஸர் சொல்லியிருக்கிறார். பிரபோ, உம்முடைய அனுக்ரஹ பிரஸாதத்தால்தான் ஸத்வம் முதலான குணங்கள் கொண்ட பிரகிருதி மாயையைத் தாண்ட முடியும்; உமது பாதங்களை சரணமடைந்து தேவரீரை உபாயமாக வைத்து, தேவரீருடைய இடமாகிற தத்விஷ்ணோः பரமம் பதம் அடைவதற்கு இடைவிடாமல் உங்களையே தியானிக்கும்படி தேவரீர் சங்கல்பிக்க வேண்டும். என் ஆசார்யரான ஸ்ரீபாஷ்யகாரர் ஒவ்வொரு நாளும் ஆத்ம உஜ்ஜீவனத்திற்காக பிராப்ய ருசி குலையாதே, என் ஸ்வரூபம் நாசமாகாதபடி, வளர்ந்து போகும்படிக்கு ஈடான அனுசந்தான விசேஷத்தை "ततश्चप्रत्यहमात्मो ज्जीवन यैमनुस्मरेत्" எனக்கு அருள் செய்ய வேண்டும். அமரேஸ்வரா அயோநிஜையே, சித்த ஸாத்ய உபாயமாக விருக்கும் சீதாராமா, உம்மாலே அருள் செய்யப்பட்டு, அளவில்லாத ப்ரீதியோடு, அனன்ய பிரயோசனமான பூஜா விசேஷத்தை, கண்ணாலே பார்ப்பது போல, தெளிவான தியானத்தை உடையவனாக, கொடுமை நிறந்த மனத்தை ஒழித்து நதேவலோகாக்ரமணம், வைகுந்தம், உம்மை விட்டுப் போவதையும் சாவில்லாமல் ஆத்மாவை அனுபவித்துக் கொண்டிருப்பதையும் உலகங்களை ஆள்வதாகிய ஐஸ்வர்யங்களையும் தேவரீரை விட்டு நான் ஆசைப்படவில்லை. என் கர்மம், மனது, வாக்கு, சிரஸ் இவைகளாலே தேவரீரைத் தவிர தேவரீருடைய கைங்கர்ய போகத்தைத் தவிர நான் ஒன்றையும் விரும்ப மாட்டேன், செய்யமாட்டேன் என்று சொன்னார். அப்பேற்பட்ட லக்ஷ்மி நாராயணா, உம்மை பரதன், அர்ஜுனன், நாரதர், துருவன்,

பிரஹ்லாதன், ஸ்ரீமத் ராமானுஜனுகிய லக்ஷ்மணன் இவர்களை முன்னிட்டு சரணமடைகிறேன்.]

"கிருபா நிதியாகிற தாங்கள்என்னிடம் சாங்கோ பாங்கமாக அனுக்ரஹம் செய்திருக்கிறீர். உம்முடைய கிருபை வரம்பு மீறியிருக்கிறது. (அதாவது என்னிடமுள்ள தோஷங்களால், நான் உமது கிருபையைப்பெற அருகதையில்லாத போதிலும், நீர் அவைகளை மனம் கொள்ளாமல் ஸர்வாங்க பூர்ணமாகக் கிருபையை என்னிடம் காண்பித்திருக்கிறீர்.) குற்றங்களைக் காணுத கோஸாயி, உம்முடைய ஸ்வபாவமான சீல நடத்தையும், ஆர்த்திகளின் குறைகளைப் போக்கும் ஸ்வபாவமும், தன்னடியார்களின் க்ஷேமப் பொறுப்புக்களை வகிப்பதில் ஊக்கமும் என்னை பரவசப்படுத்துகின்றன. அத்துடன் என்னிடமும் இவ்வளவு அளவு கடந்த கருணையையா, காட்டவேண்டும் என்கிறதால், எனக்கு அதிக இடம் கொடுப்பதாகவும் இருக்கிறது, என்கிற எண்ணமும் உண்டாகின்றது." (1514)

(கருத்து: நீர் அர்ஜுனனுக்கு "மாசுச:" என்று அருளிச் செய்த கிருபாளு. உம்முடைய ஸுப்ரஸாதத்தால், உம்மை அடைய ஸ்வரூப விரோதிகளை நாசம் செய்த பிறகு, என்னைக் காக்கும் பலனுகிய தங்களுடைய திருவடிகள் எனக்குக் கிடைத்திருக்கின்றன. இந்தப் பரம போக்யம் எல்லா நிலைமைகளிலும் நீடித்து வளர, உம்முடைய ஸ்வாதந்திரியம் மீண்டும் என்னை கைவிட்டு விடுவீர்களோ என்கிற பயமும் நாசமாவதற்கு, உமது கிருபையையே மீண்டும் யாசிப்பவனுக விருக்கிறேன். உம் முடைய பாதங்களைத் தவிர வேறு பலனை நாடாது, உமது திருப்தியையே எனது எல்லாத் தடைகளும் நீங்குவதற்கு யாசிக்கிறேன். ஆகவே, உமது ப்ரீதியை வளர்க்க எண்ணம் கொண்ட என்னிடம் மஹா அனுக்ரஹம் செய்ய வேண்டும். சீதையின் பேரில் பிரார்த்திக்கும் எனக்கு நீங்கள் இருவர்களும் ஆத்ம உஜ்ஜீவனம். உங்களுடைய திருவடிகளே எனக்கு ருசி; பிராப்யபலன், நித்ய கைங்கர்யம் செய்ய வேண்டிய நிலைமை. எல்லா உபாயங்களையும் வர்ஜித்து ஏகபாவத்துடன் நான் அனுஷ்டித்த நியமம்; (பரமம்யோ மஹத்தேஜ: பரமம்யோ மஹத்தப: என்று வேதவியாஸர் பீஷ்மர் தர்மர் ஆகிய பாகவத உத்தமர்கள் காட்டிய) உன் பாதங்களே என் விருத்தி; லக்ஷ்மியுடன் கூடிய நாராயணு, உம்முடைய மஹா பிரஸாதம் எனக்குக் கிடைத்தால் அதுவே போதும். நான் உமது ஆக்ஞையை உல்லங்கனம் செய்திருந்த போதிலும் நியமங்கள் தவறியிருந்தாலும் என்னை

அன்புடன் "மாசுச:" சோகிக்க வேண்டாம் என்று கிருபா திருஷ்டியுடன் பார்த்தீர். ஸர்வாங்க பூர்ணமான கிருபை எனக்கு உம்மிடமிருந்து கிடைத்திருக்கும் போது, கோவிந்தரே, இனி எனக்கு என்ன வருத்தம் இருக்கப் போகிறது? என்னைக் காக்க வந்த அம்மானே, கோஸாயி, என்னை ரக்ஷிக்காவிடில் உமக்கே தீங்கு வரும் என்னும் நிலையில் கூட, "உனக்கு இனி துக்கம் உண்டோ?" என்று மஹா சௌசீல்யவாத்ஸல்ய சௌலப் யத்துடன், பிராட்டியுடன் கூடிய நாராயணா, ஸர்வ ஸ்வாமியாயும் கிருதக்ஞராயும் ஞானம் சக்தி கருணை விலாஸங்களால் என்னை, (காகா சூரனைப்போல அனஹர்தனையும் காத்த சீதாராமா, ஆள வந்தார், ஸ்ரீ பாஷ்யக்காரர், பராசரர் போன்ற மஹரிஷிகளின் சேஷ சேஷிபாவ ஸம்பந்தத்தையும் மற்ற இதர உத்தம குணங் களையும் உம்முடைய நிர்ஹேதுக கிருபைக்கு அடிமைகளாக்கி,) தங்கள் கருணையினாலேயே ஈடுபட்டு நின்ற மாதிரி, நானும் அதே கருணையால் உஜ்ஜீவிக்கப்பட விரும்புகிறேன்.)

"பிராட்டியுடன் கூடிய நாராயணா, (முகில்வண்ணா, ஸத்ய வாக்யரே, சரணாகதர்களைக் காக்கும் த்ருடவ்ரதரே, வால்மீகி முனிவரால் புகழப்பட்ட தர்மக்ஞரே கிருதக்ஞரே, நாரதரால் கீர்த்தனம் செய்யப்பட்ட நியந்தாத்மா, மஹா வீர்யரே, தியுதி மான், த்ருதிமான், எல்லோரையும் வசீகரிக்கும் வசியே,) ஸ்ரீமானாகிற நீர் எனக்கு ஸ்வாமி, இந்த சமாஜத்திற்கு நியந்தா. இந்தக் காரணத்தினால் சங்கோஜமின்றி, நான் வினயம் என்று நினைத்த போதிலும் தாங்கள் அவினயம் என்று நினைக்க வொண்ணாதபடி சுசியாக ஏதோ வார்த்தைகளை தங்கள் ஸந்நிதா னத்தில் (சீதையின் கருணையினால்) ஸமர்ப்பித்து விட்டேன். (சாரங்கதரரே,) நீங்கள் அபார அன்புடனிருப்பதால் துணிந்து சொல்லி விட்டேன். தேவ தேவா, உம்மை ருசி கண்டதால், உம்மிடம் தாஸ உள்ளம் கொண்ட என் வார்த்தைகள் அதிகிரமித் திருந்தால் அதே கிருபையால் என்னை க்ஷமிக்க வேண்டும். இவன் மஹா துக்கம் அடைந்தவன் மஹா ஏமாற்றம் அடைந் தவன் என்று கருணை மேலிட்டு என்னை அனுக்கிரஹிக்க வேண்டும், ஸ்வாமி." (1515)

"உம்மைப் போலவும், சீதையைப் போலவும், ராமானுஜ னாகிற லக்ஷ்மணன் முன்பும், மஹாஸ்ரேஷ்டர்களடங்கிய ஜனக, விஸ்வாமித்ர, வஸிஷ்ட சபையிலும், இந்த மாதிரி வார்த்தைகள் சொல்லப்படுவது மஹா அபராதம். நீங்கள் எல்லோரும் இயற்கையாகவே என் ஸுஹ்ருத்துக்கள்; மஹா புத்திமான்கள்;

நியமநிஷ்டர்கள்; என் ஸ்வாமியாகிற தாங்கள் கருணையையே கவசம் கொண்டவர்கள். ஆகையால் உங்கள் ஸந்நிதியில் அதிகம் பேசுவது மஹா அபராதம். தேவ தேவா, இந்தக் காரணத்தால் என்னிடம் அனுக்ரஹம் கொண்டு, ஆக்ஞையிடும். இதனால் என் ஆசை மனோரதங்களை நிறைவேற்றிவிடுவீர்கள்.'' (1516)

''ஸ்வாமி, உம்முடைய சரணகமலங்களின் பாதரஜ்ஜுகளே என் கதி. என் தஞ்சம். நான் சத்யத்தோடு உத்கோஷிக்கிறேன். அவைகளே என் மஹா தபஸ்ஸின் பலன். அவைகளே நான் தியானிக்க வேண்டிய நாராயண பதங்கள். அவைகளே என் சுகத்திற்கும் பராயணம். அவைகளே எனக்கு மங்களங்களைச் செய்விக்கும் மங்களம். (என் துக்கங்களைப் போக்கும் மனோன் மணி. நான் லயமடையும் லலிதாதேவி. பிரபோ,) மீண்டும் ஜய ஜய சப்தங்களுடன் உத்கோஷிக்கிறேன். அந்த திவ்ய சரணங்களை என் ஹ்ருதயத்தில் பதித்துக்கொண்டு, (எவ்விதம் விஷ்வக்ஸேனர் ஹரி சரணங்களை அனயமும் ஹ்ருதயத்தில் தரித்துக்கொண்டு ஆனந்தமடைகிறரோ, எவ்விதம் சீதாபிராட்டி ''மயாவினா ஸுஷ்யதி ஸோகதீனம் ஜலக்ஷயே பத்மமி வாத பேன, நாஸீத் வ்யதா யஸ்ய நவீர் நஸோகஃ, கஸ்சித்ஸ தைரியம் ஹ்ருதயம் கரோதி என்றும்,) (ஆஞ்சநேயர் ''ஸீதேதி மதுராம் வாணிம் வ்யாஹரன் பிரதிபுத்யதே'' என்கிறபடியும்,) (ஐயா, தாயே, ஜகத்பதியே, ஜகத்ஸ்வாமியே, ஜகந்நாதரே, ராஜேஸ் வரரே,) நான் படுக்கும் போதும், உண்ணும் போதும், ஸ்வப்னத் திலும் கூட உங்களுடைய ருசியால் பெருமூச்சு விட்டுக்கொண்டு, பிரியே, ஸ்வாமி என்று தங்களையும், பிராட்டியையும் பலதட வைகள் அழைக்கின்றேன். மஹாத்மாக்களே.'' (1517)

''நான் கபட உள்ளம் கொண்டவனல்ல. (ஸஹஜ ஸ்நேகத் துடன் உம்மிடம் பிராப்ய ருசி கண்டு, என் புருஷார்த்தங்களுக் காகவே, என் ஆத்ம உஜ்ஜீவனத்திற்காகவே, பாப புண்ணிய ரஹிதனாக, உம்மை சரணமடைந்திருக்கிறேன்.) இதில் நான்கு வித புருஷார்த்தங்களாகிற தர்மார்த்த காம மோக்ஷத்திலோ என் ஸ்வயநலத்திலோ ஆசை இல்லை. எனக்கு உமது பாதங் களை விட புருஷார்த்தங்களும் முக்கியமில்லை. உமது பாதங் களைத் தவிர எனக்கு போக்யம் வேறு எதுவும் இல்லை. ஸ்வாமி யாகிற உங்கள் ப்ரீதியே என் சேவை கைங்கர்யங்களுக்குப் பலன். அனன்ய பிரயோசனமில்லாத என் பக்தி பிரேமைகளை அங்கீகரித்தருளும். உம்முடைய ஆக்ஞையைப் பரிபாலிப்பதை

விட வேறு ருசி ஒன்றுமில்லை. தேவரே, உம் தாஸனாகிற எனக்கு என்ன கட்டளையிடுவீரோ, அதுவே தங்கள் ஸுப்ரஸாதம். அதை நான் அடைந்து நன்றாக பரிபாலிப்பேன். நான் உங்கள் கிங்கரன். நித்ய கிங்கரன். உமது எண்ணத்தை இனி தெரிவிக்கலாம்.'' (1518)

[தியானம்

பரதபிரியா, சீதாபதே, ராமா, என் பாசமோசனி, மாலினி, பத்மபத்ர விசாலாக்ஷி, மீனலோசனி, உமாமஹேஸ்வரர்கள் போல விருக்கும் சீதாராமா, அகிஞ்சனனும், அனன்ய கதியை உடையவனும், அனன்ய சரண்யன் என்று பரதன் உன்னை அடைந்தது போல, மஹாலக்ஷ்மிபிரியா, நாராயணா, என் ஆசார்யரே, ஸர்வாதாரா, நானும் உன்னை வந்தடைகிறேன். அன்றொரு நாள் துருவனின் ஆரோஹணத்தையும், த்வாத சாக்ஷர மந்திரத்தின் வீர்யத்தையும், பகவானாகிய உசானஸ் அசுரபாலர்களுக்கு உபதேசித்தபோது, ''பாருங்கள் மாதா வினால் தூண்டப்பட்ட துருவன் சப்தரிஷிகளையும், நாரதரையும் அடைந்து, மஹாமந்திரத்தை உபதேசமாக அடைந்து, மஹா தபஸ் செய்தான். அஹோ அஸ்ய தபஸ்ஸின் வீர்யம்; அஹோ அஸ்ய தபஸஃ பலம்,'' என்று சொன்னது போல், எனக்கு கபிலாசார்யர் மாதிரி பரதன் விளங்குகிறானே. தியாகராஜர் அன்று சொன்னது மாதிரி, ''ராமா, பதினான்கு லோகங் களுக்கும், ஸ்ரீதேவிக்கும், பவர், பிரும்மா, புரந்தரன், ஸனகாதி முனிவர், சுகர், பீஷ்மர், நாரதர், வேதவியாஸர், பராசரர் ஆகியவர் களுக்கும், நித்ய ஆஸ்ரயமான உன் திருவடிகளைத் தவிர எனக்கு வேறு கதியில்லை.'' அன்று அர்ஜுனன் சொன்னது போல, ''நீர் விஸ்வேஸ்வரர். அகில சராசரங்களுக்கும் குரு, தெய்வம், உன்னைவிட பூஜிக்கத்தகுந்தவன் யாரும் இல்லை. ஆதலால் உன்னை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். உன் பிரசாதத்தை அருளிச் செய்.'' ஸர்வலோக சரண்யனாகிற நீ, உன் வார்த்தை களின்படியே சரணமடைந்திருக்கும் என்னை, ஸரஸிஜாக்ஷா, விஸ்வரக்ஷகா, கிருபையுடன் சீதையின் புருஷகாரத்தினால் பரிபாலிக்க வேண்டும். காலமூர்த்தி, பரதன் நியாயவான், ஆத்ம நிரதன், ஆசார சீலமுள்ளவன், உன் தம்பி, பொறுமையும், அடக்கமும் உள்ளவன், பொறாமையற்றவன், தீக்ஷை உள்ளவன். அப்பேற்பட்ட மஹா பாக்யவானாகிற, என் ஆசார்யனாகிற பரதனை முன்னிட்டு, உன்னோடு சேர்ந்திருக்கும் அனபாயினி

யாகிற மஹாலக்ஷ்மியின் கருணையால் போக்கப்பட்ட, பாப பயங்களை மறந்து நான் சரணமடைகிறேன். ஸர்வ பிதா, மஹா விஷ்வக்ஸேனரும், மாதவரும், கேசவருமான நாராயணு, நீதான் எனக்கு ஸித்தோபாயம். என்றால் சொல்லப்பட்ட முனிவர்கள், ஆசார்யர்கள் பிராட்டியை ஸம்சாரக்கடலை கடத்துபவளாக சொல்லுகிறார்கள். ஆதலால் நீயும், பிராட்டியும், இருவர்களும் சேர்ந்து எனக்கு சேஷிகளாகி, உங்கள் இருவர்களிடத்திலும் கைங்கரியம் செய்தல், உபாய உபேயமாகவும், உங்களால் ஸாத்வத ஸம்ஹிதையில் சொல்லப்பட்டதும், கருடன், பணிபதி, விஷ்வக்ஸேனர் போன்ற நித்யஸுரிகளால் அனுஷ்டிக்கப்பட்டதும், அநேக ஸ்ம்ருதி ஸ்ருதிகளைத் தழுவியதும், ஏகஃ என்கிற சப்தத்தால் பிரதிபாதிக்கப்படுகிறவனும், ஸதா பிராட்டியைத் தழுவிக் கொண்டிருக்கும் எம்பெருமானே, மஹா நாராயணரே, பரதனை முன்னிட்டு பிரபத்தி செய்த என்னை சரண்ய வரனுகிற நீ, அர்ஜுனனைக் குறித்து உபதேசிக்கப்பட்ட சர்ம ஸ்லோக மந்திரத்தாலே அனுலோசித விசேஷஅசேஷலோக शरण्य, கிருஷ்ணம் தர்மம் ஸநாதனம், யோகோ 'யோகவிதாம் நேதா என்கிற படியும் "शरण्यं शरणं च त्वाम्" என்கிறபடி சிறந்த ஞானமுள்ள சனகாதிகள், தேவரீரை சரணமாக அடையத்தக்கவராயும், சரணம் அடைந்தவர்களை காப்பாற்றுகிறதாகவும் சொல்லுகிறார்கள். ராமாயணத்திலும் யுத்தகாண்டத்தில் (120–18) சொல்லியிருக்கிறது. ஹே விஷ்ணோஃ கீர்த்திநாதா, லக்ஷ்மியுடன் கூடிய உன்னை, ஸகல தேவர்களும், மஹரிஷிகளும், ஜனகர், விஸ்வாமித்ரர், வஸிஸ்டர் கூடிய சபையின் முன்பு சரணமடைந்திருக்கிறேன். ஶ்ரீமத் ராமானுஜா, தயவு செய். ராமனுக்கும், சீதைக்கும் ஸய்யாசனு, அன்புடன் என்னைப்பற்றி எடுத்துச் சொல்.]

பரதன் இவ்வாறு கூறி, அன்பினால் பரவசனாகி, மெய் மறந்து மயிர்கூச்சலிறப் பெற்று, கண் வழியே நீர் சோர நின்றான். பிறகு ஆகுல சித்தத்தோடு பரபரப்புடன் சென்று, பிரபு, ராமனுடைய திருவடிக்கமலங்களை இறுகப் பற்றிக் கொண்டான். அப்போது பரதனிடம் தோன்றிய அந்த பக்தி பாரவச்யத்தையும், அந்தச் சூழ்நிலையையும், ஒருவராலும் வருணனை செய்ய இயலாது. (1519)

(கருத்து: அகிஞ்சனுன பரதன், அனன்ய சரண்யனுன ராகவனை, சீதாராமனை, வேதமயமாகக் கொண்ட சொற்களால், பிரேமையுடன் ஆராதித்தான். நாரதர், தியாகராஜர் போன்ற மஹான்கள், எந்த தத்வத்தை கிருதக்ஞதையுடன் புகழ்ந்து

பாடிக் கொண்டிருந்தார்களோ, அந்த பிரேமை புத்தியுடன், நர வரஸ்ரேஷ்டஞன சீதாராமனை, புளகசரீரமுள்ளவனுக, ஆனந்த பாஷ்பங்கள் அவனுடைய புண்ய புஷ்கரலோசனங்களி லிருந்து பெருகிக்கொண்டு வர, பரம யோகீஸ்வரர்கள் அனுஷ் டிக்கும் நியாஸவித்யையை, (என் போன்ற சம்சாரிகள் உத்தாரணம் அடைவதற்கு) பரம காருண்யத்துடன் பகிரங்க மாக வஸிஷ்ட, விஸ்வாமித்திர, ஜனக சபையில், சீதாராமன், லக்ஷ்மணன் பார்த்துக் கொண்டிருக்கும்போது, ஸர்வதேவர்கள் கேட்டுக் கொண்டிருக்கும் போது, பகிரங்கமாக (ஸ்ரீமத் ராமானுஜர் திருக்கோஷ்டியூரில், அஷ்டாக்ஷரத்தைப் பிரகடனப் படுத்தியது போல,) சித்ரகூட பர்வதத்தில், மந்தாகினிதீரத்தில் அன்புடன் உபதேசித்தான். ராமபிரபுவின் கமலபதங்கள்தான் தஞ்சம் என்று காட்டுபவன் போல, அந்த சீதாராம பாதங்களில் த்வ்ய மந்திரத்தை அனுஷ்டிக்கும் பரம பாகவதனைப் போல, சாஷ்டாங்க சுக்ருத நமஸ்காரம் செய்தான். ஆஞ்சநேயர், லக்ஷ்மணன், சீதை வருடும் புண்ய பாதங்களை, அனன்ய கதியாக அடைந்து, ஏகமாத்திரமாக பிடித்துக் கொண்டான் பரம பாகவதன். எனக்கு ஆத்ம உஜ்ஜீவனத்தைக் காட்டிய புண்ய மார்க்கதரிசி. அவனுடைய பரோபகாரத்தையும், வாத்ஸல்யமான ஸ்நேகத்தையும், எனக்கு ஹம்ஸராக விளங்கு பவரும், ஸம்சார நோய்களைப் போக்கும் சிந்தாமணியாகவும், பொற்புதையல் போல தம்மை மறைத்து வைத்துக்கொண்டு, பரதனைப் போல மஹா பாகவத சிரோண்மணிகளால் வெளிப் படுத்தப்பட்ட ஸம்பவர், ஸம்மிதர் ஆகிய சீதாராம சரணங்களைப் பரிவுடன் காட்டிய மஹா தேஜஸ்வி. அந்த ராமப்ரீதியையும், புஷ்கரலோசனங்களையும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்த பரத னுடைய விஸ்வாஸ பிரேமையையும், ஸகலரும் ஒப்புக்கொள்ளக் கூடிய ஆர்த்த திருப்த பிரபத்தியையும், காலதேசவரையின்றி ஸகலராலும் ஸம்மானிக்கப்படும் மஹா யோகத்தின் ரஹஸ் யத்தைக் காட்டின ஞானவைராக்ய பூஷஞன, பரதனுடைய அன்பு காணிக்கையையும் யாரால் வர்ணிக்க முடியும் ?)

கிருபாஸிந்துவாகிய இராமன், இனிய சொற்கள் கூறி, பரதனுக்கு ஆறுதல் கூறினார். தன் கை கொடுத்து அவனை எழுப்பி, தன்னருகே அமரச்செய்தார். பரதனுடைய வினயமும், சுபாவமும், இராமனுடைய ஸ்நேக பாரவசயமும் கண்டு, சபையினர் அனைவரும் உள்ளம் கரைந்து நின்றனர். (1520)

**கருத்து :** என் பிரபு, கிருபாஸிந்து, சீதாராமன் சிறந்து விளங்கும் தனது பூர்ணசந்திரனுடையது போன்றதும், ஸாதுக்களின் ஹ்ருதயம் போல களங்கமற்றதும், உதார குணத்துடன் கூடியதும், அந்த மஹாத்மாவான ராமர், பரதனுடைய வார்த்தைகளேயும், பிரபத்தி செய்யும் வகைகளேயும், புஷ்கர லோசனங்களால் அம்ருதத்தை வர்ஷிப்பவராக, (ஸர்வ பரிவாரங்களுடன் கூடிய லக்ஷ்மிநாராயணன் வைகுண்டத்தில் தன் பக்தனே ஸ்வீகரிப்பது போல,) பரதனே அன்புடன் தழுவி, உச்சிமோந்து பக்கத்தில் உட்கார வைத்து, அவன் உடம்பைத் தடவி, தன் ஹ்ருதயத்தோடு அணேத்துக்கொண்டு ஸம்மானித்தார். ஸ்ரீ வத்ஸவக்ஷன், ப்ருகுபதம் பதிந்த மார்பன், கௌஸ்துப மணியை மார்பில் அணிந்தவன், சீதையை மார்பில் தரிப்பவன், ராமன் இன்று பரதசின்னனுகை ஆனுன். பரதத்வஜராக விளங்கினுன். பரம பக்தியுடன் ஸமர்ப்பிக்கப்பட்ட வினய வித்யையை அங்கீகரித்தான். அவனுடைய நீண்ட புஜங்களின் நடுவே மஹா சோபிதமாக விளங்கும் பரதன், ராமனின் ஹ்ருதயவேத்யனுக சிறப்பிக்கப்பட்டான். (சீதாராமனுல் அனுக்ரஹிக்கப்பட்ட பரதன் காமேஸ்வரர் ஸ்ரீ பீடத்தில் அமர்வது போல, ஸ்ரீகரபீடத்தில் ராமனுல் அமர்த்திக் கொள்ளப்பட்டான். ராமன் மடியில் அமர்ந்த பரதன், காமேஸ்வரங்கத்தில் வீற்றிருக்கும் காமேஸ்வரியைப் போல, சகல முனிகளுக்கும் காக்ஷி அளித்தான்.) அவனுடைய வார்த்தைகளேக் கேட்ட சீதாபதி, (யசோதை, நந்தகோபர்) கௌஸல்யை இவர்களால் அனுஷ்டிக்கப்பட்ட பக்தியினுல் ஏற்படும் ஆனந்தத்தை அடைந்தது போல, பரதவஸ்யனுன என் பிரபு, (கண்ணிநுண் சிறுத் தாம்பினுல் கட்டுண்ணப்பட்ட பெருமாயன், என் அப்பன், என் அமுது,) பரதன் பெற்ற சிறந்த நன்மைக்காக விளங்கினுன். ஸர்வ வியாபகனுகிற பரம்பொருள், (அன்று யசோதையினுல் இடுப்பில் கட்டப்படும்போது சரீரம் சிரமத்தினுல் வேர்த்து, தலே கவிழ்ந்திருப்பதையும் பார்த்து, என் பிரபு கிருபையினுல் கட்டுக்கு அகப்பட்டுக் கொண்டது போல,) ராமர் ஸ்வாதீனராய் இருந்தும், பரதன் வசத்தில் இருப்பதைக் காட்டினுர். மோக்ஷத்தைக் கொடுக்கிற கிருபாளு, அந்த சீதாராமனிடமிருந்து எந்த பிரஸாதத்தை பரதன் அடைந்தானே, அந்த பிரஸாதத்தை பிரும்மாவும் அடையவில்லே. சரீரத்தில் வசிக்கிற லக்ஷ்மியும் அடையவில்லே. கௌஸல்யையின் புத்ரனுன ராமன், பக்திமான்களுக்கு எப்படி எளிதாய் அறியக்கூடியவரோ, அவ்வித தேகாபி

மானியான என் போன்றவர்களும், பகவானுடைய ஸ்வரூப மாகவே விளங்கும் ஞானிகளும் எளிதில் அறியக்கூடியவரல்லர். சுகர் தேடும் பிருந்தாவன சரணங்கள், துளசிதாஸர் தேடும் பிருந்தாவனக் காடுகள், யசோதை அனுபவித்த புஷ்கர ஆனந்தங்கள் யாவையும், பரதன் ஒருங்கே அடைந்து அனுபவித்தான். (ராம சம்பத்துள்ள பரதா, அர்ஜுனவ்ருக்ஷம் போல வளர்ந்திருக்கும் எனக்கு உரல் போன்ற வடிவம் கொண்டு, என்னையும் ஸர்வலோக நாதனை ரமாபதியிடம் சேர்த்த ஜகத்பதி, உன்னுடைய சரணங்களில் என் மனஸ்ஸும், உனக்கு சிரஸ்ஸும், ஆதாரமான சீதாபதியான ஸ்ரீராமனிடம் நமஸ்கரிப்பதில் உங்கள் இருவர்களுடைய தரிசனத்தில் எனக்கு இருக்கட்டும். ஸதா இருக்கட்டும்.)

அந்த ஒப்பு உயர்வற்ற காக்ஷியை சீதாராமன் ஸாதுக்களின் நடுவே, முனி வஸிஷ்டர் மிதிலாபதியான ஜனகர் யாவரும் ஸ்நேக பிரேமையில் மூழ்கினவர்களாகயிருப்பதை எல்லோரும் ஆனந்தப் பூர்வமாகப் பார்த்தார்கள். எல்லோருடைய மனதும் பரதனைப் புகழ்ந்தது. பரம பாக்யமான பரத பக்தி. அதனுடைய ஆழம் வீர்யம் கம்பிரியம், அதன் மஹத்தான பலன் யாவையும் ஒவ்வொருவரும் புகழும்படியிருந்தது. பரதன் என்ன புண்ணியம் செய்தான்? கவிகளால் புகழப்படும் ராம லீலை அற்புதமாக விருக்கிறது. ஸர்வேஸ்வரனை சீதாராம தம்பதிகள் பக்தியினால் கட்டப்பட்டு, பரம ஸம்சாரிகள் துக்கங்களைத் தாண்டுவதற்கு ஓடம் போல பிரகாசித்தான். தேவதைகளின் மனத்தில்கூட பரதனின் நிரதிசய பக்தியைப் பற்றித் தானே வியக்கும்படி முழுவதுமிருந்தது. ஆச்சரியம் தாங்கமுடியாமல், மந்தார பாரிஜாத கற்பக புஷ்பங்களை ராமன் மடியில் உட்கார்ந்திருந்த பரதன் மீது பொழிந்தார்கள். அந்த புஷ்ப விருஷ்டியைக் கண்ட பகவான் கிருபாளு, (கபிலாசாரியர் போலவிருக்கும்) துளஸிதாஸர் சொல்லுகிறார். "ஸகல லோகங்களும் பரதனுடைய வார்த்தைகளைக் கேட்டதும் வியாகுல மடைந்தவர்கள் போலத் தோன்றினார்கள். இரவு வந்ததும் கமலபுஷ்பம் வாடி வதங்குவதுபோல எல்லோருடைய மனமும் கருத்து குவிந்தது போலிருந்தது!" (1521)

[தியானம்

ஹே நாராயணா, மஹாலக்ஷ்மி நாதா, ஹரிபூ: லக்ஷ்மி தேவிகள் போல மஹாலக்ஷ்மியுடன் கூடிய சீதாராமா, பரதா,

இடைவிடாமல் ஸ்ரீராமனின் தாமரைப் பாதங்களை தியானித்துக் கொண்டு, பிரஹ்லாதனைப் போல ராமனுடைய மடியில் ஏறிய சித்தி சங்கல்பரே, என் ஸவிதாவே, பரதனுடைய ஸித்தார்த்தரே, பிரபன்னனுடைய ஸித்தியே, பரதனை மடியில் ஏற்றிய சீதாராமா, என்னுடைய ஸித்திதரே, ஸித்திஸாதனரே, என் தாஸர்கள் அபராதம் ஒருக்காலும் செய்யமாட்டார்கள், அவர்கள் ஏதேனும் செய்தால் நல்லதையே செய்வார்கள் என்று சொல்லும் க்ஷமிணும் வரரே, பரதனுடைய ஆசார பிரபாவம் மஹாதர்மத்துடன் கூடிய பிரவிருத்தி நிவிருத்தி தர்மமாக விளங்குகிறது. அச்யுதனை பலனைக் கொடுக்கிறது. ஸாத்விக தியாகத்துடன் செய்யப்பட்டது. பகவத் ப்ரீதிக்காக செய்யப்பட்டதும், பகவத் பாதங்களை உபாயமாகக் கொண்டதும் நிஷித்த கர்மங்களை விட்டு ஸத்தியமென்று சொல்லப்பட்ட ஆத்மாவின் அனுபவத்தையும், அநிருதம் என்று சொல்லப்படும் ஐஸ்வர்யங்கள் ராஜ்ய போகங்கள் ஆகிய எல்லாவற்றையும் விட்டுவிட்டு, அந்த தியாகத்திலும் கர்த்ருத்வமாகிற " நான் செய்தேன் " என்கிற எண்ணத்தையும் விட்டு மஹா ஸாத்விகனை பரதன் ராமனுக்கு பராதீனனுக அனுசந்தித்து எனக்கு குருவாகவும் ஆத்ம வித்யையும் ஸாத்வத வித்யையின் மர்மத்தையும் உபதேசித்தவனுக ஆகிருன். நிஷ்காம்யனுகவும் நிஷித்த கர்மங்களை விட்டதினுல் நிவிருத்தி தர்மத்தை அடைந்தவனுகவும் பகவத் ப்ரீதியை வளர்க்கும், நீடிக்கச்செய்யும் பிரவிருத்தி தர்மத்தையும் அடைந்தவனுகவும், நிவிருத்தி, பிரவிருத்தி ஆகிற இரு தர்மங்களை அனுஷ்டிக்கும் பக்தனுகவும் எல்லா ஆத்மாக்களுக்கும் ஆத்மாவாகிய பரமேஸ்வர சீதாராமனை எல்லா பிரகாரத்திலும் சரணமாக அடைந்து ஏகாந்தியைப் போல விளங்குகிருன். அதனுல் பயமில்லாமல் ராமனுடைய மடியில் பிரஹ்லாதன் லக்ஷ்மிநரசிம்மரின் மடியில் ஏறினதுபோல ஏறினுன். நாரதரால் உபதேசிக்கப்பட்ட பிரஹ்லாதனும், வஸிஷ்டரால் உபதேசிக்கப்பட்ட பரதனைப் போலவும் (விஸ்வாமித்திரரால் உபதேசிக்கப்பட்ட நானும்) தியாகராஜரைப் போல நிரந்தரமாக இச்சரீரத்தை ஒளிக்காமல் ஸ்ரீஹரி நாராயணனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். ஈடில்லாத கோடி மன்மதர்களின் லாவண்ய குவியல்களைக் கொண்ட ஜடாதர சீதாராமா, முத்துமாலைகள் போல விளங்கும் ஸ்ரீவத்ஸ ஸ்ரீதரா, பால் வடியும் திருமுகத்தையும் விஸ்வாமித்ரர் யசோதை கண்டு ஆனந்தித்து சதாகாலமும் உன்னையும் சீதாபிராட்டியையும் கண்ணுரக்காணுத எனக்கு இது என்ன ஜன்மம். கருடவாஹனு,

பணிபதிசயனு, யானையைக் காக்கவும் திரௌபதியைக் காக்கவும் பிரஹ்லாதனை காக்கவும் பரதனையும் கட்டி அணைக்கவும் நீங்கள் ஓடிவரவில்லையா. ஹேசங்கபாணி, கதாதரா, கமலநயனு, கிருபாளு, இந்திரகர்மா.]

பூமியில் இரு சமாஜத்தார்களும், ஸ்திரி புருஷர்கள் யாவரும் துக்கத்தால் கவரப்பட்டு நம்பிக்கையிழந்தவர்களாக இருந்த சமயம், இந்திரனும் ஆசையினாலும் க்ரோதத்தினாலும் தூண்டப் பட்டு, சில பேர்களைக் கொல்ல விரும்பினான். (1522)

இந்திரன் கபடத்தினாலும் ஜால வித்யைகளிலும் மிக்கத் தேர்ந்தவன். எப்பொழுதும் தர்மத்தில் பற்றுதலுடன், தன் இந்திர போகத்திலும் ஆசைப்பட்டு காரியங்களைச் சாதிக்கும் சாமர்த்தியசாலி. இந்திரன் ஆதிகாலத்தில் தன் விரோதியான பாகாஸுரனைக் கபடத்தால் கொன்று பாகஸாஸனன் என்கிற பெயரை அடைந்தான். இந்த கபட வித்யையில் அவன் காக்கை யைப் போலத் தேர்ந்தவன். யாரிடமும் அவனுக்கு நம்பிக்கை கிடையாது. அவன் தயை, இரக்கமற்றவன். அவனுடைய வழி களும் நேர்மையானதில்லை. (1523)

முதலில் அந்த ஜனங்களின் மனத்தையும் புத்தியையும் மயக்கி, கபடமாக இந்திர ஜால வித்யைகளை பிரயோகித்து, ஒவ் வொருவருடைய தலையிலும் மதிமயக்கத்தை ஏற்படுத்தி, மாயை யைப் பிரயோகித்தான். தேவமாயையினால் கட்டுண்ணப்பட்டு அந்த அயோத்தி மிதிலாவாஸிகள் கலக்கமடைந்த போதிலும் ஸ்ரீராமனுடைய கிருபையாலும் பரதனை ராம அங்கத்தில் தரிசித்த பாக்யத்தாலும் அவர்களுடைய ஸ்ரீராமபக்தி குறைவடைய வில்லை. (1524)

ஒரு பக்கம் பயம். இன்னொரு பக்கம் இந்திர ஜாலம். அதனால் அவர்களுடைய மன நிலை தடுமாறிக்கொண்டு, வனத்தில் தங்கிவிடலாமா அல்லது தங்கள் ஊர்களுக்குப் போய்விடலாமா என்று தடுமாட்டமாக யோசித்துக்கொண்டிருந்தார்கள். ஒரு க்ஷணமும் சாந்தியில்லாமல் கெட்ட ஸ்திதியில் இருப்பவர்களைப் போலத் தோன்றினார்கள். சமுத்திர சங்கமத்தை அடைந்த நதி எவ்விதம் இரு பக்கங்களிலும் எதிர்த்து ஒடும் ஜலத் திவிலைகளைத் போல தத்தளித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய தாவி ஓடுமோ, அது நிலைமை பரிதாபகரமாக விருந்தது. (1525)

தோஷத்தை அடைந்த சித்தம். அதனால் சந்தோஷம் பாதிக்கப்பட்டிருந்தது. ஒருவரை ஒருவர் கலந்து பேசிக்கொள்ள வில்லை. ரகசியமாக அவர்கள் துக்க வேதனையை அனுபவித்துக்

கொண்டிருந்தார்கள். கிருபாநிதியாகிற ஸ்ரீராமச்சந்திரன் அவர் களுடைய தீனதசையை நோக்கி தன் ஹ்ருதயத்தில் சிரித்துக் கொண்டு எண்ண ஆரம்பித்தார் " நாய், இந்திரன் காமியாகிற யௌவனப் பருவன் ஒரே நோக்கம் படைத்தவர்களாக, சப்த ரூபத்தில் கூட ஒரே ஸ்வபாவம் படைத்தவர்களாக (பாணிணி யின் வ்யாகரணத்திலும் ஒன்ருகச் சொல்லப்படுகிறது.) காணப் படுகிருர்கள். (1526)

(ஸ்வான், யுவன், மகவான் எல்லாம் ஒரேமாதிரியாவிருக் கின்றன. श्वयुवमघोनामतद्धिते श्वन् मघवन् युवन् என்ற மூன்று சொற்களிலும் சில இடங்களில் 'வ' என்பது 'ஊ' என மாறும்— என்பது சூத்திரத்தின் பொருள்)

பரதனும் ஜனகரும் முனி ஜனங்களும் மந்திரிகளும் ஸாதுக் களும் இந்திர மாயையினுல் கட்டப்படவில்லை. இவர்களைத் தவிர மற்ற புரவாஸிகளிடம் அந்தமாயை அதிகிரமித்திருந்தது. தேவமாயை அந்தப் புரவாஸிகளிடம் அவரவர்களின்ஞான யோக்யதைக்கு தக்கபடி அவர்களைத் துன்பப்படுத்தியது. (1527)

என்பிரபு கிருபாஸிந்து ஸ்ரீராமச்சந்திரன் பிறர் கஷ்டங்களை தன் கஷ்டங்களைப் போல பாவித்து சகாயம் செய்யும் பிரபு, சங்கபாணி, சக்ரபாணி, கதாதரர், விஷ்ணு, இந்த புரவாஸி களின் தன் மீதுள்ள நிஜ ஸ்நேகத்தையும், ஸுரபதியின் குடில எண்ணத்தையும் அறிந்து துக்கமடைந்தார். அந்த சபை முழுவ திலும் ஜனகரும், குரு வஸிஷ்டரும் பிராம்மணர்களும் மந்திரி களும் அங்கு கூடிய யாவர்களுடைய புத்தியும் பரதனுடைய நிரதிசய பக்தியினுல் தடுமாற்றமடைந்திருந்தது. (1528)

சித்திரத்தில் எழுதின் பொம்மைகள் மாதிரி, யாவரும் ஸ்ரீராமச்சந்திரனைப் பார்த்தார்கள். வெட்கத்தினுலும் மனம் தளர்ந்து நம்பிக்கையில்லாதவர்கள் மாதிரி, ஏதோ ராமனைப் பார்த்து பக்தியினுல் முணுமுணுத்துக்கொண்டு இருந்தார்கள். பரதனுடைய ராமபக்தியும் வினய வழிகளும் அங்கங்களுடன் ஸமர்ப்பிக்கப்பட்ட நியாஸ யோகமும், காதுக்கு இனிமையான சொற்களும் அவர்களுக்குப் பிரத்யக்ஷமாகப் பார்க்கும் ராம அனுக்ரஹ பிரவாகமும் சுகத்தைத் தருவதாயும் வார்த்தை களால் விவரிக்கமுடியாதபடி அத்யந்த கடூரமான வழிகளாகவும் காணப்பட்டது. பரதனைப் போல நமக்கு இவ்வளவு விஸ்வாஸம் வருமா என்றும் கடினமான வழியாகிற ஏகாந்திகளின் நியமத்தை அனுஷ்டிக்க முடியுமோ என்று பயமிருந்தது. (1529)

முனி கணங்களும் யோகிகளும் பரதனுடைய பக்தி நியாஸங்களைக் கண்டு, ''நாமல்லவோ நித்ய ஸம்சாரிகள்'' என்று எண்ணமிட்டார்கள். மிதிலேசரான ஜனகரும் நம்முடைய ஞானமும் ''பக்தி ஹீனமாகவும், விஸ்வாசம் குறைந்ததாகவும் அல்லவோ காணப்படுகிறது,'' என்று தனக்குள் நினைத்துக்கொண்டார். மஹா பெருமை வாய்ந்த ஆசார்யர்களால் உபதேசிக்கப்பட்ட ஜனகரின் அனுஷ்டானங்களை ஒருவிதம் தெரிந்த விக்ஞான ஸம்பன்னரான துளஸிதாஸர் சொல்லுகிறார். ''ஜனகரே இவ்விதம் சிரமப்படும்போது நான் பரதனுடைய மகிமைகளை எவ்விதம் வர்ணிப்பேன்? பரதனுடைய பக்தி விஸ்வாசம் மங்களப் பலன்களைத் தரும் சரணாகதி உபாயம், புத்தியை தெளியவைக்கும் அழகான நியாஸ விந்யாஸச் சொற்கள் என்னைப் போன்றவனுடைய ஹ்ருதயத்தையும் மலரவைக்கின்றன. என்னையும் மணமுள்ளவனாகச் செய்கின்றன.'' (1530)

''என் புத்தியோ மிகமிக ஸ்வல்பம். பரதனுடைய மகிமைகளோ அபாம்நிதி போலவும், மேருமலையைப் போலவும் மிகப் பெரியது. நான் மாத்திரமின்றி சுக்ராசாரியார் போன்ற சகல மஹாகவிஸ்ரேஷ்டர்கள்கூட லஜ்ஜைப் படும்படி பரதனுடைய மகிமைகள் அளவிட முடியாதபடி விருக்கின்றன. பரதனைப் பற்றிச் சொல்லவேண்டிய ருசி வளருகிறது. ஆனால் வார்த்தைகளும் சக்தியும் பஞ்சமாகி விடுகின்றது. என் புத்தியும் அதனால் இளமையுற்று பாலனுடைய மழலைப் பேச்சுகளைப் போல இனிமையாகவும் புத்தி ஹீனமாகவுமிருக்கின்றன.'' (1531)

''பரதனுடைய புகழ் நிர்மலமானது. மாசு பெருததது. களங்கமின்றி பூர்ண சந்திரன் போல சுமங்களமாக பொலிகிறது. கவியினுடைய புத்தி பெண் சகோர பக்ஷி மாதிரி, அந்த அம்ருத நிலவுகளை இன்புறப் பருகுகிறது.'' நிர்மலமான ராம ஆகாசத்தில் பரத சந்திரன் உதித்ததைக்கண்ட சகோர பக்ஷியான துளசிதாஸர் ஆச்சரியம் தாங்காமல், ராமதாகம் கொண்டவர் போல, விமல ஹ்ருதயத்துடன் சகோர பக்ஷி மாதிரி, ஆனந்தத்துடன் பார்த்து, பார்த்து, ஏக மாத்திரமாக அவனையே பார்த்துக்கொண்டு ஆனந்தமடைந்து கொண்டிருக்கிறார். அவரால் பேசுவதற்குகூட சாவகாஸமில்லாதபடி ஸ்தம்பித்து ஆசையுடன் அன்புடன் ஸஹ்ருதயத்துடன் விமலமதியோடு பரதனைப் பார்த்தவண்ணமிருக்கிறார். (1532)

''பரதனுடைய பக்தி பிரபன்ன ஸ்வபாவங்கள் வேதங்களால் கூட நிர்ணயமாகச் சொல்லமுடியாதபடி விருக்கின்றன. அப்பேற்

பட்ட மஹத்வம் வாய்ந்த பரத பெருமைகள் அல்பமதி படைத்த எனக்கு எவ்விதம் அடங்கக்கூடும்? என்னுடைய சபல சித்தத்தை கவி ஜனங்களே, மன்னித்துவிடுங்கள். பரதனுடைய அப்ராகிருதமான பக்தியையும், அவாப்த ஸமஸ்த காமனுன ஸ்ரீ சீதா ராமனுடைய பாதங்களையும், ஸத்பாவத்தினுல் ஏற்பட்ட குரு சிஷ்ய பாவம், பாகவத பக்த பிரபாவம், ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு, நல்ல ஹ்ருதயத்துடன் சொன்னுலோ, கேட்டாலோ, போதுமே, எந்த மனுஷ்யன் சீதா ராமனுடைய திவ்ய சரணங்களில் அனுரக்தம் கொண்டவனுக பக்தி பிரேமை அடைந்தவனுக, ஏன் மாறமுடியாது?'' (1533)

[தியானம்

ஸ்ரீராமா, சீதா, கமலோத்பவா, கமலசின்னு, பரதனை அடையாளமாக உடைய ஸ்ரீராமா, எப்போது பூர்ண சந்திரனை யொக்கும் உங்கள் திருமுக மண்டலத்தைப் பார்க்கப் போகிறேன். சேஷசயனு, எப்போது கொஞ்சும் சலங்கைகளின் மணி ஓசையுடன் வரும் சீதையை அணைத்துக் கொண்டிருக்கும் ஸர்வாத்மனுகிற நாராயணனைப் பார்க்கப்போகிறேன்? பரதன், பிரஹ்லாதன், உத்தங்கர், தியாகராஜர் போன்ற பக்தாத்மாக்களை த்ருத ஆத்மாவாகக் கொண்ட கிருஷ்ணு, நரஹரி, முரஹரி, சீதாபதே, பத்மநேத்ரா, பக்தர்களின் இடையூறுகளைப் போக்கும் ஹரிபகவானே, என்னிடமும் ஸ்ரீதாமன் ஸ்ரீதோக கிருஷ்ணன் முதலிய பாலர்களோடும் விளையாடும் வேகவான், என் ஸ்வஸ்தி வசனங்களுக்கு ஆனந்தப்படும் ஸ்தோத்ர பிரியரே, நீரும் சீதையும் உன் பக்த கோடிகளும் என்றும் பல்லாண்டு பல்லாண்டாக இருந்து எங்களை உய்விப்பீராக, நீர் கோபிகைகளிடம் சொன்ன வார்த்தைகளையும் ஸ்ரீதாமனிடம் சொல்லிய வசனங்களையும் நினைத்துப்பாரும். ''பெரும்பாலும் வறுத்த விதை முளைக்கும் தன்மையை அடையாதது போல, என்னிடம் சித்தத்தை செலுத்தினவர்களுடைய சிரமமானது அற்பபயனைக் கொடுக்காது.'' காத்யாயனி விரதத்தைச் செய்த கோபிகைகளும், பிரஹ்லாதன் பரதன் செய்த பக்தியையும் அங்கீகரித்த ராமா, உனக்கு விஸ்வாத்மா, விஸ்வகர்மா, விஸ்வ ஸம்பவன் என்கிற பெயர்களுக்கு ஏற்ப பல பெயர்கள் பல உருவங்கள், பலஜோலிகள் உண்டு. மாதவா, புண்டரீகாக்ஷா, உம்முடைய ரூபங்களும் அழகு விலாஸங்களும் சாஸ்வதம். ஜனுர்த்தனரே, பாஞ்சஜன்யரே, தனஞ்ஜயரே, உம்முடைய ஐஸ்வர்யம் நிறைந்த

ரூபமாகிற வைஷ்ணவ ரூபத்தை உத்தங்க மேகங்களாகிற ஜல வர்ஷத்தைப் பொழியும் உன் அம்ருத வடிவை எப்போது சொடுக்கப் போகிறாய்? பிரஹ்லாத பரத தியாகராஜ துளசிப்ரியா, அர்ஜுன சகா, உம்மால் கிருதலக்ஷணம் செய்யப்பட்டவனாக பிராணனாலும் புத்தியினாலும் பேச்சினாலும் எப்போதும் நன்மையைச் செய்து, உம்மிடம் வந்து சேருவேனாக. யமுனா நதி தீரத்தில் பில்வமரமாக விருந்த பிருந்தவனமே, பாகவத ஜனக் கூட்டமே, பிராணிகளுடைய விருப்பங்களைத் தரும் கற்பகமே, பரதனை எனக்கு தா. ராமன் மேல் ஏறிய பரதனும் நரஹரியின் மடியில்யேறிய பிரஹ்லாதனும் உமையின் மடியில் ஏறிய குஹனைப் போல அல்லவா இருக்கிறார்கள். ஓங்கார ரூபனே, கருடனுக்கு அளித்த நிஜபக்தியை எனக்குத் தரவேண்டும்.]

பரதனை ஸ்மரணை செய்து எவனொருவன் துர்லபரும் வைஷ்ணவ ரூபமான சீதா ராமனை ப்ரேமையுடன் எளிதில் அடையாமல் இருக்கிறானோ, அவனைப்போல மஹா அபாக்யம் படைத்தவன் இந்த துக்க சம்சாரத்தில் யார் இருக்கக்கூடும்? பரதனுக்காக நம்மிடம் அவர் கட்டாயம் வந்தே தீருவார். என் பிரபு சீதா ராமன் ஸுலபர், அல்பசந்தோஷி, தீன தயாளு, எல்லோரையும் உய்விக்க எண்ணம் கொண்ட உதார ஹ்ருதயமுள்ளவர். எல்லோருடைய நிஜபக்தியையும் தீன ஸ்திதியையும் பிரதியக்ஷமாக அறிபவர். அப்பேற்பட்ட பிரபு தனக்கு இணையில்லாமல் விளங்கும் பகவான், ஸ்ரீராமனுடைய ஸுப்ரஸாதத்தை அடைய விரும்பி, ஸாத்விக தியாக புத்தியுடன் ராம அங்கத்தில் ஆரூப்யனாகிற பரதன் துயரக்கடலில் மூழ்கி, வருந்தி கண்ணீர் தாரை தாரையாகப் பெருக, நேசத்துடன் உட்கார்ந்திருந்த போது, (அந்த அசுர பாலகனாகிற பிரஹ்லாதனைப் போல), அவனுடைய தீன ஸ்திதியைக் கண்ட, தாமரைக் கண்களை உடைய என் பிரபு. (1534)

தர்ம விரதம் பூண்டவன்; பக்தர்களைக் காப்பதாகிய சரீர ப்ருத், த்ருதாத்மா, பக்தர்களின் ஐக்யத்துக்கு விரோதம் செய்யும் எதிரிகளை அடக்கி, ஆளும் தீரர், நந்தகி என்னும் ஆயுதத்தை உடைய கதாதரர், தம் பக்தர்களுக்கு தவறுதல் வராமல் காக்கும் நியாயர், நீதி சாஸ்திரத்தின் பிரமாணமாகவிருப்பவர் "பஜஸ்வ மாம்" என்று சொல்லி பக்தர்களைக் காக்கும் வ்ரத ஸத்யர், பரம துர்லபரான ஹரி, நிஜபக்திகளை உடைய பரதனைப் போன்ற பாகவத ஸ்ரேஷ்டர்களால் பிறருக்கு எளிதில் அடையும்படி வைக்கும் ஸஹஜஸ்நேகம் கொண்ட கிருபாளு, சீலமே உருவெடுத்து

வந்திருக்கும் திவ்ய விக்ரஹர், சுகங்களைக் கொடுக்கும் கற்பக விருக்ஷம், ஸ்ரீராமனின் புகழ்களை ஸாகரம் போல அளவிட முடியாதபடியும், பாபங்களை போக்கும் புண்ணியங்களாகவும், பாபமயங்களைத் தீர்க்கும் புண்ணிய நதிகளின் இருப்பிடமாகிற கங்கா ஸாகரம் போலவிருப்பவர்; அன்பை அன்பினால் காக்கும் ஜிதக்ரோதர், ஜிதமன்யு, என் பிரபு பரவசமடைந்த ஸ்ரீசிதா ரகுராமன் இதுதான் சமயம், இந்த இடம் தான் உயர்ந்தது, இது தான் நல்ல முகூர்த்தம், இந்த சபையில் தான் தான் செய்ய வேண்டியவராக நினைத்து. (1535)

அழகான வசனங்களை, அழகான ப்ரீதியுடன் கூடிய கம்பீர வசனங்களை, உத்தங்க மேகங்கள் மருதேசத்தில் பொழிவது போல, மேக கம்பீரத்துடன் பிரபு தேஜோ வ்ருஷராகி பரதனுக்கு அனுக்ரஹம் செய்தார். அந்த வார்த்தைகளை சரஸ்வதி தேவியே மீண்டும் இன்பமாகச் சொல்லமுடியும். சுருக்கமாக விருந்தன, ஆனால் பலனிலும் ஹிதத்திலும் பெரும்பயனாக விருந்தது.! அவைகளை நான் மீண்டும் சொல்வதால், சந்திரனுடைய அம்ருத தாரைகள் போல (எனக்கு பரம விசால்யகரணி, மிருதசஞ்சீவினி, போல) இனிப்பாகவும் தேன்கலந்த மதுபோலவிருக்கிறது. "பிரிய பரதா, என் தம்பி, நீ ரகு குலத்தின் தர்மங்களை நன்கு அறிந்தவன். ராஜ தர்மத்தையும் (பீஷ்மரைப் போல) நன்கு அறிபவன். சகல சாஸ்திரங்களையும் லோக ரீதிகளையும், பெரிய வர்களால் கற்பிக்கப்பட்டவனாகவு மிருக்கிறாய். என்னிடமும் ப்ரேமை வைத்த ப்ரவீணனாகவுமிருக்கிறாய்." (1536)

"அன்பனே, கர்ம வசனங்களாலும் சுத்தமான மனத்தினாலும் நீ தோஷமில்லாத நிர்மலன். உனக்கு ஸமானம் வேறு யாருமில்லை. ஆசாரியர்களடங்கிய இந்த மஹா பெரிய குரு ஸமாஜத்தின் முன்பு, உன்னைப்போல தீன ஸ்திதியை அடைந்த நான் என் தம்பியின் பெருமைகளை எவ்விதம் புகழ்வேன்?" (1537)

"உனக்கு சூர்ய குலத்தின் ரீதியும், ஸத்ய பிரதிக்ஞை கொண்ட பிதாவின் கீர்த்திகளும், உன்னிடம் காட்டிய அளவற்ற ப்ரீதியையும் நான் நன்கு அறிவேன். இந்த ஸமாஜமும், இந்த குரு ஸ்ரேஷ்டர்களின் முன்பு நான் மீண்டும் சொல்லவேண்டிய தில்லை. இந்த மாதிரி நாம் இருவர்களும் சிரமப்படும்போது, தர்ம மரியாதை உள்ள பெரியவர்கள் என்ன சொல்லுகிறார்கள்; உன் சிநேகிதர்கள், சத்ருக்கள், உதாஸீனர்கள் என்ன சொல்லு கிறார்கள் என்றும் உனக்குத் தெரியும்." (1538)

"பரம ஞானியாகிற உனக்கு, இந்த பூமியில் பிறந்த யாவருக்கும் என்ன கர்த்தவ்யம், என்ன கடமை செய்ய வேண்டியது, என்கிற நியாயம் தெரிந்திருக்கிறது. உனக்கு எது ஹிதம், எனக்கு எது நல்லது, நம் இருவர்களுக்கும் செய்ய வேண்டிய கடமை காரியம் எது என்றும் தெரிந்திருக்கிறது." நானும் நீயும் மோஹத்தினால் தர்மத்தை விடக்கூடாது. என் வார்த்தைகளில் உனக்கு அதிகநம்பிக்கை உண்டு. ஆகவே இந்த சமயத்திற்கு ஏற்ப, நான் உனக்கு அனுகூலமான வார்த்தைகள் சொல்லுகிறேன்." (1539)

"என் பிரிய பரதா, நம் பிதா இறந்துபோன பின்பு, நாட்டில் குழப்பம் ஏற்படாமல் பரம கிருபாளுவாகிய வஸிஷ்ட பகவானுடைய அருளால் நாம் எல்லோரும் உஜ்ஜீவிக்கப் பட்டோம். அந்த குரு கிருபையினால் நம்மை நம்பிவாழும் பரிஜனங்களும் காப்பாற்றப்பட்டார்கள். தர்ம க்ஷேத்திரமாகிய அயோத்தியும் நன்கு காப்பாற்றப்பட்டது. நம் குடும்பம், புரிவாஸிகள், சகலரும் தர்மத்தால் கட்டப்பட்டு, அமைதியுடன் காக்கப்பட்டு, ஒரு கெடுதலையும் அடையாமல், இதுவரை பார்த்து வரப்பட்டார்கள். (1540)

[தியானம்

ஹே பரதராமா, வராரோஹரே, ஹே மாங்கரே, பரதனை ஸமாதானம் செய்து அவனுக்கு ஞானத்தைக் கொடுத்த நீ கிருஷ்ணனாக விருந்து ருக்மணிக்கு உபதேசித்த ஆத்மதத்வமாக விருக்கும் கேசவனல்லவோ? நாராயணா, அர்ஜுனன் ஹ்ருஷி கேச னாகிற உன்னை ஹ்ருதிவேதியன் என்று சொன்னான். தேவேசரே, ஜகந்நிவாஸ ஸஹஸ்ரபாஹு, உமக்கு சத்ருமித்ரன் உதாஸீனன் என்கிற வித்யாஸம் கிடையாது. ஜீவாத்மாக்களுக்கு ஏற்படும் மாயை உமக்கு இல்லை. உமக்கு சகல ஜீவராசிகளும் பூத இந்திரி யங்கள் ஆனாலும், அந்த பூத இந்திரிய குணங்கள் உம்மிடம் பற்றுகிறதில்லை. என்னைப்போல அக்ஞானமுள்ளவர்கள், பரதனை மடியில் வைத்து ஞானம் உபதேசிக்கும் வராங்கரே, எனக்கு ஸ்ரீமத் ராமானுஜன் செல்வபிள்ளையை மடியில்வைத்து உபதே சிப்பது போல விளங்கும் ஆதி தேவரே, பிரபிதாமஹரே, புருஷரே, புராணரே, அனந்த ரூபரே, ஸஹஸ்ரகிருதுவே, எனக்கும் அர்ஜுனனுக்கும் பரதனுக்கும் ருக்மணிக்கும் சீதைக் கும் ஸர்வரே, கிருஷ்ணரே, ராமரே என் சகாவே, ஆத்மபந்துவே, ஸம்சார சுழல்களில் அகப்பட்டு, சொப்னத்தில் வஸ்து வில்லாமல்

அனுபவிக்கும் சுகதுக்கங்களைப் போல ஸம்சார துக்கங்களை உன் நினைவு உள்ளவர்கள் அனுபவிக்கிறார்கள். அப்பேற்பட்ட ஸம்சாரக் கிணற்றில் தாழ்ந்திருக்கும் என்னை மேலே நோக்கி அண்ணார்ந்து உம்மை, உம்முடைய அஸ்வத்த விருக்ஷத்தை, நிமிர்ந்து பார்க்கச் செய்யும் உம்பரே, எனக்குத் தெளிவான ஞானமும் மனசாந்தியும் கொடும். சந்திரனுடைய கலைகளுக்கு வ்ருத்திக்ஷயம் உண்டேதவிர, சந்திரனுக்கு இல்லாததுபோல, ஜன்மாதி விகாரங்கள் சுகதுக்கங்கள் தேகத்துக்கே அன்றி ஆத்மாவுக்கு அல்ல; ஆத்மா மரணம் அடைந்தது என்பது சந்திரன் அமாவாசையில் நசித்தான் என்பதைப் போல ஒக்கும். இவ்விதம் என்னை ஞானவானாக்கி, உன் கிருபையால் ஆத்மாவை அறிந்து, தேகியான என்னை நித்ய ஸம்சாரியாகச் செய்ய வேண்டாம். ருக்மிணிகாந்தா, சீதாநாயகா, ரமாபதி, பத்மகந்தா, ஸர்வகந்தா, என்னை ஆதரி.]

"தர்மத்தில் ஸகலரும் மனம் ஈடுபட்டவர்களாக விருக்கிறார்கள். சூரியன் தினம் கிழக்கே உதித்து, மேற்கே அஸ்தமிப்பது, அவனுடன் கூடிய சகல தாராகணங்களும் அவரவர்களின் பாதையில் சென்றுகொண்டிருப்பது எல்லாம் தர்மத்தின் நியதியினால் தான். இந்த தர்மவழியில் செல்லுவதால் ஒருவருக்கும் கிலேசங்கள், தாபங்கள் வாராதபடிக்கும், காலாகாலங்களில் அஸ்தமித்து உதயமாகியும் ஏற்படும் நியமமானது எல்லோருடைய நன்மைக்கும்தானே விருக்கிறது. இதற்கு விபரீதமாக ஏதாவது ஏற்பட்டால், ஜகம்முழுவதிலும் கிலேசங்கள்தானே ஏற்படும். என் பரதா, சூரியன் காலத்திற்கு முன் அஸ்தமித்துவிட்டாற் போல, நம் பிதா நம்மைவிட்டு திடீரென்று இறந்துபோய்விட்டார். அதனால் சகலருக்கும் கிலேசங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த உத்பாதம் விதாதாவினால் ஏற்படுத்தப்பட்டது. அவ்விதமிருந்தும், வஸிஷ்ட முனிவருடைய கிருபாபலத்தினாலும் மிதிலேசருடைய நல்ல எண்ணத்தாலும் சகலரும் இந்த ஆபத்திலிருந்து காப்பாற்றப்பட்டோம்." (1541)

"ராஜ்யத்தைக் காப்பது, அதன் தர்ம விவரங்கள், நம்முடைய நல்ல பெயர், நம் குலத்தின் நல்ல கீர்த்திகள், தர்ம நாட்டமுள்ள நம் மனது, நமது எண்ணங்கள் ஆசரணைகள், இந்த ராஜ்யமாகிற பூமி இதர ஐஸ்வரியங்கள் நமது மனைவி பந்துக்கள் வீடு ஆகிய எல்லாம் நமது குருவாகிற வஸிஷ்ட பகவானால், அவருடைய மஹா வ்ரதங்களாலும் கீர்த்தி பிரபாவங்களாலும் காப்பாற்றப்பட்டன. இனியும் சுபமாக அவை காப்

பாற்றப்படும். அதனால் நாம் வருத்தப்படவேண்டியதில்லை. அவருடைய சாமார்த்தியமும் அளவிடமுடியாதபடியும், வீர்யங்களும் அதிகமாகவும் இருக்கின்றன.'' (1542)

''இந்த குரு மஹானுடைய அபார கிருபையினால், மஹா பிரஸாதத்தால் நீயும் உன் ராஜ்யமும் வனத்தில் சஞ்சரிக்கும் நாங்களும் காப்பாற்றப்படுவோம். இந்த ஸமாஜமும் சுகத்தை அடைவார்கள். நம் பந்துக்களும் துக்கத்தைப் போக்குவார்கள். மாதா பிதா குரு எஜமானன் ஆகியவர்களின் ஸமஸ்த ஆக்ஞைகளை பரிபாலிக்கும் ஆசரண ஏக தர்மமானது 'இந்த பூமியைத் தாங்குவதில் தரணிதரனாகிற ஆதிசேஷனைப்போல, புகழத்தக்கது. ஆதலால் இந்த பூமியாகிற தர்மம் பரிபாலிக்கப்பட்டால், ஆதிசேஷன் பூமியைத் தாங்குவதுபோல, அந்த தர்மமும் உன்னையும் பரிபாலிக்கும். (உனக்கும் ஸ்ரீமத் ராமாநுஜனுடைய கிருபை கிடைக்கும்.'') (1543)

''என் பிரியபந்துவே, நீ இப்போது அவருடைய ஆக்ஞையைச் செய்துவருவதால் உன்னையும் உஜ்ஜீவித்துக்கொண்டு, என்னையும் அதர்ம வழியிலிருந்து காப்பாற்றி, நம் இருவர்களுடைய தர்ம நிஷ்டையால், இந்த சூரியகுலத்திற்கே உரித்தான கீர்த்தியையும், பெருமைகளையும் காப்பாற்றப்படட்டும். நம்போன்ற அனுஷ்டான சீலர்களுக்கு தர்மத்தில் நம்பிக்கை வைத்து மாதா பிதா குரு தெய்வம் இவர்களின் ஆக்ஞைபிரகாரம் நடப்பதால், நம்முடைய மனோரதங்கள் யாவும் பூர்த்தி பெற்று, நமக்கும் கீர்த்தி பிரபாவங்களும் ஸம்பூர்ணமான நற்கதியும், விஸ்வவிபூதி ஐஸ்வரியங்களும் சித்திக்கும். நாம் திரிவேணியாகிற சரஸ்வதி கங்கை யமுனையாகிற விமலமான கீர்த்தி நற்கதி, ஐஸ்வரியசித்திகள் யாவும் அடையப்பெறுவோம். (1544)

''நாம் ஆலோசித்துச் செய்யவேண்டிய விஷயம் மிகக் கடினமாகத்தானிருக்கிறது. இந்த பிரஜைகளைக் காப்பாற்றும் ராஜதர்மமும் மிக்க பொறுப்புள்ளதாகவுமிருக்கிறது. ஆகையால் ராஜதர்மத்தை உத்தேசித்து, நாம் இருவரும் கிலேசங்களைப் பொறுக்கவேண்டும். நீ உன் பரிஜனங்களை சுகப்படுத்தும் விஷயத்தில் மிக்க சிரத்தையோடு இருக்கவேண்டும். என் அருமைத் தம்பி, ஆசைத் தம்பி, எனக்கு நேர்ந்த வனவாசம் ஆபத்தான விஷயம்தான். ஆனால் என்னிடமும் சீதையிடமும் லக்ஷ்மணனிடமும் அதிக அன்பு கொண்ட உனக்கு, எங்கள் பிரிவினால், விஸ்லேஷத்தினால் மஹத்தான துக்கம் ஏற்பட்டிருக்கிறது. அதனால் உனக்கு என்னைவிட பெரும் கஷ்டம் வந்திருக்

கிறது. வாஸ்தவம்தான். பதினுன்கு வருஷங்கள் பொறுப்பது கடினம்தான்.'' (1545)

"உன்னுடைய கோமளமானதும் வெண்ணெய்போல அதி மிருதுவான ராம ஆசையுள்ள உன் மனத்தை நான் நன்கு அறிவேன். என் பிரிவு உனக்கு சகிக்கத் தக்கதல்ல. ஆனுல் ஸமயம் கெட்டதாக விருக்கிறதே. நாம் என்ன செய்வது? உனக்கும் எனக்கும் நாம் ஒருவருக்கொருவர் பிரிவதைவிட உசிதமான வார்த்தைகள் இந்த சமயத்திற்கு ஏற்ப, வேறு ஒன்றும் இல்லை. இந்த கெட்ட சமயத்திலும் என் உதவியை நாடி வந்திருக்கும் உனக்கு நான் இந்த மாதிரி சொல்வதில் நிஷ்டுரம் இருந்த போதிலும், ஆபத்துக் காலங்களில் நாம் இருவர்களும் ஒன்று சேர்ந்துதான் ஒருவருக்கொருவர் சகாயம் செய்து கொண்டுதான், மஹா ஆபத்திலிருந்து நாம் இருவர்களும் காப்பாற்றப்பட வேண்டும். நம்முடைய கைகளால்தானே வஜ்ரம் முதலிய ஆயுதங்களின் தாக்குதலை தவிர்க்கமுடியும்?'' (1546)

"நீயும் நானும் ராஜ்ய லக்ஷ்மியின் சேவகர்கள். தர்மத்தைக் காத்து, பரிபாலிக்க வந்தவர்கள். சேவகர்கள் கைகள் போலவும் கால்கள் போலவும் கண்கள் போலவும் இருப்பவர்கள். முகம் போல ஆக்ஞை செய்பவர்கள் எஜமானர்களே. சேவக தர்மத்திற்கு நாம் இருவர்களும் கைகூப்பி, அதன் மர்மத்தைப் பார்த்து அதனடியில் (ஆஞ்சநேயர் ராம சரணங்களில் அடைந்திருப்பது போலவும் தர்மர் கிருஷ்ணனுடைய உள்ளத்திற்கு அடங்கி நடப்பது போலவும்,) நாம் இருப்போம். இந்த மாதிரி சேவகர்களின் தர்மம் இருக்கிறது.'' தர்மத்தின் மீது ஸ்வாமியின் ப்ரீதி ஆகியவைகளைக் கண்டு, கேட்டு, கவிகள் தர்மாத்யக்ஷர், லோகாத்யக்ஷர், பிரஜாத்யக்ஷர் என்று பலவிதங்களாக ராமனை புகழ்கிருர்கள் என்று துளசிதாஸர் கவிசொல்லுகிருர். (1547)

அந்த ராஜசபை, பிரஜைகள், முனிவர்கள், தர்மநிஷ்டர்கள் ஆகிய யாவரும் அடங்கிய அந்த மஹா சபையிலுள்ள யாவரும் ரகு வரஸ்ரேஷ்டனுல் அழகாகச் சொல்லப்பட்ட வசனங்களைக் கேட்டார்கள். ஒரு பக்கம் பிரேமையாகிற க்ஷீரஸமுத்திரம், இன்னெரு பக்கம் மஹா கிலேசங்களுடன் கடையப்பட்டதால் வெளிவந்த அம்ருதம், அவ்யயமான தர்மமாக விருந்தது. அங்கு கூடியிருந்த ஸகல சமாஜத்தார்களும் ஆச்சர்யம் நிரம்பப்பட்டு ஆனந்த மிகுதியினுல் ஒன்றும் பேசமுடியாதபடி யிருந்தார்கள். ஆனந்தமயி கோப்யமான தர்ம மாதாவான சரஸ்வதிகூட பேச முடியாமல் அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தாள். (1548)

ஆனால் பரதனுக்கு சந்தோஷம் தாங்கமுடியவில்லை. நம் எஜமானர் அனுகூல புத்தியுடன் நம் தோஷங்களையும் மனதேக க்லேசங்களையும் விரட்டுவதில் ஊர்ஜிதராக விருக்கிறார். இதில் சந்தேகமே இல்லை. என் துக்கங்களும் கிலேசங்களும் பறந்து போய் விட்டன. பிரஸன்னாத்மா என் ராமன், எனக்கு மிகச் சிறந்த பிரஸாதமாகிற ஆத்ம ஞானத்தை உதிர்த்து, என் மனத்தின் இருள், பயம், அந்தகாரம் ஆகிய எல்லாவற்றையும் போக்கி, எனக்கு இந்த ஸம்சாரத்தில் ஜீவாத்ம ஸ்திதியையும் தேக ஆத்ம ஸ்திதியையும் போதித்து, சிறந்த அத்யாத்ம ஞானத்தையும் உபதேசித்திருக்கிறான். எனக்கு நியக்ரோத உம்பரராக விளங்குகிறார். (பலராமரால் கீறப்பட்ட யமுனை போகும் வழிபோல), ராமனால் காட்டப்பட்ட தர்ம வழியில் நானும் போகிறேன் என்று பரதன் தீர்மானத்திற்கு வந்தவனானான். அவனைப் பார்த்தால் மூகனாக விருப்பவனிடம் சரஸ்வதிதேவி ஸாந்நித்யம் செய்வது போல, தர்மதேவதை பரதனிடம் ஸாந்நித்யம் செய்தாள். (1549)

பரதன் மஹா பிரேமையுடன் தர்ம மூர்த்தியான ஸ்ரீராமனை சுக்ருத பிரணாமம் செய்தான். சகல மனோரதங்களும் நிறைவேற்றப்பட்ட ஆர்த்திபோல சந்தோஷத்துடன், தாமரைத் தண்டுகள்போல விருக்கும் தன் அழகான கரங்களை ராம சந்நிதியில் குவித்து, மன இன்பத்துடன் பேசலானான். "என் நாதரே, தர்ம நந்தனரே, என் பயங்கள், பாபங்கள் தோஷங்கள் யாவும் ஒழிந்தன. நான் தங்களைத் தேடிவந்து, தரிசித்ததால் பரம சுகங்களை அடைந்தேன். நான் பிறந்த ஜன்மலாபத்தை இன்று தான் அடைந்தேன். ரகு குலத்தில் உம்மோடுகூடப் பிறந்த லாபத்தின் மகிமைகளை இன்று நான் உணர்ந்தேன்." (1550)

"ஹே கிருபாளு, இப்போது ஸ்வாமியாகிற நீர் ஆக்ஞை யிடலாம். என் சிரம் உங்கள் தர்ம ஆக்ஞையின் அடியில் மரியாதையாக அடங்கித் தாழ்கின்றது. உமது இஷ்டபிரகாரம் நடக்க விருக்கும் எனக்கு, பிரபுவாகிய தாங்கள், உம் நினைவாலும் உம் நாம ஜபத்தாலும், நான் என் மன சோகங்களை விலக்கிக் கொள்வேன். நான் ஆனந்தப்படுவதற்கும், அதை அவலம்பித்து சேவை செய்து, என் தாபங்களைப் போக்கிக்கொள்வதற்கு உதவும்படிக்கும் அதன் கைபிடிப்பினால் ஸ்வாமி நான் உம்மிடம் பதினான்கு வருஷங்களுக்குப் பின்பு வந்து சேருவதற்கும் கராவலம்பன சின்னத்தை ஏதாவது உமது அடையாளமாகக் கொடும். நான் அதை என் பூஜா தெய்வமாக மதித்து வழிபடுவேன்.

உமது கிருபையால் ஸ்வாமி அதை நான் பெற்றுக்கொண்டு சந்தோஷத்துடன் அயோத்தி போகிறேன்.'' (1551)

''தேவரே என் பிரபுவே, இன்னொரு விஷயத்தையும் கேட்கிறேன். குருவின் ஆக்ஞைப்படி நான் ராஜ்யாபிஷேக சாமக்கிரியைகளைக் கொணர்ந்து வந்திருக்கிறேன். ஸகல தீர்த்தங்களின் ஜலங்களையும் சேகரித்துக்கொண்டு வந்திருக்கிறேன். அவைகளுக்கு என்ன ஆக்ஞை செய்கிறீர்?'' (1552)

''ஸ்வாமி, எனக்கு இன்னுமொரு மனோரதம் இருக்கிறது. அதைச் சொல்வதில் பயமும் லஜ்ஜையுமிருக்கிறது.'' அதைக் கேட்ட பிரபு ஸ்ரீராமச்சந்திரன் ''தம்பி, உடனே சொல்'' என்று சொன்னார். பிரபுவின் உத்திரவை அடைந்த பரதன் அழகான குரலில் ஸஹஜ ஸ்நேகத்துடன் சொல்லலானான். (1553)

''இந்த சித்ரகூடம் சுசியாகவும் மன சந்தேகங்களைப் போக்கும் பவித்ரஸ்தானமாகவும்,(கோவிந்தராஜன்வாழும்சித்ரகூடமா) யிருக்கிறது. அநேக வனங்களும் பசு பக்ஷிகளுடன் கூடிய குளங்களும், சிறு அருவிகளும் நதிகளும் (வேங்கட மலையில் உள்ளதுபோல) அநேகமிருக்கின்றன. ஊற்றுக்களும் குன்றுகளும்(திருமலை யிலிருப்பதுபோல) விருக்கின்றன. அப்பேற்பட்ட விசேஷ பூமியில் தங்களுடைய திருவடிகள் பதிந்த ஸ்தலங்களைக் கண்டு நான் ஆனந்தமடைய விரும்புகிறேன்.'' (1554)

ஸ்ரீரகுநாதன் சொன்னான்: ''அவஸ்யமாக நீ அத்ரி ரிஷியின் ஆக்ஞையை அடைந்து, அவருடைய இஷ்டப்படி என்ன செய்யவேண்டுமோ, எங்கு செல்ல விரும்புகிறாயோ அதைச் செய். அவருடைய கிருபையினால் நிர் பயமாய் இந்த காட்டில் ஸஞ்சரிக்கலாம். இந்த மஹா முனிவருடைய மஹா பிரஸாதத்தால் அல்லவா, இந்த வனம் முழுவதும் மங்களமயமாக விருக்கிறது. பரமபாவனமாகவும் அத்யந்த சுகத்தை உண்டு பண்ணுவதாவு மிருக்கிறது. (1555)

ஸப்தரிஷிகளின் நாயகரான அத்ரிபகவானுடைய ஆக்ஞையின் பிரகாரம் இந்த சுபமான அபிஷேக தீர்த்தங்களை ''அத்ரிஜா'' என்கிற தீர்த்தத்தில் ஸ்தாபிதம் செய்து அவர் இஷ்டப்படி நடந்துகொள்'' என்று சொன்னார். பிரபு ஸ்ரீ சீதாராமனுடைய வசனங்களைக் கேட்ட பரதன் அதன்படி நடந்து அத்யந்த சுகத்தை அடைந்தான். ஆனந்த ஹ்ருதயத்துடன் அந்த ஸ்ரேஷ்டமான அத்ரி முனிவரின் பாதகமலங்களில் நமஸ்கரித்து, ஸகல மங்களங்களையும் பெற்றான். (1556)

[தியானம்

ஸ்ரீ சீதாராமா, பரதனுக்கு அத்ரி ரிஷியைக் காண்பித்துக் கொடுத்த ஸ்வராட், உன் தர்ம வியவஸ்தையைக் கண்டால் பயமாகவிருக்கிறது. உன் பாதங்கள் கல்லை பொன்னுக்கி விட்டதைவிட ஆச்சரியம் ஒன்றுமில்லை என்று நினைத்திருந்தேன். இன்று வெண்ணெயைப் போல இளகின மனத்தை உடைய பரதனை கல்நெஞ்சமாக்கி, பதினுங்கு வருஷங்கள் உன்னையும் சீதையையும் ராமானுஜனையும் நினைத்து நினைத்து, ஸமஸ்லேஷ விஸ்லேஷ துக்கத்தை அனுபவிக்கவைத்தாய். நீ பண்ணின தர்ம வியவஸ்தை இந்திரனுக்கும் தேவர்களுக்கும் அனுகூலம்தான். அதைவிட அவர்களின் பத்னிகளுக்கு மிக்க அனுகூலம் காட்டிய சீதை, மஹா கருணையையே அவதாரம் எடுத்தவள், தன்னைச் சிறைப்படுத்திக்கொண்டு, உன்னிடம் அத்தியந்த பக்தியால் உன் தயையை எதிர்பார்த்திருந்தாள் ஒரு வருஷம். ஸத்யஸந்தரே, ஸத்யரே, ஸத்யமேதஸ்ஸே, ஸத்ய தர்மமாகிற சரணுகத ரக்ஷணத்தை பொறுப்பாக நடத்தின ஸ்வதந்திர ராமா, உன் தர்ம வியவஸ்தையை பரதன் சீதை இருவர்களும் ஒப்புக்கொண்ட சூக்ஷ்மம் தான் என்ன? கைகளை உயரத் தூக்கி உத்கோஷித்த வியாஸ பகவான் "தர்மம், தர்மம் என்று நான் தெருவின் நடுவே ஊர்த்வபாஹுக்களுடன் கோஷிக்கிறேன். தர்மத்தால் அர்த்தமும் காமமும் கிடைக்கும். தர்மம் நித்யம், தர்மம் காமத்தாலும் பயத்தாலும் லோபத்தாலும் த்யாஜ்யம் படத்தக்கதல்ல. சுக துக்கங்கள் அநித்யம்; ஜீவன் நித்யம்; அதன் காரணம் அநித்யம். ஆகையால் தர்மத்தை அனுஷ்டிப்பவர்கள் ஆதிகாரணரும் மூல கர்த்தாவுமான பகவானை ரத்னநிதிபோல அடைகிருர்கள். ராமா, சீதையும் பரதனும் உன் திருப்திக்காக பொறுத்தார்கள். நீ இல்லாதபோனுல் லக்ஷ்மிதேவி பூமியில் சீதையாக அவதரித்து தேவமாதர்களை விடுவிக்கும் காரணத்தால் உன்னைவிட்டுப் பிரிந்திருப்பாளா? இந்திரனுடைய காரியங்களை சாதிக்கும் வ்யாஜத்தினுல் பரதனும் அதற்கு ஸம்மதித்தான். சங்கரரும் உமையும் உன்னை நாராயணன் என்று தெரிந்துகொண்டுதானே உன்னையும் லக்ஷ்மிதேவியையும் புகழ்கிருர்கள். சபரியும் உன்னைப் புரிந்துகொண்டாளோ? இல்லாதபோனுல் வானரங்களால் கடலில் போட்ட கற்கள் மிதக்குமா? மாபெரும் அபராதங்களைச் செய்த நானும், ஆளவந்தாரும், தியாகராஜரும் ஆஞ்சநேயரும் துளசி தாஸரும் உன் ஆனந்தங்களை அடையமுடியுமா? ஸீமந்தனி, ஸர்வேஸ்வரர், சரண்யனுன ராகவனிடம் அந்த தர்மதேவதை

யிடம், என் விருத்தாந்தங்களைச் சொல்லி, என் யோகத்திற்கும் சித்தி அளிக்கச் சொல்.]

பரதராம ஸம்வாதங்கள் (அவதூதரான தத்தாத்ரேயர் யது மஹாராஜனுக்கும், பகவான் கிருஷ்ணர் உத்தவருக்கும் சொல்லிய ஸம்வாதங்களைப் போல,) மங்களங்களைக் கொடுக்கும் ஔஷதம். ஸ்ரீ சீதாராமா பக்தியையும், தர்மத்தில் பற்றுதல் உள்ள மனத்தையும் ஞானம் வைராக்கியம், உலகத்தில் சுகபோகங்களின் அநித்யம் எல்லாவற்றையும் காண்பிக்கும் ஞான தீபங்கள்போல விருக்கின்றன. இந்த ராமபரத ஸம்வாதங்கள் மிக்க கஷ்டங்களை அனுபவிக்கும் ஸ்வார்த்திகளான தேவதைகளை ஆனந்தப் படுத்தின. ரகுகுலத்தின் தியாகத்தைப் புகழ்ந்து, கற்பக மலர்களை பரதன்மீது பொழிந்தார்கள். (1557)

"பரதன் மஹாதன்யன். தனஞ்ஜயரான ஸ்ரீராமனை அடைந்துவிட்டான்." (பதினான்கு வருஷங்கள் பொறுத்து மீண்டும் அந்த அச்யுதனை அடைந்துவிட்டான். ஸ்ரீராமபக்தியினால் ஸ்ரீராம பாதுகைகளால், லக்ஷ்மிநரசிம்மன் சடகோபரை கராவலம்பனம் செய்து அழைத்துப் போனதுபோல, பதினான்கு வருஷங்களின் பிரிவுக்கு அப்பால் சீதாராமனால் பரதனிடம் ஒப்புவிக்கப்பட்ட மஹா ஸத்யமுள்ள பாதுகைகளின் பிரபாவத்தால் பரதன் ஸ்ரேயசை அடைந்தான். அவன் தேவகாரியத்தைச் செய்ய உதவினான். தேவமாதர்களின் சிறையை மீட்கக் காரணமானான். அப்பேற்பட்ட பரத ஸ்ரீராமசந்திரனுக்கு ஜய மங்களங்கள் ஸந்ததமும் ஏற்படட்டும். ஸ்ரீராம பாதுகைகளுக்கு நித்ய மங்களம் ஏற்படட்டும்" என்று சந்தோஷத்துடன் இந்திரன் முதலிய திக்பாலர்கள் தர்மத்தை வாழ்த்தி, பகவானையும் பக்தனாகிற பரதனையும் வாழ்த்தினார்கள்.) எங்களைக் காப்பாற்றின சரணாகதி தர்மமே, கோஸாயியான ராமனை எங்களிடம் இப்போதும், பரதனிடம் பதினான்கு வருஷங்களுக்குப் பிற்காலத்திலும் ஒப்பிவை" என்று சந்தோஷத்துடன் ஆரவாரித்தார்கள். பரதனுடைய வசனங்களைக் கேட்ட ஜனக மஹாராஜரும், வஸிஸ்டமுனிவரும் அந்த சபை எல்லோரும் அதிக உத்ஸாஹத்துடன் ஸ்ரீராம பரத தீர்ப்பை ஒப்புக் கொண்டார்கள். (1558)

பரதன் தர்மத்திலும் தெய்வத்திலும் நம்பிக்கை உள்ளவன். ராமனும் சரணாகதிசெய்த தேவர்களைக் காப்பாற்றும் ஸத்யஸந்தர். இவர்களுடைய தர்மத்தின் விஸ்வாசம் சீலஸமூகங்கள், குணக் கடல் போவிருக்கின்றன. ஜனகராஜரும் மிக புளகாங்கித சரீரத்

துடன் அந்த இரு ராஜகுமாரர்களைப் புகழ்ந்தார். இந்த சேவகன் இந்த எஜமானன், இந்த இருசகோதரர்களாகிற பரதராம ஸ்நேகம் அதிக ஆச்சரியமுள்ளதாக விருக்கிறது. ஒரு பக்கம் இருவரும் நியமத்தால் கட்டப்பட்டிருக்கிறார்கள் ; மற்றொரு பக்கம் பரஸ்பர நன்மையையும் விருத்தியையும் விரும்புகிறார்கள். இருவர்களின் உள்ளமும் அதி பாவனமாகவிருக்கிறது.'' (1559)

மந்திரிகளும் அரசன் நமக்கு கிடைத்துவிட்டான் என்று சந்தோஷித்து, பரதராமனிடம் பிரேமை உள்ளத்துடன் அவரவர்களின் புத்திபிரகாரம் நன்றி செலுத்தினார்கள். அந்த இருவகை கூட்டத்தார்களும் ராமனுடைய திடவ்ரதத்தையும் பரதனுடைய சேவகதர்மத்தையும் புகழ்ந்து, ராஜதர்மத்தின் பலன்களை எதிர் பார்ப்பவர்களாக இருவர்களையும் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். (1560)

ராமனின் மாதாவான கௌசல்யாதேவி ஸ்ரீராமவியோகத்தினால் துக்கத்தையும், தர்ம மனதுள்ள பரதனின் லாபத்தால், சந்தோஷத்தையும் அடைந்தாள். மற்ற ராணிமார்களை தைர்யப் படுத்தி, பதினான்கு வருஷங்கள் சீக்கிரம் ஓடிவிடும். கவலைப் படாதீர்கள், என்று ஆஸ்வாசப்படுத்தினாள். அந்த சமாஜத்தில் சிலர் ராமனின் தியாக உள்ளத்தைப் புகழ்ந்தார்கள். இன்னும் சிலர் பரதனின் தர்மஉள்ளத்தைப் புகழ்ந்தார்கள். இதில் பெரும் நன்மையை அடைந்தவன் பரதன் என்று (நான் சொல்வது போல) எல்லோர்களும் சொன்னார்கள். (1561)

அந்தசமயம் அத்ரிபகவான் பரதனைப் பார்த்துச் சொன்னார். ''பரதா, இந்த பர்வதத்தின் சமீபம் ஒரு அழகான கிணறு இருக்கிறது. அந்த கிணற்றின் ஜலம் பவித்திரமானது. உவமையில்லாத தீர்த்தம். அம்ருதம்போல குணமுள்ளது. அந்த கிணற்றில் இந்த மிகபுண்யமான அபிஷேக தீர்த்தங்களை (அத்ரிஜா) ஸ்தாபிதம்செய்.'' (1562)

பரதன் அத்ரிபகவானின் ஆக்ஞையை நிறைவேற்றினான். அவன் தன் தம்பியான சத்ருக்னனுடனும், அங்கு வந்திருந்த ஸாது ஜனங்களுடனும் நேராக அந்தகிணறு இருக்குமிடம் போனான். அந்தகிணறு ரொம்ப ஆழமுள்ளதாகவிருந்தது. (1563)

பாவனமானதும் மிக்கப் புண்யத்தைக் கொடுக்ககூடிய அந்த கிணற்றில் சேர்த்தான். அதனால் அதிக ஆனந்தத்தை அடைந்த அந்த அத்ரிபகவான் (ஸோமனுடைய பிதா,) பரதனை இறுகத் தழுவி, உச்சிமுகந்து சொன்னார் ''பரதா, இந்த ஸ்தலம் அனாதி

காலமாக சித்திகளைக் கொடுக்கும் ஸ்தலமாகவிருக்கிறது. காலக் கிரமத்தில் இதுமறையப்பட்டு ஒருவருக்கும் தெரியாமல் இதுவரை இருந்தது. உன்னுல் இதுமீண்டும் புனர்உத்தாரணம் செய்யப் பட்டது.'' (1564)

அந்தசமயம் பரதன் அந்த புண்ணியமான இடத்தை ஜல யுக்த ஸ்தானமாகப் பண்ணி, அந்த புண்ணிய ஜலங்களை அனுபவிப்பதற்கு அழகான கட்டங்களை தன் சேவகர்களால் ஏற்படுத்தி, அந்த கிணற்றை ஆழமாகத் தோண்டி பெரிதாகவும் பண்ணினுன். இப்போது தெய்வ ஆக்ஞையின்படி அந்த கிணற்றின் ஜலம் ஸகலமான புண்ணியதீர்த்தங்களின் இருப்பிட மாக அகிலவிஸ்வத்திற்கும் உபகாரமாகவும், சுகந்தமான தர்ம விசாரணை செய்வதற்கு உபயோகமாகவும், அத்யந்த அதிருஷ்டத்தை ஒரே இடத்தில் பல புண்யதீர்த்தங்களின் பலன் களைக் கொடுப்பதாகவுமிருக்கிறது. (1565)

[தியானம்

ஹேராமா, சீதாலக்ஷ்மணு, உங்களுடைய நிக்ரஹம் ராவண னுக்கு இருந்தபோதிலும் அவன் சம்பந்தப்பட்டவரை அனுக்ரஹ மாகவே இருந்திருக்கவேண்டும். அர்ஜுனனுக்கும் பரதனுக்கும் உன்னுடைய சூக்ஷ்மமான தர்மநிச்சயம் கடிவாளம் இழுப்பது போல, தம்சொல்படி கேட்கும்படி நடத்தின பிரக்ரஹர் என்று சொல்லும்படியிருக்கிறது. தன் பாபங்கள் போக பிராயோப வேசம் பண்ணின பரதனும் அர்ஜுனனும் உன் விஸ்வரூப தரிசனத்தினுல் கண்டு பயந்துபோய், உன் வார்த்தைகளைக் கேட்டு நடந்தார்கள். ஹ்ருஷ்கேசா, சீதையின் ஸந்நிதானத்தில் உன்பாதங்களைச் சரணமடைந்தவன் எங்கேயாவது வீணுகப் போகமுடியுமா? பரதனுடைய பழுத்த ஞானமும், லக்ஷ்மண னுடைய பொறுமையும், சுசியும், கார்யத்தை நன்கு செய்யும் திறமையும், ராமனுக்குப் பிரியத்தைச் செய்யும் பிரியதரிசனமும், சுபலக்ஷ்ணங்களும் என்னைப் போலவிருக்கும் நித்ய ஸம்சாரி களுக்கு இருக்கமுடியுமா? என் பூர்வாசாரியர்கள் ஸ்ரீராமனுக்கும், விபீஷணனுக்கும் கிருஷ்ணனுக்கும் செய்த சுக்ருத நமஸ்காரம் ஒன்றுபோதுமே என்று சொன்னுர்கள். அது எவ்விதம் பொய்யாகும்? எனக்கு ஆஞ்சநேயரைப் போல உங்களுக்கு ஸந்தேசம் சொல்லி அனுப்ப தூதன் இல்லையே; நான் என்ன செய்வேன்? உன் ஸ்வதந்திரம் ரொம்ப பயங்கரமாகவிருக்கிறது. உன்னைவிட உன் காலதர்மம் ரொம்ப பயங்கரமாகவிருக்கிறது.

ஹே ஸரஸிருஹேக்ஷண, ஸஜ்ஜனஜீவன, நீயும் பிராட்டியும் அந்த பரதலக்ஷ்மணர்களும் சத்ருக்ன ஆஞ்சநேயரும் தயை செய்யாதபோனால், எவை, மிருதுபாஷண, எனக்கு சுகத்தை தரும்? நாதயோகியே, என் ராஜஶ்ரீயே, புண்யஶ்ரீயே, பலஶ்ரீயே, தர்மஶ்ரீயே எனக்கு நாதபிரும்ம ரஸம் கொடுக்கும் புண்ய மூர்த்தியே, காலாதீதனே, ஸாமஜவரகமன, என்னிடம் எப்போது நீங்கள் வருவீர்கள்? காயத்திரியை மூச்சாகக் கொண்ட மஹாஸ்வனரே, காலம் ஜாதிதர்மம் வேததர்மங்கள் யாவற்றையும் பாராமல் என்னிடம் வாருங்கள்.]

பரதனால் ஸ்தாபிக்கப்பட்ட மஹாதீர்த்தம் என்றும் ஸாது ஜனங்களுக்குப் பாவனம்செய்யும் பரமபுண்ய தீர்த்தமாக இன்றும் ''பரததீர்த்தம்'' என்று பிரஸித்தி பெற்று பெயருடன் விளங்குகிறது. ப்ரேமையாகிற ராமபக்தியைக்கொடுக்கும் சிந்தாமணியாகவிருக்கிறது. மஹாபாகவத ஸ்ரேஷ்டரும் ராஜகுமாரனும் பகவத் பக்தியில் ப்ரவீணனுமான பரததீர்த்தத்தில் நியமமுடன் குளித்து, ஒவ்வொரு ஜந்துவும் மனம் வசனம் கர்மங்களில் பாவமற்று நிர்மலமாக ஆகிவிடுகிறார்கள். (1566)

அந்த கிணற்றின் புண்யதீர்த்தங்களைப் புகழ்ந்து கொண்டு ஸகல ஜனங்களும் ஶ்ரீசீதாராமச்சந்திரன் ஸந்நிதிக்கு திரும்பி வந்தார்கள். ஶ்ரீரகுநாதர் அத்ரி மஹரிஷியிடமிருந்து அந்த மஹா புண்ய தீர்த்தத்தின் மகிமைகளைக் கேட்டு ஆனந்தித்தார். (1567)

அந்த இதிஹாஸத்தைப் பரம ப்ரீதியுடன் தர்மபுத்தியால் எல்லோரும் கேட்டுக்கொண்டிருந்த சமயம், அந்த இரவும் கழிந்தது. விடிந்த பின்பு பரதன், சத்ருக்னன் இருவர்களும் நித்யகிரியைச் செய்துவிட்டு, ஶ்ரீராமனுடைய ஆக்ஞையையும், அத்ரி, வஸிஷ்டர் ஆகியவர்களுடைய அனுமதியையும் பெற்று (1568)

தங்களுடன் கூட வந்த ஸமாஜத்தார்களுடன், சீதாராமன் சஞ்சரித்த அந்த வன பிரதேசத்தை பிரதக்ஷிணமாகச் சுற்றி, வெறும் கால்களுடன் நடந்து சுற்றிப் பார்த்தார்கள். அவர்களுடைய மனம், அதிமிருது நளின கோமள சீதாராம பாதங்களைத் தியானித்து, கால்களில் ஒன்றும் அணியாத பொற்திருவடிகளை, தியானித்த வண்ணமாக, ஒவ்வொரு இடத்திலும், அந்த மிருது பாதங்கள், மிருதுவான பூமாதேவி, தன் மனத்தில் கோமளமாகப் பதித்து, அலங்கார விபூஷிதையாக இருந்த கோலத்தில் அவர்கள் கண்டார்கள். மங்கள நாயகி, மாதவி

தரணீதரனுடைய பாதங்களை அலங்காரமாக அணிந்து கொண்டிருந்தாள். பரத சத்ருக்னர்களுடைய வெறும் கால்களை கண்டு சகிக்காத பூமாதேவி அவர்கள் பாதங்களையும் தாங்கும் அதிமிருது நடைபாதையானுள், அந்த புண்ய தேவதை. (1569)

அந்த புண்ணியமான பூமாதேவதை, தன் குக்ஷிக்குள் மிக்க கடூரமானதும், உபத்ரவங்களைக் கொடுக்கும் கடின வஸ்துக்களாகிற தர்ப்பை, முள், கல், பூமி பிளப்புக்கள், இன்னும் விக்னங்களாக விருக்கும் கெட்ட வஸ்துக்களையும் மறைத்து, பரத சத்ருக்னர்களுக்காக அவர்களின் நடைபாதையை அதிமிருதுவாகவும், அத்யந்த சுலபமாகவும், சுத்தமாகவும் ஆக்கினுள். அவர்களுடைய மனத்தைக் குளிரப்படுத்துவதற்கு அதிசுகந்தமானதும், மெள்ள வீசுவதும், சகிக்கக்கூடிய குளிர்ச்சியுள்ளதுமான காற்று எங்கும் வீசியது, மந்தமாருதம் வீசியது. (1570)

பாதையில் சுகந்தமான புஷ்பங்கள் சிதறிக் கிடந்தன. மேகத்தின் சாயை யிருந்தபடியால், வெய்யிலும் அதிகமாக விருக்கவில்லை. தேவர்கள் புஷ்பமாரி செய்தார்கள். விருக்ஷங்கள் விதவிதமான புஷ்பங்களை தரித்துக்கொண்டு ரமணீயமாயிருந்தன. பழங்கள் தினுசு தினுசாக காய்த்து தொங்கிக் கொண்டிருந்தன. எங்கு பார்த்தாலும் புஷ்ப புல் மெத்தை போல, மிருதுவான நடைபாதையாக விருந்தது. மனத்தை ஆனந்தம் செய்யும் மிருகங்கள், பசு, பக்ஷிகள் அன்புடைய குரலால், பரத சத்ருக்னனை, ஸ்ரீ ராமச்சந்திரனுடைய அருமையான சகோதரர்கள் என்று நினைத்து, அவர்களுக்கு சேவை செய்ய விருப்பமுள்ளவைகளாக அன்புடன் நடந்து கொண்டன. (1571)

துளசிதாஸர் சொல்கிறுர்: ''சாதாரண மனிதன் கொட்டாவி விடும்போது கூட, 'ராம், ராமா'' என்று ஒரு தடவை சொன்னுல் கூட, அவனிடம் சகல சித்திகளும், ஐஸ்வர்யங்களும் அமோகமாக ஓடிவந்துவிடுகின்றன. அப்பேற்பட்ட சுலபர் என் பிரபு. அப்பேற்பட்ட ஸ்ரீ ராமச்சந்திரனுடைய மூச்சு மாதிரி, பிராணபிரியன் அல்லவா பரதன். அந்த பரதன் விஷயத்தில், இந்தவிதமான பூமியின் ஆச்சர்யகரமான செய்கைகளும், தேவதைகளின் புஷ்ப மேகவிருஷ்டிகளும் ஆச்சரியமான விஷயங்களா ?'' (1572)

இந்த விதமாக ராம தியானத்துடன், ராம பாதுகைகளை, ஊர்த்வ பாஹுக்களுடன் தியானித்துக் கோஷித்துக்கொண்டு,

வெறும் கால்களுடன் பரதன், (வேதவியாஸர் தர்மத்தை நிர்வஹித்துக்கொண்டு போவது போல,) அந்த சீதாராம பிருந்தாவனத்தில் நடந்து சென்றான். அவனுடைய தர்ம நிஷ்டை, மஹா விஸ்வாசம், ராமபக்தியே ஸாம்ராஜ்யம் என்கிற ஏகாந்த பக்தி, ஏகாந்தியின் தர்ம அனுஷ்டானம், (தியாகராஜர், வேதவியாஸர், நாரதர் போன்ற மஹான்களால்,) மிக்க ஆச்சரிய அனுபவத்துடன் வேத்யமான சால ஸ்வானுபவங்களைப்பற்றி யாரால் எடுத்துச் சொல்ல முடியும்? (அந்த மஹான்களை ஒரு தடவை கண்டு தரிசித்தால், அத்யந்த பிரம்மானந்தம் கைகூடுமே.) அப்பேற்பட்ட பவித்ரமான பரதனை, நியமவிரத முள்ள முனிவர்களும் கண்டு, வெட்கப்படும்படி ஆனார்கள். பவித்ரமான ஜலதீர்த்தங்களைப்போல், புண்ணியமான பரதனின் பாதங்கள் பட்ட பூப்பிரதேசங்கள், பரதனிடம் லாபமடைந்த பசு, பக்ஷி, மிருகங்கள், விருக்ஷங்கள், புல், கொடி போன்ற அற்ப வஸ்துக்கள், மலை பர்வதங்கள், வனங்கள், உத்யான வனங்கள். (1573)

சகல ஜீவராசிகளும் அந்த விசேஷமான இடத்தில், விசித்திரமான அழகுடன், பவித்திரமானதும், தெய்வீக ஸம்பந்த முள்ளதாகவும் ஆகி இருந்தன. பரதன் ஆச்சர்யம் தாங்காமல், அத்ரிபகவானை ஒவ்வொன்றையும் வினவ, அந்த மஹானு பாவரும், எல்லாம் சீதாராம பரத கிருபை என்று சொல்லும் போது, எல்லோரும் சந்தோஷமடைந்தார்கள். அந்த ஸப்த ரிஷிகணங்களின் அக்ரர், ஒவ்வொரு ஜந்துவின் நாமத்தையும், அது அடைந்த ராமகிருபையாகிற ஹேதுவையும், அந்தக் காரணத்தால் குணங்களோடு திகழ்ந்து, மஹா புண்ய பிரபாவங் களுடன் விளங்கும் தீர்த்த அழகுகளையும், ஒன்றுவிடாமல் விவரித்துச் சொன்னார். (1574)

பரதன் ஒவ்வொன்றிலும் ஸ்நானம் செய்தான்; நமஸ்கரித் தான். சில சமயங்களில் மனோஹரமான இடங்களில் உட்கார்ந்து சிரமபரிகாரம் செய்தான். சில விடங்களை அனுராகத்துடன் தரிசனம் செய்தான். சில இடங்களில் முனியின் ஆக்ஞை பெற்று உட்கார்ந்து, சீதா சகிதனான ராமனையும், லக்ஷ்மணனை யும் தியானித்து ஜபம் செய்தான். (1575)

பரதனுடைய எளிய ஸ்வபாவம், பரம உத்க்ருஷ்டமான ஸ்நேகம். அழகிய சேவக நிலை, ராமசீதா தியானம் ஆகியவை களை, அந்த அழகான வனதேவதைகள் கண்டார்கள். பரதனை வாழ்த்தி ஆசீர்வதித்தார்கள். இவ்விதம் அவர்கள் அலைந்து

திரிந்து எல்லாவற்றையும் பார்த்து திரும்பும்போது பகல் முடிய மூன்று ஜாமங்களிருந்தன. அவர்கள் திரும்பி ஆஸ்ரமம் வந்து சேர்ந்து பிரபு சீதாராமனுடைய சரண கமலங்களை அடைந்து தர்சனம் செய்தார்கள். (1576)

[தியானம்

ஹே ஸாகேத ராமா, கேசவா, நாராயணு, மாதவா, நாராயணி, பத்ரகாளி, இந்திரமாலினி, ராமா, ரங்கஸாயி, சாரங்கம் என்கிற வில்லே, ஓங்காரமாக வைத்துக்கொண்டிருக்கும் ஸ்ரீராமா, தேவேசரே. தேவர்களையும், தேவபத்னிகளையும், அவர்கள் அனுஷ்டிக்கும் பிரவர்த்தி, நிவ்ருத்தி, தர்மங்களையும் தாங்கும் தேவ்ப்ருத், இந்திரனுல் முதலில் அறியப்பட்டு, தர்ம பராயணர்களான திக்பாலர்களிடம் ''இவர்தான் ஆதிதேவர், நாராயணர்,'' என்று பிரகடனப்படுத்தப்பட்ட பிரபோ, தேவ தேவா, பரதனுக்கும், தியாகராஜருக்கும், அரஜுனனுக்கும் குருவாக விருந்த சீதாராமா, உமது சிஷ்யனும், பிரபன்னனுமாக என்னை அறிந்து, பிரணவ ராமா, ஓங்கார ராமா, என்னை உன் அன்பினுல் போஷித்து வா. இந்திரனுக்கும் நாயகனுன படியால், என்னை துக்கதயிதனுக இருக்கும்படிச் செய்வதில் உனக்கும், சசீபதியான இந்திரனுக்கும் என்ன சந்தோஷம் இருக்கிறது? நீ லோகாத்யக்ஷர், தரணியைக் காக்கும் பிரபு என்று தெரிந்துதானே, நான் உன்னை ஆராதிக்கிறேன். ராஜீவ நேத்ரங்களுடனும் தயையைச் சொரிந்து, வள்ளல் பெரும் பசுக்கள் போல விருக்கும் உங்களைக் காணுமல் என் ஜன்மம் வீண். தியாகராஜரிடமிருந்து பக்தியையும், வேதாந்த தேசிகரிடமிருந்து பிரபன்ன ஞானத்தையும், அர்ஜுனன், துளசிதாஸரிடமிருந்து பக்தியையும் கடன் கேட்டு, இவன் வருகிருன் என்று யோசிக்கிருயா? காசிபதியான உமாமஹேஸ்வரர், அவர்கள் புத்ரனுன ஓங்கார நாயகர், இவர்களிடம் நான் உன் பக்தியை பிச்சை கேட்டு வந்திருக்கிறேன் என்று உனக்கு யோசனையா? குஹன் தெரிந்து கொண்ட ஞானத்தை விடவா என் நம்பிக்கை மோசம். ஆம், நான் ஒப்புக்கொள்கிறேன். அவர்களுக்கு சித்ரலேகை போன்ற உஷையின் தோழியிருந்து, சித்ரம் எழுதிக் காண்பித்தாள். எனக்கு அது மாதிரி உன் ரூபகுணங்களை, அவர்கள் காட்டிய சித்திரத்தில் அல்லவா தெரிந்து கொண்டு, உஷை மாதிரி லஜ்ஜையைவிட்டு, உங்களை அடைய ஆசைப்படுகிறேன். அவர்களும், நீயும், என்னை ரக்ஷிக்காமல் நிராஹரித்து

விட்டால், நான் யாரிடம் போவேன். கிருபை செய்யமாட்டாயா? சீதாகாந்த விஸ்வகோபின்.]

புண்ய ஸ்ரீயுடன் கூடிய பரதன், ஐந்து தினங்கள் அந்த சீதாராம ஸந்நிதானத்தில் தங்கி, அத்ரிபகவானின் கிருபையால் காட்டப்பட்ட புண்ணிய தீர்த்தங்களில், தங்கி நீராடினான். அந்த ஐந்து தினங்களிலும் அத்ரி ரிஷியிடமிருந்து காசிபதியான மஹாதேவர், உமாமஹேஸ்வர் இவர்களுடைய சுந்தரமான கீர்த்தி பிரபாவங்களையும், பகவான் விஷ்ணு விருஷப்பிரியர் நாராயணருடைய கீர்த்தி பிரபாவங்களையும், சங்கோசமின்றி கேட்டு அறிந்து கொண்டு, ஐந்தாவது நாள் சாயந்திரம் வரை, தம்பி சத்ருக்னனுடன் காலத்தைக் கழித்தான். (1577)

மறுநாட் காலையில் பரதன், தன்னுடன் வந்த பிராம்மணர், ஜனகபுரி மன்னரான ஜனகர், அவருடைய கூட்டத்தார்கள் யாவரும் எழுந்திருந்து, எல்லோரும் ஸ்நானம் செய்த பின்பு, அவர்களை சந்தித்தான். இன்று சுபதினம், நாம் நம் ஊர்களுக்கு திரும்பிப் போவதற்கு நல்ல முகூர்த்தம் என்று மனதில் எல்லோரும் தீர்மானித்தவர்களாக ராமனிடம் சென்றார்கள். கிருபாளு, பிறர் மனத்தின் துக்கத்தை எளிதில் அறிந்து, மஹா அனுகம்பையுடன் துக்கத்தை சகிக்கும் தர்மர், அஹிம்சையை விரதமாகக் கொண்ட ஸத்யர், அவர்களின் மனோபீஷ்டத்தை அறிந்தவராக, துக்காக்கிராந்தராக ஒன்றும் பேசமுடியாமல், முகத்தை (என்னிடம் பராங்முகனாக விருப்பதுபோல) விருந்தார். (1578)

ஸ்ரீராமச்சந்திரனுடைய மனநிலையை, குரு வஸிஷ்டர் அறிவார். அவருடைய சகாக்களான ஜனகர், பரதர் அறிவார்கள். அந்த மாதிரி அயோத்தி மக்களும், ஜனக மக்களும் அறிவார்கள். ஆனால் ராமன் மாத்திரம் பேசாமல் உட்கார்ந்து கொண்டு, காலத்தை எதிர்பார்த்தவராகத் தோன்றினார். பூமியை நோக்கின முகத்துடன், நாம் இன்னும் சோதிக்கலாமா, அவன் திருஷ்டிபதத்தில் வரலாமா என்று யோசனை செய்யும் பெரு மாயன் போலத் தோன்றினார். அந்த சபை முழுவதும் ராமனை ஸ்லாகித்துக்கொண்டு, ஸ்ரீராமச்சந்திரனைப் போல ஒரு ஸ்வாமி, தேவேசர் எங்கும் இல்லை, இருக்கமுடியாது என்று சொல்லிய வண்ணம் இருந்தார்கள். (1579)

பரதன் பார்த்தான், பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய உச்ச நிலையை. "ஐயா" என்று பூர்ணமான பிரேமையுடன் அழைத்

தான். (விஸ்வரூபத்துடன் விசேஷமாக ஜ்வலிக்கும் பரந்தாமன். பிரணவத்தினுல், தாரகமந்திரத்தினுல், அஷ்டாக்ஷரத்தினுல், த்வயத்தினுல். சர்மஸ்லோகத்தினுல், சாஷ்டாங்கமாக பிரபன்ன யோகத்தை அடைந்து நமஸ்கரித்தான். கிருதாஞ்சலிகளுடன் பிரபுவைப் பார்த்து, ''ஸ்வாமி,'' பிரேமை ஆனந்தம் ததும்பும் படி கிருதார்த்தனுக, கிருதக்ஞையுடன், லீலாபத்மம் தாங்கிய மஹாமாயனே, இந்திரகர்மத்தில் அனுராகம் செய்த உத்தம புராதனனே, சீதாராமனே நோக்கி, என்றும் மறக்க முடியாதபடி தப்த வார்த்தைகளே ஸமர்ப்பித்தான். ''பிரபு, என் ஆனந்தத்தை அனுபவிக்கும் மஹா பிரியரே, நான் உமக்கு ருசியாக விருந்து, உமது ஆனந்தத்திற்கு ஹேதுவானேன். நீர் செய்த க்ருஷி பலித்தது என்று ஆனந்திக்கும் ஸ்ரீராமா, ஸ்ரீமானே, என்னுல் உமக்கு யாதொரு தொந்தரவும், கஷ்டமும் வேண்டாம். என் மனோரதங்கள் யாவும் பூர்த்தியாய்விட்டன.'' (பிரஹ்லாதன் முதலிய மாபெரும் பக்தர்கள் வரமாகக் கேட்டு அனுபவித்த உமது பக்தியை எனக்கு தந்தருள். என்னைக் காப்பாற்றி அருள் செய். என குருவே, கிருபாளு.) (1580)

''என் ஸந்தாபங்கள், வருத்தங்கள், குறைகள், தோஷங்கள், பாபங்கள், புண்ணிய தர்மங்கள், யாவும் அடங்கின. எனக்காக இந்த சகல ஜனங்களும் மிக்க க்லேசங்களை அடைந்தார்கள். தங்களையும் மஹா கஷ்டங்களுக்கு உட்படுத்திக் கொண்டார்கள். கோஸாயி, (தீப்தமூர்த்தியே, மஹா கர்மாவே, ஒரு வித்யாஸமும் பாராட்டாமல் பூச்சி, புழு மாதிரி விருக்கும் ஈன ஜன்மங்களுக்கும் மனுஷ்ய தேகம் கொடுத்து சிறந்த ஐஸ்வர்யமான உமது ஸம்பந்த போகத்தைக் கொடுத்த ஸ்ரீராமா,) எங்களுக்கு உத்தரவு தர வேண்டும். நான் ஐயா உங்கள் தாஸன், உங்கள் பக்தன், அயோத்திக்குச் சென்று, பதினுன்கு வருஷங்கள் உமது வ்ரதத்துடன் தீக்ஷை கொண்டு, காத்து உமது அங்கீகாரத்தை எதிர் பார்த்துக் கொண்டிருப்பேன்.'' (உமது ஆக்ஞையின்படி ராஜ தர்மத்தை அவலம்பித்து உம்மால் ஏவப்பட்டு, உமது கைங்கர் யத்தைச் செய்வேன்.) (1581)

''தீனதயாளு, எனக்காக இரங்கின பிரபுவே, உமது சரணங்களை அவலம்பனம் செய்து நான் எந்த உபாயத்தால் உம்மை மீண்டும் காண்பேன்? கோஸலாதிபதியே, ஸாகேத ராமா, என்னை ஆட்கொண்டு ஆளவந்த ஸ்ரீராமா, கிருபாளு. உன் ஆக்ஞையின்படி அயோத்தி திரும்பும் பரதன் எந்தவிதம் பதினுன்கு வருஷங்களுக்குப் பின் உமது பாத சேவைகளை நீர்

ஸ்வயமாக அங்கீகரிக்கும்படி காண்பேன்? எனக்கு உபதேசம் செய்யும்.'' (1582)

'' எங்களைக் காத்து வந்த குருமஹாராஜ், (தேவப்ருத், குரு) உமது சம்பந்தத்தால் உமது ப்ரேமை பக்தியால், நான் இந்த ஸாகேதபுரி வாஸிகள், என் பந்து பரிஜனங்கள், பிரஜைகள் யாவரும் சுசிகளாக நாங்கள் உம்முடைய சாக்ஷாத்காரமின்றி, உம்முடன் சேர்ந்து வாழ்வதைத் தவிர பெரிதினும் யாதொன்றும் வேண்டோம், அதை அடைவதற்காக, பவதுக்க சாகரத்திலிருக்கும் அக்னி தாபங்களைக்கூட சகிப்போம். ஹே பிரபு, (வைகுண்ட நாதா, ரங்கநாத, சாரங்கதரா, பிரணவாகார விமானம் உள்ள ரங்கநாயகி ஸமேதா,) உன் பாதங்களைத் தவிர, பரம பதமும் எங்களுக்கு வேண்டாம். உம்முடைய சுவையைத் தவிர எங்களுக்கு வேறு ஒன்றிலும் ஆசையில்லை.'' (1583)

நீர் எல்லோருடைய உள்ளப் போக்கையும், உங்கள் அடிமையாகிய எனது உள்ளத்தின் போக்கையும் விருப்பத்தையும், இருக்கும் நிலையையும் நன்கு அறிவீர். நீர் எல்லாருடைய மன விருப்பத்திற்கு ஏற்ப நடப்பவர். இருபுறத்துக்கும் தகுந்தபடி கடைசிவரை நடப்பீர். (1584)

(கருத்து: பக்தர்களைக் கடாக்ஷிக்கும் ஸ்வாமி, ஸத்யரே, நீர் எல்லோருடைய ஹ்ருதயத்தில் ஹ்ருதி வேத்யனாகவிருந்து கொண்டும், சாக்ஷியாகவுமிருக்கிறீர். உம்முடைய சரண ருசி, உமது பிராட்டி, பரிவாரங்களின் ருசி ஆனந்தங்களை எங்களிடம் பெருக்கி, எங்களை உங்களுடைய சேவக கைங்கர்யங்களில் பிரவர்த்திக்கச் செய்கிறீர்கள். விருஷப்ரியராக விருக்கும் உம்மிடம் நாங்கள் மோஹப்பட்டு, ஆசையுடன் மீண்டும் ஈஸ்வரராக காணப்பெறும் பாக்யம் எப்போது பெறுவோம்? அதுபோல, நீரும், ஸ்வாமி, ''கிருஷி பலித்தது'' என்று சொல்லும்படி முதித மனத்துடன் எங்களை நோக்கும் நாள் எப்போது வரும்? ஸத்ய ஸந்தரே, பிரணத பாலரே, பக்தர்களைக் காக்கும் விஷயத்தில் விரத தீக்ஷை கொண்ட ஜடாதர ராமா, ஸர்வ லோக சரண்யனான உமக்கு எல்லோரையும் ரக்ஷணம் செய்யவேண்டிய பொறுப்பு இருக்கலாம். தேவரே, நிர்ஹேதுக கிருபையினால் கூட, எங்களையும் ஒதுக்கிவிடாதீர்கள். உம்மால் எல்லோரும் நாங்களும் உள்பட, ஸ்வாமி, உமது ஸம்ரக்ஷகத்திற்குரியவர்கள். எங்களுக்கு இம்மையிலும் நீர்தான்; மறுமையிலும் நீர்தான். இருவித போக மோக்ஷமும் நீர்தான். நீங்கள் ஸர்வதோமுகராக

விருக்கிறபடியால் நாங்கள் சொல்லி, நீர் அறிந்துகொள்ள வேண்டியதில்லை.)

"பிரணதார்த்தி ஹரரே, நாங்கள் உம்மிடம் பூர்ணமாக விஸ்வாஸம் வைத்திருக்கிறோம். நீர் ஸர்வசக்திமான், ஸர்வ வியாபகரானபடியால், எங்களுக்கு ஒருவிதமான விசாரமோ, கவலையோ கிடையாது. இதைப்பற்றி நாங்கள் யோசிக்க வேண்டியதில்லை. நான் வாஸ்தவமாக ஆர்த்தியாகவிருக்கிற படியாலும், நீர் எங்களிடம் அதிக கருணையுடன் வாத்ஸல்யமாக விருக்கிறபடியாலும், நாதரே, நான் உங்களிடம் வரம்பு மீறி பேசுவதினுல் மனக் கலக்கத்தை அடைகிறேன்." (1585)

(கருத்து: எங்களுடைய அகிஞ்சனத்வமும், அனன்ய கதியும், தீனத் தன்மையும் தங்களுக்குத் தெரியும். நாங்கள் படும் க்லேசங்களையும் அறிவீர். பிராட்டியை விட்டுப் பிரியாதவனே, அடியார்களை கைவிடாதவனே, அடியேன் வேறு கதியின்றி உங்களைச் சரணமடைந்தேன். வாக்கால் சொல்லி, மனத்தால் சிந்தித்து, தேகத்தால் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, அபராதங்கள் தோஷங்கள் தங்கள் ஸங்கல்பத்தினுல் நீங்கிய வனுக, உங்களையே பலனுக வரித்து, நம்மிருவர்களுடைய ஸம்பந்தம் ஒழிக்க முடியாதது, ஜகத் ரக்ஷகனுகிய நீர் அறிவில்லாதவை, அவைகளுடன் சேர்ந்த பத்த ஜீவன், அவைகளிலிருந்து விடுபட்ட ஜீவன், ஆகிய யாவருக்கும் ஆதாரமாகவிருக்கும் தாமோதரரே, ஞானகம்யரே, நீர் எங்கள் விஷயத்தில் உபாயமாகவுமிருக்கக் கடவீர். நாராயணு, எங்கள் விஷயத்திலும், பரமாத்மாவாகிய உமது கருணை வேண்டும் இவர்களும் நானும் ஸ்வதந்தர்களல்ல. "மே ந" இவைகள் என்னுடையதல்ல. "நம" என்று சொல்லி பிரபத்தி செய்யும், என்னை ஆத்ம ஹவிஸ்ஸாக ஏற்றுக்கொள்ளவேண்டும். நீர் பிரளய காலத்தில் கூட ஸ்ரீகர்ப்பராக, என்னையும் மார்க்கண்டேயாதிகளையும், சிஷ்டர்களையும் தரிக்கும் புருஷோத்தமனுக விருக்கிறீர். "ந மநம்" என்கிற உபாயத்தை அடைந்தவனுக, "கண்ணபுரத்தம்மானே," உன்னைத் தவிர வேறு உபாஸிக்கத் தகுந்த தெய்வம் இருக்கின்றது என்று எண்ணுபவர்களுடன் சேராமல், நான் விரும்பியேற்றுக்கொண்டது உமது திவ்ய பாத சரணங்களுக்கு அடிமையாய் யிருப்பதையே. இவ்விதம் விஸ்தாரமாகச் சொல்லியதற்கு என்னை மன்னிக்கவும். ஜபர்தஸ்தியுடன் சொல்லப்பட்ட வார்த்தைகளை மன்னிக்கவும். உம்முடைய கிருபையால்

எனக்கு ஸ்பாவமாக யேற்பட்ட கைங்கர்யங்களின் பிரகாரங்கள் எல்லாக் காலங்களிலும், எல்லா அவஸ்தைகளிலும் ஏற்படும்படி அருள் செய்யவேண்டும்.)

[தியானம்

ஹே நாராயணு, பரதன் பராசரர் முதலியவர்களால் ஆத்மாவாகப் பார்க்கப்பட்ட பிரபோ, விஷ்ணு ஞான ஸ்வரூபன், ஸர்வமயன் அதனுல் விக்ஞானம் ஆகிற அம்ருதத்தினுல் எந்த மனிதன் தனது நிஜ ஸ்வரூபத்தை மறந்து, அவரவர்களின் கர்மங்களின் பேத ரூப காரணமாக விளங்கும் சர்வ ஜகத்தையும், சராசரங்களனைத்தையும், அதனுடைய சித்தாந்தங்களையும், ஏகமாத்திரமாக, விக்ஞான ரூபத்துடன் விசுத்த ஆத்மாவுடன், விமலனுகிற அமலனுதிப் பிராணுக எங்கும் பார்க்கிருன். அந்த பரமாத்மாவினுல் கடாக்ஷிக்கப்பட்ட விக்ஞான ஸம்பத்துள்ளவன் விசோகமுடையவனுகவும் (சோகமில்லாதவனுகவும்) லோபங்கள் முதலிய ஸமஸ்த தோஷங்கள் விலகியவனுகவும், ஏகம், அந்த ஏகபுருஷன் ஸத் என்கிறதாகவும் பரமः பரேஸः பாராபாரம் அபாரம் என்று சொல்லக்கூடிய ஜகதீஸ்வரரை, வாசுதேவரை, வெவ்வேறு ரூபத்திலும் வெவ்வேறு பதார்த்தங்களாகவும் பார்க்கிருன். கஜேந்திரனையும் முதலையையும் விடுவித்த உத்தாரணர், இன்று இந்திரனையும் பரதனையும் காப்பாற்ற வந்த உத்தாரணர், அவர்களுடைய பயங்களைப் போக்கும் வீதபயர், ஆசையினுல் கெடாமல் பகவானுடைய தர்மங்களைக் கேட்டும் பார்த்தும் அனுபவித்தும் பிரகடனப் படுத்தியும் பகவானுடைய புண்ய சிரவண கீர்த்திகளை ஆழ்ந்து அனுபவித்தும், தர்மங்களின் சாரமும், ராமர் தர்மத்திற்கு ஸேதுவைப் போல அணையாகவிருப்பதையும், குற்றமற்றதும் என்றும் அழியாததுமான நீண்ட சுகத்தைத் தருவதுமாகிய ராமரிஷி பரதரிஷி வாக்யங்களால் எனக்கு பராசரர் மைத்ரேயருக்கு உபதேசித்தது போலவும், சப்தரிஷிகள் தாமரைக் கிழங்கைத் திருடிய பின்பு திருப்பித் தந்த இந்திரனுக்கு அருளிய தர்ம வசனங்களைப் போலவும் நான் கேட்கும்படி ஆயிற்று. லீலா பத்மத்தை கையில் வைத்திருக்கும் வைரோசனியே, ஸௌதாமினியே, ஸாதுக்களின் சங்கத்தை அடைந்த நான் மின்னல் போலத் தோற்றமுள்ள உங்களுடைய கோடி லாவண்ய அழகு குவியல் கொண்ட சுபதர்சனத்தை எப்போது காண்பேன்? சங்கு சக்கரம் ஏந்தும் தடக்கையனை, கதாதரனை, லீலாபத்மம் கொண்ட துருவ நாராயணனை, என் கிருபாஸிந்துவை, நாரதர்

வியாஸர் துதித்த லக்ஷ்மி நாராயணனை நான் எப்போது பார்ப்பேன்?]

"என்னை ஆட்கொண்ட ஸ்வாமியே, என்னை நீர்தான் திருத்திப் பணி கொள்ள வேண்டும். (நான் உம்மிடமிருந்து விசுத்தமானதும் நிர்மலமானதும் என்றும் நீடித்து ஆனந்தத்தைத் தரக்கூடியதும், அழிவற்றதானதும், தர்மரூபியுள்ளதாயும் ஏகமாத்திரம் பராயணமாக உள்ளதுமானதும், ஸநாதனமான ஏகதர்மத்தை உபதேசித்தருளும். தோஷங்கள், மமகாரங்கள் யாவும் விலகி, நமஸ்காரம் செய்த எனக்கு, சரணாகதியை அடைந்த எனக்கு) ஆத்மகுருவாக, ஆத்ம வித்யையாகிற குஹ்ய வித்யையை உபதேசித்தருளும்." வினயமுள்ள பரதனுடைய வசனங்களைக் கேட்ட ஒவ்வொருவரும் ஹம்ஸம் பாலை மாத்திரம் அருந்தி ஜலத்தை விட்டுவிடுவது போல, பரதனுடைய சரணாகதி வசனங்கள் மிக்க ஸாரமாக விருக்கின்றன என்று சொல்லி அவனைப் புகழ்ந்தார்கள். (வீதபயரே, உத்தாரணரே, புண்யஸ்ரவணகீர்த்தனரே, என் துன்பத்தைத் தெரிந்த வித்வத்தமரே, என் துன்பங்கள் நீங்க உபாயம் தெரிந்தவரே, என்னைக் கிருபையால் கடாக்ஷித்தருளும். பரதனுடைய புகழ்மிக்கதும், அவன் சம்பாஷணைகளை நினைப்பதிலும் கேட்பதிலும் உரைப்பதிலும் எல்லா பாவங்களிலிருந்தும் நீங்கும்படி செய்யும் வசனங்களை ரிஷிகள், தேவர்கள், ஜனக மஹாராஜர், அயோத்தி ஜனகபுரி வாஸிகள், சீதை ராமானுஜன் சத்துருக்னன் ஆகிய யாவர்களும் ஆச்சரியத்துடன் கேட்டு, அவனைப் பலவிதமாகப் புகழ்ந்தார்கள்.) (1586)

தீனபந்துவான ஸ்ரீ ராமன் தன் தம்பியின் வார்த்தைகளைக் கேட்டார். அவனுடைய துன்பத்தையும், அவன் மலின மனத்துடனிருந்ததாலும், அதிக விஸ்வாசமுள்ளவனாகவும், கோப்திருத்வம் கொண்டதாயும், மனத்தை உருக்கும் சொற்களால் அதிவினயத்துடன் ஸமர்ப்பிக்கப்பட்ட பூர்ண சரணாகதியையும் பரதனுடைய நமஸ்காரதிகளாலும், லஜ்ஜையின்றி சொல்லப்பட்ட சொற்களாலும் "என்னை இன்று பரதன் அலங்கரித்திருக்கிறான்" என்று அவர் எண்ணினார். (நான் பெரிய பிராட்டியான சீதையுடன் இருப்பதையும் தெரிந்து என் அங்கீகாரத்தையும் வேண்டுகிறான். நான் இவனுக்கு அனுகூலமாக வேண்டும்.) மஹா சாமர்த்தியமுள்ள பிரபு இவனையும் இந்திரனையும் உத்தேசித்தும் தேசகாலம், சமயத்தில் செய்யப்பட வேண்டிய தர்மங்களையும் ஆராய்ந்து, "எதை எப்போது செய்யவேண்டும்" என்கிற

எண்ணங்கள் கொண்ட பரமேசர், (புருஷோத்தமர் ஸர்வ சக்தி மான், ரிஷிகளால் மிக்க பரிஸ்ரமத்துடன் காப்பாற்றப்பட்ட வித்யையை ஓதுபவன்போல, என் பிரபு, காருண்யவள்ளல்,) பேச ஆரம்பித்தான். (1587)

"என்னை அலங்கரிக்கும் பரதா, உன்னுடைய கவலைப் பொறுப்புக்களையும், காட்டில் வசிக்கும் எங்களுடைய கவலைப் பொறுப்புக்களையும், நம்மைச் சேர்ந்தவர்களுடைய சுகங்களின் பொறுப்புக்களையும், சகல ஜனங்களின் க்ஷேமப் பொறுப்புக்களை யும் யாவற்றையும் குரு மஹா ராஜரான வஸிஷ்ட பகவானிடம் நானும் நீயும் சேர்ந்து ஸமர்பித்து விட்டோம். மிதிலேசரான ஜனகரும் கூட துணைக்கு இருக்கிறார். நம் சிரங்களின் மேல் வஸிஷ்டரும், விஸ்வாமித்திரரும், ஜனகரும் இருக்கிறார்கள். அவர்கள் நம்மை கட்டிக் காக்கும் போது நமக்கு ஒருவிதமான க்லேசங்கள் ஸம்பவிக்காது, வீணாக கவலைப்படாதே." (1588)

"உனக்கும் எனக்கும் இது தான் பரம புருஷார்த்தம். நாம் சம்பாதிக்க வேண்டிய தனம், சுயசஸ், தர்மங்கள், விசேஷமான பகவத் ப்ரீதி ஆகிய யாவும் நம் பிதாவின் ஆக்ஞைக்கு உட்பட்டு அவற்றை நிறைவேற்றி வைப்பதே. இறந்து போன அரசரின் கீர்த்தியை ரக்ஷிப்பதில் நமக்கு உலகத்தின் முன்பும், வேதங் களில் சொல்லப்பட்ட தர்மத்தின் படியும், முக்கியமான கடமை யாக விருக்கிறது." (1589)

"குரு, பிதா, மாதா, எஜமானர் ஆகியவர்களின் கட்டளைகள் யாவையும் பாலனம் செய்வதுதான் நமக்கு நல்லது. அவர் களுக்கு அடங்கின நாம் ஒருக்காலும் தவறுதல் செய்யமாட்டோம் என்கிற பரம விஸ்வாசத்துடன் சகல கவலைகளையும் விட்டவனாக அயோத்திக்கு திரும்பிச்செல். குரு ஆணைப்படி நான் வரும் வரை அயோத்தியை ஆண்டுவா." (1590)

"தேசத்தையும் பொக்கிஷத்தையும் பந்து பரிவாரங்களையும் ஸகல ஜனங்களையும் க்ஷேமங்களையும் குருவாகிற வஸிஷ்ட பாதங்களில் ஸமர்ப்பித்து நிர்பரனாகவிரு. நீயும் அவருடைய பாத துளிகளின் நிழலில் வசிப்பவனாக விருந்து கொண்டு அவருடைய கட்டளையையும் தாய்மார்களின் சொற்படி நடப்ப வனாகவும், சுமந்திரர் போல மந்திரிகளின் சிறந்த ஆலோசனை கூறுவதின்படியும் இந்த பூமியையும், பிரஜைகளையும் சிறந்த ராஜ தர்மத்துடன் அரசாண்டுவா." (1591)

துளசிதாஸர் சொல்கிறார், "என் பிரபு ஸ்ரீராமன் மீண்டும் உபதேசம் செய்தார். ராஜ்யத்தில் முக்கியமான அங்கமாயிருப்ப

வன், மனிதனுடைய முகம் வாய் மாதிரி இருக்க வேண்டும். சாப்பிடுவது, குடிப்பது, போஷிப்பது எல்லாவற்றையும் செய்யும் வாய் விவேக பூர்வமாக தேகத்தின் ஒவ்வொரு அங்கத்தையும் காப்பாற்றுவது போல, நீ விவேக பூர்ணமாக விருந்து கொண்டு எல்லோருக்கும் அன்னத்தை பகிர்ந்து கொடுத்து போஷித்துவா.'' (1592)

''ராஜ தர்மத்தின் ஸர்வ ஸாரமும் மர்மமும் இதுதான். எவ்விதம் மனத்தில் மனோரதம் ஒளிந்து கொண்டிருக்கிறதோ, அதுபோல ஒளிந்து கொண்டிருக்கும் ரகசியமானதும் பிறருக்கு உபயோகப்படும்படி வாழுதலும் தான் சாஸ்திரங்களில் சொல்லப் பட்ட தர்மம், என்று உபதேசம் செய்தார். ஸ்ரீ ரகுநாதன் பரதனை அணைத்து ஆறுதல் சொல்லித் தேற்றினார். ஆனால் பரதன் ஒருவித ஆதாரமுமின்றி மனத்தில் சந்தோஷமடைய வில்லை. அவன் எதையோ தன் சாந்திக்காகத் தேடிக் கொண் டிருந்தான். (1593)

[தியானம்

ஹே மனஸே, பரதனிடமும் தியாகராஜரிடமும் நட்பு கொள்ள விரும்புகிறாயே. உனக்கு சீதாராமனுடைய பக்தனின் குண விசேஷங்கள் தெரியுமா? சீதாராம பக்தன் ஸலில ஸ்வபாவ முள்ள ராமனுக்கு வேண்டியவன். தன்னைப் பற்றி இதைச் செய்தேன், இதைச் செய்வேன் என்று பறை சாற்றிக் கொள்ள மாட்டான். சாகஸம், கபடம், பொய் ஆசரணைகள் யாவும் இருக்காது. சப்பல சித்தத்துடன் இது வேண்டும், என்று ஐஸ்வர் யங்களின் மேல் ஆசையும், பசுபத்னி குழந்தைகள் பதவி இவை களில் ஆசை வைத்து ராமபக்தியை மறக்கமாட்டான். சிவன் மாதவன் என்கிற பேதமும் அவனுக்கு இருக்காது. மஹா பக்தர்களான ஆஞ்சநேயர், வைநதேயர், சதா பஜித்துக் கொண்டிருக்கும் சீதாராம பாதங்களை ஆஸ்ரயித்திருக்கும் பக்தன் தான் ஒருவனே நல்லவன் என்று கர்வத்துடன் ராஜஸ தாமஸ குணங்களில் ஈடுபட்டு, ராமன் கிருபாளு என்பதை மறந்து கெட்ட எண்ணத்தில், தன்னை பாவனம் செய்து கொள்ளாமல், திரியக்கூடாது. சீதாபதியான ராமன் மஹா கிருபாளு தான். திரௌபதியின் ஒரு அலரலுக்கு ஓடி வந்தவன் தெரியுமா? ஆனால் அவள் அனுஷ்டித்த ராஜயோக மார்க்கம் உனக்குத் தெரியுமா? மஹா உத்தமியான சீதை ஒரு வருஷகாலம் ராம கிருபைக்கு காத்துக்கிடக்க வேண்டியதாயிற்று. ராஜசிகா

மணியான ராமன் காரியத்தை அறிந்து செய்பவன். உன்னை அடக்கிக் கொண்டு, ஏ மனஸே, சீதாராமனுடைய கிருபையை தினமும் அவலம்பித்தவனாக, ஒவ்வொரு நிமிஷமும் அதற்கு தகுதியுள்ளவனாக இருக்க பழகிக்கொள். தசரத புத்ரன், வஸிஷ்ட சிஷ்யன், விஸ்வாமித்திர துளசி பிரியன், ரொம்ப கடின மாக சம்பாதிக்க வேண்டியவன். ஜிதா மித்ரனல்லவா அவன். இல்லாத போனால் உமாகாந்தன் சதா தம்புரு சகிதமாக ராம கானம் செய்து கொண்டிருப்பாரா? ஆஞ்சநேயர் சிரஞ்சீவித் வத்தை வாங்கிக் கொள்வாரா? ஹரி பகவானாகிற ஸ்ரீ சீதாராமனை மஹரிஷிகளும் தேவர்களும் சகல சராசரங்களும் அண்டி வாழ் நாட்களை நடத்துவார்களா? நன்றாக புரிந்து கொள்.]

பரதனுடைய சீலமான நடத்தை, நிரதிசயப்ரேமை ஒரு பக்கம்; மற்றொரு பக்கம் வஸிஷ்டருடைய பெருமைகளும், மந்திரிமார்களின் ஸ்நேகமான அன்பும், அங்கு கூடியிருந்த ஸர்வ ஸமாஜத்தினருடைய பக்தியும் ரகுபதியின் மனத்தையும் கிருபையையும் கலக்கியது. (ஆபத்துக்களைப் போக்கும் ஹிரண்யகர்ப்பர், ஹரிபகவான் அங்கு பரதனுக்காகவும், மற்ற வர்களுக்காகவும் மனம் கலங்கி, பக்த பராதீனமானார்.) கிருபா நிதியாகிற பிரபு தனது பாதுகைகளை கழற்றி, பரதனிடம் கொடுத்தார். பரதன் அவைகளை மிக்க மரியாதையுடன் ஏற்றுக் கொண்டு, தனது தலையின் மீது அலங்கரித்துக் கொண்டான். (1594)

[கருத்து: தன்னைப் பிரமாணமாக நம்புவதற்கு தமது மகிமை களை காலம் தேசம் என்று பாராமல், ஸர்வ தர்சனராக விருக்கும் பிரபு, "ஸங்கீர்த்ய நாராயண சப்த மாத்திரம் விமுக்தாஸ் துக் காஸ் சுகினோபவந்தி என்று வேத வியாஸர் சஞ்சயனுக்குச் சொன்னபடி விளங்கும் மஹா நாராயணர், துளசிதாஸர், தியாக ராஜர் போன்ற பக்தர்களுக்கு பலமுறை வந்து போய்க் கொண் டிருக்கும் ஸமாவர்த்தர்; ஆஞ்சநேயசுகர் நாரதாதி ரிஷிகளும் மார்க்கண்டேய பிருகு விஷ்வக்ஸேனர், உமா சம்பு, அனந்த கருடன் முதலானவர்களுக்கும், இந்திரன் போன்ற திக்பாலர் களுக்கும் அவர்களுடைய பத்னிகளுக்கும் ஸனகஸனந்தனாதி களுக்கும் மிகப் பிடித்தமான பிருந்தாவன சரணங்களின் பாது கைகள். சதா காமாக்ஷியாக பக்தர்களைக் கடாக்ஷிக்கும் பாதங்கள். மலர் மகள் வருடும் பாதங்களின் சரண பாதுகைகள். மேருமலையைப் போல சோபனமாகச் சிறந்து விளங்கும் நாயகரின் திவ்ய பாதுகைகள். பிரபுவினால் பரதனுக்கு அன்பாக



பிரபு ராமன் பரதனுக்கு ராஜ தர்மத்தை உபதேசித்து, அதற்குப் பின்பு தனது பாதுகைகளை பரதனுக்கு அளித்தல்.

அளிக்கப்பட்டதும், அவனை கராவலம்பனம் செய்வதற்கு அளிக்கப்பட்ட மஹா அனுக்ரஹமுள்ள சரண பாதுகைகள். (பிரபு லக்ஷ்மி நாராயணனின் மடியில் உட்கார்ந்திருக்கும் அசுர பாலகனாகிற பிரஹ்லாதனின் தலையைத் தடவிக் கொடுப்பது போல,) வருத்தத்தில் தேய்ந்து போன பரதனுடைய தலையை அந்த திவ்ய ரங்கநாத பாதுகைகள் அலங்கரித்தன.]

கருணாநிதியாகிற ராமனுடைய பாதுகைகளை, ராமன் சீதை வஸிஷ்டர் ஆகியோர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போது, பரதன் அங்கீகரித்து, சீதாராமனுடைய அன்பை ஸர்வ காலங்களிலும் பரிபூர்ணமாகப் பெற்றுக் கொண்டான். (அப்பேற்பட்ட பரதனை நான் அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.) கருணை பீடத்தில் அமர்ந்திருக்கும் சீதாராமனுடைய திவ்ய பாதுகைகள் இரண்டு காவலர்களைப் போல, ஜபர்தஸ்துடன் விழிப்புடன் சதா காலத்திலும் மிக்க ஜாக்ரதையாகக் ஸகல பிராணிகளின் க்ஷேமத்தைப் பரிபாலிக்கும் சேவகர்கள் மாதிரி, பரதனுடைய தலையில் அலங்கரித்தன. ஆம், அப்ரமேயரான சீதாராமனிடம் ஆழ்ந்த அன்புள்ள பரத ப்ரேமையை (மஹா ஸ்ரீநிதியை) அன்புடன் ரக்ஷிக்கும் ஸம்புடம் மாதிரி (ரத்ன கர்ப்பம் போல) விளங்கின. அவைகள் ஜீவனுக்கு மிக்கயத்தனத்தால் செய்யப்பட வேண்டிய யோகத்திற்கு "ராம" என்கிற இரு திவ்ய அக்ஷரங்கள் கொண்ட ராம நாமாவாக விளங்கின. (1595)

(கருத்து: அந்த திவ்ய பாதுகைகள் ரங்கநாயகி ஸமேத ரங்கநாதனுடைய பாத சரணங்களில் வீற்றிருக்கும் ஆதிசேஷனுடைய மற்றொரு அவஸ்தையாகிற பரமேஷ்டி குருவின் அம்சம். குருகூர் சடகோபனைப்போல வைஷ்ணவ அக்ரகண்யரின் பிரபாவம். எக்காலத்திலும், யாவராலும் விரும்பப்படுவதும், சுகந்தமானதும், ஆத்மாவுக்குப் பிரணவ காயத்திரியை உபதேசிக்கும் குருவாகவும், ராம நாமமாகவும், த்வயமந்திரமாகவும், சீதாராம சரணங்களை வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் (அர்ஜுனன்) போன்ற ஜீவகோடிகளுக்கு "மாசுசஃ" என்று சொல்லி அபய ப்ரதானம் செய்கிற பரமேஷ்டி குருவின் பாதுகைகள்.)

(இந்த விடத்தில் பகவானுடைய மெல்லிய திருவடிகளின் பெருமைகளையும் வேதாந்த தேசிகர் அனுபவித்ததையும் அனுபவிக்கவும். ஒரு காலத்தில் யசோதையினால் இடுப்பில் கட்டப்பட்ட சலங்கையுடன் இரு மருத மரங்களைத் தாவி நடத்திய மெல்லிய பாதங்கள், கோபிகைகளின் வீடுகளில் உறி ஏறிய மென் பதங்கள். காளியன் தலையில் நடமாடிய கூத்தபிரானின்

குஞ்சித மஞ்சித சிஞ்சித பாதங்கள், மலர்மகள் வருடும்போது சிவந்து போகும் பாதுகைகள், மறு பிறப்பை அறுக்கும் பாதங்கள், தர்மனுக்காகத் தூது சென்ற பாதங்கள், அர்ஜுனனுக்காக ரதம் ஓட்டி கீதை சொல்லிய பிரபன்ன வித்யையின் ஆசார்யனின் பாதங்கள், திருவிக்ரம அவதாரத்தில் ஏற்பட்ட கங்கையின் உற்பத்தி ஸ்தானமாகத் திகழ்ந்த பாதங்தள், அகல்யையின் சாப விமோசனம் ஏற்படக் காரணமான பாதங்கள், அகஸ்தியர் போன்ற மஹரிஷிகளின் ஆஸ்ரமங்களுக்குச் சென்ற பாதங்கள், துளசி தாஸருக்கு சித்திர கூடத்தில் காக்ஷி அளித்த சுந்தர பாதங்கள், பரதன் தலைமேல் ஏறி அமர்ந்தது போல, என் நெஞ்சில் பதிந்து நடமாடும் சுந்தர பாதங்கள். ஆஹா! அந்தப் பாதங்களின் பாதுகைகள்.)

ரகு குலத்தின் பெருமைகளைக் காக்கும் இரு வாசல்கள் போல கிர்த்தி பிரபாவம் வாய்ந்த கதவுகள் போலவும், சுகந்தமான கர்மங்களைச் செய்வதற்கு உபயோகப்படும் இரு கரங்கள் போலவும், சீர்மையான பாதையில் செல்ல விருப்பமுள்ளவனுக்கு மார்க்க தரிசியாக விருக்கும் இரு நயனங்கள் போலவும் அந்த பாதுகைகள் காக்ஷி அளித்தன. பரதன் மிக்க ஆனந்தத்துடன் கரவலாம்பனம் செய்யும் இந்த பாதுகைகளை அடைந்தான். அவனுக்கு ராம வழியில் செல்லுவதற்கு ஆதாரம் கிடைத்தது. அந்த சுக ஆனந்தம் ராமனும் சீதையும் மிக்கச் சந்தோஷத்தோடு அயோத்திக்கு திரும்பி வர சம்மதிப்பதுபோல விருந்தது. (1596)

(கருத்து: அரவிந்த மலரில் தோன்றிய பத்ம சீதையின் இரு கடைக்கண்களின் ஓரத்தில் ஒதுங்கும் பகவானுடைய இரு நயனங்கள்; சதா பரதனை பரிபாலித்து வரும் மஹா பாதுகைகள். பரதன் அவைகளை முதித மனத்துடன், தன் ஸ்நேக அவலம்பனத்திற்காக யேற்றுக் கொண்டான். அவன் அடைந்த ஆனந்தம், அடைந்த ஸ்ரீநிதி அவன் அனுபவித்த சீதாராம கிருபையை யார் என்ன சொல்லமுடியும்? ஆஞ்சநேயர் ராமலக்ஷ்மணனை தோளில் தூக்கிக் கொண்டு போனுல் எவ்விதம் ஆனந்தப்படுவார், அதுபோல, பரதன் சீதா ராமன் ஆகிய இருவர்களையும் தன் தலையில் சுமந்து கொண்டிருப்பதாக ஆனந்தத்துடன் அனுபவித்தான். வைஷ்ணவ பக்தன் லக்ஷ்மி நாராயணனை சுமப்பது போலவும், பகவத்பக்தி பாகவத பிரேமை ஆகிய இரண்டையும் வகிப்பது போல ஆனந்தித்தான். அப்பேற்பட்ட பாதுகைகளைக்கொண்ட பரதனை துளசி தாஸர், கம்பர், உமாசங்கரர், தியாகராஜர், கருடன் விஷ்வக்

ஸேனர், குஹன், ஆஞ்சநேயர், வால்மீகி, ராமானுஜன், வேதாந்த தேசிகர், நம்மாழ்வார் போன்ற வைஷ்ணவ பக்தர்களை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். அர்ஜுனன், தர்மர், திரௌபதி, வேத வியாஸர் ஆகியவர்களிடம் காட்டிய மஹா அன்பு எனக்கு, வைநதேயர், பணிபதி நாகராஜன் கிருபையால், சித்திக்கட்டும். ஹே மனஸே, ராமனை சீதையுடன் விரும்புவாயாகில் சீதாராமன் நித்யவாசம் செய்யும் பக்தர்களை அண்டி, அவர்களிடம் லயித்திரு.)

பரதன் மீண்டும் மனத்தினால் ராம பாதங்களுக்கு நமஸ்காரம் செய்து அயோத்தி திரும்புவதற்கு விடை கேட்டான். அப்போது ராமன், அடக்கமும் பொறுமையும் உருவாகத் தோன்றினன். பரதனைக் கட்டி இறுகத் தழுவிக் கொண்டார். (ஸ்ரீவத்ஸவக்ஷன் ஸ்ரீதரன், ஸ்ரீயப்பதி, உமையை சங்கரர் இறுகத் தழுவுவது போல, பரத வக்ஷஸ்தல) ராமன் பரதனை இறுக அணைத்துக் கொண்டார். (அந்த இன்பத்தைப்பற்றி ஊர்த்வ ரேதஸ்ஸான ஆஞ்சநேயருக்குத் தானே தெரியும். கிருபாளு, பரதனைத் தழுவிய சீதாராமா, பார்வதி சங்கரர் ஆனந்தப்படுவது போல விளங்கும் என் பரமாத்மதத்வமே, உம்மை பரதனையும் ஆஞ்சநேயரையும் சிவ பார்வதியையும் முன்னிட்டு நமஸ்கரிக்கிறேன்.) இங்கே இவ்விதம் நடந்து கொண்டிருக்கும்போது அமரபதி இந்திரன் இதுதான் தக்க சமயம் என்று எண்ணி, அயோத்தி, ஜனக மக்களிடம் கால தாமதத்தினால் யேற்படும் மனக்லேசங்களை மாயையினால் உண்டு பண்ணினான். (1597)

அந்த மாயமும் ஒரு விதத்தில் அந்த மஹாபுண்யம் வாய்ந்த மக்களுக்கு ராம பிரஸாதமாகிற வரமாகத் தோன்றியது. ராம சீதா, லக்ஷ்மண வியோகத்தால் மரித்துவிடுவோம் என்று அவதிப்பட்ட அவர்களுக்கு மீண்டும் அவர்கள் கிடைக்கக்கூடும் என்கிற நம்பிக்கையை (ம்ருத சஞ்சீவினி மாதிரி) எழுப்பி அவர்களை உய்வித்தது. அந்த திவ்ய பாதுகைகள், பரதனின் ராம விஸ்வாஸம், பரதனால் ஏற்படப்போகும் குருகடாக்ஷம் ஆகிய யாவையும் சித்திக்கப் பெற்று அவர்களுடைய சோகத்தை நாசம் செய்து, சீதாராமனைச் சேர்த்து வைத்து, (சூடாமணி, அங்குலீயகம் மாதிரி) இரு சஞ்சீவினி மருந்துகள் போல விளங்கின. அந்த மருந்துகள் இல்லாத போனால் சீதாராம லக்ஷ்மண வியோகத்தினால் பெரும் வியாதி ஏற்பட்டு அவர்கள் மரித்தே போயிருப்பார்கள். (1598)

ராம கிருபை ஸகலருக்கும் உயிரையும் அளித்து புஷ்டியைக் கொடுக்கும் அம்ருதம் போல விளங்கியது. முதலில் விரோத மான மனமுள்ள தேவதைகளுக்கு தங்கள் காரியம் இனி சித்திக் கும் என்கிற நம்பிக்கை உண்டாக்கியது. அதனுல் அவர்கள் அந்த அயோத்தி ஜனங்களை ரக்ஷிக்கும் ஹிதகாரிகளாக மாறி ஞர்கள். (ராமனுடைய பரந்த வக்ஷஸ்தலம்; சீதை சின்னமுன ராமன்; இரு தீர்க்க பாஹுக்கள், அம்ருதத்தைப் பொழியும் புஷ்கராக்ஷங்கள்; மதுரமான வார்த்தைகளைக் கொட்டும் இன்ப கரமான தித்திக்கும் வாய்;) என் பிரபு சீதாராமன் பரதனை மீண்டும் இறுகத் தழுவிக்கொண்டு உச்சி மோர்ந்து ஆசீர்வதித் தார். (வைகுண்டத்தில் வந்து சேரும் பிரபன்னன் மணிமா மண்டபத்தில் பணிபதி சயனத்தில் எழுந்தருளியிருக்கும் லக்ஷ்மி நாதனுகிற நாராயணன் ஸந்நிதானத்தில் எவ்விதம் ஆனந்த மடைவானே அதுபோல ராமனுடைய பிரேமையை சீதையின் ஸந்நிதானத்தில் பரதன் ஆனந்தமாக அனுபவித்துக் கொண்டி ருந்தான்.) அதை அனுபவிப்பதில் ஈடுபட்ட பரதன் பேச முடியாமல் தத்தளித்துக் கொண்டிருந்தான். அவன் பாதங்களைப் பற்றின நான் அதை எவ்விதம் விவரித்துச் சொல்லமுடியும்? என்று துளசிதாஸர் சொல்வது போல நானும் சொல்லுகிறேன். (1599)

[தியானம்

துஷ்டர்களை சிக்ஷிப்பதற்கும் சிஷ்டர்களை அனுக்ரஹிப் பதற்கும் அவதாரம் செய்த ராமா சீதா, என் பிறப்பு, தமஸ் குணங்களால் நிரப்பப்பட்டு பிறருக்கு ஹிம்சை செய்வதையே நீக்க முடியாத ஸ்வபாவமாகப் பெற்றேன். ஒரு தடவை மிக்க சிரமப்பட்டு மஹா துஷ்ட ஸ்வபாவமுள்ள நான் உன் திவ்ய பாதார விந்தங்களை நமஸ்கரிப்பதால் உன் ரக்ஷகத்தை பலிசக்கிர வர்த்தியும் காளிங்கனும் அடைந்தது மாதிரி நான் அடைந்து விடுகிறனே. இவ்விதமிருக்கும் போது நாராயணு, ஸ்வயமாக ரகுபதி, ஸாத்வதாம்பதி, ஸத் ஸம்பிரதாய பிரபன்ன பக்தனுகிற பரதனுக்கு தானே விரும்பி உன்னை வந்து அடைந்து உன் அனுக்ரஹம் பெற்றுல் எவ்விதம் ஆனந்தம் இருக்கும்? பரதனை என் திருச்சிற்றம் பலமாகவும், தர்ம க்ஷேத்ரமாகிய ஹரிவக்ஷ ஸ்தலமாகவும் நான் நினைக்கிறேன். ஹே புருஷா, புராதனு, மஹானுபாவா, தர்ம விதுத்தமரே, எனக்கும் பலிக்கும் காளிங் கனுக்கும் கிருதாந்த கிருத்தாக வந்த மஹா அனுக்ரஹ

மூர்த்தியே, உமைக்கு மஹேஸ்வரரால் உபதேசிக்கப்பட்ட மோக்ஷ உபநிஷத்தாகிற வைராக்யமே, பிரஹ்லாதனுக்கு அனுக்ரஹித்த மஹா நாராயணு, உம்முடைய பாதபங்கஜங்களின் மகரந்த தேனை பிரும்மா முதலிய தேவர்கள் உம்மை சரண மடைந்து அனுபவிக்கிருர்கள். துஷ்டர்களாகப் பிறந்த நாங்கள் உமது அனுக்ரஹத்தால் அல்லவோ, உமது பாத தூள்களை வலுவில் யத்ருச்சையாக அடையப் பெறவேண்டும். நீர் பிரஸன்னம் அடைந்தால் உம்முடைய தாக்ஷிண்ய திருஷ்டி பதவியை அடைகிறேம். ஹே அமிதயோகீஸ்வரரே, மாயா லீலையை ஆபரணமாகக் கொண்ட விஷ்ணே, காருண்யஸிந்தோ, பக்தர்களை அனுக்ரஹிக்கும் விசாரதரே, ஸர்வாத்மன், கல்பதரு மாதிரி விளங்கும் உமது பாத பல்லவங்கள் துஷ்டர்களுக்கும் சிஷ்டர்களுக்கும் மஹா அனுக்ரஹமாக விளங்குகிறது. ஹே பகவான், பரத பிரிய சீதாராமா, உம்மிடமிருக்கும் ஸமதிருஷ்டி விஷமர்களுக்கும் துஷ்டர்களுக்கும் மஹா அனுக்ரஹமாயிருக்கும் போது, மஹா பாகவத பக்தனை பரதனுக்குக் காட்டிய பிரேமை உமது கிருபையாலே அடையப் பெற்ற மஹா சிறந்த பிரஸாத மாகவிருக்கும் என்று சொல்ல என்ன தடையிருக்கும்? அச்சுதா மதுசூதனு, கோவிந்தா, முராரி, இந்திரனுடைய பயத்தைப் போக்கின வாமனு, உருக்ரமா, பரதனையும் அயோத்தி ஜனங்களை யும் ரக்ஷித்த பாதுகைகளையும் நமஸ்கரித்து உமது ரக்ஷணத்தை பிரஸாதமாக வேண்டுகிறேன்.]

பரதனுடைய நிலைமை சொல்ல முடியாதபடி ஆனந்த சமூகத்தினுல் அடையப்பட்ட அனுக்ரஹ பிரஸாதமாகவிருந்தது. (மஹா பலிச்சக்கரவர்த்தி உருக்ரமனுல் பிரஸாதிக்கப்பட்ட பின்பு எவ்விதம் பத்த அஞ்சலியுடன், பாஷ்பங்களுடன் பகவானுடைய தயையால் அம்ருதம் தெளிக்கப்பட்ட கற்பக விருக்ஷம் போல சகலருக்கும் பகவத் ஸம்பந்தத்தைக் கொடுக்கும் மஹா அனுக்ரஹ சாலியாக விளங்கினுன்.) பரதனுடைய பிரபுல்ல லோசனங்களி லிருந்து ஆனந்த பாஷ்பங்கள் உதிர்ந்து கொண்டிருக்க, மனம் ராம ஹ்ருதயமாக, சரீரம் புல்லரிக்க, ராமபக்தி பிரவாஹமாக பெருகிக் கொண்டிருந்தது. தர்மத்தை வைராக்யமாக அனுஷ்டிப் பதில் மிக்க தீரனுகவும், ஆபத்காலங்களிலும் ஸத்ய தர்மத்தை விடாத ரகுநாதனும் ஆச்சரியப்பட்டு மனக்கலக்கம் உள்ள வனுகத் தோன்றும் பரதன். ஸ்ரீராமனும் பரதனுடைய புண்ய மான பிரபன்ன நமஸ்காரத்தை அங்கீகரித்தும், தான் ஒன்றும் பண்ண முடியவில்லையே என்று வருத்தப்படுகிறவராக பிரேமை

கண்ணீர்களை விட்டு அவனை சமாதானப் படுத்தினர். அவருடைய அரவிந்த நேத்ரங்களிலிருந்து பெருகும் ஜலத்திவலை களைக் கண்டு, தேவகணங்கள் மறுபடியும் துக்கத்தில் ஆழ்ந் தார்கள். (1600)

முனிகணங்கள், குருவஸிஷ்ட பகவான், ஜனக, மஹாராஜர் ஆகிய மஹாஸ்ரேஷ்டர்கள், தங்கத்தை ஸ்புடம் செய்து மஹா பரிசுத்தத்தை அடைவிப்பது போல, ஆபத்துக்களிலும் விசுத்த மான ஞானத்தினுல் பிரகாசிக்கும் விக்ஞானிகள், ஸத்யத்தை வ்ரதமாகவும் கவசமாகவும் வைராக்யத்தை எக்காலத்திலும் அனுஷ்டிக்கும் ஞான சீலர்கள், பிரும்மாவினுலேயே ஸ்வயம் நிர்லேபமாகிற வைராக்யத் தன்மையினுல் படைக்கப்பட்ட மஹா உத்தமர்கள், ஜகத் ஸம்சாரமாகிய ஜலத்தில் கமல புஷ்பத்தின் இலை மாதிரி ஸம்பவித்தவர்கள், மஹானுபாவர்கள், மோக்ஷ உப நிஷத்தாகிற வைராக்யத்தை அனுஷ்டிக்கும் முமுக்ஷுக்கள். (1601)

அவர்கள் ரகுவானுடைய அபார பிரியத்தையும், பரத னுடைய நிரதிசயமான பக்தி பிரேமையையும் கண்டு, ஸ்தம் பித்துப்போய் விட்டார்கள். இது வல்லவோ பகவானுடைய நிஜ ஸ்வரூபமும், சேதனனுடைய இயற்கையாக உள்ள ஸ்வரூபமும், மஹாமகிமைகளுடன் இருவர்களும் பிர்காசிக்கிருர்கள். அந்த இன்பக் காக்ஷியைக் கண்ட மஹாபாக்யவான்களாகிற அவர்க ளுடைய மனமும் சரீரமும் ஆனந்தச் சொற்களும் எல்லையை மீறி அத்யந்த ஆனந்தத்தை அடைந்தன. (1602)

வைராக்யம் ஞானம் ஆகிய இருகுணங்கள் பக்தி பிரேமை யுடன் கலந்திக்கும்போது விக்ஞான சீலர்களான ஜனக மஹாராஜரும் குரு வஸிஷ்ட பகவானும் பரத ராம ப்ரேமையில் ஈடுபட்டவர்களாக கட்டப்பட்டு காணப்படும்போது, லெளகிக மான ஜனங்களின் ஸ்வபாவங்களை சொல்லவாவேண்டும்? இயற்கையாகவே பிராக்ருத ப்ரீதி உள்ள ஸ்வபாவமுள்ளவர்கள் இப்பேற்பட்ட அனுத்தமமான பரதராம விஸ்லேஷத்தினுல் ஏற்படும் வியோகத்தை வர்ணனை செய்வதே, என் போன்ற கவிகளுக்கு மிக்க கொடியதான செய்கையாக விருக்கிறது. நிச்சயமாகவே நான் கொடியவனுக தான் இருக்கவேண்டும்.! (1603)

"அந்த கவிகளின் இயற்கை ஸ்வபாவம் இந்த விஷயத்தில் தளருகிறது. மனம் தயங்குகிறது. இது வர்ணிக்கத்தகுந்த விஷயமல்ல." இதை மனத்தால் தியானித்து, இன்பம் அனுபவிக்க

வேண்டிய விஷயமாச்சுதே என்று இந்த சமயத்திற்கு ஏற்ப, நானும் இதை தியானம் செய்து இன்புறுகிறேன். (அபிராக்ருத மான பரத ராம ஸ்நேகம் வைகுண்டத்தில் பகவான் நாராயணன் தன்னிடம் வரும் சேதனனை, "க்ருஷி பலித்தது" என்று சந்தோஷப் பெருமிதம் அடைவது போல, இயற்கையானதும், அனுத்தமமான பிரேமை ஸம்பத்துக்கள் இவை.) பிரபு பரதனை மீண்டும் இறுகத் தழுவி, அவனை ஆஸ்வாஸப்படுத்தினர். அதன் பிறகு, சத்ருக்னனை தன் மடியில் உட்கார வைத்து, அவனையும் முத்தமிட்டு தன் ஹ்ருதயத்துடன் தழுவி ஆசீர்வதித்தார். (1604)

பரதனுடைய மனேபீஷ்டத்தைத் தெரிந்து கொண்ட அந்த மந்திரிகள், ராஜசேவகர்கள் தங்கள் வேலைகளில் ஈடுபட்டவர்களாக, அயோத்தி செல்வதற்கு ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தனர். இதைக் கேட்டு, இரு சமாஜத்தார்களும் அதிகமான துக்கத்தை அடைந்து, அவர்களும் திரும்பிப் போவதற்கு ஏற்பாடுகளை தயார் செய்ய ஆரம்பித்தார்கள். (1605)

பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய திவ்ய பாதங்களை, அந்த பரத சத்ருக்னர்கள் வணங்கி நமஸ்கரித்து, ஸ்ரீராமச்சந்திரனுடைய ஆக்ஞையைத் தலையில் சுமந்த அந்த தீரர்கள், அயோத்திக்குத் திரும்பலானர்கள். அந்த மஹரிஷிக் கூட்டங்கள், தபஸ்விகள், வனதேவதைகள் அந்த இரு ராஜகுமாரர்களை ஸம்மானித்துப் புகழ்ந்து ஆசீர்வதித்தார்கள். இதுவல்லவோ ராமபக்தி, இதுவல்லவோ பாகவத பிரேமை, இதுவல்லவோ வைஷ்ணவ சீலம். (1606)

அதன் பிறகு லக்ஷ்மணனை, கிரமமாகத் தழுவி விடை பெற்றுக்கொண்டு, இரு ராஜசகோதரர்களும், சீதையின் சரண கமலங்களில் அடிபணிந்து, வினயத்துடன் தங்கள் பிரார்த்தனையை நிவேதித்து, அவளையும் பிரதக்ஷணம் செய்து, ஸகல மங்களங்களுக்கும் ஆதாரமாகிற ஸ்ரீதேவியின் அனுக்ரஹ பிரஸாதத்தை அடைந்தவர்களாகவும் விளங்கி, அதிபிரேமையுடன் அந்த பரத சத்ருக்னன் அயோத்திக்கு திரும்பினர்கள். (1607)

ஸ்ரீராமன் ஜனகரை அதிவினயத்துடன் நமஸ்கரித்தார். அவருடன் லக்ஷ்மணனும் கூட விழுந்து நமஸ்கரித்தான். இருவர்களும் அதிபிரேமையுடனும், வினயத்துடனும் அவரை நமஸ்கரித்து ஆசீர்வாதம் பெற்றுர்கள். அவரிடம் ஸ்ரீராமன் சொன்னர் "தேவா, என் பேரிலும், சீதையின் பேரிலும், தயையினல் நிரம்பப்பட்டு, அதிக சிரமத்துடன் எங்களை பார்ப்ப

தற்கு பெரிய சமாஜ சகிதம் வனம் வந்திருக்கிறீர்கள். நான் உங்களுக்கு மஹா கிலேசங்கள் கொடுத்துவிட்டேன்.'' (1608)

''ஐயா, எங்களுக்கு மங்கள ஆசீர்வாதங்கள் செய்யுங்கள். பிறகு மிதிலேக்குச் செல்லுங்கள்'' என்று வினயமாகச் சொன்ஞர். அதன் பிறகு ஜனகமஹாராஜர் மிக்க தைரியமடைந்து, தன் மனத்தை கட்டுப்படுத்திக்கொண்டு, ராமனிடமிருந்து விடைபெற்றுக் கொண்டார். அவரும் புறப்பட்டுப் போனதை பார்த்த முனிஜனங்களும் ராமனிடம் வந்தார்கள். ஸ்ரீ சீதாராமன் அந்த முனிகணங்களே விஷ்ணுவுக்கும், மஹாதேவருக்கும் சமமாக கௌரவமாக நடத்தி, அவர்களே நமஸ்கரித்து, அவர்களுடைய ஆசீர்வாதங்களேப் பெற்றுக்கொண்டு, அவர்களேயும் திரும்பிப் போவதற்கு அனுமதித்தார். (1609)

[தியானம்

ஹே ராமா, சீதா, நாராயணு, கதாதரா, கருடத்வஜா, பரதத்வஜரே, ராவணன், துர்யோதனன், மிக்க சக்தி, தேஜஸ், ஐஸ்வர்யங்கள் வாய்ந்தவர்களாக இருந்தபோதிலும், லோபத்திஞல் அதர்மத்தை கைக்கொண்டார்கள். அவர்கள் ஸ்வதர்மத்தை அனுஷ்டித்தும், ஸதாசார்யர்களின் கிருபையை அடையவில்லே. அதஞல் பகவானுடைய கோபத்திற்கு ஆளாஞர்கள். தர்மபுத்ரர் ஸதாசார்யரான வேதவியாஸருடைய மஹா அனுக்ரஹத்தை பரதன் வஸிஷ்டருடைய மஹா அனுக்ரஹத்தை அடைந்தது போலவும், ஹே சீதாராமா, நீங்கள் வஸிஷ்ட, விஸ்வாமித்திர, அத்ரி, அகஸ்திய பிரஸாதங்களால் கஷ்டங்களேத் தாண்டியது போலவும், மஹா கஷ்டங்களேத் தாண்டிஞர்கள். பரதன் ஸதாசார்ய ஸம்பத்திஞல், உன் பாதங்களே அவலம்பித்து மஹா துக்கத்திலிருந்து விடுபட்டான். அதுமாதிரி சீதாராமா, உன் பாதங்களே அவலம்பனம் செய்யும் எனக்கு தர்மபுத்தியுள்ள ஸதாசாரிய சம்பத்தை அனுக்ரஹம் செய்யவேண்டும். என் பேராபத்துக்களே நீக்கி, நீ பலி, பிரஹ்லாதனே கதாபாணியாக விருந்து சம்ரக்ஷித்தது மாதிரி, கருடத்வஜா, கதாதரா, சீதா மனேகரா, என்னேயும் ரக்ஷிக்க வேண்டும்.]

ஸ்ரீ ராம லக்ஷ்மணர் ஆகிய இரு சகோதரர்களும், ஜனகரின் மஹாராணியாகிற சுநயனுவிடம் சென்று, அவளுடைய திவ்ய பாதசரணங்களில் நமஸ்கரித்து, அவளுடைய ஆசீர்வாதங்களேப் பெற்றுத் திரும்பி வந்தார்கள். அதன் பிறகு அவர்கள் கௌசிக மாமுனிவரையும் நமஸ்கரித்து, ஆசீர்வாதம் பெற்ருர்கள். அங்கு

வந்திருந்த வாமதேவர், ஜாபாலி ஆகிய மஹரிஷிகளையும் நமஸ்கரித்து, அவர்களின் ஆசீர்வாதங்களையும் பெற்றுக்கொண்டு, புரஜனங்களையும், பந்து பரிவாரங்களையும், மந்திரிகளையும் நமஸ்கரித்து (1610)

அவர்களின் யோக்யதைக்கு தக்கபடி, வினயவினதிகளுடன் நமஸ்கரித்து, அவர்களுடைய மங்கள ஆசீர்வாதங்களையும் பெற்றுக் கொண்டார்கள். லக்ஷ்மணனும் அவர்களை நமஸ்கரித்து ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டான். அதன் பிறகு மஹா கிருபையை வாரி அளிக்கும் வள்ளல், அங்கு வந்த நாரிபுருஷர்கள் யாவரையும் ஸம்மானித்து, யதாயோக்யம் நமஸ்கரித்து, அவர்களையும் அயோத்திக்கும், ஜனகபுரிக்கும் செல்லுவதற்கு வேண்டிக் கொண்டார். (1611)

அதன் பிறகு பரதனுடைய மாதாவான கைகேயியின் பாதங்களை நமஸ்கரித்து, பிரபு ஸ்ரீராமச்சந்திரன் தன்னுடைய சுசியான ஸ்நேக பிரேமையைக் காட்டி அவளை ஆனந்தித்தான். அதனால் அவள் தன் குற்றங்களை மறந்து ஸ்ரீசீதாராமனை இறுகத் தழுவிக் கொண்டு முத்தம் இட்டு, அன்பான ஆசீர்வாதங்களை அளித்தாள். அதன் பிறகு அவளை நல்ல பல்லக்கில் ஏற்றி அயோத்திக்கு அனுப்பிவித்தார். (1612)

ராமன் மீது அத்யந்த பிரியம் கொண்ட சீதாதேவி தன்பந்து ஜனங்களிடம் கலந்து கொண்டு, அவர்களை நமஸ்கரித்து பரம புனிதரும், பிராண பிரியர்களான மாதா பிதாக்களை நமஸ்கரித்து, அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பி வந்தாள். அதன் பிறகு மாமியார்களான கௌஸல்யா சுமித்திரா கைகேயி தேவிகளை நமஸ்கரித்து அவர்களால் தழுவப்பட்டு, அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டாள். அவளுடைய பிரணமங்களையும் அவர்களால் காட்டிய பரமப்ரீதியையும் கவிஞனின் ஹ்ருதயத்தை கடினமாக்கி உத்ஸாஹமாக்க முடியாதபடி காட்டினாள். அதை நான் விவரிக்க முடியாதபடி அற்பபலத்துடனிருக்கிறேன். (1613)

அவர்களுடைய புத்திமதிகள், அனுகூலமான சிக்ஷைகளையும் மங்களகரமான ஆசீர்வாதங்களையும் அந்த சீதாதேவி வினயத்துடன் பெற்றுக் கொண்டாள். அதன் பிறகு இருதரப்பினர்களின் மாதாக்களின் ப்ரீதியை அடைந்தவளாக, அந்த சிறிய பாலை ப்ரேமை ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கினவள் போல விளங்கினாள். அந்த சமயம் ரகுபதி அழகான பல்லக்குகளை தரவழித்து அவைகளில் தன் தாய்மார்களை ஏற்றினர். (1614)

அடிக்கடி அந்த ராம லக்ஷ்மண சகோதரர்கள் அதிக பிரேமையினால் தங்கள் தாய்மார்களைத் தழுவிக்கொண்டு ஆஸ்வாசப்படுத்தினார்கள். அருமாதிரி அவர்களும் அந்த குழந்தைகளை அணைத்து, உச்சிமோந்து மங்கள ஆசீர்வாதங்கள் செய்து, தங்கள் ஸ்நேகத்தை வெளிப்படுத்தினார்கள். (1615)

பரதனுடைய பரிவாரங்களும் ஜனக மஹாராஜருடைய பரிவாரங்களும் அலங்கரிக்கப்பட்ட யானை குதிரை இன்னும் அநேக விதமான வாகனங்களுடன் புறப்படுவதற்கு ஏற்பாடு செய்தனர். (1616)

ஹ்ருதயத்தில் ஸ்ரீராமனையும் சீதையையும் லக்ஷ்மணனையும் தரித்துக் கொண்டு, ஸகல ஜனங்களும் தங்கள் ஊர்களுக்குத் திரும்பினார்கள். காளைமாடுகள், குதிரைகள், யானைகள் இன்னும் அநேக மிருகவாகனங்கள் யாவும் மனத்தில் அதிபரவசத்துடன் ராமபக்தியை அசஞ்சலமாகப் பெற்றுக் கொண்ட காரணத்தினால் சென்று கொண்டிருந்தன. (1617)

[தியானம்

ஹே ராமா நாராயணா, சீதாபதே, எந்த சீதை, எந்த பரதன் வெகுகாலமாய் விட்டுப் பிரிந்த உம்முடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்து, ஸகல துக்கங்களையும் ஸகல க்லேசங்களையும், தாபத்ரயங்களையும் மறந்து, ஆனந்தமடைந்தார்களோ அந்த உத்தமமான பூர்ண சந்திரர்களைப் போல விமலமுக மண்டலத்தை நான் எப்போது காண்பேன்? ஹே உருக்ரமரே, உபேந்திரரே, பிரும்மருத்ராதிகளையும் தன் அபிப்ராயத்தில் இருக்கும்படி செய்யும் ஜேதா, அத்ரி அகஸ்திய பிரும்ம ரிஷிகளுக்கு அனுக்ரஹம் செய்ய விரும்பும் வாமனரே, அர்ஜுனனுக்கும் இந்திரனுக்கும் சகாவாகவிருக்கும் ஸுவீரரே, நான் உன் எண்ணத்தை தெரிந்து கொண்டேன். வ்ரததீக்ஷையுடன் பிருஹஸ்பதியின் வசனத்துக்கு அடங்கிய இந்திராணி, புலோமை, சசீதேவி படும் கஷ்டங்களையும் அவளுடன் கூட வ்ரத தீக்ஷையுடனிருக்கும் திக் பாலர்களின் மனைவிகளையும் அப்சரஸ்களையும் அனுக்ரஹம் செய்ய விருப்பமுள்ள சீதையின் மனோபீஷ்டத்தை சாதிப்பதற்காக பரதனை தர்மஹ்ருதயத்துடனும், ருதம் சத்யம் ஆகிய இரண்டும் மார்பில் அலங்கரிக்க அரவிந்த ஹஸ்தையான சீதையை ஒரு தடவை பார்த்துக்கொண்டு ஆஸ்வாசப்படுத்தினீர். பரதனும் உம்மை குலதனம் என்று நினைத்து உம்முடைய கிருபையை அடைந்தால் பரம சுக்ருதம் என்று நம்பி அயோத்தி திரும்பினான். பரதனு

டைய பாதங்களைத் தாங்கும் எனக்கு உமது திருவடி சம்பந்தம், திருமுக தரிசனம் எப்போது கிடைக்கும்? சீதையை நான் அடைந்து அவளுடைய புருஷகாரத்தினால் எப்போது உம்மை அடைவேன்? ஆஞ்சநேயருடைய மித்ரா, என்னைக் காப்பாற்று. விஸ்வயோனி அனந்தா அச்யுதா, உபேந்திரா என்னை ரக்ஷி.]

சீதை குருவாகிற வஸிஷ்டருடைய பாதங்களில் நமஸ்கரித்த பின்பு அவருடைய பத்னியாகிற அருந்ததியை நமஸ்கரித்தாள். லக்ஷ்மணனும் ராமனும் அவர்களை நமஸ்கரித்து மங்கள ஆசீர் வாதங்களைப் பெற்றார்கள். அவர்களை சந்தோஷத்துடன் பல்லக்கில் ஏற்றிவிட்டு மனத்தில் சந்தோஷமும் வருத்தமும் கலந்து ஆஸ்ரமத்திற்கு மூவர்களும் திரும்பினார்கள். (1618)

அதன் பிறகு நிஷாத ராஜனான குஹப்பெருமானை மூவர் களும் சந்தித்தார்கள். (உமா புத்ரனாகிய) பிரபு ஆச்சரியத்துடன் அவர்களை மீண்டும் தரிசித்து, தன் சொந்த நிலையில் பழுத்த பழம் போல ஞான பண்டிதனாக காக்ஷி அளிக்கும் நிவிருத்த ஆத்மாவாகவும் தர்மத்தை அடிக்கடி அடிக்கடி முளைக்கவைக்கும் பீஜ அவ்யயமாகப் பார்த்தார். ஸர்வரஞ்சனாகவும் ஸர்வ மோஹன மாக விருக்கும் பிரபுவை விட்டுப் பிரிய மனமில்லாத குஹன் தன் பரிவாரங்களுடன் திரும்பினான். அவனுடன் அவன் சகாக் களான. கோலர்கள், கிராதர்கள் பேலர்கள் வனத்தில் நடமாடும் இதர ஜனங்கள், ஒவ்வொருவரும் ராமபிரானை சீதை லக்ஷ்மணன் சகிதம் நமஸ்கரித்து விடை பெற்றுக்கொண்டார்கள். (1619)

பிரபு ராமன் சீதை லக்ஷ்மணனுடன் வந்த ஜனங்களின் பிரிவால் வருத்தப்பட்டவராக அந்த அக்ஷய வடத்தின் நிழலில் உட்கார்ந்து கொண்டிருந்தார். பரதனுடைய அமானுஷ்யமான ஸ்நேகம், பகவத் பக்தி ஸ்வபாவமாகவே விகஸித்திருப்பதையும், அவனுடைய கம்பீரமானதும் மதுரமானதும் நெஞ்சை உருக்கும் மொழிகளையும் நினைத்துப்பார்த்து, ' இதுவல்லவோ சுத்தஞானம் இது வல்லவோ வைராக்கியம்; இதுவல்லவோ வாஸுதேவன் ஸர்வம் என்று நினைக்கும் ஞானவானாகிற மஹாத்மாவின் உள்ளம்; என்று பரதனை புகழ்பவராக லக்ஷ்மணன் சீதையிடம் தன் ஆழ்ந்த சகோதர ஸ்நேகத்தை வெளிப்படுத்தினார். (1620)

ஒரு பக்கம் தம்பியின் மீதுள்ள ப்ரீதி; மற்றொரு பக்கம் அவன் செய்த தியாகச் செய்கை. மனம் வாக்கு காயத்தினால் செய்யப்பட்டதும் நிரதிசயமானதும் வாஸுதேவ உள்ளத்தினால் சொல்லப்பட்ட சொற்கள் யாவும் ஸ்ரீராமனுடைய திருமுக மண்டலத்திலிருந்து ஸ்வயமாக வெளிவரும் கீர்த்திபுகழ்கள்.

அந்த ஒப்புயர்வற்ற பிரேமையை எவ்விதம் வர்ணிப்பது? அந்த சுபமான வார்த்தைகளைக் கேட்ட அந்த மஹாபாக்கியமான சித்ரகூடமலை, அதில் வசிக்கும் பசு பக்ஷி மிருகங்கள் யாவும், அதன் கீழே ஓடும் ஜலத்தில் சஞ்சரித்து வசிக்கும் மீன் முதலிய ஜந்துக்களும், சராசரங்களும் மனம் நொந்ததாக அப்பேற்பட்ட மஹாத்மாவின் தர்சனத்தை சீக்கிரம் இழந்துவிட்டோமே என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தன. (1621)

ரகுவீரனுடைய கஷ்டதிசையைக் கண்ட இந்திரன் முதலிய தேவர்கள் பாரிஜாத விருக்ஷத்தின் பூக்களை உதிர்த்து தங்களுடைய பத்தினிகள் படும் கஷ்டங்களை சீதைக்கும் ஸ்ரீராம னுக்கும் அறிவுறுத்தினர்கள். பிரபு, ஆததாயி, சாரங்கபாணி, அவர்களை நினைத்து, அவர்களை பிரணமம் செய்து, ஆஸ்வாசப் படுத்தினர். அப்போது தேவராஜன் திக்பாலர்கள், அவர் களுடைய பத்தினிகள் யாவரும் சந்தோஷமடைந்தார்கள். கஷ்டங்கள் சீக்கிரமே நீங்கிவிடும், இனி ராவணனிடமிருந்து பயம் வேண்டாம் என்று சந்தோஷித்துக் கொண்டார்கள். (1622)

சீதையுடன் கூடியவரும் தம் தம்பியான லக்ஷ்மணனுடன் கூடிய ஸ்ரீராமன் பர்ண குடிக்கு திரும்பிவந்தார். அவர்கள் வந்ததைப் பார்த்தால் வைராக்கியம், பக்தி ஞானம் ஆகிய மூன்றும் உருவம் எடுத்து வந்தது போலிருந்தது. (1623)

[தியானம்

ஹே பிரபு, என்நாவுக்கு இனிய ஆராவமுதமே, முகில் வண்ணனே, நெடுமாலே, என் பிறவிப்பயனே, விண்ணமுதா, உன் இஷ்டத்தினால் அவதரிக்கும் ஸ்வயம் ஜாதரான நாராயணா, சீதையை த்வஜமாகக்கொண்ட ஸத்குணோஜ்வலா, அக்ஷர மாகியும், அனுஸ்வரமாகியும், பதமாகியும் அதன் அர்த்தமாயும், நாதமாயும், நாதத்திற்கு இன்மையான இன்சுவையாகவிருக்கும் ராமாசீதா, நீங்கள் இருப்பிடம் வேங்கடம், வைகுந்தம், நீலக் கடல் கடைந்த மாதவா, சாரங்கபாணி, நீண்ட புஜங்களை சரணாகதி அடைந்த குருகூர் சடகோபன், பரதன், துளசிதாஸர் ஆகிய யாவருக்கும் அடைக்கலமாவதற்கு உபயோகப்படுத்தும் நாராயணா, மஹாலக்ஷ்மிபிரியா, தன்வி, பஞ்சாயுதா, இந்திரியங் களை அடக்கும் கோதண்டபாணி கிருஷ்ணநாதா, பரதனைக் காத்து இந்திரனை அனுக்ரஹித்த தர்மி, உன்னை சீதையின் ஸந்நிதானத்தில் இன்புற்ற சீலத்துடன் விளங்கும் குருகூர் சடகோபன் பரதன் ராமானுஜன் ஆகியவர்களை என்குரு, என்

மார்க்கதரிசி என்றும் ரத்னகர்ப்பர் என்றும், ரத்ன நாபியென்றும் நமஸ்கரித்து, சாரங்கபாணி உம்மை பல தடவைகள் சுக்ருத பிரணமம் செய்கிறேன்.]

குருவஸிஷ்ட, விஸ்வாமித்திர, வாமதேவ, ஜாபாலி முனிக் கூட்டங்களும் பிராம்மண சீலர்களும் பரதனும் ராஜா ஜனகரும் ஆகிய யாவரும் ஸ்ரீ சீதாரமனுடைய திருவடிகளை இழந்துவிட்ட படியால் அதிக வியாகுலம் அடைந்தார்கள். ஆனால் திவ்ய ஞானசம்பத்தை அடைந்தபடியால், (இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் என்கிருப்போலே,) ஸ்ரீராமனுடைய குணகீர்த்தி பிரபாவங்களால் ஜ்வலிக்கிற மனத்தால் அந்த ஸ்ருதி சாகரனை ஸ்மரித்து, அவன் இன்புற்றுவாழும் உட்கோயிலில் ஆனந்தம் கொண்டு (அடியேனுக்கு திருவடிகீழ் விழுந்திருப்பார் நெஞ்சில் மேவுகன் ஞானி, அடியேனுக்கு இருப்பிடமே என்கிருப் போல,) என்னை அடிமைகொண்ட மாயன், ஸுபுஜர், தாருணர் என்னை ஆக்கி, ஆட்படுத்திய தென்னரங்கன், என் ராமபிரான் நினைவே போதும் என்று வாயால் வாழ்த்தி, மனத்தால் நினைத்து போய பிழைகள் மீண்டும் வராமல் காத்து, இன்புறுவோம் என்று நினைத்து செல்பவர்களாக வழியில் சப்தமின்றி சென்று கொண்டிருந்தார்கள். (1624)

அவர்கள் போகும் வழியில் முதல் நாள் யமுனை நதியில் இறங்கி தீர்த்தமாடி அன்று அந்த புனிதகரையில் தங்கினர்கள். அன்றைய தினம் பக்தியால் கரைபுரண்டு பங்கயமாமலர் போல விருக்கும் சீதையின் நாயகனுகிற ராமனை, நம் ராமானுஜனை நினைத்து, அவர்களுடைய பொங்கிய கீர்த்திகளை நினைத்து, வ்ரதம் பூண்டவர்களாக ஆகாரமின்றி கழித்தார்கள். இரண்டாம் நாள் தேவஸரிதையாகிற கங்கையில் நீராடி ஸ்ருங்கிபேரபுரத்தில் தங்கினர்கள். ராமனுடைய சகாவான குஹன் சகல ஏற்பாடு களையும் அமைத்து பாகவத கைங்கர்யங்கள் செய்தான். (1625)

அதன் பிறகு அவர்கள் கோமதியில் தீர்த்தமாடி வழியில் செல்லுபவர்களாக நான்காம் நாள் அவந்திபுரிக்கு வந்து சேர்ந் தார்கள். ஜனக மஹாராஜர் நான்கு தினங்கள் அயோத்தியில் தங்கினர். ராஜநீதியை பரதனுக்கு அவர் உபதேசித்து, ராஜாங்க பொக்கிஷங்களை செவ்வன சீர்திருத்தம் செய்துவிட்டு அவனுக்கு அர்த்த சாஸ்திரத்தின் மர்மங்களை எடுத்து உரைத்தார். (1626)

அப்போது மந்திரிமார்களையும் குரு வஸிஷ்டரையும் கலந்து அவர்களுடைய உதவியால் ராஜவிவகாரங்களை சீரமைத்து அதன்

பிறகு ராமசாஸனத்தின்படி வஸிஷ்டருடைய மேற்பார்வையில் ராஜகாரியங்களை நடக்கும்படி நியமித்துவிட்டு மிதிலாதேசத்திற்கு அவர் சென்றார். அயோத்தியில் உள்ள ஸ்திரிபுருஷர்கள் யாவரும் குரு வஸிஷ்டரின் ஆக்ஞைப்படி ஸ்ரீராமச்சந்திரனுடைய ராஜதானியில் சுகமாக காலத்தைக் கழித்தார்கள். (1627)

எல்லோரும் எப்பொழுது ஸ்ரீசீதாராம தர்சனத்தை மீண்டும் காண்போம் என்று நியமவ்ரதர்களாக உபவாஸ வ்ரதங்களோடு காலத்தைக் கழித்தார்தள். ஆபரண அலங்காரங்களைத் தியாகம்செய்து, தேகசுகங்களைத் தரும் இன்சுவை ஆகாரம், போகபோக்யங்கள் யாவையும் தியாகம் செய்துவிட்டு ஆஸ்ரமவாசிகளைப் போல, சீதாராமன் ராமானுஜனின் திரும்பிவரும் அயோத்தி ஆகமனத்தை எதிர்பார்த்தவர்களாகவும், அந்த ஆசை நாளுக்குநாள் விருத்தி அடைய, வாழ்க்கையாத்திரையை தினமும் கூடவே நடத்திவந்தார்கள். (1628)

[தியானம்

ஹேராமா, சீதாராமானுஜ, லக்ஷ்மிநாராயணா, கவிஸ்ரேஷ்டர்களான புதன், அகஸ்தியர், குஹன் முதலியவர்கள்; சுக்ராசார்யர் பிருஹஸ்பதி போன்ற களங்கமில்லாத ஸாது ஹ்ருதயத்தை உடையவர்கள், சந்திரன்போல சரத்ருதுவில் பிரகாசிக்கும் உம்முடைய களங்கமற்ற ஹ்ருதயத்தையும், செய்கைகளையும் லீலையாகிற கதைகளையும் கூறி அதன்மூலம் ஐயா, உமது ஸ்வரூப ஞானத்தை அடைகிறார்கள். இந்திரனுக்கு சகாவான அனந்த ஹுதபுக், வேதத்தின் ஸாரமாகிற உமது வ்யக்தரூபங்களான அவதாரங்களில் நீர் காட்டிய அனுக்ரஹ நிக்ரஹ செய்கைகளை நினைத்து, ஹேவிஷ்ணோ, காருண்ய ஸிந்தோ, பரதாக்ரஜரே, உம்மை பூதபவ்யபவத் பிரபு என்றும் மூன்று காலங்களிலும் விருப்பப்பட்ட நாதர் என்றும், போக்தாவென்றும் சகல சராசரங்களையும் தாங்கி போஷித்து விருத்தி செய்யும் பூதபாவனர் என்றும் சொல்லுகிறார்கள். அர்ச்சராதி மார்க்கத்திலிருக்கும் இந்திரனுக்கு சகாவாகவும் மித்ரனாகவும் எஜமானனாகவுமிருக்கிற உபேந்திரரே, உருக்ரமரே, நெடியோனே, நம்பூத்ரி பட்டரால் கீர்த்தனம் செய்யப்பட்ட கிருஷ்ணநாதா, வாஸுதேவரே, எப்போது உம்முடைய தரிசனம் எனக்கு சீதாபிராட்டியுடன் கிடைக்கும்?]

ராமனுடைய கிருபையை அடைந்த பரதன் நம்பிக்கை பூர்ணமாகவுள்ள ராஜசேவகர்களை அழைத்து அவரவர்களின்

யோக்யதைக்குத் தகுந்தபடி காரியங்களைக் கொடுத்து அவர்களை நியமித்து பரிபாலித்துவந்தான். அவர்கள் ராஜவிஸ்வாசம் கொண்டவர்களாக தங்கள் காரியங்களை சரிவரச் செய்தார்கள். தன் அருமைத் தம்பியான சத்ருக்னனை அழைத்து தன் தாய்மார்களின் சேவை சிஸ்ரூஷைகளையும் கவனிக்க ஏற்பாடு செய்தான். (1629)

பிறகு பூலோக தேவதைகளான பிராம்மணர்களை அழைத்து அஞ்சலிபந்தத்துடன், பிரணமம் செய்து, அதிவினயத்துடன் அவர்களை ஆராதித்து கௌரவப்படுத்தி, வேண்டிக்கொண்டான். "என் நாதர்களே, லோகஸ்வாமிகளே, ஸம்பூர்ண மனத்துடன் நீங்கள் எல்லோரும் அனுக்ரஹசித்தர்களாக என்னிடம் இருக்க வேண்டும். நீங்கள் பரம உத்ஸாஹத்துடன் சிறிய காரியமோ பெரியகாரியமோ, என்னால் எது செய்யப்படவேண்டும் என்று நினைப்பீர்களோ, அதை சங்கோசமின்றி சொல்லி என்னை கிருதார்த்தனாக ஆக்கவேண்டும். நான் உங்கள் பிரியத்தை சம்பாதிப்பதற்கு எப்போதும் சித்தமாயிருக்கிறேன். வித்வான்களே, என்னைப் பூர்ணமாக க்ஷமாரூபத்துடன் பிரஸாதிக்க வேண்டும். நான் உங்கள் தாஸன்," என்று பலதடவைகள் பிரார்த்தித்துக் கொண்டான். (1630)

அதன்பிறகு பரதன் தன் பந்துபரிவாரங்களை அழைத்து அவர்களிடம் பிரியமாக நடந்து அவர்களின் இஷ்டங்களை பூர்த்தி செய்து அனிஷ்டங்களை நிவர்த்திசெய்து பந்துஜன பிரியனாக ஆனான். அதேமாதிரி பரதன் அயோத்தி ஜனங்களை அழைத்து, தன் பந்துக்கள்மாதிரி அவர்களை கௌரவித்து ஸமதிருஷ்டியுடன் ஸம சித்தத்துடன் அவர்களின் மனோரதங்களை பூர்த்திசெய்து புரஜனபிரியனாக ஆனான். அதன்பிறகு ஒருநாள் தன் இளைய சகோதரனான சத்ருக்னனை அழைத்து அவனுடன் குருவான வஸிஷ்டருடைய மஹாலுக்குச் சென்று அவரையும் அவர் பத்னியான அருந்ததியையும் தண்டன்செய்து பத்த அஞ்சலிகளுடன் தாழ்மையாக வசனங்களை ஸமர்ப்பித்தான். (1631)

"ஐயா என் குருநாதா, ஆப்தபந்துவே, என்னை எப்போதும் பிரியத்துடன் ரக்ஷித்தருளவேண்டும். நான் உம்முடைய நிஜசேவகன். இந்த ராஜ்யம் உம்முடையது. எல்லாம் உம்முடைய ஆதீனத்தில் இருக்கிறது. எனக்கு கட்டளையிட வேண்டும். உமது ஆக்ஞையை நிறைவேற்றும் பரதசத்ருக்னர்களாக தாங்களும் தங்கள் பத்னியும் நினைக்கவேண்டும்" என்று சொல்லிய வசனங்களைக் கேட்டவரும் உதாரமனஸ் உடையவரு

மான வஸிஷ்டபகவான், (யாவராலும் ஆஸ்ரயிக்கப்பட்ட ஞான வான் ஸத்யவ்ரதர், குணங்களில் சிறந்த வரிஷ்டன், ஸப்த ரிஷி மண்டலத்தில் மிகச் சிறந்தவராக வசிப்பவர், எல்லாவற்றையும் தாங்கி போஷித்து, திரவியங்களைக் கொடுக்கும் பூமியில், பர்த்தா வையே அனுசரித்து மஹா கீர்த்திவாய்ந்த அருந்ததியின் துல்ய சீலமான கணவர்,) மஹாராஜவிஸ்வாசத்துடன் பரதனைத் தழுவி, அன்பினுல் உடம்பு முழுவதும் புல்லரிக்க, பிரேமையைக் கவச மாக உடைய மஹா பாகவத உத்தமர், பரதனைப் பார்த்து அன்பு மொழிகள் கூறினர். "என் பரதா, உனக்கு நான் எதைச் சொல்லவேண்டும்? (என் பேரன் பராசரர் விஷயத்தில் அனுக் ரஹம் கொண்டவனுக ஒரு சமயம் இருந்தபோது நான் எதைச் சொன்னேனே அதை உனக்கு நான் ஆசீர்வதிக்கிறேன்.] "நீ சொல்வது செய்வது நினைப்பது எல்லாம் பரமாத்மாவைக் கொண்டதும், பரமாத்மாவினுலும் வேத சாஸ்திரங்களினுலும் மஹா நிஷ்டர்களாலும் ஸர்வகாலத்திலும் ஸர்வதேசத்திலும் ஸர்வ சம்மதமாக ஒப்புக்கொள்ளப்படும் தர்மங்களாக விளங்கும்." (புராதனமும் அவ்யயமுமான தர்மத்தை, தர்ம முடிச்சை அறிவது மஹாகடினம். அதை அனுஷ்டிப்பவர்கள் தர்மத்திற்கு பிரபு. நீ தர்ம விஷயத்தில் மயக்கமில்லாமல், வேதம் பிரத்யக்ஷம் சிஷ்டாசாரம் ஆகிய மூன்று பிரமாணங்களாலும் நீ உயர்ந்து விளங்குவாய். தர்க்கங்களினுல் தர்மத்தை விசாரிக்காமல் கொல்லாமை, ஸத்யம், பொறுமை, கொடை ஆகிய இந்த நான்கை யும் அனுஷ்டித்து பிராம்மணர்கள் விஷயத்திலும் உன் ரகு குல பரம்பரையாக வந்த ஒழுக்கம் எதுவோ அதை அனுசரித்தும், அவர்கள்தான் தர்மத்தின் வழியைக் காட்டுகிறவர்கள், அவர் களின் சொற்களை மூடனுகவும் குருடனுகவும் விசாரிக்காமல் செய்யும் மன ஆற்றல் உள்ளவனுகவிருந்து பொருளாசையையும் அர்த்தகாமங்களையும் விட்டு, தர்மம் ஒன்றையே சிந்திப்பவனுக இரு. தர்மம் ஒன்றுதான் சிறந்தது. அது அனுஷ்டானம் செய்பவர்களின் கௌரவத்தைப் பொறுத்திருக்கிறது. அப்பேற் பட்ட உன்னைவிட துல்ய ஆசரணைகள் உள்ள தர்மநிஷ்டர் யாவரும் இருக்கமுடியாதபடி பரதா, நீ எக்காலத்திலும் விளங்கு வாய். தர்மத்தில் சம்சயம் ஏற்பட்டிருக்கும் காலங்களில் நீயே (பீஷ்மர் தர்மபுத்திராதிகளைப்போல,) "உன் அனுஷ்டானங்களே பிரமாணங்களாக விளங்கட்டும். அப்பேற்பட்ட தர்ம நிச்சய புத்தியை என் மஹா பிரஸாதமாக உனக்கு அளிக்கிறேன். ஸத் புருஷர்களையும் வேத சாஸ்திரங்களில் நம்பிக்கை உள்ளவர்களை

அடுத்து தர்மத்தை ஆபத்காலங்களிலும் விடாதவனுக மஹா கீர்த்தியுடன் நீ விளங்குவாய்'' என்று திரிகால ஞானியானவரும் மஹா வரிஷ்டருமான பகவான் வஸிஷ்டர் அந்த பரத சத்ருக்னர் களை ஆசீர்வதித்தார். (1632)

பரதன் அந்த பொன் வார்த்தைகளைக் கேட்டு அபார நம் பிக்கையுடன் அவரைப் பூஜித்து, ஆசீர்வாதங்களை மீண்டும் அடைந்தான். மஹாபாக்யவான், மஹாபிரஸாதமாகிற குருவின் கிருபையை அடைந்தவனுன பரதன் வஸிஷ்டருடைய ஆக்ஞை யின்படி ஜ்யோதிஷர்களைக் கலந்து, அவர்களால் நிச்சயிக்கப் பட்ட நல்ல முகூர்த்தத்தில் பிரபு ஸ்ரீராமச்சந்திரனுடைய சரண பொற் பாதுகைகளை ராஜ சிம்மாஸனத்தில், ரகுகுல வம்ச சிம்மா ஸனத்தில் ஏற்றி, எழுந்தருளச் செய்து, பிரபுவின் பாதுகை களுக்கு கிங்கரனுக தன்னை நியமித்துக்கொண்டு ராஜகாரியங்களை ஜாக்ரதையாக கவனிக்கலானுன். (''ரத்னமைய பொற் பாதுகை களே, உங்களுடைய சுபமான கிங்கிணி சப்தங்களால் ஏற்படும் நாதத்தின் தர்ம ஒலியில், உங்களுடைய ரத்ன மாணிக்க கிரண தொகுதியால் வெளிப்படும் ஸ்ருதுகளின் கருத்துக்களாகிற ஞான ஒளியில் ஸதா பரிணமித்துக்கொண்டிருக்கும் பரதனை நான் என் ஆசார்யனுகவும் சகாவாகவும் பந்துவாகவும் நமஸ் கரித்து, அவனுடைய சுபமான ஆசீர்வாதங்களை வேண்டு கிறேன்.'' சீதாராமா, வஸிஷ்டபகவானே, பராசரரே, வியாஸரே, விஸ்வாமித்ரரே நீங்கள்தான் அருள் செய்ய வேண்டும்.) (1633)

[தியானம்

ஹே ராமா, பரத நாராயணு, மஹாலக்ஷ்மி நாதா, ஸர்வோன் னதா, ராகவா, மோஹன ராமா, என் அமோகரே, இந்திரனையும் பலியையும் காப்பாற்றின அமோகரே, எனக்கு அநீசராகவும் சம்புவாகவும் தரணிதரனுகிற மஹாவராகராகவும் கங்கையைத் தரிக்கும் ஜடாதரனுகவும் மாதவனுகவும் எப்போது தர்சனம் தருவாய்? மஹா யோகிகளான நம்மாழ்வார், தியாகராஜர், பரதன், மார்க்கண்டேயர் முதலிய ஞானிகளின் ஹ்ருதயத்தில் குடிகொண்டிருக்கும் ஈசரே, என் ஸந்தோஹ லக்ஷ்மியே, நாரா யணு, அரங்கன் மலரடியே, நான் எப்போதும் உன் பாத தர்சனங் களைக்கண்டு, என் ஹ்ருதய தாபங்களைப் போக்கி, கருணைக் கடலான ராமாசீதா, என் கிருஷ்ணு, உன் பாத விரல்களை தியானம் செய்பவனுக எப்போதும் இருப்பேனுக. வேங்கடபதே,

வரதாயகா, என் காமாக்ஷியே, நாராயணி, பட்டு பீதாம்பரம் உடுத்திய உன் திருமேனியைக் கண்டு கல்பக விருக்ஷமாக விருக்கும் உன் மூர்த்தி ஸ்வரூபத்தை என் குலதனமாக நினைத்து எப்போதும் உன் கிருபையால் என் பூர்வாசாரியர்கள் காட்டிய வழியில் உன் நிழலடியை என் பற்றுக்கொம்புபோல அடைந் திருப்பேனாக. ராமா, சீதா லஷ்மணா, நீங்கள்தான் என் பரமா கதி. கிரிஜாரமணா, நாதமயமாக விருக்கும் சம்போ, உமா மஹேஸ்வரரே, சுந்தரராஜா, கங்காதரா, எனக்கு அருள்செய்.]

ராம மாதாவான கௌஸல்யா தேவியின் அனுமதி பெற்று, குரு வஸிஷ்டருடைய பாதங்களில் நமஸ்கரித்து, என் பிரபு ரகுநந்தனுடைய பாததூளிகளை தன் நெற்றியில் ஊர்த்வபுண்ட ரங்களாக தரித்துக்கொண்டு, என் குலச் செல்வனாகிற பரதன் ஸ்ரீசீதாராமனுடைய நித்யானந்தமான தயையைப் பெற விருப்பம் கொண்டவனாக, நந்திகிராமத்தில் ஒரு பர்ண குடியை அமைத்து, சீதாராம ராமானுஜனின் அயோத்தி ஆகமனத்தை எதிர் நோக்கியவனாகவும், தர்ம துரந்தரனாக, ஆஸ்ரம வாசியானான். (என் பிரபு, ஸ்ரீராமன் என் பற்றுக் கொம்பான பரதனின் சிரமத்தைப் போக்குவதற்கும், மீண்டும் ஸம்சார தாபங்களை அடையாமலிருப்பதற்கும், பிரும்ம ஞானத்தைக் கொடுத்து க்ஷத்திரிய ஜாதியில் பிறந்த ராஜ குமாரனாக விருந்த போதிலும், ரஜஸ்தமஸ்குணங்கள் விலகப் பெற்றவனாக பூர்ண ஸத்வம் நிரம்பினவனாக, அது வரையில் அவனால் அலைந்து அடையப்பட்ட தேக சிரமத்தை ஆற்றுகிறவராக; அந்த பரத ஆஸ்ரமத்தில் அவனையும் தன்னிடம் இளைப்பாறுவதற்கு விஸ்ராம ராக பாத மூலங்களைப் பற்றின யோகியான பரதனுக்கு மோக்ஷ லக்ஷ்மியாகவும் காக்ஷி அளித்தார். பாபம், பயம், வருத்தம், களைப்பு, பசி, தாகம், ரோகம், கிழத்தனம், விசனம், மயக்கம், இறப்பு ஆகிய ஸம்சாரக் கடலின் அலைகளிலிருந்தும், அவித்யை முதலிய க்லேசங்களிலிருந்தும் மதம், மாத்ஸர்யம் ஆகிய துன்பங் களிலிருந்தும் விடு பெற்றவனாக, பரதன் சீதாராம ராமானுஜனின் அயோத்தி ஆகமனத்தை எதிர்பார்த்தவனாக, (என்போன்ற பக்தர்களுக்கு மோக்ஷ லக்ஷ்மியை உபதேசிப்பவனாக) இளைப் பாறி இன்புற்றவனானான். (1634)

அவன் தலையில் (மஹாதேவரைப் போல) ராம நினைவாகிற ஜடா மண்டலம். சரீரத்தில் மரவுரியாகிற வஸ்திரம். முனிவேஷ தாரியாக, பூமியனடியில் தர்ப்பை ஆஸனம். போஜன வஸ்திரங் களிலும் வ்ரத தீக்ஷையிலும் நியம ஆசாரங்களிலும் தோற்றத்

  

திலும், ஆசரணைகளிலும், (சங்கரபகவான் உமையை அடைவதற்கு ராம வ்ரத தாருணனுக ராம நாமத்தை உச்சரித்து தவ வாழ்க்கையை, நாத பிரும்ம யோகத்தினுல் அனுஷ்டித்தாரோ, அதுபோல) பரதன் நாராயண பாத மூலங்களை நம்பியவனுக, பரமானந்தமான ஸந்தோஹ லக்ஷ்மியை பற்றுக் கொம்பாக, (நம்மாழ்வார் போல திருமால் உள்ளம் புகுந்தவனுக,) ப்ரேமை நிரம்பினவனுக, கடும்பிரும்ம ரிஷியின் வாழ்க்கையை, அதுவே பரம உத்தம தர்மம், உத்தாரகமாக விஸ்வாசம் கொண்டு, அனுஷ்டிக்கலானுன். (1635)

ஈரவேஷ்டிக்குப் பின் மரவுரி; காய்கறி, கிழங்கு, பழம் ஆகிய ஸத்வ ஆகாரங்களே உணவு. இவைகளால் ராஜபோக வாழ்க்கையின் சுகங்களை பரித்தியாகம் செய்துவிட்டு, பிரும்ம ரிஷியான பரதன் மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றிலும் அமோகரும் அநீஸரும், பக்தர்களுக்கு ஸ்நானம் அலங்காரம் கோஷ்டி முதலிய காரியங்களிலும் பராதீனமானவரும் ஸ்வதந்திரமில்லாத சீதாராமனை, சீதாராம ஜபத்தினுல், பரம உத்தேஸ்யமாக நினைத்த வண்ணமாகவிருந்தான். தசரதருடைய காலத்திலேயே அயோத்தியின் செல்வ பெருக்குகள் ஸுரராஜனுன தேவேந்திரனையும் தனராஜனுகிற குபேரனையும் கேட்டமாத்திரத்திலே லஜ்ஜைப் படும்படியிருந்தன. அப்பேற்பட்ட ஸம்பத்குவியல்கள் ராமன் சீதை வாழும் அயோத்தியில் சகல விதங்களாலும் விருத்தி அடைந்து பரிபூர்ணமாகவிருந்தன. (1636)

அப்பேற்பட்ட அயோத்யா புரியின் செல்வப் பெருக்குக்களை தியாகம் செய்துவிட்டு, ராமன் சீதை ராமானுஜன் யின்றி நமக்கு போக சுகங்கள் வேண்டாம், என்கிற மனப்பான்மையுடன். ஆஸ்ரம வாழ்க்கையை அனுசரித்தவனுக பரதன் ராமனுடைய திவ்ய திருவடிகளை, அப்போது மலர்ந்த சம்பக புஷ்பத்தைச் சுற்றிவரும் வண்டு போலவும் (நாராயண திவ்ய லீலையை கானம் செய்யும் நாரத மஹரிஷியைப் போலவும்,) பரம ப்ரீதனுக நாத பிரும்ம யோகத்தை அனுஷ்டித்து, (உமா மஹேஸ்வரர் கமல புஷ்பத்துடன் தம்புரா சகிதம் ராம கானத்தை பாடுவதுபோல,) ராம நாம சங்கீர்த்தனம் செய்யும் ஒரு தேனீப் போல ராம சரணங்களைச் சுற்றி சஞ்சரிக்கலானுன். ரமா விலாஸங்களாகிற ஸந்தோஹ லக்ஷ்மியை ஆஸ்ரயித்தவனுகி, தன் தாபங்களைப் போக்கிக்கொண்டு, ஸ்ரீராம பிரேமையில் அனுவர்த்திப்பவனுக, (என் போன்ற பக்தர்களுக்கு பரம கிருபாளுவாகி கல்பக விருக்ஷத்தின் பற்றுக் கொம்பாக,) பரதாழ்வார் போக சாமக்ரி

யைகளை அதிகமாக உண்டவன் உமிழ்வது போல, அருவெறுப்பினுல் ஒதுக்கித்தள்ளி ராமாக மனத்தை முமுக்ஷுவைப் போல எதிர்பார்த்து கொண்டு காலத்தை ஸ்வீகரித்தான். (1637)

பரதன் சீதா ராம திருவடிகளை (நம்மாழ்வாரைப் போல) தஞ்சம் என்று அனுபவித்து, (உமாமஹேஸ்வரரைப் போல) நாத ரஸமாகி, (நாரதர்போன்ற) மகான்களால் கீர்த்தனம் செய்யப்படும் ப்ரேமை ரஸமாகி, (எனக்கும் துளசிதாஸருக்கும் தியாகராஜருக்கும், விஷ்வக்ஸேனருக்கும் உத்தவருக்கும் குபேரனுக்கும்) ராம பிரும்மரஸமாக காக்ஷி அளித்தான். ஆம். பரதன் ஸ்ரீராமச்சந்திரனுல் ஸ்வயமாக அனுக்ரஹிக்கப்பட்ட பிரேமை பாத்திரம் அல்லவா அவன்? அப்பேற்பட்ட மஹனீயர் போக ஐஸ்வர்யங்களை உமிழ்ந்த ஆகாரம் போல தியாகம் செய்தது மிக ஆச்சர்யமில்லை. பூமியிலே சாதகபக்ஷியின் பெண்பக்ஷி அதன் பதிக்கு காட்டும் ஏகமாத்திர விஸ்வாசம் ஆச்சரியப்படக் கூடியதாக விருக்கிறதா? அதுபோல ஹம்ஸ பறவை தண்ணீர் கலந்த பாலில் பாலை மாத்திரம் உட்கொண்டு அஸத்தான ஜலத்தை ஒதுக்குவது ஆச்சர்யமாக விருக்கிறதா? அப்பேற்பட்ட விவேக விபூதியான ஈஸ்வர ஸ்ருஷ்டியில் பிரமையாகிற மயக்கம், கலக்கம், துக்கம், மோஹம் அடையாத பக்ஷி வர்க்கங்களே இருக்கும்போது, நான் பரதனை எவ்விதம் புகழ்ந்து திருப்தி அடைவேன்? (அப்பேற்பட்ட மஹா சீலமுள்ள பரதனை நான் எப்போதும் நமஸ்கரிக்கிறேன்.) (1638)

[தியானம்

ஹே ராமா சீதா, நாராயணு, இந்திரனுக்காக சதா ஆயுதமும் கையுமாக விருக்கும் நாராயணு, இந்திரனையும் சசிதேவியையும் சதா தர்மத்தில் பிரவர்த்திக்கச் செய்யும் கோவிந்தா, பிரும்மா, பலராமர் இந்திரன் போன்ற மஹா ஞானிகளும் உம்முடைய பாத சரணங்களில் பணிந்து உமா மஹேஸ்வரர்களைப் போல உமது பக்தியையே பெரிதாக விரும்புகிருர்கள். பரதனைக் காப்பாற்றும் உன் பாத சரணங்கள் உலகங்களுக்கு தந்தையாயும், நல்வழி உபதேசிக்கும் குருவாயும், எல்லாவற்றையும் அடக்கி ஆளும் நியந்தாவாகவுமிருந்து, தக்க சமயத்தில் யாவராலும் தடுக்கமுடியாதபடி சிக்ஷையைச் செய்ய விருப்பம் கொண்டிருக்கும் லோக பாலர்களாக விருக்கின்றன. இவ்விதமிருப்பது அக்ஞானிகள் யாவரையும் தண்டித்து, கர்வத்தைப் போக்கி அவரவர்களுக்கு நன்மை செய்வதின்

பொருட்டேயாம். ஹே ஏகபாதரே, அதோக்ஷஜரே, திரிபதரே, திரிதசாத்யக்ஷரே, த்யுதித்ரரே, பரதனைக் கட்டிக்காக்கும் உன் திவ்ய பாத சரணங்களை அவலம்பித்தவனுக உன் பக்தியையே எனக்கு வரதானமாகக் கேட்கிறேன். உமா மஹேஸ்வரர்களே, நீங்கள் நாராயண பக்தியை மார்க்கண்டேயருக்கு அனுக்ரஹித்தது மாதிரி, உங்கள் பாதங்களை வணங்கும் எனக்கு என் அபராதங்களை மன்னித்து, ஸ்வர்ச்சலே சூர்யனிடம் சேர்ந்திருப்பது போல, சீதை ராமனிடம் அடங்கியிருப்பதுபோல, நான் நாரதர் உபதேசத்தால் நாராயண பக்தியை அடைய விரும்புகிறேன்.]

பரதனுடைய சரீரம் தவத்தால் களைத்து, நியமத்தால் வாட்டப்பட்டு, நாளுக்கு நாள் இளைத்துக்கொண்டிருந்தது. தேகத்தின் பலம் நாளுக்கு நாள் குன்றுவது போல இளைத்து வாட்டப்பட்டிருந்தது. ஆனல் உபவாஸாதிகளால் ஆத்ம பலம் விருத்தி அடைந்து முகத்தில் த்யுதி, தேஜோமயமாக விளங்கியது. தினம் புதிது புதிதாக ராம ப்ரேமை (ருதுகாலத்தில் வளரும் விருக்ஷம், பாலேயான பெண்ணைப்போல) நவ யௌவனமாக வளர்ந்துகொண்டு பரதன் ராம புஷ்டியை வெகு சீக்கிரம் அடைந்தான். தர்மத்தில் பற்றுதலும் நாளுக்கு நாள் அதிகரிக்க அவனுடைய மனமும் ராம பக்தியினல் உத்ஸாஹத்தை அடைந்து அவனுக்கு மறுமலர்ச்சியைக் கொடுத்து ஆனந்தப்படுத்தியது. (1639)

சரத் காலத்தில் ஜலம் வரட்சியை அடைந்ததினல் க்ஷீணித்துப் போகவிருக்கும் குளம் ஆறு முதலியவை உலர்ந்து போனலும், அந்த தண்ணீரில் வாழும் ஜலாசயங்கள், கமல புஷ்பங்கள் ஸூர்யனுடைய பிரபையால் மலர்ந்து ஆனந்தமளிக்கின்றதோ, அதுபோல சமம், தமம், நியமம், நிஷ்டையாகிற தவம் உபவாஸம் முதலியவைகளால் வாட்டப்பட்ட தேகத்தை உடைய பரதன் விமல ஹ்ருதயத்துடன், மனத்தின் மலங்கள் அகங்காராதிகள், ஐஸ்வர்ய மதத்தினல் ஏற்படும் குற்றங்கள், புத்தியீனத்தால் ஏற்பட்ட லோபம் முதலிய அக்ஞான அவித்யைகள் யாவும் விலக்கப்பட்டு, நிர்மலமான ஆகாசத்தில் கோள சக்ரத்தை நடத்துகிற துருவ நக்ஷத்திரநேமி போலவும், சந்திர ரூபியாகவும், பகவானுடைய குக்ஷியில் வைத்துக் காப்பாற்றப்பட்டவன் போலவும், (பிரளய காலத்தில் கூட அழியாத அளவற்ற மகிமையுள்ள போக ஸாதனங்கள் நிரம்பின பரம பதத்தில் இருக்கும் மார்க்கண்டேய ரிஷி போலவும்) ப்ரபூதராக காக்ஷி அளிக்கும்

பரதன் ஸ்ரீராமசரணங்களை அவலம்பித்தவனுக, என் போன்ற ஆப்த பந்துக்களுக்கு வழிகாட்டும் பரமபத வாசலாக விளங்கினுன். (1640)

அவனுடைய மஹா விஸ்வாஸம், 'ராமன் இன்று வருவான் நாளை வருவான்' என்கிற ஆசையினுல் அதிகரிப்பதாகவும், பக்திப் ப்ரேமையானது வளர்க்கப்பட்டு, அந்த நிர்மலமான ஆகாயத்தில் சப்த ரிஷிகளுடன் வாழும் துருவ நக்ஷத்திரத்தைப் போல ஸ்திரமாகவும் ஆதார பூதமாயுமிருந்தது. பதினுன்கு வருஷங்களில் செய்யப்பட்ட சீதா ராம தியானம் அயோத்தியாகிற தர்ம க்ஷேத்திரத்தில் விகஸித்து, குளிர்ச்சி செய்யும் பூர்ண சந்திரனைப் போல தாபங்களைப் போக்கும் குளிர்ந்த ஹ்ருதயமாக விருந்தது. அவன் நினைத்து ஆனந்தமடையும் கருணை வள்ளலான ஸ்வாமி, ராம சீதா மூர்த்திகள்; துருவ நக்ஷத்திரத்தின் மேல் திருவிக்ரம அவதாரத்தின் சமயம் பிரும்ம கமண்டல ஜலத்தினுல் அபிஷேகம் செய்யப்பட்ட ஏகபாதருடைய ஆகாச கங்கை வழிந்து ஓடுவது போல, அவன் அடைந்த ஆனந்த மெய்ஞான மலர்ச்சியால் பொங்கிவரும் ஆனந்த பாஷ்பங்கள் அவன் பாபங்களையும் கெட்ட எண்ணங்களையும் நாசம் செய்து, அவனுடைய ராம நாராயண பக்தியை நாளுக்கு நாள் விருத்தி செய்து மலரும்படி செய்தது. அந்த ராம பிரேமையினுல் உள்ளம் நிர்மலமாகி, காலத்தின் தோஷங்கள் யாவும் பற்றப் படாதவனுக, பரதன், (என் பரதாழ்வார் தன் பந்து ஜனக் கூட்டத்துடன் அசுபங்களைப்போக்கும் துருவ சப்த ரிஷிதார மண்டலமாகவும், சந்திர சூரிய கிரஹங்கள் சேர்ந்து பிரகாசப்படுவது போலவும், ஸ்வர்ச்சலை சூரியனிடமும், சசீதேவி மஹேந்திரனிடமும், அக்னியுடன் ஸ்வாஹாஸ்வதாதேவி பிரகாசிப்பது போலவும்,) பரம சோபிதமாக எக்காலத்திலும் மார்க்கதரிசியாக பரமபத வாசலாக, (இந்திரன் பிரஜாபதி காக்கும் சிறந்த பொக்கிஷமாக) விளங்கினுன். (1641)

பரதனுடைய பக்தி விஸ்வாஸம் (பிரஹ்லாத, நம்மாழ்வார், நாரதர் ஆகிய) மஹான்களுடைய பக்தி போல விருந்தது. அவனுடைய ஞானம் (மார்க்கண்டேய ரிஷியின் ஞானத்தைப் போல) மாயையிலிருந்து காப்பாற்றப்பட்ட ஞானமாக விளங்கியது. அவன் செய்கைகள் கர்மங்கள் (பிரும்மா இந்திராதிகளுடைய) கர்மங்கள் போல தர்மபிருவிருத்தியை அடைந்ததாக விருந்தன. அவனுடைய பக்திப்ரேமை (அர்ஜுனன் தர்ம புத்ராதிகளுடைய) ப்ரேமையைப்-போல ஆப்த பந்துவினுடைய பிரேமையை ஒத்

திருந்தது. அவனுடைய வைராக்யம் (வஸிஷ்டர் விஸ்வாமித்ரர் போல) கரை காணுதபடி விருந்தது. அவனுடைய நிர்மல ஹ்ருதய குணங்கள் (சுக பிரும்மத்தைப் போல) தோஷங்கள் அற்று விளங்கின. அவனுடைய ஐஸ்வர்ய விபூதிகள் (வேத வியாஸ பகவான் கூட) தன் விசாலமான புத்தியால் வர்ணிக்கத் தயங்குவார் போல விருந்தன. ஸ்வயம் நாராயண அம்சமான வேதவ்யாஸரே சொல்லத் தயங்கும் போது, சேஷ பகவானே, கணேசரோ, சரஸ்வதிதேவியோ அதை அடையாளங் கண்டு விவரிக்க முடியாதபடி யிருந்தது. (1642)

[தியானம்

ஹே ராமா, சீதா, லக்ஷ்மணு, பரத சத்ருக்னு, மஹா நாராயணு, நீங்கள்தான் எனக்கு நன்மையைத் தரும் ஹிரண்ய கர்ப்பர். நீங்கள்தான் எனக்கு ஸாவித்தரி. எனக்கு தேவேந்திரன் போன்ற திக்பாலர்களுக்கும், ரிஷிகளுக்கும், ஏன் ஸர்வசராசரங் களுக்கும் தவறுதல் வராமல் காக்கும் நியாயர். உம்முடைய ஸங்கல்பத்திஞல் ஸகல சராசரங்களையும், அதில் அடங்கிய விரிவுகளையும் நடத்தும் ஸ்தவிஷ்டர். உங்களை நான் பகவானுக வும், புருஷோத்தமனுகவும், மஹாத்மாவாயும், ரகுகுலபதியான தசரதமஹாராஜர், கௌஸல்யா, சுமித்திரா, கைகேயி புத்ரர் களாகவும், என்னைக் காக்க வந்த சுத்த ஞானஸ்வரூபர்களாகவும், ஸர்வபூத ஸ்வரூபர்களாகவும், சமஸ்தகாரண பூதருமாக நான் வணங்குகிறேன். ரகுபதி, ஸாத்வதாம்பதி, சந்தனம், புஷ்பம், துளசி, பில்வம் முதலியவைகளால் அர்ச்சித்து உங்களைத் தியானம் செய்கிறேன். ஹே ராமா, உன்னுடைய பக்தாம்ருத மான பாதசரணங்களை, ஆஞ்சநேயர், பரதன், சீதை, லக்ஷ்மணன், சத்ருக்னன் துதித்தது போல, ஸர்வார்த்தகம், ஸ்ரீ சடகோப வாங்மயம், ஸஹஸ்ரசாகோபநிஷத் ஸமானமாக விஸ்வஜனங்களை மோஹித்து, ஆனந்தம் கொடுத்து வேதஸாகர மாகிற உன் குண ரூப அதிசயங்களை ஸ்பஷ்டமாகிற காய்த்திரி, ஸாவித்திரி, சரஸ்வதி ஆகிற அக்ஷரங்களை வெளிப்படுத்தும் என் சாஸ்வதமான பிரும்மத்தைச் சொல்லி, கீர்த்தனம் செய்து, என் அசுபங்களைப் போக்கிக் கொள்கிறேன். தேவமாதா, உன்னுடைய மஹத்தான குணு கீர்த்திகளை எவ்விதம் கணக்கிட முடியும்? அக்ஷரங்களுக்கு மகிமைகளைக் கொடுக்கும் நாதசப்த பிரும்மமே, வேதவியாஸர், யாக்ஞய வல்கியர், நாரதர், தியாக ராஜர், வால்மீகி, நரன் போன்ற நரோத்தமர்கள் பூஜிக்கும்

ஸாவித்திரி தேவதை, சடகோப சரணங்களே, சீதாராம சரணங்களே, எனக்கு நீங்கள்தான் குரு, தெய்வம், பிதா, மாதா. கிருபை செய்யவேண்டும், அம்பிகே.]

பக்தாம்ருதனுன பரதன், அந்த உத்தம ராம பாதுகைகளை, ரத்னமய சிம்மாஸனத்தில் எழுந்தருளச் செய்து, இஜ்யை முதலிய பகவத் ஆராதனம் செய்து, ராஜகாரியங்களுடன் ஆத்ம நிவேதனத்தையும் ஸமர்ப்பித்து, அந்த வரப்பிரஸாதத்தால் தன் தாபங்களைப் போக்கி, உத்தம சாந்தியை அடைந்தவனுக, ஹ்ருதயத்தில் சீதாராம பிரேமையாகிற ஸ்திர நிலையை அடைந்தவனுக, ஸதா சமாதி நிலைமை அடைந்தவண்ணமிருந்தான். அந்த பாதுகைகளின் திவ்ய ஆக்ஞையை அடைந்து ராஜ காரியங்களையும், பொக்கிஷங்களையும் வினியோகம் செய்தான். (1643)

அவனுடைய சரீரம், ராம சீதா ஸ்துதியினுல் புளகாங்கித மடைந்தது. அவனுடைய ஹ்ருதயத்தின் மேல், சீதாராம சின்னமாகிற கௌஸ்துபம் விளங்கிற்று. (ப்ருகுபதம் பதிந்த விஷ்ணு மாதிரி) ராமசீதா சரணங்களை பதிக்கப்பெற்ற பாகவத ஸ்ரேஷ்டனுக விளங்கினுன் பரதன். (நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், குலசேகராழ்வார், நாராயண ஜபம் செய்வது போல,) நாவிற்கு இனிய ராமநாமத்தை, பரதன் ஜபித்துக்கொண்டு, தன்னுடைய பரிபூர்ண லோசனங்களின் வழியாக, ராமாம்ருத கண்ணீர்களை விட்டவண்ணமிருந்தான். பக்தர்களுக்குப் பிரியரான பகவான் அவனிடம் ஸதா ஸாந்நித்யம் செய்துகொண்டு விளங்குபவரா யிருந்தார். லக்ஷ்மணன், ராமன் சீதை காட்டில் தவவேடத்துடன் வசித்தார்கள். ஆனுல் பரதனே தன் கிருஹத்தில் வசிப்பவனுக யிருந்தும், தவத்தினுல் சரீரத்தை வாட்டுபவனுகவும், பதினுன்கு வருஷங்கள் காலத்தைக் கழித்தான். (கோமயத்தில் வேகப்பட்ட யவதானியங்களைச் சாப்பிட்டுக்கொண்டு), நிர்மலமான ஹ்ருதயத்துடன் சகல ஆசாரங்களோடு பவித்திரமான வாழ்க்கையை அவன் அனுசரித்து வந்தான். (1644)

ராம சீதா லக்ஷ்மண வனவாசம், பரதனுடைய கிரஹவாசம் ஆகிய இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்த மஹான்கள், எல்லாப் பிரகாரங்களிலும் பரதனுடைய வாழ்க்கையே மேல் என்று புகழ ஆரம்பித்தார்கள். பரதனுடைய நியம அனுஷ்டானம், ராம சீதா லக்ஷ்மண சிந்தனைகள், தியான யோகத்தினுல் ஏற்படும் ஸமாதி நிலை, அந்த உச்ச நிலையிலும் ராஜகாரியங்கள், பகவானுக்குக் கர்மங்களை ஆராதனமாகச் செய்து கொண்டு, அதன் பிரஸாதங்

களை வினியோகம் செய்வதைப் பார்த்து, மஹரிஷிகள் எல்லோரும் லஜ்ஜையை அடைந்தார்கள். தன் (கர்த்ருத்வத்தை விட்டு,) பரம ஞானியாக, பரம முனி வேஷதாரியாக, நியம நிஷ்டைகளுடன் சீதாராம பக்தியையே ஆபரணமாக அணிந்து கொண்டு விளங்கும் அந்த பிரும்மரிஷியான பரதனுடைய வாழ்க்கையைக் கண்ட விருத்தர்களான (காஸ்யப, கௌதம, வஸிஷ்ட முதலிய) பிரும்மரிஷிகள் கூட ஆச்சரியத்துடன் அவனைப் புகழ ஆரம்பித்தார்கள். (ஸாவித்திரி பிரும்மத்தை அடைந்த) அவர்கள் அந்த மஹானுபாவனுன பரதனைக் கண்டு, தாங்கள் கூட ராம பக்தியில் தாழ்ந்தவர்கள் என்று தங்களை எண்ண ஆரம்பித்தார்கள். (1645)

[தியானம்

ஹே ராமா, நாராயணு, திரிபுரசுந்தரி, லக்ஷ்மி, ராமானுஜா, ஸ்வரூப ஞானத்தை அடைந்த பரதன், உன்னைத் தவத்தினல் மீண்டும் அடைந்தான். ஸர்வலோகங்களுக்கும் குருவும், ஆசார்யனுகவும், பரமபிரியனுகவும் ஆனுன். அவனை நினைப்பதே உன் சம்பந்தத்தைக் கொடுக்கும். ஸர்வமங்கள மூலம் அவனை அர்ச்சிப்பது திருஷ்டா திருஷ்ட பலன். ஹே பரதனை ரமித்து, போகவதியான அயோத்தியில் ரத்ன சிம்மாஸனத்தில் வீற்றிருக்கும் போகேந்திரசயனுகிற ரமாபதியின் திவ்ய பாதுகைகளே, ஏகாந்தியின் விரதத்தை அடைந்து, கர்மங்களையும், ஜீவயாத்திரையும் ஆராதனமாகச் செய்த பரதனுடைய பூஜைகளை, தங்கள் திருமுடியில் ஏற்றுக்கொண்டீர்கள். அப்பேற்பட்ட வாக்குக்கு எட்டாத மகிமைகளைக் கொண்ட சீதாராம பாதுகைகளே, உங்களை நானும் சுக்ருத நமஸ்காரங்கள் செய்து, பாகவத ஸம்பந்தம் பெற்று, சீதாராமனுடைய திவ்ய தரிசனத்தை என்று காண்பேன்? நாராயணு எனக்கு உனது கிருபை எப்போது கிடைக்கும்?]

பரதனுடைய தர்ம ஆசரணை அனுஷ்டானங்கள் கொண்ட சரித்திரம் சாஸ்த்ரோக்தமாகவும், பரம புனிதமாகவுமிருக்கின்றன. அவனைப் பற்றிச் சொல்லும் விருத்தாந்தங்கள் கேட்கக் கேட்க மதுரமாக விருக்கின்றன. கேட்பவருக்கும் மஹா ஆனந்தத்தையும் உள்ளத்தில் சாந்தியையும் கொடுக்கும் பரமஔஷதமாகவிருக்கிறது. அவனுடைய ஸ்வரூப ஞானம் அதனுல் அடையப்பெறும் பகவத் ஸம்பந்தம், அந்த ஸம்பந்தத்தினுல் ஏற்படும் விபவ ஐஸ்வர்யங்கள் யாவற்றிற்கும் மங்கள மூல காரணமாக விருக்

கிறது. கலியுகத்தில் கல்மஷங்களைப் போக்கும் அசாதாரண சக்திவாய்ந்த ஸித்த ஔஷதமாக விருக்கிறது. கலியுகத்தில் செய்யப்படும் பாபங்களைப் போக்கி ஹரி சரணங்களில் சேர்க்கும் தெப்பமாக விருக்கிறது. இந்த சம்சாரத்தில் மஹாமோஹத்தினுல் ஏற்படும் காள ராத்திரிக்கு ஞான ஒளியைத் தந்து அந்தகாரத்தை அகற்றும் தினபதியான சூரியனுக்கு சமமாகவிருக்கிறது. (ஆரோக்யம் போகம் ஆகிய இரண்டையும் கொடுக்கும் சர்ம ஸ்லோகமாக விளங்குகிறது.) (1646)

(பரதனுடைய சரித்திரம்) பாபக் கூட்டங்கள், அனுதி காலமாக வரும் பாபக்கொத்துகளாகிற யானைக்கூட்டங்களுக்கு மிருகராஜனுகிற சிம்மம்போலவிருக்கிறது. சம்சாரத்தில் பாப பயங்களால் ஏற்படும் ஸகல சந்தாபங்களை நஷ்டம் செய்து மனதில் சாந்தியைக் கொடுப்பதாகவிருக்கிறது. பரதனுடைய விஜயம், பாதுகைகளின் அயோத்தி அரசாட்சி ஆகிய விருத்தாந்தங்கள் கொண்ட கதாம்ருதம் பவமாகிய சம்சாரத்தில் ஏற்படும் தொல்லைகளை நஷ்டப்படுத்தி பக்தர்களுக்கு ஹிதம் செய்யும் ராம ஸுதாகரமாகிற சீதாராம சரணங்களின் அம்ருத ருசியை யேற்படுத்தும் மஹத்வம் பெற்றது. அதனுல் ராம ஸ்நேகம் பெற்ற பக்தர்கள் இந்த உலகில் சாரமாகிற "ஸ்ரீராம்" எனப்படும் சந்திரனுடைய அம்ருதத்தைக் பிறர்களுக்குக் கொடுப்பதாக விருக்கிருர்கள். அம்ருத ஸாதனம் ஸாத்யம் என்கிறபடி எம் பெருமானுடைய திருவடிகளையே என்றும் அழியாத உபாய மாகவும், பலனுகவும் வித்வான்கள் அறிகிருர்கள். (1647)

ஸ்ரீசீதாராமனுடைய அத்யந்த பிரேமையை சம்பாதித்த பரதன் இந்த உலகில் தோன்றியிராத போனுல், ராமாம்ருதத்தை வர்ஷிக்கும் பரிபூர்ண சந்திரன் தோன்றியிராது. (தாபங்களை அனுபவிக்கும் பக்தர்களுக்கும், ஸோமபானம்செய்யும் தேவர்கள், அஸ்வினி குமாரர்களுக்கும் ராமாம்ருதத்தை பரதன் இந்த ஜகத்தில் தோன்றிக் கொடுத்திருக்காத போனுல் யாவரும் ஆனந்த மடைந்திருக்க முடியாது.) அபிராக்ருதமான சுக ஆனந்தத்தை பரதனுக்கு சீதாராமன் கொடுத்து அனுபவிக்காதிருந்தால், எந்த ரிஷி வேதங்களில் சொல்லப்பட்டபடி நியம நிஷ்டைகளை, சமம் தமம் ஆகிற இந்திரிய கட்டுப்பாடுகளை இன்னும் பிரபத்தி, பக்தி, யோகம் போன்ற கடின விரதங்களை அனுஷ்டிப்பார்கள்? ஸம்சாரத்தில் யேற்படும் துக்கம், ஏமாற்றத்தால் ஏற்படும் ஸந்தாபங்கள், பாபக் கூட்டங்களின் பயனுன தரித்திரத்வம், தர்மம் முதலிய விஷயங்களில் டம்பமும் இன்னும் காலம், தேசம், மனம்,

சரீரம் ஆகியவைகளால் ஏற்படும் தோஷங்களும் சுபமான கீர்த்திகளைக் கொடுக்காமல், தடங்கலாக விருக்கும் பாப தோஷங் களை சீதா ராம லக்ஷ்மண மங்கள தர்சனத்தைப் பாராமல் வெறும் காற்று அடைத்த பையைப்போல சரீரத்தை வைத்துக் கொண்டு வ்ருதாவாகவும் வீணாகவும் காலத்தைப் போக்குவதால் என்ன லாபம் என்று நினைப்பவர்களுக்கு பரதன் ஒரு ஆதர்ச புருஷனாகத் தோன்றுகிறான். எம்பெருமானை அடைவதற்கு அவருடைய திருவடிகளே ஸாதனம், ஸாத்யம் என்று நிரூபித்த பரதன் இருந்திராவிடில் என்போன்ற பாபிகளுக்கு நம்பிக்கை எவ்விதம் வரும்? அதுவும் கலிகாலத்தில் துளசிதாஸர் போன்ற மஹான்கள் வழிகாட்டி மார்க்கதரிசிகளாக ஏற்பட்டிருக்கும் போது, மூர்க்கனும், மஹாபாபிஷ்டனும், காலத்தினால் ஏற்படும் தோஷங்களுக்கு பாத்யதையான (என்னைப்போன்ற) பாப ஆத் மாக்களுக்கு ஸ்ரீசீதாராமனுடைய அத்யந்த ஸ்நேகம் எவ்விதம் கிடைக்கும்? (பரதா, துளஸிதாஸரே, அத்யந்த கிருபாளுக் களே, என்னையும் உங்கள் தயவால் கட்டிக் காக்கவேண்டும்.) (1648)

என் பிரபு ஆசார்யர் மங்கள மூர்த்தி துளஸிதாஸர் சொல்லு கிறார். 'எந்த மஹா புண்யவான் பரத விருத்தாந்தத்தை நியம நிஷ்டையுடன் மிக சிரத்தையுடன் கேட்கிறானோ, அவனுக்கு அவஸ்யம் மங்கள சரண்யனான ஸ்ரீசீதாராம சரணங்களில் பிரேமை, ஸ்நேகம் யேற்பட்டு மஹாவிஷமுள்ள தாபங்களி லிருந்து விடுதலை அடைந்து, விஷயங்களில் பற்றுதல் இல்லாமை பெற்று, மோக்ஷமாகிற முமுக்ஷுவின் ஞானத்தினால் சீதாராம ஸம்பந்தம் பெற்று நிரதிசயமான ஆனந்தத்தை அடைவார்கள். (1649)

மாஸபாராயணம்—21வது நிறுத்தம். ராமசரித மானஸம் என்கிற மானஸ ராமாயணத்தில் 2வது காண்டம் முற்றிற்று.

கலியுகத்தின் ஸம்பூர்ண பாபங்களை நாசம் செய்யும் இரண்டாவது காண்டமான அயோத்தியா காண்டம் முற்றிற்று.

**அயோத்தியா காண்டம் ஸமாப்தம்**

[தியானமும், 1649 சுலோகங்களும்]

# கோஸ்வாமி துளசிதாஸரால் இயற்றப்பட்ட
# ராம சரித மானஸம் அல்லது
# மானஸ ராமாயணம் என்கிற ராமதர்சனம்

---

## அரண்ய காண்டம்

[தியானம்

பரதா, என் குருவே, உன்னுடைய உயர்ந்த ஜீவனத்தாலும், எம்பெருமானே ஸ்வாமியாக விருப்பதையும், தானே ஸ்வபாவ மாகவே அவனுக்குத் தாஸனுக விருப்பதையும், எப்போதும் என்னைப்போன்ற நாரத சிஷ்யர்களுக்கு, வேதவியாஸ பகவான் 'த்யேயம் நாராயணம் பிரபும்,' என்கிறுப் போல, மிக உயர்ந்த புருஷார்த்த ரூபமான கைங்கர்யம், அதனுல் லாபமடையும் ரஸத்தில் ருசி, ஸத்தா என்று சொல்லப்படும் உபாயமான ஞானத்துடன் இருப்பது, இவைகளினுல், லக்ஷ்மியுடன் நித்யமாக தரிப்பவன், தரணிதரன், விருஷபிரியர், தாயும், தந்தையுமாய் நின்று, ஸகல சராசரங்களுக்கு ஆதாரமாகவும், ஜனேஸ்வரனுகவும், அர்ஜுனனுக்கும், எனக்கும் " என் சரணங்களைப் பற்று " என்று தெளிவாகக் காட்டிய, மஹாத்மாவின் கிருபை உள்ளத்தைக் காட்டிய மஹா குருவன்றே பரதன். ஹே ராமசீதா, பரதனை அண்டி அவன் காட்டிய வழியில் நடந்து வரும் நாதமுனிகள், ஆளவந்தார், ராமானுஜர், வேதவியாஸர், வேதாந்ததேசிகர், மணவாள மாமுனிகள்போன்ற வைஷ்ணவர்களுடைய ஸம்பந்தச் சேர்க்கையில் பிரபத்தி யோகத்தை அடைந்த என்னை, நீதான் பரதனை உஜ்ஜீவிக்கச் செய்தது போல, என்னையும் ரக்ஷிக்க வேண்டும். ஹே ராமா, உன் திருவடி திருவருளால் கிடைக்கப் பெற்ற நீங்கள் " சரணே புகு", அஹ் மோக்ஷயிஷ்யாமி என்கிற கருணை

---

குறிப்பு :—இந்த புஸ்தகத்தில் துளசிதாஸரின் ராமசரிதமானஸ ராமாயணத்தின் மொழிபெயர்ப்பு செய்யுட்களின் நம்பரில் வரிசையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. பிராக்கட் செய்திருக்கிற தியானமும் மொழி பெயர்ப்பில் பிராக்கட்டுகளில் போடப்பட்டிருக்கும் வசனங்களும் என் மனுேபாவத்தையும் துளசிதாஸரின் கருத்துக்களையும் விமர்சனம் செய்கின்றன.—ஆசிரியர்.

ஸ்வபாவத்துடன் கூடிய ராம தம்பதிகளே, தர்மபுத்திரர் அர்ஜுனாதிகளுக்குத் தூது போயும், பரதனுக்கு ஸ்வாமியாயும், நின்ற ஸ்தானத்தில் மஹேஸ்வரரே, ஸர்வேஸ்வரரே, ஜனேஸ் வரரே, "சோகம் தீர்" "மாசுசஃ" என்று உரைத்த வள்ளலே, நீங்களே நம்மை விடாமல் சூழ்ந்து வளைத்துக் கொள்கிறீர்கள். உங்கள் திருவடித் தாமரைகளில் எல்லையில்லாத பிரேமையுள்ள எனக்கு ஞான பரம்பரையாலும், பிறவியாலும், பிதாமஹராகவு முள்ள பரதநாத முனிகள், ஆளவந்தார், ராமானுஜர், துளசி தாஸர் போன்ற மஹா ஆசார்யர்களின் வாக்குக்களை நினைத்து, என் தீய ஒழுக்கம் யாதொன்றையும் பொருட்படுத்தாது, அவர் களுக்காக, நாரதர், வால்மீகி, ஆஞ்சநேயர், அர்ஜுனன், தியாகராஜர், வேதவியாஸர், சுகர், விஸ்வாமித்திரர், வஸிஷ்ட பராசராதிகளுக்காக, கருணாநிதே, அடியேனுக்கு அனுலோசித விசேஷனாக, ப்ரஸித மத்வ்ருத்திம் அசிந்தயித்வா என்கிறபடி அபராதங்களை மறந்து, உங்களுடைய ஸர்வவித கைங்கர்ய சாம்ராஜ்யத்தை, ருசியை எப்போதும் கிடைக்கும்படி அருள் புரியவேண்டும். ஆசார்ய புரஸ்காரம் செய்யும் என்னை அபராத க்ஷமையினால் பராதீனமாகக் கருதி, பிரார்த்திக்கிறவனாகி, அருள் பரிபாலிக்க வேண்டும். ராமா சீதா நாராயணா, மஹா லக்ஷ்மி நாதா, உனக்குப் பூஜைகளைச் செய்து, உன் நாமங்களை ஜபித்து, உனக்கு இஜ்யை முதலிய ஆராதனைகளைச் செய்து, உங்கள் திருப்திக்காக ஸ்வயம் பிரயோசனமாக வாழுகிறேன் என்று நீங்கள் ஸ்வீகரிக்க வேண்டும்.]

தர்ம விருக்ஷத்தின் ஆணிவேரானவரும், விவேகமென்னும் சமுத்திரத்திற்கு ஆனந்த உத்ஸாஹம் செய்யும் பூரண சந்திர னும், வைராக்யம் (அதற்கு வேண்டிய ஞானம் பலம் சக்தி) ஆகிய கமலபுஷ்பத்திற்கு விகாஸமளிக்கும் (ஞான) பாஸ்கரனும், பாபம் என்னும் கனாந்தகாரத்தைப் போக்கும் சுடரும், மூன்று வித (ஆதி ஆத்மிக ஆதி தைவிக ஆதி பௌதிக) தாபங்களை அழிக்கிறவரும், மோஹமென்னும் மேகக் கூட்டங்களைச் சின்ன பின்னமாக்கி அழிப்பதற்கு வானத்தில் தோன்றிய பெரும் புயற் காற்றான ருத்ரரே, பிரம்மாவின் புத்ரரே, நவயௌவனரே, விருஷப் கொடியானே, (என் பிரேமை, அக்ஞானம் அவித்யை, சஞ்சல புத்தி ஆகியவைகளால் யேற்படுவதும், கலிகாலத்தினா லும், தேசத்தினாலும், அசக்தியினாலும் யேற்படும்) தோஷங்களை யும், கல்மஷங்களையும் போக்குகின்றவரும், சக்கிரவர்த்தித் திருமகனாகிற ராமச்சந்திரனுக்குப் பிரியமானவரும் ஆகிய

பகவான் சங்கரரை, நான் மஹேஸ்வரியை முன்னிட்டு நமஸ்கரிக்கிறேன். (1)

நீர் நிறைந்த கார்முகில் போல் மகிழ்ச்சியின் திரளாகி மனங் கவரும் அழகு கொண்ட திருமேனியுடையவனும், பீதகவாடையுடன் பொலிந்து காட்சியளிப்பவனும், கையில் வில்வாளியும், இடையில் தூணீரக்கட்டும் கொண்டு விளங்குபவனும், செந்தாமரை யிதழ்போல் நீண்ட பெரும் கண்களுடன், திருமுடியில் சடையுமேந்தி சோபையுடன் காட்சியளிப்பவனும், ஜானகியும் இளையவனும் (லக்ஷ்மணனும்) பின்தொடர வழி நடந்து ஏகுகின்ற இராமனை, (கண்டார் மனத்திற்கு) இன்பம் பயப்பவனை வணங்குகின்றேன். (2)

[தியானம்

உங்களை உமாசங்கரர் முன்னிலையில் நமஸ்கரித்து ஆராதிக்கிறேன். கிருபாளு, தயை செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.) ஹே பகவான், ஸ்நேகிதம் பார்வை, சிரிப்பு கருணை, க்ஷமை, அருள், ஆகியவைகளுடன் கூடிய அரவிந்தாக்ஷரே, சகலத்தையும் படைத்து அடக்க மேலான சக்தி வாய்ந்த புருவங்களைக் கொண்ட யோகீஸ்வரரான ஸ்ரீமந் நாராயணமூர்த்தியே, "நான் தர்மத்தைச் சொல்லுகிறவன், சொல்லுகிறபடி அதைச் செய்கிறவன், அதனால் சந்தோஷத்தை அடைகிறவன், உலகத்தை சிக்ஷிப்பதற்காக இந்த மாதிரி ஜடா முகுடம் தரித்தேன்," என்று சொல்லும்படி ஜடாமுகுடம் தரித்த ஸ்ரீராமச்சந்திர பிரபோ, சீதா மணாளா, லக்ஷ்மண சகிதம் விளங்கும் நித்ய தம்பதிகளே, உங்களுடைய திருஷ்டி மார்க்க வழிகளில் சஞ்சரிக்கும் என்னை ரக்ஷிக்கவேண்டும்.]

(சதாசிவன் மடியில் ஆனந்தகரமாக வீற்றிருக்கும் உமாதேவியே, குரு சிஷ்ய பாவத்திற்கு விலக்ஷணமாக விருக்கும் தீப்தமூர்த்திகளே, எனக்குத் தாயும் தந்தையுமாக விருக்கும் புண்ணிய மூர்த்திகளே, நமஸ்காரம்). சிவன் பார்வதியிடம் சொல்லுகிறார், "ஸ்ரீ உமாதேவியே, பரமாத்மாவான ஸ்ரீசீதாராமனுடைய குணங்கள் ரொம்ப ரொம்ப கூடமாகவும் குஹ்யமாகவும் ரத்னங்கள் கிடைப்பதுபோல ரொம்ப அரிதாக வுமிருக்கின்றன. பரம ஞானிகளும், முனிவர்களும் அந்தப் பெரும் பண்புகளை உணர்ந்து வைராக்யம் பெற்று மோட்சமடைவார்கள். ஆனால் ராமனுக்குப் பிரதிகூலரான மூடர்களும், தர்மத்தில் நாட்டம் கொள்ளாதவர்களும் (தர்மத்தை நம்பாமல் அதில் தோஷங்களைக்

காண்பவர்கள்) மஹா மோஹத்தை அடைந்து அக்ஞானிகளாகி விடுகிறுர்கள்.'' (3)

[தியானம்

ஹே ராமா சீதா பிரபோ, லக்ஷ்மி நாராயணு, ஸத்யம் தர்மம் என்றும், வினயம் ஞானம் என்றும், தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்ட கருடத்வஜரே, ஸர்வசக்திமானே, திரிலோக த்ருக் என்று சொல்லப்படும் ராமா, கோதண்டஹஸ்தா, ராமாவதாரத்தில் இந்திரனுக்கு அனுகூலராகவிருந்த பரதனையும் சீதையையும் காக்கவைத்த வாஸவானுஜரே, தம் ஆனந்தத்தை மஹரிஷிகளுக்குப் பங்கிட்டுக்கொடுக்க விருப்பமுள்ளவராக கால்நடையாகச் சென்ற நந்தனரே, எல்லாக் காலங்களிலும் எல்லா அவஸ்தைகளிலும் மஹாலக்ஷ்மியுடன் இணைந்திருக்கும் நந்தியே, எனக்கு ஏகாத்மாவாகவும், கைகேயி இந்திரன் யசோதை ஆகியவர்களுடன் தண்டனையைப் பொறுக்கும் ஸர்வராகவும் இருக்கும் சீதாராமா, எனக்கு எப்போது கிருபை செய்வாய்?]

'' தர்மக்ஷேத்ரமாகிற அயோத்தியில் வாழ்ந்த மனிதர்களின் உத்தம அனுபவங்கள், பரதனுடைய அபாரமான ராமபக்தி, அவர்களுடைய ராமபிரேமை ஆகிய எல்லாவற்றையும் என் புத்திக்கு எட்டினபடி, என்பிரியமுள்ள உமா, ராஜ்யஸ்ரீயே, கானம் செய்தேன். இன்னமும் பிரபு ராமாசீதா பிரபாவங்களைச் சொல்கிறேன் கேளு. அந்த மஹான்களுடைய புண்ய சரித்திரத்தைக் கவனமாகக்கேளு. இப்போது தேவர்கள், மனுஷ்யர்கள் முனிஜனங்கள் ஆகியவர்களின் மனத்தில், ஸ்வாமியாகவும் ஸர்வராகவும் விளங்குகிற அந்த உத்தம மஹான்களின் சரிதம் அத்யந்த பாவனமானது. அவர்கள் காட்டில் வாசம் செய்யும்போது கூட ஸர்வலோகங்களையும் தரிக்கும் ஆதார மூர்த்தியாகவும் பரம பாவனர்களாகவும் திகழ்ந்தார்கள்.'' (4)

''ஒரு தடவை ராமன் அழகான புஷ்பங்களைச் சேகரித்து, அதை தன் கைகளினுல் ஆபரணமாக விதவிதமாக அழகு செய்து தன் மடியில் உட்கார்திருக்கும் சீதைக்கு, ஆனந்தம் ஏற்படும்படி அலங்கரித்தார். அவர்களைத் தாங்கின சதாசிவ மஞ்சமாகிற அழகான சிலை மஹாபாக்ய முள்ளதாக அவர்களால் செய்யப்பட்டிருந்தது. அவர்களுடைய ஸ்ருங்காரமோதநிலை அவர்கள் திரிலோகத்ருக்கானபடியால் யாவரையும் வசீகரித்தது.'' (5)

"ஸுரபதியான இந்திரனுடைய பிள்ளை ஜயந்தன் காக்கை ரூபம் எடுத்து ஸ்ரீரகுபதியினுடைய பலத்தை பரிக்ஷை செய்ய விரும்பினான். மஹாமந்தமதி படைத்த ஒரு சிறிய எறும்பு ஸமுத்திரத்தின் ஆழங்களைப் பார்க்க சாஹஸ புத்தியுடன் வருவதுபோலிருந்தது." (6)

"அந்த மூடன் பகவானுடைய பலத்தை பரிக்ஷை செய்ய மந்தபுத்தியுடன் சீதையினுடைய சலங்கை மிட்டி ஆகியவை களால் அலங்கரிக்கப்பட்டிருந்த பாதசரணங்களில் ஒன்றை கொத்திவிட்டு வேடிக்கை பார்த்தான். அவளுடைய காலில் பொங்கிவரும் ரத்தத்தைப் பார்த்துவிட்டு, பிரபு ரகுநாயகன் ஒரு அம்பை தனுஷ்ஷில் வைத்துப் பொறுத்தி அவனை அடிக்க அதை எய்தார்." (7)

[தியானம்

ஹே ராமாசீதா, நாராயணா, மோக்ஷலக்ஷ்மியே, தாயற்ற எனக்கு நீங்கள்தான் தாய். தகப்பனற்ற எனக்கு நீங்கள்தான் தகப்பன். ஆசார்யனற்ற எனக்கு நீங்கள்தான் குரு. வீடற்ற எனக்கு நீங்கள்தான் மோக்ஷம். உங்களை நாரதர், வியாஸர் போன்றவர்கள் புருஜித், வீரபாஹு, புருஸத்தமர் என்று பலவித மாகப் புகழ்கிறார்கள். என்போன்ற நாதனற்றவர்களுக்கு தாங்கள் தான் கதி. ஆதிசேஷன்மேல் வீற்றிருக்கும் நாராயணமூர்த்தியே, அர்ஜுனனால் மிக்க வினயத்துடன் நமஸ்கரிக்கப்பட்ட பரம புருஷரே, ஸ்ரீமதியான லக்ஷ்மியை அங்கமாக உடைய நாராயணா, வேதங்களின் ரஹஸ்ய அர்த்தமாக விருப்பவரே, நீர்தான் எனக் குப் பிரியர், பரபிரும்மம். மேகம்போல காந்தியை உடைய பரமாத்மா, பூமியின் பாரத்தைப் போக்கும் வ்யாஜத்தால் தங்க ளுடைய பத்மம் போன்ற சரணத்தை அடைந்தவர்களை கரை யேற்றவே தாங்கள் ரகுகுலத்தில் அவதரித்தீர்கள். உண்மையான பரபிரும்மத்தைப்போல ஒளித்துக்கொண்டிருந்த சீதாராமா, எப்போது என்னிடம் கிருபை கூர்ந்து விலக்ஷணமாக வரப் போகிறீர்கள்?]

"வீரபாஹுவான ரகுராமன் சீதையின் ஸந்நிதானத்தில் அதிக கிருபையை அடையக்கூடியவர். பிறர்களின் தோஷங்களைப் பாராத விஸ்ருதாத்மாவான அவர் எப்போது எந்த வியாஜத்தி னால் இவனை கரையேற்றலாம் என்று சதா கவலை அடையும் கிருபாளு. அப்பேற்பட்ட ரகுநாயகனை, சீதையின் ஸ்நேகத்தின் வசமடைந்த தீனதயாளுவை, அவகுணங்கள் கர்வங்கள்

நிறைந்த ஜயந்தன் ரகு நாயகனை ஸாதாரண மனிதன் என்ற விவேகமற்ற எண்ணத்துடன் பரிக்ஷிக்க விரும்பினான்.'' (8)

''பகவான் ரகு நாயகன் பிரும்மாஸ்திர மந்திரத்தை உச்சரித்து அவனைத் தண்டிக்க ஏவினார். அந்த அஸ்திரத்தின் ஜ்வாலையினால் தஹிக்கப்பட்ட ஜயந்தன் பயமடைந்தவனாக காக்கை ரூபத்துடன் ஓடினான். பிறகு தன் ஸ்வயரூபத்தை தரித்தவனாக, பிதாவான இந்திரனிடம் ரக்ஷையை வேண்டினான். தன் ஆத்ம பந்துவான ராமனுடைய விரோதி என்று தெரிந்து கொண்டு, இந்திரனும் தன் பிள்ளையைத் தியாகம் செய்து விட்டான். அவனுக்கு அவன் ரக்ஷையைத் தரவில்லை.'' (9)

''தன் ஆசை நிறைவேறப்படாமல், மனத்தில் பயபீதி அடைந்தவனாக, ஜயந்தன் ஓடி அலைந்தான்; எவ்விதம் சுதர்சன சக்ரத்தின் ஜ்வாலைகளைத் தாங்க முடியாமல் துர்வாஸர் பயத் துடன் சகல சராசரங்களிடமும் ஓடி ஒளிய விரும்பினாரோ, அது போல அலைந்து திரிந்தான் ஜயந்தன். பிரும்மதாமாகிற பிரும்ம லோகம் சிவலோகம் ஆகிய ஸமஸ்த லோகங்களையும் அடைந்தும் அவன் ரக்ஷணத்தை அடையவில்லை. காரண ஜலத்திற்கு அப்பால் கூறமுடியாததான வைகுண்டபதி தங்கள் ஸ்தானத்தை விட்டு, கீழே பூமியில் அவதரித்தபோதும் அதைத் தெரிந்து கொள்ளாமல் ஜயந்தன் சீதாராம அபராதியாகி, பயம் சோகங் களால் மூழ்கப்பட்டவனாக, நாதனற்றவனாக வியாகுலத்துடன் இங்குமங்கும் அலைந்து திரிந்தான்.'' (10)

''கருத்த ராமாசீதா அபராதத்தை யார் பொறுப்பார்கள்? யாராவது இங்கு உட்கார்ந்து கொஞ்சம் இளைப்பாறி, பின்பு நீ செல்லலாம் என்றுகூடச் சொல்லுவார்களா? யாவராலும் நிரா ஹரிக்கப்பட்ட ராம த்ரோஹி அல்லவா அவன்? எவனால் அவ னுக்கு அடைக்கலம் தரமுடியும்? என் பிரபு காகபுசண்டி தெளிந்த ஞானமுள்ள கருடனிடம் சொல்லுகிறார். ''ஹே கருடா, கவனமாகக் கேளு. விஷ்ணுவைத் தூக்கும் வேதாத்மாவே, ராமனுக்கும் பிராட்டிக்கும் த்ரோஹம் செய்த அவனுக்கு சொந்த தாய்கூட ம்ருத்யுவுக்கு சமானமாகி விடுவாள். சொந்த தகப்பன் யமராஜனுக்கு ஸமானம் ஆகிவிடுகிறான். அம்ருதம்கூட விஷமாகி விடும்.'' (11)

''மித்ரன் என்று சொல்லக்கூடிய ஆபத்ஸகாவானவன்கூட ஆயிரக்கணக்கான சத்ருக்களின் மனோபாவத்தை அடைந்து அவனை விரோதிக்கிறான். தேவநதியாகிற கங்கை அவனைக் கண்டு யமபுரியில் பாபிகளைத் தண்டிக்கும் வைதரணி நதியாக

மாறிவிடுகிருள். பிரிய சகா, நன்ருகக் கேள். எப்போது ரகு நாதன் பராமுகனுக ஆகிவிடுகிருனே, ஸர்வத்ருக்கான பரம புருஷன் எவனே நிராஹரிக்கிருனே, அவனே ஸகல சராசரங் களும் தியாகம் செய்துவிடுகின்றன. அவனுக்கு அக்னிகூட அதிக ஜ்வாலேயுடன் தகிக்கும் குணத்தை அடைகிருன்.'' (12)

''ஸர்வஜன ரக்ஷகனுகிற நாரதபகவான் அவனுடைய அவஸ்தையை அறிந்துகொண்டார். அவனிடம் தயை கொண் டார். (புருஸத்தமரான அவருடைய ஹ்ருதயம் அத்யந்த கோமள ஸ்வபாவத்துடன் இருக்கும். ஸாதுக்களின் விலக்ஷணமான தயை எதிரிகளிடமும் சமயம்பார்க்காமல் 'காண்பிக்கப்படும்.) அவருடைய தூண்டுதலின்பேரில் ஜயந்தன் சீதாராம ஸந்நிதா னத்தில் சரணம் அடைந்தான். பிரணமம் செய்தான். வாய் விட்டு அலறினுன், ''ஹே பிரபு, என் மாதாவே, என்னேக் காக்கும் பிரணதார்த்தி பிரபோ, சரணம் என்று ஒருக்கால் சொன்னவர்களுக்கு அபயத்தை அளித்து, அவனுக்கு ஹிதம் செய்யும் ஆர்த்திகல்பா, என் குற்றத்தை மறந்து, ரக்ஷை செய்ய வேண்டும்'' என்று கதறினுன். பிராண பயத்தை அடைந்த ஜயந்தன் சீதாராம சரணங்களே சரணமாகப் பற்றினுன். (13)

[தியானம்

ஹே நாராயணு, பிராட்டி பிரியா, ஜிதக்ரோதா, காமம் க்ரோதம், விஷபரிக்ஷை முதலியவைகளிலும் தளராது பக்தர் களேக் காப்பாற்றிய புண்ய சீலா, சரணுகதனுன காகாசுரனேக் காப்பாற்றிய ஜிதமன்யுவே, எனக்கு சுகத்தை தந்த ஸுகதரே, ஜயந்தனேயும், அர்ஜுனனேயும், மருத்துக்களேயும், இந்திரனேயும் காப்பாற்றிய ஜீவனரே, திருமாமகளேக் காப்பாற்றுவதில் மிக்க சிரத்தையுடன் இருக்கும் ஸ்ரீ கர்ப்பரே, கோதண்டராமா, சீதா ராமா, நீதான் தியாகராஜர், நாரதர், மார்க்கண்டேயர் போன்ற வர்களுக்கு இருந்தது போல கல்யாண ராமன், சீதாபதி உங்களே விட்டு யார் எனக்கு புகல்! உங்கள் பேச்சுக்கள், கண் திருஷ்டி கள், அபயங்கள் கருணே நோக்குகள், கருணே விலாஸங்கள், ஆஸ்ரிததயைகள், இல்லாமல் எனக்கு வாழ்வின் பிரயோசனம் ஒன்றுமில்லே. எப்போது உன் கிருபை, உங்கள் தயை, கடைக் கண் வீச்சுக்கள், எனக்கு கிடைக்கும்? நீங்கள் தான் என் பிராணபந்து. ஸஹிஷ்ணுவே பூசயரே, ராமபக்த சமாஜத்தை ரக்ஷிக்கும் கோதண்ட ஹஸ்தா, உன் குளிர்ந்த பார்வையும், கருணே உள்ளமும் என்னே அணேக்கும் ஹஸ்தங்களும் ஆஞ்ச

நேயாதிகள் பார்வதி ரமணன் அனவரதமும் தொழும் உன் பாதங்களுமே எனக்குத் தஞ்சம். எது வேண்டுமானாலும் வரட்டும். நான் அவைகளை விட மாட்டேன். எந்த ஆபத்திலும் உன்னை விட முடியாதபடி அனுக்ரஹிப்பாயாக.]

நல்ல சமயத்தில் பரம சுக்ருதத்தினால் உந்தி தள்ளப்பட்ட ஜயந்தன் சீதாராம சரணங்களில் அத்யந்த பயத்துடன், மலிந்த ஹ்ருதயத்துடன் விழுந்தான். விழும்போது ஜயந்தன் வாய்விட்டுக் கதறினான். "பிரபோ மன்னிக்க வேண்டும். என்னைக் காப்பாற்றும். (என் தாயே செங்கமலக் கண்கள் உள்ள என் தாயே, ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அபராதம் செய்தேன். என் நெஞ்சு வேகும்படி பாவம் செய்தேன், தாயே; எனக்கு அருள் செய்து, பொருளென்று படைத்து, உன் புகழைப்பாடி ஆடி குருகூர் சடகோபன் தீட்டிய வழியில் என் நெஞ்சுருக, மனமுறுக, அருள்செய் அம்மா. அப்பா, உங்கள் அணைப்பிற்கு புகு தருதல் செய்ய வேண்டும். வேதவித்தே, தயாளு, ரகுராமா, சீதாபதி ரக்ஷித்தருளு. உங்களை சாதாரண மானிடர்களாக நினையாமல் அதுளித பலம், அதுளித கிருபை ஸர்வசக்திமானாகிற ஸார்வ பௌமனாக நான் உங்களுடையே திருவடிகளையே நமஸ்கரிக்கிறேன். என் தஞ்சம், என் அபயம் என் ஈசன் என்று சரணமடைகிறேன். [பிரபோ, மமகாரத்தில் ஏற்பட்ட இருளினால் மந்த புத்தியாகி உம்மை அந்தமின்புகழ் நாராயணனாகிற காரெழில் வண்ணனல் என்று அறியாமல் போனேன்.]" (14)

"நான் செய்த கர்மங்களின் பலனாக அசுபங்கள் ஏற்பட்டன. நான் செய்த தவறு இதுவரை போதும். இனிமேல் என்னை சுத்தப்படுத்தி என்னைக் கட்டி காத்தருள வேண்டும். உங்களுடைய திறமுடைய சரணங்களே எனக்கு நெறி ஏற்பட நலங்கள். அவைகள் தான் எனக்குத் தஞ்சம். உங்களை நான் வலம் செய்து, கோயில் கொண்டு, நினைவில் அமர்த்தி, பெருங் கோயிலானைத் தொழுவது போல, தொழுது, சூதென்றும் களவுமின்றி, ஐயா, பராபரமே நளினாக்ஷனே, வேதம் முன் விரித்தானே. அயன் அரன் தொழும் ஆதி நாராயணனே, குன்றுமேல் ஞானம் அபயம் கொண்ட அனந்த பிரானே, திருவேங்கடத்தானே, என் கடும் வினை ஓய பிறப்பு, இறப்பு, பிணி தணிய நான் மலராம் அடித்தாமரைக் கொண்ட வரதனே, அத்திகிரி அப்பனே, திருக்கண்ண புரத்தானே, மொய்த்த சோலைகள் மொய்த்த பூக்கள் தடமாகக் கொண்ட அழகிற சுந்தரராஜனே, சரணம்

சரணம் என்று ஓடிவந்திருக்கிறேன்.'' அப்போது என் வழி காட்டியான சிவன் பார்வதியிடம் சொல்லுகிறார், ''பவானி, நன்றாகக் கேளு. என் பிரபு மஹா கிருபாளு. என் பிரபு ஸஹிஷ்ணு என்கிறபடி நம் தோஷங்களைப் பாராத ஆர்த்தி கல்பன். ஆபத்ஸகா. பக்தவத்ஸலன். ஒரு தடவை சரணம் என்று சொல்வோர்க்கு, தன்னையே அளிக்கும் பிராண வல்லபன், அவனுடைய ஒரு கண்ணைப் பிடுங்கி, அவனைப் பிராணனுடன் விடுதலை அளித்தான். கேசவ கடாக்ஷம் பெற்ற ஜயந்தன் சீதையின் பெரும் தயையைப் பெற்றான். உயிர் தப்பி பிழைத்தான்.'' (15)

''மோஹத்தினால் நிலை தப்பி, சொந்த தாய் தந்தைக்கே அவன் த்ரோஹம் செய்தான். என் புத்ரன், இவனுக்கு நாம் கெடுதி செய்யலாமோ என்று பகவானுக்கு கிருபையை உண்டு பண்ணினான். அவனைத் தண்டியாமலும் விட்டால், மஹா அபராதம் என்று நினைக்கும்படியும் செய்தான். அதனால் அவனுடைய வதம் உசிதமில்லை, இவனுக்கு நாம் புத்தி புகட்டி இவனையும் நாம் ஆட்கொள்ள வேண்டும், என்கிற எண்ணத்தினால் பிரபு, அத்யந்த கிருபையின் வசம் அடைந்தவராக அவனை விட்டு விட்டார். இதிலிருந்து நீ தெரிந்து கொள். பரம அபராதியானாலும் ஸ்ரீராமச்சந்திரன் காட்டிய கிருபைக்கு சமம் எங்கிருக்கக் கூடும்? யார் இருக்க முடியும்?'' (16)

ரகுபதி சித்ர கூடத்தில் வசித்து பல ஆச்சர்யகரமான செய்கைகளைச் செய்தார். அவருடைய புண்ணிய செய்கைகள், கேட்பதற்கும் சொல்வதற்கும் எழுதுவதற்கும் அம்ருதம் போல ருசிகரமாகவிருந்தன. பரத நம்பிக்கு காட்டிய வழியையே விரோதியான ஜயந்தனுக்கும் காட்டி வித்யாஸமின்றி ரக்ஷித்து இருவர்களையும் பரிபாலித்தான். கொஞ்ச நாட்கள் கழிந்த பின்பு ராமன் தனக்குள் யோசிக்கலானார். இனி இவிடம் வசித்து வந்தால் எல்லோரும் நம்மை அறிந்து கொண்டு விடுவார்கள். இந்த இடத்தை விட்டுப் போவது நலம் என்று முடிவுக்கு வந்தார். (17)

ஸகல முனி ஜனங்களின் அனுமதி பெற்று சீதா லக்ஷ்மண சகிதம் ஸ்ரீராமன் மேற்கொண்டு வனயாத்திரையைச் செய்தார். அத்ரி ஆஸ்ரமம் வந்து அவருடைய தர்சனத்தைக் காண விரும்பினார். அத்ரி பகவானும் அவர்கள் வந்ததை அறிந்து அதிக சந்தோஷத்துடன் ஓடி வந்து அவர்களை வரவேற்றார். (18)

[தியானம்

ஹே நாராயணா, ஹருஷீகேசா, வம்சவர்த்தனரே, அத்ரி ரிஷியினால் பூஜிக்கப்பட்ட ஸங்கல்ப நாராயணரே, ஸப்த ரிஷி களின் கைங்கர்யத்தை மேன் மேலும் விருத்தி செய்பவரே, சரணாகதர்களின் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்பவரே, ரத்ன கர்ப்பரே, அழியாத சுகத்தை வாரிக்கொடுக்கும் ப்ரபூதரே எல்லாம் நிரம்பின பூர்ணரே, பரம பதத்திலிருக்கும் லக்ஷ்மி நாராயணா, நித்ய விபூதியில் ஒரு பாகத்தினால் மானிட ரூபராக அவதரித்த த்ரிககுத்தாமரே, மூன்று கொண்டைகள் கொண்ட யக்ஞவராஹரே, உம்மை மனத்தினால் தியானித்து சுத்த ஸத்வத் தினால் பூஜை செய்து, உமது திருவடித் தாமரைகளை ஆராதித்து உமது இன்பத்தையும் கிருபையையும் திருவருளையும் பெறு வேனாக. பிரபு, அத்ரி ஆஸ்ரமத்தில் எழுந்தருளிய ராம சீதா லக்ஷ்மணா, உங்களுடைய சௌலப்யம், ஆநிரை மேய்த்த உங்களுடைய கிருபா திருஷ்டிகள் எப்போது கிடைக்கும்?]

அத்ரி பகவானுடைய ஆனந்தம் சொல்ல முடியாதபடி அதிகரித்திருந்தது. அவருடைய சரீரம் புளகாங்கிதத்துடன் உடனே எழுந்திருந்தார். தள்ளாத வயது அதையும் பொருட் படுத்தாது அவர் ஓடினார். அந்த ராம தம்பதிகளை வரவேற்க ஓடினார். தன் ஆஸ்ரமத்தில் அவர்களுக்கு அதிதி ஸத்காரம் செய்ய, பூர்ணமாக ஆராதனை செய்ய தன் கிருத கிருத்யங்களை நேரில் வந்து சாக்ஷாத்கரித்திருக்கும் நாராயண தம்பதிகளை, என் பிரபு வம்ச வர்த்தனரை, சீக்கிரம் அழைத்து வரச் செய்ய ஓடினார். அவர்களைக் கண்டதும் தேக சிரமத்தைப் பார்க்காமல் சுக்ருத பிரணாமங்களைச் செய்தார். அவர்களைத் தழுவி ஆசீர் வாதம் மங்களா சாஸனம் முதலியவற்றைச் செய்தார். பல்லாண்டு, பல்லாண்டுகள் பாடினார். என் பிரபு ஸ்ரீ ராமன் அவரை இறுகத் தழுவிக் கொண்டு பரத நம்பிக்கு கடாக்ஷித்த ப்ரேமை வெள்ளத்தை நினைத்துக் கொண்டு அத்ரி தம்பதிகளை வாழ்த்தி, அவர் கையைப் பிடித்துக் கொண்டார். அதே சமயத்தில் அத்ரிரிஷி லக்ஷ்மணனையும் கட்டி அணைத்துக் கொண்டார். அந்த ரகு குல சிரோண்மணிகளைக் கண்டதும் அவருடைய ப்ரேமை ஆனந்தம் வெள்ளப் பெருக்காக எடுத்து, உடம்பு முழுவதும் கண்ணீர் மயமாக எல்லோருக்கும் வந்து கொண்டிருந்தது. இதுவல்லவோ உண்மையான அன்பு என்று சிலாகிக்கும்படி விளங்கியது. (19)

ஸ்ரீ ராமனுடைய புஷ்கராக்ஷங்களில் கண்ணீர் திவிலைகளைக் கண்டதும் அத்ரி பகவானுக்கு கண்ணீர் தாரைகளாகப் பெருகின. அத்யந்த பிரேமையுடனிருந்த ராமனை தன் ஆஸ்ர மத்திற்கு கையைப் பிடித்துக் கூட்டி வந்தார். அவர் செய்த அதிதி ஸத்காரத்தையும் பூஜையையும் யாரால் விவரிக்க முடியும்? பிரபுவுக்கு கந்த மூலம் சுவையான பழங்கள் ஆகாராதிகளைக் கொடுத்து இன் சொல்லுடன் ஹ்ருதய சுத்தியுடன் பூஜித்து சகலரையும் திருப்தி செய்தார். (20)

பிரபுவுக்கு நல்ல ஆஸனம் கொடுத்தார். அவருடைய ராஜ கம்பீர்ய சோபையைக் கண்டு ஆனந்தித்தார். அவருடைய புண்யமான லோசனங்களிலிருந்து நீர் வழிந்து கொண்டி ருந்தது. பிரேமையுடன் அஞ்சலி செய்து கொண்டு அவர் அந்த பரமபதநாதனை, ஆதி நாராயணனை நினைத்துக் கொண்டு மஹா ப்ரவீணர்களான அந்த வேத புருஷனை பரம மேதாவி யான அத்ரி பகவான் ஸ்ருதி கீதை சொல்வது போல அர்ச் சித்தார். ஸ்துதி செய்தார். (21)

"ஹே பக்தவத்ஸலா, பரம புருஷா, உங்களை சுக்ருத பிரணமம் செய்கிறேன். என் வீட்டைத் தேடி வந்த கிருபாளு, ஜனார்த்தனரே, (வெண்ணெய், தாமரை இதழ் இவைகளைக் காட்டிலும் அதி மென்மை வாய்ந்த மனமுடைய கிருபாளு, கிருதக்ஞரே, ஸாது ஜனங்களுக்கு ஐஸ்வர்யங்களையும் மோக்ஷத் தையும் அளிக்கும் பரம பத நாதனே,) நமஸ்காரம் செய்கிறேன். ஏதாவது ஒரு நல்ல காரியத்தை மட்டுமே நினைவில் வைத்துக் கொண்டு, உபகாரம் செய்யும் மஹா சீல குணமுள்ள நாராயணா, நீர் ஸந்துஷ்டி அடைந்து எனது கிரஹத்தை ஸ்வயமாகவே எழுந்தருளினது என் பாக்யம். அக்ஷய பதமாகிற வைகுண்ட பதவியை ஸர்வ சாதாரணமாகக் கொடுக்கும் வள்ளலே, உன்னுடைய திருவடித் தாமரைகளில் நான் தஞ்சம் புகுந்து அனந்த கோடி நமஸ்காரங்கள் செய்து, என் ரக்ஷணத்தை, ஐயா, உம்மிடம் ஒப்பிவிக்கிறேன். உம்மையே பெரும் தனமாக மதித்து, உமக்காகவே ஜீவயாத்திரையை நடத்தி, உம்முடைய ஸந்துஷ்டியையே பரமார்த்த லாபம் என்று கருதும் வைஷ்ணவ சீலர்களுக்கு உம்முடைய திவ்ய பதாப்ஜங்கள் ஸர்வ ஸுலபமாகக் கிடைப்பது ஸத்யம், ஸத்யம் அப்பேற்பட்ட உத்தம சரணங் களை நான் பற்றிக் கொண்டு என் வாழ் நாட்களை கழித்துக் கொண்டு வருகிறேன் பிரபோ. (22)

"கரிமேனி கொண்ட வேங்கட வரதா, கரிமாணிக்கமே, எந்த சீதோஷ்ண ஸ்திதியிலும் அணைப்பதற்கு ஹிதமாயுள்ள சியாம சுந்தரனே. சுபாங்கனே, திவ்ய புருஷனே, என் நாவுக்கு இனிய அமுதனே, எம்மானே, தித்திக்கும் எம்பெருமானே, அழகிய மணவாளா, உம்முடைய திவ்ய சௌந்தர்ய குவியல்கள் தேஜோ மயமாக என் சம்சார தாபங்களைப் போக்கி, பவசாகரத்திற்கு மந்திராசலம் போல என்னுடைய துக்கங்களைக் கடைந்து எனக்கு சாந்தி பராயணத்தைக் கொடுக்கின்றன. ஹே ஆத்ம பந்து, உம்முடைய புஷ்கர லோசனங்கள் பிரபுல்லமாக தாமரை மலர் போல விகஸித்து, என்பால் அன்பு கூர்ந்து நோக்கும் போது, உம் இனிய சொற்களை என் காதுகளில் கேட்கும் போது, உம்முடைய தீர்க்க பாஹுக்கள் என்னை (குழந்தை பிரஹ்லாதனை வாரியணைப்பது போல) அணைக்கும் போது, பிரபோ, என்னுடைய சகல தோஷங்களும் பாபங்களும் துரதிக்ரம செயல்களும் கர்ம பிரவாஹத்தில் ஏற்படும் ஜன்ம ஜன்மமாக ஓடிவரும் தோஷங்கள் யாவும் அழிந்து, நான் உம்முடைய பரம கிருபையாகிற பெரிய பிராட்டியின் புருஷகார வலிமையினால் சுசியாக்கப்பட்டேன். ஆசார்யன் ஸந்நிதியில் என் மமகாரங்கள் அழிக்கப்பட்டு பரதந்திரனாகவும் ஆசார்ய கிருபையை அவலம்பித்தவனாகவும் பரபக்தி பரஞானம் பரம பக்தி கொண்டவனாக, ஹே பிரபோ, நான் தோற்றமளிக்கிறேன். (23)

"என் நெஞ்சுக்கு இனியவனே, உமக்கு ஆயிரம் பாஹுக்கள், ஆயிரம் காதுகள் ஆகிய எல்லாம் என்போன்ற தீனர்களின் குறைகளைக் கேட்டும், கண்களால் பார்த்தும், திருக்கரங்களால் நிஜமான ரக்ஷகத்தை அளிப்பதற்காகவல்லவோ விருக்கின்றன; திரிவிக்ரமரே, மூன்று வேதங்களிலும் உம்முடைய மகிமைகள் அல்லவா கூறப்பட்டிருக்கின்றன. பிரபோ, உம்முடைய நாமங்களும் வைபவங்களும் அனந்தமானவை. உம்முடைய ஐஸ்வரியங்கள், கீர்த்தி பிரபாவங்கள், அவதாரங்கள் சொல்வதற்கு அடங்காமல் அப்ரமேயமானவை. எந்த சமயத்தில் எந்தவிதமான உதவி பக்தர்களால் வேண்டப்படும், அதற்கு தங்குதடையின்றி, உதவவேண்டும் என்று நிச்சயபுத்தியுடன் வில்லையும் அம்பையும் சதா தரித்துக்கொண்டிருக்கும் கோதண்டராமா, உம்மால் ஸர்வ காலங்களிலும் மூன்று லோகங்களும் காக்கப்படுவதால் நீர் திரிலோகேஸ்வரர், விஸ்வேஸ்வரர், விஸ்வத்ருக்

விஸ்வாத்மா, விபவர், திரிலோகாத்மா, நாராயணர் என்றும் பல விதமாக எல்லோராலும் புகழப்படுகிறீர்.'' (24)

[தியானம்

ஹே ராமா சீதா, நாரதபகவானுல் சேவிக்கப்பட்ட ஸங்கல்ப நாராயணு, தேவதேவா, புருஷோத்தமா, ஸநாதனு, அனந்தஜித் என்று உம்மை அழைக்கிருர்கள். உம்முடைய மகிமைகளை யாரால் அறியமுடியும்? உம்மை தியானிப்பவர்களுக்கு களைப்பைத் தீர்த்து, செழிப்பை உண்டாக்கும் மஹா ஒளியுள்ள சந்திராம்சு வாகவிருக்கிறீர். ராமாசீதா லக்ஷ்மணு, உம்மை சந்தித்தபின்பு என் மன இருள், புற இருள் யாவும் ஓடிவிட்டிருக்கிறது. என் பாஸ்கரத்யுதியே, இவ்வுலகத்திற்கு காரணமான பிரதானம், புருஷன் ஆகியவைகளுக்கு ஈஸ்வரர் ஈஸ்வரியாகவிருக்கும் உங்களை சப்தரிஷிகள், துருவன், இந்திரன், பிரஜாபதி இவர்களை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். பிரதான புருஷேஸ்வரரான உம்முடைய பகவத் ஸ்வரூபத்தை நான் நமஸ்கரிக்கிறேன். மின்னல்களின் காந்திபோலவிருக்கும் தேஜோமூர்த்தியான நாராயணு, உன்பாதங்களே என் தஞ்சம். கர்மசேஷமுள்ள ஜீவன்களுக்கெல்லாம் ஸம்சார காரணமான பிரதானத்தை நான் நமஸ்கரித்து, அது அழியும் காலத்தில் நீர் ஒருவரே அழியாத வஸ்துவாகவும் மார்க்கண்டேயர் சுகாதிகளால் பூஜிக்கப்படும் பர பிரும்மமாகவும் உம்மை நான் ஆராதித்து உம்முடைய கிருபையை யாசிக்கிறேன். பிரபோ, தயை செய்யும்.]

''சூர்யவம்சத்திற்கு ரத்னகிரீடம்போல விளங்கும் அணி விளக்கே, இந்திரியங்கள் பிராணன் முதலியவைகளுக்கு உள்ள சக்தியாகிற மஹேஸ்வரருடைய தனுஷ்ஷை உடைத்த பரமாத்மா வின் சக்திரூபதரரே, உமக்கு நமஸ்காரம். என்னிடம் போல சப்தரிஷிகள், நாரதர், வால்மீகிபோன்ற முனிவர்களின் மனத்தில் ஆனந்தகூத்தனுக நடமாடும் பிரபோ, சந்திராம்சு என்கிற நாமத்திற்கு ஏற்ப, பக்தர்களுக்கு செழிப்பை உண்டாக்கும் ரஞ்சனரே, ஸஹஸ்ரஜித், அனந்தஜித் என்கிறபடி வேதங்களின் விருப்பப்படி அசுரர்கள் தர்மசத்ருக்கள் யாவரையும் நாசம் செய்வதற்கு அவதாரம் செய்யும் பிரபோ, உம்மையும் சீதையை யும் நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.'' (25)

''தாங்கள் காமதேவனை ஜயித்த திரிபுராரியினுலும் பத்ம மாகிற லீலாபத்மத்தை தரித்துக்கொண்டிருப்பவளும் மஹா தேவரை ஒரு க்ஷணமும் விட்டுப் பிரியாத உமாதேவியினுலும்

ஸதா ஆனந்தமாக ஸப்தஸ்வரங்களாகிற நாதபிருந்தத்தால் ஆராதனம் செய்யப்பட்டு, கிர்த்தனம் பாடப்பட்டவரே, உமக்கு நமஸ்காரம். உம்மையல்லவோ பிரும்மாவும் அவரையடுத்த தேவர்களும் ஆராதித்து தங்கள் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்கிருர்கள். ஆகாசம்போல ஒன்றிலும் பற்றற்றிருக்கும் தன்மையாகிற விசுத்த ஞானத்தை அடைந்த திவ்யமங்கள விக்ரஹமே, தாங்கள் நாலுவிதமான பிரபஞ்ச சரீரங்களைவிடவும் எடுக்கவும் வல்லமையுள்ள மங்களவிக்ரஹ மூர்த்தியே, என்னுடைய காரியங்களில், எண்ணங்களில் சொற்களில் உள்ள தோஷங்களைப் போகக் வேண்டும். உம்மைச் சரியாக தெரிந்துகொள்ளாததனுல் ஏற்பட்ட மோகம் என்னை வாட்டுகிறது. ஐயா கிருபை செய்யவேண்டும்.'' (26)

"என்னைக் கட்டிக்காக்கும் மஹாலக்ஷ்மியான இந்திராவின் பதியே, சுகத்தைவிரும்பும் ஸாது ஜனங்களுக்கு நீங்கள் இருவர்களும் ஏகமாத்திரமான கதியல்லவா? அப்பேற்பட்ட பராசக்தியுடன் கூடிய உம்மை, ஐயா, அடிக்கடி அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஸ்வாமி, நீரும் லக்ஷ்மணனும் அனுஜர்களாகவும் பிரதானம் புருஷன் ஆகிய இவைகளுக்கு ஈஸ்வரர்களாகவுமிருக்கிறீர்கள். அப்பேற்பட்ட ராமலக்ஷ்மணு, உங்கள் இருவர்களையும் நான் நமஸ்கரிக்கிறேன். தர்மத்தில் நாட்டமுள்ள சசீபதியான மஹேந்திரனுக்கு தம்பியாகப் பிறந்த உபேந்திரரே, உமக்கு நமஸ்காரம்.'' (27)

"எந்த மனுஷ்யர்கள் அஹங்காரம். மமகாரங்கள் விலகி, ஆத்மாவுக்கு உண்டாகும் நல்ல அறிவாகிற ஸம்ருதி என்கிற நிலைமையினுல் ஸம்சார பயத்தை யொழிக்கிற தங்களுடைய சரணுரவிந்தங்களை சோம்பலின்றி சிரத்தையுடன் பஜிக்கிருர்களோ, அவர்கள் சம்சாரரூபமாகிற பவஸாகரத்தில் அவதிப்படுகிருர்களில்லை. ஆனுல் அப்பேற்பட்ட மஹா பாக்யமுள்ள மனிதர்கள் இந்திரிய சுகங்கள் நிறைந்ததும் அழியும் தன்மையுள்ளதும், சரீரமே ஆத்மா என்கிற புத்தியுள்ளதும், சரீரத்தை விட ஆத்மாவாகிற பரபிரும்மமே உயர்ந்தது, அந்த பரபிரும்மம் நித்திய திவ்ய தம்பதிகளான நீங்கள்தான் என்று தெரிந்தும் அறிவில்லாமல் அநேகவிதமாக யோகமாயையால் கட்டப்பட்டு, அநேக கிலேசங்களை அனுபவித்து பகவானுகிற உங்களுடைய ஸங்கற்ப ரூபஞானத்திற்கு இலக்காக ஆகாமல் அவதிப்படுகிருர்கள். மீண்டும் அவதிப்பட்டும் அதேகிலேசங்களை அனுபவிப்பதற்கு ஸம்சார ஸமுத்திரத்தில் மூழ்கிவிடுகிருர்கள்.'' (28)

"அப்பேற்பட்ட மஹா சமுத்திரத்திலிருந்து விடுபட்ட ஏகாந்திகளுக்கு நாராயணா, நீர் எப்போதும் ஸந்துஷ்டியாக இருக்கிறீர். அவர்களுக்கு சம்சாரபயத்தை ஒழிக்கிறீர். அதனால் அவர்கள் ஏகாக்ர சித்தத்துடன் உம்முடைய சரணாரவிந்தங்களை பஜிக்கிறார்கள். அப்பேற்பட்ட மஹானுபாவர்கள் இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கி, பிராணனில் சேர்த்து, அந்த பிராணனையும் உம்மிடம் ஸமாதியோகத்தில் ஸமர்ப்பித்து, தங்களுடைய ஸ்வரூபஞானத்தினால் உம்மைவந்து அடைகிறார்கள்." (29)

"உம்முடைய விபவங்களும் சக்திகளும் ரூபலாவண்யங்களும் நிரதிசயமானவை. நீர்பரம்பொருளான நாராயணர் உம்முடைய நாமங்களும் கீர்த்தி பிரபாவங்களும் அற்புதமானவை. நீர் சகல சராசரங்களுக்கும் சேதனா சேதனங்களுக்கும் பிரபுவாகவுமிருக்கிறீர். உமக்கு ஆதியும் அந்தமுமில்லை. அதனால் நீர் ஜகத்குருவாகவும் சமஸ்த பூதங்களுக்கும் ஈஸ்வரராகவும் சாஸ்வதமானவருமாக விருக்கிறீர். உமக்கு ஈடு ஒருவரும் இருந்ததில்லை; இருக்கப்போவதுமில்லை. எங்கும் வியாபகமுள்ள விஷ்ணுவாக விளங்குகிறீர். சமஸ்த பூதங்களுக்குக் காரணமான தாமஸ அஹங்காரமாகவும்; எல்லா இந்திரியங்களுக்கு காரணமான ராஜஸ அஹங்காரமாகவும்; சமஸ்த தேவர்களுக்கு காரணமான ஸாத்விக அஹங்காரமாகவுமிருக்கிறீர். கர்மசேஷமுள்ள ஜீவன்களுக்கு ஸம்சாரகாரணமான "பிரதான"மாகவுமிருக்கிறீர். எல்லாம் அழியும் காலத்திலும் நீர் ஒருவரே அழியாத வஸ்துவாகவுமிருக்கிறீர். சத்வம் ரஜஸ் தமஸ் ஆகிற குணங்கள் உம்மிடத்தில் யோகமாயையினால் கற்பனை செய்யப்பட்டு, அந்த யோகமாயையும் உமது ஸங்கல்பத்திற்கு அனுசரணையாக நடக்கிறது. நீர் எல்லாவற்றையும் ஸங்கல்ப மாத்திரத்தில் நடத்திவைக்கும் திறமைபெற்றவர், உமக்கு மாறுதலோ விகாரமோ கிடையாது. நீர் எப்போதும் துரிய அவஸ்தையிலும் கேவலம் தனிப்பட்ட புருஷனாக விளங்கி, அதிக விலக்ஷணமாக எல்லாவற்றையும் காலத்தையும் நடத்திவைக்கும் அதிமானுஷ்ய சக்திபடைத்த பரம்பொருளாகவிருக்கிறீர்." (30)

[தியானம்

ஹே அத்ரிபகவானால் புகழப்பட்ட சீதாராமா, லக்ஷ்மணா, மஹா நாராயணா, மஹாலக்ஷ்மியே, சரணம். நீங்கள் விஸ்வதாருணர்கள், விஸ்வத்திற்கு மங்களத்தைச் செய்யும் மஹானுபவர்

கள். உலகங்களுக்கு முதல்பொருளாகிய மும்மூர்த்திகளின் ரூப தாரரான ஜகதாதிஜர். நீர் அஸுரஸ்வபாவங்களை ஒழித்து, அவர்களையும் ஸம்ரக்ஷித்த ஜிதக்ரோதர், அச்யுதர். அஹிர்புதன்யரால் ஆராதனம் செய்யப்பட்ட ரங்கநாயகர். அழகிலும் பெருமைகளிலும் ஸத்பதாசாரத்திலும் தர்மசீல அனுஷ்டானங்களில் கங்கை, உமை இவர்களுக்கு சரிசமமாகச் சொல்லக் கூடிய தர்ம வத்ஸலையான சீதையை மனைவியாகக்கொண்ட ராமா, சேதனு சேதனங்களில் ஆகிய இரண்டிலும் விலக்ஷணமாக விளங்கும் ஜன்ம ம்ருத்யுஜராதிகள் என்று சொல்லப்படும் உம்மை சீதா ராமானுஜன் ஸந்நிதானத்தில் நமஸ்கரிக்கிறேன்.]

''ஹே பிரபோ, உம்மை சரணம் வந்து அடைந்தவர்களைக் காப்பாற்றுவதில் மஹா ஊக்கம் காண்பித்த நீர் எதிரிகளின் வரிசையை நடுங்கச்செய்யும் வல்லபர் என்று சொல்லப்படுகிறீர். உம்முடைய சுபமான தர்சனமாகிற மங்களவிக்ரஹ சேவை மிக்க மிக்க அரிது. விதண்டாவாதம்செய்பவர்கள், ஆத்மவிஷயங்களில் ஈடுபடாதவர்கள், தேகசுகங்களிலும் விஷயப் பற்றுதல்களிலும் மனம்கொண்டவர்களுக்கு நீர் மிக்க துர்லபர். உமது திருவடிகளை ஆஸ்ரயித்து நீர் இட்ட ஸங்கல்பத்தினுல் நடப்பேன் என்று வ்ரதம் பூண்ட பக்த பராதீனர்களுக்கு ஐயா, மஹாலக்ஷ்மியுடன் கூடிய மஹாபிரபோ, அனந்தனுடைய சேர்க்கைபெற்ற லக்ஷ்மி நாராயணு, நீர் கல்பகவிருக்ஷம் போல நன்மையைச் செய்யும் உதாரர். உம்முடைய திவ்ய திருஷ்டிகள், கிருபாகடாக்ஷங்கள், பூர்ணசந்திரனுடைய திருஷ்டிகள் போலவும், சூர்யனுடைய ஒளி போலவும், பாரபக்ஷமின்றி யாவரையும் ஸம்ரக்ஷிக்கும் புலமை வாய்ந்தன. அப்பேற்பட்ட பரமகிருபாளுவாகிற உம்மை சதா பக்தியுடன் மஹாவினய சம்பத்துடன் சேவித்துவரும் எங்களுக்கு எப்பொழுதும் சுகத்தை தாங்கள் தருவதில் என்னதடை இருக்கக் கூடும்?'' (31)

''ஸ்யாம கந்தராங்கதா, உம்முடைய பூபதி ரூபங்களையும் விபவ ஞான ஐஸ்வர்யங்களையும் கீர்த்தி பிரபாவங்களையும் நான் நினைத்து நினைத்து, மனம் உருகுகிறேன். மாதவியான சீதைக்குப்பதியே, நான் உங்களை சுக்ருத தண்ட நமஸ்காரங்கள் செய்கிறேன். என் குற்றங்களையும், குறைகளையும் கவனியாமல் எங்களிடம் சந்தோஷமுற வேண்டும். உங்களை நான் அடிக்கடி பிரணமங்கள் செய்து வேண்டிக் கொள்கிறேன். இந்த மாதிரி பரபக்தி பரஞான பரம பக்தியையே உங்களிடம் ஈடேறு செய்யும்படி எங்களுக்கு வரமாக அளிக்கவேண்டும். உங்களுடைய

பதாப்ஜங்களை அடைவதில் ஒருவித சிரமமும் களைப்பும் மதி மயக்கமும் ஒருக்காலும் எங்களுக்கு ஏற்படாமல் எங்களை ரக்ஷித்தருளவேண்டும்.'' (32)

என் குருவாகிற துளசிதாஸர், அதிர் அனுசூயா தம்பதிகளால் வேண்டப்பட்டு, '' சரி ''யென்று பகவானாலும் ஆமோதிக்கப்பட்ட இன்னொரு வரத்தையும் மஹா கிருபையுடன் நம் போன்றவர்களை உஜ்ஜீவிப்பதற்காக, மீண்டும் சொல்கிறார் '' இந்த ஸ்தவ ராஜ ஸ்தோத்திரத்தை மிக்க நம்பிக்கையுடன் எவர்கள் படிக்கிறார்களோ, அப்பேறற்பட்ட மஹா பாக்யமுள்ளவர்கள் ஹே, பிரபோ, லக்ஷ்மி நாதா, ராமானுஜனுக்கு தயை செய்த நித்ய தம்பதிகளே, புருஷோத்தமா, உம்முடைய தத் விஷ்ணோ: பரமம்பதம் என்கிற வைகுண்ட பதத்தை ஒருவித சம்சயமுமின்றி அடைகிறார்கள். அது மாத்திரமில்லை. நிரந்தரமாக பரம பக்தி வளர்வது காரணமாக அந்த பதத்தை ஒருவித சங்கோச பயமின்றி, உங்களுடைய மஹா கிருபையால் அனவரதமும் அனுபவிக்கிறார்கள். மீண்டும் இந்த ஜகத்திற்கு அவர்களுடைய சங்கல்பமின்றி, ஆவிர்பவிக்கிறதில்லை. இது ஸத்யம், ஸத்யம்.'' (33)

அதிவினயத்துடன் மஹா மேதாவியான அத்ரி பகவான் சீதாராமனைப் புகழ்ந்து பாடி ஆடி, தண்டனிட்டு அவர்களுடைய பாத பங்கஜங்களை அலம்பி, ஸ்ரீபாத தீர்த்தம் கண்டருளப் பண்ணி, கிருதாஞ்சலியுடன் தாஸ்யபுத்தியுடன் மீண்டும் வெட்கமின்றி அதிவினய கூடராக வார்த்தைகளை ஸமர்ப்பித்தருளினார். '' ஹே நாதா, நான் எந்த தவறுதல் செய்தாலும், காலத்தின் கொடுமையாலும், எந்த விதமான அவகதி எனக்கு ஸம்பவித்தாலும், உம்முடைய பதாப்ஜங்களை இப்போது நம்பி வாழும் எனக்கு, எக்காலத்திலும், என் போன்றவர்களுக்கும், ஸ்வாமி, குளிர்ச்சியைத்தரும் மகிழ்ச்சியுடன் உம்முடைய திருவடித் தாமரைகளை அன்றி வேறு ஒன்றிலும் ருசி நாட்டமில்லாமை யிருக்கும்படி அருள்புரிய வேண்டும் '' என்று வேண்டிக்கொண்டார். (34)

திவ்யமானதும் சுகந்தமானதும் மனத்திற்குப் பிடித்தமானதுமான வஸ்திரங்களையும் பூஷணங்களையும் அந்த அனுசூயாதேவி சீதைக்கு வெகுமதியாகக் கொடுத்து, அவளை அலங்காரம் செய்து, அவளுடைய ரூப லாவண்யங்களைக் கண்டு அனுபவித்தாள். அந்த பூஷணங்கள் வஸ்திரங்கள் நூதனமாகவும் பிரகாசமுள்ளதாகவும், அழகை விருத்தி செய்வதிலும் சுகத்தைத் தருவதிலும் ஈடற்று விளங்கின. அதன்பிறகு அந்த

மஹா உத்தமியான ரிஷி பத்னி சீதையைக் கொஞ்சி, தடவி முத்தமிட்டு ஆசீர்வதித்துக்கொண்டு மிருதுவான பாணியில் காதுக்கும் மனத்திற்கும் இனிமையான சொற்களால் நாரி தர்மம் என்கிற பதிவிரதா தர்மத்தை, [உமை ரிஷிதேவ கணங்களின் ஸந்நிதானத்தில் மஹேஸ்வரருடைய விருப்பத்திற்காகச் சொல்லி அருளினதுபோல,] பதிவிரதா தர்மத்தைச் சொல்வதில் வ்யாஜமாக வைத்து, அந்த பரதேவதையுடன் சம்பாஷித்தாள். (35)

[தியானம்

ஹே சீதாபதி, ராமலக்ஷ்மணா, நாராயணா, பத்ம கர்ப்பரே, பத்மநாபரே, அரவிந்தாக்ஷரே, மாதவா, மஹாலக்ஷ்மி பிரியா, பரமபதநாதா, பரவாஸுதேவா, ரங்கபதி, ஸம்ஸார பீஜம் உங்கள் அருளால் நிவிருத்தி அடைகிறது. பிள்ளைப் பூச்சிக்கு ஸந்திருப்தி வாஸம் ஸந்தோஷம். எல்லாம் புழுதியிலே ஆனாலும், திவ்ய மங்களபதி, அதுக்கு அந்தப் புழுதி ஒட்டுகிறதா, இல்லை. அதுபோல ஸம்சார பீஜம் நசிக்க வேண்டுமானால் நான் பதினெட்டு படிகள் அல்லவோ தாண்டவேண்டும். திருக்கோஷ்டியூர் நம்பி எம்பெருமானாருக்கு பதினெட்டுப் படிகள் தாண்ட வைத்தார். முதற்படியான அஹங்காரம் மமகாரம், மாத்ஸர்யம், லோபம் இவைகளை ஒழிக்கவேண்டும். அக்னியாலே பிறந்த விளக்கு சீதளமான காற்றில் அமர்ந்தாற்போல என் மமகாரங்கள் கர்த்ருத்வம் எல்லாம் உன் கிருபையால் நசித்து, உங்களுக்கு திருப்தி யேற்பட்டு உம்முடைய கைங்கர்ய பிரவிருத்திகளுக்கு அர்ஹனாக, திருமந்திரம் த்வயம் சர்ம ஸ்லோகம் இவைகளுக்கு அதிகாரியாகி, உங்கள் திருவருளுக்கு கைகூட வேண்டுமென்று உங்களுடைய கிருபையை நாரதர் அத்ரி அனுசூயை பிரார்த்திப்பதுபோல பிரார்த்திக்கிறேன். எங்களுடைய அனன்ய சரண்யனே கிருபை செய்.]

"என் பிரியமுள்ள விதேக ராஜகுமாரியே, உன் மாதா பிதாக்கள் எல்லோரும் உன் நன்மையையே விரும்பும் ஹிதகாரிகள். ஆனாலும் அவர்கள் எல்லோரும் உன் தேக சுகங்களை விரும்புகிற படியால் அவர்களால் ஒரு எல்லை வரைதான் உனக்கு நன்மை செய்யமுடியும். என் பிரிய ஜானகி, நன்றாக கேளு. உன்னுடைய பதியாகிய கணவன் இருக்கிறாரே, உனக்கு அமித பலன்களைக் கொடுப்பவர், அவனுடைய ஆத்ம ஸம்பந்தம் உனக்கு மோக்ஷத்தையும், அவனுக்கு அனன்யார்ஹத்வம் உனக்கு எல்லையில்லாத

கீர்த்திகளையும், ஆனந்தத்தையும் இகத்திலும் பரத்திலும் கிடைக்கச்செய்யும். அதனால் அம்மா, உன் பர்த்தாவை அந்தரங்க சுத்தியுடனும் சிரத்தையுடனும் பூஜை செய். [உமை ஒரு தடவை மஹேஸ்வராருக்குச் சொல்லியது போல,] தர்ம விரதமுள்ள பதிவ்ரதை வெகு சுலபத்தில் நல்ல உலகங்களை அடைகிறாள். பதி சேவையைத் தவிர மற்ற தெய்வ ஆராதனைகள் உள்பட எதைச் செய்வித்தாலும் அந்தப் பெண் உத்தம லோகங்களை அடைகிறதில்லை. அதனால் பதிசேவையை இழந்துவிட்டால் அந்த ஸ்திரி அதர்மம் செய்தவளாகவே கருதப்படுகிறாள்.'' (36)

''பதி சேவையாகிற தர்மம் ஆசரணையில் ரொம்ப கடினம். மனத்தில் தைரியத்தை வரவழித்துக் கொண்டுதான் நீ அதை அனுஷ்டிக்கவேண்டும். தைரியம், பதி வ்ரதா தர்மம், மித்ரர்கள், ஸ்திரிகள் ஆகிய நான்கிற்கும் சதா ஆபத்துக்கள் நேரிடும் ஸ்திரிகளுக்கு கணவர்களாக வயதான புருஷன், ரோகி, ஒன்றையும் கேட்காத மூர்க்கன், தனமில்லாதவன், குருடன், செவிடன், க்ரோதம் கொண்டவன், அதிதீனன் ஆகியவர்கள் ஏற்படலாம்.'' (37)

''ஆனால் ஸ்திரிகள் தன் பதி என்கிற காரணத்தினால் அவனை அலக்ஷ்யம் செய்யக்கூடாது. அவ்விதம் அவமானம் செய்ய நேரிட்டால் அவள் யமபுரியில் விதவிதமான துக்க வேதனைகளை அனுபவிக்கிறாள். ஆகையால் சரீரம், வசனம், மனம் ஆகிய திரிகரணத்தினாலும் உன் பதிக்கு அடங்கி, அவனுடைய திவ்ய சரணார விந்தங்களில், [உமை சங்கரருடன், ரமிப்பதுபோல] ரமாபதியாகிய நாராயணருடைய ஆக்ஞையாகச் செய்து வா. இதுதான் அம்மா, நீ வனத்திலும் வீட்டிலும் செய்யவேண்டிய ஏகமாத்திரமான வ்ரதம், நியமம். பதி ப்ரேமையை அடைந்த ஸ்திரி பதிலோகத்தை சுலபமாக அடைகிறாள். அவளுக்கு இன்பங்களும் சுகங்களும் காத்துக் கிடக்கின்றன.'' (38)

''இன்னமும் நன்றாக கேளு. இந்த உலகத்தில் நான்கு விதமான பதி வ்ரதைகள் இருக்கிறார்கள் என்று நான் சொல்லுவதாக நினைத்துக் கொள்ளவேண்டும். வேதங்கள், புராணங்கள் இதிஹாஸங்கள், ஸாது ஜனங்கள் இகத்தையும் பரத்தையும் பார்த்துவிட்டு நிஜமான உண்மையை பறைப் சாற்றுகிறார்கள். அவர்களில் மிக்க உத்தம வர்க்கத்தைச் சேர்ந்த பதிவிரைதகளின் ஹ்ருதய ஆகாசத்தில் வேறொரு புருஷனைப் பற்றி நினைவே இருக்காது. ஸ்வப்னத்தில் கூட அன்ய புருஷனை அவர்கள்

நினைக்கிறதில்லை. மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றிலும் பதியையே தெய்வமாக அவர்கள் நினைப்பவர்கள்.'' (39)

''இரண்டாவது வர்க்கமான மத்யம தரத்தாரைப் பற்றிக் கேளு. தன்னுடன் கூடப்பிறந்த பிராதாக்கள், பிதா புத்ரன் இவர்கள் எவ்விதம் நன்மை செய்கிறார்களோ, அதுபோல அவர்களுக்குச் சமமாக பதியை நினைப்பவர்கள். தன் வயதிற்கு சரிக்குச் சமமான பிராதா போலவும் ரொம்ப வயதான பதியை பிதாவுக்கு ஸமமாகவும் சிறிய புத்ரன் போலவும் அவள் நேசிக்கிறாள். அப்பேற்பட்ட ஸ்திரி தன் பதியின் நடத்தையை விசாரித்து அதன்படிதான் தன்னை ஒழுங்குபடுத்திக் கொண்டாலும், தன் குலத்தின் ஆசரணை அனுஷ்டானங்களால் தனக்குத் தோன்றிய படி அவள் நடந்து வந்தாலும், வேதங்கள் அவளை ரொம்ப கேவலமான நிக்ருஷ்ட ஸ்திரியாகவே பாவிக்கின்றன. ஆகையால் பர்த்தா செய்வதை உன் புத்தியினால் தர்மம் அதர்மம் என்று விசாரியாதே. இது குலத்தின் தர்மமா அல்லது குலத்திற்கு ஏற்படும் கெடுதலா என்று ஆராயாமல் உன் பதியிடம் அந்தரங்க விஸ்வாச பக்தியுடன் அவனுக்கு அடங்கி வாழு.'' (40)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி சமேத பரம பத நாராயணா, ஹயவக்த்ரா, பரம கிருபாளு, ஆனந்த கருட விஷ்வக்ஸேனா ஸர்வ பாரிவாரங்களுடன் கொலுவீற்றிருக்கும் மஹா கிருபாளு, என் தேகாபிமானம் போய் ஆத்மஞானம் கொண்டவனாகவும், அந்த ஆத்ம ஞானத்தால், ஸர்வரே, ஐஸ்வர்ய போகாதிகளில் உபேக்ஷை அடைந்தேன். அதனால் பரமாத்மாவே உயர்ந்த பொருள் அவனுடைய ஸாந்நித்யத்தைப் பெறவேண்டியது என்கிற வ்ரதம் பூண்டவனாக பகவத் ப்ரேமை அதிகரித்தவனாய், அந்த பகவத் ப்ரேமையினால் உண்டான விஷயாந்திர ருசிகள் அறுக்கப்பட்டேன். அதனால் வைஷ்ணவனாகி, பாரதந்திரனாகி, எனக்கு ஆசார்யனே பகவத் ஸம்பந்தம் கொடுப்பான்' என்கிற விஸ்வாசம் கொண்டவனாய், காமராகத்வேஷங்கள் ஒழிக்கப் பெற்றேன். அதனால், ஸர்வ தீர்த்தகரரே, ஸம திருஷ்டியுள்ள வைஷ்ணவனாக ஆக்கப்பட்டேன். க்ஷமை அஹிம்சை, ஸத்யம், ஆர்ஜவம், ஸர்வ ஜந்துக்களிடமும் தயை தாக்ஷண்யம் கொண்ட வைஷ்ணவத்வம் சித்திக்கப் பெற்றேன். அதன் பலனாக ஸாத்விக பரிக்ரஹம் அடையப்பெற்று, அதனால் பாகவத பரிக்ரஹம்

அடையப்பெற்றேன். பகவானுடைய பக்தர்களைக் கண்டு தாஸ்ய புத்தியுடன் அதுவே ஸ்வயம் பிரயோஜனமாகக் கண்டருளிச் செய்து, அனன்ய பிரயோசனமாகிற பகவத் கைங்கர்யம், பாகவத கைங்கர்யம் ஆகிய இரண்டையும் அடையப்பெற்றேன். என் பிரபுவான ராமானுஜர் ஸாதித்து அருளியபடி அனன்ய பிரயோசனம் ஆகாமல் பகவானுக்கும் பிராட்டிக்கும் ஆசார்யனுக்கும் அனன்யார்ஹஸேஷபூதனுக ஆகமாட்டேன். அனன்யார்ஹசேஷபூதனுகாதே அனன்ய சரண்யகனுக ஆக மாட்டான் என் பிரபு நாராயணன். அவன் அனன்ய சரணனுகாமல் நான் யோக்யதை பொருந்திய வைஷ்ணவ அதிகாரியாக மாட்டேன். பகவத் கிருபையை அடைவதற்கும் திருமந்திரம் எனக்கு கைகூட வேண்டுவதற்கும், பகவானுக்கும் பிராட்டிக்கும், ஆசார்யருக்கும், பகவத் பாகவத ப்ரேமைக்கு வசப்பட்டிருக்கும் பக்தர்களுக்கு அனன்யார்ஹசேஷபூதனுகாமல், பகவானும் பிராட்டியும் ஆசார்யனும் அனன்ய சரணமாக மாட்டார்கள். இது தான் பரம வைஷ்ணவ தர்மம் என்றும் மாசுசः என்பதிற்கு பதினெட்டுத் தடவைகள் திருக்கோஷ்டியூர் நம்பி எம்பெருமானுருக்கு பதினெட்டு ரஹஸ்யங்களாக உபதேசம் செய்த கிரமம். (எவ்விதம் பதிவிரதைக்கு அஞ்சு குடி தியாஜ்யமும் மூன்று குடி உபாதேயமும் ஆகுமோ அது போலே, அவளுக்கு தியாஜ்யர் கன்னிகைகள் வேஸ்யைகள், வேஸ்யாபதிகள், ஒருவனுக்குக் கை கொடுத்து வைத்திழந்து போனவள், உள்ளேயிருந்து மசக்குகிறவள்; மூன்று கூட உபாதேயங்களான மாதா பிதாக்கள், தன் பர்த்தாவிற்கு அவாஜ்ஜிநீயமான பந்துக்கள், தன்னேடு ஒத்த பதிவிரதைகள் ஆகிய மூன்று உபாதேயங்கள்;) அது போல முமுக்ஷுவுக்கு ஸம்சாரிகள், வேதாந்திரங்கள், தேவதாந்திர பரதந்தரர்கள் ஆகியவர்கள் தியாஜ்யர்கள் எனக் கருதப்படவேண்டும். இத்துடன் வைஷ்ணவ தர்சனத்தில் புகுந்து நின்று தர்சனபரராக விருத்தல், ரூப நாமங்களை நன்ருக ஆராய்ந்து, உள்ளே புகுந்து, அனன்ய பிரயோசனமாக விருத்தல் ஆகியவை அஞ்சு குடி என்றும், உபாதேயங்களாகிற மூன்று குடி ஆசார்யர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனன்ய பிரம்மசாரிகளான ஏகாந்திகள் என்று அறியப்படுகிருர்கள். இதுவல்லவோ ராமானுஜன் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உபதேசித்த மார்க்கம். இவைகளின்படி மமகாரங்கள் ஒழித்கப் பெற்று ராமா, சீதா, அனுசூயா, அத்ரி தம்பதிகளின் வார்த்தைகளுக்கு கௌரவம் வைத்து எங்களைக் காப்பாற்றமாட்டாயா?]

"அம்மா, சீதா, எந்த ஸ்திரி சமயம் சந்தர்ப்பம் வாய்க்காமலும், மிக்க பயத்தினாலேயே தன் பதிக்கு அடங்கி நடப்பவளுமாக திகழ்கிறாளோ, அந்த ஸ்திரியும் அதமமான ஸ்திரி என்று உலகம் கூறுகின்றது. ஆகையினால் பதியை உன் ஸ்வய முயற்சியால் எப்போதும் தெய்வமாகக் கருதி எந்த அவஸ்தையிலும் கௌவரவப்படுத்து. அது மட்டுமல்ல, என் ஆத்ம பந்துவே, தன் பதிக்கு எவள் த்ரோக எண்ணமுள்ளவளாக மிக்க வஞ்சக புத்தியுடன் கள்ள புருஷனுடன் கூடி ரமிக்கிறாளோ, அந்த பாவியான ஸ்திரி நூறு கல்பங்கள் வரை ரௌரக நகரத்தில் விழுந்து அவதிப்படுகிறாள்." (41)

"சுகமோ ஒரு க்ஷணத்திற்கு ஏற்படுகிறது. அந்த க்ஷண சுகத்திற்கு அவள் துக்கத்தை கணக்கிட முடியாத கோடி கோடிக் கணக்கான ஜன்மங்களில் அனுபவிக்கிறாள். அவளுக்குச் சமமான துஷ்டை யார் இருக்கக் கூடும்? நீயே சொல்? அவளுடைய அவதியாகிற கஷ்ட நிலைமையை யோசித்துப் பார்ப்பதற்கே என் மனம் கூசுகிறது. அதே மாதிரி நீயும் யோசித்துப் பார். எந்த ஸ்திரி பதிவிரதை தர்மத்துடன் பதியையே தெய்வமாகக் கருதி அவனுக்கு சிஸ்ரூஷைகள் செய்து, அவனைத் திருப்தி செய்விக்கிறாளோ, அந்த மஹா பாக்யவதி, ஒருவித சிரமுமின்றி பரம உத்தம கதியை, பதிலோகத்தை அடைகிறாள்." (42)

"தன் பதிக்கு பிரதி கூலமாக எந்த ஸ்திரி நடந்து கொள்கிறாளோ அந்த யுவதியானவள், எப்போதைக் கெப்போது ஜன்மம் எடுத்துப் பிறக்கிறாளோ, விதவையாகி விடுகிறாள். ஒவ்வொரு வாழ்க்கையிலும் அவள் வைதவ்யத்தை அடைகிறாள்." (43)

"இன்னொரு விஷயத்தையும் நன்றாகப் புரிந்து கொள். ஸ்திரி ஜாதியோ பிறப்பிலேயே மஹா பாவத்தை அடைந்து, அபவித்திரமானது; பிறப்பிலே தாழ்ந்து போனாலும், பதிவிரதா தர்மத்தினால் அந்த ஸ்திரி வர்க்கம் சுபமான கதியை வெகு சுலபமாக அடைகிறது. பதிவிரதா தர்மத்தை அனுஷ்டித்தபடியால் இன்று கூட துளசி, பகவான் நாராயணனுக்குப் பிரியவளாகி விட்டாள். பதிக்கு அவளுடைய அனன்யார்ஹசேஷத்வமும் அனன்ய பக்தியாகிற சரண்யத்வமும் சேர்ந்து மஹா பாக்ய வசத்தினால் அவள் பகவத் கைங்கர்யத்திற்கு அருஹதையாகி, பகவத் ப்ரேமைக்கு நிரந்தர யோக்யதையைப் பெற்று விட்டாள். அப்பேற்பட்ட துளசி மஹாத்மியத்தை நான்கு வேதங்களும் எப்பொழுதும் புகழ்கின்றன." (44)

ஹே சீதா, என் பிரிய சிஷ்யையே, நன்ருக கவனமாய் கேள். நீ பகவானை என்றும் பிரியாத பெரிய பிராட்டி என்று நான் நன்கு அறிவேன். உன் ஸந்நிதானத்தில் நான் என்ன சொல்லக்கூடும்? பதிவிரதா தர்மம் பூண்டவளாக நான் இது வரை காலம் கழித்து விட்டேன். அம்மா, உன் மாசற்ற "சீதா" என்கிற நாமதேயத்தை ஸ்திரிகள் தங்களுக்கு அணி கலமாக வைத்துக் கொண்டு உன்னையே தியானம் செய்து, பதி விரதா தர்மத்தை அனுஷ்டிப்பார்கள். (அகல கில்லேன் அலர் மேல் மங்கை மார்பில் உறைபவனை) பரந்தாமனுக்கு நீ மிக்கப் பிரியையான பெரிய பிராட்டி. உன் கிருபை எனக்கும் என் போன்ற ஸ்திரி வர்க்கத்தினர்களுக்கும் ஸம்பவிக்க வேண்டும் என்கிற காரணத்தினுல், ஸம்சாரிகள் ஹிதத்தை அடைய வேண்டும் என்கிற நோக்கத்தினுல், அம்மா, என்னுல் அனுஷ்டிக் கப்படும் பதிவிரதா தர்மத்தைப் பற்றி நான் சொன்னேன். நீதான் எனக்கு கிருபை செய்ய வேண்டும்." (45)

ஜானகி தேவி பொறுமையுடன், அபார கிருபை வசம் அடைந்தவளாக, அந்த மஹா பதிவிரதா சிரோண்மணி அனு சூயையின் வார்த்தைகளைக் கேட்டாள். (ஆம், நான் மானிட வேஷத்தில் வந்திருந்தாலும், இவளை நான் கௌரவம் செய்ய வேண்டும். உலகம் உஜ்ஜீவிக்க வேண்டும். இவளுடைய பாத சரணங்களில் அடி பணிந்து மிக்க மரியாதையுடன் இவளுடைய சுபமான ஆசீர்வாதங்களை நான் பெறுவேன் என்று மனத்தில் சங்கல்பம் செய்பவளாக,) சீதாதேவி, அனுசூயா தேவியின் பாத சரணங்களில் அடி பணிந்து அவளுடைய மங்களமான ஆசீர் வாதங்களைப் பெற்ருள். அந்த சமயம் கிருபா நிதியாகிற ஸ்ரீ ராமச்சந்திரன் அத்ரி பகவானிடம் மிக்க அன்புடன், பணி வுடன் விக்ஞாபித்துக் கொண்டார். "ஸ்வாமி, எங்களுக்கு உங்களுடைய மங்கள ஆசீர் வாதங்கள் வேண்டும். விடை கொடும். நாங்கள் வேருெரு வனத்திற்குச் செல்ல விரும்பு கிறேம்." (46)

"பிரபு, எங்களிடம் ஸந்ததமும் கிருபையுடன் இருக்க வேண்டும். நான் உங்களுடைய சேவகன், எப்பொழுதும் உங்களுடைய ஆக்ஞையைச் சிரமேற் கொண்டு செய்யக் காத்திருக்கிறேன். எங்களை ஒருக்காலும் உங்களுடைய ஸ்நேக பிரேமையிலிருந்து தள்ளிவிட வேண்டாம்" தர்ம துரந்திரரான ராமனுடைய வார்த்தைகளைக் கேட்டார். அந்த மஹா வ்ரதமுள்ள அத்ரி முனிவர் பரம ஞானி. அத்யந்த பிரேமையுடன் அவர்

மீண்டும் ராமச்சந்திரனிடம் வார்த்தைகளை ஸமர்ப்பிக்கலானுர்.'' (47)

[தியானம்

''ஹே சீதாராமா, அச்யுதா, விஸ்வகர்மா, ஆசார்ய கிருபையால் பகவானுடைய திருவடி சம்பந்தம் பெற்ற நான் அனுதி காலம் விமுகனுய், உம் கிருபையால், அபிமுகமாகச் செய்யப்பட்டு உம்முடைய திருமந்திர பிரபாவத்தால் அக்ஞானத்தையும் விபரீத ஞானத்தையும் ஒழிக்கப்பெற்றவனுக ஆனேன். அந்த சுபமான பகவத் பிரவிருத்தியின் பலனுக கைங்கர்யப் பிராப்தியையும் அடைந்தேன். பாகவத பிரேமையினுல் குணலேசமின்றி தோஷங்களில் பூர்ணனுன என்னை ஸதாசார்ய ஸம்பத்தின் விளைவாக, பகவத் கைங்கர்யத்துக்கு பொருளாக்கப்பட்டேன். ஹே பிரபோ, மாதவா, கேசவா, மும்மூர்த்திகளுக்கும் முதல்வா, தேக இந்திரியங்களாலும் ஏற்படும் விகாரங்கள், சப்தாதி ப்ராவாண்யங்கள் பகவத் விஷயத்தை மிக முக்யமாக கருதும்படி தடையாக விருப்பதை நீரே உமது கிருபையால் போக்கி அருளவேண்டும். ஹே லக்ஷ்மி பூமி நீளா ஸமேதராக நித்ய முக்தானு பாவ்யமாக விளங்கும் க்ஷீரஸாகர நாராயணு, ஸகல ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி சம்ஹார கர்த்தாவாய், ஸர்வலோக சரண்யமாக விளங்கும் பரமாத்மாவே, என் முக்தாத்மாவே பிரும்மருத்ராதி தேவதைகளுக்கும் அவாங்மானஸ கோசரமாய் விளங்கும் ஆதிமூலமே, அவ்யயமே, அப்ரமேயா, வ்யூஹ விபவ அந்தர்யாமி, ஸர்வ அவதார ரூபங்களை உடைத்த மஹா பிரபோ, நீர் எப்போதும் எங்களிடம் பிரியதமனுகவிருக்க வேண்டுகிருேம். யாவராலும் புகழப்படும் உங்களுடைய கிருபை எங்களுக்கு எவ்விதம் எப்போது கிடைக்கும்? ஸ்ரீயப்பதியே, உங்கள் திருவடிகளே சரணம்.] (48)

(ருத்ரரை தேவர்கள் ஆஸ்ரயிக்கிருர்கள். ருத்ரர் பிரும்மாவை ஆஸ்ரயிக்கிருர். பிரும்மா பரமபத நாதனுகிற கேசவனை, மாதவனை ஆஸ்ரயிக்கிருர். அப்பேற்பட்ட விஷ்ணு ''நான் பிராம்மணர்களை ஆஸ்ரயிக்கிறேன்'' என்று சொல்லுகிருர். (அப்பேற்பட்ட பரம்பொருளே, ''நமோ பிரும்மண்ய தேவாய கோ பிராம்மண ஹிதாயச'' என்கிறபடி,) ''ஹே ஸ்வாமி, பிரும்மாவும் ருத்ரரும் ஸநகாதி முனிவர்களும் உம்முடைய பரமகிருபையை ஸ்ரீ நிதி என்றும், நீரே பரமார்த்தமான பொருள் என்றும் மற்றது எல்லாம் அனர்த்தம் (பொருள் இல்லை) என்று நினைத்தவர்களாக

ஸதா முயற்சித்துக்கொண்டிருக்கிறுர்கள்.) (அப்பேற்பட்ட அசிந்தனீயர், அனந்தர், அஜர் தமக்கு மேற்பட்ட நாதனில்லாத அநாதர்; நீர் நிர்குணம் என்று சொல்லப்படும் மாயைக்கு உட்பட்ட முக்குணங்களுக்கும் அதீதர். நீர் கூடாத்மா; நிர்த்வந்தர்; பாகவத பிராம்மண கோக்களின் பிரியர்; களங்கமற்றவர்; விகாரமற்றவர். நிதானம், அம்ருதம், ஸுதா, ஸ்வதா, ஸ்வாஹா என்று சொல்லப்படுகிறீர். உம்முடைய ஆத்ம மாயையினுல் சகல சராசரங்களேயும், தேஜஸ்ஸினுலும், தபஸ்ஸினுலும், ஸ்நேக பாசத்தாலும், ஷாட் குணங்களாகிற சக்தி, வீர்யம், தேஜஸ், பலம், ஞானம், ஐஸ்வர்யாதிகளாலும் பஞ்சாயுத ஸந்நிதனுக நடத்துகிறீர்.) அவ்விதமான பரமார்த்த பொருளாகவிருக்கும் ஹே ராமா, சீதாபதி, உங்களே நிஷ்காமபுத்தியினுல் ஸ்வயம் பிரயோசனமாக, (அனன்யசரண்யனுக பூஜை செய்து, ஆராதித்து நான் உங்களுக்கு பிரியதமனுக ஆனேன்.) தீனபந்து பகவான், (வாஸுதேவா, நாராயணு,) என்னிடம் இதுவரை சில நிமிஷங்கள் மிருதுவானதும், என் தாபங்களே தணிப்பதுமான கோமளமான வசனங்களேப் பேசினீர். இன்னும் கொஞ்சம் நிமிஷம் என்னிடம் இரும். (என்னேவிட்டு உடனே பிரிந்து போகாதேயும். வேதத்தின் முதல் பொருளே.'') (49)

''பிரபோ எங்கள் நெஞ்சில் நிறைந்திருக்கும் பிரபோ, வேதத்தின் முதற் பொருளே, லக்ஷ்மிதேவி மற்ற தேவதைகளே விட்டுவிட்டு, தங்களே ஏகமாத்திரமாக பூஜிக்கிருள். அதன் காரணத்தையும், இப்போதுதான் எங்களுக்கு மஹாலக்ஷ்மியாகிற உமது பத்னியின் சாமர்த்தியத்தையும் புரிந்துகொள்ள முடிந்தது. தங்களேப்போல சீலத்திலோ, பிறர்களுக்கு நன்மை செய்வதிலோ, யார் இருக்கிருர்கள்? அதனுல் அல்லவோ லக்ஷ்மி தேவி தங்களேப் பதியாக வரித்தாள். ஸகல தேவர்களேயும் விட மிக்க ஸ்ரேஷ்டமானவர் நீர்தானே? இவ்விதம் தாங்கள் புருஷோத்தமராக விருக்கும்போது, தங்களேப் பஜிக்கும் லக்ஷ்மி தேவி போன்ற பக்தர்களின் சீலமோ, கல்யாண நன்மைகளோ, பாக்யங்களோ, தங்களேப்போல ஏன் அபிவிருத்தியடையாது? தங்களுடைய கிருபையால் நாங்கள் ஏன் அவைகளே அடையப் பெறமாட்டோம்? (50)

(கருத்து :—ஸ்ரீதேவியாகிய சீதை எங்களுக்குப் பேருபகாரத்தைச் செய்திருக்கிருள். ''மிக்க வேதியர், அடியவர், வேதத்தின் உட்பொருளே என் நெஞ்சில் தங்க, என்னுள் நிறுத்தினுள்.'' இந்திராவாகிற சீதை எங்கள் வீட்டில் அடிஎடுத்துவைத்து,

தங்களிடமுள்ள தன் பக்தியுடன் கலந்த காதலை எங்களுக்குப் பிரகடனப்படுத்தினுள். மஹாசாமர்த்தியமாக தங்களை விட்டு அனவரதமும் பிரியாதபடி வாழ்ந்துவரும் சீதை தங்களுடைய மதி, சாக்ஷாத்காரம், தர்மச் செயல்கள் ரூப சௌந்தர்யங்கள் யாவையும் கண்டு, அரசபோகங்களை விட்டு தங்களுடன் வனத்திற்கு வந்திருக்கிருளே அவளுடைய நடத்தையும் செயலும் உடம்பும் யாவையும் "தேவ தேவா, உமக்காக அளிக்கப்பட்டிருக்கின்றன" என்பதுபோல, அவள் ஸதா தங்களையே பஜித்து வருகிருள். அப்பேற்பட்ட அவளுடைய செய்கையின் மர்ம ரஹஸ்யம் இப்பொழுதுதான் எங்களுக்குப் புரிந்தது. ஹே கிருபாளு, லக்ஷ்மிதேவி சகல தேவதைகளையும் த்யாஜ்யம் செய்துவிட்டு தங்களையே பதியாக வரித்தாளே, அத்துடன் தங்களை விட்டுப் பிரியாதபடி தங்களுடைய வக்ஷஸ்தலத்தில் பூர்ணமாக பிரகாசித்துக்கொண்டிருக்கிருளே, அந்த ஸர்வோத்தமரான நீர் தேவதேவராகவும், சௌலப்ய சௌந்தர்ய சுகுமார குணங்களால் பக்தர்களின் நன்மையையே விரதமாகக் கொண்டிருக்கும் காருண்ய ஸ்வபாவங்களாலும் எல்லோரையும் வசீகரிக்கிறீர். இப்பேற்பட்ட ஸ்ரேஷ்டமான குணங்கள் உங்களிடமின்றி வேறு எங்குபோய்த் தேடக்கூடும்? அதனுல் நாராயணப் பிரியையாகிற மஹாலக்ஷ்மியின் சாமர்த்தியத்தையோ, உமக்குச் சமமான கல்யாண குணங்களைக் கொண்ட உதார புருஷரையோ எங்ஙனம் யாரைச் சொல்லக்கூடும்? ஆகவே நீங்கள் இருவர்களும் நிஜமாகவே அதிசயமான திவ்ய தம்பதிகள். உங்களுக்கு நாங்கள் ஸதா அடிமை செய்யக் கடமைப்பட்டிருக்கிருேம்)

"ஹே ஸ்வாமி, உங்களை நான் எவ்விதம் புகழ்வேன்? உம்முடைய திருவருள் எப்போது எனக்குக் கிடைக்கும்? உம்முடைய பிரயாணத்திற்கு நான் ஒன்றும் தடை செய்யமாட்டேன். ஸகல உலகங்களிலும் சேதன அசேதனங்களிலும் பிரவேசித்திருக்கும் அந்தர்யாமியே, என் எண்ணங்களை நீர் நன்கு அறிவீர். எனக்கு உங்களைப் பார்த்ததும் மேலே ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை" என்று அத்ரி அனுசூயா தம்பதிகளின் கண்களில் பிரேமை கண்ணீர்களை விட்டு அழுது, புளகாங்கித சரீரத்துடன் பிரபுல்ல லோசனங்களால், பகவானுடைய கரிய திருக்கோலத்தைச் செவ்வாய்க்குன்றை, அரவிந்தாக்ஷங்களை, கார்மேனி வண்ணனை, பச்சைக்குன்றம்போலவிருந்த மாமணியாளனை, (என் ஆரா அமுதானை, கோவிந்தனை, அறியாத பிள்ளைபோல

அன்பினால் கட்டுண்டு,) "இறைவா, என்னை ஆட்கொள்வாய்" என்று கதறிக்கொண்டு பகவத் தம்பதிகளை ஸ்பர்சித்துக்கொண்டு ஆனந்தமயமாக விளங்கினார்கள். (51)

[தியானம்

ஹே ஸந்தோஹ லக்ஷ்மியுடன் கூடிய மோக்ஷ நாராயணா, எனக்கு மோக்ஷ உபநிஷத்தை உபதேசித்த உமா மஹேஸ்வரர் களே, நிரதிசயமான அழகுடன் விளங்கும் தாரர்களே, "சரணா கதர்களை ரக்ஷிக்கும் ஸுவ்ரதர்களே, ஸம்சாரக் கடலினின்று தப்பவைக்கும் தாரர், உத்தாரர் என்று சொல்லப்படும் தீப்த மூர்த்திகளே, திருத்தேர்தட்டில் அர்ஜுனனுக்கு உபதேசித்த "அஹம்" என்று சொல்லி சர்வசக்திவாய்ந்த கண்ணன், "த்வாம்" என்கிற மோக்ஷ அதிகாரியை, "மோக்ஷயிஷ்யாமி" "மாசுசஃ" என்கிற பதங்களால் சரண்யருசியுள்ள என்னை மிக்கக் கருணையால் அபயஹஸ்தத்தால் ப்ராப்ய பிரதிபந்தங்களை நிவிருத்தி செய்வித்து, அப்பாலே நிர்பரத்வத்தை அனுஸந்தா னம் செய்யச் சொல்லி, அப்பால் அனுஸந்தானார்த்தமாக பரிக் ரஹம் கொள்வது என்று திருக்கோஷ்டியூர் நம்பி ராமானுஜருக் குச் சொல்லி அருளினார். அவருடைய திருவடி ஸம்பந்தம் பெற்ற எனக்கு, சர்மஸ்லோக பிரகரணம் செய்துதலைக் காட்டு கிறுப்போல, அத்ரி அனுசூயா தம்பதிகள் சீதாராமனை, லக்ஷ் மணன் சகிதம் ஆராதித்து, நிர்பரமாகவும், அந்த நித்யசூரிக ளுடன் கூடிய பகவானால் பரிக்ரஹம் செய்யப்பட்டவர்களாகவும் ஆனார்கள். அப்பேற்பட்ட மஹாபாக்யம் எனக்கு எப்போது கிடைக்கும்? கலியில் அவதிப்படும் எனக்கு விஷய தடாகத்தி லிருந்து விடுதலையாகிய உங்களுடைய பரிக்ரஹம் எப்போது ஏற்படும்? தியாகராஜரால் காட்டப்பட்ட ராஜ பாதையாகிற உம்மை துளசி, மல்லிகை, பில்வ, மரு, தவனம் ஆகிய சுகந்த பத்ர புஷ்பங்களால் அர்ச்சனை செய்யும் வழியில் நடந்துவரும் எனக்கு எப்போது உங்கள் கிருபை கிடைக்கும்?]

அத்ரி அனுசூயா தம்பதிகளின் தேஹங்கள் பகவத் ஸ்பர்சத் தால் மெய் சிலிர்த்து நிர்பரர்களாக விருந்தபொது, ப்ரேமை கண்ணீர்கள், பிரேமை ஆனந்தங்கள் பொங்கிவர ஆரம்பித்தன. பகவானுடைய பாத தாமரைகளைப் பார்த்துக்கொண்டேயிருக்க, பகவானுடைய கைகளாலே அவர்களுடைய சரண விரதங்களை ஸ்வீகாரம் செய்யப்பட, பகவானுடைய முக பங்கஜ முகமும் சீதையின் தாமரைபோலவிருக்கும் வதனமும் விகஸித்தன.

(பகவானுடைய கிருபையாலும் பெரிய பிராட்டியின் ஸந்நிதானத்தில் எழுந்த புருஷகார பிரபாவத்தினுலும், ஆசார்யனைப்போல ஸாந்நித்யம் செய்துகொண்டிருந்த ராமானுஜனுகிற லக்ஷ்மணனுடைய ஸந்நிதியில் பிரார்த்தனை செய்யப்பட்ட சரணுகதி விரதங்கள் வீணுகிப் போய்விடுமோ?) அவர்களுடைய திவ்ய நேத்ரங்கள், அப்ராக்ருதமான அந்த திவ்ய தம்பதிகளின் முக தேஜஸ்ஸுகளில் ஈடுபட்டு ஒட்டிக்கொண்டிருந்தன. அப்போது அவர்களுடைய மனதில் ஒரே எண்ணம்தான் குடிகொண்டிருந்தது. "நாம் என்ன சுக்ருதம் செய்தோமோ தெரியவில்லை. காலத்திற்கும் மனத்திற்கும் புத்திக்கும் எட்டாதவரும், ஞானவானும் வேதங்களாகிற ஸ்ருதிக்களுக்கும் மேற்பட்ட புருஷரும் சர்வசக்தியோடு சர்வஸௌலப்யாதி குணங்கள் கொண்ட மஹா கிருபாளுவாகிற ஆதிநாராயண தம்பதிகள் எங்கள் கிரஹத்தில் அவர்களாகவே ஸ்வய இச்சையால் சாக்ஷாத்கரிக்கப்பெற்றிருக்கும் பாக்கியம் பெற்ருேமே? அவர்களை நேராக அர்ச்சிக்க, ஆராதிக்க அதிதி ஸத்காரம் செய்ய உத்தம பேறு பெற்ருேமே? நம்மாழ்வார்போன்ற வைஷ்ணவ ஆசாரியர்கள் "அவாவற்று வீடு பெற்ற," பாக்யத்தை இந்த பிரகிருதியில் இந்த காலத்தில், இந்த சுகந்தமான உடம்புகளில் பெற்ருேமே? நாம் அப்படி மஹா பாக்கிய ஸம்பத்துக் கொள்வதற்கு என்ன ஜபம், என்ன தவம் செய்திருக்கக்கூடும்? இவைகளை அனுஷ்டித்துத்தானே, ராமனிடம் அனுபமான பக்தி யேற்படுகிறது. எவ்விதமாக பூர்ணமாக ஜபயோகம், தர்மபிரவிருத்தி செய்திடினும், நாம் மனுஷ்யர்கள்தானே? குறைகளையும் இந்திரிய தோஷங்களையும் கொண்ட மனிதர்கள்தானே? (ஆம். மாசுச: என்று சொல்லிய கண்ணனும், அந்ருதம் நவக்ஷ்யாமி கதாசன, ராமோத்விः நாபி பாஷதே என்று சொல்லிய ராமனும், நம் போன்ற அஷ்டாக்ஷர ஜப பாராயணங்களும், சரணுகதி என்கிற யோகத்தை அவலம்பித்தவர்களாகவும் ஸத்வங்களால் பிரகாசிக்கும் சமம், தமம், த்யானம், அஹிம்சை, க்ஷமை, தானம் முதலிய தர்ம சமூஹங்களைக் கொண்ட புண்ணிய ஆத்மாக்களை ஸுவ்ரதர், தாருணர், மோக்ஷயிஷ்யாமி என்று சொல்லப்படும் தாரர்) 'பிரபு ராமன்' நிச்சயமாக அத்ரி அனுசூயாவர்களின் அனுபமபக்திக்கு கட்டுப்பட்ட மாதிரி மஹாகிருபையை அவர்கள் பூர்ணமாக அடைந்தது மாதிரி அவர்களிடம் வந்ததுபோல நம்மிடமும் பிரபு சீதாராமன் கட்டாயம் வந்து சேருவார்கள். இருந்தாலும் இந்த ரகுவீரனுடைய புண்ய சரித்திரம், அவனுடைய பக்தர்களின் விஜயம்

ரொம்ப மாதுர்யமாகவும் புண்யமாகவும் புனிதமாகவும் நித்யம் ஆனந்தம் கொடுப்பதாகவும் இருக்கிறது என்கிருர் துளசிதாஸர். (52)

கலியின் மலங்களையும், கலிகாலத்தில் யேற்படும் கல்மஷங்களையும் ஸ்ரீராமனைப் பாடி ஆடி மகிழ்ந்தால்தான் போக்கமுடியும். ஸ்ரீராமனுடைய திவ்ய நாமம்தான் பாபங்களைப் போக்கி, மனத்திற்கு சாந்தியை அளித்து மனிதனுக்கு நல்ல கீர்த்தியையும், சுகத்திற்கு மூலமான நான்கு வித புருஷார்த்தங்களையும் கொடுக்கும். ஆகவே துளசிதாஸர் சொல்லுகிருர் "நான் சொல்வதை ஆமாம், இது ஸத்யம்" என்று எவர்கள் மிக்க மரியாதையுடன் ஆமோதிக்கிருர்களோ, அவர்களிடம் பகவான் ஸ்ரீராமச்சந்திரன் பரம அனுகூலராகி விடுகிருர்." (53)

"இந்த கலிகாலத்தில் கடூரமான பாபங்கள் கால தோஷத்தினுல் ஏற்படுகின்றன. அதனுல் தர்மமே மறைந்து விடுகிறது. பரமாத்மாவே பெரிய அர்த்தம் (பொருள்) என்கிற ஞானம் சுலபமாக வருவதில்லை. அந்த ஞான ஸம்பத்தை அடைவதற்கு ஸாதனமாக விஸ்வாசம், சிரத்தை ஆகிய அம்சங்கள் கொண்ட யோகமும் சித்திப்பதில்லை. (இவைகளை ஸதாசாரியன் வழியாகவும் அடையவேண்டும்.) இப்பேற்பட்ட மஹத்தான கஷ்டங்கள் இருக்கும்போது எவர்கள் ஸ்ரீராமனே கதி; (ஸகல சேதன அசேதனங்களுக்கும் வ்யாபகமாயும் தாரகமுமாய் சரீரியாய், சேஷியாய் விலக்ஷண விக்ரஹ யுக்தமாய், லக்ஷ்மீ பூமி நீளா ஸமேதனுகிற எம்பெருமான், நாராயணன், அனுக்ரஹ ஸம்ஹார கர்த்தாவாய்) ராமனுக அவதரித்து நம்மை பரிக்ரஹம் செய்து கொள்ளுவார் என்கிற ஒரே நம்பிக்கையால், அந்த அவாப்த ஸம்ஸ்தகாமனை, அல்ப சந்தோஷியை, (நமஸ்காராதிகளால் திருப்தி அடையும் மஹா பிரபுவை) எவர்கள் பஜிக்கிருர்களோ, அவர்கள் அல்லவோ மிகமிக கெட்டிக்காரர்கள்." இதையல்லவோ அத்ரி அனுசூயா தம்பதிகள் நமக்கு பேருபகாரமாகக் காட்டினுர்கள் என்று சொல்லுகிருர் துளசிதாஸர்.) (54)

(இப்படிப்பட்ட பரம உபகாரம் செய்த அத்ரி முனிவருடைய பாதங்களை, அனுசூயாவின் திவ்ய சரணங்களை, அந்த இருவர்களுடைய தாமரைச் சரணங்களை நான் நமஸ்கரிக்கிறேன்.) அந்த் முனியினுடைய பாத கமலங்களுக்கு பிராம்மண ப்ரியரான ராமன், ஸகல தேவதைகளுக்கும் மனுஷ்யர்களுக்கும் பிரபுவான பரந்தாமன் வணங்கிவிட்டு, மேலே வனம் சென்ருர். முதலில் வில்லுடன் ஸ்ரீராமனும், அவருக்குப்பின் சீதையும் அவளுக்குப்

பின் லக்ஷ்மணனும் பாணம் பொருந்திய வில்லுடன் சென்று கொண்டிருந்தார்கள். அந்த இரு சகோதரர்களின் வேஷங்கள் அழகான தபஸ்விகளின் ரூபத்தை தரித்துக்கொண்டு அவர்கள் நடந்து போகும் வரிசைகள் அத்யந்த சோபைகளுடன் விளங்கின. (55)

அந்த இரு ராஜகுமாரர்களின் நடுவில் ஸாக்ஷாத் ஸ்ரீதேவி போல சீதை நடந்து சென்றுகொண்டிருந்தாள். பரப்பிருமம மாகிற ராமன் அதற்குப்பின் மாயையாகிற சீதை, அவளுக்குப் பின் ஜீவன் எவ்விதம் செல்லுவார்களோ, அதுபோல அவர்கள் மூவரும் சென்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் சஞ்சரிக்கும் வழி களில் உள்ள ஆறுகள், வனங்கள், குன்று மலைகள், சமவெளிப் பிரதேசங்கள் யாவும் இவர்கள் ஸாக்ஷாத் லோகாதிபதிகள் மஹேஸ்வரர்கள் என்று அடையாளம் தெரிந்துகொண்டு, அவர் களுக்கு சுகந்தமானதும் சுலபமானதுமான வழிகளாக விளங்கின. (56)

[தியானம்

ஹே ராமா, சீதா பிரபோ, லக்ஷ்மணனால் சேவை செய்யப் பட்ட சீதாபதி, நாராயணா, திரிபதர் என்கிற ஜீவன், அசேதனம் இவைகளை நடத்தும் நியந்தாவாகிற ஈஸ்வரன் என்று சொல்லப் படும் மூன்று தத்வங்களே, ஆசாரிய உபகாரத்தினால் கைங்கர்ய மாக்கப்பட்ட பொருளாகிற என்னை, காலம் பிரகிருதி என்கிற லீலோபகரணங்களாலும் போகோபகரணமாகிற சேதனா சேதன வர்க்கங்களாலும் என்னைப் பகவானிடம் சேர்ப்பிக்க வேண்டும். அந்த சேர்க்கைக்கு மூல காரணமாகிற நிஸ்ஸங்கத்வம் பெற்று என் பிரபத்தி பக்தி யோகங்கள் பூர்ணம் பெற வேண்டும். பரமாத்மா பராயணனாகிற என்னை மோக்ஷ பதமாகிறதும் அஜன்மா, அனாதி, அவிநாசி, விகாரமற்றதும் மரணாதி உபாதை களிலிருந்து விடுபட்டு, இந்திரியங்களுக்கும் அறியமுடியாத பரமமான பதத்தை விஷ்ணு பகவானுடைய ஆராதனையால் ஸௌபரி ரிஷியானவர் அடைந்ததுபோல நானும் அடைய வேண்டும். அப்பேற்பட்ட அச்யுத பதத்திற்கு முக்கிய ஹேது வாகிற பாகவத ஸத்ஸங்கத்தை, ஓம்ஹரியே நமः என்று சொல்லும் பாகவத ஸாதுக்களின் சேர்க்கையை நான் எப்பொழு தும் அடையவேண்டும். மத்ஸயம் சம்சாரத்தைப் பெருக்குவது போல, விஷயாந்திரங்களில் ஈடுபட்டிருக்கும் மனிதர்களுடைய

ஸங்க ஸ்நேகத்தை உன் கிருபையால் நான் எப்பொழுதும் அடையவேண்டாம்.]

எங்கு எப்போது ரகுராய் என்கிற புருஷோத்தமர் சென்று கொண்டிருந்தாரோ, (அப்போது நாங்கள் உங்கள் கைங்கர்யத் துக்காக பிறந்து விருக்கிறோம் என்கிற ஆவலுடன்) மேகங்கள் ஆகாசத்தில் சஞ்சரித்துக்கொண்டு, நிழல் படர்ந்து, குளிர்ந்த வர்ஷத்தை அளித்து அவர்களுடைய களைப்பைப் போக்கின. அவ்விதம் போகும்போது, வழியில் விராதன் என்கிற ராக்ஷஸனை அவர்கள் கண்டார்கள். எதிரில் வழிமறித்து, நின்று கொண் டிருக்கும் அவனை ரகுவீரன் வெட்டிச் சாய்த்தார். (57)

பகவான் ராமச்சந்திரனுடைய கைப்பட்ட மாத்திரத்தில் அந்த ராக்ஷஸன் தன் ஸ்வரூபத்தை விட்டுவிட்டு, ஒரு அழகான தேவ ரூபத்தை அடைந்தான். அவனுடைய பச்சாதாபங்களைக் கேட்ட பிரபு சீதாபதி அவன் மேல் இரக்கம் கொண்டு, அனந்த ஸர்வேஸ்வரன் அச்யுத பதமாகிற வைகுண்ட பதத்திற்கு அவனை அனுப்பி வைத்தார். அதன் பிறகு பிரபு தன் இளைய சகோதர னை லக்ஷ்மணனுடனும் பாரியையான சீதையுடனும் சரபங்க முனிவர் வாழும் ஆஸ்ரமத்திற்கு எழுந்தருளினர். (58)

பகவான் ராமச்சந்திரன் வந்திருப்பதை அறிந்து, முனிவர னுகிற சரபங்கர்' (இந்திர லோகத்தையும் தியாஜ்யம் செய்து விட்டு, எப்போது பிரபு ராமன் தன் பத்னியுடன், தன் ஆஸ்ரமத் திற்கு எழுந்தருளுவார், அவரிடம் தன் கிரியானுஷ்டானங்களின் பலன்களை நேரிலேயே ஸமர்ப்பித்து, அவருடைய அனுக்ரஹங் களைப்பெறக் காத்துக் கொண்டிருக்கும் அந்த மாமுனிவர்,) மிக்க ஆச்சரியத்துடன், தாமரை முகம் போல விகஸித்து புன்னகை கொண்ட ராமச்சந்திரனை அன்புடன், உத்ஸாஹத் துடன் வரவேற்றுர். அவருடைய நேத்ரங்களில் கண்ணீர் தாரை கள் பெருகி, ஆனந்த ஹ்ருதயத்துடன் அவர்களைப் பார்த்த வண்ணமிருந்தார். மிக்க மரியாதைகளுடன் அவர்களை வரவேற்று, நமஸ்கரித்து, தேன் வண்டு மொய்த்த தாமரையின் மகரந்த ரஸங்களைப் பருகுவதுபோல, இன்பமயமாகி, தோஷ ரஹித சித்தத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார். ஸகலருக்கும் விதாதா, அசிந்திய ரூபன், அணுவுக்கு அணு, மஹத்திற்கு மஹத், சுத்த ஸ்வரூபம், பகவான் விஷ்ணு அந்த சரபங்க ரிஷி யினுடைய தபஸ்ஸிற்குப் பலனுக நேராக சாக்ஷாத்கரித்து, அவருடைய சரண விரதங்களை ஸ்வீகரிக்க எழுந்தருளியிருக் கிறுர் என்று அவர் உணர்ந்தார்.) சரபங்க ரிஷியினுடைய

ஜன்மம் அல்லவோ தன்யமானது! அதுவல்லவோ அடைவதற்கு அரிது. (59)

முனிவர் மிக்க வினயத்துடன் ஸமர்ப்பித்தார். "ஹே கிருபாளு, ரகுவீரா, மானஸ ஸரோவராகிய சங்கரருடைய மனதில் சதா ஆனந்தத்துடன் நர்த்தனமாடும் ராஜ ஹம்ஸமே, ஐயா, ஸ்வாமி, தயவு செய்து கேளும். நான் பிரும்மலோகம் செல்வதாக விருந்தேன். பகவான் நாராயணன் ராம அவதாரம் எடுத்து பூமியில் எழுந்தருளி, வனத்திற்கு சென்றிருப்பதாகக் கேள்விப் பட்டேன்." (60)

"அந்த நிமிஷம் முதல் ராத்திரியும் பகலும் கண்விழித்துக் கொண்டு, ஸ்வாமி, உமக்காக காத்துக் கிடக்கிறேன். (பிரபோ, இன்று நான் அவ்யக்தன், அமலனுதி பிரான் ஸர்வ ஸ்வரூபரை, என் பரம குருவை, ஆதி அந்தமில்லாத ஆதிநாராயணனை, என் மனம் குளிர திவ்ய தர்சனம் செய்தேன்) உம்முடைய சேவகன் என்று என்னை ஸ்வீகரித்து, என் மீது காட்டப்பட்ட தங்களுடைய அபார கிருபைக்கு நான் பாத்திரமாகி, என்னை கிருத கிருத்யனுகச் செய்த உபகாரத்திற்கு நான் என்ன சொல்வேன்? (என்னைக் கட்டிக் காக்க வந்த பிரபோ, த்ரவிண ப்ரதரே, ஸம்பூர்ண தேஜோ மயப்பிரபோ,) நான் எவ்விதமான ஸாதனங்களிலும் தேர்ச்சி பெருதவன். அப்படியிருந்தும் என்னிடம் கிருபை காட்டி, என் மனோரதத்தைப் பூர்த்தி செய்ததற்கு நான் எவ்வாறு புகழ்வேன்! நான் உங்கள் தாஸன். இன்று மாதிரி என்றும் என்னிடம் தங்களுடைய பரிபூர்ண கிருபை இருக்கவேண்டும்." (61)

[தியானம்

ஹே ராமா சீதா ப்ரபோ, ஜனக சுதாரமணு, ஆதிநாராயணு பிரபோ, நளினலோசனு, உங்களைப் பஜிக்காமல் இந்த நர ஜன்மம் வீண். வீண். ஹே ஸுபாஷணு, உன்னோடு ஸம்பாஷிக்காமல் இந்த ஜன்மம் வீண். உன்னை பரம பந்து என்று நானும் நீரும் எண்ணுமல் போனுல், பூலோகத்தில் வாழ்வது மஹாவீண். கஜேந்திரனையும் சரபங்கரையும் அணைத்து நின்ற பரிய அவஸ்திதரே, எங்கும் வியாபித்திருக்கும் வ்யாதிஸரே, ஸத்குண ஸத்ய ஸ்வரூபரே, பராத்பரரே, ஸதாசாரிய ஸம்பத்தே, ஆசாரியனுடைய ஸ்ரீபாததீர்த்தம் முதலியவை எனக்கு ஸ்வரூப நாசத்தைப் போக்கி, பிடித்தார் பிடித்தாரைப் பற்றி உனது திருவடிகளிலே பண்ணும் நான் செய்த சரணுகதி அனவரத

நித்ய கல்யாண போத ஸர்வ ரஸ, ஸர்வ கந்தனுன நாராயணனை "ஸதா பஸ்யந்தி" என்று சொல்லும்படி பண்ணுகையன்றோ எனக்கு ஸ்வரூபலாபம். ஞானமும் விரக்தியும் உன்மீது அத்யந்த பக்தியும் பிரேமையையும், சரீரம் அர்த்தம் பிராணும்ச ஸத்குருப்யோ நிவேதயேத் என்கிறுப் போலே, நான் சோதனை செய்து, ஆசார்ய பிரஸாதம் உள்ளவனுக, உம்முடைய அனுபவ சித்திபெற வேண்டும். அப்போது அன்றோ நித்யனுய், நித்யானு பவம் பண்ணி, நித்யரோடு ஒரு கோர்வையான சங்கிலித் தொடராக கலக்கவேண்டும். நிர்விகாரா, சாது ஜனங்களாகிற தியாகராஜர், ராமானுஜர், முதலிய பக்தர்களிடம் விசேஷ கிருபை காட்டிய எம்பெருமாளே, பிராட்டியே, ஆசார்யரையே பரமப் பிராப்தமாக அடைந்த என்னைக் காத்து ரக்ஷித்தருளு.]

"ஹே தேவா, உண்மையாகச் சொல்லப்போனல், எனக்கு பரம உபகாரம் செய்துவிட்டதாக நான் சொல்லுகிறேனே, அது தப்பு. உம்முடைய ஸ்வரூபத்தை அறிந்தவர்கள், பக்தர்களைக் கட்டி அணைக்கும் ஸ்வபாவம் உமக்கு இயற்கையாக உள்ளது. அதனுல் உமக்கு பக்தர்களின் மனப்பிரகாரம் நடக்கும் ஸத்குண ஸத்ய ஸ்வரூபர் என்று காரணப் பெயர் விளங்குகிறது. (அதனுலேதானே ஸ்வாமி, உமக்கு வ்யாதிசர் என்கிற நாமம் ஏற்பட்டிருக்கிறது. இந்திராதி தேவர்களிடமும் அவரவர் இஷ்டப் படி நடக்கிறீர். உன் பக்தர்களாகிற எல்லோரையும் நீர் உமது சௌசீல்ய சௌலப்யத்தினுல் மனங்களை கவர்ந்து விடுகிறீர்.) நான் உம்மையே நம்பி வாழும் தீனன். உம்மை விதிப்படி வணங்கி, தழுதழுத்து மெய்மறந்து ஸ்தோத்திரங்களை செய்து, கற்பனைகளுக்கு எட்டாத உமது ஸ்வரூபம், திவ்ய மங்கள விக்ரஹம், குணச் சிறப்புக்கள், மகிமைகள் முதலியவற்றை சொல்லமுடியாமல் திணறினவன் நான். உமது ஸந்நிதானத்தில் நான் பிராணனை தியாகம் செய்துவிட விரும்புகிறேன். (நீர் என்னை அணைத்துக் கொண்டிருக்கும் சமயம், ராகலோப தோஷங்களை விட்டவனுக, ஸத்பிரபாவம் ஓங்கி வளர்ந்தவனுக, என்னுடைய மங்கள கதிக்கு வரம் கொடுக்க வந்தாற்போல, தாங்கள் ஸாக்ஷாத்காரம் செய்திருக்கும் சமயம்,) என் சரீரத்தை தியாகம் செய்யும் வரை, ஐயா, கொஞ்சம் இவ்விடத்தில் தாமஸிக்க வேண்டும்." (62)

நான் செய்திருக்கும் பிரபத்தி யோகம், உமக்காகச் செய்த கர்ம ஆராதனைகளாகிற யக்ஞங்கள், ஜபதபாதிகள், (திருமந் திரம், த்வ்யம் முதலிய அனுஸந்தானங்கள்) இன்னும் பாகவத

கைங்கர்யம் போன்ற விரதங்கள் எல்லாம் உமது பாதங்களில் புருஷகார ஸமேதையான சீதாபிராட்டியின் கடாக்ஷத்தால் ஸமர்ப்பித்து விட்டேன். என் தேஹத்தையும், என் தனங்களையும், என் தவங்களையும் ஸமர்ப்பித்துவிட்டு, அதே ஸ்வாமியிடம் என் பிராணனையும் ஸமர்ப்பிக்க விரும்புகிறேன். ஸ்வயம் பிரயோசனமாக இவைகள் செய்யப்படாததால், உங்களுடைய பக்தி போக்யங்கள் அனவரதமும் எனக்கு கிடைக்க வேண்டும்'' என்கிற வரதானம் உங்கள் கிருபையினால் எனக்கு சித்திக்க வேண்டும். இவ்விதம் அனன்ய பக்தியையே வரமாகப் பிரார்த்தித்தார் சரபங்கரிஷி. ஸ்வரூபலாபத்தை அடைந்த மஹா முனிவர் அவிடத்திலே அக்னி சிதைகளை மூட்டி, ஹ்ருதயத்தில் நிர்விஹாரமாக, ஸகல ஸங்க தியாகத்தை செய்து, அந்த அக்னி சிதையின் மேல் ஏறி உட்கார்ந்தார். (63)

"ஸ்யாமசுந்தரா, காயாம்பு மேனியுடன் பொலிவு கொண்டு, கருமுகில் போல அருள் சுரக்கும் ஸகுண ஸ்வரூபியான சீதா ராமா, பிரபோ, சீதாநாயகா, ராமானுஜனுகிற லக்ஷ்மணா, நீங்கள் மூவரும் அனவரதமும், உங்கள் ரூபங்களுடனும், நாமங்களுடனும், ஸகுண பிரும்மமாக என் ஹ்ருதயத்தில் நிரந்தரமாக வாஸம் செய்யவேண்டும். (நான் எல்லா தர்மங்களையும் பரித்யாஜ்யம் செய்துவிட்டு, இப்போது உங்களை பரிகிரஹிக்கிறேன். நீங்களும் என்னை ரக்ஷித்து பரிகிரஹிக்க வேண்டும்.)'' (64)

இவ்விதம் சொல்லிவிட்டு, சரபங்கரிஷி தன் தேஹத்தை யோகாக்னியில் கொளுத்தி, அந்த அக்னியில் சரீரத்தை தியாகம் செய்தார். ராமசீதாவின் கிருபையினால், ("நஃ புனராவர்த்ததே தத்விஷ்ணோஃ பரமம் பதம்'' என்கிற நாராயண பதமாகிற) வைகுண்ட பதத்தை அடைந்தார். அந்த பரமபாக்யமுள்ள முனிவர் ராமனுடைய திவ்ய உடம்பில் ஐக்யமாகவில்லை. முதன் முதலாகவே அவர் பகவானிடம் ஸகுணபிரும்மத்தின் அனன்ய பக்தியை வரமாகப் பெற்றுவிட்டார். அதனால் கடாக்ஷிக்கப் பெற்று அவர் வைகுண்டத்தை அடைந்து விட்டார். (65)

அங்கு கூடியிருந்த ரிஷிகணங்களும், முனிஸ்ரேஷ்டர்களும் அந்த சரபங்கருடைய உத்தமகதியைக் கண்டு அவரவர்கள் ஹ்ருதயத்தில் விசேஷமான சுகத்தை அடைந்தார்கள். ஸகல முனிவர்களும் "இதுவல்லவோ வள்ளல் ராமன் கொடுக்கும் சுக்ருதம்'' என்று புகழ்ந்து, உடனே தங்களுக்கும் அந்த பரம அனுத்தம கதியைத் தரவேண்டும் என்கிற எண்ணத்துடன்

பிரபு ஸ்ரீ சீதாராமச்சந்திரனையும், லக்ஷ்மணனையும் நமஸ்கரித்து ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பித்தார்கள். "பிரபு, பக்தர்களின் ஹிதங்களைப் பூர்த்தி செய்வதே வ்ரதமாகக் கொண்ட பிரணதார்த்த ஹரனே, உம்மை நாங்கள் சரணாகதி அடைந்தோம். உம்முடைய கருணை ஆனந்தத்திற்கு என்றும் மங்களங்கள் யேற்படட்டும். உம்மை கருணைக்கு மூலமாக நாங்கள் வழிபடுகிறோம். உங்களுக்கு எப்போதும் ஜயமங்களங்கள் ஏற்படட்டும்." (66)

அவர்களின் பிரார்த்தனைகளை ஸ்வீகரித்துக் கொண்டு, பகவான் ரகுநாதன் மீண்டும் தன் பிரயாணத்தை தொடர்ந்து செய்தார். அவரைத் தரிசிப்பதற்கு ஸ்ரேஷ்டமான முனிவர்கள் விமலஹ்ருதயத்துடன் ஆவலுடன் ஓடிவந்தார்கள். அவருடன் வன யாத்திரையை அவர்களும் செய்தார்கள். அவ்விதம் அவர்கள் போகும்போது ஒரு இடத்தில் எலும்புக் குவியல்களைக் கண்டார். பிரபு அந்த குவியல்களைக் கண்டதும் பிரபுவுக்கு தயை பிரவாகமாக ஓடி பெருக்கியது. அங்கு வந்திருந்த முனிக் கூட்டங்களை "இது என்ன?" என்று கேட்டார். (67)

[தியானம்

ராமா, சீதாராமானுஜா, நாரதர், தியாகராஜர், துளசிதாஸர் போன்றவர்களுக்கும், எனக்கும், குருவாக விளங்கின ஜாதவேதஸே, ஜ்வலிக்கிற உங்கள் தேஜஸ்ஸை கோதண்ட ஹஸ்தத்தால் வெளியுலகிற்குக் காண்பித்த மஹா பிரபோ, நாராயணா, புண்டரீகாக்ஷரே, எந்த விடத்தில் நீங்கள் இருக்கிறீர்களோ, அந்த விடத்தில் ரதந்திரம், பிருஹத்ஸாமம் பாடப்படுகின்றன. அந்த இடத்தில் அக்னி யாககுண்டத்தில் ஜ்வலித்துக் கொண்டு சதா விளங்குகிறது. புண்டரீகாக்ஷரே, எந்த விடத்தில் யாகங்களைச் செய்வித்து, இந்திரனுக்கும் ஸோமபானம் செய்வித்து, ஹரிபகவானை திருப்தி அடையச் செய்கிறார்களோ, அந்த விடத்தில் தாங்கள் இருக்கிறீர்கள். எந்த விடத்தில் கோதானம் சிரத்தையோடு ஸ்வர்ண தக்ஷிணையுடன் நல்ல வேதவித்துக்குக் கொடுக்கப்படுகிறதோ, அந்த விடத்தில் தாங்கள் சாக்ஷாத்கரிக்கிறீர்கள். அப்பேற்பட்ட ரகுகுல திலகமே, ஜனகசுதாரமணா, மஹா வினயரே, ஸர்வேஸ்வரர்களே, உங்களுக்கு எப்பொழுதும் ஜயமங்களங்கள் ஏற்படட்டும்.]

முனிவர்கள் ஸ்ரீ ராமனுக்கு உத்தரம் சென்னார்கள். "ஹே ஸ்வாமி, தாங்கள் சர்வதர்சி. (ஸர்வதோமுகர், விஸ்ருதாத்மா.)

உள்ளும் புறமும் கிடந்திருக்கும் அந்தர்யாமியாகிற விஷ்ணு பகவான், வ்யாப்ய நாராயணர். இதுபற்றி தங்களுக்குத் தெரிந்திருந்தும், எங்களுடைய ஏற்றத்தாழ்வுகளைப் பாராமல் ஸ்வாமி, நீர் இதைப்பற்றி எங்களிடம் அறிந்துகொள்ள விரும்புகிறீர். இந்த எலும்புக் குவியல்கள் இரவில் நடமாடும் ராக்ஷஸர்களால் சகல முனிவர்களும் தின்றப்பட்டு, அவர்களின் எலும்புக்கூடுகளை சாப்பிட்ட பின்பு விட்டு எரியப்பட்டவை. அவைகளே இந்த எலும்புக்குவியல்கள்'' என்று சொன்னார்கள். இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ரகுவீரனுடைய நயனங்களிலிருந்து இரக்கத்தால் கண்ணீர்கள் தாரைகளாக வழிந்து கொண்டிருந்தன. (68)

பகவான் ஸ்ரீ ராமச்சந்திரன் உயரத் தூக்கிய கைகளுடன் சத்ய வ்ரதமாக பிரமாணம் செய்தார். "இன்று முதல் இந்த பிருதிவியில் மற்றவர்களுக்குத் துக்கங்களை விளைவிக்கும் ராக்ஷஸர்களை நான் அழித்துவிடுகிறேன்'' என்று சபதம் செய்தார். ஸமஸ்த முனிஜனங்களும் அவர்களுடன் சம்பாஷித்த லாபமும் யேற்பட்டு, சீதாராம தரிசனத்தை அடைந்த சுகத்துடன் சாந்தி பராயணர்களாக, தங்கள் ஆஸ்ரமங்களுக்குத் திரும்பினார்கள். ராமதர்சனத்தின் சுகங்களைப் பற்றியே அவர்கள் ஸதா சம்பாஷணம் செய்து கொண்டிருந்தார்கள். (69)

நற்பிறப்பை அடைந்தவரும், அகஸ்திய மாமுனிவருடைய சிஷ்யனுமாகிற சுதீக்ஷ்ணர் என்கிற பெயருள்ள ரிஷி பகவான் ராமச்சந்திரனிடம் அத்யந்த பக்தி உள்ளவர்; மனம், கர்மம், வசனங்களில் ஸ்ரீ சீதாராம பதத்தையே தியானம் செய்து கொண்டு, ஸ்வப்னத்தில் கூட ராமசேவகனாக தன்னைப் பாவித்துக்கொண்டு வாழ்ந்து வந்தார். அவருடைய அனன்ய பக்தி விஸ்வாசம், மற்ற தெய்வங்களிடமும் நம்பிக்கை வைக்காமல், ராமனையே பரந்தாமனாக நினைத்து அவர் வாழ்ந்து வந்தார். (70)

பிரபு வந்து கொண்டிருக்கிறார் என்ற செய்தியை அறிந்து, சுதீக்ஷ்ணர் தன் மனோரதம் நிறைவேறிவிட்டதாக எண்ணி, வெகுசீக்கிரம் ராமனைக் காண ஓடிவந்தார். "ஹே பிரும்மா, தீனர்களைக் காப்பாற்றும் ஸ்ரீ ரகுராய் எனக்கு அருள் செய்வார்? மஹா துஷ்டர்களிடமும் தயை காண்பிக்கும் பிரபு, என்னிடமும் தயையுடன் இருப்பாரா?'' (71)

"இளைய சகோதரனுடன் கூடிய பிரபு, லக்ஷ்மணனுடன் கூடிய ஸ்ரீராமன் என் சேவகத்தை ஸ்வீகரிப்பவரா? கோஸாயி, என் பிரபு, என் குருர்குரு, என் நிஜமான பக்தியை அறிவாரா!

(நான் மற்ற தெய்வங்களை ஆராதியாமல் இருந்திருக்கிறேன். அவர்கள் ஸம்மதமும் பெற்றேன் இலன்.) அப்பேற்பட்ட எனக்கு அவர் அருள் செய்வாரா? எனக்குத் திடமான விஸ்வாசம் ஏற்படவில்லையே. என் மனதில் பரபக்தியும், விரக்தியும், உத்தம ஞானமும் ஏற்படவில்லையே, நான் என்ன செய்வேன்?'' என்று மனம் கலங்கினார். (72)

[தியானம்

ஹே நாராயணா, லக்ஷ்மிசமேதா, ராமாசீதா, நான் செய்யும் கர்மங்கள் யாவும் உம்முடைய ஆராதனைகள்தான். ஆதி ஜீவனும் ஸ்ருஷ்டி கர்த்தாவாகிற பிரும்மாவும் உலக ஸ்ருஷ்டிகளைச் செய்யும் சமயம் தேவர்களை தன் இந்திரியங்களாகவும் காலத்தை யக்ஞப் பொருளாகவும் பரம புருஷனாகிற உம்மை, விரூபாக்ஷரே, தர்மத்தையும் அவைகளின் அனுஷ்டானங்களையும் கண்களாக உடையவரே, ஆராதித்து அக்னியாக வரித்து, தன்னையே பூர்ண ஆஹுதியாகத் தியானித்து, அந்த மானஸ யக்ஞத்தைப் பூர்த்தி செய்தார். உம்மை அடைந்து தானே, ஸ்வாமி, மங்கள மூல்யரான வ்ருஷாஹி, பிரும்மா தர்மத்தை நிலை நிறுத்தினர். பிரபு, ஸ்ரீ ராமா, அந்த தர்மத்திலே நீ அவதாரம் கொண்டு உம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட சம்சார புவனங்களை ரக்ஷிக்கிறாய். தர்மத்தின் வழியாக கர்ம பலன்களையும் ரக்ஷிக்கிறாய். ஹே ராமா, பிரபோ, தங்களைத் தியானம் செய்யும் எவனும் வளர்ச்சியை அடைந்து, அவனுடைய ஸர்வாபீஷ்டங்களும் பூர்த்தியாகி, நீர் அவனுக்கு உபயோகமான காமதேனுவாக விளங்குகிறீர். நீர் பிறவித் துன்பங்களை எனக்கு ஒழித்து, எனக்கு சாகா நிலையை எப்போது அளிக்கப் போகிறீர்?]

அவர் மீண்டும் தனக்குள் சொல்லிக் கொண்டார் ''பிரபோ, ஸ்வாமி, நான் ஸத்ஸங்கத்தை அடையவில்லை. யோகம் (அஷ்டாக்ஷரம் த்வயம்) முதலிய ஜபங்களையும், யாகயக்ஞங்கள் ஒன்றையும் செய்யாமல் காலத்தைக் கழித்து விட்டேன். அது மாத்திரமல்ல. மஹா விஸ்வாசமடைந்து, பிரபத்தி யோகத்தின் முக்கிய அம்சமாக தங்களுடைய திவ்ய சரணங்களை அடைந்து விட்டிருக்கிறேன். ஆனாலும் (தாங்கள் பரம வ்யூஹத்திலிருந்து கொண்டு தங்களை உபாஸிப்பவர்களை அனுக்ரஹிப்பதற்காக ஸ்தூல ரூபியாகி, அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருந்து, இன்று மஹா கிருபையுடன் என்னை ஆட்கொள்ளுவதற்காக, என் கிரஹத்தில் அதிதிகளாக வந்திருக்கிறீர்கள். அப்பேற்பட்ட

தங்களுக்கு,) மிக்க பக்தி பூர்ணமாக, மிக்க அனுராகத்துடன் தங்களுடைய சரண கமலங்களைச் சரியாக ஆராதிக்காமலும், த்ருட வ்ரதனாகவும் நான் இல்லை ஸ்வாமி. உம்முடைய ஸ்வரூப மாகிற கருணையையே, ஸ்வாமி, நான் ஏகமாத்திரமாக நம்பி யிருக்கிறேன். (எனக்கும் என் போன்ற மஹா தோஷங்கள் நிரம்பின பாபிகளுக்கும் "இவன் நம்மை அடைந்து விட்டான், அனன்ய கதி அனன்ய சரண்யன் அசரண்யம் சரண்யம் என்று இவன் சொல்லி விட்டான். இவன் பிராட்டியின் முன்பாக என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லி விட்டான்.) இவனைப் பரம கருணையினால் சம்ரக்ஷிக்க வேண்டும் என்று தாங்கள் மஹா சங்கல்பம் கொள்ளவேண்டும்" என்று சொல்லிக் கொண்டார். சீதாராமா, நீங்கள் என்னை ரக்ஷித்தருள வேண்டும் என்று வேண்டுபவர்போலத் தோன்றினார். (73)

அது மாத்திரமில்ல. சுதீக்ஷ்ணர் பகவானுடைய புண்ட ரீகாக்ஷங்களையும் அனுக்ரஹ உள்ளத்தையும் அபய ஹஸ்தத்தை யும் அச்யுத பாதங்களையும் மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்ப்ப வராக, அவைகளினால் ஏற்பட்ட ஆனந்தத்தின் பலனாக, மனத்தில் பக்தி வெள்ளம் பெருக மீண்டும் தனக்குள் எண்ணி சொல்லி ஆரம்பித்தார். "சம்சார தாபங்களை ஒழிக்கும் தங்க ளுடைய முக பங்கஜத்தை ஸ்வாமி, மஹா புண்யத்தின் பலனாக, தங்களுடைய மஹா கிருபையை அடைந்தவனாக, இன்று நான் பார்க்கப் பொகிறேன். என் லோசனங்கள் பரிபூர்ண மாக நிரம்ப அந்த பாக்யத்தின் பலன்களை அனுபவிக்கப் போகின்றன. நான் உம்முடைய அனுக்ரஹத்திற்குப் பாத்திர முள்ளவனாக ஆக்கப் பட்டேன்." மஹேஸ்வரர் உமைக்குச் சொல்லுகிறார். "ஹே பவானி, சுதீக்ஷ்ணர் நிர்பரனாக, நிர்பய மாக ஆகிவிட்டார். அந்த பரம ஞானியாகிற சுதீக்ஷ்ணர் அத்யந்த பிரேமை பக்தியினால் கட்டுண்ணப்பட்டு ஆனந்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தார். அவருடைய இன்ப ஆனந்தங்களை யாவரால்தான் வர்ணிக்க முடியும்?" (74)

"அவரால் நான்கு திசைகளையும் அறியப்பட முடியவில்லை. அந்த திசைகளின் நடுவிலிருக்கும் நான்கு மூலைகளையும் அவரால் அறியமுடியவில்லை; அவரால் வழி ஒன்றும் காணமுடியவில்லை; பிறருக்குச் சொல்லவும் முடியவில்லை. தான் யார்; தான் எங்குப் போகிறோம் என்றுகூட அவருக்குத் தெரியவில்லை. அந்த பரம பாக்யமுள்ளவர் சில சமயம் நமஸ்காரம் செய்வார்; சில சமயம் ஆனந்தப் பெருக்கினால் கூத்தாடுவார்; சில சமயம் பகவா

னுடைய அபார குண மஹாத்மியங்களைக் கீர்த்தனம் செய்து பாடுவார். அவருடைய தசை, ஸ்திதி விவரிக்க முடியாம லிருந்தது.'' (75)

பகவான் ஸ்ரீ ராமச்சந்திரனுடைய கிருபையினால் அந்த முனிவர் அத்புதமான ப்ரேமை பக்தியை வரமாகப் பெற்று விட்டார். எல்லை மீறிய பக்தியின் விளைவாக அந்த முனிவர் விருக்ஷங்களின் நடுவில் தன்னை மறைத்துக் கொண்டு வெட்கப் பட்டவராக விருந்த போது பிரபு ராமச்சந்திரனால் காணப் பட்டார். ''இனி இவரை நாம் பூர்ணமாக அனுக்ராஹிக்க வேண்டும்'' என்று பகவான் ராமச்சந்திரன் சங்கல்பம் கொண்டவராகி அவருடைய நிரதிசய பக்தியை மெச்சி, அவருடைய ஹ்ருதயத்தில் தன்னை பிரகடனப் படுத்திக் கொண்டார். (76)

அந்த முனிவர் அந்த விடத்திலேயே தன்நிலை மறந்து, அசஞ்சலமாக பூமியில் உட்கார்ந்து கொண்டு, அந்த இன்ப ஆனந்தத்தை அனுபவிக்கத் தொடங்கி விட்டார். அவருடைய சரீரம் புளகாங்கித மடைந்தது. அவருடைய ஒவ்வொரு மயிர்க் காலும் தேகத்தில் பலாப்பழத்தின் மேலே விருக்கும் முள் காம்புகள் போல பெரிதாக விளங்கி, இன்ப முற்றிருந்தார். அந்த சமயத்தில் பிரபு அவரிடம் வந்து கொண்டிருந்தார். அவருடைய பக்தியையும் பிரேமையையும் கண்டு பிரபு ராமன் மனத்தில் சந்தோஷமடைந்தார். (77)

[தியானம்

ஹே ராமா சீதா ரமணா, நாராயணா, மஹாலக்ஷ்மி பிரியா, மனிதனின் சுகதுக்கங்களுக்கு அவன் கர்மங்களே காரணம். வித்வானாகிறவன் எப்பொழுதும் மனத்தை ஸமாதானம் செய்து ஒரு நிலையில் நிறுத்தி, ஸ்ரேயசை விருத்தி செய்வதற்குரிய கர்மாக்களைச் செய்ய வேண்டும். மனிதன் அடக்க முள்ளவனா கவும் தர்ம சீலனாகி, மற்றப் பிராணிகளை தன்னைப் போல பார்க்க வேண்டும். பெரியோர்களை ஸத்தியத்துடனும் ஒழுக்கத் துடனும் பூஜிக்க வேண்டும். எவன் அபிமானத்தை விட்டு காமமற்றவனாகி, ப்ரீதியுடன் உலகத்தைப் பார்க்கிறானோ, ஸாமர்த்தியமில்லாமல் தர்மத்துடன் கூடி ஒரு பிராணிக்கும் துன்பம் செய்யாமலிருக்கிறானே, அவன் நல்லோர்களால் பூஜிக்கப்படுகிறான். அஸிதர், தேவலர், வஸிஷ்டர், விஸ்வாமித் திரர், அத்ரி போன்ற மஹரிஷிகள் விஷ்ணுவைத் துதித்து தவத்

தினால் அருளைப் பெற்றார்கள். பல வகையிலும் தாழ்ந்தவர்கள் விஷ்ணு பக்தியினால் மேன்மை அடைந்தார்கள். அவர்கள் காட்டிய வழியில் வரும் பராசரருடைய சிஷ்யனாகிற எனக்கு விஷ்ணுவின் கிருபை எப்போதும் கிடைக்க வேண்டும்.]

பரந்தாமனாகிற ஸ்ரீ ராமன் பல தடவைகள் அந்த முனிவரை ஸமாதியிலிருந்து கலைப்பதற்கு முயன்றார். அவரைத் தட்டி எழுப்பினார். ஆனால் அந்த முனிவர் தியான யோகத்தில் ஏற்படும் ஆனந்தங்களை அனுபவிக்கிறவராகி எழுந்திருக்கவே இல்லை. உடனே ராமன் தன்னுடைய பூபதி ரூபத்தை அவருடைய மனத்தில் மறைத்து, அந்த விடத்தில் நான்கு புஜங்களுடன் சங்கு, சக்ர, கதை, தாமரை மலர்சகிதமாக தன்னை வெளிப்படுத்திக் கொண்டார். (78)

தன்னுடைய இஷ்ட தேவதையின் ஸ்வரூபம் மறைந்து, அதற்குப் பதிலாக வேறொரு ரூபம் வரக்கண்ட அந்த முனிவர் வியாகுலமடைந்து அதிக வருத்தத்துடன் நாகரத்னத்தை வைத்திருக்கும் சர்ப்பம் அந்த மணி நஷ்டமாகி விட்டால் எவ்விதம் வ்யாகுலப்படுமோ, அது போல மனக் கொதிப்புடன் எழுந்திருந்தார். கண்களைத் திறந்து பார்த்த போது தன் முன்னால் ஸ்யாம ரூபத்துடன் அதி அழகாக விளங்கும் ராமனையும் அவருடைய தம்பியான லக்ஷ்மணனையும் சீதா பிராட்டியையும் கண்டார். அவருடைய ஆனந்தம் எல்லையற்றதாக விருந்தது. (79)

அதிக பிரேமையுடன் மஹா பாக்யமடைந்த அந்த சுதீக்ஷ்ணர் மரம் போல சீதாராம சரணங்களில் விழுந்து சுக்ருத பிரணாமம் செய்தார். பரந்தாமன் ராமன் தன்னுடைய தீர்க்க விசாலமான புஜங்களால் அவரை வாரி அணைத்து தன் மார்புடன் கட்டி அணைத்தார். (80)

அந்த முனிவர் மஹா கிருபாளுவான ஸ்ரீ ராமச்சந்திரனால் அணைக்கப்பட்டு சந்தோஷப்படும் சமயம், அவ்விருவர்களின் தோற்றம் ஒரு ஸ்யாம நிறமுள்ள தமால விருக்ஷம் பொன் நிறமுள்ள விருக்ஷத்தைக் கட்டி அணைத்தால் எவ்விதம் தோன்றுமோ, அது போல விருந்தது. அந்த முனிவர் ராமனுடைய சௌந்தர்ய வனத்தைப் பார்த்து ரமித்துக் கொண்டிருந்தார். பேச்சு மூச்சில்லாமல் ஸ்தம்பித்துப் போனது போல, சித்திரத்தில் எழுதிய பொம்மையைப் போல காக்ஷி அளித்தார். (81)

அந்த சமயம் தீர புத்தியுள்ள முனிவர் அடிக்கடி ராம சரணங்களை ஸ்பரிசிக்கிறவராகி, புனः புன: நமஸ்காரம் செய்து தன்னை ஸ்ரேயசராக ஆக்கிக் கொண்டார். அதன் பிறகு அவர் பிரபுவை கைகளால் பிடித்துக் கொண்டு தன் ஆஸ்ரமத்திற்குக் கூட்டி வந்தார். பிரபுவுக்கு தன் இஷ்டப்படி அநேக விதமான பூஜை ஆராதனைகளைச் செய்தார். (82)

அவரை உபசரிக்கும் சமயம், அந்த முனிவர் பேசத் தொடங்கினார். "பிரபு, என் பிரார்த்தனையை தயவுசெய்து கேளும். ஐயா, உம்முடைய மஹத்தான கிருபையை நான் அனுபவிக்கும் பாக்கியம் பெற்றவனாக ஆனேன். உம்மை நான் எவ்விதம் ஸ்தோத்ரம் செய்தாலும் உம்முடைய கிருபையை வர்ணிப்பது ரொம்ப கடினமாகவிருக்கிறது. என் புத்தி தயங்குகிறது. உமது மகிமைகள் அநேகம் இருக்கின்றன. சூரியனுக்கு முன்பு ஒரு சிறிய மின்மினிப் பூச்சி எவ்விதம் பிரகாசமாக விருக்கக் கூடும்?" (83)

"நீலகமலங்களின் மாலையைப்போலவும் நீலோத்பலம் போன்ற நீலவர்ணத்தால் சோபிதமாக விளங்கும் சியாமள சுந்தராங்கதா, ஸ்ரீராமா; (என் முன்) ஜடா முகுடத்தையும் வற்கலையையும் ஆடையாகக்கொண்டு முனிவேஷத்துடன் விளங்கும் சீதாராமா, இப்போது உம்முடைய கைகளில் கோதண்டமும் பாணமும் காணப்படுகின்றன. இடுப்பில் கட்டப்பட்ட அம்புராத்துணியை உடைய கோதண்ட ராமா, என் மனத்தைக் கொள்ளைகொண்ட ரகுவீரா, உனக்கு நான் நிரந்தரமாக நமஸ்காரங்கள் செய்கிறேன்" (84)

"ஐயா, உம்முடைய சுபதர்சனம் மோஹம் என்கிற காட்டிற்கு அக்னியைப்போல எரிக்கும் பொருளாக விருக்கிறது. சாது ஜனங்களின் சேர்க்கையாகிற கமலபுஷ்பங்கள் கொண்ட தாமரைக்காடுகளை விகஸிக்கச் செய்யும் பானுவாக நீர் இருக்கிறீர். பிறர்களுக்கு ஹிம்சை செய்யும் ராக்ஷஸர்களான மதயானைகளுக்கு சிம்மமாகத் தோன்றுகிறீர். ஸம்சாரத்தில் ஏற்படும் ஜனனமரண பயங்களாகிற பக்ஷிகளைக் கொல்லும் பருந்து மாதிரி நீர் விளங்குகிறீர். நான் அடிக்கடி உம்முடைய ரக்ஷணத்தை வேண்டுகிறேன்." (85)

"சிகப்பு நிறமுள்ள பத்மத்தின் தளங்கள் போல அருள் சுரக்கும் ராஜீவலோசனா, (என்னைக் கட்டிக்காக்க வந்த வரதப் பெருமானே, அருளாளா,) சீதையின் நேத்திரங்களாகிற சகோர பக்ஷிகளுக்கு சந்திரமாப்போல் விளங்கும் ரமா, காந்தா,

பகவான் சங்கரருடைய ஹ்ருதயமாகிற மானஸ ஸரோவரில் உல்லாஸமாக விளையாடும் பாலஹம்ஸமே, அடியவர்களை ரக்ஷணம் செய்து விசாலமான மார்பு பிரதேசத்தில் தீர்க்க பாஹுக்களால் கட்டி அணைக்கும் வேங்கடநாயகா, ராமச்சந்திர பிரபோ, உமக்கு அடிக்கடி நான் நமஸ்காரங்ககள் செய்கிறேன்.'' (86)

"மந்தபுத்தியினால் ஏற்படும் விஸ்வாஸக் குறைவு என்கிற ஸர்ப்பத்திற்கு கருடனைப் போல நிக்ஷேபணம் செய்யும் ஆத்ம பந்துவே, மனஇருள், அவித்யை முதலியவைகளால் ஏற்படும் பக்தியற்ற ஞானத்திற்கு நாசத்தைக்கொடுக்கும் பிரபுவாகவும் அனந்தகல்யாண குணங்களுடன் தாங்கள் விளங்குகிறீர். பிறப்பு, இறப்பு ஜரைவ்யாதி, துக்கம், தரித்திரம் ஆகிய ஷட் ஊர்மிகளாகிற சம்சாரபந்தங்களுக்கு நாசம் செய்யும் அம்ருத் யுவே, (அம்ருத ரூபியே, என்னை சந்தோஷப்படுத்தும் லக்ஷ்மி நரசிம்மனே,) தேவர்களையும் இந்திரனையும் பிரும்மாவையும் சங்கரரையும் ஸதா ஆனந்தப்படுத்தும் ஸுரபந்துவே, கிருபையையே வ்ரதமாகவும் தேஜோமயமாகவும் கவசமாகவும் கொண்ட ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியே, என்னிடம் சதா தாங்கள் அனுக்ரஹ புத்தியுடன் இருக்கவேண்டும்.'' (87)

"உம்மிடத்தில் காணப்படும் குணவிசேஷங்கள் ஸௌந்தர்ய, ஸௌகந்த்ய, அகிலஹேய பிரத்யனீ ககல்யாண குணங்கள் நிரதி சய ஞானபல ஐஸ்வர்ய வீரிய சக்தி தேஜஸ் சௌசீல்ய வாத்ஸல் யாதி குணங்கள், பக்தர்களைத் தேடிக்கொண்டு போகும் இயற்கை யின் ஸ்வபாவங்கள் ஔதார்யம், பக்தர்களிடம் பேசும் மாதுர்யம், காம்பீர்யமாகிற நடை முகபாவங்கள், சாதுர்யமான பேச்சுக்கள் பூர்வபாஷணங்கள், தீனர்களுக்குத் தைர்யத்தைக் கொடுக்கும் இயற்கையான ஸ்வபாவங்கள் இன்னும் அநேக கல்யாண குணச்சேர்க்கைளுக்கு மஹோததி போல நீர் விளங்குகிறீர். அதனால் நீரோ பரமபுருஷனாகி ஸத்வம் ராஜஸம் தாமஸாதி குணங்களால் பற்றப்படாத நிர்குணமுள்ளவராகவும் விளங்கு கிறீர். உம்மை ஞானத்தினாலோ இந்திரயங்களாலோ, சொற் களினாலோ பூர்ணமாக அறிய முடியாதபடி சப்த பிரும்மத் திற்கும் அப்பால் இருப்பவராகவும், ஞானம் இந்திரியங்களுக்கு மேற்பட்டவராகவும் அகோசரமாகவும் விளங்குகிறீர். உம்மை (ஆழ்வாராதிகள்) அமலனாதிபிரான் ஆதிபிரான் என்று ஸ்துதி செய்திருக்கிறார்கள். அகிலலோக நாயகராகவும் ஸம்பூர்ணமான தோஷங்கள் இல்லாதவராகவும், சகல சராசரங்களையும் தாங்கும்

விஸ்வத்ருக்காகவும், பூமியை உத்தாரணம் செய்த மஹாவராஹ ராகவும், ஆபத்து சமயங்களில் பூமியின் பாரத்தைப் போக்க வந்த கிருபாளுவாகவும் விளங்குகிற ஸ்ரீராமச்சந்திர பிரபுவுக்கு நான் அடிக்கடி நமஸ்காரங்கள் செய்து என் தாஸ்யத்தை விண்ணப்பித்துக் கொள்கிறேன்.'' (உம்முடைய ஸ்வரூபஞான ஸம்பந்தம் என்னைவிட்டு உமது கிருபையால் பிரியாமல் எப்போதும் இருக்கட்டும்.') (88)

[தியானம்

ஹே பக்தகல்பதரு, மஹாலக்ஷ்மி, நாராயணா, ராமா, சீதா, ராமானுஜா, மஹாபிரபோ, உமது மகிமைகள் அபாரமான படியால் அனந்தர் என்று சொல்லப்படுகிறீர். நான் பிறருடைய தனத்தைக் கண்டு ஆசைப்படவில்லை. ஜந்துக்களை ஹிம்சை செய்யவிரும்பாத போதும், என் தோஷங்கள் கர்மபந்தங்கள்; அக்ஞான பற்றுதல்கள், மமகாரங்கள் என்னைப்படுகுழியில் தள்ளி விடுகின்றன. நீர் சுத்த ஆத்மா. உம்முடன் கூடவிருக்கும் சீதை அனபாயினி, உமது ஸஹாயினி, தர்மசாரிணி, பதிவிரதை, மஹாலக்ஷ்மி என்று தெரிந்தும் லஜ்ஜையில்லாமல் தர்மத்தையும் தர்ம ஹேதுவான பேச்சுக்கள் ஹேதுக்கள் யாவையும் பெறுமல் கொழுத்த மனமுடையவனாகி, கோபம், க்ரோதம், மோஹம், உத்தண்டம், மாத்ஸர்யம், லோபம் மிகுந்தவனாகி, ஸ்வாமி தாங்கள் அந்தர்யாமியாக எப்போதும் என்னை பார்த்துக்கொண் டிருக்கும்போதும் கூட, உங்கள் கருணையை மறந்து அசுர குணங்களுடன் விருத்தியாகியிருக்கிறேன். பிரும்ம ஞானத்தை அடையவேண்டும் என்கிற விருப்பம் இருந்தாலும் ஹிம்சையான கர்மத்தைவிட ஆசைப்படாததாலும், தர்மத்திற்காக முறைதவறி நடக்கவும் ஆசைப்படுகிறேன். அடக்கத்தை விட்டவனாகி, இஷ்டர்களுடைய சேர்க்கையால் ஸ்நேகமும் வைரமும் ஏற்பட்டு பல பிறவிகளில் சுழல்கிறேன். ''குணங்களில் பற்றுதல் வை; தோஷங்களில் பற்றுதல் வைக்காதே'' என்று பராசரர் அடிக்கடி எனக்குச் சொல்லியும் ஆசை நிரம்பப்பட்டவனாக சங்கல்பம் கொண்டவனாக அதர்மமாகவும் நான் நடந்திருக்கிறேன். யம தூதனை சிக்ஷித்த யமன் என்னிடம் அநேக குறைகள் காண்பான். ஆனால் பிரபோ, கமலநயனா, வாஸுதேவா, விஷ்ணோ, தரணிதரா, அச்யுதா சங்கு சக்ரபாணே, உன்னை பராசரால் உபதேசிக்கப்பட்டபடி நான் அடிக்கடி பலதடவைகள் கூப்பிடுகிறேன். நாராயணா, லக்ஷ்மி, அவ்யயாத்மாவே, புருஷரே

நீங்கள் என் திருஷ்டிபதத்தில் இருக்கும்வரை, என் குணதோஷங்கள் என்னை அதிக்ரமிக்கிறதில்லை. உம்மை சரணாகதி என்று நம்பிவந்த என்னை, மஹாபுருஷா, ஆத்ம பூதனாகயிருந்துகொண்டு, உம்மையே பார்த்துக்கொண்டு உம்மையே கதியாக நினைத்து வாழ்ந்துவந்திருக்கிற என்னை ஆட்கொள்ள மாட்டாயா? என் தோஷங்களைப்பாராமல் எனக்கு தடை சொல்லாமல், என் ஈஸ்வரர்களே, என்னை ஆட்கொள் வீர்களா?'']

''பிரபோ, என்வினையினால் ஏற்பட்ட அசுரச் செய்கைகள் கொடும் சொற்கள், பற்றுதலால் ஏற்பட்ட காமம், க்ரோதம், அதர் மத்தில் ருசி, கெட்ட சூழ்நிலைகளால் ஏற்படும் லோபம், மதமாத் ஸர்ய அசுசி ஆகிய சகல தோஷங்களையும் பொறுக்கும் அரௌத் திரரே, (ஜிதமன்யுவே, ஜிதக்ரோதரே,) உம்முடைய ஐஸ்வர் யங்கள் பக்தபோக்யங்கள் கிருபாவேசங்கள், மகிமைகள் அனந்தமாயிருப்பதாலும், உம்முடைய கல்யாண குணங்களின் குளிர்ச்சியினால் கடுமை தணிக்கப்பட்டு ஸௌம்யமாக விருக்கும் கல்பகவ்ருக்ஷத் தோட்டமே, பக்தர்களின் மனத்தைக் குளிரப் படுத்தும் கல்பக மருக்கொழுந்தே. (என் கோபத்தையும், கோபம் ஏற்படுவதற்கு மூலகாரணமாயிருக்கிற சங்கல்பத்தையும், மோஹம் லோபம் இவைகளால் ஏற்படும் மதங்களும் என்னை விட்டு உமது கிருபையால் நாசமடையப் போகின்றன.) திருஷ்ணையினால் நிரம்பப்பட்ட என்னை உமது சாமார்த்தியத் தினால் ஆத்மபூதனாக வைக்கக்கடவாய். உம்முடைய சுபமான சுபதர்சனத்தால் மிக்க மிக்க கடினமானதும் ஜன்மசுழல் களிலேயே உழண்டுவரும் மஹா சமுத்திரத்திற்கு உமது குணகீர்த்தனங்களே அந்த மஹார்ணவத்தைத் தாண்டும் ஸேதுவாகிற அணையாகவும் பாலமாகவும் இருக்கிறது. ஹே தினகர குலத்தில் த்வஜமாகவும் (சுடராகவும்) தோன்றிய ராமா, உம்முடைய பாதங்களே எனக்கு ரக்ஷணம். ரக்ஷாமி என்று நிரந்தரமாக நம்பியிருக்கும்படி எனக்கு கிருபை செய்ய வேண்டும்.''(89)

''உம்முடைய கோதண்ட ஹஸ்தங்கள், சரணர்களை அணைத்துக்கட்டி ஆறுதல் சொல்லும் தீர்க்கபாஹுக்கள், (என் விரோதிகளையும்) உமது சத்ருக்களையும் வதம் செய்வதற்காக பஞ்சாயுதங்களைக் கொண்ட உம்முடைய திருக்கரங்கள், அதுளித பிரதாபங்கள் சக்தி பல வரிசைகள் கொண்டனவாக விருக்கின்றன. அவைகளின் மகிமைகளினால் கலிகாலத்தின்

மலங்கள், என்பாபக்கூட்டங்கள், அந்தகார இருள்கள் போல விருக்கும் என் அக்ஞான விபரீதஞான செய்கைகள் எல்லா வற்றையும் நாசம் செய்து வேருடன் அறுத்து எனக்கு சுகங் களைத் தருவதாக விருக்கின்றன. உம்முடைய மனம் தர்மத்தால் ஏற்பட்ட அஹிம்சையை கவசமாக அணிந்து கொண்டிருக்கிறது. உம்முடைய கல்யாண குணசமூஹங்களினால் பகவான் என்று சொல்லப்படுகிறீர். குணசீலா, சௌலப்ய வாத்ஸல்யாதி குணங் களால் அலங்கரிக்கப்படும் ராமா, உம்முடைய சேர்க்கை எனக்கு ஆனந்தத்தை தருகிறது. என்னைவிட்டு ஸந்ததமும் பிரியேன் என்று எனக்கு அருள் செய்வாயாக.'' (90)

''தாங்கள் நிர்மலமாகவும் குணங்களால் பற்றப்படாத அனுமயரான நாராயணர். உள்ளும் புறமும் எங்கும் வியாபக மாகவுள்ள விஷ்ணு பகவான். அவ்யய ஆத்மாவாகிற அவிநாசி. யாவருடைய ஹ்ருதயத்திலும் உள் உறைந்து தூண்டுதல் செய்யும் அந்தர்யாமி. வாஸுதேவரே, அவ்விதம் அறியப்படாத வராயிருந்த போதிலும் நீர் என் மனத்தில் உன் ஸஹாயணி யாகிற ஸ்ரீ தேவியுடனும், தம்பியாகிற லக்ஷ்மணனுடன் கூட நீங்கள் எப்போதும் என் ஹ்ருதயத்தில் ஸாந்நித்யம் செய்து கொண்டு நித்ய வாஸம் செய்ய வேண்டும். கரதூஷணாதிகளை வதம் செய்யப்போகும் கராரியே, வனத்தில் உள்ள பக்தர்களை தாமே தேடிப் செய்யப்போகும் ராமா, எப்பொழுதும் என் திருஷ்டி பதத்தில் தாங்கள் இருக்கவேண்டும்; என் மனத்தி லும் நீர் நித்யவாசம் செய்ய வேண்டும்.'' (91)

''ஸ்வாமி, நீர் நித்ய கல்யாண குணங்களுடன் கூடிய ஸகுண பிரும்மமா அல்லது ஸத்வம் ரஜஸ்தமஸ் ஆகிற முக்குணங்களால் பற்றப்படாத நிர்குண பிரும்மமா அல்லது அந்தர்யாமியா என்று எனக்குத் தெரியாது. யார் யாருக்கு எவ் விதமாக தோன்றுகிறீரோ, அதையும் சொல்லித் தீர்க்கமுடியாது. என் உள்ளத்தில் உறை கொண்டிருக்கும் (அலர்மேல் மங்கை மார்பனே) கோஸல ராஜனே, தங்களுடைய குளிர்ந்த அருள் கொண்ட ராஜீவ நயனங்களால் என்னை சதா கடாக்ஷித்துக் கொண்டு என் ஹ்ருதய குகையை தாங்கள் வசிக்கும் நித்ய தாம் என்று சொல்லப்படும் வைகுந்தம் மாதிரி தாங்கள் நினைக்க வேண்டும்.'' (92)

''என்னுடைய அபிமானமாயுள்ள ஒரு ஆசையையும் தாங்கள் பூர்த்தி செய்ய வேண்டும். (என்னிடம் எந்த அவஸ் தையிலும் ஜாக்கிரதையாக என் மனத்தை விட்டு அகலாதபடி

தங்களைப் பற்றிய ஒரே எண்ணம் இருந்து கொண்டு இருக்க வேண்டும். அந்த எண்ணத்தை தங்கள் கிருபையால் நான் ஒருக்காலும் மறக்கக் கூடாது.) அந்த எண்ணம் என்ன வென்றால், நான் ஒரு ராம சேவகன்; ரகுபதி என் பதி, என்னைக் கட்டிக் காக்கும் பதி, குரு, தெய்வம் என்கிற எண்ணம் என்னை விட்டு அகலக்கூடாது. பிரபோ, இந்த வரத்தை தாங்கள் அனவரதமும் இருக்கும்படி எனக்குத் தந்தருள வேண்டும்,'' என்று கண்களில் ஜலம் விட்டுக் கொண்டு பிரேமாஞ்சலி யுடன் விண்ணப்பித்துக் கொண்டார். பிரபு ராமச்சந்திரன் முனிவருடைய வசனங்களையும் மனோபாவங்களையும் மனத்தில் ரசித்துக்கொண்டு கேட்டுக் கொண்டிருந்தார். ப்ரேமை பூர்ண மாகவும் பக்தி வினய நம்ரதைகளைக் கவசமாகக் கொள்ளப்பட்ட மஹாந்யாஸம் செய்த இந்த மஹா முனிவரை பிரபு இறுக ஆசையுடன் கட்டி அணைத்துக் கொண்டார். (முனிவருடைய ஜன்ம ஜன்மாந்திரங்களாக வரும் தாபங்களை அறவே ஒழித்து அவரை இன்புறுகச் செய்தார்) (93)

அதிக சந்தோஷத்துடன் அணைத்துக் கொண்டு பரமபத நாதனுகிற ராமன் சுதீக்ஷ்ணரைப் பார்த்துச் சொல்லலானுர் ''முனீஸ்வரரே, நான் உம்மிடம் பரம சந்தோஷம் கொண்டேன். உமக்கு யாது வரம் வேண்டுமோ அதைப் பெற்றுக் கொள்ளும்.'' அந்த முனிவர் பதில் சொன்னுர், ''ஸ்வாமி, நான் யாரிடமும் வரம் கேட்டுப் பெற்றதில்லை. எனக்கு உமது அன்பு கிடைத்த பின்பு எது அதைவிட உயர்ந்ததாக இருக்கும்; அதை நான் அடைவதற்கு எதை நான் அடைய வேண்டும்? எதை நான் நிராஹரிக்க வேண்டும் என்கிற புத்தியும் எனக்கு கிடையாது. எது நித்யமாக உள்ளது எது அநித்யமாக உள்ளது என்கிற நினைவுகளும் எனக்கு இல்லை.'' (94)

''ரகுராய், நான் உம்முடைய தாஸன், தாஸர்களை சந்தோஷிப்பித்து வைக்கும் நியமமும் உள்ள கிருபாளு நீர். எனக்கு எஜமானராகிய உமக்கு எது இச்சையோ அதை நான் பெற சித்தமாயிருக்கிறேன். அதை தாங்கள் கொடுக்கலாம்'' என்று விக்ஞாபித்தார். ஸ்ரீ ராமச்சந்திரன் சொன்னுர், ''ரிஷீஸ் வரரே, உமக்கு அசஞ்சலமானதும் த்ருடமானதுமான ராம பக்தி ஏற்படட்டும். வைராக்யமாகிற விஷயப்பற்றுதல்களிலிருந்து விடுதலை ஏற்படட்டும். பரஞானம் பரம பக்தி கொண்டவனுகவும் பரிபூர்ண குணங்கள் உள்ள பொக்கிஷமாகவும் ஞான விக்ஞான ஸம்பன்னனுகவும் நீர் இருப்பீராக'' என்று அருளினுர். (95)

அப்பொழுது சுதீக்ஷ்ணர் மீண்டும் ராமனிடம் ஸமர்ப்பித்துக் கொண்டார். "ஸ்வாமி, என் பிரபுவாகிற தங்களிடமிருந்து தங்கள் இச்சையாகக் கொடுக்கப்பட்ட வரதானத்தைப் பெற்றுக் கொண்டேன். இப்பொழுது நான் கேட்கும் வரத்தை தயவு செய்து தரவேண்டும்." (96)

"பிரபோ, ஸ்ரீ ராமா, உமது தம்பி லக்ஷ்மணனுடனும் பிரிய பார்யையான ஜானகியுடனும் தனுஷ்பாணம் கொண்ட ஹஸ்தங்களுடனும் என் ஹ்ருதய ஆகாசத்தில் சதா தாங்கள் வசித்துக் கொண்டிருக்க வேண்டும், (அனுஷ நக்ஷத்திரத்துடன் கூடிய சந்திரனைப் போல பிரகாசித்துக் கொண்டு தாங்கள் சதா விளங்க வேண்டும்," என்று கரங்கள் கூப்பிக் கொண்டு சுதீக்ஷ்ணர் வரமாகக் கேட்டார். (97)

"நீர் கேட்கிறபடியே வரத்தைக் கொடுத்தேன்," என்று ரமா நிவாஸனுகிற ஸ்ரீ ராமச்சந்திரன் சிரித்துக் கொண்டு அவருக்கு வரதானம் அருளினர். பிரபு கும்பத்தில் (வஸிஷ்டருடன் கூடப்) பிறந்த அகஸ்திய மாமுனிவரையும், (லோபா முத்ரையையும்) பார்க்க ஆவல் கொண்டவராக சுதீக்ஷ்ணரிடம் மீண்டும் விடை பெற்றுக் கொண்டார். அப்போது அந்த ரிஷி பகவானிடம் சொன்னர், "ஸ்வாமி, நான் என் குருவாகிற அகஸ்தியரைப் பார்த்து வெகுகாலம் ஆயிற்று. நானும் என் ஆஸ்ரமத்தில் வசித்த காலமும் அதிகமாகி விட்டது." (98)

"இப்போது நான் என் குருநாதரை தரிசிக்க விரும்பு கிறேன். (பிரபுவாகிற உம்முடைய சேர்க்கை சம்பந்தத்தால் நான் மீண்டும் ஆசார்ய ஸம்பந்தம் பெற்றவனுவேன்.) நான் தங்களுக்கு ஒருவித தொந்தரவும் செய்யாமல், அதுவும் தங்களுக்கு இஷ்டமிருந்தால், உங்களுடன்கூட வந்து என் குருநாதருடைய ஆஸ்ரமத்தைக் காண்பிக்கிறேன்," என்று தாழ்மையுடன் விக்ஞாபித்துக் கொண்டார். முனிவருடைய மிக்கச் சாதுர்யமான பேச்சினல் கவரப்பட்ட பிரபு மஹா கிருபையை அடைந்தவராக அவருடன் அகஸ்திய ஆஸ்ரமம் போக சம்மதித்தார். சுதீக்ஷ்ணர் சீதையுடன் கூடிய அந்த இரு சகோதரர்களையும் அழைத்துக் கொண்டு அகஸ்திய (லோபா முத்ரையின்) ஆஸ்ரமம் சென்றூர். (99)

[தியானம்

ஹே ஸ்ருங்கார நாயகி, ஹயக்ரீவரால் ஆராதனம் செய்யப் படும் மஹா லலிதா தேவியே, உமாலக்ஷ்மி, பத்மராக மணியை

தரித்துக் கொண்டிருக்கும் திரைலோக்ய மோஹனசுந்தரீ, அத்ரி அனுசூயையினல் அலங்கரிக்கப்பட்ட குருவிந்த மணி பூஷணி, நாதமய சூக்ஷ்ம ரூப ஸர்வ ஸித்தி ப்ரதாயினி, தசசக்திகளாகிற விஷ்ணுவின் பத்து அவதாரங்களில் விஷ்ணு பகவானல் தரிக்கப்பட்ட பத்து ஆயுதங்களின் சக்திகளை உடைய பரமாம்பிகே, அகஸ்திய லோபா முத்ரையினல் அர்ச்சிக்கப் பட்ட சௌகந்திக, சம்பக, கதம்ப, மல்லிகை, தாமரை ஜப குஸுமங்களை தரித்துக் கொண்டு நீலகேசியாக விளங்கும் சீதா தேவியே, என் மனேஹரியே, ராமனுடைய சுதாவே, ஸ்ரீ கண்ட விரிஞ்சி விஷ்ணு இவர்களால் பூஜை செய்யப்படும் நாதாத்மிகே, கமலாம்பிகே, உன்னுடைய ஆனந்த தத்வ ஸ்வரூபத்தை அகஸ்திய லோபா முத்ரையின் பிரஸாதத்தால் நான் அடைவேனக. மித்ரா வருணனுடைய புத்ரரும், பிரதாபவானும், கும்ப ஸம்பவரும் வாதாபியை ஜீர்ணம் செய்தவரும், கடல் நீரைப் பருகியவரும், தேவர்களால் வேண்டப்பட்டு பூலோகம் தேவலோகம் ஆகிய இரு உலகங்களிலும் தன்னுடைய தேஜஸ்ஸால் அசுரர்களை எரித்து விரட்டி மீண்டும் தேவர்களுக்குத் தேவபதத்தை கொடுத்த மஹானும், காவேரி சூழ் ரங்கநாதனை ஆராதித்தவரும், அசுரர்களுக்கும் க்ஷமையைக் காட்டினவரும், தெற்குதிக்கில் யமராஜனுக்கு ரித்விக்காக இருப்பவரும், கிரஹஸ்த தர்மத்தை சரிவர அனுசரிப்பவரும் பகவத் ஆராதனைக்கு சுசியாக உள்ள மனத்தின் பெருமையை எனக்கு போதித்த வரும், தமிழ் கர்த்தாவாகிற அகஸ்தியரை லோபா முத்ரையின் கணவனை குஹப்பெருமானின் அத்யந்தநண்பரை, விக்னேஸ்வரருடைய சிஷ்யனை, நான் அடிக்கடி நமஸ்கரித்து ராமபிரஸாதத்தை அடைய வேண்டுகிறேன். சூர்யனுடைய ஒளியின் மத்தியில் ராமனுக்கும் எனக்கும் ஆதித்ய ஹ்ருதயத்தில் ஸாந்நித்யம் செய்யும் ஆதிநாராயணனை மந்திரத்தால் உபதேசித்த மஹானுபாவனை நான்சுக்ருத பிரணமம் செய்கிறேன். மனேவாக்கு காயங்களால் செய்யப்பட்ட சுத்த கர்மங்களின் பெருமைகளையும், சீலம், சமம், சாஸ்திர, திருஷ்டி, தவம் இவைகளின் பெருமையை பராசரர் உரைத்தபடிச் செய்து காண்பித்த அகஸ்திய லோபாமுத்ரையை நான் வணங்குகிறேன்.]

போகும் வழியில் மஹா அருள் கொண்ட ராமன் தன் பாதங்களில் அடி பணியும் உத்தம பக்தியின் லக்ஷணங்களை சுதீக்ஷ்ணருக்குச் சொன்னர். இவ்விதம் பேசிக்கொண்டே சுரர்களுக்கும் பூமண்டலத்திற்கும் சக்ரவர்த்தியாகிற ஸ்ரீ ராமன்

அகஸ்தியருடைய ஆஸ்ரமம் வந்து சேர்ந்தார். உடனேயே சுதீக்ஷ்ணர் தன் குருநாதரின் தாமரைப் பாதங்களில் வணங்கி, சுக்ருத தண்ட பிரணமங்கள் செய்து பகவானுடைய ஆக மனத்தை எடுத்து உரைத்தார். (100)

"ஹே குரு மஹராஜ், கோஸல தேசாதிபரான தசரத ருடைய திருக்குமாரர் சக்கரவர்த்தி திருமகன், ஸகல லோக ஆதார பூதன், ஸ்ரீ ராமச்சந்திரன் தங்கள் ஆஸ்ரமத்திற்குத் தம்பி லக்ஷ்மணனுடனும் சீதா பிராட்டியுடனும் வந்து கொண் டிருக்கிறார். ஸ்வாமி, (அஷ்டமி சந்திரனை நெற்றியில் தரித்துக் கொண்டிருக்கும் லலிதா தேவியை, மஹா திரிபுர சுந்தரியை ஹயக்ரீவ வசனங்களால் ஆராதித்துக் கொண்டும் தினம் பாலை மந்திரம் ஜபித்துக் கொண்டும், "எப்போது என் பிரபு நாராயணன் எனக்கு சாத்யமான பிராப்யமாக வரப் போகிறான்" என்று இரவும் பகலும் ஜபம் தவம் செய்து கொண்டிருக்கும் என் குருநாதரே,) தங்களுடைய தவத்தின் பலன் கிடைக்கும் நேரம் வந்தாகி விட்டது" என்று மஹா வினயத்துடன் சொன்னார். (101)

இந்த சமாசாரத்தைக் கேட்ட அகஸ்தியர் உடனே ஓடிப் போனார். பகவானைச் சந்தித்து அவரை கராவலம்பனம் செய்து கூட்டி வருவதற்கு மிக்க உத்ஸாஹத்தோடு ஓடினார். பச்சை பசேரென்று மருக்கொழுந்து போன்ற வதனம், (மல்லிகை போன்ற மென்மையான) ஹரி பகவானுடைய திவ்ய திரு மேனியை தரிசனம் செய்தார். அவருக்கு அற்புதமான ஆனந்தம் ஏற்பட்டது. பரிபூர்ண லோசனங்களால் அம்ருத தாரை யுடன் பகவான் பிராட்டி ராமானுஜன் ஆகியவர்களைச் சேவித்தார். அவர் இன்பம் அனுபவித்துக் கொண்டிருக்கும் சமயம் மானிட ஸ்வபாவங்கள் மேலிட்ட ராம லக்ஷ்மண சகோதரர்கள் அகஸ்தியருடைய கமல பதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். ரிஷி, ஜானகியின் ஸுதாவாகிற இருவர் களையும் எழுப்பிப் ப்ரேமையுடன் தன் ஹ்ருதயத்துடன் மஹா அனுபவத்துடன் தழுவிக் கொண்டார். (102)

மிக்க மரியாதையுடன் ஞானியான மாமுனிவர் அவர்க ளுடைய சௌக்யங்களை வினவி அவர்களுக்கு வழிகாட்டிக் கொண்டு, தன் ஆஸ்ரமத்திற்கு அவர்களை எழுந்தருளப் பண்ணினார். அகஸ்திய முனிவர் அவர்களை நியமத்துடன் ஆராதனை, பூஜை, இஜ்யை, ஸ்துதிகள் செய்து, அடிக்கடி பகவான் ஸ்ரீ சீதா ராமச்சந்திரனுடைய அனுக்ரஹ சௌசீல்ய

வாத்ஸல்ய ஸௌலப்ய குணங்களை புகழ்வராகி, "ஸ்வாமி, தாங்கள் என் பக்கத்தில் வீற்றிருக்க, என்னைவிட பாக்யவான் இன்று யாரும் இருக்க முடியாது. என் பெரும் பாக்யம் தாங்களே என்னைத் தேடி வந்திருப்பதே" என்று புகழ்ந்து கொண்டிருந்தார். (103)

அந்த புண்ய ஆஸ்ரமத்தில், (சிந்தாமணி கிரஹத்தில்,) இருந்த ஸ்ரேஷ்டமான பல முனிகணங்களும் அகஸ்திய முனிவருடைய மகிமையால் சுகத்தின் மூலமான ஸ்ரீ சீதாபதியான ராமச்சந்திரனுடைய உத்தம தர்சனத்தையும் அருளையும் அடைந்து, ஆனந்தம் கொண்டார்கள். (104)

[தியானம்

நாராயணா, ராமாசீதா, மாதவா கோவிந்தா அச்யுதா ஹ்ருஷிகேசரே, ஸ்ரீமானே, என்னையும் லோபா முத்ரையையும் கடாக்ஷித்த காவேரி ரங்கா, தீரர்களுக்குஅதோக்ஷஜரே, ஆறு குணங்களாகிற இந்திரியம், மனம், புத்தி, ஸத்வம், தேஜோபலம், த்ருதி ஆகியவைகளால் அளவற்ற கடல்போல நிரம்பியிருப்பவரும், அபிராக்ருதமானதும் அநிர் தேஸ்ய வபுவுமான வாஸுதேவரே, மஹாத்மாவே கருத்த நீலாபம் போன்ற குஞ்சிதமும், அமலமும் நெருக்கமாயுள்ளதும், சுருண்டு அலை மாதிரி ஓடும் கேசபாரங்களை ஜடாமுகுடமாக தரித்து ரத்ன புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கும் முனி வேஷதர ராமா, லக்ஷ்மணா, ஸ்ரீ வத்ஸவக்ஷம் போல சீதையை கூட்டிக் கொண்டு வந்திருக்கும் தீர்த்த நாராயணா உங்களை நான் நமஸ்கரிக்கிறேன். பாலை பாலேந்து வதனம் போல மிக்க மனோஹரமுள்ள சீதா நாயகா, அழகான ஊர்த்வ புண்டரங்கள் அணிந்த சீதா ராமா, லக்ஷ்மணனைத் த்வஜமாகக் கொண்ட கோதண்ட ஹஸ்தா, என் ஹ்ருதயத்தைக் குளிரப்படுத்துவதும் கருணை நிரம்பியதும், பாற்கடலின் அம்ருதம் போன்றதுமான உன் பத்ம தள திருஷ்டிகளுக்கும் மன உல்லாஸமான விளையாட்டுப் பார்வைகளுக்கும் விசாலமான புஜங்களை உடைய விஸ்வ பாஹீக்களாக பதமனுத்தமம் என்று சொல்லப்படும் சீதாபதே, அனுமயமாகவும், புண்ணிய கீர்த்திகளுள்ளதாகவும், ஸாது ஜனங்களால் பரிஸேவிதமான உன் செந்தாமரை அடிகளுக்கும் நான் ஆயிரம் நமஸ்காரங்கள் செய்கிறேன். பிரபோ, என் பாப புண்யங்கள் நசிக்க, என்னால் செய்யப்பட்ட தர்மம் அதர்மம் ஒழிய, ஸங்கல்பம், ஸங்கல்பத்தை தியாகம் செய்யும் உன் கிருபையாகிற பேசா

மலிருத்தலும் எல்லாவற்றையும் சப்திக்கிற ஸர்வ தர்மங்களையும், ஸ்வாமி, நான் தங்களிடம் அர்ப்பணம் செய்துவிட்டேன். விஷ்ணோ, ஸகல ஜகத்திற்கும் ஆதார நிலையரே, உதாஸீனராகவும் கர்மங்களில் ஏறி மோக்ஷ மார்க்கத்தை மனக்கவலையுடன் பராசரர் சொல்லிய வழியில் பார்க்கிறேன். சிரத்தையுடனும் மனம் அடங்கினவனும், புத்தியுள்ளவனுகவும், எல்லாக் கர்மங்களிலிருந்து விலகின ஆசாரத்துடன் ஜரையற்றதான உன் அச்யுத பாதங்களை நான் ஆஸ்ரயமாக அடைகிறேன். அகஸ்திய லோபா முத்ரையினுல் அர்ச்சிக்கப்பட்ட சீதாபதே, லக்ஷ்மணாக்ராஜா எனக்கு கிருபை செய்.)

முனி ஸமூஹங்களால் சூழப்பட்ட சீதாபதியான ஸ்ரீராமச்சந்திரன் கருணை விலாஸங்களுடன் எல்லோரையும் ஒருமுறை பார்த்தார். (அதாவது ஒவ்வொரு முனிவருக்கும் என் பிரபு நேராக உட்கார்ந்து சம்பாஷிப்பது போல விஸ்வதோ முகராக, விஸ்வ பாஹுக்களுடன், ஸஹஸ்ர நயனங்களுடன் கடாக்ஷித்துக் கொண்டு ஒவ்வொரு ரிஷியையும் கடாக்ஷித்து பிரஸாதித்து அருளினுர்.) அவர் இருந்த ஸாந்நித்யம், சித்தத்தை நிலைப்படுத்தும் ஆனந்தப் பார்வைகள், சரத்காலத்தில் (ஜ்யேஷ்டா நக்ஷத்திரத்தில்) பூர்ணமாக விளங்கும் சந்திரன் ரிஷிகணங்களாகிற சகோரபக்ஷி ஸமுதாயங்களை எவ்விதம் குளிர்ச்சி செய்து ஆனந்தப் படுத்துவானே, அதுபோல அவர் ஸன்முகராக, ஸர்வதோமுகராக, நிகரற்ற அழகு கருணை விலாஸங்களுடன் எல்லோரையும் கடாக்ஷித்து அருளினுர். (105)

அந்த சுபமான நேரத்தில் பிரபு ரகுவீரன் மாமுனிவரை பிரும்ம ரிஷியான அகஸ்தியரை, ஸர்வ பிரதாபமுள்ளவராகவும் ரிஷிகளுள் அக்ர கண்யராகவும் நினைத்து அந்த முனியைப் பார்த்துச் சொன்னுர். "பிரபோ, ஸர்வக்ஞரான உம்மிடமிருந்து நான் ஒன்றையும் ஒளிக்க முடியாது. நான் எதற்காக (பரமபதத்திலிருந்து அவதாரம் எடுத்து) வந்திருக்கிறேன் என்கிற காரணமும் உமக்குத் தெரியும். ஆதலால் நான் உமக்கு ஒன்றும் புதிதாய் சொல்ல வேண்டியதில்லை." (106)

"பிரபோ, தாங்கள் மஹாராஜ மந்திரமான ஸ்ரீ வித்யையை எனக்கு உபதேசித்தருள வேண்டும். அந்த மந்திரத்தை ஸித்தி செய்து முனி த்ரோஹிகளான ராக்ஷஸர்களை நான் அழிப்பேன்." பிரபுவினுடைய ஸுபாஷிதமான வார்த்தைகளைப் புரிந்து கொண்ட (ஹயக்ரீவர் சிஷ்யனுகிற) அகஸ்தியர் சிரித்துக் கொண்டார். கைகளை கூப்பிக் கொண்டு அந்த

(ஸித்தார்த்தரான) ராமனைப் பார்த்து அகஸ்தியர் சொன்னர் "பிரபோ, தாங்கள் மஹாமாயர். எந்த எண்ணத்தினுல் இந்த உபசார வார்த்தைகளை தாங்கள் நிவேதனம் செய்தீர்கள் என்று எனக்குப் புரியவில்லை. (உம்முடைய ஸங்கல்பம் என்னுடைய ஸ்வரூபத்தை நாசம் செய்து விட வேண்டாம் பிரபோ.") (107)

"உம்மைப் பஜிப்பதால் ஸகல பாபங்களும் நசிக்கின்றன. உம்முடைய சிஷ்யனும், உம்மால் சிக்ஷிக்கப்பட்டவனுமாகிற நான் மஹா மூர்த்தியாகிற உம்முடைய பிரபாவங்களைக் கீர்த்தனம் செய்து, உமது மாயையாகிற மயக்கும் சக்தியை ஒரு விதமாகப் புரிந்து கொண்டாலும், உம்மைப் போல நான் அறிந்தவனில்லை. தங்களுடைய அளவற்ற நாம கீர்த்தனங்களைக் கானம் செய்து தாழ்ந்து நின்று கைகளைக் கூப்பிக் கொண்டு மேலே இருக்கும் தங்களை நோக்கி, தலை வணங்குகிறேன். ஆகாயத்திற்கும் மேற்பட்டவருமான நியக்ரோத உம்பரை சகல பிரபஞ்சங்களுக்கும் மேல் இருப்பதும் அவ்யயமும் சாஸ்தா என்கிற ஆதிபீஜமாக விளங்கும் காரணப் பொருளே, எல்லாக் குணங்களிலும் சிறப்புவாய்ந்த விபூதியான மஹா லக்ஷ்மியை பதியாக உடைய உம்பரே, தங்களுடைய மாயா சக்தியினுல் எல்லாப் பிரபஞ்சங்களையும் நடத்தும் நியந்தாவே, தன்னை அதே மாயையினுல் மறைத்துக் கொள்ளும் அஸ்வத்தரே, உம்முடைய எண்ணங்களும் மாயையின் செய்கைகளும் பிரும்மாண்டமாக வளர்ந்திருப்பதும் மேலிருந்து முளைப்பதும் கீழே நோக்கி கிளைகளுமான அனுதியான அஸ்வத்த வ்ருக்ஷம் போல பழம் கிளைகளுடன் (விஸ்வரேதஸ்ஸாகவும், விஸ்வாத்மாவாகவும் விஸ்வமாகவும்) பரவியிருக்கின்றன. (108)

"அந்த அரசமரத்தின் பழத்தின் உள்ளேயிருக்கும் பீஜம், புழு எவ்விதம் அணுவாக விருக்கிறதோ அதுபோல சகல ஜீவர்களும் சராசரங்களும் அந்த பிரும்மாண்ட ரூபியான பழத்தின் உள்ளே உமது கிருபையால் வாழ்கிருர்கள். அவ்விதம் அணுவாக விருந்தாலும் அந்த பீஜம் எவ்விதம் பிரும்மாண்டமான விருக்ஷமாக மீண்டும் வளர்கிறதோ அதுபோல உம்முடைய சங்கல்பத்தால் எல்லோரும் வாழ்கிருர்கள். அந்த ஜீவர்களான புழுக்களுக்கும் பீஜங்களுக்கும் வேறு ஏதாவது பழங்களையோ தாய் தந்தையர்களையோ தெரியுமோ? அந்த ஜீவன்களையும் ஜராமரணம் ஆகிற கடூரமான காலதேவதை

பக்ஷிக்கிறது. அந்த காலதேவதையும், (சுதர்சனரே, காலரே,) தங்களிடம் பயத்துடன் நடுநடுங்குகிறது.'' (109)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி சகிதராம நாராயணு, ராமானுஜ ஸேவித ஆதிநாராயணு, க்ஷத்திரிய தர்மமாகிற லோக பரி பாலனத்தையும் ஸத்யதர்மபராயணம் என்கிற வியாஜத்திஞல் பிதாவின் ஆக்ஞையைப் பெற்று முனிஜனங்களையும் பக்தர் களையும் காப்பாற்றி, ராவணன் வாலி இவர்களுடைய வதத்திஞல் தேவர்களையும் அஞதியான தர்மத்தையும் காப்பாற்றினுய். அர்க்கரே, ஹிரண்ய நாபரே அன்னம் கொடுப்பவரும் வாஜஸனி என்று அழைக்கப்படும் சூரியநாராயணு, ரகுவம்சதிலகா, ஸந்தர் என்று அழைக்கப்படும் ஆஸ்ரிதர்களுக்கு இஷ்டங்களைக் கொடுக்கும் தாதாவே, ஞானவழியில் செல்பவனும், பற்றுதல்களை விட்டவனும் சரீரமாகிற ஆஸ்ரமத்தில் இருப்பவரும், தவம் சௌசம் என்கிற தீர்த்தத்தை உடையவரும், தேவியின் பக்தரும் பிரும்மத்தை அறிந்தவரும், எனக்குத் தாயும் தந்தையுமாக விருக்கும் அகஸ்திய லோபமுத்ரையை பராசரரை முன்னிட்டு நான் நமஸ்கரிக்கிறேன். மனிதனுக்கு ஞாதிகள் கர்மகாரணமாக ஏற்படுகிறது. தோழர்கள் சங்கல்பத்திஞல் ஏற்படுகிறது. மாதா, பிதா, புத்ரன், பிராதா, மனைவி, ஸத்மித்திரர்கள், ஸுவர்ணம் ஆகிய எல்லாம் முன்செய்த நல்வினை தீவினைகளால் மனிதனை அடைகின்றன. அந்தராத்மாவான ஈஸ்வரர் நேரிட்ட கர்ம பலனை அறிந்து அஸ்வினி தேவர்கள் மூலம் அதற்கு தக்கபடி புத்தியை ஏவுகிருர். நாராயண பாதங்களில் சலனமற்ற மனத்தை உடையவன் கார்யத்தில் முயற்சியுள்ளவஞக, மனே தைரியத்துடன் விருக்கும் பண்டிதனை, ஸம்பத்துக்கள் எந்நாளும் கிரணங்கள் சூரியனை விடாததுபோல, விடுகிறதில்லை. ஹே பிரபோ, ரத்னகர்ப்பரே, ஸுலோசனரே தாரதம்யமின்றி நடக்கும் பரமேஸ்வரரே, கர்மாவும் காலமும் சுபாசுபங்களும் உம்மால் நடத்தப்படுகிறது. அந்த ஈஸ்வரராகிய உம்மை என் ஆத்மாவுடன் கூடிய மனத்திஞல் பிராக்ஞுகப் பார்க்கின்றேன். அகஸ்திய லோபா முத்திரைக்கு வசப்பட்ட பிரபோ, விரிந்த ஆத்மாவுடன் கூடியிருக்கும் என்னை நீங்கள்தான் கடாக்ஷிக்க வேண்டும். குருதமரே, கிருபை செய்யவேண்டும்.]

''தாங்கள் ஸகலலோக பாலர்களுக்கும் பதி. அவ்வித மிருந்தும் சாதாரண மனிதனைப் போல என்னிடம் வினவுகிறீர்.

(எனக்கும் லோபா முத்திரைக்கும் கிருபையை வாரிக்கொடுத்த காவேரி ரங்கபதி,) கிருபா நிகேதனம் தாங்கள் தானே. (ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் நித்ய விபூதிகளுடன்கூட விளங்கும் பிரண வாகார நாராயணா, ஸ்ரீரங்கநாத பிரபோ என் ஹ்ருதயத்தில் ஸ்ரீரங்க நாயகியுடன்,) சீதா பிராட்டியுடன், தாங்கள் (ரங்கதாம், பெரிய கோயில் என்று நினைத்து) சதா சாந்நித்யம் செய்து கொண்டு வாஸம் செய்யவேண்டும். ஸ்வாமி, என்னை சதா தங்கள் பாதங்களில், தங்கள் திருஷ்ட கோசரத்தில் அமரும்படி பிரேரணை செய்து கிருபை ஸாதிக்கவேண்டும். ராமானுஜனுடன் சீதா சகிதமாக என்மனதில் நித்ய வாசம் செய்யவேண்டும்.'' (110)

''ஸ்வாமி, என்னிடம் தாங்கள் அசஞ்சலமற்றதும், திருடமானதுமான பக்தியையும், ஞானவழியாகிற விஷயபற்றுதல்களிலிருந்து விடுதலை அடைந்த மனமானது ஆத்மாவுடன் சேருதலாகிற வைராக்ய யோகத்தையும் ஸத்ஸங்கத்தை ஏற்படுத்தும் சுபமான ஸங்கல்பங்களையும், தங்களுடைய திருவடித்தாமரைகளில் நிச்சயபுத்தியுடன் கூடினதும், (காலம், கர்மம், துக்கங்களுடைய சங்கல்பம், இவைகளால் பிரிக்க முடியாததான) பிரேமை, பக்தி, விஸ்வாசம், ரக்ஷணம், சரணம் ஆகியவைகளை, சீதாபிராட்டியுடன் கூடிய ராமா, தாங்கள் எனக்கு வரமாக, ராமானுஜன் கூடவிருக்கும் ஸந்நிதியில், தந்து அருள வேண்டும். (பிரபோ, தாங்கள் குருதமர் என்று சொல்லப்படும் பிரும்மாவுக்கும் குருவாக விருக்கிறீர்.) அகண்டமான பிரபஞ்சங்களை படைத்தும் ஒவ்வொன்றிலும் அத்யந்த அணுஸ்வரூபத்துடன் நீர் அந்தர்யாமியாக விருக்கிறீர். அதனால் தங்களுடைய மகிமைகள் அனந்தம். ஒவ்வொரு ஜந்துவிடமும் அந்தர்யாமியாகவிருந்து ப்ரேரணை செய்வதால் ஒவ்வொருவருடைய இந்திரியம், மனம், ஆத்மாஞானம் இவைகளுக்கு அனுபவிக்கும்படி விஷயமாகவும் இருக்கிறீர். அதோக்ஷஜரே, அவ்விதமிருந்தும், ஸாதுஜனங்களால் சுலபமாக அனுபவிக்கப்படும்படி எளிதாகப் பற்றும்படியும் சுலபர், சுசீலர் என்கிறபடி நீர் விஷயமாக விருக்கிறீர்'' (111)

''தங்களுடைய ஸ்வரூப குண விசேஷங்கள் அனந்தமவ்யயமாக விருந்தபோதிலும், தங்களுடைய விசேஷங்களும் இயற்கையான வடிவழகுடன் சேர்ந்து விளங்கும் குண பிரபாவங்களும் அனுபவ ஆனந்தத்திற்கு ஸாதுக்களால் அடையப்படுகின்றன. அவைகளையும் நான் தியானித்து அனு

பவித்துப் பார்த்து, என் மனதில் தங்கள் ஸங்கல்பத்தினால் என்ன ரூபம், என்ன குண விசேஷங்களை தாங்கள் உடையவர் என்று தோன்றுகின்றதோ, அதை நான் சொல்லித் தீர்த்தேன். ஸ்வாமி, அவ்விதம் நான் என்ன தான் சொன்ன போதிலும் என் மனம் தங்களுடைய ஸகுண பிரும்மத்தையே நாடி அதில் லயித்து, தங்கள் வடிவழகைப் பருகி அதனிடம் பரம பக்தியை வேண்டுபவனாக விருக்கிறேன். வ்யக்தமானதும் சுத்த ஸத்வத்துடன் கூடினதும் சுலபமாகத் தியானம் செய்யக் கூடியதும் என் மனதை அபஹரிக்கிறதான ஸ்ரீ ராமமூர்த்தியே சீதாராம பிரும்மமே, நான் தங்களுக்குத் தாஸனாக ஸதா இருக்க வேண்டும். உம்மை ஆஸ்ரயிப்பதினால் நானல்லவோ விருத்தியை அடைகிறேன். இந்த காரணத்தினால்தான், மஹா கிருபாளு, என்னிடம் தாங்கள் வினவுகிறீர்.'' (112)

(''ரங்கநாயகியுடன் கூடிய ரங்கநாதா,) பிரபோ, பரம மனோஹரமாகவும் பவித்திரமானதுமான ஸ்தானம் ஒன்றிருக்கிறது. (கிருஷ்ணனாகவும் ராமனாகவும் ஸ்ரீவித்யா ராஜகோபாலனுமாகவுமிருக்கும் நாதரே,) அந்த பரமபாவனமாகிற பஞ்சவடி என்கிற ஸ்தானம் சமீபத்தில் இருக்கிறது. அந்த பஞ்சவடிக்குப் போகும் வழி தண்டகவனத்தில் இருக்கிறது. பிரபு, அதில் தாங்கள் சஞ்சரிப்பவராக, (கௌதம முனிவராலும் சுக்ராசார்யராலும்) உக்ரமான சாபம் கொடுக்கப்பட்ட தண்டக வனத்தை தாங்கள் தங்கள் பாதரேணுக்களால் புனிதப் படுத்தவேண்டும். அந்த ஸ்ரேஷ்டமான முனிவர்களுடைய சாபத்திலிருந்து அந்த வனத்தைக் காப்பாற்றி, அதில் சஞ்சரிக்கும் ஜந்துக்களையும் புனிதப்படுத்தி தாங்களும் சீதையுடன் பஞ்சவடியிலும் கொஞ்ச காலம் வசிக்கவேண்டும்.'' (113)

''ரகு குலத்தின் ரத்னமணியே, அங்கே தாங்கள் ஸகல முனிவர்களிடம் தயைகொண்டு நித்யவாஸம் செய்யவேண்டும். இங்கு கூடியிருக்கும் முனிவர்கள் தண்டகவனத்தில் இருக்கும் முனிவர்கள் யாவரும் உம்மையே ஆஸ்ரயித்திருக்கிறார்கள். அவர்களிடமும் தாங்கள் தயை காட்டவேண்டும்'' என்று சொன்னார். ராமனும் ''ஆகட்டும்'' என்று சொல்லிவிட்டு அகஸ்திய லோபாமுத்திரையிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு சீக்கிரமாக பஞ்சவடிக்கு அருகில் சீதை லக்ஷ்மணனுடன் போய்ச் சேர்ந்தார். (114)

[தியானம்

நாராயணு, உமாசங்கரரால் சேவிக்கப்பட்ட வைகுண்ட பதே, ரங்கபதே, தங்களுடைய மகிமைகளின் முடிவை அறிந்தவன் பிறக்கவும் இல்லை, பிறக்கப் போவதும் இல்லை. ஆகவே, கிருஷ்ணு, சீதாபதே, ராமாசீதா, ஸ்ரீதேவியின் ஈசரே, ஸ்ரீயப்பதியே, மஹா கோசரே, மாதவா, பிரளய காலத்திலும் நான்கு நக்ஷத்திரங்களுடன் கூடிய க்ஷாமரே, கன்றுக் குட்டிகள் நாசமடைந்த காரணத்தால் மங்கியானவர், "பகவானே பரமார்த் தம்," என்று நம்பி மோக்ஷமடைந்தார். அதேமாதிரி பிரபு, நான் காமத்தைச் சேர்ந்த ரஜோ குணத்தையும் விலக்கி துக்கத்தையும் லஜ்ஜையின்மையையும், ஸந்தோஷ மில்லாமையையும் நாசம் செய்து விட்டு, காமக்ரோதங்களிலிருந்து விடுபடுதலையும் கர்மங் களிலிருந்து ஒழிவடைதலையும் அடைந்தவனுக விருக்கிறேன். ஒரே நிலையில் உள்ளவனுகவும், வண்டுகளைப் போல பிராணி களுக்குத் த்ரோஹமில்லாமலே, என் குருநாதரிடமிருந்து ஸாரத்தை கிரஹித்துக் கொண்டு, குருவாயூரப்பா, கிருஷ்ணு, அஜகர வ்ரதத்துடன் உன்னிடம் உறுதியான பக்தியுடன் ஸ்வ தர்மத்திலுமிருந்து கொண்டுமிருக்கிறேன். பிரபோ, மிகக் குறைந்த உலக வாழ்க்கையை உள்ளவனும் பராபரமான உம்மை தியானித்தவனுக பயமும் பேராசையையும் விட்டவனுகவுமிருக் கிறேன். ஹே காமமே, நீ எதை எதைப் பீடிக்கிருயோ அதை அதையே விரும்பிக் கொண்டிருக்கிருய். எளிதில் கிடைப்ப தையும் அறியாமல், என்னைத் துக்கத்திலும் சோகத்திலும், தள்ளாதே. இப்போது விஷ்ணுவின் பக்தியைக் கொண்ட நான் உன்னுல் அடையத் தக்கவனல்லன். காமத்திற்கு மூலமான அக் ஞானத்தை அறுத்து, விதேஹ ராஜனின் வ்ரதத்தை அடைந்து மிதிலை எறிக்கப்பட்டாலும் என்னுடையதில்லை என்கிறபடி; யயாதிக்குப் போத்யரால் உபதேசிக்கப்பட்ட மோக்ஷ உபநிஷத் தாகிய சாந்தியைப் பற்றிய வைராக்யத்தை அனுஷ்டிப்பவனுக விருக்கிறேன். ராமா சீதாபதே, லக்ஷ்மணு, உங்கள் கிருபை வேண்டும்.)

அங்கே கழுகு அரசனுன ஜடாயு, பகவானுக்கு அதிதி ஸத் காரத்துடன் காத்துக் கொண்டிருந்தார். அந்த பெரிய உடையார் அநேகவித பக்ஷ்யங்களுடன் அத்யந்த பிரேமை பூர்ணமாக அவர்களை உபசரித்தார். அந்த பாகவத ஸ்ரேஷ்ட னுடன் பகவான் கோதாவரி நதி தீரத்தில் ஒருபர்ண சாலையை அமைத்து, வாஸம் செய்து கொண்டிருந்தார். (115)

  

எந்த சமயத்திலிருந்து ராமன் அவ்விடத்தில் வசிக்க ஆரம்பித்தாரோ, அப்போதிலிருந்து முனி ஜனங்கள் பயம் நீங்கினவர்களாக சுகமாக வாழ ஆரம்பித்தார்கள். மலை, வனம், நதி, குளம், குட்டைகள் யாவும் அதிசோபையுடன் அழகாக விளங்கின. ஒவ்வொரு நாளும் புதிது புதிதான சோபையுடன் அவைகள் விளங்கின. (116)

சிவசக்தி ஐக்ய ஸ்வரூபமாகிற ராமசீதா மிதுனம் ஏற்பட்டதிலிருந்து அந்த நதி தீரத்திலுள்ள பக்ஷி மிருகங்களின் ஸமூஹக் கூட்டங்கள் அதி ஆனந்தத்துடன் கிரீடித்துக்கொண்டு விரோதமான மனப்பான்மையின்றி சுகமாகத் திரிந்தன. வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டு மதுரமாகச் சப்தித்துக்கொண்டு அதிக சோபைகளுடன் திரிந்துகொண்டிருந்தன. என் பிரபு சீதையுடன் சேர்ந்த பிரபு, அழகுக்கு உயிர் கொடுக்கும் தெய்வங்கள், சிவசக்தியாகிற ஆத்ம ஸ்வரூபத்துடன் இருக்கும்போது அந்த சோபையின் மஹத்வங்களைப்பற்றி ஆயிரம்நாவு படைத்த ஆதிசேஷனுல்கூட வர்ணிக்க முடியுமா? என் பிரபு ரகுவீரன் எந்தவிடத்தில் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டு வாழ்கிருரோ, அவ்விடத்தின் சோபைகளை எவராலாவது வர்ணிக்க முடியுமா? (117)

ஒருநாள் பிரபு சுகமாக ஏகாந்தத்தில் வீற்றிருந்தார். அந்த சமயம் லக்ஷ்மணன் கைகளைக் கட்டிக்கொண்டு மிக்க வணக்கத்துடன் ஸஹஜமாக நிவேதித்தான். "ஸ்வாமி, சுரர்களுக்கும் நரர்களுக்கும், முனீஸ்வரர்களுக்கும், சகல சராசரங்களுக்கும் ஸ்வாமியாக விளங்கும் பிரபோ, என்னை ஒரு சேவகன்போல மதித்து, எஜமானராகிய உம்மிடம் தாஸ்யமாக விண்ணப்பம் செய்துகொள்ள விரும்புகிறேன்." (118)

"நான் ஒரே நிலையாக நின்று தங்கள் சரோஜ பாதங்களின் ரஜஸ்களாகிற தூள்களை ஏகமாத்திரமாக அணிந்துகொண்டு தங்களுக்கு சேவை செய்ய விரும்புகிறேன். (நான் ஸ்வாமி, எந்த அவஸ்தையிலும் காலம் தேசம் கர்மம் ஞானம் பக்தி இவைகளாலும் விகாரமடையப் பெருதவனுகவிருக்க வேண்டும்; என் அந்தராத்மாவுக்கு பிரபுவாக விளங்குபவரே, தங்களுடைய சரணருசி எனக்கு எப்போதும் ஏற்படவேண்டும். அதைத் தரக்கூடிய உபதேசத்தை எனக்கு கருணை கூர்ந்து உபதேசிக்க வேண்டும்.) ஞானம், வைராக்யம், யாவரையும் மயக்கக்கூடிய முக்குணங்கள் கொண்ட மாயை, இவைகளின் ஸ்வரூபம், சூக்ஷ்மங்கள் யாவற்றையும் கருணைகூர்ந்து எனக்கு உபதேசித்து அருளவேண்டும்.

ஸ்வாமி, தங்களிடம் அனன்ய பக்தி ஏற்பட வேண்டும். அந்த பக்தியினால் தங்களுடைய கிருபையை அனவரதமும் தாங்கள் என்னிடம் காட்டவேண்டும். இவைகள் எல்லாவற்றையும் ஸம்ப விக்கக்கூடிய உபதேசத்தை ஸ்வாமி தாங்கள் கிருபை கூர்ந்து எனக்கு அருளவேண்டும்.'' (119)

''பிரபு, ஈஸ்வரன் ஜீவன் இவர்களின் பேதங்கள் ஸ்வரூபஸ்வ பாவங்கள், இவர்களுடைய பிரவிருத்தி யாவற்றையும் முழுவதும் விளக்கவேண்டும். தங்களுடைய பாதசரணங்களை சதா நம்பி வாழும் ரீதியையும் சோகம் மோஹம் பிராந்தியாகிற தடுமாற்றம் இவைகளைப் போக்கும் நிச்சய புத்தியையும் என்மீது கிருபை கூர்ந்து அருள்புரிய வேண்டும்.'' (120)

[தியானம்

நாராயணரே, லக்ஷ்மிநாதரே, ராமகிருஷ்ண, பட்டருக்கு ஈர வாடையில் அனுக்ரஹித்த ரங்கநாத பிரபோ, மதுராவில் ஆஸ்ரி தர்களைக் காணப் புறப்பட்ட பாங்கி பிகாரியே, சுகர், மாரீசன் ஆகியவர்கள் தேடிய பிருந்தாவன சரணங்களை உடைய கிருஷ்ண, ராமா, நீலமேக ஸ்யாமள, யக்ஞ வராஹரே, சுதா, ஸநாதனரே, பூமி அமிழ்ந்திருக்கும்போது தேவர்களும் நடுங்கும் படி சப்தம் செய்த வராஹமே, ம்ஹாபாஹூவே, யோகியே, முனியே, ரங்கபதியே, ஆத்மாவுக்கு ஆத்மாவாகவிருப்பவரே, வாஸுதேவரே, அளவற்ற காந்தியுள்ள ஹரிபகவானே, பத்ம நாபரே, ஸ்வாமி, நீர்தான் சகல உலகங்களையும் நாசம் செய்யும் காலம் ஆகிறீர். உலகங்களைத் தரிக்கும் ஆதிசேஷனைத் தாங்கும் சேஷாசலபதியாகவுமிருக்கிறீர். அழிவில்லாதவரும் ஸர்வலோக ஆஸ்ரயரும் தாமரை மலர்போன்ற கண்களுள்ள ஸ்ரீவத்ஸ வக்ஷரே, ஸ்ரீபதே, நீரே முதல்வர். நீரே எனக்கு ஈஸ்வரராக விருக்கிறீர். நீரே பிராட்டியுடன் என்னை யமுனைக்கு அழைத் துக்கொண்டு ஸ்நானம் செய்வித்து பட்டருக்கு உம்மால் அளிக் கப்பட்ட அபயஹஸ்தத்தை எனக்கும் என்னுடையவர்களுக்கும் அளித்தாய். கிருபாளு. உமக்கு அநேக நமஸ்காரங்கள்.]

பிரபு ராமச்சந்திரன் லக்ஷ்மணனை நோக்கிச் சொன்னார். ''குழந்தாய், சுருக்கமாக உனக்கு விளங்கும்படி சொல்கிறேன். கவனமாக மனம், சித்தம், புத்தி எல்லாம் ஒருங்கே பண்ணிக் கொண்டு ஏகமாத்திரமாகக் கேளு. '' நான் '' என்கிற மமகாரம், ''என்னுடையது'' என்கிற அஹங்காரம், அதுமாதிரி ' நீ ' '' உன்

டையது'' என்கிறதும் எல்லாம் மாயைகள். இந்த மாயை ஸமஸ்த ஜீவர்களையும் வசப்படுத்தி ஆட்டி வைக்கிறது.'' (121)

''உன்னுடைய கோசரமான இந்திரியங்களுக்கு எது புலப்படுகின்றதோ, உன் மனம் எந்த எந்த விஷயங்களில் பற்றுதல் கொண்டு, ''இது வேண்டும், இது தேடப்பட வேண்டும்'' என்று காற்ருய் அலைந்து திரிந்து, உனது மனம் விஷய போகங்களில் லயித்து எதை விரும்புகின்றதோ, அதை மாயை என்று நீ தெரிந்துகொள். தம்பி, அப்பேற்பட்ட மாயையில் இரு பிரிவுகளிருக்கின்றன. ஒன்று பரவித்யை என்று சொல்லப்படும் ஆத்ம வித்யை; இன்னொன்று அவித்யையாகிற சரீரத்தைப் பற்றிய அக்ஞானம். இந்த இரண்டிற்கும் உள்ள வித்யாஸத்தை நன்ருக அறிந்துகொள். சொல்கிறேன் கேள்.'' (122)

''இந்த அவித்யை இருக்கிறதே அது மஹா துஷ்ட ஸ்வபாவம் உள்ளது. பரம க்லேசங்களை உண்டுபண்ணக் கூடியது. நிரதிசய துக்கமயமாக விருக்கக்கூடியது. ஒரு ஜீவன் அதன் வசம் அடைந்துவிட்டால் ஸம்சாரம்என்கிற ஜனனமரணக் கிணற்றில், சம்சாரச் சுழலில், விழுந்து விடுவான். அவனுக்கு விடுதலையேகிடையாது. மற்ருென்று விஷயமாகிற ஆத்ம வித்யை இருக்கிறதே, (அதைப் பெரியோர்களிடமிருந்து அப்யஸித்து வணங்கிப் பெற்றுக் கொண்டாயானுல்,) நீ ஸத்வம் ரஜஸ் தமஸ் ஆகிற முக்குணங்களால் யேற்படும் கர்ம வசனங்களுக்கு அதீதனுக, அதன் வசத்திலிருந்து ஜகத்தை உஜ்ஜீவிக்கக்கூடிய சக்திகள் ஏற்பட்டு, நாளடைவில் அந்த சக்திகளிலும் முக்குணங்களிலும் பற்றப்படாதவனுகி, குணதோஷ ரஹிதனுக, (வைகுண்டத்தில் ஆதிசேஷனுல் முகரப்பட்ட ஜீவன் முக்குணங்களை விடுவது போல,) இருந்தாயாகில், நாளடைவில் பிரபுவினுடைய பாதார விந்தங்களை ஸதா ஆஸ்ரயிக்கும்படி அந்தரியாம்யான பகவான் உன்னைத் தூண்டுவார். அப்பேற்பட்ட ஆத்மவான் ஜிதக்ரோதனுக, ஜிதேந்திரியனுக, பகவானையே நம்பியிருந்து, தன்னுல் செய்யக்கூடியது ஒன்றுமில்லை என்று சங்கல்ப ஹீனனுகவும், புல்லைப்போல பலமற்றவன் போலவும் காணப்படுகிருன்.'' (123)

''ஆத்ம ஞானத்தை அடைந்த வித்வானுக்கு (பதினுறு) தோஷங்கள் கிடையாது. (கர்வமின்மை, கபடமின்மை, ஹிம்சையில்லாமை, கோபத்தால் ஏற்படும் க்ரோதம் அதனுல் ஏற்படும் க்ஷமையில்லாமை, பிறர்களை வஞ்சித்து ஏமாற்றுதலும் இல்லை. அவன் குருவுக்கு அடங்கினவனுகவும் சுசியாகவும் மனம் அடங்

கினவனுகவும் விஷயப் பற்றுதல்கள் இல்லாதவனுகவும், அஹங்கார மமகாராதிகளைத் தியாஜ்யம் செய்தவனுகவும் அடிக்கடி ஜன்மச் சுழலில் ஏற்படும் க்லேசங்களை நினைப்பவனுகவும் ஆசைகளிலிருந்து விடுபட்ட முக்தனுகவும், புத்ரன், தாரம், வீடு புகழ் ஆகியவைகளில் பற்று அற்றவனுகவும், ஆபத்துக் காலங்களிலும் பொறுமையை அவலம்பித்துக்கொண்டு பகவத் கிருபையை எதிர்பார்க்கிறவனுகவும், ஆஸ்திகனுயும் நாராயணரிடம் அளவற்றதும் என்றும் மாருததுமான திருடபக்தி உள்ளவனுகவுமிருப்பான். தனிமையை விரும்பி பகவத் அனுபவம் பெறுகிறவனுகவும், மதுரை பிருந்தாவனம் போன்ற புண்ணிய க்ஷேத்ரங்களை தரிசிப்பவனுகவும், ஸத்ஸங்கத்தையும் பாகவத பிரேமையை உடையவனுகவும் விளங்குவான்.) யாவரையும், எந்த ஜந்துவையும் ஸமதிருஷ்டியுடன் பார்த்து இந்த ஜகத்தை வாஸுதேவ மயமாகப் பார்ப்பான். த்வந்தங்களிலிருந்து விடுபட்டவனுகவும், ஸர்வ ஆத்ம பாவமாக எவற்றையும் பார்க்கும் ஸ்வபாவமுள்ளவனுவான். இப்பேற்பட்ட பரம பாகவதனுகிற (ஸ்ரீ வைஷ்ணவனிடம்) விக்ஞான ஸம்பத் உள்ள பரம பாகவதனிடம், ஒருவித தோஷமும் ஒட்டுவதில்லை. அவனைக் கண்டாலே பிரும்ம மயமாக விருக்கும். பிரும்ம ரிஷியைப்போல எல்லாவற்றையும் நன்ருகவே வாஸுதேவ மயமாகப் பார்ப்பான். என் குழந்தாய், அவன்தான் பரம வைராகி. அவனுக்குத் தேவர்கள் வசப்படுவார்கள். நவசித்திகள் கைகட்டி வாய்ப் புதைத்து அவன் ஆக்ஞைக்கு உட்படும். மூன்று குணங்களும் அதன் செய்கை ஸ்வபாவங்களும் அவனுக்கு ஒரு புல்போல சர்வ சாதாரணமாகிவிடும். அதாவது அவன் முக்குணங்களையும் வென்றவனுகவிருப்பான். (124)

[தியானம்

நாராயணு மஹாலக்ஷ்மி சமேத தீர்த்த நாராயணு, வேதங்கள் உலகத்திற்கு பிரமாணம். சப்த பிரும்மம், பர பிரும்மம் ஆகிய இரு பிரும்மங்களும் உன் கிருபையால் அறியத் தக்கவை. சப்த பிரும்மத்தில் சாமர்த்தியமுள்ளவன் வேதத்தில் சொல்லிய பர பிரும்மத்தை அடைகிருன். வேதத்தில் சரீரத்தையும் ஆத்மாவையும் உபயோகப்படுத்த கர்மாக்கள், ஞான சம்பத்துக்கள் உள்ளன. சரீரத்தை உபயோகப்படுத்தி, கர்மாக்களைச் செய்து இந்த கர்மாக்கள் நித்யமான பலன்களைக் கொடுப்பது என்று புத்தியினுல் நிச்சயம் செய்து ராமா நாராயணு, லக்ஷ்மி சீதா,

வேதங்களுக்கும் மேற்பட்டதும், சரீரபுத்தி இந்திரியங்கள் ஆகிய வைகளுக்கு அதீதரும் எல்லா ஜனங்களுடைய அனுபவங்களை யும் சாக்ஷியாகக் கொண்ட பரபிரும்மத்தை அடைய வேண்டும். கர்மங்கள் சரீர சுத்தியைச் செய்கின்றன. ஆஸ்ரம தர்மங்களைச் செய்து பயனை விரும்பாமல் கர்மாக்களைச் செய்து பக்குவசித்த முள்ளவர்களாகி, வேதாந்தமாகிற உபநிஷத்துக்களில் கீர்த்தனம் செய்யப்பட்ட பரபிரும்மத்தை நினைப்பவர்களாக, ஸந்தோஷம் அடைந்தவர்களாக, பிரும்மபாவத்தை அடையவேண்டும். இந்த ஆத்ம ஞானம் ஆகிற வேதாந்த ஞானமோ மோக்ஷ ஸாதனம். சித்தத்தின் மலமானது பக்குவமான காலத்தில் விக்ஞானத்தை உண்டாக்க ஹேதுவாகவிருக்கிறது. அப்போது பூததயை, பொறுமை, சாந்தி, கொல்லாமை, ஸத்யம், நேர்மை, துரோஹம் இல்லாமை, அபிமானமில்லாமை, லஜ்ஜை, சீதோஷ்ணத்தைப் பொறுத்தல், ஒழிவு இவ்விதமான பிரும்ம மார்க்கங்கள் ஏற்படு கின்றன. இவைகளால் வித்வான்கள் பிரும்ம மார்க்கத்தை அடைகின்றனர். பிரும்ம ஞானத்தில் உறுதியுள்ள மனிதன் ஸந்தோஷத்தை அடைந்து வேதத்தினுல் அறியக்கூடிய கர்ம பிரும்ம ஸ்வரூபத்தையும் அவைகளில் நிற்கும் நிலையையும் அனுஷ்டான ஸித்தியையும் அறிந்து பிரும்ம வித்வித, வேத வித்தாகிருன். இருப்பு இல்லை; முடிவு நடுவு, ஸத் அசத், நிலை யுள்ளது நிலையில்லாதது, வ்யக்தம் அவ்யக்தம் எல்லாம் அவனுக்குத் தெளிவாகித் தெரிகிறது. எல்லாவற்றிற்கும் ஆத்மா வாகவும், சிவமும் தேஜஸ், க்ஷமை, சாந்தி, கெடுதலற்ற சுபம், வ்யோமம், ஸநாதனம், த்ருவம் என்கிற சொற்களால் ஞானக் கண்ணுடைய பிராம்மணர்களால் அறியப்படுகிறது. அப்பேற் பட்ட பிரும்ம ரூபமான பிராம்மணனுக்கு, வேதவித்துக்கு அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். அந்த அத்யாத்ம வித்யைக்கும் பரபிரும்மத்திற்கும் அதற்கு உபாயங்களான கர்ம ஞான பக்தி பிரபத்திக்கும் அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன்.]

"எவ்வளவு முயன்றும், (மார்க்கண்டேயர் போன்ற தபஸ் ஜபசித்தி உள்ளவர்கள்கூட) மாயையை சரியாக அறிந்து கொள்ள முடியாது. அதுமாதிரி ஈஸ்வர ரூபத்தையும், ஸ்வரூப ஸ்வபாவங்களையும் பூர்ணமாக அறிந்துகொள்ள முடியாது. சாதாரணமான ஜீவன் தனது நிஜஸ்வரூபத்தையும் எளிதில் அறிய முடிகிறதில்லை. வேதவித்தானவன், (கபிலர் போன்ற மஹ ரிஷிகள்) கர்மபலத்தை நிச்சயமாக அறிந்து அதை மனத்தினுல் உற்றுப்பார்த்து எல்லாவற்றிலும் அடக்கமாகவும், விசுத்தர்

களாக பிரும்ம ஞானத்தில் நிலைபெற்றவர்களாகவும் இருக்கிறான். அப்பேற்பட்ட பிரும்ம ஞானமுள்ள ஜீவன் மாயையின் யதார்த்த மான ஸ்வரூபத்தையும், ஈஸ்வரனுக்கு தான் அடிமை என்றும், இவ்விதம் தன் ஸ்வரூபமாகிற பரம தந்திரியம் ஆகியவைகளை அறிந்தவனே வித்வானான ஜீவன் ஆகிறான். அடிக்கடி அப்யஸிக் கிறவனாக பகவானுடைய காருண்யத்தையும் மங்கள அனுக்ர ஹத்தையும் வேண்டுபவனாக அவன் இருக்கிறான். (அப்பேற் பட்ட மஹாத்மா வாஸுதேவனே ஸர்வம் என்று தியான யோகத் தினால் அறிகிறான்.) ஈஸ்வரனே ஜீவனுக்கு கர்மங்களுக்கேற்ப கர்மபதங்களையும், அவைகளினின்று விடுவிக்கும் மோக்ஷ மார்க்கத்தைக் கொடுப்பவனாகவும், ஜீவர்களுக்கு எஜமானகவும், மாயையை நடத்துகிறவராவார். அவனே காலத்தையும் நடத்து கிறவன்.) கர்மங்களின் கடூரமான பந்தங்களினின்று விடுபட்டு, ஞானக் கண்ணுடையவனாக ஸநாதனம், சிவம், ஸ்ரேஷ்டம், ஜகத்தின் உற்பத்தி லய காரணகிற நாராயணனை ஸர்வ ஸ்ரேஷ்ட ராகவும் த்ருவமாகவும் எல்லோரையும் நடத்திவைக்கும் நியந்தா வாகவும், மாயையின் குணங்களை தன்னிடம் வசப்படுத்தி அதை நடத்துகிறவராகவும், பகவானை அழிவற்றதுமான பிரும்ம ஸ்வரூபமாகப் பார்க்கிறான்.'' (125)

''சதுர்வித புருஷார்த்தங்களில் தர்மமும் அதன் ஆசரணையுமே சிறந்தது என்று நினைக்கும் ஜீவனுக்கு நாளடை வில் வைராக்யமும், யோகத்தினால் பகவானே பரம்பொருள் என் கிற பரஞானமும், அந்த பரஞானத்தின் விளைவாக நான்காவது புருஷார்த்தமாகிற மோக்ஷமும் சித்திக்கின்றது. இவ்விதமாக வேதங்கள் பறைசாற்றுகின்றன. இந்த புருஷார்த்தங்கள் அனைத்தும் என்னையேபற்றியிருப்பதாலும், ஹே பிரியமான தம்பி, நான் இவைகளைவிட சீக்கிரமாக பக்தி மார்க்கத்தினால் களிப்பு அடைபவனாகவும், அந்த ஆனந்தக் களிப்பினால் நான் பக்தனின் ஸகல அபீஷ்டங்களைப் பூர்த்தி செய்பவனாகவும், அவ னுடைய அநிஷ்டங்களை நீக்குபவனாகவும் இருக்கிறேன். (126)

கருத்து : ''சதுர்வித புருஷார்த்தங்களில் தர்மமே முக்கிய மானது என்று புத்தியினால் நிச்சயித்து, தர்மத்தில் பற்றுதல் கொண்டு அந்த தர்மத்தையும் பெரியோர்களுடைய ஆசரணை யால் அனுஷ்டித்து, ஸ்பர்சித்திலும் சப்தத்திலும் ரஸத்திலும் ரூபத்திலும் கந்தத்திலும் போகங்களை அனுபவிக்கிறான். பிறகு போக கிரியைகளில் திருப்தி அடையாமல், ஞானக் கண்ணாலே ஒழிவை அடைகிறான். கர்மத்தில் தோஷத்தையும் ஹிம்சையை

யும் பார்க்கிறவனுகவும் கர்மத்தினின்று விடுபட்டவனுக, தர்மத்தை விடாமல் இருக்கிருன். பிறகு நசிக்கும் உலகத்தைப் பார்த்து, எல்லாவற்றையும் விடுவதிலும் முயற்சியுள்ளவனுக, மோக்ஷத்திற்குத் தகுந்த அதிகாரியாக விளங்குகிருன். ஒன்றிலும் பற்ருதவனுக மோக்ஷத்தை அவலம்பித்து, நாளடைவில் பாபங்களைத் தள்ளியதுபோல புண்ணியங்களையும் தள்ளிவிடுகிருன். எந்த பலத்தினுல் அவன் அவைகளைத் தள்ளுகிருனே, அதே பலத்தினுல் ஸங்கல்பத்தையும் தியாஜ்யம் செய்துவிட்டு பகவத் கிருபையை வேண்டியவனுக, பரஞானம் பரமபக்தி ஆகிற பகவத் பிரஸாதத்தால் நாராயணனையே ஏகமாத்திரமாக பரிபூர்ணமாக அனுபவிக்கிருன். (பிரும்ம பதத்தை அடைந்தவனுக, காமக்ரோத லோப மத மாத்ஸர்யங்களை விட்டவனுக, தீனனுக, கர்வமில்லாமல், பயமில்லாமல், மற்ற பயன்களில் இச்சையில்லாமல் பகவத் ப்ரேமையையே ஸ்வயம் பிரயோசனமாக மனேவாக்கு காயங்களின் அடக்கம் ஆகிய மோக்ஷத்திற்கு தெளிவும் களங்கமற்றதான வழியை அடைகிருன்.) இவ்விதமாக வேதங்கள் மோக்ஷ வழியை வர்ணிக்கின்றன. இந்த வழிகளைவிட என் பிரியமான தம்பி, இன்னென்றும் சொல்லுகிறேன். கவனமாகக் கேளு. நான் என்னிடம் பூர்ண விஸ்வாஸம் கொண்டு அனவரதமும் பக்தி செய்பவனிடம் விசேஷமான பிரியத்துடன் சீக்கிரமாகவே அருள் புரிகிறேன். பக்தியினுல் அடையப்படும் நான் ஒருக்கால் சரணம் என்றேர்க்கும் பரிபூர்ண அனுக்ரஹதாமனுக விளங்குகிறேன்.)

இப்பேற்பட்ட பரபக்தி ஸர்வ ஸ்வதந்தரமானது. பரபக்தி பக்தி மார்க்கத்தினுலேயே அடையப்படுகிறது. அதற்கு என்னைப்பற்றிய பரஞானம், விக்ஞானம், இன்னும் இதைப் போன்ற ஸாதனங்களும் தேவையில்லை. அது ஒரு ராஜபாதை. ஞானமும் அதற்குள் அடங்கிவிட்டிருக்கின்றது. பிரியமான லக்ஷ்மணு, இப்பேற்பட்ட பரபக்தி உத்தம உத்தமான மங்களங்களை அளிப்பதற்கு மூலகாரணமாக விருக்கிறது. அதை அடைவதற்கு ஸாதுக்களின் ஸங்கம சேர்க்கை மிக அவசியம். ஸாதுக்கள் பிரஸன்னமாகிவிட்டால், பரபக்தி சுலபமாக அடையப்படுகிறது. (127)

[கருத்து: "பக்தி பிரபத்தி ஆகிற உபாயங்கள், உன்னை கைப்பிடித்து என் தாஸர்களிடம் சேர்க்கும் கராவலம்பனம் செய்யும் ஸாதனம். மிக்க ஸ்வதந்திரத்துடன், பிற உபாயங்களின் ஸஹாயமின்றி நேராக ராஜபாட்டை வழியாக சேதனனை

என்னிடம் அழைத்து வரக்கூடிய பலம் பொருந்தியவை. ஞானம் விக்ஞானம் போன்ற சாதனங்கள் தேவையில்லை. இதுவே பலனளிக்கக்கூடியது. (கண்ணன் கழலினை நண்ணும் மன முடையீர் எண்ணும் திருநாமம், திண்ணம் நாரணமே'' என்கிறுப் போல மாதவன்என்று ஓதுவல்லீரேல் தீது ஒன்றும் அடையா ஏதம் சாராவே, நீரார் முகில் வண்ணன் பேரா ரோது வார், ஆராரமரரே, என்கிறபடி) என் தாள்களினிடமுள்ள அன்பு பக்தி ப்ரேமை ஸர்வ மங்களங்களுக்கும் மூலகாரணம். அப்பேற்பட்ட அனுத்தமமான சுகநிதி, லக்ஷ்மணா, நன்ருகக் கேளு. உன் முன் வினைகள் அகல, பகவானின் பொன்னங் கழற்கமல போதிரண்டும் அடைய, தெளிவுற்று, ஸ்திரமாய் நிலை நின்று அதில் இன்பமுற்று நிற்கிறவன் மிகச் சிறந்த (ஆசார்ய ஸம்பந்தத்திலும், அந்த ஆசார்யரும் மஹாகிருபையை அடைந்தவராகவும் அவனுக்குப் பிரபன்ன காயத்திரியை உபதேசிக்கிறவனுகி,) ஸாதுக்களின் அனுகூல மான சேர்க் கையை அடைகிருன். அப்பொழுது ஸதாசாரிய கடாக்ஷத்தினல் ஏற்பட்ட அனுகூலத்தினல், ஒரு சேதனனுக்கு அபூர்வமான, உத்தமகதி கிடைக்கிறது'']

'' இன்னும் சொல்லுகிறேன் கேள். லக்ஷ்மணா, என்னிடம் கொள்ளும் பக்திக்கு உள்ள ஸாதனங்களையும் கேளு. விஸ்தார மாகச் சொல்கிறேன். இந்த மார்க்கத்தை அனுஷ்டித்து சிரம மில்லாமல் ஒரு சேதனன் பகவானுடைய பொற்தாமரைப் பாதங் களை ஸஹஜ ஸ்வபாவத்துடன் பற்றுகிருன். முதன் முதலாக விப்ரசரணங்களில் நமஸ்காரம் செய்து, அத்யந்த ப்ரீதியுடன் இருக்கவேண்டும். வேதங்களில் சொல்லியபடி அவர்களுடைய வர்ணாஸ்ரம தர்மங்களை ப்பரிபாலிக்கவேண்டும்.'' (123)

'' இதனுடைய பலன் நாளடைவில் விஷயங்களிலிருந்து புத்தி நிவர்த்தி அடைந்து வைராக்யம் ஏற்படும். மனத்தில் ஓழிவு ஏற்பட்டதும், என்னுடைய தர்மமாகிற பாகவத தர்மத்தில் ருசி ஏற்படும். பகவானே பரமநிதி, பகவானை அடைவதே உத்தமமான தர்மம். (அப்புண்டரீகக் கொப்பூழ்ப்புறை பள்ளி அப்பனுக்கே தொண்டர் தொண்டர் தொண்டர், தொண் டன் என்கிற சங்கிலித் தொடராகவரும் பகவத் பாகவத ஸம்பந்தம் பெற்றவனுக இவன் விளங்கிடுவான்.) நாளடைவில் ஸ்ரவணம் (கேட்பது) கீர்த்தனம் (பகவத் புகழ்களை கானம் செய்வது) ஸ்மரணம் (புண்யமான பகவத் கதைகளையும் நாமாக்களையும் தியானம் செய்வது) பாதஸேவனம் (பகவானுடைய பாதங்களை

நாரதர் சொல்லியபடி பதினாறு வழிகளால் அர்ச்சித்து இன்புறு வது) அர்ச்சிப்பது, நமஸ்காராதிகளால் வந்தனம் செய்வது பகவானுக்கே தாஸ்யமாக விருத்தலும், அதில் பிரேமையும் பிரவிருத்தி அனுவர்த்தியாக விருப்பது; பகவத் பாகவத ஸம்பந் தம் கொண்ட ஸக்யமாக மித்ரத்வமாக விருத்தல், கடைசியாக ஆத்ம நிவேதனம் என்கிற பரநியாஸம் (பரஸமர்ப்பணம்) செய்வது ஆகிய ஒன்பது வழிகளால் இந்த பகவத் பக்தி விருத்தி அடைகிறது. (திருடவ்ரதனுக பிரபன்ன யோகத்தை அடைந்து, "அபயம் ஸர்வ பூதேப்யோ ததாமி ஏதத் வ்ரதம் மம," "அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:" "ராமோத்விர் நாபி பாஷதே" என்கிறபடியும் பரம ஏகாந்திகள் செய்யும் கர்மங் களையெல்லாம் பகவான் தன் திருமுடியால் ஸ்வீகரிக்கிறுன் என் கிற வேதவியாஸருடைய வசனங்களாகிற "யாக்ரியா: ஸம்பிர யுக்தா: ஸ்யுரேகாந்த கதபுத்திபி: தா:ஸர்வா: சிரஸாதேவ: ப்ரதி கிருண்ஹாதி வைஸ்வயம்" என்கிறபடியும், "த்வம்மே அஹம்மே" என்கிற பட்டர் முக்தகத்தின்படி "கோஅத்ர ஸாக்ஷீசுதி: ஸ்யாது ஹன்தத்வத் பக்ஷபாதி ஸ இதி நிருகலஹே ம்ருஞ்ய மத்யஸ்த வதுத்வம்" பிணக்கும் சேதனனுக்கு ஸ்வாமியான ஸர்வேஸ் வரன் अहं मे என்று திமிரப்பண்ணும் அஹங்கார விசேஷத்தாலே அஸத்கல்பனுன இந்த ஜீவாத்மாவை நிரூபாதிக சேஷமானபடி, சேஷத்வானு ஸந்தானம் உஜ்ஜீவிப்பிக்கிற தாகையாலே சேஷி யோடு ஸம்பந்தம் பெற்றவனுகி, ஈஸ்வரன் ஸர்வ சேஷியாகிற படிக்கும், ஆசாரிய உபதேசப்படிக்கும் சுருதியில் சொல்லப்பட்ட படிக்கும் அர்ச்சராதிகதியைக் கண்ணுள் இருப்பவனுய்ச் சொல் லப்பட்ட புருஷனைப்பற்றிக் கேட்ட உபகோஸலனுக்கு பரபிரும் மத்தை அடையவிப்பதாய், ஸதாசார்ய கடாக்ஷத்தினுல், கண் ணுள் இருப்பவன் பரமபுருஷனுகிறுன் என்கிற பாத நாராயண ருடைய பிரும்ம ஸூத்திரம் 1-2-17, "ஸ்ருதோப நிஷத்க கத்வபி தானுஸ்ச" என்கிற ஸ்ருதியின்படிக்கும்) பரமதாஸ்யனுகிற அந்த சேஷன் என்னிடம் பரிபூர்ண அனுபவம் கொண்டவனுக விருக்கிறுன். அவன் என்னுடைய லீலைகளாகிற சேஷ்டிதங் களில் அதிக பிரேமை கொண்டவனுக, நிரதிசய ஆனந்த சுகங் களை அடைகிறுன்." (129)

"அப்பேற்பட்ட என் பக்தி கொண்ட வைஷ்ணவர்கள் சாதுக்களின் சரண கமலங்களை பதமனுத்தமம் என்று அவலம் பித்து அத்யந்த பாகவத பிரேமையுடன் விளங்குகிறுர்கள். அவர்கள் ஸதா மனத்தாலும் கர்மத்தாலும் இன் சொற்களாலும்

இப்பேற்பட்ட பகவத் பாகவத பிரேமையை திருடவ்ரதமாக அடைந்து நியம நிஷ்டர்களாக விளங்குகிறார்கள். குரு, பிதா, மாதா, பந்து, சகோதரர்கள், எஜமானன், தேவதைகள் ஆகிய எல்லாம் நானே, ஸர்வ சேஷியான பகவானுக்கு நான் அடிமை கொண்டேன்; (எனக்கு அவனுடைய அருள் சித்திப்பதற்கு, "நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்" சித்திப்பதற்கு, வேறு உபாயத்தையும் காணாமல், பேரருளாளா, உம்முடைய பரத்வ சௌலப்யாதி குணங்களில் மோஹமடைந்து, ஞான பக்தி யோகங்களாலும் உங்களைப் பஜிக்கும் சேதனர்களுக்கும் உங்கள் தயையே காரணமாகிறது; அப்பேற்பட்ட தயையே ஆளவந்தார் சொல்லியபடி அடியேனுக்கும் வலிமையைத் தருவ தாக என் உறுதி, "கிருபயா கேவலமாத்ம ஸாத்குரு" என்கிறாப் போலே, "ராமா, வதார்ஹமபி காகுத்ஸः கிருபயா பர்யபாலயத்" என்கிறாப்போலே, லக்ஷ்மணா, அனைவருக்கும் அடைக்கலமாக (ராமபிரானை சரணமடைந்த காகாசூரன் கொல்லப்பட வேண்டியவனாக விருந்தும், தன் கருணையினால் அவனை உயிர் பிச்சை அளித்துக் காப்பாற்றினான்;) நம்மாழ்வார் கூறியது போல "எனக்கே தன்னைத் தந்த கற்பகம்; என்னமுதம் கார் முகில் போலும் வேங்கட நல்வெற்பன், விசும் போர்பிரான் எந்தை தாமோதரனே;" "தமேவ சரணம் கச்ச அர்ஜுனா எம் பெருமானை சரணம் அடைவாய்." என்கிறபடிக்கும்; காரியம் கருணாமார்யேண நகஸ்சித் நாபராத்யதி, தஸ்யைவ வஸீதாபதேः தேனமைத்ரி பவதுதே யதிஜீவிதும்ர்ஹஸி; என்கிற பிராட்டியின் வசனங்களாலும், அபியாசாம வைதேஹி மேதத்தி மமரோசதே; நம்மைக்காக்கும் சீதையினிடம் யாசிப்போம். இதுதான் உசித மாகத் தோன்றுகிறது என்று திரிசடையின் ராக்ஷஸிகளுக்குச் சொல்லிய உபதேசத்தின் பிரகாரமும்,) அந்த சேதனன் (இத்யாதி பிரமாணங்களால்) என்னுடைய ரக்ஷணத்தை அடைந்து சுகியாகி நிர்பரனாகிறான்." (130)

"என்னுடைய பரத்வ சௌலப்பாதி குணங்கள், சௌசீல்ய வாத்ஸல்யாதி குண விசேஷங்களைக் கேட்பதாலும் உரைப்ப தாலும் புண்ய ஸ்ரவண கதைகளையும் இதிஹாஸங்களையும், (வேறு தேவதைகளிடம் பக்தியற்றவர்களாய், அனன்யகதியாக பாகவதர்களிடம் அன்பு கொண்டவர்களாக, வேறு பயன்களை வேண்டாமல் ஸ்வயம் பிரயோசனமாக அசரண்ய சரண்யாம் அனன்யசரணः சரணமஹம் பிரபத்யே" என்று பக்தி பிரபத்தி செய்யும்) பாகவத ஸ்ரேஷ்டர்கள் என் சௌலப்ய பரத்வ விபவங்

களைக் கேட்கும்போது, அவர்களுடைய சரீராதி இந்திரியங்கள் மனம் புத்தி ஆத்மா ஆகிய யாவும் ஒருமிக்க புளகாங்கித மடைந்து, அவர்கள் குரல் தழுதழுத்து நயனங்களிலிருந்து அம்ருத தாரைகள் பிரேமையினுல் உதிர்ந்த வண்ணம் இருக்கிருர்கள். அவர்கள், லஜ்ஜையின்றி, காமத்திற்காகவோ, மதத்திற்காகவோ டம்பத்திற்காகவோ, தன் பக்தி பிரபன்ன யோகங்களைப் பிரகடனப்படுத்தாமல் ஸ்வயம் பிரயோஜனமாக ஹரி பகவானே ஸ்ரீமதாம்வரர், என்று நம்பி வாழ்கிருர்கள். அவர்களிடம் நான் நிரந்தரமாக வசிக்கிறேன். (மஹாலக்ஷ்மியின் பூர்ண கடாக்ஷம் பெற்ற பகவான் கடாக்ஷிக்க லேசம் பெற வேண்டுமே என்று பிரும்மருத்ராதி தேவேந்திரன் போன்றவர்கள் தவம் கிடக்கும் அந்த நாராயண கிருபையைப்பற்றி ஸ்மரிக்கும் போதுநாராயண வசமாகிருர்களே ; என் பிரிய தம்பியே, அந்த பாகவத உத்தமர்களிடம் நானும் மஹாலக்ஷ்மியுடன் நித்யவாஸம் செய்கிருேம். அவர் ஆதீனத்திற்கு உட்பட்டு, என் வ்ரதங்களையும் பங்கப்படுத்திக் கொள்கிறேன். ஸர்வ ஸ்வதந்திரத்தையும் இழந்து அவர்கள்பால் கனைத்தினங் கற்றெருமை கன்றுக்கு இரங்கி, நினைத்த முலை வழியே நின்று பால் சோற ; அறியாத பிள்ளை களோம் அன்பினுல் உனதன்னை, இறைவா, நீதாராய் பறையேலோ ரொம்பாவாய், உன் பொற்ருமரையடியே போற்றும் பொருள் கேளாய், உறவே நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது ; உன்தன்னேடு உற்ருேமேயாவோம் ; மற்றை நங்காமங்கள் மாற்றேலோ ரொம்பாவாய் ; எங்கும் திருவருள் பெற்று இன்புறுவ ரொம்பாவாய் ; என்று ஆண்டாள் ஸாதித்தபடிக்கும், லக்ஷ்மணு, ராமானுஜா, நீ ஸாதித்து அருளியபடி "தவபவேயம் புண்டரீகாக்ஷ த்வமேவையம் குருஷ்வமாம், "ஸ்ரீமத் பாதாரவிந்தயுகளம் சிரஸிக்ருதம் த்யாத்வா அம்ருதஸாகரான் தர்நிமக்ன ஸர்வாவயவः சுகம் ஆஸித, நித்யகிங்கரோ பவிஷ்யஸி, மாதே பூதத்ர ஸம்சயः என்கிற உன்வாக்கின்படி, நான் அவர்களிடம் கருத்துடனும் தேஹத்துடனும் ஆத்மாவுடனும் ஸதா வசிக்கிறேன்.") (131)

"எவர்களுடைய நித்தியநைமித்திக தேக யாத்திரை கர்மாக்கள் வேதங்களில் சொல்லப்பட்டபடி, "கர்மாக்கள் எல்லாம் பகவத் ஆராதனம்" என்றும், பலனை விரும்பாமல் கர்மத்திற்காகவே செய்யவேண்டும் ; அந்த கர்மங்களும் பகவத் ப்ரீதி ஒன்றிற்காகச் செய்யப்படவேண்டும் என்கிற நியமம் உள்ளவர்களிடமும் ; அவர்களுடைய வசனங்களும் இன் சொற்களாகவும்

ஹிம்சையில்லாததாகவும், பாராபாரம் அபாரம் பரபாரமாகிற என்னையே விஷயமாகவிருக்கின்றதோ ; (மார்க்கண்டேய ரிஷி உமா மஹேஸ்வரர்களிடம் அச்யுத பக்தியை வரமாகக் கேட்கும் போது "பகவத் அச்யுதாம் பக்திம் தத்பரேஷீ ததாத்வயி" என்கிற அசஞ்சலமான நாராயண ப்ரிதியை வேண்டும்போது, நாராயணனை உபாஸிக்கும் உமா மஹேஸ்வரர்களிடமும் வைஷ்ணவர்களிடமும் பரம பாகவதர்களிடமும் பக்தி விஸ்வாஸத்தை பிரஸாதித்து அருளவேண்டும்." என்று வேண்டியது போல ;) லக்ஷ்மணா, (அப்பேற்பட்ட சுகமார்க்கண்டேய ரிஷிகளைப்போல) ஹரி பகவானிடம் நிஷ்காம பக்தி கொண்டவர்களிடம், நான் ஸதா வசிக்கிறேன். (யாக்ஞ்யவல்கிய ரிஷி விஸ்வாவஸுவிடம் உரைத்த மாதிரி, பிரும்ம பாவத்தை அடைந்த வைஷ்ணவன் மத்ஸ்யம் ஜலம் வேறு, தான் வேறு என்று நினைக்காமல் எப்பொழுதும் உள்ள ஸ்நேக ஸம்பந்தம் அபிமானம் ஸஹவாஸம் ஆகியவைகளில் ஜீவனும் பிரகிருதியையும் தன்னையும் ஏகமாக ஒன்றாக அறிவதுபோல, நான் வேறு பிரகிருதி வேறு என்று அறியும் சமயம், இருபத்தைந்தாம் பொருளான ஜீவன் கேவலனாகி, இருபத்தாறுவது பொருளான பரமாத்மாவைப் பார்க்கிறான். அந்த வேறான பரமன் அந்த ஜீவனிடத்தில் இருப்பதால், ஸாதுக்கள் அவனை புருஷன் என்றும் ஒருவன் என்றும் அறிகிறார்கள். அப்பேற்பட்ட கேவலனாக விஷ்ணு பக்தன் பரமாத்மா நாராயணனே கதியென்று கர்ம வசனங்களை பகவானே நியமிக்கிறான், பகவத் திருப்திக்காகவே செய்கிறேன் என்று ஸாத்வீக தியாகத்துடன் தனக்குச் க்ஷேமத்தைச் செய்து கொள்ளுவதற்காக பரமான நாராயணரை அவ்யயம் அஜர் அனந்தாத்மா என்று சொல்லும் பாகவத ஸ்ரேஷ்டர்களிடமும் அன்பு செலுத்துகிறான். கடைசியாகவும் இதைக் கேளு, நாரதர் ஜனார்த்தனரை நோக்கி," பிரபோ, மிக்க கோரமான ஏகார்ணவத்தில் சராசரங்கள் நாசத்தை அடைந்தபொழுது, எந்த எந்த பொருள்களில் தாங்கள் காணப்படுகிறீர்கள் என்று வினவியபோது, பகவான் நாராயணர் தன் அவதாரங்களைக் கூறினார். ஹம்ஸம், மத்ஸயம், கூர்மம், வராஹம், நரசிம்மன், வாமனன், பரசுராமன், தாசரதி ராமன், பலராமன், கிருஷ்ணன், கல்கி, ஆகிற அவதாரங்களைச் சொல்லி அதன் பிறகு நரநாராயண அவதாரங்களின் மகிமை, அஷ்டாக்ஷர மந்திரத்தின் ஜனனம் யாவற்றையும் சொல்லி, அதன் பிறகு நான்கு வேதங்களுடன் கூடியதும் ஸாங்கிய யோகங்களுடன் செய்யப்பட்டதும் அதனால்

பாஞ்சராத்ரம் (ஐந்து தினங்களில் சொல்லப்பட்டதும்) என்று அழைக்கப்படும் நாராயணருடைய வாக்கினுல் வெளியிடப்பட்ட மஹா உபநிஷத்தை நாரதருக்குச் சொல்லியபடி; அந்த நாராயணருடைய அவதாரங்களின் மகிமைகளை ஆனந்தகரமாக கீர்த்தனம் கானம் செய்யப்பட்ட வால்மீகி, வேதவியாஸர், சுகர், வைசம்பாயனர், தியாகராஜர், துளசிதாஸர், நம்மாழ்வார், போன்ற மஹான்களின் ஹ்ருதயத்திலும் நான் வசிக்கிறேன். இவர்களால் இயற்றப்பட்ட ருசிகரமானதும் மதுரமான வாக்யங்கள் கொண்டதுமான, கீர்த்தன காவ்யங்கள் அழிவற்றவை. இவைகளை சதா பஜனை செய்பவர்களிடமும், லக்ஷ்மணு நான் சதா மஹாலக்ஷ்மி ஸந்நிதனுக நித்யவாஸம் செய்கிறேன். லக்ஷ்மணு, நீ என்னிடமிருந்து கேட்ட வைஷ்ணவ ஸாரம் அநேக சரித்திரங்களின் அம்ருதஸாரமாக எடுக்கப்பட்டது. ஒரே முகமாக முடிவான தியானத்துடன் ஏகாந்தத்தில் நன்ருக நிலைத்து இருந்து எப்பொழுதும் படிக்கிறவனும் கேட்சிறவனுமான மனிதன் பெரிய ஸ்வேததீபம் அடைந்து ஸ்வயம் பிரகாசமான நாராயணரை அடைவான். பிராம்மணர்களுக்கு ஹிதமான வரும் ஸநாதனரும், புருஷோத்தமருமான ஜனர்த்தனர் எப்பொழுதும் பூஜிக்கப்படத் தகுந்தவர். ஜகத்திற்கு தாயும் தந்தையுமாகவும் குருவாகவும் இருப்பவர்.) (அப்பேற்பட்ட க்ஷீராப்தி நாதன் ஸனக ஸநந்தனுதிகளால் பக்தி வினயமாக ஆராதிக்கப்படும் பகவான் நாராயணர், கருடத்வஜர் விஷ்வக்ஸேனர், நாராயணரைக் கதியாக உடைய உன்னிடம் ப்ரீதி அடையக்கடவர்'' என்று புருஷோத்தம ராமன் சீதையின் ஸந்நிதானத்தில் என் போன்ற ஆத்மாக்கள் உஜ்ஜீவிக்க துளசிதாஸர் வாயிலாக அருளிச் செய்தார்.) (பகவானுனை அந்த புருஷரே ஜயமுள்ளவர் என்று எப்பொழுதும் ஜபம் செய்து கொண்டு ஸரஸ்வதியின் ஸாரமான இந்த இதிஹாஸத்தைப் படிக்க வேண்டும்.) (132)

[தியானம்

நாராயணு, ஶ்ரீகரரே, ஶ்ரீபதே, ஆத்மவானே, லக்ஷ்மணனுகிற ராமானுஜருக்கு தயையே ஸிந்துவாகக் கொண்ட குரூர்குரோ, உங்கள் இருவர்களையும் நான் சரணமடைந்தேன். எனக்கு நாரதர் வியாஸர் சுகர் போன்ற மஹா குருக்கள், தங்களையே ஸதா ஹ்ருதயத்தில் தரித்துக்கொண்டு பஜனை செய்கிருர்கள். ஸமஸ்த பரிவாரங்களுடன் கூடிய ஶ்ரீமதே நாராயணு, குருவின்

உபதேசத்தை அடைந்த சிஷ்யன் எல்லாப் போகங்களிலும் விருப்பமற்று, உற்பத்தி, வளர்ச்சி, ஜனன மரணம் என்கிற லக்ஷணங்களுடன் வ்யக்தமாக சொல்லப்படும் ஆத்மா, அவ்யத்த மாகிற நாராயணரிடமிருந்து உண்டாகிறது என்றும், நான்கு வித புருஷார்த்தங்களுக்கு காரணமாகிறது புத்தி என்றும் சொல்லப்படுகிறது. இந்த புத்தியானது ஸத்வம் க்ஷேத்ரக்ஞன் என்று சொல்லக்கூடிய ஜீவன் ஆகிய இரண்டும் அவ்யக்த லக்ஷணங்களாகும். இவைகள் இரண்டும் விஷயங்களில் பற்றுதல் களை உடைத்ததாகவிருக்கும். பகவானுல் கடாக்ஷிக்கப்பட்ட பரஞான பரம பக்தியுள்ளவன் ஸதாசாரிய சேர்க்கையால் விஷயப் பற்றுதல்களை நீக்கி அவைகளிடமிருந்து வேருக பரமாத்மாவை அறிகிருன். ஞானவான்களாகிற அந்த பாகவத பக்தர்கள் பிறப்பு இறப்பு இல்லாமைகளை நிச்சயம் செய்து கொண்டு பிரவிருத்தி நிவிருத்தி இரண்டையும் அறிந்து, திட ஸங்கல்பம் கொண்டவனுக, பரபிரும்மத்தில் நிச்சயம் செய்து கொண்டு கர்மங்களையும் முழுமையும் மீறிச்சென்று ஜபயக்ஞத் தால் பிராம்மணர்களாலே அடையப்படும் பிரும்ம ஞானத்தினுல் அடைகிருர்கள். மனிதர்களுடைய ஏற்றத் தாழ்வு அவர்களின் அறிவையே பொறுத்துயிருக்கிறது. சாதாரண போகங்களில் இச்சையைத் தள்ளி, புத்தியினுல் தர்மங்களை ஊடுருவிப்பார்த்து பகவான்தான் ஸநாதனம், பழுதில்லாத பரமார்த்திகம் என்று நினைத்த வைஷ்ணவ பூர்வாசாரியர்கள் தர்மம் அதர்மம், ஸத்யம் அஸத்யம் இவைகளைத் தியாகம் செய்து அந்த பரமாத்ம பலத் தால் எந்த ஸத்யம் அஸத்யம் ஆகிய இரண்டையும் விட்டார் களோ, அதே பலத்தால் "விடுவது" என்கிறதையும்விட்டு, பர வஸ்துவாகிறதும் சாஸ்வதமான ஸ்தானத்திற்கு ஸாதனமாகிற மோக்ஷ ஸாதனமாகிறதும் ஸூர்ய லோகத்தை அடுத்தவனுக, க்ஷேத்ரக்ஞர் என்று சொல்லக்கூடிய பகவானுடைய நித்ய விபூதியை அடைகிருன். ஆயர்பாடியில் தயிர் வெண்ணை உண்ட கிருஷ்ணு, வானவர் புகழும்படி அயோத்தியை சீதையுடன் அரசாண்ட எம் அரசராகிய ராமா, நீங்கள்தான் எனக்கும் அருள்புரிய வேண்டும்.]

அகில குருக்களாகிற சீதாராமசந்திரரால் பரம கிருபையுடன் பக்தி யோகங்களின் பெருமைகளையும், பிரபத்தி யோகத்தின் லக்ஷணங்களையும் பாகவத லக்ஷணங்களையும் உபதேசிக்கப்பட்ட லக்ஷ்மணன் அத்யந்த சுகத்துடன் எல்லாவற்றையும் கேட்டான். அவனுடைய சரீரம் புளகாங்கிதமடைந்து, தாஸ்ய ஸ்வபாவம்

மீறி, (தர்மபுத்திரர் பகவான் கிருஷ்ணரை, கேசவரை, கிருதாஞ்சலியுடனும் பக்தியுடனும் தழுதழுத்த குரலில் ''ஸர்வ லோகேசா, ஹ்ருஷிகேசா, திரயீமயி, திரயீநாதா'' என்று சொல்லி பிரதக்ஷிணம் செய்து பக்தியினுல் பூர்ணமாக சுகிருத நமஸ்காராதிகளைச் செய்து ஆனந்தத்துடன் காணப்பட்டாரோ, அதுபோல) மஹா உரகன் (தயையை அவலம்பித்தவர், கருணையையே கவசமாகக் கொண்ட உதார மஹாத்மா, வேதங்களின் ஸாரமாகிற அஷ்டாக்ஷரத்தை, வேத வித்தாகவும் பரமனடி காட்டும் அந்த புண்யகர திருமந்திரத்தை உலகத்தின் நன்மைக்காக குருவின் ஆணையையும் மீறி திருக்கோஷ்டியூரில் கோபுர உச்சியில் பிரகடனப்படுத்திய ராமானுஜர் அனந்தர்,) சீதாராம சரணங்களில் சரணம் என்று சொல்லி விழுந்தார். சுகிருத நமஸ்காரங்கள் செய்தார். ''பிரபோ அகில லோக நாயகா, எனக்கு நீங்கள் தான் தாயும் தந்தையும். (எம்பெருமானுமாய், செல்வ நாராயணுகை, திரிமூர்த்தியாக, உம்பர்வானவர் அறியும் ஆதியும் ஜோதியுமாக விளங்கும் எம்பெருமானே, உம்மை நான் மறப்பேனு? மறப்பும் ஞானமும் நான் ஒன்றும் உணர்ந்திலேன் செந்தாமரைக்கண்ணு, என் மணியே, மாணிக்கமே, உங்களை நான் மறப்பேனு? என்று) வாய் நெகிழ மதுரமாக பகவானை, அந்த அச்யுத நாராயணனை ஜகத்பதியை (திருமாமகளின் அன்புக்கினிய அமுதை) புகழ்ந்து பாடி கைகட்டி தாஸ்ய பாவத்துடன் நின்றூர். (இந்த விதமாக சீதாராமனின் சந்தோஷத்திற்காகவே அயோத்தியிலிருந்து வனம் ஏறிய இளையபெருமாள், நாராயணனுகிற லக்ஷ்மி ராமனைப் பார்த்துச் சொன்னூர்.'' ஸ்வாமி, ஸர்வ ஆதாரமுமான உங்களை விட்டுப் பிரிய இஷ்டப்படவில்லை. உமக்கு நிருபகனுகவிருக்கிற என்னை விட்டு தாங்களும் இருக்கக்கூடாது. நாமிருவரும் ஒருவரை விட்டு ஒருவர் இருக்கமுடியாது என்கிற நிருபக பிரமாணம் போல பெருமாள் பிராட்டிக்கு நித்ய கைங்கர்யம் செய்தார்.) இந்த விதமாக வைராக்யம், ஞானம், பிரபத்தி, யோகம், பகவான், சேதனன் ஆகிய இருவர்களின் ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்கள், அவைகளை அடைய உபாயஉபேயங்கள், பரமார்த்த லாபங்கள், தத்வம்ஹிதம் புருஷார்த்தம் ஆகிற எல்லாவற்றையும் பகவான் ராமச்சந்திரன் ராமானுஜருக்குப் பல நாட்கள் பிரஸாதித்து அருளினூர். இந்த பிரகாரம் பலதினங்கள் சென்றன. (133)

சூர்ப்பனகை என்ற பெயருள்ள ராக்ஷஸி ராவணனுக்கு தங்கையாக விருந்தாள். பெண் சர்ப்பத்தைப்போல பயங்கர

மான ஸ்வபாவமும் துஷ்ட ஹ்ருதயமும் கொண்டவள். ஒரு நாள் அவள் பஞ்சவடிக்குப் போனுள். அங்கு சுகுமாரர்களான இரு ராஜ குமாரர்களை கண்டதும் அவளுடைய மனம் காமத்தால் பேதலித்தது. (134)

காகபுசுண்டி கருடனைப் பார்த்துச் சொல்கிறுர். "கருடரே, பெண்களின் ஸ்வபாவம் இயற்கையாகவே சலன புத்தி உள்ள தாகவும், நம்பத்தகாததாகவுமிருக்கிறது. அதிலும் (பெரியோர் களால் பழக்கப்படாதவளும் நற்குலத்தில் பிறவாதவளும்) தர்மம் ஞானம் சூன்யமாகவும், காமாந்தக ஸ்வபாவமுள்ளவளும், பாபத் தில் மனமுள்ள ஸ்திரி, பிராதா, புத்ரன் என்கிற நியமத்தைக் கூடப் பாராமல் மனோஹரமான புருஷனைக் கண்டதும் உடனே ஆசைப்படுகிறுள். (உலகில் எதிலிருந்து ஸ்திரி பிரும்மாவினுல் படைக்கப்பட்டாளோ, அந்த மூல காரணத்திலிருந்து பெண் களின் குற்றங்கள் இயற்கையாகவே படைக்கப்பட்டிருக்கின்றன. ஸர்ப்பத்தின் விஷம்போல துஷ்ட ஸ்வபாவமுள்ள ஸ்திரி ஒருக்காலும் தன் மனத்தைக் கட்டுப்படுத்துகிறதில்லை. யமன் வடவாக்னி, கத்தி முனை, ஸர்ப்பத்தின் விஷம் ஆகிய எல்லாம் ஒரு தட்டு. கெட்ட ஸ்திரியின் காமாந்தக ஸ்வபாவம் மற்றொரு தட்டு. ஸ்திரியின் தட்டே கீழே நிற்கும். தங்கள் மாயைகளாலும் ஸாஹஸங்களினுலும் புருஷர்களை ஏமாற்றி, பசுக்கள் புதிய புல்லை மேய்வதுபோல, புது மனிதர்களைக் கண்டதும் கணவன் மார்களை ஒதுக்கித்தள்ளி புதிய மனிதர்களைப் பிடிக்கின்றனர். அவ்வித ஸ்வபாவமுள்ளவள் சூர்ப்பனகை.) சூர்யனைக் கண்ட சூர்யகாந்திமணி உருகுவதைப் போல் அவள் ராமனைக் கண்டதும் மனம் உருகினுள். (135)

ஸ்ரீராமச்சந்திரனுடைய சுந்தர வடிவத்தைக் கண்ட சூர்ப்பனகை அதில் ருசி கொண்டவளாக பிரபுவினிடம் வந்து சேர்ந்தாள். (அதிகமாக பூத்து விளங்கும் மல்லிகைப் பூ சிரித்து விளையாடுவதுபோல) புன்சிரிப்புடன் பிரபுவினிடம் அவள் சம்பாஷிக்கலானுள். "ஸ்வாமி, உமக்கு ஈடாக வேறு ஒரு புருஷனை நான் கேட்டதுமில்லை. கண்டதும் இல்லை. அதேமாதிரி பிரபு, என்னைப்போல ஒரு பெண்ணும் தாங்கள் எங்கு தேடினு லும் அகப்படமாட்டாள். ஆஹா, பிரும்மா நம் இருவர்களையும் ஜோடியாகச் சேர்த்துவைக்க ஆலோசனை செய்து எவ்வளவு ஒற்றுமையுடன் சாங்கோபாங்கமாக நம் இருவர்களையும் ஸ்ருஷ்டித்திருக்கிறுர்." (136)

"நான் மூன்று லோகங்களிலும் எனக்கு யோக்யமான புருஷனைத் தேடிவிட்டேன். எனக்குத் தகுந்த புருஷனை நான் இதுவரை தேடிக் காணவில்லை. இதன் காரணமாக நான் இன்னும் குமாரியாகவே கல்யாணம் செய்துகொள்ளாத பெண்ணாக விருக்கிறேன். ஐயா, தங்களைக் கண்டதும் என் மனம் தங்களையே நாடி நிற்கிறது. என் சித்தத்தை உமது மோஹன புன்னகை கலக்குகிறது. உம்முடைய அழகிய கபோல பிரதேசமும் தீர்க்க பாஹுக்களும் விசாலமான வக்ஷ பிரதேசமும் என் காமத்தை கலக்குகிறது." (137)

பிரபு சீதையை மந்தஹாஸமாகப் பார்த்துவிட்டு, அதே பார்வையுடன் கேலியாக சூர்ப்பனகையைப் பார்த்துச்சொன்னார் "நான் கல்யாணமானவன். என் தம்பி யுவனாகவும் தனியாகவுமிருக்கிறான்." அப்போது லக்ஷ்மணனுடைய சமீபம் அவள் வந்து சேர்ந்தாள். அவளைத் தங்கள் விரோதியின் தங்கை என்று தெரிந்து கொண்டு லக்ஷ்மணன் அவளிடம் மிருதுவான குரலில் சகோதரனைக் காட்டிச் சொன்னார். (138)

"சுந்தரி (பகவானை விரும்பும் காமாந்தகி) நான் பிரபுவினுடைய தாஸன்." ராமனைச் சுட்டிக் காண்பித்துக்கொண்டு, "அந்த பிரபுவின் சேவகன்." "எனக்கு ஸ்வதந்திரம் கிடையாது; பராதீனன். ஆகையால் உனக்கு என்னால் ஒருவிதமான சுகமும் சந்தோஷமும் ஏற்படாது. மேலும் என் ஸ்வாமி காம சாஸ்திரத்தில் ஸமர்த்தர். கோஸலபுரி அரசர். அவர் எதைச் சொல்கிறாரோ, அவருக்கு எது மனத்தில் தோன்றுகிறதோ, அதன்படி தான் எல்லாம் நடக்கும்." (139)

"எங்கேயாவது ஒரு சேவகன் ராஜபோகங்களை அனுபவிக்கத் தகுதியா? ஒன்றுக்கும் உதவாத பிச்சைக்காரன் மேலான சம்மானத்தை அடையப்பெற லாயக்கா? கள் சாராயம் குடித்தல் ஆகிய பாதகங்களைச் செய்பவன் உத்தமமான ஸம்பத்துக்களை அடைந்து நிரந்தரமாக சுகிக்கக் கூடுமா? விபசாரி வாழ்க்கை நடத்தும் நாரிக்கு சுபமான கதி ஏற்படுமா? பணக்காரனாக விருந்தும் லோபியாகவிருப்பவன் மங்களமான கீர்த்தி பிரபாவங்களை அடையமுடியுமா? விஷயங்களில் பற்றுதல் கொண்ட அபிமானி சதுர்வித புருஷார்த்தங்களை அடையக்கூடுமா? இவைகளை அடையக் கூடுமானால் நாம் ஆகாயத்திலிருந்து பாலைக் கறந்து விடலாமே" (140)

இந்த வார்த்தைகளால் அதைரியப்பட்டுப் போன அந்த ராக்ஷஸி மீண்டும் பிரபு ராமனிடம் வந்து சேர்ந்தாள். பகவான்

அவளை லக்ஷ்மணனிடம் மீண்டும் அனுப்பி வைத்தார். அப்போது லக்ஷ்மணர் சொன்னர், "எந்த புருஷன் லஜ்ஜையை ஒரு புல் மாதிரி மதித்து தான் செய்த பிரதிக்ஞையை புல்லைப் போல தியாகம் செய்கிருனோ, மானம் வெட்கம் பாபம் ஒன்று மின்றி பரி தியாகம் செய்கிருனோ, அவனே லஜ்ஜையற்ற காமாந்தகியாகிற உன்னை மணக்கத் தக்கவன்." (141)

அவருடைய வார்த்தைகளால் கோபம் உண்டாக்கப்பட்டு க்ரோத மூர்ச்சினளாக அந்த ராக்ஷஸி ஸ்ரீ ராமனிடம் மீண்டும் வந்து சேர்ந்தாள். தன்னுடைய பயங்கரமான ரூபத்தைப் பிர கடனப் படுத்திக் கொண்டு ராமனின் முன் நின்ருள். ரகுராய் அந்த ரூபத்தைக் கண்டு சீதை பயப்படுகிருள் என்று சூசிக்கும்படி தம்பி லக்ஷ்மணனுக்கு சமிக்ஞை செய்தார். (142)

[தியானம்

நாராயணு, பராத்பரா, தேவேஸரெ, லக்ஷ்மி நாதரே, அமித விக்ரமரே, சீதையை ஏக பத்தினியாகக் கொண்ட ஸுவ்ரதரே, ராமாசீதா, ல்க்ஷ்மணுக்ரஜரே, உம்மை விரும்பிய சூர்ப்பனகை உமது ஸங்பல்பத்தால் அழிக்கப்பட்டாள். சீதைக்கு ஹிம்சை செய்ய இச்சித்த சூர்ப்பனகையின் மூலம் ராவணுதிகளும் அழிந்தார்கள். அனன்யகதியாக வந்து அடையும் பக்தர்களைக் காக்கும் பிரிய க்ருத், ப்ரியார்ஹரே, மேலான குலத்தில் பிறந்தும் அசுரத் தன்மையினுல் தர்மத்தை மீறி தேவர்கள் பிராம்மணர்கள் இவர்களை அவமதித்து, விஷயங்களை அனுபவிக்கும் அசுரத் தன்மையிலிருந்து என்னைக் காப்பாற்று. கருடனைப் போல தர்மத்தில் பற்றுதல் உள்ள மனத்தை எனக்கு கொடு. ஹிம்ஸா ரூபமான கர்மங்களிலிருந்து என்னை விலக்கி விடு. சாஸ்திரத்தில் ஆராய்ந்து அனுதி சித்தமான பிரும்ம ஞானத்தைக் கொடு. தர்மத்தை மீறி முறை தவறி கலப்பாக திரவியத்தை கொடுக் காதே. அடக்கத்துடன் எல்லோரையும் ரக்ஷிக்கும்படி அனு க்ரஹம் செய். உலகத்தில் ஆத்ம பூதனுக எல்லா ஜனங்களையும் தன்னைப் போல பார்க்கிறவனுக வாழவிக்கச் செய். எப் பொழுதும் உங்கள் திருவடித் தாமரைகளில் பற்றுதல் உள்ள வனுக என் மனம் சங்கல்பம் நீங்கினதாக, புருஷோத்தம ராமா, கல்யாணி, பராசரர், ஆஞ்சநேயர், விஷ்வக்ஸேனர் குஹப் பெருமானை முன்னிட்டுக் கொண்டு உன் தாள்களைப் பணியும் எனக்கு க்ஷேமத்தை நினை. நிலமாமகள் மலர் போல உன்னுடன் இருக்கும் சீதைத்கு பிரமன், சிவன், இந்திரன் ஆகி

யோருக்கு நாயகராகிய நீர், சங்கல்ப நாராயணு, உம்முடைய திருநாமமாகிற நமோ நாராயணமே என் கடும் வினைகளை போக்குவதற்கு உதவட்டும்.]

பகவானுடைய இங்கிதப் பிரகாரம் நடக்கும் லக்ஷ்மணன் அதிலாவகமாக, வெகு துரிதமாக, சூர்ப்பனகையின் காதுகளையும் மூக்கையும் அறுத்து அத்துடன் ராவணனுடைய கோபத்தையும் அவனால் ஏற்படப் போகிற விரோதத்தையும் ஸம்பாதித்து விட்டான். (143)

(பாவம், ராமனை ஆசைப்பட போக, அது நிராசையாகி, அதனால் ஹிம்சை புத்தியை அடைந்த) சூர்ப்பனகை சீதையின் ஸந்நிதானத்தில் உயிருடன் விடப்பட்டு, காதுகளையும் மூக்கையும் மாத்திரம், (காகாசூரனைப் போல) இந்திரிய நஷ்டமாகி, அனுப்பப்பட்டாள். (பிரபோ, ஏகபத்னி விரதம் கொண்ட ஸுவ்ரதரே, உன் மனம் தர்மத்திலும், அதிலும் ஹிம்சையில்லாத தர்மத்திலும் மாயையின் விளையாட்டுக்களிலும் சங்கல்பித்திருந்தது. பெண் என்றும் பாராமல், உமது சேஷ்டிதங்களுக்கு அவளை உடந்தையாகப் பண்ணினுய் போலிருக்கிறது.) சூர்ப்பனகை அங்கஹீனமாக ஆகிவிட்டாள். அவளுடைய சரீரத்திலிருந்து (சீதாராம த்ரோஹத்தினுல் யேற்பட்ட) ரத்த பிரவாஹம் ஓடியது. அந்த மஹத்தான உடம்பிலிருந்து பெருகும் ரத்த தாரை, பெரிய மலையின் கொடு முடியிலிருந்து விழுந்து ஓடும் நீர்த் தாரைகள் போல விளங்கின. விலலாபத்துடன் அவள் ஓடினுள். சகோதரர்களான கர தூஷணுதிகளிடம் சென்றுள். அவர்களிடம் லஜ்ஜையின்றி ராம மோஹத்தினுல் ஏற்படுத்தப் பட்ட க்ரோதத்தினுல் "உங்கள் பௌருஷம் பலம் வீரத்தனம் ஆகிய எல்லாம் வீண்" என்று கதறினுள். (144)

அவர்களால் வினவப்பட்ட சூர்ப்பனகை எல்லாவற்றையும் சொன்னுள். ராக்ஷஸர்களின் தலைவர்களான அவர்கள் இதைக் கேட்டதும் தங்கள் சேனைகளுடன் புறப்பட்டார்கள். ராக்ஷஸ ஸமூகங்கள் கூட்டமாகவும் வித விதமாள ரூபங்களுடனும் புறப்பட்டன. அந்த கூட்டங்கள் கறுத்த நிறம் படைத்த மலைகள் இறக்கைகளுடன் கூடி பறந்து வருவது போல விளங்கின. (145)

அந்தக் கூட்டங்களில் நானுவித வாஹனங்கள் இருந்தன. பெரியதும் நானுவித ரூபமுள்ள கத்தி, சூலம், பட்டசம் போன்ற ஆயுதங்களுள் அபாரமாகவும் கணக்கற்றதாகவுமிருந்தன. அந்த சேனைக் கூட்டங்களின் முன் நின்று கொண்டு சூர்ப்பனகை நடத்திச் சென்றுள். பாவம், அசுபமான ரூபம். அமங்

கள மாக்கப்பட்டவள். அவளைத் தலைவியாகக் கொண்டு அந்த சேனைக் கும்பல் கிளம்பியது. (146)

அந்த சேனைக் கணங்கள் புறப்படும் போது அமங்கள சகுனங்கள் ஏற்பட்டன. பயத்தை உண்டு பண்ணும்படி கோர மான சகுனங்கள் ஏற்பட்டன. மிருத்யுவின் வசமடைந்த அந்த ராக்ஷஸக் கூட்டங்கள் அவைகளை லக்ஷயம் செய்யாமல் புறப்பட்டன. கர்ஜனைகளைச் செய்து கொண்டு, ஆரவாரத்துடன் ஆகாயத்திலிருந்து தாவிக் கொண்டும், குதித்துக் கொண்டும் அவர்கள் சென்றார்கள். அந்த உத்ஸாஹத்தைக் கண்ட யுத்த வீரர்கள் இன்னும் அதிக உத்ஸாஹத்தை அடைந்தார்கள். (147)

அந்த சேனைக் கும்பலில் ஒரு சேனை வீரன் "இரு சகோதரர்களையும் உயிருடன் பிடித்து விடுவோம். அவர்களைக் கொன்ற பின்பு, அந்த ஸ்திரியையும் அபஹரித்து விடுவோம்" என்று சொன்னான். ஆகாச மண்டலம் முழுவதும் தூசியினால் நிரப்பப்பட்டிருந்தது. அப்பொழுது ராமன் தன் தம்பியைக் கூப்பிட்டு வார்த்தைகளைச் சொன்னான். (148)

[தியானம்

உமா மஹேஸ்வரரால் வணங்கப்பட்ட நாராயணா, சீதா காந்தா, ராமர், வால்மீகி நாரதர், தியாகராஜர், துளசிதாஸர் என் போன்றவர்களுக்கு நீதானே குலதனம், ஸந்ததமும் தேடப் பட வேண்டிய ஜீவனம் நீதானே அப்பா. ஹே சாரங்கபாணி, கோதண்ட ஹஸ்தா, மேதாவி, அமித விக்ரமரே, தேஜஸ்வி, ஸநாதனா, துருவரே, ராகவா, ஸ்வயம் பிரகாசரே, பரமாத்புத சரிதா, சீதையைக் கட்டி தழுவிக் கொண்ட கராரி, உன் கோபம் சமனம் அடைய வேண்டும். உன்னைப் பராமுகனாகவிருந்து சரியாக அறிந்து கொள்ளாதது என் குற்றம். உன் கிருபை மிக்க விரிந்தது என்று தெரிந்து கொள்ளாத என்னை மன்னிப் பாயா? மாதவா, ரமணீயகரனாகிற தியாகராஜரால் கானம் செய்யப்பட்ட ராமா, சரதாப ஹஸ்தங்களுடன் கரதூஷணாதி களிடமிருந்து சீதையைக் காப்பாற்றிய சீதா ஸம்ரக்ஷணா, கௌதமர் பச்சாதாபப்பட்டு தன் புத்ரனாகிய சிரகாரியிடம் வரும் போது அஹல்யை உயிருடன் இருக்கக் கண்டு எவ்விதம் ஆனந்த மடைந்தாரோ, அதுபோல ஆனந்தமடைந்த சீதை அன்புடன் உன்னிடம் வந்தாளே அந்த மாதிரி என்னிடம் அன்பு காட்ட மாட்டாயா? ராமா, உனக்குத் தகுதி உள்ளவன், தகுதி யில்லாதவன், என்கிற பாகுபாடு இருக்கலாம். ஆனால்

அவளுக்கு இருக்காது. அன்பு, கர்வம், மானம், த்ரோகம் பாபச் செய்கை, அப்ரியம், இவைகளில் தாமதித்துச் செய்த சிரகாரி எவ்விதம் சிலாகிக்கப்பட்டான். அப்பேற்பட்ட தாமஸம், காரியத்தை நிதானமாகச் செய்வது எனக்கு பேருபகாரமாக என் கோபத்தை அடக்கி, இது காரியம், இது அகாரியம் என்று எனது கர்மத்தை நியமனம் செய்வதாக விருக்கிறது. பச்சா தாபமான காரியம் ஒரு பொழுதும் செய்யத்தக்கதல்ல. அனுதி காலமாக தர்மத்தைச் செய்கிறவன், பெரியோர்களால் பழக்கப் பட்டவன் நெடுங்காலம் மனத்தை அடக்கினவன், தர்மமான வார்த்தைகளைச் சொல்பவன், மாதா பிதாவின் பிரியத்தை அடைந்தவன், தவத்தினுல் செல்வவானுகி அகஸ்தியர் போல தவத்தினுல் மனத்தை அடக்கினவன், மானம் பெருமைகளுக்காக வசப்படாத கௌதமர் இந்திரனை க்ஷமித்தது மாதிரி, யாவரிடமும் க்ஷமை கொண்டவனுக விருப்பான். எனக்கு பாதகங்களிலிருந்து வரும் தோஷத்தை சீதாராம சரணங்களே விலக்கவேண்டும். அவைகளே எனக்கு ஆதாரம். ஸஜ்ஜன நிச்சய மூர்த்தியே, என் பாபங்களுக்கு சண்ட சூர்யனே, சீதையை மார்பில் தரித்த காரில் திகழ் காயாம்பு வண்ணனே, என் கண்ணபுரத்து அம்மானே, உன்னுடைய ஸ்ரீ தாம நறுந்துழாய் தாழ்ந்து என்னை எப்போது அணைத்துக் கொள்வாய்?]

"லக்ஷ்மணு, ராக்ஷஸக் கூட்டங்கள் பயங்கரமாக ஓடி வருகின்றன. ஜானகியை அழைத்துக் கொண்டு பர்வதங்களில் குஹ்யமான இடத்திற்குப் பத்திரமாக அழைத்துச் செல். பொருமை கொண்ட இந்த அசுரர்கள் அஜாக்கிரதையாக துக்கத்தை அனுபவிக்க இவ்விடம் வருகிருர்கள். பயப்படாமலும் ஸாவதானமாகவும் நீங்கள் இருங்கள்" என்று ராமன் ஆக்ஞை யிட்டார். பிரபுவின் ஆக்ஞையைத் தாங்கி, சீதையுடன் தனுஷ்பாணத்துடன் லக்ஷ்மணன் சென்ருன். (149)

கோதண்ட ஹஸ்த, தன்வியாகிற பிரபு ராமன் சத்ருக்களின் கூட்டத்தின் சமீபம் சென்ருர். அவர்களும் நெருங்கினுர்கள். மிக்க கோபமடைந்தவராக விருந்த போதிலும் பிரபு மந்த ஹாஸத்துடன் தனுஷ்ஷையும் பாணத்தையும் தயார் செய்து கொண்டு யுத்தம் செய்யத் தயரானுர். (150)

மேதாவியான பிரபு கடினமான கோதண்டத்தை (திரிபுராரி யுத்தம் செய்தது போல) பூமியில் நிறுத்தி கால்களினுல் அமுக்கிக் கொண்டு, ஜடா முடியையும் இடுப்பில் கட்டியிருக்கும் மரவுரியையும் கச்சத்தையும் இறுகக் கட்டி யுத்தம் செய்ய

ஸந்நத்தரானுர். "அப்போது, ராமா, (உன் பார்வை தேஜஸ் செழிப்பை உண்டாக்கும்.) மரகத மணிக் குன்று போல விளங்கிருயே,அதன் மேல் கோடி கோடிக்கணக்கான மின்னல்களின் திரள்கள் போல கணக்கற்ற மின்னல் ராசிகளுடன் யுத்தம் செய்யும் இரு ஸர்ப்பங்கள் போல, பிரபு, ஸ்வயம் பிரகாசர், சராசாபதரர் யுத்தம் செய்தீர்.'' பக்தர்களின் பாபங்களை நாசம் செய்யக்கூடிய பிரபுவின் இடுப்பில் அம்புராதி துணி சீராகக் கட்டப்பட்டிருந்தது. விசாலமான புஜங்களில் கோதண்டத்தை தரித்திருந்தார். (அப்போது ராமா, அலைகள் போல பரந்து விசாலமாகவும் நெருங்கியதாகவுமிருக்கும் மயிர் கேசங்களைத் தட்டிக் குலுக்கினீர். நிமிர்ந்த தலையின் பக்கங்களில் ஒதுக்கப் பட்ட கேச பாசங்களை உடைய கோதண்ட ராமா, தியாகராஜர், சீதை, துளசி தாஸர், லக்ஷ்மணன், விஸ்வாமித்ரர் ஆகியவர்கள் அனுபவித்த இன்பகாக்ஷியான ராமா, கராரியே, மஹா பாஹுக் களுடன் அம்ருத மதனம் செய்யும் போது நான் முந்தி, நான் முந்தி, என்று ஓடி வரும் ஆயிரம் கைகள் கொண்ட திரிவிக்ரமா, உம்முடைய தீர்க்கமான புஜங்களில் தனுஷ்பாணமும் இருக்கின் றனவே. உமது பாணங்கள் வேகமாகவும் துரிதமாகவும் நிச்சய குறியுடனும் செல்லுமே;) "ஹே பிரபு ராகவ சிம்மமே, தனித்து நின்று கஜக் கூட்டங்களை பிளந்து தள்ளும் நரசிங்கா, உம் முடைய ஹ்ருதய மனோபாவத்தை யார் அறிவார்? அவர்களை நோக்கிக்கொண்டு யுத்த ஸந்நிதமாக விருந்தாயே; அந்த ராக்ஷஸக் கூட்டங்களாகிற யானைகளுக்கு முன்பு சிம்மக் குட்டி யைப் போல பயமின்றி உட்கார்ந்து கொண்டு அல்லவா தாமதித்து உன் காரியத்தைச் செய்துமுடித்தீர்.'' (என் சிர காரியே என்னைக் காப்பாற்று.) (151)

(அந்த ராஜமுனியைப் பார்த்து) "பிடியுங்கள், பிடியுங்கள்'' என்று கூக்குரல் இட்டுக்கொண்டு ஓடிவரும் சேனைகளைப் பிரபு கண்டார். அந்த சேனைகள் பிரபுவை நான்கு புறங்களிலும் சூழ்ந்துகொண்டு சண்டை செய்தார்கள். அவர் தனியாக மத்தியில் நின்றுகொண்டு அவர்களை ஓடச்செய்த காக்ஷி, உதைய சூரியன் தனியாக பிரகாசித்துக்கொண்டு அவனைச் சுற்றி வளைத்துக் கொண்டிருக்கும் மந்தேஹர்கள் என்று சொல்லப்படும் தைத்யர்களை விரட்டி அடிக்கப்படும்போது எவ்விதம் தோன்று வானே, அதைப்போல என் பிரபு பிரகாசித்தார். (152)

அந்த பாக்யமுள்ள ராக்ஷஸர்கள் பிரபுவினுடைய சௌந் தர்ய குவியல்களைக் கண்டார்கள். வீரலக்ஷ்மியுடன் கூடிய

மாதுர்ய விழிகள், பார்ப்பவர்களை ஆகர்ஷிக்கும் தேஜஸ் உள்ள மங்கள விக்ரஹம், கோதண்டத்தை லாகவமாக வளைத்துக் கொண்டு மின்னல்போல சுழன்றுகொண்டும் நான்கு திக்குக்களி லும் எதிர்த்து நிற்கும் ராக்ஷஸக் கும்பல்களை விரட்டி அடிக்கும் துரிதம் ஆகிய எல்லாவற்றையும் கண்டார்கள். அவ்விதமே ஸ்தம்பித்துப்போய் விட்டார்கள். அவர்களால் மேலே அஸ்திரம் போடுவதற்கு முடியவில்லை. (பிரபு ஸம்மோஹனாஸ்திரத்தை பிர யோகித்து, அவர்களுடைய சாந்த நிலையைக் குலைத்து, மயங்கச் செய்தார்.) உடனே கரதூஷணர்கள் மந்திரிகளை அழைத்துச் சொன்னார்கள். "ஆஹா, என்ன அழகு, என்ன சௌந்தர்யம், என்ன வீரம், இந்த ராஜகுமாரன் மனிதர்களுக்கு ஒரு பூஷண மாகவல்லவோ விளங்குகிறான்." (153)

"நாகர்கள், அசுரர்கள், தேவர்கள், மனிதர்கள், முனி கணங்கள் ஆகிய எவ்வளவோ பேர்களை நான் இதற்கு முன்பு பார்த்திருக்கிறேன். ஜயித்தும் இருக்கிறேன். கொன்றுமிருக்கி றேன். ஆனால் என் சகோதரர்களே, இதுவரையிலும் இவ்வளவு சுந்தரவீர மூர்த்தியை நான் எங்கேயும் கண்டதில்லை." (154)

"இந்த ராஜகுமாரன் என் தங்கையை அங்கஹீனம் செய்த போதிலும் இப்பேற்பட்ட அனுத்தமமான அழகு வரிசைகளைக் கொண்டிருக்கும் புருஷன் நம்மால் கொல்லப்படுவதற்கு யோக்ய மில்லை. இவர்கள் ஒளித்து வைத்திருக்கிற ஸ்திரியை நம்மிடம் ஒப்புவிக்கட்டும். நாம் இந்த இரு சகோதரர்களான ராஜகுமாரர் களுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்துவிடலாம். அவர்கள் சுகமாக வீடு திரும்பிப் போகட்டும்." (155)

"இந்தச் செய்தியை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். அவர்கள் என்ன பதில் சொல்லுகிறார்கள் என்று அறிந்து வாருங் கள்" என்று தூதர்களை அனுப்பினார்கள். தூதர்கள் ஓடிவந்து ஸ்ரீராமச்சந்திரனிடம் இந்த ஸந்தேசத்தைத் தெரிவித்தார்கள். அந்தச் செய்தியைக் கேட்ட ராமச்சந்திரன் சிரித்துக்கொண்டு பதில் சொன்னார். (156)

[தியானம்

நாராயணா, மஹாலக்ஷ்மி பிரபோ, நாரதர் ஸ்வேத தீபத்தில் எவ்விதம் ஒருவழிப்பட்ட மனமுள்ளவராகவும் ஊர்த்வபாஹுக் களுடன் ஸமாதி நிலையில் ஸகலகல்யாண குணங்களைக் கொண்ட குணப்ருக்காகவும் திருமந்திரமாகிய வேதங்களின் சாரத்தை நிர்

குணமாகவும் நாமரூபமாகவும் பார்த்தார். நாராயணா, உம்முடைய சச்சிதானந்த ரூபத்தின் சௌந்தர்யங்களை அழகிட்டதாகவும் கண்டார். அதைப்போல மோஹன ராமா, உன் திரு உருவத்தை திரிபுர சுந்தரியாகவும், சீதை அதி ப்ரேமையுடன் அணைத்துக்கொள்ளும் ஜகன்மோஹன ராமனாகவும், ராஜஶ்ரீயாகவும், உம்மைப் பலவிதங்களால் பார்த்துத் துதிக்கிறேன். எனக்கு உம்மிடம் பயத்தை உண்டுபண்ணி, பிற்பாடு பயத்தை நாசம் செய்த பயநாசனரே, தேவதேவேஸரே, ஓம் பூர்புவஃ லக்ஷ்மியாகவிருக்கும் அந்தர்யாமியே, இந்திரியங்களுடன் கூடிய ஜீவனுக்கும் அந்தராத்மாவே, லோகசாக்ஷியே, வீரலக்ஷ்மியுடன் கூடிய ஶ்ரீராமா, புருஷோத்தமா, சரணம். காலாந்தகனைப்போல தண்டத்தைச் செய்யும் கோதண்ட ராமா, மஹா புருஷா, என் அம்ருதமே, உன் கிருபைதான் வேண்டும். வ்யோமரே, ஸநாதனரே, ஸதஸத்வ்யக்தா வ்யக்தரே, உம்மிடம் ஆத்ம ஸமர்ப்பணம் செய்த எனக்கு நீரே ரக்ஷணம். கர தூஷணர்களைக் கொல்ல நினைத்த சரசாபதரனே, நாரதர் போன்ற யோகிகளால் ஸ்தோத்ரம் செய்யப்படும் பரிபூர்ணா, தியாகராஜபரிபாலா, ஸுர பூமி ஸுரஸேவிதா, உனக்கு தேவர்களையும் ஸாதுக்களையும் ரக்ஷணம் செய்பவன், மஹாலக்ஷ்மியை ஸம்ரக்ஷணம் செய்பவன் என்கிற பெரிய கீர்த்தி இருக்கிறது. அபராஜிதரே, என்னை ஸம்ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பு உமக்குத்தானே. பிரும்மண்ய தேவரே நமஸ்காரம். உமக்கு அடிக்கடி நமஸ்காரம் செய்கிறேன்.]

"நான் க்ஷத்திரியன். வனத்தில் வேட்டையாட வந்திருக்கிறேன். உங்களைப்போல பிறர்களுக்கு ஹிம்சை செய்யும் கொடிய விலங்குகளை தேடிக் கொல்ல வந்திருக்கிறேன். நீங்கள் பலவான்களான சத்ருக்கள் என்று நான் பயப்படவில்லை. நான் பீமவிக்ரமம் உள்ளவன். காலனோடுகூட எதிர்த்துச் சண்டை செய்யும் தண்டர்." (157)

"என்னைச் சாதாரண மனிதன் என்று எண்ணவேண்டாம். நான் சிறியவன் என்று ஏமாந்து போகாதீர்கள். (நான் ம்ருத்யு ரூபம் கொண்ட ப்ரமர்த்தனர். தைத்ய குலத்தை நாசம் செய்து முனிவர்களை ஸம்ரக்ஷிக்கும் பிரவிருத்த வேதவிக்ரியர். பிராம்மணப் பிரியர். துஷ்டர்களை தண்டிக்கும் அதிக்ருச்ரர்.) என்னுடன் சண்டை செய்ய உங்களுக்கு பலம் இல்லாதுபோனால், பிழைத்துப் போங்கள். (பிறர்களுக்கு சுகத்தைத் தரும் ஸுக ப்ரதர்.) என்னுடன் போர் செய்யாமல் புறங்காட்டி ஓடும் விமுகர்களை நான் யுத்தத்தில் அடிப்பதில்லை." (158)

"யுத்தத்தில் விருப்பமுள்ளவர்களாக என்னிடம் வந்த பின்பு, கபடமாகவும், மிக்க கெட்டிக்காரர்கள் பேசுவதுபோல சாமர்த்தியமாகப் பேசுவது என் வழக்கம் அல்ல. அதுபோல ரணகளத்தில் சண்டை போட விரும்பும் எதிரிக்குக் கிருபையைக் காட்டுவது கோழைத்தனம். சிறந்த வீரனுக்கு இது அழகல்ல." என்று பிரபு மறுமொழி கொடுத்தார். தூதர்கள் அந்த ஸந்தேசத்தை சீக்கிரமாகவே கரதூஷணர்களிடம் சொன்னுர்கள். அந்த வசனங்களைக் கேட்டதும் அவர்களுடைய ஹ்ருதயம் கோபத்தினுல் ஜ்வலித்தது. (159)

ஆக்ரோஷம் கொண்டவர்களாக அவர்கள் கத்தினுர்கள். "இவனைப் பிடியுங்கள், கைதி செய்யுங்கள்," இந்த ஆக்ஞையைப் பெற்ற ராக்ஷஸ சேனைகள் யுத்தம் செய்ய விருப்பத்துடன் தனுஷ்பாணம், தோமரம், சக்தி, ஆயுதம், சூலம், கடோரம் என்கிற கத்திகள், மண்வெட்டி கோடாலி இன்னும் அநேகவித ஆயுதங்களுடன் ராமனிடம் ஓடிவந்தார்கள். பிரபு ஸ்ரீராமச்சந்திரன் மஹா மேதாவி லக்ஷ்மி வாஸம் செய்யும் நாராயணர் தனுஷ்ஷின் நாணை டங்காரம் செய்தார். முதன் முதலில் அந்த நாதம் ஏற்பட்டதும் அந்த சப்தம் கோரமாகவும் பயத்தை உண்டுபண்ணுவதாகவுமிருந்தது. அந்த பயத்தினுல் ராக்ஷஸர்கள் அதிவியாகுலமடைந்து அந்த சமயத்தில் என்ன செய்வது, என்று தெரியாமல் கலங்கினுர்கள். (160)

**[தியானம்**

ஹே நாராயணு, மஹா பிரபோ, கமலா காந்தா, உமா மஹேஸ்வரரால் ராம நாமமே சிறந்தது என்று நிரூபணம் செய்யப்பட்டது. நீர் அபராஜிதர். உட்பகைகளான காமக்ரோதங்களை நாசம் செய்கிறவர். மஹாபிரளய காலத்தில் உலகங்களுக்கு ஆதார நிலையரான பூர்வ நிவாஸர். பிரும்மாவுக்கு வேதங்களை உபதேஸித்த பிரும்ம புரோஹிதர். ஜகத்பதி, ஹரிவல்லபா சீதாதேவி, ருததாமரே, நாராயணராகிய ஆதிதேவரே, கர்ம பலனைக் கொடுக்கும் வஸுப்ரதரே, தியாகராஜரால் வணங்கப்பட்ட பாதாரவிந்தரே, ஸனக ஸநந்தனுதி முனிஸேவிதரே, உன்னைத் தவிர கருணுமூர்த்தி இந்த ஜகத்தில் எனக்கு எங்கு கிடைக்கும்? ராமாவதாரத்தில் நீர் காட்டிய யமமும், நியமமும், ஞானமும், ராக்ஷஸர்களிடம் த்வேஷமும், ஸ்திரி முதலானவர்களிடமும் பரிக்ரஹமும், தர்மநடத்தையில் கர்வமும், சீதையினிடத்தில் காமமும், தர்ம பராயணராக யுத்தம் செய்வதும், க்ஷத்திரிய தர்மம்

பக்தஸம்ரக்ஷணம் ஆகியவைகளில் டம்பமில்லாமையும், வானராதிகளாகிற ஸர்வ சாதாரண பிறப்புள்ளவர்களிடமும் நீர் காட்டிய ஸ்நேகமும் உமக்கு ஈடு யார் இருக்கிறுர்கள்! கராரியே, லக்ஷ்மணுக்ரஜா, ரங்கபதே, சீதாபதே, என்னை ரக்ஷி.]

அந்த சைன்யங்கள் உடனே ராமனை அதிபலவான் என்று புரிந்து கொண்டு ஸாவதானமாக அவருடன் யுத்தம் செய்ய ஓடினுர்கள். ராமச்சந்திர மூர்த்தியின் மேல் அஸ்திரங்களைப் பலவிதமாக வர்ஷித்தார்கள். (161)

பிரபு ராமச்சந்திர மூர்த்தி அந்த அஸ்திரங்களைப் பிரதி அஸ்திரங்களால் எள்ளுத் துண்டுகள் போல வெட்டி சிதற அடித்தார். பிரபு தன் கோதண்டத்தை காது வரை இழுத்து பாணங்களை விட்டார். (162)

ராமனுடைய தனுஸ்ஸிலிருந்து விடுபட்ட பாணங்கள் பயங்கரமாக மூச்சு விட்டுக் கொண்டு ஆக்ரோஷத்துடன் பாயும் அநேக ஸர்ப்பங்கள் மாதிரி தீவிரமாயிருந்தன. யுத்த அரங்கில் ரணதீரனுகிற ராமன் கோபம் கொண்டு கூர்மையான பாணங்களால் அத்யந்த தீக்ஷ்ணமாக அடித்தார். (163)

அந்த கடூரமான பாணங்களைக் கண்டு ராக்ஷஸ வீரர்கள் பயந்து முதுகு காட்டி ஓட ஆரம்பித்தார்கள். இதனுல் கோப மடைந்த கர தூஷண திரிசரஸ் ஆகிற மூன்று சகோதரர்கள் ஓடும் சைன்யங்களைக் கடும் வார்த்தைகளால் தூஷித்தார்கள். ''எவர்கள் யுத்தத்திலிருந்து உயிருக்குப் பயந்து ஓடுகிறுர்களோ, (164)

அவர்களை நாங்கள் எங்கள் கைகளால் கொன்றுவிடுவோம்.'' எப்படியும் மரணம் தங்களுக்கு நிச்சயம் என்று தெரிந்து கொண்ட வீரர்கள் ரணகளத்திற்குத் திரும்பி வந்தார்கள். அநேக விதமாக அவர்கள் ஸ்ரீராமனிடம் யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். (165)

தன் சத்ருக்கள் அதிக கோபாவேச மடைந்து யுத்தம் செய்வதைக் கண்டு, பிரபு கோதண்டத்தை வளைத்து அநேக பாண வர்ஷங்களால் பயங்கரக் கூட்டங்களான ராக்ஷஸர்களைக் கொல்ல ஆரம்பித்தார். (166)

[தியானம்

ஹே கிருபாளு, நாராயணு, ரங்கபதி, ராஜபதியே, கோமாதாவே, உமாபதியே, நரநாராயணு, உன் திருவிளையாடல்களைச் சொல்லித் தீருமோ? அர்ஜுனனுக்கு தாமே நின்று ஸித்தோபாயமான கிருஷ்ணன் ஸநாதன தர்மம் என்று உப

  

தேசித்தாய்; ராமாவதாரத்தில் திருமகளும் தானுமாகி ஒரு நினை வால் கரதூஷணுதிகளையும் ராவணுதிகளையும் ஒரே விதமான ஸங்கல்பத்தால் உய்க்க எண்ணி, உன் பொற் நிதியை அடைக்கலமாக செய்வித்தாய்; "ராமன் இன்றி நான் எவ்விதம் வாழ்வேன்? சீதையின்றி ராமன் இதுகாறும் எவ்விதம் உயிர் தரிக்கிருன்? காலம் கொடியது. காலத்தை யாவரும் தாண்ட முடியாது" என்று ஆஞ்சநேயர் வியக்கும்படி பிரபத்தி யாகிய ஸத்பதத்தை, சிறந்த வழி நடையை, உங்களுக்கு அனன்யார்ஹசேஷத்வத்தையும் எனக்குப் புரிய வைத்தாய். உங்களுக்கு நிருபாதிக ஸ்வாமித்வத்தையும் ஜீவர்களுக்கு நிரு பாதிக கிருபையை ஸர்வ சேஷியான பகவான் ஸ்வார்த்தமாகக் கொடுத்து, ஜீவர்களுடைய குண தோஷங்கள் யாவையும் கர்ம ஜன்யமாகவும் கர்ம நிரபேக்ஷயாயும் உள்ளவை எனக் காட்டி ஞர்கள். ஐயா தண்டரே, சாரங்க தன்வா, கராரியே, முராரியே, உம்முடைய நிருபாதிக சேஷித்வம் என்று சொல்லப்படுகிற ஸ்வரூபத்தில் நமஸ்; அஹம் நமம என்கிற சொற்களைக் கொண்ட நான் தண்டனைகளாலும் கிருபைகளாலும் அனுக்ரஹ பிரக்ரஹ வ்யக்ரஹ பரிக்ரஹ சங்கல்பங்களாலும் அல்லவோ பூர்ண காமத்தை அடைகிறேன். ப்ரணவாகார ரூபா, உங்க ளுடைய மஹா கிருபை எப்போது எனக்கு கிடைக்கும்? உரு காயரே, விஷ்ணே.]

பாவம், அந்த ராக்ஷஸர்களின் அங்கங்கள், தலைவேறு புஜங்கள்வேறு கைகால்கள் முண்டங்கள் வெவ்வேருக வெட்டி சிதறப்பட்டு, (திருவிக்ரமனுடைய பரந்த விராட் ஸ்வரூபத்தில் தூசிகள் ஒட்டிக்கொண்டிருப்பதுபோல) பூமியில் இங்கும் அங்கும் ஓடி விழுந்தன. சரதாபஹஸ்தனுகிறவரும் தீர்க்க பாஹுக்களைக்கொண்ட பிரபு தொடர்ந்து குறி தப்பாமல் அடிக் கும் கோதண்டராமன், (சண்டசூர்யன் பிரகாசிப்பதுபோல) பாணவர்ஷங்களை பிரயோகம் செய்தார். யானைகளைப்போல பருத்த தேகங்கள் கொண்ட ராக்ஷஸ வீரர்கள் கொடுமுடி கொண்ட மலைகள் சிதறி இந்திரனுடைய வஜ்ராயுதத்தால், சின்னபின்னமாக ஆக்கப்பட்டு விழுமோ, அது போல அவர்கள் நான்கு திசைகளிலும் விழுந்தார்கள். (167)

யுத்தத்தில் வெட்டப்பட்ட சரீர முண்டங்கள் ஆயிரக் கணக்கானவை. அசுர மாயையினுல் சிலர் யுத்தம் செய்ய ஆரம் பித்தார்கள். ஆகாயத்தில் எழும்பி கோர யுத்தம் செய்ய ஆரம் பித்தார்கள். ஆகாசத்தில் கைகளும் கால்களும் வெட்டப்பட்டு

தூக்கி எறியப்பட்டன. தலையில்லாத முண்டங்கள் யுத்தகளத்தில் இங்கும் அங்கும் ஓட ஆரம்பித்தன. (168)

கிரௌஞ்ச பக்ஷிகள், காக்கைகள், நரிகள் ஊளையிட்டுக் கொண்டு, பயங்கர சப்தங்களுடன் ரணகளத்தில் திரிய ஆரம்பித்தன. (169)

நரிகள் ஊளையிட்டன; பூதபிரேத பிசாசங்கள் தங்கள் கமண்டலங்களில் ரத்தத்தை நிரப்பிக்கொண்டு உண்டு களித்தன. வேதாளங்கள் மண்டை ஓடுகளை வைத்துக்கொண்டு தாளம் போட்டு நர்த்தனம் செய்தன. தாளந்ருத்யம் செய்யும் யோகினிகள்போல களித்தன. ரகுவீரன் பிரசண்டமாக பாண வர்ஷங்களால் யுத்த வீரர்களின் வக்ஷஸ்தலங்களையும் புஜங்களையும் தலைகளையும் அடித்து நொறுக்கி சிதறிக்கொண்டிருந்தார். அவர்களுடைய முண்டங்கள் நான்கு பக்கங்களிலும் பயங்கர சப்தங்களுடன் "பிடியுங்கள்," "பிடியுங்கள்" என்று ஆரவாரமிட்டுக்கொண்டு பயங்கரமாக ஓடிக்கொண்டு போயின. (170)

வபையை நகங்களால் பற்றிக்கொண்டு கழுகுக் கூட்டங்கள் ஆகாயத்தில் கிளம்பின. பிசாசங்கள் இன்னொரு பாகங்களைப் பற்றிக்கொண்டு ஆரவாரம் செய்தன. சுருங்கச் சொல்லப் போனல் யுத்தகளமாகிய ஒரு பட்டிணத்தில் சிறிய பாலர்கள் கூட்டம் கூட்டமாக பட்டம் விட்டால் எவ்விதம் ஆகாயத்தில் தோன்றுமோ, அதுபோல் அந்த காக்ஷி விளங்கியது. அநேக யுத்த வீரர்கள் மாண்டார்கள். சிலபேர்களுக்கு பலத்த காயம். சிலபேர்களுக்கு மார்பில் பலமான காயம். பலபேர்கள் அங்கங்கள் இழந்து பூமியில் கிடந்தார்கள். தன் வீரர்கள் இவ்விதம் அவகதியை அடைந்து சேனை சின்ன பின்னமாக ஆக்கப்பட்டதைக் கண்ட கரதூஷணுதிகள் கோபம் கொண்டு ராமனை யுத்தத்தில் தீவிரமாக சண்டை செய்யும்படி தூண்டினுர்கள். (171)

[தியானம்

நாராயணு, விஷ்ணே, சதலாவண்ய ராமா, சீதாபிரபோ நாரத வ்யாஸ தியாகராஜ பரத ராமரால் துதிக்கப்பட்ட பிரபோ, ராஜாதிராஜா ரதி ராஜனுகிற மன்மதனைவிட சதலாவண்யம் கொண்ட மோஹன ராமா, கிருஷ்ணு ஸ்மரணம்பரம், ஏகம் ஹரிஸ்மரணம்பரம், நாராயண மவாப்நோதி ஸத்ய பாபக்ஷயான் நரः விஷ்ணுஸ் ஸ்மரணாத் க்ஷீண ஸமஸ்த க்லேச ஸஞ்சயः, வாஸுதேவே மனேயஸ்ய ஜபஹோமார்சீசனுதிஷு தஸ்யாணத ராயோ மைத்திரேய, தேவேந்திரத்வாதிகம் பலம், ஜப வாஸு

தேவேதி முக்திபிஜம், அனுத்தமம், ஞானமேவபரம், பிரும்ம ஞானம் மிகச் சிறந்தது என்று என் ஆசாரியர் பராசரர் சொன்ஞர். அவித்யையினுல் ஏற்பட்ட உபாதிகள் பந்தங்களுக்கு காரணம். இந்த ஸம்பூர்ண விஸ்வம் ஞானுத்மகமாகவும் ஞான மயமாகவும் இருக்கிறது. வித்யை அவித்யை ஆகியவைகளைக் கூட ஞானம் என்று தெரிந்துகொள்ளவேண்டும். ஆகையால் ஒரு பதார்த்தமும் துக்கத்தையோ சந்தோஷத்தையோ கொடுக்கக்கூடியதாக வில்லை. சமயத்திஞல் அல்லவோ அதே பதார்த்தம் சுகம் துக்கம் ஆகிய இரண்டையும் கொடுப்பதாக விருக்கிறது. ஆகையால் ஹே மனஸே, சீதா பிரபுவாகிற ராமனை நினை. ராமா, எங்கேயாவது பசுவைத்தேடி கன்றுக்குட்டி போகிறதா? மழையைத்தேடி நெற்கதிர் போகிறதா? சீதையைத்தேடி நீ போகிருயா அல்லது அவள் உன்னைத்தேடி வருகிருளா? தியாகராஜருக்கு இந்த ரஹஸ்யத்தைச் சொன்ன புருஷோத்தம ராமா, இந்திர பதவியோ அல்லது தீர்க்க ஆயுஸுடன்கூடிய உன் ஸ்மரணமோ, இருந்தும் உன் தயையின்றி, உன் தர்சனமின்றி, நான் பூஜை ஆராதனம் செய்யும்போது, உன் திவ்ய மங்கள விக்ரஹத்தின் சோபைகளை நேரில் காணுமல் வாழ்ந்து வருவதிஞல் என்ன பிரயோசனம்? எனக்கு எப்போது அப்பா, உன் திருவருளாகிற சாந்தி பராயணம் கிடைக்கும்?]

மிக்க கோபமடைந்த ராக்ஷஸ வீரர்கள் கணக்கற்ற பாணங்கள், கத்தி ஆயுதங்கள், தோமரங்கள், கோடாலிகள், சூலங்கள், கத்திகள் போன்ற ஆயுதங்களால் ஏகமாத்திரமாக ரகுவீரனை அடிக்கக் கிளம்பிஞர்கள். ரகுவீரன் அதஞல் கோபமடைந்து ஒவ்வொன்றையும் அறுத்து அதற்குமேல் பாணங்களை வர்ஷிக்க ஆரம்பித்தார். பிரபுவின் கார்யம் ஒரு கண் இமை மூடுவதற்குள் செய்து முடிப்பதாக விருந்தது. ராக்ஷஸர்களின் மார்பில் அவருடைய பாணங்கள் பத்து பத்தாகவும் கணக்கற்றதாகவும் பலமாகவும் விழுந்தன. அந்த ராக்ஷஸ வீரர்களின் தலைவர்கள் பலமாக அடிபட்டு விழுந்ததும், மீண்டும் எழுந்திருந்து திருப்பி அடிக்க ஆரம்பித்தார்கள். (172)

யுத்தத்தில் கீழே விழுந்தவர்கள் மீண்டும் எழுந்திருந்து சண்டை செய்ய ஆரம்பித்தார்கள். அவர்களுக்கு மரணம் ஏற்படாமல் மாயை யுத்தம் செய்வது அதிசயமாக விருந்தது. வித விதமான ஜால யுத்தங்களை செய்தார்கள். தேவதைகள் இதைக் கண்டும், ராக்ஷஸர்களின் எண்ணிக்கை பதிஞன்கு ஆயிரம்; ராமன் தனிப்பட்ட வீரன். ஒருவித உதவியுமின்றி அவர்களுடன்

எவ்விதம் சண்டைசெய்யப் போகிருன் என்று வியாகுலம் அடைந்தார்கள். பிரபு, மாயாதீதன், தேவர்கள் ரிஷிகள் வியாகுல மடைவதைப் பார்த்து ஒரு யுக்தி செய்தார். அந்த யுக்தியின்படி ஸர்வ ஸம்மோஹனுஸ்திரத்தை பிரயோகம் செய்துவிட்டார். அந்த அஸ்திரம் விடுபட்டதும் அந்த ராக்ஷஸ கும்பல்களில் இருந்த ஒவ்வொருவரும் மற்றொருவனை ராமரூபமாகக் கண்டார்கள். ஒவ்வொருவரும் மற்ற ராக்ஷஸனை எதிரியாக நினைத்து பரஸ்பரம் சண்டை செய்துகொண்டே யாவரும் இந்தவிதமாக மாண்டார்கள். (173)

ஸகல ராக்ஷஸர்களும் இங்கே ராமன் இருக்கிருன்; அதோ இருக்கிருன்; இதோ இருக்கிருன் என்று ராம் ராம் என்று சொல்லிக்கொண்டு தங்கள் தேகத்தை ரணகளத்தில் துறந்தார்கள். (பதித பாவனனுகிற) ராமன், (ரதி ராஜ, சதலாவண்ய பிரபு) ஒவ்வொருவனுக்கும் திவ்ய தர்சனம் தந்து புனராவிருத்தி இல்லாத (தத் விஷ்ணோः பரமபதம் என்கிற) நாராயண பதத்தை, மஹாக்ருபாவேசராக அளித்தார். என் பிரபு மஹாக்ருபாளு. ஒரு க்ஷணத்தில் உபாயமாக எல்லோரையும் வெட்டித் தள்ளி, யாவருக்கும் மோக்ஷ பதத்தைக் கொடுத்தார். (174)

தேவர்களுக்கு சந்தோஷம் தாங்கவில்லை. சகல ராக்ஷஸர்களும் ஏகமாத்திரமாகக் கொல்லப்பட்டார்கள். பாரிஜாத கற்பக சம்பக புன்னுக சுகந்த மலர்களை ஆகாயத்திலிருந்து வர்ஷித்தார்கள். ஒவ்வொருவரும் விதவிதமாக பகவானை ஸ்தோத்ரம் செய்துவிட்டு, கைகூப்பி அஞ்சலி நமஸ்காரங்கள் செய்து அதன் பிறகு தங்கள் சோபிதமான விமானங்களில் ஏறிக்கொண்டு தங்கள் இருப்பிடம் சென்ருர்கள். (175)

ராமர் யுத்தம் முடிந்த பின்பு சகல சத்ருக்களும் மாண்டார்கள் என்று தெரிந்துகொண்டார். அதைப் பார்த்த சகல தேவதைகளும் மனுஷ்யர்களும் முனிஜனங்களும் பயம் தெளிந்தவர்களாக ஆனுர்கள். அப்பொழுது லக்ஷ்மணன் சீதையை அழைத்துக்கொண்டு வந்தான். அந்த இருவர்களும் பிரபுவின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தார்கள். பிரபு, (திருவிக்ரமன்) பரம ஆனந்தத்துடன் அவர்களை வாரி அணைத்துக் கொண்டார். (176)

என் தாய் சீதை பிரபு ஸ்ரீராமச்சந்திரனை ஸ்யாம சுந்தராங்கதனை, (மணிவண்ணனை ஆலிலையில் பள்ளிகொண்ட மிருதுவான சரீரம் கொண்ட பாலகன் எவ்விதம் கோமளமான சரீரத்துடன் விளங்கினுரோ அதுபோல) அத்யந்த கோமளமான

சரீரத்துடன், யுத்தம் செய்த களைப்பினால் முத்துக்கள்போல வியர்வைத்துளிகள் மேனியில் படிந்திருக்க, அந்த சுந்தர வதனனை, (ராஜீவலோசனனை ஸர்வ ஜகன்மோஹன ராமனை,) மலர்ந்த தாமரையைப்போல விருக்கும் கண்ணிதழ்களைக் கொண்ட சீதை, பங்கயத்தாள், ஓடித்தாவி, தன் மிருதுவான கரங்களால் தழுவிப் ப்ரேமையுடன் ஸ்பர்சித்தாள். (ஸரஸிருஹ நயனனாகிற பிரபு சஞ்சீவினியாகிற சீதையைப் ப்ரேமையுடன் ஆலிங்கனம் செய்து தடவிக் கொடுத்தார். உமாதேவியை மஹேஸ்வரர் ஏற்றுத் தழுவி எவ்விதம் ஆனந்திப்பாரோ, அது போல சீதா லோலனாகிற பிரபு மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார்.) இந்தவிதமாக ரகுநாயகன் பஞ்சவடியில் சீதையுடன் ரமித்து சுரர்களுக்கும் முனிவர்களுக்கும் சுகத்தைக் கொடுத்துக்கொண்டு லக்ஷ்மணனுடன் வனவாசம் செய்தார். சுகத்தைத் தரும் பிரபு மஹத்தான சரித்திர பிரபாவங்களுடன் சீதையுடன் ரமித்தார். (177)

[தியானம்

ஹே ராமா, பார்வதி தேவிக்கு மஹாதேவர் உன் நாமங்களின் பெருமைகளைச் சொல்லும்போது உன் ஒரு திருநாமமாகிற ஸ்ரீராம சப்தமானது ஜனார்த்தனருடைய ஆயிர மங்கள நாமாக்களுக்குத் துல்யம் என்று ஸாதித்து அருளினார். அப்பேற்பட்ட மஹானுபாவரான சங்கரர் ஸர்வ ஸ்ருதி பராயணமாக விருந்த தண்டி என்கிற பிரும்ம ரிஷியால் ஆயிரம் நாமாக்களால் ஸ்தோத்ரம் செய்யப்பட்டார். பிரும்மவாதியான அவருடைய ஸ்தோத்திரத்தை மஹாதேவர் உமாதேவியுடன்கூட ரமித்தார். பிரும்மா விஷ்ணு, சதக்ருது, விஸ்வேதேவர்கள், மஹரிஷிகள் சந்தோஷத்துடன் அந்த ரிஷியை ஆனந்தப்படுத்தினார்கள். திவ்யஞான சக்ஷுஸ்ஸுடன் சிலாகிக்கப்பட்டதும், தண்டி மஹரிஷியினால் கீர்த்தனம் செய்யப்பட்டதுமான ஆயிரம் சிவ நாமாக்களை நரஸ்ரேஷ்டரும் யாதவ ஸ்ரேஷ்டருமான வாஸுதேவர் உபமன்யுவினிடமிருந்து பிரஸாதமாகப் பெற்றார். ஜகத்பதியும் யக்ஞபதியுமாகிற விஷ்ணுவும், சங்கரர், பார்வதி ஸம்வாதத்தில் பலவிதமாகத் திருப்தி அடையப்பட்டார். அப்பேற்பட்ட லோக குருக்களான உமா மஹேஸ்வரர்கள் எனக்கு நாராயண தத்வமாகிறதும், திருமந்திரத்துடன் கூடியதும், அர்த்த பஞ்சகம் என்கிற பகவானுடைய ஸ்வரூபம், ஜீவாத்மாவின் ஸ்வரூபம், புருஷார்த்தம், உபாயம், இதை அடைய

முடியாமல் செய்யும் பிரதிபந்தகம் (விரோதி ஸ்வரூபம்) ஆகிய அர்த்த பஞ்சகம் த்வயமாகிற திருவடிகளை அனுஸந்திப்பதும், சர்மஸ்லோகமாகிற உபாயத்தையும் பலத்தையும் சொல்லுவதாகக் கூடிய ரஹஸ்ய த்ரயத்தை எனக்குச் சொல்லி கடாக்ஷித்து அருள வேண்டும். திருமந்திரத்தில் நாராயண பதத்தாலே பரமாத்ம ஸ்வரூபம், விளங்கலாயிற்று. பிரணவத்தாலே ஆத்மஸ்வரூபம் சொல்லலாயிற்று. சதுர்த்தியாலே புருஷார்த்த ஸ்வரூபத்தை சொல்லலாயிற்று. நமஸ் சப்தத்தாலே, விரோதி ஸ்வரூபமும் உபாயம் சொல்லப்பட்டதாயிற்று. ஜீவன் பரதந்திரன் என்கிற ஸ்வரூபம் காண்பிக்கப்பட்டது. மகாரத்தாலே விரோதிகளின் ஸ்வரூபம் சொல்லலாயிற்று. த்வயத்தில் நாராயண பதம் பரமாத்ம ஸ்வரூபம், பிரபத்யே என்கிறது ஆத்ம ஸ்வரூபம். சதுர்த்தி, நமஸ்ஸில் மகாரம் விரோதி ஸ்வரூபம். சரணௌ சரணபாதங்களே உபாயம். சர்ம ஸ்லோகத்தில் மாம் அஹம் பரமாத்மாவின் பரத்தையும் ஸௌலப்யத்தையும் சொல்லலாயிற்று. வ்ரஜ, த்வா, மாசுசः என்கிற பதங்களாலே ஸ்வஸ்வரூபம் (ஜீவனுடைய) சொல்லலாயிற்று. ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி என்கையாலே அநிஷ்ட நிவிருத்தி, இஷ்டபிராப்தியாகிற புருஷார்த்த ஸ்வரூபம் சொல்லப்பட்டதாயிற்று. ஏகம் என்கிற பதத்தாலே உபாயம் சொல்லப்பட்டது. இவ்விதம் உபாய உபேயமாக விருக்கிற லக்ஷ்மி நாராயணரின் திருவடிகள், திவ்யதர்சனம், மதுரமான பேச்சு மொழிகள், ஆண்டாள் பரதன் லக்ஷ்மணர் தியாகராஜர் உமா மஹேஸ்வரர்கள் அனுபவித்த தூயமான அனன்யார்ஹ சேஷத்வம், அதை அடைவதற்கு ஸகல வேதார்த்த ப்ரதிபாத்தியமாகிற அர்த்த பஞ்சகம் என்கிற திருமந்திரம், பரமாத்ம ஜீவாத்ம ஸ்வரூபம் அதன் அனுபவம், விரோதி உபாயங்கள் புருஷார்த்த லாபம் எல்லாம் விளங்கினதாயிற்றே. ராமா சீதா, இவ்விதம் உபதேசம் பெற்ற எனக்கு உங்கள் கிருபை அனவரதமும் கிடைக்கவேண்டும்.]

கரதூஷண திரிசிரஸ் ஆகியவர்கள் கொல்லப்பட்டதைக் கண்ட சூர்ப்பனகை அலறிக்கொண்டு ராவணனிடம் ஓடினாள். மஹா க்ரோதத்துடன் அவனைத் தூண்டுதல் பண்ணும்படி வார்த்தை, சரமாரிப் பொழிந்தாள். "உன் தேசத்தின் நன்மைகளை உனது ராஜ பொக்கிஷத்தையும் மறந்து விடு. (178)

"இரவு பகலாக உன் நேரத்தை விஷய போகங்களாகிற மதுபானத்தில் காலத்தை செலவழித்துக் கொண்டிருக்கிறாய். உன் சத்ரு உன் தலைமேல் ஏறியிருப்பதை, நீ பார்க்கவில்லை.

எங்கேயாவது ராஜ நீதியையும் தர்மத்தையும் விட்ட அரசனும், தர்மத்தை விட்டு அநீதியாக பொருள் சேர்க்கும் தனுதிபதியும், ஸத்கர்மாக்களை ஹரிக்கு ஆராதனம் என்று சொல்லாத வேத பாடகனும், பிரும்ம வித்யையாகிற ஆத்ம வித்யையை அடையாமல் சில்பம் போன்ற வித்யைகளை சிரமப்பட்டு அடைந்து அதனுல் தன்னை விவேகன் என்று சொல்லிக்கொள்ளும் அறிவாளியும் எங்கேயாவது உருப்படுவார்களா? அப்பேற்பட்டவர்களுக்கு ராஜ்யமோ தனமோ, ஸத்கர்மங்களோ, வித்யைகளோ பயன் படாது. அவர்கள் எடுத்துக்கொண்ட பரிஸ்ரமம் வீணே. ஸந்யாஸியின் வாழ்க்கை நடத்தும் ஒரு ஏகாந்திக்கு விஷய போகம் என்கிற சேர்க்கையும் கெடுமதி கொண்ட மந்திரியைக் கொண்ட அரசனும், கபடமான ஞானம், கள் மது குடிப்பதில் லஜ்ஜையும், (179)

மன உள்ளத்திலிருந்து எழும்பும் ஸ்நேக உணர்ச்சியில்லாத அன்புப் ப்ரீதியும், " நான் பெரியவன் நான் கர்த்தா " என்கிற மமகாரங்களுடன் விளங்கும் ஜீவன் தன் ஸ்வரூபத்தை உணராமல் அஹங்காரத்துடன் இருப்பவனும் ஆகிய எல்லோரும் அதிவேகமாக அழிந்து போகிருர்கள், என்கிற நீதியை பலர் சொல்லி நான் கேள்விப்பட்டிருக்கிறேன்." (180)

"சத்ரு, ரோகம், அக்னி, பாபங்கள், பிரபு, ஸர்ப்பம் ஆகியவை சிறியவை என்று ஒருக்காலும் ஒருவன் அலக்ஷ்யம் செய்யக்கூடாது. இதை நன்ருகபுரிந்துகொள். முளையிலிருந்தே, ஜன்மப் பிறப்பை அடைந்த சமயத்திலிருந்தே, இதை நாம் நன்ருக உணர்ந்து கொள்ளவேண்டும்." இவ்விதமாக சூர்ப்பனகை பலவித விலலாபங்களால் அழுதுகொண்டு எல்லா விருத்தாந்தங்களையும் ராவணனிடம் கூறினுள். (181)

[தியானம்

ராமா, சீதா, நாராயணு, நாரதர், பீஷ்மர் வியாஸர் போன்றவர்களால் உபதேசிக்கப்பட்ட அஹிம்சை, சத்யம், அக்ரோதம், தானம் இந்த நான்கும் அத்துடன் தர்மபுத்ரருடைய ஜிக்ஞாஸமும், பீமனுடைய ஏகபக்தியும் அர்ஜுனனுடைய விஸ்வாஸமும், நகுல சஹாதேவ சத்ருக்னனுடைய பாகவத உள்ளமும், தேவ தேவா, பரதனுடைய அறிவும், ராமானுஜனுகிற லக்ஷ்மணனுடைய கைங்கர்யமும் சீதையின் அனன்யார்ஹசேஷத்வமும் எனக்கு வேண்டும். இந்த ஆத்மாவுக்கு எம்பெருமான் கட்டிய மங்கள ஸூத்ரம் திருமந்திரமாகிய ஓம் நமோ நாராயணுய நம:

என்பது பிள்ளை திருநறையூர் அரையர் அருளிச் செய்தார். அதுபோல ஸம்சார வர்தகமான தாலிக்கயிறு பதினறு இழையாய் இரண்டு சரடாயிருக்கிறது. கைங்கர்ய வர்தகமான மங்கள ஸூத்ரம் எட்டு இழையாய் மூன்று சரடாயிருக்கிறது. ஸ்வரூபத்திலும் அனுவர்த்தியிலும் ஸ்வ ரக்ஷணத்திலும் சீதையைப் போல அசக்தியையும் பற்றியிருக்கும். "ஈஸ்வரனைப் பேணுகை" என்பதைத் தானே சேஷத்வஞானம் வெளிப்படுத்துகிறது. கைங்கர்ய ருசியையும் சேஷத்வ ஞானத்தையும் நாராயண பதமாகிற ஸ்ரீதேவியுடன் கூடிய நாராயணரிடத்தில் முழுமனத்துடன் ஊக்கம் வைத்தவராக இளைய பெருமாள் ஆசரித்துக் காட்டினர். அது மாதிரி லக்ஷ்மிதேவி மிகப்பெரிய தர்மம் என்று சொல்லப்படுபவரும், பிராம்மணர்களிடத்தில் அன்பு என்கிறதைக் காட்டி, யாவரும் விரும்பத்தக்க தகுதியுமுள்ள நாராயணரிடத்தில் சரீரத்தோடு வசிக்கிருள். அப்பேற்பட்ட சீதையுமாகிய லக்ஷ்மியும், லக்ஷ்மணனுல் செய்யப்பட்ட ராமானுவர்த்தியும், திருமந்திரமாகிய ஜீவபரமாத்மாவின் ஸ்வரூபமும், நாராயனன், அவனே ஈஸ்வரன் சேஷபூதன் என்றும், அன்யசேஷத்வ நிவர்த்தகன், விலக்ஷண நிரூபகன், அஹங்கார நிவர்த்தகன், தன் சம்பந்தத்தை விரும்பிய என் போன்ற பக்தர்களுக்கு ஸம்பந்த யுக்தன், அனன்யக்தி, அனன்ய சரணம் என்று சொல்லும் அகிஞ்சனர்களுக்கு கிங்கரஸ்வபாவத்துடன், தேவர்கள் அவனை நியமித்துக் கொண்டதுபோல, தன்னைத் தானே நியமித்துக்கொள்வான். கிருபாளு, உதார ஹ்ருதயன், பக்தவத்ஸலன், பிராம்மண பிரியன், லக்ஷ்மிபிரியன், ஸ்ரீகரன், ஸ்ரீதரன் ஸ்ரீவத்ஸவக்ஷன், ஸ்ரீமான், ஜிதேந்திரியன், நாரதப் பிரியன், ஓங்காரஸ்வரூபி, ஏகாக்ஷரம் கொண்ட பிரணவரூபி, என்னைக் கட்டிக்காக்கவேண்டும்.]

ராவணன் தர்பார் நடத்திக்கொண்டிருந்தான். சகல மந்திரிகளும் பரிஜனங்களும் சூழ்ந்திருக்க அந்த சூர்ப்பனகை தரையில் விழுந்து அதிவியாகுலத்துடன் ராவணனிடம் கதறினுள். "(பத்துவிதமான ஐஸ்வர்யங்களைக் கொண்ட) தசக்ரீவனே, மஹாபாஹு பலம்கொண்ட தசகந்தரனே, நீ உயிருடன் இருக்கும்போது, இப்பேற்பட்ட அவகதி எனக்கு ஏற்பட்டது." என்று சொல்லி அவள் அழுதாள். (182)

சபை முழுவதும் சூர்ப்பனகையின் வார்த்தைகளால் சுடப்பட்டு அதிவியாகுலத்துடன் எழுந்தார்கள். ராவணனும் எழுந்திருந்தான். சகலசபையினரும் அவளை கைதூக்கி எழுப்பி,

அவளைச் சமாதானம் செய்யமுயன்றார்கள். லங்கையின் பதியாகிற ராவணன் சூர்ப்பனகையைத் தழுவி ஆஸ்வாசப் படுத்தி அவளைப்பார்த்துச் சொன்னான் "நிஜத்தைச் சொல். யார் உன்னை மூக்கு காதுகளை வெட்டினார்கள்?" (183)

சூர்ப்பனகை பதில் உரைத்தாள் "அயோத்தியாபதி யாகிற தசரதனுடைய இருபுத்ரர்கள். அவர்கள் இரண்டு இளம் புருஷ சிங்கங்கள் மாதிரி வனத்தில் வேட்டையாடுவதற்கு வந்திருக்கிறார்கள். அவர்களைப்பற்றி சுருக்கமாகச் சொல் கிறேன். அவர்கள் இந்த பிருத்வி முழுவதும் நிசாசரர்களைப் பூண்டோடு அழித்து விடுவார்கள் போலிருக்கிறது." (184)

"தசானனா, அவர்களுடைய புஜபலத்தினால் முனிஜனங்கள் கானகங்களில் நிர்பயமாக சஞ்சரிக்கிறார்கள். பார்ப்பதற்கு இவர்கள் பாலகர்கள் மாதிரியிருந்தாலும் காலாந்தகன் மாதிரி காரியத்தில் இருக்கிறார்கள். பரம வீரர்களாகவும், தீரமுள்ளவர் களாகவும் பெரும் தனுஷ்ஷை வைத்திருப்பவர்களாகவும், குணஸம் பன்னவர்களாகவுமிருக்கிறார்கள்." (185)

"இரு பிராதாக்களும் அதுளிதபலம் கொண்டவர்கள். அவர் களுடைய கீர்த்தி பிரபாவங்களும் ஈடுயற்று மிகப் பரந்தவை களாகவு மிருக்கின்றன. அவர்கள் அஹிம்சை செய்யும் துஷ்டர் களை வதம் செய்கிறார்கள். தேவதைகளுக்கும் ரிஷிகணங் களுக்கும் சுகத்தைக் கொடுப்பதாகவுமிருக்கிறார்கள். அவர்கள் தான் அழகு, சோபை, புருஷத்வம், கீர்த்தி பிரபாவங்கள், (செளலப்ய செளசீல்யாதி குணங்களுக்கும், அஹிம்சை, சத்யம் அக்ரோதம், தானம் ஆகிய தர்ம சூக்ஷ்மங்களுக்கும்) சிறந்த "தாம்"; பொக்கிஷம் என்று சொல்லப்படும் ஸ்ரீ நிதியை, ஸ்ரீ தேவியை தரித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களில் பெரியவன் ராம் என்கிற பெயரை உடையவன்; அவனுக்கு பக்கத்தில் ஒரு யுவதி "சியாமை", மஹா அழகுடன் வீற்றிருந் தாள்." (186)

"அவளுடைய ரூபம், அழகின் ராசிக்குவியல்கள், சொல்ல முடியாதபடி பிரும்மாவினால் ஸ்ருஷ்டிக்கப் பட்டிருக்கின்றன. நூறுகோடி ரதிகளும் ஒருங்கே கூடியும் அவளுடைய அழகின் முன்பு ஸர்வசாதாரணம். அந்த ராமனுடைய தம்பி லக்ஷ்மணன் என்னுடைய மூக்குக் காதுகளை வெட்டினான். நான் உன் தங்கை என்று சொன்ன பின்பும்கூட, அதைக் கேட்ட பின்பும் கூட அவர்கள் என்னை பரிஹாஸத்துடன் அவமானப்படுத்தி அங்கங்களை ஹீனம் செய்து அனுப்பியிருக்கிறார்கள்." (187)

[தியானம்

ராமா, அகிலலோகஸாரமனுதாரக நாமமாகிற உன்னே, தசரத புத்ரனே, தினமணி வம்சகுல ஜாதனே, ஸ்ரீதேவியாகிற சீதா நாயகனே, லக்ஷ்மண அக்ரஜனே, யோகிகள் கிருதக்ஞை யாலும் குணங்களாலும் புகழ்கிருர்களே, அப்பேற்பட்ட பத்ம நயனம், கௌஸ்துப தரணம், முனிஜன வேதபராயணம் ஆகிய அழகு விலாஸங்களால் ஏற்படுத்தப்பட்ட கிருதலக்ஷணனை உன்னே, யார் என்று அறிந்து கொள்ளாமல் போனுல் மிக்க பாக்ய ஹீனன் ஆவான். அநாமயம், பரபிரும்மம், பணிபத சயனம், புள்ளரையன் என்று சொல்லப்படும் கருடனுடைய ஸ்வாமியான நாராயணன் என்று உம்மைப்பற்றி புரிந்து கொள்ளாத அறிவும் அறிவே இல்லை. அவ்விதம் புரிந்தும், சரி யாகப் புரிந்துகொள்ளாமல் உன் மாயையினுல் புரிபடாதபடி பாபக்கூட்டங்களோ, அல்லது உமா மஹேஸ்வரர்களுடைய ஸுப்ரஸாதங்கள் இல்லாமலோ, ராவணன் வழி தவறினவனுக சூர்ப்பனகையால் "ராம்" என்று சொல்லக் கேட்டும், தியாக ராஜரைப் போல சுகமடையாமல் க்ரோத மூர்ச்சிதனுக ஆனுன். அந்தோ பரிதாபம்! இது வேதம் பணிந்தோர்களே அழித்ததின் காரணமோ அல்லது அவனுடைய திண்ணம் கொண்டு அலேந்து திரியும் ஐஸ்வர்யங்களின் மதத்தின் காரணமோ, தெரியவில்லை. ஸர்வ ரக்ஷகனுகிற நாராயணனேப் புரிந்து கொள்ளமுடியாத பேதையாய், பிள்ளேயாய், அறிவில்லாதவனுய் போனுனே, அந்தோ, ஜானகியின் கடாக்ஷம், உபதேசம் ஆகிய பாக்யங்களே அடைந்தும், அவன் ஞானவிபாக காரியமான அக்ஞானத் தினுலே வருபவை எல்லாம் அடிக்கழஞ்சு பெறும் என்கிற ஸ்ரீவசனபூஷண திவ்ய சூக்தியின்படி அக்ஞானத்தையே மூல பலமாக பகவானின் ஸர்வரக்ஷகத்வத்தையும் சௌல்ப்யாதி குணேத்தமங்களேயும் அறியவில்லையே. என்ன சாபமோ, என்ன பாபமோ, தெரியவில்லை. அப்பேற்பட்ட சாபங்களேயும் பாபங் களேயும் அம்மா நீ எனக்கு அருளாதே. பகவான் பிராட்டி ஆகியவர்களின் ஸம்பந்தத்தை நான் பெறவேண்டுவதற்காக வும் என்னிடம் நீங்கள் கிருபா வேசர்களாக இருக்கவேண்டும். ராமா, எனக்கு உன் பெயராகிய தாரக நாமத்தைச் சொல்லும் ஆசரியன் சூர்ப்பனகை போல விருக்கவேண்டாம். உன் ரூப ராசிகளேக் கண்டு மகிழ்பவனுகவும், உன் குண விலாஸங்களில் ருசியுள்ளவனுகவும் இருக்க திருவருள் தா. ராமா, ருசிராங் கதரே, ரக்ஷணரே.]

"நான் கர தூஷணர்களை உதவிக்கு அழைத்தேன். ஆனால் அந்த உத்தம வீரர்கள் க்ஷண முடியுமுன் சேனைகளுடன் அழிந்துபோய் விட்டார்கள். கரன், தூஷணன், திரிசிரஸ் ஆகியவர்கள் அழிந்துபோய் விட்டார்கள் என்கிற வார்த்தையைக் கேட்டதும் ராவணனுக்கு பொழுது புலர்ந்தது. (வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டு நடுங்குமாற்போல், ராமனுடைய திவ்ய சேஷ்டிதங்களைக் கேட்டு நஞ்சுண்டாரைப்போல மயக்கம் கொள்ளவில்லை; ஹரி என்று பேரரவம் உள்ளம் புகரவில்லை. உள்ளம் குளிரவில்லை.) ஆனால் அவன் க்ரோதம் நிரம்பினவனாக அனல்போல ஜ்வலித்துக்கொண்டு துடித்துக் கொண்டிருந்தான்." (188)

"ஆம் ராம நாமத்தைக் கேட்டுவிட்டான். (தம்மனையே நாராயணம் அநாமயம் என்கிறுப் போலே, கள்ளச் சகடம், பேய் முலை நஞ்சுண்டு எனக்கேட்டு கம்ஸன் தவித்தாற் போல,) ராவணன் கதி கலங்கினான். சூர்ப்பனகையிடம் தன் பாஹு பலங்களை விஸ்தரிக்கச் சொல்லி அவளைச் சமாதானப்படுத்தினான். அதன் பிறகு சிந்தையுடன் கூடி அத்யந்த சோகத்தினாலும் பயத்தாலும் பீடிக்கப்பட்டு மாயையினால் புத்தி கலங்கப்பட்டவனாக, ராவணன் தன் அந்தப்புரத்திற்குச் சென்றான். விடியுங்காலம் வரும் வரை இரவு முழுவதும் ராம சீதா நினைவாகவே அவன் கழித்தான். (189)

'அவன் மனத்தில் எண்ணங்கள் பலவிதமாகப் புகுந்தன. என் சேவகனிடம் அருகே செல்வதற்கு கூட சுரர்களோ, நரர்களோ, அசுரர்களோ, நாகர்களோ, பக்ஷிகளோ, பயப்படுவார்கள். யாரும் இதுவரை சென்றதில்லை. கரதூஷணர்களோ எனக்குச் சமமான பல சம்பத்து உடையவர்கள். அவர்களையே இந்த ராமன் கொன்றிருப்பதால் இவன் பகவானாகத் (நாராயணனாகத்) தான் இருக்கவேண்டும். இல்லாதபோனால் யாரால் அவர்களைக் கொல்லமுடியும்?" (190)

"தேவர்கள் எந்த ஆதிபகவானை (பணிபதி சயனனை ரமா அந்தரங்கத்தில் விளையாடும் ஸ்ரீலோலனை சாரங்கதரனை, ஸுதன்வா என்கிற அழகான புஜங்களால் தரித்திரிக்கும் வில்லையும் பாணத்தையும் கொண்ட மஹா வீரனை,) ரஞ்சனம் செய்து கோயில் கொண்டு பஜிப்பார்களோ, அந்த பத்ம நயனனாகிற நாராயணன் (ரங்கபதி) ஒரு வேளை அவதாரம் எடுத்து வந்து பூபாரத்தை நீக்குவதற்கு லீலையாக மானிட வேஷம் பூண்டு வந்தாரோ; அவ்விதம் வந்திருப்பாராகில் நான் என்ன

செய்யக்கூடும்? ஆம். அவரிடம் வைரம் பூண்டு (ஹிரண்யாக்ஷன் மாதிரி) சண்டை செய்வேன். பிரபுவின் அம்பினுல் கொல்லப் பட்டு என் பிராணனே விடுவேன். அந்த பிரபுவினுல் ரரக்ஷஸ ஜன்மப் பிறப்பு மரணம் ஆகிய பவசாகர சுழல்களிலிருந்து கரையேற்றப்படுவேன். (எம்பெருமானுடைய ஸம்பந்தத்தை மீண்டும் பெறுவேன்.'' (191)

[தியானம்

ராமா, சீதா ராமா, விஸ்வாமித்திர பிரியா, வஸிஷ்டரால் நாமகரணம் செய்யப்பட்ட ராமா, லக்ஷ்மணு, பரதா சத்ருக்னு ஜனகாத்மஜா நீங்களே சரணம். வால்மீகி முனிவரே சரணம் நாரதரே சரணம். பிரிய தரிசனரே, புருஷோத்தமரே ஜகந் நாதரே, ஸர்வலோக ஹிதரே, ஆத்மவானே, ஜிதக்ரோதரே, சீதையின் மலர் மார்பினில் உறங்குபவரே, விசாலாக்ஷியான சீதைக்கு உன் மார்பை தந்தாயேனும், வாயினுல் சொற்களாவது எங்களுக்கு தரலாகாதா? ஹே சீதை, ஹே ராம, நீங்கள் இருவர் களும் உமா மஹேஸ்வர தம்பதிகள் போல ஒரு மிதுன தத்வ மாகவும் அர்த்தமாகவும் விளங்குகிறீர்கள். ஆற்ருமையினுல் நாங்கள் இவ்விதம் சொல்லியும், இரங்கத் தக்கவர்களானுலும், நாராயணு, மஹாலக்ஷ்மி சமேத மஹா புருஷரே, புருஷேஸ்வரரே, எங்கள் பக்கலிலும் நீங்கள் உபேக்ஷை செய்வது தர்மமன்று, உங்களுக்கு தயை அதிகம் என்று ஆசார்யர்கள் சொல்லு கிருர்கள். பூர்வ பாஷி என்றும், பிரியதர்சனர், மலர் மார்பா, அரங்கா என்றும், உன் வடிவழவைக் கண்டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ் செய்பவன் என்றும் சொல்லுகிருர்கள். என்னிடம் உன் பரிபூர்ண கிருபை, பாராபாரம், மாமாயன், கதமாயன் என்று சொல்லப்படும் உங்கள் திருஷ்டி எப்போது விழும்?]

''தாமஸ குணங்கள் அதிக்ரமித்திருக்கும் இந்த ராஷஸ ஜன்மத்தினுல் நான் ஸர்வ ஸ்ரேஷ்டரான நாராயணமூர்த்தியைப் பஜித்து, மிக உன்னதமான ஸத்வ குணங்களால் ஆராதித்து அவரை திருப்தி செய்வதென்பது, இதுவும் இவ்வளவு காலத்திற்கு மேல், என் வாழ் நாட்களே திருப்பி சீர் அமைத்து வாழ்வது மிக மிகக் கடினம். பகவான் அவதரித்திருக்கிற இந்த சமயத்தில் நான் சீக்கிரமாக மனம், வாக்கு, கர்மாக்களால் ஒரு விதமான திருட நிச்சயத்திற்கு வரவேண்டும். சரி, இந்த முடிவை நான் செய்கிறேன். எனக்கு நரரூபம் கொண்டவரால் மரணம் ஸம்ப

விக்கப் போகிறது என்று பிரும்மா வரம் கொடுத்திருக்கிற படியால் இந்த ராமன், தசரதபுத்ரன், கௌஸல்யா ஸுதனுக, விருக்கட்டும், அவரோடு சண்டை செய்கிறேன். பகவானே அவதரித்து, அவரால் மரணம் ஏற்பட்டால் ஸ்லாக்யம். அல்லது ஒரு வேளை ராமன் சாதாரண ராஜகுமாரனுக விருந்தால், சூர்ப்பனகைக்காக நான் சண்டைப் போட்டுத்தான் ஆக வேண்டும். ஆகையால் எனக்காகவோ சூர்ப்பனகைக்காகவோ இருவிதங்களிலும், ஜகன்னுதரான ராமனுக விருந்தாலும் சரி, அல்லது கோஸல தேசத்து ராஜகுமாரனுக விருந்தாலும் சரி, யுத்தம் செய்தே தீரவேண்டும். அவனுடைய வைரத்தை சம்பாதிப்பதற்கு என்ன வழி? சரி, அந்தப் பெண்ணை ஸ்வதர்மப்படி அபஹரித்தாக வேண்டும். இருவிதங்களாலும் ரணம் (யுத்தம்) செய்து ராமனுடன் ஆக வேண்டும்,'' என்கிற தீர்மானத்திற்கு வந்தான் தசமுகன். (192)

ராவணன் தனியாக ரதத்தின் மேல் ஏறிக்கொண்டு சமுத்திரத்தின் கரைக்குச் சென்ருன். அங்கே மாரீசன் சமுத்திரக் கரையில் நின்று கொண்டிருந்தான். பகவான் சங்கரர் உமையைப் பார்த்துச் சொன்னுர் ''பார்வதி, கேளு, இந்த விடத்தில் ராமச்சந்திர பிரபு ஒரு யுக்தி பண்ணினுர். அதனுடைய விருத்தாந்தத்தைக் கேள்.'' (193)

அங்கே, லக்ஷ்மணன் கந்த மூலம் பழங்கள் சேகரிப்பதற்கு வனத்திற்கு சென்றிருந்தான். சகலருக்கும் சுகத்தை வாரி அளிக்கும் வள்ளல் பிரபு, ஜனகரின் பெண்ணுகிய சீதையை அழைத்து, கிருபாவேசராக சிரித்துக் கொண்டு சொன்னுர். (194)

''பிரியே, சுசீலமான பதிவிரதா தர்மத்தை அனுஷ்டித்து (உமையைப்போல விளங்கும் பார்யையே ஸஹதர்மசாரிணி,) நான் மனுஷ்ய லீலைக்குயேற்ப, இந்த உலகத்தில் மனோஹரமாக லீலை செய்ய விரும்புகிறேன். மனுஷ்யர்களின் ஹிதத்திற்காக ராக்ஷஸர்களை அழிக்கும் வரையில் நீ அக்னியில் ஒளிந்து கொண்டு உனக்குப் பதிலாக மாயை ரூபம் எடுத்த நாரியாக என்னிடம் வசித்துக் கொண்டிரு '' (195)

ஸ்ரீராமச்சந்திரன் பூராவிருத்தாந்தங்களைச் சீதையினிடம் சொன்னுர். (சீதை ஸ்ரீராமச்சந்திரனுடைய பிரபுவின் பாதங்களை நமஸ்கரித்து ஹ்ருதயத்தில் மலர் மார்பில் தரித்திருக்கும் வன மாலையைப் போல, ராமனைத் தழுவிக் கொண்டாள்) பிரபுவின் சரண தூளிகளை ஹ்ருதயத்தில் அணிந்துகொண்டு அக்னியில் புகுந்தாள். சீதாதேவி தன் நிழலாகிற மாயா மூர்த்தியை

ஸ்ருஷ்டித்து நிஜபிரதிபிம்பத்தைப் போல் படைத்து, தன் ஸ்தானத்தில் அவளை நிறுத்தினுள். (ஜகன் மோஹினி) (திரிபுர சுந்தரி) தேஜஸ் சீலம் ரூபம் வினயம், (பதிவ்ரதா தர்மம், ஸுரநர ரக்ஷணம் ஆகிய குணங்களோடு) கூடிய மாயை சீதையைப் போல விளங்கினுள். (196)

[தியானம்

ராமா சீதா நாராயணு, மஹாலக்ஷ்மி சமேத கிருபாளு, முன்பு ஒரு நாள் ராவணன் மாதிரி விருத்ராஸுரனும், ஸம்சார கதியை உண்டு பண்ணுகிற காமம் க்ரோதம் லோபம் பயம் ஸ்வப்னம் என்கிற யோக தோஷங்கள், ஐந்து பிராணன்கள், பத்து இந்திரியங்கள், மனம், புத்தி, சப்தமரஸம், கந்தம், ரூபம் ஸ்பர்சங்களாகிற ஐந்து இந்திரிய விஷயங்களிலும், ஸத்வரஜஸ் தமஸ்ஸாகிற மூன்று குணங்களினிடமிருந்தும் அவித்யை, அஹங் காரம், கர்மம் ஆகியவைகளிலிருந்து விடுபட்டு மறுஜன்மத்தை அடையாமலிருந்தான். ஞானத்தினுல் விருத்தி அடைந்த விருத்திரன் சுக்ரர் வினவியதற்கு பதில் சொன்னுன். "நான் தபத்தினுல் ஐஸ்வரியங்களை அடைந்தேன்; அந்த ஐஸ்வரியங் கள் என் கர்மங்களால் நழுவிவிட்டன. ஆசையால் நான் தைரிய மடைந்து, எல்லாப் பாபங்களை அபஹரிக்கிறவரும், ஸமர்த்தரும், ஒரு இடத்திலும் தடையில்லாமல் செல்லக்கூடியவரும் பரி பூர்ணரும் முடிவற்றவரும், சுத்தரானவரும், வ்யாபகமுள்ளவரும் மஞ்சள் நிறமுடைய மீசையை உடையவரும், எல்லாப் பிராணி களுக்கும் பிதாமஹரும், பகவானுமாகிற நாராயணரைத் தரிசித்து அந்த தவத்தின் புண்யத்தால் கர்மாவின் பயனை வினவினுன். சுக்ரரும், ஸர்வாத்மரும் பகவானுமான அந்த தேவரை நமஸ்காரம் செய்துவிட்டு, ஆகாயத்தோடு கூடிய பிருத்வி யாருடைய பாஹு, சிரஸ்தானங்களாக விளங்கு கின்றதோ, அந்த முடிவுற்ற மோக்ஷமாகிற விஷ்ணுவின் பதத்தை விளக்கினுர். அந்த ஸம்வாதங்களின் சந்தேகங்களை அறுப்பதற் காக அங்கு யதேச்சையாக வந்திருந்த ஸனத் குமாரரும் "நாராயணரே பல ரூபமாகவும் ஒரு ரூபமாகவும் விளங்குகிருர்" என்று சொன்னுர். மேலும் அவர் விருத்திரனுக்கு கீழ்க்கண்ட வாறு சொன்னுர். "திதியின் குமாரர்களான அசுரர்கள் ஆயிரக் கணக்கான யோனிகளின் உற்பத்தியை அடைந்து பிறகு சித்தியை அடைகிருர்கள்; தேவனுன இந்திரன் சுபமான சாஸ்திரத்தை அப்யஸித்து தன் அனுபவ ரூபமாக நாரா

யண கதியை அடைகிருன் என்று சொன்னுர். ஆகையால் விருத்ரன் மனத்தை அடக்கி, சுத்தமான மனத்திஞல் பரபிரும் மத்தைத் தியானித்து, பிரும்ம ஸாக்ஷாத்காரமான பரவித்யை யாகிற ஆத்ம வித்யையை அடைந்து விகாரமற்றதும் அழிவற்ற தும் அடையமுடியாத நாராயண பதத்தை அடைந்தான். விஷ்ணு விஞுடைய ஆக்ஞாசக்ரம் எங்கும் வியாபித்திருக்கிறது. அவர் மஹாத்மாவும் புருஷர்களுள் மிக்க உத்தமரானவர். அவரிடம் எல்லா ஜகத்தும் நிலேத்திருக்கிறது. இந்த ஆத்ம ஞானத்தால், ஹே நாராயணு, விருத்திராஸுரன், ராவணன், சுக்ரர், ஸனத் குமாரர் ஆகியவர்கள் சொல்லியபடி, என் மனத்தையும் பரமாத்மா வாகிய நாராயணரிடம், மஹாலக்ஷ்மியின் பிரபுவினிடம் அர்ப்பிக் கிறேன். ரஜஸ் தமஸ் இல்லாமல் ஸத்வ குணத்துடன் சுக்கில வர்ணமுடையவஞக, விலங்கு நரக கதிகளிலிருந்து விடுபட்ட ஸாத்யர் என்கிற தேவ பாவத்தை அடைந்தவர்கள் ஸ்வேத தீப வாஸிகள், நாராயணரை எப்பொழுதும் பஜித்து அடைகிருர்கள். அவர்களே முன்னிட்டு நான் நாராயணரை சரணம் அடை கிறேன். எனக்கு பாபம் பயம் ஏற்படவேண்டாம்.]

(மாயாக்ரீடன், மாயினமாத்யன், கதமாயன், நாராயணர் என் மோஹங்களே அறுக்கும் மஹநீயர். அவரே மஹா விஷ்ணு.) இந்தவிதமாக சங்கல்பித்து, சீதையை, தன் மனேனுகூலேயாகிற மாயாதேவியை லீலேக்காக அக்னியில் புகரவைத்து, மாயை என்கிற ஒரு சீதையை, அதே பிரதிபிம்ப சாயையை ஸ்ருஷ்டித்த நாராயணருடைய மர்ம ஏற்பாடுகள், அதன் ரஹஸ்யங்கள், லக்ஷ்மணனுக்குகூடத் தெரியாது. (பகவான் தன் இச்சைப்படி காரியம் நடத்தும் சாமர்த்தியமுள்ளவர். ஆனல் அவருடைய மர்மங்கள் விஷ்ணுவின் பத்னியாகிற லக்ஷ்மிதேவிக்கு மட்டும் தெரியும். இருவர்களுமல்லவோ லீலேயாகிற நித்ய விளேயாட்டுக் களே தர்ம கார்யத்திற்காக உபயோகப்படுத்துகிறவர்கள். தானே பிரதானம், தனது இஷ்ட பிராப்தியையே ஸ்வார்த்தமாக உபயோகப்படவேண்டியது. தர்மமே பிரதானம்.) (நான் ஸ்வதந் திரன், நான் செய்வதுதான் தர்மம் என்கிற நீசமான எண்ணத் துடனும், மமகாரத்துடனும் இதுவரை வாழ்ந்து வந்த) ராவணன் மாரீசனேக் கண்டு தலேவணங்கி, அந்தவிடத்தில் போடப்பட் டிருந்த ஒரு ஆசனத்தில் அமர்ந்தான். (197)

சிவன் சொல்கிருர்—"உமை, கேள். நீசர்களாக வாழ்ந்து வரும் அசுர ஸ்வபாவம் உள்ளவர்களின் வினய வணக்கங்கள் எப்பொழுதும் அதிக துக்கத்தை தரும். அங்குசம், தனுஷ்,

ஸர்ப்பம், பூனை ஆகியவைகள் மிருதுவாகவும், வழவழப்பாகவு மிருக்கின்றன. என் பிரிய பவானி, உன்னால் ஜகம் முழுவதும் கரையேற்றப்படுகிறது. ஸுரநாயகி, பிரியநாயகி, இவர்களுடைய பிரியமான குரல் எவ்வளவு பயங்கரமான முடிவைத் தருகிறது என்று தெரியுமா? அகாலத்தில் புஷ்பிக்கும் மலர்களைப் போல, இவர்களுடைய தரிசனமே ரொம்ப துர்லபம். அதிலும் இவர்களுடைய பேச்சுக்கள் மிக்க மதுரமாகவிருந்தால், அவை மிக மிகக் கொடியவை.'' (198)

ராவணனுக்கு உபசாரங்கள் செய்த பின்பு மாரீசன் மரியாதையுடன் ராவணனை வினவினான். ''பிரியமானவனே, உன்னைப் பார்த்தால் மனம் கலங்கினவனாகத் தோன்றுகிறாய். என்ன காரணம்? இந்த வேளையில் தனியாக வந்திருக்கிறாயே. உன் சுகக் குறைவிற்கு என்ன காரணம்?'' (199)

தசமுகன் மாரீசனுக்கு எல்லா விருத்தாந்தங்களைச் சொன்னான். தன் அவமானங்களையும் நஷ்டங்களையும் எடுத்து உரைத்தான். அதன் பிறகு ராவணன் சொன்னான், ''இங்கும் அங்கும் துள்ளி ஓடும் ஸ்வபாவமுள்ளதும், கபடமானதுமான மாயாமிருகத்தின் வேஷத்தை தரித்துக்கொள். இந்த உபாயத்தால் நான் சீதையை அபஹரிக்க விரும்புகிறேன்'' என்று தனது திட்டத்தை அவனிடம் விளக்கிச் சொன்னான். (200)

அப்பொழுது மாரீசன் சொன்னான் ''தசக்ரீவா, கவனமாய் கேள். உனக்கு பத்து தலைகள், பத்து இந்திரியங்கள் ஒவ்வொரு தலையிலும் வேலை செய்தும் ராமனை நீ சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. ராமன் சராசரங்களுக்கு ஈஸ்வரனாகிய நாராயணர் மனுஷ்ய ரூபம் எடுத்து அவதரித்திருக்கிறார். என் பிரிய பந்து, அந்த மஹாத்மாவிடம் விரோதம் செலுத்தாதே. அவர் இஷ்டப்பட்டால் நாம் மரணத்தை அடைகிறோம். அவர் இஷ்டப்பட்டால் நாம் உயிரோடு வாழ்கிறோம். மரணம் பிறப்பு ஜீவனம் ஆகிய எல்லாம் அவருடைய ஆக்ஞாசக்கிரத்தால் தான் ஏற்படுகிறது.'' (அவைகள் அவர் அதீனம் கொண்டவை. ''அசரண்ய சரணாகதனை நாராயணா, சரண்யம் சரணாகதம்'' என்கிறபடி பிரும்ம ருத்திராதிகளாலும் இந்திராதி தேவர்களாலும் வணங்கப்பட்ட மஹாலக்ஷ்மி, உங்கள் ஸங்கல்பம் நல்லவர்களுக்கு மிருதுவாகவும், தர்மத்திலிருந்து விலகினவர்களுக்கு மிக்க கடூரமாகவுமிருக்கிறது. அதிலும் சங்கல்ப மாயையின் பலம் மிக உன்னதம். உன் திருஷ்டி பதத்தில் விழும் ஸுர அஸுரர்கள்கூட அதிலிருந்து தப்பமுடியாமல் தவிக்கிறார்கள். அதனால் விஷ்ணுவின் மாயை

யிலிருந்து விடுபட, மார்க்கண்டேய ரிஷி, சங்கர பார்வதியிட மிருந்து, மோக்ஷ ஞானத்தையும் விஷ்ணு பக்தியையும் அவ்யய மான அகோர மூர்த்தியை உபாஸித்து, வரம் பெற்றார். அந்த மாயையாகிற தேவியினால் சும்பன் நிசும்பன் இன்னும் ஆயிரக் கணக்கான தைத்யர்கள் கொல்லப்பட்டார்கள். உன்னிடம் பக்தி சிரத்தை உள்ளவன் அத்யந்த வினய நம்ரதிகளுடன் பஜிக் கிறான். தாயே, ஆர்யா, துர்க்கா, வேதகர்பா, அம்பிகா, பத்ரா, பத்ரகாளி, க்ஷேமதா, பாக்யதா என்று பிராதக் காலமும் ஸாய மும் எவன் ஒருவன் உபாஸித்து ஸ்துதி செய்கிறானோ, அவனே நாராயணருடைய கிருபையால் ஸமஸ்த காமங்களையும் அடை கிறான். அம்மா தாயே, நீ தான் பூதி; ஸந்நதி; க்ஷாந்தி, காந்தி என்று சொல்லப்படுகிறாய். நாராயண சஹோதரி, காமாக்ஷி, உமாதேவியே, வைஷ்ணவியே, வாராஹி, பிரும்மாணி, நீதான் ஆகாயம், பிருத்வி, திருதி, லஜ்ஜை, புஷ்டி, உஷை. இந்த பரந்த சம்சாரத்தில் எவள் சக்தி தேவதையென்று உபாஸிக்கப்படு கிறாளோ, அவள் நீ தான். உன்னுடைய மகிமைகள் அசிந்தனீய மானவை. உனக்கு மது மாம்ஸம் முதலியவை ஆகாரமாகவிருக் கின்றன. நாராயணரால் விடை கொடுக்கப்பட்ட மஹாமாயே, நீ அர்ஜுனன், மார்க்கண்டேயர் நரநாராயணரிஷி, பராசரர் கிருஷ்ணன், ராமன் இவர்களிடம் கிருபையோடு இருந்ததுமாதிரி என்னிடமும் பத்ரே, கிருபையுடன் இருக்கவேண்டும்,) (201)

"என் பிரிய பந்துவான ராவணா, இந்த ராஜகுமாரன் சிறு பருவத்திலேயே விஸ்வாமித்திரருடைய யாகத்தை ரக்ஷணம் செய்தவன். (அந்த சமயம் அவன் சுபாகு தாடகை இவர்களைக் கொன்றவன்.) ரகுபதி அந்த யாகத்தின் போது என்னை மோஹிக் கும்படி உயிரைப் போக்காத ஒரு பெரும் பாணத்தை என் மீது எறிந்தான். கௌஸல்யையின் ஆனந்தத்தை விருத்தி செய்யும் அந்த ராமன் லாவகமாக அந்த அம்பினால் ஒரு க்ஷணத்திற்குள் நூறு யோசனைகள் (எண்ணூறு மைல்கள்) தூரம் என்னை கொண்டுபோய் எறிந்தான். ஸர்வ ஜனங்களுக்கும் ஹிதம் செய்யக்கூடியவனும் தர்ம குணம் படைத்த அவனிடம் வைரம் செய்வது நன்மையைத் தராது. (202)

"ராம பாணத்தால் தாக்கப்பட்ட நான் இப்பொழுது வண்டி னால் மொய்த்து அடிக்கடி கடிக்கப்படும் புழுவைப் (குழவி) போல மிக்க பயத்தை அடைந்து ராமனுடைய பெயரைக் கேட்டாலே பயந்து நடுங்குகிறேன். அந்த பயத்தினால் எங்கு பார்த்தாலும் ராம லக்ஷ்மணனையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். (பத்ம பத்ர

நிபேஷணன் போலவும், சீரக்ருஷ்ணஜீ நாம்பரம், தனுஷ்பாண ஹஸ்த, ஜடாதரஞன ராமனை காலாந்தகன் போலவும், ஸாது மாதிரியாகவும், தர்மவிக்ரஹம் போலவும், ஸர்வ லோகங்களைக் காக்கும் நாராயணனுகவும் தேவேந்திரன் போலவாகவும், தசரத புத்ரன் ராமனுகவும், விருக்ஷத்திற்கு விருக்ஷம், என் நினைப்பிற்கு நினைப்பாக ஸதா எனக்கு காக்ஷி அளித்துக்கொண்டிருக்கிருன். ஆகையால் அவன் இருக்கிற திசைக்கு நமஸ்காரம் செய்து கொண்டிருக்கிறேன். அது மாத்திரம் அல்ல. இன்னமும் கவன மாய் கேள்.) சாதாரண மனிதன் அல்ப பலத்துடன் இருப்பது போல அந்த ராமனையும் நினைத்து ஏமாந்து போகாதே. அந்த இரு ராஜபுத்ரர்களும் மஹா சூரர்கள். அவர்களுடன் விரோதம் செய்வது நமக்கு நன்மையைத் தராது.'' (203)

"அவனுடைய பூர்வ விருத்தாந்தங்களையும் கேள். அவன் தான் தாடகை சுபாஹு என்பவர்களைக் கொன்றவன். அந்த பிரபு தான் ஹரகோதண்டமாகிற சிவதனுஷ்ஷை ஒடித்தவன். கர தூஷண திரிசிரஸ்ஸை வதம் பண்ணி கீழே தள்ளினவன். அப்பேற்பட்ட பிரசண்ட கோதண்ட ராமன் சாதாரண மனுஷ்ய னுக அல்ப பலமுடையவனுக இருக்கமுடியாது.'' (ராவணு, அப்பேற்பட்ட பயம் கொண்ட நான் ஒரு ராமனை மாத்திரம் பார்க்கவில்லை. அவனைப்போல ஆயிரக்கணக்கான ராமர்கள் என்னை சூழ்ந்துகொண்டு இருப்பதை எப்போதும் பார்க்கிறேன். ஸ்வப்னத்தில்கூட ராமமயமாக காலத்தைக் கழிக்கிறேன்.) (204)

"ராக்ஷஸாதிபா, உன் ஆத்மாவின் சௌக்யம், ராக்ஷஸ குல சௌபாக்யம், இவைகளை நினைத்துக்கொண்டு வீட்டிற்கு திரும்பிச் செல்'' என்று சொன்னுன். மாரீசனுடைய வார்த்தை களைக் கேட்ட ராவணன் கோபாக்ராந்தனுக, அநேக துர்வசனங் களால் அவனை திட்ட ஆரம்பித்தான். "மூர்க்கனே, பெரிய குரு மாதிரி என்னை சிக்ஷிக்கிருய். எனக்கு ஞானம் போதிக்கிருய். என்னை நன்ருக தெரிந்துகொண்ட நீ சொல் பார்க்கலாம். இந்த ஸம்சாரத்தில் என்னிடம் யுத்தம் செய்வதில் சமர்த்தன் யார் இப்போது இருக்கிருன்?'' (205)

அப்பொழுது மாரீசன் தன் மனத்திற்குள் யோசிக்க ஆரம்பித்தான். அம்பு சஸ்திரம் வைத்துக்கொண்டவன், மர்ம ரஹஸ்யங்களைத் தெரிந்து கொண்டவன், ஸமர்த்தனுகிற எஜமானன், மூர்க்கன், தனம் கொண்ட பிரபு, வைத்யன், ஸ்துதி பாடகன், கவி, சமையல் செய்யும் பரிசாரகன் ஆகிய ஒன்பது

பேர்களிடம் விரோதம் செய்துகொள்வது மங்களங்களைத் தராது. (206)

இருவிதத்திலும் ராவணனிடமிருந்தோ ராமனிடமிருந்தோ எனக்கு மரணம் ஸம்பவிப்பவதாகவிருக்கிறது. அவ்விரு வழிகளில் ரகு நாயகனை சரணமடைந்து (அசரண்யம் சரண்யம், அனன்ய சரணம் என்று நாராயணரை மனதில் நினைத்துக் கொண்டு) ஞானானந்தக் கடலில் மூழ்கி, ஆதியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதி பௌதிகம் ஆகிற தாபங்களிலிருந்து விடுபடுவேன். நான் ரகுநாதனையே சரணமாகப் பற்றுவேன். (பலி நமுசியைப் போல) அப்ரமேயனான ரகுநந்தனை, ஜனகாத்மஜாவாகிற சீதையின் நாயகனை மனத்தால் நான் சரணமடைந்து அவனால் மரணம் அடைவேன். மீண்டும் தனக்குள் அவன் இன்னும் ஒரு யோசனையைச் செய்து கொண்டான். நான் இப்பொழுது இவனுக்கு பதில் சொன்னால், இவன் என்னை வெட்டி விடுவான். இவனால் கொல்லப்படுவதற்குப் பதிலாக ரகுபதியின் அம்புக்கு நான் ஏன் இறக்கக்கூடாது, என்கிற யோசனையையும் செய்தான். (207)

[தியானம்

ராமா, நாராயணா, மஹாலக்ஷ்மிவினுத ராம நாராயணா, நாதாத்மக, உங்களுடைய பக்தி தான் பூமியில் எடுத்த இந்த ஜன்மத்தில் ஸம்பாதிக்க வேண்டிய மஹத்தான ஐஸ்வர்யம். இல்லாவிடில் என் ஜன்மம் பூபாரம் தான். அசிந்தரநீயா, அப்ரமேயா உங்களுடைய மகிமை இயற்கையாகவே உள்ளது. நீர் பிறரைத் தாங்கியும் உம்மையும் தாங்கிக் கொள்கிறீர். அதனால் உமக்கு ஸ்வத்ருதர் என்கிற பெயர் ஏற்பட்டது. மாரீசன் போல ராக்ஷஸர்கள் உம்மை மயக்கினபோதும் கூட, ஸ்வத்ருதராக, ஸ்வவசமாக விருந்து, அவர்களையும் ராமா, உனது ஜகன் மோஹன ரூபத்தால் மயக்குகிறாய். உன் வழிகளில் பழக்கப் படாத குறைவுள்ள சேதனர்களையும் உம்முடைய ஸ்வதந்திர ஸங்கல்பத்தினால் பரமபதத்தையும் அடைய வைக்கும் அத்ருதர் என்கிற மஹா கிருபாளு நீயல்லவோ. ஐயா, எந்த பிறவியில் பிறந்தாலும் ஜாயமான கடாக்ஷத்தினால் எவனை நீர் பிறப்பிலேயே பார்க்கிறீரோ, அவன் மோக்ஷத்தை அடைந்துவிடுகிறான் என்று வேத வியாஸர் சொல்லியிருக்கிறார். நாரதர், தியாகராஜரால் அர்ச்சிக்கப்பட்ட சீதாபதே, ராமா, ரங்கநாராயணா, நான் ஏதாவது செய்தேன் என்கிற வியாஜத்தை உம்முடைய

ஸ்வதந்திர சங்கல்பத்தினுல் ஆரோபித்து, உம்முடைய கிருபை யாகிற ஸந்தர்ப்பத்தை ஞானவான்கள் எதிர்பார்ப்பதுபோல காத்துக்கிடக்கும் எனக்கு நாராயணு, ராமபிரபோ, கோதண்ட ராமா, சீதா நாயகா, முகுந்தா, மாதரம், பிதரம், ஸஹஜம் நிவாஸம், ஸந்தஃ ஸமேத்ய சரணம், ஸுஹ்ருதம், கதிம்ச ஆகிற ஆறு சம்பத்துக்களை உடைய நான். உனது ஸ்வாபாவிகமான ஸுஹ்ருதயம் என் மேல் விழும் என்கிற நினைப்புடன் ஸ்ரீராமா என் சம்சாரக் கடலைத் தாண்டுவதற்கு வேண்டுகிறேன். பராங்குசன், பரகாலன், ஆளவந்தார், வேதாந்த தேசிகர் முதலிய பெரியோர்களால் சொன்ன சொற்களால், "நாத, த்வதீய சரணௌ சரணம் கதானும்," என்கிறபடி உங்களையே நான் நம்பியிருக்கிறேன்" என்று கிருபை செய்யவேண்டும்.]

இவ்விதம் தனக்குள் ஸங்கல்பம் செய்து கொண்டவனுக, மாரீசன் ராமதியானத்துடன் ராவணனுடன் சென்முன். அவனுக்கு அகண்டமாக சீதாராம பக்தி, சுரபூசுரர்களுக்கும் கிடைக்கப் பெருத ராமபக்தி, ராமனுல் ஏற்படப்போகும் வதம், ராம சரணங்கள் ஆகிய எல்லாம் அவன் கண்களுக்கு எதிரில் தோன்றின. (கம்ஸனைப் போல மாரீசனும் க்ருஹீத தனுஷும் ராமம் பாச ஹஸ்தமிவாந்தகம் விருக்ஷே வ்ருக்ஷேச பஸ்யாமி சீரகிருஷ்ணு நாம்பரம் ராமமேவ பஸ்யாமி, ரகார தீனி நாமானி ராமதிரஃ அப்ரமேயம் ஹிதத்தேஜோ யஸ்ய ஸஜனகாத்மஜா திருஷ்டஸ் சேத்வம் ரணேதேன ததன்தம் தவஜீவதம் என்கிறப்போல, ராம மயமாக எங்கும் கண்டான். மரணம் ஸம்பவிக்கும் நேரம் கூட அவனுடைய மனம் இந்த ராம பூரிப்பினுல் அத்யந்த சாந்தியுடன் ஆத்ம தேகம் ஒளி தீபம் போல பிரகாசித்தது) ஆம் என் சுக்ருதத்தினுல் பரம பாக்யமாயுள்ள ராமனுடைய ஸஹஜ ஸ்நேகஸ்வபாவத்தை நான் காணப்போகிறேன். இந்த மாபெரும் எண்ணங்களை ராவணனிடம் அவன் சொல்லவில்லை. (208)

மனத்திற்குள் சீதாராம ஸ்வரூபத்தை ஸ்மரித்துக்கொண்டு, ராமனுக்குப் பிரியதமனுக, பகவானுடைய நிஜதிவ்ய மங்கள விக்ரஹ ஸ்வரூபத்தை நினைப்பவனுக, மாரிசன் அதிமோஹப் பட்டவனுக, தன்னுடைய நேத்ரங்களிலிருந்து வழியும் சுக ஸம்பந்தத்தைத் தெரிவிக்கும் கண்ணீர்களால் நிர்வாணம் எனப் படும் மாபலனைப் பெறுவதற்கு தன் சித்தத்தை தயார் செய்து கொண்டிருந்தான். என் பிரபு ஸ்ரீதேவி சகிதனுகவும், லக்ஷ்மண னுடன் கூடியவராகவும் எனக்கு கிருபை செய்வாரா? ஸ்வபாவிகமாக அவர் கிருபைக்கு இருப்பிடமாயிற்றே. அவருடைய

சரணங்களைத் தியானித்து மனம் லயித்தவனாகவிருக்கும் எனக்கு அருள் செய்வாரா? (நான் பிறப்பிலோ, கர்மத்திலோ, சுத்த மில்லாதவன்; என்னுடைய துஷ்ட பிறப்பையும் துஷ்டசேஷ்டி தங்களையும் பிரபு மறந்து, அக்ரோதமாக மோக்ஷம் கொடுப் பாரா? ஸ்வதந்திரம் ஸங்கல்பம் கொண்ட ஸ்வதிருதர், ஸ்வவசர்) என் மீது தயை செய்வாரா? என் பக்தியும் அவருடைய திருஷ்டி பதத்திற்கு வருமா? என்ன இருந்தால் என்ன? என் மீது கிருபை கொண்ட ஸார்ங்க தன்வா, கோதண்டபாணி, ஸுகஸாகரன், என் பிரபு ஹரிபகவான், ஸுதன்வா, தன்னுடைய திருக்கரங்களால் என்னை அணைப்பதற்கு பதிலாக, (அக்ரோத ராக, அபராஜிதரான பகவான்) என்னைப் பாணங்களால் கொல்ல மாட்டாரா?'' (209)

''ஆம், நான் தனுஷ்பாணியாகிய ஸ்ரீகோதண்ட ஹஸ்தனை, என்னைப் பிடிப்பதற்கு ஓடிவரும் பிரபுவை அடிக்கடி பார்ப்பேன். மேலும் கீழும் ஆஜானுபாஹுவை, (ஆடியாடி அகங்கரைந்து, என் மனம் இசை பாடிப்பாடி கண்ணீர் மல்கி, எங்கும் நாடி நாடி நரசிங்கா வென்று வாடிவாடும் இவ்வாணுதலே,) அவரை மீண்டும் மீண்டும் பார்த்து மகிழ்வேன். என் ஞான மூர்த்தி யாகிற நாராயணனை என் பிரபுவைப்பார்த்து இன்புறும் பாக்யன் என்னைப் போல தன்யன் யார் இருக்கக்கூடும்? (ஆபாத சூடமனுபூய ஹரி என்கிருப்போல) நான் புவன சுந்தரமோஹன ராமனை என் அதிருஷ்டமான நயனங்களால் பார்ப்பேன். என்ன பாக்யம், என்ன பாக்யம்.'' (210)

இதற்குள் ராவணன் ஸ்ரீசீதாராமன் வாழும் வனத்திற்கு அருகே வந்து சேர்ந்துவிட்டான். ராவணனுக்கு அனுசரணை யாக கபடமிருகத்தின் வேஷத்தை மாரீசன் தரித்துக்கொண் டான். அந்த மாயா மிருகம் அதிவிசித்திரமானதும் வர்ணிக்க முடியாதபடி அழகுடன் விளங்கியது. அதனுடைய தேகம் முழுவதும் தங்கமயமாகவும், பச்சை முத்து பவழம் போன்ற மணிகளாலும் அலங்கரிக்கப்பட்டதாகவுமிருந்தது. (211)

மாயை சீதை பரம ருசியுடன் அந்த கபட மிருகத்தை நோக்கினாள். அங்கம் அங்கமாக அழகு மனோஹரத்துடன் மான் வேஷம் கொண்ட மிருகத்தை உற்றுப்பார்த்தாள். உடனே ஆச்சர்யம் கொண்டவளாக, ராமனைக் கூவி அழைக்க ஆரம்பித் தாள். தேவா, ரகுவீரரே, கிருபாளு, கேளுங்கள், இந்த அழகான மானின் துள்ளி ஓடும் கதி, என்னை வசீகரிக்கிறது.'' (212)

ஸத்ய ஸந்தரான பிரபுவிடம் ஜானகி சொன்னாள். "ஸத்ய பிரதிக்ஞையை விரதமாகக் கொண்டிருக்கும் பிரபோ, இந்த மானைக் கொன்று இதனுடைய சர்மத்தை (தோலை) எனக்குத் தாரும்." ரகுபதிக்கு இந்த மானைப் பற்றியும், அதன் காரணமான உடலைப் பற்றியும் நன்கு தெரிந்திருந்த போதிலும், தேவ காரியத்தின் நிமித்தம் சந்தோஷத்துடன் எழுந்து சென்றார். (213)

பிரபு மிருகத்தைப் பார்த்தார். கச்சையை கட்டிக்கொண்டு கைகளில் தனுஷ் பாணம் எடுத்துக்கொண்டு, அதன் பின்னே அழகான பாணத்தைப் பூட்டிக் கொண்டு ஓடினார். பிரபு லக்ஷ்மணனை அழைத்து, "தம்பி, இந்த வனத்தில் அநேக ராக்ஷஸர்கள் சஞ்சரிக்கிறார்கள்." (214)

"புத்தி, விவேகம், பலம், ஸமயத்திற்கு தகுந்தாற் போல சமயோஜித புத்தி, ஆகியவைகளுடன் சீதையை ரக்ஷணம் செய்" என்று லக்ஷ்மணனுக்கு உத்தரவு செய்துவிட்டு, பின்பு பிரபு அந்த மிருகத்தைத் தொடர்ந்து ஓடினார். பிரபு ராமன் நல்ல அம்புடன் பூட்டப்பட்ட தனுஷ்ஷுடன் மிருகத்தை அடிக்க ஓடினார். (215)

[மாயா மிருகத்தைத் தேடி ஓடிய அந்த பிருந்தாவன சரணங்களுக்கு அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். எந்த பிரபுவை வேத புராணங்கள் சாஸ்திர ஆகம இதிஹாஸங்கள் தேடித் தேடி அலைந்து அருமருந்தென்றும், அமிர்தம் என்றும், தொழுது அடிப்பணிந்து முடிவு தெரியாமல் கலங்கி நிற்கின்றதோ, அந்த மாயன் (மாயா கிரீடன், மாயினமாத்யன், பாரம் பாராபார மபாரம் பரபாரமான அநிர்தேஸ்ய வபுஃ பாரா பாராதார மதார்யன்,) இன்று மாரிசனுகிற பக்த உள்ளம் கொண்ட ராக்ஷஸன் மான் உருவத்தில் ஓடிச் சென்று நிக்ரஹ சக்தியைப் பிரார்த்தித்தவனாக, அவனை ஆட்கொள்ள ஓடினார். எந்த பூர்ணனை உமா மஹேஸ்வரர்கள் தலையில் சுமந்துகொண்டு ஸதா ஸ்மரித்த வண்ணம் ஜடா முகுடதாரிகளாகயிருந்த போதிலும், அவர்கள் முடிவு காணாமல் விளங்குகிறார்களோ, அந்த மஹா விஷ்ணு இன்று ஒரு அரக்ககுலத்தில் உதித்த மாயா மிருகத்தின் பின்பு தொடர்ந்து ஓடினார். பக்தர்களுக்கு வசப் பட்ட (நளினாக்ஷன், மோஹமஹாரி மஹனீயன்) ஜகந்நாதன் மாரீசனைத் தேடி ஓட ஓட ஆரம்பித்தார். மாயா மிருகம் சில சமயம் அவர் அருகில் வரும். சில சமயம் துள்ளிக் கொண்டு வெகு தூரம் ஓடிவிடும். சில சமயங்களில் தன்னைப் பிரகடனப்



மாரீசனுகிற மாய மானைப் பிரபு அடித்தல். பிரபுவின் அழகை அடிக்கடி பார்த்துக்கொண்டு மான் ஓடியது. ஸ்ரீராமனும் பின் தொடர்ந்து ஓடிச் சென்றார். எந்த பிரபுவை வேதங்கள் பூர்ணமாக அறிய முடியவில்லையோ, எவருடைய தியானத்தில் உமாமஹேஸ்வரர்கள் ஸதா ஈடுபட்டு மனம் கர்ம வசனங்களில் ராம சேவகர்களாக தங்களைப் பாவித்துக்கொள்கிறார்களோ அப்பேற்பட்ட பிரபு ஸ்ரீராமன் மாயையினால் விளங்கும் மானைத் தொடர்ந்து ஓடிச் சென்றார்.

படுத்திக் கொள்ளும்; சில காலங்களில் தன்னை மறைத்துக் கொள்ளும். (216)

இந்த விதமாக ஒளிந்து கொண்டும் பிரகடனப்படுத்திக் கொண்டும் விளையாடும் அந்த மாரீச மான் பிரபுவை ஆஸ்ரமத்திலிருந்து வெகு தூரத்திற்கு அப்பால் கொண்டுவந்து சேர்த்தான். அப்பொழுது பார்த்தார். ஒரு கடினமான அஸ்திரத்தைப் பூட்டி அவர் அந்த மானைக் கொன்ருர். சாகும் சமயம் அந்த மாரீச மான் கோரமான சப்தமிட்டுக் கொண்டு பூமியில் விழுத்தப் பட்டான். (217)

முதலில் "லக்ஷ்மணன்" என்கிற பெயரை சப்தமிட்டான். அதன் பிறகு மனத்தில் பிரபு ராமச்சந்திரனை ஸ்மரணம் செய்தான். பிராணன் பிரியும் சமயம் தன்னுடைய ராக்ஷஸ தேகத்தை ஸ்வீகரித்துக் கொண்டு அத்யந்த பக்தி பிரேமையுடன் பிரபு சீதாராமனை ஸ்மரித்தான். (அவன் மரிக்கும் போது பிரணவத்தைச் சொல்லிக் கொண்டு செத்தான்.) (218)

ஸர்வக்ஞரான பிரபு அவனுடைய சுத்த ஹ்ருதயத்தின் ஆசையை அறிந்தார். முனிவர்களுக்கும் கிடைக்கப் பெருத வைகுண்ட பதத்தை பிரபு அவனுக்கு அளித்தார். (219)

தேவதைகள் ஆச்சர்யகரமான அந்த சம்பவத்தைக் கண்டு, பிரபுவின் ஔதார்யகுணங்களைப் புகழ்கிறவர்களாக புஷ்பங்களை ஆகாயத்திலிருந்து வர்ஷித்தார்கள். ரகுநாதனை பலவிதமாக ஸ்தோத்ரம் செய்தார்கள். தீனபந்து, ரகுநாதன் பாரபக்ஷமின்றி அசுரர்களுக்குக் கூட தனது பரம பதத்தைத் தரும் ஔதார்யம் கொண்ட வள்ளல் பிரபு அன்ருே? (220)

[தியானம்

ராமா ஜானகி ராமா, மஹா நாராயணா, லக்ஷ்மி வினுத நாராயணா, உன் சங்கல்பம் உன் கிருபை இவைகளைப் புரியாத என்னை மன்னிக்க மாட்டாயா? என்னல் செய்யப்படும் அபராதங்களைப் பொறுக்க மாட்டாயா? எனக்கு சபல சித்தத்தைக் கொடுத்தவனும் நீதானே? உன்னைத் தியாகராஜர் போன்ற மஹான்கள் ஸகல லோகங்களுக்கும் பலன் என்று என்ன அன்பினுல் சொன்னரோ, அந்த மாதிரி அல்லவோ நான் உன்னை நினைக்க வேண்டும். டம்பம், அக்ஞானம் திதிக்ஷை தமம் சமம் இல்லாத (சூன்யமாக) ஸ்வரூபம் கொண்ட தைத்ய மூர்த்திகளாகவும், மந்த ஸத்வம், ஞான சூன்யம், சப்தாதி விஷயங்களில் லோபியாக விருக்கும் தன்மை கொண்ட யக்ஷ

மூர்த்தியாகவும் ஹே பிரபு நீர் பிரகாசிக்கிறீர். க்ரூரத்வம், மாயையினுல் தமோமயமாகி, அந்தகார இருள் சூழ்ந்த மனத்தை உடையவராய் நீர், ராக்ஷஸ ரூபத்தினுல் பிரகாசிக்கிறீர். பிரபோ, புருஷோத்தமரே, ஸ்வர்க்கத்திலும் தர்மத்திலும், யாகம் முதலிய ஸத்கர்மங்களிலும் பற்றுதல் கொண்ட உம்முடைய தர்ம மூர்த்திக்கு அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். ஜலம் அக்னி இவைகளில் நடக்கும் ஸ்வபாவம் உள்ளவர்களுக்கும் எப்பொழுதும் ஸந்தோஷத்துடன் கூடிய ஸித்த ரூபமாகிற உமக்கு நமஸ்காரம்.. க்ஷமையில்லாதவர்களும் அத்யந்த க்ரூரம் கொண்டவர்களும் காம போகங்களில் இச்சையுள்ள நாகஸ்வ ரூபத்திற்கு நமஸ்காரம். மாயா மோஹ ரூபம் எடுத்து, அசுரர்களே வர்ண தர்மங்களிலிருந்து நழுவி விடும்படி செய்து, வேதமார்க்கங்களிலிருந்தும் தபஸ்ஸிலிருந்தும் விலகச் செய்து, பாஷண்டிகளாக மாற்றிய புத்தருக்கு நமஸ்காரம். உம்முடைய லீலா விவகாரங்கள் ஜனுர்த்தனரே, புரிய முடியாதபடி, ஸர்வ பிரபஞ்சங்களிலும் வியாபித்திருக்கின்றன. முசுகுந்தனுக்கு வனுவில் ஓடி முக்தி அளித்த பிரபோ, என்னிடம் எப்போது வருவாய்? உன்னே நினைத்தாலே, மிக மிக பயமாகவிருக்கிறது.]

துஷ்டனுன மாரீசனே வெட்டி வீழ்த்திய ரகு வீரன் திரும்பவும் ஆஸ்ரமத்திற்குத் திரும்பினுர். கையில் தனுஷ் இடுப்பில் அம்புராத்துணி வெகு அழகாக சோபையுடன் விளங்கின. இங்கே ஆஸ்ரமத்திலோ, மாரீசன் சாகும் சமயம் "லக்ஷ்மணு ஹா, ராமா," என்கிற த்வனி சப்தங்களேக் கேட்ட சீதை பயம் கொண்டாள். அத்யந்த இருள் சூழ்ந்த பயத்தினுல் என்ன செய்வது என்று யோசிக்க அவளுக்கு அந்த சமயம் ஆத்ம பலமும் விவேகமும் இல்லே. லக்ஷ்மணனே அழைத்துச் சொன்னுள். (221)

"நீ சீக்கிரம் செல். உன் பிராதா மஹா ஸங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிருர்." லக்ஷ்மணன் சிரித்துக் கொண்டு பதில் சொன்னுர் "மாதா, கேளுங்கள். என் பிரபு ராமன் புருவத்தை நெரித்தால் போதும். ஸகல ஸ்ருஷ்டிகளும் பிரளய காலத்தில் நாசமடைவது போல ஆகிவிடும். தாயே, என் ராமனுக்கு ஸ்வப்னத்திலும் கூட ஸங்கடம் வராது. அம்மா தைரியமாக விருங்கள்." (222)

(மாயா மோஹன் ஸ்வதர்மத்தில் இருந்த தைத்யர்களேப் பீடிப்பது போல) சீதை, லக்ஷ்மணனே அவிவேகமற்றதும் தர்மத்திற்குப் புறம்பானதுமான மர்ம வசனங்களால் லக்ஷ்மண

னுடைய சுத்த புத்த ஹ்ருதயத்தைத் துளைத்தாள். ஹரியின் கட்டளையினால், அசஞ்சலமான லக்ஷ்மணனுடைய புத்தியும் மனமும் பிதற்ற மடைந்தது. தேவியை வனதேவதைகளிடமும் திசை தேவதைகளிடமும் ஒப்புவித்து விட்டு, லக்ஷ்மணன் ராமனுக்கு அபராதம் செய்பவனாகச் சென்றான். அவன் ராவண ரூபியாகிற சந்திரனை ஹிம்சை செய்யும் ராஹுவாகிற ஸ்ரீராமச் சந்திரனிடம் சென்றான். (பாஷண்டி மதத்தை அடைந்த பிராம்மணன் தேவதை அதிதி இவர்களைப் பூஜிக்காமல், விதி வசத்தால் ஏவப்பட்டு, சௌச ஹீனனாகவும் ஸ்வயார்த்தியாக வாழ்பவனும், ஜலம், தானம், தர்ப்பணம், பித்ரு பிண்டம் முதலிய கர்மாக்களிலிருந்து விலகினவனாகவும், லோகத்தினர் களால் வார்த்தை ஸல்லாபம் செய்வதற்கே அருகதையற்ற பிராம் மணன் போல விளங்கினான் லக்ஷ்மணன்.) (223)

[தியானம்

நாராயணா, ரங்கபதே, மாரன் விஷ்ணு சித்தன் முடி வணங்கிய விஷ்ணு பிராணே, விஷ்ணு வல்லபே, ஜகத்தாத்ரி என்று பராசரரால் அழைக்கப்பட்ட இசைக்குயிலே, நளன் தமயந்திக்கு அனங்க மேகலை போல விளங்கின சீதா ராமா, பட்டர்பிரான் கோதை சொல்லிப் புகழ்ந்த செங்கண் திருமுகத்து செல்வத் திருமாலே, தியாகராஜர் கீர்த்தனம் செய்த திரிபுர சுந்தரியே, மந்த கமன கடாக்ஷ வல்லபையே, உன்னைக் காண்பது மஹா பூஜா பலம். உன் திவ்ய ரூபத்தைக் காண்பது பரம ஸ்ரீநிதி. அதி விவேகம் படைத்த பிரும்மாதி ஸுரர்களுக் கும் கிடைக்காத தங்க மயமான நகைகளோடு மங்கள வாரத்தில் உத்திர நக்ஷத்திரத்தில் ஜனார்த்தனருடைய திரிபுரசுந்தரியாகிய உன்னைப் பார்ப்பது மஹா பாக்யம். கலியுகத்தில் நீ தானே தீனரக்ஷகி, லலித குண கருணாஸாகரமே, துளசி மாலையுடன் முசுகுந்தனுக்கு மோக்ஷம் கொடுத்த கிருஷ்ணா, சக்ரன், உமா, சசி லோபாமுத்ரை போன்றவர்களுக்கும் சுக்ராசாரியாருக்கும் காக்ஷி அளித்த மிருது திரிபுரசுந்தரி, உன்னைப் பார்க்காத ஜன்மமும், உன்னை அர்ச்சிக்காத ஜன்மமும், காமாக்ஷி, உன்னால் பார்க்கப்படாத வாழ் நாட்களும் வீண் அம்மா. நீதான் எனக்கு அம்மா, ஹரி எனக்கு பிதா; கருடனை வாஹனமாகிக் கொண்ட சுபதாயகி, தியாகராஜனையும் காமனையும் வசீகரித்த மனோஹரி, சங்கரருக்கு ககளரியாகவும், பிரும்மாவுக்கு ஹம்ஸினி யாகவும் தோற்றமளித்த வாராஹி, வைஷ்ணவி, உன் சரணங்

களே என் தஞ்சம் உன் நாமங்களே என் நாவுக்கு உகந்தன. என் பைங்கிளியே, என்னிடம் வாராயோ.]

இந்த கடூரமான வார்த்தைகளை தசகண்ட ராவணன் மறைந்து நின்று கேட்டுக் கொண்டிருந்தான். லக்ஷ்மணன் செல்லும் சமயம் தான் சரியான ஸந்தர்ப்பம் என்று தீயபுத்தியுள்ள அவன் அறிந்து கொண்டு, ஸந்யாசி வேஷத்தைத் தரித்தவனாக சீதையின் முன்பு தோன்றினான். எவனுடைய தரிசனத்தைக் கண்டு, ஸுர அசுரர்கள் பயந்து வெளிறிப் போய் நடு நடுங்குவார்களோ, அப்பேற்பட்ட "பயக்ருத்" உருவத்தை நினைத்தும் கூட அவர்கள் இரவில் தூங்கமாட்டார்களோ அந்த பயத்தாலேயே நீடிக்கப்பட்ட ஏக்கத்தினால் மறுதினம் கூட ஸர்வ ஜந்துக்களுக்கும் (ஸர்வ ஸம்மதமாகவிருக்கும்) பசிக்கு அன்னம் பானம் கூட மனத்திற்கு பிடிக்காமல் இருக்குமோ. (224)

அப்பேற்பட்ட பாஹுபலம், ஐஸ்வர்ய பலம், ரூப பலம், தைர்யம் காந்தி ராஜ லக்ஷணங்கள் ஆகியவைகளுக்கு சிறந்த இருப்பிடமாகிய ராக்ஷஸ ராஜனாகிய ராவணன் இன்று (மாயா தேவியாகிறவளும் மஹா லக்ஷ்மியுமாகிற) சீதையின் முன்பு ஒரு நாய்க்குச் சமமாக, எஜமானன் வெளியில் சென்றிருந்த சமயம், யக்ஞ ஹவிஸ்ஸை நக்கிச் சாப்பிட திருட்டு எண்ணம் கொண்ட நாயைப் போல அங்கு தோன்றினான். காக பூசண்டி கருடனைப் பார்த்துச் சொல்லுகிறார், "கருடரே, பாஹு பலம் கொண்டவரே, கெட்ட வழியில் தனது ஸ்வரூப நாசத்தைக் தேடிக் கொண்ட ராவணன் (சிஷ்யன் ஆசார்யனுக்குக் காட்டும் ப்ரரீதி, ஆசார்யன் சிஷ்யனுக்குச் செய்ய வேண்டிய ஹிதம் ஆகிய இரண்டும் இல்லாத சிஷ்யனைப் போல,) சரீரத்தில் தேஜஸ் இழந்தவனாக, புத்திகளங்கம் உள்ளவனாக, பலம் குன்றியவனாக, ஸ்வரூபம் நாசமடைந்தவனாய், தசகண்ட ராவணன் விளங்கினான். (தயையற்றதும், கடூரமானதும் உலகத்தாரால் நிந்திக்கக் கூடியதுமான செய்கைகளால், அதர்மத்தினால், அளவற்ற தேஜஸ்ஸும் பிரபாவங்கள் உள்ளவனாகவுமிருந்தும், ராவணன் நரக வழியில் விழுந்தான். அந்தோ! பாபம் !) (225)

ராவணன் தன்னுடைய பெருமைகளை சீதையினிடம் அநேக பிரகாரம் "தர்சனம்" செய்தான். (தனக்கு ஹிதமான ராக்ஷஸ விவாஹக் கதைகளையும், அரசனுக்கே உயர்ந்த பொருள், (சியாமந்தக மணி போன்ற) உத்தம மணிகள், நாரீ மணிகள், பொக்கிஷமாக விருக்க வேண்டும் என்கிற ராஜ

நீதியையும் உபதேசித்தான். அவளுக்குப் பயத்தை தரும் சொற்களையும் (ஜனகரை வதைப்பது, ராம லக்ஷ்மணர்கள் மனிதர்க்ள், அற்ப பலம் படைத்தவர்கள் என்று அவமதித்தும், அவர்களையும் அபஹரிப்பதும் ஆகிய) பல வார்த்தைகளைச் சொன்னன். பிறகு அவளுக்கு பயத்தைத் தரும் தனது ராக்ஷஸ ஸ்வபாவத்தைக் காட்டினன். ஆயுதங்களைக் கொண்டு பயமுறுத்தினன். மாயையைப் பிரயோகித்தான். மொத்தத்தில் ராக்ஷஸ சேஷ்டிதங்கள் அனைத்தையும் அவன் செய்துபார்த்தான்) என் அம்மா, (பரதேவதை, திரிபுரசுந்தரி, மஹாமாயையாகிற) சீதா தேவி, பொறுமையுடனும் சாந்தியுடனும் பதில் அளித்தாள். ''யதியே, கோஸாயி, எனக்கு தகப்பன் போன்றவரே, பார்ப்பதற்கு ஸந்யாசி போலவும், ஆனல் பேசும் வார்த்தைகளில் கபட ஸந்யாஸி துஷ்ட ஹ்ருதயத்துடன் சொல்வது போலவும் சொல்லுகிறீர்.''

அந்த சமயம் ராவணன் தனது ஸ்வயரூபமான பத்துத்தலைகள் இருபது கைகளுடன் கூடிய விஸ்வரூபத்தைக் காட்டினன். தன் பெயரையும் ரூபத்தையும் சொன்னவுடன், சீதை பயந்து போய்விட்டாள். சீக்கிரம் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, சீதை ராவணனைப் பார்த்து '' துஷ்டா, நில். என் பிரபு வந்து கொண்டிருக்கிருர். (மஹா ஹ்ருதர் என்று கூறப்படும் ஆழ்ந்த மடுப்போலவிருக்கும்) என் பதி வந்து கொண்டிருக்கிருர்.'' (226)

அழகிய பெண் சிங்கத்தை துச்சமான முயல் நாடுவது போல, சீதையை அண்டின ராக்ஷஸ ராஜன், ''நீ என்னைச் சேர்ந்தவள்'' என்று கூறி மிருத்யுவின் வசத்தை அடைந்துவிட்டான். ஆனல் அவனுடைய மனம் சீதாப்பிராட்டியின் சரணங்களை நாடியது. அவன் அடைந்த சுகம், ஸ்நேகம், ஸந்தோஷம், ஸம்பந்தம் யாவும் சொல்ல முடியாதபடி யிருந்தது. (சிஷ்யன் ஆசாரிய கிருபையை அடைந்து பகவத் பிரியத்தையும் ஸம்பாதித்து, செங்கண் திருமுகத்துச் செல்வ திருமாலால் எங்கும் திருவருள் பெற்று விளங்குவானே, அதுபோல ராவணன் அன்று விளங்கினன்.) (227)

[தியானம்

ஹே லக்ஷ்மி, பாற்கடலில் நீ ஆவிர்பவித்தபோது உன்னைப் பார்த்து, ரிஷிகள் ஸ்துதிகள் செய்ததும், கிருதாசி போன்ற நவ கன்னிகைகள் பாடி ஆடி நர்த்தனம் செய்தும், தேவேந்திரன் உன்னைத் திவ்யமான மாலை ஆபரணங்களால் அலங்கரித்து, ''ஹரி

வக்ஷஸ்தலே,'' "மஹாலக்ஷ்மி", என்று ஸ்துதி செய்தவண்ண மிருந்தான். அதனுல் அவன் துர்வாஸரால் கொடுக்கப்பட்ட சாபத்திலிருந்து மீண்டவனுகி, மீண்டும் திரைலோக்ய ஸாம்ராஜ்யத்தை அடைந்தான். அம்மா, உன்னுடைய சுபதர்சனம், சரண்ய சரணுகதர்களுக்கு அடைக்கலமாக விருக்கிறது. பகவான் உன்னுலேயே விசிஷ்டராகவும், க்ருத லக்ஷணராகவும் எல்லாப் பொருள்களிலும், எல்லா புருஷர்களிலும், மேம்பட்டவராக விளங்குகிருர். அம்ருத ஸஹஜே, அனபாயினி, மஹாலக்ஷ்மி அம்மா, பிரஹ்லாதன் உன்னைத் துதித்து லக்ஷ்மி நரசிம்மன் கிருபையை அடைந்து, குலத்தையே நாராயணரின் அனுக்ரஹ சக்திக்கு யோக்யதையுள்ளதாக ஆக்கினன். ராவணன் சும்பன், நிசும்பன், விப்ரசித்தி முதலானவர்கள் உன் நாதனுன விஷ்ணுவை அவமதித்து, நீயும் உன் பிரிய நாராயணனும் மஹார்த்தம், மஹாநிதி என்று அறியப்படவேண்டியிருக்க, நீங்கள் அனந்தஸ்ரீயாகவிருந்தும், அற்ப பலன்களை அவர்கள் நாடியதால் அனர்த்தரராகவே விளங்கினுர்கள். தேவ காரியத்திலே ஊர்ஜிதமாகவிருக்கும் மஹாலக்ஷ்மி நாராயணு, ராவணகும்பகர்ணுதிகளுக்கு இறுதிக் காலத்தில் ஞானத்தையும் பக்தியையும் தந்த சீதாராமா, தர்ம ஸ்வரூபியே, மஹாலக்ஷ்மி, உன்னுடைய ஹரிவக்ஷஸ்தலத்திலிருந்து குளிர்ந்த கடாக்ஷங்கள் சந்திரனுடைய அம்ருதவர்ஷங்கள்போல விருக்கின்றன. ஹஸ்த நக்ஷத்திரத்தில் பிறந்த வரதராஜரின் அபயஹஸ்தமும் பிருந்தாவன சரணங்களும், ராவணுதி சும்ப நிசும்பன் முதலியவர்களாலும் கிடைக்கப் பெருததும், என் காம க்ரோதங்களின் விஷயப் பற்றுதல்களை அழிக்கக் கூடியதுமான உனது சங்கல்பத்தினுல் மஹாலக்ஷ்மி அம்மா, உன்னுல் ஒருவளாலேயே மாற்றக்கூடிய திடசங்கல்பரான நாராயணனை, அக்ஷோப்யரை, எனக்குத் தர வேண்டும். அம்மா, எப்போது உன் அருள் நோக்கு, புருஷகாரங்கள், செந்தாமரை திருவடிகள், ஸ்ரீதாமம் என்கிற நீரஜ நேத்ர கிருபை, ராமா சீதா, எனக்குக் கிடைக்கும்?]

காமத்தினுல் துடித்துக் கொண்டிருக்கிற ராவணன் சீதையினுல் நிராஹரிக்கப்பட்டவுடன், க்ரோதத்தை அடைந்தான். (ராம லக்ஷ்மண விமுகனுன ராவணன் சீதையாகிற அனபாயினியை ராமனுடைய "ஸஹாயணியைப்," பிரிக்கப் பார்த்தான். குலத்திற்கும் ஐஸ்வர்யங்களுக்கும் தனது காலத்திற்கும் நாசத்தைத் தேடிக் கொண்டான். நாராயண ப்ரியை, சரீரத்துடன் நித்யஸ்ரீ நித்ய மங்களமாகவும், ஸ்ரீவத்ஸ வக்ஷமாகவும், விளங்கும் சீதா ஜகஜ்

ஜனனி, ஜகதாம்பா, காத்யாயனி, சிவசக்தி ரூபம்போலவிருக்கும் ஐக்ய மிதுனம் பிரிபட்டது. ராம நிந்தையால் ராவணனிடமிருந்து சீலம் என்கிற லக்ஷ்மி விலகிவிட்டாள். அதனால் தர்மம் குன்றியது. தர்மம் குன்றியதால் குலசகிதம் நாசத்தைத் தேடி சம்பாதித்துக் கொண்டான்.) காலத்தினால் தூண்டப்பட்டு, அவன் சீதையை ரதத்தின்மேல் உட்கார வைத்துக்கொண்டு, ஆகாய மார்க்கமாக அவன் கிளம்பினான். அவசரமாக புறப்படுகிறவனும், கோதண்ட ஹஸ்தனாகிற ராம பாணங்களுக்கு மிக்க பயப்படுகிறவனும், அதர்மத்தில் செல்லுகிற அவனுக்கு அந்தச் சமயத்தில் ரதத்தைச் சாரத்யம் செய்வதற்குக்கூட பயமாகவிருந்தது. (228)

சீதை (என் தாய், நாராயண ப்ரியா, ராமஶ்ரீ) கதற ஆரம்பித்தாள். "ஹா ரகுராயா, சரணம் அடைந்தவர்களுக்கு ரக்ஷணத்தைத் தரும் ரகுகுல ராமா, நாராயணராகிய மஹா வீரரே, ரண தீரரே, நான் (அனன்யார்ஹ சேஷவ்ரதம் பூண்டு வாழ்ந்து வந்ததில்) உமக்கு என்ன அபராதம் செய்து, உம்முடைய தயையிலிருந்து, நழுவிவிட்டேன்? (சாஸ்திர விசாரதரே,) உம்மிடம் "சரணம்" என்று வந்தோர்க்கு ரக்ஷணத்தையும் சுகத்தையும் அளிக்கும் (இஷ்டோ விசிஷ்டர்) நீர் அல்லவா? தாங்கள் அவதரித்த ரகுகுலமே சரணாகதர்களுக்கு ரக்ஷணம் அளிக்கும் மகிமையைப் பெற்றது. அப்பேற்பட்ட ரகுகுலமாகிற ஸரோஜ புஷ்பத்தை மலரவைக்கும் ஆதித்ய ரூபியாகிற ரகுநாயகா." (229)

"ஹா லக்ஷ்மணா, உமக்கு எவ்வளவு அபராதம் நான் செய்துவிட்டேன். நீர் சொல்லியது வாஸ்தவமாயிற்றே. ஸர்வபாகவத உத்தமராகிய உமக்கு நான் தோஷங்கள் கற்பித்துவிட்டேன். (உம்மிடம் க்ரோதம்கொண்டு, அஸஹ்ய அபசாரங்களைச் செய்துவிட்டேன்.) அதனுடைய பலனை இப்போது நான் அனுபவிக்கிறேன். (பகவத் அபசாரத்தைவிட பாகவத அபசாரம் மஹா கொடியதாயிற்றே. நடுக்கடலில் மூழ்கிவிடும் படகுபோல) ஒரு வித உதவியுமின்றி, நான் பெரும் ஆபத்தில் மூழ்கிவிட்டேனே, என்னைக் காப்பாற்றுகிறவர்கள் ஒருவரும் இல்லையே," என்று பல விதமாக ஜானகிதேவி பிரலாபித்தாள். அழுதாள். ஓலமிட்டாள். "என் பிரபு என்னிடம் பூர்ண கிருபை உள்ளவர். அப்பேற்பட்ட ஸ்நேகமுள்ள பிரபு இப்போது என் அபசாரத்தினால் வெகுதூரம் போய்விட்டாரே, இதுவும் என் அபசாரத்தின் பலனா?" (230)

"என் விபத்தை பிரபுவிடம் யார் நிவேதனம் செய்வார்கள்? யக்ஞத்தின் புரோடசத்தை ஒரு கழுதை சாப்பிட விரும்பு

கிறதே.'' சீதையின் கோரமான துக்க வசனங்களையும் விலலாபங்களையும் சகல சராசர ஜீவராசிகளும் கேட்டு, பரம துக்கத்தை அடைந்தன. (231)

கழுகின் அரசனுகிய ஜடாயு சீதையின் அபயவாணியைக் கேட்டார். அவளுடைய குரலை ரகுகுலத் திலகமாகிற சீதையின் குரல் என்று அடையாளம் புரிந்துகொண்டார். நீசமான ராக்ஷஸ ராஜன் அவளை அழைத்துச் செல்வதைக் கண்டார். ஒரு கபிலைப் பசு மிலேச்சனிடம் சிக்கியதுபோல அவள் ராக்ஷஸனிடம் அகப்பட்டுக்கொண்டு தவிப்பதைக் கண்டார். (232)

[தியானம்

சீதா தேவியே, பத்ம பிரியே, பத்ம ஹஸ்தே, ராமனுடைய முகாரவிந்தத்தில் இரு பத்மமாகிற இரு புஷ்கராக்ஷங்களாக விருப்பவளே, பத்மாலயே, விஸ்வப்பிரியே, விஷ்ணுவின் சகாயனியாகவும், மனோனுகூலையாகவுமிருக்கும் மஹாலக்ஷ்மிதாயே, சரபரே, வரம்பு மீறி நடக்கும் அதர்மர்களை தண்டிக்கும் பீமரே, என்னிடம் தயை இரக்கம் காட்டவேண்டும். உமா மஹேஸ்வரரிடத்தில் தர்மத்தைத் தவிர எல்லாப் பொருள்களும் அநித்யமாக விருக்கின்றன. ஐஸ்வர்யங்கள், தபங்கள், பந்துக்கள், கர்மாக்கள், சிநேகிதர்கள் ஆகிய யாவற்றையும் ஒரு நொடியில் விட்டு விட்டுப் போகிறவன் மோக்ஷத்தில் பற்றுள்ளவனுகிறுன். எப்பொழுது நான் சீதாராம பாத பத்மங்களை சரணம் அடையப் போகிறேன் என்கிற வைராக்ய விவேஹத்தை அடைந்த ராவணன் அஹிம்சையைப் பற்ருமல் ஹிம்சையாகிற ராக்ஷஸ தர்மத்தைப் பின்பற்றி குலத்துடன் நாசமடைந்தான். கிருத்ர (கழுகு) ராஜனுகிற பெரிய உடையார் மாமிஸம், மது சாப்பிட்டுப் பழக்கம் இருந்தபோதிலும் பகவத் கைங்கர்யம் என்கிற அஹிம்ஸா மார்க்கத்தை அனுசரித்து, விஸ்வப் பிரியையாகிற சீதையை ராவணனிடமிருந்து காப்பாற்ற மிருதுவான பேச்சுக்களாலும், அவை பலன் தராதபோது சண்டை செய்தும், தன் உயிரை லோகநாதருக்காகத் தியாகம் செய்து, சீதாராமனுடைய தயையாகிற நித்யானந்த விபூதியை அடைந்தார். என் ஸ்ரீயாகிற சீதாதேவியே, ராமனுடைய அன்பும் அஹிம்சா மார்க்கமும் எனக்கும் கிடைக்க அருள் செய்யவேண்டும்.]

ஜடாயு (அஹிம்ஸா தர்மத்தைப் பின்பற்றியவராகி,) சீதையைத் தேற்றினுர். ''சீதாதேவி, என் புத்ரிபோல்விருக்கும் விஸ்வரிப்யே. பயப்படாதே. தைர்யமாக இரு. ஹிம்ஸையை தொழி

லாக உள்ள இந்த ராக்ஷஸனை நான் நாசம் செய்கிறேன்.'' (சரபம் என்கிற மிருகம் எவ்வளவு க்ரோதத்துடன் சிம்மத்தைத் தாக்குமோ) அந்த பீம விக்ரத்துடன் அவர் ராவணனைத் தாக்கினார். அவர் ஓடும்பொழுது, பர்வதங்கள் வஜ்ராயுதத் தாக்கலால் எவ்விதம் சிதறி விழுமோ, அதுபோல பூமி நடுங்கியது. (233)

''ஹரே, துஷ்டா நில். ஓடாதே. என்னிடம் பயப்படாமல் அதிவேகமாக ஓடுகிறாயே. என்னை அடையாளம் தெரிந்து கொள்ளவில்லையா ?'' பிரளய காலத்தில் ருத்ரன் போலவும் யமராஜனுக்கு நிகரான பயங்கர உருவத்துடன் ஜடாயு ஓடிவருவதைக் கண்டு, தஸகந்தரனாகிற ராவணன் தன் மனத்திற்குள் அனுமானமிட்டான். (234)

''இந்த மலை மாதிரி உருவம் கொண்ட பக்ஷிமைனாக பர்வதமாக விருக்குமோ அல்லது பக்ஷிராஜனான கருடனோ தெரியவில்லை. இவர் கருடனாக விருந்தால் என் பலம் அவருக்குத் தெரிந்திருக்கக்கூடும். அந்த கருடனுக்கு ஸ்வாமியாகிற விஷ்ணு பகவானுக்கும் தெரிந்திருக்கும்.'' அந்த பக்ஷி சமீபம் நெருங்கி வரும்போது ராவணன் அதை வயோதிகமான ஜடாயு, பெரிய உடையார் என்று புரிந்துகொண்டான். ''சரி, என் கைகளின் தீர்த்தத்தினால் இவர் தன் சரீரத்தை ராமார்ப்பணம் சீதார்ப்பணம் செய்வதற்கு ஓடி வருகிறார்.'' என்று வாய்விட்டுச் சொன்னான். (235)

இந்த வார்த்தைகளைக் கேட்ட ஜடாயு வேகத்துடன் ராவணனை மூக்கு நகங்களால் தாக்கி, கோபத்துடன் வார்த்தைகளைச் சொன்னார். ''ராவணா, என் வார்த்தையையும் உபதேசத்தையும் கேள். ஜானகியை விட்டு விட்டு குசலபூர்வமாக வீட்டிற்கு திரும்பிச் செல். என் வார்த்தையை லக்ஷ்யம் செய்யாமல் போனால், உனக்கு இருபது கைகள் இருந்தபோதிலும், உன்னைச் சுற்றி பாஹு பலம், தபஸ் பலம் பொருந்திய பந்துக்கள் சிநேகிதர்கள் இருந்தபோதிலும் உனக்கு கோரமான கதிதான் ஏற்படும்'' (236)

''ஸ்ரீராமனுக்கு இழைக்கப்பட்ட அபராதம் பயங்கரமாகவும் ஸர்வத்தையும் நாசம் செய்கிற காலாக்னியைப் போல உன்னையும் உன் பந்து மித்ரர்களையும், தபஸ் ஐஸ்வர்யங்களையும் வேருடன், குலத்துடன் நாசம் செய்துவிடும். தசானனா, இது நிச்சயம்'' என்றார். ஆனால் ராவணன் பதில் ஒன்றும் கூறவில்லை. அப்பொழுது ஜடாயு க்ரோதத்துடனும் அதிவேகத்துடனும் ராவணனைத் தாக்கினார். (237)

ராவணனுடைய சிகையைப் பிடித்து ஆட்டி அவனை ரதத்திலிருந்து கீழே பூமியில் தள்ளினார். சீதையை ஜாக்ரதையாக ஒரு இடத்தில் உட்கார வைத்து விட்டு ஜடாயு மீண்டும் ராவணனிடம் சண்டை செய்ய ஓடிவந்தார். தன் அலகினால் ராவணனை பலவிதமாகக் காயப்படுத்தினார். பலவிதமாக தாக்கப்பட்ட ராவணன் ஏறக்குறைய அரை மணி நேரம் மூர்ச்சை அடைந்தான். (238)

மூர்ச்சையிலிருந்து ராவணன் எழுந்திருந்து, அதிகோபம் கொண்டவனாக தன்னுடைய பயங்கரமான வாளை உருவி, ஜடாயுவின் இறக்கைகளை வெட்டித் தள்ளினான். பக்ஷியின் இறக்கைகள் வெட்டப்பட்ட பின்பு, "இதுதான் நான் செய்யக்கூடியது; ஸ்ரீராமச்சந்திரனுடைய அத்புதமான லீலை, அவனுடைய சங்கல்ப திருவுள்ளம் எதுவாக விருக்குமோ தெரியவில்லை" என்று ஸ்ரீராம நினைவுடன் ஜடாயு பூமியில் விழுந்தார். (239)

சீதையை மீண்டும் ரதத்தில் ஏற்றி ராவணன் அதிவேகத்துடன் ரதத்தைச் செலுத்தினான். அவனுக்கு பயம் அதிகரித்தது. சீதையினுடைய விலலாபங்கள் ஆகாயத்தில் கேட்கப்பட்டன. ஒரு பெண் மான் க்ரூரமான வேடனிடம் அகப்பட்டுக்கொண்டு தன் பதியை நினைத்து எவ்விதம் வருந்துமோ, அதைப்போல சீதை பயங்கொண்டு அலர ஆரம்பித்தாள். (240)

[தியானம்

நாராயணா, மதுசூதனா, மஹாலக்ஷ்மி, என் அம்பா, பர தேவதை, பரமாத்மா, தீபத்திற்கு ஒளி போன்றவளே, தர்மத்திற்கு அனுஷ்டானம் போன்றவளே, அக்னிக்கு ரூபம் தேஜஸ் போன்றவளே, சுத்த சித்தத்திற்கு விக்ஞானம் போன்றவளே, ஏகாந்திகளுக்கு பிரும்ம தியானம் போன்றவளே, உங்களுடைய நிஜ ஸ்வரூபம் பிரிக்க முடியாதது. ஹே வரதராஜனாகிற மரகத ஸ்யாமளன் சந்தோஷம், அம்மா லக்ஷ்மியாகிற சீதையே நீ அதற்கு நித்ய துஷ்டிபோல அல்லவா யிருக்கிறாய். சீதே, உன் பிரபுயக்ஞம்; நீ தக்ஷிணை; ஜனார்த்தனர் புரோடசம் லக்ஷ்மி தேவி, நீ ஆஜ்ய நெய் ஆஹூதி; பகவான் விஷ்ணு சங்கரர்; லக்ஷ்மி தேவி, நீ கௌரி; கேசவர் சூர்யன்; கமல வாஸினியாகிற நீ பிரபாதேவி; ஸ்ரீவிஷ்ணு பித்ருகணம், கமலா, நீ நித்ய புஷ்டியை அளிக்கும் ஸ்வதாதேவி. புண்டரீகாக்ஷர் ஸர்வாத்மக ஆகாசம், லக்ஷ்மி அம்மா, அதில் நீ ஸ்வர்க்கலோகம்; பகவான் ஸ்ரீதரர் சந்திரமா, அதில் லக்ஷ்மிதேவி, நீ அனபாயினியாகிற காந்தி.

மஹா பிராக்ஞரான ஹரி ஜகத் சேஷ்டை, அம்மா ஸ்ரீ தேவி, நீ அதன்கதி. வாஸு தேவர் த்ருவம். அம்மா லக்ஷ்மி, நீ அதன் பிரபாவம். நாராயணர் இந்திரன்; அம்மா நீ இந்திராணி. சக்ரதரர், யமன். கமலாலயா, நீ தூமோர்ணை; ஸ்ரீவத்ஸவக்ஷன் தனேஸ்வரராகிய குபேரன், ஸ்ரீதேவி நீ ருத்திதேவி. மஹா பாஹுக்களைக் கொண்ட கேசவர் வருணன். மஹா பாக்யமுள்ள லக்ஷ்மிதேவி, நீ கௌரி; ஹரிபகவான் விப்ரேந்திரரும் தேவ ஸேனாபதியாகிற முருகன், ஸ்ரீதேவி நீ தேவஸேனை. கதாக்ரஜர் ஆஸ்ரயர். நீ ஆஸ்ரிதர்களைக் காக்கும் சக்தி. முகுந்தர் பிரும்மா, பத்மா, நீ கருணை ரூபம் கொண்ட காயத்திரி. மஹத் பிரும்மம் ஸர்வஸ்ருதி பராயணம் என்று சொல்லப்படும் சாவித்திரி நீ; அதன் திருமேனி, பிரபாவம், பலன், என் பிரபு ராமன். ராமன் நாராயணர், அயோநிஜர், பிரபிதாமஹர் ஸர்வரும் ஆவார். சீதே, நீ மஹாலக்ஷ்மி, தயையை கவசமாகவும் புருஷகாரத்தை வாணியாகவும் வீர்யத்தைக் கொண்ட ஸத்குண ஸம்பன்னையாக வும் இருப்பவள். மிதுன ஐக்ய ஸ்வரூபம் கொண்ட மஹாலக்ஷ்மி நாராயணா, ராம சீதா, உங்களுக்கு நமஸ்காரம். விஸ்வமோஹன, மோஹினி, விஸ்வேசி, நமஸ்கரிப்பவனும், சரணம் என்று சொல்லுகிற என்னை கிருபையுடன் பரிபாலிக்க வேண்டும். ஸர்வ துக்கங்களிலிருந்தும் எங்களைக் காப்பாற்ற வேண்டும். மஹரிஷி களால் துதி செய்யப்படும் ஸ்தோத்ரப் பிரியே, ராமா, நீங்கள் தான் எங்களுக்கு சரணமாக எப்பொழுதும் இருக்கும்படி அருள் புரிய வேண்டும். ஸகல புவன ரக்ஷகர்களே.]

ரிஷ்யமுக பர்வதத்தின் சிகரத்தில் சில வானரங்கள் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவை அழுது புலம்புகிற சீதை யைக் கண்டனர். அந்த வானரர்களையும் சீதை கண்டாள். அந்த வானரர்களிடம் (ஹரிபகவானே, பஞ்சாயுதனே, என்று சொல்லிக் கொண்டு,) தன்னுடைய வஸ்திரத்தின் ஒரு பகுதியை சீதை விட்டு எரிந்தாள். அத்துடன் சில ஆபரணங்களையும் கழற்றி அவள் விட்டு எரிந்தாள். (திகம்பரனும் விஸ்வம்பரனுமாகிற ஸ்ரீராமனை மனத்தினால் சீதை (திரௌபதியைப் போல) ஸ்மரித் தாள். (அச்யுதா, கோவிந்தா, சங்கு சக்ர கதாபாணே,) சரணா கதர்களைக் காப்பாற்றுவதற்கு வ்ரத தீக்ஷையைச் செய்து கொண்டு, பரபரப்புடன் காப்பாற்றும் அருள் வரதா, பேரருளாளா, என்று சீதை கதறினாள்.) இந்தவிதமாக (மணியி லிருந்து ஒளியைப் பிரிக்க விரும்பும் ஹிம்ஸாரூபியான) ராவணன் சீதையை ராமலக்ஷ்மணன் மறைந்திருக்கும் சமயம் அபஹரித்து,

பயத்துடன் கடுங்காவலில் ராக்ஷஸ ஸ்தீரிகளின் பாதுகாப்பில் அவளை அசோக வனத்தில் கொண்டு போய் ஒளித்தான். (241)

சீதாதேவி அநேகவிதமாக பயபீதியுடன் காலத்தைக் கழித்தாள். அந்த துஷ்டன் அவளைப் பயமுறுத்தியும் துன்புறுத்தியும், ஆசையைக் காட்டும் இன்மொழிகளாலும், (ராஜ்யம் ஐஸ்வர்யம், தனது பிரபாவங்கள் யாவற்றையும் அவளுடைய பாதங்களில் ஸமர்ப்பித்தும்,) அவளுடைய ப்ரீதியை அடைவதற்கு பல முயற்சிகளைச் செய்து பார்த்தான். (பதியை விட்டுப் பிரிந்த பெண் கிளி ஆண் கிளியையே நினைத்து, சகல போக போக்யங்களை எவ்விதம் தியாஜ்யம் செய்யுமோ, அதுபோல) சீதை ராவணனையும் அவனுடைய முயற்சிகளையும், நிராஹரித்தாள். அதனுல் அவன் மனம் தளராமல் மீண்டும் முயற்சிசெய்து பார்க்கலாம் என்கிற நம்பிக்கையினுல், ராவணன் சீதையை கடுங்காவலில் அசோக மரத்தினடியில் வைத்தான். மஹா கிருபை, தயையையே கவசமாகக் கொண்ட சீதாதேவி ராவணனிடம் நிர்தயையுடன் ராம தியானமாகவே இருந்தாள். ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதபத்மங்களை அனவரதமும் பிரியாத சீதாதேவி, சகல சாஸ்திரங்களையும் அறிந்து, (ஸத்குருவாகிற மஹேஸ்வரரால் பகுமானிக்கப்பட்டவளும், கங்கை, காவேரி, நர்மதை, கோதாவரி ஆகிய புண்ணிய நதிகளால் ஆஸ்ரயிக்கப்பட்டவளும், என்னை அருள்கொண்டு பார்த்திடும் ஸ்ரீவித்யா தேவியும், கோவத்ஸங்களால் அடையப்படும் உமாதேவியைப் போல,) பாதி விரத்யம் என்கிற தர்மவிரத பூஷணியாக பத்மநாபருடைய திருவடிகளை "தஞ்சம்" என்று நினைத்து, ராமனை எதிர்பார்த்த வண்ணம் அசோக மரத்தினடியில் கடுங்காவலில் வைக்கப்பட்ட சீதை காலத்தைக் கழித்தாள். (அசோக மரத்தின் பூங்கொத்துப் போலவும், உருக்கி வார்த்த தங்கம் போலவும், கற்பகக் கொடியைப்போல சீதை உட்கார்ந்து கொண்டிருந்தாள். மைதிலி மிருத சஞ்சீவினியாகிற ராம சரித்திரத்தைச் சொல்லப் போகும் ஹனுமாரை எதிர்பார்த்துக்கொண்டு, கலங்கிய மனத்துடன் ராம கவசமாக உட்கார்ந்து கொண்டிருந்தாள். அப்பேற்பட்ட சீதாதேவியை, ஆஞ்சநேயரை முன்னிட்டுக் கொண்டு, அடிக்கடி நமஸ்கரித்து, சரணம் அடைகிறேன். ஜகதம்மா, என்னை ரக்ஷிக்கவேண்டும் என்று பிரார்த்தித்துக்கொள்கிறேன்.) (242)

  

## நவாஹ பாராயணம்—ஆறுவது நிறுத்தம்

[தியானம்

ராமாசீதா, நாராயணு, ஹரிவல்லபே, நாராயண ப்ரியே, உனக்கும் ஸ்ரீராமச்சந்திரனுக்கும் ஸதா மங்கள ஜயங்கள் ஏற்படட்டும். உங்களுடைய மங்கள நாமங்களுக்கும் உங்களுடைய மங்கள ரூபங்களுக்கும் நித்ய ஜயங்கள் நித்ய மங்களங்கள் ஏற்படட்டும். ராமய்யா, எந்த மஹானுபாவன் ஹிம்சா ரூபமாக, உன் பத்னி ஜானகியை அசோக வனத்தில் வைத்தானே, அவனுடைய அழிவிற்கு உன்னை பரம பதத்திலிருந்து பூமியில் அவதரிக்கச் செய்தானே, அந்த மஹாராஜனை ராவணனை நான் ஆயிரம் தடவைகள் நமஸ்காரம் செய்கிறேன். முனிஜன ஹ்ருதய ராமா, ராவணனுக்கும் ஆத்ம வித்யையை உபதேசித்து, "சரணுகத வத்ஸலனிடம் என்னிடமிருந்து (நிவர்த்தய) திருப்பிய உன் மனத்தை வைத்து ஆஸ்ரயம் செய்து, நீ செய்த கடுத்த அபராதங்களுக்கு மன்னிப்பு கேளு," என்று உதார மனத்துடன் சொல்லிய க்ஷேமக்ருத்தும் சிவையுமான சீதா பிராட்டிக்கு நான் ஆயிரம் கோடி நமஸ்காரங்கள் செய்கிறேன். வேதங்களால் புகழப்படுகிறவரும், பிரும்ம ருத்திராதிகளால் கானம் செய்யப்படுகிறவரும், தியாகராஜ துளசிதாஸர்களால் "ராஜீவ நயனன், மிருது பாதாரவிந்த பாவனன்," என்று கூறப்படும் சீதாராமா, உங்களுக்கும் உங்கள் பரிவாரங்களாகிற ஸாது ஜனங்களுக்கும் ஸதா மங்களங்கள் ஏற்படட்டும். ஸ்ரீமானே, கருணுன்விதரே, நீலமான மேகத்தில் மின்னல் கொடி போல விளங்கும் ராமசீதா, பிரஹ்லாத நாரத வால்மீகி ரிஷிகளால் துதிக்கப்படுகிறவர்களே, மஹா ஸம்சாரியான நாங்கள் துக்கங்களிலிருந்து விடுபெற்று தத்விஷ்ணேः பரமம் பதம் என்று சொல்லப்படும் நாராயண பதத்தை அடையவேண்டும். பங்கஜாக்ஷி, ஹரிவக்ஷஸ்தலே, ஸுபீமரே, கிருபை செய்யுங்கள்.]

(உமாதேவி எவ்விதம் சங்கரரால் உபதேசிக்கப்பட்டு ராம நாமத்தை ஸதா ஜபித்துக் கொண்டு வாழ்ந்து வருகிருளோ, அதுபோல) சீதாதேவி மாயா மிருகத்தைத் தேடி ஓடிய பிருந்தாவன ராம சரணங்களை மனத்தில் தரித்துக்கொண்டு, ஹரி நாமத்தை உச்சரித்துக் கொண்டும் ராம ஸ்வரூபத்தை மனத்தில் தரித்துக்கொண்டு, ராம தரிசனத்தை ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணமிருந்தாள், சீதா பிராட்டி ராம தியானம், ராம ஸ்வரூபம், ராமநாமம் ஆகியவைகளுடன் கூடிய ராம மயமாக தன்னை

ஆஹுதி செய்து கொண்டிருந்தாள். (பத்மாக்ஷியான சீதை சிம்சுபா விருக்ஷத்தின் கீழே தவக்கோலம் பூண்டு அசோகர், ஸோக நாஸனர் என்று சொல்லப்படும் ஆசாரிய ரூபரான ராமனைக் காண ஆசைப்படுவது போல் எனக்கு காக்ஷி அளித்தாள். நாராயண பிரியே, என் மார்க்க தரிசியே, உனக்கு ஆயிரம் கோடி சுக்ருத நமஸ்காரங்கள் செய்கிறேன். அஞ்சநேயரை முன்னிட்டுக் கொண்டு நான் சரணம் அடைகிறேன். ஜயசீதா, ஜயராமா, ஜயஜய சீதாராமா என்று ஆயிரம் கோடி ஜயமங்கள கீதங்கள் உங்களுக்குப் பாடுகிறேன். ஜயங்கள் உங்களுக்கு ஸதா ஏற்படட்டும்.) (243)

ரகுபதி தன் தம்பி எதிர் நோக்கி வருவதைக் கண்டு வெளிப்படையாக சிந்தை அடைந்தவர் போல, பிரபு, (கஹன கோசரர், ஆழ்ந்த மடுப்போலவிருக்கும் ராமர்), லக்ஷ்மணனைப் பார்த்துப் பேசினர். "தம்பி, என்ன காரியம் செய்துவிட்டாய்? ஜனகரின் பெண்ணாகிய சீதையை தனியாக விட்டுவிட்டு என் ஆக்ஞையையும் உல்லங்கனம் செய்துவிட்டு, ஏன் இங்கு வந்து கொண்டிருக்கிருய்?" (244)

"ராக்ஷஸக் கூட்டங்கள் இங்குமங்கும் அலைந்து திரிந்து கொண்டிருக்கின்றனர். என் மனத்தில் சீதை ஆஸ்ரமத்தில் இல்லை என்று தோன்றுகிறது." பிரபுவான அண்ணனுடைய சரண கமலங்களைப் பிடித்துக்கொண்டு தம்பி லக்ஷ்மணன் கதறினன், "என்னைக்காக்கும் பிரபோ, என் மீது யாதொரு தோஷம் இதில் இல்லை," என்று சகல விருத்தாந்தங்களைக் கூறி அழுதான். (245)

தம்பியுடன் கூடிய பிரபு ஆஸ்ரமத்தை நோக்கிச் சென்றார். கோதாவரியின் கரையில் உள்ள ஆஸ்ரமத்தினருகே அடைந்தார். ஆஸ்ரமத்தில் சீதையைக் காணவில்லை. சாதாரண ஸம்சாரியான மனுஷ்யன் தன் பார்யை நஷ்டப்பட்டுப் போனல் எவ்விதம் மீளாத துக்கத்தை அடைவானே, அதுபோல பிரபு அழுதார். எவருடைய நாமத்தையும் ரூபத்தையும் தியானிப்பவர்களுக்கு, நாதனற்று கதறும் தீனர்களுக்கு சோகத்தை ஒழிப்பாரோ, அவர் அன்று சாதாரண மனிதனைப்போல தேம்பித் தேம்பி அழுதார். எவருடைய பிரபாவத்தால் பக்தர்களுக்கு மறைந்திருக்கும் தமது பிரபாவத்தை அறியும்படி அவர்களுடைய அகக்கண்களையும், புறக்கண்களையும் திறக்கும் திறமையுள்ள அப்ராகிருதமான பேரொளி கொண்ட அரிச்சிஷ், மான், அன்று சாதாரண மனிதனைப் போல, சீதையைத் தியானம் செய்பவராக, பாதிவிரத்ய

ஸ்திரி போல ஏக பத்னி வ்ரதம் தீக்ஷை கொண்ட ராமன் (கன்றை விட்டுப் பிரிந்த தாய்ப் பசு போல) கதறினார். (246)

"அம்மா, ஜானகி, ஸர்வ கல்யாண குணங்களைக் கொண்ட கல்யாணி, (உன்னால் அல்லவோ, எனக்கு ஸ்ரீவிபாவனர் ஸ்ரீமதாம் வரர் என்கிற திவ்ய நாமங்கள்யேற்பட்டன. அந்த நாமங்களுக்கு ஏற்ப மகிமையையும் கொடுத்து என்னை ஸர்வலோக ஆஸ்ரயனாகப் பண்ணிய) குண நிதியே, ஹே ஜானகி, சீதா, என்னை விட்டுப் பிரிந்தாயே, எங்கு சென்றாய்? உன் ரூபம், சீல நடத்தை, சுக்ஞானத்தினால் செய்யப்பட்ட மங்கள விரதங்கள், உன் நாமத்தை நினைப்பவர்களை க்ஷணமாத்திரத்தில் புனிதப்படுத்தும் பாவனமானவளே, மஹா பிரபாவங்களைக் கொண்டதயிதே, (ராமனாகிற கொழுக் கொம்புக்கு கற்பக வ்ருக்ஷம் போன்றவளே, உன்னைவிட்டுப் பிரிய ராமனாகிற நான் என்ன அபராதம் செய்தேன்?) "லக்ஷ்மணா, (இன்று முதல் நான் ஸ்ரீமானாக இல்லை. குணப்ருக் இல்லை. ஸ்ரீபதியுமில்லை, தயையுடன் கூடிய ஸ்ரீகரனும் இல்லை. என் ஒளி என்னை விட்டு பிரிந்துவிட்டது. என்னைத் திருவுக்கும் திரு என்று சொல்லக்கூடிய நாமமாகிற ஸ்ரீசர் என்று அழைக்கிறார்களே, அப்பேற்பட்ட பிராட்டியாகிற ஸ்ரீதேவி,) என் ஈஸ்வரி என் அருகே இல்லை" என்று பிரபு லக்ஷ்மணனிடம் பலவிதமாகக் கதறி அழுதார். அப்பொழுது ஸ்ரீராமன் சீதாலோலனாக, கொடிகளையும் விருக்ஷங்களையும் "சீதை எங்கே, (என் ஈஸ்வரி எங்கே?)" என்று வினவியராகத் தேடிக்கொண்டு சென்றார். லக்ஷ்மணன் பல விதமாக பிரபுவுக்கு ஆறுதல் சொன்னான். (247)

"பக்ஷிகளே, மதுவைச் சாப்பிடும் இன்ப வண்டுகளே, என்னை இன்ப மூட்டி என்னை மதுகரமாகச் செய்யும் சீதை எங்கே? அந்த தாமரைப் பூக் கொத்துப் போலவிருக்கும் சீதையைக் கண்டீர்களா? மிருகங்களே, சஞ்சலமான கண்களை உடைய பெண்மானாகிய சீதையை, என் ஜானகியைக் கண்டீர்களா? பக்ஷிகளே, சீதையாகிற பச்சைக் கிளியை கண்டீர்களா? என் கஞ்சன பக்ஷியாகிற சீதையைப் பார்த்தீர்களா? புரு மாதிரி வெண்மையான ஹ்ருதயத்துடன் கூடிய மைதிலியாகிற சீதையைக் கண்டீர்களா? துடி துடிப்புடன் கூடிய கண்களை உடைய சீதையாகிற பெண் மானைப் பார்த்தீர்களா? மீன் குஞ்சுகளைப் பார்த்துப் போஷிக்கும் தாய் மீனைப்போல விருக்கும் மீனாக்ஷியாகிற சீதையைப் பார்த்தீர்களா? பல மதுரமான புஷ்பங்களிலிருந்து உயர்ந்ததான தேனை சேகரிக்கும் வண்டு

வைப் போல, மஹா அறிவாளியான சீதையைக் கண்டீர்களா? கொஞ்சிக் கொஞ்சி சலங்கை மாதிரி கிங்கிணி சப்தத்துடன் பேசும் கோகிலமான சீதையைக் கண்டீர்களா?'' (248)

"மல்லிகை மொட்டைப் போல குவிந்தவாயை உடைய மதுர மான என் சீதையைப் பார்த்தீர்களா? இளம் மாதுளம் பூவைப் போல நிறத்தை உடைய (லலிதா) தேவியைப் பார்த்தீர்களா? மின்னல் கொடியைப் போலவும், கற்பகக் கொடி போலவும் தங்க நிறமுள்ள என் பொற் கொடியைக் கண்டீர்களா, தாமரைப் பூப் போல விகஸித்திருக்கும் புன் சிரிப்பு பூத்த சீதையைப் பார்த் தீர்களா? சரத் காலத்து சந்திரனைப் போல மிக்க தேஜஸ் வாய்ந்ததும் மிக்க அழகுடன் கூடிய ஸௌதாமினியாகிற என் சீதையைக் கண்டீர்களா? (அவளைத் தழுவிக் கொண்டால் அந்த இன்ப சுகம் நாகராஜனின் பெண்ணைப் போல வழவழப்பாயும், நழுவிவிடுமோ என்கிற பயத்தால் இறுக்கிக் கட்டி அணைத்துக் கொள்ள ஹேதுவாயிருக்கும்) நாக கன்னிகையான என் சீதை யைப் பார்த்தீர்களா? அவளை நான் நினைத்தவுடன், நான் வருண னுடைய பாசம் போல இறுகக் கட்டப்படுகிறேன். என்னை அங்கங்களில்லாத (அனங்க) மன்மதன் காமபாணத்தினால் பீடிக்கிறான். அவனுடைய பஞ்சபாணங்களாகிற குஸுமாயு தங்களால் என்னைத் துன்புறுத்துகிறான். ஹே ஹம்ஸமே, அந்த சீதையைப் பார்த்து ஹம்ஸங்கள் தன் நடை அழகை சீர்திருத்திக் கொள்ளுமே, அந்த சீதையைப் பார்த்தீர்களா? ஒரு பெண் யானை ஆண் யானையுடன் சேரும் போது எந்த மதத்தினால் அவள் கதறுவாளோ, அவ்விதமான கஜகாமினியாகிற சீதையைப் பார்த்தீர்களா? அவளுடைய பார்வையும் மிதப்பும், மிடுக்கும் கம்பீரமும் நிஜமான பெண் சிம்மத்திற்குக் கூட கிடையாதே. அப்பேற்பட்ட ஸர்வ உத்தமியானவளும் காமத்தினால் என்னை பரிதவிக்க செய்தவளும் சுந்தரியுமான சீதையைக் கண்டீர்களா?'' ராமனுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்லுவதற்குத் தயங்கிய ஜகத்தும் சகல சராசரங்களும் அழுது கொண்டு மௌனமாக விருந்து நீங்கள் எல்லோரும் இன்று என் சீதையின் மறைவினால் உங்கள் பெருமைகளை பொறுமையுடன் புகழ்ந்து கொண்டிருக் கிறீர்கள். அதனால் தான் மௌனமாக விருக்கிறீர்கள். என் சீதையை எங்கேயாவது ஒளித்து வைத்திருக்கிறீர்களா? சொல் லுங்கள். நான் உங்களை விடமாட்டேன்.'' (249)

[தியானம்

ராமா, நாராயணு, தர்மபுத்ரர், நளன், தியாகராஜர், மார்க்கண்டேயர், தேவலர், தேவஸ்தானர், ராஜஸ்ரீயாகிய சீதை, உமை, சம்பு நாரதர் யாவரும், ராம நாமத்தை அகிலஸாரம், ராமநாமமே அஷ்டாக்ஷரத்தைப் போல தாரகமந்திரம், ராமநாமமே ஸத்யம் என்று விஸ்வாஸம் கொண்டு ராமனுடைய கீர்த்திகளை ஸுஸ்வரமாகப் பாடுவது நித்யமும் நிரந்தரமுமாக சுகத்தைத் தரும் என்று எனக்கு கீர்த்தனங்களால் வழிகாட்டினர்கள். ஸர்வ சாக்ஷியான சூர்யனே, வாயு பகவானே, அக்னிதேவனே, இந்திரனே, வருணனே, குபேரனே, யமதர்மராஜனே, கேளுங்கள். இந்திரனே, ஆகாயமே, பூமியே, நக்ஷத்திரங்களே, பகல் இரவுகளே, ருதுக்களே கேளுங்கள். அன்று புண்ய ஸ்லோகனை நளனுக்கும் தமயந்திக்கும் உங்களால் சொல்லப்பட்ட சத்திய மொழிகளை மீண்டும் கேளுங்கள். அதாவது, "நளனுக்கு ஏற்றவள் தமயந்தி; தமயந்திக்கு நளன் தான் ஏற்றவள், அது போல குற்றமற்ற சீதை ராமனுக்கே மனைவியாக ஏற்றவள்." அழகிய முகமுள்ளவளும், நீண்ட கண்களுள்ளவளும், சியாமையும், சோகத்தால் சூழப்பட்டவளும், ராமதியானமே உருவாகக் கொண்டவளும், அவிதி என்கிற சகலபோகங்களையும் தியாகம் செய்து, அழுக்கால் பூசப்பட்ட அங்கங்கள் உள்ளவளும், அழகிய புன் சிரிப்பால் என் பிரபு ஸ்ரீராமனை சந்தோஷப்படுத்துபவளும், புண்ய ஸ்லோகையும், விசாலாக்ஷியும், பரம சுபமானவளும், சிரமத்தால் மயக்கமடைந்தவளும், சிவந்த கடைக் கண்கள் கொண்ட ராமனுல் ஆசையுடன் தழுவப்பட்டவளும், விசாலமான பின் தட்டுக்களை உடையவளும், ராவணனை ராமன் லங்கைக்கு வருவதற்கு முன் கடைக்கண்களால் எரித்தவளும், மான், புரு இவைகளைப்போல் பயந்த ஸ்வபாவத்தை உடையவளும், துக்கத்தின் முடிவை எதிர்பார்க்கிறவளும், குலஸ்திரிக்குள்ள கற்பு என்கிற வ்ரதத்துடன், கஷ்டத்தை அடைந்த போதிலும் தாமே தம்மைக் காத்துக் கொள்ள பலம், பொறுமை, பதிவ்ரதம் பூண்டவளும், தான் உயிர்தரிப்பவளும், ராமனைவிட்டு தீன ஸ்திதியை அடைந்த என் தாய், ஜகதாம்பா, சீதா பிராட்டியை நான் அடிக்கடி வணங்குகிறேன். அர்ஜுனன் ஊர்வசியினிடம் முன்பு சொல்லிய வரம்பு மீருத தர்மச் சொற்களால் அவளை நான் பூஜித்து ஆராதிக்கிறேன். மனோ வியாதிகளாலும், விதியின் கொடுமையினுலும் பூர்வ கர்மங்களின் தோஷங்களாலும் ஏற்பட்ட அவித்யா காரணமாக வந்த என்னை,

ராக்ஷஸிகளைக் கட்டிக்காத்த சீதை தான் காப்பாற்றவேண்டும். மஹாத்மாவும் சாஸ்திர ஞானியுமாகவிருக்கும் புருஷனும் ஸ்திரியும் விதிவசத்தாலோ சாபத்தினாலோ மறைந்து வாழ்கிறார்கள். சீதாதேவி, ஜனகர் குலத்தில் பிறந்து தசரதருடைய குலத்தில் வாழ்க்கைபெற்று எப்பொழுதும் தயையுடன் கூடிய நீ ஸ்ரீராமச்சந்திரனை எனக்கு காட்டிக்கொடுக்கமாட்டாயா? நீயும் என் விஷயத்தில் தயைசெய்வாய் அம்மா.]

" என் ஜானகி பில்வபழங்களைப் போல கடினமானதும் ருசியான மார்பு பிரதேசங்களை உடையவள். அவளுடைய நிறம், துடையின் அழகுகள் ஜாம்பூனதம் என்கிற உருக்கி வார்த்த தங்கம்போலவிருக்கும். வாழைத்தண்டு போலவும் குளிர்ச்சியையும் கொண்டன. சியாமை போன்றவளும், குளிர்காலத்தில் இள வெப்பம் கொடுப்பவளும், கோடை காலத்தில் இளம் குளிர்ச்சியையும் கொடுக்கும் துடைப் பிரதேசங்கள் உடையவளே, கரபோரு, லஜ்ஜை, நாணம், அடக்கமுள்ளவளும் என்னிடம் கலவிச் சேரும்போது மனத்தில் லவலேசமும் சங்கோசமும் அதிருப்தியும் ஒருக்காலும் காணப்படாதவளாகவுமிருந்தாள். அவளுடைய ஹிருதயதழுவுதல் என்தேக மனநோய்களைப் போக்கும் சிந்தாமணியாச்சுதே. அப்பேற்பட்ட ஜானகி என்னைவிட்டுப் பிரிந்தாள். சுகுமாரி, நீ மங்கள அங்கங்களை உடையவள். (ஸ்யாமையான இவளது புருவங்களின் நடுவில் உடன்பிறந்ததும், மேலானதும் தாமரை மலர் போன்றதும், ராமனுக்கு மாத்திரம் பிரத்யேகமாகக் காணப்படும் மறுக்களை உயர்ந்த அழகு சௌபாக்ய லக்ஷணங்களாகக் கொண்டவளுமான என் ஹரி வல்லபே, மேகத்தால் மறைக்கப்பட்ட சந்திரனைப்போல என்னிடமிருந்து கவரப்பட்டாய். கருமையான கூந்தலின் நுனியுள்ளவளும், தாமரை மலர்போன்ற கண்களை உடையவளும், கருமையான விழிகள் உள்ளவளும், அற்ப பாக்யமுள்ள என்னால் தனியாக வனத்தில் விடப்பட்டாய்.) பாலையான உன் பிரிவினால் பயங்கரமான துக்கத்தில் இருக்கும் என்னை அற்ப புத்தியுள்ளவன், அற்ப பாக்கிய முள்ளவன், என்று எல்லா சேதன அசேதனங்களும் என்னைக் கேலி செய்கிறார்கள். கல்யாணி, நீ என்னை விட்டுப் பிரிந்ததால் இவைகள் பெருமிதத்துடன் என்னைப் பார்த்துப் பரிகாசம் செய்கின்றன. பெரிய ஸம்பத்லக்ஷ்மி தங்களிடம் வந்துவிட்டதாக இவைகள் தங்களை நினைத்துக்கொண்டு, இன்று, உன் பிரிவினால் வாடும் என்னை, உன்னை சதா தியானிக்கும் என்னை, (தாமரைப் பூவின் உட்காய் போன்ற காந்தியுள்ளவ

னும், உன் மனத்திற்குப் பிடித்தவன் என்று நீயே அடிக்கடி சொல்லும் என்னை,) பிரிய பிராணேஸ்வரி, எல்லாம் கேலி செய்கின்றன. நீ எங்கு போய் ஒளிந்து கொண்டாய்? குற்றமற்ற சீதே உன்னை நான் எங்கு காண்பேன்?'' (250)

''தேவி ஜானகி, இவைகள் உன்னிடம் பொருமை கொண்டு தங்களைப்பற்றி பெருமையாக நினைத்துக் கொள்ளட்டும். நீ எவ்விதம் அதை சகித்துக் கொண்டிருக்கிருய்? (நாராயணருக்கு மஹாலக்ஷ்மி தேவி எவ்விதம் அனபாயினி என்கிற பிரியமான தேவியாக விருக்கிருளோ, அதுபோல உன்னுடைய ஸாக்ஷாத்காரத்தினுல் என்னைச் சதா பிரியம் செய்துகொண்டு வாழ்ந்து வந்த ராம பிரியே,) உன்னை உன் கிருபையினுல் என்முன் ஓடி வந்து வெளிப்படுத்திக்கொள். பிரகடனம் செய்துகொள் அம்மா. (அகிலாண்ட கோடி பிரும்மாண்ட நாயகியே, சப்தரூபமாக விருப்பவளே, மஹா மாயையே, என் ஸ்வர்ண சக்கரத்தின் பிந்துவே, என் காமேஸ்வரி, காமாக்ஷி, என்னை ஆஹ்லாதப் படுத்தும் மஹேஸ்வரி, என்னிடம் ஓடிவா. நான் உன் காருண்யத்தை எதிர்பார்க்கிறேன்.) தேவி ஓடிவந்து என்னை அணைத்துக்கொள்.'' இவ்விதமாக ராமச்சந்திர பிரபு லக்ஷ்மண அக்ரஜன், (ஸதாசிவன் காமேஸ்வரியைப் பூஜிப்பதுபோல,) மஹா அறிவுடன் சீதையை வர்ணித்தார். (ஆம் ஸஹஸ்ர கோடி பிரும்மாண்ட நாயகி, ஆதிசக்தி பரதேவதையை பிரபு பிரளய காலத்தில் உதரத்தில் வைத்துக்கொண்டு பலவிதங்களாக யோகநித்ரையை துரியாவஸ்தையில் எவ்விதம் உபாஸித்தாரோ, அது மாதிரி பிரபு, கதமாயன்,) இன்று மஹா விரஹ தாபங்களுடன் காம மோஹிதனுக, சீதா லோலனுக, தன்னுடைய ஆனந்தவல்லியை பாஹ்யரூபமாகத் தேட ஆரம்பித்தார். (அவிதி என்கிற தியாக புத்தியுடன் கூடிய பிரபு இன்று ஜடாமுடி தரித்து பரம வைராகியின் வேஷம் அணிந்து வனத்தில் சஞ்சரிப்பவராக ஹ்ரீங்கார மந்திரங்களால் லலிதா தேவியை அர்ச்சிப்பதுபோல) ஸர்வாங்க சுந்தரியாகிற சீதையை மனுஷ்ய அவதாரத்திற்கு யேற்ப சாதாரண புருஷன் தன் மனைவியாகிற ராஜ்யஸ்ரீயைத் தேடுவதுபோல தேடினுர். (251)

என் பிரபு ஸ்ரீராமன் பூர்ண காமர். அவரை நினைத்த மாத்திரத்தில் ஆஸ்ரிதர்களின் மனோபீஷ்டங்களைப் பூர்த்தி செய்யும் பிரபு. ஔதார்ய குணத்தில் பரிபூர்ண காமர். (இன்று சீதையில்லாமல் பூர்ண ரஹிதராகவும்,) ஆனந்தம் பரப்பிரும்மேதி யோனிঃ என்கிறபடி ஆனந்த ஸாகரமாகவிருக்கும் ஸ்ரீராமன்

சீதையின்றி சோகத்தில் மூழ்கியவராகவிருந்தார். (எந்த பிரபுவின் ராமநாமம் என்கிற திவ்யநாமத்தைப் பகவான் மஹேஸ்வரர் பார்வதி தேவிக்கு உபதேசித்து, வைராக்யம் என்கிற மோக்ஷ உபநிஷத்தை அனுஷ்டித்துக் காட்டினாரோ;) இறப்பு பிறப்பு கிழத்தனம், வியாதி, துக்கம் சந்தோஷத்தின் ஸ்திரமின்மை ஆகிய ஷடூர்மிகள் போலவிருக்கும் ஸம்சார ஆர்ணவத்தின் சுழல்களிலிருந்து விடுதலை கொடுக்கும் பிரபு, நாராயணர், அவிநாசி, இன்று சாதாரண ஜகத்புருஷனாக சீதையை நினைத்துக் கதறுகிறார்; மனுஷ்ய நாடகம் ஆடி ராவணனைக் கொல்ல பூமியில் அவதரித்த ராமன் சாதாரண மனிதன் துக்கங்களில் சிரமப்படுபவன் போலவும், தர்ம பராயணனாக விருப்பவனாகவும், ஸஹஸ்ர நயனங்கள் உள்ள தேவராஜனுடைய காரியத்தை ஸாதிப்பதற்கு இன்று சீதையை ராவணனிடம் பறிகொடுத்து, தேவமாதர்களின் சிறையை மீட்பதற்காக ஸ்வசங்கல்பத்தினால் "ஸ்வராட்" ஆகிற பகவான் தன்னையும் தன்னுடைமையான திருமா மகளையும் அனர்த்தத்திற்கு உள்ளாக்கினான். ஹந்தோ, அவன் கருணை.) அந்த தயாமூர்த்தியாகிற ராமன் தேடி நடந்துகொண்டு வரும் போது கழுகு அரசனான ஜடாயு பூமியில் தள்ளப்பட்டு ரத்த காயங்களுடன் அலங்கோலத் திசையில், ஸ்ரீராம சரணங்களே கதி என்று நம்பி, ராமநாமத்தை முணுமுணுத்துக்கொண்டு ஜடாயு அவதிப்படுவதைப் பார்த்தார். அவருடைய தீனஸ்திதி, தியான யோகத்தில் அமர்ந்துகொண்டு ராம சரணங்களில் ஈடுபாடு, * மஹா புருஷனின் திருவடிகளின் சுபமான லக்ஷணங்

---

[* பிராட்டியின் அழகுச் செல்வங்களை பிரபு துளசிதாஸர் ராமன் வாக்கினால் சொல்கிறார். சகல சேதன சேதனங்களில் உள்ள அழகின் அம்சம் நிறைந்த ஒவ்வொரு பக்ஷி, மிருகம் யாவற்றையும் விடாமல் சொல்கிறார். ஒவ்வொரு அம்சமும் ஸ்ருஷ்டியில் தனிப்பட்ட அழகுடன் விளங்கியதாகவும், சீதை ஒருவளிடத்தில் தான் எல்லா அம்சங்களும் ஒருங்கே சேர்ந்து, அழகின் நிதிபோலகூட வசித்தன என்று சொல்லுகிறார். கண்கள் மீன்களுக்கும், கருங் குயில்களுக்கும், சஞ்சலமான மானின் கண்களுக்கும் ஒப்பிடுகிறார். கிளியின் மூக்கின் அழகும், புருவின் கழுத்தும், வண்டுகள்போல கருநிறம் கொண்டு சுருள் சுருளாகவிருக்கும் கேசபாசமும், கோகிலம்போல ஸுஸ்வரமாகப் பாடும் இனிமையும், மல்லிகை மொட்டுப்போல அழகான தந்த வரிசைகளும், மாதுளம்பழத்தின் உள் அழகுபோலத் தந்த வரிசைகளையும், மின்னல்போல நிறம், ஒளியும், தாமரைப்பூ பூத்துச் சிரிப்பது போலவும், அழகானதும் உயர்ந்த லக்ஷணங்களைச் சொல்வது போலவும், சிகப்பு நிறமாகிற கால்

களில் ஈடுபட்ட பக்தி, வாய்விட்டு ராமா, ராமா என்று முணகிக் கொண்டு, இருந்த ஜடாயுவின் நிலை பார்க்கப் பரிதாபமாக விருந்தது. (252)

(இருபத்தாருவது தத்வமாகிற மஹா புருஷனுல் இருபத்தைந்தாவது தத்வமாகிற புருஷன் பார்க்கப்படுகிறது போல,) பகவான் ஸ்ரீராமச்சந்திரன், கிருபாஸிந்து, தன்னுடைய செந்தா

---

கைகள், கண்கள், இன்சொல், மனம், பார்க்கப்பார்க்க ரம்யம், ஆகிய குணங்களைக் கொண்ட முகம், சரத்காலத்தின் பூர்ண சந்திரன் போல பொலிவு பெற்ற முகம், நாகங்கள்போல நீண்டு தொங்கும் தலைமயிர் பின்னல்கள், வருணனுடைய பாசம்போல ஆகர்ஷித்து வசப்படுத்தும் இளம் புன்சிரிப்பு, மந்தஸ்மிதம், மன்மதனின் தனுஷ்போல வளைந்த நெற்றிப் புருவங்கள், நடைகதி, ஆகியவைகளில் ராஜ ஹம்ஸத்திற்கும், மதயானைக்கும் ஒத்தது போல அழகு, கம்பீரம், மதம், மந்தகதி, பெண் சிம்மத்தைப் போல ஒடுங்கி இளைத்திருக்கும் இடுப்பு, ஸுமத்யமா, என்கிறது போலவும், வில்வப் பழங்கள் போல கடினமானதும், பருத்து ருசியுடன் வசீகரிக்கும் ஸ்தன பிரதேசங்கள், தங்க வாழைத்தண்டு போல நீண்ட மென்மையான துடைகள் ஆகிய எல்லா அழகு வரிசைகளும், சீதையின் அழகு விலாஸங்களில் அடங்கி அமர்ந்திருந்தன. இவைகளைத் தவிர இன்னும் சில அழகு அம்சங்களும், சுபத்தைத் தரும் மறுக்களும், சாமுத்ரிகா லக்ஷணங்களும் தேவ ஸ்திரிகளுக்கு மாத்திரமே காணப்படும் பிரத்யேக விசேஷ அழகுகளும், சீதையிடம் பரிணமித்து விளங்கின என்கிருர். இன்று சீதையின் மறைவினுல் அந்த சுப லக்ஷணங்கள் மீண்டும் அந்த அந்த பிராணிகளுக்கு வந்து சேர்ந்து அழகின் உயர்த்தியை அவைகள் திரும்பி அடைந்ததாகச் சொல்கிருர்.

அதே மாதிரி மஹா புருஷ லக்ஷணங்கள் பகவானுடைய ஒவ்வொரு திருவடியிலும், 24 லக்ஷணங்களாக வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இடது பாதத்தில் உள்ள லக்ஷணங்கள்: (1) ஊர்த்வ ரேகை (2) ஸ்வஸ்திகா ரேகை, (3) அஷ்டசோணம் (4) லக்ஷ்மியாகிற இருதங்க சுருள்கள் போல வட்டங்கள் (5) ஏர் (6) உலக்கை (7) ஆதிசேஷன் போல உருவம் (8) அஸ்திரம் (9) சூன்யவடிவுடன் விளங்கும் ஆகாயம், (10) தாமரைப்பூ (11) ரதம் (12) வஜ்ரம் (13) யவதான்யம் (14) கற்பகவிருக்ஷம் (15) அங்குசம் (16) கொடி (17) முகுடம் (18) சுதர்சனசக்ரம் (19) சிம்மாஸனம் (20) யமதண்டம் (21) சௌரி (22) குடை (23) மனித உருவம் (24) மலர் மாலை.

வலது திருவடியில் காணப்படும் விசேஷலக்ஷணங்கள்: (1) சரயு நதி (2) பசுவின்குளம்பு (3) பூமி (4) யானை (5) சிறிய கொடி (6) நாகப்பழம் (7) மூன்ரும்பிறைச் சந்திரன் (8) சங்கு (9) ஷட்கோணம் (10) முக்கோணம் (11) கதை (12) ஜீவனைக்காட்டும்

மரைக் கண்களால் ஜடாயுவைத் தானே வலுவில் சென்று பார்த்தார். தனது செந்தாமரைக் கைகளால் அந்த மஹா உத்தம பிறவி கொண்ட ஜடாயுவை, (லக்ஷ்மி நரசிம்மன் பிரஹ்லாதனை உச்சந்தலையில் தடவுவதுபோல,) தடவிக் கொடுத்தார். ரகு வீரன், பிறர்களின் துன்பங்களைப் போக்கும் ரக்ஷகன், ரணதீரன் இன்று தனக்காக உயிர்கொடுத்த மஹாவீரனைக் கண்டார். அப் பேற்பட்ட தீனஸ்திதியை அடைந்த ரகுகுல உத்தமன், பிறரிடம் பிரதிகிரஹம் ஒன்றையும் அடையாத வம்சத்தினர்களான ரகு குலத்தில் பிறந்தவன், இன்று தனக்காக, பிராட்டிக்காக, உயிர் கொடுக்க முன் வந்த பரம ஔதார்யனைக் கண்டார். குணமூர்த்தி யான ஸ்ரீராமன், தன்னையும் அறியாமல், சகல மங்களங்களை வாரிக் கொடுக்கும் மஹா நாராயணமூர்த்தியைப் போல ஜடாயு வின் முன்பு காணப்பட்டார். ஸ்ரீவத்ஸவக்ஷ: ஸ்ரீநிவாஸ: ஸ்ரேய: என்று சொல்லும்படியிருக்கும் பகவான் ராமச்சந் திரமூர்த்தி, ஜடாயுவின் முன்பு தோன்றி, பரம சுந்தராங்கதனாக, சுகுமாரனாக, சோபைகளின் ஸ்ரீநிநியைப்போல, காருண்யக் கவ சனாக, தயை நிரம்பின மனம் உள்ளவனாக, புஷ்கராக்ஷங்கள் புஷ்கலம் என்கிற மேகங்கள் போல அம்ருத கடாக்ஷங்கள் வர் ஷிப்பவனாக, ஸ்ரீ சீதாராமன் ஜடாயுவுக்குக் காக்ஷி அளித்தார். அவருடைய புண்ய தர்சனம், புண்ய ஸ்பர்சம், புண்ய நினைவு, ஆகிய எல்லாம் ஜடாயுவின் உபாதைகளைப் போக்கின. அவ ருடைய ஆத்மா சாந்தியுடன் பிரகாசித்தது. (253)

அப்பொழுது கிருத்ரராஜன் ஜடாயு சீதையின் எல்லா விருத் தாந்தங்களையும் மிக்க தைரியத்துடன் சொன்னார். ''என்னுடைய பவபயங்களைப் போக்கும் ஸ்ரீராமா, கேளு. இந்த அவஸ்தை ராவணனால் எனக்குச் செய்யப்பட்டது. அந்தத் துஷ்டன் ஜான கியை அபஹரித்துக்கொண்டு போனான்.'' (254)

---

அணுப்போல ஒருபுள்ளி (13) பிந்து (14) சக்தி ஆகிற அரைவட்டம் (15) அம்ருதசாகரம் (16) வயிற்றில் உள்ள மூன்று மடிப்புக்கள் கொண்ட மூன்று கோடுகள் (17) மீன் (18) பூர்ணசந்திரன் (19) புல்லாங்குழல் (20) யாழ்போன்ற வாத்தியம் (21) தனுஷ் (22) அம்புராத்துணி (23) ஹம்ஸம் (24) உச்சிப்பு சுட்டிபோல் ஒரு ஆபரணம்.

சீதையின் இடது பாதத்தில் ராமனுடைய வலது பாதத்தின் லக்ஷணங்களும், அவளுடைய வலது பாதத்தில் ஸ்ரீராமனுடைய இடது பாதத்தின் லக்ஷணங்களும் இருக்கிறதாகச் சொல்லப்படுகின்றன.)

[தியானம்

ஹே நாராயணி நரதஸ்வரூபிணி, வேதமந்திர காரிணி, மத்ஸ்ய கூர்ம வராஹாதி அவதாரங்களுக்கு மூலகாரிணி, என் காமாக்ஷி, மதுசூதன சித்தத்தில் ஆனந்தமாக வீற்றிருக்கும் ராஜாராஜேஸ்வரி, ராவண கும்பகர்ணன், சம்பராசுரன், பராசராதி முனி ஹ்ருதயத்தில் வீற்றிருக்கும் ஆத்மவித்யையே, தேவி எனக்கு விமுக்தி பலத்தைக் கொடுப்பவளே, சரஸ்வதியே, நீதான் யக்ஞவித்யையாகிற கர்ம காண்டம்; உபாஸனையாகிற மஹாவித்யை; இந்திரஜாலம் என்கிற குஹ்ய வித்யை; முக்தி பலத்தைக்கொடுக்கும் ஆத்மவித்யை; தர்க்க வித்யையாகிற ஆன்வீக்ஷியும்; ருக்யஜுர் ஸாமம் என்கிற மூன்று வேதங்களும், சில்பம், வாணிஜ்யம் என்கிற வார்த்தாவாகவும், ராஜதர்மம் ஆகிற தண்ட நீதியும், நீயே ஸர்வவித்யைகளாகவும் விளங்குகிறாய். சங்கீதபிரியே, சம்புவின் ஹ்ருதயத்தில் உல்லாஸ ஹம்ஸமாக விளையாடுகிறாய். ராமநாதனால் பூஜை செய்யப்பட்ட மஹா நாராயணி, உன் அழகினால் எல்லோரையும் ஸ்தம்பனம் செய்கிறாய். ஜகத்மண்டலம் பூராவும் உன் சேஷ்டிதங்களாகிற மஹத் என்கிற உன் மாதத்தை அடைந்திருக்கிறது. ஸர்வார்த்த ஸாதினியாகிய ஆதிசக்தி தேவதையே, என்னைக் காப்பாற்று. என் காமம் க்ரோதம் மதம்போன்ற துர்விஷயங்களுக்கு அங்குசம்போன்றவளே, உலகம் பூராவும் ஸர்வஞானமயமாக விளங்கும் பரமேஸ்வரி, உனக்கு அநேக கோடி நமஸ்காரங்கள் பண்ணுகிறேன். ராமஶ்ரீ பீடத்தில் வீற்றிருக்கும் சித்த லக்ஷ்மியே, மஹாபத்ரையே, என் மோஹங்களுக்கும் விஷயப்பற்றுதல்களுக்கு மஹாகாளியாக விருக்கும் தேவ தேவியே, சக்ரேஸ்வரி, ஸர்வேஸ்வரி உனக்கு அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். புண்யஸ்லோகனும், குற்றமற்றவனும், நீண்டகைகளை உடையவனும், தமயந்தியின் கணவனான நளன் என்கிற நிஷாத ராஜனுக்கு கார்க்கோடகன் என்கிற சிறந்த பன்னகன் எவ்விதம் அருள் செய்தானோ, அதுபோல என் கஷ்டங்களிலிருந்து விடுவிக்கும் காளியே, ஸம்சாரத் தாபங்களிலிருந்து எனக்கு ரக்ஷணம் தருவாய். எனக்கு ஸர்வ ஸௌபாக்யங்களை அருள்வாய். சந்திரன் சூரியன் அக்னி ஆகிற மூன்று கண்களை உடைய அம்ருதே, விஷ்ணு பகவானுக்கு யக்ஞமயவடிவாக பிரகாசிப்பவளே, சரணம், சரணம்.]

ஜடாயு மீண்டும் சொன்னார். "கோஸாயி, சரணாகதர்களை ரக்ஷிக்கும் ராமநாதா, பிறர்களுக்கு கொடூரம் செய்யும் (ரவம்

செய்யும்) ராவணன் தெற்குதிக்கை நோக்கி சீதையுடன் சென்றான். குர்ரீபக்ஷி மாதிரி அத்யந்த விலலாபங்களுடன் அந்த பெண் சீதை அலறிக்கொண்டு போனாள். பிரபு உம்மிடம் இந்தச் செய்தியைச் சொல்லி, உயிரை விடவேண்டும் என்கிற இச்சையினால் பிராணனைப் பிடித்துக்கொண்டிருக்கிறேன். பரமேஸ்வரா, (நாராயணா, சித்தேஸ்வரியாகிற) சீதை உன்னை விட்டுப் பிரிந்துவாடுகிறாள். மிக்க துன்பம் அடைந்திருக்கிறாள். கிருபாநிதி, இனிமேல் எனக்கு சந்தோஷத்துடன் போக விடை தாரும்.'' (255)

ராமன் சொன்னார். ''பிரிய ஆத்ம பந்துவே, சரீரத்தை ரக்ஷித்துக்கொள்ளும். நான் உயிர்தருகிறேன்.'' அந்த சமயம் ஜடாயு தனக்குள் யோசித்தார். பிறகு தீர்க்கமான அறிவினால் ஏற்பட்ட புன்சிரிப்புடன், வார்த்தைகளை அவர் பிரபுவினிடம் கொட்டலானார். ''ராமா, யோகிகள் தங்கள் ஹ்ருதயத்தில் சதா தங்களைத் தியானித்து அனவரதமும் நிஷ்டையுடன் உம்மை எதிர் பார்த்து, காலத்தை கழிப்பார்களே, அப்பேற்பட்ட பிரபுவாகிய நீர், உமது திருநாமத்தை மரண சமயத்தில் ஒரு தடவை சொல்லி, மஹா அதமனாகிற துஷ்டன்கூட முக்தியை அடைகிறான்; இந்தவிதமாக உம்மை வேதங்கள் கோஷிக்கின்றன. ஹே முகுந்தா,'' (256)

''நீர் (இப்பொழுது தயை ரூபமாகிற சீதையைத் தேடுவதின் வ்யாஜமாக என்முன் வந்திருக்கிறீர்.) (அந்த மஹா பாக்கியவதியே உம்மை என்முன் நிறுத்தியிருக்கிறாள். அகோசரமானவரும், அதோக்ஷஜருமான நாராயணா,) இப்போது என் திருஷ்டி கோசரமாக நீர் புலப்படுகிறீர். நானும் உம்முடைய திருஷ்டிபதத்தில் இருப்பவனாகவும், உம்மாலேயும் பார்க்கப் பட்டவனாக ஆகிறேன். பிரணதார்த்தி பிரபோ, நாதா, என் உடலுக்கும் என் ஆத்மாவுக்கும் இதைவிட பூர்த்திசெய்யும் காலம் எப்போது மீண்டும் வரும்? இனிநான் எதற்காக உயிரையும் சரீரத்தையும் தரிக்கவேண்டும்? (அதுளித சங்கல்ப நாராயணா, ரகோத்தமா, ரகுராய் என்னை நீதான் காப்பாற்ற வேண்டும். என் கர்ம பிரபாவங்களுக்கும், அனாதி காலமாக ஓடி வரும் கர்ம வாசனைகளுக்கும், பிரவிருத்திகளுக்கும், அக்ஞான மயமாகவிருக்கும் கர்ம ஞான பக்தி கதிகளுக்கும் ஸர்வஸம் க்ஷோபண சக்தியாகிற உமது கிருபையை என்மீது அபார காருண்யத்துடன் செலுத்தும்,'' என்று சொல்லும்போது,) பெரிய உடையாருடைய பரிபூர்ண லோசனங்களிலிருந்து அம்



பிரபு ராமச்சந்திரன் நேத்ரங்களில் கண்ணீர் பெருக, ஜடாயுவின் உயிர்த் தியாகத்தைப் புகழ்ந்து பேசுகிறார். "பிள்ளாய், உன்னுடைய ஸ்ரேஷ்ட மான கர்மத்தினால் சிறந்த கதியைப் பெற்றாய். எவர்களுடைய மனதில் பிறர்களுடைய ஹிதம் இருக்கின் றதோ, அவர்களுக்கு ஜகத்தில் எது வும், எந்த மேலான கதியும், அடை யப் படாததாகவில்லை."

  

ருத தாரைகள் பெருகிக் கொண்டிருந்தன. ஆனந்த பரவசமடைந்த அந்த உத்தமமானவருடைய சரீரத்தில், (ராம ஸ்பரிசம் கொண்ட உத்தம தேஹத்தில், மஹா கிருதலக்ஷ்ணன், கிருத பூர்ணன், கிருதாக்ருத்யனுகிற) ஜடாயு வெகுசிரமத்துடன் மூச்சுவிட்டுக்கொண்டிருந்தார். ரகுராயினுடைய புஷ்கர நேத்ரங்களிலிருந்தும், (புஷ்கரம் போன்ற க்ஷேத்திரத்தில் உள்ள ஹ்ருதயத்திலிருந்து பங்கஜம் புஷ்பித்தது போல,) அம்ருத கருணையாகிற தாரைகள் பெருகி வழிந்துகொண்டிருந்தன. தன் அணைப்பில் மார்புடன் இரு தீர்க்கமான பாஹுக்களால் பகவான் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி ஜடாயுவை வாரி அணைத்துக்கொண்டார். அதிக கருணை வசமடைந்த பிரபு, (உதார ஹ்ருதயர், நாராயணர்,) தழுதழுத்த குரலில் சொல்ல ஆரம்பித்தார். "ஐயனே, உன்னுடைய நிஜஸ்ரேஷ்ட கர்மத்தினுல் யாவருக்கும் கிடைக்காத நாராயண பதத்தை நீ அடைவாய். அது உனக்காக காத்துக்கொண்டிருக்கிறது." (257)

துளசிதாஸர் சொல்லுகிருர். "ராமன் சொன்னதாக சொல்கிருர்." "எந்த மஹானுபாவனிடம் பிறருடைய நன்மைகளும், ஹிதங்களும் சதா ஹ்ருதயத்தில் வசிக்கின்றனவோ, அந்த மஹாத்மாவினுல் இந்த ஜகத்முழுவதும் ஸாதிக்க முடியாதது ஒன்றுமில்லை. அவன் ஒருக்காலும் அவகதியை அடையவே மாட்டான். அதுமாத்திரமா? பிறர்களுக்கு மிக்க துர்பலமாகவிருக்கும் அனுத்தமமான பரமாம்கதி என்கிற லக்ஷ்மி நாராயண ஸம்பத்தையும் அவன் பெறுவான். என் பிரியனே, உமது இஷ்டப்படி சரீரத்தைத் தியாகம் செய்துவிட்டு, நான் கொடுக்கும் பரம்தாம் என்னும் பதத்தை நீர் அடைவீர். நீர் இன்று பரிபூர்ண காமராகிவிட்டீர். உமக்கு எல்லாம் சித்தித்து விட்டது." (258)

[தியானம்

ஹே ராமா, ஜானகி மனோஹரா, நீரஜாக்ஷா, சீதாதேவியின் பிரபோ, மஹேஸ்வரி, யோகிகளின் ஹ்ருதயத்தில் ஸதா தாண்டவமாடும் மனோகரி, புண்யஸ்லோகனுன நளன், தர்மர், அரிச்சந்திரன் முதலிய ராஜாக்களின் மனத்தில் ஸதா வசித்துக் கொண்டிருக்கும் தர்மதேவதையே, என்னிடம் ஸதா கிருபையுடன் இருக்கவேண்டும். அற்ப ஸ்துதிசெய்யும் என்னிடம் பரம ப்ரீதியை அடையவேண்டும். என் அபராதங்களை பொருட்படுத்தாது என்னிடம் க்ஷமைசெய்ய வேண்டும். விசாலாக்ஷி,

அழகிய முகம் உள்ளவளே, நீண்ட கண்களுள்ள காமாக்ஷியே, அன்புடன் பார்க்கும் மீனாக்ஷியே, நன்மை தீமை யாவையும் பார்க்கும் வாயுசந்திரன் சூரியன் போலவிருப்பவளே, உன்னை முயற்சியாலும் தவத்தாலும் வந்து அடையவேண்டும். நந்தன வனத்தில் உள்ள புஷ்பங்களாலும் மகரந்த வாசனை திரவியங்களாலும் மஹரிஷிகளின் ஸ்துதிகளாலும், நித்யம் ஆராதனம் செய்யவேண்டும். மஹாலக்ஷ்மியே, தருணியே, புஷ்டியே கருமையான கண்கள் உள்ளவளே, அஞ்சன நிறமுள்ள ராமனின் பத்னியே, அழுக்கடைந்தவளே, அக்னியின் சாந்தி போலவும் ராமனைவிட்டுப் பிரிந்ததினால் சமனமாகிற அக்னியைப் போல சூடுள்ளவளே, தவக்கோலத்தில் இருப்பவளே, தர்ம வத்ஸலே, மஹாதுர்க்கே நான் நமஸ்கரிக்கிறேன். காத்யாயனி, காளராத்திரி, ஞானஸ்வரூபிணி, வாராஹி, கருத்மானால் சோபிக்கப்பட்ட ருத்திதேவதையே, அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். ஸர்வகாமத்வராகிய ஸ்ரீராமனிடம் அன்பு செலுத்திய என்னை ரக்ஷி, அம்மா, தாயே.]

'பிரியனே, தயவுசெய்து எனது பிதாவான தசரதரிடம் சீதையின் ஹரணத்தைப்பற்றிச் சொல்லவேண்டாம். நான் அவருக்குப் பிறந்த புத்ரனானால், அந்த தசகண்ட ராவணன் அவன் குடும்பத்துடன், தண்டனை செய்யப்பட்டு, பேருபகாரத்தைப் பெற்றவனைப் போல ஸ்வயமாகவே அவரிடம் வந்து எல்லாவற்றையும் சொல்லுவார்.'' (259)

கழுகு ராஜனாகிற ஜடாயு ஹரிநாமத்தை உச்சரித்துக் கொண்டு, தனது திவ்ய சரீரத்தைத் தியாகம் செய்தார். (ஸ்வேத தீபத்தில் இருக்கும் ஸாத்யரைப்போல ஹரியினுடைய) திவ்ய ரூபமெடுத்துக்கொண்டு, உத்தமமான பலவிதமான ஆபரணங்கள், விலை உயர்ந்த பட்டு பீதாம்பரம் அணிந்துகொண்டு, நீலமேக ஸ்யமாள மரகதமணி உருவம்கொண்டு நான்கு புஜங்களுடன், விசாலமான வக்ஷஸ்தலம், ராம பிரேமையினால் வழிந்து ஓடும் பரிபூர்ண லோசனங்களால் க்ருதலக்ஷணனாக, கிருதாஞ்சலியுடன் சிதையை மனத்தில் தரித்துக்கொண்டு, ராமனை ஸ்துதிகளால் புகழ ஆரம்பித்தார். (260)

''ஜயஜய் ராமா, உனக்கு ஸதா நித்ய மங்களம், நித்திய ஜயங்கள் உண்டாகட்டும். உம்முடைய மரகதபச்சை போல பிறர்களை செழிக்கவைக்கும் அனுத்தமமான ரூபத்தை, ஹரிரூபத்தை நான் எவ்விதம் வர்ணிப்பேன்? ஸர்வசக்தி மானாகவிருந்தும், பிறப்பிலும் ஜாதியிலும் எளியதாஸ உள்ளம்

  

படைத்த கழுகு, ஸர்ப்பம் போன்ற ஜந்துக்களுக்கு உத்தமமான உன் பதத்தை அளிக்கிருயே. அந்த குணத்தை நிர்குணம் என்று சொல்வதா, ஸகுணம் என்று சொல்வதா, அல்லது ஸத்ய மான குணங்களின் சேஷ்டிதங்கள் என்று சொல்வதா, அல்லது மாயையாகிற உன் திவ்ய லீலை என்று சொல்வதா என்று எனக்கு தெரியவில்லை. பத்து இந்திரியங்கள், பத்து சக்திகள், பத்து விதமான ஐஸ்வர்யங்கள், பத்துத் தலைகளைக் கொண்ட ராவணனைக் கொல்லப்போகும் வீரமார்த்தாண்ட பிரசண்ட வீரா, ராவணனுடைய பலமுள்ளதும் கைலாஸ மலையை எடுத்ததினுல் அடையாளம் செய்யப்பட்டதுமான புஜங்களை கண்டம் கண்ட மாக வெட்டப்போகும் 'கோதண்டஹஸ்தா, சாரங்கதன்வா, சரணம், சரணம். காகுத்ஸா, பூமிக்கு பாரத்தை ஒழிக்க வந்திருக்கும் சோபனு, கருமுகில் போலவிருக்கும் அஞ்சன வண்ணனே, சரோஜ முகத்தை உடைய ராமா, சீற்றமில்லாததும் எப்போதும் அடிப்பணிந்தோர்களைக் காப்பாற்றும் வன்மை கொண்டதும் கருணையுள்ள புஷ்கராக்ஷங்கள் கொண்ட செங் கண் திருமாலே, ராஜீவாக்ஷா, விசாலமான கமல புஷ்பத்தைப் போல விளங்கும் அரவிந்தாக்ஷா, என் ராமகிருபாளு, ஆஸ்ரிதனுன என்னை (உன் அடிதாங்கிய பரதநம்பியைப் போல) அணைத்துக்கொண்ட புஜங்களை உடைய தூமணிவண்ணனே, நித்ய யசஸ் நித்யஸ்ரீ கொண்ட நீ என்னை பவசாகரத்தின் பயங் களிலிருந்து காப்பாற்றும். கிருபாளு, உன்னை அடிக்கடி நமஸ்காரங்கள் செய்கிறேன். (261)

[தியானம்

ராமா, நாராயணு, மார்க்கரே, என்னை அழைத்துச்செல்லும் நேயரே, உம்மை விட எனக்கு நன்மை செய்வதில் வேறு யாரு மில்லை என்று சொல்லக்கூடிய அநயரே, உம்முடைய கடாக்ஷ விக்ஷண்யம் இருந்தால் போதுமா? உம்முடைய பாகவத அடியார் களுடைய கடாக்ஷமும் எனக்கு வேண்டும் அப்பா, வஞ்சனை யில்லாததும் பலவகைப்பட்டதும் பரம பதத்திலிருந்து எழுந்து வந்து பூமியில் அவதாரம் செய்திருப்பினும், அப்ராகிருதமான நிஜ ஸ்வபாவத்துடன் கூடியதுமான உம்முடைய ராமகிருஷ்ண அவதாரங்கள் ''தர்மம்'' என்று சொல்லக்கூடிய நிவிருத்தி தர் மத்தை ஸ்தாபிப்பது போலவிருக்கின்றன. உம்முடைய பரத்வம், ஸௌசீல்ய குணங்கள் ஒருபுறம் இருக்கட்டும். உம்முடைய குரு ரக்ஷக ஸ்பாவமும் ஒருபுரம் இருக்கட்டும் உம்முடைய திவ்ய

மங்கள விக்ரஹத்தை கல்யாண ஸ்வரூபமாக பார்க்கக்கூடிய ஸாலம்பன யோகமும்; உம்முடைய அபார சேஷ்டிதங்கள் கொண்ட வாஸுதேவ ஸ்வரூபத்தை ஞானக்கண்களால் பார்க்கும் யோகமும் ஒருபுறம் இருக்கட்டும்; என்னை (ஜடாயுவைப்) போன்ற மஹாத்மாக்கள் கர்ம யோகத்தினால் ஆராதித்து, ஆத்ம ஞானம் அடைந்து அந்த கர்ம யோகத்தின் பலனை மனத்துடன் உம்மிடம் அர்ப்பித்து, உம்மையே அதில் சகாயமாகக் கொண்டு, சக்தியற்றவனாக, பயமில்லாதவனாக, உமது கிருபையால், பரஸமர்ப்பணம் செய்தவனாக, உமது திருவடிகளையே அடைவதற்கு பாதி விரத்ய தர்மம்போல வ்ரத தீக்ஷை கொண்டவர்களாகி, ஸ்வரூப ஐக்யம் இல்லாமல், உமது ஸாயுஜ்யத்தை அடைகிறார்கள். பிரபோ, உம்மால் அணைக்கப்பட்டு, உம்மால் ஸுக்ஷும்ன நாடியில் பிரவேசிக்கச் செய்யப்பட்டு அர்ச்சிசராதி மார்க்கத்தில் உம்மால் தள்ளப்பட்டு, அக்னி, தின தேவதை, சுக்ல பக்ஷ தேவதை, உத்திராயண தேவதை, ஸம்வத்ஸர தேவதை, வாயு தேவதை, ஸூரியன், சந்திரன், ஸௌதாமினி, அமானவன் என்கிற வித்யுத் புருஷன், வருணன், இந்திரன், நான்முகன், ஆகிய ஆதி வாஹிகர்கள் அழைத்துச் செல்லும் உமது ஸ்தானத்தை, (சீதையின் நிமித்தம் ஜடாயுவுக்கும்) எனக்கு கொடுத்தீர். அப்பேற்பட்ட மஹானுபாவன் (பெரிய உடையாரும்) உமது சேஷவிருத்திக்கு அனுகுணமாக எல்லாம் இருக்க, உன்னை விட்டுப் பிரிய மனமில்லாதவராக, உன் லக்ஷணங்களோடு, ஜகத் வியாபாரர்த்திருத்வம் ஸ்ரீயப்பதித்வம் முதலியவைகளைத் தவிர, ஆனந்த போக பாத்திரத்தில், உமது கடாக்ஷத்தால் பரி பூர்ணராகவும், உமது ஸாம்யத்தில் திருப்தி அடைகிறவராகவும் ஆகிறார் அன்றோ? அப்பேற்பட்ட மஹா பாகவதர்கள் உம்மைச் சரணமடைவதுபோல நான் சரணம் அடைகிறேன்.'']

''பரமாத்மா, உம்மிடம் அமிதமான பலபராக்ரம இருக்கிறது. நீர் அனாதியான புருஷன். மற்றவர்களைப் போல ஜனனம் எடுக்காத அஜர், அஜன்மா. மனுஷ்ய அவதாரமாகிற ராம அவதாரத்தில் மறைந்திருக்கும் அவ்யக்தர். உமது ஸ்வரூபம் காலத்தினாலும், தோற்றத்தினாலும் வஸ்துவினாலும் அளவிட முடியாதபடியால் அகோசரமானது. மகிமைகளில் தமக்குத்தாமே ஒப்பாக எண்ணக்கூடிய ஏகர் என்று நினைக்கப்படுகிறீர். கோவிந்தரே, இந்திராதி தேவர்களால் ஸ்துதி செய்யப்படும் பூமிக்குப் பதியே, உம்முடைய கீர்த்தி நாம பிரபாவங்களை வேத வாக்யங்களால் தான் அறியமுடியும். உம்முடைய ஸ்வரூபம்

ஞான ஆனந்த மயமாக விருக்கிறபடியால், நிர்த்வந்தங்களாகிற ஜன்மம் இறப்பு, துக்கம் சந்தோஷம் ஆகிற இரட்டைகளிலிருந்து விடுபட்டவராக விருக்கிறீர். அதனால் ஸுக்ஞானம், விக்ஞான ரூபமாகி, பக்தர்களின் மூன்றுவித தாபங்களை அபஹரிக்கிறீர். தரணீதரா, (திருவிக்ரம அவதாரத்தில் ஒரு பாதத்தால் பூமி பூராவையும் அளந்த உம்பர் கோமானே, ராம அவதாரத்தில் முனி ஜனங்களைத் தேடித் திரிந்த முனி ராஜவேஷதரா,) ராம தாரக மந்திரத்தை ஸதா ஜபம் செய்யும் பெரியோர்களின் மனத்தை ரஞ்சனம் செய்யும் ஆனந்த கந்தமூர்த்தி, பிரபோ, உம்மிடத்தில் ஸகல கர்மங்களுடைய ஸங்கத்தையும், பலன்களை யும் ஸமர்ப்பித்து நிற்கும் நிஷ்காம அடியார்களனைவருக்கும் மிகப்பிரியராக உள்ளவரே, அப்பேற்பட்டவர்களின் கோரிக்கை களை மிக்க மகிழ்ச்சியோடு, அவர்கள் விரும்பாமலே, அளிக்கும் வள்ளலே, அந்த பக்தர்களின் காமாதி கோபம் கிரோதம்போன்ற அக்ஞானக் கொத்துக்களை அறுக்கும் மஹா ராமச்சந்திர மூர்த்திக்கு அடிக்கடி நமஸ்காரங்கள் செய்கிறேன்.'' (262)

[தியானம்

ஸ்ரீசீதாராமசந்திர மூர்த்தியே, நரநாராயண ரிஷிகள் மாதிரி எனக்கு அஷ்டாக்ஷரத்தின் மகிமையை உபதேசிக்கும் ஸத்குரு ஆசாரியர்களே, உங்களுக்கு நந்தினியுடன் கூடவிருக் கும் ராஜகோபாலனை முன்னிட்டு தண்டம் செய்கிறேன். என் அபராதங்களைப் பொறுக்கும்படி வேண்டிக் கொள்கிறேன். பார்வதியுடன் கூடிய மஹாதேவரே, முடியுள்ளவரே, எல்லாப் பிராணிகளுக்கும் ஈஸ்வரரே, பகனுடைய கண்களை கெடுத்தவரே, தேவதேவரே, நீலகண்டரே, கங்கையினால் சடையாளம் செய்யப் பட்ட ஜடாதரரே, உம்மை எங்கும் உள்ளவராகவும், காரணங் களுக்கு மேலானவராகவும், தேவர்களுக்கும் அடையவேண்டியவ ராகவும், அர்ஜுனன் அறிந்த மாதிரி நானும் அறிகிறேன். பிரபோ, நீர் அபராஜிதர். விஷ்ணு ரூபியான சிவனும், சிவ ரூபி யான விஷ்ணுவும், தக்ஷயக்ஞத்தை நாசம் செய்தவரும், நெற்றிக் கண் உள்ளவரும், சர்வரும், கிருபையை வர்ஷிக்கிறவரும், சூல பாணியும், தம்புரா சகிதம் ராம சங்கீர்த்தனங்களைப் பாடுபவரும், பினாக மென்னும் வில்லால் உலகத்தைக் காப்பவரும், சூர்யரும், எனக்கு ரஜஸ் தமஸ் ஆகிற குணங்களை விலக்கி, ஸத்வம் நிலைக்கச் செய்து, மங்களங்களைக் கொடுப்பவரும் ராமருடைய அந்தரங்க பதியுமான உமாபதியை அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். பகவானு

டைய ராம நாமம், அஷ்டாக்ஷரம், சகல சுகங்களைக் கொடுக்கிற அகில தாரகம், ஸத்யம் என்கிற ஆஸனத்தை உடையது. அது அகில சராசரங்களின் ஸாரம் என்று என் மனம் எப்போது அறியப்போகிறது? அறிவின்மையாலும் ஆலோசியாமையாலும் செய்யப்பட்ட அபராதங்களை மன்னித்து அருளவேண்டும். விருஷபமாகிற வத்ஸையை அணைத்துக்கொண்ட பிரபோ, உம்முடைய ஸ்பரிசம் அழகிய தாமரை போலவிருக்கும் முகம், தீர்க்க பாஹுக்கள், ப்ரிதி அடைந்த அடையாளத்துடன் கூடிய உம்முடைய சுக்ருத பார்வைகள், என் தோஷங்களை விலக்கும் அம்ருதமான கர ஸ்பர்சம் எப்போது எனக்கு ஸம்பவிக்கும்? நாராயணா, மஹாலக்ஷ்மி, திக்பாலர்களாலும் அப்சரஸ்களாலும் மஹரிஷிகளாலும் கருட அனந்த விஷ்வக்ஸேனாதிகளாலும் சூழப்பட்ட கைங்கர்ய லக்ஷ்மியுடன் கூடிய நர நாராயணா, எப்போது என்னைத் தழுவிக்கொள்வீர்?]

"ஸ்வாமி, உம்மை ஸ்ருதிகள் ஸ்மிருதிகள் நிரஞ்சனர், மாயையிலிருந்து விடுபட்டவர், பரபிரும்மம், சகல திக்குகளிலும் வியாபித்திருக்கும் விஸ்வமூர்த்தி, விகாரமற்றவர் என்று கோஷிக்கின்றன. உம்மை அடைவதற்கு முயற்சிக்கும் பக்தர்களின் இடையூறுகளைப் போக்கும் அஜர் என்றும், அகில ஸாரம் என்றும் கோஷிக்கின்றன. ஸ்வாமி, உம்மை ஸித்த முனி ஜனங்கள் தியானம் செய்து தபோபலத்தால், நீர்தானே உயர்ந்த ஸாரம், அகில சராசர தாரக போஷக மந்திரம், நித்யமும் நிரந்தரமும் சுகத்தைத் தரும் கற்பக தரு என்று திடமான நம்பிக்கையுடன் ஸத்வம் ரஜ்ஸ் தமஸ் ஸாதிகளிலிருந்து விடுபட்டு, ஞானம் வைராக்யம் யோகம் முதலியவைகளை அடைந்து இன்புற்று சுமுகிகளாக விளங்குகிறார்கள். பிரபோ, (கருமாமுகில் தோய் நெடுமாடக் கண்ணபுரத்தம்மானே, திருமாமகள் அருள் மாரி செழு நீராலி வளநாடனே,) உம்முடைய கருணையாகிற காளமேகம் அருள் சுரக்கும் பாலை அம்ருதவர்ஷமாக, பாரபக்ஷமின்றி வர்ஷிக்கும் மேகங்களைப் போல வர்ஷிக்கிற கடைக்கண்களை உடைய கருணாகந்தனே, பகவான், உம்முடைய சோபை தரும் மரகத பச்சை போலவிருக்கும் திவ்ய மங்கள விக்ரஹம் என் போன்ற தொண்டரும் அமரரும் முனிவரும் தொழும்படி சோபாவிருந்தமாக விருக்கிறது. உம்முடைய சுபமான அங்கங்களால், (மலர் மகள் ஸ்பர்சிக்கும் திவ்ய புணரிய தேகமும், நிலமகள் மலைமகள் தொழும் நிதி திருவே,) ஸகல சேதனா சேதனர்களை வசீகரிக்கிறீர். நான் உம்முடைய அழகு குவியலால் தாக்கப்பட்டு மோஹன

மடைந்து ஆசையுடன் உம் அடிகளை வந்து அடைந்தேன். பிரபோ, என் ஹிருதயத் தாமரையில் வீற்றிருக்கும் ஹ்ருஷீகேசரே, என் ஹ்ருதய கமலத்தில் வண்டு ரூபராக என் அனன்ய பக்தி மதுரஸத்தை உண்டு களித்து, சீதா லோலனாக திரியும் நீர், எனக்கு உம்மிடம் உள்ள அங்கங்களின் கிருபையை, அநேக கோடிக்கணக்கான காமதேவனின் நிதி பொக்கிஷமாகிற திருமேனியைத் தந்து சதா என் திருஷ்டி பதத்திலிருந்து இருந்துகொண்டு வரிஷித்துக் கொண்டிரும்.'' (263)

''ஹரி பகவானே, (நாராயணா), சீதாராமா, உம்மை ஆகமங்களும் புராணங்களும் எளிதில் அடையப்படுவராகவும், கடும் தவத்தினால் அறிய ஸர்வ ஸ்வதந்தரரான முடிகிறவராகவும், நிர்மல ஸ்வபாவத்துடன் இருப்பவராகவும், விகார மற்றவராகவும் படியால் மஹா மதம் கொண்ட சேஷ்டிதங்கள் கொண்டவராகவும், உத்தண்டராகவும், (என்னைப் போன்ற அற்பசக்தி பலம் அனுஷ்டானம் என்கிற சீல நடத்தை, ஆசார்யரில்லாமை, கிருபை இன்னும் அநேக தோஷங்கள் கொண்ட பரம ஸம்சாரிக்கு நிர்ஹேதுக கிருபையினால்) அனவரதமும் சாந்தியுடனும் விளங்கும் ஸர்வ தர்சியாகவும், பயமில்லாதவராகவும் (தந்தையும் தாயுமாக) விருக்கிறீர். நீரே ஜன்ம ரஹிதரான அஜர். ஸ்வாமி, குளிர்ந்த கடாக்ஷவர்ஷத்தினால் என்னை சீதளமாக்கி, தாபத்ரயங்களிலிருந்து விடுதலை செய்கிறீர். அப்பேற்பட்ட சாந்தமூர்த்தியாகிற நீர் மனம் இந்திரியங்களை எப்பொழுதும் தன் வசத்தில் வைத்திருக்கும் ஸ்வத்ருதர் (விஸ்வாமித்திர வஸிஷ்ட நாரத அகஸ்திய பிருஹஸ்பதி போன்ற கடும் தபஸ்விகளுக்கும்) யோகிகளுக்கும் மிக்க சிரமத்துடன் சம்பாதிக்கப்படும் யோக தவத்தின் பலனாகவுமிருக்கிறீர். (பிரஹ்லாதன் போன்ற மஹா பக்தர்களிடம் கருணைகாட்டி அவனுடைய லோபம் மோஹம் மஹாமோகம் ஆகிய தோஷங்களை விலக்கின விஷ்ணோ; உம்மை அகில லோகங்களும் ஸ்வாமியாகவும் அப்ராகிருதமான தேஜஸ்ஸை உடையவராகவும் (அர்ச்சிஷ்மான் என்று சொல்லி), நான் வணங்குகிறேன். ரமாதேவி நித்யவாஸம் செய்யும் ராஜகோபாலா, தர்ம நந்தினியாகிற சீதையுடன் நித்யவாஸம் செய்யும் ராமா, தாஸ உள்ளத்துடன் வந்த என்னை ரக்ஷித்து, அபராதங்களை மறந்து, உமது பாத சேவைகளைக் கொடும். (வஸூமனஸ்ஸே, வஸூப்ரதரே,) என் ஹ்ருதயத்தில் வசிக்கும் ஸத்பூதியே, நீர் எப்பொழுதும் எனக்கு துணை செய்பவராக, என்னைப் பவித்திரமாக்கி, எப்பொழுதும் தங்களுடைய புண்ய ஸ்ரவண கீர்த்திகளை ஸூஸ்

வரமாக (சம்பு உமாதேவியைப் போல நாதமய உபாஸனையோடு) ஆனந்த கீர்த்தனம் செய்வதற்கு பிரேரணை செய்யும். அதனால் நான் (அந்த மஹான்களைப் போல) ஸம்சார சுழல்களில் அகப் பட்டுக் கொள்ளாமல், உம்முடைய வைகுண்ட பதத்தை அடை வேனாக. ஜன்மம், பிறப்பு, இறப்பு, வ்யாதிகளிலிருந்து விடுபட்ட வனாக உம்முடைய மோக்ஷ திருவடிகளை நான் அடைவேனாக.'' (264)

[தியானம்

மோக்ஷ நாராயணா, பரதனால் சேவிக்கப்பட்ட தீர்த்த நாராயணா, அர்ஜுனனால் விஸ்வம் என்று சொல்லப்பட்ட பிரபோ, கௌஸல்யைக்கும் காகபூசண்டிக்கும் வாயையும் உதரத் தையும் காண்பித்து அவர்களை ஸ்தம்பிக்க வைத்து, ஆனந்தத் தினால் பேச்சு, மூச்சு இல்லாதபடி திவ்ய தரிசனம் கொடுத்த ஸ்ரீராமா, சீதாபிரபோ உமது அடியார்களைத் தவிர உம்முடைய மாயையைத் தாண்டுவது மிகக்கடினம். அதுவும் உமது அருளினால் தாண்டுகிறார்கள். பிரதான புருஷேஸ்வரா, திவ்ய கல்யாண குணங்களின் அமானுஷ்யமாக சேர்க்கை பெற்ற உம்முடைய சௌந்தர்ய லாவண்யங்களை எவ்விதம் வர்ணிப் பேன்? உமது ஸ்வரூபம் இயற்கையான கருணையுடன் விளங்கு கிறது. உமது லீலை எவருக்கும் புரிபடாதபடி விருக்கிறது. அதைவிட உம்முடைய நித்ய விபூதிகளும் மிக்க ஆச்சர்ய கரமானவை. ஜடாயு போன்றவர்கள் உம்மை கர்மத்தினால் ஆராதித்து திருப்தி அடைகிறார்கள். அவர்கள் என்னைப் போல பாபம் அசுசி நிறைந்த மனிதர்களை சுசி செய்கிறார்கள். உம் முடைய கந்தர்ப்ப லாவண்யத்தையும் லீலா விபூதிகளையும் ஸ்பரிசிப்பதற்கு அவர்கள் ஹேதுவாகவிருக்கிறார்கள். ராவணாதி களைப் போல அதிக பிரஸங்கிகளை ஏறிட்டுக் கொள்ளாமல் என்னுடைய ரக்ஷணத்திற்கு அவனே கடவன் என்று சூசிப்பிக் கிறார்கள். என் அப்பனே, நீ நெஞ்சிலே என் அபராதங்களை நினைக்கினும், வாயால் நெருப்பைச் சொரிந்தாலும், மறுத்துக் கூறாத கருத்துக்களைச் சொன்னாலும் பிரபோ, காருண்யஸிந்தோ, தியாகராஜர் போன்ற மஹான்களுக்கு கிருபை செய்த தயா கேசரே, நீர் என் ஆர்த்தியின் கனத்தையும், அகவாயிலிலுள்ள சுத்தியையும் நினைத்து, விஷ்ணுவே, ஹிரண்ய கர்ப்பரே, ஈஸ்வரரே, நாராயணரே, உம்முடைய திருஷ்டிகளால் பரிவுடன் என் நெஞ்சுக் கதவை திறந்து எங்களால் திறக்கத் தள்ள

முடியாத கதவை, உன் சிறுவனென்று, நீயே திறக்கவேணும், இளம் கன்றுக்கு இரங்கிவரும் பசுப்போல என் ராஜகோபாலா, நீ வருவாய்.]

அந்த அகண்டமானதும் பரமா பக்தியுடன் கூடியதும் பர ஞானத்தை உடைய சச்சிதானந்தம் ஆகிய முவ்வித ஆனந்தத்தைத் தருவதும், என்றும் அழியாததுமான ராமனுடைய பிரேமை பக்தியை வரமாகப் பெற்ற கழுகுராஜனுகிற பெரிய உடையார் ராம நாமத்தை ஜபம் செய்து கொண்டு ஹரியினுடைய பதத்தை அடைந்தார். பிரபு, தன் தகப்பனுக்குச் செய்தது போல, ஜடாயுவுக்கு கடைசி ஈமக்கடன்களைச் செய்தார். பிரபு ஸ்வயமாக தன் திருக்கரங்களால் பிரேத ஸம்ஸ்காராதி கிரியைகளைச் செய்தார். (265)

என் பிரபு ஸ்ரீரகுநாதன் அதிமென்மையான சித்தத்தை உடையவர். மஹா கிருதக்ஞர், தீனதயாளு, ஒரு காரணமுமின்றி நிர்ஹேதுவாக, ''இவன் நம்மைச் சேர்ந்தவன்'' என்று சங்கல்பிக்கும் மஹா உதாரர். ஜடாயு பிறப்பில் திரியக் ஜாதியைச் சேர்ந்ததும், மாம்ஸம் முதலியவைகளைத் தின்னும் க்ரூரநெஞ்சு படைத்துள்ள அதமபக்ஷியின் பிறப்பை அடைந்திருந்தது. ஆனுல் மஹத்தான கர்மத்தால் பகவத் கைங்கர்ய பிராப்தி பெற்று யோகி ஜனங்களும் அடையமுடியாத ஸ்ரீவைஷ்ணவ பதத்தை, (நம்மாழ்வார் நாதமுனிகள், கஜேந்திரன் போன்ற புண்ய சாலிகள் அடைந்த) மஹா துர்லபமான உத்தமகதியை அடைந்தார். (266)

ஸர்வ சாக்ஷியான சம்பு உமையைப் பார்த்துச் சொல்கிறுர். ''என் பிரியே, உமா, கவனமாகக் கேளு. விஷயங்களில் ஈடுபடும் மனிதர்கள் இருக்கிறுர்களே, அவர்கள் மஹா அபாக்யவான்கள். பகவத் நினைவே இல்லாத இந்த புருஷர்களைப் போல பாக்ய ஹீனர்கள் யாரும் இருக்கமுடியாது. ஹரியின் பதங்களை விட விஷய போகங்களில் அனுராகம் கொண்டவர்கள் சிறந்த பாக்யத்தை அடைகிறதில்லை'' மீண்டும் அந்த இரு சகோதரர்களும் சீதையைத் தேடப் புறப்பட்டார்கள். பெரும் வனத்தில் அங்கும் இங்கும் தேடிக்கொண்டு சென்று கொண்டிருந்தார்கள். (267)

அவர்கள் அந்த அடர்ந்த காட்டில் புதர்களைப் பார்த்தார்கள். விருக்ஷங்களிலும் கொடிகளிலும் ஏறிப்பார்த்தார்கள். அந்தக் காட்டில் அநேக மிருகங்கள், பக்ஷிகள், யானைகள் சிம்மங்கள் அநேகமிருந்தன. அவைகளை எல்லாம் தாண்டிப் போய்க் கொண்

டிருக்கும் போது, வழியில் கபந்தன் என்கிற ராக்ஷஸனைக் கண்டார்கள். அவனை வெட்டித் தள்ளினுர்கள். அவனும் சாப பங்கமடைந்து கைகூப்பி, வார்த்தைகளைச் சொல்ல ஆரம்பித் தான். (268)

"பிரபு, துர்வாஸ மஹரிஷியால் எனக்கு இவ்வித சாபம் கொடுக்கப்பட்டது. உனக்கு, பிரபு நாராயணருடைய பாதங் களை தரிசித்த பின்பு இந்த சாபம் முடிந்துவிடும். உன் பாபமும் அகன்றுவிடும்" என்று அந்த ரிஷி சொன்னுர். ஸ்ரீராமன் பதில் சொன்னுர், "கந்தர்வனே, நன்ருகத் தெரிந்து கொள். பிராம்மணர்களை ஒருக்காலும் அவமதிக்காதே. அவ்விதம் அவமதித்தால் என்னுடைய ப்ரீதியை அடையமுடியாது." (269)

"மனத்தாலும், கர்மத்தாலும், வசனத்தாலும் கபட வேஷத்தைத் துறந்து எவர்கள் பூதேவர்களான பிராம்மணர் களைப் பூஜித்து சேவை செய்கிருர்களோ, அவர்களுக்கு நானும், பிரும்மாவும், மங்களங்களைத் தரும் மஹா தேவரும் இதர தேவர்களும், வசப்பட்டிருப்போம். அப்பேற்பட்ட பிராம்மணப் பிரியரே, ராமா, உமக்கு நமஸ்காரம். (270)

"விப்ரர்கள் க்ரோதத்தினுல் சாபம் கொடுக்கட்டும்; கொலை செய்யட்டும். பொறுக்க முடியாத கடூரமான சொற்களை ஆயுதங் கள் போலவும், வஜ்ரம் போலவும் தாக்கட்டும். அவ்விதமிருந்த போதிலும் பிராம்மணர்கள் மிக்க சிரத்தையோடு பூஜிக்கத் தக்க வர்கள்" என்று ஸாது ஜனங்கள் சொல்லுகிருர்கள். (பூஜிப் பதற்குத் தகுந்த சீல குணங்களும், செளம்ய குணங்களும் அவர் களுக்கு இல்லாத போனுலும், விப்ரர்கள் ஸதா பூஜிக்கத் தகுந்த வர்கள்.) குணஸம்பன்னனும், ஞானத்தில் நிபுணனுமாகிற சூத்ரன் கூட அவ்விதம் ஸ்லாகிக்கத் தகுந்தவன் அல்ல." (271)

இந்த விதமாக ரகுநாதன் கந்தர்வனுக்கு தனது தர்மமாகிற பாகவத ஸம்ரக்ஷணத்தைப் பிரகடனப்படுத்தினுர். அவனுடைய பக்தி ப்ரேமையைக் கண்டு ஆனந்தித்தார். அந்த கந்தர்வன் பகவானுடைய சரண கமலங்களில் வணங்கிவிட்டு ஆகாயமார்க்க மாக கந்தர்வலோகத்திற்குச் சென்ருன். (272)

**[தியானம்**

**அம்மா, மோக்ஷத்தைக் கொடுக்கும் திரிபுரசுந்தரி, என் சீதே, மஹா மாய நிவாரணி, ஆனந்த ஹ்ருதய காரிணி, அணி மாதி சக்திகளால் சூழப்பட்ட ஈஸ்வரி, ரஹஸ்யயோகினிகளால் அர்ச்சிக்கப்பட்ட பிந்துஸ்வரூப திரிபுராம்பா, உன்மாதனம்**

கொண்ட லலிதாதேவி, ஸர்வாங்க ஸுந்தரி, ஸர்வ ஸம்பத் பிரதாயினி, உன் பாதங்களில் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். எனது அஹங்காரத்தையும் விஷயப்பற்றுதல்களையும் ஒழிக்கும் அங்குசதாரிணி, உனது வலது கையாகிற அபயமுத்ரைக்கு ஸஹ்ஸ்ர சரணங்கள் செய்கிறேன். அம்பா, அம்ருதா, தயாபரி, ஆதிபுரவாஸினி, கரும்பு வில் கொண்ட அனங்க கோதண்ட ஹஸ்தத்தால் என்னை ரக்ஷி என்று ஆயிரம் தடவைகள் வேண்டு கிறேன். பரமேஸ்வரி, சித்தேஸ்வரி, வஜ்ரேஸ்வரி, ஞானேஸ்வரி, சங்கு, சக்கிரம், கதை, சார்ங்கம், அங்குசம், சூலம் ஆகிற ஆயு தங்களைக் கொண்ட உனது ஸ்மக்ஷேபண சக்திகளை ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். அம்மா எனது ரக்ஷணத்தை வேண்டுகிறேன். அம்புஜநேத்ரி, சுத்த ஹ்ருதய ஸ்வரூபிணி, நந்தினி, ஹ்ருதய உல்லாஸினி, ஸனக ஸநந்தன, தும்புருநாரத தியாகராஜ முனிகள் சேவித நாத ரூபிணி, ஓங்காரி, அகிலாண்ட கோடி பிரும்மாண்ட நாயகி, நித்யானந்தா, நீலலோஹிதனுடைய ஆஹ்லாதினி, உனது தம்புரா, பத்மம் கொண்ட ஹஸ்தங்களுக்கு ஆயிரம் நமஸ்காரங்கள் செய்து உனது கிருபா கடாக்ஷத்தை வேண்டுகிறேன். மஹத் ஐஸ்வர்யங்கள் கொண்ட சம்பு மோஹினி, உமாதேவி, குஹ கஜமுக ஜனனி, என் ரோகங்களைப் போக்கும் திரிபுரா ஸித்தா சக்ரேஸ்வரி, உனக்கு ஆயிரம் நமஸ் காரங்கள் செய்கிறேன். சந்திரன், மணிமகுடம், நவரத்னமாலை, நவரத்னமேகலை, ஸ்வர்ண ஆபரணங்கள், மாணிக்க சலங்கைகள் கொண்ட ராஜாதி மணி கணபூஷிணி, மத்த கஜராஜகமனி, லோக சங்கரி, உன்னுடைய நாமஜபங்களைச் செய்து உனது அனுக்ரஹ கிருபையை வேண்டுகிறேன். ஜகன் மனோஹரி, ராஜ்யஶ்ரீ, கௌரி, லோபாமுத்ரா புலோபமா சீதா இவர்களால் அர்ச்சிக்கப்பட்ட ராஜராஜேஸ்வரி, திரிபுவனேஸ்வரி, உன்பாத சரணங்களை ஆயிரம் தடவைகள் நமஸ்கரித்து, பராத்பரி, என்னை ஆட்கொள்ளும் கிருபையை ஆயிரம் தடவைகள் பிரார்த்திக் கிறேன். கிருபாஸிந்தோ, உன்னைப் பாராத ஜன்மமும் உன் அழகு லாவண்யங்களை புகழாதவாயும், உன் நாம ஜபங்களைச் செய்யாத ஜன்மமும் வீணே. ராமசங்கர ஹ்ருதய உல்லாஸினி, ராமச்சந்திர, கிருஷ்ண சந்திர சகோதரி, திரிஜகதேஸ்வரி, பார்வதி ரமா, பிரும்மாணி, வஜ்ரேஸ்வரி, ஸர்வாணி, பகமாலினி, சீதாதேவி, லலிதா மஹா திரிபுர சுந்தரி, என்னை உன் பொருள் என்று நீதான் கருணையுடன் ஸ்வீகரித்துக் கொள்ளவேண்டும் என்று ஆயிரம் தடவைகள் சுக்ருத பிரணமங்கள் செய்து மோக்ஷ

லக்ஷ்மியாகிற உன்னைக் கேட்டுக் கொள்கிறேன். உனது அம்ருத வார்த்தைகளையும் ஸ்பரிசத்தையும் கடாக்ஷ வீக்ஷண்யங்களையும் என்னைத் தழுவிக்கொள்ளும் மாத்ரு ஸ்வபாவத்தையும் எப்போது காணப்போகிறேன்? காமாக்ஷி, தயைசெய் அம்மா.]

உதார மஹாத்மா, அகில விஸ்வத்திற்கும் ஆதாரமூர்த்தி என் புருஷோத்தம ராமன். அந்த கந்தர்வனுடைய ஆகாச கமனத்தைப் பார்த்து ரமித்துக்கொண்டு பரம ஸௌலப்யவச மடைந்து, சபரியின் ஆஸ்ரமத்திற்குச் சென்றார். (ஸமஸ்தயக்ஞங் களுக்கு அதிபதி, தேவராஜன் முதலானவர்களும் மிக்க சிரமப் பட்டு ஆராதிக்கப்படும் யக்ஞமூர்த்தி, எவருடைய நிஜ ஸ்வரூபத்தை பிரும்மா, ருத்திரன், இந்திரன், அஸ்வினி தேவதை கள், வஸூ, ஆதித்ய மருத்கணங்கள், ஸகலரும்அறியமுடியாதபடி விளங்கும் கேசவமூர்த்தி இன்று சபரியின் நேத்ரங்களை ஆனந்தம் செய்வதற்காக ஸ்வயமாக, என் பிரபு சென்றார். ஸர்வாத்மா, ஸர்வவித் ஆகிற அசிந்தனீயர், அவ்யயர், ஸர்வவ்யாபகரான விஷ்ணு இன்று மஹாகிருபையுடன் சபரியைக் காண வேகமாகச் சென்றார். இன்று மத்ஸய கூர்ம வராஹ ஹயக்ரீவநரசிம்ம வாமன திரிவிக்ரம அவதாரங்கள் எடுத்த அஜர் சபரியுடன் வார்த்தைகள் சம்பாஷிக்க ஸ்வயமாகச் சென்றார்.) ("இன்று என்நேத்ரங்கள் ஜன்மபலனை அடைந்தன, இன்று மஹாபிரபாவங்கள் கொண்ட என் குருநாதராகிய மதங்கரிஷியின் வசனங்களை ஸத்யமாக்கின. இன்று, இப்பொழுது பூத்துவிகஸிக்கும் பூர்ண உந்நித்ர பத்ம பத்ராக்ஷமாகிற விஷ்ணுவின் முகத்தை தரிசனம்பெறும் மஹா பாக்கியம்பெற்றேன்" என்று சொல்லும்படி) அந்த சபரி தன் குருநாதரை நினைத்து மனத்தில் விசுத்த ஆத்மாவாகி, ஆனந்த பாஷ்பங்கள்விட்டு சந்தோஷமடைந்தாள். (273)

அப்போது மலர்ந்த தாமரைபுஷ்பத்தைப் போல இரு அம்புஜ நேத்ரங்கள். (ஸ்ரீவத்ஸசின்னத்துடன் கொண்ட) விசாலமான மார்பு பிரதேசம், கைகள், தலையில் ஜடாமுகம். (வேதவேதாங் கங்கள் ஆகிய) வனமாலை. நீலமேகமணி தீபம்போல ஸ்யாமள நிறம்கொண்ட ராமமூர்த்தி; (ஹம்ஸகுந்த புஷ்பம் சந்திரன்போல) வெண்மையுடன் கலந்த சிகப்புவர்ணம் கொண்ட (பலபத்ரர் மூர்த்திபோல) லக்ஷ்மணமூர்த்தி ஆகிய இருசகோதரர்களை அடிக்கடி சரணம்செய்து சபரிதேவி தன்சிரத்தில் அவர்களுடைய பாதரேணுக்களைத் தரித்துக்கொண்டு ஆனந்தித்தாள். (அந்த உத்தம திருவடிகளை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.) (274)

பிரேமைபாசம் அதிகரித்து வசனங்கள் அவளுடைய தொண்டையிலிருந்து சிரமத்துடன் வெளிவர, கண்கள் ஆனந்த பாஷ்பங்களை உதிர்க்க, அவளுடைய புல்லரித்த தேகம் மனம் ஆகியவைகளின் ஆனந்தங்களை எவ்விதம் சொல்லமுடியும்? (அன்றொரு நாள் அனந்தசேஷசயனத்தின் மீது தனது மஸ்தகத்தை வைத்து பிருத்வியை தாரணம்செய்ய அவதரித்த கிருஷ்ணபகவான் "அக்ரூரே" என்று அழைத்து, அந்த பாகவத உத்தமனை எவ்விதம் ஆனந்தித்தாரோ, அதுபோல) அந்த சபரி, குருவின் கடாக்ஷம்பெற்ற வேடுவ ஸ்திரி, (இந்த சம் சாரத்தில் உள்ள மாதா, பிதா, புத்ரபுத்ரி, ஸுஹ்ருதுக்கள், பிராதா பந்து ரூபியாகிற சகலரையும் மாயையினால் ஒன்றுகட்டி, அந்த பந்தங்களிலிருந்து விடுவிக்கும் மாயாபதி,) இன்று "சபரி" என்று கூப்பிட்டுக்கொண்டு சென்றார். சபரியினால் அவர் அடிக்கடி நமஸ்கரிக்கப்பட்டார். (எந்த சரோஜ சரணங்களை லக்ஷ்மிதேவி நித்யம் ஆராதித்து ஆனந்தமடைவாளோ,) அந்த உத்தமதிருவடிகளை தழுவிக்கொண்டு, அவள் தலைவணங்கினாள். (ஸாத்வத கணங்கள் எந்த மஹாபுருஷனை வாஸுதேவராகவும் வேதாந்த வேத்தாவாகிற விஷ்ணுவாகவும், ஜகத் ஆதாரமான ஹரிபகவானாகவும், பூஜை செய்கிறார்களோ,) அந்த தீப்தமூர்த்தி யாகிற ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி இன்று மிக்க மரியாதையுடன் சபரி யினால் வரவேற்கப்பட்டு, அடிக்கடி நமஸ்கரிக்கப்பட்டார். தன் இளைய சகோதரனான லக்ஷ்மணன்கூட அதிதிஸத்காரம் பெற்றவ ராகி, சபரியினால் (கொடுக்கப்பட்ட ஜலம், ஆசமனம் முதலிய சுந்தர அதிதிஸத்காரத்தை அங்கீகாரம் செய்து,) அழகான இன் சொற்களால் உபசரிக்கப்பட்டு, அழகான ஆசனத்தில் அமரப் பட்டவர்களாக இருவர்களும் காணப்பட்டார்கள். (275)

(அன்று விதுரர் அளித்த அன்னத்தை உண்டமாதிரி,) பிரபு சபரியின் கைகளிலிருந்து கந்தமூலம், சுவையானதும், அனுபவித்து சுவைத்ததுமான பழதினுசுகளை இன்று வாங்கி, விருந்துண்டார். "ராமா, இது உனக்குப்பிடிக்கும் என்று தெரிந்து சேகரித்துவைத்திருக்கிறேன். இதைச் சாப்பிடு," என்று தன்கைகளால் பழங்களை நைவேத்யம் செய்த அந்த மஹாபாக்யசாலியான சபரி, (அவளால் ஸமர்ப்பிக்கப்பட்ட ஸகல ஆராதனைகளையும் சௌசீல்ய ஸாகரனாகிற ராமன் தன்பிராதா வான லக்ஷ்மணனுடன் இருவரும் சுமுகிகளாக அங்கீகரித்தார், ஸதஸத்ரூப ஜகத், அதைத் தாங்கும் பாரப்ருக் என்கிற வித்யா ரூபியாகிற) பிரபு இன்று நிலைத்து, நின்று, நிறைந்த உள்ளத்

துடன் சபரியால் பிரேமையுடன் ஸமர்ப்பிக்கப்பட்ட ஸ்வாதிஷ்ட ஆகாராதிகளை அதிவினயத்துனும், வேடிக்கையுடனும் பிரேமையுடனும் ஸ்வீகரித்து (வேங்கடமும் வெஃகாபும் சுடராழியானைப் பாடி ஆடுவதுபோல,) ஆனந்தித்து அருள் செய்தார். (276)

(நேரேகண்ட நாரணனை, அரவணைமேல் பள்ளிகொண்ட அரவிந்தாக்ஷனை, வணங்கிய) சபரி கைகளைக் கட்டிக்கொண்டு எதிரில் நின்ருள். (கௌஸல்யையின் முலைப்பால் உண்ட பெருமானை பவளச்செவ்வாய் கொண்ட திருமேனியானை) என் பிரபுவை, (ஆலிலைமேல் பையபாலகனுய் அவதரித்த எம் பெருமானை) சபரி அடிக்கடி பிரேமையுடன் பார்த்து சந்தோஷித்தாள். அத்யந்த சந்தோஷமிகுதியினுல் ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பித்தாள். "ஸ்வாமி, (அன்று இவ்வுலகம் அளந்த பெருமாளே,) உம்மை அதமஜாதியில் பிறந்த நான், ஜடமதி கொண்டு, அஹங்காரமாய்த் திரிந்த நான், விஷயசுகங்களில் பற்றுதல்கொண்ட நான், (இன்று உம்மை வரகுரு பிரஸாதத்தால் அடையப்பெற்று,) காண் மீண்டும் காண் எனவிரும்பும் கண்கள் கொண்டு தரிசித்த உங்களுடைய திருமேனியை எந்தவிதமாக ஸ்தோத்ரம் செய்வேன்? கிருபாளு." (277)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மி, தேவதேவா, ராமாசீதா, லக்ஷ்மணு உங்களை என்று காணப் போகிறேன்? உங்களோடு என்று சம்பாஷித்து என் இன்பநாட்களை போக்குவேன்? ரிஷிபத்னிகளுக்குக் கூட கிடைக்காத மஹாபாக்யத்தை உன் கிருபையால் சபரி அடைந்தாள். கருடத்வஜ, ராஜீவநயனு, என் ஆராவமுதே அன்று பாண்டவர்களுக்காக தூதுசென்ருய். இன்று பேய்ச்சி பாலுண்ட பெருமானைப்போல, நீ சபரியின் திருக்கைகளால் நேராக அதிதிஸத்காரம் செய்யப்பட்டு, உன் பரமசௌலப்யத்தை புகழ்தக்க கீர்த்தனங்களால் தியாகராஜர் வால்மீகி ரிஷிகளால் ஸ்திரப்படுத்திக் கொண்டாய். இப்படி கண்கள் காண்டற்கரிய கருமணியை கரிகிரிவரதனை, அருள்பிரியனை, என் சபரி மோக்ஷ ராமனை, அருள்வரதனை, என் மெய்விரத ராமனை, லக்ஷ்மியுடன் காடோப கூடமாகவிருக்கும் மாதவனை, நாரதப்பிரியனை எப்போது நான் காண்பேன்? எப்போது என் கடுவினைகள் அனைத்தும் அகன்று, விஷம் நீங்கின காளிங்கன் போல, தாக்ஷாயணி என்கிற தர்மபத்னி பரமசிவன் நினைவாக உயிர் நீத்தாற்போல, உன் அபாரகிருபையை உமை அடைந்ததுபோல



சபரி தனது கைகளில் ரஸமுள்ளதும், சுவையுள்ளதுமான பழங்களையும், கந்த மூலங்களையும் ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் அளித்தாள். ராமன் அவைகளைப் பிரேமையுடன் ஸ்வீகரித்துக் கொண்டு சபரியை அடிக்கடி புகழ்ந்தார்.

ராமா, உன்னை எப்போது தரிசிப்பேன்? மன்னு மணித்தலத்து மாணிக்கமே, என் ஆதித்யனே, ரகுவீரா, நீர் முன்னும் ராமனாய், பின்னும் ராமனாய், பலராமனாக, தாமோதரனாய் கல்கியாய் ஆனாய். அர்ஜுனனுக்குத் தேர்தட்டில் உபதேசித்த செம்பவழ வாய் கண்ணபிரானே, என் ராமச்சந்திர பிரபோ, எப்போது உன்பிரிய ஜானகியுடன் பந்துபரிவாரத்துடன் எனக்கு உன் முகதரிசனத்தைக் கொடுப்பாய்?]

சபரி மீண்டும் அதிவினயத்துடன் பெருமாளிடம் ஸமர்ப்பிக்கலானாள். "வாரும், அருள்வரதரே, ரகுராமா லக்ஷ்மணா, (என் கிருஹத்திற்கு வந்து என்னை உங்களைச் சேர்ந்தபொருள் என்று ஸ்விகரித்தீர். என் வினைகளைத் தீர்த்த சுகுமாரா, தசரத புத்ரா, ரகுவீரா, லக்ஷ்மணபூர்வஜா, ஜானகிரமணா,) நான் பிறப்பில் அதமஜாதியில் பிறந்தவள். (உம்மால் விதிக்கப்பட்ட கர்ம காண்டங்களைச் செய்தவள் அல்ல; பிரபோ, உம்மால் நிந்திக்கப் பட்டதும் வர்ஜிய கர்த்தவ்யங்களை செய்யாமலும் இல்லை.) ஜாதியில் தோஷங்கள் நிறைந்துள்ளதும் சஞ்சல ஸ்வபாவமுள்ள ஸ்திரி ஜாதியைச் சேர்ந்தவள். என்னைப்போல அவகுணங்கள் சேர்ந்த ஒரு ஜந்துவை பிரபு நீர் பார்த்தாவது கேட்டாவது இருக்கமுடியாது. மதிமந்தம் படைத்து ஸ்வரூப அஹங்காரம் கொண்டு ஈனஸ்திரி குலத்தில் பிறந்தவள் நான். நான் இதுகாறும் வாழ்நாட்களை வீணாக்கிவிட்டேன்." இவ்விதம் சொல்லிக்கொண்டு போன சபரியை, பிரபு நிறுத்தி, சொல்லலானார், "சபரி, (இதில் நீ என்ன குற்றம் செய்திருக்கிறாய்!) பாமினி, என் வார்த்தைகளைக் கேள். என் சம்பந்தமட்டில் கேவலம் ஏதாவது ஒருவிதமான பக்தியைச் செய்தால், அதை மெச்சுகிறேன்." (278)

"எனக்கு ஜாதிப்பிறப்பைப் பற்றி கருத்தில்லை. எனக்கு பந்துமித்ரன் என்கிற உறவும் என்னை பாதிக்காது. குலத்தின் பெயரையும் பெருமையையும் நான் கவனிப்பதில்லை. இவன் தர்மவான், காலந்தோறும் தன் ஸ்வதர்மத்தை விடாமல் ரக்ஷித்து வாழ்ந்துவருகிறான் என்கிறதையும் நான் அதிகமாகப் பார்க்கிறதில்லை. பிரியமான சபரி, இவனிடம் பெருமைக்குள்ள பலம், கீர்த்தி, தனம், குடும்பகௌரவம், மஹா கல்யாணகுணங்கள், காரிய சாமர்த்தியம், ரூபம், மகிமைகள் அநேகமிருந்தினும், (இவை எல்லாம் அர்ஜுனனைப்போல ஒரு வ்யக்தியிடம் சேர்ந்து பரிமளித்திருந்தாலும், ஸ்திரியோ புருஷனோ யாவராயிருந்தாலும் சரி,) அதைக்கூட என்மீது பக்தியில்லாது போனால் ஒன்றையும்

நான் அதிகமாக கௌரவிக்கிறதில்லை. இவைகள் அனைத்தும் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, (தர்மபுத்திரர் போல, எவனுக்கு என்மீது அத்யந்த விஸ்வாசம், நம்பிக்கை, பராதீனம், அன்னன்யசரண்ய பக்தி இல்லாதபோனால்,) நான் அப்பேற்பட்டவர்களிடம் ஜலஹீனமான மேகம்போல காட்டி, அவர்களிடமிருந்து நான் பிரிந்துவிடுகிறேன்.'' (279)

"அம்மா, பிரியே சபரி, கவனமாகக் கேள். இந்த ஜகத்தில் ஒன்பதுவித பக்திபாவங்கள் இருக்கின்றன. மனத்தை ஒருமைப் படுத்திக்கொண்டு, ஸாவதானமாகக் கேள். முதலில் என் பெருமைகளை ஸ்ரீ நிதிபோல காப்பாற்றும் ஸாது ஜனங்களின் ஸத் ஸங்கத்தின்மீது ஆசை வைத்திருப்பது முதல் கௌரவம்பெற்றது. அதற்கு அடுத்தாற்போல, என்னுடைய புண்ய கதைகளில் மனத்தைவைத்து ஸ்ரவணம் செய்வது, ஆனந்த கீர்த்தனம் பாடுவது. மூன்றாவது ஸ்தானத்தில் வரும் குருபக்தியின் விசேஷத்தை உணர்ந்தவர்களைப் பற்றினது. அதைவிவரித்துச் சொல்கிறேன் கேள். (உலகில் இருபத்துநான்கு தத்வங்களை அறிந்தவன் "நான்" என்கிற ஸ்வரூபத்தை உடையவன்; சரீரத்துடன் கூடினதுமான தத்வ ஸங்காதமானது இந்த ஜகத்தில் வ்யக்தமாயும் அவ்யக்தமாயும் காணப்படும்போது "தேவதத்தன்" என்னும் பெயரை உடையவன். இந்த தேவதத்தன் தசமபுருஷ அறிவை (ஆசார்யரால் உபதேசிக்கப்படாத புருஷன் தன்னை விட்டு ஒன்பது பேர்களை எண்ணியபோது ஆசார்ய உபதேசத்தால் தன்னை அறிந்துகொண்டு பத்து மனிதர்களாக கணக்கு பண்ணுகிறவன் போல) ஸம்பாதித்து மஹாகிருபையுடன் அந்த ஆசார்யனால் மீண்டும் உபதேசிக்கப்பட்டவனாய், கடாக்ஷிக்கப் பெற்றவனாய், அந்த அவ்யக்தத்திற்கு மேலான பரமாத்மாவை அறிகிறவன். இவ்விதம் வரிசையாக உபதேசிக்கப்பட்டவனும், மஹாகிருதக்ஞனும், சிஷ்யனும், மந்தமதியுடன் அந்தர்செவிடன் போல, குருவினுடைய பாதாரவிந்தங்களையே நம்பி, அவைகளே எனக்கு சரண், அதுவே என்னைக் காக்கும் தெய்வம் என்று நம்பிவாழ்கிறவன். தேவுமற்றறியேன் குருகூர் நம்பி, திரிதந்தாகிலும் தேவபிரானுடைய கரியகோலத் திருவுருக் காண்பன் நான் பெரிய வண்குருகூர் நகர் நம்பிக்கு ஆள் உரியனாய், அடியேன் பெற்ற நன்மையே, என மஹாகுரு விஸ்வாசத்துடன் பாரில் தோன்றிய கண்ணபிரானை வர்ஜித்து, குருகூர் நம்பியை அடைந்த மதுரகவியாழ்வார் போலவிருப்பவன்.) அதுமாதிரி; குருபாதபங்கஜ மலர்களின் தேனை அருந்திய நீ மிக உத்தமமான

வழியைக் கடைப்பிடித்து, என்னால் கடாக்ஷிக்கப் பெற்றாய். இந்த பாக்யத்தின் பிரபாவம், விசேஷம் சொல்ல முடியாது. இதற்கு அடுத்தாற்போல வருவது என் குணஸாகரங்களை கபடமின்றி அனுபவித்து அதில் பிரேமை காட்டுவது கீர்த்தனம் செய்வது.'' (280)

''சபரி, இன்னொரு பக்தியையும் கேள். ராம மந்திரமோ அகில உலகத்திலும் ஸாரம், அதுதான் தாரகபோஷகம், அது தான் மஹா விஸ்வாசம், அதுதான் திருடகல்பதரு என்று நம்பி ஜபயக்ஞம் செய்து என் திருவடிகளை அடைவது ஐந்தாவது மார்க்கம். இதைப்பற்றி வேதங்களில் பிரசித்தமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. ஆறுவது மார்க்கம் என்னை நினைத்து, திருட மாக ஏகாக்ர மனத்துடன் சகல போகங்களையும் தியாகம் செய்து விட்டு, விஷயங்களில் நிவிருத்தி அடைந்து, இந்திரிய நிக்ரஹத் தாலும் சீலதமமாகிற அஹிம்ஸா, ஸத்யம், கார்யகர்த்ருத்வத்தைத் தியாகம் செய்துவிட்டு வாழ்வது ஸாது ஜனங்களால் நிரந்தரமாக ஆஸ்ரயிக்கப்பட்ட கர்மகாண்ட விரதத்தால் என்னை ஆரா திப்பது.'' (281)

''ஏழாவது வர்க்கத்தில் வரும் பக்தி மார்க்கத்தைப்பற்றியும் கேள். என்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட இந்த பிரபஞ்சம் முழுவதும் ராம மயமாகவும் வாஸுதேவமயமாக அறிந்து ஸமதிருஷ்டி யுடன் காமம் க்ரோதமின்றி, ஸர்வபூதஹிதகாங்க்ஷனாக, ஸத்யம் ஞானம் ஆனந்தம் ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத் என்கிற ஞானிக ளானவர்களும் நாராயணபரர்களாகவு மிருப்பவர்கள். இவர்கள் அநேக ஜன்மங்கள் எடுத்து ஞானத்தை ஆஸ்ரயித்து அந்த பரம் ஞானத்தினால் ''பரமாத்மாவாகிற நான்'' உயர்ந்த பொருள் என்று கண்டு அறிந்து, அந்த உயர்ந்த பொருள் எங்கும் ஸர்வ வ்யாபகமாக விருக்கிறது என்று விஸ்வாசம் கொண்டு, மஹாத்மாக்களாக என் பராயண குழாம்களை என்னை விட உயர்ந்த ஸ்தானத்தில் ஈர்ஷையின்றி பூஜிக்கிறவர்கள் எவர்களோ, அந்த உத்தமர்கள் இந்த ஏழாம் வகுப்பில் வருபவர் கள். இதற்கு அடுத்தாற்போல வருபவர்கள் பாகவத உத்தமர்கள், (அஜகர விரதத்துடன்,) யத்ருச்சையாக வந்த லாபத்தில் ஸந் துஷ்டி அடைந்து, (நான் ஒன்றும் முயற்சி செய்யவில்லை, கல்லி லும் தேரை இருப்பதுபோல, கருவில் சிசு இருப்பதுபோல, ஸ்வாதந்திரம் அற்றவனாக, விதியினால் நான் உந்தித் தள்ளப்படு கிறேன் என்று தர்மபுத்ரரைப்போல) மஹா விஸ்வாசத்துடன் ஸ்வப்னத்திலும் (தனக்கு ஜன்ம விரோதிகளான கர்ண துரியோ

தனுதிகளிடமும்) தோஷங்களைப் பாராத (அஜாத சத்ருவாக) எவர்கள் இருக்கிறார்களோ, அந்த பரம புண்யசீலர்கள் பிறர் தோஷங்களைப் பாராத உத்தம வைஷ்ணவ தாஸர்கள், (கிருஷ்ண பிரிய, கிருஷ்ணநாத என்று என்னைப் பிரியமாக கிருதாஞ்சலி யுடன் பக்தி வினயமாக கிருஷ்ண ஏகாதசியன்று உபவாசம் கொண்டு த்வாதசி அன்று என்னை அர்ச்சித்து, விப்ரபோஜனம் செய்வித்து,) பக்திமானும் தர்மஸம்பன்னனுகவுமிருக்கிற நரர்கள் இந்த வழியைச் சேர்ந்தவர்கள்.'' (282)

''ஒன்பதாவது பக்திவர்க்கத்தில் சேர்ந்தவர்களும் என்னை மிக்க சுலபமாக அடைகிறுர்கள். (நாரத மஹரிஷி வியாச பகவானைப்போல ஸரஸ ஸ்வபாவத்துடன் எல்லோரிடமும் கபட மின்றி, அனுகம்பையுடன், (அசுரனே, தேவனே, மனிதனே, ராக்ஷஸனே, புழுவோ, மிருகமோ, பக்ஷியோ, விருக்ஷமோ எதையும் பாராமல்) எல்லாப் பொருள்களிலும் வியாபகமாக விருக்கும் என்னை (ஸஹஸ்ர சீர்ஷாபுருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ர பாத் ஸபூமிம் விஸ்வதோத்ருத்வா, அத்யதிஷ்டஸ் தசாங்குலம் புருஷ ஏவேத ஸர்வம் என்று நினைப்பவர்களாக,) எந்த அவஸ் தையிலும், சுகத்திலும், துக்கத்திலும், லாபத்திலும், நஷ்டத் திலும், மானத்திலும், அவமானத்திலும், கோபத்திலும், சாந்தத் திலும், சீதோஷ்ண ஸ்திதிகளின் மாறுதல்களிலும் ஒன்றையும் கவனியாத முனிபோல, இது பரமாத்மாவின் திருவுள்ளம் என்று (சங்கல்ப நாராயணனை) அனவரதமும் நம்பி வாழும் பாகவத ஸ்ரேஷ்டர்கள் இருக்கிறுர்கள். அவர்கள் இந்த வழியில் என்னை அடைகிறுர்கள். (இவர்கள் ஸ்திதப்பிரக்ஞர்களாகவும் நின்ற நிலை உள்ளவர்களாகவும், சந்தோஷத்திலும் சோகத்திலும் விகாரமடையாது, அன்று அலர்ந்த தாமரைப்பூப்போல முகார விந்தத்தை உடைய கருணுர விந்தார்கள்; உலக நன்மையை ஸதா தியானிப்பவர்கள், சோம்பல் நித்ரையை ஜயித்தவர்கள், பக்திரஸம் கொண்டவர்கள், கல்லிலும் பொன்னிலும் ஸமதிருஷ்டி உள்ளவர்கள், சாது ஜனங்களால் மிக்க சுலபமாக அடையக் கூடியவர்கள். அகில குருக்கள், பரமபாகவதர்கள், பாகவதப் பிரியர்கள். லோகத்தை உத்தாரணம் செய்வதற்கே பிறந்த மஹானுபாவர்கள்.) அவர்கள் ஸ்திரியோ, புருஷனே, ஜடமோ, சேதனப்பொருளோ யாவற்றையும் கவனியாத மஹனீயர்கள். (அவர்கள் உத்தம ஸ்ரேணியில் உள்ள ஜாதிக் குதிரைகளைப் போல சுமந்து வழிகாட்டி ஸம்சார தாபங்களைப் போக்கி, அக்கரை சேர்த்து வைப்பவர்கள்.'' ''ஹே ராமா, சபரிசாக்ஷி

பூதா, அவர்கள் என்னையும் சுலபமாக அடையவிருக்கும் மார்க்க தரிசிகள்.'') (283)

''பாமினி, நான் அவர்களிடம் நிரதிசய, அத்யந்த பிரியம் வைத்திருக்கிறேன். அவர்கள்தான் என் ஹ்ருதயம். (என்னைத் தெரிந்துகொண்டு பிறர்க்கும் மஹா கருணையுடன் காட்டிக் கொடுக்கும் புண்யசீலர்கள். இவர்களிடம் மணமும் பூவும்போல வும் ஒட்டிக்கொண்டிருக்கிறேன்.) இவ்வித சகல பிரகார பக்தி வகைகள் உனக்கு என்னால் சொல்லப்பட்டன. இப்பேற்பட்ட பக்தி குழாங்கள் திருட பக்தியுடன் என்னை ஸதா அடைகிறார்கள். நீயும் என்னை இப்போது சொல்லப்பட்ட எல்லாவித பக்தி மார்க் கங்களால் உபாஸித்து குரு வார்த்தைகளுக்கு அடங்கி குரு விஸ்வாசம், குருசிச்ரூஷை இவைகளால் என்னை ஆனந்தப் படுத்தியிருக்கிறாய். ஆகையினால், நான் பரம சந்துஷ்டனாக, உன் பக்தி விரதங்களை மெச்சுகிறவனாக, உனக்கு அனுக்ரஹம் செய்ய எண்ணத்துடன் வந்து இருக்கிறேன். சபரி, என் ஆக்ஞை யினால் புனராவிருத்தி ரஹித பரமபதமான தத்விஷ்ணோः பரமம் பதம் என்கிற நாராயண பதத்தை உனக்கு அளிக்கிறேன்.'' (284)

(இந்தப் பதம், இந்த உத்தம அர்ச்சராதி மார்க்கத்தில் செல்லும் பரமாம்கதி, ஆதித்ய பிரவேசம் கொண்டதும் அமான வனாகிற திவ்ய புருஷனால் அழைத்துச் செல்லும்படியான பரம வைஷ்ணவகதி, உன் புண்ய மகிமையினால் சுலபமாக இன்று அடையும்படி, என்னால் சாக்ஷாத்கரிக்கப்பட்டு, ஸித்தமா யிருக்கிறது. சபரி, ஸித்தமாயிருக்கிறது. சங்குசக்ர கதாபாணி, நாராயண உபாகத, சரண்யஸ்ஸர்வலோகனும் நாராயண உபா கதः என்கிறபடி,) என்னுடைய பிராப்ய தர்சனம் வீண் போகா தாது. பரமலாபங்களை துருவ மார்க்கத்தில் உண்டுபண்ணக் கூடியது. அதன் பலனாக ஜீவன் ஸ்வரூபலாபத்தை அடைந்து, இயற்கையாக உள்ளதும் நிஜ ஆத்ம ஸ்வரூபத்துடன் ஸ்வ பிரவிருத்தியாகிற என்னிடம், என் பதத்தை வந்து அடைகிறான். சபரி, இப்போது நான் கேட்கும் விஷயத்தைச் சொல். ஜனக ஸுதாவும், கஜகாமினிபோல விருந்தவளும் எனக்கு அம்ருத ருசிபோல் ஆனந்தம் கொடுப்பவளும் என் சகியுமாகிற சீதை யைப்பற்றி தகவல் ஏதாவது உனக்குத் தெரியுமா?'' (285)

சபரி பதில் உரைத்தாள் ''ரகுராய், தாங்கள் பம்பா என்கிற பெயருள்ள ஸரோவருக்குச் சொல்லுங்கள். அங்கு சுக்ரீவன் என்கிற மித்ரன் உமக்கு கிடைப்பான். தேவதேவா, ரகுவீரா, அவனுக்கு விஷயங்கள் எல்லாம் தெரியும். (என்னிடம் அடிக்கடி

உமது வரவைப்பற்றி கேட்டுக்கொண்டிருக்கிருன்.) ஸர்வக்ஞரே, நீரும் இதை அறிந்தும் என்னிடம் வினவுகிறீர். அவன் உமக்கு உதவியைச் செய்வான். தீரபுத்தியுடன் அவனிடம் சீக்கிரம் போய்ச் சேருங்கள்.'' (286)

அடிக்கடி சபரி பிரபுக்களின் சரண கமலங்களில் நமஸ்கரித்துவிட்டு தன் குருநாதரான மதங்கமுனியை ஸ்மரித்து அவருடைய விருத்தாந்தங்களேயும் பிரபுவிடம் ஸமர்ப்பித்து அதன் பிறகு தன் ஆத்ம கதையையும் அவள் நிவேதனம் செய்தாள். (287)

அவ்விதம் அவள் தன் விஷயங்களேச் சொல்லும்போது, ''கனஸ்யாம, கனமேக நீலகம்புக்ரீவனே, (பெருமை உடைய திருவருளாகிற தயாதேவியுடன்கூடிய வெங்கடரமணனே, அத்தகிரி அருளாளப்பெருமானே, கரிவரதராஜனே, ஜகன்மோஹன ரங்கனே சுகர் கண்டு ஆனந்தித்த ஹரிபகவானே, பங்கஜநாபனே, பங்கஜநேத்ரனே, அரவிந்ததாள் அடியானே,) சபரி அடிக்கடி பார்க்கிறவளாக, ஆனந்திப்பவளாக, ஸ்மரிப்பவளாக, யோகாக்னியால் (தர்மபத்னியான தாக்ஷாயணியைப்போல) தன் தேஹத்தை ராமலக்ஷ்மண ஸந்நிதானத்தில் எரித்துக்கொண்டு, ஹரிபதத்தை அடைந்தாள். (எப்பேற்பட்ட ராமானுஜாதி போன்ற யோகிகள் புகழும் சூழ்வீசும் பனிமுகில் தூரியம் முழங்கின, ஆழிகடலலேத்திரை கையெடுத்தாடின, ஏழ்பொழிலும் வளமேந்திய என்னப்பன் வாழ்புகழ் நாரணன் தமரைக்கண்டுகந்தே, நபுனராவர்த்ததே நபுனராவர்த்ததே என்கிற நாராயணபதத்தை மற்றைய யோகிகளுக்கு சாதிக்கமுடியாத துர்லபமான கதியை சபரி, பெருமாள் ஆக்ஞையினுல் ஸ்வீகரிக்கப்பட்டு, அடைந்தாள். (அப்பேற்பட்ட சபரிக்கும், சபரி மோக்ஷ சாக்ஷி பூதர்களான ராம லக்ஷ்மணர்களுக்கும் நான் ஆயிரம் நமஸ்காராதிகளே அடிக்கடி செய்கிறேன். கிருஷ்ணர் தேர்கட்டில் மஹாபிராக்ஞனுகிற அர்ஜுனனுக்கு உபதேசித்தது போலவும், ஜனகர் சுகருக்கு உபதேசித்து அனுக்ரஹித்தது போலவும், பார்வதி எனக்கும் குஹனுக்கும் சொன்னதுபோலவும்) என் பிரபு ஸதாசார்யர் துளசிதாஸர் சொல்லுகிருர்: ''கர்மஸ்வரூபம் பலவகைப்பட்டது. கர்மகதியும் பலவகையுடன் கூடியது. அதுமாதிரி வேதத்தில் நிந்திக்கப்பட்ட பாப கர்மங்களும் அநேக ஸ்வரூபத்துடன் பல விதங்களாக அறியப்படுகின்றன. பலபேர்கள் பல அபிப்ராயங்களுடன் விளங்குகிருர்கள். பல மதஸ்தினர்கள் தோன்றுகிருர்கள். இவைகள் எல்லாம் சோகத்தையே முடிவாகப் பலனே

உடையன. ஆகையால் சுகத்தையும் சந்துஷ்டியையும் முடிவாக விரும்புகிறவன். ("மாம் ஏகம் சரணம் வ்ரஜ, அவ்யக்தம் அஹம் அசிந்தனீயோ அஹம், பூர்வைரபி முமுக்ஷுபிः அர்ச்சனீயோ அஹம், ஈஸோ அஹம், அஹம் அவாப்யோ அஹம் ஸநாதனः" என்கிற வசனங்களின்படி, மனுஷ்யனே, குற்றம், பலமின்மை, ஆயுஸ் குறைவு, விஷயபோக இச்சை ஆகிற சகல மலங்களும் தோஷங்களும் நிறைந்த மனஸே,) கர்மக்ஷயத்தை அடைந்து, நிவிருத்தி அடைந்து, புனராவிருத்தி மார்க்கத்தில் பூர்ணவிஸ்வாசத்துடன் இராம பதத்தில் சீதாராம சரணங்களில், ஜயசீதா ஜயராமா, ஜயசீதாராம லக்ஷ்மண சரணங்களில், பற்றுதல் வைத்தவனாக வாழ. ("வாழ்நாட்களைப்போக்கி ஜன்மத்தைப் பாழ்படுத்திக் கொள்ளாதே. இந்த சந்தர்ப்பம் உனக்கு மீண்டும் வராது.") இவ்விதம் துளசிதாஸர் சித்தாந்த பூர்வமாக ராம பக்தியை நிர்ணயிக்கிறார். (288)

[தியானம்

ராமா, அன்று ஆநிரை மேய்த்தவனாய் கன்றுகளைத் தேடித் திரிந்த கோபாலனாக, காடுகளில் அலைந்து திரிந்தாய். இன்று என் திருமாமகளைத் தேடித்திரிந்த கேள்வனாக நீ தோற்றம் அளிக்கிறாய். அன்று ஒரு காலால் பூமியை அளந்தாய். இன்றோ ராமா, சீதைக்காக மாயா மிருகத்தைத்தேடி ஓடிப்போய், அதனால் சிறைப்பட்ட சீதையைமீட்க, ராவணனைத் தேடிப்போகிறாய். அன்று முசுகுந்தனை தேடிப்போனாய். இன்று சுக்ரீவனை தேடிப் போகிறாய். கருமாமுகில் வண்ணா, அயன் அரன் வணங்கும் மாலே, இன்று தயிர் அரவம் கேட்டு நாராயணன் மூர்த்தி, என் கேசவன், தாமோதரன் என்று ஓசையோடே தயிர் கடைகிற மாதிரி, தனது சித்தத்தைக் கடைந்து வெண்ணெயைப்போல வேறு சிந்தனையின்றி உன் பக்கல் கருத்தை வைத்த சிந்தயந்தி என்கிற ஆய்ச்சியை, "இவற்றை விற்றுவா" என்று பாலையும் நெய்யையும் தயிரையும் கொடுத்தனுப்ப, அவளும் அங்ஙனமே விற்கச் செல்ல, நினைவுகள் கண்ணபிரான் பக்கல் இருந்தமையாலே, "கோவிந்தன் வாங்கவில்லையோ, கிருஷ்ணன் வாங்கவில்லையோ, மாதவன் வேணுமா, கேசவன் வாங்கவில்லையோ" என்று ராமா, கிருஷ்ணா, உன் நாமங்களை இன்னமும் சொல்லிக் கொண்டிருக்கிற சிந்தயந்தி போல, ஆஞ்சநேயர், உனக்காக அன்று காத்துக் கிடந்த அக்ரூரரைப் போல இன்று விளங்குகிறார். கருமாமுகில் நிறத்தானே, திருமா

மகள் கேள்வனே, சீதையைத் தேடித் திரிந்து செல்லும் அடையாளம் கொண்ட ரகுராமா, இன்று ராமானுஜர் திருக்கோளூர் பெண்ணைத் தேடியது போல, இன்று சீதையைத் தேடும் வியாஜத்தினால் எனக்கு ஸத்குருவாக விளங்கும் மாருதியைத் தேடிப் போனீரோ. என் ஆராவமுதமே, அன்பே, அண்டர் கோனே, திருவரங்கத்து அம்மானே, செண்பகப்பூச்சூட்ட என்னிடம் வருவாய். மாம்பூ மொய்த்திருக்கும்படி எழில் நிறைந்த கோதண்ட ஹஸ்தா, என் பாபபயங்களைப் போக்கும் நாரணா, மஹாலக்ஷ்மியுடன் கூட என்னிடம் வாரும். ராமானுஜா, அடிக்கடி உம்மை பிரார்த்திக்கிறேன். நீயல்லவோ பரமபதம், अथ सह न என்று திருவாய்மலர்ந்த பட்டர்பிரானே, அந்த நாராயணன் பொருட்டு எனக்கு ஸ்வபாவமாய் ஏற்பட்ட கைங்கர்யங்களின் பிரகாரங்கள் எல்லாக் காலத்திலும், எல்லா அவஸ்தைகளிலும் உண்டாக வேண்டும் என்று சிந்தையோடிருக்கும் ஆஞ்சநேயரே, என்னை சுத்தம் செய்யும் வாயு குமாரனே, சிந்தயந்தி போல ராமமயமாக விருக்கும் உம்மை, சீதையை முன்னிட்டு நமஸ்கரிக்கிறேன். ஸதாசார்யனே, என்னை ரக்ஷித்தருளும். என் கலிதோஷங்களை நாசம் செய்யும். ஸ்ரேயசைக் கொடும்.]

துளசிதாஸர் சொல்கிறார்: "ஜாதியில் நீசமான பிறப்பை அடைந்திருக்கட்டும்; பிறந்த இடம் சூழ்நிலை பாபங்கள் மலிந்துக்கிடக்கும் இடமாக விருக்கட்டுமே. (என் பிரபு ராமன், கிருஷ்ணன் உதாரமனஸ் உள்ளவன். அவன் உன்னை ரக்ஷிக்கத் தயாராக விருக்கிறான்.) ஏ மனஸே, கேசவனை நீ நினை, மஹா மந்தபுத்தி படைத்து பின்பு வருந்தாதே. ("மம" என்று சொல்லிக்கொண்டு ராவணனைப் போல காற்றாய் அலைந்து திரிந்து) உன் சுகம் இதுதான். (இன்று என்னுள் புகுந்தானை, என் நெஞ்சினுள் புகுந்து, எனக்கு நீர்மல்கி, நெஞ்சு நெகிழ்ந்து, அன்று ஆய்ச்சிகள், இன்று ஆஞ்சநேயாதிகளைப் போல என் மனக்குன்றின் மேல் நின்று நிலைத்த தீபப்பிரகாசனை, பாராளும் அயோத்தி மைந்தனை, சீராளும் வடமதுரைப்பிரானை, அடிக்கடி சிந்தனை செய். என் வ்ரஜராஜபதி கோமானே, என் பிரபு சாகேதராமனை மறந்துவிட்டு கலியில் உள்ள ராஜஸதாமஸ அகங்காரங்களில் ஈடுபட்டு, சுலபமாக அடையக்கூடிய சுகத்தை விட்டுவிட்டு, குணவிஹீனனாகி காலத்தை பாழ்பண்ணிக் கொண்டிருக்கிறாயே. என்று உனக்கு இரவு முடிந்து பகல் உதயமாகப் போகிறதோ) என்று சொல்லி முடித்தார். (289)

பிரபு ராமன் சென்று கொண்டே போனார். அந்த வனத்தை விட்டு இன்னொரு இடத்திற்குச் சென்றார். அந்த இரு யுவராஜ குமாரர்கள் சிம்மக் குட்டிகள் போல, அரசிளங்காளைகள் போல நடந்து சென்றார்கள். அதுளித பலம் கொண்ட நரசார்த்தூலர் கள், (அஸ்வினி குமாரர்களைப் போல பிரகாசித்துக் கொண்டு சென்றார்கள். சீதையை விட்டுப் பிரிந்த தாமோதரன், பிரபு, மற்றவர்களின் கிலேசங்களைப் போக்கும் கேசவர், இன்று ஒரு சாதாரண மனிதனைப் போல அழுதுகொண்டு தன் ஸ்ரீநிதியைத் தேடிக்கொண்டு போன விஷயத்தை எவ்விதம் யாரால் சொல்ல முடியும்? அந்த மஹா பாக்யவானாகிற லக்ஷ்மணனிடம் என் பிரபு ராமன் அநேக கதைகள், இதிஹாஸங்கள் சொல்லி தன்னைத்தானே தேற்றிக்கொள்ள ஆத்மபோதனைகளில் ஈடுபட்டு, லக்ஷ்மணனிடம் சொன்னார். (இந்த ராம லக்ஷ்மண ஸம்வாதங் கள், குரு சிஷ்யனுக்கு போதிப்பது போல, மிகச் சிறந்தனவை யாக இருந்தன.) (290)

அவ்விதம் தினகரகுலபதிகளான அவர்கள் செல்லும் போது ஒரு அழகான இடத்தைக் கண்டார்கள். அதனுடைய சோலை யைக் கண்டு, ராமன் சொன்னார்: "லக்ஷ்மணா, இதோ இந்த அழகான இடத்தைப் பார். இது காடாக விருந்தாலும் எனக்கு உத்ஸாஹத்தை தரும்படி சோலையுடன் இருக்கிறது. இதைப் பார்த்து நான் மீண்டும் சீதையைப் பற்றியே நினைக்கிறேன். என் சிந்தனையைத் தூண்டிவிடும்படி இது என்னை கஷ்டப் படுத்துகிறது. அவைகள் என்னைப் பார்த்து நிந்தை செய்வது போலிருக்கிறது." (ராமா, உனக்கு கொடுக்கப்பட்ட ஸ்ரீநிதியை இழந்துவிட்டாய். உன் மூடத்தனத்திற்கு நாம் என்ன பண்ணச் செய்யக் கூடும்? என்று பரிஹஸிப்பது போலத் தோன்றுகிறது. என்று சொல்லி அழும் ராமன் சீதையைப் பற்றி மிக்க துக்கிக்கிற வராய் காணப்பட்டார்.") (291)

ராம லக்ஷ்மணன் ஆகிய இரண்டு பேர்களையும் பார்த்து பயந்து ஓடும் ஆண் மான்களின் கூட்டங்களைப் பார்த்து, ராமன் லக்ஷ்மணனிடம் சொன்னார், "இதோ பார். இந்த பெண் மான் தன் பதியினிடம் பயந்து ஓடிச்செல்கிறது. அதற்கு அதன் தலைவன் சொல்லுவதைக் கேட்டாயா?" "நீ ஏன் பயந்து ஓடுகிறாய்? என்னுடன் நீ ஆனந்தமாக காலத்தை அனுபவித்துக் கொண்டு சுகமாக விரு. இவர்கள் உன்னைத் தேடி வரவில்லை. தங்க வர்ணமுள்ள (கொம்புகளில்லாத) பெண் மானை அல்லவோ இவர்கள் தேடிச் செல்கிறார்கள்." (292)

[தியானம்

ராமா, நாராயணு, மாதவா, உன்னை பலதடவைகளில், பல ஜன்மங்களில் தேடியும் என்னுல் கண்டுபிடிக்க முடியவில்லை. எங்கே அப்பா ஒளிந்து கொண்டிருக்கிருய்? உன் உருவம் சீதையினிடம் புதைந்த பொருளாகிவிட்டதா? என்னை ஸ்ரீகரனுக ஆக்க விரும்பும் மாயனே, பஞ்சவர் தூதுக்கு கால்நடையாகச் சென்ற கிருஷ்ணு, நஞ்சுமிழ் காளிங்கனிடம் போய் நற்பொய் கைக்கு புகழ் அளித்தவனே, செங்கமலப்பூவில் தேன் போல விருக்கும் என் தாயாரான சீதையை, வண்டு போல் சுற்றித் திரியும் ஸ்ரீராமா, சிவ மாதவ பிரும்மா ஆகிற மும்மூர்த்தி களிடமும் உறை கொண்ட பிரபோ, நீர் ஸம்சார மார்க்கத்திற்கு முடிவாக விளங்கும் விஷ்ணு நாராயணனுக விருக்கிறீர். இந்த ஸம்சாரமாகிற அனந்தத்திற்கு அனந்தமாகவும், முடிவாகவும், ஸத்ய ஸ்வரூபமாகவும் விளங்குகிறீர். பிரும்மபாரம் கொண்ட முனிஜனங்களுக்கு பராபர பூதமாக விளங்குகிறீர். ராமா, நீர் பரமார்த்த ரூபி. அனுத்ம பிரபஞ்சரூபிக்கு பரமாக விளங்கு கிறீர். பர என்கிற இந்திரியங்களுக்கு புலப்படாத அகோசர மான அபாரமாக (பாரபாரः) என்று விளங்குகிறீர். பக்தர்களைக் காக்கும் பக்தவத்ஸலா, நீரே பஞ்சபூதம்; நீரே அதற்கு காரண மாகிற பஞ்சதன்மாத்திரை; ராமா, நீரே அதற்கும் ஹேதுவாகிற தாமஸ அஹங்காரம்; அதற்கும் பரஹேதுவாக விளங்கும் மஹத்தத்வம்; அதற்கும் ஹேதுவாக விளங்கும் பிரதானம்; அந்த பிரதானத்திற்கும் ஹேதுவாகவும், ஸகல கார்யகர்த்தா ஸஹித கார்ய ரூபமாக உருவெடுத்து, நிலைத்து, சகல பிரபஞ்சங் களையும் அசேஷமாகப் பாதுகாத்து ரக்ஷிக்கிறீர். அப்பேற்பட்ட எம்பெருமானே; என்னிடம் வாரீர். அஞ்சனு வண்ணனே, மாயைச் சகடம் உதைத்தவனே, மிக்க பெரும் புகழைப் படைத்த மாவலி வேள்வியில் தானம் வாங்கிய பிரபோ, என்ன மாயம் உம்மிடமிருக்கிறது? சங்கும், சக்கிரமும் ஏந்தும் கிருதலக்ஷ்ணு, இன்று உம்மை அறிந்து கொள்ள ராமானுஜனைத் தவிர யார் இருக்கிருர்கள்? நீர் பிரும்மாவிற்கு பிரபு; அவ்யயம்; நித்யஸர்வ பூதர்; பிரும்ம பிரஜைகள் அனைத்துக்கும் பதி. அச்யுதன் கோவிந் தன் அஜர், ஸர்வ வியாபி, க்ஷயமில்லாத அபக்ஷயர், சகல விகா ரங்களும் அல்லாத அஸங்கி, நீர்தான் அக்ஷரர், புருஷோத் தமர். ஆதலால் உமக்கு எங்களைப் போன்ற மானிடர்களுக்கு ஸர்வ சாதாரணமான ராகத்வேஷங்கள் கிடையாது. அதனுல் உம்மிடம் சாந்தி நிலைத்திருக்கிறது. அப்பேற்பட்ட பிரும்ம

பராத்யனுகிற ராமா, சீதா அன்வேஷணனுகப் போகும் தசரத ராமா, லக்ஷ்மண ராமா, நீர் என் கிலேசங்களைப் போக்கும் கேசவர். நாராயணு, அருள்மறை வேந்தனே, மார்பில் மறுவனே, வெங்கடவனே.]

"இந்த மதம் பிடித்த பெண் யானை என்ன ஆர்வமாக கஜராஜனைத் தழுவுகின்றது. என்னிடமிருக்கும் போது சீதை என்னை இறுகத் தழுவினுள். வலிய ஓடிவந்து என்னைத் தழுவினுள், என்று கர்வம் கொண்ட என்னை இந்த ஆண் யானை சிக்ஷை செய்கிறது. என் மோஹத்தை அழிக்கிறது. ஏனப்பா உன் மடத்தனத்திஞல் பெரும் புகழ் படைத்த சீதையை தனியாக விட்டு இழந்தாய்? என்று என்னை நிந்திக்கிறது. (அவளுடைய கஜம்போல நடையும், பார்வையும், அவள் என்னை அணைக்கும் போது திருமுலைத் தடங்களால் பதிய வைத்த என் நெஞ்சை விம்ம வைக்கிறது.) லக்ஷ்மணு, நான் அடிக்கடி அடிக்கடி வேதமறைகளை ஆராய்ந்து பார்த்து விட்டேன். அவைகளை மீண்டும் மீண்டும் ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டும். அரசனை எவ்வளவுதான் பூஜித்து நன்மதிப்பைப் பெற்றிருந்த போதிலும், அவன் நம்பத்தகாதவன்தான். அரசன் நம் வசத்தில் இருக்கிறுன் என்று நம்பும் மனிதன் மூடபுத்தி உள்ளவன் ஆவான்." (293)

"லக்ஷ்மணு, அதுமாதிரி, நான் என் ஸ்திரியைக் கவர்ச்சி செய்துவிட்டேன். என் ஹிருதயத்தில் அவள் ராணியாக அமர்ந்து விட்டாள் என்று இறுமாந்து ஒருபோதும் பேசக்கூடாது. யுவதி, சாஸ்திரம், அரசன் ஆகிற மூவர்களும் எவருக்கும் பூரணமாக வசப்பட்டவர்கள் அல்லர். இதை நன்ருக புரிந்து கொள். என் அருமைத் தம்பியே, தேஜஸ் இழந்த நான் எவ்வாறு சந்தோஷத்தை அடைவேன்? இதோ பார், வசந்த காலம் என்முன் அழகாக நர்த்தனம் செய்கிறது. சீதையை விட்டுப் பிரிந்த நான் இதை பயங்கர ரூபமுள்ளதாக காண்கிறேன்." (294)

"என் பிரிய சீதை என்னிடமில்லாமல் அதிக வியாகுலம் அடைந்து விட்டேன் நான். பலஹீனனுக ஆகிவிட்டேன். சீதா வியோகத்தால் அத்யந்த தாபங்கள் கொண்டவன் என்று அறிந்து, காமதேவன் தனது பரிவாரங்களாகிற புஷ்பவனங்களையும், தேனை உறிஞ்சிச் சாப்பிடும் வண்டுகளையும், வர்ண அழகுடன் நர்த்தனமாடும் இன்புற்ற பக்ஷிகளையும் ஏவி, என்னை தாக்குகிறுன். சரி, இவனுல் ஒன்றும் முடியாது. இவன் அத்யந்த

பலஹீனன் என்று என்னைப் பார்த்து ஏசுகிறான், லக்ஷ்மணா, ஏசுகிறான்.'' (295)

''அப்பொழுது காமதேவனுடைய தூதனாகிற மந்தமாருதம் தனது எஜமானனுக்கு சொல்லுகிறான், ''நான் உன்னுடன் சேர்ந்திருக்கிறேன். ராமன் தனிமையாக விருக்கிறான். வா; நாம் இருவர்களும் அவனை ஹிம்சிப்போம்.'' இந்தச் செய்தியைக் கேட்ட காமதேவன், தனது பரிவாரங்களை சீர் அமைத்து நிறுத்தி, நம்மை இந்த அழகிய காக்ஷியால், சூழ்ந்து வளைத்திருக்கிறான்.'' (296)

''இதோ பார், விசாலமான விருக்ஷங்களை கொடிகள் தாவி கட்டி அணைத்துக்கொண்டு இறுகத் தழுவிக்கொண்டிருக்கின்றன. இதைப் பார்த்தால் ஆகாயத்தில் பந்தல் போட்ட மாதிரி இருக்கிறது. வாழைமரங்களும், தாளவிருக்ஷங்களும் கொடித்வஜம் போட்ட மாதிரி அழகாக நீண்டு வளர்ந்திருக்கின்றன. இவைகளுடைய அழகு வரிசைகளைப் பார்த்து மோஹமடையாத மனிதன் மஹா தீரனாகத்தான் இருக்கவேண்டும்.'' (297)

''எவ்வளவு விதமான புஷ்பங்கள் விதவிதமாய் புஷ்பித்து மரம் செடிகளில் பூர்ண அழகுடன் விளங்குகின்றன. அவைகளைப் பார்த்தால் விதவிதமான ஆயுதங்களுடன் சண்டை செய்யும் வீரர்கள் தங்கள் ஆயுதங்களை சுழட்டிக் கொண்டிருப்பதுபோல காக்ஷி அளிக்கிறார்கள். அங்குமிங்கும் எங்கும் அழகாகக் காணப்படும் விருக்ஷங்கள் தனிப்பட்ட சிப்பாய் வீரர்கள் முகாம் போட்டு தங்கியிருப்பதுபோல காக்ஷி அளிக்கிறார்கள்.'' (298)

[தியானம்

அம்மா நாராயணி, பரமேஸ்வரி, என் தேகம், மனம், இந்திரியம், பிராணன், ஸகல கர்ம ஞான பக்தி பிரபன்ன சேஷ்டிதங்கள், ஆகிய யாவையும் உனது திருவருள் என்று சொல்லும்படி நிர்ஹேதுக கிருபையாகவும் தோன்றுகிறது. எல்லா சராசரங்களையும் லயமடையச் செய்யும் லலிதாதேவி, உன்னுடைய நிஜ அருண பிரபையினால் ஸகல பிரும்மாண்டங்களையும் ஆனந்தத்தினால் மூழ்கச் செய்கிறாய். ராமனுடன் செய்யும் ஸல்லாப மாதுர்ய பேச்சுக்களால் ஸரஸ்வதியின் திவ்ய தம்புரா கானத்தை தோல்வி அடையும்படி செய்கிறாய், அம்பா, அழகு வாய்ந்ததும், தங்கமயமான அங்கதம் கேயூரம் முதலிய தோள் வளைகளினால் கூடிய நான்கு திருக்கைகளால் ராமனை உனது அணைப்பினால் இன்புறுகச் செய்கிறாய். என் பரிபூர்ண காமினி, உன்னுடைய மெல்லிய இடை ரத்னங்களால் இழைக்கப்பட்ட மேகலை, பக்தர்

களாகிற தியாகராஜர், ராமதாஸர் போன்ற மஹான்களால் உன்னைப்பற்றிப் பாடும் புகழ்மாலே, கீர்த்தனை மணிமாலையைப் போல அல்லவா பிரகாசிக்கின்றது. உன் மார்பில் உள்ள பதக்கம் ராமனுடைய சஹோதரர்களை நினைவுபடுத்துகிறது. மாணிக்கத்தின் தேஜஸ்களால் விளங்கும் உன் முழங்கால்கள் என்னைப் போன்ற பக்தி நம்ரதை உள்ளவர்களுக்கு ஸ்திர புத்தியையும் பக்தியையும் கொடுக்கும் கற்பக விருக்ஷங்கள் மாதிரியிருக்கின்றன. ராம மஹிஷியே, கல்யாண கல்பதருவே, காமேஸ்வரி காமேஸ்வரரிடம் அனுபவித்து அடங்கியதுபோல நீ ராமனிடம் வைத்த அன்பினால் உன்னுடைய சேஷ்டிதங்களை ராமனுடைய கௌரவத்திற்காக அடக்கிக்கொண்டாய். காமாக்ஷி, ஸ்ரீமந் நகர நாயிகே, எப்பொழுதும் உன் பாதங்களை எனக்கு கொடு. உன் குளிர்ந்த திருஷ்டிகளை என் மீது வர்ஷி. என் ஸஹஸ்ரார பத்மத்தில் இருந்துகொண்டு, ஸுதாவை வர்ஷிக்கும் ஸுதா ஸாராபி வர்ஷிணி, என்னிடம் கிருபை செய். என்னுடைய லஜ்ஜை, மோஹம், கர்வம் லோபம் ஆகிய துர்குணங்களைப் போக்கும் லஜ்ஜாட்யா, என்னுடைய ரோக பர்வதங்களைப் போக்கும் வஜ்ர தாரணியே, ராமனுடைய கரபோருவே, சீதாதேவியே, உனக்கு அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன்.]

"இந்தக் குயில்கள் (ராம சீதா என்று) கூவுவதைக் கேள். இந்த குயில்கள் காமம் கொண்டு மதம் பிடித்து அலையும் யானைகளாகிற மன்மதனுடைய சேனைகள். இந்த நாரைகள், காக்கைகள் போல கருமையானதும் நீண்ட வால் கொண்ட பக்ஷிகள் அந்த மன்மத சேனைகளுக்கு ஒட்டகப் படைகள் போலவும், கோவேறு கழுதைகள் போலவும், சீதையின் பிரிவாற்ருமையால் ஏற்படும் விரக ஸந்தேசத்தை சுமந்து கொண்டு என்னைத் தாக்குகின்றன. இந்த மயிலைப் பார். எனக்கு முன்பு மந்தஸ்மிதம் செய்யும் சீதையின் அழகை நினைவுபடுத்துகிறது. இந்த சகோர பக்ஷிகளைப் பார்த்தால் (நான் நேரம் கழித்து வந்தால் எனக்காக வழிமேல் விழிவைத்து காத்துக் கிடக்கும் சீதையின் ஞாபகம் வருகிறது.) (என்னோடு கொஞ்சி கெஞ்சி, அழகுடன் பேசும் ஸுததியான சீதை எங்கே என்று கேட்பது போல இந்த பைங்கிளி என்னிடம் பேசுகிருள். அழகான கழுத்துப் படைத்த இந்த புருக்கள் (என் கம்புக்ரீவ) சீதையை ஞாபகப்படுத்துகின்றன. மந்த நடையுள்ள ஹம்ஸம் என்னைப் பார்த்து "சீதை இவ்விதம் நடப்பாளா?" என்று சீதையின் கதியை ஒத்திகை பாரப்பது போல அவளுடைய நடை அழகை ஞாபகப்படுத்துகிறது.

இப்பேற்பட்ட மயில்கள், சகோர பக்ஷிகள், கிளிகள், புருக்கள், ஹம்ஸங்கள் யாவும் என்னைத் தாக்கும் மன்மதனுடைய சேனைக்கு அராபியக் குதிரைகள் போல விருக்கின்றன.'' (299)

குயில்களைப் போல வால் நீண்ட பக்ஷிகளைப் (Partridge) பார். பயந்த ஸ்வபாவமுள்ள இந்த குருவிகளைப் (Quails) பார். இவைகள் என்னைத் தாக்கும் காலாட் படைகள். இவ்விதம் பல சேனைகளுடன் கூடிய காமதேவனுடைய சேனைகளின் வரிசைகளை யார்தான் விபரமாக வர்ணிக்கக்கூடும்? மனத்திற்கு புரிபடாதபடி மிக்க மென்மையாயும், பலம் வாய்ந்தவைகளாகவு மல்லவோ இந்த சேனை வரிசைகள் விளங்குகின்றன. இந்த பெரிய குன்றுகளைப் பார். இவைகள் மன்மதனுடைய ரதங்களைப் போல விருக்கின்றன. வேகமாக பாய்ந்து ஓடும் இந்த ஓடைகளைப் பார். இவைகள் மன்மதனின் ரண பேரிகைகள், துந்துபி வாத்யங்களைப் போல ஒலிக்கின்றன. லக்ஷ்மணா, இந்த சாதக பக்ஷிகளைப் பார். இவைகள் மன்மதனுடைய வந்திகள் மாதிரி, மன்மதனுடைய புகழ்களைப் பாடிக்கொண்டு என்னைத் தாக்கு கின்றன.'' (300)

"காமமதுவை உண்டு, இன்பரஸத்துடன் ரீங்காரம் செய்யும் இந்த வண்டுக்கள் நாதசுரம் போலவும், ஷணாய் என்கிற வாத்தியத்தைப் போலவும் ஒலிக்கின்றன. சீதளம், மந்தம், சுகந்தமாகிற முக்குணங்களால் மெதுவாக என் மீது வீசும் இந்த மலய மாருதங்கள் காம தேவனுடைய தூதர்கள் போலவும் ரதியைப் போலவிருக்கும் என் சீதையை நினைவுபடுத்துகின்றன. இந்தப் பிரகாரம் மன்மதன் தன்னுடைய நான்குவித ரத கஜ துரக பதாதி சேனைகளுடன் என்னை ஹிம்சிக்கிறான். யாவரையும் ஸகல சராசரங்களையும் பங்கப்படுத்தும் மன்மதன் என்னையும் யுத்தத்திற்கு அழைக்கிறான்.'' (301)

"லக்ஷ்மணா, இப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த காமதேவனுடைய சேனையைக் கண்டு, பயப்படாமல், தைர்யமாக எவன் இந்த ஜகத்தில் ஸ்திரபுத்தியுடன், (அர்ஜுனன் ஊர்வசியின் முன்பு நிலைத்த மனம் உள்ளவனாக, மிகுந்த லஜ்ஜை அடைந்தவனாக, கைகளால் காதுகளைப் பொத்திக் கொண்டு இன் சொல்லால் "எனக்கு குரு பத்னிக்கு நீ ஒப்பானவள்'' என்று அவளால் வேண்டப்பட்டும் உரைத்தானே, ஜிதேந்திரியனாக, மனம் தர்மத்திலிருந்து நழுவிவிடாதவனாக, தீரனாக தன்னை எவ்விதம் காப்பாற்றிக் கொண்டானோ, அதுபோல) உறுதியாக மன்மதனுடன் போராடுகிறானோ, அவனே வித்வான். அவனே

தீரன். இந்த காமதேவன் ஒரு ஸ்திரியை ஹிமய பர்வதத்தின் பலம் போல அல்லவா தனது பலத்தின் சகாயத்திற்கு வைத்துக் கொண்டிருக்கிறுன். அந்த ஸ்திரியாகிய காமதேவனின் பலத்தினிடமிருந்து எவன் தன்னை விடுவித்துக் கொள்கிறுனே, அவனே ஸ்ரேஷ்ட யுத்த வீரன்.'' (302)

"அருமைத் தம்பி, தகாதவற்றில் காமம், அது நிராசையாகப் போனல் ஏற்படும் வருத்தமாகிற க்ரோதம், பிறர்களுக்கு கொடுக்க சம்மதமில்லாத பேராசையுள்ளதும், தன் சுகத்திலே பற்றுதல் உடைய மேற்சொல்லிய காம க்ரோத லோபம் ஆகிய மூன்று அவகுணங்களும் சேர்ந்து ஒரு மனிதனுடைய புண்ய பிரபாவங்களை அழிக்கும் துர்க்குணங்கள் என்று நினைத்துக் கொள். பரமாத்மாவை அறிந்த வித்வான்கள், விக்ஞானம் படைத்த தீரர்கள், முனிகள் கூட, இந்த துர்குணங்களின் சேஷ்டிதங்களுக்கு ஒரு க்ஷணத்தில் அடிமையாகப் போய்விடுகிறுர்கள்.'' (303)

[தியானம்

ஜனகசுதா, ஜகஜ்ஜனனி, என் தாயே, ரகு நாயகா, ஸுரநர முனிஸேவிதா, என் ஸ்ரீநிவாசரே, உங்களுடைய பாத கமலங்களை வணங்கும் எங்களுக்கு விமல ஞானத்தைக் கொடும். உங்களுடைய ஸங்கல்பம் எங்களிடம் எப்போதும் அனுகூலமாக விருக்கட்டும். நீர் ஸ்வதந்திர ஸங்கல்பர் என்று பெயர் பெற்றிருந்தும், யாவருக்கும் வசப்படாத அத்ருதர் என்று வியாஸரால் அழைக்கப்படுகிறீர். ஐயா, என்னுடைய நிஜ ஆத்மஸ்வரூபத்தை நீர் தெரிந்து கொண்டு, அதை என்னுல் சுலபமாக மாற்ற முடியாது என்று நீர் அறிவீராக. நான் உம்மிடம் சேரும் வரை, உங்களையே ஆதாரமாகக் கொண்டு முயற்சி செய்தும், உங்களை அடைவதற்கு அசுக்தனுன விருந்தாலும் என்னை உங்களுடைய க்ருபா சங்கல்பத்தினுல் ஸம்ரக்ஷிக்கவேண்டும். ஸ்வாமி, எனக்கு பலஹீனங்கள் அதிகமாக இருக்கின்றன. சங்கோஜமும் உண்டு. புத்தி விகாஸமாகிற ஆத்ம பலமும் இல்லை. உம்முடைய அனுபவ சுகமாகிற கைவல்யத்தைவிட உமக்கு ஒரு க்ஷணமாகிலும், ஸ்வாமி, கைங்கர்யம் செய்யவேண்டும் என்கிற ஆசையுமிருக்கிறது. அல்பமாயிருக்கினும், மாயோன், உனக்கே ஆளாகும் சிறு காலத்தை யுறுமோ அந்தோ தெரியலை, என்கிறபடி, உமக்கு கைங்கர்ய பாக்யங்கள் செய்த லக்ஷ்மணனையும், நீர் சீதா அன்வேஷணனுகப் போகும் சமயம் உமது திவ்ய பாத தேக

இந்திரிய மன சிரமங்களின் களைப்பு நீக்குவதற்காகவும், உமக்கு உத்ஸாஹங்களை மீண்டும் உண்டாக்குவதற்கும், ஆள்படுத்திய உமது ஸ்ருஷ்டியாகிற பசு, மிருகம் பக்ஷி, புஷ்பம், விருக்ஷம், பழம் ஆகிய சகல சேதனு சேதனங்களுக்கும், ''விஸ்வம்'' என்று அறியப்படும் ஜகத்தை, மஹா லக்ஷ்மியை முன்னிட்டு நான் சரணமடைகிறேன். ராமாசீதா, நீங்கள் இருவர்களும் பானுவாகிற சூரியன். ஜகத்தைப் பார்க்கும் சக்ஷுஃ ஸர்வதேஹங்களுக்கும் ஆத்மா. ஸர்வபூதங்களுக்கும் யோனி. ஸர்வ கிரியைகளுக்கும் ஆசாரநியமம். நீங்களே ஸமஸ்த பூதங்களுக்கும் கதி. நீங்களே ஸ்வர்க்க த்வாரம், பிரஜா த்வாரம், மோக்ஷத்வாரம். சராசர ஆத்மாவும் சூக்ஷ்மாத்மாவாகவுமிருக்கிறீர். உங்களுடைய மென்மலர் அடிகளை நோவாமல் அகமகிழ்ந்து நமஸ்கரிக்கிறேன். ராவணனுகிற ராக்ஷஸனைத் தேடிச் சென்ற ரகுராமா, லக்ஷ்மணு, என்னிடமும் நீங்கள் அன்பு செலுத்த வேண்டும்.]

''லோபத்தின் ஆயுதங்கள் இச்சையும் டம்பமாகிய கபட வேஷமும்; காமத்தின் ஆதாரபலம் ஸ்திரி. க்ரோதத்திற்கும் கடுமையான வசனங்கள்தான் பலத்தை தருகின்றன. இதை நன்ருக அறிந்து தீர விசாரித்து ஸ்ரேஷ்டமான முனிஜனங்கள், காமத்தையும் க்ரோதத்தையும் வெல்லவேண்டும் என்று சொல்லியிருக்கிருர்கள்.'' (304)

என் பிரபு காமாதிஹாரி பரமசிவன் பார்வதியிடம் சொல்லுகிருர். ''பார்வதி, என் பிரபு ஸ்ரீராமச்சந்திரன் விஸ்வம் முழுவதற்கும் ஆதார யோனியாக விருப்பதால், ஒன்றிலும் பற்றப்படாத குணுதீதமர். (தம்மாலேயே தான் தாங்கப்படும் ஸ்வதந்ருதர்) சராசர ஆத்மா. ஜகத்திற்கு ஸ்வாமி. ஜகத்சக்ஷுஃ உள்ளும் புறமும் வியாபித்திருக்கும் பிரபு. என் பிரியமான உமா, இவ்விதம் வெளிப்படையாக தன்னுடைய தீன ஸ்திதியை பறைசாற்றுவதால், காமத்தை ஆதாரமாக வைத்து வாழும் ஸம்சாரி ஜனங்களுக்கும், மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கி, புத்தியை ஆத்மாவினிடம் ஸமர்ப்பித்திருக்கும் தீரர்களான யோகி ஜனங்களுக்கும் பிரபு வைராக்யத்தின் வழியை உபதேசிக்கிருர். விமலமான ஞானத்திஞல் மனத்தை திருடமாக்கும் வைராக்ய உபநிஷத்தை உபதேசிக்கிருர்.'' (305)

''ஆசை நிறைவேருமல் கடூர வசனங்களால் ஏற்படும் க்ரோதம், காமம், லோபம், மதம், மாயாமோஹம் ஆகிய ஐந்தும் பகவான் சீதாராமச்சந்திரனுடைய அனுக்கிரஹ சங்கல்பத்திஞல்

நாசமடைந்து போகின்றன. என் பிரிய உமா, எந்தக் கூத்த பிரான் (மாயாஜாலன், ஆனந்தநடராஜன்,) எவனிடம் பிரஸன்ன மடைந்து அனுகூல ஸங்கல்பனுக விருக்கிருரோ, அவனிடம் மாயையின் இந்திர ஜாலங்கள் விகஸிப்பதில்லை. அழிந்து போகின்றன.'' (306)

''பிரியமுள்ள உமா, நான் என்னுடைய சொந்த அனுபவத்தைச் சொல்கிறேன் கேள். (அவிக்ஞாதர், பக்தர்களின் குற்றங்களைப் பாராத) என்பிரபு ஹரிபகவானை எவர்கள் ஸதா பஜனை செய்கிருர்களோ, அவர்கள் இந்த உலகத்தில் இருப்பது யாவும் நசிக்கும் குணத்தை உடையது; ஸ்வப்னம் மாதிரி இறந்துவிடக்கூடியது என்று அறிகிருர்கள். ஆகையால் பிரபுவின் பூஜைகளும் ஆராதனைகளும், அவருக்காக கைங்கர்யம் செய்வதும், அவர் நாமாக்களைச் சொல்லி வழிபடுவதும், அவருடைய பாதங்களைச் சரணம் செய்வதும் ஒன்றுதான் இந்த ஜகத்தின் உண்மையான விஷயம்.'' இவ்விதம் ஞானபோதகம் செய்பவராக பிரபு ஸ்ரீராமன் லக்ஷ்மணனுடன் பம்பா நாமம் கொண்டதும் அழகியதும் கம்பிரமானதுமான தடாகத்திற்கு வந்து சேர்ந்தார். (307)

அந்தத் தடாகத்தின் ஜலம் ஸாதுக்களின் ஹ்ருதயத்தைப் போல நிர்மலமாகவிருந்தது. மனோஹரமானதும் அழகானதுமான தீர்த்தக் கட்டங்கள் நான்கு திசைகளிலுமிருந்தன. அங்கங்கே அழகான பசுக்களும் மிருகங்களும் தண்ணீர் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. அவைகள் கூட்டமாகவிருப்பதைப் பார்த்தால், உதார ஹ்ருதயமுள்ள தனவான் வீட்டின் முன்பு யாசகர்கள் கும்பலாக நிற்பதுபோலத் தோன்றுகிறது. (308)

[தியானம்

நாராயணு, மஹாலக்ஷ்மிநிவாஸா, சீதே, ராஜராஜேஸ்வரி, உங்கள் பாதாரவிந்தங்களை அடிக்கடி சேவிக்கிறேன். உங்களுடைய நாம மகிமைகள், ரூப சௌந்தரியங்கள், சக்தி பிரபாவங்கள், யாவற்றையும் நேரில் கண்ட ஆஞ்சநேயரை வணங்கி, உங்களை சாக்ஷாத்கரிக்கிறேன். உம்முடைய சக்திகள் பலவிதமாகவிருக்கின்றன. திரைலோக்ய மோஹன சக்தி தேவதையே, ஸர்வார்த்தம் நீங்கள்தான். ஸர்வ சௌபாக்கியங்களைக் கொடுக்கும் ராஜராஜேஸ்வரி, உங்களிடமே ஸம்க்ஷோபண சக்தியிருக்கிறது. நீங்கள் மனம் குளிர்ந்தால் ஸர்வ ஆசைகளையும் பூர்த்தி செய்கிறீர்கள். நீங்கள் ஸர்வ ஆயுதங்களோடு உங்களுடைய

பக்த பிரபன்னர்களை ஸர்வரக்ஷாம் என்கிற சக்தி பிரபாவத்தால் ரக்ஷிக்கிறீர்கள். நீங்கள் தேகமன வியாதிகளைப் போக்கும் ஸர்வரோக ஹர சஞ்சீவினியாக விருக்கிறீர்கள். உங்களை அணிமாதி சித்திகள் தங்கள் பெருமைகளுக்காகவே அடைந்து ஆஸ்ரயித்திருக்கின்றன. ஸர்வஸித்தியே, உம்முடைய பக்தர்களிடம் காருண்யபாவத்தால் நீங்கள் அவர்களை ஸர்வ ஆனந்த மயமாக ஆக்குகிறீர்கள். உங்களை வம்ச பரம்பரைபோல ஸ்ரீ நாதானந்தர் மஹாகுரு முதல் (என்) வரை அநேக பிரபன்னர்களும் இன்னும் எவ்வளவோ பக்த சிரோண்மணிகளும் உங்களை ஆஸ்ரயித்தும், ஆஸ்ரயிக்கவும் போகிறுர்கள். நாரதராலும் தும்புருவாலும் கீர்த்தனம் செய்யப்பட்ட என் மன உல்லாஸ தேவதைகளே, காமேஸ்வரரிடம் மஹா திரிபுரசுந்தரி வீற்றிருப்பதுபோல, ராமனுடைய திவ்ய அங்கங்களில் வீற்றிருக்கும் சீதா தேவியே, குபேரன், துருவன், சுக்ராசாரியார், உபமன்யு ரிஷிகளால் துதிக்கப்படும் மஹா தேவதையே, லலிதாதேவி, பட்டாரிகா, கணபதி, அகஸ்தியர், லோபா முத்ரையினுலும், மன்மதனுலும் ஆராதிக்கப்பட்ட ராஜ்ய லக்ஷ்மியே, உங்களைக் குஹன் போன்ற மஹா பக்தரஸிகர்களை முன்னிட்டு சரணம் அடையும் எங்களுக்கு தேவதேவியே, உங்களுடைய நிரதிசய சுப மங்களங்களை, கடாக்ஷ வீக்ஷண்யங்களை க்ருபையுடன் அளி அம்மா, அளி, என் தோஷங்களை க்ஷமி.]

"லக்ஷ்மணு, கமல புஷ்பங்களாலும், கமல பத்ரங்களாலும் வியாபித்திருக்கும் இந்த பத்ம வனத்தையும் ஜலத்தையும் பார். அடர்த்தியாக வளர்ந்திருக்கிற பத்ம புஷ்பங்கள் கொடிகளாலும் இலைகளாலும் சூழப்பட்டு, ஜலமே காணப்பட முடியாதபடியிருக்கிறது. (மாயையினுல் விரிக்கப்பட்ட திரையினுல், பரப்பிரும்மத்தின் அகிலஹேய ப்ரத்யநீக கல்யாண குண கணங்களும் அனந்த ஞான ஆனந்த ஸ்வரூபங்களும், அசிந்திய திவ்ய அத்புத நிரதிசய, நிரவத்ய, நிரந்தரமாக ஜ்வலிக்கும் சௌந்தர்ய அழகுகளும், மாதுர்ய, சாதுர்ய, சௌகுமார்ய, சௌகந்திய, லாவண்ய யௌவன, அனந்தகுண, திவ்யரூப ஐஸ்வர்ய, ஞான பல, தைரிய, வீர்ய, சக்தி தேஜஸ்ஸுகன், சௌசீல்ய, வாத்ஸல்ய சௌலப்ய குணவிலாஸங்கள், அஹிம்சை, தயை, ஔதார்யாதி மஹத்வங்கள், இன்னும் அநேக விலக்ஷணமாகவுள்ள ஐஸ்வர்ய பிரபாவங்கள், ஆகிய யாவும் மறைக்கப்பட்டிருந்த போதிலும், ரஹஸ்ய தர்ப்பணம் என்கிற ஸ்ரீவித்யையின் பிரபாவத்தால் அல்லவோ அடையமுடிகிறது.) மாயையில் அழுந்தின சாதாரண

மனிதனுக்கு அந்த நிர்குண பரபிரும்மம் தன்னைக் காட்டிக் கொடுக்கிறதில்லை.'' (அதுபோல, ஜலம் சுலபமாகக் காணப் படாமல் ரஹஸ்ய தர்ப்பணம் என்கிற ஸ்ரீவித்யைப்போல மறைந்திருக்கிறது.) (309)

''இப்பேற்பட்ட அத்யந்த ஸலிலமான ஜலபிரவாஹத்தில் ஸ்ரீவித்யையில், ஊறித் தேர்ந்த பக்தர்கள் மீன் குஞ்சுகள் மாதிரி சதா ஆனந்த பிரும்ம மயமாக, (மஹா திரிபுரசுந்தரியின் அகண்ட ஏக திரைலோக்ய பிரும்ம ரஸம் கொண்டதாகவும்,) நிரதிசய சுக ஆனந்தத்தையும் அடைகிறுர்கள். எவ்விதம், தர்மத் தின்முன் பற்றுதலுள்ள தர்மசிலர்கள் ஸநாதனமான பகவா னிடத்தில் ஆத்ம ஸமர்ப்பணம் செய்வதால் அந்த பகவானுடைய ரக்ஷணத்தை அடைகிறுர்களோ, அதுமாதிரி மஹா யோகீஸ்வரர் கள் ஸ்ரீவிஜயோபூதிஃயாகிற சுக ஆனந்தங்களை துருவமாக அடைந்து ஸதா தினந்தோறும் இன்புறுகிறுர்கள்.'' (310)

''அந்த தடாகத்தில் (பிந்து கோணங்களின் நடுவில் ஸ்வர்ண பிந்துவிருப்பது போலவும், பல ஆவரணங்களால் சூழப்பட்டு நடுவில் ஆதிசக்தி வீற்று இருப்பது போலவும்,) பத்மவனம் என் கிற காட்டில் ஸெளகந்திகம் என்கிற ஆயிரம் இதழ்கள் உள்ளதும் பல நிறங்களுடன் கூடியதுமான தாமரைப் புஷ்பங்கள் பல இருக்கின்றன. (ஒவ்வொரு ஆவரணத்திலும் அநேக கோடி சக்தி தேவதைகள், ரஹஸ்ய யோகினிகள். குப்த யோகினிகள், ஸம்பிரதாய யோகினிகள் இருப்பதுபோல) மதுரமான குரலுடன் ரீங்காரம் செய்யும் வண்டுகள் அநேகமிருக்கின்றன. அந்தத் தாமரைத் தடாகத்தில், வாத்துக்கள், ராஜ ஹம்ஸங்கள், பேசிக் கொண்டும் உல்லாஸமாக விளையாடிக்கொண்டுமிருக்கின்றன. அவைகள் போடும் சப்தங்கள் தங்களுக்குள் தங்கள் பிரபுவி னுடைய அழகு மகிமைகளைக் கண்டு, அவருடையக் கீர்த்திகளை யும் பேசிக்கொண்டிருப்பது போலத் தோன்றுகின்றன.'' (311)

''சக்ரவாக பக்ஷிகள், நாரைகள் போன்ற பக்ஷி சமுதாயங்கள் அவைகளின் வரிசைகள், அழகுக் கூட்டங்கள் எல்லாம் விவரிக்க முடியாதபடி எழில் கொண்டிருக்கின்றன. அவைகளின் அழகு களை வர்ணிப்பதைவிட அவைகளைக் காண்பதே மேல் என்று சொல்லும்படிக்கும், வார்த்தைகளில் அடங்க முடியாதபடி வித விதமான பக்ஷிகளும் காணப்படுகின்றன. அந்த அழகான பக்ஷிக் கூட்டங்கள் போடும் சப்தங்கள், குரல்கள், வழிப்போக்கர்களை அழைத்துச் சுந்தரமாகப் பேசுவது போலவும், அவர்களின் குசல பிரஸ்னத்தை விசாரிப்பது போலவுமிருக்கின்றன.'' (312)

"அந்தத் தடாகத்தின் கரை ஓரங்களில் முனிஜனங்கள் ஆஸ்ரமங்களைக் கட்டிக்கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். அந்தத் தடாகத்தைச் சுற்றி அழகான விருக்ஷங்கள் நான்கு புறங்களிலும் காணப்படுகின்றன. சம்பக புஷ்பம், பகுள புஷ்பம், கதம்பம், தமால பாடல, பலா மரங்களும், பால் பசையுள்ள மரங்களும், மாமரங்களும், (313)

அப்போது துளிர்விட்ட இலைகளும், மிக்க மணமுள்ள நானு பிரகாரமான புஷ்பங்களும், அந்தப் புஷ்பங்களில் ரீங்காரம் செய்யும் வண்டுக் கூட்டங்களும் சொல்ல முடியாதபடி அழகாய் விளங்குகின்றன. சீதளமானதும், மந்தமானதும், சுகந்தமானதும் எல்லோருடைய மனத்தை ரஞ்சனம் செய்வதுமான மாருதம் வீசிக் கொண்டிருக்கிறது" (314)

அந்த இன்பச் சூழ்நிலையில் "கூ கூ" என்கிற கோகில த்வனிகள் கேட்கப்பட்டன. அவைகளின் குரல் இனிமை முனிவர்களின் தியான நிலைமையையும் கலைக்கும்படி இருந்தது. (315)

[தியானம்

என் குருநாதா சரணம். எனக்கு விமல ஞானத்தைக் கொடுத்து மாயா மோஹத்தை ஒழித்து, நிஜஸ்வரூபத்தை உணர்த்திய குருநாதா, உமக்கு அநேக மங்கள ஜயங்கள் ஏற்படட்டும். அன்றொரு நாள் என் தேவியான மாதவிக்கு கஷ்டம் வந்தபோதிலும், பொறுமை என்கிற தவத்தினால் ஆனந்தத்தை உண்டாக்கி வைத்த ஆஞ்சநேயா, சரணம், சரணம். சங்கு சக்ர கதா தரனாகிற புண்டரீகாக்ஷா, சரணம். பூமிதேவியைப் பாதாளத்திலிருந்து உத்தாரணம் செய்த ஆதிவராஹ மூர்த்தியே சரணம் பரமாத்ம ஸ்வரூபமே உமக்கு நமஸ்காரம். கோவிந்தா, கோபாலா, தேனுவாஹன ராஜகோபாலா சரணம் சரணம். ராம பாதாரவிந்தங்களே சரணம் சரணம். உம்முடைய பரத்வத்தை யாரும் அறிந்தது இல்லை. ஆனால் ஆஞ்சநேயாதிகள் உம்முடைய விபவ, அர்ச்சாவதார ரூபங்களை அர்ச்சிக்கிறார்கள். உம்மை ஆராதித்து தேவர்கள், ரிஷிகள், முமுக்ஷுக்களின் கதியை அடைகிறார்கள். வாஸுதேவ ஸ்வரூபமான, உம்மை புத்தியினால் "அகிலம் தவரூபம்," என்று நிச்சயித்து, எதை எதை இந்திரியங்களால் அறியப்பட்டு, மனத்தில் கிரஹணம் செய்துகொண்டு உம்மை ஸந்துஷ்டி செய்கிறார்களோ, அந்த பர வாஸுதேவ ஸ்வரூபத்திற்கு அநேக நமஸ்காரங்கள் செய்கிறேன். பூமிதேவியின் குமாரியான சீதை இன்று ராம தியானமாகிற விரதத்துடன்

அசோகவனத்தில் என்றும் உன் வக்ஷஸ்தலத்தில் அனபாயினி என்கிற காடோபகூட ஐக்யத்தைப் பெற்று மாதவி என்று அழைக்கப்படுகிருள். அவளே உன் ரூபம். அவளும் நீயும் காடோபகூடமாக விருக்கிறீர்கள். உங்கள் இருவர்கள் மூலமாக என் குருநாதரும், அவரால் "நானும்" நீங்களும், அறியப்படு கிரேம். உம்முடைய அனந்தமான ரூபலாவண்யங்களுக்கு அநேக நமஸ்காரங்கள். ஸம்பூர்ண ஞானமய, ஸ்தூலமய, அவ்யயமய, அவ்யக்த வ்யக்தமய ராமா சீதா, உங்களுக்கு எப்போதும் ஜயங்கள் ஏற்படட்டும். பராபர ஸ்வரூபமே, விஸ்வாத்மன், வஷட்காரமே, யக்ஞபதே, ஓங்காரமே, அக்ரரே, வேதங்களும் அங்கங்களும் யக்ஞ புருஷரும் நீங்களே. மூர்த்தி, அமூர்த்தி, திருஸ்யம், அதிருஸ்யம் ஆகிய எல்லாம் நீங்கள். புருஷோத்தமா, என்னுல் சொல்லப்பட்டது சொல்லப்படாதது, எல்லாம் தாங்களே. அதனுல் அன்ரே அர்ஜுனன் வாஸு தேவரை எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருக்கும் "ஸர்வ ஸ்வரூபரே" என்ருன். அப்பேற்பட்ட பரவாஸுதேவருக்கு ஆஞ்சநேயர், அர்ஜுனன், தேனு இவர்களை முன்னிட்டு நான்கு புறத்திலும் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். உங்களுடைய மகிமை களை அறியாத என்னிடம் க்ஷமையுடன் குற்றங்களை மறந்து, பயத்திஞல் வருந்துகிற எனக்கு உலகம் அனைத்தையும் வடிவ மாகக் கொண்ட ஹ்ருஷீகேசரே என் ஹ்ருதிவேத்யனே, குரு க்ருபா கடாக்ஷத்திஞல் அனுக்ரஹமுள்ளவராக விருக்க வேண்டும், என்று பல தடவைகள் பிரார்த்திக்கிறேன். குரு மஹாராஜரே, நீரே கதி ]

'ருசியுள்ளதும் பிடித்தமுள்ளதுமான பழங்களை சுமந்து கொண்டு இருக்கும் விருக்ஷங்கள் குணஸம்பன்னன் அதிவின யத்துடன் இருப்பதுபோலவும், அந்த விருக்ஷங்கள் மாதவி யாகிற பூமியை நோக்கி தாழ்ந்து தலைவணங்கி யிருப்பதையும் பார்த்தால் தாயின் முகத்தை நோக்கிச் சிரித்து விளையாடும் சிசுக்கள் முத்தமிடுவதுபோல விருக்கின்றன. தங்கள் ஐஸ்வர் யங்களை பிறர்களுடைய நன்மைக்காகவே செலவிடும் பரோப காரியான தனவான்களைப்போல, (பரோபகாரியான புருஷன் தன்னுடைய நியாயவழியில் சம்பாதித்த ஸுஸம்பத்தை அதி வினயத்துடன் பிறர் நன்மைக்கே பயன்படுத்துவதுபோல,) அந்த பாக்யமுள்ள விருக்ஷங்கள் விளங்குகின்றன." (316)

என் பிரபு, (ஆதிவராஹமூர்த்தி, யக்ஞவராஹன்) அத்யந்த அழகுகள் கொண்ட பம்பாதடாகத்தின் ஸலிலமான ஜலத்தைக்

கண்டு ஸ்நானம் செய்து, பரமசுகத்தை அடைந்தார். அந்த சுந்தர விருக்ஷங்களின் நிழலில் ரகுநாதன் தன் அனுஜனுகிற லக்ஷ்மணனுடன் விஸ்ராமம் செய்வதற்கு அமர்ந்தார். (317)

அந்த புனிதமான இடத்திற்கு தேவதைகளும் ஸ்ரேஷ்ட முனிகணங்களும் வந்து பகவானை ஸ்துதிசெய்து, தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்ருர்கள். கிருபாளு, (யோகமாயை முதலிய ஸாமர்த்தியம் கொண்ட கோதண்டராமன்,) மனத்தில் பிரஸன்னமனத்துடன் ராமானுஜருக்கு (என்னைப் போன்ற வைஷ்ணவ தாஸர்கள் சரணுகதி அடையும் திரிஜகத் புண்யபல மாகிற லக்ஷ்மண முனிக்கு,) அநேக உண்மைகள், தத்வங்கள் கொண்ட ரஹஸ்ய கதைகளைச் சொன்னர். (318)

சீதா வியோகத்தினுல் பகவானுக்கு ஏற்பட்ட பரம வைராக்யத்தைப் பார்த்து, என் குருநாதர், நாராயண ஹ்ருதயர், நாரதர் தன் மனத்திற்குள் பச்சாதாபப்பட்டார். "பரமகிருபாளுவாகிற என் பிரபு எனது சாபத்தினுல் அநேகவிதமாக சீதையைப் பிரிந்து கஷ்டப்படுகிருர். கலக்கமுற்றிருக்கிருர். அவருக்கு என்னுல் பெரும் தீமை இழைக்கப்பட்டது. துக்கமயமாக, சீதா லோலனுக, சீதாஅன்வேஷனுக அவர் காணப்படுகிருர். அவருக்கு நான் பெரும் தவறு செய்துவிட்டேன்." (319)

"இந்த சமயம் நான் அவரைக்கண்டு, தண்டனிட்டு, (நாராயணபரனுக வாழும் என்னை,) ஸஹஜ ஸ்நேகத்தினுல் விளைந்த அபராதங்களையும் குற்றங்களையும் மன்னிக்கச் சொல்வேன். (புத்ரனுடைய குற்றங்களை தகப்பன் மன்னிப்பது போலவும், சிநேகிதனுடைய தோஷங்களை தோழன் மறப்பது போலவும், மனைவியின் குற்றங்களை பொறுக்கும் கணவன் போலவும்,) நான் பயத்துடனும் வருத்தத்துடனும் அவரைப் பொறுக்கும்படி நான் பிரார்த்திக்கிறேன்" என்று நாரதர் தனக்குள் யோசித்துக்கொண்டு தன்னுடைய கரத்தில் வீணையுடன் பிரபுவினிடம் சென்ருர். அப்போது பிரபு சுகமாக ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார். (320)

[தியானம்

ராமா, ஹரிவக்ஷஸ்தல நாராயணு, லக்ஷ்மி நாராயணு, சீதையை மனதில் தரித்துக்கொண்டிருக்கும் ஜகன்மோஹன ராமா, ரத்னகர்ப்பரே, திரௌபதி தர்மபுத்ரரால் சேவிக்கப்படும் ஸஹிஷ்ணுவே, நரநாராயணர்கள் போலவிருக்கும் ராமா லக்ஷ்மணு, ஸுதர்சனரே, ஸுலோசனரே, புஷ்கராக்ஷரே,

புண்டரீக நயனரே, அரவிந்தாக்ஷரே, சந்திரன், மின்னல், வருணன், சூரிய கிரணங்கள் ஆகியவர்களை பிரகாசிக்கச்செய்யும் ரவிலோசனரே, தேஜோமயமாக விருக்கும் ராமா, உம்மை தியாகராஜர், சியாமாசாஸ்திரி, தீக்ஷிதர் ஆகிய நாதோபாஸகர்கள் வழிபடும் மார்க்கங்களில் உபாஸிக்கிறேன். சப்த பிரும்மமே, அனுமான பிரும்மமே, இந்த உலகில் நடப்பது எல்லாம் ராமானுக்ரஹ பலமேதான். உம்முடைய திவ்ய விக்ரஹ மகிமையைத் தியானம் செய்துவந்த மஹனீயர்கள் உம்முடைய நாமகீர்த்தி, அம்ருதமய சமுத்திரத்தில் மூழ்கி, கிரஹபீடைகள், பஞ்சமஹாபாதகங்கள் காமாதி க்ரோதலோப சத்ருக்கள், யாவற்றையும் ராமா, உமது அனுக்ரஹபலத்தினுல் அல்லவோ ஜயிக்கிருர்கள். ரஸிக சிரோன்மணிகளான நாதோபாஸனை செய்யும் மஹனீயர்கள் மனத்தை அடக்கி, சங்கர நாராயணு, பிரும்மாதி தேவர்கள் வசப்படும் நாதோபாஸனையை, காமாக்ஷி அம்மா, சீதாபிராட்டியே, சாரதா தேவியே, அனுஷ்டித்து வேதாகமங்களுக்கு அப்பால் பிரகாசிக்கும் உன்னை, வேதங்களால் புகழப்படும் உத்தமனை, ஹயக்கிரீவ மூர்த்தியை, "நீதான் விஸ்வம், அகில விஸ்வத்தின் ஸாரம்" என்று சொல்லி வணங்குகிருர்கள். நீதானே மந்திராத்மிகம், தந்திராத்மிகம், யந்திராத்மிகம் என்று நம்பி தங்களுடைய மதுரமான குரலினுலும் வாக்குக்களாலும், ஸ்வரங்களாலும், ராகம், லயம் பாவம் ஆகிய மூன்றையும் கொண்ட பக்தி பிரபாவங்களால் உம்மை அனுதிகாலமாக நித்ய சுமுகிகளாகப் புகழ்கிருர்கள். அப்பா நாராயணு, ஹரிவக்ஷஸ்தல லக்ஷ்மியே, சீதா பிரபோ, நீதானே அப்பா, தியாகராஜர் போன்ற என் குருவுக்கு நிகம ஆகமங்களின் அர்த்தம். நீதானே ஸ்வர சுத்தமான சங்கீதம். நீதான் ஸத்பக்தி மார்க்கம். பிரபோ, நீதானே விஸ்ராமத்தின்போது அருந்தப்படும் திராக்ஷை ரஸம். அப்பா நீதானே, நவக்ரஹங்களின் நவரஸம். அச்யுதா, நாராயணு, சீதாபதி, தியாகராஜ ஸேவித ஶ்ரீராமா, என்னிடம் கிருபைசெய்ய மாட்டாயா? சீதா நாயகனுகிற உம்மை அல்லவோ நாத உபாஸனையால் சந்தோஷப்படுத்த வேண்டும். நாரதரிடம் மஹாபிரியம் கொண்ட பக்தவத்ஸலா, விஷ்வக்ஸேனரே, ஹம்ஸரே, மஹாஹம்ஸரே, சரணம் சரணம்.)

அந்த மஹானுபாவரான நாரதபகவான் விஸ்வரூபரான பகவான் ஶ்ரீராமச்சந்திரனை ராமநாம ஸங்கீர்த்தனங்களினுல் பாடிக்கொண்டு, (அந்த வேதியர் ஒருவழிப்பட்டவராய், நாதோபஸனையை கடைப்பிடித்தவராய், மேலே தூக்கப்பட்ட கைகளையும்

தம்புராவையும் உடையவராய், ஸமாதியில் இருப்பவர் போல, (எல்லாமாயும், நிர்குணமாயும், தோஷங்கள் இல்லா தவரும் கல்யாணகுண ஸ்வரூபமாயுமிருக்கிற) பகவானைக் குறித்து துதிக்கலானுர்; அவருடைய பிரேமை பக்தி விலா ஸங்கள், பச்சாதாபங்கள் அதிகரித்து சொல்லமுடியாதபடி பிரபாவங்களுடன் ஓங்கி விளங்கின. (ஓம் தேவதேவரே, விஸ்வமூர்த்தியே, பக்தவத்ஸலரே, பிராம்மண்யதேவரே, பக்தனு கிற நான் உம்மை தரிசிக்க விரும்புகிறேன். நிர்விகல்பஞானம், ஏகாந்த தர்சனம், நாதோபஸனை, ஆகியவைகளின் பொருட்டு, உமக்கு நமஸ்காரங்கள் செய்கிறேன்.) அவ்விதம் துதித்து நாரதர் பகவானை அநேக சுக்ருத நமஸ்காரங்கள் செய்தார். எழுந்திருந்து மீண்டும் மீண்டும் நமஸ்கரித்து ரகுராமனை பிர தக்ஷிணம் செய்தார். அவரை தன் ஹ்ருதயத்தோடு தழுவிக் கொண்டார். (அடிக்கடி தழுவிக்கொண்டு, இன்ப ஆனந்தத்தை தியாகராஜர், தீக்ஷிதர், சியாமாசாஸ்திரி போன்ற நாதோபஸகர் கள் பிரும்மத்தை ஒன்றையே வழிபடும் ஏகாந்திகள் அடையும் ஆனந்தத்தை அடைந்தார்.) (321)

பிரபுவும் நாரதரைத் தழுவி இன்பமடைந்து, கையைப் பிடித்து ஸுஸ்வாகதம் சொல்லி, இன்சொல்லினுலும் சுமுகமாக வும் வரவேற்று தன் பக்கலில் அவரை அமர்த்தி உட்காரச் சொல்ல ஆக்ஞாபித்தார். ராமானுஜன் நாரதருடைய பாதங் களை வணங்கி அவருடைய கால்களைப்பிடித்து, அவருடைய களைப்பை போக்கினுன். (322)

என் பிரபு ரகுநந்தனன் அநேக பிரகாரம் நாரதரை குசல பிரஸ்னம் செய்தார். அதிபிரஸன்னமடைந்த பிரபு, ஸஹஜ ஸ்நேகத்துடன் அவரை ஆதரித்தார். ஸர்வக்ஞரும் ஹரியுமான பகவான் தன்வசம் அடைந்திருந்ததைக்கண்ட மஹாபாக்ய வானுகிற நாரதமஹரிஷி (என் தயாளு, என் குரு மஹாராஜர், எனக்கு ஆதித்யன்போலவிருக்கும் ஸர்வசாக்ஷி,) அழகான ஸரோஜ புஷ்பங்கள்போலவிருக்கும் பகவானுடைய திருமுக மண்டலத்தைப் பார்த்துக்கொண்டு அதிவினயத்துடன், கோமள மான தாமரைத் தண்டுகள் போலவிருக்கும் கரகமலங்களால் ஸ்துதி செய்தார். (323)

"உதாரகுணம் சௌசீல்யம், சௌலப்யம், வாத்ஸல்யம் மஹாகிருபை ஆகிற உத்தம குணங்களால் யேற்படும் ஸஹஜ ஸ்நேகத்துடன் கூடிய ஸ்ரீரகுநாயகா, (சீதையை வக்ஷஸ்தலத் தில் வைத்திருக்கும் ராமா, என்னைப் பார்.) என் வார்த்தைகளை

தயவுசெய்து கேளும் பிரபோ. (அனுதியும், ஆயிரம் கண்களை உடையவரும், ஆயிரம் தலைகளையும், பாதங்களையும், கைகளையும் கொண்ட மஹா நாராயணரே, ஸ்ரீமானே, என் பிரபுவே, வாயினுல் பிரணவத்தையும், அதனுடன் சேர்ந்திருக்கும் காயத்ரி மந்திரத்தை உச்சரிக்கும் பிரபுவே, மற்ற முகங்களாலே பல விதமான ஸ்வரங்களுடன் நான்கு வேதங்களைச் சொல்லுகிறவரும், பாபங்களை ஹரிப்பவரும், இந்திரிய வசமுள்ளவரும், சார்ங்கதன்வாவும், தேவருமான நாராயணரே,) ராமா, சீதாராமா, உம்மை தரிசித்தால், கிடைக்கமுடியாத சகல சுபங்களும் எளிதில் அடையப்படக்கூடாத மங்களங்களும் தாளுகவே ஓடிவருகின்றன. வரதாயகா, உம்மிடம் ஆர்த்தியாக வந்திருக்கும் எனக்கு, உம்மை சதா மௌனமாக உபாஸிக்கும் எனக்கு, ஏகதர்த்விதர்திரிதர் போன்ற மஹாமுனிவர்கள் விரும்பும் உம்முடைய தர்சனத்தில் விருப்பமுள்ள எனக்கு, கிருபை கூர்ந்து மஹா பிரஸாதத்துடன் ஒரு வரம் அருளவேண்டும். (ரங்கநாயகா, வேங்கடவரதா, உபநிஷத்துக்களால் கானம் செய்யப்படும்) பிரபுவாகிய நீர் என் ஹ்ருதயத்திலும் வசிக்கும் அந்தர்யாமி அல்லவா? ஆதலால் என் மனேபீஷ்டத்தையும் தாங்கள் அறிவீர்.'' (324)

(இந்த விடத்தில் நாரதருக்கு நாராயணர் ஆசார்யராகத் தோற்றம் அளித்தார்.) (அப்பொழுது பிரபு, யக்ஞங்களுக்குப் பதியான தேவர், வேதங்கள், கமண்டலு, தர்ப்பங்கள், சிறந்த ஜபமாலை மணிகள், குசங்கள், மான்தோல் தண்டம் ஆகிய வற்றையும், அக்னியையும், கைகளால் தரித்துக்கொண்டிருந்தார். தெளிவான மனத்தை உடைய நாரதரைப் பார்த்த பிரபு தேவர்களுக்கெல்லாம் ஆதியும், விகாரமற்றவருமான) பகவான் சொன்னர். ''ஏகாந்திகளில் சிறந்த முனியே, (விஸ்வரூபத்தை அடைந்த நான், விகாரமற்றவராக,) உம்மிடத்தில் அருள் உள்ளவனுக விருக்கிறேன். என் ஸ்வபாவம் உமக்கு நன்ருகத் தெரியுமே. என் பக்தர்களிடமிருந்து நான் எதையும் மறைக்கிறதில்லை. இப்பொழுது நீர் விரும்புகிற வரத்தை என்னிடமிருந்து கேட்டுப் பெற்றுக்கொள்ளும். முனிஸ்ரேஷ்டரே, உமக்கு இல்லாதது என்னிடம் யாது இருக்கிறது?'' (325)

''என் பக்தர்களுக்கு இல்லாதது என்னிடம் ஒன்றும் இல்லை. (எனக்கு தர்மத்தின்மேல் விஸ்வாசம்கொண்ட என் பக்தர்கள் சீதையைவிட மேலானவர்கள். தர்மத்திற்குமேல் யாதொன்றும் இல்லை அன்ருே?) உம்மைப்போல ஏகாந்திகளிற் சிறந்தவரும் இல்லையன்ருே? பிராம்மணு, (இங்கு பகவான் தர்ம ஸ்வரூபத்தை

விளக்குகிறார்.) (தர்மருடைய அங்கங்களைக்கொண்ட) என்னிட மிருந்து எதை வேண்டுமானாலும் பிரார்த்திக்கொள்ளும்'' என்று பகவான் சொன்னார். அப்பொழுது நாரத பிரும்மரிஷி, தன்னுடைய தவம், யமம், நியமம் யாவற்றின் பயனை அடைந்தவராக தன்னைக் கருதினார். தேவதேவரான பகவானைப் பார்த்து, பிரஸன்ன ஹ்ருதயத்துடன் அவர் பேசலானார். ''நான் கேட்கப் போகும் வரம் இதுதான் பிரபு. மன்னித்துவிடும். எனக்கு அருள் புரியும்படி கேட்டுக்கொள்கிறேன்.'' (326)

''அனாதியும், எல்லா மூர்த்திகளின் ஸ்வரூபத்தை உடையவராகவும், பிரபுவாகவும், மஹானாகவும் இருக்கும் தங்களுக்கு அநேக நாமாக்கள் இருக்கின்றன. வேதங்கள், மந்திரங்கள், தந்திரங்கள் அநேக நாமாக்களைத் தங்களுக்கு கோஷிக்கின்றன. அந்த நாமாக்களுள் ஒரே ஒரு நாமம் சகல நாமாக்களின் பலத்தையும், அர்த்தத்தையும், பொருளையும், சக்தியையும் கொண்டதும், மஹா வீர்யமுள்ளதாக விருக்கிறது. அது ராம நாமமாக விருக்கிறது. அந்த ராம நாமம் உமது கிருபையினால், (உமது வக்ஷஸ்தலத்தில் வீற்றிருக்கும் சீதா லக்ஷ்மியின் கிருபையினால்) அகில தாரகமாக விளங்கட்டும். இந்த மகிமை பெற்ற ராம நாமம் மஹா பிரபாவங்களுடன் அகில போஷகமாக விளங்கட்டும். பாபரூபி, அக்ஞானி ரூபியாகிற பக்ஷிக் கூட்டங்களை சம்ஹரிக்கும் வேடனைப் போல உமது திவ்ய ராம நாமம், ஹே கோதண்ட ஹஸ்தா, சாரங்கதன்வா எக்காலத்திலும் விளங்கட்டும்.'' (327)

''உம்மிடம் வைத்திருக்கும் எனது பக்தி, (ரோஹிணியுடன் கூடிய) பூர்ண சந்திரனைப் போல விகஸித்து பூத்து நிலாப் பொழியும் பௌர்ணமி ராத்திரி மாதிரி விளங்கட்டும். அந்த பூர்ணிமையில் ராம நாமம் கொண்ட (ரோஹிணி) சந்திரன் பரிபூர்ணமாக பிரகாசிக்கட்டும். அந்த அபாரமான சந்திரனைச் சுற்றி நிர்மலமான ஆகாயத்தில் தாரா கணங்களாகிற பக்த ஜனங்களின் ஹ்ருதயங்கள் நித்யமாக வசிக்கட்டும்.'' (வஸுப்ரதரே, அருள் செய்ய வேண்டும், என்று கேட்டுக் கொண்டார்.) (328)

கிருபாஸிந்து என் பிரபு ரகுநாதன் (''ஏவமஸ்து,'') ''நீர் கேட்டபடி ஆகட்டும்,'' என்று வரமளித்தார். அப்பொழுது நாரத மஹரிஷி அத்யந்த சந்தோஷம் கொண்டவராக பிரபுவின் பாதார விந்தங்களில் தனது திருமுடியை வைத்து, அடிக்கடி நமஸ்காரம் செய்தார். (329)

[தியானம்

ராமா சீதா ராமா, பட்டாபி ராமா, கோதண்ட ராமா, ராமய்யா, நீ யாருக்காக இந்த பூலோகத்தில் அவதாரம் செய்தாய்? மஹராஜு, ராமா, எந்த மஹானுபாவன் உன்னை பரமபதத்திலிருந்து பூலோகத்திற்கு வரச் செய்தானோ, அந்த மஹானுபாவனை ஆயிரம் தடவைகள் நான் நமஸ்காரம் செய்கிறேன். ராஜாவாகவும் ரிஷியாகவும், உன் ராம நாமம் வேதங்களாலும், ஆகமங்களாலும் மஹேஸ்வரராலும் உமையினாலும் சதா தியானிக்கப்பட்டு ஜபம் செய்யப்பட்டு, என் வரையிலும் எனக்குப் பின்பும் உபயோகப் படும்படி ஆவதற்காகவா? உன்னுடைய அத்புதமான ரூபமிருக்கிறதே பரதன் ஆஞ்சநேயர், நாரதர் போலவிருக்கும் மஹனீயர்களும் துளசிதாஸர், தியாகராஜர் போன்ற மஹான்களும் ஹ்ருதயத்தில் மிகச் சிறந்த பொக்கிஷமாக தேக்கி வைத்திருக்கிறார்களே, அதற்காகவா அவதரித்தாய்? முனிராஜ ரூப நாரத வந்தித ராமா, அன்று துளசிதாஸர் உத்கோஷித்தாரோ உன் ரூபத்தை விட உன் ராம நாமம் அதிக மஹத்வம் வாய்ந்தது என்று சொல்லுவதற்காகவா நீ அவதரித்தாய்.? உன்னுடைய நாமத்தையும் ரூபத்தையும் கண்டு, அனுபவித்த லக்ஷ்மணனும் சீதையும் எனக்கு சொல்ல மாட்டீர்களா? அல்லது மஹானுபாவனாகிற ராவணன், உன்னை மஹாவீரன் ராமன், இவன் அனுமயமான நாராயணனே என்று முடிவிலும் ஆதியிலும் தெரிந்து கொண்டானே. அவனாவது உன் அவதார ரஹஸ்யத்தை அறிவானோ? ராமா, சீதா ராமா, உன்னை அனவரதமும் சந்திரவதனத்தோடும் வேத சாஸ்திர சந்தஸ்ஸுகளாலும் நாத ரூபமாகிற ஸ்வரராக பாவலயாதிகளால் வழிபடும் நாதோபஸகர்களும் ஹ்ருதயத்தில் உன் ரூபம், நாமம் ஆகிய இரண்டையும் சேர்த்து வைத்து பிரும்மானந்தத்தை சதா அனுபவிக்கிறார்களே, அவர்களாவது உன் அவதார மகிமையையும், யாருக்காக, எவருடைய சாபத்தை வ்யாஜமாக வைத்து, பூமியில் சீதா அன்வேஷணாக அவதரித்தாயோ, அவர்களாவது உன் அவதார மர்மத்தை அறிவார்களா? ராமா, ஸாமகானலோலா, நாரதருடைய மனஸ்ஸினாலும் வீணா கானத்திலும் சந்தோஷமடைந்து ஆனந்த நடராஜ மூர்த்தியாக விளங்கும் ராமா, உமா மஹேஸ்வரர்களின் மானஸ ஸஞ்சாரிக ஹம்ஸப் பேடே, ஸுரகணங்கள் வணங்கும் பாதங்களை உடைய ராமா, பதித பாவனா, பராத்பரா, கருட ஸேவிதா, ராஜ ராஜேஸ்வரியால் ஸ்வரலயாதி ராக பாவங்களினால்

சேவிக்கப்படும் ராஜ மாதங்கி, உன்னை எத்தனை மஹானுபாவர்கள் நாமத்துடன் சேவிக்கிறார்களோ, ரூபத்துடன் பார்க்கிறார்களோ, நாம ரூபத்துடன் நீர் காக்ஷி அனைவருக்கும் அளிக்கிறாயோ, அவ்வளவு பேர்களையும் நமஸ்காரம் செய்து, நாரத ரிஷிக்கு மஹா கிருதக்ஞையுடன் ஜயகோஷங்கள் செய்கிறேன். ராமா சீதா ராமா, லக்ஷ்மண ராமா, பரதராமா, சத்ருக்ன ராமா, நாரத ராமா, உமா மஹேஸ்வர ராமா, ஆஞ்சநேய ராமா எப்போது என்னிடம் நீ வருவாய்?]

ரகு நாதன் நாரத பகவானிடம் அதி பிரஸன்னராகி விட்டார். அதனால் தைரியமடைந்த நாரத ரிஷி மீண்டும் மிருதுவான குரலில் பேச ஆரம்பித்தார். "ராமபிரபோ, ராமா, ரகு நாதா, தயவு செய்து கேளுங்கள். தாங்கள் தங்களுடைய நிஜமாயையை என் பேரில் ஏவி, என்னை அன்று மோஹிக்கும்படி செய்தீர்." (330)

"அப்பொழுது நான் விவாகம் செய்து கொள்ள ஆசை கொண்டேன். பிரபு, என்ன காரணத்தால் என் ஆசையை நிராசையாகச் செய்தீர்? நான் உமக்கு பராதீனன் என்று தெரிந்தும்கூட, என்னுடைய ஆசையை ஏன் பங்கம் செய்தீர்?" பிரபு பதில் உரைத்தார், "முனீஸ்வரரே, கேளும். நான் சொல்லும் வார்த்தை சத்யமானது. சகல விதமான ஆசைகளையும் துறந்து, என்னை திட விஸ்வாசத்துடன் அகில ஸாரம் என்று கேவலனாக நீர் அறிந்து பூஜித்து வருகிறீர்." (331)

"அப்பேற்பட்ட ஏகாந்த பக்தி உள்ளவர்களை சத்யவ்ரத தீக்ஷை கொண்டு, என் பக்தர்களை, என் ஆஸ்ரிதர்களை ஒரு மாதா, தன் சிசுவை, (ரத்ன கர்ப்பம் போலவும் ஸ்ரீ நிதி போலவும்) எவ்விதம் காப்பாற்றுகிறாளோ, அது போல ஸர்வ ரக்ஷகத்வத்தை நான் சதா செய்து கொண்டிருக்கிறேன். அந்த சிசு நெருப்பையோ, பாம்பையோ தொடப் போனால் அந்த மாதா, தான் சிரமத்தை அடைந்த போதிலும் அந்த சிசுவை எவ்விதம் காப்பாற்றுவாளோ, அது போல மிக்க ஜாக்கிரதையுடன் காத்து ரக்ஷிப்பேன்." (332)

"அந்த சிசு வளர்ந்த பின்பும் அதன் தாயார் அதன் மேல் பிரியமாகத்தான் இருக்கிறாள். ஆனால் அவளுடைய ப்ரீதி முதலில் இருந்த ப்ரீதியைப் போல சிசு பராயணமாக விருக்காது, இருக்க முடியாது. வளரும் அந்த சிசுவும் மாத்ரு பராயணமாகவுமில்லை. இருக்கவுமுடியாது. அந்த சிசு குணங்களின் சேர்க்கையால் தன்னைத் தானே ரக்ஷிக்க சக்தி பெற்றது என்று நினைக்

கிறது. மாதாவிடம் நிர்பரத்வம் கிடையாது. ஞானியானவன் அந்த வளர்ந்த சிசுவைப் போல தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள சக்தி பெற்றவனாக ஆகிறான். அதனால் அவன் ஸ்வதந்திரனாகி விடுகிறான். ஆனால் என்னைப் பராயணமாக வைத்து வாழும் பக்தர்கள், தாஸர்கள் எனக்கு சிசுவைப் போல பிரியமானவர்கள். அந்த மாதாவை நம்பி வாழும் சிசு எவ்விதம் நிர்பரமாகவும் (பொறுப்பின்றியும், கவலையில்லாமலும் சிசு எவ்விதம் வாழுமோ, அது போல என்னிடம் பக்தி செலுத்தியவர்கள் கவலையின்றி வாழுகிறார்கள். அவர்கள் தர்க்கங்களினால் (தர்மத்தை விசாரிக்காமல், ஆசாரியர் எதைச் சொல்லுகிறாரோ அதில் ஸந்தேகமின்றி, கண் தெரியாதவன் போலவும் மூடன் போலவும், விசாரிக்காமல், கொல்லாமை, ஸத்யம், பொறுமை, கொடை இவை நான்கையும் அனுஷ்டித்து, பரம்பரை பரம்பரையாக வந்த ஒழுக்கக் கட்டுப்பாட்டில் ஊன்றி, இவ்வுலகனைத்தும் குரு மகராஜரால் நிலைத்து நிறுத்தப்படுகிறது என்று விஸ்வாஸம் கொண்டு,) பாகவத பிரேமையை வளர்த்து, அவர்கள் மூலம் நாரதரே, பாரதந்திரியம் என்கிற ஸ்வரூபலாபம், ஸ்வரூப ஞானம் அடைந்து விளங்கும் தாஸர்கள், என்னிடம் பரஞானம் பரம பக்தியுடன் விளங்கும் அடியார்கள் இருக்கிறார்களே, அந்த அடியார்களுக்கு அடியார் என்று சொல்லுபவரை நான் மனம் உவந்து ஆஸ்ரயித்து அவர்களை விடாதபடி ஸதா ஒட்டிக் கொள்கிறேன். (இப்பேற்பட்ட ஆசார்ய பக்தியுள்ள தாஸர்கள் எனக்கும் மிக்க பிடித்தவர்கள். அவர்கள் பரஞானம் அடைந்தும் பரம பக்தியினால் என்னுடைய அச்யுத பாதங்களை ஸ்தானம் பிரம்சம் ஏற்படாமல்யிருக்க பிடித்துக்கொண்டும், நானும் அவர்களை ரக்ஷித்துக் கொண்டுமிருக்கிறேன்.) (333)

[கருத்து :

நாரதரே, தர்ம புத்ரர் அனுஷ்டித்துக் காட்டின வழியில் ஊற்றமாக "பகவானால் நான் உந்தி தள்ளப்படுகிறேன், என்னால் ஆவது ஒன்றுமில்லை, எனக்கு பகவானே கதி, அந்த பகவத் பிராப்திக்கு ஆசார்ய கடாக்ஷமே, ஆசார்ய கைங்கர்யமே, ஆசார்ய பிராப்தியே, பலன்" என்று நம்பி வாழும் வைஷ்ணவ தாஸர்களை நான் தொடர்ந்து அவர்களையே நாடி வருகிறேன். "பண்டிதனாகிற ஞானி பக்தியுடன் என்னையும், என்னை நம்பி வாழும் பாகவத உத்தமர்களையும் பூஜித்து என் கிருபையை ஸதா அடைந்தவண்ண மிருக்கிறான்; ஆனால் பக்தியில்லாத ஞானி

களோ காமக்ரோதவசமடைந்து பாகவத பிரேமை, ஆசார்ய பிரேமை அற்று, ஸ்வரூப நாசமடைந்து அதனல் பகவத்ப்ராப்தி யாகிற ஸ்வரூப லாபத்தையும் இழந்து விடுகிருர்கள். ஆகையால் என் பக்தர்கள், என் தாஸர்கள் என்று சொல்லப்படும் அடியார்க்கு அடியார், சிசு மாதிரி மாத்ரு பராயணமாக விருக்கிருர்கள். ஆனல் பரம பக்தி இல்லாத ஞானிகள் ஆசார்ய பராயணம் இல்லாத படியால் பகவத் பராயணம் அற்றவர்களாகவும் போய் விடுகிருர்கள். அதனல் அவர்கள் உத்தாரணம் செய்யப்படுவதில்லை.")

[தியானம்

நாராயணு, வாஸுதேவா, பிரத்யும்னு, அநிருத்தரே, ரமா, மஹராஜா, ராஜ ராஜேஸ்வரா, பூமன்னுமாதுவாகிற சீதையை ஹ்ருதயத்தில் பொருந்திய மார்பா, புகழ் மலிந்த மாமன்னு மாறனடி பணிந்து உய்ந்த எம் ராமானுசா, மேகத்தை ஒத்த கருணை, காரி ஏய் கருணை ஆழ்வார்களின் அருளால் வாங்கப் பெற்று என் போன்ற மன்னிவாழ் நித்ய சம்சாரிகளுக்கு நெஞ்சே சொல், அவன் நாமங்களை என்று பல கல்யாண குணங்கள் சேர்ந்து, தூயவன் தீதில் இராமனுசன் என்று அமுதனர் வாக்கி லிருந்து பெருகும் என் அமுது, ஆராத அமுதாக விருக்கிறது. கற்றவர் காமுறும் சீலம் என்கிற பாகவத தர்மத்தை மஹாப்புகழ் வாய்ந்த வாலகில்யர்கள் புகழும் "வைஷ்ணவம்" என்று சொன்ஞர்கள். தர்ம சாஸனம், பரமதர்மம் என்று அழைக்கப்படும் தர்சனம், ஒருவன் காயப்பட்டால் அவனும் ரத்தம் கொண்டு பெருங்காயமடைந்திருப்பதாக நினைக்கும்படி கூரேச புத்ரரான பட்டரின் வாயிலாக அவரது அருமைச் சீடரான நஞ்சீயருக்கு கிடைத்த பாகவத தர்சனமே, என் அருள் நெறியே, அன்பு நெறியே, ஸாத்வ தாம்பதியே, பஸ்யந்தி ஆத்மனி ஆத்மானம் பக்தியா ஸ்ருதகிருஹீதயா, என்கிருப் போலே கிலேச நிவாரணத்தை உபதேசித்த ஸ்ரீ ராமானுஜனுடைய திவ்ய கமல பதங்களை நெஞ்சிற் கொண்டு, ராமா, ஆனந்த ராமா, நாரத ராமா, உன்னை ஒன்றையே அறிவேன். எனக்கு உற்ற பேரின்ப மல்லவா என்று நினைத்த உன் பாகவத கோஷ்டிகளை வைஷ்ணவ தாஸர்களையும் நான் பிரேமையுடன் பூஜித்து ஆராதித்து இன்புறு கிறேன். நிஜமாகவே என் ஆசார்யர் எனக்கு ஆத்ம பிராப்தி காமராகிருர். எனக்கு ஐஹிக ஐஸ்வர்யமும், பிரம்மபதம் அளவாக உடைத்ததான ஆமுஷ்மிக ஐஸ்வர்யத்தையும் கொடுக்கிருர். என்னை விவேகித்து, நித்யனுய் ஞானரூபியாய் ஆத்மபோகமே

புருஷார்த்தம் என்று உபதேசிக்கிறுர். அதன் பிராப்திக்கு பிரகிருதேபரனுய், அமலனுய், ஞான ஆனந்தமயனுமாய், பகவத் அனனன்யார்ஹசேஷத்தை உபதேசிக்கிறுர். அந்த சேஷத்தி லிருந்து விளையும் அனன்ய போக்யத்தையும் ஆத்மாவுக்கு ஸ்வானுபாவமாக அணுவாய் கொடுத்து என்னைத் திருத்தி, பணி கொண்டு, அருள் கொண்டு ஸ்வதந்திர ஸ்வரூப விருத்தம் என்றும் விஷம் போல அனுதரித்து, ஸர்வ சரண்யனுன, ஸர்வ பிராப்யமான ஶ்ரீமந்நாராயணருடைய திருவடிகளில் என்னை சேர்ப்பிக்கிறுர். அந்த ஸம்பந்தம் பிரியாதிருக்க ஶ்ரீயப்பதியி னுடைய அச்யுத திருவடிகளை ஆஸ்ரயித்த பாகவத உத்தமர் களிடம் என்னை நிவேதனம் செய்கிறுர். என்னை ஒரு பொருள் ஆக்கி, அன்பனுய், அன்பன் தன்னை அடைந்தவர்க்கெல்லாம் அன்பன் என்று சொல்லும்படி வாழ்ந்த தென்குருகூர் நகர் நம்பிக்கு அன்பனுனவரும், பொங்கிய கீர்த்திகளை உடைய ராமா னுசனுடைய பூமலர்களிலே என்னைத் துளசிதளமாக அர்ச்சிக் கிறுர். தேவப்பிரானுடைய கரிய திருக்கோலத்தை காணும்படி நாமரூபமாகவும், அன்னையாயும், அத்தனுயும் என்னை ஆண்டிடு கிறுன். அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த ராமானுசா, நாரதரே, வேதவியாஸரே, சுகரே, பரிக்ஷித்து எவ்விதம் பாகவத தர்மத் திற்கு அடிக்கோலாக விளங்கினுரோ, அதுபோல ராமநாமத் திற்கும், சங்கர்ஷண ஆத்மாவாகிற உமாமஹேஸ்வரர்கள் ஐக்ய கூடஸ்தமாக விருப்பதற்கும், மூலகாரணமாகவிருந்த கிருபாளு, நாரதரே, ஆவார். ஹே குருநாதா, உமக்கு கிருதக்ஞதையை யாவரால் சொல்லமுடியும்? என் ஹ்ருதயத்வாரத்தில் ஸூக்ஷ்ம மாகவும், பிரதிஷ்டிதம் என்று சொல்லும்படி ஸ்திரமாக விளங்கும் ராமமந்திரமாக வல்லவோ நீர் பிரகாசிக்கிறீர். ஷடாக்ஷரமே, அஷ்டாக்ஷரமே, த்வயமந்திரமே, த்வாத சாக்ஷரமே, சர்ம ஸ்லோகமே, அனன்ய சரணனுகாதே, அதிகாரி புருஷனுக ஆக மாட்டான். அதிகாரி புருஷன் ஆனவனுக்கு திருமந்திரார்த்தம் கைகூடும் என்று எம்பெருமானுருக்கு பதினெட்டாவது தடவை உபதேசித்த திருக்கோஷ்டியூர் நம்பிகளே நாரதரே, சரணம்.]

"என்னுடைய சேவகர்கள், முகுந்தனுடைய தாஸர்கள் என்று சொல்லப்படுபவர்கள், என்னுடைய ஆதார பலத்தையே நம்பி வாழ்கிறுர்கள். ஆனுல் ஞானிகளோ தங்கள் பலத்தையே நம்பி வாழ்கிறுர்கள். ஆனுல் இவ்விருவகைப்பட்டவர்களுக்கும் காமம், க்ரோதம் ஆகிற சத்ருக்கள் ஏற்படுகின்றன. இருவகை யினர்களும் அந்த சத்ருக்களுக்கு முன்பு மிக்கத் தாபத்தை

அடைகிறார்கள். அவ்விதமிருப்பினும், என்னையே நம்பி வாழும் சேவகர்கள் அந்த காமக்ரோதாதிகளை எளிதில் ஜயித்து, தங்கள் வசமடைந்து, எனது பிரபாவத்தினால் காப்பாற்றப்படுகிறார்கள். ஆகையால் பண்டிதர்கள் இந்த விஷயத்தைத் தீர விசாரித்து, என்னையே அண்டி பாரதந்திரிய உள்ளத்துடன் வாழ்கிறார்கள். அவர்கள் பரஞானத்தை அடைந்த போதிலும், என் மீதுள்ள பக்தியை விடுகிறதில்லை.'' (334)

''காமம், க்ரோதம், லோபம், மதம், அக்ஞானமாகிற மோஹம் ஆகியவை மிக்க பலமுள்ள சேனை வீரர்கள். இவைகள் அனைவரிலும் மிக்க பலமுள்ளவள் மாயையின் ரூபியாகிற ஸ்திரிதான். அவள்தான் அத்யந்த துக்கத்தை மனிதர்களுக்குக் கொடுக்கிறாள்.'' (335)

(கருத்து : ''நாரதரே, நன்றாகக் கேளும். தீர்த்த பாதர்களான பாகவத உத்தமர்கள், (ஸாத்வத ஸ்ரேஷ்டர்கள்,) சாரங்கதன்வாவாகிற நாராயணனுடைய மட்டற்ற கீர்த்தி பிரபாவங்களை, ஆனந்த மயமாக பிரேமையுடன் பாடி, தன்னையும், பிறர்களையும் ரமிக்க வைக்கும் முகுந்த சேவகர்களாக விருக்கிறார்கள். அவர்களுடைய நிர்மலமான ஹ்ருதயத்தில், அச்சுதன், ஹரிநாராயண பிரபு விகஸித்த தாமரையில் இருப்பது போலவும், நினைத்த மாத்திரத்தில் நாமத்தை ஜபித்தவனிடம் கிங்கரனாக ஓடிவருகிறான். அதுபோல தன்னைப் பக்தியில் ஆஹுதி செய்யும் பாகவத உத்தமர்களின் பாத சேவையின்றி, உமது மனத்தில் சாந்தி ஏற்படாது. காமம், க்ரோதம், லோபம், மதம், பிரபலமான மோஹம் யாவும் உமக்கு சாந்தியைத் தராது. இவைகளில் துக்கங்களையும், கிலேசங்களையும் தரும் மாயா ரூபிணியாகிற ஸ்திரி மறைந்து கொண்டு, உமது யோகநிஷ்டைகளை பாழ்படுத்தி, உம்மையும் கிலேசங்களுக்கு ஆள்படுத்துகிறாள். யாத்ருச்சிகமாக சந்தோஷமடையும் முனி என் கிருபையைப் பரிபூர்ணமாக அடைகிறான்'' என்று சொன்னார். அப்பேற்பட்ட ராமனால் உபதேசிக்கப்பட்ட நாரதர் பகவான் நாராயணரின் அம்சமாகிற வேதவியாஸருக்கும் இதைத்தானே உபதேசித்தார். அதைத்தானே என் குருநாதர் எனக்கு உபதேசித்தார்.) (ஆஹா, சாரங்கதன்வாவினுடைய வாக்யமும், தேவரிஷியினுடைய வசனங்களும், சுக பிரும்மத்தின் பரிக்ஷித்துக்கு உபதேசமாகிற பாகவத தர்மமும், ராமானுஜன் எனக்குப் பூர்ணமாக காண்பிப்பாராக. அப்பேற்பட்ட என் பூர்வாசாரியர்கள் அனைவருக்கும் நான் சுத்தமாக நமஸ்கரிக்

கிறேன். என்னை ரக்ஷிக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். கிருபை வேண்டும்.)

"நாரதரே இன்னும் கேளும். புராணங்களும், வேதங்களும், ஸாதுக்களும் ஒன்றையே பறைசாற்றுகிறார்கள். மோஹரூபியான வனத்தைப் புஷ்பித்து, அழகுற விகஸித்து வைக்கும் வஸந்த ருதுவாகிறவள் ஸ்திரியேதான். (அறிவுள்ளவனாக விருந்தாலும், பெரியோர்களால் பழக்கப்படாதவனும் மோஹத்தை அடைகிறான். அவனையும் வசப்படுத்தக்கூடியவள் ஸ்திரியே ஆவாள்.) யோக நியம நிஷ்டங்கள், தபோபலம், ஜபபலம், ஸமஸ்தயோக மார்க்கங்களில் நிபுணர்களாக விளங்குபவர்கள் கூட ஸ்திரியினுடைய மாயவலையில் சிக்கி, தங்கள் வழிகளிலிருந்து தவறிவிடுகிறார்கள். அப்பேற்பட்ட தபோசீலர்களுக்கு காமம் என்கிற ஸ்திரி க்ரீஷ்மருதுவைப் போல, அவர்களால் மிக்க சிரமத்துடன் தேக்கி வைக்கப்பட்டிருக்கும் ஜலநிதியாகிற தபோபலத்தை உறிஞ்சுவிடுகிறாள்" (336)

"ஆகையினால் காமமோ, க்ரோதமோ, மதமோ, பொறாமையோ, ஜலாஸ்ரயத்தில் தவளைகளைப் போல சஞ்சரிக்கின்றன. வர்ஷருதுவில் ஏற்படும் மழையினால் அவர்கள் சந்தோஷப்படுகிறார்கள். அப்பொழுதும் வர்ஷங்கள் மாதிரி ஸ்திரிதான் அவர்களுக்கு ஆதாரமாகவிருக்கிறாள். குமுத புஷ்பங்களின் ஸமுதாயம் கெட்ட வாஸனையுள்ளதாக விருக்கிறது. அதுமாதிரி ஸ்திரியே சரத்ருதுவில் அந்த குமுத புஷ்பங்களை விகஸிக்க வைக்கும் மூலகாரணமாக விருக்கிறாள்." (337)

"தர்மங்களும், தர்மங்களை ஒட்டி அனுஷ்டிக்கப்படும் கர்மங்களும் தாமரை மலர்களைப் போல விருக்கின்றன. அப்பேற்பட்ட தாமரை மலர்களை பனியினால் நாசம் செய்யும் ஹேமந்தருது ஸ்திரி போல விருக்கிறாள். விஷய வாஸனைகளில் ஊறின ஸ்திரி அந்த தாமரைக் காடாகிற தர்மங்களை அழிக்கிறாள். அதேமாதிரி அஹங்காரம் மமதையுடன் விளங்கும் ஜவந்தி புஷ்பங்களின் குவியல் போல விருக்கும் ஸ்திரி சிசிர்ருது என்கிற குளிர் காலத்தின் கடைசியில் அதிசோபிதமாக வளருகிறாள்." (338)

[தியானம்

நாராயணா, நாராயண பிரியே, என் பிராட்டியே, சரணம். நாராயணரும் மஹா பெரியவர்தான். என் ஸதாசார்யரான ராமானுஜரும், கிருஷ்ணனுடைய அனுஜனாகிற ராமனும் மஹா பெரியவர்தான். ராமானுஜரை பெருமாள் ஸ்வீகரித்துக்கொண்

டார். ஆகவே எம்பெருமானுரே, உடையவரே, பெரிய திருமொழி யில் "நம் குடி" என்று சொல்லும் தாயாரைப் போல, என் போன்றவர்களுக்கு அகதி என்று சொல்ல முடியாமல் ரக்ஷகம் தருகிறீர். திருமாலிருஞ்சோலை அழகர் "நீயா அகதி!" கர்ண கடூரமாக விருக்கிறதே, ராமானுஜன் சம்பந்தம் பெற்ற நீரா அகதி? என்றும், மீண்டும் மீண்டும் கிடாம்பி ஆச்சாரைக் கேட்டும், அதனுல் அழகிய சுந்தரராஜன், ராமானுஜன் ஸம்பந் தம் மிக்க உயர்ந்தது என்று காட்டினர். பெருமாள், ராமானுஜர் ஸம்பந்தம் இவ்விதமிருக்க, இவைகளை விட மிக்க உயர்ந்த நிதி பிராட்டியின் ஸம்பந்தமே, அதுவே இரண்டையும் விட பெரி தாகத் தான் தோன்றுகிறது. அவ்வித பிராட்டி ஸம்பந்தமின்றி, திருமாலிருஞ்சோலையாரே, நீராவது ஆசார்யராவது தயை செய்வீர்களாக? சேதனனை ரக்ஷிக்கும் விஷயத்தில், உமக்கு கஷ்டம் வந்த போதிலும், அல்லது ஆசார்யருக்கும் மனக் கலக்கம் ஏற்பட்ட போதிலும், பிராட்டியன்றே தயை ரூபமாக, யாத்ருச்சிக கிருபையாக ஆவிர்பவிக்கிருள். உதாரணமாக மஹா பாகவத உத்தமர்கள் அடங்கிய கங்கை நதி தீரத்தில், பரிக்ஷித் மஹாராஜர் பிராயோபவேசம் செய்து, மரணத்தை யும், ஹரிபதத்தையும் நினைத்துக் கொண்டிருந்த சமயம், நீலோத்பலமாக வியாஸபுத்ரர், சுகர், ஆவிர்பவித்தாரல்லவா? எந்த ஞானபலத்தினுல் என் குஹர் ஆசார்யன், பரமசிவனுக்கு சுவாமிநாதராக ஆனுரோ, அந்த காமாக்ஷியை நான் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். பகவானே, உமக்கு ஆயிரம் நாமங்களும், அதனுல் ஏற்பட்ட ஸகலேதர விலக்ஷணன் என்கிற ராமானுஜன் காட்டிய காரணப் பெயரும், என் தாயான மஹா லக்ஷ்மியை சதா ஆஸ்ரயம் தாங்கள் பண்ணிக் கொள்வதால் அல்லவோ ஏற்படுகிறது. என் குருநாதர் உம்மை அகில ஹேய ப்ரத்யநீய கல்யாண குணங்கள் என்றும், ஸர்வ அவாப்த ஸமஸ்த காமன் என்று சொல்வதும், ஆஞ்சநேயாதிகளாலும், பராச ராலும் நேரில் பார்த்து அனுபவிக்கப்பட்ட பிரபாவங்களை எனக்கு வேதாந்த தேசிகர் மீண்டும் போதித்ததாலும், என் தீபம் மீண்டும் பிரகாசமடைகிறது. ஆலகாலவிஷம் உண்ட சதாசிவ னுக்கு, என் தாயார் மிருத சஞ்சீவினியாகிற ஔஷதம் போல வும், எனக்கு கருணையை வர்ஷிக்கும் நிர்மலமானதும், எப்போதும் மலர்ந்த விழிகள் தேசகாலவரையின்றி உம்மிடமும், என் ஆசார்யரிடமும், விஸ்வாசத்தையும், நிருபாதிக கிருபையை யும், வைராக்யம், பிரபத்தி ஆகிற யோகங்களையும் அனுக்ரோதம்

என்கிற தயையினால் என்னை ஸம்ரக்ஷிக்கிருள். பிரபோ, ஆசார்ய தேவா, உங்களுடைய இரண்டு திருவடிகளையும், குரு கிருபையையும், ஸ்ரீபலமாகிற திருமால் கிருபையையும் ஸ்வீகரித்த எனக்கு அவளே, அந்த பங்கயத்தாளே, பாதம் இரண்டும் சரண் எனப் பற்றிய என்னை குற்றமில்லாத நிச்சய ஞானத்தோடு கொள்ளுமாறு, த்வயத்தை புருஷகாரமாக ஏற்று, அனுஷ்டிக்கும்படி செய்கிருள். அப்பேற்பட்ட காமாக்ஷி, மீனாக்ஷி, விசாலாக்ஷி, பங்கஜாக்ஷி ஸ்வரூபியான மஹாலக்ஷ்மியை நான் அடிக்கடி உமாமஹேஸ்வரர் ஸந்நிதானத்தில் நமஸ்கரிக்கிறேன். வேதாந்த தேசிகரே, முதலியாண்டானே, என்னை ஸ்வீகரித்துக் கொள்ளும்.]

"பாபரூபமுடைய ஆந்தைகளுக்கு நிகராக சுகத்தைத் தரக் கூடியது ஸ்திரி ரூபமான அந்தகார இருட்டு. அவித்யை, மோஹம் இரண்டும் ஞானத்தின் தீப பிரகாசத்தை ஒளிப்படுத்துகிறதில்லை. ஸத்வபுத்தி, பலம், சீலம், (ஜாதியின் உயர் பிறப்பு), ஸத்ய கவசம் ஆகிய நான்கும் மத்ஸங்கள் போல விருக்கின்றன. இந்த மங்களமான நான்கு குணங்களாகிற மத்ஸ்யங்களைப் பிடிக்கும் அங்குசமாக ஸ்திரி பரதேவதையாக விளங்குகிருள் என்று மிகக் கெட்டிக்காரர்கள் சொல்லுகிருர்கள்." (339)

"நாரத பகவானே, யுவதியாகவும், கருணையற்றவளாகவும் இருக்கும் ஸ்திரி அவகுணங்களுக்கு இருப்பிடம். அவள் தனக்கும், பிறருக்கும் பீடையை விளைவிக்கிருள். சூலம் கொண்டு ஹிம்சையை செய்கிறவள். இதன் காரணத்தினால் பகவானே, ஸதாசாரியரே, மோஹரூபியான பெண்ணை, நான் சிருஷ்டித்தேன். மாயாரூபியான ஸ்திரியை, நீர் விவாஹம் செய்து கொண்டால் பகவத்தயையை அடையமாட்டீர் என்று நம்பி, உமக்கு நிருபாதிக பிரகரணத்தால் கிருபை செய்தேன். உமது விவாகத்தைத் தடுத்தேன்." (340)

பிரபு ஸ்ரீ ரகுநாதனுடைய அழகான வசனங்களைக் கேட்ட நாரத முனிவர் புளகாங்கித மடைந்து கண்களில் நீர்மல்க, ஆனந்தத்துடன் நிரம்பியவராகக் காணப்பட்டார். அவர் தன் மனத்திற்குமுன் எண்ண ஆரம்பித்தார். "ஸ்ரீ ரகுநாதனுடைய ரீதியே ரீதி; அவருக்கு தன் சேவகர்களின் மீது ஏற்பட்டிருக்கும் ப்ரீதி அத்யாச்சர்யமானது. (ஹே மனமே நீயே சொல். எங்கேயாவது பிரபுவைப்போல யாராவது இருப்பார்களா? த்ருடமான அன்பும், ப்ரீதியும், தனது சேவகர்களிடம் காட்டப்படும் விஸ்வா

சமும் அவருக்கே இயற்கையாக ஏற்பட்ட ஸ்வபாவம் ஆச்சுதே. அதுமாதிரி யார் இருப்பார்கள் ?'') (341)

[கருத்து : என் ஆசார்யர், பகவானுடைய அம்சமாக விளங்கும் நாரதபகவான் பம்பா நதிக்கரையில் நீலோத்பலமாக விகஸித்திருக்கும் சீதாத்யான முள்ள ராமன் தயையின் பிரகரண மடைந்தவராக, நாரத பகவானுக்கு காம்க்ரோத மற்றவளும், மதம் மாத்ஸர்ய மில்லாதவளும், இந்திர நீலமணி போலவும், மேகம், குந்தம் சந்திரன் இவைகளின் காந்திகளுக்கும் அப்பால் மேல் பட்டவளும், தயையையே ஸ்வரூபமாக உடையவளும், பகவானிடத்தில் ஸாந்நித்யம் பெற்றவளும், ஆசார்யர்களுக்கு திவ்யஞானத்தைக் கொடுப்பவளும், யாத்ருச்சிகா கிருபையாகிற புருஷகாரத்தை சேதனர்களுக்குச் செய்பவளும், காமாக்ஷியுமாகிற என் சீதையை, நினைத்து புலம்பி, மீண்டும் தயையுடன் கூடியவராக, புத்திமான்களால் கேட்கப்படவேண்டிய வசனங்களைச் சொன்னர். ராமதாரக மந்திரத்தின் பெருமைகளையும் உபதேசித்து, முனீஸ்வரரைத் தழுவி உச்சி மோர்ந்து புளக சரீரமாகி, லோககல்யாணத்திற்க்காக நாரத பகவானை உஜ்ஜீவிக்கச் செய்தார். ஶ்ரீ ரகுபதியினுடைய தயை நிறைந்த வசனங்களை நாரதபகவான் புளகாங்கித சரீரத்துடன், நிலோத்பலம் போன்று விகஸித்திருக்கும் பரிபூர்ண நயனங்களால் கிருபையாகிற அம்ருதம் பெருக கேட்டுக்கொண்டிருந்தார். தன் மனத்திற்குள் அவர் எண்ணமிட்டார் என் பிரபு ரகுநாதனுடைய ரீதியே மிக்க உயர்ந்தது. பக்தபிரியன், பாகவதப்பிரியன் ''ஒருக்கால் சரணம் என்றவர்க்கு திருமால் அடைக்கலம் கொள்வானே,'' என்று சொல்லும்படி தயை நிறைந்தவரும், அகிலஹேய ப்ரத்யனீக கல்யாண குணங்கள் கொண்டவரும், ஆர்த்திகல்பனும், ஆபத்ஸகனும், க்ஷமையை கவசமாகக் கொண்டவரும், என் அடியார் ஒருக்காலும் தவறு செய்யார், அவ்விதம் அபராதம் செய்வாராகிலும் அவர் எனது கருணைக்கு பாத்திரமாகிறுன் என்று சொல்லும்படி விளங்கினர். (அன்பு பொறுமை ஆகிய இரு திருவடிகளைக்கொண்ட சீதையின் நாயகரே, நீரே எனது மனதின் லக்ஷ்யமாக விருக்கவேண்டும். இவ்வளவு கருணையுடனும், ''இவன் என்னைச் சேர்ந்தவன்,'' ''இவனை நான் தியாஜ்யம் செய்துவிடக்கூடாது,'' என்கிற தயையும், அதிவிஸ்வாசம் மரித்துப்போன சமயமும்கூட ஆத்மாவை துளிரவைக்கும் நிருபாதிக, யாத்ருச்சிக கிருபையினுல் அல்லவா என்பிரபு இன்று மனுஷ்ய ரீதியில், சிந்தித்து அளித்து அருள்

புரிகிருர், தானும் இன்புறுகிருர். அப்பேற்பட்ட சீதா பிரபோ, மஹாலக்ஷ்மியே, வேதாந்த தேசிகரையும் குஹனையும் ஆதாரமாகக்கொண்ட என்னை நீங்கள்தான் ஸர்வகாலங்களிலும் பகவானிடம் துளசி தளமாக சேர்ப்பிக்கவேண்டும். சங்கு சக்கரம் கையில் கொண்டானை என்வேத முதல்வனை தீர ஓது விக்க வேண்டும்.]

"எந்த மனுஷ்யர்கள் பிரமை, மமகாரம் ஆகியவைகளைத் தியாகம் செய்துவிட்டு, அப்பேற்பட்ட சௌசீல்ய ராமனைப் பஜிக்காமல் இருக்கிருர்களோ, அவர்கள் ஞான சூன்யர்கள்; துர்புத்தியுள்ளவர்கள். அத்துடன் மிக்க பாக்கியம் கெட்ட வர்கள்" என்று நான் சொல்வேன். (இனியாவது ஹே மனமே, அவரை ஏகாக்ர சித்தத்துடன் பஜித்துவா). அதன் பிறகு நாரத முனிவர் மிக்க மரியாதையுடன் சொன்னுர். "மஹா ஞான விசாரதரே, என் பிரபு, ஹே ராமச்சந்திர மூர்த்தியே, தயவு செய்து கேளும்." (342)

[கருத்து: "பிரபோ, ராமா, நாராயணு, உமது சேஷ்டிதங் கள் அனந்தம். இறுதியில் எல்லாம் மங்களகரமாகவே முடியும். உமது அருளினுலும், உம்மால் காண்பிக்கப்பட்ட க்ஷமையாகிற ஆத்ம குணத்தாலும், என்னைப் பரிசுத்தம் செய்தீர். ஸ்வாமி, மஹா நியமரே, என் பாபங்களைப் போக்கும் கிருச்ரரே, எந்த மனிதன் மோஹத்தை பொறுமையினுலும், அன்பினுலும், உமது கிருபையாலும் போக்குகிருன் இல்லையா, உமது ஆயிர நாமாக் களின் ஸாரமாகிற ராம மந்திரத்தை, உமாசங்கரர் அனவரதமும் ஜபித்துக்கொண்டிருப்பது போல, ஜபித்து, மனத்தில் க்ஷமை சாந்தி, சுகம் ஆகியவைகளை அடைந்து, பிரமையாகிற மாயா மோஹத்தை ஒழிக்காமல் காலத்தைக் கழிக்கிருர்களோ, பிரபு, கிருச்ரரே, அவர்கள் வெகுசீக்கிரத்தில் ஞான சூன்யமாகிவிடுகிருர் கள். சந்தேகத்துடன் ராமனுடைய பரத்வத்தை எவர்கள் பார்க் கிருர்களோ, அவர்கள் மாதாவின் கற்பை ஆராயும் துர்புத்தியுள்ள புத்திரன் போல ஆகிவிடுகிருர்கள்." "ஞானம் இருக்கிறது, ஆனுல் ஸ்வாமி, உமக்கு பாக்கியமில்லை," என்று ராமானுஜன் உய்யக்கொண்டார் என்கிற வைஷ்ணவனிடம் சொல்லி திருத்திப் பணிகொண்டது போல ராமனிடம் விமுகர்களாக விருப்பவர்கள் பாக்ய ஹீனர்களே! பிரபோ, அவன் அன்று தாக்ஷாயணி சிவவடி விலிருந்து பிரிந்த மஹாமோஹத்தைப்போல ஆகி, சிவஸாந்நித் யத்தை இழந்த அபாக்யவதிபோல ஆய்விடுகிருன்.) இவ்விதம் தனக்குள் யோசித்துக்கொண்ட நாரதர் மீண்டும் பிரபுவினிடம்

ஸமர்ப்பிக்க ஆரம்பித்தார்'' (வித்யாதரரே, யோகதரரே, சித்ர சிகண்டியே,) விக்ஞான விசாரதரே, ஸ்ரீராமா, கேசவா, நான் சொல்வதைக் கேளும்.)

[தியானம்

நாராயணு மஹாபிரபோ, ஹயக்ரீவ அவதாரமாகிற உம்மிடம் நான் யாது சொல்லப்போகிறேன்? மாயாதரங்கிணி, உன் மலர்போன்ற பாதங்களை இறுகப் பிடித்துக்கொண்டிருக்கும் அகஸ்திய லோபாமுத்திரை ஆகியவர்களுக்கு ஸ்ரீநிதியாக பொறுமை, க்ஷாந்தி, சுகம் ஆகிய எல்லாவற்றையும் அளித்த ராஜராஜேஸ்வரி, உன்னிடம் தியான ரூபமாக நான் வந்திருக்கிறேன். ராமா, சீதையைப் பிரிந்துவாடும் பிரபோ, குரு நியமனம் என்கிற விரதத்தை தலைமேல் சுமக்கும் முதலியாண்டானே, அத்துளாய் வீட்டில் ஸ்ரீதன வெள்ளாட்டியாக வேலை செய்த உன்னுடைய அபாம்நிதி, மஹோததியாகிற ஸௌலப்ய ஸௌசீல்ய விலாஸங்களையும் எனக்குத்தரவேண்டும். நாரத பகவானுல் அனவரதமும் கானம் செய்யப்படும் புண்ய ஸ்ரவண கீர்த்திகளின் பெருமைகளை அறிவதற்குப் புத்தியும் தியாகராஜர் ராமானுஜர் போன்ற உத்தமர்களால் அனுஷ்டிக்கப் பட்ட பொறுமை எனக்கில்லையே என்று நான் வருந்துகிறேன். என் தாயாகிய சீதை ஹனுமாரிடம் சொன்ன சொற்களை நினைத்துப் பார்க்கலாம். ''உன்னை க்ஷணமும் விட்டுப் பிரியேன்'' என்று வாக்குக்கொடுத்த (திருமண) கல்யாண ராமன் ''என்னைவிட்டு இன்று ஒரு வருஷகாலம் பிரிந்த பிரபு மஹா அபராதியாக விருக்கிருர். கருணையையும் க்ஷமையையும் ஆபரணங்களாகக்கொண்டு, மன்னிக்க முடியாதபடி ஸ்ரீராமனுக விளங்கும் பிரபு, மஹா சூரர் என்று பெயர் எடுத்திருக்கிருர். அந்தப் பெருமானை, சீதை மன்னித்தாளே, அந்த கருணையை என்னவென்று சொல்வது? அந்த கருணை பகவத் கருணையையும் மிஞ்சி நிற்கிறது. உமா மஹேஸ்வரர்கள் தங்களுக்குள் வியவஸ்தை செய்துகொண்டு பரம கடூரமான பாபங்களைச் செய்த என்னைப்போன்ற பாதகர்களையும் சதா அன்புடன் பரிபாலித்த வண்ணமாக விருக்கிருர்களே, அவர்களுடைய கருணையையும், பாகவதர்களிடம் காட்டும் பொறுமையையும், க்ஷமையையும், ஸ்வாமி, எனக்கு மற்றவர்களிடம் தயவு செய்து கொடு. நாராயணரே, என்னுல் வலம் செய்யப்படும் மாலிருஞ் சோலைமலையானே, சேதனனுடைய நித்ய ஜீவயாத்திரை ஸ்வயம்

  

என்கிற எண்ணங்களாலும், மதம் பிடித்து மோஹரூபத்தை அடைந்து, லோபத்தினுல் ஹிம்சையையும் பரபீடையையும் அடைவதால், சம்பு, மஹேஸ்வரா, என் ஆத்மகுருவே, ராமானுஜா, குலகுருவே, அகஸ்தியலோபாமுத்ரா, என் மார்க்க தரிசிகளே, ராஜமாதங்கி, என்தாயே, சகியே, என்பிரியே, நாராயண லக்ஷ்மிபாதங்களை மறந்து, ராமானுஜ உபதேசங்களை வஞ்சித்து, அனந்தமான அஸஹ்ய அபசாரங்களுக்கு இலக்காக ஆய்விட்டேனே. சீதா பிராட்டியையும், சதி தேவியையும் நினைத்து, ராமநாராயண ஜபத்தைச் செய்து, மஹேஸ்வர லோபா முத்ரா அகஸ்திய திவ்யபாத சேவைகளால் கிடைக்கப்பெறும் ஸ்வயநிலை பிரவிருத்தியும், சடகோபனுல் அளிக்கப்பட்டதும் ராமானுஜரால் வளர்க்கப்பட்டதும், பாம்பு ஜாதிக்குள் இல்லாத வைரத்தையும், உமா மஹேஸ்வரர்களிடம் பிரகாசிக்கும் ஐக்ய சம்பந்தத்தையும் பிரேமையே வரண்டுபோன என் மனத்திற்கு க்ஷமையையும் கொடுத்து எனது அசுபமான மதியில் உண்டாகும் காமக்ரோதஹிம்சை முதலிய அபசாரங்களை போக்கு அம்மா. மஹேஸ்வரரின் தயிதே, தன்னை ராமதூதன் என்று பவ்யமாக சொல்லிக்கொண்டவனும், சீதையிடம் ராமனைப் பற்றிச் சொல்லும்போது "ராமன் பிரும்மாஸ்திரத்தையும் அறிந்தவன், வேதங்களையும் அறிந்தவன், வேதம் அறிந்த ஞானிகளுள் சிறந்தவன், அந்த தசரத புத்ரனுகிற ராமன் தங்களை க்ஷேமமா என்று என்னைக் கேட்கச்சொன்னுர்" என்று சொல்லி, உத்தம குருஸ்தானத்தையும் அடைந்தானே. உமா சங்கரரைச் சேர்த்துவைத்த ராமநாம பிரபாவமாக விளங்கினுரோ, அந்த ஆஞ்சநேயரை, சிவசக்தி ஐக்கிய ஸ்வரூபத்தை முன்னிட்டுக்கொண்டு; நான் சீதாரமனை ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். "ராஜ்யம்விட்டு, வனம்போ" என்று கைகேயி சொன்னவுடனே, அன்று மலர்ந்த செந்தாமரை போல இருந்தது அம்மா என்று சொல்லும்படி அந்த ராமனின் முகத் திருமண்டலம் இருந்தது. அப்பேற்பட்ட ராமன் இன்று சீதான் ஸ்வேஷனுக க்ரோதமடைந்தபோது, "சியாமா, பத்மபலாசாக்ஷி, பிரியா, விரஹிதாமயா, கதம்தாரயதி பிராணுன் விவசா ஜனகாத் மஜா" என்று சொன்னுரே. சம்பு தக்ஷன் பெண்ணைவிட்டுப் பிரிந்த சமயம் கதறினபோது, ராமநாமம் எவ்விதம் அவருக்கு ஆறுதலைக் கொடுத்ததோ, அதுபோல, இன்று லக்ஷ்மணன் "ஸம்ஸ்தம்ப ராம, பத்ரம்தே மாசுச: புருஷோத்தமா, நேத்ரு சானும் மதி: மந்தா பவத்ய கலுஷாத்மனும் ஸ்மருத்வா வியோ

கஜம் துக்கம் த்யஜஸ்நேகம் ப்ரியஜனே'' என்று சொல்லி தன்னையும் பகவானையும் மனம் தேற்றி, மஹாத்மானம் க்ருதாத்மானம் ஆத்மானம் நாவ புத்யஸே'' என்று க்ஷமையை பிரபோதித்த லக்ஷ்மண முனியை முன்னிட்டுக்கொண்டு நான் சீதா ராமனை நமஸ்கரிக்கிறேன் சீதா, பவானி, அகஸ்திய லோபாமுத்ரை, சம்பு ஆகியவர்களின் ஆத்மாவாகிற நாராயணரை வேண்டுகிறேன். நாரதரே, நீர் எனக்கு நாராயணரிடம் தூது செல்லவேண்டும். ஆஞ்சநேயர் ராமதூதனுக ஆனதுபோல, அந்த பாண்டவ தூதனிடம், பார்த்த சாரதியிடம் ஸஹிஷ்ணுவிடம் நீர் என்னைப்பற்றிச் சொல்லவேண்டும். துளசிதாஸரே, நீரும் கிருபை செய்யும்.]

''ஹே ரகுவீரா, ஜன்ம மரண பயங்களை உன்னை நம்பி வாழும் ஸாதுக்களுக்கு நாசம் செய்பவரே, என்னை ஆட்கொள்ள வந்த நாதரே, எனக்கு இன்னொரு விஷயத்தையும் அருளிச் செய்து, கிருபை செய்யவேண்டும். ஸ்வாமி, ஸாதுக்களின் லக்ஷணங்களைப் பற்றிச் சொல்லவேண்டும்,'' என்று நாரதரால் வினவப்பட்ட ஸ்ரீராமன் மீண்டும் சொல்லலானுர். ''முனி ஸ்ரேஷ்டரே, நீர் கேட்டபடி ஸாதுக்களின் லக்ஷண அடையாளங்களைச் சொல்லுகிறேன். அந்தக் காரணங்களால் நான் அவர்களிடம் வசமடைந்து, அவர்களிஷ்டப்படி நான் நடந்து வாழ்கிறேன்.'' (343)

(கருத்து: ஸ்வாமி, தாங்கள் அப்பேற்பட்ட ஸாதுக்களின் வசமாக ஸதா ஸாந்நித்யம் செய்துகொண்டு, அவர்களை திருத்திப் பணி கொள்வதால், தாங்கள் லோக கல்யாணுர்த்தமாக விளங்குகிறீர்கள். தங்களால் பழக்கப்பட்ட ஸாதுக்கள் மஹாதீர்த்த ஹ்ருதர்கள், அவர்களைப் பற்றிய மஹாபாவனமான லக்ஷணங்களை லோக கல்யாணுர்த்தம் தயவுசெய்து எனக்கு உபதேசிக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்தார். பிரபு நாரதருக்கு பதில் சொன்னுர். ''முனியே கேளும். அவர்களுடைய வசத்தில் நான் ஸதா ஸாந்நித்யம் செய்துகொண்டிருப்பது வாஸ்தவம்தான். அதன் காரணத்தையும் அவர்களைப் பற்றியும்நான் சொல்லுகிறேன் கேளும்.)

'' அந்த ஸாதுக்கள் காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யமாகிற ஆறுவித தோஷங்களை வென்றவர்கள். அவர்கள் பாபரஹிதர்கள், நிச்சயமானதும் விமலமானதுமான புத்தியை உடையவர்கள். என்னையே நம்பி வாழும் அகிஞ்சனர்கள். ஸர்வத்தையும் தியாகம் செய்த மஹாபுருஷர்கள். உள்ளும்

வெளியும் சுத்தமான நடத்தையுள்ளவர்கள். சாந்தர்களாக விருப்பதால், ஆத்மசுகத்தை அனுபவிப்பவர்கள். பிறர்களுக்கும் சுகத்தை அளிப்பவர்கள். எல்லையற்ற ஞானவான்கள் அவர்களுக்கு ஸ்வய இச்சை மனோபீஷ்டங்கள் யாதும் கிடையாது. மிதமான ஆகாராதிகளால் உபவாஸம் முதலிய விரதங்களை அனுஷ்டிப்பவர்கள். ஸத்ய நிஷ்டர்கள், எல்லாவற்றையும் பாரபக்ஷமின்றி பார்க்கும் விரிந்த திருஷ்டியுள்ள கவிஞர்கள். சாஸ்திர ஞானத்திலும், அனுஷ்டானங்களிலும் தேர்ச்சியுள்ள வித்வான்கள், ஸர்வத்தையும் ஈஸ்வர மயமாகப் பார்க்கும் யோகீஸ்வரர்கள்.'' (344)

கருத்து :— ''அந்த பாகவத உத்தமர்கள் ஷடூர்மிகள் எனச் சொல்லப்படும் தோஷங்களை வென்றவர்கள். பாபரஹிதர்கள் ஜிதேந்திரியர்கள். மற்ற ஆசைகளைத் தியாஜ்யம் செய்துவிட்டு, என்னிடம் அசஞ்சலமான பக்தியாகிற புத்தியை வைத்திருப்பவர்கள். என்னையே நம்பி வாழும் பராயணர்கள். பிராணன் முதலிய ஸகல சம்பத்துக்களையும் எனக்காகத் தியாகம் செய்யும் உத்தமர்கள். உள்ளும் புறமும் கபடமின்றி ஸர்வ ஸங்கதோஷமாகிற பற்றுதல்களிடமிருந்தும் விஷயருசிகளினின்றும் விடுபட்டவர்கள். விமலமான மதியுள்ளவர்கள். சுத்தமான ஆசாரமுள்ளவர்கள். (குருசிச்ரூஷை, குருநியமனம், குருகிருபை, ஆகியவைகளில் நம்பிக்கை வைத்து, சுத்தர்களாக இருப்பவர்கள்.) என்னையே நம்பியிருக்கும் அகிஞ்சனர்கள் அவர்களைப் பார்த்த மாத்திரத்தில் கலிகல்மஷங்களும் கொடிய பாபங்களும் உடனேயே காலதாமதம் ஒன்றுமின்றி நசித்துப்போய், சுகத்தையும் ஆனந்தத்தையும் வாரிக்கொடுக்கும் சுகதாமர்கள். அவர்கள் ஜனார்த்தனராகிய என்னுடைய அமிதமான பிரபாவங்களை எளிதில் தெரியக்கூடிய ஞானவான்களாக விருப்பவர்கள். அவர்கள் ஏகாந்திகளானபடியால் பிறர்களுடைய தங்கம் முதலியவற்றைப் பார்த்தும் திருணமாகக் கருதும் இச்சாரஹிதர்கள். என்னையே அனன்ய போக்யமாக கருதுவதால், மிதமான ஸத் ஆகாரத்தை உண்டு களித்திருப்பவர்கள். (அவர்கள் ஸ்படிககிரியின் சிலையாகிற சாளக்ராமத்தை ஆராதிப்பதால் அவர்களுடைய மனது ஸ்படிகம்ாகவும் சந்திரன் போலவும் களங்கமற்றும் இருக்கிறது.) அதனால் அகில ஜகத்திற்கும் ஹிதம் செய்பவர்களாக, ஸத்தியம் என்கிற வ்ரத அனுஷ்டானத்தை கைக்கொண்டவர்களாகவிருக்கிறார்கள். வாஸுதேவ மயமாக ஸகல சேதனசேதனர்களைப் பார்ப்பதால் சாந்த ஸ்வரூபமான கவிகளாகவும்,

வித்வான்களாகவும், யோகிகளாகவும் விளங்குகிருர்கள். ஸநாதனமான விஷ்ணுபகவானே ஹ்ருதய புண்டரத்தில் தரிப்ப தால் சகலருக்கும் ஸௌம்யரூபமாக விளங்குகிருர்கள்.). (எப் பொழுதும் அவர்கள் கமலநயனு, வாஸுதேவா, விஷ்ணே, தரணிதரா, அச்யுதா, சங்கு சக்ரபாணே, உம்மையே நான் சரணம் அடைந்திருக்கிறேன் என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பவர்கள். அவர்கள் சத்சித் ஆனந்தமயமாக விருப்பவர்கள்.) அவர்கள் ஸர்வத்தையும் பிரேரணை செய் பவரும், கவியும், எல்லாவற்றையும் பார்க்கிறவரும், பேசுகிற வரும், ஸர்வக்ஞரும் சகல, சேதனு சேதனங்களுக்கு ஈஸ்வரரும், (அனுதினமும் உயர்வற வுயர்நலம் உடையவனவன், மயர்வற மதிநலம் அருளினன் யவனவன், அயர்வறுமமரர்கள் அதிபதி யவனவன், துயரறு சுடரடி தொழுதெழு என் மனனே, என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடி பகவானுடைய கல்யாண குணங்களையும், தோஷமில்லாத) ஸகுண பிரும்மத்தை உபாஸித்துக்கொண்டு, அவ்யக்தமானதும், அஜரும், ஜனர்த்த னருமாகிய ஸ்ரீமந் நாராயணரை, சதா தியானித்த வண்ணமாக விருப்பார்கள். அவர்கள் யோகீஸ்வரர்கள். (அவர்கள் சாரீரகன் என்கிற தேகத்திறல் சொல்லப்படும் பரமாத்மாவை தன்னுள்ளும் பிறர்களின் இடத்திலும் பார்க்கும் நாராயண பரர்கள். சத்அசித் என்கிற சரீரத்தை உடைய ஈஸ்வரரை எங்கும் அவர்கள் பார்ப்ப தால், அவர்களுக்கு தோஷம் கிடையாது. அவர்கள் ஞானத்தினல் ஏற்படும் ஆனந்தங்களை ஸ்வயம் பிரகாசமாகத் தெரிந்து கொண்டு, இயற்கையாக ஞான ஆனந்தத்தை, ஸ்வரூப ஞான ஆனந்த பிரவிருத்தியுள்ள ஈஸ்வரரை, பகவான் விஷ்ணுவை, ஸர்வ வியாபகமாகவும், அனந்தமாகவும், தமஸః பரஸ்தாத் என்கிற வேத புருஷனை பொலிந்து இருண்ட கார்வானில் மின்னேபோல் தோன்றி மலிந்து திரு இருந்த மார்பன், நான் காணும் பொருள்களின் அழகாயும், காக்ஷிக்கு ஆதாரமாயும், பிரும்ம ருத்ராதி தேவர்களால் ஸ்துதி செய்யப்படும் புருஷன் என்கிற நாமத்தை உடையவனும், புருஷோத்தமன் என்று சொல்லப்படுகிறவரும், யக்ஞபதியும், விகார மற்றவருமான, என்னை, மஹாலக்ஷ்மியுடன் கூடிய என்னை, நிமித்தகாரணம், உபாதானகாரணம், ஸஹகாரிககாரணம், எல்லாம் நான் என்றும், போக்யம் போக்தா, போகோபகரணம் எல்லாம் நானே என்றும், ஸ்வதந்திரமுள்ள என்னை, பக்த பராதீனனுன என்னை, ஆசார்ய ஸம்பந்தத்தால், பாரதந்திரீய ஸ்வபாவத்துடன், ஸதா ஆஸ்ர

யித்த வண்ணமாக விருப்பவர்கள். அதே பாவத்துடன் நானும் அவர்களுக்கு உட்பட்டு, பாண்டவர் தூதன் போல, அவாப்த ஸமஸ்த காமனுகிற நான் அவர்களுக்கு அடிமை வ்ரதம் பூண்டு, அருள்கொண்டு வாழ்கிறேன். எம்பெருமான் அருளைக்காட்டிலும் ஆழ்வார்களின் அருள் பெரிது, "அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே," என்கிறப்போல, "இவ்வுலகினில்" என்கிறபதத்திற்கு ஈஸ்வரன் கைவிட்ட ஆத்மாக்களையும் அவர்களுடைய துர் கதியையும் கண்டும், "ஐயோ, இவர்களையும் நாம் உஜ்ஜீவனம் செய்யாவிடில் யார் செய்வார்கள்?" என்ற அபார கருணையினுல் அவர்கள்பால் அருள் செலுத்தி, ஸர்வாதிகாரத்துடன், பிராட்டி யின் கிருபா வேசத்தினுல், ஊரும் நாடும் உலகமும் தம்மைப் போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்றப் பண்ணி நீரு யிற்று, என்று நஞ்சீயர் வ்யாக்யானப்படி, "வேதாதிகாரிகளுக்கு உஜ்ஜீவனுகும்படி எம்பெருமான் கீதை நெறியை அருளிச் செய்தது; அநதிகாரிகளும் கிருதார்த்தராகும்படியாயினரே." ஆழ்வார் அருளிச் செய்கிறது என்கிறதை ஸத்யமாக நிரூபணம் செய்வதுபோல, அவர்கள் சொல்லுக்கு கட்டுப்பட்டவனுக விருக்கிறேன். நாரதரே, என்னுல் கீதையில் காட்டப்பட்ட தத்வ உபதேசமாகிற ஸாத்வதம், ஸித்த தர்ம விதி இதுதான். (இதில் திருவாய்மொழியில் சொல்லப்பட்டதும், உமக்கு நான் இப்போது அருளிச் செய்ததும், இந்த சூரணைகள், உபதேசங்கள், வசனங் கள், விதி அனுஷ்டானங்கள் என்று தெரிந்துகொள்ளும்) (நாரத ரும், அன்று பட்டர் முன்பு நஞ்சீயர் "இன்றென்று அறியேன் என்னைப் பண்ணிற்று" என்று சொன்னதுபோல, சிஷ்யனென்று பாராமல் பேரைக் கொண்டாடும்படியான பிரபாவ அதிசய முடையவராகி, பராசரபட்டரின் அருளைக் கொண்டாடி என் நெஞ்சில் அனுஸந்தித்தார். "இருள்படும்படியான திருமேனியும் எண் திசையுமறிய இயம்புவேன், திரிதந்தாகிலும் தேவப்பிரா னுடைய கரிய கோலத் திருவுருக்காண்பன்;" "பராங்குச நாயகி யின் கண் விசாலத்தைப் போல, பாகவதர்களுடைய அருளும் மஹதோ மஹீயான். அவைகளைப்போல பகவான் திருவாய் மலர்ந்து பேரருளுகிருரே, நிர்வாஹம் பண்ணுகிருரே, ஆச்சரியம் ஆச்சரியம். இவருடைய ஆரா அமுதமாகிற சுவைகளுக்கு நான் எவ்வாறு கிருத்ஞை செய்வேன் என்று மஹானுபாவரான நாரதர் எண்ணமிட்டார். (அன்று ஸ்வேத தீபத்தில் நாராயணரைப் பார்த்தபோது எவ்விதம் ஆனந்தித்தாரோ, அதுபோல் இன்று நாரதர் ராமனைக்கண்டு ஆனந்தித்தார். இவ்விதம் எனக்குப்

பாகவத பெருமைகளைப் பறைசாற்றிய பகவானுக்கும், லக்ஷ்மிக்கும், நாரதருக்கும் பராசரருக்கும் ஆழ்வாராதிகளுக்கும் ராமானுஜருக்கும், அவருடைய சிஷ்யர்களுக்கும் துளஸிதாஸருக்கும், தியாகராஜருக்கும் அநேக நமஸ்காரங்கள் நான் செய்கிறேன். எங்களையும் ஸ்வீகரித்துக்கொண்டு அருள் காட்ட வேண்டும் என்று, பிரார்த்தித்துக் கொள்கிறேன். பிரபோ, பிராட்டியே, கிருபை செய்யவேண்டும்.)

[தியானம்

என் குரு நாதர்களான நாரத பராசராதி ஆழ்வார்களுக்கு சரணம். ராமா, நீர் மிக்கப் பயப்படத் தக்கவன். கொடியவர். நெஞ்சில் இரக்கமில்லாத கடியன். நான் உம்மிடம் ஸம்பந்தம் கொள்ள முடியாதபடி வளர்ந்திருக்கும் நெடியன். உம்முடைய பிரபாவங்கள் உம்மிடமே இருந்துவிட்டுப்போகட்டும். உம்மையே பராயணமாக வைத்து வாழ்ந்தாளே, அந்த ஸர்வ சக்தி பரா, சீதை எவ்வளவு தடவைகள், எவ்வளவு காலம் உம்மைவிட்டுப் பிரிந்திருந்தாள்? உம்மையே விபூதியாக அணிந்துகொண்ட லோக குருக்களான உமாமஹேஸ்வரர்கள், தாக்ஷாயணி பரமசிவனுகவிருக்கும்போது, எண்பத்தேழு ஆயிரம் ஆண்டுகள் பிரிந்திருந்ததாக துளசிதாஸர்சொல்லுகிறரே, அது உமக்கு நியாயமா? நாரதரிடம் என்ன குறைகளைக் கண்டீர் ஸ்வாமி? அவரையும் எவ்வளவு தடவைகள் பங்கப்படுத்தினர்? அது மாதிரி, ஞான ஸமுத்திரம் போலவும், பிறருக்கு ஆனந்தத்தைத் தரும் வேத வியாஸரை நீர் என்ன விதமாக சோகப்படுத்தினீர்? நீரே வலுவில் வந்து யாசகம் கேட்டு, பலி தானம் செய்தபோது, அவனை உம்பாதத்தால் தலையில் அமுக்கி, பாதாளம் போகச்சொன்னீரே? இது உமக்கு நியாயமா? அந்த மஹாபலிசக்கிரவர்த்திக்கு நியாயமான வழியில் உபதேசித்த என் ஆச்சார்யரான சுக்ரபகவானை கண் இழக்கும்படி செய்தீரே? தர்மபுத்ராதிகளுக்கு ராஜ்யம் கிடைத்தபோதிலும் புத்ரர்கள், பந்துக்கள் இல்லாத ராஜ்யசூன்யமாகச் செய்தீரே, உம்மையே ஒருவராக நம்பிவாழ்ந்தவன் எவராவது சுகமடைந்திருக்கிறர்களா? அதற்கு தியாகராஜரும் ராமதாஸரும் ஸர்வசாக்ஷிகள். என் தாயான ஜானகிதேவியினுடைய தயை யில்லாதபோனல் நான் உம்மிடம் வரப் பயப்படுகிறேன். உம்மைவிட உமது பாகவதர்கள் உசத்தியென்று நாரதரிடம் சொன்னீரே. அந்த பரமபாகவதர்களும், ஸதாசார்யர்களும், பிராட்டியின் கருணையையே நம்பி வாழ்கிறர்கள் அன்றே? ஏன்

நீரே ஆதிசக்தியை நம்பி வாழ்கிறீர்கள். எனக்கும், சகல சேதனு சேதனங்களுக்கும், ஆசார்யர்களாலும் ஈஸ்வரனுலும் பரிதியாகம் செய்யப்பட்ட சமயத்தில்கூட, நீர் ஆலிலையில் சேர்ந்தபோது ஸ்ரீகர்பராகவிருந்தபோது கூட, என் தாயே என்னை ஸம்ரக்ஷிக்கிருள். சகல சேதனர்களையும் உய்விக்கிருள். என் ரெங்கநாயகி பராங்குசநாயகி அவள். "எங்கள் மேல் சீறியருளாதே இறைவா," என்று ஆண்டாள் விளம்பித்தாளே அதைப்போல சொல்லி என்னை நிர்வஹிக்கிருள். அந்த சீறியருளாளன் தேடிப்போகும் சீதே, உமாலக்ஷ்மியே, பரமசிவன் அல்லும் பகலும் அனவரதமும் நாராயணரின் பிரியத்திற்காக உன்னைத் தானே நம்பி வாழ்கிருன். கொடியநெஞ்சுள்ள விஷ்ணுவே, ஆலகாலவிஷத்தை நாராயணன் ப்ரீதிக்காக, "குரு நியமனம்" என்கிற ஆக்ஞைக்குட்பட்டு நீலகண்டர் சாப்பிட்டாரே, அப்போது யாருடைய பலத்தினுல் ஸ்வாமி, உயிர்தரித்தார்? அபார காருண்யனுகிற சம்புவை பரிதபிக்கவைத்த ராமா, பூர்வாசார்யர்கள் செய்தபடி ரெங்கநாயகியை சரணம் அடைந்திருக்கும் என்னை நாரத ஆஞ்சநேயாதிகளால் புகழப்படும் மார்க்கண்டேய ரிஷியின் புத்ரியான லக்ஷ்மியை, வேதவியாஸர், பராசர, சுகர், தியாகராஜர் போற்றிப் புகழும் அந்த சீதையை நான் எவ்விதம் காண்பேன்? எப்போது காண்பேன்? உமா கிருபை செய் அம்மா. ஜகன்மாதா ஸர்வேஸ்வரி.]

"அவர்கள் மிக்க ஜாக்ரதையுள்ளவர்கள். தன்னைப் போல பிறர்களையும் கௌரவம் செய்யும் மஹநீயர்கள். தங்களைப்பற்றிய அபிமானத்தை முற்றும் துறந்தவர்கள். எந்த ஆபத்திலும் தெய்வசல்கல்பத்திற்கு உட்படுவதால் தைரியவான்கள். ஆபத்திலும் தர்மத்தைமறவாதவர்கள். தர்ம ஆசனைகளில் தர்ம துரந்தரர்கள், மஹாநிபுணர்கள். தர்மமுடிச்சை நன்ருக அறிந்தவர்கள்." (345)

"அவர்களே ஸமஸ்தகல்யாணகுணங்களுக்கு நிதி. அவர்கள் சம்சாரத்தில் பற்றுதல் அற்றவர்களாக விருப்பதால், சம்சார துக்கங்களில் அவர்கள் அமுழ்ந்திப்போகிறதில்லை. அவர்களுக்குப் பகவத் ஸ்வரூபத்தையும், பகவத்கிருபையையும் பற்றிய சந்தேகங்கள் கிடையாது. என்னுடைய சரணகமலங்களிலே அவர்களுக்கு அத்யந்தப் பிரியம். இந்த ப்ரீதியைவிட்டு, அவர்களுடைய சொந்த தேகத்திலோ வீட்டிலோ, அதிகப் பிரியம் கிடையாது. அதாவது எனது கமலபாதங்களிலுள்ள பக்திபிரேமை தங்க

ளுடைய சொந்த தேகத்திலோ அல்லது மனைவி மக்களிடமோ கொண்டுள்ள பிரேமையைவிட மிக்க அதிகம்.'' (346)

(கருத்து: நாரதபகவானே, அவர்கள் ஜாக்ரதையுள்ளவர்கள். இந்த ஸம்சாரம் இந்தஜகத் எல்லாம் துக்கங்களாகவும், ஹிம்ஸிக்கிறதாகவு மிருக்கிறது. மரணம், பயம், துக்கம், பிரிவு, சுகமில்லாமை, கஷ்டஜீவனம், குரு கிருபையில்லாதது, ஸர்வத்ரமும் ஸதா காலத்திலும், ஸர்வ தேசங்களிலும் துக்கத்தையே பரிணமமாக கொண்டது. இது ஸம்சார வாழ்க்கை. அதில் பிறந்த ஜீவன் என் திருவுள்ளத்தில் ஏற்படும் லீலையாகிற சங்கல்பத்தால் பரமதுக்கங்களை அனுபவிக்கிறுன். இந்த ஸம்சாரம் முக்குணங்களாகிற ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் குணங்களால் கர்ம சேஷ்டிதங்கள் செய்யப்பட்டு, அனவரதமும் ஜீவன் துக்கத்தை அனுபவிக்கிறுன். அப்பேறப்பட்ட துக்க சமுத்திரத்திலிருந்து இந்த பாகவத உத்தமர்கள் ஹ்ருதயம் பிளந்துபோகும்படி துக்கத்தை அனுபவிக்கும் ஜீவர்களை கரையேற்றுகிறுர்கள். அவர்களுக்கு தயையே இயற்கையான குண ஸ்வரூபமாகவிருக்கிறது. மண்ணில் பிறந்த புழு, பிள்ளைப்பூச்சி, பாம்பு, மண்ணினுல் ஒட்டப்படாதது போல, அவர்களும் இந்த குணசேஷ்டிதங்களினுல் பற்றப்படாதவர்கள், துக்கரஹிதர்கள். எனது காருண்யத்தையும் அதற்கு மூலகாரணமாகிற பிராட்டியின் புருஷகாரத்தையும் நம்பி, அவர்கள் மஹாகிருபையுடன் சேதனர்களின் சந்தேகப் பேய்களைவிரட்டி உஜ்ஜீவிக்கச் செய்கிறுர்கள். அவர்கள் என்னுடையதும், பிராட்டியினுடையதுமான சரோஜ சரணங்களைக் காட்டி அன்று விதுலை ஸஞ்சயன் என்கிற தன் புத்ரனுக்கு குந்தி வசனங்களால் வாசுதேவரிடம் சொல்லப்பட்டதும் தர்மபுத்ரருக்கு ஸந்தேசமாக அளிக்கப்பட்டதுமான புருஷலக்ஷணங்களை ஜ்வலிக்கச் செய்கிறுர்கள். ''பிறர்'' என்கிற சத்ருவை பொறுக்காமையால் ''புருஷன்'' என்று சொல்லப்படுகிறுள். முயற்சியுள்ள சூரனும், மனஉறுதி உள்ளவனும், சிங்கம்போல பராக்ரம் படைத்தவனும், மரணத்தை அடைந்தபோதிலும் தேசத்தாலும் ஜனங்களாலும் புகழப்படுகிறவனும், தன்னுடைய சொந்த பிரியத்தையும் சுகத்தையும் தள்ளிவிட்டு, ''புருஷ பிரயத்தனம்'' என்பதை ஆஸ்ரயிப்பது போல, அர்ஜுனனுடைய காரியத் திறமையுடன், தனஞ்ஜயரான கிருஷ்ணனே, அந்த ஸநாதனமான நாராயணரை, பிராட்டி, ஆசார்யர்கள் மேல் நம்பிக்கையாகிற மஹாவிஸ்வாசம் வைத்துத்தேடி அடைகிறுனே, அந்த புருஷனே இந்த உலகிலும் மறு உலகிலும் நன்மையை அடைந்து பிறர்களை

யும் மகிழவைக்கிருன். நாரதரே, அந்த மஹாபாகவத உத்தமர் களுக்கு என் பாதசரணங்களைத் தவிர வேறு ஆசையில்லை. தங்கள் சரீரங்களில் பற்றுதல், சுகம் ஆகியவை இல்லை. அவர் களுக்கு "தனது" என்று சொல்லக்கூடிய 'ஆஸ்தியாகிற வீடு போன்றவையும் இல்லை.)

"அந்த பாகவத உத்தமர்கள் பிறர்களுடைய புகழ்வசனங் களைக் கேட்கும்போது, அசூயை அடையாமல் ஆனந்தமடை கிருர்கள். ஆனுல் அவர்களை நாம் புகழ்ந்தால் அவர்கள் வெட்கப்படுகிருர்கள். அவர்கள் ஸமதிருஷ்டி உள்ளவர்களாக குற்றம் தோஷங்களை ஆராயாமல் எல்லாப் பிராணிகளிடம் அன்பு செலுத்துவதால், பழுத்த மரத்தை ஸர்வ பிராணி களும் எவ்விதம் அண்டி சந்தோஷத்துடன் பிழைக்குமோ அதுபோல எல்லோராலும் ஆஸ்ரயம் செய்யப்பட்டு வாழ் கிருர்கள். நண்பர்களுக்கும், பந்துக்களுக்கும் ஹிதம் செய்யும் சூரர்களாகவிருக்கிருர்கள். (தேவர்கள் இந்திரனுடைய பராக்ரமத் தால் சுகமாக வாழ்வதுபோல இந்தபாகவத அனுத்தமர் கள் தன்னை அண்டினவர்களை சுகமாகவைத்து செழிக்கச் செய் கிருர்கள்.) இப்பேற்பட்ட மஹான்களுக்கு எது நியாயம், எது அநியாயம், எது தர்மம் எது அதர்மம் என்று சுலபமாகத் தெரியும். அவர்கள் இவ்வுலகில் சுபமான புகழை தாங்களும் அடைந்து பிறர்களையும் அடையவைக்கிருர்கள். யாவராலும் அடையக்கூடிய ஸரள ஸ்வபாவமுள்ளவர்கள், பொருமை யில்லாமல் தயையுடன் யாவற்றையும் சம்ரக்ஷிப்பவர்கள்" எல் லோரிடமும் பாரபக்ஷமின்றி அன்பு செலுத்துபவர்கள்." (347)

"அந்த மஹானுபாவர்களுக்கு என் நாமஜபம், அந்த ஜபத் தினுல் ஏற்படும் தவம், வ்ரதம் என்று சொல்லப்படும் பொறுமை, தமம் என்று சொல்லப்படும் இந்திரிய நிக்ரஹம், பசி குறி தாகம் ஆகியவைகளைத் தைர்யத்துடன் பாதுகாத்தல் முதலியன, தியாக புத்தி, நியமங்களாகிற சித்த சுத்தி தேக சுத்தி, பிராண சுத்தி, உபவாஸம், ஸ்நானம், சந்தியை முதலிய கர்மாக்கள், நித்ய வாழ்க் கையின் ஜீவனமாகவும், குரு சரணுரவிந்தங்களின் நிழலில் வாழ்கிறவர்களாகவும், பசுக்களைக் காப்பாற்றுகிறவர்களாகவும் "கோவிந்தன்" என்கிற என் நாம ஜபத்தை ஜீவன சாராம்ச மாகக் கருதுகிறவர்களாகவும், வேதங்களையும், வேதங்களைப் பராயணமாகக் கொண்ட பிராம்மணர்களையும், தெய்வ மாகவும் கொண்டாடுபவர்களாகவுமிருக்கிருர்கள். அவர்களுக்குச் சிரத்தை, க்ஷமை, மித்ரஸ்நேகம், தயை, மனம் பிரஸன்னமடை

வதால் ஏற்படும் ஆனந்தம் ஆகியஎல்லாம் உண்டு. எல்லா வற்றையும் ஸாதிக்கக் கூடியதும், மிருத சஞ்சீவினியாகிற என் திருவடிகளைக் கபடமில்லாமல் ஆஸ்ரயித்து, பிரேமையுடன் வாழும் அவர்கள் எனக்கும் பிராண பிரியர்களன்றோ?'' (348)

[தியானம்

எனக்குப் பிதாவும் எனக்கு ஹிதத்தைச் செய்யும் ராமா, நாராயணா, திருவேங்கடத்தில் லக்ஷ்மியைத் தரித்துக்கொண்டிருக்கும் ரமாரமணா, ஆனந்தமாகத் தேனுவின்மீது சாய்ந்து கொண்டு வத்ஸங்களாகிற கன்றுகளால் சூழப்பட்டிருக்கும் ராஜ கோபாலா, ரங்கராஜா, உங்களனைவரையும் பர வாஸுதேவ ரூப மாக ஸ்மரித்துக்கொண்டு, பரதன் என்கிற உன் பாதங்களிலும், லக்ஷ்மணன் என்கிற உன் கிரீடத்திலும், அவர்களைப் புரஸ் ஸகாக்களாக வைத்து, நாரதரை என் குருவாகவும், ரெங்கநாயகி என்கிற பிரேரணை செய்யும் தேவதையை தயையாகவும், ஸ்ரீரங்க நாதா, திருவேங்கடமுடையானே, என் வரதராஜனே, உன் பாதங்களை நான் சரணம் அடைகிறேன். நாராயணா, ராமா, உங்களுடைய சரணாம்புஜங்களை அனன்ய ப்ரயோஜனமாக, நிர திசய ப்ரேமையுடன் வந்து அடைகிறேன். பங்குனி உத்திரத் தில் காவேரி நதிதீரத்தில் பிராட்டியுடன்கூட ஐக்யமாக ஸ்ரீரங்க நாயகியின் கிரஹத்தில் எழுந்தருளியிருக்கும் பிரபோ, ரெங்க நாதா, அன்று பிரஹ்லாதன் தன் குலத்தினர்களை ''இந்த ஸம் ஸாரம் அஸாரம். அதனால் விஷயங்களில் மனத்தை ஈடுபடுத்தா தீர்கள். தைத்ய சமுஹங்களே, அச்யுதனுடைய பாதங்களை ஸதா ஆராதனை செய்யுங்கள். அந்த அச்யுதன் உங்களிடம் பிரஸன்னமானால் உங்களுக்குக் கிடைக்கக் கூடாதது ஒன்றும் இல்லை. தர்ம அர்த்த காமங்களில் மனத்தை செலுத்தாதீர்கள். அவைகள் எல்லாம் அத்யந்த துச்சம். பிரும்ம ரூபமாகிற நாரா யணரை அடையுங்கள். அவர் உங்களுக்கு மஹத்தான பலனைக் கொடுப்பார், ஸந்தேகமின்றி என் வார்த்தையை நம்புங்கள்,'' என்று உபதேசித்தான். அதுமாதிரி யதிகளின் ராஜரான ராமா னுஜன் தான் யதியாகவிருந்தபோதிலும், சகல சேதனா சேதனர் களின் வருத்தங்களைத் தாங்காமல், நித்யானபாயினியும், நிரவத்ய மான ஸ்வரூபங்களை உடையவளும், தேவ தேவரான நாராயண ருக்கு மஹிஷியும், அகில ஜகன்மாதாவும், என்னுடைய தாயாக வும், எனக்கும் ஸகல சம்சாரிகளுக்கும் '' அசரண்ய சரண்யாம், '' ''அனன்ய சரணः'' என்று சொல்லி, உன்னை, அம்மா, பக

வானுகிற ரங்கராஜன் உன்னை அணைத்து இணைத்து மகிழ்ந்திருக்கும்போது, சொல்லி சரணமடைந்து பிரார்த்தித்தாரே, அப்போது என்ன பரிவுடன் ரங்கராஜ தயிதே, பதித சொன்னுய்? "அஸ்துதே." "அப்பா உனக்கு மாத்திரமில்லை. உன்னைச் சேர்ந்தவர்களுக்கும் அல்லவோ என் கிருபை ஸம்பவிக்கட்டும்" என்கிற பிரகரணமாக, "தயைவ ஸர்வம் ஸம்பத்ஸயதே" என்று சொன்னுயே. அதை ஞாபகப்படுத்திக் கொள். அதேமாதிரி சீதே, நீ வாயுபுத்ரனிடம் "ஹரிஸ்ரேஷ்டனே, இந்த சூடாமணியை ராமனிடம் கொடு. இதைப் பார்த்ததும் என் பிரபு என் தாய், என்னையும், ராஜாவான தசரதரையும் ஆகிய மூன்று பேர்களையும் நன்கு நினைப்பார். ஹனுமன், முயற்சி அடைந்து என் துக்கத்தைப் போக்குகிறவனுய் நீ ஆகவேண்டும். அம்மாதிரி ஆலோசித்துச் செய். உனது முயற்சியானது துக்கத்தைப் போக்குவதாக ஆகிவிடும்," என்று சொன்னுய். வாயு புத்ரனும் மஹா பயங்கரனுமான அந்த ஹனுமார் "அப்படியே செய்கிறேன்" என்று பிரதிக்ஞை செய்துவிட்டு வைதேஹியைச் சிரஸ்ஸால் நமஸ்கரித்துச் சென்றுர். அப்பேற்பட்ட அவாப்த ஸமஸ்தகாமனுகிற ரெங்கராஜனை சீதையின் பரதந்திர ஸ்வரூபத்தால் நானும் பரத லக்ஷ்மண முனிகளைச் சாக்ஷியாக வைத்து, ஈஸ்வரியின் ப்ரேரணையினுல் பகவானுகிற ரெங்கநாதருடைய திவ்ய சரணுரவிந்தங்களைச் சரணமடைகிறேன். ஆசார்ய ஹ்ருதயத்தில் ஸாந்நித்யம் கொண்ட என்னிடம், ரெங்கநாதா, ரங்கநாயகி ஸமேத ஸாந்நித்யம் கொண்ட உனக்கு, என்னிடம் தயை வராதா? கருத்த கண்களுள்ள மைதிலி, ஆசாரியரால் எனக்காகப் பரிந்து பேசப்பட்ட மஹாலக்ஷ்மியே, ஹனுமானுடைய விஸ்வரூபத்தைக் கண்டும், "என் பர்த்தாவினிடத்திலிருக்கும் ப்ரீதியை முன்னிட்டும், ராமனைத் தவிர மற்றெரு புருஷனுடைய சரீரத்தை நான் தொடமாட்டேன்" என்று ஆஞ்சநேயருக்கும் எனக்கும் அனன்யார்ஹ சேஷத்வத்தை, அம்மா, நீ போதித்தாயே. அந்த ஆஞ்சநேயரும் ராமனிடம் சென்று முதலில் நீ இருந்தத் திக்கை நமஸ்கரித்துவிட்டு, அதற்குப்பின் ராமனுக்குப் பிரிய ஸந்தேசத்தைக் கொடுத்தாரே. அப்பேற்பட்ட ரங்கதயிதே, நாராயண பரா, என்னை ஆதரிக்க மாட்டாயா?]

"இந்தப் பாகவத பக்தர்கள் தங்களுக்குள் வைராக்யமுள்ளவர்களான யதிகளாக விருப்பார்கள். (ஆனுல் நித்ய ஸம்சாரிகளாக விருப்பவர்களை உஜ்ஜீவிக்கும் பொருட்டு கருணுநிதிகளாக

பகவானிடமும், பிராட்டியினிடமும், சேதனர்களுக்காக ராமானுஜர் மாதிரி கருணையைப் பிரார்த்திப்பவர்கள்.) (பரதன் சத்ருக்னனைப்போல) தெளிந்த ஞானமுள்ளவர்கள். (லக்ஷ்மணனைப்போல) வினய ஸம்பத்துள்ள கிங்கரர்கள். (பிரஹ்லாதனைப் போல) ஸம்சார தாபங்களிலிருந்து விடுபடும் மோக்ஷ மார்க்கமாகிற விக்ஞான ஸம்பத்துள்ளவர்கள். (ஈஸ்வரியைப்போல) தத்வ ஞானமாகிற பரதந்திர ஸ்வரூபத்தைப் புராண இதிஹாஸங்களால் நிர்த்தாரணம் செய்பவர்கள். (ஆஞ்சநேயாதிகளைப் போல) டம்பம் உள்ளவர்களல்ல. வாஸ்தவமான ராம பக்தியைக் கொண்டவர்கள். (சூடாமணியைப் போன்ற) உயர்ந்த ரத்னமாகிற மானத்தைப் பூஷணமாகவுடையவர்கள். நாரதரே, (உம்மைப்போல) மதமின்றி மறந்தும்கூட கெட்டவழியில் மனத்தைச் செலுத்தாதவர்கள். ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்படாத அதர்ம வழிகளில் தங்கள் பாதத்தை மறந்தும்கூட வைக்க மாட்டார்கள்.'' (349)

''ஸதா அவர்கள் என்னுடைய லீலைகளாகிற கதாம்ருதங்களைப் பருகிக் கொண்டும், பிறர்களுக்குச் சொல்லியும் இன்புற்று இருப்பார்கள். அவர்கள் ஒருவித பிரயோசனத்தையும் எதிர்பார்க்காமல், பிறர்களின் நன்மையையே தேடி அலைந்து கொண்டிருப்பவர்கள், மஹா பரோபகாரிகள். நாரதரே, நன்ருகக் கேளும். ஸாதுக்களின் ஸ்ரேஷ்டமான குணங்கள் இருக்கின்றனவே, அவைகளை ஸரஸ்வதி தேவியோ, வேதங்களோ சொல்லித் தீர்ந்தபாடில்லை. அவைகள் அபாரமாக விருக்கின்றன.'' (அப்பேற்பட்ட ஸாதுக்களை நான் ஆயிரம் நமஸ்காரங்களைச் செய்கிறேன். அவர்களை முன்னிட்டு, நாரதஸேவிதா, சீதா ராமா லக்ஷ்மணு, உங்களையும் ஆயிரம் தடவைகள் நமஸ்கரிக்கிறேன். (350)

பகவான் நாராயணராகிய ஸ்ரீராமச்சந்திரனுல் நாரதருக்கு இந்தவிதமாக பக்த, பாகவத திருமந்திர பிரபாவங்கள், பம்பா தீர்த்தக்கரையில் உபதேசிக்கப்பட்டன. சீதையை சின்னமாக வுடைய ஸ்ரீராமன், (மஹா பிரபு, ஆஸ்ரிதவாத்ஸல்யன், நாரத, பிரஹ்லாத, ஆஞ்சநேய, பரத, சத்ருக்ன, லக்ஷ்மணப்ரியன்), கருணையால் நனைந்த உள்ளத்துடன் நாரதருக்கு பேருபகாரமாக பாகவத தர்மத்தை உபதேசித்தார். ''இவ்விதம் பக்த பாகவதர்களின் பெருமைகளை ஸாரதாதேவியோ, சேஷபகவானே சொல்லித் தீர்க்க முடியாது'' என்று பெருமாள் நாரதரிடம் சொல்லி முடித்தவுடன், நாரதர் ஸ்ரீசீதா தேவி ஸதா ஆஸ்ரயித்திருக்கும்

விந்தங்களை ஆஸ்ரயித்து, (அன்று ராமானுஜர் பங்குனி உத்தி ரத்தின் உத்ஸவத்தின் போது, பிராட்டி கிருஹத்திற்கு எழுந் தருளியிருந்த ரெங்கநாதனுடைய திவ்ய பாதங்களை ரெங்க நாயகியை புறம் வைத்து வணங்கினரோ,) அதுபோல நாரதரும் (ராமானுஜனுகிற லக்ஷ்மணமுனியை புறம்வைத்து) பகவா னுடைய பாத பங்கஜங்களை ஆஸ்ரயித்தார்.

தீனபந்து, ஆஸ்ரிதவாத்ஸல்யன், பக்தவத்ஸலன், நாரத பிரியன், என் பிரபு, தனக்குத் தீங்கு செய்த ராவணனையும் நிக்ரஹம் செய்வதா, அனுக்ரஹம் செய்வதா, (புலஸ்திய குமார னுச்சுதே, விப்ரனுச்சுதே, உமாமஹேஸ்வரர்களின் பக்தனுச் சுதே என்று பதினுயிரம் தடவைகள் கலங்கிய கருணுகாகுத்ஸன், இவன் நம்மை "அடிபணியானு, மித்ரபாவத்தினுல் பூர்வவாஸனை யினுலாவது அடையமாட்டானு, தன் தம்பிவிபீஷணனைப் பார்த்தாவது இவன்திருந்தமாட்டானு " என்றுபெரு நேரம் சிந்தித்து, கலங்கிய கோதண்டராமன், சீதையைப் புரிந்து கொண்ட ராமன், நாரதபகவானுக்கு, ஸ்ரீமந்நாராயணு குண கீர்த்திகளைப் பாடும் பாகவத உத்தமர்களின் லக்ஷ்ய லக்ஷணங் களைப் பற்றிச் சொன்னுர். நாரதருக்கு மிக்க கிருபையுடன் உபதேசித்தார். அந்த மஹா பாகவத உத்தம உத்தமர்களின் கல்யாண ஸம்பந்தம் கொண்ட பிரபன்னர்களின் ஹிதத்திற்காக, (அன்று லோக குருக்களான உமாமஹேஸ்வரர் ரிஷிதேவகணங் களின் ஸந்நிதானத்தில் தர்மத்தின் ஸ்வரூபங்களை உரைத்தது போல, பிரபு ஸ்ரீராமச்சந்திரன் இன்று பாகவத பக்த கோஷ்டி களுக்கு ஏகபராயணமாகவிருக்கும் நாராயண திருவடிகளை அடிப்படையாகக் கொண்டதும் ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதங் களை அடையவைக்கும் மஹா தாரஹத்தை, ராமானுஜன் ஸந்நிதி யில், தன் திருமுக மண்டலத்தினுல் பம்பாகுள தீர்த்தத்தில் திருவாய் மலர்ந்து, ஸ்ரீமுகமாக அருளினுர். ஆர்த்திகளின் கஷ்டங்களைப் பொறுக்கமாட்டாதவரும், தீக்ஷை வ்ரதம் கொண்ட ஜடாதரராமன், என் பிரபு, அகில லோக கல்யாணங்களுக்கு மூலகாரணன், உமாமஹேஸ்வரர்களைச் சேர்த்து வைத்தவர், வால்மீகி, வியாஸர், தியாகராஜர் போன்ற மஹான்களுக்கும், எனக்கும், துளசிதாஸருக்கும் ஆத்மபந்துவாக விளங்குகிருர்! அன்று துருவன் துருவநாராயணரிடமிருந்து வித்தையை கிரஹித்ததுபோல, கண்ணனிடமிருந்து அர்ஜுனன் தாரக வித்தையை கிரஹித்தது போல நாரதர் ராம தாரக வித்தையை கிரஹித்தார்.)

தாரக சீதையை தரித்துக் கொண்டிருக்கும் பகவானுடைய சரணார விந்தங்களை, அப்பேற்பட்ட மஹாத்மியங்களை உள்ள லக்ஷ்மி நாராயணரை, சீதா ராமனை, நாரதர் அடிக்கடி நமஸ்கரித்தார். அதன் பிறகு அவர் பிரம்மபுரத்திற்கு எழுந்தருளினார். (அப்பேற்பட்ட மஹத்வம் வாய்ந்த நாரதரை எனக்குக் காட்டிய துளசி தாஸர் மஹாதன்யர். அவரை நான் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன்.) அந்த மஹாத்மா துளசி தாஸர் சொல்லுகிறார். "நாரதர் அல்லவோ தன்யர். தனஞ்ஜயர். அந்த நாரத பகவான் ஸகல ஆசைகளையும் துறந்து, லோக கல்யாணார்த்தம், (ராமானுஜன் யதியாக விருந்த போதிலும் சேதனர்களை உஜ்ஜீவிக்கும் நோக்கத்தால் அன்று முதல் நித்ய ஸம்சாரியாக இன்றும், என்றும் வாழ்கின்றாரோ, வைஷ்ணவர்களின் உத்தாரணத்திற்காக பாடுபட்டாரோ, அதற்காகப் பிராட்டியுடன் கூடிய ரங்கராஜனிடம், அன்று அவர் சரண் புகுந்து யாவர்களின் உத்தாரணத்தை வேண்டி அடைந்தாரோ,) அதுபோல இந்த நாரத பகவான் ஸ்ரீ ஹரி பகவானுடைய அச்யுத சரணங்களில் ஈடுபட்டு தன்மயமாகி, ஏகாந்தியாக, பசும்பொன் மேனி பெற்று, மரகதமணி செழிப்பை அடைந்து, ஸகல சம்சாரிகளின் துக்கங்களையும் தாபங்களையும் அழித்து பிரபன்ன பக்தி சேதனர்களை செழிப்பிக்க வைக்கிறார் அன்றோ? (அப்பேற்பட்ட மஹா பிரபு நாரதருக்கு, கம்பன், துளசிதாஸர், தியாக ராஜர், வால்மீகி, ஸனத்குமாரர் ஆகியவர்களை புறம்வைத்து நான் நமஸ்கரித்து, அவரை என் மார்க்க தரிசியாக ஸ்வீகரித்து ஹரியின் பதங்களை விரும்புகிறேன். (351)

[தியானம்

த்யேயः ஸதா ஸவித்திர மண்டல மத்யவர்த்தி நாராயணः அச்யுதா, கோவிந்தா, புண்டரீகாக்ஷா, ரக்ஷமாம் சரணாகதம், நமோ பிரும்மண்ய தேவாய கோபிராம்மண ஹிதாயச, ஜகத் ஹிதாய கிருஷ்ணாய ராமாய கோவிந்தாயா, நமோ நமः என்று அனுஸந்தித்து நான் ராம திருவடிகளை அடைகிறேன். ஹே பிரபோ, அர்ஜுனனுடைய மனக்கோயிலில் ஹ்ருஷிகேசராக அமர்ந்து, அவனுக்கு ஹிதம் செய்தீரே, உம்மை வஸிஷ்ட, விஸ்வாமித்திர, நாரத, அகஸ்திய, லோபாமுத்ரை ஆகியவர்களை புரஸ்ஸகாவாகக் கொண்டு நமஸ்கரிக்கிறேன். காலாத்மன், பீஷ்மரை வதம் செய்த க்ரீடாத்மன், ராவணன் என்கிற அஹங்

காரத்தை வதம் செய்த க்ரூரரே, உம்மை ராமானுஜன் ஸந்நிதியில் அடிக்கடி நமஸ்கரிக்கிறேன். ஆதித்யரே, நீரே த்வதசாக்ஷரமாகிற பன்னிரு ஆதித்யமூர்த்திகள். கிழக்கு திக்கில் உதயமாகும் ஆதித்யருக்கும் நமஸ்காரம். மேற்கு திக்கிலுள்ள அஸ்தாசலத்தில் மறையும் பிரபுவுக்கு நமஸ்காரம். ஜ்யோதிர்கணங்களுக்குப் பதியாக விருக்கும் தினத்தின் ஸ்வாமிக்கு நமஸ்காரம். தாமரைப் பூக்களாகிற பக்தர்களை மலரவைக்கும் மார்த்தாண்டருக்கு நமஸ்காரம். உமாஸ்கந்தனைப் போல சம்சார தாபங்களை நசிக்கச் செய்யும் ரவி பிரபுவுக்கு நமஸ்காரம். பரதலக்ஷ்மண சத்ருக்ன ஸமேதராக விருக்கும் சீதாராமனுக்கு நமஸ்காரம். நாரத, வஸிஷ்ட, விஸ்வாமித்ர, அகஸ்திய, வாமதேவ, ஆஞ்சநேயாதிகளாலும், தேவகணங்களாலும் சூழப்பட்டிருக்கும் ரகுகுலபூஷணனுக்கு நமஸ்காரம். ஸ்வர்ணம் போன்ற காந்தியை உடையவளும், அக்னிஸ்வரூபியும், ஸகல ஜனங்களின் புண்ணிய பாபங்களுக்குச் சாக்ஷியாக விருக்கும் காயத்திரி, ஸாவித்திரி, சரஸ்வதி ஆகிற மஹா தேவதையை மார்பில் தரித்துக் கொண்டிருக்கும் நாராயணமூர்த்திக்கு நமஸ்காரம். சீதாராமா, லக்ஷ்மி நாராயணா, நீங்களே ஸகல வேதங்களுக்கும், ஸகல கிருகங்களுக்கும் ஸாரம். உம்முடைய பதாப்ஜங்களை உபாயமாக அடைந்து, சரணமடைந்தவர்களுக்கும், பாரதந்திரியம் கொண்டு, ஆசார்ய ஸம்பந்தம் பெற்று, ஆத்மநிக்ஷேபணம் என்கிற நியாஸ வித்யையினால் ஸமர்ப்பிக்கப்பட்ட சேதனர்களுக்கு, நீரே பலமாக ஸ்வய சித்தமாகிறீர். நீரே ஸகல பிரமாண தாத்பர்யங்களாக விருக்கிறீர். அஷ்டாக்ஷரம், த்வயம், ராம தாரகம், ஆகிற ராமானுஜ ஸித்தாந்தமாகவும், கிருஷ்ணன் அன்று அர்ஜுனனுக்கு உபதேசித்த சர்மஸ்லோகம், பிரபத்தியோகம் என்கிற ஸித்தாந்தத்திற்கு பொருளாகவும் இருக்கிறீர்! பிரபோ, அசிந்தநீயரே, அயோநிஜரே, பிதாமஹரே, நாராயணா, ஸதா அலர்மேல் மங்கையுடன் கூடிய ஸ்ரீநிவாஸரே, தசரத ராமரே, தரணிதரரே, அன்று பிராட்டி நிரூபித்த பாரதந்திரியம், அனன்யார்ஹத்வம் என்கிற உபநிஷத் கீதையாகிற மரபில் வளர்ந்த என்னை, "நான் எனக்கு அபராதம் செய்த ராவணனையும் ஸம்ரக்ஷிப்பேன்," என்று வாய்விட்டுச் சொன்ன உம்மை சரணமடைந்திருக்கிறேன். அப்பேற்பட்ட சரணாகதி ரக்ஷகம் என்கிறது உமக்குமாத்திரமல்ல, என் பிராட்டிக்கும் விரதமாச்சுதே. "மித்ரபாவேன ஸம்பிராப்தம் நத்யஜேயம் கதாசன, ஸக்ருதேவ பிரபன்னாய தவாஸ்மீதி சயாசதே, அபயம் ஸர்வபூதேப்யோ

ததாம்யஹம் ஏதத்வ்ரதம்மம,'' என்று சொல்லிய சீதாராமா, உன்னை நமஸ்கிரிக்கிறேன். அதேமாதிரி, '' இயம் சீதா மமஸுதா ஸஹதர்ம சரீதவ ப்ரதீச்ச சைநாம் பத்ரம் தேபாணிம் கிருண்ஹீஷ்வ பாணினு, பதிவ்ரதா மஹாபாகா, சாயேவ அனுகதா ஸதா,'' என்கிற சீதாராம விவாஹமந்திரத்தினுல் சீதையும் உன்னைப்போல வ்ரதம் பூண்டாள். அப்பேற் பட்ட சீதையை, நீர் பத்தாயிரம் ஆண்டுகள் பிரிந்துவாழ சம்மதித்தீர். ஆனுல் சீதையோ, ''ராமன் என்னிடம் பரம காருண்யம் காட்டும் பிரபு, ஸத்யஸ்வரூபி; எனக்கு அவருடைய லீலையில் ஸமத்வமான பங்கு உண்டு'' என்ருலும், '' நான் ஒரு ஸ்திரி, பதிவிரதை, ஆகிறபடியால் ராமனுக்கு அடங்கியவள்'' என்று ஸர்வ வினயத்துடன் நிலைத்து நின்ருளே, அந்த மஹா புனிதையான சீதையை புருஷகாரமாக வைத்து, நாரத ராமானுஜ ஸம்பந்தம் பெற்று, நான், ராமா, உம்மை சரணமடைகிறேன். அஷ்டாக்ஷரத்தில் பிறந்து, த்வயத்தில் வளர்ந்து, ஆசார்ய ஸம்பந்தத்தாலே கிருபையைத் தேவியினிடமிருந்து வேண்டுகிற வனுகவு மிருக்கிறேன். பத்தாயிரம் ஆண்டுகள் சீதையை விட்டுப்பிரிந்த பெருமாள் லக்ஷ்மணனை பகல் நேரமும் பிரிய மனமில்லாதவராக, எவ்விதம் லக்ஷ்மணனை ஸம்ரக்ஷித்தீரோ, அதுபோல என்னையும், ஹேபிரபு, சீதாநாயகா, பிதாபுத்திர ஸம்பந்தம், ரக்ஷ்ய ரக்ஷகஸம்பந்தம், சேஷி சேஷ ஸம்பந்தம், பர்த்ரு பார்யா ஸம்பந்தம், ஞாத்ருஞேய ஸம்பந்தம், ஸ்வஸ்வாமி ஸம்பந்தம், சரீர சாரீர ஸம்பந்தம், ஆதார ஆதேய ஸம்பந்தம், போக்திருத்வ போக்யத்வ ஸம்பந்தம் ஆகிற ஒன்பதுவித ஸம் பந்தங்களால் ஹே சீதே, காமாக்ஷி, கிருபாகடாக்ஷி, நாராயணி, ராமானுஜா, நாரதரே, நரநாராயண ரிஷிகளே, உங்களை விரும்பும் என்னை ஸ்வீகரிக்கவேண்டும். ஆசார்யர்களால் நிவேதனம் செய்யப்பட்ட என்னை சூடாமணியை அங்கீகரித்தது போல அங்கீகரிக்கவேண்டும். ஹே சீதே, ராம தயிதே, கிருபாளு, பகவானுடைய கிருபைக்கு உனது தயவினுல் நான் பாத்திரமாகவேண்டும். பகவானுடைய கிருபையினுல் நான் ஆசார்ய கிருபைக்கு பாத்திரமாக வேண்டும். செங்கண்வாய் எங்கள் ஆயர்தேவா, அத்திருவடி திருவடிமேல் பொருதல் சங்கணித் துறைவன் வண்டென் குருகூர் சடகோபன் அடி ஸம்பந்தம் பெற்றுப்பணிந்துய்ந்தவனே, அவன் நாமங்களை நான் சொல்லிச் சொல்லி என்நெஞ்சை நிலைநிறுத்துவேனே.]

"எந்த மனிதர்கள் ராவணனுடைய சத்ருவாகிற ஸ்ரீராமச்சந்திரனுடைய பவித்திரமான புகழை ஸதா பாடிக்கொண்டும், பிறர்கள் சொல்லிக் கேட்டுக் கொண்டுமிருக்கிறார்களோ, அந்த மனிதர்கள் வெகு சுலபமாக வைராக்யத்தையும், ஜபம், யோகம் முதலிய சாதனங்களுமின்றி எளிதில் ஸ்ரீராமச்சந்திரனுடைய திருடமான பக்தர்களாகி விடுகிறார்கள்." (352)

(கருத்து :-என் பிரபு கருணா காகுத்ஸன், சரணாகத ரக்ஷகன், ராவணனைக் கொல்லுவதற்குமுன் பல தடவைகள் தன் நிஜ ஸ்வரூபத்தை வெளிப்படுத்தியவன், பல தடவைகள் கருணையைக் காண்பித்தவன். "இன்று போய் நாளை வா" என்று ராவணனை யுத்த ரங்கத்தில் சொன்னவன். பிராட்டியினால் விதிதஃ ஸஹி தர்மக்ஞஃ ஸரணாகத வத்ஸலஃ தேனமைத்திரி பவது தேயதி ஜீவிதுமிச்சஸி, ப்ரஸாதயஸ்வ த்வம் சைனம் ஸரணாகத வத்ஸலம் மாம் சாஸ்மை ப்ரயதோ பூத்வா நிர்யாதயிது மர்ஹஸி ஏவம் ஹிதே பவேத் ஸ்வஸ்தி ஸம்ப்ரதாய ரக்ஷத்தமே, அன்யதா த்வம்ஹி குர்வாணோ வதம் ப்ராப்ஸ்யஸி ராவண," என்று பிராட்டியால் உபதேசிக்கப்பட்ட ராவணனை ஸ்வீகரிப்பதற்காக பகவான் பூமியில் அவதாரம் செய்யவில்லை. அவருடைய சங்கல்ப மாத்திரத்தில் பரமபதத்தில் நிலைத்து நின்று இந்த காரியத்தை அவர் ஸாதித்திருப்பார். அவன் நினைத்தாலும் ராவணனும் அனுக்ரஹபாத்திரனாகி விடுவான் அன்றோ? ஏனெனில் அவனுடைய உள்ளத்திலும் குடிகொண்ட அந்தர்யாமி அல்லவோ ராமன்? ஆனால் என் பிரபு லோகத்தின் கல்யாணத்திற்காகவும், விபீஷண ஆஞ்சநேயாதிகளின் பக்திபிரபாவத்தை பிரகடனப் படுத்துவதற்கும் ராவணனைக் கொல்ல நினைத்து, சீதா அன்வேஷனாக லங்கைக்குச் சென்றுகொண்டிருந்தார். அப்பேற்பட்ட கருணா காகுத்ஸன், ரகுகுல பூஷணன், தசரத புத்ரன், (பூமியின் மணாளன்,) ஸ்ரீசீதாராமச்சந்திரனுடைய பவித்திரமானதும் பாவனமானதுமான கீர்த்திகளை எவர்கள் பாடுவார்களோ, கேட்பார்களோ, அவர்கள் வைராக்யமாகிற சம்சார தாபங்களின் நிவர்த்தியையும் அதை சமனம் செய்கிற மணிமந்திர ஔஷதமாகிற ராம நாமத்தையும், அகண்டமான ராம பக்தியையும் அதை அனுஸந்திக்கும் பாகவதர்களின் பக்தியையும் சந்தேகமின்றி அடைகிறார்கள். இவைகளின்றி நம் மனதில் திருடமானராம பக்தி ஏற்படாது. பகவத் பக்தி பாகவத பக்தி ஆகிய இரண்டும்தான் நமக்கு உத்தம சாந்தியை அளிக்கக் கூடி

யது. ராம பக்தியையும் வளரச் செய்யக்கூடியது என்று ஸித்தாந்த பூர்வமாக நாரத உபாக்யனத்தினுல்பிரபு நமக்கு விளக்கினுர்.]

(யுவதியான ஸ்திரியைப் பூஜிப்பது, காம போகங்களில் அதிகமாக ஈடுபடுதலானது மனிதனுடைய விவேகத்தை அழித்து விடுகிறது.) "யுவதியின் சரீரம் தீபத்தில் விழுந்து மடியும் விட்டில் பூச்சி மாதிரியாக விருக்கிறது. (விவேகத்தினுல் ஒருவன் அந்த பூச்சியைப் போல காமம் என்கிற தீயில் விழுந்து நாசமடைய வேண்டாம்.) இதை நீ ஏன் அறிந்துகொள்ள மறுக்கிருய்? ஹே மூடமனமே, நீ அந்த விட்டில் பூச்சியைப் போல அழிந்துபோக நினைக்காதே. காமம், மதம், ஸ்வ அபிமானம் ஆகியவற்றைத் தியாகம் செய்துவிட்டு, ஸ்ரீராமச்சந்திரனைப் பூஜித்து வா. ஸதா ஸத்ஸங்கத்தை அடைந்து (மனத்தில்) ராம பக்தியை வளர்த்துக் கொள்" என்று துளஸிதாஸர் நமக்குப் போதிக்கிருர். (அப்பேற் பட்ட மஹா ஆசார்யரை நான் அடிக்கடி வணங்குகிறேன்.) 353

மாஸபாராயணம்—22வது நிறுத்தம். ராமசரித மானஸம் என்கிற மானஸ ராமாயணத்தில் 3வது காண்டம் முற்றிற்று.

கலியுகத்தின் ஸம்பூர்ண பாபங்களை நாசம் செய்யும் மூன்ரு வது காண்டமான அரண்ய காண்டம் முற்றிற்று.

**அரண்ய காண்டம் ஸமாப்தம்**

**(தியானமும், (353) சுலோகங்களும்)**

# பிழைத்திருத்தம்

## அயோத்யா, அரண்ய காண்டம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 33 | அருவருக்கு | அவருக்கு |
| 8 | 17 | பிரஜைகள் | பிரஜைகளுக்கு |
| 10 | 22 | உங்களும் | உங்கள் |
| 17 | 4 | அதித் | அதிப் |
| ,, | 12 | ஆக மனதை | ஆக மனத்தை |
| ,, | 25 | பேர்களை | பேர்கள் |
| 19 | 30 | கபடமாகும் | கபடமாக |
| 186 | 13 | அருவக்கத்தகாத | அருவருக்கத்தகாத |
| 200 | 5 | அவளின் | அவனின் |
| 309 | 31 | ஆக்கப்படமாட்டோம் | ஆக்கப்படவேண்டும் |
| 326 | 16 | க்ஷிமிக்க | க்ஷமிக்க |
| 355 | 23 | ஆக்ஜையாக | ஆக்ஞையாக |
| 366 | 25 | ஸ்பாவத்துடன் | ஸ்வபாவத்துடன் |
| 367 | 10 | அறிந்து | அறிந்த |
| 484 | 25 | அம்பரீஷணனும் | அம்பரீஷனும் |
| 490 | 15 | அகிலவோ | அல்லவோ, |
| 708 | 34 | அது | அந்த |
| ,, | 35 | அபைந்த | அடைந்த |
| 759 | 13 | ஸாவித்தரி | ஸாவித்திரி |
| ,, | ,, | எனக்கு | எனக்கும் |
| 781 | ,, | அதிர் | அத்ரி |
| 783 | 32 | பறைப் சாற்று | பறை சாற்று |
| 784 | 19 | ஆனந்த | அனந்த |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 800 | 14 | மற்றவர்களுக்சூத் | மற்றவர்களுக்குத் |
| 809 | 21 | தேடிப் செய்யப் | delete செய்யப் |
| 825 | 19 | வித்வித | delete வித |
| 826 | 4 | பரம தந்திரியம் | delete ம |
| 839 | 35 | ஆயுதங்களுள் | ஆயுதங்களும் |
| 871 | 35 | ககளரி | கௌரி |
| 921 | 27 | அசுக்தனுன | அசக்தனுக |
| 957 | 1 | விந்தங்களை | பாதார விந்தங்களை |

---